மத்தியதரைக்கடல்

சீரியா

சீதோன்

தமஸ்கு

பெனிக்கியா

ஏர்மோன் மலை

தீரு

பிலிப்புச் செசரியா

கலிலேயா

கொராசின்

கப்பர்நகூம்

மகதாலா

கலிலேயா கடல்

கர்மேல்பர்வதம்

கானா

நாசரேத்து

நாயீன்

கதரோன்

கடல்

செசரியா

பத்துப் பட்டணங்கள்

யோர்தான்நதி

சமாரியா

சீகார்

பெரேயா

யோப்பா

அரிமத்தியா

லித்தா

எரிகோ

எம்மாவு

எருசலேம்

ஆசதோத்து

பெத்லெகேம்

சாக்கடல்

காத்சா

யூதேயா

**புதிய ஏற்பாட்டின் காலம்**

**பலெஸ்தீனா நாடு**






## எருசலேமும்
### அதன் சுற்றுப்புறங்களும்

# புதிய ஏற்பாடும் சங்கீதங்களும்

புதிய மொழிபெயர்ப்பு
கிரேக்க மூல நூலிலிருந்து செய்யப்பட்டது

1977

இந்தியா வேதாகமச் சங்கம்
20 மஹாத்மா காந்தி சாலை
பெங்களூர்

# THE NEW TESTAMENT

and

PSALMS

*Tamil—C.L.*

1977

5,000 Copies



**The Bible Society of India**
**20, Mahatma Gandhi Road**
**Bangalore**

# புதிய ஏற்பாட்டில் அடங்கிய நூல்கள்

பின், கிழக்குத் திசையிலிருந்து மாகோய்
என்னும் ஞானிகள் சிலர் எருசலேமுக்கு
வந்து, 2 ''யூதரின் அரசராகப் பிறந்திருக்
கிறவர் எங்கே இருக்கிறார்? கிழக்கில் அவ
ருடைய விண்மீன் தோன்றக் கண்டோம்;
அவரைப் பணிவதற்காக வந்திருக்கிறோம்''
என்றனர். 3 அதைக் கேட்டதும் ஏரோது
அரசன் கலக்கமடைந்தான். அவனோடு
எருசலேம் நகரத்தார் அனைவருமே கலங்
கினர். 4 அவன் யூத மக்களிடையே இருந்த
எல்லாத் தலைமை ஆசாரியர்களையும் வேத
அறிஞர்களையும் ஒன்றுகூட்டி, *மேசியா
எங்கே பிறக்க வேண்டும் என்று அவர்க
ளிடம் கேட்டான். 5 அவர்கள் அவனிடம்,
''யூதேயாவிலுள்ள பெத்லெகேமில் பிறக்க
வேண்டும்; ஏனெனில்,

6 ''யூதேயா நாட்டிலுள்ள பெத்லெ
கேமே, நீ யூதாவின் தலைமையான
நகரங்களில் சிறியதல்ல; ஏனென்
றால், உன்னிடமிருந்து ஆட்சித்
தலைவர் ஒருவர் தோன்றிவருவார்;
அவர் ஆயனைப்போல என்னுடைய
மக்களாகிய இஸ்ரவேலரை நடத்து
வார்'

என்பது இறைவாக்குரைப்பவரின் நூலில்
எழுதியிருக்கிறது'' என்று சொன்னார்கள்.
7 அப்பொழுது ஏரோது அந்த ஞானிகளை
மறைவாகத் தனியே அழைத்து, விண்மீன்
தோன்றிய காலத்தைப்பற்றி அவர்களிட
மிருந்து திட்டமாக அறிந்து கொண்டு,
8 ''நீங்கள் போய், குழந்தையைக் குறித்துத்
திட்டமாகக் கேட்டறியுங்கள்; நீங்கள்
அதைக் கண்டபிறகு எனக்குத் தெரியப்
படுத்துங்கள்; அப்பொழுது நானும் வந்து
அந்தக் குழந்தையைப் பணிந்துகொள்
வேன்'' என்று சொல்லி, அவர்களைப் பெத்லெ
கேமுக்கு அனுப்பினான். 9 அவர்கள் அரசன்
சொன்னதைக் கேட்டு, அவ்வாறே புறப்
பட்டுப் போனார்கள். முன்பு தோன்றிய
போது அவர்கள் பார்த்த அதே விண்மீன்
அப்போது தோன்றி, அவர்களுக்கு முன்னே
சென்று, குழந்தை இருந்த இடத்திற்குமேல்
வந்ததும் நின்றுவிட்டது. 10 விண்மீனின்
காட்சி அவர்களுக்கு அளவுகடந்த மகிழ்ச்
சியை அளித்தது. 11 அவர்கள் வீட்டிற்குள்
போய், அங்கே தாயாராகிய மரியாளிடம்
குழந்தையைக் கண்டு, கீழே விழுந்து அதைப்
பணிந்தார்கள்; பிறகு அவர்கள் தங்கள்
அரும்பொருள் பெட்டிகளைத் திறந்து,
பொன்னையும் தூபவர்க்கத்தையும்
வெள்ளைப் போளத்தையும் அதற்குக்
காணிக்கையாகப் படைத்தார்கள். 12 அதன்
பின் அவர்கள் ஏரோதுவினிடம் திரும்பிப்
போக வேண்டாமென்று கனவில் கடவுளால்
எச்சரிக்கப்பட்டு, வேறு வழியாகத் தங்கள்
சொந்த நாட்டுக்குப் போய்விட்டார்கள்.

## எகிப்துக்குச் செல்லுதல்

13 அவர்கள் போனபின், ஆண்டவ
ருடைய தூதன் யோசேப்புக்குக் கனவில்
தோன்றி, ''நீ எழுந்து குழந்தையையும்
தாயையும் கூட்டிக்கொண்டு எகிப்துக்கு
ஓடிவிடு. நான் உனக்குச் சொல்லும்
வரையில் அங்கேயே இரு. ஏனெனில்,
குழந்தையைக் கொன்றுவிடுவதற்காக
ஏரோது அதைத் தேடப்போகிறான்''
என்று சொன்னான். 14 யோசேப்பு உடனே
எழுந்து, குழந்தையையும் தாயையும்
கூட்டிக்கொண்டு, இரவிலேயே புறப்பட்டு
எகிப்துக்குப் போனார். 15 ஏரோது
இறக்கும் வரை அவர் அங்கேயே இருந்தார்.
ஆண்டவர் தம் வாக்குரைப்பவர் மூலமாக,
''எகிப்திலிருந்து என்னுடைய மைந்தனை
வரவழைத்தேன்'' என்று உரைத்தது
இவ்வாறு நிறைவேறிற்று.

## ஏரோது செய்த படுகொலை

16 பிறகு ஏரோது, அந்த ஞானிகள்
தன்னை ஏமாற்றிவிட்டதைக் கண்டு மிகவும்
சினமடைந்தான். அவன் தான் அந்த
ஞானிகளிடமிருந்து திட்டமாக அறிந்த
காலத்தின்படி கணக்கிட்டு ஆட்களை
அனுப்பி, பெத்லெகேமிலும் அதன் சுற்றுப்
புறங்களிலும் இரண்டு வயதும் அதற்கு
உட்பட்டுமிருந்த எல்லா ஆண் குழந்தை
களையும் கொன்றுவிட்டான்.

17 ''இராமாவிலே கூக்குரல் கேட்டது;
அழுகையும் புலம்பலும் மிகுதி.
இராகேல் தன் பிள்ளைகளுக்காக
அழுதாள், அவை இல்லாமற்போன
தால் அவள் துயரத்தின் மேலீட்
டினால் ஆறுதல் பெறவும் மறுத்து
விட்டாள்''

18 என்று இறைவாக்குரைப்பவராகிய
எரேமியாவின் மூலம் உரைக்கப்பட்டது
அப்போது நிறைவேறிற்று.

## எகிப்திலிருந்து திரும்பி வருதல்

19 ஏரோது இறந்தபின், ஆண்டவரு
டைய தூதன் எகிப்தில் யோசேபுக்குக்
கனவில் தோன்றி, 20 ''நீ எழுந்து குழந்தை
யையும் தாயையும் கூட்டிக்கொண்டு
இஸ்ரவேல் நாட்டுக்குப் போ. குழந்
தையின் உயிரை வாங்கப் பார்த்தவர்கள்
இறந்துபோய்விட்டார்கள்'' என்றான்.
21 யோசேப்பு விழித்தெழுந்தபின், குழந்
தையையும் தாயையும் கூட்டிக்கொண்டு
இஸ்ரவேல் நாட்டுக்கு வந்து சேர்ந்தார்.
22 ஆனாலும், யூதேயாவில் அர்கெலாவு

* மேசியா என்கிற எபிரேயச் சொல் கிரேக்க மொழியில் கிறிஸ்து எனப்படும், இச்சொற்களுக்கு அபிடேகம் செய்யப்பட்டவர் என்பது பொருள்.

**2:6 மீகா. 5:2. 2:15 ஓசே. 11:1. 2:18 எரே. 3:15.**

என்பவன் தன் தகப்பனாகிய ஏரோதுவுக்குப் பின் அரசாள்வதாகக் கேள்விப்பட்டு, அங்கே போக அஞ்சினார்; கனவில் சொல்லப்பட்டபடியே அவர் கலிலேயா நாட்டுக்குச் சென்றார்; 23 சென்று, நாசரேத்து என்னும் ஊரில் குடியேறினார். நசரேயன் எனப்படுவார் என்று இறைவாக்குரைப்போர் மூலமாக உரைக்கப்பட்டது இவ்வாறு நிறைவேறிற்று.

### திருமுழுக்குநர் யோவானது அறிவிப்பு

*(மாற். 1 : 1-8; லூக். 3 : 1-9, 15-17; யோ. 1 : 19-28)*

**3** அக்காலத்திலே திருமுழுக்குநர் யோவான் யூதேயாவின் பாலைநிலத்திற்கு வந்து, 2 "மனமாற்றமடையுங்கள், விண்ணரசு நெருங்கியுள்ளது" என்று அறிவித்து வந்தார். 3 இந்த யோவான் இறைவாக்குரைப்பவராகிய எசாயாவினால்,

"ஆண்டவருக்கு வழியை ஆயத்தம் செய்யுங்கள். அவருக்குமுன் பாதைகளைச் செவ்வையாக்குங்கள் என்பது பாலைநிலத்திலே கூக்குரலிடுகிறவனுடைய தொனி"

என்று குறிக்கப்பட்டவர். 4 இவர் ஒட்டக மயிர் உடையையும் அரையில் வார்க் கச்சையையும் அணிந்திருந்தார். வெட்டுக்கிளியும் காட்டுத் தேனுந்தான் இவருடைய உணவாயிருந்தன. 5 எருசலேமிலும் யூதேயா முழுவதிலும் யோர்தான் ஆற்றை அடுத்த நாடுகளனைத்திலும் இருந்தவர்கள் அவரிடம் போய், 6 தங்கள் பாவங்களை மறைக்காமல் சொல்லி ஒப்புக்கொண்டு, யோர்தான் ஆற்றில் அவரிடம் திருமுழுக்குப் பெற்றார்கள்.

7 பரிசேயருள்ளும் சதுசேயருள்ளும் பலர் திருமுழுக்குப் பெற வருவதை அவர் கண்டு, "விரியன் பாம்பின் குட்டிகளே, வரப்போகும் தெய்வ சினத்திலிருந்து தப்பித்துக் கொள்ள இந்த வழியை உங்களுக்குக் காட்டினவன் யார்? 8 நீங்கள் மனமாற்றமடைந்தவர்களென்றால், அதை உங்கள் வாழ்க்கையில் காட்டுங்கள். 9 'ஆபிரகாமே நமக்குத் தந்தை' என்று உங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டிருக்க வேண்டாம். கடவுள் இந்தக் கற்களிலிருந்தும் ஆபிரகாமுக்குப் பிள்ளைகளை எழுப்ப வல்லவர் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். 10 ஏற்கெனவே மரங்களின் வேரை வெட்டக் கோடரியை ஓங்கியாயிற்று. நல்ல கனி கொடாத மரமெல்லாம் வெட்டப்பட்டு நெருப்பிலே போடப்படும். 11 மனமாற்றமடைதலுக்கென்று நான் தண்ணீரினால் திருமுழுக்குக் கொடுக்கிறேன். எனக்குப்பின் வருபவரோ என்னைவிட வல்லவர். அவருடைய மிதியடிகளைத் தூக்கிச் செல்லவும் எனக்குத் தகுதியில்லை; அவர் தூய ஆவியினாலும் நெருப்பினாலும் உங்களுக்குத் திருமுழுக்குக் கொடுப்பார். 12 தூற்றுக்கூடை ஒன்று அவர் கையில் இருக்கிறது. அவர் களத்தை முற்றிலும் துப்புரவாக்கி, தமது கோதுமையைக் களஞ்சியத்தில் சேர்ப்பார்; பதரை அவர் அவியாத நெருப்பில் எரித்தழிப்பார்" என்றார்.

### இயேசு திருமுழுக்குப் பெறுதல்

*(மாற். 1 : 9-11; லூக். 3 : 21, 22)*

13 பிறகு, இயேசு யோவானிடம் திருமுழுக்குப் பெறுவதற்காகக் கலிலேயாவிலிருந்து யோர்தான் ஆற்றுக்கு வந்தார். 14 யோவானோ, "நான் உம்மிடம் திருமுழுக்குப் பெறவேண்டியவனாயிருக்க, நீர் என்னிடம் வரலாமா?" என்று சொல்லி அவரைத் தடுக்கப் பார்த்தார். 15 ஆனால் இயேசு, "தற்போது இப்படி நடக்கட்டும். ஏனெனில், கடவுளுக்கு ஏற்றவையெனக் குறிக்கப்பட்டவை அனைத்தையும் இவ்வாறு நிறைவேற்றுவதே நமக்குத் தகுதியாகும்" என்று பதில் சொல்ல, அவரும் இணங்கினார். 16 திருமுழுக்குப் பெற்றவுடனே இயேசு தண்ணீரைவிட்டு வெளியேறினார். அப்போது வானம் திறப்புண்டது; தெய்வ ஆவி புறாவைப்போல இறங்கித் தம்மீது வருவதை அவர் கண்டார். 17 வானத்தினின்று, "இவர் என் அன்பார்ந்த மைந்தர். இவரால் பெருமகிழ்ச்சியடைகிறேன்" என்று ஒரு வாக்குப் பிறந்தது.

### இயேசு சோதிக்கப்படுதல்

*(மாற். 1 : 12, 13; லூக். 4 : 1-13)*

**4** அப்பொழுது இயேசு பிசாசினால் சோதிக்கப்படுவதற்கு ஆவியானவரால் வனாந்தரத்திற்குக் கொண்டு செல்லப்பட்டார். 2 அங்கு அவர் நாற்பது நாள் அல்லும் பகலும் நோன்பிருந்தார். அதன்பின் அவருக்குப் பசியுண்டாயிற்று. 3 சோதிக்கிறவன் அவரிடம் வந்து, "நீர் கடவுளின் மைந்தரானால், இந்தக் கற்களை அப்பங்களாகும்படி சொல்லும்" என்றான். 4 அதற்கு அவர்,

"'மனிதன் வாழ்வது அப்பத்தினால் மட்டுமன்று; கடவுளின் திருவாயினின்று வரும் ஒவ்வொரு சொல்லாலும் உயிர் வாழ்வான்'

என்பது வேதத்தில் எழுதியுள்ளது" என்று சொன்னார். 5 பிறகு பிசாசு அவரைத் திருநகரத்திற்குக் கொண்டுசென்று திருக்கோவிலின் உச்சியில் அவரை நிறுத்தி அவரிடம், 6 "நீர் கடவுளின் மைந்தரானால், கீழே குதியும்; ஏனெனில்,

**2:23** மாற். 1:24; லூக். 9:39; யோ. 1:45. **3:2** மத். 4:17; மாற். 1:15; திருத்தூது. 2:38. **3:3** எசா. 40:3; யோ. 1:23. **3:4** 2 அர. 1:8. **3:7** மத். 12:34; 23:33. எசா. 59:5. **3:9** யோ. 8:33; ரோ. 9:7, 8. **3:10** மத். 7:19. **3:17** ஆதி. 22:2. சங். 2:7; எசா. 42:1; மத். 12:18; 17:5; மாற். 1:11; லூக் 9:35. **4:1** யாத். 24:18; 34:28; எபி. 2:18; 4:15. **4:4** உபா. 8:3. **4:6** சங். 91:12.

மன்றத்துக்குப் போகும்போதே அவனோடு
சமரசம் செய்துகொள். 26 இல்லாவிடில்,
நான் உனக்கு உறுதியாகச் சொல்கிறேன் :
நீ காசு முழுதும் கொடுத்துத் தீர்க்கும்
வரையில் சிறையிலிருந்து வெளியேறவே
மாட்டாய்.

### கற்புநெறி தவறுதலைப்பற்றி

27 " 'கற்புநெறி தவறாதே' என்று சொல்
லப்பட்டதெனக் கேள்விப்பட்டிருக்கிறீர்
கள். 28 ஆனால் நான் உங்களுக்குச் சொல்லு
கிறேன் : ஒரு பெண்ணைக் கெட்ட எண்ணத்
தோடு பார்க்கிற எவனும் தன் உள்ளத்தில்
அவளிடம் கற்புநெறி தவறி நடந்துகொள்
கிறான். 29 நீ பாவக் குழியில் இடறிவிழ
உன் வலக்கண் காரணமாயிருந்தால் அதைப்
பிடுங்கி எறிந்துவிடு; உன் உடல் முழுதும்
நரகத்தில் எறியப் படுவதைவிட, உன்
உறுப்புகளுள் ஒன்றை நீ இழப்பதே உனக்கு
நலம். 30 நீ பாவக் குழியில் இடறிவிழ உன்
வலக்கை காரணமாயிருந்தால் அதைத்
தறித்து எறிந்துவிடு. உன் உடல் முழுதும்
நரகத்துக்குள் போவதைவிட, உன் உறுப்பு
களுள் ஒன்றை நீ இழப்பதே மேல்.

### மனைவியை விலக்கி விடுதலைப்பற்றி

(மத். 19 : 9; மாற். 10 : 11, 12; லூக்.
16 : 18)

31 " 'தன் மனைவியை விலக்கிவிடும்
எவனும் அவளுக்கு விலக்குச் சீட்டைக்
கொடுத்து விலக்கவேண்டும்' என்று சொல்
லப்பட்டது. 32 ஆனால் நான் உங்களுக்குச்
சொல்லுகிறேன்: ஒருவன் தன் மனைவியை
அவளது கற்புநெறி தவறிய நடத்தையின்
பொருட்டேயன்றி வேறெந்தக் காரணத்
திற்காகவும் விலக்குதல் கூடாது. அப்படி
ஒருவன் விலக்கிவிடுவானானால், அவன் அவ
ளைக் கற்புநெறி தவறினவளாகும்படி செய்
கிறான். கணவனால் விலக்கப்பட்டவளை யார்
மணம் செய்கிறானோ அவன் கற்பு நெறி
தவறினவனாவான்.

### ஆணையிடுதலைப்பற்றி

33 "மேலும், 'ஆணையிட்டுக் கூறும் எதை
யும் நிறைவேற்றத் தவறாதே; ஆணையிட்டு
நேர்ந்துகொண்ட யாவற்றையும் ஆண்டவ
ருக்குச் செலுத்து' என்று முன்னோருக்குச்
சொல்லப்பட்டதெனக் கேள்விப்பட்டிருக்
கிறீர்கள். 34 ஆனால் நான் உங்களுக்குச்
சொல்லுகிறேன் : ஆணையிட்டுக் கூறவே
வேண்டாம்; வானத்தின்மேலும் ஆணையிட
வேண்டாம்; ஏனெனில், அது கடவுளின்
அரியணை. 35 பூமியின்மேலும் ஆணையிட
வேண்டாம். ஏனெனில், அது அவரது
பாதப்படி; எருசலேம் மேலும் ஆணையிட
வேண்டாம். ஏனெனில், அது விண்ணரச
ரின் நகரம். 36 உன் தலைமேலும் ஆணையிட
வேண்டாம். ஏனெனில், உன் தலை முடியுள்
ஒன்றையேனும் வெண்மையாக்கவோ கறுப்
பாக்கவோ உன்னால் இயலாது. 37 நீங்கள்
'உண்டு' அல்லது 'இல்லை' என்று மட்டும்
சொல்லுங்கள். இதற்கு மிஞ்சிச் சொல்வ
தெல்லாம் *தீமையால் விளைவதாகும்.

### பழிவாங்குதலைப்பற்றி

(லூக். 6: 29, 30)

38 " 'கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல்'
என்று சொல்லப்பட்டதெனக் கேள்விப்
பட்டிருக்கிறீர்கள். 39 ஆனால் நான் உங்க
ளுக்குச் சொல்லுகிறேன்: உனக்குத் தீங்கு
செய்பவனைத் தடுத்து நிறுத்த வேண்டாம்.
உன்னை வலக் கன்னத்தில் அறைகிறவனுக்கு
மறு கன்னத்தையும் திருப்பிக் காட்டு.
40 ஒருவன் உன்னோடு வழக்காடி உன்
துண்டை எடுத்துக்கொள்ள விரும்பினால்,
அவனுக்கு உன் சட்டையையும் எடுத்துக்
கொள்ள இடங்கொடு. 41 ஒருவன் உன்னை
ஒரு மைல் தொலைவு வரும்படி கட்டாயப்
படுத்தினால், அவனோடு இரண்டு மைல்
தொலைவு செல். 42 உன்னிடம் கேட்கிற
வனுக்குக் கொடு, உன்னிடம் கடன்
வாங்க விரும்புகிறவனுக்கு அதை மறுக்
காதே.

### எதிரிகளிடம் அன்புகொள்

(லூக். 6 : 27, 28, 32—36)

43 " 'அடுத்தவனிடம் அன்புகொள்; உன்
னுடைய எதிரியையோ பகை' என்று
சொல்லப்பட்டதெனக் கேள்விப்பட்டிருக்
கிறீர்கள். 44 ஆனால் நான் உங்களுக்
குச் சொல்லுகிறேன் : உங்கள் எதிரிகளி
டம் அன்புகொள்ளுங்கள்; [உங்களைச் சபிக்
கிறவர்களுக்கு ஆசி கூறுங்கள்; உங்களை
வெறுக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள்;
உங்களைத் தூற்றுகிறவர்களுக்காகவும்] உங்க
ளைத் துன்புறுத்துகிறவர்களுக்காகவும்
கடவுளிடம் வேண்டுதல் செய்யுங்கள்.
45 இப்படிச் செய்வதால் விண்ணுலகிலுள்ள
உங்கள் தந்தைக்கு நீங்கள் பிள்ளைகளாவீர்
கள்; அவர் தீயோர் மேலும் நல்லோர்
மேலும் கதிரவனை ஒளிவீசச் செய்கிறார்.
நீதிநெறியைக் கடைப்பிடிப்போருக்கும்
கடைப்பிடியாதோருக்கும் மழை பெய்யச்
செய்கிறார். 46 உங்களிடம் அன்புள்ளவர்
களாய் இருப்பவர்களிடமே நீங்கள் அன்பு

* 'தீமைக்குக் காரணமாகிய பிசாசினால் விளைவதாகும்' என்றும் மொழி பெயர்க்கலாம்.

5:27 யாத். 20:14; உபா. 5:18. 5:29 மத். 18:9; மாற். 9:47. 5:30 மத். 18:8; மாற். 9:43 5:31 உபா. 24:1-4; மத். 19:7; மாற். 10:4. 5:32 மத். 19:9. மாற். 10:11, 12; லூக். 16:18; 1 கொரி. 7:10, 11. 5:33 இலே. 19:12; எண். 30:2; உபா. 23:21. 5:34 யாக். 5:12; 5:38 யாத். 21:24; இலே. 24:20; உபா. 19:21. 5:43 இலே. 19:18.

கொள்வீர்களானால், உங்களுக்கு என்ன
பலன்? *ஆயக்காரரும் இப்படித்தானே செய்
கிறார்கள்? 47 உங்களுடைய சகோதரருக்கு
மட்டும் வணக்கம் சொல்வீர்களானால்
நீங்கள் செய்வதில் என்ன சிறப்பு இருக்கிறது?
கடவுளை அறியாத பிற இனத்தவர்களும்
இப்படித்தானே செய்கிறார்கள்? 48 எனவே,
விண்ணுலகிலிருக்கிற உங்கள் தந்தையார்
எல்லா நற்பண்பும் நிறைந்தவராய்
இருப்பது போல நீங்களும் எல்லா நற்பண்பும்
நிறைந்தவர்களாய் இருங்கள்.

### சமயச் சடங்குகள் செய்யும் முறை

6 ''நீங்கள் உங்கள் சமயச் சடங்குகளை
மனிதர் பார்க்க வேண்டுமென்று அவர்
கள்முன் செய்யாதபடி பார்த்துக்கொள்ளுங்
கள். இல்லையென்றால், விண்ணுலகிலிருக்கிற
உங்கள் தந்தையாரிடமிருந்து உங்களுக்குப்
பலன் கிடைக்காது.
2 ''எனவே, நீ ஏழைக்கு உதவி செய்
யும்போது, போலி பக்தர்கள் தொழு
கைக்கூடங்களிலும் தெருக்களிலும் மனிதர்
புகழ வேண்டுமென்று செய்வது போல,
உனக்குமுன் பறைசாற்றும்படி செய்யாதே.
அவர்கள் தங்கள் பலனைப் பெற்றுவிட்டார்
கள் என்பதை உங்களுக்குத் திட்டமாகச்
சொல்லுகிறேன். 3 நீ ஏழைக்கு உதவி
செய்யும்போது, உன் வலக்கை செய்வது
இடக்கைக்குத் தெரியாதிருக்கட்டும். 4 அப்
பொழுது உன்னுடைய அறச்செயல் மறைவா
யிருக்கும். மறைவாயுள்ளதைக் காணும்
உன் தந்தையார் அதற்காக உனக்குக்
கைம்மாறு அளிப்பார்.

### கடவுளிடம் வேண்டுதல் செய்யும் முறை
(லூக். 11:2–4)

5 ''நீங்கள் கடவுளிடம் வேண்டுதல்
செய்யும்போது போலி பக்தரைப்போலச்
செய்ய வேண்டாம். ஏனெனில், அவர்கள்
தொழுகைக்கூடங்களிலும் தெருச்சந்திகளி
லும் நின்றுகொண்டு, மனிதர் பார்க்க
வேண்டுமென்று கடவுளிடம் வேண்டுதல்
செய்ய விரும்புகிறார்கள். அவர்கள் தங்கள்
பலனைப் பெற்றுவிட்டார்கள் என்பதை
உங்களுக்குத் திட்டமாகச் சொல்லுகிறேன்.
6 நீ கடவுளிடம் வேண்டுதல் செய்யும்
போது உன் அறைக்குள் சென்று கதவை
அடைத்துக்கொண்டு, கண்ணுக்கு மறை
வாயுள்ள உன் தந்தையாரை நோக்கிவேண்டு
தல் செய்; மறைவாயுள்ளதைக் காணும் உன்
தந்தையாரும் உனக்குக் கைம்மாறு அளிப்
பார். 7 அல்லாமலும், நீங்கள் கடவுளிடம்
வேண்டுதல் செய்யும்போது பிற இனத்தவ
ரைப்போல, வீண் சொற்களைச் சொல்லி
உளறிக்கொண்டிருக்க வேண்டாம். ஏராள
மான சொற்களைப் பயன்படுத்துவதால்
தாங்கள் வேண்டிக்கொள்வது அருளப்படு
மென்று அவர்கள் நினைக்கிறார்கள். 8 நீங்கள்
அவர்களைப்போலச் செய்ய வேண்டாம்.
நீங்கள் வேண்டிக்கொள்வதற்கு முன்னமே,
உங்களுக்கு என்னென்ன தேவையென்பது
உங்கள் தந்தையாருக்குத் தெரியும்.
9 ஆகையால், நான் சொல்லித் தருகிறபடி
அவரிடம் வேண்டுதல் செய்யுங்கள் :

விண்ணுலகிலிருக்கிற எங்கள் தந்தையே,
உமது திருப்பெயர் தூயதெனப் போற்றப்
படுவதாக;

10 உமது அருளாட்சி வருவதாக ;
உமது திருவுளம் விண்ணுலகில் நிறை
வேறுவதுபோல மண்ணுலகிலும் நிறை
வேறுவதாக.

11 அன்றன்று எங்களுக்கு வேண்டிய
உணவை இன்று எங்களுக்குத் தந்தருளும்.
12 †எங்களுக்குத் தீமை செய்தவர்களை
நாங்கள் மன்னித்திருக்கிறது போல நாங்
கள் செய்த தீமைகளை எங்களுக்கு மன்னித்
தருளும்.

13 எங்களைச் சோதனைக்கு உட்படுத்
தாதேயும்;

‡ தீமையினின்று எங்களை விடுவித்தரு
ளும்;

[ஆட்சியும் வல்லமையும் மாட்சிமையும்
என்றென்றைக்கும் உம்முடையவையே,]
ஆமென்.

14 ''மனிதருடைய குற்றங்களை நீங்கள்
மன்னிப்பீர்களானால், உங்கள் விண்ணகத்
தந்தையும் உங்களை மன்னிப்பார்; 15 மனி
தரை நீங்கள் மன்னிக்காவிடில், உங்கள்
விண்ணகத் தந்தையும் உங்கள் குற்றங்களை
மன்னிக்க மாட்டார்.

### நோன்பு இருக்கும் முறை

16 ''மேலும், நீங்கள் நோன்பு இருக்
கும்போது போலி பக்தரைப்போல முக
வாட்டத்தோடு இருக்க வேண்டாம்; தாங்

* ஆயக்காரர்: சுங்கவரி வசூலிக்கும் இவர்கள் அன்னிய ஆட்சியின் கையாள்களாய் இருந்ததால், இழிவாகக் கருதப்பட்டார்கள்.

† 'எங்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யத் தவறியவர்களை நாங்கள் மன்னித்திருக்கிறது போல, நாங்கள் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யத் தவறிய குற்றங்களை எங்களுக்கு மன்னித்தருளும்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

‡ 'தீயோனிடமிருந்து' (அதாவது தீமைக்குக் காரணமாகிய பிசாசினிடமிருந்து) என்றும் மொழி பெயர்க்கலாம்.

5:48 இலே. 19:2; உபா. 18:13; 1 யோ. 3:3. 6:5 லூக் 18:10-14. 6:14,15 மாற். 11:25,26.

டின்மீது மோதவே, அது விழுந்து முற்றிலும்
அழிந்தது.''
28 இயேசு இப்படிக் கூறி முடித்தபோது,
மக்கள் அவருடைய போதனையைக் குறித்து
வியப்படைந்தார்கள். 29 அவர் அவர்களி
டையே இருந்த வேத அறிஞரைப்போலப்
போதியாமல் அதிகாரமுள்ளவராய்ப்
போதித்து வந்தார்.

### தொழுநோயுள்ள ஒருவனைக் குணமாக்குதல்

(மாற். 1:40–45; லூக். 5:12–16)

8 இயேசு மலையிலிருந்து இறங்கினபின்,
திரளான மக்கள் அவரைப் பின்
தொடர்ந்து சென்றார்கள். 2 அப்பொழுது
தொழுநோயுள்ள ஒருவன் வந்து அவரைப்
பணிந்து, ''ஆண்டவரே, உமக்கு மனமுண்
டானால் என்னைக் குணமாக்க உம்மால்
ஆகும்'' என்று சொன்னான். 3 அவர் தமது
கையை நீட்டி அவனைத் தொட்டு, ''எனக்கு
மனமுண்டு, நீ குணமடைவாயாக'' என்
றார். உடனே அவன் தொழுநோய் நீங்கிக்
குணமடைந்தான். 4 இயேசு அவனிடம்,
''இதை யாருக்கும் சொல்லாதே, எச்சரிக்
கையாயிரு; ஆனால் ஆசாரியரிடம் போய்
உன்னைக் காட்டி, மக்களுக்கு உன்னைக்
குறித்துச் சான்றுதரும் வகையில், மோசே
கட்டளையிட்டுள்ள காணிக்கையைச்
செலுத்து'' என்று சொன்னார்.

### நூற்றுவர் தலைவனின் வேலைக்காரன் குணமடைதல்

(லூக். 7:1–10; யோ. 4:43–54)

5 இயேசு கப்பர்நகூம் என்னும் ஊருக்
குள் சென்றபோது, நூற்றுவர் தலைவன்
ஒருவன் அவரிடம் உதவி நாடிவந்து,
6 ''ஐயா, என் வேலைக்காரன் திமிர்வாதத்
தினால் தாங்கொணா நோவுடன் வீட்டில்
கிடக்கிறான்'' என்றான். 7 இயேசு, ''நான்
வந்து அவனைக் குணப்படுத்துகிறேன்''
என்று சொன்னார். 8 நூற்றுவர்தலைவனோ,
''ஐயா, நீர் என் வீட்டிற்குள் வர நான்
தகுதியற்றவன்; ஒரு வார்த்தை மட்டும்
சொல்லும், அப்பொழுது என் வேலைக்
காரன் குணமடைவான். 9 நான் அதிகாரத்
திற்குட்பட்ட மனிதன்தான்; எனக்குக்
கீழேயும் படைவீரர் உண்டு; நான் ஒருவ
னிடம், 'போ' என்கிறேன்; அவன் போகி
றான்; வேறொருவனிடம், 'வா' என்கிறேன்;
அவன் வருகிறான்; என் அடிமையிடம்,
'இதைச் செய்' என்கிறேன், அவன் செய்
கிறான்'' என்றான். 10 அதைக் கேட்டு
இயேசு வியப்படைந்து, தமக்குப்பின் வந்து
கொண்டிருந்தவர்களை நோக்கி, ''ஒன்றைத்
திட்டமாக உங்களுக்குச் சொல்லுகிறேன்:
இத்தகைய நம்பிக்கையை நான் இஸ்ர
வேலருள் எவரிடமும் கண்டதில்லை.
11 கிழக்கிலும்மேற்கிலுமிருந்து பலர் வந்து,
விண்ணரசில் ஆபிரகாம் ஈசாக்கு யாக்
கோபு என்பவர்களுடன் பந்தியில் அமர்வர்.
12 ஆனால் அந்த அரசின் உரிமையாளர்
களோ புறம்பேயுள்ள இருளிலே தள்ளப்
படுவார்கள். அங்கே அழுகையும் பற்கடிப்
பும் இருக்கும் என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன்'' என்றார். 13 பிறகு இயேசு நூற்
றுவர் தலைவனைப் பார்த்து, ''நீ போக
லாம், நீ நம்பினபடியே நடக்கும்'' என்று
சொன்னார். அவ்வேளையிலேயே அவன்
வேலைக்காரன் குணமடைந்தான்.

### இயேசு பலருக்குக் குணமளித்தல்

(மாற். 1:29–34; லூக். 4:38–41)

14 இயேசு பேதுருவின் வீட்டிற்குள்
சென்றபோது அவருடைய மாமி காய்ச்ச
லாய்க் கிடக்கிறதைக் கண்டார். 15 அவர்
அவளுடைய கையைத் தொட்டார், காய்ச்
சலும் அவளை விட்டு நீங்கிற்று. அவள்
எழுந்து அவருக்குப் பணிவிடை செய்தாள்.
16 மாலை நேரம் வந்தபோது, பேய்பிடித்த
பலரை அவரிடம் கொண்டுவந்தார்கள்.
அவர் பேய்களைத் தமது சொல்லைக்
கொண்டே ஓட்டினார், பிணியாளிகள்
எல்லாரையும் குணமாக்கினார்.
17 ''அவர்தாமே நம்முடைய நோய்களை
அகற்றினார், நம்முடைய பிணிகளைச்
சுமந்தார்''
என்று இறைவாக்குரைப்பவராகிய ஏசாயா
மூலமாக உரைக்கப்பட்டது இவ்வாறு நிறை
வேறிற்று.

### இயேசுவைப் பின்பற்றிச் செல்ல விரும்பினவர்கள்

(லூக். 9:57–62)

18 இயேசு தம்மைச் சுற்றிலுமிருந்த
கூட்டத்தைக் கண்டபோது மறுகரைக்குச்
செல்லக் கட்டளையிட்டார். 19 அப்
பொழுது வேத அறிஞன் ஒருவன் வந்து,
''போதகரே, நீர் எங்கே சென்றாலும்
நான் உம்மைப் பின்பற்றி வருவேன்''
என்றான். 20 அதற்கு இயேசு, ''நரிகளுக்கு
வளைகள் உண்டு; வானத்துப் பறவை
களுக்குக் கூடுகள் உண்டு; மனுமைந்தருக்கோ
தலைசாய்க்கவும் இடமில்லை'' என்றார்.
21 பிறகு அவருடைய சீடருள் வேறொருவன்
அவரை நோக்கி, ''ஆண்டவரே, முதலில்
நான் போய் என் தகப்பனை அடக்கம்
செய்துவிட்டு வர விடைகொடும்'' என்றான்.
22 இயேசு அவனிடம், ''இறந்தோர் தம்
இறந்தோரை அடக்கம் செய்யட்டும்; நீ
என்னைப் பின்பற்றி வா'' என்று சொன்னார்.

**7-28, 29 மாற் 1:22; லூக். 4:32; யோ. 7:15. 8:4 இலே. 14:1-32 8:11 லூக். 13:29, 8:12 மத். 22-13; 25:30; லூக்.13:28. 8:17 ஏசா. 53:4; யோ. 1:29,**

### கடற் கொந்தளிப்பை அடக்குதல்
(மாற். 4:35–41; லூக். 8:22–25)

23 அவர் படகில் ஏறினதும், அவருக்குப்
பின்னல் அவருடைய சீடர்களும் வந்து
ஏறினர்கள். 24 சிறிது நேரத்திற்குப்பின்
கடலில் மாபெரும் கொந்தளிப்பு உண்
டாயிற்று. படகின்மேல் அலைகள் கவிந்தன.
இயேசுவோ தூங்கிக்கொண்டிருந்தார்.
25 சீடர்கள் அவரை அணுகி, ''ஆண்ட
வரே, காப்பாற்றும், மடிந்து போகிறோம்!''
என்று அவரை எழுப்பினர்கள். 26 அதற்கு
அவர், ''அற்ப நம்பிக்கை உள்ளவர்களே,
ஏன் அஞ்சுகிறீர்கள்?'' என்று கேட்டுவிட்டு,
எழுந்து காற்றையும் கடலையும் அதட்டினர்.
27 மிகுந்த அமைதி உண்டாயிற்று. எல்
லாரும் வியப்புற்று, ''இவர் எப்படிப்
பட்டவரோ! காற்றும் கடலும் இவருக்குக்
கீழ்ப்படிகின்றனவே!'' என்றார்கள்.

### பேய்பிடித்த இருவரைக் குணமாக்குதல்
(மாற். 5:1–20; லூக். 8:26–39)

28 இயேசு மறுகரையிலுள்ள கதரேனர்
நாட்டிற்குப் போனபோது, பேய் பிடித்த
இருவர் கல்லறைகளிலிருந்து வெளியேறி
அவருக்கு எதிரே வந்தனர். அவர்கள்
மிகவும் கொடியவர்களாயிருந்ததால், அவ்
வழியே எவராலும் போக இயலாதிருந்தது.
29 அவர்கள், ''கடவுளின் மைந்தரே,
எங்களிடம் உமக்கு என்ன வேலை? குறித்த
காலம் வருமுன்னே எங்களை வதைக்கவா
இங்கே வந்தீர்?'' என்று கத்தினர்கள்.
30 அவர்களிடமிருந்து சற்றுத் தொலைவில்
பன்றிகள் பெருங் கூட்டமாய் மேய்ந்து
கொண்டிருந்தன. 31 பேய்கள் அவரிடம்,
''நீர் எங்களை ஓட்டுவதாயிருந்தால்,
நாங்கள் அந்தப் பன்றிக் கூட்டத்திற்குள்
புகும்படி எங்களை அனுப்பிவிடும்'' என்று
வேண்டிக்கொண்டன. 32 அதற்கு அவர்,
''போங்கள்'' என்றார். அவை வெளி
யேறிப் பன்றிகளுக்குள் புகுந்தன. உடனே
அப்பன்றிக் கூட்டம் முழுதும் ஓடிச் செங்
குத்துப் பாறையின் விளிம்புக்குக் கீழே
கடலில் பாய்ந்து தண்ணீரில் மாண்டது.
33 அவற்றை மேய்த்துக்கொண்டிருந்த
வர்கள் ஓட்டம்பிடித்தார்கள். அவர்கள்
ஊருக்குள் சென்று நடந்தவையனைத்தையும்,
பேய் பிடித்தவர்களைப்பற்றிய செய்தியையும்
விளம்பரப்படுத்தினர்கள். 34 அதைக்
கேட்டதும் ஊரார் யாவரும் இயேசுவைப்
பார்க்கப் புறப்பட்டு வந்தனர். அவர்கள்
அவரைக் கண்டு, தங்கள் நாட்டை விட்டுப்
போய்விடும்படி அவரை வேண்டிக்கொண்
டார்கள்.

### திமிர்வாதமுள்ள ஒருவனைக் குணமாக்குதல்
(மாற். 2:1–12; லூக். 5:17–26)

9 இயேசு படகிலேறிக் கடலைக் கடந்து
தமது சொந்த ஊருக்கு வந்தார். 2 அப்
பொழுது சிலர் படுக்கையில் கிடந்த திமிர்
வாதமுள்ள ஒருவனைப் படுக்கையோடு
அவரிடம் கொண்டுவந்தனர். இயேசு
அவர்களுக்கிருந்த நம்பிக்கையைக் கண்டு,
திமிர்வாதமுள்ளவனிடம், ''மகனே, இனித்
தைரியமாயிரு, உன் பாவங்கள் மன்னிக்கப்
பட்டுவிட்டன'' என்று சொன்னர். 3 அதைக்
கேட்டதும் வேத அறிஞருள் சிலர், ''இந்த
ஆள் தன்னைக் கடவுளுக்குச் சமமாக்கிக்
கொண்டு அவரைப் பழிக்கிறனே!'' என்று
தங்களுக்குள் சொல்லிக்கொண்டார்கள்.
4 அவர்களுடைய சிந்தனைகளை இயேசு
அறிந்து, ''உங்கள் உள்ளத்தில் நீங்கள்
பொல்லாத காரியங்களைச் சிந்திப்பதேன்?
5 'உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிட்டன'
என்று சொல்வதா அல்லது 'எழுந்து
நட' என்று சொல்வதா, எது எளிது?
6 என்றாலும், உலகிலே பாவங்களை மன்னிக்க
மனுமைந்தருக்கு அதிகாரம் உண்டென்பதை
நீங்கள் அறிய வேண்டும்'' என்று சொல்லி
விட்டுத் திமிர்வாதமுள்ளவனைப் பார்த்து,
''நீ எழுந்து உன் படுக்கையை எடுத்துக்
கொண்டு உன் வீட்டுக்குப் போ'' என்று
சொன்னர். 7 அவனும் எழுந்து தன்
வீட்டுக்குப் போனன். 8 அதைக் கண்ட
மக்கள் அச்சங் கொண்டார்கள்; இப்படிப்
பட்ட அதிகாரத்தை மனிதருக்குக் கொடுத்த
கடவுளைப் புகழ்ந்து போற்றினர்கள்.

### மத்தேயு என்பவரைச் சீடராக்குதல்
(மாற். 2:13–17; லூக். 5:27–32)

9 இயேசு அவ்விடம் விட்டுச் செல்லு
கையில் சுங்கச் சாவடியில் உட்கார்ந்திருந்த
ஒருவரைக் கண்டார். அவர் பெயர்
மத்தேயு. இயேசு அவரிடம், ''என்னைப்
பின்பற்றி வா'' என்று சொன்னர்.
அவரும் எழுந்து அவரைப் பின்பற்றிச்
செல்லலானர்.

10 பிறகு, இயேசு அவருடைய வீட்டில்
விருந்துண்ண அமர்ந்திருக்கையில், *ஆயக்
காரர், பாவிகள் ஆகியவர்களுள் பலர்
அங்கே வந்து இயேசுவோடும் அவருடைய
சீடரோடும் விருந்துண்ண அமர்ந்தனர்.
11 அதைக் கண்ட பரிசேயர்கள் அவருடைய
சீடரிடம், ''உங்கள் போதகர் ஆயக்கார
ரோடும் பாவிகளோடும் சாப்பிடுகிறரே,
இது என்ன?'' என்று கேட்டார்கள். 12 இது
அவருடைய காதில் விழவே அவர், ''நோயற்

* மத். 5:6 அடிக்குறிப்பைப் பார்க்க.
8:26 சங். 107:29. 9:10,11 லூக். 15:1,2

21 ''சகோதரன் தன் சகோதரனைக்
கொல்லப்படுவதற்கு ஒப்புக்கொடுப்
பான், தகப்பனும் தன் பிள்ளையை
அப்படியே செய்வான். பெற்றோரை
எதிர்த்துப் பிள்ளைகள் எழுந்து அவர்
களைக் கொன்றுவிடும்படி செய்வார்கள்.
22 என் பெயரின் பொருட்டு நீங்கள்
எல்லாருடைய பகைக்கும் ஆளாவீர்கள்.
முடிவுமட்டும் நிலைநிற்பவனே மீட்புப்
பெறுவான். 23 அவர்கள் உங்களை இந்த
ஊரில் துன்புறுத்தும்போது வேறோர்
ஊருக்கு ஓடிப்போங்கள்; நான் உங்களுக்கு
உறுதியாகச் சொல்லுகிறேன்: மனுமைந்தர்
வருவதற்குள்ளாக நீங்கள் இஸ்ரவேலரின்
ஊர்களையெல்லாம் சுற்றி முடித்திருக்க
மாட்டீர்கள். 24 சீடன் குருவைவிடச் சிறந்
தவனல்ல. வேலைக்காரன் தலைவனைவிடச்
சிறந்தவனல்ல. 25 ஒருவேளை சீடன் தன்
குருவைப் போலவும், வேலைக்காரன் தன்
தலைவனைப்போலவும் ஆகலாம். வீட்டுத் தலை
வனையே பெயல்செபூல் என்று சொல்லும்
போது, அவனுடைய வீட்டாரை அப்படிச்
சொல்வது மிகவும் திண்ணமல்லவா?

### யாருக்கு அஞ்சுவது ?

(லூக். 12:2—7)

26 ''அதற்காக அவர்களுக்கு நீங்கள்
அஞ்ச வேண்டாம். ஏனெனில், வெளி
யாக்கப்படாத மறைசெய்தியுமில்லை; அறி
யப்படாத இரகசியமுமில்லை. 27 நான்
உங்களுக்கு இருட்டில் கூறுவதை நீங்கள்
வெளிச்சத்தில் எடுத்துச் சொல்லுங்கள்.
காதோடு காதாகப் பேசக் கேட்பதை
வீடுகளின்மேல் இருந்துகொண்டு அறிவியுங்
கள். 28 ஆன்மாவைக் கொல்ல வல்லமை
யற்றவர்களாய், உடலை மட்டும் கொல்லு
கிறவர்களைக் குறித்து அச்சங்கொள்ள
வேண்டாம். ஆன்மாவையும் உடலையும்
நரகத்தில் தள்ளி அழிக்க வல்லமையுள்ள
வருக்கே அஞ்சுங்கள். 29 காசுக்கு இரண்டு
அடைக்கலான் குருவிகள் விற்கிறார்கள்
அல்லவா? ஆயினும், உங்கள் தந்தை
யாருக்குத் தெரியாமல் அவற்றுள் ஒன்று
கூடத் தரையில் விழாது. 30 உங்கள் தலை
முடிகூட முற்றும் எண்ணப்பட்டிருக்கிறது.
31 ஆகையால் இனி நீங்கள் அஞ்சவே வேண்
டாம்; பல அடைக்கலான் குருவிகளைவிட
நீங்கள் மேலானவர்கள்.

### மனிதர்முன் கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளுதல்

(லூக். 12:8, 9)

32 ''மனிதர்முன் தன்னை என்னுடையவ
னென்று ஒப்புக்கொள்ளுகிற ஒவ்வொரு
வனையும் நானும் விண்ணுலகிலிருக்கிற
என் தந்தையின் முன்னிலையில் என்
னுடையவனென்று ஒப்புக்கொள்ளுவேன்.
33 தான் என்னுடையவன் என்பதை
மனிதர்முன் மறுக்கிறவன் எவனோ அவனை
நானும் விண்ணுலகிலிருக்கிற என் தந்தை
யின் முன்னிலையில் மறுப்பேன்.

### பிரிவினை ஏற்படுதல்

(லூக். 12:51—53; 14;26, 27)

34 ''உலகிற்குச் சமாதானத்தைக்
கொண்டு வருவதற்காக நான் வந்தேன்
என்று நினைக்க வேண்டாம், சமாதானத்தை
அன்று, வாளையே கொண்டுவருவதற்காக
வந்தேன். 35 மகனைத் தகப்பனுக்கும்,
மகளைத் தாய்க்கும், மருமகளை மாமிக்கும்
விரோதமாகப் பிரித்துவிட வந்தேன். 36 ஒரு
வனுக்கு அவனுடைய வீட்டாரே பகைஞ
ராயிருப்பர். 37 என்னை நேசிப்பதைவிடத்
தன் தகப்பனையோ தாயையோ மிகுதி
யாக நேசிப்பவன் என்னுடையவன் எனப்
படத் தகுதியற்றவன். என்னை நேசிப்பதை
விடத் தன் மகனையோ மகளையோ மிகுதியாக
நேசிப்பவனும் என்னுடையவன் எனப்படத்
தகுதியற்றவன். 38 தனக்குரிய சிலுவை
யைச் சுமக்காமலும், என்னைப் பின்பற்றி
வராமலும் இருக்கிறவன் என்னுடையவன்
எனப்படத் தகுதியற்றவன். 39 தன் வாழ்
வைத் தேடி அடைபவன் அதை இழப்பான்;
என்பொருட்டுத் தன் வாழ்வை இழப்பவனே
அதை அடைவான்.

### பலன் பெறுபவர் யார்?

(மாற். 9:41)

40 ''உங்களை ஏற்றுக்கொள்ளுகிறவன்
என்னை ஏற்றுக்கொள்ளுகிறான், என்னை
ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை அனுப்
பினவரை ஏற்றுக்கொள்ளுகிறான். 41 இறை
வாக்குரைப்பவர் ஒருவரை, அவர் இறை
வாக்குரைப்பவராய் இருப்பதை முன்னிட்டு
ஏற்றுக்கொள்ளுகிறவன், இறைவாக்குரைப்
பவருக்குரிய பலனைப் பெறுவான். நேர்மை
யானவர் ஒருவரை, அவர் நேர்மையான
வராய் இருப்பதை முன்னிட்டு ஏற்றுக்
கொள்ளுகிறவன் நேர்மையானவருக்குரிய
பலனைப் பெறுவான். 42 இச்சிறியவருள்
ஒருவனுக்கு, அவன் சீடனாயிருப்பதன்
பொருட்டு, குடிக்க ஒரு கிண்ணம் தண்ணீர்
எவன் கொடுக்கிறானோ அவனும் தன்
பலனைப் பெறுமற்போவதில்லை என்று உங்க
ளுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன்.''

**10:21** மாற். 13:12; லூக். 21:16. **10:22** மத். 24:9; மாற். 13:13; லூக். 21:17. **10:24** லூக். 6:40; யோ. 13:16; 15:20 **10:25** மத். 9:34; 12:24; **10:26** மாற். 4:22; லூக். 8:17. **10:28** எபி. 10:31; 1 பேது. 3:14; **10:33** 2 தீமோ. 2:12; திருவெளி. 3:5. **10:35, 36** மீகா. 7:6. **10:38** மத். 16:24; மாற். 8:34; லூக். 9:23. **10:39** மத். 16:25; மாற். 8:35; லூக். 9:24; 17:33; யோ. 12:25. **10:40** மாற். 9:37; லூக். 9:48; 10:16; யோ. 13:20.

11 இயேசு இவ்வாறெல்லாம் தம் சீடர்
பன்னிருவருக்கும் கட்டளையிட்டபின்,
அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு, சுற்றிலு
முள்ள ஊர்களில் போதிக்கவும் உரை
நிகழ்த்தவும் சென்றார்.

### திருமுழுக்குநர் யோவானிடமிருந்து வந்த தூதுவர்

(லூக். 7:18–35)

2 யோவான் சிறையிலிருக்கையில் கிறிஸ்
துவின் செயல்களைப்பற்றிக் கேள்விப்பட்டு
அவரிடம், 3 ''வரவேண்டியவர் நீர்தானா?
அல்லது வேறொருவரை நாங்கள் எதிர்
நோக்கியிருக்கவேண்டுமா?'' என்று தம்
சீடரை அனுப்பிக் கேட்டார். 4 இயேசு
அவர்களிடம், ''நீங்கள் கேட்கிறவற்றை
யும் பார்க்கிறவற்றையும் யோவானிடம்
போய் அறிவியுங்கள்; 5 குருடர்கள் பார்வை
யடைகிறார்கள், முடவர்கள் நடக்கிறார்கள்,
தொழுநோயுள்ளவர்கள் குணமடைகிறார்
கள், செவிடர்கள் கேட்கிறார்கள், இறந்த
வர்கள் உயிரோடெழுப்பப்படுகிறார்கள்,
எளியவருக்கு அருட்செய்தி அறிவிக்கப்
படுகிறது. 6 என்னை நம்புவதற்கு எவன்
எவ்வகைத் தடையும் காணாதிருக்கிறானோ
அவன் நற்பேறு பெற்றவன்'' என்று
சொன்னார்.

7 அவர்கள் திரும்பிப் போய்க்கொண்
டிருந்த வேளையில், இயேசு யோவானைக்
குறித்து மக்களிடம் இவ்வாறு கூறினார்:
''எதைப் பார்க்க நீங்கள் வனாந்தரத்திற்
குச் சென்றீர்கள்? காற்றினால் அசையும்
நாணலையா? 8 அல்லவென்றால் எதைப்
பார்க்கச் சென்றீர்கள்? மெல்லிய ஆடை
யணிந்த மனிதனையா? மெல்லிய ஆடை
யணிந்தவர்கள் அரச மாளிகைகளில்
அல்லவா இருக்கிறார்கள்? 9 அல்லவென்
றால் எதைப் பார்க்கச் சென்றீர்கள்?
இறைவாக்குரைப்பவரையா? ஆம், இறை
வாக்குரைப்பவரைவிட மேம்பட்டவரையே
என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

10 'இதோ, நான் என் தூதனை உமக்கு
முன்னால் அனுப்புகிறேன்;
அவன் உமக்கு முன்னால் சென்று,
உமக்கு வழியை ஆயத்தம் செய்வான்'
என்று எழுதியுள்ள வேதவாக்கியத்தில்
குறிக்கப்பட்டவர் இவரே. 11 தாயினிடம்
பிள்ளையாய்ப் பிறந்தவர்களுள் திருமுழுக்
குநர் யோவானைவிடப் பெரியவர் எவரும்
தோன்றினதில்லை; ஆயினும், விண்ணரசி
லுள்ள சிறியவனும் இவரைவிடப் பெரியவ
னென்று உங்களுக்கு உறுதியாகச் சொல்லு
கிறேன். 12 திருமுழுக்குநர் யோவான்
வந்தது முதல் இந்நாள்வரையிலும் விண்
ணுலக ஆட்சி *வல்லமையாகச் செயலாற்றி
வருகிறது; †அதை வலிமையுள்ளவர்கள்
எதிர்க்கிறார்கள். 13 அதைப்பற்றி யோவான்
வரும்வரை எல்லா இறைவாக்குரைப்
போராலும் நீதிச்சட்டத்தாலும் இறை
வாக்கு உரைக்கப்பட்டு வந்தது. 14 நான்
சொல்வதை ஏற்றுக்கொள்ள உங்களுக்கு
மனமுண்டானால், இதைக் கவனியுங்கள்:
வரவேண்டியவராகிய எலியா இவரே.
15 கேட்டுணரும் காதுள்ளவன் இதைக்
கவனித்துக்கொள்ளட்டும்.

16 ''இந்தத் தலைமுறையை எதற்கு
ஒப்பிடுவேன்? சந்தை வெளியில் உட்கார்ந்து
கொண்டு மறு கட்சியாரைப் பார்த்து,
17 'உங்களுக்குக் குழல் ஊதினோம்,
நீங்கள் கூத்தாடவில்லை;
ஒப்பாரி வைத்தோம், நீங்கள் மாரடிக்
கவில்லை'
என்று சொல்லுகிற பிள்ளைகளைப்போல
இருக்கிறார்கள். 18 யோவான் வந்தார்;
அவர் உணவும் பானமும் அருந்தவில்லை;
அவரைப் பேய் பிடித்தவன் என்று சொல்லு
கிறார்கள். 19 மனுமைந்தர் வந்தார்; அவர்
உணவும் பானமும் அருந்துகிறார். அவர்கள்,
'பாருங்கள், இந்த மனிதன் பெருந்தீனிக்
காரன், குடிகாரன், ‡ஆயக்காரருக்கும்
பாவிகளுக்கும் தோழன்' என்று சொல்லு
கிறார்கள். தெய்வஞானம் நியாயமான
தென்பது அதன் செயல்களால் காட்டப்
படுகிறது.''

### மனமாற்றமடையாத ஊராரைக் கேடு சூழும்

(லூக். 10:13–15)

20 இயேசு, தம்முடைய வல்லமைச்
செயல்களுள் பெரும்பாலானவை செய்
யப்பட்ட ஊர்கள் மனமாற்றம் அடை
யாமற் போனதால், அவற்றைக் கடிந்து
கொண்டார்.

21 ''கொராசீனே, உனக்குக் கேடு
வரும்; பெத்சாயிதாவே, உனக்குக் கேடு
வரும். உங்களில் செய்யப்பட்ட வல்ல
மைச் செயல்கள் தீருவிலும் சீதோனிலும்
செய்யப்பட்டிருந்தால், அவர்கள் முன்னமே
முரட்டுத் துணியும் சாம்பலும் அணிந்து¶
மனமாற்றம் அடைந்திருப்பார்கள்.
22 இறுதித் தீர்ப்பு நாளில் தீருவுக்கும்

* 'வல்லமையாகத் தாக்கப்படுகிறது' என்றும் மொழிபெயர்க்கலாம்.

† 'ஆர்வமுள்ளவர்கள் அதைக் கைவசப் படுத்திக்கொள்ளுகிறார்கள்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

‡ மத். 5:46 அடிக்குறிப்பைப் பார்க்க.

¶ முரட்டுத் துணியும் சாம்பலும் அணிதல்: தன்னை ஒறுத்து மன வருத்தம் அடைதல்.

**11:5** ஏசா. 35:5, 6; 61:1. **11:10** மலா. 3:1. **11:12, 13** லூக். 16:16. **11:14** மலா. 4:5; மத். 17:10-13; மாற். 9:11-13.

சீதோனுக்கும் நேரிடுவது உங்களுக்கு நேரிடு
வதைவிடத் தாங்கக்கூடிய்தாய் இருக்கும்
என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். 23 கப்
பர் நகூமே, நீ வானம் வரைக்கும் உயர்த்தப்
படப் போகிருயோ? இல்லை, பாதாளம்
வரைக்கும் தாழ்த்தப்படுவாய். உன்னில்
செய்யப்பட்ட வல்லமைச் செயல்கள்
சோதோமில் செய்யப்பட்டிருந்தால், இந்
நாள் வரையிலும் அது நிலைத்திருக்குமே.
24 இறுதித் தீர்ப்பு நாளில் சோதோம்
நாட்டுக்கு நேரிடுவது உனக்கு நேரிடுவதை
விடத் தாங்கக் கூடியதாய் இருக்கும் என்று
உனக்குச் சொல்லுகிறேன்'' என்ருர்.

### நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன்

(லூக். 10 : 21, 22)

25 அந்நேரத்தில் இயேசு இவ்வாறு
சொன்னுர் : ''தந்தையே, விண்ணுக்கும்
மண்ணுக்கும், ஆண்டவரே, இவற்றை
ஞானிகளுக்கும் விவேகிகளுக்கும் மறை
வாக்கி, பாலகரைப் போன்றவர்களுக்கு
வெளிப்படுத்தினபடியால் உம்மைப் புகழ்ந்து
போற்றுகிறேன். 26 ஆம், தந்தையே,
இதுவே உமது திருவுளம். 27 எல்லாம்
என் தந்தையினுல் என்னிடம் ஒப்புவிக்கப்
பட்டிருக்கின்றன; மைந்தரைத் தந்தை
தவிர வேறு யாரும் அறியான்; தந்தையை
மைந்தரும், மைந்தர் எவனுக்குத் தந்தையை
வெளிப்படுத்தத் திருவுளங்கொள்கிருரோ
அவனும் தவிர வேறு எவனும்அறியான்.
28 அழுத்தும் சுமை சுமந்து சோர்வுற்
றிருப்பவர்களே, நீங்கள் எல்லாரும் என்னி
டம் வாருங்கள்; நான் உங்களுக்கு இளைப்
பாறுதல் தருகிறேன். 29 நான் சாந்தமும்
மனத்தாழ்மையும் உள்ளவனுயிருக்கிறேன்;
ஆகையால் என் நுகத்தை உங்கள்மேல்
ஏற்றுக்கொண்டு என்னிடம் கற்றுக்கொள்
ளுங்கள்; உங்கள் ஆன்மாவுக்கு இளைப்பாறு
தல் கிடைக்கும்; 30 என் நுகம் இசைவாக
அமைவது, என் சுமை பளுவற்றது.''

### ஓய்வுநாளில் கதிர் கொய்தல்

(மாற். 2 : 23—28; லூக். 6 : 1—5)

12 அக்காலத்தில் இயேசு ஓர் ஓய்வு
நாளன்று வயல் வழியே போனுர்.
அப்பொழுது அவருடைய சீடர்கள் பசி
யோடிருந்ததால், அவர்கள் கதிர்களைக்
கொய்து தின்னத் தொடங்கினுர்கள்.
2 பரிசேயர்கள் அதைக் கண்டபோது அவ
ரிடம், ''இதோ பாரும், ஓய்வுநாளில் செய்
யத்தகாததை உம்முடைய சீடர்கள் செய்
கிருர்களே'' என்றுசொன்னுர்கள். 3அதற்கு
அவர், ''தாவீதும் அவருடனிருந்தவர்களும்
பசியோடிருந்தபோது அவர் செய்ததைக்
குறித்து நீங்கள் படித்ததில்லையா? 4 அவர்
கடவுளின் வீட்டிற்குள் சென்றபோது,
ஆசாரியர் தவிர வேறெவரும் உண்ணக்
கூடாத படையல் அப்பங்களை அவரும்
அவருடனிருந்தவர்களும் உட்கொண்டார்
களே. 5 அல்லது ஓய்வுநாள்களில் ஆசாரி
யர் கோவிலில் வேலை செய்து, ஓய்வுநாள்
விதிகளை மீறினுலும், அவர்கள் குற்றமற்றவர்
கள் என்பதையாவது நீங்கள் நீதிச்சட்ட
நூலில் படித்ததில்லையா? 6 *கோவிலைவிடப்
பெரியவர் இங்கே இருக்கிருர் என்று நான்
உங்களுக்குச் சொல்லுகிறேன். 7 'பலியை
அன்று இரக்கத்தையே விரும்புகிறேன்'
என்பதன் கருத்து இன்னதென்பதை நீங்கள்
அறிந்திருந்தால், குற்றமற்றவர்களைக்
குற்றப்படுத்தியிருக்க மாட்டீர்கள். 8 ஓய்வு
நாளுக்கு ஆண்டவர் மனுமைந்தரே''
என்ருர்.

### சூம்பின கையன் குணமடைதல்

(மாற். 3:1—6; லூக். 6:6—11)

9 இயேசு அவ்விடம் விட்டகன்று அவர்
களுடைய தொழுகைக்கூடத்திற்குப்
போனுர். 10 அங்கே சூம்பின கையன்
ஒருவன் இருந்தான். சிலர் அவர்மீது
குற்றம் சுமத்தும் நோக்கத்தோடு, ''ஓய்வு
நாளில் குணமாக்குவது முறையாகுமா?''
என்று அவரைக் கேட்டார்கள். 11 அதற்கு
அவர், ''உங்களுள் எந்த மனிதனுவது
தன்னுடைய ஆடு ஓய்வுநாளில் குழியில்
தவறி விழுந்துவிட்டால், அதைத் தூக்கி
யெடாமல் இருப்பானு? 12 ஆட்டைவிட
மனிதன் எவ்வளவோ மேலானவன். ஆகை
யால் ஓய்வுநாளில் நன்மை செய்வது
முறையே'' என்று சொன்னுர். 13 பிறகு
அந்த மனிதனை நோக்கி, ''உன் கையை
நீட்டு'' என்ருர். அவன் நீட்டினுன்; அது
மீண்டும் நலம்பெற்று மறு கையைப்
போலாயிற்று. 14 பரிசேயரோ வெளியே
போய், அவரைக் கொன்றுவிடுவதற்காகச்
சதித்திட்டமிட்டனர்.

### தேர்ந்துகொள்ளப்பட்ட தாசர்

15 இயேசு அதை அறிந்து அவ்விடத்தை
விட்டுப் புறப்பட்டார். பலர் அவருக்குப்
பின்னுல் சென்றனர். அவர்களெல்லாரை
யும் அவர் குணமாக்கினுர். 16 அவர் தம்
மைப் பற்றி யாரிடமும் சொல்லக்கூடா
தென்று அவர்களுக்குக் கண்டிப்பாகக் கட்
டளையிட்டார். 17 இறைவாக்குரைப்பவ
ராகிய ஏசாயா மூலமாக உரைக்கப்பட்டது

* மூலத்தில் இதன் நேர்ப்பொருள், 'இங்கே இருப்பது கோவிலைவிடப் பெரியது' என்பது.

11:27 யோ. 3:35; 1:18; 10:15. 11:29 எரே. 6:16; கலா. 5:1. 12:1 உபா. 23:25. 12:3, 4 1 சாமு. 21:1-4; இலே. 24:9. 12:5 எண். 28:9, 10. 12:7 1 சாமு. 15:22; ஓசே. 6:6. 12:10 லூக். 20:20. 12:11 லூக். 14:5.

இவ்வாறு நிறைவேறிற்று. அவர் உரைத்
ததாவது:

18 ''இதோ, நான் தேர்ந்துகொண்ட
என் தாசர்,
இவரே என் அன்பர், எனக்கு உகந்தவர்.
இவர்மீது என் ஆவியை அமரச் செய்வேன்;
இவர் எல்லா நாட்டினருக்கும் என்
தீர்ப்பை அறிவிப்பார்.
19 இவர் வாக்குவாதம் செய்யமாட்டார்,
கூக்குரலிடவுமாட்டார்;
இவர் வீதிகளில் குரலெழுப்புவதில்லை.
20 நியாயத்தை வெற்றிபெறச் செய்
யும்வரை,
இவர் நெரிந்த நாணலை முறியார்,
மங்கி எரிகிற திரியை அணையார்.
21 எல்லா நாட்டினரும் இவரது திருப்
பெயரையே தங்கள் நம்பிக்கையாகக்
கொண்டிருப்பர்'' என்பது.

### இயேசுவும் பெயல்செபூலும்

(மாற். 3:20-30; லூக் 11:14-23; 12:10)

22 பிறகு பேய்பிடித்த ஒருவன் அவரிடம்
கொண்டுவரப்பட்டான். அவன் குருடனும்
ஊமையனுமாயிருந்தான். அந்த ஊமையனை
அவர் குணமாக்கவே, அவன் பேசினான்,
பார்வை பெற்றான். 23 அங்கிருந்த கூட்டத்
தினர் எல்லாரும் திகைத்துப்போய், ''இவர்
தாவீதின் மைந்தராயிருப்பாரோ'' என்று
பேசிக்கொண்டனர். 24 பரிசேயர் அதைக்
கேட்டு, ''அப்படியன்று, இவன் பேய்களின்
தலைவனாகிய பெயல்செபூலைக் கொண்டுதான்
பேய்களை ஓட்டுகிறான்'' என்றனர். 25 அவர்
களுடைய எண்ணங்களை அவர் அறிந்து
அவர்களைப் பார்த்து, ''ஒன்றையொன்று
எதிர்த்துத் தன்னையே அழிக்கக்கூடிய பிரிவு
களுள்ள எந்த அரசும் பாழாய்ப் போகும்;
ஒன்றையொன்று எதிர்த்துத் தன்னையே
அழிக்கக்கூடிய பிரிவுகளுள்ள எந்த ஊரும்
அல்லது எந்தக் குடும்பமும் நிலைத்திருக்காது.
26 சாத்தானைச் சாத்தான் ஓட்டுகிறானென்
றால், அவன் தன்னைத்தானே எதிர்த்துத்
தாக்குகிறவனாவான். அப்படியானால்
அவனுடைய அரசு எப்படி நிலைத்திருக்கும்?
27 நான் பெயல்செபூலைக் கொண்டு பேய்களை
ஓட்டுகிறேனென்றால், உங்கள் மக்கள்
அவற்றை யாரைக்கொண்டு ஓட்டுகிறார்கள்?
எனவே, நீங்கள் சொல்வது தவறு என்று
அவர்களே தீர்ப்பளிப்பார்கள். 28 நான்
கடவுளின் ஆவியைக் கொண்டே பேய்களை
ஓட்டுவதால், கடவுளின் அரசு உங்களிடையே
வந்துள்ளது என்பது உறுதி. 29 வலியவனை
முதலில் கட்டிவிட்டாலன்றி எப்படி
ஒருவன் அந்த வலியவனுடைய வீட்டுக்குள்
நுழைந்து அவனுடைய பொருள்களைக்
கொள்ளையிட இயலும்? அவனைக் கட்டிவிட்ட
பிறகுதான் அவனுடைய வீட்டைக் கொள்ளை
யிடுவான். 30 என்னோடு இராதவன்
எனக்கு எதிரியாய் இருக்கிறான்; என்னோடு
சேர்ந்துகொண்டு ஒன்றுகூட்டாதவன் சிதற
டிக்கிறான். 31 ஆகையால், நான் உங்க
ளுக்குச் சொல்லுகிறேன், எந்தப் பாவமும்
எந்தப் பழிப்புரையும் மனிதருக்கு மன்னிக்
கப்படும்; ஆனால் ஆவியானவரைப்பற்றிய
பழிப்புரையோ மன்னிக்கப்படமாட்டாது.
32 மனுமைந்தருக்கு விரோதமாக யாரா
வது ஒரு வார்த்தை பேசினால், அது அவ
னுக்கு மன்னிக்கப்படும்; ஆனால் எவன்
தூய ஆவிக்கு விரோதமாகப் பேசுகிறானோ
அவனுக்கு அது இந்த யுகத்திலும் இனி வரப்
போகும் யுகத்திலும் மன்னிக்கப்பட
மாட்டாது.

### மரமும் கனியும்

(லூக்.6 : 43–45)

33 ''மரம் நல்லது என்றால், கனியும்
நல்லதாயிருக்கும்; மரம் கெட்டது என்றால்,
கனியும் கெட்டதாயிருக்கும். மரம் தன்
கனியினால் அறியப்படும். 34 விரியன் பாம்
பின் குட்டிகளே, நீங்களே பொல்லாதவர்
களாய் இருக்கும்போது, நலமானவற்றை
உங்களால் எப்படிப் பேச இயலும்?
உள்ளத்தில் நிறைந்துள்ளதையே வாய்
பேசும். 35 நல்ல மனிதன் நல்ல களஞ்சியத்தி
லிருந்து நல்லவற்றை எடுத்து அளிக்
கிறான்; பொல்லாத மனிதன் பொல்லாத
களஞ்சியத்திலிருந்து பொல்லாதவற்றை
எடுத்து அளிக்கிறான். 36 மனிதர் பேசும்
ஒவ்வொரு வீண் வார்த்தைக்கும் இறுதித்
தீர்ப்பு நாளில் அவர்கள் கணக்குக்
கொடுக்க வேண்டுமென்று உங்களுக்குச்
சொல்லுகிறேன். 37 நீ குற்றமற்றவன்
என்று தீர்ப்புப் பெறுவதும் உன் சொற்க
ளாலேதான்; நீ குற்றவாளி என்று தீர்ப்புப்
பெறுவதும் உன் சொற்களாலேதான்''
என்றார்.

### அற்புத அத்தாட்சி கேட்டல்

(மாற். 8:11, 12; லூக். 11:29–32)

38 அதைக் கேட்டு, வேத அறிஞர்
சிலரும் பரிசேயர் சிலரும் அவரை நோக்கி,
''போதகரே, நீர் எங்களுக்கு உம்மைப்
பற்றிய அற்புத அத்தாட்சி ஒன்று காட்ட
வேண்டுமென்று விரும்புகிறோம்'' என்றனர்.
39 அதற்கு அவர், ''பொல்லாததும்
நம்பிக்கையற்றதுமான சமுதாயந்தான்
அற்புத அத்தாட்சி தேடும். அதற்கு
இறைவாக்குரைப்பவராகிய யோனாவின்
அத்தாட்சியைத் தவிர வேறு அத்தாட்சி

**12:18-21** ஏசா. 42:1-4. **12:24** மத். 9:34; 10:25. **12:30** மாற். 9:40; லூக். 11:23. **12:32** லூக். 12:10. **12:33** மத். 7:20; லூக். 6:44. **12:34** மத். 15;18 லூக். 6:45. **12:38** மத். 16:1. மாற். 8:11; லூக். 11:16. **12:39** மத். 16:4; மாற். 8:12.

கொடுக்கப்படுவதில்லை. 40 எவ்வாறு யோனு
மூன்று நாள் அல்லும் பகலும் திமிங்கிலத்
தின் வயிற்றில் இருந்தாரோ, அவ்வாறே
மனுமைந்தரும் மூன்று நாள் அல்லும்
பகலும் பூமிக்குள்ளே இருப்பார். 41 இறுதித்
தீர்ப்பின்போது நினிவே பட்டணத்து
மக்கள் இக்காலத்து மக்களோடு தாங்களும்
எழுந்து நின்று, இவர்கள்மேல் குற்றம்
சுமத்துவார்கள். ஏனெனில், அவர்கள்
யோனு அறிவித்த செய்தியைக் கேட்டு
மனமாற்றம் அடைந்தவர்கள். இதோ,
இங்கே இருப்பவர் யோனுவை விடப்
பெரியவர்.* 42 இறுதித் தீர்ப்பின்போது
தென்னாட்டு அரசி இக்காலத்து மக்களோடு
தானும் எழுந்து நின்று இவர்கள்மேல் குற்றம்
சுமத்துவாள். ஏனெனில், இவள் உலகின்
கடைமுனையிலிருந்து சாலொமோனின்
ஞானத்தைக் கேட்க வந்தவள், இங்கே
இருப்பவர் சாலொமோனைவிடப் பெரியவர்†

## அசுத்த ஆவி திரும்பி வருதல்
(லூக். 11:24-26)

43 ''அசுத்த ஆவி ஒன்று ஒருவனை விட்டு
வெளியேறியபின், வறண்ட இடங்களில்
அலைந்து திரிந்து இளைப்பாறுமிடம் தேடியும்
அதைக் கண்டுபிடிக்காவிடில், 44 'நான்
விட்டுவந்த என் வீட்டுக்கே திரும்பிப்
போவேன்' என்று சொல்லும்; பிறகு
வந்து, அவ்வீடு காலியாயிருப்பதையும்
பெருக்கி அழகாக வைக்கப்பட்டிருப்
பதையும் கண்டு, 45 திரும்பிப் போய்த்
தன்னைவிடப் பொல்லாத வேறு ஏழு
ஆவிகளைத் தன்னோடு கூட்டிக்கொண்டு
வந்து, உட்புகுந்து, அங்கே குடியிருக்கும்.
அப்பொழுது அந்த மனிதனுடைய பின்
னிலைமை முன்னிலைமையைவிடக் கேடுள்ள
தாகும். இந்தப் பொல்லாத சமுதாயத்
துக்கும் இப்படியே நடக்கும்'' என்றார்.

## இயேசுவின் உண்மையான உறவினர்
(மாற். 3:31–35; லூக். 8:19–21)

46 அவர் மக்களோடு தொடர்ந்து
பேசிக்கொண்டிருக்கையில், அவருடைய
தாயாரும் சகோதரரும் வந்து அவரோடு
பேச வேண்டுமென்று வெளியே நின்று
கொண்டிருந்தார்கள். 47 ஒருவன் அவரி
டம், ''அதோ, உம்முடைய தாயாரும்
உம்முடைய சகோதரரும் உம்மோடு பேச
வேண்டுமென்று வெளியே நின்றுகொண்
டிருக்கிறார்கள்'' என்று சொன்னான்.
48 அவரோ தம்மிடம் இப்படிச் சொன்ன
வனைப் பார்த்து, ''என் தாயார் யார்?
என் சகோதரர் யார்?'' என்று கேட்டார்.
49 பிறகு தம் சீடருக்கு நேரே கையை
நீட்டி, ''இதோ, என் தாயும் என் சகோ
தரரும். 50 விண்ணுலகிலிருக்கிற என்
தந்தையின் திருவுளத்தை யார் நிறை
வேற்றுகிறாரோ அவரே எனக்குச் சகோ
தரன், எனக்குச் சகோதரி, எனக்குத்
தாய்'' என்று சொன்னார்.

## விதை விதைப்பவன்
(மாற். 4 : 1–9; லூக். 8 : 4–8)

13 அதே நாளில் இயேசு வீட்டை விட்டு
வெளியே போய்க் கடலோரத்தில்
உட்கார்ந்தார். 2 மக்கள் கூட்டங்கூட்ட
மாய் வந்து அவரைச் சூழ்ந்துகொண்ட
படியால், அவர் ஒரு படகில் ஏறி அமர்ந்
தார். மக்களெல்லாரும் கரையில் நின்ற
னர். 3 அவர் உவமைகள் மூலமாகப் பல
காரியங்களை அவர்களுக்குச் சொன்னார் :

4 ''விதைப்பவன் ஒருவன் விதைவிதைக்கச்
சென்றான். அவன் விதைக்கையில் சில
விதைகள் பாதையில் விழுந்தன. பறவைகள்
வந்து அவற்றைத் தின்றுவிட்டன. 5 சில
விதைகள், மண் மிகுதியாய் இல்லாத
கற்பாறை நிலத்தில் விழுந்தன. அங்கே
மண் ஆழமாய் இல்லாததால் அவை விரை
வில் முளைத்தன; 6 வெயில் ஏறினபோதோ
வாடி வதங்கி, வேரில்லாமையால் உலர்ந்து
போயின. 7 சில விதைகள் முட்செடி
களினிடையே விழுந்தன. முட்செடிகள்
வளர்ந்து அவற்றை நெருக்கிவிட்டன.
8 சில விதைகள் நல்ல நிலத்திலும் விழுந்
தன; அவற்றுள் சில நூறு மடங்காயும்,
சில அறுபது மடங்காயும், சில முப்பது
மடங்காயும் பலன் தந்தன. 9 கேட்டுணரும்
காதுள்ளவன் இதைக் கவனித்துக்கொள்
ளட்டும்'' என்றார்.

## இயேசு உவமைகள் மூலமாகப் பேசியதன் நோக்கம்
(மாற். 4:10–12; லூக். 8:9, 10)

10 சீடர்கள் அவரை அணுகி, ''ஏன்
அவர்களோடு உவமைகள் மூலமாகப் பேசு
கிறீர்?'' என்று கேட்டார்கள். 11 அதற்கு
அவர், ''விண்ணரசின் மறைசெய்திகளை
அறியும் நற்பேறு உங்களுக்கு அருளப்
பட்டிருக்கிறது; அவர்களுக்கோ அது
அருளப்படவில்லை. 12 உள்ளவனுக்கே
கொடுக்கப்படும்; தேவைக்கு மேலும் அவன்
பெறுவான். இல்லாதவனிடமிருந்தோ உள்
ளதும் எடுத்துக்கொள்ளப்படும். 13 அவர்கள்
கண்டும் காணாதவர்களாயும், கேட்டும்

* மூலத்தில் இருப்பதன் நேர்ப்பொருள், 'இங்கே இருப்பது யோனுவைவிடப் பெரியது' என்பது.
† மூலத்தில் இருப்பதன் நேர்ப்பொருள், 'இங்கே இருப்பது சாலொமோனைவிடப் பெரியது' என்பது.

12:40 யோனு. 1:17. 12:41 யோனு. 3:5. 12:42 1 அர; 10:1-10; 2 வரலாறு. 9:1-12. 13:12 மத். 25;29; மாற். 4:25; லூக். 8:18; 19:26.

கேளாதவர்களாயும், உணர்ந்துகொள்ளாத
வர்களாயும் இருக்கிறபடியால், நான்
உவமைகள் மூலமாக அவர்களோடு பேசு
கிறேன். 14 ஏசாயா உரைத்த இறை
வாக்கு அவர்களிடம் நிறைவேறுகிறது.
ஆண்டவர் அவரிடம் சொன்னதாவது :

'நீங்கள் கேட்டுக்கேட்டு வந்தாலும்
உணர்வதில்லை,
பார்த்துப் பார்த்து வந்தாலும் காண்ப
தில்லை.
15 இந்த மக்களுடைய உள்ளம் மழுங்கி
விட்டது;
இவர்களுடைய செவி மந்தமாயிற்று,
இவர்கள் தங்கள் கண்களை மூடிக்
கொண்டார்கள்.
இல்லாவிடில், ஒருவேளை இவர்கள்
கண்ணால் கண்டு, காதால் கேட்டு,
உள்ளத்தால் உணர்ந்து, என் பக்கம்
திரும்பலாம்; அப்படித் திரும்பினால்
நான் இவர்களைக் குணப்படுத்துவேன்'

என்பதே. 16 ஆனால் உங்கள் கண்களோ
நற்பேறு பெற்றவை; அவை காண்கின்
றன. உங்கள் காதுகளும் நற்பேறு பெற்
றவை. அவை கேட்கின்றன. 17 இறை
வாக்குரைப்போர், நேர்மையானோர் ஆகி
யோருள் பலர் நீங்கள் காண்கிறவற்றைக்
காண விரும்பியும் காணாதுபோயினர்;
நீங்கள் கேட்கிறவற்றைக் கேட்க விரும்பியும்
கேளாதுபோயினர் என்று உங்களுக்குத்
திட்டமாகச் சொல்லுகிறேன்.

### விதைப்பவன் உவமையின் விளக்கம்

*(மாற். 4:13–20; லூக். 8:11–15)*

18 "ஆகையால், விதைப்பவன் உவமை
யைக் கவனித்துக் கேளுங்கள். 19 அருளாட்
சியின் செய்தியை ஒருவன் கேட்டும்
அதை அவன் புரிந்துகொள்ளாமலிருக்கும்
போது, தீயோன் வந்து அவனுடைய
உள்ளத்தில் விதைக்கப்பட்டதைப் பறித்
துக்கொள்ளுகிறான்; இவன்தான் பாதை
யில் விதைக்கப்பட்டவன். 20 கற்பாறை
நிலங்களில் விதைக்கப்படுகிறவன் தெய்வ
வார்த்தையைக் கேட்டு அதை உடனே
மகிழ்ச்சியோடுஏற்றுக்கொள்கிறவன்.21இவ
னுக்குள் அது வேர் கொள்வதில்லை; ஆகை
யால், இவன் சிறிது காலமட்டும் நிலைத்து
நின்று, தெய்வ வார்த்தை காரணமாக
வேதனையும் துன்பமும் உண்டானவுடனே
இடறி விழுகிறான். 22 முட்செடிகளுள்ள
இடங்களில் விதைக்கப்படுகிறவன் தெய்வ
வார்த்தையைக் கேட்கிறான்; ஆயினும்,
உலகக் கவலையும், செல்வத்தின் வஞ்சகமும்
தெய்வ வார்த்தையை நெருக்கிவிடுகிற
தனால், அது பலனற்றுப்போகிறது.
23 நல்ல நிலத்தில் விதைக்கப்படுகிறவனோ
தெய்வ வார்த்தையைக் கேட்டுப் புரிந்து
கொள்ளுகிறான்; இவன் நூறு மடங்
காய், அறுபது மடங்காய், முப்பது
மடங்காய்ப் பலன் தருகிறான்" என்றார்.

### கோதுமையும் களைகளும்

24 அவர் வேறோர் உவமையையும்
அவர்களுக்கு எடுத்துரைத்தார். "விண்
ணரசு, தன் வயலில் நல்ல கோதுமை
விதையை விதைத்த மனிதனுக்கு ஒப்பா
யிருக்கிறது. 25 எல்லாரும் தூங்குகையில்
அவனுடைய பகைவன் வந்து கோதுமை
யிடையே களைகளை விதைத்துவிட்டுப்
போனான். 26 பயிர் வளர்ந்து கதிர்விட்ட
போது, களைகளும் காணப்பட்டன.
27 வீட்டுத் தலைவனிடம் அவனுடைய வேலை
யாள்கள் வந்து, 'ஐயா, நீர் உமது வயலில்
கோதுமை விதையையல்லவா விதைத்தீர்?
அதில் களைகள் எப்படி வந்தன?' என்று
கேட்டார்கள். 28 அதற்கு அவன், 'என்
பகைவன் ஒருவன் இப்படிச் செய்துவிட்
டான்' என்று சொல்ல, வேலையாள்கள்,
'அப்படியானால் நாங்கள் போய் அவற்றைப்
பறித்தெடுக்க வேண்டுமென்பது உம்
முடைய விருப்பமா?' என்று கேட்டார்கள்.
29 அதற்கு அவன், 'வேண்டாம், களை
களைப் பறித்தெடுக்கும்போது ஒரு வேளை
நீங்கள் கோதுமையையும் அவற்றோடு சேர்த்
துப் பிடுங்கிவிடுவீர்கள். 30 ஆகையால் அறு
வடை வரை இரண்டையும் வளரவிடுங்கள்.
அறுவடைக் காலத்தில் நான் அறுவடை
யாள்களிடம், முதலில் களைகளைப் பறித்
தெடுத்து, எரிப்பதற்கென்று அவற்றைக்
கட்டுகளாகக் கட்டுங்கள்; பிறகு கோது
மையை என் களஞ்சியத்தில் சேர்த்துவையுங்
கள் எனச் சொல்லுவேன்' என்றான்" என்று
சொன்னார்.

### கடுகு விதை

*(மாற். 4:30–32; லூக். 13:18, 19)*

31 வேறோர் உவமையையும் அவர்களுக்கு
எடுத்துரைத்தார். "விண்ணரசு கடுகு
விதைக்கு ஒப்பாயிருக்கிறது. ஒருவன் அதை
எடுத்துத் தன் நிலத்தில் விதைக்கிறான்.
32 அவ்விதை எல்லா விதைகளையும்விடச்
சிறியதுதான்; ஆயினும், அது வளரும்
போது மற்றெல்லாச் செடிகளையும்விடப்
பெரிதாகி, வானத்துப் பறவைகள் வந்து
அதன் கிளைகளில் தங்கும் அளவிற்கு ஒரு
*மரமாகிறது" என்றார்.

### புளிப்பு மாவு

*(லூக். 13:20, 21)*

33 வேறோர் உவமையையும் அவர்களுக்கு
எடுத்துரைத்தார். "விண்ணரசு புளிப்பு

* இங்கே குறிக்கப்படுவது பலஸ்தீன நாட்டில் வளரும் ஒருவகைக் கடுகு மரம்.
13:14, 15 ஏசா. 6:9,10; யோ. 12:40; திருத்தூது. 28:26. 13:16, 17 லூக். 10:23, 24; திருத்தூது. 22:15; 1 பேது. 1:12. 13:32 எசே. 17:23.

மாவுக்கு ஒப்பாயிருக்கிறது. ஒரு பெண் புளிப்பு மாவை எடுத்து மூன்று படி மாவுக்குள் புதைத்து வைக்கிறாள்; அதனால் அந்த மாவு முழுதும் புளித்துப்போகிறது'' என்றார்.

### இயேசு உவமைகளைப் பயன்படுத்தியதேன்?

*(மாற். 4:33, 34)*

34 இவற்றையெல்லாம் இயேசு மக்களுக்கு இப்படி உவமைகள் மூலமாகச் சொன்னார்; உவமைகள் இல்லாமல் அவர் அவர்களோடு எதையும் பேசவில்லை.

35 ''என் நாவினால் உவமைகளை உரைப்பேன்,
உலகத் தோற்றமுதல் மறைந்திருக்கிறவற்றை விவரிப்பேன்''

என்று இறைவாக்குரைப்பவர் உரைத்தது இவ்வாறு நிறைவேறிற்று.

### கோதுமையும் களைகளும்: இந்த உவமையின் விளக்கம்

36 பிறகு இயேசு மக்களை அனுப்பிவிட்டு வீட்டுக்கு வந்தார். அவருடைய சீடர்கள் அவரை அணுகி, ''வயலில் களைகள் என்னும் உவமையை எங்களுக்குத் தெளிவுபடுத்த வேண்டும்'' என்று கேட்டார்கள். 37 அதற்கு அவர், ''நல்ல கோதுமை விதையை விதைக்கிறவர் மனுமைந்தர். 38 வயல் இவ்வுலகம். கோதுமை விதை அருளாட்சியின் மைந்தர்கள். களைகள் தீயோனின் மைந்தர்கள். 39 அவற்றை விதைக்கும் பகைவன் பிசாசு. அறுவடை யுக முடிவு. அறுவடையாள்கள் தெய்வதூதர். 40 எவ்வாறு களைகளை ஒன்றுய்ச் சேர்த்து நெருப்பில் எரிக்கிறார்களோ, அவ்வாறே யுக முடிவிலும் நடக்கும். 41 மனுமைந்தர் தம் தூதரை அனுப்புவார். மனிதர் பாவக் குழியில் இடறி விழுவதற்குக் காரணமாயிருக்கிற யாவற்றையும், நேர்மையற்ற செயல்களைச் செய்கிற யாவரையும், அவர்கள் அவருடைய அரசினின்று பிரித்து ஒன்றுய்ச் சேர்த்து நெருப்புச் சூளையில் போட்டுவிடுவார்கள். 42 அங்கே அழுகையும் புலம்பலும் இருக்கும். 43 அவ்வேளையில் நேர்மையானவர்கள் தங்கள் தந்தையாரின் அரசில் கதிரவனைப்போல ஒளிவீசிக்கொண்டிருப்பார்கள். கேட்டுணரும் காதுள்ளவன் இதைக் கவனித்துக் கொள்ளட்டும்.

### மூன்று உவமைகள்

#### (1) புதையல்

44 ''விண்ணரசு நிலத்தில் மறைந்திருக்கும் புதையலுக்கு ஒப்பாயிருக்கிறது. புதையலை ஒருவன் காண்கிறான்; கண்டதும் அதை மறைத்து வைத்துவிட்டு, தனக்குண்டாகும் மகிழ்ச்சியினால் புறப்பட்டுப் போய்த் தனக்குள்ள யாவற்றையும் விற்று அந்த நிலத்தை வாங்கிக்கொள்ளுகிறான்.

#### (2) முத்து

45 ''மேலும், விண்ணரசு நல்ல முத்துகளை நாடிச் செல்லுகிற வாணிகனுக்கு ஒப்பாயிருக்கிறது. 46 அவன் விலையுயர்ந்த ஒரு முத்தைக் கண்டதும், உடனே போய்த் தனக்குள்ள யாவற்றையும் விற்று அதை வாங்கிக்கொள்ளுகிறான்.

#### (3) வலை

47 ''மேலும், விண்ணரசு கடலில் வீசப்பட்டு எல்லா வகையான மீன்களையும் வாரிக்கொள்ளும் வலைக்கு ஒப்பாயிருக்கிறது. 48 அந்த வலை நிறைந்ததும் அதைக் கரைக்கு இழுத்து, கீழே உட்கார்ந்து, நல்லவற்றைக் கூடைகளில் சேர்ப்பார்கள்; பயனில்லாதவற்றை வெளியே எறிந்துவிடுவார்கள். இவ்வாறே யுக முடிவிலும் நடக்கும். 49 தெய்வதூதர் புறப்பட்டுவந்து, பொல்லாதவர்களை நேர்மையானவர்களினின்று பிரித்து, 50 அவர்களை நெருப்புச் சூளையில் போட்டுவிடுவார்கள். அங்கே அழுகையும், பற்கடிப்பும் இருக்கும்'' என்று சொன்னார்.

51 ''இவற்றையெல்லாம் புரிந்துகொண்டீர்களா?'' என்று அவர் கேட்க, அவர்கள், ''ஆம்'' என்றார்கள். 52 அவர் அவர்களிடம், ''இப்படியிருக்கிறபடியால், விண்ணரசில் இருப்பதற்கென்று பயிற்சி பெற்ற ஒவ்வொரு வேத அறிஞனும், தன் வீட்டறையிலிருந்து புதியதையும் பழையதையும் எடுத்துக் கொடுக்கும் வீட்டுத் தலைவனுக்கு ஒப்பாயிருக்கிறான்'' என்றார்.

### நாசரேத்தில் இயேசு புறக்கணிக்கப்படுதல்

*(மாற். 6:1–6; லூக். 4:16–30)*

53 இந்த உவமைகளைச் சொல்லி முடித்த பிறகு இயேசு அவ்விடம் விட்டகன்று, 54 தம்முடைய சொந்த ஊருக்கு வந்து, அவர்களுடைய தொழுகைக்கூடத்தில் அவர்களுக்குப் போதித்தார். அவர்கள் வியப்படைந்து, ''இந்த ஞானம் இவனுக்கு எங்கிருந்து வந்தது? எப்படி இந்த வல்லமைச் செயல்களைச் செய்கிறான்? 55 இவன் தச்சனுடைய மகன் அல்லவா? இவனுடைய தாயின் பெயர் மரியாள் அல்லவா? யாக்கோபு, யோசேப்பு, சீமோன், யூதா என்பவர்கள் இவனுடைய சகோதரர்தானே? 56 இவனுடைய சகோதரிகள் யாவரும் நம்மோடு இருக்கிறார்கள் அல்லவா? இப்படி

13:35 சங். 78:2.

யிருக்க, இவையெல்லாம் இவனுக்கு எங்கிருந்து வந்தன?'' என்றார்கள். அவரை ஏற்றுக்கொள்ளாதபடி இத்தகைய எண்ணங்கள் அவர்களுக்குத் தடங்கலாயிருந்தன.
57 இயேசு அவர்களை நோக்கி, ''இறைவாக்குரைப்பவருக்குத் தம் சொந்த ஊரிலும் வீட்டிலுமே மதிப்பு இராது, மற்ற இடங்களில் மதிப்பு உண்டு'' என்று சொன்னார். 58 அவர்களுடைய நம்பிக்கையின்மை காரணமாக அவர் அங்கே வல்லமைச் செயல்களை மிகுதியாகச் செய்யவில்லை.

### திருமுழுக்குநர் யோவான் கொல்லப்படுதல்

(மாற். 6:14–29; லூக். 9:7–9)

14 அந்தச் சமயத்தில் சிற்றரசன் ஏரோது இயேசுவைப் பற்றிக் கேள்விப்பட்டான். அப்பொழுது அவன் தன் ஊழியக்காரரிடம், 2 ''இவர் திருமுழுக்குநர் யோவானே. யோவான் இறந்தோரிடமிருந்து எழுந்துவிட்டார்; அதனாலேதான் இவரிடம் இத்தகைய அற்புதமான வல்லமை விளங்குகிறது'' என்று சொன்னான்.

3 ஏரோது தன் சகோதரன் பிலிப்புவின் மனைவி ஏரோதியாள் என்பவள் பொருட்டு யோவானைப் பிடித்து விலங்கிட்டுச் சிறையில் அடைத்திருந்தான். 4 ஏனெனில், யோவான் அவனிடம், ''நீர் அவளை வைத்திருக்கிறது முறையன்று'' என்று பன்முறை சொல்லியிருந்தார். 5 ஏரோது அவரைக் கொன்றுவிட வேண்டுமென்றிருந்தான். ஆனால் யோவானை இறைவாக்குரைக்கும் ஒரு பெரியார் என்று மக்கள் மதித்துவந்ததால் அவர்களுக்கு அஞ்சிக்கொண்டிருந்தான்.

6 ஏரோதுவின் பிறந்தநாள் கொண்டாட்டத்தின்போது, ஏரோதியாளின் மகள் கூடியிருந்தவர்கள் நடுவே நடனம் ஆடி, ஏரோதுவுக்குக் களிப்பூட்டினாள். 7 அதனால் அவள் கேட்பது எதுவாயினும் அதைத் தருவதாக அவன் அவளுக்கு ஆணையிட்டு வாக்களித்தான். 8 அவள் தன் தாய் சொல்லிக் கொடுத்தபடி, ''திருமுழுக்குநர் யோவானுடைய தலையை ஒரு தட்டில் வைத்து இந்த இடத்திலேயே எனக்குக் கொடுக்க வேண்டும்'' என்று கேட்டாள். 9 அரசன் வருத்தமுற்றான். ஆயினும், அவன் தன் ஆணையின் பொருட்டும், கூட விருந்துண்டவர்களின் பொருட்டும் அதைக் கொடுக்கும்படி கட்டளையிட்டான்; 10 ஆளையும் அனுப்பிக் காவற்கூடத்தில் யோவானுடைய தலையை வெட்டிவரச் செய்தான். 11 அவரது தலையை ஒரு தட்டில் கொண்டுவந்து அப்பெண்ணிடம் கொடுத்தார்கள். அவள் அதைத் தன் தாயிடம் கொண்டுபோய்க் கொடுத்தாள். 12 யோவானுடைய சீடர்கள் வந்து அவருடைய உடலை எடுத்துச் சென்று அடக்கம்செய்தார்கள்; பிறகு இயேசுவினிடம் போய் அதை அறிவித்தார்கள்.

### ஐயாயிரம் பேருக்கு உணவளித்தல்

(மாற். 6:30–44; லூக். 9:10–17; யோ. 6 : 1–15)

13 அதைக் கேட்டதும், இயேசு தனியாயிருப்பதற்காக அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டார்; அவர் ஒரு படகில் ஏறி மனித நடமாட்டமில்லாத ஓர் இடத்துக்குப் போனார். இதைக் கேள்விப்பட்டுத் திரளான மக்கள் பல ஊர்களிலுமிருந்து தரைமார்க்கமாய் நடந்து, அந்த இடத்தை அடைந்தார்கள். 14 அவர் கரையில் இறங்கினபோது ஒரு பெருங் கூட்டத்தைக் கண்டு அவர்கள் மீது மனவுருக்கங்கொண்டு, அவர்களுடனிருந்த நோயாளிகளைக் குணமாக்கினார். 15 மாலை நேரம் வந்தபோது, அவருடைய சீடர்கள் அவரை அணுகி, ''இது மனித நடமாட்டமில்லாத இடம்; நேரமும் ஆகிவிட்டது. அவர்கள் ஊர்களுக்குப் போய்த் தங்களுக்கு உணவு வாங்கிக்கொள்ளும்படி அவர்களை அனுப்பிவிட வேண்டும்'' என்று சொன்னார்கள். 16 ஆனால் இயேசு அவர்களிடம், ''அவர்கள் போக வேண்டியதில்லை; நீங்களே அவர்களுக்கு ஏதாவது சாப்பிடக் கொடுங்கள்'' என்று சொன்னார். 17 அதற்கு அவர்கள், ''இங்கே எங்களிடம் ஐந்து அப்பங்களும் இரண்டு மீன்களுந்தவிர வேறொன்றும் இல்லையே'' என்றார்கள். 18 அவர், ''அவற்றை என்னிடம் கொண்டு வாருங்கள்'' என்றார். 19 பிறகு, புல் தரையில் பந்தியிருக்கும்படி மக்களுக்குக் கட்டளையிட்டுவிட்டு, அவர் அந்த ஐந்து அப்பங்களையும் இரண்டு மீன்களையும் எடுத்து, வானத்தை நிமிர்ந்து பார்த்து, துதிசெலுத்தி, அப்பங்களைப் பிட்டுச் சீடரிடம் கொடுத்தார். சீடர்கள் மக்களுக்குப் பரிமாறினார்கள். 20 எல்லாரும் வயிறுர உண்டனர். அவர்கள் சாப்பிட்டு மீந்த துணிக்கைகள் பன்னிரண்டு கூடைகள் நிறைய எடுக்கப்பட்டன. 21 பெண்களும் பிள்ளைகளும் நீங்கலாக, சாப்பிட்ட ஆண்களின் தொகை ஏறத்தாழ ஐயாயிரம்.

### இயேசு கடல்மீது நடத்தல்

(மாற். 6:45–52; யோ. 16:6–21)

22 பிறகு இயேசு சீடரைத் தமக்குமுன் மறுகரைக்குப் படகில் செல்லும்படி கட்டாயப்படுத்தினார். அதே சமயத்தில் அவர் மக்களையும் அங்கிருந்து போய்விடும்படி செய்தார். 23 மக்களை அனுப்பினபின் அவர் ஜெபம் செய்வதற்காகத் தனியே ஒரு மலையின்

**13:57** யோ. 4:44. **14:4** இலே. 18:16; 20:21

மேல்ஏறினர். பொழுது சாய்ந்த பிறகும் அவர்
அங்கேயே தனியாயிருந்தார். 24 அதற்குள்
ளாகப் படகு கரையிலிருந்து நெடுந்தொலைவு
போய்விட்டது; எதிர் காற்றடித்ததால் அது
அலைகளினால் அலைக்கழிக்கப்பட்டது. 25 இர
வின் நான்காம் சாமத்தில்* இயேசு கடல்
மீது நடந்து அவர்களை நோக்கிச் சென்றார்.
26 அவர் கடல்மீது நடப்பதைச் சீடர்கள்
கண்டு, அவரை ஓர் ஆவியின் தோற்றம் என்று
சொல்லிக் கலங்கி, அச்சத்தால் அலறினர்
கள். 27 உடனே இயேசு அவர்களோடு
பேசி, ''தைரியமாயிருங்கள், நான்தான்,
அஞ்ச வேண்டாம்'' என்று சொன்னார்.
28 அதற்குப் பேதுரு, ''ஆண்டவரே, நீர்
தாமென்றால், நான் தண்ணீர்மீது நடந்து
உம்மிடம் வரக் கட்டளையிடும்'' என்றார்.
29 அவர், ''வா'' என்றார். அப்பொழுது
பேதுரு படகிலிருந்து இறங்கி, தண்ணீர்
மீது நடந்து இயேசுவை நோக்கி வந்தார்.
30 ஆயினும், கடுங்காற்றைப் பார்த்து அஞ்சி
அமிழத் தொடங்குகையில், ''ஆண்டவரே,
என்னைக் காப்பாற்றும்'' என்று அலறினர்.
31 உடனே இயேசு கையை நீட்டி அவரைப்
பிடித்து, ''அற்ப நம்பிக்கை உள்ளவனே,
ஏன் ஐயங்கொள்ளத் தொடங்கினாய்?''
என்றார். 32 அவர்கள் படகில் ஏறியதும்
காற்றுத் தணிந்தது. 33 படகில் இருந்தவர்
கள் அவரைப் பணிந்து, ''உண்மையாக நீர்
கடவுளின் மைந்தர்'' என்றார்கள்.

### கெனேசரேத்தில் அற்புதங்கள்

(மாற். 6 : 53–56)

34 பிறகு அவர்கள் கடலைக் கடந்து
கெனேசரேத்து என்னுமிடத்தில் கரை சேர்ந்
தார்கள். 35 அவ்விடத்து மக்கள் அவர்
இன்னாரென்பதை அறிந்துகொண்டு, சுற்றுப்
புறமெங்கும் ஆள் அனுப்பி, பிணியாளிகள்
அனைவரையும் அவரிடம் கொண்டுவந்து,
36 அவரது ஆடையின் ஓரத்தையாவது
தொடவிடும்படி அவரை வேண்டிக்கொண்
டார்கள். தொட்ட யாவரும் குணமடைந்
தனர்.

### முன்னோர் பரம்பரை

(மாற். 7 : 1–23)

15 பிறகு பரிசேயரும் வேத அறிஞரும்
எருசலேமிலிருந்து இயேசுவினிடம்
வந்து, 2 ''உம்முடைய சீடர் நம் முன்னோர்
பரம்பரையை மீறி நடப்பதேன்? சாப்பிடு
முன் அவர்கள் முறைப்படி கை கழுவுவதில்
லையே'' என்றார்கள். 3 அதற்கு அவர்,
''நீங்கள் உங்கள் பரம்பரையின் பொருட்
டுக் கடவுளின் திருக்கட்டளையை மீறி நடப்
பதேன்? 4 'உன் தகப்பனையும் தாயையும்
உயர்வாக மதிப்பாயாக' என்றும், 'தகப்
பனையோ தாயையோ தூற்றுகிறவன் சாகவே
சாவானாக' என்றும் கடவுள் சொல்லியிருக்
கிறார். 5 ஆனால் நீங்களோ, எவனாவது தன்
தகப்பனையோ தாயையோ பார்த்து,
'உமக்கு உதவியாக என்னால் கொடுக்கக்
கூடியதை நேர்ந்துகொண்ட காணிக்கை
ஆக்கிவிட்டேன்' என்று சொல்லிவிடு
வானானால், 6 அதன் பிறகு அவன் தன்
தகப்பனையோ தாயையோ உயர்வாக மதிக்க
வேண்டுவதில்லை என்று சொல்லுகிறீர்கள்.
இவ்வாறு நீங்கள் உங்கள் பரம்பரையின்
மூலம் கடவுளின் வார்த்தையைப் பயனற்ற
தாக்கிவிடுகிறீர்கள். 7 போலி பக்தரே, உங்
களைக் குறித்துச் சரியாகத்தான் இறைவாக்
குரைப்பவராகிய ஏசாயா உரைத்திருக்
கிறார் :

8 'இந்த மக்கள் உதட்டினால் என்னை
உயர்வாகப் போற்றுகிறார்கள்;
ஆனால் இவர்கள் உள்ளமோ என்னை விட்டு
நெடுந் தொலைவில் இருக்கிறது.
9 மனிதருடைய கட்டளைகளை ஞான
போதனையாகப் போதிக்கிறார்கள்.
ஆகையால் இவர்கள் என்னை வழிபடுவது
வீண்'

என்று சொல்லியிருக்கிறார்'' என்றார்.

10 பிறகு அவர் கூட்டத்தைத் தம்மிடம்
வரவழைத்து, அவர்களை நோக்கி, ''இதைக்
கவனித்து நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள்.
11 ஒரு மனிதனின் வாய்க்குள் போவது
அவனை மாசுபடுத்துவதில்லை, வாயிலிருந்து
வெளி வருவதே அவனை மாசுபடுத்தும்''
என்றார். 12 அப்பொழுது சீடர்கள் அவரை
அணுகி, ''பரிசேயர் இந்த வார்த்தையைக்
கேட்டு வருத்தமடைந்தனர் என்பது உமக்
குத் தெரியுமா?'' என்று கேட்டார்கள்.
13 அதற்கு அவர், ''என் தந்தையார் நடாத
நாற்றுகளெல்லாம் வேரோடு பிடுங்கப்படும்.
14 அவர்களை அப்படியே விட்டுவிடுங்கள்.
அவர்கள் குருடரை வழிநடத்தும் குருடர்
கள். குருடனைக் குருடன் வழிநடத்தினால்,
இருவரும் குழியிலேதான் விழுவார்கள்''
என்றார். 15 அப்பொழுது பேதுரு அவரை
நோக்கி, ''இந்த உவமையை எங்களுக்கு விளக்
கிக் காட்டியருளும்'' என்று கேட்க, 16 அவர்
''நீங்களுமா இன்னும் உணர்வற்றவர்களா
யிருக்கிறீர்கள்? 17 வாய்க்குள்ளே போகும்
எதுவும் வயிற்றில் சென்று வெளியே கழிந்து
போகும். இதை நீங்கள் உணரவில்லையா?
18 வாயினின்று வெளிவருபவை உள்ளத்
திலிருந்து வருகின்றன; அவையே மனிதனை
மாசுபடுத்தும். 19 ஏனெனில், உள்ளத்தி
லிருந்தே தீய எண்ணம், கொலை, கற்புநிலை
தவறுதல், ஒழுக்கக்கேடு, களவு, பொய்ச்
சான்று, வசைமொழி ஆகியவை வெளியே

* இங்கே குறிக்கப்படுவது விடியற்காலம் 3 மணி முதல் 6 மணி வரையிலுமுள்ள காலப்பகுதி.

**14:33** மத். 4:3; 16:16. **14:36** மத். 9:20. **15:4** யாத். 20:12; 21:17; இலே. 20:9; உபா. 5:16. **15:8,9** ஏசா. 29:13. **15:14** லூக். 6:39. **15:18** மத். 12:34; தீத்து 1:15.

வரும். 20 இவையே மனிதனை மாசுபடுத்
தும்; கை கழுவாமல் சாப்பிடுவது மனிதனை
மாசுபடுத்தாது'' என்றார்.

### கானான் நாட்டுப் பெண்ணின் நம்பிக்கை

(மாற். 7:24–30)

21 இயேசு அவ்விடம் விட்டகன்று தீரு
சீதோன் நாட்டை நோக்கிப் போனார்.
22 அந்த நாட்டில் குடியிருந்த ஒரு கானான்
நாட்டுப் பெண் அவரிடம் வந்து, ''ஆண்
டவரே, தாவீதின் மைந்தரே, என்மீது
இரங்கியருளும். என் மகள் பேய்பிடித்து
மிகவும் துன்பப்படுகிறாள்'' என்று கதறிச்
சொன்னாள். 23 அவர் அவளுக்கு மறு
மொழியாக ஒரு வார்த்தைகூடச் சொல்ல
வில்லை. அப்பொழுது அவருடைய சீடர்கள்
அவரை அணுகி, ''இவளை அனுப்பிவிடும்,
இவள் நமக்குப் பின்னே கத்திக்கொண்டு
வருகிறாளே'' என்று வேண்டிக்கொண்டார்
கள். 24 அதற்கு அவர், ''இஸ்ரவேல் மரபின
ருள் காணாமற்போயிருக்கும் ஆடுகளிடம்
மட்டுமே நான் அனுப்பப்பட்டேன்''
என்றார். 25 அவளோ அவரிடம் வந்து
அவரைப் பணிந்து, ''ஆண்டவரே, எனக்கு
உதவி செய்தருளும்'' என்றாள். 26 அதற்கு
அவர், ''பிள்ளைகளின் உணவை எடுத்து
நாய்க்குட்டிகளுக்குப் போடுவது நல்ல
தன்று'' என்று சொல்ல, 27 அவள், ''மெய்
தான், ஆண்டவரே, ஆயினும், நாய்க்
குட்டிகள் தங்களை வளர்ப்போரின் மேசையி
லிருந்து விழும் சிறு துண்டுகளைத் தின்னுமே''
என்றாள். 28 இயேசு அதைக் கேட்டு, ''அம்மா,
உன் நம்பிக்கை பெரிது; நீ விரும்புகிறபடியே
உனக்கு நடக்கும்'' என்றார். அந்நேரமே
அவளுடைய மகள் குணமடைந்தாள்.

### இயேசு பலவகைப்பட்ட நோயாளிகளுக்குக் குணமளித்தல்

29 இயேசு அவ்விடம் விட்டகன்று,
கலிலேயாக் கடற்கரை வழியே போய், ஒரு
மலையின்மேல் ஏறி அங்கே அமர்ந்தார்.
30 அப்பொழுது மக்கள் கூட்டங்கூட்ட
மாய் அவரிடம் வந்தார்கள். அவர்கள் தங்க
ளோடு முடவர், குருடர், ஊனர், ஊமையர்
போன்ற பலரைக் கொண்டுவந்து அவர்
காலடியில் விட்டார்கள். அவர் அவர்களைக்
குணமாக்கினார். 31 ஊமையர் பேசுகிறதை
யும், ஊனர் குணமடைகிறதையும், முடவர்
நடக்கிறதையும், குருடர் பார்க்கிறதையும்
மக்கள் கண்டு வியப்படைந்து, இஸ்ரவேலின்
கடவுளைப் போற்றிப் புகழ்ந்தார்கள்.

### இயேசு நாலாயிரம்பேருக்கு உணவளித்தல்

(மாற். 8 : 1–10)

32 பிறகு இயேசு தம்முடைய சீடரை
அழைத்து, ''இந்த மக்களைப் பார்க்கும்
போது என் மனம் உருகுகிறது; இவர்கள்
மூன்று நாளாக என்னோடு தங்கியிருக்
கிறார்கள். சாப்பிடுவதற்கு இவர்களிடம்
ஒன்றுமில்லை. இவர்களைப் பட்டினியாய்
அனுப்பிவிட எனக்கு மனமில்லை; அனுப்
பினால் வழியில் சோர்ந்துபோவார்கள்''
என்றார். 33 அதற்குச் சீடர், ''இவ்வளவு
பெரிய கூட்டத்தின் பசியை ஆற்றுவதற்குத்
தேவையான உணவு இந்தப் பாலைவனத்
தில் நமக்கு எப்படிக் கிடைக்கும்?'' என்
றனர். 34 அப்பொழுது இயேசு, ''உங்
களிடம் எத்தனை அப்பங்கள்இருக்கின்றன?''
என்று கேட்க, அவர்கள், ''ஏழு அப்பங்
கள்; சில சிறு மீன்களுங்கூட இருக்கின்
றன'' என்று சொன்னார்கள். 35 அவர் கூட்
டத்தைப் பார்த்துத் தரையில் பந்தியிருக்
கும்படி கட்டளையிட்டார். 36 பிறகு அந்த
ஏழு அப்பங்களையும் மீன்களையும் அவர்
எடுத்து, கடவுளுக்கு நன்றி செலுத்தி,
பிட்டு, சீடரிடம் கொடுத்துக்கொண்டிருக்க,
சீடர்களும் மக்களுக்குப் பரிமாறினார்கள்.
37 எல்லாரும் வயிறார உண்டனர். மீந்த
துணிக்கைகளை ஏழு கூடைகள் நிறைய எடுத்
தார்கள். 38 பெண்களும் பிள்ளைகளும் நீங்க
லாக, சாப்பிட்ட ஆண்களின் தொகை
நாலாயிரம். 39 பிறகு அவர் மக்களை
அனுப்பிவிட்டு, ஒரு படகில் ஏறி, மகதா
நாட்டு எல்லைக்குள் சென்றார்.

### அற்புத அத்தாட்சி கேட்டல்

(மாற். 8:11–13; லூக். 12:54–56)

16 பரிசேயரும் சதுசேயரும் இயேசுவினிடம்
வந்து அவரைப் பரிசோதிக்கும் வகை
யில் அவரைப்பற்றி வானத்திலிருந்து வரும்
ஓர் அற்புத அத்தாட்சியைத் தங்களுக்குக்
காட்டும்படி கேட்டனர். 2 [அதற்கு அவர்,
''பொழுது சாயும்போது வானம் சிவந்திருந்
தால், நீங்கள், 'வானிலை நேர்த்தியாயிருக்
கும்' என்று சொல்லுகிறீர்கள். 3 காலை
நேரத்தில் வானம் சிவந்து மந்தாரமாயிருந்
தால், நீங்கள், 'இன்றைக்குக் காற்றும்
மழையுமிருக்கும்' என்று சொல்லுகிறீர்கள்.
வானத்தின் நிலையைக் கண்டறிய நீங்கள்
அறிந்திருக்கிறீர்களே, காலத்தின் அறிகுறி
களைக் கண்டறிய உங்களால் இயலாதா?]
4 பொல்லாததும் நம்பிக்கையற்றதுமான
சமுதாயந்தான் அற்புத அத்தாட்சி தேடும்.
யோனாவின் அத்தாட்சியைத் தவிர வேறு
அத்தாட்சி இவர்களுக்குக் கொடுக்கப்படுவ
தில்லை'' என்றார். பிறகு அவர் அவர்களை
விட்டகன்று போய்விட்டார்.

### பரிசேயரின் புளிப்பு மாவு

(மாற். 8:14–21)

5 கடலின் மறுகரைக்குச் செல்லுகையில்
அப்பங்களை எடுத்துச் செல்ல அவருடைய

16:1 மத். 12:38; லூக். 11:16; யோ. 6:30, 31.

சீடர்கள் மறந்துவிட்டார்கள். 6 பிற்பாடு
இயேசு அவர்களிடம், ''பரிசேயர், சதுசேயர்
என்பவர்களின் புளிப்பு மாவைக் குறித்து
விழிப்பாயும் எச்சரிக்கையாயும் இருங்கள்''
என்று சொன்னார். 7 ஆனால் அவர்களோ,
''நாம் அப்பங்களை எடுத்து வராததாலேதான்
இப்படிச் சொல்லுகிறார்'' என்று தங்க
ளிடையே பேசிக்கொண்டார்கள். 8 இயேசு
அதை அறிந்து, ''அற்ப நம்பிக்கை உள்ளவர்
களே, உங்களிடம் அப்பங்கள் இல்லாததைக்
குறித்து ஏன் உங்களிடையே பேசிக்கொண்
டிருக்கிறீர்கள்? 9 இன்னுமா நீங்கள் உணர
வில்லை? ஐந்து அப்பங்களை ஐயாயிரம் பேருக்
குப் பகிர்ந்தது உங்களுக்கு நினைவில்லையா?
மீந்ததை எத்தனை கூடை நிறைய எடுத்
தீர்கள்? 10 அல்லது ஏழு அப்பங்களை
நாலாயிரம் பேருக்குப் பகிர்ந்ததும் உங்
களுக்கு நினைவில்லையா? மீந்ததை எத்தனை
கூடை நிறைய எடுத்தீர்கள்? 11 நான் சொன்
னது அப்பத்தைப்பற்றியன்று என்பதை
நீங்கள் உணர்ந்துகொள்ளாததேன்? மீண்டும்
சொல்லுகிறேன் : பரிசேயர், சதுசேயர்
என்பவர்களின் புளிப்பு மாவுக்கு எச்சரிக்
கையாயிருங்கள்'' என்று சொன்னார்.
12 அப்போதுதான், ''எச்சரிக்கையாயிருங்
கள்'' என்று அவர் சொன்னது அப்பத்திற்
கான புளிப்பு 'மாவைக் குறித்து அன்று,
பரிசேயர், சதுசேயர் என்பவர்களின்
போதனையைக் குறித்தே என்று அவர்கள்
அறிந்துகொண்டார்கள்.

## இயேசுவைப்பற்றிப் பேதுரு கூறியது

(மாற். 8:27–30; லூக். 9:18–21)

13 பிறகு இயேசு பிலிப்புச் செசரியாவின்
எல்லைக்குள் சென்றார். அங்கே அவர் தம்
முடைய சீடரைப் பார்த்து, ''மனுமைந்
தரை யார் என்று மக்கள் சொல்லுகிறார்
கள்?'' என்று கேட்க, 14 அவர்கள், ''சிலர்
திருமுழுக்குநர் யோவான் என்றும், சிலர்
எலியா என்றும், வேறு சிலர் எரேமியா
அல்லது இறைவாக்குரைப்போருள் ஒருவர்
என்றும் சொல்லுகிறார்கள்'' என்றார்கள்.
15 அவர், ''நீங்கள் என்னை யார் என்று
சொல்லுகிறீர்கள்?'' என்று அவர்களைக்
கேட்க, 16 சீமோன் பேதுரு, ''நீர் என்று
முள்ள கடவுளின் மைந்தராகிய மேசியா''
என்று பதிலளித்தார். 17 இயேசு அவரிடம்,
''யோனாவின் மகனாகிய சீமோனே, நீ
நற்பேறு பெற்றவன்; ஏனெனில், மனித
அறிவு இதை உனக்கு வெளிப்படுத்தவில்லை,
விண்ணுலகிலிருக்கிற என் தந்தையாரே
இதை உனக்கு வெளிப்படுத்தியிருக்கிறார்.
18 எனவே, நான் உனக்குச் சொல்லு
கிறேன் : உன் பெயர் *பேதுரு; இந்தக் கற்
பாறையின்மேல் என் திருச்சபையைக் கட்டு
வேன். பாதாள உலகத்தின் சக்தியும் அதை
வெல்லாது. 19 விண்ணரசின் திறவுகோல்
களை உன்னிடம் தருவேன். மண்ணுலகில்
நீ கூடாதென்று தடை செய்வது எதுவோ
அது விண்ணுலகில் தடை செய்யப்பட்ட
தாகும். மண்ணுலகில் நீ அனுமதிப்பது
எதுவோ அது விண்ணுலகில் அனுமதிக்கப்
பட்டதாகும்'' என்றார். 20 பிறகு தாம்
மேசியா என்பதை எவருக்கும் சொல்ல
வேண்டாமென்று சீடருக்குக் கண்டிப்பாகக்
கட்டளையிட்டார்.

## இயேசு தம் பாடுகளையும் மரணத்தையும் முன்னறிவித்தல்

(மாற். 8:31–9:1; லூக். 9:22–27)

21 இயேசு தாம் எருசலேமுக்குப் போய்,
மூப்பர், தலைமை ஆசாரியர்கள், வேத
அறிஞர் ஆகியோரால் பல பாடுகள் அடைய
வும் கொல்லப்படவும் வேண்டும் என்பதை
யும், மூன்றாம் நாளில் உயிரோடெழுப்பப்பட
வேண்டும் என்பதையும் தம் சீடருக்கு அது
முதல் எடுத்துச் சொல்லிவந்தார். 22 அதற்
காகப் பேதுரு அவரைத் தனியாக அழைத்து
அவரைக் கடிந்துகொண்டார். ''ஆண்ட
வரே, இது வேண்டாம். உமக்கு இப்படி
ஒருபோதும் நேரிடாது'' என்று சொன்னார்.
23 ஆனால் அவர் திரும்பிப் பேதுருவைப்
பார்த்து, ''சாத்தானே, எனக்குப் பின்னாலே
போ, நீ எனக்குத் தடங்கலாயிருக்கிறாய்;
கடவுளின் சிந்தனைக்கேற்பச் சிந்தியாமல்
மனிதரின் சிந்தனைக்கேற்பச் சிந்திக்கிறாய்''
என்று சொன்னார்.

24 பிறகு இயேசு தம் சீடரைப் பார்த்து,
''ஒருவன் என்னைப் பின்பற்றி வர விரும்
பினால், அவன் தன்னைத்தான் வெறுத்து,
தனக்குரிய சிலுவையை எடுத்துக்கொண்டு
என்னைப் பின்பற்றி வரட்டும். 25 எவன்
தன் † உயிரைப் பாதுகாத்துக்கொள்ள விரும்
புகிறானோ அவன் அதை இழந்துவிடுவான்;
என் பொருட்டுத் தன் உயிரை எவன் இழக்
கிறானோ அவன் அதைக் கண்டுகொள்வான்.
26 மனிதன் உலகம் முழுவதையும் ஊதிய
மாகப் பெற்றாலும் அவனது ஆன்மாவை
இழந்துவிடுவானானால் அவன் அடையும் பயன்
என்ன? மனிதன் தன் ஆன்மாவுக்கு ஈடாக
எதைக் கொடுக்க இயலும்? 27 மனுமைந்தர்
தம்முடைய தந்தையின் மாட்சிமையோடு
தம் தூதர்களுடன் வரப்போகிறார். அப்-

*பேதுரு என்று எழுதப்பட்டிருக்கும் கிரேக்கச் சொல்லுக்கும் [பெத்ரொஸ்], கற்பாறை என்று மொழிபெயர்க்கப்பட்டிருக்கும் கிரேக்கச் சொல்லுக்கும் [பெத்ரா] கிரேக்க மூலப் பகுதி ஒன்றே.

† கிரேக்கச் சொல் உயிர் என்றும் ஆன்மா என்றும் பொருள்படும்.

**16:6** லூக். 12:1. **16:9** மத். 14:17-21. **16:10** மத்; 15:34-38. **16:14** மத். 14:1,2; மாற். 6:14, 15; லூக். 9:7, 8. **16:16** யோ. 6:68, 69. **16:19** மத். 18:18; யோ. 20:23. **16:24, 25** மத். 10:38; லூக். 14:27; 17:33; யோ. 12:25, 26. **16:27** யோபு. 14:11. சங். 62:12; மத். 25:31; ரோ. 2:6.

போது அவர் அவனவன் செய்கைக்குத் தக்க
படி அவனவனுக்குப் பலனளிப்பார். 28 உங்
களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன் :
இங்கே நிற்கிறவர்களுள் சிலர் மனுமைந்தர்
ஆட்சிபுரிகிறவராக வருவதைக் காணுமுன்
மரணம் அடையப்போவதில்லை'' என்ருர்.

### இயேசு மறுதோற்றமடைதல்

*(மாற். 9:2–13; லூக். 9:28–36)*

17 ஆறு நாளுக்குப்பிறகு, இயேசு பேதுரு
வையும் அவருடன் யாக்கோபையும்,
அவர் சகோதரன் யோவானையும் தனியே
அழைத்து அவர்களை ஓர் உயர்ந்த மலைக்குக்
கூட்டிக்கொண்டு போனுர். 2 அங்கே அவர்
கள் முன்னிலையில் அவர் மறுதோற்றமடைந்
தார். அவருடைய முகம் கதிரவனைப்போல
ஒளி வீசிற்று. அவருடைய ஆடைகள் வெளிச்
சத்தைப்போல வெண்மையாயின. 3 மோசே
யும் எலியாவும் தோன்றி அவரோடு பேசி
ஞர்கள். சீடர் அந்தக் காட்சியைக் கண்ட
போது, பேதுரு இயேசுவினிடம், ''ஆண்ட
டவரே, நாம் இங்கேயே இருப்பது நல்லது.*
நீர் விரும்பினுல் உமக்கு ஒன்றும் மோசே
யுக்கு ஒன்றும் எலியாவுக்கு ஒன்றுமாக மூன்று
கூடாரங்களை நான் இங்கே அமைக்கிறேன்''
என்று சொன்ஞர். 5 அவர் இப்படிப் பேசிக்
கொண்டிருந்தபோதே ஒளிமயமான மேகம்
ஒன்று அவர்கள்மேல் நிழலிட்டது. அந்த
மேகத்தினின்று, ''இவர் என் அன்பார்ந்த
மைந்தர்; இவரால் பெருமகிழ்ச்சி அடை
கிறேன்; இவருக்குச் செவிசாயுங்கள்'' என்ற
ஒரு வாக்குப் பிறந்தது. 6 அதைக் கேட்
டதும் சீடர் அச்சம் மேலிட்டவர்களாய்
முகங்குப்புற விழுந்தனர். 7 இயேசு அவர்க
ளண்டை வந்து அவர்களைத் தொட்டு,
''எழுந்திருங்கள், அஞ்ச வேண்டாம்''
என்ருர். 8 அவர்கள் ஏறிட்டுப் பார்த்தார்
கள்; அப்பொழுது இயேசு ஒருவரைத் தவிர
வேருெருவரும் இருக்கக் காணவில்லை.

9 அவர்கள் மலையிலிருந்து இறங்கி வருகை
யில், இயேசு, ''மனுமைந்தர் இறந்தோரிட
மிருந்து உயிரோடெழுப்பப்படும் வரை
இந்தக் காட்சியைப்பற்றி ஒருவருக்கும்
சொல்லக் கூடாது'' என்று அவர்களுக்குக்
கட்டளையிட்டார். 10 அப்பொழுது சீடர்கள்
அவரிடம், ''எலியாதான் முதலில் வர
வேண்டுமென்று வேத அறிஞர்கள் சொல்
கிருர்களே, அது எப்படி?'' என்று கேட்
டார்கள். 11 அதற்கு அவர், ''எலியா வந்து
எல்லாவற்றையும் சீர்படுத்துவார் என்பது
உண்மைதான். 12 ஆனுல் நான் உங்களுக்
குச் சொல்லுகிறேன், எலியா ஏற்கெனவே
வந்துவிட்டார். அவரை அறிந்துகொள்
ளாமல் தாங்கள் விரும்பியபடியெல்லாம்
அவருக்குச் செய்துவிட்டார்கள். மனுமைந்
தரும் இவ்வாறே அவர்களால் பாடுகள்
அடையப்போகிருர்'' என்ருர். 13 அவர்
திருமுழுக்குநர் யோவானைக் குறித்தே தங்க
ளோடு பேசினுர் என்பதைச் சீடர்கள் அப்
போது அறிந்துகொண்டார்கள்.

### அசுத்த ஆவி பிடித்திருந்த இளைஞனைக் குணமாக்குதல்

*(மாற். 9:14–29; லூக். 9:37–43)*

14 அவர்கள் மக்களிடம் திரும்பிவந்த
போது, ஒருவன் அவரை அணுகி அவர்முன்
முழந்தாள்படியிட்டு, ''ஐயா, என் மகன்
மீது இரங்கும். 15 அவன் ஒரு வலிப்பு
நோயாளி, மிகவும் துன்பப்படுகிருன்; அடிக்
கடி தீயிலும் தண்ணீரிலும் விழுகிருன்.
16 அவனை உம்முடைய சீடரிடம் கொண்டு
வந்தேன். ஆனுல் அவனைக் குணமாக்க அவர்
களால் இயலவில்லை'' என்ருன். 17 இயேசு
அதைக் கேட்டு, ''நம்பிக்கையில்லாத சீர்
கெட்ட சமுதாயமே, எவ்வளவு காலம் நான்
உங்களோடிருப்பது, எவ்வளவு காலம் உங்க
ளிடம் பொறுமை காட்டுவது? அவனை
இங்கே என்னிடம் கொண்டுவாருங்கள்''
என்ருர். 18 அவர்கள் கொண்டுவந்ததும்
இயேசு அந்தப் பேயை அதட்டினுர்; அது
அவனை விட்டு நீங்கிற்று. அந்நேரமே அந்த
இளைஞன் குணமடைந்தான். 19 பிற்பாடு
சீடர்கள் இயேசுவை அணுகி, ''அதை ஓட்ட
ஏன் எங்களால் இயலவில்லை?'' என்று அவ
ரிடம் தனித்துக் கேட்டார்கள். 20 அதற்கு
அவர், ''உங்களுடைய நம்பிக்கைக்
குறைவுதான் காரணம்; உங்களுக்குக்
கடுகளவு நம்பிக்கை இருந்தால், உங்களால்
இயலாத காரியம் ஒன்றுமிராது. நீங்கள்
இந்த மலையைப் பார்த்து, 'இவ்விடம் விட்டு
அப்புறம் போ' என்று சொல்லும்போது,
அது போய்விடும். இதை உங்களுக்கு உறுதி
யாகச் சொல்லுகிறேன். [21 இவ்வகைப்
பேயை ஜெபத்தினுலும் நோன்பினுலுமே
யொழிய வேறு எதனுலும் வெளியேற்ற
இயலாது''] என்ருர்.

### இயேசு தம் மரணத்தைப்பற்றி மீண்டும் முன்னறிவித்தல்

*(மாற். 9:30–32; லூக். 9:43–45)*

22 அவர்கள் கலிலேயாவில் ஊர் ஊராகச்
செல்லுகையில் இயேசு சீடரிடம் மனுமைந்
தர் மனிதர் கைகளில் ஒப்புக்கொடுக்கப்
படப்போகிருர் என்றும், 23 அவர்கள்
அவரைக் கொன்றுவிடுவார்கள் என்றும்,
ஆயினும், அவர் மூன்ரும் நாளில் உயிர்த்

* 'நல்லவேளையாக நாங்கள் இங்கே இருக்கிரேம்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

17:5 ஆதி. 22:2; சங். 2:2; ஏசா. 42:1; மத். 3:17; 12:18; மாற். 1:14; லூக். 3:22; 2 பேது. 1:17, 18. 17:10 மலா. 4:5. 17:20 மத். 21:21; மாற். 11:23; 1 கொரி. 13:2.

தெழுவார் என்றும் சொன்னார். அதைக்
கேட்டு அவர்கள் மிகவும் வருத்தமுற்றார்கள்.

## வரிப்பணம் செலுத்துதல்

24 அவர்கள் கப்பர்நகூம் போய்ச் சேர்ந்த
போது, கோவில் வரி வசூலிப்போர் பேதுரு
வினிடம் வந்து, ''உங்கள் போதகர்,
கோவில் வரி செலுத்துகிறதில்லையா?''
என்று கேட்டனர். அவர், ''செலுத்து
கிறார்'' என்றார். 25 பிறகு அவர் வீட்டுக்குள்
சென்று பேசத் தொடங்குமுன், இயேசு
அவரிடம், ''சீமோனே, உனக்கு எப்படித்
தோன்றுகிறது? இவ்வுலக அரசர்கள் சுங்க
வரியையும் தலை வரியையும் யாரிடம் வாங்கு
கிறார்கள்? தங்கள் பிள்ளைகளிடமா அல்லது
மற்றவர்களிடமா?'' என்று கேட்டார்.
26 ''மற்றவர்களிடந்தான்'' என்று பேதுரு
பதில் சொன்னார். அப்பொழுது இயேசு,
''ஆகவே, பிள்ளைகள் இவ்வகையான கட்டுப்
பாட்டுக்குஉட்பட்டவர்களல்ல. 27 ஆயினும்,
நாம் அவர்களுக்குத் தடங்கலாயிருக்கக்
கூடாது. நீ கடலுக்குப் போய், தூண்டில்
போட்டு, முதலில் அகப்படும் மீனை எடுத்து
அதன் வாயைத் திறந்து பார்த்தால், ஒரு
வெள்ளி நாணயம் இருப்பதைக் காண்பாய்.
அதை எடுத்து என் சார்பிலும் உன் சார்
பிலும் அவர்களிடம் செலுத்திவிடு'' என்று
சொன்னார்.

## மிகப் பெரியவன் யார்?

(மாற். 9:33–37; லூக். 9:46–48)

18 அவ்வேளையில் சீடர்கள் இயேசுவினிடம்
வந்து, ''விண்ணரசில் மிகப் பெரியவன்
யார்?'' என்று கேட்டார்கள். 2 அவர் ஒரு
சிறு பிள்ளையைத் தம்மிடம் அழைத்து,
அதை அவர்கள் நடுவே நிறுத்தி, 3 ''நீங்கள்
மனமாற்றமடைந்து சிறு பிள்ளைகளைப்போல
ஆனாலன்றி, விண்ணரசினுள் செல்ல மாட்
டீர்கள். இது உறுதி என்று உங்களுக்குச்
சொல்லுகிறேன். 4 இந்தச் சிறு பிள்ளை
யைப்போலத் தன்னைத் தாழ்த்துகிறவனே
விண்ணரசில் மிகப் பெரியவன். 5 இப்படிப்
பட்ட ஒரு சிறு பிள்ளையை என் பெயரின்
பொருட்டு எவன் ஏற்றுக்கொள்கிறானோ
அவன் என்னை ஏற்றுக்கொள்கிறான்.

## பாவக் குழியில் இடறிவிழுதல்

(மாற். 9:42–48; லூக். 17:1, 2)

6 ''என்னிடம் நம்பிக்கை கொண்டுள்ள
இந்தச் சிறுவருள் ஒருவன் பாவக்குழியில்
இடறிவிழ எவன் காரணமாயிருக்கிறானோ
அவன் கழுத்தில் ஒரு பெரிய ஏந்திரக் கல்லைக்
கட்டி, நடுக்கடலில் அவனை மூழ்கடிப்பதே
அவனுக்கு நலம். 7 பாவக்குழியில் இடறி
விழச் செய்கிறவற்றின் பொருட்டு, ஐயோ,
உலகத்துக்குக் கேடு வரும்; அவ்வாறு இடறி
விழச் செய்பவை வந்தே தீரும். ஆனால்,
அவை எந்த மனிதனால் வருகின்றனவோ,
ஐயோ, அந்த மனிதனின் நிலை பரிதாபமே!
8 நீ பாவக்குழியில் இடறிவிழ உன் கையா
வது உன் காலாவது காரணமாயிருந்தால்,
அதைத் தறித்துவிடு; நீ இரண்டு கையுடைய
வனாய் அல்லது இரண்டு காலுடையவனாய்
என்றும் அவியாத நெருப்பில் தள்ளப்படு
வதைவிட, ஒரு கை இல்லாதவனாய் அல்லது
ஒரு கால் இல்லாதவனாய் என்றுமுள்ள மெய்
வாழ்வுக்குள் செல்வது உனக்கு நலம். 9 நீ
பாவக்குழியில் இடறிவிழ உன் கண் காரண
மாயிருந்தால், அதைப் பிடுங்கி எறிந்துவிடு.
நீ இரண்டு கண்ணுடையவனாய் எரி நரகத்
தில் தள்ளப்படுவதைவிட, ஒற்றைக் கண்
ணனாய் என்றுமுள்ள மெய்வாழ்வுக்குள் செல்
வது உனக்கு நலம்.

## வழி தவறிப்போன ஆட்டைத் தேடிக் கண்டுபிடித்தல்

(லூக். 15 : 3–7)

10 ''இந்தச் சிறுவருள் ஒருவனையும் நீங்கள்
இழிவாகக் கருதக் கூடாதென்று எச்சரிக்
கிறேன். நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்:
இவர்களுக்குரிய தெய்வதூதர்கள் விண்
ணுலகில் என் தந்தையின் முகத்தை எப்
போதும் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்.
[11 ''மனுமைந்தர் கெட்டழிந்து
போனதை மீட்கவே வந்திருக்கிறார்.] 12 உங்
களுக்கு எப்படித் தோன்றுகிறது? ஒரு
மனிதன் தனக்கிருக்கும் நூறு ஆடுகளுள்
ஒன்று வழி தவறிப்போனால், மற்றத்
தொண்ணூற்றொன்பது ஆடுகளையும் மலை
களில் விட்டுவிட்டு வழி தவறிப்போனதைத்
தேடாமலிருப்பானா? 13 அதைக் கண்டு
பிடித்துவிட்டால், வழி தவறிப்போகாத
தொண்ணூற்றொன்பது ஆடுகளைக் குறித்து
மகிழ்ச்சியடைவதைவிட அதைக் குறித்தே
மிகுதியாக மகிழ்ச்சியடைவான் என்று உங்
களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன்.
14 அவ்வாறே இந்தச் சிறுவருள் ஒருவனும்
கெட்டழியக் கூடாதென்பதே விண்ணுலகத்
திலிருக்கிற உங்கள் தந்தையின் திருவுளம்.

## பாவம் செய்யும் சகோதரனைப் பற்றியது

(லூக். 17:3)

15 ''உன் சகோதரன் ஒருவன் [உனக்கு
விரோதமாக] ஏதாவதொரு பாவம் செய்து
விட்டால், நீ அவனிடம் போய், அவனது
பாவத்தை அவனுக்கு உணர்த்து; நீயும்
அவனும் தனித்திருக்கையில் அப்படிச் செய்.
உன் சகோதரன் உனக்குச் செவிசாய்த்தால்,
நீ அவனைக் காப்பாற்றியவனாவாய்.

**17:24** யாத். 30:13; 38:26. **18:3,4** சங். 131:2; மாற். 10:15; லூக். 18:17 **18:8** மத். 5:30; மாற். 9:43-47. **18:11** லூக். 19:10. **18:12** எசே. 34:4, 16. **18:15** கலா. 6:1; தீத்து. 3:10.

16 அவன் உனக்குச் செவிசாய்க்காமற்
போனால், 'இரண்டு மூன்று சாட்சிகளுடைய
வாக்கு மூலத்தால் எல்லாக் காரியங்களும்
நிலைநாட்டப்பட வேண்டும்' என்பதற்கிசைய
இரண்டொருவரை உன்னுடன் கூட்டிக்
கொண்டு அவனிடம் மீண்டும் போ.
17 அவர்களுக்கும் அவன் செவிசாய்க்காமற்
போனால், அதைத் திருச்சபைக்குத் தெரியப்
படுத்து. திருச்சபைக்கும் அவன் செவி
சாய்க்காமற் போனால் அவன் உனக்கு
அன்னியனாகவும் * ஆயக்காரனாகவும் இருக்
கட்டும்.

18 "நான் உங்களுக்கு உறுதியாகச் சொல்
லுகிறேன் : மண்ணுலகில் நீங்கள் கூடா
தென்று தடை செய்பவை எவையோ அவை
விண்ணுலகில் தடைசெய்யப்பட்டனவாகும்.
மண்ணுலகில் நீங்கள் அனுமதிப்பவை
எவையோ அவை விண்ணுலகில் அனுமதிக்
கப்பட்டனவாகும். 19 அல்லாமலும் உங்
களுள் யாராவது இருவர், தாம் வேண்டிக்
கொள்ளும் எந்தக் காரியத்தையாவது
குறித்து மண்ணுலகில் ஒருமனப்பட்டிருந்
தால், அது விண்ணுலகிலிருக்கிற என் தந்
தையினால் அவர்களுக்கு அருளப்படும் என்று
உங்களுக்குச் சொல்லுகிறேன். 20 ஏனெ
னில், எங்கே இரண்டு மூன்று பேர் என்
பெயரால் கூடியிருக்கிறார்களோ, அங்கே
அவர்கள் நடுவில் நான் இருக்கிறேன்"
என்றார்.

### மன்னிப்பளியாத அடிமை

21 பிறகு பேதுரு அவரை அணுகி, "ஆண்
டவரே, என் சகோதரன் எனக்கு விரோத
மாகக் குற்றம் செய்துகொண்டேயிருந்தால்
நான் எத்தனை முறை அவனை மன்னிக்க
வேண்டும்? ஏழு முறை மட்டுமா?" என்று
கேட்டார். 22 அதற்கு இயேசு, "ஏழு
முறை மட்டுமன்று, ஏழெழுபது முறை
மட்டும்" என்று உனக்குச் சொல்லுகிறேன்.
23 ஆகையால் விண்ணரசை இந்த உவமை
யால் விளக்கலாம் : ஓர் அரசன் தன் அடிமை
களோடு கணக்குத் தீர்த்துக்கொள்ளத் தீர்
மானித்தான். 24 அவன் கணக்குத் தீர்க்கத்
தொடங்கினபோது, பதினாயிரம் தாலந்து†
கடன்பட்டிருந்த ஒருவன் அவன் முன்னிலை
யில் கொண்டுவந்து விடப்பட்டான்.
25 அந்த ஆள் கடனை அடைக்க இயலாத
நிலையிலிருந்தான். அதை அடைப்பதற்காக
அவனையும், அவனுடைய மனைவி மக்களையும்,
அவனுக்குள்ள யாவற்றையும் விற்றுவிடும்
படி தலைவன் கட்டளையிட்டான். 26 அப்
பொழுது அந்த அடிமை அவனுடைய
காலில் விழுந்து பணிந்து, 'என்னிடம்
சற்றுப் பொறுமை காட்டும்; எல்லாவற்றை
யும் திருப்பிக் கொடுத்துவிடுகிறேன்' என்று
சொன்னான். 27 அந்த அடிமையின் தலைவன்
அவன்மீது இரக்கங்கொண்டு, அவனுக்கு
விடுதலையளித்தான்; கடனையும் மன்னித்து
விட்டான். 28 ஆனால் அதே அடிமை
வெளியே போனதும், தன்னிடம் நூறு
தினாரியம் கடன்பட்டிருந்த தன் உடன்
அடிமை ஒருவனைக் கண்டு, 'நீ என்னிடம்
பட்ட கடனை இப்போதே திருப்பிக் கொடுக்
கிறாயா இல்லையா? என்று சொல்லிக்
கொண்டே அவனைப் பிடித்துத் தொண்
டையை நெறித்தான். 29 அப்பொழுது
அவனுடைய உடன் அடிமை அவன் காலில்
விழுந்து, 'என்னிடம் சற்றுப் பொறுமை
காட்டும், உமது கடனைத் திருப்பிக்
கொடுத்துவிடுகிறேன்' என்று வேண்டிக்
கொண்டான். 30 ஆனால், அவனோ அதற்கு
உடன்படாமல் உடனே போய், அவன் பட்ட
கடனைத் திருப்பிக கொடுக்குமட்டும் அவனைச்
சிறையிலடைக்கச் செய்தான். 31 அவனு
டைய உடன் அடிமைகள் நடந்ததைக் கண்டு
மிகவும் வருத்தமுற்றுத் தங்கள் தலைவனிடம்
போய் நடந்தவற்றையெல்லாம் விவரித்துச்
சொன்னார்கள். 32 அதன்பேரில் தலைவன்
அந்த அடிமையைத் தன்னிடம் வரவழைத்து
"பொல்லாதவனே, நீ என்னை வேண்டிக்
கொண்டதால் உன் கடன் முழுவதையும்
உனக்கு மன்னித்தேனே. 33 நான் உனக்கு
இரங்கினதுபோல, நீயும் உன்னுடைய உடன்
அடிமைக்கு இரக்கங்காட்டியிருக்க வேண்
டாமா? என்று கேட்டு, சினந்து, 34 அவன்
பட்ட கடன் முழுவதையும் தனக்குத் திருப்
பிக் கொடுக்குமட்டும் வதைப்போரிடம்
அவனை ஒப்புக்கொடுத்தான். 35 உங்களுள்
தன் சகோதரனை மனமார மன்னியாத
ஒவ்வொருவனுக்கும் என் விண்ணகத் தந்தை
யும் இப்படியேதான் செய்வார்" என்றார்.

### மனைவியை விலக்கிவிடுதல் பற்றிய போதனை

(மாற். 10 : 1—12)

19 இயேசு இந்த வார்த்தைகளைச் சொல்லி
முடித்த பிறகு, கலிலேயா நாட்டை
விட்டுப் புறப்பட்டு, யோர்தான் ஆற்றுக்கு
அப்பாலுள்ள யூதேயா நாட்டு எல்லைக்குள்
சென்றார். 2 திரளான மக்கள் அவரைப்
பின்தொடர்ந்து சென்றார்கள். அங்கே அவர்
அவர்களைக் குணமாக்கினார்.

3 அப்பொழுது பரிசேயர் சிலர் அவரிடம்
வந்து, அவரைப் பரிசோதிக்கும் வகையில்,

* மத். 5;46 அடிக்குறிப்பைப் பார்க்க.
† ஒரு தாலந்து 6.000 திநாரியத்துக்குச் சமம். ஒரு திநாரியம் விவசாயத் தொழிலாளியின் ஒரு நாள் கூலிக்குச் சமம்.

18:16 உபா. 19:15; 2 கொரி. 13:1; 1தீமோ. 5:19, 20. 18:18 மத். 16:19; யோ. 20:23. 18:19, 20 மத். 7:7,8; யோ. 15:7, 16. 18:21, 22 லூக். 17:3, 4. 18:33 1 யோ. 4:11.

''கணவன் தன் மனைவியை எந்தக் காரணத்
திற்காகவாவது விலக்கிவிடுவது முறை
யாகுமா?'' என்று கேட்டனர். 4 அதற்கு
அவர்,
'''ஆதியிலே படைப்புக் கர்த்தா
அவர்களை ஆணும் பெண்ணுமாக உண்
டாக்கினார்'
என்றும்,
5 'ஆகையால், ஒருவன் தன் தகப்பனை
யும் தாயையும் விட்டுப் பிரிந்து
தன் மனைவியோடு சேர்ந்திருப்பான்.
இருவரும் ஒரே உடலாயிருப்பார்கள்
என்றுரைத்தார்'
என்றும் நீங்கள் படித்ததில்லையா?
6 ஆகையால், இனிமேல் அவர்கள்
இருவரல்ல, ஒரே உடலாயிருப்பார்கள்.
எனவே, கடவுள் இணைத்ததை மனிதன்
பிரிக்காதிருப்பானாக'' என்றார். 7 அதற்கு
அவர்கள், ''அப்படியானால், விலக்குச் சீட்
டைக் கொடுத்து, அவளை விலக்கிவிடலா
மென்று மோசே கட்டளையிட்டது ஏன்?''
என்று கேட்டார்கள். 8 அவர், ''உங்கள்
அறிவு குறைவுள்ளதாய் இருப்பதனாலேதான்
உங்கள் மனைவியரை விலக்கிவிடலாமென்று
உங்களுக்கு அனுமதி கொடுத்தார். தொடக்க
காலத்தில் இப்படியிருந்ததில்லை, 9 ஆனால்.
நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் : கற்பு
நெறி தவறுதலைத் தவிர வேறெந்தக்
காரணத்திற்காகவாவது தன் மனைவியை
விலக்கிவிட்டு வேறொரு பெண்ணை எவன்
மணம் செய்கிறானோ அவன் கற்புநெறி
தவறினவனாகிறான். [விலக்கப்பட்டவளை
மணம் செய்கிறவனும் கற்புநெறி தவறின
வனாகிறான்]'' என்றார். 10 அதற்கு அவரு
டைய சீடர்கள் அவரிடம், ''கணவன் மனைவி
உறவு இப்படியிருக்க வேண்டுமென்றால்,
மணம் செய்யாமலிருப்பதுதான் நல்லது''
என்று சொன்னார்கள். 11 அவரோ, ''அருள்
பெற்றவர்கள் தவிர வேறு எவராலும் நான்
சொல்வதை ஏற்றுக்கொள்ள இயலாது.
12 பிறக்கும்போதே அண்ணகராய்ப் பிறந்
தவர்களும் உண்டு; மனிதரால் அண்ணக
ராக்கப்பட்டவர்களும் உண்டு; விண்ணரசின்
பொருட்டு தங்களை அண்ணகராக்கிக்கொண்
டவர்களும் உண்டு. இதை ஏற்றுக்கொள்ளக்
கூடியவன் ஏற்றுக்கொள்ளட்டும்'' என்று
சொன்னார்.

## இயேசு சிறு பிள்ளைகளை ஆசீர்வதித்தல்

*(மாற். 10:13–16; லூக். 18:15–17)*

13 பிற்பாடு, இயேசு சிறு பிள்ளைகள்மேல்
கைகளை வைத்து ஜெபம் செய்ய வேண்டு
மென்று அவர்களைச் சிலர் அவரிடம்
கொண்டுவந்தனர். கொண்டுவந்தவர்களைச்
சீடர்கள் கடிந்துகொண்டார்கள். 14 ஆனால்
இயேசு, ''சிறு பிள்ளைகள் என்னிடம் வர
அவர்களுக்கு இடங்கொடுங்கள்; அவர்களைத்
தடை செய்யாதீர்கள்; விண்ணரசு அப்படிப்
பட்டவர்களுடையது'' என்று சொல்லி,
15 அவர்கள்மேல் கைகளை வைத்தார்; பிறகு
அங்கிருந்து புறப்பட்டுப் போனார்.

## செல்வமுடைய ஒருவனது கேள்வி

*(மாற். 10:17–31; லூக். 18:18–30)*

16 அப்பொழுது ஒருவன் இயேசுவிடம்
வந்து, ''போதகரே, என்றுமுள்ள மெய்
வாழ்வை அடைவதற்கு எந்த நல்வினையை
நான்செய்ய வேண்டும்?'' என்று கேட்டான்.
17 அதற்கு அவர், *''நல்வினையைப்பற்றி
ஏன் என்னிடம் கேட்கிறாய்? நல்லவராய்
இருக்கிறவர் ஒருவரே. நீ என்றுமுள்ள மெய்
வாழ்வுக்குள் செல்ல விரும்பினால் திருக்கட்
டளைகளைக் கடைப்பிடிக்க வேண்டும்''
என்றார். 18 ''எந்தத் திருக்கட்டளைகளை?''
என்று அவன் கேட்க, இயேசு, ''கொலை
செய்யாதே, கற்புநெறி தவறாதே, களவு
செய்யாதே, பொய்ச்சாட்சி சொல்லாதே,
19 உன் தகப்பனையும் தாயையும் உயர்வாக
மதிப்பாயாக. மேலும், உன்னிடம் நீ அன்பு
கொள்வதுபோல அடுத்தவனிடமும் அன்பு
கொள்ள வேண்டும்'' என்று சொன்னார்.
20 அந்த இளைஞன் அவரிடம், ''இவற்றை
யெல்லாம் கடைப்பிடித்து வந்திருக்கிறேன்.
இன்னும்என்னிடமுள்ள குறைபாடு என்ன?''
என்று கேட்டான் 21 அதற்கு இயேசு
''நீ முற்றிலும் தேறினவனாயிருக்க விரும்
பினால், நீ போய் உன் உடைமைகளை விற்று
ஏழைகளுக்குக் கொடுத்துவிடு; விண்ணுல
கில் உனக்குச் செல்வம் கிடைக்கும். பிறகு
வந்து என்னைப் பின்பற்றி நட'' என்றார்.
22 அந்த இளைஞன் மிகுந்த செல்வமுடைய
வனாயிருந்தபடியால், இந்த வார்த்தை
யைக் கேட்டதும், வருத்தத்தோடு போய்
விட்டான். 23 அப்பொழுது இயேசு தம்
சீடரிடம், ''செல்வமுடையவன் விண்ணரசி
னுள் செல்வது அரிது. இதை உறுதியாக
உங்களுக்குச் சொல்லுகிறேன். 24 மீண்டும்
உங்களுக்குச் சொல்லுகிறேன் : செல்வ
முடைய ஒருவன் கடவுளின் அரசினுள் செல்
வதைக் காட்டிலும் ஒட்டகம் ஊசியின்
காதில் நுழைவதே எளிது எனலாம்''
என்றார்.
25 சீடர்கள் அதைக் கேட்டுத் திகைப்
புற்று, ''அப்படியானால் யாராலேதான் மீட்
படைய இயலும்?'' என்று கேட்டார்கள்.
26 இயேசு அவர்கள் திகைத்ததைக் கண்டு,

* நீ ஏன் என்னை நல்லவர் என்று அழைக்கிறாய்? கடவுள் ஒருவரைத் தவிர நல்லவர் வேறெவரு மில்லை'' என்பதும் பாடம் (மாற். 10:18 லூக். 18:18 பார்க்க).

**19:4** ஆதி. 1:27; 5:2 **19:5** ஆதி. 2:24; 1 கொரி. 6:16; 7:10. **19:7** உபா. 24:1-4; மத். 5:31. **19:9** மத். 5:32; லூக். 16:18; 1 கொரி. 7:10, 11. **19:18** யாத். 20:13-15; உபா. 5:18-20. **19:19** யாத். 20:12; இலே. 19:18; உபா. 5:16. **19:21** மத். 13:44-46. **19:26** லூக். 1:37.

''மனிதருக்கு இது இயலாது; ஆனால் கடவுளுக்கு எல்லாம் இயலும்'' என்றார். 27 அப்பொழுது பேதுரு, ''நாங்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டு உம்மைப் பின்பற்றி வந்தவர்களாயிற்றே, எங்களுக்கு என்ன கிடைக்கும்?'' என்று கேட்டார். 28 இயேசு அவர்களைப் பார்த்து, ''யாவும் புதிதாக்கப்படும் காலத்தில் மனுமைந்தர் தமது மாட்சிமைபொருந்திய அரியணையில் வீற்றிருக்கும்போது, என்னைப் பின்பற்றிவந்த நீங்களும் இஸ்ரவேல் மக்களின் பன்னிரண்டு குலங்களையும் விசாரணைசெய்து தீர்ப்பளிக்கிறவர்களாய்ப் பன்னிரண்டு அரியணைகளில் வீற்றிருப்பீர்கள். இதை உங்களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன். 29 மேலும், என் பெயரின் பொருட்டு வீடுகளையாவது, சகோதரரையாவது. சகோதரிகளையாவது, தகப்பனையாவது, தாயையாவது, பிள்ளைகளையாவது, நிலங்களையாவது விட்டுவிட்டவன் எவனும் இன்னும் மிகுதியானவற்றைப் பெறுவான்; கடவுள் வாக்களித்த என்றுமுள்ள மெய்வாழ்வையும் பெற்றுக்கொள்வான். 30 ஆனாலும், முந்தினோராயிருக்கிறவர்களுள் பலர் பிந்தினோராயும் பிந்தினோராயிருக்கிறவர்களுள் பலர் முந்தினோராயும் இருப்பார்கள்.

### திராட்சைத் தோட்ட வேலையாள்கள்

**20** ''விண்ணரசு இவ்வாறு இருக்கிறது : திராட்சைத் தோட்டத்துத் தலைவன் ஒருவன் தன் தோட்டத்தில் வேலைசெய்ய ஆள்கள் சிலரைக் கூலிக்கமர்த்தும்படி விடியற்காலத்தில் புறப்பட்டுப் போனான். 2 அவன் நாளொன்றுக்கு ஒரு *திநாரியம் என்று அந்த வேலையாள்களுடன் கூலி பேசி அவர்களைத் தன் திராட்சைத் தோட்டத்துக்கு அனுப்பினான். 3 ஏறக்குறைய †காலை ஒன்பது மணிக்கும் அவன் போய், கடைத்தெருவில் வேலையில்லாமல் நின்றுகொண்டிருந்த வேறு சிலரைக் கண்டு, 4 அவர்களிடம், 'நீங்களும் என் திராட்சைத் தோட்டத்துக்குப் போங்கள், எது நியாயமான கூலியோ அதை உங்களுக்குக் கொடுக்கிறேன் என்று சொன்னான். அவர்களும் போனார்கள். 5 மறுபடியும் அவன் ‡பகல் பன்னிரண்டு மணிக்கும் ¶ பிற்பகல் மூன்று மணிக்கும் போய் அப்படியே செய்தான். 6 §மாலை ஐந்து மணிக்கும் அவன் போய், வேறு சிலர் நிற்பதைக் கண்டு அவர்களிடம், 'ஏன் வேலை செய்யாமல் நாள் முழுவதும் இப்படி நின்றுகொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்டான். 7 அவர்கள், 'எவரும் எங்களைக் கூலிக்கு அமர்த்தவில்லை' என்றார்கள். அவன் அவர்களிடம், 'நீங்களும் என் திராட்சைத் தோட்டத்துக்குப் போங்கள்' என்றான். 8 மாலையானதும், திராட்சைத் தோட்டத்துத் தலைவன் தன் காரியக்காரனிடம், 'வேலையாள்களை அழைத்து, பிந்தி வந்தவர்கள் தொடங்கி முந்தி வந்தவர்கள் வரை அவர்களுக்குக் கூலி கொடு' என்று சொன்னான். 9 எனவே, ஐந்து மணிக்கு அமர்த்தப்பட்டவர்கள் வந்து ஆளுக்கு ஒரு திநாரியம் வாங்கினார்கள். 10 ஆகையால், முதலில் அமர்த்தப்பட்டவர்கள் வந்தபோது, தங்களுக்கு மிகுதியாகக் கிடைக்கும் என்று எண்ணினார்கள். ஆனால், அவர்களுக்கும் ஆளுக்கு ஒரு திநாரியம் வீதந்தான் கிடைத்தது. 11 அவர்கள் அதை வாங்கிக்கொண்டு, தலைவனுக்கு விரோதமாக முணுமுணுத்து, 12 'கடைசியில் வந்த இவர்கள் ஒரு மணி நேரந்தான் வேலை செய்தார்கள்; நாங்களோ நாள் முழுவதும் பாடுபட்டதோடு வெயிலின் கொடுமையையும் சகித்தோம்; ஆயினும், இவர்களை எங்களுக்குச் சமமாக்கிவிட்டீரே' என்றார்கள். 13 அவர்களுள் ஒருவனிடம் தலைவன், 'நண்பனே, நான் உனக்கு அநியாயம் செய்யவில்லை. நீ என்னிடம் ஒரு திநாரியத்துக்குச் சம்மதிக்கவில்லையா? 14 உனக்கு உரியதை வாங்கிக்கொண்டு போ. உனக்குக் கொடுத்தது போலக் கடைசியில் வந்த இவனுக்கும் கொடுப்பது என் விருப்பம். 15 என்னுடையதைக்கொண்டு நான் விரும்புகிறபடி செய்ய எனக்கு உரிமையில்லையா? இல்லாவிடில், நான் தாராளமுள்ளவனாய் இருந்ததனால் உனக்குப் பொறாமை வந்துவிட்டதா?' என்றான். 16 இவ்வாறே, பிந்தினோர் முந்தினோரும், முந்தினோர் பிந்தினோரும் ஆவார்கள்.'' என்றார்.

### இயேசு தம் மரணத்தையும் உயிர்த்தெழுதலையும் பற்றி மூன்றாம்முறை அறிவித்தல்

*(மாற். 10 : 32—34; லூக். 18 : 31—34)*

17 இயேசு எருசலேமுக்குப் போகையில் வழியிலே பன்னிருவரையும் ஒரு பக்கமாக அழைத்து அவர்களிடம், 18 ''நாம் இப்போது எருசலேமுக்குப் போகிறோம். மனுமைந்தர் தலைமை ஆசாரியர்களிடமும் வேத அறிஞரிடமும் ஒப்புக்கொடுக்கப்படுவார். அவர்கள் அவருக்குக் கொலைத் தீர்ப்பளிப்பார்கள்; 19 அவரை ஏளனம் செய்து, வாரினால் அடித்து, சிலுவையில் அறையும்படி யூதரல்லாதாரிடம் ஒப்புக்கொடுப்பார்கள்.

* ஒரு திநாரியம் விவசாயத் தொழிலாளியின் ஒரு நாள் கூலிக்குச் சமம்.

† மூலத்தில், யூதர் கணக்குப்படி, 'மூன்றாம் மணி' என்றிருக்கிறது.

‡, ¶, § மூலத்தில், யூதர் கணக்குப்படி, முறையே ஆறாம் மணி, ஒன்பதாம் மணி, பதினோராம் மணி என்றிருக்கிறது.

**19:28** தானி. 7:22; லூக். 22:30; 1 கொரி. 6:2; திருவெளி. 3:21; 20:4. **19:30** மத். 20:16; லூக். 13:30. **20:8** இலே. 19:13; உபா. 24:15. **20:16** மத். 19:30; மாற். 10:31; லூக். 13:30.

அவரோ மூன்றும் நாளில் உயிரோடெழுப்பப்படுவார்'' என்றார்.

## ஒரு தாயின் வேண்டுகோள்

(மாற். 10 : 35–45)

20 பிறகு செபெதேயுவின் மைந்தருடைய தாய், அவரிடம் தன் மைந்தருடன் வந்து, ஒரு வேண்டுகோள் செய்வதற்காக அவரைப் பணிந்து நின்றாள். 21 அவர் அவளிடம், ''உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்க, அவள், ''உம்முடைய அரசில் என் மைந்தர்களாகிய இவ்விருவரும் ஒருவன் உமது வலப்பக்கத்திலும், ஒருவன் உமது இடப்பக்கத்திலும் அமர்ந்திருக்கும்படி அருள்புரிய வேண்டும்''' என்றாள். 22 அதற்கு இயேசு, ''நீங்கள் என்ன கேட்கிறீர்கள் என்பதே உங்களுக்குத் தெரியவில்லை. நான் குடிக்கப்போகும் *பானத்தை உங்களால் குடிக்க முடியுமா?'' என்று கேட்டார். அதற்கு அவர்கள், ''எங்களால் முடியும்'' என்று சொன்னார்கள். 23 அவர் அவர்களைப் பார்த்து, ''ஆம், நான் குடிக்கப்போகும் பானத்தை நீங்கள் குடிக்கத்தான் போகிறீர்கள்; ஆனால் என் வலப்பக்கத்திலும் இடப்பக்கத்திலும் அமர்ந்திருக்கும்படி அருள்புரிவதோ என் உரிமையன்று; என் தந்தையினால் அவ்விடங்கள் யாருக்கென்று குறிக்கப்பட்டிருக்கின்றனவோ அவர்களுக்கே அருளப்படும்'' என்று சொன்னார். 24 இவற்றைக் கேட்டு மற்றப் பத்துப் பேரும் அந்த இரு சகோதரர்மேல் சினங்கொண்டனர். 25 இயேசு அவர்களைத் தம்மிடம் அழைத்து, ''உலக மக்களை ஆளுகிறவர்கள் அவர்கள் மீது இறுமாப்புடன் ஆட்சி செலுத்துவதுண்டு என்பதும், மேலதிகாரிகள் அவர்கள்மீது சர்வாதிகாரம் செலுத்துவதுண்டு என்பதும் உங்களுக்குத் தெரியும். 26 ஆனால், உங்களிடையே அப்படி இருத்தலாகாது. உங்களுள் எவன் பெரியவனாயிருக்க விரும்புகிறானோ அவன் உங்களுக்கு ஊழியனாகவே இருக்கட்டும். 27 உங்களுள் எவன் தலைவனாயிருக்க விரும்புகிறானோ அவன் உங்களுக்கு அடிமையாகவே இருக்கட்டும். 28 இவ்வாறே மனுமைந்தரும் ஊழியம் கொள்ளும்படி வராமல், ஊழியம் செய்யவும், எல்லாரையும் மீட்டுக்கொள்ளும் பொருட்டுத் தம் உயிரையே மீட்புப் பொருளாகக் கொடுக்கவும் வந்தார்'' என்றார்.

## குருடர் இருவர் பார்வை அடைதல்

(மாற். 10:46–52; லூக். 18:35–43)

29 அவர்கள் எரிகோ நகரத்தை விட்டுப் புறப்பட்டுப் போகையில் ஒரு பெரிய கூட்டம் அவருக்குப் பின்னே சென்றது. 30 வழியோரத்தில் உட்கார்ந்திருந்த குருடர் இருவர், இயேசு அவ்வழியே வருகிறார் என்று கேள்விப்பட்டு, ''ஆண்டவரே, தாவீதின் மைந்தரே, எங்கள்மீது இரங்கியருளும்'' என்று கத்தினார்கள். அவர்களைப் பேசாதிருக்கும்படி கூட்டத்தினர் அதட்டினர். 31 அவர்களோ, ''ஆண்டவரே, தாவீதின் மைந்தரே, எங்கள்மீது இரங்கியருளும்'' என்று இன்னும் உரத்துக் கத்திக்கொண்டேயிருந்தார்கள். 32 இயேசு நின்று, அவர்களை அழைத்து, ''உங்களுக்கு நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்க, 33 அவர்கள், ''ஆண்டவரே எங்கள் கண்களைத் திறந்தருளும்'' என்றார்கள். 34 இயேசு மனவுருக்கங்கொண்டு, அவர்களுடைய கண்களைத் தொட்டார். உடனே அவர்கள் பார்வையடைந்து அவரைப் பின்பற்றிச் சென்றார்கள்.

## இயேசு எருசலேமுக்குள் அரசகோலத்துடன் செல்லுதல்

(மாற். 11 : 1–11; லூக். 19 :28–38; யோ. 12 : 12–19)

21 அவர்கள் எருசலேமை நெருங்கி, ஒலிவமலைச்சரிவிலுள்ள பெத்பகே என்னும் ஊரை அடைந்தபோது, இயேசு சீடர் இருவரிடம், 2 ''உங்களுக்கு எதிரே இருக்கிற அந்த ஊருக்குப் போங்கள். போனதும் கட்டப்பட்டிருக்கிற ஒரு கழுதையையும், அதனோடு அதன் குட்டியையும் காண்பீர்கள். அவற்றை அவிழ்த்து என்னிடம் கொண்டுவாருங்கள். 3 யாராவது ஒருவன் உங்களிடம் ஏதேனும் சொன்னால், நீங்கள், 'ஆண்டவருக்கு இவை 'தேவை' என்று சொல்லுங்கள்; உடனே அவற்றை அனுப்பிவிடுவான்'' என்று சொல்லி அவர்களை அனுப்பினார்.

4 ''இதோ, உன் அரசர் சாந்தகுணமுள்ளவராய் உன்னிடம் வருகிறார்,
கழுதையின்மேல் ஏறிவருகிறார்,
பொதிமிருகக் குட்டியின்மேல் ஏறிவருகிறார்.
என்று சீயோன் மகளுக்குச் சொல்லுங்கள்''

என்று, 5 இறைவாக்குரைப்போர் மூலமாக உரைக்கப்பட்டது நிறைவேற இது நடந்தது. 6 சீடர்கள் போய், இயேசு தங்களுக்குக் கட்டளையிட்டபடியே செய்தார்கள். 7 அவர்கள் கழுதையையும் குட்டியையும் ஓட்டிவந்து, அவற்றின்மேல் தங்கள் மேலாடைகளைப் போட்டார்கள்; அவர் ஏறியமர்ந்து சென்றார். 8 திரளான மக்கள் தங்கள் மேலாடைகளை வழியில் விரித்தார்கள். சிலர் மரக்கிளைகளை வெட்டி வழியில் பரப்பினர். 9 முன்னே சென்றவர்களும் பின்னே வந்தவர்களுமாகிய மக்கள்.

* கிரேக்க பதத்தின் நேர்ப்பொருள். 'பாத்திரத்தை' என்பது.

20:25, 26 லூக். 22:25, 26. 20:26, 27 மத். 23:11; மாற். 9:35; லூக். 22:26; யோ. 13:4, 15. 20:28 மத். 26:28; ரோ. 5:6; 1 தீமோ. 2:6. 21:4 சக. 9:9. 21:7; 1 அர. 1:33. 21:8 2 அர. 9:13. 21:9 சங். 118:26.

''தாவீதின் மைந்தருக்கு ஓசன்னா!*
ஆண்டவரின் திருப்பெயரால் வருகிறவர்
ஆசி பெறுவாராக,
விண்ணகத்தில் ஓசன்னா!''
என்று ஆர்ப்பரித்தார்கள். 10 அவர் எருச
லேமுக்குள் சென்றபோது, நகரத்தார் எல்
லாரும் கலக்கமுற்று, ''இவர் யார்?'' என்று
கேட்டனர். 11 ''இவர்தாம் இறைவாக்
குரைப்பவராகிய இயேசு; கலிலேயா நாட்டு
நாசரேத்தூரைச் சார்ந்தவர்'' என்று கூட்
டத்தார் பதிலளித்தனர்.

### இயேசு திருக்கோவிலைப் புனிதமாக்குதல்

(மாற். 11 : 15-19; லூக். 19:45-48;
யோ. 2:13-22)

12 இயேசு திருக்கோவிலுக்குள் சென்று,
அங்கே வாணிகம் செய்துகொண்டிருந்தவர்
கள், வாங்கிக்கொண்டிருந்தவர்கள் எல்
லாரையும் வெளியே துரத்தினார்; காசுக்
கடைக்காரரின் மேசைகளையும், புறா விற்பவர்
களின் இருக்கைகளையும் கவிழ்த்துப் போட்
டார். 13 பிறகு அவர்களிடம், ''என்
வீடு ஜெபவீடு என்று வேதத்தில் எழுதியிருக்
கிறது; நீங்களோ அதைக் கொள்ளைக்காரரின்
குகையாக்குகிறீர்கள்'' என்று சொன்னார்.

14 திருக்கோவிலில் குருடரும் சப்பாணி
யரும் அவரிடம் வந்தனர். 15 அவர் அவர்
களைக் குணமாக்கினார். தலைமை ஆசாரியரும்
வேத அறிஞரும் அவர் செய்த வியப்பூட்டும்
செயல்களையும், ''தாவீதின் மைந்தருக்கு
ஓசன்னா'' என்று பிள்ளைகள் திருக்கோவிலில்
ஆர்ப்பரிக்கிறதையும் கண்டு சினங்கொண்டு,
16 அவரை நோக்கி, ''இவர்கள் சொல்லு
கிறது உமக்குக் கேட்கிறதா?'' என்று கேட்
டனர். அவர், ''ஆம், கேட்கிறது, 'சிறுவரு
டைய வாயும் குழந்தைகளின் வாயும் உம்
மைப் புகழ்ந்தேத்தும்படி செய்தீர்' என்று
நீங்கள் வேதத்தில் படித்ததே இல்லையா?''
என்று கேட்டார். 17 பிறகு அவர் அவர்களை
விட்டகன்று, நகரத்திற்கு வெளியே பெத்தா
னியா என்னும் ஊருக்குப் போய், அங்கே
இராத் தங்கினார்.

### அத்தி மரம் சபிக்கப்படுதல்

(மாற். 11:12—14, 20—24)

18 காலையில் அவர் நகரத்திற்குத் திரும்பி
வருகையில் அவருக்குப் பசித்தது. 19 வழி
யருகே ஓர் அத்தி மரத்தைக் கண்டு, அதனரு
கில் சென்றார். அதில் இலைகளைத் தவிர
வேறொன்றையும் காணவில்லை. அதனால்,
''இனிமேல் நீ ஒருபோதும் கனிகொடுக்கப்
போவதில்லை'' என்றார். 20 உடனே அத்தி
மரம் பட்டுப்போயிற்று. சீடர் அதைக்கண்டு
வியப்படைந்து, ''அத்தி மரம் எப்படி
இவ்வளவு விரைவில் பட்டுப்போயிற்று?''
என்று கேட்க, 21 இயேசு, ''நீங்கள் ஐயம்
எதுவுமின்றி நம்புவீர்களானால், இந்த
அத்தி மரத்துக்கு நான் செய்ததை நீங்களும்
செய்வீர்கள். அதுவுமன்றி, நீங்கள் இந்த
மலையைப் பார்த்து, 'நீ பெயர்ந்து, கடலில்
போய் விழு' என்று சொன்னாலும் அது
அப்படியே நடக்கும்; இதை உறுதியாக உங்
களுக்குச் சொல்லுகிறேன். 22 நீங்கள் நம்
பிக்கையோடு ஜெபத்தின் மூலம் கேட்பவை
எவையாயினும் அவற்றை யெல்லாம் பெற்
றுக்கொள்வீர்கள்'' என்றார்.

### இயேசுவின் அதிகாரத்தைப்பற்றிய கேள்வி

(மாற். 11:27—33; லூக். 20:1—8)

23 இயேசு திருக்கோவிலுக்குள் சென்று
போதித்துக்கொண்டிருக்கையில், தலைமை
ஆசாரியரும் மக்களின் மூப்பரும் அவரிடம்
வந்து, ''நீர் எந்த அதிகாரத்தைக்கொண்டு
இவற்றைச் செய்கிறீர்? இந்த அதிகாரத்தை
உமக்குக் கொடுத்தவர் யார்?'' என்று கேட்
டனர். 24 அதற்கு இயேசு, ''நானும்
உங்களை ஒரு கேள்வி கேட்கிறேன். அதற்கு
நீங்கள் பதில் சொன்னால், நானும் எந்த
அதிகாரத்தைக்கொண்டு இவற்றைச் செய்
கிறேன் என்பதை உங்களுக்குச் சொல்லு
கிறேன். 25 திருமுழுக்குக் கொடுக்கும் அதி
காரம் யோவானுக்கு எங்கிருந்து வந்தது?
கடவுளிடமிருந்தா† அல்லது மனிதரிட
மிருந்தா?'' என்று கேட்டார். அவர்கள் தங்
களிடையே கலந்துபேசி, ''கடவுளிடமிருந்து
வந்தது' என்று சொல்வோமானால், 'பின்
ஏன் நீங்கள் அவரை நம்பவில்லை?' என்று
நம்மைக் கேட்பார். 26 'மனிதரிடமிருந்து
வந்தது' என்று சொல்வோமென்றாலோ, மக்
களைப்பற்றிய அச்சம் நமக்கு இருக்கிறதே.
ஏனென்றால், யோவானை இறைவாக்குரைக்
கும் ஒரு பெரியார் என்று எல்லாரும் மதித்து
வருகிறார்களே'' என்று பேசிக்கொண்டு,
இயேசுவினிடம், ''எங்களுக்குத் தெரியாது''
என்றார்கள். 27 அவரும் அவ்வாறே,
''நானும் எந்த அதிகாரத்தைக்கொண்டு
இவற்றைச் செய்கிறேன் என்று உங்களுக்குச்
சொல்ல மாட்டேன்'' என்று சொல்லி
விட்டார்.

### உடன் பிறந்தார் இருவர் உவமை

28 பிறகு அவர், ''இது உங்களுக்கு எப்
படித் தோன்றுகிறது? ஒருவனுக்கு இரண்டு
மைந்தர்கள் இருந்தார்கள். அவன் மூத்த
வனிடம் சென்று, 'மகனே, இன்று நீ திராட்
சைத் தோட்டத்துக்குப் போய் வேலை செய்'

*இந்த எபிரேய பதத்தின் மூலப்பொருள், 'காத்தருளும்' என்பது. ஆனால் வழக்கில் இது வாழ்த்தைத் தெரிவிக்கும் ஒரு பதமாயிற்று.
† மூலத்திலிருக்கும் பதத்தின் நேர்ப்பொருள், விண்ணுலகத்திலிருந்தா என்பது.
**21:13** ஓசா. 56:7 **21:15** யோ. 12:19. **21:16** சங். 8:2. **21:21** மத். 17:20; லூக். 17:6; யோ. 14:12; 1 கொரி. 13:2. **21:23** யோ. 2:18. **21:25** யோ. 3:27.

ஒன்று சேர்ந்து அவரிடம் வந்தார்கள்.
35 அவர்களுள் நீதிச்சட்ட அறிஞனாயிருந்த
ஒருவன் அவரைப் பரிசோதிக்கும் வகையில்,
36 ''போதகரே, நீதிச்சட்டத்தில் முதன்
மையான திருக்கட்டளை எது?'' என்று கேட்
டான். 37 அவர், ''உன் கடவுளாகிய ஆண்
டவரிடம் உன் முழு உள்ளத்தோடும் உன்
முழு ஆன்மாவோடும் உன் முழு மனத்
தோடும் அன்புகொள்வாயாக. 38 இதுவே
முக்கியமானதும் முதன்மையானதுமான
திருக்கட்டளை. 39 இதை ஒத்திருக்கிற
இரண்டாம் திருக்கட்டளை, உன்னிடம் நீ
அன்புகொள்வதுபோல அடுத்தவனிடமும்
அன்புகொள்வாயாக என்பது. 40 இவ்விரு
திருக்கட்டளைகளிலும் நீதிச்சட்டம் முழுமை
யும் இறைவாக்குரைப்போரின் 'போதனையும்
அடங்கியிருக்கின்றன'' என்றார்.

### மேசியாவைப்பற்றிய கேள்வி

(மாற். 12 35–37; லூக். 20:41–44)

41 பரிசேயர் கூடியிருந்த அந்த வேளையில்
இயேசு அவர்களைப் பார்த்து, 42 ''மேசி
யாவைக் குறித்து நீங்கள் என்ன நினைக்கிறீர்
கள்? அவர் யாருடைய மைந்தர்?'' என்று
கேட்டார். ''அவர் தாவீதின் மைந்தர்'' என்
றார்கள். 43 அதற்கு அவர் ,''அப்படியானால்
தாவீது ஆவியானவரால் ஆட்கொள்ளப்
பட்டு, அவரை ஆண்டவர் என்று சொல்வது
எப்படி?
44 ('கடவுளாகிய) ஆண்டவர் என் ஆண்
டவரிடம் :
நான் உம்முடைய பகைவரை உமது
காலடியின்கீழ்ப் போடுகிறேன்;
அதுவரை நீர் என் வலப்பக்கத்தில்
அமர்ந்திரும் என்றார்'
என்று கூறியிருக்கிறாரே. 45 தாவீதே மேசி
யாவை ஆண்டவரென்று அழைத்திருக்கிறா
ரென்றால், அவர் தாவீதுக்கு மைந்தராயிருப்
பது எப்படி?'' என்று கேட்டார். 46 அவ
ருக்கு மறுமொழியாக ஒருவனாலும் ஒரு
வார்த்தைகூடச் சொல்ல இயலாமற்
போயிற்று; அன்று முதல் ஒருவனும்
அவரிடம் கேள்வி கேட்கத் துணியவுமில்லை.

### பரிசேயரின் போலி பக்தியை வெளிப்படுத்துதல்

(மாற். 12:38–40; லூக். 11:37–52;
20 : 45–47)

23 பிறகு இயேசு அங்கே கூடியிருந்தவர்களை
யும் சீடரையும் பார்த்து, 2 ''வேத அறி
ஞரும் பரிசேயரும் மோசேயின் பதவியில் வீற்
றிருக்கிறார்கள். 3 ஆகையால் அவர்கள்
உங்களுக்கு என்னென்ன சொல்லுகிறார்
களோ அவற்றின்படியெல்லாம் ஒழுங்காக
நடந்து வாருங்கள், அவர்கள் நடத்தை
யையோ பின்பற்றாதீர்கள். ஏனென்றால்,
அவர்கள் சொல்வார்கள், ஆனால் அதன்படி
நடப்பதில்லை. 4 பளுவான சுமைகளைக் கட்டி
மனிதர் தோள்மேல் வைக்கிறார்கள், ஆனால்
அவற்றைச் சுமந்து செல்லக் கைகொடுத்து
உதவமாட்டார்கள்; 5 தங்கள் செய்கைகளை
யெல்லாம் மனிதர் காண வேண்டுமென்றே
செய்கிறார்கள்; தங்கள் *நெற்றிப்பட்டங்களை
அகலமாக்கி, ஆடையின் குஞ்சங்களைப் பெரி
தாக்குகிறார்கள். 6 விருந்துகளில் முதன்மை
யான இடங்களையும், தொழுகைக்கூடங்
களில் முதன்மையான இருக்கைகளையும்,
7 சந்தை வெளிகளில் வணக்கத்தையும்,
†ரபீ என்று மனிதரால் அழைக்கப்படுவதை
யும் நாடுகிறார்கள். 8 நீங்களோ, மக்கள்
உங்களை 'ரபீ' என்று அழைக்காதபடி பார்த்
துக்கொள்ளுங்கள்; உங்களுக்குக் குருவாயிரு
கிறவர் ஒருவரே; நீங்களெல்லாரும் சகோ
தரர். 9 மண்ணுலகில் ஒருவனையும் 'தந்தை'
என்று நீங்கள் அழைக்க வேண்டாம், உங்
களுக்குத் தந்தையாயிருக்கிறவர் ஒருவரே;
அவர் விண்ணுலகில் இருக்கிறார். 10 மக்கள்
உங்களைத் தலைவர்கள் என்று அழைக்காத
படி பார்த்துக்கொள்ளுங்கள். 11 மேசியா
ஒருவரே உங்கள் தலைவர். உங்களிடையே
பெரியவனாயிருப்பவன் உங்களுக்குப் பணி
யாளாய் இருக்கட்டும். 12 தன்னை உயர்த்து
கிறவன் தாழ்த்தப்படுவான்; தன்னைத்
தாழ்த்துகிறவனே உயர்த்தப்படுவான்.
13 ''போலி பக்தர்களாகிய வேத அறி
ஞரே, பரிசேயரே, உங்களுக்குக் கேடு வரும்.
மனிதர் விண்ணரசிற்குள் செல்லாதபடி
அவர்களுக்கெதிரில் அதன் கதவைப் பூட்டி
விடுகிறீர்கள்; நீங்களும் அதனுள் செல்லுவ
தில்லை, செல்ல முயலுகிறவர்களைச் செல்ல
விடுவதுமில்லை.
[14 ''போலி பக்தர்களாகிய வேத அறி
ஞரே, பரிசேயரே, உங்களுக்குக் கேடு வரும்.
நீங்கள் கைம்பெண்களின் சொத்துகளைக்
கைப்பற்றி விழுங்கிவிடுகிறீர்கள்; அதே
சமயத்தில் வெளிப்பார்வைக்குக் கடவுளிடம்
நீண்ட நேரம் வேண்டுதலும் செய்கிறீர்கள்.
இதன் பொருட்டு நீங்கள் கடுமையான
தண்டனை பெறுவீர்கள்''].
15 ''போலி பக்தர்களாகிய வேத அறி
ஞரே, பரிசேயரே, உங்களுக்குக் கேடு வரும்.
ஒரே ஒருவனை உங்கள் மார்க்கத்தில் சேர்க்
கும்படி தரையையும் தண்ணீரையும் கடந்து
செல்கிறீர்கள்; அவன் வந்து சேரும்போது,
அவனை நரகத்துக்கு உங்களைவிட இரண்டு
மடங்கு தகுதியுள்ளவனாக்கிவிடுகிறீர்கள்.

* வேத வசனங்கள் அடங்கிய சிறு தோற்பை.
† யூத மத குரு.

22:37 உபா. 6:5; 1 யோ. 2:7. 22:39 இலே. 19:18; கலா. 5:14. 22:44 சங். 110:1; திருத்தூது. 2:34; எபி. 1:13. 1 கொரி. 15:25; 22 46 லூக். 20:40. 23 :4 உபா. 17:10, 11; ரோ. 2:17-24. 23:5 மத். 6:8; உபா. 6:8; எண். 15:38. 23:11 மத். 20:26, 27; மாற். 9:35; 10:43, 44; லூக். 22:26. 23:12 லூக். 14:11; 18:14; 1:52, 53.

16 ''குருட்டு வழிகாட்டிகளே, உங்களுக்
குக் கேடு வரும். எவனாவது திருக்கோவிலின்
மேல் ஆணையிட்டால், அதனால் ஒன்றுமில்லை
என்றும், ஆனால் எவனாவது திருக்கோவிலின்
பொன்னின்மேல் ஆணையிட்டால், அவன்
அதற்குக் கட்டுப்பட்டவன் என்றும் சொல்லு
கிறீர்கள். 17 மதிகேடரே, குருடரே, எது
பெரிது? பொன்னா அல்லது பொன்னைப்
புனிதமாக்கும் திருக்கோவிலா? 18 மேலும்,
எவனாவது பலி பீடத்தின்மேல் ஆணையிட்
டால், அதனால் ஒன்றுமில்லை என்றும், ஆனால்
எவனாவது அதன்மேலுள்ள காணிக்கையின்
மேல் ஆணையிட்டால் அவன் அதற்குக் கட்
டுப்பட்டவன் என்றும் சொல்லுகிறீர்கள்.
19 குருடரே, எது பெரிது? காணிக்கையா
அல்லது காணிக்கையைப் புனிதமாக்கும்
பலிபீடமா? 20 ஆகையால் பலிபீடத்தின்
மேல் ஆணையிடுகிறவன் அதன்மேலும் அதன்
மீதுள்ள எல்லாவற்றின்மேலும் ஆணையிடு
கிறான். 21 திருக்கோவிலின்மேல் ஆணையிடு
கிறவன் அதன்மேலும் அதில் குடிகொண்டிருப்
பவர்மேலும் ஆணையிடுகிறான். 22 வானத்
தின்மேல் ஆணையிடுகிறவன் கடவுளின்
அரியணையின்மேலும் அதில் வீற்றிருக்கிறவர்
மேலும் ஆணையிடுகிறான்.

23 ''போலி பக்தர்களாகிய வேத அறி
ஞரே, பரிசேயரே, உங்களுக்குக் கேடு வரும்.
நீங்கள் புதினா, வெந்தயம், சீரகம் ஆகியவற்
றுள் பத்திலொரு பாகத்தைச் செலுத்து
கிறீர்கள்; ஆனால் நீதிச்சட்டத்தில் முக்கியம்
பெற்றிருக்கும் நியாயம், இரக்கம், கடவுளைப்
பற்றும் நம்பிக்கை ஆகியவற்றைக் கைக்
கொள்ளாமல் விட்டுவிட்டீர்கள். அவற்றைச்
செலுத்துவதை விட்டுவிடாமலே, இவற்றை
நீங்கள் கைக்கொண்டு வந்திருக்க வேண்டும்.
24 குருட்டு வழிகாட்டிகளே, நீங்கள்
கொசுவை வடிகட்டி ஒட்டகத்தை விழுங்கு
கிறீர்கள்.

25 ''போலி பக்தர்களாகிய வேத அறி
ஞரே, பரிசேயரே, உங்களுக்குக் கேடு வரும்.
நீங்கள் உணவுப் பாத்திரங்களின் வெளிப்
புறத்தைத் துப்புரவாக்குகிறீர்கள்; உட்புறத்
திலோ அவை கொள்ளையாலும் தீய இச்சை
யாலும் நிறைந்திருக்கின்றன. 26 குருட்டுப்
பரிசேயனே, முதலில் பாத்திரத்தின் உட்
புறத்தைத் துப்புரவாக்கு; அப்பொழுது
அதன் வெளிப்புறமும் துப்புரவாகும்.

27 ''போலி பக்தர்களாகிய வேத அறி
ஞரே, பரிசேயரே, உங்களுக்குக் கேடு வரும்.
நீங்கள் வெள்ளையடித்த கல்லறைகளுக்கு ஒப்
பாயிருக்கிறீர்கள். அவை புறம்பே அழகாய்க்
காணப்படுகின்றன. அவற்றினுள்ளேயோ
இறந்தவர்களின் எலும்புகளும் எல்லா வகை
யான அசுத்தமும் நிறைந்திருக்கும். 28 அவ்
வாறே நீங்களும் புறம்பே நேர்மையானவர்
கள்போல மனிதருக்குக் காணப்படுகிறீர்
கள்; ஆனால் உள்ளேயோ போலித்தனத்
தாலும் அக்கிரமத்தாலும் நிறைந்திருக்
கிறீர்கள்.

29 ''போலி பக்தர்களாகிய வேத அறி
ஞரே, பரிசேயரே, உங்களுக்குக் கேடு வரும்.
நீங்கள் இறைவாக்குரைப்போரின் கல்லறை
களைக் கட்டுகிறீர்கள்; நேர்மையானவர்களின்
சமாதிகளை அலங்கரிக்கிறீர்கள். 30 'எங்கள்
மூதாதையர் காலத்தில் நாங்கள் இருந்திருந்
தால், இறைவாக்குரைப்போரின் இரத்
தத்தை அவர்கள் சிந்திய பழிக்கு நாங்கள்
உடந்தையாக இருந்திருக்கமாட்டோம்' என்
கிறீர்கள். 31 இப்படிச் சொல்வதால்,
நீங்கள் இறைவாக்குரைப்போரைக் கொன்ற
வர்களின் மைந்தரென்பதற்கு நீங்களே
சாட்சிகளாகிறீர்கள். 32 ஆகவே, உங்கள்
மூதாதையர் தொடங்கின காரியத்தை
நீங்கள் செய்து முடித்துவிடுங்கள். 33 பாம்பு
களே, விரியன்குட்டிகளே, உங்களால்
நரக தண்டனைக்கு எப்படித் தப்ப முடியும்?
34 ஆகையால் நான் இப்போது இறைவாக்
குரைப்போரையும் ஞானிகளையும் வேத
அறிஞரையும் உங்களிடம் அனுப்பப்
போகிறேன். அவர்களுள் சிலரைக் கொல்
வீர்கள்; சிலுவையிலும் அறைவீர்கள்;
சிலரை உங்கள் தொழுகைக்கூடங்களில்
வாரினால் அடிப்பீர்கள்; ஊர் ஊராய்த் துரத்
தித் துன்புறுத்தவும் செய்வீர்கள். 35 நீங்கள்
இப்படிச் செய்வதனால், நீதிமான் ஆபேலு
டைய இரத்தம் முதல் திருக்கோவிலுக்கும்
பலிபீடத்துக்கும் நடுவே நீங்கள் கொன்ற
பரகியாவின் மகனாகிய சகரியாவின் இரத்
தம் வரைக்கும், பூமியில் சிந்தப்பட்ட எல்லா
நீதிமான்களின் இரத்தத்திற்கும் உங்களிடம்
பழிவாங்கப்படும். 36 அந்தத் தண்டனை
களெல்லாம் இந்தத் தலைமுறையின் மீதே
சுமரும். இதை உங்களுக்கு உறுதியாகச்
சொல்லுகிறேன்.

### இயேசு எருசலேமுக்காக வருந்துதல்

(லூக். 13:34, 35)

37 ''எருசலேமே, எருசலேமே, இறைவாக்
குரைப்போரைக் கொன்று, உன்னிடம்
அனுப்பப்பட்டவர்களைக் கல்லாலடிக்கும்
நகரமே! கோழி தன் குஞ்சுகளைச் சிறகுகளின்
கீழே கூட்டிச் சேர்த்துக்கொள்ளும் வண்ண
மாக நான் எத்தனையோ முறை உன் பிள்ளை
களைக் கூட்டிச் சேர்த்துக்கொள்ள விரும்
பினேன். உங்களுக்கோ விருப்பமில்லாமற்
போயிற்று. 38 இப்போதோ உங்களுடைய
வீடு கைவிடப்பட்டதாயிற்று. 39 இதுமுதல்
'ஆண்டவரின் திருப்பெயரால் வருகிறவர்
ஆசிபெறுவாராக' என்று நீங்கள் சொல்லும்
காலம்வரை என்னைக் காணவே மாட்டீர்கள்

**23:22** ஏசா. 66;:1 மத். 5:34. **23:23** இலே. 27:30; உபா. 14:22; எசே. 45:13. **23:27** திருத்தூது. 23:3. **23:28** லூக். 16:15; 18:9. **23:30** லூக். 11:47. **23:31** திருத்தூது. 7:52. **23:35** ஆதி. 4:8-10; எபி. 11:4; திருவெளி. 16:6; 18:24, **23:37** சங். 17:8; 91:4. **23:38** சங். 118:26.

என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்''
என்றார்.

### திருக்கோவிலின் அழிவைப்பற்றிய முன்னறிவிப்பு

(மாற். 13:1, 2; லூக். 21:5 ,6)

24 இயேசு திருக்கோவிலை விட்டுப் புறப்பட்
டுப் போகையில், அவருடைய சீடர்கள்
திருக்கோவிலைச் சேர்ந்த கட்டடங்களை
அவருக்குக் காட்டுவதற்காக அவரிடம் வந்
தார்கள். 2 அவர் அவர்களைப் பார்த்து,
''இவற்றையெல்லாம் பார்க்கிறீர்களே; இவ்
விடத்தில் கல்லின்மேல் கல் இராதபடி எல்
லாம் இடிக்கப்படப்போகின்றன என்று
உங்களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன்''
என்று சொன்னார்.

### துன்பங்களின் தொடக்கம்

(மாற். 13:3–13; லூக். 21:7–19)

3 அவர் ஒலிவ மலையில் உட்கார்ந்திருக்
கையில், சீடர்கள் அவரிடம் தனித்து வந்து,
''இவை எப்போது நடக்கும்? உம்முடைய
வருகைக்கும் யுக முடிவுக்கும் அறிகுறி
என்ன? எங்களுக்குச் சொல்லும்'' என்று
கேட்டார்கள். 4 அதற்கு இயேசு, ''ஒருவ
னும் உங்களை ஏமாற்றிவிடாதபடி பார்த்
துக்கொள்ளுங்கள். 5 ஏனெனில், என்
பெயரை வைத்துக்கொண்டு, 'நானே
மேசியா' என்று சொல்லும் பலர் தோன்று
வர். 6 போர் முழக்கத்தையும் போர்ச்
செய்திகளையும் கேட்கப்போகிறீர்கள். என்
றாலும், கலங்க வேண்டாம். இவை நடக்கத்
தான் வேண்டும். ஆனால் முடிவு அப்போதுங்
கூட வந்துவிடாது. 7 நாட்டை எதிர்த்து
நாடும், அரசை எதிர்த்து அரசும் எழும்
பும். பஞ்சமும், பல இடங்களில் நில நடுக்
கங்களும் உண்டாகும். 8 இவையெல்லாம்
துன்பங்களின் தொடக்கமே.

9 அப்பொழுது உங்களை வாதிப்பதற்கும்
கொல்வதற்கும் ஒப்படைப்பார்கள். என்
பெயரின்பொருட்டு நீங்கள் எல்லா நாட்
டினருடைய பகைக்கும் ஆளாவீர்கள்.
10 அப்பொழுது பலர் கடவுளைப்பற்றும்
நம்பிக்கையில் தடுமாற்றமடைந்து,ஒருவரை
யொருவர் காட்டிக்கொடுப்பார்கள்;
ஒருவரையொருவர் பகைப்பார்கள்.
11 பொய்யாக இறைவாக்குரைப்போர் பலர்
எழுந்து, ஏராளமானபேரை ஏமாற்றுவார்
கள். 12 அக்கிரமம் மிகுதியாவதால் பலரு
டைய அன்பு தணிந்துபோகும். 13 முடிவு
மட்டும் நிலைநிற்பவனே மீட்புப் பெறுவான்.
14 அருளாட்சியைப்பற்றிய இந்த நற்செய்தி
உலகமெங்குமுள்ள எல்லா நாட்டினருக்கும்
இறைச்சான்றாக அறிவிக்கப்படும்; அதன்பின்
முடிவு வரும்.

### பேரழிவு

(மாற். 13 : 14–23; லூக். 21 : 20–24)

15 ''மேலும், இறைவாக்குரைப்பவ
ராகிய தானியேல் மூலமாக உரைக்கப்பட்ட
'பாழாக்கும் அருவருப்பான பொருள்'*புனித
மான இடத்தில் நிற்பதைக் காணும்போது–
படிப்பவன் இதைப் புரிந்துகொள்ளட்டும்–
16 யூதேயாவில் உள்ளவர்கள் மலைகளுக்கு
ஓடிப்போகட்டும். 17 வீட்டின் மேல்தளத்
தில் இருப்பவன் தன் வீட்டிற்குள் இருப்ப
வற்றை எடுப்பதற்காக இறங்கிப் போக
வேண்டாம். 18 வயலில் இருப்பவன் தன்
மேலாடையை எடுப்பதற்காகத் திரும்பிச்
செல்லவேண்டாம். 19 அந்நாள்களில் கருத்
தரித்திருப்பவர்கள், பால் கொடுக்கிறவர்
கள் ஆகியோருடைய நிலை, ஐயோ! பரி
தாபம்! 20 நீங்கள் ஓடிப்போவது மாரிக்
காலத்திலாவது ஓய்வுநாளிலாவது நேரிடா
திருக்கும்படி கடவுளிடம் மன்றாடுங்கள்.
21 அப்பொழுது மிகுந்த துன்பம் இருக்கும்;
அப்படிப்பட்ட துன்பம் உலகம் உண்டான
காலமுதல் இந்நாள்வரையிலும் இருந்த
தில்லை; இனிமேல் இருக்கப்போவதுமில்லை.
22 அந்த நாள்கள் குறைக்கப்படாவிடில்,
மனுமக்களுள் எவனும் பிழைத்திருக்க
மாட்டான். ஆனால், கடவுளால் தேர்ந்து
கொள்ளப்பட்டவர்களின் பொருட்டு அந்த
நாள்கள் குறைக்கப்படும். 23 அப்பொழுது
எவனாவது ஒருவன் உங்களிடம், 'இதோ,
மேசியா இங்கே இருக்கிறார் அல்லது அங்கே
இருக்கிறார்' என்று சொல்வானானால் நம்
பாதீர்கள். 24 ஏனெனில், போலியான
மேசியாக்களும் பொய்யாக இறைவாக்
குரைப்போரும் எழுந்து, கடவுளால் தேர்ந்து
கொள்ளப்பட்டவர்களை ஏமாற்றக் கூடு
மானால் அதற்காக அரிய பெரிய செயல்களை
யும் அற்புதங்களையும் செய்வார்கள்.
25 இதை உங்களுக்கு முன்னதாகவே
சொல்லிவிட்டேன். 26 ஆகையால், 'அதோ
வனாந்தரத்தில் இருக்கிறார்' என்று உங்களுக்
குச் சொல்வார்களானால் புறப்பட்டுப்
போகாதீர்கள்; 'இதோ, உள்ளறையில்
இருக்கிறார்' என்றால் நம்பாதீர்கள். 27 ஏனெ
னில், மனுமைந்தருடைய வருகையானது
மின்னல் கிழக்கில் தோன்றி மேற்குவரைக்
கும் மின்னுவதுபோல இருக்கும். 28 பிணம்
எங்கே இருக்குமோ அங்கே கழுகுகள் வந்து
கூடும்.

### மனுமைந்தரின் வருகை

(மாற். 13:24–27; லூக். 21:25–28)

29 ''அந்த நாள்களின் துன்பம் முடிந்த
வுடனே கதிரவன் இருண்டுவிடும்; நிலா
ஒளி வீசாது; விண்மீன்கள் வானத்தினின்று

* பொருளடக்க அட்டவணை பார்க்க.

**24:3** 1 யோ. 2:28. **24:9** மத். 10:22. **24:15** தானி. 9:27; 11:31; 12:11. **24:17, 18** லூக். 17:31. **24:21** தானி. 12:1; திருவெளி. 7:14. **24:23** லூக். 17:23, 24; 2 தெச. 2:3, 4, 9. **24:24** 2 பேது. 2:1-3; 1 யோ. 4:1. **24:28** யோபு 39:30; லூக். 17:37. **24:29** எசா. 13:10; 34:4; எசே. 32:7; யோவேல் 2:10,31; 3:15; திருவெளி. 6:12,13.

விழும். வானத்தின் ஆற்றல்கள் அசைக்கப்படும். 30 அப்பொழுது மனுமைந்தரைக் குறிக்கும் ஓர் அடையாளம் வானத்தில் தோன்றும்; தோன்றியதும், உலகிலுள்ள எல்லா நாட்டு மக்களும் புலம்பி அழுவார்கள். மனுமைந்தர் வல்லமையோடும் மாபெரும் மாட்சிமையோடும் வானத்தின் மேகங்கள்மீது வருகிறதைக் காண்பார்கள். 31 பெரிய எக்காள முழக்கத்தோடு அவர் தம்முடைய தூதரை அனுப்புவார். அவர்கள் வானத்தின் ஒரு விளிம்பிலிருந்து மறு விளிம்புவரைக்கும் நான்கு திசைகளிலுமிருந்து அவரால் தேர்ந்துகொள்ளப்பட்டவர்களைக் கூட்டிச் சேர்ப்பார்கள்.

### அத்தி மரத்தின் படிப்பினை

*(மாற். 13:28–31; லூக். 21:29–33)*

32 ‘அத்தி மரத்திலிருந்து இந்தப் படிப்பினையைக் கற்றுக்கொள்ளுங்கள். அது இளங்கிளை விட்டுத் தளிர்க்கும்போது, கோடைக்காலம் நெருங்கிவிட்டதென்று நீங்கள் அறிந்துகொள்கிறீர்கள். 33 அவ்வாறே இவற்றையெல்லாம் நீங்கள் காணும்போது, அவர் வாயிலண்டை நெருங்கி வந்திருக்கிறார் என்று அறிந்துகொள்ளுங்கள். 34 இவையெல்லாம் நடக்கும் வரையிலும் இந்தத் தலைமுறை ஒழிந்துபோவதேயில்லை. இதை உங்களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன். 35 விண்ணும் மண்ணும் ஒழிந்துபோகும், என் வார்த்தைகளோ ஒருபோதும் ஒழிவதில்லை.

### ஒருவனும் அறியாத நாள்

*(மாற். 13:32–37; லூக். 17:26–30, 34–36)*

36 ‘‘அந்த நாளையும் அந்த நேரத்தையும் பற்றி விண்ணகத் தந்தை ஒருவர் தவிர வேறெவரும் அறியார், விண்ணுலகிலுள்ள தூதரும் அறியார். [மனுமைந்தரும் அறியார்.] 37 நோவாவின் காலத்தில் எப்படி இருந்ததோ அப்படியே மனுமைந்தர் வருகையும் இருக்கும். 38 பெருவெள்ளத்துக்கு முற்பட்ட காலத்தில், நோவா பேழைக்குள் சென்ற நாள் வரையிலும், மக்கள் உண்டும் குடித்தும் பெண் கொண்டும் பெண் கொடுத்தும் வந்தார்கள். 39 பெருவெள்ளம் வந்து அனைவரையும் வாரிக்கொண்டு செல்லும்வரை அதைப்பற்றி அவர்களுக்கு ஒன்றுமே தெரியாதிருந்தது. அவ்வாறே மனுமைந்தர் வருகை சமயத்திலும் நடக்கும். 40 வயலில் இரண்டுபேர் இருப்பார்கள்; ஒருவன் உயர எடுத்துக்கொள்ளப்படுவான், மற்றவன் அங்கேயே விட்டுவிடப்படுவான். 41 இரண்டு பெண்கள் ஏந்திரக்கல்லில் அரைத்துக்கொண்டிருப்பார்கள்; ஒரு பெண் உயர எடுத்துக்கொள்ளப்படுவாள். மற்றவளோ விட்டுவிடப்படுவாள். 42 உங்கள் ஆண்டவர் எந்த நாளில் வருவார் என்பது உங்களுக்குத் தெரியாது; ஆகையால் விழிப்பாயிருங்கள். 43 திருடன் எந்தச் சாமத்தில் வருவானென்பது வீட்டுத் தலைவனுக்குத் தெரிந்தால், அவன் விழித்திருப்பான், தன் வீட்டைக் கன்னமிட இடங்கொடுக்கமாட்டான்; இதைத் தெரிந்துகொள்ளுங்கள். 44 நீங்களும் அவ்வாறே ஆயத்தமாயிருங்கள்; நீங்கள் நினையாத நேரத்தில் மனுமைந்தர் வருவார்.

### நம்பிக்கைக்குரிய வேலைக்காரன் யார்?

*(லூக். 12:41–48)*

45 ‘‘நம்பிக்கைக்குரியவனும் முன்மதி உள்ளவனுமான வேலைக்காரன் ஒருவன் தன் உடன் வேலைக்காரருக்கு ஏற்ற வேளையில் உணவளிக்கும்படி தலைவனால் மேலதிகாரியாக நியமிக்கப்பட்டான் என்று வைத்துக்கொள்வோம். 46 தலைவன் வரும்போது அப்படிச் செய்கிறவனாக அவனைக் கண்டால், அவ்வேலைக்காரன் நற்பேறு பெற்றவனாவான். 47 அவனைத் தலைவன் தனக்குள்ள யாவற்றின்மேலும் அதிகாரியாக அமர்த்துவான். இதை உங்களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன். 48 ஆனால், அந்த வேலைக்காரன் பொல்லாதவனாயிருந்து, ‘என் தலைவர் இப்போது வரமாட்டார்’ என்று தன் உள்ளத்தில் சொல்லிக்கொண்டு, 49 உடன் வேலைக்காரரை அடிக்கவும், குடிகாரருடன் கூடிக்கொண்டு உண்ணவும் குடிக்கவும் தலைப்பட்டானென்றால், 50 அந்த வேலைக்காரன் எதிர்பாராத ஒரு நாளிலும் அறியாத ஒரு நேரத்திலும் அவனுடைய தலைவன் வந்து, அவனைக் கடுமையாகத் தண்டிப்பான். 51 போலி பக்தர்களுக்குரிய கதிதான் அவனுக்குக் கிடைக்கும். அங்கே அழுகையும் பற்கடிப்பும் இருக்கும்.

### பத்துக் கன்னியர் உவமை

**25** ‘‘விண்ணரசு அந்நாளில் எவ்வாறு இருக்கும் என்பதை இவ்வாறு விளக்கலாம் : பத்துக் கன்னியர் தம் தீவட்டிகளைப் பிடித்துக்கொண்டு மணவாளரை எதிர்கொள்ளச் சென்றனர். 2 அவர்களுள் ஐவர் முன்மதி இல்லாதவர்கள்; ஐவர் முன்மதி உள்ளவர்கள். 3 முன்மதி இல்லாதவர்கள் தங்கள் தீவட்டிகளைக் கொண்டுபோனபோது எண்ணெயைத் தங்களோடு எடுத்துக்கொண்டு போகவில்லை. 4 முன்மதி உள்ளவர்களோ தங்கள் தீவட்டிகளோடு எண்ணெயையும் கிண்ணங்களில் எடுத்துக்கொண்டு போனார்கள். 5 மணவாளர் வரக் காலந்தாழ்த்தவே, எல்லாரும் தூக்கத்தினால் சோர்வுற்றுத் தூங்கிவிட்டனர். 6 நள்ளிரவில், ‘இதோ, மணவாளர்! அவரை எதிர்கொள்ளப் புறப்படுங்கள்’ என்று கூவும் குரலொன்று கேட்

**24:30** தானி. 7:13; திருவெளி. 1:7; 1 தெச. 4:16. **24:37** ஆதி. 6:5-8; எபி. 11:7. **24:39** ஆதி. 7:11-23; 2 பேது. 3:6. **24:42-44** மத். 25:13; லூக். 12:39, 40; 1 தெச. 5:2; 2 பேது. 3:10; திருவெளி. 3:3. **25:1** லூக். 12:35, 36.

டது. 7 அந்தக் கன்னியர் எல்லாரும் எழுந்து
தத்தம் தீவட்டிகளை ஆயத்தம் செய்தனர்.
8 அப்பொழுது முன்மதி இல்லாதவர்கள்
முன்மதி உள்ளவர்களை நோக்கி, 'உங்கள்
எண்ணெயில் எங்களுக்குக் கொஞ்சம்
கொடுங்கள்; எங்கள் தீவட்டிகள் அணையப்
போகின்றன' என்று சொன்னார்கள்.
9 அதற்கு முன்மதி உள்ளவர்கள், 'இல்லை,
ஒருவேளை எண்ணெய் எங்களுக்கும் உங்
களுக்கும் போதுமானதாய் இல்லாமற்
போகலாம். ஆகையால், நீங்கள் கடைக்
காரரிடம் சென்று உங்களுக்கென்று வாங்கிக்
கொள்ளுவதுதான் நல்லது' என்றார்கள்.
10 அப்படியே அவர்கள் வாங்கப் போனார்
கள். அதற்குள் மணவாளர் வந்துவிட்டார்.
ஆயத்தமாயிருந்தவர்கள் அவரோடு திருமண
வீட்டிற்குள் போனார்கள்; கதவும் அடைக்
கப்பட்டது. 11 பிறகு மற்றக் கன்னியர்
வந்து, 'ஆண்டவனே, ஆண்டவனே, எங்
களுக்குக் கதவைத் திறந்தருளும்' என்று
வேண்டினர். 12 ஆனால், அவரோ மறு
மொழியாக, 'உங்களை நான் அறியேன்;
இதை உங்களுக்கு உறுதியாகச் சொல்லு
கிறேன்' என்று சொன்னார்.

13 ''ஆகையால், நீங்கள் விழிப்பாயிருங்
கள், ஏனெனில், அந்த நாளும் நேரமும்
எப்போது வருமென்பது உங்களுக்குத்
தெரியாது.

## மூன்று பணியாளர் உவமை

*(லூக். 19:11–27)*

14 ''விண்ணரசை இவ்வாறும் விளக்க
லாம்: ஒரு மனிதன் வெளிநாட்டுக்குச் செல்லு
முன் தன் பணியாளரை வரவழைத்து, தன்
சொத்தை அவர்களிடம் ஒப்படைத்தான்.
15 அவன் ஒருவனுக்கு ஐந்து *தாலந்து
பணமும், ஒருவனுக்கு இரண்டு தாலந்து
பணமும், இன்னொருவனுக்கு ஒரு தாலந்து
பணமுமாக, அவனவன் திறமைக்குத் தக்க
வாறு கொடுத்துவிட்டுப் பயணம் சென்
றான். 16 ஐந்து தாலந்து வாங்கினவன்
உடனே போய் அதைக்கொண்டு வாணிகஞ்
செய்து, இன்னும் ஐந்து தாலந்தைச் சம்
பாதித்தான். 17இரண்டு தாலந்துவாங்கினவ
னும் அவ்வாறே செய்து இன்னும் இரண்டு
தாலந்தைச் சம்பாதித்தான். 18 ஒரு தாலந்து
வாங்கினவனோ புறப்பட்டுப் போய் நிலத்
தைத் தோண்டி, தன் தலைவன் கொடுத்த
பணத்தைப் புதைத்து வைத்துவிட்டான்.
19 பல நாள்களுக்குப் பின் அந்தப் பணி
யாளரின் தலைவன் திரும்பிவந்து, அவர்
களுடன் கணக்குத் தீர்க்கத் தொடங்கினான்.
20 ஐந்து தாலந்து வாங்கினவன் இன்னும்
ஐந்து தாலந்தைக் கொண்டு வந்து காட்டி,
'ஐயா, நீர் என்னிடம் ஐந்து தாலந்து ஒப்
படைத்தீர்; இதோ, இன்னும் ஐந்து தாலந்
தைச் சம்பாதித்தேன்' என்றான். 21 தலைவன்
அவனிடம், 'மிக நன்று, நீ நல்லவன், நம்
பிக்கைக்குரிய பணியாளன். இச்சிறு காரியத்
தில் நீ நம்பிக்கைக்குரியவனாயிருந்தாய்;
பெரிய காரியங்களுக்கு உன்னை அதிகாரியாக
வைக்கப் போகிறேன்; வா, உன் தலைவனு
டைய மகிழ்ச்சிக் கொண்டாட்டத்தில்
கலந்துகொள்' என்றான். 22 இரண்டு
தாலந்து வாங்கினவனும் வந்து, 'ஐயா,
நீர் என்னிடம் இரண்டு தாலந்தை ஒப்
படைத்தீர்; இதோ, இன்னும் இரண்டு
தாலந்தைச் சம்பாதித்தேன்' என்றான்.
23 தலைவன் அவனிடம், 'மிக நன்று, நீ
நல்லவன், நம்பிக்கைக்குரிய பணியாளன்.
இச்சிறு காரியத்தில் நம்பிக்கைக்குரியவனா
யிருந்தாய்; பெரிய காரியங்களுக்கு உன்னை
அதிகாரியாக வைக்கப்போகிறேன்; வா,
உன் தலைவனுடைய மகிழ்ச்சிக் கொண்டாட்
டத்தில் கலந்துகொள்' என்றான். 24 ஒரு
தாலந்து வாங்கினவனும் வந்து, 'ஐயா,
நீர் கொடூரமானவர், மற்றவர்கள் விதைத்த
இடத்தில் அறுவடை செய்பவர், மற்றவர்
கள் தூற்றின இடத்தில் சேர்த்துக் குவிப்
பவர் என்பது எனக்குத் தெரியும்.
25 ஆகையால், உமக்கு அஞ்சி உமது
தாலந்தை நிலத்தில் புதைத்து வைத்திருந்
தேன். இதோ, உம்முடைய பணம் அப்
படியே இருக்கிறது, எடுத்துக்கொள்ளும்'
என்றான். 26 தலைவன் அந்தப் பணி
யாளனைப் பார்த்து, 'நீ பொல்லாதவன்,
சோம்பேறி, நான் மற்றவர்கள் விதைத்த
இடத்தில் அறுவடை செய்பவன் என்பதும்
மற்றவர்கள் தூற்றின இடத்தில் சேர்த்துக்
குவிப்பவன் என்பதும் உனக்குத் தெரிந்திருந்
தன அல்லவா? 27 அப்படியானால், நீ என்
பணத்தை வட்டிக் கடையில் கொடுத்து
வைத்திருக்க வேண்டும். வைத்திருந்தால்,
நான் வந்ததும் என் பணத்தை வட்டியோடு
வாங்கியிருப்பேன்' என்று அவனுக்குச்
சொல்லிவிட்டு, 28 'அந்தத் தாலந்தை
இவனிடமிருந்து வாங்கிப் பத்துத் தாலந்து
உள்ளவனுக்குக் கொடுங்கள்; 29 உள்ளவன்
எவனுக்கும் கொடுக்கப்படும், அவன் நிறை
வாகவும் பெறுவான்; இல்லாதவனிட
மிருந்தோ உள்ளதும் எடுத்துக்கொள்ளப்
படும். 30 பயனற்ற இந்தப் பணியாளைப்
புறம்பேயுள்ள இருளில் போடுங்கள்; அங்கே
அழுகையும் பற்கடிப்பும் இருக்கும்' என்று
சொன்னான்.

## எல்லா நாட்டினருக்கும் வரும் தீர்ப்பு

31 ''தெய்வதூதர் புடைசூழ, மனுமைந்
தர் தமது மாட்சிமை விளங்க வரும்போது,
தமது மாட்சிமை பொருந்திய அரியணையில்

* மத் 18:24 அடிக்குறிப்பைப் பார்க்க.

**25:11, 12** லூக். 13:25. **25:19** 2 கொரி. 5:10. **25:29** மத். 13:12; மாற். 4:25; லூக். 8:18. **25:30** மத். 8:12; 22:13; லூக். 13:28. **25:31** மத். 16:27; 19:26; 2 கொரி. 5:10.

வீற்றிருப்பார். 32 அப்பொழுது அவருடைய
முன்னிலையில் எல்லா நாட்டிலுள்ள மக்களும்
ஒன்றுசேர்க்கப்படுவார்கள்; ஆட்டிடையன்
செம்மறியாடுகளையும், வெள்ளாடுகளையும்
வெவ்வேருகப் பிரிப்பதுபோல, அவர்களை
அவர் பிரித்து, 33 செம்மறியாடுகளைத் தம்
வலப்பக்கத்திலும், வெள்ளாடுகளைத் தம்
இடப்பக்கத்திலும் நிறுத்துவார். 34 பிறகு
அரசர் தம் வலப்பக்கத்தில் நிற்பவர்களைப்
பார்த்து, 'வாருங்கள், என் தந்தையின்
ஆசி பெற்றவர்களே, உலகத் தோற்றமுதல்
உங்களுக்காக ஏற்படுத்தப்பட்டுள்ள அரசை
உங்களுக்கு உரியதாக்கிக்கொள்ளுங்கள்.
35 ஏனெனில், பசியுள்ளவனுயிருந்தேன்,
எனக்கு உணவு கொடுத்தீர்கள்; தாகமுள்ள
வனுயிருந்தேன், என் தாகத்தைத் தீர்த்தீர்
கள்; அன்னியனுயிருந்தேன், என்னை ஏற்றுக்
கொண்டீர்கள்; 36 ஆடையில்லாதிருந்தேன்,
எனக்கு ஆடை கொடுத்தீர்கள்; நோயுற்
றிருந்தேன், என்னைக் கவனித்துக்கொள்ள
வந்தீர்கள்; சிறையிலிருந்தேன், என்னைப்
பார்க்க வந்தீர்கள்' என்பார். 37 அப்
பொழுது அந்தச் சான்ருேர்கள், 'ஆண்
வரே, உம்மை நாங்கள் எப்போது பசியுள்ள
வராகக் கண்டு உணவு கொடுத்தோம்?
அல்லது தாகமுள்ளவராகக் கண்டு தாகந்
தீர்த்தோம்? 38 உம்மை எப்போது அன்னிய
ராகக் கண்டு ஏற்றுக்கொண்டோம்? அல்லது
ஆடையில்லாதவராகக் கண்டு ஆடை
கொடுத்தோம்? 39 உம்மை எப்போது
நோயுற்றவராக அல்லது சிறையிலிருக்கிறவ
ராகக் கண்டு உம்மைப் பார்க்க வந்தோம்?'
என்று கேட்பார்கள். 40 அதற்கு அரசர்
அவர்களிடம், 'நான் உங்களுக்கு உறுதியாகச்
சொல்லுகிறேன் : இந்த மிகச் சிறியரான
என் சகோதரருள் ஒருவனுக்கு நீங்கள் செய்
தது எதுவோ அதை எனக்கே செய்தீர்கள்'
என்பார். 41 பிறகு இடப்பக்கத்தில் நிற்ப
வர்களைப் பார்த்து, 'சபிக்கப்பட்டவர்களே,
என்னை விட்டகன்று, பிசாசுக்கும் அவனு
டைய தூதருக்கும் ஏற்படுத்தப்பட்டுள்ள
என்றும் அவியாத நெருப்புக்குள் விழுங்கள்.
42 ஏனெனில், பசியுள்ளவனுயிருந்தேன்,
நீங்கள் எனக்கு உணவு கொடுககவில்லை; தாக
முள்ளவனுயிருந்தேன், நீங்கள் என் தாகத்
தைத் தீர்க்கவில்லை; 43 அன்னியனுயிருந்
தேன், நீங்கள் என்னை ஏற்றுக்கொள்ளவில்லை;
ஆடையில்லாதிருந்தேன், நீங்கள் எனக்கு
ஆடை கொடுக்க வில்லை; நோயுற்றிருந்தேன்,
சிறையிலிருந்தேன், நீங்கள் என்னைக் கவனித்
துக்கொள்ளவரவில்லை' என்பார். 44 அதற்கு
அவர்கள், 'ஆண்டவரே, உம்மை நாங்கள்
எப்போது பசியுள்ளவராகவோ, தாகமுள்ள
வராகவோ அன்னியராகவோ, ஆடையில்
லாதவராகவோ, நோயுற்றவராகவோ,
சிறையிலடைக்கப்பட்டவராகவோ கண்டு
உமக்குப் பணிவிடை செய்யாதிருந்தோம்?'
என்று கேட்பார்கள். 45 அப்பொழுது அவர்
அவர்களிடம், நான் உங்களுக்கு உறுதியாகச்
சொல்லுகிறேன் : 'மிகச் சிறியராகிய இவர்
களுள் ஒருவனுக்கு நீங்கள் செய்யாதிருந்
தது எதுவோ அதை எனக்கே செய்யாதிருந்
தீர்கள்' என்பார். 46 எனவே, இவர்கள்
என்றுமுள்ள தண்டனை அடையச் செல்வார்
கள், சான்ருேர்களோ என்றுமுள்ள மெய்
வாழ்வை அடையச் செல்வார்கள்'' என்ருர்.

### இயேசுவைக் கொன்றுவிடச் சதித்திட்டம்

*(மாற். 14:1, 2; லூக். 22:1, 2;யோ. 11 : 45–53)*

**26** இயேசு இந்தச் செய்திகளையெல்லாம்
சொல்லி முடித்த பின்பு, தம்முடைய
சீடரிடம், 2 ''இன்னும் இரண்டு நாள் கழித்துப்
*பஸ்காப் பண்டிகை வரப்போகிறதென்பது
உங்களுக்குத் தெரியும். அப்பொழுது மனு
மைந்தர் சிலுவையில் அறையப்படுவதற்கு
ஒப்புக்கொடுக்கப்படப் போகிருர்'' என்ருர்.
3 இதற்கிடையில் தலைமை ஆசாரியர்களும்
மக்களின் மூப்பரும் காய்பா என்ற தலைமை
ஆசாரியருடைய மாளிகையில் ஒன்றுகூடி,
4 இயேசுவைச் சூழ்ச்சியாய்ப் பிடித்துக்
கொன்றுவிடத் திட்டமிட்டார்கள். 5 ஆனுல்
அவர்கள், ''பண்டிகைக் காலத்தில் வேண்
டாம், மக்களிடையே கலகம் உண்டாகி
விடும்'' என்றும் பேசிக்கொண்டார்கள்.

### பெத்தானியாவில் இயேசுவுக்கு நறுமணத் தைலம் பூசுதல்

*(மாற். 14:3–9; யோ. 12:1–8)*

6 இயேசு பெத்தானியாவில் தொழு
நோயாளி என்று கூறப்பட்ட சீமோன்
வீட்டில் இருக்கையில், 7 ஒரு பெண் விலை
யுயர்ந்த நறுமணத் தைலமுள்ள சலவைக்கல்
குப்பி ஒன்றை எடுத்துக்கொண்டு அவரிடம்
வந்து, அவர் சாப்பிட அமர்ந்திருக்கையில்,
அந்தத் தைலத்தை அவருடைய தலைமீது
ஊற்றிஞள். 8 சீடர் அதைக் கண்டு சின
மடைந்து, ''ஏன் இந்த வீண் செலவு?
9 இதைப் பெரிய தொகைக்கு விற்று, அந்தப்
பணத்தை ஏழைகளுக்குக் கொடுத்திருக்
கலாமே'' என்ருர்கள். 10 இயேசு அவர்
களுடைய எண்ணத்தை அறிந்து, அவர்
களிடம், ''ஏன் இந்தப் பெண்ணுக்குத்
தொல்லை கொடுக்கிறீர்கள்? இவள் எனக்குச்
செய்தது ஒரு நல்ல செய்கை. 11 ஏனெனில்,
ஏழைகள் என்றும் உங்களோடு இருக்கிருர்

* பஸ்கா : இச்சொல் 'கடந்து செல்லுதல்' எனப் பொருள்படும். இஸ்ரவேலர் எகிப்து நாட்டினின்று விடுதலையாகிப் புறப்பட்ட நிகழ்ச்சியின் நினைவாக இப்பண்டிகை ஆண்டுதோறும் கொண்டாடப்பட்டு வந்தது.

**25:35 36** ஏசா. 58:7. **25:40** நீதி. 19:17; திருத்தூது. 9:5; எபி. 6:10. **25:46** தானி. 12:2; யோ. 5:29. **26:3, 4** சங். 2:1, 2; யோ. 11:47-53; திருத்தூது. 4:25-27. **26:7** லூக். 7:37, 38. **26:11** உபா. 15:11.

கள்; நானோ உங்களோடு என்றும் இருக்கப் போவதில்லை. 12 இவள் இந்தத் தைலத்தை என் உடலின்மீது ஊற்றின செய்கை என்னை அடக்கம் செய்வதற்கு ஆயத்தப்படுத்தும் செய்கையாகும். 13 உங்களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன் : உலக முழுவதிலும் எங்கெங்கே இந்த நற்செய்தி அறிவிக்கப்படுமோ அங்கெல்லாம் இவள் செய்ததும் இவளை நினைவுகூர்வதற்கு ஏதுவாகக் கூறப்படும்'' என்றார்.

### இயேசுவைக் காட்டிக்கொடுக்க யூதாஸ் உடன்படுதல்

(மாற். 14:10, 11; லூக். 22:3–6)

14 அதன்பின் பன்னிருவருள் ஒருவனாகிய யூதா இஸ்காரியோத்து என்பவன் தலைமை ஆசாரியர்களிடம் போய், 15 ''நான் அவரை உங்களுக்குக் காட்டிக்கொடுத்தால், நீங்கள் எனக்கு என்ன தருவீர்கள்?'' என்று கேட்டான். அவர்கள் முப்பது வெள்ளிக் காசை எண்ணி அவனிடம் கொடுத்தார்கள். 16 அந்நேர முதல் அவன் அவரைக் காட்டிக்கொடுப்பதற்கு வாய்ப்புத் தேடிக் கொண்டிருந்தான்.

### சீடரோடு இயேசு பஸ்கா விருந்தை உண்ணுதல்

(மாற். 14 : 12–21; லூக். 22 : 7–14, 21–23; யோ. 13 : 21–30)

17 புளிப்பில்லாத அப்பப் பண்டிகையின் முதல் நாளில் சீடர்கள் இயேசுவினிடம் வந்து, ''நீர் பஸ்கா விருந்தை உண்ண நாங்கள் எங்கே ஆயத்தம்செய்ய வேண்டுமென்று விரும்புகிறீர்?'' என்று கேட்டார்கள். 18 அதற்கு அவர், ''நீங்கள் நகரத்திற்குப் போய் நான் முன்பு சொன்ன மனிதனிடம், 'என் நேரம் நெருங்கியிருக்கிறது, உன் வீட்டில் என் சீடரோடு பஸ்காவைக் கொண்டாடப்போகிறேன்' என்று போதகர் சொல்லுகிறாரென அவனுக்குச் சொல்லுங்கள்'' என்றார். 19 இயேசு தங்களுக்குக் கட்டளையிட்டபடியே சீடர்கள் செய்து, பஸ்காவை ஆயத்தப்படுத்தினார்கள். 20 மாலைவேளை வந்ததும், அவர் பன்னிருவரோடும் பந்தியிலமர்ந்தார். 21 அவர்கள் சாப்பிடும்போது இயேசு, ''உங்களுக்குத் திட்டமாகச் சொல்லுகிறேன் ; உங்களிடையேயிருக்கும் ஒருவனே என்னைக் காட்டிக் கொடுக்கப்போகிறான்'' என்றார். 22 அவர்கள் அதைக் கேட்டு மிகவும் வருத்தமுற்று அவரை நோக்கி, ''ஆண்டவரே, நானா அவன்?'' என்று ஒவ்வொருவரும் கேட்க, 23 அவர், ''பாத்திரத்தில் என்னோடு கையிட்டுச் சாப்பிட்டவனே என்னைக் காட்டிக் கொடுக்கப்போகிறான். 24 மனுமைந்தர் தமக்கென்று வேதத்தில் குறித்திருக்கிற பாதையில் செல்கிறார். ஆனாலும், எவனால் மனுமைந்தர் காட்டிக்கொடுக்கப்படுகிறாரோ அந்த மனிதனுக்குக் கேடு வரும். அந்த மனிதன் பிறவாதிருந்தானானால் அவனுக்கு நலமாயிருந்திருக்கும்'' என்றார். 25 அவரைக் காட்டிக்கொடுத்த யூதாஸ், ''நானா அவன், *ரபீ?'' என்று கேட்க, அவர், நீயே சொல்லிவிட்டாயே'' என்றார்.

### திருவிருந்தை ஏற்படுத்துதல்

(மாற். 14:22–26; லூக். 22:15–20; 1 கொரி. 11 : 23–25)

26 அவர்கள் சாப்பிடுகையில், இயேசு அப்பத்தை எடுத்து, துதிசெலுத்தி, அதைப் பிட்டு, சீடருக்குக் கொடுத்து, ''இதை வாங்கி உட்கொள்ளுங்கள்; இது என் உடல்'' என்றார். 27 பிறகு பாத்திரத்தை எடுத்து கடவுளுக்கு நன்றி செலுத்தி, அவர்களுக்குக் கொடுத்து, ''எல்லாரும் இதிலுள்ளதை அருந்துங்கள்; 28 ஏனெனில், இது உடன்படிக்கைக்குரிய என் இரத்தம்; பாவமன்னிப்புக்கென்று இது எல்லாருக்காகவும் சிந்தப்படுகிறது. 29 இதுமுதல் நான் உங்களோடு என் தந்தையின் ஆட்சியில் திராட்சைப் பழரசத்தைப் புதிதாக அருந்தும் நாள் வரையிலும் இதை அருந்துவதேயில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்'' என்றார். 30 பிறகு அவர்கள் துதிப்பாட்டுப் பாடிவிட்டு, ஒலிவமலைக்குப் புறப்பட்டுப் போனார்கள்.

### பேதுருவின் மறுதலிப்பைப்பற்றிய முன்னறிவிப்பு

(மாற். 14:27–31; லூக். 22:31–34; யோ. 13:36–38)

31 அப்பொழுது இயேசு அவர்களிடம் இன்றிரவு நீங்களெல்லாரும் என்னை நம்புவதை விட்டுவிட்டு ஓடிப் போவீர்கள். ஏனெனில்,

'ஆயனை வெட்டுவேன்,
மந்தையின் ஆடுகள் சிதறடிக்கப்படும்'

என்று வேதத்தில் எழுதியுள்ளது. 32 நான் உயிரோடு எழுப்பப்பட்டபின் உங்களுக்கு முந்திக் கலிலேயாவுக்குப் போவேன்'' என்றார். 33 அதற்குப் பேதுரு, ''எல்லாரும் உம்மை நம்புவதை விட்டுவிட்டு ஓடிப் போனாலும் நான் ஒருபோதும் அப்படிச் செய்ய மாட்டேன்'' என்றார். 34 இயேசு அவரிடம், ''திட்டமாக உனக்குச் சொல்லுகிறேன் : இன்றிரவு சேவல் கூவுமுன், என்னை உனக்குத் தெரியாதென நீ மூன்று முறை மறுதலிக்கப்போகிறாய்'' என்றார். 35 அதற்குப் பேதுரு, ''நான் உம்மோடு இறக்க வேண்டுவதாயிருந்தாலுங்கூட உம்மைத்

* போதகரே

26:21 சங். 55:12-14. 26:23 சங் 41:9; யோ. 13:18. 26:27 1 கொரி. 10:16. 26:28 ஏசா. 53:12. எரே. 31:31-34. 26:31 சக. 13:7. 26:32 மத். 28:7, 16.

தெரியாதென்று மறுதலிக்கவே மாட்டேன்''
என்றார். சீடர் எல்லாரும் அவ்வாறே
கூறினர்.

## கெத்செமனே தோட்டத்தில்

(மாற். 14:32–42; லூக். 22 :39–46)

36 பிறகு இயேசு அவர்களுடன் கெத்செ
மனே என்னும் இடத்திற்குப் போனார்.
போனதும், அவர் சீடரை நோக்கி, ''நான்
அதோ அங்கே போய் ஜெபம் செய்துகொண்
டிருக்கையில் நீங்கள் இங்கே உட்கார்ந்
திருங்கள்'' என்று சொன்னார்; 37 பிறகு
பேதுருவையும் செபெதேயுவின் மைந்தர்கள்
இருவரையும் தம்மோடு அழைத்துச்
சென்றார். அப்பொழுது வருத்தமும்
ஆழ்துயரமும் அவரை ஆட்கொள்ளவே,
38 அவர் அவர்களிடம், ''என் ஆன்மா
சாவுக்கேதுவான கடுந்துயரத்தால் நிறைந்
திருக்கிறது; நீங்கள் இங்கே தங்கி என்னோடு
விழித்திருங்கள்'' என்று சொல்லிவிட்டு,
39 சற்று அப்பாற் சென்று முகங்குப்புற
விழுந்து, ''என் தந்தையே, கூடுமானால்
இத்துன்பக்கலம் என்னிடமிருந்து நீங்கட்
டும்; என்றாலும், நான் விரும்புகிறபடியன்று,
நீர் விரும்புகிறபடியே நடக்கட்டும்'' என்று
மன்றாடினார். 40 பிறகு அவர் சீடரிடம்
வந்து, அவர்கள் தூங்கிக்கொண்டிருக்கிற
தைக் கண்டு, பேதுருவை நோக்கி, ''என்ன
இது! ஒரு மணி நேரம் என்னோடு விழித்
திருக்க உங்களால் இயலவில்லையா? உள்ளத்
தில் ஆர்வம் இருக்கிறது; உடலோ
ஆற்றலற்றதாயிருக்கிறது. 41 ஆகையால்
சோதனைக்குட்படாதபடி விழித்திருந்து
ஜெபம் செய்யுங்கள்'' என்றார். 42 அவர்
மறுபடியும் இரண்டாம் முறையாகப் போய்,
''இந்தக் கலத்தை நான் அருந்தினாலன்றி
இது என்னை விட்டு நீங்காதென்றால், உமது
திருவுளமே நிறைவேறட்டும்'' என்று
சொல்லி ஜெபம் செய்தார். 43 அவர் திரும்
பவும் வந்து அவர்கள் தூங்கிக்கொண்டிருக்
கிறதைக் கண்டார்; அவர்களுடைய கண்கள்
தூக்க மயக்கமாயிருந்தன. 44 அவர் மறு
படியும் அவர்களை விட்டுச் சென்று, மீண்டும்
மூன்றாம் முறையாக முன்பு சொன்ன வார்த்
தைகளையே சொல்லி ஜெபம் செய்தார்.
45 பிறகு அவர் தம்முடைய சீடரிடம் வந்து,
''இன்னுமா தூங்கி இளைப்பாறிக்கொண்
டிருக்கிறீர்கள்? *பாருங்கள், நேரம் நெருங்கி
விட்டது; மனுமைந்தர் பாவிகளுடைய
கைகளில் ஒப்புக்கொடுக்கப்படப்போகிறார்.
46 எழுந்திருங்கள், போவோம்; என்னைக்
காட்டிக்கொடுக்கிறவன் இதோ நெருங்கி
வந்துவிட்டான்'' என்றார்.

## இயேசு பிடிபடுதல்

(மாற். 14:43–50; லூக். 22:47–53;
யோ. 18:3–12)

47 அவர் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கை
யில், பன்னிருவருள் ஒருவனாகிய யூதாஸ்
அங்கே வந்தான். அவனோடு ஒரு பெரிய
கூட்டத்தார் வாள்களோடும் தடிகளோடும்
வந்தனர். அவர்கள் தலைமை ஆசாரியர்கள்,
மக்களின் மூப்பர்கள் ஆகியவர்களால் அனுப்
பப்பட்டவர்கள். 48 அவரை அவர்களுக்குக்
காட்டிக்கொடுக்கவிருந்தவன், ''நான்
யாரை முத்தமிடுகிறேனோ அவர்தாம் அந்த
ஆள், அவரைப் பிடித்துக்கொள்ளுங்கள்''
என்று அவர்களுக்கு அடையாளம் சொல்லி
யிருந்தான். 49 அவன் அவ்வாறே இயேசு
விடம் போய், ''ரபீ, வாழ்க!'' என்று
சொல்லிக்கொண்டே அவரை முத்தமிட்
டான். 50 இயேசு அவனை நோக்கி, ''நண்
பனே, நீ செய்ய வந்த செயலை விரைவி
லேயே செய்''† என்றார். அப்பொழுது அவர்
கள் இயேசுவின் அருகில் வந்து அவர்மேல்
கைவைத்து அவரைப் பிடித்தார்கள்.
51 இயேசுவோடு இருந்தவர்களுள் ஒருவன்
முன்வந்து தன் வாளை உருவி, தலைமை
ஆசாரியருடைய வேலைக்காரனைத் தாக்கி
அவனுடைய காதைத் துண்டித்தான்.
52 அதைக் கண்ட இயேசு அவனிடம் ''உன்
வாளை அதன் உறையில் போடு; ஏனென்
றால், வாளை எடுக்கிற யாவரும் வாளால்
மடிவார்கள். 53 நான் என் தந்தையை
வேண்டிக்கொண்டால், அவர் பன்னிரண்டு
‡ இலேகியோன்களுக்கும் மேற்பட்ட தெய்வ
தூதரை உடனே என்னிடம் அனுப்ப மாட்
டாரென்று நினைக்கிறாய்? 54 அப்படிச் செய்
தால், இவ்வாறுதான் நடக்க வேண்டு
மென்று உரைக்கும் வேத வாக்கியங்கள்
எப்படி நிறைவேறும்?'' என்றார். 55 அதன்
பின் இயேசு கூட்டத்தை நோக்கி, ''இது
என்ன? கொள்ளைக்காரனைப் பிடிக்க வருவது
போல வாள்களோடும் தடிகளோடும்
என்னைப் பிடிக்க வந்திருக்கிறீர்களே? நான்
நாள்தோறும் திருக்கோவிலில் உட்கார்ந்து
போதித்துக்கொண்டிருந்தேன்; அப்போ
தெல்லாம் நீங்கள் என்னைப் பிடிக்கவில்லை.
56 இறைவாக்குரைப்போர் எழுதியுள்ளவை
நிறைவேறுவதற்காகவே இவையனைத்தும்
நடந்திருக்கின்றன'' என்றார். அப்பொழுது
எல்லாச் சீடர்களும் அவரை விட்டுவிட்டு
ஓடிப்போனார்கள்.

* 'இனித் தூங்கி இளைப்பாறுங்கள்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

† 'நீ வந்த காரணம் என்ன?' என்றும் மொழி பெயர்க்கலாம்.

‡ இலேகியோன்: ரோம இராணுவத்தில் ஏறத்தாழ 6,000 போர்வீரர் அடங்கிய ஒரு படைப் பிரிவு.

**26:39** யோ. 4:34; ரோ. 5:19; பிலி. 2:8, **26:48** நீதி. 27:6. **26:54** லூக். 24:26, 27 **26:55** லூக். 19:47; 21:37; யோ. 18:20.

கள்; நானோ உங்களோடு என்றும் இருக்கப் போவதில்லை. 12 இவள் இந்தத் தைலத்தை என் உடலின்மீது ஊற்றின செய்கை என்னை அடக்கம் செய்வதற்கு ஆயத்தப்படுத்தும் செய்கையாகும். 13 உங்களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன் : உலக முழுவதிலும் எங்கெங்கே இந்த நற்செய்தி அறிவிக்கப்படுமோ அங்கெல்லாம் இவள் செய்ததும் இவளை நினைவுகூர்வதற்கு ஏதுவாகக் கூறப்படும்'' என்றார்.

### இயேசுவைக் காட்டிக்கொடுக்க யூதாஸ் உடன்படுதல்

*(மாற். 14:10, 11; லூக். 22:3–6)*

14 அதன்பின் பன்னிருவருள் ஒருவனாகிய யூதா இஸ்காரியோத்து என்பவன் தலைமை ஆசாரியர்களிடம் போய், 15 ''நான் அவரை உங்களுக்குக் காட்டிக்கொடுத்தால், நீங்கள் எனக்கு என்ன தருவீர்கள்?'' என்று கேட்டான். அவர்கள் முப்பது வெள்ளிக் காசை எண்ணி அவனிடம் கொடுத்தார்கள். 16 அந்நேர முதல் அவன் அவரைக் காட்டிக்கொடுப்பதற்கு வாய்ப்புத் தேடிக் கொண்டிருந்தான்.

### சீடரோடு இயேசு பஸ்கா விருந்தை உண்ணுதல்

*(மாற். 14 : 12–21; லூக். 22 : 7–14, 21–23; யோ. 13 : 21–30)*

17 புளிப்பில்லாத அப்பப் பண்டிகையின் முதல் நாளில் சீடர்கள் இயேசுவினிடம் வந்து, ''நீர் பஸ்கா விருந்தை உண்ண நாங்கள் எங்கே ஆயத்தம்செய்ய வேண்டுமென்று விரும்புகிறீர்?'' என்று கேட்டார்கள். 18 அதற்கு அவர், ''நீங்கள் நகரத்திற்குப் போய் நான் முன்பு சொன்ன மனிதனிடம், 'என் நேரம் நெருங்கியிருக்கிறது, உன் வீட்டில் என் சீடரோடு பஸ்காவைக் கொண்டாடப்போகிறேன்' என்று போதகர் சொல்லுகிறாரென அவனுக்குச் சொல்லுங்கள்'' என்றார். 19 இயேசு தங்களுக்குக் கட்டளையிட்டபடியே சீடர்கள் செய்து, பஸ்காவை ஆயத்தப்படுத்தினார்கள். 20 மாலைவேளை வந்ததும், அவர் பன்னிருவரோடும் பந்தியிலமர்ந்தார். 21 அவர்கள் சாப்பிடும்போது இயேசு, ''உங்களுக்குத் திட்டமாகச் சொல்லுகிறேன் ; உங்களிடையேயிருக்கும் ஒருவனே என்னைக் காட்டிக் கொடுக்கப்போகிறான்'' என்றார். 22 அவர்கள் அதைக் கேட்டு மிகவும் வருத்தமுற்று அவரை நோக்கி, ''ஆண்டவரே, நானா அவன்?'' என்று ஒவ்வொருவரும் கேட்க, 23 அவர், ''பாத்திரத்தில் என்னோடு கையிட்டுச் சாப்பிட்டவனே என்னைக் காட்டிக் கொடுக்கப்போகிறான். 24 மனுமைந்தர் தமக்கென்று வேதத்தில் குறித்திருக்கிற பாதையில் செல்கிறார். ஆனாலும், எவனால் மனுமைந்தர் காட்டிக்கொடுக்கப்படுகிறாரோ அந்த மனிதனுக்குக் கேடு வரும். அந்த மனிதன் பிறவாதிருந்தானானால் அவனுக்கு நலமாயிருந்திருக்கும்'' என்றார். 25 அவரைக் காட்டிக்கொடுத்த யூதாஸ், ''நானா அவன், *ரபீ?'' என்று கேட்க, அவர், நீயே சொல்லிவிட்டாயே'' என்றார்.

### திருவிருந்தை ஏற்படுத்துதல்

*(மாற். 14:22–26; லூக். 22:15–20; 1 கொரி. 11 : 23–25)*

26 அவர்கள் சாப்பிடுகையில், இயேசு அப்பத்தை எடுத்து, துதிசெலுத்தி, அதைப் பிட்டு, சீடருக்குக் கொடுத்து, ''இதை வாங்கி உட்கொள்ளுங்கள்; இது என் உடல்'' என்றார். 27 பிறகு பாத்திரத்தை எடுத்து கடவுளுக்கு நன்றி செலுத்தி, அவர்களுக்குக் கொடுத்து, ''எல்லாரும் இதிலுள்ளதை அருந்துங்கள்; 28 ஏனெனில், இது உடன்படிக்கைக்குரிய என் இரத்தம்; பாவமன்னிப்புக்கென்று இது எல்லாருக்காகவும் சிந்தப்படுகிறது. 29 இதுமுதல் நான் உங்களோடு என் தந்தையின் ஆட்சியில் திராட்சைப் பழரசத்தைப் புதிதாக அருந்தும் நாள் வரையிலும் இதை அருந்துவதேயில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்'' என்றார். 30 பிறகு அவர்கள் துதிப்பாட்டுப் பாடிவிட்டு, ஒலிவமலைக்குப் புறப்பட்டுப் போனார்கள்.

### பேதுருவின் மறுதலிப்பைப்பற்றிய முன்னறிவிப்பு

*(மாற். 14:27–31; லூக். 22:31–34; யோ. 13:36–38)*

31 அப்பொழுது இயேசு அவர்களிடம் இன்றிரவு நீங்களெல்லாரும் என்னை நம்புவதை விட்டுவிட்டு ஓடிப் போவீர்கள். ஏனெனில்,

'ஆயனை வெட்டுவேன்,
மந்தையின் ஆடுகள் சிதறடிக்கப்படும்'

என்று வேதத்தில் எழுதியுள்ளது. 32 நான் உயிரோடு எழுப்பப்பட்டபின் உங்களுக்கு முந்திக் கலிலேயாவுக்குப் போவேன்'' என்றார். 33 அதற்குப் பேதுரு, ''எல்லாரும் உம்மை நம்புவதை விட்டுவிட்டு ஓடிப்போனாலும் நான் ஒருபோதும் அப்படிச் செய்ய மாட்டேன்'' என்றார். 34 இயேசு அவரிடம், ''திட்டமாக உனக்குச் சொல்லுகிறேன் : இன்றிரவு சேவல் கூவுமுன், என்னை உனக்குத் தெரியாதென நீ மூன்று முறை மறுதலிக்கப்போகிறாய்'' என்றார். 35 அதற்குப் பேதுரு, ''நான் உம்மோடு இறக்க வேண்டுவதாயிருந்தாலுங்கூட உம்மைத்

* போதகரே

**26:21 சங். 55:12-14. 26:23 சங் 41:9; யோ. 13:18. 26:27 1 கொரி. 10:16. 26:28 ஏசா. 53:12. எரே. 31:31-34. 26:31 சக. 13:7. 26:32 மத். 28:7, 16.**

தெரியாதென்று மறுதலிக்கவே மாட்டேன்'' என்றார். சீடர் எல்லாரும் அவ்வாறே கூறினர்.

### கெத்செமனே தோட்டத்தில்

*(மாற். 14:32—42; லூக். 22 :39—46)*

36 பிறகு இயேசு அவர்களுடன் கெத்செமனே என்னும் இடத்திற்குப் போனார். போனதும், அவர் சீடரை நோக்கி, ''நான் அதோ அங்கே போய் ஜெபம் செய்துகொண்டிருக்கையில் நீங்கள் இங்கே உட்கார்ந்திருங்கள்'' என்று சொன்னார்; 37 பிறகு பேதுருவையும் செபெதேயுவின் மைந்தர்கள் இருவரையும் தம்மோடு அழைத்துச் சென்றார். அப்பொழுது வருத்தமும் ஆழ்துயரமும் அவரை ஆட்கொள்ளவே, 38 அவர் அவர்களிடம், ''என் ஆன்மா சாவுக்கேதுவான கடுந்துயரத்தால் நிறைந்திருக்கிறது; நீங்கள் இங்கே தங்கி என்னோடு விழித்திருங்கள்'' என்று சொல்லிவிட்டு, 39 சற்று அப்பாற் சென்று முகங்குப்புற விழுந்து, ''என் தந்தையே, கூடுமானால் இத்துன்பக்கலம் என்னிடமிருந்து நீங்கட்டும்; என்றாலும், நான் விரும்புகிறபடியன்று, நீர் விரும்புகிறபடியே நடக்கட்டும்'' என்று மன்றாடினார். 40 பிறகு அவர் சீடரிடம் வந்து, அவர்கள் தூங்கிக்கொண்டிருக்கிறதைக் கண்டு, பேதுருவை நோக்கி, ''என்ன இது! ஒரு மணி நேரம் என்னோடு விழித்திருக்க உங்களால் இயலவில்லையா? உள்ளத்தில் ஆர்வம் இருக்கிறது; உடலோ ஆற்றலற்றதாயிருக்கிறது. 41 ஆகையால் சோதனைக்குட்படாதபடி விழித்திருந்து ஜெபம் செய்யுங்கள்'' என்றார். 42 அவர் மறுபடியும் இரண்டாம் முறையாகப் போய், ''இந்தக் கலத்தை நான் அருந்தினாலன்றி இது என்னை விட்டு நீங்காதென்றால், உமது திருவுளமே நிறைவேறட்டும்'' என்று சொல்லி ஜெபம் செய்தார். 43 அவர் திரும்பவும் வந்து அவர்கள் தூங்கிக்கொண்டிருக்கிறதைக் கண்டார்; அவர்களுடைய கண்கள் தூக்க மயக்கமாயிருந்தன. 44 அவர் மறுபடியும் அவர்களை விட்டுச் சென்று, மீண்டும் மூன்றும் முறையாக முன்பு சொன்ன வார்த்தைகளையே சொல்லி ஜெபம் செய்தார். 45 பிறகு அவர் தம்முடைய சீடரிடம் வந்து, ''இன்னுமா தூங்கி இளைப்பாறிக்கொண்டிருக்கிறீர்கள்? *பாருங்கள், நேரம் நெருங்கி விட்டது; மனுமைந்தர் பாவிகளுடைய கைகளில் ஒப்புக்கொடுக்கப்படப்போகிறார். 46 எழுந்திருங்கள், போவோம்; என்னைக் காட்டிக்கொடுக்கிறவன் இதோ நெருங்கி வந்துவிட்டான்'' என்றார்.

### இயேசு பிடிபடுதல்

*(மாற். 14:43—50; லூக். 22:47—53; யோ. 18:3—12)*

47 அவர் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கையில், பன்னிருவருள் ஒருவனாகிய யூதாஸ் அங்கே வந்தான். அவனோடு ஒரு பெரிய கூட்டத்தார் வாள்களோடும் தடிகளோடும் வந்தனர். அவர்கள் தலைமை ஆசாரியர்கள், மக்களின் மூப்பர்கள் ஆகியவர்களால் அனுப்பப்பட்டவர்கள். 48 அவரை அவர்களுக்குக் காட்டிக்கொடுக்கவிருந்தவன், ''நான் யாரை முத்தமிடுகிறேனோ அவர்தாம் அந்த ஆள், அவரைப் பிடித்துக்கொள்ளுங்கள்'' என்று அவர்களுக்கு அடையாளம் சொல்லியிருந்தான். 49 அவன் அவ்வாறே இயேசுவினிடம் போய், ''ரபீ, வாழ்க!'' என்று சொல்லிக்கொண்டே அவரை முத்தமிட்டான். 50 இயேசு அவனை நோக்கி, ''நண்பனே, நீ செய்ய வந்த செயலை விரைவிலேயே செய்''† என்றார். அப்பொழுது அவர்கள் இயேசுவின் அருகில் வந்து அவர்மேல் கைவைத்து அவரைப் பிடித்தார்கள். 51 இயேசுவோடு இருந்தவர்களுள் ஒருவன் முன்வந்து தன் வாளை உருவி, தலைமை ஆசாரியருடைய வேலைக்காரனைத் தாக்கி அவனுடைய காதைத் துண்டித்தான். 52 அதைக் கண்ட இயேசு அவனிடம் ''உன் வாளை அதன் உறையில் போடு; ஏனென்றால், வாளை எடுக்கிற யாவரும் வாளால் மடிவார்கள். 53 நான் என் தந்தையை வேண்டிக்கொண்டால், அவர் பன்னிரண்டு ‡இலேகியோன்களுக்கும் மேற்பட்ட தெய்வ தூதரை உடனே என்னிடம் அனுப்ப மாட்டாரென்று நினைக்கிறாய்? 54 அப்படிச் செய்தால், இவ்வாறுதான் நடக்க வேண்டுமென்று உரைக்கும் வேத வாக்கியங்கள் எப்படி நிறைவேறும்?'' என்றார். 55 அதன் பின் இயேசு கூட்டத்தை நோக்கி, ''இது என்ன? கொள்ளைக்காரனைப் பிடிக்க வருவது போல வாள்களோடும் தடிகளோடும் என்னைப் பிடிக்க வந்திருக்கிறீர்களே? நான் நாள்தோறும் திருக்கோவிலில் உட்கார்ந்து போதித்துக்கொண்டிருந்தேன்; அப்போதெல்லாம் நீங்கள் என்னைப் பிடிக்கவில்லை. 56 இறைவாக்குரைப்போர் எழுதியுள்ளவை நிறைவேறுவதற்காகவே இவையனைத்தும் நடந்திருக்கின்றன'' என்றார். அப்பொழுது எல்லாச் சீடர்களும் அவரை விட்டுவிட்டு ஓடிப்போனார்கள்.

* 'இனித் தூங்கி இளைப்பாறுங்கள்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
† 'நீ வந்த காரணம் என்ன?' என்றும் மொழி பெயர்க்கலாம்.
‡ இலேகியோன்: ரோம இராணுவத்தில் ஏறத்தாழ 6,000 போர்வீரர் அடங்கிய ஒரு படைப் பிரிவு.

**26:39** யோ. 4:34; ரோ. 5:19; பிலி. 2:8, **26:48** நீதி. 27:6. **26:54** லூக். 24:26, 27 **26:55** லூக். 19:47; 21:37; யோ. 18:20.

### தலைமைச் சங்கத்தின் முன்னிலையில்

(மாற். 14:53–65; லூக். 22:54, 55,
63–71; யோ. 18:12–14, 19–24)

57 இயேசுவைக் கைது செய்தவர்கள்
அவரைத் தலைமை ஆசாரியராகிய காய்
பாவிடம் கூட்டிக்கொண்டு போனார்கள்;
அங்கே வேத அறிஞரும் மூப்பரும் கூடியிருந்
தனர். 58 பேதுரு தலைமை ஆசாரியருடைய
மாளிகையின் முற்றம் வரைக்கும் தொலை
வில் அவரைப் பின்தொடர்ந்து போய்,
உள்ளே நுழைந்து, முடிவைப் பார்ப்பதற்
காகக் காவலருடன் உட்கார்ந்துகொண்
டார். 59 தலைமை ஆசாரியர்களும் தலைமைச்
சங்கத்தார் அனைவரும் இயேசுவை மரண
தண்டனைக்குள்ளாக்கும்படி அவருக்கு எதி
ரான சாட்சியம் ஒன்றாவது கிடைக்குமா
வென்று பார்த்தார்கள். 60 ஆனால் கிடைக்க
வில்லை; பல பொய்ச் சாட்சிகள் முன்வந்த
போதிலும் தகுதியான சாட்சியம் ஒன்றுமே
கிடைக்கவில்லை. 61 கடைசியில் இருவர் முன்
வந்து, ''இவன், 'கடவுளின் ஆலயத்தை
இடித்துவிட்டு, அதை மூன்று நாளில்
என்னால் கட்டியெழுப்ப முடியும்' என்று
சொன்னான்'' என்றனர். 62 அப்பொழுது
தலைமை ஆசாரியர் எழுந்து இயேசுவைப்
பார்த்து, ''இதற்கு ஒரு பதிலும் சொல்
வதற்கில்லையா? இவர்கள் உனக்கு விரோத
மாகச் சாட்சி கூறுகிறார்களே; நீ என்ன
சொல்லுகிறாய்?'' என்று கேட்டார். 63 இயே
சுவோ பேசாதிருந்தார். அப்பொழுது
தலைமை ஆசாரியர் அவரிடம், ''என்றென்று
முள்ள கடவுளின்மேல் ஆணையிட்டுச் சொல்
லும்படி உன்னைக் கேட்கிறேன். நீ கடவுளின்
மைந்தராகிய மேசியாதானா?'' என்று கேட்
டார். 64 அதற்கு இயேசு, ''நீரே சொல்லி
விட்டீரே;* மேலும், மனுமைந்தர் தெய்வ
வல்லமையின் வலப்பக்கத்தில் வீற்றிருப்
பதையும், வானத்தின் மேகங்கள்மீது வரு
வதையும் இப்போதிருந்தே காண்பீர்கள்
என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்''
என்றார். 65 தலைமை ஆசாரியர் அதைக்
கேட்டவுடனே தம் ஆடைகளைக் கிழித்துக்
கொண்டு, ''இவன் தெய்வ நிந்தனை பேசி
னான். இனிமேல் நமக்குச் சாட்சிகள் எதற்கு?
இப்போது நீங்களே இந்தத் தெய்வ நிந்தனை
யைக் கேட்டீர்கள்; உங்களுக்கு எப்படித்
தோன்றுகிறது?'' என்று கேட்டார்.
66 அவர்கள், ''இவன் மரண தண்டனைக்கு
உரியவன்'' என்றார்கள். 67 அதன்பின் அவரு
டைய முகத்தில் துப்பி, அவரை அடித்தார்
கள்; சிலர் கன்னத்தில் அறைந்து,
68 ''மேசியாவே, உன்னை அடித்தவன் யார்?,
ஞானத்தால் உணர்ந்து சொல்'' என்றனர்.

### பேதுருவின் மறுதலிப்பு

(மாற். 14 : 66–72; லூக். 22 : 56–62;
யோ. 18:15–18,25–27)

69 பேதுரு வெளியே முற்றத்தில் உட்
கார்ந்திருந்தார். ஒரு வேலைக்காரி அவரிடம்
வந்து, ''நீயும் கலிலேயனாகிய இயேசுவுடன்
இருந்தாயே'' என்று சொன்னாள். 70 அவர்,
''நீ என்ன சொல்லுகிறாய் என்பதே எனக்
குத் தெரியவில்லை'' என்று சொல்லி எல்
லார் முன்னிலையிலும் மறுதலித்தார்.
71 அவர் வாயிலருகே போனபோது
வேறொரு வேலைக்காரி அவரைக் கண்டு,
''இவன் நாசரேத்தூர் இயேசுவுடன் இருந்
தான்'' என்று அங்கிருந்தவர்களிடம் சொன்
னாள். 72 அவர், ''அந்த ஆளை எனக்குத்
தெரியாது'' என்று ஆணையிட்டு மறுபடியும்
மறுதலித்தார். 73 சற்று நேரத்துக்குப்பின்
அங்கே நின்றவர்கள் பேதுருவின் அருகில்
வந்து, ''உண்மையாகவே நீயும் அவர்களுள்
ஒருவனே; உன் பேச்சே உன்னைக் காட்டிக்
கொடுக்கிறது'' என்றார்கள். 74 அப்பொழுது
அவர், ''அந்த ஆளை எனக்குத் தெரியாது''
என்று சொல்லி, பழிப்பாணையிட்டுச் சத்
தியம் செய்யத் தொடங்கினார். 75 உடனே
சேவல் கூவிற்று. ''சேவல் கூவுமுன்
என்னை உனக்குத் தெரியாதென நீ மூன்று
முறை மறுதலிப்பாய்'' என்று இயேசு
அவரிடம் சொன்ன வார்த்தை அவருடைய
நினைவுக்கு வந்தது; அவர் வெளியே போய்க்
கதறி அழுதார்.

### பிலாத்துவினிடம் இயேசுவைக் கொண்டு சென்றது

(மாற். 15 : 1; லூக். 23 : 1, 2;
யோ. 18 : 28–32)

27 பொழுது விடிந்ததும் எல்லாத் தலைமை
ஆசாரியர்களும் மக்களின் மூப்பர்களும்
இயேசுவைக் கொன்றுவிடும்படி அவருக்கு
விரோதமாக ஆலோசனை செய்தார்கள்.
2 அதன்பின் அவர்கள் அவரைக் கட்டி,
நடத்திச் சென்று, மாநிலத் தலைவன் பிலாத்
துவினிடம் ஒப்புக்கொடுத்தார்கள்.

### யூதாசின் முடிவு

(திருத்தூது. 1 : 18,19)

3 அவரைக் காட்டிக்கொடுத்த யூதாஸ்
அவர் குற்றத் தீர்ப்புப் பெற்றதைக் கண்ட
போது, மனவருத்தமடைந்து, அந்த முப்பது
வெள்ளிக்காசைத் தலைமை ஆசாரியர்களிட
மும் மூப்பர்களிடமும் திரும்பவும் கொண்டு
போய், 4 ''குற்றமில்லாத இரத்தத்தை
நான் காட்டிக்கொடுத்துப் பாவம் செய்
தேன்'' என்றான். அவர்கள், ''அதைப்பற்றி

* 'நீர் அப்படிச் சொல்லுகிறீர்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

26:61 யோ. 2:19; திருத்தூது. 6:14. 26:64 தானி. 7:13; திருத்தூது. 2:33; 7:55. 26:65, 66 இலே. 24:16. 26:67 ஏசா. 50:6.

எங்களுக்கென்ன? அது உன்பாடு'' என்று
சொன்னார்கள். 5 சொன்னதும், அவன்
அந்த வெள்ளிக்காசைத் திருக்கோவிலில்
எறிந்துவிட்டுப் போனான்; போய் நான்று
கொண்டு செத்தான். 6 தலைமை ஆசாரியர்
கள் அந்த வெள்ளிக்காசை எடுத்து, ''இது
இரத்தத்தின் கிரயமானதால் இதைக்
காணிக்கைப் பெட்டியில் போடுவது முறை
யன்று'' என்று சொல்லிவிட்டு, 7 பிறகு
கலந்துபேசி, அதைக்கொண்டு அன்னியரை
அடக்கம் செய்யும் இடமாக, 'குயவன்
நிலத்தை' வாங்கினார்கள். 8 அதனாலேதான்
அந்த நிலம் இந்நாள் வரையிலும் 'இரத்த
நிலம்' எனப்படுகிறது.

9 ''இஸ்ரவேல் மக்களால் விலை மதிப்
பிடப்பட்டவரின்
கிரயமாகிய முப்பது வெள்ளிக்காசை
எடுத்து,
10 குயவன் நிலத்தை வாங்கக் கொடுத்
தார்கள்;
ஆண்டவர் எனக்கு இட்ட கட்டளை
யும் இதுவே''

என்று இறைவாக்குரைப்பவராகிய எரே
மியா மூலமாக உரைக்கப்பட்டது அப்போது
நிறைவேறிற்று.

### பிலாத்து இயேசுவை விசாரணை செய்தல்

(மாற். 15 : 2–5; லூக். 23 : 3–5;
யோ. 18 : 33–38)

11 இயேசு மாநிலத் தலைவன்முன் நிற்கை
யில், அவன் அவரைப் பார்த்து, ''நீ யூதரு
டைய அரசனா?'' என்று கேட்டான். அதற்கு
இயேசு, ''நீர் சொல்லுகிறபடிதான்'' *
என்றார். 12 ஆனால் தலைமை ஆசாரியர்
களும் மூப்பர்களும் அவர்மீது குற்றம் சுமத்
தினபோது, அவர் ஒரு பதிலும் சொல்ல
வில்லை. 13 அப்பொழுது பிலாத்து அவரைப்
பார்த்து, ''உனக்கு விரோதமாக எத்த
னையோ காரியங்களைக் குறித்து இவர்கள்
சாட்சி கூறுகிறார்களே, உனக்குக் கேட்கவில்
லையா?'' என்று கேட்டான். 14 அவரோ
ஒன்றுக்கும் ஒரு பதிலும் அவனிடம் சொல்ல
வில்லை. அதைக் கண்டு மாநிலத் தலைவன்
மிகவும் வியப்புற்றான்.

### இயேசுவுக்கு மரணத் தீர்ப்பு

(மாற். 15 : 6–15; லூக். 23 : 13–25;
யோ. 18 : 39–19 : 16)

15 பண்டிகைதோறும் மக்கள் விரும்பிக்
கேட்கும் ஒரு கைதியை மாநிலத் தலைவன்
அவர்களுக்காக விடுதலை செய்வது வழக்கமா
யிருந்தது. 16 அச்சமயம் † பரபாஸ் என்னும்
பேர்போன கைதி ஒருவன் சிறையிலிருந்
தான். 17 அவர்கள் ஒன்றுகூடியிருந்த
அந்த வேளையில், பிலாத்து அவர்களிடம்,
''நான் யாரை உங்களுக்காக விடுதலை
செய்ய வேண்டும்? பரபாசையா? மேசியா
எனப்படுகிற இயேசுவையா?'' என்று கேட்
டான். 18 ஏனெனில், அவர்கள் பொறாமை
காரணமாக அவரைத் தன்னிடம் ஒப்புக்
கொடுத்தார்கள் என்பது அவனுக்குத் தெரி
யும். 19 அல்லாமலும், அவன் நீதிபதியின்
இடத்தில் வீற்றிருக்கையில், அவனுடைய
மனைவி அவனிடம் ஆளனுப்பி, ''அந்த நீதி
மான் காரியத்தில் நீர் தலையிட வேண்டாம்.
நேற்றிரவு கனவில் அவர் பொருட்டு நான்
மிகவும் பாடுபட்டேன்'' என்று சொல்லச்
சொன்னான். 20 ஆனால் தலைமை ஆசாரியர்
களும் மூப்பர்களும், பரபாசை விடுவிக்கவும்,
இயேசுவை எப்படியாவது ஒழிக்கவும் கேட்
கும்படி மக்களைத் தூண்டிவிட்டார்கள்.
21 மாநிலத் தலைவன் அவர்களிடம், ''இவ்
விருவருள் யாரை நான் உங்களுக்காக
விடுதலை செய்ய வேண்டும்?'' என்று கேட்க,
அவர்கள், ''பரபாசையே'' என்றார்கள்.
22 அப்பொழுது பிலாத்து, அப்படியானால்,
''மேசியா என்னும் இயேசுவை நான் என்ன
செய்ய வேண்டும்?'' என்று கேட்டான்.
''அவனைச் சிலுவையில் அறையும்'' என்று
எல்லாரும் கூறினர். 23 மாநிலத் தலைவன்,
''ஏன், இவன் என்ன தீங்கு செய்து
விட்டான்?'' என்று கேட்க, அவர்கள்,
''அவனைச் சிலுவையில் அறையும்'' என்று
முன்னைவிட மிகுதியாகக் கூச்சலிட்டார்கள்.
24 பிலாத்து தன் முயற்சி பயனளிக்கவில்லை
யென்றும், அதற்கு மாறாகக் கலகந்தான்
உண்டாகிறதென்றும் கண்டு, தண்ணீரை
எடுத்து, ''இந்த ‡மனிதனுடைய இரத்தத்
தைச் சிந்துவதைப் பொறுத்தமட்டில் நான்
குற்றமற்றவன், நீங்களே பார்த்துக் கொள்
ளுங்கள்'' என்று சொல்லி மக்கள் முன்னிலை
யில் கைகளைக் கழுவினான். 25 அதற்கு மக்க
ளெல்லாரும், ''இவனுடைய இரத்தத்தைச்
சிந்தும் பழி எங்கள்மேலும் எங்கள் பிள்ளை
கள்மேலும் இருக்கட்டும்'' என்றார்கள்.
26 அதன்பின் அவன் பரபாசை அவர்களுக்
காக விடுதலை செய்தான்; இயேசுவையோ
வாரினால் அடிப்பித்தான்; பிறகு அவரைச்
சிலுவையில் அறையும்படி ஒப்புக்கொடுத்து
விட்டான்.

### படைவீரரின் ஏளனம்

(மாற். 15 : 16–20; யோ. 19 : 2, 3)

27 அதன்பின் மாநிலத் தலைவனின் படை
வீரர் இயேசுவை மாளிகைக்குள்ளே கூட்டிக்
கொண்டு போய், பட்டாளம் முழுவதையும்
அவர்முன் ஒன்றுகூட்டி, 28 அவருடைய

* 'நீர் அப்படிச் சொல்லுகிறீர்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
† 'இயேசு பரபாஸ்' என்பது ஒரு சில பிரதிகளின் பாடம்.
‡ 'நீதிமானுடைய' என்பது ஒரு சில பிரதிகளின் பாடம்.
27:9, 10 சக. 11:12, 13. 27:24 உபா. 21:6-9.

ஆடைகளைக் கழற்றி ஒண்சிவப்பான
மேலாடையை அவருக்கு அணிந்து, 29 முள்
ளால் ஒரு முடியைப் பின்னி அதை அவர்
தலையில் வைத்தார்கள்; அவருடைய வலக்
கையில் ஒரு கோலைக் கொடுத்து, அவர்முன்
முழந்தாள்படியிட்டு, ''யூதருடைய அரசனே
வாழ்க!'' என்று சொல்லி அவரை ஏளனம்
செய்தார்கள்; 30 அவர்மேல் துப்பி, அந்தக்
கோலைப் பிடுங்கி, அதைக்கொண்டே
அவரைத் தலையில் அடித்தார்கள். 31 இவ்
வாறு அவரை ஏளனம் செய்த பிறகு,
அவருக்கு அணிந்த மேலாடையைக் கழற்றி
விட்டு, அவருடைய உடைகளையே அவருக்கு
உடுத்தி, அவரைச் சிலுவையிலறைய நடத்
திக்கொண்டு போனார்கள்.

## சிலுவையில் அறைதல்

(மாற். 15 : 21–32; லூக். 23 : 26–43;
யோ. 19 : 17–27)

32 அவர்கள் வெளியே போய்க்கொண்
டிருக்கையில், சிரேனே ஊரானாகிய
சீமோன் என்பவனைக் கண்டு, அவனைக் கட்
டாயப்படுத்தி அவருடைய சிலுவையைச்
சுமந்து வரும்படி செய்தார்கள். 33 அவர்
கள் தலையோட்டிடம் என்று பொருள்கொள்
ளும் கொல்கொதா என்னும் இடத்தை
அடைந்தபோது, 34 ஒருவகையான கசப்புப்
பொருள் கலந்த திராட்சை இரசத்தை
அவருக்குக் குடிக்கக் கொடுத்தார்கள். அவர்
அதைச் சுவைபார்த்துவிட்டுக் குடிக்க
மறுத்துவிட்டார். 35 அவர்கள் அவரைச்
சிலுவையில் அறைந்தபின், அவருடைய
ஆடைகளைச் சீட்டுக் குலுக்கிப்போட்டுப்
பங்கிட்டுக்கொண்டார்கள்; 36 பிறகு அங்கே
உட்கார்ந்து அவரைக் காவல் காத்தார்கள்;
37 அவருடைய தலைக்குமேல் அவரைப்
பற்றிய குற்ற அறிக்கையை வைத்தார்கள்.
அதில், 'இவன் யூதருடைய அரசனாகிய
இயேசு' என்று எழுதியிருந்தது. 38 அவரு
டைய வலப்பக்கத்தில் ஒருவனும் இடப்பக்
கத்தில் ஒருவனுமாக இரண்டு கொள்ளைக்
காரரை அவரோடு சிலுவைகளில் அறைந்
தார்கள். 39 அந்த வழியே சென்றவர்கள்
தங்கள் தலைகளை ஆட்டி, 40 ''திருக்கோவிலை
இடித்துவிட்டு மூன்று நாளில் கட்டியெழுப்பு
கிறவனே, நீ கடவுளின் மைந்தனென்றால்
உன்னை நீயே காப்பாற்றிக்கொள்; சிலுவையி
லிருந்து இறங்கி வா'' என்று சொல்லி அவ
ரைப் பழித்தார்கள். 41 அவ்வாறே தலைமை
ஆசாரியர்களும் வேத அறிஞர் மூப்பர்
ஆகியோருடன் சேர்ந்து ஏளனமாகப் பேசிக்
கொண்டு, 42 ''பிறரைக் காப்பாற்றினான்;
தன்னைக் காப்பாற்றிக்கொள்ள இயலவில்லை.
இவன் இஸ்ரவேலின் அரசனாம்! இப்பொழுது
சிலுவையிலிருந்து இறங்கி வரட்டும், இவனை
நம்புகிறோம். 43 கடவுளிடம் நம்பிக்கை
கொண்டிருந்தான். அவருக்கு இவன்மேல்
பிரியமிருந்தால், இப்போது இவனை விடுவிக்
கட்டுமே. இவன், 'நான் கடவுளின் மைந்
தன்' என்றானே'' என்று சொன்னார்கள்.
44 அவரோடு சிலுவைகளில் அறையப்பட்ட
கொள்ளைக்காரரும் இவ்வாறே அவரைப்
பழித்துரைத்தனர்.

## இயேசுவின் மரணம்

(மாற். 15:33–41; லூக். 23:44–49;
யோ. 19:28–30)

45 நடுப்பகல் முதல் பிற்பகல் மூன்று மணி
வரையிலும்*, நாடெங்கும் இருள் சூழ்ந்திருந்
தது. 46 பிற்பகல் ஏறக்குறைய மூன்று
மணிக்கு † இயேசு, ''ஏலீ, ஏலீ, லாமா சபக்
தானீ,'' அதாவது, ''என் கடவுளே, என்
கடவுளே, ஏன் என்னைக் கைவிட்டீர்?'' என்று
உரத்த குரலில் கூப்பிட்டார். 47 அங்கே
நின்றவர்களுள் சிலர் இதைக் கேட்டு, ''இவன்
எலியாவைக் கூப்பிடுகிறான்'' என்றனர்.
48 உடனே அவர்களுள் ஒருவன் ஓடிப்
போய், கடற்காளானை எடுத்துக் காடியில்
தோய்த்து, அதை ஒரு கோலில் மாட்டி
அவருக்குக் குடிக்கக் கொடுத்தான்.
49 மற்றவர்களோ, ''பொறு, எலியா
இவனைக் காப்பாற்ற வருகிறாரோவென்று
பார்ப்போம்'' என்றார்கள். 50 இயேசு மறுபடி
யும் உரத்த குரலில் கத்தி ஆவி துறந்தார்.
51 அதே நேரத்தில் திருக்கோவிலின்
திரை மேலிருந்து கீழ் வரைக்கும் இரண்
டாகக் கிழிந்தது; நிலம் அதிர்ந்தது, கற்
பாறைகள் பிளந்தன; 52 கல்லறைகள் திறந்
தன; துஞ்சிய தூயோர் பலருடைய உடல்
கள் உயிர் பெறலாயின. 53 அவர் உயிர்த்
தெழுந்த பின்பு இவர்கள் கல்லறைகளை
விட்டுப் புறப்பட்டு, திருநகரத்திற்குள்
சென்று, பலருக்குக் காட்சியளித்தார்கள்.
54 நூற்றுவர் தலைவனும் அவனோடு இயேசு
வைக் காவல் காத்தவர்களும், நிலநடுக்கத்
தையும் நடந்த காரியங்களையும் கண்டு
மிகவும் அஞ்சி, ''மெய்யாகவே இவர் கடவு
ளின் மைந்தரே'' என்றார்கள். 55 கலிலேயா
விலிருந்து இயேசுவைப் பின்பற்றி நடந்து
அவருக்குப் பணிவிடை செய்த பெண்மக்கள்
பலரும் அங்கே இருந்தனர்; அவர்கள் தொலை
விலே நின்று பார்த்துக்கொண்டிருந்தார்கள்.
56 அவர்களிடையே மகதலேனா மரியாளும்,
யாக்கோபுக்கும் யோசேப்புக்கும் தாயாகிய
மரியாளும், செபெதேயுவின் மைந்தர்க
ளுடைய தாயும் இருந்தார்கள்.

* மூலத்தில், யூதர் கணக்குப்படி, ஆறும் மணி முதல் ஒன்பதாம் மணி வரையில் என்றிருக்கிறது.
† மூலத்தில், யூதர் கணக்குப்படி, ஒன்பதாம் மணிக்கு என்றிருக்கிறது.
27:34 சங். 69:21. 27:35 சங். 22:18. 27:39 சங். 22:7; 109:25 27:40 மத். 26:61; யோ. 2:19. 27:43 சங். 22:8.
27:46 சங். 22:1. 27:48 சங். 69:21. 27:51 யாத். 26:31-33. 27:55, 56 லூக். 8:2, 3.

### அடக்கம் செய்தல்

(மாற். 15:42—47; லூக. 23:50—56;
யோ. 19:38—42)

57 மாலை நேரம் வந்ததும் அரிமத்தியா
ஊரைச் சேர்ந்த யோசேப்பு என்னும் செல்
வர் அங்கே வந்தார்; அவரும் இயேசுவின்
சீடராயிருந்தார். 58 அவர் பிலாத்து
வினிடம் போய் இயேசுவின் உடலைக்
கொடுக்கவேண்டுமென்று கேட்டார். பிலாத்
துவும் அதைக் கொடுத்துவிடக் கட்டளையிட்
டான். 59 யோசேப்பு, உடலை எடுத்து,
அதைத் தூய்மையான மெல்லிய துணியில்
சுற்றி, 60 கற்பாறையில் தாம் வெட்டி
யிருந்த தம் புதிய கல்லறையில் வைத்து
அதன் வாயிலில் ஒரு பெரிய கல்லைப் புரட்டி
வைத்துவிட்டுப் போனார். 61 அப்போதெல்
லாம் மகதலேனா மரியாளும் மற்ற மரி
யாளும் அங்கேதான் இருந்தார்கள்; அவர்
கள் கல்லறைக்கு எதிரே உட்கார்ந்திருந்
தார்கள்.

### கல்லறைக்குக் காவல்

62 மறுநாள் அதாவது ஆயத்த நாளுக்கு
அடுத்த நாள், தலைமை ஆசாரியர்களும்
பரிசேயரும் பிலாத்துவின்முன் வந்துகூடி,
63 "ஐயா, அந்த வஞ்சனையாளன் உயிரு
டன் இருக்கும்போது, 'மூன்று நாளுக்குப்
பின் உயிர்த்தெழுவேன்' என்று சொன்னது
எங்களுக்கு நினைவிருக்கிறது. 64 ஆகையால்
மூன்றாம் நாள் வரையில் கல்லறையைப்
பத்திரப்படுத்தக் கட்டளையிடும்; இல்லா
விடில், அவனுடைய சீடர்கள் வந்து அவனைத்
திருடிக்கொண்டு போய்விட்டு, 'இறந்தோ
ரிடமிருந்து உயிர்த்தெழுந்தார்' என்று மக்
களிடம் சொல்லுவார்கள், அப்பொழுது
முந்தின வஞ்சனையைவிடப் பிந்தினது
இன்னும் மோசமாயிருக்கும்" என்றார்கள்.
65 அதற்குப் பிலாத்து, "உங்களிடந்தான்
காவற்காரர்கள் இருக்கிறார்களே; போய்
உங்களால் இயன்ற வரையில் பத்திரப்படுத்
திக்கொள்ளுங்கள்" என்றான். 66 அவர்கள்
போய்க் கல்லறைக்குக் காவல் வைத்து,
கல்லுக்கு முத்திரையும் இட்டுப் பத்திரப்
படுத்தினார்கள்.

### இயேசு உயிர்த்தெழுந்தார்

(மாற். 16:1—8; லூக். 24:1—12;
யோ. 20:1—10)

**28** ஓய்வுநாள் முடிந்து, வாரத்தின்
முதலாம் நாள் விடிந்து வருகையில்,
மகதலேனா மரியாளும் இன்னொரு மரியாளும்
கல்லறையைப் பார்க்க வந்தார்கள். 2 அப்
பொழுது ஒரு பெரிய நிலநடுக்கம் உண்
டாயிற்று. ஆண்டவருடைய தூதன் வானத்
தினின்று இறங்கிவந்து வாயிலிலிருந்து
கல்லைப் புரட்டித் தள்ளி, அதன்மீது உட்
கார்ந்தான். 3 அவனதுதோற்றம் மின்னலைப்
போலிருந்தது. அவனது உடை பனிக்கட்டி
போல வெண்மையாயிருந்தது. 4 அவனைப்
பார்த்த அச்சத்தால் நடுநடுங்கி, காவற்
காரர்கள் செத்தவர்கள் போலானார்கள்.
5 அந்த வேளையில் தெய்வதூதன் அந்தப்
பெண்களை நோக்கி, "நீங்கள் அஞ்ச வேண்
டாம். சிலுவையில் அறையப்பட்ட இயேசு
வைத் தேடுகிறீர்கள் என்பது எனக்குத்
தெரியும். 6 அவர் இங்கே இல்லை; தாம்
சொன்னபடியே அவர் உயிர்த்தெழுந்து
விட்டார். அவரை வைத்த இடத்தை வந்து
பாருங்கள். 7 விரைந்து சென்று, 'அவர்
இறந்தோரிடமிருந்து உயிர்த்தெழுந்தார்.
அவர் உங்களுக்கு முந்திக் கலிலேயாவுக்குப்
போய்விடுவார்; அங்கே அவரைக் காண்பீர்
கள்' என்று அவருடைய சீடரிடம் சொல்
லுங்கள். இதுவே நான் உங்களுக்குச்
சொல்ல வேண்டிய செய்தி" என்றான்.
8 அவர்கள் விரைவாகக் கல்லறையை
விட்டுப் புறப்பட்டு, அச்சத்தோடும் அதே
நேரத்தில் மிகுந்த மகிழ்ச்சியோடும் அவரு
டைய சீடருக்கு அறிவிக்க ஓடினார்கள்.
9 வழியில் இயேசு தாமே அவர்களுக்கு எதிர்ப்
பட்டு, "வாழ்க!" என்று சொல்லி அவர்
களை வாழ்த்தினார். அவர்கள் அவரை அணுகி
அவருடைய பாதங்களைத் தழுவி, அவரை
வணங்கினார்கள். 10 இயேசு அவர்களிடம்,
"இனி அச்சங்கொள்ள வேண்டாம். நீங்கள்
என் சகோதரரிடம் சென்று, அவர்களைக்
கலிலேயாவுக்குப் போகும்படி சொல்லுங்
கள். அங்கே நான் அவர்களுக்குக் காட்சி
யளிப்பேன்" என்று சொன்னார்.

### காவற்காரர் அறிவித்த செய்தி

11 அவர்கள் போய்க்கொண்டிருந்த அந்த
வேளையில், காவல்புரிந்த காவலருள் சிலர்
நகரத்திற்குள் சென்று, நடந்த யாவற்றை
யும் தலைமை ஆசாரியர்களுக்கு அறிவித்
தனர். 12 அந்த ஆசாரியர்கள் மூப்பருடன்
கூடிப்பேசினபின், அந்தக் காவலருக்கு
நிறையப் பணம் கொடுத்து, 13 " 'நாங்கள்
தூங்கிக்கொண்டிருந்தோம், அப்பொழுது
அவனுடைய சீடர்கள் இரவில் வந்து
அவனைத் திருட்டுத்தனமாகக் கொண்டு
போய்விட்டார்கள்' என்று மக்களுக்குச்
சொல்லிவிடுங்கள். 14 மாநிலத் தலைவனின்
காதுக்கு இது எட்டுமானால், நாங்கள் எப்படி
யாவது அவரை நம்பவைத்து உங்களுக்குத்
தொல்லை வராதபடி பார்த்துக்கொள்ளு
கிறோம்" என்றார்கள். 15 அவர்கள்
பணத்தை வாங்கிக்கொண்டு, தங்களுக்குக்
கற்பிக்கப்பட்டபடியே செய்தார்கள்.
இதனால் யூதரிடையே இந்தக் கதை இந்நாள்
வரையிலும் உலவி வருகிறது.

27:63 மத். 16:21; 17:25; 20:19; மாற். 8:31; 9:31; 10:33, 34; லூக். 9:22; 18:31-33.

### இயேசுவின் கட்டளை

*(மாற். 16:14—18; லூக். 24:36—49;
யோ. 20:19—23; திருத்தூது. 1:9—11)*

16 பதினொரு சீடர்களும் கலிலேயாவுக்குப்
போய் இயேசு தங்களுக்குக் குறித்திருந்த
மலையை அடைந்தார்கள். 17 அங்கே அவர்
கள் அவரைக் கண்டு வணங்கினார்கள்; ஆனால்
அவர்களுள் சிலர் நம்பத் தயங்கினர். 18 அப்
பொழுது இயேசு சீடருக்கு அருகில் வந்து
அவர்களோடு பேசினார். ''எனக்கு விண்ணி
லும் மண்ணிலும் எல்லா அதிகாரமும்
அருளப்பட்டிருக்கிறது. 19 ஆகையால்
நீங்கள் புறப்பட்டுப் போய் எல்லா நாட்
டினரையும் சீடராக்குங்கள்; அவர்களுக்குத்
தந்தையார், மைந்தர், தூய ஆவியான
வரின் திருப்பெயரால் திருமுழுக்குக்
கொடுத்து, 20 நான் உங்களுக்குக் கட்டளை
யிட்ட யாவற்றையும் அவர்கள் கடைப்பிடிக்
கும்படி அவர்களுக்குப் போதியுங்கள். இதோ
யுக முடிவு வரை எல்லா நாள்களிலும் நான்
உங்களோடு இருக்கிறேன்'' என்று அவர்
களுக்குச் சொன்னார்.

**28:16, 17** மத். 26:32; மாற். 14:28. **28:19** லூக். 24:47; திருத்தூது. 1:8. **28:20** சங். 125:2; யோ. 14:16-21.

# மாற்கு எழுதின அருட்செய்தி நூல்

## திருமுழுக்குநர் யோவானின் அருளுரை

(மத். 3:1–12; லூக். 3:1–9, 15–17;
யோ. 1:19–28)

1 கடவுளின் மைந்தராகிய இயேசு கிறிஸ்து
வைப்பற்றிய நற்செய்தியின் தொடக்கம்.
2 இறைவாக்குரைப்பவராகிய ஏசாயாவின்
நூலில்,

''இதோ, நான் என் தூதனை உமக்கு
முன்னால் அனுப்புகிறேன்; அவன்
உமக்கு வழியை ஆயத்தமாக்குவான்''

என்றும்,

3 'ஆண்டவருக்கு வழியை ஆயத்தம்
செய்யுங்கள்,
அவருக்குமுன் பாதைகளைச் செவ்வை
யாக்குங்கள்'
என்பது பாலைநிலத்திலே கூக்குரலிடுகிற
வனுடைய தொனி''

என்றும் எழுதியுள்ளபடி, 4 திருமுழுக்கு
நர் யோவான் பாலைநிலத்திற்கு வந்து [திரு
முழுக்குக் கொடுத்து,] ''பாவமன்னிப்புப்
பெற மனமாற்றமடைந்து திருமுழுக்குப்
பெறுங்கள்'' என்று அறிவித்துக்கொண்டு
வந்தார். 5 அவரிடம் யூதேயா நாடு முழுவதி
லும் எருசலேம் நகரத்திலும் உள்ளோர்
யாவரும் போய், தம் பாவங்களை மறைக்
காமல் சொல்லி ஒப்புக்கொண்டு, யோர்
தான் ஆற்றில் அவரிடம் திருமுழுக்குப்
பெற்றுவந்தனர். 6 யோவான் ஒட்டக மயிர்
உடையும், அரையில் வார்க்கச்சையும்
அணிந்திருந்தார்; வெட்டுக்கிளியையும காட்
டுத் தேனையும் உண்டுவந்தார். 7 அவர்,
''என்னைவிட வல்லவர் ஒருவர் எனக்குப்
பின் வருகிறார்; அவருடைய மிதியடி
வாரைக் குனிந்து அவிழ்க்கவும் எனக்குத்
தகுதியில்லை. 8 நான் தண்ணீரினால் உங்களுக்
குத் திருமுழுக்குக் கொடுத்தேன்; ஆனால்
அவரோ தூய ஆவியினால் உங்களுக்குத் திரு
முழுக்குக் கொடுப்பார்'' என்று அறிவித்து
வந்தார்.

## இயேசு திருமுழுக்குப் பெறுதல்

(மத். 3 : 13–17; லூக். 3 : 21, 22)

9 அக்காலத்தில் ஒரு நாள் இயேசு கலிலே
யாவிலுள்ள நாசரேத்து என்னும் ஊரி
லிருந்து வந்து, யோர்தான் ஆற்றில் யோவா
னிடம் திருமுழுக்குப் பெற்றார். 10 பிறகு
அவர் தண்ணீரை விட்டு வெளியேறி வருகை
யில், வானம் பிளவுபடுவதையும், ஆவியான
வர் புறாவைப்போலத் தம்மேல் இறங்கு
வதையும் கண்டார். 11 அப்பொழுது
வானத்தினின்று ஒரு வாக்குப் பிறந்து, ''நீர்
என்னுடைய அன்பார்ந்த மைந்தர்; உம்
மால் பெரு மகிழ்ச்சியடைகிறேன்'' என்று
உரைத்தது.

## இயேசுவுக்கு நேரிட்ட சோதனை

(மத். 4:1–11; லூக். 4:1–13)

12 உடனே ஆவியானவர் அவரைத்
தூண்டி வனாந்தரத்திற்குப் போகச் செய்
தார். 13 அவர் வனாந்தரத்தில் நாற்பது
நாள் தங்கியிருந்தபோது சாத்தானால்
சோதிக்கப்பட்டார். அங்கே காட்டு விலங்கு
களினிடையே இருந்தார். தெய்வதூதர்கள்
அவருக்குத் தொடர்ந்து பணிவிடை செய்து
வந்தார்கள்.

## கலிலேயாவில் ஊழியம் செய்யத் தொடங்குதல்

(மத். 4:12–17; லூக். 4:14, 15)

14 யோவான் சிறையில் வைக்கப்பட்ட
பின்பு இயேசு கலிலேயாவுக்கு வந்து, கடவு
ளுடைய [அரசின்] நற்செய்தியை அறிவித்து
வந்தார். 15 ''காலம் நிறைவேறியிருக்
கிறது, கடவுளின் அரசு நெருங்கியுள்ளது.
மனமாற்றமடைந்து இந்த நற்செய்தியில்
நம்பிக்கை வையுங்கள்'' என்றார்.

## மீனவர் நால்வரை இயேசு அழைத்தல்

(மத். 4 : 18–22; லூக். 5 : 1–11)

16 அவர் கலிலேயாக் கடலோரமாய்ப்
போகையில், மீனவராகிய சீமோனும் அவரு
டைய சகோதரன் அந்திரேயாவும் கடலில்
வலை வீசிக்கொண்டிருக்கிறதைக் கண்டார்.
17 இயேசு அவர்களைப் பார்த்து, ''என்
பின்னே வாருங்கள், உங்களை மனிதரைப்
பிடிக்கிறவர்களாக்குவேன்'' என்று சொன்
னார். 18 உடனே அவர்கள் வலைகளை விட்டு
விட்டு அவரைப் பின்பற்றிச் சென்றார்கள்.
19 அவர் சற்று அப்பால் போனபோது
செபெதேயுவின் மகன் யாக்கோபையும்
அவருடைய சகோதரன் யோவானையும் கண்
டார். அவர்கள் தங்கள் படகில் வலைகளைப்
பழுதுபார்த்துக்கொண்டிருந்தார்கள்.
20 அவர் அவர்களையும் அழைத்தார். அவர்
கள் தங்கள் தகப்பன் செபெதேயுவைக்
கூலியாள்களோடு படகிலே விட்டுவிட்டு
அவருக்குப் பின்னே சென்றார்கள்.

## அசுத்த ஆவி பிடித்த ஒருவனைக் குணப்படுத்துதல்

(லூக். 4:31–37)

21 அப்பால் அவர்கள் கப்பர்நகூம் என்னும்
ஊருக்குள் சென்றார்கள். ஓய்வுநாள் வந்த
போது அவர் தொழுகைக்கூடத்திற்குச்
சென்று போதித்தார். 22 அவர் வேத
அறிஞரைப்போலப் போதியாமல், அதிகார
முடையவராய் அவர்களுக்குப் போதித்து

1:2 மலா. 3:1. 1:3 ஏசா. 40:3; யோ. 1:23. 1:6 2 அர. 1:8. 1:11 சங். 2:7; ஏசா. 42:1; மத். 3:17; 12:18; மாற். 9:7; லூக். 3:22. 1:15 மத். 3:2. 1:22 மத். 7:26-29.

வந்தபடியால், அங்கிருந்தவர்கள் அவ
ருடைய போதனையைக் கேட்டு வியப்படைந்
தார்கள். 23 அசுத்த ஆவி பிடித்திருந்த
ஒரு மனிதனும் அந்நேரத்தில் அவர்களு
டைய தொழுகைக்கூடத்தில் இருந்தான்.
24 அவன், ''நசரேயனாகிய இயேசுவே,
எங்களிடம் உமக்கு என்ன வேலை? எங்களை
அழிக்கவா வந்திருக்கிறீர்? நீர் இன்னாரென்
பது எனக்குத் தெரியும், நீர் கடவுளின்
பரிசுத்தர்'' என்று கத்தினான். 25 இயேசு
அந்த அசுத்த ஆவியை அதட்டி, ''பேசாதே,
இவனை விட்டு வெளியே போ'' என்றார்.
26 அப்பொழுது அந்த அசுத்த ஆவி அவனை
அலைக்கழித்து, பெரிய கூச்சலிட்டு, அவனிட
மிருந்து வெளியேறிற்று. 27 எல்லாரும்
திகைப்புற்று, *''இது என்ன? இது அதிகார
முள்ள புதிய போதனை. இவர் அசுத்த ஆவி
களுக்கும் கட்டளையிடுகிறார், அவையும்
இவருக்குக் கீழ்ப்படிகின்றனவே!'' என்று
தங்களிடையே பேசிக்கொண்டனர்.
28 அவரைப்பற்றிய புகழ் விரைவில் கலிலே
யாவின் சுற்றுப்புறமெங்கும் பரவிற்று.

## இயேசு பலருக்குக் குணமளித்தல்

(மத். 8:14–17; லூக். 4:38–41)

29 அவர்கள் தொழுகைக்கூடத்தை விட்டு
வெளியே வந்து யாக்கோபோடும், யோவா
னோடும், சீமோன், அந்திரேயா என்பவர்
களுடைய வீட்டுக்குப் போனார்கள். 30 அங்கே
சீமோனுடைய மாமி காய்ச்சலாய்க்
கிடந்தாள், அவளைப்பற்றி இயேசுவுக்குச்
சொன்னார்கள். 31 அவர் அருகே போய்க்
கையைப் பிடித்து அவளைத் தூக்கினார்,
காய்ச்சல் அவளை விட்டு நீங்கிற்று; அவள்
அவர்களுக்குப் பணிவிடை செய்தாள்.
32 மாலை நேரமாகிப் பொழுதும் சாய்ந்தது.
உடனே, பிணியாளிகள், பேய் பிடித்திருந்
தவர்கள் அனைவரையும் மக்கள் அவரிடம்
கொண்டு வந்தார்கள். 33 ஊர் முழுவதும்
வீட்டு வாயிலின்முன் வந்து கூடிவிட்டது.
34 பலவகையான நோய்களால் பீடிக்கப்
பட்டிருந்த பலரை அவர் குணமாக்கினார்;
பல பேய்களையும் ஓட்டினார். அந்தப் பேய்
கள் அவரை அறிந்திருந்தபடியால், அவை
பேசுவதற்கு அவர் இடங்கொடுக்கவில்லை.

## இயேசு பல இடங்களுக்குச் சென்று அருளுரையாற்றுதல்

(லூக் 4:42–44)

35 மறுநாள் காலையில் அவர் இருட்டு நீங்கு
முன் எழுந்து, தனிமையான ஓர் இடத்திற்
குப் போய், அங்கே ஜெபம் செய்துகொண்
டிருந்தார். 36 சீமோனும் அவரோடு இருந்த
வர்களும் அவரைத்தேடிப்போய், 37 அவரைக்
கண்டு, ''எல்லாரும் உம்மைத் தேடிக்
கொண்டிருக்கின்றனர்'' என்று சொன்னார்
கள். 38 அவர் அவர்களிடம், ''நாம்
பக்கத்திலுள்ள வேறு ஊர்களுக்குப்
போவோம் வாருங்கள்; அங்கும் நான்
அருளுரையாற்ற வேண்டும்; நான் வந்
திருப்பது இதற்காகவே'' என்று சொன்னார்.
39 பிறகு அவர் கலிலேயா நாடெங்கும்
போய், அவர்களுடைய தொழுகைக்கூடங்
களில் அருளுரையாற்றினார்; பேய்களையும்
ஓட்டினார்.

## தொழுநோயுள்ள ஒருவனைக் குணமாக்குதல்

(மத். 8:1–4; லூக். 5:12–16)

40 ஒரு நாள் தொழுநோயுள்ள ஒருவன்
அவரிடம் வந்து, அவர்முன் முழந்தாள்
படியிட்டு, ''உமக்கு மனமுண்டானால்,
என்னைக் குணமாக்க உம்மால் ஆகும்''
என்று வேண்டிக்கொண்டான். 41 அவர்
மனவுருக்கங்கொண்டு, தமது கையை
நீட்டி, அவனைத் தொட்டு, ''எனக்கு மன
முண்டு, நீ குணமடைவாயாக'' என்றார்.
42 உடனே தொழுநோய் அவனை விட்டு
நீங்கிற்று; அவன் குணமானான்.
43 அவர் அவனுக்குக் கண்டிப்பாகக் கட்
டளையிட்டு, ''நீ யாருக்கும் ஒன்றும் சொல்
லாதே, எச்சரிக்கையாயிரு; ஆனால், ஆசாரி
யரிடம் போய் உன்னைக் காட்டி, 44 நீ குண
மானதற்காக, மக்களுக்குச் சான்று தரும்
வகையில் மோசே கட்டளையிட்டுள்ள காணிக்
கைகளைச் செலுத்து'' என்று சொல்லி,
உடனே அவனை அனுப்பினார். 45 அவனோ
புறப்பட்டுப் போய், இந்தச் செய்தியை
எங்கும் அறிவித்து விளம்பரப்படுத்தினான்.
அதனால் அது முதற்கொண்டு அவரால் எந்த
ஊருக்கும் வெளிப்படையாகச் செல்ல
இயலாமற்போயிற்று: அவர் வெளியே
தனிமையான இடங்களில் தங்கி வந்தார்.
என்றாலும், எத்திசையிலுமிருந்து மக்கள்
அவரிடம் வந்துகொண்டிருந்தார்கள்.

## திமிர்வாதமுள்ள ஒருவனைக் குணமாக்குதல்

(மத். 9:1–8; லூக். 5:17–26)

2 சில நாளுக்குப் பின்பு இயேசு மறு
படியும் கப்பர்நகூமுக்குப் போனார். அவர்
வீட்டிலேதான் இருக்கிறார் என்ற செய்தி
பரவிற்று. 2 ஏராளமானபேர் வந்து வாயி
லின் முன்னும் இடமில்லாமற்போகும் அள
விற்குக் கூடினர். அவர் அவர்களுக்குத்
தெய்வ வார்த்தையைப் போதித்தார்.
3 அவர் போதிக்கையில் நால்வர் சுமந்து
வந்த திமிர்வாதமுள்ளவன் ஒருவனை
அவரிடம் கொண்டுவந்தார்கள். 4 கூட்டம்

* ''இது என்ன? புதிய போதனை! இவர் அதிகாரத்தோடு அசுத்த ஆவிகளுக்கும் கட்டளையிடுகிறார். அவை யும் இவருக்குக் கீழ்ப்படிகின்றனவே!'' என்றும் மொழிபெயர்க்கலாம்.

1:39 மத். 4:23; 9:35. 1:44 இலே. 14:1-32.

பெரிதாயிருந்ததால் திமிர்வாதமுள்ளவனை
அவர்முன் கொண்டுவர இயலாமல், அவர்
இருந்த இடத்துக்குமேலே வீட்டின் கூரை
யைப் பிரித்துத் திறப்புண்டாக்கி, அவனைப்
படுக்கையோடு இறக்கினார்கள். 5 இயேசு
அவர்களுக்கிருந்த நம்பிக்கையைக் கண்டு
திமிர்வாதமுள்ளவனிடம், ''மகனே, உன்
பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிட்டன''
என்றார். 6 அப்பொழுது அங்கே உட்கார்ந்
திருந்த வேத அறிஞர் சிலர், 7 ''இவன் ஏன்
இப்படிப் பேசுகிறான்? தன்னைக் கடவுளுக்குச்
சமமாக்கிக்கொண்டு அவரைப் பழிக்கிறானே!
கடவுள் ஒருவராலன்றி வேறு யாரால்
பாவங்களை மன்னிக்க இயலும்?'' என்று
தங்கள் உள்ளத்தில் சிந்தித்துக்கொண்டிருந்
தனர். 8 அவர்கள் தங்களுக்குள்ளே இப்
படிச் சிந்திக்கிறார்கள் என்பதை இயேசு அப்
போதே தாமாக அறிந்து, ''உங்கள் உள்ளத்
தில் நீங்கள் இப்படிச் சிந்திப்பதேன்? 9 திமிர்
வாதமுள்ள இவனிடம், 'உன் பாவங்கள்
மன்னிக்கப்பட்டுவிட்டன' என்று சொல்
வதா அல்லது 'எழுந்து உன் படுக்கையை
எடுத்துக்கொண்டு நட, என்று சொல்
வதா, எது எளிது? 10 என்றாலும், உலகிலே
பாவங்களை மன்னிக்க மனுமைந்தருக்கு
அதிகாரம் உண்டென்பதை நீங்கள் அறிய
வேண்டும்'' என்று சொல்லிவிட்டு, திமிர்
வாதமுள்ளவனைப் பார்த்து, 11 ''நான்
உனக்குச் சொல்லுகிறேன், நீ எழுந்து உன்
படுக்கையை எடுத்துக்கொண்டு, உன் வீட்
டுக்குப் போ'' என்றார். 12 உடனே அவன்
எழுந்து தன் படுக்கையை எடுத்துக்கொண்டு
எல்லாரும் காண வெளியே போனான்.
அதைக் கண்டு யாவரும் வியப்படைந்து,
''நாம் ஒருபோதும் இப்படிக் கண்டதில்
லையே!'' என்று சொல்லிக் கடவுளைப்
புகழ்ந்து போற்றினர்.

### இலேவி என்பவரைச் சீடராக்குதல்
*(மத். 9:9—13; லூக். 5:27—32)*

13 பிறகு இயேசு மறுபடியும் கடலோரம்
போனார்; அவரிடம் மக்களெல்லாரும் வந்
தனர்; அவர் அவர்களுக்குப் போதித்தார்.
14 அவர் அவ்விடம் விட்டுச் செல்கையில்,
அல்பேயுவின் மகன் இலேவி சுங்கச் சாவடி
யில் உட்கார்ந்திருக்கிறதைக் கண்டு, அவரி
டம், ''என்னைப் பின்பற்றி வா'' என்றார்,
அவரும் எழுந்து அவரைப் பின்பற்றிச் செல்ல
லானார். 15 பிறகு இயேசு அவருடைய
வீட்டில் விருந்துண்ண அமர்ந்தபோது,
*ஆய்க்காரர், பாவிகள் ஆகியவர்களுள் பலர்
அவரோடும் அவருடைய சீடரோடும் விருந்
துண்ண அமர்ந்தனர். இப்படிப்பட்டவர்கள்
பலர் அவரைப் பின்பற்றிச் சென்றனர்.
16 அவர் பாவிகளோடும் ஆயக்காரரோடும்
உணவு அருந்துவதைப் பரிசேயரைச் சேர்ந்த
வேதஅறிஞர் கண்டு அவருடைய சீடரிடம்,
''இவர் ஆயக்காரரோடும் பாவிகளோடும்
சாப்பிடுகிறாரே! இது என்ன!'' என்று கேட்
டனர். 17 இது இயேசுவின் காதில் விழவே,
அவர் அவர்களிடம், ''நோயற்றவர்களுக்
கன்று, நோயுற்றவர்களுக்கே மருத்துவன்
தேவை, நேர்மையானவர்களையன்று, பாவி
களையே அழைக்க வந்தேன்'' என்றார்.

### நோன்பிருத்தலைப்பற்றிய கேள்வி
*(மத். 9:14—17; லூக். 5:33—39)*

18 யோவானுடைய சீடரும் பரிசேயரும்
நோன்பிருந்த ஒரு சமயத்தில், சிலர்
அவரிடம் வந்து, ''யோவானுடைய சீடரும்
பரிசேயருடைய சீடரும் நோன்பிருக்கிறார்
களே, உம்முடைய சீடர் ஏன் நோன்பிருப்
பதில்லை?'' என்று கேட்டனர். 19 அதற்கு
இயேசு, ''மணவாளன் தன்னுடைய
தோழரோடு இருக்கும்போது, அந்தத்
தோழர் நோன்பிருக்கலாமா? மணவாளன்
தங்களுடன் இருக்கும்வரை அவர்களால்
நோன்பிருக்க இயலாது, 20 மணவாளன் அவர்
களை விட்டுப் பிரிக்கப்படும் காலம் வரும்,
அக்காலத்திலே நோன்பிருப்பார்கள்.
21 ஒருவனும் பழைய ஆடையில் கோடித்
துணியை ஒட்டுப்போட மாட்டான்; ஒட்டுப்
போட்டால், கோடித்துணி பழைய துணி
யைக் கிழித்துவிடும்; கிழிசலும் பெரிதாகும்.
22 அவ்வாறே ஒருவனும் புதிய திராட்சை
இரசத்தைப் பழைய துருத்திகளில் ஊற்றி
வைக்க மாட்டான்; ஊற்றி வைத்தால்,
இரசம் துருத்திகளைக் கிழித்துவிடும், இரச
மும் துருத்திகளும் பாழாய்ப்போகும்; புதிய
இரசத்துக்குப் புதிய துருத்திகளே ஏற்
றவை'' என்றார்.

### ஓய்வுநாளில் கதிர் கொய்தல்
*(மத். 12:1—8; லூக். 6:1—5)*

23 ஓர் ஓய்வுநாளில் அவர் வயல் வழியே
போக நேர்ந்தது. அவருடைய சீடர்கள் கூட
நடந்து போகும்போது கதிர்களைக் கொய்
யத் தொடங்கினார்கள். 24 அப்பொழுது
பரிசேயர் அவரிடம், ''இதோ, இவர்கள்
ஓய்வுநாளில் செய்யத்தகாததை ஏன் செய்
கிறார்கள்?'' என்று கேட்டனர். 25 அதற்கு
அவர், ''தாவீதும் அவருடனிருந்தவர்
களும் உணவு கிடைக்காமல் பசியாயிருந்த
போது, அவர் செய்ததைக் குறித்து நீங்கள்
படித்ததில்லையா? 26 அவர் அபியத்தார்
என்னும் தலைமை ஆசாரியர் காலத்தில்
கடவுளின் வீட்டிற்குள் சென்று ஆசாரியர்
தவிர வேறெவரும் உண்ணக்கூடாத படை
யல் அப்பங்களைத் தாம் உண்டதுமல்லாமல்,
அவற்றைத் தம்முடனிருந்தவர்களுக்கும்
கொடுத்தாரே'' என்றார். 27 பின்னும் அவர்
அவர்களிடம், ''மனிதனுக்காக ஓய்வுநாள்

* மத். 5:46 அடிக்குறிப்பைப் பார்க்க.

**2:23** உபா. 23:25. **2:26** இலே. 24:9. **2:25, 26** 1சாமு. 21:1-6. **2:27** உபா. 5:14

உண்டாக்கப்பட்டதேயன்றி, ஓய்வுநாளுக்
காக மனிதன் உண்டாக்கப்படவில்லை;
28 ஆகவே, மனுமைந்தர் ஓய்வுநாளுக்கும்
ஆண்டவர்'' என்றார்.

### சூம்பின கையன் குணமடைதல்

(மத். 12:9—14; லூக். 6:6—11)

3 வேறொரு சமயம் இயேசு தொழுகைக்
கூடத்துக்குப் போனார். அங்கே சூம்பின
கையன் ஒருவன் இருந்தான். 2 சிலர் அவர்
மீது குற்றம் சுமத்தும் நோக்கமுடையவர்
களாய், ஓய்வுநாளில் அவனைக் குணப்படுத்து
வாரோ என்று அவரைக் கூர்ந்து கவனித்துக்
கொண்டிருந்தனர். 3 அவர் சூம்பின
கையனைப் பார்த்து, ''எழுந்து நடுவே நில்''
என்றார். 4 பிறகு அவர்களைப் பார்த்து,
''ஓய்வுநாளில் நன்மை செய்வதோ தீமை
செய்வதோ உயிரைக் காப்பதோ அதை
அழிப்பதோ, எது நியாயம்?'' என்று கேட்
டார்; அவர்களோ பேசாதிருந்தார்கள்.
5 அவர் தம்மைச் சுற்றிலுமிருந்தவர்களைச்
சினத்தோடு பார்த்து, அவர்களுடைய உள்
ளத்தின் பிடிவாதத்தைக் கண்டு வருந்தி,
அந்த மனிதனை நோக்கி, ''உன் கையை
நீட்டு'' என்றார்; அவன் நீட்டினான், அவன்
கை சீர்பட்டது. 6 பரிசேயரோ வெளியேறி
னர்; அவரை எப்படிக் கொன்றுபோடலா
மென அன்றுமுதல் அவருக்கு விரோத
மாக ஏரோதியரோடு கலந்து பேசி வந்தனர்.

### திரளான மக்கள் இயேசுவினிடம் வருதல்

7 பிறகு இயேசு அவ்விடத்திலிருந்து தம்
முடைய சீடரோடு கடற்கரைக்குப் போனார்.
கலிலேயாவைச் சேர்ந்த திரளான மக்கள்
அவருக்குப் பின்னால் சென்றார்கள். 8 யூதேயா,
எருசலேம், இதுமேயா, யோர்தானுக்கு அக்
கரைப் பகுதி, தீரு சீதோன் ஊர்களின்
சுற்றுப் புறங்கள் ஆகிய இடங்களிலிருந்தும்
ஏராளமான மக்கள் அவர் செய்தவற்றை
யெல்லாம் கேள்விப்பட்டு அவரிடம் வந்தார்
கள். 9 ஏனெனில், அவர் பலரைக் குண
மாக்கினதால் நோயாளிகளெல்லாரும்
அவரைத் தொட வேண்டுமென்று திரண்டு
வந்து அவர்மேலே விழும் அளவுக்கு
அவரிடம் வந்தனர். 10 கூட்டம் தம்மை
நெருக்கி விடாதபடி தமக்கு ஒரு படகை
ஆயத்தமாக வைத்திருக்க அவர் தம்
சீடரிடம் சொன்னார். 11 அசுத்த ஆவிகளும்
அவரைக் காணும்போதெல்லாம் அவர்
காலில் விழுந்து, ''நீர் கடவுளின் மைந்தர்''
என்று கத்தின. 12 இயேசு தம்மைப்பற்றி
அந்த ஆவிகள் தெரிவிக்கக்கூடாதென்று
அவற்றிற்கு மிகவும் கண்டிப்பாகக் கட்டளை
யிட்டார்.

### பன்னிரு திருத்தூதுவரை இயேசு தேர்ந்துகொள்ளுதல்

(மத். 10:1—4; லூக். 6:12—16)

13 பிறகு இயேசு மலைமேல் ஏறிப்போய்,
தாம் கருத்தில் கொண்டிருந்தவர்களைத் தம்
மிடம் வரவழைத்தார்; அவர்களும் அவரிடம்
வந்தார்கள். 14 அப்பொழுது அவர், தம்
மோடு இருப்பதற்காகவும், அருளுரை ஆற்று
வதற்கென்றும், 15 அதிகாரத்தோடு பேய்
களைத் துரத்துவதற்கென்றும் தாம் அனுப்பு
வதற்காகவும் பன்னிருவரை நியமித்தார்.
16 அவர்கள், பேதுரு என்று அவர் பெயரிட்ட
சீமோன், 17 செபெதேயுவின் மகன் யாக்
கோபு, யாக்கோபின் சகோதரன் யோவான்
(இவர்கள் இருவருக்கும் இடிமுழக்க மக்கள்
என்னும் பொருள்கொள்ளும் போவனர்
கேஸ் என்னும் பெயரை அவர் இட்டார்),
18 அந்திரேயா, பிலிப்பு, பர்த்தொலொ
மேயு, மத்தேயு, தோமா, அல்பேயுவின் மகன்
யாக்கோபு, ததேயு, *கானானியர் எனப்பட்ட
சீமோன், 19 இயேசுவைக் காட்டிக்கொடுத்த
யூதா இஸ்காரியோத்து என்பவர்களே.

### இயேசுவும் பெயல்செபூலும்

(மத். 12:22—32; லூக். 11:14—23; 12:10)

20 பிறகு இயேசு ஒரு வீட்டுக்குப்போனார்.
அவர்களால் சாப்பிடக்கூட இயலாதபடி
மக்கள் மறுபடியும் வந்து கூடினார்கள்.
21 அவருடைய உறவினர் அதைக் கேள்விப்
பட்டபோது, அவரைப் பிடித்துக் கொண்டு
போக வந்தனர்; ஏனெனில், அவர் மதி
கலங்கி இருக்கிறார் என்று அவர்கள் பேசிக்
கொண்டார்கள். 22 எருசலேமிலிருந்து வந்
திருந்த வேத அறிஞர், ''இவனைப் பெயல்
செபூல் என்னும் பேய் பிடித்திருக்கிறது,
பேய்களின் தலைவனைக்கொண்டு பேய்களை
ஓட்டுகிறான்'' என்று சொல்லிவந்தனர்.
23 அவர் அவர்களைத் தம்மிடம் வரவழைத்து,
உவமைகள் மூலமாக அவர்களோடு பேசி
னார்: ''சாத்தானைச் சாத்தானால் எப்படி
ஓட்ட இயலும்? 24 ஒன்றையொன்று எதிர்த்
துத் தன்னையே அழிக்கக்கூடிய பிரிவுகளுள்ள
எந்த அரசும் நிலைத்திருக்க இயலாது.
25 ஒன்றையொன்று எதிர்த்துத் தன்னையே
அழிக்கக்கூடிய பிரிவுகளுள்ள எந்தக் குடும்
பமும் நிலைத்திருக்க இயலாது. 26 சாத்
தான் தன்னைத்தானே எதிர்த்துத் தாக்கு
கிறவனாயிருந்தால் அவனால் நிலைத்திருக்க
இயலாது, ஒழிந்தே போவான். 27 வலிய
வனை முதலில் கட்டிவிட்டாலன்றி ஒருவனா
லும் அவனுடைய வீட்டிற்குள் நுழைந்து,
அவன் பொருள்களைக் கொள்ளையிட
இயலாது. அவனைக் கட்டிவிட்ட பிறகுதான்,
அவனுடைய வீட்டைக் கொள்ளையிடுவான்.

* மத். 10:4 அடிக்குறிப்பைப் பார்க்க.

**3:11 லூக். 4:41. 3:12 மத். 12:16. 3:22 மத். 9:34; 10:25.**

28 நான் உங்களுக்கு உறுதியாகச் சொல்லு
கிறேன் : மனிதருடைய எல்லாப் பாவங்
களும், அவர்கள் பேசும் எந்தப் பழிப்புரை
யும் அவர்களுக்கு மன்னிக்கப்படும்;
29 ஆனால் தூய ஆவியை எவன் பழிக்கிறானோ
அவன் ஒருபோதும் மன்னிப்புப் பெறான்,
தீராத பாவத்திற்கே ஆளாவான்'' என்றார்.
30 ''இவனை ஓர் அசுத்த ஆவி பிடித்திருக்
கிறது'' என்று அவர்கள் சொல்லி வந்தபடி
யால், அவர் இப்படிச் சொன்னார்.

### இயேசுவின் உண்மையான உறவினர்
*(மத். 12:46–50; லூக். 8:19–21)*

31 அப்பொழுது இயேசுவின் தாயாரும்
சகோதரரும் வந்து வெளியே நின்றுகொண்டு
அவரைத் தாங்கள் அழைப்பதாகச் சொல்லி
அனுப்பினார்கள். 32 அவரைச் சூழ ஆள்கள்
உட்கார்ந்திருந்தார்கள்; அவர்கள் அவரிடம்
''இதோ, உம்முடைய தாயாரும் உம்
முடைய சகோதரரும் வெளியே நின்று
கொண்டு உம்மைத் தேடுகிறார்கள்'' என்று
சொல்ல, 33 அவர் அவர்களுக்கு மறுமொழி
யாக, ''என் தாயாரும் என் சகோதரரும்
யார்?'' என்று கேட்டார். 34 பிறகு தம்
மைச் சுற்றிலும் உட்கார்ந்திருந்தவர்களைப்
பார்த்து, ''இதோ, என் தாயும் என்
சகோதரரும் இவர்களே; 35 கடவுளின்
திருவுளத்தை யார் நிறைவேற்றுகிறாரோ
அவரே எனக்குச் சகோதரன், எனக்குச்
சகோதரி, எனக்குத் தாய்'' என்று
சொன்னார்.

### விதை விதைப்பவன்
*(மத். 13:1–9; லூக். 8:4–8)*

4 இயேசு மறுபடியும் கடலோரத்தில்
போதிக்கத் தொடங்கினார். திரளான
மக்கள் அவரிடம் வந்து கூடியபடியால்,
அவர் கடலில் நின்ற ஒரு படகில் ஏறி அமர்ந்
தார்; மக்களெல்லாரும் கடலோரமாய்க்
கரையில் இருந்தனர். 2 அவர் உவமைகள்
மூலமாகப் பல காரியங்களை அவர்களுக்குப்
போதிக்கலானார்; போதிக்கையில், அவர்
களிடம், 3 ''இதைக் கேளுங்கள்: விதைப்
பவன் ஒருவன் விதை விதைக்கச் சென்றான்.
4 அவன் விதைக்கையில், சில விதைகள்
பாதையில் விழ நேர்ந்தது; பறவைகள் வந்து
அவற்றைத் தின்றுவிட்டன. 5 சில விதை
கள் மண் மிகுதியாய் இல்லாத கற்பாறை
நிலத்தில் விழுந்தன; அங்கே மண் ஆழமாய்
இல்லாததால் அவை விரைவில் முளைத்தன;
6 வெயில் ஏறினபோதோ வாடி வதங்கி,
வேரில்லாமையால் உலர்ந்துபோயின. 7 சில
விதைகள் முட்செடிகளினிடையே விழுந்
தன; முட்செடிகள் வளர்ந்து அவற்றை
நெருக்கிவிட்டன; அவை பலன் கொடுக்க
வில்லை. 8 சில விதைகள் நல்ல நிலத்திலும்
விழுந்தன; அவை முளைத்து ஓங்கி வளர்ந்து
முப்பது மடங்காய், அறுபது மடங்காய்,
நூறு மடங்காய்ப் பலன் தந்தன. 9 கேட்
டுணரும் காதுள்ளவன் கவனித்துக்கொள்
ளட்டும்'' என்றார்.

### உவமைகளைப் பயன்படுத்தியதன் நோக்கம்
*(மத். 13:10–17; லூக். 8:9, 10)*

10 இயேசு தனித்திருக்கையில், அவரைச்
சார்ந்திருந்தவர்களும் பன்னிருவரும் அவ
ரிடம் அந்த உவமைகளை விளக்கும்படி கேட்
டார்கள். 11 அதற்கு அவர், ''உங்களுக்குக்
கடவுளுடைய அரசைப்பற்றிய மறைசெய்தி
தெரிவிக்கப்பட்டிருக்கிறது; புறம்பே இருக்
கிறவர்களுக்கோ எல்லாம் உவமைகளாகவே
இருக்கின்றன. 12 அவர்கள்,

'ஒருபோதும் மனமாற்றமடையாமலும்
மன்னிப்புப் பெறாமலும் இருப்பதற்கேது
வாக,
பார்த்துப் பார்த்து வந்தும் அறியாமலும்
கேட்டுக் கேட்டு வந்தும் உணராமலும்
இருக்கும்படி'

இப்படி ஆயிற்று '' என்று சொன்னார்.

### விதை விதைப்பவன் உவமையின் விளக்கம்
*(மத். 13:18–23; லூக். 8:11–15)*

13 பின்னும் இயேசு அவர்களிடம்,
''நீங்கள் இந்த உவமையைப் புரிந்துகொள்ள
வில்லையா? அப்படியென்றால் மற்ற எல்லா
உவமைகளையும் எப்படி விளங்கிக்கொள்ளப்
போகிறீர்கள்? 14 விதைக்கிறவன் தெய்வ
வார்த்தையை விதைக்கிறான். 15 அந்த
வார்த்தை விதைக்கப்படுகிற பாதையிலிருப்
பவர்கள் வார்த்தையைக் கேட்டவுடனே,
சாத்தான் வந்து அவர்களுக்குள் விதைக்கப்
பட்ட வார்த்தையை எடுத்துவிடுகிறான்.
16 அவ்வாறே கற்பாறை நிலங்களில் விதைக்
கப்படுகிறவர்கள் தெய்வ வார்த்தையைக்
கேட்டவுடனே மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்
ளுகிறார்கள். 17 ஆனாலும், இவர்களுக்குள்
அது வேர்கொள்ளாததால், இவர்கள் சிறிது
காலமட்டும் நிலைத்திருந்து, தெய்வ
வார்த்தை காரணமாக வேதனையும் துன்ப
மும் உண்டானவுடனே இடறிவிழுகிறார்கள்.
18 முட்செடிகளுள்ள இடங்களில் விதைக்
கப்படுகிறவர்களும் தெய்வ வார்த்தையைக்
கேட்கிறார்கள். 19 ஆயினும், உலகக் கவலை
களும், செல்வத்தின் வஞ்சகமும், பல்வேறு
இச்சைகளும் உட்புகுந்து தெய்வ வார்த்
தையை நெருக்கிவிடுகின்றன; ஆகையால்
அது பலனற்றுப்போகிறது. 20 நல்ல நிலத்
தில் விதைக்கப்படுகிறவர்களோ தெய்வ
வார்த்தையைக் கேட்டு ஏற்றுக்கொண்டு,
முப்பது மடங்காய், அறுபது மடங்காய்,
நூறு மடங்காய்ப் பலன் தருகிறார்கள்''
என்று சொன்னார்.

3:29 லூக். 12:10. 4:1 லூக். 5:1-3, 4:11 ரோ. 16:26 4:12 ஏசா. 6:9, 10.

### விளக்கு எதற்காக?
(லூக். 8:16—18)

21 பின்னும் இயேசு அவர்களிடம், ''விளக்
கைக் கொண்டுவருவது எதற்காக? ஒரு
பாத்திரத்தின் கீழே அல்லது கட்டிலின் கீழே
வைப்பதற்காக அன்று, விளக்குத் தண்டின்
மீது வைப்பதற்காக அல்லவா? 22 வெளி
யரங்கமாகாத இரகசியமுமில்லை; வெளிப்
படாத மறைபொருளுமில்லை. 23 கேட்கக்
காதுள்ளவன் எவனும் கேட்பானாக''
என்றார்.
24 மேலும் அவர் அவர்களிடம், ''நீங்கள்
காதால் கேட்பதைக் குறித்துக் கவனமா
யிருங்கள். நீங்கள் அளக்கிற அளவின்படியே
உங்களுக்கும் அளக்கப்படும். இன்னும்
கூடுதலாகவும் கொடுக்கப்படும். 25 உள்ள
வனுக்கே கொடுக்கப்படும்; இல்லாதவனிட
மிருந்தோ உள்ளதும் எடுத்துக்கொள்ளப்
படும்'' என்றார்.

### முளைத்துப் பயிராகும் விதை

26 பின்னும் அவர், ''கடவுளின்
அரசானது, ஒருவன் நிலத்தில் விதை
விதைத்தபின் நாள்தோறும் இரவில் தூங்கிப்
பகலில் விழித்திருக்க, 27 அவனுக்குத் தெரி
யாத வகையில் விதையானது முளைத்துப்
பயிராகிறதைப் போல இருக்கிறது. 28 நிலம்
தானாகவே முதலில் முளையையும், பிறகு
கதிரையும், அதன் பிறகு கதிரிலே நிறைந்த
தானியத்தையும் பலனைக் கொடுக்கிறது.
29 பயிர் விளைந்து, அறுவடைப் பருவம்
வந்ததும் அவன் அரிவாள்கொண்டு அறுக்
கத் தொடங்குகிறான்'' என்றார்.

### கடுகு விதை
(மத். 13:31, 32; லூக். 13:18 ,19)

30 அவர் மேலும் இவ்வாறு சொன்னார் :
''கடவுளின் அரசை எதற்கு ஒப்பிடலாம்?
அல்லது எந்த உவமையால் அதை விளக்க
லாம்? 31 அது கடுகு விதைக்கு ஒப்பாயிருக்
கிறது; அந்த விதை நிலத்தில் விதைக்கப்
படுகிறபோது உலகிலுள்ள எல்லா விதை
களையும்விடச் சிறியதாகத்தான் இருக்கிறது.
32 என்றாலும், அது விதைக்கப்பட்டபின்,
முளைத்து வளர்ந்து எல்லாச் செடிகளை
யும் விடப் பெரியதாகி, வானத்துப் பறவை
கள் அதன் நிழலில் வந்து தங்கும் அளவிற்
குப் பெரிய கிளைகள் விடும்.''*
33 இயேசு இப்படிப்பட்ட பல உவமை
களின் மூலம் தெய்வ வார்த்தையை அவர்
கள் கேட்டறியும் திறமைக்கு ஏற்றவாறு
அவர்களுக்குப் போதித்துவந்தார்.
34 உவமைகள் இல்லாமல் அவர் அவர்
களோடு எதையும் பேசவில்லை; ஆனால்,
தம்முடைய சீடருக்கோ எல்லாவற்றையும்
அவர்களோடு தனித்திருக்கையில் விளக்கிக்
காட்டினார்.

### கடற் கொந்தளிப்பை அடக்குதல்
(மத். 8:23—27; லூக். 8:22—25)

35 அன்று மாலையில் இயேசு அவர்களைப்
பார்த்து, ''அக்கரைக்குப் போவோம்
வாருங்கள்'' என்று சொல்ல, அவர்கள்
கூட்டத்தை அனுப்பிவிட்டு, 36 படகில்
அப்படியே அவரைக் கொண்டுசென்றார்கள்.
வேறே படகுகளும் அவருக்குப் பின்
போயின. 37 அப்பொழுது ஒரு பெரும்
புயற்காற்று எழுந்தது. அலைகள் படகின்
மேல் அடுத்தடுத்து மோத, அதுவும் தண்
ணீரால் நிறைந்துகொண்டே வந்தது. 38 அந்
நேரத்தில் இயேசு படகின் பிற்பகுதியில்
தலையணைவைத்துத் தூங்கிக்கொண்டிருந்
தார். அவர்கள் அவரை எழுப்பி, ''போத
கரே, மடிந்துபோகிறோமே! உமக்குக் கவலை
யில்லையா?'' என்றார்கள். 39 அவர் விழித்
தெழுந்து காற்றை அதட்டிவிட்டு, கடலைப்
பார்த்து, ''இரையாதே, சும்மா இரு''
என்றார்; காற்றும் தணிந்தது; மிகுந்த
அமைதி உண்டாயிற்று. 40 இயேசு அவர்
களிடம், ''ஏன் அஞ்சுகிறீர்கள்? உங்களுக்கு
இன்னும் நம்பிக்கை வரவில்லையா?''
என்றார். 41 அவர்கள் மிகவும் அச்சமுற்று,
''இவர் யாராய் இருக்கக்கூடும்! காற்றும்
கடலும் இவருக்குக் கீழ்ப்படிகின்றனவே!''
என்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்
டார்கள்.

### பேய் பிடித்தவன் குணமடைதல்
(மத். 8:28—34; லூக். 8:26—39)

5 பிறகு அவர்கள் கடலுக்கு மறுகரையி
லுள்ள கெரசேனர் நாட்டுக்குப் போனார்
கள். 2 இயேசு படகிலிருந்து இறங்கின
வுடனே, அசுத்த ஆவி பிடித்த ஒரு
மனிதன் கல்லறைகளிலிருந்து அவருக்கு
எதிரே வந்தான்; 3 அவன் தங்குமிடம் கல்
லறைகளே. அவனைச் சங்கிலிகளினாலுங்கூட
எவனாலும் கட்டிவைக்க இயலாமற்
போயிற்று. 4 அவனைப் பன்முறை விலங்குக
ளிட்டும் சங்கிலிகளினால் கட்டிவைத்தும்
பார்த்தார்கள்; ஆனால் அவன் சங்கிலிகளை
முறித்து, விலங்குகளைத் துண்டு துண்டாக
நொறுக்கிவிட்டான். 5 அவனை அடக்க
எவனாலும் இயலவில்லை. அவன் அல்லும்
பகலும் இடைவிடாமல் கல்லறைகளிலும்
மலைகளிலுமிருந்து அலறுவான்; தன்னையே
கற்களால் காயப்படுத்திக்கொள்வான்.
6 அவன் தொலைவிலிருந்து இயேசுவைக்

* இங்கே குறிக்கப்படுவது பலஸ்தீனா நாட்டில் வளரும் ஒருவகைக் கடுகு மரம்.

4:21 மத். 5:15; லூக். 11:33. 4:22 மத். 10:26; லூக். 12:2. 4:24 மத். 7:2; லூக். 6:38; 4:25 மத். 13:12; லூக். 8:18; 19:26, 4:29 யோவேல் 3:13.

கண்டு ஓடி வந்து அவரைப் பணிந்து
கொண்டே, 7 ''இயேசுவே, உன்னதமான
கடவுளின் மைந்தரே, என்னிடம் உமக்கு
என்ன வேலே? கடவுளின்மேல் ஆணே,
என்னை வதைக்க வேண்டாம்'' என்று
உரத்த குரலில் கத்தினன். 8 ஏனென்றால்,
அவர் அவனைப் பார்த்து, ''அசுத்த
ஆவியே, இந்த மனிதனை விட்டு வெளியே
வா'' என்று கட்டளையிட்டுக்கொண்டிருந்
தார். 9 பிறகு அவர் அவனிடம், ''உன்
பெயர் என்ன?'' என்று கேட்டார். அதற்கு
அவன், ''என் பெயர் *இலேகியோன்,
ஏனென்றால் நாங்கள் பலர்'' என்று சொல்லி,
10 அந்த நாட்டிலிருந்து தங்களை அனுப்ப
வேண்டாமென்று கெஞ்சிக் கேட்டுக்
கொண்டான்.

11 அங்கே ஒரு மலையில் பன்றிகள் பெருங்
கூட்டமாய் மேய்ந்துகொண்டிருந்தன.
12 பேய்கள் அவரிடம், ''நாங்கள் அந்தப்
பன்றிகளுக்குள் புகும்படி எங்களை அங்கே
அனுப்பிவிடும்'' என்று வேண்டிக்கொள்ள,
13 இயேசு அப்படியே அவற்றிற்கு விடை
கொடுத்தார். உடனே அசுத்த ஆவிகளும்
வெளியேறிப் பன்றிகளுள் புகுந்தன; புகவே,
ஏறக்குறைய இரண்டாயிரம் பன்றிகளடங்
கிய அந்தக் கூட்டம் ஓடிச் செங்குத்துப்
பாறையின் விளிம்புக்குக் கீழே கடலில்
பாய்ந்து அழிந்துபோயிற்று. 14 அவற்றை
மேய்த்துக்கொண்டிருந்தவர்கள் ஓடிப்போய்
ஊரிலும் சுற்றுப்புறங்களிலும் அதை விளம்
பரப்படுத்தினர்கள். நடந்தது என்ன
வென்று பார்ப்பதற்கு ஊர் மக்கள் புறப்
பட்டு, 15 இயேசுவினிடம் வந்தபோது,
இலேகியோன் என்ற பேய் பிடித்திருந்தவன்
ஆடை அணிந்து, தன்னுணர்வோடு உட்
கார்ந்திருக்கிறதைக் கண்டு திகிலடைந்தார்
கள். 16 நடந்ததை நேரில் பார்த்தவர்கள்,
பேய் பிடித்திருந்தவனுக்கும் பன்றிகளுக்கும்
நேரிட்டதை அவர்களுக்கு விவரித்துச்
சொன்னர்கள். 17 அப்பொழுது அவர்கள்
இயேசுவைத் தங்கள் நாட்டை விட்டுப்
போய்விடும்படி வேண்டிக்கொண்டார்கள்.
18 அவ்வாறே அவர் படகில் ஏறினர்;
ஏறுகையில், பேய் பிடித்திருந்தவன் தான்
அவரோடு கூடவே இருக்க வேண்டுமென்று
கேட்டுக்கொண்டான். 19 ஆனல் அவர்
அவனுக்கு இடங்கொடாமல் அவனிடம்
''நீ உன் வீட்டிற்குப் போய், ஆண்டவர்
உன்மீது இரக்கங்கொண்டு உனக்குச் செய்
ததையெல்லாம் உன் உறனருக்கு விவரித்
துக் கூறு'' என்றார். 20 அவன் சென்று,
இயேசு தனக்குச் செய்ததையெல்லாம் தெக்
கப்போலி நாட்டினருக்கு அறிவித்து வந்
தான். அதைக் கேட்டவரெல்லாரும் வியப்
புற்றனர்.

## பெரும்பாடுள்ள பெண் குணமாதலும், யவீருவின் மகள் உயிர்த்தெழுதலும்

(மத். 9:18–26; லூக். 8:40–56)

21 இயேசு கடலைக் கடந்து மீண்டும் மறு
கரையை அடைந்ததும் திரளான மக்கள்
அவரிடம் வந்து கூடினர்கள்; அவர்
கடலோரத்திலிருந்தபோதே, 22 தொழு
கைக்கூடத் தலைவர்களுள் ஒருவனன யவீரு
என்பவன் வந்து அவரைக் கண்டு, அவர்
காலில் விழுந்து, 23 ''என் மகள் சாகுந்
தறுவாயில் இருக்கிறாள்; அவள் குணமாகிப்
பிழைத்துக்கொள்ளும் பொருட்டு, நீர் வந்து
அவள்மேல் உம்முடைய கைகளை வைத்
தருளும்'' என்று அவரைக் கெஞ்சிக் கேட்டுக்
கொண்டான். 24 அவர் அவனோடு சென்றார்.
திரளான மக்கள் அவரைப் பின்தொடர்ந்து
நெருக்கிக்கொண்டு சென்றார்கள். 25 ஒரு
பெண் பன்னிரண்டு ஆண்டுகளாகப் பெரும்
பாடுள்ளவளாய் இருந்தாள். 26 அவள்
மருத்துவர் பலரிடம் மிகவும் துன்பப்பட்டும்
தனக்குண்டானவை அனைத்தும் செல
வழித்தும் யாதொரு பயனும் அடையாமல்,
முன்னைவிட மோசமான நிலையிலிருந்தாள்.
27 அவள் இயேசுவைப்பற்றிக் கேள்விப்பட்
டிருந்ததால், ''நான் அவருடைய ஆடையை
மட்டும் தொட்டால் போதும், குணமாகி
விடுவேன்'' என்று சொல்லிக்கொண்டு,
28 பின்பக்கமாகக் கூட்டத்தினூடே வந்து
அவருடைய மேலாடையைத் தொட்டாள்.
29 உடனே அவளுடைய உதிரப்பெருக்கு
நின்றுபோயிற்று. அவளும், தான் நோய்
நீங்கிக் குணமடைந்ததைத் தன் உடலில்
உணர்ந்தாள். 30 அந்நேரத்திலேயே இயேசு
தம்முடைய வல்லமை தம்மிடமிருந்து
வெளிப்பட்டது என்பதை உணர்ந்து, கூட்
டத்தினிடையே திரும்பி, ''யார் என் ஆடை
யைத் தொட்டது?'' என்று கேட்டார்.
31 அப்பொழுது அவருடைய சீடர்கள்
அவரிடம், ''திரளான மக்கள் உம்மை
நெருக்கிக்கொண்டிருக்கிறதைக் கண்டும்,
என்னைத் தொட்டது யார் என்று கேட்
கிறீரே'' என்றார்கள். 32 அவரோ அதைச்
செய்த ஆளைக் காணும்படி சுற்றிலும் பார்த்
துக்கொண்டிருந்தார். 33 அந்தப் பெண்
தனக்கு நேர்ந்ததை அறிந்து, அஞ்சி, நடுங்
கிக்கொண்டு அவர் முன் வந்து விழுந்து,
உண்மை முழுவதையும் அவரிடம் சொன்
னள். 34 அவர் அவளிடம், ''மகளே, உன்
நம்பிக்கை உன்னைக் குணமாக்கியிருக்கிறது,
சமாதானத்தோடு போ, உன் நோய் நீங்கி
நலத்தோடிரு'' என்றார்.

35 அவர் இப்படிப் பேசிக்கொண்டிருக்கை
யில், தொழுகைக்கூடத் தலைவ
னுடைய வீட்டிலிருந்து சிலர் வந்து,

* மத். 26:53 அடிக்குறிப்பைப் பார்க்க.

5:34 மத். 8:10.

அவனிடம், ''உம்முடைய மகள் இறந்து
போய்விட்டாள், போதகரை ஏன் இன்
னும் தொந்தரவு செய்கிறீர்?'' என்ற
னர். 36 *அவர்கள் சொன்ன வார்த்தை
இயேசுவின் காதில் விழவே, அவர் தொழு
கைக்கூடத் தலைவனைப் பார்த்து, ''அஞ்
சாதே, நம்பிக்கையை மட்டும் விடாதிரு''
என்று சொன்னார். 37 அவர் பேதுரு, யாக்
கோபு, யாக்கோபின் சகோதரன் யோவான்
ஆகியோரைத் தவிர வேறெவரையும் தம்
முடன் வரவிடாமல், 38 அவர்களோடு
தொழுகைக்கூடத் தலைவன் வீட்டுக்குப்
போய், மக்கள் சந்தடி செய்வதையும் ஓல
மிட்டு அழுது புலம்புவதையும் கண்டார்;
39 உள்ளே சென்று, ''ஏன் இந்தச் சந்தடி?
ஏன் அழுகிறீர்கள்? சிறுமி சாகவில்லை.
உறங்குகிறாள்'' என்றார். அவர்களோ
அவரைப் பார்த்து நகைத்தார்கள்.
40 ஆனால் அவர் எல்லாரையும் வெளியே
அனுப்பிவிட்டு, சிறுமியின் தகப்பனையும்
தாயையும் தம்முடன் வந்தவர்களையும்
அழைத்துக்கொண்டு, சிறுமி இருந்த அறைக்
குள் சென்று, 41 சிறுமியின் கையைப்
பிடித்து, ''தலித்தா கூம்'' என்றார். அதற்கு,
'உனக்குச் சொல்லுகிறேன் : சிறுபெண்ணே
எழுந்திரு' என்பது பொருள். 42 உடனே
அப்பெண் எழுந்து நடக்கலானாள்; அவளுக்கு
வயது பன்னிரண்டு. அதைக் கண்டதும்
மக்கள் மிகவும் வியப்புற்று மலைத்துப்
போனார்கள். 43 அவர், ''இது யாருக்கும்
தெரியக்கூடாது'' என்று அவர்களுக்குக்
கண்டிப்பாகக் கட்டளையிட்டுவிட்டு,
அவளுக்கு உணவு கொடுக்கும்படி சொன்னார்.

## நாசரேத்தில் இயேசு புறக்கணிக்கப்படுதல்

*(மத். 13:53–58; லூக். 4:16–30)*

**6** இயேசு அங்கிருந்து புறப்பட்டுத் தம்
சொந்த ஊருக்குச் சென்றார். அவரு
டைய சீடர்களும் அவரைப் பின்தொடர்ந்து
சென்றார்கள். 2 ஓய்வு நாள் வந்தபோது,
அவர் தொழுகைக்கூடத்தில் போதித்தார்.
பலர் கேட்டு வியப்படைந்து, ''இவனுக்கு
இவை எங்கிருந்து வந்தன? இவனுக்கு
அருளப்பட்டிருக்கும் ஞானந்தான் என்னே!
இவனுடைய கைகளால் வல்லமைச் செயல்
கள் நடப்பதெப்படி? 3 இவன் தச்சன்
அல்லவா? மரியாளின் மகன்தானே? யாக்
கோபு, யோசே, யூதா, சீமோன் என்பவர்
களின் சகோதரன் அல்லவா? இவன் சகோத
ரிகள் இங்கே நம்மோடு இருக்கிறார்கள் அல்
லவா?'' என்றனர். இது அவரை ஏற்றுக்
கொள்ள அவர்களுக்குத் தடையாயிருந்தது.
4 இயேசு அவர்களை நோக்கி, ''இறைவாக்
குரைப்பவருக்குத் தம் சொந்த ஊரிலும் சுற்
றத்தாரிடையேயும் வீட்டிலுமே மதிப்பிராது,
மற்ற இடங்களில் மதிப்புண்டு'' என்றார்.
5 அங்கே அவர் நோயாளிகள் சிலர்மேல்
கைகளை வைத்து அவர்களைக் குணமாக்கின
தைத் தவிர வேறு வல்லமைச் செயல் எதை
யும் அவரால் செய்ய இயலாமற்போயிற்று.
6 அவர்களுக்கு நம்பிக்கை இல்லாததைக்
கண்டு அவர் வியப்புற்றார்.

## பன்னிருவரையும் திருப்பணிக்கு அனுப்புதல்

*(மத். 10:1, 5–15; லூக். 9:1–6)*

பிறகு அவர் ஊர் ஊராகச் சென்று
போதித்து வந்தார். 7 அப்பொழுது, அவர்
பன்னிருவரையும் தம்மிடம் அழைத்து,
அவர்களுக்கு அசுத்த ஆவிகளை அடக்க
அதிகாரம் கொடுத்து, அவர்களை இருவர்
இருவராகத் திருப்பணி செய்வதற்கென்று
முதல் முறையாக அனுப்பினார். 8 அப்
பொழுது அவர், ''வழிக்கு ஒரு தடியைத்
தவிர, சாப்பாடு, பை, அரைக் கச்சையில்
பணம் முதலிய வேறெதையும் கொண்டு
போக வேண்டாம்; 9 என்றாலும், மிதியடி
யைத் தரித்துக்கொள்ளலாம். ஆனால்
ஒருவரும் இரண்டு சட்டைகளை அணிந்து
கொள்ளக்கூடாது'' என்று கட்டளையிட்
டார். 10 பின்னும் அவர் அவர்களைப்
பார்த்து ''எந்த ஊரிலாவது ஒரு வீட்டில்
நீங்கள் தங்கப் போனால், அவ்வூரை விட்டுப்
புறப்படும்வரையில் அங்கேயே தங்கியிருங்
கள். 11 எந்த ஊராராவது உங்களை ஏற்றுக்
கொள்ளாமலும் நீங்கள் சொல்வதைக்
கேளாமலுமிருந்தால், அவ்வூரை விட்டுப்
போய்விடுங்கள்; போகும்போது, அவர்களை
எச்சரிக்கும் வகையில் உங்கள் கால்களில்
படிந்துள்ள தூசியை உதறிவிடுங்கள்''
என்றார். 12 அப்படியே அவர்கள் புறப்
பட்டுப்போய், மக்கள் மனமாற்றமடைய
வேண்டுமென்று அறிவித்தார்கள்; 13 பல
பேய்களை ஓட்டினார்கள்; நோயாளிகள்
பலரை எண்ணெய் பூசிக் குணப்படுத்தி
னார்கள்.

## திருமுழுக்குநர் யோவான் கொல்லப்படுதல்

*(மத். 14 : 1–12; லூக். 9 : 7–9)*

14 இயேசுவின் பெயர் எங்கும் பரவியதால்,
ஏரோது அரசனும் இயேசுவைப்பற்றிக் கேள்
விப்பட்டான். சிலர், ''திருமுழுக்குநர்
யோவான் இறந்தோரிடமிருந்து எழுந்துவிட்
டார். அதனாலேதான் இவரிடம் அற்புத
மான வல்லமை விளங்குகிறது'' என்றனர்.
15 சிலர், ''அவர் எலியா'' என்றும் வேறு
சிலர், ''அவர் பண்டைக்காலத்து இறை
வாக்குரைப்போரைப் போன்றவர்'' என்றும்
கூறினர். 16 ஆனால் ஏரோது அதைக் கேள்விப்
பட்டபோது, ''அவர் யோவானே! அவர்

* 'அவர்கள் சொன்ன வார்த்தையை இயேசு பொருட்படுத்தாமல்' என்றும் மொழிபெயர்க்கலாம்

**5.39** திருத்தூது. 20:10. **5:40** திருத்தூது. 9:40. **6:3** யோ. 6:42. **6:4** யோ. 4:44. **6:9** மத். 8:10. **6:11** திருத்தூது. 13:51. **6:8-11** லூக். 10:4-11. **6:13** யாக். 5:14. **6:14, 15** மத். 16:14.

தலையை நான் வெட்டச் செய்தேன்; ஆனால் அவர் உயிரோடெழுப்பப்பட்டிருக்கிறார்!'' என்று சொன்னான். 17 இந்த ஏரோதுதான் தன் சகோதரன் பிலிப்புவின் மனைவி ஏரோதியாள் என்பவளைத் தனக்கு மனைவியாக்கிக் கொண்டவன். 18 யோவான் ஏரோதுவினிடம், ''உம் சகோதரனுடைய மனைவியை நீர் வைத்திருக்கிறது முறையன்று'' என்று சொல்லிவந்தார். ஆகையால் இந்த ஏரோதியாளின் பொருட்டு ஏரோது ஆள் அனுப்பி யோவானைப் பிடித்து விலங்கிட்டுச் சிறைப்படுத்தியிருந்தான். 19 ஏரோதியாள் யோவான்மேல் தீரா வெறுப்புக்கொண்டு அவரைக் கொன்றுவிட விரும்பினாள். ஆனால் அவளால் அப்படிச் செய்ய இயலவில்லை. 20 ஏனென்றால், அவர் நேர்மையும் தூய்மையும் உள்ளவர் என்பதை ஏரோது அறிந்திருந்ததால், அவன் யோவானுக்கு அஞ்சி அவரைப் பாதுகாத்து வந்தான். அவன் அவர் சொல்லைக் கேட்டு மிகவும் மனக்கலக்கம் அடைந்தபோதிலும் அவருக்கு விருப்புடன் செவிசாய்ப்பதுண்டு. 21 ஒரு நாள் ஏரோதியாளுக்கு ஒரு நல்ல வாய்ப்புக் கிடைத்தது. எப்படியென்றால், ஏரோது தன் பிறந்தநாள் வந்தபோது தன் அரசியல் அதிகாரிகளுக்கும், படைத்தலைவர்களுக்கும், கலிலேயா நாட்டுப் பெரியோருக்கும் ஒரு விருந்து நடத்தினான். 22 அப்பொழுது ஏரோதியாளின் மகள் உள்ளே வந்து நடனம் ஆடி, ஏரோதுவுக்கும் அவனோடு விருந்துண்டவர்களுக்கும் களிப்பூட்டினாள். 23 அரசன் அப்பெண்ணிடம், ''நீ விரும்புவது எதுவானாலும் என்னிடம் கேள், உனக்குத் தருகிறேன்'' என்று சொன்னான்; மேலும், ''நீ என்னிடம் எதைக் கேட்டாலும், அது நான் ஆளும் நாட்டில் பாதியானாலும் அதை உனக்குத் தருகிறேன்'' என்று ஆணையிட்டும் கூறினான். 24 அவள் வெளியேபோய், ''நான் என்ன கேட்கட்டும்?'' என்று தன் தாயைக் கேட்டாள். அவள், ''திருமுழுக்குநர் யோவானின் தலையைக் கேள்'' என்றாள். 25 உடனே அவள் அரசனிடம் விரைந்து வந்து, ''திருமுழுக்குநர் யோவானின் தலையை இப்போதே ஒரு தட்டில் வைத்து எனக்குக் கொடுக்க வேண்டும்'' என்று கேட்டாள். 26 அரசன் மிகவும் வருந்தினான். ஆயினும், அவன் தன் ஆணையின் பொருட்டும், கூட விருந்துண்டவர்களின் பொருட்டும் அவளுக்கு மறுக்க விரும்பவில்லை. 27 அவன் உடனே ஒரு காவனை அனுப்பி, யோவானின் தலையைக் கொண்டுவரும்படி கட்டளையிட்டான். 28 அப்படியே அவன் போய்க் காவற்கூடத்தில் யோவானுடைய தலையை வெட்டி, அதை ஒரு தட்டில் கொண்டுவந்து அந்தப் பெண்ணிடம் கொடுக்க, அவள் அதைத் தாயினிடம் கொடுத்தாள். 29 யோவானுடைய சீடர்கள் அதைக் கேள்விப்பட்டு வந்து, அவர் உடலை எடுத்துச் சென்று, அதை ஒரு கல்லறையில் வைத்தார்கள்.

### ஐயாயிரம் பேருக்கு உணவளித்தல்

(மத். 14:13–21; லூக். 9:10–17; யோ. 6:1–15)

30 திருத்தூதுவர்கள் இயேசுவினிடம் வந்து கூடித் தாங்கள் செய்தவை போதித்தவை யாவற்றையும்பற்றி அவருக்கு அறிவித்தார்கள். 31 இயேசு அவர்களிடம் ''சற்று இளைப்பாறத் தனிமையான ஓர் இடத்துக்கு ஒதுக்கமாகப் போவோம் வாருங்கள்'' என்றார். ஏனென்றால், பலர் வருவதும் போவதுமாய் இருந்தனர்; சாப்பிடக்கூட அவர்களுக்கு நேரம் கிடைக்கவில்லை. 32 அவ்வாறே அவர்கள் மட்டும் ஒரு படகில் ஏறித் தனிமையான ஓர் இடத்துக்குப் போனார்கள்.

33 அவர்கள் போகிறதை மக்கள் கண்டார்கள்; அவர்களை இன்னாரென்று பலர் கண்டுகொண்டதால் அவர்கள் எல்லா ஊர்களிலுமிருந்து தரைமார்க்கமாக ஓடி, அவர்களுக்கு முன் அவ்விடத்தை அடைந்தார்கள். 34 அவர் கரையில் இறங்கினபோது ஒரு பெருங்கூட்டத்தைக் கண்டார். அவர்கள் ஆயனில்லாத ஆடுகளைப்போல இருந்தார்கள்; ஆகையால் அவர் அவர்கள்மீது மனவுருக்கங்கொண்டு, அவர்களுக்குப் பல கருத்துகளைப் போதிக்கலானார். 35 நெடுநேரம் ஆகிவிடவே, சீடர்கள் அவரை அணுகி, ''இது மனித நடமாட்டமில்லாத இடம்; நேரமும் ஆகிவிட்டது; 36 சுற்றிலுமுள்ள சிற்றூர்களுக்கும் பட்டிகளுக்கும் போய்த் தங்களுக்குச் சாப்பிட ஏதாவது வாங்கிக்கொள்ளும்படி நீர் இவர்களை அனுப்பிவிட வேண்டும்'' என்று சொன்னார்கள். 37 அவரோ அவர்களை நோக்கி, ''நீங்களே அவர்களுக்கு ஏதாவது சாப்பிடக் கொடுங்கள்'' என்றார். அதற்கு அவர்கள், ''நாங்கள் போய் இருநூறு *தினாரியத்துக்கு அப்பங்களை வாங்கி வந்து இவர்களுக்குச் சாப்பிடக் கொடுப்பதா?'' என்று கேட்டார்கள். 38 அப்பொழுது அவர், ''உங்களிடம் எத்தனை அப்பங்கள் இருக்கின்றன? போய்ப் பாருங்கள்'' என்றார். அவர்கள் பார்த்து வந்து, ''ஐந்து அப்பங்கள் இருக்கின்றன, இரண்டு மீன்களும் உண்டு'' என்றார்கள். 39 அவர், ''எல்லாரையும் பசும்புல் தரையில் பந்தி பந்தியாக உட்காரவையுங்கள்'' என்று அவர்களுக்குக் கட்டளையிட்டார். 40 எல்லாரும் நூறு நூறு பேராகவும் ஐம்பதைம்பது பேராகவும் வரிசை வரிசையாய்

* மத். 20:2 அடிக்குறிப்பைப் பார்க்க.

6:17, 18 லூக். 3:19, 20. 6:20 திருத்தூது. 24:25. 6:23 எஸ்தர் 5:3. 6:31 மாற். 2:2; 3:20. 6:34 எண். 17:17; 1 அர. 22:17; 2 வரலாறு. 18:16; எசே. 34:5; சக. 10:2; மத். 9:36.

உட்கார்ந்தனர். 41 அவர் அந்த ஐந்து
அப்பங்களையும் இரண்டு மீன்களையும் எடுத்து
வானத்தை நிமிர்ந்து பார்த்து, துதி
செலுத்தி அப்பங்களைப்பிட்டு, அவர்களுக்குப்
பரிமாறுவதற்காகச் சீடரிடம் கொடுத்துக்
கொண்டேயிருந்தார். அப்படியே அந்த
இரண்டு மீன்களையும் எல்லாருக்கும் பங்
கிட்டார். 42 எல்லாரும் வயிறுர உண்
டனர். 43 அப்பத் துணிக்கைகளிலும் மீன்
களிலும் மீந்ததைப் பன்னிரண்டு கூடைகள்
நிறைய எடுத்தார்கள். 44 அப்பம் சாப்
பிட்ட ஆண்களின் தொகை ஐயாயிரம்.

### இயேசு கடல்மீது நடந்தது
(மத். 14:22–33; யோ. 6:16–21)

45 பிறகு இயேசு மக்களை அனுப்பிக்கொண்
டிருக்கையில், சீடர் உடனே படகிலேறி
மறு கரைக்குப் பெத்சாயிதாவை நோக்கித்
தமக்குமுன் போகும்படி அவர்களை வற்புறுத்
தினுர்; 46 மக்களை அனுப்பிவிட்டு, ஜெபம்
செய்வதற்காக ஒரு மலைக்குப் போனுர்.
47 பொழுது மயங்கும் நேரத்தில் படகு
நடுக்கடலில் இருந்தது; அவர் தனிமையாகக்
கரையிலிருந்தார். 48 அப்பொழுது எதிர்
காற்றடித்ததால், சீடர்கள் அரும்பாடுபட்டுப்
படகைச் செலுத்திக்கொண்டிருந்தார்கள்.
அவர் அதைக் கண்டு, கடல்மீது நடந்து
அவர்களை நோக்கிச் சென்றுர்; அவர்களைக்
கடந்து போக வேண்டுமென்றுமிருந்தார்.
அப்பொழுது இரவின் நான்காம் சாமம்.*
49 அவர் கடல்மீது நடக்கிறதை அவர்கள்
கண்டு, அவரை ஓர் ஆவியின் தோற்றம்
என்று எண்ணி அலறினுர்கள்; 50 ஏனென்
ருல், எல்லாருமே அவரைக் கண்டு அஞ்சி
நடுங்கினர். உடனே அவர் அவர்களோடு
பேசி, ''தைரியமாயிருங்கள், நான்தான், அஞ்
சாதீர்கள்'' என்று சொல்லி, 51 அவர்கள்
இருந்த படகில் ஏறினுர். காற்றும் தணிந்
தது. அவர்கள் மிகவும் திகைத்துப்போனுர்
கள்; 52 ஏனெனில், அப்பங்கள் பெருகின
அற்புதத்தை அவர்கள் புரிந்துகொள்ள
வில்லை. அவர்களுடைய உள்ளம் மந்தமா
யிருந்தது.

### கெனேசரேத்தில் நிகழ்ந்த அற்புதங்கள்
(மத். 14:34–36)

53 அவர்கள் கடலைக் கடந்து கெனேச
ரேத்து என்னுமிடத்தில் கரை சேர்ந்து
படகை நிறுத்திக் கட்டினுர்கள். 54 அவர்
கள் படகை விட்டு இறங்கினவுடனே அவர்
இன்னுர் என்பதை மக்கள் அறிந்துகொண்டு,
55 அந்தச் சுற்றுப்புறமெங்கும் ஓடித் திரிந்து
பிணியாளிகளைப் படுக்கைகளில் கிடத்தி,
இயேசு வந்திருக்கிறுர் என்று கேள்விப்பட்ட
இடங்களுக்கெல்லாம் அவர்களைச் சுமந்துவந்
தார்கள். 56 அல்லாமலும், இயேசு சென்ற
ஊர்கள் பட்டிகள் சிற்றூர்கள் எவையோ
அவற்றின் சந்தைவெளிகளில் நோயாளிகளை
வைத்திருந்து, அவருடைய ஆடையின் ஓரத்
தையாகிலும் தொட விடும்படி அவரை
வேண்டிக்கொண்டார்கள். அவரைத்
தொட்ட அனைவரும் குணமடைந்தனர்.

### முன்னேர் பரம்பரை
(மத். 15:1–20)

7 ஒரு நாள் பரிசேயரும் எருசலேமி
லிருந்து வந்திருந்த வேத அறிஞர்
சிலரும் இயேசுவினிடம் வந்து கூடினர்.
2 அவர்கள், அவருடைய சீடருள் சிலர் தீட்
டான, அதாவது கழுவாத கைகளால் சாப்
பிடுவதைக் கண்டார்கள். 3 பரிசேயரும்
மற்றெல்லா யூதரும் முன்னேரின் பரம்பரை
யைப் பின்பற்றிக் கைகளை முறைப்படி கழு
வாமல் சாப்பிடுவதில்லை. 4 †கடையிலிருந்து
வந்ததும் ஆசாரப்படி கழுவாமல் சாப்பிடுவ
தில்லை. அப்படியே கிண்ணங்கள், பாண்டங்
கள், செப்புக்குடங்கள் ஆகியவற்றைக் கழுவு
வார்கள். இவை தவிர, பரம்பரை வழக்கப்
படி பின்பற்ற வேண்டியவை இன்னும் பல
இருந்தன. 5 ஆகவே, பரிசேயரும் வேத
அறிஞரும் அவரிடம், ''உம்முடைய சீடர்
நம் முன்னேர் பரம்பரையின்படி நடவாமல்
தீட்டான கையால் சாப்பிடுவதேன்?'' என்று
கேட்டார்கள். 6 அவர் அவர்களிடம்,
''போலி' பக்தர்களாகிய உங்களைக் குறித்து
ஏசாயா சரியாய் இறைவாக்கு உரைத்திருக்
கிறுர்; அது,

'இந்த மக்கள் உதட்டினுல் என்னை உயர்
வாகப் போற்றுகிறுர்கள்;
ஆனுல் இவர்கள் உள்ளமோ என்னை
விட்டு நெடுந் தொலைவில் இருக்கிறது.
7 மனிதருடைய கட்டளைகளை ஞான
போதனையாகப் போதிக்கிறுர்கள்;
ஆகையால் இவர்கள் என்னை வழிபடு
வது வீண்'

என்று எழுதப்பட்டிருக்கிறது. 8 நீங்கள்
கடவுளின் கட்டளைகளைக் கைவிட்டு, மனித
பரம்பரையைப் பின்பற்றி வருகிறீர்கள்''
என்றுர். 9 மேலும் அவர்களிடம், ''உங்கள்
பரம்பரை வழக்கத்தைக் ‡கடைப்பிடிக்க
வேண்டும் என்பதற்காக கடவுளின் கட்ட
ளைகளை எவ்வளவு நன்ருக ஒதுக்கிவிட்டீர்கள்!
10 பாருங்கள்; 'உன் தகப்பனையும் உன் தாயை

* இங்கே குறிக்கப்படுவது விடியற்காலம் 3 மணி முதல் 6 மணி வரையிலுமுள்ள காலப் பகுதி.

† 'கடையிலிருந்து கொண்டுவந்ததையும் ஆசாரப்படி கழுவாமல் சாப்பிடுவதில்லை' என்றும் மொழி பெயர்க்கலாம்.

‡ 'நிலைநாட்டுவதற்காக' என்பதும் பாடம்.

6:52 மாற். 4:13. 6:56 மாற், 5:27,28 திருத்தூது. 5:15. 7:2 லூக். 11:38 7:3 யோ. 2:6; கலா. 1:14. 7:6, 7 ஏசா. 29:13. 7:10 யாத். 20:12; 21:17; இலே. 20:9; உபா. 5:16.

யும் உயர்வாக மதிப்பாயாக என்றும், தகப்
பனையாவது தாயையாவது தூற்றுகிறவன்
சாகவே சாவானாக' என்றும் மோசே
சொல்லியிருக்கிறார். 11 ஆனால் நீங்களோ,
ஒருவன் தன் தகப்பனையோ தாயையோ
பார்த்து, 'உமக்கு உதவியாக என்னால்
கொடுக்கக்கூடியதைக் கொர்ப்பானாக, அதா
வது நேர்ந்துகொண்ட காணிக்கையாக
ஆக்கிவிட்டேன்' என்று சொல்லிவிடு
வானானால், 12 அதன் பிறகு அவன் தன்
தகப்பனுக்கோ தாய்க்கோ எந்த உதவியும்
செய்ய வேண்டுவதில்லை என்று சொல்லி
உதவி செய்யாதபடி அவனைத் தடுத்து
விடுகிறீர்கள். 13 வழிவழியாக நீங்கள்
போதித்து வந்த இந்தப் பரம்பரை வழக்
கத்தின் மூலம் கடவுளின் வார்த்தையையும்
பயனற்றதாக்கிவருகிறீர்கள். நீங்கள் செய்
கிற வேறு பல காரியங்களும் இப்படியே
இருக்கின்றன'' என்று சொன்னார்.
14 பிறகு அவர் கூட்டத்தை மறுபடியும்
தம்மிடம் அழைத்து, அவர்களை நோக்கி,
''நீங்கள் எல்லாரும் நான் சொல்வதை நன்
றாகக் கவனித்துப் புரிந்துகொள்ளுங்கள்.
15 வெளியே இருந்து மனிதனுக்குள்ளே
சென்று அவனை மாசுபடுத்தக்கூடியது
எதுவுமில்லை; மனிதனுக்குள்ளிருந்து வெளி
வருகிறவையே அவனை மாசுபடுத்தும்''
என்றார். [16 கேட்டுணரும் காதுள்ளவன்
கவனித்துக் கொள்ளட்டும்.] 17 அவர் கூட்
டத்தை விட்டு வீட்டிற்குள் வந்தபோது,
அவருடைய சீடர் அவரிடம் இந்த உவமை
யைப்பற்றிக் கேட்க, 18 அவர், ''நீங்களும்
இந்த அளவிற்கு உணர்வற்றவர்களாய்
இருக்கிறீர்களா? வெளியேயிருந்து மனிதனுக்
குள்ளே செல்லும் எதனாலும் அவனை மாசு
படுத்த இயலாது. 19 ஏனென்றால், அது
அவனுடைய உள்ளத்திற்குள் நுழையாமல்
வயிற்றில் சென்று, வெளியே கழிந்து
போகும். இதை நீங்கள் உணரவில்லையா?''
என்றார். இப்படிச் சொன்னதால் அவர்
எல்லா உணவுப்பொருளையும் தூயதாக்கி
விட்டார். 20 அவர் மேலும் அவர்களிடம்,
''மனிதனுக்குள்ளிருந்து வெளிவருவதுதான்
அவனை மாசுபடுத்தும்; 21 ஏனெனில், மனித
னுடைய உள்ளத்திலிருந்தே தீய எண்ணங்கள்,
அவை விளைவிக்கும் ஒழுக்கக்கேடு, களவு,
கொலை, 22 கற்புநிலை தவறுதல், பேராசை,
பொல்லாங்கு, கபடு, காமம், பொறாமை,
வசைமொழி, பெருமை, மதிகேடு ஆகியவை
வெளிவரும். 23 பொல்லாங்கான இவை
யெல்லாம் உள்ளத்திலிருந்து வெளிவந்து
மனிதனை மாசுபடுத்தும்'' என்றார்.

### கானானாட்டுப் பெண்ணின் நம்பிக்கை
(மத். 15:21–28)

24 பிறகு அவர் அங்கிருந்து புறப்பட்டு,
தீரு [சீதோன்] எல்லைக்குச்சென்று, அங்கே
ஒரு வீட்டிற்குப் போனார்; தாம் அங்கிருப்
பதை ஒருவரும் அறியாதிருக்க விரும்பியும்,
அவரால் மறைவாயிருக்க இயலவில்லை.
25 சிறிது நேரத்திற்குள் ஒரு பெண் அவரைப்
பற்றிக் கேள்விப்பட்டு உள்ளே வந்து அவர்
காலில் விழுந்தாள். அவளுடைய மகளை
அசுத்த ஆவி பிடித்திருந்தது. 26 அவள் ஒரு
கிரேக்கப் பெண்; சீரோபேனிக்கியா இனத்
தைச் சேர்ந்தவள்; தன் மகளிடமிருந்த
பேயை ஓட்டிவிடும்படி இயேசுவை வேண்டிக்
கொண்டாள். 27 அவர் அவளைப் பார்த்து,
''முதலில் பிள்ளைகள் வயிறார உண்ணட்டும்,
பிள்ளைகளின் உணவை எடுத்து நாய்க்குட்டி
களுக்குப் போடுவது நல்லதன்று'' என்றார்.
28 அதற்கு அவள், ''மெய்தான், ஐயா;
ஆயினும், மேசையின்கீழிருக்கும் நாய்க்குட்டி
கள், குழந்தைகள் சிந்தும் சிறு துண்டுகளைத்
தின்னுமே!'' என்றாள். 29 அப்பொழுது
அவர், ''நீ இந்த வார்த்தையைச் சொன்
னதனால் இப்போது வீட்டுக்குப் போகலாம்.
பேய் உன் மகளை விட்டு நீங்கிப்போயிற்று''
என்றார். 30 அவள் தன் வீட்டுக்குத் திரும்
பினதும், தன் மகள் கட்டிலில் படுத்திருக்
கிறதையும் பேய் நீங்கிவிட்டதையும்
கண்டாள்.

### செவிடன் குணமடைதல்

31 இயேசு தீருவிலிருந்து சீதோன் வழி
யாகச் சென்று தெக்கப்போலி நாட்டையும்
கடந்து, கலிலேயாக் கடலை அடைந்தார்.
32 செவிடனும் திக்குவாயனுமான ஒருவனை
சிலர் அவரிடம் கொண்டுவந்து, அவன்மீது
கையை வைக்கும்படி அவரை வேண்டிக்
கொண்டனர். 33 அவர் அவனைக் கூட்டத்தை
விட்டுத் தனியே அழைத்துக்கொண்டு
போய்த் தம்முடைய விரல்களை அவன் காது
களிலிட்டு, உமிழ்ந்து, அவன் நாவைத்
தொட்டு, 34 வானத்தை நிமிர்ந்து பார்த்து,
பெருமூச்சு விட்டு, அவனை நோக்கி: ''எப்
பத்தா'' என்றார். அதற்குத் திறக்கப்படுவா
யாக என்பது பொருள். 35 அவனுடைய
செவிகள் திறக்கப்பட்டன; நாவின் கட்டும்
அவிழ்ந்தது, அவன் செவ்வையாய்ப் பேசி
னான். 36 நடந்ததை ஒருவருக்கும் சொல்ல
வேண்டாமென்று அவர் அவர்களுக்குக் கட்
டளையிட்டார். ஆனாலும், எவ்வளவுக்கெவ்
வளவு அவர்களுக்குக் கட்டளையிட்டாரோ
அவ்வளவுக்கவ்வளவு மிகுதியாக அவர்கள்
அதை அறிவித்து வந்தார்கள்; 37 அளவற்ற
வியப்புடன், ''இவர் எல்லாவற்றையும் நன்
றாகச் செய்திருக்கிறார்; செவிடர் கேட்கவும்
ஊமையர் பேசவும் செய்கிறார்'' என்று
சொன்னார்கள்.

### நாலாயிரம் பேருக்கு உணவளித்தல்
(மத். 15:32–39)

8 அந்நாள்களில் வேறொரு சமயம்
திரளான மக்கள் கூடியிருந்தார்கள்.

7:10 ... 7:35, 36 மத். 7:18, 19 திருத்தூது. 10:9-16; கொலோ. 2:16, 21, 22. 7:32 மாற். 6:5; 8:23; 1 தீமோ. 4:14, 15. 7:35, 36 மத். 8:3, 4. 7:37 மத். 9:33; 15:31.

சாப்பிடுவதற்கு அவர்களிடம் ஒன்றுமில்லா
திருக்கவே, இயேசு தம்முடைய சீடரை
அழைத்து, 2 ''இந்த மக்களைப் பார்க்கும்
போது என் மனம் உருகுகிறது; இவர்கள்
மூன்று நாளாக என்னோடு தங்கியிருக்
கிறார்கள்; சாப்பிடுவதற்கு இவர்களிடம்
ஒன்றுமில்லை. 3 நான் இவர்களைப் பட்டினி
யாய் வீட்டுக்கு அனுப்பிவிட்டால், வழியில்
சோர்ந்துபோவார்கள்; இவர்களுள் சிலர்
நெடுந்தொலைவிலிருந்து வந்திருக்கின்றனர்''
என்றார். 4 அதற்கு அவருடைய சீடர்கள்,
''இந்தப் பாலைவனத்தில் ஒருவனால் எப்படி
இத்தனை பேருக்குச் சாப்பாடு போட்டுப்
பசியாற்ற இயலும்?'' என்று கேட்டார்கள்.
5 அதற்கு அவர், ''உங்களிடம் எத்தனை
அப்பங்கள் இருக்கின்றன?'' என்று கேட்க,
அவர்கள், ''ஏழு'' என்றார்கள். 6 அவர்
மக்களைப் பார்த்துத் தரையில் பந்தியிருக்
கும்படி கட்டளையிட்டார்; பிறகு அந்த ஏழு
அப்பங்களையும் எடுத்து, கடவுளுக்குத் துதி
செலுத்தி, பிட்டு, பரிமாறும்படி தம்
சீடரிடம் கொடுத்துக்கொண்டிருக்க, அவர்
களும் மக்களுக்குப் பரிமாறினார்கள். 7 சில
சிறு மீன்களும் அவர்களிடம் இருந்தன; அவர்
அவற்றையும் ஆசீர்வதித்தபின் பரிமாறச்
சொன்னார். 8 அவர்கள் வயிறார உண்டார்
கள். மீந்த துணிக்கைகளை ஏழு கூடைகள்
நிறைய எடுத்தார்கள். 9 அங்கிருந்தவர்நள்
ஏறத்தாழ நாலாயிரம் பேர். 10 அவர் அவர்
களை அனுப்பிவிட்டு, தம் சீடரோடு உடனே
படகிலேறி, தல்மனூத்தா என்னும் இடத்
திற்குப் போனார்.

## அற்புத அத்தாட்சி கேட்டல்
(மத். 16:1–4)

11 அப்பொழுதுபரிசேயர்வந்துஅவரோடு
வாதாடத் தொடங்கி, அவரைப்பற்றி
வானத்திலிருந்து வரும் ஓர் அற்புத அத்
தாட்சியைக் காட்டும்படி கேட்டு, அவரைப்
பரிசோதித்தனர். 12 அவர் தமக்குள் பெரு
மூச்சு விட்டு, ''ஏன் இக்காலத்து மக்கள்
அற்புத அத்தாட்சி தேடுகிறார்கள்?' உங்
களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன்: இக்
காலத்து மக்களுக்கு அற்புத. அத்தாட்சி
எதுவும் கொடுக்கப்படமாட்டாது'' என்று
சொன்னார்; 13 பிறகு அவர்களை விட்ட
கன்று, மறுபடியும் படகில் ஏறி
மறுகரைக்குப் போனார்.

## பரிசேயரின் புளிப்பு மாவு
(மத். 16:5–12)

14 சீடர்கள் சாப்பாடு எடுத்துப்போக
மறந்துவிட்டார்கள்; படகில் அவர்களிடம்
ஒரே ஒரு அப்பம் மட்டும் இருந்தது. 15 அப்
பொழுது அவர் அவர்களை எச்சரிக்கத்
தொடங்கி, ''நீங்கள் பரிசேயருடைய
புளிப்பு மாவையும் ஏரோதுவின் புளிப்பு
மாவையும் குறித்து எச்சரிக்கையாயும் விழிப்
பாயும் இருங்கள்'' என்று சொன்னார்.
16 அவர்கள், ''நம்மிடம் அப்பங்கள் இல்
லாததாலேதான் இப்படிச் சொல்லுகிறார்''*
என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்
டார்கள். 17 அவர் அதை அறிந்து அவர்களை
நோக்கி, ''நீங்கள் ஏன் உங்களிடம்
அப்பங்கள் இல்லாததைக் குறித்துப் பேசிக்
கொண்டிருக்கிறீர்கள்? இன்னுமா உணராம
லும் புரிந்துகொள்ளாமலும் இருக்கிறீர்
கள்? உங்கள் உள்ளம் மந்தமாய்ப்
போயிற்றா? 18 உங்களுக்குக் கண்ணிருந்தும்
காணாமல் இருக்கிறீர்கள், காதிருந்தும்
கேளாமல் இருக்கிறீர்கள். உங்களுக்கு நினை
வில்லையா? 19 நான் ஐந்து அப்பங்களை
ஐயாயிரம் பேருக்குப் பகிர்ந்தபோது, மீந்த
துணிக்கைகளை எத்தனை கூடை நிறைய எடுத்
தீர்கள்?'' என்று கேட்டார். அவர்கள்,
''பன்னிரண்டு'' என்றார்கள். 20 ''நான்
ஏழு அப்பங்களை நாலாயிரம் பேருக்குப்
பகிர்ந்தபோது, மீந்த துணிக்கைகளை எத்தனை
கூடை நிறைய எடுத்தீர்கள்?'' என்று கேட்
டார். 21 அவர்கள், ''ஏழு'' என்றார்கள்.
''அப்படியிருந்தும் நீங்கள் இன்னும்
உணர்ந்துகொள்ளவில்லையா?'' என்றார்.

## பெத்சாயிதாவில் குருடன் பார்வை அடைதல்

22 பிறகு அவர்கள் பெத்சாயிதா என்னும்
ஊரை அடைந்தார்கள். அப்பொழுது சிலர்
ஒரு குருடனை அவரிடம் கொண்டுவந்து,
அவனைத் தொடும்படி அவரை வேண்டிக்
கொண்டனர். 23 அவர் அந்தக் குருடனு
டைய கையைப் பிடித்து அவனை ஊருக்கு
வெளியே கூட்டிக்கொண்டுபோய், அவன்
கண்களில் உமிழ்ந்து, கைகளை அவன்மேல்
வைத்து, ''எதையாவது பார்க்கிறாயா?''
என்று கேட்டார். 24 அவன் நிமிர்ந்து
பார்த்து, ''மனிதரைப் பார்க்கிறேன்; அவர்
கள் மரங்களைப்போலக் காணப்படுகிறார்கள்;
ஆனால் நடந்து திரிகிறார்கள்'' என்றான்.
25 பிறகு அவர் மறுபடியும் அவன் கண்
களின்மேல் கைகளை வைக்கவே, அவன்
விழித்துப் பார்த்தான்; முற்றிலும் குண
மடைந்து எல்லாவற்றையும் தெளிவாகக்
காணலானான். 26 அவர் அவனிடம்,
''ஊருக்குள் எங்கேயும் செல்லாதே. [ஊரில்
இதை யாருக்கும் சொல்லாதே]'' என்று
சொல்லி அவனை அவனுடைய வீட்டுக்கு
அனுப்பிவிட்டார்.

* 'நம்மிடம் அப்பங்கள் இல்லையே என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்' என்றும் மொழி பெயர்க்கலாம்.

**8:11** மத். 12:38; லூக். 11:16. **8:15** லூக். 12:1. **8:18** எரே, 5:21; எசே. 12:2; மாற். 4:12. **8:23** யோ. 9:6.

### இயேசுவைப்பற்றிப் பேதுரு கூறியது

(மத். 16:13–20; லூக். 9:18–21)

27 பிறகு இயேசுவும் அவருடைய சீடரும்
பிலிப்புச் செசரியா என்னும் பட்டணத்தை
அடுத்த ஊர்களுக்குப் புறப்பட்டுப் போனார்
கள். வழியில் அவர் தம்முடைய சீடரைப்
பார்த்து, ''மக்கள் என்னை யாரென்று
சொல்லுகிறார்கள்?'' என்று கேட்டார்.
28 அதற்கு அவர்கள், ''உம்மைச் சிலர்
திருமுழுக்குநர் யோவான் என்றும், சிலர்
எலியா என்றும், வேறு சிலர் இறைவாக்
குரைப்போருள் ஒருவர் என்றும் சொல்லு
கின்றனர்'' என்றார்கள். 29 அவர், ''நீங்கள்
என்னை யாரென்று சொல்லுகிறீர்கள்?''
என்று கேட்க, பேதுரு, ''நீர் மேசியா.''
என்று பதிலளித்தார். 30 அப்பொழுது
அவர் தம்மைப்பற்றி ஒருவருக்கும் சொல்ல
வேண்டாமென்று அவர்களுக்குக் கண்டிப்
பாகக் கட்டளையிட்டார்.

### இயேசு தம் பாடுகளையும் மரணத்தையும் முன்னறிவித்தல்

(மத். 16:21–28; லூக். 9:22–27)

31 பிறகு அவர், ''மனுமைந்தர் பல பாடு
கள் படவும், மூப்பர்கள், தலைமை ஆசாரியர்
கள், வேத அறிஞர்கள் ஆகியோரால் தகாத
வரென்று தள்ளப்படவும் கொல்லப்படவும்,
மூன்று நாளுக்குப்பின் உயிர்த்தெழவும்
வேண்டும்'' என்று அவர்களுக்கு அதுமுதல்
போதித்து வந்தார். 32 இதையெல்லாம்
அவர் ஒளிவுமறைவில்லாமல் சொல்லி வந்
தார். அதற்காகப் பேதுரு அவரைத் தனியாக
அழைத்து, அவரைக் கடிந்துகொண்டார்.
33 ஆனால், அவர் திரும்பித் தம் சீடரைப்
பார்த்த வண்ணம், ''சாத்தானே, பின்
னாலே போ, கடவுளின் சிந்தனைக்கேற்பச்
சிந்தியாமல் மனிதரின் சிந்தனைக்கேற்பச் சிந்
திக்கிறாய்'' என்று சொல்லிப் பேதுருவைக்
கடிந்துகொண்டார்.

34 பிறகு அவர் கூட்டத்தையும் தம் சீடரை
யும் தம்மிடம் அழைத்து, ''ஒருவன்
என்னைப் பின்பற்றி வரவிரும்பினால், அவன்
தன்னைத்தான் வெறுத்து, தனக்குரிய
சிலுவையை எடுத்துக்கொண்டு, என்னைப்
பின்பற்றி வரட்டும். 35 எவன் தன்
*உயிரைப் பாதுகாத்துக்கொள்ள விரும்பு
கிறானோ அவன் அதை இழந்துவிடுவான்,
என் பொருட்டும் அருட்செய்தியின் பொருட்
டும் எவன் தன் உயிரை இழக்கிறானோ அவன்
அதைப் பாதுகாத்துக்கொள்ளுவான்.
36 மனிதன் உலகம் முழுவதையும் ஊதிய
மாகப் பெற்றாலும் அவனது ஆன்மாவை
இழந்துவிடுவானானால், அவன் அடையும்
பயன் என்ன? 37 மனிதன் தன் ஆன்மா
வுக்கு ஈடாக எதைக் கொடுக்க இயலும்?
38 இறைப்பற்று இல்லாதவர்களும் பாவிகளு
மான இக்காலத்து மக்களுள் எவன் என்னைக்
குறித்தும் என் வார்த்தைகளைக் குறித்தும்
வெட்கப்படுவானோ, அவனைக் குறித்து மனு
மைந்தரும் தம்முடைய தந்தையின் மாட்சி
மையில் தூய தூதர்களோடு வரும்போது
வெட்கமடைவார்'' என்றார்.

9 மேலும் அவர் அவர்களிடம், ''உங்
களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன்:
இங்கே நிற்கிறவர்களுள் சிலர் கடவுளின்
ஆட்சி வல்லமையோடு வந்திருப்பதைக்
காணுமுன் இறக்கப்போவதில்லை'' என்றார்.

### இயேசு மறுதோற்றமடைதல்

(மத். 17:1–13; லூக். 9:28–36)

2 ஆறு நாளுக்குப் பின்பு, இயேசு பேதுரு
வையும் யாக்கோபையும் யோவானை
யும் தனியே அழைத்து அவர்களை மட்டும்
ஓர் உயர்ந்த மலைக்குக் கூட்டிக்கொண்டு
போனார்; அங்கே அவர்கள் முன்னிலையில்
அவர் மறுதோற்றமடைந்தார். 3 அவரு
டைய ஆடைகள், இவ்வுலகில் எவராலும்
சலவை செய்ய இயலாத அளவுக்கு மிகவும்
பளபளப்பான வெண்மையாயின. 4 அப்
பொழுது மோசேயும் அவருடன் எலியா
வும் தோன்றி இயேசுவோடு பேசினார்கள்.
5 சீடர் அந்தக் காட்சியைக் கண்டபோது,
பேதுரு இயேசுவினிடம், ''ரபி, நாம்
இங்கேயே இருப்பது நல்லது;† உமக்கு
ஒன்றும், மோசேயுக்கு ஒன்றும், எலியா
வுக்கு ஒன்றுமாக மூன்று கூடாரங்களை நாங்
கள் அமைக்கிறோம்'' என்றார். 6 அவருக்கு
என்னதான் சொல்வதென்றே தெரியாமல்
இப்படிச் சொன்னார். ஏனென்றால், அவர்கள்
மிகவும் திகில்கொண்டிருந்தார்கள். 7 அப்
பொழுது ஒரு மேகம் வந்து அவர்கள்மேல்
நிழலிட்டது. ''இவர் என் அன்பார்ந்த மைந்
தர், இவருக்குச் செவிசாயுங்கள்'' என்று
அந்த மேகத்தினின்று ஒரு வாக்குப்
பிறந்தது. 8 உடனே அவர்கள் சுற்றுமுற்றும்
பார்த்தார்கள்; அப்பொழுது தங்களோடு
இயேசு ஒருவரைத் தவிர வேறெவரும் இருக்
கக் காணவில்லை.

9 அவர்கள் மலையிலிருந்து இறங்கி வருகை
யில், அவர் ''மனுமைந்தர் இறந்தோரிட
மிருந்து உயிரோடெழுந்திருக்கும் வரையில்,
நீங்கள் கண்டவற்றை ஒருவருக்கும் சொல்
லக்கூடாது'' என்று அவர்களுக்குக் கட்டளை
யிட்டார். 10 அப்படியே அவர்கள் அந்த
வார்த்தையை மனத்தில் வைத்துக்கொண்டு,
'''இறந்தோரிடமிருந்து உயிரோடெழுந்
திருப்பது என்கிறாரே' இது என்ன?'' என்று

* கிரேக்கச் சொல் உயிர் என்றும், ஆன்மா என்றும் பொருள்படும்.
† 'நல்ல வேளையாக நாங்கள் இங்கே இருக்கிறோம்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

8:28 மாற். 6:14, 15; லூக். 9:7, 8. 8:29 யோ. 6:68, 69. 8:34 மத். 10:38, 39; 16:24-28; லூக். 9:23-27; 14:26, 27 8:35 மத். 10:39; லூக். 17:33; யோ. 12:25. 9:2-7 2 பேது. 1:17, 18. 9:7 மத். 3:17; மாற். 1:11; லூக். 3:22.

ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.
11 பிறகு அவர்கள் அவரிடம், ''எலியாதான்
முதலில் வரவேண்டுமென்று வேத
அறிஞர்கள் சொல்லுகிறார்களே; அது
எப்படி?'' என்று கேட்டார்கள். 12 அதற்கு
அவர், ''எலியா எல்லாவற்றையும் சீர்
படுத்த முதலில் வருவார் என்பது உண்மை
தான். எனினும், மனுமைந்தர் பாடுகள்
பல அடையவும் புறக்கணிக்கப்படவும்
வேண்டுமென்று அவரைக் குறித்து வேதத்
தில் எழுதியிருக்கிறதே; அது என்ன?
13 நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் :
எலியா ஏற்கெனவே வந்துவிட்டார், அதுவு
மன்றி, தாங்கள் விரும்பியபடியெல்லாம்
அவருக்குச் செய்துவிட்டார்கள். அவரைக்
குறித்து வேதத்தில் எழுதியிருக்கிறபடி இது
நடந்தது'' என்றார்.

### அசுத்த ஆவி பிடித்திருந்த இளைஞனைக் குணமாக்குதல்

(மத். 17:14—21; லூக். 9:37—43)

14 அவர்கள் மற்றச் சீடரிடம் வந்தபோது,
அவர்களைச் சுற்றிலும் ஒரு பெரிய கூட்டம்
நிற்கிறதையும், அவர்களோடு வேத அறிஞர்
வாதாடுவதையும் கண்டார்கள். 15 மக்க
ளெல்லாரும் அவரைக் கண்டவுடனே வியப்
படைந்து ஓடி, அவரை வரவேற்றனர்.
16 அவர் அவர்களிடம், ''நீங்கள் இவர்
களோடு எதைப்பற்றி வாதாடுகிறீர்கள்?''
என்று கேட்டார். 17 கூட்டத்தாருள்
ஒருவன் அவரைப் பார்த்து, ''போதகரே,
ஊமைப் பேய் பிடித்திருக்கும் என் மகனை
உம்மிடம் கொண்டுவந்தேன்; 18 அது
எங்கே அவனை ஆட்கொள்கிறதோ அங்
கேயே அவனைக் கீழே வீழ்த்துகிறது. அப்
பொழுது வாயில் நுரை தள்ளுகிறது.
அவன் பற்களை நெரிக்கிறான்; உடம்பு
விறைத்துப்போகிறது. அப்பேயை ஓட்டி
விடும்படி உம்முடைய சீடரிடம் கேட்டேன்;
அவர்களால் அது இயலாமற்போயிற்று''
என்றான். 19 அதைக் கேட்டு அவர் அவர்
களிடம், ''நம்பிக்கையில்லாத சமுதாயமே,
எவ்வளவு காலம் நான் உங்களோடிருப்பது?
எவ்வளவு காலம் உங்களிடம் பொறுமை
காட்டுவது? அவனை என்னிடம் கொண்டு
வாருங்கள்'' என்றார். 20 அவனை அவரிடம்
கொண்டுவந்தார்கள். அந்த ஆவி அவரைக்
கண்டவுடனே அவனை அலைக்கழித்தது;
அவன் தரையில் விழுந்து புரண்டான்;
வாயில் நுரை தள்ளிற்று. 21 அவர் அவனு
டைய தகப்பனைப் பார்த்து, ''இது
இவனுக்கு வந்து எவ்வளவு காலமாகிறது?''
என்று கேட்டார். அதற்கு அவன், ''குழந்
தைப் பருவம் முதற்கொண்டே இருந்து
வருகிறது; 22 இவனைக் கொன்றுவிடும்படி
பல தடவை தீயிலும் தண்ணீரிலும் இவனை
அது தள்ளினதுண்டு. உம்மால் ஏதாவது
செய்ய இயலுமானால் எங்கள்மீது இரக்கங்
கொண்டு, எங்களுக்கு உதவி செய்யும்''
என்று கெஞ்சிக் கேட்டான். 23 இயேசு
அவனிடம், '''இயலுமானால்' என்றாய். நம்
பிக்கையுடைய எவனுக்கும் எல்லாம்
இயலும்'' என்றார். 24 உடனே பையனு
டைய தகப்பன், ''எனக்கு நம்பிக்கை
உண்டு; என்னிடமுள்ள நம்பிக்கையின்
மையை நீக்கியருளும்'' என்று [கண்ணீ
ரோடு] கதறினான். 25 மக்கள் திரளாய்
ஓடி வருவதை இயேசு கண்டார்; ஆகவே,
அவர் அந்த அசுத்த ஆவியை அதட்டி,
''ஊமையும் செவிடுமான ஆவியே, உனக்
குக் கட்டளையிடுகிறேன், இவனை விட்டு
வெளியே போ, இனிமேல் இவனுக்குள்
நுழையாதே'' என்றார். 26 அது அலறி,
அவனை மும்முரமாக அலைக்கழித்துவிட்டு
வலிப்பு வரச் செய்தபின் வெளியேறிற்று.
அவன் செத்தவன் போலக் கிடந்தான்;
அதனால் அவன் செத்துப்போனான் என்று
பலர் கூறினர். 27 இயேசுவோ அவன்
கையைப் பிடித்து அவனைத் தூக்கிவிட்டார்;
அவன் எழுந்து நின்றான். 28 அவர் வீட்டுக்
குள் சென்றபின், அவருடைய சீடர்கள்
அவரிடம் தனிமையாக, ''அதை ஓட்ட
ஏன் எங்களால் இயலவில்லை?'' என்று கேட்
டார்கள். 29 அதற்கு அவர், ''இவ்வகைப்
பேயை ஜெபத்தினாலே [நோன்பினாலே]
அன்றி, வேறு எதனாலும் வெளியேற்ற
இயலாது'' என்றார்.

### இயேசு தம் மரணத்தைப்பற்றி மீண்டும் முன்னறிவித்தல்

(மத். 17:22, 23; லூக். 9:43—45)

30 பிறகு அவர்கள் அங்கிருந்து புறப்
பட்டுக் கலிலேயா வழியாகப் போனார்கள்;
அது யாருக்கும் தெரியக்கூடாது என்று அவர்
விரும்பினார். 31 ஏனெனில், அவர் தம்
முடைய சீடருக்குப் போதனை செய்து
கொண்டே போனார்; அவர் அவர்களிடம்,
''மனுமைந்தர் மனிதர் கைகளில் ஒப்புக்
கொடுக்கப்படுவார், அவர்கள் அவரைக்
கொன்றுவிடுவார்கள் ; கொல்லப்பட்ட
மூன்று நாளுக்குப் பிறகு அவர் உயிர்த்
தெழுவார்'' என்று சொன்னார். 32 அவர்
சொன்னது அவர்களுக்குப் புரியவில்லை.
அதைக் குறித்து அவரிடம் கேட்கவும்
அவர்கள் அஞ்சினார்கள்.

### மிகப் பெரியவன் யார்?

(மத். 8:1—5; லூக். 9:46—48)

33 அவர்கள் கப்பர்நகூம் போய்ச் சேர்ந்
தார்கள். அங்கே அவர் வீட்டிலிருந்தபோது,
அவர்களிடம், ''வழியில் நீங்கள் எதைப்
பற்றி விவாதம் செய்துகொண்டு வந்தீர்
கள்?'' என்று கேட்டார். 34 அவர்கள்

**9:11** மலா. 4:5; மத். 11:14. **9:34** லூக். 22:24.

பேசாதிருந்தார்கள். ஏனெனில், வழியில்
அவர்கள் தங்களுள் மிகப்பெரியவன் யார்
என்று ஒருவரோடொருவர் விவாதம் செய்
திருந்தார்கள். 35 அப்பொழுது அவர் உட்
கார்ந்து பன்னிருவரையும் அழைத்து அவர்
களிடம், ''எவனாவது முதல்வனாயிருக்க
விரும்பினால் அவன் எல்லாரையும்விடக்
கடையானவனாயும் எல்லாருக்கும் பணியாள
னாயும் இருக்கட்டும்'' என்று சொன்னார்.
36 பிறகு ஒரு சிறு பிள்ளையைக் கொண்டு
வந்து, அதை அவர்கள் நடுவே நிறுத்தி,
அதை அணைத்துக்கொண்டு, 37 ''இப்படிப்
பட்ட சிறு பிள்ளைகளுள் ஒன்றை என்
பெயரால் எவன் ஏற்றுக்கொள்கிறானோ
அவன் என்னை ஏற்றுக்கொள்கிறான்; என்னை
எவன் ஏற்றுக்கொள்கிறானோ அவன் என்னை
யன்று என்னை அனுப்பினவரையே ஏற்றுக்
கொள்கிறான்'' என்றார்.

### நமக்கு விரோதமாக இராதவன் நம் சார்பாக இருக்கிறான்

(லூக். 9:49, 50)

38 யோவான் அவரிடம், ''போதகரே,
ஒருவன் உமது திருப்பெயரால் பேய்களைத்
துரத்துகிறதைக் கண்டோம்; அவன் நம்
மைப் பின்பற்றி வராதவன், ஆகையால்
அவனைத் தடுக்கப் பார்த்தோம்'' என்றார்.
39 அதற்கு இயேசு, ''அவனைத் தடுக்க வேண்
டாம். என் பெயரால் வல்லமைச் செயல்
ஒன்றைச் செய்தவுடனே என்னைக் குறித்துத்
தீதாய்ப் பேசக்கூடியவன் எவனுமில்லை.
40 நமக்கு விரோதமாக இராதவன் நம்
சார்பாக இருக்கிறான். 41 நீங்கள் கிறிஸ்து
வினுடையவர்களாய் இருக்கிறீர்கள் என்
பதற்காக உங்களுக்கு ஒரு கிண்ணம்
தண்ணீர் எவன் குடிக்கக் கொடுக்கிறானோ
அவன் தன் பலனைப் பெறாமல்போவதில்லை
என்று உங்களுக்கு உறுதியாகச் சொல்லு
கிறேன்.

### பாவக் குழியில் இடறிவிழுதல்

(மத். 18:6–9; லூக். 17: 1, 2)

42 ''என்னிடம் நம்பிக்கை கொண்டுள்ள
இந்தச் சிறுவருள் ஒருவன் பாவக்குழியில்
இடறிவிழ எவன் காரணமாயிருக்கிறானோ,
அவன் கழுத்தில் ஒரு பெரிய ஏந்திரக்
கல்லைக் கட்டி, அவனைக் கடலில் தள்ளி
விடுவதே அவனுக்கு நலம். 43 நீ பாவக்
குழியில் இடறிவிழ உன் கை காரணமாயிருந்
தால், அதைத் தறித்துவிடு; நீ இரண்டு
கையுடையவனாய் அவியாத நெருப்புள்ள
நரகத்துக்குப் போவதைவிட, ஊனமுள்ள
வனாய், மெய்வாழ்வுக்குள் செல்வது உனக்கு
நலம். [44 நரகத்தில் அவர்களைத் தின்னும்
புழு சாகாது, நெருப்பும் அவியாது.] 45 நீ
பாவக்குழியில் இடறி விழ உன் கால் காரண
மாயிருந்தால், அதைத் தறித்துவிடு; நீ
இரண்டு காலுடையவனாய் நரகத்தில்
தள்ளப்படுவதைவிட, முடவனாய் மெய்வாழ்
வுக்குள் செல்வது உனக்கு நலம். [46 நரகத்
தில் அவர்களைத் தின்னும் புழு சாகாது,
நெருப்பும் அவியாது.] 47 நீ பாவக்குழியில்
இடறிவிழ உன் கண் காரணமாயிருந்தால்,
அதைப் பிடுங்கி எறிந்துவிடு; நீ இரண்டு
கண்ணுடையவனாய் நரகத்தில் தள்ளப்படு
வதைவிட, ஒற்றைக் கண்ணனாய்க் கடவுளின்
அரசினுள் செல்வது உனக்கு நலம்.
48 நரகத்தில் அவர்களைத் தின்னும் புழு
சாகாது, நெருப்பும் அவியாது. 49 நெருப்
பினால் ஒவ்வொருவனும் உப்புப்பதனம் செய்
யப்படுவான். [எந்தப் பலியும் உப்பினால்
பதம் செய்யப்படும்.] 50 உப்பு ஒரு நல்ல
பொருள்; ஆயினும், அது சாரத்தை இழந்து
விட்டால் எதைக்கொண்டு அதற்குச்
சாரமேற்றுவீர்கள்? உங்களில் உப்பு உள்ள
வர்களாயிருங்கள், ஒருவரோடொருவர் நட்
பமைதியுடன் பழகுங்கள்'' என்றார்.

### மனைவியை விலக்கிவிடுதல்பற்றிய போதனை

(மத். 19:1–12)

10 இயேசு அவ்விடம் விட்டுப் புறப்பட்டு
யூதேயா நாட்டுக்கும் யோர்தான் ஆற்
றுக்கு அப்பாலுள்ள பகுதிக்கும் சென்றார்.
அங்கும் மக்கள் கூட்டங்கூட்டமாய்
அவரிடம் வந்தார்கள். அவர் தமது வழக்கப்
படியே அவர்களுக்கும் போதித்தார். 2 அப்
பொழுது பரிசேயர் சிலர் அவரிடம் வந்து
அவரைப் பரிசோதிக்கும் வகையில், ''ஒருவன்
தன் மனைவியை விலக்கிவிடுவது முறை
யாகுமா?'' என்று கேட்டனர். 3 அதற்கு
அவர், ''மோசே உங்களுக்கு என்ன
கட்டளையிட்டார்?'' என்று கேட்டார்.
4 அவர்கள், ''விலக்குச் சீட்டை எழுதிக்
கொடுத்து அவளை விலக்கிவிட அனுமதி
கொடுத்திருக்கிறார்'' என்றார்கள். 5 இயேசு
அவர்களிடம், ''உங்கள் அறிவு குறைவுள்ள
தாய் இருப்பதனாலேதான் அவர் இந்தக்
கட்டளையை உங்களுக்காக எழுதி வைத்
திருக்கிறார். 6 படைப்பு முதற்கொண்டே
கடவுள்,

'அவர்களை ஆணும் பெண்ணுமாக உண்
டாக்கினார்.'

7 'ஆகையால் ஒருவன் தன் தகப்பனையும்
தாயையும் விட்டுப் பிரிந்து,
தன் மனைவியோடு சேர்ந்திருப்பான்.
8 இருவரும் ஒரே உடலாயிருப்பார்கள்.'
ஆகையால், இனிமேல் அவர்கள் இருவரல்ல,
ஒரே உடலாயிருப்பார்கள். 9 எனவே,
கடவுள் இணைத்ததை மனிதன் பிரிக்காதிருப்
பானாக'' என்றார். 10 அவர்கள் வீட்டுக்கு

9:35 மத். 20:26, 27 9:37 மத். 10:40; லூக். 10:16; யோ. 13:20. 9:40 மத். 12:30; லூக். 11:23. 9:41 மத். 10:42.
9:43 மத். 5:30. 9:47 மத். 5:29. 9:48 ஏசா. 66:24. 9:50 மத். 5:13; லூக். 14:34, 35. 10:4 உபா. 24:1-4; மத். 5:31.
10:6 ஆதி. 1:27; 5:2. 10:7, 8 ஆதி. 2:24.

வந்த பிறகு அவருடைய சீடர்கள் அதே
காரியத்தைப்பற்றி அவரிடம் கேட்டார்கள்.
11 அவர் அவர்களிடம், ''எவன் தன்
மனைவியை விலக்கிவிட்டு வேறொரு பெண்ணை
மணம் செய்கிறானோ அவன் அவளுக்குத்
துரோகமாகக் கற்புநெறி தவறி நடக்கிற
வனாகிறான். 12 எவள் தன் கணவனை விலக்கி
விட்டு வேறொருவனை மணம் செய்கிறாளோ,
அவள் கற்புநெறி தவறியவளாகிறாள்''
என்றார்.

### இயேசு பிள்ளைகளை ஆசீர்வதித்தல்

(மத். 19:13—15; லூக். 18:15—17)

13 இயேசு சிறு பிள்ளைகளைத் தொட்டு ஆசீர்
வதிக்க வேண்டுமென்று அவர்களைச் சிலர்
அவரிடம் கொண்டுவந்தனர்; கொண்டு
வந்தோரைச் சீடர்கள் கடிந்துகொண்டார்
கள். 14 இயேசுவோ அதைக் கண்டு சின
மடைந்து, ''சிறு பிள்ளைகள் என்னிடம் வர
அவர்களுக்கு இடங்கொடுங்கள்; அவர்களைத்
தடைசெய்யாதீர்கள்; கடவுளின் அரசு அப்
படிப்பட்டவர்களுடையது. 15 ஒரு சிறு
பிள்ளை ஏற்பதுபோல, கடவுளின் அரசை
எவன் ஏற்றுக்கொள்ளவில்லையோ அவனால்
அதனுள் செல்ல இயலாது. இது உறுதி
என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்'' எனக்
கூறிவிட்டு, 16 அவர்களை அணைத்துக்
கொண்டு அவர்கள் மேல் கைகளை வைத்து,
அவர்களை ஆசீர்வதித்தார்.

### செல்வமுடைய ஒருவனது கேள்வி

(மத். 19:16—30; லூக். 18:18—30)

17 இயேசு புறப்பட்டு நடந்துபோகையில்
ஒருவன் அவரிடம் ஓடிவந்து, முழந்தாள்
படியிட்டு, ''நல்ல போதகரே, கடவுள் வாக்
களித்த என்றுமுள்ள மெய்வாழ்வைப் பெற்
றுக்கொள்ள நான் என்ன செய்யவேண்டும்?''
என்று கேட்டான். 18 இயேசு
''ஏன் என்னை நல்லவர் என்று அழைக்கிறாய்?
கடவுள் ஒருவரைத் தவிர நல்லவர் வேறெ
வருமில்லையே'' என்று அவனுக்குச் சொல்லி
விட்டு, 19 ''திருக்கட்டளைகளை நீ அறிந்
திருக்கிறாய். கொலை செய்யாதே, கற்பு நெறி
தவறாதே, களவு செய்யாதே, பொய்ச்
சாட்சி சொல்லாதே, வஞ்சனை செய்யாதே,
உன் தகப்பனையும் தாயையும் உயர்வாக
மதிப்பாயாக'' என்றார். 20 அதற்கு அவன்,
''போதகரே, இவற்றையெல்லாம் என்
இளமைப் பருவம் முதற்கொண்டே நான்
கடைப்பிடித்து வந்திருக்கிறேன்'' என்றான்.
21 இயேசு அவனைக் கூர்ந்துநோக்கி,
அவனிடம் அன்புகொண்டு, ''உன்னிடம்
குறைபாடு ஒன்று இருக்கிறது; நீ போய்,
உனக்குள்ள யாவற்றையும் விற்று, ஏழை
களுக்குக் கொடுத்துவிடு; விண்ணுலகில்
உனக்குச் செல்வம் கிடைக்கும்; பிறகு வந்து
என்னைப் பின்பற்றி நட'' என்றார். 22 அவன்
மிகுந்த செல்வம் உடையவனாயிருந்தபடி
யால், இந்த வார்த்தையைக் கேட்டதும்
முகம்வாடி வருத்தத்தோடு போய்விட்டான்.
23 அப்பொழுது இயேசு சுற்றிலும் பார்த்
துத் தம் சீடரிடம், ''செல்வமுடையவர்கள்
கடவுளின் அரசினுள் செல்வது எவ்வளவு
அரிது பாருங்கள்'' என்றார். 24 அவர்
சொன்னதைச் சீடர்கள் கேட்டுத் திகைப்
படைந்தார்கள். இயேசு பின்னும் அவர்
களிடம், ''சிடப்பிள்ளைகளே, [செல்வத்தில்
நம்பிக்கை வைத்திருப்பவர்கள்] கடவுளின்
அரசினுள் செல்லுதல் மிகவும் அரிது.
25 செல்வமுடையவன் ஒருவன் கடவுளின்
அரசினுள் செல்வதைக்காட்டிலும் ஒட்டகம்
ஊசியின் காதில் நுழைவதே எளிது
எனலாம்'' என்று சொன்னார். 26 அவர்கள்
மிகவும் திகைப்புற்று, ''அப்படியானால்,
யாராலேதான் மீட்புப் பெற இயலும்?''
என்று தங்களிடையே பேசிக்கொண்டார்கள்.
27 இயேசு அவர்கள் திகைத்ததைக்
கண்டு, ''மனிதருக்கு இது இயலாது, கடவு
ளுக்கோ அப்படியன்று, கடவுளுக்கு எல்லாம்
இயலும்'' என்றார். 28 பேதுரு பேசத்
தொடங்கி, ''நாங்கள் எல்லாவற்றையும்
விட்டுவிட்டு உம்மைப் பின்பற்றி வந்தவர்
களாயிற்றே!'' என்று சொன்னார்.
29 அதற்கு இயேசு, ''என் பொருட்டும்
அருட்செய்தியின் பொருட்டும் வீட்டையா
வது சகோதரரையாவது சகோதரிகளை
யாவது தாயையாவது தகப்பனையாவது
பிள்ளைகளையாவது நிலங்களையாவது விட்டு
விட்டவன் எவனும், 30 இப்போதுள்ள
காலத்தில், நூறு மடங்காக வீடுகளையும்
சகோதரரையும் சகோதரிகளையும் தாய்மா
ரையும் பிள்ளைகளையும் நிலங்களையும், இவற்
றோடு துன்பங்களையும் அடைவான்; வரப்
போகும் யுகத்தில் என்றுமுள்ள மெய்வாழ்
வையும் அடைவான்; இதை உங்களுக்கு
உறுதியாகச் சொல்லுகிறேன். 31 ஆனாலும்,
முந்தினோராயிருக்கிறவர்களுள் பலர் பிந்தி
னோராயும், பிந்தினோராயிருக்கிறவர்கள் முந்
தினோராயும் இருப்பார்கள்'' என்றார்.

### இயேசு தம் மரணத்தையும் உயிர்த்தெழுதலையும் பற்றி மூன்றாம் முறை அறிவித்தல்

(மத். 20 : 17—19; லூக். 18 : 31—34)

32 பிறகு அவர்கள் எருசலேமுக்குப் பயணப்
பட்டுப் போகும் வழியில் இயேசு சீடருக்கு
முன் நடந்து போய்க்கொண்டிருந்தார்.
சீடருக்குத் திகைப்புண்டாயிற்று; பின்னே
சென்றவர்கள் அச்சத்தோடு போனார்கள்.
அப்பொழுது அவர் பன்னிருவரையும் மறு

**10:11, 12** மத். 5:32; லூக். 16:18; 1கொரி. 10, 11. **10:15** மத். 18:3. **10:19** யாத். 20:12-16; உபா. 5:16-20; 24:14. **10:31** மத் 20:16; லூக். 13:30. **10:32** யோ. 11:16.

படியும் ஒரு பக்கமாக அழைத்து, தமக்கு நேரிடப்போகும் காரியங்களை அவர்களுக்குச் சொல்லத் தொடங்கினார்.
33 ''நாம் இப்போது எருசலேமுக்குப் போகிறோம்; மனுமைந்தர் தலைமை ஆசாரியரிடமும் வேத அறிஞரிடமும் ஒப்புக்கொடுக்கப்படுவார். அவர்கள் அவருக்குக் கொலைத் தீர்ப்பளித்து, அவரை யூதரல்லாதாரிடம் ஒப்புக்கொடுப்பார்கள்.
34 அவர்கள் அவரை ஏளனம் செய்து, அவர்மேல் துப்பி, வாரினால் அடித்து, அவரைக் கொன்றுவிடுவார்கள்; மூன்று நாளுக்குப்பின் அவர் உயிரோடு எழுந்திருப்பார்'' என்றார்.

### யாக்கோபு, யோவான் என்பவர்களின் வேண்டுகோள்

(மத். 20 : 20–28)

35 செபெதேயுவின் மைந்தர்கள் யாக்கோபும் யோவானும் இயேசுவினிடம் வந்து, ''போதகரே, நாங்கள் கேட்கப்போகிறதை நீர் எங்களுக்குச் செய்தருள வேண்டுகிறோம்'' என்றார்கள்.
36 அவர் அவர்களிடம், ''நான் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும்?'' என்றுகேட்டார்.
37 அதற்குஅவர்கள், ''நீர் உமது மாட்சிபொருந்திய அரசில் வீற்றிருக்கும்போது எங்களுள் ஒருவன் உமது வலப்பக்கத்திலும் மற்றவன் இடப்பக்கத்திலும் அமர்ந்திருக்கும்படி அருள்புரிய வேண்டும்'' என்றார்கள்.
38 இயேசுவோ அவர்களிடம், ''நீங்கள் என்ன கேட்கிறீர்கள் என்பதே உங்களுக்குத் தெரியவில்லை. நான் குடிக்கும் பானத்தை* உங்களால் குடிக்க முடியுமா? நான் பெறும் முழுக்கை உங்களால் பெற முடியுமா?'' என்று கேட்டார்.
39 அதற்கு அவர்கள், ''எங்களால் முடியும்'' என்று சொன்னார்கள். இயேசு அவர்களைப் பார்த்து, ''ஆம், நான் குடிக்கும் பானத்தை நீங்கள் குடிக்கத்தான் போகிறீர்கள்; நான் பெறும் முழுக்கையும் பெறத்தான் போகிறீர்கள்.
40 ஆனால் என் வலப்பக்கத்திலும் இடப்பக்கத்திலும் அமர்ந்திருக்கும்படி அருள் புரிவதோ என் உரிமையன்று; அவ்விடங்கள் யாருக்கென்று குறிக்கப்பட்டிருக்கின்றனவோ அவர்களுக்கே அவை அருளப்படும்'' என்றார்.
41 இவற்றைக் கேட்டு மற்றப் பத்துப்பேரும் யாக்கோபின்மீதும் யோவான் மீதும் சினங்கொண்டனர்.
42 இயேசு அவர்களைத் தம்மிடம் அழைத்து, ''உலக மக்களை ஆளுகிறவர்களாய்க் கருதப்படுகிறவர்கள் அவர்கள்மீது இறுமாப்புடன் ஆட்சி செலுத்துவதுண்டு என்பதும், அவர்களுடைய மேலதிகாரிகள் அவர்கள்மீது சர்வாதிகாரம் செலுத்துவதுண்டு என்பதும் உங்களுக்குத் தெரியும்.
43 ஆனால், உங்களிடையே அப்படி இருத்தலாகாது. உங்களுள் எவன் பெரியவனாயிருக்க விரும்புகிறானோ அவன் உங்களுக்குப் பணியாளனாகவே இருக்கட்டும்.
44 உங்களுள் எவன் தலைவனாயிருக்க விரும்புகிறானோ அவன் எல்லாருக்கும் அடிமையாகவே இருக்கட்டும்.
45 ஏனெனில், மனுமைந்தரும் ஊழியம் கொள்ளும்படி வராமல் ஊழியம் செய்யவும், எல்லாரையும் மீட்டுக்கொள்ளும் பொருட்டுத் தம் உயிரையே மீட்புப்பொருளாகக் கொடுக்கவும் வந்தார்'' என்றார்.

### ஒரு குருடன் பார்வையடைதல்

(மத். 20 : 29–34; லூக். 18 : 35–43)

46 அவர்கள் எரிகோ நகரத்திற்கு வந்து சேர்ந்தார்கள். பிறகு இயேசுவும் அவருடைய சீடரும் ஒரு பெரிய கூட்டத்தோடு எரிகோவை விட்டுப் புறப்பட்டுப் போனார்கள். வழியோரத்தில் கண் தெரியாத பிச்சைக்காரன் ஒருவன் உட்கார்ந்திருந்தான்; அவன் திமேயுவினுடைய மகன் பர்திமேயு.
47 நசரேயனாகிய இயேசு போய்க்கொண்டிருக்கிறார் என்று அவன் கேள்விப்பட்டு, ''இயேசுவே, தாவீதின் மைந்தரே, என்மீது இரங்கியருளும்'' என்று கத்தினான்.
48 பலர் அவனைப் பேசாதிருக்கும்படி அதட்டினர். அவனோ, ''தாவீதின் மைந்தரே, என்மீது இரங்கியருளும்'' என்று இன்னும் உரத்துக் கத்திக்கொண்டிருந்தான்.
49 அப்பொழுது இயேசு நின்று, அவனைக் கூப்பிடச் சொன்னார். அவர்கள் அந்தக் குருடனைக் கூப்பிட்டு, ''தைரியமாயிரு, எழுந்திரு, உன்னைக் கூப்பிடுகிறார்'' என்று சொன்னார்கள்;
50 சொன்னதும், அவன் தன் மேலாடையைக் கீழே போட்டுவிட்டு, குதித்தெழுந்து, இயேசுவினிடம் வந்தான்.
51 இயேசு அவனை நோக்கி, ''நான் உனக்கு என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டார். அதற்கு அவன், †''ரபூனி, நான் பார்வை பெற வேண்டும்,'' என்றான்.
52 இயேசு அவனிடம், ''நீ போகலாம், உன் நம்பிக்கை உன்னைக் குணமாக்கிற்று'' என்றார். உடனே அவன் பார்வை பெற்று அவருக்குப் பின்னே அதே வழியில் சென்றான்.

### இயேசு எருசலேமுக்குள் அரச கோலத்துடன் செல்லுதல்

(மத். 21 : 1–11; லூக். 19 : 28-40; யோ. 12 : 12–19)

11 அவர்கள் ஒலிவமலைச் சரிவிலுள்ள பெத்பகே பெத்தானியா என்னும் ஊர்களுக்கருகில் சென்று எருசலேமை நெருங்கிய போது,
2 இயேசு தம் சீடருள் இருவரிடம், ''உங்களுக்கு எதிரே தெரிகிற அந்த ஊருக்குப் போங்கள்; அதனுள் போகும்போது, இதுகாறும் ஒரு மனிதனும் ஏறியிராத கழுதைக்குட்டி ஒன்று கட்டியிருப்பதைக்

*கிரேக்க பதத்தின் நேர்ப்பொருள், பாத்திரத்தை என்பது.

†அருமைப் போதகரே.

**10:38** லூக். 12:50. **10:42-45** மத். 20:24-28; லூக். 22:24-27.

காண்பீர்கள்; அதை அவிழ்த்துக்கொண்டு வாருங்கள். 3 யாராவது உங்களிடம், 'ஏன் இப்படிச் செய்கிறீர்கள்?' என்று கேட்டால், 'இது ஆண்டவருக்குத் தேவை; அவர் உடனே இதை இங்கே *திருப்பி அனுப்பிவிடுவார்' என்று சொல்லுங்கள்'' எனக் கூறி அவர்களை அனுப்பினார். 4 அவர்கள் அப்படியே போய், ஒரு வீட்டு வாயிலுக்கு வெளியே தெருவில் கட்டியிருந்த ஒரு கழுதைக்குட்டியைக் கண்டு அதை அவிழ்த்தார்கள். 5 அப்பொழுது அங்கே நின்றவர்களுள் சிலர் அவர்களிடம், ''என்ன செய்கிறீர்கள்? குட்டியை நீங்கள் எப்படி அவிழ்க்கலாம்?'' என்று கேட்டனர். 6 அதற்கு அவர்கள், இயேசு சொன்னபடியே பதில் சொன்னார்கள்; அந்த மனிதரும் அவர்களைப் போகவிட்டனர். 7 பிறகு அவர்கள் அந்தக் குட்டியை இயேசுவினிடம் ஓட்டிவந்து, அதன்மேல் தங்கள் மேலாடைகளைப் போட்டார்கள். அவர் அதன்மீது ஏறியமர்ந்து சென்றார். 8 பலர் தம் மேலாடைகளையும், வேறு பலர் வயல் வெளிகளில் வெட்டிய இலை தழைகளையும் வழியில் பரப்பினர். 9 முன்னே சென்றவர்களும் பின்னே வந்தவர்களும்,

†''ஓசன்னா!
ஆண்டவரின் திருப்பெயரால் வருகிறவர் ஆசி பெறுவாராக;
10 வருகிற ஆட்சி, நம் தந்தையாகிய தாவீதின் ஆட்சி ஆசி பெறுவதாக;
விண்ணகத்தில் ஓசன்னா!''

என்று ஆர்ப்பரித்தார்கள். 11 இயேசு எருசலேமை அடைந்தபின் திருக்கோவிலுக்குள் சென்று, எல்லாவற்றையும் சுற்றிக் கவனித்தார்; அதற்குள் மாலை நேரம் வந்துவிட்டதால், பன்னிருவருடன் பெத்தானியாவுக்குப் போனார்.

## அத்திமரம் சபிக்கப்படுதல்
(மத். 21 : 18, 19)

12 மறுநாள் அவர்கள் பெத்தானியாவிலிருந்து போனபோது அவருக்குப் பசித்தது. 13 அவர் இலைகளடர்ந்த ஓர் அத்திமரத்தைத் தொலைவில் கண்டு, அதில் ஏதாவது கிடைக்குமாவென்று பார்க்கப் போனார். ஆனால், அதனருகில் சென்றபோதோ, அதில் இலைகளைத் தவிர வேறொன்றையும் காணவில்லை; ஏனெனில், அது அத்திப்பழக் காலமன்று. 14 இயேசு அதைப் பார்த்து, ''இனி ஒருபோதும் ஒருவனும் உன் பழத்தைப் பறித்துத் தின்னாதிருப்பானாக'' என்றார். அவர் சொன்னது அவருடைய சீடர்களின் காதில் விழுந்தது.

## இயேசு திருக்கோவிலைப் புனிதமாக்குதல்
(மத். 21 : 12—17; லூக். 19 : 45—48; யோ. 2: 13—22)

15 பிறகு அவர்கள் எருசலேம் போய்ச் சேர்ந்தார்கள். இயேசு திருக்கோவிலுக்குள் சென்று, அங்கே வாணிகம் செய்துகொண்டிருந்தவர்களையும், வாங்கிக்கொண்டிருந்தவர்களையும் வெளியே துரத்தினார்; காசுக்கடைக்காரருடைய மேசைகளையும் புறு விற்பவர்களுடைய இருக்கைகளையும் கவிழ்த்துப் போட்டார். 16 திருக்கோவில் வழியாக வாணிகப் பொருள் எதையும் எடுத்துச் செல்ல அவர் ஒருவருக்கும் இடங்கொடுக்கவில்லை. 17 அவர் அவர்களிடம் ''என் வீடு எல்லா நாட்டினருக்கும் ஜெப வீடு எனப்படும் என்று வேதத்தில் எழுதியிருக்கிறதல்லவா? அப்படியிருக்க, நீங்கள் இதைக் கொள்ளைக்காரரின் குகையாக்கிவிட்டீர்களே!'' என்று சொன்னார். 18 தலைமை ஆசாரியரும் வேத அறிஞரும் அதைக் கேள்விப்பட்டு, அவரைக் கொன்றுவிட வழி தேடினார்கள். ஆனாலும், மக்களெல்லாரும் அவருடைய போதனையைக் குறித்து வியப்படைந்திருந்ததால், அவரைப்பற்றிய அச்சம் அவர்களுக்கு இருந்தது. 19 மாலையானதும் இயேசுவும் சீடரும் நகரத்தை விட்டுப் புறப்பட்டார்கள்.

## பட்டுப்போன அத்தி மரத்தின் படிப்பினை
(மத். 21:20—32)

20 மறுநாள்காலையில்அவர்கள் அவ்வழியே போய்க்கொண்டிருந்தபோது, அந்த அத்தி மரம் வேரோடு பட்டுப்போயிருந்ததைக் கண்டார்கள். 21 பேதுரு நடந்ததை நினைவுகூர்ந்து அவரிடம், ‡''ரபீ, இதோ, நீர் சபித்த அத்தி மரம் பட்டுப்போயிருக்கிறது'' என்றார். 22 அதைக் கேட்ட இயேசு அவர்களிடம், ''கடவுளிடம் நம்பிக்கையுள்ளவர்களாயிருங்கள். 23 உங்களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன் : இந்த மலையைப் பார்த்து, 'நீ பெயர்ந்து கடலில் போய் விழு' என்று எவன் சொல்லுகிறானோ அவன், தான் சொன்னது நிறைவேறும் என்று தன் உள்ளத்தில் ஐயம் எதுவுமின்றி நம்புவானானால் அவன் சொன்னது அப்படியே நடக்கும். 24 ஆகையால் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் : நீங்கள் மன்றாடிக் கேட்டுக்கொள்பவை எவையோ அவற்றையெல்லாம் பெற்றுவிட்

* திருப்பி என்று பொருள்படும் வார்த்தை ஒரு சில பிரதிகளில் இல்லை, அப்பிரதிகளின்படி, 'ஆண்டவருக்கு இது தேவை என்று சொல்லுங்கள். அவனும் உடனே அதை இவ்விடத்துக்கு அனுப்புவான்' என்று இவ்வாக்கியம் அமையும்.

† மத், 21:9 அடிக்குறிப்பைப்பார்க்க,

‡ போதகரே.

11:9 சங். 118:26. 11:17 ஏசா. 56:7; எரே. 7:11. 11:23 மத். 17:20, 21; லூக். 17:6; 1 கொரி. 13:2.

டோம் என்று நம்புங்கள்; அப்பொழுது
நீங்கள் பெறுவீர்கள். 25 நீங்கள் ஜெபம்
செய்துகொண்டு நிற்கும்போது, ஒருவனுக்கு
விரோதமாக உங்களுக்கிருக்கும் மனக்குறை
எதுவாயினும் அவனை மன்னித்துவிடுங்கள்;
அப்பொழுது விண்ணுலகிலிருக்கிற உங்கள்
தந்தையாரும் உங்கள் குற்றங்களை மன்னிப்
பார். [26 நீங்கள் மன்னிக்காவிட்டால்,
விண்ணுலகிலிருக்கிற உங்கள் தந்தையாரும்
உங்கள் குற்றங்களை மன்னிக்கமாட்டார்'']
என்று சொன்னார்.

### இயேசுவின் அதிகாரத்தைப்பற்றிய கேள்வி

(மத். 21:23–27; லூக். 20:1–8)

27 அவர்கள் மறுபடியும் எருசலேமுக்குப்
போனார்கள். இயேசு திருக்கோவிலில் உலா
விக்கொண்டிருக்கையில், தலைமை ஆசாரி
யரும் வேத அறிஞரும் மூப்பரும் அவரிடம்
வந்து, 28 ''நீர் எந்த அதிகாரத்தைக்கொண்டு
இவற்றைச் செய்கிறீர்? இவற்றைச் செய்ய
உமக்கு அதிகாரம் கொடுத்தவர் யார்?''
என்று கேட்டனர். 29 இயேசு அவர்களிடம்,
''நானும் உங்களை ஒரு கேள்வி கேட்கிறேன்,
நீங்கள் எனக்குப் பதில் சொல்லுங்கள்; அப்
பொழுது நானும் எந்த அதிகாரத்தைக்
கொண்டு இவற்றைச் செய்கிறேன் என்று
உங்களுக்குச் சொல்லுகிறேன். 30 திருமுழுக்
குக் கொடுக்கும் அதிகாரம் யோவானுக்குக்
கடவுளிடமிருந்து* வந்ததா, மனிதரிட
மிருந்து வந்ததா? இதற்குப் பதில் சொல்
லுங்கள்'' என்றார். 31 அவர்கள் தங்களி
டையே கலந்துபேசி, ''கடவுளிடமிருந்து
என்று சொல்வோமானால் 'பின் ஏன் நீங்கள்
அவரை நம்பவில்லை?' என்று கேட்பார்.
32 மனிதரிடமிருந்து என்று சொல்வோமா?''
எனப் பேசிக்கொண்டார்கள். ஆனால்,
யோவான் உண்மையிலேயே இறைவாக்
குரைக்கும் ஒரு பெரியார் என்று மக்களெல்
லாரும் கருதி வந்ததால், அவர்களுக்கு
அஞ்சி, 33 இயேசுவினிடம், ''எங்களுக்குத்
தெரியாது'' என்று சொல்லிவிட்டார்கள்.
அப்பொழுது இயேசு, ''நானும் எந்த
அதிகாரத்தைக் கொண்டு இவற்றைச் செய்
கிறேன் என்று உங்களுக்குச் சொல்லமாட்
டேன்'' என்றார்.

### திராட்சைத் தோட்டத்துக் குத்தகைக்காரர் உவமை

(மத். 21:33–46; லூக். 20:9–19)

12 பிறகு இயேசு உவமைகள் மூலமாக
அவர்களோடு பேசத்தொடங்கினார் :
''ஒருவன் ஒரு திராட்சைத் தோட்டம்
அமைத்துச் சுற்றிலும் வேலியடைத்து, அதில்
ஆலையை அமைத்துக் காவல் மாடமும் கட்
டினான்; பிறகு அதைக் குடியானவர் சிலரிடம்
குத்தகைக்கு விட்டுவிட்டு வெளியூருக்குப்
போனான். 2 பருவகாலம் வந்தபோது,
தோட்டத்தின் கனிகளில் தன் பாகத்தை
வாங்கி வரும்படி அவன் பணியாள் ஒருவனை
அந்தக் குடியானவர்களிடம் அனுப்பினான்.
3 அவர்களோ அவனைப் பிடித்து அடித்து,
வெறுங்கையோடு அனுப்பிவிட்டார்கள்.
4 பிறகு அவன் வேறொரு பணியாளை அவர்
களிடம் அனுப்பினான்; அவனையும் அவர்கள்
தலையில் அடித்து இழிவுபடுத்தினார்கள்.
5 பின்னும் ஒருவனை அனுப்பினான்; அவனை
அவர்கள் கொன்றுவிட்டார்கள். வேறு
பலரையும் அனுப்பினான்; அவர்களுள்
சிலரை அடித்தார்கள்; மற்றவர்களைக்
கொன்றுவிட்டார்கள். 6 அவனிடம்
இன்னும் ஒருவன் இருந்தான். அவனுடைய
அருமை மகன்தான் அவன்; 'என்னுடைய
மகனை அவர்கள் மதிப்பார்கள்' என்று சொல்
லிக்கொண்டு, கடைசியாக அவனை அவர்
களிடம் அனுப்பினான். 7 ஆனால் அந்தக்
குடியானவர்கள், 'இவன்தான் சொத்துக்கு
உரிமையாளன்; வாருங்கள், இவனைக்
கொன்றுவிடுவோம், அப்பொழுது இவனுக்
குச் சேரவேண்டிய சொத்து நம்முடைய
தாகும்' என்று தங்களிடையே பேசிக்
கொண்டு, 8 அவனைப் பிடித்துக் கொன்று,
திராட்சைத் தோட்டத்துக்கு வெளியே
எறிந்துவிட்டார்கள். 9 இப்பொழுது திராட்
சைத் தோட்டத்துச் சொந்தக்காரன் என்ன
செய்வான்? அவன் வந்து அந்தக் குடியான
வர்களை ஒழித்துவிட்டு, திராட்சைத் தோட்
டத்தையும் வேறு ஆள்களிடம் ஒப்படைப்
பான்.

10 'வீடு கட்டுகிறவர்கள் உதவாதென்று
தள்ளிவிட்ட கல்லே
மூலைக்குத் தலைக்கல்லாயிற்று,
11 அது ஆண்டவராலே நடந்தது,
நம் கண்ணுக்கு இது வியப்பாயிருக்கிறது'

என்கிற வேத வாக்கியத்தை நீங்கள் படித்த
தில்லையா?'' என்றார். 12 இந்த உவமை
யைத் தங்களைக் குறித்தே சொன்னார் என்று
அவர்கள் அறிந்து, அவரைக் கைது செய்ய
வழி தேடினார்கள்; ஆனால் மக்களுக்கு அஞ்சி
அவரிடமிருந்து போய்விட்டார்கள்.

### வரி செலுத்துவதைப்பற்றிய கேள்வி

(மத். 22:15–22; லூக். 20:20–26)

13 இயேசுவின் பேச்சில் அவரைச் சிக்க
வைக்கும்படி பரிசேயர், ஏரோதியர் என்பவர்
களுள் சிலரை அவரிடம் அவர்கள் அனுப்பி
னார்கள். 14 அவர்கள் வந்து, ''போதகரே,
நீர் உண்மையுள்ளவர், எவருக்கும் நீர் அஞ்
சுவதில்லை; ஏனெனில், நீர் யாருக்கும் தனிச்
சலுகை காட்டாமல், தெய்வமார்க்கத்தை
உண்மையாகப் போதிக்கிறீர்; இவையெல்
லாம் எங்களுக்குத் தெரியும்'' என்று

* மூலத்திலிருக்கும் பதத்தின் நேர்ப்பொருள், 'விண்ணுலகிலிருந்து' என்பது.

**11:25,26 மத்.6:14, 15 12:1 ஏசா. 5:1, 2. 12:10, 11 சங். 118:22, 23:**

சொல்லி, ''ரோமப் பேரரசனுக்கு வரி
செலுத்துவது முறையா இல்லையா? நாம்
கொடுக்கலாமா, கொடுக்கக்கூடாதா?''
என்று கேட்டார்கள். 15 அவர் அவர்களு
டைய வஞ்சனையை அறிந்துகொண்டு அவர்
களைப் பார்த்து, ''நீங்கள் ஏன் என்னைப்
பரிசோதிக்கிறீர்கள்? ஒரு தினாரிய நாணயத்
தைக் கொண்டுவாருங்கள், நான் பார்க்க
வேண்டும்'' என்றார். 16 அவர்கள் அதைக்
கொண்டுவந்தார்கள். அப்பொழுது அவர்,
''இந்த உருவமும் பெயரும் யாருடை
யவை?'' என்று கேட்டார். அவர்கள்,
''ரோமப் பேரரசனுடையவை'' என்றார்
கள். 17 இயேசு அவர்களிடம், ''பேரரசனுக்
குரியதைப் பேரரசனுக்கும் கடவுளுக்குரிய
தைக் கடவுளுக்கும் செலுத்துங்கள்''
என்றார். அவர்கள் அவரைப் பார்த்து வியப்
படைந்தார்கள்.

### உயிர்த்தெழுதலைப்பற்றிய கேள்வி

*(மத். 22:23—33; லூக். 20:27—40)*

18 ''உயிர்த்தெழுதல் என்பது இல்லை''
என்று சாதிக்கும் சதுசேயருள் சிலர் அவரி
டம் வந்து, 19 ''போதகரே, ஒருவனுடைய
சகோதரன் பிள்ளையில்லாதவனாய்த் தன்
மனைவியைத் தனியே விட்டுவிட்டு இறந்து
போவானானால், அவன் மனைவியை அவனு
டைய சகோதரன் மணம் செய்துகொண்டு,
தன் சகோதரனுக்கு மகப்பேறு உண்டாக்க
வேண்டுமென்று மோசே எங்களுக்கு எழுதித்
தந்திருக்கிறாரே. 20 ஓர் ஊரில் சகோதரர்
எழுவர் இருந்தனர்; அவர்களுள் மூத்தவன்
ஒரு பெண்ணை மணம் செய்து, மகப்பேறு
இல்லாமலே இறந்துபோனான். 21 இரண்
டாம் சகோதரனும் அவளை மணம் செய்து,
மகப்பேறு இல்லாமலே இறந்துபோனான்.
22 மூன்றாம் சகோதரனும் அப்படியே
இறந்துபோனான். எழுவருக்கும் மகப்பேறு
இல்லாமலே போயிற்று. எல்லாருக்கும்
கடைசியில் அந்தப் பெண்ணும் இறந்தாள்.
23 உயிர்த்தெழும் நாளில், அவர்கள் எழுந்
திருக்கும்போது, அவர்களுள் யாருக்கு
அவள் மனைவியாயிருப்பாள்? எழுவரும்
அவளை முறையே மனைவியாகக் கொண்டிருந்
தனரே'' என்று கேட்டார்கள். 24 இயேசு
அவர்களிடம், ''நீங்கள் தவறான வழியில்
செல்கிறீர்கள்; வேதத்தையும் கடவுளின்
வல்லமையையும் நீங்கள் அறியாததுதானே
இதற்குக் காரணம்? 25 இறந்தோரிட
மிருந்து உயிர்த்தெழுந்தபின் எவரும் பெண்
கொள்வதுமில்லை, கொடுப்பதுமில்லை. அவர்
கள் விண்ணுலகிலுள்ள தெய்வதூதர்களைப்
போல இருப்பார்கள். 26 இறந்தோர்
உயிரோடெழுப்பப்படுவதுகுறித்துஎவ்வாறு
கடவுள், மோசேயினிடம், 'நான் ஆபிரகா
மின் கடவுள், ஈசாக்கின் கடவுள், யாக்
கோபின் கடவுள்' என்று கூறியதை
மோசேயின் நூலில் முட்செடியைப்பற்றிய
பகுதியில் நீங்கள் படித்ததில்லையா? 27 அவர்
இறந்தோரின் கடவுளல்ல, உயிருள்ளோரின்
கடவுளே. நீங்கள் செல்வது முற்றிலும்
தவறானவழி'' என்று சொன்னார்.

### முதன்மையான திருக்கட்டளை

*(மத். 22:34—40; லூக். 10:25—28)*

28 அவர்கள் தர்க்கித்ததை வேத அறிஞன்
ஒருவன் கேட்டு, அவர்களுக்கு இயேசு தக்க
விடையளித்ததைக் கண்டு, அவரிடம் வந்து,
''திருக்கட்டளைகள் எல்லாவற்றுள்ளும்
முதன்மையானது எது?'' என்று கேட்டான்.
29 இயேசு அவனிடம், ''இஸ்ரவேலே கேள்:
நம்முடைய கடவுளாகிய ஆண்டவர்தாம்
ஆண்டவர். 30 'உன் கடவுளாகிய ஆண்ட
வரிடம் உன் முழு உள்ளத்தோடும் உன்
முழு ஆன்மாவோடும் உன் முழு மனத்
தோடும் உன் முழு ஆற்றலோடும் அன்பு
கொள்வாயாக' என்பதே முதன்மையான
திருக்கட்டளை. 31 'உன்னிடம் நீ அன்பு
கொள்வதுபோல அடுத்தவனிடமும் அன்பு
கொள்வாயாக' என்பது இரண்டாம் திருக்
கட்டளை. இவற்றைவிட முக்கியமான திருக்
கட்டளை வேறொன்றும் இல்லை'' என்றார்.
32 அதைக் கேட்ட வேத அறிஞன், ''இது
சரிதான் போதகரே, 'கடவுள் ஒருவரே,
அவரைத் தவிர வேறொரு கடவுள் இல்லை'
என்று நீர் சொன்னது உண்மையே.
33 அவரிடம் முழு உள்ளத்தோடும் முழு
மனத்தோடும் முழு ஆற்றலோடும் அன்பு
கொள்வதும், தன்னிடம் அன்புகொள்வது
போல அடுத்தவனிடமும் அன்புகொள்
வதுமே எரிக்கப்படும் எல்லாப் பலிகளையும்
மற்றப் பலிகளையும்விட மேல்'' என்றான்.
34 அவன் விவேகமாக விடையளித்ததை
இயேசு கண்டு அவனை நோக்கி, ''நீ கடவு
ளின் அரசிற்குத் தொலைவிலில்லை'' என்றார்.
அதன்பின் ஒருவரும் அவரிடம் ஒரு கேள்வி
யும் கேட்கத் துணியவில்லை.

### மேசியாவைப்பற்றிய கேள்வி

*(மத். 22 : 41—46; லூக். 20 : 41—44)*

35 பிறகு இயேசு திருக்கோவிலில் போதித்
துக்கொண்டிருந்தபோது, ''மேசியா தாவீ
தின் மைந்தரென்று வேத அறிஞர்கள்
சொல்லுகிறார்களே, அது எப்படிப் பொருந்
தும்? 36 தாவீதே தூய ஆவியினால் ஆட்
கொள்ளப்பட்டு,

> ('கடவுளாகிய) ஆண்டவர் என் ஆண்ட
> வரிடம் :
> நான் உம்முடைய பகைவரை உமது
> காலடியின்கீழ்ப் போடுகிறேன்;
> அதுவரை நீர் என் வலப்பக்கத்தில்
> அமர்ந்திரும் என்றார்'

**12:19** உபா. 25:5. **12:26** யாத். 3:6. **12:29,30** உபா. 6:4, 5. **12:31** இலே. 19:18. **12:32** உபா. 4:35. **12:33** ஓசே. 6:6. **12:36** சங். 110:1; திருத்தூது. 2.34, 35; எபி. 1:13.

எனக் கூறியிருக்கிறாரே. 37 தாவீதே
அவரை ஆண்டவரென்று அழைத்திருக்கிறா
ரென்றால் அவர் தாவீதுக்கு மைந்தராயிருப்
பது எப்படி?'' என்று கேட்டார். திரளான
மக்கள் அவருடைய போதனையை ஆவ
லுடன் கேட்டுவந்தார்கள்.

### வேத அறிஞரின் போலி பக்தியை வெளிப்படுத்துதல்

*(மத். 23 : 1–36; லூக். 20 : 45–47)*

38 இயேசு அவர்களுக்குப் போதிக்கையில்,
''வேத அறிஞரைக் குறித்து எச்சரிக்கையா
யிருங்கள். அவர்கள் நீண்ட அங்கிகளை
அணிந்துகொண்டு நடந்து திரியவும், சந்தை
வெளிகளில் வணக்கம், 39 தொழுகைக்
கூடங்களில் முதன்மையான இருக்கைகள்,
விருந்துகளில் முதன்மையான இடங்கள்
இவற்றைப் பெறவும் விரும்புகிறார்கள்.
40 கைம்பெண்களின் சொத்துகளைக் கைப்
பற்றி விழுங்கிவிட்டு அதேசமயத்தில் வெளிப்
பார்வைக்குக் கடவுளிடம் நீண்டநேரம்
வேண்டுதலும் செய்கிறார்கள்; அவர்கள்
கடுமையான தண்டனை பெறுவார்கள்''
என்று சொன்னார்.

### ஏழைக் கைம்பெண்ணின் காணிக்கை

*(லூக். 21 : 1–4)*

41 பிறகு இயேசு காணிக்கைப் பெட்டிக்கு
எதிரே உட்கார்ந்து, காணிக்கைப் பெட்டி
யில் மக்கள் எவ்வகையில் பணம் போடு
கிறார்கள் என்று பார்த்துக்கொண்டிருந்தார்.
மிகுந்த செல்வமுடையவர் பலர் மிகுதி
யாகப் போட்டனர். 42 ஓர் ஏழைக் கைம்
பெண்ணும் அங்கே வந்து, ஒரு *கொற்ற
ராந்தி நாணயத்துக்குச் சமமான இரண்டு
காசைப் போட்டாள். 43 அப்பொழுது
அவர் தம் சீடரை அழைத்து அவர்களிடம்,
''ஓர் உண்மையை உங்களுக்குச் சொல்லு
கிறேன் : காணிக்கைப் பெட்டியில் பணம்
போட்டவர்கள் எல்லாரையும்விட இந்த
ஏழைக் கைம்பெண்ணே மிகுதியாகப் போட்
டிருக்கிறாள். 44 எப்படியெனில், அவர்க
ளெல்லாரும் தங்கள் செல்வப்பெருக்கி
லிருந்து எடுத்துப் போட்டனர். ஆனால்,
இவளோ தன் வறுமையிலிருந்து, தன்னிட
மிருந்த யாவற்றையும், தன் பிழைப்புக்
கென்று வைத்திருந்த எல்லாவற்றையுமே
எடுத்துப் போட்டுவிட்டாள்'' என்றார்.

### எருசலேம் திருக்கோவிலின் அழிவைப் பற்றிய முன்னறிவிப்பு

*(மத். 24:1,2; லூக். 21:5,6)*

13 இயேசு திருக்கோவிலை விட்டுப் புறப்
பட்டுப் போகையில் அவருடைய
சீடருள் ஒருவர் அவரைப் பார்த்து,
''போதகரே, இதோ பாரும், எத்தகைய
கற்கள்! எத்தகைய கட்டடங்கள்!'' என்று
சொல்ல, 2 இயேசு அவரிடம், ''இந்தப்
பெரிய கட்டடங்களைப் பார்க்கிறாயே; இவ்
விடத்தில் கல்லின்மேல் கல் இராதபடி
எல்லாம் இடிக்கப்பட்டுப் போகும்'' என்றார்.

### துன்பங்களின் தொடக்கம்

*(மத். 24:3–14; லூக். 21:7–19)*

3 பிறகு இயேசு திருக்கோவிலுக்கு எதிர்ப்
பக்கத்தில் ஒலிவ மலையிலே உட்கார்ந்திருக்
கையில் பேதுரு, யாக்கோபு, யோவான்,
அந்திரேயா என்பவர்கள் அவரிடம் தனித்து
வந்து, 4 ''இவை எப்போது நடக்கும்? இவை
யெல்லாம் நிறைவேறித் தீரும் காலத்திற்
கான அறிகுறி என்ன? எங்களுக்குச் சொல்
லும்'' என்றார்கள். 5 இயேசு அவர்களுக்கு
இவ்வாறு போதிக்கலானார்: ''ஒருவனும் உங்
களை ஏமாற்றிவிடாதபடி பார்த்துக்கொள்
ளுங்கள். 6 என் பெயரை வைத்துக்
கொண்டு, 'நானே அவர்' என்று சொல்
லும் பலர் தோன்றி, பலரை ஏமாற்றுவர்.
7 போர்முழக்கத்தையும் போர்ச் செய்தி
களையும் கேட்கும்போது கலங்காதீர்கள்;
இவை நடக்கத்தான் வேண்டும்; ஆனால்
முடிவு அப்போதுங்கூட வந்துவிடாது.
8 நாட்டை எதிர்த்து நாடும், அரசை
எதிர்த்து அரசும் எழும்; இங்குமங்கும் நில
நடுக்கங்கள் ஏற்படும், பஞ்சமும் உண்டாகும்;
இவை துன்பங்களின் தொடக்கமே. 9 ஆனால்
நீங்கள் விழிப்பாயிருங்கள். உங்களை வழக்கு
மன்றங்களுக்கு ஒப்புக்கொடுப்பார்கள்.
தொழுகைக்கூடங்களில் நீங்கள் அடிக்கப்
படுவீர்கள். என் பொருட்டு ஆளுநர் முன்
னும், அரசர் முன்னும் நிறுத்தப்படுவீர்கள்.
அவர்கள்முன் என்னைப்பற்றிச் சாட்சி கூறு
வீர்கள். 10 எல்லா நாட்டினருக்கும் முத
லில் அருட்செய்தி அறிவிக்கப்பட்டாக
வேண்டும். 11 அவர்கள் உங்களைக் கொண்டு
போய் விசாரணைக்கு ஒப்புக்கொடுக்கும்
போது, என்ன சொல்வதென்று நீங்கள்
முன்னதாகவே கவலைப்படவேண்டாம். அந்த
நேரத்தில் உங்களுக்கு எது அருளப்படுமோ
அதையே சொல்லுங்கள். ஏனெனில், பேசு
பவர்கள் நீங்களல்ல, தூய ஆவியானவரே.
12 சகோதரன் சகோதரனையும், தகப்பன்
பிள்ளையையும் மரணத் தீர்ப்புக்கு ஒப்புக்
கொடுப்பார்கள்; பெற்றோரை எதிர்த்துப்
பிள்ளைகள் எழுந்து அவர்களைக் கொன்று
விடும்படி செய்வார்கள். 13 என் பெயரின்
பொருட்டு நீங்கள் எல்லாருடைய பகைக்கும்
ஆளாவீர்கள். முடிவு மட்டும் நிலை
நிற்பவனே மீட்புப் பெறுவான்.

* ஒரு கொற்றராந்தி நாணயம் 1/64 திநாரியம். ஒரு திநாரியம் விவசாயத் தொழிலாளியின் ஒருநாள் கூலிக்குச் சமம்.

13:9—11 மத். 10:17—20; லூக். 12:11, 12. 13:13 மத். 10:22.

## பேரழிவு

(மத். 24:15–28; லூக். 21:20–24)

14 "'மேலும் பாழாக்கும் அருவருப்பான
பொருள்'* நிற்கக்கூடாத இடத்தில் நிற்க
நீங்கள் காணும்போது—படிப்பவன் இதைப்
புரிந்துகொள்ளட்டும் — யூதேயாவில் உள்ள
வர்கள் மலைகளுக்கு ஓடிப்போகட்டும்.
15 வீட்டின் மேல்தளத்தில் இருப்பவன் கீழே
இறங்கியபின் தன் வீட்டிலிருந்து எதையா
வது எடுத்துக்கொள்வதற்காக உள்ளே
செல்ல வேண்டாம். 16 வயலில் இருப்ப
வன் தன் மேலாடையை எடுப்பதற்காகத்
திரும்பிச் செல்ல வேண்டாம். 17 அந்நாள்
களில் கருத்தரித்திருப்பவர்கள், பால்கொடுக்
கிறவர்கள் ஆகியோருடைய நிலை, ஐயோ!
பரிதாபம்! 18 இவை மாரிக்காலத்தில்
நேராதிருக்கவேண்டுமென்று கடவுளிடம்
வேண்டிக்கொள்ளுங்கள். 19 ஏனெனில்,
அந்த நாள்கள் துன்ப நாள்களாயிருக்கும்.
அப்படிப்பட்ட துன்பம் கடவுள் உலகத்
தைப் படைத்தது முதல் இதுவரையிலும்
இருந்ததில்லை, இனிமேல் இருக்கப்போவது
மில்லை. 20 ஆண்டவர் அந்த நாள்களைக்
குறைக்காவிடில் எந்த மனிதனும் பிழைத்
திருக்க மாட்டான்; ஆனால் அவர், தாம்
தேர்ந்துகொண்டவர்களின் பொருட்டு
அந்த நாள்களைக் குறைத்திருக்கிறார். 21 அப்
பொழுது எவனாவது ஒருவன் உங்களி
டம், 'இதோ, மேசியா இங்கே இருக்கிறார்,
அதோ அங்கே இருக்கிறார்' என்று சொல்ல
வானானால் அவனை நம்பாதீர்கள். 22 ஏனெ
னில், போலியான மேசியாக்களும் பொய்
யாக இறைவாக்குரைப்போரும் தோன்றி,
கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களை
ஏமாற்றக்கூடுமானால் அதற்காக அரிய
செயல்களையும் அற்புதங்களையும் செய்வார்
கள். 23 நீங்கள் விழிப்பாயிருங்கள்; உங்
களுக்கு எல்லாவற்றையும் முன்னதாகவே
சொல்லிவிட்டேன்.

## மனுமைந்தரின் வருகை

(மத். 24:29–31; லூக். 21:25–28)

24 "அந்நாள்களில், அந்தத் துன்பத்திற்
குப் பின்பு கதிரவன் இருண்டுவிடும், நிலா
வும் ஒளிவீசாது. 25 விண்மீன்கள் வானத்
தினின்று விழுந்துகொண்டிருக்கும், வானத்
தின் ஆற்றல்களும் அசைக்கப்படும். 26 அக்
காலத்தில் மனுமைந்தர் மிகுந்த வல்லமை
யோடும் மாட்சிமையோடும் மேகங்கள்மீது
வருவதைக் காண்பார்கள். 27 அப்பொழுது
அவர் தம்முடைய தூதரை அனுப்பி, மண்
ணுலகின் கடைமுனை முதற்கொண்டு வானத்
தின் கடைமுனைவரைக்கும் நான்கு திசை
களிலுமிருந்து தாம் தேர்ந்துகொண்டவர்
களைக் கூட்டிச் சேர்ப்பார்.

## அத்திமரத்தின் படிப்பினை

(மத். 24:32–35; லூக். 21:29–33)

28 "அத்திமரத்திலிருந்து இந்தப் படிப்
பினையைக் கற்றுக்கொள்ளுங்கள்; அது இளங்
கிளை விட்டுத் துளிர்க்கும்போது கோடைக்
காலம் நெருங்கிவிட்டதென்று நீங்கள்
அறிந்துகொள்ளுகிறீர்கள். 29 அவ்வாறே
இவை நிகழ்வதை நீங்கள் காணும்போது
அவர் வாயிலண்டை நெருங்கி வந்திருக்
கிறார் என்று அறிந்துகொள்ளுங்கள்.
30 இவையெல்லாம் நிகழும்வரையிலும் இத்
தலைமுறை ஒழிந்துபோகாதென்று உங்க
ளுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன்.
31 விண்ணும் மண்ணும் ஒழிந்துபோகும்,
என் வார்த்தைகளோ ஒருபோதும்
ஒழிவதில்லை.

## விழிப்பாயிருங்கள்

(மத். 24:36–44)

32 "அந்த நாளையும் அந்த நேரத்தை
யும்பற்றி விண்ணகத் தந்தையாரைத் தவிர
வேறெவரும் அறியார்; விண்ணுலகிலுள்ள
தூதரும் அறியார், திருமைந்தரும் அறி
யார். நீங்கள் எச்சரிக்கையாயிருங்கள், விழிப்
பாயிருங்கள்; 33 ஏனெனில், அந்த நேரம்
எப்போது வருமென்பது உங்களுக்குத் தெரி
யாது. 34 இது எதைப்போல இருக்கிற
தென்றால், தன் வீட்டை விட்டுப் புறப்
பட்டு வெளிநாட்டுக்குச் செல்லும் ஒரு மனி
தன், தன் ஊழியருக்கு அதிகாரங்கொடுத்து
ஒவ்வொருவனுக்கும் அவனவன் வேலையை
யும் குறிப்பிட்டு, காவற்காரனை விழிப்பா
யிருக்கும்படி கட்டளையிடுவதுபோல இருக்
கிறது. 35 ஆகையால் விழிப்பாயிருங்கள்;
வீட்டுத் தலைவர் எப்போது வருவாரென்பது
உங்களுக்குத் தெரியாது. அது மாலையோ,
நள்ளிரவோ, சேவல் கூவும் நேரமோ,
காலையோ என்பது உங்களுக்குத் தெரியாது.
36 அவர் திடீரென்று வந்து, உங்களைத்
தூங்குகிறவர்களாய் நேரில் காணாதபடி
பார்த்துக்கொள்ளுங்கள். 37 உங்களுக்கு
நான் சொல்லுகிறதை எல்லாருக்குமே
சொல்லுகிறேன், விழிப்பாயிருங்கள்''
என்றார்.

## இயேசுவைக் கொன்றுவிடச் சதித்திட்டம்

(மத். 26:1-5; லூக். 22:1,2;
யோ. 11:45–53)

**14** †பஸ்காப் பண்டிகையும் புளிப்பில்லா
அப்பப்பண்டிகையும் வர இன்னும்

* பொருளடக்க அட்டவணை பார்க்க.
† மத். 26:2 அடிக்குறிப்பைப் பார்க்க.
**13:14** தானி. 9:27; 11:31; 12:11. **13:15, 16** லூக். 17:31. **13:19** தானி. 12:1: லூக். 21:23, 24; திருவெளி. 7:14. **13:24, 25** ஏசா. 13:10; 34:14; எசே. 32:7; யோவேல் 2:10, 31; 3:15; திருவெளி. 6:12, 13. **13:26** தானி. 7:13, 14; திருவெளி. 1:7. **13:32** மத். 24:36. **13:34** லூக். 12:26—38.

இரண்டு நாள் இருந்தது. தலைமை ஆசாரி
யர்களும் வேத அறிஞர்களும் இயேசுவைச்
சூழ்ச்சியாய்ப் பிடித்துக் கொன்றுவிட வழி
தேடிக்கொண்டிருந்தார்கள். 2 எனவே
அவர்கள், ''பண்டிகைக் காலத்தில் வேண்
டாம், மக்களிடையே கலகம் உண்டாகி
விடும்'' என்று பேசிக்கொண்டார்கள்.

### பெத்தானியாவில் இயேசுவுக்கு நறுமணத் தைலம் பூசுதல்

(மத். 26:6-13; யோ. 12:1-8)

3 பெத்தானியாவில் தொழுநோயாளி
என்று கூறப்பட்ட சீமோன் வீட்டில் இயேசு
இருந்தார். அவர் சாப்பிட அமர்ந்திருக்கை
யில், ஒரு பெண் நளதம் என்னும் பரிமளத்
தைலமுள்ள சலவைக்கல் குப்பி ஒன்றை
எடுத்துக்கொண்டு அவரிடம் வந்தாள்; அது
கலப்பற்றதாயும் விலையுயர்ந்ததாயும் இருந்
தது. அவள் அந்தக் குப்பியை உடைத்துத்
திறந்து, தைலத்தை அவர் தலைமீது ஊற்றி
ஞள். 4 அங்கிருந்த சிலர் சினமடைந்து,
''இந்தத் தைலத்தை ஏன் இப்படி வீணுக்க
வேண்டும்? 5 முந்நூறு * திநாரியத்துக்கும்
மேலாக இதை விற்று, அந்தப் பணத்தை
ஏழைகளுக்குக் கொடுத்திருக்கலாமே''என்று
தங்களிடையே பேசிக்கொண்டு அவள்மீது
சீற்றங்கொண்டனர். 6 ஆனால் இயேசு அவர்
களிடம், ''இவளை அப்படியே விட்டுவிடுங்
கள், இவளுக்கு ஏன் தொல்லை கொடுக்கிறீர்
கள்? இவள் எனக்குச் செய்தது ஒரு நல்ல
செய்கை. 7 ஏனெனில், ஏழைகள் உங்க
ளோடு என்றும் இருக்கிறார்கள்; நீங்கள்
விரும்பும்போதெல்லாம் அவர்களுக்கு
நன்மை செய்யலாம். ஆனால் நானே உங்க
ளோடு என்றும் இருக்கப்போவதில்லை.
8 இவள் தன்னால் இயன்றதைச் செய்தாள்;
என் அடக்கத்திற்கு ஆயத்தமாக என் உட
லுக்குத் தைலம் பூச முந்திக்கொண்டாள்.
9 உங்களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன்:
உலக முழுவதிலும் எங்கெங்கே அருட்செய்தி
அறிவிக்கப்படுமோ அங்கெல்லாம் இவள்
செய்ததும் இவளை நினைவுகூர்வதற்கு ஏது
வாகக் கூறப்படும்'' என்றார்.

### இயேசுவைக் காட்டிக்கொடுக்க யூதாஸ் உடன்படுதல்

(மத்.26:14–16; லூக். 22:3–6)

10 பன்னிருவருள் ஒருவனான யூதா இஸ்
காரியோத்து என்பவன் அவரை தலைமை
ஆசாரியாருக்குக் காட்டிக்கொடுக்கும்
நோக்கத்துடன் அவர்களிடம் போனான்.
11 அவர்கள் அதை அறிந்து மகிழ்ச்சி
யடைந்து,அவனுக்குப் பணம் கொடுப்பதாக
வாக்களித்தார்கள்;அவனும் சமயம் பார்த்து
அவரைக் காட்டிக்கொடுப்பதற்காக வழி
தேடிக்கொண்டிருந்தான்.

### சீடரோடு இயேசு பஸ்கா விருந்தை உண்ணுதல்

(மத். 26:17–25; லூக். 22:7–14, 21–23; யோ. 13:21–30)

12 புளிப்பில்லாத அப்பப்பண்டிகையின்
முதல் நாளும் வந்தது. பஸ்காவுக்குரிய ஆடு
பலியிடப்படும் அந்த நாளில், இயேசுவின்
சீடர்கள் அவரிடம், ''நீர் பஸ்கா விருந்தை
உண்ண நாங்கள் எங்கே போய் ஆயத்தம்
செய்ய வேண்டுமென்று விரும்புகிறீர்?''
எனக் கேட்டார்கள். 13 அவர் தம்முடைய
சீடருள் இருவரிடம், ''நீங்கள் நகரத்திற்
குள் செல்லுங்கள்; ஒருவன் தண்ணீர்க்
குடம் சுமந்துகொண்டு உங்களுக்கு எதிரே
வருவான். 14 அவனுக்குப்பின்னே சென்று,
அவன் எந்த வீட்டிற்குள் செல்கிறானே அந்த
வீட்டின் தலைவனிடம், 'என்னுடைய சீட
ரோடு நான் பஸ்கா விருந்தை உண்பதற்
கான தனி அறை எங்கே இருக்கிறது என்று
போதகர் கேட்கச் சொன்னார்' என்று சொல்
லுங்கள். 15 அவன் மேல்மாடியில் பெரிய
அறை ஒன்றை உங்களுக்குக் காட்டுவான்.
அது கம்பளம் முதலியன விரிக்கப்பெற்று
ஆயத்தமாயிருக்கும்; அங்கே நமக்காக
ஆயத்தம் செய்யுங்கள்'' எனக்கூறி அவர்
களை அனுப்பினார். 16 அந்தச் சீடர்களும்
அவ்வாறே புறப்பட்டு நகரத்துக்குள் சென்று
அவர் தங்களுக்குச் சொன்னபடியே யாவும்
இருக்கக் கண்டு, பஸ்காவை ஆயத்தம்
செய்தார்கள்.

17 மாலைவேளை வந்ததும், அவர் பன்
னிருவரோடும் வந்தார். 18 அவர்கள் பந்தியி
லமர்ந்து சாப்பிடும்போது இயேசு, ''திட்ட
மாக உங்களுக்குச் சொல்லுகிறேன்; உங்
களுள் ஒருவன் என்னைக் காட்டிக்கொடுக்கப்
போகிறான்; அவன் என்னோடு சாப்பிட்டுக்
கொண்டுமிருக்கிறான்'' என்றார். 19 அவர்
கள் அதைக்கேட்டு வருத்தமுற்று, ஒவ்வொரு
வனாக அவரிடம், ''நானல்லவே? நானல்
லவே?'' என்று கேட்டார்கள். 20 அதற்கு
அவர், ''அவன் பன்னிருவருள் ஒருவன்,
பாத்திரத்தில் என்னோடு கையிட்டுச் சாப்
பிடுகிறவன். 21 மனுமைந்தர் தமக்கென்று
வேதத்தில் குறித்திருக்கிற பாதையில் செல்
லுகிறார். ஆனாலும், யாரால் மனுமைந்தர்
காட்டிக்கொடுக்கப்படுகிறாரோ அந்த மனி
தனுக்குக் கேடுவரும். அந்த மனிதன் பிற
வாதிருந்தானானால் அவனுக்கு நலம்''
என்றார்

* மத். 20:2 அடிக்குறிப்பைப் பார்க்க.
**14:3** லூக். 7:37, 38. **14:7** உபா. 15:11. **14:18** சங். 41:9; யோ. 13:21.

### திருவிருந்தை ஏற்படுத்துதல்

(மத். 26:26—30; லூக்.22:15—20;
1 கொரி. 11:23—25)

22 அவர்கள் சாப்பிடுகையில், இயேசு
அப்பத்தை எடுத்து, துதி செலுத்தி, அதைப்
பிட்டு, அவர்களுக்குக் கொடுத்து, ''இதை
வாங்கிக்கொள்ளுங்கள், இது என் உடல்''
என்ருர். 23 பிறகு பாத்திரத்தை எடுத்து,
கடவுளுக்கு நன்றி செலுத்தி, அவர்களுக்குக்
கொடுத்தார். அவர்களெல்லாரும் அதி
லுள்ளதை அருந்தினுர்கள். 24 அப்பொழுது
அவர், ''இது [புதிய] உடன்படிக்கைக்
குரிய என் இரத்தம்; இது எல்லாருக்காக
வும் சிந்தப்படுகிறது. 25 இதுமுதல் கட
வுளின் அரசில் திராட்சைப் பழரசத்தைப்
புதிதாக அருந்தும் நாள்வரையிலும், நான்
இதை அருந்துவதேயில்லை என்று உறுதி
யாக உங்களுக்குச் சொல்லுகிறேன்'' என்
ருர். 26 பிறகு அவர்கள் துதிப் பாட்டுப்
பாடிவிட்டு ஒலிவமலைக்குப் புறப்பட்டுப்
போனுர்கள்.

### பேதுருவின் மறுதலிப்பைப்பற்றிய முன்னறிவிப்பு

(மத். 26:31—35; லூக்.22;31—34;
யோ. 13:36—38)

27 அப்பொழுது இயேசு அவர்களிடம்,
''நீங்களெல்லாரும் என்னை விட்டு ஓடிப்
போவீர்கள். ஏனெனில்,
'ஆயனை வெட்டுவேன்,
ஆடுகள் சிதறடிக்கப்படும்'
என்று வேதத்தில் எழுதியுள்ளது. 28 ஆனுல்
நான் உயிரோடு எழுப்பப்பட்டபின் உங்க
ளுக்கு முந்திக் கலிலேயாவுக்குப் போவேன்''
என்ருர். 29 அப்பொழுது பேதுரு அவரி
டம், ''எல்லாரும் உம்மை விட்டு ஓடிப்
போனுலும் நான் அவ்வாறு செய்ய மாட்
டேன்'' என்று சொன்னுர். 30 இயேசு
அவரைப் பார்த்து, ''திட்டமாக உனக்குச்
சொல்லுகிறேன்: இன்றிரவே, சேவல்
இரண்டுமுறை கூவுமுன், என்னை உனக்குத்
தெரியாதென நீ மூன்றுமுறை மறுதலிக்கப்
போகிருய்'' என்ருர். 31 ஆனுல் அவரோ
மிகவும் அழுத்தமாக, ''நான் உம்மோடு
இறக்க வேண்டியதாயிருந்தாலும், உம்மை
எனக்குத் தெரியாதென மறுதலிக்க மாட்
டேன்'' என்று சொன்னுர். அப்படியே
மற்றவர்களும் சொன்னுர்கள்.

### கெத்செமனே தோட்டத்தில்

(மத். 26:36-46; லூக்.22:39-46)

32 பிறகு அவர்கள் கெத்செமனே என்
னும் இடத்துக்குப் போனுர்கள்; போனதும்,
இயேசு தம்முடைய சீடரை நோக்கி, ''நான்
ஜெபம் செய்கையில் நீங்கள் இங்கே உட்
கார்ந்திருங்கள்'' என்ருர். 33 பிறகு
பேதுரு, யாக்கோபு, யோவான் என்றவர்
களைத் தம்மோடு கூட்டிக்கொண்டு போனுர்.
அப்பொழுது திகிலும் ஆழ்துயரமும் அவரை
ஆட்கொள்ளவே, 34 அவர் அவர்களிடம்,
''என் ஆன்மா சாவிற்கேதுவான கடுந்துய
ரத்தால் நிறைந்திருக்கிறது. நீங்கள் இங்கே
தங்கி விழித்திருங்கள்'' என்று சொல்லி
விட்டு, 35 சற்று அப்பாற் சென்று,
தரையில் விழுந்து, கூடுமானுல் அந்த வேளை
தமக்கு வராதிருக்குமாறு செய்யும்படிவேண்
டுதல் செய்து, 36 ''அபா* (அதாவது
அப்பா), எல்லாம் உம்மாலே ஆகும்; இத்
துன்பக்கலத்தை என்னிடமிருந்து நீக்கி
விடும்; ஆயினும், நான் விரும்புகிறபடி
யன்று, நீர் விரும்புகிறபடியே நடக்கட்
டும்'' என்ருர். 37 பிறகு அவர் திரும்பி
வந்து, அவர்கள் தூங்கிக்கொண்டிருப்பதைக்
கண்டு, பேதுருவை நோக்கி, ''சீமோனே,
தூங்கிக்கொண்டா இருக்கிருய்? ஒரு மணி
நேரம் விழித்திருக்க உன்னுல் இயல
வில்லையா? 38 நீங்கள் சோதனைக்குட்படாத
படி விழித்திருந்து ஜெபம் செய்யுங்கள்.
உள்ளத்தில் ஆர்வம் இருக்கிறது; உடலோ
ஆற்றலற்றதாயிருக்கிறது'' என்ருர்.
39 அவர் மறுபடியும் போய் முன்
சொன்ன வார்த்தைகளையே சொல்லி ஜெபம்
செய்தார். 40 அவர் திரும்பவும் வந்து
அவர்கள் தூங்கிக்கொண்டிருப்பதைக்
கண்டார். அவர்களுடைய கண்கள்
மிகுந்த தூக்க மயக்கமாயிருந்தன. அவ
ருக்கு என்ன பதில் சொல்வதென்று அவர்
களுக்குத் தெரியவில்லை. 41 அவர் மூன்ரும்
முறை திரும்பி வந்து அவர்களை நோக்கி,
†''இன்னுமா தூங்கி இளைப்பாறிக்கொண்
டிருக்கிறீர்கள்? ‡போதும், நேரம் வந்து
விட்டது; இப்போதே மனுமைந்தர் பாவி
களுடைய கைகளில் ஒப்புக்கொடுக்கப்படு
கிருர். 42 எழுந்திருங்கள் போவோம்;
என்னைக் காட்டிக்கொடுக்கிறவன் இதோ!
நெருங்கி வந்துவிட்டான்'' என்ருர்.

### இயேசு பிடிபடுதல்

(மத். 26:47—56; லூக். 22:47—53;
யோ. 18:3—12)

43 அவர் பேசிக்கொண்டிருந்த அந்த
நேரத்திலேயே பன்னிருவருள் ஒருவனுன
யூதாஸ் வந்தான்; அவனேடு ஒரு பெரிய
கூட்டத்தார் வாள்களோடும் தடிகளோடும்
வந்தனர். அவர்கள் தலைமை ஆசாரியர்

* 'அபா' என்பது 'அப்பா' என்று பொருள்படும் அரமேயச் சொல். இயேசு தாமே கூறிய இச்சொல்லை மாற்கு அப்படியே கூறியிருக்கிருர்.
† 'இனித் தூங்கி இளைப்பாறுங்கள்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
‡ இங்கு வரும் கிரேக்க பதத்தைக் 'கணக்குத் தீர்ந்தது' என்கிற பொருளில் 'தீர்த்தாயிற்று' என்றும் மொழி பெயர்க்கலாம்.

**14:24** எரே. 31:31—34. **14:25** லூக். 22:18. **14:27** சக. 13:7. **14:28** மத். 28:16.

வேத அறிஞர் மூப்பர் ஆகியோரால் அனுப்
பப்பட்டவர்கள். 44 அவரை அவர்களுக்
குக் காட்டிக்கொடுக்கவிருந்தவன், ''நான்
யாரை முத்தமிடுகிறேனோ அவர்தாம் அந்த
ஆள்; அவரைப் பிடித்துப் பத்திரமாகக்
கொண்டுபோங்கள்'' என்று அவர்களுக்கு
அடையாளம் சொல்லியிருந்தான். 45அவன்
வந்தவுடனே அவரை அணுகி, ''ரபீ''
என்று சொல்லிக்கொண்டே அவரை முத்த
மிட்டான். 46 அப்பொழுது அவர்கள்
அவர்மேல் கைவைத்து அவரைப் பிடித்தார்
கள். 47 பக்கத்தில் நின்றவர்களுள் ஒருவர்
வாளை உருவி, தலைமை ஆசாரியருடைய
வேலைக்காரனைத் தாக்கி, அவனுடைய
காதைத் துண்டித்தார். 48 இயேசு அவர்
களைப் பார்த்து, ''இது என்ன? கொள்ளைக்
காரனைப் பிடிக்க வருவதுபோல வாள்
களோடும் தடிகளோடும் என்னைப் பிடிக்க
வந்திருக்கிறீர்களே! 49 நான் நாள்தோறும்
திருக்கோவிலில் உங்களிடையே போதித்துக்
கொண்டிருந்தேன்; அப்போதெல்லாம் நீங்
கள் என்னைப் பிடிக்கவில்லை. வேதவாக்கி
யங்கள் நிறைவேறவே இப்படி நடக்கிறது''
என்றார். 50 அப்பொழுது எல்லாச் சீடர்
களும் அவரை விட்டுவிட்டு ஓடிப்போனார்
கள். 51 இளைஞன் ஒருவன் தன் உடம்பின்
மேல் ஒரு துப்பட்டியை மட்டும் போர்த்துக்
கொண்டு அவர் பின்னே சென்றான்; அவ
னைப் பிடித்தார்கள்; 52 ஆனால் அவனோ
துப்பட்டியை விட்டுவிட்டு ஆடையில்லா
மலே ஓடிவிட்டான்.

### தலைமைச் சங்கத்தின் முன்னிலையிலே

*(மத். 26:57–68: லூக். 25:54,55,
63–71; யோ. 18:13–16,19-24)*

53 பிறகு அவர்கள் இயேசுவைத் தலைமை
ஆசாரியரிடம் நடத்திக்கொண்டு போனார்
கள். அப்பொழுது எல்லாத் தலைமை ஆசாரி
யர்களும் மூப்பரும் வேத அறிஞரும் ஒன்று
கூடினார்கள். 54 பேதுரு தலைமை ஆசாரி
யருடைய மாளிகையின் முற்றம்வரைக்கும்
தொலைவில் அவரைப் பின்தொடர்ந்து
போய், காவலரோடு உட்கார்ந்துகொண்டு,
நெருப்பினருகில் குளிர் காய்ந்து கொண்
டிருந்தார். 55 தலைமை ஆசாரியர்களும்
தலைமைச் சங்கத்தார் அனைவரும் இயேசுவை
மரண தண்டனைக்குள்ளாக்கும்படி அவ
ருக்கு விரோதமான சாட்சியம் ஏதாவது
ஒன்று கிடைக்குமோவெனப் பார்த்தார்கள்
கிடைக்கவில்லை. 56 ஏனெனில், ''அவ
ருக்கு விரோதமாகப் பலர் பொய்ச் சாட்சி
சொல்லியும், அந்தச் சாட்சியங்கள் ஒன்றுக்
கொன்று ஒவ்வாதிருந்தன. 57 சிலர்
எழுந்து, '' 'கைவேலைப்பாடாகிய இந்தத்
திருக்கோவிலை இடித்துவிட்டு, கைவேலைப்
பாடல்லாத வேறொன்றை மூன்று நாளில்
நான் கட்டியெழுப்புவேன்' என்று இவன்
சொன்னதை நாங்கள் கேட்டோம்'' என்று,
58அவருக்கு விரோதமாகப் பொய்ச்சாட்சிக்
கூறினர். 59 அப்படியும் அவர்களுடைய
சாட்சியம் ஒவ்வவில்லை. 60 அப்பொழுது
தலைமை ஆசாரியர் எழுந்து முன்வந்து,
இயேசுவைப் பார்த்து, ''இதற்கு ஒரு பதி
லும் சொல்வதற்கில்லையா? இவர்கள் உனக்கு
விரோதமாகச் சாட்சி சொல்லுகிறார்களே,
நீ என்ன சொல்லுகிறாய்?'' என்று கேட்
டார். 61 அவரோ பேசாதிருந்தார்;
பதில் ஒன்றும் சொல்லவில்லை. மறுபடியும்
தலைமை ஆசாரியர் அவரைப் பார்த்து, ''நீ
போற்றுதலுக்குரியவரின் மைந்தராகிய
மேசியாதானா?'' என்று கேட்க, 62 இயேசு,
''நான்தான் அவர். மேலும், மனுமைந்தர்
தெய்வ வல்லமையின் வலப்பக்கத்தில் வீற்
றிருப்பதையும் வானத்தின் மேகங்கள்மீது
வருவதையும் நீங்கள் காண்பீர்கள்'' என்று
சொன்னார்; 63 சொன்னதும், தலைமை
ஆசாரியர் தம் ஆடைகளைக் கிழித்துக்
கொண்டு, ''இனிமேல் நமக்குச் சாட்சியங்கள்
எதற்கு? 64 நீங்களே இந்தத் தெய்வ நிந்
தனையைக் கேட்டீர்கள், உங்களுக்கு
எப்படித் தோன்றுகிறது?'' என்று கேட்டார்.
அதற்கு அவர்கள் எல்லாரும், ''இவன் மரண
தண்டனைக்குரியவன்'' என்று தீர்ப்புக் கூறி
னர். 65 அப்பொழுது சிலர் அவர்மீது
துப்பி, அவருடைய முகத்தை மூடி அவரை
அடித்து, ''யார் அடித்ததென்று சொல்''
என்றனர். காவலரும் அவரை அறைந்தனர்.

### பேதுருவின் மறுதலிப்பு

*(மத். 26:69–75; லூக். 22:56–62;
யோ. 18:15–18,25–27)*

66 அச்சமயத்தில் பேதுரு கீழே முற்றத்
திலிருக்கையில், தலைமை ஆசாரியருடைய
வேலைக்காரிகளுள் ஒருத்தி அங்கு வந்து,
67 குளிர்காய்ந்துகொண்டிருந்த பேதுரு
வைக் கண்டு, அவரை உற்றுப்பார்த்து,
''நீயும் நாசரேத்தூர் இயேசுவுடன் இருந்
தாயே'' என்றாள். 68 அதற்கு அவர்,
''நீ என்ன சொல்லுகிறாய் என்பதே எனக்
குத் தெரியவில்லை, புரியவுமில்லை'' என்று
சொல்லி மறுதலித்தார்; பிறகு வெளியே
முற்றத்தின் முன்புறத்துக்குப் போனார்.
69 அப்பொழுது ஒரு சேவல் கூவிற்று. அந்த
வேலைக்காரி அவரை அங்கேயும் கண்டு மறு
படியும், ''இவன் அவர்களுள் ஒருவன்''
என்று அருகில் நின்றவர்களுக்குச் சொல்ல,
அவர் மறுபடியும் மறுதலித்தார். 70 சற்று
நேரத்திற்குப் பின்பு அருகில் நின்றவர்களும்
பேதுருவினிடம், ''உண்மையாகவே நீ
அவர்களுள் ஒருவனே; ஏனெனில், நீ ஒரு

**14:49** லூக். *19:47; 21:37.* **14:58** யோ. *2:19;* 2 கொரி. *5:1.* **14:62** தானி. *7:13.* **14:64** இலே. *24:16.*

கலிலேயன்'' என்றார்கள். 71 அவரோ,
''நீங்கள் சொல்லுகிற அந்த ஆளை எனக்குத்
தெரியாது'' என்று சொல்லிப் பழிப்பாணை
யிட்டுச் சத்தியம் செய்யத் தொடங்கினார்.
72 உடனே சேவல் இரண்டாம் முறை
கூவிற்று. ''சேவல் இரண்டு முறை கூவு
முன், என்னை உனக்குத் தெரியாதென நீ
மூன்றுமுறை மறுதலிப்பாய்'' என்று இயேசு
தம்மிடம் சொன்ன வார்த்தை பேதுருவின்
நினைவுக்கு வந்தது, அவர் விம்மி விம்மி
அழுதார்.

### பிலாத்துவின் முன்னிலையில்

(மத். 27:1,2,11-14; லூக். 23:1-5;
யோ. 18:28—38)

15 பொழுது விடிந்தவுடனே தலைமை
ஆசாரியர்கள் மூப்பரோடும் வேதஅறி
ஞரோடும் கலந்து பேசினார்கள். பிறகு அவர்
கள் இயேசுவைக் கட்டினார்கள். தலைமைச்
சங்கத்தாரனைவரும் அவரை நடத்திச்
சென்று, பிலாத்துவினிடம் ஒப்புக்கொடுத்
தார்கள். 2 பிலாத்து அவரைப் பார்த்து,
''நீ யூதருடைய அரசனா?'' என்று கேட்
டான். 3 அவர், *''நீர் சொல்கிறபடி
தான்'' என்றார். பிறகு தலைமை ஆசாரியர்
கள் குற்றச்சாட்டுகளை அவர்மீது சுமத்தி
னார்கள். 4 அப்பொழுது பிலாத்து மறு
படியும் அவரை நோக்கி, ''இவற்றிற்கு ஒரு
பதிலும் சொல்லுவதற்கில்லையா?'' என்று
கேட்டு, ''இவர்கள் எத்தனை குற்றச்சாட்டு
களை உன்மீது சுமத்துகிறார்களென்று பார்''
என்றான். 5 ஆனால் இயேசு அதற்குப் பிற
கும் ஒரு பதிலும் சொல்லவில்லை. அதைக்
கண்டு பிலாத்து வியப்புற்றான்.

### மரணத் தீர்ப்பளித்தல்

(மத். 27:15—26; லூக். 23:13—25;
யோ. 18:39—19:16)

6 பண்டிகைதோறும் மக்கள் கேட்டுக்
கொள்ளும் ஒரு கைதியை அவர்களுக்காகப்
பிலாத்து விடுதலை செய்வதுண்டு. 7 ஒரு
கலகத்தில் கொலை செய்த கலகக்காரரோடு
பரபாஸ் என்னும் ஒருவனும் அச்சமயம்
சிறையிலிருந்தான். 8 மக்கள் கூடிவந்து,
பிலாத்து வழக்கமாகச் செய்து வந்தபடியே
தங்களுக்குச் செய்யவேண்டுமென்று கேட்க,
அவன் அவர்களிடம், 9 ''நான் உங்களுக்
காக யூதருடைய அரசனை விடுதலை செய்வது
உங்களுக்கு விருப்பந்தானா?'' என்று
கேட்டான். 10 ஏனென்றால், தலைமை ஆசாரி
யர்கள் பொறாமை காரணமாகவே அவரை
தன்னிடம் ஒப்புக்கொடுத்தார்கள் என்
பது அவனுக்குத் தெரியும். 11 ஆனால்
தலைமை ஆசாரியர்கள், பரபாசையே தங்
களுக்காக விடுதலை செய்யக் கேட்கும்படி
மக்களை ஏவிவிட்டார்கள். 12 பிலாத்து
மறுபடியும் அவர்களிடம் பேசி, ''அப்படி
யானால் யூதருடைய அரசனென்று நீங்கள்
சொல்லுகிற இவனை நான் என்ன செய்ய
வேண்டும்?'' என்று கேட்டான். 13 அதற்கு
அவர்கள், ''அவனைச் சிலுவையில் அறை
யும்'' என்று கூச்சலிட்டார்கள். 14 அப்
பொழுது பிலாத்து, ''ஏன்? இவன் என்ன
தீங்கு செய்துவிட்டான்?'' என்று கேட்க,
அவர்கள், ''அவனைச் சிலுவையில் அறை
யும்'' என்று இன்னும் உரத்துக் கூச்சலிட்
டார்கள். 15 பிலாத்து மக்களை மகிழ்விக்க
விரும்பி, பரபாசை அவர்களுக்காக விடுதலை
செய்தான். இயேசுவையோ வாரினால்
அடிப்பித்தான்; பிறகு அவரைச் சிலுவையில்
அறையும்படி ஒப்புக்கொடுத்துவிட்டான்.

### படைவீரரின் ஏளனம்

(மத். 27:27—31; யோ. 19:2,3)

16 பிறகு படைவீரர் இயேசுவை மாநிலத்
தலைவனுடைய மாளிகையின் முற்றத்
திற்குக் கூட்டிக்கொண்டுபோய், படை முழு
வதையும் ஒன்றுகூட்டி, 17 செந்நிற
மேலாடையை அவருக்கு உடுத்தி, முள்ளால்
ஒரு முடியைப் பின்னி அவருக்குச் சூட்டி,
18 ''யூதருடைய அரசனே, வாழ்க!''என்று
அவரை வாழ்த்தி, 19 கோலால் அவரைத்
தலையில் அடித்து அவர்மேல் துப்பி, முழந்
தாள்படியிட்டு அவரை வணங்கினார்கள்.
20 இவ்வாறு அவரை ஏளனம் செய்த பிறகு
செந்நிற மேலாடையைக் கழற்றிவிட்டு,அவ
ருடைய உடைகளையே அவருக்கு உடுத்தி,
அவரைச் சிலுவையில் அறைய வெளியே
நடத்திக்கொண்டு போனார்கள்.

### சிலுவையில் அறைதல்

(மத். 27:32—44; லூக். 23:26—43;
யோ. 19:17—27)

21 அப்பொழுது சிரேனே ஊரானாகிய
சீமோன் என்பவன் நாட்டுப்புறத்திலிருந்து
அவ்வழியே வந்துகொண்டிருந்தான்; அவன்
அலெக்சந்தர், ரூப்பு என்பவர்களின் தகப்
பன். அவருடைய சிலுவையைச் சுமந்து
செல்லும்படி அவர்கள் அவனைக் கட்டாயப்
படுத்தினார்கள். 22 அவர்கள் தலையோட்
டிடம் என்று பொருள்படும் கொல்கொதா
என்னும் இடத்துக்கு அவரை நடத்திக்
கொண்டு போனார்கள். 23 அங்கே அவ
ருக்கு வெள்ளைப்போள மயக்க மருந்து
கலந்த திராட்சை இரசத்தைக் குடிக்கக்
கொடுத்துப் பார்த்தார்கள்;அவரோ அதைக்
குடிக்கவில்லை.24 பிறகு அவரைச்சிலுவையில்
அறைந்தார்கள்; அறைந்தபின் அவருடைய

* 'நீர் அப்படிச் சொல்லுகிறீர்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
15:24 சங். 22:18.

ஆடைகளில் யாருக்கு எந்தப் பாகம்
கிடைக்க வேண்டுமென்பதைக் கண்டுபிடிக்
கச் சீட்டுக் குலுக்கிப் போட்டு, அவற்றைப்
பங்கிட்டுக் கொண்டார்கள். 25 அவரைச்
சிலுவையில் அறைந்தபோது மணி காலை
ஏறக்குறைய ஒன்பது* இருக்கும். 26 அவ
ரைப் பற்றிய குற்ற அறிக்கை அங்கே வைக்
கப்பட்டிருந்தது; அதில், ''யூதருடைய அர
சன்'' என்று எழுதியிருந்தது. 27 அவரு
டைய வலப்பக்கத்தில் ஒருவனும், இடப்
பக்கத்தில் ஒருவனுமாக இரண்டு கொள்
ளைக்காரரை அவரோடு சிலுவைகளில்
அறைந்தார்கள். [28 அக்கிரமக்காரருள்
ஒருவராக எண்ணப்பட்டார் என்கிற வேத
வாக்கியம் இவ்வாறாக நிறைவேறிற்று.]
29 அந்த வழியே சென்றவர்கள் தங்கள் தலை
களை ஆட்டி, ''ஆகா, திருக்கோவிலை இடித்து
விட்டு மூன்று நாளில் கட்டி எழுப்புகிற
வனே, 30 சிலுவையிலிருந்து இறங்கி உன்னை
நீயே காப்பாற்றிக்கொள்'' என்று சொல்லி
அவரைப் பழித்தார்கள். 31 அவ்வாறே
தலைமை ஆசாரியர்களும் வேத அறிஞரோடு
சேர்ந்து ஏளனமாக ஒருவரோடொருவர்
பேசிக்கொண்டு, ''பிறரைக் காப்பாற்றி
னுன், தன்னைக் காப்பாற்றிக்கொள்ள இயல
வில்லை. 32 இஸ்ரவேலின் அரசனுகிய
மேசியா இப்போது சிலுவையிலிருந்து
இறங்கிவரட்டும், நாங்கள் அதைப் பார்த்து
நம்புவோம்'' என்றூர்கள். அவரோடு சிலு
வைகளில் அறையப்பட்டவர்களும் அவ
ரைப் பழித்தார்கள்.

### இயேசுவின் மரணம்

(மத். 27:45–56; லூக். 23:44–49;
யோ. 19:28–30)

33 பகல் பன்னிரண்டு மணிக்கு† நாடெங்
கும் இருள் சூழ்ந்தது. பிற்பகல் மூன்றுமணி‡
வரையிலும் அப்படியே இருந்தது. 34 பிற்
பகல் மூன்று மணிக்கு இயேசு, ''எலோயீ,
எலோயீ, லாமா சபக்தானீ'' என்று உரத்த
குரலில் கத்தினுர். அதற்கு, ''என் கடவுளே,
என் கடவுளே, ஏன் என்னைக் கைவிட்டீர்?''
என்பது பொருள். 35 அங்கே நின்றவர்
களுள் சிலர் அதைக் கேட்டு, ''பாருங்கள்,
எலியாவைக் கூப்பிடுகிறுன்'' என்றனர்.
36 அப்பொழுது ஒருவன் ஓடிப்போய், கடற்
காளானைக் காடியில் தோய்த்து, அதை ஒரு
கோலில் மாட்டி அவருக்குக் குடிக்கக்
கொடுத்து, ''பொறுங்கள், எலியா இவனை
இறக்கிவிட வருகிறுரு பார்ப்போம்'' என்
றுன். 37 இயேசு உரத்துக் கத்தி உயிர்
துறந்தார். 38 அப்பொழுது திருக்கோவிலின்
திரை மேலிருந்து கீழ்வரைக்கும் இரண்டா

கக் கிழிந்தது. 39 அவருக்கு எதிரே நின்று
கொண்டிருந்த நூற்றுவர் தலைவன் அவர்
இப்படி உரத்துக் கத்தி உயிர் துறந்ததைக்
கண்டு, ''மெய்யாகவே இந்த மனிதன் கட
வுளின் மைந்தன்'' என்றுன். 40 பெண்
மக்கள் சிலரும் தொலைவில் நின்று பார்த்துக்
கொண்டிருந்தனர், அவர்களிடையே
மகதலேனு மரியாளும், சின்ன யாக்கோபுக்
கும் யோசேயுக்கும் தாயாகிய மரியாளும்,
சலோமே என்பவளும் இருந்தார்கள்.
41 இவர்கள், அவர் கலிலேயாவில் இருந்த
போதே அவரைப் பின்பற்றி நடந்து அவ
ருக்குப் பணிவிடை செய்தவர்கள். அவ
ரோடு எருசலேமுக்கு வந்திருந்த வேறு
பெண் மக்கள் பலரும் அங்கே இருந்தனர்.

### அடக்கம் செய்தல்

(மத். 27:57–61; லூக். 23:50–56;
யோ. 19:38–42)

42 இதற்குள் மாலை நேரமும் வந்துவிட்
டது. அன்று ஓய்வு நாளுக்கு முந்தினஆயத்த
நாளானதால், 43 அரிமத்தியா ஊரைச்
சேர்ந்தவரும் தலைமைச் சங்கத்தில் மதிப்புப்
பெற்ற உறுப்பினருமாகிய யோசேப்பு
என்பவர் பிலாத்துவினிடம் துணிவுடன்
போய், இயேசுவின் உடலைக்
கொடுக்கவேண்டும் என்று கேட்
டார்; அவர் கடவுளுடைய அரசின்
வரவை எதிர்நோக்கிக்கொண்டிருந்தவர்.
44 இயேசு அதற்குள் மரணமடைந்ததைக்
கேட்டுப் பிலாத்து வியப்புற்று, நூற்றுவர்
தலைவனை வரவழைத்து, ''அவர் ஏற்கெனவே
மரணமடைந்துவிட்டாரா?'' என்று விசா
ரித்தான். 45 நூற்றுவர் தலைவன் மூல
மாகச் செய்தியை அறிந்துகொண்டு உடலை
யோசேப்பினிடம் ஒப்புவித்தான். 46 அவர்
போய் மெல்லிய துணியை வாங்கிக்கொண்டு
வந்து, அவரை இறக்கி, அந்தத் துணியில்
சுற்றி, கற்பாறையில் வெட்டியிருந்த கல்
லறையில் வைத்து, ஒரு கல்லைப் புரட்டிக்
கல்லறையின் வாயிலில் வைத்தார். 47 அவர்
எங்கே வைக்கப்படுகிறுரென்று மகத
லேனு மரியாளும் யோசேப்பின் தாயாகிய
மரியாளும் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

### இயேசு உயிர்த்தெழுந்தார்

(மத். 28:1–8; லூக். 24:1–12;
யோ. 20:1–10)

16 மகதலேனு மரியாளும், யாக்கோபின்
தாயாகிய மரியாளும், சலோமே என்
பவளும் இயேசுவின் உடலில் பூசுவதற்காக,
ஓய்வுநாள் முடிந்தபின் நறுமணப் பொருள்
களை வாங்கி, 2 வாரத்தின் முதல் நாள்

* மூலத்தில், யூதர் கணக்குப்படி, மூன்றும் மணி என்றிருக்கிறது.
† ‡ மூலத்தில், யூதர் கணக்குப்படி, முறையே ஆறும் மணி, ஒன்பதாம் மணி என்றிருக்கிறது.

15:28 ஏசா. 52:12; லூக். 22:37. 15:29 சங். 22:7; 109:25; மத். 14:58; யோ. 2:19. 15:34 சங். 22:1. 15:36 சங். 69:21. 15:38 யாத். 31—33. 15:40, 41 லூக். 8:2, 3.

விடியற்காலத்தில் கதிரவன் எழும் வேளை
யிலே கல்லறைக்குப் போனார்கள்; 3 போகை
யில் அவர்கள், ''கல்லறையின் வாயிலி
லிருந்து கல்லை நமக்காகப் புரட்டித் தள்ள
யாராவது இருப்பார்களா?'' என்று ஒருவ
ரோடொருவர் பேசிக்கொண்டு போனார்கள்.
4 ஆனால் அவர்கள் ஏறிட்டுப் பார்த்த
போது அது புரட்டித் தள்ளப்பட்டிருந்த
தைக் கண்டார்கள். அது மிகவும் பெரிய
கல். 5 பிறகு அவர்கள் கல்லறைக்குள்
போனார்கள்; அங்கே ஓர் இளைஞன் வெள்ளை
யங்கி அணிந்துகொண்டு வலப்பக்கம் உட்
கார்ந்திருக்கிறதைக் கண்டு திகிலடைந்தார்
கள். 6 அவன் அவர்களைப் பார்த்து, ''திகி
லடைய வேண்டாம், சிலுவையில் அறை
யுண்ட நசரேயனாகிய இயேசுவைத் தேடு
கிறீர்கள்; அவர் உயிர்த்தெழுந்துவிட்டார்;
இங்கே இல்லை. இதோ இதுதான் அவரை
வைத்த இடம். 7 நீங்கள் போய் அவரு
டைய சீடரிடமும் பேதுருவிடமும், 'உங்
களுக்கு முந்தி அவர் கலிலேயாவுக்குப்போய்
விடுவார்; அவர் உங்களுக்குச் சொன்ன
படியே அங்கே அவரைக் காண்பீர்கள்'
என்று சொல்லுங்கள்'' என்றான். 8 அவர்
கள் வெளியே வந்து நடுக்கமும் திகிலும்
கொண்டவர்களாய்க் கல்லறையை விட்டு
ஓடினார்கள்; அவர்கள் ஒருவருக்கும் ஒன்றும்
சொல்லவில்லை; அஞ்சிக்கொண்டிருந்தார்கள்.

### மகதலேனா மரியாளுக்குக் காட்சியளித்தல்

*(மத். 28:9,10; யோ. 20:11–18)*

[*9 வாரத்தின் முதலாம் நாள் விடியற்
காலத்தில் உயிர்த்தெழுந்தபின்பு இயேசு மக
தலேனா மரியாளுக்கு முதலில் காட்சியளித்
தார். அவளிடமிருந்துதான் அவர் முன்பு
ஏழு பேய்களை ஓட்டியிருந்தார். 10 அவள்
போய் அவரோடு இருந்துவந்தவர்களுக்குத்
தான் கண்டதை அறிவித்தாள். அவர்கள்
அந்நேரத்தில் துயருற்று அழுதுகொண்
டிருந்தார்கள்; 11 அவர் உயிரோடிருக்கிறா
ரென்றும், அவள் அவரைக் கண்டாளென்
றும் அவளிடமிருந்து கேள்விப்பட்டபோதி
லும் அவர்கள் நம்பவில்லை.

### இரண்டு சீடருக்குக் காட்சியளித்தல்

*(லூக். 24:13–35)*

12 அதன் பின்பு அவர்களுள் இருவ
ருக்கு அவர் வேறோரு வகையில் காட்சி
யளித்தார். அவர்கள் அப்போது நாட்டுப்
புறத்துக்கு நடந்து போய்க்கொண்டிருந்தார்
கள். 13 அவர்கள் திரும்பிப்போய் அதை
மற்றவர்களுக்கு அறிவித்தார்கள்; அவர்
களையும் அவர்கள் நம்பவில்லை.

### சீடருக்கு இட்ட கட்டளை

*(மத். 28:16–20; லூக். 24:36–49; யோ. 20:19–23; திருத்தூது. 1:6–8)*

14 பிற்பாடு, பதினொருவரும் சாப்பிட்டுக்
கொண்டிருக்கையில் அவர் அவர்களுக்குக்
காட்சியளித்தார்; உயிர்த்தெழுந்த தம்
மைக் கண்டவர்களை அவர்கள் நம்பாத
தால் அவர்களுடைய நம்பிக்கையின்மையை
யும், உள்ளத்தின் மந்தத் தன்மையையும்
குறித்து அவர்களைக் கடிந்துகொண்டார்.
15 பிறகு அவர் அவர்களிடம், ''நீங்கள்
உலகமெங்கும் போய், படைப்புகளான
யாவருக்கும் அருட்செய்தியை அறிவியுங்கள்.
16 அதில் நம்பிக்கை வைத்துத் திருமுழுக்
குப் பெறுபவன் மீட்புப் பெறுவான்.
நம்பாதவனோ குற்றத் தீர்ப்புப் பெறுவான்.
17 நம்பிக்கை உடையவர்களின் திருப்பணி
யில் இந்த அரிய செயல்கள் காணப்படும்;
அவர்கள் என் பெயரால் பேய்களை ஓட்டுவார்
கள்; பிறமொழிகளைப் பேசுவார்கள்; பாம்பு
களைப் பிடிப்பார்கள்; 18 சாவுக்கேதுவான
ஏதாவதொன்றைக் குடித்தாலும் அது அவர்
களுக்குத் தீங்கு செய்யாது; பிணியாளிகள்
மேல் அவர்கள் கைகளை வைப்பார்கள்; அவர்
களும் குணமடைவார்கள்'' என்றார்.

### இயேசுவின் விண்ணேற்றம்

*(லூக். 24:50–53; திருத்தூது. 1:9–11)*

19 அவர்களுடன் பேசி முடித்த பின்பு,
ஆண்டவராகிய இயேசு விண்ணுலகத்துக்கு
எடுத்துக்கொள்ளப்பட்டார்; பிறகு அவர்
கடவுளின் வலப்பக்கத்தில் அமர்ந்தார்.

20 அவர்கள் புறப்பட்டுப் போய் எங்கும்
அருளுரை ஆற்றினார்கள். ஆண்டவர் அவர்
களுடனே செயல்புரிந்து, அவர்களுடைய
திருப்பணியில் காணப்பட்டுவந்த அரிய
செயல்களினால் அவர்கள் கூறிய வார்த்தை
மெய்யெனக் காட்டினார்.]

* வ. 9–20 இப்பகுதி இந்த அருட்செய்தி நூலின் விரிவான முடிவுரையாகச் சில பிரதிகளில் காணப்படுகிறது. வேறு சில பிரதிகளில் சுருக்கமான முடிவுரையாக: ''அவர்கள் பேதுருவிடமும் அவரோடிருந்தவர்களிடமும் தங்களுக்குச் சொல்லப்பட்ட யாவற்றையும் சுருக்கமாகக் கூறினார்கள். அதன்பின் இயேசு தாமே என்றுமுள்ள மீட்பைப்பற்றிய தூய்மையானதும் அழியாததுமான அருட்செய்தியைச் சீடர் மூலமாக, கீழ்த்திசையிலிருந்து மேல் திசைவரைக்கும் அனுப்பினார்'' என்பது காணப்படுகிறது.

**16:7** மத். 26:32; மாற். 14:28. **16:15** திருத்தூது. 1:8; **16:19** திருத்தூது. 1:9—11; 1 திமோ. 3:16.

# லூக்கா எழுதின அருட்செய்தி நூல்

## முகவுரை

1 மதிப்பிற்குரிய தெயோப்பிலுவே, நம்
மிடையே நடந்தேறிய காரியங்களை
முறைப்படுத்தி ஒரு வரலாறு எழுதப்
பலர் முற்பட்டிருக்கின்றனர்; 2 அவற்
றைத் தொடக்கமுதலே நேரில் கண்டும்,
தெய்வ வார்த்தையை அறிவித்தும் வந்த
ஊழியர் நம்மிடம் ஒப்படைத்திருக்கிற
படியே அதை எழுத முற்பட்டிருக்கின்ற
னர். 3 ஆகவே, உமக்குக் கூறப்பட்ட
செய்திகளின் அடிப்படையான உண்மை
களை நீர் அறிந்துகொள்ள வேண்டுமென்
னும் நோக்கத்தோடு, 4 எல்லாவற்றையும்
தொடக்கத்திலிருந்து திட்பநுட்பமாக
ஆராய்ச்சி செய்திருக்கிற நானும் அவற்றை
ஒழுங்குபடுத்தி உமக்கு எழுதுவது நல
மென்று கருதினேன்.

## யோவானது பிறப்பைப்பற்றிய முன்னறிவிப்பு

5 ஏரோது யூதேயா நாட்டில் அரசனு
யிருந்த காலத்தில் சகரியா என்ற ஆசா
ரியர் ஒருவர் இருந்தார். அவர் அபியா
வின் ஆசாரியக் குழுவைச் சேர்ந்தவர்.
அவருடைய மனைவி ஆரோனுடைய மர
பைச் சேர்ந்தவள். அவள் பெயர் எலிச
பெத்து. 6 அவர்கள் இருவரும் கடவுள்
பார்வையில் நேர்மையாய் விளங்கினவர்
கள்; ஆண்டவருடைய எல்லாக் கட்டளை
களின்படியும், நியமங்களின்படியும், எவ
ரும் குற்றங்காண முடியாத வகையில்
நடந்து வந்தவர்கள். 7 எலிசபெத்து மலடி
யாய் இருந்ததனுல் அவர்களுக்குப் பிள்
ளைப்பேறு இல்லை; மேலும், இருவரும்
வயது சென்றவர்களாயும் இருந்தனர்.
8 சகரியாவின் ஆசாரியக் குழுவிற்கு ஊழி
யம் செய்ய வேண்டிய முறை வந்தது,
அப்பொழுது அவர் திருக்கோவிலில் ஆசாரிய
ஊழியம் செய்து வந்தார். 9 கடவு
ளின் ஆலயத்திற்குள் சென்று யார் தூபம்
காட்டுவது என்பதைத் தெரிந்துகொள்ள,
ஆசாரிய ஊழியத்தையடுத்த வழக்கப்
படி சீட்டுக் குலுக்கினபோது, சகரியாவின்
பெயர்ச் சீட்டுக் கிடைத்தது. 10 அவர் தூபம்
காட்டும் வேளையில் மக்கள் எல்லாரும்
கூட்டமாய் வெளியே ஜெபம் செய்து
கொண்டிருந்தனர். 11 அப்பொழுது தூப
பீடத்தின் வலப்பக்கத்திலே ஆண்டவரு
டைய தூதன் ஒருவன் அவருக்குக் காணப்
பட்டான். 12 சகரியா அவனைக் கண்ட
தும் அஞ்சி நடுங்கினுர். 13 தூதன் அவரை
நோக்கி, ''சகரியாவே, அஞ்சாதே. உன்
வேண்டுதலுக்குக் கடவுள் செவிசாய்த்
தார். உன் மனைவி எலிசபெத்து உனக்கு
ஒரு மகனைப் பெற்றெடுப்பாள்; அவனுக்கு
யோவான் என்று பெயரிடுவாய். 14 நீ
மகிழ்ந்து களிகூர்வாய்; அவனது பிறப்பி
னுல் பலருக்கு மகிழ்ச்சி உண்டாகும்.
15 அவன் ஆண்டவர் பார்வையில் மேன்மை
மிக்கவனுயிருப்பான்; திராட்சை இரசமோ,
மதுவோ அருந்த மாட்டான். தன் தாயின்
வயிற்றில் கருவாயிருக்கும்போதே தூய
ஆவி நிறைந்தவனுயிருப்பான். 16 அவன்
இஸ்ரவேல் மக்களுள் பலரை அவர்
களுடைய கடவுளாகிய ஆண்டவர் பக்கம்
திருப்புவான். 17 எலியாவுக்கிருந்த ஆவி
யையும் வல்லமையையும் பெற்றிருப்
பான்; ஆண்டவரின் முன்னேடித் தூது
வனுய்ப் பணியாற்றுவான்; தந்தை
யரும் பிள்ளைகளும் ஒரே சிந்தையுடைய
வர்களாய் ஒன்றிவாழச் செய்வான்; கட
வுளுக்குக் கீழ்ப்படியாதவர்கள் நேர்மை
யானவர்களின் மனப்போக்கை உடையவர்
களாய் இருக்கும்படி திருப்புவான்; இவ்
வாறு ஆண்டவருக்கு ஏற்ற மனுக்குலம்
ஒன்றை ஆயத்தப்படுத்துவான்'' என்று
கூறினுன். 18 அப்பொழுது சகரியா அந்
தத் தூதனை நோக்கி, ''இவ்வாறு நடக்கு
மென்று நான் எப்படித் தெரிந்துகொள்
வது? நானும் என் மனைவியும் முதுமை
யடைந்துவிட்டோமே!'' என்றுர். 19 அதற்
குத் தூதன் அவரிடம், ''நான் கடவுள்
முன்னிலையில் நிற்பவன், என் பெயர்
காபிரியேல்; உன்னிடம் பேசவும் உனக்கு
இந்த அருட்செய்தியை அறிவிக்கவும்
அனுப்பப்பட்டேன். 20 இதைக்கேள்: உரிய
காலத்தில் என் சொல் நிறைவேறும்.
நீயோ அதை நம்பவில்லை. எனவே, இவை
நடைபெறும் வரையிலும் நீ பேசாமலும்
பேச முடியாமலும் இருப்பாய்'' என்றுன்.
21 மக்கள் சகரியாவுக்காகக் காத்திருந்தார்
கள்; அவர் கோவிலில் காலந்தாழ்த்தவே,
அதைக் குறித்து மக்கள் வியப்புற்றுர்கள்.
22 அவர் வெளியே வந்தபோதோ அவ
ரால் அவர்களிடம் பேச இயலவில்லை.
அதிலிருந்து அவர்கள் கோவிலில் அவர்
திருக்காட்சி ஒன்றினைக் கண்டார் என்ப
தைத் தெரிந்துகொண்டார்கள். அவர்
அவர்களிடம் சைகையினுல் பேசினுர்;
ஊமையாகவே இருந்துவந்தார். 23 அவரது
பணிவிடைக்காலம் முடிந்ததும் அவர்
வீடு திரும்பினுர். அதன்பின்னர் அவர்
மனைவி எலிசபெத்து கருத்தரித்தாள்.
24 ''மக்களிடையே எனக்கிருந்த பழியை
நீக்கும்படி ஆண்டவர் இக்காலத்தில் என்
னைக் கண்ணேக்கி, 25 எனக்கு இப்படிச்
செய்தருளினுர்'' என்று சொல்லிக்
கொண்டாள்; ஐந்து மாதம் பிறர் கண்ணில்
படாதிருந்தாள்.

**1:5** 1 வரலாறு. 24:10. **1:15** எண். 6:3; கலா. 1:15. **1:17** மலா. 4:5, 6. **1:19** தானி. 8:16; 9:21.

## இயேசுவின் பிறப்பைப்பற்றிய முன்னறிவிப்பு

26 ஆறும் மாதத்தில் காபிரியேல் தூத
னைக் கடவுள் கலிலேயாவிலுள்ள நாச
ரேத்து என்னும் ஊரிலிருந்த ஒரு கன்னி
யிடம் அனுப்பினார். 27 அக்கன்னியைத்
தாவீதின் மரபில் வந்த ஒருவருக்கு
மணம் செய்து கொடுக்க ஒப்பந்தம்
செய்யப்பட்டிருந்தது. அவர் பெயர்
யோசேப்பு. அந்தக் கன்னியின் பெயர்
மரியாள். 28 தெய்வதூதன் மரியாளின்
வீட்டிற்குச் சென்று, ''அருள் பெற்ற மங்
கையே, நீ வாழ்க! ஆண்டவர் உன்னோடி
ருக்கிறார். [பெண்களிடையே நீ ஆசி
பெற்ற ஒரு பெண்]'' என்று சொன்னான்.
29 மரியாள் அவனுடைய வார்த்தையைக்
கேட்டுக் கலக்கமுற்று,அந்த வாழ்த்தின்
பொருள் யாதாயிருக்கக்கூடும் என்று சிந்
திக்கத் தொடங்கினார். 30 அப்பொழுது
தூதன், ''மரியாளே, அஞ்ச வேண்டாம்; நீ
கடவுளின் அருளைப் பெற்றிருக்கிறாய்.
31 இதோ, நீ கருத்தரித்து ஒரு மைந்தரைப்
பெற்றெடுப்பாய்; அம்மைந்தருக்கு இயேசு
என்று பெயரிடுவாய். 32 அவர் மேன்மை
மிக்கவராயிருப்பார், உன்னதமானவரு
டைய மைந்தர் எனப்படுவார்; கடவுளா
கிய ஆண்டவர் அவருடைய தந்தையா
கிய தாவீதின் அரியணையை அவருக்கு
அளிப்பார். 33 அவர் யாக்கோபின் மர
பினர்மீது என்றென்றைக்கும் ஆட்சி
செலுத்துவார். அவரது ஆட்சிக்கு முடிவே
இராது'' என்றான். 34 மரியாள் தூதனிடம்,
''இது எப்படி நடக்கக்கூடும்? நான் கண
வனை அறிந்ததில்லையே'' என்றார். 35 அதற்
குத் தூதன், ''தூய ஆவி உன்னிடம்
வரும், உன்னதமானவருடைய வல்லமை
உன்மேல் நிழலிடும்; ஆகையால் உன்னி
டம் பிறக்கும் திருக்குழந்தை கடவுளின்
மைந்தர் எனப்படும். 36 உன் உறவின
ளாகிய எலிசபெத்தும் தன் முதுமைப்
பருவத்தில் ஒரு மகனைக் கருத்தரித்திருக்
கிறாள்; மலடி என்று சொல்லப்பட்டுவந்த
அவளுக்கு இது ஆறும் மாதம். 37 கடவு
ளால் இயலாத காரியம் ஒன்றுமில்லை''
என்றான். 38 அதற்கு மரியாள், ''இதோ,
நான் ஆண்டவரின் அடிமை, உமது சொற்
படியே எனக்கு ஆகக்கடவது'' என்றார்.
அப்பொழுது தெய்வதூதன் மரியாளை
விட்டு அகன்றான்.

## மரியாள் எலிசபெத்தைக் காணுதல்

39 அதற்குப் பிறகு ஒருநாள் மரியாள்
புறப்பட்டு, யூதா மலைநாட்டிலுள்ள ஓர்
ஊருக்கு விரைந்து போய், 40 சகரியாவின்
வீட்டிற்குள் சென்று, எலிசபெத்தை
வாழ்த்தினார். 41 எலிசபெத்து மரியாளின்
வாழ்த்துரையைக் கேட்டபோது, அவர்
வயிற்றிலிருந்த பிள்ளை துள்ளிற்று; எலிச
பெத்து தூய ஆவியினால் நிரப்பப்பட்டு,
42 உரத்த குரலில், ''பெண்களிடையே நீ
ஆசிபெற்ற ஒரு பெண். உன்னிடம் பிறக்கப்
போகும் குழந்தையும் ஆசிபெற்றது. 43 என்
ஆண்டவரின் தாயார் என்னிடம் எழுந்
தருள எனக்குக் கிடைத்த நற்பேறுதான்
என்னே! 44 உன் வாழ்த்துரை என் காதில்
ஒலித்ததும் என் வயிற்றிலுள்ள பிள்ளை
களிப்புடன் துள்ளிற்று. 45 ஆண்டவர்
தனக்குச் சொன்னவை நிறைவேறித்தீரும்
என்று நம்பினவளே நற்பேறு பெற்ற
வள்'' என்றார்.

## மரியாளின் புகழ்ப்பாடல்

46 அதைக் கேட்ட மரியாள்,
''என் ஆன்மா ஆண்டவரைப்
புகழ்ந்து போற்றுகிறது.
47 என் மீட்பராகிய கடவுளை
நினைத்து என் உள்ளம் களிகூர்கிறது.
48 அவர் தம் அடிமையின் தாழ்நிலை
யைக் கண்ணோக்கினார்; ஆம்,இதுமுதல்
எல்லாத் தலைமுறையினரும் என்னை
நற்பேறு பெற்றவள் என்பார்கள்.
49 ஏனெனில், வல்லமையுடையவர்
எனக்கு அரும்பெரும் செயல்கள்
பல செய்தார்;

பரிசுத்தம் என்பதே அவரது திருப்
பெயர்.

50 அவரது இரக்கம் அவருக்கு அஞ்சு
வோருக்கு தலைமுறை தலைமுறையாகக்
கிடைக்கும்.

51 அவர் தமது கைவல்லபத்தைக்
காட்டினார்; இறுமாப்புடையவர்களை
யும், அவர்கள் தங்கள் உள்ளத்தில்
கொண்டுள்ள திட்டங்களையும் சிதற
டித்தார்.

52ஆட்சிபுரிவோரை அரியணையினின்று
அகற்றினார்; தாழ்நிலையில் இருப்
போரை உயர்நிலையில் அமர்த்தினார்.
53 பசியுள்ளவர்களை நலன்களால்
நிரப்பினார்;செல்வர்களை வெறுமையாக
அனுப்பினார்.

54 நம்முடைய மூதாதையருக்கு அவர்
சொன்னபடியே,ஆபிரகாமுக்கும்அவர்
மரபினருக்கும் என்றென்றைக்கும்
இரக்கங் காட்ட நினைத்தருளி,
55 தம் அடியானாகிய இஸ்ரவேலுக்கு
ஆதரவளித்தார்''

1:27 மத். 1:18. 1:31 மத். 1:21. 1:32, 33 2 சாமு. 7:12, 13, 16; ஏசா. 9:6, 7. 1:36 ஆதி. 18:14. 1:42 நீதி. 5:24; லூக். 11:27, 28. 1:45 யோ. 20:29. 1:46—55 1 சாமு. 2:1—10; ஏசா. 29:19. 1:50 சங். 103:17. 1:54 ஆதி. 17:7.

என்றார். 56 மரியாள் ஏறக்குறைய மூன்று
மாதம் எலிசபெத்தோடு தங்கிவிட்டு வீடு
திரும்பினார்.

### திருமுழுக்குநர் யோவானது பிறப்பு

57 எலிசபெத்துக்குப்பேறுகாலம் வந்தது:
அவர் ஒரு மகனைப் பெற்றெடுத்தார்.
58 ஆண்டவர் அவருக்குத் தமது பேரிரக்கத்
தைக் காட்டினாரென்பதை அவருடைய
அயலகத்தாரும் உறவினரும் கேள்விப்
பட்டு அவருடன் தாங்களும் மகிழ்ந்து
கொண்டாடினார்கள். 59 அவர்கள் எட்
டாம் நாளில் பிள்ளைக்கு விருத்தசேதனம்
செய்ய வந்தார்கள்; சகரியா என்ற தகப்
பனார் பெயரையே அவனுக்குச் சூட்ட
இருந்தார்கள். 60 அப்பொழுது அவன்
தாய், ''அப்படியன்று, அவனுக்கு
யோவான் என்று பெயரிட வேண்டும்''
என்றார். 61 அதற்கு அவர்கள், ''உன்உறவின
ருள் இப்பெயர் கொண்ட எவரும் இல்
லையே'' என்று சொல்லி, 62 சகரியாவை
நோக்கி, ''நீர் குழந்தைக்கு என்ன பெயர்
சூட்ட விரும்புகிறீர்?'' என்று சைகை
காட்டிக் கேட்டார்கள். 63 அவர் எழுது
பலகை ஒன்றைக் கேட்டு வாங்கி, அதில்
'இவன் பெயர் யோவான்' என்று எழுதி
னார். எல்லாரும் வியப்படைந்தனர்
64 உடனே அவரது வாய் திறந்தது. நா
கட்டவிழ்ந்தது. அவர் பேசத் தொடங்கி
னார்; கடவுளைப் போற்றினார். 65 அதனால்
அவர்களைச் சுற்றி வாழ்ந்து வந்த யாவருக்
கும் அச்சமுண்டாயிற்று. இந்த நிகழ்ச்சி
கள் எல்லாவற்றையும் பற்றிய பேச்சு
யூதேயாவின் மலைநாடெங்கும் பரவிற்று.
66 அவற்றைக் கேள்விப்பட்டவர்களெல்
லாரும் தம் மனத்திலே அவற்றை வைத்
துக்கொண்டு, ''இந்தப் பிள்ளை எத்தகைய
தாகுமோ!'' என்றனர். ஏனெனில், ஆண்
டவரது அருட்கை அதனோடு இருந்தது
என்பது அவர்களுக்குத் தெளிவாகத்
தெரிந்தது.

### சகரியாவின் பாடல்

67 பிள்ளையின் தகப்பனாரான சகரியா
தூய ஆவியினால் நிரப்பப் பெற்றுப் பின்வரும்
இறைவாக்கை உரைத்தார்:

68 ''இஸ்ரவேலின் கடவுளாகிய
ஆண்டவர் போற்றுதலுக்குரியவர்;
அவர் தம் மக்களைத் தேடிவந்து
அவர்களுக்கு மீட்பளித்தார்.
69 தம் வாக்குரைக்கும் தூயோரின்
வாயினால் நெடுங்காலத்திற்கு முன்
அவர் கூறியுள்ளபடியே,
70 நம்முடைய எதிரிகளினின்றும்
நம்மைப் பகைக்கிற யாவருடைய
கையினின்றும் நம்மை மீட்க, 71 தம்
அடியானாகிய தாவீதின் மரபில்
நமக்காக *வல்ல மீட்பரை எழச்
செய்தார்.
72 நம்முடைய மூதாதையருக்கு இரக்
கம் காட்டவும், 73 தமது தூய
உடன்படிக்கையையும் நம்முடைய
மூதாதையராகிய ஆபிரகாமுக்குஇட்ட
ஆணையையும் நினைவுகூர்ந்து நிறை
வேற்றவும இவ்வாறு செய்தருளினார்.
74 நம்முடைய எதிரிகளின் கைகளி
னின்று நாம் விடுவிக்கப்பட்டு,
75 அவர் பார்வையில் தூய்மையோடும்
நேர்மையோடும் வாழ்நாளெல்
லாம் அச்சமின்றிச் சேவை செய்
வதற்காக அவர் நமக்கு இவ்வாறு
நற்பேறு அருளினார்.
76 குழந்தாய், நீ உன்னதமானவரு
டைய வாக்குரைப்பவன் எனப்படு
வாய்.
77 ஏனெனில், நம் கடவுளின் உருக்க
மான இரக்கத்தின் மூலம் பாவ
மன்னிப்பைப் பெறுவதனால் வரும்
மீட்பை ஆண்டவருடைய மக்களுக்
குத் தெரியப்படுத்தி, அவருக்கென
வழிகளை ஆயத்தம் செய்ய நீ அவரு
டைய முன்னோடித் தூதனாகச் செல்
வாய்.
78 சாவுக்கு அஞ்சிக்கொண்டும் இரு
ளில் உட்கார்ந்துகொண்டும் இருக்
கிறவர்களுக்கு ஒளி தரவும், நம்
முடைய காலடிகளைச் சமாதான
வழியில் நடத்தவும்,
79 அதே இரக்கம் செயலாற்றுவதன்
மூலம் வானத்திலிருந்து மீட்பராகிய
விடிவெள்ளி தோன்றி நமக்கு
வருகை தரும்.''

80 பிள்ளை நாளுக்கு நாள் வளர்ந்து ஆன்ம
வலிமையும் கொண்டிருந்தது. இஸ்ரவேலரி
டையே திருப்பணி செய்யும்படி அனுப்
பப்படும்வரையிலும் யோவான் பாலை
நிலத்திலே இருந்துவந்தார்.

### இயேசுவின் பிறப்பு

(மத். 1:18–25)

**2** அக்காலத்தில் உலகமெங்கும் மக்கள்
தொகை பதிவு செய்யப்பட வேண்டு
மென்று ரோமப் பேரரசன் அகுஸ்துவின்
கட்டளை பிறந்தது. 2 இந்த முதலாம்
கணக்கு, சீரியா நாட்டிலே சிரேனியு
என்றவன் மாநிலத்தலைவனாய் இருந்த
போது பதிவு செய்யப்பட்டது. 3 எல்லா
ரும் பதிவு செய்துகொள்ளத் தத்தம் ஊர்
களுக்குச் சென்றனர். 4 யோசேப்பும் தம்

* கிரேக்கச் சொல்லின் நேர்ப்பொருள், 'மீட்பளிக்கும் கொம்பு' என்பது.
1:59 ஆதி. 17:10; இலே. 12:3. 1:77 மலா. 3:1. 1:78 ஏசா. 9:2; 2 பேது. 1:19; யோ. 8:12.

மைப் பதிவு செய்துகொள்வதற்காகக்
கலிலேயா நாட்டிலுள்ள நாசரேத்து என்
னும் ஊரிலிருந்து யூதேயா நாட்டிலுள்ள
பெத்லெகேம் என்னும் தாவீதின் ஊருக்
குப் போனார். 5 ஏனென்றால்,அவர் தாவீ
தின் மரபினரும் குடும்பத்தவருமாயிருந்
தார். அவருக்கென்று திருமண ஒப்பந்
தம் செய்துகொடுக்கப்பட்டிருந்த மரியாள்
அவரோடு சென்றார்; மரியாள் அப்போது
கருத்தரித்திருந்தார். 6 அவர்கள்
அவ்விடத்தில் இருக்கையில், அவருக்
குப் பேறுகாலம் வந்தது. 7 அவர் தம்
தலைப்பேறான மைந்தனைப் பெற்றெடுத்
தார்; பிள்ளையைத் துணிகளில் சுற்றி,
தொழுவத்தின் முன்னணையில் படுக்க
வைத்திருந்தார். ஏனெனில், சத்திரத்தில்
அவர்களுக்கு இடம் கிடைக்கவில்லை.

### ஆயரும் தெய்வதூதரும்

8 அப்பொழுது அப்பக்கங்களிலே ஆயர்
கள் வெட்டவெளியில் தங்கி, இரவில்
தங்கள் மந்தையைக் காத்துக்கொண்டிருந்
தார்கள். 9 திடீரென்று ஆண்டவருடைய
தூதன் அவர்களுக்குக் காட்சியளித்து
நிற்க, ஆண்டவரது மாட்சிமை அவர்
களைச் சுற்றிலும் சுடர் வீசிற்று; அவர்
கள் மிகவும் அஞ்சினார்கள். 10 தெய்வ
தூதன் அவர்களிடம், ''அஞ்சாதீர்கள்;
இதோ, எல்லா மக்களுக்கும் பெருமகிழ்ச்சி
தருகிற நற்செய்தியை உங்களுக்கு அறி
விக்கிறேன். 11 இன்று தாவீதின் ஊரிலே
உங்களுக்காக ஆண்டவராகிய மேசியா
என்னும் மீட்பர் பிறந்திருக்கிறார்.
12 குழந்தையைத் துணிகளில் சுற்றி முன்ன
ணையில் கிடத்தியிருப்பதை நீங்கள் காண்
பீர்கள். இதுவே உங்களுக்கு அடையா
ளம்'' என்றான். 13 உடனே விண்ணுல
கப் படைத்திரள் அந்தத் தூதனுடனே
சேர்ந்து,

> 14 *''உன்னதத்தில் கடவுளுக்கு மாட்
> சிமை, உலகில் மனிதரிடையே சமா
> தானம், மனிதர்மேல் அவருக்குப்
> பரிவு''

என்று சொல்லிக் கடவுளைப் புகழ்ந்தது.
15 தெய்வ தூதர்கள் அவர்களை விட்டு
விண்ணுலகிற்குச் சென்ற பிறகு, ஆயர்
கள் ஒருவரையொருவர் நோக்கி, ''வாருங்
கள், ஆண்டவர் நமக்கு அறிவித்திருக்
கிற இந்த நிகழ்ச்சியை நாம் பெத்லெகே
முக்குப் போய்ப் பார்ப்போம்'' என்று
சொல்லிக்கொண்டு, 16 விரைந்து சென்று
மரியாளையும் யோசேப்பையும் முன்னணை
யில் படுத்திருந்த குழந்தையையும் கண்
டார்கள்; 17 கண்டு, அந்தக் குழந்தை
யைக் குறித்துத் தங்களுக்குச் சொல்லப்
பட்ட செய்தியை அறிவித்தார்கள்.
18 அதைக் கேட்ட யாவரும் ஆயர்கள் தங்
களுக்குச் சொன்னவற்றைக் குறித்து
வியப்படைந்தனர். 19 மரியாளோ அந்தச்
செய்திகள் எல்லாவற்றையும் தம் நினை
வில் வைத்துக்கொண்டு சிந்தனை செய்து
வந்தார். 20 ஆயர்கள் தங்களுக்குச்
சொல்லப்பட்டதன்படியே கேட்டதும் கண்
டதுமான எல்லாவற்றிற்காகவும் கடவுளைப்
புகழ்ந்து போற்றிக்கொண்டே திரும்பிப்
போனார்கள்.
21 குழந்தைக்கு விருத்தசேதனம் செய்ய
வேண்டிய எட்டாம் நாளில், தாயின் வயிற்
றில் அது உற்பவித்ததற்கு முன்பே தெய்வ
தூதன் சொல்லியிருந்தபடி, அதற்கு இயேசு
என்று பெயரிட்டார்கள்.

### இயேசுவைத் திருக்கோவிலுக்கு எடுத்துச் செல்லுதல்

22 மோசேயின் நீதிச்சட்டத்தின்படி
அவர்களுடைய தூய்மைச் சடங்கு நாள்கள்
கழிந்தபின், 23 ''தலைப்பேறான எந்த
ஆணும் ஆண்டவருக்கு உரியதெனக் கரு
தப்படும்'' என்று எழுதியிருக்கிறதற்கிசைய
இயேசுவை ஆண்டவர் முன்னிலையில் நிறுத்த
எருசேலமுக்கு எடுத்துச் சென்றனர்.
24 இரு காட்டுப் புறாக்களையோ இரு புறாக்
குஞ்சுகளையோ கொண்டுவர வேண்டுமென்று
ஆண்டவருடைய நீதிச்சட்டத்தில் சொல்லி
யிருக்கிறவாறு அவற்றைப் பலியாகச்
செலுத்தவும் அங்கே சென்றனர். 25 சிமி
யோன் என்னும் பெயர் கொண்ட ஒருவர்
எருசலேமில் இருந்தார்; அவர் நேர்மையும்
கடவுட்பற்றும் உள்ளவர், இஸ்ரவேல் மக்
களுக்கு வரப்போகும் மீட்புக்காகக் காத்
திருந்தவர்; அவரோடு தூய ஆவியானவர்
இருந்தார். 26 ''ஆண்டவருடைய மேசி
யாவைக் காணுமுன்னே நீ இறக்கமாட்
டாய்'' என்று தூய ஆவியானவர் அவ
ருக்கு அறிவித்திருந்தார். 27 அவர் ஆவி
யானவரால் தூண்டுதலளிக்கப் பெற்றுத்
திருக்கோவிலுக்கு ஏற்கெனவே வந்திருந்
தார். 28 நீதிச்சட்ட முறைமைப்படி
குழந்தை இயேசுவுக்குச் செய்ய வேண்டிய
வற்றைச் செய்து முடிக்கப் பெற்றோர் இயே
சுவை உள்ளே கொண்டுவந்தபோது, சிமி
யோன் குழந்தையைத் தம் கைகளில் ஏந்
திக்கொண்டு,

* 'உலகத்தில் கடவுளுக்கு மாட்சிமை, உலகில் அவருக்குப் பிரியரான மனிதரிடையே சமாதானம்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
'உன்னதத்திலிருக்கிற கடவுளுக்கு மாட்சிமையும் உலகிலே சமாதானமும் மனிதர்மேல் பரிவும் உண்டாவதாக' என்பது ஒருசில பிரதிகளின் பாடம்.

**2:5** யோ. 7:42; மத். 1:18. **2:14** எபே. 3:12. **2:21** இலே. 12:2—6; லூக். 1:31. **2:23** யாத். 13:2, 12. **2:24** இலே. 5:7; 12:8.

29 ''ஆண்டவரே உமது வாக்கின்
படி உம்முடைய அடியானுகிய நான் இம்
மையை விட்டுச் சமாதானத்தோடு
செல்ல இப்போது அருள்கூர்ந்திருக்கிறீர்;
30 எல்லா நாட்டினரும் காணுமாறு
நீர் ஏற்பாடு செய்த 31 உமது மீட்பை
என் கண்கள் கண்டன.
32 அந்த மீட்புப் பிற இனத்தவ
ருக்கு ஒளியாகவும் உம்முடைய மக்க
ளாகிய இஸ்ரவேலுக்கு மாட்சிமையாக
வும் விளங்கும்.''
என்று கடவுளைப் போற்றிப் புகழ்ந்தார்.

33 குழந்தையைக் குறித்துச் சிமியோன்
கூறினவற்றைக் கேட்டுப் பெற்ருேர் வியப்
புற்றனர். 34 சிமியோன் அவர்களுக்கு
ஆசிகூறி, தாயாகிய மரியாளை நோக்கி,
''இதோ, இக்குழந்தை இஸ்ரவேல் மக்க
ளுள் பலர் வீழ்ச்சியடைவதற்கும் எழுச்சி
யுறுவதற்கும் காரணமாகவும், தெய்வ அரு
ளுக்கு அடையாளமாகவும் நியமிக்கப்பட்
டிருக்கிறது; ஆயினும் அந்த அடையாளத்
தைப் பலர் ஏற்க மறுப்பர். 35 உன் உள்
ளத்தையும் ஒரு வாள் ஊடுருவிப் பாயும்.
பலருடைய சிந்தனைகள் வெளிப்படையாகும்
வண்ணம் இப்படி நடக்கும்'' என்ருர்.
36 ஆசேர் குலத்தவளும் பானுவேலின்
மகளுமாகிய அன்னுள் என்ற இறைவாக்
குரைக்கும் ஒரு பெண் இருந்தாள்; அவள்
வயது சென்றவள்; கன்னிப் பருவத்தில்
மணமாகி ஏழு ஆண்டு கணவனோடு வாழ்ந்
தவள்; எண்பத்து நான்கு வயதான கைம்
பெண். 37 அவள் திருக்கோவிலை விட்டு
நீங்காமல் நோன்பிருந்து ஜெபம்செய்து,
இரவும் பகலும் திருப்பணி செய்துகொண்
டிருந்தாள். 38 அவளும் அந்நேரத்தில்
அங்கே வந்து, கடவுளைப் புகழ்ந்து எருச
லேமின் மீட்புக்காகக் காத்திருந்த யாவரிட
மும் அக்குழந்தையைப் பற்றி எடுத்துரைத்
தாள்.

### நாசரேத்துக்குத் திரும்புதல்

39 ஆண்டவருடைய நீதிச்சட்டத்தின்படி
எல்லாவற்றையும் அவர்கள் செய்துமுடித்த
பிறகு, கலிலேயா நாட்டிலுள்ள தங்கள்
ஊராகிய நாசரேத்துக்குத் திரும்பிப்
போனுர்கள். 40. பிள்ளையாகிய இயேசு
வளர்ந்து வலிமை பெற்ருர்; ஞானம் நிறைந்
தவராயும் இருந்தார். கடவுளின் அரு
ளும் அவர் மீது இருந்தது.

### பிள்ளையாகிய இயேசு திருக்கோவிலில் தங்கிவிடுதல்

41 இயேசுவின் பெற்ருேர் ஆண்டு
தோறும் * பஸ்காப் பண்டிகையின்
பொருட்டு எருசலேமுக்குப் போவதுண்டு.
42 இயேசுவுக்குப் பன்னிரண்டு வயதான
போது, அவர்கள் அந்தப் பண்டிகையைக்
கொண்டாடும் வழக்கப்படி அங்கே சென்று
பண்டிகை நாள்கள் முடிந்தபின் வீடு திரும்
பினுர்கள். 43 பிள்ளையாகிய இயேசு எரு
சலேமில் தங்கிவிட்டார். ஆனுல், இதை
அவருடைய பெற்ருேர் அறியவில்லை.
44பயணம் செய்வோரின் கூட்டத்தில் எங்கே
யாவது அவர் இருப்பார் என்று அவர்கள்
நினைத்துக்கொண்டு,ஒருநாள் பயணம்செய்த
பின் உறவினரிடையேயும் அறிமுகமானவர்
களிடையேயும் அவரைத் தேடினுர்கள்;
45 அவரைக் காணுததால் அவரைத்
தேடிக் கொண்டே எருசலேமுக்குத் திரும்
பிப் போனுர்கள். 46 மூன்று நாளுக்குப்
பின், அவர்கள் அவரைத் திருக்கோவிலில்
கண்டார்கள்; அவர் போதகர்கள் நடுவில்
உட்கார்ந்துகொண்டு, அவர்கள் பேசினதை
கேட்டுக்கொண்டும் கேள்விகள் கேட்டுக்
கொண்டும் இருந்தார். 47 அவர் பேசி
னதைக் கேட்ட யாவரும் அவருடைய அறி
வுக்கூர்மையையும் அவர் பகர்ந்த விடை
களையும் கண்டு திகைப்புற்றனர். 48 பெற்
ருேர் அவரைக் கண்டு வியப்படைந்தனர்.
அப்பொழுது அவருடைய தாயார்
அவரை நோக்கி, ''மகனே, நீ ஏன் இப்
படிச் செய்தாய்? உன் தந்தையும் நானும்
கவலையோடு உன்னைத் தேட நேர்ந்ததே''
என்ருர். 49 அதற்கு இயேசு, ''நீங்கள்
ஏன் என்னைத் தேடினீர்கள்? நான் என்
† தந்தையாரின் வீட்டில் இருக்க வேண்டு
மென்பது உங்களுக்குத் தெரியாதா?''
என்ருர். 50 அவர் சொன்னதை அவர்கள்
புரிந்துகொள்ளவில்லை. 51 அவர் அவர்
களுடன் சென்று நாசரேத்தை அடைந்து
அவர்களுக்கு அடங்கி நடந்து வந்தார்.
அவர் தாயாரோ இந்தக் காரியங்களையெல்
லாம் தம் உள்ளத்தில் வைத்துக்
கொண்டார்.
52 இயேசு வளர வளர ஞானத்தில்
முதிர்ந்து கடவுளுக்கும் மனிதருக்கும் மேன்
மேலும் உகந்தவரானுர்.

### திருமுழுக்குநர் யோவானது அறிவிப்பு

(மத்.3:1-12; மாற்.1:1-8; யோ.1:19-28)

3 ரோமப் பேரரசன் திபேரியு ஆட்சி
செலுத்தின பதினைந்தாம் ஆண்டில்

* மத். 26:2 அடிக்குறிப்பைப் பார்க்க.
† 'தந்தையாருக்குரியவற்றைச் செய்துகொண்டு' என்றும் மொழிபெயர்க்கலாம்.
2:31 ஏசா. 52:10.; 2:32 ஏசா. 42:6; 49:6. 2:34 யோ. 19:25—27; எபி. 12:3. 2:37 1 தீமோ. 5:5.
2:39 மத். 2:23. 2:41 யாத். 12:1—27; உபா. 16:16. 2:48 யோ. 7:15, 46. 2:51 லூக். 2:19; ஆதி.
37:11. 2:52 நீதி. 3:4.

சகரியாவின் மகன் யோவானுக்குப் பாலை
நிலத்திலே கடவுளின் வாக்குஅருளப்பட்டது.
2 அப்பொழுது பொந்தியு பிலாத்து யூதே
யாவில் மாநிலத் தலைவனையும், ஏரோது
கலிலேயாவில் * சிற்றரசனையும், அவன்
சகோதரனாகிய பிலிப்பு இத்துரேயா, தரா
கோனித்தி நாடுகளின் சிற்றரசனையும் லிசா
னியா அபிலேனேயில் சிற்றரசனையும் இருந்
தார்கள், அன்னாவும் காய்பாவும் தலைமை
ஆசாரியர்களாயிருந்தார்கள். 3 யோவான்
யோர்தான் ஆற்றுக்கடுத்த சுற்றுப்புறமெங்
கும்போய், ''பாவமன்னிப்புப்பெற மனமாற்
றமடைந்து திருமுழுக்குப் பெறுங்கள்'' என்று
அறிவித்து வந்தார். 4 அவருடைய ஊழியம்,

'''ஆண்டவருக்கு வழியை ஆயத்
தம் செய்யுங்கள்,
அவருக்கு முன் பாதைகளைச் செவ்வை
யாக்குங்கள்,
பள்ளங்களெல்லாம் நிரப்பப்படும்,
5 எல்லா மலைகளும் குன்றுகளும்
தாழ்த்தப்படும்,
கோணலானவை நேரானவையாகும்,
கரடானவை சமமான வழிகளாகும்,
6 மனிதர் யாவரும் கடவுள் அரு
ளும் மீட்பைக் காண்பர்' என்பது பாலை
நிலத்திலே கூக்குரலிடுகிறவனுடைய
தொனி,''

என்று இறைவாக்குரைப்பவராகிய ஏசா
யாவின் நூலில் எழுதியுள்ளபடி இருந்தது.
7 அவர் தம்மிடம் திருமுழுக்குப் பெறு
வதற்கு வந்த கூட்டத்தைப் பார்த்து,''விரி
யன் பாம்பின் குட்டிகளே! வரப்போகும்
தெய்வ சினத்திலிருந்து தப்பித்துக்கொள்ள
உங்களுக்கு இந்த வழியைக் காட்டினவன்
யார்? 8 நீங்கள் மனமாற்றம் அடைந்தவர்
களானால்,அதை உங்கள் வாழ்க்கையில் காட்
டுங்கள். ஆபிரகாம் நமக்குத் தந்தை என்று
உங்களுக்குள்ளே சொல்லிக்கொள்ளாதீர்
கள்; கடவுள் இந்தக் கற்களிலிருந்தும் ஆபிர
காமுக்குப் பிள்ளைகளை எழுப்ப வல்லவர்
என்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.
9 ஏற்கெனவே மரங்களின் வேரை வெட்டக்
கோடாரியை ஓங்கியாயிற்று. நல்ல கனி
கொடாத மரமெல்லாம் வெட்டப்பட்டு
நெருப்பிலே போடப்படும்'' என்றார்.
10 இதைக் கேட்ட மக்கள், ''அப்படியானால்
நாங்கள் என்ன செய்ய வேண்டும்?'' என்று
கேட்டார்கள். 11 அவர், ''இரண்டு ஆடை
களை உடையவன் ஆடை இல்லாதவனுக்கு
ஒன்றைக் கொடுக்க வேண்டும்; உணவை
உடையவனும் அப்படியே உதவ வேண்டும்''
என்றார். 12 ஆயக்காரரும் திருமுழுக்குப்
பெற வந்து அவரிடம், ''போதகரே, நாங்
கள் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்
டனர். 13 அவர், ''உங்களுக்குக் குறிக்கப்
பட்டுள்ள தொகைக்கு மேலே ஒன்றும் வாங்
காதீர்கள்'' என்றார். 14 படை வீரரும்
அவரை நோக்கி, ''நாங்கள் என்ன செய்ய
வேண்டும்?'' என்று கேட்டனர். அவர்,
''நீங்கள் ஒருவருக்கும் இடுக்கண் செய்யா
மலும் ஒருவர் மீதும் பொய்யாய்க் குற்றம்
சுமத்தாமலும் உங்கள் சம்பளமே போதும்
என்றும் இருங்கள்'' என்றார்.

15 மக்கள் மீட்பர் ஒருவரை எதிர்
நோக்கிய நிலையில் இருந்தார்கள்; அவர்கள்
தங்கள் உள்ளங்களில் ஒருவேளை யோவான்
தான் மேசியாவாயிருக்கலாம் என்று சிந்
தித்துக்கொண்டிருந்தார்கள். 16 ஆனால்
யோவான் எல்லாரையும் பார்த்து, ''நான்
தண்ணீரினால் உங்களுக்குத் திருமுழுக்குக்
கொடுக்கிறேன், என்னைவிட வல்லவர் ஒருவர்
வருகிறார்; அவருடைய மிதியடி வாரை
அவிழ்க்கவும் எனக்குத் தகுதியில்லை, அவர்
தூய ஆவியினாலும் நெருப்பினாலும் உங்
களுக்குத் திருமுழுக்குக் கொடுப்பார்.17 தம்
களத்தை முற்றிலும் துப்புரவாக்குவ
தற்காகவும் கோதுமையைத் தமது களஞ்
சியத்தில் சேர்ப்பதற்காகவும் தூற்றுக்கூடை
ஒன்று அவர் கையில் இருக்கிறது; பதரை
அவர் அவியாத நெருப்பிலிட்டு எரித்தழிப்
பார்'' என்றார். 18 இவ்வாறு அவர் இன்
னும் பல அறிவுரைகளையும் சொல்லி, மக்
களுக்கு அருட்செய்தியை அறிவித்து வந்
தார். 19 ஆனால் சிற்றரசன் ஏரோதோ
தன் சகோதரனுடைய மனைவியான ஏரோதி
யாளை முன்னிட்டும், தான் செய்த மற்றப்
பொல்லாங்குகளை முன்னிட்டும் யோவானால்
கண்டிக்கப்பட்டதால், அவரைக் காவலில்
அடைத்து வைத்தான். 20 இவ்வாறு,
அவன் தான் செய்த மற்றெல்லாவற்றோடும்
இந்தப் பொல்லாங்கையும் செய்து
விட்டான்.

### இயேசு திருமுழுக்குப் பெறுதல்

(மத். 3:13-17; மாற் 1:9-11)

21 மக்களெல்லாரும் திருமுழுக்குப்
பெற்ற வேளையில் இயேசுவும் திருமுழுக்குப்
பெற்றார். அவர் ஜெபம் செய்கையில் வானம்
திறந்தது; 22 தூய ஆவியானவர் புறா
உருவங்கொண்டு அவர்மீது இறங்கினார். அப்
பொழுது வானத்தினின்று, ''நீர் என் அன்
பார்ந்த மைந்தர்; உம்மால் பெருமகிழ்ச்சி
யடைகிறேன்'' என்று ஒரு வாக்கும்
பிறந்தது.

* கிரேக்கச் சொல்லின் நேர்ப்பொருள், 'காற்பங்கு நாட்டிற்குத் தலைவன்' என்பது.
3:4—6 ஏசா. 40:3—5. 3:8 யோ. 8:33. 3:9 மத். 7:19. 3:10 திருத்தூது. 2:37. 3:12 லூக். 7:29. 3:19,20 மத் 14:3, 4; 6:17,18. 3:22 ஆதி. 22:2; சங், 2:7; ஏசா. 42:1; மத். 3:17; மாற். 1:11 லூக். 9:35

### இயேசுவின் மூதாதையர் அட்டவணை

(மத். 1:1—17)

23 இயேசு தம் ஊழியத்தைத் தொடங்
கினபோது ஏறக்குறைய முப்பது வயதுள்ள
வராயிருந்தார். அவர் யோசேப்பின் மகன்
என்று கருதப்பட்டார். அந்த யோசேப்பு
ஏலியின் மகன்; 24 ஏலி மாத்தாத்தின் மகன்;
மாத்தாத்து இலேவியின் மகன்; இலேவி
மெல்கியின் மகன்; மெல்கி யன்னாயின்மகன்;
யன்னாய் யோசேப்பின் மகன்; யோசேப்பு
மத்தத்தியாவின் மகன்; 25 மத்தத்தியா
ஆமோசின் மகன்; ஆமோஸ் நாகூமின்
மகன்; 26 நாகூம் எஸ்லியின் மகன்;
எஸ்லி நங்காயின் மகன்; நங்காய்
மாகாத்தின் மகன்; மாகாத்து மத்தத்தியா
வின் மகன்; மத்தத்தியா சேமேயின் மகன்;
சேமேய் யோசேக்கின் மகன்; 27 யோசேக்கு
யோதாவின் மகன்; யோதா யோவன
னின் மகன்; யோவனான் ரேசாவின் மகன்;
ரேசா செருபாபேலின் மகன்; செருபாபேல்
சலாத்தியேலின் மகன்; 28 சலாத்தியேல்
நேரியின் மகன்; நேரி மெல்கியின்
மகன்; மெல்கி அத்தியின் மகன்; அத்தி
கோசாமின் மகன்; கோசாம் எல்மாதாமின்
மகன்; எல்மாதாம் ஏரின் மகன்; ஏர் ஏசுவின்
மகன்; 29 ஏசு எலியேசரின் மகன்;
எலியேசர் யோரீமின் மகன்; யோரீம் மாத்
தாத்தின் மகன்; மாத்தாத்து இலேவியின்
மகன்; 30 இலேவி சிமியோனின் மகன்;
சிமியோன் யூதாவின் மகன்; யூதா யோசேப்
பின் மகன்; யோசேப்பு யோனாமின் மகன்;
யோனாம் எலியாக்கீமின் மகன்; எலியாக்கீம்
மெலெயாவின் மகன்; 31 மெலெயா மென்
னாவின் மகன்; மென்னா மாத்தாத்தாவின்
மகன், மாத்தாத்தா நாத்தாமின் மகன்;
நாத்தாம் தாவீதின் மகன்; 32 தாவீது
ஈசாயின் மகன்; ஈசாய் ஓபேதின் மகன்;
ஓபேத் போவாசின் மகன்; போவாஸ்
சாலாவின் மகன்; சாலா நகசோனின் மகன்;
நகசோன் அமினதாபின் மகன்;
33 அமினதாபு அத்மீனின் மகன்; அத்மீன்
ஆர்னியின் மகன்; ஆர்னி எஸ்ரோ
மின் மகன்; எஸ்ரோம் பேரேசின் மகன்;
பேரேஸ் யூதாவின் மகன்; யூதா யாக்கோ
பின் மகன்; 34 யாக்கோபு ஈசாக்கின்
மகன்; ஈசாக்கு ஆபிரகாமின் மகன்; ஆபிர
காம் தேராகின் மகன்; தேராகு
நாகோரின் மகன்; 35 நாகோர் செரூகின்
மகன்; செரூகு ரெகூவின் மகன்; 36 ரெகூ
பேலேகின் மகன்; பேலேகு ஏபேரின்
மகன்; ஏபேர் சாலாவின் மகன்; சாலா
காயினானின் மகன்; காயினான் அர்ப்பகசாத்
தின் மகன்; அர்ப்பகசாத் சேமின் மகன்;
சேம் நோவாவின் மகன்; நோவா
லாமேக்கின் மகன்; 37 லாமேக்கு மெத்து
சலாவின் மகன்; மெத்துசலா ஏனோக்கின்
மகன்; ஏனோக்கு யாரேத்தின் மகன்;
யாரேத்து மகலாலெயேலின் மகன்; மகலா
லெயேல் காயினானின் மகன்; காயினான்
ஏனோசின் மகன்; 38 ஏனோஸ் சேத்தின்
மகன்; சேத் ஆதாமின் மகன்; ஆதாம்
கடவுளின் மகன்.

### இயேசு சோதிக்கப்படுதல்

(மத். 4:1—11; மாற். 1:12,13)

4 இயேசு தூயஆவியினால் நிறைந்தவராய்
யோர்தானை விட்டுத் திரும்பினபின்
அந்த ஆவியினால் வனாந்தரத்தில் வழிநடத்
தப்பட்டுவந்த காலத்தில், நாற்பது நாள்
பிசாசினால் சோதிக்கப்பட்டார். 2 அந்நாள்
களில் அவர் ஒன்றும் உட்கொள்ளவில்லை.
அந்நாள்கள் கழிந்ததும் அவருக்குப்
பசியுண்டாயிற்று. 3 அப்பொழுது
பிசாசு அவரை நோக்கி, ''நீர்
கடவுளின் மைந்தரானால் இந்தக் கல் அப்ப
மாகும்படி சொல்லும்'' என்றான்.
4 அதற்கு இயேசு, ''மனிதன் வாழ்வது அப்
பத்தினால் மட்டுமன்று, [கடவுளுடைய ஒவ்
வொரு வார்த்தையினாலும் வாழ்வான்]
என்று வேதத்தில் எழுதியிருக்கிறது'' என்
றார். 5 பிறகு பிசாசு அவரை *உயரக்
கொண்டுபோய், உலகத்தின் அரசுகள்
அனைத்தையும் ஒரு நொடிப்பொழுதில்
அவருக்குக் காட்டி, 6 ''இவற்றின்மேல்
முழு அதிகாரத்தையும், இவற்றின் மாட்சி
மையையும் உமக்குத் தந்திடுவேன், இவை
யாவும் என்னிடம் ஒப்படைக்கப்பட்டிருக்
கின்றன. இவற்றை யாருக்குக் கொடுக்க
விரும்புகிறேனோ அவனுக்குக் கொடுக்க என்
னால் இயலும். 7 நீர் என்முன் விழுந்து
என்னைப் பணிந்தால் எல்லாம் உம்முடை
யவை ஆகும்'' என்று சொன்னான்.
8 அதற்கு இயேசு,

''‘உன் கடவுளாகிய ஆண்டவரை
வணங்கி, அவர் ஒருவருக்கே சேவை
செய்து வருவாயாக’

என்று எழுதியுள்ளதே'' என்றார்.
9 பிறகு அவன் அவரை எருசலேமுக்குக்
கொண்டு சென்று திருக்கோவிலின் உச்சி
யில் அவரை நிறுத்தி, ''நீர் கடவுளின்
மைந்தரானால், இங்கிருந்து கீழே குதியும்.
10 ஏனெனில்,

‘உம்மைக் காப்பாற்றும்படி தம்மு
டைய தூதருக்குக் கட்டளையிடுவார்’

என்றும்,

11 ‘உமது கால் கல்லிற் படாதபடி
அவர்கள் உம்மைத் தங்கள் கைகளில்
தாங்கிக்கொள்வார்கள்’

என்றும் எழுதியுள்ளது'' என்றான்.

* ‘உயர்ந்த மலையின்மேல் கொண்டுபோய்’ என்பது சில பிரதிகளின் பாடம்.
4:4 உபா. 8:3. 4:6 உபா. 6:13. 4:10 சங். 91:11. 4:11 சங். 91:12.

12 இயேசு அவனிடம், ''உன் கடவுளாகிய
ஆண்டவரைச் சோதிக்காதே என்றும் சொல்
லியிருக்கிறதே'' என்றார். 13 எல்லாச்
சோதனைகளையும் முடித்தபின்பு, வேறு சம
யம் வாய்க்கும் வரையிலும் பிசாசு அவரை
விட்டு விலகியிருந்தான்.

### கலிலேயாவில் ஊழியம் செய்யத் தொடங்குதல்

*(மத் 4:12—17; மாற். 1:14,15)*

14 பிறகு இயேசு ஆவியானவரின்
வல்லமையுடையவராய்க் கலிலேயாவுக்குத்
திரும்பிச்சென்றார். அவரைப் பற்றிய செய்தி
சுற்றுப்புறமெங்கும் பரவிற்று. 15 அவர்
அவர்களுடைய தொழுகைக்கூடங்களில்
போதித்து வந்தார். எல்லாரும் அவரைப்
புகழ்ந்தனர்.

### நாசரேத்தில் இயேசு புறக்கணிக்கப்படுதல்

*(மத். 13:53—58; மாற். 6:1—6)*

16 பிறகு அவர் தாம் வளர்ந்த ஊரா
கிய நாசரேத்துக்கு வந்து, தமது வழக்கப்
படியே ஓய்வுநாளில் தொழுகைக்கூடத்திற்
குச் சென்று, வேத பாடம் படிக்க எழுந்து
நின்றார். 17 இறைவாக்குரைப்பவராகிய
ஏசாயாவின் நூற்சுருள் அவரிடம் கொடுக்கப்
பட்டது. அவர் அதை விரித்து,

18 ''ஆண்டவருடைய ஆவி என்
மேல் இருக்கிறது;
அவர் என்னை அபிடேகம்
செய்துள்ளார்.
எளியவருக்கு அருட் செய்தியை அறி
விக்கவும்,
'சிறைப்பட்டோருக்கு விடுதலை!
குருடருக்குப் பார்வை!'
என்று அறிவிக்கவும்,
ஒடுக்கப்பட்டோர் விடுதலை
அடையும்படி செய்யவும்,
19 'இதோ! ஆண்டவர் அருள் தரும்
ஆண்டு!' என்று அறிவிக்கவும் அவர்
என்னை அனுப்பியுள்ளார்''

என்று எழுதியிருக்கிற பாகத்தை எடுத்துப்
படித்த பிறகு, 20 அந்த நூலைச் சுருட்டிப்
பணிவிடைக்காரனிடம் கொடுத்துவிட்டு
உட்கார்ந்தார். தொழுகைக் கூடத்திலுள்ள
எல்லாருடைய பார்வையும் அவர்மேலேயே
இருந்தது. 21 அப்பொழுது அவர் அவர்களை
நோக்கி, ''இன்றைக்கு நீங்கள் இந்த வேத
பாகத்தைக் கேட்கையிலேயே இது நிறை
வேறுகிறது'' என்றார். 22 எல்லாரும் அவ
ரைப் பாராட்டி, அவருடைய வாயினின்று
எழுந்த அருள்மொழிகளைக் கேட்டு வியப்
புற்று, ''இவன் யோசேப்பின் மகன்தானே''
என்றனர். 23 அவர் அவர்களைப் பார்த்து
''நீங்கள் என்னிடம், 'மருத்துவனே, உன்னை
நீயே குணப்படுத்திக்கொள்' என்கிற பழ
மொழியைச் சொல்லுவதோடு, 'நாங்கள்
கேள்விப்பட்டபடி கப்பர்நகூமில் நீ செய்த
செயல்கள் எவையோ அவற்றை உன் சொந்த
ஊராகிய இவ்விடத்திலும் செய்' என்பீர்
கள் என்பது திண்ணம். 24 நானே உங்
களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன்:
இறைவாக்குரைக்கும் எவரும் தம் சொந்த
ஊரில் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை.
25 எலியாவின் காலத்தில் மூன்றரை ஆண்டு
வானம் அடைபட்டு, நாடெங்கும் கொடிய
உணவுப் பஞ்சம் உண்டானது. அக்காலத்
தில், இஸ்ரவேலரிடையே கைம்பெண்கள்
பலர் இருந்தனர். 26 ஆயினும், அவர்
களுள் எவரிடமும் எலியா அனுப்பப்பட
வில்லை; சீதோன் நாட்டிலுள்ள சரெப்தா
ஊரிலிருந்த ஒரு கைம்பெண்ணிடமே அனுப்
பப்பட்டார். 27 மேலும், இறைவாக்
குரைப்பவராகிய எலிசாவின் காலத்தில்
இஸ்ரவேலரிடையே தொழுநோயுள்ளவர்
பலர் இருந்தனர்; அவர்களுள் எவனும் குண
மாக்கப்படவில்லை. சீரியா நாட்டினனாகிய
நாகமானே குணமாக்கப்பட்டான் என்னும்
உண்மையையும் உங்களுக்குச் சொல்லு
கிறேன்'' என்றார். 28 இவற்றைக் கேட்ட
போது தொழுகைக்கூடத்திலிருந்த அனை
வரும் வெகுண்டெழுந்து, 29 அவரை
ஊருக்கு வெளியே பிடித்துத் தள்ளி, தம்மு
டைய ஊர் அமைந்திருந்த மலையிலுள்ள
செங்குத்தான ஓர் இடத்திலிருந்து கீழே
தள்ளிவிடும்படி அவரை அங்கே நடத்திச்
சென்றனர். 30 அவரோ அவர்கள்
நடுவே சென்று அப்பாற் போய்விட்டார்.

### அசுத்த ஆவி பிடித்திருந்த ஒருவனைக் குணமாக்குதல்

*(மாற். 1:21—28)*

31 பிறகு இயேசு கலிலேயாவிலுள்ள
கப்பர்நகூம் என்னும் ஊருக்குச் சென்று,
ஓய்வுநாளன்று மக்களுக்குப் போதனை
அளித்தார். 32 அவரது பேச்சு அதிகாரம்
பொருந்தியதாய் இருந்தபடியால் அவரு
டைய போதனையைக் குறித்து அவர்கள்
வியப்படைந்தார்கள். 33 அத்தொழுகைக்
கூடத்திலே அசுத்த ஆவியான பேய் பிடித்த
ஒருவன் இருந்தான். 34 அவன் உரத்துக்
கத்தி, ''ஐயோ! நசரேயனாகிய இயேசுவே,
எங்களிடம் உமக்கு என்ன வேலை?
எங்களை அழிக்கவா வந்திருக்கிறீர்? நீர் இன்
னாரென்பது எனக்குத் தெரியும், நீர் தூயர்;
கடவுளிடமிருந்து வந்தவர்'' என்று சொன்

4:12 உபா. 6:16. 4:18,19 ஏசா 61:1,2. 4:24 யோ. 4:44. 4:25 1 அர. 17:1. 4:26 1 அர. 17:8—16.
4:27 2 அர. 5:1—14. 4:28 யோ. 7:30. 4:30 யோ. 8:59. 4:32 மத். 7:28, 29.

னான். 35 இயேசு பேயை அதட்டி,
''பேசாதே, இவனை விட்டு வெளியே போ''
என்றார்; அப்பொழுது பேய் அவனை அவர்
கள் நடுவில் கீழே தள்ளிவிட்டு, அவனுக்கு
ஒரு தீங்கும் செய்யாமல் அவனிடமிருந்து
நீங்கிப் போயிற்று. 36 எல்லாரும் திகைப்
புற்றனர்; ''இது என்ன வார்த்
தையோ! அதிகாரத்தோடும் வல்லமையோ
டும் அசுத்தஆவிகளுக்குக் கட்டளையிடுகிறார்;
அவையும் வெளியேறுகின்றன'' என்று ஒரு
வரோடொருவர் பேசிக்கொண்டனர்.
37 அவரது புகழ் சுற்றுப்புறமெங்கும்
பரவிற்று.

### இயேசு பலருக்குக் குணமளித்தல்
(மத். 8:14—17; மாற். 1: 29—34)

38 பிறகு அவர் தொழுகைக்கூடத்தை
விட்டு வெளியே போய், சீமோனுடைய
வீட்டிற்குள் சென்றார்; அங்கே சீமோனு
டைய மாமி கொடிய காய்ச்சலால் வருந்
திக்கொண்டிருந்தாள். அவளைக் குணப்
படுத்தும்படி அவரிடம் வேண்டிக்கொண்
டார்கள். 39 அவர் அவள் பக்கத்தில்
குனிந்து நின்று, காய்ச்சலை அதட்டவே,
அதுவும் அவளை விட்டு நீங்கிற்று. உடனே
அவள் எழுந்து அவர்களுக்குப் பணிவிடை
செய்தாள்.

40 கதிரவன் மறையும் நேரம் வந்த
போது, பல்வேறு நோய்களால் வருந்தின
வர்கள் யார் யார் வீட்டில் இருந்தார்
களோ அந்நோயாளிகளை அவர்களெல்லா
ரும் அவரிடம் கொண்டுவந்தனர். அவர்
கள் ஒவ்வொருவர் மேலும் அவர் தம்முடைய
கைகளை வைத்து, அவர்களைக் குணமாக்கி
னார். 41 அவர்களுள் பலரிடமிருந்த
பேய்களும், ''நீர் கடவுளின் மைந்தர்''
என்று கத்திக்கொண்டே வெளியேறின.
அவர் மேசியா என்பதைப் பேய்கள் அறிந்
திருந்தபடியால், அவர் அவற்றை அதட்டி,
பேச விடாமல் தடுத்தார்.

### இயேசு யூதேயாவில் அருளுரையாற்றுதல்
(மாற். 1:35-39)

42 பொழுது விடியும் வேளையில் இயேசு
புறப்பட்டுத் தனிமையான ஓரிடத்துக்குப்
போனார். மக்கள் அவரைத் தேடி அவரிடம்
வந்து, அவர் தங்களை விட்டுப் போகாதபடி
அவரை நிறுத்திக்கொள்ளப் பார்த்தார்கள்.
43 அவரோ அவர்களை நோக்கி, ''நான்
மற்ற ஊர்களிலும் கடவுளுடைய அரசின்
அருட்செய்தியை அறிவிக்கவேண்டும்,இதற்
காகவே அனுப்பப்பட்டிருக்கிறேன்'' என்று
சொன்னார். 44 பிறகு அவர் யூதேயா
நாட்டிலுள்ள தொழுகைக்கூடங்களில் அரு
ளுரையாற்றிவந்தார்.

### மீனவர் நால்வரை இயேசு அழைத்தல்
(மத். 4:18-22; மாற். 1:16-20)

5 ஒருநாள் மக்கள் அவரை
நெருக்கிக்கொண்டு கடவுளின்
வார்த்தையைக் கேட்டுக்கொண்டிருக்க,
2 அவர் கெனேசரேத்துக் கடலருகே
நின்று, கடலோரத்திலிருந்த இரண்டு
படகுகளைக் கண்டார். மீனவர்கள் அவற்றை
விட்டு இறங்கி, வலைகளை அலசிக்
கொண்டிருந்தார்கள். 3 அப்பொழுது
அவர் அந்தப் படகுகளுள் ஒன்றில் ஏறினார்.
அது சீமோனுடையது. அவர் அதைக் கரை
யிலிருந்து சற்றே தள்ளும்படி அவரைக்
கேட்டு, உட்கார்ந்துகொண்டு, படகிலிருந்து
மக்களுக்குப் போதித்தார். 4 அவர்
போதித்து முடித்தபின்பு சீமோனிடம்,
''படகை ஆழத்துக்குத் தள்ளிக்கொண்டு
போய் மீன் பிடிக்க உங்கள் வலைகளை வீசுங்
கள்'' என்றார். 5 அதற்குச் சீமோன்,
''ஐயா, இரவு முழுவதும் நாங்கள் முயற்சி
செய்தும் ஒன்றும் அகப்படவில்லை; ஆயி
னும், உமது சொற்படியே வலைகளை வீசு
கிறேன்'' என்றார். 6 அப்படியே அவர்கள்
செய்து, திரளான மீன்களைப் பிடித்தார்கள்.
7 வலைகள் கிழியத் தொடங்குகை
யில், மற்றப் படகிலிருந்த கூட்டாளிகள்
வந்து தங்களுக்கு உதவி செய்யும்படி அவர்
களுக்குச் சைகை காட்டினார்கள்; அவர்கள்
வந்து இரு படகுகளையும் மீன்களால் நிரப்பி
னார்கள்; அவை அமிழும் நிலையிலிருந்தன.
8 அதைக் கண்டு சீமோன் பேதுரு இயேசு
வின் காலில் விழுந்து, ''ஆண்டவரே, நான்
பாவியான மனிதன், நீர் என்னை விட்டுப்
போய்விடும்'' என்றார். 9 பிடித்த மீன்
களின் திரளைக் கண்டு அவரும் அவரோடி
ருந்த யாவரும், மற்றும் அவர் கூட்டாளி
களான செபெதேயுவின் மைந்தர்களான
யாக்கோபும், யோவானும் திகைத்துப்
போனார்கள். 10 அப்பொழுது இயேசு
சீமோனிடம், ''அச்சங்கொள்ளாதே, இந்
நேரமுதல் நீ மனிதரைப் பிடிக்கிறவனாய்
இருப்பாய்'' என்று சொன்னார். 11 அவர்
கள் படகுகளைக் கரையில் கொண்டுபோய்
நிறுத்தினபின், எல்லாவற்றையும் விட்டு
விட்டு அவரைப் பின்பற்றிச் சென்றார்கள்.

### தொழுநோயுள்ள ஒருவனைக் குணமாக்குதல்
(மத். 8:1-4; மாற். 1:40-45)

12 பிறகு இயேசு ஓர் ஊரில் இருக்கை
யில் தொழுநோய் நிறைந்த ஒரு மனிதன்
வந்தான். அவன் இயேசுவைக் கண்டு முகங்

5:1—3 மத். 13:12; மாற். 3:9, 10; 4:1. 5:5 யோ. 21:3. 5:6 யோ. 21:6. 5:8 யாத். 33:20; மத். 8:8. 5:9 மாற். 1:17—19. 5:10 யோ. 21: 15—17; 19.

குப்புற விழுந்து, ''ஐயா, உமக்கு மன
முண்டானால் என்னைக் குணமாக்க உம்மால்
ஆகும்'' என்று அவரை வேண்டிக்கொண்
டான். 13 அவர் தமது கையை நீட்டி,
அவனைத் தொட்டு, ''எனக்கு மனமுண்டு,
நீ குணமடைவாயாக'' என்றார். உடனே
தொழுநோய் அவனை விட்டு நீங்கிற்று.
14 அவர் அவனிடம், ''இதை ஒருவருக்கும்
சொல்லாதே, ஆனால் நீ ஆசாரியரிடம்
போய் உன்னைக் காட்டி, நீ குணமான
தற்காக, மக்களுக்குச் சான்றுதரும் வகையில்
மோசே கட்டளையிட்டுள்ள காணிக்கையைச்
செலுத்து'' என்று சொன்னார். 15 ஆயி
னும், அவரைப் பற்றிய செய்தி பெரிதளவில்
பரவிவந்தது. திரளான மக்கள் அவர்
போதனையைக் கேட்கவும், தங்கள் பிணி
களினின்று குணமடையவும் கூட்டங் கூட்ட
மாய் வந்தார்கள். 16 அவரோ வேளா
வேளையில் மறைவாக ஆள் நடமாட்டமில்
லாத இடத்திற்குச் சென்று ஜெபம் செய்து
கொண்டிருப்பார்.

### திமிர்வாதமுள்ள ஒருவனைக் குணமாக்குதல்
(மத். 9:1-8; மாற். 2:1-12)

17 ஒரு நாள் இயேசு போதித்துக்
கொண்டிருந்தார். கலிலேயா, யூதேயா
நாடுகளிலுள்ள எல்லா ஊர்களிலும் எருச
லேம் நகரத்திலுமிருந்து வந்த பரிசேயரும்
நீதிச்சட்ட அறிஞர்களும் உட்கார்ந்திருந்
தார்கள். பிணியாளிகளைக் குணமாக்க
ஆண்டவரின் வல்லமை இயேசுவுக்குள்
இருந்தது. 18 அப்பொழுது சிலர் திமிர்
வாதமுள்ள ஒரு மனிதனைப் படுக்கையோடே
சுமந்துகொண்டு வந்து, அவனை உள்ளே
கொண்டுபோய் அவர்முன் வைக்க வழிதேடி
னர். 19 கூட்டம் பெரிதாயிருந்ததால்,
அவனை உள்ளே கொண்டுபோக வழி காணா
மல், வீட்டின்மேல் ஏறி, ஓடுகளுக்கிடையே
வழியுண்டாக்கி, இயேசுவுக்குமுன் கூட்
டத்தின் நடுவில் அவனைப் படுக்கையோடு
இறக்கினார்கள். 20 அவர்களுக்கிருந்த நம்பிக்
கையை அவர் கண்டு, ''மனிதனே, உன்
பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டுவிட்
டன'' என்றார். 21 இதைக் கேட்ட வேத
அறிஞரும் பரிசேயரும், தன்னைக் கடவுளுக்
குச் சமமாக்கிக்கொண்டு அவரைப் பழிக்
கிற இவன் யார்? கடவுள் ஒருவராலன்றிப்
பாவங்களை மன்னிக்க யாரால் இயலும்?''
என்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்
டனர். 22 இயேசு அவர்கள் சிந்தனைகளை
அறிந்து, அவர்களுக்கு மறுமொழியாக,
23 ''உங்கள் உள்ளத்தில் நீங்கள் இப்படிச்
சிந்திப்பதேன்? 'உன் பாவங்கள் உனக்கு
மன்னிக்கப்பட்டுவிட்டன' என்று சொல்
வதா அல்லது 'எழுந்து நட' என்று சொல்
வதா, எது எளிது? 24 என்றாலும், உல
கிலே பாவங்களை மன்னிக்க மனுமைந்த
ருக்கு அதிகாரம் உண்டென்பதை நீங்கள்
அறிய வேண்டும்'' என்று சொல்லிவிட்டு,
திமிர்வாதமுள்ளவனைப் பார்த்து, ''நான்
உனக்குச் சொல்லுகிறேன்: நீ எழுந்து உன்
படுக்கையை எடுத்துக்கொண்டு உன் வீட்
டுக்குப் போ'' என்று சொன்னார். 25 உடனே
அவன் அவர்கள் காண எழுந்து தன்
படுக்கையை எடுத்துக்கொண்டு, கடவுளைப்
புகழ்ந்துகொண்டே தன் வீட்டுக்குப்
போனான். 26 எல்லாரும் வியப்படைந்
தனர்; கடவுளைப் புகழ்ந்தனர்; அச்சம்
நிறைந்தவர்களாகி, ''புதுமையான காரி
யங்களை இன்று கண்டோம்'' என்றனர்.

### இலேவி என்பவரைச் சீடராக்குதல்
(மத். 9:9-13; மாற். 2:13-17)

27 இதன்பின் இயேசு புறப்பட்டுப்போய்
சுங்கச்சாவடியில் உட்கார்ந்திருந்த இலேவி
என்ற ஆயக்காரரைக் கண்டு, ''என்னைப்
பின்பற்றிவா'' என்றார். 28 அவர் எல்லா
வற்றையும் விட்டுவிட்டு எழுந்து, அவரைப்
பின்பற்றிச் செல்லலானார். 29 அந்த
இலேவி தன் வீட்டில் அவருக்குப் பெரிய
விருந்தளித்தார். ஆயக்காரர் பலரும் மற்ற
வர்களும் அவர்களோடு பந்தியிலமர்ந்தார்
கள். 30 அதைக் கண்ட பரிசேயரும் அவர்
களைச் சேர்ந்த வேத அறிஞரும் அவருடைய
சீடரைக் குற்றப்படுத்தும் நோக்கத்தோடு
''நீங்கள் * ஆயக்காரரோடும் பாவிகளோ
டும் உணவும் பானமும் அருந்துகிறீர்களே!
இது ஏன்?'' என்று அவர்களைக் கேட்டார்
கள். 31 இயேசு அவர்களுக்கு மறுமொழி
யாக, ''நோயற்றவர்களுக்கன்று, நோயுற்ற
வர்களுக்கே மருத்துவன் தேவை. 32 நேர்மை
யானவர்களையன்று, பாவிகளையே மன
மாற்றம் அடையும்படி அழைக்க வந்தேன்''
என்றார்.

### நோன்பிருத்தலைப்பற்றிய கேள்வி
(மத். 9:14-17; மாற். 2:18-22)

33 பிறகு அவர்கள் அவரிடம், ''யோவா
னுடைய சீடர்கள் அடிக்கடி நோன்பிருந்து
ஜெபம் செய்துவருகிறார்கள், பரிசேயரு
டைய சீடர்களும் அப்படியே செய்கிறார்
கள்; உம்முடைய சீடர்களோ எல்லா நாள்
களிலும் உணவும் பானமும் அருந்துகிறார்
களே!'' என்றார்கள். 34 அதற்கு இயேசு,
''மணவாளன் தன்னுடைய தோழரோடு
இருக்குமளவும் அந்தத் தோழரை நோன்
பிருக்கும்படி செய்ய உங்களால் இயலுமா?
35 மணவாளன் அவர்களை விட்டுப் பிரிக்கப்
படும் காலம் வரும்; அக்காலத்தில் நோன்
பிருப்பார்கள்'' என்றார். 36 அவர்களுக்கு

* மத். 5:46 அடிக்குறிப்பைப் பார்க்க.

**5:14** இலே. 14:1—32. **5:26** திருத்தூது. 19:17. **5:30** லூக். 15:1, 2. **5:39** யோ. 3:19.

ஓர் உவமையையும் சொன்னார்: ''ஒரு
வனும் புதிய ஆடையிலிருந்து ஒரு துண்
டைக் கிழித்து, அதைப் பழைய ஆடை
யோடு இணைக்க மாட்டான்; இணைத்தால்
அது புதிய ஆடையைக் கிழித்துவிடும்,புதிய
துண்டும் பழையதோடு பொருந்தாது.
37 அவ்வாறே, ஒருவனும் புதிய திராட்சை
இரசத்தைப் பழைய துருத்திகளில் ஊற்றி
வைக்க மாட்டான்; ஊற்றி வைத்தால் புதிய
இரசம் துருத்திகளைக் கிழித்துவிடும், இரச
மும் சிந்திப்போகும், துருத்திகளும் கெட்
டுப்போகும். 38 புதிய இரசத்தைப் புதிய
துருத்திகளில் ஊற்றிவைக்க வேண்டும்.
39 பழைய இரசத்தைக் குடித்தவன் புதி
யதை விரும்ப மாட்டான். பழையதே நல்
லது என்று சொல்லுவான்'' என்றார்.

### ஓய்வுநாளில் கதிர் கொய்தல்

*(மத். 12:1-8; மாற். 2:23-28)*

6 இயேசு ஓர் ஓய்வுநாளன்று வயல்
வழியே போகையில், அவருடைய சீடர்
கதிர்களைக் கொய்து, கைகளினால் நிமிட்
டித் தின்றனர். 2 பரிசேயர் சிலர் அவர்
களைப் பார்த்து, ''ஓய்வு நாளில் செய்யத்
தகாததை நீங்கள் ஏன் செய்கிறீர்கள்?''
என்று கேட்டனர். 3 இதைக் கேட்ட
இயேசு அவர்களிடம், ''தாவீதும் அவருட
னிருந்தவர்களும் பசியோடிருந்தபோதுஅவர்
செய்ததைக் குறித்து நீங்கள் படித்ததில்
லையா? 4 அவர் கடவுளின் வீட்டிற்குள்
சென்று, ஆசாரியர் தவிர வேறெவரும் உண்
ணக்கூடாத படையல் அப்பங்களைப் பெற்று
தாமும் உண்டு, தம்முடனிருந்தவர்களுக்கும்
கொடுத்தாரே'' என்று கூறி, 5 ''ஓய்வு
நாளுக்கு ஆண்டவர் மனுமைந்தரே!''என்று
சொன்னார்.

### சூம்பின கையன் குணமடைதல்

*(மத். 12:9-14; மாற். 3:1-6)*

6 வேறோர் ஓய்வுநாளில் இயேசு தொழு
கைக்கூடத்திற்குள் சென்று போதித்துக்
கொண்டிருந்தார். அங்கே ஒரு மனிதன்
இருந்தான். அவனது வலக்கை சூம்பியிருந்
தது. 7 வேத அறிஞரும் பரிசேயரும்
அவர்மேல் குற்றம் சுமத்துவதற்கான கார
ணம் கண்டுபிடிப்பதற்காக, ஓய்வுநாளில்
அவர் குணமாக்குவாரோ என்று அவரைக்
கூர்ந்து கவனித்துக்கொண்டிருந்தார்கள்.
8 அவரோ அவர்கள் சிந்தனைகளை அறிந்து,
சூம்பின கையனைப் பார்த்து, ''எழுந்து
நடுவே நில்'' என்று சொன்னார்; அவன்
எழுந்து நின்றான். 9 அப்பொழுது இயேசு
அவர்களிடம், ''ஓய்வுநாளில் நன்மை செய்
வதா தீமை செய்வதா, உயிரைக் காப்
பதா அதை அழிப்பதா, எது சட்டத்திற்கு
ஏற்றது என்று உங்களைக் கேட்கிறேன்''
எனச் சொல்லி, 10 சுற்றிலுமிருந்த எல்
லாரையும் பார்த்துவிட்டு, அந்த மனித
னிடம், ''உன் கையை நீட்டு'' என்றார்.
அவன் நீட்டினான்; அவனுடைய கை சீர்
பட்டது. 11 அவர்களோ சீற்றவெறி
கொண்டு, இயேசுவை என்ன செய்யலா
மென்று ஒருவரோடொருவர் பேசித் திட்ட
மிடலானார்கள்.

### பன்னிரு திருத்தூதுவரை இயேசு தேர்ந்துகொள்ளுதல்

*(மத். 10:1-4; மாற். 3:13-19*

12 அக்காலத்தில் ஒரு நாள் இயேசு
ஜெபம் செய்வதற்காக மலைக்குப் போய்,
இரவு முழுவதும் கடவுளிடம் வேண்டுதல்
செய்துகொண்டிருந்தார். 13 பொழுது
விடிந்தபோது, அவர் தம்முடைய சீடர்
களை வரவழைத்து அவர்களுள் பன்னிருவ
ரைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்குத் திருத்
தூதுவர் என்று பெயரிட்டார். 14 அவர்
கள், பேதுரு என்று அவர் மறுபெயரிட்ட
சீமோன், அவருடைய சகோதரன் அந்தி
ரேயா, யாக்கோபு, யோவான், பிலிப்பு,
பர்தலொமேயு, 15 மத்தேயு, தோமா,
அல்பேயுவின் மகன் யாக்கோபு, தீவிரவாதி
எனப்பட்ட சீமோன், 16 யாக்கோபின்
சகோதரன் யூதா, அவரைக் காட்டிக்
கொடுத்த யூதா இஸ்காரியோத்து என்ப
வர்களே.

### திரளான மக்களுக்குக் குணமளித்தல்

*(மத். 4:23-25)*

17 இயேசு அப்பன்னிருவருடன் இறங்கி
வந்து, சமதளமான இடத்தில் நின்றார். அவ
ருடைய மற்றச் சீடருள் பலரும் யூதேயா
முழுவதிலும் எருசலேமிலும் தீரு சீதோன்
கடற்கரைகளிலுமிருந்து வந்த திரளான
மக்களும் அங்கே இருந்தார்கள். 18 அவரது
போதனையைக் கேட்கவும், தங்கள் பிணி
களைத் தீர்த்துக்கொள்ளவும் அவர்கள் வந்
திருந்தார்கள். அசுத்த ஆவிகளால் தொல்
லைக்குள்ளானவர்களும் வந்திருந்தார்கள்.
அவர்களும் அவரால் குணமாக்கப்பட்டார்
கள். 19 அவரிடமிருந்து வல்லமை புறப்
பட்டு எல்லாரையும் குணமாக்கினதால்
அனைவரும் தம் கையால் அவரைத் தொடு
வதற்கு முயற்சி செய்தனர்.

### நற்பேறு பெற்றோர் யார்?

*(மத். 5:1-12)*

20 இயேசு தம்முடைய சீடரை நோக்கி,
''எளியவர்களாகிய நீங்கள் நற்பேறு
பெற்றவர்கள், கடவுளின் அரசு உங்களுக்
குரியது.

6:1 உபா. 23:25. 6:4 இலே. 24:9. 6:3, 4: 1 சாமு. 21:1—6. 6:19 மாற். 5:30. 6:20, 21 மத்.5:1—5.

21 ''இப்போது பசியோடிருக்கிற நீங்
கள் நற்பேறுபெற்றவர்கள், கடவுள் உங்கள்
பசியைப் போக்குவார்.
''இப்போது அழுகிற நீங்கள் நற்பேறு
பெற்றவர்கள், நீங்கள் நகைப்பீர்கள்,
22 ''மனுமைந்தர் பொருட்டு மக்கள்
உங்களை வெறுத்து, உங்களை விலக்கிவைத்து
இழித்துரைத்து, உங்கள் பெயரே ஆகா
தென்று ஒதுக்கிவிடும்போது, நீங்கள் நற்
பேறு பெற்றவர்களாவீர்கள். 23 அந்நாளில்
மனமகிழ்ந்து துள்ளிக் குதியுங்கள்; விண்
ணுலகில் உங்கள் பலன் மிகுதியாகும். அவர்
கள் மூதாதையரும் இறைவாக்குரைப்
போருக்கு அப்படியே செய்துவந்தனர்.

## கேடு வருவது யாருக்கு ?

24 ''செல்வர்களே, உங்களுக்குக் கேடு
வரும். உங்களுக்கு ஆறுதல் கிடைத்துவிட்
டது.
25 ''இப்போது நிறைவுள்ளவர்களாய்
இருக்கிறவர்களே, உங்களுக்குக் கேடு வரும்.
இனிப் பசியோடிருப்பீர்கள்.
''இப்போது நகைக்கிறவர்களே, இனித்
துயரப்பட்டு அழுவீர்கள்.
26 ''எல்லா மனிதரும் உங்களைப்
புகழ்ந்து பேசும்போது, உங்களுக்குக் கேடு
வரும்; அவர்கள் மூதாதையரும் பொய்யாக
இறைவாக்குரைப்போருக்கு அப்படியே
செய்தனர்.

## எதிரிகளிடம் அன்புகொள்ளுங்கள்

(மத். 5:38-48; 7:12)

27 ''ஆனால் எனக்குச் செவிசாய்க்கிற உங்
களுக்கு நான் சொல்லுகிறேன்: உங்கள்
எதிரிகளிடம் அன்புகொள்ளுங்கள்; உங்களை
வெறுக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள்;
உங்களைச் சபிக்கிறவர்களுக்கு ஆசிகூறுங்கள்;
28 உங்களைத் தூற்றுவோருக்காகக் கட
வுளிடம் வேண்டுதல் செய்யுங்கள்.
29 உன்னை ஒரு கன்னத்தில் அறைகிறவனுக்கு
மறு கன்னத்தையும் திருப்பிக் காட்டு. உன்
மேலாடையை எடுத்துக்கொள்ளுகிறவன்
உன் உள்ளாடையையும் எடுக்கப் பார்த்
தால் அவனைத் தடுக்காதே. 30 உன்னிடம்
கேட்பவன் எவனுக்கும் கொடு; உன்னுடை
யதை எடுத்துக்கொள்பவனிடம் அதைத்
திருப்பிக் கேட்காதே. 31 பிறர் உங்களுக்கு
எப்படிச் செய்ய வேண்டுமென்று விரும்பு
கிறீர்களோ அப்படியே நீங்களும் அவர்களுக்
குச் செய்யுங்கள். 32 உங்களிடம் அன்பு
கொள்கிறவர்களிடமே நீங்களும் அன்பு
கொண்டால், நீங்கள் அடையும் தனிச்
சிறப்பு என்ன? பாவிகளும் தங்களிடம் அன்பு
கொள்கிறவர்களிடந்தான் அன்புகொள்கி
றார்கள். 33 உங்களுக்கு நன்மை செய்கிற
வர்களுக்கே நீங்கள் நன்மை செய்தால், நீங்
கள் அடையும் தனிச்சிறப்பு என்ன?
பாவிகளும் அதைத்தான் செய்கிறார்கள்.
34 திரும்பப் பெற்றுக்கொள்ளலாமென்று
எதிர்பார்த்து நீங்கள் கடன் கொடுத்தால்,
நீங்கள் அடையும் தனிச்சிறப்பு என்ன? பாவி
கள்கூடச் சரிக்குச்சரி திரும்பப் பெற்றுக்
கொள்வதற்கென்று பாவிகளுக்குக் கடன்
கொடுக்கிறார்களே. 35 நீங்களோ உங்கள்
எதிரிகளிடம் அன்புகொள்ளுங்கள்; நன்மை
செய்யுங்கள்; பதிலுக்கு எதையும் எதிர்
பாராமல் கடன் கொடுங்கள்; அப்பொழுது
உங்களுக்கு மிகுதியான கைம்மாறு கிடைக்
கும். நீங்கள் உன்னதமானவருடைய மக்க
ளாயிருப்பீர்கள். ஏனெனில், அவர் நன்றி
கெட்டோருக்கும் பொல்லாருக்கும் பரிவு
காட்டுகிறவராய் இருக்கிறார். 36 உங்கள்
விண்ணகத் தந்தை இரக்கமுள்ளவராய்
இருக்கிறவாறே நீங்களும் இரக்கமுள்ளவ
வர்களாய் இருங்கள்.

## பிறருக்குத் தீர்ப்பளித்தல்

(மத். 7:1—5)

37 ''பிறரைக் குற்றவாளிகளென்று
தீர்ப்புக் கூறாதீர்கள்; அப்பொழுது நீங்களும்
குற்றவாளிகளென்ற தீர்ப்புப் பெறாதிருப்
பீர்கள். பிறரைத் தண்டனைக்கு ஆளாக்கா
தீர்கள்; அப்பொழுது நீங்களும் தண்ட
னைக்கு ஆளாக மாட்டீர்கள். மன்னியுங்கள்,
அப்பொழுது உங்களையும் கடவுள் மன்னிப்
பார். 38 கொடுங்கள், அப்பொழுது உங்
களுக்கும் கொடுக்கப்படும்; அமுக்கிக் குலுக்
கிச் சரிந்து விழும்படி நன்றாக அளந்து,
உங்கள் மடியிலே போடுவார்கள். நீங்கள்
அளக்கும் அளவின்படியே உங்களுக்கும்
அளக்கப்படும்'' என்றார்.

39 பிறகு அவர் ஓர் உவமையை அவர்
களுக்குச் சொன்னார். ''குருடனைக் குருட
னால் வழிநடத்த இயலுமா? அவர்கள் இரு
வரும் குழியில் விழுவார்களல்லவா?
40 எப்படியும் சீடன் எவனும் தன் குருவை
விடத் தேறினவனாகப் போவதில்லை. அவன்
முழுப் பயிற்சி பெற்றாலும் தன் குருவைப்
போலவேதான் இருப்பான். 41 நீ உன்
கண்ணிலுள்ள தூலத்தைக் கவனியாமல்,
உன் சகோதரன் கண்ணிலுள்ள துரும்பைப்
பார்ப்பதேன்? 42 அல்லது நீ உன் கண்ணி
லுள்ள தூலத்தைப் பாராமல், உன் சகோ
தரனிடம், 'சகோதரனே, உன் கண்ணி
லுள்ள துரும்பை எடுத்துவிடுகிறேன்' என்று
நீ எப்படிச் சொல்லலாம்? போலி பக்தனே,

**6:22** மத். 5:11, 12; 1 பேது. 4:14. **6:23** 2 வரலாறு. 36:16; திருத்தூது. 7:52. **6:24** லூக். 16:25. **6:28** 1 பேது. 3:9. **6:33** லூக். 14:12—14. **6:39** மத். 15:14. **6:40** மத். 10:24, 25; யோ. 13:16; 15:20.

முதலில் உன் கண்ணிலுள்ள தூலத்தை
எடுத்துவிடு; பிறகு உன் சகோதரன் கண்ணி
லுள்ள துரும்பை எடுக்க உனக்குத் தெளி
வான பார்வை கிடைக்கும்.

### மரமும் கனியும்
(மத். 7:17–20;12:33–35)

43 ''நல்ல மரம் நச்சுக்கனி கொடாது,
நச்சு மரம் நல்ல கனி கொடாது. 44 அந்
தந்த மரம் அதனதன் கனியினால் அறியப்
படும். யாரும் முட்செடிகளில் அத்திப் பழங்
களைப் பறிப்பதுமில்லை, நெருஞ்சிச் செடியில்
திராட்சைப் பழங்களை அறுப்பதுமில்லை.
45 நல்ல மனிதன் தன் உள்ளத்திலிருக்கும்
நல்ல களஞ்சியத்திலிருந்து நலமானதை
எடுத்து அளிக்கிறான். பொல்லாத மனிதன்
தன்னுள் இருக்கும் பொல்லாத களஞ்சியத்
திலிருந்து பொல்லாததை எடுத்து
அளிக்கிறான். உள்ளத்தில் நிறைந்துள்ள
தையே ஒருவனுடைய வாய் பேசும்.

### இருவகையான வீடுகள்
(மத். 7:24–27)

46 ''நீங்கள் என்னை ஆண்டவரே, ஆண்
டவரே என்று அழைத்தும், நான் சொல்லு
கிறபடி நீங்கள் ஏன் செய்கிறதில்லை? 47 என்
னிடம் வந்து, என் வார்த்தைகளைக் கேட்டு,
அவற்றின்படி செய்கிற ஒவ்வொருவனும்
யாரை ஒத்திருப்பான் என்பதை உங்களுக்
குக் காண்பிக்கிறேன். 48 ஆழமாகத்
தோண்டி, கற்பாறையின்மேல் அடித்தள
மிட்டு, வீடு கட்டின மனிதனை அவன் ஒத்
திருப்பான். வெள்ளம் வந்தபோது,நீரோட்
டம் அந்த வீட்டின்மேல் மோதியும், அதை
அசைக்க இயலவில்லை; ஏனெனில், அது நன்
றாய்க் கட்டப்பட்டிருந்தது. 49 என் வார்த்
தைகளைக் கேட்டும் அவற்றின்படி செய்யா
தவனோ அடித்தளமில்லாமல் மண்ணின்
மேல் வீடு கட்டினவனை ஒத்திருப்பான்.
நீரோட்டம் அதன்மேல் மோதினவுடனே
அது விழுந்தது; அந்த வீடு முற்றிலும்
அழிந்தது'' என்றார்.

### நூற்றுவர் தலைவனின் வேலைக்காரன் குணமடைதல்
(மத். 8:5–13; யோ. 4:43–54)

7 இவற்றையெல்லாம் மக்களுக்குச்
சொல்லி முடித்தபின் இயேசு கப்பர்
நகூமுக்குச் சென்றார். 2 அங்கே நூற்றுவர்
தலைவன் ஒருவனுடைய வேலைக்காரன்
நோயுற்றுச் சாகுந்தறுவாயிலிருந்தான்;
அவன் அந்தத் தலைவனுக்கு அருமையான
வன். 3 அந்தத் தலைவன் இயேசுவைப் பற்
றிக் கேள்விப்பட்டபோது, அவர் வந்து தன்
வேலைக்காரனைக் குணப்படுத்த வேண்டும்
என்று அவரை வேண்டிக்கொள்ள யூதரின்
மூப்பர் சிலரை அவரிடம் அனுப்பினான்.
4 அவர்கள் இயேசுவினிடம் வந்து, ''நீர்
இந்த உதவி செய்கிறதற்கு அவர் தகுதி
யுள்ளவர்; 5 நம்முடைய இனத்தை நேசிக்
கிறார். எங்களுக்கு ஒரு தொழுகைக்கூடத்
தையும் கட்டியிருக்கிறார்'' என்று சொல்லி
அவரை வருந்தி அழைத்தார்கள். இயேசு
அவர்களோடு போனார். 6 வீட்டுக்குச் சற்
றுத் தொலைவில் இருந்தபோது, நூற்றுவர்
தலைவன் தன் நண்பர் சிலரை அவரிடம்
அனுப்பி, ''ஐயா, உமக்கு இந்தத் தொந்
தரவு வேண்டாம், நீர் என் வீட்டிற்குள்
வர நான் தகுதியற்றவன். 7 ஆகையால்
உம்மிடம் வரவும் எனக்குத் தகுதியிருப்ப
தாக நான் எண்ணவில்லை; ஆனாலும், ஒரு
வார்த்தை சொல்லும்; அப்பொழுது என்
வேலைக்காரன் குணமடைவான். 8 நான்
அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்ட மனிதன்தான்,
எனக்குக் கீழேயும் படைவீரர் உண்டு;
நான் ஒருவனிடம், 'போ' என்கிறேன்,
அவன் போகிறான்; வேறொருவனிடம், 'வா'
என்கிறேன், அவன் வருகிறான்; என் அடி
மையிடம், 'இதைச் செய்' என்கிறேன்,
அவன் செய்கிறான் என்று சொல்லுங்கள்''
என்றான். 9 இயேசு இவற்றைக் கேட்டு
அவனைக் குறித்து வியப்படைந்து, தமக்குப்
பின் வந்துகொண்டிருந்த கூட்டத்தைத்
திரும்பிப் பார்த்து, ''இத்தகைய நம்பிக்
கையை நான் இஸ்ரவேல் மக்களிடையிலும்
கண்டதில்லை என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன்'' என்றார். 10 அனுப்பப்பட்டவர்
கள் வீட்டிற்குத் திரும்பி வந்தபோது,
வேலைக்காரன் குணமடைந்திருப்பதைக் கண்
டார்கள்.

### நாயீன் ஊர்க் கைம்பெண்ணின் மகன் உயிர்த்தெழுதல்

11 அதற்குப் பிறகு இயேசு நாயீன் என்
னும் ஓர் ஊருக்குப் போனார். அவருடைய
சீடரும் திரளான மக்களும் அவருடன்
போனார்கள். 12 அவர் ஊரின் வாயிலை
நெருங்கினபோது, சிலர் இறந்துபோன
ஒருவனைத் தூக்கிக்கொண்டு வெளியே வந்து
கொண்டிருந்தனர். அவன் தாய்க்கு ஒரே
மகன், அவளும் ஒரு கைம்பெண்; அவளு
டன் ஊராருள் பலர் பெருங்கூட்டமாய்
இருந்தனர். 13 ஆண்டவர் அவளைப்
பார்த்தபோது, அவள்மேல் மனவுருக்கங்
கொண்டு, ''அழாதே'' என்று சொன்னார்;
14 பாடை அருகில் சென்று அதைத்
தொட்டார்; அதைச் சுமந்து வந்தவர்கள்
நின்றார்கள். அப்பொழுது அவர், ''இளை

6:46 மத். 7:21 7:5 திருத்தூது. 10:1, 22.

ஞனே, உனக்குச் சொல்லுகிறேன்: எழுந்
திரு'' என்றார். 15 இறந்தவன் எழுந்து உட்
கார்ந்து பேசத் தொடங்கினான்; அவர் அவ
னைத் தாயினிடம் ஒப்புவித்தார். 16 அனை
வரையும் அச்சம் ஆட்கொள்ள. ''நம்மி
டையே இறைவாக்குரைக்கும் ஒருவர்தோன்
றியிருக்கிறார், கடவுள் தம்முடைய மக்க
ளைத் தேடி வந்திருக்கிறார்'' என்று சொல்லிக்
கடவுளைப் புகழ்ந்தார்கள். 17 அவரைப்
பற்றிய இந்தச் செய்தி யூதேயா நாடு முழு
வதிலும் சுற்றுப்புறமெங்கும் பரவிற்று.

### திருமுழுக்குநர் யோவானிடமிருந்து வந்த தூதுவர்

(மத். 11:2–19)

18 இவை அனைத்தையும் யோவானு
டைய சீடர்கள் அவரிடம் அறிவித்தார்கள்.
அப்பொழுது யோவான் தம் சீடருள் இரு
வரை ஆண்டவரிடம் அனுப்பி, 19 ''வர
வேண்டியவர் * நீர்தானா? அல்லது வேறொரு
வருக்காக நாங்கள் எதிர்நோக்கியிருக்க
வேண்டுமா?'' என்று கேட்கும்படி சொன்
னார். 20 அவர்கள் அவரிடம் வந்து, ''வர
வேண்டியவர் நீர்தானா, அல்லது வேறொரு
வருக்காக நாங்கள் எதிர்நோக்கியிருக்க
வேண்டுமா என்று கேட்கும்படி திருமுழுக்கு
நர் யோவான் எங்களை உம்மிடம் அனுப்
பினார்'' என்றார்கள். 21 அவர் அந்தச் சம
யத்தில் பிணிகள், கொடிய நோய்கள், பொல்
லாத ஆவிகள் இவற்றினின்று பலரைக் குண
மாக்கி, குருடர் பலருக்குப் பார்வை அளித்
துக்கொண்டிருந்தார். 22 பிறகு அவர்
அவர்களிடம், ''நீங்கள் இப்போது பார்த்த
வற்றையும் கேட்டவற்றையும் யோவானி
டம் போய் அறிவியுங்கள்; குருடர்கள் பார்
வையடைகிறார்கள், முடவர்கள் நடக்கிறார்
கள், தொழுநோயுள்ளவர்கள் குணமடை
கிறார்கள், செவிடர்கள் கேட்கிறார்கள், இறந்
தவர்கள் உயிரோடு எழுப்பப்படுகிறார்கள்,
எளியவருக்கு அருட்செய்தி அறிவிக்கப்படு
கிறது. 23 என்னை நம்புவதற்கு எவன் எவ்
வகைத் தடையும் காணவில்லையோ அவன்
நற்பேறு பெற்றவன்'' என்றார்.

24 யோவானுடைய தூதுவர் போன
பின்பு, அவர் யோவானைக் குறித்து மக்களி
டம், ''எதைப் பார்க்க நீங்கள் பாலை நிலத்
திற்குச் சென்றீர்கள்? காற்றினால் அசையும்
நாணலையா? 25 அல்லவென்றால் எதைப்
பார்க்கச் சென்றீர்கள்? மெல்லிய ஆடை
யணிந்த மனிதனையா? அலங்கார ஆடை
யணிந்து செல்வத்தோடு வாழ்கிறவர்கள்
அரச மாளிகைகளில் அல்லவா இருக்கிறார்
கள்! 26 அல்லவென்றால் எதைப் பார்க்கச்
சென்றீர்கள்? இறைவாக்குரைப்பவரையா?
ஆம், இறைவாக்குரைப்பவரைவிட மேம்
பட்டவரையே என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன்.

27 'இதோ, என் தூதனை உமக்கு முன்
னால் அனுப்புகிறேன், அவன் உமக்கு
முன்னால் சென்று,
உமக்கு வழியை ஆயத்தம் செய்வான்'

என்று எழுதியுள்ள வேத வாக்கியத்தில்
குறிக்கப்பட்டவர் இவரே. 28 தாய்க்குப்
பிள்ளையாய்ப் பிறந்தவர்களுள் யோவானை
விடப் பெரியவர் எவருமில்லை; ஆயினும்,
கடவுளின் அரசிலுள்ள சிறியவனும் அவரை
விடப் பெரியவனென்று உங்களுக்குச் சொல்
லுகிறேன்'' என்றார். 29 ஆயக்காரர் உட்
பட எல்லா மக்களும் இதைக் கேட்டு,
''கடவுள் நீதிபரர்'' என்பதை ஒப்புக்
கொண்டார்கள். ஏனென்றால், அவர்கள்
யோவானுடைய திருமுழுக்கைப் பெற்றிருந்
தார்கள். 30 பரிசேயரும் நீதிச்சட்ட அறி
ஞர்களுமோ அவரிடம் திருமுழுக்குப் பெறா
திருந்ததால் தங்களுக்கான கடவுளின் திட்
டத்தைக் கெடுத்துக்கொண்டார்கள்.

31 பின்னும் இயேசு, ''இந்தத் தலை
முறையை எதற்கு ஒப்பிடுவேன்? 32 இவர்கள்
எதைப்போல இருக்கிறார்கள்? சந்தை
வெளியில் உட்கார்ந்துகொண்டு ஒருவரை
யொருவர் கூப்பிட்டு,

'உங்களுக்குக் குழல் ஊதினோம்,
நீங்கள் கூத்தாடவில்லை;
ஒப்பாரி வைத்தோம், நீங்கள் அழ
வில்லை'

என்று சொல்லுகிற பிள்ளைகளைப்போல
இருக்கிறார்கள். 33 திருமுழுக்குநர் யோவான்
வந்தார்; அவர் அப்பம் உண்ணவில்லை;
திராட்சை இரசம் அருந்தவில்லை. நீங்கள்
அவரைப் பேய்பிடித்தவன் என்கிறீர்கள்.
34 மனுமைந்தர் வந்தார்; அவர் உண
வும் பானமும் அருந்துகிறார். நீங்கள், 'இந்த
மனிதன் பெருந்தீனிக்காரன், குடிகாரன்,
† ஆயக்காரருக்கும் பாவிகளுக்கும் தோழன்'
என்கிறீர்கள். 35 தெய்வ ஞானம் நியாய
மானதென்று அதை ஏற்றுக்கொண்ட யாவ
ராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது'' என்றார்.

### பாவியான பெண்ணுக்கு மன்னிப்பளித்தல்

36 பரிசேயருள் ஒருவன் இயேசுவைத்
தன்னோடு விருந்துண்ண வேண்டுமென்று

* யூதர் எதிர்நோக்கிய மீட்பர்.
† மத். 5:46 அடிக்குறிப்பைப் பார்க்க.

7:16 மத். 16:14—16. 7:22 ஏசா. 35:5, 6; 61:1; இருத்தாது. 3:8. 7:27 மலா. 3:1. 7:29, 30 மத். 21:32; லூக். 3:12.

கேட்டுக்கொண்டான். அவர் அந்தப் பரி
சேயனுடைய வீட்டுக்குப் போய் உணவு
கொள்ள உட்கார்ந்தார். 37 அந்த ஊரில்
பாவியான பெண் ஒருத்தி இருந்தாள். அவர்
அந்தப் பரிசேயனுடைய வீட்டில் சாப்பிடு
கிறார் என்பதை அவள் அறிந்து, ஒரு வெள்
ளைக்கல் பரணியில் நறுமணத் தைலம்
கொண்டு வந்து, 38 அவருக்குப் பின்னால்
பாதத்தருகில் அழுதுகொண்டு நின்று, அவர்
பாதங்களைத் தன் கண்ணீரினால் நனைத்து,
தன் கூந்தலினால் துடைத்து, அவர் பாதங்
களை முத்தமிட்டு, நறுமணத் தைலத்தைப்
பூசினாள். 39 அவரை அழைத்த பரிசேயன்
அதைக் கண்டு, ''இந்த ஆள் இறைவாக்
குரைப்பவராய் இருந்தால் தம்மைத் தொடு
கிற பெண் யார் என்பதையும், எப்படிப்
பட்டவள் என்பதையும் அறிந்திருப்பார்.
இவள் பாவியாயிற்றே'' என்று தனக்குள்
சொல்லிக்கொண்டான். 40 இயேசு அவ
னிடம், ''சீமோனே, உனக்கு நான் ஒரு
காரியம் சொல்ல வேண்டும்'' என்றார்.
அதற்கு அவன், ''சொல்லும், போதகரே''
என்றான். 41 அப்பொழுது அவர், ''ஒரு
வனிடம் இருவர் கடன்பட்டிருந்தனர். ஒரு
வன் ஐந்நூறு * திநாரியப் பணமும், மற்ற
வன் ஐம்பது திநாரியப் பணமும் கொடுக்க
வேண்டியதாயிருந்தது. 42 கடனைத் தீர்க்க
அவர்களால் இயலாதிருக்கவே, அவன் இரு
வரையும் மன்னித்துவிட்டான். அவர்களுள்
எவன் அவனிடம் மிகுந்த அன்புடையவனா
யிருப்பான்? அதைச் சொல்'' என்றார்.
43 அதற்குச் சீமோன், ''எவனுக்கு மிகுதி
யாக மன்னித்துவிட்டானோ அவனே என்று
நினைக்கிறேன்'' என்றான். 44 அவர் அவனி
டம், ''சரியாகத் தீர்ப்பளித்தாய்'' என்று
கூறி, அந்தப் பெண்ணின் பக்கம் திரும்பி,
சீமோனிடம், ''இந்தப் பெண்ணைப் பார்த்
தாயா? உன் வீட்டிற்குள் வந்தேன், நீ என்
கால்களுக்குத் தண்ணீர் தரவில்லை. இவளோ
தன் கண்ணீரினால் என் பாதங்களை நனைத்துக்
கூந்தலினால் அவற்றைத் துடைத்தாள். 45 நீ
எனக்கு முத்தம் கொடுக்கவில்லை. இவளோ
நான் உள்ளே வந்ததிலிருந்து என் பாதங்
களை ஓயாமல் முத்தமிட்டுக்கொண்டிருக்
கிறாள். 46 நீ என் தலைக்கு எண்ணெய்
பூசவில்லை; இவளோ என் பாதங்களில் நறு
மணத் தைலம் பூசினாள். 47 ஆகையால்
நான் உனக்குச் சொல்லுகிறேன்: இவள்
செய்த பல பாவங்கள் இவளுக்கு மன்னிக்
கப்பட்டுள்ளன, இவள் காட்டிய பேரன்பி
லிருந்து இது தெரிகிறது. எவனுக்குச் சிறி
தளவு மன்னிக்கப்படுகிறதோ, அவன் சிறி
தளவே அன்புகாட்டுவான்'' என்று சொல்லி,
48 அவளைப் பார்த்து, ''உன் பாவங்கள்
உனக்கு மன்னிக்கப்பட்டன'' என்றார்.
49 அப்பொழுது அவரோடு கூடச் சாப்பிட்
டவர்கள், ''இவர் யார்? பாவங்களையும்
மன்னிக்கிறாரே!'' என்று தங்களுக்குள்ளே
சொல்லிக்கொள்ளலானார்கள். 50 அவர்
அந்தப் பெண்ணிடம், ''உன் நம்பிக்கை நீ
மீட்படையும்படி செய்திருக்கிறது: நீ சமா
தானத்தோடு போ'' என்று சொன்னார்.

## பெண்களின் பணிவிடை

**8** அதற்கப்பால் இயேசு ஊர் ஊராய்ச்
சென்று கடவுளுடைய அரசின் அருட்
செய்தியை அறிவித்துவந்தார். பன்னிரு
வரும் அவருடன் இருந்தனர். 2 மேலும்,
பொல்லாத ஆவிகளினின்றும் நோய்களினின்
றும் குணமாக்கப்பட்டிருந்த பெண்கள்
சிலரும், ஏழு பேய்கள் நீங்கின மகதலேனாள்
என்ற மரியாளும், 3 ஏரோதுவின் காரியக்
காரனான கூசா என்பவனின் மனைவி
யோவன்னாளும், சூசன்னாளும், மற்றும் பல
பெண்களும் அவர்களோடிருந்தார்கள்.
இவர்கள் தங்கள் பொருள்களைக் கொண்டு
அவர்களுக்குப் பணிவிடை செய்துவந்தார்
கள்.

## விதை விதைப்பவன்

(மத். 13:1-9; மாற். 4:1-9)

4 பற்பல ஊர்களிலிருந்து திரளான மக்
கள் ஒன்றுகூடி இயேசுவினிடம் வந்தபோது,
அவர் உவமை மூலமாக இவ்வாறு பேசினார்:
5 ''விதைப்பவன் ஒருவன் விதை விதைக்கச்
சென்றான். அவன் விதைக்கையில் சில விதை
கள் பாதையில் விழுந்து மிதியுண்டன.
வானத்துப் பறவைகள் வந்து அவற்றைத்
தின்றுவிட்டன. 6 சில விதைகள் கற்பாறை
யின்மேல் விழுந்தன; அவை முளைத்தபின்
அங்கே ஈரமில்லாமையால் உலர்ந்துபோயின.
7 சில விதைகள் முட்செடிகளினிடையே
விழுந்தன; முட்செடிகள் கூடவே வளர்ந்து
அவற்றை நெருக்கிவிட்டன. 8 சில விதை
கள் நல்ல நிலத்திலும் விழுந்தன, அவை
வளர்ந்து நூறு மடங்கான பலனைத் தந்
தன.'' இவற்றைச் சொல்லி, ''கேட்டுண
ரும் காதுள்ளவன் இதைக் கவனித்துக்
கொள்ளட்டும்'' என்று உரத்துச் சொன்னார்.

## உவமையின் கருத்து

(மத். 13:10-17; மாற். 4:10-20)

9 ''இந்த உவமையின் கருத்து என்ன?''
என்று அவருடைய சீடர்கள் அவரிடம் கேட்
டார்கள். 10 அதற்கு அவர், ''கடவுளு
டைய அரசைப் பற்றிய மறைசெய்திகளை
அறியும் நற்பேறு உங்களுக்கு அருளப்பட்டி

* மத். 20:2 அடிக்குறிப்பைப் பார்க்க.

**7:37, 38** மத். 26:7; மாற். 14:3; யோ. 12:3 **8:2, 3** மத். 27:55, 56; மாற். 15:40, 41; லூக். 23:49. **8:10** ஏசா. 6:9.

ருக்கிறது. மற்றவர்களுக்கோ, அவர்கள்
கண்டும் காணுதவர்களாயும் கேட்டும் உண
ராதவர்களாயும் இருக்க, அவை உவமை
களாக அளிக்கப்படுகின்றன. 11 இந்த
உவமையின் கருத்து இதுவே: விதை கட
வுளின் வார்த்தை. 12 பாதையில் உள்ள
வர்கள் தெய்வ வார்த்தையைக் கேட்ட
வர்கள்; அவர்கள் நம்பி மீட்புப் பெருதபடி
பிசாசு வந்து அந்த வார்த்தையை அவர்
கள் உள்ளத்திலிருந்து எடுத்துவிடுகிருன்.
13 கற்பாறையின்மேல் உள்ளவர்கள் கேட்
கும்போது மகிழ்ச்சியோடு தெய்வ வார்த்
தையை ஏற்றுக்கொள்ளுகிறுர்கள்; ஆயி
னும், இவர்களுக்குள் அது வேர்கொள்ளா
ததால், இவர்கள் சிறிது காலம் மட்டும்
நம்பி, சோதனைக் காலத்தில் வழுவிப்போகி
ருர்கள். 14 முட்செடிகளுக்குள் விழுந்த
விதை, தெய்வ வார்த்தையைக் கேட்டும்
கவலை, செல்வம், உலக இன்பம் ஆகியவற்
ருல் வரவர நெருக்கப்பட்டு, பலன் கொடா
மற் போகிறவர்களைக் குறிக்கும். 15 நல்ல
நிலத்தில் விழுந்த விதையோ, தெய்வவார்த்
தையைக் கேட்டு, அதைச் செம்மையான
நல்ல உள்ளத்தில் பதியவைத்துத் தளராத
ஊக்கத்துடன் பலன் தருகிறவர்களைக்
குறிக்கும்.

### விளக்கு எதற்காக?

*(மாற். 4:21—25)*

16 ''எவனும் விளக்கை ஏற்றி அதை
ஒரு பாத்திரத்தினுல் மூடுவதில்லை, கட்டி
லின் கீழே வைப்பதுமில்லை; உள்ளே வரு
வோருக்கு வெளிச்சம் தெரியும்படி அதை
விளக்குத் தண்டின் மீதுதான் வைப்பான்.
17 வெளியரங்கமாகாத இரகசியமுமில்லை;
வெளிப்பட்டு அறியப்படாத மறைசெய்தி
யுமில்லை. 18 ஆகையால், நீங்கள் எப்படித்
தெய்வ வார்த்தையைக் கேட்கிறீர்கள் என்
பதைக் குறித்துக் கவனமாயிருங்கள்; உள்ள
வனெவனே அவனுக்குக் கொடுக்கப்படும்;
இல்லாதவனெவனே அவனிடமிருந்து
தனக்குண்டென்று அவன் நினைப்பதும் எடுத்
துக்கொள்ளப்படும்'' என்ருர்.

### இயேசுவின் உண்மையான உறவினர்

*(மத். 12:46—50; மாற்.3:31—35)*

19 இயேசுவின் தாயாரும் சகோதரரும்
அவரிடம் வந்தனர். கூட்டம் பெரியதா
யிருந்ததால் அவரண்டையில் சேர அவர்
களால் இயலவில்லை. 20 ''உம்முடைய
தாயாரும் உம்முடைய சகோதரரும் உம்
மைப் பார்க்க வேண்டுமென்று வெளியே
நிற்கின்றனர்'' என்று அவருக்கு அறிவிக்கப்
பட்டது. 21 அதற்கு அவர், ''கடவுளு
டைய வார்த்தையைக் கேட்டு அதன்படி
செய்பவர்களே எனக்குத் தாயும் சகோதரரு
மாவார்கள்'' என்று அவர்களிடம் சொன்
ஞர்.

### கடற் கொந்தளிப்பை அடக்குதல்

*(மத். 8:23—27; மாற். 4:35—41)*

22 பிறகு ஒருநாள் இயேசு தம் சீட
ரோடு ஒரு படகில் ஏறினுர். ''கடலின் அக்
கரைக்குப் போவோம் வாருங்கள்'' என்று
அவர் அவர்களிடம் சொல்ல, அவர்கள் அப்
படியே படகை ஓட்டினுர்கள். 23 படகு
ஓடுகையில் அவர் தூங்கிவிட்டார். அப்பொ
ழுது புயற்காற்றுக் கடலில் வீச, அவர்கள்
அமிழ்ந்துபோகும் இக்கட்டான நிலையில்
இருந்தார்கள். 24 அவர்கள் அவரை
அணுகி, ''ஐயா, ஐயா, மடிந்து போகி
ரேம்!'' என்று அவரை எழுப்பினுர்கள்.
அவர் விழித்தெழுந்து காற்றையும் தண்ணீ
ரின் கொந்தளிப்பையும் அதட்டினுர்; அவை
தணிந்தன; அமைதியும் உண்டாயிற்று;
25 அவர் அவர்களை நோக்கி,''எங்கே உங்கள்
நம்பிக்கை?'' என்ருர். அவர்கள் அச்சமுற்று
''இவர் யாராய் இருக்கக்கூடும்! காற்றுக்
கும் கடலுக்கும் கட்டளையிடுகிருர், அவை
யும் இவருக்குக் கீழ்படிகின்றனவே!'' என்று
ஒருவருக்கொருவர் சொல்லி வியப்படைந்
தார்கள்.

### பேய் பிடித்தவனைக் குணமாக்குதல்

*(மத். 8:28—34; மாற். 5:1—20)*

26 பிறகு அவர்கள் கலிலேயாவுக்கு எதி
ரேயுள்ள கெரசேனர் நாட்டுக்குப் போனுர்
கள். 27 இயேசு கரையில் இறங்கினபோது
பேய்கள் பிடித்திருந்த அவ்வூரான் ஒருவன்
அவருக்கு எதிரில் வந்தான்; அவன் நெடுங்
காலமாக ஆடை அணியாதிருந்தவன், வீட்
டில் தங்காமல் கல்லறைகளில் தங்கினவன்.
28 அவன் இயேசுவைக் கண்டதும், கூக்
குரலிட்டு, அவர்முன் விழுந்து, ''இயேசுவே
உன்னதமான கடவுளின் மைந்தரே, என்
னிடம் உமக்கு என்ன வேலை? என்னை
வதைக்காதிருக்க உம்மை வேண்டிக் கொள்
கிறேன்'' என்று உரத்த குரலில் சொன்னுன்.
29 ஏனென்ருல்,அசுத்த ஆவி அந்த மனிதனை
விட்டுப் போகும்படி அவர் கட்டளையிட்டுக்
கொண்டிருந்தார். அது முன்பு பன்முறை
அவனைப் பிடித்ததுண்டு. அவன் சங்கிலிகளி
ஞலும் விலங்குகளினுலும் கட்டுண்டு காவல்
செய்யப்பட்டிருந்தும் கட்டுகளை முறித்து
விட்டிருந்தான்; பேயினுல் அவன் பாலை
நிலத்திற்குத் துரத்தப்பட்டுமிருந்தான்.
30 இயேசு அவனைப் பார்த்து, ''உன் பெயர்
என்ன?'' என்று கேட்டார். அவன்,* ''இலே

* ரோம இராணுவத்தில் ஏறத்தாழ 6,000 போர்வீரர் அடங்கிய ஒரு படைப் பிரிவு.

**8:16** மத். 5:15; லூக். 11:33; யோ. 8:12. **8:17** மத். 10:26; லூக். 12:2. **8:18** மத். 25:29; மாற். 4:24, 25; லூக். 19:26. **8:21** எசே. 33:31.

கியோன்'' என்றான். ஏனென்றால், பல பேய்
கள் அவனுக்குள் புகுந்திருந்தன. 31 அவை
தங்களைப் பாதாளக் குழிக்குள் போகக் கட்
டளையிடாதபடி அவரை வேண்டிக்கொண்
டன. 32 அங்கே ஒரு மலையில் பன்றிகள்
பெருங்கூட்டமாய் மேய்ந்து கொண்டிருந்
தன. அவற்றிற்குள் செல்லத் தங்களுக்கு
விடை கொடுக்கும்படி பேய்கள் அவரை
வேண்டிக்கொள்ள, அவரும் விடைகொடுத்
தார். 33 பேய்கள் அந்த மனிதனை விட்டு
வெளியேறி, பன்றிகளுக்குள் புகுந்தன. அப்
பொழுது பன்றிக்கூட்டம் ஓடிச் செங்குத்
துப் பாறையின் விளிம்புக்குக் கீழே கடலில்
பாய்ந்து அமிழ்ந்துபோயிற்று. 34அவற்றை
மேய்த்துக்கொண்டிருந்தவர்கள் நடந்த
தைக் கண்டு ஓடிப்போய் ஊரிலும் சுற்றுப்
புறங்களிலும் அதை விளம்பரப்படுத்தினர்
கள். 35 நடந்ததைப் பார்க்கும்படி மக்கள்
ஊருக்கு வெளியே வந்தார்கள். அவர்கள்
இயேசுவினிடம் வந்தபோது, பேய்கள் நீங்
கப்பெற்ற மனிதன் ஆடை அணிந்து, தன்
னுணர்வோடு இயேசுவின் பாதத்தருகில்
உட்கார்ந்திருப்பதைக் கண்டு திகிலடைந்
தார்கள். 36 நடந்ததை நேரில் கண்டவர்
கள், பேய்கள் பிடித்திருந்தவன் எவ்வாறு
குணமடைந்தானென்று அவர்களுக்கு அறி
வித்தார்கள். 37 அப்பொழுது கெரசேன
ருடைய நாட்டின் சுற்றுப்புறத்திலிருந்த மக்
களெல்லாரும் மிகவும் திகிலடைந்ததால்,
தங்களை விட்டுப் போய்விடும்படி அவரை
வேண்டிக்கொண்டனர். அவ்வாறே அவரும்
படகில் ஏறித் திரும்பிப் போனார். 38 அப்
பொழுது பேய்கள் நீங்கின மனிதன்
தன்னை அவரோடு இருக்க விடும்படி அவ
ரிடம் வேண்டினான். 39 ஆனால் அவர்,
''நீ உன் வீட்டிற்குத் திரும்பிப்போய், கட
வுள் உனக்குச் செய்ததையெல்லாம் விவ
ரித்துக் கூறு'' என்று சொல்லி, அவனை
அனுப்பிவிட்டார். அப்படியே அவன் போய்
இயேசு தனக்குச் செய்ததையெல்லாம்
ஊரெங்கும் அறிவித்தான்.

## பெரும்பாடுள்ள பெண் குணமடைதலும் யவீருவின் மகள் உயிர்பெற்றெழுதலும்

(மத். 9:18–26; மாற். 5:21–43)

40 இயேசு திரும்பிவந்தபோது திரளான
மக்கள் அவரை வரவேற்றார்கள். ஏனெ
னில், எல்லாரும் அவருக்காகக் காத்துக்
கொண்டிருந்தனர். 41 தொழுகைக்கூடத்
தலைவனாகிய யவீரு என்ற பெயருள்ள ஒரு
வன் வந்து, இயேசுவின் காலடியில் விழுந்து
தன் வீட்டுக்கு வரும்படி அவரை வேண்டிக்
கொண்டான். 42 ஏனென்றால், பன்னி
ரண்டு வயதுள்ள அவனுடைய ஒரே மகள்
சாகுந்தறுவாயில் இருந்தாள். அவர்
போகையில் திரளான மக்கள் அவரைச் சூழ
நெருக்கிக்கொண்டு சென்றார்கள்.

43 ஒரு பெண் பன்னிரண்டு ஆண்டுகளா
கப் பெரும்பாடுள்ளவளாய் இருந்தாள்,
அவளைக் குணப்படுத்த எவராலும் இயல
வில்லை. 44 அவள் அவருக்குப் பின்னால்
சென்று அவருடைய ஆடையின் ஓரத்தைத்
தொட்டாள்; உடனே அவளுடைய பெரும்
பாடு நின்றது. 45 இயேசு, ''என்னைத்
தொட்டது யார்?'' என்று கேட்டார். எல்
லாரும் மறுத்தபோது, * பேதுரு, ''ஐயரே,
திரளான மக்கள் உம்மைச் சூழ்ந்து நெருக்
கிக்கொண்டிருக்கிறார்களே!'' என்றார்.
46 அதற்கு இயேசு, ''என்னை யாரோ ஒருவர்
தொட்டிருக்க வேண்டும். ஏனெனில், என்
னிலிருந்து வல்லமை வெளிப்பட்டதை நான்
உணர்ந்தேன்'' என்றார். 47 அந்தப் பெண்,
தான் அவருக்கு மறைவாயில்லை என்பதைக்
கண்டு, நடுக்கத்துடன் அவர்முன் விழுந்து,
தான் அவரைத் தொட்ட காரணத்தையும்,
உடனே குணமடைந்ததையும் எல்லா மக்
கள் முன்னிலையிலும் அவருக்கு அறிவித்
தாள். 48 அவர் அவளிடம், ''மகளே, உன்
நம்பிக்கை உன்னைக் குணமாக்கியிருக்கிறது,
நீ சமாதானத்தோடு போ'' என்றார்.

49 அவர் அப்படிப் பேசிக்கொண்டிருக்
கையில் தொழுகைக்கூடத் தலைவனுடைய
வீட்டிலிருந்து ஒருவன் வந்து அவனிடம்,
''உம்முடைய மகள் இறந்துபோய்விட்டாள்.
இனிப் போதகரைத் தொந்தரவு செய்ய
வேண்டாம்'' என்றான். 50 இயேசுவும்
அதைக் கேட்டு, அவனிடம், ''அஞ்சாதே,
நம்பிக்கையை மட்டும் விடாதே. அப்பொ
ழுது அவள் நலத்தோடிருப்பாள்'' என்றார்.
51 அவர் வீட்டிற்குள் சென்றபோது, பேதுரு,
யோவான், யாக்கோபு, பெண்ணின் தாய்
தகப்பன் ஆகியோரைத் தவிர வேறொரு
வரும் தம்முடன் வர அவர் இடந்தரவில்லை.
52 எல்லாரும் அவளுக்காக அழுது மாரடித்
துக்கொண்டிருந்தனர். அவர், ''அழா
தீர்கள், அவள் சாகவில்லை, உறங்குகிறாள்''
என்றார். 53 அவள் செத்துப்போனாள்
என்று அவர்களுக்குத் தெரிந்திருந்ததால்
அவர்கள் அவரைப் பார்த்து நகைத்தார்
கள். 54 அவரோ அவளுடைய கையைப்
பிடித்து, ''பெண்ணே, எழுந்திரு'' என்று
சொல்லிக் கூப்பிட, அவளுடைய உயிர்
திரும்பி வந்தது. 55 உடனே அவள் எழுந்
திருந்தாள். அவளுக்குச் சாப்பாடு கொடுக்
கக் கட்டளையிட்டார். 56 அவளுடைய
பெற்றோர் திகைத்துப்போயினர். நடந்ததை
எவருக்கும் சொல்லாதிருக்கும்படி அவர்
அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

* 'பேதுருவும் அவரோடிருந்தவர்களும்' என்பது ஒரு சில பிரதிகளின் பாடம்.

### பன்னிருவரையும் திருப்பணிக்கு அனுப்புதல்

(மத். 10:5–15; மாற். 6:7–13)

9 இயேசு பன்னிருவரையும் ஒன்றாய் வர
வழைத்து, எல்லாப் பேய்களையும் அடக்
கவும், நோய்களைத் தீர்க்கவும் அவர்களுக்கு
வல்லமையும் அதிகாரமும் கொடுத்து,
2 கடவுளின் அரசை விளம்பரப்படுத்தவும்,
பிணியாளிகளைக் குணமாக்கவும் அவர்களை
அனுப்பினார். 3 அனுப்பினபோது அவர்
அவர்களிடம், ''வழிக்கு நீங்கள் ஒன்றை
யும் எடுத்துக்கொண்டு போக வேண்டாம்.
கைத்தடி, பை, சாப்பாடு, பணம் ஆகிய
எதுவும் வேண்டாம், சட்டைகளும் ஒருவ
ருக்கு இரண்டு வேண்டாம். 4 எந்த வீட்
டில் தங்கப்போகிறீர்களோ அங்கேயே தங்கி
யிருங்கள்; அங்கிருந்தே புறப்படுங்கள்.
5 உங்களை ஏற்றுக்கொள்ளாதவர்கள் எவர்
களோ அவர்களுடைய ஊரை விட்டு நீங்கள்
புறப்படும்போது, அவர்களை எச்சரிக்கும்
வகையில் உங்கள் கால்களில் படிந்துள்ள
தூசியை உதறிவிடுங்கள்'' என்று சொன்
னார். 6 அவர்கள் புறப்பட்டு ஊர் ஊராய்ச்
சென்று, எங்கும் அருட்செய்தியை அறி
வித்துப் பிணியாளிகளைக் குணமாக்கினார்கள்.

### ஏரோதுவின் திகைப்பு

(மத். 14:1–12; மாற். 6:14–29)

7 நடந்துகொண்டிருந்த எல்லாவற்றை
யும் சிற்றரசன் ஏரோது கேள்விப்பட்டான்.
சிலர் யோவான் இறந்தோரிடமிருந்து
எழுந்துவிட்டார் என்றும், 8 சிலர் எலியா
தோன்றியிருக்கிறார் என்றும், சிலர் பண்
டைக் காலத்து இறைவாக்குரைப்போருள்
ஒருவர் உயிர்த்தெழுந்துவிட்டார் என்றும்
பேசிக்கொண்டபடியால், அவன் திகைப்ப
டைந்து, 9 ''யோவான் தலையை நானே
வெட்டச் செய்தேன்; ஆனால், இத்தகைய
காரியங்களைச் செய்வதாக நான் கேள்விப்
படும் இவர் யார்?'' என்று சொல்லிக்
கொண்டான்; அவரைப் பார்க்கவும் விரும்
பினான்.

### ஐயாயிரம் பேருக்கு உணவளித்தல்

(மத். 14:13–21; மாற். 6:30–44;
யோ. 6:1–15)

10 திருத்தூதுவர்கள் திரும்பி வந்து,
தாங்கள் செய்த யாவற்றையும் அவருக்கு
விவரித்துச் சொன்னார்கள். அவர் அவர்களை
கூட்டிக்கொண்டு அவர்களோடு தனித்திருக்
கப் பெத்சாயிதா என்னும் ஊருக்குப்
போனார். 11 திரளான மக்கள் அதை
அறிந்து, அவரைத் தொடர்ந்து சென்றார்
கள். அவர்களை அவர் வரவேற்று, கடவு
ளின் அரசைப்பற்றி அவர்களோடு பேசினார்.
12 குணமடைவதற்காக வந்தவர்களைக்
குணப்படுத்தினார். பொழுது சாயும் நேரத்
தில், பன்னிருவரும் அவரை அணுகி, ''நாம்
இருக்கிற இடம் மனித நடமாட்டமில்லாத
இடம்; இந்த மக்கள் சுற்றிலுமிருக்கிற ஊர்
களுக்கும் பட்டிகளுக்கும் போய்த் தங்கவும்,
தங்களுக்கு உணவுப் பொருள்களைத் தேடிக்
கொள்ளவும் அவர்களை அனுப்பிவிடும்''என்
றனர். 13 அதற்கு அவர், ''நீங்களே அவர்
களுக்கு ஏதாவது சாப்பிடக் கொடுங்கள்''
என்றார். அப்பொழுது அவர்கள், ''எங்களி
டம் இருப்பதெல்லாம் ஐந்து அப்பங்களும்
இரண்டு மீன்களுமே; அதற்கு மேலில்லை,
நாங்கள் போய் இந்த மக்கள் எல்லாருக்கும்
உணவு வாங்கி வந்தால்தான் முடியும்'' என்
றார்கள். 14 அங்கே ஏறத்தாழ ஐயாயிரம்
ஆண்கள் இருந்தார்கள். அவர் தம்
சீடரை நோக்கி, ''இவர்களைப் பந்திக்குச்
சுமார் ஐம்பது பேராக உட்காரவையுங்
கள்'' என்றார். 15 அவர்கள் அப்படியே
செய்து எல்லாரையும் உட்காரவைத்தார்
கள். 16 அப்பொழுது அவர் அந்த ஐந்து
அப்பங்களையும் இரண்டு மீன்களையும் எடுத்து
வானத்தை நிமிர்ந்து பார்த்து, துதி
செலுத்தி, பிட்டு, சீடரிடம் கொடுத்துக்
கொண்டிருக்க, அவர்களும் மக்களுக்குப் பரி
மாறினார்கள். எல்லாரும் வயிறார உண்ட
னர். 17 அவர்கள் சாப்பிட்டு மீந்த
துணிக்கைகளைப் பன்னிரண்டு கூடைகள்
நிறைய எடுத்தார்கள்.

### இயேசுவைப்பற்றிப் பேதுரு கூறியது

(மத். 16:13–19; மாற். 8:27–29)

18 பிறகு ஒரு சமயம் இயேசு தனி
ஜெபம் செய்து கொண்டிருக்கையில், சீடர்
களும் பக்கத்தில் இருந்தார்கள். அப்பொ
ழுது அவர் அவர்களிடம், ''மக்கள் என்னை
யார் என்று சொல்லுகிறார்கள்?'' என்று
கேட்டார். 19 அதற்கு அவர்கள், ''திரு
முழுக்குநர் யோவான் என்று சொல்லுகிறார்
கள், சிலரோ எலியா என்றும், வேறு சிலர்
பண்டைக் காலத்து இறைவாக்குரைப்போ
ருள் ஒருவர் உயிர்த்தெழுந்துவிட்டார் என்
றும் சொல்லுகின்றனர்'' என்றார்கள்.
20 அவர் அவர்களிடம், ''நீங்கள் என்னை
யார் என்று சொல்லுகிறீர்கள்?'' எனக் கேட்
டார். பேதுரு, ''நீர் கடவுளின் மேசியா'
என்றார். 21 அப்பொழுது அவர், ''இதை
நீங்கள் யாருக்கும் சொல்லக்கூடாது''என்று
கண்டிப்பாகக் கட்டளையிட்டார்.

9:5 திருத்தூது. 13:51. 9:3—5 லூக். 10:4—11. 9:7, 8 மத். 16:14; மாற். 8:28; லூக். 9:19.
9:19 மத். 14:1, 2; மாற். 6:14, 15; லூக். 9:7, 8. 9:20 யோ. 6:68, 69.

### இயேசு தம் பாடுகளையும் மரணத்தையும் முன்னறிவித்தல்
(மத். 16:20—28; மாற். 8:30-9:1)

22 மேலும், ''மனுமைந்தர் பாடுகள
டைந்து, மூப்பராலும் தலைமை ஆசாரியர்
களாலும் வேத அறிஞர்களாலும் தகாத
வரென்று தள்ளப்பட்டு, கொலையுண்டு,மூன்
றும் நாளில் எழுப்பப்பட வேண்டும்'' என்
றும் சொன்னார். 23 பிறகு அவர் எல்லா
ரையும் நோக்கி, ''ஒருவன் என்னைப் பின்
பற்றி வர விரும்பினால், அவன் தன்னைத்
தான் வெறுத்து, தனக்குரிய சிலுவையை
நாள்தோறும் எடுத்துக்கொண்டு, என்னைப்
பின்பற்றி வரட்டும். 24 எவன் தன் * உயி
ரைப் பாதுகாத்துக்கொள்ள விரும்புகிறானோ
அவன் அதை இழந்துவிடுவான்; என்
பொருட்டுத் தன் உயிரை எவன் இழக்கி
றானோ அவன் அதைப் பாதுகாத்துக்கொள்
ளுவான். 25 மனிதன் உலகம் முழுவதை
யும் ஊதியமாகப் பெற்றாலும், அவன் தன்
னையே இழந்து தனக்குக் கேடு விளைவித்துக்
கொண்டால், அவன் அடையும் பயன்
என்ன? 26 எவனாவது என்னைக் குறித்தும்
என் வார்த்தைகளைக் குறித்தும் வெட்கப்
பட்டால் அவனைக் குறித்து மனுமைந்தரும்,
தமக்கும் விண்ணகத் தந்தைக்கும் தூய தூத
ருக்கும் உரிய மாட்சிமையில் வரும்போது
வெட்கமடைவார். 27 இங்கே நிற்கிறவர்
களுள் சிலர் கடவுளின் அரசைக் காணுமுன்
மரணம் அடையப்போவதில்லை என்று திட்
டமாக உங்களுக்குச் சொல்லுகிறேன்''
என்றார்.

### இயேசு மறுதோற்றமடைதல்
(மத். 17:1—8; மாற். 9:2—8)

28 இந்த வார்த்தைகளை அவர் சொல்லி
ஏறக்குறைய எட்டு நாள் ஆனபின், அவர்
பேதுருவையும், யோவானையும், யாக்கோ
பையும் கூட்டிக்கொண்டு, ஜெபம் செய்வ
தற்கு ஒரு மலையின்மேல் ஏறினார். 29 அவர்
ஜெபம் செய்கையில் அவருடைய முகத்
தோற்றம் மாறிற்று, அவருடைய ஆடை
வெண்மையாக மின்னொளி வீசிற்று.
30மோசே,எலியா ஆகியஇருவர் மாட்சிமை
யுடன் தோன்றி, அவரோடு உரையாடினர்.
31அவர் எருசலேமில் நிறைவேற்றப்போகும்
அவருடைய மரணத்தைப்பற்றிப் பேசிக்
கொண்டிருந்தனர். 32 பேதுருவும் அவ
ரோடிருந்தவர்களும் தூக்க மயக்கமாயிருந்
தார்கள். அவர்கள் விழித்தபோது அவ
ருடைய மாட்சிமையையும் அவரோடு நின்ற
இருவரையும் கண்டார்கள். 33 அவ்விரு
வரும் அவரை விட்டுப் போகையில் பேதுரு
இயேசுவினிடம், ''ஐயா, நாம் இங்கேயே
இருப்பது நல்லது;† உமக்கு ஒன்றும்,
மோசேயுக்கு ஒன்றும், எலியாவுக்கு ஒன்று
மாக மூன்று கூடாரங்களை நாங்கள் அமைக்
கிறோம்'' என்று தாம் சொன்னது இன்ன
தெனத் தெரியாமலே சொன்னார்.
34 இவற்றை அவர் சொல்லிக்கொண்டிருக்
கையில் ஒரு மேகம் தோன்றி அவர்கள்மேல்
நிழலிட்டது. அவர்கள் அந்த மேகத்தால்
சூழப்பட்டிருக்கையில் அச்சமுற்றார்கள்.
35 அப்பொழுது, ''இவரே என் மைந்தர்,
இவரைத் தேர்ந்துகொண்டேன், இவருக்குச்
செவிசாயுங்கள்''‡ என்று அந்த மேகத்தி
லிருந்து ஒரு வாக்குப் பிறந்தது. அந்த
வாக்குப் பிறந்தபின் இயேசு மட்டும் காணப்
பட்டார். 36 அவர்கள் தாங்கள் கண்ட
வற்றுள் ஒன்றையும் அந்நாள்களில் எவருக்
கும் அறிவிக்கவில்லை, அவற்றைத் தங்கள்
மனத்திலேயே வைத்துக்கொண்டிருந்தார்
கள்.

### அசுத்த ஆவி பிடித்திருந்த இளைஞனைக் குணமாக்குதல்
(மத். 17:14—18; மாற். 9:14—27)

37 மறுநாள் அவர்கள் மலையிலிருந்து
இறங்கினபோது, திரளான மக்கள் அவரி
டம் வந்தார்கள். 38 கூட்டத்திலிருந்து
ஒருவன் உரத்த குரலில், ''போதகரே, உம்
மைக் கெஞ்சிக் கேட்கிறேன்; என் மகனைக்
கண்ணோக்கியருளும், அவன் எனக்கு ஒரே
மகன். 39 ஓர்ஆவி அவனைப்பிடித்திருக்கிறது;
திடீரென்று அலறுகிறான். அது அவனை அலைக்
கழிக்கிறது. வலிப்பு வந்து வாயில் நுரை
தள்ளுகிறது. அது அவனை நொறுக்குவது
மல்லாமல்,எளிதில் அவனை விட்டுப் போவது
மில்லை. 40 அதை ஓட்டிவிடும்படி உம்மு
டைய சீடரை வேண்டிக்கொண்டேன்;
ஆனால் அவர்களால் இயலாமற்போயிற்று''
என்றான். 41 இதைக் கேட்ட இயேசு,
''நம்பிக்கையில்லாத சீர்கெட்ட சமுதாயமே,
எவ்வளவு காலம் நான் உங்களோடிருப்பது?
எவ்வளவுகாலம் உங்களிடம்பொறுமை காட்
டுவது? உன் மகனை இங்கே கொண்டுவா''
என்றார். 42 அவன்வந்துகொண்டிருக்கையில்
பேய் அவனைக் கீழே தள்ளி அலைக்கழித்தது.
இயேசு அந்த அசுத்த ஆவியை அதட்டிவிட்டு,
பையனைக் குணமாக்கித் தகப்பனிடம் ஒப்பு
வித்தார். 43 அப்பொழுது எல்லாரும் கடவு
ளின் மாண்பினைக் கண்டு திகைப்புற்றனர்.

* கிரேக்கச் சொல், உயிர் என்றும் ஆன்மா என்றும் பொருள்படும்.
† 'நல்லவேளையாக நாங்கள் இங்கே இருக்கிறோம்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
‡ 'இவரே என்னுடைய அன்பார்ந்த மைந்தர். இவருக்குச் செவிசாயுங்கள்' என்பது ஒருசில பிரதிகளின் பாடம்.

9:23 மத். 10:38; லூக். 14:27. 9:24 மத் 10:39; லூக். 17:33; யோ. 12:25. 9:28—35 2 பேது. 1:17, 18. 9:35 ஏசா. 42:1; மத். 3:17; 12:18; மாற். 1:11; லூக். 3:22

### இயேசு தம் மரணத்தைப்பற்றி மீண்டும் முன்னறிவித்தல்

(மத்.17:22,23; மாற்.9:30—32)

இயேசு செய்த யாவற்றையும் குறித்து அனைவரும் வியந்துகொண்டிருக்கையில் அவர் தம்முடைய சீடரிடம், 44 ''நீங்கள் இந்த வார்த்தைகளைக் கவனமாகக் கேளுங்கள். மனுமைந்தர் மனிதர் கைகளில் ஒப்புக்கொடுக்கப்படப்போகிறார்'' என்றார். 45 அவர் சொன்னதை அவர்கள் விளங்கிக்கொள்ளவில்லை. அவர்கள் உணர்ந்துகொள்ளாதபடி அது அவர்களுக்கு மறைவாயிருந்தது. அதைக் குறித்து அவரிடம் கேட்கவும் அஞ்சினார்கள்.

### மிகப் பெரியவன் யார்?

(மத். 18:1—5; மாற். 9:33—37)

46 தங்களுள் மிகப் பெரியவன் யார் என்கிற வாதம் ஒன்று அவர்களிடையே எழுந்தது. 47 இயேசு அவர்கள் உள்ளத்தின் சிந்தனையை அறிந்து, ஒரு சிறு பிள்ளையைக் கொண்டுவந்து அதைத் தம்மருகில் நிறுத்தி, 48 ''இந்தச் சிறு பிள்ளையை என் பெயரால் எவன் ஏற்றுக்கொள்ளுகிறானோ அவன் என்னை ஏற்றுக்கொள்ளுகிறான்; என்னை எவன் ஏற்றுக்கொள்ளுகிறானோ அவன் என்னை அனுப்பினவரை ஏற்றுக்கொள்ளுகிறான்; உங்களனைவருள்ளும் எவன் சிறியவனோ அவனே மிகப் பெரியவன்'' என்று அவர்களிடம் சொன்னார்.

### உங்களுக்கு விரோதமாக இராதவன் உங்கள் சார்பாக இருக்கிறான்

(மாற். 9:38—40)

49 இதைக் கேட்ட யோவான், ''ஐயா, ஒருவன் உமது பெயரால் பேய்களை ஓட்டுவதைக் கண்டோம். அவன் எங்களோடு சேர்ந்து உம்மைப் பின்பற்றி வராதவன். ஆகையால் அவனைத் தடுக்கப் பார்த்தோம்'' என்று அவரிடம் சொன்னார். 50 இயேசு அவரிடம், ''தடுக்க வேண்டாம், உங்களுக்கு விரோதமாக இராதவன் உங்கள் சார்பாக இருக்கிறான்'' என்றார்.

### சமாரியாவிலுள்ள ஓர் ஊரார் இயேசுவை ஏற்றுக்கொள்ள மறுத்தல்

51 அவர் மேலே எடுத்துக் கொள்ளப்படும் காலம் கிட்டியபோது, எருசலேமுக்குப் போக வேண்டுமென்று தீர்மானித்து, அத்திசை நோக்கிப் புறப்பட்டார்; 52 தமக்கு முன்பாகத் தூதுவர்களை அனுப்பினார். அவர்கள் போய் அவருக்கான முன்னேற்பாடுகளைச் செய்யச் சமாரியருடைய ஊர் ஒன்றுக்குச் சென்றார்கள். 53 அவர் எருசலேமை நோக்கிப் போய்க்கொண்டிருந்த காரணத்தால் அவ்வூரார் அவரை ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. 54 அதைக் கண்டபோது அவருடைய சீடர் யாக்கோபும், யோவானும், ''ஆண்டவரே, [எலியா செய்ததுபோல] வானத்திலிருந்து நெருப்பு இறங்கிவந்து இவர்களை அழிக்கும்படி நாங்கள் கட்டளையிடுவது உமக்கு விருப்பமா?'' என்று கேட்டார்கள். 55 அவரோ திரும்பிப் பார்த்து அவர்களைக் கடிந்துகொண்டார். [பிறகு, ''நீங்கள் எத்தகைய ஆவியுள்ளவர்கள் என்பதை அறிந்துகொள்ளவில்லை. 56 மனுமைந்தர் மனிதருடைய உயிரை அழிப்பதற்கு அன்று, அதற்கு மீட்பு அருளுவதற்கே வந்தார்]'' என்றார். பிறகு அவர்கள் வேறோர் ஊருக்குப் போனார்கள்.

### இயேசுவைப் பின்பற்றிச் செல்ல விரும்பினவர்கள்

(மத். 8:19—22)

57 அவர்கள் வழிநடந்து போகையில் ஒருவன் அவரைப் பார்த்து, ''நீர் எங்கே சென்றாலும் நான் உம்மைப் பின்பற்றி வருவேன்'' என்றான். 58 அதற்கு இயேசு, ''நரிகளுக்கு வளைகள் உண்டு; வானத்துப் பறவைகளுக்குக் கூடுகள் உண்டு. மனுமைந்தருக்கோ தலைசாய்க்கவும் இடமில்லை'' என்றார். 59 பிறகு அவர் வேறொருவனைப் பார்த்து, ''நீ என்னைப் பின்பற்றி வா'' என்றார். ஆனால் அவன், ''முதலில் நான் போய் என் தகப்பனை அடக்கம் செய்துவிட்டு வர விடைகொடும்'' என்றான். 60 அதற்கு அவர், ''இறந்தோர் தம் இறந்தோரை அடக்கம் செய்யட்டும், நீ போய்க் கடவுளின் ஆட்சியை விளம்பரப்படுத்து'' என்றார். 61 வேறொருவனும் அவரிடம், ''ஆண்டவரே, உம்மைப் பின்பற்றி வருவேன். ஆயினும், முதலில் நான் போய், என் வீட்டிலுள்ளவர்களிடம் சொல்லிவிட்டு வர எனக்கு விடைகொடும்'' என்றான். 62 இயேசு அவனிடம், ''கலப்பையில்கையை வைத்த பிறகு பின்னால் இருக்கிறவற்றைத் திரும்பிப் பார்க்கிற எவனும் கடவுளின் அரசுக்குத் தகுதியற்றவன்'' என்றார்.

### எழுபதுபேரின் திருப்பணி

**10** இவற்றிற்குப் பின்பு ஆண்டவர் வேறு எழுபது பேரை நியமித்து, தாம் போக விருந்த ஒவ்வோர் ஊருக்கும் இடத்திற்கும் அவர்களைத் தமக்கு முன்பாக இருவர் இருவராக அனுப்பினார். 2 அனுப்பினபோது அவர் அவர்களிடம், ''அறுவடை மிகுதி, வேலையாள்களோ குறைவு, ஆகையால் அறுவடைக்குச் சொந்தக்காரர் தமது அறுவடைக்குத் தேவையான வேலையாள்களை

9:48 மத். 10:40; லூக். 10:16; யோ. 13:20. 9:54 2 அர. 1:9, 10. 9:61 1 அர. 19:19—21. 10:2 மத். 9:37, 38

அனுப்பும்படி அவரை வேண்டிக்கொள்ளுங்
கள். 3 புறப்பட்டுப் போங்கள். ஓநாய்
களுக்கிடையே ஆட்டுக்குட்டிகளைப் போல
உங்களை அனுப்புகிறேன், 4 பணப்பையோ
தோற்பையோ மிதியடியோ கொண்டு
போக வேண்டாம். வழியிலே எவரிடமும்
நலம் விசாரிக்க நிற்க வேண்டாம். 5 நீங்கள்
எந்த வீட்டிற்குள் சென்றாலும் முதலில்,
'இந்த வீட்டிற்குச் சமாதானம்' என்று
சொல்லுங்கள். 6 அங்கே இருப்பவன் சமா
தான சீலனாயிருந்தால்,* நீங்கள் கூறும்
சமாதானம் அவனிடம் தங்கும், இல்லை
யென்றால் அது உங்களிடமே திரும்பிவிடும்.
7 அந்த வீட்டிலேயே நீங்கள் தங்கி அவர்கள்
தருவதைச் சாப்பிடுங்கள், வேலை செய்ப
வன் கூலிக்கு உரியவன். ஒரு வீட்டை விட்டு
வேறொரு வீட்டுக்குப் போக வேண்டாம்.
8 நீங்கள் ஓர் ஊருக்குள் செல்லும்போது
அவ்வூரார் உங்களை ஏற்றுக்கொண்டால்,
அவர்கள் உங்களுக்குக் கொடுப்பதை உட்
கொண்டு, அவ்விடத்திலுள்ள பிணியாளி
களைக் குணமாக்கி, 9 'கடவுளின் அரசு
உங்களை நெருங்கியுள்ளது' என்று அங்குள்ள
வர்களுக்குச் சொல்லுங்கள். 10 ஓர் ஊருக்
குள் செல்லும்போது அவ்வூரார் உங்களை
ஏற்றுக்கொள்ளாவிட்டால், அதன் தெருக்
களில் நீங்கள் சென்று, 11 'எங்கள் கால்
களில் ஒட்டின உங்கள் ஊர்த் தூசியையும்
உங்களுக்கு எதிராக உதறிவிடுகிறோம். ஆயி
னும், இது உங்களுக்குத் தெரிந்திருக்கட்
டும்: கடவுளின் அரசு நெருங்கியுள்ளது'
என்று சொல்லுங்கள். 12 †அந்நாளில்
சோதோமுக்கு நேரிடுவது அந்த ஊருக்கு
நேரிடுவதைவிடத் தாங்கக்கூடியதாயிருக்கும்
என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

### மனமாற்றமடையாத ஊராரைக் கேடு சூழும்
(மத். 11:20–24)

13 ''கொராசீனே, உனக்குக் கேடு வரும்;
பெத்சாயிதாவே, உனக்குக் கேடு வரும்.
உங்களில் செய்யப்பட்ட வல்லமைச் செயல்
கள் தீருவிலும் சீதோனிலும் செய்யப்பட்
டிருந்தால் அவர்கள் முன்னமே ‡ முரட்டுத்
துணி உடுத்திச் சாம்பலில் உட்கார்ந்து மன
மாற்றமடைந்திருப்பார்கள். 14 இறுதித்
தீர்ப்பு நாளில் தீருவுக்கும் சீதோனுக்கும்
நேரிடுவது உங்களுக்கு நேரிடுவதைவிடத்
தாங்கக் கூடியதாயிருக்கும். 15 கப்பர்
நகூமே, நீ வானம் வரைக்கும் உயர்த்தப்
படப்போகிறாயோ? இல்லை பாதாளம் வரைக்
கும் தாழ்த்தப்படுவாய். 16 உங்களுக்குச்
செவிசாய்க்கிறவன் எனக்குச் செவி
சாய்க்கிறான், உங்களைப் புறக்கணிக்கிறவன்
என்னைப் புறக்கணிக்கிறான்; என்னைப் புறக்
கணிக்கிறவனோ என்னை அனுப்பினவரையே
புறக்கணிக்கிறான்'' என்றார்.

### எழுபதுபேரும் திரும்பி வருதல்

17 அனுப்பப்பட்ட அந்த எழுபது பேரும்
மகிழ்ச்சியோடு திரும்பி வந்து, ''ஆண்ட
வரே, உமது திருப்பெயராலே நாங்கள் கட்
டளையிட்டால், பேய்கள்கூட எங்களுக்குக்
கீழ்ப்படிகின்றன'' என்றனர். 18 அவர்
அவர்களிடம், ''சாத்தான் வானத்தினின்று
மின்னலைப்போல விழக் கண்டேன். 19 பாருங்
கள், பாம்புகளையும் தேள்களையும் மிதிக்க
வும், பகைவனின் முழு வல்லமையையும்
அடக்கவும் உங்களுக்கு அதிகாரம் கொடுத்
திருக்கிறேன். ஒன்றுமே உங்களுக்குத்
தீங்கிழைக்காது. 20 ஆயினும், ஆவிகள் உங்
களுக்குக் கீழ்ப்படிகின்றன என்பதற்காக
நீங்கள் மகிழ்ந்துகொண்டிராமல், உங்கள்
பெயர்கள் விண்ணுலகில் எழுதப்பட்டிருக்
கின்றன என்பதற்காக மகிழ்ச்சியடையுங்
கள்'' என்றார்.

### இயேசு அகமகிழ்தல்
(மத். 11:25–27; 13:16,17)

21 அந்நேரத்தில் தூய ஆவியானவர்
இயேசுவை அகமகிழச் செய்தார். அவர்,
''தந்தையே, விண்ணுக்கும் மண்ணுக்கும்
ஆண்டவரே, இவற்றை ஞானிகளுக்கும்
விவேகிகளுக்கும் மறைவாக்கி, பாலகருக்கு
வெளிப்படுத்தினபடியால் உம்மைப் புகழ்ந்து
போற்றுகிறேன். ஆம், தந்தையே, இதுவே
உம்முடைய திருவுளம். 22 எல்லாம் என்
தந்தையினால் என்னிடம் ஒப்படைக்கப்பட்
டிருக்கின்றன. மைந்தர் யாரென்பதைத் தந்
தையைத் தவிர வேறு எவனும் அறியான்.
தந்தை யாரென்பதை மைந்தரும், மைந்தர்
எவனுக்குத் தந்தையை வெளிப்படுத்தத்
திருவுளங்கொள்கிறாரோ அவனும் தவிர,
வேறு எவனும் அறியான்'' என்றார்.
23 பிறகு அவர் சீடர் பக்கம் திரும்பி, அவர்
களிடம் தனித்து, ''நீங்கள் காண்கிறவற்
றைக் காணும் கண்கள் நற்பேறுபெற்றவை.
24 எப்படியெனில், நான் உங்களுக்குச்
சொல்லுகிறேன்: இறைவாக்குரைப்போர்
பலரும் அரசர்களும் நீங்கள் காண்கிறவற்
றைக் காண விரும்பியும் காணவில்லை; நீங்கள்

* கிரேக்கச் சொல்லின் நேர்ப்பொருள், 'சமாதானத்தின் மகன்' என்பது.
† இறுதித் தீர்ப்புநாளில்.
‡ முரட்டுத் துணி உடுத்திச் சாம்பலில் உட்காருதல்: தன்னை ஒறுத்து மனவருத்தமடைதல்.

10:3 மத். 10:16. 10:4—4 மத். 10;7—14; மாற். 6:8—11; லூக். 9:3—5. 10:7 1 கொரி. 9:14; 1 திமோ. 5:18. 10;10,11 திருத்தூது. 13:51. 10:12 ஆதி. 18:24—28; மத். 10:15; 11:24 10:15 எசா. 14:13—15. 10:16 மத். 10:40; மாற். 9:37; லூக். 9:48; யோ. 13:20. 10:19 சங். 91:13; திருவெளி. 12:9. 10:22 யோ. 3:35; 10:15.

கேட்கிறவற்றைக் கேட்க விரும்பியும்
கேட்கவில்லை'' என்றார்.

### இரக்கங்காட்டிய சமாரியன்

25 பிறகு நீதிச்சட்ட அறிஞன் ஒருவன்
எழுந்திருந்து, இயேசுவைப் பரிசோதிக்கும்
வகையில் ''போதகரே, கடவுள் வாக்க
ளித்த என்றுமுள்ள மெய்வாழ்வைப்பெற்றுக்
கொள்ள நான் செய்ய வேண்டுவது என்ன
என்று கேட்டான். 26 அதற்கு அவர்,
''நீதிச் சட்டத்தில் என்ன எழுதியிருக்கிறது?
நீர் படிக்கிறது என்ன?'' என்று கேட்டார்.
27 அவன், ''உன் கடவுளாகிய ஆண்ட
வரிடம் உன் முழு உள்ளத்தோடும் உன்
முழு ஆன்மாவோடும் உன் முழு ஆற்ற
லோடும் உன் முழு மனத்தோடும் அன்பு
கொள்வாயாக: உன்னிடம் நீ அன்புகொள்
வதுபோல அடுத்தவனிடமும் அன்புகொள்
வாயாக என்று எழுதியிருக்கிறது'' என்றான்.
28 அவர், ''நீர் சொன்னது சரி. அப்
படியே செய்யும், அப்பொழுது
மெய்வாழ்வு கிடைக்கும்''என்றார். 29ஆனால்
அவன், தன்னிடம் தவறு ஒன்றுமில்லை
எனக் காட்ட விரும்பி இயேசுவினிடம்,
''எனக்கு அடுத்தவன் எனப்படுகிறவன்
யார்?'' என்று கேட்டான். 30 அதற்கு
இயேசு, ''ஒருவன் எருசலேமிலி
ருந்து எரிகோவுக்குச் சென்றான்; செல்கை
யில், கொள்ளைக்காரரர் கையில் அகப்பட்
டான். அவர்கள் அவன் ஆடைகளை உரிந்து
கொண்டு, அவனை அடித்து, குற்றுயிராக
விட்டுச் சென்றார்கள். 31 ஆசாரியர் ஒரு
வர் தற்செயலாக அவ்வழியே வந்தார்;
அவனைக் கண்டதும் ஒரு பக்கமாக விலகிச்
சென்றார். 32 அப்படியே ஓர் இலேவிய
னும் அந்த இடத்துக்கு வந்தான்; அவனைக்
கண்டதும் ஒரு பக்கமாக விலகிச் சென்
றான். 33 பயணம் செய்துகொண்டிருந்த
சமாரியன் ஒருவனோ அவனைக் கண்டபோது
மனவுருக்கங்கொண்டு, அருகே சென்றான்;
34 காயங்களில் எண்ணெயும் திராட்சை
இரசமும் வார்த்து, அவற்றைக் கட்டி, தான்
ஏறிவந்த விலங்கின்மீது அவனை ஏற்றி, ஒரு
சத்திரத்துக்குக் கொண்டுபோய் அவனைக்
கவனித்துக்கொண்டான். 35 மறுநாள்
இரண்டு * தினாரியத்தை எடுத்துச் சத்திரக்
காரன் கையில் கொடுத்து, ''நீ இவனைக்
கவனமாகப் பார்த்துக்கொள். இதற்குமேல்
ஏதேனும் நீ செலவழித்தால் நான் திரும்பி
வரும்போது அதை உனக்குத் தந்துவிடுகி
றேன்' என்றான். 36 இந்த மூவருள் யார்
கொள்ளைக்காரரர் கையில் அகப்பட்டவனுக்கு
அடுத்தவனாக நடந்துகொண்டான் என்று
உமக்குத் தோன்றுகிறது?'' எனக்கேட்டார்.
37 அதற்கு அவன், ''அவனுக்கு
இரக்கம் காட்டினவனே'' என்றான். அப்
பொழுது இயேசு, ''நீரும் போய் அப்படியே
செய்யும்'' என்று சொன்னார்.

### மார்த்தாளும் மரியாளும்

38 இயேசுவும் அவருடைய சீடர்களும்
புறப்பட்டுப்போகையில் அவர் ஓர் ஊருக்
குள் சென்றார். அங்கே மார்த்தாள் என்னும்
ஒரு பெண் அவரைத் தன் வீட்டில் வர
வேற்றாள். 39 அவளுக்கு மரியாள் என்
னும் ஒரு சகோதரி இருந்தாள். மரியாள்
ஆண்டவர் காலடியில் உட்கார்ந்து அவரு
டைய வார்த்தையைக் கேட்டுக்கொண்
டிருந்தாள். 40மார்த்தாளோ பலவேலைகளில்
ஈடுபட்டு அல்லற்பட்டுக்கொண்டிருந்தாள்.
அவள் அவரிடம் வந்து, ''ஆண்டவரே,
என் சகோதரி என்னைத் தனியே வேலை
செய்ய விட்டுவிட்டு வந்திருக்கிறாளே,உமக்கு
அக்கறை இல்லையா? எனக்கு உதவி செய்
யும்படி அவளிடம் சொல்லும்'' என்றாள்.
41 அதற்கு ஆண்டவர், ''மார்த்தாளே,
மார்த்தாளே, நீ பல காரியங்களைப் பற்றிக்
கவலைப்பட்டுக் கலங்குகிறாய்; 42 [தேவை
யானது கொஞ்சமே]தேவையானது ஒன்றே;
அந்த நல்ல பங்கை மரியாள்தான் தேர்ந்து
கொண்டாள். அது அவளிடமிருந்து எடுக்
கப்படமாட்டாது'' என்றார்.

### கடவுளிடம் வேண்டுதல் செய்வதுபற்றி

(மத். 6:9–13;7:7–11)

11 இயேசு ஓர் இடத்தில் ஜெபம் செய்து
கொண்டிருந்தார். அவர் ஜெபம்
செய்து முடித்த பிறகு, அவருடைய சீட
ருள் ஒருவர் அவரிடம், ''ஆண்டவரே,
யோவான் தம் சீடருக்கு ஜெபம் செய்யக்
கற்றுக்கொடுத்ததுபோல, நீரும் எங்களுக்
குக் கற்றுக்கொடுத்தருளும்'' என்றார்.
2 அதற்கு அவர், ''நீங்கள் ஜெபம் செய்யும்
போது,

[விண்ணுலகிலிருக்கிற எங்கள்] தந்
தையே, உமது திருப்பெயர் தூய
தெனப் போற்றப்படுவதாக.
3 உமது அருளாட்சி வருவதாக.
அன்றன்று எங்களுக்கு வேண்டிய
உணவை அன்றன்று எங்களுக்குத்
தந்தருளும்.
4 எங்களுக்குத் தீமை செய்கிற
ஒவ்வொருவரையும் நாங்கள்
மன்னிக்கிறபடியால், எங்கள்
பாவங்களை எங்களுக்கு மன்னித்தரு
ளும்.†

* மத். 20:2 அடிக்குறிப்பைப் பார்க்க.
† 'எங்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யத் தவறிய ஒவ்வொருவரையும் நாங்கள் மன்னிக்கிறபடியால், எங்கள் பாவங்களை எங்களுக்கு மன்னித்தருளும்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

**10:27** உபா. 6:5; இலே. 19:18 **10:28** இலே. 18:5. **10:25—28** மத். 22:35—40; மாற். 12:28—34. **10:38, 39** யோ. 11:1

எங்களைச் சோதனைக்கு உட்படுத்தா
தேயும் என்று சொல்லுங்கள்''
என்றார்.
5 பின்னும் அவர் அவர்களை நோக்கி,
''உங்களுள் ஒருவன் தனக்கு நண்பனாயிருக்
கிறவனிடம் நள்ளிரவில்போய்,6 'நண்பனே,
பயணம் செய்யும் என் நண்பன் ஒருவன்
என்னிடம் வந்திருக்கிறான், அவனுக்குக்
கொடுப்பதற்கு என்னிடம் ஒன்றுமில்லை;
மூன்று அப்பங்களை நீ எனக்குக் கடனாகத்
தர வேண்டும்' எனக் கேட்கிறான் என்று
வைத்துக்கொள்வோம்; 7 அப்பொழுது
அவன் உள்ளிருந்து, 'என்னைத் தொந்தரவு
செய்யாதே, கதவு பூட்டியாயிற்று, என்
பிள்ளைகளும் என்னோடு படுத்திருக்கிறார்கள்;
எழுந்து உனக்குக் கொடுக்க என்னால்
இயலாது' என்று சொல்வதுண்டு அல்லவா?
8 நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்: அவன்
தனக்கு நண்பனாயிருப்பதை முன்னிட்டு
எழுந்து அவனுக்குக் கொடாவிட்டாலும்,
அவன் வெட்கமின்றி விடாப்பிடியாகக்
கேட்கிறதை முன்னிட்டாவது எழுந்து,
அவனுக்குத் தேவையான மட்டும் கொடுப்
பான்.
9 ''மேலும் நான் உங்களுக்குச் சொல்லு
கிறேன்: கேளுங்கள், அப்பொழுது உங்க
ளுக்குக் கொடுக்கப்படும்; தேடுங்கள், அப்
பொழுது கண்டுபிடிப்பீர்கள்; தட்டுங்கள்,
அப்பொழுது உங்களுக்குத் திறக்கப்படும்.
10 கேட்கிறவன் எவனும் பெற்றுக்கொள்
ளுகிறான்; தேடுகிறவன் கண்டுபிடிக்கிறான்;
தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும். 11 உங்
களுள் எந்தத் தகப்பனாவது தன் மகன் [அப்
பத்தைக் கேட்டால் அவனுக்குக் கல்லைக்
கொடுப்பானா?] மீனைக் கேட்டால் மீனுக்
குப் பதிலாகப் பாம்பைக் கொடுப்பானா?
12 அல்லது முட்டையைக் கேட்டால்
அவனுக்குத் தேளைக் கொடுப்பானா?
13 பொல்லாராகிய நீங்களே உங்கள் பிள்ளை
களுக்கு நல்ல பொருள்களை நன்கொடையாக
வழங்க அறிந்திருக்கிறீர்களென்றால்,
விண்ணுலகிலிருக்கிற தந்தையார் தம்மிடம்
கேட்கிறவர்களுக்குத் தூய ஆவியைக்
கொடுப்பது எவ்வளவு திண்ணம்!'' என்றார்.

### இயேசுவும் பெயல்செபூலும்
(மத். 12:22–30; மாற். 3:20–27)

14 பிறகு, அவர் ஊமைப் பேய் ஒன்றை
ஓட்டினார். பேய் நீங்கினவுடனே ஊமையன்
பேசினான். மக்கள் வியப்படைந்தார்கள்.
15அவர்களுள் சிலரோ, ''இவன் பேய்களின்
தலைவனாகிய பெயல்செபூலைக் கொண்டு பேய்
களை ஓட்டுகிறான்'' என்றனர். 16 வேறு
சிலர் அவரைப் பரிசோதிக்கும் வகையில்
அவரைப் பற்றி வானத்திலிருந்து வரும் ஓர்
அற்புத அத்தாட்சியைக் காட்ட வேண்டு
மென்று கேட்டனர். 17 அவரோ அவர்களு
டைய சிந்தனைகளை அறிந்துகொண்டு, அவர்
களைப் பார்த்து, ''ஒன்றையொன்று எதிர்த்
துத் தன்னையே அழிக்கக் கூடிய பிரிவுகளுள்ள
எந்த அரசும் பாழாய்ப் போகும்; அப்படிப்
பட்ட பிரிவுகளுள்ள எந்தக் குடும்பமும்
விழுந்துபோகும். 18 சாத்தானும் தன்னைத்
தானே எதிர்க்கிறவனாயிருந்தானென்றால்,
அவன் அரசு எப்படி நிலை நிற்கும்? நான்
பெயல்செபூலைக் கொண்டு பேய்களை
ஓட்டுகிறேன் என்கிறீர்களே! 19 மேலும்,
நான் பெயல்செபூலைக் கொண்டு பேய்களை
ஓட்டுகிறேனென்றால், உங்கள் மக்கள்
யாரைக் கொண்டு ஓட்டுகிறார்கள்?
எனவே, நீங்கள் சொல்வது தவறு
என்று அவர்களே தீர்ப்பளிப்பார்கள்.
20 கடவுளின் கரத்தைக் கொண்டு நான்
பேய்களை ஓட்டுகிறேனாயின், கடவுளின் அரசு
உங்களிடம் வந்துள்ளது என்பது உறுதி.
21 படைக்கலம் பூண்ட வலியவன் ஒருவன்,
தன் அரண்மனையைக் காவல் செய்யும்
போது அவனுடைய சொத்துப் பத்திரமா
யிருக்கும். 22 அவனைவிட வலிமை வாய்ந்த
ஒருவன் வந்து அவனை வெல்லும்போது
அவன் நம்பியிருந்த எல்லாப் படைக்கலங்
களையும் பறித்துக்கொண்டு, கொள்ளைப்
பொருளையும் பங்கிட்டுவிடுவான். 23 என்
னோடு இராதவன் எனக்கு விரோதமாக
இருக்கிறான்; என்னோடு சேர்ந்துகொண்டு
ஒன்று கூட்டாதவன் சிதறடிக்கிறான்.

### அசுத்த ஆவி திரும்பி வருதல்
(மத். 12:43–45)

24 ''அசுத்த ஆவி ஒன்று ஒருவனை விட்டு
வெளியேறியபின், வறண்ட இடங்களில்
அலைந்து திரிந்து இளைப்பாறுமிடம் தேடி
யும் அதைக் கண்டுபிடிக்காவிட்டால், 'நான்
விட்டுவந்த என் வீட்டுக்கே திரும்பிப்
போவேன்' என்று சொல்லும். 25 பிறகு
வந்து, அவ்வீடு துப்புரவாகப் பெருக்கி அழ
காக வைக்கப்பட்டிருப்பதைக் கண்டு,
26 திரும்பிப்போய்த் தன்னைவிடப் பொல்
லாத வேறு ஏழு ஆவிகளைக் கூட்டிக்கொண்டு
வந்து, உட்புகுந்து, அங்கே குடியிருக்கும்.
அப்பொழுது அந்த மனிதனுடைய பின்
னிலைமை முன்னிலைமையைவிடக் கேடுள்ள
தாகும்'' என்றார்.

### உண்மையான நற்பேறு

27 இயேசு இவற்றைச சொல்லுகையில்
கூட்டத்திலிருந்த ஒரு பெண் அவரை
நோக்கி, ''உம்மைச் சுமந்த வயிறும் நீர்
பாலுண்ட மார்பகமும் நற்பேறு பெற்
றவை'' என்று உரத்துச் சொன்னாள்.
28 அதற்கு அவர், ''இன்னும் சரியாகச்
சொன்னால், கடவுளின் வார்த்தையைக்

**11:15** மத். 9:34; 10:25. **11:16** மத். 12:38; 16:1; மாற். 8:11. **11:23** மாற். 9:40.

கேட்டு, அதைக் காத்துக்கொள்ளுகிற
வர்களே நற்பேறு பெற்றவர்கள்'' என்றார்.

### அற்புத அத்தாட்சி கேட்டல்

(மத். 12:38–42)

29 மக்கள் திரள் திரளாய்க் கூடி வந்து
கொண்டிருக்க, அவர் பேசத் தொடங்கி,
''இந்தக் காலத்து மக்கள் பொல்லாதவர்
கள், அற்புத அத்தாட்சி தேடுகிறார்கள்;
யோனாவின் அத்தாட்சியைத் தவிர வேறு
அத்தாட்சி இவர்களுக்குக் கொடுக்கப்படுவ
தில்லை. 30 யோனா நினிவே பட்டணத்தா
ருக்கு எப்படி அத்தாட்சியாயிருந்தாரோ,
அப்படியே மனுமைந்தரும் தம்மில் தாமே
இந்தக் காலத்து மக்களுக்கு இருப்பார்.
31 இறுதித் தீர்ப்பின்போது தென்னாட்டு
அரசி இந்தச் சமுதாயத்தின் ஆண் மக்க
ளோடு தானும் எழுந்து நின்று, இவர்கள்
மேல் குற்றம் சுமத்துவாள். ஏனெனில்,
இவள் உலகின் கடைமுனையிலிருந்து
சாலொமோனின் ஞானத்தைக் கேட்க
வந்தவள். 32 இதோ, இங்கே * இருப்பவர்
சாலொமோனைவிடப் பெரியவர். இறுதித்
தீர்ப்பின்போது நினிவே பட்டணத்தார்
இந்தக்காலத்து மக்களோடு தாமும் எழுந்து
நின்று இவர்கள்மேல் குற்றம் சுமத்துவார்
கள். ஏனெனில், அவர்கள் யோனா அறிவித்த
செய்தியைக் கேட்டு மனமாற்றமடைந்
தவர்கள். இதோ, † இங்கே இருப்பவர்
யோனாவை விடப் பெரியவர்.

### உடலுக்கு விளக்கு

(மத். 5:15;6:22,23)

33 ''எவனும் விளக்கை ஏற்றி அதை
மறைவிடத்திலோ ஒரு பாத்திரத்தின் கீழோ
மறைத்து வைப்பதில்லை; உள்ளே வருகிற
வர்களுக்கு வெளிச்சம் தெரியும்படி விளக்
குத் தண்டின்மீதுதான் வைப்பான். 34 உன்
கண்தான் உன் உடலுக்கு விளக்கு. உன்
கண் தெளிவாய் இருக்கும்போது, உன்
உடல் முழுவதும் ஒளியுள்ளதாய் இருக்கும்;
உன் கண் பொல்லாததாய் இருக்கும்போது
உன் உடலும் இருளுள்ளதாய் இருக்கும்.
35 ஆகையால் உன்னிலுள்ள ஒளி இருளா
யிருக்குமோ என்று ஆராய்ந்துபார். 36 உன்
உடல் முழுவதும் ஒரு பாகத்திலும் இருளில்
லாமல் வெளிச்சமாய் இருந்தால், ஒரு விளக்
குத் தன் சுடரினால் உனக்கு வெளிச்சம் தரு
வதுபோல, உன் உடல் வெளிச்சம் நிறைந்த
தாய் இருக்கும்'' என்று கூறி முடித்தார்.

### பரிசேயரையும் நீதிச்சட்ட அறிஞர்களையும் கேடு சூழும் என்று கூறியது

(மத். 23:1–36; மாற். 12:38–40)

37 இயேசு இப்படிப் பேசுகையில் பரி
சேயன் ஒருவன் அவர் தன்னுடனே உணவு
அருந்த வேண்டுமென்று அவரைக் கேட்டுக்
கொண்டான். அவர் உள்ளே போய் உட்
கார்ந்தார். 38 அவர் உணவு அருந்து
வதற்கு முன் தம்மைச் சுத்திகரித்துக்கொள்
ளாததைப் பரிசேயன் கண்டு வியப்படைந்
தான். 39 ஆண்டவரோ, ''பாருங்கள்,
பரிசேயராகிய நீங்கள் உணவுப் பாத்திரங்
களின் வெளிப்புறத்தைத் துப்புரவாக்குகிறீர்
கள். உங்கள் உட்புறமோ பேராசையினாலும்
பொல்லாங்கினாலும் நிறைந்திருக்கிறது.
40 மதிகேடரே, வெளிப்புறத்தை உண்டாக்கி
னவர் உட்புறத்தையும் உண்டாக்கவில்
லையா? உட்புறத்தில் உள்ளவற்றை ஏழை
களுக்குக் கொடுங்கள்; 41 அப்பொழுது
யாவும் உங்களுக்குத் துப்புரவாயிருக்கும்.

42 ''பரிசேயரே, உங்களுக்குக் கேடு
வரும்; ஏனெனில், புதினா, மருக்கொழுந்து
முதலிய எல்லாப் பூண்டுகளிலும் பத்தி
லொரு பாகத்தைக்காணிக்கையாகச் செலுத்
துகிறீர்கள், நியாயத்தையும் கடவுளின்
அன்பையுமோ புறக்கணிக்கிறீர்கள். அவற்
றைச் செலுத்துவதை விட்டுவிடாமலே,
இவற்றை நீங்கள் கடைப்பிடித்து வந்திருக்க
வேண்டும். 43 பரிசேயரே, உங்களுக்குக்
கேடு வரும். ஏனெனில், நீங்கள் தொழு
கைக்கூடங்களில் முதன்மையான இருக்கை
யையும், சந்தைவெளிகளில் வணக்கத்தை
யும் பெற விரும்புகிறீர்கள். 44 உங்க
ளுக்குக் கேடு வரும். ஏனெனில், நீங்கள்
மறைந்திருக்கிற பிணக் குழிகளைப்போல
இருக்கிறீர்கள். இதை அறியாமல் மனிதர்
அவற்றின்மீது நடக்கிறார்கள்'' என்றார்.

45 அதைக் கேட்ட நீதிச்சட்ட அறிஞன்
ஒருவன் அவரிடம், ''போதகரே, இவ்வாறு
சொல்வதனால் எங்களையும் நீர் அவமானப்
படுத்துகிறீரே!'' என்றான். 46 அதற்கு
அவர், ''நீதிச்சட்ட அறிஞர்களே, உங்
களுக்கும் கேடு வரும். ஏனெனில், சுமப்ப
தற்கரிய சுமைகளை நீங்கள் மனிதர்மேல்
சுமத்துகிறீர்கள். நீங்களோ அந்தச் சுமை
களை ஒரு விரலினால்கூடத் தொட மாட்டீர்
கள். 47 உங்களுக்குக் கேடு வரும். ஏனெ
னில், நீங்கள் இறைவாக்குரைப்போருக்குக்
கல்லறை கட்டுகிறீர்கள். அவர்களைக் கொன்
றவர்கள் உங்கள் மூதாதையரே. 48 ஆகை
யால், உங்கள் மூதாதையரின் செய்கை
களுக்கு நீங்கள் சாட்சிகளாகிறீர்கள், அவற்
றிற்கு உடன்பட்டுமிருக்கிறீர்கள். அவர்கள்
கொன்றார்கள், நீங்கள் கல்லறை கட்டுகிறீர்
கள். 49 அதனாலேதான் தெய்வ ஞானம்
இவ்வாறு சொல்லியிருக்கிறது: நான் இறை
வாக்குரைப்போரையும் திருத்தூதுவரையும்
அவர்களிடம் அனுப்புவேன். அவர்களுள்

* மூலத்தில் இருப்பதன் நேர்ப்பொருள், 'இங்கே இருப்பது சாலொமோனைவிடப் பெரியது' என்பது.
† மூலத்தில் இருப்பதன் நேர்ப்பொருள், 'இங்கே இருப்பது யோனாவைவிடப் பெரியது' என்பது.
**11:29** மத். 16:14; மாற். 8:12. **11:30** யோனா 3:4. **11:31** 1 அர. 10:1—10; 2 வரலாறு. 9:1—12.
**11:32** யோனா 3:5. **11:33** மத். 5:15; மாற். 4:21; லூக். 8:16. **11:42** இலே. 27:30.

சிலரைக் கொன்று, சிலரைத் துன்புறுத்து
வார்கள். 50 இப்படிச் செய்வதனுல் ஆபே
லின் இரத்தம் முதல் பலிபீடத்துக்கும்
திருக்கோவிலுக்கும் நடுவே கொலேயுண்ட
சகரியாவின் இரத்தம்வரைக்கும் உலகத்
தோற்றமுதல் சிந்தப்பட்ட இறைவாக்
குரைப்போர் அனைவரின் இரத்தத்திற்கும்
இந்தத் தலைமுறையிடம் பழிவாங்கப்படும்.
51 ஆம், இந்தத் தலைமுறையிடம் அதற்குப்
பழிவாங்கப்படும்; இது திண்ணம் என்று
நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். 52 நீதிச்
சட்ட அறிஞர்களே, உங்களுக்குக் கேடு
வரும். ஏனெனில், அறிவுக்கான திறவு
கோலை எடுத்துக்கொண்டீர்கள். நீங்களும்
உள்ளே செல்லவில்லை, உள்ளே செல்வோ
ரையும் தடுத்துவிட்டீர்கள்'' என்ருர்.

53 அவர் அவ்விடம் விட்டுப் புறப்பட்ட
போது, வேத அறிஞரும் பரிசேயரும் சீறி
எழுந்து, 54 அவருடைய வாய்ப்பேச்சில்
அவரைச் சிக்கவைக்கும் நோக்கத்தோடு,
அவரைப் பல காரியங்களைக் குறித்துப்
பேசும்படி செய்ய, அவரிடம் கேள்விகள்
கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

### ஓர் எச்சரிக்கை

(மத். 10:26,27)

12 அவ்வேளையில் ஆயிரக்கணக்கான மக்
கள் ஒருவரையொருவர் மிதிக்கும் அள
வுக்கு வந்து கூடினர்கள். அப்பொழுது
இயேசு முதலில் தம்முடைய சீடரை நோக்கி
''பரிசேயரின் போலி பக்தியாகிய புளிப்பு
மாவைக் குறித்து எச்சரிக்கையாயிருங்கள்.
2 வெளியாக்கப்படாத மறைசெய்தியு
மில்லை; அறியப்படாத இரகசியமுமில்லை.
3 ஏனெனில், நீங்கள் இருட்டில் பேசினது
எதுவோ, அது வெளிச்சத்தில் கேட்கப்படும்;
நீங்கள் உள் அறையிலே காதில் சொன்னது
எதுவோ அது வீடுகளின் மேலிருந்து வெளிப்
படையாக அறிவிக்கப்படும்.

### யாருக்கு அஞ்சுவது?

(மத். 10:28–31)

4 ''என் நண்பர்களே, நான் உங்
களுக்குச் சொல்லுகிறேன்: உடலைக் கொன்ற
பின் அதற்குமேல் ஒன்றும் செய்ய இயலா
தவர்களுக்கு நீங்கள் அஞ்சவேண்டாம். 5 நீங்
கள் யாருக்கு அஞ்ச வேண்டுமென்று உங்
களுக்குச் சொல்லிவைக்கிறேன். கொல்லப்
பட்டபின் நரகத்திலே தள்ள அதிகாரமுள்
ளவருக்கு அஞ்சுங்கள்; ஆம், அவருக்கே
அஞ்சுங்கள் என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன்.
6 ''இரண்டு காசுக்கு ஐந்து அடைக்க
லான் குருவிகள் விற்கிறர்களல்லவா? ஆயி
னும், அவற்றுள் ஒன்றேனும் கடவுள் முன்
னிலையில் மறக்கப்படுவதில்லை. 7 உங்கள்
தலை முடிகூட முற்றிலும் எண்ணப்பட்டி
ருக்கிறது. அஞ்சாதீர்கள்; பல அடைக்கலான்
குருவிகளைவிட நீங்கள் மேலானவர்கள்.

### மனிதர்முன் கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளுதல்

(மத். 10:32,33;12:32;10:19,20)

8 ''அன்றியும் நான் உங்களுக்குச் சொல்
லுகிறேன்: மனிதர் முன் தன்னை என்னு
டையவனென்று ஒப்புக்கொள்கிற ஒவ்வொ
ருவனையும் மனுமைந்தர் கடவுளின் தூதர்
முன் தம்முடையவனென்று ஒப்புக்கொள்
வார். 9 மனிதர் முன் என்னை இன்னு
ரென்று தெரியாதென மறுதலிக்கிறவன்
கடவுளின் தூதர்முன் மறுதலிக்கப்படுவான்.
10 மனுமைந்தருக்கு விரோதமாக எவனு
வது ஒரு வார்த்தை சொன்னல் அது அவ
னுக்கு மன்னிக்கப்படும். ஆனல், தூய
ஆவிக்கு விரோதமாகப் பழிப்புரை கூறு
கிறவனே மன்னிப்புப் பெற மாட்டான்.
11 தொழுகைக்கூடத் தலைவர்கள், ஆட்சி
செய்வோர், அதிகாரிகள் ஆகியோர்முன்
உங்களைக் கொண்டுபோய் விடும்போது, எப்
படி என்ன உத்தரவு சொல்லுவோமென்று
நீங்கள் கவலைப்பட வேண்டாம்; 12 நீங்கள்
பேச வேண்டியவற்றை அந்நேரத்தில் தூய
ஆவியானவர் உங்களுக்குக் கற்பிப்பார்''
என்ருர்.

### மதிகேடனன செல்வன்

13 கூட்டத்திலிருந்த ஒருவன் அவரைப்
பார்த்து, ''போதகரே, மரபுரிமையாக
வரும் எங்கள் சொத்தைப் பாகம் பிரித்து
என் பங்கை எனக்குத் தரும்படி என் சகோ
தரனுக்குச் சொல்லும்'' என்று கேட்டுக்
கொண்டான். 14 அவர் அந்த ஆளை
நோக்கி, ''என்னை உங்களுக்கு நீதிபதியாக
அல்லது பங்கிடுவோனுக 'ஏற்படுத்தினவன்
யார்?'' என்று கேட்டார். 15 பிறகு அவர்
அவர்களைப் பார்த்து, ''எவ்வகைப் பேரா
சைக்கும் இடங்கொடாமல் விழிப்புடன் எச்
சரிக்கையாயிருங்கள். ஏனெனில், ஒருவனு
டைய மெய்வாழ்வு அவனுடைய செல்வப்
பெருக்கில் இல்லை'' என்ருர். 16 ஓர் உவ
மையையும் அவர்களுக்குச் சொன்னர்:
''செல்வமுடைய ஒருவனது நிலம் நன்ருக
விளைந்தது. 17 அதைக் கண்டு அவன் தனக்
குள் சிந்தனை செய்து, நான் என்ன செய்
வேன்? என் விளைபொருள்களைச் சேர்த்து
வைப்பதற்கு இடம் இல்லையே. 18 ஒன்று

**11:52** மத். 23:13. **11:54** மத். 19:3; 22:15. **12:1** மத். 16:6; மாற். 8:15. **12:2** மத். 4:22; லூக். 8:17
**12:10** மத். 12:32; மாற். 3:29. **12:11, 12** மத். 10:19, 20; மாற். 13:11; லூக். 21:14,15.

செய்வேன். என் களஞ்சியங்களை இடித்துப்
பெரியவையாய்க் கட்டி, எல்லாத் தானி
யத்தையும் பொருள்களையும் அங்கே சேர்த்து
வைத்து, 19 'நெஞ்சே, பல்லாண்டுகளுக்கு
வேண்டிய பொருளெல்லாம் உனக்கு இருக்
கின்றன. நீ கவலையற்று இளைப்பாறு,
உண்டு குடித்துக் களிப்புடனிரு என்று
சொல்லிக்கொள்வேன்' என்றான். 20 ஆனால்,
கடவுள் அவனிடம், 'மதிகேடனே, இன்றி
ரவே உன் உயிர் உன்னை விட்டு நீங்கப்போகி
றது. அப்பொழுது நீ சேர்த்து வைத்தவை
யாருடையவையாகும்?' என்று கேட்டார்.
21 தனக்காகவே பொருளைச் சேர்த்துக்
கொண்டு கடவுளுக்கென்று செல்வமுடைய
வனாய் இராதவன் இவ்வாறே இருப்பான்''
என்றார்.

### கவலைப்படாதீர்கள்

(மத். 6:25—34)

22 பிறகு இயேசு தம்முடைய சீட
ரிடம், ''ஆகையால், நான் உங்களுக்குச்
சொல்லுகிறேன்: உயிர் வாழ்வதற்கு என்ன
உண்போமென்றோ, உடலை மூட என்ன
உடுப்போமென்றோ கவலைப்படாதீர்கள்.
23 உணவைவிட உயிரும், உடையைவிட
உடலும் முக்கியம். 24 காகங்களைக் கவனி
யுங்கள்; அவை விதைப்பதுமில்லை; அறுப்பது
மில்லை. அவற்றிற்குப் பண்டகசாலையோ,
களஞ்சியமோ இல்லை. ஆயினும், அவற்றிற்
கும் கடவுள் உணவளிக்கிறார். பறவைகளை
விட நீங்கள் எவ்வளவோ மேலானவர்கள்.
25 கவலைப்படுவதனால் தன் வளர்த்தியோடு
ஒரு முழத்தைக் கூட்ட உங்களுள் யாரால்
இயலும்?* 26 மிகச்சிறிய காரியத்தைக்
கூட உங்களால் செய்ய இயலாதிருக்க, மற்ற
வற்றிற்காக நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்
கள்? 27 காட்டு மலர்கள் எப்படி உண்டா
கின்றன என்பதைக் கவனியுங்கள். அவை
நூற்பதுமில்லை, நெய்வதுமில்லை, ஆயினும்,
சாலொமோன்கூடத் தன் முழு மாட்சிமை
யிலும் அவற்றுள் ஒன்றைப் போலும் உடுத்தி
யிருந்ததில்லை என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன். 28 அற்ப நம்பிக்கை உள்ளவர்
களே, இன்றைக்கிருந்து நாளைக்கு அடுப்பில்
எறியப்படும் காட்டுப் புல்லுக்கே கடவுள்
இவ்வாறு உடுத்துகிறார் என்றால், உங்க
ளுக்கு அவர் உடுத்துவது எவ்வளவு திண்
ணம்! 29 ஆகையால், என்ன உண்போம்,
என்ன குடிப்போம் என்று தேடிக்கொண்டி
ருக்க வேண்டாம், கவலை கொள்ளவும்
வேண்டாம். 30 இவற்றையெல்லாம்
உலகத்தில் கடவுளை அறியாத பிற இனத்த
வரே நாடித் தேடுகின்றனர். இவை உங்
களுக்குத் தேவைப்படுகின்றன என்பது உங்
கள் தந்தையாருக்குத் தெரியும். 31 அவ
ரது அருளாட்சிக்குட்படுவதை நாடுங்கள்.
அப்பொழுது இவையும் உங்களுக்குச் சேர்த்
துக் கொடுக்கப்படும்.

### உண்மைச் செல்வம்

(மத். 6:19—21)

32 ''சிறுமந்தையே, அஞ்ச வேண்டாம்;
ஏனெனில், உங்களுக்கு அந்த ஆட்சியைக்
கொடுக்க உங்கள் தந்தையார் திருவுளங்
கொண்டிருக்கிறார். 33 உங்களுக்கு உள்ள
வற்றை விற்று ஏழைகளுக்குக் கொடுங்
கள். ஒருபோதும் பழமையாகப் போகாத
பணப்பைகளை, அதாவது, குறையாத
செல்வத்தை விண்ணுலகில் உங்களுக்கென
வைத்துக்கொள்ளுங்கள். அங்கே திருட
னும் அணுகமாட்டான், பூச்சியும் அழிக்
காது. 34 எங்கே உங்கள் செல்வம் இருக்
கிறதோ அங்கே உங்கள் மனமும் இருக்கும்.

### விழிப்பாயிருக்கும் ஊழியர்கள்

35 ''உங்கள் அரைக்கச்சைகள் கட்டப்
பட்டும் விளக்குகள் எரிந்துகொண்டும்
இருக்கட்டும். 36 திருமண விருந்திலிருந்து
தங்கள் தலைவன் திரும்பிவந்து தட்டும்
போது உடனே அவனுக்குத் திறப்பதற்
காகக் காத்துக்கொண்டிருக்கிற மனித
ருக்கு ஒப்பாயிருங்கள். 37 தலைவன் வரும்
போது விழிப்பாயிருக்கிறவர்களாக அவன்
காண்கிற ஊழியர்களே நற்பேறு பெற்ற
வர்கள். அவன் அரைகட்டிக்கொண்டு,
அவர்களைப் பந்தியிருக்கச் செய்து, அவர்
களண்டை வந்து, பணிவிடை செய்வான்.
இதை நான் உங்களுக்கு உறுதியாகச்
சொல்லுகிறேன். 38 அவன் இரவின்
இரண்டாம் சாமத்திலாவது மூன்றாம்
சாமத்திலாவது வந்து, அவ்வூழியர்கள் அப்
படியே இருக்கக் கண்டால், அவர்கள் நற்
பேறு பெற்றவர்கள். 39 திருடன் எந்த
நேரத்தில் வருவான் என்பது வீட்டுத் தலை
வனுக்குத் தெரிந்திருந்தால், அவன் தன்
வீட்டைக் கன்னமிட இடங்கொடுக்கமாட்
டான் என்பதை அறிந்துகொள்ளுங்கள்.
40 அப்படியே நீங்கள் நினையாத நேரத்
தில் மனுமைந்தர் வருவார். ஆகையால்,
நீங்களும் எப்போதும் ஆயத்தமாயிருங்
கள்'' என்றார்.

### நம்பிக்கைக்குரிய வேலைக்காரன் யார்?

(மத். 24:45—51)

41 அப்பொழுது பேதுரு, ''ஆண்ட
வரே, இந்த உவமையை எங்களைக் குறித்
துச் சொல்லுகிறீரா, அல்லது எல்லாரையும்

* 'தன் ஆயுளோடு ஒரு நாளைக் கூட்ட உங்களுள் யாரால் இயலும்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

**12:27** 1 அர. 10:4—7; 2 வரலாறு. 9:3—6. **12:35** மத். 25:1—13. **12:36** மாற். 13:34—36; 1 பேது. 1:13. **12:39, 40** மத். 24:43, 44.

குறித்துச் சொல்லுகிறீரா?'' என்று
கேட்டார். 42 அதற்கு ஆண்டவர்,''நம்
பிக்கைக்குரியவனும் விவேகமுள்ளவனு
மான ஊழியன் ஒருவன் தன் தலைவனு
டைய வேலைக்காரருக்கு ஏற்ற வேளையில்
படியளக்கும்படி அவனால் கண்காணிப்பாள
னாய் நியமிக்கப்பட்டான் என்று வைத்துக்
கொள்வோம். 43 தலைவன் அவனை அப்ப
டிச் செய்கிறவனாய்க் கண்டால் அந்த
ஊழியன் நற்பேறு பெற்றவனாவான்.
44 அவனைத் தலைவன் தனக்குள்ள யாவற்
றின் மேலும் அதிகாரியாக அமர்த்துவான்
என்கிற உண்மையை உங்களுக்குச் சொல்
லுகிறேன். 45 ஆனால், அந்த ஊழியன்,
'என் தலைவர் இப்போது வரமாட்டார்'
என்று தன் உள்ளத்தில் சொல்லிக்கொண்டு
வேலைக்காரர் வேலைக்காரிகளை அடிக்கவும்,
உண்டு குடித்து வெறித்திருக்கவும் தலைப்
பட்டானென்றால், 46 அந்த ஊழியன்
எதிர்பாராத ஒரு நாளிலும், அறியாத
ஒரு நேரத்திலும் அவனுடைய தலைவன்
வந்து, அவனைக் கடுமையாகத் தண்டித்து,
வஞ்சனையாளருக்குரிய கதிக்கு ஆளாக்கு
வான். 47 தலைவனுடைய விருப்பம் என்ன
வென்பதை அறிந்திருந்தும் அதன்படி
முன்னேற்பாடு எதுவும் செய்யாமலும் நட
வாமலுமிருக்கும் ஊழியனுக்குப் பல அடி
கள் கிடைக்கும். 48 ஆனால் அதை அறி
யாத ஒருவன் தண்டனைக்குரியவற்றைச்
செய்தாலும், அவனுக்குச் சில அடிகளே
கிடைக்கும். எவனிடம் மிகுதியாகக்
கொடுக்கப்படுகிறதோ அவனிடம் மிகுதி
யாக எதிர்பார்க்கப்படும்; எவனிடம் மிகு
தியாக ஒப்புவிக்கப்படுகிறதோ அவனிடம்
அதைவிட மிகுதியாகக் கேட்கப்படும்.

### பிரிவினை ஏற்படுதல்
(மத். 10:34—36)

49 ''மண்ணுலகில் தீயை வீச வந்தேன்;
அது ஏற்கெனவே மூண்டு எரிந்துகொண்டி
ருக்க வேண்டுமென்பதே என் பேராவல்.
50 ஆயினும், நான் பெற வேண்டிய முழுக்கு
ஒன்று உண்டு. அது நடந்து தீருமளவும்
எனக்கு இருக்கும் மன நெருக்கடியைச்
சொல்ல இயலாது. 51 மண்ணுலகில் சமா
தானத்தை ஏற்படுத்த வந்தேன் என்று
நினைக்கிறீர்கள்? இல்லை, பிரிவினையையே
என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.
52 எப்படியெனில், இதுமுதல் ஒரே வீட்டி
லுள்ள ஐந்து பேரினிடையே பிரிவினை ஏற்
படும். இரண்டு பேருக்கு விரோதமாக
மூன்று பேரும், மூன்று பேருக்கு விரோத
மாக இரண்டு பேரும்இருப்பார்கள்.53 அவர்
கள் பிரிந்து, தகப்பன் மகனுக்கும்,
மகன் தகப்பனுக்கும், தாய் மகளுக்கும்,
மகள் தாய்க்கும், மாமி மருமகளுக்கும்,
மருமகள் மாமிக்கும் விரோதமாக இருப்
பார்கள்'' என்றார்.

### பருவ காலத்தைக் கண்டறிதல்
(மத். 16:2,3)

54 மேலும் அவர் கூட்டத்தைப்
பார்த்து, ''மேற்கில் மேகம் எழும்பு
கிறதை நீங்கள் காணும்பொழுது, மழை
பெய்யும் என்று உடனே சொல்லுகிறீர்
கள்; அப்படியே மழை பெய்கிறது. 55 தெற்
கிலிருந்து காற்று வீசும்போது வெப்பம்
மிகுதியாகும் என்று சொல்லுகிறீர்கள்.
அப்படியே நடக்கிறது. 56 போலி
பக்தரே, பூமியின் நிலையையும் வானத்
தின் நிலையையும் கண்டறிய உங்களுக்குத்
தெரிகிறதே, இந்தக் காலத்தின் நிலையை
மட்டும் நீங்கள் கண்டறியாமல் இருப்பது
எப்படி?

### உன் எதிரியோடு சமரசம் செய்துகொள்
(மத். 5:25,26)

57 ''எது நியாயமானது என்று நீங்
களே தீர்மானியாமல் இருக்கிறதேன்?
58 உன் எதிரி உன்னை நீதிபதிமுன் இழுத்துக்
கொண்டு போகாமலும், நீதிபதி உன்னைக்
காவலனிடம் ஒப்படைக்காமலும், காவ
லன் உன்னைச் சிறையில் அடைத்துவைக்
காமலும் இருக்க வேண்டுமென்றால், நீ
உன் எதிரியோடு அதிகாரியிடம் போகும்
போது வழியிலேயே அவனோடு உனக்
குள்ள வழக்கைத் தீர்த்துக்கொள்ள முயற்சி
செய். 59 இல்லாவிடில், நான் உனக்குச்
சொல்லுகிறேன்: நீ காசை முழுதும் கொடுத்
துத் தீர்க்கும்வரையில் சிறையிலிருந்து
வெளியேறவே மாட்டாய்'' என்றார்.

### மனமாற்றமடைந்தாலன்றி அழிந்துபோவீர்கள்

**13** அந்த வேளையில் அங்கே சிலர் வந்து,
பிலாத்து கலிலேயர் சிலருடைய இரத்
தத்தை அவர்களுடைய பலிகளோடு கலந்
தான் என்ற செய்தியை அவருக்கு அறி
வித்தனர். 2 அவர் அதைக் கேட்டு, ''அந்
தக் கலிலேயருக்கு இவை நேர்ந்ததால்,
அவர்கள் மற்றெல்லாக் கலிலேயரையும்
விடப் பெரும் பாவிகள் என்று நினைக்கிறீர்
களா? 3 அப்படியன்று என்று உங்களுக்
குச் சொல்லுகிறேன். நீங்களும் மன
மாற்றமடையாவிடில், எல்லாரும் அவ்
வாறே அழிந்துபோவீர்கள். 4 சீலோவா
மிலே கோபுரம் விழுந்து பதினெட்டுப்
பேரைக் கொன்றதே; அவர்கள் எருசலே
மிலுள்ள மற்றெல்லா மனிதரையும்விடப்

**12:50** மாற். 10:38. **12:53** மீகா. 7:6.

பெருங்குற்றவாளிகளென்று நினைக்கிறீர்
களா? 5 அப்படியன்று என்று உங்களுக்
குச் சொல்லுகிறேன். நீங்களும் மனமாற்
றம் அடையாவிடில், எல்லாரும் அவ்வண்
ணமே அழிந்துபோவீர்கள்'' என்றார்.

## கனிகொடாத அத்தி மரம்

6 பிறகு அவர் இந்த உவமையைச்
சொன்னார்: ''ஒருவன் தன் திராட்சைத்
தோட்டத்தில் அத்தி மரம் ஒன்றை நட்டு
வைத்திருந்தான். அவன் அதில் கனியைத்
தேடி வந்தபோதோ ஒன்றையும் காண
வில்லை. 7 அப்பொழுது அவன் தோட்டக்
காரனை நோக்கி, 'இதோபார், மூன்று
ஆண்டுகளாக இந்த அத்தி மரத்தில் கனி
யைத் தேடி வருகிறேன், ஆனால் ஒன்றை
யும் காணவில்லை. இதை வெட்டிவிடு. இது
நிலத்தை ஏன் பாழாக்கிக்கொண்டிருக்க
வேண்டும்?' என்றான். 8 அதற்கு அவன்,
'ஐயா, இந்த ஆண்டும் இது இருக்கட்டும்.
நான் இதைச் சுற்றிலும் கொத்தி எருப்
போட்டுப் பார்க்கிறேன். 9 அடுத்த ஆண்
டில் கனி கொடுக்குமானால் நல்லது, இல்லை
என்றால் வெட்டிவிடலாம்' என்று சொன்
னான்'' என்றார்.

## ஓய்வுநாளில் நன்மை செய்தல்

10 ஓய்வுநாள் ஒன்றில் அவர் ஒரு
தொழுகைக்கூடத்தில் போதித்துக்கொண்
டிருந்தார். 11 அங்கே இருந்த ஒரு பெண்
நோய்தரும் ஆவியால் பதினெட்டு ஆண்டு
களாகப் பீடிக்கப்பட்டுக் கூன்விழுந்து சற்
றேனும் நிமிர இயலாத நிலையில் இருந்
தாள். 12 இயேசு அவளைக் கண்டு, அருகே
அழைத்து, ''பெண்ணே உன் நோயி
லிருந்து நீ விடுதலை பெற்றுவிட்டாய்''
என்று சொல்லி, 13 அவள்மேல் தம்முடைய
கைகளை வைத்தார்; உடனே அவள்
நிமிர்ந்து நின்று கடவுளைப் போற்றினாள்.
14 ஆனால் தொழுகைக்கூடத் தலைவனோ,
ஓய்வுநாளில் இயேசு குணப்படுத்தின
தைக் கண்டு சினமடைந்து, கூடியிருந்த
வர்களை நோக்கி, ''நீங்கள் வேலை செய்ய
வேண்டிய நாள்கள் ஆறு உண்டு, அந்
நாள்களில் வந்து குணமடைந்துகொள்ளுங்
கள், ஓய்வுநாளில் வேண்டாம்'' என்
றான். 15 ஆண்டவர் அவனுக்குப் பதில்
சொல்லும் வகையில், ''போலி பக்தர்
களே, உங்களுள் ஒவ்வொருவனும் ஓய்வு
நாளில் தன் மாட்டையாவது கழுதையையா
வது தொழுவத்திலிருந்து அவிழ்த்துக்
கொண்டுபோய், அதற்குத் தண்ணீர் காட்டு
கிறானல்லவா? 16 பாருங்கள்! ஆபிரகாமின்
மகளாகிய இவள் சாத்தானால் பதினெட்டு
ஆண்டுகளாகக் கட்டப்பட்டிருந்தாள்.
ஓய்வுநாளில் இவளை இந்தக் கட்டிலி
ருந்து அவிழ்த்துவிடக் கூடாதா?'' என்று
கேட்டார். 17 அவர் இப்படிக் கேட்ட
தும், அவருடைய எதிரிகள் அனைவரும்
வெட்கமடைந்தனர். கூடியிருந்த எல்லா
ருமோ அவர் செய்துகொண்டிருந்த வியக்
கத்தக்க செயல்கள் எல்லாவற்றையும்
குறித்து மகிழ்ச்சியடைந்தனர்.

## கடவுளின் அரசை ஒப்பிட்டுக் காட்டுதல்

(மத். 13:31—33; மாற். 4:30—32)

18 அப்பொழுது இயேசு, ''கடவுளின்
அரசு எதற்கு ஒப்பாயிருக்கிறது? அதை
நான் எதற்கு ஒப்பிட்டுக் காட்டுவேன்?
19 அது கடுகு விதைக்கு ஒப்பாயிருக்கிறது.
ஒருவன் கடுகுவிதை ஒன்றை எடுத்துத்
தன் தோட்டத்தில் விதைத்தான். அது
வளர்ந்து மரமாயிற்று.* வானத்துப் பற
வைகள் அதன் கிளைகளில் வந்து தங்கலா
யின'' என்றார்.

20 மறுபடியும் அவர், ''கடவுளின்
அரசை நான் எதற்கு ஒப்பிட்டுக் காட்டு
வேன்? 21 அது புளிப்பு மாவுக்கு ஒப்பா
யிருக்கிறது. ஒரு பெண் புளிப்பு மாவை
எடுத்து அதை மூன்றுபடி மாவுக்குள்
புதைத்து வைக்கிறாள், அதனால் அந்த மாவு
முழுவதும் புளித்துப்போகிறது'' என்றார்.

## இடுக்கான வாயில்

(மத். 7:13,14,21—23)

22 அவர் ஊர்கள் பட்டிகள் வழியாக
நடந்து போதித்துக்கொண்டே எருசலேமை
நோக்கிப் பயணம் செய்தார். 23 அப்
பொழுது ஒருவன் அவரிடம் வந்து,
''ஆண்டவரே மீட்புப் பெறப்போகிறவர்
கள் சிலர்தானோ?'' என்று கேட்டான்.
24 அவர் அங்கிருந்தவர்களிடம், ''நீங்கள்
இடுக்கான வாயில் வழியாக உட்செல்லக்
கடுமுயற்சி செய்யுங்கள்; பலர் உட்செல்ல
முயற்சி செய்வர்; ஆனால் அவர்களால்
இயலாமற்போகும் என்று உங்களுக்குச்
சொல்லுகிறேன். 25 வீட்டுத் தலைவன்
எழுந்து வந்து கதவைப் பூட்டியது முதல்
நீங்கள் வெளியே நின்றுகொண்டு, 'ஆண்
டவரே, எங்களுக்குத் திறந்தருளும்' என்று
சொல்லிக் கதவைத் தட்டுவீர்கள்; ஆனால்
அவர், 'நீங்கள் எங்கிருந்து வந்தவர்களோ
உங்களை எனக்குத் தெரியாது' என்று உங்
களுக்குச் சொல்லுவார். 26 பின்னும் நீங்
கள், 'உமது முன்னிலையில் நாங்கள் உணவும்

* இங்கே குறிக்கப்படுவது பலஸ்தீனா நாட்டில் வளரும் ஒருவகைக் கடுகு மரம்.

13:6 எரே. 8:13; மத். 21:19, 20. 13:10 யோ. 9:14. 13:14 யாத். 20:9, 10; உபா. 5:13. 14.
13:25 மத். 25:10—12.

பானமும் அருந்தியிருக்கிறோம், நீர்
எங்கள் வீதிகளில் போதித்திருக்கிறீர்'
என்று சொல்லுவீர்கள். 27 ஆனாலும்,
அவர், 'நீங்கள் எங்கிருந்து வந்தவர்களோ,
எனக்குத் தெரியாது. நேர்மையற்றவர்
களே, எல்லாரும் என்னை விட்டு அகன்று
போங்கள்' என்று சொல்லுவார். 28 ஆபி
ரகாம், ஈசாக்கு, யாக்கோபும் இறை
வாக்குரைப்போர் அனைவரும் கடவுளின்
அரசில் இருப்பதையும் நீங்கள் புறம்பே
தள்ளப்படுவதையும் அங்கே நீங்கள்
காணும்போது, உங்களிடையே அழுகை
யும் பற்கடிப்பும் இருக்கும். 29 கிழக்கி
லும் மேற்கிலும் வடக்கிலும் தெற்கிலு
மிருந்து மனிதர்கள் வந்து, கடவுளின்
அரசிலே பந்தியில் அமருவார்கள். 30 பிந்
தினோர் சிலர் முந்தினோராவர், முந்தி
னோர் சிலர் பிந்தினோராவர்'' என்றார்.

## இயேசு எருசலேமுக்காக வருந்துதல்

(மத். 23:37—39)

31 அந்நேரத்தில் பரிசேயர் சிலர் அவ
ரிடம் வந்து, ''நீர் இங்கிருந்து புறப்பட்
டுப் போய்விடும். ஏரோது உம்மைக்
கொல்ல வேண்டுமென்றிருக்கிறான்'' என்று
கூறினர். அவர் அவர்களிடம், ''இன்றும்
நாளையும் பேய்களை ஓட்டுவேன், பிணி
களைத் தீர்ப்பேன். 32 மூன்றாம் நாளில்
நான் என் பணியில் முழுநிறைவாக்கப்
பெறுவேன் என்று நீங்கள் போய் அந்த
நரிக்குச் சொல்லுங்கள். 33 இருந்தாலும்,
நான் இன்றும் நாளையும் அதற்கடுத்த
நாளும் தொடர்ந்து போய்க்கொண்டே
யிருக்க வேண்டும். ஏனெனில், இறைவாக்
குரைக்கும் ஒருவர் எருசலேமுக்கு வெளியே
மடிவதென்பது நடக்க முடியாத காரியம்.
34 எருசலேமே, எருசலேமே, இறைவாக்
குரைப்போரைக் கொன்று, உன்னிடம்
அனுப்பப்பட்டவர்களைக் கல்லாலடிக்கும்
நகரமே! கோழி தன் குஞ்சுகளைச் சிறகு
களின் கீழே கூட்டிச் சேர்த்துக்கொள்ளும்
வண்ணமாக நான் எத்தனையோ முறை
உன் பிள்ளைகளைக் கூட்டிச்சேர்த்துக்கொள்ள
விரும்பினேன். உங்களுக்கோ விருப்பமில்
லாமற் போயிற்று. 35 இப்போதோ உங்
கள் வீடு கைவிடப்பட்டதாயிற்று. ஆண்
டவரின் திருப்பெயரால் வருகிறவர் ஆசி
பெறுவாராக என்று நீங்கள் சொல்லும்
நாள் வருமட்டும் என்னைக் காணவேமாட்
டீர்கள் என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன்'' என்றார்.

## நீர்க்கோவை நோயாளியைக் குணமாக்குதல்

14 ஓய்வுநாள் ஒன்றில் இயேசு பரிசே
யரின் தலைவன் ஒருவனுடைய வீட்
டுக்கு உணவு அருந்தப் போயிருந்தார்.
அப்பொழுது அவர்கள் அவரைக் கூர்ந்து
கவனித்துக்கொண்டிருந்தார்கள். 2 அங்கே
நீர்க்கோவை நோயுள்ள ஒருவன் அவர்
முன் இருந்தான். 3 அவ்வேளையில் இயேசு
அங்கிருந்த நீதிச்சட்ட அறிஞர்களையும்,
பரிசேயரையும் பார்த்து, ''ஓய்வுநாளில்
குணப்படுத்துவது முறையா இல்லையா?''
என்று கேட்டார். அவர்களோ பேசாதி
ருந்தார்கள். 4 அப்பொழுது அவர் அவ
னைத் தொட்டுக் குணப்படுத்தி அனுப்பி
விட்டு, அவர்களை நோக்கி, 5 ''உங்களுள்
ஒருவன் தன்னுடைய மகனாவது மாடா
வது கிணற்றில் விழுந்துவிட்டால், ஓய்வு
நாளென்றாலும் உடனே அதைத் தூக்கி
விடாமல் இருப்பானா?'' என்று கேட்டார்.
6 அதற்குப் பதில் சொல்ல அவர்களால்
இயலாமற்போயிற்று.

## விருந்தினருக்கும் விருந்தளிப்போருக்கும் ஒரு படிப்பினை

7 விருந்துக்கு அழைக்கப்பட்டவர்கள்
பந்தியில் முதன்மையான இடங்களைத்
தெரிந்தெடுத்ததை அவர் கவனித்து,
அவர்களிடம் உவமானமாக, 8 ''ஒருவன்
உன்னைத் திருமண விருந்துக்கு அழைத்
திருக்கும்போது, பந்தியில் முதன்மையான
இடத்தில் போய் உட்காராதே. ஒருவேளை
உன்னைவிட மதிப்புள்ள ஒருவன் அழைக்
கப்பட்டிருந்தால், 9 உன்னையும் அவனை
யும் அழைத்தவன் உன்னிடம் வந்து,
'இவருக்கு இடங்கொடு' என்பான்; அப்
பொழுது நீ வெட்கத்தோடு கடைசி
இடத்துக்குப் போக நேரிடும். 10 நீ
அழைக்கப்பட்டிருக்கும்போது போய்க்
கடைசி இடத்தில் உட்காரு. அப்பொழுது
உன்னை அழைத்தவன் வந்து, 'நண்பனே,
முன்னால் உயர்வான இடத்துக்கு வா'
என்று சொல்லுவான். அப்பொழுது பந்தி
யில் இருப்பவர் எல்லாருக்கும் முன் நீ
பெருமையடைவாய். 11 ஏனென்றால், தன்
னைத்தான் உயர்த்துகிறவன் எவனும்
தாழ்த்தப்படுவான்; தன்னைத்தான் தாழ்த்
துகிறவனோ உயர்த்தப்படுவான்'' என்று
சொன்னார்.

12 பிறகு அவர் தம்மை விருந்துக்கு
அழைத்தவனிடம், ''நீ பகலிலாவது இர
விலாவது விருந்து நடத்தவிருக்கும்போது,

13:27 சங். 6:8 13:28 மத். 8:11, 12; 22:13; 25:30. 13:30 மத். 19:30; 20:16; மாற். 10:31.
13:35 சங். 118:26 14:5 மத். 12:11; லூக். 13:15; யோ. 7:23. 14:8—10 நீதி. 25:6, 7; மத்.
23:6. 14:11 மத். 23:12; லூக். 18:14.

உன் நண்பர், உன் சகோதரர், உன் உற
வினர், செல்வமுடைய அயலகத்தார்
ஆகியோரை அழைக்க வேண்டாம்; அழைத்
தால் அவர்களும் உன்னைப் பதிலுக்கு
அழைப்பார்கள். அதுவே உனக்குக் கைம்
மாறாகிவிடும். 13 அப்படிச் செய்யாமல்,
நீ விருந்து நடத்தவிருக்கும்போது, ஏழை
கள், ஊனர்கள், முடவர்கள், குருடர்கள்
ஆகியோரை வரவழை. 14 அப்பொழுது
நீ நற்பேறு பெற்றவனாவாய். ஏனெனில்,
அவர்கள் உனக்குக் கைம்மாறு செய்ய
இயலாதவர்கள். நேர்மையானவர்களின்
உயிர்த்தெழுதலின்போது உனக்குக் கைம்
மாறு கிடைக்கும்'' என்றார்.

### பெரிய விருந்து
(மத். 22:1—10)

15 அவர்களோடு பந்தியில் இருந்தவர்
களுள் ஒருவன் இவற்றைக் கேட்டபோது,
அவரைப் பார்த்து, ''கடவுளின் ஆட்சி
யில் விருந்துண்பவன் நற்பேறு பெற்றவனா
யிருப்பான்'' என்றான். 16 அதற்கு அவர்,
''ஒரு மனிதன் பெரியதொரு விருந்தை
ஆயத்தம் செய்து, பலரை வரவழைத்
தான். 17 விருந்துநேரம் வந்ததும், அவன்
தன் ஊழியனை அழைக்கப்பட்டவர்களிடம்
அனுப்பி, 'வாருங்கள், விருந்து ஆயத்த
மாயிருக்கிறது என்று சொல்' என்றான்.
18 அவர்கள் எல்லாருமே சாக்குப்போக்
குச் சொல்லத் தொடங்கினர். முதலாம்
ஆள், 'ஒரு வயலை விலைக்கு வாங்கினேன்.
நான் கட்டாயமாகப் போய் அதைப்
பார்க்க வேண்டும். ஆகையால், என்னை
மன்னிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்'
என்றான். 19 வேறொருவன், 'ஐந்து ஏர்மாடு
கள் வாங்கியிருக்கிறேன்; அவற்றைச்
சோதித்துப் பார்க்கப் போகிறேன். என்னை
மன்னிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்'
என்றான். 20 இன்னும் ஒருவன், 'ஒரு
பெண்ணை மணம் செய்துகொண்டேன்.
அதனால் என்னால் வர இயலவில்லை' என்
றான். 21 அந்த ஊழியன் திரும்பிவந்து,
இவற்றைத் தன் தலைவனுக்கு அறிவித்த
போது, அவன் சினமடைந்து தன் ஊழி
யனிடம், 'நீ பட்டணத்தின் வீதிகளிலும்
சந்துகளிலும் விரைவாகப் போய், ஏழை
களையும் ஊனரையும் குருடரையும் முட
வரையும் இங்கே கூட்டிக்கொண்டு வா'
என்றான். 22 பிறகு அந்த ஊழியன்,
'ஐயா, நீர் கட்டளையிட்டபடி செய்தா
யிற்று. ஆனால், இன்னும் இடம் இருக்
கிறது' என்றான். 23 அப்பொழுது தலை
வன் ஊழியனிடம், 'நீ பெருவழிகளிலும்
நடைபாதைகளிலும் போய் அங்கிருப்ப
வர்களை உள்ளே வரும்படி கட்டாயப்
படுத்து; என் வீடு நிறைய வேண்டும்.
24 நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்:
அழைக்கப்பட்ட அந்த ஆள்களுள் ஒரு
வனும் என் விருந்தைச் சுவைத்துப் பார்க்
கப்போவதில்லை' என்றான்'' என்று
சொன்னார்.

### கிறிஸ்துவின் சீடனாவது எப்படி?
(மத். 10:37,38)

25 திரளான மக்கள் இயேசுவோடு
போய்க்கொண்டிருந்தார்கள். 26 அவர்
திரும்பி அவர்களைப் பார்த்து, ''என்னிடம்
வருகிற ஒருவன் தன் தகப்பன் தாய் மனைவி
மக்கள் சகோதரர் சகோதரிகளையும், ஏன்,
தன் உயிரையுமே வெறுத்துவிடாதவனாய்
வந்தால், அவனால் எனக்குச் சீடனா
யிருக்க இயலாது. 27 தனக்குரிய சிலு
வையைச் சுமக்காமலும் என்பின்னே வரா
மலும் இருக்கிறவனால் என் சீடனாயிருக்க
இயலாது. 28 உங்களுள் எந்த மனிதனா
வது கோபுரம் ஒன்று கட்ட விரும்பினால்
அவன் முதலில் உட்கார்ந்து, அதைக்
கட்டி முடிப்பதற்குப் போதுமான பொருள்
உண்டா என்று செலவைக் கணக்கிட்டுப்
பாராமல் இருப்பானா? 29 அப்படிச் செய்யா
விட்டால், அடித்தளமிட்ட பிறகு கட்டி
முடிக்க அவனால் இயலாமற்போகும்
போது, 30 பார்ப்பவர்கள் எல்லாரும்,
'இவன் கட்டத் தொடங்கினான், முடிக்
கவோ இயலவில்லை' என்று ஏளனம் செய்
யத் தொடங்குவார்கள். 31 எந்த அரச
னாவது வேறோர் அரசனோடு போர்புரியப்
போகும்போது, தன்னுடைய பதினாயிரம்
பேரைக் கொண்டு, தன்னை எதிர்த்து வரு
வோனுடைய இருபதினாயிரம் பேரை
எதிர்க்க இயலுமா என்று முதலில்
அமர்ந்து ஆராயாமல் இருப்பானா?
32 எதிர்க்க இயலாதென்று கண்டால், எதிரி
தொலைவில் இருக்கையிலேயே தன்னுடைய
தூதுவர்களை அனுப்பி, சமாதானத்துக்
கான நிபந்தனைகளைக் கேட்பானல்லவா?
33 அவ்வாறே உங்களுள் எவனும் தனக்கு
உள்ளவை எல்லாவற்றையும் விட்டுவிடா
விடில் எனக்குச் சீடனாயிருக்க இயலாது.

### சாரத்தை இழந்த உப்பு
(மத். 5:13; மாற். 9:50)

34 ''உப்பு ஒரு நல்ல பொருள். ஆயி
னும் அதுவே சாரத்தை இழந்துவிட்டால்
எதைக்கொண்டு அதை மீண்டும் சார
முள்ளதாக்க முடியும்? 35 அது நிலத்
திற்கோ உரத்திற்கோ உதவாமற்போகும்,
அதை வெளியே எறிந்துவிடுவார்கள். கேட்
டுணரும் காதுள்ளவன் இதைக் கவனித்
துக்கொள்ளட்டும்'' என்றார்.

**14:13** நீதி. 22:9. **14:15** மத். 8:11. **14:26** மத். 10:37. **14:27** மத். 10:38; 16:24; மாற். 8:34; லூக். 9:23.

## மூன்று உவமைகள்

### காணமற்போயிருந்த ஆடு
(மத். 18:12–14)

15 * ஆயக்காரர், பாவிகள் ஆகிய எல்
லாரும் இயேசு சொல்வதைக் கேட்க
அவரிடம் வந்தவண்ணமிருந்தனர். 2 அத
னுல் பரிசேயரும் வேத அறிஞரும், ''இவன்
பாவிகளைச் சேர்த்துக்கொண்டு அவர்
களோடு சாப்பிடவும் செய்கிறுனே!''
என்று சொல்லி முணுமுணுத்துக்கொண்
டிருந்தார்கள். 3 அப்பொழுது அவர் இந்த
உவமையை அவர்களுக்குச் சொன்னுர்:
4 ''உங்களுள் எந்த மனிதனுவது தன்னு
டைய நூறு ஆடுகளுள் ஒன்று காணமற்
போனுல், தொண்ணூற்றென்பது ஆடு
களையும் நடுக்காட்டிலே விட்டுவிட்டு,
காணமற்போனதைக் கண்டுபிடிக்கும்வரை
யில் தேடித்திரியாமல் இருப்பானு?
5 கண்டுபிடித்தால் மகிழ்ச்சியோடு அதைத்
தன் தோள்மீது போட்டுக்கொண்டு,
6 வீட்டுக்கு வந்து, நண்பரையும் அயலகத்
தாரையும் வரவழைத்து, அவர்களிடம்,
'காணமற்போயிருந்த என் ஆட்டைக்
கண்டுபிடித்துவிட்டேன். என்னேடு சேர்ந்து
மகிழ்ந்து கொண்டாடுங்கள்' என்பான்.
7 அவ்வண்ணமே, மனமாற்றம் தேவையில்
லாத தொண்ணூற்றென்பது நேர்மை
யானவர்களின் பொருட்டு உண்டாகும்
மகிழ்ச்சியைவிட, மனமாற்றமடையும் ஒரே
பாவியின் பொருட்டு விண்ணுலகில் உண்
டாகும் மகிழ்ச்சி மிகுதியாயிருக்கும் என்று
உங்களுக்குச் சொல்லுகிறேன்.

### காணமற்போயிருந்த வெள்ளிக்காசு

8 ''அல்லது பத்து வெள்ளிக்காசை
வைத்திருக்கும் எந்தப் பெண்ணுவது அவற்
றுள் ஒரு காசை இழந்துவிட்டால்,
விளக்கை ஏற்றி, வீட்டைப் பெருக்கி,
அதைக் கண்டுபிடிக்கும் வரையிலும் கவ
னத்தோடு தேடாமல் இருப்பாளா?
9 கண்டுபிடித்தால், தன் நண்பர்களையும்
அயலகத்தாரையும் வரவழைத்து, 'காண
மற்போயிருந்த வெள்ளிக்காசைக் கண்டு
பிடித்துவிட்டேன், என்னேடு சேர்ந்து
மகிழ்ந்து கொண்டாடுங்கள்' என்பாள்.
10 அவ்வண்ணமே, ஒரே ஒரு பாவி மன
மாற்றமடைந்தாலும், அவன் பொருட்டுக்
கடவுளின் தூதர்களிடையே மகிழ்ச்சி உண்
டாகும் என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன்'' என்றுர்.

### காணமற்போயிருந்த மகன்

11 மேலும் அவர், ''ஒரு மனிதனுக்கு
மைந்தர் இருவர் இருந்தனர். 12 அவர்
களுள் இளையவன் தகப்பனிடம் சென்று,
'அப்பா, சொத்தில் எனக்குச் சேர வேண்
டிய பாகத்தை எனக்குக் கொடுத்துவிட
வேண்டும்' என்று கேட்டான்; அவனும்
தன் சொத்தை அவர்களுக்குப் பங்கிட்டுக்
கொடுத்தான். 13 சில நாள்களுக்குள்ளாக
இளைய மகன் தனக்குரிய எல்லாவற்றை
யும் விற்றுப் பணத்தைத் திரட்டிக்கொண்டு
வெளிநாடு ஒன்றுக்குப் போனுன். அங்கே
அவன் ஒழுக்கக்கேடான வாழ்க்கை நடத்தி,
தன் சொத்தைப் பாழாக்கலானுன்;
14 எல்லாவற்றையும் செலவு செய்துவிட்
டான், பிறகு அந்த நாட்டில் கொடிய
பஞ்சமும் வந்தது. அவன் வறுமையால்
வாடத் தொடங்கினபோது, 15 அந்த
நாட்டினன் ஒருவனை அண்டிப் பிழைப்ப
தற்காக அவனிடம் சென்றுன். அவன்
தன் பண்ணையில் பன்றி மேய்க்க அவனை
அனுப்பினுன். 16 பன்றி தின்னும் தவிட்
டையாவது தின்று தன் வயிற்றை நிரப்ப
லாமென்று அவனுக்கு ஆவல் உண்டா
யிற்று. ஆனுல் எவரும் அவனுக்கு எதை
யும் கொடுக்கவில்லை. 17 அவனுக்கு மனத்
தெளிவு ஏற்பட்டபோது அவன், 'என்
தகப்பனுர் வீட்டில் எத்தனையோ கூலி
யாள்களுக்குத் தேவைக்கு மேலாகவே
உணவு கிடைக்கிறது. 18 நானே இங்கே
பசியால் மடிகிறேன். நான் புறப்பட்டு
என் தகப்பனுரிடம் போவேன்; போய்,
'அப்பா, விண்ணுலகத்துக்கு விரோதமாக
வும், உமக்கு விரோதமாகவும் பாவம்
செய்தேன். 19 இனி நான் உம்முடைய
மகன் என்று சொல்லப்படுவதற்குத் தகுதி
யற்றவன், உம்முடைய கூலியாள்களுள்
ஒருவனுக என்னை வைத்துக்கொள்ளும்
என்பேன்' என்று சொல்லிக்கொண்டு,
புறப்பட்டுத் தன் தகப்பனிடம் வந்தான்.
20 அவன் தொலைவில் வரும்போதே தகப்
பன் அவனைக் கண்டுவிட்டான். கண்ட
தும், மனம் உருக, அவன் ஓடி அவனைக்
கட்டித் தழுவி முத்தமிட்டான்.†
21 மகனே தகப்பனிடம், 'அப்பா, விண்ணு
லகத்துக்கு விரோதமாகவும் உமக்கு விரோ
தமாகவும் பாவம் செய்தேன். இனி நான்
உம்முடைய மகன் என்று சொல்லப்படு
வதற்குத் தகுதியற்றவன்' என்று சொன்
னுன். 22 ஆனுல் தகப்பனே தன் வேலைக்
காரரை வரவழைத்து, 'நீங்கள் உடனே
முதல்தரமான உடையைக் கொணடுவந்து
இவனுக்கு உடுத்துங்கள்; இவன் கைக்கு

* மத். 5:46 அடிக்குறிப்பைப் பார்க்க.
† கிரேக்கச் சொற்றொடரின் நேர்ப்பொருள், 'கழுத்தின்மேல் விழுந்து முத்தமிட்டான்' என்பது.

15:1, 2 லூக். 5:29, 30. 15:4 மத். 18:12–14. 15:5 ஏசா. 40:11. 15:6 லூக். 19:10. 15:10 எசே. 18:23; 33:11. 15:13 நீதி. 29:3. 15:16 நீதி. 27:7. 15:20, 21. எரே. 31:20.

மோதிரம் போடுங்கள்; காலுக்கு மிதியடி அணியுங்கள்; 23 கொழுத்த கன்றைக் கொண்டுவந்து அடித்துச் சமையுங்கள். நாம் உண்டு களிப்போம். 24 இந்த என் மகன் செத்துப்போயிருந்தவன்; இப்போது உயிரோடு வந்திருக்கிறான், காணாமற்போயிருந்தவன்; இப்போது கிடைத்துவிட்டான்' என்றான். அவர்கள் அப்படியே செய்து களிப்புடன் கொண்டாட்டங்களைத் தொடங்கினார்கள்.

25 ''அவனுடைய மூத்த மகன் அப்போது வயலில் இருந்தான். அவன் திரும்பி வீட்டிற்கருகில் வந்தபோது, அங்கு நடந்த ஆடல் பாடல்கள் அவன் காதில் விழுந்தன. 26 அவன், வேலைக்காரருள் ஒருவனை அழைத்து, 'இது என்ன?' என்று வினவினான். 27 அதற்கு அவன், 'உம்முடைய தம்பி வந்துவிட்டார். அவரை நலத்தோடு மீண்டும் அடைந்துவிட்டதால், உம்முடைய தகப்பனார் கொழுத்த ஒரு கன்றை அடித்திருக்கிறார்' என்றான். 28 அப்பொழுது அவன் சினமடைந்து உள்ளே நுழைய மறுத்துவிட்டான். தகப்பன் வெளியே வந்து அவனை வருந்தி அழைத்தான். 29 அவன் தகப்பனிடம், 'இத்தனை ஆண்டுகளாக நான் உமக்காக உழைத்து வருகிறேன்; உமது கட்டளையை ஒருபோதும் மீறினதில்லை. அப்படியிருந்தும் என் நண்பரோடு நான் களிப்புடனிருப்பதற்கு நீர் ஓர் ஆட்டுக் குட்டியைக்கூட எனக்கென்று ஒருபோதும் கொடுத்ததில்லை. 30 உம்முடைய மகனாகிய இவன் விலைமகளிருடன் சேர்ந்து உமது சொத்தை அழித்துவிட்டுத் திரும்பி வந்தான். வந்தவுடனே இவனுக்காகக் கொழுத்த கன்றை அடிக்கிறீரே' என்றான். 31 அதற்கு அவன், 'மகனே, நீ எப்போதும் என்னுடன் இருக்கிறாய், என்னுடையவை எல்லாம் உன்னுடையவையே. 32 இப்போது நாம் இப்படிக் களிகூர்ந்து மகிழுவது முறையே. ஏனென்றால், உன் தம்பியாகிய இவன் செத்துப்போனவன். ஆனால் இப்போது உயிரோடு வந்திருக்கிறான்; காணாமற்போயிருந்தவன், இப்போது கிடைத்துவிட்டான்' என்று சொன்னான்'' என்றார்.

### நேர்மையற்ற கண்காணிப்பாளன்

**16** மேலும் இயேசு தம்முடைய சீடரை நோக்கி, ''செல்வமுடையவன் ஒருவனுக்கு ஒரு கண்காணிப்பாளன் இருந்தான். அவன் தன் தலைவனுடைய சொத்துகளை அழித்துக்கொண்டிருப்பதாகத் தலைவனுக்கு அறிவிக்கப்பட்டது. 2 அப்பொழுது தலைவன் அவனை வரவழைத்து, 'நான் உன்னைக் குறித்து இப்படிக் கேள்விப்படுகிறேனே, இது என்ன? உன் கண்காணிப்புக் கணக்கை ஒப்புவித்துவிடு. இனிமேல் நீ கண்காணிப்பாளனாய் இருக்க முடியாது' என்றான். 3 அந்த ஊழியன் தனக்குள்ளே, 'நான் என்ன செய்வேன்! என் தலைவன் என்னைக் கண்காணிப்பு வேலையிலிருந்து தள்ளிவிடுகிறாரே; மண்ணைக் கொத்தி வேலை செய்ய எனக்கு வலிமையில்லை, பிச்சையெடுக்கவும் வெட்கமாயிருக்கிறது. 4 ஆனால் நான் செய்ய வேண்டுவது இன்னதென்பது இப்போது எனக்குத் தெரிந்துவிட்டது. கண்காணிப்பு வேலையைவிட்டு நான் தள்ளப்படும்போது மற்றவர்கள் என்னை ஏற்றுக்கொள்வதற்காக நான் அதைச் செய்யப்போகிறேன்' என்று சொல்லிக்கொண்டான். 5 பிறகு அவன் தன்னுடைய தலைவனிடம் கடன்பட்டவர்களை ஒவ்வொருவனாக வரவழைத்து, முதலாவது வந்தவனைப் பார்த்து, 'நீ என் தலைவனிடம் வாங்கின கடன் எவ்வளவு?' என்று கேட்டான். 6 அவன், 'நூறு குடம் எண்ணெய்' என்றான். கண்காணிப்பாளன் அவனிடம், 'நீ உன் சீட்டை வாங்கி, உட்கார்ந்து ஐம்பது என்று உடனே எழுது' என்றான். 7 பிறகு வேறொருவனைப் பார்த்து 'நீ வாங்கின கடன் எவ்வளவு?' என்று கேட்டான். அவன், 'நூறு கலம் கோதுமை' என்று சொல்ல, அவன், 'நீ உன் சீட்டை வாங்கி, எண்பது என்று எழுது' என்றான். 8 நேர்மையற்ற அந்தக் கண்காணிப்பாளன் இவ்வாறு முன்மதியுடன் செய்ததால், தலைவன் அவனை மெச்சிக்கொண்டான். ஒளியின் பிள்ளைகளைவிட இந்த யுகத்தின் பிள்ளைகள் தங்கள் தலைமுறைக்கு ஏற்றவாறு விவேகமாக நடந்துகொள்ளுகிறார்கள். 9 அநீதத்திற்கேதுவான உலகப் பொருளால் உங்களுக்கு நண்பரைத் தேடிக்கொள்ளுங்கள். அப்பொருள் இல்லாமல் போகும்போது அவர்கள் உங்களை என்றுமுள்ள வீடுகளில் வரவேற்பார்கள் என்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். 10 சிறிய காரியத்தில் உண்மையுள்ளவனே பெரிய காரியத்திலும் உண்மை உள்ளவனாய் இருப்பான். சிறிய காரியத்தில் நேர்மையில்லாதவன் பெரிய காரியத்திலும் நேர்மை இல்லாதவனாய் இருப்பான். 11 அநீதத்திற்கேதுவான உலகப் பொருளைக் கையாளுவதில் நீங்கள் உண்மை அற்றவர்களாய் இருந்தால், யார் உங்களிடம் மெய்ப்பொருளை நம்பி ஒப்புவிப்பார்கள்? 12 வேறொருவனுக்குரியதில் நீங்கள் உண்மை அற்றவர்களாய் இருந்தால், யார் உங்களுக்கு எதையும் சொந்தமாகக் கொடுப்பார்கள்? 13 வீட்டு வேலைக்காரன் எவனும் இரண்டு தலைவர்களுக்கு வேலைக்கார

**15:24** லூக். *19:10;* **15:32** எசே. *18:23; 33:11.* **16:13** மத். *6:24.*

ணுயிருக்க முடியாது; ஏனென்றால், அவன் ஒருவரைப் பகைத்து, மற்றவரிடம் அன்பு கொள்ளுவான். அல்லது ஒருவரோடு சேர்ந்துகொண்டு, மற்றவரைப் புறக்கணிப்பான். ஒரே சமயத்தில் கடவுளுக்கும் உலகப் பொருளுக்கும் வேலை செய்கிறவர்களாயிருக்க உங்களால் இயலாது'' என்றார்.

### நீதிச்சட்டமும் கடவுளின் அரசும்

*(மத். 11:12,13;5:31,32; மாற். 10:11,12)*

14 பண ஆசைபிடித்த பரிசேயர்கள் இவை எல்லாவற்றையும் கேட்டு அவரை இகழ்ந்தார்கள். 15 அவர் அவர்களிடம், ''மனிதர்முன் உங்களை நீங்கள் நீதிமான்களாகக் காட்டிக்கொள்ளுகிறீர்கள், ஆனால் கடவுள் உங்கள் உள்ளத்தை அறிந்திருக்கிறார். மனிதரிடையே மேன்மையாக எண்ணப்படுவது கடவுள் பார்வைக்கு அருவருப்பானது. 16 நீதிச்சட்டமும் இறைவாக்குரைப்போரும் யோவான் காலம் வரையிலுந்தான். அதற்குப் பிறகு கடவுளுடைய அரசின் நற்செய்தி அறிவிக்கப்பட்டு வருகிறது. யாவரும் அதற்குள் நெருக்கியடித்துக்கொண்டு நுழையப்பார்க்கிறார்கள். 17 என்றாலும், விண்ணும், மண்ணும் ஒழிந்துபோனாலும் போகலாம்; ஆனால் நீதிச்சட்டத்தில் ஓர் எழுத்தின் பகுதியாகிலும் அழியாது.

18 ''தன் மனைவியை விலக்கிவிட்டு வேறொரு பெண்ணை மணம் செய்கிறவன் எவனும் கற்புநெறி தவறுகிறவனாகிறான். கணவனால் விலக்கப்பட்ட ஒருத்தியை மணம் செய்கிறவனும் கற்புநெறி தவறுகிறவனாகிறான்.

### செல்வனும் இலாசருவும்

19 ''செல்வமுடைய மனிதன் ஒருவன் இருந்தான். அவன் செந்நிற உடையும் பட்டாடையும் அணிந்துகொண்டு நாள்தோறும் உண்டு களித்து வளமாய் வாழ்ந்து வந்தான். 20 இலாசரு என்னும் பெயர் கொண்ட ஏழை மனிதன் ஒருவனும் இருந்தான். அவன் புண்கள் நிறைந்தவனாய் அந்தச் செல்வன் வீட்டு வாயிலருகில் கிடந்தான்; 21 அவனுடைய மேசையிலிருந்து விழும் துணிக்கைகளால் தன் பசியை ஆற்றிக்கொள்ள ஆவலோடு காத்துக்கொண்டிருப்பான். நாய்கள் வந்து அவன் புண்களை நக்கும். 22 ஒரு நாள் அந்த ஏழை இறந்துபோனான். தெய்வதூதர்கள் அவனை ஆபிரகாமின் மடியிலே கொண்டுபோய் விட்டார்கள். பிறகு அந்தச் செல்வனும் இறந்துபோனான், அடக்கம் செய்யப்பட்டான். 23 அவன் பாதாளத்தில் வேதனைப்படுகையில் உயரப் பார்த்தான். அப்பொழுது தொலைவில் ஆபிரகாமையும் அவர் மடியில் இலாசருவையும் கண்டான். 24 உடனே அவன், 'தந்தை ஆபிரகாமே, நீர் எனக்கு இரங்கி, இலாசரு தன் விரலின் நுனியைத் தண்ணீரில் தோய்த்து என் நாவைக் குளிரச் செய்யும்படி அவனை அனுப்பும். இந்தத் தீச்சுடரிலே வேதனைப்படுகிறேனே' என்று உரத்துச் சொன்னான். 25 ஆபிரகாம், 'மகனே, நீ உன் வாழ்நாளில் எல்லா நலன்களையும் பெற்று இன்புற்றிருந்தாய். இலாசரு அடைந்ததோ இன்னல். அதை நினைத்துப்பார். இப்போது அவன் இங்கே ஆறுதலடைகிறான். நீயோ வேதனைப்படுகிறாய். 26 மேலும், எங்களுக்கும் உங்களுக்கும் நடுவே ஒரு பெரும் பிளப்பு இருக்கிறது. ஆகையால் இவ்விடத்திலிருந்து உங்களிடம் வர விரும்புகிறவர்கள் கடந்து வர இயலாது. அவ்விடத்திலிருந்து ஒருவரும் எங்களிடம் கடந்து வரவும் இயலாது' என்றார். 27 அதற்கு அவன், 'அப்படியானால், தந்தையே, நீர் அவனை என் தகப்பன் வீட்டுக்கு அனுப்பும்படி உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன். 28 எனக்கு உடன்பிறந்தார் ஐவர் உண்டு. வேதனையுள்ள இந்த இடத்துக்கு அவர்களும் வராதபடி அவன் போய் அவர்களுக்கு எச்சரிக்கை செய்யட்டும்' என்றான். 29 ஆபிரகாம், 'அவர்களுக்கு மோசேயும் இறைவாக்குரைப்போரும் இருக்கிறார்கள்; அவர்களுக்குச் செவிசாய்க்கட்டும்' என்று சொன்னார். 30 அதற்கு அவன், 'இல்லை, தந்தை ஆபிரகாமே, இறந்தவர்களுள் ஒருவன் அவர்களிடம் போனால் மனமாற்றமடைவார்கள்' என்றான். 31 ஆபிரகாம், 'அவர்கள் மோசேயும் இறைவாக்குரைப்போரும் கூறியவற்றிற்குச் செவிசாய்க்காவிடில், இறந்தோரிடமிருந்து ஒருவன் உயிரோடெழுந்து போனாலும் நம்ப மாட்டார்கள்' என்று சொன்னார்'' என்றார்.

### இயேசுவின் திருவாய்மொழிகள் சில

*(மத். 18:6,7,21,22; மாற். 9:42)*

**17** இயேசு தம்முடைய சீடரிடம், ''பாவக்குழியில் இடறிவிழக் காரணமானவை ஏற்படாமலிருக்க முடியாது. ஆயினும், அவை எவனால் ஏற்படுகின்றனவோ அவன் நிலை பரிதாபமே! 2 அவன் இந்தச் சிறியருள் ஒருவனைப் பாவத்தில் இடறிவிழச் செய்வதைவிட, தன் கழுத்தில் ஏந்திரக்

**16:16** மத். 11:12, 13. **16:17** மத். 5:18. **16:18** மத். 5:32; 1 கொரி. 7:10, 11. **16:25** லூக். 6:24, 25. **16:29** லூக். 24:27, 44. **16:31** யோ. 5:46, 47.

கல்லோடு கடலில் தள்ளப்படுவதே
அவனுக்கு நலமாயிருக்கும். 3 நீங்கள்
விழிப்பாயிருங்கள். உன் சகோதரன் பாவம்
செய்தால் அவனைக் கடிந்துகொள்; அவன்
மனமாற்றமடைந்தால் அவனை மன்னித்து
விடு. 4 ஒரே நாளில் அவன் ஏழு முறை
உனக்கு விரோதமாகக் குற்றம் செய்ய
நேர்ந்து, ஏழு முறையும் உன்னிடம் வந்து,
'நான் மனமாற்றமடைந்திருக்கிறேன்'
என்று சொல்வானானால், அவனை நீ மன்
னிக்க வேண்டும்'' என்றார்.

5 பிறகு திருத்தூதுவர் ஆண்டவரிடம்,
''எங்கள் நம்பிக்கை பெருகுமாறு செய்த
ருளும்'' என்றனர். 6 அதற்கு ஆண்டவர்
''கடுகு விதையையொத்த நம்பிக்கை உங்
களுக்கு இருக்குமானால், நீங்கள் இந்தக்
காட்டத்தி மரத்தைப் பார்த்து, 'நீ
பெயர்ந்துபோய்க் கடலில் வேரூன்றி நில்'
என்று சொன்னாலும் அது உங்களுக்குக்
கீழ்ப்படியும்.

7 ''உங்களுள் ஒருவன் தன்னுடைய
அடிமை உழுதுவிட்டு, அல்லது மந்தையை
மேய்த்துவிட்டு வயலிலிருந்து வந்ததும்
அவனிடம், 'நீ உடனே வந்து சாப்பிட
உட்காரு' என்று சொல்லுவான்? 8 'நீ
எனக்குச் சாப்பாடு ஆயத்தம் செய்து,
அரைகட்டிக்கொண்டு, நான் சாப்பிடும்
வரையில் எனக்குப் பணிவிடை செய்.
அதற்குப் பிறகு நீ சாப்பிடலாம்' என்
றல்லவா சொல்லுவான்? 9 தான் கட்
டளையிட்டவற்றை அந்த அடிமை செய்த
தற்காக அவனுக்கு நன்றி கூறுவானா? கூற
மாட்டானல்லவா? 10 அவ்வாறே நீங்க
ளும் உங்களுக்குக் கட்டளையிடப்பட்ட
யாவற்றையும் செய்து முடித்த பின்பு,
'நாங்கள் பயனற்ற வெறும் அடிமைகள்;
எங்கள் கடமையைத்தான் செய்தோம்'
என்று சொல்லுங்கள்'' என்றார்.

### தொழுநோயுள்ள பத்துப் பேர் குணமடைதல்

11 பிறகு இயேசு எருசலேமை நோக்கிப்
பயணம் செய்கையில் சமாரியா கலிலேயா
நாடுகளுக்கிடையே நடந்து சென்றார்.
12 அவர் ஓர் ஊருக்குள் செல்கை
யில், தொழுநோயுள்ள பத்து மனிதர்கள்
அவருக்கு எதிரே வந்து, தொலைவில்
நின்று, 13 ''இயேசுவே, ஐயா, எங்க
ளுக்கு இரங்கியருளும்'' என்று உரத்த
குரலில் வேண்டினார்கள். 14 அவர்
அவர்களைக் கண்ணோக்கி, ''நீங்கள் போய்
உங்களை ஆசாரியருக்குக் காட்டுங்கள்''
என்றார். அப்படியே அவர்கள் போய்க்
கொண்டிருக்கையில் குணமடைந்தார்கள்.
15 அவர்களுள் ஒருவன், தான் குண
மடைந்ததைக் கண்டதும், உரத்த குரலில்
கடவுளைத் துதித்துக்கொண்டே திரும்பி
வந்து, 16 அவர் காலடியில் முகங்குப்புற
விழுந்து, அவருக்கு நன்றி செலுத்தினான்;
அவன் ஒரு சமாரியன். 17 இயேசு அவ
னைக் கண்டு, ''பத்துப் பேரும் குணமடைந்
தார்களல்லவா? மற்ற ஒன்பது பேர்
எங்கே? 18 யூதனல்லாத இந்த மனிதனே
யன்றி வேறொருவனும் கடவுளுக்குத் துதி
செலுத்தும்படி திரும்பி வந்ததாகத் தெரிய
வில்லையே!'' என்று சொல்லி, 19 அவனி
டம், ''நீ எழுந்து போ, உன் நம்பிக்கை நீ
மீட்படையும்படி செய்திருக்கிறது'' என்றார்.

### கடவுளுடைய அரசின் வருகை
(மத். 24:23—28,37—41)

20 கடவுளின் அரசு எப்போது வரும்
என்று பரிசேயர் அவரிடம் கேட்க, அவர்
''கடவுளின் அரசு கண்ணால் காணும்
வகையில் வராது. 21 இதோ, இங்கே அல்
லது அதோ, அங்கே என்று யாரும்
சொல்ல மாட்டார்கள். ஏனென்றால், கடவு
ளின் அரசு உங்களுக்குள்ளேயே இருக்
கிறது'' என்றார். 22 பிறகு அவர் தம்மு
டைய சீடரைப் பார்த்து, ''காலம் வரும்,
அப்பொழுது நீங்கள் மனுமைந்தருடைய
நாள்களுள் ஒன்றைக் காண வேண்டும்
என்று ஆவல் கொள்வீர்கள்; ஆனால்,
அதைக் காணமாட்டீர்கள். 23 உங்களிடம்
சிலர், 'அதோ, அங்கே, இதோ, இங்கே'
என்று கூறுவர். நீங்கள் போக வேண்டாம்.
அவர்களைப் பின்தொடரவும் வேண்டாம்.
24 வானத்தின் ஒரு திசையிலிருந்து மறு
திசை வரைக்கும் மின்னி ஒளிவீசுகிற மின்
னலைப்போல மனுமைந்தர் தமது நாளில்
இருப்பார். 25 ஆனால் அதற்கு முன்பு அவர்
பலபாடுகள் அடைந்து, இக்காலத்து மக்க
ளால் தகாதவரென்று தள்ளப்பட்டாக
வேண்டும். 26 நோவாவின் காலத்தில்
இருந்ததுபோல மனுமைந்தர் காலத்திலும்
இருக்கும். 27 நோவா பேழைக்குள்
சென்ற நாள்வரையிலும் மக்கள் உண்டும்
குடித்தும் பெண்கொண்டும், பெண்கொடுத்
தும் வந்தார்கள். பெருவெள்ளம் வந்து
எல்லாரையும் அழித்துவிட்டது. 28 அவ்
வாறே, லோத்தியினுடைய காலத்திலும்
நடந்தது. மக்கள் உண்டார்கள், குடித்
தார்கள், கொண்டார்கள், விற்றார்கள்,
நட்டார்கள், வீடு கட்டினார்கள்.
29 லோத்துசோதோமைவிட்டு வெளியேறிய
நாளில் வானத்தினின்று நெருப்பும் கந்தக
மும் சொரிந்து எல்லாரையும் அழித்து
விட்டன. 30 மனுமைந்தர் வெளிப்படும்
நாளிலும் அவ்வாறே நடக்கும்.

**17:3** மத். 18:15. **17:6** மத். 17:20; 21:21. **17:13** இலே. 13:45, 46. **17:14** இலே. 14:1—32. **17:20, 21** மத். 4:17. **17:26** ஆதி. 6:5—8. **17:27** ஆதி. 7:6—24. **17:28, 29** ஆதி. 18:20—19:25.

31 அந்தநாளில் வீட்டின்மேல் இருப்பவன்
வீட்டிலுள்ள தன் பொருள்களை எடுத்துக்
கொள்ள இறங்கிப்போக வேண்டாம். அது
போலவே, வயலில் இருப்பவனும் திரும்
பிப்போக வேண்டாம். 32 லோத்தின் மனை
வியை நினைத்துக்கொள்ளுங்கள். 33 எவன்
தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள
முயற்சி செய்கிருனே அவன் அதை இழந்து
விடுகிருன். எவன் அதை இழந்து
விடுகிருனே அவன் அதைக் காத்துக்
கொண்டு வாழ்வான். 34 அந்த இரவில்
இருவர் ஒரே இடத்தில் படுத்திருப்பர். ஒரு
வன் ஏற்றுக்கொள்ளப்படுவான், மற்றவன்
கைவிடப்படுவான். 35 இரண்டு பெண்கள்
ஒன்றுசேர்ந்து எந்திரக் கல்லில் அரைத்
துக்கொண்டிருப்பார்கள். 36 ஒரு பெண்
ஏற்றுக்கொள்ளப்படுவாள், மற்றவள் கை
விடப்படுவாள் [வயலில் இருவர் இருப்பர்;
ஒருவன் ஏற்றுக்கொள்ளப்படுவான், மற்ற
வன் கைவிடப்படுவான்] என்று உங்களுக்
குச் சொல்லுகிறேன்'' என்ருர். 37 அவர்கள்,
''எங்கே ஆண்டவரே?'' என்று அவரிடம்
கேட்க, அவர், ''பிணம் எங்கேயோ
அங்கே கழுகுகள் வந்து கூடும்'' என்று
அவர்களுக்குச் சொன்னுர்.

### கைம்பெண்ணும் நீதிபதியும்

18 பிறகு, சோர்ந்துபோகாமல் எப்போ
தும் கடவுளிடம் வேண்டுதல் செய்ய
வேண்டும் என்று காட்ட இயேசு ஓர் உவ
மையை அவர்களுக்குச் சொன்னுர்.
2 ''ஒரு பட்டணத்தில் நீதிபதி ஒருவன்
இருந்தான். அவன் கடவுளுக்குஅஞ்சாதவன்,
மனிதரை மதியாதவன். 3 அந்தப்
பட்டணத்தில் ஒரு கைம்பெண்ணும் இருந்
தாள். அவள் அவனிடம் அடிக்கடி சென்று
'எனக்கு நீதி வழங்கி, என் எதிரியின் கையி
னின்று என்னைத் தப்புவியும்' என்று விண்
ணப்பம் செய்துவந்தாள். 4 சிறிது காலம்
அவனுக்கு மனமில்லாதிருந்தது. பிறகு
அவன், 'நான் கடவுளுக்கு அஞ்சாதவன்,
மனிதரை மதியாதவன்; 5 ஆயினும், இந்
தக் கைம்பெண் என்னைத் தொந்தரவு
செய்கிறதை முன்னிட்டாவது இவளுக்கு
நியாயம் வழங்குவேன். இல்லாவிடில்
இவள் ஓயாமல் வந்து என்னை நச்சரித்து
விடுவாள்' என்று தனக்குள்ளே சொல்லிக்
கொண்டான்'' என்ருர். 6 பின்னும்
ஆண்டவர், ''நேர்மையற்ற அந்த நீதிபதி
சொன்னதைக் கவனியுங்கள். 7 இப்படி
யிருக்க, கடவுள் தம்மால் தேர்ந்து
கொள்ளப்பட்டவர்கள் தம்மை நோக்கி
இரவும் பகலும் கதறும்போது அவர்களுக்
குப் பொறுமையோடு செவிசாய்த்து நியா
யம் வழங்காமலிருப்பாரா? இதில் காலந்
தாழ்த்துவாரா? 8 விரைவிலேயே அவர்
களுக்கு நியாயம் வழங்குவார் என்று உங்
களுக்குச் சொல்லுகிறேன். ஆனுலும், மனு
மைந்தர் வரும்போது உலகில் கடவுளைப்
பற்றும் நம்பிக்கையைக் காண்பாரா?''
என்ருர்.

### பரிசேயனும் ஆயக்காரனும்

9 மேலும் அவர், தாங்கள் நேர்மை
யானவர்களென நம்பி, மற்றவர்களை இழி
வாகக் கருதிவந்த சிலரைப் பார்த்து இந்த
உவமையைச் சொன்னுர்: 10 ''இருவர்
கடவுளிடம் வேண்டுதல் செய்யக் கோவி
லுக்குச் சென்றனர்; ஒருவன் பரிசேயன்,
மற்றவன் * ஆயக்காரன். 11 பரிசேயன்
நின்றுகொண்டு, 'கடவுளே, உமக்கு நன்றி
செலுத்துகிறேன்; ஏனெனில், நான் கொள்
ளைக்காரர், அநீதர், கெட்ட நடத்தை
யுடையோர் ஆகிய மற்றவர்களைப்போல்
இல்லை; ஆயக்காரனுகிய இவனைப்போலு
மில்லை. 12 வாரத்தில் இரண்டு முறை நோன்
பிருக்கிறேன்; என் வருமானம் அனைத்தி
லும் பத்திலொரு பாகத்தைக் காணிக்கை
யாகச் செலுத்துகிறேன்' என்று தனக்
குள்ளே ஜெபம் செய்தான். 13 ஆனுல்
ஆயக்காரன் தொலைவில் நின்று, வானத்தை
நிமிர்ந்து நோக்கவும் துணியாமல் தன்
மார்பிலே அடித்துக்கொண்டு, 'கடவுளே,
பாவியாகிய எனக்கு இரங்கியருளும்' என்
ருன். 14 நான் உங்களுக்குச் சொல்லு
கிறேன். அவனல்ல, இவனே கடவுளால்
ஏற்றுக்கொள்ளப்பட்டவனுய் வீடு திரும்பி
னுன். ஏனென்ருல், தன்னைத்தான் உயர்த்
துகிறவன் எவனும் தாழ்த்தப்படுவான்;
தன்னைத்தான் தாழ்த்துகிறவனே உயர்த்
தப்படுவான்'' என்ருர்.

### இயேசு சிறு பிள்ளைகளை ஆசீர்வதித்தல்
(மத். 19:13–15; மாற். 10:13–16)

15 அவர் குழந்தைகளைத் தொட்டு
ஆசீர்வதிக்க வேண்டுமென்று அவர்களைச்
சிலர் அவரிடம் கொண்டுவந்தனர். சீடர்
கள் அதைக் கண்டு, கொண்டு வந்தவர்களைக்
கடிந்துகொண்டார்கள். 16 இயேசுவோ
அப்பிள்ளைகளைத் தம்மிடம் அழைத்து
''சிறு பிள்ளைகள் என்னிடம் வர அவர்
களுக்கு இடங்கொடுங்கள்; அவர்களைத்
தடை செய்யாதீர்கள்; கடவுளின் அரசு
அப்படிப்பட்டவர்களுடையது. 17 சிறு
பிள்ளை ஏற்பதுபோலக் கடவுளின் அரசை

* மத். 5:46 அடிக்குறிப்பைப் பார்க்க.
17:31 மத். 24:17, 18; மாற். 13:15, 16. 17:32 ஆதி. 19:26. 17:33. லூக். 9:24; யோ. 10:25.
18:1 லூக். 11:9—13. 18:5 நீதி. 25:15. 18:7 திருவெளி. 6:9—11. 18:8 மத். 24:12. 18:9 லூக்.
16:15; நீதி. 21:2; 28:13. 18:14 மத். 23:12; லூக். 14:11.

எவன் ஏற்றுக்கொள்ளவில்லையோ அவனால்
அதனுள் செல்ல இயலாது; இது உறுதி
என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்''
என்றார்.

### செல்வமுடைய ஒருவனது கேள்வி

*(மத். 19:16—30;மாற்.10;17—31)*

18 அப்பொழுது யூதத் தலைவருள்ஒருவன்
''நல்ல போதகரே, கடவுள் வாக்களித்த
என்றுமுள்ள மெய்வாழ்வைப் பெற
நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று
அவரைக் கேட்டான். 19 இயேசு அவனி
டம், ''ஏன் என்னை நல்லவர் என்று
அழைக்கிறாய்? கடவுள் ஒருவரைத் தவிர
நல்லவர் எவருமில்லை. 20 திருக்கட்டளைகள்
உனக்குத் தெரியும், கற்புநெறி தவறாதே,
கொலை செய்யாதே, களவு செய்யாதே,
பொய்ச்சாட்சி சொல்லாதே, உன் தகப்ப
னையும் உன் தாயையும் உயர்வாக மதிப்
பாயாக'' என்றார். 21 அதற்கு அவன்,
''இவற்றையெல்லாம் நான் என் இள
மைப்பருவம் முதற்கொண்டே கடைப்
பிடித்து வந்திருக்கிறேன்'' என்றான்.
22 இயேசு அதைக் கேட்டு, ''ஆயினும், உன்
னிடம் இன்னும் ஒரு குறைபாடு இருக்
கிறது. உனக்குள்ள யாவற்றையும் நீ
விற்று, ஏழைகளுக்குப் பங்கிட்டுக்கொடுத்து
விடு; விண்ணுலகில் உனக்குச் செல்வம்
இருக்கும். பிறகு வந்து என்னைப் பின்
பற்றி நட'' என்றார். 23 அவன் மிகுந்த செல்
வம் உடையவனானபடியால், இவற்றைக்
கேட்டபோது மிகவும் வருத்தமுற்றான்.
24 இயேசு அவனை நோக்கி, ''செல்வமுடை
யவர்கள் கடவுளின் அரசினுள் செல்வது
எவ்வளவு அரிது! 25 செல்வமுடைய ஒரு
வன் கடவுளின் அரசினுள் செல்வதைக்
காட்டிலும் ஒட்டகம் ஊசியின் காதில்
நுழைவதே எளிது எனலாம்'' என்றார்.
26 அதைக் கேட்டவர்கள், ''அப்படியா
னால் யாராலேதான் மீட்புப் பெற இய
லும்?'' என்று கேட்டார்கள். 27 அதற்கு
அவர், ''மனிதருக்கு இயலாதவை, கட
வுளுக்கு இயலும்'' என்றார். 28 அப்
பொழுது, பேதுரு, ''இதோ, நாங்கள்
எங்களுக்குச் சொந்தமானவற்றை விட்டு
விட்டு உம்மைப் பின்பற்றி வந்தவர்களா
யிற்றே'' என்றார். 29 அவர் அவர்களி
டம், ''கடவுளுடைய அரசின்பொருட்டு
வீட்டையாவது மனைவியையாவது, சகோ
தரரையாவது, பெற்றோரையாவது விட்டு
விட்டவன் எவனும், 30 இப்போதுள்ள
காலத்தில் இன்னும் மிகுதியானவற்றையும்,
வரப்போகும் யுகத்தில் என்றுமுள்ள
மெய்வாழ்வையும் அடையாமற்போவ
தில்லை என்று உறுதியாக உங்களுக்குச்
சொல்லுகிறேன்'' என்றார்.

### மீண்டும் ஒரு முறை இயேசு தம் மரணத்தையும் உயிர்த்தெழுதலையும் பற்றி முன்னறிவித்தல்

*(மத்.20:17—19; மாற்.10:32—34)*

31 பிறகு இயேசு பன்னிருவரையும் ஒரு
பக்கமாக அழைத்து, ''நாம் இப்போது
எருசலேமுக்குப் போகிறோம்; மனுமைந்
தரைப்பற்றி இறைவாக்குரைப்போர்
எழுதியுள்ளவை யாவும் அங்கே நிறை
வேறித் தீரும். 32 அவர் யூதரல்லாதா
ரிடம் ஒப்புக்கொடுக்கப்படுவார்; அவர்கள்
அவரை ஏளனம் செய்து, இழிவாக நடத்தி
அவர்மேல் துப்பி, 33 வாரினால் அவரை
அடித்து, கொன்றுவிடுவார்கள்; மூன்றாம்
நாளில் அவர் உயிரோடு எழுந்திருப்பார்''
என்றார். 34 ஆனால், அவர்களோ இவற்
றுள் ஒன்றையும் புரிந்துகொள்ளவில்லை;
அவர் கூறியது அவர்களுக்கு மறைபொரு
ளாயிருந்தது; சொல்லப்பட்டவற்றை அவர்
கள் அறிந்துகொள்ளாமலே இருந்தார்கள்.

### ஒரு குருடன் பார்வையடைதல்

*(மத்.20:29—34; மாற்.10:46—52)*

35 பிறகு இயேசு எரிகோ நகருக்கருகில்
போய்க்கொண்டிருந்தார். அங்கே ஒரு குரு
டன் வழியோரத்தில் உட்கார்ந்துகொண்டு
பிச்சை கேட்டுக்கொண்டிருந்தான்.
36 மக்கள் கூட்டமாய் நடந்துபோகிற
ஓசையை அவன் கேட்டு, ''இது என்ன?''
என்று கேட்டான். 37 ''நசரேயனாகிய இயேசு
போகிறார்'' என்று அவனுக்குச் சொன்
னார்கள். 38 உடனே அவன், ''இயேசுவே,
தாவீதின் மைந்தரே, எனக்கு இரங்கி
யருளும்'' என்று உரத்துக் கூப்பிட்டான்.
39 முன் நடந்தவர்கள் அவனைப் பேசா
திருக்கும்படி அதட்டினார்கள். அவனோ,
''தாவீதின் மைந்தரே, எனக்கு இரங்கி
யருளும்'' என்று இன்னும் உரத்துத்
திரும்பத் திரும்பக் கத்தினான். 40 இயேசு
நின்று, அவனைத் தம்மிடம் கூட்டிக்
கொண்டு வரும்படி சொன்னார். 41 அவன்
அருகே வந்ததும், ''நான் உனக்கு என்ன
செய்ய வேண்டும்?'' என்று கேட்டார்.
அதற்கு அவன், ''ஆண்டவரே, நான்
திரும்பவும் பார்வை பெறவேண்டும்'' என்
றான். 42 இயேசு அவனிடம், ''பார்வை
பெறுவாயாக, உன் நம்பிக்கை உன்னைக்
குணமாக்கிற்று'' என்றார். 43 உடனே
அவன் பார்வை பெற்று, கடவுளைப்
போற்றிப் புகழ்ந்துகொண்டே அவரைப்
பின்பற்றிச் சென்றான். எல்லா மக்களும்
அதைக் கண்டு கடவுளைப் புகழ்ந்தார்கள்.

**18:20** யாத். 20:12—16; உபா. 5:16—20. 18:29 லூக். 14:26, 27.

## இயேசுவும் சகேயுவும்

19 இயேசு எரிகோ நகருக்குள் சென்று
அது வழியாக நடந்து போய்க்
கொண்டிருந்தார். அவ்வூரில் சகேயு என்ற
ஒருவன் இருந்தான். 2 அவன் *ஆயக்கார
ருக்குத் தலைவன், மிகுந்த செல்வம் உடை
யவன். 3 அவன் இயேசு எப்படியிருப்
பாரோ என்று பார்க்க வழி தேடினான்;
ஆனால், மக்கள் கூட்டமாயிருந்ததால்,
அவரைப் பார்க்க இயலவில்லை; ஏனெனில்,
அவன் குள்ளனாயிருந்தான். 4 அவர் போய்க்
கொண்டிருந்த வழியில் அவன் முன்னதாக
ஓடி, அவரைப் பார்ப்பதற்காக ஒரு காட்
டத்தி மரத்தின்மேல் ஏறிக்கொண்டான்.
5 இயேசு அந்த இடத்துக்கு வந்தபோது,
அண்ணாந்து பார்த்து அவனிடம், "சகேயுவே,
விரைவாக இறங்கிவா, இன்று நான்
உன் வீட்டில் தங்க வேண்டும்" என்றார்.
6 அவன் விரைவாக இறங்கிவந்து, அவரை
மகிழ்ச்சியோடு வரவேற்றான். 7 அதைக்
கண்ட யாவரும், "இது என்ன, பாவி
யான ஒரு மனிதனிடம் இவர் தங்கப்
போயிருக்கிறாரே" என்று சொல்லி முணு
முணுத்தனர். 8 சகேயு முன்வந்து ஆண்ட
வரை நோக்கி, "ஆண்டவரே, நான் இப்
போதே என் சொத்தில் பாதியை ஏழை
களுக்குக் கொடுத்துவிடுகிறேன். நான்
யார் யாரிடம் அநியாயமாக என்னென்ன
வாங்கியிருக்கிறேனோ அவற்றையெல்லாம்
நான்கு மடங்காகத் திருப்பிக் கொடுத்து
விடுகிறேன்" என்றான். 9 இயேசு அவனை
நோக்கி, "இன்று இந்த வீட்டாருக்கு
மீட்பு வந்திருக்கிறது; இவனும் ஆபிரகா
மின் மகன்தானே. 10 காணாமற்போயி
ருப்பதைத் தேடுவதற்கும் அதை மீட்ப
தற்குமே மனுமைந்தர் வந்திருக்கிறார்"
என்று சொன்னார்.

### பத்துப் பணியாள்கள் உவமை
(மத். 25:14—30)

11 அவர்கள் இவற்றைக் கேட்டுக்
கொண்டிருக்கையில், அவர் தொடர்ந்து
ஓர் உவமையைச் சொன்னார். ஏனென்
றால், அவர் எருசலேமுக்கு அருகில் இருந்த
தால், கடவுளின் அரசு விரைவில் வெளிப்
படுமென்று அவர்கள் நினைத்தார்கள்.
12 அந்த உவமை இதுவே: "உயர்குடிப்
பிறந்த ஒருவன் அரசனாக அமர்த்தப்பெற்று
வருவதற்காகத் தொலைவிலுள்ள ஓர் இடத்
துக்குப் போனான். 13 போகுமுன் அவன்
தன் பணியாளருள் பத்துப் பேரைஅழைத்து
அவர்களிடம் பத்து மினா† நாணயங்கள்
கொடுத்து, 'நான் திரும்பி வருமளவும்
இதை வைத்து வாணிகம் செய்துகொண்
டிருங்கள்' என்று சொன்னான். 14 அவன்
மீது வெறுப்புக் கொண்டிருந்த அவனு
டைய குடிமக்கள், 'இவன் எங்கள் அரச
னாக வருவது எங்களுக்கு விருப்பமில்லை'
என்று தெரிவிக்கும்படி அவன் பின்னே
தூதுவர்களை அனுப்பினார்கள். 15 என்றா
லும், அவன் அரசனாக அமர்த்தப்பெற்
றுத் திரும்பி வந்தான். வந்தவுடன் தன்
னிடம் பணம் வாங்கியிருந்த பணியாளர்
கள் வாணிகத்தில் சம்பாதித்தது எவ்வளவு
என்று அறிவதற்காக அவர்களைத் தன்னி
டம் அழைத்துவரச் சொன்னான். 16 அப்
பொழுது முதலாம் பணியாள் வந்து,
'ஐயா, நீர் கொடுத்த பணத்தின் மூலம்
எனக்கு இன்னும் பத்து மினா கிடைத்
தது' என்றான். 17 தலைவன் அவனிடம்,
'பணியாளனே, நீ நல்லவன்; நன்றாகச்
செய்தாய். நீ மிகச் சிறிய காரியத்தில்
நம்பிக்கைக்குரியவனாய் இருந்தபடியால்,
இது முதல் நீ பத்துப் பட்டணங்களுக்கு
அதிகாரியாயிரு' என்றான். 18 அப்படியே
இரண்டாம் பணியாளும் வந்து, 'ஐயா,
நீர் கொடுத்த பணத்தின் மூலம் எனக்கு
ஐந்து மினா கிடைத்தது' என்றான். 19 தலை
வன் அவனிடமும், 'அப்படியானால், நீ
ஐந்து பட்டணங்களுக்கு அதிகாரியாயிரு'
என்றான். 20 பிறகு அடுத்தவன் வந்து,
'ஐயா, இதோ, நீர் கொடுத்த மினா நாண
யம், இதை அப்படியே ஒரு துணியில்
முடித்து வைத்திருந்தேன். 21 உமக்கு
அஞ்சியே இப்படிச் செய்தேன்; ஏனென்
றால், நீர் கொடூரமான மனிதர், நீர்
முதல் போடாதபோதிலும் ஊதியத்தை
எடுத்துக்கொள்கிறவர். நீர் விதைக்காத
போதிலும், விளைவை எடுத்துக்கொள்கிற
வர்' என்றான். 22 அவன் அந்தப் பணி
யாளைப் பார்த்து, 'நீ பொல்லாதவன்,
உன் வாயைக் கொண்டே உனக்குத் தீர்ப்
பளிக்கிறேன். நான் கொடூரமான மனி
தன்; நான் முதல் போடாத போதிலும்
ஊதியத்தை எடுத்துக்கொள்கிறவன்;
விதைக்காதபோதிலும் விளைவை எடுத்துக்
கொள்ளுகிறவன் என்பது உனக்குத் தெரிந்
திருந்ததல்லவா? 23 அப்படியானால், நீ
ஏன் என் பணத்தை வட்டிக் கடையில்
போட்டு வைக்கவில்லை? வைத்திருந்தால்,
நான் வந்து அதை வட்டியோடு வாங்கி
யிருப்பேனே' என்று சொல்லிவிட்டு,
24 பக்கத்தில் நின்றவர்களை நோக்கி, 'அந்த
நாணயத்தை இவன் கையிலிருந்து வாங்கி,
பத்து மினா உள்ளவனுக்குக் கொடுங்கள்'
என்றான். 25 அதற்கு அவர்கள், 'ஐயா,
அவனிடந்தான் பத்து மினா இருக்கிறதே'

* மத். 5:46 அடிக்குறிப்பைப் பார்க்க.

† மினா நாணயம் நூறு தினாரியத்துக்குச் சமம்; ஒரு தினாரியம் விவசாயத் தொழிலாளியின் ஒரு நாள் கூலிக்குச் சமம்.

என்றார்கள். 26 அப்பொழுது அவன், 'உள்
ளவன் எவனுக்கும் கொடுக்கப்படும், இல்
லாதவனிடமிருந்தோ உள்ளதும் எடுத்துக்
கொள்ளப்படும் என்று உங்களுக்குச் சொல்
லுகிறேன். 27 மேலும், நான் தங்கள்
அரசனாக அமர்த்தப்படுவதை விரும்பாத
என் எதிரிகளை இங்கே கொண்டு வந்து
என்முன் வெட்டிவீழ்த்துங்கள்' என்று
சொன்னான்.''

## இயேசு எருசலேமுக்குள் அரசகோலத்துடன் செல்லுதல்

(மத். 21:1—11; மாற். 11:1—11;
யோ. 12:12—19)

28 இவற்றைச் சொன்ன பின்பு இயேசு
முந்தி நடந்துகொண்டே எருசலேமை
நோக்கிப் போனார். 29 அவர் ஒலிவம் என்
னும் மலைக்கு அருகிலுள்ள பெத்பகே,
பெத்தானியா என்னும் ஊர்களை நெருங்
கினபோது, தம்முடைய சீடருள் இரு
வரிடம், 30 ''உங்களுக்கு எதிரே இருக்கிற
அந்த ஊருக்குப் போங்கள்; அதனுள்
செல்லும்போது, ஒரு மனிதனும் இது
காறும் ஏறியிராத கழுதைக்குட்டி ஒன்று
கட்டியிருப்பதைக் காண்பீர்கள்; அதை
அவிழ்த்துக்கொண்டு வாருங்கள். 31 யாரா
வது உங்களிடம், 'இதை ஏன் அவிழ்க்
கிறீர்கள்?' என்று கேட்டால், நீங்கள்,
'ஆண்டவருக்கு இது தேவை' என்று கூறுங்
கள்'' எனச் சொல்லி அவர்களை அனுப்பி
னார். 32 அனுப்பப்பட்டவர்கள் போய்,
தங்களுக்கு அவர் சொன்னபடியே இருக்
கக் கண்டார்கள். 33 கழுதைக் குட்டியை
அவர்கள் அவிழ்க்கையில் அதற்கு உடைய
வர்கள், ''குட்டியை ஏன் அவிழ்க்கிறீர்
கள்?'' என்று அவர்களிடம் கேட்டார்கள்.
34 அதற்கு அவர்கள், ''இது ஆண்டவ
ருக்குத் தேவை'' என்று சொல்லிவிட்டு,
இயேசுவினிடம் அதை ஓட்டிவந்தார்கள்;
35 பிறகு அக்குட்டியின் மேல் தங்கள்
மேலாடைகளைப் போட்டு, இயேசுவை
அதன்மேல் உட்காரவைத்தார்கள். 36 அவர்
போகையில் அவர்கள் தங்கள் மேலா
டைகளை வழியிலே விரித்தார்கள். 37 அவர்
பட்டணத்தை நெருங்கி ஒலிவ
மலைச் சரிவில் வந்ததும், சீடர் கூட்டத்
தார் அனைவரும் உரத்த முழக்கம் எழுப்
பித் தாங்கள் கண்ட எல்லா வல்லமைச்
செயல்களுக்காகவும் மகிழ்ச்சியோடு,
38 ''ஆண்டவரின் திருப்பெயரால்
வருகிற அரசர்
ஆசி பெறுவாராக!
விண்ணுலகில் சமாதானம்,
விண்ணகத்தில் மாட்சிமை!

என்று கடவுளைப் போற்றிப் புகழ்ந்தனர்.
39 அப்பொழுது கூட்டத்திலிருந்த பரி
சேயருள் சிலர் அவரிடம், ''போதகரே,
உம்முடைய சீடரை அதட்டிவையும்''
என்று கேட்டுக்கொள்ள, 40 அவர், ''நான்
உங்களுக்குச் சொல்லுகிறேன்: இவர்கள்
அமைதியாயிருந்தாலும், இந்தக் கற்களே
ஆரவாரம் செய்யும்'' என்றார்.

41 அவர் பட்டணத்தை நெருங்கின
போது, அதைப் பார்த்து அதற்காகப்
புலம்பி அழுது, 42 ''இந்த நாளிலாகி
லும் சமாதானத்துக்கு ஏதுவானவற்றை நீ,
ஆம் நீ அறிந்திருந்தாயானால் எவ்வளவோ
நலமாயிருக்கும். ஆனால், இப்பொ
ழுதோ அவை உன் கண்களுக்கு மறை
வாய்ப்போயின. 43 உனக்கு ஒரு காலம்
வரும்; அக்காலத்தில் உன் பகைவர்கள்
உன்னைச் சூழ மதிலெழுப்பி உன்னை வளைந்து
கொண்டு, 44 எப்பக்கத்திலும் உன்னை
நெருக்கி, உன்னையும் உன்னிலுள்ள பிள்ளை
களையும் அடியோடழித்து, உன்னில் கல்
லின்மேல் கல் இராதபடி செய்வார்கள்.
ஏனென்றால், கடவுள் உன்னைத் தேடி
வந்த வேளையை நீ அறிந்துகொள்ளாமற்
போனாய்'' என்று சொன்னார்.

## இயேசு திருக்கோவிலைப் புனிதமாக்குதல்

(மத். 21:12—17; மாற். 11:15—19;
யோ. 2:13—22)

45 இயேசு திருக்கோவிலுக்குள் சென்று,
அங்கே வாணிகம் செய்துகொண்டிருந்தவர்
களை வெளியே துரத்தினார்; 46 துரத்து
கையில் அவர்களிடம், ''என்னுடைய வீடு
ஜெப வீடு என்று வேதத்தில் எழுதியிருக்
கிறது, நீங்களோ அதைக் கொள்ளைக்காரர்
குகையாக்கினீர்கள்'' என்றார்.

47 பிறகு ஒவ்வொரு நாளும் அவர்
திருக்கோவிலில் போதித்து வந்தார்.
தலைமை ஆசாரியரும் வேத அறிஞரும் மக்
களுள் தலைமையானவர்களும் அவரைக்
கொன்றுவிட வழிதேடியும், 48 மக்கள்
எல்லாரும் அவருடைய போதனையைக்
கேட்டு அவர்மீது பற்றுவைத்திருந்ததால்,
என்ன செய்வதென்று அவர்களுக்குத்
தோன்றவில்லை.

## இயேசுவின் அதிகாரத்தைப்பற்றிய கேள்வி

(மத். 21:23—27; மாற். 11:27—33)

**20** ஒரு நாள் இயேசு திருக்கோவிலில்
மக்களுக்குப் போதித்துக்கொண்டே
அருட்செய்தியை அறிவிக்கையில், தலைமை
ஆசாரியரும், வேத அறிஞரும் மூப்பரோடு
சேர்ந்து அவரிடம் வந்து 2 ''நீர் எந்த

19:26 மத். 13:12; மாற். 4:25; லூக். 8:18. 19:38 சங். 118:26. 19:39, 40 மத். 21:14—16.
19:43 ஏசா. 29:3. 19:46 ஏசா. 56:7; எரே. 7:41. 19:47 லூக். 21:37.

அதிகாரத்தைக் கொண்டு இவற்றைச்
செய்கிறீர், இந்த அதிகாரத்தை உமக்குக்
கொடுத்தவர் யார் என்று எங்களுக்குச்
சொல்லும்'' எனக் கேட்டனர்.
3 அதற்கு அவர், ''நானும் உங்களை ஒரு
கேள்வி கேட்கிறேன். எனக்குப் பதில்
சொல்லுங்கள். 4 திருமுழுக்குக் கொடுக்கும்
அதிகாரம் யோவானுக்குக் *கடவுளிட
மிருந்து வந்ததா? மனிதரிடமிருந்து
வந்ததா?'' என்று கேட்டார். 5 அவர்கள்
தங்களிடையே கலந்துபேசி, ''கடவுளிட
மிருந்து வந்தது என்று சொல்வோமானால்,
'பின் ஏன் நீங்கள் அவரை நம்ப
வில்லை?' என்று கேட்பார்; 6 மனிதரிட
மிருந்து வந்தது என்று சொல்வோமானால்,
எல்லா மக்களும் யோவானை இறைவாக்
குரைக்கும் ஒரு பெரியாரென ஒப்புக்
கொண்டிருக்கிறபடியால், நம்மைக் கல்லா
லடித்துக் கொன்றுவிடுவார்கள்'' என்று
சொல்லிக்கொண்டு, 7 ''அது எங்கிருந்து
வந்ததோ, எங்களுக்குத் தெரியாது'' என்
றார்கள். 8 அப்பொழுது இயேசு அவர்
களிடம், ''நானும் எந்த அதிகாரத்தைக்
கொண்டு இவற்றைச் செய்கிறேன் என்று
உங்களுக்குச் சொல்ல மாட்டேன்'' என்றார்.

## திராட்சைத் தோட்டத்துக் குத்தகைக்காரர் உவமை

*(மத்.21:33–46; மாற்.12:1–12)*

9 பிறகு இயேசு மக்களுக்கு இந்த உவ
மையைச் சொன்னார்: ''ஒருவன் ஒரு
திராட்சைத் தோட்டம் அமைத்து,அதைக்
குடியானவர் சிலரிடம் குத்தகைக்கு விட்டு
விட்டு, வெளியூருக்குப் போய் அங்கேயே
நெடுங்காலம் இருந்துவிட்டான். 10 பருவ
காலம் வந்தபோது, தோட்டத்தின் கனி
களில் தன் பாகத்தைத் தனக்குக் கொடுத்
தனுப்பும்படி, அவன் பணியாள் ஒருவனை
அந்தக் குடியானவர்களிடம் அனுப்பினான்.
அவர்களோ அவனை அடித்து வெறுங்கை
யோடு அனுப்பிவிட்டார்கள். 11 பிறகு
அவன் இரண்டாம் முறை ஒரு பணியாளை
அனுப்பினான்; அவனையும் அவர்கள் அடித்து
இழிவாக நடத்தி வெறுங்கையோடு
அனுப்பிவிட்டார்கள். 12 அவன் மூன்றாம்
முறையும் ஒரு பணியாளை அனுப்பினான்.
அவனையும் காயப்படுத்தித் துரத்திவிட்
டார்கள். 13 அதைக் கண்ட திராட்சைத்
தோட்டத்துக்குச் சொந்தக்காரன், 'இப்
போது என்ன செய்யலாம்? என் அருமை
மகனையே அனுப்புகிறேன்; ஒருவேளை
அவர்கள் அவனை மதிப்பார்கள்' என்று
சொல்லிக்கொண்டான்.14 ஆனால் குடியான
வர்கள் அவனைக் கண்டபோது, 'இவன்தான்
சொத்தின் உரிமையாளன். வாருங்கள்,
இவனைக் கொன்றுவிடுவோம், அப்
பொழுது இவனுக்குச் சேரவேண்டிய
சொத்து நம்முடையதாகும்' என்று ஒரு
வரோடொருவர் பேசிக்கொண்டு, 15 அவ
னைத் திராட்சைத் தோட்டத்திற்குப்
புறம்பே தள்ளிக்கொண்டுபோய் கொன்று
விட்டார்கள். இப்பொழுது திராட்சைத்
தோட்டத்துக்குச் சொந்தக்காரன் அவர்
களை என்ன செய்வான்? 16 அவனே
வந்து அந்தக் குடியானவர்களை ஒழித்து
விட்டு, திராட்சைத் தோட்டத்தையும்
வேறு ஆள்களிடம் ஒப்படைப்பான்'' என்
றார். அவர்கள் அதைக் கேட்டு, ''ஐயோ,
அப்படி வேண்டாம்'' என்றார்கள்.
17 அவரோ அவர்களைக் கூர்ந்து நோக்கி,

'' 'வீடு கட்டுகிறவர்கள் உதவாதென்று
தள்ளிவிட்ட கல்லே மூலைக்குத் தலைக்
கல்லாயிற்று'

என்று எழுதியிருக்கிற வேத வாக்கியத்தின்
கருத்து என்ன? 18 அந்தக் கல்லின்
மேல் விழுகிறவன் எவனும் நொறுங்கிப்
போவான்; அது எவன்மேல் விழுமோ
அவனை அது தவிடுபொடியாக்கிவிடும்''
என்றார். 19 வேத அறிஞர்களும் தலைமை
ஆசாரியர்களும் தங்களைக் குறித்தே அவர்
இந்த உவமையைச் சொன்னார் என்று
அறிந்து, அந்நேரமே அவரைப் பிடித்துக்
கொண்டுபோகப் பார்த்தார்கள். ஆனா
லும் மக்களுக்கு அஞ்சிக்கொண்டிருந்
தார்கள்.

## வரி செலுத்துவதைப்பற்றிய கேள்வி

*(மத்.22:15–22; மாற்.12:13–17)*

20 ஆகவே, அவர்கள் தக்க சமயத்துக்
காகக் காத்திருந்தார்கள்; அவரை மாநிலத்
தலைவன் கைக்குள்ளும் அவனது ஆட்
சிக்குட்பட்டவற்றிலும் அகப்படுத்த எண்ணி
அவருடைய பேச்சில் ஏதாவது ஒரு குற்
றம் கண்டுபிடிப்பதற்கென்று உண்மையுள்
ளவர்கள்போல நடிக்கக் கூடிய வேவுகாரரை
அவரிடம் அனுப்பினார்கள். 21 அவர்கள்
வந்து, ''போதகரே, நீர் நியாயமாகப்
பேசுகிறீர், போதிக்கிறீர், தெய்வமார்க்
கத்தை யாருக்கும் தனிச்சலுகை காட்டா
மல் உண்மையாகப் போதிக்கிறீர்; இவை
யெல்லாம் எங்களுக்குத் தெரியும்'' என்று
சொல்லி, 22 ''நாம் ரோமப் பேரரச
னுக்கு வரி செலுத்துவது நியாயமா இல்
லையா?'' என்று கேட்டார்கள். 23 அவர்
அவர்களுடைய சூழ்ச்சியை அறிந்து
கொண்டு, அவர்களைப் பார்த்து, 24 ''ஒரு
திநாரிய நாணயத்தை எனக்குக்காட்டுங்கள்.

* மூலத்திலிருக்கும் பதத்தின் நேர்ப்பொருள், விண்ணுலகிலிருந்து என்பது.

**20:9** ஏசா. 5:1. **20:17** சங். 118:22.

இதிலிருக்கும் உருவமும் பெயரும்
யாருடையவை?'' என்று கேட்டார். அவர்
கள், ''ரோமப் பேரரசனுடையவை'' என்
றார்கள். 25 அதற்கு அவர், ''அப்படி
யானால் பேரரசனுக்குரியதைப் பேரரச
னுக்கும், கடவுளுக்குரியதை கடவுளுக்கும்
செலுத்துங்கள்'' என்று சொன்னார்.
26 மக்கள் முன்னிலையில் அவருடைய பேச்
சில் குற்றம் கண்டுபிடிக்க அவர்களால்
இயலவில்லை; அவருடைய மறுமொழியைக்
குறித்து வியப்படைந்து அவர்கள் மௌன
மாய் இருந்துவிட்டார்கள்.

### உயிர்த்தெழுதலைப்பற்றிய கேள்வி

(மத்.22:23—33; மாற்.12:18—27)

27 உயிர்த்தெழுதல் என்பது இல்லை
யென்று சாதிக்கும் சதுசேயருள் சிலர் அவ
ரிடம் வந்து, 28 ''போதகரே, ஒருவன்
மனைவியோடு வாழ்ந்தும் பிள்ளையில்லாமல்
இறந்துபோனால், அவன் மனைவியை அவ
னுடைய சகோதரன் மணம் செய்து, தன்
சகோதரனுக்கு மகப்பேறு உண்டாக்க
வேண்டுமென்று மோசே எங்களுக்கு எழு
தித் தந்திருக்கிறாரே. 29 இவ்வாறிருக்க,
சகோதரர் எழுவர் இருந்தனர். அவர்
களுள் மூத்தவன் ஒரு பெண்ணை மணம்
செய்தான். ஆனால் பிள்ளை இல்லாமலே
இறந்துபோனான். 30 பிறகு இரண்டாம், மூன்
றாம் சகோதரர் அவளை முறையே மணம்
செய்தனர். 31 அப்படியே ஏழுபேரும்
அவளை மணம் செய்து பிள்ளையில்லாமலே
இறந்துவிட்டனர். 32 கடைசியில் அந்தப்
பெண்ணும் இறந்தாள். 33 அவர்கள்
உயிர்த்தெழுந்தபின் அவள் அவர்களுள்
யாருக்கு மனைவியாயிருப்பாள்? ஏழு பேரும்
அவளை முறையே மனைவியாகக் கொண்
டிருந்தனரே'' என்று கேட்டார்கள்.
34 இயேசு அவர்களிடம், ''இம்மையின் மக்
கள் பெண் கொண்டும், பெண் கொடுத்
தும் வருகிறார்கள். 35 மறுமையையும்
இறந்தோரிடமிருந்து உயிர்த்தெழுந்த நிலை
யையும் அடையத் தகுதியுள்ளவர்களாக
எண்ணப்பட்டவர்கள் அங்கே சென்றபின்
பெண் கொள்வதுமில்லை, கொடுப்பதும்
இல்லை. 36 ஏனெனில், இறப்பு என்பதே
அங்கில்லை. அவர்கள் தெய்வதூதரைப்
போலிருப்பார்கள்; உயிர்த்தெழுதலின்
மக்கள் என்பதால் அவர்கள் கடவுளின்
மக்கள். 37 இறந்தவர்கள் எழுப்பப்படுவார்
கள் என்பதை மோசேயும் முட்செடியைப்
பற்றிய நூற் பகுதியில் குறித்துக் காட்டி
யிருக்கிறார். எப்படியெனில், அவர் ஆண்ட
வரை ஆபிரகாமின் கடவுள், ஈசாக்கின்
கடவுள், யாக்கோபின் கடவுள் என்று
குறிப்பிடுகிறார். 38 அவர் இறந்தோரின்
கடவுளல்ல, உயிருள்ளோரின் கடவுளே;
ஏனென்றால், அவரைப் பொறுத்தமட்டில்
எல்லாரும் உயிரோடிருக்கிறார்கள்'' என்
றார். 39 வேத அறிஞருள் சிலர் அதைக்
கேட்டபோது, ''போதகரே, நீர் நன்றாகச்
சொல்லிவிட்டீர்'' என்றனர். 40 அதன்
பின்பு அவர்கள் அவரிடம் ஒரு கேள்வியும்
கேட்கத் துணியவில்லை.

### மேசியாவைப்பற்றிய கேள்வி

(மத்.22:41—46; மாற்.12:35—37)

41 பிறகு இயேசு அவர்களிடம் ''மேசி
யாவைத் தாவீதின் மைந்தரென்று சொல்
லுகிறார்களே, அது எப்படிப் பொருந்தும்?
42 தாவீதே சங்கீத நூலில்,

('கடவுளாகிய) ஆண்டவர் என்
ஆண்டவரிடம்:
43 நான் உம்முடைய பகைவரை
உமக்குப் பாதப்படியாக்கி விடுகி
றேன்; அதுவரை நீர் என் வலப்
பக்கத்தில் அமர்ந்திரும் என்றார்'

எனச் சொல்லுகிறாரே. 44 இவ்வாறு
தாவீது மேசியாவை ஆண்டவரென்று
அழைத்திருக்க, அவர் தாவீதுக்கு மைந்தரா
யிருப்பதெப்படி?'' என்றார்.

### வேத அறிஞரின் போலி பக்தியை வெளிப்படுத்துதல்

(மத்.23:1—36; மாற்.12:38—40)

45 பிறகு மக்களெல்லாரும் கேட்டுக்
கொண்டிருக்கையில், இயேசு தம்முடைய
சீடரை நோக்கி, 46 ''வேத அறிஞரைக்
குறித்து எச்சரிக்கையாயிருங்கள். அவர்கள்
நீண்ட அங்கிகளை அணிந்துகொண்டு நடந்து
திரியவும், சந்தைவெளிகளில் வணக்கம்,
தொழுகைக்கூடங்களில் முதன்மையான
இருக்கைகள், விருந்துகளில் முதன்மை
யான இடங்கள் இவற்றைப் பெறவும்
விரும்புகிறார்கள். 47 கைம்பெண்களின்
சொத்துகளைக் கைப்பற்றி விழுங்கிவிடு
கிறார்கள்; அதே சமயத்தில் வெளிப்பார்
வைக்குக் கடவுளிடம் நீண்ட நேரம் வேண்டு
தலும் செய்கிறார்கள். அவர்கள் கடுமை
யான தண்டனை பெறுவார்கள்'' என்றார்.

### ஏழைக் கைம்பெண்ணின் காணிக்கை

(மாற். 12:41—44)

21 இயேசு நிமிர்ந்து பார்த்து, செல்வ
முடையவர்கள் தங்கள் காணிக்கை
களைக் காணிக்கைப் பெட்டியில் போடுவ
தைக் கவனித்துக்கொண்டிருந்தார். 2 ஓர்
ஏழைக் கைம்பெண்ணும் அதில் இரண்டு
காசைப் போட்டாள். 3 அவர் அதைக்

20:27 திருத்தூது. 23:8. 20:28 உபா. 25:5. 20:37 யாத். 3:6. 20:42, 43 சங். 110:1. 20:46 லூக். 11:43.

கண்டு, ''ஓர் உண்மையை உங்களுக்குச்
சொல்லுகிறேன்: இந்த ஏழைக் கைம்
பெண்ணே மற்றெல்லாரையும்விட மிகுதி
யாகப் போட்டிருக்கிறாள். 4 எப்படி
யெனில், அவர்களெல்லாரும் தங்கள் செல்
வப்பெருக்கிலிருந்து எடுத்துக் காணிக்கை
போட்டனர்; ஆனால் இவளோ தன
வறுமையிலிருந்து தன் பிழைப்புக்கென்று
வைத்திருந்த எல்லாவற்றையும் எடுத்துப்
போட்டுவிட்டாள்'' என்றார்.

### திருக்கோவிலின் அழிவைப்பற்றிய முன்னறிவிப்பு

*(மத்.24:1—2; மாற்.13:1,2)*

5 சிலர் திருக்கோவிலைக் குறித்து, அது
எவ்வளவு சிறந்த கற்களினாலும் காணிக்
கைப் பொருள்களினாலும் அழகுபடுத்தப்
பட்டிருக்கிறதென்று சொன்னபோது,
6 அவர், ''நீங்கள் பார்க்கிற இவையெல்
லாம் கல்லின்மேல் கல் இராதபடி இடிக்
கப்பட்டுப்போகும் காலம் வரும்'' என்றார்.

### அறிகுறிகளும் துன்புறுத்துதலும்

*(மத்.24:3—14; மாற்.13:3—13)*

7 அவர்கள் அவரைப் பார்த்து, ''போத
கரே, அப்படியானால் இவை எப்போது
நடக்கும்? இவை நடக்கும் காலத்திற்கான
அறிகுறி என்ன?'' என்று கேட்டார்கள்.
8 அதற்கு அவர், ''நீங்கள் ஏமாற்றப்
பட்டுப்போகாதபடி பார்த்துக்கொள்ளுங்
கள்; ஏனெனில், என் பெயரை வைத்துக்
கொண்டு, நானே அவர் என்றும், காலம்
நெருங்கிவிட்டது என்றும் சொல்லும் பலர்
தோன்றுவர். அவர்களுக்குப் பின்னே
செல்லாதீர்கள். 9 போர்களையும் கலகங்களை
யும் பற்றி நீங்கள் கேள்விப்படும்போது
திகிலடையாதீர்கள். இவை முன்னதாக
நடந்து தீர வேண்டும்; ஆனாலும் முடிவு
உடனே வந்துவிடாது'' என்றார்.

10 பின்னும் அவர் அவர்களைப் பார்த்து
''நாட்டை எதிர்த்து நாடும், அரசை
எதிர்த்து அரசும் எழும். 11 மாபெரும்
நிலநடுக்கங்களும் இங்குமங்கும் கொள்ளை
நோய்களும் பஞ்சமும் உண்டாகும்;கோரக்
காட்சிகளும் வானத்தில் பெரிய கெடுகுறி
களும் தோன்றும். 12 இவையெல்லாம்
நடப்பதற்குமுன் அவர்கள் உங்களைப்
பிடித்து, தொழுகைக்கூடங்களுக்கும் சிறைச்
சாலைகளுக்கும் ஒப்புக்கொடுத்து, அரசர்
முன்னும் ஆளுநர் முன்னும் உங்களைக்
கொண்டுபோய்த் துன்புறுத்துவார்கள்.
இவையெல்லாம் உங்களுக்கு என் பெயரின்
பொருட்டு நேரும். 13 இதுவே நீங்கள்
என் சாட்சிகளாயிருப்பதற்கு ஏற்ற சமய
மாக அமையும், 14 ஆகையால் உங்கள்
மனத்தில் நீங்கள் செய்யவேண்டிய தீர்மான
மாவது,உங்கள் எதிர்வாத வழக்கை முன்பே
உருவாக்கிக்கொள்ளக் கூடாது என்பதே.
15 ஏனெனில், நானே உங்களுக்கு நாவன்
மையையும் ஞானத்தையும் கொடுப்பேன்;
உங்களை எதிர்ப்பவர் எவராலும் அவற்றை
எதிர்க்கவோ மறுக்கவோ இயலாது.
16 உங்கள் பெற்றோரும் சகோதரரும் உற
வினரும் நண்பருங்கூட உங்களைக் காட்டிக்
கொடுப்பார்கள். உங்களுள் சிலர் மரண
தண்டனையும் பெறுவர். 17 என் பெயரின்
பொருட்டு நீங்கள் எல்லாருடைய
பகைக்கும் ஆளாவீர்கள். 18 ஆயினும்,
உங்கள் தலையிலுள்ள ஒரு முடிகூட அழிந்து
போகாது. 19 நீங்கள் உறுதியாய் நிற்ப
தன்மூலம் உங்கள் ஆன்மா காக்கப்பெற்ற
தாகும்.

### எருசலேமின் அழிவைப்பற்றிய முன்னறிவிப்பு

*(மத்.24:15—21; மாற்.13:14—19)*

20 ''மேலும், எருசலேம் நகரம் படை
களால் சூழப்பட்டிருப்பதை நீங்கள் காணும்
அவ்வேளையில் அதன் அழிவு நெருங்கி
விட்டதென்பதைத் தெரிந்துகொள்ளுங்கள்.
21 அப்பொழுது யூதேயாவில் உள்ள
வர்கள் மலைகளுக்கு ஓடிப்போகட்டும்; எரு
சலேம் நகரத்தில் இருப்பவர்கள் வெளி
யேறிவிடட்டும்: நாட்டுப்புறங்களில் இருப்
பவர்கள் நகருக்குள் வராதிருக்கட்டும்.
22 ஏனெனில், அவை பழிவாங்குதலின்
நாள்கள். எழுதியுள்ள யாவும் நிறைவேறும்
படி அவை வரும். 23 அந்நாள்களில் கருத்
தரித்திருப்பவர்கள் பால் கொடுக்கிறவர்கள்
ஆகியோருடைய நிலை ஐயோ! பரி
தாபம்! ஏனென்றால், அப்பொழுது நாட்டில்
மிகுந்த இடுக்கணும் இந்த மக்கள்
மீது கடவுளின் சினமும் வரும். 24 அவர்கள்
கூர்மையான வாளால் வீழ்த்தப்படுவார்கள்;
எல்லா நாடுகளுக்கும் கைதிகளாகக்
கொண்டுபோகப்படுவார்கள். யூத
ரல்லாதாருக்கான காலம் முடிவுறும்
வரையிலும் எருசலேம் அவர்களால் மிதி
யுண்டதாய்க் கிடக்கும்.

### மனுமைந்தர் வருகை

*(மத்.24:29—31; மாற்.13:24—27)*

25 ''கதிரவனிலும் நிலாவிலும் விண்
மீன்களிலும் கெடுகுறிகள் தோன்றும்; உல
கில் மக்கள் மனவேதனையடைவார்கள்;
கடலும் அலைகளும் முழங்குவதால் அவர்
கள் தத்தளிப்பார்கள். 26 வானத்தின்

**21:10** தானி. 9:2. **21:12—15** மத். 10:17—22; லூக். 12:11, 12; யோ. 15:20. **21:22** ஓசே. 9:7. **12:24** திருவெளி. 11;2. **21:25** ஏசா. 13:10; எசே. 32:7; யோவேல் 2:31; திருவெளி. 6:12, 13;

ஆற்றல்கள் அசைக்கப்படும். ஆகையால்
உலகத்தில் இன்னும் என்னென்ன நேரு
மோவென்று மனிதர்கள் அஞ்சி மூர்ச்
சையடைவார்கள். 27 அக்காலத்தில் மனு
மைந்தர் வல்லமையோடும் மாபெரும்
மாட்சிமையோடும் மேகத்தின்மீது வரு
கிறதைக் காண்பார்கள். 28 இவை நடை
பெறத் தொடங்கும்போது, உங்கள் மீட்சி
நெருங்கி வருவதால், நீங்கள் நிமிர்ந்து
தலைதூக்கி நில்லுங்கள்'' என்றார்.

## அத்தி மரத்தின் படிப்பினை
(மத்.24:32—35; மாற்.13:28—31)

29 பிறகு இயேசு ஓர் உவமையை அவர்
களுக்குச் சொன்னார்: ''அத்தி மரத்தை
யும் மற்றுமுள்ள எல்லா மரங்களையும்
பாருங்கள். 30 அவை தளிர் விட்டதும்,
அதைக் கண்டு கோடைக்காலம் நெருங்கி
விட்டது என்று நீங்களாகவே அறிந்து
கொள்ளுகிறீர்கள். 31 அவ்வாறு இந்
நிகழ்ச்சிகள் நடைபெறுவதை நீங்கள்
காணும்போது, கடவுளின் அரசு நெருங்கி
விட்டது என்று அறிந்துகொள்ளுங்கள்.
32 எல்லாம் நடைபெறும் வரையிலும் இத்
தலைமுறை ஒழிந்துபோவதேயில்லை என்று
உங்களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன்.
33 விண்ணும் மண்ணும் ஒழிந்துபோகும்,
என் வார்த்தைகளோ ஒருபோதும் ஒழிவ
தில்லை.

## விழிப்பாயிருங்கள்

34 ''சிற்றின்பம், குடிவெறி, இம்மைக்
குரிய கவலைகள் ஆகியவற்றால் உங்கள் உள்
ளம் ஒருபோதும் மந்தமாகப்போகாத
படி நீங்கள் எச்சரிக்கையாயிருங்கள். இல்
லாவிடில், * அந்நாள் திடீரென்று கண்ணி
யைப்போல உங்களைச் சூழ்ந்துகொள்ளும்.
35 அது உலகெங்கும் வாழும் அனைவருக்
கும் வந்தே தீரும். 36 ஆகையால் இனி
மேல் நடக்கப்போகும் இவற்றிற்கெல்லாம்
நீங்கள் தப்புவதற்கும், மனுமைந்தர் முன்
னிலையில் நிற்பதற்கும் ஆற்றல் பெறும்படி
கடவுளிடம் வேண்டுதல் செய்து,
எல்லா நேரத்திலும் விழிப்பாயிருங்கள்''
என்று சொன்னார்.

37 அந்நாள்களில் இயேசு பகற்காலத்
தில் திருக்கோவிலில் போதிப்பார்; இராக்
காலத்தில் வெளியே போய், ஒலிவம் என்
னும் மலையில் தங்குவார். 38 எல்லா மக்
களும் அவர் சொல்வதைக் கேட்க விடி
யற்காலத்தில் திருக்கோவிலில் அவரிடம்
வந்து கூடுவார்கள்.

## இயேசுவைக் கொன்றுவிடச் சதித்திட்டம்
(மத். 26:1—5; மாற். 14:1,2;
யோ. 11:45—53)

22 அப்பொழுது † பஸ்கா எனப்படும்
புளிப்பில்லாத அப்பப்பண்டிகைநெருங்
கிற்று. 2 தலைமை ஆசாரியர்களும் வேத
அறிஞரும் அவரை எப்படிக் கொல்லுவ
தென்று வழி தேடிக்கொண்டிருந்தார்கள்;
மக்களைப் பற்றிய அச்சம் அவர்களுக்கு
இருந்தது.

3 பன்னிருவருள் ஒருவனாகிய இஸ்காரி
யோத்து என்ற மறுபெயர் பூண்ட யூதா
சுக்குள் சாத்தான் புகுந்தான். 4 யூதாஸ்
புறப்பட்டுப் போய், தான் அவரை எப்படிக்
காட்டிக் கொடுப்பதென்று தலைமை
ஆசாரியர்களோடும் காவற்படைத் தலைவ
ரோடும் கலந்துபேசினான். 5 அவர்கள்
மனமகிழ்ந்து அவனுக்குப் பணம் கொடுப்
பதென்று அவனோடு ஒப்பந்தம் செய்து
கொண்டார்கள். 6 அவன் அதற்கு உடன்
பட்டு, மக்கள் கூட்டமில்லாத வேளையில்
அவரை அவர்களுக்குக் காட்டிக்கொடுப்ப
தற்கெனச் சமயம் பார்த்துக்கொண்டி
ருந்தான்.

## பஸ்கா விருந்தை ஆயத்தம் செய்தல்
(மத். 26:17—25 மாற். 14:12—21;
யோ. 13:21—30)

7 புளிப்பில்லாத அப்பப்பண்டிகையில்
பஸ்காவுக்குரிய ஆடு பலியிடப்பட வேண்டிய
நாள் வந்தது. 8 அப்பொழுது இயேசு
பேதுருவையும் யோவானையும் அழைத்து,
''நீங்கள் போய் நமக்காகப் பஸ்கா
விருந்தை ஆயத்தம் செய்யுங்கள்'' என்று
சொன்னார். 9 அவர்கள், ''நாங்கள் எங்கே
ஆயத்தம் செய்ய வேண்டுமென்று விரும்பு
கிறீர்?'' எனக் கேட்டார்கள். 10 அதற்கு
அவர், ''இதோ, இந்த நகரத்திற்குள்
நீங்கள் சென்றதும் ஒருவன் தண்ணீர்க்
குடம் சுமந்துகொண்டு உங்களுக்கு எதிரே
வருவான்; அவனுக்குப் பின்னால் போய்
அவன் செல்லும் வீட்டிற்குள் நீங்களும்
சென்று, 11 அந்த வீட்டுத் தலைவனிடம்,
'என் சீடரோடு நான் பஸ்கா விருந்தை
உண்பதற்கான அறை எங்கே இருக்கிறது
என்று போதகர் உம்மிடம் கேட்கச் சொன்
னார்' என்று சொல்லுங்கள். 12 அவன்
மேல் மாடியில் பெரிய அறை ஒன்றை
உங்களுக்குக் காட்டுவான். அதில் கம்பளம்
முதலியன விரித்திருக்கும். அங்கே நீங்கள்
விருந்துக்கு ஏற்பாடு செய்யுங்கள்'' என்றார்.

* இறுதித் தீர்ப்புநாள்.
† மத். 26:2 அடிக்குறிப்பைப் பார்க்க.
**21:27.** தானி. 7:13; திருவெளி. 1:7. **21:37** லூக். 19:47 **22:1** யாத். 12:1—27.

13 அவர்கள் போய், அவர் தங்களுக்குச்
சொன்னபடியே யாவும் இருக்கக் கண்டு,
பஸ்கா விருந்துக்கு ஏற்பாடு செய்தார்கள்.

### திருவிருந்தை ஏற்படுத்துதல்

*(மத்.26:26—30; மாற்.14:22—26;*
*1 கொரி. 11:23—25)*

14 குறித்த நேரம் வந்தபோது, இயேசு
பந்தியில் அமர்ந்தார்; திருத்தூதுவரும்
அவரோடு அமர்ந்தனர். 15 அப்பொழுது
அவர் அவர்களிடம், ''நான் பாடுகள்
அடையுமுன்னே உங்களோடு இந்தப்
பஸ்கா விருந்தை உட்கொள்ள மிக மிக
ஆவலோடிருந்தேன். 16 கடவுளின் அரசில்
இது நிறைவேறுமட்டும் நான் இனி இதை
உட்கொள்வதேயில்லை என்று உங்களுக்
குச் சொல்லுகிறேன்'' என்றார். 17 அவர்
பாத்திரத்தை எடுத்து, கடவுளுக்கு நன்றி
செலுத்தி அவர்களிடம், ''நீங்கள் இதை
வாங்கி உங்களிடையே பங்கிட்டுக்கொள்
ளுங்கள். 18 கடவுளின் அரசு வருமட்டும்
இனி நான் திராட்சைப் பழரசத்தை
அருந்துவதில்லை என்று உங்களுக்குச் சொல்
லுகிறேன்.'' என்றார். 19 பிறகு அவர்
அப்பத்தை எடுத்து, கடவுளுக்கு நன்றி
செலுத்தி, அதைப் பிட்டு, அவர்களிடம்
கொடுத்து இவ்வாறு சொன்னார்: ''இது
என் உடல். [இது உங்களுக்காகக் கொடுக்
கப்படுகிறது. என்னை நினைவுகூரும்படி
இதைச் செய்யுங்கள்.'' 20 உணவு உண்ட
பிறகு அவர் அவ்வாறே பாத்திரத்தைக்
கொடுத்து இவ்வாறு சொன்னார்: ''இந்
தப் பாத்திரம் உங்களுக்காகச் சிந்தப்படு
கிற என்னுடைய இரத்தத்தினால் உறுதி
செய்யப்படும் புதிய உடன்படிக்கை.]
21 இதோ! என்னைக் காட்டிக்கொடுக்கிற
வனுடைய கை பந்தியில் என்னோடு இருக்
கிறது. 22 மனுமைந்தர் தமக்கென்று தீர்
மானிக்கப்பட்ட பாதையிலே செல்லுகிறார்;
என்றாலும், அவரைக் காட்டிக்கொடுக்
கிற மனிதனுக்குக் கேடு வரும்.'' 23 அப்
பொழுது அவர்கள், அவ்வாறு செய்கிறவன்
தங்களுள் யாராய் இருக்கக்கூடும்
என்று பேசிக்கொண்டார்கள்.

### பன்னிருவரிடையே எழுந்த விவாதம்

24 அப்பொழுது அவர்களிடையே, தங்
களுள் எவன் மற்றெல்லாரையும்விடப்
பெரியவன் என எண்ணப்படுவான் என்ற
விவாதமும் எழுந்தது. 25 இயேசு அவர்
களிடம், ''உலக மக்கள்மீது அரசர்கள்
இறுமாப்புடன் ஆட்சி செலுத்துவதுண்டு.
அதிகாரம் செலுத்துகிறவர்கள் வள்ளல்கள்
என்னும் பட்டம் பெறுவதுமுண்டு.
26 ஆனால் உங்களிடையே அப்படி இருத்
தலாகாது. உங்களுள் பெரியவன் சிறிய
வனாயும் தலைவன் பணியாளனாயும் இருக்க
வேண்டும். 27 பந்தியில் இருப்பவனோ,
பணிவிடை செய்பவனோ, எவன் பெரிய
வன்? பந்தியில் இருப்பவன் அல்லவா?
ஆனால் நானோ உங்களிடையே பணி
விடை செய்கிறவனாகவே இருக்கிறேன்.
28 நான் சோதிக்கப்பட்டவேளைகளில் என்னை
விட்டகலாமல் இருந்தவர்கள் நீங்களே.
29 ஆகவே, என் தந்தையார் எனக்கு அர
சுரிமை அளித்திருப்பதுபோல, நானும்
உங்களுக்கு அளிக்கிறேன். 30 அதனால்
நீங்கள் என்னுடைய ஆட்சியில் என் விருந்
தில் உணவும் பானமும் அருந்துவீர்கள்;
இஸ்ரவேலின் பன்னிரு குலங்களையும்
விசாரித்துத் தீர்ப்பளிக்கிறவர்களாக அரி
யணைகளில் அமருவீர்கள்'' என்றார்.

### பேதுருவின் மறுதலிப்பைப்பற்றிய முன்னறிவிப்பு

*(மத்.26:31—35; மாற்.14:27—31;*
*யோ. 13:36—38)*

31 மேலும் அவர், ''சீமோனே,
சீமோனே, கோதுமையைச் சலிப்பதுபோல
உங்களெல்லாரையும் சலித்துத் தரம் பிரிப்ப
தற்குச் சாத்தான் அனுமதி பெற்றிருக்
கிறான். 32 ஆனால், நானோ உன் நம்பிக்கை
அற்றுப்போகாதிருக்க உனக்காக ஜெபம்
செய்திருக்கிறேன். நீ மனமாற்றமடைந்த
பின் உன் சகோதரரை உறுதியுடன் இருக்கச்
செய்'' என்றார். 33 அதற்கு அவர்,
''ஆண்டவரே, உம்மோடு சிறைப்படு
வதற்கும் சாவதற்கும் நான் ஆயத்தமா
யிருக்கிறேன்'' என்று சொல்ல, 34 அவர்,
''பேதுருவே, உனக்குச் சொல்லுகிறேன்,
இன்றைக்குச் சேவல் கூவுமுன், என்னை
உனக்குத் தெரியாதென நீ மூன்று முறை
மறுதலிக்கப்போகிறாய்'' என்றார்.

### பணப்பையும் வாளும்

35 பின்னும் அவர் அவர்களிடம்,
''பணப்பையும் தோற்பையும் மிதியடியும்
இல்லாமல் நான் உங்களை அனுப்பின
போது, உங்களுக்குக் குறை ஏதாவது
இருந்ததா?'' என்று கேட்க, அவர்கள்,
''ஒரு குறையும் இருந்ததில்லை'' என்றார்கள்.
36 அவர் அவர்களிடம், ''இப்
பொழுதோ பணப்பை உடையவன் அதை
எடுத்துக்கொள்ளட்டும், தோற்பை உடைய

22:20 எரே. 31:31—34. 22:21 சங். 4:9. 22:24 மத். 18:1; மாற். 9:34; லூக். 9:46. 22:26 மத்.
23:11; மாற். 9:35. 22:25, 26 மத். 20:25—27; 10:42—44. 22:27 யோ. 13:12—15. 22:30
மத். 19:28. 22:35 மத். 10:9, 10; மாற். 6:8, 9; லூக். 9:3; 10:4.

வனும் அப்படியே செய்யட்டும், வாள்
இல்லாதவன் தன் மேலாடையை விற்று
ஒன்றை வாங்கிக்கொள்ளட்டும்;
37 ஏனெனில், நான் உங்களுக்குச் சொல்லு
கிறேன்: குற்றம் செய்தோருள் ஒருவராக
எண்ணப்பட்டார் என்று எழுதியுள்ள வேத
வாக்கியம் என்னில் நிறைவேறுதல் பெற
வேண்டும். என்னைப்பற்றி எழுதியுள்ளது
உண்மையிலேயே நிறைவேறி வருகிறது''
என்றார். 38 அதற்கு அவர்கள், ''ஆண்
டவரே, இதோ இங்கே இரண்டு வாள்கள்
இருக்கின்றன'' என்று சொல்ல, அவர்,
''நிறுத்துங்கள், போதும்'' என்றார்.

### ஒலிவமலையில்
*(மத்.26:36—46; மாற்.14:32—42)*

39 அதற்குப்பின் இயேசு வெளியே வந்து
தம் வழக்கப்படி ஒலிவமலைக்குப் போனார்;
சீடர்களும் அவரைப் பின்தொடர்ந்தார்
கள். 40 அவ்விடத்தை அடைந்தபோது
அவர் அவர்களைப் பார்த்து, ''நீங்கள்
சோதனைக்குள்ளாகாதிருக்கும்படி ஜெபம்
செய்துகொண்டிருங்கள்'' என்று சொல்லி
விட்டு, 41 அவர்களிடமிருந்து விலகிக்
கல்லெறி தொலைவு சென்று, தாமும்
முழந்தாள்படியிட்டு ஜெபம் செய்தார்.
42 அப்பொழுது, ''தந்தையே, இந்தத்
துன்பக்கலம் என்னை விட்டு நீங்குவது உமது
திருவுளம் என்றால், இதை நீக்கியருளும்;
ஆயினும், என் விருப்பமன்று, உமது விருப்
பமே நிறைவேறட்டும்'' என்று சொல்லி
ஜெபம் செய்தார். 43 [அவ்வேளையில்
வானத்திலிருந்து ஒரு தூதன் வந்து அவர்
முன் தோன்றி அவருக்குத் திடமளித்
தான். 44 அவர் ஆழ்துயரம் நிறைந்த
வராய் இன்னும் மிகுந்த ஊக்கத்துடன்
ஜெபம் செய்தார். அவர் வியர்வை இரத்தப்
பெருந்துளிகள்போலத் தரையில் விழுந்தது.]
45 அவர் ஜெபம் செய்து முடித்த
பின் எழுந்து சீடரிடம் சென்று,
அவர்கள் துயரத்தினால் சோர்வுற்றுத்
தூங்கிவிட்டதைக் கண்டு, ''என்ன! தூங்கிக்
கொண்டிருக்கிறீர்களே! 46 சோதனைக்குள்
ளாகாதிருக்கும்படி எழுந்து ஜெபம் செய்
யுங்கள்'' என்றார்.

### இயேசு பிடிபடுதல்
*(மத்.26:47—56; மாற்.14:43—50; யோ. 18:3—11)*

47 இயேசு இவ்வாறு பேசிக்கொண்
டிருக்கையில், இதோ, ஒரு கூட்டம்! அக்
கூட்டத்திற்கு முன்னால் பன்னிருவருள் ஒரு
வனாகிய யூதாஸ் என்பவனே வந்தான்.
அவன் இயேசுவை முத்தமிடுவதற்காக
அவரை அணுகினான். 48 இயேசு அவனைப்
பார்த்து, ''யூதாசே, முத்தத்தினாலா நீ
மனுமைந்தரைக் காட்டிக்கொடுக்கிறாய்?''
என்றார். 49 அவருடன் இருந்தவர்கள்
நடக்கப்போவதை அறிந்துகொண்டு,
''ஆண்டவரே, நாங்கள் வாள்கொண்டு
தாக்கலாமா?'' என்று கேட்டார்கள்.
50 அப்பொழுது அவர்களுள் ஒருவர்
தலைமை ஆசாரியருடைய வேலைக்காரனைத்
தாக்கி, அவனுடைய வலக்காதைத் துண்
டித்தார். 51 இயேசு அதைக் கண்டு, ''இம்
மட்டோடு விடுங்கள்'' * என்று சொல்லி,
அவன் காதைத் தொட்டு அவனைக் குணப்
படுத்தினார். 52 பிறகு இயேசு தம்மைப்
பிடிக்க வந்த தலைமை ஆசாரியர்களையும்
திருக்கோவில் காவற்படைத் தலைவரையும்
மூப்பரையும் பார்த்து, ''இது என்ன?
கொள்ளைக்காரனைப் பிடிக்க வருவதுபோல
வாள்களோடும் தடிகளோடும் புறப்பட்டு
வந்திருக்கிறீர்களே! 53 நான் நாள்தோறும்
உங்களோடு திருக்கோவிலில் இருந்தேன்.
அப்போதெல்லாம் நீங்கள் என்மேல் கை
வைக்கவில்லை. ஆனால் இது உங்களுடைய
வேளை; இது இருளின் ஆட்சி'' என்றார்.

### பேதுருவின் மறுதலிப்பு
*(மத்.26:57,58,69—75;மாற்.14:53,54 யோ.18:12—18,25—27)*

54 அவர்கள் அவரைப் பிடித்து, தலைமை
ஆசாரியர் வீட்டுக்கு நடத்திக்கொண்டு
போனார்கள். பேதுரு தொலைவிலே பின்
தொடர்ந்து போனார். 55 அவர்கள் முற்
றத்தின் நடுவில் நெருப்பு மூட்டி அதைச்
சுற்றி உட்கார்ந்தபோது, பேதுருவும் அவர்
களிடையே போய் உட்கார்ந்து கொண்
டார். 56 அப்பொழுது ஒரு வேலைக்காரி
அவர் நெருப்பினருகில் உட்கார்ந்திருக்கி
றதைக் கண்டு, அவரை உற்றுப் பார்த்து
விட்டு, ''இந்த ஆளும் அவனோடிருந்த
வனே'' என்றாள். 57 அதற்கு அவர்,
''அம்மா, அந்த ஆளை எனக்குத் தெரி
யாது'' என்று சொல்லி மறுதலித்தார்.
58 சற்று நேரத்திற்குப்பின் வேறொரு
வன் அவரைக் கண்டு, ''நீயும் அவர்
களுள் ஒருவன்தான்'' என்றான். அதற்குப்
பேதுரு, ''இல்லை, ஐயா, நானல்ல'' என்
றார். 59 ஏறக்குறைய ஒருமணி நேரத்திற்
குப் பின்பு வேறொருவன் அவரைப் பார்த்து,
''உண்மையாகவே இவனும் அவனைச் சேர்ந்
தவனே. இவன் கலிலேயன்தான்'' என்று
அழுத்தமாகக் கூறினான். 60 ஆனால் பேதுரு

* 'இதையாவது செய்ய விடுங்கள் என்று பதில் சொல்லி அவன் காதைத் தொட்டு அவனைக் குணப்படுத்தினார்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

**22:37** ஏசா. 53:12.

''நீ என்ன சொல்லுகிருய் என்பதே எனக்குப் புரியவில்லையப்பா'' என்ருர் அந்த விநாடியிலேயே, அவர் பேசிக் கொண்டிருக்கையிலேயே சேவல் கூவிற்று.
61 ஆண்டவரும் திரும்பிப் பேதுருவை உற்று நோக்கினுர். 'இன்றைக்குச் சேவல் கூவுமுன், என்னை உனக்குத் தெரியாதென நீ மூன்று முறை மறுதலிப்பாய்' என்று ஆண்டவர் சொன்ன வார்த்தை பேதுருவின் நினைவுக்கு வந்தது. 62 அவர் வெளியே போய்க் கதறி அழுதார்.

### இயேசுவை அடித்து ஏளனம் செய்தல்
*(மத்.26:67,68; மாற்.14:65)*

63 இயேசுவைப் பிடித்துவந்த மனிதர் அவரை அடித்து ஏளனம் செய்து, 64 அவருடைய கண்களைக் கட்டி, ''உன்னை அடித்தவன் யார்? ஞானத்தால் உணர்ந்து சொல்'' என்று அவரைக் கேட்டார்கள்;
65 மற்றும் பல இழிவான வார்த்தைகளையும் அவருக்கு விரோதமாகச் சொன்னுர்கள்.

### தலைமைச் சங்கத்தின் முன்னிலையில்
*(மத்.26:59–66; மாற்.14:55–64 யோ. 18:19–24)*

66 பொழுது விடிந்ததும் தலைமை ஆசாரியர்களும் வேத அறிஞர்களும் அடங்கிய மக்களின் மூப்பர்சபை கூடிற்று. அவர்கள் அவரைத் தங்கள் தலைமைச் சங்கத்தின் முன் கொண்டுவந்து நிறுத்தி, 67 ''நீ மேசியா என்ருல் அதை எங்களுக்குச் சொல்லிவிடு'' என்ருர்கள். அதற்கு அவர், ''நான் சொன்னுலும் நம்பமாட்டீர்கள்.
68 நான் கேள்வி கேட்டாலும் பதில் சொல்லமாட்டீர்கள். 69 ஆயினும், இது முதற்கொண்டு மனுமைந்தர் தெய்வ வல்லமையின் வலப்பக்கத்தில் வீற்றிருப்பார்'' என்ருர். 70 அப்பொழுது அவர்கள் எல்லாரும் சேர்ந்து, ''அப்படியானுல் நீ கடவுளுடைய மைந்தனு?'' என்று கேட்டார்கள். அவர், ''நீங்கள் சொல்லுகிறபடியே நான் அவர்தான்''* என்று சொல்ல,
71 அவர்கள், ''இதற்குமேல் நமக்குச் சாட்சி எதற்கு? இவன் வாயிலிருந்தே நாம் கேட்டுவிட்டோமே'' என்ருர்கள்.

### பிலாத்துவின் முன்னிலையில்
*(மத். 27:1,2,11–14; மாற். 15:1–5; யோ. 18:28–38)*

**23** பிறகு கூட்டத்திலிருந்த அனைவரும் எழுந்து அவரைப் பிலாத்துவின்முன் கூட்டிச்சென்று, 2 அவனிடம், ''இந்த ஆள் எங்கள் இனத்தவரைக் கலகம் செய்யத் தூண்டுகிருன்; ரோமப் பேரரசருக்கு வரி கொடுப்பதைத் தடுக்கிருன்; தானே மேசியாவாகிய அரசன் என்றும் சொல்லுகிருன். இவ்வாறெல்லாம் இவன் செய்ய நாங்களே கண்டோம்'' என்று கூறி அவர் மீது குற்றம் சுமத்தினுர்கள். 3 பிலாத்து இயேசுவைப் பார்த்து, ''நீ யூதருடைய அரசனு?'' என்று கேட்க அவர், ''நீர் சொல்லுகிறபடிதான்''† என்ருர். 4 அப்பொழுது பிலாத்து தலைமை ஆசாரியர்களையும் அங்கிருந்த மக்களையும் நோக்கி, ''இந்த மனிதனிடம் நான் ஒரு குற்றத்தையும் காணவில்லையே!'' என்ருன்.
5 ஆனுல் அவர்கள், ''இவன் கலிலேயா நாட்டில் தொடங்கி இவ்விடம் வரைக்கும், யூதேயா முழுவதிலும் மக்களுக்குப் போதனை செய்து அவர்களைத் தூண்டிவிடுகிருன்'' என்று மிகவும் அழுத்தமாகச் சொன்னுர்கள்.

### ஏரோதுவின் முன்னிலையில்

6 பிலாத்து இதைக் கேட்டபோது, ''இவன் கலிலேயனு?'' என்று வினவி,
7 அவர் ஏரோதுவின் அதிகாரத்துக்குட்பட்டவர் என்பதைத் தெரிந்துகொண்டு, அப்போது ஏரோதுவும் எருசலேமில் இருந்ததால், அவரை அவனிடம் அனுப்பிவைத்தான். 8 ஏரோது அவரைக் குறித்து ஏற்கெனவே கேள்விப்பட்டிருந்ததால், அவரை பார்க்கவேண்டுமென்று நெடுங்காலமாக விருப்பங்கொண்டிருந்தான்; அவரால் செய்யப்படும் ஏதாவதோர் அற்புதத்தைப்பார்க்கலாமென்று ஆவலாயுமிருந்தான். ஆகையால் அவன் இயேசுவைக் கண்டதும் மிகவும் மகிழ்ச்சியடைந்தான். 9 அவன் அவரிடம் பல கேள்விகள் கேட்டுப்பார்த்தான், ஆனுல் அவர் அவனுக்கு ஒரு பதிலும் கூறவில்லை. 10 தலைமை ஆசாரியர்களும் வேத அறிஞர்களும் அவர்மேல் மும்முரமாகக் குற்றம் சுமத்திக்கொண்டே நின்ருர்கள். 11 அப்பொழுது ஏரோது தன் போர்வீரரோடு சேர்ந்து அவரை இழிவாக நடத்தி, ஏளனம் செய்து, பளபளப்பான ஆடையை அவருக்கு உடுத்தி அவரைப் பிலாத்துவினிடம் திருப்பி அனுப்பிவிட்டான். 12 முன்னே ஒருவருக்கொருவர் பகைவராயிருந்த பிலாத்துவும் ஏரோதுவும் அன்றைக்குநண்பர்களானுர்கள்.

### மீண்டும் பிலாத்துவின் முன்னிலையில்
*(மத்.27:15–26; மாற்.15:6–15 யோ. 18:39–19:16)*

13 பிலாத்து தலைமை ஆசாரியர்களையும் அதிகாரிகளையும் மக்களையும் ஒன்று

* 'நான் அவரென்று நீங்கள் சொல்லுகிறீர்கள்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
† 'நீர் அப்படிச் சொல்லுகிறீர்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
22:61 லூக். 22:34.

கூடச்செய்து, 14 அவர்களைப் பார்த்து, ''இந்த மனிதன் மக்களைக் கலகம் செய்யத் தூண்டுகிறவன் என்று சொல்லி என்னிடம் கொண்டுவந்தீர்கள்; நீங்களே பாருங்கள்; உங்கள் முன்னிலையில் நான் விசாரணை செய்தபோது, இவன்மீது நீங்கள் சுமத்துகிற குற்றங்களுள் ஒன்றையும் இவனிடம் காணவில்லை. 15 ஏரோதுவும் காணவில்லை. அதனாலேதான் அவர் இவனை நம்மிடம் திருப்பியனுப்பிவிட்டார். எனவே, மரண தண்டனைக்கேற்ற தொன்றும் இவன் செய்துவிடவில்லை என்பது தெளிவு. 16 ஆகையால் இவனுக்குச் சிறு தண்டனை கொடுத்து விடுதலை செய்கிறேன்'' என்றான். 17 [ஏனெனில், பண்டிகைதோறும் அவன் அவர்களுக்காக ஒருவனை விடுதலை செய்தாக வேண்டும்.] 18 ஆனால் அவர்களெல்லாரும், ''இவனைத் தொலைத்துவிடும்; எங்களுக்காகப் பரபாசை விடுதலை செய்யும்'' என்று சொல்லி ஒருமிக்கக் கூச்சலிட்டனர். 19 பரபாஸ் என்பவன் நகரத்தில் நடந்த ஒரு கலகத்தின் பொருட்டும் கொலையின் பொருட்டும் சிறையில் வைக்கப்பட்டிருந்தவன். 20 பிலாத்து இயேசுவை விடுதலை செய்ய விரும்பி, மறுபடியும் அவர்களோடு பேசிப்பார்த்தான். 21 ஆனால் அவர்களோ, ''அவனைச் சிலுவையில் அறையும், சிலுவையில் அறையும்'' என்று கத்திக்கொண்டேயிருந்தார்கள். 22 அவன் மூன்றாம் முறை அவர்களை நோக்கி, ''ஏன்? இவன் என்ன தீங்கு செய்துவிட்டான்? மரண தண்டனைக்கேற்ற குற்றம் ஒன்றையும் இவனிடம் நான் காணவில்லையே! நான் இவனுக்குச் சிறு தண்டனை கொடுத்து விடுதலை செய்கிறேன்'' என்றான். 23 அப்படி அவன் சொல்லியும், அவரைச் சிலுவையில் அறையும்படி அவர்கள் பெருங்கூச்சலிட்டு விடாப்பிடியாகக் கேட்டார்கள். முடிவில் அவர்களுடைய கோரிக்கை நிறைவேறிற்று. 24 அவர்கள் கேட்டபடியே நடக்கட்டும் என்று பிலாத்து தீர்ப்பளித்து, 25 கலகத்தின் பொருட்டும் கொலையின் பொருட்டும் சிறையில் வைக்கப்பட்டிருந்தவனை அவர்கள் கேட்டுக்கொண்டபடியே விடுதலை செய்தான்; இயேசுவையோ தங்கள் விருப்பம்போலச் செய்யும்படி அவர்களிடம் ஒப்புக்கொடுத்தான்.

## சிலுவையில் அறைதல்

*(மத். 27:32–44; மாற். 15:21–32; யோ. 19:17–27)*

26 அவர்கள் அவரைக் கூட்டிச்செல்கையில், சிரேனே ஊராகிய சீமோன் வயல் வெளியிலிருந்து வந்துகொண்டிருந்தான். அவனைப் பிடித்து, இயேசுவின் பின்னே அவருடைய சிலுவையைச் சுமந்துகொண்டு வரும்படி அதை அவன்மேல் சுமத்தினார்கள். 27 பெருந்திரளான மக்கள் அவர் பின்னே சென்றார்கள்; பெண்கள் அவருக்காக மாரடித்துப் புலம்பிக்கொண்டு சென்றார்கள். 28 இயேசு அவர்கள் பக்கம் திரும்பி, ''எருசலேம் புதல்வியரே, நீங்கள் எனக்காக அழ வேண்டாம்; உங்களுக்காகவும் உங்கள் பிள்ளைகளுக்காகவும் அழுங்கள். 29 ஏனென்றால், காலம் வரப்போகிறது. அப்பொழுது மலடிகளை நற்பேறு பெற்றவர்கள் என்றும், பிள்ளைப் பேறற்ற வயிறுகளையும் பால் கொடாத மார்பகத்தையும் நற்பேறு பெற்றவை என்று சொல்லுவார்கள்; 30 மலைகளை நோக்கி, 'எங்கள்மேல் விழுங்கள்' என்றும், குன்றுகளை நோக்கி, 'எங்களை மறைத்துக்கொள்ளுங்கள்' என்றும் சொல்லுவார்கள். 31 மரம் பச்சையாயிருக்கையிலேயே இவற்றைச் செய்கிறார்களே, அது காய்ந்த பிறகு என்னதான் நேரிடாது!'' என்றார்.

32 அவரோடு வேறு இருவரும் — இவ்விருவரும் குற்றவாளிகள் — கொல்லப்படுவதற்கெனக் கொண்டு போகப்பட்டனர். 33 தலையோடு என்று சொல்லப்படும் இடத்திற்கு அவர்கள் வந்து சேர்ந்தபின், அங்கே அவரையும் அவருடைய வலப் பக்கத்தில் ஒரு குற்றவாளியையும், இடப் பக்கத்தில் ஒரு குற்றவாளியையும் சிலுவைகளில் அறைந்தார்கள். 34 அப்பொழுது இயேசு, ''தந்தையே, இவர்களை மன்னியும், தாங்கள் செய்கிறது இன்னதென்பதை அறியாதிருக்கிறார்கள்'' என்றார். அவர்கள் சீட்டுக் குலுக்கிப் போட்டுப் பார்த்து அவருடைய ஆடைகளைப் பங்கிட்டுக்கொண்டார்கள். மக்கள் பார்த்துக்கொண்டு அங்கே நிற்க, 35 அதிகாரிகள், ''இவன் மற்றவர்களைக் காப்பாற்றினான்; இவன் கடவுளின் மேசியாவும் அவரால் தேர்ந்துகொள்ளப்பட்டவனுமென்றால், தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ளட்டும்'' என்று இகழ்ந்து பேசினார்கள். 36 படைவீரரும் அவரை ஏளனம் செய்தனர். அவர்கள் அருகே வந்து, புளிப்பான காடியை அவரிடம் நீட்டி, 37 ''நீ யூதருடைய அரசன் என்றால், உன்னை நீயே காப்பாற்றிக்கொள்'' என்று சொன்னார்கள். 38 ''இவன் யூதருடைய அரசன்'' என்ற வாசகமும் அவருக்கு மேலே இருந்தது.

39 சிலுவையில் தொங்கிக்கொண்டிருந்த குற்றவாளிகளுள் ஒருவன், ''நீ மேசியா தானே? அப்படியானால் உன்னைக்

**23:30** ஓசே. 10:8; திருவெளி. 6:16. **23:34** சங். 22:18.

காப்பாற்றிக்கொள், எங்களையும் காப்
பாற்று'' என்று அவரைப் பழித்தான்.
40 ஆனால் மற்றவன் அவனைக் கண்டித்து,
''நீயும் இதே தீர்ப்புப் பெற்றிருந்தும்,
கடவுளுக்கு நீ அஞ்சுவதில்லையா? 41 நாம்
தண்டிக்கப்படுவது முறையே; நாம் செய்த
வற்றிற்குத் தகுந்த பலனடைகிறோம்.
இவரோ தகாததொன்றும் செய்யவில்
லையே'' என்று அவனுக்குப் பதிலளித்
தான். 42 பிறகு அவன், ''இயேசுவே,
நீர் உமது அரசுரிமையோடு வரும்போது
அடியேனை நினைத்தருளும்'' என்றான்.
43 அவர் அவனிடம், ''நான் உறுதியாகச்
சொல்லுகிறேன்: இன்றைக்கு நீ என்
னோடுகூடவே பேரின்பவீட்டில் இருப்பாய்''
என்றார்.

## இயேசுவின் மரணம்

*(மத். 27:45–56; மாற். 15:33–41;
யோ. 19:28–30)*

44 அப்பொழுது ஏறக்குறையப் பகல்
பன்னிரண்டு மணி* இருக்கும். 45 கதிர
வன் ஒளியற்றுப்போனதால், பிற்பகல்
மூன்று மணி† வரையிலும் நாடெங்கும்
இருள் சூழ்ந்திருந்தது. திருக்கோவிலின்
திரை, நடுவில் இரண்டாகக் கிழிந்தது.
46 இயேசு உரத்த குரலில், ''தந்தையே,
உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்பு
விக்கிறேன்'' என்று சொல்லி உயிர் துறந்
தார். 47 நூற்றுவர் தலைவன் நடந்ததைக்
கண்டு, கடவுளைப் புகழ்ந்து, ''இந்த மனி
தன் மெய்யாகவே நீதிபரன்'' என்று
சொன்னான். 48 அங்கே நடந்த காட்சி
யைப் பார்க்க ஒன்றுகூடியிருந்த எல்லா
மக்களும் நடந்தவற்றைக் கண்டு தாங்
கொணாத் துயரத்துடன் திரும்பிப்போனார்
கள். 49 ஆனால் அவருக்கு அறிமுகமானவர்
அனைவரும், கலிலேயாவிலிருந்து அவரைப்
பின்தொடர்ந்து வந்த பெண்மக்களும்
தொலைவில் இவற்றைப் பார்த்துக்
கொண்டே நின்றார்கள்.

## அடக்கம் செய்தல்

*(மத். 27:57–61; மாற். 15:42–47;
யோ. 19:38–42)*

50 யோசேப்பு என்னும் பெயர்கொண்ட
ஒருவர் இருந்தார். அவர் யூதர்நாட்டு
அரிமத்தியா என்னும் ஊரிலிருந்து வந்த
வர்; தலைமைச் சங்கத்தாருள் ஒருவர்,
நற்பண்பு உடையவர், நேர்மையானவர்.
51 அவர்களுடைய இந்தத் தீர்மானத்துக்
கும் செய்கைக்கும் உடன்படாதிருந்தவர்;
கடவுளுடைய அரசின் வருகையை எதிர்
நோக்கிக்கொண்டிருந்தவர். 52 அவர் பிலாத்
துவினிடம் போய், இயேசுவின் உடலைக்
கொடுக்க வேண்டுமென்று கேட்டு, 53 அதை
இறக்கி மெல்லிய துணியில் சுற்றி,
கற்பாறையில் வெட்டப்பட்டிருந்த ஒரு
கல்லறையில் அவரை வைத்தார். அதுவரை
யிலும் அது யாரையும் அடக்கம் செய்யப்
பயன்படுத்தப்படாத கல்லறை. 54 அந்த
நாள் ‡ ஆயத்தநாள்; ஓய்வுநாள் தொடங்
கும் நேரமுமாயிற்று. 55 கலிலேயாவிலி
ருந்து அவருடனே வந்திருந்த பெண்மக்
கள் பின்தொடர்ந்து சென்று, கல்லறை
யையும் அதில் அவருடைய உடல் வைக்
கப்பட்ட வகையையும் பார்த்துவிட்டு,
திரும்பிப்போய், 56 நறுமணப் பொருள்
களையும், நறுமணத் தைலங்களையும்
ஆயத்தம் செய்தார்கள்.

## இயேசு உயிர்த்தெழுந்தார்

*(மத். 28:1–10; மாற். 16:1–8;
யோ. 20:1–10)*

**24** திருக்கட்டளைக்கிணங்க அவர்கள்
ஓய்வுநாளில் ஓய்ந்திருந்தார்கள். பிறகு
வாரத்தின் முதலாம் நாள் விடியற்காலத்
தில் தாங்கள் ஆயத்தம் செய்திருந்த நறு
மணப் பொருள்களை அவர்கள் எடுத்துக்
கொண்டு கல்லறைக்கு வந்தார்கள், 2 வந்
ததும், கல்லறையிலிருந்த கல் புரட்டித்
தள்ளப்பட்டிருந்ததைக் கண்டார்கள்.
3 அவர்கள் உள்ளே நுழைந்தபோதோ
ஆண்டவராகிய இயேசுவின் உடல் அங்கே
இல்லாததைக் கண்டார்கள். 4 அதைக்
குறித்து அவர்கள் மனக்கலக்கமுற்று நிற்
கையில், ஒளிவீசும் ஆடையணிந்த இருவர்
அவர்கள் அருகில் திடீரென்று வந்து நின்
றனர். 5 அந்தப் பெண்கள் அச்சமுற்றுக்
குனிந்து தரையைப் பார்த்துக்கொண்டி
ருந்தார்கள். அந்த இருவரும் அவர்களை
நோக்கி, ''உயிரோடிருக்கிறவரை நீங்கள்
இறந்தோரிடையே தேடுகிறதேன்? அவர்
இங்கே இல்லை; அவர் உயிர்த்தெழுந்து
விட்டார். 6 அவர் கலிலேயாவிலிருந்த
போதே உங்களுக்குச் சொன்னதை நினைவு
படுத்திப் பாருங்கள். 7 மனுமைந்தர்
பாவிகளான மனிதர் கைகளில் ஒப்புக்
கொடுக்கப்பட்டு, சிலுவையில் அறை
யுண்டு, மூன்றாம் நாள் உயிரோடெழுந்
திருந்தாக வேண்டுமென்று சொன்னாரே''
என்றார்கள். 8 அப்பொழுது அவர்கள்
அவருடைய வார்த்தைகளை நினைவுபடுத்
திக்கொண்டு, 9 கல்லறையை விட்டுத்
திரும்பிப்போய், இந்தக் காரியங்கள் எல்

* † மூலத்தில், யூதர் கணக்குப்படி, முறையே ஆறும்மணி, ஒன்பதாம் மணி என்றிருக்கிறது.
‡ யூத ஓய்வுநாளுக்கு முந்தின நாளாகிய வெள்ளிக்கிழமை.
**23:46** சங். 31:5; திருத்தூது. 7:59. **23:49** லூக். 8:2, 3; 24:10. **24:6, 7** மத். 16:21; 17:22, 23; 20:18, 19; மாற். 8:31; 9:31; 10:33, 34; லூக். 9:22; 18:31, 33;

லாவற்றையும் பதினொருவருக்கும் மற்ற
யாவருக்கும் அறிவித்தார்கள். ,10 அந்தப்
பெண்கள் யாரென்றால், மகதலேனா மரி
யாள், யோவன்னாள், யாக்கோபின் தாயா
கிய மரியாள் என்பவர்களே. அவர்களும்
மற்றப் பெண்களும் இவற்றைத் திருத்
தூதுவரிடம் சொன்னார்கள். 11 அவர்கள்
சொன்னது ஆதாரமற்ற செய்தியாக அவர்
களுக்குத் தோன்றினதால், அவர்கள் அப்
பெண்களை நம்பவில்லை. 12 ஆனாலும்,
பேதுரு எழுந்து கல்லறைக்கு ஓடினார். அவர்
அதற்குள்ளே குனிந்து பார்க்கையில்,
துணிகளை மட்டும் கண்டு, நடந்ததைக்
குறித்து வியந்துகொண்டே வீடு திரும்பினார்.

### எம்மாவு என்னும் சிற்றூருக்கு நடந்துசெல்லுதல்

*(மாற். 16:12,13)*

13 அதே நாளில் அவர்களுள் இருவர்
எருசலேமிலிருந்து ஏறத்தாழ ஏழு மைல்
தொலைவிலுள்ள எம்மாவு என்னும் சிற்
றூருக்குச் சென்றுகொண்டிருந்தனர்.
14 அவர்கள் நடந்த இந்த நிகழ்ச்சிகள்
அனைத்தையும் குறித்து ஒருவரோடொரு
வர் பேசிக்கொண்டே சென்றார்கள். 15 இப்
படி அவர்கள் ஒருவரையொருவர் வினவி
உரையாடிக்கொண்டு நடக்கையில்,இயேசு
தாமே அருகே சென்று அவர்களோடு
நடந்துபோனார். 16 என்றாலும், அவர்
இன்னார் என்பதைக் கண்டுகொள்ளாதபடி
அவர்களுடைய கண்கள் மறைக்கப்
பட்டிருந்தன. 17 அவர் அவர்களிடம்,
''நீங்கள் நடந்துகொண்டே ஒருவரோ
டொருவர் பேசிக்கொள்ளும் இந்தக் காரி
யம் என்ன?'' என்று கேட்டதும் அவர்
கள் நின்றுவிட்டார்கள்; அவர்களுடைய
முகங்கள் வாட்டமுற்றிருந்தன. 18 அவர்
களுள் ஒருவரான கிலெயோப்பா என்ப
வர், ''எருசலேம் நகரத்தில் தங்கியிருப்ப
வருள் நீர் ஒருவர் மட்டுந்தான் இந்நாள்
களில் அங்கு நடப்பவற்றை அறியாமல்
இருக்கிறீர்போலும்'' என்று பதில் சொன்
னார். 19 இயேசு, ''நடந்தவற்றையா?''
என்று கேட்க, அவர்கள், ''நசரேயனா
கிய இயேசுவைக் குறித்தவற்றைத்தான்.
அவர் இறைவாக்குரைப்பவராய் விளங்கி,
கடவுள் முன்னும் எல்லா மக்கள் முன்
னும் செய்கையிலும் வாக்கிலும் வல்ல
மையுள்ளவராய் இருந்தார். 20 அவரை
நம்முடைய தலைமை ஆசாரியர்களும் அதி
காரிகளும் மரணத்தீர்ப்புக்கு ஆளாக்கிச்
சிலுவையில் அறைந்தார்கள். 21 நாங்
களோ இஸ்ரவேல் மக்களுக்கு மீட்சி
அளிக்கப்போகிறவர் இவரே என்று நம்
பிக்கொண்டிருந்தோம். தவிர, இவையெல்
லாம் நிகழ்ந்து இன்றோடு மூன்று நாள்
ஆகிறது. 22 என்றாலும் எங்களைச் சேர்ந்த
பெண்டிர் சிலர் எங்களைத் திகைக்கச்
செய்துவிட்டனர். அவர்கள் விடியற்
காலத்தில் கல்லறைக்குப்போய், அவரு
டைய உடல் அங்கே இல்லாததைக் கண்டு
திரும்பி வந்தார்கள். 23 அவர்கள் தாங்
கள் தெய்வதூதரைக் கண்கூடாகக் கண்
டதாகவும், அந்தத் தூதர் அவர் உயி
ரோடிருக்கிறார் என்று உரைத்ததாகவும்
சொல்லுகிறார்கள். 24 எங்களோடு இருந்
தவர்களுள் சிலரும் கல்லறைக்குப் போய்,
பெண்டிர் சொன்னபடியே யாவும் இருக்
கக் கண்டனர்; ஆனால் இயேசுவைக் காண
வில்லை'' என்றார்கள். 25 அப்பொழுது
அவர் அவர்களை நோக்கி, ''அறிவில்லா
தவர்களே, உங்கள் உள்ளம் இறைவாக்
குரைப்போர் உரைத்த யாவற்றையும்
நம்ப இயலாத அளவிற்கு மந்தமாயிருக்
கிறது. 26 மேசியா தமது மாட்சிமைக்குள்
செல்லுவதற்குமுன் இந்தப் பாடு
களை அடைந்துதீர வேண்டும் அல்லவா?''
என்று சொல்லி, 27 மோசேயும் இறை
வாக்குரைப்போர் அனைவரும் உரைத்த
வற்றிலிருந்து தொடங்கி, எல்லா வேதப்
பகுதிகளிலும் தம்மைக் குறித்து எழுதி
யுள்ளவற்றை அவர்களுக்கு எடுத்து விளக்
கினார். 28 அவர்கள் தாங்கள் போகும்
சிற்றூருக்கு அருகில் வந்ததும், இயேசு
அதற்கப்பாலும் போகிறவர்போலக் காட்
டினார். 29 அப்பொழுது அவர்கள்,''மாலை
நேரமாயிற்று; பொழுதும் சாய்ந்துவிட்
டது. ஆகையால் நீர் எங்களுடனே வந்து
தங்கும்'' என்று சொல்லி அவரை வருந்திக்
கேட்டுக்கொள்ள, அவரும் அவர்
களுடன் போனார். 30 பிறகு அவர்களோடு
பந்தியில் அமர்ந்திருக்கையில், அவர் அப்
பத்தை எடுத்து, துதி செலுத்தி,அதைப்
பிட்டு, அவர்களுக்குக் கொடுத்த அந்
நேரத்தில் அவர்கள் கண்கள் திறக்கப்
பட்டன. 31 அவர் இன்னார் என்பதை
அவர்கள் கண்டார்கள். உடனே அவர்
அவர்களை விட்டு மறைந்துபோனார். 32 அப்
பொழுது அவர்கள் ஒருவரையொருவர்
பார்த்து, ''வழியில் அவர் வேதவாக்கியங்
களை நமக்கு விளக்கிக் காட்டிப் பேசுகை
யில் நமது உள்ளம் கொழுந்து விட்டு எரி
வதுபோல இல்லையா'' என்று சொல்லிக்
கொண்டார்கள். உடனே அவர்கள்,
எழுந்து எருசலேமுக்குத் திரும்பிப்போய்,
33 ஒன்றாய்க் கூடியிருந்த பதினொருவரை
யும் அவர்களோடிருந்தவர்களையும் அங்கே
கண்டார்கள். 34 அங்கிருந்தவர்கள்,''ஆண்
டவர் மெய்யாகவே உயிர்த்தெழுந்துவிட்
டார்; சீமோனுக்குக் காட்சியளித்திருக்
கிறார்'' என்று சொன்னார்கள். 35 இவர்

**24:31 திருத்தூது. 8:39.**

களும் தாங்கள் போய்க்கொண்டிருந்த
வேளையில் நிகழ்ந்தவற்றையும், அவர் அப்
பத்தைப் பிட்டுக் கொடுக்கையில் எப்படித்
தாங்கள் அவரை அறிந்துகொண்
டார்கள் என்பதையும் விவரித்துச்
சொன்னார்கள்.

### இயேசு சீடர்களுக்குக் காட்சியளித்தல்
*(மத். 28:16—20; மாற். 16:14—18;*
*யோ. 20:19—23; திருத்தூது.1:6—8)*

36 அவர்கள் இவற்றைப் பேசிக்கொண்
டிருக்கையில், இயேசு தாமே அவர்களி
டையே வந்து நின்று, அவர்களைப் பார்த்து
''உங்களுக்குச் சமாதானம் உண்டாவ
தாக!'' என்றார். 37 அவர்கள் திடுக்
கிட்டு, அச்சங்கொண்டு, ஓர் ஆவியைக்
காண்பதாக நினைத்தார்கள். 38 அப்பொ
ழுது அவர் அவர்களைப் பார்த்து, ''ஏன்
கலங்குகிறீர்கள்? உங்கள் உள்ளத்தில் ஐயம்
எழுவானேன்? 39 என் கைகளையும்,
கால்களையும் பாருங்கள், நான்தான்; என்
னைத் தொட்டுப் பாருங்கள்; எனக்குத்
தசையும் எலும்புகளும் இருப்பதை நீங்கள்
காண்கிறீர்களே; இவை ஓர் ஆவிக்கு
இராதே'' என்று சொல்லி, 40 தம்மு
டைய கைகளையும் கால்களையும் அவர்
களுக்குக் காட்டினார். 41 அவர்களோ
மகிழ்ச்சியின் மிகுதியினால் அப்போதுங்கூட
நம்ப முடியாமல் திகைத்துக்கொண்டிருக்
கையில், அவர் அவர்களிடம், ''உண்
பதற்கு ஏதாவது இருக்கிறதா?'' என்று
கேட்டார். 42 அவர்கள் பொரித்த மீன்
துண்டு ஒன்றை அவருக்குக் கொடுக்க,
43 அவர் அதை வாங்கி அவர்கள் முன்
னிலையில் சாப்பிட்டார்.

44 பிறகு அவர் அவர்களைப் பார்த்து,
''நான் உங்களோடிருந்த காலத்தில் உங்
களுக்குச் சொன்ன வார்த்தைகளின்
பொருள் இதுவே: மோசேயின் நீதிச்சட்
டத்திலும் இறைவாக்குகளிலும் சங்கீதங்
களிலும் என்னைக் குறித்து எழுதியுள்ள
யாவும் நிறைவேறியாக வேண்டும்'' என்று
சொன்னார். 45 அப்படிச் சொல்லி, வேதப்
பகுதிகளை அவர்கள் புரிந்துகொள்ளும்படி
அவர்களுடைய மனத்தைத் திறந்தருளி,
46 அவர்களிடம், ''மேசியா
பாடுற்று மூன்றாம் நாளில் இறந்தோரிட
மிருந்து எழுந்திருக்க வேண்டுமென்றும்,
47 எருசலேம் தொடங்கி எல்லா நாட்டி
னருக்கும், 'மனமாற்றமடைந்து பாவ
மன்னிப்பைப் பெறுங்கள்' என்று அவரு
டைய திருப்பெயரால் அறிவிக்கப்பட
வேண்டுமென்றும் எழுதியிருக்கிறது.
48 இவற்றிற்கு நீங்களே சாட்சி
களாயிருக்கிறீர்கள். என் தந்தை
வாக்களித்ததை நான் உங்களுக்கு வழங்
கப்போகிறேன். 49 உன்னதத்திலிருந்து உங்
களுக்கு வல்லமை அருளப்படும் வரை
யிலும் நீங்கள் இந்த நகரத்திலேயே
இருங்கள்'' என்று சொன்னார்.

### இயேசுவின் விண்ணேற்றம்
*(மாற்.16:19,20; திருத்தூது. 1:9—11)*

50 பிறகு இயேசு பெத்தானியா வரைக்கும்
அவர்களை அழைத்துக்கொண்டு போனார்;
அங்கே தம்முடைய கைகளை உயர்த்தி
அவர்களை ஆசீர்வதித்தார். 51 அவர்களை
ஆசீர்வதிக்கையிலேயே அவர் அவர்களை
விட்டுப் பிரிந்தார்; பிறகு விண்ணுலகத்
திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டார்.
52 அவர்கள் அவரை வணங்கிவிட்டு,
மிகுந்த மகிழ்ச்சியோடு எருசலேமுக்குத்
திரும்பி வந்தார்கள்; 53 நாள்தோறும்
திருக்கோவிலில் கூடிக் கடவுளைப் புகழ்ந்து
போற்றினார்கள்.

24:49 திருத்தூது. 1:4

# யோவான் எழுதின அருட்செய்தி நூல்

### முன்னுரை

ஆதியிலேயே திருவாக்கு இருந்தார்;
அந்த வாக்கு, கடவுளோடிருந்தார்;
அந்த வாக்கு, கடவுளுமாயிருந்தார்.
2 அவர் ஆதியிலேயே கடவுளோடிருந்
தார்,
3 அவர் மூலமாகவே எல்லாம் உண்டா
யின. * உண்டானதெதுவும் அவராலே
யல்லாமல் உண்டாகவில்லை.
4 அவருள்ளேயே மெய்வாழ்வு இருந்தது;
அந்த வாழ்வே மனிதருக்கு ஒளியாயிருந்
தது.
5 அந்த ஒளி இருளில் சுடர்வீசிக்கொண்
டிருக்கிறது. இருளால் அதை அடக்கிவிட
இயலவில்லை. †
6 கடவுளால் அனுப்பப்பட்ட மனிதர்
ஒருவர் இருந்தார்;
அவருடைய பெயர் யோவான்.
7 அவர் அந்த ஒளியைக் குறித்துச் சாட்சி
கூற வந்தவர்.
**அவர் மூலம் எல்லாரும் அந்த ஒளியிடம்
நம்பிக்கை கொள்ளும்படி, அவர் அந்த
ஒளியைக் குறித்துச் சாட்சி கூற வந்தார்.**
8 அவர் அந்த ஒளியல்ல;
அந்த ஒளியைக் குறித்துச் சாட்சிகூற
வந்தவரே.
9 ‡ எந்த மனிதனுக்கும் ஒளி தருகிற
அந்த மெய்யான ஒளி
அப்போதே உலகத்துக்கு வந்தார்.
10 அவர் உலகத்தில் இருந்தார்;
உலகமும் அவர் மூலமாக உண்டானது
தான்; ஆனால் உலகமோ அவரை அறிந்து
கொள்ளவில்லை.
11 அவர் தமக்குச் சொந்தமாயிருந்த
இடத்திற்கே வந்தார்;
அவருக்குச் சொந்தமாயிருந்தவர்களோ
அவரை ஏற்றுக்கொள்ளவில்லை.
12 ஆனாலும், யார் யார் அவரை ஏற்றுக்
கொண்டார்களோ, அதாவது யார் யார்
அவரது திருப்பெயரில் நம்பிக்கை வைத்
தார்களோ,
அவர்களுக்குக் கடவுளின் பிள்ளைகளாகும்
உரிமையை அவர் அளித்தார்.
13 இவர்கள் இரத்தத்தினாலோ,
இயற்கையான ஆசையினாலோ,
கணவனுடைய விருப்பத்தினாலோ பிறந்த
வர்களல்ல,
கடவுளாலேயே பெற்றெடுக்கப்பட்டவர்
கள்.

14 திருவாக்கு மானிடரானார்;
அவ்வாறாகி அருளும் சத்தியமும் நிறைந்த
வராய் நம்மிடையே தங்கியிருந்தார்.
அவரது மாட்சிமையை நாங்கள்
கண்ணாரக் கண்டோம்;
அம்மாட்சிமை விண்ணகத் தந்தையிட
மிருந்து வரும்
ஒரேபேறானவருக்கே உரிய மாட்சிமையா
யிருந்தது.

15 யோவானும், ''எனக்குப் பின் வரு
கிறவர் என்னைவிடப் பெரியவர்;
நான் பிறப்பதற்கு முன்பிருந்தே
அவர் இருக்கிறார் என்று நான்
சொன்னவர் இவரே''
என வெளிப்படையாக உரைத்து
அவரைக் குறித்துச் சாட்சி கூறியிருக்
கிறார்.
16 அவரது அருளின் நிறைவிலிருந்து
நாம் எல்லோரும் அருள்மேல் அருள்
பெற்றிருக்கிறோம்.
17 மோசேயின் மூலம் நீதிச்சட்டம்
கொடுக்கப்பட்டது.
இயேசுகிறிஸ்துவின் மூலம் அருளும்
சத்தியமும் கிடைத்தன.
18 கடவுளை ஒருவனும் ஒருபோதும்
கண்டதில்லை.
விண்ணகத் தந்தை தம் மார்போடணைத்
துக்கொண்டுள்ள ஒரேபேறான
கடவுளே ¶ அவரை வெளிப்படுத்தினார்.

### திருமுழுக்குநர் யோவானது சாட்சியம்
*(மத். 3:1—12; மாற். 1:7—8;*
*லூக். 3:15—17)*

19 எருசலேமிலிருந்து யூதர்கள், ஆசாரி
யர் சிலரையும் இலேவியர் சிலரையும்
யோவானிடம் அனுப்பி, ''நீர் யார்?''
என்று கேட்டபோது, ''நான் மேசியா
அல்ல'' என்பதே அவர் கூறிய சாட்சியம்.
20 இவ்வாறு அவர் ஒப்புக்கொண்டு, மறுக்
காமல் வெளிப்படையாகவும் அறிவித்தார்.

21 அப்பொழுது அவர்கள், ''அப்படி
யானால் நீர் யார்? நீர் எலியாவா?''
என்று கேட்க, அவர், ''இல்லை'' என்றார்.

* 'அவராலேயல்லாமல் எதுவும் உண்டாகவில்லை; (4) உண்டானதெதுவோ அது அவராலே மெய்வாழ்வு பெற்றதாயிருந்தது; அந்த வாழ்வு மனிதருக்கு ஒளியாயிருந்தது' என்பதும் பாடம்.

† 'புரிந்துகொள்ள இயலவில்லை' என்றும் மொழிபெயர்க்கலாம்.

‡ 'உலகத்தில் தோன்றும் எந்த மனிதனுக்கும் ஒளி தருகிற மெய்யான ஒளி அந்த ஒளியே' என்பதும் பாடம்.

¶ 'மைந்தரே' என்பதும் பாடம்.

**1:1** 1 யோ. 1:1, 2. **1:3** சங். 33:9; கொலோ. 1:15—20; எபி. 1:1—3; திருத்தூது. 3:14. **1:5** யோ. 8:12; 1 யோ. 2:8. **1:6** மத். 3:1; மாற். 1:4; லூக். 3:1, 2. **1:10** 1 யோ. 2:13. **1:12** 1 யோ. 3:2. **1:14** யாத். 25:8, 9; இலே. 26:11, 12; 1 அர. 8:27. **1:16** கொலே. 2:9, 10. **1:17** யாத். 34:10, 32. **1:18** யாத். 33:20; 1 யோ. 4:12; கொலோ. 1:15. **1:21** திருத்தூது. 13:25.

''வரவேண்டிய இறைவாக்குரைப்பவர் நீர்
தாமோ?'' என்று கேட்டதற்கும் அவர்
''இல்லை'' என்றார். 22 எனவே, அவர்கள்
அவரிடம், ''நீர் யார் என்பதைச் சொல்லும்,
எங்களை அனுப்பினவர்களுக்கு நாங்கள் பதில்
சொல்ல வேண்டுமே; உம்மைப்பற்றி
என்னதான் சொல்லுகிறீர்?'' என்று
கேட்டார்கள். 23 அதற்கு அவர்,

'''ஆண்டவரின், வழியைச் செவ்வை
யாக்குங்கள் என்று வனாந்தரத்தில் கூக்
குரலிடுகிறவனுடைய தொனி'

என்று இறைவாக்குரைப்பவராகிய ஏசாயா
குறிப்பிட்ட தொனிதான் நான்'' என்று
சொன்னார். 24 இந்த ஆள்கள் பரிசேய
ரால் அனுப்பப்பட்டவர்கள். 25 அவர்கள்
அவரைப் பார்த்து, ''நீர் கிறிஸ்துவுமல்ல,
எலியாவுமல்ல, வரவேண்டிய இறைவாக்
குரைப்பவருமல்லவென்றால், ஏன் திரு
முழுக்குக் கொடுக்கிறீர்?'' என்று கேட்
டார்கள். 26 அதற்கு யோவான் அவர்
களிடம், ''நான் தண்ணீரினால் திருமுழுக்
குக் கொடுக்கிறேன்; நீங்கள் அறியாதிருக்
கிற ஒருவர் உங்களிடையே இருக்கிறார்.
27 எனக்குப் பின் வருகிறவர் அவரே;
அவருடைய மிதியடியின் வாரை அவிழ்க்க
வும் எனக்குத் தகுதியில்லை'' என்று சொன்
னார். 28 இது யோவான் திருமுழுக்குக்
கொடுத்துவந்த யோர்தான் ஆற்றின்
அக்கரையிலுள்ள பெத்தானியா என்னும்
ஊரில் நடந்தது.

### இதோ, தெய்வ ஆட்டுக்குட்டி!

29 மறுநாள் யோவான் தம்மிடம்
இயேசு வருகிறதைக் கண்டு, ''இதோ,
உலகத்தின் பாவத்தைச் சுமந்து நீக்கிடும்
தெய்வ ஆட்டுக்குட்டி. 30 எனக்குப்பின்
ஒருவர் வருகிறார்; அவர் என்னைவிடப்
பெரியவர், நான் பிறப்பதற்கு முன்பே
அவர் இருக்கிறார் என்று நான் சொன்ன
வர் இவரே. 31 இவர் இன்னாரென்பது
எனக்குத் தெரியாதிருந்தபோதிலும், இஸ்ர
வேல் மக்களுக்கு இவர் வெளிப்படுத்தப்
படும்பொருட்டே நான் தண்ணீரினால்
திருமுழுக்குக் கொடுக்கிறவனாய் வந்தேன்''
என்றார். 32 அவர் மேலும் கூறிய சாட்
சியமாவது: ''ஆவியானவர் புறாவைப்
போல வானத்தினின்று இறங்கி இவர்மீது
தங்குவதை நான் கண்டேன். 33 இவர்
இன்னாரென்பது எனக்குத் தெரியாமலே
தான் இருந்தது. ஆனால், தண்ணீரால்
திருமுழுக்குக் கொடுக்கும்படி என்னை
அனுப்பினவர், 'ஆவியானவர் இறங்கி
யார்மீது தங்குவதை நீ காண்பாயோ
அவரே தூய ஆவியினால் திருமுழுக்குக்
கொடுப்பவர்' என்று எனக்குச் சொல்லி
யிருந்தார். 34 அப்படியே நான் கண்டு,
'இவரே கடவுளின் மைந்தர்' என்று சாட்சி
கூறிவருகிறேன்'' என்பது.

### முதன் முதலாகச் சீடரானவர்கள்

35 மறுநாள் யோவான் தம்முடைய
சீடருள் இருவருடன் நின்றுகொண்டி
ருந்தபோது, 36 அப்பக்கம் நடந்துசென்ற
இயேசுவை உற்றுநோக்கி, 'இதோ, தெய்வ
ஆட்டுக்குட்டி!'' என்றார். 37 அந்தச்
சீடர் இருவரும் அவர் சொன்னதைக் கேட்டு
இயேசுவுக்குப் பின்னே நடந்து சென்றனர்.
38 இயேசு திரும்பிப் பார்த்து, அவர்கள்
தம் பின்னே வருவதைக் கண்டு, அவர்களி
டம், ''உங்களுக்கு என்ன வேண்டும்?''
என்று கேட்டார். அதற்கு அவர்கள், ''ரபீ,
நீர் எங்கே தங்கியிருக்கிறீர்?'' என்று கேட்
டார்கள் (ரபீ என்பதற்குப் போதகர் என்
பது பொருள்). 39 அவர், ''வாருங்கள்,
நீங்களே அதைக் கண்டுகொள்வீர்கள்''
என்றார். அவர்களும் போய் அவர் தங்கி
யிருந்த இடத்தைக் கண்டு, அன்று அவரு
டன் தங்கினார்கள். அப்பொழுது நேரம்
ஏறக்குறைய பிற்பகல் நான்கு மணி * இருக்
கும். 40 யோவான் சொன்னதைக் கேட்டு
அவரைப் பின்பற்றிச் சென்ற இருவருள்
ஒருவர் அந்திரேயா என்பவர். அவர் சீமோன்
பேதுருவின் உடன்பிறந்தார். 41 அவர்
போய் முதலில் தம் உடன்பிறந்தார்
சீமோனைக் கண்டுபிடித்து அவரிடம், ''மேசி
யாவைக் கண்டுவிட்டோம்'' என்று சொன்
னார் (மேசியா என்பதற்குக் கிறிஸ்து †
என்பது பொருள்). 42 பிறகு அவரை
இயேசுவினிடம் கூட்டிக்கொண்டு வந்தார்.
இயேசு அவரை உற்றுநோக்கி, ''நீ யோவா
னுடைய மகன் சீமோன்; நீ கேபா ‡
என்று அழைக்கப்படுவாய்'' என்றார்.
(கேபா என்பதற்கும், பேதுரு என்பதற்கும்
பொருள் ஒன்றே.)

### பிலிப்பு நாத்தான்வேல் என்றவர்கள் சீடராகும்படி அழைக்கப்படுதல்

43 மறுநாள் இயேசு கலிலேயாவுக்குப்
போகத் தீர்மானித்தார். அப்பொழுது
அவர் பிலிப்புவைக் கண்டு, ''என்னைப்
பின்பற்றி வா'' என்றார். 44 பிலிப்பு,
அந்திரேயாவையும் பேதுருவையும் போல,
பெத்சாயிதா ஊரினர். 45 பிலிப்பு நாத்
தான்வேலைக் கண்டு, ''மோசே நீதிச்

* மூலத்தில், யூதர் கணக்குப்படி, பத்தாம் மணி என்றிருக்கிறது.
† மேசியா என்கிற எபிரேயச் சொல்லுக்கும், கிறிஸ்து என்கிற கிரேக்கச் சொல்லுக்கும் 'அபிடேகம் செய்யப்பட்டவர்' என்பது பொருள்.
‡ அரமேயு பதமான கேபா என்பதும், கிரேக்க பதமான பேதுரு என்பதும் கற்பாறை என்று பொருள்படும் பகுதிகளினடியாகப் பிறந்தவை.
1:23 ஏசா. 40:3. 1:29 ஏசா. 53:7, 12. 1:32 ஏசா. 11:2; 61:1. 1:34 ஏசா. 42:1; லூக். 9:15; 23:35.
1:45 உபா. 18:18; திருத்தூது. 26:22.

சட்ட நூலிலும், இறைவாக்குரைப்போர்
தம் நூல்களிலும் யாரைக் குறித்து எழுதி
யிருக்கிறார்களோ அவரை நாங்கள் கண்டு
விட்டோம். அவர் யோசேப்பின் மைந்
தர் நாசரேத்தூர் இயேசுவே'' என்று
சொன்னார். 46 அதற்கு நாத்தான்வேல்,
''நாசரேத்திலிருந்து எந்த நன்மையாவது
வரக்கூடுமா?'' என்றார். பிலிப்பு, ''நீரே
வந்து பாரும்'' என்று சொன்னார்.
47 நாத்தான்வேல் தம்மை நோக்கி வரு
கிறதை இயேசு கண்டு, அவரைப் பற்றி,
''இவரே உண்மையான இஸ்ரவேலர்,
இவரிடம் கபடம் என்பதே இல்லை'' என்றார்.
48 நாத்தான்வேல் அவரிடம், ''என்னை
உமக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்
டார். இயேசு அவரிடம், ''பிலிப்பு, உன்னை
அழைக்குமுன், நீ அத்திமரத்தின் கீழ்
இருந்தபோதே நான் உன்னைப் பார்த்
தேன்'' என்று சொன்னார். 49 அதற்கு
நாத்தான்வேல், ''ரபீ, நீரே கடவுளின்
மைந்தர், நீரே இஸ்ரவேலின் அரசர்''
என்றார். 50 இயேசு அவரை நோக்கி,
''உன்னை அத்திமரத்தின் கீழே பார்த்தே
னென்று நான் உனக்குச் சொன்னதால்
இப்படி நம்புகிறாயா? இதைவிடப் பெரிய
காரியங்களை நீ பார்க்கப்போகிறாய்'' என்று
சொன்னார். 51 மேலும் அவர், ''மிகவும்
உறுதியாக உங்களுக்குச் சொல்லுகிறேன்,
வானம் திறந்திருக்கிறதையும், தெய்வ
தூதர் மனுமைந்தர் வழியாக ஏறிச் செல்
கிறதையும் இறங்கி வருகிறதையும் நீங்கள்
காண்பீர்கள்'' என்று அவரிடம் சொன்னார்.

## கானாவில் நடந்த திருமணம்

2 மூன்றாம் நாள் கலிலேயாவிலுள்ள
கானா என்னும் ஊரில் திருமணம்
ஒன்று நடைபெற்றது; இயேசுவின் தாயா
ரும் அங்கே இருந்தார். 2 இயேசுவும் அவ
ருடைய சீடர்களும் அந்தத் திருமணத்
துக்கு அழைக்கப்பட்டிருந்தார்கள்.
3 திராட்சை இரசம் போதாமற்போன
போது, இயேசுவின் தாயார் அவரைப்
பார்த்து, ''அவர்களிடம் திராட்சை இரசம்
தீர்ந்து போயிற்று'' என்று சொன்னார்.
4 அதற்கு இயேசு, ''அம்மணீ, நான்
செய்ய வேண்டியதை நீ எனக்குச் சொல்லத்
தேவையில்லை. என் நேரம் இன்னும்
வரவில்லை'' என்றார். 5 அவருடைய
தாயார் பணியாளரிடம், ''இவர் உங்க
ளுக்கு என்ன சொல்லுகிறாரோ அதைச்
செய்யுங்கள்'' என்று சொன்னார். 6 யூதரின்
சுத்திகரிப்பு முறைமையை முன்னிட்டு ஆறு
கற்சாடிகள் அங்கே வைக்கப்பட்டிருந்தன;
அவற்றுள் ஒவ்வொன்றும் இரண்டு மூன்று
குடம் தண்ணீர் கொள்ளும். 7 இயேசு
பணியாளரிடம், ''இந்தச் சாடிகளில் தண்
ணீர் நிரப்புங்கள்'' என்று சொன்னார்.
அவர்கள் அவற்றை விளிம்புவரை நிரப்பி
னார்கள். 8 பிறகு அவர் அவர்களிடம்,
''இப்போது இதை மொண்டு, பந்திவிசா
ரிக்கிறவனிடம் கொண்டுபோங்கள்''
என்று சொல்ல, அவர்களும் கொண்டு
போனார்கள். 9 திராட்சை இரசமாய்
மாறியிருந்த அந்தத் தண்ணீரைப் பந்தி
விசாரிக்கிறவன் சுவைபார்த்தான். அது
எப்படி வந்ததென்பது அவனுக்கு அப்
போது தெரியாது; அது தண்ணீரை
மொண்டுவந்த பணியாளருக்குத்தான் தெரி
யும். ஆகையால் பந்தி விசாரிக்கிறவன்
மணவாளனை அழைத்து, 10 அவனிடம்,
''எல்லாரும் உயர்ந்த இரசத்தை முதலில்
பரிமாறுவார்கள்; மக்கள் நன்றாய்க் குடித்த
பின் தரத்தில் குறைவானதைக் கொடுப்
பார்கள்; நீயோ உயர்ந்த இரசத்தை இது
வரையிலும் வைத்திருந்தாயே'' என்று
சொன்னான். 11 இவ்வாறு இயேசு,
தெய்வ ஆற்றலுக்கு அடையாளமாகத்
தாம் செய்த செயல்களுள் முதலாவதான
இந்தச் செயலைக் கலிலேயாவிலுள்ள கானா
வூரில் செய்து, தம் மாட்சிமையை வெளிப்
படுத்தினார்; அவருடைய சீடர்கள் அவ
ரிடம் நம்பிக்கை கொண்டார்கள்.
12 அதன்பின் அவரும் அவருடைய
தாயாரும் சகோதரரும் சீடர்களும் கப்
பர்நகூம் என்னும் ஊருக்குப் போனார்கள்.
அங்கே சிலநாள் தங்கியிருந்தார்கள்.

## இயேசு திருக்கோவிலைப் புனிதமாக்குதல்

(மத். 21:12,13; மாற். 11:15–18;
லூக். 19:45,46)

13 யூதரின் பஸ்காப் பண்டிகை*
நெருங்கிவிடவே, இயேசு எருசலேமுக்குப்
போனார். 14 அங்கே திருக்கோவிலில் ஆடு
மாடு புறா விற்கிறவர்களையும் காசுக்கடை
அமைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறவர்
களையும் கண்டு, 15 கயிற்றினால் ஒரு
சாட்டையைச் செய்து, அவர்கள் எல்லா
ரையும் ஆடுமாடுகள் அனைத்தையும் திருக்
கோவிலுக்கு வெளியே துரத்தினார்; காசுக்
கடைக்காரருடைய சில்லறைகளைச் சிந்திச்
சிதறிப் பலகைகளைக் கவிழ்த்துப் போட்
டார். 16 பிறகு அவர் புறா விற்றுக்
கொண்டிருந்தவர்களைப் பார்த்து,
''இவற்றை இங்கிருந்து எடுத்துச் செல்
லுங்கள்; என் தந்தையாரின் வீட்டை
வாணிகஞ்செய்யும் நிலையமாக்கவேண்டாம்''
என்று சொன்னார். 17 அவருடைய சீடர்
கள், ''உமது வீட்டைப் பற்றிய ஆர்வம்
என்னை எரித்துவிடும்'' என்று வேதத்தில்
எழுதியுள்ளதை நினைவுபடுத்திக்கொண்
டார்கள். 18 ஆனால், யூதர்கள் அவரைப்

* மத். 26:2 அடிக்குறிப்பைப் பார்க்க.

1:51 ஆதி. 28:12. 2:5 ஆதி. 41:55. 2:12 மத். 4:13. 2:17 சங். 69:9.

பார்த்து, ''நீர் இப்படிச் செய்யலாம்
என்பதற்கு ஆதாரமாக எங்களுக்குக் காட்
டும் அடையாளம் என்ன?'' என்று கேட்
டார்கள். 19 அதற்கு இயேசு, ''இந்தக்
கோவிலை இடித்துவிடுங்கள்; நான் மூன்று
நாளில் இதை எழுப்புவேன்'' என்று
அவர்களிடம் சொல்ல, 20 யூதர்கள்;
''இந்தக் கோவில் நாற்பத்தாறு ஆண்டு
களில் கட்டப்பட்டதாயிற்றே; இதை நீர்
மூன்றே நாளில் எழுப்பிவிடுவீரோ?''
என்று கேட்டார்கள். 21 ஆனால், அவர்
சொன்னதோ அவரது உடலாகிய கோவிலைப்
பற்றியது. 22 ஆகையால், அவர்
இப்படிச் சொன்னதை அவர் இறந்தோ
ரிடமிருந்து உயிரோடெழுப்பப்பட்டபின்
அவருடைய சீடர்கள் நினைவுபடுத்திக்
கொண்டு, வேத வாக்கியத்தையும் இயேசு
சொன்ன சொல்லையும் நம்பினார்கள்.

### இயேசு மனிதரை அறிவார்

23 பஸ்காப் பண்டிகைக் காலத்தில்
இயேசு எருசலேமில் இருக்கையில், அவர்
செய்த அரிய செயல்களைக் கண்ட பலர்
அவரது திருப்பெயரில் நம்பிக்கை வைத்
தனர். 24 ஆனால் இயேசுவோ அவர்களை
நம்பித் தம்மை அவர்களிடம் ஒப்படைத்து
விடவில்லை. ஏனெனில், அவர் எல்லா
மனிதரையும் அறிந்திருந்தார். 25 எந்த
ஒரு மனிதனைப் பற்றியும் அவருக்கு யாரும்
எதையும் எடுத்துச் சொல்வது தேவை
யில்லாதிருந்தது. மனிதன் உள்ளத்தி
லிருப்பதை அவர் தாமாகவே தெரிந்து
கொள்ளுகிறவர்.

### இயேசுவும் நிக்கொதேமுவும்

3 நிக்கொதேமு என்ற ஒரு மனிதர்
இருந்தார்; அவர் பரிசேயர், யூத
ருடைய தலைவர்களுள் ஒருவர். 2 அவர்
ஒரு நாள் இரவு இயேசுவினிடம் வந்து,
''ரபி, நீர் கடவுளிடமிருந்து வந்த போதகர்
என்பது எங்களுக்குத் தெரியும். கடவுள்
தன்னோடு இருந்தாலன்றி ஒருவனாலும்
நீர் செய்யும் இந்த அரிய செயல்
களைச் செய்ய முடியாது'' என்றார். 3 அதற்கு
இயேசு, ''ஒருவன் மறுபடியும்* பிறந்தா
லன்றிக் கடவுளின் அரசைக் காண முடி
யாது என்று மிகவும் உறுதியாக உனக்
குச் சொல்லுகிறேன்'' என்று சொன்னார்.
4 அப்பொழுது நிக்கொதேமு, ''வயதான
பின் ஒருவன் எப்படிப் பிறக்க முடியும்?
அவன் தாயின் வயிற்றில் இரண்டாம்
முறை நுழைந்து பிறக்க முடியுமா?'' என்று
கேட்டார். 5 அதற்கு இயேசு, ''ஒருவன்
தண்ணீரினாலும் ஆவியினாலும் பிறந்தா
லன்றி அவனால் கடவுளின் அரசினுள் செல்ல
முடியாது என்று மிகவும் உறுதியாக
உனக்குச் சொல்லுகிறேன். 6 ஊன் இயல்
பினால் பிறப்பது ஊன் இயல்புடையது,
ஆவியினால் பிறப்பது ஆவியின் இயல்புடை
யது. 7 நீங்கள் மறுபடியும் பிறந்தாக
வேண்டும் என்று நான் உனக்குச் சொன்ன
தைக் குறித்து வியப்படைய வேண்டாம்.
8 †காற்று, தனக்கு விருப்பமான இடத்
தில் வீசுகிறது; அதன் ஓசையை நீ கேட்
கிறாய்; ஆனால் அது எங்கிருந்து வருகிற
தென்பதும் எங்கே செல்கிறதென்பதும்
உனக்குத் தெரியாது; ஆவியினால் பிறந்த
வன் எவனும் அப்படியேதான் இருப்
பான்'' என்றார். 9 அதைக் கேட்ட நிக்கொ
தேமு, ''இது எப்படி நடக்க முடியும்?''
என்றார். 10 அதற்கு இயேசு, ''நீ இஸ்ர
வேல் மக்களுக்குப் போதகனாயிருந்தும்
இது உனக்குத் தெரியவில்லையா? 11 மிகவும்
உறுதியாக உனக்குச் சொல்லுகிறேன்:
எங்களுக்குத் தெரிந்ததைச் சொல்லுகி
றோம்; நாங்கள் கண்டதை எங்கள் சாட்சி
யத்தில் கூறுகிறோம்; ஆனால் நீங்களோ
எங்கள் சாட்சியத்தை ஏற்றுக்கொள்வ
தில்லை. 12 மண்ணுலகத்துக்கடுத்தவற்றை
நான் உங்களுக்குச் சொன்னேன், நீங்
களோ நம்பவில்லை; அப்படியானால் விண்
ணுலகத்துக்கடுத்தவற்றை நான் உங்களுக்
குச் சொன்னால் அதை நீங்கள் எப்படி
நம்பப்போகிறீர்கள்? 13 ‡விண்ணுலகி
லிருந்து இறங்கி வந்தவராகிய மனுமைந்
தரைத் தவிர வேறு யாரும் விண்ணுல
கிற்கு ஏறிப் போனதில்லை. 14 மோசே
யினால் வெண்கலப் பாம்பு பாலைநிலத்தில்
உயர்த்தப்பட்டது. 15 அதுபோல, மனு
மைந்தரும் அவரிடம் நம்பிக்கை கொண்
டிருக்கிற ஒவ்வொருவனுக்கும் அவரால்
என்றுமுள்ள மெய்வாழ்வு கிடைக்கும்படி
உயர்த்தப்பட வேண்டும்.

16 ''கடவுள் தம்முடைய ஒரேபேறான
மைந்தரிடம் நம்பிக்கை கொள்ளும் எவ
னும் கெட்டழிந்து போகாதிருந்து என்று
முள்ள மெய்வாழ்வைப் பெறும்படி, அவ
ரைத் தந்தருளினார்; இந்த அளவுக்கு
அவர் உலகத்தின்மீது அன்புகூர்ந்தார்.
17 எனவே, தம் மைந்தர் உலகத்துக்குக்
குற்றத் தீர்ப்பு அளிக்க வேண்டுமென்று
அவரைக் கடவுள் உலகத்துக்கு அனுப்ப
வில்லை; உலகம் அவரால் மீட்புப் பெற

* கிரேக்க பதம், 'மேலிருந்து' என்றும் பொருள்படும்.
† ஒரே கிரேக்க பதம், 'காற்று' என்றும், 'ஆவி' என்றும் பொருள்படும்.
‡ 'விண்ணுலகிலிருந்து இறங்கிவந்தவரும் விண்ணுலகில் உள்ளவருமான மனுமைந்தரைத் தவிர' என்பது சில பிரதிகளின் பாடம்.

2:19 மத்.26:61; 27:40; மாற்.14:58; 15:29. 2:25 நீதி.15:11. 3:1 யோ.7:50—52; 19:39. 3:3 1 பேது.1:23.
3:5 எசே.36:25; ரோ.8:9; தீத்து 3:5 3:8 திருந்தூது. 2:2. 3:11 ஏசா. 50:4, 10; மத். 11:27. 3:12 நீதி.30:4.
3:14 எண். 21:9 3:16 மத். 21:37; ரோ. 8:32; 1 யோ. 4:9 3:17 யோ. 4:42; 12:47; 2 கொரி. 5:19.

வேண்டுமென்றே அவரை அனுப்பினார்.
18 அவரிடம் நம்பிக்கை கொண்டிருக்கிற
வன் குற்றவாளி என்ற தீர்ப்புப் பெறு
வதில்லை. ஆனால் அவரிடம் நம்பிக்கை
கொண்டிராதவனே கடவுளின் ஒரே
பேறான மைந்தரின் திருப்பெயரில் நம்
பிக்கை வைக்காததால், அவன் ஏற்
கெனவே குற்றவாளி என்ற தீர்ப்புக்கு
உள்ளாகிவிட்டான். 19 மனிதருடைய
செய்கைகள் பொல்லாதவையானதால்,
ஒளி உலகத்தில் வந்திருந்தும், அவர்கள்
அந்த ஒளியை விரும்பாமல் இருளையே
விரும்பினார்கள். அவர்களுக்கு இதுவே
தெய்வத் தீர்ப்பு. 20 தீமை செய்பவன்
எவனும் ஒளியை வெறுக்கிறான்; அவன்
தன் செய்கைகள் வெளிக்குத் தெரியக்
கூடாது என்பதற்காக ஒளியினிடம் வரா
மலிருக்கிறான். 21 ஆனால் சத்தியத்தை
நடைமுறையில் கடைப்பிடிக்கிறவனே தன்
செய்கைகள் கடவுளுக்குட்பட்ட நிலையில்
செய்யப்பட்டவை என்பது வெளிக்குத்
தெரியும்படி ஒளியினிடம் வருகிறான்''
என்று சொன்னார்.

### இயேசுவும் யோவானும்

22 அதன்பின் இயேசுவும் அவருடைய
சீடர்களும் யூதேயா நாட்டிற்குப் போனார்
கள்; அங்கே அவர் அவர்களோடு தங்கி
மக்களுக்குத் திருமுழுக்குக் கொடுத்தார்.
23 யோவானும் சாலீம் ஊருக்கு அருகி
லுள்ள அயினோன் என்னும் இடத்தில்
திருமுழுக்குக் கொடுத்துக்கொண்டிருந்
தார். அங்கே தண்ணீர் மிகுதியாய் இருந்
தது. மக்கள் அவரிடம் வந்து திரு
முழுக்குப் பெற்றார்கள். 24 யோவான்
சிறையில் அடைக்கப்படுவதற்கு முன்பு
இப்படி நடந்தது.
25 ஒரு நாள் யோவானுடைய சீடருக்
கும் யூதன் ஒருவனுக்கும் சுத்திகரிப்பு
முறைபற்றித் தர்க்கம் உண்டாயிற்று.
26 அவர்கள் யோவானிடம் வந்து, ''ரபீ,
யோர்தான் ஆற்றின் அக்கரையில் உம்மு
டன் ஒருவர் இருந்தாரே, அவரைக்
குறித்து நீர் சாட்சியமும் சொன்னீரே,
இதோ பாரும், அவர் திருமுழுக்குக்
கொடுக்கிறார்; எல்லாரும் அவரிடம்
போகின்றனர்'' என்று சொன்னார்கள்.
27 அதற்கு யோவான், ''கடவுள் ஒருவனுக்கு
அருளியதைத் தவிர வேறு எதையும்
அவன் தனக்கு உரியதாக்கிக்கொள்ள
இயலாது. 28 நான் கிறிஸ்துவல்ல; நான்
அவருக்கு முந்தி அனுப்பப்பட்டவனே
என்று நான் சொன்னதற்கு நீங்களே
சாட்சிகள். 29 மணவாட்டியை உடைய
வனே மணவாளன். மணவாளனுடைய
தோழன் அவனருகில் நின்று, அவன்
சொல்வதைக் கேட்கிறான்; அவனுடைய
குரலைக் கேட்டுப் பெருமகிழ்ச்சி அடைகி
றான். அந்த மகிழ்ச்சியே என்னுடையது.
அது இப்போது எனக்கு நிறைவாகக்
கிடைத்துள்ளது. 30 அவர் வளர வேண்
டும், நானோ குறைய வேண்டும்'' என்றார்.

### விண்ணுலகிலிருந்து வருகிறவர்

31 * மேலிருந்து வருகிறவர் எல்லாருக்
கும் மேலானவராயிருப்பார்; மண்ணி
லிருந்து உண்டானவன் மண்ணுலகுக்குரிய
வன்; அவன் மண்ணுலகுக்குரியவற்றைப்
பேசுவான். விண்ணுலகிலிருந்து வருகிற
வர் எல்லாருக்கும் மேலானவராயிருப்பார்.
32 அவர் தாம் கண்டதையும் கேட்டதை
யுமே தம் சாட்சியத்தில் கூறுகிறார். என்
றாலும், அவருடைய சாட்சியத்தை ஏற்றுக்
கொள்ளுகிறவன் எவனுமில்லை.
33 அவருடைய சாட்சியத்தை ஏற்றுக்
கொள்ளுகிறவன் அதன்மூலம் கடவுள்
உண்மையானவர் என்பதை முத்திரையிட்டு
உறுதிப்படுத்துகிறான். 34 கடவுளால் அனுப்
பப்பட்டவர் கடவுளின் வார்த்தையைச்
சொல்லுகிறார். ஏனெனில், கடவுள் தம்
ஆவியை அளவுபார்த்துக் கொடுப்பதில்லை.
35 விண்ணகத் தந்தையார் தம் மைந்த
ரிடம் அன்புகூர்கிறபடியால், அவருடைய
கையில் எல்லாவற்றையும் ஒப்படைத்திருக்
கிறார். 36 அந்த மைந்தரிடம் நம்பிக்கை
கொள்ளுகிறவன் இப்போதே என்றுமுள்ள
மெய்வாழ்வை உடையவனாயிருக்கிறான்;
மைந்தருக்குக் கீழ்ப்படியாதவனோ மெய்
வாழ்வைக் காண மாட்டான், கடவுளின்
சினந்தான் அவன்மேல் நிலைத்திருக்கும்.

### இயேசுவும் சமாரியா நாட்டுப் பெண்ணும்

4 யோவானைவிட இயேசுவே மிகுதி
யான சீடரைச் சேர்த்துக்கொண்டு
அவர்களுக்குத் திருமுழுக்குக் கொடுக்
கிறார் எனப் பரிசேயருக்குச் செய்தி எட்
டிற்று. 2 ஆனால் உண்மையில் இயேசு
தாமே திருமுழுக்குக் கொடுக்கவில்லை, அவ
ருடைய சீடர்களே கொடுத்தார்கள்.
3 பரிசேயருக்குச் செய்தி எட்டியதை
இயேசு அறிந்தபோது, அவர் யூதேயாவை
விட்டு மறுபடியும் கலிலேயாவுக்குப்
போனார். 4 போகையில் அவர் சமாரியா
நாடு வழியாகச் செல்ல வேண்டியதா
யிருந்தது. 5 அவர் சமாரியாவிலுள்ள
சீகார் என்னும் ஊரை அடைந்தார்.
அந்த ஊர் யாக்கோபு தம்முடைய மகன்
யோசேப்புக்குக் கொடுத்த நிலத்துக்கருகில்
இருக்கிறது. 6 அங்கே யாக்கோபின் கிண
றும் இருக்கிறது. இயேசு பயணத்தினால்

* வ. 31–36 வரையிலுமுள்ள பாகத்தையும் யோவான் சொன்னதாகக் கொள்ள இடமுண்டு.
3:19 சங். 52:3. 3:20 யோபு 24:13—17; எபே. 5:13. 3:21 1 யோ. 1:6. 3:28 யோ. 1:20. 3:35 மத். 11:27; லூக். 10:22 4:5 ஆதி. 33:19; யோசுவா 24:32.

களைப்புற்று, அந்தக் கிணற்றுக்கருகில் வந்து
உட்கார்ந்தார். அப்பொழுது நேரம் ஏறக்
குறையப் பகல் பன்னிரண்டு மணி*
இருக்கும்.

7 ஒரு சமாரியப் பெண் தண்ணீர்
மொள்ள அங்கே வந்தாள். இயேசு அவ
ளிடம், ''குடிக்கக் கொஞ்சம் தண்ணீர்
கொடு'' என்றார். 8 அந்நேரத்தில் அவரு
டைய சீடர்கள் உணவு வாங்கி வருவதற்
காக ஊருக்குள்ளே சென்றிருந்தார்கள்.
9 சமாரியப் பெண் இயேசுவைப் பார்த்து,
''நீர் யூதர், நானோ சமாரியப் பெண்;
நீர் என்னிடம் குடிக்கத் தண்ணீர் கேட்
பது எப்படி?'' என்றாள். ஏனெனில், சமா
ரியர் பயன்படுத்தும் கலன்களை யூதர்கள்
பயன்படுத்த மாட்டார்கள். 10 இயேசு
அவளைப் பார்த்து, ''கடவுளின் ஈவு இன்ன
தென்பதும், குடிக்கத் தண்ணீர் வேண்
டும் என்று கேட்கிறவர் இன்னாரென்பதும்
உனக்குத் தெரிந்திருந்தால், நீயே அவரி
டம் கேட்டிருப்பாய், அவரும் உனக்கு
மெய்வாழ்வுதரும் தண்ணீரைக் கொடுத்
திருப்பார்'' என்று சொன்னார். 11 அப்
பொழுது அவள், ''ஐயா, தண்ணீர்
மொள்ள உம்மிடம் ஒன்றுமில்லை, கிண
றும் ஆழமானது. அப்படியிருக்க, உமக்கு
எங்கிருந்து மெய்வாழ்வுதரும் தண்ணீர்
கிடைக்கும்? 12 நம்முடைய தந்தையாகிய
யாக்கோபுவைவிட நீர் பெரியவரா? அவர்
இந்தக் கிணற்றை எங்களுக்கு வெட்டிக்
கொடுத்தார்; அவரும் அவருடைய பிள்
ளைகளும் அவருடைய கால்நடைகளும்
இதிலேதான் தண்ணீர் குடிப்பது வழக்
கம்'' என்றாள். 13 அதற்கு இயேசு,
''இந்தத் தண்ணீரைக் குடிக்கும் எவனுக்கும்
மீண்டும் தாகமெடுக்கும். 14 ஆனால்,
நான் கொடுக்கும் தண்ணீரை எவன்
குடிக்கிறானோ அவனுக்கு ஒருபோதும் தாக
மெடுக்காது. நான் அவனுக்குக் கொடுக்கும்
தண்ணீர், அவன் என்றுமுள்ள மெய்
வாழ்வைப் பெறும்படி அவனுக்குள்ளே
பொங்கியெழும் நீரூற்றாயிருக்கும்'' என்று
சொன்னார். 15 அந்தப் பெண் அவரைப்
பார்த்து, ''ஐயா, எனக்குத் தாகமெடா
மலும், தண்ணீர் மொள்ள நான் இங்கே
வராமலும் இருக்கும்படி அந்தத் தண்
ணீரை எனக்குத் தாரும்'' என்று கேட்
டாள்.

16 அதற்கு அவர், ''நீ போய் உன்
கணவனை இங்கே அழைத்துக்கொண்டு
வா'' என்றார். 17 அந்தப் பெண், ''எனக்
குக் கணவன் இல்லையே' என்று சொல்ல,
இயேசு அவளிடம், '' 'எனக்குக் கணவன்
இல்லை' என்று நீ சொன்னது சரிதான்.
18 உனக்கு ஐந்து கணவர் இருந்தனர்;
இப்போது உன்னுடன் இருப்பவன்
உன்னுடைய கணவன் அல்ல: நீ சொன்
னது உண்மையே'' என்றார். 19 அப்
பொழுது அந்தப் பெண் அவரிடம்,
''ஐயா, நீர் இறைவாக்குரைக்கும் ஒருவர்
என்பதைக் கண்டுகொண்டேன். 20 எங்
கள் மூதாதையர் இந்த மலையில் தொழுது
வந்தனர்; நீங்களோ தொழ வேண்டிய
இடம் எருசலேமிலேதான் இருக்கிறது என்
கிறீர்கள்'' என்றாள். 21 அதற்கு இயேசு,
''அம்மா, என்னை நம்பு, காலம் வரு
கிறது, அப்பொழுது நீங்கள் விண்ணகத்
தந்தையாரைத் தொழுவது இந்த மலை
யிலுமன்று, எருசலேமிலுமன்று. 22 நீங்கள்
யாரைத் தொழுகிறீர்கள் என்று தெரியா
மலே தொழுது வருகிறீர்கள்; எங்களுக்கோ
நாங்கள் யாரைத் தொழுகிறோம் என்பது
தெரியும். ஏனெனில், மீட்புப் பெறுதல்
யூதரிடமிருந்துதான் தொடங்குகிறது.
23 ஆயினும், காலம் வரும்; ஏன், இப்
போதே வந்திருக்கிறது; உண்மையாய்த்
தொழுகிறவர்கள் இனிமேல் விண்ணகத்
தந்தையாரை ஆவியோடும் உண்மை
யோடும் தொழுவார்கள். இப்படிப்பட்டவர்
களே தம்மைத் தொழ வேண்டுமென்று
விண்ணகத் தந்தையார் விரும்புகிறார்.
24 கடவுள் ஆவியாயிருக்கிறார்; அவரைத்
தொழுகிறவர்கள் ஆவியோடும் உண்மை
யோடும் தொழ வேண்டும்'' என்றார்.
25 அதற்கு அந்தப் பெண், ''கிறிஸ்து
எனப்படும் மேசியா வருவார் என்பது
எனக்குத் தெரியும்; அவர் வரும்போது
எல்லாவற்றையும் நமக்கு அறிவிப்பார்''
என்று சொல்ல, 26 இயேசு அவளிடம்,
''உன்னோடு பேசுகிற நானே அவர்''
என்றார்.

27 அந்நேரத்தில் அவருடைய சீடர்கள்
திரும்பிவந்தார்கள். அவர் ஒரு பெண்
ணோடு பேசிக்கொண்டிருக்கிறதை அவர்கள்
கண்டு திகைப்படைந்தார்கள்; ஆனாலும்,
''என்ன விசாரிக்கிறீர்?'' என்றாவது ''ஏன்
அவளோடு பேசுகிறீர்?'' என்றாவது யாரும்
கேட்கவில்லை. 28 அந்தப் பெண் குடத்தை
வைத்துவிட்டு, ஊருக்குள்ளே சென்று,
29 அங்கிருந்த மக்களிடம், ''வாருங்கள்,
ஒருவர் நான் செய்த ஒவ்வொரு காரி
யத்தையும் எனக்குச் சொல்லிவிட்டார்;
அவரை வந்து பாருங்கள்; ஒருவேளை
அவர் மேசியாவாயிருக்கலாம்'' என்று
சொன்னாள். 30 அவர்களும் ஊரை விட்டுப்
புறப்பட்டு அவரிடம் வந்தார்கள்.

* மூலத்தில், யூதர் கணக்குப்படி, ஆறும் மணி என்றிருக்கிறது.
4:14 சங். 36:9; ஏசா. 58:11. 4:19 மத். 16:14, 15. 4:20 உபா. 12:5, 6. 4:22 2 அர. 17:27—43;
ஏசா. 2:3; ரோ. 9:4, 5. 4:25 உபா. 18:18—22; யோ. 9:37.

31 இதற்கிடையில் சீடர்கள் அவரிடம்,
''ரபீ, சாப்பிட வாரும்'' என்று கூப்
பிட்டார்கள். 32 அதற்கு அவர், ''உண்
பதற்கு உணவு என்னிடம் இருக்கிறது;
அதை நீங்கள் அறியீர்கள்'' என்றார்.
33 சீடர்கள் அதைக் கேட்டு ஒருவரை
யொருவர் பார்த்து, ''யாராவது இவ
ருக்கு உணவு கொண்டு வந்திருப்பார்
களோ'' என்று பேசிக்கொண்டார்கள்.
34 இயேசு அவர்களிடம், ''என்னை அனுப்
பினவருடைய திருவுளப்படி செய்து அவ
ருடைய வேலையை முடிப்பதே என்
உணவு. 35 'இன்னும் நான்கே மாதங்கள்
இருக்கின்றன; பிறகு அறுவடை வந்து
விடும்' என்று நீங்கள் சொல்லுகிறதுண்
டல்லவா?' ஆனால், நான் சொல்லுகிறேன்.
அதோ, வயல் பக்கமாக ஏறிட்டுப் பாருங்
கள்; பயிர் வெண்மையாகி ஏற்கெனவே
அறுவடைக்குப் பக்குவமாயிருக்கிறது.
36 இப்போதே அறுவடை செய்கிறவன்
கூலியை வாங்கிக்கொண்டிருக்கிறான்;
என்றுமுள்ள மெய்வாழ்வுக்குள் பலனைச்
சேகரித்துக்கொண்டுமிருக்கிறான்; ஆகவே,
விதை விதைக்கிறவனும் அறுவடை செய்
கிறவனும் ஒருமிக்க மகிழ்ச்சியடைகிறார்
கள். 37 நீங்கள் வருந்தி உழைத்து விளை
விக்காததை அறுவடை செய்ய உங்களை
அனுப்பினேன்; மற்றவர்கள் உழைத்தார்
கள், அவர்களுடைய உழைப்பின் பலன்
உங்களுக்குக் கிடைத்துவிட்டது. 38 இதன்
மூலம் 'விதை விதைக்கிறவன் ஒருவன்,
விளைவை அறுக்கிறவன் வேறொருவன்'
என்கிற பழமொழியின் உண்மை விளங்கு
கிறது'' என்றார்.

39 ''நான் செய்த ஒவ்வொரு காரியத்
தையும் எனக்குச் சொல்லிவிட்டார்''
என்று அந்தப் பெண் கூறிய சாட்சியம்
காரணமாக அந்த ஊர்ச் சமாரியருள்
பலர் அவரிடம் நம்பிக்கை கொண்டனர்.
40 ஆகையால், அந்தச் சமாரியர்கள் அவ
ரிடம் வந்தபோது அவரைத் தங்களுடன்
தங்கியிருக்கும்படி வேண்டிக்கொண்டார்
கள்; அவரும் அங்கே இரண்டு நாள்
தங்கினார். 41 அச்சமயம் அவர் கூறிய
வார்த்தைகள் காரணமாக இன்னும் பலர்
அவரிடம் நம்பிக்கை கொண்டனர்.
42 அவர்கள் அந்தப் பெண்ணிடம், ''இப்
போது நாங்கள் நம்புவது நீ சொன்ன
தால் அன்று; அவர் சொன்னதை நாங்
களே நேரில் கேட்டோம். அவர் உண்
மையாகவே உலகத்தின் மீட்பர் என்ப
தைத் தெரிந்துகொண்டோம்'' என்றார்கள்.

## ஓர் அரசாங்க அதிகாரியின் மகனைக் குணமாக்குதல்

(மத். 8:5–13; லூக். 7:1–10)

43 அந்த இரண்டு நாளும் கழிந்தபின்
இயேசு அவ்விடம் விட்டுப் புறப்பட்டுக் கலி
லேயாவுக்குப் போனார். 44 ஏனென்றால்
அவரே, ''இறைவாக்குரைப்பவருக்குத் தம்
சொந்த நாட்டில் மதிப்பு இராது'' என்று
சொல்லியிருக்கிறார். 45 கலிலேயர்கள் எரு
சலேமுக்குப் பண்டிகைக்காகப் போயிருந்த
போது, அங்கே அவர் செய்த யாவற்றை
யும் பார்த்திருந்தார்கள். ஆகையால்,
அவர் கலிலேயாவுக்கு வந்தபோது, அவர்
கள் அவருக்கு நல்ல வரவேற்பு அளித்
தார்கள்.

46 பிறகு அவர் கலிலேயாவிலுள்ள
கானா என்னும் ஊருக்கு மறுபடியும்
போனார். முன்பு அவர் தண்ணீரைத்
திராட்சை இரசமாக்கினது அங்கேதான்.
அரசாங்க அதிகாரி ஒருவனுடைய மகன்
கப்பர்நகூமில் நோயுற்றிருந்தான்.
47 இயேசு யூதேயாவிலிருந்து கலிலேயா
வுக்கு வந்திருக்கிறார் என்பதை அந்த மனி
தன் கேள்விப்பட்டு, அவரிடம் போய்,
அவர் வந்து தன் மகனைக் குணமாக்க
வேண்டுமென்று கேட்டுக்கொண்டான்.
அவனுடைய மகன் அப்போது சாகுந்
தறுவாயில் இருந்தான். 48 இயேசு அவனி
டம், ''அரிய செயல்களையும் அற்புதங்
களையும் கண்டாலன்றி உங்களுக்கு நம்
பிக்கை ஏற்படாது'' என்று சொன்னார்.
49 அந்த அதிகாரி, ''ஐயா, என் பிள்ளை
சாவதற்குள் விரைவில் வாரும்'' என்று
வேண்டினான். 50 அதற்கு இயேசு, ''நீ
போகலாம், உன் மகன் முழுநலத்தோடு
இருக்கிறான்'' என்று சொன்னார். அவன்
இயேசு தனக்குச் சொன்ன இந்தச்
சொல்லை நம்பி அங்கிருந்து புறப்பட்டுப்
போனான். 51 அவன் போகையில் அவனு
டைய வேலைக்காரர்கள் அவனுக்கு எதிரே
வந்து அவனுடைய பையன் முழுநலத்
தோடு இருப்பதாகச் சொன்னார்கள்.
52 அவன், ''எத்தனை மணிக்கு அவனுக்கு
குணம் ஏற்படத் தொடங்கிற்று?'' என்று
அவர்களிடம் விசாரித்தான். அவர்கள்,
''நேற்றுப் பிற்பகல் ஒரு மணிக்கு * அவ
னுக்குக் காய்ச்சல் விட்டது'' என்றார்கள்.
53 அதே நேரத்திலேதான் ''உன் மகன்
முழுநலத்தோடு இருக்கிறான்'' என்று இயேசு
தன்னிடம் சொன்னார் என்பது அவன்
நினைவிற்கு வந்தது. இதனால் அவனும்

* மூலத்தில், யூதர் கணக்குப்படி, ஏழாம் மணி என்றிருக்கிறது.

4:34 மத். 26:39; யோ. 19:20. 4:35 மத். 9: 37—39; லூக். 10:2; திருவெளி. 14:15. 4:38 யோ. 17:16; 20:21; திருத்தூது. 8:14—17. 4:44 மத். 13:57; மாற். 6:4; லூக். 4:24. 4:45 யோ. 2:23. 4:46 யோ. 2:1—11.

அவனுடைய வீட்டார் அனைவரும் அவ
ரிடம் நம்பிக்கை கொண்டவர்களாயினர்.
54 இயேசு, தெய்வ ஆற்றலுக்கு அடையாள
மாகத் தாம் செய்த செயல்களுள் இரண்
டாவதான இந்தச் செயலை, யூதேயாவி
லிருந்து கலிலேயாவுக்கு வந்த பிறகு
செய்தார்.

### பெத்சாதா குளத்தினருகில் நோயாளி ஒருவன் குணமடைதல்

5 இதற்குப்பின் யூதருடைய பண்டிகை
ஒன்று வரவே, இயேசு எருசலே
முக்குப் போனார். 2 எருசலேமில் ஆட்டு
வாயிலுக்குப் பக்கத்தில் ஐந்து மண்டபங்
களுள்ள ஒரு குளம் இருக்கிறது; அது
எபிரேய மொழியில் பெத்சாதா* எனப்
படும். 3 அந்த மண்டபங்களில் குருடர்,
முடவர், சூம்பின உறுப்புடையோர் ஆகிய
பிணியாளிகள் ஏராளமாய்ப் படுத்திருப்
பார்கள். [அவர்கள் குளத்து நீர் கலங்கு
வதற்காகக் காத்திருப்பார்கள். 4 ஏனெ
னில், தெய்வதூதன் ஒருவன் சில வேளை
களில் அந்தக் குளத்தில் இறங்கி, தண்
ணீரைக் கலக்குவான்; தண்ணீர் கலங்கின
பின் யார் அதனுள் முதலில் இறங்கு
வானோ அவன் எப்படிப்பட்ட நோயாளி
யாயிருந்தாலும் குணமடைவான்.] 5 முப்
பத்தெட்டு ஆண்டுகள் நோயுற்றிருந்த
ஒருவனும் அங்கே படுத்துக் கிடந்தான்.
6 இயேசு அவன் படுத்திருக்கிறதைக்
கண்டு, அவன் அந்நிலையில் நெடுங்கால
மாக இருந்துவந்ததை அறிந்து அவனி
டம், ''உனக்குக் குணமடைய விருப்பந்
தானா?'' என்று கேட்டார். 7 நோயாளி
அவரைப் பார்த்து, ''ஐயா, தண்ணீர்
கலக்கப்படும்போது குளத்தில் என்னை
இறக்கிவிடுவதற்கு ஆள் இல்லை. நான்
போவதற்குள் வேறொருவன் எனக்குமுன்
இறங்கிவிடுகிறான்'' என்றான். 8 இயேசு
அவனிடம், ''எழுந்து உன் படுக்கையைத்
தூக்கிக்கொண்டு நடந்துபோ'' என்று
சொன்னார். 9 உடனே அவன் குண
மடைந்து, தன் படுக்கையைத் தூக்கிக்
கொண்டு நடந்துபோனான்.

அன்று ஓய்வுநாள். 10 ஆகையால்,
யூதர்கள் குணமாக்கப்பட்டவனைப் பார்த்து,
''இன்று ஓய்வுநாள்: நீ படுக்கையைத்
தூக்கிக்கொண்டு நடப்பது சட்ட விரோ
தம்'' என்றார்கள். 11 அதற்கு அவன்,
''என்னைக் குணமாக்கினவரே என்னிடம்,
'உன் படுக்கையைத் தூக்கிக்கொண்டு
நடந்துபோ' என்று சொன்னார்'' என்றான்.
12 அப்பொழுது அவர்கள், ''படுக்கையைத்
தூக்கிக்கொண்டு நடந்துபோ என்று உனக்
குச் சொன்ன அந்த மனிதன் யார்?''
என்று அவனைக் கேட்டார்கள். 13 ஆனால்
குணமடைந்தவனுக்கோ அவர் யாரென்று
சொல்லத் தெரியவில்லை. ஏனென்றால்,
அவ்விடத்தில் மக்கள் கூட்டமாயிருந்தார்
கள், இயேசுவும் அவ்விடத்திலிருந்து ஏற்
கெனவே போய்விட்டார். 14 சிறிது நேரத்
திற்குப் பின் இயேசு அவனைத் திருக்
கோவிலில் கண்டு, ''இதோ பார், நீ குண
மடைந்திருக்கிறாய்; முன்பு இருந்ததை
விடக் கேடானதெதுவும் உனக்கு நேரிடா
திருக்க, இனிப் பாவம் ஒன்றும் செய்
யாதே'' என்றார். 15 அவன் அந்த யூத
ரிடம் போய், தன்னைக் குணமாக்கியவர்
இயேசு என்பதை அறிவித்தான். 16 இயேசு
ஓய்வுநாளில் இதைப்போன்றவற்றைச்
செய்துவந்தபடியால், யூதர்கள் அவருக்
குத் தொல்லை கொடுக்கத் தொடங்கினார்
கள். 17 இயேசு அதை அறிந்து அவர்
களிடம், ''என் தந்தையார் ஓய்வெடா
மல் செயலாற்றிவருகிறார்; அவ்வாறே
நானும் செயலாற்றுகிறேன்'' என்றார்.
18 இவ்வாறு அவர் ஓய்வுநாள் விதியை
மீறினதுமல்லாமல், கடவுளைத் தம்முடைய
சொந்தத் தந்தையென்றும் சொல்லித்
தம்மைக் கடவுளுக்குச் சமமாக்கினதால்
யூதர்கள் அவரைக் கொன்றுவிடப் பெரு
முயற்சி செய்தார்கள்.

### திருமைந்தருடைய அதிகாரம்

19 அதை அறிந்த இயேசு அவர்க
ளிடம், ''மிகவும் உறுதியாக உங்களுக்குச்
சொல்லுகிறேன்: திருமைந்தர் தாமாகவே
எதையும் செய்ய இயலாது; தந்தையார்
எதைச் செய்கிறாரென்று தாம் காண்
கிறாரோ அதை மட்டுந்தான் அவரால்
செய்ய இயலும்; தந்தையார் எவற்றைச்
செய்கிறாரோ அவற்றை மைந்தரும் அப்ப
டியே செய்கிறார். 20 தந்தையார் மைந்
தரை நேசித்து, தாம் செய்கிறவற்றை
யெல்லாம் அவருக்குக் காட்டுகிறார்; நீங்
கள் வியப்படையும் வகையில், இன்னும்
மேலான செயல்களையும் அவருக்குக் காட்
டுவார். 21 தந்தையார் இறந்தோரை
எழுப்பி உயிர்ப்பிக்கிறதுபோல, மைந்த
ரும் தாம் திருவுளங்கொண்டவர்களை
உயிர்ப்பிக்கிறார். 22 தந்தையார் எவனுக்
கும் தீர்ப்பளிப்பதில்லை; தந்தையாரைக்
கனப்படுத்துவதுபோல, எல்லாரும் மைந்
தரையும் கனப்படுத்த வேண்டுமென்று,
தீர்ப்பளிக்கும் அதிகாரம் முழுவதையும்
அவர் மைந்தரிடம் ஒப்படைத்திருக்கிறார்.
23 மைந்தரைக் கனப்படுத்தாதவன் அவரை
அனுப்பின தந்தையாரையும் கனப்படுத்

* இப்பெயர் சில பிரதிகளில் பெதஸ்தா என்றும், வேறு சில பிரதிகளில் பெத்சாய்தா என்றும் காணப்படுகிறது.
5:10 நெகே. 13:9 எரே.17:21, 22. 5:18 மத். 12:14. 5:22 தானி. 7:10; இருத்தூது. 10:42

31 இதற்கிடையில் சீடர்கள் அவரிடம்,
''ரபீ, சாப்பிட வாரும்'' என்று கூப்
பிட்டார்கள். 32 அதற்கு அவர், ''உண்
பதற்கு உணவு என்னிடம் இருக்கிறது;
அதை நீங்கள் அறியீர்கள்'' என்றார்.
33 சீடர்கள் அதைக் கேட்டு ஒருவரை
யொருவர் பார்த்து, ''யாராவது இவ
ருக்கு உணவு கொண்டு வந்திருப்பார்
களோ'' என்று பேசிக்கொண்டார்கள்.
34 இயேசு அவர்களிடம், ''என்னை அனுப்
பினவருடைய திருவுளப்படி செய்து அவ
ருடைய வேலையை முடிப்பதே என்
உணவு. 35 'இன்னும் நான்கே மாதங்கள்
இருக்கின்றன; பிறகு அறுவடை வந்து
விடும்' என்று நீங்கள் சொல்லுகிறதுண்
டல்லவா?' ஆனால், நான் சொல்லுகிறேன்.
அதோ, வயல் பக்கமாக ஏறிட்டுப் பாருங்
கள்; பயிர் வெண்மையாகி ஏற்கெனவே
அறுவடைக்குப் பக்குவமாயிருக்கிறது.
36 இப்போதே அறுவடை செய்கிறவன்
கூலியை வாங்கிக்கொண்டிருக்கிறான்;
என்றுமுள்ள மெய்வாழ்வுக்குள் பலனைச்
சேகரித்துக்கொண்டுமிருக்கிறான்; ஆகவே,
விதை விதைக்கிறவனும் அறுவடை செய்
கிறவனும் ஒருமிக்க மகிழ்ச்சியடைகிறார்
கள். 37 நீங்கள் வருந்தி உழைத்து விளை
விக்காததை அறுவடை செய்ய உங்களை
அனுப்பினேன்; மற்றவர்கள் உழைத்தார்
கள், அவர்களுடைய உழைப்பின் பலன்
உங்களுக்குக் கிடைத்துவிட்டது. 38 இதன்
மூலம் 'விதை விதைக்கிறவன் ஒருவன்,
விளைவை அறுக்கிறவன் வேறொருவன்'
என்கிற பழமொழியின் உண்மை விளங்கு
கிறது'' என்றார்.

39 ''நான் செய்த ஒவ்வொரு காரியத்
தையும் எனக்குச் சொல்லிவிட்டார்''
என்று அந்தப் பெண் கூறிய சாட்சியம்
காரணமாக அந்த ஊர்ச் சமாரியருள்
பலர் அவரிடம் நம்பிக்கை கொண்டனர்.
40 ஆகையால், அந்தச் சமாரியர்கள் அவ
ரிடம் வந்தபோது அவரைத் தங்களுடன்
தங்கியிருக்கும்படி வேண்டிக்கொண்டார்
கள்; அவரும் அங்கே இரண்டு நாள்
தங்கினார். 41 அச்சமயம் அவர் கூறிய
வார்த்தைகள் காரணமாக இன்னும் பலர்
அவரிடம் நம்பிக்கை கொண்டனர்.
42 அவர்கள் அந்தப் பெண்ணிடம், ''இப்
போது நாங்கள் நம்புவது நீ சொன்ன
தால் அன்று; அவர் சொன்னதை நாங்
களே நேரில் கேட்டோம். அவர் உண்
மையாகவே உலகத்தின் மீட்பர் என்ப
தைத் தெரிந்துகொண்டோம்'' என்றார்கள்.

## ஓர் அரசாங்க அதிகாரியின் மகனைக் குணமாக்குதல்

(மத். 8:5—13; லூக். 7:1—10)

43 அந்த இரண்டு நாளும் கழிந்தபின்
இயேசு அவ்விடம் விட்டுப் புறப்பட்டுக் கலி
லேயாவுக்குப் போனார். 44 ஏனென்றால்
அவரே, ''இறைவாக்குரைப்பவருக்குத் தம்
சொந்த நாட்டில் மதிப்பு இராது'' என்று
சொல்லியிருக்கிறார். 45 கலிலேயர்கள் எரு
சலேமுக்குப் பண்டிகைக்காகப் போயிருந்த
போது, அங்கே அவர் செய்த யாவற்றை
யும் பார்த்திருந்தார்கள். ஆகையால்,
அவர் கலிலேயாவுக்கு வந்தபோது, அவர்
கள் அவருக்கு நல்ல வரவேற்பு அளித்
தார்கள்.

46 பிறகு அவர் கலிலேயாவிலுள்ள
கானா என்னும் ஊருக்கு மறுபடியும்
போனார். முன்பு அவர் தண்ணீரைத்
திராட்சை இரசமாக்கினது அங்கேதான்.
அரசாங்க அதிகாரி ஒருவனுடைய மகன்
கப்பர்நகூமில் நோயுற்றிருந்தான்.
47 இயேசு யூதேயாவிலிருந்து கலிலேயா
வுக்கு வந்திருக்கிறார் என்பதை அந்த மனி
தன் கேள்விப்பட்டு, அவரிடம் போய்,
அவர் வந்து தன் மகனைக் குணமாக்க
வேண்டுமென்று கேட்டுக்கொண்டான்.
அவனுடைய மகன் அப்போது சாகுந்
தறுவாயில் இருந்தான். 48 இயேசு அவனி
டம், ''அரிய செயல்களையும் அற்புதங்
களையும் கண்டாலன்றி உங்களுக்கு நம்
பிக்கை ஏற்படாது'' என்று சொன்னார்.
49 அந்த அதிகாரி, ''ஐயா, என் பிள்ளை
சாவதற்குள் விரைவில் வாரும்'' என்று
வேண்டினான். 50 அதற்கு இயேசு, ''நீ
போகலாம், உன் மகன் முழுநலத்தோடு
இருக்கிறான்'' என்று சொன்னார். அவன்
இயேசு தனக்குச் சொன்ன இந்தச்
சொல்லை நம்பி அங்கிருந்து புறப்பட்டுப்
போனான். 51 அவன் போகையில் அவனு
டைய வேலைக்காரர்கள் அவனுக்கு எதிரே
வந்து அவனுடைய பையன் முழுநலத்
தோடு இருப்பதாகச் சொன்னார்கள்.
52 அவன், ''எத்தனை மணிக்கு அவனுக்கு
குணம் ஏற்படத் தொடங்கிற்று?'' என்று
அவர்களிடம் விசாரித்தான். அவர்கள்,
''நேற்றுப் பிற்பகல் ஒரு மணிக்கு * அவ
னுக்குக் காய்ச்சல் விட்டது'' என்றார்கள்.
53 அதே நேரத்திலேதான் ''உன் மகன்
முழுநலத்தோடு இருக்கிறான்'' என்று இயேசு
தன்னிடம் சொன்னார் என்பது அவன்
நினைவிற்கு வந்தது. இதனால் அவனும்

* மூலத்தில், யூதர் கணக்குப்படி, ஏழாம் மணி என்றிருக்கிறது.

**4:34** மத். 26:39; யோ. 19:20. **4:35** மத். 9: 37—39; லூக். 10:2; திருவெளி. 14:15. **4:38** யோ. 17:18; 20:21; திருத்தூது. 8:14—17. **4:44** மத். 13:57; மாற். 6:4; லூக். 4:24. **4:45** யோ. 2:23. **4:46** யோ. 2:1—11.

அவனுடைய வீட்டார் அனைவரும் அவ
ரிடம் நம்பிக்கை கொண்டவர்களாயினர்.
54 இயேசு, தெய்வ ஆற்றலுக்கு அடையாள
மாகத் தாம் செய்த செயல்களுள் இரண்
டாவதான இந்தச் செயலை, யூதேயாவி
லிருந்து கலிலேயாவுக்கு வந்த பிறகு
செய்தார்.

### பெத்சாதா குளத்தினருகில் நோயாளி ஒருவன் குணமடைதல்

5 இதற்குப்பின் யூதருடைய பண்டிகை
ஒன்று வரவே, இயேசு எருசலே
முக்குப் போனார். 2 எருசலேமில் ஆட்டு
வாயிலுக்குப் பக்கத்தில் ஐந்து மண்டபங்
களுள்ள ஒரு குளம் இருக்கிறது; அது
எபிரேய மொழியில் பெத்சாதா* எனப்
படும். 3 அந்த மண்டபங்களில் குருடர்,
முடவர், சூம்பின உறுப்புடையோர் ஆகிய
பிணியாளிகள் ஏராளமாய்ப் படுத்திருப்
பார்கள். [அவர்கள் குளத்து நீர் கலங்கு
வதற்காகக் காத்திருப்பார்கள். 4 ஏனெ
னில், தெய்வதூதன் ஒருவன் சில வேளை
களில் அந்தக் குளத்தில் இறங்கி, தண்
ணீரைக் கலக்குவான்; தண்ணீர் கலங்கின
பின் யார் அதனுள் முதலில் இறங்கு
வாரோ அவன் எப்படிப்பட்ட நோயாளி
யாயிருந்தாலும் குணமடைவான்.] 5 முப்
பத்தெட்டு ஆண்டுகள் நோயுற்றிருந்த
ஒருவனும் அங்கே படுத்துக் கிடந்தான்.
6 இயேசு அவன் படுத்திருக்கிறதைக்
கண்டு, அவன் அந்நிலையில் நெடுங்கால
மாக இருந்துவந்ததை அறிந்து அவனி
டம், "உனக்குக் குணமடைய விருப்பந்
தானா?" என்று கேட்டார். 7 நோயாளி
அவரைப் பார்த்து, "ஐயா, தண்ணீர்
கலக்கப்படும்போது குளத்தில் என்னை
இறக்கிவிடுவதற்கு ஆள் இல்லை. நான்
போவதற்குள் வேறொருவன் எனக்குமுன்
இறங்கிவிடுகிறான்" என்றான். 8 இயேசு
அவனிடம், "எழுந்து உன் படுக்கையைத்
தூக்கிக்கொண்டு நடந்துபோ" என்று
சொன்னார். 9 உடனே அவன் குண
மடைந்து, தன் படுக்கையைத் தூக்கிக்
கொண்டு நடந்துபோனான்.

அன்று ஓய்வுநாள். 10 ஆகையால்,
யூதர்கள் குணமாக்கப்பட்டவனைப் பார்த்து,
"இன்று ஓய்வுநாள்: நீ படுக்கையைத்
தூக்கிக்கொண்டு நடப்பது சட்ட விரோ
தம்" என்றார்கள். 11 அதற்கு அவன்,
"என்னைக் குணமாக்கினவரே என்னிடம்,
'உன் படுக்கையைத் தூக்கிக்கொண்டு
நடந்துபோ' என்று சொன்னார்" என்றான்.
12 அப்பொழுது அவர்கள், "படுக்கையைத்
தூக்கிக்கொண்டு நடந்துபோ என்று உனக்
குச் சொன்ன அந்த மனிதன் யார்?"
என்று அவனைக் கேட்டார்கள். 13 ஆனால்
குணமடைந்தவனுக்கோ அவர் யாரென்று
சொல்லத் தெரியவில்லை. ஏனென்றால்,
அவ்விடத்தில் மக்கள் கூட்டமாயிருந்தார்
கள், இயேசுவும் அவ்விடத்திலிருந்து ஏற்
கெனவே போய்விட்டார். 14 சிறிது நேரத்
திற்குப் பின் இயேசு அவனைத் திருக்
கோவிலில் கண்டு, "இதோ பார், நீ குண
மடைந்திருக்கிறாய்; முன்பு இருந்ததை
விடக் கேடானதெதுவும் உனக்கு நேரிடா
திருக்க, இனிப் பாவம் ஒன்றும் செய்
யாதே" என்றார். 15 அவன் அந்த யூத
ரிடம் போய், தன்னைக் குணமாக்கியவர்
இயேசு என்பதை அறிவித்தான். 16 இயேசு
ஓய்வுநாளில் இதைப்போன்றவற்றைச்
செய்துவந்தபடியால், யூதர்கள் அவருக்
குத் தொல்லை கொடுக்கத் தொடங்கினார்
கள். 17 இயேசு அதை அறிந்து அவர்
களிடம், "என் தந்தையார் ஓய்வெடா
மல் செயலாற்றிவருகிறார்; அவ்வாறே
நானும் செயலாற்றுகிறேன்" என்றார்.
18 இவ்வாறு அவர் ஓய்வுநாள் விதியை
மீறினதுமல்லாமல், கடவுளைத் தம்முடைய
சொந்தத் தந்தையென்றும் சொல்லித்
தம்மைக் கடவுளுக்குச் சமமாக்கினதால்
யூதர்கள் அவரைக் கொன்றுவிடப் பெரு
முயற்சி செய்தார்கள்.

### திருமைந்தருடைய அதிகாரம்

19 அதை அறிந்த இயேசு அவர்க
ளிடம், "மிகவும் உறுதியாக உங்களுக்குச்
சொல்லுகிறேன்: திருமைந்தர் தாமாகவே
எதையும் செய்ய இயலாது; தந்தையார்
எதைச் செய்கிறாரென்று தாம் காண்
கிறாரோ அதை மட்டுந்தான் அவரால்
செய்ய இயலும்; தந்தையார் எவற்றைச்
செய்கிறாரோ அவற்றை மைந்தரும் அப்ப
டியே செய்கிறார். 20 தந்தையார் மைந்
தரை நேசித்து, தாம் செய்கிறவற்றை
யெல்லாம் அவருக்குக் காட்டுகிறார்; நீங்
கள் வியப்படையும் வகையில், இன்னும்
மேலான செயல்களையும் அவருக்குக் காட்
டுவார். 21 தந்தையார் இறந்தோரை
எழுப்பி உயிர்ப்பிக்கிறதுபோல, மைந்த
ரும் தாம் திருவுளங்கொண்டவர்களை
உயிர்ப்பிக்கிறார். 22 தந்தையார் எவனுக்
கும் தீர்ப்பளிப்பதில்லை; தந்தையாரைக்
கனப்படுத்துவதுபோல, எல்லாரும் மைந்
தரையும் கனப்படுத்த வேண்டுமென்று,
தீர்ப்பளிக்கும் அதிகாரம் முழுவதையும்
அவர் மைந்தரிடம் ஒப்படைத்திருக்கிறார்.
23 மைந்தரைக் கனப்படுத்தாதவன் அவரை
அனுப்பின தந்தையாரையும் கனப்படுத்

* இப்பெயர் சில பிரதிகளில் பெதஸ்தா என்றும், வேறு சில பிரதிகளில் பெத்சாய்தா என்றும் காணப்படுகிறது.
5:10 நெகே. 13:9 எரே.17:21, 22. 5:18 மத். 12:14. 5:22 தானி. 7:10; இருத்தூது. 10:42

தாதவனாவான். 24 மிகவும் உறுதியாக உங்களுக்குச் சொல்லுகிறேன்: என் வார்த்தையைக் கேட்டு என்னை அனுப்பினவரை நம்புகிறவன் இப்போதே என்றுமுள்ள மெய்வாழ்வு உடையவனாயிருக்கிறான்; அவன் குற்றத் தீர்ப்புக்குள்ளாகாமல், மரணத்திலிருந்து மெய்வாழ்வுக்குள் வந்திருக்கிறான். 25 இன்னும் ஒன்றை மிகவும் உறுதியாக உங்களுக்குச் சொல்லுகிறேன்: காலம் வரும்; ஏன், இப்போதே வந்திருக்கிறது. உயிரற்றவர்கள் இதுமுதல் கடவுளின் மைந்தருடைய குரலைக் கேட்பார்கள். அதற்குச் செவிசாய்ப்பவர்களே மெய்வாழ்வைப் பெறுவார்கள். 26 தாம் மெய்வாழ்வுக்குப் பிறப்பிடமாயிருக்கிறதுபோல, மைந்தரும் மெய்வாழ்வுக்குப் பிறப்பிடமாயிருக்கும்படி தந்தையார் அருள்கூர்ந்திருக்கிறார். 27 மேலும், அவர் மனுமைந்தராயிருக்கிறபடியால், தீர்ப்பளிக்கும் அதிகாரத்தையும் அவருக்குக் கொடுத்திருக்கிறார். 28 இதைக் குறித்து நீங்கள் வியப்படைய வேண்டாம். ஏனெனில், பிணக்குழிகளிலுள்ள அனைவரும் அவருடைய குரலைக் கேட்டு வெளியே வரும் காலம் வருகிறது. 29 அப்பொழுது, நல்லவை செய்தவர்கள் மெய்வாழ்வை அடைவதற்கென்றும், தீயவை செய்தவர்கள் தண்டனைத் தீர்ப்புப் பெறுவதற்கென்றும் உயிர்த்தெழுந்து வெளியே வருவார்கள்.

### இயேசுவைப்பற்றிய சாட்சியங்கள்

30 "எதையும் நானாகவே செய்ய இயலாது. தந்தையாரிடமிருந்து கேட்டறிகிறதன்படியே நான் தீர்ப்பளிக்கிறேன். என் விருப்பத்தை அன்று, என்னை அனுப்பின தந்தையாரின் விருப்பத்தை நிறைவேற்றுவதே என் நோக்கமாயிருப்பதால், என் தீர்ப்பு நியாயமானதாகவே இருக்கும். 31 என்னைக் குறித்து நானே சாட்சி கூறினால் என் சாட்சியம் செல்லாது. 32 என்னைக் குறித்துச் சாட்சி கூறுவதற்கு வேறொருவர் இருக்கிறார்; அவர் என்னைக் குறித்துக் கூறுகிற சாட்சியம் உண்மை என்பது எனக்குத் தெரியும். 33 நீங்கள் யோவானிடம் ஆள் அனுப்பிக் கேட்டுப் பார்த்தீர்கள். அவரும் சத்தியத்தைக் குறித்துச் சாட்சி கூறினார். 34 மனித சாட்சியம் எனக்குத் தேவையில்லை; நீங்கள் மீட்புப் பெற வேண்டும் என்பதற்காக இதைச் சொல்லுகிறேன். 35 யோவான் எரிந்து சுடர்விடும் விளக்காயிருந்தார். நீங்களும் விருப்பத்துடன் சிறிது காலம் அவருடன் ஒளியில் அகமகிழ்ந்தீர்கள். 36 ஆனால், எனக்கோ அவருடைய சாட்சியத்தைவிட மேலான சாட்சியம் ஒன்று உண்டு. நான் செய்து முடிக்கும்படி தந்தையார் எனக்குக் கொடுத்தருளிய செயல்களே, அதாவது நான் செய்துவரும் செயல்களே, தந்தையார் என்னை அனுப்பினாரென்று என்னைக் குறித்துச் சாட்சியளிக்கின்றன. 37 அல்லாமலும், என்னை அனுப்பின தந்தையாருங்கூட என்னைக் குறித்துச் சாட்சியளித்திருக்கிறார். நீங்களோ ஒருபோதும் அவர் குரலைக் கேட்டதில்லை, அவர் உருவத்தைக் கண்டதில்லை; 38 அவர் வார்த்தை உங்களிடம் நிலைத்திருப்பதுமில்லை; ஏனெனில், அவர் அனுப்பினவரை நீங்கள் நம்பவில்லை. 39 நீங்கள் வேத வாக்கியங்களை ஆராய்ந்து பார்க்கிறீர்கள்; அவற்றின்மூலம் என்றுமுள்ள மெய்வாழ்வு கிடைப்பதாக நினைக்கிறீர்கள். அந்த வாக்கியங்களே என்னைக் குறித்துச் சாட்சி கூறுகின்றன. 40 என்றாலும், மெய்வாழ்வைப் பெறும்படி என்னிடம் வர உங்களுக்கு மனமில்லை.

41 "நான் மனிதருடைய புகழை நாடுவதில்லை. 42 ஆனால், உங்களை நான் நன்கு அறிவேன், உங்கள் உள்ளத்தில் கடவுளின் அன்பு இல்லை. 43 நான் என் தந்தையாரின் பெயரால் வந்திருக்கிறேன்; நீங்களோ என்னை ஏற்றுக்கொள்ளவில்லை; வேறொருவன் தன் சொந்தப் பெயரால் வருவானானால் அவனை ஏற்றுக்கொள்வீர்கள். 44 ஒரே ஒன்றான கடவுளிடமிருந்து வரும் மாட்சிமையை நாடாமல், ஒருவரிடமிருந்து ஒருவருக்கு வரும் புகழை ஏற்றுக்கொள்ளும் நீங்கள் எப்படி நம்ப இயலும்? 45 தந்தையாரின் முன்னிலையில் நான் உங்கள்மீது குற்றம் சுமத்தப் போகிறேன் என்கிற எண்ணத்தை விட்டுவிடுங்கள்; உங்கள்மீது குற்றம் சுமத்துகிற ஒருவர் இருக்கிறார். அவர் நீங்கள் நம்பியிருக்கிற மோசேயே. 46 மோசேயை நீங்கள் நம்பியிருந்தால் என்னையும் நம்பியிருப்பீர்கள். ஏனெனில், அவர் என்னைக் குறித்து எழுதியிருக்கிறார். 47 அவர் எழுதினதை நீங்கள் நம்பவில்லையானால், நான் சொல்வதை நீங்கள் எப்படி நம்புவீர்கள்?" என்று கேட்டார்.

### ஐயாயிரம் பேருக்கு உணவளித்தல்

*(மத். 14:13–21; மாற். 6:30–44; லூக். 9:10–17)*

**6** இதன்பின் இயேசு திபேரியாக் கடல் என்கிற கலிலேயாக் கடலின் மறுகரைக்குப் போனார். 2 திரளான மக்கள் அவருக்குப் பின்னே சென்றார்கள்.

**5:24** 1 யோ. 3:14. **5:27** தானி. 7:17—22; மத். 9:6; 2 கொரி. 5:10. **5:29** தானி. 12:2. **5:33** யோ. 1:19—27; 3:27—30. **5:37** மத். 3:17; மாற். 1:11; லூக். 3:22. **5:41** 1 தெச. 2:6. **5:421** யோ. 3:17. **5:44** மத். 6:1; யோ. 12:41; ரோ 2 2:29; 1 தெச. 2:6. **5:45** உபா. 31:26. **5:46** உபா. 18:15; லூக். 16:31.

ஏனென்றால், நோயாளிகளிடம் அவர்
செய்துவந்த அரிய செயல்களை அவர்கள்
கண்டிருந்தார்கள். 3 இயேசு மலையின்மேல்
ஏறிச்சென்று தம்முடைய சீடரோடு உட்
கார்ந்தார். 4 அது பஸ்கா என்னும் யூத
ருடைய பண்டிகை நெருங்கிவரும் காலம்.
5 இயேசு நிமிர்ந்து பார்த்து திரளான
மக்கள் தம்மை நோக்கி வருவதைக் கண்டு
பிலிப்புவினிடம், ''இந்த மக்கள் உண்ப
தற்கு நாம் எங்கே அப்பம் வாங்கலாம்?''
என்று கேட்டார். 6 தாம் செய்யப்
போவதை அவர் அறிந்திருந்தும் பிலிப்பு
வைப் பரிசோதிப்பதற்காக இப்படிக் கேட்
டார். 7 அதற்குப் பிலிப்பு, ''ஆளுக்குக்
கொஞ்சம் கொஞ்சம் கொடுத்தாலுங்கூட
இருநூறு தினாரியத்து* அப்பமும்
போதாதே'' என்று சொன்னார். 8 அப்
பொழுது அவருடைய சீடருள் ஒருவரும்,
சீமோன் பேதுருவின் உடன்பிறந்தாரு
மாகிய அந்திரேயா அவரிடம், 9 ''இங்கே
ஒரு பையன் இருக்கிறான். அவனிடம்
ஐந்து வாற்கோதுமை அப்பங்களும்
இரண்டு மீன்களும் இருக்கின்றன. ஆனால்
இத்தனை பேருக்கும் அவை எப்படிப்
போதும்?'' என்றார். 10 இயேசு, ''மக்க
ளைப் பந்தியமரச் செய்யுங்கள்'' என்றார்.
அங்கே நல்ல புல்தரை இருந்தது. பந்தி
யமர்ந்த ஆண்களின் எண்ணிக்கை
ஏறக்குறைய ஐயாயிரம். 11 இயேசு அந்த
அப்பங்களை எடுத்து, கடவுளுக்கு நன்றி
செலுத்தி, பந்தியமர்ந்தவர்களுக்குப் பகிர்ந்
தளித்தார். மீன்களையும் அவ்வாறே செய்
தார், அவர்களுக்கு வேண்டியமட்டும்
கிடைத்தது. 12 அவர்கள் வயிறார உண்ட
பின் அவர் தம்முடைய சீடரிடம், ''மீந்த
துணிக்கைகளுள் ஒன்றும் வீணாகாதபடி
அவற்றைப் பொறுக்கிச் சேருங்கள்'' என்
றார். 13 அவர்களும் அவ்வாறே சேர்த்து,
மக்கள் அந்த ஐந்து வாற்கோதுமை அப்
பங்களிலும் மீதமாகவிட்ட துணிக்கைகளைப்
பன்னிரண்டு கூடைகளில் நிரப்பினார்கள்.
14 இயேசு செய்த இந்த அரிய செயலை
அந்த மக்கள் கண்டு, ''உலகத்தில் தோன்ற
வேண்டிய இறைவாக்குரைப்பவர் உண்
மையில் இவரே'' என்றார்கள். 15 அவர்கள்
வந்து தம்மைப் பிடித்து அரசராக்கப்
போகிறார்கள் என்பதை இயேசு அறிந்து,
விலகிக்கொண்டு தனியராய் மறுபடியும்
மலைக்குச் சென்றார்.

## இயேசு கடலின்மீது நடத்தல்

*(மத். 14:22—33; மாற். 6:45—52)*

16 மாலை நேரம் வந்ததும், அவரு
டைய சீடர்கள் கடற்கரைக்குப் போய்,
17 ஒரு படகில் ஏறிக் கடலைக் கடந்து கப்பர்
நகூமுக்குச் செல்லப் புறப்பட்டார்கள்.

* மத். 20:2 அடிக்குறிப்பைப் பார்க்க.

அதற்குள் இருட்டிவிட்டது. இயேசுவும்
அதுவரையில் அவர்களிடம் வந்து சேர
வில்லை. 18 ஒரு பெருங்காற்று அப்போது
வீசிற்று, கடலும் கொந்தளிக்கத் தொடங்
கிற்று. 19 அவர்கள் ஏறத்தாழ மூன்று
அல்லது நான்கு மைல் தொலைவு பட
கைச் செலுத்தியபின், இயேசு கடலின்
மீது நடந்துகொண்டே படகுக்குப் பக்கத்
தில் வருவதைப் பார்த்தார்கள்; பார்த்த
தும், அவர்களுக்கு மிகுந்த அச்சம் உண்
டாயிற்று. 20 இயேசு அவர்களிடம்,
''நான்தான், அஞ்சாதீர்கள்'', என்று
சொன்னார். 21 அப்பொழுது அவர்கள்
அவரைப் படகில் ஏற்றிக்கொள்ள வேண்டு
மென்று எண்ணினார்கள். ஆனால், படகு
உடனே அவர்கள் சேர வேண்டிய இடம்
போய்ச் சேர்ந்தது.

## மெய்வாழ்வு தரும் அப்பம் இயேசுவே

22 மறுநாளும் மக்கள் அடுத்த கரை
யிலேயே நின்றுகொண்டிருந்தார்கள்.
அவர்கள் அங்கே ஒரே ஒரு படகைத்
தவிர வேறு படகுகள் இருந்ததில்லை என்
பதையும், அந்தப் படகில் சீடர்கள் மட்டும்
போனார்களேயொழிய, இயேசு அவர்
களோடு போகவில்லை என்பதையும் கண்
கூடாகப் பார்த்திருந்தார்கள். 23 அப்
பொழுது திபேரியாவிலிருந்து வேறு படகு
கள் வந்து, ஆண்டவர் கடவுளுக்கு நன்றி
செலுத்திக் கொடுத்த உணவை மக்கள்
சாப்பிட்ட இடத்திற்குப் பக்கமாகக் கரை
யோரத்தில் நின்றன. 24 அங்கே இயேசு
வும் இல்லை, அவருடைய சீடரும் இல்லை
என்பதை மக்கள் தெரிந்துகொண்ட
தால், தாங்களும் அந்தப் படகுகளில்
ஏறிக்கொண்டு இயேசுவைத் தேடிக் கப்பர்
நகூமுக்கு வந்தார்கள். 25 கடலின்
மறுகரையில் அவர்கள் அவரைக் கண்டு,
''ரபீ, நீர் எப்பொழுது இங்கே வந்தீர்?''
என்று கேட்டார்கள். 26 அதற்கு இயேசு,
''நீங்கள் என்னைத் தேடுவது, தெய்வ
ஆற்றலுக்கு அடையாளமான செயல்களைக்
கண்டு புரிந்துகொண்டதனாலன்று, அப்
பங்களை வயிறார உண்டதனாலேதான் என்று
மிகவும் திட்டமாகச் சொல்லுவேன்.
27 அழிந்துபோகும் உணவுக்காக
உழைக்க வேண்டாம்; என்றுமுள்ள மெய்
வாழ்வுக்கென்றிருக்கின்ற அழிந்துபோகாத
உணவுக்காக உழையுங்கள்; அதை மனு
மைந்தர் உங்களுக்குக் கொடுப்பார். அவர்
மீதே தந்தையாகிய கடவுள் தமது அதி
கார முத்திரையைப் பொறித்திருக்கிறார்''
என்றார். 28 அப்பொழுது அவர்கள் அவ
ரிடம், ''கடவுளுக்கடுத்த செயல்களை நாங்
கள் செய்ய வேண்டுமென்றால், அதற்கு
என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்

டார்கள். 29 இயேசு, ''கடவுள் அனுப்
பினவரிடம் நம்பிக்கை கொள்வதே அவ
ருக்கடுத்த செயல்'' என்று சொன்னார்.
30 அவர்கள், ''அப்படியானால், நாங்கள்
கண்ணால் கண்டு உம்மை நம்ப வேண்டும்
என்றால் நீர் அதற்காகக் காட்டும் அற்புத
அத்தாட்சி என்ன? நீர் செய்யும் செயல்
தான் என்ன? 31 'அவர்கள் உண்பதற்கு
அவர் வானத்திலிருந்து அப்பம் அருளி
னார்' என்று வேதத்தில் எழுதியுள்ளபடி
நம்முடைய மூதாதையர் வனாந்தரத்தில்
மன்னாவை உண்டனரே'' என்றார்கள்.
32 அதற்கு இயேசு, ''மிகவும் உறுதியாக
உங்களுக்குச் சொல்லுகிறேன்: மோசே
உங்களுக்குக் கொடுத்தது வானத்திலிருந்து
வந்த அப்பமன்று. வானத்திலிருந்து உங்
களுக்கு மெய்யான அப்பத்தை அருளு
கிறவர் என் தந்தையாரே. 33 * விண்ணுல
கினின்று இறங்கி வந்து, உலகத்துக்கு
மெய்வாழ்வு அருளுகிற அப்பமே கடவுள்
அருளும் அப்பம்'' என்று சொன்னார்.

34 அப்பொழுது அவர்கள் அவரிடம்,
''ஆண்டவரே, இந்த அப்பத்தையே எங்
களுக்கு எப்போதும் தர வேண்டும்'' என்று
கேட்டார்கள். 35 இயேசு அவர்களிடம்
''நானே மெய்வாழ்வு தரும் அப்பம்;
என்னை வந்தடைகிறவனுக்குப் பசியே
இராது, என்னிடம் நம்பிக்கை கொள்கிற
வனுக்கு ஒருபோதும் தாகம் இராது.
36 ஆனால், நான் உங்களுக்குச் சொன்ன
படி, நீங்கள் என்னைக் கண்டிருந்தும் என்
னிடம் நம்பிக்கை கொள்ளாமல் இருக்கி
றீர்கள். 37 தந்தையார் எனக்குக் கொடுக்
கும் யாவரும் என்னிடம் வந்து சேர்வார்
கள். என்னை வந்தடைந்தவனை நான் ஒரு
போதும் தள்ளிவிட மாட்டேன். 38 ஏனென்
றால், என் சொந்த விருப்பத்தை நிறை
வேற்றுவதற்கன்று, என்னை அனுப்பின
வரின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்கே,
நான் விண்ணுலகிலிருந்து வந்தேன்.
39 என்னை அனுப்பினவருடைய விருப்பம்
எதுவெனில், அவர் எனக்குக் கொடுத்த
வர்களுள் ஒருவனையும் நான் இழந்துவிடா
மல், கடைசி நாளில் அவர்கள் எல்லா
ரையும் உயிரோடெழுப்ப வேண்டும் என்
பதே. 40 மைந்தரைக் கண்டு அவரிடம்
நம்பிக்கை கொள்ளுகிறவன் எவனுக்கும்
என்றுமுள்ள மெய்வாழ்வு கிடைக்க வேண்
டும் என்பதே என் தந்தையாரின் விருப்
பம். நான் அவனைக் கடைசி நாளில்
உயிரோடெழுப்புவேன்'' என்று சொன்னார்.

41 ''விண்ணுலகினின்று இறங்கி வந்த
அப்பம் நானே'' என்று அவர் சொன்ன
தால் யூதர்கள் அவரைப்பற்றி முணு
முணுத்துப் பேசிக்கொண்டிருந்தார்கள்.
42 ''இவன் யோசேப்பின் மகன் இயேசு
அல்லவா? இவனுடைய தகப்பனையும்
தாயையும் நமக்குத் தெரியுமே. அப்படி
யிருக்க இவன், 'நான் விண்ணுலகினின்று
இறங்கி வந்திருக்கிறேன்' என்று சொல்வ
தெப்படி?'' என்று பேசிக்கொண்டார்கள்.
43 அதைக் கேட்ட இயேசு, ''உங்களி
டையே முணுமுணுப்பு வேண்டாம்.
44 என்னை அனுப்பின தந்தையார் யாரை
ஈர்த்துக்கொள்வாரோ அவனைத் தவிர
வேறு யாராலும் என்னை வந்தடைய இய
லாது. என்னை வந்தடைந்தவனை நான்
கடைசி நாளில் உயிரோடெழுப்புவேன்.
45 'எல்லா மக்களும் கடவுளால் போதிக்
கப்பட்டவர்களாவார்கள்' என்று இறை
வாக்கு நூற்பகுதியில் எழுதியிருக்கிறது.
தந்தையாரிடம் கேட்டுக் கற்றுக்கொள்
ளும் எவனும் என்னை வந்தடைவான்.
46 இதனால் கடவுளிடமிருந்து வந்தவர்
மட்டுமன்றி, வேறு சிலரும் தந்தையாரைக்
கண்டிருக்கின்றனர் என்று கொள்ள
லாகாது. தந்தையாரைக் கண்டிருக்
கிறவர் இவர் ஒருவரே. 47 மிக
வும் உறுதியாக உங்களுக்குச் சொல்லு
கிறேன்: இவரிடம் நம்பிக்கை கொள்ளு
கிறவன் என்றுமுள்ள மெய்வாழ்வை
உடையவனாயிருக்கிறான். 48 மெய்வாழ்
வைத் தரும் அப்பம் நானே. 49 உங்கள்
மூதாதையர் வனாந்தரத்தில் மன்னாவை
உண்டுவந்த போதிலும் இறந்துபோயினர்.
50 ஆனால் இந்த அப்பத்தை உண்ணும்
எவரும் இறப்பதில்லை. இதற்காகவே நான்
விண்ணுலகிலிருந்து வந்திருக்கிறேன்.
51 நானே விண்ணுலகினின்று இறங்கி
வந்த மெய்வாழ்வாகிய அப்பம்; இந்த
அப்பத்தை ஒருவன் உண்டால், அவன்
என்றைக்கும் மெய்வாழ்வை உடையவனா
யிருப்பான். நான் கொடுக்கப்போகும் அப்பம்
என் மாமிசமே; நான் இதை உலகம்
மெய்வாழ்வைப் பெறுவதற்காகக் கொடுக்
கிறேன்'' என்று சொன்னார்.

52 இதைக் கேட்ட யூதரிடையே ஒரு
தர்க்கம் உண்டாயிற்று; ''நாம் உண்
பதற்கு இவன் தன் மாம்சத்தை எப்படிக்
கொடுக்க இயலும்?'' என்று அவர்கள்
பேசிக்கொண்டார்கள். 53 இயேசு
அவர்களிடம், ''மிகவும் உறுதியாக உங்
களுக்குச் சொல்லுகிறேன்: நீங்கள் மனு

* 'விண்ணுலகினின்று இறங்கி வந்து, உலகத்துக்கு மெய்வாழ்வு அளிக்கிறவரே கடவுள் அருளும் அப்பம்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

**6:31** யாத். 16:14, 15; சங். 78:24. **6:35** நீதி. 9:1—6; ஏசா. 55:1—3. **6:38** மத். 26:39; எபி. 10:7, 10. **6:40** 1 யோ. 2:25. **6:44** மத். 16;17. **6:45** ஏசா. 54:13. எரே. 31:33. 34; 1 தெச. 4:9; 1 யோ. 2:20—27. **6:46** யாத். 33:20.

மைந்தரது மாம்சத்தை உண்டு அவரது
இரத்தத்தைக் குடித்தாலன்றி, உங்களுக்குள்
மெய்வாழ்வு உடையவர்களாயிருக்க
மாட்டீர்கள். 54 என் மாம்சத்தைச் சாப்
பிட்டு என் இரத்தத்தைக் குடிப்பவன்
என்றுமுள்ள மெய்வாழ்வை உடையவனு
யிருப்பான். நான் அவனைக் கடைசி நாளில்
உயிரோடெழுப்புவேன். 55 என் மாம்
சமே மெய்யான உணவு, என் இரத்தமே
மெய்யான பானம். 56 என் மாம்சத்தைச்
சாப்பிட்டு, என் இரத்தத்தைக் குடிக்கிற
வன் எனக்குள் தங்கியிருக்கிறன், நானும்
அவனுக்குள் தங்கியிருக்கிறேன். 57 மெய்
வாழ்வுக்குப் பிறப்பிடமாகிய தந்தையார்
என்னை அனுப்பினர்; நான் தந்தையாரால்
மெய்வாழ்வு உள்ளவனுயிருக்கிறேன்; அது
போல என்னை உண்பவனும் என்னுல்
மெய்வாழ்வைப் பெற்றவனுயிருப்பான்.
58 விண்ணுலகினின்று வந்த அப்பம்
இதுவே; இது உங்கள் மூதாதையர் சாப்
பிட்டதைப் போன்றதன்று; அவர்கள்
இறந்து போனுர்கள். இந்த அப்பத்தைச்
சாப்பிடுகிறவன் என்றைக்கும் மெய்
வாழ்வை உடையவனுயிருப்பான்'' என்று
சொன்னர். 59 அவர் கப்பர்நகூமில் உள்ள
தொழுகைக்கூடத்தில் போதிக்கையில்
இந்தக் காரியங்களைச் சொன்னர்.

## என்றுமுள்ள மெய்வாழ்வளிக்கும் வார்த்தைகள்

60 அவருடைய சீடருள் பலர் இதைக்
கேட்டு, ''இது கடினமான போதனை;
யாரால் இதை ஏற்றுக்கொள்ள இயலும்?''
என்றனர். 61 தம்முடைய சீடர்கள்
அதைக் குறித்து முணு முணுப்பதை இயேசு
தாமாகவே அறிந்துகொண்டு அவர்களி
டம், ''இதைக் கேட்க உங்களுக்கு அரு
வருப்பாய் இருக்கிறதா? 62 அப்படியா
னுல், மனுமைந்தர் தாம் முன்பு இருந்த
இடத்திற்கு ஏறிச்செல்வதை நீங்கள் காண
நேரிட்டால் உங்களுக்கு எப்படியிருக்கும்?
63 மெய்வாழ்வை அளிப்பது ஆவியே,
மாம்சம் ஒன்றுக்கும் உதவாதது; நான்
உங்களுக்குச் சொன்ன வார்த்தைகளே
ஆவி, அவையே மெய்வாழ்வு. 64 அப்படி
யிருந்தும் என்னிடம் நம்பிக்கை கொள்
ளாத சிலர் உங்களிடையே இருக்கின்
றனர்'' என்று சொன்னர். நம்பிக்கை
கொள்ளாதவர் இன்னர் என்பதும், தம்
மைக் காட்டிக்கொடுக்கப்போகிறவன்
இன்னன் என்பதும் இயேசுவுக்குத் தொடக்
கத்திலிருந்தே தெரியும். 65 ஆகையால்
அவர், ''இதனலேதான், 'தந்தையார்
எவனுக்கு அருள் தந்திருக்கிறரோ அவ
னைத் தவிர வேறெவனும் என்னை வந்த
டைய இயலாது' என்று நான் உங்களுக்கு
முன்பு சொன்னேன்'' என்றுர்.

66 இதைக் கேட்டதும், அவருடைய
சீடருள் பலர் அவரை விட்டுப் பின்வாங்
கத் தொடங்கினர். அதன்பின் அவர்கள்
அவரோடு சேர்ந்து நடந்துபோகவில்லை.
67 அதைக் கண்ட இயேசு பன்னிருவரை
யும் பார்த்து, ''நீங்களும் போய்விட மாட்
டீர்களே?'' என்று கேட்டார். 68 அதற்
குச் சீமோன் பேதுரு அவரிடம், ''ஆண்
டவரே, நாங்கள் யாரிடம் போவோம்?
உம்மிடந்தான் என்றுமுள்ள மெய்வாழ்
வளிக்கும் வார்த்தைகள் உண்டு. 69 நீரே
கடவுளின் பரிசுத்தர் * என்று நாங்கள்
இப்போது நம்புகிறேம், இதை அறிந்து
கொண்டோம்'' என்று சொன்னர்.
70 அதற்கு இயேசு, ''பன்னிருவராகிய
உங்களை நானே தேர்ந்துகொண்டேனல்
லவா? ஆயினும், உங்களுள் ஒருவன் பிசா
சாயிருக்கிறன்'' என்று சொன்னர்.
71 அவர் இதை இஸ்காரியோத்தூர் சீமோ
னுடைய மகனை யூதாசைக் குறித்துச்
சொன்னர். அவன் அவரைக் காட்டிக்
கொடுக்கப்போகிறவனுயிருந்தான்; அவனும்
பன்னிருவருள் ஒருவனே.

## இயேசுவின் சகோதரருக்கிருந்த நம்பிக்கையின்மை

**7** அதன்பின் இயேசு கலிலேயா நாட்
டில் பல இடங்களுக்குச் சென்றுர்.
யூதேயா நாட்டிற்குச் செல்ல அவர்
விரும்பவில்லை; ஏனெனில், அங்கிருந்த
யூதர்கள் அவரைக் கொன்றுவிட வழி
தேடிக்கொண்டிருந்தார்கள். 2 ஆனுல்
யூதரின் கூடாரப் பண்டிகை நெருங்கி
யிருந்ததால், 3 அவருடைய சகோதரர்கள்
அவரிடம், ''நீர் இவ்விடத்தை விட்டு
யூதேயாவுக்குப் போக வேண்டும்; உம்மு
டைய சீடர் நீர் செய்யும் செயல்களைப்
பார்க்கட்டும். 4 நாடறிந்தவனுய் இருக்க
விரும்பும் எவனும் மறைவில் எதையும்
செய்யமாட்டான்; நீர் இந்தக் காரியங்
களைச் செய்கிறவரென்றுல், உலகத்துக்கே
உம்மை இன்னரென்று வெளிப்படுத்திவிட
லாமே'' என்று சொன்னர்கள். 5 அவரு
டைய சகோதரரும், அவரிடம் நம்பிக்கை
கொண்டிராததால் இப்படிச் சொன்னர்கள்.
6 இயேசு அவர்களிடம், ''எனக்கேற்ற
நேரம் இன்னும் வரவில்லை, உங்களுக்கோ
எந்தக் காலமும் ஏற்றதுதான். 7 உலகத்

* 'நீர் மெய்வாழ்வுக்குப் பிறப்பிடமாகிய கடவுளின் மைந்தராகிய மேசியா' என்பது சில பிரதிகளின் பாடம். (மத். 8:29 பார்க்க.)

6:56 யோ. 15:4, 5. 6:68, 69 உபா. 8:3; மத். 16:16; மாற். 8:29. லூக். 9:20. 6:70 யோ. 13:2, 27.
7:2 இலே. 23:34; உபா. 16:13.

தால் உங்களைப் பகைக்க இயலாது; என்
னையோ அது பகைக்கிறது. ஏனெனில்,
அதன் செயல்கள் பொல்லாதவை என்
பதை நான் அதற்கு எடுத்துக்காட்டி வரு
கிறேன். 8 நீங்கள் பண்டிகைக்குப் போங்
கள்; நான் இந்தப் பண்டிகைக்கென்று
செல்லப்போவதில்லை. ஏனெனில், எனக்
கேற்ற நேரம் இன்னும் வரவில்லை''என்று
சொன்னார். 9 அவர்களுக்கு இப்படிச்
சொல்லிவிட்டு அவர் கலிலேயாவிலேயே
இருந்துவிட்டார்.

### இயேசு கூடாரப் பண்டிகைக் காலத்தில் போதித்தல்

10 என்றாலும், அவருடைய சகோதரர்
பண்டிகைக்குப் போய்விட்ட பின்பு அவரும்
போனார். ஆனால் வெளிப்படையாகப்
போகாமல், சற்று மறைவாகப் போனார்.
11 பண்டிகையின்போது யூதர்கள்,
''அந்த ஆள் எங்கே?'' என்று கேட்டுக்
கொண்டே அவரைத் தேடினார்கள். 12 கூட்
டத்தில் பலர் அவரைப்பற்றி முணுமுணு
வென்று பேசிக்கொண்டனர்; சிலர்,
''அவர் நல்லவர்'' என்றனர்; வேறு
சிலரோ, ''இல்லை, அவன் மக்களை ஏமாற்று
கிறவன்'' என்றனர். 13 யூதத் தலைவர்
களைப்பற்றிய அச்சம் காரணமாக அவ
ரைக் குறித்து ஒருவனும் வெளிப்படை
யாகப் பேசவில்லை.

14 பண்டிகை ஆசரிப்பில் பாதி முடிந்
ததும், இயேசு திருக்கோவிலுக்குப் போய்ப்
போதிக்கலானார். 15 அதைக் கண்ட யூதர்
கள் வியப்படைந்து, ''போதனையே பெறாத
இந்த ஆளுக்கு இவ்வளவு கல்வியறிவு
எப்படி வந்தது?'' என்றார்கள். 16 இயேசு
அவர்களைப் பார்த்து, ''நான் போதிக்கும்
போதனை என்னுடையதன்று, அது என்னை
அனுப்பினவருடையதே. 17 அவரது விருப்
பத்தை நிறைவேற்ற ஒருவனுக்கு மன
முண்டானால், அவன் இந்தப் போதனை
கடவுளிடமிருந்து வருகிறதா அல்லது
அதை நானாகவே போதிக்கிறேனா என்று
அறிந்துகொள்ளுவான். 18 தானாகவே
எதையும் சொல்லுகிறவன் தன் சொந்த
மாட்சிமையை நாடுகிறவன்; தன்னை
அனுப்பினவருடைய மாட்சிமையை நாடு
கிறவனே உண்மையுள்ளவன்; அவனிடம்
நேர்மைக்கேடு இராது. 19 மோசே உங்
களுக்கு நீதிச்சட்டத்தைக் கொடுத்திருக்
கிறார் அல்லவா? அப்படியிருந்தும் உங்க
ளுள் எவனும் அந்த நீதிச்சட்டத்தைக்
கடைப்பிடிப்பதில்லை. என்னை ஏன் கொல்
லப் பார்க்கிறீர்கள்?'' என்று கேட்டார்.
20 அதற்கு அந்த மக்கள், ''உன்னை ஏதோ
ஒரு பேய் பிடித்திருக்கிறது. யாரும்
உன்னைக் கொல்லப் பார்க்கவில்லையே!''
என்றார்கள்.

### ஓய்வுநாளில் குணமாக்கினது நியாயமே

21 இயேசு அவர்களிடம், ''அன்று
நான் ஒரு செயலைச் செய்தேன். அது உங்
களெல்லாருக்கும் வியப்பாயிருந்தது.
22 ஆனால், இதையொட்டியே மோசே
உங்களுக்கு விருத்தசேதன ஆசரிப்பை நிய
மித்திருக்கிறார். உண்மையில் அது மோசே
யினிடமிருந்து வந்ததன்று, நம் மூதாதை
யரிடமிருந்து வந்ததாகும். அதன்படி
நீங்கள் ஓய்வுநாளிலும் விருத்தசேதனம்
செய்கிறீர்கள். 23 மோசேயின் நீதிச்சட்
டத்தை மீறுதிருப்பதற்காக ஓய்வுநாளில்
ஒருவன் விருத்தசேதனம் செய்யப்படுகிற
னென்றால், ஓய்வுநாளில் நான் ஓர் ஆளை
முற்றும் குணப்படுத்தினேன் என்பதற்காக
என்மீது சினங்கொள்ளலாமா? 24 வெளித்
தோற்றத்தைப் பார்த்துத் தீர்ப்புக் கூறு
வதை விட்டுவிட்டு, நீதியோடு தீர்ப்பளி
யுங்கள்'' என்று சொன்னார்.

### இந்த ஆள் மேசியாவா ?

25 அப்பொழுது எருசலேம் நகரத்தா
ருள் சிலர், ''இவரைத்தானே கொல்லத்
தேடுகிறார்கள்? 26 இவர் இங்கே வெளிப்
படையாக நின்று பேசிக்கொண்டிருக்கிறார்.
எவனும் இவரிடம் போய் எதையும்
சொல்வதாகத் தெரியவில்லையே! ஒருவேளை
இவரே மேசியா என்பதை அதிகாரிகள்
திட்டமாக அறிந்துகொண்டார்களோ?
27 ஆனால் இவர் எந்த இடத்திலிருந்து
வந்தவர் என்பது நமக்குத் தெரியும்.
மேசியா வரும்போது, அவர் எங்கிருந்து
வருகிறார் என்பது எவனுக்கும் தெரியா
மலல்லவா இருக்கும்!''என்றனர். 28 ஆகவே,
இயேசு திருக்கோவிலில் போதிக்கையில்
உரத்த குரலில், ''நான் யார் என்பதும்,
எங்கிருந்து வந்திருக்கிறேன் என்பதும் உங்
களுக்குத் தெரியுமென்றா சொல்லுகிறீர்
கள்? எப்படியிருந்தாலும், நானாகவே வர
வில்லை; நான் அனுப்பப்பட்டேன்; என்னை
அனுப்பினவர் மெய்ப்பொருளானவராயி
ருக்கிறார். அவரை நீங்கள் அறிந்துகொள்ள
வில்லை. 29 நானோ அவரை அறிந்திருக்கி
றேன். அவரிடமிருந்தே நான் வந்திருக்
கிறேன், அவர் தாமே என்னை அனுப்பி
னார்'' என்று சொன்னார். 30 இப்படிச்
சொன்னதால், அவர்கள் அவரைப் பிடித்துக்
கொண்டுபோக முயன்றுபார்த்தார்
கள். ஆனால் அவருடைய நேரம் அது
வரையிலும் வராததால், ஒருவனும்

7:22 லேவி. 12:3; ஆதி. 17:10; திருத்தூது, 7:8. 7:23 மத். 12:1—5, 11, 12; லூக். 14:5. 7:24 சக. 7:9 7:27 எபி. 7:3.

அவர்மேல் கைவைக்கவில்லை. 31 கூட்டத்
தாருள் பலர் அவரிடம் நம்பிக்கை கொண்
டனர். அவர்கள், ''மேசியா வரும்போது,
இவர் செய்திருக்கிறதைவிடவா மிகுதியான
அரிய செயல்களைச் செய்யப்போகிறார்?''
என்று பேசிக்கொண்டார்கள்.

## இயேசுவைப் பிடிக்க ஆள் அனுப்புதல்

32 இப்படி மக்கள் அவரைப்பற்றி
முணுமுணுவென்று பேசிக்கொண்டது
பரிசேயர் காதில் விழுந்தது. ஆகையால்
தலைமை ஆசாரியர்களும் பரிசேயரும் அவ
ரைப் பிடித்து வரும்படி காவலரை அனுப்
பினார்கள். 33 இயேசு இதை அறிந்து,
''நான் இன்னும் சிறிது காலந்தான் உங்
களோடிருப்பேன்; பிறகு என்னை அனுப்
பினவரிடம் சென்றுவிடுவேன். 34 நீங்கள்
என்னைத் தேடுவீர்கள், ஆனால் கண்டு
பிடிக்க மாட்டீர்கள்; நான் இருக்கும்
இடத்துக்கு உங்களால் வரவும் இயலாது''
என்று சொன்னார். 35 அதைக் கேட்ட
யூதர்கள், ''நாம் கண்டுபிடிக்க இயலாத
படி இவர் எங்கே போய்விடுவார்? கிரேக்
கரிடையே சிதறலாக வாழும் யூதரிடம்
சென்று கிரேக்கருக்குப் போதனை செய்
வாரோ? 36 'நீங்கள் என்னைத் தேடுவீர்
கள், ஆனால் கண்டுபிடிக்க மாட்டீர்கள்;
நான் இருக்கும் இடத்துக்கு உங்களால்
வரவும் இயலாது' என்று சொன்னாரே.
இதற்குப் பொருளென்ன?'' என்று தங்
களிடையே பேசிக்கொண்டார்கள்.

## மெய்வாழ்வாகிய தண்ணீர்

37 பண்டிகையின் கடைசி நாள் மிக
முக்கியமான நாளாயிருந்தது; அந்நாளில்
இயேசு எழுந்து நின்று, ''ஒருவனுக்குத்
தாகம் இருந்தால் அவன் என்னிடம் வந்து
பானம் பருகுவானாக. 38 என்னிடம் நம்
பிக்கை கொண்டுள்ளவன் எவனோ அவன்
உள்ளத்திலிருந்து, வேதவாக்கியம் சொல்
லுகிறபடி, மெய்வாழ்வாகிய தண்ணீர்
ஆறாய்ப் பெருக்கெடுத்து ஓடும்'' என்று
உரத்துச் சொன்னார். 39 தம்மிடம் நம்
பிக்கை கொள்ளுகிறவர்களுக்கு அருளப்
படவிருக்கும் ஆவியானவரைக் குறித்து
அவர் இப்படிச் சொன்னார். இயேசு அது
வரையிலும் மாட்சிமைக்கு உயர்த்தப்படா
திருந்ததால், ஆவியானவரும் அதுவரை
யிலும் அருளப்படாதிருந்தார்.

## மக்களிடையே பிரிவினை

40 கூட்டத்தாருள் சிலர் இந்த வார்த்
தைகளைக் கேட்டு, ''மெய்யாகவே
இவர்தாம் எதிர்பார்க்கப்படும் இறைவாக்
குரைப்பவர்'' என்றனர். 41 சிலர், ''இவரே
மேசியா'' என்றனர்; வேறு சிலரோ
''கலிலேயா நாட்டிலிருந்தா மேசியா வரு
வார்? 42 தாவீதின் மரபிலிருந்தும்,
தாவீது குடியிருந்த பெத்லெகேம் ஊரி
லிருந்தும் வருவார் என்றல்லவா வேதம்
கூறுகிறது?'' என்றனர். 43 எனவே, அவ
ரால் மக்களிடையே பிரிவினை ஏற்பட்டது.
44 அவர்களுள் சிலர் அவரைக்
கைது செய்ய வேண்டுமென்றிருந்தனர்.
ஆனாலும் அவர்மேல் ஒருவனும் கை
வைக்கவில்லை.

## யூதத் தலைவரின் நம்பிக்கையின்மை

45 பிறகு தலைமை ஆசாரியர்களும்
பரிசேயரும் அனுப்பியிருந்த காவலர்கள்
அவர்களிடம் திரும்பி வந்தார்கள். அவர்
கள் காவலர்களைப் பார்த்து, ''நீங்கள்
ஏன் அவனைக் கொண்டுவரவில்லை?''
என்று கேட்க, 46 காவலர்கள், ''அந்த
மனிதன் பேசுவதுபோல எவனும் ஒரு
போதும் பேசினதில்லை'' என்று சொன்
னார்கள். 47 அப்பொழுது பரிசேயர் அவர்
களிடம், ''நீங்களுமா மோசம்போனீர்கள்?
48 அதிகாரிகளுள் யாராவது அவனிடம்
நம்பிக்கை கொண்டவர்களாய் இருக்கிறார்
களா? அல்லது பரிசேயருள்ளாவது அப்
படிப்பட்டவர் உண்டா? 49 இந்தப்
பாமர மக்களுக்கு நீதிச்சட்டம் தெரியாது.
இவர்கள் சபிக்கப்பட்டவர்கள்'' என்றனர்.
50 அவர்களுள் ஒருவர் நிக்கொதேமு என்
பவர். அவரே முன்பு இயேசுவினிடம்
வந்தவர். அவர் அவர்களைப் பார்த்து,
51 ''ஒருவனை முதலில் விசாரணை செய்
யாமலும், அவன் செய்தது இன்னதென்
பதை அறியாமலும் அவனைக் குற்றவாளி
என்று நம்முடைய சட்டம் தீர்ப்பளிக்
குமா?'' என்று கேட்டார். 52 அதற்கு
அவர்கள், ''நீர் கலிலேயாவிலிருந்து வந்
தவரல்லவே? வேதத்தை ஆராய்ந்து பாரும்;
இறைவாக்குரைக்கும் எவரும் கலிலேயா
வில் தோன்றுவதில்லை என்பதை அப்
போது தெரிந்துகொள்வீர்'' என்று சொன்
னார்கள்.

## கற்புநெறி தவறிய பெண்

53 [பிறகு எல்லாரும் தத்தம் வீட்டுக்
குச் சென்றனர்.

**8** இயேசு ஒலிவமலைக்குப் போனார்.
2 விடியற்காலத்தில் அவர் மறுபடியும்
திருக்கோவிலுக்கு வந்தார்; அங்கிருந்த
மக்களெல்லாரும் அவரிடம் வந்தனர்.
அவர் உட்கார்ந்து அவர்களுக்குப் போதித்

**7:34** உபா. 4;29; நீதி. 1:28; ஏசா. 55:6 ஓசே. 5:6, **7:38** நீதி. 18:4; ஏசா. 55:1, 3. **7:42** மீகா
:52. **7:50** யோ. 3:1; 19:39. **7:51** உபா. 17:4.

தார். 3 அப்பொழுது கற்புநெறி தவறிய
ஒரு பெண்ணை வேத அறிஞரும் பரிசேய
ரும் கூட்டிக்கொண்டு வந்து நடுவில்
நிறுத்தி, 4 அவரிடம், ''போதகரே, இந்தப்
பெண் கற்புநெறி தவறி நடக்கும்போதே
பிடிக்கப்பட்டாள். 5 இப்படிப்பட்டவளைக்
கல்லாலடித்துக் கொல்ல வேண்டுமென்
பது நீதிச்சட்டத்தில் மோசே நமக்கு இட்
டுள்ள கட்டளையாயிற்றே; நீர் என்ன
சொல்லுகிறீர்?'' என்று கேட்டார்கள்.
6 அவரிடம் ஏதாவதொரு குற்றம் கண்டு
பிடிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன்
அவரை இப்படிக் கேட்டுப் பரிசோதித்
தார்கள். இயேசுவோ குனிந்து விரலினால்
தரையில் எழுதத் தொடங்கினார். 7 ஆனால்
அவர்கள் அவரை விடாமல் கேட்டுக்
கொண்டிருந்ததால், அவர் நிமிர்ந்து
பார்த்து அவர்களிடம், ''உங்களுள் எவன்
ஒரு பாவமும் செய்யாதவனோ அவன்
முதலில் இவளைக் கல்லாலடிக்கட்டும்''
என்று சொல்லிவிட்டு, 8 மறுபடியும்
குனிந்து தரையில் எழுதிக்கொண்டிருந்
தார். 9 அவர்கள் அதைக் கேட்டதும்,
முதலில் முதியோர் அங்கிருந்து செல்ல,
பிறகு ஒவ்வொருவராக எல்லாரும் போய்
விட்டனர். இயேசு தனிமையாக விடப்
பட்டார்; அந்தப் பெண் அங்கேயே
நின்றுகொண்டிருந்தாள். 10 இயேசு
நிமிர்ந்து பார்த்து அவளிடம், ''பெண்ணே
எங்கே அவர்கள்? ஒருவரும் நீ குற்ற
வாளி என்று தீர்ப்புக் கூறவில்லையா?''
என்று கேட்டார். 11 அதற்கு அவள்,
''இல்லை ஐயா'' என்றாள். இயேசு அவ
ளிடம், ''நீ குற்றவாளி என்று நானும்
தீர்ப்புக் கூறவில்லை, நீ போகலாம், இனி
ஒருபோதும் பாவம் செய்யாதே'' என்று
சொன்னார்.]

### உலகத்துக்கு ஒளி இயேசுவே

12 பிறகு இயேசு மறுபடியும் மக்களைப்
பார்த்து, ''நானே உலகத்துக்கு ஒளி;
என்னைப் பின்பற்றுகிறவன் ஒருபோதும்
இருளில் நடக்க மாட்டான்; அவன் மெய்
வாழ்வாகிய ஒளியைப் பெற்றிருப்பான்''
என்று சொன்னார். 13 பரிசேயர் இதைக்
கேட்டு அவரிடம், ''நீரே உம்மைக் குறித்
துச் சாட்சி சொல்வதால், உமது சாட்சி
யம் செல்லாது'' என்றார்கள். 14 அதற்கு
இயேசு, ''நானே என்னைக் குறித்துச்
சாட்சி கூறினாலும் என் சாட்சியம் செல்
லும்: ஏனெனில், நான் எங்கிருந்து வந்
தேன், எங்கே செல்கிறேன் என்பது எனக்
குத்தான் தெரியும். நான் எங்கிருந்து வரு
கிறேன், எங்கே செல்கிறேன் என்பது உங்
களுக்குத் தெரியாது. 15 நீங்கள் மனிதப்
போக்கின்படி தீர்ப்புக் கூறுகிறீர்கள்;
நான் ஒருவனைப்பற்றியும் தீர்ப்புக் கூறுவ
தில்லை. 16 அப்படி நான் தீர்ப்புக் கூற
நேர்ந்தால், என் தீர்ப்பு நீதியுள்ளதாய்
இருக்கும். ஏனெனில், தனிமையாக நான்
தீர்ப்புக் கூறுவதில்லை; என்னை அனுப்பின
வராகிய தந்தையாரும் என்னோடு இருக்
கிறார். 17 ஒரே சாட்சியத்தை இருவர்
கூறினால் அது உண்மையானதாயிருக்கும்
என்று உங்கள் நீதிச்சட்டத்திலேயே எழுதி
யிருக்கிறதே. 18 நானும் என்னைக் குறித்
துச் சாட்சி கூறுகிறேன், என்னை அனுப்
பினவராகிய தந்தையாரும் என்னைக் குறித்
துச் சாட்சி கூறுகிறார்'' என்று சொன்
னார். 19 அப்பொழுது அவர்கள் அவரி
டம், ''உம்முடைய தந்தையார் எங்கே
இருக்கிறார்?'' என்று கேட்டார்கள்.
அதற்கு இயேசு, ''நீங்கள் என்னையும்
அறிந்துகொள்ளவில்லை; என் தந்தையாரை
யும் அறிந்துகொள்ளவில்லை. என்னை நீங்
கள் அறிந்திருந்தால், என் தந்தையாரை
யும் அறிந்திருப்பீர்கள்'' என்று சொன்
னார். 20 திருக்கோவிலில் அவர் காணிக்
கைப் பெட்டிக்கருகிலிருந்து போதிக்கை
யில், இந்த வார்த்தைகளைச் சொன்னார்.
என்றாலும், ஒருவனும் அவரைக் கைது
செய்யவில்லை. ஏனெனில், அவருடைய
நேரம் இன்னும் வரவில்லை.

### நான் செல்லும் இடத்துக்கு உங்களால் வர இயலாது

21 அவர் மறுபடியும் அவர்களைப்
பார்த்து, ''நான் செல்லப்போகிறேன்;
நீங்கள் என்னைத் தேடுவீர்கள்; ஆனால்
உங்கள் பாவம் நீங்காமலே நீங்கள் சாவீர்
கள். நான் செல்லும் இடத்துக்கு உங்க
ளால் வர இயலாது'' என்றார். 22 அப்
பொழுது யூதர்கள், ''நான் செல்லும்
இடத்துக்கு உங்களால் வர இயலாது
என்கிறாரே! ஒருவேளை தற்கொலை செய்து
கொள்ளப்போகிறாரோ!'' என்றார்கள்.
23 அவர் அவர்களிடம், ''நீங்கள் மண்
ணினின்று தோன்றியவர்கள், நான் விண்
ணினின்று தோன்றியவன்; நீங்கள் இந்த
உலகத்திற்குரியவர்கள், நான் இந்த உல
கத்திற்குரியவனல்ல. 24 அதனாலேதான்
நீங்கள் உங்கள் பாவங்கள் நீங்காமலே
சாவீர்கள் என்று உங்களுக்குச் சொன்னேன்.
நான் யாரோ, அவர்தான் நான் என்
பதை நீங்கள் நம்பாவிட்டால், உங்கள்
பாவங்கள் நீங்காமலே நீங்கள் சாவீர்கள்''
என்று சொன்னார். 25 அதற்கு அவர்கள்,
''நீர் யார்?'' என்று கேட்க, இயேசு
அவர்களிடம், ''நான் யாரென்று தொடக்
கத்தில் உங்களுக்குச் சொல்லிவந்தேனோ

**8:5** இலே. 20:10; உபா. 22:22—24. **8:11** எசே. 18:23, 32. **8:12** ஏசா. 42:6; மத். 5:14; யோ. 9:5. **8:16** யோ. 5:30. **8:17** உபா. 17:6; 19:15.

அவர்தான் நான்* 26 உங்களைக் குறித்து
நான் சொல்லக்கூடியவையும் தீர்ப்பளிக்
கக்கூடியவையும் பல உண்டு. ஆனால்
என்னை அனுப்பினவரிடம் கேட்டவற்
றையே நான் உலகத்துக்குச் சொல்லு
கிறேன்; அவர் சத்தியவாசகர்'' என்று
சொன்னார். 27 அவர் தங்களிடம் விண்ண
கத் தந்தையாரைக் குறித்துப் பேசினா
ரென்பதை அவர்கள் அறிந்துகொள்ள
வில்லை. 28 ஆகையால் இயேசு அவர்களைப்
பார்த்து, ''நீங்கள் மனுமைந்தரை உயர்த்
தினபின், நான் யாரோ, அவர்தான்
நான் என்றும், நானாகவே எதையும் செய்
கிறதில்லை, தந்தையார் எனக்குக் கற்
பித்தபடியே நான் இவற்றைச் சொல்லு
கிறேன் என்றும் அறிந்துகொள்ளுவீர்கள்.
29 என்னை அனுப்பினவர் என்னோடு
இருக்கிறார்; அவருக்கு உகந்தவற்றையே
நான் எப்போதும் செய்கிறபடியால், அவர்
என்னைத் தனியே விட்டுவிடவில்லை'' என்று
சொன்னார். 30 அவர் இவற்றைச் சொல்
லுகையில், பலர் அவரிடம் நம்பிக்கை
கொண்டனர்.

### சத்தியம் விடுதலை அளிக்கும்

31 இயேசு தம்மை நம்பின யூதரைப்
பார்த்து, ''உங்கள் வாழ்க்கை என் வார்த்
தையில் வேரூன்றியதாய் இருக்குமானால்
மெய்யாகவே நீங்கள் என் சீடர்களா
யிருப்பீர்கள்; சத்தியத்தையும் அறிந்து
கொள்ளுவீர்கள். 32 அந்தச் சத்தியம்
உங்களை விடுதலை பெற்றவர்களாக்கும்''
என்று சொன்னார். 33 அதற்கு அவர்கள்,
''நாங்கள் ஆபிரகாமின் மரபினர்கள்;
நாங்கள் ஒருபோதும் ஒருவனுக்கும் அடி
மைகளாய் இருந்ததில்லை; நீங்கள் விடுதலை
பெற்றவர்களாவீர்கள் என்று நீர்
எப்படிச் சொல்லலாம்?'' என்று கேட்
டார்கள். 34 அதற்கு இயேசு அவர்களி
டம், ''மிகவும் உறுதியாக உங்களுக்குச்
சொல்லுகிறேன், பாவம் செய்கிறவன் எவ
னும் பாவத்துக்கு அடிமை. 35 அடிமை
யாயிருப்பவன் எப்போதும் வீட்டில் நிலைத்
திருக்க மாட்டான், மகனே எப்போதும்
நிலைத்து இருப்பவன். 36 ஆகவே, மைந்
தர் உங்களுக்கு விடுதலையளித்துவிட்டால்,
நீங்கள் மெய்யாகவே விடுதலை பெற்றவர்
களாவீர்கள். 37 நீங்கள் ஆபிரகாமின்
மரபினர்கள் என்பது எனக்குத் தெரியும்.
ஆயினும், நீங்கள் என்னைக் கொல்ல வழி
தேடுகிறீர்கள். ஏனென்றால், என் வார்த்தை
உங்கள் உள்ளத்தில் இடம்பெறவில்லை.
38 நான் என் தந்தையிடம் கண்டுகொண்
டவற்றை எடுத்துரைக்கிறேன்; நீங்கள்
உங்கள் தந்தையிடமிருந்து கற்றதை உங்
கள் செய்கையில் காட்டுகிறீர்கள்'' என்றார்.

### பிசாசுதான் உங்களுக்குத் தந்தை

39 அதற்கு அவர்கள், ''ஆபிரகாமே
எங்கள் தந்தை'' என்று சொல்ல, இயேசு
''நீங்கள் உண்மையில் ஆபிரகாமின் பிள்
ளைகளாயிருந்தால், ஆபிரகாம் செய்தவற்
றைச் செய்வீர்கள். 40 ஆனால் நீங்களோ,
கடவுளிடம் கேட்ட சத்தியத்தை உங்
களுக்கு எடுத்துச் சொன்ன என்னைக்
கொல்ல வழி தேடுகிறீர்கள்; ஆபிரகாம்
இப்படிச் செய்ய மாட்டாரே. 41 உங்களுக்
குத் தந்தையாயிருப்பவனுடைய செயல்
களையே நீங்கள் செய்கிறீர்கள்'' என்று
சொன்னார். அதற்கு அவர்கள், ''என்ன?
நாங்கள் முறைகேடான வழியில் பிறந்த
வர்களா? இல்லவே இல்லை. எங்களுக்கு
ஒரே தந்தைதான் உண்டு, அவர் கட
வுளே'' என்றார்கள். 42 இயேசு அவர்
களிடம், ''கடவுள் உங்களுக்குத் தந்தை
யாயிருந்தால், நீங்கள் என்னிடம் அன்பு
கொள்ளுவீர்கள். ஏனெனில், நான் கட
வுளிடமிருந்தே வந்திருக்கிறேன்; நானாகவே
வரவில்லை, அவரே என்னை அனுப்பினார்.
43 என் பேச்சை நீங்கள் புரிந்துகொள்ளா
மலிருப்பதேன்? என் சொல்லுக்குச் செவி
சாய்க்க இயலாத நிலையில் நீங்கள் இருப்
பதுதான் காரணம். 44 பிசாசுதான் உங்
களுக்குத் தந்தை. உங்கள் தந்தையின்
விருப்பத்தை நிறைவேற்றுவதில் நீங்கள்
ஆர்வம் காட்டிவருகிறீர்கள். அவன் ஆதி
முதல் மனித கொலைகாரனாகவே இருந்து
வருகிறான். சத்தியம் என்பதே அவனிடம்
இல்லாததால், அவன் சத்தியத்தில் நிலை
கொள்ளவில்லை. பொய் பேசும்போது
அவன் தன் இயல்பான குணத்தையே
காட்டுகிறான். ஏனெனில், அவன் பொய்யன்,
பொய்க்குத் தந்தையும் அவனே.
45 நான் உங்களுக்குச் சத்தியத்தைச்
சொல்கிறேன்; அதனாலேதான் நீங்கள்
என்னிடம் நம்பிக்கை கொள்ளவில்லை.
46 என்னிடம் பாவம் உண்டென்று உங்க
ளுள் யாராலாவது மெய்ப்பிக்க இயலுமா?
நான் சத்தியத்தைச் சொல்லியிருக்க, நீங்
கள் ஏன் என்னிடம் நம்பிக்கை கொள்ள
வில்லை? 47 கடவுளுக்கு உரியவனாயிருப்பவன்
கடவுளின் சொல்லுக்குச் செவிசாய்ப்பான்.
நீங்கள் கடவுளுக்கு உரியவர்கள் ஆகாத
தனாலேதான் செவிசாய்க்காமல் இருக்
கிறீர்கள்'' என்றார்.

* 'நான் ஆதியில் யாராயிருந்தேனோ அவராகவே இருக்கிறேன் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்' என்
றுவது, 'நான் எதற்காகத்தான் உங்களோடு பேச வேண்டும்?' என்றுவது மொழிபெயர்க்கலாம்.
8:29 1 யோ 3:22. 8:32 ஏசா, 42:7. 8:34 யோ. 8:17–19; 2 பேது. 2:19. 8:36 கலா. 5:1. 8:44 1 யோ
3:8. 8:46 1 பேது. 2:22; 1 யோ. 3:5

### இயேசுவும் ஆபிரகாமும்

48 அப்பொழுது யூதர்கள் அவரிடம்,
''நீ ஒரு சமாரியன், பேய்பிடித்தவன்
என்று நாங்கள் சொல்வது சரிதானே?''
என்று கேட்டார்கள். 49 அதற்கு இயேசு,
''நான் பேய்பிடித்தவன் என்று சொல்
வது தவறு, நான் என் தந்தையாரைக்
கனப்படுத்துகிறேன், நீங்களோ என்னை
இழிவுபடுத்துகிறீர்கள். 50 நான் என்
மாட்சிமையை நாடவில்லை; அதை நாடு
கிறவர் ஒருவர் இருக்கிறார், அவரே தீர்ப்புக்
கூறுகிறவர். 51 மிகவும் உறுதியாக
உங்களுக்குச் சொல்லுகிறேன்: ஒருவன்
என் சொல்லைக் கடைப்பிடித்து நடந்தால்
அவன் என்றைக்குமே சாக மாட்டான்''
என்றார். 52 யூதர்கள் அவரைப் பார்த்து,
''நீ பேய்பிடித்தவன் என்பது இப்போது
எங்களுக்குத் திட்டமாய்த் தெரிந்துவிட்
டது. ஆபிரகாம் இறந்துபோனார், இறை
வாக்குரைப்பவர்களும் இறந்து போனார்
கள். ஆனால், நீயோ, 'ஒருவன் என்
சொல்லைக் கடைப்பிடித்து நடந்தால்
அவன் என்றைக்குமே சாக மாட்டான்'
என்கிறாய். 53 அப்படியானால் எங்கள்
தந்தையாகிய ஆபிரகாமைவிட நீ பெரிய
வனா? அவர் இறந்தார், இறைவாக்குரைப்
பவர்களும் இறந்தார்கள். உன்னை நீ
யாரென்று சொல்லிக்கொள்கிறாய்?''
என்று கேட்டார்கள். 54 அதற்கு இயேசு,
''நானே எனக்கு மாட்சிமை அளித்துக்
கொண்டால் என் மாட்சிமைக்கு மதிப்
பில்லை. எனக்கு மாட்சிமை அளிப்பவர்
என் தந்தையாரே. அவரை நீங்கள் உங்
கள் கடவுள் என்று சொல்லுகிறீர்கள்.
55 ஆனால், நீங்கள் அவரை அறிந்துகொள்ள
வில்லை. நான் அவரை அறிந்திருக்
கிறேன். அவரை அறிந்துகொள்ளவில்லை
என்று நான் சொல்வேனானால், நானும்
உங்களைப்போன்ற பொய்யனாவேன். நான்
அவரை அறிந்திருக்கிறேன், அவருடைய
சொல்லைக் கடைப்பிடித்து நடக்கிறேன்.
56 உங்களுடைய தந்தையாகிய ஆபிரகாம்
என் நாளைக் காணப்போகிறவராய் இருந்
ததற்காக அகமகிழ்ந்தார்; அதையும்
கண்டு களிகூர்ந்தார்'' என்று சொன்னார்.
57 அப்பொழுது யூதர்கள் அவரிடம்,
''உனக்கு இன்னும் ஐம்பது வயதுகூட
ஆகவில்லையே. நீயா ஆபிரகாமைப் பார்த்
திருக்கிறாய்?'' என்று கேட்டார்கள்.
58 அதற்கு இயேசு, ''ஆபிரகாம் பிறப்
பதற்கு முன்பிருந்தே நான் இருந்துவரு
கிறேன். இதை உங்களுக்கு மிகவும் உறுதி
யாகச் சொல்லுகிறேன்'' என்றார். 59 அப்
பொழுது அவர்கள் அவர்மேல் எறிவதற்
காகக் கற்களை எடுத்தார்கள். இயேசுவோ
மறைந்து திருக்கோவிலிலிருந்து போய்
விட்டார்.

### பிறவிக் குருடன் பார்வை பெறுதல்

9 அவர் போகையில் ஒரு பிறவிக் குரு
டனைக் கண்டார். 2 அப்பொழுது
அவருடைய சீடர்கள், அவரிடம், ''ரபீ*
இவன் குருடனாய்ப் பிறந்ததற்கு யார்
செய்த பாவம் காரணம்? இவன் செய்
ததா, இவனுடைய பெற்றோர் செய்ததா?''
என்று கேட்டார்கள். 3 அதற்கு இயேசு,
''அது இவன் செய்த பாவமுமன்று, இவ
னுடைய பெற்றோர் செய்த பாவமுமன்று.
கடவுளின் நற்செயல்கள் இப்போது இவ
னிடம் விளங்கும்பொருட்டே இவன் இப்
படியிருக்கிறான். 4 பகல் இருக்கும்போதே
என்னை அனுப்பினவருடைய செயல்களை
நாம்† செய்தாக வேண்டும்; இரவு வரு
கிறது; அப்போது ஒருவராலும் வேலை
செய்ய இயலாது. 5 இப்பொழுது நான்
உலகத்தில் இருப்பதால் உலகத்திற்கு ஒளி
யாயிருக்கிறேன்'' என்று சொன்னார்.
6 இப்படிச் சொன்னபின் அவர் தரையில்
உமிழ்ந்து, உமிழ் நீரினால் சேறு உண்
டாக்கி, அந்தச் சேற்றைக் குருடனுடைய
கண்களின்மேல் பூசினார். 7 பிறகு அவ
னிடம், ''சீலோவாம் குளத்துக்குப் போய்க்
கண்களைக் கழுவு'' என்று சொன்னார்.
(சீலோவாம் என்பதற்கு அனுப்பப்பட்ட
வர் என்பது பொருள்.) அவன் போய்க்
கழுவிப் பார்வை பெற்றுத் திரும்பினான்.

8 அக்கம்பக்கத்தில் உள்ளவர்களும், அவ
னைப் பிச்சைக்காரனாய் அதற்கு முன்
பார்த்திருந்தவர்களும் அவனைக் கண்ட
போது, ''இவன்தானே இங்கே உட்
கார்ந்து பிச்சை கேட்டுக்கொண்டிருந்
தவன்?'' என்றார்கள். 9 சிலர், ''இவன்
தான்'' என்றனர். வேறு சிலரோ,
''இல்லை, இவன் அவனைப்போல இருக்
கிறான்'' என்றனர். அப்பொழுது அந்த
மனிதன், ''நானே அவன்'' என்று
சொன்னான். 10 அவர்கள், ''அப்படியா
னால் உன் கண் எப்படிப் பார்வை பெற்
றது?'' என்று கேட்டார்கள். 11 அதற்கு
அவன், ''இயேசு எனப்பட்ட ஒருவர்
சேறுண்டாக்கி, அதை என் கண்களின்
மேல் பூசி, 'சீலோவாமுக்குப் போய்க்
கண்களைக் கழுவு' என்றார். நான் போய்க்
கழுவினேன், பார்வை கிடைத்தது''
என்று சொன்னான். 12 அப்பொழுது அவர்
கள் அவனிடம், ''அவர் எங்கே இருக்கி
றார்?'' என்று கேட்க, அவன், ''எனக்
குத் தெரியாது'' என்றான்.

* போதகரே.
† 'நான்' என்பது ஒருசில பிரதிகளின் பாடம்.
9:5 மத். 5:14; யோ. 8:12. 9:7 2 அர. 5:10

### பரிசேயர் நடத்திய விசாரணை

13 முன்பு குருடனாயிருந்த அவனை அவர்
கள் பரிசேயரிடம் கூட்டிக்கொண்டு போனார்
கள். 14 இயேசு சேறுண்டாக்கி அவனு
டைய கண் பார்வை பெறும்படி செய்த
நாள் ஓர் ஓய்வுநாள். 15 ஆகையால் பரி
சேயரும் அவனைப் பார்த்து, ''எப்படிப்
பார்வை பெற்றாய்?'' என்ற கேள்வி
யையே கேட்டனர். அதற்கு அவன்,
''அவர் என் கண்ணின்மேல் சேற்றைப்
பூசினார், நான் கண்களைக் கழுவினேன்,
இப்பொழுது பார்வை பெற்றவனாயிருக்
கிறேன்'' என்றான் 16 அப்பொழுது பரி
சேயருள் சிலர், ''அந்த ஆள் ஓய்வுநாள்
விதியைக் கடைப்பிடிக்காதவன்; ஆகை
யால் அவன் கடவுளிடமிருந்து வந்த மனி
தனாய் இருக்க முடியாது'' என்றனர்.வேறு
சிலரோ, ''பாவியாயிருக்கும் ஒரு மனித
னால் இப்படிப்பட்ட அரிய செயல்களை
எப்படிச் செய்ய இயலும்?'' என்றனர்.
அவர்களிடையே இவ்வாறு பிரிவினை ஏற்
பட்டது. 17 ஆகையால் அவர்கள் மறு
படியும் அந்தக் குருடனைப் பார்த்து,
''உன் கண்களுக்குப் பார்வை கொடுத்த
அந்த ஆளைக் குறித்து நீ என்ன சொல்லு
கிறாய்?'' என்று கேட்டார்கள். அவன்,
''அவர் இறைவாக்குரைக்கும் ஒரு
பெரியார்'' என்று சொன்னான்.

18 அந்த யூதர், அவன் முன்பு குருட
னாயிருந்து பிறகு பார்வை பெற்றான்
என்பதை நம்ப மனமில்லாமல், பார்வை
பெற்றவனுடைய பெற்றோரை வரவழைத்து
அவர்களிடம், 19 ''இவன் உங்களுடைய
மகன்தானா? இவன் குருடனாய்ப் பிறந்
தான் என்றா சொல்லுகிறீர்கள்? அப்படி
யானால், இவனுக்கு இப்போது எப்படிக்
கண் தெரிகிறது?'' என்று கேட்டனர்.
20 அதற்கு அவனுடைய பெற்றோர்,
''இவன் எங்களுடைய மகன்தான். இவன்
குருடனாய்ப் பிறந்தான், இதுதான் எங்
களுக்குத் தெரியும். 21 ஆனால், இவனுக்கு
இப்போது எப்படிக் கண் தெரிகிறதென்
பதோ, இவனுடைய கண்களுக்குப் பார்வை
கொடுத்தது யாரென்பதோ எங்களுக்குத்
தெரியாது. இவனையே கேட்டுக்கொள்ளுங்
கள். இவன் வயதுவந்தவன், தனக்காகத்
தானே பேசக்கூடியவன்'' என்று கூறினர்.
22 யூதத் தலைவருக்குப் பயந்ததனால் அவ
னுடைய பெற்றோர் இப்படிக் கூறினர்.
ஏனெனில், எவனாவது அவரை மேசியா
என்று ஒப்புக்கொள்வானானால், அவனைத்
தங்கள் சபையிலிருந்து விலக்கிவிடுவ
தென்று அந்த யூதர்கள் ஏற்கெனவே தீர்
மானம் செய்திருந்தார்கள். 23 அதனாலே
தான் அவனுடைய பெற்றோர், ''அவன்
வயதுவந்தவன், அவனையே கேட்டுக்கொள்
ளுங்கள்'' என்று சொல்லிவிட்டனர்.

24 ஆகவே, குருடனாயிருந்த அந்த மனி
தனை யூதர்கள் மீண்டும் அழைத்து, ''நீ
கடவுளுக்கு மாட்சிமை அளி. இந்த மனி
தன் பாவி என்பது எங்களுக்குத் தெரி
யும்'' என்றார்கள். 25 அதற்கு அவன்,
''அவர் பாவியா, இல்லையா என்பது
எனக்குத் தெரியாது; ஒன்றுதான் எனக்
குத் தெரியும். நான் குருடனாயிருந்தேன்,
இப்போது பார்க்கிறேன்'' என்று சொன்
னான். 26 அவர்கள் அவனிடம், ''அவன்
உனக்கு என்ன செய்தான், உன்
கண்களுக்கு எப்படிப் பார்வை கொடுத்
தான்?'' என்று கேட்டார்கள். 27 அதற்கு
அவன், ''நான் ஏற்கெனவே உங்களுக்குச்
சொன்னேன், நீங்களோ அதைச்
செவிகொடுத்துக் கேட்கவில்லை; ஏன்
அதை மறுபடியும் கேட்க விரும்புகிறீர்
கள்? நீங்களும் அவருடைய சீடராக விரும்
புகிறீர்களோ?'' என்றுகேட்டான். 28 அதன்
பின் அவர்கள் அவனை வைதுவிட்டு,
''நீதான் அவனுடைய சீடன், நாங்
கள் மோசேயின் சீடர்கள். 29 மோசே
யோடு கடவுள் பேசினார் என்பது எங்
களுக்குத் தெரியும். இவன் எங்கிருந்து
வந்தான் என்பது எங்களுக்குத் தெரி
யாது'' என்று சொன்னார்கள். 30 அதற்கு
அந்த மனிதன், ''என்ன ஆச்சரியம்!
அவர் என் கண்களுக்குப் பார்வை அளித்
திருக்கிறார்; என்றாலும், அவர் எங்கிருந்து
வந்தாரென்பது உங்களுக்குத் தெரியவில்
லையே! 31 பாவிகளின் வேண்டுதலுக்குக்
கடவுள் செவிசாய்ப்பதில்லை என்பது நமக்
குத் தெரியும்; ஆனால், ஒருவன் தெய்வ
பக்தியுள்ளவனாயிருந்து, அவருடைய திரு
வுளத்தை நிறைவேற்றுவானானால், அவ
னுக்கு அவர் செவிசாய்ப்பார். 32 பிறவி
யிலேயே குருடனாயிருந்த ஒருவனுடைய
கண்களுக்கு யாரும் பார்வை அளித்த
தாக உலகம் உண்டானது முதல் எவரும்
கேள்விப்பட்டதே இல்லை. 33 அவர் கட
வுளிடமிருந்து வந்திருந்தாலன்றி அவரால்
ஒன்றும் செய்ய இயலாது'' என்று சொன்
னான். 34 அதைக் கேட்டதும் அவர்கள்,
''பிறந்தது முதல் பாவத்தில் மூழ்கிக்
கிடக்கும் நீயா எங்களுக்குப் போதிக்க
வந்தாய்!'' என்று சொல்லி அவனைத்
துரத்திவிட்டார்கள்.

### ஆன்மீகக் குருட்டுத்தனமும் அது நீங்கப்பெறுதலும்

35 அவர்கள் அவனைத் துரத்திவிட்டார்
கள் என்பதை இயேசு கேள்விப்பட்டார்;
பிறகு அவர் அவனைக் கண்டுபிடித்த

9:31 நீதி. 15:29.

போது, ''மனுமைந்தரிடம் * உனக்கு நம்
பிக்கை உண்டா?'' என்று கேட்டார்.
36 அதற்கு அவன், ''ஐயா, அவர்
யாரென்பதைச் சொல்லும்; அப்பொழுது
அவரிடம் நம்பிக்கை கொள்கிறேன்''
என்ருன். 37 இயேசு அவனிடம் ''நீ அவ
ரைப் பார்த்திருக்கிருய். அவரே இப்
போது உன்னேடு பேசிக்கொண்டிருக்
கிருர்'' என்று சொன்னுர். 38 உடனே
அவன், ''நம்புகிறேன், ஆண்டவரே''
என்று சொல்லி அவரை வணங்கினுன்.
39 அப்பொழுது இயேசு, ''பார்வை இல்
லாதவர்கள் பார்க்கும்படியும், பார்வை
உள்ளவர்கள் குருடராகும்படியும் தீர்ப்
பளிக்கவே நான் இந்த உலகத்துக்கு
வந்தேன்'' என்ருர்.

40 அவரோடிருந்த பரிசேயர் இதைக்
கேட்டபோது, ''அப்படியானுல் நாங்
களும் குருடர்களா?'' என்று கேட்டனர்.
41 இயேசு அவர்களிடம், ''நீங்கள் குரு
டர்களாயிருந்தால் உங்கள்மீது பாவப்
பழி சுமராது. ஆனுல், 'எங்களுக்குக் கண்
தெரிகிறது' என்று நீங்கள் இப்போது
சொல்லுகிறபடியால், உங்கள் பாவப்பழி
உங்களை விட்டு நீங்காமலிருக்கிறது'' என்ருர்.

### ஆட்டுத்தொழுவமாகிய உபமானம்

10 ''மிகவும் உறுதியாக உங்களுக்குச்
சொல்லுகிறேன்: எவனுவது ஆட்
டுத் தொழுவம் ஒன்றினுள் வாயில் வழி
யாகச் செல்லாமல் வேறு வழியாக ஏறிச்செல்
வானுனுல, அவன் திருடனுய் அல்லது
கொள்ளைக்காரனுய் இருப்பான். 2 வாயில்
வழியாக உள்ளே செல்லுகிறவனே ஆடு
களின் ஆயன். 3 காவற்காரன் அவனுக்குக்
கதவைத் திறப்பான். ஆடுகள் அவனு
டைய குரலுக்குச் செவிசாய்க்கும். அவன்
தன் சொந்த ஆடுகளைப் பெயர் சொல்
லிக் கூப்பிட்டு, அவற்றை வெளியே நடத்
திச் செல்வான். 4 அவன் தன்னுடைய
எல்லா ஆடுகளையும் வெளியே ஓட்டிவந்த
பின், அவற்றிற்குமுன் போவான்; ஆடு
களும் அவன் பின்னே செல்லும். ஏனெ
னில், அவற்றிற்கு அவனது குரல் தெரி
யும். 5 வேற்ருள் ஒருவன் பின்னே அவை
செல்வதில்லை; அவை அவனை விட்டு ஓடிப்
போகும்; ஏனென்ருல், வேற்ருளின் குரல்
அவற்றிற்குத் தெரியாது.'' 6 இயேசு
அவர்களுக்கு இந்த உபமானத்தைச் சொன்
னுர். ஆனுல், அவர்களோ அவர் தங்
களுக்குச் சொன்னதன் கருத்தைப் புரிந்து
கொள்ளவில்லை.

### தொழுவத்தின் வாயில் இயேசுவே

7 ஆகையால் இயேசு மறுபடியும் அவர்
களைப் பார்த்து, ''மிகவும் உறுதியாக
உங்களுக்குச் சொல்லுகிறேன்: தொழு
வத்தின் வாயில் நானே. 8 எனக்கு முன்பு
வந்தவர்களெல்லாரும் திருடர்கள், அவர்
கள் கொள்ளைக்காரர்கள். அவர்களுக்கு
ஆடுகள் செவிசாய்க்கவில்லை. 9 நானே
வாயில்; என்னை வழியாகக் கொண்டு ஒரு
வன் உட்சென்ருல் அவனை நான் காத்த
ருளுவேன். அவன் உள்ளேயும் வருவான்,
வெளியேயும் செல்வான்; சென்று மேய்ச்
சலைக் காண்பான். 10 திருடன் ஆடுகளைத்
திருடுவதற்கும் கொல்வதற்கும் அழிப்ப
தற்குமே வருவான். நானே அவை என்று
முள்ள மெய்வாழ்வைப் பெறும் பொருட்டும்
அதை முழு நிறைவாகப் பெறும் பொருட்
டும் வந்திருக்கிறேன்.

### மெய்யான ஆயன் இயேசுவே

11 ''மெய்யான ஆயன் நானே. மெய்
யான ஆயன் ஆடுகளுக்காகத் தன் உயி
ரையும் கொடுப்பான். 12 கூலிக்கு மேய்ப்
பவனே ஓநாய் வரும்போது அதைக்
கண்டு, ஆடுகளை விட்டுவிட்டு ஓடிப்
போவான்; ஏனெனில், அவன் உண்மை
யான ஆயனுமல்ல; ஆடுகளுக்குச் சொந்தக்
காரனுமல்ல ஓநாய் ஆடுகளை இழுத்
துச் சென்று அவற்றைச் சிதறடிக்கும்.
13 அவன் கூலிக்கு மேய்ப்பவனுய் இருப்
பதால் ஓடிப்போகிருன். ஆடுகளைப்பற்றி
அவனுக்கு அக்கறை இல்லை. 14 நானே மெய்
யான ஆயன். விண்ணகத் தந்தை
என்னை அறிந்திருக்கிறதுபோலவும், நான்
விண்ணகத் தந்தையை அறிந்திருக்கிறது
போலவும், 15 நான் என்னுடைய ஆடுகளை
அறிந்திருக்கிறேன். அவையும் என்னை
அறிந்திருக்கின்றன. என் ஆடுகளுக்காக
என் உயிரையும் கொடுப்பேன். 16 எனக்
குச் சொந்தமான வேறு ஆடுகள் உண்டு.
அவை இந்தத் தொழுவத்தில் இல்லை.
அவற்றையும் நான் நடத்திக்கொண்டு
வர வேண்டும். அவை என் குரலுக்குச்
செவிசாய்க்கும். அப்பொழுது எல்லாம்
ஒரே மந்தையாய் இருக்கும்; அதற்கு
ஆயனும் ஒருவனே. 17 நான் என் உயி
ரைக் கொடுக்கிறபடியால் விண்ணகத் தந்
தையார் என்னிடம் அன்புகொள்ளுகிருர்.
18 நான் அதை மீண்டும் பெற்றுக்
கொள்ளும்படி கொடுக்கிறேன். வேறெரு
ருவன் அதை என்னிடமிருந்து பறிப்ப
தில்லை; நானுகவேதான் அதைக் கொடுக்
கிறேன். அதைக் கொடுக்கவும் எனக்கு

* 'கடவுளின் மைந்தர்' என்பதும் பாடம்.

**9:41** மத். 23:16, 17. **10:4** யாத். 13:22, **10:9** சங். 23:1—3, **10:10** யோ 10:28. **10:11** எசே. 34:1—32. எபி. 13:20. **10:12** எரே. 23:1—3. சக. 11:17 **10:15** மத். 11:27; லூக். 10:22. **10:16** எசே. 37:24; எபே. 2:14, 15:4:4, 5.

அதிகாரம் உண்டு; அதை மீண்டும் பெற்றுக்
கொள்ளவும் எனக்கு அதிகாரம் உண்டு.
இவ்வாறு செய்யும்படிதான் என் தந்தை
யார் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார்''
என்றார்.

19 இந்த வார்த்தைகள் காரணமாக
யூதர்களிடையே மறுபடியும் பிரிவினை ஏற்
பட்டது. 20 அவர்களுள் பலர், ''இவனை
ஒரு பேய் பிடித்திருக்கிறது, ஏதேதோ
பிதற்றுகிறான்; இவன் சொல்வதை ஏன்
கேட்டுக்கொண்டிருக்கிறீர்கள்?'' என்றனர்.
21 வேறு சிலர், ''இந்த வார்த்தைகள்
பேய்பிடித்த ஒருவன் சொல்லக்கூடியவை
அல்ல. குருடருடைய கண்களுக்குப் பார்வை
கொடுக்கப் பேயால் இயலுமா?'' என்றனர்.

## யூதர்கள் இயேசுவை ஏற்க மறுத்தல்

22 அப்பொழுது எருசலேமில் பீட
அர்ப்பணிப்புப் பண்டிகை நடைபெற்றுக்
கொண்டிருந்தது; அது மாரிக்காலம்.
23 இயேசு திருக்கோவிலில் சாலொமோன்
மண்டபத்தில் உலாவிக்கொண்டிருந்தார்.
24 யூதர்கள் அவரைச் சூழ்ந்துகொண்டு,
''எவ்வளவு காலம் இப்படி எங்களை நீர்
காக்க வைப்பீர்? நீர் மேசியாவாயிருந்
தால் அதை எங்களுக்குத் தெளிவாகச்
சொல்லிவிடும்'' என்றார்கள். 25 அதற்கு
இயேசு, ''நான் உங்களுக்குச் சொல்லி
யிருக்கிறேன், ஆனால் நீங்கள் நம்பாம
லிருக்கிறீர்கள். என் தந்தையாரின் பெய
ரால் நான் செய்கிற செயல்களே என்
னைக் குறித்துச் சாட்சி கூறுகின்றன. என்
றாலும், நீங்கள் நம்பாமலிருக்கிறீர்கள்.
26 ஏனென்றால், நீங்கள் என் மந்தை
யைச் சேராத ஆடுகள். 27 என் ஆடுகள்
என் குரலுக்குச் செவிசாய்க்கும். நான்
அவற்றை அறிந்திருக்கிறேன், அவை என்
னைப் பின்பற்றி வருகின்றன. 28 நான்
அவற்றிற்கு என்றுமுள்ள மெய்வாழ்வைக்
கொடுக்கிறேன். அவை ஒருபோதும் அழியப்
போவதில்லை; எவனும் அவற்றை என்
கையிலிருந்து பறித்துக்கொள்ளப்போவது
மில்லை. 29 அவற்றை எனக்கு அருளிய
என் தந்தையார் எல்லாரையும்விடப் பெரி
யவர்*. அவற்றை அவர் கையிலிருந்து
பறித்துக்கொள்ள எவராலும் இயலாது.
30 நானும் என் தந்தையாரும் ஒன்றே''
என்றார்.

31 அப்பொழுது அவரைக் கல்லாலடிப்
பதற்காக யூதர்கள் மறுபடியும் கல்லை
எடுத்தார்கள். 32 இயேசு அதைக் கண்டு,
''விண்ணகத் தந்தையினுடைய பல நல்ல
செயல்களை உங்களுக்குச் செய்து காட்டி
யிருக்கிறேன். அவற்றுள் எந்தச் செயலுக்
காக என்னைக் கல்லாலடிக்கப் பார்க்கிறீர்
கள்?'' என்று கேட்டார். 33 அதற்கு
யூதர்கள், ''நல்ல செயல் எதற்காகவும்
அன்று, தெய்வ நிந்தனைக்காகக் கல்லா
லடிக்கப்போகிறோம். நீ ஒரு மனிதனா
யிருந்தும் உன்னைக் கடவுளாக்கிக்கொள்
ளுகிறாய்'' என்று சொன்னார்கள்.
34 இயேசு அவர்களை நோக்கி, ''உங்கள்
நீதிச்சட்ட நூலில், 'நீங்கள் தேவர்கள்
எனச் சொன்னேன்' என்று எழுதியிருக்
கிறதல்லவா? 35 கடவுளின் வார்த்தை
யாருக்கு உரைக்கப்பட்டதோ அவர்களை
அவர் தேவர்கள் என்று சொல்லி அழைத்
திருக்கிறார். வேதம் கூறுவதைத் தள்ளி
விட இயலாது. 36 அப்படியானால், விண்
ணகத் தந்தையார் தமக்கு உரிமையாக்
கிக்கொண்டு உலகத்திற்கு அனுப்பியிருக்
கிற என்னைக் கடவுளின் மைந்தர் என்று
நான் சொன்னதால், 'தெய்வ நிந்தனை
கூறுகிறாய்' என்று நீங்கள் சொல்லலாமா?
37 என் தந்தையாரின் செயல்களை நான்
செய்யவில்லையென்றால், நீங்கள் என்னை
நம்ப வேண்டாம். 38 ஆனால், அவற்றை
நான் செய்கிறேனென்றால், என்னை நீங்கள்
நம்பாமற்போனாலும், அந்தச் செயல்களை
யாவது நம்புங்கள்; அதன்மூலம் விண்ணகத்
தந்தையார் எனக்குள்ளும் நான்
விண்ணகத் தந்தையார்க்குள்ளும் இருக்
கிறதைக் கண்டறிந்துகொள்வீர்கள்''
என்று சொன்னார். 39 அதனால் அவர்கள்
அவரைப் பிடித்துக்கொண்டுபோக மறு
படியும் முயன்றார்கள். அவரோ அவர்கள்
கையில் அகப்படாமல் விலகிவிட்டார்.

40 அவர் மறுபடியும் யோர்தான் ஆற்
றைக் கடந்து, யோவான் முதலில் திரு
முழுக்குக் கொடுத்துவந்த இடத்திற்குப்
போய் அங்கே தங்கினார். பலர் அவர்
இருந்த இடத்திற்கு வந்தனர். 41 அவர்
கள், ''யோவான் அரிய செயல் ஒன்றை
யும் செய்யவில்லை; ஆனால், யோவான்
இவரைப்பற்றிச் சொன்னதெல்லாம் உண்
மையே'' என்று பேசிக்கொண்டார்கள்.
42 அங்கே பலர் அவரிடம் நம்பிக்கை
கொண்டனர்.

## இலாசருவின் மரணம்

11 பெத்தானியா என்னும் ஊரில்
வாழ்ந்துவந்த இலாசரு என்பவன்
நோயால் வருந்திக்கொண்டிருந்தான்; அவ்
வூரிலேயே மரியாளும், அவளுடைய உடன்

* 'என் தந்தையார் எனக்கு அளித்தவை, எல்லாவற்றையும்விடப் பெரியவை' என்பதும் பாடம்.
10:26 1 கொரி. 2:14. 10:29 உபா. 32:39; ஏசா. 43:13. 10:33 இலே. 24:16. 10:34 சங். 82:6.
10:35 எபி. 1:1. 10:38 யோ. 14:11; 17:21. 10:39 லூக். 4:30; யோ. 8:39. 10:40 மத். 19:1;
மாற். 10:1 யோ. 1:28. 11:1, 2 லூக். 10:38, 39; யோ. 12:1—8.

பிறந்தாளாகிய மார்த்தாளும் வாழ்ந்து
வந்தார்கள். 2 ஆண்டவருக்கு நறுமணத்
தைலம் பூசி, தன் கூந்தலினால் அவரு
டைய பாதங்களைத் துடைத்தவள் இந்த
மரியாளே. நோயால் வருந்திய இலாசரு
இவளுடைய உடன்பிறந்தான். 3 அந்தச்
சகோதரிகள் இயேசுவினிடம் ஆளனுப்பி,
''ஆண்டவரே, உம்முடைய அன்பார்ந்த
நண்பன் நோயால் வருந்திக்கொண்டிருக்
கிறான்'' என்று தெரிவித்தார்கள். 4 அவர்
அதைக் கேட்டதும், ''இந்த நோயினால்
ஏற்படப்போகும் முடிவு அவனது மரண
மன்று; இது கடவுளின் மாட்சிமை விளங்
குவதற்கும், இதன்மூலம் கடவுளின்
மைந்தர் மாட்சிமை பெறுவதற்கும் வந்
திருக்கிறது'' என்று சொன்னார். 5 இயேசு
மார்த்தாளிடமும் அவளுடைய உடன்
பிறந்தாளிடமும், இலாசருவிடமும் அன்பு
கொண்டிருந்தார். 6 அவன் நோயால்
வருந்திக்கொண்டிருக்கிறான் என்பதை
அவர் கேள்விப்பட்ட பிறகு அங்கேயே
இரண்டு நாள் தங்கியபின், 7 சீடரைப்
பார்த்து, ''நாம் யூதேயாவுக்குத் திரும்
பிப் போவோம், வாருங்கள்'' என்று
சொன்னார். 8 அதற்குச் சீடர்கள், ''ரபீ,
இப்போதுதானே யூதர்கள் உம்மைக் கல்லா
லடிக்க முயன்றார்கள்? மறுபடியுமா நீர்
அங்கே போகிறீர்?'' என்று கேட்டார்கள்.
9 அதற்கு இயேசு, ''பகலொளி பன்னி
ரண்டு மணி நேரம் வீசுமன்றோ? பகலில்
நடக்கும் ஒருவன் உலகத்தின் ஒளியைக்
கண்டு நடப்பதால் இடறிவிழ மாட்டான்:
10 இரவில் நடப்பவனே இடறிவிழுவான்;
ஏனென்றால், அவனுள் அந்த ஒளி இல்லை''
என்று சொன்னார். 11 இப்படிச் சொன்ன
பின் அவர் அவர்களிடம், ''நம்முடைய
நண்பன் இலாசரு தூங்குகிறான்; நான்
அவனை எழுப்புவதற்காகப் போகிறேன்''
என்றார். 12 அதற்குச் சீடர்கள், ''ஆண்
டவரே, அவன் தூங்குவதாயிருந்தால்,
பிழைத்துக்கொள்ளுவான்'' என்றார்கள்.
13 இயேசு அவன் இறந்ததைக் குறித்து
இவ்வாறு பேசியிருக்க, அவர்கள் அவன்
தூங்கி இளைப்பாறுகிறான் என்று அவர்
சொன்னதாக நினைத்துக்கொண்டார்கள்.
14 அப்பொழுது இயேசு, ''இலாசரு
இறந்துபோனான்'' என்று வெளிப்படை
யாகச் சொல்லிவிட்டு, 15 ''நான் அங்கே
இல்லாமற்போனதால், நீங்கள் என்னிடம்
நம்பிக்கை கொள்வதற்கு உங்களுக்கு ஒரு
வாய்ப்புக் கிடைக்கப்போகிறது. உங்களுக்
குக் கிடைக்கப்போகும் இந்த நன்மைக்
காக நான் மகிழ்ச்சியடைகிறேன். வாருங்
கள்; அவனிடம் போவோம்'' என்றார்.
16 திதிமு என்று வழங்கப்பட்ட தோமா
அதைக் கேட்டுத் தம் உடன்சீடரைப்
பார்த்து, ''அவரோடு சாகிறதற்கு நாமும்
போவோம் வாருங்கள்'' என்று சொன்னார்.

### உயிர்த்தெழுதலும் மெய்வாழ்வும் இயேசுவே

17 இயேசு போய்க்கொண்டிருக்கையில்,
இலாசருவைக் கல்லறையில் வைத்து
நான்கு நாள் ஆயிற்று என்பது அவருக்குத்
தெரியவந்தது. 18 பெத்தானியா
எருசலேமுக்குப் பக்கத்தில் ஏறத்தாழ
இரண்டு மைல் தொலைவிலிருந்தது.
19 மார்த்தாள், மரியாள் என்பவர்களின்
உடன்பிறந்தான் இறந்துபோனதால் அவர்
களுக்கு ஆறுதல் சொல்ல யூதர் பலர்
அங்கே வந்திருந்தனர். 20 இயேசு வந்து
கொண்டிருக்கிறார் என்று கேள்விப்பட்ட
தும் மார்த்தாள் அவரை எதிர்கொள்ளச்
சென்றாள்; மரியாள் வீட்டிலேயே தங்கி
விட்டாள். 21 மார்த்தாள் இயேசுவினி
டம் வந்து, ''ஆண்டவரே, நீர் இங்கே
இருந்திருந்தால் என் தம்பி செத்திருக்க
மாட்டான். 22 இப்போதுங்கூட நீர் கட
வுளிடம் கேட்கிறவை எவையோ அவற்றை
யெல்லாம் கடவுள் உமக்கு அருளு
வார் என்பது எனக்குத் தெரியும்'' என்று
சொன்னாள். 23 இயேசு அவளிடம், ''உன்
தம்பி மீண்டும் உயிர்பெற்றெழுவான்''
என்றார். 24 அதற்கு மார்த்தாள், ''கடைசி
நாளில் நடைபெறும் உயிர்த்தெழுதலின்
போது அவனும் உயிர்பெற்றெழுவான் என்
பது எனக்குத் தெரியும்''என்று சொன்னாள்.
25 இயேசு அவளிடம், ''உயிர்த்தெழுத
லும் நானே; மெய்வாழ்வும் நானே; என்
னிடம் நம்பிக்கை கொண்டிருப்பவன்
இறந்துவிட்டாலும் மெய்வாழ்வை உடை
வனாய் இருப்பான். 26 உயிரோடிருக்கும்
ஒருவன் என்னிடம் நம்பிக்கை கொண்
டால், அவன் என்றைக்குமே இறக்க மாட்
டான். இதை நம்புகிறாயா?'' என்று கேட்
டார். 27 அதற்கு அவள், ''நீரே மேசியா,
கடவுளின் மைந்தர், இவ்வுலகில் தோன்று
வாரென எதிர்பார்க்கப்பட்டவர் என்
பதை நம்புகிறேன்'' என்று சொன்னாள்.

### இயேசு கண்ணீர் சிந்துதல்

28 இப்படிச் சொன்னபின்பு அவள்
தன் உடன்பிறந்தாளாகிய மரியாளிடம்
போய் அவளைத் தனியாக அழைத்து,
''போதகர் வந்திருக்கிறார், உன்னைஅழைக்
கிறார்'' என்று சொன்னாள். 29 அவள்
அதைக் கேட்டவுடனே புறப்பட்டு அவரி
டம் சென்றாள். 30 இயேசு அதுவரை
யிலும் ஊருக்குள் வரவில்லை; மார்த்தாள்
அவரைக் கண்டு பேசிய இடத்திலேயே
இருந்தார். 31 வீட்டில் மரியாளோ

**11:9** யோ. 8:12. **11:13** மத். 9:24.

டிருந்து அவளுக்கு ஆறுதல் சொல்லிக்
கொண்டிருந்த யூதர்கள் அவள் புறப்
பட்டு விரைவாக வெளியே போவதைக்
கண்டு, அவள் கல்லறைக்கு அழுவதற்
காகப் போகிறாள் என்று நினைத்து, அவள்
பின்னே சென்றார்கள். 32 மரியாள் இயேசு
இருந்த இடத்துக்கு வந்து, அவரைக்
கண்டு, அவர் காலடியில் விழுந்து, ''ஆண்
டவரே, நீர் இங்கே இருந்திருந்தால் என்
தம்பி செத்திருக்க மாட்டான்'' என்றாள்.
33 அவள் அழுவதையும், அவளோடு
வந்த யூதர் அழுவதையும் இயேசு கண்ட
போது, உள்ளந் துடிதுடித்து, தமக்
குள்ளே பெரிதும் கலக்கமுற்று, 34''அவனை
எங்கே வைத்திருக்கிறீர்கள்?'' என்று
கேட்டார். அவர்கள், ''வந்து பாரும்
ஆண்டவரே'' என்றார்கள். 35 அதைக்
கேட்டு இயேசு கண்ணீர் விட்டழுதார்.
36 யூதர்கள் அதைக் கண்டு, ''இவர்
அவனை எவ்வளவு நேசித்து வந்திருக்கிறார்
பாருங்கள்'' என்று பேசிக்கொண்டார்
கள். 37 அவர்களுள் சிலர், ''குருடனு
டைய கண்களுக்குப் பார்வை அளித்த
இவர், இவன் சாகாமலிருக்கவும் செய்
திருக்கக்கூடாதா?'' என்றனர்.

## இலாசரு உயிர்பெறுதல்

38 மறுபடியும் இயேசுவின் உள்ளம்
துடித்தது. அவர் கல்லறையண்டை சென்
றார். அது ஒரு குகை; அதை ஒரு கல்
மூடியிருந்தது. 39 இயேசு, ''கல்லை எடுத்து
விடுங்கள்'' என்றார். இறந்துபோனவனு
டைய உடன்பிறந்தாளாகிய மார்த்தாள்
அவரிடம், ''ஆண்டவரே, நான்கு நாளாகி
விட்டன, இப்போது நாறுமே'' என்றாள்.
40 இயேசு, ''உனக்கு நம்பிக்கையிருந்
தால், நீ கடவுளின் மாட்சிமையைக் காண்
பாய் என்று நான் உனக்குச் சொல்லி
யிருக்கிறேனல்லவா?'' என்றார். 41 அப்
பொழுது கல்லை எடுத்துவிட்டார்கள்.
இயேசு அண்ணாந்து பார்த்து, ''தந்
தையே, நீர் எனக்குச் செவிசாய்த்ததற்
காக உமக்கு நன்றி செலுத்துகிறேன். 42 நீர்
எப்போதும் எனக்குச் செவிசாய்க்கிறீர்
என்பது எனக்குத் தெரியும். என்றாலும்,
நீரே என்னை அனுப்பினீர் என்பதைச்
சூழ நிற்கும் இம்மக்கள் நம்ப வேண்டு
மென்று அவர்களுக்காகவே இதைச்
சொல்லுகிறேன்'' என்றார். 43 இவ்வாறு
சொன்னபின் அவர் உரத்த குரலில்,
''இலாசருவே, வெளியே வா'' என்று
கூப்பிட்டார். 44 இறந்தவன் வெளியே
வந்தான். அவனுடைய கால்கள் மேலும்,
கைகள் மேலும் பிரேதத் துணிகள் சுற்றிக்
கட்டப்பட்டிருந்தன. முகத்திலும் ஒரு
துணி சுற்றியிருந்தது. இயேசு அவர்களி
டம், ''கட்டுகளை அவிழ்த்து இவனைப்
போகவிடுங்கள்'' என்று சொன்னார்.

## இயேசுவைக் கொன்றுவிடச் சதித்திட்டம்

*(மத். 26;1–5; மாற். 14:1–2; லூக். 22;1,2)*

45 மரியாளைப் பார்க்க வந்திருந்த யூத
ருள் பலர் இயேசு செய்தவற்றைக் கண்ட
போது அவரிடம் நம்பிக்கை கொண்டனர்.
46 சிலரோ புறப்பட்டுப் பரிசேய
ரிடம் போய் இயேசு செய்தவற்றை அவர்
களுக்குத் தெரிவித்தனர். 47 அதன்பேரில்
தலைமை ஆசாரியர்களும் பரிசேயரும் தலை
மைச் சங்கத்தைக் கூட்டி, ''இந்த மனி
தன் பல அற்புதச் செயல்களைச் செய்து
கொண்டிருக்கிறான்; நாம் சும்மா இருக்
கிறோமே! 48 இவனை இப்படியே விட்டு
விட்டால் எல்லாரும் இவனிடம் நம்பிக்கை
கொள்வர். அப்பொழுது ரோமர்கள்
வந்து நம்முடைய திருத்தலத்தையும்,
இனத்தையும் கைப்பற்றி அழித்துவிடுவார்
கள்'' என்று சொன்னார்கள். 49 காய்பா
என்பவர் அவர்களுள் ஒருவர். அவர் அந்த
ஆண்டில் தலைமை ஆசாரியராய் இருந்
தார். அவர் அவர்களைப் பார்த்து, ''உங்
களுக்கு ஒன்றுமே தெரியவில்லை. 50 ஓர்
இனம் முழுவதும் அழிந்துபோவதைவிட
மக்கள் பொருட்டு ஒரே ஒரு மனிதன்
சாவது உங்களுக்கு நலம் என்பதைக்கூட
நீங்கள் சிந்திக்காமற்போனீர்கள்'' என்று
சொன்னார். 51 இதை அவர் தாமாக
யோசித்துச் சொல்லவில்லை. அவர் அந்த
ஆண்டில் தலைமை ஆசாரியராய் இருந்த
தால், ''இயேசு யூத மக்களுக்காக மரண
மடையப்போகிறார். 52 அவர் அந்த மக்க
ளுக்காக மட்டுமன்றி, சிதறலாக வாழ்
கிற கடவுளின் பிள்ளைகளை ஒன்றுசேர்த்து
ஒரே கூட்டமாக்க வேண்டுமென்று இவர்
களுக்காகவும் மரணமடையப்போகிறார்''
என்பதை இறைவாக்காக உரைத்தார்.
53 ஆகவே, அவரைக் கொன்றுவிட
வேண்டும் என்பதே அன்றுமுதல் அவர்
களது தீர்மானமாய் இருந்தது.

54 ஆகையால் இயேசு அதன்பின் யூத
ரிடையே வெளிப்படையாக நடமாட
வில்லை; அவ்விடம் விட்டுப் புறப்பட்டு
அவர் பாலைநிலத்துக்கு அருகிலுள்ள நாட்
டில் எப்பிராயீம் என்னும் ஊருக்குப்
போய் அங்கே தம்முடைய சீடருடன்
தங்கியிருந்தார்.

55 யூதரின் பஸ்காப் பண்டிகையும்
நெருங்கி வந்தது. பண்டிகைக்கு முன்

**11:46** மத். 26:3, 4; லூக். 22:2; திருத்தூது. 4:16. **11:49** லூக். 3:2; யோ. 18:13. **11:53** மத். 12:14.

தம்மை முறைப்படி சுத்தி செய்துகொள்
வதற்காகப் பலர் நாட்டுப்புறங்களிலிருந்து
எருசலேமுக்குச் சென்றனர். 56 அங்கே
அவர்கள் இயேசுவைத் தேடினார்கள்.
அவர்கள் திருக்கோவிலில் நிற்கையில் ஒரு
வரையொருவர் பார்த்து, ''உங்களுக்கு
எப்படித் தோன்றுகிறது? அவர் பண்டி
கைக்கு வர மாட்டார்போலத் தோன்று
கிறதே'' என்று பேசிக்கொண்டார்கள்.
57 தலைமை ஆசாரியர்களும் பரிசேயரும்
அவரைப் பிடிக்க நினைத்து அவர் இருக்கும்
இடம் யாருக்காவது தெரிந்திருந்
தால் அதைத் தங்களுக்குத் தெரிவிக்க
வேண்டுமென்று கட்டளையிட்டிருந்தார்கள்

### பெத்தானியாவில் இயேசுவுக்கு நறுமணத் தைலம் பூசுதல்

(மத். 26:6–13; மாற். 14:3–9)

**12** பஸ்காப் பண்டிகைக்கு ஆறு நாளுக்கு
முன்பு இயேசு பெத்தானியா என்
னும் ஊருக்குப் போனார். அது அவர்
உயிரோடெழுப்பின இலாசருவின் ஊர்.
2 அங்கே அவருக்கு விருந்து செய்தார்
கள்; மார்த்தாள் பணிவிடை செய்தாள்.
அவரோடு பந்தியில் அமர்ந்தவர்களுள்
இலாசரும் ஒருவன். 3 அப்பொழுது மரி
யாள் கலப்பற்றதும், விலையுயர்ந்ததுமான
நளதம் என்னும் தைலத்தில் ஓர் இராத்
தல் கொண்டுவந்து, இயேசுவின் பாதங்
களில் பூசி, தன் கூந்தலினால் அவருடைய
பாதங்களைத் துடைத்தாள். 4 அந்தத்
தைலத்தின் நறுமணம் வீடெங்கும் கமழ்ந்
தது. அவருடைய சீடருள் ஒருவனும்,
அவரைக் காட்டிக்கொடுக்க இருந்தவனு
மான யூதா இஸ்கோரியோத்து, 5 ''இந்
தத் தைலத்தை முந்நூறு திநாரியத்துக்கு
விற்று அப்பணத்தை ஏழைகளுக்குக்
கொடுத்திருக்கலாமே'' என்றான். 6 அவன்
இப்படிச் சொன்னது ஏழைகளுக்காகக்
கவலைப்பட்டதனாலன்று; அவன் ஒரு திரு
டன். பணப்பெட்டி அவனிடம் இருந்த
தால், அதில் போடப்படுவதிலிருந்து
அவன் எடுத்துக்கொள்வதுண்டு. அத
னாலேதான் இப்படிச் சொன்னான். 7 அப்
பொழுது இயேசு, ''இவளைத் தடை செய்
யாதே, அப்படியே விட்டுவிடு; என்
அடக்க நாளை முன்னிட்டு இதைச் செய்
யட்டும். 8 ஏழைகள் உங்களிடையே எப்
போதும் இருக்கிறார்கள். ஆனால் நானோ
உங்களிடையே எப்போதும் இருக்கப்
போவதில்லை'' என்றார்.

### இலாசருவைக் கொன்றுவிடச் சதித்திட்டம்

9 அவர் அங்கே இருந்ததை அறிந்த
யூதர்கள் ஒரு பெருங்கூட்டமாய் வந்தார்
கள்; அவர்கள் இயேசுவை முன்னிட்டு
மட்டும் வரவில்லை; அவர் இறந்தோரிட
மிருந்து உயிரோடெழுப்பின இலாசரு
வைப் பார்ப்பதற்காகவும் வந்தார்கள்.
10 அதைக் கண்ட தலைமை ஆசாரியர்
கள் இலாசருவையும் கொன்றுவிடுவ
தென்று தீர்மானித்தார்கள். 11 ஏனெனில்,
அவன் காரணமாகப் பல யூதர்கள் இயேசு
வினிடம் போய் அவரிடம் நம்பிக்கை
கொள்ளலானார்கள்.

### இயேசு எருசலேமுக்குள் அரசகோலத்துடன் செல்லுதல்

(மத். 21:1–11; மாற். 11:1–11;
லூக். 19:28–40)

12 மறுநாள், பண்டிகைக்கு வந்த திர
ளான மக்கள் இயேசு எருசலேமுக்கு வரு
கிறார் என்பதைக் கேள்விப்பட்டார்கள்.
13 அவர்கள் குருத்தோலைகளை எடுத்துக்
கொண்டு, அவரை எதிர்கொள்ளப் புறப்
பட்டுப் போய்,

''ஓசன்னா,* ஆண்டவரின் திருப்
பெயரால் வருகிறவர்
கடவுளின் ஆசி பெறுவாராக!
இஸ்ரவேலின் அரசர்
கடவுளின் ஆசி பெறுவாராக!''

என்று ஆர்ப்பரித்தார்கள்.

14 இயேசு அங்கே ஒரு கழுதைக்குட்டி
யைக் கண்டு அதன்மேல் ஏறிச் சென்றார்.

15 ''சீயோன்மகளே, அஞ்ச வேண்டாம்;
இதோ! உன் அரசர் வருகிறார்;
அவர் கழுதைக் குட்டியின்மேல்
ஏறிவருகிறார்''

என்று வேதத்தில் எழுதியுள்ளதற்கிசைய
இப்படி நடந்தது. 16 இவற்றின் கருத்தை
அவருடைய சீடர் அந்நேரத்தில் புரிந்து
கொள்ளவில்லை. இயேசு மாட்சிமைக்கு
உயர்த்தப்பட்டபிறகுதான், இவை அவரைக்
குறித்து எழுதப்பட்டவை என்பதும்,
இவற்றையே அவருக்குச் செய்தார்கள்
என்பதும் அவர்கள் நினைவிற்கு வந்தன.
17 அவர் இலாசருவைக் கல்லறையை
விட்டு வெளியே வரும்படி கூப்பிட்டு,
அவனை இறந்தோரிடமிருந்து உயி
ரோடெழுப்பினபோது அவரோடிருந்த மக்
கள் அங்கே நடந்ததைக் குறித்துச் சாட்சி
கூறி வந்தார்கள். 18 அவர் அந்த அரிய
செயலைச் செய்தார் என்று மக்கள் கேள்
விப்பட்டிருந்ததால், அவர்கள் அவரை
எதிர்கொள்ளப் போனார்கள். 19 அதைக்
கண்ட பரிசேயர், ''பாருங்கள், இதோ,

* மத். 21:9 அடிக்குறிப்பைப் பார்க்க.
**12:3** லூக். 7:37, 38. **12:8** உபா. 15:11. **12:13** சங். 118:26; திருவெளி. 7:9. **12:15** சக. 9:9. **12:19** யோ. 11:47, 48;

உலகமே அவன் பின்னே போய்விட்டது.
நம்மால் ஒன்றும் செய்ய இயலவில்லையே''
என்று தங்களிடையே பேசிக்கொண்டனர்.

### கிரேக்கர் சிலர் இயேசுவைக் காண விரும்புதல்

20 பண்டிகையின்போது தொழுவதற்
காக வந்தவர்களுள் சிலர் கிரேக்கர்.
21 அவர்கள் கலிலேயா நாட்டுப் பெத்
சாயிதா ஊரானாகிய பிலிப்புவினிடம்
வந்து, ''ஐயா, இயேசுவைக் கண்டுபேச
விரும்புகிறோம்'' என்று சொன்னார்கள்.
22 அவர் அந்திரேயாவினிடம் போய்
அதைச் சொன்னார். பிறகு அந்திரேயா
வும் பிலிப்புவும் இயேசுவினிடம் வந்து
அதைத் தெரிவித்தார்கள். 23 இயேசு
அவர்களுக்கு மறுமொழியாக, ''மனு
மைந்தர் மாட்சிமை அடையும் நேரம்
வந்துவிட்டது. 24 மிகவும் உறுதியாக
உங்களுக்குச் சொல்லுகிறேன்: கோதுமை
மணி மண்ணில் விழுந்து மடியாவிட்டால்
அது தனி மணியாகவே இருக்கும். அது
மடிந்தாலோ மிகுந்த பலனைக் கொடுக்கும்.
25 தன் உயிரை நேசிப்பவன் அதை இழந்து
விடுவான்; இந்த உலகத்தில் இருக்கும்போது
தன் உயிரை வெறுப்பவனே அதை என்று
முள்ள மெய்வாழ்வுக்கென்று காத்துக்
கொள்ளுவான். 26 ஒருவன் எனக்குப்
பணிவிடை செய்ய வேண்டுமென்று இருப்
பானானால், அவன் என்னைப் பின்பற்றி
வரட்டும்; அப்பொழுது நான் எங்கே
இருக்கிறேனோ அங்கே எனக்குப் பணி
விடை செய்கிறவனும் இருப்பான். ஒரு
வன் எனக்குப் பணிவிடை செய்வானானால்
அவனுக்கு விண்ணகத் தந்தையார் மேன்மை
அருளுவார்.

### இயேசு தம் மரணத்தைப்பற்றிக் கூறுதல்

27 ''இப்பொழுது என் ஆன்மா கலங்கு
கிறது. நான் என்ன சொல்வேன்? தந்
தையே, இந்த நேரத்திலிருந்து என்னைக்
காத்தருளும் என்பேனோ? இல்லை, இதற்
காகத்தானே நான் இந்த நேரத்திற்குள்
ளாக வந்திருக்கிறேன். 28 தந்தையே,
உமது திருப்பெயரின் மாட்சிமை விளங்
கும்படி செய்யும்'' என்றார். அப்பொழுது
''மாட்சிமை விளங்கும்படி செய்தேன்,
மீண்டும் விளங்கும்படி செய்வேன்''என்று
வானத்தினின்று ஒரு வாக்குப் பிறந்தது.
29 அங்கே நின்று அதைக் கேட்ட மக்கள்
''இடியொலி முழங்கிற்று'' என்றார்கள்.
ஆனால் சிலர், ''தெய்வதூதன் ஒருவன்
அவரோடு பேசினான்'' என்றனர். 30 இயே
சுவோ, ''இந்த வாக்கு என் பொருட்
டன்று, உங்கள் பொருட்டே பிறந்தது.
31 இப்போதே இந்த உலகத்தின்மீது
தீர்ப்புக் கூறப்படுகிறது. இப்போதே இந்த
உலகத்திற்கடுத்தவற்றின் தலைவன் புறம்பே
தள்ளப்படப்போகிறான். 32 நான் பூமி
யிலிருந்து உயர்த்தப்பட்டிருக்கும்போது,
எல்லாரையும் என்னிடம் ஈர்த்துக்கொள்
வேன்'' என்றார். 33 தாம் இன்னவித
மாக மரணம் அடையப்போகிறார் என்
பதைக் குறித்துக்காட்ட இப்படிச்சொன்னார்.
34 அதைக் கேட்ட மக்கள் அவரிடம்,
''மேசியா என்றென்றைக்கும்
இருக்கிறார் என்று திருச்சட்ட நூலில்
கூறியுள்ளதை நாங்கள் கேட்டிருக்கிறோம்.
அப்படியிருக்க, மனுமைந்தர் உயர்த்தப்
பட வேண்டும் என்று நீர் எப்படிச் சொல்
லுவீர்? இந்த மனுமைந்தர் யார்?'' என்று
கேட்டார்கள். 35 அப்பொழுது இயேசு
அவர்களிடம், ''இன்னும் சிறிது காலம்
ஒளி உங்களோடு இருக்கும். இருளில் நீங்
கள் அகப்பட்டுக்கொள்ளாதபடி, ஒளி
உங்களோடு இருக்கும்போது நடந்து
கொண்டேயிருங்கள்; இருளில் நடந்து
செல்பவன் எவனுக்கும் தான் செல்வது
எங்கே என்பது தெரியாது. 36 நீங்கள்
ஒளியின் மக்களாகும்படி ஒளி உங்களோடு
இருக்கையில் ஒளியில் நம்பிக்கை வையுங்கள்''
என்று சொன்னார்.

### யூதர்களின் நம்பிக்கையின்மை

இப்படிச் சொன்னபின் இயேசு அவர்
களை விட்டகன்று மறைந்துகொண்டார்.
37 தெய்வ ஆற்றலுக்கு அடையாளமாக
அவர் இத்தனை செயல்களை அவர்கள்
கண்காணச் செய்திருந்தும், அவர்கள் அவ
ரிடம் நம்பிக்கை கொள்ளவில்லை. 38 இறை
வாக்குரைப்பவராகிய ஏசாயா,

''ஆண்டவரே, எங்கள் மூலமாக
கேள்விப்பட்டதை எவன் நம்பினான்?
ஆண்டவருடைய புயம் வெளிப்
படுத்தப்பட்டது எவனுக்கு விளங்
கிற்று?''

என்று சொன்ன சொல் இவ்வாறு நிறை
வேறிற்று.

39 மேலும் இறைவாக்குரைப்பவராகிய
ஏசாயா,

40 ''அவர்கள் தங்கள் கண்களால்
காணாமலும்,
உள்ளத்தால் உணராமலும்
நான் அவர்களைக் குணமாக்கும்படி

**12:24** 1 கொரி. 15;36. **12:25** மத். 10:39; 16:25; மாற். 8:35; லூக். 9:24; 17:33. **12:27** மத். 26:37; லூக். 22:40—46: யோ. 6:38; 11:33; 13:21; 18:4; எபி. 5:7, 8. **12:31** லூக் 10:18; திருவெளி. 12:9; 20:1—6. **12:34** சங். 110:4; ஏசா. 9:7; எசே. 37:25, தானி. 7:14. **12:38** ஏசா. 53:1. **12:40** ஏசா. 6:9, 10.

அவர்கள் மனமாற்றமடையாமலும் இருப்பதற்காக,
அவர்கள் கண்களை அவர் குருடாக்கி அவர்கள் உள்ளத்தை மந்த மாக்கினார்''

என்று சொல்லியிருக்கிறவாறே அவர்களால் நம்பிக்கை கொள்ள இயலாமற்
போயிற்று. 41 ஏசாயா அவருடைய மாட்சிமையைக் கண்டிருந்ததால் இவ்வாறு சொன்னார்: மேசியாவைக் குறித்தே இப்படிப் பேசினார்.

42 அப்படிப்பட்ட நிலையிலும், அதிகாரிகளிலுங்கூடப் பலர் அவரிடம் நம்பிக்கை கொள்ளலாயினர். ஆனால், அவர்கள் பரிசேயருக்கு அஞ்சி அதை வெளிப்படையாக ஒப்புக்கொள்ளாதிருந்தார்கள்.; அப்படி ஒப்புக்கொண்டால் அவர்களுடைய சபையிலிருந்து விலக்கப்படுவார்கள்.
43இவ்வாறு அவர்கள் கடவுளால் ஏற்றுக்கொள்ளப்படுவதைவிட மனிதரால் ஏற்றுக்கொள்ளப்படுவதையே மிகுதியாக விரும்பினார்கள்.

### இயேசு சொன்ன வார்த்தையே தீர்ப்பளிக்கும்

44 பிறகு இயேசு உரத்த குரலில், ''என்னிடம் நம்பிக்கை கொள்பவன் என்னிடமன்று, என்னை அனுப்பினவரிடமே நம்பிக்கை கொள்கிறான்.
45 என்னைக் காண்பவனும் என்னை அனுப்பினவரையே காண்கிறான்.
46 என்னிடம் நம்பிக்கைகொள்பவன் எவனும் இருளிலிருந்து என்றும் நீங்கியிருக்க வேண்டுமென்றே நான் ஒளியாய் இவ்வுலகத்திற்கு வந்திருக்கிறேன்.
47 ஒருவன் என் வார்த்தைகளைக் கேட்டு அவற்றைக் கடைப்பிடித்து நடவாதிருந்தால், அவனுக்குத் தீர்ப்பளிப்பவன் நான் அல்ல; ஏனென்றால், நான் உலகத்துக்குக் குற்றத் தீர்ப்பு அளிப்பதற்காக வரவில்லை; உலகத்தை விடுவிப்பதற்காகவே வந்தேன்.
48 என்னைப் புறக்கணித்து, என் வார்த்தைகளை ஏற்றுக்கொள்ளாதவன் குற்றவாளி என்று தீர்ப்புச் செய்ய ஒன்று இருக்கிறது; நான் உரைத்த வாக்கே அவன் குற்றவாளி என்று கடைசி நாளில் தீர்ப்புச் செய்யும்.
49 ஏனெனில், அதை நானாகவே உரைக்கவில்லை, என்னை அனுப்பின தந்தையார் நான் எதைச் சொல்ல வேண்டும், எதைப் போதிக்க வேண்டும் என்பதை எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார்.
50 அவரது கட்டளையே என்றுமுள்ள மெய்வாழ்வு என்பது எனக்குத் தெரியும். ஆகையால், நான் சொல்லுகிறவை எவையென்றால், தந்தையார் என்னைச் சொல்லும்படி சொன்னவையே'' என்று கூறினார்.

### இயேசு தம் சீடரின் பாதங்களைக் கழுவுதல்

13 பஸ்காப் பண்டிகைக்குச் சற்றுமுன்பு இயேசு, தாம் இவ்வுலகத்தை விட்டுத் தந்தையாரிடம் செல்வதற்கான வேளை வந்துவிட்டதென்பதைத் தெரிந்துகொண்டார். இந்த உலகத்திலிருந்த தம்முடையவர்களிடம் எப்போதுமே அன்புகொண்டிருந்த அவர், அவர்களிடம் தாம் கொண்டிருந்த அன்பின் பூரணத் தன்மையை அப்போது அவர்களுக்குக் காட்டினார்.

2 இயேசுவைக் காட்டிக் கொடுக்கும்படி இஸ்காரியோத்தூர் சீமோனுடைய மகனாகிய யூதாசின் உள்ளத்தைப் பிசாசு ஏற்கெனவே ஏவிவிட்டிருந்தான். அவர்கள் சாப்பிட்டுக்கொண்டிருந்தபோது,
3 இயேசு தந்தையார் எல்லாவற்றையும் தம் கையில் ஒப்புவித்திருப்பதையும், தாம் கடவுளிடமிருந்து வந்து கடவுளிடமே திரும்பிச் செல்வதையும் அறிந்திருந்ததால்,
4 பந்தியை விட்டெழுந்து மேலாடையைக் கழற்றி வைத்துவிட்டு, ஒரு துண்டை எடுத்து இடுப்பில் கட்டிக்கொண்டு,
5 ஒரு கலத்தில் தண்ணீரை ஊற்றி, சீடருடைய பாதங்களைக் கழுவி, தாம் இடுப்பில் கட்டியிருந்த துண்டினால் துடைத்துக்கொண்டு வந்தார்.
6 அவர் சீமோன் பேதுருவினிடம் வந்தபோது அவர் அவரிடம், ''ஆண்டவரே, என் பாதங்களை நீர் கழுவலாமா?'' என்று கேட்டார்.
7 அதற்கு இயேசு, ''நான் செய்வது இன்னதென்பது உனக்கு இப்போது தெரியாது, இனிமேல் புரிந்து கொள்ளுவாய்'' என்று சொன்னார்.
8 பேதுரு அவரிடம், ''நீர் ஒருபோதும் என் பாதங்களைக் கழுவலாகாது'' என்றார். அதற்கு இயேசு, ''நான் உன்னைக் கழுவாவிட்டால், நீ என்னுடையவற்றில் பங்கு கொள்கிறவனாய் இருக்க இயலாது''என்று சொன்னார்.
9 அப்பொழுது சீமோன் பேதுரு, ''ஆண்டவரே, அப்படியானால் என் பாதங்களை மட்டுமன்றி, என் கைகளையும் என் தலையையுங்கூடக் கழுவ வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.
10 இயேசு அவரிடம், ''குளித்தவன் தன் பாதங்களை மட்டும் கழுவினால் போதும், மற்றப்படி அவன் முழுதும் தூய்மையாய் இருக்கிறான். நீங்கள் தூய்மையாய் இருக்கிறீர்கள்; ஆனால் எல்லாரும் தூய்மையாயில்லை'' என்றார்.
11 தம்மைக் காட்டிக் கொடுப்பவன் யாரென்பது அவருக்குத் தெரிந்திருந்ததால் அவர்கள் எல்லாரும் தூய்மையாயில்லை என்று அவர் சொன்னார்.

12:49 உபா. 18:18, 19.

12 அவர்களுடைய பாதங்களைக் கழு
வின பின்பு, அவர் தம்முடைய மேலா
டையை அணிந்துகொண்டு, மீண்டும்
பந்தியிலமர்ந்து, அவர்களைப் பார்த்து,
''நான் உங்களுக்குச் செய்தது இன்ன
தென்பதைப் புரிந்துகொண்டீர்களா?
13 நீங்கள் என்னைப் போதகரென்றும்,
ஆண்டவரென்றும் சொல்லுகிறீர்கள்; நீங்
கள் சொல்வது சரியே. நான் போதகர்
தான், ஆண்டவர்தான். 14 ஆண்டவரும்
போதகருமாகிய நானே உங்கள் பாதங்
களைக் கழுவியிருப்பதால், நீங்கள் ஒருவரு
டைய பாதங்களை ஒருவர் கழுவக் கட
மைப்பட்டிருக்கிறீர்கள். 15 நான் உங்க
ளுக்குச் செய்ததுபோல நீங்களும் செய்
யும்படி உங்களுக்கு மாதிரி காட்டினேன்.
16 மிகவும் உறுதியாக உங்களுக்குச்
சொல்லுகிறேன்: வேலைக்காரன் தன் தலை
வனைவிடப் பெரியவனல்ல; தூதுவனுக
அனுப்பப்படுகிறவன் தன்னை அனுப்பின
வரைவிடப் பெரியவனல்ல. 17 இவை உங்
களுக்குத் தெரிந்திருப்பதால், இவற்றை
நடைமுறையிலும் காட்டுவீர்களானல் நீங்
கள் நற்பேறு பெற்றவர்களாயிருப்பீர்கள்.
18 உங்கள் எல்லாரையும்பற்றி நான்
பேசவில்லை. நான் தேர்ந்துகொண்டவர்
கள் இன்னரென்பது எனக்குத் தெரியும்.
ஆனாலும், 'என்னுடைய அப்பத்தை
உண்டவன் எனக்கு இரண்டகமாகத் தன்
குதிகாலைத் தூக்கினான்' என்கிற வேத
வாக்கியம் நிறைவேறியாக வேண்டுமே!
19 அது நடக்கும்போது, நான் யாரோ,
அவரே நான் என்று நீங்கள் நம்பும்
பொருட்டு, இப்போதே, அது நடப்ப
தற்கு முன்னதாகவே, அதை உங்களுக்குச்
சொல்லுகிறேன். 20 நான் அனுப்புகிற
வனை ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை
ஏற்றுக்கொள்ளுகிறான், என்னை ஏற்றுக்
கொள்ளுகிறவன் என்னை அனுப்பினவரை
ஏற்றுக்கொள்ளுகிறான் என்று மிகவும்
உறுதியாக உங்களுக்குச் சொல்லுகிறேன்''
என்று சொன்னார்.

### உங்களுள் ஒருவன் என்னைக் காட்டிக்கொடுப்பான்

*(மத். 26:20—25; மாற். 14:17—21; லூக். 22:21—23)*

21 இப்படிச் சொன்னபின் இயேசு
உள்ளம் கலங்கியவராய், ''மிகவும் திட்ட
மாக உங்களுக்குச் சொல்லுகிறேன்: உங்
களுள் ஒருவனே என்னைக் காட்டிக்
கொடுக்கப்போகிறான்'' என்று வெளிப்
படையாகக் கூறினார். 22 அவர் யாரைக்
குறித்துச் சொன்னார் என்பது சீடருக்குத்
திட்டவட்டமாகத் தெரியாததால், அவர்
கள் ஒருவரையொருவர் பார்த்தார்கள்.
23 இயேசுவின் சீடருள் அவருக்கு அன்
பார்ந்தவராயிருந்த ஒருவர் அவருடைய
மார்பருகில் சாய்ந்துகொண்டிருந்தார்.
24 அவர் யாரைக் குறித்துச் சொல்லு
கிறார் என்று கேட்கும்படி சீமோன் பேதுரு
அவருக்குச் சைகை காட்டினார். 25 அந்
தச் சீடர் தாம் இருந்தபடியே பின்புற
மாக இயேசுவின் மார்பில் சாய்ந்து
கொண்டு அவரிடம், ''அவன் யார்,
ஆண்டவரே?'' என்று கேட்டார். 26அதற்கு
இயேசு, ''நான் யாருக்கு இந்த அப்பத்
துண்டைத் தோய்த்துக் கொடுக்கிறேனே
அவன்தான்'' என்று சொல்லிவிட்டு, அந்த
அப்பத் துண்டைத் தோய்த்தெடுத்து,
இஸ்காரியோத்தூர் சீமோனுடைய மகன்
யூதாசுக்குக் கொடுத்தார். 27 அவன் அப்
பத் துண்டை வாங்கினான்; சாத்தானும்
அவனுக்குள் புகுந்தான். அப்பொழுது
இயேசு அவனிடம், ''செய்கிறதை விரை
வில் செய்'' என்று சொன்னார். 28 எதற்
காக அவனிடம் இப்படிச் சொன்னார்
என்பதைப் பந்தியிலிருந்தவர்களுள் ஒரு
வரும் புரிந்துகொள்ளவில்லை. 29 பணப்
பெட்டி யூதாசின் பொறுப்பில் இருந்த
தால், இயேசு அவனிடம், பண்டிகைக்குத்
தேவையானதை வாங்கவோ, ஏழை
களுக்கு ஏதாவது கொடுக்கவோ சொன்ன
தாகச் சிலர் நினைத்துக்கொண்டனர்.
30 அப்பத் துண்டை வாங்கிக்கொண்டு
அவன் வெளியே போனான். அது இராக்
காலம்.

### புதிய நெறி

31 அவன் வெளியே போனபின்,
இயேசு, ''இப்பொழுதே மனுமைந்தர்
மாட்சிமை பெற்றுவிட்டார்;
கடவுளும் அவரால் மாட்சிமை பெற்று
விட்டார். 32 இவ்வாறு கடவுள் மாட்
சிமை பெற்றிருப்பதால், கடவுளும் அவ
ருக்குத் தம் முன்னிலையில் மாட்சிமை
அளிப்பார், விரைவில் அவருக்கு மாட்
சிமை அளிப்பார். 33 சீடப்பிள்ளைகளே,
நான் இன்னும் சிறிது காலந்தான் உங்
களோடிருப்பேன். நீங்கள் என்னைத் தேடு
வீர்கள்; ஆனால், அந்த யூதருக்கு நான்
சொன்னதையே, அதாவது நான் செல்
லுகிற இடத்துக்கு உங்களால் வர இய
லாது என்பதையே உங்களுக்கும் சொல்லு
கிறேன். 34 நான் உங்களுக்குப் புதிய
தொரு நெறியை அருளுகிறேன்: நீங்கள்
ஒருவரிடமொருவர் அன்புடையவர்களா
யிருங்கள். நான் உங்களிடம் அன்பு
கொண்டிருந்தபடியே நீங்கள் ஒருவரிட

**13:12—15** லூக். 22:27; எபே. 5:2; பிலி. 2:5, 8. **13:16** மத். 10:24; லூக். 6:40; யோ. 15:20 **13:18** சங். 41:9. **13:20** மத். 10:40; மாற். 9:37; லூக். 9:48; 10:16. **13:27** லூக். 22:3. **13:33** யோ. 7:34. **13:34** மத். 19:19; லூக். 10:27; ... 2 யோ. 5.

மொருவர் அன்புடையவர்களாயிருங்கள். 35 நீங்கள் ஒருவரிடமொருவர் அன்புடையவர்களாய் இருப்பதைக் கொண்டு நீங்கள் என்னுடைய சீடர்கள் என்பதை எல்லாரும் அறிந்துகொள்ளுவார்கள்'' என்றார்.

### பேதுருவின் மறுதலிப்பைப்பற்றிய முன்னறிவிப்பு

*(மத்.26:31–35; மாற்.14:27–31; லூக். 22:31–34)*

36 சீமோன் பேதுரு அவரைப் பார்த்து, ''ஆண்டவரே, நீர் எங்கே செல்கிறீர்?'' என்று கேட்டார். அதற்கு இயேசு, ''நான் செல்கிற இடத்துக்கு என்னைப் பின்பற்றி வர இப்போது உன்னால் இயலாது; பிறகுதான் வருவாய்'' என்றார். 37 அப்பொழுது பேதுரு, ''ஆண்டவரே, ஏன் இப்போது என்னால் பின்தொடர்ந்து வர இயலாது? நான் உமக்காக என் உயிரையும் கொடுப்பேனே'' என்று சொன்னார். 38 அதற்கு இயேசு, ''நீ எனக்காக உன் உயிரையும் கொடுப்பாயோ? மிகவும் திட்டமாக உனக்குச் சொல்லுகிறேன்; சேவல் கூவுமுன்னே, என்னைத் தெரியாதென நீ மூன்று முறை மறுதலிக்கப்போகிறாய்'' என்றார்.

### விண்ணகத் தந்தையிடம் செல்லும் வழி இயேசுவே

**14** ''உங்கள் மனத்தில் கலக்கம் வேண்டாம். கடவுளிடம் நம்பிக்கை உள்ளவர்களாயிருங்கள்,* என்னிடமும் நம்பிக்கை உள்ளவர்களாயிருங்கள். 2 என் தந்தையாரின் வீட்டில் ஏராளமான அறைகள் உண்டு. அப்படி இல்லாதிருந்தால், உங்களுக்கென்று ஓர் இடம் ஆயத்தம் செய்வதற்காகச் செல்கிறேன் என்று உங்களிடம் சொல்லியிருப்பேனா? 3 நான் சென்று உங்களுக்கென்று ஓர் இடத்தை ஆயத்தம் செய்தபின் திரும்பி வந்து, நான் இருக்கும் இடத்திலேயே நீங்களும் இருக்கும்படி உங்களை என்னிடம் அழைத்துக்கொள்வேன். 4 நான் செல்லும் இடத்துக்கு வழி உங்களுக்குத் தெரியும்'' என்றார். 5 தோமா அவரிடம், ''ஆண்டவரே, நீர் செல்லும் இடமே எங்களுக்குத் தெரியாதிருக்கும்போது, அதற்கு வழியை நாங்கள் எப்படி அறிந்திருக்க முடியும்?'' என்று கேட்டார். 6 அதற்கு இயேசு, ''வழியும் சத்தியமும் மெய்வாழ்வும் நானே; என்னை வழியாகக் கொண்டாலன்றி, எவராலும் விண்ணகத் தந்தையாரிடம் வந்தடைய இயலாது. 7 நீங்கள் என்னை இன்னாரென்று அறிந்தவர்களாய் இருப்பீர்களானால், என் தந்தையாரையும் அறிந்தவர்களாய் இருப்பீர்கள்; இப்போதிருந்தே நீங்கள் அவரை அறிந்தவர்களாய் இருக்கிறீர்கள்; அவரைக் கண்டவர்களாயும் இருக்கிறீர்கள்'' என்று சொன்னார். 8 அப்பொழுது பிலிப்பு அவரிடம், ''ஆண்டவரே, தந்தையாரை எங்களுக்குக் காட்டியருளும், அதுவே எங்களுக்குப் போதும்'' என்று சொல்ல, 9 இயேசு, ''பிலிப்புவே, இவ்வளவு காலம் நான் உங்களோடிருந்தும் நீ என்னை அறிந்துகொள்ளவில்லையா? என்னைக் கண்டவன் தந்தையாரைக் கண்டவனாயிருக்கிறான். அப்படியிருக்க, 'தந்தையாரை எங்களுக்குக் காட்டியருளும்' என்று நீ கேட்பதேன்? 10 நான் தந்தையாருக்குள்ளும் தந்தையார் எனக்குள்ளும் இருப்பதை நீ நம்பவில்லையா? நான் உங்களுக்குக் கூறும் வார்த்தைகளை நானாகக் கூறவில்லை. தந்தையார் தாமே எனக்குள் இருந்துகொண்டு தம்முடைய செயல்களைச் செய்துவருகிறார். 11 நான் தந்தையாருக்குள் இருக்கிறேன், தந்தையார் எனக்குள் இருக்கிறார் என்று நான் சொல்வதை நம்புங்கள். அல்லாவிட்டால் இந்தச் செயல்களின் பொருட்டாவது அதை நம்புங்கள். 12 மிகவும் திட்டமாக உங்களுக்குச் சொல்லுகிறேன்: என்னிடம் எவன் நம்பிக்கை கொள்கிறானோ அவனும் நான் செய்யும் செயல்களைச் செய்வான்; இவற்றைவிடப் பெரியவற்றையும் செய்வான்; ஏனெனில், நான் தந்தையாரிடம் செல்கிறேன். 13 நீங்கள் என் பெயரால் கேட்பது எதுவாயினும், தந்தையாரின் மாட்சிமை மைந்தரிடம் வெளிப்பட வேண்டும் என்பதற்காக அதை நான் செய்வேன். 14 என் பெயரால் நீங்கள் என்னிடம் எதைக் கேட்டுக்கொண்டாலும் அதை நான் செய்வேன்.

### தூய ஆவியானவரைப்பற்றிய வாக்குறுதி

15 ''நீங்கள் என்னிடம் அன்புடையவர்களாயிருந்தால் நான் அருளும் நெறிகளைக் கடைப்பிடிப்பீர்கள். 16 நானும் தந்தையாரை வேண்டிக்கொள்வேன்; அப்பொழுது அவர் இன்னொரு சகாயரை† உங்களோடு என்றைக்கும் இருப்பதற்காக உங்களுக்குத் தந்தருளுவார். 17 அவரே சத்தியராகிய ஆவியானவர். அவரை உலகத்தால் ஏற்றுக்கொள்ள இயலாது.

* 'கடவுளிடம் நம்பிக்கை உள்ளவர்களாயிருக்கிறீர்களே' என்று மொழிபெயர்ப்பதுமுண்டு.
† கிரேக்க பதத்திற்கு, ஆலோசனை கூறுகிறவர், தேற்றுகிறவர், பரிந்து பேசுகிறவர் என்கிற பொருள்களும் உண்டு.
**13:38** மத். 26 33–35; மாற். 14:29—31 **14:2** 1 தெச. 4:7. **14:3** எபி. 6:19, 20. **14:6** யோ. 1:4; எபி. 10:19, 20. **14:7** 2 கோரி. 4:4. **14:12** மத். 21:21 **14:13** மத். 7:7—11; திருத்தூது. 3:16; 1 யோ. 3:22.

ஏனெனில், அது அவரைக் காணுமலும்
அறியாமலும் இருக்கிறது. நீங்களோ அவரை
அறிந்திருக்கிறீர்கள்; ஏனெனில், அவர்
உங்களோடு தங்கியிருக்கிருர், உங்களுக்
குள்ளும் இருக்கிருர். 18 நான் உங்களைத்
திக்கற்றவர்களாக விடமாட்டேன்; உங்
களிடம் மீண்டும் வருவேன். 19 இன்னும்
சிறிது காலந்தான் இருக்கிறது; பிறகு
உலகம் என்னைக் காணுது, நீங்களோ
என்னைக் காண்பீர்கள்; ஏனென்ருல், நான்
மெய்வாழ்வு உள்ளவனுயிருக்கிறேன், நீங்
களும் அந்த வாழ்வை உடையவர்களாய்
இருப்பீர்கள். 20 நான் என் தந்தை
யாருக்குள்ளும் நீங்கள் எனக்குள்ளும் நான்
உங்களுக்குள்ளும் இருப்பதை நீங்கள்
அந்த நாளில் அறிந்துகொள்வீர்கள்.
21 நான் அருளும் நெறிகளை ஏற்றுக்
கொண்டு அவற்றைக் கடைப்பிடிக்கிறவனே
என்னிடம் அன்புகொள்கிறவன்.
என்னிடம் அன்புகொள்கிறவன்மீது என்
தந்தையார் அன்புகொள்வார். நானும்
அவனிடம் அன்புகொண்டு அவனுக்கு
என்னை வெளிப்படுத்துவேன்'' என்ருர்.
22 யூதாஸ் என்பவன் — இவன் இஸ்காரி
யோத்தூர் யூதாசல்ல — அவரிடம், ''ஆண்
டவரே, உம்மை நீர் உலகத்துக்கு வெளிப்
படுத்தாமல் எங்களுக்கு மட்டும் வெளிப்
படுத்துவதாகச் சொல்லுகிறீரே, இதன்
பொருள் என்ன?'' என்று கேட்டான்.
23 அதற்கு இயேசு, ''ஒருவன் என்னிடம்
அன்புகொண்டிருந்தால் அவன் என்
வார்த்தையைக் கடைப்பிடித்து நடப்
பான்; என் தந்தையார் அவனிடம் அன்பு
கொள்வார்; நாங்கள் அவனிடம் வந்து
அவனேடு வாசம் செய்வோம். 24 என்
னிடம் அன்புகொள்ளாதவன் என் வார்த்
தையைக் கடைப்பிடித்து நடக்க
மாட்டான். நீங்கள் கேட்கும் வார்த்தை
என்னுடையதன்று, என்னை அனுப்பின
தந்தையாருடையதே.

25 ''நான் உங்களோடு இருக்கும்
இந்தக் காலத்தில் இவற்றை உங்களுக்குச்
சொல்லிவிட்டேன். 26 தந்தையார் என்
பெயரால் அனுப்பப்போகிற தூய ஆவி
யாகிய சகாயர் எல்லாவற்றையும் உங்
களுக்குப் போதிப்பார்; அவரே நான்
உங்களுக்குச் சொன்ன யாவற்றையும் உங்
களுக்கு நினைவூட்டுவார். 27 சமாதா
னத்தை உங்களுக்கு அளித்துவிட்டுச் செல்
லுகிறேன். என்னுடைய சமாதானத்
தையே நான் உங்களுக்கு அளிக்கிறேன்.
உலகம் அளிப்பதுபோல நான் இதை உங்
களுக்கு அளிக்கவில்லை. உங்கள் மனத்தில்
கலக்கம் வேண்டாம், நீங்கள் மருளவும்
வேண்டாம். 28 'நான் போகிறேன்,
ஆனுல், உங்களிடம் திரும்பி வருவேன்'
என்று நான் உங்களுக்குச் சொன்னதைக்
கேட்டீர்களே. நீங்கள் என்னிடம் அன்பு
கொண்டிருந்தால், நான் தந்தையாரிடம்
செல்கிறேன் என்பதற்காக மகிழ்ச்சியடை
வீர்கள். ஏனெனில், தந்தையார் என்னை
விடப் பெரியவர். 29 இப்பொழுது
இவை நடக்குமுன் இதை உங்களுக்குச்
சொல்லிவைக்கிறேன். இவை நடக்கும்
போது நீங்கள் நம்ப வேண்டும் என்பதற்
காக இவ்வாறு சொல்லுகிறேன். 30 நான்
இன்னும் மிகுதியாக உங்களோடு பேசப்
போவதில்லை. ஏனெனில், இந்த உலகத்
திற்கடுத்தவற்றின் தலைவன் வருகிருன்.
அவனுக்கு என்னிடம் எந்த உரிமையும்
இல்லை. 31 ஆனுல், நான் தந்தையாரிடம்
அன்புகொண்டிருக்கிறேன் என்பதையும்
தந்தையார் எனக்குக் கட்டளை இட்ட
படியே நான் செய்கிறேன் என்பதையும்
உலகம் அறிய வேண்டும் என்பதற்காக
இப்படி நடக்கும். எழுந்திருங்கள், புறப்
பட்டுப் போவோம்'' என்ருர்.

### மெய்யான திராட்சைச் செடி இயேசுவே

**15** ''நானே மெய்யான திராட்சைச்
செடி; என் தந்தையார் தோட்டக்
காரர். 2 என்னிடமுள்ள கனி கொடாத
கொடி ஒவ்வொன்றையும் அவர் தறித்து
விடுவார், கனி கொடுக்கும் கொடிகள் மிகுதி
யாகக் கனி கொடுக்கும்படி அவற்றை
அவர் கழித்துத் துப்புரவு செய்வார்.
3 நான் உங்களோடு பேசிவந்திருக்கும்
வார்த்தை காரணமாக நீங்கள் இப்
போதே துப்புரவாகிவிட்டீர்கள். 4 நான்
உங்களுக்குள் நிலைத்திருப்பதுபோல நீங்
களும் எனக்குள் நிலைத்திருங்கள். திராட்சைக்
கொடியால் தானுகக் கனி கொடுக்க இய
லாது; அது செடியில் நிலைத்திருந்தாலன்றிக்
கனி கொடாது. அவ்வாறே நீங்களும்
எனக்குள் நிலைத்திருந்தாலன்றி உங்களால்
கனி கொடுக்க இயலாது. 5 நான்
திராட்சைச் செடி, நீங்கள் அதன் கொடி
கள். ஒருவன் எனக்குள்ளும் நான் அவ
னுக்குள்ளும் நிலைத்திருந்தால் அவன் மிகுதி
யாகக் கனி கொடுப்பான். என்னுடன்
இருந்தாலன்றி உங்களால் ஒன்றும் செய்ய
இயலாது. 6 ஒருவன் எனக்குள் நிலைத்து
இராவிட்டால் அவன் வெளியே எறியப்
பட்ட கொடியைப்போல இருக்கிருன்;
அவன் உலர்ந்து போவான்; அப்படிப்
பட்ட கொடிகளை ஒன்றுசேர்த்து நெருப்
பில் போட்டு எரித்துவிடுவார்கள். 7 நீங்
கள் எனக்குள்ளும் என் வார்த்தை

14:18 மத். 28:20. 14:21 1 யோ. 2:5; 3:24; 4:21. 14:26 எபே. 3:5: 1 யோ. 2 20, 27. 14:27 ரோ.
5:1; எபே. 2:14—18. 14:31 யோ. 6:38. 15:2 மத். 15:13. 15:5 உபா. 8:17; சங். 127:1 15:6 எசே.
19:12; 15:1—8; மத். 3:10; 13:40. 15:7 1 யோ. 5:14.

உங்களுக்குள்ளும் நிலைத்து இருந்தால், நீங்
கள் விரும்பிக் கேட்பது எதுவாயினும் அது
அப்படியே நடக்கும். 8 நீங்கள் மிகுதியாகக்
கனி கொடுத்து என் சீடராய் இருப்பதன்
மூலம் என் தந்தையாரின் மாட்சிமையை
விளங்கச் செய்வீர்கள். 9 தந்தையார்
என்னிடம் அன்புகொண்டிருப்பதுபோல
நானும் உங்களிடம் அன்புகொண்டிருக்
கிறேன். என் அன்பிலேயே நிலைத்து இருங்
கள். 10 என் தந்தையார் தந்த நெறி
களை நான் கடைப்பிடித்து வருகிறேன்,
அவருடைய அன்பிலேயே நிலைத்திருக்கி
றேன்; அவ்வாறே நீங்களும் நான் தந்த
நெறிகளைக் கடைப்பிடித்தால் என் அன்பில்
நிலைத்திருப்பீர்கள்.

11 ''என் மகிழ்ச்சியே உங்களுக்குள்
இருக்க வேண்டுமென்றும், உங்கள் மகிழ்ச்சி
நிறைவானதாக இருக்க வேண்டுமென்றும்
இவற்றை உங்களுக்குச் சொன்னேன்.
12 நான் உங்களிடம் அன்புகொண்டிருப்
பதுபோல நீங்களும் ஒருவரிடமொருவர்
அன்புகொள்ளுங்கள்; இதுவே நான்
தரும் நெறி. 13 தன் நண்பர்களுக்காகத்
தன் உயிரைக் கொடுக்கிறவனுடைய
அன்பைவிட மேலான அன்பு எவரிடமும்
இருக்க முடியாது. 14 நான் உங்களுக்குக்
கட்டளையிடுவதை நீங்கள் செய்தால்,
நீங்கள் எனக்கு நண்பர்கள். 15 இனி
நான் உங்களை வேலைக்காரர் என்று
சொல்ல மாட்டேன். ஏனெனில், தன் தலை
வன் செய்வது இன்னதென்பது ஒரு
வேலைக்காரனுக்குத் தெரியாது. உங்களை
நண்பர்கள் என்றேன். ஏனென்றால், உங்
களுக்கு நான் என் தந்தையாரிடமிருந்து
கேட்ட யாவற்றையும் அறிவித்துவிட்
டேன். 16 நீங்கள் என்னைத் தேர்ந்து
கொள்ளவில்லை; நானே உங்களைத் தேர்ந்து
கொண்டேன். நீங்கள் போய்க் கனி
கொடுக்க வேண்டுமென்றும், நிலைத்திருக்கும்
கனியைக் கொடுக்க வேண்டுமென்றும்
உங்களை நியமித்திருக்கிறேன். நீங்கள்
விண்ணகத் தந்தையை என் பெயரால்
வேண்டிக்கொள்வது எதுவோ அதை அவர்
உங்களுக்கு அருளும்படி இப்படிச் செய்
தேன். 17 நீங்கள் ஒருவரிடமொருவர்
அன்புகொள்ள வேண்டுமென்றே இவற்றை
நான் உங்களுக்கு வலியுறுத்திக் கூறு
கிறேன்.

## உலகத்தாரின் பகைமை

18 ''உலகம் உங்களைப் பகைக்கிறதென்
பது உண்மைதான். ஆனால், அது உங்
களைப் பகைக்குமுன்பே என்னைப் பகைத்
தது என்பதை அறிந்துகொள்ளுங்கள்.
19 நீங்கள் உலகத்திற்குச் சொந்தமான
வர்களாய் இருந்திருந்தால், உலகம் தனக்
குச் சொந்தமான உங்களை நேசித்திருக்கும்.
ஆனால், நீங்கள் உலகத்திற்குச் சொந்த
மல்லாத மக்கள். நான் உங்களை உலகத்
தினின்று தேர்ந்தெடுத்துவிட்டேன்.
ஆகையால் உலகம் உங்களைப் பகைக்
கிறது. 20 'வேலைக்காரன் தன் தலைவனை
விடப் பெரியவனல்ல' என்று நான் உங்
களுக்குச் சொன்னதை நினைவில் வைத்துக்
கொள்ளுங்கள். அவர்கள் என்னைத் துன்
புறுத்தினார்களென்றால், உங்களையும் துன்
புறுத்துவார்கள்; அவர்கள் என் வார்த்
தையைக் கடைப்பிடித்து நடந்திருந்தால்,
உங்களுடைய வார்த்தையையும் கடைப்
பிடித்து நடப்பார்கள். 21 என் பெயரின்
பொருட்டே அவர்கள் இப்படியெல்லாம்
உங்களை நடத்துவார்கள். ஏனெனில்,
என்னை அனுப்பினவரை அவர்கள் அறிந்து
கொள்ளவில்லை. 22 நான் வந்து அவர்
களுக்குப் போதிக்கவில்லையென்றால், அவர்
கள்மேல் பாவம் சுமந்திராது. இப்பொ
ழுதோ தங்கள் பாவத்திற்குச் சாக்குப்
போக்குச் சொல்ல அவர்களுக்கு வழியே
இல்லை. 23 என்னைப் பகைக்கிறவன் என்
தந்தையாரையும் பகைக்கிறான். 24 வேறெ
வரும் செய்யாத செயல்களை நான் அவர்
களிடையே செய்யவில்லையென்றால், அவர்
கள்மேல் பாவம் சுமந்திராது. இப்பொ
ழுதோ அவர்கள் அவற்றைப் பார்த்திருக்
கிறார்கள்; என்னையும் என் தந்தையாரை
யும் பகைக்கவும் செய்கிறார்கள். 25 'கார
ணமில்லாமல் என்னைப் பகைத்தார்கள்'
என்று அவர்களுடைய நீதிச்சட்ட நூலில்
எழுதியுள்ள வாக்கியம் இவ்வாறு நிறை
வேறிற்று.

26 ''தந்தையாரிடமிருந்து நான் அனுப்
பப்போகிற சகாயர் உங்களிடம் வருவார்;
அவரே தந்தையாரிடமிருந்து வெளிப்
பட்டு வரும் சத்தியராகிய ஆவியானவர்;
அவர் வந்து எனக்காகச் சாட்சி கூறுவார்.
27 நீங்களும் சாட்சி கூறுவீர்கள்; ஏனெ
னில், நீங்கள் தொடக்கத்திலிருந்தே என்
னோடு இருந்துவருகிறீர்கள்.

**16** ''நீங்கள் நம்பிக்கையினின்று வழுவி
விடாதிருக்கும்படி நான் இந்தக் காரி
யங்களை உங்களுக்குச் சொன்னேன். 2 உங்
களைத் தொழுகைக்கூடத்திலிருந்து விலக்கி
விடுவார்கள். மேலும், உங்களைக் கொல்லு
கிற எவனும் தான் கடவுளுக்குத் திருத்
தொண்டு புரிவதாக எண்ணிக்கொள்ளும்
காலமும் வருகிறது. 3 அவர்கள்

**15:12** யோ. 13:34; 1 யோ. 3:23; 2 யோ. 5. **15:16** 1 யோ. 4:10. **15:18** மத். 10:22; 1 யோ. 3:13. **15:20** மத். 10:24; லூக். 6:40; யோ. 13:16. **15:25** சங். 35:19; 69:4. **15:27** மத். 10:19; லூக். 21:13; திருத்தூது. 1:8. **16:2** திருத்தூது. 26:9—11; 1 திமோ. 1:13.

தந்தையாரையும் என்னையும் அறிந்து
கொள்ளாமலிருப்பதால் இப்படியெல்லாம்
செய்வார்கள். 4 இவை நடைபெறும் காலம்
வரும்போது, நான் உங்களுக்குச் சொன்
னதை நீங்கள் நினைவுபடுத்திக்கொள்
வதற்காகவே இவற்றை உங்களுக்குச்
சொன்னேன்.

### தூய ஆவியானவரின் செயல்

''தொடக்கத்திலேயே நான் இந்தக்
காரியங்களை உங்களுக்குச் சொல்லவில்லை.
ஏனெனில், நான் உங்களோடு கூடவே
இருந்தேன். 5 இப்போதோ நான் என்னை
அனுப்பினவரிடம் செல்கிறேன். உங்களுள்
எவனும் என்னை 'எங்கே செல்கிறீர்?'
என்று கேட்கிறதாகத் தெரியவில்லை. 6 நான்
இந்தக் காரியங்களை உங்களுக்குச் சொன்
னதால் உங்கள் உள்ளம் வருத்தத்தினால்
நிறைந்திருக்கிறது. 7 எனினும், நான்
உங்களுக்குச் சொல்வதே உண்மை. நான்
போவதால் உங்களுக்கு நன்மையே உண்
டாகும். நான் போகாதிருந்தால், சகாயர்
உங்களிடம் வர மாட்டார். நான் போவே
னானால் அவரை உங்களிடம் அனுப்பு
வேன். 8 அவர் வந்து பாவம், நீதி, தெய்
வத் தீர்ப்பு ஆகியவை சம்பந்தமாக உல
கத்தாரிடம் காணப்படும் தவறுகளை எடுத்
துக்காட்டி அவற்றை அவர்களுக்கு உணர்த்
துவார். 9 அவர்கள் என்னிடம் நம்
பிக்கை கொள்ளாததால் அவர்களிட
முள்ள பாவத்தையும், 10 இனிமேல்
நான் உங்கள்முன் இராமல், தந்தையாரி
டம் போகிறதால், கடவுளுக்கேற்கும் நீதி
எத்தகையதென்பதையும், 11 இந்த
உலகத்திற்கடுத்தவற்றின் தலைவனுக்குக்
குற்றத் தீர்ப்பு அளிக்கப்பட்டிருப்பதால்,
தெய்வத்தீர்ப்பு எத்தகையதென்பதையும்
எடுத்துக்காட்டி அவர்களுக்கு உணர்த்
துவார். 12 நான் உங்களுக்குச் சொல்ல
வேண்டிய காரியங்கள் இன்னும் பல
உண்டு; ஆனால், இப்போது அவற்றை
உங்களால் தாங்க இயலாது.
13 சத்தியராகிய ஆவியானவர் வரும்
போது முழுச் சத்தியத்தையும் நீங்கள்
அறியும்படி உங்களை வழிநடத்துவார்.
அவர் தாமாக எதையும் சொல்லாமல்
தாம் கேட்டறிவது எதுவோ அதையே
உங்களுக்குச் சொல்லி, வரப்போகிற காரி
யங்களையும் அறிவிப்பார். 14 எனக்கே
உரிமையானவற்றிலிருந்து எடுத்து அவர்
உங்களுக்கு அறிவிப்பதன் மூலம் என்
மாட்சிமை விளங்கும்படி செய்வார்.
15 தந்தையாருடையவை யாவும் என்னு
டையவையே. அதனால்தான், 'எனக்கே
உரிமையானவற்றிலிருந்து எடுத்து அவர்
உங்களுக்கு அறிவிப்பார்' என்றேன்.

### துயரம் மகிழ்ச்சியாக மாறும்

16 ''சிறிது காலந்தான்; பிறகு என்
னைப் பார்க்கமாட்டீர்கள். பின்னும் சிறிது
காலம்; அப்போது என்னைக் காண்பீர்
கள்'' என்றார். 17 அவருடைய சீடருள்
சிலர், '' 'சிறிது காலந்தான்; பிறகு என்
னைப் பார்க்க மாட்டீர்கள்; பின்னும்
சிறிது காலம்; அப்போது என்னைக் காண்
பீர்கள்' என்று சொல்லுகிறாரே. மேலும்,
'நான் தந்தையாரிடம் செல்கிறபடியால்'
என்கிறாரே, அவர் சொல்வதுதான் என்ன?''
என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டு
18 ''அவர் சொல்லும் இந்தச் சிறிது
காலம் என்பது எது? அவர் என்ன சொல்
லுகிறார் என்பதே நமக்குத் தெரியவில்
லையே'' என்றார்கள். 19 அவர்கள் தம்மி
டம் அதைப்பற்றிக் கேட்க விரும்புவதை
இயேசு அறிந்து, அவர்களைப் பார்த்து,
''சிறிது காலந்தான்; பிறகு என்னைப் பார்க்க
மாட்டீர்கள். இன்னும் சிறிது காலம்;
அப்போது என்னைக் காண்பீர்கள் என்று
நான் சொன்னதைப்பற்றித்தானே நீங்கள்
ஒருவரையொருவர் கேட்டுக்கொண்டிருக்கி
றீர்கள்? 20 மிகவும் திட்டமாக உங்களுக்குச்
சொல்லுகிறேன்: நீங்கள் அழுவீர்கள், புலம்பு
வீர்கள்; உலகமோ மகிழ்ச்சியோடிருக்கும்.
நீங்கள் துயரப்படுவீர்கள்; ஆனால் உங்கள்
துயரம் மகிழ்ச்சியாக மாறும். 21 குழந்தை
யைப் பெறும்போது தாயானவள் தனக்குப்
பேறுகாலம் வந்துவிட்டபடியால் துயரப்படு
கிறாள்; ஆனால் குழந்தையைப் பெற்றெடுத்த
பின், ஒரு குழந்தை உலகத்தில் தோன்றி
னது என்கிற மகிழ்ச்சியினால் தன் வேதனையை
மறந்துவிடுகிறாள். 22 அதுபோலவே, நீங்
கள் இப்போது துயரப்படுகிறீர்கள். ஆனால்
மறுபடியும் நான் உங்களைக் காண்பேன்.
அப்போது உங்கள் உள்ளம் மகிழ்ச்சியடை
யும்,; உங்கள் மகிழ்ச்சியை ஒருவனாலும் உங்
களை விட்டு நீக்கிவிட இயலாது. 23 அந்த
நாளில் நீங்கள் என்னிடம் கேள்வி கேட்டுக்
கொண்டிருக்க மாட்டீர்கள். மிகவும் உறுதி
யாக உங்களுக்குச் சொல்லுகிறேன்: நீங்கள்
தந்தையாரிடம் என் பெயரால் கேட்பது
எதுவோ அதை அவர் உங்களுக்குத் தந்தரு
ளுவார். 24 இதுவரையிலும் நீங்கள் என்
பெயரால் எதையும் கேட்டதில்லை. உங்கள்
மகிழ்ச்சி நிறைவுபெற வேண்டும். ஆகையால்
கேளுங்கள், அப்பொழுது நீங்கள் பெற்றுக்
கொள்ளுவீர்கள்.

### நான் உலகத்தை வென்றுவிட்டேன்

25 ''நான் உங்களுக்குச் சொன்னவற்றை
உபமானங்கள் மூலம் சொன்னேன். ஒரு
காலம் வரும்; அப்போது நான் உங்களோடு

**16:20** திருவெளி. 11:10; எபி. 12:11; சங். 126;6; 1 பேது. 1:6. **16:21** எரே. 31:13. **16:22** யோ. 14:19; 11:15; 20:20. **16:23** யோ. 14:11.

உபமானங்கள் மூலம் பேசாமல், தந்தை
யாரைப்பற்றித் தெளிவாக உங்களுக்கு அறி
விப்பேன். 26 அந்த நாளில் என் பெயரால்
நீங்கள் வேண்டுதல் செய்வீர்கள். உங்களுக்
காகத் தந்தையாரிடம் அப்போது மன்றாடு
வேன் என்று நான் சொல்லாதிருப்பது,
27 தந்தையார் தாமே உங்களை நேசிக்கிறார்
என்பதால்தான். அவர் உங்களை நேசிப்ப
தற்குக் காரணம், நீங்கள் என்னை நேசித்து,
நான் கடவுளிடமிருந்து வந்தேனென்பதை
நம்புவதேயாகும். 28 நான் தந்தையாரின்
முன்னிலையினின்று புறப்பட்டு உலகத்துக்கு
வந்தேன்; இப்போது உலகத்தை விட்டுத்
தந்தையாரிடம் செல்கிறேன்'' என்று சொன்
னார். 29 அப்பொழுது அவருடைய சீடர்
கள், ''இதோ, இப்போதுதான் தெளிவாகச்
சொல்லுகிறீர், உபமானமாக ஒன்றும்
சொல்லவில்லை. 30 உமக்கு எல்லாம் தெரி
யும்; யாரும் உம்மைக் கேள்வி கேட்கத்
தேவையில்லை என்பது இப்போது எங்களுக்
குத் தெரிகிறது. இதனால் நீர் கடவுளிட
மிருந்து வந்தீரென்பதை நம்புகிறோம்''
என்று சொன்னார்கள். 31 அதற்கு இயேசு,
''இப்போது நம்புகிறீர்களா? சரி,
இதைக் கேளுங்கள்: 32 நீங்கள் சிதறடிக்கப்
படுவீர்கள். ஒவ்வொருவனும் தன்தன் வீட்
டுக்குச் செல்ல நேரிடும்; என்னைத் தனியே
விட்டுவிடுவீர்கள். அந்தக் காலம் வரும்;
ஏன், இப்போதே வந்திருக்கிறது. ஆனால்
நான் தனிமையாயில்லை. தந்தையார் என்
னுடன் இருக்கிறார். 33 நீங்கள் எனக்குள்
நிலைத்திருந்து சமாதானத்தைப் பெறும்
பொருட்டு இவற்றை உங்களுக்குச் சொன்
னேன். உலகத்தில் உங்களுக்குத் துன்பம்
இருக்கும்; ஆனாலும் மனச்சோர்வடையா
தீர்கள்; நான் உலகத்தை வென்றுவிட்
டேன்'' என்று சொன்னார்.

### இயேசுவின் மன்றாட்டு

**17** இப்படிப் பேசினபின் இயேசு
வானத்தை அண்ணாந்து பார்த்து,
''தந்தையே, நேரம் வந்துவிட்டது. உம்
முடைய மைந்தரால் உமது மாட்சிமை
விளங்கும்படி நீர் அவரது மாட்சிமையை
விளங்கச் செய்தருளும். 2 ஏனெனில், நீர்
உம்முடைய மைந்தரிடம் ஒப்புவித்த அனை
வருக்கும் அவர் என்றுமுள்ள மெய்வாழ்
வைக் கொடுக்கும்பொருட்டு மனுமக்கள்
அனைவர்மேலும் நீர் அவருக்கு அதிகாரம்
அளித்திருக்கிறீர். 3 உண்மையான ஒரே
கடவுளாகிய உம்மையும் நீர் அனுப்
பினவராகிய இயேசுகிறிஸ்துவையும் அறிந்து
கொள்வதே என்றுமுள்ள மெய்வாழ்வு.
4 நான் செய்யும்படி நீர் எனக்குத் தந்த
வேலையை நான் செய்து முடித்ததன்
மூலம் உலகத்தில் உமது மாட்சிமையை
விளங்கச் செய்கிறேன். 5 தந்தையே, உல
கம் உண்டானதற்குமுன் உமது முன்
னிலையில் எனக்கு இருந்த அதே மாட்சி
மையை அருளி, இப்போதும் உமது
முன்னிலையில் எனக்கு மாட்சிமை அளித்
தருளும்.

6 ''உலகத்தினின்று தேர்ந்தெடுத்து நீர்
என்னிடம் ஒப்புவித்த மனிதருக்கு நான்
உமது திருப்பெயரை வெளிப்படுத்தி
னேன். உம்முடையவர்களாயிருந்த அவர்
களை நீர் என்னிடம் ஒப்புவித்தீர். அவர்கள்
உமது வார்த்தையைக் கடைப்பிடித்து
நடக்கிறார்கள். 7 நீர் எனக்குத்
தந்தவையெல்லாம் உம்மிடமிருந்தே வரு
கின்றன என்பதை அவர்கள் இப்போது
அறிந்திருக்கிறார்கள். 8 நீர் எனக்கு அரு
ளிய வாசகத்தை நான் அவர்களுக்கு
அருளினேன். அவர்கள் அதை ஏற்றுக்
கொண்டார்கள். நான் உமது முன்னிலை
யினின்று வந்தேன் என்பதை அவர்கள்
தெரிந்துகொண்டார்கள் என்பது திண்
ணம். நீர் என்னை அனுப்பினீர் என்பதையும்
நம்பினார்கள். 9 நான் அவர்களுக்காக
மன்றாடுகிறேன்; உலகத்திற்காக அன்று, நீர்
என்னிடம் ஒப்படைத்தவர்களுக்காக
மன்றாடுகிறேன். 10 ஏனெனில், அவர்கள்
உம்முடையவர்கள் — என்னுடையவை
யாவும் உம்முடையவை, உம்முடையவை
என்னுடையவை — அவர்களால் நான்
மாட்சிமை அடைந்திருக்கிறேன். 11 இனி
நான் உலகத்தில் இருக்கப்போவதில்லை;
அவர்களோ உலகத்தில் இருப்பார்கள்.
நான் உம்மிடம் வருகிறேன். தூயரான
தந்தையே, நாம் ஒன்றாயிருப்பதுபோல
அவர்களும் இருக்கும்படி நீர் எனக்கு
ஒப்புவித்த உமது திருப்பெயரின் பாது
காப்பிலேயே அவர்களையும் வைத்துப்
பாதுகாத்தருளும். 12 நான் அவர்களோடு
இருக்கையில் நீர் எனக்கு ஒப்புவித்த
உமது திருப்பெயரின் பாதுகாப்பில் அவர்
களை வைத்துக் காத்துவந்தேன். அவர்
களுள் ஒருவனும் அழியவில்லை. வேதா
கமம் நிறைவேறும்படி 'அழிவின் மகன்'
மட்டும் அழிந்தான். இப்பொழுது நான்
உம்மிடம் வருகிறேன். 13 என் மகிழ்ச்சி
அவர்கள் உள்ளத்தில் நிறைவாயிருக்கும்
படி நான் உலகத்தில் இருக்கையிலேயே
இவ்வாறு சொல்லுகிறேன். 14 உமது
வார்த்தையை நான் அவர்களிடம் ஒப்
படைத்தேன். நான் உலகத்துக்குரியவனாய்
இல்லாததுபோல அவர்களும் உலகத்துக்
குரியவர்களாய் இல்லை; அதனால் உலகம்

**16:28** யோ. 1:14. **16:32** சக. 13:7; மத். 26:31. **16:33** சங். 129:2; யோ. 12:31; 14:30; 1 யோ. 2:14. **17:2** 1 யோ. 2:25. **17:3** எரே. 24:7; எசே. 36:25—28. **17:4** 1 யோ. 5:20, 21. **17:12** சங். 41:9; மத். 26:24; யோ. 13:18; இருத்தூது. 1:16.

அவர்களைப் பகைத்தது. 15 நீர் அவர்களை
உலகத்தினின்று பிரித்துவிட வேண்டு
மென்று நான் கேட்கவில்லை; அவர்களைத்
தீயோனிடமிருந்து* காத்தருள வேண்டு
மென்றுதான் கேட்கிறேன். 16 நான் உல
கத்துக்குரியவனாய் இல்லாததுபோல அவர்
களும் உலகத்துக்குரியவர்களாய் இல்லை.
17 சத்தியத்தைக் கொண்டு அவர்களை
உமக்கு உரியவர்களாக்கியருளும். உமது
வார்த்தையே சத்தியம். 18 நீர் என்னை
உலகத்திற்குள் அனுப்பினதுபோல நானும்
அவர்களை உலகத்திற்குள் அனுப்பினேன்.
19 அவர்களும் மெய்யாகவே உமக்கு உரிய
வர்களாயிருக்கும்படி, அவர்களுக்காக
நான் என்னையே உமக்கு உரியவனாக்கு
கிறேன்.

20 ''நான் அவர்களுக்காக மட்டுமன்றி
அவர்களது வார்த்தையின் மூலம் என்னி
டம் நம்பிக்கை கொள்ளுகிறவர்களுக்காக
வும் வேண்டிக்கொள்ளுகிறேன். 21 நீர்
என்னை அனுப்பினீர் என்பதை உலகம்
நம்புவதற்காக, அவர்கள் எல்லாரும் ஒன்
றாயிருக்க வேண்டும் என்று வேண்டிக்
கொள்ளுகிறேன். தந்தையே, நீர் எனக்
குள்ளும் நான் உமக்குள்ளும் இருக்கிறது
போல அவர்களும் நமக்குள் இருக்க
வேண்டுமென்றும் வேண்டிக்கொள்ளு
கிறேன். 22 நாம் ஒன்றாயிருக்கிறது போல,
அவர்களும் ஒன்றாயிருக்கும்படியும், நான்
அவர்களுக்குள்ளும் நீர் எனக்குள்ளும்
இருப்பதால் அவர்கள் ஒன்றாவதில் முழு
வளர்ச்சி அடையும்படியும், நீர் எனக்கு
அளித்த மாட்சிமையை நான் அவர்
களுக்கு அளித்தேன். 23 நீர் என்னை
அனுப்பினீர் என்பதையும். நீர் என்னி
டம் அன்புகொண்டதுபோல அவர்களிட
மும் அன்புகொண்டீர் என்பதையும் உலகம்
அறிந்துகொள்வதற்காக இப்படிச் செய்
தேன். 24 தந்தையே, உலகத் தோற்றத்
திற்கு முன் நீர் என்னிடம் அன்புகொண்டு
எனக்கு மாட்சிமை அளித்தீர். நீர் என்னி
டம் ஒப்படைத்தவர்கள் என் மாட்சிமை
யைக் காணும்படி, நான் எங்கே இருக்கி
றேனோ அங்கே அவர்களும் இருக்க வேண்டு
மென்று விரும்புகிறேன். 25 நீதியுள்ள
தந்தையே, உலகம் உம்மை அறிந்துகொள்ள
வில்லை; நானோ உம்மை அறிவேன்; நீர்
என்னை அனுப்பினீர் என்பதை இவர்களும்
அறிந்துகொண்டார்கள். 26 நீர் என்னி
டம் கொண்டிருந்த அன்பு இவர்களுக்குள்
இருக்கவும், நானும் இவர்களுக்குள் இருக்
கவும், உம்மை இவர்கள் அறிந்துகொள்
ளும்படி செய்தேன்; இன்னமும் அறிந்து
கொள்ளும்படி செய்வேன்'' என்று
மன்றாடினார்.

### இயேசு பிடிபடுதல்

(மத்.26:47–56; மாற்.14:43–50;
லூக். 22:47–53)

18 இப்படிப் பேசினபின் இயேசு தம்
சீடரோடு வெளியே வந்து, கெத
ரோன் என்னும் நீரோடையைக் கடந்து
சென்றார். அங்கே ஒரு தோட்டம் இருந்தது.
அவரும் அவருடைய சீடரும் அதனுள்
சென்றார்கள். 2 இயேசுவும் அவரு
டைய சீடர்களும் அடிக்கடி அங்கே போய்க்
கூடுவதுண்டு. அவரைக் காட்டிக்கொடுத்த
யூதாசுக்கும் அந்த இடம் தெரியும்.
3 எனவே, யூதாஸ் படைவீரரையும்,
தலைமை ஆசாரியர்களும் பரிசேயரும்
அனுப்பின காவலரையும் கூட்டிக்கொண்டு
கைப்பந்தங்கள், விளக்குகள், படைக்கலன்
கள் ஆகியவற்றோடு அவ்விடத்திற்கு வந்
தான். 4 இயேசு தமக்கு நேரிடப்போகும்
யாவற்றையும் அறிந்தவராய் வெளியே
வந்து அவர்களைப் பார்த்து, ''யாரைத்
தேடுகிறீர்கள்?'' என்று கேட்டார்.
5 அவர்கள் அவரிடம், ''நாசரேத்தூர்
இயேசுவை'' என்று சொன்னார்கள். இயேசு
''நான்தான் அவர்'' என்றார். அவரைக்
காட்டிக்கொடுத்த யூதாசும் அவர்களோடு
நின்றுகொண்டிருந்தான். 6 ''நான்தான்
அவர்'' என்று இயேசு அவர்களிடம்
சொன்னதும், அவர்கள் பின்வாங்கித்
தரையிலே விழுந்தார்கள். 7 ''யாரைத்
தேடுகிறீர்கள்?'' என்று அவர் அவர்களை
மீண்டும் கேட்டார். அவர்கள், ''நாச
ரேத்தூர் இயேசுவை'' என்று சொன்னார்
கள். 8 இயேசு, ''நான்தான் அவர் என்று
உங்களுக்குச் சொன்னேனே: நீங்கள் என்
னைத்தான் தேடி வந்தீர்கள் என்றால்
இவர்களைப் போகவிடுங்கள்'' என்றார்.
9 ''நீர் என்னிடம் ஒப்புவித்தவர்களுள்
ஒருவனையும் நான் இழந்துவிடவில்லை''
என்று தாம் அளித்த வாக்கை நிறை
வேற்ற இப்படிச் சொன்னார். 10 சீமோன்
பேதுருவினிடம் ஒரு வாள் இருந்தது.
அவர் அதை உருவித் தலைமை ஆசாரி
யருடைய வேலைக்காரனைத் தாக்கி, அவ
னுடைய வலக்காதைத் துண்டித்தார்.
அந்த வேலைக்காரன் பெயர் மல்குஸ் என்
பது. 11 அப்பொழுது இயேசு பேதுரு
வைப் பார்த்து, ''உன் வாளை உறையில்
போடு. இது தந்தையார் எனக்குக்
கொடுத்துள்ள துன்பக்கலம். இதை நான்
பருகாமல் இருப்பேனா?'' என்று சொன்னார்.

* 'தீமையினின்று' என்றும் மொழிபெயர்க்கலாம்.
17:15 மத். 6:13; 1 கொரி. 5:10; 1 யோ. 5:18; 1 பேது. 1:22. **17:18** யோ. 4:37; 20:21. **17:19**
1 தெச. 4:7; எபி. 2:11. **17:20** யோ. 14:20; திருத்தூது. 4:32. **17:23** யோ. 15:9. **17:24** 1 தெச.
4:17; 2 தெச. 1:12. **17:25** 1 யோ. 3:1. **18:11** மத். 26:39; மாற். 14:36; லூக். 22:42.

### அன்னாவின் முன்னிலையில்
(மத்.26:57,58; மாற்.14:53,54;
லூக். 22:54)

12 படைவீரரும் படைத்தலைவனும் யூத
ருடைய காவலரும் இயேசுவைப் பிடித்துக்
கட்டி, 13 அவரை முதலில் அன்னாவிடம்
நடத்திச் சென்றார்கள். அந்த ஆண்
டில் தலைமை ஆசாரியராயிருந்த காய்பா
வுக்கு அவர் மாமன். 14 இந்தக் காய்பா
தான், ''மக்கள் பொருட்டு ஒரே ஒரு
மனிதன் சாவது நலம்'' என்று யூதருக்கு
ஆலோசனை கூறினவர்.

### பேதுருவின் மறுதலிப்பு
(மத்.26:69,70; மாற்.14:66–68;
லூக். 22;55–57)

15 சீமோன் பேதுருவும் வேறொரு
சீடரும் இயேசுவைப் பின்தொடர்ந்து
சென்றார்கள். அந்தச் சீடர் தலைமை ஆசாரி
யருக்கு அறிமுகமானவர். எனவே, அவர்
இயேசுவோடு தலைமை ஆசாரியரது
மாளிகை முற்றத்திற்குப் போனார். பேதுரு
வெளியில் வாயிலருகே நின்றுவிட்டார்.
16 அப்பொழுது தலைமை ஆசாரியருக்கு
அறிமுகமாயிருந்த அந்தச் சீடர் வெளியே
வந்து, வாயில் காப்பவளிடம் சொல்லிப்
பேதுருவை உள்ளே அழைத்துக்கொண்டு
போனார். 17 அப்பொழுது வாயில் காக்கும்
வேலைக்காரி பேதுருவினிடம், '' நீயும்
அந்த மனிதனுடைய சீடருள் ஒருவனல்
லவா?'' என்று கேட்டாள். அவர்,
''இல்லை'' என்றார். 18 அது குளிர்காலமா
யிருந்தபடியால் வேலைக்காரரும் காவலரும்
கரியினால் நெருப்பு உண்டாக்கி,
அங்கே நின்று குளிர் காய்ந்துகொண்டி
ருந்தார்கள்; பேதுருவும் அவர்களோடு
நின்று குளிர்காய்ந்துகொண்டிருந்தார்.

### தலைமை ஆசாரியரது விசாரணை
(மத்.26;59–66; மாற்.14;55–64;
லூக். 22;66–71)

19 தலைமை ஆசாரியர் இயேசுவினிடம்
அவருடைய சீடரைப்பற்றியும், அவரு
டைய போதனையைப்பற்றியும் விசாரித்
தார். 20 இயேசு மறுமொழியாக, ''உல
கமே அறிய நான் வெளிப்படையாகப்
பேசி வந்தேன், யூதரெல்லாரும் கூடி
வரும் தொழுகைக்கூடங்களிலும் திருக்
கோவிலிலுந்தான் நான் எப்போதும்
போதித்தேன். மறைவாக ஒன்றும் பேச
வில்லை. 21 என்னிடம் ஏன் இதை விசா
ரிக்கிறீர்? நான் சொன்னதைக் கேட்ட
வர்களிடம் விசாரித்துப் பாரும்; நான்
அவர்களுக்கு என்ன சொன்னேன் என்
பது அவர்களுக்குத் தெரியும்'' என்று
சொன்னார். 22 அவர் இப்படிச் சொன்ன
தும் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த
காவலருள் ஒருவன், ''தலைமை ஆசாரி
யருக்கு இப்படித்தானா பதில் சொல்லுவது?''
என்று சொல்லிக்கொண்டே இயேசுவை
ஓர் அறை அறைந்தான். 23 இயேசு
அவனைப் பார்த்து, ''நான் பேசினது தவறா
யிருந்தால், தவறு என்னவென்பதை
எடுத்துக்காட்டு; நான் பேசினது சரியென்
றால் ஏன் என்னை அடிக்கிறாய்?'' என்று
கேட்டார். 24 அதன்பின் அன்னா அவ
ரைக் கட்டுண்டவராகவே தலைமை ஆசாரிய
ராகிய காய்பாவினிடம் அனுப்பினார்.

### பேதுரு மறுபடியும் மறுதலித்தல்
(மத்.26:71–75; மாற்.14:69–72;
லூக். 22:58–62)

25 சீமோன் பேதுரு குளிர் காய்ந்து
கொண்டு நிற்கையில் சிலர் அவரிடம்,
''நீயும் அவருடைய சீடருள் ஒருவனல்
லவா?'' என்று கேட்டார்கள். அவர்,
''இல்லை'' என்று மறுதலித்தார். 26 தலைமை
ஆசாரியருடைய வேலைக்காரருள் ஒருவன்,
''தோட்டத்தில் நான் உன்னை அவனோடு
பார்த்தேனல்லவா?'' என்று கேட்டான்.
இவன் பேதுருவினால் காது துண்டிக்கப்
பட்டவனுக்கு உறவினன். 27 பேதுரு
மீண்டும் மறுதலித்தார். உடனே சேவல்
கூவிற்று.

### பிலாத்துவின் முன்னிலையில்
(மத்.27:1,2,11-14;மாற்.15:1-5;
லூக். 23:1–5)

28 பிறகு அவர்கள் இயேசுவைக் காய்பா
வினிடமிருந்து மாநிலத் தலைவனின்
மாளிகைக்கு அழைத்துச் சென்றார்கள்.
அது பொழுதுவிடியும் வேளை. பஸ்கா
விருந்தை உண்ணுமுன் தீட்டுப்படாமலிருக்க
வேண்டும் என்பதற்காக அவர்கள் அந்த
மாளிகைக்குள் நுழையவில்லை. 29 ஆகை
யால் பிலாத்து வெளியே அவர்களிடம்
வந்து, ''இந்த மனிதன்மீது நீங்கள் சுமத்
தும் குற்றமென்ன?'' என்று கேட்டான்.
30 அதற்கு அவர்கள், ''இவன் குற்றம்
செய்திராவிட்டால் இவனை உம்மிடம் ஒப்
புக்கொடுக்க வந்திருக்கமாட்டோமே''என்
றார்கள். 31 அப்பொழுது பிலாத்து அவர்
களைப் பார்த்து, ''இவனைக் கொண்டு
போய் உங்கள் சட்டப்படி நீங்களே விசா
ரணை செய்துகொள்ளுங்கள்'' என்றான்.
அதற்கு யூதர்கள், ''யாருக்கும் மரண

**18:14** யோ. 3:14; 12:32. **18:20** ஏசா. 45:19; 48:16; மத். 26:55; லூக். 19:47; 22:53. **18:22** திருத்தூது. 23:2.

தண்டனை அளிக்க எங்களுக்கு அதிகாரம்
இல்லையே'' என்று சொன்னார்கள். 32 இவ்
வாறு சொல்லி, இயேசு தமக்கு இன்ன
வகையான மரணம் வரும் என்று குறிப்
பிட்டுச் சொன்னது நிறைவேறும்படி
செய்துவிட்டார்கள்.

33 பிலாத்து மீண்டும் மாளிகைக்குள்
சென்று இயேசுவை வரவழைத்து, ''நீ
யூதருக்கு அரசனா?'' என்று கேட்டான்.
34 அதற்கு இயேசு, ''நீரே இப்படிக்
கேட்கிறீரா, அல்லது மற்றவர்கள் என்
னைப்பற்றி உம்மிடம் கூறினார்களா?''
என்று கேட்டார். 35 பிலாத்து, ''என்ன?
நான் ஒரு யூதனா? உன்னுடைய இனத்த
வரும் தலைமை ஆசாரியர்களுமே உன்னை
என்னிடம் ஒப்படைத்திருக்கிறார்கள். நீ
என்ன செய்தாய்?'' என்று கேட்டான்.
36 அப்பொழுது இயேசு, ''என் அரசு
இவ்வுலகத்தின் இயல்புடையதன்று; என்
அரசு இவ்வுலகத்தின் இயல்புடையதா
யிருந்தால், நான் யூதரிடம் ஒப்புக்கொடுக்
கப்படாதபடி என் ஆள்கள் எதிர்த்துப்
போராடியிருப்பார்கள்; இல்லை, என்
அரசு இவ்வுலகத்தின் இயல்புடையதன்று''
என்று சொன்னார். 37 அப்பொழுது
பிலாத்து, ''அப்படியானால் நீ ஓர் அர
சன்தானே?'' என்று கேட்க, இயேசு,
''நான் அரசனென்று நீரே சொல்லு
கிறீர்; சத்தியத்தைக் குறித்துச் சாட்சி
கூறவே நான் பிறந்தேன். அதற்காகவே
இந்த உலகத்துக்கு வந்தேன்; தனக்
குள்ளே சத்தியத்தை உடையவன் ஒவ்
வொருவனும் என் குரலுக்குச் செவி
சாய்க்கிறான்'' என்று கூறினார். 38 பிலாத்து
அவரிடம், ''சத்தியம் என்பது என்ன?''
என்று கேட்டான்.

### மரணத்தீர்ப்பு அளித்தல்
*(மத்.27:15–31; மாற்.15:6–20;
லூக். 23:13–25)*

இப்படிக் கேட்டுவிட்டு அவன் மறுபடியும்
வெளியே யூதரிடம் வந்து, ''நான்
அவனிடம் ஒரு குற்றத்தையும் காண
வில்லை. 39 பஸ்காப் பண்டிகையின்போது
உங்களுக்காக ஒரு கைதியை விடுதலை
செய்யும் வழக்கம் இருக்கிறதே, அதன்
படி நான் உங்களுக்காக யூதருக்கு அர
சனாகிய இவனை விடுதலை செய்வது உங்
களுக்கு விருப்பந்தானா?'' என்று கேட்
டான். 40 அதற்கு அவர்கள், ''அவன்
வேண்டாம், பரபாஸ்தான் வேண்டும்''
என்று அடுத்தடுத்துக் கூச்சலிட்டார்கள்.
பரபாஸ் என்றவன் ஒரு கொள்ளைக்
காரன்.

**19** அதன்பின், பிலாத்து இயேசுவைப்
பிடித்து வாரினால் அடிக்கும்படி
செய்தான். 2 படைவீரர் முள்ளால் ஒரு
முடியைப் பின்னி அதை அவர் தலையில்
வைத்து, செந்நிற மேலாடை ஒன்றை
அவருக்கு அணிந்தனர்; 3 பிறகு அவரிடம்
மீண்டும் மீண்டும் வந்து, ''யூதருடைய
அரசனே, வாழ்க!'' என்று சொல்லி,
அவரை அறைமேல் அறை அறைந்தனர்.
4 பிலாத்து மறுபடியும் வெளியே வந்து
மக்களை நோக்கி, ''நான் அவனிடம் ஒரு
குற்றத்தையும் காணவில்லை என்பதை உங்
களுக்குத் தெரிவிக்கும்படி அவனை வெளியில்
உங்களிடமே கொண்டு வருகிறேன்''
என்று சொன்னான். 5 இயேசு முள்முடி
யும் செந்நிற மேலாடையும் அணிந்தவ
ராய் வெளியே வந்தார். பிலாத்து அவர்
களைப் பார்த்து, ''இதோ மனிதன்!''
என்றான். 6 அவரைக் கண்டதும் தலைமை
ஆசாரியர்களும் காவலரும், ''சிலுவையில்
அறையும், சிலுவையில் அறையும்''
என்று கூக்குரலிட்டார்கள். பிலாத்து,
அவர்களிடம், ''நீங்களே இவனைக்
கொண்டுபோய்ச் சிலுவையில் அறையுங்கள்.
நான் இவனிடம் ஒரு குற்றத்தையும்
காணவில்லை'' என்று சொன்னான்.
7 அதற்கு யூதர்கள், ''இவன் தன்னைக்
கடவுளின் மைந்தன் என்று கூறிக்கொள்
கிறான். எங்களுக்கு ஒரு சட்டம் உண்டு.
அந்தச் சட்டத்தின்படி இவன் சாக வேண்
டும்'' என்று சொன்னார்கள்.

8 இந்த வார்த்தையைக் கேட்டதும்
பிலாத்து இன்னும் மிகுதியாக அஞ்சினான்.
9 அவன் மறுபடியும் மாளிகைக்குள்
சென்று இயேசுவினிடம், ''நீ எங்
கிருந்து வந்தவன்?'' என்று கேட்டான்.
இயேசுவோ அவனுக்குப் பதிலளிக்கவில்லை.
10 அப்பொழுது பிலாத்து, ''என்னோடு பேச
மாட்டாயா? உன்னை விடுதலை செய்யவும்
எனக்கு அதிகாரம் உண்டு, உன்னைச் சிலு
வையில் அறையவும் எனக்கு அதிகாரம்
உண்டு; இது உனக்குத் தெரியுமல்லவா?'
என்று கேட்டான். 11 அதற்கு இயேசு,
''விண்ணிலிருந்து உமக்கு அதிகாரம்
அளிக்கப்படாதிருந்தால் என்மேல் உமக்கு
எந்த அதிகாரமும் இல்லை. இப்படியிருப்ப
தால், என்னை உம்மிடம் ஒப்புக்கொடுத்த
வன்மேல் பெரும்பழி சுமரும்'' என்று
சொன்னார். 12 அதன்பேரில் பிலாத்து
அவரை எப்படியாவது விடுதலை செய்ய
வேண்டுமென்று எண்ணினான். ஆனால்
யூதர்களோ, ''இவனை விடுதலை செய்
தால், நீர் ரோமப் பேரரசருடைய நண்
பர் என்று சொல்வதற்கில்லை; தன்னை அரச
னாக்கிக்கொள்ளும் எவனும் பேரரச
ருக்கு எதிரியே'' என்று கூக்குரலிட்டார்கள்.

18:32 யோ.3:14; 12:32. 18:37 1 யோ.3:20. 18:38 மத்.27:13; லூக்.23:22 19:7 லேவி.24:16; யோ.10:33.

13 இந்த வார்த்தைகளைக் கேட்டதும் பிலாத்து இயேசுவை வெளியே அழைத்துக் கொண்டு வந்தான்; பிறகு கல்தளம் என்று சொல்லப்படும் இடத்திலுள்ள நீதி பதி இருக்கைமீது உட்கார்ந்தான். அந்த இடம் எபிரேயு மொழியில் கபத்தா எனப்படும். அன்று பஸ்காப் பண்டி கைக்கு ஆயத்த நாள். 14 மணியும் கிட்டத் தட்ட பகல் பன்னிரண்டு* ஆகிவிட்டிருந்தது. பிலாத்து யூதரை நோக்கி, ''இதோ, உங்கள் அரசன்'' என்று சொன்னான். 15 அவர்களோ, ''தொலைத்துவிடும், தொலைத்துவிடும், சிலுவையில் அறையும்'' என்று கூக்குரலிட்டார்கள். பிலாத்து, ''உங்கள் அரசனையா நான் சிலுவையில் அறைவது?'' என்று கேட்டான். அதற்குத் தலைமை ஆசாரியர்கள், ''ரோமப் பேரர சரைத் தவிர வேறு அரசர் எங்களுக்கு இல்லை'' என்று சொன்னார்கள். 16 எனவே, முடிவில் பிலாத்து அவரைச் சிலுவையில் அறையும்படி அவர்களிடம் ஒப்புக்கொடுத் தான்.

## சிலுவையில் அறைதல்
(மத்.27:32—44; மாற்.15:21—32; லூக். 23:26—43)

அவர்கள் இயேசுவைப் பிடித்துக் கொண்டு போனார்கள். 17 அவர் தமது சிலுவையைத் தாமே சுமந்துகொண்டு, நகரத்துக்கு வெளியே இருந்த தலையோட் டிடம் என்னும் இடத்துக்குப் போனார். அது எபிரேய மொழியில் கொல்கொதா எனப்படும். 18 அங்கே இயேசுவைச் சிலு வையில் அறைந்தார்கள்; அவரோடு வேறு இருவரை இரு பக்கங்களிலும், அவரை நடுவிலும் சிலுவையில் அறைந்தார்கள். 19 பிலாத்து ஓர் அறிக்கையை எழுதி அதைச் சிலுவையில் பொருத்தும்படி செய்தான். அதில், ''நாசரேத்தூர் இயேசு யூதரின் அரசன்'' என்று எழுதியிருந்தது. 20 இயேசுவைச் சிலுவையில் அறைந்த இடம் நகரத்துக்குப் பக்கத்தில் இருந்ததால் யூதர் பலர் அந்த அறிக்கையைப் படித் தனர். அது எபிரேயு இலத்தீன் கிரேக்க மொழிகளில் எழுதப்பட்டிருந்தது. 21 யூத ருடைய தலைமை ஆசாரியர்கள் பிலாத்து விடம், ''யூதரின் அரசன் என்று எழுத வேண்டாம், 'நான் யூதரின் அரசன்' என்று அவன் சொல்லிக்கொண்டதாக எழுதவேண்டும்'' என்று கேட்டுக்கொண் டார்கள். 22 அதற்குப் பிலாத்து, ''நான் எழுதினது எழுதினதே'' என்று சொன்னான்.

23 இயேசுவைச் சிலுவையில் அறைந்த பின் படைவீரர்கள் அவருடைய உடைகளை எடுத்து அதை நான்கு பாகங் களாக்கி ஆளுக்கு ஒரு பாகம் எடுத்துக் கொண்டார்கள். உள்ளங்கியையும் எடுத் தார்கள். ஆனால் அது தையலே இல்லா மல் மேலிருந்து அடிவரை ஒரே துணி யாய் நெய்யப்பட்டிருந்தது. 24 ஆகை யால் அவர்கள், ''நாம் இதைக் கிழிக்கா மல், இது யாருக்குக் கிடைக்கும் என்று பார்க்கச் சீட்டுக் குலுக்கிப் போடுவோம்'' என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டு அவ்வாறே செய்தார்கள்.

''என் ஆடைகளைத் தங்களுக்குள் பங்கிட்டுக்கொண்டு என் உடையின் பேரில் சீட்டுக் குலுக்கினார்கள்''

என்கிற வேதவாக்கியமும் இவ்வாறு நிறை வேறிற்று. 25 இயேசுவின் தாயாரும் அவ ருடைய தாயாரின் சகோதரியும் கிலெ யோப்பாவின் மனைவியாகிய மரியாளும் மகதலேனா மரியாளும் அவரது சிலுவை யருகில் நின்றுகொண்டிருந்தார்கள் 26 தம்முடைய தாயாரும் தாம் நேசித்த சீடரும் அருகே நிற்கிறதை இயேசு கண்டு, தம் தாயாரிடம், ''அம்மணீ, அதோ உன் மகன்'' என்றார். 27 பிறகு அந்தச் சீடரை நோக்கி, ''அதோ உன் தாய்'' என்றார். அந்நேரமுதல் அந்தச் சீடர் அவரை ஏற்றுக்கொண்டு தம் வீட்டில் ஆதரித்து வந்தார்.

## இயேசுவின் மரணம்
(மத். 27:45—56; மாற்.15:33—41; லூக். 23:44—49)

28 அதன்பின், எல்லாம் முடிந்தன என்பதை இயேசு அறிந்து, ''தாகமயிருக் கிறேன்'' என்றார். நிறைவேற வேண்டிய வேதவாக்கியம் முற்றிலும் நிறை வேறிற்று. 29 அங்கே ஒரு பாத்திரம் நிறைய காடி இருந்தது. அந்தக் காடி யில் கடற்காளானைத் தோய்த்து, அதை ஈசோப்புத் தண்டில் பொருத்தி, அவர் வாயருகில் பிடித்தார்கள். 30 காடியை வாயில் வாங்கினபின் இயேசு, ''முடிந் தது'' என்றார்; பிறகு தலையைச் சாய்த்து ஆவியை ஒப்புக்கொடுத்தார்.

## ஈட்டியால் குத்துதல்

31 அன்று ஆயத்த நாளாகிய வெள் ளிக்கிழமை; அடுத்த நாள் தனிச்சிறப் புடைய ஓர் ஓய்வுநாள். அந்த ஓய்வு நாளில் உடல்கள் சிலுவையில் இராதபடி காலெலும்புகளை முறித்து அவற்றை எடுத்துவிடும்படி பிலாத்துவினிடம் யூதர் கள் கேட்டுக்கொண்டார்கள். 32 எனவே,

* மூலத்தில், யூதர் கணக்குப்படி, ஆறும் மணி என்றிருக்கிறது.
19:15 லூக். 19:14. 19:20 எபி. 13:12. 19:24 சங். 22:18 19:28 சங். 69:21; 22:15, 19:31 உபா. 21:23.

படைவீரர்கள் போய், இயேசுவோடு சிலு வையில் அறையப்பட்டவர்களுள் ஒருவன் காலெலும்புகளை முதலிலும், பிறகு அடுத் தவன் காலெலும்புகளையும் முறித்தார் கள். 33 இயேசுவினிடம் அவர்கள் வந்த போதோ, அவர் ஏற்கெனவே மரண மடைந்திருப்பதைக் கண்டதால், அவரு டைய காலெலும்புகளை முறிக்கவில்லை. 34 ஆனால் அவரது விலாப்புறத்தில் படை வீரருள் ஒருவன் ஈட்டியால் குத்தினான்; உடனே இரத்தமும் தண்ணீரும் வெளி வந்தன. 35 அதை நேரில் கண்டவனே இதற்குச் சாட்சி கூறியிருக்கிறான்; அவ னது சாட்சியம் உண்மையானதே. தான் கூறுவது உண்மையென்பது அவனுக்குத் தெரியும்; நீங்களும் நம்ப வேண்டுமென்றே இதைக் கூறியிருக்கிறான். 36 ''அவருடைய எலும்புகளுள் ஒன்றும் முறிக்கப்படுவ தில்லை'' என்கிற வேதவாக்கியம் நிறை வேறும்படி இப்படி நடந்தது. 37 மேலும், ''தாங்கள் ஊடுருவக் குத்தினவரை உற்று நோக்குவார்கள்'' என்று வேறொரு வேத வாக்கியமும் கூறுகிறது.

### அடக்கம் செய்தல்
*(மத்.27:57–61; மாற்.15:42–47; லூக். 23:50–56)*

38 அதற்குப்பின், அரிமத்தியா ஊர் யோசேப்பு என்பவர் இயேசுவின் உடலை எடுத்துக்கொண்டுபோகப் பிலாத்துவினி டம் அனுமதி கேட்டார். அந்த யோசேப் பும் இயேசுவின் சீடரே. ஆனால் அவர் யூதருக்கு அஞ்சி, அந்தரங்க சீடராகவே இருந்தார். பிலாத்து அனுமதி கொடுக்கவே அவர் வந்து இயேசுவின் உடலை எடுத்துக் கொண்டு போனார். 39 முன்பு ஒருநாளிரவு இயேசுவினிடம் வந்த நிக்கொதேமு என்பவரும் அங்கே வந்தார். அவர் வெள் ளைப்போளமும், அகில் தூளும் சேர்ந்த நறுமணக் கலவையை ஏறக்குறைய நூறு இராத்தல் கொண்டுவந்திருந்தார். 40 அவர் கள் இயேசுவின் உடலை எடுத்து, யூதர் அடக்கம் செய்யும் முறைமைப்படி நறுமணப் பொருள்களோடு அதைத் துணிகளில் சுற்றிக் கட்டினார்கள். 41 அவர் சிலுவையில் அறையப்பட்ட இடத்தில் ஒரு தோட்டம் இருந்தது. அந்தத் தோட்டத்தில் அது வரையிலும் யாரையும் அடக்கம் செய்யப் பயன்பட்டிராத புதிய கல்லறை ஒன்று இருந்தது. 42 அன்று யூதரின் பண்டிகைக்கு ஆயத்த நாளாயிருந்ததாலும், அந்தக் கல் லறை அருகிலிருந்ததாலும், இயேசுவை அதில் வைத்தார்கள்.

### இயேசு உயிர்த்தெழுந்தார்
*(மத். 28:1–10; மாற். 16:1–8; லூக். 24:1–12)*

20 வாரத்தின் முதல் நாளன்று மகத
லேனா மரியாள் விடியற்காலையில்
இருட்டு நீங்குமுன் கல்லறைக்குப் போய்,
கல்லறையின் வாயிலை அடைத்திருந்த கல்
அகற்றப்பட்டிருந்ததைக் கண்டாள். 2 கண்
டதும், அவள் விரைந்து ஓடிச் சீமோன்
பேதுருவினிடமும், இயேசு நேசித்த அந்த
மற்றச் சீடரிடமும் வந்து அவர்களி
டம், ''ஆண்டவரைக் கல்லறையிலிருந்து
யாரோ எடுத்துக்கொண்டு போய்விட்டார்
கள்; அவரை எங்கே வைத்திருக்கிறார்கள்
என்பது எங்களுக்குத் தெரியவில்லை''
என்று சொன்னாள். 3 உடனே பேதுருவும்
மற்றச் சீடரும் புறப்பட்டுக் கல்லறையை
நோக்கிப் போனார்கள். 4 அவ்விருவரும்
சேர்ந்தே ஓடினர். ஆனால், பேதுருவை
மற்றச் சீடர் முந்திக்கொண்டு விரைந்து
ஓடி முதலில் கல்லறையை அடைந்தார்.
5 அவர் குனிந்து உள்ளே பார்த்தபோது,
துணிகள் கிடக்கிறதைக் கண்டார். ஆனால்
உள்ளே போகவில்லை. 6 அவருக்குப் பின்
வந்த சீமோன் பேதுரு நேரே கல்லறைக்
குள் நுழைந்தார். அங்கே துணிகள் கிடக்
கிறதைக் கவனித்தார். 7 இயேசுவின் தலையை
மூடியிருந்த துணி அந்தத் துணிகளோடு
இல்லாமல் தனியாய் ஓரிடத்தில் சுருட்டிக்
கிடக்கிறதையும் கவனித்தார். 8 கல்
லறைக்கு முதலில் வந்த அந்த மற்றச்
சீடரும் பிறகு உள்ளே நுழைந்தார்.
அதைப் பார்த்து, நடந்ததை விளங்கிக்
கொண்டு, நம்பிக்கையுள்ளவரானார்.
9 ''அவர் இறந்தோரிடமிருந்து எழுந்
திருக்க வேண்டும்'' என்று வேதத்தில்
சொல்லியிருப்பதை அவர்கள் அதுவரை
யிலும் விளங்கிக் கொள்ளாமலிருந்தார்கள்.
10 பிறகு அந்தச் சீடர்கள் தங்கள்
இருப்பிடங்களுக்குத் திரும்பிப் போய்விட்
டார்கள்.

### இயேசு மகதலேனா மரியாளுக்குக் காட்சியளித்தல்
*(மத். 16:9–11)*

11 மரியாள் கல்லறைக்கு வெளியே
வந்து அதனருகில் நின்று அழுதுகொண்
டிருந்தாள். அவள் அழுதுகொண்டே
குனிந்து கல்லறைக்குள் பார்த்தாள்.
12 இயேசுவின் உடல் வைக்கப்பட்டிருந்த
இடத்தில் வெண்ணுடை அணிந்திருந்த
இரண்டு தெய்வதூதர், தலைமாட்டில் ஒரு
வனும் கால்மாட்டில் ஒருவனும் உட்

**19:36** யாத். 12:46; எண். 9:12; சங். 34:20. **19:37** சக. 12:10; திருவெளி. 1:7. **19:39** யோ. 3:1, 2.
**20:7** யோ. 11:44; 19:40. **20:9** யோ. 14:26

கார்ந்திருக்கிறதைக் கண்டாள். 13 அவர்கள் அவளைப் பார்த்து, ''ஏன் அம்மா அழுகிறாய்?'' என்று கேட்க, அவள், ''என் ஆண்டவரை யாரோ எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள்; அவரை எங்கே வைத்திருக்கிறார்கள் என்பதும் தெரியவில்லை'' என்றாள். 14 இவ்வாறு சொல்லிவிட்டு அவள் தலையைப் பின்பக்கம் திருப்பினாள்; இயேசு நிற்கிறதைக் கண்டாள். ஆனால் அது இயேசு என்பது அவளுக்குத் தெரியாது.

15 இயேசு அவளைப் பார்த்து, ''அம்மா, ஏன் அழுகிறாய்? யாரைத் தேடுகிறாய்?'' என்று கேட்டார். அவளோ அவரைத் தோட்டக்காரன் என்று நினைத்து அவரிடம், ''ஐயா, நீர் அவரைத் தூக்கிக் கொண்டு போயிருந்தால், அவரை எங்கே வைத்தீர் என்று எனக்குச் சொல்லும், நான் அவரை எடுத்துக்கொள்ளுகிறேன்'' என்றாள். 16 இயேசு அவளை நோக்கி, ''மரியாளே'' என்றார். அவள் அவர் பக்கமாகத் திரும்பி எபிரேயு மொழியில் ''ரபூனி'' என்றாள். அதற்குப் போதகரே என்பது பொருள். 17 இயேசு அவளைப் பார்த்து, ''என்னைப் பற்றிக்கொண்டிருக்க முயலாதே; நான் இன்னும் தந்தையாரிடம் ஏறிச் செல்லாமலேதான் இருக்கிறேன். ஆனால், என் தந்தையாரும் உங்கள் தந்தையாரும், என் கடவுளும் உங்கள் கடவுளுமாயிருக்கிறவரிடம் நான் செல்லப் போகிறேன். இதை நீ என் சகோதரரிடம் போய்ச் சொல்'' என்றார். 18 மகதலேனா மரியாள் சீடரிடம் போய், ''நான் ஆண்டவரைக் கண்டேன்'' என்று அறிவித்தாள்; அவர் தன்னிடம் சொன்ன இந்தச் செய்தியையும் அவர்களுக்குத் தெரிவித்தாள்.

### இயேசு சீடர்களுக்குக் காட்சியளித்தல்
(மத்.28:16–20; மாற்.16:14–18; லூக். 24:36–49)

19 வாரத்தின் முதல் நாளாகிய அன்று மாலை நேரத்தில், சீடர்கள் ஓர் அறையில் கூடியிருந்தார்கள். யூதரைப் பற்றிய அச்சத்தினால் கதவுகள் தாழிடப்பட்டிருந்தன. அப்பொழுது இயேசு வந்து அவர்களிடையே நின்று, ''உங்களுக்குச் சமாதானம் உண்டாவதாக'' என்றார். 20 இவ்வாறு சொல்லி, அவர் தம் கைகளையும் விலாவையும் அவர்களுக்குக் காட்டினார். சீடர்கள் ஆண்டவரைக் கண்டு பெருமகிழ்ச்சியடைந்தார்கள். 21 இயேசு மறுபடியும் அவர்களிடம், ''உங்களுக்குச் சமாதானம் உண்டாவதாக; தந்தையார் என்னை அனுப்பினதுபோல நானும் உங்களை அனுப்புகிறேன்'' என்று சொன்னார். 22 இப்படிச் சொல்லி அவர்கள்மீது ஊதி, ''தூய ஆவியைப் பெற்றுக்கொள்ளுங்கள். 23 யாருடைய பாவங்களை நீங்கள் மன்னிக்கிறீர்களோ அவை அவர்களுக்கு மன்னிக்கப்பட்டவையே. யாருடைய பாவங்களை நீங்கள் மன்னியாதிருக்கிறீர்களோ அவை அவர்களுக்கு மன்னிக்கப்படாதவையே'' என்றார்.

### இயேசுவும் தோமாவும்

24 பன்னிருவருள் ஒருவரான திதிமு எனப்படும் தோமா, இயேசு வந்திருந்த போது அவர்களோடில்லை. 25 எனவே, மற்றச் சீடர்கள், ''ஆண்டவரைக் கண்டோம்'' என்று அவரிடம் சொல்ல, அவர் அவர்களைப் பார்த்து, அவருடைய கைகளில் ஆணிகளினாலுண்டான தழும்பை நான் பார்த்து, ஆணி இருந்த இடத்தில் என் விரலை இட்டு, அவர் விலாவில் என் கையை வைத்துப் பார்த்தாலன்றி நம்பவே மாட்டேன்'' என்று சொன்னார்.

26 எட்டு நாளுக்குப்பின் அவருடைய சீடர்கள் முன்போலவே வீட்டிற்குள் இருந்தார்கள்; அவர்களோடு தோமாவும் இருந்தார். கதவுகள் தாழிடப்பட்டிருந்தன; அப்பொழுது இயேசு வந்து அவர்களிடையே நின்று, ''உங்களுக்குச் சமாதானம் உண்டாவதாக'' என்றார். 27 பிறகு அவர் தோமாவைப் பார்த்து, ''உன் விரலை இங்கே நீட்டி என் கைகளைத் தொட்டுப் பார்த்துக்கொள்; உன் கையை நீட்டி என் விலாவிலே வை; இன்னும் நம்பிக்கையற்றவனாயிராதே, நம்பிக்கை உள்ளவனாயிரு'' என்று சொன்னார். 28 அதற்குத் தோமா, ''என் ஆண்டவரே, என் கடவுளே'' என்றார். 29 இயேசு அவரிடம், ''என்னைப் பார்த்ததனாலேதானே நம்புகிறாய்? பார்க்காமலே நம்புகிறவர்கள் நற்பேறு பெற்றவர்கள்'' என்று சொன்னார்.

### இந்த நூலை எழுதியதன் நோக்கம்

30 தெய்வ ஆற்றலுக்கு அடையாளமான வேறுபல செயல்களையும் இயேசு தம்முடைய சீடரின் கண்ணெதிரே செய்தார். அவை இந்த நூலில் எழுதப்படவில்லை. 31 எனினும், இதிலுள்ளவை, இயேசு கடவுளின் மைந்தராகிய கிறிஸ்து என்று நீங்கள் நம்புவதற்காகவும், நம்பி அவருடைய திருப்பெயரால் மெய்வாழ்வை அடைவதற்காகவும் எழுதப்பட்டிருக்கின்றன.

**20:14** லூக். 24:16. **20:21** மத். 28:19; மாற். 16:15 லூக். 24:47. **20:22** திருத்தூது. 1:8. **20:23** மத். 16:19; 18:18. **20:29** லூக். 1:45; யோ. 4:48; **20:31** 1 யோ. 5:13; திருத்தூது. 3:16.

## இயேசு ஏழு சீடருக்குக் காட்சியளித்தல்

21 பிறகு இயேசு திபேரியா கடலருகில்
மறுபடியும் சீடருக்குக் காட்சியளித்
தார். அவர் காட்சியளித்த வகை இதுவே
2 சீமோன் பேதுருவும், திதிமு எனப்
பட்ட தோமாவும், கலிலேயா நாட்டுக்
கானாவூர் நாத்தான்வேலும், செபெதேயு
வின் மைந்தரும், அவருடைய சீடருள்
வேறு இருவரும் ஒன்றாய்க் கூடியிருந்தனர்.
3 சீமோன் பேதுரு மற்றவர்களைப் பார்த்து,
''நான் மீன்பிடிக்கப் போகிறேன்''
என்று சொன்னார். அதற்கு அவர்கள்,
''நாங்களும் உம்மோடு வருகிறோம்''
என்றார்கள். அவர்கள் போய்ப் படகில்
ஏறினார்கள். அன்று இரவு முழுவதும்
அவர்கள் ஒன்றும் பிடிக்கவில்லை. 4 பொழுது
விடியும் வேளையில் இயேசு கரையில் வந்து
நின்றார். ஆனால், அங்கே நின்றவர் இயேசு
என்பது சீடர்களுக்குத் தெரியாது. 5 இயேசு
அவர்களைப் பார்த்து, ''பிள்ளைகளே, மீன்
ஒன்றும் கிடைக்கவில்லையா?'' என்று
கேட்டார். அதற்கு அவர்கள், ''இல்லை''
என்று சொன்னார்கள். 6 அப்பொழுது
அவர், ''படகின் வலப்புறம் வலையை
வீசுங்கள், கிடைக்கும்'' என்றார். அவர்கள்
அவ்வாறே வீசினார்கள்; ஏராளமான மீன்
கள் அகப்பட்டன. ஆகையால் அவர்
களால் வலையை இழுக்க இயலவில்லை.
7 இயேசு நேசித்த அந்தச் சீடர் அதைக்
கண்டு பேதுருவினிடம், ''அவர் ஆண்டவரே''
என்று சொன்னார். அவர் ஆண்டவரே
என்று சொன்னதைக் கேட்டதும்
சீமோன் பேதுரு, தம் ஆடையைக் களைந்
திருந்ததால் மேலாடையை அரையில் கட்
டிக்கொண்டு கடலில் குதித்து நீந்தி
வந்தார். 8 ஆனால் மற்றச் சீடர்களோ
படகில் இருந்தவாறே மீன் நிறைந்திருந்த
அந்த வலையை அப்படியே இழுத்துக்
கொண்டு வந்தார்கள். அவர்கள் கரையி
லிருந்து நெடுந்தொலைவிலன்று, ஏறக்
குறைய இருநூறு முழத்தொலைவிலேதான்
இருந்தார்கள்.

9 அவர்கள் கரையில் இறங்கினபோது,
கரியினால் நெருப்பு மூட்டியிருப்பதையும்,
அதன்மேல் மீனை வேகவைத்திருப்பதை
யும், அங்கே அப்பம் இருப்பதையும் கண்
டார்கள். 10 இயேசு அவர்களிடம், ''நீங்
கள் இப்போது பிடித்த மீன்களுள் சில
வற்றைக் கொண்டுவாருங்கள்'' என்று
சொன்னார். 11 சீமோன் பேதுரு படகில்
ஏறி வலையைக் கரைக்கு இழுத்தார். வலை
நிறையப் பெரிய மீன்கள் இருந்தன.
மொத்தம் நூற்றைம்பத்துமூன்று. அத்தனை
மீன்கள் இருந்தும் வலை கிழியவில்லை.
12 இயேசு அவர்களிடம், ''சாப்பிட
வாருங்கள்'' என்று சொன்னார். அவர்
ஆண்டவரே என்பதை அறிந்துகொண்ட
தால், சீடருள் ஒருவராவது, ''நீர் யார்?''
என்கிற கேள்வியை அவரிடம் கேட்கத்
துணியவில்லை. 13 இயேசு அவர்களருகில்
வந்து அப்பத்தை எடுத்துக் கொடுத்தார்;
மீனையும் அப்படியே கொடுத்தார்.
14 இயேசு தாம் இறந்தோரிடமிருந்து
உயிரோடெழுந்தபின் தம் சீடருக்குக்
காட்சியளித்தது இது மூன்றாம் முறையாகும்.

## இயேசுவும் பேதுருவும்

15 அவர்கள் சாப்பிட்டு முடிந்தபின்
இயேசு சீமோன் பேதுருவைப் பார்த்து,
''யோவான் மகனாகிய சீமோனே, இவர்
களைவிட நீ என்னிடம் அதிகமாக அன்பு
கூர்கிறாயா?'' என்று கேட்டார். அதற்கு
அவர், ''ஆம், ஆண்டவரே, நான் உம்மை
நேசிக்கிறேன் என்பது உமக்குத் தெரி
யும்'' என்று சொன்னார். அவர், ''என்
ஆட்டுக்குட்டிகளை மேய்த்துவா'' என்றார்.
16 இரண்டாம் முறை அவர் அவரிடம்
''யோவான் மகனாகிய சீமோனே, நீ என்
னிடம் அன்புகூர்கிறாயா?'' என்று கேட்
டார். அதற்கு அவர், ''ஆம், ஆண்ட
வரே; உம்மை நேசிக்கிறேன் என்பது
உமக்குத் தெரியும்'' என்று சொன்னார்.
அவர், ''என் ஆடுகளுக்கு மேய்ப்பனா
யிரு'' என்றார். 17 மூன்றாம் முறையும்
அவர் அவரைப் பார்த்து, ''யோவான்
மகனாகிய சீமோனே, என்னை நீ நேசிக்
கிறாயா?'' என்று கேட்டார். ''என்னை நீ
நேசிக்கிறாயா?'' என்று அவர் தம்மிடம்
மூன்றாம் முறை கேட்டதால், பேதுரு
வருத்தமுற்று, ''ஆண்டவரே, எல்லாம்
உமக்குத் தெரியும், நான் உம்மை நேசிக்
கிறேன் என்பதையும் நீர் அறிவீர்'' என்
றார். இயேசு அவரிடம், ''என் ஆடுகளை
மேய்த்துவா. 18 நீ இளைஞனாயிருந்த
போது, உனக்கு விருப்பமான இடத்துக்கு
நீ வரிந்து கட்டிக்கொண்டு போவதுண்டு,
ஆனால் நீ வயது முதிர்ந்தவனாயிருக்கும்
போது, உன் கைகளை நீட்டுவாய், வேறொ
ருவன் உன்னைக் கட்டி உனக்கு விருப்ப
மில்லாத இடத்துக்குக் கொண்டுசெல்
வான் என்று உனக்கு மிகவும் திட்டமா
கச் சொல்லுகிறேன்'' என்று சொன்னார்.
19 அவர் எவ்வாறு மரணமடைந்து கட
வுளின் மாட்சிமையை வெளிப்படுத்துவார்
என்பதைக் குறிப்பிடுவதற்காக இப்படிச்
சொன்னார். இப்படிச் சொன்னபின் அவர்
அவரிடம், ''என்னைப் பின்பற்றி வா''
என்றார்.

**21:3** லூக். *5:5—10.* **21:9** லூக். *24: 41—43.* **21:15** திருத்தூது. *20:28.* **21:17** மத். *16:17—19* லூக். *22:31, 32;* **21:18** 2 பேது. *1:14.*

### இயேசுவால் நேசிக்கப்பட்ட சீடன்

20 பேதுரு திரும்பிப் பார்த்து, இயேசு
வால் நேசிக்கப்பட்ட சீடரும் பின்பற்றி
வருகிறதைக் கண்டார். கடைசி இராப்
பந்தியில் இயேசுவின் மார்பருகில் சாய்ந்து
''ஆண்டவரே, உம்மைக் காட்டிக்கொடுப்
பவன் யார்?'' என்று கேட்டவர் அவரே.
21 அவரைக் கண்டு பேதுரு இயேசுவி
னிடம், ''ஆண்டவரே, இவனுக்கு என்ன
நடக்கும்?'' என்று கேட்டார். 22 அதற்கு
இயேசு, ''நான் வருமளவும் இவன் உயி
ரோடிருக்க வேண்டுமென்று நான் திரு
வுளங்கொண்டால் உனக்கென்ன? நீ என்
னைப் பின்பற்றிவா'' என்று சொன்னார்.
23 ஆகையால், அந்தச் சீடர் இறக்கமாட்
டார் என்ற பேச்சு சகோதரரிடையே
பரவிற்று. ஆனால், அவர் இறக்க
மாட்டார் என்று இயேசு சொல்லவில்லை;
''நான் வருமளவும் இவன் உயிரோடிக்க
வேண்டுமென்று நான் திருவுளங்கொண்
டால் உனக்கென்ன?'' என்றுதான் சொன்
னார்.

24 அந்தச் சீடரே இவற்றிற்குச் சாட்சி
யாயிருக்கிறார். அவரே இவற்றை எழுதி
வைத்தவர். அவருடைய சாட்சியம்
உண்மை என்பது எங்களுக்குத் தெரியும்.
25 இயேசு செய்த வேறு பல காரியங்
களும் உண்டு; அவற்றை ஒவ்வொன்றாக
எழுதினால், எழுதப்படும் நூல்களை உலகமே
கொள்ளாது என்று நினைக்கிறேன்.

**21:20** யோ. 13:25.

# திருத்தூதுவர் செயல்கள்

1 அன்பார்ந்த தெயோப்பிலுவே, இயேசு விண்ணுக்கு உயர்த்தப்பட்ட நாள்வரையிலும் அவர் செய்தவை போதித்தவை யாவற்றையும் குறித்து நான் முதலாம் நூலில் எழுதினேன். 2 அவர் பாடுற்று மரணமடைந்தபின், தாம் தேர்ந்து கொண்ட திருத்தூதுவருக்கு நாற்பது நாள்வரையில் பலமுறை காட்சியளித்து, கடவுளின் அரசைப்பற்றிய காரியங்களை அவர்களுக்குப் போதித்தார். இதுபோன்ற பல சான்றுகளினால் தாம் உயிரோடிருப்பதை அவர் அவர்களுக்குத் தெளிவாகக் காட்டினார்; 3 அவர்கள் செய்ய வேண்டியவற்றைக் குறித்துத் தூய ஆவியானவரைக் கொண்டு அவர்களுக்குக் கட்டளையுமிட்டார். 4 அந்த நாற்பது நாட்காலத்தில் அவர்களோடு உணவு அருந்திக்கொண்டிருந்த ஒரு சமயத்தில் அவர் அவர்களிடம், ''நீங்கள் எருசலேமை விட்டுப் போகாமல், என்னிடம் கேட்டறிந்த விண்ணகத் தந்தையாரின் வாக்குறுதி நிறைவேறும் வரையில் இங்கேயே காத்திருங்கள். 5 யோவான் தண்ணீரினால் திருமுழுக்குக் கொடுத்தார்; ஆனால் நீங்களோ இன்னும் சில நாள்களில் தூய ஆவியினால் திருமுழுக்குப் பெறப்போகிறீர்கள்'' என்று சொன்னார்.

## இயேசுவின் விண்ணேற்றம்

6 பிறகு அவர்கள் அவரோடு இருந்தபோது அவரிடம், ''ஆண்டவரே, நீர் இஸ்ரயேலுக்கு அரசை மீண்டும் நிறுவித் தரும் காலம் இதுதானா?'' என்று கேட்டார்கள். 7 அதற்கு அவர், ''விண்ணகத் தந்தையார் தமது ஆட்சியுரிமையால் குறித்து வைத்திருக்கும் காலங்களையும் நேரங்களையும்பற்றிய அறிவு உங்களுக்குரியதன்று. 8 ஆனால் தூய ஆவியானவர் உங்களை ஆட்கொள்ளும்போது நீங்கள் வல்லமை பெற்றவர்களாகி, எருசலேமிலும், யூதேயா சமாரியா முழுவதிலும், உலகின் கடைசிவரைக்குமே என்னைக் குறித்துச் சாட்சி கூறுவீர்கள்'' என்று சொன்னார். 9 இதைச் சொன்னபின் அவர்களுடைய கண்கள் காண அவர் மேலே எடுத்துச் செல்லப்பட்டார். ஒரு மேகம் அவரை அவர்கள் கண்களுக்கு மறைத்துவிட்டது. 10 அவர் செல்கையில் அவர்கள் வானத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டேயிருந்தார்கள். அப்பொழுது வெண்ணாடை அணிந்த இருவர் தோன்றி 11 ''கலிலேயரே, ஏன் வானத்தைப் பார்த்துக்கொண்டு நிற்கிறீர்கள்? உங்களிடையேயிருந்து விண்ணுலகத்துக்கு எடுத்துச் செல்லப்பட்ட இந்த இயேசு எவ்வண்ணமாக விண்ணுலகத்துக்குச் சென்றார் என்பதைக் கண்டீர்கள்; அவ்வண்ணமாகவே அவர் வருவார்'' என்றனர்.

## இயேசுவின் திருத்தூதுவர்கள்

12 பிறகு திருத்தூதுவர்கள் ஒலிவம் என்னும் மலையிலிருந்து எருசலேமுக்குத் திரும்பினார்கள். அம்மலை எருசலேமுக்குப் பக்கத்தில் ஓய்வுநாளில் செல்லக்கூடிய தொலைவில்* உள்ளது. 13 அவர்கள் எருசலேமுக்குள் சென்று, தாங்கள் தங்கியிருந்த மாடி அறைக்குப் போனார்கள். அவர்கள் பேதுரு, யோவான், யாக்கோபு, அந்திரேயா, பிலிப்பு, தோமா, பர்த்தொலொமேயு, மத்தேயு, அல்பேயுவின் மகன் யாக்கோபு, தீவிரவாதி எனப்பட்ட சீமோன் யாக்கோபின் மகன் யூதாஸ் என்பவர்கள். 14 அவர்கள் எல்லாரும் சில பெண்களோடும் இயேசுவின் தாயாராகிய மரியாளோடும் அவருடைய சகோதரரோடும் சேர்ந்து ஒருமனப்பட்டவர்களாய் ஜெபம் செய்து வந்தார்கள்.

## மத்தியா தேர்ந்தெடுக்கப்படுதல்

15 அங்கே ஏறக்குறைய நூற்றிருபது பேர் ஒன்றாய்க் கூடுவதுண்டு. அப்படியிருந்த காலத்தில் ஒரு நாள் பேதுரு சகோதரர் நடுவே எழுந்துநின்று, 16 ''சகோதரரே, இயேசுவைப் பிடித்தவர்களுக்கு வழிகாட்டியாயிருந்த யூதாசைக் குறித்துத் தூய ஆவியானவர் தாவீதின் வாயிலாக முன்னுரைத்த வேதவாக்கியம் அப்படியே நிறைவேற வேண்டியதாயிற்று. 17 அவன் எங்களுள் ஒருவனாக எண்ணப்பட்டு, இந்தப் பணியில் பங்குபெற்றிருந்தான். 18 (அவன் தன்னுடைய நேர்மையற்ற செயலுக்காகக் கிடைத்த கூலியினால் ஒரு நிலத்தை வாங்கினான். அவன் அங்கே போய்த் தலைகீழாக விழ, வயிறு வெடித்துக் குடலெல்லாம் சரிந்துபோயின. 19 இது எருசலேமில் குடியிருப்பவர் அனைவருக்கும் தெரியவந்தது. அதனால் அந்த நிலம் அவர்களுடைய தாய்மொழியில் அக்கெல்தமா எனப்படுகிறது; அதற்கு இரத்த நிலம் என்பது பொருள்). 20 சங்கீத நூலில்,

* ஏறத்தாழ ஒரு கிலோ மீட்டர்.

**1:1—4** லூக். 1:1—4; லூக். 24:49, 51; 1 தீமோ. 3:16. **1:5** மத். 3:11; மாற். 1:8; லூக். 3:16; யோ. 1:33. **1:8** ஏசா. 43:10; மத். 28:19; மாற். 16:15; லூக். 24:47. **1:9** மாற். 16:19; லூக். 24:50, 51. **1:10** 1 பேது. 3:22. **1:13** லூக். 6:14—16. **1:18** மத். 27:3—10. **1:20** சங். 69:25; யோ. 17:12; சங். 109:8.

'அவனுடைய வீடு பாழாவதாக,
ஒருவனும் அதில் குடிபுகாதிருப்பானாக'
என்றும்,

'அவனிடமிருந்த மேற்பார்வைப்
பொறுப்பை வேறொருவன் பெறுவானாக'
என்றும் எழுதியிருக்கிறது. 21 ஆகையால்
ஆண்டவராகிய இயேசுவின் உயிர்த்தெழு
தலைக் குறித்துச் சாட்சிகூற எங்களோடு
இன்னும் ஒருவர் சேர்ந்தாக வேண்டும்.
அவர் எங்களோடு இருந்த மனிதருள்
ஒருவராயிருக்க வேண்டும்; 22 அதாவது
அவர், யோவான் திருமுழுக்குக் கொடுத்து
வந்த காலமுதல், ஆண்டவராகிய இயேசு
நம்மிடையேயிருந்து மேலே எடுத்துச் செல்
லப்பட்ட நாள்வரையில் எங்களோடு தங்கி
யிருந்த காலமெல்லாம் எங்களோடு
இருந்திருக்க வேண்டும்'' என்று சொன்
னார். 23 அவர்களுள் இருவரை அவர்கள்
குறிப்பிட்டார்கள். ஒருவர் யுஸ்து என்னும்
மறுபெயருள்ள பர்சபா; இவருக்கு
யோசேப்பு என்ற பெயரும் இருந்தது.
மற்றவர் மத்தியா. 24 பிறகு அவர்கள்,
''ஆண்டவரே, எல்லாருடைய உள்ளங்
களையும் அறிகிறவரே, யூதாஸ் என்பவன்
தன் பணியையும் திருத்தூதுவர் பதவி
யையும் விட்டுவிட்டுத் தனக்குரிய இடத்
துக்குப் போய்விட்டான். 25 அவன் விட்டு
விட்ட பதவியைப் பெறுவதற்கு இவ்விரு
வருள் நீர் தேர்ந்துகொண்டவர் யார்
என்பதை எங்களுக்குக் காட்டியருளும்''
என்று வேண்டுதல் செய்தார்கள். 26 அதன்
பின் சீட்டுக் குலுக்கினார்கள்; எடுத்த
சீட்டு மத்தியாவின் பெயர்ச்சீட்டாயிருந்
தது. அவர் பதினொரு திருத்தூதுவரோடு
சேர்க்கப்பட்டார்.

### தூய ஆவியின் வருகை

2 பெந்தெகொஸ்தே* என்னும் நாளும்
வந்தது. அன்று அவர்கள் எல்லாரும்
ஓரிடத்தில் ஒன்றாய்க் கூடியிருந்தார்கள்.
2 அப்பொழுது கடுங்காற்று வீசும்
போது எழுவது போன்ற பேரிரைச்சல்
திடீரென்று வானத்தினின்று உண்டாகி
அவர்கள் உட்கார்ந்திருந்த வீடு முழு
வதும் ஒலித்தது. 3 நெருப்பு மயமான
பிரிவுற்ற நாவுகள் போன்றவை அவர்
களுக்குக் காணப்பட்டன; அவற்றுள் ஒவ்
வொன்றும் ஒவ்வொருவர் மேலும் வந்து
தங்கிற்று. 4 எல்லாரும் தூய ஆவியை
நிறைவாகப் பெற்று, தாங்கள் பேசு
வதற்கு ஆவியானவர் தூண்டுதலளித்த
படியே வெவ்வேறான மொழிகளில் பேசி
னார்கள்.

5 அப்பொழுது வானத்தின் கீழுள்ள
எல்லா நாடுகளிலுமிருந்து வந்திருந்த பக்தி
யுள்ள யூதர் பலர் எருசலேமில் தங்கி
யிருந்தனர். 6 அந்த இரைச்சல் உண்டா
னதும் நகரத்து மக்கள் திரளாக வந்து
கூடினார்கள். அவர்களுள் ஒவ்வொருவனும்
தன் தன் தாய்மொழியில் திருத்தூதுவர்
பேசுவதைக் கேட்டதால் அவர்களுக்குத்
திகைப்புண்டாயிற்று. 7 எல்லாரும் மலைத்
துப்போய் வியப்படைந்து, ''இவ்வாறு
பேசுகிற இவர்கள் எல்லாரும் கலிலேயர்
அல்லவா? 8 அப்படியிருக்க, இவர்கள் பேசு
வதை நம்முள் ஒவ்வொருவனும் தன்தன்
தாய்மொழியில் கேட்பதெப்படி?

9 ''பார்த்தரும், மேதரும், எலாமீத்
தரும், மெசொபொத்தாமியா, யூதேயா,
கப்பத்தோக்கியா, பொந்து, ஆசியா,
10 பிரிகியா, பம்பிலியா, எகிப்து ஆகிய
நாடுகளிலும், சிரேனே பட்டணத்தை
யடுத்த லீபியாவின் பகுதிகளிலும் குடி
யிருக்கிறவர்களும், 11 இங்கே தங்கியிருக்
கிற ரோமரும், யூதரும், யூத மார்க்
கத்தைத் தழுவியவர்களும், கிரேத்தரும்
அரபியருமாகிய நாம், நம் தாய்மொழி
களில் கடவுளின் மாபெரும் செயல்களை
இவர்கள் எடுத்துக் கூறுவதைக் கேட்
கிறோமே'' என்றார்கள். 12 எல்லாரும்
திகைத்துப்போய், ''இது என்னவா
யிருக்கும்?'' என்று ஒருவரோடொருவர்
பேசிக்கொண்டு மலைத்து நின்றனர்.
13 ஆனால் சிலரோ, ''இவர்கள் குடிவெறி
யில் மூழ்கியிருக்கிறார்கள்'' என்று ஏளனம்
செய்தனர்.

### பேதுருவின் பேருரை

14 அப்பொழுது பேதுரு மற்றப் பதி
னொரு திருத்தூதுவரோடும் எழுந்துநின்று
அவர்களைப் பார்த்து உரத்த குரலில், ''யூத
மக்களே, எருசலேம் நகரப் பெருமக்களே,
இதைத் தெரிந்துகொள்ளுங்கள். என்
சொல்லுக்குச் சற்றுச் செவிசாயுங்கள்.
15 நீங்கள் நினைப்பதுபோல இவர்கள் மது
வெறி கொண்டவர்களல்ல. இப்பொழுது
காலை ஒன்பது மணிதானே* 16 நீங்கள்
காண்பது இறைவாக்குரைப்பவராகிய
யோவேல் மூலமாக உரைக்கப்பட்டிருப்
பதே. 17 அது இதுவே:
'கடைசி நாள்களில்

* ஐம்பதாவது நாள் என்று பொருள்படும் பெந்தெகொஸ்தே என்னும் திருநாள், அறுவடைக்காக நன்றி செலுத்தும் யூதப் பண்டிகை நாள். அது பஸ்காவுக்குப்பின் ஐம்பதாம் நாளில் கொண்டாடப்பட்டது. பஸ்கா: மத். 26:2 அடிக்குறிப்பைப் பார்க்க.

† மூலத்தில், யூதர் கணக்குப்படி, மூன்றாம் மணி என்றிருக்கிறது.

**1:22** மத். 3:16; மாற். 1:9; லூக். 3:21. **1:24** எரே. 11:20; திருவெளி. 2:23. **2:1** இலே. 23:15—21; உபா, 16:9—11. **2:5** மத். 28:19. **2:17—21** யோவேல் 2:28—32.

மனுமக்கள் யாவர்மேலும் என்
ஆவியைப் பொழிவேன்.
அப்பொழுது உங்கள் புதல்வரும்
உங்கள் புதல்வியரும்
இறைவாக்கு உரைப்பர்;
உங்கள் இளைஞர் திருக்காட்சிகளையும்
உங்கள் முதியோர் கனவுகளையும்
காண்பார்கள்.

18 என்னுடைய ஆண் அடிமைகள்
மேலும்
என்னுடைய பெண் அடிமைகள் மேலும்
அக்காலத்தில் என் ஆவியைப் பொழி
வேன்,
அப்பொழுது அவர்கள் இறைவாக்கு
உரைப்பார்கள்.

19 மேலே வானத்தில் அற்புதங்களை
யும்,
கீழே பூமியில் இரத்தம், நெருப்பு,
புகைக்காடு ஆகிய
கெடுகுறிகளையும் காணச்செய்வேன்.

20 சிறந்ததும் மாட்சிமையுள்ளதுமான
ஆண்டவரின்
நாள் வருமுன்னே
கதிரவன் இருளடையும்,
நிலா இரத்தமாக மாறும்.

21 அப்பொழுது ஆண்டவரின் திருப்
பெயரைக் கூவியழைத்து அபய
மிடுகிறவன் எவனோ,
அவன் மீட்கப்படுவான் என்று
கடவுள் உரைக்கிறார்'.

22 ''இஸ்ரவேல் மக்களே, இந்த வார்த்
தைகளைக் கேளுங்கள். நாசரேத்தூர் இயேசு
வைக் கொண்டு கடவுள் உங்களிடையே
வல்லமைச் செயல்களையும் அற்புதங்களை
யும் அரிய செயல்களையும் செய்தார்.
இந்தச் சான்றுகளின் மூலம் அவர் இன்னா
ரென்பதைக் கடவுள் உங்களுக்கு உறுதிப்
படுத்திக் காட்டினார். இதை நீங்கள் அறிந்
திருக்கிறீர்கள். 23 கடவுள் வகுத்த திட்
டத்தின்படியும், அவர் முன்கூட்டி அறிந்
திருப்பதற்கு ஏற்பவும் இந்த இயேசு உங்
களிடம் ஒப்புக்கொடுக்கப்பட்டார். நீங்கள்
புறச் சமயத்தாரைப் பயன்படுத்தி
அவரைச் சிலுவையில் அறைந்து கொன்
றீர்கள். 24 கடவுளோ மரணத்தின் துயரக்
கட்டுகளை நீக்கி அவரை உயிரோடெழுப்
பினார். மரணத்தினால் அவரைப் பிடித்து
வைத்திருக்க முடியாமற்போயிற்று.

25 ''அவரைக் குறித்துத் தாவீது,
'என்முன் நின்ற ஆண்டவரை
நான் எப்போதும் நோக்கிக்
கொண்டிருந்தேன்;

நான் அசைக்கப்படாதபடி அவர்
என் வலப்பக்கத்தில் இருக்கிறார்.

26 ஆகையால் என் உள்ளம் மகிழ்ந்தது,
என் நாவு களிகூர்ந்தது.
என் உடலும் நம்பிக்கையில் நிலை
கொண்டிருக்கும்.

27 ஏனெனில், என் ஆன்மாவை நீர்
பாதாளத்தில் விட்டுவிட மாட்டீர்.
உம்முடைய தூயோனை அழிந்து
போகவும் விடமாட்டீர்.

28 மெய்வாழ்வுக்குரிய நெறியை எனக்
குத் தெரியப்படுத்தினீர்.
நீர் என்னோடிருந்து என்னை மகிழ்ச்சி
யினால் நிரப்புவீர்'
என்று சொல்லுகிறார்.

29 ''சகோதரரே, நம் மூதாதையாகிய
தாவீதைப்பற்றி நான் உங்களுக்குச்
சொல்லப்போவதை நீங்கள் மறுக்க மாட்
டீர்கள். அவர் இறந்தார்; அடக்கம் செய்
யப்பட்டார். அவருடைய கல்லறை இன்றும்
நம் ஊருக்கருகில் இருக்கிறது.
30 அவர் இறைவாக்குரைத்த ஒருவர்.
தம்முடைய மரபினருள் ஒருவரைத் தம்
அரியணையில் அமர்த்தப்போவதாகக் கட
வுள் தம்மிடம் கூறிய உறுதிமொழியை
அவர் அறிவார். 31 ஆகையால் அவர்
முன்னுணர்வு உள்ளவராய்,

'அவர் பாதாளத்தில் விடப்படவில்லை,
அவரது உடல் அழிந்துபோகவுமில்லை'

என்று உரைத்தது, மேசியாவின் உயிர்த்
தெழுதலைக் குறித்தே. 32 நான் குறிப்
பிட்ட இயேசுவையே கடவுள் உயிரோ
டெழுப்பினார்; இதற்கு நாங்கள் எல்லோ
ரும் சாட்சிகள். 33 அவர் கடவுளின்
வலப்பக்கத்துக்கு* உயர்த்தப்பட்டார்,
வாக்களிக்கப்பட்ட தூய ஆவியைத் தந்தை
யாரிடமிருந்து பெற்று இவ்வாறு
பொழிந்தருளினார்; அதையே நீங்கள் இப்
போது காண்கிறீர்கள், கேட்கிறீர்கள்.
34 விண்ணுலகத்துக்கு ஏறிச் சென்றவர்
தாவீதல்ல. மேலும், தாவீதே,

('கடவுளாகிய) ஆண்டவர் என்
ஆண்டவரிடம்:

நான் உம்முடைய பகைவரை
உமக்குப் பாதப்படியாக்கிவிடுகிறேன்;

35 அதுவரை நீர் என் வலப்பக்கத்தில்
அமர்ந்திரும்'

* மூலத்திலுள்ள பதத்தை, 'வலக்கையால்' அல்லது 'வல்லமையால்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
**2:23** மத். 27:35; மாற். 15:24; லூக். 23:33; யோ. 19:18 திருத்தூது. 4:10; 1 தெச. 2:15. **2:24** மத். 28:5, 6: மாற். 16:6; லூக். 24:5. **2:25—28** சங். 16:8—11. **2:30** சங். 132:11; 2 சாமு. 7:12, 13. **2:34, 35** சங். 110:1.

என்று சொல்லியிருக்கிறார். 36 ஆகை
யால், நீங்கள் சிலுவையில் அறைந்த
இந்த இயேசுவையே கடவுள் ஆண்டவரும்
மேசியாவுமாக்கினார் என்பது இஸ்ரவேல்
இனத்தார் அனைவருக்கும் திட்டமாகத்
தெரிந்திருக்கட்டும்'' என்று சொன்னார்.

37 இதைக் கேட்டதும் அவர்கள் உள்ளம்
குத்துண்டவர்களாகப் பேதுருவை
யும் மற்றத் திருத்தூதுவரையும் பார்த்து,
''சகோதரரே, நாங்கள் இப்போது என்ன
செய்ய வேண்டும் என்கிறீர்கள்?'' என்று
கேட்டார்கள். 38 அதற்குப் பேதுரு,
''நீங்கள் மனமாற்றமடைந்து, உங்கள்
பாவங்கள் மன்னிக்கப்படுவதற்காக ஒவ்
வொருவரும் இயேசுகிறிஸ்துவின் திருப்
பெயரால் திருமுழுக்குப் பெறுங்கள், அப்
பொழுது தூய ஆவியாகிய ஈவைப் பெறுவீர்
கள். 39 ஏனெனில், தெய்வ வாக்குறுதி
உங்களுக்கும், உங்களுடைய பிள்ளை
களுக்கும், தொலைவிலுள்ள யாவருக்கும்,
நம்முடைய கடவுளாகிய ஆண்டவர் தம்
மிடம் அழைக்கும் எல்லாருக்கும் உரியது''
என்று சொன்னார். 40 வேறு பல சொற்க
ளாலும் இதை அவர் வலியுறுத்திக் கூறி,
''நெறிகேடாக நடக்கும் இந்தத் தலைமுறை
யாருக்குவரும் முடிவினின்று உங்களைத் தப்பு
வித்துக் கொள்ளுங்கள்'' என்று பரிவுடன்
தூண்டினார். 41 அவரது சொல்லை ஏற்றுக்
கொண்டவர்கள் திருமுழுக்குப் பெற்றார்கள்.
அன்று ஏறக்குறைய மூவாயிரம்
பேர் அவர்களோடு சேர்க்கப்பட்டனர்.
42 அவர்கள் திருத்தூதுவருடைய போதனை
யிலும் நெருங்கிய உறவிலும் அப்பம்
பிட்குதலிலும் ஜெபம் செய்வதிலும் நிலை
கொண்டிருந்தார்கள்.

### இயேசுகிறிஸ்துவை நம்பினவர்கள் நடத்திய வாழ்க்கை

43 எல்லாரும் பயபக்தியுடன் இருந்து
வந்தனர். திருத்தூதுவர் மூலமாகப் பல
அற்புதங்களும் அரிய செயல்களும் நடந்
தேறின. 44 அருட்செய்தியில் நம்பிக்கை
வைத்த எல்லாரும் ஒருமித்திருந்தனர்.
அவர்களுடைய பொருள்களெல்லாம் பொது
வுரிமைச் சொத்தாயின. 45 அவர்கள்
சொத்துகளையும் உடைமைகளையும் விற்றுத்
தங்களுள் ஒவ்வொருவனுக்கும் அவனவன்
தேவைக்குத் தக்கவாறு பகிர்ந்து
கொடுப்பார்கள். 46 அவர்கள் ஒருமனப்பட்
டவர்களாய் நாள்தோறும் திருக்கோவிலில்
கூடுவார்கள்; வீடுகளிலும் கூடி அப்பம்
பிட்டு உண்மையான மனமகிழ்ச்சி
யோடு ஒன்றாய்ச் சாப்பிடுவார்கள். இவ்
வாறு அவர்கள் கடவுளுக்குத் துதி
செலுத்தி வந்தார்கள். 47 மக்கள் எல்
லாரும் அவர்களிடம் பரிவு கொண்டிருந்
தார்கள். ஆண்டவரும் தாம் மீட்டுக்கொண்
டவர்களை நாள்தோறும் அவர்களோடு
சேர்த்துக்கொண்டே இருந்தார்.

### பிறவி முடவன் குணமடைதல்

3 ஒரு நாள் ஜெப நேரமாகிய பிற்
பகல் மூன்று மணிக்குப்* பேதுருவும்
யோவானும் திருக்கோவிலுக்குச் சென்ற
போது, 2 பிறப்பிலேயே முடவனாயிருந்த
ஒருவனைச் சிலர் தூக்கிக்கொண்டு வந்
தனர். திருக்கோவிலுக்குச் செல்கிறவர்
களிடம் பிச்சை கேட்பதற்காக அவனை
அவர்கள் நாள்தோறும் திருக்கோவிலின்
அழகுவாயில் எனப்பட்ட வாயிலருகில்
கொண்டுவந்து வைப்பதுண்டு. 3 அவன்
திருக்கோவிலுக்குள் செல்லவிருந்த பேதுரு
வையும் யோவானையும் பார்த்துப் பிச்சை
கேட்டான். 4 பேதுரு அவனைக் கூர்ந்து
பார்த்தார், யோவானும் பார்த்தார்.
5 பேதுரு, ''எங்களைப் பார்'' என்றார்.
அவன் அவர்களை உற்றுக் கவனித்தான்;
ஏதாவது அவர்களிடமிருந்து கிடைக்கும்
என்று அவன் எதிர்பார்த்தான். 6 ஆனால்
பேதுருவோ, ''வெள்ளியும் பொன்னும்
என்னிடமில்லை; என்னிடம் உள்ளதை
உனக்குத் தருகிறேன். நாசரேத்தூர்
இயேசுகிறிஸ்துவின் திருப்பெயரால் சொல்
லுகிறேன், நடந்து செல்'' என்று கூறி,
7 அவன் வலக்கையைப் பிடித்து அவனை
எழுந்திருக்கச் செய்தார். உடனே அவன்
பாதங்களும் கணுக்கால்களும்
வலுவடைதன. 8 அவன் துள்ளி எழுந்து
நின்று நடக்கத் தொடங்கினான். பிறகு
நடந்தும் குதித்தும் கடவுளைத் துதித்துக்
கொண்டே அவர்களோடு திருக்கோவி
லுக்குள் சென்றான். 9 அவன் நடக்கிறதையும்
கடவுளைத் துதிக்கிறதையும் எல்லாரும்
பார்த்தனர். 10 திருக்கோவிலின் வாயி
லருகில் பிச்சை கேட்டு உட்கார்ந்திருந்தவன்
அவனே என்பதை அவர்கள் அறிந்தபோது,
அவனுக்கு நடந்ததைக் குறித்து வியப்பும்
திகைப்பும் அடைந்தார்கள்.

### பேதுருவின் அருளுரை

11 அவன் பேதுருவையும் யோவானையும்
பற்றிக்கொண்டிருந்தபோது, எல்
லாரும் திகைத்துப்போய்ச் சாலொமோன்
மண்டபம் என்னும் இடத்துக்கு அவர்
களிடம் ஓடிவந்தனர். 12 அதைக் கண்டு
பேதுரு அவர்களை நோக்கி, ''இஸ்ரவேல்
மக்களே, இதைக் குறித்து நீங்கள் வியப்
படைவதேன்? எங்களுடைய சொந்த சக்தி

* மூலத்தில், யூதர் கணக்குப்படி, ஒன்பதாம் மணி என்றிருக்கிறது.
2:39 ஏசா. 57:19. 2:44 திருத்தூது. 4:32—35.

யால் அல்லது பக்தியால் இவனை நாங்கள்
நடக்கச் செய்துவிட்டதுபோல எங்
களையே ஏன் கூர்ந்துபார்க்கிறீர்கள்?
13 ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபின்
கடவுளாகிய நம்முடைய மூதாதையரின் கட
வுள் தம் தாசனாகிய இயேசுவின் மாட்சிமை
விளங்கும்படி செய்துள்ளார். அவர் உங்
களால் பிலாத்துவினிடம் ஒப்புக்கொடுக்
கப்பட்டவரே. பிலாத்து அவருக்கு விடு
தலையளிக்கத் தீர்மானித்தபோது நீங்கள்
அவன்முன் அவரை வேண்டாமென்று
புறக்கணித்தீர்கள். 14 தூய்மையும் நீதியு
மானவரை நீங்கள் புறக்கணித்து, கொலை
காரனை விடுவிக்கும்படி வேண்டிக்கொண்
டீர்கள்; 15 மெய்வாழ்வுக்கு ஊற்றான
வரை நீங்கள் கொன்றுவிட்டீர்கள். கட
வுள் அவரை இறந்தோரிடமிருந்து எழுப்பி
யுள்ளார்; இதற்கு நாங்கள் சாட்சிகள்.
16 அவரது திருப்பெயரே, நீங்கள் பார்க்
கிறவனும் உங்களுக்குத் தெரிந்தவனு
மான இவனுக்கு வலுவைத் தந்தது;
அந்தப் பெயரைப் பற்றும் நம்பிக்கை
யினால் இது நடந்தேறியது. அந்த நம்
பிக்கையே* உங்கள் எல்லாருடைய முன்
னிலையிலும் இவ்வாறு இவனுக்கு முழு
குணம் அளித்திருக்கிறது.

17 ''சகோதரரே, நீங்கள் அறியாமை
யினாலே செய்தீர்கள். உங்கள் அதிகாரி
களும் அறியாமையினாலேதான் செய்தார்
கள்; இது எனக்குத் தெரியும். 18 கட
வுளோ தம்முடைய மேசியா பாடுகள்
அடைய வேண்டுமென்று இறைவாக்
குரைப்போர் அனைவர் வாயிலாகவும் முன்
னறிவித்ததை இவ்வாறு நிறைவேற்றினார்.
19 ஆகவே, உங்கள் பாவங்கள் நீக்கப்
படும் பொருட்டு மனமாற்றமடைந்து அவர்
பக்கம் திரும்புங்கள். 20 அப்பொழுது
ஆண்டவருடைய முன்னிலையினின்று
புத்துயிர் பெறும்காலம் உங்களுக்கு வரும்;
உங்களுக்கென்று நியமிக்கப்பட்ட மேசியா
வாகிய இயேசுவையும் அவர் அனுப்பு
வார். 21 அவ்வாறு யாவும் சீர்படும் காலம்
வரையில் அவர் விண்ணுலகில் இருக்க
வேண்டும். தொன்றுதொட்டுக் கடவுள்
தமது வாக்கை உரைத்த தூயோர்
வாயிலாக இந்தக் காலத்தைப்பற்றி
உரைத்துவந்தார். 22 மோசே,

'உங்கள் கடவுளாகிய ஆண்டவர்
என்னைப்போன்ற இறைவாக்குரைப்பவர்
ஒருவரை
உங்கள் சகோதரரிடையேயிருந்து
உங்களுக்கென்று தோன்றச் செய்வார்.
அவர் உங்களுக்குச் சொல்லும்
எல்லாவற்றின்படியேயும் அவருக்குக்
கீழ்ப்படியுங்கள்.
23 இறைவாக்குரைப்பவராகிய அவ
ருக்குக் கீழ்ப்படியாதவன் எவனோ
அவன் மக்களிடையே இராதபடி
அடியோடு அழிக்கப்படுவான்'

என்று சொன்னார். 24 சாமுவேல் முதற்
கொண்டு வரிசையாக இறைவாக்கு
உரைத்து வந்தவர்கள் அனைவரும் இந்தக்
காலத்தின் வருகையை முன்னறிவித்தனர்.
25 அவர்கள் மூலமாக வாக்களிக்கப்பட்ட
வற்றிற்கு வாரிசுகள் நீங்களே.

'உன் மரபின் மூலம்
உலகிலுள்ள எல்லா இனத்தவரும்
ஆசி பெறுவர்'

என்று கடவுள் ஆபிரகாமுக்குச் சொல்லி
உங்கள் மூதாதையரோடு செய்த உடன்
படிக்கைக்கும் நீங்கள் வாரிசுகள். 26 ஆகை
யால், கடவுள் தம் தாசனைத் தோன்றச்
செய்து, அவரை முதல் முதல் உங்களி
டம் அனுப்பினார்; உங்களுள் ஒவ்வொரு
வனையும் அவனவன் பொல்லாங்குகளி
னின்று விலக்கி ஆசீர்வதிப்பதற்காக
அவரை அனுப்பினார்'' என்று சொன்னார்.

### யூத சங்கத்தார் நடத்திய விசாரணை

4 பேதுருவும் யோவானும் மக்களோடு
பேசிக்கொண்டிருந்தபோது, அவர்கள்
மக்களுக்குப் போதனை செய்ததாலும்,
இயேசுவின் உயிர்த்தெழுதலை அடிப்படை
யாகக் கொண்டு இறந்தோரிடமிருந்து
உயிர்த்தெழுதல் உண்டென்று அறிவித்த
தாலும், 2 ஆசாரியர்களும் திருக்கோவில்
காவற்படைத் தலைவனும் சதுசேயரும்
எரிச்சலடைந்து, முன்னால் வந்து அவர்
களைக் கைது செய்தார்கள்; 3 ஆனால்,
அது மாலைவேளையாயிருந்ததால், அவர்
களை மறுநாள்வரையில் காவலில் வைத்
திருந்தார்கள். 4 தெய்வ வார்த்தையைக்
கேட்டவர்களுள் பலர் அதில் நம்பிக்கை
வைத்தனர். அப்படி நம்பிக்கை வைத்த
ஆண்களின் எண்ணிக்கை ஏறக்குறைய
ஐயாயிரமாயிற்று.

5 மறுநாள் யூத அதிகாரிகளும் மூப்பரும்
வேத அறிஞரும் எருசலேமில் ஒன்று கூடி
னார்கள். 6 அங்கே தலைமை ஆசாரியரா
கிய அன்னா, காய்பா, யோவான், அலெக்
சந்தர் என்பவர்களும், தலைமை ஆசாரி
யரின் குடும்பத்தைச் சேர்ந்த அனைவரும்
கூடியிருந்தனர். 7 அவர்கள் திருத்தூதுவரை
நடுவில் நிறுத்தி, ''எந்த வல்லமையைக்

* 'அந்தப் பெயரால் உண்டான நம்பிக்கையே' என்றும் மொழிபெயர்க்கலாம்.
**3:13** யாத். 3:15. **3:14** மத். 27:15—23; மாற். 15: 6—14; லூக். 23:13—23; யோ. 19:12—15.
**3:17** 1 கொரி. 2:8; 1 தீமோ. 1:13. **3:18** லூக். 18:31. **3:22** உபா. 18:15, 18. **3:23** உபா. 18:19.
**3:25** ஆதி. 22:18.

கொண்டு அல்லது யாருடைய பெயரால்
இதை நீங்கள் செய்தீர்கள்?'' என்று
கேட்டார்கள். 8 அப்பொழுது பேதுருவுக்
குத் தூயஆவி நிறைவாக அருளப்படவே,
அவர் அவர்களை நோக்கி, 9 ''மக்கள்
தலைவர்களே, மூப்பர்களே, நோயாளிக்குக்
கிடைத்த நன்மையைக் குறித்தும், அவன்
எவ்வாறு குணமடைந்தான் என்பதைக்
குறித்தும் நீங்கள் இன்று எங்களை விசாரணை
செய்ய விரும்புகிறீர்கள். 10 இவன்
நாசரேத்தூர் இயேசுகிறிஸ்துவின் திருப்
பெயராலேதான் குணமாகி உங்கள்முன்
நிற்கிறான். இது உங்கள் எல்லாருக்கு
மன்றி, இஸ்ரவேல் மக்கள் அனைவருக்கும்
தெரிந்திருக்கட்டும். நீங்கள் அவரைச்
சிலுவையில் அறைந்தீர்கள், கடவுளோ
அவரை இறந்தோரிடமிருந்து உயிரோ
டெழுப்பினார். 11 வீடு கட்டுகிறவர்களா
கிய உங்களால் வேண்டாமென்று தள்ளப்
பட்டபோதிலும், மூலைக்குத் தலைக்கல்லாய்
அமைந்தவர் இவரே. 12 இவரைத் தவிர
வேறு எவர் மூலமாகவும் மீட்பு இல்லை;
ஏனெனில், வானத்தின் கீழெங்கும் மனி
தரிடையே, நம்மை மீட்பதற்கு வேறு
ஒரு பெயரும் அருளப்படவில்லை'' என்று
சொன்னார்.

13 பேதுருவும் யோவானும் கல்வியறிவு
இல்லாத சாதாரண மனிதரென்பதை
அவர்கள் அறிந்திருந்ததால், அவ்விருவரு
டைய துணிவைக் கண்டு வியப்படைந்
தார்கள்; அவ்விருவரும் இயேசுவோடு
இருந்தவர்களென்பதையும் உணர்ந்தார்
கள். 14 குணமடைந்த மனிதன் அவர்
களோடு நிற்கிறதை அவர்கள் கண்ட
தால், மறுத்துப் பேச அவர்களுக்கு வழி
யில்லை. 15 எனவே, தலைமைச் சங்கத்தை
விட்டு வெளியே போகும்படி அவர்களுக்குக்
கட்டளையிட்டுவிட்டு, அவர்கள் ஒரு
வரோடொருவர் கலந்து பேசலானார்கள்:
16 ''இந்த மனிதரை என்ன செய்யலாம்?
குறிப்பிடத்தக்க அரிய செயல் ஒன்று
இவர்களால் செய்யப்பட்டிருக்கிறது; எருச
லேமில் குடியிருக்கிற யாவருக்கும் அது
தெரியும். அதை நம்மால் மறுக்க இய
லாது. 17 ஆயினும், இது மக்களிடையே
மேலும் பரவாதிருக்கும்பொருட்டு, இந்தப்
பெயரால் அவர்கள் எவரிடமும் இனி
மேல் பேசக்கூடாதென்று சொல்லி அவர்
களை அச்சுறுத்துவோம்'' என்று பேசிக்
கொண்டார்கள். 18 பிறகு அவர்களை
அழைத்து, ''நீங்கள் இயேசுவின் பெய
ரால் இனி ஒருபோதும் பேசவுங்கூடாது;
போதனை செய்யவுங்கூடாது'' என்று கட்
டளையிட்டார்கள். 19 அதற்கு மறுமொழி
யாகப் பேதுருவும் யோவானும்,
''கடவுளுக்குக் கீழ்ப்படிவதற்கும் மேலாக
உங்களுக்குக் கீழ்ப்படிவது கடவுள் பார்வை
யில் முறையானதாகுமா? நீங்களே தீர்மானி
யுங்கள். 20 எப்படியிருந்தாலும் நாங்கள்
கண்டதையும் கேட்டதையும் சொல்லா
மலிருக்க எங்களால் இயலாது'' என்று
சொன்னார்கள். 21 நடந்த அற்புதத்தைக்
குறித்து எல்லாரும் கடவுளைப் போற்றிப்
புகழ்ந்து வந்ததால், அவ்விருவரையும்
தண்டிக்க ஒரு வழியும் இல்லை என்பதை
அவர்கள் கண்டார்கள்; ஆகையால், அவ்
விருவரையும் மேலும் அச்சுறுத்திவிட்டு,
அவர்களுக்கு விடுதலையளித்தார்கள்.
22 அற்புதமாகக் குணமடைந்த மனிதன்
நாற்பது வயதுக்கு மேற்பட்டவன்.

## ஆண்டவரை நம்பினவர்களின் மன்றாட்டு

23 விடுதலையடைந்தபின் அவர்கள் தங்
களைச் சேர்ந்தவர்களிடம் வந்து, தலைமை
ஆசாரியர்களும் மூப்பர்களும் தங்களுக்குச்
சொன்ன யாவற்றையும் அறிவித்தார்கள்.
24 அவர்கள் அதைக் கேட்டு, கடவுளை
நோக்கி ஒருமனப்பட்டவர்களாய் உரத்த
குரலில் மன்றாடினார்கள்; ''ஆண்டவரே,
விண்ணையும், மண்ணையும், கடலையும், அவற்
றிலுள்ள யாவற்றையும் படைத்தவர் நீரே.

25 'பிற இனத்தவர் சீறியெழுவா
னேன்?
அந்த மக்கள் வீணாகச் சூழ்ச்சி
செய்வானேன்?
26 ஆண்டவரையும் அவர் அபிடேகம்
செய்தவரையும் எதிர்த்து
உலக அரசர் எழுந்தனர்,
அதிகாரிகளும் ஒன்று சேர்ந்தார்கள்'

என்று எங்கள் மூதாதையும் உம்முடைய
தாசனுமாகிய தாவீது வாயிலாக நீர்
தூய ஆவியைக் கொண்டு உரைத்தீர்.
27 நீர் உரைத்ததற்கேற்ப இந்தப் பட்ட
ணத்தில் ஏரோதுவும், பொந்தியுபிலாத்
துவும், யூதரல்லாதாரோடும் இஸ்ரவேல்
மக்களோடும், நீர் அபிடேகம் செய்த
தூய தாசனாகிய இயேசுவுக்கு விரோத
மாக ஒன்று சேர்ந்தார்கள். 28 நடந்தேற
வேண்டுமென்று உம்முடைய கைவல்லபமும்
திருவுளமும் முன்குறித்த யாவற்றையும்
இவ்வாறு செய்து முடித்தார்கள்.
29 ஆண்டவரே, இப்பொழுது நீரே அவர்
களுடைய அச்சுறுத்தலைப் பார்த்து, உம்
முடைய அடியார் முழுத் துணிவுடன்
உமது வார்த்தையை எடுத்துக்கூற அவர்
களுக்கு அருள் தாரும்; 30 பிணியாளிகளைக்
குணமாக்க உமது கையை நீட்டியருளும்;

**4:11** சங். 118:22: மத். 21:42; 1 பேது. 2:7. **4:16** யோ. 11:47, 48. **4:20** 1 கொரி. 9:16; 2 தீமோ. 1:7, 8. **4:24** யாத். 20:11; நெகே. 9:6; சங். 146:6. **4:25, 26** சங். 2:1, 2. **4:27** லூக். 23:7–11; மத். 27:1, 2; மாற். 15:1; லூக். 23:1; யோ. 18:28, 29. **4:29** எபே. 6:19.

உம்முடைய தூய தாசனுகிய இயேசுவின்
திருப்பெயர் மூலமாக அரிய செயல்களை
யும் அற்புதங்களையும் நடப்பித்தருளும்.''
31 இப்படி அவர்கள் மன்ருடியவுடன்,
அவர்கள் கூடியிருந்த இடம் அதிர்ந்தது.
அவர்கள் எல்லாருக்கும் தூய ஆவி நிறை
வாக அருளப்படவே, அவர்கள் கடவுளின்
வார்த்தையைத் துணிவுடன் கூறி
வந்தார்கள்.

### பொது உடைமை

32 ஆண்டவரிடம் நம்பிக்கை கொண்ட
வர்களின் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்
ஒரே வகையான மனப்போக்கும் உணர்ச்சி
யும் உடையவர்களாயிருந்தார்கள். ஒரு
வனும் தன் உடைமைகளுள் எதையும்
தனக்கே உரியதென்று சொல்லவில்லை;
எல்லாம் அவர்களுக்குப் பொதுவாயிருந்தன.
33 திருத்தூதுவர் மிகுந்த வல்லமையோடு
ஆண்டவராகிய இயேசுவின் உயிர்த்தெழு
தலைக் குறித்துச் சாட்சி கூறிவந்தனர்.
அவர்கள் எல்லாருமே பேரருளைப் பெற்ற
வராயிருந்தனர்.* 34 அவர்களுள் ஒரு
வனுக்கும் ஒரு குறையும் இருக்கவில்லை.
ஏனெனில், நிலங்கள் அல்லது வீடுகள்
உடையவர் அனைவரும் அவற்றை விற்று,
35 அப்பணத்தைக் கொண்டுவந்து, திருத்
தூதுவர் காலடியில் வைப்பார்கள்; அது
அவனவன் தேவைக்குத் தக்கபடி பகிர்ந்து
கொடுக்கப்படும்.

36 யோசேப்பு என்னும் இலேவியர் ஒரு
வர் இருந்தார்; அவர் சீப்புரு தீவைச்
சேர்ந்தவர். திருத்தூதுவர் அவருக்குப்
பர்னபா என்று பெயரிட்டிருந்தனர்.அதற்
குச் சகாயசீலன் என்பது பொருள்.
37 அவர் தமக்கிருந்த நிலத்தை விற்று,
அப்பணத்தைக் கொண்டுவந்து திருத்தூது
வர் காலடியில் வைத்தார்.

### அனனியா, சப்பீராள்

5 அனனியா என்னும் ஒருவன் இருந்
தான். அவன் தன் மனைவியாகிய
சப்பீராளோடு சேர்ந்து தங்களுக்குச்
சொந்தமான நிலம் ஒன்றை விற்ருன்.
2 விற்ற பணத்தில் ஒரு பகுதியை ஒளித்து
வைத்துக்கொண்டு, மற்றப் பகுதியைக்
கொண்டுவந்து, திருத்தூதுவர் காலடியில்
வைத்தான். இதற்கெல்லாம் அவனுடைய
மனைவியும் உடந்தையாயிருந்தாள். 3 அப்
பொழுது பேதுரு, ''அனனியாவே,
நிலத்தை விற்ற பணத்தில் ஒரு பகுதியை
ஒளித்து வைத்துக்கொண்டு, தூய ஆவி
யானவரிடம் பொய் சொல்லும் அளவுக்கு
உன் உள்ளத்தைச் சாத்தான் ஆட்கொண்
டதெப்படி? 4 அது விற்கப்படாமல் இருந்த
போது, உன்னுடையதாய்த்தானே இருந்
தது; அது விற்கப்பட்ட பிறகும் அந்தப்
பணம் உனக்கு உரியதாய்த்தானே இருந்
தது. பின் ஏன் இவ்வாறு செய்ய உன்
உள்ளத்தில் எண்ணங்கொண்டாய்? நீ மனி
தரிடமன்று, கடவுளிடமே பொய் சொன்
ஞய்?'' என்று சொன்னுர். 5 இந்த வார்த்
தையைக் கேட்டதும் அனனியா கீழே
விழுந்து உயிர்விட்டான். அதைக் கேட்
டுக்கொண்டிருந்த அனைவரையும் பேரச்சம்
ஆட்கொண்டது. 6 இளைஞர் எழுந்து
வந்து அவனைத் துணியால் மூடி வெளியே
கொண்டுபோய் அடக்கம் செய்தனர்.

7 ஏறக்குறைய மூன்று மணி நேரத்
திற்குப்பின் அவனுடைய மனைவி உள்ளே
வந்தாள்; நடந்தது அவளுக்குத் தெரி
யாது. 8 பேதுரு அவளிடம், ''நிலத்தை
இவ்வளவுக்குத்தானு விற்றீர்கள் சொல்?''
என்று கேட்க, அவள், ''ஆம், இவ்வள
வுக்குத்தான்'' என்ருள். 9 பேதுரு அவளி
டம், ''ஆண்டவரின் ஆவியைச் சோதித்
துப்பார்க்க நீங்கள் ஒத்துப்போனதேன்?
அதோ பார், உன்னுடைய கணவனை
அடக்கம் செய்தவர்கள் வாயிற்படியில்
நிற்கிருர்கள். அவர்கள் உன்னையும் கொண்டு
போவார்கள்,'' என்று சொன்னுர்.
10 உடனே அவள் அவர் காலடியில்
விழுந்து உயிர்விட்டாள். இளைஞர் உள்ளே
வந்தபோது அவள் செத்துக் கிடக்கிற
தைக் கண்டார்கள்; அவளையும் வெளியே
கொண்டுபோய் அவளுடைய கணவன்
பக்கத்தில் அடக்கம் செய்தார்கள். 11 சபை
யார் எல்லாரையும், இதைக் கேள்விப்
பட்ட அனைவரையும் பேரச்சம் ஆட்
கொண்டது.

### அரிய செயல்களும் அற்புதங்களும்

12 திருத்தூதுவர் பல அரிய செயல்
களும் அற்புதங்களும் மக்களிடையே
செய்து வந்தனர். அவர்கள் எல்லாரும்
ஒருமனப்பட்டுச் சாலொமோன் மண்டபத்
தில் கூடுவதுண்டு. 13 எனினும், ஏனை
யோருள் ஒருவரும் அவர்களோடு சேர்ந்து
பழகத் துணியவில்லை. பொதுமக்கள் அவர்
களை உயர்வாக மதித்து வந்தார்கள்.
14 திரளான ஆண்களும் பெண்களும்
ஆண்டவரிடம் நம்பிக்கை கொள்ளவே,
அவர்கள் அவர்களோடு சேர்க்கப்பட்டார்
கள். 15 இவற்றின் விளைவாக, பேதுரு
நடந்து செல்லுகையில் அவருடைய நிழ
லாவது ஒருசிலர் மேல் படும்படி பிணி
யாளிகளைக் கட்டில்களிலும் படுக்கைகளிலும்
கிடத்தி வெளியே கொண்டுவந்து வீதி
களில் வைக்கத் தொடங்கிவிட்டார்கள்.

* 'அவர்கள் எல்லாருமே நன்மதிப்பைப் பெற்றவராயிருந்தனர்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
4:32 பிலி. 1:27 5:4 உபா. 23:22, 23. 5:9 1 கொரி. 10:9. 5:15 மாற். 6:56.

16 எருசலேமைச் சுற்றிலுமுள்ள
ஊர்களிலிருந்து திரளான மக்கள் பிணி
யாளிகளையும் அசுத்த ஆவிகளால் துய
ருற்றவர்களையும் கூட்டிக்கொண்டு அங்கே
வந்தார்கள்; அவர்கள் எல்லாரும் குண
மடைந்தனர்.

## திருத்தூதுவர் துன்புறுத்தப்படுதல்

17 அதைக் கண்ட தலைமை ஆசாரியருக்
கும் அவரைச் சேர்ந்த யாவருக்கும், அதா
வது உள்ளூர்ச் சதுசேயர் கட்சியினருக்
கும் பொறுமை பொங்கியெழுந்ததால்,
18 அவர்கள் திருத்தூதுவரைக் கைது
செய்து, பொதுச்சிறையில் அடைத்து வைத்
தார்கள். 19 ஆனால், அன்றிரவு ஆண்ட
வரின் தூதன் ஒருவன் சிறைச்சாலைக்
கதவுகளைத் திறந்து, அவர்களை வெளி
யே அழைத்துவந்து, 20 ''நீங்கள் போய்
திருக்கோவிலில் நின்று, இந்த மெய்வாழ்
வைப் பற்றிய செய்தியை மக்களுக்கு முழு
வதும் எடுத்துக்கூறுங்கள்'' என்று சொன்
னான். 21 அவர்கள் அதைக் கேட்டு,
பொழுது விடிந்ததும் திருக்கோவிலுக்குள்
சென்று அவ்வண்ணமே போதித்துக் கொண்
டிருந்தார்கள். அவ்வேளையில் தலைமை
ஆசாரியரும் அவரைச் சார்ந்தவர்களும்
சேர்ந்து, தலைமைச் சங்கத்தாராகிய இஸ்ர
வேல் மக்களின் மூப்பர் அனைவரையும்
ஒன்றுகூட்டினார்கள், பிறகு திருத்தூது
வரைக் கொண்டுவரும்படி சிறைச்சாலைக்கு
ஆள் அனுப்பினார்கள். 22 பணியாளர்
சென்று, சிறைச்சாலையில் அவர்கள் இல்லா
ததைக் கண்டு திரும்பி வந்து, 23 ''சிறைச்
சாலை மிகவும் பத்திரமாகப் பூட்டியிருக்
கிறதையும், காவற்காரர் வாயிலுக்கெதி
ரில் நிற்கிறதையும் கண்டோம்; ஆனால்
கதவைத் திறந்தபோதோ உள்ளே ஒரு
வரையும் காணவில்லை'' என்று தெரிவித்
தனர். 24 திருக்கோவில் காவற்படைத்
தலைவனும் தலைமை ஆசாரியர்களும் இதைக்
கேட்டபோது, திருத்தூதுவருக்கு என்ன
நடந்திருக்கக் கூடுமென்று சொல்லித்
திகைத்தார்கள். 25 அப்பொழுது ஒருவன்
உள்ளே வந்து, ''நீங்கள் சிறைச்சாலையில்
அடைத்துவைத்த மனிதர்கள் இப்போது
திருக்கோவிலில் நின்று மக்களுக்குப் போதித்
துக் கொண்டிருக்கிறார்கள்'' என்று தெரி
வித்தான். 26 உடனே காவற்படைத்தலை
வன் பணியாளரோடு சென்று, வன்முறை
எதுவும் கையாளாமல் அவர்களை அழைத்து
வந்தான்; ஏனெனில், மக்கள் தங்களைக்
கல்லாலடிப்பார்கள் என்ற அச்சம் அவர்
களுக்கு இருந்தது.

27 அவர்கள் திருத்தூதுவரை அழைத்து
வந்து தலைமைச் சங்கத்தின் முன் நிறுத்தி
னார்கள். பிறகு தலைமை ஆசாரியர் விசா
ரணை செய்தார். 28 ''நீங்கள் இந்தப்
பெயரால் போதிக்கக் கூடாதென்று நாங்
கள் உங்களுக்கு மிகக் கண்டிப்பாகக் கட்
டளையிட்டிருந்தோம். ஆனால், நீங்களோ
உங்கள் போதனையை எருசலேம் முழுவதி
லும் பரவச் செய்தீர்கள்; அந்த மனிதனின்
இரத்தத்தைச் சிந்திய பழியை எங்
கள்மீது சுமத்தப்பார்க்கிறீர்கள்'' என்று
சொன்னார். 29 அதற்குப் பேதுருவும்
மற்றத் திருத்தூதுவரும், ''மனிதருக்குக்
கீழ்ப்படிவதற்கு மேலாகக் கடவுளுக்குக்
கீழ்ப்படிய வேண்டும். 30 நீங்கள் சிலுவை
மரத்தில் தொங்கவைத்துக் கொன்றுவிட்ட
இயேசுவை நம்முடைய மூதாதையரின்
கடவுள் உயிரோடெழுப்பி, 31 இஸ்ரவேல்
மக்களுக்கு மனமாற்றத்தையும் பாவமன்
னிப்பையும் அருளுவதற்காக அவரைத்
தலைவராகவும், மீட்பராகவும் தமது
வலப்பக்கத்துக்கு* உயர்த்தினார். 32 இவ்
வாறு நடந்தவற்றிற்கு நாங்கள் சாட்சி
கள்; தமக்குக் கீழ்ப்படிகிறவர்களுக்குக்
கடவுள் தந்திருக்கிற தூய ஆவியான
வரும் சாட்சி'' என்று பதிலுரைத்தார்
கள்.

33 அவர்கள் அதைக் கேட்டதும் உள்
ளத்தில் கொதிப்படைந்து அவர்களைக்
கட்டாயம் கொன்றுவிட வேண்டுமென்று
நினைத்தார்கள். 34 அப்பொழுது கமாலி
யேல் என்னும் பரிசேயர் அந்தத் தலை
மைச் சங்கக்கூட்டத்தில் எழுந்து நின்றார்.
அவர் எல்லா மக்களாலும் உயர்வாக
மதிக்கப்பட்ட நீதிச்சட்டப் போதகர்.
அவர் அந்த மனிதரைச் சற்றுநேரம்
வெளியே கொண்டுபோகச் சொல்லிவிட்டு
35 சங்கத்தாரைப் பார்த்து, ''இஸ்ரவேல்
மக்களே, இந்த மனிதருக்கு நீங்கள் செய்
யப்போவதைக் குறித்து எச்சரிக்கையா
யிருங்கள். 36 சிறிது காலத்திற்கு முன்பு
தெயுதாஸ் என்பவன் தன்னை ஒரு பெரிய
மனிதனெனக் கூறிக்கொண்டு தோன்றி
னான். அவனோடு ஏறக்குறைய நானூறு
பேர் சேர்ந்துகொண்டனர். அவன் கொலை
யுண்டான்; அவனை நம்பியிருந்த எல்லா
ஆள்களும் சிதறிப்போனார்கள்; 37 எனவே,
எல்லாம் ஒன்றுமில்லாமற்போயின.
அதன்பின் மக்கள் தொகை பதிவு செய்
யப்பட்ட காலத்தில் கலிலேயனாகிய யூதாஸ்
என்னும் ஒருவன் கிளம்பினான். அவன்
தன்னோடு ஒரு கூட்டத்தைச் சேர்த்துக்
கொண்டு, கலகம் செய்யும்படி அவர்
களைத் தூண்டினான். பிறகு அவன் ஒழிந்
தான், அவனை நம்பியிருந்த அனைவரும்
சிதறடிக்கப்பட்டனர். 38 இப்பொழுது
நான் உங்களுக்குச் சொல்வது இதுவே:

* திருத்தூது. 2:33 அடிக்குறிப்பைப் பார்க்க.
5:16 லூக். 4:40, 41. 5:28 மத். 27:25. 5:38, 39 மத். 15:13; லூக். 20:4.

இந்த மனிதரை ஒன்றும் செய்ய வேண்
டாம், இவர்களை அப்படியே விட்டுவிடுங்
கள்; ஏனெனில், இந்தத் திட்டம் அல்லது
இந்தச் செயல் மனிதரால் உண்டான
தாயிருந்தால் இது தானகவே ஒழிந்து
போகும். 39 ஆனல் இது கடவுளால் உண்
டானது என்றல், இவர்களை ஒழித்துவிட
உங்களால் ஒருபோதும் இயலாது; அதுவு
மன்றி நீங்கள் கடவுளை எதிர்க்கிறவர்
களாகவும் காணப்பட நேரிடும்'' என்று
சொன்னர். அவர்களும் அவருடைய
சொல்லை ஏற்றுக்கொண்டார்கள். 40 திருத்
தூதுவரை அவர்கள் உள்ளே வரச்செய்து
அடிப்பித்து, ''இனிமேல் நீங்கள் இயேசு
வின் பெயரால் பேசக்கூடாது'' என்று
சொல்லி, அவர்களை அனுப்பிவிட்டார்கள்.
41 அவர்களோ தாங்கள் அந்தப் பெயரின்
பொருட்டு இகழப்படத் தகுதியுடையவர்
களென எண்ணப்பட்டதற்காக மகிழ்ச்சி
யடைந்து, தலைமைச் சங்கத்தைவிட்டு
வெளியேறினர்கள். 42 அவர்கள் நாள்
தோறும் திருக்கோவிலிலும் வீடுவீடாக
வும் தொடர்ந்து போதித்து, இயேசுவே
மேசியா என்கிற நற்செய்தியை அறிவித்து
வந்தார்கள்.

### எழுவர் அமர்த்தப்படுதல்

6 அக்காலத்தில் சீடரின் தொகை
பெருகிவந்தது. அப்பொழுது எபிரேய
மொழி பேசுவோருக்கு விரோதமாகக்
கிரேக்க மொழி பேசுவோர் முணு
முணுக்கத் தொடங்கினர். தங்களிடையே
யிருந்த கைம்பெண்கள் அன்றடப் பரா
மரிப்பில் சரியாகக் கவனிக்கப்படவில்லை
யென்று அவர்கள் முணுமுணுத்தார்கள்.
2 எனவே, பன்னிருவரும் சீடர் கூட்டத்
தினரை ஒருங்கே வரவழைத்து, ''நாங்
கள் கடவுளின் வார்த்தையைப் போதிப்
பதை விட்டுவிட்டு, உணவு பங்கிடும்
பணியைச் செய்வது முறையன்று. 3 ஆகை
யால், சகோதரரே, நன்மதிப்புப் பெற்ற
வர்களாயும் தூய ஆவியையும் ஞானத்
தையும் நிறைவாகப் பெற்றவர்களாயு
மிருக்கிற எழுவரை உங்களிடையேயிருந்து
தேர்ந்தெடுங்கள்; அவர்களை இந்த வேலை
யில் அமர்த்துவோம். 4 அப்பொழுது, நாங்
கள் ஜெபம் செய்வதும் தெய்வ வார்த்
தையைப் போதிப்பதும் இடையூறின்றி
நடைபெறும்'' என்று கூறினர். 5 அவர்கள்
கூறியது கூட்டத்தினர் அனைவருக்கும்
நலமாகத் தோன்றிற்று. அவர்கள் ஆண்
டவரைப் பற்றும் உறுதியான நம்பிக்கை
யுள்ளவரும் தூய ஆவியை நிறைவாகப்
பெற்றவருமான ஸ்தோவான் என்றவரை
யும் அவரோடு பிலிப்பு, பிரொகோரு,
நிக்கானோர், தீமோன், பர்மெனு, அந்தி
யோகியா பட்டணத்தாரும் யூத மார்க்
கத்தைத் தழுவியிருந்தவருமான நிக்
கொலா என்பவர்களையும் தேர்ந்தெடுத்து,
திருத்தூதுவர்முன் நிறுத்தினர்கள்.
6 அவர்கள் ஜெபம் செய்து அவர்கள்
மேல் கைகளை வைத்தார்கள்.

7 கடவுளின் வார்த்தை மேன்மேலும்
பரவிற்று; எருசலேமில் சீடரின் தொகை
யும் பெருகிக்கொண்டேவந்தது. ஆசாரி
யருள்ளும் பலர் நம்பிக்கை கொண்டு
ஆண்டவரின் நெறியை ஏற்றுக்கொண்
டனர்.

### ஸ்தேவான் பிடிபடுதல்

8 அருளும் வல்லமையும் நிறைவாகப்
பெற்றிருந்த ஸ்தேவான் மக்களிடையே
மாபெரும் அற்புதங்களையும் அரிய செயல்
களையும் செய்துவந்தார். 9 எனினும்,
லிபர்த்தீனர் தொழுகைக் கூடத்தைச்
சேர்ந்த சிரேனே, அலெக்சந்திரியா பட்
டணத்தார், சிலிசியா, ஆசியா நாட்டி
னர் ஆகியோருள் சிலர் ஸ்தேவானை
எதிர்த்து அவரோடு தர்க்கம் செய்தனர்.
10 ஆனல், தூய ஆவியானவர் அவருக்கு
அருளின ஞானத்தோடு அவர் பேசின
தால், அவரை எதிர்த்து நிற்க அவர்
களால் இயலவில்லை. 11 பிறகு அவர்கள்
சிலரைத் தூண்டிவிட்டு, ''இவன் மோசே
யுக்கும் கடவுளுக்கும் விரோதமாகப் பழிச்
சொற்கள் கூறினதைக் கேட்டோம்''
என்று சொல்லும்படி செய்தார்கள்.
12 அப்படியே அவர்கள் மக்களையும் மூப்
பரையும் வேத அறிஞரையும் தூண்டிவிட்
டார்கள். அவர்கள் அவரிடம் வந்து அவ
ரைப் பிடித்து, தலைமைச் சங்கத்திற்கு
இழுத்துக்கொண்டு போனர்கள்; பொய்ச்
சாட்சிகளையும் நிறுத்தினர்கள். 13 அந்தச்
சாட்சிகள், ''இந்த மனிதன் இங்குள்ள
தூய திருக்கோவிலுக்கும் நீதிச்சட்டத்திற்
கும் விரோதமாக ஓயாமல் பேசிக்கொண்
டிருக்கிறன். 14 'நாசரேத்தூர் இயேசு
என்கிற ஆள் இந்தக் கோவிலை அழித்து
விடுவார்' என்றும், 'மோசே நம்மிடம்
ஒப்படைத்த முறைமைகளையும் மாற்றி
விடுவார்' என்றும் இவன் சொன்னதைக்
கேட்டோம்'' என்று சொன்னர்கள்.
15 தலைமைச் சங்கத்தில் உட்கார்ந்திருந்த
அனைவரும் அவரைக் கூர்ந்துபார்த்த
போது, அவருடைய முகம் தெய்வ தூத
னுடைய முகம்போல இருப்பதைக் கண்
டார்கள்.

### ஸ்தேவானின் பேருரை

7 தலைமை ஆசாரியர், ''இது உண்மை
தானு?'' என்று ஸ்தேவானைக் கேட்டார்.

5:41 1 கொரி. 4:9, 10. 6:2 யாத். 18:17—23. 6:3 1 தீமோ. 3:8—10. 6:6 1 தீமோ. 4:14. 6:10 லூக். 24:15:

2 அதற்கு அவர், ''ச கோ த ர ரே,
தந்தையரே, கேளுங்கள். நம்முடைய
தந்தை ஆபிரகாம் காரான் என்னும்
ஊரில் குடியேறுவதற்குமுன், மெசொப்
பொத்தாமிய நாட்டில் வாழ்ந்துவந்
தார். அப்பொழுது மாட்சிமைமிக்க கட
வுள் அவருக்குக் காட்சியளித்து, 3 'நீ
உன் நாட்டையும் உன் சுற்றத்தாரையும்
விட்டுப் புறப்பட்டு நான் உனக்குக் காட்டப்
போகும் நாட்டுக்கு வா' என்று சொன்னர்.
4 அவரும் அப்படியே கல்தேயர்
நாட்டை விட்டுப் புறப்பட்டுப் போய்க்
காரான் என்னும் ஊரில் குடியேறினர்.
அவருடைய தகப்பன் இறந்தபின் கடவுள்
அவரை அங்கிருந்து கொண்டுவந்து நீங்
கள் இப்போது குடியிருக்கிற இந்த நாட்
டில் குடியேறச் செய்தார். 5 இந்த நாட்
டில் கடவுள் அவருக்கு அப்போது ஓர்
அடி நிலத்தைக்கூடச் சொந்தமாகக்
கொடுக்கவில்லையெனினும், இந்த நாட்
டையே அவருக்கும் அவருக்குப்பின் அவ
ருடைய மரபினருக்கும் உரிமைச் சொத்
தாகக் கொடுக்கப்போவதாக வாக்களித்
தார்; அப்போது அவருக்குப் பிள்ளையே
இல்லாதிருந்தும் அவ்வாறு வாக்களித்
தார். 6 அவருடைய மரபினர் வெளி
நாட்டில் அன்னியராய் இருக்க நேரிடு
மென்றும் அந்த நாட்டினர் அவர்களை
அடிமைகளாக்கி நானூறு ஆண்டுகள்
கொடுமைப்படுத்துவார்களென்றும் கடவுள்
அவரிடம் சொன்னர். 7 மேலும் அவர்,
'அவர்களை அடிமைகளாய் வைத்திருக்கும்
அந்த நாட்டினருக்கு நானே தீர்ப்பளித்து
அவர்களைத் தண்டிப்பேன்; அதன்பின் அவர்
கள் புறப்பட்டு வந்து இந்த இடத்தில்
என்னை வழிபடுவார்கள்' என்றும் சொன்னர்.
8 பிறகு, விருத்தசேதனத்தை அடையாள
மாகக் கொண்ட உடன்படிக்கையை அவ
ருக்கு ஏற்படுத்திக் கொடுத்தார். அதன்
படியே ஆபிரகாம் ஈசாக்கைப் பெற்ற
பின் எட்டாம் நாளில் அவருக்கு விருத்த
சேதனம் செய்தார். ஈசாக்கு யாக்கோபுக்
கும், யாக்கோபு நம் குலத் தந்தையர்
பன்னிருவருக்கும் அ வ் வா றே செய்
தார்கள்.

9 ''நம் குலத் தந்தையர் அவர்களுள்
ஒருவரான யோசேப்பின்மீது பொறாமைப்
பட்டு அவரை அடிமையாக விற்றுவிட்டனர்.
அவர் எகிப்து நாட்டிற்குக் கொண்டு
செல்லப்பட்டார். ஆனல், கடவுள் அவ
ரோடிருந்தார்; 10 அவருக்கு வந்த எல்
லாத் துன்பங்களினின்றும் அவரை விடு
வித்தார். அவர் அவருக்கு அளித்திருந்த
வசீகரத் தன்மையையும் விவேகத்தையும்
எகிப்து நாட்டு அரசனாகிய பார்வோன்
கண்டு, அவரை எகிப்து நாட்டிற்கும் தன்
வீட்டைச் சார்ந்த அனைத்திற்கும் அதி
காரியாக நியமித்தான். 11 பிறகு எகிப்து
நாட்டிலும் கானான் நாட்டிலும் எங்கும்
பஞ்சம் வந்தது, மிகுந்த துன்பமும் உண்
டாயிற்று; நம்முடைய மூதாதையருக்கு
உணவு கிடையாமற்போயிற்று. 12 எகிப்து
நாட்டில் தானியம் இருப்பதாக யாக்
கோபு கேள்விப்பட்டு நம்முடைய மூதா
தையரை அங்கே அனுப்பிவைத்தார்.
13 இது அவர்கள் செய்த முதற் பயணம்.
இரண்டாம் பயணத்தில் யோசேப்பு, தம்
சகோதரர்களுக்குத் தாம் யாரென்பதைத்
தெரியப்படுத்தினர். அதன்பின் பார்
வோனுக்கு யோசேப்பின் குடும்பத்தைப்
பற்றித் தெரியவந்தது. 14 யோசேப்பு,
தம் தகப்பன் யாக்கோபுக்கும் தம் சுற்
றத்தார் எழுபத்தைந்து பேருக்கும் செய்தி
அனுப்பி அவர்கள் அனைவரையும் வர
வழைத்தார். 15 யாக்கோபும் எகிப்து நாட்
டுக்கு வந்தார். அவரும் நம்முடைய மூதா
தையரும் அங்கேயே இறந்துபோயினர்.
16 அவர்களுடைய உடல்கள் சீகேமுக்குக்
கொண்டுவரப்பட்டு, அங்கே ஏமோர்
குடும்பத்தினரிடம் ஆபிரகாம் விலை
கொடுத்து வாங்கியிருந்த கல்லறையில்
அடக்கம் செய்யப்பட்டன.

17 ''கடவுள் ஆபிரகாமுக்கு அருளி
யிருந்த வாக்குறுதி நிறைவேறும் காலம்
நெருங்கி வருகையில், எகிப்து நாட்டில்
நம்முடைய இனம் பலுகிப் பெருகியிருந்தது.
18 க டை சி யி ல் யோசேப்பை அறி
யாத வேருெருவன் எகிப்து நாட்டிற்கு
அரசனானன். 19 அவன் நம்முடைய இனத்
தவரை வஞ்சகமாகவும் கொடுமையாக
வும் நடத்தி, அவர்களுடைய குழந்தை
களைச் சாகடிக்கும் நோக்கத்துடன்அவற்றை
வெளியே போட்டுவிடுமாறு செய்தான்.
20 அந்தக் காலத்திலேதான் மோசே பிறந்
தார். அவர் அழகுள்ளவராயும் கடவு
ளுக்கு உகந்தவராயுமிருந்தார்; மூன்று
மாதம் தகப்பன் வீட்டில் பேணி வளர்க்
கப்பட்டார். 21 பிறகு அவரை வெளியே
போட்டுவிடவே, பார்வோனுடைய மகள்
அவரைத் தத்து எடுத்து, தன் சொந்தப்
பிள்ளையாகப் பேணி வளர்த்தாள்.
22 மோசே எகிப்து நாட்டினரின் எல்லாக்
கலைகளையும் கற்று, சொல்லிலும் செயலி
லும் வல்லவராய் விளங்கினர்.

**7:2, 3** ஆதி. 12:1. **7:4** ஆதி. 11:31; 12:4. **7:5** ஆதி. 12:7; 13:15; 15:18; 17:8. **7:6, 7** ஆதி. 15:13, 14. **7:8** ஆதி. 17:10—14; 21:2—4; 25:26; 29:31—35:18. **7:9** ஆதி. 37:11, 28;39:2, 21. **7:10** ஆதி. 41:39—41 **7:11** ஆதி. 42:1,2. **7:13** ஆதி. 45:1, 16. **7:14** ஆதி. 45:9, 10, 17, 18; 46:27. **7:15.** ஆதி. 46:1—7; 49:33. **7:16** ஆதி. 23:3—6; 33:19; 50:7—13; யோசுவா 24:32. **7:17, 18** யாத். 1:7, 8; **7:19** யாத். 1:10, 11, 22. **7:20** யாத். 2:2. **7:21** யாத். 2:3—10.

23 ''அவருக்கு நாற்பது வயதான
போது, இஸ்ரவேல் மக்களாகிய தம்
இனத்தவரைப் போய்ப் பார்க்க வேண்டு
மென்ற எண்ணம் அவர் மனத்தில் எழுந்தது.
24 அவர் போனபோது அவர்களுள்
ஒருவன் கொடுமையாக நடத்தப்படுவ
தைக் கண்டு, துன்புற்றவனுக்குத் துணை
யாக நின்று, அவனுக்கு நியாயம் வழங்க,
துன்புறுத்தின எகிப்தியனைத் தாக்கி வீழ்த்
தினார்; 25 தம் கையினால் தம் சகோ
தரர்களுக்குக் கடவுள் மீட்பு அருளுகிறார்
என்பதை அவர்கள் உணர்ந்துகொள்வார்
களென்று அவர் நினைத்தார். அவர்களோ
உணர்ந்துகொள்ளவில்லை. 26 மறுநாள்
அவர்களுள் சிலர் சண்டையிட்டுக்
கொண்டிருந்தபோது, மோசே அவர்களி
டம் சென்று, அந்த மனிதரைப் பார்த்து,
'நீங்களோ சகோதரர்கள்; ஏன் இப்படி
ஒருவரையொருவர் கொடுமையாக நடத்
துகிறீர்கள்?' என்று சொல்லி அவர்களைச்
சமாதானப்படுத்தப்பார்த்தார். 27 ஆனால்
அடுத்தவனைக் கொடுமையாக நடத்தின
வன், 'உன்னை எங்களுக்குத் தலைவனாக
வும் நீதிபதியாகவும் நியமித்தது யார்?
28 நீ எகிப்தியனை நேற்றுக் கொன்றதுபோல
என்னையும் கொல்ல நினைக்கிறாயா?'
என்றான். 29 இந்தப் பதிலைக் கேட்டதும்,
மோசே அந்த நாட்டிலிருந்தே ஓடிப்
போய்விட்டார். அவர் மீதியான் நாட்
டிற்குப் போய் அங்கே தங்கியிருந்தார்.
அவருக்கு இரு மைந்தர்கள் பிறந்தார்கள்.

30 ''இவ்வாறு நாற்பது ஆண்டுகள்
கழிந்தன. அதன்பின், சீனாய் மலையருகி
லுள்ள பாலைநிலத்தில் முட்செடி ஒன்று
எரிய, அந்தத் தீச்சுடரில் ஒரு தெய்வ
தூதன் அவருக்குக் காணப்பட்டான்.
31 மோசே அந்தக் காட்சியைக் கண்டு
வியப்புற்றார். அதைக் கூர்ந்துபார்க்க
அவர் நெருங்கியபோது, 32 'நான் உன்னு
டைய மூதாதையரின் கடவுள். ஆபிர
காம் ஈசாக்கு யாக்கோபு என்பவர்களின்
கடவுள் நானே' என்ற ஆண்டவரது
வாக்குப் பிறந்தது. மோசே நடுங்கினார்;
அதை உற்றுப்பார்க்க அவருக்குத் துணிவு
இல்லை. 33 அப்பொழுது ஆண்டவர் அவ
ரிடம், 'உன் கால்களிலிருக்கிற மிதியடி
களைக் கழற்றிவிடு; நீ நிற்கிற இடம்
புனிதமான நிலம். 34 எகிப்திலிருக்கிற
என் மக்கள் அனுபவிக்கும் கொடுமையை
நானே பார்த்தேன்; அவர்களுடைய பெரு
மூச்சைக் கேட்டேன்; அவர்களை விடுவிப்
பதற்காக இறங்கி வந்திருக்கிறேன். உன்னை
எகிப்து நாட்டிற்கு அனுப்புகிறேன், இப்
போதே வா' என்றார்.

35 ''அந்த மோசேயிடம் அவர்கள்,
'உன்னை எங்களுக்குத் தலைவனாகவும் நீதி
பதியாகவும் நியமித்தது யார்?' என்று
சொல்லி அவரை ஏற்க மறுத்தார்கள்.
அதே மோசேயைக் கடவுள், முட்செடி
யில் அவருக்குக் காணப்பட்ட தெய்வ
தூதனைக்கொண்டு தலைவனாகவும் மீட்பனா
கவும் அனுப்பினார். 36 அவர் அவர்களை
எகிப்து நாட்டிலிருந்து அழைத்துவந்தார்;
அந்த நாட்டிலும், செங்கடலிலும், பிறகு
நாற்பதாண்டுக் காலம் பாலைநிலத்திலும்
அற்புதங்களையும் அரிய செயல்களையும்
செய்தார். 37 அந்த மோசேயே இஸ்ர
வேல் மக்களிடம் 'என்னைப் போன்ற
இறைவாக்குரைப்பவர் ஒருவரைச் சகோ
தரராகிய உங்களிடையேயிருந்து கடவுள்
உங்களுக்கென்று தோன்றச் செய்வார்'
என்று சொன்னவர். 38 அவரே பாலை
நிலத்தில் கூடின சபையில் இருந்தவர்,
சீனாய் மலையில் தம்மோடு பேசிய தெய்வ
தூதனோடும் நம்முடைய மூதாதையரோடும்
உரையாடினவர். உயிருள்ள தெய்வ
மொழிகளை நமக்கு வழங்குவதற்காக
அவற்றைப் பெற்றவரும் அவரே. 39 ஆனால்
அவருக்குக் கீழ்ப்படிய நம்முடைய மூதா
தையருக்கு மனமில்லாமற்போயிற்று.
அவர்கள் அவரை வேண்டாமென்று தள்ளி
விட்டு, எகிப்து நாட்டுக்குத் திரும்பிச்
சென்றுவிட விரும்பினார்கள். 40 அவர்கள்
ஆரோனைப் பார்த்து, 'எங்களை எகிப்து
நாட்டிலிருந்து அழைத்துவந்த மோசே
யுக்கு என்ன நேர்ந்ததோ தெரியவில்லை.
ஆகையால், எங்களை நடத்திச் செல்வதற்
கெனத் தெய்வங்களைச் செய்து கொடும்'
என்று கேட்டார்கள். 41 அக்காலத்திலே
தான் அவர்கள் கன்றுக்குட்டியைச் செய்து
அந்த உருவச் சிலைக்குப் பலி செலுத்தி,
தங்கள் கைகளால் உண்டாக்கப்பட்ட
பொருளைக் குறித்து மகிழ்ந்து கொண்டா
டினார்கள். 42 எனவே, கடவுள் அவர்களிட
மிருந்து விலகி வானத்துக் கோளங்களை
வணங்கும்படி அவர்களை விட்டுவிட்டார்.
இவ்வாறே இறைவாக்குரைப்போரின் நூல்
திரட்டிலும் எழுதியுள்ளது:

இஸ்ரவேல் குடும்பத்தினரே,
பாலைநிலத்தில் நாற்பதாண்டுக்
காலம் பலிகளையும் காணிக்கை
களையும் எனக்கா படைத்தீர்கள்?

43 மோளோகைத் தொழும் கூடாரத்
தையும்
உங்கள் தெய்வமாகிய ரொம்பாவின்
விண்மீனையும் சுமந்துகொண்டு
போனீர்கள்.

7:23—29 யாத். 2:11—15. 7:29 யாத். 18:3, 4. 7:30—34 யாத். 3:1—10. 7:36 யாத். 7:3; 14:21, 33. 7:37 உபா. 8: 15, 18. 7:38 யாத். 19:1—20:17; உபா. 5:1—33. 7:40 யாத். 32:1. 7:41 யாத். 32:2—6. 7:42, 43 ஆமோஸ் 5:25—27.

இவையே வழிபடுவதற்கென்று நீங்கள் செய்துகொண்ட உருவங்கள்.
ஆகையால், உங்களைப் பாபிலோனுக்கு அப்பால் குடிபெயர்ந்து போகச் செய்வேன்.’

44 “பாலைநிலத்தில் நம்முடைய மூதாதையருக்குச் சாட்சியக் கூடாரம்* இருந்தது. அது மோசேயோடு பேசினவர் கட்டளையிட்டதற்கேற்ப அவருக்கு அவர் காட்டிய மாதிரியின்படி செய்யப்பட்டிருந்தது. 45 அதை நம்முடைய மூதாதையர் பரம்பரை வழியாகப் பெற்றனர். அவர்கள் இங்கே †யோசுவாவோடு வந்தபோது கடவுள் இங்குள்ள மக்களை அவர்கள் எதிரிலிருந்து துரத்திவிடவே, அவர்கள் இந்த நாட்டைச் சொந்தமாக்கிக்கொண்டார்கள். அக்காலத்தில் அந்தக் கூடாரத்தையும் இங்கே கொண்டுவந்தார்கள். அது தாவீதின் காலம்வரையில் இங்கேயே இருந்தது. 46 தாவீது கடவுளின் அருளைப் பெற்றவர். அவர் யாக்கோபின் குடும்பத்திற்கென்று‡ ஒரு கோவிலைக் கட்ட அனுமதி தரும்படி அவரிடம் வேண்டுதல் செய்தார். 47 ஆனால், சாலொமோன்தான் கடவுளுக்கு ஓர் ஆலயத்தைக் கட்டினார். 48 எனினும், உன்னதத்திலிருப்பவர் மனித கையினால் கட்டப்பட்ட எதிலும் குடிகொள்வதில்லை. இறைவாக்குரைப்பவர் இவ்வாறு சொல்லியிருக்கிறார்.

49 ‘வானம் என் அரியணை,
பூமி என் பாதப்படி;
எப்படிப்பட்ட ஆலயத்தை நீங்கள் எனக்குக் கட்டுவீர்கள்?
நான் இளைப்பாறுவதற்கான இடம் ஏது?
50 இவை அனைத்தையும் நானே என் கையால் உண்டாக்கவில்லையா?’
என்று ஆண்டவர் உரைக்கிறார்.

51 “பிடிவாதமுள்ளவர்களே, நீங்கள் உள்ளத்திலும் செவியிலும் விருத்தசேதனம் பெறாதவர்களாய் இருக்கிறீர்கள்; தூய ஆவியானவரை எப்போதும் எதிர்க்கிறீர்கள். உங்கள் மூதாதையரைப் போலவே நீங்களும் செய்கிறீர்கள். 52 இறைவாக்குரைப்போருள் யாரைத்தான் உங்கள் மூதாதையர் துன்புறுத்தாமலிருந்தனர்? நீதிபரருடைய வருகையை முன்னறிவித்தவர்களை அவர்கள் கொன்றார்கள். இப்பொழுது நீங்கள் அந்த நீதிபரரைக் காட்டிக்கொடுத்துக் கொன்றுவிட்டீர்கள். 53 நீங்கள் தெய்வ தூதர் மூலம் நீதிச்சட்டத்தைப் பெற்றீர்கள்; ஆனால் அதைக் கடைப்பிடித்து நடக்கவில்லை” என்று சொன்னார்.

### ஸ்தேவானைக் கல்லாலடித்தல்

54 இதைக் கேட்டதும் அவர்கள் தங்கள் உள்ளத்தில் கொதிப்படைந்து ஸ்தேவானைப் பார்த்துப் பற்களை நெரித்தார்கள். 55 அவரோ தூய ஆவியை நிறைவாகப் பெற்றவராய் வானத்தை ஏறிட்டுப் பார்த்துக்கொண்டிருந்தார். அவர் கடவுளின் மாட்சிமையையும், கடவுளின் வலப்பக்கத்தில் இயேசு நிற்கிறதையும் கண்டு, 56 “அதோ, வானம் திறந்திருக்கிறதையும், மனுமைந்தர் கடவுளின் பக்கத்தில் நிற்கிறதையும் பார்க்கிறேன்” என்றார். 57 ஆனால் அவர்களோ உரத்த குரலில் கூச்சலிட்டு, தங்கள் காதுகளை அடைத்துக்கொண்டு, ஒன்றுசேர்ந்து அவர்மேல் பாய்ந்து, 58 அவரை நகரத்துக்கு வெளியே தள்ளிக்கொண்டுபோய், அங்கே அவர்மீது கற்களை எறிந்தார்கள். அவருக்கு விரோதமாகச் சாட்சி சொன்னவர்கள் தங்களுடைய மேலாடைகளைச் சவுல் என்னும் ஓர் இளைஞனிடம் ஒப்படைத்து அவன் காலடியில் வைத்திருந்தார்கள். 59 அவர்கள் ஸ்தேவான்மீது கல்லை எறிந்துகொண்டிருக்கையில், அவர், “ஆண்டவராகிய இயேசுவே, என் ஆவியை ஏற்றுக்கொள்ளும்” என்று அபயமிட்டார்; 60 பிறகு முழந்தாள்படியிட்டு, “ஆண்டவரே, இவர்கள்மீது இந்தப் பாவத்தைச் சுமத்தாதேயும்” என்று உரத்த குரலில் வேண்டுதல் செய்தார். இதைச் சொன்னபின் அவர் அப்படியே துஞ்சிவிட்டார்.

**8** அவரைக் கொல்லுவதற்குச் சவுலும் உடன்பட்டிருந்தார்.

### சவுல் திருச்சபையைத் துன்புறுத்தியது

அந்நாள்முதல் எருசலேம் திருச்சபை கொடுமையான துன்புறுத்துதலுக்கு உள்ளாயிற்று. திருத்தூதுவர் தவிர மற்றெல்லாரும் யூதேயா சமாரியாவின் நாட்டுப்புறமெங்கும் சிதறுண்டு சென்றனர். 2 தெய்வபக்தியுள்ள மனிதர் சிலர் ஸ்தேவானை அடக்கம் செய்து அவருக்காகப் பெரிதும் துக்கங்கொண்டாடினர். 3 ஆனால் சவுல் திருச்சபையைப் பாழ்படுத்தி வந்தார்.

* தன் மக்களோடு உடன்படிக்கை செய்துகொண்ட கடவுள் அவர்களோடு இருக்கிறார் என்பதற்குச் சாட்சியாயிருக்கும் கூடாரம்.
† இங்கே மூலத்திலிருப்பது ‘இயேசு’ என்கிற பெயர். அது ‘யோசுவா’ என்கிற எபிரேயப் பெயரின் கிரேக்க வடிவம்.
‡ ‘யாக்கோபின் கடவுளுக்கென்று’ என்பது வேறு சில பிரதிகளின் பாடம்.

**7:44** யாத். 25:9, 40. **7:45** யோசுவா 3:14—17; **7:46** 2 சாமு. 7:1—16; 1 வரலாறு. 17:1—14. **7:47** 1 அர. 6:1—38; 2 வரலாறு. 3:1—17. **7:49, 50** ஏசா. 66:1, 2. **7:51** ஏசா. 63:10 **8:3** திருத்தூது. 9:1, 2; 22:4; 26:10, 11; 1 கொரி. 15:9; கலா. 1:13; பிலி. 3:6; 1 தீமோ. 1:13.

அவர் வீடுதோறும் நுழைந்து, ஆண்களை யும் பெண்களையும் இழுத்துக்கொண்டு போய் அவர்களைக் காவலில் அடைத்தார்.

### சமாரியா நாட்டில் அருட்செய்தி பரவுதல்

4 சிதறுண்டு சென்றவர்கள் அருள் வாக்கை அறிவித்துக்கொண்டு ஊர் ஊரா கச் சென்றார்கள். 5 பிலிப்பு என்பவர் சமாரியா நாட்டின் தலைநகரத்திற்குப் போய் அங்கிருந்தவர்களுக்கு மேசியாவைப் பற்றி அறிவித்தார். 6 பிலிப்பு சொன்ன வற்றை மக்கள் கேட்டதோடு அவர் செய்துவந்த அரிய செயல்களையும் கண்டு, அவருடைய சொல்லுக்கு ஆர்வத்துடன் செவிசாய்த்தார்கள். 7 அசுத்த ஆவிகள் பிடித்த பலரிடமிருந்து அந்த ஆவிகள் பெருங்கூச்சலிட்டுக்கொண்டு வெளியேறின தையும், பல திமிர்வாத நோயாளிகளும் முடவர்களும் குணமடைந்ததையும் அவர் கள் கண்டிருந்தார்கள். 8 அந்த நகரத் தார் பெருமகிழ்ச்சியடைந்தனர்.

9 சீமோன் என்னும் ஒரு மனிதன் அந்த நகரத்தில் இருந்தான். அவன் நெடுங் காலமாகத் தன் மாய வித்தையின் மூலம் சமாரிய மக்களைத் திகைக்கவைத்து, தன்னை ஒரு பெரிய மனிதன் என்று சொல்லிக்கொண்டுவந்தவன். 10 ''மகத் தானது எனப்படும் தெய்வ சக்தி இவனே'' என்று கூறி, சிறியோர் முதல் பெரியோர் வரை எல்லாருமே அவனை உயர்வாக மதித்துவந்தனர். 11 அவன் நீண்ட காலம் தன் மாய வித்தைகளினால் அவர் களைத் திகைக்கவைத்து வந்ததால், அவர் கள் அவனை அவ்வாறு மதித்தார்கள். 12 ஆனால் கடவுளின் அரசையும் இயேசு கிறிஸ்துவின் திருப்பெயரையும்பற்றிய நற்செய்தியைப் பிலிப்பு அறிவித்தபோது, அவர்கள் அவரை நம்பினார்கள்; ஆண் களும் பெண்களும் வந்து திருமுழுக்குப் பெற்றார்கள். 13 சீமோனுங்கூட அவ்வாறே நம்பித் திருமுழுக்குப் பெற்றுப் பிலிப்பு வோடுகூடவே இருந்தான். அவர் செய்த அரிய செயல்களையும் மாபெரும் வல்ல மைச் செயல்களையும் கண்டு மலைத்துப் போனான்.

14 சமாரியா கடவுளின் வார்த்தையை ஏற்றுக்கொண்டது என்பதை எருசலேமி லிருந்த திருத்தூதுவர் கேள்விப்பட்டு, பேதுருவையும் யோவானையும் அங்கே அனுப்பினர். 15 இருவரும் போய், அங் குள்ளவர்கள் தூய ஆவியைப் பெற்றுக் கொள்ளும்படி அவர்களுக்காக மன்றாடினர். 16 ஏனெனில், அதுவரை அவர்களுள் யார்மீதும் தூய ஆவி இறங்கவில்லை; அவர்கள் ஆண்டவராகிய இயேசுவின் திருப்பெயரால் கொடுக்கப்பட்ட திரு முழுக்கு மட்டுமே பெற்றிருந்தார்கள். 17 பிறகு பேதுருவும் யோவானும் அவர்கள்மேல் கைகளை வைத்தபோது, அவர்கள் தூய ஆவியைப் பெற்றார்கள். 18. திருத்தூதுவர் கைகளை வைப்பதனால் தூய ஆவி அருளப்படுகிறது என்பதைச் சீமோன் கண்டபோது, 19 அவன், ''நான் யார்மேல் என்னுடைய கைகளை வைக் கிறேனோ அவன் தூய ஆவியைப் பெறும் படி எனக்கும் இந்த ஆற்றலைக் கொடுங் கள்'' என்று சொல்லி அவர்களிடம் பணம் கொடுக்க முன்வந்தான். 20 அப் பொழுது பேதுரு அவனிடம், ''கடவுள் அருளும் வரத்தை விலை கொடுத்து வாங் கக்கூடும் என்று நீ எண்ணியதால், உன் பணத்தோடு நீயும் ஒழிந்துபோ. 21 உன் உள்ளம் கடவுள்முன் நேர்மையற்றதா யிருக்கிறபடியால், இதில் உனக்குப் பங்கு மில்லை, பாகமுமில்லை. 22 நீ உன் வாழ்க் கையில் எட்டி போன்ற கசப்பை அனு பவிப்பாய்; பாவச் சிறையில் கட்டுண்டு கிடப்பாய் என்பதை நான் காண்கிறேன். 23 எனவே, நீ இந்தத் தீய குணத்தை விட்டுவிட்டு மனமாற்றமடைந்து, ஆண்ட வரை நோக்கி மன்றாடிப்பார். ஒருவேளை உன் உள்ளத்தில் எழுந்த இந்த எண்ணம் மன்னிக்கப்படலாம்'' என்று சொன்னார். 24 அதற்குச் சீமோன், ''நீங்கள் சொன்ன வற்றுள் ஒன்றும் எனக்கு நேரிடாதபடி நீங்களே எனக்காக ஆண்டவரிடம் மன் றாடுங்கள்'' என்று கேட்டுக்கொண்டான். 25 பிறகு அவர்கள் ஆண்டவருடைய வார்த்தையை வலியுறுத்திக் கூறிவிட்டு, சமாரிய நாட்டின் சிற்றூர்கள் பலவற்றில் அருட்செய்தியை அறிவித்துக்கொண்டே எருசலேமுக்குத் திரும்பி வந்தார்கள்.

### எத்தியோப்பியன் திருமுழுக்குப் பெறுதல்

26 பிற்பாடு ஆண்டவரின் தூதன் பிலிப் புவினிடம், ''நீ புறப்பட்டு, எருசலேமி லிருந்து காத்சாவுக்குப் போகும் வழியா கத் தெற்கு நோக்கிப் போ'' என்று சொன் னான். அது ஆள் நடமாட்டமற்ற ஒரு வழி. 27 அவரும் புறப்பட்டுப் போனார். அச்சமயம் எத்தியோப்பியன் ஒருவன் எரு சலேமுக்குக் கடவுளைத் தொழப் போய் விட்டுத் திரும்பி அவ்வழியே சென்றுகொண் டிருந்தான். அவன் ஓர் அண்ணகன்; கந்தாகே எனப்பட்ட எத்தியோப்பிய அரசியினிடம் அமைச்சனாயிருந்தான். அவ னுடைய செல்வம் அனைத்தும் அவனு டைய பொறுப்பிலிருந்தது. 28 தேரில் அமர்ந்து சென்றுகொண்டிருக்கையில், அவன் ஏசாயா நூலிலுள்ள இறைவாக்கு

8:17 1 தீமோ. 4:14.

களைப் படித்துக் கொண்டிருந்தான். 29 ஆவி
யானவர் பிலிப்புவினிடம், ''நீ அந்தத்
தேரை அணுகி அதனோடு கூடவே போ''
என்று சொன்னார். 30 அவ்வாறே பிலிப்பு
ஓடி அதனண்டை சேர்ந்து, அவன் ஏசாயா
நூலிலுள்ள இறைவாக்குகளைப் படிப்ப
தைக் கேட்டு, ''நீர் படிப்பது உமக்கு
விளங்குகிறதா?'' என்றார். 31 அதற்கு
அவன், ''யாராவது விளக்கிக் காட்டினா
லன்றி இது எனக்கு எப்படி விளங்கும்?''
என்று சொல்லிவிட்டு பிலிப்புவைத் தன்
னோடு வந்து உட்காரும்படி கேட்டுக்
கொண்டான். 32 அப்போது அவன் படித்
துக்கொண்டிருந்த வேதாகமப் பகுதி
இதுவே:

''கொல்லப்படுவதற்கு இழுத்துச்செல்லப்
படும் ஓர்ஆட்டைப்போல அவர் கொண்டு
போகப்பட்டார்.
மயிர் கத்திரிக்கிறவன்முன் ஆட்டுக்குட்டி
கத்தாதிருக்கிறதுபோல,
அவர் வாய் திறவாதிருந்தார்.
33 அவர் தாழ்த்தப்பட்டார், அவ
ருக்கு நியாயம் வழங்கப்படவுமில்லை;
அவருடைய உயிர் உலகினின்று முன்
கூட்டியே நீக்கப்பட்டுவிட்டதால்,
அவருடைய மரபினரைப் பற்றிப் பேச
இடமேது?''

34 அண்ணகன் பிலிப்புவைப் பார்த்து
''நான் உம்மை ஒன்று கேட்க விரும்பு
கிறேன். இறைவாக்குரைப்பவர் இதை
யாரைக் குறித்துச் சொல்லுகிறார்? தம்
மைக் குறித்தா அல்லது இன்னொருவரைக்
குறித்தா?'' என்றான். 35 அப்பொழுது
பிலிப்பு, அந்த வேத வாக்கியத்தி
லிருந்து தொடங்கி, இயேசுவைப் பற்றிய
நற்செய்தியை அவனுக்கு அறிவிக்கலானார்.
36 அவர்கள் வழிநெடுகப் போய்க்கொண்
டிருக்கையில் நீர்நிலை ஒன்றிற்கு வந்தார்
கள். அப்பொழுது அண்ணகன், ''இதோ,
தண்ணீர்! நான் திருமுழுக்குப் பெற
ஏதேனும் தடையிருக்கிறதா?'' என்று
கேட்டான். [37 அதற்குப் பிலிப்பு, ''நீர்
முழு உள்ளத்தாலும் இயேசுவை நம்பி
னால் தடையில்லை'' என்றார். அப்போது
அவன், ''இயேசுகிறிஸ்து கடவுளின் மைந்
தரென்பதை நம்புகிறேன்'' என்று கூறி
னான்; பிறகு தேரை நிறுத்தச் சொன்
னான்.] 38 பிலிப்பு, அண்ணகன் இரு
வருமே தண்ணீரில் இறங்கினார்கள். பிலிப்பு
அவனுக்குத் திருமுழுக்குக் கொடுத்தார்.
39 அவர்கள் தண்ணீரை விட்டு வெளி
யேறினவுடனே ஆண்டவரின் ஆவியானவர்
பிலிப்புவை அங்கிருந்து கொண்டு
போய்விட்டார். அதற்குப்பின் அண்ணகன்
அவரைப் பார்க்கவேயில்லை. எனி
னும், அவன் மகிழ்ச்சியோடு தன் வழியே
சென்றான். 40 பிலிப்புவோ, தாம் ஆசோத்
என்னும் ஊரில் இருப்பதைக் கண்டார்.
பிறகு அவர், வழியிலிருந்த ஊர்களிலெல்
லாம் அருட்செய்தியை அறிவித்துக்
கொண்டே சென்று கடைசியில்
செசரியாவை அடைந்தார்.

## சவுலின் மனமாற்றம்

(திருத்தூது. 22:6-16; 26:12-18)

9 இதற்கிடையில் சவுல் சீறி எழுந்து
ஆண்டவருடைய சீடரைக் கொன்று
விடுவதாக அச்சுறுத்தி வந்தார். 2 இந்தப்
புதிய நெறியைச் சேர்ந்த ஆண்களோ
பெண்களோ தமஸ்குவில் இருந்தால்,
அவர்களைக் கண்டுபிடித்து கைது செய்து
எருசலேமுக்குக் கொண்டுவர அவர் திட்ட
மிட்டார். அதற்காக அவர் தலைமை
ஆசாரியரிடம் சென்று தமஸ்குவிலுள்ள
தொழுகைக்கூடங்களுக்கு அதிகாரப் பத்தி
ரங்களைக் கேட்டு வாங்கிக்கொண்டார்.
3 பிறகு அவர் பயணம் செய்து தமஸ்குவை
நெருங்கினபோது, திடீரென்று அவரைச்
சுற்றிலும் வானத்திலிருந்து ஒரு வெளிச்சம்
மின்னொளிபோல வீச, அவர் தரையில்
விழுந்தார். 4 விழுந்ததும், ''சவுலே,
சவுலே, என்னை ஏன் துன்புறுத்துகிறாய்?''
என்று தம்மோடு பேசும் ஒரு குரலைக்
கேட்டார். 5 உடனே அவர், ''ஆண்ட
வரே, நீர் யார்?'' என்றார். அதற்கு
அவர், ''நீ துன்புறுத்துகிற இயேசுவே
நான். [தாற்றுக்கோல் முனையில் நீ
உதைப்பதால் உனக்குத் துன்பந்தான்
வரும்'' என்று சொன்னார். 6 அவர் நடு
நடுங்கித் திகைத்து, ''ஆண்டவரே, நான்
என்ன செய்ய வேண்டுமென்பது உமது
திருவுளம்?'' என்றார்.] அதற்கு அவர்,
''நீ எழுந்து பட்டணத்துக்குள் போ,
நீ என்ன செய்ய வேண்டும் என்பது அங்கே
உனக்குத் தெரிவிக்கப்படும்'' என்று சொன்
னார். 7 அவரோடு பயணம் செய்தவர்கள்
அந்தக் குரலைக் கேட்டார்கள்; ஆனால்
அங்கே ஒருவரும் இல்லாததைக் கண்டு
பேச்சற்று நின்றுவிட்டார்கள். 8 சவுல்
தரையிலிருந்து எழுந்து கண்களைத் திறந்த
போது, அவர் கண்ணுக்கு ஒன்றும் தெரிய
வில்லை. ஆகையால் அவர்கள் அவர் கை
யைப் பிடித்துத் தமஸ்குவுக்கு அவரைக்
கூட்டிக்கொண்டு போனார்கள். 9 அவர்
மூன்று நாள் பார்வையற்றிருந்தார்; ஒன்
றும் உண்ணவுமில்லை, குடிக்கவுமில்லை.
10 தமஸ்குவில் அனனியா என்னும் ஒரு
சீடர் இருந்தார். ஆண்டவர் அவருக்குக்
காட்சியளித்து, ''அனனியாவே!'' என்று
கூப்பிட, அவர், ''ஆண்டவரே, இதோ

**8:32, 33** ஏசா. 53;7, 8. **8:39** 1 அர. 18:12. **9:7** தானி. 10:7.

அடியேன்'' என்றார். 11 அப்பொழுது
ஆண்டவர், ''நீ புறப்பட்டு நேர் என்னும்
தெருவுக்குப் போய், யூதாவின் வீட்டில்
சவுல் என்னும் தர்சுப் பட்டணத்தான்
ஒருவனைப்பற்றிக் கேள். அவன் இப்
போது ஜெபம் செய்துகொண்டிருக்
கிறான். 12 அவன் அனனியா என்னும் ஒரு
வர் வந்து தன்மீது கைகளை வைத்ததாக
வும், தான் மீண்டும் பார்வை பெற்ற
தாகவும் காட்சி கண்டிருக்கிறான்'' என்று
சொன்னார். 13 அதற்கு அனனியா,
''ஆண்டவரே, இந்த ஆள் எருசலேமில்
உமக்குரிய மக்களுக்கு எத்தனையோ தீங்கு
களைச் செய்தானென்று பலர் வாயிலாகக்
கேள்விப்படுகிறேன். 14 உமது திருப்
பெயரைத் தொழுகிற யாவரையும் கைது
செய்வதற்கென்று தலைமை ஆசாரியர்களி
டமிருந்து அதிகாரத்தைப் பெற்றுக்
கொண்டு அவன் இங்கேயும் வந்திருக்
கிறான்'' என்றார். 15 அதற்கு ஆண்டவர்,
''நீ போ, ஏனென்றால், அவன் யூதரல்லா
தாரிடமும் அரசனிடமும் இஸ்ரவேல் மக்
களிடமும் சென்று என் பெயரை அறி
விக்கும்படி நான் தேர்ந்துகொண்ட கருவி.
16 என் பெயரின் பொருட்டு அவன் எவ்
வளவு பாடுகள் அடைய வேண்டுமென்
பதை நானே அவனுக்குக் காட்டுவேன்''
என்றார். 17 அனனியா புறப்பட்டுப்போய்
அந்த வீட்டிற்குள் நுழைந்து, சவுல்மீது
தம் கைகளை வைத்து, ''சகோதரனே,
சவுலே, நீ வந்த வழியில் உனக்குக்
காட்சியளித்த ஆண்டவராகிய இயேசு,
நீ பார்வை பெறுவதற்காகவும் தூய ஆவி
யினால் நிரப்பப்படுவதற்காகவும் என்னை
உன்னிடம் அனுப்பியிருக்கிறார்'' என்று
சொன்னார். 18 உடனே அவருடைய கண்
களிலிருந்து செதில் போன்றவை கீழே
விழுந்தன; அவர் மீண்டும் பார்வை
பெற்று எழுந்திருந்து திருமுழுக்குப்
பெற்றார். 19 பிறகு அவர் சாப்பிட்டு
வலுவடைந்தார்.

### தமஸ்குவில் சவுல் பகர்ந்த சாட்சியம்

சவுல் தமஸ்குவிலிருந்த சீடரோடு சில
நாள் தங்கியிருந்தார். 20 விரைவிலேயே
அவர், ''இயேசுவே கடவுளின் மைந்தர்''
என்று தொழுகைக்கூடங்களில் அறிவிக்க
வும் தொடங்கிவிட்டார். 21 அதைக் கேட்ட
வர்கள் அனைவரும் திகைப்புற்று, ''எருச
லேமில் இந்தப் பெயரைத் தொழுது
கொண்டிருந்தவர்களை அழித்தவன் இவன்
தானே? அப்படிப்பட்டவர்களைக் கைது
செய்து தலைமை ஆசாரியர்களிடம் கொண்டு
போக வேண்டுமென்ற அந்த ஒரே நோக்
கத்தோடுதானே இவன் இங்கேயும் வந்
தான்'' என்றார்கள். 22 ஆனால் சவுலோ
மேலும் ஊக்கங்கொண்டவராய், 'இயேசுவே
மேசியா' என்பதை ஆதாரத்து
டன் மெய்ப்பித்து வந்தார். அதனால்
தமஸ்குவில் வாழ்ந்துவந்த யூதரிடையே
குழப்பம் உண்டாயிற்று.

### சவுல் யூதரிடமிருந்து தப்பிச்சென்றது

23 பலநாள் கழிந்தபின், அவரைக்
கொன்றுவிட யூதர் திட்டமிட்டனர்.
24 அவர்களுடைய சதித்திட்டம் சவுலுக்
குத் தெரியவந்தது. அவரைக் கொன்று
விடுவதற்காக அவர்கள் இராப்பகலாய்ப்
பட்டணத்தின் வாயில்களைக் காவல் செய்
தார்கள். 25 ஆனால் அவருடைய சீடர்கள்
அவரை ஓர் இரவில் அழைத்துக்
கொண்டு போய் ஒரு கூடையில் வைத்து
மதில் வழியாக இறக்கிவிட்டார்கள்.

### எருசலேமில் சவுல்

26 சவுல் எருசலேமை அடைந்தபின்
சீடரோடு சேர்ந்துகொள்ள விரும்பினார்.
ஆனால் அவரும் ஒரு சீடர் என்பதை
அவர்கள் நம்பவில்லை; எல்லாருமே அவ
ருக்கு அஞ்சிக்கொண்டிருந்தனர். 27 அப்
பொழுது பர்னபா சவுலைக் கூட்டிக்
கொண்டு திருத்தூதுவரிடம் சென்று,
அவர் வழியில் எப்படி ஆண்டவரை
நேரில் கண்டாரென்றும், ஆண்டவர் அவ
ரிடம் என்ன சொன்னாரென்றும், அவர்
தமஸ்குவில் எப்படித் துணிவுடன் இயேசுவின்
திருப்பெயரை அறிவித்தாரென்றும்
அவர்களுக்கு விவரித்துச் சொன்னார்.
28 அதன்பின் சவுலும் அவர்களோடு
சேர்ந்து எருசலேமில் அங்குமிங்கும் சென்று
ஆண்டவரின் திருப்பெயரைத் துணிவுடன்
அறிவித்துவந்தார். 29 கிரேக்க மொழி
பேசும் யூதரிடம் போய் அவர்களோடு
தர்க்கம் செய்தும் வந்தார். அவர்களோ
அவரைக் கொன்றுவிட முயற்சி செய்து
வந்தார்கள். 30 அவரோடிருந்த சகோத
ரர்கள் அதை அறிந்து, அவரைச்
செசரியாவுக்கு அழைத்துச் சென்று, அங்கி
ருந்து தர்சுவுக்கு அனுப்பிவிட்டார்கள்.

31 யூதேயா கலிலேயா சமாரியா நாடுக
ளெங்குமிருந்த திருச்சபை தொல்லை
யின்றி அமைதியுடனிருந்தது. அது வளர்ச்
சியடைந்து ஆண்டவருக்கு அஞ்சி நடந்து,
தூய ஆவியானவரின் துணையினால் பெருகி
வந்தது.

### ஐனேயா என்னும் திமிர்வாத நோயுள்ளவன் குணமடைதல்

32 பேதுரு பற்பல இடங்கள் வழியாக
பயணம் செய்து வருகையில், லித்தா

9:15 1 கொரி. 9:16, 17. 9:23–25 2 கொரி. 11:32, 33.

என்னும் ஊரில் வாழ்ந்துவந்த இறை
மக்களிடமும் போனார். 33 அங்கே திமிர்
வாத நோயுள்ளவனை எட்டு ஆண்டுகள்
படுக்கையில் கிடந்த ஐனேயா என்னும்
ஒருவனை அவர் கண்டார். 34 பேதுரு அவ
னிடம், ''ஐனேயாவே, இயேசுகிறிஸ்து
உன்னைக் குணமாக்குகிறார்; எழுந்து உன்
படுக்கையை நீயே சுருட்டி வை'' என்றார்.
உடனே அவன் எழுந்திருந்தான்.
35 லித்தாவிலும் சாரோனிலும் வாழ்ந்து
வந்தவர்கள் அனைவரும் அவனைக் கண்டு
ஆண்டவர் பக்கம் திரும்பினர்.

## தொர்க்காள் மீண்டும் உயிர் பெறுதல்

36 யோப்பா பட்டினத்திலிருந்த சீடர்
களுள் தபீத்தாள் என்னும் ஒரு பெண்
இருந்தாள். தபீத்தாள் என்பதற்குத்
தொர்க்காள், அதாவது பெண்மான் என்
பது பொருள். அவள் தன் முழு நேரத்
தையும் நன்மை செய்வதிலும், அறச்
செயல்கள் புரிவதிலும் செலவிட்டு வந்தாள்.
37 லித்தாவில் பேதுரு இருந்த வேளையில்,
அவள் நோயுற்று இறந்துவிட்டாள்.
அவளைக் குளிப்பாட்டி மேல்மாடியில் கிடத்தி
யிருந்தார்கள். 38 லித்தா யோப்பாவுக்குப்
பக்கத்து ஊரானதால், அங்கே பேதுரு இருப்
பதைச் சீடர் கேள்விப்பட்டு, அவரிடம்
இருவரை அனுப்பி, விரைவில் தங்களி
டம் வர வேண்டுமென்று கேட்டுக்கொண்
டார்கள். 39 பேதுரு புறப்பட்டு அவர்க
ளோடு போனார். அவர் போய்ச் சேர்ந்
ததும் அவர்கள் அவரை மேல்மாடிக்கு
அழைத்துக்கொண்டு போனார்கள். அப்
பொழுது எல்லாக் கைம்பெண்களும் அவ
ரைச் சூழ்ந்துகொண்டு, தொர்க்காள் தங்
களோடிருந்த காலத்தில் தைத்த பல சட்
டைகளையும் உடைகளையும் அவரிடம்
காட்டி அழுதார்கள். 40 பேதுரு எல்லா
ரையும் வெளியே அனுப்பிவிட்டு, முழந்
தாள்படியிட்டுக் கடவுளிடம் வேண்டுதல்
செய்தார். பிறகு பிணத்தின் பக்கம்
திரும்பி, ''தபீத்தாளே, எழுந்திரு'' என்
றார். அவள் கண்களைத் திறந்தாள், பேது
ருவைக் கண்டு எழுந்து உட்கார்ந்தாள்.
41 அவர் அவளுக்குக் கைகொடுத்து
எழுந்து நிற்கச் செய்தார். ஆண்டவரிடம்
நம்பிக்கை கொண்டிருந்தவர்களையும் கைம்
பெண்களையும் பிறகு கூப்பிட்டு, அவர்கள்
முன் அவளை உயிருடன் நிறுத்தினார்.
42 இச்செய்தி யோப்பா முழுவதும் தெரிய
வந்தது. பலர் ஆண்டவரிடம் நம்பிக்கை
கொண்டனர். 43 பேதுரு யோப்பா
வில் தோல் பதனிடும் சீமோன் என்னும்
ஒருவனுடன் பலநாள் தங்கியிருந்தார்.

## பேதுருவும் கொர்நேலியுவும்

10 செசரியா பட்டினத்தில் கொர்நேலியு
என்னும் ஒருவன் இருந்தான். அவன்
இத்தாலியப் படையில் நூற்றுவர் தலைவ
னாயிருந்தான். 2 அவன் பக்தியுள்ளவன்.
அவனும் அவன் வீட்டார் அனைவரும்
யூதரல்லாதாராயினும், அவர்கள் மெய்க்
கடவுளை வழிபட்டுவந்தவர்கள். அவன்
யூத மக்களுக்கு அறச்செயல்களைச் செய்த
வன். கடவுளை நோக்கி வேண்டுதல் செய்
யத் தவறாதவன். 3 அவனுக்கு ஒரு நாள்
பிற்பகல் ஏறக்குறைய மூன்று மணிக்கு* ஒரு
காட்சி அருளப்பட்டது. கடவுளின் தூதன்
தன்னிடம் வருவதையும், ''கொர்நேலி
யுவே'' என்று தன்னைக் கூப்பிடுவதையும்
அவன் அந்தக் காட்சியில் தெளிவாகக்
கண்டான். 4 அந்தத் தூதனை அவன்
கூர்ந்துநோக்கியதும் அச்சமுற்று, ''என்ன
ஆண்டவரே?'' என்று கேட்டான். அதற்
குத் தூதன், ''உன்னுடைய வேண்டுதல்
களையும் அறச்செயல்களையும் கடவுள் ஏற்
றுக்கொண்டார்; உனக்கு அருள்புரியத்
திருவுளங்கொண்டுள்ளார். 5 இப்போதே
நீ யோப்பாவுக்கு ஆள் அனுப்பி, பேதுரு
என்னும் மறுபெயருள்ள சீமோனை வர
வழை. 6 அவன் தோல் பதனிடுகிற
சீமோன் என்னும் ஒருவனுடைய வீட்டில்
தங்கியிருக்கிறான்; அந்த வீடு கடலோரத்
தில் இருக்கிறது'' என்று சொன்னான்.
7 தன்னோடு பேசின தெய்வதூதன்
மறைந்துபோன பிறகு, கொர்நேலியு தன்
வீட்டு வேலைக்காரருள் இருவரையும்,
தனக்குப் பணி செய்வதற்கென்று அமர்த்
தப்பட்டிருந்த படைவீரருள் பக்தியுள்ள
ஒருவனையும் அழைத்து, 8 நடந்ததெல்லா
வற்றையும் அவர்களுக்கு விவரித்துச்
சொல்லி, யோப்பாவுக்கு அவர்களை அனுப்
பினான்.

9 அவர்கள் பயணம் செய்து மறுநாள்
அந்த ஊரை நெருங்கிக்கொண்டிருந்த
நேரத்தில், பேதுரு ஜெபம் செய்வதற்காக
வீட்டின் மேல் தளத்திற்குப் போனார்.
அப்பொழுது மணி ஏறக்குறையப் பகல்
பன்னிரண்டு† இருக்கும். 10 அவருக்குப்
பசி உண்டாயிற்று, அவர் சாப்பிட விரும்
பினார். சாப்பாடு ஆயத்தமாகிக்கொண்
டிருக்கையில், அவர் பரவசமாகி, 11 வானம்
திறந்திருப்பதையும், பெரிய கப்பற்பாயைப்
போன்றதொரு விரிப்பு அதன் நான்கு
மூலைகளைக் கொண்டு பூமியில் இறக்கி
விடப்படுவதையும், 12 அதில் தரையி
லுள்ள எல்லாவகையான நடப்பன, ஊர்
வன, வானில் பறப்பன ஆகியவை இருப்

* மூலத்தில், யூதர் கணக்குப்படி, 'ஒன்பதாம் மணிக்கு' என்றிருக்கிறது.
† மூலத்தில், யூதர் கணக்குப்படி, 'ஆறாம் மணி' என்றிருக்கிறது.
10:14 எசே. 4:14.

பதையும் கண்டார். 13 அப்பொழுது,
''பேதுருவே, எழுந்திரு, இவற்றைக்
கொன்று சாப்பிடு'' என்று ஒரு குரல்
அவருக்குச் சொல்லிற்று. 14 அதற்குப்
பேதுரு, ''வேண்டவே வேண்டாம்; ஆண்
டவரே, தீட்டும் தூய்மையற்றதுமான
எதையும் நான் ஒருபோதுமே சாப்பிட்ட
தில்லை'' என்றார். 15 இரண்டாம் முறை
அக்குரல், ''தூய்மையானது என்று கட
வுள் சொன்ன எதையும் நீ தீட்டு எனச்
சொல்லாதே'' என்று அவருக்கு உரைத்
தது. 16 இப்படி மூன்று முறை நடந்த
தும், அந்த விரிப்பு வானத்துக்கே திருப்பி
எடுத்துக்கொள்ளப்பட்டது.

17 தாம் கண்ட காட்சியின் பொருள்
என்னவென்பதை அறியாமல் பேதுரு
தமக்குள்ளே திகைத்துக்கொண்டிருந்த
வேளையில், கொர்நேலியு அனுப்பிய ஆள்
கள் சீமோன் வீட்டை விசாரித்துக்
கொண்டே அங்கே வந்து சேர்ந்தார்கள்.
18 அவர்கள் வாசற்படியில் நின்று, ''ஐயா,
பேதுரு என்னும் சீமோன் இங்கே இருக்
கிறாரா?'' என்று கேட்டார்கள். 19 பேதுரு
அந்தக் காட்சியைப்பற்றிச் சிந்தித்துக்
கொண்டிருக்கையில் ஆவியானவர், ''சிலர்*
உன்னைத் தேடி வந்திருக்கின்றனர். 20 நீ
எழுந்து கீழே இறங்கி யாதொரு தயக்கமு
மின்றி அவர்களோடு போ; நான்தான்
அவர்களை அனுப்பியிருக்கிறேன்'' என்று
அவரிடம் சொன்னார். 21 பேதுரு இறங்
கிப்போய் அந்த மனிதரிடம், ''நீங்கள்
தேடுகிற ஆள் நான்தான். உங்களுக்கு
என்ன வேண்டும்?'' என்று கேட்டார்.
22 அதற்கு அவர்கள், ''நாங்கள் நூற்று
வர் தலைவன் கொர்நேலியுவினிடமிருந்து
வந்திருக்கிறோம்; அவர் நேர்மையானவர்;
மெய்க் கடவுளை வழிபடுகிறவர்; யூத
மக்கள் அனைவராலும் நன்கு மதிக்கப்
பெற்றவர்; உம்மைத் தமது வீட்டுக்கு
வரவழைத்து நீர் சொல்வதைக் கேட்க
வேண்டுமென்று தெய்வதூதர் அவருக்குக்
கட்டளையிட்டார்'' என்றார்கள். 23 அப்
பொழுது பேதுரு அவர்களை உள்ளே
அழைத்துச்சென்று உபசரித்தார்.

மறுநாள் அவர் அவர்களோடு புறப்
பட்டுப் போனார்; யோப்பாவிலிருந்த
சகோதரருள் சிலரும் அவரோடு சென்றனர்.
24 அடுத்த நாள் அவர்கள் செசரி
யாவை அடைந்தார்கள். கொர்நேலியு
தன் சுற்றத்தாரையும் நெருங்கிய நண்
பர்களையும் ஒன்றுகூட்டி அவர்களுடைய
வரவை எதிர்நோக்கியிருந்தான். 25 பேதுரு
வந்ததும் கொர்நேலியு அவரை எதிர்
கொண்டு அவருடைய காலில் விழுந்து
வணங்கினான். 26 ஆனால் பேதுரு, ''எழுந்
திரும், நானும் ஒரு மனிதன்தான்''
என்று சொல்லி அவனை எழுந்திருக்கச்
செய்தார். 27 பிறகு அவனோடு பேசிக்
கொண்டே உள்ளே போனார். அங்கே
பலர் கூடியிருந்ததைக்கண்டு, 28 அவர்களைப்
பார்த்து, ''ஒரு யூதன் யூதனல்லாதவ
னோடு உறவாடுவதோ, அவனுடைய வீட்
டுக்குப் போவதோ எவ்வளவு முறை
கேடான காரியம் என்பது உங்களுக்குத்
தெரியும். ஆனால் எந்த மனிதனையும்
தீட்டு உள்ளவனென்றோ தூய்மையற்றவ
னென்றோ சொல்லக்கூடாதென்று கடவுள்
எனக்குக் காட்டினார். 29 ஆகையால் நீங்
கள் கூப்பிட்டனுப்பியபோது மறுத்துப்
பேசாமல் வந்தேன். இப்பொழுது உங்
களைக் கேட்கிறேன்: எதற்காக என்னைக்
கூப்பிட்டனுப்பினீர்கள்?'' என்று கேட்டார்.

30 அதற்குக் கொர்நேலியு, ''நான்கு
நாளுக்குமுன் இதே நேரத்தில் நான்
என் வீட்டில் பிற்பகல் மூன்று மணிக்குச்†
செய்யப்படும் ஜெபத்தைச் செய்துகொண்
டிருந்தேன். அப்பொழுது பளபளப்பான
உடை உடுத்திய ஒருவர் திடீரென என்
முன் வந்து நின்றார். 31 அவர், 'கொர்நேலி
யுவே, உன் வேண்டுதலுக்குக் கடவுள்
செவிசாய்த்தார். உன்னுடைய அறச்
செயல்களை அவர் ஏற்றுக்கொண்டார்.
32 எனவே, நீ யோப்பாவுக்கு ஆள் அனுப்பி,
பேதுரு என்னும் மறுபெயருள்ள சீமோனை
வரவழை; அவன் கடலோரத்தில் தோல்
பதனிடுகிற சீமோன் வீட்டில் தங்கியிருக்கி
றான்' என்றார். 33 உடனே நான் உமக்கு
ஆள் அனுப்பினேன்; நீரும் என்மீது தயவு
வைத்து வந்தீர்; ஆண்டவர் உமக்குக்
கட்டளையிட்ட யாவற்றையும் கேட்பதற்கு
நாங்கள் எல்லோரும் இப்போது இங்கே
கடவுள் முன்னிலையில் கூடியிருக்கிறோம்''
என்று சொன்னான்.

### பேதுருவின் உரை

34 அப்பொழுது பேதுரு, ''கடவுள்
யாருக்கும் தனிச்சலுகை காட்டுவதில்லை.
35 அவருக்கு அஞ்சி நடந்து நேர்மை
யானதைச் செய்கிறவன் எந்த இனத்தவ
னாயினும் அவனை அவர் ஏற்றுக்கொள்வார்
என்கிற உண்மையை இப்போது உணர்
கிறேன். 36 கடவுள் எல்லாருக்கும் ஆண்
டவராகிய இயேசுகிறிஸ்துவின் மூலம்
சமாதானம் உண்டு என்கிற நற்செய்
தியை அறிவித்தபோது, இஸ்ரவேல் மக்க
ளுக்கு அவருடைய வார்த்தை அருளப்

* 'இருவர்,' 'மூவர்' என்கிற பாடங்களும் உண்டு.
† மூலத்தில், யூதர் கணக்குப்படி, 'ஒன்பதாம் மணிக்கு' என்றிருக்கிறது.
**10:14** எசே. *4:14*. **10:15** ஆதி. *1:31* **10:26** திருத்தூது. *14:15*; திருவெளி. *19:10*. **10:28** திருத்தூது. *15:9*.
**10:34** உபா. *10:17*; ரோ. *2:11*; *1* பேது. *1:17*. **10:36** ஏசா. *52:7*.

பட்டது என்பது உங்களுக்குத் தெரியும்.
37 திருமுழுக்குப் பெறுங்கள் என்று
யோவான் அறிவித்துத் தம் பணியை
முடித்தபின் கலிலேயாவில் தொடங்கி
யூதேயா முழுவதிலும் நடந்த காரியங்
களும் உங்களுக்குத் தெரியும். 38 கடவுள்
நாசரேத்தூர் இயேசுவுக்குத் தூய ஆவி
யையும் வல்லமையையும் அருளி அவரை
அபிடேகம் செய்தார் என்பதும் உங்களுக்
குத் தெரியும். கடவுள் அவரோடிருந்த
தால், அவர் நன்மை செய்கிறவராகவும்
பிசாசின் கொடுமையான ஆட்சிக்குட்பட்
டிருந்த யாவரையும் விடுவித்துக் குணப்
படுத்துகிறவராகவும் எங்கும் சென்றார்.
39 அவர் யூதருடைய நாட்டிலும் எருச
லேமிலும் செய்த யாவற்றிற்கும் நாங்கள்
சாட்சிகள். அவரைச் சிலுவை மரத்தில்
தொங்கவைத்துக் கொன்றுவிட்டார்கள்.
40 ஆனால் கடவுள் அவரை மூன்றாம் நாள்
உயிரோடெழுப்பி, வெளிப்படையாகக்
காணப்படும்படி செய்தார். 41 எனினும்,
எல்லா மக்களுக்குமன்று, அவருடைய
சாட்சிகளாயிருக்கும்படி ஏற்கெனவே கட
வுளால் குறிக்கப்பட்டவர்களுக்கே காணப்
படும்படி செய்தார். அவர் இறந்தோரிட
மிருந்து உயிர்த்தெழுந்தபின் அவரோடு
உணவும் பானமும் அருந்தியவர்களாகிய
நாங்களே அந்தச் சாட்சிகள். 42 மேலும்,
உயிரோடிருப்போருக்கும் இறந்தோருக்கும்
தாமே கடவுளால் ஏற்படுத்தப்பட்ட
நீதிபதி என்று மக்களுக்கு அறிவிக்கவும்
அதை உறுதிப்படுத்தவும் அவர் எங்களுக்
குக் கட்டளையிட்டார். 43 அவர் யார்
என்பதற்கு இறைவாக்குரைப்போர் அனை
வரும் கூறியிருப்பதே சான்று; அதாவது
அவரிடம் நம்பிக்கை கொள்ளும் எவனும்
அவரது திருப்பெயரால் பாவமன்னிப்
பைப் பெறுவான் என்பது'' என்று
சொன்னார்.

### யூதரல்லாதார் தூய ஆவியைப் பெறுதல்

44 பேதுரு இவ்வாறு பேசிக்கொண்
டிருக்கையிலேயே, அவர் கூறியதைக் கேட்ட
அனைவரையும் தூய ஆவியானவர் இறங்கி
வந்து ஆட்கொண்டார். 45 அவர்கள் பல
மொழிகளில் பேசிக் கடவுளைப் போற்றிப்
புகழ்ந்தார்கள். 46 ஆண்டவரிடம் நம்
பிக்கை கொண்டிருந்த யூதர் சிலர் பேதுரு
வோடு வந்திருந்தனர். அவர்கள் அதைக்
கேட்டு, தூய ஆவியாகிய ஈவு யூதரல்லா
தார் மேலும் பொழியப்பட்டதைக் குறித்
துத் திகைப்புற்றார்கள். 47 அப்பொழுது
பேதுரு, ''இவர்கள் நம்மைப்போலத்
தூய ஆவியைப் பெற்றுவிட்டதால், இவர்
களுக்குத் தண்ணீரால் திருமுழுக்குக்
கொடுப்பதை யாரால் தடுக்க முடியும்?''
என்று சொல்லி, 48 இயேசுகிறிஸ்துவின்
திருப்பெயரால் அவர்களுக்குத் திருமுழுக்
குக் கொடுக்கக் கட்டளையிட்டார். பிறகு
அவர்கள் அவரைச் சிலநாள் அங்கேயே
தங்கும்படி கேட்டு நிறுத்திக்கொண்டார்கள்.

### பேதுரு தாம் செய்ததை எருசலேம் திருச்சபைக்கு அறிவித்தல்

11 யூதரல்லாதாரும் கடவுளின் வார்த்
தையை ஏற்றுக்கொண்டார்கள் என்
பது திருத்தூதுவருக்கும் யூதேயாவெங்கு
முள்ள சகோதரருக்கும் தெரியவந்தது.
2 பேதுரு எருசலேமுக்குத் திரும்பி வந்த
போது, விருத்தசேதனக் கட்சியார் அவ
ரோடு வாதாடி, 3 ''நீர் விருத்தசேதனம்
பெற்றிராத ஆள்களுடைய வீட்டுக்குப்
போய் அவர்களோடு சாப்பிட்டீரே''
என்று குறைகூறினர். 4 எனவே, பேதுரு
நடந்ததை எல்லாம் ஒழுங்காக அவர்
களுக்கு விவரித்துச் சொன்னார்.

5 ''நான் யோப்பா பட்டினத்தில்
ஜெபம் செய்துகொண்டிருக்கையில் பரவ
வசமாகி ஒரு காட்சி கண்டேன். பெரிய
கப்பற்பாயைப் போன்றதொரு விரிப்பு
அதன் நான்கு மூலைகளைக் கொண்டு
வானத்திலிருந்து இறக்கிவிடப்பட்டு என்
னிடம் வந்தது. 6 நான் அதை உற்றுக்
கவனித்தேன். அதில் விலங்குகள், தரை
யில் நடப்பன, ஊர்வன, வானில் பறப்
பன ஆகியவை இருப்பதைக் கண்டேன்.
7 அப்பொழுது 'பேதுருவே, எழுந்திரு,
இவற்றைக் கொன்று சாப்பிடு' என்று
என்னிடம் சொன்ன ஒரு குரலொலியைக்
கேட்டேன். 8 ஆனால் நான், 'வேண்
டவே வேண்டாம், ஆண்டவரே, தீட்டும்
தூய்மையற்றதுமான எதையும் ஒரு
போதுமே நான் என் வாய்க்குள் போட்ட
தில்லை' என்றேன். 9 'தூய்மையானவை
என்று கடவுள் சொன்னவற்றை நீ தீட்டு
என்று சொல்லாதே' என வானத்தினின்று
இரண்டாம் முறை ஒரு குரலொலி பிறந்
தது. 10 இப்படி மூன்று முறை நடந்தது.
பிறகு எல்லாம் வானத்துக்கே திருப்பி
எடுத்துக்கொள்ளப்பட்டன. 11 அதே
நேரத்தில் செசரியாவிலிருந்து என்னிடம்
அனுப்பப்பட்ட மூன்று மனிதர் நான்
இருந்த வீட்டின்முன் வந்து நின்றனர்.
12 யாதொரு தயக்கமுமின்றி அவர்
களோடு போகும்படி ஆவியானவர் எனக்
குச் சொன்னார். இந்த ஆறு சகோதரர்
களும் என்னோடு வந்தார்கள். நாங்கள்
கொர்நேலியுவின் வீட்டிற்குப் போய்ச்
சேர்ந்தோம். 13 அவன், தெய்வதூதன்
ஒருவன் தன் வீட்டில் வந்து நின்றதைக்
கண்டதாகவும், 'யோப்பாவுக்கு நீ ஆள்
அனுப்பிப் பேதுரு என்னும் மறுபெய
ருள்ள சீமோனை வரவழை. 14 அவன், நீயும்

உன் வீட்டார் அனைவரும் மீட்புப் பெறு
வதற்கேதுவான செய்தியை உனக்குச்
சொல்லுவான்' என்று தன்னிடம் கூறிய
தாகவும் எங்களிடம் அறிவித்தான். 15நான்
எழுந்து பேசிக்கொண்டிருந்தபோதே, தூய
ஆவியானவர் தொடக்கத்தில் நம்மீது
இறங்கியதுபோல அவர்கள்மீதும் இறங்
கினர். 16 அப்பொழுது, 'யோவான் தண்
ணீரினால் திருமுழுக்குக் கொடுத்தார். நீங்
களோ தூய ஆவியினால் திருமுழுக்குப்
பெறுவீர்கள்' என்று ஆண்டவர் சொன்ன
வார்த்தை என் நினைவிற்கு வந்தது.
17 ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவினிடம்
நாம் நம்பிக்கை கொண்டபோது,
கடவுள் நமக்கு அருளின அதே ஈவை
அவர்களுக்கும் அருளினாரானால், கடவுளை
எதிர்த்து நிற்க நான் யார்?'' என்று
சொல்லி முடித்தார். 18 இதைக் கேட்ட
போது, குறை கூறுவதை அவர்கள் நிறுத்தி
விட்டு, ''பிற இனத்தவரும் மெய்வாழ்
வைப் பெறும்படி கடவுள் அவர்களுக்கு
மனமாற்றத்தை அருளினர் என்பது தெரி
கிறது'' என்று சொல்லிக் கடவுளைப்
போற்றிப் புகழ்ந்தார்கள்.

### அந்தியோகியாவில் அமைந்த திருச்சபை

19 ஸ்தேவானின் மரணத்தையொட்டி
உண்டான துன்புறுத்துதலினால் சிதறுண்ட
வர்கள் பெனிக்கியா நாடு, சீப்புரு தீவு,
அந்தியோகியா பட்டணம் ஆகிய இடங்
கள்வரை சென்றார்கள். வழியில் அவர்கள்
யூதருக்கு மட்டுமே தெய்வ வார்த்தை
யைக் கூறினார்கள், வேறெவருக்கும் கூற
வில்லை. 20 அவர்களுள் சீப்புரு தீவினரும்
சிரேனே பட்டினத்தாருமாகிய சிலர் இருந்
தனர். அவர்கள் அந்தியோகியாவுக்குப்
போய், கிரேக்கரோடு பேசி, அவர்களுக்
கும் ஆண்டவராகிய இயேசுவைப் பற்றிய
நற்செய்தியை அறிவித்தார்கள். 21 ஆண்
டவரது கைவல்லபம் அவர்களோடிருந்
தது; திரளான மக்கள் ஆண்டவரிடம்
நம்பிக்கை கொண்டு அவர் பக்கம் திரும்
பினார்கள்.

22 அவர்களைப்பற்றிய இச்செய்தி எரு
சலேமிலுள்ள சபையாரின் காதுக்கு எட்
டிற்று. அவர்கள் பர்னபாவை அந்தியோ
கியாவுக்கு அனுப்பி வைத்தார்கள்.
23 அவர் ஒரு நல்ல மனிதர், தூய
ஆவியை நிறைவாகப் பெற்றவர், உறுதி
யான நம்பிக்கை உள்ளவர். அவர் போய்ச்
சேர்ந்து, கடவுளின் பேரருள் செயலாற்றி
வருவதைக் கண்டு மகிழ்ச்சியடைந்தார்.
ஆண்டவரின் உண்மையான அடியாராய்
மன உறுதியுடன் நிலைத்திருக்கும்படி
எல்லாருக்கும் அறிவுரை கூறினார். 24 மிகு
தியான மக்கள் ஆண்டவர் பக்கம் சேர்ந்
தார்கள்.

25 அதன்பின் பர்னபா சவுலைத் தேடிக்
கொண்டு தர்சு பட்டணத்துக்குப் போனார்.
அங்கே அவரைக் கண்டுபிடித்து, அந்தி
யோகியாவுக்கு அழைத்து வந்தார்.
26 அவர்கள் இருவரும் ஓராண்டுக்காலம்
அந்தச் சபையாரோடுகூடவே இருந்து திர
ளான மக்களுக்குப் போதனை செய்தார்
கள். சீடர்களுக்குக் கிறிஸ்தவர்கள் என்
கிற பெயர் முதன் முதலில் அந்தியோகி
யாவில் வழங்கலாயிற்று.

27 ஒரு நாள் இறைவாக்குரைப்பவர்
சிலர் எருசலேமிலிருந்து அந்தியோகியா
வுக்கு வந்தனர். 28 அவர்களுள் அகபு
என்னும் ஒருவர் எழுந்து நின்று, ஆவி
யானவர் மூலமாகத் தாம் அறிந்து
கொண்டபடி, உலகமெங்கும் கொடிய
பஞ்சம் உண்டாகப்போகிறதென்று முன்
னறிவித்தார். அவர் சொன்னபடியே பேர
ரசன் கிலவுதியுவின் காலத்தில் பஞ்சம்
உண்டாயிற்று. 29 அப்பொழுது, ஒவ்
வொரு சீடனும் தன்னாலியன்ற பண
உதவியை யூதேயாவில் வாழும் சகோதர
ருக்கு அனுப்ப வேண்டுமென்று அவர்கள்
தீர்மானித்தார்கள். 30 அப்படியே அவர்
கள் அதைச் சேகரித்துப் பர்னபா, சவுல்
என்பவர்கள் கையில் கொடுத்து, அங்குள்ள
திருச்சபை மூப்பருக்கு அனுப்பினார்கள்.

### திருத்தூதுவர் ஏரோதுவால் துன்புறுத்தப்படுதல்

12 ஏறக்குறைய அதே சமயத்தில்,
ஏரோது அரசன் திருச்சபையாருள்
சிலரைப் பிடித்துக் கொடுமைப்படுத்தினான்.
2 யோவானுடைய உடன்பிறந்தானாகிய
யாக்கோபைப் பிடித்து வாளால் கொன்
றான். 3 அது யூதருக்கு மகிழ்ச்சியளித்த
தைக் கண்டு அடுத்தபடியாகப் பேதுரு
வையும் கைதியாகப் பிடித்தான். புளிப்
பில்லாத அப்பப்பண்டிகைக் காலத்தில்
இது நடந்தது. 4 அவரைப் பிடித்துச்
சிறையில் அடைத்து வைத்து, அவரைக்
காவல் காக்கும் பொறுப்பை நன்நான்கு
படைவீரர் கொண்ட நான்கு காவலர்ப்
பிரிவினிடம் ஒப்புவித்தான்; *பஸ்காப்
பண்டிகைக்குப் பின் பொதுமக்கள் அறி
யும்படி அவரை விசாரணை செய்யலா
மென்று எண்ணியிருந்தான். 5 பேதுரு
இவ்வாறு காவலில் வைக்கப்பட்டிருக்கை
யில் திருச்சபையார் அவருக்காகக் கட
வுளிடம் ஆர்வத்துடன் மன்றாடி வந்தனர்.

* மத். 26:2 அடிக்குறிப்பைப் பார்க்க.
**11:16** திருத்தூது. 1:5. **11:17** திருத்தூது. 15:9 **11:19** திருத்தூது. 8:1—4; 21:4. **11:28** திருத்தூது. 21;10.
**11:30** கலா. 2:1. **12:4** யாத். **12:1—27**

### பேதுரு சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டது

6 ஏரோது அவரை விசாரணை செய்ய வேண்டுமென்றிருந்த நாளுக்கு முந்தின இரவில், பேதுரு இரண்டு சங்கிலிகளால் கட்டுண்டு, இரண்டு படைவீரருக்கிடையே தூங்கிக்கொண்டிருந்தார். காவற்காரரும் வாயிலுக்குமுன் சிறைச்சாலையைக் காத்துக்கொண்டிருந்தனர் 7 அப்பொழுது ஆண்டவரின் தூதன் ஒருவன் அங்கே வந்து நின்றான்; நின்றதுமே அறையினுள் ஒளி வீசிற்று. அவன் பேதுருவைத் தட்டி எழுப்பி, ''சீக்கிரம் எழுந்திரு'' என்றான். உடனே சங்கிலிகள் அவருடைய கைகளினின்று கழன்று விழுந்தன. 8 தூதன் அவரைப் பார்த்து, ''அரைக்கச்சையைக் கட்டு; மிதியடிகளைத் தரித்துக்கொள்'' என்றான். அவரும் அப்படியே செய்தார். பிறகு தூதன், ''உன் மேலாடையை அணிந்துகொண்டு என் பின்னே வா'' என்றான். பேதுரு அவனைப் பின்தொடர்ந்து சென்றார். 9 தூதன் மூலமாக நடைபெற்ற யாவும் உண்மையாகவே நடந்தவை என்பதை அவர் உணரவில்லை; ஏதோ ஒரு காட்சி காண்பதாக நினைத்துக்கொண்டார். 10 அவர்கள் முதற் காவலையும் இரண்டாம் காவலையும் கடந்து, நகரத்திற்குச் செல்லும் வாயிலின் இருப்புக் கதவருகில் வந்தபோது, அவர்களுக்கென்று அது தானாகவே திறக்க, அவர்கள் வெளியேறினார்கள். அவர்கள் ஒரு தெருக் கோடியை அடைந்ததும், தூதன் அவரை விட்டகன்றான். 11 பிறகுதான் பேதுருவுக்குத் தன்னுணர்வு வந்தது. அவர், ''ஆண்டவர் தம்முடைய தூதனை அனுப்பி என்னை ஏரோதுவின் கையினின்றும், எனக்கு நேரிடுமென்று யூதர் எதிர்பார்த்த தீங்கினின்றும் காப்பாற்றினார். இது உண்மையாகவே நடந்ததென்பது இப்போதுதான் எனக்குத் தெரியவருகிறது'' என்று சொல்லிக்கொண்டார்.

12 இதைத் தெரிந்துகொண்டதும் அவர் யோவானுடைய தாயாகிய மரியாளின் வீட்டுக்குப் போனார். இந்த யோவானுக்கு மாற்கு என்னும் மறுபெயருண்டு. அங்கே பலர் கூடி ஜெபம் செய்துகொண்டிருந்தனர். 13 அவர் வாயிற் கதவைத் தட்டினபோது, ரோதை என்னும் வேலைக்காரி, அது யாரெனப் பார்க்க வந்தாள்; 14 கூப்பிட்டவர் பேதுரு என்பதை அறிந்ததும், அவளுக்குண்டான மகிழ்ச்சியில் அவள் கதவைக்கூடத் திறக்காமல் உள்ளே ஓடிப்போய், ''பேதுரு வாயிலண்டை நிற்கிறார்'' என்று தெரிவித்தாள். 15 அதற்கு அவர்கள், ''நீ பிதற்றுகிறாய்'' என்றார்கள். ஆனால் அவளோ, ''இல்லை, உண்மைதான்'' என்று மிகவும் அழுத்தமாகக் கூறவே, அவர்கள், ''அது அவருடைய தூதனாயிருக்கும்'' என்றார்கள். 16 பேதுரு விடாமல் கதவைத் தட்டிக்கொண்டேயிருந்தார். அவர்கள் கதவைத் திறந்து அவரைக் கண்டபோது திகைத்துப்போனார்கள். 17 சந்தடி செய்யாதிருக்கும்படி அவர் அவர்களுக்குச் சைகை காட்டி, ஆண்டவர் எப்படித் தம்மைச் சிறையிலிருந்து வெளியே கொண்டுவந்தாரென்பதை விவரித்தபின், ''யாக்கோபுக்கும் மற்றச் சகோதரருக்கும் இதைத் தெரிவியுங்கள்'' என்று சொன்னார். பிறகு புறப்பட்டு வேறோரிடத்துக்குப் போய்விட்டார்.

18 பொழுதும் விடிந்தது; பேதுருவுக்கு என்ன ஆயிற்று என்பதுபற்றிப் படைவீரரிடையே பெரியதோர் அமளி உண்டாயிற்று. 19 ஏரோது அவரைத் தேடிப்பார்க்கச் செய்தான். அவரைக் கண்டுபிடியாமற் போனபோது, காவற்காரரை விசாரணை செய்து, அவர்களுக்கு மரணதண்டனை விதித்தான். பிறகு அவன் யூதேயாவை விட்டுச் செசரியாவுக்குப் போய் அங்கே தங்கியிருந்தான்.

### ஏரோதுவின் மரணம்

20 ஏரோது அரசன் தீரியர் மேலும் சீதோனியர் மேலும் பல நாள்களாக மிகவும் சினங்கொண்டிருந்தான். அவர்கள் அவனைக் காண்பதற்காக, ஒன்றுசேர்ந்து வந்தார்கள். அவர்கள் அரண்மனை மேற்பார்வையாளனான பிலாஸ்துவைத் தங்கள் வசப்படுத்திக்கொண்டு, அரசனோடு சமாதானம் செய்துகொள்ளப் பார்த்தார்கள்; ஏனெனில், அவர்கள் நாடு அந்த அரசனின் நாட்டிலிருந்து உணவுப்பொருள்களைப் பெற்றுவந்தது. 21 குறித்த நாளில் அவர்கள் ஒன்றுகூடியிருந்தபோது, ஏரோது அரச உடை உடுத்தி, மேடையில் அமர்ந்து ஓர் உரையாற்றினான். 22 அப்பொழுது பொதுமக்கள், ''இது ஒரு மனிதன் பேசும் பேச்சன்று, தெய்வத்தின் பேச்சே'' என்று ஆரவாரம் செய்தார்கள். 23 அவன் கடவுளுக்கு மாட்சிமை அளிக்காததால், ஆண்டவரின் தூதன் உடனே அவனை அடித்து வீழ்த்தினான். அவன் புழுப்புழுத்துச் செத்தான்.

24 ஆண்டவருடைய வார்த்தை மேன்மேலும் பரவிப் பெருகிக்கொண்டேவந்தது.

25 பர்னபாவும் சவுலும் தங்கள் பணியைச் செய்து முடித்தபின், மாற்கு என்னும் மறுபெயருள்ள யோவானைக் கூட்டிக்கொண்டு, எருசேலேமிலிருந்து திரும்பி வந்துவிட்டார்கள்.

**12:24 திருத்தூது. 6:7.**

### அருட்செய்திப் பணிக்கெனப் பர்னபாவும் சவுலும் அனுப்பப்படுதல்

**13** அந்தியோகியாவிலிருந்த திருச்சபையில் இறைவாக்கு உரைப்பவர்களும் போதகர்களும் இருந்தார்கள். அவர்கள் பர்னபா, நீகர் என்னும் சிமியோன், சிரேனே ஊரான் லூகியு, சிற்றரசன் ஏரோதுவுடன் வளர்ந்த மனயீன், சவுல் என்பவர்களே. 2 அவர்கள் நோன்பிருந்து ஆண்டவரைச் சேவித்துவந்தபோது, தூய ஆவியானவர், ''பர்னபாவையும் சவுலேயும் நான் எந்த வேலேக்கென்று அழைத்திருக்கிறேனே அந்த வேலேயைச் செய்வதற்காக அவர்களை எனக்கென்றே தனிப்படுத்துங்கள்'' என்று சொன்னர். 3 அவர்கள் நோன்பிருந்து ஜெபம் செய்து, அவர்கள்மீது கைகளை வைத்து அவர்களை அனுப்பிவைத்தார்கள்.

### சீப்புரு தீவில்

4 இவ்வாறு பர்னபாவும் சவுலும் தூய ஆவியானவரால் அனுப்பப்பட்டார்கள். அவர்கள் செலுக்கியா பட்டினத்துக்குச் சென்று, அங்கிருந்து சீப்புரு தீவுக்குக் கப்பலேறிப் போனர்கள். 5 அவர்கள் சாலமி பட்டினத்தை அடைந்து, யூதரின் தொழுகைக்கூடங்களில் கடவுளின் வார்த்தையை அறிவித்துவந்தார்கள். அவர்கள் யோவானை உதவிக்கு வைத்துக்கொண்டார்கள். 6 அங்கிருந்து அவர்கள் தீவு முழுவதுங் கடந்து பாப்போ பட்டினம் வரைக்கும் போனர்கள்; அங்கே மந்திரவாதியான பர்யேசு என்னும் ஒரு யூதனைக் கண்டார்கள். 7 அவன் பொய்யாக இறைவாக்குரைக்கும் ஒருவன். அவன் அத்தீவின் ஆட்சித் தலைவனன செர்கியு பவுலின் பரிவாரத்தைச் சேர்ந்தவன். அறிவுத் திறமுடைய அந்தத் தலைவன் கடவுளின் வார்த்தையைக் கேட்க விரும்பிப் பர்னபாவையும் சவுலையும் தன்னிடம் வரவழைத்து, கடவுளின் வார்த்தையைச் சொல்லும்படி கேட்டான். 8 ஆனல் எலிமா என்னும் பெயரையுமுடைய அந்த மந்திரவாதி அவர்களை எதிர்த்துப் பேசி, அந்தத் தலைவன் ஆண்டவரிடம் நம்பிக்கை கொள்ளாதபடி அவன் கவனத்தைத் தடுக்கப்பார்த்தான். 9 அப்பொழுது பவுல் என்னும் பெயரையுமுடைய சவுலுக்குத் தூய ஆவி நிறைவாக அருளப்பட்டது. அவர் எலிமாவை உன்னிப்பாகப் பார்த்து, 10 ''பிசாசின் மகனே, நீ எல்லா வகைக் கபடமும் வஞ்சகமும் நிறைந்தவன். நீதியான எதையும் எதிர்ப்பதே உன் வேலை. ஆண்டவரின் நேர்மையான நெறியைக் கோணலாக்குவதை நிறுத்த மாட்டாயா? 11 இதோ பார், ஆண்டவரின் சிற்றக்கை உன்னைத் தாக்கப்போகிறது. அதனல் நீ குருடனய்ப் போய்க் குறிக்கப்பட்ட காலம் வரையில் கதிரவன் ஒளியைக் காண மாட்டாய்'' என்று சொன்னர். உடனே அவனுக்குப் பார்வை மங்கிற்று, கண் இருண்டது. அவன் அங்குமிங்கும் தடவி, தனக்கு வழிகாட்ட ஓர் ஆளைத் தேடினன். 12 நடந்ததை அத்தீவின் ஆட்சித்தலைவன் கண்டபோது, அவன் ஆண்டவரிடம் நம்பிக்கை கொண்டவனனன்; ஆண்டவரைப்பற்றி அவன் கற்றுக்கொண்டது அவனை வியப்படையச் செய்தது.

### பிசீதியா நாட்டு அந்தியோகியாவில்

13 பிறகு பவுலும் அவரைச் சேர்ந்தவர்களும் பாப்போவில் கப்பலேறி, பம்பிலியா நாட்டிலுள்ள பெர்கே பட்டினம் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே யோவான் அவர்களை விட்டுப் பிரிந்து எருசலேமுக்குத் திரும்பினர். 14 மற்ற இருவரும் பெர்கேயிலிருந்து புறப்பட்டுப்போய்ப் பிசீதியா நாட்டு அந்தியோகியாவை அடைந்தார்கள். ஓய்வுநாள் வந்தபோது, அவர்கள் தொழுகைக்கூடத்தில் போய் உட்கார்ந்தார்கள். 15 நீதிச்சட்டத்திலிருந்தும் இறைவாக்குரைப்போரின் நூல்களிலிருந்தும் படித்து முடித்தபின், தொழுகைக்கூடத் தலைவர்கள் அவர்களிடம், ''சகோதரரே, மக்களுக்குப் போதனையாகச் சொல்வதற்கு ஏதேனும் இருந்தால் சொல்லுங்கள்'' என்று ஆள் அனுப்பிக் கேட்டுக் கொண்டார்கள்.

### பவுலின் உரை

16 அப்பொழுது பவுல் எழுந்து கையை உயர்த்திப் பேசத் தொடங்கினர்: ''இஸ்ரவேல் மக்களே, மெய்க்கடவுளை வழிபடுகிற ஏனைய மக்களே, கேளுங்கள். 17 இஸ்ரவேலராகிய இந்த மக்களின் கடவுள் நம்முடைய மூதாதையரை தேர்ந்துகொண்டார். எகிப்து நாட்டில் இந்த மக்கள் தங்கியிருந்தபோது, அவர் அவர்களை ஒரு மாபெரும் இனமாக்கி, தம்முடைய கைவல்லபத்தினல் அவர்களை அந்த நாட்டை விட்டு வெளியே அழைத்துக்கொண்டு வந்தார். 18 நாற்பது ஆண்டுகள் பாலை நிலத்தில் அவர்கள் நடந்துகொண்ட முறையை அவர் பொறுமையுடன் சகித்தார். 19 பிறகு கானன் நாட்டில் ஏழு இனத்தினரை அழித்து, அவர்கள்* நிலத்தை நானூற்றைம்பது ஆண்டுகளுக்கு உரிமைச் சொத்தாக அனுபவிக்கும்படி

* 'அவர்களை ஆதரித்து வந்தார்' என்பதும் பாடம்.

**13:10** யோ. *8:44.* **13:12** மத். *22:33;* லூக். *4:32.* **13:17** யாத். *1:7; 12:51.* **13:18** எண். *14:34;* உபா. *1:31.* **13:19** உபா. *7:1;* யோசுவா *14:1.*

இவர்களுக்குக் கொடுத்தார். 20 அதன்பின்
இறைவாக்குரைப்பவரான சாமுவேலின்
காலம் வரையிலும் அவர்களுக்கு நீதிபதி
களை அவ்வப்போது ஏற்படுத்திக் கொடுத்
தார். 21 பிறகு அவர்கள் தங்களுக்கு ஓர்
அரசன் வேண்டுமென்றார்கள். கடவுள்
பென்யமின் குலத்தானும், கீசினு
டைய மகனுமான சவுலை அவர்களுக்கு
அரசனாக ஏற்படுத்திக் கொடுத்தார்;
அவர், நாற்பது ஆண்டுகள் ஆட்சிசெலுத்
தினார். 22 பிற்பாடு அவரை நீக்கிவிட்டுத்
தாவீதை அவர்களுக்கு அரசனாக ஏற்
படுத்தினார். அவரைப்பற்றி அவர், 'ஈசா
யின் மகன் தாவீதை நான் எனக்கு உகந்
தவனாயிருக்கக் கண்டேன். அவன் எனக்கு
விருப்பமான யாவற்றையும் செய்கிறவன்'
என்று பாராட்டிப் பேசினார். 23 கடவுள்
தம் வாக்குறுதியின்படி அவர் மரபிலி
ருந்தே இஸ்ரவேலருக்கு ஒரு மீட்பரை
வரச்செய்தார். அவரே இயேசு. 24 அவ
ருடைய வருகைக்குமுன் யோவான்,
'மனமாற்றமடைந்து திருமுழுக்குப் பெறுங்
கள்' என்று இஸ்ரவேல் மக்கள் அனை
வருக்கும் கூறிவந்தார். 25 யோவான்
தம் வாழ்க்கை ஓட்டத்தை முடிக்கவிருக்
கையில், 'நீங்கள் என்னை யாரென்று
நினைக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரி
யும். நான் அவரல்ல. எனக்குப் பின்னால்
ஒருவர் வருகிறார்; அவருடைய மிதியடி
களை அவிழ்ப்பதற்கும் நான் தகுதியற்ற
வன்' என்றார். 26 சகோதரரே, ஆபிர
காம் மரபில் வந்த மக்களே, கடவுளுக்கு
அஞ்சி நடக்கிற ஏனைய மக்களே, நமக்குத்
தான் இந்த மீட்புச் செய்தி அனுப்பப்
பட்டிருக்கிறது. 27 எருசலேமில் வாழ்ந்து
வந்தவர்களும் அவர்களுடைய அதிகாரி
களுமோ அவரை யாரென்று அறிந்து
கொள்ளவில்லை. ஓய்வுநாள்தோறும் படிக்
கப்படும் இறைவாக்குரைப்போரின் வார்த்
தைகளைப் புரிந்துகொள்ளவுமில்லை. ஆயி
னும், அவர்கள் அவருக்குக் குற்றத்தீர்ப்பு
அளித்ததன் மூலம் அந்த வார்த்தைகள்
நிறைவேறின. 28 மரணத் தீர்ப்புக்கேற்ற
குற்றமொன்றும் அவரிடம் காணாதிருந்
தும், அவரைக் கொன்றுவிடும்படி அவர்கள்
பிலாத்துவைக் கேட்டுக்கொண்டார்கள்.
29 அவர்கள் அவருக்குச் செய்தவை
மூலமாக அவரைப்பற்றி எழுதியுள்ள
யாவும் நிறைவேறின. அவரைச் சிலுவை
மரத்திலிருந்து இறக்கிக் கல்லறையில்
வைத்தார்கள்; 30 ஆனால் கடவுள் அவரை
இறந்தோரிடமிருந்து உயிரோடெழுப்பினார்.
31 அவர் தம்முடன் கலிலேயாவிலிருந்து
எருசலேமுக்கு வந்தவர்களுக்குப் பலநாள்
காட்சியளித்தார்; அவர்களே இப்போது
மக்கள்முன் அவருடைய சாட்சிகளாய்
விளங்குகிறார்கள். 32 கடவுள் இயேசுவை
உயிரோடெழுப்பியதன் மூலம், அவர் நம்
மூதாதையரிடம் கூறி அளித்த வாக்குறுதி
யின் நிறைவேற்றத்தை அவர்களுடைய
பிள்ளைகளாகிய நாம் காணும்படி அருள்
புரிந்தார் என்கிற நற்செய்தியை உங்க
ளுக்கு அறிவிக்கிறோம். 33 இரண்டாம் சங்
கீதத்திலும் இவ்வாறே எழுதியிருக்கிறது:

'நீர் என் மைந்தர்,
இன்று நான் உம்மைப் பெற்றெடுத்தேன்.'

34 இனி அவர் ஒருபோதும் அழிவுக்குட்
படாதபடி அவரை இறந்தோரிடமிருந்து
உயிரோடெழுப்பினார் என்பதைப்பற்றி
அவர்,

'தாவீதுக்கு நான் வாக்களித்த தூய்மை
யும் உறுதியுமான ஆசீர்வாதங்களை
உங்களுக்கும் அருளுவேன்'

என்று உரைத்தார். 35 அது காரணமாகவே,

'உம்முடைய அடியானை
அழிந்துபோகும்படி விடமாட்டீர்'

என்று வேறோரிடத்திலும் சொல்லியிருக்
கிறது. 36 தாவீது தம் காலத்தாரி
டையே கடவுளின் திருவுளம் நிறைவேறும்
வண்ணம் உழைத்தார்; அவர் துஞ்சின
பின், தம் மூதாதையர் அருகில் அடக்கம்
செய்யப்பட்டார். இவ்வாறு அவர்
அழிந்துபோனார். 37 ஆனால் கடவுளால் உயி
ரோடெழுப்பப்பட்டவர் அழிந்துபோக
வில்லை. 38 சகோதரரே, இது உங்களுக்
குத் தெரிந்திருக்கட்டும். இவர் மூலமா
கவே உங்களுக்குப் பாவமன்னிப்பு உண்டு
என்று அறிவிக்கப்படுகிறது. 39 மோசே
யின் நீதிச்சட்டம் உங்களை எந்தக் குற்றங்
களினின்று விடுவிக்க இயலாதிருந்ததோ
அந்தக் குற்றங்களினின்று இவரிடம்
நம்பிக்கை கொள்ளுகிற எவனையும் இவர்
விடுவிப்பார். 40 ஆகவே,

'ஏளனம் செய்வோரே, பாருங்கள்;
வியப்புறுங்கள், அழிந்துபோங்கள்!
உங்கள் காலத்தில் நான் ஒரு செயலைச்
செய்வேன்;
அதை நீங்கள் நம்ப மாட்டீர்கள்;
ஒருவன் அதை உங்களுக்கு விவரித்
தாலும்,
நம்பவே மாட்டீர்கள்'

என்று, 41 இறைவாக்குரைப்போரின் நூல்
தொகுதியில் எழுதியிருப்பது உங்களுக்கு
நேரிடாதபடி பார்த்துக்கொள்ளுங்கள்''
என்று சொல்லிமுடித்தார்.

**13:20** நீதிபதி. 2:16; 1 சாமு. 3:20. **13:21** 1 சாமு. 8:5; 10:21. **13:22** 1 சாமு. 13:14; 16:12; சங். 89:20. **13:24** மாற். 1:4; லூக். 3:3. **13:25** மத். 3:11; மாற். 1:7; லூக். 3:10; யோ. 1:20, 27. **13:28** மத். 27:22, 23; மாற். 15:13, 14; லூக். 23:21—23; யோ. 19:15; **13:29** மத். 27;57—61; மாற். 15:42—47; லூக். 23:50—56; யோ. 19:38—42. **13:31** திருத்தூது. 1:2. **13:33** சங். 2:7. **13:34** ஏசா 55:3. **13:35** சங். 16:10. **13:40** ஆப. 1:5

42 அவர்கள் வெளியே செல்கையில்,
அடுத்த ஓய்வுநாளிலும் வந்து இந்தக்
காரியங்களைப்பற்றியே தங்களிடம் பேசும்
படி மக்கள் அவர்களைக் கேட்டுக்கொண்
டார்கள். 43 சபை கலைந்தபின், யூதருள்
பலரும், யூத மார்க்கத்தைத் தழுவி
யிருந்தவர்களுள் பலரும் பவுலையும் பர்ன
பாவையும் பின்தொடர்ந்து சென்றனர்.
பவுலும் பர்னபாவும் அவர்களோடு பேசி,
கடவுளின் அருளில் நிலைத்திருக்கும்படி
அவர்களுக்கு ஊக்கமூட்டினார்கள். 44 அடுத்த
ஓய்வுநாளில் ஏறத்தாழ ஊரார் அனை
வரும் கடவுளின் வார்த்தையைக் கேட்
பதற்கு வந்து கூடினர். 45 யூதர் அந்தக்
கூட்டத்தைக் கண்டபோது, அவர்கள்
உள்ளத்தில் பொறாமை பொங்கியெழுந்தது.
அவர்கள் பவுல் சொன்னதை
எதிர்த்து வாதாடினார்கள்; அவரை இகழ்ந்
தார்கள். 46 ஆனால் பவுலும் பர்னபாவும்
துணிவுடன் அவர்களோடு பேசினார்கள்:
''நாங்கள் செய்ய வேண்டியபடியே, முத
லில் உங்களுக்குத்தான் கடவுளின் வார்த்
தையைச் சொன்னோம். அதை நீங்கள்
வேண்டாமெனத் தள்ளி, உங்களை நீங்
களே என்றுமுள்ள மெய்வாழ்வடையத்
தகுதியற்றவர்களெனக் கருதுகிறபடியால்,
இப்போதே உங்களை விட்டு யூதரல்லாதா
ரிடம் செல்கிறோம். 47 ஏனெனில்,

'உலகின் கடைசி எல்லைவரைக்கும்
மீட்பு அருளுகிறவராய் இருக்கும்படி
உம்மை யூதரல்லாதாருக்கு
ஒளியாக ஏற்படுத்தினேன்'

என்று ஆண்டவர் சொல்லி இவ்வாறு
செய்ய எங்களுக்குக் கட்டளையிட்டார்''
என்று சொன்னார்கள்.

48 அதைக் கேட்டபோது யூதரல்லா
தார் மகிழ்ச்சியடைந்து ஆண்டவரின்
வார்த்தையைப் புகழ்ந்தனர். என்றுமுள்ள
மெய்வாழ்வை அடைவதற்கெனக் குறிக்கப்
பட்டவர்கள் அனைவரும் அவரிடம் நம்
பிக்கை கொண்டனர். 49 ஆண்டவரின்
வார்த்தை நாடெங்கும் பரவிற்று.
50 ஆனால் யூதரோ பிற இனத்தவருள்
மெய்க்கடவுளை வழிபடுகிற சீமாட்டிகளை
யும் பட்டணத்துப் பெரியோரையும்
தூண்டிவிட்டு அவர்களைக் கொண்டு
பவுலையும் பர்னபாவையும் துன்புறுத்தித்
தங்கள் நாட்டிலிருந்து துரத்திவிட்டார்
கள். 51 அவர்கள் தங்கள் கால்களில்
ஒட்டியிருந்த தூசியை அவர்களுக்கு எதி
ராக உதறிவிட்டு, இக்கோனியாவுக்குப்
போனார்கள். 52 சீடராகியிருந்தவர்கள்
தூய ஆவியையும் அதன் மகிழ்ச்சியையும்
நிறைவாகப் பெற்று வாழ்ந்து வந்தார்கள்.

## இக்கோனியாவில்

14 அவர்கள் இக்கோனியாவிலும் அவ்
வாறே யூதருடைய தொழுகைக்
கூடத்திற்குச் சென்று பேசினதன் விளை
வாக, யூதரும் கிரேக்கருமடங்கிய ஒரு
பெருங்கூட்டத்தினர் ஆண்டவரிடம் நம்
பிக்கை கொண்டனர். 2 ஆனால், அவரி
டம் நம்பிக்கை கொள்ளாத யூதர்கள்
அங்கிருந்த யூதரல்லாதாரைத் தூண்டி
விட்டு, அவர்கள் மனத்தில் சகோதரர்
மீது பகைமை உண்டாகும்படி செய்தார்
கள். 3 அந்தத் திருத்தூதுவர்கள் அங்கே
பலநாள் தங்கி, ஆண்டவரிடம் கொண்
டிருந்த நம்பிக்கையால் துணிவுடன் பேசி
வந்தார்கள்; ஆண்டவரும் அவர்கள்
கையால் அரிய செயல்களும் அற்புதங்
களும் நடைபெறும்படி செய்து, தமது
அருட்செய்திக்கு உறுதியளித்துவந்தார்.
4 ஊர் மக்களோ யூதர் பக்கம் சிலரும்
திருத்தூதுவர் பக்கம் சிலருமாகப் பிரிந்
திருந்தார்கள். 5 யூதரல்லாதார் யூதரோடு
சேர்ந்து, அதிகாரிகளின் ஆதரவையும்
பெற்று, அவர்களைக் கொடுமைப்படுத்தவும்
கல்லாலடிக்கவும் திட்டமிட்டனர்.
6 இதை அவர்கள் தெரிந்துகொண்டு
லிக்கவோனியா நாட்டு ஊர்களாகிய லீஸ்தி
ராவுக்கும் தெர்பைக்கும், அவற்றின் சுற்றுப்
புறங்களுக்கும் தப்பியோடி, 7 அந்த இடங்
களில் அருட்செய்தியை அறிவித்துவந்
தார்கள்.

## லீஸ்திராவில்

8 லீஸ்திரா ஊரில் கால் வழங்காத
ஒருவன் ஓரிடத்தில் உட்கார்ந்துகொண்
டிருந்தான். அவன் பிறப்பிலேயே முடவன்,
ஒருபோதும் நடந்தறியாதவன். 9 அவன்
பவுல் பேசியதைக் கேட்டுக்கொண்டிருந்
தான். பவுல் அவனைக் கூர்ந்து கவனித்து,
குணமடைவதற்கேதுவான நம்பிக்கை அவ
னிடம் உண்டென்பதைக் கண்டு, 10 ''எழுந்
திரு, காலூன்றி நேராக நில்'' என்று
உரத்த குரலில் சொன்னார். அவனும்
குதித்தெழுந்து நடக்கத் தொடங்கினான்.
11 பவுல் செய்ததை மக்கள் கண்டு லிக்க
வோனிய மொழியில், ''தெய்வங்களே
மனித உருவமெடுத்து நம்மிடம் இறங்கி
வந்திருக்கிறார்கள்'' என்று கூச்சலிட்டார்
கள். 12 அவர்கள் பர்னபாவைத் தேயுஸ்
தெய்வம் என்றார்கள்; பவுல் முக்கிய பேச்
சாளராயிருந்ததால், அவரை ஹெர்மேஸ்
தெய்வம் என்றார்கள். 13 அதுவுமன்றி,
நகரவாயிலுக்கு அடுத்தாற்போல் இருந்த
தேயுஸ் கோவிலின் பூசாரி எருதுகளையும்
பூமாலைகளையும் அந்த வாயிலுக்குக்
கொண்டு வந்து, மக்களுடன் சேர்ந்து

**13:47** ஏசா. *42:6.* **13:51** இலே. *12:3.* **14:3** *1* தெச. *2:14;* மாற். *16:17—20.* **14:5** *2* தீமோ. *3:11.*

அவர்களுக்குப் பலியிடவும் எண்ணினான்.
14 இது பர்னபா, பவுல் ஆகிய திருத்
தூதுவர் காதுக்கு எட்டினபோது, அவர்
கள் தங்கள் ஆடைகளைக் கிழித்துக்கொண்டு
கூட்டத்திற்குள் பாய்ந்து சென்று,
15 ''மக்களே, ஏன் இப்படிச் செய்கிறீர்
கள்? நாங்களும் உங்களைப் போன்றவர்
களே, வெறும் மனிதர்களே. நீங்கள்
வீணான இந்தக் காரியங்களை விட்டுவிட்டு
விண்ணையும் மண்ணையும் கடல்களையும்
அவற்றிலுள்ள யாவற்றையும் படைத்த
என்றுமுள்ள கடவுள் பக்கம் திரும்ப
வேண்டுமென்றே நாங்கள் அருட்செய்தி
யைக் கூறிவருகிறோம். 16 கடந்த காலத்தில்
அவர் எல்லா இனத்தவரையும் அவரவர்
வழிகளில் நடக்கும்படி விட்டிருந்தார்.
17 ஆயினும், அவர் உங்களுக்கு அருளிய
நன்மைகளில் தம்மைப்பற்றிய சான்று
கள் தந்திருக்கிறார். எப்படியெனில்,
வானத்திலிருந்து மழையையும் காலா
காலத்தில் நற்பலனையும் உங்களுக்குக்
கொடுத்திருக்கிறார். உங்களுக்கு உண
வளித்து உங்கள் உள்ளத்தில் மகிழ்ச்சி
பொங்கும்படி செய்திருக்கிறார்'' என்று
சொன்னார்கள். 18 இப்படிச் சொல்லித்
தங்களுக்குப் பலியிடாதபடி மக்களை ஒரு
வாறு தடுத்துவிட்டார்கள்.

19 பிறகு அந்தியோகியாவிலும் இக்
கோனியாவிலுமிருந்து யூதர்கள் வந்தார்
கள். அவர்கள் பொதுமக்களைத் தங்கள்
வசப்படுத்திக்கொண்டு, பவுலைக் கல்லா
லடித்தார்கள். அவர் இறந்துபோனாரென்று
எண்ணி, அவரை இழுத்துக்கொண்டுபோய்
ஊருக்கு வெளியே போட்டுவிட்டார்கள்.
20 சீடர் வந்து அவரைச் சூழ்ந்து நிற்
கையில், அவர் எழுந்து ஊருக்குள் சென்
றார். மறுநாள் அவர் பர்னபாவுடன் தெர்
பைக்குப் புறப்பட்டுப் போனார்.

### சீரியாவிலுள்ள அந்தியோகியாவுக்கு திரும்புதல்

21 அந்த ஊரில் அவர்கள் அருட்
செய்தியை அறிவித்துப் பலரைச் சீட
ராக்கினார்கள்; பிறகு லீஸ்திரா, இக்
கோனியா, அந்தியோகியா என்ற ஊர்
களுக்குத் திரும்பிப்போய், 22 அங்கிருந்த
சீடரின் உள்ளத்திற்கு உறுதியளித்து,
அவர்கள் ஆண்டவரைப் பற்றும் நம்பிக்
கையில் நிலைத்துநிற்க வேண்டுமென்று
அறிவுரை கூறினார்கள். ''கடவுளின் ஆட்
சிக்குள் செல்லும் வழியில் நமக்குப் பல
துன்பங்கள் நேரிட்டே தீரும்'' என்றும்
கூறினார்கள். 23 அவர்கள் நோன்பு இருந்து
ஜெபம் செய்து, சீடருக்கென ஒவ்வொரு
திருச்சபையிலும் மூப்பன்மார்களை நிய
மித்து அவர்களைத் தாங்கள் நம்பிக்கைவைத்
திருந்த ஆண்டவரின் அருட்பாலிப்புக்கு
ஒப்படைத்தார்கள். 24 பிறகு பிசீதியா
நாடு வழியாகச் சென்று, பம்பி
லியா நாட்டை அடைந்தார்கள். 25 அங்
குள்ள பெர்கேயில் தெய்வ வார்த்தையை
எடுத்துக் கூறினபின், அத்தாலியா என்
னும் ஊருக்குப் போய், 26 அங்கிருந்து
கப்பலேறி அந்தியோகியாவுக்கு வந்து
சேர்ந்தார்கள். அவர்கள் அதுவரையிலும்
நிறைவேற்றி முடித்த வேலைக்கென்று
கடவுளின் அருட்பாலிப்புக்குத் தொடக்கத்
தில் ஒப்படைக்கப்பட்ட இடமும் அதுவே.
27 அவர்கள் அங்கே சேர்ந்தபின் சபை
யாரைக் கூட்டி, கடவுள் தங்களுட
னிருந்து செய்த யாவற்றையும், யூதரல்
லாதாரும் ஆண்டவரை நம்புவதற்கு
அவர் எவ்வாறு வழி திறந்தார் என்ப
தையும் அவர்களுக்குத் தெரிவித்தார்கள்.
28 அவர்கள் அங்கே சீடரோடு நீண்ட
காலம் தங்கியிருந்தார்கள்.

### எருசலேமில் கூடின திருச்சபை மன்றம்

15 யூதேயாவிலிருந்து சிலர் அந்தியோகி
யாவுக்கு வந்து, ''மோசேயின் முறை
மைப்படி நீங்கள் விருத்தசேதனம் செய்து
கொள்ளாவிட்டால் உங்களால் மீட்படைய
இயலாது'' என்று சகோதரருக்குப்போதிக்
கத் தொடங்கினர். 2 அதனால் அவர்
களுக்கும் பவுல், பர்னபா என்பவர்களுக்கு
மிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டது.
கடுமையான வாக்குவாதமும் நடந்தது.
இந்த விவாதம்பற்றிக் கலந்து பேசப்
பவுலும் பர்னபாவும் அங்கிருந்த வேறு
சிலரும் எருசலேமிலுள்ள திருத்தூதுவர்,
மூப்பர் ஆகியோரிடம் போக வேண்டு
மென்று தீர்மானித்தனர். 3 அங்கிருந்த
சபையாரும் அவர்களை வழியனுப்பி வைத்
தனர். அவர்கள் பெனிக்கியா சமாரியா
நாடுகள் வழியாக யூதரல்லாதார் ஆண்ட
வர் பக்கம் திரும்பியுள்ள செய்தியை அறி
வித்துக்கொண்டே போனார்கள். அச்
செய்தி சகோதரர் எல்லாருக்கும் மிகுந்த
மகிழ்ச்சியளித்தது. 4 அவர்கள் எருசலேம்
வந்து சேர்ந்தபோது, அங்கிருந்த சபை
யாரும் திருத்தூதுவரும் மூப்பர்களும்
அவர்களை வரவேற்றார்கள். அப்பொழுது
அவர்கள் கடவுள் தங்களுடனிருந்து செய்த
யாவற்றையும் அறிவித்தார்கள். 5 அதைக்
கேட்ட பரிசேயக் கட்சியினருள் ஆண்ட
வரிடம் நம்பிக்கை கொண்டிருந்த சிலர்
எழுந்து நின்று, ''அவர்கள் விருத்தசேதனம்

**14:16** *சங். 147:20.* **14:17** *எரே. 5:24.* **14:19** *2 கொரி. 11:25; 2 தீமோ. 3:11.* **15:1** *இலே. 12:3.*

செய்துகொள்ள வேண்டும்; மோசேயின் நீதிச்சட்டத்தைக் கடைப்பிடிக்கும்படி அவர்களுக்குக் கட்டளையிடவும் வேண்டும்'' என்று கூறினர். 6 திருத்தூதுவர்களும் மூப்பர்களும் இந்தக் காரியத்தைக் குறித்துக் கலந்து பேசுவதற்காக ஒன்று கூடினர்கள். 7 நெடுநேரமாக வாக்குவாதம் நடந்தபின், பேதுரு எழுந்து அவர்களைப் பார்த்து, ''சகோதரரே, யூதரல்லாதார் அருட்செய்தியை என்மூலம் கேட்டு அதில் நம்பிக்கை வைக்கும்படி கடவுள் பல நாள்களுக்கு முன்பே உங்களுள் ஒருவனுகிய என்னைத் தேர்ந்துகொண்டார்; இது உங்களுக்குத் தெரிந்ததே. 8 உள்ளங்களை அறிகிற கடவுள் நமக்குத் தூய ஆவியை அருளியது போலவே அவர்களுக்கும் அருளி, தாம் அவர்களை ஏற்றுக்கொண்டதைத் தெரிவித்திருக்கிறர். 9 அவர்களுடைய நம்பிக்கையின் மூலம் அவர்கள் இதயத்தையும் அவர் தூய்மையாக்கினர்; நம்மையும் அவர்களையும் அவர் எந்த வேறுபாடுமின்றி நடத்தியிருக்கிறர். 10 இப்படியிருக்க நாமும் நம்முடைய மூதாதையரும் சுமக்க இயலாதிருந்த ஒரு நுகத்தை இந்தச் சீடருடைய கழுத்தில் ஏன் சுமத்துகிறீர்கள்? இப்படி ஏன் கடவுளைப் பரிசோதிக்கிறீர்கள்? 11 நமக்கு எப்படி ஆண்டவராகிய இயேசுவின் அருளால் மீட்பு உண்டோ, அப்படியே அவர்களுக்கும் உண்டு; இதுவே நமது நம்பிக்கை'' என்று சொன்னர்.

12 இதைக் கேட்டதும், கூடியிருந்தவர்கள் எல்லாரும் அமைதியாகிவிட்டனர். அவர்கள் பர்னபாவும் பவுலும் கடவுள் தங்களைக்கொண்டு யூதரல்லாதாரிடையே செய்த அரிய செயல்கள் அற்புதங்கள் யாவற்றையும் விவரித்துச் சொன்னதைக் கேட்டார்கள். 13 அவர்கள் சொல்லி முடித்ததும் யாக்கோபு பேசத் தொடங்கினர்; 14 ''சகோதரரே, நான் சொல்லுவதைக் கேளுங்கள்: கடவுள் எப்படி முதல் முறையாகப் பிற இனத்தவரிடையேயிருந்து தமக்கென ஒரு சமுதாயத்தைத் தேர்ந்துகொண்டார் என்பதைச் சிமியோன் உங்களுக்கு இப்போது விவரித்தார். 15 இறைவாக்குரைப்போரின் வார்த்தைகளும் இதற்கு ஒத்திருக்கின்றன:

16 'இவற்றிற்குப்பின் நான் திரும்பிவந்து,
விழுந்து கிடக்கும் தாவீதின் அரசாகிய வீட்டை
மறுபடியும் கட்டியெழுப்புவேன்.
அதில் இடிக்கப்பட்ட பகுதிகளை மறுபடியும் கட்டியெழுப்பி,
அதை நேராய் நிறுத்துவேன்.
17 மற்ற மனிதரும், என் பெயர் பொறிக்கப்பெற்றிருக்கும் பிற இனத்தவர் யாவரும்,
ஆண்டவரை நாடி அவரிடம் வந்து சேர்வதற்காக இப்படிச் செய்வேன்
என்று ஆண்டவர் சொல்லுகிறர்;
18 அவர் இதை நீண்ட காலத்திற்கு முன்பே வெளிப்படுத்திவிட்டார்.'

என்று எழுதியிருக்கிறது. 19 ஆகையால் கடவுள் பக்கம் திரும்புகிற பிற இனத்தவருக்கு வீணுகத் தொல்லை கொடுக்கக் கூடாது. 20 ஆனுலும், அவர்கள் தெய்வச் சிலைகளுக்குப் படைக்கப்பட்ட பொருள்கள், கழுத்து நெரிக்கப்பட்டுச் செத்தவை, இரத்தம் நீக்கப்படாத இறைச்சி ஆகியவற்றை உண்பதையும் கெட்ட நடத்தையையும் தவிர்க்கும்படி அவர்களுக்கு நாம் எழுத வேண்டும். இதுவே என் தீர்ப்பு.
21 பண்டைக்காலம் முதல் மோசேயின் நீதிச்சட்டம் எல்லாப் பட்டணங்களிலும் போதிக்கப்பட்டும் ஓய்வுநாள்தோறும் தொழுகைக்கூடங்களில் வாசிக்கப்பட்டும் வந்திருக்கிறது'' என்றர்.

### திருச்சபை மன்றம் அனுப்பின கடிதம்

22 அப்பொழுது திருத்தூதுவரும் மூப்பர்களும் சபையாரனைவரும் தங்களிடையேயிருந்து சிலரைத் தேர்ந்தெடுத்து, அவர்களைப் பவுலோடும் பர்னபாவோடும் அந்தியோகியாவுக்கு அனுப்பிவைப்பதென்று தீர்மானித்தனர். அவ்வாறே அங்குள்ள சகோதரரிடையே முதன்மையானவர்களாகிய பர்சபா என்னும் யூதாசையும் சீலாவையும் தேர்ந்தெடுத்து,
23 அவர்கள் கைவசம் இவ்வாறு கடிதமெழுதி அனுப்பினர்கள்: ''அந்தியோகியாவிலும் சீரியாவிலும் சிலிசியாவிலுமுள்ள யூதரல்லாத சகோதரருக்குத் திருத்தூதுவரும் மூப்பர்களுமான சகோதரர் வாழ்த்துக் கூறி எழுதுவது: 24 எங்களிடமிருந்து வந்த சிலர் தம் பேச்சினுல் உங்கள் மனத்தைக் குழப்பி உங்களைக் கலக்கமுறச் செய்தனர் என்று கேள்விப்பட்டோம். ஆனுல் அவ்வாறு நாங்கள் அவர்களுக்குக் கட்டளையிடவில்லை. 25 ஆகையால் நம்முடைய ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவின் திருப்பெயரின் பொருட்டுத் தங்கள் உயிரையும் கொடுக்கத் துணிந்தவர்களும் எங்களுக்கு அன்பார்ந்தவர்களுமாகிய பர்னபா, பவுல் என்பவர்களோடு,
26 நாங்கள் தேர்ந்தெடுத்த மனிதரை உங்களிடம் அனுப்பிவைப்பதென்று ஒருமனத்தோடு தீர்மானித்தோம். 27 அதன்படி யூதாசையும் சீலாவையும் அனுப்பிவைக்கிறேம்; நாங்கள் இங்கே கூறும் செய்

15:10 மத். 23:4; கலா. 5:1. 15:16, 17 ஆமோஸ் 9:11, 12. 15:24 கலா. 2:12.

தியை அவர்களும் உங்களுக்கு வாய்மொழி
யாக அறிவிப்பார்கள். 28 கீழ்க்காணும்
இன்றியமையாத கட்டுப்பாட்டைத் தவிர
வேறெந்த சுமையையும் உங்கள்மீது சுமத்
தாதிருப்பது நலம் என்று தூய ஆவி
யானவருக்கும் எங்களுக்கும் காணப்பட்
டது. 29 தெய்வச் சிலைகளுக்குப் பலியிடப்
பட்டவை, இரத்தம் நீக்கப்படாதஇறைச்சி,
கழுத்து நெரிக்கப்பட்டுச் செத்தவை ஆகிய
வற்றை உண்பதையும், கெட்ட நடத்தை
யையும் தவிர்க்க வேண்டும். இவற்றை
விட்டு விலகியிருப்பதே உங்களுக்கு அடுத்
தது; உங்களுக்கு எங்கள் வாழ்த்து.''

30 அவர்கள் விடைபெற்று, அந்தியோ
கியா போய்ச் சேர்ந்தபின், அங்குள்ள
சபையாரை ஒன்றுகூட்டிக் கடிதத்தைக்
கொடுத்தார்கள். 31 அவர்கள் அதைப்
படித்ததும் மேலும் ஊக்கம் பெற்று
மகிழ்ச்சியடைந்தார்கள். 32 யூதாசும்,
சீலாவும் இறைவாக்குரைப்பவர்களாயிருந்
தபடியால், இவர்கள் பல கருத்துகளைக்
கூறி அந்தச் சகோதரருக்கு ஊக்கமூட்டித்
திடமளித்தார்கள். 33 இவர்கள் அங்கே
சிறிது காலம் தங்கியிருந்துவிட்டு, அந்தச்
சகோதரரிடமிருந்து சமாதான வாழ்த்து
டன் விடைபெற்று, தங்களை அனுப்பின
வர்களிடம் திரும்பினார்கள். [34 சீலா
வுக்கோ அங்கேயே தங்கியிருப்பது நல
மென்று காணப்பட்டது]. 35 ஆனால் பவு
லும் பர்னபாவும் அந்தியோகியாவில் தங்கி
விட்டார்கள். அவர்கள் வேறு பலருடன்
ஆண்டவரின் வார்த்தையைப் போதித்
தும் அருட்செய்தியை அறிவித்தும் வந்
தார்கள்.

36 சில நாளுக்குப்பின் பவுல் பர்ன
பாவைப் பார்த்து, ''நாம் ஆண்டவரின்
வார்த்தையை அறிவித்த எல்லா ஊர்
களுக்கும் திரும்பிப்போய், அங்குள்ள
சகோத்ரர்கள் எப்படியிருக்கிறார்கள் என்று
பார்ப்போம் வாரும்'' என்று சொன்னார்.
37 மாற்கு என்னும் யோவானையும் கூட்டிக்
கொண்டு போக வேண்டுமென்று பர்னபா
விரும்பினார். 38 ஆனால், தங்களோடு
ஊழியம் செய்ய வராமல், பம்பிலியா
நாட்டில் தங்களை விட்டுப் பிரிந்த அவரைக்
கூட்டிக்கொண்டு போவது சரியன்று எனப்
பவுலுக்குக் காணப்பட்டது. 39 ஆகையால்
அவர்களிடையே கடுமையான தர்க்கம்
உண்டாயிற்று; ஒருவரை விட்டு ஒருவர்
பிரியவும் நேர்ந்தது. பர்னபா மாற்கு
வைக் கூட்டிக்கொண்டு, சீப்புரு தீவுக்குக்
கப்பலேறிப் போனார். 40 பவுலோ சீலா
வைத் தேர்ந்துகொண்டார். அங்கிருந்த
சகோதரர் அவரை ஆண்டவரின் அருட்
பாலிப்புக்கு ஒப்படைக்க, அவர் புறப்
பட்டு, 41 சீரியா சிலிசியா நாடுகள் வழி
யாகச் சென்று, ஆங்காங்குள்ள சபைகள்
உறுதிபெறும்படி செய்தார்.

## பவுல், சீலா என்பவர்களோடு தீமோத்தேயு செல்லுதல்

16 பிறகு பவுல் தெர்பைக்கும் லீஸ்தி
ராவுக்கும் போனார். அங்கே தீமோத்
தேயு என்னும் ஒரு சீடர் இருந்தார்.
அவருடைய தாய் ஆண்டவரைப் பற்றும்
நம்பிக்கையுள்ள ஒரு யூதப் பெண்மணி;
தகப்பன் கிரேக்க இனத்தவன். 2 இந்தத்
தீமோத்தேயு லீஸ்திராவிலும் இக்கோனி
யாவிலுமிருந்த சகோதரரால் நன்கு மதிக்
கப்பெற்றவர். 3 தீமோத்தேயு தம்மோடு
வர வேண்டுமென்று பவுல் விரும்பினார்.
அவருடைய தகப்பன் கிரேக்க இனத்த
வன் என்பது அவ்விடங்களிலிருந்த எல்லா
யூதருக்கும் தெரிந்திருந்ததால், அவர்கள்
பொருட்டுப் பவுல் அவருக்கு விருத்த
சேதனம் செய்வித்தார். 4 அவர்கள் புறப்
பட்டுப்போனபோது, வழியிலிருந்த ஊர்
களில் எருசலேமிலுள்ள திருத்தூதுவரும்
மூப்பர்களும் செய்த தீர்மானங்களை ஆங்
காங்கிருந்த சகோதரரிடம் கொடுத்து,
அவற்றின்படி நடக்கச் சொன்னார்கள்.
5 திருச்சபைகள் ஆண்டவரைப் பற்றும்
நம்பிக்கையில் உறுதிபெற்று வந்தன;
நாளுக்கு நாள் தொகையில் பெருகியும்
வந்தன.

## மக்கெதோனியாவிலிருந்து பவுலுக்கு வந்த அழைப்பு

6 பிறகு ஆசியா மாநிலத்தில் தெய்வ
வார்த்தையை எடுத்துரைக்காதபடி தூய
ஆவியானவர் அவர்களைத் தடுத்ததால்,
அவர்கள் பிரிகியா கலாத்தியா நாடு
வழியாகச் சென்றார்கள். 7 அவர்கள்
மீசியா நாட்டினருகில் வந்தபோது, அங்
கிருந்து பித்தினியா நாட்டுக்குள் செல்லப்
பார்த்தார்கள். ஆனால் இயேசுவின் ஆவி
யானவர் அவர்களைச் செல்ல விடவில்லை.
8 எனவே, அவர்கள் மீசியா நாடு வழி
யாகச் சென்று துரோவா பட்டினம்
போய்ச் சேர்ந்தார்கள். 9 அங்கே பவுல்
இரவில் ஒரு காட்சி கண்டார். அதில்
மக்கெதோனியா நாட்டினன் ஒருவன்
தோன்றி, ''நீர் எங்களிடம் மக்கெதோ
னியாவுக்கு வந்து எங்களுக்கு உதவி
செய்ய வேண்டும்'' என்று தம்மைக் கேட்
டுக்கொண்டதாகக் கண்டார். 10 அவர்
அந்தக் காட்சியைக் கண்டதும், அவர்
களுக்கும் அருட்செய்தியை அறிவிப்பதற்
காகக் கடவுள் எங்களை அழைத்திருக்கிறார்
என்பதை நாங்கள் உணர்ந்து, மக்கெ
தோனியாவுக்கு உடனே புறப்பட்டுப்போக
ஏற்பாடுகள் செய்தோம்.

## பிலிப்பி பட்டணத்தில் லீதியாள் திருமுழுக்குப் பெறுதல்

11 பிறகு நாங்கள் துரோவாவில் கப்ப
லேறி, சமொத்திராக்கே தீவுக்கு நேரா
கச் சென்று, மறுநாள் நெயாப்போலி பட்டி
னம் போய்ச் சேர்ந்தோம்; 12 அங்கிருந்து
பிலிப்பி பட்டணத்துக்குப் போய், அங்கே
சிலநாள் தங்கியிருந்தோம். அது மக்கெ
தோனியாவின் அப்பகுதியில் ஒரு முக்கிய
மான ஊர்; ரோமர் வந்து குடியேறின
இடம். 13 அந்தப் பட்டணத்தின் வாயி
லுக்கு வெளியே ஆற்றோரமாய் யூதர் இறை
வழிபாடு செய்யும் இடம் ஒன்று இருக்கலா
மென்று நாங்கள் நினைத்ததால், ஓய்வு
நாளில் அங்கே போய் உட்கார்ந்துகொண்டு
அங்கே கூடியிருந்த பெண்களோடு பேசி
னோம். 14 நாங்கள் பேசினதைக் கேட்டுக்
கொண்டிருந்தவர்களுள் லீதியாள் என்ற ஒரு
பெண்ணும் இருந்தாள். அவள் ஒருவகைச்
செந்நிற ஆடை விற்பவள், தியத்தைரா
ஊராள். அவள் யூத இனத்தைச் சேராத
வளாயிருந்தும் மெய்க்கடவுளை வழிபட்டு
வந்தாள். பவுல் சொல்வதைக் கவனத்
தில் கொள்ளும்படி ஆண்டவர் அவளு
டைய உள்ளத்தைத் திறந்தருளினார்.
15 அவளும் அவளுடைய வீட்டாரும் திரு
முழுக்குப் பெற்றபின், அவள், ''என்னை
நீங்கள் ஆண்டவரிடம் நம்பிக்கை உள்ள
வள் என்று கருதினால், என் வீட்டிற்கு
வந்து தங்குங்கள்'' என்று எங்களை வருந்திக்
கேட்டு இணங்கவும் செய்துவிட்டாள்.

## பவுலும் சீலாவும் சிறைப்பட்டது

16 இறைவழிபாடு செய்யும் இடத்
திற்கு ஒரு நாள் நாங்கள் போய்க்கொண்
டிருந்தபோது, குறி சொல்லும் ஆவி
பிடித்திருந்த ஓர் அடிமைப்பெண் எங்
களுக்கு எதிரே வந்தாள். அவள் குறி
சொல்லித் தன் முதலாளிகளுக்கு மிகுந்த
வருவாய் கிடைக்கச் செய்து வந்தாள்.
17 அவள் பவுலையும் எங்களையும் பின்
தொடர்ந்துகொண்டே, ''இவர்கள் உன்
னதமான கடவுளின் அடியார்கள்; மீட்
படையும் வழியை உங்களுக்கு அறிவிக்
கிறார்கள்'' என்று கத்தினாள். 18 இப்படிப்
பலநாள் செய்துவந்தாள். இதனால் பவுல்
அந்தத் தொல்லையைப் பொறுக்க மாட்டா
மல், அவள் பக்கம் திரும்பி, ''இயேசு
கிறிஸ்துவின் திருப்பெயரால் உனக்குக்
கட்டளையிடுகிறேன்; இவளை விட்டுப் போய்
விடு'' என்று அந்த ஆவிக்குச் சொன்னார்.
அந்நேரமே அது அவளை விட்டு அகன்றது.
19 அவளுடைய முதலாளிகள், தாங்கள்
நம்பியிருந்த வருவாய்க்குரிய வாய்ப்பெல்
லாம் போய்விட்டதே என்று சொல்லி,
பவுலையும் சீலாவையும் பிடித்து, பொது
அரசாங்கத்திலிருந்த அதிகாரிகளிடம் இழுத்
துக்கொண்டு போனார்கள். 20 அங்கே
அவர்களை அந்த அதிகாரிகளிடம் நிறுத்தி,
''யூதராகிய இந்த மனிதர்கள் நமது
ஊரையே கலக்கிவிட்டார்கள். 21 ரோம
ராகிய நாம் ஏற்கவும் செய்யவும் தகாத
முறைமைகளைப் போதிக்கிறார்கள்'' என்று
சொன்னார்கள். 22 மக்கள் கூட்டமும்
அவர்களுக்கு விரோதமாக எழுந்தது.
அந்த அதிகாரிகள் அவர்களுடைய ஆடை
களைக் கிழித்தெறிந்து, அவர்களைப் பிரம்
பினால் அடிக்கும்படி கட்டளையிட்டார்கள்.
23 அவர்களைப் பலமுறை அடிப்பித்தபின்
சிறைச்சாலையில் அடைத்து வைத்தார்கள்;
அவர்களைப் பத்திரமாகக் காக்கும்படி
சிறைச்சாலை காப்பவனுக்குக் கட்டளையிட்
டார்கள். 24 இந்தக் கண்டிப்பான கட்
டளைப்படி, சிறைச்சாலை காப்பவன் அவர்
களை உட்சிறையில் தள்ளி, அவர்களு
டைய கால்களைத் தொழுமரத்தில் மாட்
டினான்.

25 நள்ளிரவில் பவுலும் சீலாவும் கட
வுளைப் புகழ்ந்து பாடி அவரிடம் வேண்டு
தல் செய்துகொண்டிருந்தார்கள். மற்றக்
கைதிகள் அதைக் கேட்டுக்கொண்டிருந்
தார்கள். 26 அப்பொழுது சிறைச்சாலை
யின் அடித்தளத்தையே ஆட்டும்படியான
பெரியதொரு நில நடுக்கம் திடீரென ஏற்
பட்டது. உடனே எல்லாக் கதவுகளும்
திறந்தன; எல்லாருடைய விலங்குகளும்
கழன்று வீழ்ந்தன. 27 சிறைச்சாலை காப்
பவன் விழித்துக்கொண்டான். சிறைச்
சாலைக் கதவுகள் திறந்திருக்கிறதைக்
கண்டு, கைதிகள் தப்பியோடிவிட்டார்
கள் என்று எண்ணி, வாளை உருவித்
தன் உயிரைப் போக்கிக்கொள்ளப்
போனான். 28 ஆனால் பவுல் உரத்த குர
லில், ''உனக்கு ஒரு தீங்கும் செய்து
கொள்ளாதே. நாங்கள் எல்லோரும்
இங்கேதான் இருக்கிறோம்'' என்று கத்தினார்.
29 சிறைச்சாலை காப்பவன் விளக்கைக்
கொண்டுவரச் சொல்லி, உள்ளே
ஓடினான்; நடுங்கிக்கொண்டே பவுலுக்கும்
சீலாவுக்கும் முன்னால் விழுந்தான்; 30 பிறகு
அவர்களை அறைக்கு வெளியே அழைத்து
வந்து, ''ஐயன்மாரே, மீட்படைவதற்காக
நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று
கேட்டான். 31 அதற்கு அவர்கள், ''ஆண்
டவராகிய இயேசுகிறிஸ்துவினிடம் நம்
பிக்கை கொள், அப்பொழுது நீயும் உன்
வீட்டாரும் மீட்படைவீர்கள்'' என்று
சொன்னார்கள். 32 பிறகு அவனுக்கும்
அவனுடைய வீட்டிலுள்ள அனைவருக்கும்
கடவுளின் வார்த்தையை எடுத்துரைத்

**16:22** பிலி. 1:30; 1 தெச. 2:2. **16:23** 2 கொரி. 11:25. **16:25** கொலோ. 3:16

தார்கள். 33 அவன் அந்த இரவு நேரத்
திலேயே அவர்களைக் கூட்டிக்கொண்டு
போய் அவர்களுடைய காயங்களைக் கழுவி
னன். அவனும் அவனுடைய குடும்பத்
தார் அனைவரும் உடனே திருமுழுக்குப்
பெற்றார்கள். 34 பிறகு அவன் அவர்களைத்
தன் வீட்டிற்கு அழைத்துச்கொண்டுபோய்
அவர்களுக்கு உணவளித்தான்; கடவுளி
டம் நம்பிக்கை கொள்ளும் நற்பேறு
தனக்குக் கிடைத்ததைப் பற்றித் தன்
வீட்டார் அனைவரோடும் சேர்ந்து அக
மகிழ்ந்தான்.

35 பொழுது விடிந்ததும் அதிகாரிகள்,
''அந்த மனிதரை விடுவித்துவிடு'' என்று
தலையாரிகள் மூலம் சொல்லியனுப்பினர்
கள். 36 சிறைச்சாலை காப்பவனும் அந்தச்
செய்தியை பவுலுக்கு அறிவித்தான்.
''உங்களை விடுவிக்கும்படி அதிகாரிகள்
சொல்லியனுப்பியிருக்கிறார்கள்; ஆகையால்
நீங்கள் இப்போது தாராளமாகப் போக
லாம்'' என்று சொன்னான். 37 ஆனால்
பவுல் அவர்களிடம், ''நாங்கள் ரோமக்
குடிமக்கள். இருந்தபோதிலும், அவர்கள்
விசாரணை செய்யாமலே எங்களை எல்லார்
முன்னிலையிலும் அடித்துச் சிறைச்சாலையில்
அடைத்து வைத்தார்கள்; இப்பொழுது
பிறருக்குத் தெரியாமல் எங்களை அனுப்பி
விடப் பார்க்கிறார்களா? அது நடக்காது.
அவர்கள் வந்து எங்களை வெளியே அழைத்
துச் செல்லட்டும்'' என்று சொன்னார்.
38 அவர் சொன்னதைத் தலையாரிகள்
அதிகாரிகளிடம் போய் அறிவித்தார்கள்.
அவர்கள் ரோமக் குடிமக்கள் என்பதைக்
கேள்விப்பட்டதும் அந்த அதிகாரிகள் அச்
சங்கொண்டு, 39 தாங்களே வந்து, அவர்
களிடம் நயமாகப் பேசி, அவர்களை
வெளியே வரச்செய்து, ஊரைவிட்டுப்
போய்விடும்படி கேட்டுக்கொண்டார்கள்.
40 அவர்களும் சிறைச்சாலையிலிருந்து
வெளியே வந்து, லீதியாள் வீட்டிற்குப்
போனார்கள். அங்கே சகோதரரைக் கண்டு
அவர்களை மனத்தளர்ச்சியடையாமல் இருக்
கச் சொல்லிவிட்டு விடைபெற்றுச் சென்
றார்கள்.

## தெசலோனிக்கேயில் குழப்பம்

**17** அவர்கள் அம்பிப்போலி, அப்பொ
லோனியா என்னும் ஊர்களைக் கடந்து
தெசலோனிக்கே பட்டணம் போய்ச் சேர்ந்
தார்கள். அங்கே யூதருடைய தொழு
கைக்கூடம் ஒன்று இருந்தது. 2 பவுல்
தம் வழக்கப்படியே அங்கிருந்த யூதர்
களிடம் சென்று, வேத வாக்கியங்களை
எடுத்துரைத்து, அவர்களோடு மூன்று
ஓய்வுநாள்கள் தர்க்கம் செய்தார்.
3 மேசியா பாடுகள் அடையவும் இறந்
தோரிடமிருந்து உயிரோடெழுந்திருக்கவும்
வேண்டும் என்றும், தாம் அவர்களுக்கு
அறிவித்த இயேசுவே அந்த மேசியா என்
றும் விளக்கிக் காட்டினார். 4 அவர்களுள்
சிலர் அதை ஒப்புக்கொண்டு பவுல், சீலா
என்பவர்களோடு சேர்ந்துகொண்டனர்.
கிரேக்கருள் மெய்க்கடவுளை வழிபட்டு
வந்தோருள் பலரும், செல்வாக்கு மிகுந்த
பெண்மணிகள் பலரும் அவ்வாறே செய்
தனர். 5 மற்ற யூதர்களோ பொறாமைப்
பட்டு, பொல்லாத வீணர் சிலரைச்
சேர்த்து ஒரு கூட்டத்தைத் திரட்டி, பட்
டணத்தில் அமளி உண்டாக்கினார்கள்; பவு
லையும் சீலாவையும் பொதுமக்கள் அவை
யின் முன்னிலையில் கொண்டு வருவதற்
காக யாசோன் என்பவனுடைய வீட்
டைச் சூழ்ந்துகொண்டு அவர்களைத் தேடிப்
பார்த்தார்கள். 6 அவர்களைக் காணாது,
யாசோனையும் சகோதரர் சிலரையும்
பட்டணத்து அதிகாரிகளிடம் இழுத்துச்
சென்று, ''உலகெங்கும் குழப்பம் உண்
டாக்கி வருகிற ஆள்கள் இங்கேயும் வந்து
விட்டார்கள். 7 அவர்களை இந்த யாசோன்
ஏற்றுக்கொண்டிருக்கிறான். இவர்கள் எல்
லாரும் இயேசு என்னும் வேறோர் அரசன்
இருப்பதாகச் சொல்லி, நம்முடைய
பேரரசரின் சட்டங்களுக்கு மாறானதைச்
செய்துவருகிறார்கள்'' என்று கூச்சலிட்
டார்கள். 8 இப்படிச் செய்து, அதைக்
கேட்ட கூட்டத்தினரையும் அதிகாரிகளை
யும் கலக்கமடையச் செய்துவிட்டார்கள்.
9 அதிகாரிகள் யாசோனிடமிருந்தும் மற்ற
வர்களிடமிருந்தும் நன்னடத்தை ஈடு
வாங்கிக்கொண்டு அவர்களை விட்டுவிட்
டார்கள்.

## பெரோயாவில் கலகம்

10 இரவு நேரம் வந்தவுடனே சகோ
தரர்கள் பவுலையும் சீலாவையும் பெரோயா
பட்டணத்துக்கு அனுப்பிவிட்டார்கள்.
அவர்கள் அங்கே போய்ச் சேர்ந்தபின்
யூதரின் தொழுகைக்கூடத்திற்குப்
போனார்கள். 11 அங்கிருந்தவர்கள் தெச
லோனிக்கேயில் இருந்த யூதரைப் போலல்
லாமல், பரந்த மனப்பான்மை உடையவர்
களாய் இருந்தார்கள். அவர்கள் தெய்வ
வார்த்தையை மெய்யார்வத்துடன் கேட்டு,
பவுலும் சீலாவும் கூறினது சரியா
வென்று பார்க்க வேத வாக்கியங்களை
நாள்தோறும் ஆராயலானார்கள். 12 அவர்
களுள் பலரும் கிரேக்கருள் பல ஆண்
களும் பல உயர்குடிப் பெண்களும் ஆண்
டவரிடம் நம்பிக்கை கொண்டார்கள்.
13 பெரோயாவிலும் கடவுளின் வார்த்தை
பவுலினால் அறிவிக்கப்பட்டதென்பதைத்
தெசலோனிக்கே பட்டணத்து யூதர்கள்
அறிந்து அங்கேயும் வந்து மக்களைத்

தூண்டிவிட்டு கலகமூட்டினார்கள். 14அதன்
பேரில் அங்கிருந்த சகோதரர்கள் பவுலைக்
கடற்கரைப் பக்கம் போய்விடும்படி உடனே
அனுப்பினார்கள். சீலாவும் தீமோத்தேயு
வும் அங்கேயே தங்கிவிட்டார்கள்.
15 பவுலை அழைத்துச் சென்றவர்கள்
அவரை அத்தேனே பட்டணம் வரைக்
கும் கூட்டிக்கொண்டு போனார்கள். அங்கே
பவுல் அவர்களைப் பார்த்து, ''சீலாவும்
தீமோத்தேயுவும் என்னிடம் மிக விரைவில்
வர வேண்டுமென்று அவர்களுக்குச்
சொல்லுங்கள்'' என்றார். பிறகு அவர்கள்
திரும்பிவிட்டார்கள்.

### அத்தேனேயில் பவுல் நிகழ்த்தின உரை

16 அத்தேனே பட்டணத்தில் பவுல்
சீலாவுக்காகவும் தீமோத்தேயுவுக்காகவும்
காத்திருக்கையில், அந்தப் பட்டணத்தில்
தெய்வச் சிலைகள் நிறைந்திருப்பதைக் கண்
டார்; அவற்றைக் காணக் காண, அவர்
மனம் மிகவும் வருந்திற்று. 17 எனவே,
அவர் தொழுகைக்கூடத்தில் பார்த்த யூத
ரோடும், பிற இனத்தவருள் மெய்க்கட
வுளை வழிபட்டு வந்தவர்களோடும்,
கடைத்தெருவிலே நாள்தோறும் சந்தித்த
மக்களோடும் விவாதம் நடத்தி வந்தார்.
18 எப்பிக்கூரர்,* ஸ்தோயிக்கர்† ஆகிய தத்
துவ ஞானிகள் சிலர் அவரோடு வாதாடி வந்
தனர். சிலர், ''இந்த வாயாடி என்ன
தான் சொல்லப் பார்க்கிறான்!'' என்றனர்.
வேறு சிலர், ''இவன் ஏதோ அன்னிய
தெய்வங்களைப்பற்றி விளம்பரம் செய்
கிறவன்போலத் தெரிகிறது'' என்றனர்.
அவர் இயேசுவையும் உயிர்த்
தெழுதலையும்பற்றிய நற்செய்தியை அறி
வித்து வந்தபடியால் அவர்கள் இப்படிச்
சொன்னார்கள். 19 அவர்கள் அவரை
அரையோப்பாகு‡ என்னும் மன்றத்துக்குக்
கூட்டிக்கொண்டுபோய், ''நீர் கூறும் இந்தப்
புதிய போதனை என்னவென்பதை
நாங்கள் அறியலாமா? 20 எங்கள் காதுக்கு
நூதனமாயிருக்கும் சில காரியங்களை
நீர் சொல்லுகிறீர். அவற்றின் கருத்து
என்னவென்பதை அறிய விரும்புகிறோம்''
என்றார்கள். 21 அத்தேனே பட்டணத்தார்
அனைவரும் அதில் தங்கியிருக்கும் அன்னி
யரும் இதுபோன்ற புதுப்புதுக் காரியங்
களைச் சொல்வதிலும் கேட்பதிலுமே
பொழுதைப் போக்குவார்கள், வேறெதிலும்
கவனம் செலுத்துவதில்லை.

22 பவுல் அரையோப்பாகு என்னும்
மன்றத்தின் நடுவில் நின்று, ''அத்தேனே
நகரப் பெருமக்களே, நீங்கள் மதாச்சா
ரத்தைக் கடைப்பிடிப்பதில் சிறிதளவும்
தவறாதவர்கள் என்பதைக் காண்கிறேன்.
23 எப்படியெனில், நான் இங்குமங்கும்
சென்று உங்கள் வழிபாட்டிடங்களைக்
கவனித்துப் பார்த்தேன்; **'நாம் அறிந்து
கொள்ளாத தெய்வத்துக்கு'** என்று எழுதி
யிருக்கிற ஒரு பலிபீடத்தையும் கண்
டேன். எனவே, இன்னார் என்பதை
அறிந்துகொள்ளாமலே நீங்கள் வணங்கி
வருகிற கடவுளையே நான் உங்களுக்கு
அறிவிக்கிறேன். 24 உலகத்தையும் அதி
லுள்ள அனைத்தையும் படைத்த கடவுள்
விண்ணுக்கும் மண்ணுக்கும் ஆண்டவர்;
அவர் மனித கையினால் செய்யப்படும்
கோவில்களில் குடிகொள்வதில்லை. 25 எல்
லாருக்கும் உயிரையும் மூச்சையும் மற்
றெல்லாவற்றையும் கொடுக்கிறவர் அவரே.
ஆகையால், அவருக்கு எதுவும் தேவை
யில்லை. மனிதர் தம் கையால் செய்யும்
பணிவிடையும் அவருக்குத் தேவையில்லை.
26 மனித குலத்திலுள்ள எல்லா இனங்
களையும் அவர் ஒரே ஆளினின்று உண்டு
பண்ணி, உலகெங்கும் அவர்களைக் குடி
யிருக்கச் செய்தார்; அவரவருக்கென்று குறிப்
பிட்ட காலங்களையும் குடியிருப்பின் எல்லை
களையும் குறித்திருக்கிறார். 27 அவர்கள்,
கடவுளாகிய தம்மை நாடித்தேட வேண்டும்
என்பது அவரது நோக்கம்; அவர்கள்
அப்படிச் செய்வதால், தம்மைத் தட்டித்
தடவியாகிலும் கண்டுகொள்ளக் கூடும்
என்பது அவரது எண்ணம். ஆனால், உண்
மையில் அவர் நம்முள் ஒவ்வொருவருக்கும்
அருகிலேயே இருக்கிறார். 28 ஏனெனில்,
அவருக்குள்ளாகத்தான் நாம் பிழைத்
திருக்கிறோம், செயலாற்றுகிறோம், இருக்கி
றோம். இதையே உங்கள் கவிஞருள் சிலர்,

'நாம் அவருடைய பிள்ளைகள்'

என்று சொல்லியிருக்கின்றனர். 29 நாம்
கடவுளின் பிள்ளைகளாயிருப்பதால், கடவுள்
மனிதருடைய சிற்ப வேலையினாலும்
சிந்தனையினாலும் உருவாக்கப்பட்ட பொன்
வெள்ளி கல் உருவங்களைப்போல இருப்
பாரென்று நினைக்கக் கூடாது. 30 மக்கள்
அறியா நிலையில் இருந்த காலத்தில் அவர்
கள் செய்ததைக் கடவுள் பொருட்படுத்
தாதிருந்தார். ஆனால், இப்பொழுது உல
கெங்கும் எல்லாரும் மனமாற்றமடைய
வேண்டுமென்று மனிதருக்குக் கட்டளை
யிடுகிறார். 31 ஏனெனில், அவர் ஒரு நாளைக்
குறித்திருக்கிறார். அந்நாளில் தாம் நிய
மித்த மனிதனைக் கொண்டு அவர் உல
கத்துக்கு நீதியோடு தீர்ப்பு வழங்கப்
போகிறார். அந்த மனிதனை இறந்தோரிட
மிருந்து உயிரோடெழுப்பினதன் மூலம்
அதை எல்லாருக்கும் உறுதிப்படுத்தியிருக்
கிறார்'' என்று சொன்னார்.

* † பொருளடக்க அட்டவணை பார்க்க
‡ இது மார்ஸ் மேடை என்று ரோமரால் வழங்கப்பட்டு வந்தது.
**17:24, 25** 1 அர. 8:27; ஏசா. 42:5; **17:29** ஏசா. 40:18; ரோ. 1:22, 23. **17:30** ரோ. 3:25.

32 இறந்தோரின் உயிர்த்தெழுதல்
என்று கேட்டபோது சிலர் ஏளனம் செய்
தனர். வேறு சிலரோ, ''இதைப்பற்றி
நீர் இன்னொரு சமயம் வந்து பேசும்,
கேட்போம்'' என்றனர். 33 அதன்பின்,
பவுல் அவர்களிடமிருந்து போய்விட்டார்.
34 சிலர் அவர் பக்கம் சேர்ந்துகொண்டு
ஆண்டவரிடம் நம்பிக்கை கொண்டனர்.
அவர்களுள் அரையோப்பாகு என்னும்
மன்றத்தின் ஓர் உறுப்பினரான தியோனி
சியும், தாமரி என்னும் ஒரு பெண்மணி
யும் இருந்தார்கள்; அவர்களோடு வேறு
சிலரும் இருந்தனர்.

### கொரிந்துவில் பவுல் செய்த ஊழியம்

**18** அதன்பின் பவுல் அத்தேனே பட்ட
ணத்திலிருந்து புறப்பட்டு, கொரிந்து
பட்டணம் போய்ச் சேர்ந்தார். 2 அங்கே
பொந்து நாட்டினரான ஆக்கிலா என்
னும் ஒரு யூதனையும் அவனுடைய மனைவி
பிரிஸ்கில்லாளையும் அவர் கண்டு, அவர்
களுடைய வீட்டுக்குப் போனார். யூதரெல்
லாரும் ரோமாபுரியை விட்டு வெளியேற
வேண்டுமென்று பேரரசன் கிலவுதியு கட்
டளை பிறப்பித்திருந்ததால், அவர்கள்
இத்தாலியாவிலிருந்து அப்போதுதான்
அங்கே வந்திருந்தார்கள். 3 கூடாரம்
செய்வது அவர்களுடைய பிழைப்புத்
தொழில். பவுலும் அதே தொழிலைச்
செய்பவர்; ஆகையால் அவர் அவர்களு
டன் தங்கி அத்தொழிலைச் செய்துவந்
தார். 4 ஓய்வுநாள்தோறும் அவர் தொழு
கைக்கூடத்தில் விவாதங்கள் நடத்தி, யூத
ரையும் கிரேக்கரையும் நம்பவைக்கும்
வகையில் பேசிவந்தார். 5 சீலாவும் தீமோத்
தேயுவும் மக்கெதோனியாவிலிருந்து வந்த
பின், பவுல் தெய்வ வார்த்தையைப்
போதிப்பதில் முற்றிலும் ஈடுபடலானார்.
அவர் இயேசுவே மேசியா என்று யூத
ருக்கு வலியுறுத்திக் கூறிவந்தார். 6 அவர்
கள் எதிர்ப்புத் தெரிவித்துப் பழிப்புரை
கூறினபோது, அவர் தம் ஆடையை
உதறி, ''நீங்கள் அழிந்துபோக நேர்ந்
தால், அதற்கு நீங்களே பொறுப்பாளி
கள், நானல்ல. இப்போதே நான் பிற
இனத்தவரிடம் போகிறேன்'' என்று
சொன்னார். 7 பிறகு அவர் அங்கிருந்து
புறப்பட்டு, தித்தியு யுஸ்துவின் வீட்டிற்
குப் போனார். தித்தியு யுஸ்து என்பவன்
பிற இனத்தவனாயினும், அவன் மெய்க்
கடவுளை வழிபட்டுவந்தான். அவனு
டைய வீடு தொழுகைக்கூடத்திற்கு அடுத்
தாற்போல இருந்தது. 8 தொழுகைக்
கூடத் தலைவன் கிறிஸ்பு என்பவனும் அவ
னுடைய வீட்டார் அனைவரும் ஆண்ட
வரை நம்பினர். கொரிந்தியருள் பலரும்
பவுல் சொன்னதைக் கேட்டு அதில் நம்
பிக்கை வைத்துத் திருமுழுக்குப் பெற்றனர்.
9 ஓர் இரவில் ஆண்டவர் பவுலுக்குக்
காட்சியளித்து, ''அஞ்சாதே, பேசு, மவு
னமாயிருந்துவிடாதே. 10 ஏனெனில்,
நான் உன்னோடு இருக்கிறேன். உனக்குத்
தீங்குசெய்ய உன்மேல் எவனும் கைவைக்
கப்போவதில்லை. இந்தப் பட்டணத்தில்
எனக்கு உரிய மக்கள் பலர் இருக்கின்ற
னர்'' என்று சொன்னார். 11 எனவே,
பவுல் கடவுளின் வார்த்தையை அங்குள்
ளவர்களுக்குப் போதித்துக்கொண்டு ஒன்
றரை ஆண்டு அங்கே இருந்தார்.

12 கல்லியோன் என்பவன் அகாயா
வில் * ஆட்சித் தலைவனாயிருக்கையில்,
யூதர்கள் ஒன்றுசேர்ந்து பவுலுக்கு விரோத
மாக எழுந்து, அவரை நீதிமன்றத்துக்குக்
கொண்டுபோய், 13 ''இவன் சட்டத்துக்கு
மாறான முறையில் கடவுளை வணங்கு
மாறு மக்களைத் தூண்டிவிடுகிறான்'' என்
றார்கள். 14 பவுல் பேசுவதற்கு வாயெடுக்
கப்போனபோது, கல்லியோன் யூதரைப்
பார்த்து, ''யூத மக்களே, இதில் அநி
யாயமோ, குற்றச்சாட்டுக்குரிய பொல்
லாங்கோ இருக்குமானால், நான் உங்
களுக்குப் பொறுமையுடன் செவிகொடுப்
பது முறையே. 15 ஆனால் இதுவோ
சொற்களையும் பெயர்களையும் உங்கள்
மதச் சட்டத்தையும்பற்றிய விவாதமா
யிருக்கிறது. ஆகையால் நீங்களே இதைப்
பார்த்துக்கொள்ளுங்கள். இப்படிப்பட்ட
காரியங்களை விசாரணை செய்ய எனக்கு
மனமில்லை'' என்று சொல்லி, 16 அவர்
களை நீதிமன்றத்திலிருந்து அனுப்பிவிட்
டான். 17 பிறகு அங்கிருந்தவர்கள் எல்
லாரும் தொழுகைக்கூடத் தலைவன் சொஸ்
தேனே என்பவனைப் பிடித்து நீதிமன்றத்
திற்கு எதிரே கொண்டுவந்து அடித்தார்
கள். கல்லியோன் இவற்றுள் ஒன்றையும்
கவனத்தில் எடுத்துக்கொள்ளவில்லை.

### பவுல் அந்தியோகியாவுக்குத் திரும்புதல்

18 பவுல் இன்னும் பலநாள் கொரிந்து
வில் தங்கியிருந்தார். பிறகு அவர் சகோ
தரரிடம் விடைபெற்றுச் சென்று, தாம்
செய்திருந்த பொருத்தனையின்படியே கெங்
கிரேயா பட்டினத்தில் தலைச்சவரம் செய்து
கொண்டு, சீரியா நாட்டுக்குக் கப்பலேறிப்
போனார். பிரிஸ்கில்லாளும் ஆக்கிலாவும்
அவருடன் போனார்கள். 19 அவர்கள்
எபேசு பட்டினம் போய்ச் சேர்ந்தபின்,

* கிரேக்க நாட்டில் ரோமப் பேரரசின் ஒரு மாநிலம்.
**18:3** *1 கொரி. 4:11.* **18:8** *1 கொரி. 1:14* **18:10** *1 கொரி. 2:3,* **18:18** *எண். 6:18; திருத்தூது. 21:27, 28.*

அவர் அவர்களை விட்டுப் பிரிந்து, தாம்
மட்டும் தொழுகைக்கூடத்திற்குப் போய்,
யூதரோடு விவாதம் நடத்தினார். 20 அவர்
கள் அவரை இன்னும் சிறிதுகாலம் தங்
களுடன் தங்கியிருக்கும்படி கேட்டுக்கொண்
டார்கள். அவர் அதற்கு உடன்படாமல்,
21 [''வருகிற பண்டிகை சமயத்தில் நான்
எப்படியாயினும் எருசலேமில் இருக்க வேண்
டும்.] கடவுள் திருவுளங்கொண்டால் மறு
படியும் உங்களிடம் வருவேன்'' என்று
சொல்லி விடைபெற்றுக்கொண்டு, எபேசு
விலிருந்து கப்பலில் புறப்பட்டார். 22 அவர்
செசரியா பட்டினத்தில் இறங்கி, எருச
லேமுக்குப் போய்ச் சபையாரைக் கண்டு
பேசிவிட்டு, அந்தியோகியாவுக்கு வந்தார்.
23 அங்கே அவர் சிறிது காலம் தங்கி
யிருந்தபின் புறப்பட்டு, கலாத்தியாவின்
ஒரு பகுதி வழியாகவும் பிரீகியா நாடு
வழியாகவும் சென்று, ஆங்காங்கிருந்த
எல்லாச் சீடருடைய உள்ளத்திற்கும் திட
மளித்தார்.

### அப்பொல்லோவின் திருப்பணி

24 அப்பொல்லோ என்னும் யூதர்
ஒருவர் எபேசுவுக்கு வந்திருந்தார். அவர்
அலெக்சந்திரியாவில் பிறந்தவர், பேச்சில்
வல்லவர், வேதாகமங்களை நன்கறிந்தவர்.
25 அவர் ஆண்டவரின் நெறியில்
பயிற்சிபெற்று, இயேசுவைப்பற்றிய காரி
யங்களை மிகுந்த ஆர்வத்தோடு எடுத்
துரைத்து, செம்மையாகப் போதித்து
வந்தார். ஆயினும், அவருக்கு யோவான்
கொடுத்த திருமுழுக்கு மட்டுமே தெரிந்
திருந்தது. 26 அவர் தொழுகைக்கூடத்தில்
துணிவுடன் பேசினார். அவருடைய
பேச்சைக் கேட்ட பிரிஸ்கில்லாளும் ஆக்கி
லாவும் அவரைக் கூட்டிக்கொண்டுபோய்,
கடவுளின் நெறியை இன்னும் திட்ப
நுட்பமாக அவருக்கு விளக்கினார்கள்.
27 அவர் அகாயாவுக்குப் போக வேண்டு
மென்று விரும்பினபோது, அப்படியே செய்
யும்படி சகோதரர் அவருக்கு ஊக்கமளித்து,
அகாயாவிலுள்ள சீடருக்கு அவரை ஏற்
றுக்கொள்ளும்படி கடிதம் எழுதினார்கள்.
அவர் அங்கே போய்ச் சேர்ந்து கடவுளின்
அருளால் ஆண்டவரிடம் நம்பிக்கை
கொண்டிருந்தவர்களுக்கு மிகவும் உதவி
யாயிருந்தார். 28 எப்படியெனில், அவர்
யூதரை வெளிப்படை வாதத்தில் விடா
முயற்சியோடு வாதாடி வென்று, வேத
வாக்கியங்களைக் கொண்டு இயேசுவே
மேசியா என்பதை நிலைநாட்டினார்.

### எபேசு பட்டினத்தில் பவுல் செய்த ஊழியம்

19 அப்பொல்லோ கொரிந்துவில் இருக்
கையில் பவுல் உள்நாட்டுப் பகுதி
வழியாகச் சென்று எபேசு பட்டினம்
போய்ச் சேர்ந்தார். அங்கே சீடர் சிலரை
அவர் கண்டு, 2 ''நீங்கள் ஆண்டவரிடம்
நம்பிக்கை கொண்டபோது தூய ஆவி
யைப் பெற்றீர்களா?'' என்று கேட்டார்.
அதற்கு அவர்கள், ''தூய ஆவி இருக்
கிறதைப்பற்றி நாங்கள் கேள்விப்பட்
டதேயில்லை'' என்று சொன்னார்கள்.
3 ''அப்படியானால் நீங்கள் எந்தத் திரு
முழுக்குப் பெற்றீர்கள்?'' என்று அவர்
கேட்க, அவர்கள், ''யோவான் கொடுத்த
திருமுழுக்கு'' என்றார்கள். 4 அப்பொழுது
பவுல், '' 'நீங்கள் மனமாற்றமடைந்து திரு
முழுக்குப் பெறுங்கள்' என்று சொல்லி,
யோவான் திருமுழுக்குக் கொடுத்தபோது,
தமக்குப் பின் வருபவரிடம் நம்பிக்கை
கொள்ள வேண்டுமென்று மக்களுக்குச்
சொன்னார். அவர் குறிப்பிட்டவர்தாம்
இயேசு'' என்றார். 5 அதைக் கேட்டு
அவர்கள் ஆண்டவராகிய இயேசுவின்
திருப்பெயரால் திருமுழுக்குப் பெற்றார்கள்.
6 பவுல் அவர்கள்மேல் கைகளை
வைத்ததும் தூய ஆவியானவர் இறங்கி
வந்து அவர்களை ஆட்கொண்டார். அப்
பொழுது அவர்கள் பற்பல மொழிகளில்
பேசினார்கள்;இறைவாக்கும் உரைத்தார்கள்.
7 அந்த மனிதரின் எண்ணிக்கை
ஏறக்குறைய பன்னிரண்டு இருக்கும்.

8 பிறகு பவுல் தொழுகைக்கூடத்திற்குப்
போனார்; அங்கே மூன்றுமாத காலம் கட
வுளின் அரசைப்பற்றித் துணிவுடன்
அறிவித்து, மக்கள் அவ்வரசை ஏற்கும் வகை
யில் அவர்களோடு விவாதம் நடத்தினார்.
9 ஆனால் சிலர் பிடிவாதமுள்ளவர்களாகி,
அதை ஏற்க மறுத்து, கூட்டத்தார்
முன்னிலையில் இந்த நெறியைப்
பற்றித் தீதாகப் பேசத் தொடங்கினர்.
அப்பொழுது அவர் அவ்விடம் விட்டுவிலகி,
சீடரையும் பிரித்துக் கூட்டிக்கொண்டு
போய், திறன்னு என்பவனுடைய கல்விச்
சாலை மன்றத்தில் நாள்தோறும் விவாதங்கள்
நடத்தி வந்தார். 10 இது இரண்டு
ஆண்டுக்காலம் நடைபெற்றது. ஆசியா
மாநிலத்திலிருந்த யூதர் கிரேக்கர் எல்லா
ருமே ஆண்டவரின் வார்த்தையைக் கேட்
டறிந்தனர்.

### ஸ்கேவாவின் மைந்தர்

11 கடவுள் பவுலின் கையால் மாபெரும்
அரிய செயல்கள் நடைபெறும்படி
செய்துவந்தார். 12 எப்படியெனில், அவரது
உடலில் பட்ட கைக்குட்டைகளையோ
துண்டுகளையோ கொண்டுவந்து நோயாளி
கள்மேல் வைத்தாலே போதும், நோய்கள்
அவர்களை விட்டு நீங்கும், பொல்லாத

18:24 1 கொரி. 1:12. 19:4 மத். 3:11; மாற். 1:4, 7, 8; லூக். 3:4, 16; யோ. 1:26, 27. 19:12 லூக். 8:44—47; திருத்தூது. 5:15.

ஆவிகள் போய்விடும். 13 ஊர் ஊராய்த்
திரிந்து பேயோட்டும் யூதர் சிலரும்
ஆண்டவராகிய இயேசுவின் திருப்பெயரை
உச்சரித்துக்கொண்டு பேயோட்டப் பார்த்
தனர். அவர்கள் பொல்லாத ஆவி பிடித்
திருந்தவர்களைப் பார்த்து, ''பவுல் அறி
விக்கிற இயேசுவின் திருப்பெயரால் ஆணை
யிடுகிறேன், போய்விடு'' என்று கூறி
வந்தார்கள். 14 யூதத் தலைமை ஆசாரியர்
ஸ்கேவா என்பவருடைய ஏழு மைந்
தர்கள் இவ்வாறு ஒரு முறை கூறினபோது,
15 பொல்லாத ஆவி அவர்களிடம்,
''இயேசுவை அறிவேன், பவுலும் எனக்குத்
தெரியும், ஆனால் நீங்கள் யார்?'' என்று
கேட்டது. 16 பொல்லாத ஆவி பிடித்த
மனிதனும் அவர்கள்மேல் பாய்ந்து அவர்
கள் எல்லாரையும் வன்மையாகத் தாக்கிக்
கீழே வீழ்த்தினான். அவர்கள் ஆடைகளை
இழந்து, காயங்களுடன் அந்த வீட்டை
விட்டு ஓடினார்கள். 17 இது எபேசுவில்
இருந்த யூதர் கிரேக்கர் அனைவருக்கும்
தெரியவந்தது; அவர்கள் எல்லாருக்கும்
அச்சம் உண்டாயிற்று. ஆண்டவராகிய
இயேசுவின் திருப்பெயர் புகழ்பெற்றது.
18 ஆண்டவரிடம் நம்பிக்கை கொண்டவர்
களும் பலர் வந்து, தங்களுடைய மந்
திரப் பழக்கங்களையும் அவற்றின் நுணுக்கங்
களையும் வெளிப்படையாகச் சொல்லி ஒப்
புக்கொண்டார்கள். 19 மாயவித்தைக்கா
ரருள் பலர் தம் நூல்களைக் கொண்டு
வந்து எல்லார் முன்னிலையிலும் எரித்
தழித்தனர். அவற்றின் விலையைக் கணக்
கிட்டபோது, அது ஐம்பதினாயிரம் வெள்
ளிக்காசு எனத் தெரியவந்தது. 20 ஆண்
டவருடைய வார்த்தை இவ்வாறு ஆற்
றல் பொருந்தியதாய்ப் பரவி வல்லமை
யுடன் மேலோங்கிற்று.

### எபேசுவில் அமளி

21 இவை யாவும் நடந்தபின், பவுல்
மக்கெதோனியா அகாயா நாடுகளைக்
கடந்து எருசலேமுக்குப் போக வேண்டு
மென்று தம் மனத்தில் முடிவு செய்து
கொண்டார். தாம் அங்கே போனபின்
ரோமாபுரியையும் பார்க்க வேண்டுமென்
றும் தமக்குள் சொல்லிக்கொண்டார்.
22 இப்படி முடிவு செய்தபின், தமக்குப்
பணிவிடை செய்தவர்களுள் தீமோத்தேயு,
ஏரஸ்து என்ற இருவரையும் மக்கெதோ
னியாவுக்கு அனுப்பிவிட்டு, அவர் சிறிது
காலம் ஆசியாவில் தங்கினார்.

23 அக்காலத்தில் ஆண்டவரின் நெறி
சம்பந்தமாக எபேசுவில் பெரியதோர்
அமளி உண்டாயிற்று. 24 அங்கே தெமேத்
திரியு என்னும் ஒரு தட்டான் இருந்
தான். அர்த்தெமி* தேவதையின் கோவில்
போன்ற சிறு உருவங்களை அவன் வெள்ளி
யினால் செய்துவந்தான்; அதனால் கம்மி
யத் தொழிலாளருக்கு மிகுந்த ஆதாயம்
கிடைக்கச் செய்தான். 25 அவன் அவர்
களையும் அவர்களைப் போன்ற மற்றத்
தொழிலாளரையும் ஒன்றுகூட்டி, ''தொழி
லாள மக்களே, நமது தொழிலினால்
நமக்கு நல்ல பிழைப்பு இருக்கிறதென்
பது உங்களுக்குத் தெரியும். 26 ஆனால்,
இந்தப் பவுல் என்பவன், 'மனித கையி
னால் செய்யப்படும் தெய்வங்கள் தெய்
வங்களல்ல' என்று எபேசுவில் மட்டு
மன்றி, கிட்டத்தட்ட ஆசியா முழுவதி
லுமே சொல்லி, பெருந்திரளான மக்கள்
இதை நம்புமாறு செய்து, அவர்களுடைய
மனத்தைத் திருப்பிவிட்டான்; நீங்கள்
இதைக் கண்டும் கேட்டும் வருகிறீர்கள்.
27 இதனால் பெருங்கேடு விளையக்கூடும்.
நம்முடைய தொழிலுக்கு மதிப்பே இல்
லாமற்போய்விடும்; அது மட்டுமன்று,
மாபெரும் தேவதையாகிய அர்த்தெமி
யின் கோவில் ஒரு சிறப்பும் இல்லாத
தென்று எண்ணப்படும், முழு ஆசியா
வும், ஏன் முழு உலகமுமே வணங்கிவரும்
அர்த்தெமியின் மாட்சிமையும் மங்கிப்
போகும்'' என்று சொன்னான்.

28 அவர்கள் இதைக் கேட்டு ஆத்திர
மடைந்து, ''எபேசியரின் அர்த்தெமி
வாழ்க!'' என்று மீண்டும் மீண்டும் கத்தி
னார்கள். பட்டணமெங்கும் குழப்பம் உண்
டாயிற்று. 29 பவுலுக்கு வழித்துணையாக
வந்திருந்த மக்கெதோனியராகிய காயு,
அரிஸ்தர்க்கு என்பவர்களைப் பிடித்து
இழுத்துக்கொண்டு அவர்கள் ஒரே கூட்ட
மாய் அரங்க மேடைக்கு ஓடினார்கள்.
30 பவுல் இதை அறிந்து, அந்தக் கூட்
டத்தின்முன் போய் நிற்க விரும்பினார்.
ஆனால், சீடர் அவரைப் போக விட
வில்லை. 31 ஆசிய நாட்டு அதிகாரிகளுள்
அவருக்கு நண்பராயிருந்த சிலரும் அவ
ரிடம் ஆள் அனுப்பி, அரங்க மேடைப்
பக்கமே தலைகாட்ட வேண்டாம் என்று
அவரை வருந்திக் கேட்டுக்கொண்டார்கள்.
32 கூட்டத்தில் குழப்பம் ஏற்பட்
டிருந்ததால், சிலர் இப்படியும், சிலர் அப்
படியும் கூச்சலிட்டனர். தாங்கள் வந்து
கூடினதற்குக் காரணம் என்னவென்பது
கூடப் பெரும்பாலாருக்குத் தெரியா
திருந்தது. 33 அப்பொழுது யூதர்கள் அலெக்
சந்தர் என்பவனை முன்னுக்குத் தள்ளி
னார்கள்; கூட்டத்தாருள் சிலர் குழப்பத்தின்
காரணத்தை அவனுக்கு எடுத்துரைத்த
னர். அலெக்சந்தரும் சைகை காட்டி
மக்களுக்கு நியாயத்தை எடுத்துரைக்கப்
பார்த்தான். 34 ஆனால், அவன் யூதன்

* இப்பெயர் ரோமரால் 'தியானா' என்று வழங்கப்பட்டுவந்தது.

என்பதை அவர்கள் அறிந்தபோது, ''எபே
சியரின் மாபெரும் அர்த்தெமி வாழ்க!''
என்று எல்லாரும் சேர்ந்து ஏறத்தாழ
இரண்டு மணி நேரம் கத்தினர். 35 நக
ரத்தின் ஆணையாளர் கூட்டத்தை அமைதி
யாயிருக்கச் செய்து, ''எபேசிய மக்களே,
மாபெரும் அர்த்தெமிக்கும் வானத்தி
னின்று விழுந்த சிலைக்கும் எபேசியரின்
பட்டணமே பொறுப்பாளி என்பதை அறி
யாதவனும் உண்டா? 36 இவற்றை எவரா
லும் மறுக்க இயலாது. ஆகையால்,
நீங்கள் அமைதியாயிருக்க வேண்டும். அவ
சரப்பட்டு எதையும் செய்ய வேண்டாம்.
37 நீங்கள் கொண்டுவந்த இந்த மனிதர்
கோவில் கொள்ளைக்காரருமல்ல, நம்
முடைய தேவதையை நிந்திக்கிறவரு
மல்ல. 38 தெமேத்திரியுவுக்கும் அவனைச்
சேர்ந்த தொழிலாளருக்கும் யார் மீதா
வது வழக்கு இருக்குமானால், அதை விசா
ரணை செய்யும் நாள்களுண்டு; அதிகாரி
களும் இருக்கிறார்கள். அங்கே ஒருவர்மீது
ஒருவர் வழக்குத் தொடரட்டும். 39 இன்
னும் எதைப்பற்றியாவது நீங்கள் கேட்க
வேண்டுமானால், சட்டப்படி கூடும்
சபையில் அதைத் தீர்த்துக்கொள்ளலாம்.
40 இன்று நடந்தவை சம்பந்தமாக நாம்
கலகம் செய்ததாக நம்மீது குற்றம் சுமத்
தப்படலாம். ஏனெனில், இவை கார
ணம் எதுவுமின்றி நடந்திருக்கின்றன;
இந்த முறைகேடான கூட்டத்தைப்பற்றி
எவ்வகையான விளக்கமும் நம்மால் அளிக்க
இயலாது'' என்று சொன்னான். 41 இவ்
வாறு சொல்லி அவன் கூட்டத்தைக்
கலைத்துவிட்டான்.

### பவுல் மக்கெதோனியாவுக்கும் கிரேக்க நாட்டுக்கும் செல்லுதல்

**20** கலகம் அடங்கியபின் பவுல் சீடரை
வரவழைத்துத் தைரியத்தோடிருக்கச்
சொல்லிவிட்டு, அவர்களிடம் விடைபெற்
றுக்கொண்டு, மக்கெதோனியாவுக்குப்
புறப்பட்டுப் போனார். 2 அவர் அந்தப்
பகுதிகள் வழியாகச் சென்று, ஆங்காங்
கிருந்த சீடருக்கு ஊக்கமளிக்கும் வகை
யில் பல வார்த்தைகளைக் கூறிவிட்டு,
கிரேக்க நாடு போய்ச் சேர்ந்தார். 3அங்கே
அவர் மூன்று மாதங்கள் கழித்தார். அவர்
சீரியா நாட்டுக்குக் கப்பலேறக் காத்திருக்
கையில், தமக்கு விரோதமாக யூதர் சதித்
திட்டமிட்டதை அறிந்தபடியால், மக்கெ
தோனியா வழியாகத் திரும்பிச் செல்லத்
தீர்மானித்தார். 4 அவருடன் பிருவின்
மகனாகிய பெரோயா ஊரான் சோபத்
தார், தெசலோனிக்கேயருள் அரிஸ்தர்க்கு,
செக்குந்து என்பவர்கள், தெர்பை ஊரான்
காயு, தீமோத்தேயு, ஆசியா நாட்டா
ராகிய தீகிக்கு, துரோப்பீமு ஆகிய இவர்
கள் இருந்தார்கள். 5 இவர்கள் முன்ன
தாகவே போய், துரோவாவில் எங்களுக்
காகக் காத்துக்கொண்டிருந்தார்கள்.

6. நாங்கள் புளிப்பில்லாத அப்பப் பண்
டிகை கழிந்தபின் பிலிப்பிப் பட்டணத்திலி
ருந்து கப்பலில் புறப்பட்டோம்; ஐந்து
நாளில் துரோவாவிலிருந்த அவர்களிடம்
போய்ச் சேர்ந்தோம்; அங்கே ஏழு நாள்
தங்கினோம்.

### துரோவாவில் நடந்தவை

7 வாரத்தின் முதல் நாளில்* அப்பம்
பிட்கும்படி நாங்கள் கூடியிருக்கையில்,
பவுல் சீடரோடு கலந்து பேசலானார்.
அவர் மறுநாள் புறப்பட வேண்டியிருந்த
தால், நள்ளிரவு வரையில் பேசிக்கொண்
டேயிருந்தார். 8 நாங்கள் கூடியிருந்த
மாடியறையில் பல விளக்குகள் இருந்தன.
9 ஐத்திகு என்னும் இளைஞன் ஒருவன்
பலகணியில் உட்கார்ந்திருந்தான். பவுல்
பேச்சை நீட்டிக்கொண்டே போகையில்
தூக்கத்தால் அயரத் தொடங்கினான்.
தூக்கம் மேலிடவே, அவன் அயர்ந்து
மூன்றும் மெத்தையிலிருந்து கீழே விழுந்
தான். அவனைத் தூக்கி எடுத்த
போது அவன் பிணமாயிருந்தான்.
10 உடனே பவுல் கீழே இறங்கிப்
போய், அவன்மீது தம்மைக் கிடத்தி,
அவனை அணைத்துக்கொண்டு, ''கூச்சல்
போடாதீர்கள். இவன் உயிரோடுதான்
இருக்கிறான்'' என்றார். 11 பிறகு மாடிக்
குப்போய், அப்பம் பிட்டு உட்கொண்ட
பின் அவர்களோடு நெடுநேரமாகப்
பொழுது விடியும்வரையில் பேசிக்கொண்
டிருந்துவிட்டுப் புறப்பட்டார். 12 உயி
ரோடிருந்த அந்த இளைஞனை அவர்கள்
கூட்டிச் சென்றார்கள். அதனால் அவர்
களுக்கு அளவற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று.

### துரோவாவிலிருந்து மிலேத்துவுக்குப் பயணம் செய்தல்

13 பவுல் அஸ்ஸோ பட்டினம் வரைக்
கும் தரை வழியாகப் போக வேண்டுமென்
றிருந்தபடியால், அவரை அங்கே கப்ப
லில் ஏற்றிக்கொள்வதற்காக, அவர் திட்ட
மிட்டபடியே, நாங்கள் முன்னதாகவே
கப்பலில் புறப்பட்டு அங்கே போயிருந்
தோம். 14 அவ்வாறே அவர் அஸ்ஸோ
வில் எங்களைச் சந்தித்தார். அவரை
நாங்கள் கப்பலில் ஏற்றிக்கொண்டு மித்தி
லேனே பட்டினத்துக்குப் போனோம்.
15 அங்கிருந்து புறப்பட்டு, மறுநாள்

* யூதர் கணக்குப்படி, சனிக்கிழமை மாலையில்.

கீயு தீவின் பக்கமாகச் சென்றோம்; அடுத்த நாள் நேராகச் சென்று சாமு தீவையும், அதற்கடுத்த நாள் மிலேத்துப் பட்டினத்தையும் அடைந்தோம். 16 ஏனெனில், பெந்தெகொஸ்தே நாளில்* எப்படியாவது தாம் எருசலேமில் இருக்க வேண்டுமென்று பவுல் எண்ணினதால், ஆசியாவில் தங்கிக் காலந்தாழ்த்த அவர் விரும்பவில்லை.; ஆகவே, அவர் எபேசு பட்டினத்திற்குப் போகக் கூடாதெனத் தீர்மானித்திருந்தார்.

### எபேசிய மூப்பருக்குப் பவுலின் பிரிவுரை

17 அவர் மிலேத்துவிலிருந்து எபேசுவுக்கு ஆளனுப்பி, சபை மூப்பர்களை வரவழைத்தார். 18 அவர்கள் வந்து சேர்ந்ததும் அவர் அவர்களிடம், ''நான் ஆசியா நாட்டில் கால்வைத்த நாள்முதல் அங்கிருந்த காலமெல்லாம் எப்படி உங்களோடிருந்து, 19 யூதருடைய சதித்திட்டங்களால் எனக்கு வந்த கடுந்துன்ப நேரங்களில், மிகுந்த தாழ்மையோடும் கண்ணீரோடும் ஆண்டவருக்குச் சேவை செய்தேன் என்பது உங்களுக்குத் தெரியும். 20 நன்மை பயக்கும் போதனைகளுள் எதையும் நான் உங்களுக்கு அறிவியாமல் இருக்கவில்லை. வெளியிடங்களிலும் வீடு வீடாகவும் உங்களுக்கு அறிவுரை கூறிப் போதித்தேன். 21 யூதராயினும் கிரேக்கராயினும் ஒவ்வொருவரும் மனமாற்றமடைந்து கடவுள் பக்கம் திரும்ப வேண்டுமென்றும், நம்முடைய ஆண்டவராகிய இயேசுவினிடம் நம்பிக்கை கொள்ள வேண்டுமென்றும் வலியுறுத்திக் கூறினேன். இதுவும் உங்களுக்குத் தெரியும். 22 ஆவியானவர் என்னைக் கட்டாயப்படுத்துகிறார். நான் இப்போது எருசலேமுக்குப் போகிறேன். அங்கே எனக்கு என்னென்ன நேரிடுமோ, நான் அறியேன். 23 ஆனால், சிறைச்சாலையும், பலவகைத் துன்பமும் எனக்காகக் காத்திருக்கின்றன என்று தூய ஆவியானவர் ஒவ்வோர் ஊரிலும் எனக்கு உணர்த்தி வருவதை மட்டும் அறிவேன். 24 என்னைப் பொருத்தவரையில், என் உயிர் எனக்கு ஒரு பொருட்டன்று. ஆண்டவராகிய இயேசு எனக்குக் கொடுத்திருக்கும் ஊழியத்தை, அதாவது கடவுளின் அருளைப்பற்றிய நற்செய்தியை வலியுறுத்தி அறிவிக்கும் வேலையைச் செய்து முடித்துவிட்டு, என் வாழ்க்கை ஓட்டத்தை முடிப்பேனானால், அதுவே எனக்குப் போதும்.

25 ''இப்போது இதைக் கவனியுங்கள்: நான் உங்களிடையே சுற்றி அலைந்து, 'இதோ, கடவுளின் அரசு!' என்று அறிவித்து வந்தேன். ஆனால், இனிமேல் உங்களுள் எவரும் என் முகத்தைப் பார்க்கப் போவதில்லை என்பது எனக்குத் தெரியும். 26 எனவே, இன்று நான் இதை உங்களுக்கு வலியுறுத்திக் கூறுகிறேன். உங்களுள் யாராவது கெட்டழிந்தால், அது என் குற்றமாகாது. 27 ஏனெனில், கடவுளுடைய திட்டம் முழுவதையும் உங்களுக்கு அறிவித்துவிட்டேன், ஒன்றையும் மறைத்து வைக்கவில்லை. 28 நீங்கள் உங்களையும் மந்தை முழுவதையும் கவனமாகப் பார்த்துக்கொள்ளுங்கள். கடவுள் தமது சொந்த இரத்தத்தினால் சம்பாதித்துக்கொண்ட அவருடைய திருச்சபையை மேய்ப்பதற்காக, தூய ஆவியானவர் உங்களை அந்த மந்தையின் மேற்பார்வையாளராக வைத்திருக்கிறார். 29 நான் போனபின் கொடிய ஓநாய்கள் உங்களிடையே வரும் என்பது எனக்குத் தெரியும். அவை மந்தையைத் தப்பி ஓடாதபடி தாக்கும். 30 மேலும், சிலர் உங்கள் நடுவிலிருந்தே கிளம்புவர். அவர்கள் சீடர்களைத் தம் பக்கம் இழுத்துக்கொள்வதற்காக உண்மையைத் திரித்துக் கூறுவார்கள். இதுவும் எனக்குத் தெரியும். 31 ஆகையால், விழிப்பாயிருங்கள். நான் மூன்று ஆண்டுகள் அல்லும் பகலும் ஓயாமல் கண்ணீரோடு ஒவ்வொருவருக்கும் அறிவுரை கூறிவந்தேன் என்பதை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். 32 இப்பொழுது நான் உங்களைக் கடவுளிடமும் அவருடைய அருள் நிறைந்த வார்த்தையின் வழிநடத்துதலுக்கும் ஒப்படைக்கிறேன். நீங்கள் ஆன்மீக வளர்ச்சியடையும்படி செய்யவும், கடவுளுக்கெனப் பிரித்து வைக்கப்பட்ட அனைவருக்கும் உரிய உரிமைப்பங்கு உங்களுக்கும் கிடைக்கும்படி செய்யவும் அந்த வார்த்தைக்கு வல்லமை உண்டு. 33 ஒருவருடைய வெள்ளியையோ பொன்னையோ ஆடையையோ நான் விரும்பினதில்லை. 34 என்னுடைய தேவைகளுக்காகவும், என்னுடனிருந்தவர்களுடைய தேவைகளுக்காகவும் இந்தக் கைகளே வேலை செய்தன என்பதை நீங்கள் அறிவீர்கள். 35 இவ்வாறு பாடுபட்டு உழைத்துத் திக்கற்றவர்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்று பலவகையில் உங்களுக்குக் காட்டினேன். 'பெறுவதினும் தருவதே இன்பம்' என்று ஆண்டவராகிய இயேசு தாமே சொல்லியிருப்பதை மறவாதீர்கள்'' என்று சொன்னார்.

36 இவற்றைச் சொன்னபின் அவர் அவர்கள் எல்லாரோடும் சேர்ந்து முழந்தாள்படியிட்டு ஜெபம் செய்தார். 37 அப்பொழுது எல்லாரும் பவுலைக் கட்டித் தழுவி முத்தமிட்டுக் கதறி அழுதனர்.

* திருத்தூது. 2:1 அடிக்குறிப்பைப் பார்க்க.
**20:18** 2 கொரி. 1:8, 9. **20:35** எபே. 4:28.

38 இனிமேல் தம் முகத்தை அவர்கள் பார்க்கப்போவதில்லை என்று அவர் சொன்னது அவர்களை மிகுந்த துயரத்தில் ஆழ்த்தியது. பிறகு அவர்கள் கப்பல் வரைக்கும் போய் அவரை வழியனுப்பினார்கள்.

### பவுல் எருசலேமுக்குச் செல்லுதல்

21 நாங்கள் அவர்களை விட்டுப் பிரிந்த பின் கப்பலில் புறப்பட்டு நேராகப் போய், கோஸ் தீவை அடைந்தோம்; மறு நாள் ரோது தீவுக்குச் சென்று, அங்கிருந்து பத்தாரா பட்டினம் போய்ச் சேர்ந்தோம்; 2 அங்கே பெனிக்கியா நாட்டுக்குச் செல்லும் ஒரு கப்பலைக் கண்டு அதில் ஏறிப்போனோம். வழியில் சீப்புரு தீவு தென்பட்டது. 3 நாங்கள் அங்கே போகாமல், அதன் தென்புறமாகப் போய்ச் சீரியா நாட்டை நோக்கிச் சென்று, தீரு பட்டினத்தை அடைந்தோம். அங்கே கப்பலின் சரக்கை இறக்க வேண்டியிருந்தது. 4 அந்தச் சமயத்தில் நாங்கள் அங்குள்ள சீடரைத் தேடிக் கண்டுபிடித்து, அவர்களோடு ஏழுநாள் தங்கினோம். அவர்கள் தெய்வ ஆவியினால் எச்சரிக்கப்பட்டதால் பவுலினிடம், ''நீர் எருசலேமுக்குச் செல்லவே வேண்டாம்'' என்று கேட்டுக்கொண்டார்கள். 5 எனினும், அந்த நாள்களை அவர்களோடு கழித்தபின், நாங்கள் புறப்பட்டு எங்கள் பயணத்தைத் தொடங்கினோம். அப்பொழுது அவர்கள் எல்லாரும் எங்களை வழியனுப்ப மனைவி மக்களோடு பட்டினத்தின் எல்லையைத் தாண்டும்வரை வந்தார்கள். கடற்கரையில் நாங்கள் முழந்தாள்படியிட்டு ஜெபம் செய்துவிட்டு, 6 ஒருவரிடமொருவர் விடை பெற்றுக்கொண்டோம். பிறகு நாங்கள் கப்பலில் போய் ஏறினோம். அவர்கள் வீடுகளுக்குத் திரும்பினார்கள்.

7 நாங்கள் தீருவிலிருந்து புறப்பட்டு, பித்தொலெமாய்ப் பட்டினம் வந்து சேர்ந்து கப்பற் பயணத்தை முடித்துக்கொண்டோம். அங்கே சகோதரரைக் கண்டு நலம் விசாரித்துவிட்டு, அவர்களுடன் ஒரு நாள் தங்கியிருந்தோம். 8 மறுநாள் நாங்கள் புறப்பட்டு செசரியாவுக்கு வந்து, தேர்ந்தெடுக்கப்பட்ட ஏழு பேருள் ஒருவரான பிலிப்பு என்னும் அருட்செய்தியாளரின் வீட்டிற்குச் சென்று அவருடன் தங்கினோம். 9 அவருக்கு நான்கு கன்னிப் பெண்மக்கள் இருந்தார்கள்; அவர்கள் இறைவாக்கு உரைத்துவந்தார்கள். 10 நாங்கள் பல நாள் அங்கே தங்கியிருந்தோம். அப்பொழுது இறைவாக்குரைப்பவராகிய அகபு யூதேயாவிலிருந்து வந்தார். 11 அவர் எங்களிடம் வந்து, பவுலின் அரைக்கச்சையை எடுத்துத் தம் கால்களையும் கைகளையும் கட்டிக்கொண்டு, ''இந்த அரைக்கச்சையைச் சொந்தமாக உடைய மனிதனை எருசலேமில் யூதர்கள் இப்படிக் கட்டி, பிற இனத்தவர் கையில் ஒப்புக்கொடுப்பார்கள். தூய ஆவியான வர் தாமே இதைச் சொல்லுகிறார்'' என்றார். 12 இதைக் கேட்டபோது, நாங்களும் அங்கே இருந்தவர்களும் பவுலை எருசலேமுக்குப் போக வேண்டாமென்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டோம். 13 அதற்குப் பவுல், ''ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? உங்கள் அழுகையால் என் மன உறுதியைச் சிதைத்துவிடப்பார்க்கிறீர்களா? நான் ஆண்டவராகிய இயேசுவின் திருப்பெயருக்காக எருசலேமில் கட்டி வைக்கப்படுவதற்கு மட்டுமன்றி, இறப்பதற்கும் ஆயத்தமாயிருக்கிறேன்'' என்றார். 14 அவரை இணங்கவைக்க எங்களால் இயலாமற்போகவே, ஆண்டவருடைய திருவுளப்படி நடக்கட்டும் என்று சொல்லிப் பேசாதிருந்துவிட்டோம்.

15 அங்கே பல நாள்களைக் கழித்தபின், நாங்கள் பயணத்துக்கான ஆயத்தங்களைச் செய்துகொண்டு எருசலேமுக்குப் புறப்பட்டுப் போனோம். 16 செசரியா பட்டினத்துச் சீடர் சிலர் எங்களோடு வந்தனர். சீப்புரு தீவைச் சேர்ந்த மினாசோன் என்னும் பழைய சீடன் ஒருவன் வீட்டில் நாங்கள் தங்க வேண்டியிருந்ததால், அவர்கள் அவனையும் தங்களோடு அழைத்துவந்தார்கள்.

### பவுல் யாக்கோபைச் சந்தித்தல்

17 நாங்கள் எருசலேம் போய்ச் சேர்ந்த போது, சகோதரர்கள் எங்களை மகிழ்ச்சியுடன் வரவேற்றார்கள். 18 மறுநாள் பவுல் எங்களைக் கூட்டிக்கொண்டு யாக்கோபைப் பார்க்கப் போனார். அங்கே மூப்பர் எல்லாரும் வந்திருந்தனர். 19 அவர் அவர்களுக்கு வாழ்த்துக் கூறிவிட்டு, தாம் ஆற்றிய பணியின் மூலம் கடவுள் யூதரல்லாதாரிடையே செய்தவற்றை ஒவ்வொன்றாக எடுத்துரைத்தார். 20 அவர்கள் அதைக் கேட்டு, கடவுளைப் போற்றிப் புகழ்ந்தார்கள். ஆயினும், அவர்கள் அவரை நோக்கி, ''சகோதரனே, யூதருள் எத்தனையோ ஆயிரம் மக்கள் ஆண்டவரிடம் நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள். அவர்கள் எல்லாரும் நீதிச்சட்டத்தில் மிகுந்த ஆர்வமுள்ளவர்கள். 21 அவர்கள் உம்மைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறார்கள். பிற இனத்தவரிடையே வாழும் யூதன் எவனும் தன் பிள்ளைகளுக்கு விருத்தசேதனம் செய்யவோ, அவர்கள் நம்முடைய முறைமைகளின்படி நடக்கவோ வேண்டியதில்லை என்று

நீர் சொல்லுகிறீராம். யூதர்கள் மோசே
யைப் பின்பற்றுவதையும் விட்டுவிடும்படி
போதிக்கிறீராம். 22 நீர் வந்திருக்கிறீர்
என்பது அவர்களுக்கு எப்படியும் தெரிய
வரும். அப்படியானால் என்ன செய்ய
லாம்? 23 நாங்கள் உமக்குச் சொல்கிற
படி செய்யும். பொருத்தனை செய்து
கொண்ட நான்கு மனிதர்கள் இங்கே
இருக்கிறார்கள். 24 அவர்களைக் கூட்டிக்
கொண்டுபோய் அவர்களோடு சேர்ந்து
தூய்மைப்படுத்தும் சடங்கு செய்துகொள்
ளும். அவர்கள் தலைமுடியை மழிப்பதற்கு
ஆகும் செலவையும் நீரே கொடுத்துவிடும்.
இப்படிச் செய்தால் உம்மைப்பற்றிக் கேள்
விப்பட்டவை அனைத்தும் பொய் என்ப
தையும், நீரும் நீதிச்சட்டத்தைக் கடைப்
பிடித்து நடப்பவரென்பதையும் எல்லாரும்
அறிந்துகொள்வர். 25 ஆண்டவரிடம்
நம்பிக்கை கொண்டிருக்கும் பிற இனத்த
வரைப் பொருத்தவரையில் நாங்கள்
செய்த தீர்மானமாவது, அவர்கள்
தெய்வச் சிலைகளுக்குப் பலியிடப்பட்டது,
இரத்தம் நீக்கப்படாத இறைச்சி, கழுத்து
நெரிக்கப்பட்டுச் செத்தது ஆகியவற்றை
உண்பதையும், கெட்ட நடத்தையையும்
தவிர்க்க வேண்டும் என்பது. இதை அவர்
களுக்கு எழுதித் தெரிவித்துவிட்டோம்''
என்றார்கள். 26 அதன்பேரில் பவுல் அந்த
மனிதரை மறுநாள் கூட்டிக்கொண்டு
போய், அவர்களோடு தாமும் சடங்கின்
படி தூய்மை செய்துகொள்ளலானார்;
பிறகு திருக்கோவிலுக்குள் சென்று, தூய்
மைச் சடங்குகளின் காலம் எப்போது
முடியுமென்றும், அவர்களுள் ஒவ்வொரு
வனுக்காகவும் அப்போது பலி செலுத்தப்
படும் என்றும் தெரிவித்தார்.

## பவுல் கைதியாகப் பிடிக்கப்படுதல்

27 அதற்கான ஏழு நாள்களும் முடியப்
போகும் சமயத்தில், ஆசியா நாட்டி
லிருந்து வந்திருந்த யூதர் சிலர் அவரைத்
திருக்கோவிலில் கண்டனர். உடனே அவர்
கள் மக்கள் எல்லாரையும் தூண்டிவிட்டு
அவரைப் பிடித்துக்கொண்டு, 28 ''இஸ்ர
வேல் மக்களே, உதவிக்கு வாருங்கள்.
இந்த ஆள்தான் இஸ்ரவேல் மக்களுக்கும்
நீதிச்சட்டத்திற்கும் இந்த இடத்திற்கும்
விரோதமாக எங்கும் போய் எல்லாரிட
மும் பேசி வருகிறவன். அவ்வாறு செய்த
தோடு, இப்போது திருக்கோவிலுக்குள்
கிரேக்கரைக் கொண்டுவந்து, இந்தப் புனி
தமான இடத்தைத் தீட்டுப்படுத்தியுமிருக்
கிறான்'' என்று கத்தினார்கள். 29 எபேசி
யனாகிய துரோப்பீமு என்பவன் நகரத்தில்
பவுலுடன் இருந்ததை அவர்கள்
முன்னே பார்த்திருந்தார்கள். எனவே,
அவனைப் பவுல் திருக்கோவிலுக்குள்
கொண்டு வந்திருப்பார் என்று நினைத்துக்
கொண்டார்கள். 30 பிற்பாடு நகரம் முழு
வதிலும் அமளி உண்டாயிற்று; மக்களும்
திரண்டு ஓடிவந்தார்கள். அவர்கள் பவு
லைப் பிடித்துத் திருக்கோவிலுக்கு வெளியே
இழுத்துக்கொண்டு போனார்கள். உடனே
கதவுகள் அடைக்கப்பட்டன. 31 அவர்கள்
அவரைக் கொல்லப்போகும் நேரத்தில்,
எருசலேம் முழுதும் குழப்பத்திலிருக்கிற
தென்ற செய்தி கோட்டையிலிருந்த படைத்
தலைவனுக்கு வந்தெட்டியது. 32 உடனே
அவன் படைவீரரையும் நூற்றுவர்
தலைவர்களையும் கூட்டிக்கொண்டு படிகள்
வழியே இறங்கி ஓடிவந்தான். படைத்
தலைவனையும், படைவீரரையும் கண்டதும்,
அவர்கள் பவுலை அடிப்பதை நிறுத்தி
விட்டார்கள். 33 அப்பொழுது அத்தலை
வன் பவுலின் அருகில் சென்று அவரைப்
பிடித்துக்கொண்டு, அவரை இரண்டு
சங்கிலிகளினால் கட்டும்படி கட்டளையிட்
டான்; பிறகு, ''இவன் யார்? இவன்
என்ன செய்தான்?'' என்று விசாரித்தான்.
34 கூட்டத்திலிருந்த சிலர் இப்படியும்,
சிலர் அப்படியும் கூச்சலிட்டனர். அந்தப்
பெருங்கூச்சல் காரணமாக நடந்ததை
அவனால் சரியாகத் தெரிந்துகொள்ள
முடியவில்லை. ஆகையால் அவரைக் கோட்
டைக்குள் கொண்டுபோகும்படி கட்டளை
யிட்டான். 35 படைவீரர் அவரோடு
படிக்கட்டுக்கருகில் வந்தபோது, அவரைத்
தூக்கிக்கொண்டு போகும்படி நேர்ந்தது;
ஏனெனில், கூட்டம் கட்டுமீறி நெருக்கிக்
கொண்டிருந்தது. 36 அவர்களெல்லாரும்,
''இவனைத் தொலைத்துவிடும்'' என்று
கத்திக்கொண்டே பின்னால் வந்துகொண்
டிருந்தனர்.

## பவுல் தம்மைப்பற்றிய விவரம் சொல்லுதல்

37 அவர்கள் பவுலைக் கோட்டைக்குள்
கொண்டுபோகவிருந்தபோது, அவர் படைத்
தலைவனிடம், ''நான் உம்மிடம் ஒரு
வார்த்தை சொல்லலாமா?'' என்று கேட்
டார். அதற்கு அவன், ''உனக்குக் கிரேக்க
மொழிகூடத் தெரியுமா? 38 அப்படியா
னால் சில நாள்களுக்குமுன் புரட்சி
செய்து, கொலைகாரக் கூட்டத்தைச்
சேர்ந்த நாலாயிரம் பேரை பாலைநிலத்
துக்குக் கூட்டிக்கொண்டு ஓடிப்போன
அந்த எகிப்தியன்தான் நீ, அல்லவா?''
என்று கேட்டான். 38 அதற்குப் பவுல்,
''நான் ஒரு யூதன், சிலிசியா நாட்டி
லுள்ள தர்சு பட்டணத்தைச் சேர்ந்தவன்.
அது சிலிசியா நாட்டில் பெயர்பெற்ற
ஓர் ஊர். மக்களிடம் பேச எனக்கு அனு
மதி கொடுக்குமாறு உம்மைக் கேட்டுக்

**21:23, 24** எண். 6:13—21. **21:25** திருத்தூது. 15:29,

கொள்ளுகிறேன்'' என்றார். 40 அனுமதி
கொடுக்கப்பட்டபோது பவுல் படிக்கட்
டில் நின்றுகொண்டு அமைதியாயிருக்கும்
படி மக்களை நோக்கிச் சைகை காட்டினார்.
உடனே சந்தடி அடங்கிற்று. அவர்
எபிரேயு மொழியில் பேசத் தொடங்கினார்.

22 ''சகோதரரே, தந்தையரே, இப்
போது நான் உங்களுக்குச் சொல்லப்
போகும் நியாயத்துக்குச் செவி
கொடுங்கள்'' என்றார். 2 அவர் எபிரேயு
மொழியில் பேசினதை அவர்கள் கேட்ட
தும் இன்னும் அமைதியாயிருந்தார்கள்.
3 அப்பொழுது அவர், ''நான் ஒரு யூதன்,
சிலிசியா நாட்டுத் தர்சு பட்டணத்தில்
பிறந்தவன்; ஆனாலும், எருசலேமாகிய
இந்த நகரத்தில் வளர்ந்தவன், நம் மூதா
தையரின் நீதிச்சட்டத்தைக் கமாலியேலின்
பாதத்தருகே திட்பநுட்பமாகக் கற்றவன்.
இன்று நீங்கள் எல்லாரும் கடவுளுக்கடுத்த
வற்றில் ஆர்வங்காட்டுவது போலவே
நானும் காட்டிவந்தேன். 4 நான் இந்தப்
புதிய நெறியைச் சேர்ந்த ஆண்களையும்
பெண்களையும் பிடித்துக் கட்டி, அவர்
களைச் சிறையிலடைத்தேன். அவர்கள்
சாகும்வரை அவர்களைத் துன்புறுத்தி
னேன். 5 இதற்குத் தலைமை ஆசாரியரும்
மூப்பர் சபை முழுதும் சாட்சி. இவர்களிட
மிருந்து தமஸ்குவிலுள்ள நம் சகோதரர்
களுக்குக் கடிதங்கள் வாங்கிக்கொண்டு
போனேன். அங்குள்ள ஆள்களைப் பிடித்
துக்கட்டி எருசலேமுக்குக் கொண்டுவந்து
தண்டனைக்குள்ளாக்கும்படி தமஸ்குவை
நோக்கிப் பயணம் செய்தேன்.

### பவுல் தாம் மனமாற்றமடைந்த வரலாற்றைச் சொல்லுதல்

(திருத்தூது. 9:1–19; 26:12–18)

6 'அப்படிப் பயணம் செய்து தமஸ்
குவை நெருங்கினபோது எனக்கு நடந்த
தைக் கேளுங்கள்: அப்பொழுது மத்தி
யான வேளை; திடீரென்று என்னைச் சுற்றி
லும் வானத்திலிருந்து ஒரு பேரொளி
வீசிற்று. நான் கீழே விழுந்தேன். 7 அப்
பொழுது, 'சவுலே, சவுலே, என்னை ஏன்
துன்புறுத்துகிறாய்?' என்று உரைத்த ஒரு
குரலைக் கேட்டேன். 8 நான், 'ஆண்டவரே,
நீர் யார்?' என்றேன். அவர், 'நீ துன்
புறுத்துகிற நாசரேத்தூர் இயேசுவே நான்'
என்றார். 9 என்னோடு இருந்தவர்கள் ஒளி
யைக் கண்டார்கள்; ஆனால், என்னோடு
பேசினவர் சொன்னதைக் கேட்கவில்லை.
10 பின்னும் நான், 'ஆண்டவரே, நான்
என்ன செய்ய வேண்டும்?' என்று கேட்
டேன். அதற்கு ஆண்டவர் என்னிடம்,
'எழுந்து தமஸ்குவுக்குப் போ; நீ செய்
யும்படி நியமிக்கப்பட்டுள்ள யாவற்றை
யும் குறித்து அங்கே உனக்குச் சொல்லப்
படும்' என்றார். 11 அந்த ஒளியின் மாட்
சியால் நான் பார்வையற்றவனானேன்.
ஆகையால் என்னோடு இருந்தவர்கள்
என்னைக் கைலாகு கொடுத்துக் கூட்டிக்
கொண்டுபோக, நான் தமஸ்குவை அடைந்
தேன்.

12 ''அங்கே அனனியா என்னும் ஒருவர்
இருந்தார். அவர் நீதிச்சட்டத்தின்படி
நடந்துவந்த பக்திமான்; அங்கே
இருந்த எல்லா யூதராலும் நன்கு மதிக்
கப்பெற்றவர். 13 அவர் என் அருகில்
வந்து நின்று, 'சகோதரனே, சவுலே,
பார்வையடைவாயாக' என்றார். அந்
நேரமே நான் பார்வையடைந்து அவ
ரைப் பார்த்தேன். 14 அப்பொழுது அவர்,
'நம்முடைய முன்னோரின் கடவுள், நீ இப்
படித் தம்முடைய திருவுளத்தை அறிய
வும், நீதிபரரைக் காணவும், அவருடைய
திருவாயினின்று வரும் வார்த்தைகளைக்
கேட்கவும் வேண்டுமென்று உன்னைத்
தெரிந்தெடுத்தார். 15 நீ பார்த்தவற்றை
யும் கேட்டவற்றையும் எல்லா மனிதரின்
முன்னிலையிலும் எடுத்துரைக்கும் அவரு
டைய சாட்சியாயிருப்பாய். 16 ஆகவே,
இனிக் காலந்தாழ்த்தத் தேவையில்லை. நீ
எழுந்து, அவருடைய திருப்பெயரைத்
தொழுது வேண்டிக்கொண்டு, திருமுழுக்
குப் பெற்றுக்கொள்; உன் பாவக் கறை
கழுவப்படட்டும்' என்று சொன்னார்.

17 ''பிறகு நான் எருசலேமுக்குத்
திரும்பி வந்தேன். ஒரு நாள் திருக்கோவி
லில் நான் ஜெபம் செய்துகொண்டிருக்கை
யில் பரவசமடைந்து, ஆண்டவரைக் கண்
டேன். 18 அவர் என்னிடம், 'காலந்
தாழ்த்தாமல் எருசலேமை விட்டு விரை
விலேயே போய்விடு. ஏனெனில், நீ என்
னைப்பற்றிச் சொல்லும் சாட்சியத்தை இவர்
கள் ஏற்றுக்கொள்ளப்போவதில்லை'
என்றார். 19 அதனால் நான் அவரிடம்,
'ஆண்டவரே, உம்மிடம் நம்பிக்கை கொண்
டவர்களை நான் காவலில் வைத்தேன்;
தொழுகைக்கூடங்களுக்குச் சென்று
அவர்களை அடித்தேன். 20 உம்முடைய
சாட்சியான ஸ்தேவானுடைய இரத்தம்
சிந்தப்பட்டபோது, நானும் அருகே நின்
றேன்; அதற்கு உடன்பட்டுமிருந்தேன்.
அவரைக் கொன்றவர்களின் மேலாடை
களுக்குக் காவலாயிருந்தேன். இவையாவும்
இந்த ஊராருக்குத் தெரியுமே' என்று
சொன்னேன். 21 அதற்கு அவர், 'புறப்
படு, தொலைவிலுள்ள பிற இனத்தவரிடம்
உன்னை அனுப்பப்போகிறேன்' என்று
சொன்னார்'' என்றார்.

**22:4.5** திருத்தூது. 8:3; 26:9—11, **22:20** திருத்தூது. 7:58; 8:1; 26:10.

22 இதுவரையிலும் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த அவர்கள் இதைக் கேட்டதும், ''இவன் ஒழியட்டும்; இவன் உயிரோடிருக்கவே கூடாது'' என்று உரத்த குரலில் கத்தினார்கள். 23 அவர்கள் இவ்வாறு கூச்சலிட்டுக்கொண்டு, தங்கள் மேலாடைகளை எடுத்து வீசி, காற்றில் மண்ணைவாரியிறைத்துக்கொண்டிருந்ததால், 24 படைத் தலைவன் அவரைக் கோட்டைக்குள் கொண்டுபோகக் கட்டளையிட்டான். அவர்கள் அவருக்கு விரோதமாக இப்படிக் கத்தினதற்கான உண்மைக் காரணத்தை அறிய அவரைச் சவுக்கால் அடித்து விசாரணை செய்யச் சொன்னான். 25 அவர்கள் அவரைச் சவுக்காலடிக்கக் கட்டினபோது, பவுல் அருகே நின்ற நூற்றுவர் தலைவனைப் பார்த்து, ''ஒரு ரோமக் குடிமகனைச் சவுக்காலடிக்க, அதுவும் விசாரணை செய்யாமல் சவுக்காலடிக்க உங்களுக்கு உரிமையுண்டா?'' என்று கேட்டார். 26 நூற்றுவர் தலைவன் அதைக் கேட்டதும் படைத் தலைவனிடம் போய், ''என்ன காரியம் செய்யப்போனீர்? இவன் ஒரு ரோமக் குடிமகனாயிற்றே'' என்று அறிவித்தான். 27 படைத் தலைவன் பவுலினிடம் வந்து, ''நீ ஒரு ரோமக் குடிமகன்தானா? என்னிடம் சொல்'' என்றான். 28 அதற்கு அவர், ''ஆம்'' என்றார். அதைக் கேட்ட அந்தத் தலைவன், ''நான் ஒரு பெருந்தொகை கொடுத்து இந்தக் குடிமை உரிமையைப் பெற்றேன்'' என்று சொல்லப் பவுல், ''நான் ரோமக் குடிமகனாகவே பிறந்தேன்'' என்றார். 29 அவரை விசாரணை செய்ய இருந்தவர்கள் உடனே அவரை விட்டு விலகிக்கொண்டார்கள். படைத் தலைவனும், தான் கட்டி வைத்த மனிதன் ஒரு ரோமக் குடிமகன் என்பதை அறிந்ததும் அச்சமுற்றான்.

### தலைமைச் சங்கத்தின் முன்னிலையிலே

30 யூதர் பவுலின்மீது சுமத்திய குற்றம் இன்னதென்பதைப் படைத் தலைவன் திட்டமாக அறிய விரும்பினான். எனவே, அவன் மறுநாள் பவுலின் கட்டுகளை அவிழ்த்துவிட்டு, தலைமை ஆசாரியர்களையும் தலைமைச் சங்கத்தார் அனைவரையும் வந்து கூடும்படி கட்டளையிட்டான். பிறகு பவுலைக் கொண்டுவந்து அவர்கள் முன்னிலையில் நிறுத்தினான்.

**23** பவுல் தலைமைச் சங்கத்தாரைக் கூர்ந்து நோக்கி, ''சகோதரரே, நான் இந்நாள் வரையிலும் கடவுள் முன்னிலையில் என் மனச்சாட்சிக்கிசைய என் வாழ்க்கையை நடத்திவந்திருக்கிறேன்'' என்று சொன்னார். 2 சொன்னதும், தலைமை ஆசாரியராகிய அனனியா அவரை வாயில் அடிக்கும்படி பக்கத்தில் நின்றவர்களைப் பார்த்துச் சொன்னார். 3 அப்பொழுது பவுல் அவரிடம், ''வெள்ளையடித்த மண் சுவரே, கடவுள் உன்னை அடிப்பார்; நீதிச் சட்டத்தின்படி எனக்குத் தீர்ப்பளிக்க வீற்றிருக்கும் நீ, நீதிச்சட்டத்தை மீறி என்னை அடிக்கக் கட்டளையிடலாமா?'' என்று கேட்டார். 4 அருகே நின்றவர்கள், ''கடவுளின் தலைமை ஆசாரியரையா இப்படி வைகிறாய்?'' என்றார்கள். 5 அதற்குப் பவுல், ''சகோதரரே, இவர் தலைமை ஆசாரியர் என்பது எனக்குத் தெரியாது. 'உன் இனத்தவரின் தலைவரைப்பற்றித் தீதாகப் பேசாதே' என்றல்லவா வேதத்தில் எழுதியிருக்கிறது?'' என்றார். 6 அவர்களுள் ஒரு பகுதியினர் சதுசேயர், மற்றப் பகுதியினர் பரிசேயர் என்பதைப் பவுல் அறிந்துகொண்டு, ''சகோதரரே, நான் ஒரு பரிசேயன்; பரிசேயர் மரபில் வந்தவன். இறந்தவர்கள் உயிர்த்தெழுவார்கள் என்கிற நம்பிக்கை எனக்கு இருப்பதாலே தான் நான் விசாரணைக்காக நிறுத்தப்பட்டிருக்கிறேன்'' என்று தலைமைச் சங்கக் கூட்டத்தில் உரத்துக் கூறினார். 7 அவர் இப்படிச் சொன்னதும், பரிசேயருக்கும் சதுசேயருக்குமிடையே வாக்குவாதம் உண்டாயிற்று; எனவே, கூட்டம் இரண்டாகப் பிரிந்தது. 8 சதுசேயர், உயிர்த்தெழுதல், தெய்வதூதன், ஆவி ஆகியவற்றுள் எதுவும் இல்லை என்று சொல்லுகிறவர்கள். ஆனால், பரிசேயரோ இவை எல்லாம் உண்டென்று ஒப்புக்கொள்ளுகிறவர்கள். ஆகையால் பெருங்கூச்சல் எழுந்தது. 9 அப்பொழுது பரிசேயர் கட்சியைச் சேர்ந்த வேத அறிஞர் சிலர் எழுந்து நின்று, ''இந்த மனிதனிடம் தவறு எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை; ஓர் ஆவியோ ஒரு தெய்வதூதனோ இவனோடு பேசியிருக்கக் கூடாதா?'' என்று வாதாடினர். 10 வாக்குவாதம் வலுத்தபோது, அவர்கள் பவுலைப் பிய்த்தெறிந்துவிடுவார்களோவென்று படைத் தலைவன் அஞ்சி, படைவீரரைப் பார்த்து,''இறங்கிப் போய், அவனை அவர்கள் நடுவிலிருந்து இழுத்துவந்து, கோட்டைக்குள் கொண்டுபோங்கள்'' என்று கட்டளையிட்டான்.

11 அன்றிரவு ஆண்டவர் அவரருகில் நின்று, ''தைரியமாயிரு, என்னைப் பற்றிய செய்தியை நீ எப்படி எருசலேமில் வலியுறுத்திக் கூறினாயோ அப்படியே ரோமாபுரியிலும் கூறி, அங்கேயும் நீ என்னுடைய சாட்சியாயிருக்க வேண்டும்'' என்றார்.

**23:5** யாத். 22;28. **23:6** திருத்தூது. 26:5. பிலி. 3:5. **23:8** மத். 22:23; மாற். 12:18; லூக். 20:27,

### பவுலைக் கொன்றுவிடச் சதித்திட்டம்

12 பொழுது விடிந்தபின் யூதருள் சிலர்
மறைவாகக் கூட்டம்போட்டு, தாம் பவுலைக்
கொன்றுவிடும் வரையில் உண்பதுமில்லை
குடிப்பதுமில்லை என்று சபதம் செய்து
கொண்டனர். 13 இப்படிச் சதித்திட்ட
மிட்டவர்களின் எண்ணிக்கை நாற்பதுக்கும்
மேலிருக்கும். 14 அவர்கள் தலைமை
ஆசாரியர்களிடமும் மூப்பரிடமும் போய்,
''நாங்கள் பவுலைக் கொல்லும்வரை எதை
யும் சாப்பிடுவதில்லை என்று வீரச் சப
தம் செய்துகொண்டோம். 15 ஆகையால்
நீங்களும் தலைமைச் சங்கத்தாரும் அவனு
டைய காரியங்களை இன்னும் திட்டமாக
அறியப்போவதுபோல நடித்து, படைத்
தலைவனுக்கு இப்போது செய்தி அனுப்பி,
அவனை உங்களிடம் கூட்டிவரச் செய்யுங்
கள். அவன் உங்களிடம் வந்து சேருமுன்
நாங்கள் அவனைக் கொன்றுவிட ஆயத்த
மாயிருப்போம்'' என்றார்கள்.

16 இந்தச் சூழ்ச்சி பவுலின் உடன்பிறந்
தாள் மகன் காதுக்கு எட்டினவுடன்,
அவன் கோட்டைக்குப் போய், உள்ளே
நுழைந்து, பவுலுக்கு அதை அறிவித்தான்.
17 பவுல் நூற்றுவர் தலைவர்களுள் ஒரு
வனை அழைத்து, ''இந்த இளைஞனைப்
படைத் தலைவனிடம் அழைத்துச் செல்
லும்; இவன் அவரிடம் அறிவிக்க வேண்
டிய செய்தி ஒன்று இருக்கிறது'' என்றார்.
18 அப்படியே அவன் அந்த
இளைஞனைப் படைத்தலைவனிடம் கூட்டிக்
கொண்டு போய், ''காவலில் வைக்கப்
பட்ட பவுல் என்னை அழைத்து, இந்த
இளைஞனை உம்மிடம் கொண்டுபோகும்படி
கேட்டுக்கொண்டான்; உம்மிடம்
சொல்ல வேண்டிய செய்தி ஏதோ ஒன்று
இவனிடம் இருக்கிறதாம்'' என்றான்.
19 படைத் தலைவன் அவன் கையைப்
பிடித்துத் தனியே அழைத்துச் சென்று,
''நீ என்னிடம் அறிவிக்க வேண்டிய
செய்தி என்ன?'' என்று கேட்க, 20 அவன்,
''யூதர் பவுலின் காரியத்தை இன்னும்
திட்டமாக அறியப்போவதுபோல நடித்து,
அவரை நீர் நாளைக்கு தலைமைச் சங்கத்
தாரிடம் கொண்டுவரும்படி உம்மைக்
கேட்டுக்கொள்வதெனத் தீர்மானித்திருக்
கிறார்கள். 21 நீர் அவர்களுக்கு இணங்க
வேண்டாம்; அவர்களுள் நாற்பது பேருக்கு
மேல் அவரைப் பிடிக்கச் சூழ்ச்சி செய்
திருக்கிறார்கள்; அவரைக் கொன்றுவிடும்
வரையில் தாம் உண்பதுமில்லை குடிப்பது
மில்லை என்று சபதம் செய்துகொண்டார்
கள்; அவர்கள் இப்போது தகுந்த ஏற்
பாடுகளுடனிருக்கிறார்கள்; அவரைக்
கொண்டுபோக நீர் அனுமதி தருவதற்
காகக் காத்துக்கொண்டிருக்கிறார்கள்''
என்று சொன்னான். 22 அப்பொழுது
படைத்தலைவன், ''நீ இதை எனக்கு அறி
வித்ததாக ஒருவருக்கும் சொல்லாதே''
என்று அந்த இளைஞனுக்குக் கட்டளை
யிட்டு அவனை அனுப்பிவிட்டான்.

### மாநிலத் தலைவன் பேலிக்சினிடம் பவுல் அனுப்பப்படுதல்

23 பிறகு அவன் நூற்றுவர் தலைவர்
களுள் இருவரை அழைத்து, ''செசரியாப்
பட்டினம் வரைக்கும் போவதற்கென இரு
நூறு காலாட்படை வீரரையும் எழுபது
குதிரை வீரரையும், இருநூறு ஈட்டி வீர
ரையும் இரவு ஒன்பது மணிக்குள்*
ஆயத்தமாயிருக்கச் செய்யுங்கள்.
24 பவுலை ஏற்றி, மாநிலத் தலைவன்
பேலிக்சினிடம் பத்திரமாகக் கொண்டு
போவதற்காகக் குதிரைகளையும் பார்த்து
வையுங்கள்'' என்று சொன்னான்; 25 பின்
வருமாறு ஒரு கடிதத்தையும் எழுதினான்:

26 ''மதிப்பிற்குரிய மாநிலத் தலைவர்
பேலிக்சுக்கு, 27 கிலவுதியு லீசியா வாழ்த்
துக் கூறி எழுதுவது: யூதர் இந்த மனி
தனைப் பிடித்துக்கொள்ளப் போகும்
நேரத்தில், இவன் ஒரு ரோமக் குடிமகன்
என்பதை நான் கேள்விப்பட்டு, படை
வீரருடன் போய் இவனை விடுவித்தேன்.
28 அவர்கள் இவன்மேல் சுமத்தின குற்
றம் என்ன என்பதை அறிய விரும்பி,
இவனை அவர்களுடைய தலைமைச் சங்கத்
துக்குக் கொண்டுபோனேன். 29 அப்
பொழுது அவர்களுடைய வேத விவாதங்
கள் சம்பந்தமாக இவன் குற்றம் சுமத்தப்
பட்டான் என்பதைக் கண்டேன்; மரண
தண்டனைக்கோ விலங்கிடப்படுவதற்கோ
காரணமான குற்றம் எதுவும் இவன்மீது
சுமத்தப்படவில்லை என்பதையும் கண்
டேன். 30 பிறகு இவனுக்கு விரோத
மாக அவர்கள் ஒரு சதித் திட்டம்
வகுத்திருக்கிறார்கள் என்பது எனக்குத்
தெரியவந்தது. ஆகையால் இவனை உம்
மிடம் அனுப்பிவைக்கிறேன். குற்றம்
சுமத்துகிறவர்கள் இவன் மீதுள்ள வழக்கை
உமது முன்னிலையில் சொல்லும்படி அவர்
களுக்குக்கட்டளையிட்டுமிருக்கிறேன்'' என்று
எழுதினான்.

31 தங்களுக்கிடப்பட்ட கட்
டளையின்படி படைவீரர்கள் பவுலைக் கூட்
டிக்கொண்டு அன்றிரவு அந்திப்பத்திரி
ஊர்வரைக்கும் போனார்கள். 32 மறு
நாள் குதிரை வீரர்கள் மட்டும் அவ
னோடு சென்றார்கள். மற்றவர்கள் கோட்
டைக்குத் திரும்பிவிட்டார்கள். 33 குதிரை

* மூலத்தில், யூதர் கணக்குப்படி, 'இரவு மூன்றும் மணிக்குள்' என்றிருக்கிறது.

வீரர்கள் செசரியா போய்ச் சேர்ந்து,
மாநிலத் தலைவனிடம் கடிதத்தைக்
கொடுத்தார்கள். பவுலையும் அவன்முன்
நிறுத்தினார்கள். 34 மாநிலத் தலைவன்
அதைப் படித்தபின், பவுல் எந்த நாட்
டைச் சேர்ந்தவன் என்று கேட்டான்; அவர்
சிலிசியா நாட்டைச் சேர்ந்தவர் என்று
அறிந்துகொண்டு, 35 அவரிடம், ''உன்
மேல் குற்றம் சுமத்துகிறவர்களும் வந்து
சேர்ந்தபின் உன் வழக்கை விசாரிக்
கிறேன்'' என்று சொன்னான். பிறகு அவன்
பவுலை ஏரோது கட்டின மாளிகையிலே
காவலில் வைக்கும்படி கட்டளையிட்டான்.

### பவுலின்மீது யூதர் குற்றம் சுமத்துதல்

**24** ஐந்து நாள்களுக்குப் பின் தலைமை
ஆசாரியராகிய அனனியா என்பவர்,
மூப்பர் சிலரையும், தெர்த்துல்லு என்னும்
ஒரு வழக்கறிஞனையும் கூட்டிக்கொண்டு
மாநிலத் தலைவனிடம் வந்தார். அவர்கள்
பவுல்மீதுள்ள வழக்கைத் தெரிவித்தார்கள்.
2 பவுல் அழைக்கப்பட்டபோது, தெர்த்
துல்லு குற்றச்சாட்டுகளைப் பின்வருமாறு
எடுத்துக் கூறினான். ''மதிப்பிற்குரிய
பேலிக்சே, உம்மாலேதான் நாட்டில்
நீண்ட காலமாக அமைதி நிலவிவரு
கிறது. உம்முடைய திறமையான ஆட்சி
யினால் மக்களின் நலனுக்கான சீர்திருத்தங்
கள் பல நடந்தேறின; 3 இவற்றை நாங்கள்
எல்லா வகையிலும் எல்லா இடங்
களிலும் மிகுந்த நன்றியோடு வரவேற்
கிறோம். 4 உமது நேரத்தை வீணாக்க
நான் விரும்பவில்லை; சொல்ல
வேண்டியதைச் சுருக்கமாகச் சொல்லுகி
றோம். உமது வழக்கத்தின்படியே பொறுமை
யுடன் எங்களுக்குச் செவிகொடுக்கும்படி
கேட்டுக்கொள்கிறேன். 5 இந்த மனிதன்
சமுதாயத்தைக் கெடுக்கிற ஒரு தொற்று
நோய்; உலகிலுள்ள எல்லா யூதரிடையே
யும் கலகம் மூட்டுகிறவன். இவன் நசரேயர்
என்கிற பிரிவினைக் கூட்டத்தின் தலைவன்
என்பதையும் நாங்கள் அறிந்தோம்.
6 இவன் திருக்கோவிலையே தீட்டுப்படுத்தப்
பார்த்தான். அப்பொழுது நாங்கள்
போய் இவனைப் பிடித்துக்கொண்டோம்.
[இவனை எங்கள் நீதிச்சட்டத்தின்படி விசா
ரணை செய்ய எண்ணினோம். 7 ஆனால்,
படைத் தலைவனாகிய லீசியா வந்து, இவனை
எங்கள் கையிலிருந்து வலுக்கட்டாயமாகப்
பறித்துக்கொண்டு போய்விட்டான்.
8 இவன்மீது குற்றம் சுமத்துகிறவர்களையும்
உம்மிடம் வரும்படி கட்டளையிட்டான்.]
நீர் விசாரணை செய்தால், இவனுக்கு
விரோதமாக நாங்கள் கூறும் இவை அனைத்
தையும்பற்றி இவனிடமிருந்து நீரே
தெரிந்துகொள்ளுவீர்'' என்று சொன்னான்.
9 அவனுடன் வந்த யூதர்களும்
அவனோடு சேர்ந்துகொண்டு, அவன்
சொன்னதெல்லாம் உண்மையே என்று
சாதித்தார்கள்.

### குற்றச்சாட்டுக்குப் பவுல் கூறின பதில்

10 மாநிலத் தலைவன் சைகை காட்டிப்
பவுலைப் பேசும்படி கேட்டான். அப்பொ
ழுது அவர் இவ்வாறு சொன்னார்: ''நீர்
பல ஆண்டுகளாக இந்த நாட்டினருக்கு
நீதிபதியாக இருந்துவருகிறீர் என்பதை
அறிவேன். ஆகையால், என் வழக்கை
நம்பிக்கையோடு எடுத்துரைக்கிறேன்.
11 நான் தொழுவதற்கென எருசலேமுக்குப்
போய் இன்னும் பன்னிரண்டு நாள்கூட
ஆகவில்லை என்பதை நீரே விசாரித்து அறிந்து
கொள்ளலாம். 12 திருக்கோவிலி
லாவது தொழுகைக்கூடங்களிலாவது
நகரத்தில் எந்த இடத்திலாவது நான்
யாரோடாவது தர்க்கம் செய்ததாகவோ,
மக்களிடையே கலகம் மூட்டினதாகவோ
இவர்கள் கண்டதில்லை. 13 இவர்கள்
இப்போது என்மீது சுமத்துகிற குற்றங்களை
இவர்களால் மெய்ப்பிக்க முடியாது. 14 என்னி
னும், ஒன்றை உமது முன்னிலையில்
ஒப்புக்கொள்ளுகிறேன். இவர்கள் பிரிவினைக்
கூட்டம் என்று சொல்லுகிற மார்க்கத்தா
ருடைய நெறியின்படியே நான் எங்கள்
மூதாதையரின் கடவுளுக்குச் சேவை செய்து
வருகிறேன்; நீதிச் சட்டத்திற்குப் பொருத்
தமான யாவற்றையும் இறைவாக்குரைப்
போரின் நூல்களில் எழுதியுள்ள யாவற்
றையும் நம்புகிறேன்; 15 நல்லோரும் தீயோ
ரும் உயிர்த்தெழுவார்கள் என்றும் கடவுளை
முன்னிட்டு நம்புகிறேன். அவர்
களுக்கும் இதே நம்பிக்கை உண்டு. 16 அவர்
களைப்போலவே நானும், என் மனச்சாட்சி
என்னைக் குற்றப்படுத்தாத வகையில், கட
வுளுக்கும் மனிதருக்கும் முன்னால் எப்
போதும் நடக்க முயன்று வருகிறேன்.
17 பல ஆண்டுகளுக்குப் பிறகே நான்
என்னுடைய இனத்தவருக்குப் பண உதவி
செய்யவும் காணிக்கை செலுத்தவும் எருச
லேமுக்கு மீண்டும் சென்றேன். 18 திருக்
கோவிலில் நான் தூய்மைச் சடங்கை
முடித்துவிட்டுக் காணிக்கைகளைச் செலுத்
துகையிலேதான் அவர்கள் என்னைக் கண்
டார்கள்; அப்போது என்னோடு கூட்டமே
இல்லை; அங்கே அமளியுமில்லை. 19 ஆனால்,
ஆசியாவிலிருந்து வந்திருந்த யூதர் சிலர்
அங்கே இருந்தனர். எனக்கு விரோதமாக
அவர்களுக்கு ஏதாவது இருந்திருந்தால்,
அவர்கள் உமக்குமுன் வந்து என்மீது குற்
றம் சுமத்தியிருக்க வேண்டும். 20 இல்லா
விடில், தலைமைச் சங்கத்தார்முன் நான்
நின்றபோது இவர்கள் என்னிடம் என்ன

**24:17, 18** *திருத்தூது. 21:17—28.*

குற்றத்தைக் கண்டார்கள் என்று இப்போது சொல்லட்டும். 21 நான் அவர்கள்முன் நின்றபோது, 'இறந்தவர்கள் உயிர்த்தெழுவார்கள் என்று நான் சொல்வதாலேதான் இன்று உங்கள்முன் விசாரணைக்காக நிறுத்தப்பட்டிருக்கிறேன்' என்று உரத்துச் சொன்ன அந்த ஒரு குற்றத்தைத் தவிர வேறு என்ன கண்டார்கள் என்று சொல்லட்டும்'' என்றார்.

22 இந்தப் புதிய நெறியைப்பற்றிப் பேலிக்ஸ் நன்கு அறிந்திருந்ததால் அவன், ''படைத் தலைவன் லீசியா வரட்டும்; அப்பொழுது உங்கள் வழக்கிற்கு முடிவு சொல்வேன்'' என்று கூறி, விசாரணையை ஒத்திவைத்தான். 23 நூற்றுவர் தலைவனைப் பார்த்துப் பவுலைக் காவல் செய்யும்படி கட்டளையிட்டான். ஆனால், அவரைக் கண்டிப்போடு நடத்த வேண்டாமென்றும், அவருடைய ஆள்கள் அவருக்குப் பணிவிடை செய்வதைத் தடுக்க வேண்டாமென்றும் சொன்னான்.

### பவுல் சிறையிலடைக்கப்படுதல்

24 சில நாள்களுக்குப் பின் பேலிக்ஸ் யூதப் பெண்ணான தன் மனைவி துருசில்லாளோடு வந்து, பவுலை அழைப்பித்து கிறிஸ்து இயேசுவினிடம் நம்பிக்கை கொள்வதைப்பற்றி அவர் சொன்னதைக் கேட்டான். 25 ஆனால், நேர்மை, இச்சையடக்கம், வரப்போகும் தெய்வத் தீர்ப்பு ஆகியவற்றைப்பற்றிப் பவுல் பேலிக்சோடு பேசினபோது, அவன் அச்சமுற்றுப் பவுலினிடம், ''இப்பொழுது நீ போகலாம், இனிச் சமயம் வாய்க்கும்போது உன்னை அழைக்கிறேன்'' என்றான். 26 பவுல் தனக்குப் பணம் கொடுப்பார் என்றும் அவன் எதிர்பார்த்ததால், பவுலை அடிக்கடி அழைப்பித்து அவரோடு பேசினான். 27 இவ்வாறு இரண்டு ஆண்டுகள் கழிந்தபின் பேலிக்சுக்குப் பதிலாகப் பொர்க்கியு பெஸ்து என்பவன் மாநிலத் தலைவனாக வந்தான்; அப்பொழுது பேலிக்ஸ் யூதரின் தயவைப் பெற விரும்பி, பவுலைச் சிறையிலேயே வைத்துவிட்டுச் சென்றான்.

### பவுல் பேரரசரின் தீர்ப்பை நாடியது

**25** பெஸ்து மாநிலத் தலைவனாகப் பதவியேற்று மூன்று நாள் கழிந்தபின், அவன் செசரியாவிலிருந்து எருசலேமுக்குப் போனான். 2 தலைமை ஆசாரியர்களும் யூதத் தலைவர்களும் அவனிடம் பவுல் மீதுள்ள வழக்கைத் தெரிவித்து, தங்களுக்குத் தயவுகாட்ட வேண்டுமென்றும், 3 பவுலை எருசலேமுக்கு வரக் கட்டளையிட வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்கள்; ஏனென்றால், வழியில் பதுங்கியிருந்து அவரைக் கொன்றுவிட வேண்டுமென்றிருந்தார்கள். 4 அதற்குப் பெஸ்து, ''பவுல் செசரியாவிலே சிறைக்காவலில் இருக்கிறான். நானும் விரைவில் அங்கே போவேன். 5 அந்த மனிதனிடம் தவறு ஏதேனும் இருக்குமாயின், உங்களுள் முதன்மையாயிருப்பவர்கள் என்னோடு வந்து, அவன்மீது குற்றம் சுமத்தட்டும்'' என்று சொல்லிவிட்டான்.

6 அவர்களோடு எட்டு அல்லது பத்து நாள் தங்கிவிட்டு, செசரியாவுக்கு வந்து சேர்ந்தான். மறுநாள் அவன் வழக்கு மன்றத்தில் அமர்ந்துகொண்டு, பவுலைக் கொண்டுவரும்படி கட்டளையிட்டான். 7 அவர் வந்தபோது, எருசலேமிலிருந்து வந்திருந்த யூதர் அவரைச் சூழ்ந்து நின்றுகொண்டு, பல பெருங்குற்றச்சாட்டுகளை அவர்மீது சுமத்தினர்; ஆனால், அவற்றை அவர்களால் மெய்ப்பிக்க முடியவில்லை. 8 பவுல் அவர்களை எதிர்த்து வாதாடி, ''யூதருடைய நீதிச்சட்டத்திற்கோ, திருக்கோவிலுக்கோ, பேரரசருக்கோ விரோதமாக நான் ஒரு குற்றமும் செய்யவில்லை'' என்று சொன்னார். 9 அப்பொழுது பெஸ்து யூதரின் தயவைப் பெற விரும்பிப் பவுலினிடம், ''நீ எருசலேமுக்கு வந்து அங்கே என்முன் இந்தக் காரியங்களைப்பற்றி விசாரணைக்கு உட்படச் சம்மதிக்கிறாயா?'' என்று கேட்டான். 10 அதற்குப் பவுல், ''நான் பேரரசருடைய நீதிமன்றத்தில் நிற்கிறேன். இங்கேதான் எனக்குத் தீர்ப்பளிக்கப்பட வேண்டும். யூதருக்கு நான் ஒரு தீமையும் செய்யவில்லை. உமக்கும் இது நன்றாகத் தெரியும். 11 நான் சட்டத்தை மீறி, மரணதண்டனைக்குரிய குற்றம் ஏதாவதொன்றைச் செய்திருந்தேனானால், சாவதற்குத் தயங்க மாட்டேன். ஆனால், இவர்கள் என் மீது சுமத்தும் குற்றங்கள் முற்றிலும் ஆதாரமற்றவையென்றால், ஒருவரும் என்னை யூதரிடம் ஒப்புக்கொடுக்கக் கூடாது. பேரரசரே எனக்குத் தீர்ப்பளிக்கட்டும்'' என்று சொன்னார். 12 பெஸ்து தனக்கு ஆலோசனை கூறுகிறவர்களோடு கலந்து பேசினபின் அவரிடம், '''பேரரசரே எனக்குத் தீர்ப்பளிக்கட்டும்' என்றாய்; பேரரசரிடமே போவாய்'' என்றான்.

### அகிரிப்பா முன்னிலையில் பவுல்

13 சில நாள் கழிந்தபின் அகிரிப்பா அரசனும் பெர்னீக்கேயாளும் பெஸ்துவைக் கண்டுகொள்ளச் செசரியாவுக்கு வந்தார்கள். 14 அவர்கள் அங்கே பல நாள்

**24:21** திருத்தூது. **23:6.**

தங்கியிருக்கவே, பெஸ்து பவுலைப்பற்றிய
செய்தியை அரசனுக்கு எடுத்துச் சொன்
னான்: ''பேலிக்ஸ் காவலில் வைத்துவிட்
டுப்போன மனிதன் ஒருவன் இங்கே இருக்
கிறான். 15 நான் எருசலேமுக்குப் போயி
ருந்தபோது, யூதருடைய தலைமை ஆசாரி
யர்களும் மூப்பர்களும் அவனைப்பற்றிய
வழக்கை என்னிடம் தெரிவித்து, அவன்
குற்றவாளியென்று நான் தீர்ப்பளிக்க
வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார்கள்.
16 அப்பொழுது நான், 'குற்றம் சுமத்
தப்படும் எந்த மனிதனும் குற்றம் சுமத்
தினவர்களுக்கு நேருக்கு நேராக நின்று,
எதிர்த்து வாதாடுவதற்கான வாய்ப்புப்
பெறுமுன், அவனைத் தண்டனைக்கு ஒப்புக்
கொடுப்பது ரோமரின் முறையன்று' என்று
அவர்களுக்குச் சொன்னேன். 17 ஆகை
யால், அவர்கள் இங்கே வந்து கூடின
போது, நான் சிறிதளவும் காலந்தாழ்த்
தாமல், மறுநாளே நீதிமன்றத்தில் அமர்ந்து
அந்த ஆளைக் கொண்டுவரக் கட்டளையிட்
டேன். 18 குற்றம் சுமத்த வந்தவர்கள்
எழுந்து பேசினபோது, நான் எதிர்
பார்த்த குற்றங்களுள் ஒன்றையும் அவர்கள்
அவன்மீது சுமத்தவில்லை; 19 தங்களுடைய
மத ஆசாரங்களைப்பற்றியும், இறந்து
போன இயேசு என்னும் ஓர் ஆளைப்பற்றி
யும் விவாதத்திற்கிடமான சில காரியங்
களைப்பற்றியுமே எடுத்துரைத்தார்கள்.
அந்த இயேசு இன்னும் உயிரோடிருப்ப
தாகப் பவுல் சாதித்துக்கொண்டிருந்தான்.
20 இவற்றைப்பற்றிய விசாரணையை
நடத்த வழிதெரியாமல் நான் பவுலினி
டம், 'நீ எருசலேமுக்கு வந்து, அங்கே
என்முன் இவற்றைப்பற்றிய விசார
ணைக்கு உட்படச் சம்மதிக்கிறாயா?' என்று
கேட்டேன். 21 அவனோ தன் வழக்கை மாட்
சிமை தங்கிய பேரரசரே விசாரணை
செய்ய வேண்டுமென்றும், அதுவரையிலும்
தன்னைக் காவலில் வைக்க வேண்டுமென்
றும் கேட்டுக்கொண்டான். எனவே,
நான் அவனைப் பேரரசரிடம் அனுப்பும்
வரையில் காவலில் வைக்கும்படி கட்டளை
யிட்டேன்'' என்று சொன்னான். 22 அகி
ரிப்பா பெஸ்துவைப் பார்த்து, ''அந்த
ஆள் சொல்வதை நானும் நேரில் கேட்க
விரும்புகிறேன்'' என்றான். அதற்கு அவன்,
''நாளைக்கு நீர் கேட்கலாம்'' என்று
சொன்னான்.

23 மறுநாள் அகிரிப்பாவும் பெர்னீக்கே
யாளும் மிகுந்த ஆடம்பரத்தோடு வந்து,
படைத் தலைவர்களோடும் நகரத்திலுள்ள
பெரிய மனிதரோடும் சபா மண்டபத்திற்
குள் நுழைந்தார்கள். பிறகு, பெஸ்து
கட்டளைப்படியே, பவுல் கொண்டுவரப்
பட்டார். 24 அப்பொழுது பெஸ்து, ''அகி
ரிப்பா அரசே, இங்கே கூடியிருக்கும் பெரு
மக்களே, நீங்கள் பார்க்கிற இந்த மனித
னுக்கு விரோதமாக எருசலேமிலும் இங்
கேயும் யூத மக்கள் எல்லாரும் என்னிடம்
வந்து முறையிட்டு, இவனை உயிரோடு
விட்டுவைக்கக் கூடாது என்று கூக்குரலிட்
டனர். 25 ஆனால், இவன் மரணதண்
டனைக்குரிய குற்றம் எதையும் செய்ய
வில்லை என்பதை நான் கண்டேன். என்றா
லும், இவன் மாண்புமிக்க பேரரசரே
தனக்குத் தீர்ப்பளிக்க வேண்டுமென்று
சொன்னதால், அவரிடம் இவனை அனுப்
பத் தீர்மானித்தேன். 26 ஆனால், இவனைப்
பற்றி அரசபெருமானுக்கு எழுத என்னி
டம் திட்டமாக எதுவுமில்லை. ஆகை
யால், ஒரு விசாரணை நடத்தினால் எழுது
வதற்கு ஏதாவது கிடைக்குமென்று நினைத்து
இவனை உங்கள் முன்னிலையிலும், சிறப்
பாக, அகிரிப்பா அரசே, உமது முன்னிலை
யிலும் கொண்டுவந்திருக்கிறேன். 27 ஒரு
கைதியை, அவன்மீது சுமத்தப்பட்ட குற்
றங்கள் எவை என்று குறிப்பிட்டுக் காட்
டாமல் அனுப்புவது அறிவற்ற செயல்
என்று எனக்குத் தோன்றுகிறது'' என்றான்.

### பவுலின் எதிர்வாத வழக்கு

**26** அகிரிப்பா பவுலைப் பார்த்து, ''நீ
உன் வழக்கைச் சொல்லலாம்'' என்று
சொன்னான். அதன்பேரில் பவுல் கையைத்
தூக்கித் தன் எதிர்வாத வழக்கைச் சொல்லத்
தொடங்கினார்.

2 ''அகிரிப்பா அரசே, யூதர் என்மேல்
சுமத்துகிற எல்லாக் குற்றச்சாட்டுகளையும்
குறித்து நான் உமக்குமுன் இன்று என்
எதிர்வாத வழக்கைச் சொல்வது எனக்குக்
கிடைத்த ஒரு நல்வாய்ப்பு என்றே
கருதுகிறேன். 3 இப்படிக் கருதுவதற்கு,
நீர் யூதருடைய பழக்கவழக்கங்களையும்
அவர்களிடையே இருந்துவரும் கருத்து
வேறுபாடுகளையும் நன்கு அறிந்தவர் என்
பதே முதன்மையான காரணமாகும்.
நான் சொல்வதைப் பொறுமையோடு
கவனித்துக் கேட்கும்படி வேண்டிக்கொள்
ளுகிறேன். 4 பிள்ளைப் பருவ முதல் என்
வாழ்நாளை என் இனத்தவரிடையேயும் எருச
லேமிலும் கழித்தேன். ஆகவே, தொடக்கத்
திலிருந்தே நான் எவ்வாறு வாழ்ந்துவந்தே
னென்பது எல்லா யூதருக்கும் தெரியும்.
5 நான் நமது மார்க்கத்திலுள்ள
கட்சிகளுள் மிகக் கண்டிப்பானதாகிய
பரிசேயக் கட்சி முறைப்படி வாழ்ந்துவந்
தேன் என்பதையும் அவர்கள் நீண்ட
காலமாக அறிவார்கள்; மனமிருந்தால்
இதற்கு அவர்களே சாட்சி கூறுவார்கள்.
6 நம்முடைய மூதாதையருக்குக் கடவுள்

**26:5** திருத்தூது. 8:3; பிலி. 3:5,

அளித்த வாக்குறுதி ஒன்றில் நான் நம்
பிக்கை வைத்ததாலேதான் இப்போது விசா
ரணைக்காக நிறுத்தப்பட்டிருக்கிறேன். 7 கட
வுளை அல்லும் பகலும் அயராது வழி
பட்டுவருகிற நம்முடைய பன்னிரண்டு
குலத்தினரும் இந்த வாக்குறுதி நிறை
வேறுமென்று நம்பிக்கையுடன் எதிர்
நோக்கியிருக்கின்றனர். அரசே, இந்த
நம்பிக்கையின் பொருட்டே யூதர்கள் என்
மேல் குற்றம் சுமத்துகிறார்கள். 8 கடவுள்
இறந்தோரை உயிரோடெழுப்புகிறார் என்
பதை ஏன் நீங்கள் நம்பமுடியாத காரிய
மெனக் கருதுகிறீர்கள்?

9 ''நானும்கூட நாசரேத்தூர் இயேசு
வின் பெயருக்கு விரோதமாக எத்தனையோ
காரியங்களைச் செய்ய வேண்டுமென்று
எண்ணங்கொண்டிருந்தேன். 10 அவ்
வாறே எருசலேமில் பல காரியங்களைச்
செய்தேன். தலைமை ஆசாரியர்களிட
மிருந்து அதிகாரம் பெற்று, திருச்சபை
யாருள் பலரைக் காவலில் அடைத்தேன்.
அவர்கள் கொல்லப்படுவதற்கு நானும்
வாக்கு மூலமாக என் இசைவைத் தெரிவித்
தேன். 11 எல்லாத் தொழுகைக்கூடங்
களுக்கும் சென்று, அவர்களை எத்தனையோ
முறை தண்டனைக்குட்படுத்தி, தெய்வ நிந்த
னையாகப் பேசும்படி கட்டாயப்படுத்தினேன்.
அவர்கள்மேல் மூர்க்கவெறிகொண்டு,
வெளியூர்களுக்குங்கூடப் போய் அவர்களைத்
துன்புறுத்திவந்தேன்.

## பவுல் தாம் மனமாற்றமடைந்த வரலாற்றைச் சொல்லுதல்

12 ''அப்படிச் செய்துவந்த காலத்தில்,
நான் தலைமை ஆசாரியர்களிடம் அதிகார
மும் அனுமதியும் பெற்றுக்கொண்டு
தமஸ்குவுக்குப் போனேன். 13 அரசே,
நான் போகும் வழியில், மத்தியான வேளை
யில், கதிரவனின் ஒளியைவிட விஞ்சிய
பேரொளி ஒன்று வானத்தினின்று தோன்றி
என்னையும் என்னோடு பயணம் செய்தவர்
களையும் சுற்றிச் சுடர் வீசுவதைக் கண்
டேன். 14 நாங்கள் எல்லோரும் கீழே
விழுந்தோம். அப்பொழுது, 'சவுலே,
சவுலே, என்னை ஏன் துன்புறுத்துகிறாய்?
தாற்றுக்கோல் முனையில் நீ உதைப்பதால்
உனக்குத் துன்பந்தான் வரும்' என்று
எபிரேயு மொழியில் உரைத்த ஒரு குரலைக்
கேட்டேன். 15 நான், 'ஆண்டவரே,
நீர் யார்?' என்றேன். ஆண்டவர், 'நீ
துன்புறுத்துகிற இயேசுதான் நான். 16 இப்
போது நீ எழுந்து நிமிர்ந்து நில். இக்
காட்சியில் என்னைக் கண்டாய்; இனிமேலும்
நான் உனக்குக் காட்சியளிப்பேன்.
இப்படி நீ காண்பவற்றைக் குறித்து மக்க
ளிடம் சாட்சி பகரும் என்னுடைய ஊழி
யனாக உன்னை நியமிப்பதற்காகவே நான்
உனக்குக் காட்சியளித்தேன். 17 நான் இப்
போது உன்னை உன் சொந்த இனத்தவரி
டமும் ஏனைய மக்களிடமும் அனுப்பு
கிறேன். 18 அவர்கள் என்னிடம் கொள்
ளும் நம்பிக்கையினால் பாவமன்னிப்பையும்
கடவுளுக்கெனப் பிரித்து வைக்கப்பட்ட
வர்களுக்குரிய நற்பேற்றையும் அடையும்
பொருட்டு, இருளிலிருந்து ஒளியினிடமும்,
சாத்தானுடைய அதிகாரத்திலிருந்து
கடவுளினிடமும் மீள வேண்டும்; அதற்
காக நீ அவர்களுடைய கண்களைத் திறக்
கும்படி நான் உன்னை அனுப்புகிறேன்;
அவர்களிடமிருந்து உனக்குத் தீங்கு வரா
மல் உன்னைக் காப்பேன்' என்றார்.

## பவுல் தம் திருப்பணியைப்பற்றிச் சொல்லுதல்

19 ''அப்படியிருக்க, அகிரிப்பா அரசே,
அந்தத் திருக்காட்சிக்கு நான் கீழ்ப்படியா
மலிருக்க முடியுமா? 20 நான் முதலில்
தமஸ்குவிலும் எருசலேமிலும் யூதேயா நாடு
முழுவதிலும் உள்ளவர்களிடமும், அதன்
பின் யூதரல்லாதாரிடமும் போய், அவர்
கள் மனமாற்றமடைந்து, கடவுள்
பக்கம் திரும்பி, மனமாற்றமடைந்தவர்களுக்
கேற்ற செயல்களைச் செய்ய வேண்டு
மென்று அறிவித்தேன். 21 நான் அப்படிச்
செய்ததால், யூதர்கள் என்னைத் திருக்
கோவிலில் பிடித்துக் கொன்றுவிட முயன்
றார்கள். 22 எனினும், நான் கடவுளின்
துணையைப் பெற்றுக்கொண்டு, இயேசு
வைப்பற்றி நான் அறிந்ததை, தாழ்நிலையி
லுள்ளோருக்கும் உயர்நிலையிலுள்ளோருக்
கும் இந்நாள் வரையில் உறுதி தளராமல்
கூறிவருகிறேன். நான் கூறும் இந்தச்
சாட்சியம் இறைவாக்குரைப்போரும்
மோசேயும் முன்னறிவித்த இறைவாக்கே
யன்றி வேறெதுவுமன்று. 23 அதன்
பொருள், மேசியா பாடுகள் அடைய
வேண்டும், அவர் இறந்தோருள் முதல் முதல்
உயிர்த்தெழுந்தவராகி, யூதருக்கும் யூத
ரல்லாதாருக்கும் ஒளியை அருளுவார் என்
பதாகும்'' என்று சொல்லி முடித்தார்.

24. அவர் இவ்வாறு தம் வழக்கைச்
சொல்லுகையில், பெஸ்து உரத்த குரலில்
''பவுலே, உனக்குப் பைத்தியம் பிடித்து
விட்டது; உன்னுடைய உயர்ந்த படிப்பு
உன்னைப் பைத்தியக்காரனாக்கிவிட்டது
போலும்'' என்று சொல்ல, 25 அவர்,
''மதிப்பிற்குரிய பெஸ்துவே, நான் பிதற்ற
வில்லை; சத்தியமும் நல்ல கருத்துமுள்ள

**26:9—11** திருத்தூது. *8:3; 22:4, 5.* **26:16, 17** எசே. *2:1, 3.* **26:18** ஏசா. *42:7, 16.* **26:23** ஏசா. *42:6; 49:6.*

வார்த்தைகளைத்தான் எடுத்துரைக்கிறேன்.
26 அரசர் இவற்றை நன்குணர்ந்தவர்;
ஆகையால் அவர்முன் துணிவுடன் பேசு
கிறேன். இவற்றுள் எதுவும் அவருடைய
கவனத்தில் படாமல் இருந்திருக்கும் என்று
நான் நினைக்கவில்லை; ஏனெனில், இது
ஒரு மூலையில் நடந்த காரியமன்று. 27 அகி
ரிப்பா அரசே, இறைவாக்குரைப்போர்
இயம்பினவற்றை நீர் நம்புகிறீரா? நீர்
நம்புகிறீர் என்பது எனக்குத் தெரியும்''
என்றார். 28 அகிரிப்பா பவுலைப் பார்த்து,
''இவ்வளவு குறுகிய காலத்தில் என்னைக்
கிறிஸ்தவனாக்கிவிடலாமென்று நீ நினைக்
கிறாய்'' என்று சொல்ல, 29 பவுல்,
''குறுகிய காலத்திலோ, நீண்ட காலத்
திலோ, நீர் மட்டுமன்றி, இன்று நான்
சொல்வதைக் கேட்கிற யாவருமே, என்னைப்
போல ஆகவேண்டும் — இந்த விலங்கு
களைத் தவிர மற்றெல்லா வகையிலும்
அவர்கள் என்னைப்போல் ஆகவேண்டும்
என்பதே கடவுளை நோக்கி நான் செய்
யும் மன்றாட்டு'' என்றார்.

30 அரசனும் மாநிலத் தலைவனும் பெர்
னீக்கேயாளும் அவர்களோடு உட்கார்ந்
திருந்தவர்களும் எழுந்து, 31 தனியே
போய், ''இந்த மனிதன் மரணதண்
டனைக்கோ, சிறைத் தண்டனைக்கோ காரண
மான எதையும் செய்வதாகத் தெரிய
வில்லையே'' என்று ஒருவரோடொருவர்
பேசிக்கொண்டனர். 32 அகிரிப்பா பெஸ்
துவினிடம், ''இவன், 'பேரரசரே எனக்குத்
தீர்ப்பளிக்கட்டும்' என்று கேட்கவில்லை
யென்றால் இவனை விடுதலை செய்திருக்க
லாம்'' என்று சொன்னான்.

## ரோமாபுரிக்குப் பயணம்

**27** நாங்கள் கப்பலேறி இத்தாலிய
நாட்டுக்குப் போக வேண்டுமென்று
தீர்மானிக்கப்பட்டது. பவுலும் வேறு
கைதிகள் சிலரும், அகுஸ்து படையைச்
சேர்ந்த யூலியு என்னும் பேர்கொண்ட
நூற்றுவர் தலைவனிடம் ஒப்படைக்கப்பட்
டார்கள். 2 அதிரமித்தியம் ஊர்க் கப்பல்
ஒன்று ஆசியா மாநிலத்தின் கரை நெடுகே
உள்ள துறைமுகங்களுக்குச் செல்ல இருந்
தது. நாங்கள் அதில் ஏறிப் புறப்பட்
டோம். எங்களோடு தெசலோனிக்கே பட்
டணத்தானாகிய அரிஸ்தர்க்கு என்னும்
மக்கெதோனியா நாட்டினனும் இருந்
தான். 3 மறுநாள் நாங்கள் சீதோன்
துறைமுகத்தில் இறங்கினோம். யூலியு பவு
லினிடம் மிகுந்த பரிவுடன் நடந்து
கொண்டு, அவர் தம் நண்பரிடம் போக
வும், அவர்களால் உபசரிக்கப்படவும்
அனுமதி கொடுத்தான். 4 பிறகு அங்கிருந்து
புறப்பட்டோம்; எதிர்காற்று வீசியதால்
சீப்புரு தீவின் ஒதுக்கிலே சென்று, 5 சிலிசியா
பம்பிலியா நாடுகளை அடுத்துள்ள
கடலைக் கடந்து, லீசியா நாட்டு மீரூப்
பட்டினத்தை அடைந்தோம். 6 அங்கே
இத்தாலியா நாட்டுக்குச் செல்லும் அலெக்
சந்திரியா பட்டினத்துக் கப்பல் ஒன்று
நின்று கொண்டிருந்தது. அதை நூற்றுவர்
தலைவன் கண்டு, அதில் எங்களை
ஏற்றினான். 7 பல நாள்களுக்கு எங்கள்
பயணம் மெதுவாகவே இருந்தது. நாங்கள்
அரும்பாடுபட்டுக் கினீது பட்டினத்
துக்கு வந்தோம். தொடர்ந்து நேராகச்
செல்லக் காற்றுத் தடையாயிருந்ததால்,
நாங்கள் சல்மோனே முனையைக் கடந்து,
கிரேத்தாத் தீவின் தென்கரை ஒதுக்கிலே
சென்றோம். 8 பிறகு மிகுந்த பாடுபட்டு
அந்தக் கரையோரமாகவே சென்று லசேயா
பட்டணத்துக்கு அருகிலுள்ள செந்துறை
என்னும் இடத்தை அடைந்தோம்.

9 இதற்குள் நீண்ட காலமாகிவிட்டது.
பாவப்பரிகார நோன்பு நாளும்* கடந்தது.
அதன் பிறகு கடற்பயணம் செய்வது
ஆபத்தானது என்பதால், பவுல்
அவர்களைப் பார்த்து, 10 ''நண்பர்களே,
இது கேடு விளைவிக்கக்கூடிய பயணம்;
கப்பலுக்கும் அதிலுள்ள சரக்குக்கும் மட்டு
மன்றி நம்முடைய உயிருக்குமே அழிவு
ஏற்படப்போகிறதென்பது எனக்குத் தெரி
கிறது'' என்று எச்சரிக்கை செய்தார்.
11 ஆனால் நூற்றுவர் தலைவன் பவுல்
சொன்னதை நம்பாமல், கப்பலோட்டி
யும் கப்பலுக்குச் சொந்தக்காரனும் சொன்
னதை நம்பினான். 12 அந்தத் துறைமுகம்
மாரிக்காலத்துக்கு ஏற்றதாயில்லாததால்,
அங்கிருந்து புறப்பட்டு, கூடுமானால் கிரேத்
தாத் தீவிலுள்ள பேனிக்ஸ் துறைமுகத்தை
அடைந்து, மாரிக்காலம் கழியும்
வரை அங்கே இருக்கலாமென்று பெரும்
பான்மையர் முடிவு செய்தனர். இந்தத்
துறைமுகம் தென்மேற்கையும் வடமேற்கை
யும் நோக்கியதாயிருந்தது.

## கப்பல் புயலில் சிக்கியது

13 அச்சமயத்தில் தெற்கிலிருந்து காற்று
மெதுவாக அடிக்கவே, அவர்கள் தங்களு
டைய நோக்கம் கைகூடியதென்று எண்
ணிக்கொண்டு, நங்கூரத்தை உயர்த்தி
விட்டு, கிரேத்தாத் தீவின் கரையை இன்
னும் நெருங்கி அதன் ஓரமாகச் சென்
றார்கள். 14 ஆனால் சிறிது நேரத்திற்குள்
யூராக்கிலோன்† என்னும் கடும்புயல் அந்தத்
தீவிலிருந்து வீசத் தொடங்கிற்று.

* புரட்டாசியில் வரும் நோன்பு நாள்.
† வடகிழக்கிலிருந்து அடிக்கும் கடும் புயல்.

15 கப்பல் அதில் அகப்பட்டுக்கொள்ளவே
காற்றின் எதிர்த் திசைக்கு நேரே கப்ப
லைத் திருப்ப இயலாமற் போயிற்று; காற்
றின் திசையிலேயே கப்பலும் போகும்படி
அதை விட்டுவிட்டோம். 16 கிலவுதா
என்னும் சிறு தீவின் ஒதுக்கில் கப்பல்
சென்றபின், நாங்கள் அரும்பாடுபட்டுக்
கப்பலின் பின்னால் பிணைக்கப்பட்டிருந்த
படகைப் பிடித்து இழுத்து நிறுத்தினோம்.
17 கப்பலாள்கள் அதை உயரத் தூக்கிக்
கப்பலில் வைத்தார்கள். கப்பல் உடைந்து
போகாவண்ணம் அதன் கட்டுமானத்தைக்
கயிறுகளால் இறுகக் கட்டினார்கள். சிர்த்திஸ்
என்னும் சொரி மணலில் கப்பல்
பாய்ந்துவிடும் என அஞ்சி, பாயை
இறக்கிவிட்டு, கப்பலைத் தன் போக்கிலேயே
செல்லும்படி விட்டுவிட்டார்கள். 18 புய
லால் நாங்கள் தொடர்ந்து அலைக்கழிக்கப்
பட்டதால், மறுநாள் அந்த ஆள்கள்
கப்பல் சரக்கைக் கடலில் எறியத்தொடங்
கினார்கள். 19 மூன்றாம் நாள் கப்பல் தள
வாடங்களைத் தங்கள் கையாலேயே எடுத்
தெறிந்தார்கள். 20 பல நாள்களாகக் கதி
ரவனோ விண்மீன்களோ தென்படவில்லை;
புயலும் கடுமையாக எங்களைத் தாக்கிக்
கொண்டேயிருந்தது. எனவே, தப்பிப்
பிழைப்போம் என்ற நம்பிக்கையே எங்
களுக்கு இல்லாமற்போய்விட்டது.

21 பல நாள்களாக எவரும் ஏதுவும்
சாப்பிடவில்லை. பவுல் அவர்கள் முன்
நின்று, ''நண்பர்களே, நான் சொன்ன
தைக் கேட்டு நீங்கள் கிரேத்தாத் தீவை
விட்டுப் புறப்படாமல் இருந்திருக்க வேண்
டும்; அப்பொழுது இந்தக் கேடும் வந்
திராது; பொருள்களை இழந்திருக்கவும்
வேண்டியதில்லை. 22 ஆயினும், இப்பொ
ழுது நான் உங்களுக்குச் சொல்வது
இதுவே: மன உறுதியுடனிருங்கள்; கப்ப
லுக்குத்தான் கேடு விளையுமேயன்றி, உங்
களுள் எவருடைய உயிருக்கும் தீங்கு
நேரிடாது. 23 என்னை ஆட்கொண்ட
வரும் நான் சேவை செய்கிறவருமான
கடவுளின் தூதன் நேற்றிரவு என்னருகில்
வந்து நின்று, 24 'பவுலே, அஞ்சாதே,
நீ பேரரசன் முன்னிலையில் நிற்கத்தான்
போகிறாய். இதையும் தெரிந்துகொள்:
உன்னோடு பயணம் செய்கிற அனைவ
ருடைய உயிரையும் உன்பொருட்டுக் காப்
பாற்றக் கடவுள் திருவுளங்கொண்டுள்
ளார்' என்று சொன்னார். 25 ஆகையால்,
நண்பர்களே, மன உறுதியுடனிருங்கள்.
கடவுள் நம்பிக்கைக்குரியவர்; எனக்குச்
சொல்லப்பட்டபடியே நடக்கும் என்று
நான் நம்புகிறேன். 26 ஆயினும், நாம்
தீவு ஒன்றில் தள்ளப்படுவோம்'' என்று
சொன்னார்.

27 பதினான்காம் நாள் இரவும் வந்தது;
நள்ளிரவில் நாங்கள் ஆதிரியாக் கடலில்
அலைக்கழிக்கப்படுகையில், கப்பலாள்களுக்கு
ஏதோ ஒரு கரை பக்கத்தில் இருப்பது
போலத் தோன்றிற்று. 28 அவர்கள்
ஆழத்தை அளந்து பார்த்தபோது, அது
நூற்றிருபது அடி* எனக் கண்டார்கள்.
சற்று அப்பால் சென்றபின் மறுபடியும்
ஆழத்தை அளந்துபார்த்தபோது, அது
தொண்ணூறு அடி† எனக் கண்டார்கள்.
29 பாறைப்பாங்கான இடங்களில் தள்ளப்
படுவோமோ என்று அவர்கள் அஞ்சி,
கப்பலின் பின்பகுதியிலிருந்து நான்கு
நங்கூரங்களை இறக்கிவிட்டு, பொழுது எப்
போது விடியும் என்ற ஏக்கத்தோடிருந்
தார்கள். 30 கப்பலாள்களோ கப்பலி
லிருந்து தப்பியோட வழி தேடினார்கள்;
அவர்கள் கப்பலின் முன் பகுதியிலிருந்து
நங்கூரங்களை இறக்குவதுபோல நடித்து,
படகைக் கடலில் இறக்கினபோது, பவுல்
நூற்றுவர் தலைவனையும் படை வீரரை
யும் பார்த்து, 31 ''இந்த ஆள்கள் கப்ப
லில் இருந்தால்மட்டுமே நீங்கள் தப்பிப்
பிழைக்க முடியும்'' என்று சொன்னார்.
32ஆகவே, படை வீரர்கள் அந்தப் படகின்
கயிறுகளை அறுத்து அதை அலைகள் அடித்துக்
கொண்டு போகும்படி விட்டுவிட்டார்கள்.

33 பொழுது விடியப்போகும் வேளை
யில், பவுல் எல்லாரையும் பார்த்து,
''இன்றுவரை பதினான்கு நாள்களாக நீங்
கள் ஒன்றும் சாப்பிடவில்லை; பட்டினி
கிடந்து, என்ன நடக்குமோவென்று, கவ
லைப்பட்டுக்கொண்டிருக்கிறீர்கள். 34 இப்
பொழுது ஏதாவது சாப்பிடும்படி நான்
உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். நீங்கள்
உயிர்தப்ப அது உங்களுக்குத் தேவை.
உங்களுள் யாருடைய தலையிலிருந்தும்
ஒரு முடிகூடக் கீழேவிழாது'' என்று சொல்லி
அவர்களை உணவு உட்கொள்ளும்படி வற்
புறுத்தினார். 35 இப்படிச் சொன்னபின்
அவர் ஓர் அப்பத்தை எடுத்து, எல்லா
ருக்கும் முன்னால் கடவுளுக்கு நன்றி
செலுத்தி, 36 அதைப் பிட்டு உட்கொண்
டார். அப்பொழுது எல்லாரும் புத்துயி
ரடைந்து, சாப்பிடத் தொடங்கினர்.
37 மொத்தத்தில் நாங்கள் இருநூற்றெழு
பத்தாறு பேர் கப்பலில் இருந்தோம்.
38 எல்லாரும் பசியாற உண்டபின், அந்த
ஆள்கள் மீந்திருந்த கோதுமையைக் கட
லில் எறிந்து கப்பலின் பளுவைக் குறைத்
தார்கள்.

### கப்பல் உடைந்துபோதல்

39 பொழுது விடிந்தபோது மணற்
பாங்கான கரையுள்ள ஒரு சிறு வளை
குடா அவர்களுக்குத் தென்பட்டது. ஆனால்

*† மூலத்தில், முறையே, இருபது பாகம், பதினைந்து பாகம் என்றிருக்கிறது.

அது இன்ன இடம் என்பது அவர்களுக்குத்
தெரியவில்லை. கூடுமானால் அங்கே
கப்பலைச் செலுத்தலாமென்று அவர்கள்
முடிவு செய்தார்கள். 40 அவர்கள் நங்
கூரங்களை அவிழ்த்துக் கடலில் விட்டுவிட்
டார்கள்; அதேசமயம் சுக்கான்களின்
கட்டுகளையும் தளர்த்தினார்கள். பிறகு
முன்பாயில் காற்றுப் படுமாறு அதை
உயர்த்தி, கப்பலைக் கரை நோக்கிப் போக
விட்டார்கள். 41 ஆனால் ஏறுமாறான
நீரோட்டங்களிடையே கப்பல் அகப்பட்
டுக்கொள்ளவே, அவர்கள் அதைத் தரை
தட்டும்படி செய்தார்கள். கப்பலின் முன்
பகுதி தரையில் ஊன்றி அசையாதிருந்
தது; பின்பகுதியோ அலைகளின் வேகத்
தால் உடையத் தொடங்கிற்று. 42 கைதி
களுள் யாரேனும் நீந்தித் தப்பி ஓடிவிடக்
கூடும் என்பதால், அவர்களைக் கொன்று
விட வேண்டுமென்று படை வீரர்கள்
எண்ணினார்கள். 43 ஆனால் நூற்றுவர்
தலைவன் பவுலைக் காப்பாற்ற விரும்பி
அவர்களைத் தங்கள் எண்ணப்படி செய்ய
விடவில்லை; நீந்தக்கூடியவர்கள் முதலில்
கடலில் குதித்துக் கரை சேரவும், 44 மற்ற
வர்கள் பலகைகளையாவது, கப்பலின்
உடைந்த துண்டுகளையாவது* பற்றிக்
கொண்டு கரை சேரவும் கட்டளையிட்
டான். இவ்வாறு எல்லாரும் தப்பிக் கரை
சேர்ந்தனர்.

### மெலித்தாத் தீவில் தங்கியிருத்தல்

**28** நாங்கள் தப்பிக் கரை சேர்ந்தபின்
அந்தத் தீவின் பெயர் மெலித்தா
என்று அறிந்துகொண்டோம். 2 அந்த
நாட்டின் மக்கள் நாங்கள் எதிர்பாராத
அளவில் எங்களுக்குப் பரிவு காட்டினார்
கள். மழை பெய்து குளிராயிருந்ததால்,
அவர்கள் நெருப்புமூட்டி எங்கள் அனை
வரையும் வரவேற்றார்கள். 3 பவுல் கொஞ்சம்
சுள்ளிகளைப் பொறுக்கி அந்த நெருப்பில்
போட்டபோது, ஒரு விரியன் பாம்பு
வெப்பம் காரணமாக வெளியே வந்து
அவருடைய கையைக் கவ்விக்கொண்டது.
4 அவருடைய கையில் பாம்பு தொங்கு
வதை அந்த மக்கள் கண்டபோது,
''இந்த ஆள் ஒரு கொலைகாரனாய்
இருக்க வேண்டும். இவன் கடலுக்குத்
தப்பித்துக்கொண்ட போதிலும் நீதி
தேவதை இவனை உயிருடனிருக்க விட
வில்லை'' என்று ஒருவரோடொருவர்
பேசிக்கொண்டார்கள். 5 ஆனால் அவர்
அந்தப் பாம்பை நெருப்பில் உதறினார்.
அவருக்கு ஒரு தீங்கும் நேரிடவில்லை.
6 அவருக்கு வீக்கம் ஏற்படும் அல்லது
அவர் திடீரெனக் கீழே விழுந்து செத்துப்
போவார் என்று அவர்கள் எதிர்பார்த்
தார்கள். அவர்கள் நெடுநேரமாக எதிர்
பார்த்தும், அவரிடம் ஒருவகையான
மாற்றமும் தோன்றாததால், தங்கள்
கருத்தை மாற்றிக்கொண்டு, அவர் ஒரு
தெய்வம் என்று சொல்லத் தொடங்கி
னார்கள்.

7 அந்தத் தீவுக்குத் தலைவனான புப்பிலியு
என்பவனுடைய விளைநிலம் அந்த
இடத்துக்கு அருகில் இருந்தது. அவன்
எங்களை உள்ளன்போடு வரவேற்று, மூன்று
நாள் உபசரித்தான். 8 அப்போது புப்பிலியு
வின் தகப்பன் காய்ச்சலினாலும் சீதபேதி
யினாலும் படுக்கையில் கிடந்து வருந்திக்
கொண்டிருந்தான். பவுல் அவன் அறைக்
குப் போய், ஜெபம் செய்து, அவன்
மேல் கைகளை வைத்து அவனைக் குணப்
படுத்தினார். 9 இது நடந்த பிறகு தீவி
லிருந்த மற்ற நோயாளிகளும் வந்து குண
மடைந்தார்கள். 10 அவர்கள் எங்களுக்குப்
பல வகையில் மரியாதை செலுத்தி
னார்கள்; நாங்கள் புறப்பட்டபோது எங்க
ளுடைய பயணத்துக்குத் தேவையானவற்
றைக் கொண்டுவந்து கப்பலில் ஏற்றி
னார்கள்.

### ரோமாபுரிக்குச் செல்லுதல்

11 நாங்கள் மூன்று மாதங்களுக்குப்
பின், அந்தத் தீவில் மாரிக்காலத்திற்காகத்
தங்கியிருந்த மிதுனச் சின்னம் தாங்கிய
ஒரு கப்பலில் புறப்பட்டோம்; அது
அலெக்சந்திரியா பட்டினத்துக் கப்பல்.
12 சிரக்கூசா என்னும் துறைமுகத்தை
நாங்கள் அடைந்து, அங்கே மூன்று நாள்
தங்கினோம். 13 அங்கிருந்து கரையோர
மாகச் சென்று, ரேகியு என்னும் துறை
முகத்தை அடைந்தோம். மறுநாள் தெற்
கிலிருந்து காற்றடித்ததால், இரண்டே
நாளில் நாங்கள் புத்தேயோலி என்னும்
துறைமுகத்தை அடைந்தோம். 14 அங்கே
இருந்த சகோதரரை நாங்கள் கண்ட
போது, அவர்கள் எங்களைத் தங்களுடன்
ஏழு நாள் தங்கியிருக்கும்படி கேட்டுக்
கொண்டார்கள். அதன்பின் நாங்கள்
ரோமாபுரிக்குப் போய்ச் சேர்ந்தோம்.
15 அங்குள்ள சகோதரர் எங்களைப்பற்றிக்
கேள்விப்பட்டு, அப்பியு சந்தை, முச்சத்
திரம் என்னும் இடங்கள் வரைக்கும்
எங்களை எதிர்கொள்ள வந்தார்கள். பவுல்
அவர்களைக் கண்டபோது கடவுளுக்கு
நன்றி செலுத்தி அகமகிழ்ந்தார்.

### பவுல் ரோமாபுரி யூதரைக் கண்டு பேசுதல்

16 நாங்கள் ரோமாபுரிக்குள் சென்ற
பின், [நூற்றுவர் தலைவன் தன் காவ
லில் இருந்தவர்களைப் படைத் தலைவனிடம்

* 'கப்பலிலிருந்த ஆள்களையாவது' என்றும் மொழிபெயர்க்கலாம்.

ஒப்படைத்தான்.] பவுல் தம்மைக்
காவல் செய்த படைவீரனோடு தனி இடத்
தில் தங்கியிருக்க அனுமதி பெற்றுக்
கொண்டார்.

17 மூன்று நாளுக்குப்பின், பவுல்
யூதருள் முதன்மையானவர்களை வர
வழைத்தார். அவர்கள் வந்து கூடியபின்
அவர் அவர்களைப் பார்த்து, ''சகோதரரே,
நம்முடைய இனத்தவருக்கு விரோ
தமாகவோ, நம்முடைய மூதாதையரின்
முறைமைகளுக்கு மாறாகவோ நான் எதை
யும் செய்யாதிருந்தும், எருசலேமில் கைது
செய்யப்பட்டு, ரோமர் கையில் ஒப்ப
டைக்கப்பட்டேன். 18 அவர்கள் விசா
ரணை செய்தபோது, என்னிடம் மரண
தண்டனைக்குரிய குற்றம் ஒன்றையும்
காணாததால், என்னை விடுதலை செய்ய
விரும்பினார்கள். 19 ஆனால் யூதர் அதை
எதிர்த்து வாதாடினபோது, நான் பேர
ரசரே எனக்குத் தீர்ப்பளிக்கட்டும் என்று
கேட்க வேண்டிய நிலை ஏற்பட்டது; எனி
னும், என்னுடைய இனத்தவர்மீது ஏதாவ
தொரு குற்றத்தைச் சுமத்த வேண்டு
மென்ற நோக்கத்தோடு நான் அப்படிச்
செய்யவில்லை. 20 அதனாலேதான் உங்
களைக் கண்டு, உங்களோடு பேசுவதற்
காக உங்களை அழைத்தேன். கடவுளின்
திட்டத்தைப்பற்றி இஸ்ரவேலராகிய நமக்
குள்ள நம்பிக்கையை நான் உறுதியாகப்
பற்றிக்கொண்டிருப்பதை முன்னிட்டே
இவ்வாறு விலங்கிடப்பட்டு நிற்கிறேன்''
என்று சொன்னார். 21 அதற்கு அவர்கள்,
''உம்மைக் குறித்து யூதேயாவிலிருந்து
ஒரு கடிதமும் வரவில்லை; சகோதரருள்
யாரும் வந்து எதையும் தெரிவிக்கவு
மில்லை. உம்மைப்பற்றித் தீதாக எதையும்
சொல்லவுமில்லை; 22 எனினும், நீர் கொண்
டிருக்கும் கருத்துகளை உம்மிடமிருந்தே
கேட்டறிய ஆவலுள்ளவர்களாயிருக்கிறோம்.
ஏனெனில், இங்கும் இந்தச் சமயக் கட்சியை
எதிர்த்துப் பேசுகிறார்கள் என்பது எங்களுக்
குத் தெரியும்'' என்றார்கள்.

23 ஆகவே, குறிக்கப்பட்ட ஒரு நாளில்
பலர் அவர் தங்கியிருந்த வீட்டிற்கு வந்
தனர். அவர் கடவுளின் ஆட்சியைப்பற்றி
வலியுறுத்திக் கூறி, மோசேயின் நீதிச்
சட்டத்தையும் இறைவாக்குரைப்போரின்
நூல்களையும் ஆதாரமாகக் கொண்டு,
இயேசுவைப்பற்றிய செய்தியை எடுத்
துரைத்தார். அவர்கள் அச்செய்தியை
ஏற்றுக்கொள்ளும்படி செய்ய, காலையிலிருந்து
மாலைவரை அவர்களோடு வாதாடினார்.
24 சிலர் அவர் சொன்னதை ஏற்றுக்கொண்
டனர்; வேறு சிலரோ அதை நம்ப
மறுத்துவிட்டனர். 25 இவ்வாறு அவர்கள்
ஒருவரோடொருவர் ஒத்துவராமல் அவ்
விடத்தைவிட்டுப் புறப்பட்டார்கள். அப்
பொழுது பவுல் அவர்களைப் பார்த்து,
''இதையும் கேளுங்கள்'' என்று சொல்லி
விட்டு, ''தூய ஆவியானவர் இறைவாக்
குரைப்போராகிய ஏசாயாவின் மூலம்
உங்களுடைய மூதாதையருக்கு உரைத்தது
எவ்வளவு பொருத்தமாயிருக்கிறதென்று
பாருங்கள்.

26 'நீங்கள் கேட்டுக் கேட்டு வந்தா
லும் உணர்வதில்லை,
பார்த்துப் பார்த்து வந்தாலும் காண்
பதில்லை.

27 இந்த மக்களுடைய உள்ளம்
மழுங்கிவிட்டது;
இவர்களுடைய செவி மந்தமாயிற்று;
இவர்கள் தங்கள் கண்களை மூடிக்
கொண்டார்கள்.
இல்லாவிடில், ஒருவேளை இவர்கள்
கண்ணால் கண்டு,
காதால் கேட்டு, உள்ளத்தால்
உணர்ந்து,
என் பக்கம் திரும்பலாம்; அப்படித்
திரும்பினால்,
நான் இவர்களைக் குணப்படுத்துவேன்.
என்று இந்த மக்களிடம் போய்ச் சொல்'

என்பது அந்த வாக்கு. 28 ஆகையால்,
கடவுள் அருளும் இந்த மீட்புச் செய்தி
பிற இனத்தவருக்கு அனுப்பப்படுகிறது
என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கட்டும்.
அவர்கள் இதற்குச் செவிசாய்ப்பார்கள்''
என்றார். [29 அவர் இவ்வாறு சொல்லி
முடித்தபின், யூதர்கள் தங்களிடையே
கடுமையாக வாக்குவாதம் செய்து
கொண்டே போய்விட்டார்கள்.]

30. பவுல், தமக்கென்று வாடகைக்கு
அமர்த்தப்பட்டிருந்த வீட்டில் இரண்டு
ஆண்டுகள் முடியும் வரையில் தங்கியிருந்
தார். 31 அவர் தம்மிடம் வந்த எல்லா
ரையும் வரவேற்று, மிகுந்த துணிவோடு
கடவுளின் ஆட்சியை விளம்பரப்படுத்தி,
ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவைப்பற்றிப்
போதித்து வந்தார். ஒருவனும் அவ
ரைத் தடுக்கவில்லை.

**28:19** திருத்தூது. 25:11. **28:26, 27** ஏசா. 6:9, 10; மத். 13:14, 15.

# பவுல் ரோமருக்கு எழுதின கடிதம்

### வாழ்த்து

1 ரோமாபுரித் திருச்சபையாரே,
கிறிஸ்து இயேசுவின் அடியானும்,
திருத்தூதுவனுயிருக்கும்படி அழைக்கப்பட்ட
வனும், கடவுள் அருளிய நற்செய்தியை
அறிவிப்பதற்கெனக் குறிக்கப்பட்டவனுமா
கிய பவுல், 2 உங்கள் அனைவருக்கும்
எழுதுவதாவது: கடவுள் உங்களிடம் அன்பு
கூர்ந்திருக்கிறூர்; தமக்கு உரியவர்களா
யிருக்கும்படி உங்களை அழைத்துமிருக்கிறூர்.
3 நம்முடைய தந்தையாகிய கடவு
ளிடமிருந்தும் ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவிடமிருந்தும் உங்களுக்கு அருளும்
நலமும் உண்டாகுக! 4 தூய வேத
வாக்கியங்களில் நாம் காண்கிறபடி, கடவுள்
அந்த நற்செய்தியை அருளுவதாகத்
தம் வாக்கை உரைப்போரின் மூலம் ஏற்
கெனவே வாக்களித்திருந்தார். அந்தச்
செய்தி அவருடைய மைந்தரைப்பற்றியதே.
5 அந்த மைந்தர் மனிதன் என்ற
முறையில் தாவீதின் மரபில் வந்தவர்;
அவரது ஆவியின் தூய நிலையைப் பொருத்
தவரையில் அவர் கடவுளின் மைந்தர்.
இந்த உண்மை அவர் இறந்தோரிட
மிருந்து வல்லமையோடு உயிர்த்தெழுந்த
தைக் கொண்டு வெளிப்படையாக உறுதி
செய்யப்பட்டது. அவரே நம்முடைய
ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து. 6 அவரது
திருப்பெயர் மாட்சிமையடையும் பொருட்டு
எல்லா நாட்டு மக்களும் அவரை நம்பி
அவருக்குக் கீழ்ப்படியும்படி, நாங்கள்
திருத்தூதுவராகப் பணிபுரிய அவர் மூல
மாகத் திருவருள் பெற்ருேம். 7 அவர்
களுள் ஒரு பிரிவினராகிய நீங்களும்
இயேசுகிறிஸ்துவுக்குச் சொந்தமாயிருக்கும்
படி அழைக்கப்பட்டிருக்கிறீர்கள்.

### ரோமாபுரிக்குச் செல்ல வேண்டுமென்ற விருப்பம்

8 முதலில், உங்கள் அனைவரையும்
நினைத்து நான் இயேசுகிறிஸ்துவின் மூலம்
கடவுளுக்கு நன்றி செலுத்துகிறேன்.
ஏனெனில், நீங்கள் கிறிஸ்துவினிடம் எத்
தகைய நம்பிக்கை கொண்டிருக்கிறீர்கள்
என்பது உலகமெங்கும் தெரிந்திருக்கிறது.
9 நான் ஜெபம் செய்யும்போதெல்லாம்
உங்களைக் குறிப்பிட்டு வேண்டுதல் செய்யத்
தவறுவதில்லை என்று, திருமைந்தரைப்
பற்றிய நற்செய்தியை அறிவிப்பதன்
மூலம் நான் முழு மனத்தோடு
சேவித்துவரும் கடவுள் சாட்சியாகச்
சொல்லுகிறேன். 10 அவர் திருவுளங்
கொண்டு, நான் விரைவில் உங்களிடம்
வருவதற்கு எப்படியாவது எனக்கு ஒரு
வாய்ப்புத் தர வேண்டுமென்று அவரை
வேண்டிக்கொண்டே இருக்கிறேன். 11 உங்
கள் நம்பிக்கை உறுதிபெறும்படி, ஆவி
யானவர் எனக்கு அருளிய வரத்தினுல்
உங்களுக்குப் பயன் கிடைப்பதற்காக
உங்களை வந்து காண ஆவலுள்ளவனு
யிருக்கிறேன். 12 அதாவது, நான் உங்
களிடையே தங்கி, நீங்கள் கொண்டுள்ள
நம்பிக்கையை நானும், நான் கொண்
டுள்ள நம்பிக்கையை நீங்களும் கண்டு,
நாம் ஒருவருக்கொருவர் ஊக்கமளிக்க
வேண்டுமென்று விரும்புகிறேன். 13 சகோ
தரரே, மற்ற நாட்டினரிடையே என்
ஊழியத்திற்குச் சிறிது பலன் கிடைத்தது.
அதுபோல உங்களிடையேயும் உழைத்துப்
பலன் காண வேண்டுமென்று உங்களிடம்
வரப் பன்முறை திட்டமிட்டேன். இதை
நீங்கள் அறிய வேண்டுமென்று விரும்பு
கிறேன். ஆனுல் இந்நாள்வரையிலும் என்
னுல் வர இயலாமற்போயிற்று. 14 நான்
கிரேக்கருக்கும் கிரேக்கரல்லாதாருக்கும்
கற்றவர்களுக்கும் கல்லாதவர்களுக்கும்
கொடுத்துத் தீர்க்கவேண்டிய கடன்
ஒன்றுண்டு. 15 ஆகையால் ரோமாபுரி
யிலிருக்கும் உங்களுக்கும் அருட்செய்தியை
அறிவிக்க வேண்டுமென்பது என் பேராவல்.

### அருட்செய்தியின் வல்லமை

16 அருட்செய்தியைக் குறித்து நான்
வெட்கப்படுவதில்லை. ஏனெனில், அதுவே
மீட்பளிக்கும் தெய்வ வல்லமை. அந்த
மீட்பு முதலில் யூதனுக்கும், பிறகு கிரேக்
கனுக்கும் அருட்செய்தியை நம்பும் ஒவ்
வொருவனுக்குமே உண்டு. 17 எப்படி
யெனில், அருட்செய்தியில் மக்களைத்
தமக்கு ஏற்றவர்களெனக் கொள்ளும்
கடவுளின் நீதி வெளியாகியிருக்கிறது.
இந்த நீதி மனிதன் கடவுளிடம் கொள்
ளும் நம்பிக்கையின் மூலம் செயலாற்று
கிறதேயன்றி வேறென்றின் மூலமுமன்று.
வேதத்தில் கூறப்பட்டிருக்கிறபடி, "கட
வுளை நம்புவதால் தமக்கு ஏற்றவனென
அவரால் கொள்ளப்படுபவனே மெய்வாழ்
வைப் பெறுவான்."

### மனிதன் குற்றவாளியே

18 கடவுளின் சினமும் இப்போது விண்
ணுலகினின்று வெளியாகியிருக்கிறது. சத்
தியம் நிலவாதபடி அதைத் தீய செய்கை
யால் அடக்கி வைக்கிற மனிதனிடம்
காணப்படும் தெய்வ பயமின்மைமீதும்

1:1 திருத்தூது. 26:16—18. 1:13 திருத்தூது. 19:21. 1:16 மாற். 8:38. 1:17 ஆப. 2:4; கலா. 3:11; எபி. 10:38. 1:18 எபே. 5:6; கொலோ. 3:6.

எல்லாவகையான தீய செய்கையின்மீதும்
அந்தச் சினம் வரும். 19 கடவுளைப் பற்றி
அறியக்கூடியவை அனைத்தும் மக்களுக்கு
வெளிப்படையாயிருக்கிறது. கடவுளே
அதை அவர்கள்முன் வெளிப்படையாகக்
காட்டியிருக்கிறார். 20 கண்ணுக்குத் தெரி
யாத அவருடைய பண்புகளும், அதா
வது, அவருடைய வரம்பில்லா வல்லமை,
தெய்வீகம் ஆகியவையும், உலகம் படைக்
கப்பட்டது முதல் அவருடைய படைப்பு
கள் மூலம் தெளிவாய்க் கண்டுணரப்பட்டு
வருகின்றன. ஆகையால், அவர்களுக்குச்
சாக்குச் சொல்ல வழியேயில்லை. 21 அவர்
கள் கடவுளை அறிந்திருந்தும், கடவுளுக்
குரிய மாட்சிமையை அவர்கள் அவருக்கு
அளிக்கவில்லை; அவருக்கு நன்றி செலுத்த
வுமில்லை. அதனால் அவர்களுடைய எண்
ணங்களெல்லாம் பயனற்றவையாயின.
மடமைவாய்ந்த அவர்கள் உள்ளம் இருண்டு
போயிற்று. 22 தாங்கள் ஞானிகள் என்று
சாதித்தபோதிலும் அவர்கள் உண்மையில்
மதிகெட்டவர்களே. 23 அழிவில்லாத கட
வுளின் மாட்சிமையை அவர்கள் புறக்
கணித்துவிட்டு, அழிந்துபோகும் மனி
தரைப்போலவும், பறப்பன, நடப்பன,
ஊர்வன ஆகியவற்றைப்போலவும் உள்ள
இழிவான உருவங்களை வழிபடுவதற்
கென்று தேர்ந்துகொண்டார்கள்.

24 ஆகையால் அவர்கள் தங்கள் உள்
ளம் இச்சிக்கிறபடியெல்லாம் தங்கள்
உடல்களைத் தங்களிடையே இழிவுபடுத்
திக்கொள்ளக் கடவுள் அவர்களை அசுத்த
மான செயல்களைச் செய்யும்படி விட்டு
விட்டார். 25 அவர்கள் கடவுளைப் பற்றிய
சத்தியத்தை வெறுத்துப் பொய்யை ஏற்
றுக்கொண்டார்கள்; படைத்தவரை மறந்து
படைப்புகளை வணங்கினார்கள்; அவருக்
குத் தொண்டு செய்யாமல், அவற்றிற்குத்
தொண்டு செய்தார்கள். அவரே என்
றென்றும் போற்றுதலுக்குரியவர். ஆமேன்.
26 ஆகையால் கடவுள் அவர்களைத் தங்
கள் இழிவான விருப்பங்களுக்கேற்ப நடக்
கும்படி விட்டுவிட்டார். அவர்களுடைய
பெண்கள் இயற்கையின்ப முறையை
விட்டுவிட்டு, இயற்கைக்கு மாறாக நடந்து
கொண்டார்கள். 27 அப்படியே ஆண்
களும் பெண்களோடு சேரும் இயற்கை
முறையை விட்டுவிட்டு, ஒருவர்மீது ஒருவர்
வேட்கைகொண்டு காமத் தீக்கிரை
யானார்கள். ஆண்கள், ஆண்களுடன்
வெட்கக்கேடான செய்கைகளைச் செய்து,
தங்கள் தவறான நடத்தைக்குத் தகுந்த
பலனைத் தங்கள்மேலே வருவித்துக்
கொண்டார்கள். 28 கடவுளைப் பற்றிச்
சிந்திக்க அவர்கள் மறுத்துவிட்டதால்,
அவர்கள் மனம் சீர்கேடான வழியில்
செல்லவும், அவர்கள் ஒழுக்கக்கேடான
வற்றைச் செய்யவும் கடவுள் அவர்களை
விட்டுவிட்டார். 29 அவர்கள் எல்லாவகை
யான அநியாயமும் பொல்லாங்கும் பேரா
சையும் பகைமை உணர்ச்சியும் நிறைந்த
வர்களானார்கள். அவர்களிடம் பொறாமை,
கொலை, சண்டை, வஞ்சகம், வன்மம்
ஆகியவை மலிந்து காணப்பட்டன; 30 அவர்
கள் புறங்கூறுகிறவர்களாயும், அவதூறு
பேசுகிறவர்களாயும், கடவுளை வெறுக்கிற
வர்களாயும், மேட்டிமையுடன் நடப்பவர்
களாயும், இறுமாப்புக் கொண்டவர்களா
யும், வீண்பெருமை கொள்பவர்களாயும்,
தீமை செய்வதில் புதிய வழிகளைக் காணும்
திறமையுடையவர்களாயும், பெற்றோருக்கு
அடங்காதவர்களாயும் ஆனார்கள். 31 அவர்
கள் மதிகெட்டவர்களாயும், நம்பிக்கை
மோசம் செய்பவர்களாயும் இருந்தார்கள்.
அவர்களிடம் அன்புணர்ச்சி இல்லை, இரக்
கம் இல்லை. 32 இவ்வாறு நடப்பவர்
களுக்கு மரண தண்டனையே தக்கது;
இதுவே கடவுளின் நியமம். இதை அவர்
கள் நன்கு அறிந்திருந்தும் இவ்வாறே
நடந்து வருகிறார்கள்; அதுவுமன்றி, இவ்
வாறு நடக்கிறவர்களைப் பாராட்டியும்
வருகிறார்கள்.

## கடவுளின் நீதிமுறை

2 ஆகையால், பிறருக்குக் குற்றத்
தீர்ப்பு அளிக்கிற நண்பனே, நீ
யாரானாலும் சரி, சாக்குச் சொல்ல
உனக்கு வழியில்லை; ஏனெனில், நீ எந்தக்
காரியங்களில் ஒருவனுக்குக் குற்றத்
தீர்ப்பு அளிக்கிறாயோ அக்காரியங்களையே
நீயும் செய்கிறபடியால், நீ உனக்கே தண்
டனைத் தீர்ப்பு அளித்துக்கொள்கிறாய்.
2 மேற்கூறியவாறு நடக்கிறவர்கள்மீது
கடவுளின் தீர்ப்பு வருவது நியாயம் என்பது
நமக்குத் தெரியும். 3 அவ்வாறு நடக்
கிறவர்களுக்குக் குற்றத்தீர்ப்பு அளித்து
விட்டு, நீயும் அவ்வாறே நடக்கிறாயே!
நீ மட்டும் கடவுளின் தீர்ப்புக்குத் தப்பித்
துக்கொள்ளலாமென்று நினைக்கிறாய்? 4 அல்
லது நீ கடவுளுடைய அளவற்ற இரக்
கத்தையும் சகிப்புத் தன்மையையும் பொறு
மையையும் ஏளனம் செய்யப்பார்க்கி
றாயா? அவரது இரக்கம் நீ மனமாற்றம்
அடைய உனக்குத் தூண்டுதலளிக்கவே
இருக்கிறது என்பது உனக்குத் தெரி
யாதா? 5 நீ பிடிவாதக்காரன், மனமாற்ற
மடைய மறுக்கிறாய். அதனால் நீ தெய்வ
சினத்தைச் சம்பாதித்துக்கொண்டுவரு
கிறாய். கடவுளின் நீதித்தீர்ப்பு வெளிப்
படப்போகும் கோபநாளில் நீ அதற்கு

**1:21** எபே. *4:17, 18.* **1:23** உபா. *4:16—18;* சங். *106:20;* திருத்தூது. *17:29.* **2:1** மத். *7:1;* லூக். *6:37.*

இரையாவாய். 6 அவர் ஒவ்வொருவனுக்
கும் அவனவன் செய்கைகளுக்கேற்பப் பல
னளிப்பார்; 7 நற்செயல்களைச் செய்வதில்
சோர்வடையாமல், மாட்சிமையையும் நற்
பெயரையும் அழியாமையையும் நாடு
வோருக்கு என்றுமுள்ள மெய்வாழ்வை
அளிப்பார். 8 ஆனால், தன்னலமுடைய
வர்களாயிருந்து, சத்தியத்திற்குக் கீழ்ப்
படியாமல் அநியாயத்திற்குக் கீழ்ப்படிகிற
வர்கள்மீதோ தெய்வசினம் பொங்கி
யெழும். 9 தீமை செய்துவருகிற ஒவ்
வொருவனுக்கும் வேதனையும் கடுந்துயர
மும் உண்டாகும்; அவை அவ்வாறு செய்கிற
யூதனுக்கு முதலிலும் பிறகு கிரேக்
கனுக்கும் உண்டாகும். 10 நலமானதைச்
செய்கிற ஒவ்வொருவனுக்கும் மாட்சிமை
யும் நற்பெயரும் சமாதான வாழ்வும்
கிடைக்கும்; அவை அவ்வாறு செய்கிற
யூதனுக்கு முதலிலும் பிறகு கிரேக்கனுக்
கும் கிடைக்கும். 11 கடவுள் யாருக்கும்
தனிச் சலுகை காட்டுவதில்லை. 12 மோசே
யின் நீதிச்சட்டத்திற்கு உட்படாதவர்
களுள் எவர்கள் பாவம் செய்தார்களோ,
அவர்கள் அனைவரும் நீதிச்சட்டத்தின்படி
தண்டனை பெறாமலே அழிந்துபோவார்கள்.
அந்த நீதிச் சட்டத்திற்கு உட்பட்ட
வர்களுள் எவர்கள் பாவம் செய்தார்
களோ, அவர்கள் அனைவரும் நீதிச்சட்டத்
தின்படி தீர்ப்புப் பெறுவார்கள். 13 நீதிச்
சட்டத்தைக் கேட்பதோடு நின்றுவிடு
கிறவர்கள் கடவுள் முன்னிலையில் அவ
ருக்கு ஏற்றவர்கள் ஆவதில்லை; நீதிச்சட்
டத்தைக் கடைப்பிடிப்பவர்கள் அவரால்
தமக்கு ஏற்றவர்களெனக் கொள்ளப்படு
வார்கள். 14 நீதிச்சட்டத்திற்கு உட்
பட்டிராத பிற இனத்தவர்கள் அதற்குப்
பொருத்தமானவற்றை இயல்பாகவே செய்
யும்போது அவர்கள் தங்களுக்குத் தாங்
களே நீதிச்சட்டமாயிருக்கிறார்கள்; 15 அவர்
கள் உள்ளத்தில் நீதிச்சட்டத்தின் உட்
பொருள் எழுதப்பட்டிருக்கிறது என்பதை
அவர்கள் தங்கள் நடத்தையில் காட்டு
கிறார்கள். நன்மை தீமை அறியும் அவர்
களது மனச்சான்றிலிருந்து இது உண்மை
யென்பது தெரிகிறது. 16 நான் அறிவிக்
கிற அருட்செய்தியின்படி கடவுள் இயேசு
கிறிஸ்துவைக் கொண்டு மனிதரின் உள்
ளத்தில் மறைந்திருக்கிறவற்றைக் குறித்துத்
தீர்ப்பளிக்கும் நாளில், அவர்களுடைய
சிந்தனைகள் அவர்களைக் குற்றவாளிகள்
என்றோ குற்றமற்றவர்கள் என்றோ
தீர்ப்பளிக்கும்.

### யூதரும் நீதிச்சட்டமும்

17 நீயோ, உன்னை யூதனென்று சொல்
லிக்கொள்ளுகிறாய்; நீதிச்சட்டத்தைப்
பற்றிப் பிடித்துக்கொண்டு, கடவுளோடு
உனக்குள்ள உறவைக் குறித்துப் பெருமை
கொள்கிறாய். 18 நீதிச்சட்டத்தின் போத
னையை நீ பெற்றிருப்பதால் அவருடைய
திருவுளத்தை அறிந்திருக்கிறாய்; நன்மை
தீமையைப் பகுத்தறிகிறாய். 19 ஞானமும்
சத்தியமும் அடங்கியுள்ள திருச்சட்டம்
உன்னிடம் இருக்கிறதால், உன்னைக் குரு
டருக்கு வழிகாட்டியாகவும், இருளில்
இருப்போருக்கு ஒளியாகவும், 20 ஞான
மற்றவர்களுக்குப் பயிற்சியளிப்பவனாகவும்,
இளைஞர்களுக்குப் போதகனாகவும் இருப்ப
தாக எண்ணிக்கொள்கிறாய். 21 அப்படி
யானால், இதைக் கேள்: அடுத்தவனுக்குப்
போதிக்கும் நீ, ஒருபோதும் உனக்கே
போதித்துக்கொள்வதில்லையா? களவு
செய்யக்கூடாது என்று அறிவிக்கிறாய்;
நீ களவு செய்வதில்லையா? 22 கற்புநெறி
தவறக்கூடாது என்று கூறுகிறாய்; நீ கற்பு
நெறி தவறுவதில்லையா? தெய்வச் சிலை
களை அருவருக்கிறாய்; நீ அவற்றின்
கோவில்களிலுள்ள பொருள்களைத் திருடி
எடுத்துக்கொள்வதில்லையா? 23 நீதிச்
சட்டத்தைப் பற்றிப் பெருமை கொள்
கிறாய்; நீதிச்சட்டத்தை நீ மீறிக் கடவுளை
இழிவுபடுத்துவதில்லையா? 24 வேதத்தில்
எழுதியுள்ளபடி, ''உங்களால் கடவுளின்
திருப்பெயர் பிற இனத்தவரிடையே நிந்
தனைப் பேச்சுக்குள்ளாகிறது.'' 25 நீதிச்
சட்டத்தை நீ கடைப்பிடித்து நடந்தால்,
விருத்தசேதனத்தால் உனக்குப் பலனுண்டு.
நீதிச்சட்டத்தை நீ மீறுகிறவனாயிருந்
தால், நீ விருத்தசேதனம் பெற்றவனா
யிருந்தும் அதைப் பெறாதவனாகிவிட்டாய்.
26 எனவே, விருத்தசேதனம் பெறாத ஒரு
வன் நீதிச்சட்ட விதிமுறைகளைக் கடைப்
பிடித்தால், விருத்தசேதனம் பெறாத
அவன் விருத்தசேதனம் பெற்றவனாகக்
கருதப்படுவானல்லவா? 27 நீயோ, எழு
தப்பட்ட வேதமும் விருத்தசேதனமும்
பெற்றவனாயிருந்தும் நீதிச்சட்டத்தை மீறு
கிறாய். ஒருவன் உடலில் விருத்சேதனம்
பெறாதிருந்தும் நீதிச்சட்டத்தை நிறை
வேற்றுவானானால், அவன் உன்னைக் குற்ற
வாளியெனத் தீர்ப்புக் கூறுவான். 28 புறத்
திலே யூதனாயிருப்பவன் உண்மையான
யூதனல்ல; அவ்வாறே புறம்பே உடலில்
செய்யப்படும் விருத்தசேதனம் உண்மை
யான விருத்தசேதனமன்று. 29 அகத்தில்
யூதனாயிருப்பவனே உண்மையான யூதன்;
உள்ளத்தில் பெறப்படும் விருத்தசேதனமே
உண்மையான விருத்தசேதனம்.
அது ஏட்டிலுள்ள விதிமுறைப்படி செய்யப்
பட்டதன்று, ஆவியானவரால் செய்யப்

2:6 சங். 62:12; நீதி. 24:12. 2:11 உபா. 10:17. 2:16 1 கொரி. 4:5. 2:24 எசா 52:5. 2:29 உபா. 30:6; பிலி. 3:3; கொலோ. 2:11.

பட்டதாகும். இத்தகைய மனிதனுக்கு
வரும் புகழ் மனிதரிடமிருந்தன்று, கட
வுளிடமிருந்தே வருவதாகும்.

3 அப்படியானால், யூதருக்குள்ள சலுகை
தான் என்ன? விருத்தசேதனத்
தால் பயன் என்ன? 2 எல்லாவகையிலும்
அது மிகப்பெரிதே. முதலாவதாக, அவர்
களிடந்தான் கடவுளின் திருமொழிகள்
ஒப்படைக்கப்பட்டன. 3 ஆனால் அவர்
களுள் சிலர் அவரை நம்பாமற்போய்விட்
டனர். அதனாலென்ன? அவர்கள் நம்பா
மற்போனதால் கடவுள் தம் வாக்கை
நிறைவேற்றாமல் விட்டுவிடுவாரா? 4 இல்
லவே இல்லை. மனிதர் எல்லாரும் பொய்ய
ராயிருக்கலாம், கடவுளோ வாக்கு மாறா
தவர். இது சத்தியம். அவ்வாறே வேதத்
திலும் எழுதியிருக்கிறது.

''நீர் பேசும்போதெல்லாம் நேர்மை
யுள்ளவராயும்,
மனிதர் உம்மோடு வழக்காடும்போது,
நீர் வெற்றி பெறுகிறவராயும்
விளங்குவீர்.''

5 நாம் நீதி தவறி நடப்பதன் மூலம் கட
வுள் நீதியுள்ளவர் என்பது வெளியா
கிறது என்கிறோம். இப்படிச் சொன்னதால்
கடவுள் சினங்கொண்டு தண்டிக்கும்போது,
அவரை நீதியற்றவர் என்று சொல்லிவிட
லாமா? மனிதர் பேசும் முறையில் பேசு
கிறேன். 6 இல்லவே இல்லை. கடவுள் நீதி
யற்றவராயிருந்தால், அவர் உலகத்துக்கு
எப்படித் தீர்ப்பளிக்க முடியும்?

7 இனி, ''நான் நம்பத்தகாதவனாய்
நடப்பதன் மூலம் கடவுள் வாக்குத் தவறா
தவர் என்பது மிகத் தெளிவாகிறதோடு
அவருடைய புகழும் பெருகுகிறதென்றால்,
இன்னும் என்னைப் பாவி என்று தீர்ப்புக்
கூறுவானேன்?'' என்று ஒருவன் கேட்க
லாம். 8 அப்படியானால், ''நன்மை உண்
டாகும்படி தீமை செய்வோம்'' என்று
சொல்லலாமே!—நானே இவ்வாறு சொன்
னதாகவும் சிலர் என்னைப் பழிக்கின்றனர்.
அப்படிப் பழிக்கிறவர்கள் தண்டனைத்
தீர்ப்புப் பெறுவதுதான் நியாயம்.

### நேர்மையானவன் ஒருவன்கூட இல்லை

9 முடிவுதான் என்ன? யூதர்களாகிய
நாங்கள் மற்றவர்களைவிட மேலானவர்
களா? ஒருவகையிலும் இல்லை. யூதர்
கிரேக்கர் யாவருமே பாவத்தின் ஆளு
கைக்குள் இருக்கிறவர்கள் என்று ஏற்
கெனவே நான் கூறிவிட்டேன். 10 அவ்
வாறே வேதத்திலும் எழுதியிருக்கிறது:

''நேர்மையானவனே இல்லை; ஒருவன்கூட
இல்லை;

11 மதியுள்ளவன் எவனுமில்லை;
கடவுளை நாடித் தேடுகிறவன்
எவனுமில்லை;

12 எல்லாரும் வழிவிலகிப் போயினர்,
ஒருமிக்கக் கெட்டுப்போயினர்;
நன்மையானதைச் செய்கிறவனே இல்லை,
ஒருவன்கூட இல்லை,''

13 ''அவர்கள் தொண்டை திறந்த
பிணக்குழி;
அவர்கள் தங்கள் நாவுகளால் வஞ்சகம்
பேசுகிறார்கள்.''
''அவர்கள் உதடுகளில் பாம்பின் நஞ்சு
மறைந்திருக்கிறது.''

14 ''அவர்கள் வாய் நிரம்ப இருப்
பவை கொடிய வசைமொழிகளே.''

15 ''அவர்கள் கால்கள் இரத்தம்
சிந்துவதற்கு விரைகின்றன;

16 அவர்கள் கால்வைத்த இடமெல்
லாம் அழிவும் துயரமுமே;

17 சமாதான பாதை என்பதே அவர்
களுக்குத் தெரியாது.''

18 ''அவர்கள் மனத்தில் கடவுள்
பயம் இல்லை.''

19 நீதிச்சட்டம், தான் இவ்வாறு
சொல்பவை அனைத்தையும் நீதிச்சட்டத்
திற்கு உட்பட்டவர்களுக்கே சொல்லு
கிறது என்பது நமக்குத் தெரியும். ஆகவே,
இவர்களும் உலகத்தார் அனைவருமே வாய்
திறந்து எதுவும் சொல்ல வழியின்றிக்
கடவுளின் தீர்ப்புக்கு உள்ளாகியிருக்கின்
றனர். 20 ஏனென்றால், நீதிச்சட்டம் விதிக்
கும் செயல்களைச் செய்வதனால் எந்த
மனிதனும் கடவுளால் அவருக்கு ஏற்றவ
னெனக் கொள்ளப்படுவதில்லை. மனிதன்
பாவி என்பதை அவனுக்கு உணர்த்துவதே
நீதிச்சட்டத்தின் வேலை.

### தமக்கு ஏற்றவர்களெனக் கடவுளால் கொள்ளப்படுதல்

21 இப்பொழுதோ கடவுள் மக்களைத்
தமக்கு ஏற்றவர்களெனக் கொள்வது எவ்
வாறு என்பதும், அது நீதிச்சட்டத்தின்
வழியாய் அன்று என்பதும் வெளியாகி
யிருக்கின்றன. கடவுளுடைய நீதியின் இச்
செயலைக் குறித்து நீதிச்சட்டமும் இறை
வாக்குகளும் கூறியிருக்கின்றன. 22 கட
வுளின் இந்த நீதி இயேசுகிறிஸ்துவினிடம்
கொள்ளும் நம்பிக்கையின் மூலம், அவரிடம்
நம்பிக்கை கொள்ளும் அனைவரிடமும்

3:4 சங். 51:4. 3:10—12 சங். 14:1—3; 53:1—3. 3:13 சங். 5:9; 140:3. 3:14 சங். 10:7. 3:15—17 சங். 59:7, 8. 3:18 சங். 36:1. 3:20 சங். 143:2; கலா. 2:16. 3:22 கலா. 2:16

செயலாற்றுகிறது. அவர்களிடையே
வேறுபாட்டுக்கு இடமில்லை. 23 ஏனெனில்
எல்லாருமே பாவம் செய்துள்ளனர். எல்
லாருமே கடவுள் அளித்த மாட்சிமையை
இழந்தவர்களாய் இருக்கின்றனர். 24 அவ
ருடைய அருளால் கிறிஸ்து இயேசுவின்
மீட்சியளிக்கும் செயலின்மூலம் எல்லாருமே
அவருக்கு ஏற்றவர்களெனக் கொள்ளப்
படுகின்றனர். இது அவருடைய இலவச
ஈவு. 25 கடவுள் மனிதருடைய
பாவத்தை நீக்கும் பலியாக இயேசுவை
நியமித்தார். இயேசு தமது இரத்தம்
சிந்தியதால், இந்தப் பாவப்பரிகாரம்
உண்டாயிற்று. அவரிடம் நம்பிக்கை கொள்
வோருக்கு இதன் பலன் கிடைக்கும்.
கடவுள் தமது பொறுமையினால் கடந்த
காலத்தில் பாவங்களைத் தண்டியாமல்
விட்டுவிட்டதால், அவரது நீதி விளங்
காமற்போயிற்று, அதைத் தெளிவாகக்
காட்டுவதற்காக அவர் இவ்வாறு செய்
தார். 26 மேலும், இவ்வாறு செய்து
தமது நீதியை கடவுள் இக்காலத்திலேயே
தெளிவாகக் காட்டியதால், தாம் நீதி
யுள்ளவர் என்பதையும் இயேசுவினிடம்
நம்பிக்கை கொள்பவனைத் தமக்கு ஏற்றவ
னெனக் கொள்பவர் என்பதையும் விளங்கச்
செய்தார்.

27 அப்படியிருக்க, மனிதர் பெருமை
கொள்வதற்கு இடமேது? இடமில்லை. எந்தக்
கொள்கையின் அடிப்படையில் இடமில்லை?
செயல்களின் மூலம் கடவுளுக்கு
ஏற்றவராதல் என்னும் கொள்கைப்படி
அன்று, நம்பிக்கையின் மூலம் என்னும்
கொள்கைப்படி இடமில்லை. 28 ஏனெனில்,
நம்முடைய கொள்கைப்படி, நீதிச்சட்டம்
விதிக்கும் செயல்களைச் செய்வதனாலன்று,
இயேசுவினிடம் நம்பிக்கை கொள்வத
னாலேதான் எந்த மனிதனும் கடவுளுக்கு
ஏற்றவனென அவரால் கொள்ளப்படு
கிறான். 29 கடவுள் யூதருக்கு மட்டுமா
கடவுள்? யூதரல்லாதாருக்கும் அவரே
கடவுள் அல்லவா? 30 ஆம், அவர் யூதரல்
லாதாருக்கும் கடவுளே. ஏனெனில், கடவுள்
ஒருவரே. விருத்தசேதனம் உள்ளவர்க
ளாயினும் விருத்தசேதனம் இல்லாதவர்க
ளாயினும் அவர்களுள் யார் யார் இயேசு
வினிடம் நம்பிக்கை கொள்கிறார்களோ,
அவர்களையே கடவுள் தமக்கு ஏற்றவர்க
ளெனக் கொள்வார். 31 அப்படியானால்,
நம்பிக்கை மட்டுமே தேவை என்று சொல்
வதால் நீதிச்சட்டத்தை ஒதுக்கித் தள்ளி
விடுகிறோமா? இல்லவே இல்லை. நீதிச்சட்
டத்தின் உண்மையான நோக்கத்தை நிலை
நாட்டுகிறோம்.

## ஆபிரகாம் ஓர் எடுத்துக்காட்டு

4 இப்படியிருக்க, நமது இனத்தின்
தந்தையாகிய ஆபிரகாமுக்கு இது
காறும் கூறியது எப்படிப் பொருந்தும்?
அவர் கண்டறிந்ததென்ன? 2 ஆபிரகாம்
தம் செயல்கள் காரணமாகக் கடவுளுக்கு
ஏற்றவரானாரென்றால், அவருக்குப் பெருமை
கொள்ள இடமுண்டு; ஆனால், கடவுள்
முன்னிலையில் அப்படிப் பெருமை
கொள்ள இடமேயில்லை. 3 ஏன்? வேத
வாக்கியம் கூறுகிறதென்ன? ''ஆபிரகாம்
கடவுளை நம்பினார்; அவருடைய நம்பிக்
கையை முன்னிட்டுக் கடவுள் அவரை நீதி
மானாகப் பாவித்து ஏற்றுக்கொண்டார்.''
4 ஒருவன் வேலை செய்தால் அவனுக்கு
அளிக்கப்படுவது அவனுக்குச் சேர வேண்
டிய கூலியாகப் ''பாவிக்கப்படுகிறது'' என்று
நாம் சொல்வதில்லை. அது அவன் கூலியே,
நன்கொடையன்று. 5 ஆனால் ஒருவன்,
மீட்படைவதற்கான செயல் ஒன்றும் புரி
யாமல், குற்றவாளிக்கும் விடுதலைத்தீர்ப்பு
அளிப்பவராகிய கடவுளிடம் நம்பிக்கை
கொள்வானானால், அவனுடைய நம்பிக்
கையை முன்னிட்டுக் கடவுள் அவனை
''நீதிமானாகப் பாவித்து ஏற்றுக்கொள்
கிறார்'' என்று கூறுவது சரியே. 6 இதற்
கிசையக் கடவுள் ஒருவனுடைய நற்
செயல்களைக் கணியாமலே, அவனை நீதி
மானாகப் பாவித்து ஏற்றுக்கொள்கிற
போது, அவனுக்குக் கிடைக்கும்
நற்பேற்றைக் குறித்துத் தாவீது இவ்வாறு
உரைக்கிறார்:

7 ''யாருடைய குற்றங்கள் மன்னிக்
கப்பட்டனவோ,
யாருடைய பாவங்கள் துடைத்தழிக்கப்
பட்டனவோ,
அவர்கள் நற்பேறு பெற்றவர்கள்.
8 எவனுடைய பாவத்தை ஆண்டவர்
எழுதிவையாதிருக்கிறாரோ
அவன் நற்பேறு பெற்றவன்.''

9 இந்த நற்பேறு விருத்தசேதனம் உள்ள
வனுக்கு மட்டுந்தானா அல்லது விருத்த
சேதனம் இல்லாதவனுக்கும் உண்டா?
ஆபிரகாமை ''அவருடைய நம்பிக்கையை
முன்னிட்டுக் கடவுள் நீதிமானாகப் பாவித்து
ஏற்றுக்கொண்டார்'' என்கிறோம். 10 எப்
பொழுது அவர் அவ்வாறு ஏற்றுக்கொள்
ளப்பட்டார்? விருத்தசேதனம் உள்ளவ
ராய் இருந்தபோதா அல்லது விருத்த
சேதனம் இல்லாதவராய் இருந்தபோதா?
விருத்தசேதனம் உள்ளவராய் இருந்த
போதன்று, அது இல்லாதவராய் இருந்த
போதே. 11 அவர் விருத்தசேதனம் இல்
லாதவராய் இருந்த காலத்தில் தம்

**3:31** மத். 5:17; திருத்தூது. 24:14. **4:3** ஆதி. 15:6; கலா. 3:6; யாக். 2:23. **4:7** சங். 32:1, 2. **4:11**
ஆதி. 17·10; யோ. 7:22.

நம்பிக்கையினால் நீதிமானென ஏற்றுக்கொள்
ளப்பட்டு, அதற்கு முத்திரையாகத்தான்
பிறகு விருத்தசேதனமாகிய அடையாளத்
தைப் பெற்றார். ஆகவே, விருத்தசேதனம்
இல்லாதவர்களாயிருந்தும், கடவுளிடம்
நம்பிக்கை கொள்வதனால் நீதிமான்
களென ஏற்றுக்கொள்ளப்படுவோர் அனை
வருக்கும் அவர் தந்தையானார். 12 அதே
காரணத்தினால் விருத்தசேதனம் உள்ள
வர்களுக்கும் அவர் தந்தையானார். அதா
வது, அவர்களுள் யார் யார் விருத்த
சேதனம் பெற்றதோடு நின்றுவிடாமல்,
நம் தந்தையாகிய ஆபிரகாம் விருத்த
சேதனம் பெறுமுன் கொண்டிருந்த நம்
பிக்கையைப் பற்றிக்கொண்டு அதே
அணிவரிசையில் நடக்கிறார்களோ அவர்
களுக்கு அவர் தந்தையானார்.

## கடவுளின் வாக்குறுதி அவரை நம்புவோருக்கே

13 ஆபிரகாமும் அவருடைய மரபி
னரும் உலகத்தை உடைமையாகப் பெறு
வார்கள் என்கிற வாக்குறுதி அவர்களுக்கு
அளிக்கப்பட்டது. ஆபிரகாம் நீதிச்சட்
டத்தைக் கடைப்பிடித்து நடந்ததாலன்று,
அவரது நம்பிக்கையை முன்னிட்டு அவர்
நீதிமானெனக் கொள்ளப்பட்டதை நோக்
கியே அது அளிக்கப்பட்டது. 14 நீதிச்சட்
டத்தைச் சார்ந்திருப்பவர்களே அந்த
உடைமையைப் பெறுவார்களென்றால்,
கடவுளிடம் நம்பிக்கை கொள்வது வீண்
என்றாகும்; அந்த வாக்குறுதியும் பயனற்ற
தாகும். 15 நீதிச்சட்டம் வருவிப்பது
தெய்வசினமே. எங்கே நீதிச்சட்டம்
இல்லையோ, அங்கே நீதிச்சட்ட மீறுதலும்
இராது. 16 அதனாலேதான், எல்லாம்
அருளின் செயலே என்பது விளங்கும்படி,
அந்த வாக்குறுதி நம்பிக்கையை அடிப்
படையாகக் கொண்டு அளிக்கப்பட்டது.
ஆகவே, அது ஆபிரகாமின் மரபினர்
எல்லாருக்கும் உரியது என்பது உறுதி
யாயிற்று. அதாவது, ஆபிரகாமின் மர
பினருள் நீதிச்சட்டத்திற்கு உட்பட்டவர்க
களுக்கு மட்டுமன்றி, அவரது நம்பிக்
கையை உடையவர்களுக்கும் அது உரிய
தாயிற்று. 17 ஏனெனில், ஆபிரகாம்
நம்மெல்லோருக்குமே தந்தை. அவ்வாறே
வேதத்திலும்,

> "நான் உன்னை ஏராளமான இனத்
> தவருக்குத் தந்தையாக ஏற்படுத்தினேன்"

என்று எழுதியுள்ளது. நான் குறிப்பிடும்
வாக்குறுதி, ஆபிரகாம் நம்பிக்கை
கொண்டிருந்த கடவுளின் பார்வையில்,
மாறாத்தன்மை வாய்ந்தது. அந்தக் கடவுள்
இறந்தோரை உயிர்ப்பிக்கிறவர்;
இல்லாதவற்றைத் தம் சொல்லால் தோற்று
விக்கிறவர். 18 ஆபிரகாமிடம், "உன்
மரபினர் எண்ணிறந்தவராயிருப்பர்"
என்று சொன்னவரும் அவரே. அவர்
சொன்னது நிறைவேறும் என்ற நம்பிக்
கைக்கு யாதோர் ஆதாரமும் இல்லா
திருந்தும் ஆபிரகாம் அதில் நம்பிக்கை வைத்
திருந்தார். அதனால் அவருக்குச் சொல்
லப்பட்டதற்கிசைய அவர் ஏராளமான
இனத்தவருக்குத் தந்தையானார். 19 ஏறக்
குறைய நூறு வயதுள்ளவராயிருந்த அவர்,
தமது உடல் தளர்ந்து செத்ததுபோ
லிருந்ததையும், சாராளின் கருப்பை செத்
திருந்ததையும் கவனித்திருந்தும், நம்பிக்
கையில் உறுதி தளராதிருந்தார். 20 அவர்
கடவுளின் வாக்குறுதியில் அவநம்பிக்
கையோ ஐயமோ கொள்ளாமல்,
21 தம் நம்பிக்கையில் மேலும் உறுதி
யுடையவராகி, வாக்கை அளித்த கடவுள்
அதை நிறைவேற்றவும் வல்லவர் என்
பதை முழுமனத்துடன் நம்பிக் கடவுளைப்
போற்றினார். 22 இந்த நம்பிக்கையை முன்
னிட்டே, "கடவுள் அவரை நீதிமானாகப்
பாவித்து ஏற்றுக்கொண்டார்." 23 கட
வுள் அவரை அவ்வாறு ஏற்றுக்கொண்
டார் என்பது அவரைக் குறித்து மட்டும்
எழுதப்படவில்லை; 24 அது நமக்கும்
பொருந்தும். ஏனென்றால், நாம் நம்மு
டைய ஆண்டவராகிய இயேசுவை இறந்
தோரிடமிருந்து உயிரோடெழுப்பினவரிடம்
நம்பிக்கை கொண்டிருப்பதால், நாமும்
நீதிமான்களெனத் தீர்ப்புப்பெறப்போகி
றோம். 25 நம்முடைய தவறுகளுக்காக
இயேசு மரணமடையும்படி ஒப்புவிக்கப்
பட்டார்; நாம் கடவுளுக்கு ஏற்றவர்
களெனக் கொள்ளப்படும்படி அவர் உயி
ரோடெழுப்பப்பட்டார்.

## கடவுளுக்கு ஏற்றவர்களென அவரால் கொள்ளப்படுதலின் பயன்

5 எனவே, நம்முடைய நம்பிக்கையை
முன்னிட்டுக் கடவுளுக்கு ஏற்றவர்
களென அவரால் கொள்ளப்பட்டிருக்கிற
நாம், நம்முடைய ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்து மூலமாகக் கடவுளோடு சமா
தான உறவு கொண்டுள்ளோம். 2 நாம்
கிறிஸ்துவின் மூலம் இந்த அருளாட்சிக்
குள் வந்து சேர்ந்திருக்கிறோம்; இந்த உரி
மையை நம்பிக்கையினால் பெற்றிருக்கிறோம்.
நாம் கடவுளின் மாட்சிமையில்
பங்குகொள்வோம் என்று எதிர்நோக்கி
யிருப்பதில் பெருமகிழ்ச்சியடைகிறோம்.
3 அது மட்டுமன்று, வேதனை அனுபவிப்ப
திலும் மகிழ்ச்சியடைகிறோம். நாம் அறிந்

**4:13** ஆதி. 17:4—6; 22:17, 18; கலா. 3:29. **4:14** கலா. 3:18. **4:15** கலா. 3:10. **4:16** கலா. 3:7.
**4:17** ஆதி. 17:5. **4:18** ஆதி. 15:5 **4:19** ஆதி. 17:17. **4:25** ஏசா. 53:4, 5.

செயலாற்றுகிறது. அவர்களிடையே
வேறுபாட்டுக்கு இடமில்லை. 23 ஏனெனில்
எல்லாருமே பாவம் செய்துள்ளனர். எல்
லாருமே கடவுள் அளித்த மாட்சிமையை
இழந்தவர்களாய் இருக்கின்றனர். 24 அவ
ருடைய அருளால் கிறிஸ்து இயேசுவின்
மீட்சியளிக்கும் செயலின்மூலம் எல்லாருமே
அவருக்கு ஏற்றவர்களெனக் கொள்ளப்
படுகின்றனர். இது அவருடைய இலவச
ஈவு. 25 கடவுள் மனிதருடைய
பாவத்தை நீக்கும் பலியாக இயேசுவை
நியமித்தார். இயேசு தமது இரத்தம்
சிந்தியதால், இந்தப் பாவப்பரிகாரம்
உண்டாயிற்று. அவரிடம் நம்பிக்கை கொள்
வோருக்கு இதன் பலன் கிடைக்கும்.
கடவுள் தமது பொறுமையினால் கடந்த
காலத்தில் பாவங்களைத் தண்டியாமல்
விட்டுவிட்டதால், அவரது நீதி விளங்
காமற்போயிற்று, அதைத் தெளிவாகக்
காட்டுவதற்காக அவர் இவ்வாறு செய்
தார். 26 மேலும், இவ்வாறு செய்து
தமது நீதியை கடவுள் இக்காலத்திலேயே
தெளிவாகக் காட்டியதால், தாம் நீதி
யுள்ளவர் என்பதையும் இயேசுவினிடம்
நம்பிக்கை கொள்பவனைத் தமக்கு ஏற்றவ
னெனக் கொள்பவர் என்பதையும் விளங்கச்
செய்தார்.

27 அப்படியிருக்க, மனிதர் பெருமை
கொள்வதற்கு இடமேது? இடமில்லை. எந்தக்
கொள்கையின் அடிப்படையில் இடமில்லை?
செயல்களின் மூலம் கடவுளுக்கு
ஏற்றவராதல் என்னும் கொள்கைப்படி
அன்று, நம்பிக்கையின் மூலம் என்னும்
கொள்கைப்படி இடமில்லை. 28 ஏனெனில்,
நம்முடைய கொள்கைப்படி, நீதிச்சட்டம்
விதிக்கும் செயல்களைச் செய்வதனாலன்று,
இயேசுவினிடம் நம்பிக்கை கொள்வத
னாலேதான் எந்த மனிதனும் கடவுளுக்கு
ஏற்றவனென அவரால் கொள்ளப்படு
கிறான். 29 கடவுள் யூதருக்கு மட்டுமா
கடவுள்? யூதரல்லாதாருக்கும் அவரே
கடவுள் அல்லவா? 30 ஆம், அவர் யூதரல்
லாதாருக்கும் கடவுளே. ஏனெனில், கடவுள்
ஒருவரே. விருத்தசேதனம் உள்ளவர்க
ளாயினும் விருத்தசேதனம் இல்லாதவர்க
ளாயினும் அவர்களுள் யார் யார் இயேசு
வினிடம் நம்பிக்கை கொள்கிறார்களோ,
அவர்களையே கடவுள் தமக்கு ஏற்றவர்க
ளெனக் கொள்வார். 31 அப்படியானால்,
நம்பிக்கை மட்டுமே தேவை என்று சொல்
வதால் நீதிச்சட்டத்தை ஒதுக்கித் தள்ளி
விடுகிறோமா? இல்லவே இல்லை. நீதிச்சட்
டத்தின் உண்மையான நோக்கத்தை நிலை
நாட்டுகிறோம்.

## ஆபிரகாம் ஓர் எடுத்துக்காட்டு

4 இப்படியிருக்க, நமது இனத்தின்
தந்தையாகிய ஆபிரகாமுக்கு இது
காறும் கூறியது எப்படிப் பொருந்தும்?
அவர் கண்டறிந்ததென்ன? 2 ஆபிரகாம்
தம் செயல்கள் காரணமாகக் கடவுளுக்கு
ஏற்றவரானாரென்றால், அவருக்குப் பெருமை
கொள்ள இடமுண்டு; ஆனால், கடவுள்
முன்னிலையில் அப்படிப் பெருமை
கொள்ள இடமேயில்லை. 3 ஏன்? வேத
வாக்கியம் கூறுகிறதென்ன? ''ஆபிரகாம்
கடவுளை நம்பினார்; அவருடைய நம்பிக்
கையை முன்னிட்டுக் கடவுள் அவரை நீதி
மானாகப் பாவித்து ஏற்றுக்கொண்டார்.''
4 ஒருவன் வேலை செய்தால் அவனுக்கு
அளிக்கப்படுவது அவனுக்குச் சேர வேண்
டிய கூலியாகப் ''பாவிக்கப்படுகிறது'' என்று
நாம் சொல்வதில்லை. அது அவன் கூலியே,
நன்கொடையன்று. 5 ஆனால் ஒருவன்,
மீட்படைவதற்கான செயல் ஒன்றும் புரி
யாமல், குற்றவாளிக்கும் விடுதலைத்தீர்ப்பு
அளிப்பவராகிய கடவுளிடம் நம்பிக்கை
கொள்வானானால், அவனுடைய நம்பிக்
கையை முன்னிட்டுக் கடவுள் அவனை
''நீதிமானாகப் பாவித்து ஏற்றுக்கொள்
கிறார்'' என்று கூறுவது சரியே. 6 இதற்
கிசையக் கடவுள் ஒருவனுடைய நற்
செயல்களைக் கணியாமலே, அவனை நீதி
மானாகப் பாவித்து ஏற்றுக்கொள்கிற
போது, அவனுக்குக் கிடைக்கும்
நற்பேற்றைக் குறித்துத் தாவீது இவ்வாறு
உரைக்கிறார்:

7 ''யாருடைய குற்றங்கள் மன்னிக்
கப்பட்டனவோ,
யாருடைய பாவங்கள் துடைத்தழிக்கப்
பட்டனவோ,
அவர்கள் நற்பேறு பெற்றவர்கள்.
8 எவனுடைய பாவத்தை ஆண்டவர்
எழுதிவையாதிருக்கிறாரோ
அவன் நற்பேறு பெற்றவன்.''

9 இந்த நற்பேறு விருத்தசேதனம் உள்ள
வனுக்கு மட்டுந்தானா அல்லது விருத்த
சேதனம் இல்லாதவனுக்கும் உண்டா?
ஆபிரகாமை ''அவருடைய நம்பிக்கையை
முன்னிட்டுக் கடவுள் நீதிமானாகப் பாவித்து
ஏற்றுக்கொண்டார்'' என்கிறோம். 10 எப்
பொழுது அவர் அவ்வாறு ஏற்றுக்கொள்
ளப்பட்டார்? விருத்தசேதனம் உள்ளவ
ராய் இருந்தபோதா அல்லது விருத்த
சேதனம் இல்லாதவராய் இருந்தபோதா?
விருத்தசேதனம் உள்ளவராய் இருந்த
போதன்று, அது இல்லாதவராய் இருந்த
போதே. 11 அவர் விருத்தசேதனம் இல்
லாதவராய் இருந்த காலத்தில் தம்

3:31 மத். 5:17; திருத்தூது. 24:14. 4:3 ஆதி. 15:6; கலா. 3:6; யாக். 2:23. 4:7 சங். 32:1, 2. 4:11 ஆதி. 17:10; யோ. 7:22.

நம்பிக்கையினால் நீதிமானென ஏற்றுக்கொள்
ளப்பட்டு, அதற்கு முத்திரையாகத்தான்
பிறகு விருத்தசேதனமாகிய அடையாளத்
தைப் பெற்றார். ஆகவே, விருத்தசேதனம்
இல்லாதவர்களாயிருந்தும், கடவுளிடம்
நம்பிக்கை கொள்வதனால் நீதிமான்
களென ஏற்றுக்கொள்ளப்படுவோர் அனை
வருக்கும் அவர் தந்தையானார். 12 அதே
காரணத்தினால் விருத்தசேதனம் உள்ள
வர்களுக்கும் அவர் தந்தையானார். அதா
வது, அவர்களுள் யார் யார் விருத்த
சேதனம் பெற்றதோடு நின்றுவிடாமல்,
நம் தந்தையாகிய ஆபிரகாம் விருத்த
சேதனம் பெறுமுன் கொண்டிருந்த நம்
பிக்கையைப் பற்றிக்கொண்டு அதே
அணிவரிசையில் நடக்கிறார்களோ அவர்
களுக்கு அவர் தந்தையானார்.

### கடவுளின் வாக்குறுதி அவரை நம்புவோருக்கே

13 ஆபிரகாமும் அவருடைய மரபி
னரும் உலகத்தை உடைமையாகப் பெறு
வார்கள் என்கிற வாக்குறுதி அவர்களுக்கு
அளிக்கப்பட்டது. ஆபிரகாம் நீதிச்சட்
டத்தைக் கடைப்பிடித்து நடந்ததாலன்று,
அவரது நம்பிக்கையை முன்னிட்டு அவர்
நீதிமானெனக் கொள்ளப்பட்டதை நோக்
கியே அது அளிக்கப்பட்டது. 14 நீதிச்சட்
டத்தைச் சார்ந்திருப்பவர்களே அந்த
உடைமையைப் பெறுவார்களென்றால்,
கடவுளிடம் நம்பிக்கை கொள்வது வீண்
என்றாகும்; அந்த வாக்குறுதியும் பயனற்ற
தாகும். 15 நீதிச்சட்டம் வருவிப்பது
தெய்வசினமே. எங்கே நீதிச்சட்டம்
இல்லையோ, அங்கே நீதிச்சட்ட மீறுதலும்
இராது. 16 அதனாலேதான், எல்லாம்
அருளின் செயலே என்பது விளங்கும்படி,
அந்த வாக்குறுதி நம்பிக்கையை அடிப்
படையாகக் கொண்டு அளிக்கப்பட்டது.
ஆகவே, அது ஆபிரகாமின் மரபினர்
எல்லாருக்கும் உரியது என்பது உறுதி
யாயிற்று. அதாவது, ஆபிரகாமின் மர
பினருள் நீதிச்சட்டத்திற்கு உட்பட்டவர்க
ளுக்கு மட்டுமன்றி, அவரது நம்பிக்
கையை உடையவர்களுக்கும் அது உரிய
தாயிற்று. 17 ஏனெனில், ஆபிரகாம்
நம்மெல்லோருக்குமே தந்தை. அவ்வாறே
வேதத்திலும்,

"நான் உன்னை ஏராளமான இனத்
தவருக்குத் தந்தையாக ஏற்படுத்தினேன்"

என்று எழுதியுள்ளது. நான் குறிப்பிடும்
வாக்குறுதி, ஆபிரகாம் நம்பிக்கை
கொண்டிருந்த கடவுளின் பார்வையில்,
மாறாத்தன்மை வாய்ந்தது. அந்தக் கடவுள்
இறந்தோரை உயிர்ப்பிக்கிறவர்;
இல்லாதவற்றைத் தம் சொல்லால் தோற்று
விக்கிறவர். 18 ஆபிரகாமிடம், "உன்
மரபினர் எண்ணிறந்தவராயிருப்பர்"
என்று சொன்னவரும் அவரே. அவர்
சொன்னது நிறைவேறும் என்ற நம்பிக்
கைக்கு யாதோர் ஆதாரமும் இல்லா
திருந்தும் ஆபிரகாம் அதில் நம்பிக்கை வைத்
திருந்தார். அதனால் அவருக்குச் சொல்
லப்பட்டதற்கிசைய அவர் ஏராளமான
இனத்தவருக்குத் தந்தையானார். 19 ஏறக்
குறைய நூறு வயதுள்ளவராயிருந்த அவர்,
தமது உடல் தளர்ந்து செத்ததுபோ
லிருந்ததையும், சாராளின் கருப்பை செத்
திருந்ததையும் கவனித்திருந்தும், நம்பிக்
கையில் உறுதி தளராதிருந்தார். 20 அவர்
கடவுளின் வாக்குறுதியில் அவநம்பிக்
கையோ ஐயமோ கொள்ளாமல்,
21 தம் நம்பிக்கையில் மேலும் உறுதி
யுடையவராகி, வாக்கை அளித்த கடவுள்
அதை நிறைவேற்றவும் வல்லவர் என்
பதை முழுமனத்துடன் நம்பிக் கடவுளைப்
போற்றினார். 22 இந்த நம்பிக்கையை முன்
னிட்டே, "கடவுள் அவரை நீதிமானாகப்
பாவித்து ஏற்றுக்கொண்டார்." 23 கட
வுள் அவரை அவ்வாறு ஏற்றுக்கொண்
டார் என்பது அவரைக் குறித்து மட்டும்
எழுதப்படவில்லை; 24 அது நமக்கும்
பொருந்தும். ஏனென்றால், நாம் நம்மு
டைய ஆண்டவராகிய இயேசுவை இறந்
தோரிடமிருந்து உயிரோடெழுப்பினவரிடம்
நம்பிக்கை கொண்டிருப்பதால், நாமும்
நீதிமான்களெனத் தீர்ப்புப்பெறப்போகி
றோம். 25 நம்முடைய தவறுகளுக்காக
இயேசு மரணமடையும்படி ஒப்புவிக்கப்
பட்டார்; நாம் கடவுளுக்கு ஏற்றவர்
களெனக் கொள்ளப்படும்படி அவர் உயி
ரோடெழுப்பப்பட்டார்.

### கடவுளுக்கு ஏற்றவர்களென அவரால் கொள்ளப்படுதலின் பயன்

**5** எனவே, நம்முடைய நம்பிக்கையை
முன்னிட்டுக் கடவுளுக்கு ஏற்றவர்
களென அவரால் கொள்ளப்பட்டிருக்கிற
நாம், நம்முடைய ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்து மூலமாகக் கடவுளோடு சமா
தான உறவு கொண்டுள்ளோம். 2 நாம்
கிறிஸ்துவின் மூலம் இந்த அருளாட்சிக்
குள் வந்து சேர்ந்திருக்கிறோம்; இந்த உரி
மையை நம்பிக்கையினால் பெற்றிருக்கிறோம்.
நாம் கடவுளின் மாட்சிமையில்
பங்குகொள்வோம் என்று எதிர்நோக்கி
யிருப்பதில் பெருமகிழ்ச்சியடைகிறோம்.
3 அது மட்டுமன்று, வேதனை அனுபவிப்ப
திலும் மகிழ்ச்சியடைகிறோம். நாம் அறிந்

**4:13** ஆதி. 17:4—6; 22:17, 18; கலா. 3:29. **4:14** கலா. 3:18. **4:15** கலா. 3:10. **4:16** கலா. 3:7.
**4:17** ஆதி. 17:5. **4:18** ஆதி. 15:5 **4:19** ஆதி. 17:17. **4:25** ஏசா. 53:4, 5.

திருக்கிறபடி, வேதனை பொறுமையையும்,
4 பொறுமை புடமிட்ட நற்பண்பையும்,
நற்பண்பு எதிர்காலத்தைப்பற்றிய நம்
பிக்கையையும் விளைவிக்கும். 5 எதிர்
காலத்தைப்பற்றி நமக்கு இருக்கும் நம்
பிக்கை வீண்போகாது. ஏனெனில், நமக்கு
அருளப்பட்ட தூய ஆவியின் மூலம்
கடவுளின் அன்பு நம் உள்ளத்தில் பொழி
யப்பட்டிருக்கிறது.

6 நாம் நம்மை மீட்டுக்கொள்ளும்
திறமையின்றி இருந்த காலத்திலேயே
கிறிஸ்து, தெய்வபயம் இல்லாதிருந்த
நமக்காக, குறித்த வேளை வந்தபோது தம்
உயிரைத் தந்தார். 7 நீதிமானுக்காகவும்
ஒருவன் தன் உயிரைத் தருவது அரிது.
ஒருவேளை நல்லவன் ஒருவனுக்காக யாரா
வது தன் உயிரைத் தர முன்வரக்கூடும்;
8 ஆனால், நாம் பாவிகளாய் இருந்த
போதே கிறிஸ்து நமக்காகத் தம் உயி
ரைத் தந்தார். கடவுள் நம்மிடம் அன்பு
கொண்டுள்ளார் என்பதற்கு இதுவே
சான்று. 9 இப்பொழுது நாம் கிறிஸ்து
வின் இரத்தத்தினால் கடவுளுக்கு ஏற்ற
வர்களெனக் கொள்ளப்பட்டிருக்கிறோம்.
ஆகையால், நாம் அவர் மூலமாகத்
தெய்வசினத்திற்குத் தப்பி மீட்புப்
பெறுவோம் என்பதும் திண்ணமன்றோ?
10 நாம் கடவுளை எதிர்ப்பவர்களாய்
இருந்தபோது, அவருடைய மைந்தரின்
மரணத்தின் மூலம் அவரோடு நமக்கு
நல்லுறவு உண்டாயிற்றென்றால், அப்படி
நல்லுறவு உண்டானபின், என்றும் உயி
ரோடுள்ள அந்தத் திருமைந்தரால் நாம்
மீட்புப் பெறுவோம் என்பதும்
திண்ணமன்றோ? 11 இது வெறும்
எதிர்கால நம்பிக்கையன்று; இப்பொழுதே
நம்முடைய ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவின் மூலம் கடவுளோடு நமக்கு
நல்லுறவு உண்டாயிருக்கிறது. ஆகையால்
அவர்மூலமாகக் கடவுளை அகமகிழ்ச்சி
யோடு போற்றுகிறோம்.

## ஆதாமும் கிறிஸ்துவும்

12 இதைக் கவனியுங்கள்: ஒரே ஒரு
மனிதன் மூலமாகப் பாவம் உலகில் வந்
தது; அந்தப் பாவத்தின் மூலம் மரணம்
வந்தது. அதுபோலவே, எல்லா மனித
ரும் பாவம் செய்ததால், மரணம் எல்லா
மனிதருக்கும் பரவிற்று. 13 நீதிச்சட்டம்
அருளப்படுமுன் உலகத்தில் பாவம் இருந்
தது. ஆனால், நீதிச்சட்டம் இல்லாதபோது
பாவத்தைக் குறித்த கணக்குப் பதிவு செய்
யப்படவில்லை. 14 எனினும், ஆதாம்
முதல் மோசே வரையிலும் இருந்தவர்கள்
ஆதாமைப்போலக் கடவுளின் கட்
டளையை மீறிப் பாவம் செய்யாதிருந்த
போதிலும் மரணத்துக்கு ஆளானார்கள்.
பின்னால் வந்தவருக்கு அந்த ஆதாம்
முன்னடையாளமாயிருக்கிறான்.

15 ஆனால், அவனுடைய தவறான செய
லுக்கும் கடவுளுடைய அருட்செயலுக்கும்
இடையேயுள்ள வேறுபாடு கவனிக்கத்
தக்கது. அந்த ஒரே மனிதனுடைய தவ
றான செயலால் எல்லாருக்கும் மரணம்
நேர்ந்தது. ஆனால், கடவுளின் அருளும்,
இயேசுகிறிஸ்து என்னும் ஒரே மனிதர்
மூலமாக வந்த அருட்கொடையும் மிகப்
பேரளவில் எல்லாருக்கும் கிடைத்தது.
16 அந்த ஒரே மனிதன் செய்த பாவத்
தின் விளைவிற்கும் இந்த அருட்கொடை
யின் விளைவிற்கும் இடையேயும் வேறு
பாடு உண்டு. எப்படியெனில், ஒரே தவ
றான செயலின்பொருட்டு வந்த தீர்ப்பு,
தண்டனைத் தீர்ப்பாயிற்று. ஆனால், பல
தவறான செயல்களின்பொருட்டு வந்த
அருட்செயல், விடுதலைத் தீர்ப்பளித்தது.
17 மேலும், அந்த ஒரே மனிதனுடைய தவ
றான செயலால், ஆம், அந்த ஒரு மனி
தன் மூலமாகவே, மரணம் ஆட்சி
செலுத்த வந்தது. அப்படியென்றால்,
இயேசுகிறிஸ்து என்னும் ஒருவர் மூலமா
கப் பேரருளையும் கடவுளோடுள்ள நல்
லுறவாகிய பெரிய ஈவையும் பெறுகிறவர்
கள் மெய்வாழ்வடைந்து ஆட்சி செலுத்து
வார்கள் என்பது திண்ணமன்றோ? 18 ஆகவே,
அந்த ஒருவனுடைய தவறான செய
லால் எல்லா மனிதருக்கும் தண்டனைத்
தீர்ப்பு வந்ததுபோல, ஒருவருடைய நீதி
யான செயலால் எல்லா மனிதருக்கும்
மெய்வாழ்வளிக்கும் விடுதலைத் தீர்ப்பு
வருகிறது. 19 ஒரு மனிதனுடைய கீழ்ப்
படியாமையினால் எல்லா மனிதரும் பாவி
களானதுபோல, ஒருவருடைய கீழ்ப்படி
தலினால் எல்லாரும் கடவுளுக்கு ஏற்றவ
ராக்கப்படுவர். 20 இத்தகைய நிலையில்
தவறான செயல்கள் பெருகும்படி நீதிச்
சட்டம் நுழைந்தது.* ஆனால், பாவம்
பெருகப் பெருக, அதைவிடப் பன்மடங்
காய் அருளும் பெருகிற்று.

21 முன்பு பாவம் ஆட்சி செலுத்தி
மரணத்தை விளைவித்தது; இப்பொழுதோ
அருளானது பெருகிக் கடவுளோடு மனி
தனுக்கு நல்லுறவை ஏற்படுத்தி ஆட்சி
செலுத்துகிறது. இதன் ஆட்சி நம் ஆண்
டவராகிய இயேசுகிறிஸ்துவின் மூலம்
என்றுமுள்ள மெய்வாழ்வை விளைவிக்
கிறது.

* 'இத்தகைய நிலையில் நீதிச்சட்டம் நுழைந்தது. தவறான செயல்களும் பெருகின' என்றும் மொழிபெயர்க்கலாம்.
**5:8** யோ. 15:13. **5:9** 1 தெச. 1:10. **5:12** ஆதி. 3:6; 1 கொரி. 15:21, 22. **5:20** கலா. 3:19.

### கிறிஸ்துவுக்குட்பட்ட நிலையில் வாழ்தல்

**6** இதுகாறும் கூறியதிலிருந்து என்ன முடிவுக்கு வருகிறோம்? அருள் பெருகட்டும் என்று சொல்லிக்கொண்டு பாவத்திலே மூழ்கிக் கிடப்பதா? கூடவே கூடாது. பாவத்தைப் பொருத்தமட்டில் நாம் செத்தவர்கள். 2 அப்படியிருக்க நாம் இன்னும் எப்படிப் பாவ வாழ்க்கை நடத்திக்கொண்டேயிருக்க முடியும்? 3 கிறிஸ்து இயேசுவுடன் இணைக்கப்படுவதற்கென்று திருமுழுக்குப் பெற்ற நாமனைவரும் அந்தத் திருமுழுக்கினால் அவருடைய மரணத்தில் மரணமடைந்துமிருக்கிறோம் என்பதை அறியீர்களா? 4 ஆகவே, விண்ணகத் தந்தையாரின் மாட்சிமை பொருந்திய வல்லமையால் கிறிஸ்து இறந்தோரிடமிருந்து உயிரோடெழுப்பப்பட்டதுபோல, நாமும் புதிதான மேல்நிலை வாழ்வைப் பெற்றவர்களாய் நடந்துகொள்ளும்படி திருமுழுக்கின் மூலம் அவரோடு மரணமடைந்து அடக்கம் செய்யப்பட்டோம். 5 அவர் மரணமடைந்ததுபோலவே நாமும் அவரோடு இணைக்கப்பட்டு மரணமடைந்திருக்கிறோமென்றால், அவர் உயிர்த்தெழுந்தது போல நாமும் அவரோடு இணைக்கப்பட்டு உயிர்த்தெழுவோம். 6 நாம் இனிப் பாவத்துக்கு அடிமைகளாயிராதபடி, நமது பழைய மனித இயல்பு அவரோடு சிலுவையில் அறையப்பட்டதால், பாவத்துக்கு உட்பட்டிருந்த அந்த இயல்பு ஒழிந்து போயிற்று என்பதை நாம் அறிந்திருக்கிறோம். 7 ஒருவன் இறந்துபோன பின்பு அவன்மீது பாவத்திற்கு எவ்வகையான அதிகாரமும் இல்லை. 8 நாம் கிறிஸ்துவோடு மரணமடைந்தவர்களென்றால், அவரோடு வாழ்கிறவர்களாயும் இருப்போம் என்பதை நம்புகிறோம். 9 இறந்தோரிடமிருந்து உயிரோடெழுப்பப்பட்ட கிறிஸ்து இனி இறப்பதில்லை; மரணத்திற்கு அவர்மீது அதிகாரமில்லை என்பது நமக்குத் திட்டமாகத் தெரியும். 10 அவர் மரணத்தை ஏற்றது, பாவத்தை ஒரேயடியாக முறியடித்த செயலாயிற்று. அவர் உயிரோடெழுந்து வாழ்வது, கடவுளுக்கென்று வாழும் வாழ்வாகும். 11 அவ்வாறே கிறிஸ்து இயேசுவோடு இணைக்கப்பட்ட நிலையில், நீங்கள் பாவத்தைப் பொருத்தமட்டில் இறந்தவர்களாயும், கடவுளுக்கென்று வாழ்கிறவர்களாயும் இருப்பதைத் தெரிந்துகொள்ளுங்கள்.

12 ஆகையால் இனிப் பாவமானது இவ்வுலக வாழ்க்கையில் உங்கள்மீது ஆட்சி செலுத்தி, உங்களை உங்கள் இச்சைகளுக்குக் கீழ்ப்படுத்த இடங்கொடாதீர்கள். 13 நீங்கள் இனிமேல் உங்கள் உறுப்புகளை அநீதியானதைச் செய்யும் கருவிகளாகப் பாவத்திற்கு ஒப்படையாமல், நீங்கள் மரணத்திலிருந்து உயிரோடு வந்தவர்கள் என்பதை உணர்ந்து, உங்களைக் கடவுளிடம் ஒப்படைத்துவிடுங்கள்; உங்கள் உறுப்புகளையும் நீதியானதைச் செய்யும் கருவிகளாகக் கடவுளிடம் ஒப்படைத்துவிடுங்கள். 14 பாவம் உங்கள்மீது ஆட்சி செலுத்தாது; ஏனெனில், இப்போது நீங்கள் நீதிச்சட்டத்தின் கீழில்லாமல், அருளின் ஆட்சிக்குள் வந்திருக்கிறீர்கள்.

### கடவுளுக்கேற்ற நீதி வாழ்க்கைக்கு அடிமைகள்

15 இதன் முடிவுதான் என்ன? நாம் நீதிச்சட்டத்தின் கீழில்லாமல் அருளின் ஆட்சிக்குள் வந்திருப்பதால், நாம் பாவம் செய்யலாம் என்கிற முடிவுக்கு வருவதா? கூடவே கூடாது. 16 எதற்குக் கீழடங்கி உங்களை அடிமைகளாய் ஒப்படைக்கிறீர்களோ அதற்கே நீங்கள் அடிமைகள். நீங்கள் பாவத்திற்கு உங்களை அடிமைகளாய் ஒப்படைத்தால், அதன் விளைவு மரணமே; கடவுளுக்கு உங்களை அடிமைகளாய் ஒப்படைத்து, அவருக்குக் கீழ்ப்படிந்தால், அதனால் உண்டாவது கடவுளுக்கேற்ற வாழ்க்கை; இவை யாவும் உங்களுக்குத் தெரியாதா? 17 முன்பு பாவத்திற்கு அடிமைகளாயிருந்த நீங்கள் உங்களுக்குப் போதிக்கப்பட்ட நெறிக்கு ஒப்படைக்கப்பட்டீர்கள். அந்த நெறியை இப்போது மனமார ஏற்றுக்கொண்டிருக்கிறீர்கள். 18 அதனால் நீங்கள் பாவத்தினின்று விடுவிக்கப்பட்டு கடவுளுக்கேற்ற நீதி வாழ்க்கைக்கு அடிமைகளாய் இருக்கிறீர்கள். அதற்காகக் கடவுளைப் போற்றுகிறேன். 19 உங்களைப் போன்ற சாதாரண மக்களுக்கும் எளிதில் புரியும்படி இவ்வாறு விளக்கமாகக் கூறுகிறேன். நீங்கள் முன்பு உங்கள் உறுப்புகளை அசுத்தத்திற்கும் அக்கிரமத்திற்கும் அடிமைகளாய் ஒப்படைத்திருந்தீர்கள். அதன் விளைவாக உங்களிடம் காணப்பட்டது அக்கிரம வாழ்க்கையே. ஆனால், நீங்கள் உங்கள் உறுப்புகளை இப்போது நீதிவாழ்க்கைக்கு அடிமைகளாய் ஒப்படைத்துவிடுங்கள்; இதன் விளைவாக நீங்கள் கடவுளுக்கென்றே வாழ்வீர்கள். 20 நீங்கள் பாவத்துக்கு அடிமைகளாயிருந்த போது, நீதிவாழ்க்கையின் ஆட்சிக்கு உட்படாதிருந்தீர்கள். 21 நீங்கள் அப்போது செய்த செயல்கள் உங்களுக்கு இப்போது இழிவானவையாய்த் தோன்றுகின்றன. அவற்றால் உங்களுக்குக் கிடைத்த பலன்தான் என்ன? அவற்றின் முடிவு மரணமாய் இருந்ததன்றோ? 22 ஆனால், இப்பொழுதோ, நீங்கள் பாவத்தினின்று விடுவிக்

6:3 கலா. 3:27. 6:4 கொலோ. 2:12. 6:21, 22 உபா. 30:15—20.

கப்பட்டுக் கடவுளுக்கு அடிமைகளாய்
இருக்கிறீர்கள். நீங்கள் கடவுளுக்கென்று
வாழும் வாழ்க்கையில் அடையும் வளர்ச்
சியே இப்போது உங்களுக்குக் கிடைக்கும்
பலன். அதன் முடிவு என்றுமுள்ள மெய்
வாழ்வாயிருக்கும். 23 பாவம் தரும் கூலி
மரணமே; கடவுள் அருளும் இலவச
ஈவோ, நம்முடைய ஆண்டவராகிய
கிறிஸ்து இயேசுவோடு இணைந்து வாழும்
என்றுமுள்ள மெய்வாழ்வு.

### திருமணம் வாயிலாக அளித்த ஒரு விளக்கம்

7 சகோதரரே, உங்களுக்கு நீதிச்
சட்டம் தெரியும். எனவே, ஒருவன்
உயிரோடு இருக்கும்வரையிலேதான் நீதிச்
சட்டத்திற்கு அவன்மீது அதிகாரம் உண்டு
என்பதும் உங்களுக்குத் தெரியும். 2 இதன்
படி மணமான ஒரு பெண் தன் கணவன்
உயிரோடு இருக்கும்வரையிலேதான்
சட்டத்தினால் அவனுக்குக் கட்டுப்பட்
டிருக்கிறாள்; கணவன் இறந்துவிட்டால்,
கணவனோடு இணைத்த சட்டத்தினின்று
அவள் விடுதலை பெறுகிறாள். 3 ஆகை
யால், கணவன் உயிரோடு இருக்கும்போது
அவள் வேறொருவனோடு வாழ்ந்தால்,
அவள் கற்புநெறி தவறியவள் எனப்படு
வாள்; ஆனால், கணவன் இறந்துபோனால்,
அந்தச் சட்டத்தினின்று விடுதலை பெற்ற
வளாகிறாள்; பிறகு வேறொருவனுக்கு
மனைவி ஆவாளாயின், அவள் கற்புநெறி
தவறியவளல்ல. 4 அவ்வாறே, என் சகோ
தரரே, நீங்கள் கிறிஸ்துவின் உடலோடு
இணைக்கப்பட்டிருப்பதால், நீதிச்சட்டத்
தைப் பொருத்தமட்டில் நீங்கள் இறந்த
வர்களே. நீங்கள் அப்படி இறந்துவிட்ட
தால், கடவுளுக்கென்று கனி கொடுக்கும்படி
வேறொருவருக்கு உரியவர்களானீர்கள்.
அவர் இறந்தோரிடமிருந்து உயி
ரோடெழுப்பப்பட்ட கிறிஸ்துவே. 5 நாம்
நமது பாவ இயல்பிற்கிசைய வாழ்ந்து
வந்த காலத்தில் நீதிச்சட்டத்தால் தூண்
டப்பட்ட பாவ இச்சைகள் நம் உறுப்பு
களில் பொங்கி எழுந்தன; அதனால் வந்த
விளைவு மரணமே. 6 இப்பொழுதோ,
நம்மைக் கட்டுப்படுத்தியிருந்த நீதிச்சட்
டத்தைப் பொருத்தமட்டில் நாம் இறந்
வர்களாகிவிட்டதால் அதினின்று விடுதலை
பெற்றோம். அதனால் எழுத்துருவிலுள்ள
பழைய நெறிப்படி தொண்டு செய்வதை
விட்டுவிட்டு, ஆவியானவர் அருளும்
புதிய வாழ்வைப் பெற்றுத் தொண்டு
செய்துவருகிறோம்.

### மனிதனுள் தங்கி வாழ்கிற பாவம்

7 அப்படியானால், என்ன முடிவுக்கு
வருகிறோம்? நீதிச்சட்டமும் பாவமும்
ஒன்றுதானா? இல்லவே இல்லை. நீதிச்சட்
டம் இல்லாதிருந்தால், பாவம் இன்ன
தென்பதை நான் அறிந்திருக்க மாட்டேன்.
இச்சியாதே என்று நீதிச்சட்டம் சொல்லா
திருந்தால், இச்சைகொள்ளுதல் என்றால்
என்ன என்பதே எனக்குத் தெரிந்திராது.
8 ஆனால், திருக்கட்டளையைப் பயன்படுத்
திக்கொண்டு பாவம் எல்லா வகையான
இச்சைகளையும் எனக்குள் தூண்டிவிட்டது.
நீதிச்சட்டம் இல்லையானால், பாவத்திற்கு
உயிரில்லை. 9 நான் நீதிச்சட்டத்தோடு
தொடர்பின்றி இருந்த காலத்தில் எனக்கு
உயிர் இருந்தது. திருக்கட்டளை எனக்குத்
தெரிய வந்தபோதோ பாவம் உயிர்
பெற்றது; 10 நானோ உயிரிழந்தவனானேன்.
மெய்வாழ்வை வருவிக்க வேண்டிய
அந்தத் திருக்கட்டளை எனக்கு மர
ணத்தை வருவிக்கலாயிற்று. 11 திருக்
கட்டளையைப் பயன்படுத்திக்கொண்டு
பாவம் என்னை வஞ்சித்தது மட்டுமன்றி
என்னைக் கொன்றும்விட்டது.

12 என்றாலும், நீதிச்சட்டத்தின் தன்
மையை நோக்குமிடத்து அது தூய்மை
யானதே; அவ்வாறே திருக்கட்டளையும்
தூய்மையானது. நீதியானது, நல
மார்ந்தது, 13 அப்படியானால், நலமார்ந்த
ஒன்றா எனக்கு மரணத்தை விளைவித்தது?
இல்லவே இல்லை. பாவம் நலமார்ந்த
ஒன்றைக் கொண்டு எனக்கு மரணத்தை
விளைவித்ததால், பாவத்தின் உண்மை
யான தன்மையே வெளியாயிற்று. மேலும்,
திருக்கட்டளையைக் கொண்டு அது எனக்கு
மரணத்தை விளைவித்ததால், பாவத்தின்
பாவத்தன்மை எவ்வளவு கொடியது என்
பது வெளியாயிற்று. 14 நீதிச்சட்டம்
ஆவிக்குரியது என்பது நமக்குத் தெரியும்.
நானோ ஊன் இயல்பு உள்ளவன்; நான்
பாவத்திற்கு அடிமையாக விற்கப்பட்டவன்.
15 எப்படியெனில், நான் செய்வது
எனக்கே புரியவில்லை. எதை நான் விரும்பு
கிறேனோ அதை நான் செய்யாமல்,
எதை நான் வெறுக்கிறேனோ அதையே
செய்கிறேன். 16 நீதிச்சட்டத்திற்கு மாறா
னதையே நான் செய்கிறேன். ஆனால்,
அவ்வாறு செய்ய நான் விரும்பவில்லை.
அப்படியானால், என் விருப்பம் என்ன?
நீதிச்சட்டம் நல்லது என்பதை நான்
ஒத்துக்கொள்ளுகிறேன் என்று அது காட்டு
கிறதன்றோ? 17 நான் செய்கிறவற்றை
உண்மையில் நான் செய்யவில்லை; எனக்குள்
குடிகொண்டிருக்கும் பாவமே அவற்றைச்
செய்கிறது. 18 எனக்குள், அதாவது
எனது ஊன் இயல்பில், நலமான
எதுவும் இல்லை என்பது எனக்குத் தெரியும்.
நல்லதைச் செய்வதில் விருப்பங்

6:23 கலா. 6:7—9; யாக். 1:15. 7:2 1 கொரி. 7:39. 7:7 கலா. 3:19. 7:8 1 கொரி. 15:56. 7:10
எசே. 20:11. 7:12 1 தீமோ. 1:8. 7:15 கலா. 5:17.

கொள்ள என்னால் முடிகிறது; நல்லதைச்
செய்யவோ என்னால் முடியவில்லை. 19 நான்
விரும்பும் நல்லவற்றைச் செய்யாமல்,
நான் விரும்பாத தீமையையே செய்து
வருகிறேன். 20 எனக்கு விருப்பமில்லாத
வற்றை நான் செய்கிறேனென்றால்,
அவற்றை நான் செய்யவில்லை, எனக்குள்
குடிகொண்டிருக்கும் பாவமே அதைச்
செய்கிறது. 21 நான் நல்லதைச் செய்ய
விரும்பினாலும், தீமையைத்தான் என்னால்
செய்ய முடிகிறது. இத்தகைய விதிமுறையே
என் வாழ்க்கையில் தெளிவாகக் காணப்
படுகிறது. 22 என் உள்மனத்தைப்
பொருத்தமட்டில், நான் கடவுளின் சட்
டத்தை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்
கிறேன். 23 ஆனால், என் உறுப்புகளிலோ
வேறொரு சட்டம் செயலாற்றுவதைக்
காண்கிறேன். பாவமாகிய அந்தச் சட்டம்
என் உள்ளம் ஏற்கும் சட்டத்தை
எதிர்த்துப் போராடி, என்னைத் தனக்குக்
கையாளாக்கி வைத்திருக்கிறது. 24 அந்தோ!
என் நிலை மிகமிக இக்கட்டான நிலை.
சாவின் ஆட்சிக்குட்பட்ட இந்த உட
லினின்று என்னைக் காப்பாற்றக் கூடியவர்
யார்? 25 நம்முடைய ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்து மூலமாகக் கடவுள் செய்கிறார்;
அவரைப் புகழ்ந்து போற்றுகிறேன்.

சுருங்கச் சொன்னால், என் உள்ளத்
தைப் பொருத்தமட்டில் நான் கடவுளது
சட்டத்தின் கீழடங்கினவன்; என் ஊன்
இயல்பை நோக்கும்போது நான் பாவத்
தினது சட்டத்தின் கீழடங்கினவன்.

### ஆவியானவர் அளிக்கும் மெய்வாழ்வு

**8** இதுகாறும் கூறியதிலிருந்து நாம்
அறிந்துகொள்வது என்ன? கிறிஸ்து
இயேசுவோடு இணைக்கப்பட்டவர்களுக்குத்
தண்டனைத் தீர்ப்பே இராது.* 2 கிறிஸ்து
இயேசுவோடு இணைக்கப்பட்டவர்களுக்கு
மெய்வாழ்வளிக்கும் ஆவியானவரின் ஆட்சி,
என்னைப் பாவம், மரணம் என்பவற்றை
விளைவிக்கிற நீதிச்சட்டத்தின் ஆட்சியி
னின்று விடுவித்ததே இதற்குச் சான்று.
3 மனிதரின் பாவ இயல்பு காரணமாக
நீதிச்சட்டம் பாவத்தைப் போக்க ஆற்ற
லற்றதாயிருந்தது. இந்நிலையில், அதனால்
செய்ய இயலாததைக் கடவுள் தாமே
செய்தார். எப்படியெனில், அவர் தம்
மைந்தரைப் பாவத்துக்கு உட்பட்ட நம்
இயல்பு போன்ற இயல்புடையவராய்ப்
பாவத்தைப் பரிகரிக்க அனுப்பி, அந்த
இயல்பைக் கொண்டே பாவத்தின் அதி
காரத்திற்கு முடிவுண்டாக்கும் தீர்ப்பை அளித்
தார். 4 பாவ இயல்புக்கேற்ப வாழாமல்,
ஆவியானவரின் நடத்துதலுக்கேற்ப
வாழும் நம்மிடம் நீதிச்சட்டம் எதிர்
பார்க்கும் நீதி நிறைவாகக் காணப்பட
அப்படிச் செய்தார்.

5 ஏனெனில், தங்கள் ஊன் இயல்பிற்
கேற்ப நடப்பவர்கள் பாவ இயல்புக்குரிய
வற்றில் சிந்தையைச் செலுத்துவார்கள்;
ஆவியானவரின் நடத்துதலுக்கேற்ப வாழ்
பவர்கள், ஆவியானவருக்குரியவற்றில் சிந்
தையைச் செலுத்துவார்கள். 6 பாவ
இயல்புக்குரியவற்றில் சிந்தையைச் செலுத்து
வோருக்குக் கிடைப்பது சாவு. ஆனால்,
ஆவியானவருக்குரியவற்றில் சிந்தையைச்
செலுத்துவோருக்குக் கிடைப்பவை மெய்
வாழ்வும் சமாதானமுமாகும். 7 ஏனெ
னில், பாவ இயல்புக்குரியவற்றில் சிந்தை
யைச் செலுத்துவோர் கடவுளின் பகைஞர்.
அவர்கள் கடவுளின் நீதிச்சட்டத்திற்குக்
கீழ்ப்படியாமலும், கீழ்ப்படிய இயலா
மலும் இருக்கிறார்கள். 8 பாவ இயல்
புக்கு உட்பட்டவர்களால் கடவுளுக்கு
உகந்தவர்களாயிருக்க முடியாது. 9 ஆனால்
கடவுளின் ஆவி உங்களுக்குள் குடிகொண்
டிருக்குமானால், நீங்கள் பாவ இயல்புக்கு
உட்பட்டவர்களாய் இராமல், அந்த
ஆவிக்கு உட்பட்டவர்களாய் இருப்பீர்கள்.
எவனுக்குள்ளாவது கிறிஸ்துவின் ஆவி
இல்லையென்றால், அவன் கிறிஸ்துவுக்குச்
சொந்தமானவன் அல்ல. 10 ஆனால், உங்
களுக்குள் கிறிஸ்து இருக்கிறார் என்றால்,
நீங்கள் பாவம் காரணமாக, உங்கள்
ஊன் இயல்பைப் பொருத்தமட்டில், செத்
தவர்களாய் இருப்பீர்கள். மேலும், நீங்கள்
கடவுளால் அவருக்கு ஏற்றவர்க
ளெனக் கொள்ளப்பட்டிருப்பது காரண
மாக, ஆவியானவரே உங்கள் உயிராவார்.
11 அதுவுமன்றி, இறந்தோரிடமிருந்து
இயேசுவை உயிரோடெழுப்பினவரின் ஆவி
உங்களுக்குள் குடிகொண்டிருந்தால், இறந்
தோரிடமிருந்து கிறிஸ்துவை உயிரோ
டெழுப்பினவர், உங்களுக்குள் குடிகொண்
டிருக்கும் தமது ஆவியினாலே சாவுக்குரிய
உங்கள் உடல்களையும் உயிர்பெறச்
செய்வார்.

12 ஆகையால், சகோதரரே, நமக்கு
ஒரு கடமை உண்டு. ஆனால், அது ஊன்
இயல்பைப்பற்றியதன்று; அதாவது,
ஊன் இயல்புக்கு இசைவாக வாழும்
கடமை நமக்கு இல்லை. 13 பாவமான
அந்த ஊன் இயல்புக்கு இசைவாக வாழ்ந்
தால், நீங்கள் சாவது திண்ணம்; ஆனால்
உடலின் தீய செய்கைகளை ஆவியான
வரைக்கொண்டு சாகடித்தால், நீங்கள்
மெய்வாழ்வுடையவர்களாய் இருப்பீர்கள்.

* 'கிறிஸ்து இயேசுவோடு இணைக்கப்பட்டு, ஊன் இயல்பின்படி நடவாமல், ஆவியின்படியே நடக்கிறவர்களுக்குத் தண்டனைத் தீர்ப்பே இராது' என்பது பிற்காலப் பிரதிகளின் பாடம்.

**7:22** 2 கொரி. 4:16. **8:3** திருத்தூது. 13:39. **8:6** கலா. 6:8. **8:11** 1 கொரி. 3:16. **8:13** எபே. 4:22—24.

14 யார் யார் கடவுளின் ஆவியால்
நடத்தப்படுகிறுர்களோ அவர்களனைவரும்
கடவுளின் மைந்தர்கள். 15 மீண்டும் உங்
களை அடிமைகளாக்கி அச்சத்தில் ஆழ்த்தும்
ஆவியை நீங்கள் பெறவில்லை, உங்களைக்
கடவுளின் மைந்தர்களாக்கும் ஆவி
யைப் பெற்றிருக்கிறீர்கள்; அந்த ஆவி
யின் அருளால் நாம், ''அபா''* (அதா
வது, அப்பா) என்று கூப்பிடுகிறோம்.
16 இவ்வாறு கூப்பிடும்போது, நாம் கட
வுளின் பிள்ளைகளென்று நம் ஆவி உணர்த்
தும் உண்மையை அந்த ஆவியானவர்
தாமே உறுதிப்படுத்துகிறுர். 17 நாம்
பிள்ளைகளென்றுல் உரிமையாளருமாயிருக்
கிறோம்; கடவுள் வாக்களித்தவற்றிற்கு
உரிமையாளர்; கிறிஸ்துவின் உடன் உரிமை
யாளருமாவோம். நாம் அவரோடு
பாடுகள் அடைந்தால், அவரோடு மாட்சி
மையும் பெறுவோம்.

## வரப்போகும் மாட்சிமை

18 இனி நமக்கென வெளிப்படப்
போகும் மாட்சிமையை நோக்கும்போது,
இக்காலத்தில் நாம் அடையும் பாடுகளை
நான் ஒரு பொருட்டாக எண்ணவில்லை.
19 அத்தகைய மாட்சிமையோடு
கடவுளின் மைந்தர்கள் வெளிப்படுவதைக்
காண, படைப்பு முழுமையுமே பேராவ
லோடு காத்துக்கொண்டிருக்கிறது.
20 ஏனெனில், படைப்பு முழுமையும் பய
னற்ற நிலைக்குத் தாழ்த்தப்பட்டிருக்கிறது.
அதைத் தாழ்த்தினவரின் செயலால் அப்
படி நிகழ்ந்ததேயன்றி, அது தானே
விரும்பினதாலன்று. 21 எனினும், அது
நம்பிக்கையற்ற நிலையிலில்லை. அழி
வுறும் தாழ்நிலையினின்று விடுவிக்கப்பட்டு,
கடவுளின் மைந்தருக்குரிய மாட்சிமையையும்
விடுதலையையும் தானும் அடையும்
என்கிற நம்பிக்கையோடு அது இருக்
கிறது. 22 இன்றுவரையிலும் படைப்பு
முழுமையும் பேறுகால வேதனையில் ஒருங்கே
தவித்துப் புலம்பிக்கொண்டிருக்கிறது
என்பது நமக்குத் தெரியும். 23 படைப்பு
முழுமையும் மட்டுமன்று; இனி கிடைக்
கப்போகும் விளைச்சலின் முதற்கதிராக
ஆவியானவரைப் பெற்ற நாமும் நமக்
குள்ளே புலம்பிக்கொண்டு காத்திருக்
கிறோம். கடவுள் நம்மைத் தம் மைந்தர்
களாக்குவதற்காகவும் நம் உடலுக்கும்
மீட்பளிப்பதற்காகவும் நாம் காத்துக்
கொண்டிருக்கிறோம். 24 நாம் மீட்கப்பட்
டிருக்கிறோமெனினும், இதை எதிர்நோக்கிய
வண்ணமே வாழ்கின்றோம். ஏற்கெனவே
கண்ணுக்குத் தெரிகிறதை நோக்குதல்
எதிர்நோக்குதலாகாது. யாராவது தான்
காண்கிறதை எதிர்நோக்கிக்கொண்டிருப்
பானு? 25 ஆனுல், நாமோ காணுத
ஒன்றை எதிர்நோக்கிக்கொண்டிருக்கிறோம்.
அதற்காகப் பொறுமையுடன் காத்துக்
கொண்டுமிருக்கிறோம்.

26 மேலும், ஆவியானவர் நாம் இருக்கும்
வலிமையற்ற நிலையில் நமக்குத்
துணை நின்று உதவி செய்கிறுர். ஏனெ
னில், எவற்றிற்காக, எப்படி வேண்டுதல்
செய்ய வேண்டுமென்பது நமக்குத் தெரி
யாது. ஆவியானவர் தாமே சொற்
களற்ற நம் பெருமூச்சுகளைக் கொண்டு
நமக்காக மன்றுடுகிறுர். 27 உள்ளங்களை
ஊடுருவிப் பார்க்கிற கடவுளுக்கு ஆவி
யானவரின் கருத்து இன்னதென்பது தெரி
யும்; ஏனெனில், ஆவியானவர் அவரு
டைய திருவுளத்திற்கிசையவே அவருக்
குரிய மக்களுக்காக மன்றுடுகிறுர். 28 அன்
றியும், கடவுளிடம் அன்புகொண்டிருக்
கிறவர்களுக்கு, அதாவது, அவரது திட்
டத்தின்படி அழைக்கப்பட்டவர்களுக்கு எல்
லாம் நன்மைக்கேதுவாக ஒன்றோடொன்று
இசைந்து நடக்கின்றன † என்பது நமக்
குத் தெரியும். 29 எவர்களைக் கடவுள்
முன்பு தேர்ந்தெடுத்தாரோ அவர்கள் தம்
மைந்தரின் சாயலை ஒத்திருக்க வேண்டு
மென்று முன்பே திட்டமுமிட்டிருந்தார்.
இதன் நோக்கம் யாதெனில், ஏராள
மான பேர் இவ்வாறு ஒருவருக்கொருவர்
சகோதரராகி, தம் மைந்தரை மூத்தவ
ராகக் கொண்ட ஒரு குடும்பமாக அமைய
வேண்டும் என்பதே. 30 எவர்களைக் குறித்துக்
கடவுள் முன்பே திட்டமிட்டாரோ
அவர்களை அவர் அழைத்துமிருக்கிறுர்;
எவர்களை அழைத்தாரோ அவர்கள் தமக்கு
ஏற்றவர்களென்று தீர்ப்பளித்துமிருக்கிறுர்.
எவர்களைக் குறித்து அப்படித் தீர்ப்பளித்
தாரோ அவர்களுக்கு மாட்சிமையளித்து
மிருக்கிறுர்.

## கடவுளின் அன்பு

31 இதுகாறும் கூறியதிலிருந்து நாம்
என்ன முடிவுக்கு வருகிறோம்? கடவுள்
நம் பக்கம் இருப்பதால், யார் நமக்கு
எதிராக இருக்கக்கூடும்? 32 கிறிஸ்துவைத்
தம் சொந்த மைந்தரென்றும்
பாராமல், அவரைக் கடவுள் நம்மெல்லா
ருக்காகவும் ஒப்புக்கொடுத்தார். அவ்வாறு
செய்தவர் நமக்குத் தேவையான
யாவற்றையும் அருளாதிருப்பாரா?

* மாற். 14:36 அடிக்குறிப்பைப் பார்க்க.
† 'கடவுள் தம்மிடம் அன்புகொள்கிறவர்களோடு, அதாவது, தம் திட்டத்தின்படி அழைக்கப்பட்டவர்களோடு சேர்ந்து, எல்லாவற்றையும் அவர்களுடைய நன்மைக்கேதுவாக நடத்துகின்றுர்' என்பதும் பாடம்.
**8:15—17** கலா. 4:5—7. **8:20** ஆதி. 3:17—19. **8:21** 2 பேது. 3:13. **8:23** 2 கொரி. 5:2—5. **8:26** யாக். 4:3, 5. **8:29** 1 கொரி. 15:49; பிலி. 3:21.

33 கடவுள் தேர்ந்துகொண்டவர்கள்மீது
யார் குற்றம்சுமத்தக்கூடும்? கடவுள் தாமே
அவர்கள் தமக்கு ஏற்றவர்களென்று தீர்ப்
பளித்திருக்கிறார். 34 யார் அவர்களைத்
தண்டனைக்கு ஆளாக்கக்கூடும்?
கிறிஸ்து இயேசு நமக்காக மரணமடைந்
திருக்கிறாரே! **அதுமட்டுமன்றி, அவரே**
உயிரோடெழுப்பப்பட்டவர், கடவுளின்
வலப்பக்கத்தில் இருக்கிறவர்; நமக்காக
வேண்டுதல் செய்கிறவரும் அவரே.
35 கிறிஸ்துவின் அன்பிலிருந்து நம்மைப்
பிரிக்கக்கூடியது எது?வேதனையா?இடுக்கணா?
துன்புறுத்துதலா? உணவுப் பஞ்சமா?
உடைப் பஞ்சமா? அபாயமா? வாளினால்
வரும் சாவா? எது நம்மைப் பிரிக்கக்
கூடும்? 36 வேதத்தில் எழுதியுள்ளபடிதான்
நமக்கு நடைபெறுகிறது:

'உம்பொருட்டு நாள் முழுதும்
வதையுண்டு கொல்லப்படுகிறோம்;
வெட்டுவதற்கு நிறுத்தப்படும்
ஆடுகளெனக் கருதப்பட்டோம்.'

37 என்றாலும், நம்மிடம் அன்புகொண்
டுள்ளவரால் இவையனைத்திலும் நமக்கு
வெற்றிமேல் வெற்றி கிடைக்கிறது.
38 சாவோ, வாழ்வோ, வானதூதரோ,
ஆட்சி செலுத்தும் ஆவியோ, நிகழ்
வனவோ, வருவனவோ, 39 வலிய சக்தி
களோ, மேலே உள்ளனவோ, ஆழத்தில்
உள்ளனவோ, வேறெந்தப் படைப்போ
இவற்றுள் எதனாலும் நம்முடைய ஆண்ட
வராகிய கிறிஸ்து இயேசுவோடு இணைக்
கப்பட்டுள்ள நமக்கு அருளப்படும்
கடவுளின் அன்பிலிருந்து நம்மைப் பிரிக்க
இயலாது என்பது என் உறுதியான நம்
பிக்கை.

## இஸ்ரவேல் குடும்பத்தினரைத் தேர்ந்தெடுத்தது

9 கிறிஸ்துவின் அடியானாக ஒன்று
சொல்கிறேன்: எனக்கு இருக்கும்
துயரம் பெரிது; என் மனவேதனை ஓயா
தது; இது உண்மை. 2 நான் சொல்வது
பொய்யன்று என்பதை என் மனச்சான்றும்
தூய ஆவியானவரால் நடத்தப்பட்டு
உறுதிப்படுத்துகிறது. 3 நான் கிறிஸ்துவை
விட்டுப் பிரிந்து சாபத்திற்குள்ளாவதன்
மூலம் என் சகோதரருக்கு, அதாவது,
என் சொந்த இனத்தவருக்கு
மீட்புக் கிடைக்குமானால், அப்படியாவது
நடக்கட்டும் என்று நான் விரும்பின
துண்டு. 4 அவர்கள் இஸ்ரவேல் மக்கள்.
கடவுள் அவர்களைத் தம் மைந்தர்களாக்கி,
அவர்களிடையே தம் மாட்சிமை தங்கும்
படி செய்தார்; உடன்படிக்கைகள், நீதிச்
சட்டம், ஆலய வழிபாடு, வாக்குறுதிகள்
ஆகியவை யாவும் அவர்களுக்கே உரி
யவையாயின. 5 அவர்கள் ஆபிரகாம்
முதலிய குலத்தந்தையர் வழியாகத்
தோன்றினவர்கள். மனிதன் என்ற முறை
யில் மேசியாவும் அவர்கள் குலத்தினின்றே
தோன்றினார். அவர் எல்லாவற்றின்மீதும்
ஆட்சி செலுத்தும் கடவுள், என்றென்றும்
புகழ்ந்து போற்றுதலுக்குரியவர்.
ஆமேன்.* 6 கடவுள் அவர்களுக்கு அரு
ளின வாக்குறுதி நிறைவேறாமற்போயிற்று
என்று நான் சொல்லவில்லை. நான் சொல்
வது இஸ்ரவேல் குடும்பத்தினர் என்பதால்
அவர்கள் அனைவரும் உண்மையில் இஸ்ர
வேலராகிவிடமாட்டார்கள்; 7 ஆபிரகாமின்
மரபில் வந்தவர்கள் என்பதால்,
அவர்கள் எல்லாரையுமே ஆபிரகாமின்
மைந்தர்கள் என்று கொள்ளலாகாது என்
பதே. அவருக்கு, ''ஈசாக்கின் மரபினரே
உன் மரபினர் எனப்படுவர்'' என்று
சொல்லப்பட்டது. 8 அதாவது, இயற்கை
முறைப்படி பிறந்த பிள்ளைகளல்ல,
கடவுளின் வாக்குறுதிமூலம் பிறந்த பிள்ளை
களே கடவுளின் பிள்ளைகளாகவும் ஆபிர
காமின் மரபினராகவும் எண்ணப்படுவார்
கள். 9 அந்த வாக்குறுதி என்னவென்றால்,
''குறித்த காலத்தில் நான் திரும்பவும்
வருவேன்; அப்பொழுது சாராளுக்கு ஒரு
மகன் பிறந்திருப்பான்'' என்பதாகும்.

10 இதற்கு இன்னுமொரு சான்றுண்டு.
ரெபெக்காவுக்கு இரு பிள்ளைகள் பிறந்
தார்கள். நம் மூதாதையாகிய ஈசாக்கு
அவ்விருவருக்கும் தந்தை. 11 அவர்கள்
பிறக்குமுன்பே, அவர்கள் நல்லதோ
தீயதோ செய்யுமுன்பே, ''மூத்தவன்
இளையவனுக்கு ஊழியம் செய்வான்''
என்று அவளுக்குச் சொல்லப்பட்டது.
12 இதன்மூலம் கடவுள் எவ்வாறு தம்
திட்டத்தின்படி மனிதரைத் தேர்ந்தெடுத்
துத் தம் நோக்கத்தை நிறைவேற்றுகிறார்
என்பது நிலைநாட்டப்படுகிறது. கடவுள்
தேர்ந்தெடுப்பது மனிதரின் செயல்களைப்
பொருத்ததன்று, அவர்களை அழைக்கும்
கடவுளையே பொருத்ததாகும். 13 வேதத்
திலும், ''யாக்கோபினிடம் நான் அன்பு
கொண்டேன், ஏசாவையோ விரும்ப
வில்லை'' என்று எழுதியுள்ளது. 14 இது
எதை உணர்த்துகிறது? கடவுளிடம் அநீதி
காணப்படுகிறதென்று நாம் சொல்ல
லாமா? கூடவே கூடாது. 15 ஏனெனில்,
அவர் மோசேயினிடம்,

* 'எல்லாவற்றின்மீதும் ஆட்சிசெலுத்தும் கடவுளே என்றென்றும் புகழ்ந்து போற்றுதலுக்குரியவர். ஆமேன்' என்று மொழிபெயர்ப்பதுமுண்டு.

8:36 சங். 44:22. 9:3 யாத். 32:32. 9:7 ஆதி. 21:12. 9:9 ஆதி. 18:10. 9:12 ஆதி. 15:23. 9:13 மலா. 1:2, 3. 9:15 யாத். 33:19.

14 யார் யார் கடவுளின் ஆவியால் நடத்தப்படுகிறுர்களோ அவர்களனைவரும் கடவுளின் மைந்தர்கள். 15 மீண்டும் உங்களை அடிமைகளாக்கி அச்சத்தில் ஆழ்த்தும் ஆவியை நீங்கள் பெறவில்லை, உங்களைக் கடவுளின் மைந்தர்களாக்கும் ஆவியைப் பெற்றிருக்கிறீர்கள்; அந்த ஆவியின் அருளால் நாம், ''அபா''* (அதாவது, அப்பா) என்று கூப்பிடுகிறோம். 16 இவ்வாறு கூப்பிடும்போது, நாம் கடவுளின் பிள்ளைகளென்று நம் ஆவி உணர்த்தும் உண்மையை அந்த ஆவியானவர் தாமே உறுதிப்படுத்துகிறுர். 17 நாம் பிள்ளைகளென்றல் உரிமையாளருமாயிருக்கிறோம்; கடவுள் வாக்களித்தவற்றிற்கு உரிமையாளர்; கிறிஸ்துவின் உடன் உரிமையாளருமாவோம். நாம் அவரோடு பாடுகள் அடைந்தால், அவரோடு மாட்சிமையும் பெறுவோம்.

### வரப்போகும் மாட்சிமை

18 இனி நமக்கென வெளிப்படப் போகும் மாட்சிமையை நோக்கும்போது, இக்காலத்தில் நாம் அடையும் பாடுகளை நான் ஒரு பொருட்டாக எண்ணவில்லை. 19 அத்தகைய மாட்சிமையோடு கடவுளின் மைந்தர்கள் வெளிப்படுவதைக் காண, படைப்பு முழுமையுமே பேராவலோடு காத்துக்கொண்டிருக்கிறது. 20 ஏனெனில், படைப்பு முழுமையும் பயனற்ற நிலைக்குத் தாழ்த்தப்பட்டிருக்கிறது. அதைத் தாழ்த்தினவரின் செயலால் அப்படி நிகழ்ந்ததேயன்றி, அது தானே விரும்பினதாலன்று. 21 எனினும், அது நம்பிக்கையற்ற நிலையிலில்லை. அழிவுறும் தாழ்நிலையினின்று விடுவிக்கப்பட்டு, கடவுளின் மைந்தருக்குரிய மாட்சிமையையும் விடுதலையையும் தானும் அடையும் என்கிற நம்பிக்கையோடு அது இருக்கிறது. 22 இன்றுவரையிலும் படைப்பு முழுமையும் பேறுகால வேதனையில் ஒருங்கே தவித்துப் புலம்பிக்கொண்டிருக்கிறது என்பது நமக்குத் தெரியும். 23 படைப்பு முழுமையும் மட்டுமன்று; இனி கிடைக்கப்போகும் விளைச்சலின் முதற்கதிராக ஆவியானவரைப் பெற்ற நாமும் நமக்குள்ளே புலம்பிக்கொண்டு காத்திருக்கிறோம். கடவுள் நம்மைத் தம் மைந்தர்களாக்குவதற்காகவும் நம் உடலுக்கும் மீட்பளிப்பதற்காகவும் நாம் காத்துக் கொண்டிருக்கிறோம். 24 நாம் மீட்கப்பட்டிருக்கிறோமெனினும், இதை எதிர்நோக்கிய வண்ணமே வாழ்கின்றோம். ஏற்கெனவே கண்ணுக்குத் தெரிகிறதை நோக்குதல் எதிர்நோக்குதலாகாது. யாராவது தான் காண்கிறதை எதிர்நோக்கிக்கொண்டிருப்பானு? 25 ஆனல், நாமோ காணுதை ஒன்றை எதிர்நோக்கிக்கொண்டிருக்கிறோம். அதற்காகப் பொறுமையுடன் காத்துக் கொண்டுமிருக்கிறோம்.

26 மேலும், ஆவியானவர் நாம் இருக்கும் வலிமையற்ற நிலையில் நமக்குத் துணை நின்று உதவி செய்கிறுர். ஏனெனில், எவற்றிற்காக, எப்படி வேண்டுதல் செய்ய வேண்டுமென்பது நமக்குத் தெரியாது. ஆவியானவர் தாமே சொற்களற்ற நம் பெருமூச்சுகளைக் கொண்டு நமக்காக மன்றுடுகிறுர். 27 உள்ளங்களை ஊடுருவிப் பார்க்கிற கடவுளுக்கு ஆவியானவரின் கருத்து இன்னதென்பது தெரியும்; ஏனெனில், ஆவியானவர் அவருடைய திருவுளத்திற்கிசையவே அவருக்குரிய மக்களுக்காக மன்றுடுகிறுர். 28 அன்றியும், கடவுளிடம் அன்புகொண்டிருக்கிறவர்களுக்கு, அதாவது, அவரது திட்டத்தின்படி அழைக்கப்பட்டவர்களுக்கு எல்லாம் நன்மைக்கேதுவாக ஒன்றேடொன்று இசைந்து நடக்கின்றன † என்பது நமக்குத் தெரியும். 29 எவர்களைக் கடவுள் முன்பு தேர்ந்தெடுத்தாரோ அவர்கள் தம் மைந்தரின் சாயலை ஒத்திருக்க வேண்டுமென்று முன்பே திட்டமுமிட்டிருந்தார். இதன் நோக்கம் யாதெனில், ஏராளமான பேர் இவ்வாறு ஒருவருக்கொருவர் சகோதரராகி, தம் மைந்தரை மூத்தவராகக் கொண்ட ஒரு குடும்பமாக அமைய வேண்டும் என்பதே. 30 எவர்களைக் குறித்துக் கடவுள் முன்பே திட்டமிட்டாரோ அவர்களை அவர் அழைத்துமிருக்கிறுர்; எவர்களை அழைத்தாரோ அவர்கள் தமக்கு ஏற்றவர்களென்று தீர்ப்பளித்துமிருக்கிறுர். எவர்களைக் குறித்து அப்படித் தீர்ப்பளித்தாரோ அவர்களுக்கு மாட்சிமையளித்துமிருக்கிறுர்.

### கடவுளின் அன்பு

31 இதுகாறும் கூறியதிலிருந்து நாம் என்ன முடிவுக்கு வருகிறோம்? கடவுள் நம் பக்கம் இருப்பதால், யார் நமக்கு எதிராக இருக்கக்கூடும்? 32 கிறிஸ்துவைத் தம் சொந்த மைந்தரென்றும் பாராமல், அவரைக் கடவுள் நம்மெல்லாருக்காகவும் ஒப்புக்கொடுத்தார். அவ்வாறு செய்தவர் நமக்குத் தேவையான யாவற்றையும் அருளாதிருப்பாரா?

* மாற். 14:36 அடிக்குறிப்பைப் பார்க்க.
† 'கடவுள் தம்மிடம் அன்புகொள்கிறவர்களோடு, அதாவது, தம் திட்டத்தின்படி அழைக்கப்பட்டவர்களோடு சேர்ந்து, எல்லாவற்றையும் அவர்களுடைய நன்மைக்கேதுவாக நடத்துகின்றுர்' என்பதும் பாடம்.

**8:15—17** கலா. 4:5—7. **8:20** ஆதி. 3:17—19. **8:21** 2 பேது. 3:13. **8:23** 2 கொரி. 5:2—5. **8:26** யாக். 4:3, 5. **8:29** 1 கொரி. 15:49; பிலி. 3:21.

33 கடவுள் தேர்ந்துகொண்டவர்கள்மீது
யார் குற்றம் சுமத்தக்கூடும்? கடவுள் தாமே
அவர்கள் தமக்கு ஏற்றவர்களென்று தீர்ப்
பளித்திருக்கிறார். 34 யார் அவர்களைத்
தண்டனைக்கு ஆளாக்கக்கூடும்?
கிறிஸ்து இயேசு நமக்காக மரணமடைந்
திருக்கிறாரே! அதுமட்டுமன்றி, அவரே
உயிரோடெழுப்பப்பட்டவர், கடவுளின்
வலப்பக்கத்தில் இருக்கிறவர்; நமக்காக
வேண்டுதல் செய்கிறவரும் அவரே.
35 கிறிஸ்துவின் அன்பிலிருந்து நம்மைப்
பிரிக்கக்கூடியது எது?வேதனையா?இடுக்கணா?
துன்புறுத்துதலா? உணவுப் பஞ்சமா?
உடைப் பஞ்சமா? அபாயமா? வாளினால்
வரும் சாவா? எது நம்மைப் பிரிக்கக்
கூடும்? 36 வேதத்தில் எழுதியுள்ளபடிதான்
நமக்கு நடைபெறுகிறது:

'உம்பொருட்டு நாள் முழுதும்
வதையுண்டு கொல்லப்படுகிறோம்;
வெட்டுவதற்கு நிறுத்தப்படும்
ஆடுகளெனக் கருதப்பட்டோம்.'

37 என்றாலும், நம்மிடம் அன்புகொண்
டுள்ளவரால் இவையனைத்திலும் நமக்கு
வெற்றிமேல் வெற்றி கிடைக்கிறது.
38 சாவோ, வாழ்வோ, வானதூதரோ,
ஆட்சி செலுத்தும் ஆவியோ, நிகழ்
வனவோ, வருவனவோ, 39 வலிய சக்தி
களோ, மேலே உள்ளனவோ, ஆழத்தில்
உள்ளனவோ, வேறெந்தப் படைப்போ
இவற்றுள் எதனாலும் நம்முடைய ஆண்ட
வராகிய கிறிஸ்து இயேசுவோடு இணைக்
கப்பட்டுள்ள நமக்கு அருளப்படும்
கடவுளின் அன்பிலிருந்து நம்மைப் பிரிக்க
இயலாது என்பது என் உறுதியான நம்
பிக்கை.

## இஸ்ரவேல் குடும்பத்தினரைத் தேர்ந்தெடுத்தது

9 கிறிஸ்துவின் அடியானாக ஒன்று
சொல்கிறேன்: எனக்கு இருக்கும்
துயரம் பெரிது; என் மனவேதனை ஓயா
தது; இது உண்மை. 2 நான் சொல்வது
பொய்யன்று என்பதை என் மனச்சான்றும்
தூய ஆவியானவரால் நடத்தப்பட்டு
உறுதிப்படுத்துகிறது. 3 நான் கிறிஸ்துவை
விட்டுப் பிரிந்து சாபத்திற்குள்ளாவதன்
மூலம் என் சகோதரருக்கு, அதாவது,
என் சொந்த இனத்தவருக்கு
மீட்புக் கிடைக்குமானால், அப்படியாவது
நடக்கட்டும் என்று நான் விரும்பின
துண்டு. 4 அவர்கள் இஸ்ரவேல் மக்கள்.
கடவுள் அவர்களைத் தம் மைந்தர்களாக்கி,
அவர்களிடையே தம் மாட்சிமை தங்கும்
படி செய்தார்; உடன்படிக்கைகள், நீதிச்
சட்டம், ஆலய வழிபாடு, வாக்குறுதிகள்
ஆகியவை யாவும் அவர்களுக்கே உரி
யவையாயின. 5 அவர்கள் ஆபிரகாம்
முதலிய குலத்தந்தையர் வழியாகத்
தோன்றினவர்கள். மனிதன் என்ற முறை
யில் மேசியாவும் அவர்கள் குலத்தினின்றே
தோன்றினார். அவர் எல்லாவற்றின்மீதும்
ஆட்சி செலுத்தும் கடவுள், என்றென்றும்
புகழ்ந்து போற்றுதலுக்குரியவர்.
ஆமேன்.* 6 கடவுள் அவர்களுக்கு அரு
ளின வாக்குறுதி நிறைவேறாமற்போயிற்று
என்று நான் சொல்லவில்லை. நான் சொல்
வது இஸ்ரவேல் குடும்பத்தினர் என்பதால்
அவர்கள் அனைவரும் உண்மையில் இஸ்ர
வேலராகிவிடமாட்டார்கள்; 7 ஆபிரகாமின்
மரபில் வந்தவர்கள் என்பதால்,
அவர்கள் எல்லாரையுமே ஆபிரகாமின்
மைந்தர்கள் என்று கொள்ளலாகாது என்
பதே. அவருக்கு, ''ஈசாக்கின் மரபினரே
உன் மரபினர் எனப்படுவர்'' என்று
சொல்லப்பட்டது. 8 அதாவது, இயற்கை
முறைப்படி பிறந்த பிள்ளைகளல்ல,
கடவுளின் வாக்குறுதிமூலம் பிறந்த பிள்ளை
களே கடவுளின் பிள்ளைகளாகவும் ஆபிர
காமின் மரபினராகவும் எண்ணப்படுவார்
கள். 9 அந்த வாக்குறுதி என்னவென்றால்,
''குறித்த காலத்தில் நான் திரும்பவும்
வருவேன்; அப்பொழுது சாராளுக்கு ஒரு
மகன் பிறந்திருப்பான்'' என்பதாகும்.

10 இதற்கு இன்னுமொரு சான்றுண்டு.
ரெபெக்காவுக்கு இரு பிள்ளைகள் பிறந்
தார்கள். நம் மூதாதையாகிய ஈசாக்கு
அவ்விருவருக்கும் தந்தை. 11 அவர்கள்
பிறக்குமுன்பே, அவர்கள் நல்லதோ
தீயதோ செய்யுமுன்பே, ''மூத்தவன்
இளையவனுக்கு ஊழியம் செய்வான்''
என்று அவளுக்குச் சொல்லப்பட்டது.
12 இதன்மூலம் கடவுள் எவ்வாறு தம்
திட்டத்தின்படி மனிதரைத் தேர்ந்தெடுத்
துத் தம் நோக்கத்தை நிறைவேற்றுகிறார்
என்பது நிலைநாட்டப்படுகிறது. கடவுள்
தேர்ந்தெடுப்பது மனிதரின் செயல்களைப்
பொருத்ததன்று, அவர்களை அழைக்கும்
கடவுளையே பொருத்ததாகும். 13 வேதத்
திலும், ''யாக்கோபினிடம் நான் அன்பு
கொண்டேன், ஏசாவையோ விரும்ப
வில்லை'' என்று எழுதியுள்ளது. 14 இது
எதை உணர்த்துகிறது? கடவுளிடம் அநீதி
காணப்படுகிறதென்று நாம் சொல்ல
லாமா? கூடவே கூடாது. 15 ஏனெனில்,
அவர் மோசேயினிடம்,

* 'எல்லாவற்றின்மீதும் ஆட்சிசெலுத்தும் கடவுளே என்றென்றும் புகழ்ந்து போற்றுதலுக்குரியவர். ஆமேன்' என்று மொழிபெயர்ப்பதுமுண்டு.

8:36 சங். 44:22. 9:3 யாத். 32:32. 9:7 ஆதி. 21:12. 9:9 ஆதி. 18:10. 9:12 ஆதி. 15:23. 9:13 மலா. 1:2, 3. 9:15 யாத். 33:19.

''யாருக்கு நான் இரக்கங்காட்ட
விரும்புகிறேனோ
அவனுக்கு இரக்கங்காட்டுகிறேன்;
யாரிடம் உருக்கங்கொள்ள விரும்பு
கிறேனோ
அவனிடம் உருக்கங்கொள்கிறேன்''

என்று சொன்னார். 16 எனவே, மனிதன்
விருப்பங்கொள்வதனாலுமன்று, முயற்சி
செய்வதனாலுமன்று, கடவுள் இரக்கங்
கொள்வதனாலேயே எதுவும் நடக்கும்.
17 பார்வோனுக்குச் சொல்லப்பட்ட வேத
வாக்கும் இதுவே: ''உன்னைக் கருவியாகக்
கொண்டு என் வல்லமையைக் காட்ட
வும், என் பெயர் உலகெங்கும் விளங்கும்
படி செய்யவும் வேண்டுமென்றே உன்
னைத் தோற்றுவித்தேன்.'' 18 ஆகவே, அவர்
தம் விருப்பப்படியே ஒருவனுக்கு இரங்கு
கிறார்; இன்னொருவனைப் பிடிவாதமுள்ள
வனாக்குகிறார்.

### கடவுளின் சினமும் இரக்கமும்

19 அப்படியானால், நீ என்னிடம்,
''கடவுள் ஏன் இன்னும் மனிதனைக் குற்றப்
படுத்திக்கொண்டிருக்கிறார்? அவருடைய
விருப்பத்திற்கு மாறாக நடக்கத்தான் அவ
னால் இயலாதே!'' என்று கேட்கலாம்.
20 கடவுளை எதிர்த்து வாதாடுவதற்கு நீ
யாரையா? உருவாக்கப்பட்ட பொருள்
தன்னை உருவாக்கினவனிடம், ''ஏன்
என்னை இவ்வாறு அமைத்தாய்?'' என்று
கேட்குமா? 21 ஒரே களிமண் உருண்
டையைக் கொண்டு விலையுயர்ந்த ஒரு
பாண்டத்தையும் விலை குறைந்த ஒரு
பாண்டத்தையும் வனையக் குயவனுக்கு
உரிமையில்லையா? இவ்வண்ணமே
கடவுளின் செயலும் இருந்தது. 22 தமது
சினத்தைக் காட்டவும் தமது வல்ல
மையை விளங்கச் செய்யவும் விரும்பின
கடவுள், தமது சினத்திற்கு இலக்கானதும்
அழிவிற்குத் தகுதியானதுமான பாண்
டங்களை அவற்றின் நிலையிலேயே இருக்க
விட்டுவிட்டுப் பொறுமையோடிருந்தார்;
23 மேலும், தம் கருணையைப் பெறத்
தகுதியானதும் மாட்சிமை அடையும்படி
ஏற்கெனவே தாம் ஆயத்தமாக்கினதுமான
பாண்டங்களில் தமது வளமான மாட்சி
மையை வெளிப்படுத்துவதற்காகவும் அப்
படிச் செய்தார். இவற்றைக் குறித்து
யார் என்ன சொல்லமுடியும்? 24 அவர்
யூதர்களிடையேயிருந்து மட்டுமன்றி, யூத
ரல்லாதாரிடையேயிருந்தும் அழைத்திருக்
கிற நாமே இந்தப் பாண்டங்கள். 25 இதற்
கிசையவே ஓசேயாவின் நூலில் இவ்வாறு
சொல்லப்பட்டிருக்கிறது:

''என் மக்களாய் இல்லாதவர்களை 'என்
மக்கள்' என்றும்
நேசிக்கப்படாத ஓர் இனத்தை
'நேசிக்கப்பட்ட ஓர் இனம்' என்றும்
பெயர் சொல்லி அழைப்பேன்.
26 'நீங்கள் என் மக்கள் அல்ல' என்று
அவர்களுக்குச் சொல்லப்பட்ட அதே
இடத்தில்,
'அவர்கள் என்றுமுள்ள கடவுளின்
மைந்தர்கள்' எனப்படுவார்கள்.''

27 அவ்வாறே ஏசாயாவும் இஸ்ரவேல்
மக்களைக் குறித்து, ''இஸ்ரவேல் மைந்தர்
கள் கடற்கரை மணலைப்போல எண்ணி
றந்தவர்களாயிருந்தாலும், அவர்களுள் மீத
மான சிலரே மீட்கப்படுவர்; 28 ஏனெனில்,
ஆண்டவர் உலகிலே தமது வாக்கை
விரைவிலேயே முற்றிலும் நிறைவேற்று
வார்'' என்று ஆணித்தரமாக உரைக்
கிறார். 29 மேலும், ஏசாயா,

''வெற்றிவேந்தராகிய ஆண்டவர்
நமக்கென்று ஒரு சிறு கூட்டத்தை
மீதியாக விட்டு வைத்திராவிடில்,
நாம் சோதோமைப்போல ஆகி
யிருப்போம், கொமோராவின் நிலைக்கு
வந்திருப்போம்''

என்றும் முன்பே அறிவித்திருக்கிறார்.

### இஸ்ரவேலரும் அருட்செய்தியும்

30 அப்படியானால், என்ன முடிவுக்கு
வருகிறோம்? யூதரல்லாதார் தாம் கட
வுளால் ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு முயற்சி
செய்யாதபோதிலும், அவர்கள் கடவு
ளால் அவருக்கு ஏற்றவர்களெனக் கொள்
ளப்பட்டார்கள். இது நடந்தது அவர்
களது நம்பிக்கையினாலேதான். 31 இஸ்ர
வேலரோ தங்களைக் கடவுளுக்கு ஏற்பு
டையோராக்கும் என்று நினைத்த நீதிச்
சட்டத்தைக் கடைப்பிடிக்க முயன்றார்கள்.
ஆனால், அவர்கள் தங்கள் முயற்சியில்
வெற்றிபெறவில்லை. 32 காரணம் என்ன?
தாம் நாடியதை நம்பிக்கையின் மூலம்
நாடாமல், செயல்களின் மூலம் அடைய
லாம் என்றெண்ணினார்கள். 33 'தடுக்கும்
கல்லின்மேல்' இடறிவிழுந்தார்கள். அதைப்
பற்றி வேதத்தில்,

''இதோ, தடுக்கும் கல்லை, அதாவது,
இடறிவிழச் செய்யும் கற்பாறையை,
சீயோனில் வைத்திருக்கிறேன்.
அந்தக் கற்பாறையாகிய அவரிடம்
நம்பிக்கைகொள்பவனோ வெட்கத்
திற்குள்ளாகான்.''

**10** என்று எழுதியிருக்கிறது. சகோதரரே,
என் இனத்தவர் மீட்படைய
வேண்டும் என்பதே என் இதயவேட்கை;
கடவுளை நோக்கி நான் அவர்களுக்காகச்

**9:17** யாத். 9:16. **9:20** ஏசா. 29:16; 45:9 **9:25** ஓசே. 2:23. **9:26** ஓசே. 1:10. **9:27, 28** ஏசா. 10:22, 23. **9:29** ஏசா. 1:9 **9:33** ஏசா. 28:16.

செய்யும் விண்ணப்பமும் இதுவே. 2 அவர்
களுக்குக் கடவுள்மீது ஆர்வப்பற்று
உண்டு; அவர்கள் சார்பில் நான் இவ்வாறு
சாட்சி கூறக்கூடும். ஆனால், அந்த
ஆர்வப்பற்று உண்மையான அறிவை
அடிப்படையாகக் கொண்டதன்று. 3 எப்
படியெனில், கடவுள் மனிதனை எவ்வாறு
தமக்கு ஏற்றவனெனக் கொள்கிறார் என்
பதை அவர்கள் அறிந்துகொள்ளாததால்,
தாங்களே தங்களை அவருக்கு ஏற்புடை
யோராக்கிக்கொள்ளப் பார்த்தார்கள்.
4 ஆகையால், கடவுளின் ஏற்புமுறைக்கு
அவர்கள் தங்களைக் கீழ்ப்படுத்தவில்லை.
கிறிஸ்துவினிடம் நீதிச்சட்டம் தன் முடி
வைக் கண்டது. ஆகவே, இனி அவரிடம்
நம்பிக்கை கொள்வோர் அனைவரும்
கடவுளால் ஏற்றுக்கொள்ளப்படுவர்.

### மீட்பு எல்லாருக்குமே உரியது

5 நீதிச்சட்டத்தின் மூலம் ஒருவன்
கடவுளுக்கு ஏற்றவனாவதைப்பற்றி மோசே
எழுதியது என்னவென்றால், அதன்படி
நடக்கிற மனிதன் அதன்மூலம் மெய்
வாழ்வடைவான் என்பதாகும். 6 ஆனால்,
நம்பிக்கையின் மூலம் கடவுளால் ஏற்றுக்
கொள்ளப்படுவதைக் குறித்து (கிறிஸ்து
வைக் கீழே கொண்டுவரும்படி) ''வானத்
துக்கு ஏறுபவன் யார்?' என்றாவது,
7 (கிறிஸ்துவை இறந்தோரிடமிருந்து மேலே
கொண்டுவரும்படி) 'பாதாளக் குழியில்
இறங்குபவன் யார்?' என்றாவது நீ வீணாக
உனக்குள்ளே கேட்டுக்கொண்டிராதே''
என்று கூறப்படுகிறது. 8 இன்னும் கூறப்
படுவதென்ன? ''இந்தச் செய்தி (அதா
வது, கிறிஸ்துவினிடம் நம்பிக்கை கொள்
வதைப் பற்றி நாங்கள் அறிவிக்கும்
செய்தி),

உங்களுக்கு அருகிலேயே உள்ளது;
உங்கள் வாயில் உள்ளது;
உங்கள் உள்ளத்திலும் இருக்கிறது.''

9 நீ உன் வாயினால் இயேசுவை
ஆண்டவர் என்று சொல்லி ஒப்புக்கொண்டு,
உன் உள்ளத்தினால் அவரைக் கடவுள்
இறந்தோரிடமிருந்து உயிரோடெழுப்பினா
ரென்பதை நம்புவாயானால், நீ மீட்கப்
படுவாய். 10 உள்ளத்தினால் ஒருவன் இவ்
வாறு நம்புவானானால், அவன் கடவுளால்
ஏற்றுக்கொள்ளப்படுவான்; வாயினால் இவ்
வாறு சொல்லி ஒப்புக்கொள்வானானால்
மீட்படைவான். 11 ''அவரிடம் நம்
பிக்கை கொள்ளும் எவனும் ஏமாற்ற
மடைய மாட்டான்'' என்று வேதமும்
கூறுகிறது. 12 இதில் யூதனுக்கும் கிரேக்
கனுக்கும் இடையே வேறுபாடில்லை;
எல்லாருக்கும் ஆண்டவர் ஒருவரே. தம்மை
நோக்கி மன்றாடுகிற யாவருக்கும் அவர்
அருட்செல்வமுடையவராய் விளங்குகிறார்.
13 ஏனெனில், ''ஆண்டவரின் திருப்
பெயரைக் கூவியழைத்து அபயமிடுகிறவன்
எவனோ அவன் மீட்கப்படுவான்'' என்
றிருக்கிறது.

14 ஆனால், அவரிடம் நம்பிக்கை கொண்
டிருந்தாலன்றி, அவர்கள் எப்படி அவரி
டம் அபயமிடுவார்கள்? தாங்கள் கேள்விப்
படாத ஒருவரிடம் எப்படி நம்பிக்கை
கொள்வார்கள்? அறிவிப்பவன் இல்லாமல்
எப்படிக் கேள்விப்படுவார்கள்? 15 அனுப்
பப்படாவிடில் எப்படி யாரும் அறிவிப்
பார்கள்? இதைக் குறித்தே, 'நலமார்ந்த
அருட்செய்தியை அறிவிக்கிறவர்களின்
வருகை எத்துணை மகிழ்ச்சி தருகிறது!'
என்று வேதத்தில் எழுதியிருக்கிறது.
16 ஆயினும், எல்லாரும் அருட்செய்திக்குச்
செவிசாய்க்கவில்லை. ''ஆண்டவரே,
நாங்கள் அறிவித்ததைக் கேட்டு நம்பினவன்
எவனாவது உண்டா?'' என்று ஏசாயா
கூறியதற்கேற்ப இது நடக்கிறது. 17 ஆகவே,
அறிவிக்கப்படுவதைக் கேட்டால்தான்
அதை நம்ப முடியும். கிறிஸ்துவைப் பற்றிய
செய்தி அறிவிக்கப்பட்டால்தான்
அதைக் கேட்கமுடியும். 18 அப்படியானால்,
நான் கேட்கிறேன், ''அவர்கள்
கேள்விப்படாமலா இருந்தார்கள்?'' இல்லை,
அவர்கள் கேள்விப்பட்டார்கள்; ஏனெனில்,

''அவர்கள் குரலொலி உலகெங்கும்
ஒலித்தது;
அவர்கள் வார்த்தை உலகின்
கடைசி எல்லைவரைக்கும் சென்றது''.

19 நான் மீண்டும் கேட்கிறேன், இஸ்ர
வேலர் புரிந்துகொள்ளாமல் இருந்திருக்க
முடியுமா? நெடுங்காலத்திற்கு முன்பே
மோசே,

''ஓர் இனம் என்று சொல்லப்
படத்தகாத மக்கள்மீது உங்
களுக்கு எரிச்சல் உண்டாகும்படி
செய்வேன்;
அறிவில்லாத ஓர் இனத்தினரால்
உங்களுக்குச் சினம் உண்டாகும்படி
செய்வேன்''

என்கிற கடவுளின் வாக்கை எடுத்துரைத்
திருக்கிறாரே! 20 அவரை அடுத்து ஏசா
யாவும்,

''என்னை நாடித் தேடாதவர்கள்
என்னைக் கண்டார்கள்.
என்னைப்பற்றி அறிய முயலாத
வர்களுக்கு நான் என்னை வெளிப்
படுத்தினேன்''

10:4 கலா. 3:24. 10:5 இலே. 18:5. 10:6—8 உபா. 30:12—14. 10:11 ஏசா. 28:16. 10:13 யோவேல் 2:32. 10:15 ஏசா. 52:7. 10:16 ஏசா. 53:1. 10:18 சங். 19:4. 10:19 உபா. 32:21. 10:20 ஏசா. 65:1

என்று இன்னும் தெளிவாகக் கடவுளின்
திருமொழியை எடுத்துரைத்திருக்கிறாரே!
21 ஆனால், இஸ்ரயேலரைக் குறித்து
அவர், ''கீழ்ப்படியாதவர்களும் எதிர்த்துப்
பேசுகிறவர்களுமான மக்களை நோக்கி
நாள்முழுதும் என் கைகளை நீட்டி அழைத்
தேன்'' என்று கடவுள் சொன்னதைக்
கூறினார்.

### இஸ்ரயேலருள் மீந்திருப்பவர்கள்

11 அப்படியானால், கடவுள் தம் மக்
களைத் தள்ளிவிட்டாரா என்று கேட்க
லாம். இல்லவே இல்லை. நானும் ஓர்
இஸ்ரயேலன், ஆபிரகாம் மரபில் வந்த
வன், பென்யமீன் குலத்தினன்.
2கடவுள் தாம் முன்பே அறிந்து தேர்ந்து
கொண்ட தம் மக்களைத் தள்ளிவிடவில்லை.
எலியா இஸ்ரயேலரைப்பற்றிக் கடவு
ளிடம் எவ்வாறு முறையிட்டார் என்ப
தைப்பற்றிய வேதப்பகுதி என்ன சொல்
கிறது என்பது உங்களுக்குத் தெரியு
மல்லவா? 3 ''ஆண்டவரே, உம்முடைய
வாக்கை உரைப்பவர்களை அவர்கள்
கொன்றுவிட்டு, உம்முடைய பலிபீடங்களை
இடித்துவிட்டார்கள்; நான் ஒருவன்
மட்டும் மீந்திருக்கிறேன்; என் உயிரையும்
பறித்துவிடப் பார்க்கிறார்கள்'' என்றார்.
4 ஆனால், அவருக்குக் கிடைத்த
கடவுளின் வாக்கு என்ன? ''முழங்காலை
முடக்கிப் பாகால் தெய்வத்தைப் பணியாத
ஏழாயிரம் பேரை எனக்கென்று
மீந்திருக்கச் செய்திருக்கிறேன்'' என்பது.
5 அவ்வாறே, இக்காலத்திலும் நடந்
திருக்கிறது. மீந்திருக்கும் சிலர் இப்போதும்
இருக்கின்றனர். இவர்கள் அருளால்
தேர்ந்துகொள்ளப்பட்டவர்கள். 6 அரு
ளால் என்பதால், அது மனிதனுடைய
செயல்களாலன்று என்பது தெளிவு. அல்ல
வென்றால் அருள் அருளாயிராது.* அப்
படியானால் நாம் அறிவதென்ன? 7 இஸ்ர
யேலர் தேடினதை அவர்களுள் தேர்ந்து
கொள்ளப்பட்டவர்கள் அடைந்தார்களே
யன்றி, எல்லாரும் அடையவில்லை. அதை
அடையாதவர்கள் உணர்வு அற்றவர்
களாக்கப்பட்டார்கள். 8 வேதத்திலும்
அவ்வாறே எழுதியிருக்கிறது:

''கடவுள் அவர்களுக்கு மந்தமான
உள்ளத்தையும்,
காணவியலாத கண்களையும், கேட்க
வியலாத காதுகளையும் கொடுத்தார்.
இந்நாள் வரையிலும் அவர்கள்
அவ்வாறே இருக்கிறார்கள்.''

9 தாவீது சொல்லியிருப்பதும் அதுவே:
''அவர்கள் விருந்து அவர்களுக்கே
பொறியாகவும் கண்ணியாகவும்
இருக்கட்டும்;
இடறலும் சாபமும் ஆகட்டும்;
10 காணவியலாதபடி அவர்கள் கண்
கள் இருளாகட்டும்;
அவர்கள் முதுகு எப்போதும் சுமைகளினால்
வளைந்திருக்கட்டும்.''

### யூதரல்லாதாரின் மீட்பு

11 அப்படியானால், அவர்கள் இடறி
விழுந்ததால், முற்றிலும் அழிந்துபோய்
விடுவார்களா என்று ஒரு கேள்வி
எழலாம். இல்லவே இல்லை. உண்மையில்,
அவர்கள் தவறு செய்ததால், யூதரல்லா
தாருக்கு மீட்புக் கிடைக்கலாயிற்று.
அதைக் காணும் யூதரும் மீட்படைவதில்
ஆர்வம் கொள்ள வேண்டுமென்பதே
கடவுளின் நோக்கம். 12 அவர்கள் தவறு
செய்ததால், முழு உலகத்திற்கும் அருட்
செல்வம் கிடைக்கலாயிற்று, அவர்கள்
வீழ்ச்சியுற்றதன் விளைவாக எல்லா நாட்
டினருக்கும் அருட்செல்வம் கிடைக்கலா
யிற்று என்றால், யூதர் அனைவரும் மீட்
படையும்போது, இன்னும் எவ்வளவோ
பெரிய நன்மை விளையுமல்லவா?

13 யூதரல்லாதாராகிய உங்களுக்கு
இதைச் சொல்லுகிறேன்: நான் யூதரல்
லாதாருக்கென்று திருத்தூதுவனாயிருக்
கிறேன்; என் ஊழியத்தைக் குறித்துப்
பெருமை கொள்கிறேன். 14 இதன்மூலம்
என் சொந்த இனத்தவரிடையே பொறாமை
ஏற்பட்டு, அவர்களுள் சிலராவது மீட்புப்
பெற வேண்டுமென்பது என் நோக்கம்.
15 அவர்கள் தள்ளுண்டபோதே உலகத்
திற்குக் கடவுளோடு நல்லுறவு உண்டா
யிற்றென்றால், அவர்கள் அவரால் ஏற்றுக்
கொள்ளப்படும்போது, விளைவு எத்துணைச்
சிறப்பாயிருக்கும்! இறந்தோர் உயிர்பெற்
றனர் என்போமல்லவா?

16 பிசைந்த மாவிலிருந்து முதலில் ஒரு
பிடி மாவை எடுத்துக் கடவுளுக்குப்
படைத்தால், அந்த மாவு முழுவதுமே
கடவுளுக்குப் படைக்கப்பட்டதாகும். வேர்
கடவுளுக்குச் சொந்தம் என்றால், கிளை
களும் அவருக்குச் சொந்தமே. 17 ஒரு
நல்ல ஒலிவ மரத்தின் சில கிளைகள் தறிக்
கப்பட்டன. அந்த மரத்தில் ஒரு காட்
டொலிவ மரக்கிளை ஒட்டிவைக்கப்பட்டது.
அது அந்த மரத்தின் உரமான வேரோடு
சேர்ந்து அதன் சாரத்தைப் பெறுகிறது.

* 'மனிதனுடைய செயல்களால் என்றால், அருளால் அன்று என்பது தெளிவு: அப்படியல்லவென்றால், செயல் செயலாயிராது' என்பது பிற்காலத்தில் சேர்க்கப்பட்ட ஒரு பாடம்.

**10:21** ஏசா. 65:2. **11:1** சங். 94:14; பிலி. 3:5. **11:3** 1 அர. 19:10, 14. **11:4** 1 அர. 19:18. **11:8** உபா. 29:4; ஏசா. 29:10. **11:9, 10** சங். 69: 22,23

18 அந்தக் கிளை தறிக்கப்பட்ட கிளைகளை
விடத் தன்னை உயர்வாக எண்ணலாகாது.
நீயே அந்தக் கிளை. இந்த நிலையில் நீ
பெருமை கொண்டால், நீ வேரைத் தாங்க
வில்லை, வேர் தான் உன்னைத் தாங்கு
கிறது என்பதை நினைவூட்டிக்கொள்.
19 ஆனால், ''கிளைகள் தறிக்கப்பட்டது
நான் ஒட்டப்படுவதற்காகவே'' என்று நீ
சொல்லக்கூடும். 20 சரிதான், அவை தறிக்
கப்பட்டது அவற்றிற்குக் கடவுளிடம் நம்
பிக்கை இல்லாததனாலேயாகும். நீ நிலைத்
திருப்பதோ அந்த நம்பிக்கையினாலேயே.
எனவே, நீ உன்னைப்பற்றி மேட்டிமை
யாக எண்ணிக்கொள்ளாமல், அஞ்சி
நட. 21 ஏனெனில், மரத்தின் சொந்தக்
கிளைகளையே கடவுள் தப்பித்துக்கொள்ள
விடவில்லையென்றால், உன்னைத் தப்பித்துக்
கொள்ள விடுவாரா? 22 இதில்
கடவுளின் இரக்கத்தையும் கண்டிப்பையும்
காண்கிறோம். தவறு செய்தவர்களிடம்
கண்டிப்பு, உன்னிடமோ இரக்கம். நீ
அந்த இரக்கத்தையே சார்ந்து நில்; இல்லா
விடில், நீயும் வெட்டித் தள்ளப்படுவாய்.
23 அவர்களைப் பொருத்தமட்டில், அவர்கள்
கடவுளிடம் நம்பிக்கை கொள்ளாத
நிலையினின்று மாறினால், அவர்களும் ஒட்ட
வைக்கப்படுவார்கள். அவர்களை அவ்வாறு
ஒட்டவைக்கக் கடவுள் வல்லவர். 24 நீ
இயற்கையின்படி காட்டொலிவ மரக்
கிளை. அதினின்று நீ வெட்டப்பட்டு,
இயற்கைக்கு மாறாக நல்ல ஒலிவ மரத்தில்
ஒட்டவைக்கப்பட்டாய். அப்படி
யிருக்கும்போது, அதில் இயற்கையாகவே
கிளைகளாயிருந்த அவர்கள், தங்களுக்குச்
சொந்தமான அம்மரத்தில் ஒட்டவைக்
கப்படுவது எவ்வளவு எளிது!

### இஸ்ரவேலர் தம் முன்னிலைமைக்குக் கொண்டுவரப்படுதல்

25 சகோதரரே, நீங்கள் உங்களையே
அறிவாளிகளென்று எண்ணிக்கொண்டிருக்
கலாம். அவ்வாறு எண்ணாதிருக்கவே இந்த
மறைபொருளை உங்களுக்குத் தெரிவிக்க
விரும்புகின்றேன். அதாவது, யூதரல்லா
தார் அனைவரும் அருளாட்சிக்கு உட்படும்
வரையிலுந்தான் இஸ்ரவேலருள் ஒரு பகு
தியினர் இப்போது இருப்பது போலவே
பிடிவாதமுள்ளவராய் இருப்பர். 26 அதன்
பின் இஸ்ரவேலரெல்லாரும் மீட்கப்படுவர்.
இவ்வாறே வேதத்தில்,

''விடுதலையளிப்பவர் சீயோனிலிருந்து
வருவார்;
யாக்கோபின் மரபு முழுவதினின்றும்
இறைப்பற்றின்மையை அகற்றுவார்.
27 அவர்களுடைய பாவங்களை நீக்
கும்போது,
நான் அவர்களோடு செய்யும் உடன்
படிக்கை இதுவே''

என்று எழுதியிருக்கிறது. 28 அருட்செய்
தியைப் புறக்கணித்ததால் அவர்கள் கட
வுளுக்குப் பகைஞரானார்கள்; அது உங்
களுக்கு நன்மையாய் முடிந்தது. ஆனால்,
கடவுள் அவர்களைத் தேர்ந்தெடுத்ததால்,
அவர்கள் வாக்குறுதிகளைப் பெற்ற மூதா
தையரின் வழிவந்ததை முன்னிட்டு அவரது
அன்பிற்கு உரியவர்களானார்கள்.
29 ஏனெனில், கடவுள், தாம் அருளும்
ஈவுகளையும் தேர்ந்தெடுக்கும் மக்களையும்
பற்றிய தம் தீர்மானத்தை மாற்றுவ
தில்லை. 30 ஒரு காலத்தில் நீங்கள் கட
வுளுக்குக் கீழ்ப்படியாதிருந்தது உண்மை.
இப்போது அவர்கள் கீழ்ப்படியாமற்
போனதால், உங்களுக்குக் கடவுளின் இரக்கம்
கிடைக்கலாயிற்று. 31 அதுபோல,
இக்காலத்தில் நீங்கள் இரக்கம் பெற்றி
ருக்கிறீர்கள் என்பதற்காக, அவர்கள் இப்
போது கீழ்ப்படியாதிருக்கிறார்கள். ஆனால்,
அவர்களும் விரைவில் இரக்கம் பெறு
வதற்காகவே இவ்வாறு நடந்திருக்கிறது.
32 எல்லாருக்கும் இரக்கம் காட்ட வேண்டு
மென்னும் நோக்கத்தோடுதான் கடவுள்,
எல்லாரும் கீழ்ப்படியாதிருந்து கொடு
மையை அனுபவிக்கும்படி செய்தார்.

33 கடவுளின் அருட்செல்வம் எத்துணை
பெரிது! அவருடைய ஞானமும் அறிவும்
எவ்வளவு ஆழமானவை! அவருடைய
தீர்ப்புகள் அறிவுக்கு எட்டாதவை, அவரு
டைய வழிகள் ஆராய்ச்சிக்கு அப்பாற்
பட்டவை.

34 ''ஆண்டவருடைய மனத்தை அறிந்
தவன் யாரேனும் உண்டோ?
அவருக்கு அறிவுரை கூறினவன்
யாரேனும் உண்டா?
35 தனக்குக் கைம்மாறு கிடைக்கும்படி
அவருக்கு முன்னதாகவே கொடுத்தவன்
யாரேனும் உண்டோ?''

36 ஏனெனில், யாவும் அவரிடமிருந்தே
வந்தன, அவர் மூலமாகவே இயங்குகின்றன,
அவருக்கென்றே இருக்கின்றன; அவருக்கே
என்றென்றும் மாட்சிமை! ஆமேன்.

### புதிய வாழ்க்கை

**12** சகோதரரே, நான் இதுகாறும்
கூறியதை முன்னிட்டு, கடவுளுடைய
இரக்கத்தின் பெயரால் உங்களைக் கேட்டுக்
கொள்வது இதுவே: நீங்கள் உங்களை முழு
வதுமாகக் கடவுளுக்கு உரியதும் உகந்த
தும் உயிருள்ளதுமான பலியாக ஒப்புக்
கொடுங்கள்; இதுவே நீங்கள் செய்ய
வேண்டிய உள்ளார்ந்த மெய்வழிபாடு.
2 நீங்கள் இந்த மண்ணுலகின் போக்கிற்கு

**11:21** எரே. 49:12 **11:26** ஏசா. 59:20. **11:27** ஏசா. 27:9; எரே. 31:33, 34. **11:33** சங். 139:17, 18; ஏசா. 55:8. **11:34** ஏசா. 40:13. **11:36** 1 கொரி. 8:6; 11:12. **12:2** எபே. 4:23.

ஒத்து நடவாதீர்கள்; கடவுளால் உங்கள்
மனம் புதிதாக்கப்படவும், அதன்மூலம்
உங்கள் முழு வாழ்க்கையும் மாற்றி அமைக்
கப்படவும் இடங்கொடுங்கள். அப்போது
தான், கடவுளின் திருவுளம் யாது, அதா
வது, எது நல்லது, எது அவருக்கு உகந்
தது, எது தலைசிறந்தது என்பவற்றைக்
கண்டுகொள்ள உங்களால் இயலும்.

3 நான் அருளைப் பெற்றவன் என்கிற
முறையில் உங்களுள் ஒவ்வொருவருக்கும்
சொல்வது இதுவே: எவனும் தன்னைப்
பற்றி எண்ண வேண்டுவதற்கு மேலாக
எண்ண வேண்டாம்; அவனவனுக்குக் கட
வுள் பகிர்ந்தளித்த நம்பிக்கை வரத்தை
மனத்திற்கொண்டு, அதன் அளவுக்கேற்ப
உள்ளபடியே தன்னை மதிப்பிட வேண்டும்.
4 ஏனெனில், ஒரே உடலில் நமக்குப் பல
உறுப்புகள் இருக்கின்றன. எல்லா உறுப்
களும் செய்ய வேண்டிய வேலை ஒரே
வேலையன்று. 5 அவ்வாறே, நாம் பலரா
யிருந்தாலும், கிறிஸ்துவோடு இணைக்கப்
பட்ட நிலையில் ஒரே உடலாயிருக்கிறோம்;
அதில் தனித்தனியே உடன் உறுப்புகளா
யும் இருக்கிறோம். 6 நாம் பெற்றிருக்கும்
வரங்கள் நமக்கு அளிக்கப்பட்ட அருளுக்
கேற்ப வெவ்வேறாயிருக்கின்றன; ஒருவ
னுக்கு இறைவாக்குரைக்கும் வரம் இருக்கு
மாயின், தான் கடவுளிடம் கொண்டுள்ள
நம்பிக்கையின் அளவுக்கிசைய அவன்
அதைப் பயன்படுத்தட்டும்; 7 பணிவிடை
செய்யும் வரம் இருக்குமாயின், பணி
விடை செய்வதில் கண்ணுங்கருத்துமாய்
இருக்கட்டும். 8 அறிவுறுத்துகிறவன் அறி
வுறுத்துவதையே செய்யட்டும். ஊக்க
மளிக்கிறவன் ஊக்கமளிப்பதையே செய்
யட்டும். நன்கொடை வழங்குகிறவன் அக
மகிழ்ச்சியோடு அதை வழங்கட்டும். தலை
வனாயிருக்கிறவன் ஊக்கத்தோடு உழைக்
கட்டும். இரக்கச் செயல்களில் ஈடு
படுகிறவன் முகமலர்ச்சியோடு அவற்றில்
ஈடுபடட்டும்.

9 உங்கள் அன்பு போலி அன்பாய்
இருத்தலாகாது. தீயதை அருவருத்து
நல்லதைப் பற்றிக்கொண்டிருங்கள்;
10 சகோதர உணர்ச்சியுடன் ஒருவருக்
கொருவர் மனமார அன்பு காட்டுங்கள்.
ஒவ்வொருவனும் அடுத்தவனைத் தன்னை
விட உயர்வாக மதிப்பானாக. 11 தளரா
ஊக்கத்தோடும் ஆர்வம் தணியா உள்ளத்
தோடும் ஆண்டவருக்குத் தொண்டு செய்
யுங்கள். 12 உங்களுக்கு நம்பிக்கை இருப்ப
தால் மகிழ்ச்சியோடிருங்கள்; துன்பகாலத்
தில் பொறுமையோடிருங்கள்; ஜெபம்
செய்வதைக் கைவிடாதீர்கள். 13 உங்
களுக்குள்ளதை உங்களிடையேயுள்ள ஏழை
மக்களோடு பகிர்ந்துகொள்ளுங்கள்; விருந்
தோம்பலில் கருத்தாயிருங்கள். 14 உங்
களைத் துன்புறுத்துவோருக்கு ஆசி கூறுங்
கள்; ஆம், ஆசிகூறுங்கள். வசைமொழி
கூற வேண்டாம். 15 மகிழ்வாரோடு மகி
ழுங்கள், துயரப்படுவாரோடு துயரப்படுங்
கள். 16 ஒருவரோடொருவர் மனமொத்து
வாழுங்கள்; மேட்டிமையோடு நடவாமல்,
தாழ்நிலையில் உள்ளவர்களோடு கூடிப்பழ
குங்கள்; நீங்கள் உங்களையே அறிவாளி
களென்று எண்ணிக்கொள்ளாதீர்கள்.
17 யாருக்கும் தீமைக்குத் தீமை செய்யா
தீர்கள்; எல்லா மனிதரும் நலமென்று
கொள்பவற்றைச் செய்ய நாடுங்கள்.
18 எல்லாரோடும் நட்பமைதியுடன் வாழ
உங்களால் செய்யக்கூடியவை அனைத்தை
யும் செய்யுங்கள். 19 அன்பார்ந்தவர்
களே, நீங்கள் பழிவாங்க வேண்டாம்,
கடவுளின் சினத்திற்கு அதை விட்டுவிடுங்
கள்; ஏனெனில், வேதத்தில் எழுதியுள்
ளது இதுவே; ''பழிவாங்குவது என்
பொறுப்பு, நானே உங்கள் சார்பில் பதி
லுக்குப் பதில் செய்வேன்.'' இவ்வாறு
சொல்லுகிறார் ஆண்டவர். 20 ஆகவே,
''உன் எதிரி பசியோடிருந்தால், அவன்
பசியை ஆற்று; அவன் தாகத்தோடிருந்
தால், அவன் தாகத்தைத் தீர்; இவ்
வாறு செய்வதால் அவன் தலைமேல் எரி
தழலைக் குவிப்பாய்.'' 21 தீமை உன்னை
வெல்லும்படி விடாதே, தீமையை நன்
மையினால் வெல்லு.

### நாட்டின் அதிகாரிகளுக்குக் கீழ்ப்படிந்திரு

**13** ஆட்சி செலுத்தும் அதிகாரிகளுக்கு
எல்லாரும் அடங்கி நடக்க வேண்டும்.
ஏனெனில், கடவுள் ஏற்படுத்தினாலன்றி
ஆட்சி ஏது? இப்போது இருக்கும் ஆட்சி
கள் கடவுளாலேயே ஏற்படுத்தப்பட்டிருக்
கின்றன. 2 ஆகையால், அத்தகைய ஆட்
சியை எதிர்ப்பவன் கடவுளின் ஏற்பாட்
டையே எதிர்க்கிறான். அவ்வாறு எதிர்ப்
பவர்கள் தங்கள்மீது தண்டனைத்தீர்ப்பை
வருவித்துக்கொள்வார்கள். 3 தீச்செயல்
செய்கிறவர்களேயன்றி, நற்செயல் செய்
கிறவர்கள் அதிகாரிகளைக் கண்டு அஞ்ச
வேண்டுவதில்லை. அதிகாரியைக் கண்டு
அஞ்சாதிருக்க நீ விரும்புகிறாயா? அப்படி
யானால் நல்லதைச் செய், அப்பொழுது
அதிகாரிகளிடமிருந்து பாராட்டுப் பெறு
வாய். 4 ஏனெனில், அவர்கள் உன் நன்
மைக்கென்றே கடவுளால் நியமிக்கப்பட்
டிருக்கும் பணிவிடைக்காரர்கள். ஆனால்,

12:4, 5 1கொரி. 12:12. 12:6—8 1 கொரி. 12:4—11. 12:14 மத். 5:44; லூக். 6:28. 12:16 நீதி. 3:7; 26:12. 12:17 நீதி. 20:22. 12:18 மாற். 9:50 12:19 உபா. 32:35. 12:20 நீதி. 25:21, 22. 13:1 நீதி. 8:15, 16; 1தீமோ. 2:2; தீத்து. 3:1; 1 பேது. 2:13, 14.

நீ தீமை செய்வாயானுல் அஞ்ச வேண்
டியதுதான்; ஏனெனில், அவர்கள் கையில்
வாள் இருக்கிறது; அது வீணுக அவர்
களிடம் கொடுக்கப்படவில்லை. அவர்கள்
தீமை செய்கிறவன்மீது கடவுளின்
சினத்தை வருவித்துத் தண்டனை அளிப்
பதற்காக அவரால் நியமிக்கப்பட்டிருக்
கும் பணிவிடைக்காரர்கள். 5 இந்தக் கார
ணத்தினுல், நீங்கள் கட்டாயம் அவர்
களுக்கு அடங்கி நடக்க வேண்டும்; கட
வுளின் சினத்தை முன்னிட்டு மட்டுமன்று,
அவர்களுக்கு அடங்கி நடப்பதே சரி என்
பதாலும் அப்படிச் செய்ய வேண்டும்.
6 அதே காரணத்திஞலேதான் நீங்கள்
அவர்களுக்கு வரி செலுத்துகிறீர்கள்.
அவர்கள், கடவுள் தங்களுக்கு நியமித்த
வேலையைக் கருத்தாய்ச் செய்யும் தொண்டர்
களாயிற்றே. 7 அவரவருக்குச் செலுத்த
வேண்டுவதை அவரவருக்குச் செலுத்துங்
கள். வரிப்பணம் வாங்குவோரிடம் வரிப்
பணத்தையும், சுங்கவரி வாங்குவோரிடம்
சுங்க வரியையும் செலுத்துங்கள்; அஞ்ச
வேண்டுபவர்களுக்கு அஞ்சுங்கள்; மதிக்க
வேண்டுபவர்களை மதியுங்கள்.

## சகோதர அன்பு

8 யாருக்கும் எதிலும் கடன்படாதீர்
கள். ஒருவருக்கொருவர் அன்புகாட்டு
வதே உங்கள் ஒரே கடனுயிருக்கட்டும்.
அடுத்தவனிடம் அன்புகொள்கிறவன்
நீதிச்சட்டத்தை நிறைவேற்றியவனுவான்.
9 ஏனெனில், ''கற்புநெறி தவருதே,
கொலை செய்யாதே, களவு செய்யாதே,
இச்சை கொள்ளாதே'' என்கிற கட்டளை
களும், மற்றெல்லாக் கட்டளைகளும்,
''உன்னிடம் நீ அன்புகொள்வதுபோல
அடுத்தவனிடமும் அன்புகொள்ளவேண்டும்''
என்கிற ஒரே வாக்கியத்தில் அடங்கி
யுள்ளன. 10 அன்பு அடுத்தவனுக்குத்
தீமை செய்யாது; ஆகையால், நீதிச்சட்
டத்தை முற்றிலும் நிறைவேற்றுவது
அன்பே.

## கிறிஸ்துவின் நாள்

11 மேலும், இறுதிக்காலம் இதுவே
என்பதை உணர்ந்துகொள்ளுங்கள். நீங்கள்
தூக்கத்தை விட்டு எழ வேண்டிய நேரம்
வந்தாயிற்று. நாம் கிறிஸ்துவினிடம் நம்
பிக்கை கொண்டவர்களானபோது இருந்
ததைவிட மீட்பு இப்போது நமக்கு மிகவும்
அண்மையில் இருக்கிறது. 12 இரவு
முடியப்போகிறது, பகல் நெருங்கிவிட்
டது; ஆகையால் இருளுக்குரிய செயல்
களை அறவே களைந்துவிட்டு, ஒளிக்குரிய
படைக்கலங்களை அணிந்துகொள்வோமாக.
13 பகலில் நடக்கிறவர்களைப்போலச் சீராக
நடப்போமாக; களியாட்டம், குடிவெறி,
ஒழுக்கக்கேடு, காமவெறி, சண்டை,
பொருமை ஆகியவற்றைத் தவிர்ப்
போமாக. 14 பாவமான ஊன் இயல்புக்
கடுத்த விருப்பங்களை நிறைவேற்றுவது
எப்படி என்னும் எண்ணத்தை விட்டு
விட்டு, ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவை
நீங்கள் பூண்டுகொள்ளுங்கள்.

## உன் சகோதரனை நீ குற்றப்படுத்தாதே

14 கிறிஸ்துவைப் பற்றும் நம்பிக்கையில்
முதிர்ச்சியடையாதவனை உங்களுள்
ஒருவனுக ஏற்றுக்கொள்ளுங்கள். ஆனுல்,
கருத்து வேறுபாடுகளைப்பற்றி அவனோடு
வாதாட வேண்டாம். 2 எந்த உணவா
யிருந்தாலும் அது உண்ணத்தக்கதே என்
பது ஒருவனது கொள்கை. ஆனுல், நம்
பிக்கையில் முதிர்ச்சியடையாதவனே மரக்
கறி உணவை மட்டும் உண்கிறுன். 3 எவ்
வகை உணவையும் உண்பவன் அவ்வாறு
உண்ணுதவனை இழிவாகக் கருதக் கூடாது.
உண்ணுதவனும் உண்பவனைக் குற்றப்
படுத்தக் கூடாது; ஏனெனில், கடவுள்
அவனையும் ஏற்றுக்கொண்டிருக்கிறுர்.
4 வேருெருவருடைய வேலையாளிடம் குற்
றங்காண்பதற்கு நீ யார்? அவன் செய்
வது சரியா, தவரு என்று தீர்ப்பது அவ
னுடைய தலைவரின் பொறுப்பு. அவன்
செய்வது சரியாகத்தான் இருக்கும். ஏனெ
னில், அவனைச் சரியானதையே செய்ய
வைக்க ஆண்டவரால் முடியும். 5 ஒரு
நாள் மற்ருெரு நாளைவிடச் சிறந்ததென
ஒருவன் எண்ணுகிறுன்; வேருெருவன்
எல்லா நாள்களையும் ஒன்றுபோல எண்ணு
கிறுன். இதுபோன்ற காரியங்களைப்பற்றி
ஒவ்வொருவனும் தன் மனத்தில் முடிவு
செய்துகொண்டு அதன்படியே நடக்கட்டும்.
6 ஒரு குறிப்பிட்ட நாளைச் சிறப்
பாகக் கொண்டாடுபவன் ஆண்டவரின்
புகழுக்கென்றே அப்படிச் செய்கிறுன். எவ்
வகை உணவையும் உண்பவன் கடவுளுக்கு
நன்றி செலுத்துவதால் அவன் ஆண்ட
வரின் புகழைக் கருதியே உண்கிறுன்.
மரக்கறி மட்டும் உண்பவனும் கடவுளுக்கு
நன்றி செலுத்தி ஆண்டவரின் புகழைக்
கருதியே உண்கிறுன். 7 நம்முள் எவனும்
தனக்கென்று வாழ்வதுமில்லை, தனக்
கென்று சாவதுமில்லை. 8 நாம் வாழ்ந்தா
லும் ஆண்டவருக்கென்றே வாழ்கிருேம்,
செத்தாலும் ஆண்டவருக்கென்றே சாகி
ருேம். ஆகவே, நாம் வாழ்ந்தாலும்
செத்தாலும் ஆண்டவருக்கு உரியவர்களா
யிருக்கிருேம். 9 கிறிஸ்து மரணமடைந்த
தும், உயிரோடெழுந்ததும் இறந்தோருக்கும்

**13:6, 7** மத். 22:21; மாற். 12:17; லூக். 20:25. **13:8** கொலோ. 3:14. **13:9** யாத். 20:13—17; உபா. 5:17—21; இலே. 19:18 கலா. 5:14. **13:11** 1தெச. 5:5, 6. **14:1—6** கொலோ. 2:16.

உயிருள்ளோருக்கும் ஆண்டவரா
யிருப்பதற்காகவே. 10 அப்படியிருக்க,
உன்னைக் கேட்கிறேன்: உன் சகோதரனைக்
குற்றவாளியென்று நீ தீர்ப்புக் கூறுவா
னேன்? அவனையும் கேட்கிறேன்: நீ உன்
சகோதரனை இழிவாகக் கருதுவானேன்?
நாம் எல்லோருமே கடவுளின் முன்னிலையில்
நிறுத்தப்பட்டு விசாரணை செய்யப்
படுவோம். 11 ஏனெனில்,

'' 'என்றென்றுமுள்ள நான் ஆணை
யிட்டுக் கூறுகிறேன்:
முழங்கால் யாவும் என்முன் முடங்கும்,
நாவு யாவும் என்னையே கடவுளெனப்
போற்றும்'
என ஆண்டவர் சொல்லுகிறார்''

என்று வேதத்தில் எழுதியிருக்கிறது.
12 எனவே, நம்முள் ஒவ்வொருவனும்
தன்னைக் குறித்தே கடவுளுக்குக் கணக்குக்
கொடுப்பான்.

### உன் சகோதரனைப் பாவக்குழியில் இடறிவிழச் செய்யாதே

13 ஆகையால் இனி ஒருவரையொருவர்
குற்றவாளியென முடிவுசெய்வதை
விட்டுவிடுவோமாக. எந்தச் சகோதரன்
முன்னும் தடுக்கும் கல்லையாவது இடறு
தற்கான எதையாவது போடக் கூடாது
என்பதே நீங்கள் செய்ய வேண்டிய முடிவு.
எந்தப் பொருளும் தன்னிலேயே மாசுள்ள
தன்று; 14 ஆண்டவராகிய இயேசுவின்
தொண்டனாயிருக்கும் நான் இதைத் திட்ட
மாக அறிவேன். ஆனால், ஒரு பொருள்
மாசுள்ளது என்று ஒருவன் எண்ணினால்,
அது அவனுக்கு மாசுள்ளதாகவே
இருக்கும். 15 நீ உண்ணும் உணவு உன்
சகோதரன் மனத்தைப் புண்படுத்துமானால்,
நீ அன்பு நெறியில் நடக்கவில்லை
என்பது தெளிவு. அவனை நீ உன் உணவு
காரணமாகக் கெட்டழியும்படி செய்
யாதே; கிறிஸ்து அவனுக்காகவுந்தானே
உயிர் துறந்தார்? 16 ஆகையால், உங்
களுக்குச் சரியென்று காணப்படுவது எவ்
வகையான பழிச்சொல்லுக்கும் இடந்
தராதபடி பார்த்துக்கொள்ளுங்கள்.
17 கடவுளின் அரசு உண்பதையும் குடிப்
பதையும் சார்ந்ததன்று. அது தூய ஆவி
யானவரால் உண்டாகும் நீதியும் சமா
தானமும் மகிழ்ச்சியுமாயிருக்கிறது. 18 இந்த
உண்மைக்கேற்பக் கிறிஸ்துவுக்குத் தொண்டு
செய்கிறவனே கடவுளுக்கு உகந்தவன்;
அவன் மனிதருடைய மதிப்பையும் பெறு
வான். 19 ஆகையால், அமைதி நிலவவும்
சபையின் பொதுவாழ்க்கை வளர்ச்சியடை
யவும் துணை செய்கிறவற்றை நாடுவோ
மாக. 20 உணவைப் பற்றிய வாதங்களை
எழுப்பி, கடவுள் உண்டாக்கியிருப்பதை
அழித்துவிடாதே. எந்த உணவும் மாசற்றதே.
ஆயினும், ஒருவன் ஏதாவது ஒன்றை
உண்டு, அடுத்தவனைப் பாவக்குழியில்
இடறிவிழச் செய்வானானால், அவன் அப்
படி உண்பது தீது. 21 இறைச்சி உண்ப
தும், மது அருந்துவதும், இவைபோன்ற
வேறெதையாவது செய்வதும் உன் சகோ
தரன் பாவக்குழியில் இடறிவிழுவதற்குக்
காரணமாயிருக்கக் கூடுமானால் அவற்றை
நீ செய்யாதிருப்பதே சரி. 22 இவற்றைக்
குறித்து நீ கொண்டுள்ள நம்பிக்கை
எதுவோ அது உனக்கும் கடவுளுக்குமே
தெரிந்திருக்கட்டும். ஒருவன் தான் சரி
என்று நம்புவதைச் செய்யும்போது,
அவன் மனச்சான்று அவனைக் குற்றப்படுத்
தாதிருக்குமானால், அவன் நற்பேறு பெற்ற
வனே. 23 ஆனால், ஒருவன் எதையும் இரு
மனத்தோடு உண்பானானால், அவன் குற்ற
வாளியே. ஏனெனில், தான் செய்வதே
சரி என்ற உறுதியான நம்பிக்கையோடு
அவன் அதைச் செய்யவில்லை. அத்தகைய
நம்பிக்கையோடு செய்யப்படாத எதுவும்
பாவமே.

### உனக்கு உவப்பளிப்பதையன்று, பிறருக்கு உவப்பளிப்பதையே நாடு

15 இப்படிப்பட்ட காரியங்களில் உறுதி
யான நம்பிக்கை உடைய நாம்,
இத்தகைய உறுதியான நம்பிக்கை இல்லாத
வர்களுடைய குறைபாடுகளைப் பொறுத்
துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறோம்.
நமக்கு உவப்பளிப்பதையே நாம் செய்து
கொண்டிருத்தலாகாது. 2 பிறருக்கு நன்மை
உண்டாகும்படியும் சபையின் பொது
வாழ்க்கை வளர்ச்சி அடையும்படியும்,
நம்முள் ஒவ்வொருவனும் பிறருக்கு உவப்
பளிப்பதைச் செய்ய வேண்டும். கிறிஸ்து
தமக்கு உவப்பளிப்பதை நாடிக்கொண்
டிருக்கவில்லை.

3 ''உம்மைப் பழித்துப் பேசினவர்
களின் பழிச்சொற்கள் என்மீது
விழுந்தன''

என்று வேதத்தில் எழுதியுள்ளபடி அவ
ருக்கு நடந்தது. 4 முற்காலத்தில் எழுதப்
பட்டவை எல்லாம் நமக்கு அறிவுரை
யாகவே எழுதப்பட்டன; எப்படியெனில்,
வேத வாக்கியங்கள் அளிக்கும் ஊக்கத்
தைப் பெற்று, நாம் பொறுமையோடிருப்
பதால், நமக்கு எதிர்காலத்தைப்பற்றிய
நம்பிக்கை உண்டாகும். 5 நம்முடைய
ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவின்
கடவுளும் தந்தையுமானவரை நீங்கள்

**14:10** 2 கொரி. 5:10. **14:11** ஏசா. 45:23. **14:21** 1 கொரி. 8:13. **15:1, 2** கலா. 6:2. **15:3** சங். 69:9

ஒருமனப்பட்டு ஒரே முழக்கமாய்ப் போற்று
வீர்களாக. 6 இதற்கென்று நீங்கள் கிறிஸ்து
இயேசுவுக்கு உகந்த முறையில் ஒரே சிந்தை
யுடையவர்களாயிருக்க, பொறுமைக்கும்
ஊக்கத்திற்கும் ஊற்ருகிய கடவுள்
உங்களுக்கு அருள்புரிவாராக!

### அருட்செய்தி யூதருக்கும் யூதரல்லாதாருக்கும் உரியது

7 சுருங்கச் சொன்னல், கடவுளின் மாட்
சிமை விளங்கும்படி கிறிஸ்து உங்களைத்
தமக்கு உரியவர்களாக ஏற்றுக்கொண்டது
போல நீங்களும் ஒருவரையொருவர் ஏற்
றுக்கொள்ளுங்கள். 8 ஒன்று சொல்ல
விரும்புகிறேன்: கடவுள் வாக்குறுதி தவ
ருதவர் என்பதைக் காட்ட, கிறிஸ்து
விருத்தசேதனம் உள்ளவர்களுக்குப் பணி
விடைக்காரரானர்; மேலும், மூதாதை
யருக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதிகளை
நிறைவேற்றவும், பிறகு யூதரல்லாதாரும்
கடவுளின் இரக்கத்தைப் போற்றும்படி
செய்யவும் அப்படிப் பணிவிடைக்காரரானர்.
9 இதைக் குறித்து வேதத்தில்,

''ஆகையால் யூதரல்லாதாரிடையே
உம்மைப் புகழ்ந்து கொண்டாடுவேன்,
உமது திருப்பெயரைத் துதித்துப்
பாடுவேன்''

என்று எழுதியிருக்கிறது. 10 மேலும்,

''யூதரல்லாதவரே, அவருடைய
மக்களோடு சேர்ந்து நீங்களும்
களிகூருங்கள்''

என்றும் உள்ளது. 11 மேலும்,

''யூதரல்லாதவர்களே, நீங்கள் அனைவரும்
ஆண்டவரைத் துதியுங்கள்,
எல்லா இனத்தவரும் அவரைப்
புகழ்வாராக''

என்றும் உள்ளது. 12 மேலும்,

''ஈசாயின் முளையும்
யூதரல்லாதாரை ஆளும்படி எழு
கிறவருமாகிய
ஒருவர் தோன்றுவார்;
யூதரல்லாதவர்கள் அவரையே நம்பி
வாழ்வார்கள்''

என்று ஏசாயா உரைக்கிருர். 13 உங்களை
நம்பிக்கையோடு வாழச்செய்யும் கடவுள்
தம்மிடம் நம்பிக்கை கொண்டுள்ள உங்
களுக்குப் பெருமகிழ்ச்சியையும் சமாதா
னத்தையும் அருளுவாராக! இவ்வாறு
அவர், தூய ஆவியானவரின் வல்லமை
யால் எதிர்காலத்தைப் பற்றிய உங்கள்
நம்பிக்கையை மேலும் மேலும் பெருகச்
செய்வாராக!

### பவுல் செய்த பணி

14 என் சகோதரரே, நீங்கள் நற்
குணம் நிறைந்தவர்களாயும் எல்லாவற்
றையும் கற்றறிந்தவர்களாயும் ஒருவருக்
கொருவர் நல்லுரை கூறக்கூடியவர்களாயும்
இருக்கிறீர்கள் என்பதில் எனக்கு ஐயம் ஏது
மில்லை. 15 ஆனல், உங்களுக்குச் சிலவற்றை
நினைப்பூட்டுவதற்காக இடையிடையே
ஒளிவுமறைவின்றி எழுதியிருக்கிறேன்.
நான் யூதரல்லாதாருக்காக இயேசு
கிறிஸ்துவின் தொண்டனுகும்படி, கடவுளி
டமிருந்து அருளைப் பெற்றவன் என்ப
தால், உரிமையோடு அவ்வாறு எழுதினேன்.
16 அந்தத் தொண்டு யாதெனில்,
யூதரல்லாதார் தூய ஆவியானவரால் கட
வுளுக்கென்று பிரித்து வைக்கப்பட்டு, அவ
ருக்கு உகந்த காணிக்கையாகும்படி, அவர்
களுக்குக் கடவுளின் அருட்செய்தியை அறி
விக்கும் ஆசாரியனுய்ப் பணியாற்றுவதே
யாகும். 17 ஆகையால், இவ்வாறு கட
வுளுக்காகத் தொண்டாற்றுவதில் நான்
கிறிஸ்து இயேசுவின் அடியானுய்ப் பெருமை
கொள்ள எனக்கு உரிமை உண்டு. 18 யூத
ரல்லாதவரைக் கீழ்ப்படியச் செய்யும்
பொருட்டுக் கிறிஸ்து என்னைக்கொண்டு
நடப்பித்தவற்றைத் தவிர, அதாவது,
என் சொல்லையும், செயலையுங்கொண்டு,
அரிய செயல்கள் அற்புதங்கள் ஆகியவற்றின்
வல்லமையாலும், ஆவியானவரின்
வல்லமையாலும் நடப்பித்தவற்றைத் தவிர,
வேறெதைப்பற்றியும் பேச நான் துணிவு
கொள்வதில்லை. 19 இவ்வண்ணம் நான்
எருசலேமில் தொடங்கி, இல்லிரிக்கம் நாடு
வரைக்குமுள்ள எல்லா இடங்களிலும்
சுற்றிக் கிறிஸ்துவின் அருட்செய்தியை அறி
விக்கும் வேலையை முடித்திருக்கிறேன்.
20 கிறிஸ்துவின் திருப்பெயர் இதுவரை
யிலும் அறிவிக்கப்படாத இடங்களில்
மட்டும் அருட்செய்தியை அறிவிக்க வேண்டும்
என்று நான் ஆவல் கொண்டிருந்
தேன்; வேருெருவன் இட்ட அடித்தளத்
தின்மீது நான் கட்டடம் கட்ட விரும்ப
வில்லை. 21 அதற்கு மாருக,

''அவரைப் பற்றிய அறிவிப்பைப்
பெருதவர்கள் அவரைக் காண்பார்கள்,
அவரைப்பற்றிக் கேள்விப்படாத
வர்கள் விளங்கிக்கொள்வார்கள்''

என்று வேதத்தில் எழுதியிருப்பதற்கேற்பச்
செய்தேன்.

### பவுலின் பயணத் திட்டம்

22 எனவேதான் நான் இவ்வளவு கால
மாக உங்களிடம் வராதபடி தடை செய்
யப்பட்டேன். 23 இப்பொழுதோ,

**15:9** 2 சாமு. 22:50; சங். 18:49. **15:10** உபா. 32:43. **15:11** சங். 117:1. **15:12.** ஏசா. 11:10. **15:21.** ஏசா. 52:15. **15:22** ரோ. 1:13.

இப்பகுதிகளில் நான் செய்யக்கூடிய வேலை
முடிந்துவிட்டது; மேலும், உங்களிடம் வர
வேண்டுமென்கிற ஆவல் எனக்குப் பல
ஆண்டுகளாக இருந்துவருகிறது. 24 ஆகை
யால், நான் ஸ்பெயின் நாட்டுக்குப்
போகும்போது, வழியில் உங்களைக் கண்டு
சிறிது காலமாவது உங்களோடு தங்கி
யிருக்கும் வாய்ப்பைப் பெறுவேனென்று
நினைக்கிறேன்; பிறகு நீங்கள் என்னை வழி
யனுப்பிவைப்பீர்கள் என்று எதிர்பார்க்
கிறேன். 25 என்றாலும், இப்போது கடவுளுக்
குரிய மக்களுக்கு ஆற்றும் பணியில் ஈடு
பட்டு நான் எருசலேமுக்குப் போகிறேன்.
26 மக்கெதோனியாவிலும் அகா
யாவிலும் உள்ளவர்கள் எருசலேமிலிருக்கும்
அந்த மக்களிடையே உள்ள ஏழை
களுக்குத் தாங்கள் காட்டும் அன்பிற்கு
அறிகுறியாகப் பொருளுதவி அளிக்க
முடிவுசெய்தார்கள். 27 இதை அவர்கள்
மனமாரச் செய்தார்கள். உண்மையில்
அவர்கள் அந்த மக்களுக்குக் கடன்பட்ட
வர்களே. எப்படியெனில், அந்த மக்கள்
பெற்ற ஆன்மீக நற்பேறுகளில் யூதரல்லா
தார் பங்கு பெற்றிருக்கின்றனர்; எனவே,
உடலுக்குத் தேவையானவற்றில் அந்த
மக்களுக்குத் தொண்டு செய்ய இவர்கள்
கடன்பட்டவர்களே. 28 இந்தப் பணியை
நான் முதலில் செய்துமுடிப்பேன்; திரட்
டிய தொகையை அவர்கள் கையில் முத்
திரைக்குறியோடு நானே ஒப்படைத்தபின்,
உங்கள் ஊர் வழியாக ஸ்பெயினுக்குப்
போவேன். 29 கிறிஸ்துவினிடமிருந்து
நான் பெற்ற நிறைவான நற்பேறு என்
வருகையால் உங்களுக்கும் கிடைக்கும்
என்பது உறுதி.

30 சகோதரரே, நம்முடைய ஆண்ட
வராகிய இயேசுகிறிஸ்துவையும் ஆவியான
வர் நம் உள்ளத்தில் அருளியிருக்கும் அன்
பையும் முன்னிட்டு நான் உங்களைக் கேட்
டுக்கொள்வது இதுவே: என்னோடு சேர்ந்து
எனக்காகக் கடவுளிடம் ஊக்கமாக மன்
றாடுங்கள். 31 யூதேயாவில் அருட்செய்
தியை ஏற்க மறுப்போரிடமிருந்து எனக்குத்
தீங்கு ஒன்றும் வராமல் கடவுள்
என்னைக் காக்க வேண்டுமென்றும், எருச
லேமில் உள்ள இறைமக்களுக்கு நான்
செய்ப்போகும் பணியை அவர்கள் ஏற்
றுக்கொள்ள வேண்டுமென்றும் வேண்டுதல்
செய்யுங்கள். 32 ஏனெனில், கடவுள்
திருவுளங்கொள்வாரானால், நான் மகிழ்ச்சி
யோடு உங்களிடம் வந்து, உங்களோடு
தங்கி இளைப்பாறுதல் அடைய வேண்டு
மென்பது என் பேரவா. 33 சமாதானத்
திற்கு ஊற்றாகிய கடவுள் உங்கள் அனை
வரோடும் இருப்பாராக! ஆமேன்.

### வாழ்த்துகள்

16 உங்களிடம் வரும் நம் சகோதரியாகிய
பெபேயாளை உங்களுக்கு அறிமுகப்
படுத்த விரும்புகிறேன். அவர் கெங்கிரேயா
ஊர்த் திருச்சபையில் திருப்பணியாளராய்
இருப்பவர். 2 நீங்கள் இறைமக்களை ஏற்கும்
முறையில் அவரை உங்கள் உடன் அடியா
ளாக ஏற்றுக்கொண்டு, அவருக்கு என்
னென்ன உதவி தேவைப்படுகிறதோ அதை
யெல்லாம் அவருக்குச் செய்யுங்கள். அவர்
பலருக்கு உதவி செய்திருக்கிறார்; எனக்கும்
செய்திருக்கிறார்.

3 கிறிஸ்து இயேசுவுக்கென என்னோடு
ஊழியம் செய்கிற பிரிஸ்காளுக்கும் ஆக்
கிலாவுக்கும் என் வாழ்த்து. 4 அவர்கள் என்
உயிரைக் காக்கத் தங்கள் உயிரையும்
கொடுக்கத் துணிந்தவர்கள்; அவர்களுக்கு
நான் நன்றியுடையவனாயிருக்கிறேன். நான்
மட்டுமன்றி, யூதரல்லாதாரின் திருச்சபைகள்
எல்லாமே அவர்களுக்கு நன்றி செலுத்தக்
கடமைப்பட்டவை. 5 அவர்கள் வீட்
டில் கூடும் சபையாருக்கும் என் வாழ்த்
தைக் கூறுங்கள். எனக்கு அன்பார்ந்த எப்
பைனத்துக்கும் என் வாழ்த்தைக் கூறுங்
கள்; ஆசியா மாநிலத்தில் கிறிஸ்துவினிடம்
முதன் முதல் நம்பிக்கை கொண்ட
வன் அவனே. 6 உங்களுக்காகக் கடுமை
யாக உழைத்த மரியாளுக்கு என் வாழ்த்
தைத் தெரிவியுங்கள். 7 அந்திரோனீக்கு,
யூனியா என்பவர்களுக்கு என் வாழ்த்
தைக் கூறுங்கள். அவர்கள் என் இனத்
தைச் சேர்ந்தவர்கள்; என்னோடு காவலில்
கைதிகளாயிருந்தவர்கள்; திருத்தூதுவரி
டையே பேர்பெற்றவர்கள்; எனக்கு முன்பே
கிறிஸ்துவினிடம் நம்பிக்கை கொண்ட
வர்கள். 8 என் அன்பார்ந்த உடனடியான்
அம்பிலியாத்துக்கு என் வாழ்த்தைத் தெரி
வியுங்கள். 9 கிறிஸ்துவுக்கென்று நம்மோடு
ஊழியம் செய்கிற உர்பான், எனக்கு
அன்பார்ந்த இஸ்தாக்கி ஆகியோருக்கும்
என் வாழ்த்தைக் கூறுங்கள். 10 கிறிஸ்து
வின் உத்தம அடியானை அப்பெல்லே
வுக்கு என் வாழ்த்தைத் தெரிவியுங்கள்.
அரிஸ்தோ பூலுவின் குடும்பத்தாருக்கும்
என் வாழ்த்து. 11 என் இனத்தைச்
சேர்ந்த ஏரோதியோனுக்கு என் வாழ்த்
தைக் கூறுங்கள். நர்க்கீசுவின் குடும்பத்
தாருள் ஆண்டவரிடம் நம்பிக்கை கொண்
டவர்களுக்கு என் வாழ்த்தைக் கூறுங்கள்.
12 ஆண்டவருக்கென உழைக்கிறவர்க
ளாகிய திரிபேனாளுக்கும் திரிபோசாளுக்கும்
என் வாழ்த்தைத் தெரிவியுங்கள். ஆண்ட
வருக்கெனக் கடுமையாக உழைத்துவந்த
அன்பார்ந்த பெர்சியாளுக்கும் என் வாழ்த்

**15:25, 26** *1 கொரி. 16:1—4.* **15:27** *1 கொரி. 9:11; கலா. 6:6.* **15:30** *2 கொரி. 1:11; எபே. 6:19; கொலோ. 4:3; 1தெச. 5:25.* **16:3** *திருத்தூது. 18:2.*

தைத் தெரிவியுங்கள். 13 ஆண்டவரின்
சிறந்த அடியானாகிய ரூபுக்கும் அவன் அன்
னைக்கும் என் வாழ்த்தைக் கூறுங்கள்.
அவன் அன்னை எனக்கும் அன்னை போன்
றவள். 14 அசிங்கிரீத்து, பிலெகோன்,
எர்மே, பத்திரொபா, எர்மா ஆகியோ
ருக்கும் அவர்களோடிருக்கிற சகோதர
ருக்கும் என் வாழ்த்தைக் கூறுங்கள்.
15 பிலொலோகு, யூலியாள், நேரேயு, அவன்
சகோதரி ஒலிம்பா ஆகியோருக்கும், அவர்
களோடிருக்கிற இறைமக்கள் அனைவருக்
கும் என் வாழ்த்தைத் தெரிவியுங்கள்.
16 நீங்களும் ஒருவரையொருவர் தூய
முத்தத்தால் வாழ்த்துங்கள். கிறிஸ்துவின்
திருச்சபைகளெல்லாம் உங்களுக்கு
வாழ்த்துக் கூறுகின்றன.

17 சகோதரரே, நான் உங்களை வற்
புறுத்தி வேண்டுவது இதுவே: நீங்கள்
கற்றுக்கொண்ட போதனைக்கு நேர்மாறாகப்
பிரிவினைகளையும் இடறல்களையும் உண்
டாக்குகிறவர்களைக் குறித்து எச்சரிக்கை
யாயிருங்கள்; அவர்களை விட்டு விலகுங்
கள். 18 ஏனெனில், அப்படிப்பட்டவர்கள்
நம்முடைய ஆண்டவராகிய கிறிஸ்துவுக்கு
அன்றி, தங்கள் வயிற்றுக்கே தொண்டு
செய்கிறார்கள். அவர்கள் தங்கள் நய
மான சொற்களாலும் இனிமையான பேச்
சினாலும் கள்ளமற்றவர்களின் உள்ளங்களை
வஞ்சிக்கிறார்கள். 19 நீங்கள் அருட்செய்தி
யின்படி வாழ்க்கை நடத்துகிறவர்கள் என்
கிற செய்தி யாவரிடையேயும் பரவியிருக்
கிறது. இதனால் எனக்கு உங்களைப்பற்
றிய மகிழ்ச்சி உண்டு. என்றாலும், ஒன்று
சொல்லுகிறேன்: நீங்கள் நலமானவற்றில்
ஞானமுள்ளவர்களாயும் தீமையானவற்றில்
பேதைகளாயும் இருக்க வேண்டும். இதுவே
என் விருப்பம். 20 சமாதானத்துக்கு ஊற்
றாகிய கடவுள் விரைவில் சாத்தானை உங்கள்
கால்களின் கீழ் நசுங்கிப்போகும்படி
செய்வார். நம்முடைய ஆண்டவரா
கிய இயேசுகிறிஸ்துவின் அருள் உங்களோ
டிருப்பதாக!

21 என் உடன் ஊழியனாகிய தீமோத்
தேயுவும் என் இனத்தைச் சேர்ந்த லூகியு,
யாசோன், சொசிபத்தர் என்பவர்களும்
உங்களுக்கு வாழ்த்துக் கூறுகிறார்கள்.
22 (இந்தக் கடிதத்தை எழுதிக்கொடுத்த
தெர்தியுவாகிய நான் உங்கள் உடன் அடி
யானாக உங்களுக்கு என் வாழ்த்தைத் தெரி
வித்துக்கொள்கிறேன்). 23 நான் தங்கவும்,
சபையார் அனைவரும் வந்துகூடவும் தம்
வீட்டில் இடமளித்துவருகிற காயு உங்
களுக்கு வாழ்த்துக் கூறுகிறார். நகரத்தின்
பொருளாளரான எரஸ்தும், நம்
சகோதரனாகிய குவர்த்தும் உங்களுக்கு
வாழ்த்துக் கூறுகிறார்கள். [24 நம்முடைய
ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவின் அருள்
உங்களோடிருப்பதாக!]

## கடவுளைப் போற்றுதல்

25 கடவுளுக்கே மாட்சிமை! அவர்
உங்களை உங்கள் நம்பிக்கையில் உறுதி
யாக நிற்கச்செய்ய வல்லவர். நான் இயேசு
கிறிஸ்துவை அறிவித்துப் போதிக்கும்
அருட்செய்தி இதுவே. நீடூழிக்கால
மாக மறைபொருளாயிருந்த இந்த நற்
செய்தி, இப்போது வெளிப்படுத்தப்பட்
டிருக்கிறது. 26 இதை எல்லா நாட்டினரும்
நம்பிக் கடவுளுக்குக் கீழ்ப்படியுமாறு இறை
வாக்குரைப்போரின் நூல்கள் வாயிலாக,
என்றுமுள்ள கடவுளின் கட்டளைப்படி, இது
அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.
27 ஞான உருவாகிய கடவுள் ஒரு
வருக்கே இயேசுகிறிஸ்துவின் மூலம் என்
றென்றும் மாட்சிமை! ஆமேன்.

**16:13** *மாற். 15:21.* **16:21** *திருத்தூது. 16:1.* **16:23** *திருத்தூது. 19:29; 1 கொரி. 1:14.* **16:23** *2 தீமோ. 4:20.*

# பவுல் கொரிந்தியருக்கு எழுதின முதலாம் கடிதம்

1 கொரிந்து நகரில் இருக்கும் கடவுளின் சபைக்கு, கடவுளின் திருவுளத்தால் கிறிஸ்து இயேசுவின் திருத்தூதுவனுயிருக்கும்படி அழைக்கப்பட்ட பவுலும், சகோதரனுகிய சொஸ்தனேயும் எழுதுவதாவது: 2 நீங்களும், பல்வேறு இடங்களில் இருந்து, நம்முடைய ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவின் திருப்பெயரைத் தொழுகிறவர்கள் அனைவரும் கடவுளின் மக்களாயிருக்கும்படி அழைக்கப்பட்டுக் கிறிஸ்து இயேசுவோடு இணைக்கப்பட்டதால் அவருக்கு உரியவர்களானீர்கள். அவர் நமக்கு மட்டுமன்று அவர்களுக்கும் ஆண்டவர்.

3 நம்முடைய தந்தையாகிய கடவுளிடமிருந்தும் ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவிடமிருந்தும் உங்களுக்கு அருளும் நலமும் உண்டாகுக!

### நன்றியுரை

4 நீங்கள் கிறிஸ்து இயேசுவின் மூலம் கடவுளின் அருளைப் பெற்றுக் கிறிஸ்து இயேசுவோடு இணைக்கப்பட்டதால், எல்லா வகையிலும் செல்வராக்கப்பட்டிருக்கிறீர்கள். 5 உங்களுக்குச் சொல்வன்மையும் அறிவும் நிறைய உண்டு. ஆகையால், நான் உங்களை நினைத்துக் கடவுளுக்கு நாள்தோறும் நன்றி செலுத்திவருகிறேன். 6 கிறிஸ்துவைப்பற்றி நாங்கள் கண்டுணர்ந்து கூறினது உங்களுக்குள் உறுதி பெற்றிருக்கிறதென்பது விளங்குகிறது. 7 எனவே, நம்முடைய ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து வெளிப்படுவதை எதிர்பார்த்துக் காத்திருக்கிற நீங்கள் அருள்வரம் எதிலும் குறைவில்லாதவர்களாயிருக்கிறீர்கள். 8 நம்முடைய ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து வெளிப்படும் நாளில் நீங்கள் கறையற்றவர்களாயிருக்க அவரே உங்களை இறுதிவரை மன உறுதியுடனிருக்கச் செய்வார். 9 கடவுள்தாமே தம்முடைய மைந்தரும் நம்முடைய ஆண்டவருமாகிய இயேசுகிறிஸ்துவின் வாழ்வில் நீங்கள் பங்குகொள்ளும்படி உங்களை அழைத்தார்; அவர் நம்பிக்கைக்குரியவர்.

### பிரிவினைகள்

10 சகோதரரே, நான் நம்முடைய ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவின் திருப்பெயரால் உங்களைக் கேட்டுக்கொள்வது இதுவே: நீங்கள் எல்லாரும் ஒன்றுபட்டவர்களாய் எதையும் பேசுங்கள்; உங்களிடையே பிரிவினைகள் இருக்க வேண்டாம்; ஒரே மனமும் ஒரே நோக்கமும் உடையவர்களாய் ஒன்றுபட்டிருங்கள். 11 என் சகோதரரே, உங்களிடையே சச்சரவுகள் நடைபெறுவதாகக் குலோவேயாளின் வீட்டார் எனக்குத் தெரிவித்தனர். 12 உங்களுள் ஒவ்வொருவனும், ''நான் பவுலைச் சேர்ந்தவன்'' என்றோ, ''நான் அப்பொல்லோவைச் சேர்ந்தவன்'' என்றோ, ''நான் கேபாவைச் சேர்ந்தவன்'' என்றோ, ''நான் கிறிஸ்துவைச் சேர்ந்தவன்'' என்றோ சொல்லிக்கொள்கிறுனும்; இதைத்தான் நான் குறிப்பிடுகிறேன். 13 கிறிஸ்து பகுதி பகுதியாகப் பிரிந்து இருப்பவரா? பவுலா உங்களுக்காகச் சிலுவையில் அறையப்பட்டான்? அல்லது பவுலின் பெயராலா நீங்கள் திருமுழுக்குப் பெற்றீர்கள்? 14 நான் கிறிஸ்புவுக்கும் காயுவுக்குமேயன்றி உங்களுள் வேறு யாருக்கும் திருமுழுக்குக் கொடுக்கவில்லை; அதற்காக நான் கடவுளுக்கு நன்றி செலுத்துகிறேன். 15 எனவே, எவராலும் என் பெயரால் திருமுழுக்குப் பெற்றதாகச் சொல்ல முடியாது. 16 (ஆம், இப்போது நினைவிற்கு வருகிறது. நான் ஸ்தேபனுவின் வீட்டாருக்கும் திருமுழுக்குக் கொடுத்திருக்கிறேன். இவர்களுக்கேயன்றி வேறு யாருக்கும் நான் திருமுழுக்குக் கொடுத்ததாக எனக்கு நினைவில்லை.) 17 கிறிஸ்து என்னைத் திருமுழுக்குக் கொடுப்பதற்காக அன்று, அருட்செய்தியை அறிவிப்பதற்காகவே அனுப்பினுர். அதையும் கிறிஸ்துவின் சிலுவை பொருளற்றதாகிவிடாதபடி, உலக ஞானத்தின் பேச்சுநயத்தைப் பயன்படுத்தாமல் அறிவிக்கச் சொன்னுர்.

### கடவுளின் வல்லமையும் ஞானமும் கிறிஸ்துவே

18 சிலுவையைப்பற்றிய போதனை அழிவுப் பாதையில் செல்கிறவர்களுக்கு மடத்தனமே; மீட்புப் பாதையில் செல்கிற நமக்கோ அது கடவுளின் வல்லமையாகும். 19 ஏனெனில்,

''ஞானிகளின் ஞானத்தை நான் அழிப்பேன்;
அறிஞரின் அறிவைப் பாழ்படுத்துவேன்''

என்று வேதத்தில் எழுதியுள்ளது.

20 அப்படியானுல், இங்கே ஞானிக்கு இடமேது? அறிஞனுக்கு இடமேது? இந்த யுகத்தின் தர்க்கவல்லுநனுக்கு இடமேது? உலகியல் ஞானம் மடத்தனமே என்பதைக் கடவுள் காட்டிவிட்டார் அல்லவா?

1:5 2கொரி. 8:7. 1:8 2கொரி. 1:14. 1:10 ரோ. 15:5; பிலி. 2:2—4. 1:12 2 கொரி. 10:7; திருத்தூது. 18:24. 1:19 ஏசா. 29:14; சங். 33:10. 1:20 ஏசா. 19:12; 44:25.

21 உலகத்தால் தன் ஞானத்தைக்கொண்டே
கடவுளை அறிந்துகொள்ள இயலாது.
இதுவே கடவுளின் ஞானமுள்ள திட்டம்.
எனவே, இப்போது அறிவிக்கப்படும்
மடத்தனமான செய்தியால் கிறிஸ்துவி
னிடம் நம்பிக்கை கொள்வோருக்கு மீட்பு
அளிக்கக் கடவுள் திருவுளங்கொண்டார்.
22 யூதர்கள் அரிய செயல்களைக் காண
விரும்புகிறார்கள். கிரேக்கர்கள் ஞானத்தை
நாடுகிறார்கள். 23 ஆனால், நாங்களோ
சிலுவையில் அறையுண்ட கிறிஸ்துவை அறி
விக்கிறோம். அது யூதருக்கு இடையூறாயும்
பிற இனத்தவருக்கு மடத்தனமாயும்
இருக்கிறது. 24 ஆனால், கடவுளால் அழைக்
கப்பட்டவர்கள், யூதரானாலும் கிரேக்கரா
னாலும், அவர்களுக்கு அந்தக் கிறிஸ்து
கடவுளின் வல்லமையும் கடவுளின் ஞானமு
மாயிருக்கிறார். 25 கடவுளின் மடத்
தனம் மனித ஞானத்தைவிட மிகுந்த
ஞானம் வாய்ந்தது; கடவுளின் வலு
வின்மை மனித வலிமையைவிட மிகுந்த
வலிமை வாய்ந்தது. 26 சகோதரரே,
கடவுளிடமிருந்து உங்களுக்கு வந்த
அழைப்பை எண்ணிப்பாருங்கள்; மனி
தத் தீர்ப்பின்படி உங்களுள் எத்தனை பேர்
ஞானமுள்ளவர்கள்? வலியார் எத்தனை
பேர்? உயர் குலத்தார் எத்தனை பேர்? 27 ஆயி
னும், ஞானமுள்ளவர்களை வெட்கத்திற்
குள்ளாக்க, மடத்தனம் என உலகம்
கருதுவதைக் கடவுள் தேர்ந்துகொண்
டார்; வலியாரை வெட்கத்திற்குள்ளாக்க
வலுக் குறைந்ததென உலகம் கருது
வதைக் கடவுள் தேர்ந்துகொண்டார்.
28 உலகம் இழிவாகக் கருதினதையும்
வெறுத்துத் தள்ளினதையும் கடவுள்
தேர்ந்துகொண்டார்; இருப்பதை ஒழிக்க
இல்லாததைத் தேர்ந்துகொண்டார்.
29 எனவே, எந்த மனிதனுக்கும் கடவுள்
முன்னிலையில் தன்னைப்பற்றிப் பெருமை
யுடன் கூறிக்கொள்ள இடமே இல்லை.
30 நீங்கள் இப்போது கிறிஸ்துவோடு
இணைக்கப்பட்டிருப்பதற்குக் கடவுளே
காரணர். கிறிஸ்து இயேசுவோ கடவுளிட
மிருந்து நமக்கு வந்த ஞானம். நாம்
அவரோடு இணைக்கப்பட்டிருப்பதால் கட
வுளுக்கு நாம் ஏற்றவர்களென அவரால்
கொள்ளப்படுகிறோம்; கடவுளுக்கென்று
வாழ்கிறவர்களாகிறோம்; விடுதலையும் பெற்
றவர்களாகிறோம். 31 எனவே, வேதத்தில்
எழுதியுள்ளபடி,

''ஒருவன் எதைக் குறித்தாவது
பெருமைகொள்ள விரும்பினால்,

அவன் ஆண்டவரைக் குறித்தே
பெருமைகொள்வானாக.''

## சிலுவையில் அறையுண்ட கிறிஸ்து

2 சகோதரரே, நான் உங்களிடம்
வந்து கடவுளின் மறைபொருளை அறி
வித்தபோது, பேச்சுத் திறனையோ ஞானத்
தையோ பயன்படுத்தவில்லை. 2 நான்
உங்களிடையே இருந்தபோது, இயேசு
கிறிஸ்துவைத் தவிர, அதுவும், சிலுவை
யில் அறையுண்ட அவரைத் தவிர வேறெ
தையும் அறியாதவன் போலிருக்கத்
தீர்மானித்தேன். 3 உங்களோடு இருந்த
போது, நான் வலுவற்றவனாயிருந்தேன்;
மிகுந்த அச்சத்தோடும் நடுக்கத்தோடும்
இருந்தேன். 4 நான் பேசின பேச்சும் அறி
வித்த செய்தியும் மனித ஞானத்தின்
கவர்ச்சிகரமான சொற்களில் வழங்கப்பட
வில்லை; ஆவியானவரின் வல்லமை விளங்கும்
வகையில் வழங்கப்பட்டன. 5 உங்கள்
நம்பிக்கை மனித ஞானத்திலன்று,
கடவுளின் வல்லமையில் ஊன்றியிருக்க
வேண்டுமென்றே அவ்வாறு அறிவித்தேன்.

## கடவுளின் ஞானம்

6 ஆயினும், தக்க முதிர்ச்சி அடைந்த
வர்களிடையே நாங்கள் ஞானத்தை வழங்
காமலில்லை. ஆனால், அது இந்த யுகத்
தின் ஞானமுமன்று, அழிந்துவிடப் போகிற
வையாகிய அதன் வல்லமைகளின் ஞானமு
மன்று. 7 நாங்கள் வழங்கும் ஞானம்
வெளிப்படாதிருந்த தெய்வ ஞானம்;
மறைத்து வைக்கப்பட்டிருந்த ஞானம்.
அதை நமது மாட்சிமைக்காக உலகம்
உண்டாகுமுன்பே கடவுள் வகுத்தமைத்
திருந்தார். 8 அதை இந்த யுகத்தின் வல்ல
மைகளுள் எதுவும் அறிந்துகொள்ளவில்லை;
அறிந்திருந்தால், மாட்சிமையுள்ள ஆண்ட
வரை அவை சிலுவையில் அறைந்திருக்க
மாட்டா. 9 அந்த ஞானமோ வேதத்தில்
எழுதியுள்ளபடி,

''தம்மிடம் அன்புகொள்கிறவர்களுக்
கென்று கடவுள் ஏற்பாடுசெய்தது,
கண்ணுக்குப் புலப்படாதது, காதுக்கு
எட்டாதது, மனித உள்ளத்தில்
தோன்றாதது.''

10 நமக்கு அதைக் கடவுள் ஆவியானவர்
மூலமாக வெளிப்படுத்தினார். ஆவியா
னவர் எல்லாவற்றையும் ஊடுருவிக்
காண்பவர்; கடவுளுடைய உள்ளத்தின்
ஆழத்தையும் அறிபவர். 11 மனிதன்
உள்ளத்தில் இருப்பதை அம்மனிதனுக்குள்
இருக்கும் அவனது ஆவியைத் தவிர
வேறு எவரும் அறியார். அவ்வாறே, கட
வுளின் உள்ளத்தில் இருப்பதைக் கடவு
ளின் ஆவியைத் தவிர வேறு எவரும்
அறியார். 12 நாம் இந்த உலகத்தின்

**1:31** எரே. *9:24*. **2:9** எசா. *64:4*. **2:11** நீதி. *20:27*.

ஆவியைப் பெற்றுக்கொள்ளவில்லை; கடவுளிடமிருந்து வரும் ஆவியையே பெற்றிருக்கிறோம். கடவுள் நமக்கு அருளோடு தந்தவற்றின் தன்மையை நாம் புரிந்துகொள்ளும்படி அந்த ஆவியைப் பெற்றிருக்கிறோம். 13 ஆகையால், தெய்வ ஆவியை உடையவர்களுக்கு ஆவிக்குரியவற்றை விளக்கி உரைக்கும்போது, நாங்கள் மனித ஞானம் கற்பிக்கும் சொற்களால் பேசுவதில்லை, ஆவியானவர் கற்பிக்கும் சொற்களால் பேசுகிறோம். 14 மனித இயல்பை மட்டும் உடைய ஒருவன் கடவுளின் ஆவிக்குரியவற்றை ஏற்றுக்கொள்வதில்லை; அவை அவனுக்கு மடத்தனமாகத் தோன்றும்; அவற்றை அவனால் புரிந்துகொள்ளவும் இயலாது. ஏனெனில், அவற்றை மதிப்பிடவும், அவற்றின் பொருளை உணரவும் தெய்வ ஆவியின் துணை தேவை. 15 தெய்வ ஆவியை உடைய ஒருவனே எல்லாவற்றையும் மதிப்பிட்டு உணர்வான்; ஆனால், அவனே பிறருடைய மதிப்பீட்டிற்கு அப்பாற்பட்டவன்.

16 ''ஆண்டவருடைய மனத்தை அறிந்தவன் யாரேனும் உண்டோ? அவருக்குக் கற்பிக்கக்கூடியவன் யாரேனும் உண்டோ?''

ஆனால் எங்களுக்குக் கிறிஸ்துவின் மனம் இருக்கிறது.

### கடவுட் சேவையில் உடன் ஊழியர்

**3** சகோதரர்களே, தெய்வ ஆவியை உடையவர்களிடம் பேசுவதுபோல உங்களிடம் பேச என்னால் இயலவில்லை. உங்களை ஊன் இயல்புக்கே உட்பட்டவர்களாகவும், கிறிஸ்துவினிடம் கொண்டுள்ள நம்பிக்கையில் குழந்தைகளாகவும் பாவித்து உங்களிடம் பேச வேண்டியதாயிற்று. 2 உங்களுக்கு நான் ஊட்டினது பால் உணவேயன்றிக் கெட்டிப் பொருள் உணவன்று. ஏனெனில், அதை உட்கொள்ள இயலாத நிலையில் நீங்கள் அப்போது இருந்தீர்கள்; இப்போதும் அதே நிலையிலேதான் இருக்கிறீர்கள். 3 ஏனெனில், இன்னும் நீங்கள் ஊன் இயல்பின்படியே வாழ்ந்து வருகிறீர்கள். உங்களிடையே பொறாமையும் சச்சரவும் காணப்படுகின்றன. ஆகையால், நீங்கள் ஊன் இயல்பின்படி வாழ்ந்து உலகப் போக்கின்படி நடக்கிறவர்கள் என்பது தெளிவாகிறதல்லவா? 4 உங்களுள் ஒருவன், ''நான் பவுலைச் சேர்ந்தவன்'' என்றும், வேறொருவன், ''நான் அப்பொல்லோவைச் சேர்ந்தவன்'' என்றும் சொல்லும்போது நீங்கள் உலகப் போக்கின்படி நடக்கிறவர்கள் என்பது தெளிவுதானே? 5 அப்பொல்லோ என்பவர் யார்? பவுல் என்பவர் யார்? அவர்கள் ஆண்டவர் அவரவருக்கு அருள்பாலித்தபடியே உழைக்கும் பணிவிடைக்காரர்கள்; நீங்கள் கிறிஸ்துவினிடம் நம்பிக்கை கொள்ளும்படி உழைத்த ஊழியர்கள். 6 நான் நட்டேன், அப்பொல்லோ நீர் பாய்ச்சினார். ஆனால் விளையச் செய்தவர் கடவுளே. 7 ஆகையால், நடுகிறவனுக்கும் பெருமை இல்லை, நீர் பாய்ச்சுகிறவனுக்கும் பெருமை இல்லை, விளையச் செய்கிற கடவுளுக்கே பெருமை. 8 நடுகிறவனும் நீர் பாய்ச்சுகிறவனும் ஒரே நிலையில் இருக்கிறார்கள். ஆனாலும், ஒவ்வொருவனும் தன் உழைப்பிற்கேற்பத் தனக்குரிய கூலியைப் பெறுவான். 9 கடவுட் சேவையில் நாங்கள் உடன் ஊழியர்;* நீங்கள் கடவுள் பண்படுத்தும் பண்ணை, கடவுள் கட்டும் கட்டடம்.

10 கடவுள் எனக்களித்த அருளுக்கேற்ப நான் திறமை வாய்ந்த ஒரு கட்டடக் கலைஞனைப்போல அடித்தளம் இட்டேன்; வேறொருவன் அதன்மேல் கட்டுகிறான். ஒவ்வொருவனும் தான் அதன்மேல் கட்டும் முறையைக் குறித்துக் கவனமாக இருக்க வேண்டும். 11 ஏனெனில், ஏற்கெனவே அடித்தளம் இட்டாயிற்று; அவ்வடித்தளம் இயேசுகிறிஸ்துவே. வேறோர் அடித்தளத்தை இட எவனாலும் இயலாது. 12 அந்த அடித்தளத்தின்மேல் பொன், வெள்ளி, விலையுயர்ந்த கற்கள், மரம், புல், வைக்கோல் ஆகியவற்றால் மனிதர் கட்டடம் எழுப்பலாம். 13 ஆனால், ஒவ்வொருவனும் செய்த வேலை எத்தகையது என்பதைக் கிறிஸ்துவின் நாள் வெளிப்படுத்தும்போது அது தெரிந்துவிடும். ஏனெனில், அந்நாள் நெருப்புமயமான நாளாய்க் காணப்படும். அந்த நெருப்பு ஒவ்வொருவனும் செய்த வேலையைச் சோதித்துப் பார்த்து அதன் உண்மையான தரத்தைக் காட்டிவிடும். 14 ஒருவன் கட்டினது நிலைத்து நின்றால், அவன் கூலி பெறுவான். 15 அவன் கட்டினது எரிந்துபோனால், அவன் அதைப் பெற மாட்டான்; அவன் உயிரோ காப்பாற்றப்படும்; ஆனால், அவன் நெருப்பில் அகப்பட்டுத் தப்பினவனைப்போல இருப்பான். 16 நீங்கள் கடவுளின் ஆலயம் என்பதும், கடவுளின் ஆவி உங்களிடையே குடிகொண்டிருக்கிறார் என்பதும் உங்களுக்குத் தெரியாதா? 17 கடவுளின் ஆலயத்தை எவனாவது அழித்தால், அவனைக் கடவுள் அழித்துவிடுவார். ஏனெனில், கடவுளின்

* 'நாங்கள் கடவுளின் உடன் ஊழியர்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

2:16 எசா. 40:13. 3:2 எபி. 5:12—15. 3:4 1கொரி. 1:12. 3:6 திருத்தூது. 18:4—11; 24—28; 3:16 1 கொரி. 6:19; 2 கொரி. 6:16.

ஆலயம் புனிதமானது, நீங்களே அந்த
ஆலயம்.

18 ஒருவனும் தன்னைத்தானே ஏமாற்
றிக்கொள்ள வேண்டாம். உங்களுள் எவ
னுவது தன்னை இவ்வுலகப் போக்கின்படி
ஞானமுள்ளவன் என்று எண்ணினுல்,
அவன் உண்மையிலேயே ஞானமுள்ளவனு
கும்படி மதிகேடனுகட்டும். 19 ஏனெனில்,
இந்த உலகத்தின் ஞானம் கடவுள் பார்வை
யில் மதிகேடுதானே! இவ்வாறே வேதத்தி
லும் எழுதியுள்ளது:

''ஞானமுள்ளவர்களைக் கடவுள் அவர்
களது சூழ்ச்சியிலேயே சிக்கவைப்பார்.''
20 ''ஞானமுள்ளவர்களின் எண்
ணங்கள் வீண் என்பதை ஆண்டவர்
அறிவார்.''

21 ஆகையால், எவரும் மனிதரைப்
பற்றிப் புகழ்ந்து பேசலாகாது; ஏனெனில்,
எல்லாம் உங்களுக்கு உரியவையே.
22 பவுலோ, அப்பொல்லோவோ, கேபாவோ,
உலகமோ, வாழ்வோ, சாவோ, நிகழ்
காலமோ, எதிர்காலமோ எல்லாம் உங்களுக்
குரியவையே. 23 நீங்களோ கிறிஸ்துவுக்கு
உரியவர்கள்; கிறிஸ்து கடவுளுக்கு உரியவர்.

### திருத்தூதுவரின் ஊழியம்

4 எங்களைக் கிறிஸ்துவின் ஊழியர்கள்,
கடவுளின் மறைபொருள்களை அறி
விக்கும் பொறுப்புடைய கண்காணிப்பா
ளர்கள் என்றே எவரும் கருத வேண்டும்.
2 கண்காணிப்பாளர்கள் நம்பிக்கைக்குரிய
வர்களாய் இருக்க வேண்டும்; இதுவே
அவர்களிடம் எதிர்பார்க்கப்படும் பண்பு.
3 என்னைப் பொருத்தமட்டில், நீங்களோ,
மனிதரின் நீதிமன்றமோ என்னை மதிப்
பிட்டு அளிக்கும் தீர்ப்பை நான் சிறிதளவும்
பொருட்படுத்த மாட்டேன்; என்னை
நானே மதிப்பிட்டுத் தீர்ப்பளித்துக்கொள்
ளவுமாட்டேன். 4 என்னிடம் குற்றம் எதுவும்
இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.
ஆனுலும், இது காரணமாக நான் குற்ற
மற்றவனுகிவிடமாட்டேன். என்னை மதிப்
பிட்டுத் தீர்ப்பளிப்பவர் ஆண்டவரே.
5 ஆகையால், குறித்த காலம் வருமுன்
யாரைப்பற்றியும் நீங்கள் தீர்ப்பளிக்க
வேண்டாம்; ஆண்டவர் வரும்வரையில்
காத்திருங்கள். அவர் வந்து இப்போது
இருளில் மறைந்திருக்கிறவற்றை வெட்ட
வெளிச்சமாக்குவார்; உள்ளங்களின் எண்
ணங்களை வெளிப்படுத்துவார். அப்போது
தான் ஒவ்வொருவனும் கடவுளிடமிருந்து
பாராட்டுப் பெறுவான்.

6 சகோதரரே, உங்களுக்கு விளங்கும்
பொருட்டு, என்னையும் அப்பொல்லோவை
யும் உதாரணமாக வைத்து இவை யாவற்
றையும் கூறினேன். ''எழுதியுள்ளதற்கு
அப்பாற் செல்லாதே'' என்கிற மூதுரை
யின் பொருளை நீங்கள் எங்களைப் பார்த்துக்
கற்றுக்கொள்ள வேண்டும். உங்களுள்
எவரும் ஒருவனைப் பெருமிதத்தோடு
பாராட்டவும் வேருெருவனை எதிர்க்கவும்
கூடாது; இதற்காகவே இப்படிக் கூறினேன்.
7 சகோதரனே, நீ மற்றவர்களைவிடச்
சிறந்தவன் என்று உனக்குச் சொன்னது
யார்? உனக்கிருக்கிற அனைத்திலும்
நீ கடவுளிடமிருந்து ஈவாகப் பெருதது
எது? நீ அவ்வாறு ஈவுகளைப் பெற்றவனு
யிருந்தும், ஈவே பெருதவன்போல ஏன்
பெருமைகொள்கிருய்? 8 உங்களுக்குத்
தேவையான யாவும் ஏற்கெனவே கிடைத்து
விட்டதாக எண்ணமோ? நீங்கள் ஏற்
கெனவே செல்வராகிவிட்டீர்களோ? எங்களை
யின்றி நீங்கள் மட்டும் ஆட்சி செலுத்துவ
தாக எண்ணமோ? அப்படி நீங்கள் ஆட்சி
செலுத்தினுலும் நலமாயிருக்கும்; நாங்
களும் உங்களோடு சேர்ந்து ஆட்சி செலுத்
துவோம். 9 கடவுள் திருத்தூதுவராகிய
எங்களைப் பொது அரங்கில் கொல்லப்படு
வதற்கென அணிவரிசையில் கடைசியாக
நடத்திச் செல்லப்படும் கைதிகளைப்போல
ஆக்கிவிட்டார் என்று நினைக்கிறேன்;
தெய்வதூதருக்கும் மனிதருக்கும் முழு
உலகிற்குமே எங்களைக் காட்சிப் பொருள்
களாக்கிவிட்டார் எனத் தோன்றுகிறது.
10 நாங்கள் கிறிஸ்துவின் பொருட்டு மதி
கேடர்கள்; நீங்களோ கிறிஸ்துவோடு
இணைக்கப்பட்டிருக்கும் விவேகிகள்! நாங்கள்
வலுவற்றவர்கள்; நீங்களோ வலிமை
வாய்ந்தவர்கள்! நீங்கள் மதிப்பிற்குரி
வர்கள்; நாங்களோ மதிப்பற்றவர்கள்!
11 இந்நேரம் வரையில் நாங்கள் பசியோடிருக்
கிருேம், தாகத்தோடிருக்கிருேம், ஆடை
யின்றி இருக்கிருேம், அடிக்கப்படுகிருேம்,
தங்க இடமின்றித் தவிக்கிருேம். 12 எங்கள்
கையால் பாடுபட்டு உழைக்கிருேம். நாங்கள்
சபிக்கப்படும்போது ஆசி கூறுகிருேம்;
துன்புறுத்தப்படும்போது பொறுமை
யோடிருக்கிருேம்; 13 இகழப்படும்போது
பரிவு காட்டும்படி கேட்கிருேம். நாங்கள்
உலகத்தின் கழிவுப் பொருள்கள் போலா
னேம், இன்று வரையில் எல்லாவற்றின்
கசடெனக் கருதப்பட்டுவருகிருேம்.

14 நான் இவற்றை உங்களை வெட்கப்
படுத்துவதற்காக எழுதவில்லை. என் அன்
பார்ந்த பிள்ளைகளாகிய உங்களுக்கு அறிவு
புகட்டவே எழுதுகிறேன். 15 கிறிஸ்துவின்
திருப்பெயரால் உங்களுக்கு ஆயிரக்கணக்கான

**3:19** யோபு 5:13. **3:20** சங். 94:11. **4:1** லூக். 12:42—44. **4:11** 2 கொரி. 11:27. **4:12** திருத்தூது. 18:3. **4:15** கலா. 4:19; 1 தெச. 2:11; பிலே. 10.

ஆசான்கள் இருக்கலாம்; ஆனால்,
உங்களை ஈன்றெடுத்த தந்தை ஒருவனே.
கிறிஸ்துவோடு இணைக்கப்பட்ட நிலையில்
நானே உங்களை அருட்செய்தியின் மூலம்
ஈன்றெடுத்தேன். 16 ஆகையால், நீங்கள்
என்னைப் பார்த்து நடக்க வேண்டுமென்று
உங்களுக்கு அறிவுரை கூறுகிறேன்.
17 இதற்காகவே தீமோத்தேயுவை உங்
களிடம் அனுப்பியிருக்கிறேன். அவன்
எனக்கு அன்பார்ந்த மகன், ஆண்டவ
ரோடு இணைக்கப்பட்ட நிலையில் நம்பிக்
கைக்குரியவன். நான் கிறிஸ்து இயேசுவுக்
குட்பட்டு நடக்கும் நெறியை எடுத்துக்கூறி
அதை அவன் உங்களுக்கு நினைப்பூட்டு
வான். அதையே நான் எங்கும் எல்லாத்
திருச்சபைகளிலும் போதித்துவருகிறேன்.
18 நான் உங்களிடம் வரப் போவதில்லை
என்று நினைத்துக்கொண்டு சிலர் தம்மையே
பெரியவராக்கிக்கொண்டிருக்கின்றனர்.
19 ஆனால், ஆண்டவர் திருவுளங்கொண்
டால், நான் உங்களிடம் விரைவிலேயே
வருவேன்; வந்து, பெருமிதத்தோடு இருக்கிற
அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்
பதையன்று, அவர்களால் என்ன செய்ய
முடியும் என்பதைப் பார்க்கப்போகிறேன்.
20 கடவுளின் அரசு சொல்வன்மை
யிலன்று, செயல் வலிமையிலேதான் இருக்
கிறது. 21 நான் உங்களிடம் பிரம்போடு
வர வேண்டுமா? அல்லது அன்போடும்
சாந்த மனப்பாங்கோடும் வர வேண்டுமா?
உங்களுக்கு எது வேண்டும்?

### ஒழுக்கக்கேடான நடத்தை

**5** ஒழுக்கக் கேடான நிகழ்ச்சி ஒன்று
உங்களிடையே நிகழ்வதாகச் சொல்
லப்படுகிறது. ஒருவன் தன் சிற்றன்னையை
வைத்துக்கொண்டிருக்கிறானாம்! இறைப்
பற்றற்ற மக்களிடையேகூட இத்தகைய
ஒழுக்கக் கேடு இராது. 2 இன்னும் நீங்கள்
பெருமிதத்தோடு இருப்பது எப்படி?
நீங்கள் வெட்கித் துக்கப்பட வேண்டுமே!
அச்செயலைச் செய்தவனை நீங்கள் உங்களி
டையேயிருந்து ஏற்கெனவே விலக்கியிருக்க
வேண்டும். 3 நானோ உடலுருவில் உங்க
ளோடு இல்லாவிடினும் ஆவியுருவில் இருப்
பதால், நான் உங்களிடையே இருப்பதா
கவே வைத்துக்கொண்டு, இத்தகைய இழி
செயலைச் செய்தவனுக்கு நம்முடைய
ஆண்டவராகிய இயேசுவின் திருப்பெய
ரால் குற்றத் தீர்ப்பு அளித்துவிட்டேன்.
4 நீங்களும், ஆவியுருவிலுள்ள நானும்
நம்முடைய ஆண்டவராகிய இயேசுவின்
வல்லமை பொருந்தியவர்களாய்க் கூடி
யிருந்து, 5 அவனைச் சாத்தானிடம் ஒப்ப
டைக்க வேண்டும்; அவ்வாறு செய்தவனது
ஆவி ஆண்டவரின் நாளில் மீட்படையும்
படி, அவனது பாவமான ஊன் இயல்பு
அழிக்கப்படுவதற்காக இப்படிச் செய்ய
வேண்டும்.

6 நீங்கள் பெருமை கொள்வது உங்
களுக்கு அழகன்று. புளிப்பு மாவு சிறிதள
வேயாயினும், அது பிசைந்த மாவு முழு
வதையும் புளிக்கச் செய்யும் என்பது உங்
களுக்குத் தெரியாதா? 7 நீங்கள் புளிக்க
வைக்கப் பெறாதவர்களாய் இருக்கிறீர்கள்.
எனவே, நீங்கள் புதிதாகப் பிசைந்த
மாவாகவே இருக்கும்படி, புளிக்கவைக்கும்
பழைய மாவைத் தூக்கி எறிந்துவிடுங்கள்.
ஏனெனில், கிறிஸ்துவாகிய நமது
பஸ்காப் பலி ஏற்கெனவே செலுத்தப்பட்
டாயிற்று அல்லவா? 8 ஆகையால், பண்டி
கையைக் கொண்டாடுவோமாக; ஆனால்,
புளிக்க வைக்கும் பழைய புளிப்பு மாவோடு
மன்று, தீயகுணம் பொல்லாங்கு என்
னும் புளிப்பு மாவோடுமன்று, நேர்மை
உண்மை என்னும் புளிப்பில்லா அப்பத்
தோடு அதைக் கொண்டாடுவோமாக.

9 ஒழுக்கங்கெட்டவர்களோடு உற
வாட வேண்டாமென்று ஒரு கடிதத்தில்
உங்களுக்கு எழுதியிருந்தேன். 10 நான்
எழுதினது பொதுவாக உலகத்திலுள்ள
ஒழுக்கங்கெட்டோர், பேராசைக்காரர்,
கொள்ளைக்காரர், சிலைகளை வழிபடுவோர்
ஆகியோரைப்பற்றியன்று; அவர்களை
விட்டு விலக வேண்டுமாயின், நீங்கள் உல
கத்தினின்றே வெளியேற வேண்டியிருக்கும்.
11 நான் எழுதினது, சகோதரன்
என்னும் பெயரை வைத்துக்கொண்டு
ஒழுக்கங்கெட்டவனாகவோ பேராசைக்கார
னாகவோ சிலைகளை வழிபடுகிறவனாகவோ
பழிதூற்றுகிறவனாகவோ குடிகாரனாகவோ
கொள்ளைக்காரனாகவோ இருக்கிறவனைக்
குறித்தேயாகும். இப்படிப்பட்டவனோடு
நீங்கள் உறவுகொள்ள வேண்டாம்;
அவனோடு உணவு அருந்தவும் வேண்டாம்.
12 திருச்சபைக்குப் புறம்பே இருக்கிறவர்
களைப்பற்றித் தீர்ப்புக் கூறுவது என்
வேலையன்று; அவர்களுக்குக் கடவுள் தீர்ப்
பளிப்பார். 13 உங்களோடு இருக்கிறவர்
களுக்கு நீங்களே தீர்ப்பளிக்க வேண்டும்
அல்லவா? அந்தப் பொல்லாதவனை உங்களை
விட்டு விலக்கிவிடுங்கள்.

### சகோதரன் மீது வழக்குத் தொடர்தல்

**6** உங்களுள் ஒருவனுக்கு வேறொருவ
னோடு ஏதாவதொரு வழக்கு இருக்கு
மானால், அதைத் தீர்த்துக்கொள்ள
அவன் ஆண்டவரின் அடியாரிடம் செல்

**4:16** *1 கொரி. 11:1; பிலி. 3:17.* **4:21** *2 கொரி. 10:2.* **5:1** *உபா. 22:30.* **5:6** *கலா. 5:9.* **5:7** *யாத். 12:5.* **5:8** *யாத். 13:7; உபா. 16:3.* **5:13** *உபா. 13:5; 17:7.* **6:1** *மத். 18:15.*— 17.

லாமல், வெளியிலுள்ள வழக்குமன்றத்திற்குச்
செல்லத் துணிவானேன்? 2 உலகத்திற்குத்
தீர்ப்பு அளிக்கப்போகிறவர்கள் ஆண்
டவரின் அடியார்கள் என்பது உங்களுக்குத்
தெரியாதா? உலகத்திற்கே தீர்ப்பளிக்
கப்போகும் உங்களுக்குச் சிறிய வழக்கு
களைத் தீர்த்துக்கொள்ளத் தகுதி இல்லாமற்
போயிற்றா? 3 வானதூதர்களுக்கும் நாம்
தீர்ப்பளிப்போம் என்பது உங்களுக்குத்
தெரியாதா? அப்படியிருக்க, அன்றாட
வாழ்க்கைக்குரியவற்றைத் தீர்த்துக்
கொள்வது உங்களுக்கு ஒரு பெரிய காரியமா?
4 அத்தகைய வழக்குகள் இருக்குமானால்,
அவற்றைத் தீர்த்துக்கொள்ள, திருச்
சபை உயர்வாகக் கருதாதவர்களை நீதிபதி
களாக நீங்கள் தேர்ந்துகொள்ளலாமா?
5 இதைக் குறித்து நீங்கள் வெட்கப்பட
வேண்டும். சகோதரராகிய உங்களி
டையே ஏற்படும் வழக்குகளைத் தீர்க்கக்
கூடிய அறிவாளி உங்களுள் ஒருவன்கூட
இல்லையா? 6 சகோதரராயிருப்பவருள்
ஒருவன் இன்னொருவன்மீது வழக்குத்
தொடர வேண்டுமா? அதையும் ஆண்ட
வரிடம் நம்பிக்கை கொள்ளாதவர்கள் முன்
னிலையில் செய்ய வேண்டுமா? 7 உங்களுள்
ஒருவன்மீது இன்னொருவன் வழக்குத்
தொடர்வானானால் நீங்கள் தோல்வியடைந்த
வர்கள் என்பதையே அது காட்டுகிறது.
உங்களுக்குத் தீங்கிழைக்கப்படுமானால்,
அதை நீங்கள் பொறுத்துக்கொள்ளக்
கூடாதா? உங்கள் பொருள் திருடப்படு
மானால், அதை நீங்கள் பொருட்படுத்தாமல்
இருந்துவிடக் கூடாதா? 8 அதற்கு
மாறாக, நீங்களே பிறருக்குத் தீங்கிழைக்
கிறீர்கள்; பிறர் பொருளைத் திருடுகிறீர்
கள்; அதுவும் சகோதரருக்கே அப்படிச்
செய்கிறீர்கள். 9 தீங்கிழைப்பவருக்குக்
கடவுளின் அரசில் பங்கில்லை என்பது உங்
களுக்குத் தெரியாதா? ஏமாந்துபோக
வேண்டாம். காமுகர், சிலைகளை வழிபடு
வோர், கற்புநெறி தவறுவோர், இயற்
கைக்கு மாறாகக் காமவெறி கொள்ளும்
ஆடவர், அதற்கு உடன்படுவோர், 10 திரு
டர், பேராசைபிடித்தோர், குடிகாரர்,
வசைமொழி கூறுவோர், கொள்ளைக்காரர்
ஆகியோருக்குக் கடவுளின் அரசில் பங்
கில்லை. 11 இத்தகையோர் உங்களிடை
யேயும் சிலர் இருந்தனர். ஆனால், நீங்கள்
ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின்
திருப்பெயராலும் நம்முடைய கடவுளின்
ஆவியினாலும் மாசறக் கழுவப்பட்டீர்கள்,
கடவுளுக்கு உரியவர்களாக்கப்பட்டீர்கள்,
அவருக்கு ஏற்றவர்களென அவரால் கொள்
ளப்பட்டீர்கள்.

### உடல் கடவுளின் மாட்சிமைக்கே

12 ''எதையும் செய்ய எனக்கு உரிமை
உண்டு.'' சரிதான்; ஆனால், எல்லாம் நற்
பயன் தரக்கூடியவை அல்ல. எதையும்
செய்ய எனக்கு உரிமை உண்டு; ஆனால்
நான், எதுவும் என்னை அடிமையாக்கும்படி
விடமாட்டேன். 13 ''வயிற்றிற்கென்றே
உணவு, உணவிற்கென்றே வயிறு.'' சரிதான்;
ஆனால், வயிறு உணவு ஆகிய இரண்டை
யும் கடவுள் அழித்துவிடுவார். உடல்
ஒழுக்கக் கேட்டிற்காகவன்று ஆண்ட
வருக்காகவே இருக்கிறது. ஆண்டவர் உட
லுக்கு உரியவர். 14 ஆண்டவரை உயிர்ப்
பித்த கடவுள் நம்மையும் தம் வல்லமை
யால் உயிர்ப்பிப்பார். 15 உங்கள் உடல்கள்
கிறிஸ்துவின் உறுப்புகள் என்பது உங்
களுக்குத் தெரியாதா? அப்படியிருக்க,
நான் கிறிஸ்துவின் உறுப்புகளைப் பிரித்
தெடுத்து அவற்றை ஒரு விலைமகளின்
உறுப்புகளாகும்படி செய்வது முறையா
குமா? இல்லவே இல்லை. 16 விலைமக
ளோடு சேர்கிறவன் அவளோடு ஒருடலா
கிறான் என்பது உங்களுக்குத் தெரியாதா?
''இருவரும் ஒரே உடலாய் இருப்பார்
கள்'' என்று சொல்லியிருக்கிறதே. 17 ஆண்
டவரோடு சேர்ந்திருக்கிறவனோ அவரோடு
ஒரே ஆவி ஆகிறான். 18 ஒழுக்கக்கேட்டை
விட்டு ஓடிவிடுங்கள். மனிதன் செய்யும்
மற்றப் பாவமெல்லாம் உடலுக்குப் புறம்
பானவை. ஆனால், ஒழுக்கக்கேடான
நடத்தை சொந்த உடலுக்கே கேடு விளை
விக்கும் பாவமாகும். 19 உங்கள்
உடல் தூய ஆவியின் கோவில்;
உங்களுக்குள் குடிகொண்டிருப்பதும், நீங்கள்
கடவுளிடமிருந்து பெற்றுக்கொண்ட
துமான அந்த ஆவியின் கோவில். நீங்கள்
உங்களுக்குச் சொந்தமில்லை. இது
உங்களுக்குத் தெரியாதா? 20 நீங்கள் விலைக்கு
வாங்கப்பட்டீர்கள். எனவே, உங்கள் உட
லில் கடவுளின் மாட்சிமை விளங்கும்படி
செய்யுங்கள்.*

### திருமணம்பற்றி

7 நீங்கள் குறிப்பிட்டு எழுதினவற்றை
இப்போது எடுத்துக்கொள்வோம்:
ஆம், பெண்ணைத் தொடாதிருப்பதே ஒரு
வனுக்கு நல்லது. 2 எனினும், ஒழுக்கக்
கேடான நடத்தை எங்கும் காணப்படுவ
தால், அவனவன் தன் சொந்த மனைவி
யையும் அவளவள் தன் சொந்தக் கண
வனையும் உடையவர்களாய் இருக்க வேண்
டும். 3 கணவன் தன் மனைவியுடன் கூடித்
தன் கடமையை நிறைவேற்றுவானாக;

* 'எனவே, கடவுளுக்குச் சொந்தமானவையாகிய உங்கள் உடலாலும் உங்கள் ஆவியாலும் கடவுளின் மாட்சிமை விளங்கும்படி செய்யுங்கள்' என்பது பிற்காலப் பிரதிகளின் பாடம்.

**6:12** 1 கொரி. 10:23. **6:16** ஆதி. 2:24. **6:19** 1 கொரி. 3:16; 2 கொரி. 6:16

அவ்வாறே மனைவியும் தன் கணவனுடன்
கூடித் தன் கடமையை நிறைவேற்றுவாளாக.
4 மனைவிக்குத் தன் உடல்மேல் உரிமை
இல்லை; கணவனுக்கே அந்த உரிமை
உண்டு. அவ்வாறே கணவனுக்குத் தன்
உடல்மேல் உரிமை இல்லை; மனைவிக்கே
அந்த உரிமை உண்டு. 5 ஒருவரோடொருவர்
கூடி வாழ மறுக்காதீர்கள்; ஜெபநிலையில்
தரித்திருப்பதற்காக ஒரு குறிப்பிட்ட காலத்
திற்குப் பிரிந்திருக்க இருவரும் உடன்பட்டா
லன்றி மறுக்காதீர்கள். அதன்பின் நீங்
கள் கூடி வாழ வேண்டும். இல்லாவிடில்,
உங்களுக்குள்ள தன்னடக்கக் குறைவைப்
பயன்படுத்திச் சாத்தான் உங்களைச்
சோதிப்பான். 6 இதை நான் ஒரு கட்டளை
யாகச் சொல்லவில்லை; இது உங்கள் நிலை
மைக்கு ஏற்றது என்று சொல்லுகிறேன்.
7 எல்லாரும் என்னைப்போல இருக்க
வேண்டுமென்பதே என் விருப்பம். எனி
னும், ஒவ்வொருவனுக்கும் கடவுள்
அருளும் தனிப்பட்ட வரம் உண்டு. அது ஒரு
வனுக்கு ஒருவகையாகவும் இன்னொருவ
னுக்கு வேறொரு வகையாகவும் இருக்
கிறது. 8 மணமாகாதவர்களுக்கும் கைம்
பெண்களுக்கும் நான் சொல்வது இதுவே:
நான் இருப்பதுபோல அவர்களும் தனிய
ராய் இருந்துவிடுவதே நல்லது. 9 ஆனால்,
காமத்தை அடக்கிக்கொள்ள அவர்
களால் இயலாதிருந்தால், திருமணம்
செய்துகொள்ளட்டும். காமத்தால் வெந்
துருகுவதைவிடத் திருமணம் செய்து
கொள்வதே மேல். 10 மணமானவர்களுக்கு
நான் இடும் கட்டளை இதுவே—உண்மை
யில் இது என்னுடைய கட்டளையன்று,
ஆண்டவருடையதே—மனைவி தன் கண
வனை விட்டுப் பிரியக் கூடாது. 11 பிரிந்
தால், மறுமணமாகாமலே இருக்க வேண்
டும், அல்லது திரும்பிவந்து கணவனோடு
இணங்கி வாழ வேண்டும். கணவனும்
தன் மனைவியை விலக்கிவிடக் கூடாது.
12 மற்றவர்களுக்கு நான் சொல்வது
இதுவே—இதை ஆண்டவர் சொல்லவில்லை,
நானே சொல்கிறேன்—கிறிஸ்துவின் அடி
யானாயிருக்கும் ஒருவனுடைய மனைவி ஆண்
டவரிடம் நம்பிக்கை கொள்ளாதவளா
யிருந்தும், அவள் அவனோடு தொடர்ந்து
வாழ உடன்பட்டால், அவளை அவன்
விலக்கிவிடக் கூடாது. 13 அவ்வாறே,
கிறிஸ்துவின் அடியாளாயிருக்கும் ஒரு
பெண்ணின் கணவன் ஆண்டவரிடம் நம்
பிக்கை கொள்ளாதவனாயிருந்தும், அவன்
அவளோடு தொடர்ந்து வாழ உடன்பட்
டால், அவனை அவள் விலக்கிவிடக் கூடாது.
14 ஏனெனில், ஆண்டவரிடம் நம்பிக்கை
கொள்ளாத கணவன் தன் மனைவியோடு
இணைந்திருப்பதால், அவன் புனிதமடை
கிறான். ஆண்டவரிடம் நம்பிக்கை கொள்
ளாத மனைவியும் கிறிஸ்துவின் அந்த அடி
யானோடு இணைந்திருப்பதால், அவள்
புனிதமடைகிறாள். இல்லாவிடில், அவர்
களுடைய பிள்ளைகள் மாசுபட்டவர்களாய்
இருப்பார்கள்; ஆனால், இப்போதோ
புனிதமடைந்திருக்கிறார்கள். 15 ஆயினும்,
இருவருள் ஆண்டவரிடம் நம்பிக்கை
கொள்ளாத ஒருவர் பிரிந்து செல்ல விரும்
பினால் பிரிந்து செல்லட்டும். இத்தகைய
நிலையில் ஒரு சகோதரனுக்கோ சகோ
தரிக்கோ கட்டுப்பாடு எதுவும் இல்லை.
சமாதானத்தோடு வாழ்வதற்கென்றே
கடவுள் உங்களை அழைத்திருக்கிறார்.
16 திருமணமான பெண்ணே, உன்னால் உன்
கணவன் ஒருவேளை மீட்படையலாம்; நீ
அறியாய். கணவனே, உன்னால் உன்
மனைவி ஒருவேளை மீட்படையலாம்; நீ
அறியாய்.

### ஆண்டவர் வகுத்தமைத்த வாழ்க்கைநெறி

17 அது எப்படியிருப்பினும், ஒவ்வொரு
வனும் ஆண்டவர் அவனவனுக்குப் பகிர்ந்
தளித்த வரத்திற்கேற்பவும், கடவுள்
அழைத்தபோது அவனவன் இருந்த நிலை
மையிலேயும் வாழ்க்கை நடத்துவானாக.
இந்த ஒழுங்குமுறையையே நான் ஒவ்
வொரு திருச்சபையிலும் ஏற்படுத்திவரு
கிறேன். 18 ஒருவனைக் கடவுள் அழைத்த
போது அவன் விருத்தசேதனம் பெற்ற
வனாய் இருந்தானா? அப்படியானால், அவன்
விருத்தசேதனம் இல்லாதவனாகிவிட வழி
தேட வேண்டாம். ஒருவனைக் கடவுள்
அழைத்தபோது அவன் விருத்தசேதனம்
இல்லாத நிலையில் இருந்தானா? அப்படி
யானால் அவன் விருத்தசேதனம் செய்து
கொள்ள வேண்டாம். 19 விருத்தசேதனத்
தாலும் பயனில்லை, விருத்தசேதனம் இன்
மையாலும் பயனில்லை; கடவுளின் கட்
டளைகளைக் கடைப்பிடிப்பது ஒன்றே
தேவை. 20 ஒருவன் எந்த நிலையில் இருக்
கையில் அழைக்கப்பட்டானோ அதே நிலை
யில் அவன் நிலைத்திருக்கட்டும். 21 நீ அடி
மையாய் இருக்கையில் அழைக்கப்பட்டாயா?
வருந்தாதே. எனினும், நீ விடுதலை
நிலையை அடைய வழி உண்டானால்,
அதைப் பயன்படுத்திக்கொள்வது நல்லது.*
22 ஆண்டவரோடு இணைக்கப்படுவதற்
கென அழைக்கப்பட்ட அடிமை ஆண்டவர்
அருளும் விடுதலை நிலையை அடைந்த
வனாகிறான். அவ்வாறே தன்னுரிமையோடு
வாழும்போது அழைக்கப்பட்ட ஒருவன்

* 'விடுதலை நிலையை அடைய உனக்கு வழி இருந்தாலும், அடிமை நிலையிலேயே இருந்துகொண்டு, அதை நன்கு பயன்படுத்திக்கொள்ளப் பார்ப்பதே நல்லது' என்றும் மொழிபெயர்க்கலாம்.

7:10, 11 மத். 5:32; 19:9; மாற். 10:11, 12; லூக். 16:18.

கிறிஸ்துவின் அடிமையாகிறான். 23 நீங்கள்
ஆண்டவரால் விலைக்கு வாங்கப்பட்
டவர்கள்; நீங்கள் மனிதருக்கு அடிமை
களாக வேண்டாம். 24 சகோதரரே, ஒவ்
வொருவனும் தான் எந்த நிலைமையில்
இருக்கையில் அழைக்கப்பட்டானோ அந்த
நிலைமையிலேயே கடவுள்முன் நிலைத்திருக்
கட்டும்.

### மணமாகாதவர்களும் கைம்பெண்களும்

25 மணமாகாதவர்களைப் பற்றிய
குறிப்பை இப்போது எடுத்துக்கொள்வோம்:
நான் இதைப்பற்றி ஆண்டவரிடமிருந்து
கட்டளை எதுவும் பெறவில்லை. ஆனால்,
நான் ஆண்டவரின் இரக்கத்தால் நம்பிக்
கைக்குரியவனாய் இருக்கும்படி வரம் பெற்
றவன் என்ற முறையில் என் கருத்தைச்
சொல்லுகிறேன். 26 ஒருவன் தான் இருக்கும்
நிலைமையிலேயே இருந்துவிடுவது அவ
னுக்கு நல்லது. ஆம், இப்போதுள்ள
நெருக்கடியை முன்னிட்டு இது நல்ல
தென்றே நினைக்கிறேன். 27 நீ திருமணத்
தால் ஒரு பெண்ணோடு பிணைக்கப்பட்
டிருக்கிறாயா? அப்படியானால், அந்தப்
பிணைப்பை அறுக்க வழிதேடாதே. நீ திரு
மணத்தால் ஒரு பெண்ணோடு பிணைக்கப்
படாமலிருக்கிறாயா? அப்படியானால் மணம்
செய்துகொள்ள வழி தேடாதே. 28 அப்
படி நீ மணம் செய்துகொண்டாலும் அது
பாவமன்று. கன்னிப்பெண் மணம்
செய்துகொண்டாலும் அதுவும் பாவமன்று.
ஆனால், மணம் செய்து கொள்ளுகிறவர்கள்
உலக வாழ்க்கையில் துன்பம் அடைவார்
கள்; அதனின்று உங்களைத் தப்புவிக்க
வேண்டும் என்பதே என் நோக்கம்.

29 சகோதரரே, நான் சொல்வது
இதுவே: காலம் குறுகிக்கொண்டு வரு
கிறது. இன்றுமுதல், மனைவியை உடைய
வர்கள் மனைவி இல்லாதவர்கள்போல
இருக்கட்டும். 30 துயரப்படுகிறவர்கள்
துயரமில்லாதவர்கள் போலவும் மகிழ்ச்சி
யோடிருப்பவர்கள் மகிழ்ச்சி இல்லாதவர்கள்
போலவும் இருக்க வேண்டும். பொருள்களை
விலைக்கு வாங்கினவர்கள் அப்பொருள்கள்
இல்லாதவர்கள்போல வாழ வேண்டும்.
31 இவ்வுலகியல் துறைகளில் ஈடுபட்டிருப்
பவர்கள் அவற்றிலேயே தங்கள் முழுக்
கவனத்தையும் செலுத்தாதிருக்க வேண்டும்.
இவ்வுலகத்தின் இப்போதைய போக்கு
நெடுங்காலம் இராது.

32 நீங்கள் கவலைக்கு இடங்கொடாத
வர்களாய் இருக்க வேண்டுமென்பது என்
விருப்பம். மணமாகாதவன், ஆண்டவருக்கு
உகந்தவனாய் இருப்பது எப்படி என்கிற
நினைவினால், அவருக்கு உரியவைபற்றிய
கவலையோடிருக்கிறான். 33 மணமானவனோ
தன் மனைவிக்கும் உகந்தவனாயிருப்பது எப்
படி என்கிற நினைவோடிருப்பதால், உல
கத்திற்கு உரியவைபற்றிய கவலையும்
அவனுக்கு இருக்கிறது. எனவே, அவன்
மனம் பிளவுபட்டிருக்கிறது.* 34 கணவன்
இல்லாத பெண்ணும் கன்னியும் உடலிலும்
உள்ளத்திலும் ஆண்டவருக்கு உரிய
வர்களாய் இருப்பதற்காக, அவருக்கு உரி
யவைபற்றிய கவலையோடிருக்கிறார்கள்.
மணமானவளோ, தன் கணவனுக்கு உகந்
தவளாய் இருப்பது எப்படி என்கிற நினை
வோடிருப்பதால், அவளுக்கு உலகத்திற்கு
உரியவைபற்றிய கவலையும் இருக்கிறது.
35 நான் இவற்றை உங்கள் நன்மைக்
கென்றே சொல்லுகிறேன்; உங்களைக் கட்டுப்
படுத்துவதற்கு அன்று, நல்லொழுக்
கத்தை ஏற்படுத்த வேண்டுமென்றும், நீங்
கள் கருத்தைச் சிதறவிடாமல் ஆண்ட
வரைப் பற்றிக்கொண்டிருக்க வேண்டு
மென்றுமே இதைச் சொல்லுகிறேன்.
36 ஒருவன் தன் கன்னியிடம் தான் நியா
யமான முறையில் நடந்துகொள்ளவில்லை
என்று நினைக்கிறான் என்றும், அவன் அளவு
கடந்த காம உணர்ச்சி உடையவனாயிருக்
கிறான் என்றும் வைத்துக்கொள்வோம்.
அப்பொழுது வேறு வழியில்லையெனில்,
அவர்கள் மணம் செய்துகொள்ளட்டும்.
அவன் அப்படிச் செய்ய விரும்பினால்,
அதைச் செய்வது பாவமன்று.† 37 ஆனால்,
ஒருவன் தன் உள்ளத்தில் உறுதிகொண்ட
வனாய் நின்று, எந்தக் கட்டாயத்திற்கும்
உடன்படாதவனாயும் தன் மனத்தை
அடக்கி ஆளும் ஆற்றலுள்ளவனாயுமிருந்து,
தன் கன்னியைக் கன்னிப்பெண்ணாகவே
வைத்திருக்கத் தீர்மானித்திருப்பானானால்,
அவன் செய்தது நல்லதே. 38 நான் கூறும்
முடிவு என்னவெனில், ஒருவன் தன் கன்
னியை மணம் செய்வது நன்று; அவளை
மணம் செய்யாதிருப்பது அதனினும் நன்று
என்பதே.

39 கணவன் உயிரோடிருக்கும் வரை
யில் மனைவி அவனோடு பிணைக்கப்பட்
டிருக்கிறாள்; கணவன் துஞ்சிவிட்ட பிறகு,
அவள் தான் விரும்புகிற ஒருவனை மணந்து
கொள்ள அவளுக்கு உரிமையுண்டு. ஆனால்,
அவன் ஆண்டவரின் அடியானாய் இருக்க
வேண்டும். 40 அவள் அப்படியே இருந்து
விட்டால், இன்னும் மகிழ்ச்சியுடைய
வளாய் இருப்பாள். இது என் சொந்தக்

* 'அவ்வாறே மணமான பெண்ணுக்கும் கன்னிக்கும் வேறுபாடு உண்டு' என்பது பிற்காலத்துப் பிரதிகளின் பாடம்.

† மூலத்திலிருப்பது தெளிவாயில்லை. இதை வெவ்வேறு வகையில் மொழிபெயர்க்கலாம். நேரடியான மொழிபெயர்ப்பு: 'ஒருவன் தன் கன்னியிடம் தான் தக்கமுறையில் நடந்துகொள்ளவில்லை என்று எண்ணினால், அவன் அளவுகடந்த காம உணர்ச்சி உடையவனாய் இருப்பானானால் (அல்லது அவள் பருவங்கடந்தவளாயிருப்பாளானால்), அதனோடு அப்படியே இருக்க வேண்டுமாயின், அவன் (அல்லது அவள்) விரும்புகிறபடி செய்யட்டும்; அது பாவமன்று, அவர்கள் மணம் செய்துகொள்ளட்டும்.'

கருத்து. எனக்குள்ளும் கடவுளின் ஆவி
இருக்கிறதென்று எண்ணுகிறேன்.

### தெய்வச் சிலைகளுக்குப் படைக்கப்பட்டவை பற்றி

8 தெய்வச் சிலைகளுக்குப் படைக்கப்
பட்டவைபற்றிய குறிப்பை எடுத்துக்
கொள்வோம்: ''நம்மெல்லோருக்கும் அறிவு
உண்டு.'' இது நமக்குத் தெரி
யும். அத்தகைய 'அறிவு' பெருமையைப்
பெருக்கும்; அன்போ சபையின் பொது
வாழ்கையை வளர்க்கும். 2 தனக்குப் பேர
றிவு இருக்கிறது என்று எண்ணிக்கொள்
கிறவன் தான் அறிய வேண்டிய முறையில்
எதையும் இன்னும் அறிந்துகொள்
ளாதவனே. 3 ஆனால், ஒருவன் கடவுளி
டம் அன்புகொண்டிருப்பானானால், அவனே
அவரால் ஏற்றுக்கொள்ளப்பட்டவனாவான்.
4 தெய்வச்சிலைகளுக்குப் படைக்கப்பட்ட
உணவை உண்பது பற்றிய குறிப்பை
எடுத்துக்கொள்வோம்: ''உலகத்தில் தெய்
வச்சிலை என்பது உள்பொருள் எதையும்
குறிக்கவில்லை'' என்பதும், ''ஒரே கட
வுளைத் தவிர வேறு கடவுள் இல்லை''
என்பதும் நம்மெல்லோருக்கும் தெரியும்.
5 விண்ணிலாவது மண்ணிலாவது தெய்
வங்கள் என்று வணங்கப்படுவோர் இருக்
கலாம். — இத்தகைய தெய்வங்களும் பலர்,
ஆண்டவன்மாரும் பலர். 6 நமக்கோ
கடவுள் ஒருவரே: அவர் நமக்குத் தந்தை.
அவரிடமிருந்தே எல்லாம் வருகின்றன;
அவருக்கென்றே நாம் இருக்கிறோம்.
ஆண்டவரும் ஒருவரே; அவர் இயேசு
கிறிஸ்துவே. அவர் மூலமாக எல்லாம்
உண்டாயின; அவர் மூலமாக நாம் இருக்
கிறோம்.

7 ஆனால், எல்லாருக்கும் இந்த அறிவு
இல்லை. சிலை வழிபாட்டுப் பழக்கத்தால்
அத்தகைய உணவைச் சிலைகளுக்கு உரி
மையாக்கப்பட்ட உணவாகக் கருதி உண்
ணும் சிலர் இப்போதும் இருக்கின்றனர்.
அவர்கள் நம்பிக்கையில் முதிர்ச்சி அடை
யாதவர்களாய் இருப்பதால், அவர்கள்
மனச்சான்று கறைப்படுகிறது. 8 உணவு
நம்மைக் கடவுளுக்கு உகந்தவர்களாக்
காது. 9 உண்ணாதிருப்பதால் நமக்குக்
குறைவுமில்லை, உண்பதால் நமக்கு நிறைவு
மில்லை. ஆனாலும், உங்களுக்கு இருக்கிற
இந்த உரிமை மனவுறுதியற்றவர்களுக்கு
எந்த வகையிலும் பாவக்குழியில் இடறி
விழக் காரணமாயிராதபடி பார்த்துக்
கொள்ளுங்கள். 10 அறிவாளியாகிய நீ
சிலை வழிபாட்டுக் கோவிலில் சாப்பிடு
வதை மனவுறுதியற்ற ஒருவன் கண்டால்,
அவனது மனச்சான்று துணிவுகொள்ளும்;
அவனும் சிலைகளுக்குப் படைக்கப்பட்
டதை உண்பான் அல்லவா? 11 எனவே,
மனவுறுதியற்றவன் உன் அறிவால் கெட்
டழிந்துபோகிறான். அவன், கிறிஸ்து
தம் மரணத்தால் மீட்டுக்கொண்ட உன்
சகோதரனல்லவா? 12 இவ்வாறு நீங்கள்
சகோதரருக்கு விரோதமாகப் பாவம்
செய்து, வலுவற்ற அவர்கள் மனச்
சான்றைப் புண்படுத்துகிறதால், கிறிஸ்
துவுக்கே விரோதமாகப் பாவம் செய்
கிறீர்கள். 13 இதனாலேதான் நான் என்
உணவு என் சகோதரனைப் பாவக்குழியில்
இடறிவிழச் செய்யுமானால், ஒருநாளும்
இறைச்சி உண்ண மாட்டேன்; என் சகோ
தரன் பாவத்தில் இடறிவிழ நான் காரண
மாய் இருக்க மாட்டேன்.

### திருத்தூதுவருடைய உரிமை

9 என் விருப்பம்போல் நடக்க எனக்கு
உரிமை உண்டல்லவா? நான் ஒரு
திருத்தூதுவனல்லவா? நம்முடைய ஆண்
டவராகிய இயேசுவை நேரில் கண்டவ
னல்லவா? நீங்கள், நான் ஆண்டவருக்
காகச் செய்யும் வேலையின் பயனாகத்
தோன்றினவர்களே. 2 நான் திருத்தூது
வன் என்பதை மற்றவர்கள் ஒப்புக்
கொள்ளாவிடினும், நீங்கள் ஒப்புக்கொள்
வீர்கள் என்பது திண்ணம். ஏனெனில்,
நான் திருத்தூதுவன் என்பதற்கு ஆண்ட
வரோடு இணைக்கப்பட்டுள்ள நீங்களே
அடையாளச் சின்னங்கள்.

3 என்னிடம் குற்றம் காண்போருக்கு
நான் கூறும் விளக்கம் இதுவே: 4 உணவும்
பானமும் அருந்த எங்களுக்கு உரிமை
இல்லையா? 5 மற்றத் திருத்தூதுவரும் ஆண்
டவரின் சகோதரரும் கேபாவும் செய்
வதுபோல நாங்களும் எங்கள் கிறிஸ்தவ
மனைவியரை எங்கும் அழைத்துச் செல்ல
எங்களுக்கு உரிமை இல்லையா? 6 மேலும்,
பிழைப்புக்காக வேலை செய்யாதிருக்க மற்ற
வர்களுக்கு உரிமை இருக்கிறதே; எனக்
கும் பர்னபாவுக்கும் மட்டுந்தானா அந்த
உரிமை இல்லை? 7 தன் சொந்தச் செலவில்
எவனாவது போர்வீரனாகப் பணியாற்று
வானா? பழத்தோட்டம் அமைக்கும் எவ
னாவது அதன் கனியைத் தின்னாதிருப்
பானா? ஆடுமாடு மேய்க்கும் எவனாவது
அதன் பாலைப் பருகாதிருப்பானா? 8 மனித
வழக்கத்தை மட்டும் வைத்துக்கொண்டா
நான் இவ்வாறு சொல்லுகிறேன்? நீதிச்
சட்டமும் இவ்வாறுதானே சொல்லு
கிறது? 9 மோசேயின் சட்டத்தில், ''போர
டிக்கும் மாட்டின் வாயைக் கட்டாதே''
என்று எழுதியுள்ளது. மாடுகளைப்பற்றிய
கவலையினாலா கடவுள் இதைச் சொல்

**8:6** ரோ. 11:36; எபே. 4:6. **8:7** எபி. 13:9. **8:13** ரோ. 14:20, 21. **9·9** உபா. 25:4; 1 திமோ. 5:18.

கிறுர்? 10 அல்லது எங்கள் பொருட்டுச்
சொல்கிறுரா? எங்கள் பொருட்டே இது
எழுதப்பட்டுள்ளது. ஏனெனில், உழுகிறவன்
பலன் கிடைக்கும் என்கிற நம்பிக்
கையோடு உழ வேண்டுமே! போரடிக்கிறவன்
விளைச்சலில் பங்கு கிடைக்கும் என்கிற
நம்பிக்கையோடு வேலை செய்ய வேண்டுமே!
11 உங்களிடையே ஆவிக்குரிய
காரியங்களை நாங்கள் விதைத்திருக்க, உங்
களிடமிருந்து உடலுக்கானவற்றை அறு
வடையாகப் பெறுவது மிகையாகாது.
12 உங்களிடமிருந்து இதைப் பெற மற்ற
வர்களுக்கு உரிமை உண்டென்றுல், எங்
களுக்கும் அந்த உரிமை உண்டென்பது
மிகத் திண்ணமல்லவா?

அப்படியிருந்தும் நாங்கள் இந்த உரி
மையைப் பயன்படுத்திக்கொள்ளவில்லை;
கிறிஸ்துவைப்பற்றிய அருட்செய்தி
பரவுவதற்கு எங்களால் எந்த இடை
யூறும் ஏற்படாதபடி நாங்கள் எல்லாவற்றை
யும் தாங்கிக்கொள்கிறோம். 13 கோவிலில்
பணியாற்றுகிறவர்கள் கோவிலி
லிருந்தே உணவைப் பெறுகிறுர்கள்; பீடத்
தில் பலிசெலுத்துகிறவர்கள் பலிப்பொருள்
களில் பங்கு பெறுகிறுர்கள். இது உங்
களுக்குத் தெரியாததா? 14 அவ்வாறே,
அருட்செய்தியை அறிவிக்கிறவர்களுக்கு
அருட்செய்தியினுல் பிழைப்புக் கிடைக்க
வேண்டுமென்று ஆண்டவரும் விதித்திருக்
கிறுர். 15 ஆனுல், நான் இந்த உரிமை
களுள் ஒன்றையும் பயன்படுத்திக்கொள்ள
வில்லை. இவ்வாறு நான் எழுதுவதும்
எனக்கு உரிமையானதைப் பெறுவதற்காக
அன்று. அதைப் பெறுவதைவிடச் சாவதே
எனக்கு நலம். அதை நான் பெறுததால்
எனக்கிருக்கும் பெருமையை நீக்கிவிட
எவனுலும் இயலாது. 16 அருட்செய்தியை
நான் அறிவிக்கிறேனென்றுலும், அதில்
எனக்குப் பெருமை ஒன்றுமில்லை; அது
நான் கட்டாயம் நிறைவேற்ற வேண்டிய
கடமையே. அருட்செய்தியை நான் அறி
வியாவிடில் அழிந்தேபோவேன். 17 நானு
கவே இந்த வேலையை மேற்கொண்டிருந்
தால், ஊதியத்தை நான் எதிர்பார்க்க
லாம். உண்மை என்னவெனில், நானுகவே
அதை மேற்கொள்ளவில்லை; அது என்
கண்காணிப்புக்கு ஒப்படைக்கப்பட்டிருப்
பதால் அதை என் கடமையாகச் செய்து
வருகிறேன். 18 அப்படியானுல், எனக்கு
ஊதியம் ஏது? ஆயினும், அருட்செய்தியை
எவருக்கும் செலவின்றி அறிவிக்கும் பெரு
மையை என் ஊதியமாகக் கொள்கிறேன்.
அச்செய்தியை அறிவிக்கிறவனுக்குரிய உரி
மையைப் பயன்படுத்திக்கொள்ள நான்
விரும்பவில்லை.

19 எவருக்கும் அடிமையாய் இல்லாத
நான், பலரை ஆண்டவருக்குச் சொந்த
மாக்க என்னையே எல்லாருக்கும் அடிமை
யாக்கினேன். 20 யூதரை அவருக்குச்
சொந்தமாக்க, நான் அந்த யூதர் பொருட்டு
யூதனைப் போலானேன். நான் நீதிச்சட்
டத்திற்கு உட்படாதவனுயிருந்தும், நீதிச்
சட்டத்திற்கு உட்பட்டவர்களை அவருக்குச்
சொந்தமாக்க அவர்கள் பொருட்டு நீதிச்
சட்டத்திற்கு உட்பட்டவனைப் போலானேன்.
21 நீதிச்சட்டம் இல்லாதவர்களை
அவருக்குச் சொந்தமாக்க, அவர்கள்
பொருட்டு நீதிச்சட்டம் இல்லாதவனைப்
போலானேன். (ஆனுலும், நான் கடவுளின்
சட்டத்திற்கு உட்படாதவன் என்பது
இதன் பொருளன்று. ஏனெனில், நான்
கிறிஸ்துவின் சட்டத்திற்கு உட்பட்டவனே).
22 நம்பிக்கையில் முதிர்ச்சியடையாதவர்
களை அவருக்கே சொந்தமாக்க அவர்கள்
பொருட்டு நானும் நம்பிக்கையில் முதிர்ச்சி
பெறுதவனைப் போலானேன். எப்படியாவது
ஒரு சிலரையேனும் மீட்கும்படி நான்
எல்லாருக்கும் எல்லாம் ஆனேன். 23 நான்
செய்வதையெல்லாம் அருட்செய்தியின்
பலன் எனக்கும் கிடைக்க வேண்டுமென்று
அருட்செய்தியின் பொருட்டே செய்கிறேன்.

24 ஓட்டப்பந்தயத்தில் ஓட வந்திருப்
போர் எல்லாரும் ஓடினுலும், பரிசு பெறு
பவன் ஒருவனே என்பது உங்களுக்குத்
தெரியாதா? பரிசு கிடைக்கும்படி நீங்
களும் ஓடுங்கள். 25 பந்தயத்தில் போட்டி
யிடுகிற எல்லாரும் தம்மை எல்லா வகை
யிலும் ஒடுக்கிக்கொள்வர். அவர்கள்
வாடிப்போகும் வெற்றிமாலையைப் பெறு
வதற்காக இப்படிச் செய்கிறுர்கள். நாமோ
வாடாத வெற்றி மாலையைப் பெறுவதற்
காக இப்படிச் செய்கிறோம். 26 ஆகை
யால், நான் நோக்கமின்றி ஓடவில்லை,
காற்றை அடிக்கிறவன்போலச் சிலம்ப
மாடவில்லை. 27 நான் என் உடலைக் கடும்
பயிற்சிக்கு உட்படுத்தி, அதை அடிமை
யாக்குகிறேன்; பிறருக்கு அருட்செய்தியை
அறிவிக்கும் நானே அதன் பலனைப் பெறத்
தகுதியற்றவனென்று ஒதுக்கப்படாதபடி
இவ்வாறு செய்கிறேன்.

### சிலை வழிபாட்டைப்பற்றிய எச்சரிக்கை

**10** சகோதரரே, ஒன்றை நீங்கள் தெரிந்து
கொள்ள வேண்டுமென்று விரும்பு
கிறேன். நம் மூதாதையர் எல்லாரும்
மேகத்தால் வழிநடத்தப்பட்டனர்; எல்
லாரும் கடல் வழியாக நடந்து சென்றனர்.
2 மோசேயைச் சேர்ந்தவர்களாய்
இருக்கும்படி, எல்லாரும் இவ்வாறு மேகத்

**9:11** ரோ. *15:27.* **9:13** உபா. *18:1.* **9:14** மத். *10:10;* லூக். *10:7.* **9:25** 2 தீமோ. *4:7* **10:1** யாத். *13:21, 22; 14:22—29;*

திலும் கடலிலும் திருமுழுக்குப் பெற்றனர்.
3 எல்லாரும் ஒரே தெய்வீக உணவை
உண்டனர். 4 எல்லாரும் ஒரே தெய்வீக
பானத்தைப் பருகினர்; தம்மோடு வந்த
தெய்வீக கற்பாறையிலிருந்து தண்ணீர்
குடித்தனர். அந்தக் கற்பாறை கிறிஸ்துவே.
5 ஆயினும், அவர்களுள் பெரும்பான்மையர்
கடவுளுக்கு உகந்தவராயில்லை. அவர்கள்
மடிந்து வனுந்தரமெங்கும் சிதறிக் கிடந்
தார்கள். 6 அவர்கள் தீமையானவற்றை
விரும்பினதுபோல நாமும் விரும்பாதிருக்
கும்படி, இவை நம்மை எச்சரிக்கும் முன்
னடையாள நிகழ்ச்சிகளாயின. 7 அவர்
களுள் சிலர் சிலை வழிபாட்டினராயினர்.
இதைக் குறித்து,

''மக்கள் உண்ணவும் குடிக்கவும்
அமர்ந்தார்கள்,
களியாட்டம் ஆட எழுந்தார்கள்''

என்று வேதத்தில் எழுதியுள்ளது. அவர்
களைப்போல நீங்கள் இருக்க வேண்டாம்.
8 அவர்களுள் ஒழுக்கக்கேடாக நடந்
தோரும் இருந்தனர்; இருபத்து மூவாயிரம்
பேர் ஒரே நாளில் மடிந்து விழுந்தனர்.
அவர்களைப்போல நாமும் ஒழுக்கக்கேடாக
நடவாதிருப்போமாக. 9 அவர்களுள் சிலர்
ஆண்டவரைப் பரிசோதித்துப்பார்த்தனர்.
அவர்களைப்போல நாமும் அவரைப் பரி
சோதித்துப்பார்க்கலாகாது. 10 அவர்களுள்
சிலர் முணுமுணுத்தனர்; அழிக்கும்
தூதனால் அழிக்கப்பட்டனர். அவர்களைப்
போல நீங்களும் முணுமுணுக்காதீர்கள்.
11 அவர்களுக்கு நிகழ்ந்தவை மற்றவர்
களை எச்சரிக்கும் முன்னடையாள நிகழ்ச்
சிகள். இவை நமக்கு அறிவுரையாகவும்
எழுதப்பட்டிருக்கின்றன; ஏனெனில், நாம்
வாழும் இக்காலம் இந்த அடையாள
நிகழ்ச்சிகளின் உண்மைப் பொருள் நிறை
வேற்றம் பெற்றுவரும் காலமாகும்.
12 ஆகையால், தான் நிலையாய் நிற்ப
தாக நினைத்துக்கொண்டிருப்பவன் விழா
திருக்கும்படி விழிப்பாயிருப்பானாக. 13 உங்
களுக்கு வந்த ஒவ்வொரு சோதனையும்
மனிதருக்கு இயல்பாக வரும் சோதனையே
யன்றி வேறன்று. கடவுள் வாக்குத்
தவறாதவர். வெல்ல முடியாத சோத
னைக்கு உள்ளாகும்படி அவர் உங்களை
விட்டுவிடமாட்டார். சோதனை வரும்
போது அதனால் அசைக்கப்படாதிருக்க
உங்களுக்கு ஆற்றலளித்து, அதனின்று
நீங்கள் தப்பவும் வழி செய்வார்.

14 ஆகையால், எனக்கு அன்பார்ந்த
வர்களே, சிலை வழிபாட்டிற்கு அறவே
விலகியிருங்கள். 15 நீங்கள் அறிவுடைய
வர்கள் என்பதால் இவ்வாறு பேசுகிறேன்.
நான் சொல்வதை நீங்களே சிந்தித்து
முடிவுசெய்யுங்கள். 16 'நன்றிப் பாத்தி
ரத்தை' நாம் எடுத்துக் கடவுளுக்குத் துதி
செலுத்தி, அதிலுள்ளதைப் பருகுவதன்
மூலம், கிறிஸ்துவின் இரத்தத்தினால் வரும்
பலனில் நம்மெல்லோருக்கும் பங்கு கிடைக்
கிறது அல்லவா? நாம் அப்பத்தைப் பிட்டு
அதை உட்கொள்வதன் மூலம், கிறிஸ்து
வின் உடலில் நம்மெல்லோருக்கும் பங்கு
கிடைக்கிறது அல்லவா? 17 நாம் பிட்
கிறது ஒரே ஓர் அப்பமாயிருந்தாலும்,
அந்த ஒரே அப்பத்தில் நாமெல்லோரும்
பங்குகொள்வதாலும், நாம் பலராயிருந்
தாலும் ஒரே உடலாயிருக்கிறோம். 18 இஸ்ர
வேல் மக்களைப் பாருங்கள்; பலிப்
பொருள்களை உண்கிறவர்களுக்குப் பலி
பீடத்தினால் வரும் உறவில் பங்கு கிடைக்
கிறது அல்லவா? 19 அப்படியானால்,
நான் சொல்வதன் பொருள் என்ன?
தெய்வச் சிலைகளுக்குப் படைக்கப்பட்
டதைப் பொருட்படுத்த வேண்டுமென்றா
சொல்லுகிறேன்? தெய்வச் சிலையை ஒரு
பொருட்டாக மதிக்க வேண்டுமென்றா
சொல்லுகிறேன்?இல்லவே இல்லை. 20ஆனால்,
அவற்றை வணங்குவோர் அவற்றிற்குப்
படைக்கிறவற்றைக் கடவுளுக்கு
அன்று, பேய்களுக்கே படைக்கிறார்கள்
என்றுதான் நான் சொல்லுகிறேன். நீங்
கள் பேய்களோடு உறவுகொள்வதை
நான் விரும்பவில்லை. 21 ஆண்டவரின்
பாத்திரத்தில் அருந்தும் நீங்கள் பேய்
களின் பாத்திரத்திலும் அருந்தலாகாது;
ஆண்டவரின் பந்தியில் பங்குகொள்ளும்
நீங்கள் பேய்களின் பந்தியிலும் பங்கு
கொள்ளலாகாது. 22 நாம் ஆண்டவருக்கு
எரிச்சல் உண்டாகும்படி செய்யலாமா?
அவரை எதிர்க்கும் ஆற்றல் நமக்கு
உண்டா?

### எல்லாவற்றையும் கடவுளின் மாட்சிமைக் கென்றே செய்க

23 ''எதையும் செய்ய எனக்கு உரிமை
உண்டு.'' சரிதான். ஆனால், எல்லாம்
நற்பயன் தரக்கூடியவை அல்ல. ''எதை
யும் செய்ய எனக்கு உரிமை உண்டு.''
ஆனால், எல்லாம் சபையின் பொது
வாழ்க்கை வளர்ச்சிக்கு ஏற்றவையல்லவே.
24 எவனும் தன் நலத்தை முதலில் நாடா
மல், பிறர் நலத்தையே முதலில் நாடு
வானாக. 25 கடையில் விற்கும் எந்த
இறைச்சியையும் நீங்கள் வாங்கி உண்ண

10:3 யாத். 16:35. 10:4 யாத். 17:6; எண். 20:11. 10:5 எண். 14:29, 30. 10:6 எண். 11:4. 10:7 யாத். 32:6. 10:8 எண். 25:1—16. 10:9 எண். 21:5, 6. 10:10 எண். 16:41—49. 10:16 மத். 26:26—28; மாற். 14: 22—24; லூக். 22:19, 20. 10:18 லேவ. 7:6. 10:20 உபா. 32:17. 10:22 உபா. 32:21. 10:23 1 கொரி. 6:12.

லாம். மனச்சான்று தயங்கினாலும், கேள்வி
எதுவும் கேட்கத் தேவையில்லை. 26 ஏனெ
னில், மண்ணுலகும் அதிலுள்ளவை
அனைத்தும் ஆண்டவருடையதே. 27 ஆண்
டவரிடம் நம்பிக்கை கொள்ளாத ஒரு
வன் உங்களை விருந்துக்கு அழைக்கும்
போது, அதற்குப் போக நீங்கள் விரும்
பினால் போங்கள்; உங்களுக்குப் பரிமாறப்
படுவது எதுவாயினும் அதை உண்ணுங்
கள்; மனச்சான்று தயங்கினாலும், கேள்வி
எதுவும் கேட்கத் தேவையில்லை. 28 ஆயி
னும், ''இது ஒரு சுவாமிக்குப் படைக்கப்பட்
டது'' என்று யாராவது உங்களுக்குச்
சொன்னால், அவ்வாறு தெரிவித்தவனை
முன்னிட்டும் மனச்சான்றை முன்னிட்டும்
அதை உண்ணாதீர்கள். 29 நான் குறிப்
பிடுவது உங்கள் மனச்சான்று அன்று,
மற்றவன் மனச்சான்றேயாகும்.

''ஏன் வேறொருவன் மனச்சான்று என்
சொல்லுரிமையைக் கட்டுப்படுத்த வேண்
டும்? 30 நான் நன்றியுணர்ச்சியோடு எதை
யும் உண்டால், நன்றி செலுத்திவிட்டு
உண்ணும் அந்த உணவு காரணமாக ஏன்
நான் பழிச்சொல்லுக்கு ஆளாகவேண்டும்?''
என்று ஒருவன் கேட்கலாம்.

31 நான் சொல்லுகிறேன்: நீங்கள்
உண்டாலும் குடித்தாலும் வேறெதைச்
செய்தாலும், எல்லாவற்றையும் கடவுளின்
மாட்சிமைக்கென்றே செய்யுங்கள்.
32 யூதருக்கோ, கிரேக்கருக்கோ கடவுளின்
திருச்சபைக்கோ இடையூறாயிராதீர்கள்.
33 நானும் அவ்வாறே எனக்கு நல
மானதை நாடாமல், நான் செய்யும்
எல்லாவற்றிலும் எல்லாருக்கும் உகந்த
வனாய் நடந்து, அவர்களுக்கு நலமான
வற்றையே நாடி வருகிறேன். எல்லாரும்
மீட்படைய வேண்டுமென்பதே என்
நோக்கம்.

11 நான் கிறிஸ்துவைப் பார்த்து நடக்
கிறதுபோல, நீங்கள் என்னைப்
பார்த்து நடவுங்கள்.

### வழிபாட்டில் பெண்கள் முக்காடிடுதல்

2 நீங்கள் எப்போதும் என்னை நினைவில்
வைத்து, நான் உங்களிடம் ஒப்புவித்த
பரம்பரைப் போதனைகளை நான் ஒப்பு
வித்தவாறே கடைப்பிடித்து வருவதால்,
நான் உங்களைப் பாராட்டுகிறேன். 3 ஒன்றை
நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டுமென்று
விரும்புகிறேன்: ஒவ்வோர் ஆண்மகனுக்கும்
தலையாயிருப்பவர் கிறிஸ்து. பெண்
ணுக்குத் தலையாயிருப்பவன் ஆண்மகன்;
கிறிஸ்துவுக்குத் தலையாயிருப்பவர் கடவுள்.
4 ஜெபம் செய்யும்போது அல்லது இறை
வாக்குரைக்கும்போது, தன் தலையை
மூடிக்கொள்ளும் எந்த ஆண்மகனும்
தனக்குத் தலையாயிருப்பவரை இழிவுபடுத்து
கிறான். 5 ஜெபம் செய்யும்போது
அல்லது இறைவாக்குரைக்கும்போது, தன்
தலைக்கு முக்காடிடாத எந்தப் பெண்ணும்
தனக்குத் தலையாயிருப்பவனை இழிவுபடுத்
துகிறாள்; அது அவள் தலையை மழித்து
விட்டதற்குச் சமமாகும். 6 ஒரு பெண்
முக்காடிட்டுக்கொள்ளாவிடில் கூந்தலை
வெட்டிக்கொள்ளட்டும். கூந்தலை வெட்டு
வதோ மழித்துவிடுவதோ பெண்ணுக்கு
இழிவு என்பதால், அவள் தலைக்கு முக்
காடிட்டுக்கொள்ளட்டும். 7 ஆண்மகன்
தன் தலையை மூடிக்கொள்ள வேண்டுவ
தில்லை; ஏனெனில், அவன் கடவுளின்
சாயலையும் அவரது மாட்சியையும் பிரதி
பலிக்கிறவனாயிருக்கிறான். பெண்ணோ ஆண்
மகனது மாட்சியைப் பிரதிபலிக்கிறவளா
யிருக்கிறாள். 8 பெண்ணிலிருந்து ஆண்
தோன்றவில்லை; ஆண்மகனிலிருந்தே பெண்
தோன்றினாள். 9 மேலும், பெண்ணுக்காக
ஆண் உண்டாக்கப்படவில்லை; ஆணுக்
காகத்தான் பெண் உண்டாக்கப்பட்டாள்.
10 ஆகையால், தெய்வதூதர்களை முன்
னிட்டுப் பெண் தன் தலையில் அதிகாரச்
சின்னமாகிய முக்காட்டை அணிந்து
கொள்ள வேண்டும். 11 ஆயினும், ஆண்ட
வரோடு இணைக்கப்பட்ட நிலையில், ஆண்
பெண் இருபாலாரும் ஒருவரையொருவர்
சார்ந்திருப்பவர்களே. 12 ஏனெனில், ஆண்
மகனிலிருந்து பெண் தோன்றினதுபோல,
பெண்ணால் ஆண் தோன்றுகிறான்; ஆனால்
யாவும் கடவுளிடமிருந்தே வருகின்றன.
13 கடவுளை நோக்கி மன்றாடும்போது, பெண்
முக்காடின்றி இருப்பது முறையாகுமா?
நீங்களே சிந்தித்து முடிவு செய்யுங்கள்.
14 ஆண்மகன் தலைமுடியை நீளமாக
வளர்ப்பது அவனுக்கு இழிவு என்பதை
யும், 15 பெண் தலைமுடியை நீளமாக
வளர்ப்பது அவளுக்குப் பெருமை என்ப
தையும் இயற்கையே உங்களுக்குக் கற்
பிக்கிறதன்றோ? தலைமுடி அவளுக்கு ஒரு
போர்வையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.
16 இதைப்பற்றி எவனாவது வாக்குவாதம்
செய்ய விரும்பினால், அவன் இதைத்
தெரிந்துகொள்ளட்டும். வழிபாட்டில்
பெண்கள் முக்காடின்றி இருக்கும் வழக்கம்
எங்களிடையேயும் இல்லை, கடவுளின்
திருச்சபை எதிலும் இல்லை.

### திருவிருந்து நடக்கும்போது இருந்த சில தவறான வழக்கங்கள்

17 இந்த அறிவுரைகளைக் கூறுகையி
லேயே நான் வேறொன்றைக் குறிப்பிட

10:26 சங். 24:1; 50:12. 10:31 கொலோ. 3:17; 1 பேது. 4:11. 10:33 ரோ. 15:2. 11:1 1 கொரி. 4:16; பிலி. 3:17. 11:7 ஆதி. 1:26, 27. 11:8, 9 ஆதி. 2:18—23.

விரும்புகிறேன்; அதைப்பற்றி நான் உங்
களைப் பாராட்டுவதற்கில்லை. நீங்கள்
ஒன்றுகூடும்போது நன்மையன்று தீமை
தான் விளைவதாகத் தெரிகிறது. 18 முத
லாவதாக, நீங்கள் ஒரு சபையாகக் கூடும்
போது உங்களிடையே வெவ்வேறு பிரி
வுகள் காணப்படுவதாக் கேள்விப்படு
கிறேன். அதை நான் ஓரளவு நம்பு
கிறேன். 19 உங்களிடையே உட்பிரிவுகள்
இருக்க வேண்டியதுதான்; அதன்மூலம்
மெய்யடியார்கள் யாரென்பது வெளி
யாகும். 20 நீங்கள் ஒன்றுகூடும்போது உண்
ணும் விருந்து ஆண்டவரின் விருந்து
என்று சொல்வதற்கில்லை. 21 ஏனென்
றால், நீங்கள் உண்ணும் நேரத்தில் ஒவ்
வொருவனும் தன் சொந்த உணவை
உண்பதற்கு முந்திக்கொள்கிறான். அவ்
வாறு செய்வதால், ஒருவனுக்குப் பசி
ஆறாதிருக்க, வேறொருவன் குடிவெறிகொள்
கிறான். 22 உண்ணவும் குடிக்கவும் உங்
களுக்கு வீடுகள் இல்லையா? அல்லது இல்லாத
வர்களை வெட்கப்படுத்திக் கடவுளின் திருச்
சபையை இழிவுபடுத்துவது உங்கள் நோக்
கமா? இதைக் குறித்து நான் உங்களுக்
குச் சொல்லக்கூடியது என்ன? உங்களைப்
பாராட்டுவதா? இதற்காக நான் உங்களை
எப்படிப் பாராட்டுவது?

### திருவிருந்து ஏற்பாடு

(மத். 26:26—29 மாற். 14:22—25;
லூக். 22:14—20)

23 நான் ஆண்டவரிடமிருந்து கற்றுக்
கொண்டதையே உங்களுக்குக் கற்றுக்
கொடுத்தேன். அதாவது, ஆண்டவராகிய
இயேசு தாம் காட்டிக்கொடுக்கப்பட்ட
அதே இரவில், அப்பத்தை எடுத்து, நன்றி
செலுத்தி, அதைப் பிட்டு, 24 ''இது உங்
களுக்காகக் கொடுக்கப்படுகிற என் உடல்;
என்னை நினைவுகூரும்படி இதைச் செய்யுங்
கள்'' என்றார். 25 உணவு உண்டபின்
அவர் அவ்வாறே பாத்திரத்தையும் எடுத்து,
''இந்தப் பாத்திரம் என் இரத்தத்தின்
மூலம் ஏற்படும் புதிய உடன்படிக்கை;
நீங்கள் இதைப் பருகும்போதெல்லாம்
என்னை நினைவுகூரும்படி இவ்வாறு செய்து
வாருங்கள்'' என்றார். 26 எனவே, நீங்கள்
இந்த அப்பத்தை உண்டு, இந்தப் பாத்தி
ரத்தில் பருகும்போதெல்லாம், ஆண்டவர்
வரும் வரையில் அவரது மரணத்தை
வெளிப்படையாக அறிவிக்கிறீர்கள்.

### திருவிருந்தில் தகுதியற்ற முறையில் பங்கு கொள்வதைப்பற்றி

27 ஆகையால், எவன் தகுதியற்ற
வகையில் ஆண்டவரின் அப்பத்தை உண்டு
அவரது பாத்திரத்தில் பருகுகிறானோ
அவன் ஆண்டவரின் உடலையும் இரத்தத்
தையும் இழிவுபடுத்தும் குற்றம் செய்கிறவ
னாவான். 28 ஒவ்வொருவனும் தன் உள்
ளத்தைச் சோதித்துப் பார்த்தபின், இந்த
அப்பத்தை உண்டு இந்தப் பாத்திரத்தில்
பருகுவானாக. 29 ஏனெனில், இதுவே
அவரது உடல் என்பதை உணராமல்
உண்டு பருகுகிறவன் தனக்குத் தண்டனைத்
தீர்ப்பு வரும்படி உண்டு பருகுகிறவனா
வான். 30 அதனாலேதான் உங்களிடையே
பலர் வலுவற்றோராயும் நோயுற்றோ
ராயும் இருக்கின்றனர்; சிலர் இறந்தும்
போயினர். 31 நம்மை நாமே ஆராய்ந்து
அறிந்திருந்தோமானால் இவ்வகையான
தண்டனைத் தீர்ப்புக்கு நாம் ஆளாகி
யிருக்கமாட்டோம். 32 இறுதியில் நாம்
உலகத்தாரோடு தண்டனைத் தீர்ப்புப்
பெறாதபடி, ஆண்டவர் நம் குற்றங்
களுக்காக நம்மை இப்போதே தண்டித்துத்
திருத்துகிறார். 33 ஆகையால், என்
சகோதரரே, நீங்கள் இந்த விருந்தை
உண்ண ஒன்றுகூடும்போது, ஒருவருக்காக
ஒருவர் காத்திருக்க வேண்டும். 34 ஒரு
வனுக்குப் பசித்தால் அவன் வீட்டிலேயே
உணவு கொள்ளட்டும்; அப்பொழுது
நீங்கள் ஒன்றுகூடுவது உங்களுக்குத் தண்
டனைத் தீர்ப்பை வருவிக்காது. மற்றக்
காரியங்களை நான் வரும்போது ஒழுங்கு
படுத்துகிறேன்.

### ஆவியானவர் அருளும் வரங்கள்

12 சகோதரரே, ஆவியானவர் அருளும்
வரங்களைப்பற்றிய குறிப்பை எடுத்
துக்கொள்வோம். அவற்றைப்பற்றி நீங்
கள் நன்கு அறிய வேண்டுமென்று விரும்பு
கிறேன். 2 நீங்கள் மெய்க் கடவுளை அறி
யாதவர்களாய் இருந்த காலத்தில், பற்
பல ஆவிகளால் ஏவப்பட்டு, ஊமையான
தெய்வச் சிலைகளை வணங்கும்படி எவ்வ
ளவு ஆவலோடு ஓடினீர்கள் என்பது உங்
களுக்குத் தெரியும். 3 ஆகையால் நான்
உங்களுக்குச் சொல்லுவது இதுவே: கட
வுளின் ஆவியால் ஆட்கொள்ளப்பட்டுப்
பேசுகிற எவனும், ''இயேசு ஒழிக''
என்று சொல்ல மாட்டான். அவ்வாறே,
தூய ஆவியானவரால் ஆட்கொள்ளப்பட்
டாலன்றி, ''இயேசு ஆண்டவராயிருக்
கிறார்'' என்று யாராலும் சொல்ல
இயலாது.

4 வரங்கள் பலவகைப்படும்; அவற்றை
அருளும் ஆவியானவரோ ஒருவர். 5 திருப்
பணிகள் பலவகைப்படும்; ஆண்டவரோ
ஒருவர். 6 ஆற்றல்மிக்க செயல்கள் பல

**11:23, 24** மத். 26:26—28; மாற். 14:22—24; லூக். 22:17—19; 1 கொரி. 10:16, 17. **11:25** யாத். 24:6—8; எரே. 31:31—34. **11:32** உபா. 8:5; திருவெளி. 3:19. **12:4—11** ரோ. 12:6—8.

வகைப்படும்; கடவுளோ ஒருவர். அவரே எல்லாருக்கும் எல்லாச் செயல்களையும் செய்ய ஆற்றலளிப்பவர்.
7 நம்முள் ஒவ்வொருவனைக் கொண்டும் ஆவியானவர் வெளிப்படையாகச் செயலாற்றுவது பொது நன்மைக்கென்றே.
8 ஆவியானவரால் ஒருவனுக்கு ஞானம் நிறைந்த பேச்சு அருளப்படுகிறது; அதே ஆவியானவரால் இன்னொருவனுக்கு அறிவு நிறைந்த பேச்சு அருளப்படுகிறது.
9 அதே ஆவியானவரால் வேறொருவனுக்கு ஆண்டவரைப் பற்றும் நம்பிக்கையும், அந்த ஒரே ஆவியானவரால் இன்னொருவனுக்குப் பிணி தீர்க்கும் வரமும்,
10 இன்னொருவனுக்கு வல்லமைச் செயல்களைச் செய்யும் ஆற்றலும், இன்னொருவனுக்கு இறைவாக்குரைக்கும் வரமும், இன்னொருவனுக்கு ஆவிகளை வேறுபடுத்திக் கண்டறியும் திறமையும், வேறொருவனுக்குப் பலவகையான பரவசப் பேச்சும், இன்னொருவனுக்கு அதை விளக்கும் திறமையும் அருளப்படுகின்றன.
11 அந்த ஒரே ஆவியானவரின் ஆற்றலே இவற்றிலெல்லாம் வெளிப்படுகிறது. அவரே தம் விருப்பப்படி ஒவ்வொருவனுக்கும் வெவ்வேறான வரத்தை அளித்துச் செயலாற்றிவருகிறார்.

### பல உறுப்புகளாலான ஒரே உடல்

12 உடல் ஒன்றே; அதன் உறுப்புகளோ பல. உடலின் உறுப்புகள் பலவாயினும், அவையெல்லாம் சேர்ந்து ஒரே உடலாயிருப்பதுபோல, கிறிஸ்துவும் இருக்கிறார்.
13 நாம் யூதராயினும் கிரேக்கராயினும் அடிமைகளாயினும் தன்னுரிமையோடு வாழ்கிறவர்களாயினும், எல்லாரும் ஒரே ஆவியினால் ஒரே உடலில் இணைந்திருக்கும்படி திருமுழுக்குப் பெற்றோம்; ஒரே ஆவியே நம்மெல்லாருக்கும் பானமாக அளிக்கப்பட்டது.
14 உடல் ஓர் உறுப்பால் ஆனதன்று; பல உறுப்புகளால் ஆனது.
15 காலானது தான் கையாயிராததால், தான் உடலைச் சேர்ந்த உறுப்பன்று என்று சொன்னால், அதனால் அது உடலைச் சேராதது என்றாகிவிடுமா?
16 காதானது, தான் கண்ணாயிராததால், தான் உடலைச் சேர்ந்த உறுப்பன்று என்று சொன்னால், அதனால் அது உடலைச் சேராதது என்றாகிவிடுமா?
17 முழு உடலுமே கண்ணாயிருந்தால், கேட்பது எப்படி? முழு உடலுமே காதாயிருந்தால், முகர்ந்தறிவது எப்படி?
18 உண்மையில், கடவுள் தமது திருவுளப்படி ஒவ்வோர்உறுப்பையும் உடலில் அதனதன் வேலையைச் செய்யும்படி அமைத்திருக்கிறார்.
19 அவை யாவும் ஒரே உறுப்பாயிருந்தால் உடல் என்று ஒன்று இருக்குமா?
20 உண்மையில் உறுப்புகள் பல; உடலோ ஒன்றுதான்.
21 கண்ணானது கையைப் பார்த்து, ''நீ எனக்குத் தேவையில்லை'' என்று சொல்ல இயலாது. தலையானது கால்களைப் பார்த்து, ''நீங்கள் எனக்குத் தேவையில்லை'' என்று சொல்லவும் இயலாது.
22 பார்க்கப்போனால், வலுவற்றதாகத் தோன்றும் உறுப்புகளே மிகவும் தேவையாயிருக்கின்றன.
23 நமக்கு மதிப்பற்றவையாகத் தோன்றும் உறுப்புகளுக்கு நாம் மிகுந்த மதிப்பைக் கொடுத்து வருகிறோம். நம் உடலிலுள்ள இழிந்த உறுப்புகள் தனிக் கவனம் பெறுகின்றன.
24 உயர்வான உறுப்புகளுக்கு அது தேவையில்லை. உடலை அமைத்தவர் கடவுளே. அவர் குறைந்த மதிப்புள்ளதற்கு மிகுந்த மதிப்புக் கொடுத்து அதை அமைத்திருக்கிறார்.
25 உடலில் பிரிவினை ஏற்படாதபடியும், உறுப்புகள் ஒன்றின்மீது ஒன்று அக்கறை கொள்ளும்படியும் இப்படிச் செய்திருக்கிறார்.
26 ஓர் உறுப்பு வருந்தினால், எல்லா உறுப்புகளும் அதனோடு சேர்ந்து வருந்தும்; ஓர் உறுப்பு மேன்மை அடைந்தால், எல்லா உறுப்புகளும் அதனோடு சேர்ந்து மகிழ்ச்சியடையும்.

27 நீங்களே கிறிஸ்துவின் உடல்; ஒவ்வொருவரும் அதன் தனித்தனி உறுப்புகள்.
28 திருச்சபையில் கடவுள் முதலாவதாகத் திருத்தூதுவரையும், இரண்டாவதாக இறைவாக்குரைப்போரையும், மூன்றாவதாகப் போதகர்களையும் ஏற்படுத்தினார். அதன்பின் வல்லமைச் செயல்களைச் செய்வோர், பிறகு பிணிதீர்க்கும் வரமுடையோர், பிறருக்கு உதவி செய்வோர், ஆளும் திறமையுடையோர், பரவசப்பட்டுப் பலவகையாகப் பேசுவோர் ஆகியோரை ஏற்படுத்தினார்.
29 எல்லாருமே திருத்தூதுவரா? எல்லாருமே இறைவாக்கு உரைக்கிறார்களா? எல்லாருமே போதகர்களா? எல்லாருமே வல்லமைச் செயல்களைச் செய்கிறவர்களா?
30 எல்லாருக்குமே பிணிதீர்க்கும் வரம் உண்டா? எல்லாருமே பரவசப் பேச்சுப் பேசுகிறார்களா? எல்லாருமே அப்பேச்சுகளுக்கு விளக்கம் கூறுகிறார்களா?
31 மேலான வரங்களையே நீங்கள் ஆர்வத்துடன் நாட வேண்டும்.

இப்பொழுது எல்லாவற்றையும் விடச் சிறந்த நெறி ஒன்றை நான் உங்களுக்குக் காட்டுகின்றேன்.

### அன்பு

13 மனிதர் மொழிகளிலும் தூதர் மொழிகளிலும்,

12:12 ரோ. 12:4, 5. 12:28 எபே. 4:11.

பேசும் ஆற்றலை நான் பெற்றிருந்தாலும்,
அன்பு என்னுள் இல்லையென்றால்,
வெற்றொலி செய்யும் வெண்கல மாவேன்,
கலகலவென்று ஒலி தருகின்ற தாளமுமாவேன்.

2 இறைவாக்கு உரைக்கும் வரம் எனக்கிருந்தாலும்,
தெய்வீக மறைபொருள் யாவுமெனக்குத் தெரிந்திருந்தாலும்,
அறிவுநெறிகள் அனைத்தும் நான் அறிந்திருந்தாலும்,
மலைகளைப் பெயர்த்தகற்றும் அளவுக்கு,
என் நம்பிக்கை நிறைவு பெற்றிருந்தாலும்,
அன்பு என்னுள் இல்லையென்றால்,
நான் ஒன்றுமில்லை.

3 வறியவருக்கு உணவளிக்க எனக்குள்ளதெல்லாம்
நான் அள்ளி வழங்கினாலும்,
எரிப்பதற்கென என்னுடலை ஈந்துவிட்டாலும்,*
அன்பு என்னுள் இல்லையென்றால்,
சிறப்பு எதுவும் எனக்கு இல்லை.

4 அன்பிற்குப் பொறுமையுண்டு,
இரக்கமுண்டு,
அன்பு பொறாமை கொள்ளாது,
தற்புகழ்ச்சி செய்யாது;

5 இறுமாப்பு அடையாது, இழிவானதைப் புரியாது.
தன்னலம் நாடாது, எரிச்சல் கொள்ளாது.
குற்றத்தை நினைவில் வைக்காது.

6 அறம் குலைவதுகண்டு அகமகிழாது;
உண்மை தழைத்தால் உளமாரக் களிக்கும்,

7 குற்றம் எதையும் மன்னிக்க விரையும்,
கடவுளிடம் என்றும் நம்பிக்கையோடிருக்கும்,
எதிர்காலம் பற்றிய நம்பிக்கை எப்போதும் அதற்குண்டு;
பொறுமையுடன் எதையும் தாங்கிக் கொள்ளும்.

8 இறைவாக்கு உரைக்கும் வரம் இல்லாமற்போகும் காலம் வரும்;
பரவசப்பட்டுப் பேசும் வரம் அற்றுப்போகும் காலமுண்டு,
அறிவும் அற்றுப்போகும் காலம் வரும்;
அன்பிற்கோ ஒருபோதும் அழிவென்பதில்லை.

9 நமது அறிவும் குறைவுள்ளது,
நாம் உரைக்கும் இறைவாக்கும் குறைவுள்ளது.

10 நிறைவுள்ளது வரும்போது குறைவுள்ளது மறைந்துவிடும்.

11 குழந்தையாய் நான் இருந்தபோது,
குழந்தைபோலப் பேசினேன்,
குழந்தைபோல உணர்ந்தேன்,
குழந்தைபோலச் சிந்தித்தேன்;
பெரியவனானபோதோ குழந்தைக்கடுத்தவற்றை அறவே நான் விட்டுவிட்டேன்.

12 இப்போது நாம் கண்ணாடியில் காண்பதுபோல நிழலுருவைக் காண்கிறோம்.
அப்போதோ முகமுகமாய் நாம் காணப்போகின்றோம்.
இப்போது என் அறிவு குறைவாக இருக்கின்றது,
அப்போதோ என்னைப்பற்றிக் கடவுளுக்குள்ள அறிவைப்போல,
என் அறிவு நிறைவு பெற்றுவிடும்.

13 எனவே, நிலையாய் இருப்பவை மூன்றே;
கடவுளிடம் நம்பிக்கையும் எதிர் காலம் பற்றிய நம்பிக்கையும் அன்புமே.
இவற்றுள் தலைசிறந்தது அன்பே.

### பரவசப் பேச்சும் இறைவாக்கும்

14 அன்பிற்கே முதலிடம் கொடுங்கள்;
ஆவியானவர் அருளும் வரங்களையும்
ஆவலோடு நாடுங்கள்; ஆனால் சிறப்பாக,
இறைவாக்கு உரைக்கும் வரத்தை அடையப்பாருங்கள். 2 ஏனெனில், பரவசப்
பட்டுப் பேசுகிறவன் மனிதரோடன்று,
கடவுளோடு பேசுகிறான்; அவன் பேசுவது
எவருக்கும் விளங்குவதுமில்லை. அவன்
ஆவியானவரால் ஆட்கொள்ளப்பட்டுத்
தெய்வீக மறைசெய்திகளைச் சொல்லு
கிறான். 3 இறைவாக்கு உரைப்பவனோ
மனிதரோடு பேசி, சபையின் பொது
வாழ்க்கை வளர்ச்சியையும் ஊக்கத்தையும்
ஆறுதலையும் தருகிறான். 4 பரசவப்பட்டுப்
பேசுகிறவன் தன் சொந்த ஆன்மீக வாழ்க்
கையில் வளர்ச்சியடைகிறான். இறை
வாக்கு உரைப்பவனோ சபையின் பொது
வாழ்க்கை வளர்ச்சியடையும்படி செய்
கிறான். 5 நீங்கள் அனைவருமே பரவசப்
பேச்சுப்பேசுகிறவர்களாய் இருக்கவேண்டும்
என்பது என் விருப்பந்தான். ஆனால்,
அதைவிட மிகுதியாக நான் விரும்புவது
எதுவெனில், நீங்கள் இறைவாக்கு உரைக்
கிறவர்களாய் இருக்க வேண்டும் என்பதே.
பரவசப் பேச்சுப் பேசுகிறவனுடைய
கருத்து, சபையின் பொதுவாழ்க்கை வளர்ச்சி
யடையும்படி விளக்கப்பட வேண்டும்.
இல்லாவிடில், இறைவாக்கு உரைப்பவனே
அவனைவிட மேலானவனாவான்.

* 'தற்பெருமைகொள்ள என்னை ஒரு தியாகியாக்கிக்கொண்டாலும்' என்பதும் பாடம்.
13:2 மத். 17:20; 21:21; மாற். 11:23. 13:12 1 யோ. 3:2.

6 சகோதரரே, நான் உங்களிடம் வந்து
திருவெளிப்பாடு, மெய்யறிவு, இறை
வாக்கு, போதனை இவற்றுள் ஒன்றையும்
உங்களுக்கு எடுத்துரைக்காமல், உங்கள்
முன் பரவசப் பேச்சு மட்டும் பேசினே
னால் என்னால் நீங்கள் அடையும் பயன்
என்ன? 7 குழல் அல்லது யாழ் போன்ற
உயிரற்ற இசைக் கருவிகளை எடுத்துக்
கொள்வோம். அவை எழுப்பும் சுரங்
களிடையே வேறுபாடு இல்லாவிடில்,
குழலோ யாழோ எழுப்புவது இன்ன
இசை என்பது எப்படித் தெரியும்?
8 மேலும், எக்காளமானது போர்முழக்
கத்தைத் தெளிவாக ஒலிக்காவிடில், எவன்
போருக்குப் புறப்படுவான்? 9 அவ்வாறே,
நீங்கள் விளங்கக்கூடிய வகையில் நாவினால்
உச்சரிக்காவிடில், பேசுவதன் பொருள்
எப்படித் தெரியும்? உங்கள் பேச்சுக் காற்
றோடுதான் போகும். 10 உலகில் எத்
தனையோ வகையான மொழிகள் இருக்
கின்றன; அவற்றுள் பொருள் தராதது
ஒன்றுமே இல்லை. 11 ஒரு மொழியில்
தெரிவிக்கப்படும் பொருள் எனக்குத்
தெரியாவிட்டால், பேசுகிறவன் ஏதோ
உளறுகிறான் என்று நான் நினைப்பேன்;
அவனும் என்னைப்பற்றி அவ்வாறே நினைப்
பான். 12 நீங்கள் செய்வது இவ்வாறு
தான் இருக்கிறது. ஆகவே, ஆவியானவர்
அருளும் வரங்களை ஆவலோடு நாடும்
நீங்கள், சபையின் பொது வாழ்க்கையை
வளர்க்கும் வரங்கள் எவையோ அவற்
றிலே மேம்பாடடையப்பார்க்க வேண்டும்.
13 எனவே பரவசப்பட்டுப் பேசுகிற
வன், விளக்கங்கூறும் வரமும் தனக்குக்
கிடைக்கும்படி ஜெபம் செய்யட்டும்.
14 நான் பரவசப் பேச்சில் ஜெபம் செய்
கிறபோது, எனக்கு அருளப்பட்ட ஆவி
ஜெபம் செய்கிறது, என் மனம் செயல்
புரியவில்லை. 15 அப்படியானால், நான்
செய்ய வேண்டுவது என்ன? அந்த ஆவி
யால் ஆட்கொள்ளப்பட்டும் ஜெபம் செய்ய
வேண்டும், அறிவோடும் ஜெபம் செய்ய
வேண்டும். ஆவியால் ஆட்கொள்ளப்பட்
டுப் புகழ் பாட வேண்டும், அறிவோடும்
புகழ் பாட வேண்டும். 16 இல்லாவிடில்,
நீ ஆவியால் ஆட்கொள்ளப்பட்டவனாய்
மட்டும் நன்றி செலுத்தும்போது, அருகே
உட்கார்ந்திருக்கும் ஆள் உன் நன்றி
ஜெபத்திற்கு எப்படி 'ஆமேன்' என்று
சொல்லுவான்? 17 நீ சொல்லுவது அவ
னுக்கு விளங்காதே! நீ அழகான முறையில்
நன்றி செலுத்தியிருக்கலாம்; ஆனால்,
அடுத்தவன் அதனால் பயன் பெறமாட்
டான். 18 உங்கள் எல்லாரையும்விட மிகு
தியாக என்னால் பரவசப் பேச்சுப் பேச
இயலும்; அதற்காகக் கடவுளுக்கு நன்றி
செலுத்துகிறேன். 19 ஆயினும், சபை
யிலே பரவசப்பட்ட நிலையில் பத்தாயிரம்
சொற்களைச் சொல்வதைவிட மற்றவர்
களுக்குப் போதிக்கும் வகையில் ஐந்தே
சொற்களை அறிவோடு சொல்வதையே
நான் விரும்புகிறேன்.

20 சகோதரரே, சிந்திப்பதைப் பொருத்த
வரையில் குழந்தைகளைப்போல இராதீர்
கள்; பொல்லாங்கு செய்வதைப் பொருத்த
வரையில் அறியாக் குழந்தைகளாயும் சிந்
திப்பதில் முதிர்ந்தவர்களாயும் இருங்கள்.
21 வேதத்தில்,

''வேற்று மொழியினரைக் கொண்டும்,
அன்னியர் நாவுகளைக் கொண்டும் இந்த
மக்களோடு பேசுவேன்;
அப்பொழுதும் இவர்கள் எனக்குச்
செவிசாய்க்க மாட்டார்கள் என்று
ஆண்டவர் சொல்லுகிறார்''

என எழுதியுள்ளது. 22 ஆகவே, பர
வசப் பேச்சு, நம்பிக்கை உள்ளவர்களுக்
கென்று அல்ல, நம்பிக்கை இல்லாதவர்
களுக்கென்றே கடவுள் பயன்படுத்தும்
கருவி. இறைவாக்கு உரைத்தலோ, நம்
பிக்கை இல்லாதவர்களுக்கென்று அல்ல,
நம்பிக்கை உள்ளவர்களுக்கென்றே அவர்
பயன்படுத்தும் கருவி. 23 முழுச் சபையும்
ஒன்றுகூடியிருக்கையில், எல்லாரும் பர
வசப்பட்ட நிலையில் பேசிக்கொண்டிருக்
கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம்.
அப்பொழுது சில ஆள்கள் அல்லது ஆண்
டவரைப் பற்றும் நம்பிக்கை இல்லாத
வர்கள் உள்ளே வந்தால், அவர்கள் உங்
களைப் பைத்தியக்காரர் என்று சொல்ல
மாட்டார்களா? 24 ஆனால், எல்லாரும்
இறைவாக்கு உரைத்துக்கொண்டிருக்கும்
போது, ஆண்டவரைப் பற்றும் நம்பிக்கை
இல்லாத ஒருவனோ வேறோர் ஆளோ
உள்ளே வந்தால், ஒவ்வொருவரும் கூறு
வது அவனது குற்றத்தை அவனுக்கு
உணர்த்திக் காட்டும். அவன் குற்றவாளி
என்று தீர்ப்புக் கூறும். 25 அவன் உள்
ளத்தில் மறைந்து கிடப்பவை வெளி
யாகும். அப்பொழுது அவன் முகங்கவிழ்ந்து
கடவுளைப் பணிந்து, ''மெய்யாகவே
கடவுள் உங்களிடையே இருக்கிறார்''
என்று வெளிப்படையாக அறிவிப்பான்.

## யாவற்றையும் ஒழுங்குடன் செய்க

26 அப்படியானால், சகோதரரே, என்ன
முடிவுக்கு வருவது? நீங்கள் ஒன்றுகூடும்
போது, ஒருவன் துதிப்பாடல் பாடலாம்,
ஒருவன் போதனை செய்யலாம், ஒருவன்
கடவுள் வெளிப்படுத்தினதை எடுத்துரைக்

**14:21** ஏசா. 28:11, 12. **14:25** ஏசா. 45:14; சக. 8:23.

கலாம். ஒருவன் பரவசப்பட்டுப் பேச
லாம், அதை ஒருவன் விளக்கலாம்.
ஆனால், எல்லாம் சபையின் பொதுவாழ்க்
கையை வளர்க்கும் வகையில் நடைபெற
வேண்டும். 27 பரவசப்பட்டுப் பேசுவதா
யிருந்தால், இருவர் பேசலாம்; மிஞ்சி
னால் மூவர் பேசலாம். அவர்களும் ஒரு
வர்பின் ஒருவராகப் பேச வேண்டும்.
பிறகு ஒருவன் விளக்கங்கூறட்டும். 28 விளக்
கங்கூற யாரும் இல்லாவிட்டால், பர
வசப்பட்டுப் பேசும் அவர்கள் சபையில்
பேசாமல், தங்கள் தங்கள் உள்ளத்தி
லேயே கடவுளோடு பேசட்டும். 29 இறை
வாக்குரைப்போர் இருவர் அல்லது மூவர்
பேசலாம்; அவர்கள் பேசுவதை மற்றவர்
கள் சீர்தூக்கிப்பார்க்கட்டும். 30 அங்கே
இருக்கும் வேறொருவனுக்கு அப்போது
கடவுள் எதையாவது வெளிப்படுத்தினால்,
முன் பேசிக்கொண்டிருந்தவன் பேசுவதை
நிறுத்த வேண்டும். 31 நீங்கள் எல்லாருமே
இறைவாக்கு உரைக்கலாம். ஆனால்,
நீங்கள் ஒருவர்பின் ஒருவராய்ப் பேசினால்,
எல்லாரும் கற்றுக்கொள்ளவும் ஆறுத
லடையவும் வழியிருக்கும். 32 இறைவாக்
குரைப்போர் தாம் பெறும் தூண்டுதல்
களைத் தம் கட்டுப்பாட்டிற்குள் வைத்
திருக்க வேண்டும். 33 ஏனெனில், கட
வுள் அமளியை உண்டாக்குகிறவர் அல்ல,
அமைதி நிலவும்படி செய்கிறவர்.

ஆண்டவருடைய அடியாரின் எல்லாத்
திருச்சபைகளிலும் பெண்கள் பேசாதிருப்
பதுபோல, 34 உங்கள் திருச்சபை
யிலும் அவர்கள் பேசாதிருக்கட்டும். பேச
அவர்களுக்கு அனுமதி இல்லை; அவர்கள்
அடக்கமாயிருக்க வேண்டும்; நீதிச்சட்ட
மும் இவ்வாறே கூறுகிறது. 35 அவர்கள்
எதையாவது தெரிந்துகொள்ள விரும்
பினால், வீட்டிலே தங்கள் கணவரிடம்
அதைக் கேட்டுத் தெரிந்துகொள்ளட்டும்.
ஒரு பெண் சபையில் பேசுவது நாணக்
குறைவான செயல் அல்லவா? 36 கடவுளின்
செய்தி உங்களிடமிருந்துதான்
தோன்றினதென்றோ, அது உங்களுக்கு
மட்டுந்தான் வந்தது என்றோ நீங்கள்
நினைக்கிறீர்கள் போலும்.

37 ஒருவன் தன்னை இறைவாக்குரைப்
பவன் என்றோ, ஆவியினால் நடத்தப்படு
கிறவன் என்றோ எண்ணினால், நான் உங்
களுக்கு எழுதுவதும் ஆண்டவரின் கட்
டளை என்பதை அவன் தெரிந்துகொள்
ளட்டும். 38 ஒருவன் இதை மதிக்கவில்லை
யென்றால், அவன் மதிப்பிற்குரியவனல்ல.

39 ஆகையால், சகோதரரே, இறை
வாக்கு உரைக்கும் வரத்தைப் பேராவ
லோடு நாடுங்கள்; பரவசப் பேச்சுப் பேசு
வதைத் தடுக்காதீர்கள். 40 ஆனால், எல்
லாம் நல்ல முறையிலும் ஒழுங்காகவும்
நடைபெற வேண்டும்.

## கிறிஸ்துவின் உயிர்த்தெழுதல்

15 சகோதரரே, நான் உங்களுக்கு அறி
வித்த நற்செய்தியை உங்களுக்கு
நினைப்பூட்டி, அதன் பொருளை விளக்க
விரும்புகிறேன்; அந்த நற்செய்தியை
நீங்கள் ஏற்றுக்கொண்டீர்கள்; அதிலே
நிலைத்தும் நிற்கிறீர்கள். 2 அதனால் நீங்கள்
மீட்புப் பெற்றுவருகிறீர்கள். நான் அறி
வித்த அந்த நற்செய்தியை நீங்கள் அப்படியே
பற்றிக்கொண்டிருக்கிறீர்கள் என்றும்,
அதில் நீங்கள் வைத்துள்ள நம்பிக்கை
உறுதியானது என்றும் வைத்துக்
கொண்டு நான் இப்படிச் சொல்லுகிறேன்.

3 நான் கற்றுக்கொண்டதும், முதன்
மையானதாகக் கருதி உங்களுக்குக் கற்றுக்
கொடுத்ததும் என்னவெனில், கிறிஸ்து
வேதவாக்கியங்களின்படி நம்முடைய பாவங்
களுக்காக மரணமடைந்தார்; 4 அடக்கம்
செய்யப்பட்டு, வேதவாக்கியங்களின்படியே
மூன்றும் நாள் உயிரோடெழுப்பப்பட்
டார்; 5 பிறகு கேபாவுக்கும் அதன்பின்
பன்னிருவருக்கும் காட்சியளித்தார். 6 பிற்
பாடு அவர் ஐநூற்றுக்கும் மேற்பட்ட
சகோதரருக்கு ஒரே சமயத்தில் காட்சி
யளித்தார். (அவர்களுள் பெரும்பான்மை
யர் இந்நாள் வரையிலும் இருக்கின்
றனர்; சிலரோ துஞ்சிவிட்டனர்). 7 பிறகு
யாக்கோபுக்கும் அதன்பின் திருத்தூதுவர்
அனைவருக்கும் காட்சியளித்தார். 8 எல்லா
ருக்கும் கடைசியில், உரிய காலத்திற்கு
முன் பிறந்த பிறவிபோன்ற எனக்கும்
காட்சியளித்தார். 9 நான் திருத்தூது
வருள் மிகச் சிறியவன். கடவுளின் திருச்
சபையைத் துன்புறுத்தினதால், திருத்தூது
வன் என்னும் பெயர் பெறவும் தகுதி
யற்றவன். 10 என்றாலும், கடவுளின் அரு
ளால் நான் இப்போது இந்த நிலையை
அடைந்திருக்கிறேன். அவர் எனக்களித்த
அந்த அருள் வீணாகப் போகவில்லை. நான்
அவர்கள் எல்லாரையும்விட மிகுதியாகவே
உழைத்திருக்கிறேன். ஆனால், உண்மை
யில் நான் உழைக்கவில்லை; உழைத்தது
என்னோடிருக்கும் கடவுளின் அருளே.
11 மிகுதியாக உழைத்தது நானோ அவர்
களோ, யாராயிருந்தாலும், நாங்கள்
யாவரும் இதையே அறிவித்துவருகிறோம்;
இதையே நீங்களும் நம்பி ஏற்றுக்
கொண்டீர்கள் என்பதே குறிப்பிடத்தக்க
தாகும்.

14:34 1 தீமோ. 2:11, 12. 15:3 ஏசா. 53:5—12. 15:4 சங். 16;8—10; மத். 12:40; திருத்தூது. 2:24—32. 15:5 லூக். 24:34, 36; யோ. 20:19. 15:8 திருத்தூது. 9:3—6. 15:9 திருத்தூது. 8:3.

### இறந்தோரின் உயிர்த்தெழுதல்

12 கிறிஸ்து இறந்தோரிடமிருந்து உயி
ரோடெழுப்பப்பட்டார் என்று அறிவிக்கப்
பட்டிருக்க, உங்களுள் சிலர் இறந்தோ
ருக்கு உயிர்த்தெழுதல் இல்லை என்று
சொல்வது எப்படி? 13 இறந்தோருக்கு
உயிர்த்தெழுதல் இல்லையென்றால்,
கிறிஸ்துவும் உயிரோடெழுப்பப்படவில்லை
என்றாகும். 14 கிறிஸ்து உயிரோடெழுப்பப்
படவில்லையென்றால், நாங்கள் அறிவிக்கும்
செய்தியும் பொருளற்றதாகும், உங்கள்
நம்பிக்கையும் பொருளற்றதாகும்.
15 மேலும், நாங்கள் கடவுளின் பொய்ச்
சாட்சிகளாய்க் காணப்படுவோம். எப்படி
யெனில், கடவுள் கிறிஸ்துவை உயிரோ
டெழுப்பினார் என்று நாங்கள் அவரைப்
பற்றிச் சாட்சி கூறினோம். ஆனால், இறந்
தோர் உயிரோடெழுப்பப்படுவதில்லை என்
பது உண்மையானால், கடவுள் கிறிஸ்துவை
உயிரோடெழுப்பவில்லை என்றாகும்.
16 இறந்தோர் உயிரோடெழுப்பப்படுவ
தில்லையென்றால், கிறிஸ்துவும் உயிரோ
டெழுப்பப்படவில்லை என்றாகிறது அல்
லவா? 17 கிறிஸ்து உயிரோடெழுப்பப்
படவில்லையென்றால், உங்கள் நம்பிக்கை
பயனற்றதே. நீங்கள் இன்னும் பாவ
மன்னிப்புப் பெறாத நிலையிலேயே இருக்
கிறீர்கள் என்றுமாகும். 18 மேலும், கிறிஸ்
துவினிடம் நம்பிக்கை கொண்டவர்களாய்த்
துஞ்சினவர்களும் அழிந்துபோனவர்களா
வார்கள். 19 இம்மைக்கென்று மட்டும்
நாம் கிறிஸ்துவை நம்பி வாழ்கிறோமென்
றால், எல்லா மனிதருள்ளும் நாமே மிக
மிக இரங்குதற்குரியவர்களாவோம்.

20 ஆனால், கிறிஸ்து மெய்யாகவே உயி
ரோடெழுப்பப்பட்டார். அவர் முதலில்
உயிரோடெழுப்பப்பட்டது, துஞ்சினோர்
அனைவரும் உயிரோடெழுப்பப்படுவர் என்
பதை உறுதி செய்கிறது. 21 சாவு
நிகழ்வதும் ஒரு மனிதனாலேயே,
செத்தோரின் உயிர்த்தெழுதல் நிகழ்வதும்
ஒரு மனிதனாலேயே. 22 எல்லாரும்
ஆதாமோடு இணைக்கப்பட்டவர்களாய்
இறப்பதுபோல, எல்லாரும் கிறிஸ்
துவோடு இணைக்கப்பட்டவர்களாய் உயிர்
பெற்றெழுவர். 23 ஒவ்வொருவனும் அவ
னவனுக்கு விதித்துள்ள ஒழுங்கின்படி
உயிர்பெற்றெழுவான்: இறந்தோரின்
உயிர்த்தெழுதலை உறுதி செய்கிறவராகக்
கிறிஸ்து முதலில் உயிர்த்தெழுந்தார்.
அடுத்தபடியாக, அவருக்குரியவர்கள் உயிர்த்
தெழுவார்கள். அது அவர் மீண்டும்
வரும்போது நடக்கும். பிறகுதான் முடிவு
வரும். 24 அப்போது அவர் ஆவி
யுலகில் ஆட்சி நடத்துவோர், அதிகாரி
கள், வல்லமையுடையோர் ஆகிய அனை
வரையும் ஒழித்துவிட்டு, கடவுளும் தந்தையு
மானவரிடம் ஆட்சியை ஒப்படைப்பார்.
25 பகைவர் அனைவரையும் கடவுள் கிறிஸ்
துவின் பாதத்தின் கீழடக்கும் வரையி
லும் கிறிஸ்துவே ஆட்சி செலுத்த வேண்டு
மென்பது கடவுளின் திருவுளமாகும்.
26 ஒழிக்கப்படும் கடைசிப் பகைவன்
மரணம். 27 ''எல்லாவற்றையும் அவரு
டைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தினார்''
என்று எழுதியுள்ளது. எல்லாம் அவருக்குக்
கீழ்ப்பட்டன என்று சொல்லும்போது,
'எல்லாம்' என்பதில் கடவுள் சேர்க்கப்
படவில்லை என்பது தெளிவு; ஏனெனில்,
எல்லாவற்றையும் கிறிஸ்துவுக்குக் கீழ்ப்
படுத்தினவர் கடவுளே. 28 எல்லாம்
கிறிஸ்துவுக்குக் கீழ்ப்பட்டிருக்கும்போது,
மைந்தராகிய அவரே எல்லாவற்றையும்
தமக்குக் கீழ்ப்படுத்தின கடவுளுக்குக்
கீழ்ப்பட்டிருப்பார்; அப்பொழுது கடவுள்
எல்லாருக்கும் எல்லாமாயிருப்பார்.

29 மேலும், இறந்தவர்களுக்காகத் திரு
முழுக்குப் பெறுகிறவர்களுடைய செய்கை
யின் நோக்கமென்ன? இறந்தோர் உயி
ரோடெழுப்பப்படுவதில்லையென்றால், அவர்
களுக்காகத் திருமுழுக்குப் பெறுவானேன்?
30 நாங்களும் எந்நேரமும் ஆபத்து
களுக்கு உட்பட்டு உழைப்பானேன்?
31 சகோதரரே, நான் நாள்தோறும்
சாகிறேன். இது உண்மை; நம்முடைய
ஆண்டவராகிய கிறிஸ்து இயேசுவோடு
நாம் இணைக்கப்பட்டிருக்கிற நிலையில்,
நான் உங்களைப்பற்றிப் பெருமை கொள்
வது உண்மையாயிருப்பதுபோல இதுவும்
உண்மை. 32 நான் எபேசு நகரத்தில்
கொடிய விலங்குகளைப் போன்ற மனித
ரோடு போராடினேன்; அதை நான்
மாண்டழிந்துபோகும் ஒரு மனிதனாகச்
செய்திருந்தால், அதனால் எனக்கு என்ன
பயன்? இறந்தோர் உயிரோடெழுப்பப்
படுவதில்லையென்றால்,

''உண்போம் குடிப்போம் வாருங்கள்,
ஏனெனில், நாளைக்குச் சாகப்போகிறோம்''

என்று சொல்லலாமே! 33 உங்களை ஏவ
ரும் ஏமாற்றுவதற்கு இடங்கொடாதீர்
கள். ''தீய நட்பு நல்லொழுக்கத்தைக்
கெடுக்கும்.'' 34 மயக்கம் நீங்கித் தெளி
வடையுங்கள், பாவ வழிகளை விட்டுவில
குங்கள். உங்களுள் சிலருக்குக் கடவுளைப்
பற்றிய அறிவே இல்லை. நீங்கள் வெட்கப்
பட வேண்டுமென்றே இவற்றையெல்லாம்
சொல்லுகிறேன்.

### உயிர்த்தெழும் நிலை எத்தகையது ?

35 ''இறந்தவர்களை மீண்டும் எழுப்ப
முடியுமா? அவர்கள் எத்தகைய உடலோடு

15:25 சங். 110:1. 15:27 சங். 8:6. 15:32 எசா. 22:13; ஞாக். 12:19

வருவார்கள்?'' என்று ஒருவன் கேட்கலாம்.
36 மதிகேடனே, நீ விதைக்கிற விதை
மடியாவிடில், அது உயிர் பெறுது.
37 முளைத்துவரும் உருவத்தில் நீ அதை
விதைக்கவில்லை; வெறும் கோதுமை மணி
யையோ வேறெந்த மணியையோ நீ
விதைக்கிருய். 38 ஆனுல், கடவுள் அதற்குத்
தாம் விரும்புகிற உருவத்தைத் தருகிருர்;
விதைகளுள் ஒவ்வொரு வகைக்கும்
அந்தந்த வகைக்குரிய உருவத்தைத்
தருகிருர். 39 எல்லா ஊனும் ஒரே வகை
யான ஊனன்று. மனிதரின் ஊன் வேறு,
விலங்குகளின் ஊன் வேறு, பறவைகளின்
ஊன் வேறு, மீன்களின் ஊன் வேறு.
40 விண்ணைச்சார்ந்த மேனிகளும் உண்டு,
மண்ணைச் சார்ந்த மேனிகளும் உண்டு.
விண்ணைச்சார்ந்த மேனிகளின் அழகு வேறு,
மண்ணைச் சார்ந்த மேனிகளின் அழகு வேறு.
41 கதிரவனின் ஒளி வேறு, நிலவின் ஒளி
வேறு, விண்மீன்களின் ஒளி வேறு; ஒளி
யில் விண்மீனுக்கு விண்மீன் வேறுபடு
கிறது.

42 இறந்தோரின் உயிர்த்தெழுதலும்
அவ்வாறே இருக்கும். விதைக்கப்படுவது
அழிவிற்குரியது, உயிரோடெழுப்பப்படு
வதோ அழியாதது. 43 விதைக்கப்படுவது
பெருமையற்றது, உயிரோடெழுப்பப்படு
வதோ மாட்சிமையுள்ளது; விதைக்கப்படு
வது வலிமை குறைந்தது, உயிரோடெ
ழுப்பப்படுவதோ வலிமை நிறைந்தது.
44 விதைக்கப்படுவது ஊன் இயல்பான
உடல்; உயிரோடெழுப்பப்படுவது ஆவி
இயல்பான உடல்; ஊன் இயல்பான
உடல் உண்டு என்ருல், ஆவி இயல்பான
உடலும் உண்டு. 45 வேதத்தில் எழுதி
யுள்ளது என்னவென்ருல், முதல் மனித
ஞகிய ஆதாம் உயிருள்ள ஆள் ஆனுன்
என்பதே. கடைசி ஆதாமோ உயிர்தரும்
ஆவியானுர். 46 ஆவி இயல்பானது முந்
தியதன்று, ஊன் இயல்பானதே முந்
தியது; ஆவி இயல்பானது பிந்தியதே.
47 முதலாம் மனிதன் மண்ணிலிருந்து வந்
தவன், மண்ணுலானவன்; இரண்டாம்
மனிதரோ விண்ணிலிருந்து வந்தவர்.
48 மண்ணுலானவன் எப்படியோ அப்
படியே மண்ணுலான யாவரும் இருப்பர்;
விண்ணுக்குரிய இவர் எப்படியோ அப்
படியே விண்ணுக்குரிய யாவரும் இருப்பர்.
49 நாம் மண்ணுலானவனின் சாயலை
உடையவர்களாயிருப்பதுபோல, விண்ணுக்
குரியவரின் சாயலையும் உடையவர்களா
வோம்.

50 சகோதரரே, நான் சொல்வது
இதுவே: மனிதர், ஊனும் இரத்தமும்
உள்ள நிலையில், வாக்களிக்கப்பட்ட
கடவுளின் ஆட்சிக்குட்பட இயலாது; அழி
விற்குரியது அந்த அழியா நிலையை
அடையவும் இயலாது. 51 மறைபொரு
ளானதொன்றை உங்களுக்கு நான் இப்
போது சொல்லப்போகிறேன்: கடைசி
எக்காளம் முழங்கும். அதற்குள் நம்முள்
சிலர் இறந்துபோயிருப்பினும், அவர்
களும் நாமும் ஒரு நொடிப்பொழுதில்,
கண்ணிமைப்பு நேரத்திலே மாறுதலடை
வோம். 52 ஆம், எக்காளம் முழங்கும்,
இறந்தோர் அழிவில்லாதவர்களாய் அப்
போது உயிர்த்தெழுவர்; நாமும் மாறுத
லடைவோம். 53 ஏனெனில், அழிவிற்
குரிய இந்த உடல் அழியாமையை அணிந்
தாக வேண்டும், சாவுக்குரிய இந்த உடல்
சாகாமையை அணிந்தாக வேண்டும். 54 அழி
விற்குரிய இந்த உடல் அழியாமையையும்
சாவுக்குரிய இந்த உடல் சாகாமையையும்
அணிந்திருப்பதே வேதத்தில் எழுதியுள்ள
இவ்வாக்கின் நிறைவேற்றமாகும்:

''வெற்றி! வெற்றி! மரணம் விழுங்கப்
பட்டுவிட்டது!''

55 ''மரணமே, எங்கே உன் வெற்றி?
மரணமே, உன் கொடுக்கு என்ன
வாயிற்று?''

56 மரணத்தைக் கொடுக்குள்ளதாக்குவது
பாவம்; பாவத்தை வலிமையுள்ளதாக்கு
வது திருச்சட்டம். 57 நம்முடைய ஆண்
டவராகிய இயேசுகிறிஸ்துவின் மூலம்
நமக்கு வெற்றி கிடைக்கச் செய்கிற
கடவுளுக்கு நன்றி. 58 என் அன்பார்ந்த
சகோதரரே, ஆண்டவரோடு இணைக்கப்
பட்ட நிலையில் நீங்கள் காட்டும் உழைப்பு
வீண்போகாது என்பதை நீங்கள் அறிந்து
உறுதியோடிருங்கள்; ஒரே நிலையில் நில்
லுங்கள்; ஆண்டவரின் ஊழியத்தில்
எப்போதும் மேம்பட்டு விளங்குங்கள்.

### கடவுளுக்குரிய மக்களுக்காக நன்கொடை சேர்த்தல்

**16** கடவுளுக்குரிய மக்களுக்காக நன்
கொடை சேர்த்தல் பற்றிய குறிப்பை
எடுத்துக்கொள்வோம். கலாத்தியா நாட்டுத்
திருச்சபையாருக்கு நான் வகுத்துக்
கொடுத்த திட்டத்தின்படியே நீங்களும்
செய்யுங்கள். 2 வாரத்தின் முதல் நாளில்
உங்களுள் ஒவ்வொருவனும் தன்தன் வரு
வாய்க்கேற்றபடி ஒரு தொகையை
எடுத்துச் சேமித்து வைத்திருக்கட்டும். அப்
படிச் செய்தால், நான் உங்களிடம்
வந்திருக்கும்போது, நன்கொடை திரட்ட
வேண்டிய தேவை இராது. 3 நான் வந்த
பின், நீங்கள் யார் யாரைத் தகுதியுடைய

15:45 ஆதி. 2:7. 15:51, 52 1 தெச. 4:15—17. 15:54 ஏசா. 25:8. 15:55 ஓசே. 13:14; திருவெளி. 20:14. 16:1 ரோ. 15:25, 26.

வர்களென்று குறிப்பிடுகிறீர்களோ அவர்
களை எருசலேமுக்கு உங்கள் நன்கொடையைக்
கொண்டுபோகும்படி கடிதங்கள்
கொடுத்து அனுப்பிவைப்பேன். 4 நானும்
போவது நல்லதென்று தோன்றினால்,
நான் போவேன்; அவர்கள் என்னோடு
வரட்டும்.

## பயணத் திட்டம்

5 நான் மக்கெதோனியா நாடு வழி
யாகப் பயணம் செய்யப்போகிறேன். மக்கெ
தோனியா நாட்டைக் கடந்தபின் உங்
களிடம் வருவேன்; 6 வந்து, ஒருவேளை
சிறிது காலம் உங்களோடு தங்கியிருப்
பேன்; குளிர்காலம் முடியுமட்டும் தங்கி
னாலும் தங்குவேன். பிறகு நான் செல்ல
வேண்டிய இடத்திற்கு நீங்கள் எனக்குத்
தேவையான உதவியைக் கொடுத்து அனுப்
பலாம். 7 இப்போது போகிற வழியில்
அப்படியே உங்களைப் பார்த்துவிட்டுப்
போக நான் விரும்பவில்லை. ஏனெனில்,
ஆண்டவர் திருவுளங்கொள்வாரானால்,
சிறிது காலம் உங்களோடு தங்கியிருக்க
இயலும் என்று நினைக்கிறேன். 8 பெந்தெ
கொஸ்தே பண்டிகை* வரையிலும் நான்
இங்கே எபேசு பட்டினத்திலேயே இருப்
பேன். 9 ஏனெனில், இங்கே எதிர்ப்போர்
ஏராளமாய் இருந்தபோதிலும், பயனுள்ள
வகையில் பணியாற்ற எனக்கு நல்ல
தொரு வழி திறந்திருக்கிறது.

10 தீமோத்தேயு வந்தால், அவர் உங்க
ளிடையே தங்கியிருக்கும்போது, அவருக்கு
உங்களைக் குறித்து அச்சம் உண்
டாகாதபடி நடந்துகொள்ளுங்கள்;
அவரும் என்னைப்போலவே ஆண்டவரின்
வேலையைச் செய்து வருகிறார். 11 எனவே,
யாரும் அவரை இழிவாகக் கருதக்கூடாது.
அவர் என்னிடம் திரும்பிவந்து சேரும்படி
அவரைச் சமாதானத்தோடு வழி
யனுப்பி வையுங்கள். இங்குள்ள சகோ
தரரும் நானும் அவருக்காகக் காத்திருக்
கிறோம்.

12 இப்பொழுது சகோதரன் அப்
பொல்லோவைப்பற்றிய குறிப்பை எடுத்
துக்கொள்வோம். மற்றச் சகோதரருடன்
உங்களை வந்து பார்க்கும்படி நான்
அவரை வருந்திக் கேட்டுக்கொண்டேன்.
ஆனால் இப்போது வர அவருக்கு மன
மில்லை; வாய்ப்புக் கிடைக்கும்போது
வருவார்.

## முடிவுரை

13 விழிப்பாயிருங்கள்; ஆண்டவரிடம்
கொண்டுள்ள நம்பிக்கையில் நிலைத்திருங்
கள்; துணிவும் மன உறுதியும் உள்ளவர்
களாய் நடந்துகொள்ளுங்கள். 14 எல்லா
வற்றையும் அன்போடு செய்யுங்கள்.

15 சகோதரரே, ஸ்தேபனாவின் வீட்
டாரை உங்களுக்குத் தெரியும்; அகாயா
நாட்டில் முதன்முதல் கிறிஸ்துவினிடம்
நம்பிக்கை கொண்டவர்கள் அவர்களே.
அவர்கள் கடவுளுக்குரிய மக்களுக்குப் பணி
புரியத் தங்களையே ஒப்புவித்தவர்கள்.
16 இத்தகையோரையும், அவர்களோடு
ஒத்துழைக்கும் ஊழியர் அனைவரையும்
நீங்கள் உங்கள் தலைவர்களாக மதிக்க
வேண்டுமென்று உங்களைக் கேட்டுக்கொள்ளு
கிறேன். 17 ஸ்தேபனா, பொர்த்து
நாத்து, அகாயிக்கு என்பவர்கள் வந்தது
எனக்கு மகிழ்ச்சி. நீங்கள் என்னோடு இல்
லாத குறையை அவர்கள் நீக்கினார்கள்.
18 அவர்கள் என் உள்ளத்தையும் உங்கள்
உள்ளத்தையும் குளிரச் செய்தார்கள்.
இத்தகையோரை உயர்வாக மதியுங்கள்.

19 ஆசியா நாட்டுத் திருச்சபையிலுள்ள
வர்கள் உங்களுக்கு வாழ்த்துக் கூறு
கிறார்கள். ஆக்கிலாவும் பிரிஸ்காளும்,
அவர்கள் வீட்டில் கூடும் சபையாரும்
உங்கள் உடன் அடியார்களாக உங்களுக்குக்
கூறும் வாழ்த்துகள் பல. 20 சகோ
தரர் அனைவரும் உங்களுக்கு வாழ்த்துக்
கூறுகின்றனர். நீங்களும் ஒருவரையொருவர்
தூய முத்தத்தால் வாழ்த்துங்கள்.

21 பவுலாகிய நான் என் கைப்பட
எழுதி வாழ்த்துக் கூறுகிறேன்.

22 எவனாவது ஆண்டவர் மீது அன்பு
கொள்ளாதிருப்பானானால், அவன்மீது சாபம்
சுமர்வதாக. மாரனா தா. †

23 ஆண்டவராகிய இயேசுவின் அருள்
உங்களோடிருப்பதாக!

24 உங்களோடு கிறிஸ்து இயேசுவின்
அடியானாயிருக்கும் நான் உங்கள் அனை
வருக்கும் என் அன்பைத் தெரிவித்துக்
கொள்ளுகிறேன்.

* திருத்தூது. 2:1 அடிக்குறிப்பைப் பார்க்க.
† பவுல் பயன்படுத்தும் இந்த அரமேயச் சொற்றொடரின் பொருள், 'ஆண்டவரே, வாரும்' என்பது.
16:5 திருத்தூது. 19:21. 16:8, 9 திருத்தூது. 19:8—10. 16:10 1 கொரி. 4:17. 16:15 1 கொரி. 1:16. 16:19 திருத்தூது. 18:2.

# பவுல் கொரிந்தியருக்கு எழுதின இரண்டாம் கடிதம்

### வாழ்த்து

1 கடவுளின் திருவுளப்படி கிறிஸ்து
இயேசுவின் திருத்தூதுவனாயிருக்கும்
பவுலும் சகோதரனாகிய தீமோத்தேயுவும்,
கொரிந்துவிலிருக்கும் கடவுளின் திருச்
சபைக்கும், அகாயா நாடு முழுவதிலு
முள்ள கடவுளுக்குரிய மக்கள் அனைவருக்
கும் எழுதுவதாவது: 2 நம்முடைய
தந்தையாகிய கடவுளிடமிருந்தும் ஆண்டவ
ராகிய இயேசுகிறிஸ்துவிடமிருந்தும்
உங்களுக்கு அருளும் நலமும் உண்டாகுக!

### கடவுளைப் போற்றுதல்

3 நம்முடைய ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவின் கடவுளும் தந்தையுமானவர்
போற்றுதலுக்குரியவர்; அவர் இரக்கம்
நிறைந்த தந்தையார், நிறைவான ஆறு
தலளிக்கும் கடவுள். 4 எங்களுக்குத்
துன்பம் வரும் நேரங்களிலெல்லாம் ஆறுத
லளிப்பவர் அவரே. ஆகையால், நாங்கள்
எங்களுக்கு அவர் அளிக்கும் அதே
ஆறுதலைக் கொண்டு, எத்தகைய துன்பத்தில்
இருக்கிறவர்களுக்கும் ஆறுதலளிக்கக்
கூடியவர்களாயிருக்கிறோம். 5 கிறிஸ்து
அடைந்த பாடுகளை நாங்கள் எங்கள்
வாழ்க்கையில் மிகுதியாக அடைய அடைய,
கிறிஸ்துவின் மூலம் எங்களுக்குக் கிடைக்
கும் ஆறுதலும் மிகுதியாகப் பெருகு
கிறது. 6 நாங்கள் துன்பத்திற்குள்ளானால்,
அதனால் உங்களுக்கு ஆறுதலும் மீட்பும்
கிடைக்கும். நாங்கள் ஆறுதல் அடைந்
தால், அதனாலும் உங்களுக்கு ஆறுதல்
கிடைக்கும். அந்த ஆறுதல், நாங்கள்
படும் அதே பாடுகளை நீங்களும் ஏற்றுத்
தாங்கிக்கொள்ள உங்களுக்கு ஆற்றலளிக்
கும். 7 உங்களைப் பற்றி எங்களுக்கு உறுதி
யான நம்பிக்கை உண்டு; ஏனெனில்,
எங்கள் பாடுகளில் நீங்கள் பங்கு கொள்வது
போல, எங்கள் ஆறுதலிலும் நீங்கள்
பங்கு கொள்வீர்கள் என்பதை நாங்கள்
அறிவோம்.

8 சகோதரரே, ஆசியாவில் எங்களுக்கு
நேரிட்ட கொடிய துன்பத்தைப் பற்றி
நீங்கள் அறிய வேண்டுமென்று விரும்பு
கிறோம். அங்கே நாங்கள் தாங்கவொண்ணா
வேதனைக்குள் ஆழ்த்தப்பட்டோம்;
பிழைப்போம் என்கிற நம்பிக்கையே அற்
றுப்போயிற்று. 9 மரணதண்டனைத் தீர்ப்புப்
பெற்றுவிட்டோம் என்றே நாங்கள்
எண்ணிக்கொண்டிருந்தோம். ஆனால், நாங்
கள் எங்களை நம்பியிராமல், இறந்தோரை
உயிர்ப்பிக்கிற கடவுளையே நம்பியிருக்க
வேண்டும் என்பதற்காக இவ்வாறு
நடந்தது. 10 சாகும் நிலையிலிருந்து அவரே
எங்களைப் பன்முறை விடுவித்தார்;
இனியும் அப்படியே விடுவிப்பார். நாங்கள்
அவரையே நம்பியிருக்கிறோம். ஆம், நீங்கள்
எங்களுக்காக மன்றாடித் துணைபுரிந்து
வருவதால், இனிமேல் அவர் அப்படியே
எங்களை விடுவிப்பார். 11 பலருடைய
மன்றாட்டுகள் காரணமாக இவ்வாறு எங்
களுக்கு அருள் கிடைக்கும்போது, அதன்
பொருட்டுப் பலர் கடவுளுக்கு நன்றி
செலுத்துவர்.

### பவுலின் பயணத் திட்டத்தில் மாற்றம்

12 நாங்கள் பொதுவாக மக்களிடையே,
குறிப்பாக உங்களிடையே, மனித ஞானத்
தின்படி நடவாமல், கடவுளின் அருளைத்
துணையாகக்கொண்டு, அவர் அளிக்கின்ற
நேர்மையோடும் உள்ளத்தின் தூய்மை
யோடும் நடந்துவந்தோம். எங்கள்
மனச்சான்றும் இவ்வாறே கூறுகிறது;
இதிலே நாங்கள் பெருமைகொள்கிறோம்.
13 எங்கள் கடிதங்களில் நீங்கள் படித்
துப் புரிந்துகொள்ளக்கூடியதைத் தவிர,
வேறெதையும் நாங்கள் எழுதவில்லை. இப்
பொழுது எங்களை ஓரளவுதான் நீங்கள்
புரிந்துகொண்டிருக்கிறீர்கள். 14 ஆனால்,
நம்முடைய ஆண்டவராகிய இயேசுவின்
நாளில் நாங்கள் உங்களைப்பற்றி எவ்
வாறு பெருமைகொள்வோமோ அவ்
வாறே நீங்களும் எங்களைப்பற்றிப் பெருமை
கொள்வீர்கள் என்பதை இனி நன்கு
புரிந்துகொள்வீர்கள்.

15 இந்த உறுதியான நம்பிக்கை எனக்கு
இருப்பதாலேதான் உங்களுக்கு என்னால்
இரட்டிப்பான நன்மை உண்டாக வேண்டு
மென்று விரும்பினேன்; முதலில் ஒரு
முறை உங்கள் ஊருக்கு வரவும், 16 பிறகு
மக்கெதோனியா நாட்டுக்குச் சென்று,
அங்கிருந்து மறுபடியும் இரண்டாம் முறை
உங்கள் ஊருக்கு வரவும், அதன்பின்
யூதேயா நாட்டுப் பயணத்துக்கான உத
வியை உங்களிடம் பெற்றுக்கொள்ளவும்
திட்டமிட்டேன். 17 இவ்வாறு திட்டம்
வகுத்தபிறகு நான் அதைப் பொறுப்
பற்ற முறையில் தள்ளிவிட்டேனென்று
நினைக்கிறீர்களா? அல்லது நான் திட்டம்
வகுக்கும்போது உங்களை ஏமாற்றுவதற்
காக வகுக்கிறேன் என்று நினைக்கிறீர்களா?
நான் சொல்வதை ஒரே சமயத்தில் 'ஆம்'
என்றும், 'இல்லை' என்றும் பொருள்படும்
வகையில் சொல்கிறேனென்று நினைக்கிறீர்
களா? 18 நான் எதையும் ஒரே சமயத்தில்

**1:1** திருத்தூது. 18:1. **1:5** கொலோ. 1:24. **1:8** திருத்தூது. 20:19; 1 கொரி. 15:32. **1:11** ரோ. 15:30, 31.

‘ஆம்’ என்றும், ‘இல்லை’ என்றும்
பொருள்படுமாறு சொல்வதில்லை. கடவுள்
நம்பிக்கைக்குரியவர் என்பது எவ்வாறு
உண்மையோ அவ்வாறே இதுவும் உண்மை.
19 ஏனெனில், நானும் சில்வானு, தீமோத்
தேயு என்பவர்களும் அறிவித்த கடவு
ளின் மைந்தராகிய இயேசுகிறிஸ்து, ‘ஆம்’
என்றும், ‘இல்லை’ என்றும் இரு பொருள்
வைத்துப் பேசி ஏமாற்றுகிறவரல்ல. அவ
ரிடம் ‘ஆம்’ என்கிற ஒலியே ஒலித்தது.
20 ஏனெனில், கடவுளின் வாக்குறுதிகளுக்
கெல்லாம் ‘ஆம்’ என்று சொல்லி அவற்றை
நிறைவேற்றினவர் அவரே. அதனாலேதான்
நாம் கடவுளின் மாட்சிமை விளங்கும்
படி செய்யும்போது, அவர் மூலமாகவே
‘ஆமேன்’ என்கிறோம். 21 உங்களையும்
எங்களையும் கிறிஸ்துவுக்குரிய மக்களென
உறுதிப்படுத்தி அபிடேகம் செய்தவர்
கடவுளே. 22 நம்மீது தமது முத்திரையைப்
பொறித்து, நமக்கு இறுதியில் நற்பேறுகள்
கிடைக்கும் என்பதை உறுதிப்படுத்தும்
அடையாளமாக ஆவியானவரை நம்
உள்ளங்களில் குடிகொள்ளும்படி அருளி
யவரும் அவரே.

23 கடவுளைச் சாட்சியாயிருக்கும்படி
அழைத்து, என் உயிரின்மேல் ஆணையிட்டுச்
சொல்லுகிறேன்: உங்களுக்கு வருத்தம்
உண்டுபண்ணக் கூடாதென்றே நான்
மறுபடியும் கொரிந்து நகருக்கு வரவில்லை.
24 நீங்கள் எதை நம்ப வேண்டுமென்று
நாங்கள் உங்களுக்குக் கட்டளையிடுவ
தில்லை. ஏனெனில், ஆண்டவரைப் பற்றும்
நம்பிக்கையில் நீங்கள் ஏற்கெனவே உறு
தியாக நிற்கிறீர்கள். நீங்கள் மகிழ்ச்சி
அடைய வேண்டுமென்றே நாங்கள் உங்க
ளோடு சேர்ந்து உழைக்கிறோம்.

2 மறுபடியும் வந்து உங்களுக்கு மன
வேதனை உண்டாக்கக் கூடாது என்று
நான் எனக்குள் தீர்மானம் செய்துகொண்
டேன். 2 உங்களுக்கு நான் மனவேதனை
உண்டாக்கிவிட்டால், எனக்கு மகிழ்ச்சி
யூட்ட யார் இருக்கிறார்கள்? என்னால்
மனவேதனையுறும் உங்களைத் தவிர எனக்கு
மகிழ்ச்சியூட்டுபவர் வேறு எவரும் இல்
லையே. 3 இதற்காகவே நான் உங்களுக்கு
முன்பு அப்படி எழுதினேன். நான் வரும்
போது எனக்கு மகிழ்ச்சியூட்ட வேண்டிய
நீங்கள் மனவேதனை உண்டாக்குவது
எனக்கு விருப்பமில்லை. நான் மகிழ்ச்சி
யடைந்தால், நீங்கள் எல்லாரும் மகிழ்ச்சி
அடைவீர்கள்; இது உங்கள் எல்லாரை
யும்பற்றி நான் கொண்டுள்ள நம்பிக்கை.
4 உள்ளத்தில் மிகுந்த வேதனையோடும்
கடுந்துயரத்தோடும், கண்களில் நீர் ததும்ப
உங்களுக்கு நான் முன்பு எழுதினேன்.
அவ்வாறு நான் எழுதினது உங்களுக்கு
மனவேதனை உண்டாக்குவதற்கன்று, உங்
களிடம் நான் கொண்டுள்ள அன்பின்
பெருக்கத்தை நீங்கள் அறிந்துகொள்ள
வேண்டும் என்பதற்காகவே.

### மனவேதனை உண்டாக்கினவனை மன்னியுங்கள்

5 ஒருவன் மனவேதனை உண்டாக்கி
யிருக்கிறானென்றால், அவன் எனக்கன்று,
உங்கள் அனைவருக்குமே மனவேதனை உண்
டாக்கியிருக்கிறான் என்று கொள்ள வேண்
டும்; (அவன் செய்ததை மிகைப்படுத்திக்
கூற நான் விரும்பவில்லை). 6 உங்களுள்
பெரும்பான்மையர் அவனுக்கு அளித்த
தண்டனையே போதும். 7 ஆகையால்,
அவனை நீங்கள் இப்போது மன்னித்து,
அவனுக்கு ஆறுதல் அளிப்பதுதான் நலம்;
இல்லாவிடில், அவன் மிகுந்த மனவேதனை
யில் அப்படியே மூழ்கிவிடக்கூடும். 8 அத
னாலேதான் நீங்கள் அவனிடம் அன்பு
கொண்டிருக்கிறீர்கள் என்பதை அவ
னுக்கு ஐயமற எடுத்துக் காட்ட வேண்டு
மென்று உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்.
9 நான் முன்பு எழுதினதன் நோக்கம்
யாதெனில், நீங்கள் எல்லாவற்றிலும் என்
சொற்படி நடக்கிறீர்களாவென்று சோதித்
துப் பார்ப்பதேயாகும். 10 நீங்கள் எவனை
மன்னிக்கிறீர்களோ அவனை நானும் மன்
னிக்கிறேன். குற்றம் இருந்ததோ, இல்
லையோ, எவ்வாறாயினும்,உங்கள்பொருட்டுக்
கிறிஸ்துவின் முன்னிலையில் அனைத்
தையும் மன்னித்துவிட்டேன். 11 ஏனெ
னில், சாத்தான் நம்மை அடக்கிவைக்க
நாம் இடங்கொடுக்கக் கூடாது; அவனு
டைய நயவஞ்சகங்களை நாம் அறியாம
லில்லை.

### பவுலின் கவலையும் களிப்பும்

12 நான் கிறிஸ்துவின் அருட்செய்தியை
அறிவிக்கும்படி துரோவா என்னும் ஊருக்
குச் சென்றிருந்தபோது, ஆண்டவருக்குத்
தொண்டாற்ற எனக்கு நல்ல வாய்ப்பு
இருந்தது. 13 ஆனால், என் சகோதரன்
தீத்து அங்கே இல்லாததைக் கண்டதும்
நான் மனக்கவலையில் ஆழ்ந்தேன். ஆகை
யால், அங்கே இருந்தவர்களிடம் விடை
பெற்றுக்கொண்டு மக்கெதோனியாவுக்குப்
புறப்பட்டுப் போனேன்.

14 கிறிஸ்துவோடு இணைக்கப்பட்டிருக்
கும் எங்களை எப்போதும் வெற்றி ஊர்
வலமாக நடத்திச்சென்று, அவரைப்
பற்றிய அறிவாகிய நறுமணத் தூபத்தை

1:14 1 தெச. 2:19, 20. 1:19 திருத்தூது. 19:21. 1:19 திருத்தூது. 18:5. 2:7 கொலோ. 3:13. 2:11 எபே. 4:27. 2:12, 13 திருத்தூது. 20:1.

எங்கள்மூலம் எல்லா இடங்களிலும்
பரவச் செய்கிற கடவுளுக்கு நன்றி.
15 கிறிஸ்து கடவுளுக்கு இடும் தூபம்
நாங்களே. அத்தூபம் மீட்புப் பெறுகிற
வர்களிடையேயும் கெட்டழிந்துபோகிற
வர்களிடையேயும் நறுமணம் வீசுகிறது.
16 அது ஒரு சாராருக்குச் சாவை விளை
விக்கும் தீ, நாற்றப் புகை; மற்றொரு
சாராருக்கு மெய்வாழ்வளிக்கும் நறு
மணப் புகை; இவ்வண்ணம் பணிபுரியத்
தகுதியுடையவன் யாரேனும் உண்டோ?
17 எத்தனையோ பேர் சுற்றித் திரிந்து
கடவுளின் செய்தியை விற்பனை செய்கின்
றனர்; அவர்களைப்போல நாங்கள் செய்வ
தில்லை. எங்களைக் கடவுள் அனுப்பினார்.
நாங்கள் கிறிஸ்துவோடு இணைக்கப்பட்டுக்
கடவுளின் முன்னிலையில் நிற்கிறவர்களாய்
உள்ளத் தூய்மையோடு பேசுகிறோம்.

### புதிய உடன்படிக்கையின் ஊழியம்

3 எங்களைப்பற்றி நாங்களே மறுபடி
யும் நற்சான்றளித்துக்கொள்ளத்
தொடங்குகிறோமென்று நீங்கள் நினைக்
கிறீர்களா? சான்றுக் கடிதங்கள் வேறு சில
ருக்குத் தேவை. ஆனால், எங்களுக்கு அத்
தகைய கடிதங்களை உங்களிடம் காட்
டவோ, உங்களிடமிருந்து பெறவோ
தேவை இருக்கிறதா? 2 நீங்களே எங்கள்
சான்றுக் கடிதமாயிருக்கிறீர்கள்; அது
எங்கள் உள்ளங்களில் எழுதப்பட்டிருக்
கிறது; அதை எல்லா மக்களும் படித்தறி
கிறார்கள். 3 நீங்கள் எங்கள்மூலம் அனுப்
பப்பட்ட கிறிஸ்துவின் கடிதமாயிருக்கிறீர்
கள் என்பது வெளிப்படை. அது மையி
னாலன்று, என்றுமுள்ள கடவுளின் ஆவி
யினாலே எழுதப்பட்டிருக்கிறது. அது கற்
பலகைகளிலன்று, மனித உள்ளமாகிய
பலகையிலே எழுதப்பட்டிருக்கிறது.
4 கடவுளிடம் நாங்கள் கிறிஸ்துவின்
மூலம் கொண்டுள்ள உறுதியான நம்பிக்
கையினால் இத்தகைய உரிமை பாராட்டு
கிறோம். 5 எங்களிடம் எவ்வகையான
தகுதியும் இல்லை; நாங்களாகவே எதையும்
செய்துவிட்டோம் என்று எண்ணு
வதற்குமில்லை; எங்களைத் தகுதியுடைய
வர்களாக்குகிறவர் கடவுளே. 6 அவரே
எங்களைப் புதிய உடன்படிக்கையின் ஊழியர்
களாவதற்குத் தகுதியுடையவர்
களாக்கினார். அந்த உடன்படிக்கை ஏட்டி
லெழுதப்பட்ட சட்டத்தைச் சார்ந்த
தன்று, ஆவியானவரைச் சார்ந்ததாகும்.
ஏட்டுச் சட்டம் விளைவிப்பது சாவு, ஆவி
யானவர் அளிப்பதோ மெய்வாழ்வு.
7 கற்களில் எழுத்துகளால் பொறிக்கப்
பட்ட அச்சட்டத்தைச் சார்ந்த ஊழியம்
சாவை விளைவிப்பதாயிருந்தாலும், அது
ஏற்படுத்தப்பட்டபோது ஒளி வீசிற்று;
அந்த மாட்சிமையானது நிலையற்றதா
யினும், மோசேயின் முகத்தில் காணப்பட்ட
அந்த மாட்சிமை காரணமாக, அவரது
முகத்தை இஸ்ரவேல் மக்களால் உற்று
நோக்க இயலவில்லை. 8 அதுவே அப்படி
இருந்ததென்றால், ஆவியானவரால் ஆட்
கொள்ளப்பட்டுச் செய்யப்படும் ஊழியம்
எவ்வளவு மாட்சிமையுள்ளதாயிருக்கும்?
9 தண்டனைத் தீர்ப்பை அளிக்கும் அந்த
ஊழியமே மாட்சிமையுள்ளதாய் இருந்த
தென்றால்,விடுதலைத்தீர்ப்பை அளிக்கும் இந்த
ஊழியம் எவ்வளவோ மாட்சிமையுள்ளதாய்
இருக்குமல்லவா? 10 இந்த மேம்பட்ட
மாட்சிமை காரணமாக முன்பு மாட்
சிமை பெற்றிருந்த ஊழியம் மாட்சிமை
யற்றதாகிவிட்டது. 11 நிலையற்றதே மாட்
சிமையோடு ஏற்படுத்தப்பட்டதென்றால்,
நிலையாயுள்ளது இன்னும் எவ்வளவோ
மாட்சிமையோடு இருக்குமல்லவா?
12 இதை நாங்கள் எதிர்நோக்கிக் கொண்
டிருப்பதால், மிகுந்த துணிவுடன் பேசு
கிறோம். 13 மோசே செய்ததுபோல நாங்கள்
செய்வதில்லை. நிலையற்ற அந்த மாட்சிமை
யொளி மங்கி அணைவதை இஸ்ரவேல்
மக்கள் பார்க்காதபடி அவர் தம் முகத்தில்
ஒரு மூடுதிரையைப் போட்டுக்
கொண்டார். 14 அவர்கள் உள்ளம் மந்த
மாக்கப்பட்டிருக்கிறது. பழைய உடன்
படிக்கையின் நூல்களை அவர்கள் படிக்கும்
போது, அதே திரை இந்நாள் வரை
யிலும் அவர்கள் பார்வையை மறைக்
கிறது; அது நீக்கப்படாமலிருக்கிறது.
ஒருவன் கிறிஸ்துவோடு இணைக்கப்படும்
போதுதான் அவனிடமிருந்து அது நீங்கும்.
15 மோசேயின் நூல்களைப் படிக்கும்
போது, ஒரு மூடுதிரை இன்றுவரையிலும்
அவர்கள் மனத்தின்மீது கிடக்கிறது.
16 ஆனால், ஒருவன் மனமாற்றமடைந்து
ஆண்டவரிடம் வந்தால், அந்த மூடு
திரை நீக்கப்பட்டுவிடும். 17 இங்கு ஆண்
டவர் என்றது ஆவியானவரையே குறிக்
கிறது. ஆண்டவரின் ஆவியானவர் எங்கே
இருக்கிறாரோ அங்கே அடிமைத்தனமே
இராது. 18 நாம் எல்லோரும் முகத்தில்
மூடுதிரை இல்லாதவர்களாய் ஆண்ட
வரின் மாட்சிமையைக் கண்ணாடிபோலக்
காட்டுகிறோம்; அவரது சாயலையொத்த
மாறுதலடைந்து, மேன்மேலும் மாட்
சிமையொளி பெற்றுவருகிறோம். இவை
யாவும் ஆவியாகிய ஆண்டவரின் செயலே.

### மட்பாண்டத்தில் வைத்த செல்வம்

4 இத்தகைய ஊழியத்தை நாங்கள்
கடவுளின் இரக்கத்தால் பெற்றிருக்

3:2 1 கொரி. 9:2. 3:3 யாத். 24:12; எரே. 31:33; எசே. 11:19; 36:26. 3:6 எபே. 3:7. 3:7 யாத். 34;29. 3:13 யாத். 34:33.

கிறோம்; ஆகையால், நாங்கள் மனச்
சோர்வடைவதில்லை. 2 ஒளிவுமறைவாக
நடத்தப்படும் இழிசெயல்களை வெறுத்து
ஒதுக்கிவிட்டோம்; வஞ்சகச் சூழ்ச்சி எதை
யும் செய்யோம்; கடவுளின் செய்தியைத்
திரித்துக் கூற மாட்டோம்; சத்தியத்தை
மறைக்காமல் எடுத்துக் கூறுகிறோம்.
அதன் மூலம், கடவுள் பார்வையில் நாங்கள்
எத்தகையவர்கள் என்பதை மனச்
சாட்சிக்குக் கட்டுப்பட்ட ஒவ்வொருவனும்
கண்டுகொள்ளும் வகையில் வெளிப்படுத்து
கிறோம். 3 நாங்கள் அறிவிக்கும் அருட்
செய்தி மூடிமறைக்கப்பட்டதாய் இருக்கிற
தென்றால், கெட்டழிந்துபோகிறவர்
களுக்கே அது அப்படி இருக்கும். 4 கட
வுளின் சாயலாயிருக்கிற கிறிஸ்துவின்
மாட்சிமை விளங்கும் அருட்செய்தியின்
ஒளியை அவர்களால் பார்க்க இயலாது;
ஏனெனில், கிறிஸ்துவினிடம் நம்பிக்கை
கொள்ளாத அவர்கள் அதைப் பார்க்
காதபடி, இந்த உலகத்தின் தெய்வம்
அவர்களுடைய மனக்கண்களைக் குருடாக்கி
விட்டது. 5 நாங்கள் எங்களை விளம்பரப்
படுத்தப்பார்க்கவில்லை; இயேசுகிறிஸ்துவை
ஆண்டவர் என்றும், எங்களை இயேசுவின்
பொருட்டு உங்கள் அடிமைகள் என்றும்
அறிவிக்கிறோம். 6 ''இருளிடையே
இருந்து ஒளியானது சுடர் வீசுவதாக''
என்று சொன்ன கடவுள்தாமே, எங்கள்
உள்ளங்களில் தமது ஒளி சுடர் வீசும்படி
செய்திருக்கிறார்; அதனால் அவரது மாட்
சிமையை அறியும் அறிவாகிய ஒளி எங்
களுக்குள் சுடர் வீசுகிறது; அந்த மாட்
சிமை கிறிஸ்துவின் முகத்தில் வெளிப்
பட்ட மாட்சிமையே.

7 எனினும், இந்தச் செல்வத்தைப்
பெற்றிருக்கும் நாங்கள் வெறும் மட்
பாண்டங்களே. இதிலிருந்து இந்த மாபெரும்
வல்லமை எங்களிடமிருந்து அன்று,
கடவுளிடமிருந்தே வருகிறது என்பது
தெளிவு. 8 நாங்கள் எல்லா வகையிலும்
இடுக்கணுக்கு ஆளாகிறோம், ஆனால், நசுங்
கிப்போகவில்லை; மனக்கலக்கம் அடை
கிறோம், ஆனால், மனமுடைந்துபோவ
தில்லை; 9 துன்புறுத்தப்படுகிறோம், ஆனால்,
கடவுளால் கைவிடப்படுவதில்லை; 10 வீழ்த்
தப்படுகிறோம், ஆனால், மடிந்து போவ
தில்லை. இயேசுவின் மெய்வாழ்வு
எங்கள் ஊன் உடலில் வெளிப்படும்படி,
நாங்கள் செல்லும் இடமெல்லாம் எங்கள்
ஊன் உடலில் இயேசு அடைந்த மரணப்
பாடுகளைச் சுமந்து செல்கிறோம். 11 ஏனெ
னில், இயேசுவின் மெய்வாழ்வு சாவுக்
குரிய எங்கள் ஊன் உடலில் வெளிப்படு
வதற்காக, உயிரோடிருக்கும்போதே
இயேசுவின் பொருட்டு நாங்கள் எந்நேர
மும் மரண வாயிலில் நிறுத்தப்படுகிறோம்.
12 இவ்வாறு எங்களுக்குள் சாவு செய
லாற்றுகிறது. உங்களுக்குள்ளோ மெய்
வாழ்வு செயலாற்றுகிறது. 13 ''நம்பி
னேன், ஆகையால் பேசினேன்'' என்று
வேதத்தில் எழுதியுள்ளது. நம்பிக்கை
கொள்ளும் குணம் எங்களுக்கும் உண்டு;
14 நாங்கள் நம்புகிறோம், ஆகையால்
பேசுகிறோம். எங்கள் உறுதியான
நம்பிக்கை என்னவெனில், ஆண்டவராகிய
இயேசுவை உயிரோடெழுப்பினவர், அவ
ருடன் எங்களையும் உயிரோடெழுப்பித்
தம் முன்னிலையில் நிறுத்துவார்; அவ்வாறே
உங்களையும் எங்களுடன் நிறுத்துவார் என்
பதே. 15 நாங்கள் செய்பவை அனைத்தை
யும் உங்கள் நன்மைக்காகவே செய்
கிறோம். கடவுளின் பெருக்கமான அருளைப்
பெறுவோரின் தொகை பெருகப் பெருக,
கடவுளின் மாட்சிமை விளங்கும்படி எழும்
நன்றி முழக்கமும் மேன்மேலும் பெருகும்.

## நம்பிக்கை உடையவர்களாய் வாழ்தல்

16 எனவே, நாங்கள் மனச்சோர்வு
அடைவதில்லை. புறம்பான எங்கள் மனித
உடல் ஒடுங்கிக்கொண்டுபோனாலும், எங்கள்
உள்மனத்தில் நாங்கள் நாளுக்கு நாள்
புதுப்பிக்கப்பட்டுவருகிறோம். 17 நாம்
படும் துன்பம் அளவில் சிறியது; அது
நீடிப்பதும் நொடிப்பொழுதே; அதனால்
நமக்கு வரும் மாட்சிமையோ அளவிறந்
தது, என்றும் நிலைத்திருப்பது. 18 கண்
ணால் பார்க்கக்கூடியவற்றை அல்ல, பார்க்க
இயலாதவற்றையே நோக்கிய வண்ணம்
நாம் இருக்கிறோம். ஏனெனில், நாம்
பார்க்கக்கூடியவை நிலையற்றவை, பார்க்க
இயலாதவையோ என்றும் நிலைத்திருப்
பவை.

**5** நாம் குடியிருக்கும் இவ்வுலகிற்குரிய
கூடாரம் அழிந்தாலும், கடவுளிட
மிருந்து கிடைக்கும் ஒரு கட்டடம் நமக்கு
விண்ணுலகில் உண்டு, அது கையால்
அமைக்கப்படாதது, அழிவில்லாதது என்
பதை நாம் அறிவோம். 2 நமக்குரிய
அந்த விண்ணுலக வீட்டை இந்தக் கூடா
ரத்தின்மேல் அணிந்துகொள்வதற்காக,
இதில் இருக்கும்போது புலம்பி ஏங்கிக்
கொண்டிருக்கிறோம். 3 ஏனெனில், அவ்
வாறு அணிந்துகொண்டால், ஆடை இல்
லாதவர்களாய்க் காணப்படும் நிலை ஏற்
படாது. 4 ஆம், இந்தக் கூடாரத்தில்
வாழும் நாம், ஏதோ ஒன்றினால் அழுத்
தப்படுகிறவர்கள்போலப் புலம்பிக்கொண்
டிருக்கிறோம். இந்தப் போர்வையைக்

**4:2** 1தெச. *2:4, 5.* **4:4** எபே. *2:2.* **4:6** ஆதி. *1:3;* யோ. *8:12.* **4:13** சங். *116:10.* **4:17** மத். *5:11, 12.* **5:2** பிலி. *3:20.*

களைந்தெறிய வேண்டுமென்பது நம் விருப்ப
மன்று. சாவுக்குரிய இது மெய்வாழ்
விஞலே போர்த்தப்படுவதற்காக அதை
இதன்மேல் அணிந்துகொள்வதையே
விரும்புகிறேம். 5 இந்நிலையை அடைவதற்
கென்றே கடவுள் நம்மை உண்டாக்
கினர். அது நடக்கும் என்பதை உறுதிப்
படுத்தும் அடையாளமாக ஆவியான
வரையும் தந்தருளினர்.

6 இந்த நம்பிக்கை நமக்கு இருப்பதால்,
என்ன நேரிட்டாலும் நாம் மனந்தளரா
மலிருக்கிறேம். இந்த உடலில் குடி
கொண்டிருக்கும் வரையில் நாம் ஆண்ட
வரின் வீட்டில் இல்லாமல் தொலைவில்
இருக்கிறேம் என்பதை அறிவோம். 7 இவ்
வுலக வாழ்க்கையில் நமக்கு வழிகாட்டியா
யிருப்பது நம் கண்ணன்று, நமது நம்
பிக்கையே. 8 ஆம், நாம் மனந்தளரா
மலிருக்கிறேம்; எனினும், நாம் தொலைவில்
இருப்பதால், இவ்வுடலை விட்டுக்
குடிபெயர்ந்து ஆண்டவரின் வீட்டில்
குடிபுக வேண்டுமென்பதே நமது பேராவல்.
9 அதனுல் நாம் உடலில் குடியிருந்
தாலும், அதை விட்டுக் குடிபெயர்ந்தாலும்
அவருக்கு உகந்தவர்களாய் இருப்
பதையே எல்லாவற்றிற்கும் மேலாக விரும்பு
கிறேம். 10 ஏனெனில், நாம் அனை
வரும் கிறிஸ்துவின் நீதிமன்றத்தில் நின்றாக
வேண்டும்; அங்கே நம்மைப்பற்றிய
உண்மை வெளிப்படுத்தப்படும். அப்பொழுது
ஒவ்வொருவனும், தான் இந்த உட
லோடிருக்கையில் செய்த நன்மை தீமைக்கு
ஏற்றவாறு பலனைப் பெறுவான்.

### கடவுளோடு நல்லுறவு உண்டாக்கும் ஊழியம்

11 ஆகையால், நாங்கள் எங்கள் உள்
ளத்தில் ஆண்டவரைப்பற்றிய அச்ச
முடையவர்களாய் உழைத்து, மக்களை
நாங்கள் கூறும் செய்தியை ஏற்கும்படி
செய்ய முயலுகிறேம்; அப்படி நாங்கள்
செய்கிற யாவும் கடவுளுக்கு வெளிப்
படை; உங்கள் மனச்சான்றுக்கும் அவை
வெளிப்படை என்று நினைக்கிறேன். 12 மறு
படியும் நாங்கள் உங்களிடம் எங்களைப்
பற்றி நற்சான்று கூறுகிறேமென நினைக்க
வேண்டாம்; எங்களைப்பற்றி நீங்கள்
பெருமை கொள்வதற்கான ஆதாரத்
தையே கூறுகிறேம். உள்ளத்தில் இருப்
பதைப் பாராமல், வெளித்தோற்றத்தைப்
பார்த்துப் பெருமை கொள்கிறவர்கள்
சொல்வதற்கு நீங்கள் மறுப்புக் கூறும்படி
இதைச் சொல்லுகிறேம். 13 நாங்கள்
மதியிழந்தவர்கள் என்று சொல்கிறீர்
களா? கடவுளுக்காக அப்படி இருக்
கிறேம்; அறிவுத் தெளிவுடன் இருக்
கிறேம் என்று சொன்னுலும், உங்களுக்
காகவே அப்படி இருக்கிறேம். 14 ஏனென்
றல், கிறிஸ்துவின் அன்பே எங்களை முற்
றிலும் ஆட்கொண்டிருக்கிறது; நாங்கள்
கண்டுணர்ந்தது இதுவே: எல்லாருக்காக
வும் ஒருவர் இறந்தாரென்றல், எல்லா
ருமே இறந்தனர் என்றகிறது; 15 அவர்
எல்லாருக்காகவும் இறந்தாரென்பதால்,
வாழ்கிறவர்கள் இனித் தங்களுக்கென்று
வாழாமல், தங்களுக்காக இறந்து உயிரோ
டெழுந்தவருக்கென்றே வாழ வேண்டும்
என்றுமாகிறது.

16 ஆகையால், நாங்கள் இனிமேல்
புறம்பானவற்றை அளவுகோலாக வைத்து
எவரையும் மதிப்பிட மாட்டோம். ஒரு
காலத்தில் நாங்கள் கிறிஸ்துவை அவ்
வாறு மதிப்பிட்டிருந்தாலும் இப்போது
அவரை அவ்வாறு மதிப்பிடுவதில்லை.
17 ஒருவன் கிறிஸ்துவோடு இணைக்கப்
படும்போது, ஒரு புதிய உலகம்* தோன்
றுகிறது; பழைய உலகம் கடந்து
போயிற்று; இதோ! புதியதொன்று தோன்றி
யுள்ளது.† 18 இவை யாவும் கடவுளின்
செயலே. அவரே கிறிஸ்துவைக்
கொண்டு நமக்குத் தம்மோடு நல்லு
றவை உண்டாக்கியிருக்கிறர்; மற்றவர்
களும் அவர் அருளும் நல்லுறவை ஏற்கு
மாறு உழைக்கும் பொறுப்பை எங்களிடம்
ஒப்படைத்திருக்கிறர். 19 அதாவது, கடவுள்
உலகத்தாரின் தவறுகளை எண்ணிப்
பாராமல், அவர் தாமே கிறிஸ்துவுக்குள்
இருந்து,‡ அவர்களுக்குத் தம்மோடு நல்
லுறவை உண்டாக்கி, அவ்வாறு நல்லு
றவை உண்டாக்கின செய்தியை எங்
களிடம் ஒப்புவித்திருக்கிறர். 20 ஆகை
யால், நாங்கள் கிறிஸ்துவின் தூதுவர்
களாயிருக்கிறேம்; கடவுள் தாமே எங்
களைக் கொண்டு உங்களைக் கேட்டுக்கொள்
வதுபோல, நாங்கள் கிறிஸ்துவின் திருப்
பெயரால் உங்களை வருந்திக் கேட்டுக்
கொள்கிறேம்: நீங்கள் கடவுளோடு நல்
லுறவு கொள்ளுங்கள். 21 கிறிஸ்துவோடு
இணைக்கப்படுவதன் மூலம் நாம் கடவுளது
நீதியின் உருவாகும்படி, பாவமே
அறியாத அவரைக் கடவுள் நமக்காகப்
பாவத்தின் உருவாக்கினர்.

* 'ஒரு புதிய படைப்புச் செயல் நடைபெறுகிறது' என்றும் மொழிபெயர்க்கலாம்.
† 17-ஆம் வசனத்தை, 'ஒருவன் கிறிஸ்துவோடு இணைக்கப்படும்போது, அவன் ஒரு புதிய படைப்பு ஆகி விட்டான்; பழைய வாழ்க்கை முடிந்துவிட்டது; புதிய வாழ்க்கை தொடங்கிவிட்டது' என்றும் மொழிபெயர்க் கலாம்.
‡ 'கிறிஸ்துவின்மூலம்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

5:10 மத். 16:27; யோ. 5.27; ரோ. 14:10. 5:21 எசா. 53:5—8; ரோ. 8:3; கலா. 3:13; 1 பேது. 2:24

6 மேலும், நீங்கள் பெற்றிருக்கும்
கடவுளின் அருளை வீணாக்க வேண்டா
மென்று அவரோடு சேர்ந்து உழைக்கிற
வர்களாக நாங்கள் உங்களைக் கேட்டுக்
கொள்ளுகிறோம். 2 ஏனெனில்,

''உரிய காலத்தில் நான் உனக்குச்
செவிசாய்த்தேன்,
மீட்புக்குரிய நாளில் உனக்கு உதவி
செய்தேன்''

என்று அவர் உரைத்திருக்கிறார். இதுவே
உரிய காலம்! இன்றே மீட்பு நாள்!

3 எங்கள் ஊழியத்தைக் குறித்து எவரும்
குறைகூறாதபடி அது இருக்க வேண்டும்
என்பது எங்கள் விருப்பம். ஆகை
யால், நாங்கள் பிறருக்கு இடையூறாய்
இருக்கும் எதையும் செய்வதில்லை. 4 எங்
கள் செயல்களிலெல்லாம் நாங்கள் எங்
களைக் கடவுளின் ஊழியர்களெனக் காட்டி
வருகிறோம்; துன்பங்களையும் இக்கட்டுகளை
யும் இடுக்கண்களையும் மிகுந்த பொறுமை
யோடு தாங்கிக்கொள்கிறோம். 5 நாங்
கள் அடிக்கப்பட்டோம்; பன்முறை காவ
லில் வைக்கப்பட்டோம்; கலகங்களில் சிக்
குண்டு தவித்தோம்; ஓய்வும் உறக்கமும்
உணவுமின்றி இடையறாது உழைத்தோம்.
6 எங்கள் தூய்மை, அறிவு, பொறுமை,
பரிவு ஆகியவற்றின் மூலமும், தூய ஆவி,
களங்கமற்ற அன்பு, 7 சத்தியத்தை அறி
வித்தல், கடவுளின் வல்லமை ஆகிய
வற்றின் மூலமும் எங்களைக் கடவுளின்
ஊழியர்களெனக் காட்டி வருகிறோம்.
தாக்கவும் காக்கவும் கடவுளின் நீதியே
எங்கள் ஆயுதம். 8 நாங்கள் புகழப்படு
கிறோம்; இகழப்படுகிறோம்; போற்றப்படு
கிறோம்; தூற்றப்படுகிறோம்; எங்களை வஞ்
சகர்கள் என்கிறார்கள், நாங்களோ நேர்மை
வழுவாதவர்கள். 9 நாங்கள் யாரும் அறி
யாத ஆள்கள் என்கிறார்கள்; ஆனால்,
அனைவரும் எங்களை அறிவர்; செத்துக்
கொண்டேயிருக்கிறோம்; ஆயினும், இதோ,
உயிரோடிருக்கிறோம்; தண்டித்துத் திருத்
தப்படுகிறோம்; ஆனால், கொல்லப்பட
வில்லை; 10 துயரத்தில் ஆழ்த்தப்படு
கிறோம்; என்றாலும், எப்போதும் மகிழ்ச்சி
யோடிருக்கிறோம். நாங்கள் ஏழைகளாயி
னும், பலரை வளமுள்ளவர்களாக்கு
கிறோம். நாங்கள் ஒன்றும் இல்லாதவர்
களே; என்றாலும், அனைத்துமே எங்களுக்
குச் சொந்தம்.

11 கொரிந்து நகரத்தாரே, நாங்கள்
மனம்விட்டு உங்களோடு பேசினோம்; எங்
கள் நெஞ்சில் இருப்பதையெல்லாம் உங்
களுக்கு வெளிப்படுத்தினோம். 12 மனம்
விட்டுப் பேச நாங்கள் தயங்கவில்லை; தயக்
கம் உங்கள் உள்ளத்திலேதான் இருக்கிறது.
13 என் பிள்ளைகளுக்குச் சொல்வதுபோலச்
சொல்லுகிறேன்: நாங்கள் செய்ததைப்
போலவே நீங்களும் உங்கள் நெஞ்சில்
இருப்பதை எங்களுக்கு வெளிப்படுத்துங்கள்.

### என்றுமுள்ள கடவுளின் ஆலயம் நாமே

14 ஆண்டவரிடம் நம்பிக்கை கொள்
ளாதவர்களோடு உங்களை நீங்கள் ஒரே
நுகத்தில் பிணைத்துக்கொள்ளலாகாது. அது
பொருத்தமற்ற செயலாகும். நேர்மைக்
கும் தீமைக்கும் தொடர்பேது? ஒளிக்கும்
இருளுக்கும் உறவேது? 15 கிறிஸ்துவுக்கும்
தீயோனுக்கும்* உடன்பாடு உண்டா?
ஆண்டவரிடம் நம்பிக்கை கொள்ளாதவர்
களுக்கும் அவரிடம் நம்பிக்கை கொண்டுள்ள
வர்களுக்கும் பொதுவாயிருப்பது ஏதே
னும் உண்டா? 16 கடவுளின் ஆலயத்திற்
கும் தெய்வச் சிலைகளுக்கும் உடன்பாடு
ஏது? என்றுமுள்ள கடவுளின் ஆலயம்
நாமே. கடவுள்தாமே இவ்வாறு சொல்
கிறார்:

''அவர்களிடையே நான் குடிகொள்வேன்,
அவர்களிடையே நடமாடுவேன்;
அவர்களுக்கு நான் கடவுளாயிருப்பேன்,
அவர்கள் என் மக்களாயிருப்பார்கள்.''
17 ஆகையால்,
'' 'அவர்கள் நடுவிலிருந்து வெளியேறுங்
கள்;
அவர்களை விட்டுப் பிரிந்திருங்கள்' என்று
ஆண்டவர் சொல்கிறார்.
'மாசுள்ளதைத் தொடாதீர்கள், அப்
பொழுது நான் உங்களை ஏற்றுக்கொள்
வேன்.
18 உங்களுக்கு நான் தந்தையா
யிருப்பேன்,
நீங்கள் எனக்குப் புதல்வராகவும், புதல்
வியராகவும் இருப்பீர்கள்' என்று எல்
லாம் வல்ல ஆண்டவர் சொல்கிறார்.''

7 அன்பார்ந்தவர்களே, நாம் இத்த
கைய வாக்குறுதிகளைப் பெற்றிருப்ப
தால், உடலையும் ஆவியையும் கறைப்படுத்
தும் அனைத்தையும் அகற்றிவிட்டு நம்மை
மாசற்றவர்களாக்கிக்கொள்வோமாக;
கடவுளுக்கு அஞ்சி நடந்து, தூய்மையாயிருப்
பதில் முழு வளர்ச்சி அடைவோமாக.

### பவுலின் மகிழ்ச்சி

2 எங்களுக்கு உங்கள் நெஞ்சில் இடம்
தாருங்கள்; நாங்கள் யாருக்கும் அநியாயம்

* மூலத்தில், 'பேலியார்' என்றிருக்கிறது. இது சாத்தானுக்குள்ள ஒரு பெயர்.
**6:2** ஏசா. 49:8. **6:5** திருத்நூது. 16:23. **6:6** கலா. 5:22. **6:7** எபே. 6:11. **6:10** 2 கொரி. 4:11. **6:14** உபா. 22:10, **6:16** 1 கொரி. 3:16, 17; இலே. 26:12; எசே. 37:27. **6:17** ஏசா. 52:11. **6:18** 2 சாமு. 7:14; 1 வரலாறு. 17:13; ஏசா. 43:6; எரே. 31:9.

செய்யவில்லை, யாருக்கும் கெடுதி
செய்யவில்லை, யாரையும் வஞ்சித்துப் பய
னடையப்பார்க்கவில்லை. 3 உங்களைக்
குற்றப்படுத்துவதற்காக நான் இதைச்
சொல்லவில்லை; நான் ஏற்கெனவே சொன்ன
படி, நாங்கள் உங்களோடு சாகவும்,
வாழவும் ஆயத்தமாயிருக்கிறோம்; அந்த
அளவுக்கு நீங்கள் எங்கள் நெஞ்சில் இடம்
பெற்றுவிட்டீர்கள். 4 உங்களிடம் எனக்கு
மிகுந்த நம்பிக்கை உண்டு; உங்களைக்
குறித்து மிகவும் பெருமைகொள்கிறேன்.
எங்களுக்குப் பல துன்பங்கள் வந்தாலும்,
என் உள்ளத்தில் ஆறுதல் நிறைந்திருக்
கிறது, மகிழ்ச்சி பொங்கி வழிகிறது.

5 நாங்கள் மக்கெதோனியாவுக்கு வந்து
சேர்ந்த பிறகும் எங்களுக்கு மன அமைதி
சிறிதளவும் இல்லாதிருந்தது. எப்பக்கமும்
துன்பம்; புறத்திலே போராட்டம், உள்ளத்
திலே கவலை. 6 ஆனால், சிறுமையுற்றோ
ருக்கு ஆறுதலளிக்கும் கடவுள், தீத்து
வின் வருகையால் எங்களுக்கு ஆறுதலளித்
தார்; 7 தீத்துவினுடைய வருகையால்
மட்டுமன்று, தீத்து உங்களால் அடைந்
திருந்த ஆறுதலைக் கொண்டும் எங்களை
ஆறுதலடையச் செய்தார். தீத்து உங்
களுக்கிருந்த ஏக்கத்தையும், நீங்கள்
வருத்தமுற்றதையும், என்னைப்பற்றி உங்
களுக்கு இருக்கும் அக்கறையையும் எங்
களுக்கு எடுத்துரைத்தார். அதைக் கேட்
டதும் எனக்கு இன்னும் மிகுதியான
மகிழ்ச்சி உண்டாயிற்று.

8 என் கடிதத்தினால் நான் உங்களுக்குத்
துயரமளித்திருந்த போதிலும், அதற்காக
நான் வருந்தவில்லை. அந்தக் கடிதத்தைப்
படித்து நீங்கள் சிறிது நேரம் துயர
மடைந்தீர்கள் என்பதை அறிந்து, அதற்
காக நான் முதலில் வருந்தியிருக்கலாம்.
9 ஆனால், இப்போது நான் அதற்காக
மகிழ்ச்சி அடைகிறேன்; நீங்கள் துயரப்
பட்டதற்காக அன்று, மனமாற்றம் ஏற்
படும் வகையில் துயரப்பட்டதற்காக
மகிழ்ச்சி அடைகிறேன். நீங்கள் அந்தத்
துயரத்தைக் கடவுளின் திருவுளத்திற்
கிசைய ஏற்றுக்கொண்டீர்கள். எனவே,
உங்களுக்கு எங்களால் எந்தக் கெடுதியும்
நேரிடவில்லை. 10 கடவுளின் திருவுளத்
திற்கிசைய ஏற்கப்படும் துயரம் மீட்படை
வதற்கான மனமாற்றத்தை உண்டாக்கும்;
அதற்காக யாரும் வருத்தப்பட வேண்
டியதில்லை. ஆனால், இவ்வுலகப் போக்கில்
ஏற்கப்படும் துயரமோ சாவை விளைவிக்கும்.
11 கடவுளின் திருவுளத்திற்கிசைய நீங்கள்
ஏற்றுக்கொண்ட அந்தத் துயரம் உங்க
ளிடம் எவ்வளவு ஊக்கத்தை விளைவித்தது
பாருங்கள். அது மட்டுமா? நேர்மையை
எடுத்துக்காட்ட எவ்வளவு துடிப்பு! குற்
றத்தின்மீது எவ்வளவு வெறுப்பு! தண்
டனைக்கு எவ்வளவு அச்சம்! என்னைப்
பார்க்க எவ்வளவு ஏக்கம்! எவ்வளவு
ஆர்வம்! குற்றவாளியிடம் எவ்வளவு கண்
டிப்பு! இந்தக் காரியத்தில் நீங்கள் உங்
களை முற்றிலும் குற்றமற்றவர்களாகக்
காட்டிக்கொண்டீர்கள். 12 ஆகையால்,
நான் உங்களுக்கு அப்படி எழுதியிருந்த
போதிலும், அதைத் தீமை செய்தவனை
முன்னிட்டோ, தீமைக்கு ஆளானவனை
முன்னிட்டோ எழுதவில்லை; நீங்கள் என்
னிடம் கொண்டுள்ள பாசத்தைக் கடவுள்
முன்னிலையில் நீங்கள் உணர்ந்துகொள்ளும்
பொருட்டே அப்படி எழுதினேன். 13 அத
னாலேதான் நாங்கள் ஆறுதலடைந்தோம்.

நாங்கள் ஆறுதலடைந்ததுமன்றி, தீத்து
வின் மகிழ்ச்சியைக் கண்டு மிகுந்த மகிழ்ச்
சியும் அடைந்தோம். ஏனெனில், அவ
ருக்கு இருந்த மனக்கவலை நீங்கும்படி
நீங்கள் அனைவரும் அவருக்கு உதவி செய்
திருக்கிறீர்கள். 14 உங்களைப்பற்றி நான்
அவரிடம் பேசின எதைக் குறித்தும் வருத்
தப்படத் தேவையில்லை என்று தெரி
கிறது. நாங்கள் உங்களிடம் சொன்ன
ஒவ்வொன்றும் உண்மையாயிருப்பதுபோல,
தீத்துவினிடம் நாங்கள் உங்களைக் குறித்
துப் பெருமையுடன் சொன்னதும் உண்
மையென விளங்கிவிட்டது. 15 அவர்
உங்கள் அனைவருடைய கீழ்ப்படிதலையும்,
நீங்கள் அவரை அச்சத்தோடும் நடுக்கத்
தோடும் ஏற்றுக்கொண்டதையும் நினைவு
கூரும்போதெல்லாம், உங்களிடம் அவர்
கொண்டுள்ள அன்பு அவரது உள்ளத்தில்
பொங்கி எழுகிறது. 16 அதிலிருந்து நான்
உங்களை முற்றிலும் நம்பக்கூடும் என்பதை
அறிந்து மகிழ்ச்சியடைகிறேன்.

## யூதேயாவிலுள்ள வறியாருக்கு உதவியளிக்க ஒரு திட்டம்

8 சகோதரரே, மக்கெதோனியா
நாட்டுத் திருச்சபைகளில் கடவுள்
பொழிந்த அருளைப்பற்றி உங்களுக்குத்
தெரிவிக்க விரும்புகிறோம். 2 அவர்கள்
தங்களுக்கு நேரிட்ட துன்பத்தால் கடுமை
யாகச் சோதிக்கப்பட்டார்கள்; வறுமையில்
ஆழ்ந்திருந்தார்கள். என்றாலும், அவர்கள்
தங்களுக்கிருந்த அளவுகடந்த மகிழ்ச்சி
யினால் தாராள மனப்பான்மையோடு பேர
ளவில் பொருளுதவி செய்தார்கள். 3 அவர்
கள் தங்களால் இயன்ற அளவு கொடுத்
தார்கள்; இல்லை, இயன்ற அளவுக்கு
மேலும் கொடுத்தார்கள். 4 இதற்கு
நானே சாட்சி...கடவுளுக்குரிய மக்களுக்குச்
செய்யும் இந்தப் பணியில் பங்கு

**7:5** 2 கொரி. 2:13. **7:8, 9** எபி. 12:11. **8:1—4** ரோ. 15:26.

கொள்ளும் உரிமையைத் தங்களுக்கும்
அளிக்க வேண்டுமென்று தாங்களாகவே
எங்களை நயந்து கேட்டுக்கொண்டார்கள்.
5 நாங்கள் எதிர்பார்த்ததற்கு மேலாகவே
அவர்கள் செய்தார்கள்; தங்களை முதலில்
ஆண்டவருக்கும், பிறகு கடவுளின் திரு
வுளத்தால் எங்களுக்கும் ஒப்படைத்தார்கள்.
6 நாங்கள் இதைக் கண்டு, அத்தகைய
அறப்பணியை உங்களிடையே
தொடங்கின தீத்து அதைச் செய்து முடிக்
கும்படி அவரைக் கேட்டுக்கொண்டோம்.
7 உங்களிடம் நம்பிக்கை, சொல்வன்மை,
அறிவு, தளராத ஊக்கம், உங்கள் உள்
ளத்தில் நாங்கள் தோற்றுவித்த அன்பு
ஆகியவற்றிலெல்லாம் நீங்கள் மேம்பட்டு
விளங்குகிறீர்கள்; எனவே, இந்த அறப்
பணியிலும் மேம்பட்டு விளங்குங்கள்.

8 இதை நான் ஒரு கட்டளையாகச்
சொல்லவில்லை; மற்றவர்களிடம் காணப்
படும் ஊக்கத்தைச் சொல்வதன் மூலம்,
உங்களிடம் அத்தகைய உண்மையான
அன்பு இருக்கிறதா என்று சோதித்துப்
பார்க்கவே இதைச் சொல்லுகிறேன்.
9 நம்முடைய ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவின் அருட்செயலை நீங்கள் அறி
வீர்கள். அவர் செல்வமிக்கவராயிருந்தும்,
நீங்கள் அவருடைய ஏழ்மையால் செல்வ
ராகும்படி உங்கள் பொருட்டு அவர் ஏழை
யானார்.

10 இவற்றைப்பற்றிய என் கருத்தைச்
சொல்லுகிறேன், அதன்படி செய்வது
உங்களுக்கு நன்மை பயக்கும். ஓர்
ஆண்டிற்கு முன், இதை முதன் முதல்
செய்யத் தொடங்கினவர்கள் நீங்களே;
இதைச் செய்ய வேண்டுமென்று முதன்
முதல் தீர்மானம் செய்தவர்களும் நீங்
களே. 11 இப்போது அதைச் செய்து
முடியுங்கள். தீர்மானம் செய்தபோது
இருந்த அதே மெய்யார்வத்தோடு, உங்க
ளிடம் உள்ளதற்கேற்றபடி அதைச் செய்து
முடியுங்கள். 12 ஒருவன் மெய்யார்வத்
தோடு கொடுத்தால், அவன் தன்னிடம்
உள்ளதற்கேற்றபடி கொடுப்பதைக் கடவுள்
ஏற்றுக்கொள்கிறார்; இல்லாததை அவர்
எதிர்பார்ப்பதில்லை. 13 மற்றவர்களுடைய
தேவையை நிறைவு செய்ய நீங்கள் துன்
பத்திற்குள்ளாக வேண்டும் என்று நான்
சொல்லவில்லை. 14 எல்லாரும் சமநிலையில்
இருக்கும்படி, நீங்கள் உங்களிடம் இப்
போது மிகுதியாயிருப்பதைக் கொண்டு
மற்றவர்களுடைய குறைவை நீக்குவது
நல்லது. அப்பொழுது அவர்கள் தங்களிடம்
மிகுதியாயிருக்கும்போது உங்களு
டைய குறைவை நீக்குவார்கள். இவ்
வாறு சமநிலை ஏற்படும். 15 இதற்கேற்ப
வேதத்தில்,

''மிகுதியாகச் சேர்த்தவனுக்கு மிச்சமு
மில்லை,
குறைவாகச் சேர்த்தவனுக்குக் குறைவு
மில்லை''

என்று எழுதியிருக்கிறது.

### தீத்துவும் அவருடைய கூட்டாளிகளும்

16 உங்கள்மேல் எனக்குள்ள அதே
அக்கறை தீத்துவின் உள்ளத்திலும் உண்
டாகும்படி கடவுள் செய்திருக்கிறார்: அவ
ருக்கு நன்றி. 17 தீத்து எங்கள் வேண்டு
கோளுக்கு இணங்குவதற்காக மட்டுமன்று,
தாமாகவே உங்கள்மீது ஆர்வம் கொண்
டிருப்பதாலும், உங்களிடம் வரப் புறப்
பட்டுக்கொண்டிருக்கிறார். 18 அவரோடு
ஒரு சகோதரனையும் அனுப்பிவைக்கி
றோம். அவர் அருட்செய்தியைப் பரப்பும்
பணியைச் செய்ததன் விளைவாக எல்லாத்
திருச்சபைகளிலும் புகழப்படுகிறவர்; 19 அது
மட்டுமன்று, நாங்கள் நன்கொடையைக்
கொண்டுபோகையில் எங்களுக்கு வழித்
துணையாய் இருக்கும்படி திருச்சபைகளால்
நியமிக்கப்பட்டவருமாவார். இந்த நன்
கொடையை, ஆண்டவரின் மாட்சிமை
விளங்கவும், எங்கள் அக்கறைக்கு ஒரு
சான்றாயிருக்கவும் நாங்கள் திரட்டி எடுத்துச்
செல்கிறோம். 20 தாராளமாகக்
கொடுக்கப்பட்ட நன்கொடையை நாங்கள்
கையாளும் முறைபற்றி யாரும்
எங்களைக் குற்றப்படுத்த வழியில்லாத
படி பார்த்துக்கொள்ள அந்தச் சகோ
தரனை அனுப்பிவைக்கிறோம். 21 ஆண்
டவர் பார்வையில் மட்டுமன்று, மனி
தர் பார்வையிலும் எது சரியோ அதைச்
செய்வதே எங்கள் நோக்கம். 22 அவர்
களோடு எங்களுடைய இன்னொரு சகோ
தரனையும் அனுப்பிவைக்கிறோம். அவர்
இத்தகைய பணி செய்வதில் ஆர்வமுள்ள
வர் என்பதைப் பல வழிகளில் நாங்கள்
பன்முறை கண்டிருக்கிறோம். உங்கள் ஒத்
துழைப்பைக் குறித்து மிக உறுதியான
நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டிருப்பதால்,
அவர் இப்போது இன்னும் ஆர்வமுள்ள
வராயிருக்கிறார். 23 தீத்து யாரென்றால்,
அவர் என் கூட்டாளி, உங்களுக்காகச்
செய்யப்படும் வேலையில் என் உடன் ஊழியர்.
அவருடன் நாங்கள் அனுப்பும் சகோ
தரர் யாரென்றால், அவர்கள் திருச்சபை
களின் தூதுவர்கள், கிறிஸ்துவின் மாட்
சிமை வெளிப்படும் வகையில் உழைக்கிற
வர்கள். 24 ஆகையால் எல்லாத் திருச்
சபையாரும் அறிந்துகொள்ளும் வண்ணம்
உங்கள் அன்பை அவர்களுக்குக் காட்டுங்கள்;

**8:15** யாத். 16:18. **8:21** ரோ. 12:17.

நாங்கள் உலகப் போக்கிற்குரிய தன்ன
லத்தோடு நடக்கிறவர்கள் என்று சிலர்
எண்ணுகின்றனர்; அவர்களிடமே என்
மனத்துணிவை உறுதியுடன் காட்ட
வேண்டுமென்று நினைக்கிறேன். 3 நாங்கள்
உலகத்திலே வாழ்ந்தாலும் உலகப் போக்கிற்
குரிய தன்னலமுள்ளவர்களாய்ப் போராட
வில்லை. 4 எங்கள் போராட்டத்திற்கான
படைக்கலங்கள் இவ்வுலகத்திற்குரியவை
யல்ல. அவை அரண்களையும் அழிக்கக்
கூடிய தெய்வீக வல்லமை பொருந்தியவை.
5 அவற்றைக் கொண்டு குதர்க்கமான
வாதங்களையும் கடவுளை அறிகிற அறி
வுக்கு மாறாகத் தலைதூக்கும் எத்தகைய
மேட்டிமையையும் தகர்த்துவிடுகிறோம்;
மனித எண்ணம் எதுவாயினும் அதைக்
கிறிஸ்துவுக்குக் கீழடங்குமாறு அடிமைப்
படுத்திவிடுகிறோம். 6 நீங்கள் முற்றிலும்
கீழ்ப்படிந்த பிறகும் யாராவது ஒருவன்
எதிர்ப்புத் தெரிவிப்பானானால், அவனைத்
தண்டிக்கத் தயங்க மாட்டோம்.

7 உங்களுக்கு எதிரில் இருப்பவற்றைக்
கண்திறந்து பாருங்கள்.* யாராவது ஒருவன்
தான் கிறிஸ்துவுக்குச் சொந்தமானவன்
என்று கருதுவானானால், அவன்
தனக்குள்ளே மேலும் சிந்தனை செய்து
பார்க்கட்டும். அவன் கிறிஸ்துவுக்குச்
சொந்தமாயிருப்பதுபோலவே நாங்களும்
கிறிஸ்துவுக்குச் சொந்தமாயிருக்கிறோம்
என்பதை அவன் தெரிந்துகொள்ளட்டும்.
8 உங்கள் சபையின் பொது வாழ்க்கையை
அழிப்பதற்காக அன்று, அதை வளர்ப்ப
தற்காகவே ஆண்டவர் எங்களுக்கு அதி
காரம் கொடுத்திருக்கிறார். ஆண்டவர்
கொடுத்த அந்த அதிகாரத்தைப்பற்றி
நான் சற்று மிகுதியாகவே பெருமை
கொண்டாலும் அது சரியே, அதற்காக
நான் வெட்கப்படப்போவதில்லை. 9 இவ்
வாறெல்லாம் எழுதும்போது, நான் உங்
களை வெறும் கடிதங்கள் மூலமாக மட்டும்
மிரட்டுகிறேனென்று நினைக்க வேண்டாம்.
10 ஏனெனில், யாரோ ஒருவன்,
'பவுலின் கடிதங்கள் கடுமையானவை,
காரமானவை; ஆளைப் பார்த்தாலோ,
அவன் ஒரு சொத்தை; அவன் பேச்சும்
வெறும் கூச்சலே' என்று சொல்கிறானாம்.
11 அப்படிச் சொல்கிறவன் ஒன்றைத்
தெரிந்துகொள்ளட்டும்: நான் தொலைவி
லிருந்து கடிதங்களை எழுதும்போது, என்
சொற்களில் எப்படிக் காணப்படுகிறேனோ
அப்படியே உங்களிடையே நான் வந்திருக்கும்
போதும் என் செயலிலே காணப்படுவேன்.

12 சிலர் தம்மைத் தாமே பாராட்டிக்
கொள்கின்றனர். இத்தகைய மனிதரோடு
எங்களைச் சரிசமானமாக்கிக்கொள்ளவோ,
நாங்களும் அவர்களைப் போன்றவர்கள்
என்று சொல்லிக்கொள்ளவோ
எங்களுக்குத் துணிவில்லை! அவர்கள்
தாங்கள் உண்டுபண்ணிக்கொள்ளும் அளவு
கோலைக் கொண்டு தங்களை அளவிட்டுத்
தங்களைத் தங்களோடேயே ஒப்பிட்டுக்
கொள்கிறார்கள். அவர்கள் அறிவிலிகள்.
13 எதைப்பற்றியும் நாங்கள் அளவுமீறிப்
பெருமைகொள்வதில்லை. அதற்கென்று
எங்களுக்கு ஓர் அளவு இருக்கிறது.
அந்த அளவு, கடவுள் எங்கள் பணிக்
கெனக் குறிப்பிட்ட எல்லையாகும். உங்கள்
ஊருக்கு நாங்கள் வந்தது அந்த எல்
லையை மீறினதாகாது. 14 உங்கள் ஊர்
வரைக்கும் நாங்கள் வராதிருந்தோமானால்,
உங்களைப்பற்றி நாங்கள் பெருமைகொள்
வது அளவுமீறிய செயலாகும். உண்மை
என்னவெனில், கிறிஸ்துவின் அருட்செய்
தியை உங்களுக்கு முதன்முதல் அறி
வித்தவர்கள் நாங்களே. 15 மற்றவர்களு
டைய உழைப்பிற்குரிய பெருமையை நாங்
கள் எடுத்துக்கொள்வோமானால், நாங்கள்
எங்கள் அளவை மீறுகிறவர்களாவோம்.
நாங்கள் அவ்வாறு செய்யவில்லையே. உங்
கள் நம்பிக்கை மேன்மேலும் வளருமென
நினைக்கிறோம். அது வளர வளர, உங்
களிடையே எங்களுக்குள்ள செல்வாக்கும்
வளரும்; நாங்களும் எங்கள் எல்லைக்
குள்ளேதான் இருக்கிறவர்களாவோம்.
16 இவ்வாறு எங்கள் செல்வாக்கு வளர்
வதால், பிறகு நாங்கள் உங்கள்
ஊருக்கும் அப்பாலுள்ள பகுதிகளில் அருட்
செய்தியை அறிவிக்கக்கூடும். அப்பொழுது
நாங்கள் எங்களைப்பற்றிப் பெருமையுடன்
கூறிக்கொண்டாலும், மற்றவர்கள் தங்கள்
எல்லைக்குள் செய்த வேலையைப்பற்றி
நாங்கள் பெருமைகொள்கிறவர்களாக
மாட்டோம்.

17 ''ஒருவன் எதைக் குறித்தாவது
பெருமைகொள்ள விரும்பினால், அவன்
ஆண்டவரைக் குறித்தே பெருமை
கொள்வானாக.''

18 ஏனெனில், தன்னைப்பற்றித் தானே
நற்சான்று கூறுகிறவன் மதிப்பிற்குரியவன்
அல்ல; ஆண்டவர் யாரைப் பற்றி நற்
சான்று கூறுகிறாரோ அவனே மதிப்பிற்
குரியவனாவான்.

## போலித் தூதுவரைப்பற்றியது

11 நான் ஓரளவு மதிகேடாகப் பேசு
வதைப் பொறுத்துக்கொள்ளுமாறு
கோருகிறேன்; சற்றே பொறுத்துக்கொள்
ளுங்கள். 2 கடவுள் உங்களிடம் எப்படி

* 'நீங்கள் வெளித்தோற்றத்தைக்கொண்டு மதிப்பிடுகிறீர்கள்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
**10:12** நீதி. 27:2. **10:17** எரே. 9:24. **11:2** எபே. 5:27.

நாங்கள் உங்களைக் குறித்துப் பெரு
மையாகச் சொன்னது மிகையன்று என்
பதையும் அவ்வாறே காட்டுங்கள்.

### யூதேயாவிலுள்ள இறைமக்களுக்கு அளிக்கும் உதவி

9 கடவுளுக்குரிய மக்களுக்குச் செய்யும்
இந்த நற்பணியைக் குறித்து நான்
உங்களுக்கு எழுதத் தேவையில்லை. 2 ஏனெ
னில், உங்கள் மெய்யார்வம் எனக்குத்
தெரியும். கடந்த ஆண்டிலிருந்தே அகாயா
நாடு இந்தப் பணிக்கான ஏற்பாடுகளைச்
செய்து வருகிறதென்று மக்கெதோனியா
நாட்டினரிடம் சொல்லி, உங்களைப் பற்றிப்
பெருமையாகக் கூறிவருகிறேன். உங்கள்
ஆர்வம் இன்னும் பலரைத் தூண்டி
யெழுப்பிவிட்டிருக்கிறது. 3 இருந்தாலும்,
நாங்கள் இந்தக் காரியத்தில் உங்களைக்
குறித்துப் பெருமையாகக் கூறியது பொய்
யாகிவிடக் கூடாதே என்பதற்காகவும்,
நான் மக்கெதோனியா நாட்டினரிடம்
சொன்னதற்கேற்ப நீங்கள் தக்க ஏற்பாடு
களுடன் இருக்க வேண்டும் என்பதற்காக
வும் இந்தச் சகோதரரை உங்களிடம்
அனுப்பிவைக்கிறேன். 4 அப்படி இரா
விடில், மக்கெதோனியா நாட்டினர் என்
னோடு வந்து, நீங்கள் எந்த ஏற்பாடும்
செய்யாதிருப்பதைக் காண நேரிட்டால்,
நாங்கள் உங்களை நம்பியிருந்ததற்காக
வெட்கப்பட வேண்டியிருக்கும் என்று
சொல்லத் தேவையில்லை. 5 அதனாலே
தான், அந்தச் சகோதரர்கள் முன்கூட்டி
உங்களிடம் வந்து, நீங்கள் வாக்களித்த
உதவித் தொகையைப் பெறுவதற்கான
முன்னேற்பாடுகள் செய்யும்படி அவர்களை
கேட்டுக்கொள்ள வேண்டுமென்று நினைத்
தேன். முன்னேற்பாடு செய்தால், நீங்கள்
கொடுப்பது வலுக்கட்டாயத்தினாலன்று,
மனமாரக் கொடுக்கும் உதவித் தொகை
யாயிருக்கும்; அது நான் வரும்போது
ஆயத்தமாயுமிருக்கும்.

6 சிறுக விதைப்பவன் சிறுக அறுப்
பான், பெருக விதைப்பவன் பெருக அறுப்
பான் என்பதை நினைவில் வைத்துக்கொள்
ளுங்கள். 7 ஒவ்வொருவனும் தன்தன்
மனத்தில் தீர்மானித்தபடியே கொடுக்கட்
டும், மன வருத்தத்தோடோ அல்லது
கட்டாயத்தினாலோ கொடுக்க வேண்டாம்.
முகமலர்ச்சியோடு கொடுப்பவனே
கடவுளுக்கு மகிழ்ச்சியளிப்பவன். 8 கடவுள்
எல்லா நலன்களையும் உங்களிடம் பொங்கி
வழியச்செய்ய வல்லவர். அவர் எந்தச்
சூழ்நிலையிலும், எல்லாக் காலத்திலும் உங்
களுக்குத் தேவையான அனைத்தையும்
அருளுவார்; அது மட்டுமன்று, எவ்வகை
யான நற்செயலைச் செய்வதற்கும் வேண்
டிய பொருளையும் மிகுதியாகத் தந்தருளு
வார். 9 இதற்கிசைய வேதத்தில்,
''வாரிக் கொடுத்தான், வறியாருக்கு
வழங்கினான்;
அவனது அறச்செயல் என்றென்றும்
நிலைநிற்கும்''
என்று எழுதியிருக்கிறது. 10 விதைப்ப
வனுக்கு விதையையும், உண்பவனுக்கு
உணவையும் அளிப்பவர் உங்களுக்கும்
விதைக்க விதையைத் தந்து, அதைப் பன்
மடங்காக்குவதன் மூலம், உங்கள் அறச்
செயல்களாகிய விளைச்சலைப் பெருகும்
படியும் செய்வார்; 11 நீங்கள் எப்போ
தும் தாராளமாகக் கொடுக்கக்கூடியவர்
களாய் இருக்கும்படி, உங்களுக்குக் குன்றாத
செல்வத்தை எந்நாளும் அருளுவார்.
எங்கள் மூலம் நீங்கள் அனுப்பும் உங்கள்
தாராள நன்கொடை கடவுளைப் போற்றும்
துதியாகப் பூத்து மலரும். 12 எப்
படியெனில், நீங்கள் பணியாக ஏற்றுக்
கொண்ட இந்தச் சேவை, கடவுளுக்குரிய
மக்களின் தேவையை நிறைவு செய்வது
மன்றி, ஏராளமான மக்கள் கடவுளுக்குச்
செலுத்தும் நன்றியை மலர்ந்து விரியச்
செய்கிறது. 13 இந்த நற்பணியின் மூலம்
உங்கள் சிறந்த பண்பு விளங்கும். அதை
அவர்கள் கண்டு கடவுளைப் போற்றிப்
புகழுவார்கள். ஏனெனில், நீங்கள் ஒப்
புக்கொண்ட கிறிஸ்துவின் அருட்செய்
திக்கு உண்மையிலேயே கீழ்ப்படிந்து நடக்
கிறீர்கள் என்பது அதனால் தெரியவரும்;
அவர்களுக்கும் மற்றெல்லாருக்கும் செய்
யப்படும் இந்த அன்புப் பணியில் நீங்கள்
தாராள மனப்பான்மையுடன் பங்கு
கொள்கிறீர்கள் என்பதும் தெரியவரும்.
14 ஆகையால், கடவுள் உங்கள்மீது
பொழிந்தருளிய பேரருளை முன்னிட்டு,
அவர்கள் உங்களிடம் பாசங்கொண்டு,
உங்களுக்காகக் கடவுளிடம் வேண்டுதல்
செய்வார்கள். 15 கடவுள் அருளிய
சொல்லுக்கடங்காத ஈவுக்காக அவருக்கு
நன்றி.

### குற்றச்சாட்டுக்கு மறுமொழி

10 பவுலாகிய நான் கிறிஸ்துவின் சாந்
தத்தையும் அருளிரக்கத்தையும் முன்
னிட்டு உங்களை ஒன்று கேட்டுக்கொள்
கிறேன். உங்களோடு நான் இருக்கும்
போது, அடக்கமுள்ளவனாயும், உங்களை
விட்டுத் தொலைவில் இருக்கும்போது துணி
வுள்ளவனாயும் இருக்கிறேன் என்று நீங்கள்
சொல்கிறீர்கள். 2 நான் உங்களிடையே
வந்திருக்கும்போது என் துணிவைக் காட்
டுவதற்கு இடமிராதபடி பார்த்துக்கொள்
ளுங்கள். இதுவே என் வேண்டுகோள்.

9:6 நீதி. 11:24, 25. 9:9 சங். 112:9. 9:10 ஏசா. 55:10.

நாங்கள் உலகப் போக்கிற்குரிய தன்ன
லத்தோடு நடக்கிறவர்கள் என்று சிலர்
எண்ணுகின்றனர்; அவர்களிடமே என்
மனத்துணிவை உறுதியுடன் காட்ட
வேண்டுமென்று நினைக்கிறேன். 3 நாங்கள்
உலகத்திலே வாழ்ந்தாலும் உலகப் போக்கிற்
குரிய தன்னலமுள்ளவர்களாய்ப் போராட
வில்லை. 4 எங்கள் போராட்டத்திற்கான
படைக்கலங்கள் இவ்வுலகத்திற்குரியவை
யல்ல. அவை அரண்களையும் அழிக்கக்
கூடிய தெய்வீக வல்லமை பொருந்தியவை.
5 அவற்றைக் கொண்டு குதர்க்கமான
வாதங்களையும் கடவுளை அறிகிற அறி
வுக்கு மாறாகத் தலைதூக்கும் எத்தகைய
மேட்டிமையையும் தகர்த்துவிடுகிறோம்;
மனித எண்ணம் எதுவாயினும் அதைக்
கிறிஸ்துவுக்குக் கீழடங்குமாறு அடிமைப்
படுத்திவிடுகிறோம். 6 நீங்கள் முற்றிலும்
கீழ்ப்படிந்த பிறகும் யாராவது ஒருவன்
எதிர்ப்புத் தெரிவிப்பானானால், அவனைத்
தண்டிக்கத் தயங்க மாட்டோம்.

7 உங்களுக்கு எதிரில் இருப்பவற்றைக்
கண்திறந்து பாருங்கள்.* யாராவது ஒருவன்
தான் கிறிஸ்துவுக்குச் சொந்தமானவன்
என்று கருதுவானானால், அவன்
தனக்குள்ளே மேலும் சிந்தனை செய்து
பார்க்கட்டும். அவன் கிறிஸ்துவுக்குச்
சொந்தமாயிருப்பதுபோலவே நாங்களும்
கிறிஸ்துவுக்குச் சொந்தமாயிருக்கிறோம்
என்பதை அவன் தெரிந்துகொள்ளட்டும்.
8 உங்கள் சபையின் பொது வாழ்க்கையை
அழிப்பதற்காக அன்று, அதை வளர்ப்ப
தற்காகவே ஆண்டவர் எங்களுக்கு அதி
காரம் கொடுத்திருக்கிறார். ஆண்டவர்
கொடுத்த அந்த அதிகாரத்தைப்பற்றி
நான் சற்று மிகுதியாகவே பெருமை
கொண்டாலும் அது சரியே, அதற்காக
நான் வெட்கப்படப்போவதில்லை. 9 இவ்
வாறெல்லாம் எழுதும்போது, நான் உங்
களை வெறும் கடிதங்கள் மூலமாக மட்டும்
மிரட்டுகிறேனென்று நினைக்க வேண்டாம்.
10 ஏனெனில், யாரோ ஒருவன்,
'பவுலின் கடிதங்கள் கடுமையானவை,
காரமானவை; ஆளைப் பார்த்தாலோ,
அவன் ஒரு சொத்தை; அவன் பேச்சும்
வெறும் கூச்சலே' என்று சொல்கிறான்.
11 அப்படிச் சொல்கிறவன் ஒன்றைத்
தெரிந்துகொள்ளட்டும்: நான் தொலைவி
லிருந்து கடிதங்களை எழுதும்போது, என்
சொற்களில் எப்படிக் காணப்படுகிறேனோ
அப்படியே உங்களிடையே நான் வந்திருக்கும்
போதும் என் செயலிலே காணப்படுவேன்.

12 சிலர் தம்மைத் தாமே பாராட்டிக்
கொள்கின்றனர். இத்தகைய மனிதரோடு
எங்களைச் சரிசமானமாக்கிக்கொள்ளவோ,
நாங்களும் அவர்களைப் போன்றவர்கள்
என்று சொல்லிக்கொள்ளவோ
எங்களுக்குத் துணிவில்லை! அவர்கள்
தாங்கள் உண்டுபண்ணிக்கொள்ளும் அளவு
கோலைக் கொண்டு தங்களை அளவிட்டுத்
தங்களைத் தங்களோடேயே ஒப்பிட்டுக்
கொள்கிறார்கள். அவர்கள் அறிவிலிகள்.
13 எதைப்பற்றியும் நாங்கள் அளவுமீறிப்
பெருமைகொள்வதில்லை. அதற்கென்று
எங்களுக்கு ஓர் அளவு இருக்கிறது.
அந்த அளவு, கடவுள் எங்கள் பணிக்
கெனக் குறிப்பிட்ட எல்லையாகும். உங்கள்
ஊருக்கு நாங்கள் வந்தது அந்த எல்
லையை மீறினதாகாது. 14 உங்கள் ஊர்
வரைக்கும் நாங்கள் வராதிருந்தோமானால்,
உங்களைப்பற்றி நாங்கள் பெருமைகொள்
வது அளவுமீறிய செயலாகும். உண்மை
என்னவெனில், கிறிஸ்துவின் அருட்செய்
தியை உங்களுக்கு முதன்முதல் அறி
வித்தவர்கள் நாங்களே. 15 மற்றவர்களு
டைய உழைப்பிற்குரிய பெருமையை நாங்
கள் எடுத்துக்கொள்வோமானால், நாங்கள்
எங்கள் அளவை மீறுகிறவர்களாவோம்.
நாங்கள் அவ்வாறு செய்யவில்லையே. உங்
கள் நம்பிக்கை மேன்மேலும் வளருமென
நினைக்கிறோம். அது வளர வளர, உங்
களிடையே எங்களுக்குள்ள செல்வாக்கும்
வளரும்; நாங்களும் எங்கள் எல்லைக்
குள்ளேதான் இருக்கிறவர்களாவோம்.
16 இவ்வாறு எங்கள் செல்வாக்கு வளர்
வதால், பிறகு நாங்கள் உங்கள்
ஊருக்கும் அப்பாலுள்ள பகுதிகளில் அருட்
செய்தியை அறிவிக்கக்கூடும். அப்பொழுது
நாங்கள் எங்களைப்பற்றிப் பெருமையுடன்
கூறிக்கொண்டாலும், மற்றவர்கள் தங்கள்
எல்லைக்குள் செய்த வேலையைப்பற்றி
நாங்கள் பெருமைகொள்கிறவர்களாக
மாட்டோம்.

17 ''ஒருவன் எதைக் குறித்தாவது
பெருமைகொள்ள விரும்பினால், அவன்
ஆண்டவரைக் குறித்தே பெருமை
கொள்வானாக.''

18 ஏனெனில், தன்னைப்பற்றித் தானே
நற்சான்று கூறுகிறவன் மதிப்பிற்குரியவன்
அல்ல; ஆண்டவர் யாரைப் பற்றி நற்
சான்று கூறுகிறாரோ அவனே மதிப்பிற்
குரியவனாவான்.

### போலித் தூதுவரைப்பற்றியது

11 நான் ஓரளவு மதிகேடாகப் பேசு
வதைப் பொறுத்துக்கொள்ளுமாறு
கோருகிறேன்; சற்றே பொறுத்துக்கொள்
ளுங்கள். 2 கடவுள் உங்களிடம் எப்படி

* 'நீங்கள் வெளித்தோற்றத்தைக்கொண்டு மதிப்பிடுகிறீர்கள்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
**10:12** நீதி. 27:2. **10:17** எரே. 9:24. **11:2** எபே. 5:27.

அன்பார்வம் கொண்டிருக்கிறரோ அப்ப
டியே நானும் உங்களிடம் அன்பார்வம்
கொண்டிருக்கிறேன். நான் உங்களைக்
கிறிஸ்து என்கிற மணவாளருக்கே மண
வுறுதி செய்திருக்கிறேன்; அவர் முன்
னிலையில் உங்களைக் கற்புள்ள கன்னியாக
நிறுத்த எண்ணியிருக்கிறேன். 3 ஆயினும்,
ஏவாள் பாம்பினுல் சூழ்ச்சியாக வஞ்சிக்
கப்பட்டதைப்போல, உங்கள் மனமும்
வஞ்சிக்கப்பட்டு, கிறிஸ்துவினிடமுள்ள
கபடற்றதும், தூய்மை வாய்ந்ததுமான
பற்றுறுதியை விட்டுவிட்டுச் சீர்கெட்டுப்
போகுமோ என்ற கவலை எனக்கிருக்கிறது.
4 ஏனெனில், ஒருவன் வந்து, நாங்கள் அறி
வியாத வேறோர் இயேசுவை அறிவிப்ப
தனுல், நீங்கள் பெற்றுக்கொண்டதற்கு
மாறுன வேறோர் ஆவியைப் பெறுகிறீர்கள்;
ஏற்றுக்கொண்டதற்கு மாறுன வேறோர்
அருட்செய்தியையும் ஏற்கிறீர்கள்; என்னே
உங்கள் பரந்த மனப்பான்மை! 5 இந்த
'மிகச்சிறந்த' தூதுவரைவிட நான் எந்த
வகையில் தாழ்ந்தவன்? 6 நான் பேச்சில்
குறைபாடுள்ளவனுய் இருக்கலாம். ஆனுல்,
அறிவிலோ அப்படியன்று, இதை நான்
எல்லாவகையிலும், எல்லாச் சூழ்நிலையி
லும் உங்களுக்கு வெளிப்படுத்தியிருக்கிறேன்.

7 உங்களுக்கு எச்செலவுமின்றிக்
கடவுளின் அருட்செய்தியை அறிவித்தேன்.
உங்களை உயர்த்துவதற்காக நான் என்
னையே தாழ்வுபடுத்திக்கொண்டேன்; இப்
படிச் செய்தது ஒரு குற்றமா? 8 நான்
உங்களிடையே திருப்பணி செய்வதற்காக
மற்றச் சபையாரிடமிருந்து ஊதியம் பெற்
றேன்; இவ்வாறு உங்களுக்காக அவர்கள்
பொருளைக் கொள்ளையிட்டேன் என
லாம். 9 நான் உங்களோடிருக்கையில்
எனக்குப் பணம் தேவைப்பட்டபோதும்,
நான் யாருக்கும் ஒரு சுமையாயிருக்க
வில்லை; மக்கெதோனியாவிலிருந்து வந்த
சகோதரர் என் தேவையை நிறைவு செய்
தனர். நான் எவ்வகையிலும் உங்களுக்குச்
சுமையாயிராதபடி பார்த்துக்கொண்டேன்.
இனிமேலும் பார்த்துக்கொள்வேன். 10 நான்
பெருமைகொள்வதற்கான இந்தக் கார
ணத்தை அகாயா நாட்டுப் பகுதிகளில்
எவரும் நீக்கிவிட நான் இடமளிக்கப்
போவதில்லை. கிறிஸ்துவின் சத்தியம் என்
னுள் இருப்பது உண்மை என்பதுபோல
இதுவும் உண்மை. 11 நான் இப்படிச்
செய்வது உங்கள்மீது எனக்கு அன்பு இல்லா
ததனுலேயா? அது கடவுளுக்குத் தெரியும்.

12 சிலர் தாம் செய்யும் பணியைப்
பற்றிப் பெருமையுடன் கூறிக்கொண்டு,
அப்பணி எங்கள் பணியைப்போலத் தோன்
றும்படி செய்ய வாய்ப்புத் தேடுகின்றனர்.
அந்த வாய்ப்பு அவர்களுக்குக் கிடைக்கா
திருக்கும்படி, நான் இப்போது செய்து
வருகிறபடியே இனிமேலும் தொடர்ந்து
செய்துவருவேன். 13 அத்தகையோர்
போலித் தூதுவர், கபடமுள்ள வேலை
யாள்கள். அவர்கள் கிறிஸ்துவின் தூதுவர்
போல நடிக்கிருர்கள். 14 அதில் வியப்
பொன்றுமில்லை. சாத்தானுங்கூட ஒளி
மண்டலத் தூதன்போல நடிக்கிறுன்.
15 ஆகையால், அவனுடைய ஊழியர்
நீதி தழைக்க உழைப்பவர்போல நடிப்பதில்
புதுமை ஒன்றுமில்லை; அவர்களது
முடிவு அவர்களுடைய செய்கைகளுக்குத்
தக்கதாகவே இருக்கும்.

### பவுல் பட்ட பாடுகள்

16 மீண்டும் நான் சொல்கிறேன்:
யாரும் என்னை ஒரு மதிகேடன் என்று
நினைக்க வேண்டாம். அப்படியே நினைத்
தாலும், என்னை ஒரு மதிகேடனுகவே ஏற்
றுக்கொள்ளுங்கள். அப்பொழுது அவர்
களைப்போல நானும் என்னைப்பற்றிச்
சற்றுப் பெருமையுடன் கூறிக்கொள்ள இட
முண்டு. 17 நான் இப்போது என் பெருமை
யைத் துணிவுடன் சொல்லப்போகிறேன்;
இதை நான் ஆண்டவரால் தூண்
டுதலளிக்கப்பெற்றுச் சொல்லவில்லை; மதி
கேடனுகவே பேசுகிறேன். 18 எத்தனையோ
பேர் உலகத்திற்குரிய காரியங்களைக்
காட்டிப் பெருமைகொள்வதால், நானும்
அவ்வாறே பெருமையோடு பேசப்
போகிறேன். 19 மதி நுட்பம் உடையவர்
களாயிருக்கும் நீங்கள் மதிகேடரை மன
மாரப் பொறுத்துக்கொள்கிறீர்களே!
20 உங்களை யாராவது அடிமைகளாக்கினுல்
அல்லது சூறையாடினுல் அல்லது உங்களுக்குக்
கண்ணிவைத்தால் அல்லது உங்களிடம்
இறுமாப்புடன் நடந்துகொண்டால் அல்லது
உங்களைக் கன்னத்தில் அறைந்தால்,
நீங்கள் எதிர்ப்புத் தெரிவிப்பதில்லை:
என்னே உங்கள் நற்பண்பு! 21 நாங்கள்
இவற்றையெல்லாம் செய்ய இயலாத
கோழைகளே! இதை நான் வெட்கத்
தோடு ஒப்புக்கொள்கிறேன்!

எனினும், ஒருவனுக்கு எவ்வெவற்றில்
பெருமைகொள்ளத் துணிவு இருக்கிறதோ
அவற்றையெல்லாம் குறித்துப் பெருமை
கொள்ள எனக்கும் துணிவு உண்டு.—
மதிகேடனைப்போலவே பேசுகிறேன்.
22 அவர்கள் எபிரேயரா? நானும் ஓர் எபி
ரேயனே; அவர்கள் இஸ்ரவேலரா? நானும்
ஓர் இஸ்ரவேலனே; அவர்கள் ஆபிரகாம்
மரபில் வந்தவர்களா? நானும் ஆபிர
காம் மரபில் வந்தவனே. 23 அவர்கள்
கிறிஸ்துவின் ஊழியர்களா? நான் அவர்

11:3 ஆதி. 3:1—5, 13. 11:4 கலா. 1:6—9. 11:13 திருவெளி. 2:2. 11:23 திருத்தூது. 16:23.

களைவிட மிக மேம்பட்ட ஊழியன் என்றே சொல்வேன். — மதியிழந்தவன் போலப் பேசுகிறேன். நான் அவர்களைவிட மிகுதியாக உழைத்தவன், பன்முறை சிறையில் வைக்கப்பட்டவன். மிகுதியாக அடிபட்டவன், பன்முறை சாகும் தறுவாயில் இருந்தவன். 24 யூதர்கள் எனக்கு முப்பத்தொன்பது சாட்டையடித் தண்டனையை ஐந்து முறை வழங்கினார்கள்; 25 மூன்று முறை தடியால் அடிக்கப்பட்டேன்; ஒரு முறை கல்லால் அடியுண்டேன்; மூன்று முறை கப்பற் சிதைவில் சிக்கினேன்; நடுக்கடலில் ஓர் இரவும் பகலும் அலைப்புண்டு தவித்தேன்; 26 பயணங்கள் மிகப்பல செய்தேன்; ஆறுகளில் இடர்கள், கொள்ளைக்காரரால் இடர்கள்; என் சொந்த இனத்தவரால் இடர்கள், பிற இனத்தவராலும் இடர்கள், நகரத்திலும் இடர்கள், நாட்டுப்புறத்திலும் இடர்கள், கடலிலும் இடர்கள், போலிச் சகோதரராலும் இடர்கள். இவற்றிற்கெல்லாம் ஆளானேன். 27 அயராத உழைப்பு, கடுந்தொழில், பன்முறை தூக்கமின்மை, பசி, தாகம், பன்முறை உணவின்மை, குளிர், போதிய ஆடையின்மை ஆகியவற்றால் வருந்தினேன். 28 இவை போன்றவை நீங்கலாக, எல்லாத் திருச்சபைகளைப்பற்றிய கவலை வேறே என்னை நாள்தோறும் வருத்துகிறது. 29 ஒருவன் நம்பிக்கையில் உறுதியற்றவனாயிருந்தால், நானே அந்த உறுதியற்ற மனிதன் என்கிற உணர்வு எனக்கு இருப்பதில்லையா? ஒருவனை யாராவது பாவக்குழியில் விழும்படி செய்தால், என் மனம் கொதித்தெழுவதில்லையா?

30 நான் பெருமை கொள்வதாயிருந்தால், என் வலிமைக் குறைவால் என்னை வருத்தியவற்றைக் குறித்தே பெருமை கொள்வேன். 31 நான் சொன்னவற்றுள் எதுவும் பொய்யன்று. இது ஆண்டவராகிய இயேசுவின் கடவுளும் தந்தையுமானவருக்கே தெரியும். (அவரே என்றென்றைக்கும் போற்றுதலுக்குரியவர்.) 32 நான் தமஸ்கு பட்டணத்தில் இருந்தபோது, அரேத்தா அரசனின் ஆளுநன் என்னைக் கைதியாக்கத் தமஸ்கு பட்டணத்து வாயில்களில் காவலரை வைத்திருந்தான். 33 ஆனால், சிலர் பட்டணத்து மதிலிலிருந்த திறப்பு வழியாக என்னைக் கூடையில் வைத்து இறக்கிவிட்டனர். இவ்வாறு நான் அவன் கைக்குத் தப்பினேன்.

### பவுலுக்குக் கிடைத்த திருக்காட்சிகளும் வெளிப்பாடுகளும்

**12** பெருமை கொள்ளுதல் பயனற்ற செயலாகும். ஆயினும், நான் அவ்வாறு செய்ய வேண்டியிருப்பதால், ஆண்டவர் அருளிய காட்சிகளையும் வெளிப்பாடுகளையும் சொல்லுகிறேன். 2 கிறிஸ்துவின் அடியான் ஒருவனை நான் அறிவேன். அவன் பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பு மூன்றாம் வானம் வரையில் எடுத்துச் செல்லப்பட்டான். (அவனது ஊனுடலும் மேலே சென்றதோ இல்லையோ எனக்குத் தெரியாது, கடவுளுக்கே தெரியும்). 3 அந்த மனிதன் பேரின்ப வீட்டிற்குள் எடுத்துச் செல்லப்பட்டான். (அவனது ஊனுடலும் மேலே சென்றதோ இல்லையோ எனக்குத் தெரியாது, கடவுளுக்கே தெரியும்). 4 அங்கே மனித மொழிகளில் உச்சரிக்கவும் சொல்லவும் கூடாத செய்திகளைக் கேட்டான். இதுவும் எனக்குத் தெரியும். 5 அத்தகைய மனிதனைப்பற்றிப் பெருமையுடன் கூறுவேன்; ஆனால், என்னைப்பற்றிக் கூறும்போதோ, என் வலிமை குன்றிய நிலைமையைக் குறித்தேயல்லாமல், வேறொன்றைக் குறித்தும் பெருமையுடன் கூற மாட்டேன். 6 அப்படி நான் என்னைப்பற்றிப் பெருமையுடன் கூறிக்கொண்டாலும், மதிகேடனாகத் தோன்ற மாட்டேன். ஏனெனில், நான் சொல்வது உண்மையாகவே இருக்கும். ஆயினும், என்னிடம் காண்பதையும் கேட்பதையும்விட உயர்வாக என்னைப்பற்றி யாரும் எண்ணுவதை நான் விரும்பவில்லை. அதற்காக நான் என்னைப் பற்றிப் பெருமையுடன் கூறிக்கொள்வதைத் தவிர்க்கிறேன். 7 எனக்கு அருளப்பட்ட அந்தத் திருவெளிப்பாடுகள் மிக மேம்பட்டவை. அதனால், நான் என்னைப் பற்றி உயர்வாக எண்ண இடமுண்டு. ஆனால், நான் அப்படி எண்ணாதபடி என் உடலில் முள்போன்ற ஒரு நோய் கொடுக்கப்பட்டிருந்தது. நான் என்னைப் பற்றி உயர்வாக எண்ணாதபடி என்னைக் குத்திக்கொண்டே இருப்பதற்கு அது சாத்தானுடைய தூதனாக அனுப்பப்பட்டிருந்தது. 8 அதைக் குறித்து நான் ஆண்டவரிடம் மூன்று முறை மன்றாடி, அதை நீக்கிவிடும்படி வேண்டுதல் செய்தேன். 9 அவரோ என்னிடம், ''எனது அருள் உனக்குப் போதும்; வல்லமையற்றவர்களிடமே என் வல்லமை முழு அளவில் விளங்கும்'' என்று சொல்லிவிட்டார். ஆகையால், கிறிஸ்துவின் வல்லமை என்னுள் தங்கியிருக்கும் பொருட்டு, நான் வல்லமையற்றவனாய் இருக்க விரும்புகிறேன். அப்படி இருப்பதிலேதான் நான் பெருமைகொள்கிறேன். 10 எனவே, நான் வல்லமையற்றவனாய் இருப்பதிலும், எனக்கு நேரிடும் கொடுமையிலும் நெருக்

**11:24** உபா. 25:3 **11:25** திருத்தூது. 16:22. **11:29** 1 கொரி. 9:22. **11:32, 33** திருத்தூது. 9:24, 25.
**12:9** எசா. 40:29.

கடியிலும் வாதையிலும் இடுக்கண்களிலுங்கூடக் கிறிஸ்துவின் பொருட்டு நான் மகிழ்ச்சியோடிருக்கிறேன். ஏனெனில், நான் வல்லமையின்றி இருக்கும்போதுதான் வல்லமை உடையவனுயிருக்கிறேன்.

### கொரிந்து நகரத் திருச்சபையாரைப்பற்றிப் பவுலுக்கு இருந்த கவலை

11 நான் ஒரு மதிகேடனைப்போல நடந்துகொண்டேன். என்னைப் பாராட்ட வேண்டிய நீங்களே என்னை அவ்வாறு நடக்கும்படி செய்துவிட்டீர்கள். நான் ஒன்றுமே இல்லாதவனெனினும், அந்த 'மிகச்சிறந்த' தூதுவரைவிட நான் எவ்வகையிலும் தாழ்ந்தவனல்ல. 12 நான் உங்களிடையே அயராது உழைத்து, அரிய செயல்களையும் அற்புதங்களையும் வல்லமைச் செயல்களையும் செய்தேன். நான் ஓர் உண்மையான திருத்தூதுவன் என்பதற்கு இவையே சான்று. 13 நான் உங்களுக்கு ஒரு சுமையாய் இராததைத் தவிர, வேறு எந்த வகையில் மற்றச் சபையாரைவிட உங்களைத் தாழ்வாக நடத்தினேன்? ஆம், அது அநியாயந்தான்! என்னை மன்னியுங்கள்.

14 நான் மூன்றும் முறையாக இப்போது உங்களிடம் வர முன்னேற்பாடுகளைச் செய்துவிட்டேன். இந்த முறையும் உங்களுக்குச் சுமையாயிருக்க மாட்டேன். ஏனெனில், உங்கள் பொருள் எனக்கு வேண்டாம், நீங்களே எனக்கு வேண்டும். பிள்ளைகள் பெற்றோருக்கன்று, பெற்றோரே பிள்ளைகளுக்குப் பொருளைச் சேமித்து வைக்க வேண்டும். 15 அவ்வாறே, நான் எனக்குள்ளதை உங்களுக்காக மனமாரச் செலவிடுவேன்; என்னையே முற்றிலுமாக உங்களுக்காகக் கொடுப்பேன். இப்படி நான் உங்களிடம் கொள்ளும் அன்பு இவ்வளவு பெரிதாயிருக்க, நீங்கள் என்னிடம் கொண்டிருக்கும் அன்பு குறைவாயிருக்கலாமா? 16 நான் உங்களுக்கு ஒரு சுமையாயில்லை என்பதை நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்கள்; என்றாலும், நான் சூழ்ச்சி செய்கிறவன், உங்களை வஞ்சகமாகக் கண்ணியில் சிக்க வைக்கிறேன் என்றும் சொல்கிறீர்கள். 17 நான் உங்களிடம் அனுப்பினவர்களுள் யாரைக் கொண்டாவது உங்களை வஞ்சித்துப் பயன் பெற்றதுண்டா? 18 என் வேண்டுகோளுக்கு இணங்கித் தீத்து உங்களிடம் வந்தார். அவரோடு நம் சகோதரன் ஒருவரையும் அனுப்பிவைத்தேன். தீத்து உங்களை வஞ்சித்துப் பயன்பெற்றதுண்டா? நாங்கள் ஒரே மனப்பான்மையுடன் பணியாற்றவில்லையா? ஒரே மாதிரி நடந்துகொள்ளவில்லையா? *

19 நாங்கள் குற்றமற்றவர்கள் என்பதை உங்களிடம் மெய்ப்பிக்கப் பார்க்கிறோம் என்று இவ்வளவு நேரமும் நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள்? இல்லை. கடவுள் முன்னிலையில் கிறிஸ்துவின் அடியாராகப் பேசுகிறோம். அன்பார்ந்தவர்களே, உங்கள் சபையினுடைய பொது வாழ்க்கையின் வளர்ச்சிக்காகவே எல்லாவற்றையும் செய்கிறோம். 20 ஏனெனில், என் மனத்தில் ஒரு கவலை இருக்கிறது. ஒருவேளை நான் வரும்போது, நான் விரும்புகிறபடி இருக்கிறவர்களாக உங்களை நான் காணுமலும், நானும் நீங்கள் விரும்புகிறபடி இருக்கிறவனுக என்னை நீங்கள் காணுமலும் இருக்கலாம்; மேலும், உங்களிடையே சண்டை, பொருமை, சீற்றம், தன்னலப் போட்டிகள், தூற்றுதல், புறங்கூறுதல், இறுமாப்பு, கலகங்கள் முதலியவை காணப்படலாம். 21 அதுவுமன்றி, நான் மீண்டும் உங்களிடம் வரும்போது, நான் சேவிக்கும் கடவுள் என்னை உங்கள் முன்னிலையில் தலைகுனியச் செய்யலாம். முன்பு பாவம் செய்தவர்களுள் பலர் தாம் நடப்பித்த அசுத்த செயல்கள், ஒழுக்கக்கேடு, காமவெறி ஆகியவற்றை விட்டுவிட்டு மனமாற்றமடையாதிருப்பதைக் கண்டு நான் துயரப்பட நேரிடலாம்.

### இறுதி எச்சரிக்கை

13 இப்போது நான் உங்களிடம் வருவது மூன்றும் முறையாகும். ''இரண்டு மூன்று சாட்சிகளுடைய வாக்குமூலத்தால் எல்லாக் காரியங்களும் நிலைநாட்டப்பட வேண்டும்.'' 2 நான் இரண்டாம் முறை உங்களிடம் வந்திருந்தபோது, முன்பு பாவம் செய்தவர்களுக்கும் மற்றெல்லாருக்கும் எச்சரிக்கை செய்ததுபோல, உங்களை விட்டுத் தொலைவில் இருக்கும் இந்தச் சமயத்திலும் எச்சரிக்கை செய்கிறேன். அடுத்த முறை நான் வரும்போது எவரையும் தண்டியாமல் விடேன். 3 அப்பொழுது கிறிஸ்து எனக்குள் இருந்து பேசுகிறார் என்பதற்கு நீங்கள் கேட்கிற சான்று போதிய அளவில் கிடைக்கும். அந்தக் கிறிஸ்து உங்களிடையே வல்லமையற்றவராயில்லை. அவர் மிகுந்த வல்லமையுடன் உங்களுக்குள் செயலாற்றி வருகிறவர். 4 அவர் வல்லமையற்றவராய்ச் சிலுவையில் அறையப்பட்டார் என்பது உண்மை. ஆனல், கடவுளின் வல்லமையால் உயிரோடிருக்கிறார். அப்படியே, அவரோடு இணைக்கப்பட்டிருக்கும் நாங்

* 'ஒரே ஆவியானவரால் வழிநடத்தப்படவில்லையா? ஒரே அடிச்சுவடுகளைப் பின்பற்றி நடக்கவில்லையா?' என்றும் மொழிபெயர்க்கலாம்.

13:1 உபா. 17:6; 19:15; மத். 18:16; 1 தீமோ. 5:19.

களும் வல்லமை அற்றவர்களாய் இருந்
தாலும், கடவுளின் வல்லமையால் உங்
களுக்காக அவரோடு உயிருடன் இருப்
போம்.

5 உங்கள் வாழ்க்கை கிறிஸ்துவினிடம்
கொள்ளும் நம்பிக்கையில் வேரூன்றியிருக்
கிறதாவென்று உங்களை நீங்களே சீர்
தூக்கிப் பாருங்கள், உங்கள் தகுதியைச்
சோதித்துப் பாருங்கள், கிறிஸ்து இயேசு
உங்களுக்குள் இருக்கிறார் என்பதை நீங்கள்
உணராமலா இருக்கிறீர்கள்? நீங்கள்
தகுதியுடையவர்களாய் இருந்தால்தான்
அவர் உங்களுக்குள் இருப்பார். 6 நாங்
கள் தகுதியுடையவர்கள் என்பதைத்
தெரிந்துகொள்வீர்கள் என்கிற நம்பிக்கை
எனக்கு இருக்கிறது. 7 நீங்கள் ஒரு தீமையும்
செய்யாதிருக்கும்படி கடவுள் அருள்
புரியுமாறு நாங்கள் அவரை நோக்கி
வேண்டுதல் செய்கிறோம். நீங்கள் அப்படி
இருப்பதன்மூலம் நாங்கள் தகுதியுடைய
வர்களாகக் காணப்பட வேண்டுமென்பது
எங்கள் வேண்டுதலின் நோக்கமன்று.
நாங்கள் தகுதியற்றவர்கள்போலக் காணப்
பட நேரிட்டாலும், நீங்கள் நன்மையான
தையே செய்ய வேண்டும் என்பதுதான்
எங்கள் நோக்கம். 8 சத்தியத்திற்கு முர
ணாக எங்களால் எதையும் செய்ய இய
லாது; அதற்கிசையவே எல்லாவற்றையும்
செய்கிறோம். 9 நாங்கள் வலிமையற்ற
வர்களாய் இருந்தாலும், நீங்கள் வலிமை
யுடையவர்களாய் இருந்தால், நாங்கள்
மகிழ்ச்சியடைவோம். நீங்கள் முற்றிலும்
சீர்திருந்த வேண்டுமென்பது எங்கள்
ஜெபம். 10 ஆகையால், உங்களிடம் வரு
வதற்கு முன்பே நான் இவ்வாறு எழுது
கிறேன். இதன் நோக்கம் யாதெனில்
நான் உங்களிடம் வரும்போது, ஆண்டவர்
எனக்கு அளித்திருக்கிற அதிகாரத்
தைப் பயன்படுத்தி, உங்களிடம் கடுமை
யாக நடந்துகொள்ள இடமில்லாதிருக்க
வேண்டும் என்பதே. ஏனெனில், உங்கள்
சபையின் பொதுவாழ்க்கையை அழிப்ப
தற்காக அன்று, அதை வளர்ப்பதற்கா
கவே இந்த அதிகாரத்தை ஆண்டவர்
எனக்கு அளித்திருக்கிறார்.

### வாழ்த்து

11 இறுதியாகச் சொல்லுகிறேன்: சகோ
தரரே, மகிழ்ச்சியோடிருங்கள், சீர்திருந்த
முயலுங்கள், என் அறிவுரைக்குச் செவி
கொடுங்கள், சிந்தனையில் ஒன்றுபட்டிருங்
கள், சமாதானமாக வாழுங்கள். அப்
பொழுது அன்புக்கும் சமாதானத்துக்கும்
ஊற்றாகிய கடவுள் உங்களோடிருப்பார்.
12 ஒருவரையொருவர் தூய முத்தத்தால்
வாழ்த்துங்கள். கடவுளுக்குரிய மக்கள்
அனைவரும் உங்களுக்கு வாழ்த்துக் கூறு
கின்றனர்.

13 ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவின்
அருளும், கடவுளின் அன்பும், தூய
ஆவியானவரின் இணையறு உறவும் உங்கள்
அனைவரோடும் இருப்பனவாக!

# பவுல் கலாத்தியருக்கு எழுதின கடிதம்

1 கலாத்தியா நாட்டிலுள்ள திருச்
சபைகளுக்கு, மனிதர்களால் அல்
லது ஒரு மனிதன் மூலமாக அல்லாமல்,
இயேசுகிறிஸ்துவினாலும், அவரை இறந்
தோரிடமிருந்து உயிரோடெழுப்பின தந்
தையாகிய கடவுளாலும், 2 திருத்தூதுவனா
யிருக்கிற பவுலாகிய நானும், என்னோ
டிருக்கிற எல்லாச் சகோதரரும் எழுது
வதாவது: 3 நம்முடைய தந்தையாகிய
கடவுளிடமிருந்தும், ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவிடமிருந்தும் உங்களுக்கு அருளும்
நலமும் உண்டாகுக! 4 இயேசுகிறிஸ்துவே
நம் கடவுளும் தந்தையுமானவரின் திரு
வுளப்படி இப்போதுள்ள பொல்லாத யுகத்
தினின்று நம்மை விடுவிக்கும்படி, நம்மு
டைய பாவங்களை நீக்கத் தம்மையே
ஒப்புக்கொடுத்தார். 5 கடவுளுக்கே என்
றென்றைக்கும் மாட்சிமை! ஆமேன்.

### அருட்செய்தி ஒன்றே

6 கிறிஸ்துவின் அருளாட்சிக்குள் உங்
களை அழைத்தவரை நீங்கள் இவ்வளவு
விரைவில் விட்டுவிட்டு, வேறோர் அருட்
செய்தியை ஏற்கத் தொடங்கிவிட்டீர்
களே! எனக்கு இது வியப்பாயிருக்கிறது.
7 உண்மையில் அது வேறோர் அருட்செய்தி
யன்று. ஆனால், சிலர் உங்கள் மனத்தைக்
குழப்புகின்றனர். அவர்கள் கிறிஸ்துவின்
அருட்செய்தியைத் திரித்துக் கூறப்பார்க்
கிறார்களேயன்றி வேறொன்றுமில்லை. 8 நாங்
கள் உங்களுக்கு அறிவித்த அருட்செய்
திக்கு முரணான வேறொரு செய்தியை
நாங்களோ, வானத்தினின்று வந்த ஒரு
தூதனோ, யார் வந்து உங்களுக்கு அறி
வித்தாலும் அவன்மீது சாபம் சுமரட்டும்.
9 ஏற்கெனவே நாங்கள் சொன்ன
தையே இப்போது நான் மறுபடியும்
சொல்லுகிறேன்: நீங்கள் ஏற்றுக்கொண்ட
அருட்செய்திக்கு முரணான வேறொரு செய்
தியை உங்களுக்கு யாராவது அறிவிக்கிறா
னென்றால் அவன்மீது சாபம் சுமரட்டும்.
10 இப்படிப் பேசும்போது, நான் மனி
தருடைய நல்லெண்ணத்தை நாடுகிறவன்
என்றா தெரிகிறது? நான் கடவுளின் நல்
லெண்ணத்தையே நாடுகிறவன் என்பது
தெரியவில்லையா? நான் மனிதருக்கு உகந்
தவனாய் இருக்கவா பார்க்கிறேன்? நான்
இன்னும் மனிதருக்கு உகந்தவனாய் இருக்
கப் பார்க்கிறவனென்றால், நான் கிறிஸ்து
வின் அடியானாய் இருக்க முடியாது.

### பவுல் திருத்தூதுவரான வரலாறு

11 சகோதரரே, நான் உங்களுக்கு ஒன்
றைத் தெரிவிக்க விரும்புகிறேன்: நான்
அறிவித்த நற்செய்தி மனிதன் புனைந்தி
யற்றியது அன்று. 12 ஏனெனில், எந்த
மனிதனிடமிருந்தும் நான் அதைப் பெற்
றுக்கொள்ளவில்லை; எவனும் அதை
எனக்குக் கற்றுக்கொடுக்கவுமில்லை. இயேசு
கிறிஸ்துவே அதை எனக்கு வெளிப்படுத்தி
னார். 13 நான் யூத மார்க்கத்தைப் பின்பற்றி
வந்தபோது, எவ்வாறு நடந்துகொண்
டேன் என்பதையும், கடவுளின் திருச்
சபையை எவ்வளவாகத் துன்புறுத்தி
அதைப் பாழ்படுத்தப் பார்த்தேன் என்
பதையும் நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்
கள். 14 என் மூதாதையர் பரம்பரையில்
நான் அளவுகடந்த ஆர்வமுள்ளவனாயிருந்
ததால், யூத மார்க்கத்தைக் கடைப்பிடிப்
பதில் என் இனத்தவருள் என் வயது
டையவர் பலரைவிட மேம்பட்டவனாய்
விளங்கினேன். 15 ஆனால், நான் தாயின்
வயிற்றில் இருந்தது முதற்கொண்டே
என்னைத் தமக்கென்று பிரித்தெடுத்து,
தமது அருளால் என்னை அழைத்த கட
வுள், 16 தம் மைந்தரை நான் யூதரல்
லாதாருக்கு நற்செய்தியாய் அறிவிக்கும்படி
அவரை எனக்கு வெளிப்படுத்தத் திரு
வுளங்கொண்டார். அப்பொழுது நான்
எந்த மனிதனிடமும் கலந்து பேசவும்
இல்லை, 17 எனக்குமுன் திருத்தூதுவரா
னவர்களைப் பார்க்க எருசலேமுக்குப்
போகவுமில்லை; அவ்வாறு செய்யாமல்
உடனே அரபி நாட்டுக்குச் சென்றேன்;
அங்கிருந்து நேரே தமஸ்குவுக்குத்
திரும்பினேன்.

18 பிற்பாடு மூன்று ஆண்டுகள் கடந்த
பின்னரே, நான் கேபாவைக் கண்டு பேச
எருசலேமுக்குச் சென்றேன்; அங்கே பதி
னைந்து நாள் அவரோடு தங்கியிருந்தேன்.
19 மற்றத் திருத்தூதுவருள் ஆண்டவரின்
சகோதரன் யாக்கோபைத் தவிர வேறு
எவரையும் நான் பார்க்கவில்லை. 20 (நான்
உங்களுக்கு எழுதும் இவற்றுள் பொய்யா
னது ஒன்றுமில்லை. இதைக் கடவுள் முன்
னிலையில் சொல்லுகிறேன்). 21 பிற்பாடு
நான் சீரியா, சிலிசியா நாட்டுப் பகுதி
களுக்குப் போனேன். 22 யூதேயா நாட்டி
லிருந்த கிறிஸ்து சபையாருக்கு அப்
போதுங்கூட நான் அறிமுகமாகாமலே
தான் இருந்தேன். 23 ''இவன் நம்மை
ஒரு காலத்தில் துன்புறுத்தினான்; இப்
போதோ, தான் முன்பு பாழ்படுத்தப்
பார்த்த நம்பிக்கைநெறியை நற்செய்தி
யென அறிவிக்கிறான்'' என்று பேசப்பட்
டதை மட்டும் அவர்கள் கேள்விப்பட்
டிருந்தார்கள். 24 ஆகையால், அவர்கள்

1:4 1 திமோ. 2:6. 1:6 2 கொரி. 11:4. 1:13 திருத்தூது. 8:3; 22:4, 5, 26:9—11. 1:14 திருத்தூது. 22:3. 1:15—16 திருத்தூது. 9:3—6; 22:6—10; 26:13—18. 1:18 திருத்தூது. 9:26—30.

என்னை முன்னிட்டுக் கடவுளைப் புகழ்ந்து போற்றினார்கள்.

### பவுலும் மற்றத் திருத்தூதுவரும்

2 பதினான்கு ஆண்டுகளுக்குப் பின், நான் பர்னபாவுடன் மறுபடியும் எருசலேமுக்குப் போனேன்; 2 தீத்துவையும் கூடக் கூட்டிக்கொண்டு சென்றேன்; ஒரு திருவெளிப்பாடு காரணமாக அங்கே போனேன். நான் யூதரல்லாதாரிடையே அறிவித்து வருகிற அருட்செய்தியைப் பற்றி அவர்களோடு கலந்து பேசினேன்; மதிப்புவாய்ந்த தலைவர்களோடு மட்டும் தனிமையில் கலந்து பேசினேன். இதன் நோக்கம், நான் பாடுபட்டுச் செய்கிற வேலையும், செய்த வேலையும் வீணாகக் கூடாது என்பதேயாகும். 3 அந்தச் சமயத்தில், என்னுடனிருந்த தீத்து ஒரு கிரேக்கனாயிருந்தும், யாரும் அவனைக் கட்டாயப்படுத்தி விருத்தசேதனம் செய்து கொள்ளும்படி செய்யவில்லை. 4 அதைப் பற்றிய பேச்சு, திருட்டுத்தனமாக நுழைந்த கள்ளச் சகோதரரை முன்னிட்டே எழுந்தது. அவர்கள் நம்மை அடிமை நிலைக்குக் கொண்டு வருவதற்காக, கிறிஸ்து இயேசுவோடு இணைக்கப்பட்டிருப்பதால் நாம் அடைந்துள்ள விடுதலை நிலையை உளவு பார்க்க வந்தவர்கள். 5 உங்கள் நன்மைக்காகவே, அருட்செய்தியின் சத்தியம் திரிபின்றிக் காக்கப்பட வேண்டுமென்று, நாங்கள் சிறிதளவும் அவர்களுக்கு விட்டுக் கொடுக்காமலிருந்தோம். 6 மதிப்பு வாய்ந்தவர்களென எண்ணப்பட்ட அவர்கள்—எப்படிப்பட்டவர்களாய் அவர்கள் இருந்தார்கள் என்பதைப்பற்றி எனக்குக் கவலையில்லை; கடவுளும், மனிதன் மதிப்பிடும் வகையில் யாரையும் மதிப்பிடுவதில்லை — மதிப்பு வாய்ந்தவர்களென எண்ணப்பட்ட அவர்கள் நான் செய்து வருகிறதற்குமேல் ஒன்றும் எனக்குச் சொல்லவில்லை. 7 ஆனால், யூதருக்கு அருட்செய்தியை அறிவிக்கும் பொறுப்புப் பேதுருவினிடம் ஒப்படைக்கப்பட்டிருப்பதுபோல, யூதரல்லாதாருக்கு அதை அறிவிக்கும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது என்பதை அவர்கள் கண்டார்கள். 8 ஆம், யூதருக்குத் திருத்தூதுவனாக உழைக்கும்படி பேதுருவுக்கு வலிமை அளித்தவர், யூதரல்லாதாருக்குத் திருத்தூதுவனாக உழைக்கும்படி எனக்கு வலிமை அளித்தார். 9 எனக்கு இதற்கென அருள் அளிக்கப்பட்டிருக்கிறது என்பதைத் திருச்சபையின் தூண்களென்று எண்ணப்பட்டவர்களாகிய யாக்கோபும் கேபாவும் யோவானும் அறிந்தபோது, அவர்கள் எங்களுடன் ஒத்துழைப்பதற்கு அடையாளமாக என்னோடும் பர்னபாவோடும் கை குலுக்கினார்கள். நாங்கள் யூதரல்லாதாருக்கும், அவர்கள் யூதருக்கும் அருட்செய்தியை அறிவிக்க வேண்டுமென்பது நாங்கள் செய்துகொண்ட ஒப்பந்தம். 10 ஏழைகளுக்கு உதவி செய்ய மறக்க வேண்டாம் என்று மட்டும் சொன்னார்கள்; அதைச் செய்வதிலேதான் நானும் ஆர்வங்காட்டி வந்திருந்தேன்.

### அந்தியோகியாவில் பவுல் பேதுருவைப் பார்த்துக் கடிந்துரைத்தது

11 பிறகு, கேபா அந்தியோகியாவுக்கு வந்தபோது, அவர் அங்கே செய்தது தவறான செயல் என்று தெளிவுறத் தெரிந்ததால், நான் அவரை முகமுகமாய் எதிர்க்க நேர்ந்தது. 12 எப்படியெனில், யாக்கோபினிடமிருந்து சிலர் வருமுன் அவர் யூதரல்லாதாருடன் சேர்ந்து சாப்பிட்டுவந்தார். ஆனால், அவர்கள் வந்தபின், அவர் விருத்தசேதனத்தை வலியுறுத்தும் அந்த ஆள்களுக்கு அஞ்சி, அவ்வாறு செய்வதை நிறுத்திக்கொண்டு விலகி இருந்துவிட்டார். 13 மற்ற யூதரும் இந்த நடிப்பில் அவரோடு சேர்ந்துகொண்டனர். அவர்கள் நடிப்பைக் கண்ட பர்னபாவும் அவர்களோடு சேர்ந்துகொள்ளும் அளவுக்கு ஏமாந்துபோனார். 14 இப்படி அவர்கள் அருட்செய்தியின் சத்தியத்திற்கேற்ப நடக்காததை நான் கண்டபோது, எல்லார் முன்னிலையிலும் பேதுருவினிடம், "நீர் ஒரு யூதராயிருந்தும், யூதர் முறைப்படி நடக்காமல் யூதரல்லாதாரைப்போல நடக்கிறீரே; அப்படியிருக்க, யூதரல்லாதாரை யூதர் முறைப்படி நடக்க வேண்டுமென்று நீர் கட்டாயப்படுத்துவது எப்படி?" என்று கேட்டேன்.

### நம்பிக்கையின் மூலமே யூதரும், யூதரல்லாதாரும் மீட்படைவர்

15 நாங்கள் 'பாவிகள்' எனப்படும் யூதரல்லாதவர்களாய் இல்லை; பிறப்பிலேயே யூதர்களாயிருக்கிறோம். 16 எனினும், இயேசுகிறிஸ்துவினிடம் நம்பிக்கை கொள்பவனேயன்றி, நீதிச்சட்டத்தின் செயல்களைச் செய்பவன் கடவுளுக்கு ஏற்றவனென அவரால் கொள்ளப்படுவதில்லை; இதை நாங்கள் அறிந்திருக்கிறோம். எனவே, நாங்களும் நீதிச்சட்டத்தின் செயல்களைச் செய்வதன்பேரில் சார்ந்திராமல், கிறிஸ்து இயேசுவினிடம் கொள்ளும் நம்பிக்கையின் மூலம் கடவுளுக்கு ஏற்றவர்களென அவரால் கொள்ளப்படும்படி, கிறிஸ்துவினிடம் நம்பிக்கை கொண்டுள்ளோம். ஏனெனில், வேதம் கூறுகிறபடி, எந்த மனிதனும்

2:1 திருத்தூது. 11:30; 15:2. 2:16 சங். 143:2; ரோ. 3:20, 22.

# பவுல் கலாத்தியருக்கு எழுதின கடிதம்

1 கலாத்தியா நாட்டிலுள்ள திருச்
சபைகளுக்கு, மனிதர்களால் அல்
லது ஒரு மனிதன் மூலமாக அல்லாமல்,
இயேசுகிறிஸ்துவினாலும், அவரை இறந்
தோரிடமிருந்து உயிரோடெழுப்பின தந்
தையாகிய கடவுளாலும், 2 திருத்தூதுவனா
யிருக்கிற பவுலாகிய நானும், என்னோ
டிருக்கிற எல்லாச் சகோதரரும் எழுது
வதாவது: 3 நம்முடைய தந்தையாகிய
கடவுளிடமிருந்தும், ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவிடமிருந்தும் உங்களுக்கு அருளும்
நலமும் உண்டாகுக! 4 இயேசுகிறிஸ்துவே
நம் கடவுளும் தந்தையுமானவரின் திரு
வுளப்படி இப்போதுள்ள பொல்லாத யுகத்
தினின்று நம்மை விடுவிக்கும்படி, நம்மு
டைய பாவங்களை நீக்கத் தம்மையே
ஒப்புக்கொடுத்தார். 5 கடவுளுக்கே என்
றென்றைக்கும் மாட்சிமை! ஆமேன்.

### அருட்செய்தி ஒன்றே

6 கிறிஸ்துவின் அருளாட்சிக்குள் உங்
களை அழைத்தவரை நீங்கள் இவ்வளவு
விரைவில் விட்டுவிட்டு, வேறோர் அருட்
செய்தியை ஏற்கத் தொடங்கிவிட்டீர்
களே! எனக்கு இது வியப்பாயிருக்கிறது.
7 உண்மையில் அது வேறோர் அருட்செய்தி
யன்று. ஆனால், சிலர் உங்கள் மனத்தைக்
குழப்புகின்றனர். அவர்கள் கிறிஸ்துவின்
அருட்செய்தியைத் திரித்துக் கூறப்பார்க்
கிறார்களேயன்றி வேறொன்றுமில்லை. 8 நாங்
கள் உங்களுக்கு அறிவித்த அருட்செய்
திக்கு முரணான வேறொரு செய்தியை
நாங்களோ, வானத்தினின்று வந்த ஒரு
தூதனோ, யார் வந்து உங்களுக்கு அறி
வித்தாலும் அவன்மீது சாபம் சுமரட்டும்.
9 ஏற்கெனவே நாங்கள் சொன்ன
தையே இப்போது நான் மறுபடியும்
சொல்லுகிறேன்: நீங்கள் ஏற்றுக்கொண்ட
அருட்செய்திக்கு முரணான வேறொரு செய்
தியை உங்களுக்கு யாராவது அறிவிக்கிறா
னென்றால் அவன்மீது சாபம் சுமரட்டும்.
10 இப்படிப் பேசும்போது, நான் மனி
தருடைய நல்லெண்ணத்தை நாடுகிறவன்
என்றா தெரிகிறது? நான் கடவுளின் நல்
லெண்ணத்தையே நாடுகிறவன் என்பது
தெரியவில்லையா? நான் மனிதருக்கு உகந்
தவனாய் இருக்கவா பார்க்கிறேன்? நான்
இன்னும் மனிதருக்கு உகந்தவனாய் இருக்
கப் பார்க்கிறவனென்றால், நான் கிறிஸ்து
வின் அடியானாய் இருக்க முடியாது.

### பவுல் திருத்தூதுவரான வரலாறு

11 சகோதரரே, நான் உங்களுக்கு ஒன்
றைத் தெரிவிக்க விரும்புகிறேன்: நான்
அறிவித்த நற்செய்தி மனிதன் புனைந்தி
யற்றியது அன்று. 12 ஏனெனில், எந்த
மனிதனிடமிருந்தும் நான் அதைப் பெற்
றுக்கொள்ளவில்லை; எவனும் அதை
எனக்குக் கற்றுக்கொடுக்கவுமில்லை. இயேசு
கிறிஸ்துவே அதை எனக்கு வெளிப்படுத்தி
னார். 13 நான் யூத மார்க்கத்தைப் பின்பற்றி
வந்தபோது, எவ்வாறு நடந்துகொண்
டேன் என்பதையும், கடவுளின் திருச்
சபையை எவ்வளவாகத் துன்புறுத்தி
அதைப் பாழ்படுத்தப் பார்த்தேன் என்
பதையும் நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்
கள். 14 என் மூதாதையர் பரம்பரையில்
நான் அளவுகடந்த ஆர்வமுள்ளவனாயிருந்
ததால், யூத மார்க்கத்தைக் கடைப்பிடிப்
பதில் என் இனத்தவருள் என் வயது
டையவர் பலரைவிட மேம்பட்டவனாய்
விளங்கினேன். 15 ஆனால், நான் தாயின்
வயிற்றில் இருந்தது முதற்கொண்டே
என்னைத் தமக்கென்று பிரித்தெடுத்து,
தமது அருளால் என்னை அழைத்த கட
வுள், 16 தம் மைந்தரை நான் யூதரல்
லாதாருக்கு நற்செய்தியாய் அறிவிக்கும்படி
அவரை எனக்கு வெளிப்படுத்தத் திரு
வுளங்கொண்டார். அப்பொழுது நான்
எந்த மனிதனிடமும் கலந்து பேசவும்
இல்லை, 17 எனக்குமுன் திருத்தூதுவரா
னவர்களைப் பார்க்க எருசலேமுக்குப்
போகவுமில்லை; அவ்வாறு செய்யாமல்
உடனே அரபி நாட்டுக்குச் சென்றேன்;
அங்கிருந்து நேரே தமஸ்குவுக்குத்
திரும்பினேன்.

18 பிற்பாடு மூன்று ஆண்டுகள் கடந்த
பின்னரே, நான் கேபாவைக் கண்டு பேச
எருசலேமுக்குச் சென்றேன்; அங்கே பதி
னைந்து நாள் அவரோடு தங்கியிருந்தேன்.
19 மற்றத் திருத்தூதுவருள் ஆண்டவரின்
சகோதரன் யாக்கோபைத் தவிர வேறு
எவரையும் நான் பார்க்கவில்லை. 20 (நான்
உங்களுக்கு எழுதும் இவற்றுள் பொய்யா
னது ஒன்றுமில்லை. இதைக் கடவுள் முன்
னிலையில் சொல்லுகிறேன்). 21 பிற்பாடு
நான் சீரியா, சிலிசியா நாட்டுப் பகுதி
களுக்குப் போனேன். 22 யூதேயா நாட்டி
லிருந்த கிறிஸ்து சபையாருக்கு அப்
போதுங்கூட நான் அறிமுகமாகாமலே
தான் இருந்தேன். 23 ''இவன் நம்மை
ஒரு காலத்தில் துன்புறுத்தினான்; இப்
போதோ, தான் முன்பு பாழ்படுத்தப்
பார்த்த நம்பிக்கைநெறியை நற்செய்தி
யென அறிவிக்கிறான்'' என்று பேசப்பட்
டதை மட்டும் அவர்கள் கேள்விப்பட்
டிருந்தார்கள். 24 ஆகையால், அவர்கள்

1:4 1 திமோ. 2:6. 1:6 2 கொரி. 11:4. 1:13 திருத்தூது. 8:3; 22:4, 5, 26:9—11. 1:14 திருத்தூது. 22:3. 1:15—16 திருத்தூது. 9:3—6; 22:6—10; 26:13—18. 1:18 திருத்தூது. 9:26—30.

என்னை முன்னிட்டுக் கடவுளைப் புகழ்ந்து
போற்றினார்கள்.

### பவுலும் மற்றத் திருத்தூதுவரும்

2 பதினான்கு ஆண்டுகளுக்குப் பின்,
நான் பர்னபாவுடன் மறுபடியும்
எருசலேமுக்குப் போனேன்; 2 தீத்துவை
யும் கூடக் கூட்டிக்கொண்டு சென்றேன்;
ஒரு திருவெளிப்பாடு காரணமாக அங்கே
போனேன். நான் யூதரல்லாதாரிடையே
அறிவித்து வருகிற அருட்செய்தியைப்
பற்றி அவர்களோடு கலந்து பேசினேன்;
மதிப்புவாய்ந்த தலைவர்களோடு மட்டும்
தனிமையில் கலந்து பேசினேன். இதன்
நோக்கம், நான் பாடுபட்டுச் செய்கிற
வேலையும், செய்த வேலையும் வீணாகக்
கூடாது என்பதேயாகும். 3 அந்தச் சம
யத்தில், என்னுடனிருந்த தீத்து ஒரு
கிரேக்கனாயிருந்தும், யாரும் அவனைக் கட்
டாயப்படுத்தி விருத்தசேதனம் செய்து
கொள்ளும்படி செய்யவில்லை. 4 அதைப்
பற்றிய பேச்சு, திருட்டுத்தனமாக நுழைந்த
கள்ளச் சகோதரரை முன்னிட்டே எழுந்
தது. அவர்கள் நம்மை அடிமை நிலைக்குக்
கொண்டு வருவதற்காக, கிறிஸ்து இயேசு
வோடு இணைக்கப்பட்டிருப்பதால் நாம்
அடைந்துள்ள விடுதலை நிலையை உளவு
பார்க்க வந்தவர்கள். 5 உங்கள் நன்மைக்
காகவே, அருட்செய்தியின் சத்தியம் திரி
பின்றிக் காக்கப்பட வேண்டுமென்று,
நாங்கள் சிறிதளவும் அவர்களுக்கு விட்டுக்
கொடுக்காமலிருந்தோம். 6 மதிப்பு வாய்ந்
தவர்களென எண்ணப்பட்ட அவர்கள்—
எப்படிப்பட்டவர்களாய் அவர்கள் இருந்
தார்கள் என்பதைப்பற்றி எனக்குக்
கவலையில்லை; கடவுளும், மனிதன் மதிப்
பிடும் வகையில் யாரையும் மதிப்பிடுவ
தில்லை — மதிப்பு வாய்ந்தவர்களென எண்
ணப்பட்ட அவர்கள் நான் செய்து வரு
கிறதற்குமேல் ஒன்றும் எனக்குச் சொல்ல
வில்லை. 7 ஆனால், யூதருக்கு அருட்செய்
தியை அறிவிக்கும் பொறுப்புப் பேதுரு
வினிடம் ஒப்படைக்கப்பட்டிருப்பதுபோல,
யூதரல்லாதாருக்கு அதை அறிவிக்கும்
பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்
டிருக்கிறது என்பதை அவர்கள் கண்
டார்கள். 8 ஆம், யூதருக்குத் திருத்தூது
வனாக உழைக்கும்படி பேதுருவுக்கு வலிமை
அளித்தவர், யூதரல்லாதாருக்குத் திருத்
தூதுவனாக உழைக்கும்படி எனக்கு வலிமை
அளித்தார். 9 எனக்கு இதற்கென
அருள் அளிக்கப்பட்டிருக்கிறது என்பதைத்
திருச்சபையின் தூண்களென்று எண்ணப்
பட்டவர்களாகிய யாக்கோபும் கேபாவும்
யோவானும் அறிந்தபோது, அவர்கள்
எங்களுடன் ஒத்துழைப்பதற்கு அடை
யாளமாக என்னோடும் பர்னபாவோடும்
கை குலுக்கினார்கள். நாங்கள் யூதரல்லா
தாருக்கும், அவர்கள் யூதருக்கும் அருட்
செய்தியை அறிவிக்க வேண்டுமென்பது
நாங்கள் செய்துகொண்ட ஒப்பந்தம்.
10 ஏழைகளுக்கு உதவி செய்ய மறக்க
வேண்டாம் என்று மட்டும் சொன்னார்கள்;
அதைச் செய்வதிலேதான் நானும்
ஆர்வங்காட்டி வந்திருந்தேன்.

### அந்தியோகியாவில் பவுல் பேதுருவைப் பார்த்துக் கடிந்துரைத்தது

11 பிறகு, கேபா அந்தியோகியாவுக்கு
வந்தபோது, அவர் அங்கே செய்தது
தவறான செயல் என்று தெளிவுறத் தெரிந்
ததால், நான் அவரை முகமுகமாய்
எதிர்க்க நேர்ந்தது. 12 எப்படியெனில்,
யாக்கோபினிடமிருந்து சிலர் வருமுன்
அவர் யூதரல்லாதாருடன் சேர்ந்து சாப்
பிட்டுவந்தார். ஆனால், அவர்கள் வந்த
பின், அவர் விருத்தசேதனத்தை வலி
யுறுத்தும் அந்த ஆள்களுக்கு அஞ்சி, அவ்
வாறு செய்வதை நிறுத்திக்கொண்டு விலகி
இருந்துவிட்டார். 13 மற்ற யூதரும் இந்த
நடிப்பில் அவரோடு சேர்ந்துகொண்டனர்.
அவர்கள் நடிப்பைக் கண்ட பர்னபாவும்
அவர்களோடு சேர்ந்துகொள்ளும் அள
வுக்கு ஏமாந்துபோனார். 14 இப்படி
அவர்கள் அருட்செய்தியின் சத்தியத்திற்
கேற்ப நடக்காததை நான் கண்டபோது,
எல்லார் முன்னிலையிலும் பேதுருவினிடம்,
''நீர் ஒரு யூதராயிருந்தும், யூதர் முறைப்
படி நடக்காமல் யூதரல்லாதாரைப்போல
நடக்கிறீரே; அப்படியிருக்க, யூதரல்லா
தாரை யூதர் முறைப்படி நடக்க வேண்டு
மென்று நீர் கட்டாயப்படுத்துவது எப்படி?''
என்று கேட்டேன்.

### நம்பிக்கையின் மூலமே யூதரும், யூதரல்லாதாரும் மீட்படைவர்

15 நாங்கள் 'பாவிகள்' எனப்படும் யூத
ரல்லாதவர்களாய் இல்லை; பிறப்பிலேயே
யூதர்களாயிருக்கிறோம். 16 எனினும்,
இயேசுகிறிஸ்துவினிடம் நம்பிக்கை கொள்
பவனேயன்றி, நீதிச்சட்டத்தின் செயல்
களைச் செய்பவன் கடவுளுக்கு ஏற்றவ
னென அவரால் கொள்ளப்படுவதில்லை;
இதை நாங்கள் அறிந்திருக்கிறோம். எனவே,
நாங்களும் நீதிச்சட்டத்தின் செயல்களைச்
செய்வதன்பேரில் சார்ந்திராமல், கிறிஸ்து
இயேசுவினிடம் கொள்ளும் நம்பிக்கையின்
மூலம் கடவுளுக்கு ஏற்றவர்களென அவ
ரால் கொள்ளப்படும்படி, கிறிஸ்துவினிடம்
நம்பிக்கை கொண்டுள்ளோம். ஏனெனில்,
வேதம் கூறுகிறபடி, எந்த மனிதனும்

**2:1** திருத்தூது. *11:30; 15:2.* **2:16** சங். *143:2;* ரோ. **3:20, 22.**

நீதிச்சட்டத்தின் செயல்களைச் செய்வ
தனால் கடவுளுக்கு ஏற்றவனென அவரால்
கொள்ளப்படுவதில்லை. 17 நாங்கள் கிறிஸ்து
வோடு இணைக்கப்பட்டுக் கடவுளால் ஏற்
றுக்கொள்ளப்படுவதை நாடும்போது, யூத
ரல்லாதாரைப்போல நாங்களும் 'பாவி
கள்' எனக் காணப்படுவோமானால்,
கிறிஸ்து பாவத்துக்கு உடந்தையாயிருப்
பவர் என்று ஆகுமோ? இல்லவே இல்லை.
18 நான் தகர்த்தெறிந்த மார்க்கத்தை
நானே மீண்டும் கட்டி எழுப்புவேனானால்,
அப்பொழுது நான் 'பாவி' என்பதை நானே
நிலைநாட்டினவனாவேன். 19 எப்படியெனில்,
நான் கடவுளுக்கென்று வாழ்வதற்காக,
நீதிச்சட்டத்தைப் பொருத்தமட்டில் செத்
தவனாகிவிட்டேன். அப்படி நான் செத்த
வனானதற்கு நீதிச்சட்டமே காரணம்.
கிறிஸ்துவோடு சிலுவையில் அறையப்பட்
டவனாய் இருக்கிறேன். 20 எனவே, இப்
போது உயிர் வாழ்வது நானல்ல; கிறிஸ்
துவே என்னுள் வாழ்கிறார். இப்போது
நான் ஊன் உடலில் வாழ்வது, என்னி
டம் அன்புகொண்டு எனக்காகத் தம்மை
ஒப்புக்கொடுத்த இறைமைந்தரிடம் நான்
கொண்டுள்ள நம்பிக்கையினாலேயல்லவா?
கடவுளின் அருளை நான் ஒதுக்கித் தள்ளி
விடவில்லை. எப்படியெனில், நீதிச்சட்டத்
தினால் ஒருவன் கடவுளுக்கு ஏற்றவனென
அவரால் கொள்ளப்படக்கூடுமானால்,
கிறிஸ்து மரணத்திற்குள்ளானது வீண்
என்றாகுமே!

### நீதிச்சட்டமா, நம்பிக்கையா ?

3 அறிவில்லாத கலாத்தியரே, உங்களை
மயக்கியவர் யார்? இயேசுகிறிஸ்து
சிலுவையில் அறையப்பட்டவராக உங்கள்
கண்முன் வரைந்து காட்டப்படவில்லையா?
2 உங்களிடம் இதைமட்டும் கேட்டறிய
விரும்புகிறேன்: நீங்கள் ஆவியானவரைப்
பெற்றுக்கொண்டது எவ்வாறு? நீதிச்சட்
டத்தின் செயல்களைச் செய்ததனாலா? அல்
லது அருட்செய்தியைக் கேட்டு அதில்
நம்பிக்கை வைத்ததனாலா? 3 நீங்கள் ஆவி
யானவரைக் கொண்டு தொடங்கினதை
இப்போது மனித முயற்சியால் நிறை
வேறும்படி செய்யப்போகிறீர்களா?
இந்த அளவுக்கு நீங்கள் அறிவில்லாதவர்
களா? 4 நீங்கள் பெற்ற அனுபவங்களெல்
லாம் வீண்தானா? மெய்யாகவே அவை
வீணாகத்தான் போய்விடுமோ? 5 கடவுள்
உங்களுக்கு ஆவியானவரை அளித்து, உங்
களிடையே வல்லமைச் செயல்களை நடப்
பிப்பது, நீங்கள் நீதிச்சட்டத்தின் செயல்
களைச் செய்ததனாலா? அல்லது நீங்கள்
அருட்செய்தியைக் கேட்டு அதில் நம்
பிக்கை வைத்ததனாலா? 6 ஆபிரகாமைப்
பாருங்கள். ''ஆபிரகாம் கடவுளை நம்பி
னார்; அவருடைய நம்பிக்கையை முன்
னிட்டுக் கடவுள் அவரை நீதிமானாகப்
பாவித்து ஏற்றுக்கொண்டார்.''

7 எனவே, அத்தகைய நம்பிக்கை உடை
யவர்களே ஆபிரகாமின் மைந்தர்கள் என்
பதை அறிந்துகொள்ளுங்கள். 8 கடவுள்
யூதரல்லாதாரை நம்பிக்கையின் மூலம்
தமக்கு ஏற்றவரெனக் கொள்ளுகிறார்
என்று வேதம் முன்னதாகவே அறிந்து,
''எல்லா இனத்தவரும் உன்னோடு இணைக்
கப்பட்டோராய் நற்பேறு பெறுவர்'' என்
னும் நற்செய்தியை ஆபிரகாமுக்கு முன்
னறிவித்தது. 9 ஆகவே, நம்பிக்கை உடை
யவர்கள் நம்பிக்கை கொண்ட ஆபிர
காமோடு சேர்ந்து அவர் பெற்ற அதே
நற்பேறு பெறுவார்கள். 10 நீதிச்சட்டத்
தின் செயல்களைச் செய்வதன்பேரில்
சார்ந்திருப்போர் அனைவரும் சாபத்துக்கு
உட்பட்டவரே. ஏனெனில்,

''நீதிச்சட்ட நூலில் எழுதப்பட்டிருக்கும்
யாவற்றையும் கடைப்பிடித்து
அவற்றைச் செய்து முடிக்காத ஒவ்வொரு
வனும் சாபத்திற்குள்ளானவன்''

என்று வேதத்தில் எழுதியிருக்கிறது.
11 மேலும், ''கடவுளை நம்புவதால்
தமக்கு ஏற்றவனென அவரால் கொள்ளப்
படுபவனே மெய்வாழ்வு பெறுவான்''
என்பதால், நீதிச்சட்டம் வழியாக எவ
னும் கடவுள் முன்னிலையில் அவருக்கு
ஏற்றவனெனக் கொள்ளப்படுவதில்லை என்
பது தெளிவு. 12 நீதிச்சட்டம் நம்பிக்
கையை ஆதாரமாகக் கொண்டதன்று.
''அவற்றைச் செய்கிறவனே அவற்றால்
மெய்வாழ்வு பெறுவான்'' என்று வேதம்
உரைக்கிறது. 13 ''மரத்தில் தொங்க
விடப்பட்ட எவனும் சாபத்திற்குள்ளான
வன்'' என்று வேதத்தில் எழுதியிருக்கிற
படி, கிறிஸ்து நம் பொருட்டுச் சாபமாகி,
நீதிச்சட்டத்தின் சாபத்தினின்று
நம்மை மீட்டு விடுவித்தார். 14 இதன்
நோக்கம் யாதெனில், ஆபிரகாமுக்குக்
கிடைத்த நற்பேறு கிறிஸ்து இயேசுவோடு
இணைக்கப்படும் யூதரல்லாதாருக்கும்
கிடைக்க வேண்டும் என்பதும், அதன்
விளைவாக, வாக்களிக்கப்பட்ட ஆவியான
வரை நாமெல்லோரும் நம்பிக்கையின்
மூலம் பெற வேண்டும் என்பதுமேயாகும்.

### நீதிச்சட்டமும் வாக்குறுதியும்

15 சகோதரரே, மனித வழக்கம் ஒன்
றைச் சொல்லுகிறேன்: மனிதர் செய்து
கொள்ளும் ஓர் உடன்படிக்கையைக்கூட,

**2:19** ரோ. *6:11* **3:6** ஆதி. *15:6;* ரோ. *4:3.* **3:7** ரோ. *4:16.* **3:8** ஆதி. *12:3.* **3:10** உபா. *27:26.*
**3:11** ஆப. *2:4;* ரோ. *1:17.* **3:12** லேவி. *18:5.* **3:13** உபா. *21:23.*

அது உறுதி செய்யப்படுமாயின், யாரும் செல்லாததென்று தள்ளிவிடவோ, அதனோடு எதையும் கூட்டவோ முடியாது. 16 ஆபிரகாமுக்கும் அவர் சந்ததிக்கும் வாக்குறுதிகள் அளிக்கப்பட்டன. 'சந்ததிகளுக்கு' என்று பன்மையில் சொல்லாமல், 'உன் சந்ததிக்கு' என்று ஒருமையில் சொல்லப்பட்டிருக்கிறது. 17 கிறிஸ்துவே அந்தச் சந்ததி. நான் சொல்வது இதுவே: கடவுளால் ஏற்கெனவே உறுதி செய்யப்பட்ட உடன்படிக்கையை நானூற்று முப்பது ஆண்டுகளுக்குப்பின் வந்த நீதிச்சட்டம் செல்லாததாக்கிவிட முடியாது; அவருடைய வாக்குறுதியைப் பயனற்றதாக்கிவிடவும் முடியாது. 18 கடவுள் தம் மக்களுக்கு உரிமையாக அளிக்கும் நற்பேறு நீதிச்சட்டத்தை நிறைவேற்றுவதன் மூலம் கிடைக்குமென்றால், அது வாக்குறுதியினால் வராது என்றாகிறது. ஆனால், கடவுள் தாமே அதை வாக்குறுதியினால் ஆபிரகாமுக்கு அளித்ததால், அது இலவச ஈவாயிற்று. 19 அப்படியானால், நீதிச்சட்டம் எதற்கு? அது குற்றங்களின் உண்மைத் தன்மையை எடுத்துக்காட்டப் பிற்காலத்தில் சேர்க்கப்பட்டது. வாக்குறுதி எந்தச் சந்ததிக்கு அளிக்கப்பட்டதோ அந்தச் சந்ததி தோன்றும்வரை இருப்பதற்கென அது சேர்க்கப்பட்டது. அது தெய்வதூதர் மூலம் அருளப்பட்டது; அப்போது இணைப்பாளர் ஒருவர் துணை நின்றார். 20 இணைப்பாளர் இல்லையென்றால், ஒரே ஒருவர் செயல் புரிவார் என்பது தெளிவு. வாக்குறுதி அருளப்பட்டபோது செயல்புரிந்தவர் கடவுள் ஒருவரே.

### அடிமைகளும் மைந்தரும்

21 அப்படியானால் நீதிச்சட்டம் கடவுளின் வாக்குறுதிகளுக்கு முரணானதா? இல்லவே இல்லை. மெய்வாழ்வை அடையக்கூடிய சட்டம் ஒன்று கொடுக்கப்பட்டிருந்ததானால், அந்தச் சட்டத்தைக் கொண்டே மனிதன் கடவுளுக்கு ஏற்றவனென அவரால் கொள்ளப்பட்டிருப்பான். 22 அதற்கு மாறாக, வாக்களிக்கப்பட்ட நற்பேறு, இயேசுகிறிஸ்துவினிடம் நம்பிக்கை கொள்வோருக்கு அவர்களது நம்பிக்கையின் மூலம் அளிக்கப்பட வேண்டும் என்பதற்காகவே, வேதம் எல்லாரையும் பாவத்தின் ஆட்சியின் கீழ்ச் சிறைப்படுத்தியிருக்கிறது.

23 நம்பிக்கைநெறி தோன்றுமுன், நாம் நீதிச்சட்டத்தின் கீழ்ச் சிறைப்பட்டிருந்தோம்; வெளிப்படுத்தப்படவிருந்த அந்த நம்பிக்கைநெறியை ஏற்க நாம் ஆயத்தமாயிருக்கும்படி அவ்வாறு காவலில் வைக்கப்பட்டிருந்தோம். 24 ஆகவே, நாம் நம்பிக்கையின் மூலம் கடவுளுக்கு ஏற்றவர்களென அவரால் கொள்ளப்படும்படி, நீதிச்சட்டம் நம்மைப் பள்ளிக்கு வழிநடத்திச் செல்லும் வேலையாள்போலக் கிறிஸ்துவினிடம் நடத்திச் சென்றது.* 25 இப்பொழுது நம்பிக்கைநெறி தோன்றிவிட்டதால், இனி நாம் அந்த வேலையாளின் பொறுப்பில் இல்லை.

26 ஏனெனில், கிறிஸ்து இயேசுவோடு இணைக்கப்பட்டிருக்கும் நீங்கள் அனைவரும் நம்பிக்கையின் மூலமே கடவுளின் மைந்தர்களாயிருக்கிறீர்கள். 27 எப்படியென்றால், கிறிஸ்துவோடு இணைக்கப்படுவதற்கென்று திருமுழுக்குப் பெற்ற நீங்கள் அனைவரும் கிறிஸ்துவைப் பூண்டுகொண்டீர்கள். 28 இனி உங்களிடையே யூதனென்றும் கிரேக்கனென்றும், அடிமையென்றும் அடிமையல்லாதவனென்றும், ஆணென்றும் பெண்ணென்றும் பாகுபாடில்லை. ஏனெனில், நீங்கள் எல்லாரும் கிறிஸ்து இயேசுவோடு இணைக்கப்பட்டு, ஒரே ஆளாகியிருக்கிறீர்கள். 29 நீங்கள் கிறிஸ்துவுக்கு உரியவர்களென்றால், ஆபிரகாமின் சந்ததியாயிருக்கிறீர்கள்; ஆகையால், வாக்குறுதியின்படி அவருடைய வாரிசுகளாயும் இருக்கிறீர்கள் அல்லவா?

**4** நான் சொல்ல விரும்புவது இதுவே: வாரிசாயிருப்பவன் எல்லாச் சொத்துக்கும் உரிமையாளனாயினும், அவன் சிறுவனாய் இருக்கும் வரையில் அவனுக்கும் ஓர் அடிமைக்கும் வேறுபாடு எதுவும் இல்லை. 2 தகப்பன் குறித்த நாள் வரும் வரையிலும் அவன் தன்னுடைய பாதுகாப்பாளருக்கும் கண்காணிப்பாளருக்கும் கீழ்ப்பட்டிருக்கிறான். 3 அவ்வாறே, நாமும் சிறுவராயிருந்த காலத்தில் அண்டகோளசக்திகளுக்கு அடிமைப்பட்டவர்களாயிருந்தோம். 4 ஆனால், உரிய காலம் வந்தபோது, கடவுள் தம் மைந்தரை இவ்வுலகிற்கு அனுப்பினார்; அம்மைந்தர் ஒரு பெண்ணிடம் பிறந்து, நீதிச்சட்டத்திற்குக் கீழ்ப்பட்டவரானார். 5 இதிலடங்கிய கடவுளின் நோக்கம் யாதெனில், நீதிச்சட்டத்திற்குக் கீழ்ப்பட்டிருந்தவர்களை மீட்டு விடுவித்து, நம்மெல்லோரையும் தம்முடைய மைந்தர்களாக்க வேண்டுமென்பதே. 6 நீங்கள் மைந்தர்களாய் இருக்கிறீர்கள் என்பதை உறுதிப்படுத்த, ''அபா''† (அதாவது அப்பா) என்று கூப்பிடும் ஆவியை, தம்முடைய மைந்தரின்

* 'நீதிச்சட்டம் கிறிஸ்து வரும்வரையில் நம்முடைய காப்பாளனாயிருந்தது' என்று மொழிபெயர்ப்பதுமுண்டு.
† மாற். 14:36 அடிக்குறிப்பைப் பார்க்க.
**3:16** ஆதி. 12:7. **3:17** யாத். 12:40. **3:18** ரோ. 4:14. **3:29** ரோ. 4:13. **4:5—7** ரோ. 8:15—17.

ஆவியை, கடவுள் நம் உள்ளங்களில்
தந்தருளினர். 7 ஆகையால், இனி நீ அடி
மையாயில்லை, மைந்தனாய் இருக்கிறாய்.
நீ மைந்தனாய் இருப்பதால், கடவுளு
டைய செயலின்மூலம் அவருடைய வாரி
சாயும் இருக்கிறாய்.

## கலாத்தியரைப்பற்றிப் பவுலுக்கிருந்த கவலை

8 ஒரு காலத்தில் நீங்கள் கடவுளை அறி
யாதிருந்தீர்கள். அப்பொழுது கடவுள்
தன்மை இல்லாதவற்றிற்கு அடிமைகளா
யிருந்தீர்கள். 9 ஆனால், இப்போது நீங்கள்
கடவுளை ஏற்றுக்கொண்டிருக்கிறீர்கள்;
இல்லை, சரியாகச் சொல்வதானால், இப்
போது நீங்கள் கடவுளால் ஏற்றுக்கொள்
ளப்பட்டிருக்கிறீர்கள். அப்படியிருக்க, வலி
மையற்ற அற்பத்தனமான சக்திகளிடம்
நீங்கள் மறுபடியும் திரும்புவானேன்?
அவற்றிற்கு மீண்டும் பழையபடி அடி
மைப்பட்டிருக்க விரும்புவானேன்? 10 நல்ல
நாளும் மாதமும் காலமும் ஆண்டும்
பார்க்கிறீர்களே! 11 உங்களைப்பற்றிய
கவலை எனக்கு இருக்கிறது. உங்களுக்காக
நான் உழைத்தது வீண்தானோ?

12 சகோதரரே, உங்களை ஒன்று கேட்டுக்
கொள்ளுகிறேன்: நான் எப்படி மாறியிருக்
கிறேனோ அப்படியே நீங்களும் மாறுங்கள்.
ஏனெனில், நீங்கள் எப்படி இருந்
தீர்களோ அப்படி நான் மாறினேன்.
நீங்கள் எனக்குத் தீமை செய்தீர்களென்று
நான் சொல்லவில்லை. 13 நான் உங்க
ளுக்கு முதன்முதல் அருட்செய்தியை
அறிவிப்பதற்கு என் உடற்பிணிதான்
வாய்ப்பளித்ததென்பது உங்களுக்குத் தெரி
யும். 14 என் உடல் நிலை உங்கள் பொறு
மையைச் சோதித்தபோதிலும் நீங்கள்
என்னை வெறுத்து ஒதுக்கவில்லை, அரு
வருத்துத் தள்ளிவிடவுமில்லை. அதற்கு
மாறாக, நீங்கள் என்னை ஒரு தெய்வ
தூதனை ஏற்பதுபோல, ஏன், கிறிஸ்து
இயேசுவையே ஏற்பதுபோல ஏற்றுக்
கொண்டீர்கள் என்பதும் உங்களுக்குத்
தெரியும். 15 அப்போது உங்களுக்கு
இருந்த மகிழ்ச்சி இப்போது எங்கே
போயிற்று? உங்கள் கண்களைப் பிடுங்கி
எனக்குக் கொடுக்கக் கூடுமாயின், அதையும்
செய்திருப்பீர்கள். இது உங்களைப்பற்றிய
என் சாட்சி. 16 உண்மையைச் சொன்ன
தால் நான் இப்போது உங்களுக்குப் பகைஞ
னாகிவிட்டேனா? 17 என் எதிரிகள் உங்
களுடைய பாராட்டுதலை நாடுகிறார்கள்;
ஆனால், நல்ல நோக்கத்தோடு அப்படிச்
செய்யவில்லை. உங்களைத் தனிப்படுத்திவிட
வேண்டுமென்பதே அவர்கள் விருப்பம்;
அப்பொழுது நீங்கள் அவர்களுடைய
பாராட்டுதலை நாட வேண்டிய நிலை ஏற்
படும். 18 நான் செய்வதுபோல மற்றவர்
களும் நல்ல நோக்கத்தோடு உங்கள்
பாராட்டுதலை நாடுவது நல்லதுதான்.
நான் உங்களிடையே இருக்கும்போது
மட்டுமன்று, எப்போதுமே அப்படி
உங்கள் பாராட்டுதலை நாடுவோர் உங்களி
டையே இருப்பாராயின் எனக்கு மகிழ்ச்
சியே. 19 அன்பார்ந்த குழந்தைகளே,
கிறிஸ்து உங்கள் உள்ளங்களில் உருவாகும்
வரையில், நான் மறுபடியும் உங்கள்
பொருட்டுப் பிள்ளை பெறும் தாயைப்
போல வேதனைப்பட்டுக் கொண்டிருப்பேன்.
20 நான் நேரில் வந்து உங்களிடையே
இருந்து, வேறு வகையாக உங்களோடு
பேசக் கூடுமானால் எவ்வளவோ நன்றா
யிருக்கும். ஆனால், இப்போதோ உங்கள்
காரியத்தில் என்ன செய்வதென்றே
எனக்குத் தெரியவில்லை.

## ஆகாரும் சாராளும்

21 நீதிச்சட்டத்திற்குக் கீழ்ப்பட்டிருக்க
விரும்புகிறவர்களே, நீங்கள் இதை எனக்
குச் சொல்லுங்கள்: நீதிச்சட்டம் சொல்
வதை நீங்கள் கேட்டதில்லையா? 22 ஆபிர
காமுக்கு இரு மைந்தர்கள் இருந்தார்கள்;
ஒருவன் அடிமைப் பெண்ணிடம் பிறந்த
வன், மற்றவன் தன்னுரிமையோடு வாழ்ந்
தவளிடம் பிறந்தவன் என்று எழுதியிருக்
கிறது. 23 அடிமைப் பெண்ணிடம் பிறந்
தவன் இயல்பான முறைப்படி பிறந்தான்.
மற்றவளிடம் பிறந்தவனோ தெய்வ வாக்
குறுதியின் விளைவாகப் பிறந்தான். 24 இது
ஓர் உபமானம். அந்தப் பெண்கள் வெவ்
வேறான இரண்டு உடன்படிக்கைகளைக்
குறிக்கிறார்கள்; ஒன்று சீனாய் மலையில்
செய்யப்பட்ட உடன்படிக்கை. அது அடி
மைத்தனத்திற்கெனப் பிள்ளைகளைப் பிறப்
பிக்கிறது. இதைக் குறிக்கிறவள் ஆகார்
என்பவள். 25 அரபி நாட்டிலுள்ள சீனாய்
மலையே அந்த ஆகார். அது இப்போ
திருக்கிற எருசலேமுக்கு ஒப்பாயிருக்கிறது.
எப்படியெனில், இந்த எருசலேம் தன்
பிள்ளைகளுடன் அடிமைத்தனத்தில் இருக்
கிறது. 26 மேலே உள்ள எருசலேமுக்கோ
தன்னுரிமை இருக்கிறது. அது நமக்குத்
தாய். 27 ஏனெனில்,

''பிள்ளை பெறாத மலடியே, மகிழ்வாயாக.
பேறுகால வேதனை அடையாதவளே,

களிப்புடன் துள்ளிக் குதித்து ஆர்ப்பரிப்
பாயாக.

ஆணோடு வாழ்ந்தவளின் மக்களைவிட,

தள்ளி வைக்கப்பட்டவளின் மக்களே
மிகுதி''

4:22 ஆதி. 16:15; 21:2. 4:23 ஆதி. 17:16. 4:27 ஏசா. 54:1.

என்று வேதத்தில் எழுதியிருக்கிறது. 28 சகோதரரே, ஈசாக்கைப்போல நீங்களும் தெய்வ வாக்குறுதியால் வந்த பிள்ளைகள். 29 ஆனால், இயல்பான முறைப்படி பிறந்தவன் ஆவியானவரால் பிறந்தவனை அக்காலத்தில் எவ்வாறு துன்புறுத்திவந்தானோ அவ்வாறே இக்காலத்திலும் நடந்து வருகிறது. 30 எனினும், வேதம் உரைப்பதென்ன? ''அடிமைப் பெண்ணையும் அவள் மகனையும் துரத்திவிடு. அடிமைப் பெண்ணின் மகன் தன்னுரிமையுடன் வாழ்பவளின் மகனோடு உரிமைச் சொத்தில் ஒருபோதும் பங்குகொள்வதேயில்லை'' என்பது. 31 ஆகவே, சகோதரரே, நாம் அடிமைப் பெண்ணின் பிள்ளைகளாயில்லை; தன்னுரிமையோடு வாழ்பவளின் பிள்ளைகளாயிருக்கிறோம்.

**5** இவ்வாறு நாம் விடுதலை பெற்றவர்களாய் வாழ வேண்டுமென்றே கிறிஸ்து நம்மை விடுவித்தார். அந்நிலையிலேயே நிலைத்திருங்கள்; மீண்டும் அடிமைத்தனமாகிய நுகத்துக்குப் பணிந்து கொடுக்காதீர்கள்.

### கிறிஸ்தவனின் விடுதலை வாழ்க்கை

2 பவுலாகிய நான் உங்களுக்குச் சொல்லுகிறேன், கேளுங்கள்: நீங்கள் விருத்தசேதனம் செய்துகொண்டால், கிறிஸ்துவினால் உங்களுக்கு ஒரு பயனும் கிடைக்காது. 3 எனவே, விருத்தசேதனம் செய்துகொள்ளுகிற ஒவ்வொருவனும் நீதிச்சட்டம் முழுவதையும் கடைப்பிடிக்கக் கடமைப்பட்டவனாவான் என்பதை நான் மறுபடியும் வலியுறுத்திக் கூறுகிறேன். 4 நீதிச்சட்டத்தைக் கடைப்பிடிப்பதன் மூலம் கடவுளுக்கு ஏற்புடையவர்களாகிவிடப் பார்ப்பதால், நீங்கள் உங்களைக் கிறிஸ்துவினிடமிருந்து விலக்கிக்கொண்டீர்கள், அருளாட்சிக்குப் புறம்பாக்கிக் கொண்டீர்கள். 5 ஆனால், நாமோ, கடவுளுக்கு ஏற்றவர்களென அவரால் கொள்ளப்படுவோம் என்கிற உறுதியுடன் இருக்கிறோம். அப்படிக் கொள்ளப்படுவதற்காகப் பொறுமையோடு காத்திருக்க ஆவியானவர் நமது நம்பிக்கையின்மூலம் நமக்கு ஆற்றல் அளிக்கிறார். 6 கிறிஸ்து இயேசுவோடு இணைக்கப்பட்ட நிலையில் விருத்தசேதனத்தினாலும் நன்மையில்லை, விருத்தசேதனமின்மையினாலும் நன்மையில்லை. நன்மை தருவது அன்போடு செயலாற்றும் நம்பிக்கையே.

7 நீங்கள் இதுவரையிலும் நன்றாக ஓடினீர்களே; நீங்கள் சத்தியத்திற்குக் கீழ்ப்படிந்து வருவதைத் தடுத்தவன் யார்? 8 உங்களுக்கு இதைச் செய்தவன் உங்களை அழைப்பவராகிய கடவுளின் தூண்டுதல் பெற்று இவ்வாறு செய்யவில்லை. 9 புளிப்பு மாவு சிறிதளவேயாயினும், அது பிசைந்த மாவு முழுவதையும் புளிக்கச் செய்துவிடும் அல்லவா? 10 நீங்கள் மாறுபட்ட கருத்துக்கு இடங்கொடுக்க மாட்டீர்கள் என்பது, ஆண்டவருக்கு உங்களோடு அடியானாயிருக்கும் எனக்கு உங்களைப்பற்றி இருக்கும் உறுதியான நம்பிக்கை. உங்கள் மனத்தைக் குழப்புகிறவன் யாராயிருந்தாலும், அவன் தண்டனைத் தீர்ப்புக்கு ஆளாவான். 11 சகோதரரே, விருத்தசேதனம் தேவையென்று நான் இன்னும் போதிக்கிறேனென்பது உண்மையானால், நான் ஏன் இன்னும் துன்புறுத்தப்படுகிறேன்? அவ்வாறு நான் போதிக்கிறேனென்றால், சிலுவையைப்பற்றிய செய்தி எவருக்கும் இடையூறாயிராதே! 12 உங்களிடையே குழப்பம் உண்டாக்குகிறவர்கள் தங்களை அண்ணகராகவும் ஆக்கிக்கொள்ளலாமே!

13 நீங்களோ விடுதலை நிலையில் வாழ்வதற்கென அழைக்கப்பட்டீர்கள். சகோதரரே, அந்த விடுதலை நிலையைப் பாவ இயல்பின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காகப் பயன்படுத்தாதீர்கள்; அவ்வாறன்றி அன்பினால் ஒருவருக்கொருவர் தொண்டு செய்யுங்கள். 14 ஏனெனில், ''உன்னிடம் நீ அன்புகொள்வதுபோல அடுத்தவனிடமும் அன்புகொள்ள வேண்டும்'' என்கிற இந்த ஒரே கட்டளையில் நீதிச்சட்டம் முழுமையும் அடங்கியிருக்கிறது. 15 நீங்கள் ஒருவரையொருவர் கடித்து விழுங்குவதை நிறுத்தாவிடில், எல்லாருமே அழிவீர்கள், எச்சரிக்கை!

### தெய்வ ஆவியின் கனிகளும் பாவ இயல்பின் செய்கைகளும்

16 எனவே, நான் சொல்வது இதுவே: தெய்வ ஆவியால் ஆட்கொள்ளப்பட்டவர்களாய் வாழ்க்கை நடத்துங்கள். அப்பொழுது உங்கள் பாவ இயல்பின் விருப்பத்தை நீங்கள் நிறைவேற்றவே மாட்டீர்கள். 17 அந்த இயல்பு விரும்புவது தெய்வ ஆவிக்கு முரண்பட்டது. தெய்வ ஆவி விரும்புவது பாவ இயல்புக்கு முரண்பட்டது. இவை ஒன்றையொன்று எதிர்த்துப் போராடிக் கொண்டிருப்பதால், நீங்கள் செய்ய விரும்புகிறவற்றைச் செய்ய முடியாத நிலையில் இருக்கிறீர்கள். 18 நீங்கள் தெய்வ ஆவியினால் நடத்தப்படுகிறீர்கள் என்பது உண்மையானால், நீங்கள் நீதிச்சட்டத்திற்குக் கீழ்ப்பட்டவர்களல்ல என்பதும் உண்மை. 19 பாவ இயல்பின் செய்கைகள்

**4:29** ஆதி. 21:9. **4:30** ஆதி. 21:10. **5:9** 1 கொரி. 5:6. **5:13** ரோ. 6:15; 1 பேது. 2:16. **5:14** இலே. 19:18. **5:17** ரோ. 7:15—23; யாக். 4:1.

யாவை என்பது தெரிந்ததே. அவை
ஒழுக்கக்கேடு, அசுத்த செயல், காம
வெறி, 20 சிலே வணக்கம், மாந்திரீகம்,
பகைமை, சண்டை, பொருமை, சீற்றம்,
தன்னலப் போட்டிகள், பிரிவினே, கட்சி
மனப்பான்மை, 21 எரிச்சல், குடிவெறி,
களியாட்டம் முதலியவை. இப்படிப்பட்ட
வற்றில் ஈடுபட்டு நடப்பவர்களுக்கு வாக்
களிக்கப்பட்ட கடவுள் அரசில் பங்கில்லே
என்று நான் உங்களுக்கு ஏற்கெனவே
சொல்லியுள்ளேன். அதையே இப்போதும்
சொல்லி எச்சரிக்கை செய்கிறேன்.
22 ஆனுல், தெய்வ ஆவி விளேவிக்கும்
கனியோ அன்பு, மகிழ்ச்சி, மன அமைதி,
பொறுமை, பரிவு, நற்பண்பு, நாணயம்,
23 சாந்தம், தன்னடக்கம் என்பவை.
இவ்வாருனவற்றைத் தடை செய்யும் சட்
டம் ஏதேனும் உண்டா? 24 கிறிஸ்து
இயேசுவுக்கு உரியவர்களாயிருப்பவர்கள்,
தங்கள் பாவ இயல்பை அதன் இழிவான
உணர்ச்சிகளோடும் விருப்பங்களோடும்
சேர்த்துச் சிலுவையில் அறைந்துவிட்
டார்கள். 25 நாம் வாழ்வது தெய்வ
ஆவியினுலேயென்ருல், தெய்வ ஆவியினு
லேயே ஆட்கொள்ளப்பட்டு நடப்போ
மாக. 26 வீண் புகழை நாடாமலும்,
ஒருவருக்கொருவர் எரிச்சலூட்டாமலும்,
ஒருவர்மேல் ஒருவர் பொருமை கொள்
ளாமலும் இருப்போமாக.

## ஒருவருக்கொருவர் செய்யும் உதவி

6 சகோதரரே, ஒருவன் ஏதாவதொரு
குற்றத்தில் அகப்பட்டுக்கொண்டால்,
தெய்வ ஆவியை உடைய நீங்கள்
சாந்தத்தோடு அப்படிப்பட்டவனேச் சீர்
திருத்துங்கள்; நீயும் சோதனேக்குள்ளா
காதபடி பார்த்துக்கொள். 2 ஒருவர்
சுமையை ஒருவர் தாங்கி உதவி செய்து
கொள்ளுங்கள். இவ்வாறு செய்தால்,
கிறிஸ்துவின் நீதிச்சட்டத்தை நீங்கள்
நிறைவேற்றுவீர்கள். 3 தன்னிடம் நற்
பண்பு எதுவும் இல்லாதிருந்தும், ஒருவன்
தன்னே நல்லவன் என்று எண்ணிக்கொள்
வாஞனல், அவன் தன்னேத்தானே ஏமாற்
றிக்கொள்கிறவனுவான். 4 ஒவ்வொரு
வனும் தன் சொந்த நடத்தையைச்
சோதித்துப் பார்க்கட்டும். அப்பொழுது,
அது நல்லதாயிருந்தால், அவன் தன்
நடத்தையை முன்னிட்டே பெருமை
கொள்ளலாம். தன்னேப் பிறரோடு ஒப்
பிட்டுப் பெருமைகொள்ளத் தேவை
யில்லே. 5 ஏனெனில், அவனவன் சுமக்க
வேண்டிய சுமை ஒவ்வொருவனுக்கும்
உண்டு.

6 தெய்வ வார்த்தையில் போதனே
பெறுகிறவன், போதிக்கிறவனுக்குத் தன்
னிடமுள்ள நலமானவை யாவற்றிலும்
பங்கு கொடுப்பானுக. 7 ஒருவன் எதை
விதைக்கிருனே அதையே அறுப்பான்.
நீங்கள் ஏமாந்துபோக வேண்டாம்.
கடவுளே ஏய்க்க முடியாது. இதைத் திட்ட
மாகத் தெரிந்துகொள்ளுங்கள். 8 தன்
பாவ இயல்பாகிய நிலத்தில் விதைகளே
விதைப்பவன், அந்த நிலத்தில் விளேயும்
அழிவையே அறுப்பான். தெய்வ ஆவியா
கிய நிலத்தில் விதைகளே விதைப்பவன்,
அந்த நிலத்தில் விளேயும் என்றுமுள்ள
மெய்வாழ்வை அறுப்பான். 9 நன்மை
செய்வதில் சோர்வு அடையாதிருப்போ
மாக. நம் மனம் தளர்ச்சி அடையா
திருந்தால், தக்க காலத்தில் அறுவடை
செய்வோம். 10 ஆகையால், நமக்கு
வாய்ப்புக் கிடைக்கும் வேளேகளில் எல்
லாருக்கும், குறிப்பாக நம்பிக்கை கொண்
டோரின் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கு
நன்மை செய்வோமாக.

## இறுதி எச்சரிக்கை

11 இப்பொழுது நானே உங்களுக்கு
என் கைப்பட எவ்வளவு பெரிய எழுத்
துகளில் எழுதுகிறேன் பாருங்கள்.
12 புறம்பானவற்றில் நற்பெயர் பெற
விரும்புகிறவர்களே, உங்களே விருத்த
சேதனம் செய்துகொள்ளும்படி கட்டா
யப்படுத்துகிருர்கள். கிறிஸ்துவின் சிலு
வையை முன்னிட்டுத் துன்புறுத்தப்
படாமல் இருப்பதற்காகவே அவர்கள் இப்ப
டிச் செய்கிருர்கள். 13 விருத்தசேதனம்
வேண்டும் என்று வாதாடுகிற இவர்களே
முழு நீதிச்சட்டத்தையும் கடைப்பிடிப்ப
தில்லே. எனினும், உங்கள் உடலில் செய்
யப்படும் இந்த அறுவையின் மூலம் தங்க
ளுக்குப் பெருமை கிடைக்க வேண்டு
மென்று, நீங்கள் விருத்தசேதனம் செய்து
கொள்ளும்படி விரும்புகிருர்கள். 14 நானே
நம்முடைய ஆண்டவராகிய இயேசுகிறிஸ்
துவின் சிலுவையைத் தவிர வேறெதை
யும் குறித்து ஒருபோதும் பெருமை
கொள்ளவே மாட்டேன். அவரது சிலுவை
மரணத்தின் மூலம், உலகமானது என்
னேப் பொருத்தமட்டில் சிலுவையில் அறை
யப்பட்டதாகிவிட்டது; நானும் உலகத்
தைப் பொருத்தமட்டில் சிலுவையில்
அறையப்பட்டவனுகிவிட்டேன். 15 விருத்த
சேதனம் இருப்பதால் ஆவது ஒன்று
மில்லே, அது இல்லாததால் ஆவதும்
ஒன்றுமில்லே; தேவையானது புதிய
படைப்பே. அதனுலேதான் நான் வேறெ
தையும் குறித்துப் பெருமைகொள்வ
தில்லே. 16 யார் யார் இந்தக் கொள்
கையின்படி நடந்துவருகிருர்களோ அவர்
களோடு தெய்வ சமாதானமும் இரக்கமும்

5:24 கொலோ. 3:5. 6:10 1 தெச. 5:15. 6:15 1 கொரி. 7:19.

இருப்பதாக! கடவுளின் இஸ்ரவேலர் அனைவரோடுமே இருப்பதாக!

17 இனிமேல் எவனும் எனக்குத் தொல்லை கொடுக்க வேண்டாம். நான் இயேசுவின் அடிமை என்பதைக் காட்டும் சூட்டுக் குறிகளை என் உடலில் சுமந்து செல்கிறேன்.

### வாழ்த்து

18 சகோதரரே, நம்முடைய ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவின் அருள் உங்களோடிருப்பதாக! ஆமேன்.

# பவுல் எபேசியருக்கு எழுதின கடிதம்

1 கடவுளின் திருவுளப்படி கிறிஸ்து
இயேசுவின் திருத்தூதுவனாயிருக்கும்
பவுல், கிறிஸ்து இயேசுவோடு இணைக்கப்
பட்டு அவரிடம் நம்பிக்கை கொண்டவர்
களாய் எபேசு நகரத்திலிருக்கும் இறை
மக்களுக்கு எழுதுகிறதாவது: 2 நம்மு
டைய தந்தையாகிய கடவுளிடமிருந்தும்
ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவிடமிருந்
தும் உங்களுக்கு அருளும் நலமும் உண்
டாகுக!

### கிறிஸ்துவின் மூலம் கிடைக்கும் ஆன்மீக நற்பேறுகள்

3 நம்முடைய ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவின் கடவுளும் தந்தையு
மானவர் புகழ்ந்து போற்றுதலுக்குரியவர்.
அவர் கிறிஸ்துவோடு இணைக்கப்பட்டிருக்
கும் நமக்கு விண்ணுலக வாழ்விற்குரிய
ஆன்மீக நற்பேறுகள் அனைத்தையும்
அளித்து நம்மீது அருள்கூர்ந்திருக்கிறார்.
4 கடவுள் பார்வையில் நாம் அவருக்குரிய
வர்களும் மாசற்றவர்களும் அன்பு நிறைந்
தவர்களுமாய் விளங்கும்படி, உலகத்தோற்
றத்திற்கு முன்பே நம்மை அவர்தாமே
இயேசுகிறிஸ்துவோடு இணைந்திருக்குமாறு
தேர்ந்துகொண்டார். 5 அவர் நம்மை
இயேசுகிறிஸ்துவின் மூலம் தமக்குச்
சொந்தமான மைந்தர்களாக்கிக்கொள்ள
முன்பே திட்டமிட்டிருந்தார்; அதுவே
அவருடைய திருவுளம். 6 அவர் தம்மு
டைய அன்பார்ந்த மைந்தரைக் கொண்டு
நம்மீது பொழிந்த அவரது மாட்சிமை
பொருந்திய அருளே போற்றி போற்றி!
7 அந்த அன்பார்ந்த மைந்தரோடு நாம்
இணைக்கப்பட்டிருப்பதால், அவரது இரத்
தத்தின் மூலம் நமக்குப் பாவமன்னிப்பா
கிய மீட்புக் கிடைத்துள்ளது. இதிலிருந்து
கடவுளின் அருட்செல்வம் எத்துணை பெரி
தெனத் தெரிகிறதல்லவா? 8 அந்த அருளை
அவர் நம்மீது பெருக்கமாகப் பொழிந்து,
நமக்கு முழுநிறைவான ஞானத்தையும்
நுண்ணறிவையும் தந்தருளினார். 9 அவர்
தமது திருவுளத்திலிருந்த மறைவான திட்
டத்தை நமக்கு வெளிப்படுத்தியுள்ளார்.
அதை நமக்கு வெளிப்படுத்த வேண்டு
மென்பது அவர் கிறிஸ்துவின் மூலம்
கொண்டிருந்த கருணை நிறைந்த தீர்மானம்.
10 அந்தத் திட்டமாவது விண்ணுல
கிலும் மண்ணுலகிலுமுள்ள யாவற்றை
யும் கிறிஸ்துவின் தலைமையில் ஒன்று
சேர்க்க வேண்டுமென்பதேயாகும். குறித்த
காலம் வரும்போது அந்தத் திட்டத்தின்
நிறைவேற்றம் முடிவுறும். 11 கடவுள்
தமது திருவுளத்தின் நோக்கத்திற்கேற்ப
எல்லாவற்றையும் நடப்பிக்கிறார். அவரது
தீர்மானத்தின்படியே மேசியாவை எதிர்
நோக்கியிருந்த யூதராகிய நாங்கள்*
கிறிஸ்துவோடு இணைக்கப்படுவதற்கென
முன்பே குறிக்கப்பட்டு, அவருக்கே
உரியவர்களாக்கப்பட்டோம். 12 எங்களால்
அவருடைய மாட்சிமை புகழ்பெற்று விளங்
கும்பொருட்டு அவ்வாறு ஆக்கப்பட்
டோம். 13 நீங்களும் உங்களுக்கு மீட்
பளிக்கும் அருட்செய்தியாகிய சத்திய
வார்த்தையைக் கேட்டுக் கிறிஸ்துவினிடம்
நம்பிக்கை கொண்டீர்கள். கடவுள் தாம்
வாக்களித்த தூய ஆவியானவரைக்
கொண்டு நீங்கள் அவருக்குச் சொந்த
மென உங்கள்மீது முத்திரை பொறித்
தார். 14 அவருக்கு உரியவர்கள் மீட்டுக்
கொள்ளப்படும் வரையில், ஆவியானவர்
தாமே நாம் உரிமைச் சொத்தாகப் பெற
விருக்கும் அந்த நற்பேறு கிடைக்கும் என்
பதை உறுதிப்படுத்தும் அடையாளமா
யிருக்கிறார். கடவுள் தம்முடைய மாட்
சிமை புகழ்பெற்று விளங்கும் பொருட்டு
இவ்வாறெல்லாம் செய்தார்.

### பவுலின் மன்றாட்டு

15 மேற்கூறியவை அனைத்தையும் மனத்
தில் வைத்து நான் என் ஜெபங்களில்
உங்களைக் குறிப்பிட்டு உங்களுக்காக இடை
விடாமல் நன்றி செலுத்திவருகிறேன்.
16 ஆண்டவராகிய இயேசுவினிடம் நீங்
கள் கொண்டுள்ள நம்பிக்கையையும் கட
வுளுக்குரிய மக்கள் எல்லாரிடமும் நீங்கள்
கொண்டுள்ள அன்பையும் குறித்து நான்
கேள்விப்பட்டதிலிருந்து இவ்வாறு செய்து
வருகிறேன். 17 நம்முடைய ஆண்டவரா
கிய இயேசுகிறிஸ்துவின் கடவுளும் மாட்
சிமைமிக்க தந்தையுமானவர் தம்மை
வெளிப்படுத்தும் ஆவியை உங்களுக்குத்
தந்து, அதனால் நீங்கள் ஞானத்தைப்
பெற்று அவரை நன்றாக அறிந்துகொள்
ளும்படி செய்ய வேண்டுமென்று வேண்டு
தல் செய்கிறேன். 18 எதை நீங்கள் எதிர்
நோக்கியிருக்கும்படி கடவுள் உங்களை
அழைத்திருக்கிறார் என்பதையும், அவர்
நமக்கும் மற்றுமுள்ள இறைமக்கள் யாவ
ருக்கும் வாக்களித்த நற்பேறு எத்துணை
மாட்சிமை பொருந்தியது என்பதையும்,
19 அவர்மீது நம்பிக்கை கொண்டிருக்கிற
நம்மிடம் செயலாற்றுகிற அவரது வல்லமை
எவ்வளவு மேன்மையானது என்
பதையும் நீங்கள் அறியும்படி உங்கள்
அகக்கண்களுக்கு ஒளியூட்ட

* 'முதலில் கிறிஸ்துவை நம்பிக்கையாகக் கொண்ட யூதராகிய நாங்கள்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
**1:1** திருத்தூது. *18:19—21; 19:1.* **1:7** கொலோ. *1:14.*

வேண்டுமென்று வேண்டுதல் செய்கிறேன்.
20 பேராற்றல் வாய்ந்த இதே வல்ல
மையை அவர் கிறிஸ்துவினிடம் செய
லாற்றச் செய்ததன்மூலம் அவரை இறந்
தோரிடமிருந்து உயிரோடெழுப்பி, விண்
ணுலகில் தமது வலப்பக்கத்தில் அமர்த்
தினார்; 21 இவ்வாறு அவரை, ஆவியுல
கில் ஆட்சி நடத்துவோர், அதிகாரிகள்,
வல்லமையுடையோர், தலைவர்கள் ஆகிய
அனைவருக்கும் மேலாகவும், இந்த யுகத்
தில் மட்டுமன்று இனிவரும் யுகத்திலும்
வேறு எந்தப் பதவியிலுள்ளவருக்கும்
மேலாகவும் உயர்த்தினார்; 22 எல்லாவற்
றையும் அவர் பாதங்களுக்குக் கீழ்ப்
படுத்தி, எல்லாவற்றிற்கும் தலைவராக
அவரைத் திருச்சபைக்குத் தந்தருளினார்.
23 திருச்சபையானது அவர் உடல்;
அதுவே எல்லா வகையிலும் முற்றுமாக
நிறைவாக்கப்பெறுகிறவரின் நிறைவு.*

## இறந்த நிலையும் உயிர்ப்பிக்கப்பட்ட நிலையும்

2 ஒரு காலத்தில் நீங்கள் உங்கள்
தவறுகளையும் பாவங்களையும் முன்
னிட்டு இறந்தவர்களாயிருந்தீர்கள். 2 அப்
பொழுது பாவமே உங்கள் வாழ்க்கை
முறையாக இருந்தது. நீங்கள் இவ்வுலகத்
தின் தீய போக்கிற்கிசையவும், வான
வெளியிலுள்ள சக்திகளின் தலைவனாகிய
ஆவிக்கு அடங்கியும் நடந்துவந்தீர்கள்.
அந்த ஆவி இப்போது கடவுளுக்குக்
கீழ்ப்படியாதவர்களின் உள்ளத்தில் செய
லாற்றி வருகிறது. 3 ஒரு காலத்தில் யூதர்
களாகிய நாங்கள் எல்லாருமே அவர்
களைச் சேர்ந்தவர்களாயிருந்தோம். அப்
பொழுது நாங்கள் எங்கள் பாவ இயல்
பின் விருப்பங்களுக்கேற்ப நடந்து, எங்கள்
உடலும் மனமும் விரும்பியவாறு செய்து
வந்தோம். மற்றவர்களைப் போலவே எங்
களுக்கும் தெய்வசினத்தை வருவித்துக்
கொள்ளும் இயல்பு இருந்தது. 4 கடவுளோ
அளவற்ற இரக்கமுள்ளவர். அவர் நம்
மிடம் கொண்டுள்ள பேரன்பை முன்
னிட்டு, 5 நம் தவறுகள் காரணமாக நாம்
இறந்தவர்களாயிருந்தபோதிலும், நம்மைக்
கிறிஸ்துவோடு உயிருள்ளவர்களாக்கினார் —
அருளாலேயே நீங்கள் மீட்கப்பட்டிருக்
கிறீர்கள். 6 அவர் நம்மைக் கிறிஸ்து
இயேசுவோடு உயிரோடெழுப்பி, அவரோடு
இணைக்கப்பட்டவர்களாய் விண்ணுலகில்
வீற்றிருக்கச் செய்தார். 7 அவர் கிறிஸ்து
இயேசுவின்மூலம் நமக்குக் காட்டிய
பரிவும் அவரது அளவற்ற அருட்
செல்வமும் இனிவரும் எல்லாக் காலங்
களிலும் தெளிவாக விளங்குவதற்காகவே
இவ்வாறு செய்தார். 8 நீங்கள் அந்த
அருளாலேயே நம்பிக்கையின் மூலம் மீட்
கப்பட்டிருக்கிறீர்கள். இது உங்களால்
நடந்ததன்று; இது கடவுளின் இலவச
ஈவு. 9 இது மனித செயலால் நடை
பெறாததால், இதில் தற்பெருமைகொள்ள
எவருக்கும் இடமில்லை. 10 நாம் கடவுளின்
கைவேலைப்பாடு; நற்செயல்கள் புரி
வதற்கென்று கிறிஸ்து இயேசுவோடு
இணைக்கப்பட்டவர்களாய் உண்டாக்கப்
பட்டிருக்கிறோம். நாம் அவ்வாறு நற்
செயல்கள் புரிந்து வாழும்படி கடவுள்
முன்கூட்டியே ஏற்பாடு செய்திருக்கிறார்.

## கிறிஸ்துவோடு இணைக்கப்பட்டவர்களிடையே வேறுபாடில்லை

11 ஆகவே, பிறப்பால் யூதரல்லாதா
ராயிருக்கும் நீங்கள் உங்கள் பழைய
நிலையை எண்ணிப்பாருங்கள். உடலில்
மனிதரால் அறுவை செய்யப்பட்டதால்,
தங்களை விருத்தசேதனம் உடையவர்கள்
என்று சொல்லிக்கொள்கிறவர்கள் உங்
களை விருத்தசேதனம் இல்லாதவர்கள்
என்று இழிவாகச் சொன்னார்கள். 12 அக்
காலத்தில் நீங்கள் மேசியாவைப்பற்றிய
நம்பிக்கை எதுவும் இல்லாமலும், இஸ்ர
வேல் சமுதாயத்தோடு தொடர்பு இல்லா
மலும், தெய்வ வாக்குறுதி அடங்கிய
உடன்படிக்கைகளுக்குப் புறம்பானவர்களா
கவும், எதிர்காலத்தைப்பற்றிய நம்பிக்
கையற்றவர்களாகவும், கடவுள் இல்லாத
வர்களாகவும் இவ்வுலகில் வாழ்ந்துவந்
தீர்கள். 13 ஒரு காலத்தில் தொலைவி
லிருந்த நீங்கள், இப்போது கிறிஸ்து இயேசு
வோடு இணைக்கப்பட்டதன் மூலம் அவ
ருடைய இரத்தத்தினால் அருகே கொண்டு
வரப்பட்டிருக்கிறீர்கள்.

14 எப்படியெனில், கிறிஸ்துவே நமது
சமாதானம்; அவரே இரு இனத்தவரை
யும் ஒன்றாக்கினார். அவர் ஊனுடலில்
தோன்றி, பிரிவினைக்குக் காரணமாக இடை
யில் சுவர்போல நின்ற பகைமையை அகற்
றினார்; 15 கட்டளைகளும் விதிகளும்
நிறைந்த நீதிச்சட்டத்தை ஒழித்தார்;
இரு இனத்தவரையும் தம்மோடு இணைந்
திருக்கும் புதியதொரு மனித குலமாகத்
தோற்றுவிக்கவும், அதனால் சமாதானம்
உண்டாகவும் இவ்வாறெல்லாம் செய்
தார். 16 பகைமையைச் சிலுவையினால்
கொன்றழித்து, அதன்மூலம் இரு இனத்
தவரையும் ஒரே உடலாக அமைத்துக்
கடவுளோடு நல்லுறவு கொள்ளச் செய்
வதே அவரது நோக்கமாயிருந்தது.

* ‘அது எங்கும் எல்லாவற்றையும் நிரப்புகிறவரால் நிறைவு பெறுகிறது’ என்றும் மொழிபெயர்க்கலாம்.
1:20 சங். 110:1. 1:22, 23 கொலோ. 1:18. 2:5 கொலோ. 2:13. 2:15 கொலோ. 2:14. 2:16 கொலோ. 1:20.

17 அவர் வந்து, தொலைவிலிருந்த யூத
ரல்லாதாராகிய உங்களுக்கும் அருகி
லிருந்த யூதமக்களுக்கும் சமாதானம் உண்
டாயிற்று என்ற நற்செய்தியை அறிவித்
தார். 18 அவர் மூலமாகவே இரு இனத்
தவராகிய நாம் நமக்குப் பொதுவாயிருக்
கும் ஒரே ஆவியானவருக்குட்பட்டு விண்
ணகத் தந்தையை அணுகும் உரிமை
பெற்றிருக்கிறோம்.
19 ஆகையால், நீங்கள் இனி அன்னி
யருமல்ல, அயல் நாட்டினருமல்ல; நீங்கள்
கடவுளுக்குரிய மக்களின் சமுதாயத்தைச்
சேர்ந்தவர்கள், கடவுளின் வீட்டார்;
20 திருத்தூதுவர்கள், இறைவாக்குரைப்ப
வர்கள் ஆகிய அடித்தளத்தின்மேல் கட்ட
டமாக எழுப்பப்பட்டவர்கள். கிறிஸ்து
இயேசுதாமே அதன் முதன்மையான கல்.
21 கட்டடம் முழுவதையும் அவர் இசைவாக
ஒருங்கிணைத்து,ஆண்டவருக்கென்று ஒரு தூய
ஆலயமாக எழும்பச் செய்கிறார். 22 நீங்
கள் அவரோடு இணைக்கப்பட்டதால்,
தெய்வ ஆவியின்மூலம் கடவுளின் உறை
விடமாக ஒன்றாய்ச்சேர்த்துக் கட்டப்பட்டு
வருகிறீர்கள்.

### யூதரல்லாதாரிடையே பவுலின் ஊழியம்

**3** இவை காரணமாக, யூதரல்லாதா
ராகிய உங்கள் பொருட்டுக் கிறிஸ்து
இயேசுவின் கைதியான பவுல் எனும்
நான் உங்களுக்காகக் கடவுளிடம் மன்றாடி
வருகிறேன். 2 உங்கள் நன்மைக்கென்று
கடவுள் தம் திருநோக்கத்திற்கிசையத்
தமது அருளை எனக்குத் தந்திருப்பதைக்
குறித்து நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள்
என்று நினைக்கிறேன். 3 மறைந்திருந்த
தமது திட்டத்தைக் கடவுள் எனக்கு
வெளிப்படுத்தினார். அதைக் குறித்து நான்
முன்பே சுருக்கமாக எழுதியிருக்கிறேன்.
4 அதை நீங்கள் படிக்கும்போது கிறிஸ்து
வைச் சார்ந்த அந்த மறைசெய்தியை
நான் அறிந்திருக்கிறேன் என்பதை உங்க
ளால் கண்டுகொள்ள முடியும். 5 அந்த
மறைசெய்தி முற்காலங்களில் மனுமக்க
ளுக்குத் தெரிவிக்கப்படவில்லை. ஆனால்,
இப்போது அது கடவுளின் தூய திருத்
தூதுவருக்கும் இறைவாக்குரைப்போருக்கும்
ஆவியானவரின்மூலம் வெளிப்படுத்
தப்பட்டிருக்கிறது. 6 அந்த மறைசெய்தி
என்னவெனில், யூதராகிய எங்களுடைய
உரிமைகளுக்கு யூதரல்லாதாரும் அருட்
செய்தியின்மூலம் எங்கள் உடன் பங்
காளிகளாயினர்; ஒரே உடலில் உடன்
உறுப்பினராயினர்; கிறிஸ்துவின்மூலம் வாக்
களிக்கப்பட்ட நற்பேறுகளைப் பெறுவதில்
உடன் கூட்டாளிகளாயினர் என்பதே
யாகும். 7 கடவுளுடைய பணிவிடைக்
காரனாக அந்த அருட்செய்தியை அறிவிக்கும்
வரத்தை, கடவுள் தமது வல்லமையைக்
கொண்டு என்னுள் செயலாற்றித் தமது
அருளால் எனக்கு அளித்திருக்கிறார்.
8 கடவுளுக்குரிய மக்களுள் நானே மிக
மிகச்சிறியவன். எனினும், கிறிஸ்து
வின் அளவற்ற அருட்செல்வத்தைப்பற்றிய
நற்செய்தியை யூதரல்லாதாருக்கு
அறிவிப்பதற்காகவும், மறைவாயிருந்த
தெய்வத் திட்டம் எவ்வாறு நிறைவேற்
றப்படுகிறது என்பதை எல்லாருக்கும்
விளக்கமாகக் காட்டுவதற்காகவும் கடவுள்
எனக்குத் தமது அருளால் இந்த வரத்
தைத் தந்திருக்கிறார். 9 எல்லாவற்றையும்
படைத்த கடவுளுக்குள் இந்தத் திட்டம்
ஆதிமுதற்கொண்டே மறைந்திருந்தது.
10 கடவுள், பலவகையில் விளங்கும்
தமது ஞானத்தை வானுலகில் ஆட்சி
நடத்துவோருக்கும் அதிகாரமுடையோ
ருக்கும் திருச்சபையின்மூலம் இப்போது
தெரிவிப்பதற்காக, இக்காலம் வரையிலும்
அத்திட்டத்தை வெளிப்படுத்தா
திருந்தார். 11 இவையெல்லாம் நம்முடைய
ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவைக்
கொண்டு கடவுள் நிறைவேற்றிய அனாதி
நோக்கத்திற்கிசையவே நடக்கின்றன.
12 கிறிஸ்துவோடு நாம் இணைந்
திருப்பதாலும், அவரிடம் நம்பிக்கை
கொண்டிருப்பதாலும் துணிவுடன் கடவுளை
அணுகி அவரோடு பேசும் உரிமை நமக்குக்
கிடைத்துள்ளது. 13 ஆகையால், உங்
களுக்காக நான் படும் துன்பங்களைக்
கண்டு நீங்கள் மனந்தளர்ந்து போகா
திருக்கும்படி உங்களைக் கேட்டுக்கொள்
கிறேன். அவற்றில் நீங்கள் பெருமை
கொள்வதுதான் தகும்.

### கிறிஸ்துவின் அன்பு

14 இவை காரணமாக, விண்ணிலும்
மண்ணிலுமுள்ள ஒவ்வொரு குடும்பமும்
உண்மையிலேயே குடும்பமாய் விளங்கு
வதற்குக் காரணராயிருக்கிற 15 தந்தை
யாரிடம் நான் முழந்தாள்படியிட்டு மன்
றாடுகிறேன். 16 மாட்சிமை பொருந்திய
அருட்செல்வமுடைய அவர் தம்முடைய
ஆவியினால் உங்கள் உள்ளத்திற்கு வலிமை
யும் ஆற்றலும் தந்தருள வேண்டுமென்
றும், 17 உங்கள் நம்பிக்கையினால் கிறிஸ்து
உங்கள் உள்ளங்களில் குடிகொள்ள வேண்டு
மென்றும் மன்றாடுகிறேன். நீங்கள்
அன்பில் வேரூன்றி அதை அடித்தளமாகக்
கொண்டவர்களாய், 18 இறைமக்கள் அனை
வரோடும் சேர்ந்து கிறிஸ்துவினுடைய அன்
பின் அகலம் நீளம் உயரம் ஆழம் எவ்வளவு
என்பதை உணர்ந்து, 19 அறிவுக்
கெட்டாத அந்த அன்பை அறிந்துகொள்ளும்

**2:17** ஏசா. 57:19. **2:2** 1 பேது. 2:5. **3:4—6** கொலோ. 1:26, 27. **3:7** 2 கொரி. 3:6; 1 தெச. 2:4.

ஆற்றலுள்ளவர்களாக வேண்டுமென்றும்
மன்றாடுகிறேன். அந்த ஆற்றலைப்
பெறுவதன்மூலம் நீங்கள், கடவுள் நிறை
வுள்ளவராய் இருப்பதுபோல நிறைவுள்ள
வர்களாக்கப்படுவீர்களாக!
20 நம்முள் செயலாற்றும் தமது வல்ல
மையால், நாம் வேண்டிக்கொள்வதற்கும்
நினைப்பதற்கும் மிக மேலாகச்செய்ய
வல்லவருக்கே, 21 திருச்சபையின்மூலமும்
கிறிஸ்து இயேசுவின்மூலமும் தலைமுறை
தலைமுறையாக என்றென்றைக்கும் மாட்
சிமை! ஆமேன்.

### உடலின் ஒருங்கிணைக்கப்பட்ட தன்மை

4 ஆகவே, ஆண்டவர் பொருட்டுக்
கைதியான நான் உங்களைக் கேட்டுக்
கொள்கிறதாவது: கடவுள் உங்களை
அழைத்திருப்பதால், அதற்குத் தகுதி
யுடையவர்களாய் நடந்துகொள்ளுங்கள்.
2 எப்போதும் மனத்தாழ்மையோடும் சாந்
தத்தோடும் பொறுமையோடும் நடந்து,
ஒருவர்மீது ஒருவர் அன்புகூர்ந்து, குறை
பாடுகளைப் பொருட்படுத்தாமல் வாழுங்கள்.
3 சமாதானத்தோடு இணைந்து
வாழ்ந்து, ஆவியானவர் அருளியிருக்கும்
ஒருமைப்பாட்டை விடாமுயற்சியோடு
காத்துக்கொள்ளுங்கள். 4 கடவுள் உங்
களை அழைத்திருப்பதால் உங்கள் அனை
வருக்கும் எதிர்காலத்தைக் குறித்து ஒரே
நம்பிக்கை இருப்பதுபோல, ஒரே உட
லும், ஒரே ஆவியானவரும் உண்டு;
5 ஆண்டவரும் ஒருவரே, அவரைப் பற்
றும் நம்பிக்கையும் ஒன்றே, திருமுழுக்கும்
ஒன்றே; 6 எல்லாருக்கும் கடவுளும் தந்
தையுமானவர் ஒருவரே. அவர் எல்லார்
மேலும் ஆட்சி செலுத்துகிறவர், எல்லார்
மூலமாகவும் செயலாற்றுகிறவர், எல்லா
ருக்குள்ளும் இருப்பவர்.

7 ஆனாலும், நம்முள் ஒவ்வொருவருக்கும்
ஒவ்வோர் அளவின்படி கிறிஸ்து தமது
அருளால் வரங்களைத் தந்தருளினார்.
8 அதனாலேதான்,

''அவர் மேலே ஏறிச்சென்றபோது,
சிறைப்பட்ட கைதிகளைக் கொண்டு
சென்றார்;
மனிதருக்கு வரங்களைத் தந்தருளினார்''

என்று வேதம் கூறுகிறது. 9 (ஏறிச்சென்
றார் என்பதனால் அவர் முன்பு மண்ணுல
கில் கீழான பகுதிகளுக்கு இறங்கி வந்
தார் என்பது விளங்குகிறதல்லவா? 10 கீழே
இறங்கி வந்த அவரே, எங்கும் நிறைந்
திருக்கும்படி வானங்கள் எல்லாவற்றிற்
கும் மேலாக ஏறிச் சென்றவர்). 11 அவரே
சிலரைத் திருத்தூதுவராகவும், சிலரை
இறைவாக்குரைப்போராகவும் சிலரை
அருட்செய்தியாளராகவும், சிலரைச் சபை
ஆயர்களாகவும் போதகர்களாகவும் திருச்
சபைக்குத் தந்தருளினார். 12 கிறிஸ்துவின்
உடலாகிய திருச்சபையின் பொதுவாழ்க்கை
வளர்ச்சி அடைவதற்காக, கடவுளுக்குரிய
மக்களைத் திருப்பணிக்கென்று பக்குவப்
படுத்தும்பொருட்டு அவர்களைத் தந்தரு
ளினார். 13 அதனால் நாம் அனைவரும் நம்
பிக்கையிலும் கடவுளின் மைந்தரைப்பற்
றிய அறிவிலும் ஒன்றுபட்டவர்களாகி,
அவற்றில் நாளடைவில் முதிர்ச்சியடை
வோம்; அதாவது, கிறிஸ்துவினிடம் காணப்
படும் முழு முதிர்ச்சியையும் அடைவோம்.
14 நாம் இனிக் குழந்தைகளைப்போல
இருக்கக்கூடாது. நம்மைத் தவறான வழி
யில் செலுத்துவதற்காக மனிதர் பல்
வேறு சூழ்ச்சிகளைச் செய்து, நம்மை
ஏமாற்றப் பார்க்கின்றனர். அத்தகை
யோரின் போதனை ஒவ்வொன்றும் நம்மை
அலைகள்போல இப்படியும் அப்படியும்
அலைக்கழிக்கவோ, சுழற்காற்றுபோல்
அடித்துக்கொண்டு போகவோ நாம் இடந்
தரலாகாது. 15 நாம் அன்புகொண்ட
வர்களாகவே சத்தியத்தைக் கடைப்
பிடித்து, தலையாகிய கிறிஸ்துவோடு
இணைந்திருந்து எல்லா வகையிலும் வளர்ச்சி
யடைய வேண்டுமென்பது அவரது திரு
வுளம். 16 முழு உடலும், கடவுள் அதில்
அமைத்துத் தந்த ஒவ்வொரு தசை
நாரினாலும் ஒன்றாய்ச் சேர்த்து இணைக்கப்
பட்டு அவராலேயே இயங்குகிறது; ஒவ்
வோர் உறுப்பும் தனக்குக் குறிக்கப்பட்ட
வேலையைச் செய்வதால், உடலானது அன்
பினால் கட்டமைப்புப் பெற்று வளர்ச்சி
யடைந்து வருகிறது.

### கிறிஸ்துவோடு இணைக்கப்பட்ட நிலைக்குரிய புதிய வாழ்க்கை

17 ஆகையால், ஆண்டவரின் திருப்
பெயரால் நான் வலியுறுத்திக் கூறுவது
இதுவே: பிற மதத்தினர் நடப்பதுபோல
இனி நீங்கள் நடக்கலாகாது. அவர்கள்
தங்கள் பயனற்ற எண்ணங்களின்படி
நடக்கிறார்கள். 18 அவர்கள் மனம் இரு
ளடைந்திருக்கிறது. அவர்களுக்குப் பிடி
வாத மனம் இருப்பதாலும், அறியாமை
இருப்பதாலும் கடவுள் அருளுகின்ற வாழ்
வில் அவர்களுக்குப் பங்கில்லை. 19 அவர்
கள் இச்சை வசப்பட்டு, எல்லா வகையான
அசுத்த செயல்களையும் செய்ய வெட்க
மின்றித் தங்களைக் காமவெறிக்கு ஒப்ப
டைத்துவிட்டார்கள். 20 ஆனால், இப்
படியெல்லாம் செய்வது உங்களுக்கு அடுத்
ததன்று; நீங்கள் கிறிஸ்துவைக் கற்றவர்

4:2 கொலோ. 3:12, 13. 4:8 சங். 68:18. 4:16 கொலோ. 2:19.

களாயிற்றே. 21 நீங்கள் இயேசு கூறிய
தைக் கேள்விப்பட்டிருப்பீர்கள் என்றும்,
நீங்கள் அவருடைய அடியார்களாய் இருப்
பதால், அவரிடம் விளங்கும் சத்தியத்திற்
கேற்பப் போதிக்கப்பட்டிருப்பீர்கள் என்
றும் நான் நினைப்பதால் இவ்வாறு சொல்
லுகிறேன். 22 அந்தப் போதனையின்படி
உங்கள் முந்தின நடத்தையை மாற்றி,
மோசடி செய்யும் விருப்பங்கள் காரண
மாக அழிந்துவருகிற பழைய மனிதனுக்
குரிய இயல்பை நீங்கள் களைந்துவிடுங்கள்.
23 உங்கள் மனத்தின் போக்குப்
புதுப்பிக்கப்பட வேண்டும். 24 கடவுளின்
சாயலாகப் படைக்கப்பட்ட புதிய மனிதனுக்
குரிய இயல்பைப் பூண்டுகொள்ளுங்கள்.
அந்தப் புதிய இயல்பு, சத்தியத்தினால்
ஏற்படும் நீதியும் தூய்மையுமான வாழ்க்
கையில் விளங்கும்.

### புதிய வாழ்க்கைக்குரிய விதிகள்

25 ஆகவே, பொய் சொல்லும் வழக்
கத்தைக் களைந்துவிடுங்கள்; ஒருவரோ
டொருவர் மெய்யே பேசுங்கள். ஏனெ
னில், நாம் யாவரும் ஒரே உடலில் உறுப்
புகளாய் இருக்கிறோம். 26 சினங்கொண்
டாலும் பாவம் செய்யாதீர்கள். கதிரவன்
மறைவதற்குள் உங்கள் சினம் தணி
யட்டும். 27 பிசாசுக்கு இடங்கொடுக்க
வேண்டாம். 28 திருடுகிறவன் திருடுவதை
இனி விட்டுவிட வேண்டும்; இல்லாதவ
னுக்குக் கொடுக்கத் தன்னிடம் பொருள்
இருக்கும் வகையில் தானே கைப்பாடுபட்டு
நேர்மையாக வேலை செய்யட்டும். 29 அரு
வருக்கத்தக்க சொல் ஒன்றும் உங்கள்
வாயினின்று பிறத்தலாகாது. கேட்போர்
பயனடையும்படி, தேவைக்கு ஏற்றவாறு,
சபையின் பொது வாழ்க்கைக்கு வளர்ச்சி
தரக்கூடிய நல்ல சொற்களைப் பேசுங்கள்.
30 கடவுளின் தூய ஆவியானவருக்கு
வருத்தமுண்டாக்காதீர்கள்; மீட்பு வரும்
நாளில் நீங்கள் கடவுளுக்குச் சொந்தம்
என்பதைக் காட்ட உங்கள்மீது பொறிக்
கப்பட்ட முத்திரை அந்த ஆவியானவரே.
31 எல்லா வகையான மனக்கசப்பும் சீற்ற
மும் சினமும் வீண்கூச்சலும் இழிவாகப்
பேசுதலும், எல்லா வகையான பகைமை
உணர்ச்சியும் உங்களை விட்டு அறவே நீங்
கட்டும். 32 ஒருவருக்கொருவர் பரிவும்
மன உருக்கமும் காட்டுங்கள். கிறிஸ்து
வின்மூலம் கடவுள் உங்களை மன்னித்தது
போல, நீங்களும் ஒருவரையொருவர்
மன்னியுங்கள்.

5 இவ்வாறு நீங்கள் கடவுளின் செயலை
மாதிரியாகக் கொண்டு அவருடைய
அன்பார்ந்த பிள்ளைகளாக வாழுங்கள்.
2 கிறிஸ்து நம்மிடம் அன்புகொண்டு,
நமக்காகத் தம்மைக் கடவுளுக்கு நறு
மணம் வீசும் பலியும் காணிக்கையுமாக
ஒப்புக்கொடுத்ததுபோல, நீங்களும் அன்
புடையோராய் நடந்துகொள்ளுங்கள்.

3 உங்களிடையே ஒழுக்கக்கேடும் எவ்
வகையான அசுத்த செயலும் பேராசை
யும் இருத்தலாகாது. இவை கடவுளுக்
குரிய மக்களுக்கு அடுத்தவையல்ல என்ப
தால் இவற்றின் பெயர்கூட உங்களி
டையே சொல்லப்படலாகாது. 4 அவ்
வாறே, மானக்கேடான செய்கையும் மதி
கேடான பேச்சும் பகடி பண்ணுதலும்
இருத்தலாகாது; இவை தகாதவை; நன்றி
செலுத்துதலே தகுந்தது. 5 ஒழுக்கக்
கேடாக நடப்பவனோ, அசுத்த செயல்
புரிகிறவனோ, சிலை வழிபாட்டிற்குச் சம
மான பேராசையை உடையவனோ, கிறிஸ்
துவுக்கும் கடவுளுக்கும் உரிய அரசில்
எவ்வகையான உரிமையும் பெற மாட்
டான். இது உங்களுக்குத் திட்டமாகத்
தெரிந்திருக்கட்டும்.

### ஒளிக்கு உரியவர்களாக நடந்துகொள்ளுங்கள்

6 எவரும் உங்களை வீண் வாதங்களினால்
ஏமாற்றிவிட இடங்கொடாதீர்கள்.
இத்தகைய கேடான செயல்கள் காரண
மாகக் கடவுளின் சினம் அவருக்குக் கீழ்ப்
படியாத மக்கள்மீது வந்தே தீரும்.
7 அவர்களோடு நீங்கள் எதிலும் பங்கு
கொள்ள வேண்டாம். 8 ஒரு காலத்தில்
நீங்கள் இருள் நிறைந்தவர்களாயிருந்தீர்
கள். ஆனால், இப்போதோ நீங்கள் ஆண்
டவரோடு இணைந்திருப்பதால், ஒளி நிறைந்
தவர்களாயிருக்கிறீர்கள்; ஒளிக்கு உரிய
வர்களாக நடந்துகொள்ளுங்கள். 9 ஒளி
யானது எல்லா வகையான நன்மையையும்
நீதியையும் உண்மையையும் கனியாகத்
தருகிறது. 10 ஆண்டவருக்கு உகந்தது
எதுவென்பதை ஆராய்ந்தறியுங்கள். 11 நற்
கனியொன்றும் தராத இருளின் செயல்
களைச் செய்கிறவர்களோடு நீங்கள் உறவு
கொள்ள வேண்டாம்; அவற்றின் உண்
மைத் தன்மையை எடுத்துக்காட்டிவிடுங்
கள். 12 (அவர்கள் மறைவில் செய்கிற
வற்றைச் சொல்லக்கூட வெட்கமாயிருக்
கிறது). 13 எந்தக் காரியமானாலும் அதை
ஒளியானது எடுத்துக்காட்டும்போது, அதன்
உண்மைத் தன்மை வெளிப்படையாகும்.
14 வெளிப்படையாகும் எதுவும் ஒளிமய
மாகிறது. இதற்கிசையவே,
"தூங்குகிறவனே, எழுந்திரு,

4:22 கொலோ. 3:9. 4:24 கொலோ. 3:10. 4:25 சக. 8:16. 4:26 சங். 4:4. 4:32 கொலோ. 3:13. 5:2 யாத். 29:18; சங். 40:6.

இறந்தோரை விட்டு எழுந்து வா,
கிறிஸ்து உன்மீது ஒளிவீசுவார்''
என்று ஒரு பாடலில் கூறப்பட்டிருக்
கிறது.

15 ஆகையால், உங்கள் நடத்தையைப்
பற்றி மிகவும் கவனமாயிருங்கள். ஞான
மற்றவர்களாக நடந்துகொள்ளாமல்,
ஞானமுள்ளவர்களாக நடந்துகொள்ளுங்
கள். 16 ஒவ்வொரு தருணத்தையும் தப்ப
விடாமல் பயன்படுத்திக்கொள்ளுங்கள்;
இது பொல்லாத காலம். 17 ஆகையால்,
மதிகேடராயிராமல், ஆண்டவருடைய திரு
வுளம் எதுவென்பதைப் புரிந்துகொள்ளப்
பாருங்கள். 18 மது அருந்தி வெறி
கொள்வதை நிறுத்துங்கள்; இல்லையானால்
உங்கள் வாழ்க்கை கெட்டழிந்து போகும்.
19 தெய்வ ஆவி நிறைந்தவர்களாயிருங்
கள். நீங்கள் ஒருவரோடொருவர் பேசும்
போது, சங்கீதங்கள், புகழ்ப் பாடல்கள்,
ஞானப்பாட்டுகள் ஆகியவற்றைக்கொண்டு
பேசுங்கள்; ஆண்டவரை உங்கள் மனத்
திற்குள்ளே பாடிப் புகழுங்கள்; 20 தந்
தையாம் கடவுளுக்கு நம்முடைய ஆண்ட
வராகிய இயேசுகிறிஸ்துவின்மூலம் எப்
போதும் எல்லாவற்றிற்காகவும் நன்றி
செலுத்துங்கள்.

## கணவனும் மனைவியும்

21 நீங்கள் கிறிஸ்துவுக்கு அஞ்சி, ஒரு
வருக்கொருவர் அடங்கியிருங்கள்.

22 திருமணமான பெண்களே, ஆண்
டவருக்கு அடங்கியிருப்பதுபோல, நீங்கள்
உங்கள் கணவருக்கு அடங்கியிருங்கள்.
23 ஏனெனில், உடலாகிய திருச்சபையின்
மீட்பரான கிறிஸ்து, திருச்சபைக்குத் தலை
யாயிருப்பதுபோல, கணவன் மனைவிக்குத்
தலையாயிருக்கிறான். 24 திருச்சபை கிறிஸ்து
வுக்கு அடங்கியிருக்கிறதுபோல,
மனைவியும் தன் கணவனுக்கு எல்லா
வற்றிலும் அடங்கியிருக்க வேண்டும்.

25 கணவர்களே, கிறிஸ்து திருச்சபை
மீது அன்புகூர்ந்ததுபோல, நீங்களும் உங்கள்
மனைவியரிடம் அன்புகூர வேண்டும்.
26 அவர் திருச்சபையைத் தண்ணீரில்
கழுவுவதாலும் திருவார்த்தையாலும் புனித
மாக்கிக் கடவுளுக்கு உரியதாக்குவதற்
கென, தம்மையே அத்திருச்சபைக்காக
ஒப்புக்கொடுத்தார். 27 ஏனெனில், அதைக்
கறைதிரை முதலானவையின்றித் தூய்மை
யும் மாசற்றதுமான மாட்சிமை பொருந்
திய திருச்சபையாகத் தம் முன்னிலையில்
நிறுத்திக்கொள்ள வேண்டுமென்பது அவரது
திருவுளம். 28 கிறிஸ்து செய்த
வாறே ஒவ்வொரு கணவனும் செய்ய
வேண்டும்; தன் உடலின்மீது அவன்
அன்புகூர்வதுபோலவே தன் மனைவியின்
மீதும் அன்புகூர வேண்டும். தன் மனைவி
யின்மீது அன்புகூர்கிறவன் தன்மீதே
அன்புகூர்கிறவனாவான். 29 தன் உடலை
எவனும் ஒருபோதும் வெறுக்க மாட்டான்;
அதைப் பேணிக் காத்துவருவான். அவ்
வாறே, கிறிஸ்துவும் திருச்சபையைப்
பேணிக் காத்துவருகிறார். 30 ஏனெனில்,
நாம் அவரது உடலின் உறுப்புகள்.
31 வேதம் கூறுகிறபடி, ''ஆகையால்
ஒருவன் தன் தகப்பனையும் தாயையும்
விட்டுப் பிரிந்து, தன் மனைவியோடு சேர்ந்
திருப்பான்; இருவரும் ஒரே உடலாயிருப்
பர்.'' 32 இதில் மறைந்திருக்கும் பெரிய
உண்மை கிறிஸ்துவுக்கும் திருச்சபைக்கும்
பொருந்துவதாக நான் கொள்ளுகிறேன்.
33 அது எப்படியிருந்தாலும், உங்களுள்
ஒவ்வொருவனும் தன்மீது அன்புகூர்வது
போலத் தன் மனைவியின்மீதும் அன்பு
கூர வேண்டும். மனைவி கணவனிடம் அவ
னுக்குரிய மதிப்பை அளித்து நடந்து
கொள்ள வேண்டும்.

## பிள்ளைகளும் பெற்றோரும்

6 பிள்ளைகளே, உங்கள் பெற்றோருக்குக்
கீழ்ப்படியுங்கள்; ஆண்டவரின் அடி
யாருக்கு அதுவே முறையாகும். 2 கடவுள்
ஒரு வாக்குறுதியைச் சேர்த்து
அளித்த முதலாம் திருக்கட்டளை இதுவே:
''நீ நலம் பெறுவதற்கும் உன் நாட்டில்
நெடுங்காலம் இருப்பதற்கும், 3 உன் தகப்
பனையும் தாயையும் உயர்வாக மதிப்பா
யாக.''

4 தந்தையரே, உங்கள் பிள்ளைகளுக்கு
உங்கள்மீது எரிச்சல் ஏற்படும் வகையில்
அவர்களை நடத்தாதீர்கள்; அவர்களை
ஆண்டவருக்கேற்ற முறையில் கண்டித்துத்
திருத்தி அறிவு புகட்டி வளர்த்து
வாருங்கள்.

## அடிமைகளும் முதலாளிகளும்

5 அடிமைகளாயிருப்பவர்களே, இவ்வுல
கில் உங்களுக்கு முதலாளிகளாய் இருப்
போருக்குக் கீழ்ப்படியுங்கள். நீங்கள்
கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படிவதுபோல, அவர்
களுக்கும் அச்சத்தோடும் நடுக்கத்தோடும்
மனநேர்மையுடன் கீழ்ப்படியுங்கள்.
6 நல்ல வேலை செய்கிறவர்கள்போலக்
காட்டி மனிதரைப் பிரியப்படுத்துகிறவர்
களாய் இருக்க வேண்டாம்; கிறிஸ்துவின்

**5:16** கொலோ. 4:5. **5:19, 20** கொலோ. 3:16, 17. **5:22** கொலோ. 3:18; 1 பேது. 3:7. **5:31** ஆதி. 2:24. **6:1** கொலோ. 3:20. **6:2, 3** யாத். 20:12; உபா. 5:16. **6:4** கொலோ. 3:21. **6:5—8** கொலோ. 3:22—25.

அடிமைகளாகக் கடவுளின் திருவுளத்தை
முழுமனத்துடன் நிறைவேற்றுங்கள். 7 மனி
தருக்கு அன்று, ஆண்டவருக்கே ஊழியம்
செய்கிறீர்கள் என்று நினைத்து, மன
மகிழ்ச்சியோடு ஊழியம் செய்யுங்கள்.
8 உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, ஒரு
வன் நன்மையான எதையாவது செய்
தால், அவன் அடிமையாய் இருந்தாலும் சரி,
அடிமையில்லாதவனாய் இருந்தாலும் சரி,
ஆண்டவரிடம் பலனைப் பெறுவான்.
9 முதலாளிகளே, நீங்களும் இதை
மனத்தில் வைத்து உங்கள் அடிமைகளை
நடத்துங்கள்; அவர்களை அச்சுறுத்துவதை
விட்டுவிடுங்கள். அவர்களுக்கும் உங்களுக்
கும் முதலாளியாயிருப்பவர் விண்ணுலகில்
இருக்கிறார் என்பதையும் அவர் யாருக்
கும் தனிச்சலுகை காட்டுவதில்லை என்
பதையும் மறவாதீர்கள்.

## கடவுள் அருளும் படைக்கலம்

10 கடைசியாக நான் சொல்வது
இதுவே: நீங்கள் ஆண்டவரோடு இணைந்
திருப்பதால், அவருடைய மிகுந்த ஆற்றலைப்
பெற்று வலிமையுள்ளவர்களாய் இருங்கள்.
11 பிசாசின் சூழ்ச்சிகளை எதிர்த்து நிற்கக்
கூடியவர்களாகும்படி, கடவுள் அருளும்
எல்லாப் படைக்கலங்களையும் அணிந்து
கொள்ளுங்கள். 12 ஏனென்றால், நாம்
மனித இனத்தோடு போராடவில்லை;
ஆட்சி நடத்தும் ஆவிகள், அதிகாரம்
செலுத்தும் ஆவிகள், இருள் நிறைந்த
இந்த உலகத்தை ஆளும் சக்திகள், வானுல
கிலுள்ள பொல்லாத ஆவிகள் ஆகிய
வற்றோடு போராடுகிறோம். 13 எனவே,
கடவுள் அருளும் எல்லாப் படைக்கலங்
களையும் எடுத்துத் தரித்துக்கொள்ளுங்கள்.
அவ்வாறு தரித்துக்கொண்டால்
பொல்லாத நாள் வரும்போது, உங்க
ளால் எதிர்த்து நிற்கவும், செய்யக்கூடி
யவை அனைத்தையும் செய்து முடித்து
விட்டு உறுதியாக நிற்கவும் இயலும்.
14 ஆகையால், சத்தியத்தை உங்கள்
அரையில் கட்டிக்கொண்டு, நீதியை மார்புக்
கவசமாக அணிந்துகொண்டு நில்லுங்கள்.
15 சமாதானத்தை அறிவிக்கும் அருட்
செய்தியைக் கூறுவதற்கான ஆர்வமே
உங்கள் காலில் மிதியடியாக இருக்
கட்டும். 16 எல்லாச் சமயத்திலும் நம்
பிக்கை என்கிற கேடயத்தைப் பிடித்துக்
கொண்டிருங்கள்; அப்பொழுது அதைக்
கொண்டு தீயோன் செலுத்தும் நெருப்புக்
கணைகளையெல்லாம் அவித்துவிட உங்க
ளால் இயலும். 17 மீட்பைத் தலைச்சீரா
வாகவும், தெய்வ வார்த்தையை ஆவி
யானவர் தரும் வாளாகவும் பெற்றுக்
கொள்ளுங்கள். 18 இடைவிடாமல் கடவுளை
நோக்கி விண்ணப்பம் செய்து மன்
றாடுங்கள்; எப்போதும் ஆவியானவரின்
துணைகொண்டு வேண்டுதல் செய்யுங்கள்;
அதற்காக விழிப்பாயிருங்கள்; ஊக்கத்
தோடு கடவுளுக்குரிய மக்கள் அனைவருக்
காகவும் மன்றாடுங்கள். 19 எனக்காகவும்
மன்றாடுங்கள்; பேசுவதற்கு வாய்ப்புக்
கிடைக்கும்போது, நான் துணிவுடன்
அருட்செய்தியின் மறைபொருளை விளக்
கும்படி கடவுள் தக்க சொற்களை எனக்குத்
தந்தருளுமாறு வேண்டிக்கொள்ளுங்கள்.
20 இப்போது நான் விலங்கிடப்
பட்டிருந்தும், அந்த' அருட்செய்தியின்
தூதுவனாகவே இருக்கிறேன். அச்செய்
தியை எடுத்துக் கூறும்போது, பேச வேண்
டிய முறையில் நான் துணிவுடன் பேச
எனக்காக மன்றாடுங்கள்.

## வாழ்த்துரை

21 என்னைப்பற்றிய செய்திகளை, அதா
வது நான் எப்படி இருக்கிறேன் என்
பதை நீங்கள் அறிந்திருக்கும்படி, அன்
பார்ந்த சகோதரன் தீகிக்கு எல்லாவற்
றையும் உங்களுக்குத் தெரிவிப்பார். அவர்
ஆண்டவருக்கென்று உண்மையோடு உழைக்
கும் பணிவிடைக்காரர். 22 எங்களைப்பற்றிய
செய்திகளை உங்களுக்கு அறிவித்து, உங்கள்
உள்ளங்களுக்கு ஊக்கம் அளிப்பதற்கென்றே
அவரை உங்களிடம் அனுப்பியிருக்கிறேன்.
23 தந்தையாகிய கடவுளும், ஆண்ட
வராகிய இயேசுகிறிஸ்துவும் எல்லாச்
சகோதரருக்கும் சமாதானமும் அன்பும்
நம்பிக்கையும் அருளுவாராக! 24 நம்மு
டைய ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து
வின்மீது அழியாத அன்புசெலுத்தும்
அனைவரோடும் அருள் இருப்பதாக!

**6:9** கொலோ. 4:1; உபா. 10:17; கொலோ. 3:25. **6:14** ஏசா. 11:5; 59:17. **6:15** ஏசா. 52:7. **6:17** ஏசா. 59:17. **6:21** திருத்தூது. 20:4; 2 திமோ. 4:12. **6:21, 22** கொலோ. 4:7, 8.

# பவுல் பிலிப்பியருக்கு எழுதின கடிதம்

### வாழ்த்து

1 கிறிஸ்து இயேசுவின் அடியாரான
பவுலும் திமோத்தேயுவும் பிலிப்பி
பட்டணத்திலிருக்கும் சபை மேற்பார்வை
யாளர், திருப்பணியாளர் உட்பட கிறிஸ்
துவோடு இணைக்கப்பட்டுக் கடவுளுக்குரிய
வரான மக்கள் அனைவருக்கும் எழுதுவதா
வது: 2 நம்முடைய தந்தையாகிய கட
வுளிடமிருந்தும், ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவிடமிருந்தும் உங்களுக்கு அருளும்
நலமும் உண்டாகுக!

### பிலிப்பியருக்காக மன்றாடுதல்

3 நான் உங்களை நினைக்கும்போதெல்
லாம் என்னை ஆட்கொண்ட கடவுளுக்கு
நன்றி செலுத்துகிறேன். 4 உங்கள் அனை
வருக்காகவும் மன்றாடும்போதெல்லாம்,
நான் மகிழ்ச்சியுடன் மன்றாடுகிறேன்.
5 ஏனெனில், நீங்கள் அருட்செய்தியை
ஏற்றுக்கொண்ட நாள்முதல் இந்நாள்
வரையிலும் அதை அறிவிக்கும் வேலையில்
பங்கெடுத்துவருகிறீர்கள். 6 உங்கள் உள்
ளங்களில் இந்த நல்ல வேலையைத் தொடங்
கினவர், கிறிஸ்து இயேசுவின் நாள்வரை
யிலும் அதைத் தொடர்ந்து செய்து, அது
நிறைவுபெறும்படி செய்வார் என்பது என்
உறுதியான நம்பிக்கை. 7 நீங்கள் என்
நெஞ்சில் நிலையான இடம் பெற்றுவிட்
டீர்கள் என்பதால், உங்கள் எல்லாரையும்
பற்றி நான் இவ்வாறு எண்ணங்கொள்
வதற்கு நியாயம் உண்டு. நான் இங்கே
சிறையில் இருப்பதிலும், அருட்செய்திக்
காக வாதாடி அதை நிலைநாட்டிவருவதிலும்
எனக்குக் கிடைக்கும் அருட்பேறுதனில்
நீங்கள் என்னோடு பங்குகொள்
கிறீர்கள். 8 கிறிஸ்து இயேசு காட்டும்
அதே உருக்கத்தோடு உங்கள் எல்லாரையும்
காண நான் எவ்வளவோ ஆவலுள்ள
வனாயிருக்கிறேன். இதற்குக் கடவுளே
சாட்சி.

9 நன்மையானவற்றைப் பகுத்தறியும்
படி, நீங்கள் அன்பில் மேன்மேலும்
பெருகி முழு அறிவையும் எல்லா வகை
யான உணர்வையும் பெற வேண்டும் என்
பதே நான் உங்களுக்காகக் கடவுளிடம்
செய்யும் மன்றாட்டு. 10 அப்படி நீங்கள்
பெறுவதால், கிறிஸ்துவின் நாள் வரும்
போது, உங்களிடம் களங்கமோ குற்
றமோ இராது. 11 நீங்கள் இயேசுகிறிஸ்து
வினால் உண்டாகும் நீதி என்னும்
கனியை மிகுதியாகக் கொடுப்பீர்கள்; அத
னால் கடவுளின் மாட்சிமையையும் புகழை
யும் விளங்கச் செய்வீர்கள்.

### எனக்கு வாழ்தல் என்பது கிறிஸ்துவோடு இணைந்திருப்பதே

12 சகோதரரே, நீங்கள் ஒன்றை அறிய
வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.
எனக்கு நேர்ந்தவை அருட்செய்தியின்
பரவுதலுக்கு உதவி செய்கிறவையாய்
அமைந்தன. 13 எப்படியெனில், நான்
கிறிஸ்துவின் அடியானாயிருப்பதால் சிறைப்
படுத்தப்பட்டேன் என்பது அரண்மனைக்
காவற்படையினர் அனைவருக்கும் ஏனைய
மக்களெல்லாருக்கும் வெளிப்படையாகத்
தெரியவந்தது. 14 மேலும், சகோதரருள்
பெரும்பான்மையர் நான் சிறையில் இருப்
பதனால் ஆண்டவரிடம் திடமான நம்
பிக்கை கொண்டு, அச்சமின்றிக் கடவுளின்
வார்த்தையை எடுத்துக்கூற முன்னைவிட
மிகவும் துணிவுகொண்டிருக்கின்றனர்.

15 அவர்களுள் சிலர் பொறாமையினாலும்
போட்டி உணர்ச்சியினாலும் கிறிஸ்துவை
அறிவிக்கின்றனர்; வேறு சிலரோ
நல்ல நோக்கத்தோடு அறிவிக்கின்றனர்.
16 இவர்கள் என்மீதுள்ள அன்பினால்
அப்படிச் செய்கிறார்கள்; ஏனெனில், நான்
அருட்செய்திக்காக வாதாடும்படி இங்கே
வைக்கப்பட்டிருக்கிறேன் என்பதை இவர்கள்
அறிவார்கள். 17 மற்றவர்களிடமோ
நேர்மை இல்லை. அவர்கள் தன்னலத்தி
னால் கிறிஸ்துவை அறிவிக்கிறார்கள்; சிறை
யில் இருக்கும் எனக்கு மேலும் துன்பம்
தர நினைக்கிறார்கள். 18 அதனாலென்ன?
அவர்கள் தீய நோக்கத்தோடு செய்கிறார்
களோ உண்மையோடு செய்கிறார்களோ,
எவ்வாறாயினும் கிறிஸ்து அறிவிக்கப்படு
கிறார்; அது எனக்கு மகிழ்ச்சியே; ஆம்,
இனிமேலும் அது எனக்கு மகிழ்ச்சியா
கவே இருக்கும். 19 ஏனெனில், உங்கள்
மன்றாட்டினாலும் இயேசுகிறிஸ்துவினு
டைய ஆவியின் துணையினாலும் இவை
யாவற்றின் முடிவு என் மீட்பே* என்பது
எனக்குத் தெரியும். 20 ஏனென்றால், நான்
ஆவலோடும் நம்பிக்கையோடும் எதிர்
பார்க்கிற ஒன்றுண்டு. அது என்னவெனில்,
நான் எவ்வகையிலும் வெட்கத்திற்குள்ளா
கப்போவதில்லை என்பதே. நான் எப்போ
தும் துணிவுடன் இருப்பேன்; என்னிடம்
எப்போதும் கிறிஸ்துவின் மாட்சிமை
விளங்கினதுபோல இப்போதும், நான்
இருந்தாலும் இறந்தாலும் அது விளங்கும்.
21 எனக்கு வாழ்தல் என்பது
கிறிஸ்துவோடு இணைந்திருப்பதே; இறத்தல்
என்பது அவரோடு இன்னும் நெருங்கி
இணைந்திருப்பதே. 22 எனினும், நான் இந்த

* 'விடுதலையே' என்றும் மொழிபெயர்க்கலாம்.
**1:1** திருத்தூது. 16:12. **1:13** திருத்தூது. 28:30.

உலகில் இன்னும் வாழ்ந்தால் என் வேலை
யைப் பயனுள்ள முறையில் தொடர்ந்து
செய்யக் கூடும். ஆகையால், நான் எதைத்
தேர்ந்துகொள்வது என்றே எனக்குத்
தெரியவில்லை. 23 இந்த இரண்டு வழி
களினிடையே நான் அகப்பட்டுத் திகைத்துக்
கொண்டிருக்கிறேன். இவ்வுலகை
விட்டு நீங்கிக் கிறிஸ்துவோடு இருக்க
வேண்டுமென்கிற விருப்பம் எனக்கு இருக்
கிறது. இரண்டில் இதுவே எனக்கு மிகவும்
நலமானதாயிருக்கும். 24 ஆனால், உங்கள்
பொருட்டு நான் இந்த உலக வாழ்க்கையில்
நீடித்திருப்பது மிகவும் தேவையா
யிருக்கிறது. 25 இதைக் குறித்து எனக்கு
ஐயம் எதுவும் இல்லாததால், இன்
னும் ஒன்று எனக்குத் தெரியும்: நீங்கள்
அனைவரும் ஆண்டவரிடம் நம்பிக்கையோ
டிருப்பதில் வளர்ச்சியும் மகிழ்ச்சியும்
அடையும்பொருட்டு, நான் உங்களுக்குத்
துணையாக உயிரோடிருப்பேன். 26 ஆகவே,
நான் உங்களிடம் மறுபடியும் வரப்போவ
தால், கிறிஸ்து இயேசுவோடு இணைக்கப்
பட்டிருக்கும் நிலையில் உங்களுக்கு என்னைக்
குறித்து இருக்கும் பெருமை மிகுதியாகப்
பெருகும்.

27 நீங்கள் செய்ய வேண்டியது ஒன்
றுண்டு. கிறிஸ்துவின் அருட்செய்திக்கு
ஏற்றவாறு நடந்துகொள்ளுங்கள்; அருட்
செய்தியில் வைக்கும் நம்பிக்கைக்காக
ஒரே நோக்கத்துடன் ஒருமித்துப் போரா
டுங்கள்; ஒரே மனப்பாங்குடன் நிலைத்து
நில்லுங்கள்; 28 எதிரிகளுக்குச் சிறிதளவும்
அஞ்சாதீர்கள். நான் வந்து உங்களை
நேரில் கண்டாலும் சரி, உங்களிடம்
வராவிட்டாலும் சரி, இவ்வாறு நான்
உங்களைப்பற்றிக் கேள்விப்பட வேண்டு
மென்பதே என் ஆவல். நீங்கள் அஞ்சா
திருப்பது அவர்களுக்கு ஓர் அறிகுறியாக
அமையும்; அதன் மூலம், அவர்கள் அழி
வார்கள் என்பதையும், நீங்கள் மீட்படை
வீர்கள் என்பதையும் கடவுள் அவர்
களுக்கு உணர்த்துவார். 29 உங்களுக்குக்
கிறிஸ்துவினிடம் நம்பிக்கை கொள்ளும்
நற்பேறு மட்டுமன்று, அவருக்காகப் பாடு
களை அடையும் நற்பேறும் அருளப்பட்
டிருக்கிறது. உங்களுக்குள்ள போராட்ட
மும் எனக்குள்ள போராட்டமும் ஒன்றே.
அது எனக்கு இருந்ததை நீங்கள் முன்பு
கண்டீர்கள். இப்போதும் நீங்கள் கேள்
விப்படுகிறபடி அது எனக்கு இருக்கிறது.

## கிறிஸ்துவின் தாழ்மையும் மேன்மையும்

2 கிறிஸ்துவோடு நீங்கள் இணைக்கப்
பட்டிருப்பதால் ஊக்கமுடையவர்
களாய் இருக்கிறீர்கள்; அவருடைய அன்
பினால் மன ஆறுதல் பெற்றிருக்கிறீர்கள்.
ஆவியானவரோடு இணையரு உறவு
கொண்டவர்களாய் இருக்கிறீர்கள்; உங்
களிடையே உளங்கனிந்த பரிவும் இரக்கமும்
காணப்படுகின்றன. இவை அனைத்தும்
உண்மை அல்லவா? 2 அப்படியானால்,
நீங்கள் ஒரே சிந்தையும் ஒரே அன்பும்
ஒரே மனமும் ஒரே கொள்கையும்
உடையவர்களாயிருந்து, என் மகிழ்ச்சி
நிறைவு பெறும்படி செய்யுங்கள். 3 தன்னலத்
தோடாவது, வீண்பெருமையோடாவது
எதையும் செய்ய வேண்டாம். ஒவ்வொரு
வனும் மனத்தாழ்மையோடு மற்றவனைத்
தன்னைவிட மேம்பட்டவனாகக் கருதுவானாக.
4 ஒவ்வொருவனும் தனக்கானவற்றி
லேயே கவனம் செலுத்திக்கொண்டிராமல்,
மற்றவர்களுக்கானவற்றிலும் கவனம்
செலுத்துவானாக. 5 கிறிஸ்து இயேசுவினிட
மிருந்த சிந்தையே உங்களிடமும் இருப்ப
தாக.*

6 அவர் எப்போதும் கடவுளின் தன்
மையுடையவராயிருந்தவர்;
ஆனால் கடவுளுக்குச் சமமாயிருப்
பதை அவர், பற்றிக்கொண்டிருக்க
வேண்டிய ஒரு நிலையாகக் கருத
வில்லை.†
7 அதற்கு மாறாக, அவர் தம்மை
வெறுமையாக்கிக்கொண்டு,
அடிமையின் தன்மையை ஏற்று,
மனிதனைப் போலானார்;
மனித உருவத்தில் காணப்பட்டு,
8 தம்மைத் தாழ்த்தினார்;
கீழ்ப்படிதல் உள்ளவராய் நடந்து,
மரணத்தை ஏற்றார்;
அதுவும் சிலுவை மரணத்தை ஏற்றார்.
9 ஆகையால், கடவுள் அவரை
மேலாக உயர்த்தி,
எல்லாப் பெயருக்கும் மேலான
பெயரை அவருக்குச் சூட்டினார்.
10 இதனால்,
விண்ணவர் மண்ணவர் கீழ் உல
கத்தார் அனைவரும் முழந்தாள்
படியிட்டு, இயேசுவின் திருப்
பெயருக்கு வணக்கம் செலுத்துவர்;

* 'நீங்கள் கிறிஸ்து இயேசுவோடு இணைக்கப்பட்டிருப்பதால் உங்கள் பொது வாழ்க்கையில் உங்களுக்கு ஏற்பட்டிருக்கும் புதிய மனப்பாங்கிற்கேற்ப ஒருவரோடொருவர் நடந்துகொள்ளுங்கள்' என்றும் மொழி பெயர்க்கலாம்.

† 'ஆனால், கடவுளுக்குச் சமமாயிருப்பதை அவர், அபகரித்துப் பெற வேண்டிய ஒரு நிலையாகக் கருதவில்லை' என்றும் மொழிபெயர்க்கலாம்.

1:30 திருத்தூது. 16:19—40. 2:10, 11 எசா. 45:23.

11 ''இயேசுகிறிஸ்துவே ஆண்டவர்''
என்று,
எல்லா மக்களும் வெளிப்படையாக
ஒப்புக்கொள்வார்கள். இவை யாவும்
தந்தையாம் கடவுளின் மாட்சிமைக்கே!

### உலகில் விண் சுடர்களைப்போல ஒளி வீசுங்கள்

12 ஆகையால், எனக்கு அன்பார்ந்த
வர்களே, நான் உங்களோடு இருந்த
போது மட்டுமன்று, எப்போதுமே
நீங்கள் கீழ்ப்படிதலோடு நடந்து வந்தீர்கள்;
நான் உங்களோடு இல்லாதிருக்கும்
இப்போதுங்கூட முன்னைவிட மிகுதியான
கீழ்ப்படிதலோடு நடந்துகொள்ளுங்கள்;
நீங்கள் அடைந்த மீட்பு நிறைவுபெறும்படி
அச்சத்தோடும் நடுக்கத்தோடும்
செயல்புரிந்துவாருங்கள். 13 ஏனெனில்,
கடவுள் தாமே உங்கள் உள்ளத்தில்
செயலாற்றிவருகிறார். அவரே தமது
திருவுளப்படி நீங்கள் செயல்புரிவதற்கு
உங்களுக்கு விருப்பத்தையும் ஆற்றலையும்
தருகிறவர். 14 நீங்கள் செய்வதெல்லா
வற்றையும் முணுமுணுக்காமலும் வாதா
டாமலும் செய்யுங்கள். 15 அப்பொழுது
நெறிகெட்டுச் சீரழிந்துபோன இக்காலத்து
மக்களிடையே நீங்கள் குற்றமற்றவர்
களும் கபடற்றவர்களும் கடவுளின்
மாசற்ற பிள்ளைகளுமாய் விளங்குவீர்கள்.
16 அவர்களிடையே நீங்கள் மெய்வாழ்
வைப்பற்றிய செய்தியை ஏந்தி நின்று,
விண் சுடர்களைப்போல உலகில் ஒளிவீசு
கிறீர்கள். அதனால் என் வாழ்க்கையோட்டம்
வீணாய்ப்போய்விடவில்லை; நான்
வீணாக உழைக்கவுமில்லை என்று கிறிஸ்து
வின் நாளில் பெருமையோடு கூறிக்கொள்
வேன்.* 17 கடவுளிடம் நீங்கள் கொண்
டுள்ள நம்பிக்கை அவருக்கு உகந்த பலி
யாகப் படைக்கப்படும்போது, அந்தப்
பலியோடு நான் என் இரத்தத்தையும்
ஊற்றிப் படைக்க நேரிட்டாலும் மகிழ்ச்சி
யோடிருப்பேன். உங்கள் அனைவரோடும்
சேர்ந்து களிகூர்வேன். 18 அப்படியே
நீங்களும் இதைக் குறித்து மகிழ்ச்சியடை
யுங்கள், என்னோடு சேர்ந்து களிகூருங்கள்.

### தீமோத்தேயுவும் எப்பாப்பிரோதீத்துவும்

19 ஆண்டவராகிய இயேசு திருவுளங்
கொள்வாரானால், உங்களைப்பற்றிய செய்தி
களை அறிந்து நான் மகிழ்ச்சி அடையும்
படி தீமோத்தேயுவை விரைவிலேயே உங்
களிடம் அனுப்ப என்னால் இயலும் என்று
நம்புகிறேன். 20 உங்கள் காரியங்களில்
உண்மையாகவே அக்கறை கொள்வதற்கு
அவரைப்போன்ற நல்ல மனமுள்ளவர்
வேறு எவரும் என்னோடு இல்லை. 21 மற்
றவர்கள் எல்லாரும் தமக்கானவற்றை
நாடுகின்றனர்; கிறிஸ்து இயேசுவுக்கான
வற்றை நாடுவதில்லை. 22 தீமோத்தேயு
வின் சிறப்பு உங்களுக்குத் தெரியும்.
மகன் தகப்பனோடு உழைப்பதுபோல அவர்
என்னோடு சேர்ந்து அருட்செய்தியை அறி
விக்கும் பணியில் உழைத்தார். 23 அத
னாலேதான் அவரை உங்களிடம் அனுப்ப
லாமென்று நினைக்கிறேன். என் காரியம்
எப்படி முடிவடையும் என்பதை அறிந்த
வுடனே அவரை அனுப்பிவைக்கிறேன்.
24 ஆண்டவர் திருவுளங்கொள்வாரானால்
நானும் விரைவிலேயே வருவேன் என்கிற
திடமான நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

25 எப்பாப்பிரோதீத்து என் சகோ
தரர், என் உடன் ஊழியர், என் உடன்
போர்வீரர்; என் தேவைகளில் எனக்குப்
பணிவிடை செய்ய உங்களால் அனுப்பப்
பட்டவர். அவரை உங்களிடம்அனுப்பிவிட
வேண்டுமென்று நினைக்கிறேன்.
26 ஏனெனில், தாம் நோயுற்றிருந்த
செய்தி உங்கள் காதுக்கு எட்டியதற்காக
அவர் வருத்தமுற்றதால் உங்கள் எல்லா
ரையும் காண ஆவலோடிருக்கிறார். 27அவர்
நோயுற்றுச் சாகும் நிலையில் இருந்தது
உண்மையே. ஆனால், கடவுள் அவர்மீது
இரக்கங்கொண்டார்; அவர்மீது மட்டு
மன்று, துயரத்துக்குமேல் துயரம் எனக்கு
உண்டாகாதபடி என்மீதும் இரக்கங்
கொண்டார். 28 ஆகையால், அவரை
நீங்கள் மீண்டும் கண்டு மகிழ்ச்சியடைவதற்
காகவும் என் மனக்கவலை குறைவதற்
காகவும் அவரை விரைவிலேயே அனுப்பி
வைக்கிறேன். 29 எனவே, உங்களுடன்
ஆண்டவரின் அடியாராய் இருக்கும்
அவரை முழு மகிழ்ச்சியோடு ஏற்றுக்
கொள்ளுங்கள். இத்தகையோரை நீங்கள்
உயர்வாகவே மதிக்க வேண்டும். 30 ஏனெ
னில், கிறிஸ்துவுக்காகச் செய்யும் வேலையின்
பொருட்டே அவர் சாகும் நிலைக்கும்
வர வேண்டியதாயிருந்தது. நீங்கள் எனக்
குச்செய்ய முடியாத பணிவிடையைச்
செய்துமுடிக்க அவர் தம் உயிரையும்
கொடுக்கத் துணிந்தார்.

### தமக்கு ஏற்றவரெனக் கடவுளால் கொள்ளப்படுதல்

3 கடைசியாக, என் சகோதரரே,
ஆண்டவரோடு இணைந்திருப்பதில்
மகிழ்ச்சியோடிருங்கள்.†

* 'ஒளி வீசுங்கள்; அப்பொழுது என் வாழ்க்கையோட்டம்.. கூறிக்கொள்வேன்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
† 'என் சகோதரரே, ஆண்டவரின் திருப்பெயரால் உங்களுக்கு என் வாழ்த்தைத் தெரிவித்து முடித்துக் கொள்கிறேன்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
2:15 உபா. 32:5.

எழுதினதையே உங்களுக்கு மீண்டும்
எழுதுவது எனக்குக் கடினமன்று, உங்க
ளுக்கு அது பயனளிக்கும். 2 அந்த நாய்
களைக் குறித்து எச்சரிக்கையாயிருங்கள்;
தீய செயல் செய்கிற அவர்களைக் குறித்து
எச்சரிக்கையாயிருங்கள்; விருத்தசேதனம்
என்கிற பெயரை வைத்து உறுப்புச்
சேதனம் செய்கிற அவர்களைக் குறித்து எச்ச
ரிக்கையாயிருங்கள். 3 புறம்பான காரி
யங்களை நம்பி வாழாமல், கடவுளுடைய
ஆவியினால் ஆட்கொள்ளப்பட்டு இறைவழி
பாடு செய்து, கிறிஸ்து இயேசுவே நம்
பெருமை என்று கொள்கிறவர்களாகிய
நாமே உண்மையான விருத்தசேதனம்
பெற்றவர்கள். 4 எனக்கு விருப்பமிருந்
தால், நானும் புறம்பானவற்றை நம்பி
வாழக்கூடும். யாராவது ஒருவன் புறம்
பானவற்றை நம்பி வாழ நினைத்தால்,
அவ்வாறு நினைக்க அவனைவிட எனக்கு
மிகுதியான காரணங்கள் உண்டு. 5 நான்
பிறந்த எட்டாம் நாளில் விருத்தசேதனம்
பெற்றவன், இஸ்ரவேல் இனத்தவன்,
பென்யமீன் குலத்தினன், எபிரேயப்
பெற்றோருக்குப் பிறந்த எபிரேயன், திருச்
சட்டத்தைக் கடைப்பிடிப்பதில் பரிசேயன்,
6 சமயப் பற்றார்வத்தைப் பொருத்த
வரையில் திருச்சபையைத் துன்புறுத்தின
வன், திருச்சட்டத்திற்குரிய நீதியின்படி
பார்த்தால் குற்றமற்றவன். 7 ஆனால்,
நான் பயனுள்ளவை என்று கணக்கிட்
டிருந்த இவற்றைக் கிறிஸ்துவின் பொருட்டு
இப்போது பயனற்றவை என்றே கணக்
கிடுகிறேன். 8 உண்மையில், என் ஆண்ட
வராகிய கிறிஸ்து இயேசுவை அறியும்
அறிவே எனக்கு ஒப்பற்ற செல்வமாயிருப்
பதால், மற்ற எல்லாவற்றையுமே பய
னற்றவை என்று கணக்கிடுகிறேன்; எனக்
குள்ள எல்லாவற்றையுமே அவர் பொருட்டு
நான் பயனற்றவை என்று மதித்துத்
துறந்துவிட்டேன்; அவற்றைக் குப்பையு
மாகக் கருதுகிறேன். 9 கிறிஸ்துவை என்
செல்வமாகக் கொள்ளவும் நான் அவ
ரோடு இணைந்திருக்கவுமே இவ்வாறு
செய்கிறேன். திருச்சட்டத்தைக் கடைப்
பிடித்து நடப்பதன்மூலம் நான் என்னைக்
கடவுளுக்கு ஏற்புடையோனாக்கிக்கொள்ளப்
பார்க்கவில்லை; கிறிஸ்துவினிடம் கொண்
டுள்ள நம்பிக்கையின்மூலம் நான்
கடவுளுக்கு ஏற்றவனென அவரால் கொள்
ளப்படுகிறேன்; அதாவது, அத்தகைய
நம்பிக்கையின் அடிப்படையில் கடவுள்
தாமே என்னைத் தமக்கு ஏற்றவனெனக்
கொள்கிறார். 10 எல்லாவற்றிலும் என்
நோக்கம் யாதெனில், கிறிஸ்துவை அறி
யவும் அவரது உயிர்த்தெழுதலின் வல்ல
மையை அனுபவிக்கவும் அவருடைய பாடு
களில் பங்குகொள்ளவும் வேண்டுமென்
பதேயாகும். இதற்காக அவர் தம்
மரணத்தில் எத்தகையவராய் விளங்கி
னாரோ அத்தகையோனாய் நானும் விளங்
கும்படி நாளுக்கு நாள் என் வாழ்க்கை
மாறுதல் பெற்றுவர வேண்டும் என்கிற
பேராவல் கொண்டிருக்கிறேன். 11 இதன்
மூலம் இறந்தோர் உயிர்த்தெழுகையில்
நானும் உயிர்த்தெழுவேன் என்கிற துணிவு
எனக்கு இருக்கிறது.

## இலக்கை நோக்கி ஓடுதல்

12 இவற்றை அடைந்துவிட்டேன் என்றோ
முற்றிலும் தேறினவனாகிவிட்டேன் என்றோ
நான் எண்ணவில்லை. கிறிஸ்து இயேசு
என்னைத் தமக்குச் சொந்தமாக்கியிருக்
கிறார். ஆகையால், இவற்றை எனக்குச்
சொந்தமாக்கிக்கொள்ள நான் தொடர்ந்து
ஓடுகிறேன். 13 சகோதரரே, இவற்றைச்
சொந்தமாக்கிக்கொண்டேன் என்று நான்
கருதவில்லை; ஆனால், ஒன்று செய்கிறேன்:
கடந்ததை மறந்துவிட்டு முன்னிருப்பதை
நாடி, 14 பரிசு பெறுவதற்காக இலக்கை
நோக்கித் தொடர்ந்து ஓடுகிறேன். கிறிஸ்து
இயேசுவின் மூலம் கடவுள் எனக்கு விடுத்த
மேலுலக அழைப்பே அப்பரிசாகும்.
15 எனவே, நம்மிடையே தேறினவர்
களென்று சொல்லப்படுகிற யாவரும்
எனக்கு இருக்கும் இதே சிந்தை உடைய
வர்களாய் இருப்பார்களாக. ஏதாவது
ஒன்றைப்பற்றி நீங்கள் வேறுபட்ட சிந்தனை
கொண்டவர்களாய் இருந்தால்,
அதைப்பற்றிய உண்மையைக் கடவுள்
உங்களுக்குத் தெளிவுபடுத்துவார். 16 எப்படி
இருந்தாலும், நாம் எந்த நிலையை
அடைந்திருக்கிறோமோ அதற்கேற்பத்
தொடர்ந்து நடப்போமாக.

17 சகோதரரே, நீங்கள் எல்லாரும்
என்னைப் பார்த்து நடவுங்கள்; நாங்கள்
உங்களுக்கு முன்மாதிரி காட்டியிருக்கி
றோம்; அதன்படி நடக்கிறவர்களைக் கவ
னியுங்கள். 18 பலர் கிறிஸ்துவின் சிலு
வைக்கு எதிரிகளாக நடந்துகொள்கின்
றனர்; அவர்களைப்பற்றிப் பல முறை
உங்களோடு பேசியிருக்கிறேன். இப்
போதும் கண்ணீரோடு சொல்லுகிறேன்.
19 அழிவே அவர்கள் முடிவு; வயிறே
அவர்கள் கடவுள்; மானக்கேடே அவர்கள்
பெருமை. 20 அவர்கள் உலகத்திற்
குரியவற்றிலேயே சிந்தனை செலுத்துகிறார்
கள். நாமோ விண்ணுலகின் குடிமக்கள்.
அங்கிருந்து ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து
என்னும் மீட்பர் வருவதை எதிர்நோக்கி
யிருக்கிறோம். 21 அவர் எல்லாவற்றையும்
தமக்குக் கீழ்ப்படுத்த வல்லவர். அதே

**3:5** திருத்தூது. 23:6; 26:5; ரோ. 11:1. **3:17** 2 கொரி. 4:16; 11:1.

வல்லமையைக் கொண்டு இழிவான நிலை
யிலிருக்கும் நமது உடலை மாட்சிமை
பொருந்திய தமது உடலுக்கு ஒப்பாக
மாற்றி அமைப்பார்.

4 ஆகையால், என் அன்பார்ந்த சகோ
தரரே, எனக்கு அருமையானவர்
களே, நான் கூறியபடி ஆண்டவரோடு
இணைக்கப்பட்டிருக்கும் நிலையில் உறுதி
யாக நில்லுங்கள். அன்பார்ந்தவர்களே,
நீங்களே என் மகிழ்ச்சி, என் வெற்றி
மாலை.

### அறிவுரை

2 எயோதியாளும் சிந்திக்கேயாளும்
ஆண்டவருடைய அடியார்களாக ஒற்று
மையாயிருக்கும்படி அவர்கள் இருவரையும்
கேட்டுக்கொள்கிறேன். 3 என்
உண்மையான கூட்டாளியே, உம்மையும்
கேட்டுக்கொள்கிறேன்: அவர்களுக்கு
உதவி செய்யும். அவர்கள் கிலமெந்தோடும்
என் உடன் ஊழியர் மற்றெல்லா
ரோடும் அருட்செய்தியை அறிவிக்கும்
பணியில் என்னோடு சேர்ந்து கடுமையாக
உழைத்தார்கள். அவர்கள் பெயர்கள்
மெய்வாழ்வுள்ளோரின் அட்டவணையில்
இருக்கின்றன.

4 ஆண்டவரோடு இணைந்திருப்பதில்
எப்போதும் மகிழ்ச்சியோடிருங்கள்;
மீண்டும் சொல்கிறேன்: மகிழ்ச்சியோடிருங்
கள். 5 எல்லா மனிதரிடமும் பணிவோடு
நடந்துகொள்ளுங்கள். ஆண்டவர் விரைவில்
வரப்போகிறார். 6 எதைப்பற்றியும்
நீங்கள் கவலைப்பட வேண்டாம். ஆனால்,
எல்லாச் சூழ்நிலையிலும் உங்கள் விண்ணப்
பங்களை நன்றியோடுகூடிய ஜெபத்தி
னாலும் மன்றாட்டினாலும் கடவுளிடம் எடுத்
துச் சொல்லுங்கள். 7 அப்பொழுது எல்லா
அறிவாற்றலுக்கும் அப்பாலுள்ள தெய்வ
சமாதானம் உங்கள் உள்ளத்தையும்
உங்கள் மனத்தையும் கிறிஸ்து இயேசுவோடு
இணைந்தவாறே இருக்கும்படி காத்துக்
கொள்ளும்.

8 கடைசியாக, சகோதரரே, உண்மை
யானவை எவையோ, நன்மதிப்புள்ளவை
எவையோ, நேர்மையானவை எவையோ,
தூயவை எவையோ, விரும்பத் தக்கவை
எவையோ, இனியவை எவையோ, நற்
பண்பு, புகழ்ச்சி உள்ளவை எவையோ
அவற்றிலேயே உங்கள் சிந்தனைகளைச்
செலுத்துங்கள். 9 நீங்கள் என்னிடம்
கற்றுக்கொண்டவை, என்மூலம் தெரிந்து
கொண்டவை, என்னிடம் கேட்டறிந்
தவை, என் வாழ்க்கையில் கண்டவை
எவையோ அவற்றையே கடைப்பிடித்து
வாருங்கள்; அப்பொழுது சமாதானத்
திற்கு ஊற்றாகிய கடவுள் உங்களோடிருப்
பார்.

### பிலிப்பியரின் நன்கொடைக்கு நன்றி

10 நீண்ட காலத்திற்குப்பின் என்னைப்
பற்றி உங்களுக்கு இருக்கும் நினைவாகிய
மலர் மீண்டும் பூத்து மலர்ந்ததால், அடி
யேனாகிய எனக்கு ஆண்டவர் மிகுந்த
மகிழ்ச்சி அளித்திருக்கிறார். இப்படி உதவி
செய்ய நீங்கள் ஏற்கெனவே எண்ணங்
கொண்டிருந்தீர்கள்; ஆனால், உங்களுக்கு
வாய்ப்புக் கிடைக்கவில்லை. 11 ஏதோ
பற்றாக்குறை எனக்கு இருப்பதால் இப்படிச்
சொல்கிறேன் என்று நினைக்க வேண்டாம்.
ஏனெனில், எந்த நிலைமையிலிருந்தாலும்
மன நிறைவோடிருக்கக் கற்றிருக்கிறேன்.
12 எனக்கு வறுமையிலும் வாழத்தெரியும்.
வளமையிலும் வாழத் தெரியும். உணவோ
பட்டினியோ, நிறைவோ குறைவோ
எதையும் எந்த நேரத்திலும் ஏற்று வாழ்
வது எப்படி என்பதைக் கற்றிருக்கிறேன்.
13 கிறிஸ்து எனக்கு வலிமையளிப்பதால்,
எல்லாவற்றையும் செய்ய எனக்கு ஆற்றல்
உண்டு. 14 இருந்தபோதிலும், நான்
பட்ட துன்பத்தில் நீங்கள் பங்குகொண்
டதைப் பெரிதும் பாராட்டுகிறேன்.

15 பிலிப்பியரே, அருட்செய்தியை நான்
அறிவிக்கத் தொடங்கின காலத்தில், நான்
மக்கெதோனியாவை விட்டுச் சென்ற
பிறகு, என் வரவு செலவு கணக்கில்
உங்கள் திருச்சபை ஒன்றைத் தவிர
வேறெந்தத் திருச்சபையும் பங்கேற்க
வில்லை. நான் சொல்லாமலே இது உங்
களுக்குத் தெரியும். 16 நான் தெசலோ
னிக்கே பட்டினத்தில் இருந்தபோதுங்கூட
என் தேவைக்கான உதவியை நீங்கள்
ஒருமுறையன்று இரு முறை அனுப்பினீர்கள்.
17 நான் நாடுவது உங்கள் நன்
கொடையன்று, இதனால் உங்களுக்கு நற்
பயன் பெருக வேண்டுமென்பதே என்
நாட்டம். 18 நீங்கள் அனுப்பினதையெல்
லாம் பெற்றுக்கொண்டேன்; தேவைக்கு
மேலாகவும் இப்போது இருக்கிறது. நீங்கள்
எப்பாப்பிரோதீத்துவின்மூலம் அனுப்
பினதை அவர் என்னிடம் சேர்த்துவிட்
டார். இப்போது என்னிடம் நிறைய
இருக்கிறது. அவை நறுமணம் கமழும்
காணிக்கை, கடவுள் ஏற்பதும் அவருக்கு
உகந்ததுமான பலியுமாகும். 19 நான்
சேவிக்கும் கடவுள், கிறிஸ்து இயேசுவி
னிடமுள்ள தமது மாட்சிமை பொருந்திய
செல்வத்தைக் கொண்டு உங்கள்
தேவைகளை எல்லாம் நிறைவாக்குவார்.
20 நம்முடைய கடவுளும் தந்தையுமான

**4:15, 16** 2 கொரி. *11:9.* **4:18** யாத். *29:18.*

வருக்கே என்றென்றைக்கும் மாட்சிமை! ஆமேன்.

### வாழ்த்துரை

21 கிறிஸ்து இயேசுவோடு இணைந்திருக்
கும் இறைமக்கள் யாவருக்கும் வாழ்த்துக்
கூறுங்கள். என்னோடிருக்கிற சகோதரர்
உங்களுக்கு வாழ்த்துக் கூறுகின்றனர்.
22 இங்குள்ள இறைமக்கள் அனைவரும்,
சிறப்பாகப் பேரரசன் அரண்மனையைச்
சேர்ந்தவர்களும் உங்களுக்கு வாழ்த்துக்
கூறுகிறார்கள். 23 ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவின் அருள் உங்களோடிருப்பதாக!

# பவுல் கொலோசேயருக்கு எழுதின கடிதம்

## வாழ்த்து

1 கடவுளின் திருவுளப்படி கிறிஸ்து
இயேசுவின் திருத்தூதுவனாயிருக்கும்
பவுலும் சகோதரனாகிய தீமோத்தேயுவும்,
2 கிறிஸ்துவோடு இணைக்கப்பட்டு இறை
மக்களாயும் திடப்பற்றுள்ளவர்களாயும்
கொலோசே நகரத்திலிருக்கும் சகோதர
ருக்கு எழுதுவதாவது: நம்முடைய தந்
தையாம் கடவுளால் உங்களுக்கு அருளும்
நலமும் உண்டாகுக!

## கொலோசேயருக்காகக் கடவுளுக்கு நன்றி செலுத்துதல்

3 உங்களுக்காக நாங்கள் வேண்டுதல்
செய்யும்போதெல்லாம், நம்முடைய ஆண்
டவர் இயேசுகிறிஸ்துவின் தந்தையாகிய
கடவுளுக்கு நன்றி செலுத்துகிறோம்.
4 ஏனெனில், விண்ணுலகில் உங்களுக்காக
வைக்கப்பட்டிருக்கிற நற்பேற்றை நீங்கள்
எதிர்நோக்கியிருப்பதால், நீங்கள் கிறிஸ்து
இயேசுவினிடம் கொண்டுள்ள நம்பிக்கை
யைக் குறித்தும், இறைமக்கள் அனை
வருக்கும் காட்டும் அன்பைக் குறித்தும்
நாங்கள் கேள்விப்பட்டோம். 5 அந்த
நற்பேற்றைப்பற்றி நீங்கள் உங்களிடம்
ஏற்கெனவே கொண்டுவரப்பட்ட அருட்
செய்தியாகிய சத்திய வார்த்தையின்
மூலம் கேட்டிருந்தீர்கள். 6 அந்த அருட்
செய்தி, நீங்கள் கடவுளின் அருளைக் கேட்
டறிந்து அதன் உண்மையான தன்
மையை உணர்ந்த நாள் முதற்கொண்டு
உங்களிடையே வளர்ந்து கனி கொடுத்து
வருவதுபோல, உலகமெங்கும் பரவிக்
கனி கொடுத்து வருகிறது. 7 எங்களுக்கு
அன்பார்ந்த உடன் ஊழியனாகிய எப்பாப்
பிரா அதை உங்களுக்குப் போதித்தார்.
அவர் எங்கள் சார்பில் கிறிஸ்துவின்
உண்மையுள்ள பணிவிடைக்காரராய்
உழைக்கிறவர். 8 ஆவியானவரால் உங்
களிடம் உண்டாயிருக்கும் அன்பை எங்
களுக்குத் தெரிவித்தவரும் அவரே.

9 ஆகையால், நாங்கள் அதைக் கேள்
விப்பட்ட நாள் முதல் உங்களுக்காக
இடைவிடாமல் வேண்டுதல் செய்கிறோம்.
நீங்கள் எல்லா வகையான ஞானத்தை
யும் ஆன்மீக உணர்வையும் பெற்று,
அதன்மூலம் கடவுளின் திருவுளத்தைப்
பற்றிய அறிவை நிறைவாக அடைய
வேண்டுமென்றும், 10 அதனால் நீங்கள்
அனைத்திலும் ஆண்டவருக்கு உகந்தவர்
களாயிருந்து, அவருக்கு உரியவர்களுக்
கேற்ற வகையில் நடந்துகொள்ள வேண்டு
மென்றும் மன்றாடுகிறோம். எல்லா வகை
யான நற்செயல்களாகிய கனியைக்
கொடுத்து, கடவுளை அறிந்துகொள்வதில்
வளர்ச்சி பெற வேண்டுமென்றும் மன்
றாடுகிறோம். 11 நீங்கள் எதையும் சகித்
துக்கொண்டு பொறுமையோடிருக்கும்படி,
மேன்மை பொருந்திய ஆற்றலுள்ளவ
ராகிய அவர் உங்களுக்கு மிகுந்த வல்ல
மையை அளிப்பாராக! 12 இறைமக்க
ளுக்காக ஒளி மண்டலத்திலிருக்கும்
உரிமைச் சொத்தில் நீங்களும் பங்குபெற
உங்களைத் தகுதியுள்ளவர்களாக்கின விண்
ணகத் தந்தைக்கு நீங்கள் மகிழ்ச்சியோடு
நன்றி செலுத்துகிறவர்களாய் வாழ அவர்
அருள்புரிவாராக! 13 அவரே நம்மை இருளின்
ஆட்சியினின்று விடுவித்து, தம்முடைய அன்
பார்ந்த மைந்தரின் ஆட்சிக்குள் கொண்டு
வந்து சேர்த்தார். 14 அந்த மைந்த
ரோடு இணைக்கப்பட்டிருக்கும் நமக்குப்
பாவமன்னிப்பாகிய மீட்பு உண்டு.

## கிறிஸ்துவின் மேன்மை

15 அவர் கண்ணுக்குத் தெரியாத
கடவுளின் சாயலாயிருக்கிறார்; முதற்பேறான
வரும் படைப்பு அனைத்திற்கும் மேலான
வருமாயிருக்கிறார். 16 ஏனெனில், விண்
ணிலுள்ளவை, மண்ணிலுள்ளவை — ஆவி
யுலகிலுள்ள மன்னர்கள், தலைவர்கள்,
ஆட்சி செலுத்துவோர், அதிகாரமுடை
யோர் — கண்ணுக்குத் தெரிகிறவை, கண்
ணுக்குத் தெரியாதவை எல்லாம் அவரில்
படைக்கப்பட்டன. அனைத்தும் அவரைக்
கொண்டும் அவருக்கென்றும் படைக்கப்
பட்டன. 17 அவர் அனைத்திற்கும் முன்பே
உள்ளவர். அனைத்தும் அவரோடு இணைக்
கப்பட்டு ஒன்றாகி நிற்கின்றன. 18 அவரே
திருச்சபையாகிய உடலுக்குத் தலை;
அவரே அதற்கு ஊற்றானவர்; அவரே
இறந்தோரிடமிருந்து முதலில் உயிரோ
டெழுந்தவர், முதற்பேறானவர். அதனால்
அவர் அனைத்திலும் முதன்மையானவராய்
இருக்கிறார். 19 அவருக்குள் கடவுள் தமது
முழு நிறைவோடும் குடிகொள்ளத் திரு
வுளங்கொண்டார். 20 அவர் சிலுவையில்
சிந்தின இரத்தத்தினால் கடவுள் சமா
தானத்தை உண்டாக்கி, மண்ணுலகிலும்
விண்ணுலகிலுமுள்ள அனைத்திற்கும் அவர்
மூலமாகத் தம்மோடு நல்லுறவை உண்
டாக்கத் திருவுளங்கொண்டார்.

21 முன்பு நீங்கள் கடவுளோடு தொடர்
பின்றி இருந்தீர்கள்; உள்ளத்தில் அவ
ருக்குப் பகைஞராயிருந்தீர்கள். உங்களு
டைய செய்கைகள் பொல்லாங்கானவை
யாயிருந்தன. 22 இப்போதோ

1:7 கொலோ. 4:12; பிலே. 23. 1:14 எபே. 1:7. 1:18 எபே. 1:22, 23. 1:20 எபே. 2:16.

திருமைந்தர் தம் ஊன் உடலில் அடைந்த
மரணத்தின்மூலம் கடவுள் உங்களுக்குத் தம்
மோடு நல்லுறவை உண்டாக்கியுள்ளார்.
உங்களைத் தூய்மையுள்ளவர்களாகவும்,
மாசற்றவர்களாகவும், குற்றமற்றவர்களா
கவும் தம் முன்னிலையில் நிறுத்த வேண்டு
மென்றே இவ்வாறு செய்தார். 23 நீங்கள்
கேட்டறிந்த அருட்செய்தியின்படி, உங்
களுக்கு இனிக் கிடைக்கப்போவதை ஆவ
லோடு எதிர்நோக்கியிருக்கிறீர்கள். அதை
விட்டுவிடாமல், ஆண்டவரிடம் கொண்
டுள்ள நம்பிக்கையில் உறுதியாக ஊன்றி
நிலைத்திருப்பீர்களானால், அவ்வாறு நிறுத்
தப்படுவீர்கள். அந்த அருட்செய்தி வானத்
தின் கீழ் உலகெங்கும் அறிவிக்கப்பட்டது.
பவுலாகிய நான் அதே அருட்செய்தியை
அறிவிக்கும் பணிவிடைக்காரனானேன்.

### பவுலின் திருச்சபைத் தொண்டு

24 இப்பொழுது உங்களுக்காகப் பாடு
கள் அடைவதில் மகிழ்ச்சி கொள்கிறேன்.
கிறிஸ்துவின் பாடுகளில் இன்னும் குறை
வாயிருப்பதை அவருடைய உடலாகிய
திருச்சபைக்காக நான் என் ஊன்
உடலில் நிறைவாக்கிவருகிறேன். 25 உங்
களுக்குக் கடவுளின் செய்தியை முழுமை
யாகத் தெரிவிக்கும் பொறுப்புள்ள வேலை
அவரால் எனக்கு அளிக்கப்பட்டதால்,
நான் திருச்சபையின் பணிவிடைக்கார
னானேன். 26 அந்தச் செய்தியானது ஆதி
முதற்கொண்டே தலைமுறை தலைமுறை
யாக மறைந்திருந்த மறைபொருள்.
அதுவே இப்போது அவருக்குரிய மக்க
ளுக்கு வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது.
27 யூதரல்லாதாரிடையே இப்போது
வெளிப்படுத்தப்பட்டுவருகிற இந்த மறை
பொருள் எவ்வளவு மேன்மையும் மாட்சி
மையும் பொருந்தியதாய் உள்ளது என்ப
தைக் கடவுள் தமக்குரிய மக்களுக்குத்
தெரிவிக்கத் திருவுளங்கொண்டார்.
கிறிஸ்து உங்களுக்குள்* இருக்கிறார்; அவர்
அவ்வாறு இருப்பதே உங்களுக்கு இனி
மாட்சிமை கிடைக்கும் என்பதற்கு
ஆதாரம். 28 இதுவே அந்த மறைபொருள்.
அவரைப்பற்றிய செய்தியையே நாங்கள்
அறிவித்துவருகிறோம். கிறிஸ்துவோடு
இணைக்கப்பட்டு முதிர்ச்சியடைந்தவனாக
ஒவ்வொருவனையும் நிறுத்தும்படி, ஒவ்
வொருவனுக்கும் அறிவுரை கூறி, ஒவ்
வொருவனுக்கும் முழு ஞானத்தோடும்
போதித்து வருகிறோம். 29 அதற்கென்றே
நான் வருந்தி உழைத்துவருகிறேன். என்
னுள் அவரது ஆற்றலும் வல்லமையோடு
செயலாற்றுகிறது.

2 உங்களுக்காகவும் லவோதிக்கேயா
நகர மக்களுக்காகவும் என்னை நேரில்
பார்த்திராத மற்றெல்லாருக்காகவும் நான்
எவ்வளவாக வருந்தி உழைத்திருக்கிறேன்
என்பதை நீங்கள் அறிந்திருக்க வேண்டு
மென்று விரும்புகிறேன். 2 அவர்களுடைய
உள்ளங்கள் ஊக்கமடையவும், அவர்கள்
அன்பினால் ஒன்றாய் இணைக்கப்படவும் அவ்
வாறு உழைத்துவருகிறேன். அதனால்
அவர்கள் உணர்ந்துகொள்ளும் ஆற்றலைப்
பெற்று, அதன்மூலம் நம்பிக்கையில் முழு
உறுதிப்பாடு அடைந்து, கடவுளின் மறை
பொருளை நன்கு அறிந்துகொள்ள வேண்டு
மென்பது என் பேராவல். அந்த மறை
பொருள் கிறிஸ்துவே. 3 அவருக்குள்
ஞானமும் அறிவுமாகிய செல்வமெல்லாம்
மறைந்திருக்கின்றன. 4 போலி நியாயங்
காட்டி எவனும் உங்களை ஏமாற்றிவிடாத
படி நீங்கள் பார்த்துக்கொள்ள இதை
உங்களுக்குச் சொல்லுகிறேன். 5 என்
உடல் உங்களோடு இல்லையெனினும், என்
ஆவி உங்களோடுதான் இருக்கிறது. உங்
களிடையேயுள்ள ஒழுங்கு முறையையும்,
கிறிஸ்துவினிடம் நீங்கள் கொண்டுள்ள
நம்பிக்கையின் உறுதித் தன்மையையும்
அறிந்து நான் மகிழ்ச்சியடைகிறேன்.

### கிறிஸ்துவோடு இணைக்கப்பட்டோரின் வாழ்க்கை

6 எனவே, கிறிஸ்து இயேசுவை ஆண்
டவராக நீங்கள் ஏற்றுக்கொண்டதற்
கேற்ப, அவரோடு இணைக்கப்பட்டவர்
களாய் நடந்துகொள்ளுங்கள். 7 உங்கள்
வாழ்க்கை அவருக்குள் வேரூன்றியதாயும்
அவர்மேல் கட்டப்படுகிறதாயும் இருப்ப
தாக; உங்களுக்குப் போதிக்கப்பட்டதற்
கிசைய நீங்கள் நம்பிக்கையில் திடமாக
நில்லுங்கள்; 8 அவருக்கு மனமார நன்றி
செலுத்துங்கள். வீணும் வஞ்சகமுமான
தத்துவக் கோட்பாடுகளால் யாரும் உங்
களைக் கவர்ந்துகொள்ளாதபடி கவன
மாயிருங்கள்; அவை கிறிஸ்துவையல்ல,
மனிதரின் பரம்பரை போதனையையும்
அண்டகோள சக்திகளையும் சார்ந்தவையே.
9 அவரிடம், அதாவது அவருடைய மனித
உடலில் இறைமையின் முழு நிறைவும்
குடிகொண்டிருக்கிறது. 10 நீங்களும் அவ
ரோடு இணைக்கப்பட்டு நிறைவுடையவர்
களாய் இருக்கிறீர்கள். ஆவியுலகிலுள்ள
ஆட்சி, அதிகாரம் ஆகிய அனைத்திற்கும்
அவரே தலைவராயிருக்கிறார். 11 அவரோடு
இணைக்கப்பட்டிருப்பதால் நீங்கள் மனி
தனால் செய்யப்படாததும் கிறிஸ்துவே ஏற்
படுத்தினதுமான விருத்தசேதனத்தைப்
பெற்றீர்கள்; பாவ இயல்புடைய உடலைக்
களைந்துவிடுவதே இந்த விருத்தசேதனம்.
12 நீங்கள் திருமுழுக்கில் அவரோடு அடக்கம்

* 'உங்களிடையே' என்றும் மொழிபெயர்க்கலாம்.
2:12 ரோ. 6:4.

செய்யப்பட்டீர்கள்; அவரை இறந்
தோரிடமிருந்து உயிரோடெழுப்பின
கடவுளின் வல்லமையில் நீங்கள் வைத்திருக்
கும் நம்பிக்கையின் மூலம் அந்தத் திரு
முழுக்கிலேயே அவரோடு எழுப்பப்பட்டும்
இருக்கிறீர்கள். 13 உங்கள் தவறுகள் கார
ணமாகவும், நீங்கள் உடலில் விருத்த
சேதனம் பெறாத பிற இனத்தவரா
யிருந்த காரணத்தாலும், இறந்தவர்
களாய் இருந்தீர்கள். உங்களைக் கடவுள்
அவரோடு உயிருள்ளவர்களாக்கினார்; 14 நம்
முடைய குற்றங்களை எல்லாம் மன்னித்து
விட்டார். நீதிச்சட்டத்தின் விதிகளுக்கு
அடங்கியிருப்பதாக நாம் எழுதித் தந்த
பத்திரத்திற்கு நாம் கட்டுப்பட்டவர்
களாய் இருந்தோம். அவர் அந்தப் பத்
திரத்தைத் தள்ளுபடி செய்து, அதைச்
சிலுவைமேல் வைத்து ஆணியடித்து
அறவே ஒழித்துவிட்டார். 15 ஆவியுலகி
லுள்ள ஆட்சி நடத்துவோர், அதிகாரிகள்
ஆகியோரின் படைக்கலங்களைக்
கிறிஸ்து பறித்துக்கொண்டு சிலுவையின்
மூலம் அவர்களைக் கைதிகளாக்கி, அனை
வரும் அவர்களைப் பார்த்து நகைக்கும்
படி, அவர்களைத் தம் வெற்றி ஊர்வலத்தில்
இழுத்துச் சென்றார்.

16 எனவே, உணவையும் பானத்தை
யும்பற்றியோ, திருநாள் அமாவாசை
ஓய்வுநாள் ஆகியவற்றைப்பற்றியோ உங்
களிடம் குறைகாணும் வேலை எவனுக்கும்
உரியதன்று. 17 இவை யாவும் வர இருந்
தவற்றின் முன்னடையாளங்களே; இவை
உணர்த்தும் உண்மைப் பொருளோ கிறிஸ்து
வுக்குரியது. 18 சிலர் தம்மைத்தாமே
வருத்திக்கொள்வதையும், தெய்வ
தூதரை வணங்குவதையும் விருப்பத்தோடு
நாடுகின்றனர். அவர்கள் தாங்கள் கண்ட
காட்சிகளை ஆதாரமாக வைத்து, உலகப்
போக்கான தங்கள் சிந்தனையால் வீண்
இறுமாப்புக்கொள்கிறார்கள். 19 உங்களை
வெகுமதி பெறத்தகுதியற்றவர்களெனத்
தள்ளும் வேலை அவர்களுள் எவனுக்கும்
உரியதன்று. அவர்கள் தலையாயுள்ள
வரைப் பற்றிக்கொள்ளாமல் இருப்ப
வர்கள். திருச்சபையாகிய முழு உடலும்
தசை நார்களாலும் மூட்டுகளாலும் ஒன்
றாய் இணைக்கப்பட்டு, உணவும் ஊட்டப்
பெற்று, தலையாகிய அவராலே கடவுளின்
திட்டப்படி வளர்ந்துவருகிறது.

### கிறிஸ்துவோடு இணைக்கப்பட்டிருப்போரின் புதிய வாழ்க்கை

20 நீங்கள் கிறிஸ்துவோடு இறந்து,
அண்டகோள சக்திகளின் ஆட்சியினின்று
விடுவிக்கப்பட்டவர்களென்றால், இன்னும்
ஏன் உலகத்திற்குரியவர்கள்போல வாழ்
கிறீர்கள்? 21 ''இதைத் தொட்டுப் பிடிக்
காதே,'' ''இதைத் தின்னாதே'', ''இதில்
கை வைக்காதே'' என்கிற விதிமுறைகளை
உங்கள்மீது சுமத்த ஏன் இடங்கொடுக்
கிறீர்கள்? 22 அவை எல்லாம் பயன்படுத்திய
வுடன் அழிந்துபோகும் பொருள்களைப்
பற்றியவையே. அவை மனிதர் உருவாக்
கின கட்டளைகளும் போதனைகளுமேயல்லா
மல் வேறல்ல. 23 அந்த விதிமுறைகள்
பக்தித் தோற்றம், தன்னை ஒறுத்தல்,
உடலை வருத்திக்கொள்ளுதல் ஆகியவற்
றிற்கு உயர்வு கொடுப்பதால், அவை
ஞானமுள்ளவைபோலத் தோன்றுகின்றன.
ஆனால், உடலின் இச்சைகளை அடக்கு
வதற்கு அவற்றால் பயன் எதுவுமில்லை.

3 ஆகவே, நீங்கள் கிறிஸ்துவோடு
உயிர்த்தெழுந்தவர்களென்றால்
கிறிஸ்து கடவுளோடு அவரது வலப்பக்
கத்தில் வீற்றிருக்கும் மேலுலகத்திற்கு
உரியவற்றை நாடுங்கள். 2 இவ்வுலகிற்கு
உரியவற்றிலன்று, மேலுலகிற்கு உரிய
வற்றிலேயே சிந்தனையைச் செலுத்துங்கள்.
3 ஏனென்றால், நீங்கள் இறந்தீர்கள்; இப்
போது உங்களுக்குக் கிடைத்துள்ள மெய்
வாழ்வு கிறிஸ்துவோடு கடவுளுக்குள்
மறைந்திருக்கிறது. 4 உங்கள் மெய்வாழ்வு
கிறிஸ்துவே. அவர் வெளிப்படும்போது,
நீங்களும் அவரோடு மாட்சிமையுடைய
வர்களாக வெளிப்படுவீர்கள்.

5 ஆகையால், உலகப் போக்கான உங்
கள் இயல்பிற்குரிய யாவற்றையும், அதா
வது ஒழுக்கக்கேடு, அசுத்த செயல், இழி
வான உணர்ச்சி, தீய விருப்பம், சிலை
வணக்கத்திற்குச் சமமான பேராசை ஆகிய
வற்றை அறவே ஒழித்துவிடுங்கள். 6 இவை
காரணமாகக் கடவுளின் சினம் வரும்.
7 அத்தகைய செயல்களைப் புரிந்தவர்
களிடையே நீங்கள் வாழ்ந்துவந்த காலத்
தில், நீங்களும் அவ்வாறே நடந்து
வந்தீர்கள். 8 ஆனால், இப்போதோ நீங்கள்
சினம், சீற்றம், பகைமை உணர்ச்சி
ஆகிய எல்லாவற்றையும் களைந்துவிடுங்
கள். வசைமொழியும், நாணங்கெட்ட
பேச்சும் உங்கள் வாயினின்று பிறக்கலா
காது. 9 ஒருவரிடம் ஒருவர் பொய் பேசா
தீர்கள். ஏனெனில், பழைய மனித இயல்
பையும் அதற்குரிய செயல்களையும் நீங்
கள் உரிந்துவிட்டு, 10 புதிய மனித இயல்
பைப் பூண்டிருக்கிறீர்கள். அவ்வியல்பு
தன்னை உண்டாக்கினவரின் சாயலை மேலும்
மேலும் அடையுமாறு புதுப்பிக்கப்பட்டு
முழு அறிவையும் பெற்றுவருகிறது.

**2:13** எபே. *2:1—5.* **2:14** எபே. *2:15.* **2:16** ரோ. *14:1—6.* **2:19** எபே. *4:16.* **3:1** சங். *110:1.* **3:9** எபே. *4:24.* **3:10** ஆதி. *1:26;* எபே. *4:24.*

11 இந்நிலையில் கிரேக்கனென்றும், யூத
னென்றும், விருத்தசேதனம் பெற்றவ
னென்றும் விருத்தசேதனம் பெறாதவ
னென்றும், மிலேச்சன் என்றும், காட்டு
மிராண்டி என்றும், அடிமை என்றும்,
அடிமையல்லாதவன் என்றும் பாகுபா
டில்லை. எல்லாம் கிறிஸ்துவே, எல்லாருக்
குள்ளும் இருப்பவர் அவரே.

12 நீங்கள் கடவுளால் தேர்ந்துகொள்
ளப்பட்டவர்கள், அவருக்குச் சொந்த
மானவர்கள், அவருக்கு அன்பார்ந்தவர்கள்.
ஆகையால், அதற்கேற்ப நீங்கள்
மனவுருக்கம், பரிவு, தாழ்மை, சாந்தம்,
பொறுமை ஆகியவற்றை அணிந்துகொள்
ளுங்கள். 13 பிறருடைய குறைபாடுகளைப்
பொருட்படுத்தாதீர்கள். ஒருவரைப்பற்றி
ஒருவருக்கு ஏதாவது மனக்குறை இருக்கு
மானால் மன்னியுங்கள்; ஆண்டவர் உங்
களை மன்னித்ததுபோல நீங்களும் மன்னி
யுங்கள். 14 இந்த நற்பண்புகள் அனைத்
திற்கும் மேலாக அன்பை அணிந்துகொள்
ளுங்கள். அதுவே எல்லாவற்றையும் ஒருங்
கிணைத்து நிறைவுபெறச் செய்யும்.
15 கிறிஸ்துவின் சமாதானம் உங்கள் உள்
ளங்களில் ஆட்சி செலுத்துவதாக! நீங்கள்
ஒரே உடலின் உறுப்புகளாகி, அந்தச்
சமாதானத்தை உடையவர்களாய் இருப்
பதற்கென்றே கடவுள் உங்களை அழைத்
திருக்கிறார்; நன்றியுள்ளவர்களாயும்
இருங்கள். 16 கிறிஸ்துவின் செய்தி உங்களுக்
குள் நிறைவாய்க் குடிகொள்வதாக. முழு
ஞானத்தோடும் ஒருவருக்கொருவர் போதிக்
கிறவர்களாயும் அறிவுரை கூறுகிறவர்
களாயும் இருங்கள்; நன்றியுணர்ச்சியோடு
உங்கள் உள்ளத்தில் சங்கீதங்களையும்
புகழ்ப் பாடல்களையும் ஞானப்பாட்டுகளையும்
பாடிக் கடவுளைப் போற்றுங்கள்;
17 எதைச் சொன்னாலும் எதைச் செய்
தாலும் ஆண்டவராகிய இயேசுவின்மூலம்
தந்தையாராகிய கடவுளுக்கு நன்றிசெலுத்தி
அவரது திருப்பெயராலேயே அனைத்தை
யும் செய்யுங்கள்.

## குடும்ப வாழ்க்கைநெறி

18 திருமணமான பெண்களே, உங்கள்
கணவருக்கு அடங்கியிருங்கள். ஆண்ட
வரின் அடியாருக்கு இதுவே அடுத்ததாகும்.
19 கணவர்களே, உங்கள் மனைவி
யரிடம் அன்புகூருங்கள்; அவர்களைக்
கொடுமையாக நடத்தாதீர்கள்.

20 பிள்ளைகளே, பெற்றோருக்கு எல்லா
வற்றிலும் கீழ்ப்படியுங்கள். அதுவே ஆண்
டவருக்கு ஏற்றதும் கடவுளுக்கு உகந்தது
மானது. 21 தந்தையரே, உங்கள் பிள்ளை
களுக்கு மனக்கசப்பு உண்டாக்க வேண்
டாம்; அப்படிச் செய்தால், அவர்கள்
மனந்தளர்ந்துபோகக் கூடும்.

22 அடிமைகளாய் இருப்பவர்களே, இவ்
வுலகில் உங்களுக்கு முதலாளிகளாய்
இருப்போருக்கு எல்லாவற்றிலும் கீழ்ப்
படியுங்கள். நல்ல வேலை செய்கிறவர்கள்
போலக் காட்டி மனிதரைப் பிரியப்படுத்து
கிறவர்களாய் இருக்க வேண்டாம். ஆண்
டவருக்கு அஞ்சி, மனநேர்மையுடன் வேலை
செய்யுங்கள். 23 நீங்கள் எந்த வேலையைச்
செய்தாலும், அதை மனிதருக்காகச் செய்
யாமல், ஆண்டவருக்கே செய்கிறீர்கள் என்று
நினைத்து முழுமனத்துடன் செய்யுங்கள்.
24 வாக்களிக்கப்பட்ட உரிமைச்சொத்து
உங்களுக்கு ஆண்டவரிடமிருந்து கைம்
மாறாகக் கிடைக்கும் என்பது உங்களுக்குத்
தெரியுமல்லவா? ஆண்டவராகிய
கிறிஸ்துவுக்கே தொண்டு செய்யுங்கள்.
25 ஏனெனில், அநியாயம் செய்கிறவன்
தான் செய்த அநியாயத்திற்கேற்ற பலனை
அடைவான்; யாருக்கும் தனிச்சலுகை
இல்லை.

4 முதலாளிகளே, உங்கள் அடிமைகளை
நியாயமாகவும் நேர்மையாகவும்
நடத்துங்கள்; உங்களுக்கும் முதலாளியா
யிருப்பவர் ஒருவர் விண்ணுலகில் இருக்
கிறார் என்பதை மறவாதீர்கள்.

## அறிவுரை

2 நன்றியுள்ள உள்ளத்தோடும் ஊக்கத்
தோடும் விழிப்போடும் ஜெபம் செய்யுங்கள்.
3 எங்களுக்காகவும் மன்றாடுங்கள்.
நாங்கள் கிறிஸ்துவின் மறைபொருளை
எடுத்துக்காட்டிப் பேசக் கடவுள் எங்க
ளுக்கு வழி திறந்தருள வேண்டுமென்று
மன்றாடுங்கள். அந்த மறைபொருளின்
பொருட்டே நான் சிறைப்பட்டிருக்
கிறேன். 4 நான் பேச வேண்டிய முறையில்
பேசி அந்த மறைபொருளைத் தெளிவு
படுத்தும் ஆற்றலைப் பெறும்படி எனக்
காக மன்றாடுங்கள். 5 திருச்சபைக்குப்
புறம்பே இருக்கிறவர்களிடம் விவேகத்
தோடு பழகுங்கள். ஒவ்வொரு தருணத்
தையும் தப்பவிடாமல் பயன்படுத்திக்
கொள்ளுங்கள். 6 உங்கள் பேச்சு எப்போதும்
இனிதாயும் பொருட்சுவையுள்ளதாயும்
இருப்பதாக. ஒவ்வொருவருக்கும் எவ்
வாறு பதில் சொல்ல வேண்டும் என்பதை
நீங்கள் அறிந்திருக்க வேண்டும்.

## வாழ்த்துரை

7 என்னைப் பற்றிய செய்திகளையெல்
லாம் அன்பார்ந்த சகோதரன் தீகிக்கு

3:12, 13 எபே. 4:2, 32. 3:16, 17 எபே. 5:19, 20. 3:18 எபே. 5:22; 1 பேது. 3:1. 3:19 எபே. 5:25; 1 பேது. 3:7. 3:20 எபே. 6:1. 3:21 எபே. 6:4. 3:22, 23 எபே. 6:5—8. 3:25 உபா. 10:17; எபே. 6:9. 4:1 எபே. 6:9. 4:5 எபே. 5:16. 4:7, 8 எபே. 6:21, 22.

உங்களுக்குத் தெரிவிப்பார். அவர் ஆண்
டவருக்கென்று உண்மையோடு உழைக்கும்
பணிவிடைக்காரர், என் உடன்
அடியார். 8 எங்களைப்பற்றிய செய்திகளை
உங்களுக்கு அறிவித்து, உங்கள் உள்ளங்
களுக்கு ஊக்கம் ஊட்டுவதற்கென்றே
அவரை உங்களிடம் அனுப்பிவைக்கிறேன்.
9 நம்பகமான நம்முடைய அன்
பார்ந்த சகோதரன் ஒநேசிமுவையும் அவ
ரோடு அனுப்பிவைக்கிறேன். அவர்
உங்கள் ஊர்ச் சபையாருள் ஒருவர். இங்கே
நடப்பவை அனைத்தையும் அவர்கள் உங்
களுக்குத் தெரிவிப்பார்கள்.

10 என்னோடு கைதியாயிருக்கிற அரிஸ்
தர்க்கு உங்களுக்கு வாழ்த்துக் கூறுகிறார்.
பர்னபாவுக்கு நெருங்கிய உறவினரான
மாற்குவும் உங்களுக்கு வாழ்த்துக் கூறு
கிறார். இவருக்காக என்னென்ன செய்யப்
பட வேண்டுமென்பது ஏற்கெனவே உங்
களுக்குத் தெரிவிக்கப்பட்டது. இவர் உங்
களிடம் வந்தால், இவரை அன்போடு
ஏற்றுக்கொள்ளுங்கள். 11 யுஸ்து எனப்
படும் இயேசுவும் உங்களுக்கு வாழ்த்துக்
கூறுகிறார். கிறிஸ்துவின் அடியார்களான
யூதர்களுள் இவர்கள் மட்டுமே கடவுளு
டைய அரசின் பொருட்டு என்னுடன்
உழைப்பவர்கள். இவர்கள் இருப்பது
எனக்குப் பேராதரவு. 12 கிறிஸ்து இயே
சுவின் அடியாரும் உங்கள் ஊரைச் சேர்ந்
தவருமான எப்பாப்பிராவும் உங்களுக்கு
வாழ்த்துக் கூறுகிறார். எல்லாவற்றிலும்
கடவுளின் திருவுளத்திற்குக் கீழ்ப்படிந்து
நடப்பதில் நீங்கள் தேறினவர்களாயும்
மன உறுதி உடையவர்களாயும் நிலைத்து
நிற்க வேண்டுமென்று எப்போதும் தம்
ஜெபங்களில் உங்களுக்காக ஊக்கத்தோடு
மன்றாடிவருகிறார். 13 இவர் உங்களுக்
காகவும் லவோதிக்கேயா, ஏராப்போலி
ஆகிய நகரத்தாருக்காகவும் கடுமையாக
உழைக்கிறார் என்பதற்கு நான் சாட்சி.
14 அன்பார்ந்த மருத்துவர் லூக்காவும்
தேமாவும் உங்களுக்கு வாழ்த்துக் கூறு
கிறார்கள். 15 லவோதிக்கேயாவில் இருக்
கிற சகோதரருக்கும் நிம்பாளுக்கும் அவர்
வீட்டில் கூடும் சபையாருக்கும் வாழ்த்துக்
கூறுங்கள். 16 இந்தக் கடிதம் உங்களி
டையே படிக்கப்பட்டபின், லவோதிக்
கேயா நகரத் திருச்சபையிலும் படிக்கப்
படும்படி ஏற்பாடு செய்யுங்கள். லவோ
திக்கேயாவிலிருந்து வரும் கடிதத்தையும்
நீங்கள் படிக்க வேண்டும். 17 அர்க்கிப்பு,
தமக்கு ஆண்டவரின் திருப்பெயரால்
கொடுக்கப்பட்ட பணியில் கருத்தாய் ஈடு
பட்டு அதைச் செய்துமுடிக்க வேண்டு
மென்று அவரிடம் சொல்லுங்கள்.

18 பவுலாகிய நான் என் கைப்பட
இதை எழுதுகிறேன்: உங்களுக்கு என்
வாழ்த்து. நான் விலங்கிடப்பட்டிருக்கிறேன்
என்பதை நினைவுபடுத்திக்கொள்ளுங்கள்.
அருள் உங்களோடிருப்பதாக!

# பவுல் தெசலோனிக்கேயருக்கு எழுதின முதலாம் கடிதம்

1 தந்தையாகிய கடவுளுக்கும் ஆண்டவ
ராகிய இயேசுகிறிஸ்துவுக்கும்
சொந்தமாயிருக்கும் தெசலோனிக்கே நகரத்
திருச்சபைக்குப் பவுலும் சில்வானும்
தீமோத்தேயுவும் எழுதுவதாவது: உங்
களுக்கு அருளும் நலமும் உண்டாகுக!

### தெசலோனிக்கேயரின் நம்பிக்கையும் முன்மாதிரியும்

2 நாங்கள் கடவுளிடம் வேண்டுதல்
செய்யும்போது உங்கள் அனைவரையும்
குறிப்பிட்டு அவருக்கு என்றும் நன்றி
செலுத்தி வருகிறோம். 3 உங்கள் நம்பிக்
கையானது செயலில் வெளிப்படுவதைக்
குறித்தும், உங்கள் அன்பானது உழைப்
பில் வெளிப்படுவதைக் குறித்தும், நம்மு
டைய ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவை
நீங்கள் எதிர்நோக்கியிருப்பதால் நீங்கள்
பொறுமையுள்ளவர்களாய் இருப்பதைக்
குறித்தும் நம் கடவுளும் தந்தையுமானவர்
முன்னிலையில் நாங்கள் இடைவிடா
மல் நினைவுகூர்ந்துவருகிறோம். 4 சகோ
தரர்களே, நீங்கள் கடவுளுக்கு அன்பார்ந்
தவர்கள் என்பதும், கடவுளால் தேர்ந்து
கொள்ளப்பட்டவர்கள் என்பதும் எங்
களுக்குத் தெரியும். 5 எப்படியெனில்,
நாங்கள் அறிவித்த அருட்செய்தி வெறும்
சொற்களாயிராமல், தூய ஆவியானவரின்
வல்லமை பொருந்தியதாய் விளங்கிற்று;
நீங்களும் அதை முழு நம்பிக்கையோடு
ஏற்றுக்கொண்டீர்கள். உங்கள் நலனைக்
கருதி நாங்கள் எவ்வாறு உங்களிடம்
நடந்துகொண்டோம் என்பது உங்களுக்குத்
தெரிந்ததே. 6 உங்களுக்குத் துன்பம்
நேரிட்டபோதிலும், நீங்கள் ஆண்டவரின்
செய்தியைத் தூய ஆவியானவர் அருளும்
மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டதில் எங்
களைப்போலவும், ஆண்டவரைப் போல
வும் நடக்கிறவர்களானீர்கள். 7 இவ்வாறு
நீங்கள் மக்கெதோனியாவிலும் அகாயா
விலும் ஆண்டவரிடம் நம்பிக்கை கொண்
டுள்ள யாவருக்கும் முன்மாதிரியாக விளங்
கினீர்கள். 8 எப்படியெனில், உங்களிட
மிருந்தே ஆண்டவருடைய செய்தியின்
முழக்கம் ஒலிக்கத் தொடங்கி, பிறகு
எங்கும் பரவியது. கடவுளிடம் நீங்கள்
நம்பிக்கை கொண்டிருப்பதும் மக்கெதோ
னியா அகாயா நாடுகளில் மட்டுமன்றி,
எல்லா இடங்களிலும் தெரிய வந்திருக்
கிறது. ஆகையால், நாங்கள் அதைப்
பற்றி எதுவும் சொல்லத் தேவையில்லை.
9 நாங்கள் உங்களிடம் வந்தபோது, நீங்கள்
எங்களை எவ்வாறு ஏற்றுக்கொண்டீர்கள்
என்பதை மக்களே கூறிவருகிறார்கள்.
நீங்கள் எவ்வாறு சிலைகளை வழிபடுவதை
விட்டுவிட்டு, என்றுமுள்ள மெய்யான
கடவுளிடம் பற்றுதல் கொண்டீர்கள் என்
பதையும், அதன் விளைவாக எவ்வாறு
அவருக்கு ஊழியம் செய்துகொண்டு,
10 அவருடைய மைந்தராகிய இயேசு
வானத்தினின்று வருவதை எதிர்நோக்கி
யிருக்கிறீர்கள் என்பதையும் கூறிவரு
கிறார்கள். அந்த இயேசு இறந்தோரிட
மிருந்து கடவுளால் உயிரோடெழுப்பப்
பட்டவரும், நம்மைத் தெய்வ சினத்தி
னின்று விடுவித்து மீட்பவருமாவர்.

### தெசலோனிக்கேயில் பவுல் செய்த ஊழியம்

2 சகோதரர்களே, உங்களிடம் நாங்கள்
வந்தது பயனற்றுப்போக
வில்லை என்பது உங்களுக்கே தெரியும்.
2 நாங்கள் உங்களிடம் வருமுன் பிலிப்பி
நகரத்தில் பாடுகளடைந்தோம், பழிச்
சொல்லுக்கு ஆளானோம். இதையும்
நீங்கள் அறிவீர்கள். எங்களுக்கு அவ்வாறு
துன்பம் நேரிட்டபோதிலும், நாங்கள்
கடவுளின் அருட்செய்தியைப் பெரிய
எதிர்ப்பினிடையே உங்களுக்குச் சொல்
வதற்கு நம்முடைய கடவுள் அருளால்
துணிவு பெற்றோம். 3 எங்கள் போதனை
தவறான கருத்தையோ தீய நோக்கத்
தையோ அடிப்படையாகக் கொண்ட
தன்று; ஏமாற்றும் எண்ணமும் எங்க
ளுக்கு இல்லை. 4 கடவுள் எங்களிடம்
அருட்செய்தியை ஒப்படைத்தார். அதற்கு
நாங்கள் தகுதியுடையவர்களாயிருக்கிறோ
மென அவர் எண்ணினார். அதற்கேற்ப
நாங்கள் பேசுகிறோம். மனிதருக்கல்லாமல்,
எங்கள் உள்ளங்களைச் சோதித்தறிகிற
கடவுளுக்கே உகந்தவர்களாய் இருக்கப்பார்க்
கிறோம். 5 நாங்கள் ஒருபோதும் போலிப்
புகழ்ச்சியாகப் பேசினதில்லை; இது உங்
களுக்குத் தெரியும். நாங்கள் திருப்பணி
என்னும் போர்வையைப் போர்த்துக்
கொண்டு பொருள் பறிக்கப்பார்க்க
வில்லை; இதற்குக் கடவுளே சாட்சி.
6 நாங்கள் கிறிஸ்துவின் திருத்தூதுவர்
களாகத் தனிச் சலுகைகளைப் பெற்றிருக்கக்
கூடுமாயினும், மனிதர் எங்களை
உயர்வாக மதிக்க வேண்டுமென்று நாங்கள்
உங்களிடமோ மற்றவர்களிடமோ கேட்ட
தில்லை. 7 அதற்கு மாறாக, நாங்கள் உங்
களிடையே இருந்தபோது, தாய் தன்

1:1 திருத்தூது. 17:1. 1:6 திருத்தூது. 17:5—9. 2:2 திருத்தூது. 16:19—24; 17:1—9.

பிள்ளையை அரவணைப்பதுபோல உங்களை
அரவணைத்துக் கனிவுடன் நடந்துகொண்
டோம். 8 இவ்வாறு நாங்கள் உங்களிடம்
மிகுந்த பரிவுகொண்டு கடவுளின் அருட்
செய்தியை அறிவிப்பதோடு நின்றுவிடா
மல், எங்களையே உங்களுக்கெனக் கொடுத்து
விடவும் ஆவலுள்ளவர்களாயிருந்தோம்.
நீங்கள் எங்களுக்கு அவ்வளவு அன்பார்ந்
தவர்களாகிவிட்டீர்கள். 9 சகோதரர்களே,
நாங்கள் வருந்தி உழைத்தது உங்கள்
நினைவில் இருக்கிறதல்லவா? உங்களுள்
எவருக்கும் நாங்கள் ஒரு சுமையாய்
இராதபடி, அல்லும் பகலும் வேலை
செய்து, கடவுளின் அருட்செய்தியை உங்
களுக்கு அறிவித்துவந்தோம். 10 ஆண்ட
வரிடம் நம்பிக்கை கொண்டுள்ள உங்க
ளிடம் நாங்கள் எவ்வளவு தூய்மையோடும்,
நேர்மையோடும் நடந்து, குற்றமற்ற
வர்களாயிருந்தோம் என்பதற்கு நீங்களே
சாட்சி; கடவுளும் சாட்சி. 11 தகப்பன்
தன் பிள்ளைகளை நடத்துவதுபோல, நாங்கள்
உங்களுள் ஒவ்வொருவரையும் நடத்தி
னோம் என்பது உங்களுக்குத் தெரியும்.
12 தமது மாட்சிமை பொருந்திய அரசுக்குள்
வரும்படி உங்களை அழைக்கும் கடவுளுக்கு
ஏற்றவர்களாய் நீங்கள் நடக்கு
மாறு உங்களுக்கு அறிவு புகட்டினோம்,
ஊக்கமூட்டினோம், வற்புறுத்திக் கேட்டுக்
கொண்டோம். இதுவும் உங்களுக்குத்
தெரியும்.

13 கடவுளின் செய்தியை எங்கள்மூலம்
கேள்விப்பட்டு ஏற்றுக்கொண்டபோது, நீங்
கள் அதை மனித செய்தியாகவன்று, கட
வுளின் செய்தியாகவே ஏற்றுக்கொண்டீர்
கள். இதற்காகவும் நாங்கள் கடவுளுக்கு
இடைவிடாமல் நன்றி செலுத்திவருகி
றோம். உண்மையாகவே அது கடவுளின்
செய்திதான்; ஆண்டவரிடம் நம்பிக்கை
கொண்டுள்ள உங்களிடையே அது செய
லாற்றி வருகிறது. 14 சகோதரர்களே,
யூதேயா நாட்டில் கடவுளின் திருச்சபை
களைச் சேர்ந்த மக்களுக்கு நடந்தது
போலவே உங்களுக்கும் நடந்தது. எப்படி
யெனில், கிறிஸ்து இயேசுவுக்குரிய அந்த
மக்கள் எவ்வாறு யூதரால் துன்புறுத்தப்
பட்டார்களோ அவ்வாறே நீங்களும்
உங்கள் சொந்த இனத்தவராலே துன்புறுத்
தப்பட்டீர்கள். 15 அந்த யூதர் ஆண்ட
வராகிய இயேசுவையும் இறைவாக்குரைப்
போரையும் கொன்றவர்கள், உங்கள் ஊரி
லிருந்து எங்களைத் துரத்தியடித்தவர்கள்,
கடவுளின் விருப்பத்திற்கு மாறாக நடந்த
வர்கள், மனித இனத்திற்கே எதிரிகள்.
16 பிற இனத்தவர் மீட்புப் பெறும்படி
நாங்கள் அவர்களிடம் பேசும்போதெல்
லாம் அவர்கள் எங்களைத் தடுக்கப்பார்க்
கிறார்கள். இவ்வாறு அவர்கள் தாங்கள்
தொடர்ந்து செய்துவந்த பாவங்களை
நிறைவான அளவுக்குச் செய்துவிட்டார்
கள். அவர்கள்மீது தெய்வ சினம் வரும்
வேளையும் வந்துவிட்டது.

### தெசலோனிக்கே நகருக்கு மீண்டும் செல்லப் பவுலுக்கு இருந்த விருப்பம்

17 சகோதரர்களே, சிறிது காலம் நாங்
கள் உங்களை விட்டு, உள்ளத்தாலன்று உட
லால் மட்டுமே பிரிந்திருந்தபோதிலும்,
அப்பிரிவால் மிகவும் வருந்தினோம். உங்
களை நேரில் பார்க்கப் பேராவலோடு
மிகுந்த ஏக்கங்கொண்டிருந்தோம். 18 ஆகை
யால், உங்களிடம் வரவும் திட்டமிட்
டோம். பவுலாகிய நான், உங்களிடம்
வர ஒரு முறையன்று, இரண்டு முறை திட்ட
மிட்டேன். ஆனால் சாத்தான் எங்களைத்
தடுத்துவிட்டான். 19 நம்முடைய ஆண்ட
வராகிய இயேசுவின் வருகையின்போது
அவர் முன்னிலையில் எங்கள் நம்பிக்கையும்
மகிழ்ச்சியும் பெருமைக்குரிய வெற்றி
மாலையுமாய் இருக்கப்போகிறவர்கள்
யார்? 20 உங்களையன்றி வேறு யார்
உண்டு? ஆம், நீங்களே எங்கள் மாட்
சிமை; நீங்களே எங்கள் மகிழ்ச்சி.

3 நாம் பிரிந்திருப்பதை எங்களால்
பொறுக்க இயலாமற்போனதால்,
2 நான் அத்தேனே பட்டணத்தில் தனியே
இருக்கத் தீர்மானித்து, தீமோத்தேயுவை
உங்களிடம் அனுப்பிவைத்தேன். அவர்
நம் சகோதரன், கிறிஸ்துவின் அருட்
செய்தியை அறிவிப்பதில் கடவுளோடு
சேர்ந்து உழைப்பவர். இப்போது உங்க
ளுக்குள்ள துன்பங்களினால் எவரும் மனந்
தளர்ந்துபோகாதிருக்கும்படி, உங்களை
நம்பிக்கையில் உறுதிப்படுத்தவும் உங்
களுக்கு ஊக்கமூட்டவும் அனுப்பினேன்.
3 இத்தகைய துன்பங்கள் நமக்கு வந்தே
தீரும் என்பது உங்களுக்குத் தெரியும்.
4 நமக்குத் துன்பம் உண்டாகும் என்று
நாங்கள் உங்களோடிருந்தபோதே உங்
களுக்குச் சொன்னோம். அவ்வாறே நடந்து
மிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியும்.
5 ஆகையால், நாம் பிரிந்திருப்பதை
என்னால் பொறுக்க இயலாமற்போன
தாலும், சோதனைக்காரன் உங்களைச்
சோதித்து எங்கள் உழைப்பை வீணாக்கி
யிருப்பானோ என்கிற கவலை எனக்கு
உண்டானதாலும், நீங்கள் உங்கள் நம்
பிக்கையில் உறுதியாயிருக்கிறீர்களா என்று
அறியத் தீமோத்தேயுவை அனுப்பினேன்.
6 ஆனால், இப்பொழுது தீமோத்தேயு
உங்களிடமிருந்து எங்களிடம் வந்து, உங்கள்

**2:14** திருத்தூது. 17:5. **2:15** திருத்தூது. 9:23, 29; 13:45, 50; 14:2, 5, 19; 17:5, 13; 18:12. **3:1** திருத்தூது. 17:15. **3:6** திருத்தூது. 18:5

நம்பிக்கையையும் அன்பையும் குறித்து
நல்ல செய்தி சொன்னார். நீங்கள் எப்
போதும் எங்களைக் கனிந்த உள்ளத்தோடு
நினைவுகூர்ந்து, நாங்கள் உங்களைக் காண
ஆவலுள்ளவர்களாய் இருப்பதுபோல, நீங்
களும் எங்களைக் காண ஆவலுள்ளவர்
களாய் இருக்கிறீர்கள் என்றும் எங்க
ளிடம் சொன்னார். 7 ஆகையால், சகோ
தரர்களே, எங்களுக்கு எவ்வளவோ இக்
கட்டுகளும், துன்பங்களும் நேரிட்டபோதி
லும், நாங்கள் உங்கள் நம்பிக்கையைக்
குறித்து அறிந்தபோது, உங்களால் ஆறுத
லடைந்தோம். 8 நீங்கள் ஆண்டவரோடு
இணைந்திருப்பதில் உறுதியாக நிற்பதைக்
கேள்விப்பட்டபோது எங்களுக்கு மீண்டும்
உயிர் வந்தது. 9 நம்முடைய கடவுளின்
முன்னிலையில் நாங்கள் உங்களால் அடைந்
திருக்கிற எல்லா வகையான மகிழ்ச்சிக்கும்
ஏற்றவாறு, உங்களை நினைவுகூர்ந்து
எத்தகைய நன்றியை நாங்கள் கடவு
ளுக்குச் செலுத்த இயலும்? 10 நாங்கள்
மகிழ்ச்சி அடைவதோடு, உங்களை நேரில்
கண்டு, உங்கள் நம்பிக்கையைக் குறை
எதுவும் இல்லாததாக்க வாய்ப்புத் தர
வேண்டுமென்று அல்லும் பகலும் மிகுந்த
ஆர்வத்தோடு அவரிடம் வேண்டுதல்
செய்கிறோம். 11 நம்முடைய தந்தையா
ராகிய கடவுளும் நம்முடைய ஆண்ட
வராகிய இயேசுவும் நாங்கள் உங்களிடம்
வந்து சேரும்படி, வழியிலுள்ள இடை
யூறுகளை நீக்குவாராக! 12 உங்களிடம்
நாங்கள் கொண்டுள்ள அன்பு பெருகு
கிறதுபோல, நீங்கள் உங்களுள் ஒருவருக்
கொருவர் மட்டுமன்றி மற்றெல்லாருக்கும்
காட்டும் அன்பு பெருகி வளர ஆண்டவர்
அருள்புரிவாராக! 13 அதன் மூலம்
நம்முடைய ஆண்டவராகிய இயேசு தமக்
குரிய மக்கள் அனைவரோடும் வரும்போது,
நம் கடவுளும் தந்தையுமானவர் முன்
னிலையில் நீங்கள் குற்றமின்றித் தூய்மை
யுள்ளவர்களாய் விளங்கும்படி, உங்கள்
உள்ளங்கள் உறுதிபெறுவதாக.

### கடவுளுக்கு உகந்த வாழ்க்கை

**4** கடைசியாக, சகோதரர்களே, நாங்கள்
உங்களைக் கேட்டுக்கொள்வது
இதுவே: நீங்கள் கடவுளுக்கு உகந்தவர்
களாய் வாழும் வழியை எங்களிடம் கற்
றுக்கொண்டீர்கள்; அவ்வழியே நடந்தும்
வருகிறீர்கள். அதில் இன்னும் முன்னேறிச்
செல்லும்படி ஆண்டவராகிய இயேசுவின்
திருப்பெயரால் உங்களை வேண்டிக்
கொள்கிறோம். 2 நாங்கள் உங்களுக்கு
ஆண்டவராகிய இயேசுவின் திருப்பெய
ரால் இட்ட கட்டளைகள் யாவை என்பது
உங்களுக்குத் தெரியுமல்லவா? 3 நீங்கள்
தூயராக வேண்டுமென்பதே கட
வுளின் திருவுளம்; அதாவது, கெட்ட
நடத்தையை நீங்கள் விட்டுவிட வேண்
டும். 4 உங்களுள் ஒருவனும் தன் உடலை,*
கடவுளை அறியாத பிற இனத்தவரைப்
போலக் காமவெறிக்குக் கருவியாக்காமல்,
5 அதை ஒவ்வொருவனும் தூய்மையாகவும்
மதிப்புடனும் வைத்துக்கொள்ள
அறிந்திருக்க வேண்டும். 6 இந்தக் காரியத்
தில் யாரும் வரம்புமீறி நடந்து தன்
சகோதரனை வஞ்சிக்கக் கூடாது. இத்த
கைய செயல்கள் அனைத்திற்காகவும் ஆண்
டவர் தண்டனை வழங்குவார். இதை
நாங்கள் ஏற்கெனவே வலியுறுத்திக் கூறி
எச்சரிக்கை செய்திருக்கிறோம். 7 கடவுள்
நம்மை அசுத்த வாழ்க்கை நடத்துவதற்
காக அழைக்கவில்லை; தூய வாழ்க்கை
நடத்துவதற்காகவே அழைத்திருக்கிறார்.
8 எனவே, இக்கட்டளைகளைப் புறக்கணிக்
கிறவன், மனிதனையன்று, தம்முடைய
தூய ஆவியை உங்களுக்கு அருளும்
கடவுளையே புறக்கணிக்கிறான்.

9 சகோதர அன்பைப்பற்றி நான் உங்
களுக்கு எழுதத் தேவையில்லை. ஏனெனில்,
நீங்களே ஒருவரிடம் ஒருவர் அன்பு
கொள்ளக் கடவுளிடமிருந்து கற்றுக்கொண்
டிருக்கிறீர்கள். 10 அதன்படியே நீங்கள்
மக்கெதோனியா நாடெங்குமுள்ள சகோ
தரர் அனைவருக்கும் அன்பு காட்டி வரு
கிறீர்கள். சகோதரர்களே, இதை நீங்கள்
இன்னும் மிகுதியாகச் செய்ய வேண்டு
மென்று உங்களைக் கேட்டுக்கொள்ளு
கிறோம். 11 நாங்கள் உங்களுக்குக் கட்
டளையிட்டபடியே, அமைதியாக வாழ்வ
திலும் உங்கள் சொந்த அலுவல்களைக் கவ
னிப்பதிலும் கைப்பாடுபட்டுப் பொருள்
ஈட்டுவதிலும் நாட்டமுள்ளவர்களாயிருங்
கள். 12 அப்பொழுதுதான் நீங்கள் திருச்
சபைக்குப் புறம்பே இருக்கிறவர்களிடம்
நன்மதிப்பைப் பெறுவீர்கள்; எந்தக் குறை
யும் உங்களுக்கு ஏற்படாது.

### ஆண்டவரின் வருகை

13 சகோதரர்களே, துஞ்சினவர்களைப்
பற்றி நீங்கள் ஒன்றை அறிந்திருக்க
வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம்.
எதிர்காலத்தைப்பற்றிய நம்பிக்கை இல்
லாதவர்களைப்போல நீங்கள் துயரமடைய
வேண்டாம். 14 இயேசு இறந்தபின் உயி
ரோடெழுந்தார் என்று நாம் நம்புகிறோம்
அல்லவா? இயேசுவினிடம் நம்பிக்கை
கொண்டவர்களாய்த் துஞ்சினவர்களையும்
அப்படியே கடவுள் அவரோடு அழைத்துச்

* மூலத்திலுள்ள பதத்தின் பொருள் 'பாண்டம்' என்பது. இதை 'உடல்' என்றோ, 'மனைவி' என்றோ மொழி பெயர்ப்பதுண்டு.

செல்வார். 15 ஆண்டவர் தாமே
உரைத்ததை நாங்கள் உங்களுக்குச் சொல்
லுகிறோம்: ஆண்டவரின் வருகை
வரையில் விட்டுவைக்கப்பட்டு உயிரோடு
இருக்கப்போகும் நாம், துஞ்சினவர்களை
விடச் சிறப்பாக எதையும் பெறப்போவ
தில்லை. 16 கட்டளைக் குரல் ஒலிக்க, தலை
மைத் தெய்வதூதரின் ஆரவாரமும்
கடவுளின் எக்காளமும் முழங்க, ஆண்டவர்
தாமே வானத்தினின்று இறங்கி வரு
வார். அப்பொழுது கிறிஸ்துவினிடம் நம்
பிக்கை கொண்டவர்களாய் இறந்தவர்கள்
முதலில் உயிர்த்தெழுவார்கள். 17 பிறகு,
உயிரோடு விட்டுவைக்கப்பட்டுள்ள
நாமும் வானவெளியில் ஆண்டவரை
எதிர்கொள்வதற்காக அவர்களோடு
மேகங்கள்மீது உயரக் கொண்டுபோகப்
படுவோம், இவ்வாறு நாம் எப்போதும்
ஆண்டவரோடு இருப்போம். 18 எனவே,
இந்த உண்மைகளை எடுத்துச் சொல்லி
ஒருவரையொருவர் தேற்றுங்கள்.

**5** சகோதரர்களே, இவை நடக்கும்
காலங்களையும் நேரங்களையும்பற்றி
உங்களுக்கு எழுதத் தேவையில்லை. 2 ஏனெ
னில், திருடன் இரவில் வருவதுபோல,
ஆண்டவரின் நாள் வரும் என்பதை நீங்
களே திட்டமாக அறிந்திருக்கிறீர்கள்.
3 ''அமைதி நிலவுகிறது, ஆபத்து இல்லை''
என்று மக்கள் சொல்லிக்கொண்டிருப்
பார்கள். அப்பொழுது கர்ப்பவதிக்கு
வேதனை வருவதுபோலத் திடீரென அவர்
களுக்கு அழிவு வரும்; அவர்களால் தப்
பித்துக்கொள்ள இயலாது. 4 ஆனால்,
சகோதரர்களே, நீங்கள் இருளில் இல்லை.
ஆகையால், உங்களுக்கு அந்த நாள் திரு
டனைப்போல எதிர்பாராவண்ணம் வராது.
5 நீங்கள் எல்லாரும் ஒளிக்குரியவர்கள்,
பகலுக்குரியவர்கள். நாம் இரவுக்கோ
இருளுக்கோ உரியவர்களல்ல. 6 ஆகை
யால், ஏனைய மக்கள் துயரத்திலிருப்பது
போல நாமும் இருத்தலாகாது. விழிப்
போடும் அறிவுத் தெளிவோடும் இருப்
போமாக. 7 தூங்குபவர்கள் இரவில்
தூங்குவார்கள். குடித்து வெறிப்பவர்கள்
இரவில் குடித்து வெறிப்பார்கள். 8 பகலின்
தன்மையை உடையவர்களாகிய
நாமோ, ஆண்டவரிடம் கொண்டுள்ள
நம்பிக்கையையும் அன்பையும் மார்புக்
கவசமாகவும், மீட்பை எதிர்நோக்கியிருக்கும்
நம்பிக்கையைத் தலைச்சீராவாகவும்
அணிந்துகொண்டு அறிவுத் தெளிவுடைய
வர்களாய் இருப்போமாக. 9 ஏனெனில்,
கடவுளின் சினத்திற்கு ஆளாவதற்கென்று
நம்மை அவர் முன்குறிக்கவில்லை; நம்மு
டைய ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின்
மூலம் நாம் மீட்பு அடைவதற்கென்றே
முன்குறித்து வைத்திருக்கிறார். 10 அந்த
இயேசுகிறிஸ்து வரும்போது நாம்
உயிரோடிருந்தாலும் இறந்திருந்தாலும் அவ
ரோடு நாம் இணைந்து வாழும்படி அவரே
நமக்காக மரணமடைந்தார். 11 ஆகை
யால், நீங்கள் இப்போது செய்துவரு
வதுபோல ஒருவருக்கொருவர் ஊக்கமூட்டி
வாருங்கள்; ஆன்மீக வளர்ச்சி அடைய
ஒருவருக்கொருவர் உதவி செய்யுங்கள்.

## இறுதி அறிவுரையும் வாழ்த்தும்

12 சகோதரர்களே, உங்களிடையே
உழைத்து, ஆண்டவரின் திருப்பெயரால்
உங்கள் தலைவர்களாயிருந்து உங்களுக்கு
அறிவுரை கூறுகிறவர்களை நீங்கள் மதிப்
புடன் நடத்தி, 13 அவர்கள் செய்யும்
பணியை முன்னிட்டு அவர்களுக்கு அன்பு
காட்டி, அவர்களை மிக உயர்வாகக் கரு
தும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளு
கிறோம். உங்களிடையே அமைதி நிலவு
வதாக! 14 சகோதரர்களே, மேலும்
நாங்கள் உங்களைக் கேட்டுக்கொள்வது
இதுவே: ஒழுங்கின்றி நடப்பவர்களைக் கண்
டித்து உணர்த்துங்கள்; மனத்தளர்ச்சி
அடைந்தவர்களுக்கு ஊக்கமூட்டுங்கள்;
திடமற்றவர்களுக்கு ஆதரவளியுங்கள்; எல்
லாரிடமும் பொறுமையோடு நடந்து
கொள்ளுங்கள். 15 யாரும் அடுத்தவனுக்குத்
தீமைக்குத் தீமை செய்யாதபடி
பார்த்துக்கொள்ளுங்கள். உங்களுள் ஒரு
வருக்கொருவர் மட்டுமன்றி மற்றெல்லா
ருக்குங்கூட நலமானதைச் செய்வதையே
எப்போதும் நாடுங்கள்.

16 எப்போதும் மகிழ்ச்சியோடிருங்கள்.
17 இடைவிடாமல் ஜெபம் செய்
யுங்கள். 18 எந்த நிலைமைமையிலிருந்
தாலும் நன்றி செலுத்துங்கள்.
உங்களைக் குறித்துக் கிறிஸ்து இயேசுவின்
மூலம் வெளிப்படுத்தப்பட்ட கடவுளின்
திருவுளம் இதுவே. 19 ஆவியானவர் செய
லாற்றுவதற்குத் தடைகள் போடாதீர்கள்;
20 இறைவாக்குரைப்போர் கூறுவதை
இழிவாகக் கருதாதீர்கள்; 21 எல்லா
வற்றையும் சீர்தூக்கிப் பார்த்து நலமா
னதைப் பற்றிக்கொள்ளுங்கள்; 22 எல்லா
வகையான தீமையையும் விட்டு விலகுங்கள்.
23 சமாதானத்திற்கு ஊற்றாகிய கடவுள்
தாமே உங்களை முற்றிலும் தூய்மை
யாக்குவாராக! நம்முடைய ஆண்டவ
ராகிய இயேசுகிறிஸ்துவின் வருகையின்
போது நீங்கள் ஆவி ஆன்மா உடல் ஆகிய
அனைத்திலும் குற்றமின்றி இருக்கும்படி

**4:15—17** 1 கொரி. 15:51, 52. **5:2** மத். 24:43; லூக். 12:39; 2 பேது. 3:10. **5;8** ஏசா. 59:17; எபே. 6:13.—17.

உங்களை அவர் காப்பாராக!
24 உங்களை அழைத்திருக்கிறவர் நம்பிக்
கைக்குரியவர்; அவர் அதைச் செய்வார்.
25 சகோதரர்களே, எங்களுக்காகவும்
கடவுளிடம் மன்றாடுங்கள்.
26 சகோதரர் எல்லாரையும் தூய
முத்தத்தால் வாழ்த்துங்கள். 27 சகோ
தரர் அனைவருக்கும் இந்தக் கடிதத்தைத்
தவறாமல் படித்துக்காட்ட வேண்டுமென்று
ஆண்டவரின் திருப்பெயரால் உங்களுக்கு
வற்புறுத்திக் கூறுகிறேன்.

28 நம்முடைய ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவின் அருள் உங்களோடிருப்பதாக!

# பவுல் தெசலோனிக்கேயருக்கு எழுதின இரண்டாம் கடிதம்

## வாழ்த்து

1 நம்முடைய தந்தையாகிய கடவுளுக்கும்
ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவுக்கும்
சொந்தமாயிருக்கும் தெசலோனிக்கே
நகரத் திருச்சபைக்குப் பவுலும் சில்வானும்
தீமோத்தேயுவும் எழுதுவதாவது:
2 தந்தையாகிய கடவுளிடமிருந்தும் ஆண்ட
வராகிய இயேசுகிறிஸ்துவிடமிருந்தும்
உங்களுக்கு அருளும் நலமும் உண்டாகுக!

## கடைசிநாள் தீர்ப்பு

3 சகோதரர்களே, உங்களை நினைத்து
நாங்கள் எப்போதும் கடவுளுக்கு நன்றி
செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். ஆம்,
அவ்வாறு செய்வது தகுதியே. ஏனெனில்,
ஆண்டவரிடம் நீங்கள் கொண்டுள்ள
நம்பிக்கை ஓங்கி வளருகிறது. நீங்கள்
எல்லாரும் ஒருவருக்கொருவர் காட்டும்
அன்பும் பெருகிவருகிறது. 4 அதனாலே
தான் நாங்கள் கடவுளின் திருச்சபை
களில் உங்களைக் குறித்துப் பெருமையாகப்
பேசிவருகிறோம். நீங்கள் துன்புறுத்
தப்படும் எல்லா வேளைகளிலும், சகித்துக்
கொண்டிருக்கும் இன்னல்களுக்கிடை
யேயும், நீங்கள் காட்டுகிற பொறுமை
யையும் தளராத உங்கள் நம்பிக்கையையும்
முன்னிட்டுப் பெருமையாகப் பேசு
கிறோம். 5 இத்தகைய உங்கள் பொறுமை
கடவுளின் தீர்ப்பு நியாயமாயிருக்கும் என்
பதைக் காட்ட ஏதுவாயிருக்கிறது;
கடவுளுடைய அரசின் பொருட்டுப் பாடனு
பவிக்கிற நீங்கள் இவை எல்லாவற்றின்
விளைவாக அந்த அரசிற்குள் செல்லத்
தகுதியுடையவர்களெனக் கொள்ளப்படு
வீர்கள். 6 ஏனெனில், உங்களைத் துன்
புறுத்துகிறவர்களுக்குத் துன்பத்தையும்,
துன்புறுகிற உங்களுக்கு, எங்களுக்கு அரு
ளப்படப்போகும் துயர் நீங்கிய அமைதி
யையும் கைம்மாறாகக் கொடுப்பதே கட
வுளின் நீதிமுறையாகும். 7 ஆண்டவராகிய
இயேசு தம் வல்லமையுள்ள தூதர்களோடு
கொழுந்துவிட்டு எரிகிற தீயினிடையே
வானத்தினின்று வெளிப்படும்போது, அவ்
வாறு கைம்மாறு அருளுவார். 8 கடவுளை
அறியாதவர்களுக்கும், நம்முடைய ஆண்
டவராகிய இயேசுவின் அருட்செய்திக்குக்
கீழ்ப்படியாதவர்களுக்கும் அப்போது
இயேசு நியாயமான தண்டனை அளிப்
பார். 9 அத்தகையோர் ஆண்டவருடைய
வல்லமை விளங்கும் மாட்சிமையைக்
காணவியலா வண்ணம் அவருடைய முன்
னிலையிலிருந்து அகற்றப்பட்டு, மீளமுடி
யாதபடி அழிவைத் தண்டனையாகப் பெறு
வார்கள். 10 அந்நாளில் ஆண்டவர் தமக்
குரிய மக்களிடையே மாட்சிமை பெறு
கிறவராயும், அவரிடம் நம்பிக்கை கொண்
டுள்ள எல்லாரிடையேயும் வியந்து போற்
றப்படுகிறவராயும் வருவார். நாங்கள்
உங்களுக்கு அறிவித்த சாட்சியத்தை
நீங்கள் நம்பி ஏற்றுக்கொண்டதால்
நீங்களும் அவர்களிடையே இருப்பீர்கள்.
11 இதனாலேதான், உங்களை அழைத்திருக்
கிற நம் கடவுள் உங்களைத் தமது அழைப்
பிற்குத் தகுதியுள்ளவர்கள் எனக் கொள்ள
வேண்டுமென்று நாங்கள் எப்போதும் உங்
களுக்காக மன்றாடிவருகிறோம். அவர்
தமது வல்லமையால் உங்களுடைய ஒவ்
வொரு நல்விருப்பத்தையும், உங்கள் நம்
பிக்கை விளைவிக்கும் ஒவ்வொரு செயலை
யும் நிறைவு செய்வாராக! 12 இவ்வாறு
நம்முடைய கடவுளும் ஆண்டவராகிய
இயேசுகிறிஸ்துவும் அளிக்கும் அருளால்,
நம்முடைய ஆண்டவராகிய இயேசுவின்
திருப்பெயருக்கு உங்கள் மூலமாகவும்,
உங்களுக்கு அவர் மூலமாகவும் மாட்சிமை
உண்டாகும்.

## அக்கிரமமே உருவான மனிதன்

2 சகோதரர்களே, நம்முடைய ஆண்ட
வராகிய இயேசுகிறிஸ்துவின் வரு
கையையும், அவர் நம்மைத் தம்மோடு
சேர்த்துக்கொள்வதையும்பற்றி நாங்கள்
உங்களுக்குக் கூற விரும்புவதாவது:
2 ஆண்டவரின் நாள் வந்தாயிற்று என்று
ஏதோ ஓர் ஆவியாவது, ஒரு மனித
செய்தியாவது, எங்களிடமிருந்து வந்த
தாகக் கூறப்படும் ஒரு கடிதமாவது அறி
விக்குமானால், நீங்கள் அதிர்ச்சியோ,
திகிலோ அடைய வேண்டாம். 3 எவனும்
உங்களை எந்த வகையிலும் ஏமாற்ற
இடங்கொடாதீர்கள். அந்த நாள் வரு
முன் 'இறுதிக் கிளர்ச்சி' எனப்படுவது
வந்தாக வேண்டும்; அக்கிரமமே உருவான
மனிதன் வெளிப்பட்டாக வேண்டும்.
4 இவனே அழிவிற்குரியவன். மனிதர்
தெய்வம் எனக் கொள்வதையும், வழி
படும் அனைத்தையும் எதிர்த்து, அவற்
றிற்கு மேலாகத் தன்னை உயர்த்திக்
கொள்வான். அதனோடு நின்றுவிடாமல்,
அவன் கடவுளின் ஆலயத்தில் அமர்ந்து
கொண்டு, தன்னைக் கடவுளாகக் காட்டிக்
கொள்வான். 5 நான் உங்களோடிருந்த

1:1 திருத்தூது. 17:1. 2:1 1 தெச. 4:15—17. 2:4 தானி. 11:36; எசே. 28:2.

போது இவ்வாறு சொல்லிவந்தது உங்கள்
நினைவில் இல்லையா? 6 அவன் தனக்குக்
குறிக்கப்பட்ட காலத்திற்குமுன் வெளிப்
படாதபடி இப்போது அவனை அடக்கி
வைத்திருப்பது எதுவென்பது உங்களுக்குத்
தெரியும். 7 அக்கிரமமாகிய சக்தி
இப்போது மறைவாகச் செயலாற்றிக்
கொண்டிருக்கிறது. ஆனால், அவனை இப்
போது அடக்கிவைத்திருப்பவன் இடை
யிலிருந்து அகலும் வரையில், அது அப்ப
டியே செயலாற்றிக்கொண்டிருக்கும்.
8 அக்கிரமம் செய்பவன் பிறகு வெளிப்
படுவான். ஆண்டவராகிய இயேசு தம்
வாயால் ஊதி அவனை ஒழித்துவிடுவார்.
9 சாத்தான் வரும்போது அவன் தன்
முழு ஆற்றலினாலும் செயல்புரிவான்.
வஞ்சிக்கும் அருஞ்செயல்களும் அற்புதங்
களும் நடைபெறும். 10 கெட்டழிந்து
போகிறவர்கள் அவனது தீச்செயலால்
முற்றிலும் வஞ்சிக்கப்படுவார்கள். ஏனென்
றால், அவர்கள் மீட்பளிக்கும் சத்தியத்தை
விரும்பி ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்
கள். 11 ஆகையால், அவர்கள் பொய்
யானதை நம்பும் வண்ணம் கடவுள் அவர்
களை வஞ்சனைக்கு இரையாகும்படி செய்கிறார்.
12 சத்தியத்தை நம்பாமல் தீமையில்
நாட்டங்கொள்ளும் யாவரும் தண்டனைத்
தீர்ப்புக்கு ஆளாகும்படி இவ்வாறு
செய்கிறார்.

### மீட்புப் பெறும்படி தேர்ந்து கொள்ளப்பட்டீர்கள்

13 ஆண்டவரின் அன்பைப் பெற்ற
சகோதரர்களே, நாங்கள் உங்களை நினைத்துக்
கடவுளுக்கு எப்போதும் நன்றி
செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம்.
ஏனெனில், ஆவியானவரால் பிரித்தெடுக்
கப்படுவதாலும், சத்தியத்தை நம்புவதா
லும் மீட்புப் பெறுவோருள் நீங்கள்
முதற் கனிகளாயிருக்கும்படி, கடவுள்
உங்களைத் தேர்ந்துகொண்டார். 14 அவ்
வாறு மீட்கப்படுவதற்கென்றும், அதன்
மூலம் நம்முடைய ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவின் மாட்சிமையை நீங்களும்அடைய
வேண்டுமென்றும் நாங்கள் அறிவிக்கும்
அருட்செய்தி மூலமாக அவர் உங்களை
அழைத்தார். 15 ஆகையால், சகோதரர்
களே, நாங்கள் உங்களுக்கு வாய்மொழி
யாகவோ கடிதத்தின் மூலமோ ஒப்பு
வித்த பரம்பரைப் போதனையைப் பற்றிக்
கொண்டு உறுதியாக நில்லுங்கள். 16 நம்
முடைய ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து
வும், நம்மிடம் அன்புகொண்டு குன்றாத
ஊக்கத்தையும் எதிர்காலத்தைப்பற்றிய
நல்ல நம்பிக்கையையும் அருள்கூர்ந்து
நமக்கு அளித்த நம்முடைய தந்தையா
ராகிய கடவுளும், 17 உங்கள் உள்ளங்
களுக்கு ஊக்கந்தந்து, நலமான எல்லா
வற்றையும் நீங்கள் செய்யவும் பேசவும்
உங்களுக்குத் திடமளிப்பார்களாக!

### எங்களுக்காகக் கடவுளிடம் மன்றாடுங்கள்

3 கடைசியாக, சகோதரர்களே, எங்
களுக்காகக் கடவுளிடம் மன்றாடுங்
கள். உங்களிடையே நடந்துவருகிறது
போல, ஆண்டவரின் செய்தி எங்கும்
விரைந்து பரவிப் புகழடையவும், 2 தீய
குணமுடைய பொல்லாத மனிதர் கைக்கு
நாங்கள் தப்பவும் வேண்டிக்கொள்ளுங்
கள். ஏனெனில், ஆண்டவரைப் பற்றும்
நம்பிக்கை எல்லாரிடமும் இல்லை.

3 ஆண்டவரோ நம்பிக்கைக்குரியவர்.
அவர் உங்களுக்குத் திடமளித்து, உங்
களைத் தீயோனிடமிருந்து காப்பாற்று
வார். 4 நாங்கள் கட்டளையிட்டவற்றை
நீங்கள் செய்துவருகிறீர்களென்றும், இனி
யும் செய்துவருவீர்களென்றும் உங்க
ளோடு ஆண்டவருக்கு அடியார்களா
யிருக்கும் எங்களுக்குத் திடமான நம்
பிக்கை இருக்கிறது. 5 நீங்கள் கடவுளின்
அன்பையும் கிறிஸ்துவின் பொறுமையை
யும் உணரும்படி ஆண்டவர் உங்கள் உள்
ளங்களில் செயல்புரிவாராக!

### சோம்பித் திரியாதே

6 சகோதரர்களே, எங்களிடம் பெற்
றுக்கொண்ட பரம்பரைப் போதனைப்படி
நடவாமல் சோம்பித் திரியும் எல்லாச்
சகோதரர்களையும் விட்டு நீங்கள் விலகி
யிருக்க வேண்டுமென்று ஆண்டவராகிய
இயேசுகிறிஸ்துவின் திருப்பெயரால் உங்
களுக்குக் கட்டளையிடுகிறோம். 7 ஏனெனில்,
நீங்கள் எவ்வகையில் எங்களைப்போல
நடக்க வேண்டும் என்பது உங்களுக்கே
தெரியும். உங்களிடையே இருந்தபோது
நாங்கள் சோம்பேறிகளாயிருக்கவுமில்லை.
8 எவரிடமும் இலவசச் சாப்பாடு சாப்
பிடவுமில்லை; அல்லும் பகலும் வருந்தி
உழைத்தோம்; உங்களுள் எவருக்கும் ஒரு
சுமையாயிராதபடி வேலை செய்து சம்பா
தித்தோம். 9 உதவி பெற எங்களுக்கு
உரிமை இல்லை என்பதனாலன்று, நீங்களும்
எங்களைப் போல நடக்க வேண்டு
மென்று எங்களை உங்களுக்கு முன்மாதிரி
யாக வைக்கவே வேலை செய்தோம்.
10 நாங்கள் உங்களோடு இருந்தபோது,
உங்களுக்கு இட்ட கட்டளை இதுவே:
11 உழைக்க மனமில்லாதவன் உண்ண
வுங்கூடாது. இதை ஏன் குறிப்பிடுகிறே
னென்றால், உங்களுள் சிலர் சோம்பேறி
களாய் வாழ்ந்துகொண்டு, எந்த வேலையும்

**2:8** ஏசா. 11:4. **2:9** மத். 24:24.

செய்யாமல் பிறர் அலுவல்களில் தலை
யிடுவதையே ஒரு வேலையாகக் கொண்டி
ருப்பதாகக் கேள்விப்படுகிறோம். 12 அத்
தகையோர் ஒழுங்கீனங்களைத் தவிர்த்து, தாங்
கள் சாப்பிடும் உணவுக்காக வேலை செய்ய
வேண்டுமென்று ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவின் திருப்பெயரால் அவர்களுக்குக்
கட்டளையிட்டு எச்சரிக்கை செய்கிறோம்.
13 ஏனைய சகோதரர்களே, நீங்களோ
நன்மை செய்வதில் சோர்வடைய
வேண்டாம். 14 இந்தக் கடிதத்தில் நாங்
கள் சொல்லும் வார்த்தைக்கு யாராவது
கீழ்ப்படியாவிட்டால், அவனைக் குறித்து
வைத்துக்கொண்டு, அவனோடு பழகுவதை
விட்டுவிடுங்கள்; அப்பொழுது அவனுக்கு
வெட்கமுண்டாகும். 15 ஆனாலும், அவனைப்
பகைவனாக அன்று, சகோதரனாகவே
கருதி, அவனைக் கண்டித்து உணர்த்
துங்கள்.

### வாழ்த்து

16 சமாதானத்துக்கு ஊற்றாகிய ஆண்
டவர்தாமே எப்போதும் எல்லா வகை
யிலும் உங்களுக்குச் சமாதானம் தந்தருளு
வாராக! ஆண்டவர் உங்கள் அனைவ
ரோடும் இருப்பாராக!

17 பவுலாகிய நான் என் கைப்பட
எழுதி வாழ்த்துக் கூறுகிறேன். நான்
எழுதும் ஒவ்வொரு கடிதத்திற்கும் இதுவே
அடையாளமாகும். நான் எழுதுவது இவ்
வாறுதானிருக்கும். 18 நம்முடைய ஆண்ட
வராகிய இயேசுகிறிஸ்துவின் அருள்
உங்கள் அனைவரோடும் இருப்பதாக!

# பவுல் தீமோத்தேயுவுக்கு எழுதின முதலாம் கடிதம்

### வாழ்த்து

1 நம்முடைய மீட்பராகிய கடவுளும்,
நம்முடைய நம்பிக்கைக்கு அடிப்
படையாகிய கிறிஸ்து இயேசுவும் இட்ட
கட்டளைப்படி கிறிஸ்து இயேசுவின் திருத்
தூதுவனாயிருக்கும் பவுலாகிய நான்,
2 ஆண்டவரைப் பற்றும் நம்பிக்கை கார
ணமாக உண்மையாகவே எனக்கு மகனாய்
விளங்கும் தீமோத்தேயுவுக்கு எழுது
வதாவது: தந்தையாகிய கடவுளிடமிருந்
தும் நம் ஆண்டவராகிய கிறிஸ்து இயேசு
விடமிருந்தும் உனக்கு அருளும் இரக்கமும்
நலமும் உண்டாகுக!

### பொய்ப் போதனைபற்றிய எச்சரிக்கை

3 நான் மக்கெதோனியாவுக்குப் புறப்
படும்போது, நீ எபேசுவில் தங்கியிருக்க
வேண்டுமென்று உன்னைக் கேட்டுக்கொண்
டேன். ஏனெனில், அங்கே சிலர் வேறு
வகையாகப் போதித்துவருகின்றனர்.
4 அவர்கள் கட்டுக் கதைகளிலும் மிக
நீளமான மூதாதையர் அட்டவணைகளி
லும் கவனம் செலுத்துகிறார்கள். இவை
நம்பிக்கையின் மூலம் செயல்படுகிற
தெய்வத் திட்டத்தை நிறைவேற்றாமல் வீண்
தர்க்கங்களையே தோற்றுவிக்கின்றன. இப்
படிச் செய்யாதபடி நீ அவர்களுக்கு அறி
வுறுத்த வேண்டுமென்பதற்காகத்தான்
உன்னை அங்கே இருக்கும்படி சொன்
னேன். 5 அவ்வாறு அறிவுறுத்துவதன்
நோக்கம் என்னவெனில், அன்பை வளர்க்க
வேண்டுமென்பதே. அந்த அன்போ தூய
உள்ளம், குற்றமற்ற மனச்சான்று, மெய்
யான நம்பிக்கை இவற்றினின்றே வரக்
கூடியது. 6 சிலர் இந்நெறியைப் பின்பற்
றாது வழிதவறி வீண் பேச்சில் இறங்கி
விட்டனர். 7 அவர்கள் நீதிச்சட்டத்தின்
போதகர்களாயிருக்க விரும்புகிறார்கள்.
ஆனால், தாங்கள் சொல்லும் வார்த்தை
களின் பொருளையோ, தாங்கள் நிலை
நாட்டப்பார்க்கும் கருத்துகளையோ அவர்
களே புரிந்துகொள்ளவில்லை.

8 நீதிச்சட்டம் நல்லது என்பது நமக்குத்
தெரியும். ஆனால், ஒருவன் அதை
நீதியான முறையில் கையாள வேண்டும்.
9 அவன் அறிந்திருக்க வேண்டியது இதுவே:
நீதிச்சட்டம் நேர்மையானவர்களுக்காக
அமைக்கப்படவில்லை. முறைகேடானதைச்
செய்வோர், கட்டுப்பாட்டுக்கு அடங்கா
தோர், இறைப்பற்று இல்லாதோர்,
பாவத்தில் மூழ்கிக் கிடப்போர், தூய்மை
யற்றோர், உலகப் பற்றுடையோர், கொலை
ஞர், தந்தையைக் கொன்றோர், தாயைக்
கொன்றோர், 10 காமுகர், இயற்கைக்கு
மாறாகக் காமவெறிகொள்ளும் ஆடவர்,
குழந்தைகளைத் திருடுவோர், பொய்யர்,
பொய்யாணை இடுவோர், மற்றும் நலந்
தரும் போதனைக்கு மாறாக எதையும்
செய்வோர் ஆகியோருக்காகவே நீதிச்
சட்டம் அமைக்கப்பட்டது. 11 இதுவே,
பேரின்பத்திற்கு ஊற்றாகிய கடவுள் என்
னிடம் ஒப்புவித்திருக்கிற அவரது மாட்சி
மையைப்பற்றிய அருட்செய்தி கூறும்
போதனை.

### கடவுளின் இரக்கத்துக்காக நன்றி

12 நம் ஆண்டவராகிய கிறிஸ்து இயேசு
என்னை நம்பிக்கைக்குரியவன் எனக்கொண்டு
இந்தப் பணியில் என்னை அமர்த்தினதற்
காகவும், அதைச் செய்ய எனக்கு ஆற்ற
லளித்ததற்காகவும் அவருக்கு நன்றி
செலுத்துகிறேன். 13 முன்பு நான் வசை
மொழி கூறுகிறவனாயும் துன்புறுத்துகிற
வனாயும் வன்செயல் புரிகிறவனாயும் இருந்
தேன். ஆயினும், நான் ஆண்டவரிடம்
நம்பிக்கை கொள்ளாத நிலையில் அறி
யாமை காரணமாக அப்படிச் செய்த
தால் அவர் எனக்கு இரங்கினார். 14 நம்
ஆண்டவர் தமது மட்டில்லா அருளை என்
மீது பொழிந்தருளினார். அதுவே கிறிஸ்து
இயேசுவோடு இணைந்திருப்பதில் நமக்கி
ருக்கும் நம்பிக்கையையும் அன்பையும்
என்னுள் விளைவித்தது. 15 பாவிகளை
மீட்கக் கிறிஸ்து இயேசு உலகத்திற்கு
வந்தார் என்பது நம்பத்தக்கதும் மன
மார ஒப்புக்கொள்ளக் கூடியதுமான மா
வாக்கியமாகும். 16 பாவிகளுள் பெரும்
பாவி நானே. ஆனால், கடவுள் எனக்கு
இரங்கினார். ஏனெனில், என்னைப்போல
இயேசுகிறிஸ்துவினிடம் நம்பிக்கை
கொண்டு என்றுமுள்ள மெய்வாழ்வைப்
பெறுவோருக்கு நான் ஒரு முன்மாதிரி
யாயிருக்கும்படி, முதன்முதல் என்னி
டம் மிகுந்த பொறுமையோடிருக்கத் திரு
வுளங்கொண்டார். 17 என்றென்றும் அர
சராயிருப்பவருக்கே, அழிவில்லாதவரும்,
கண்ணுக்குப் புலப்படாதவரும், ஒரே
கடவுளுமாயிருக்கும் அவருக்கே என்றென்
றைக்கும் மாண்பு! மாட்சிமை! ஆமென்.

18 தீமோத்தேயுவே, என் மகனே,
உன்னைப்பற்றித் திருச்சபையில் முன்பு

1:2 திருத்தூது. 16:1. 1:13 திருத்தூது. 8:3; 9:4, 5.

சொல்லப்பட்ட இறைவாக்குகளுக்கிசைய
நான் உனக்கு இடும் கட்டளை இதுவே:
நீ அந்த வாக்குகளை மனத்திற்கொண்டு,
ஆண்டவரைப் பற்றும் நம்பிக்கையும்
குற்றமற்ற மனச்சான்றும் உள்ளவனாய்
நன்மைக்காக வீரத்தோடு போரிடு.
19 சிலர் தம் மனச்சான்றுக்குச் செவி
கொடாததால் தம் நம்பிக்கையாகிய கப்பல்
உடைந்துபோகும்படி செய்துவிட்டனர்.
20 இமெனேயும் அலெக்சந்தரும்
அப்படிப்பட்டவர்கள். அவர்களைச் சாத்
தானிடம் ஒப்படைத்துவிட்டேன். இந்தத்
தண்டனையின் மூலம் அவர்கள் இனிக்
கடவுளைப் பழிக்காதிருக்கக் கற்றுக்கொள்ள
வேண்டுமென்பதற்காகவே அப்படிச் செய்
தேன்.

### மன்றாடுதலைப்பற்றிய அறிவுரை

2 முதலாவதாக நான் வற்புறுத்திக்
கூறுவது இதுவே: எல்லா மனிதருக்
காகவும் நீங்கள் கடவுளிடம் வேண்டுதல்
செய்யவும் ஜெபம் செய்யவும் மன்றா-
டவும் நன்றி செலுத்தவும் வேண்டும்.
2 நாம் இறைப்பற்றும் கண்ணியமும்
நிறைந்தவர்களாய்த் தொல்லையின்றி அமை
தியாக வாழ்க்கை நடத்தும் நிலை ஏற்படு
வதற்காக அரசர்களுக்காகவும் எல்லா
அதிகாரிகளுக்காகவும் அப்படிச் செய்ய
வேண்டும். 3 இப்படிச் செய்வது நல்லது,
நம் மீட்பராகிய கடவுளின் பார்வையில்
உகந்தது. 4 ஏனெனில், எல்லா மனி
தரும் மீட்பைப் பெறவும் சத்தியத்தை
அறிந்துகொள்ளவும் வேண்டுமென்பதே
அவரது திருவுளம். 5 கடவுள் ஒருவரே;
கடவுளுக்கும் மனிதருக்குமிடையே இருக்
கும் இணைப்பாளரும் ஒருவரே. அவர்
மனிதனாகிய இயேசுகிறிஸ்துவே. 6 அவர்
எல்லாரையும் மீட்டுக்கொள்ளும் பொருட்
டுத் தம்மையே மீட்புப்பொருளாக ஒப்
புக்கொடுத்தார். கடவுள் எல்லாரையும்
மீட்டுக்கொள்ளத் திருவுளங்கொண்டிருந்
தார் என்பதற்கு உரிய காலத்தில் அவர்
அருளிய சான்று இதுவே. 7 இதை அறி
விப்போனாகவும், யூதரல்லாதாருக்கு உண்
மைக் கோட்பாடுகளைப் போதிக்கும் திருத்
தூதுவனாகவும் நான் அமர்த்தப்பட்டிருக்
கிறேன். நான் சொல்வது பொய்யன்று,
உண்மையே.

8 எனவே, வழிபாடு நடைபெறும்
இடங்களிலெல்லாம் ஆண்கள் சினமும்
தர்க்கமனப்பான்மையும் இன்றித் தூய
உள்ளத்தோடு தங்கள் கைகளை உயர்த்தி
ஜெபம் செய்ய வேண்டும் என்பதே என்
விருப்பம். 9 பெண்கள் வகை வகையான
பின்னற்சடை, பொன், முத்து, விலை
யுயர்ந்த ஆடை ஆகியவற்றினால் தங்களை
அலங்கரித்துக்கொள்ளாமல், நாணமும்
அடக்க ஒடுக்கமும் உள்ளவர்களாய்த் தகுதி
வாய்ந்த ஆடைகளை அணிந்து தங்களை
அழகுபடுத்திக்கொள்ள வேண்டும் என்பதும்
என் விருப்பம். 10 தங்களை இறைப்
பற்றுள்ளவர்களென்று சொல்லிக்கொள்ளும்
பெண்களுக்குத் தகுந்த அணிகலன் நற்
செயல்களே. 11 பெண்கள் அமைதியா
யிருந்து மிகவும் பணிவடக்கத்தோடு
போதனை பெற வேண்டும். 12 போதனை
செய்யவோ ஆண்மேல் அதிகாரம் செலுத்
தவோ பெண்ணுக்கு அனுமதி அளிக்க
மாட்டேன்; அவள் அமைதியாயிருக்க
வேண்டும். 13 ஏனெனில், ஆதாமே முதலில்
உருவாக்கப்பட்டான்; பிறகுதான்
ஏவாள் உருவாக்கப்பட்டாள். 14 மேலும்,
ஆதாம் ஏமாற்றப்படவில்லை; பெண்தான்
ஏமாற்றப்பட்டாள். அவளே கட்டளையை
மீறினாள். 15 என்றாலும், பெண்ணா
னவள் அடக்க ஒடுக்கத்தோடு, ஆண்ட
வரைப் பற்றும் நம்பிக்கையிலும் அன்பிலும்
தூய்மையிலும் நிலைத்திருந்தால்,
பிள்ளைப்பேற்றின்மூலம் அவளுக்கு மீட்புக்
கிடைக்கும்.

### சபை மேற்பார்வையாளருக்கு இருக்க வேண்டிய பண்புகள்

3 சபையை மேற்பார்வையிடும்
பொறுப்பை ஏற்க ஆவல்கொள்ளும்
எவனும் ஒரு மேன்மையான பணியை
விரும்புகிறான் என்பது நம்பத்தக்க
வார்த்தை. 2 ஆகையால், சபை மேற்
பார்வையாளராயிருப்பவர், எவராலும்
குறை காண முடியாதவரும், ஒரு முறை
மட்டும் திருமணம் புரிந்தவரும், அறிவுத்
தெளிவு, தன்னடக்கம், ஒழுக்கம் ஆகி
யவை உள்ளவரும், அன்னியரை உபசரிக்
கிறவரும், கற்பிக்கும் திறமை உடைய
வருமாய் இருக்க வேண்டும்; 3 குடிகார
ராகவோ கலகக்காரராகவோ இருக்கலா
காது. அவர் பொறுமையுள்ளவரும், சண்
டையை விரும்பாதவரும், பொருளாசை
இல்லாதவரும், 4 தம் குடும்பத்தை நல்ல
முறையில் நடத்துகிறவருமாய் இருக்க
வேண்டும். அவர் எல்லா வகையிலும்
கண்ணியமுள்ளவராயும், தம் பிள்ளைகளைக்
கீழ்ப்படிதலுள்ளவர்களாய் வளர்க்கிறவ
ராயும் இருக்க வேண்டும். 5 தம் சொந்தக்
குடும்பத்தையே நல்ல முறையில் நடத்தத்
தெரியாத ஒருவரால் கடவுளின்
சபையை எப்படிக் கண்காணிக்க முடியும்?
6 திருச்சபையில் புதிதாகச் சேர்ந்த ஒருவர்
மேற்பார்வையாளராக ஆகக்கூடாது.
அப்படி ஆவாரானால் அவர் செருக்கடை
யக்கூடும். அதனால் அவர் பேய்களின்
தலைவனுக்குக் கிடைத்த தண்டனையை

**2:7** 2 திமோ. 1:11. **2:9** 1 பேது. 3:3. **2:13** ஆதி. 2:7; 2:21, 22. **2:14** ஆதி. 3:1—6. **3:2-7** தீத்து 1:6—9.

அடைவார். 7 அவர் திருச்சபைக்குப்
புறம்பே இருக்கிறவர்களிடமும் நன்மதிப்
புப் பெற்றவராய் இருக்க வேண்டும். இல்லை
யென்றால், அவர் பழிச்சொல்லுக்கு ஆளா
கக்கூடும்; பேயின் கண்ணியில் சிக்கிக்
கொள்ளவுங்கூடும்.

### திருப்பணியாளருக்கு இருக்க வேண்டிய பண்புகள்

8 அவ்வாறே திருப்பணியாளர்களும்
கண்ணியமுடையவர்களாய் இருக்க
வேண்டும். அவர்கள் இரட்டை நாக்கு
உடையவர்களாயும் குடிகாரர்களாயும் இழி
வான முறையில் ஊதியம் தேடுகிறவர்
களாயும் இருக்கலாகாது; 9 களங்கமற்ற
மனச்சான்று உடையவர்களாயும் நாம்
நம்பிக்கை வைத்திருக்கிற கோட்பாடுகளில்
பற்றுள்ளவர்களாயும் இருக்க வேண்டும்.
10 அவர்களை முதலில் சோதித்துப்
பார்க்க வேண்டும். அவர்களிடம் குற்றம்
எதுவும் இல்லை என்று காணப்பட்டால்,
அவர்கள் திருப்பணியாளராய்ப் பணி
புரியலாம். 11 அவர்களுடைய மனைவி
யரும்* அவ்வாறே கண்ணியமுடையவ
ராயும் புறணி பேசாதவராயும் அறிவுத்
தெளிவுள்ளவராயும் எல்லாவற்றிலும்
நம்பத்தகுந்தவராயும் இருக்க வேண்டும்.
12 திருப்பணியாளர் ஒரு முறை மட்டும்
திருமணம் செய்தவராயும் தம் பிள்ளை
களையும் குடும்பத்தையும் நல்ல முறையில்
நடத்துகிறவராயும் இருக்க வேண்டும்.
13 திருப்பணியை நன்றாகப் புரிவோர்
உயர்ந்தோராக மதிக்கப்படுவர்; கிறிஸ்து
இயேசுவைப் பற்றும் நம்பிக்கையைக்
குறித்து அதிகாரத்துடன் பேசும் உரிமையும்
பெறுவர்.

### நமது கோட்பாட்டின் உட்பொருள்

14 நான் உன்னிடம் விரைவில் வரக்
கூடுமென எண்ணுகிறேன். 15 நான் வரப்
பிந்திவிட்டால், நீ கடவுளின் குடும்பத்
தாரிடையே எவ்வாறு நடந்துகொள்ள
வேண்டும் என்பதை அறியும்படி இவற்றை
உனக்கு எழுதுகிறேன். அவர்கள் என்று
முள்ள கடவுளின் சபையாயிருக்கிறார்கள்;
அச்சபையே சத்தியத்திற்குத் தூணும்
அரணுமாயிருக்கிறது. 16 நமது கோட்
பாட்டின் உட்பொருள் மிக மேன்மை
யானது என்பதில் யாதொரு ஐயமு
மில்லை.

மானிடனாய் அவர் வெளிப்படுத்
தப்பட்டார்,
கடவுளுக்கே உரியவரென ஆவியான
வரின் செயலின்மூலம் விளங்கினார்;
தெய்வதூதர் கண்முன் காட்சியளித்தார்.
யூதரல்லாதாரிடையே அவரது திருப்
பெயர் அறிவிக்கப்பட்டது.
உலகத்தார்அவரிடம் நம்பிக்கை கொண்
டனர்.
விண்ணுலக மாட்சிமைக்கு அவர் எடுத்
துக்கொள்ளப்பட்டார்.

### கோட்பாட்டினை விட்டுவிடுவோர்

4 ஆவியானவர் திட்டவட்டமாக இவ்
வாறு கூறுகிறார்: கடைசிக் காலத்தில்
சிலர் வஞ்சிக்கும் பேய்களுக்குக் கீழ்ப்
படிந்து பிசாசுகளின் போதனைகளுக்குச்
செவிசாய்த்து நாம் நம்பும் கோட்பாட்டினை
விட்டுவிடுவர். 2 மனச்சான்று செத்த
பொய்யர்களின் சூழ்ச்சியால் அவ்வாறு
நடக்கும். 3 மணம் செய்யக் கூடாதென்
றும், சில உணவுப் பொருள்களை உட்
கொள்ளக் கூடாதென்றும் அந்தப் பொய்
யர்கள் சொல்வார்கள். ஆனால், சத்தி
யத்தை நன்கறிந்த மெய்யடியார்கள்
அந்த உணவுப் பொருள்களையும் நன்றி
யுணர்ச்சியுடன் பயன்படுத்த வேண்டு
மென்றுதான் கடவுள் அவற்றைப் படைத்
திருக்கிறார். 4 கடவுள் படைத்தவையெல்
லாம் நல்லவையே. நன்றியுணர்ச்சியோடு
பயன்படுத்தினால் எதையும் விலக்க வேண்
டியதில்லை. 5 ஏனெனில், கடவுளின் திரு
மொழியாலும் நமது ஜெபத்தாலும் எப்
பொருளும் தூய்மையாக்கப்படும்.

### கிறிஸ்து இயேசுவின் நல்ல பணியாள்

6 இவற்றை நீ சகோதரருக்குக் கற்
பித்துவந்தால், நாம் நம்பும் கோட்பாட்
டிலும், நீ பின்பற்றி வந்த நல்ல போத
னையிலும் தேர்ச்சிபெற்று, கிறிஸ்து இயேசு
வின் நல்ல ஊழியனாய் இருப்பாய்.
7 உலகப் பற்றினை வளர்க்கும் கதைகளை
யும் பாட்டிகளின் கட்டுக்கதைகளையும்
வெறுத்துத் தள்ளு. இறைப்பற்றினை
வளர்க்கும் பயிற்சிகளில் பயின்றுவா.
8 உடற்பயிற்சி சிறிதளவு பயனுள்ளது
தான்; ஆனால், இறைப்பற்றோ எல்லா
வகையிலும் பயன்தரும்; இதுவே இம்மை
யிலும் மறுமையிலும் நாம் வாழ்வடை
வோம் என்கிற உறுதிப்பாட்டைத் தரும்.
9 அந்த வாழ்வை அடைவதற்காகத்தான்,
என்றுமுள்ள கடவுளே நமது நம்பிக்கை
என்றிருக்கும் நாம் பாடுபட்டு உழைத்து
வருகிறோம். அவரே எல்லா மனிதருக்கும்
சிறப்பாக மெய்யடியார்களுக்கும் மீட்பரா
யிருக்கிறார். 10 இது நம்பத்தக்கதும் மன
மார ஒப்புக்கொள்ளக் கூடியதுமான
வார்த்தை. 11 மேலே கூறியதற்கேற்ப
நடக்கும்படி கட்டளையிட்டு அவற்றைப்
போதித்துவா. 12 நீ இளைஞனாய் இருப்ப
தனால் எவனும் உன்னைத் தாழ்வாக மதி
யாதிருப்பானாக. பேச்சு, நடத்தை, அன்பு,

* 'பெண் திருப்பணியாளரும்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
4:12 1 கொரி. 16:11.

நம்பிக்கை, தூய்மை ஆகியவற்றில் நீ
மெய்யடியாருக்கு முன்மாதிரியாய் விளங்கு.
13 நான் அங்கே வரும்வரையில் சபை
யார் முன்னிலையில் வேதத்தைப் படிப்ப
திலும் அவர்களுக்கு அறிவுரை கூறுவதி
லும் போதிப்பதிலும் கவனம் செலுத்து.
14 சபையில் உரைக்கப்பட்ட இறைவாக்கு
களுக்கிசைய மூப்பர்கள் உன்மீது கைகளை
வைத்துத் திருப்பணியில் அமர்த்தின
போது, உனக்கு ஒரு தனி வரம் அரு
ளப்பட்டது. உன்னிடமிருக்கும் அந்த
வரத்தைப் பயன்படுத்தாமல் இருந்து
விடாதே. 15 இவை யாவற்றிலும்
கவனம் செலுத்து; இவற்றிலேயே ஈடுபட்
டிரு. அப்பொழுது நீ அடைந்துள்ள முன்
னேற்றம் யாவருக்கும் தெரியவரும்.
16 உன்னைப் பற்றியும் உன் போதனையைப்
பற்றியும் விழிப்பாயிரு; அவற்றில் நிலை
பெற்றிரு. இப்படிச் செய்வாயானால்,
நீயும் மீட்படைவாய்; உன் போதனைக்குச்
செவிகொடுப்போரையும் மீட்படையச்
செய்வாய்.

### சபைக் கண்காணிப்பு

5 முதியவராயிருப்பவரிடம் கடுமை
யாய் நடந்துகொள்ளாதே. அவ
ரைத் தந்தையென மதித்துப் பணிவுடன்
அறிவுரை கூறு. இளைஞரைத் தம்பிமாராக
வும், 2 வயது முதிர்ந்த பெண்களைத்
தாய்மாராகவும் கருதி அவர்களுக்கு அறி
வுரை கூறு. இளம் பெண்களைத் தூய
மனத்தோடு தங்கைமாராகக் கருதி அவர்
களுக்கு அறிவுரை கூறு. 3 ஆதரவற்றி
ருக்கும் கைம்பெண்களையே கைம்பெண்
களாகக் கொள்ள வேண்டும். 4 ஒரு கைம்
பெண்ணுக்குப் பிள்ளைகளோ பேரப்பிள்ளை
களோ இருந்தால், அப்பிள்ளைகள் தாங்
கள் கொண்டுள்ள இறைப்பற்றிற்கேற்பத்
தங்கள் குடும்பத்தினருக்குச் செய்ய வேண்
டியதை முதற்கடமையாகச் செய்து, பெற்
றோர் தங்களுக்குச் செய்த நன்மைக்குக்
கைம்மாறு அளிக்கக் கற்றுக்கொள்ளட்டும்.
இதுவே கடவுள் பார்வையில்
உகந்தது. 5 உண்மையிலேயே கைம்பெண்
எனக் கொள்ளத்தக்கவள் தன்னந்தனியே
இருப்பதால், அவள் கடவுளே தன் நம்
பிக்கை என்று அல்லும் பகலும் வேண்டு
தல் செய்வதிலும் ஜெபம் செய்வதிலும்
நிலைத்திருப்பாள். 6 ஒரு கைம்பெண்
உலக இன்பத்தில் மூழ்கிக் கிடப்பாளா
னால், அவள் நடைப்பிணமே. 7 கைம்
பெண்கள் தங்களிடம் எவரும் குற்றங்
காணாவகையில் இருக்க வேண்டுமென்று
நான் கூறியவாறு அவர்களுக்குக் கட்டளை
யிடு. 8 எவனாவது தன் உறவினரை,
குறிப்பாகத் தன் குடும்பத்தினரைப் பரா
மரியாதிருந்தால், அவன் ஆண்டவரைப்
பற்றும் நம்பிக்கையைத் துறந்தவனா
வான்; அந்த நம்பிக்கையே இல்லாதவனை
விடக் கேடுகெட்டவனாவான். 9 கைம்
பெண்ணாகப் பதிவு செய்யப்படுகிறவள்
அறுபது வயதுக்கு மேற்பட்டவளாயும் ஒரு
முறை மட்டும் திருமணம் புரிந்தவளா
யும் நற்செயல்கள் புரிந்தவளென நற்
சான்று பெற்றவளாயும் இருக்க வேண்டும்.
10 அவள் பிள்ளைகளை நன்றாக வளர்த்து
அன்னியரை உபசரித்து, கடவுளுக்குரிய
மக்களின் பாதங்களைக் கழுவி, துன்புறு
வோருக்கு உதவி செய்து, எவ்வகையான
நற்செயலையும் தளராத ஊக்கத்தோடு
செய்கிறவளாயும் இருக்க வேண்டும். 11 இள
மையான கைம்பெண்களைக் கைம்பெண்கள்
எனப் பதிவு செய்யாமல் விட்டுவிடு.
ஏனெனில், அவர்கள் கிறிஸ்துவினிட
மிருந்து தங்களைப் பிரிக்கக்கூடிய இச்
சைக்கு ஆளாகும்போது, மணம் செய்து
கொள்ள விரும்பி, 12 தாங்கள் முதலில்
கொடுத்த வாக்கை மீறுவார்களானால்,
அவர்கள் குற்றத் தீர்ப்புக்கு ஆளாவார்
கள். 13 அதுவுமல்லாமல், வீடு வீடாய்த்
திரிந்து சோம்பேறிகளாயிருப்பது அவர்
களுக்குப் பழக்கமாகிவிடும். சோம்பேறி
களாய் இருப்பது மட்டுமன்றி, தகாத
பேச்சுகளைப் பேசி வம்பளக்கிறவர்களாயும்
பிறர் காரியங்களில் தலையிடுகிறவர்களாயும்
இருப்பார்கள். 14 ஆகையால், இள
மையான கைம்பெண்கள் மீண்டும் மணம்
செய்துகொண்டு பிள்ளைகளைப் பெற்று,
குடும்பத்தை நடத்துகிறவர்களாயிருந்து,
தங்களைப்பற்றி எதிரி இழிவாகப் பேச
இடங்கொடாதிருக்க வேண்டும் என்பதே
என் விருப்பம். 15 இதற்குமுன் இவர்
களுள் சிலர் நெறிதவறிச் சாத்தான்
கையில் அகப்பட்டதுண்டு. 16 ஆண்டவரின்
அடியாளான ஒரு பெண்ணின் குடும்
பத்தில் கைம்பெண்கள் இருந்தால், அப்
பெண்ணே அவர்களுக்கு ஆதரவு அளிக்
கட்டும். திருச்சபைமீது சுமத்தப்பட்டி
ருக்கும் அச்சுமையை நீக்கிவிட வேண்டும்.
அப்பொழுது உண்மையிலேயே கைம்
பெண்கள் எனக் கொள்ளத்தக்கவர்களுக்
குத் திருச்சபை ஆதரவளிக்க முடியும்.

17 சபைகளை நன்றாக நடத்தும் மூப்பர்
கள், சிறப்பாகத் தெய்வ வார்த்தையை
அறிவிப்பதிலும் போதிப்பதிலும் ஈடுபட்டு
உழைப்பவர்கள் இருமடங்கு ஊதியத்
திற்கு உரியவர்களாக எண்ணப்பட வேண்
டும். 18 ஏனெனில், ''போரடிக்கும் மாட்
டின் வாயைக் கட்டாதே'' என்றும்,
''வேலை செய்பவன் கூலிக்கு உரியவன்''
என்றும் வேதம் கூறுகிறது. 19 ஒரு மூப்
பர்மீது கொண்டு வரப்படும் குற்றச்
சாட்டை இரண்டு மூன்று பேரின் சாட்சியம்

**5:18** உபா. 25;4; மத். 10:10; லூக். 10:7. **5:19** உபா. 17:6; 19:15.

இருந்தாலன்றி ஏற்றுக்கொள்ளாதே.
20 பாவம் செய்கிறவர்களை, மற்றவர்
களுக்கும் அச்சம் உண்டாகும்படி, எல்
லார் முன்னிலையிலும் கடிந்துகொள்.
21 கடவுளின் முன்னிலையிலும் இயேசு
கிறிஸ்துவின் முன்னிலையிலும் தேர்ந்து
கொள்ளப்பட்ட தெய்வ தூதர்களின்
முன்னிலையிலும் உனக்கு வற்புறுத்திச்
சொல்லுகிறேன்: இவற்றைக் கடைப்
பிடித்து நட, விசாரணை செய்யுமுன் ஒரு
முடிவுக்கு வராதே, ஒரு பக்கம் சார்ந்து
எதையும் செய்யாதே. 22 தீர ஆராயா
மல் யார்மேலும் கைகளை வைத்துத்
திருப்பணியில் அமர்த்த வேண்டாம். அப்
படிச் செய்து மற்றவர்களுடைய பாவச்
செயல்களுக்குப் பொறுப்பாளி ஆகிவிடாதே.
உன்னை மாசற்றவனாய்க் காத்துக்கொள்.
23 தண்ணீர் மட்டும் குடிக்கும் வழக்
கத்தை நிறுத்திவிட்டு, உன் வயிற்றின்
நலத்திற்காகவும், உனக்கு அடிக்கடி ஏற்
படும் உடல்நலக் குறைவின்பொருட்டும்
கொஞ்சம் திராட்சை இரசமும் குடித்துவா.

24 சிலருடைய பாவங்கள் பட்டப்பகல்
போல வெளிப்படையானவை. தங்களுக்
குக் குற்றத் தீர்ப்பளிக்க வேண்டுமென்று
அந்தப் பாவங்கள்தாமே உரத்துக் கத்
திக்கொண்டிருக்கின்றன. வேறு சில
ருடைய பாவங்களோ பின்னரே தெரிய
வரும். 25 அவ்வாறே நற்செயல்களும்
வெளிப்படையானவையே. அவை வெளிப்
படையாக இல்லாவிடினும், அவற்றை
என்றுமே மறைத்து வைத்திருக்க முடியாது.

**6** அடிமைத்தனமாகிய நுகத்தடியைத்
தாங்கிக்கொண்டிருக்கும் யாவரும்
தம் முதலாளிகளுக்குத் தக்க மதிப்பை
அளிக்க வேண்டும். அப்பொழுது கடவு
ளின் திருப்பெயருக்கும் நம் போதனைக்கும்
பழிச்சொல் வராது. 2 அந்த முதலாளி
களும் மெய்யடியாராய் இருப்பார்களா
னால், அடிமைகள் அவர்களைச் சகோதரர்
கள்தானே என்று எண்ணி அவர்களைத்
தாழ்வாக மதிக்கக்கூடாது. தாங்கள்
செய்யும் நல்ல வேலையின் பலனைப் பெறு
கிற அவர்கள் மெய்யடியார்களும் அன்
பார்ந்தவர்களுமாய் இருப்பதால், இன்னும்
ஆர்வத்துடன் அவர்களுக்கு வேலை செய்ய
வேண்டும். இவற்றை நீ வற்புறுத்திப்
போதித்துவா.

## தெய்வ பக்தியும் போதுமென்ற மனமும்

3 யாராவது இவற்றிற்கு மாறாகப்
போதித்து நம் ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவின் நலம்தரும் வார்த்தைகளையும்
இறைப்பற்றுக்குரிய போதனையையும்
பின்பற்றாதிருக்கிறானென்றால் 4 அவன்
செருக்குள்ளவன், ஒன்றும் தெரியாதவன்;
தர்க்கங்களிலும் சொற்களைப்பற்றிய விவா
தங்களிலும் அளவுக்கு மிஞ்சிய விருப்பங்
கொண்டவன். இவற்றினின்று பொறாமை,
சண்டை, பழிச்சொல், கீழ்த்தரமான
ஐயம், ஓயாச் சச்சரவு ஆகியவை
பிறக்கின்றன. 5 இவை சத்தியத்தை
இழந்ததோடு தீய மனத்தைக் கொண்ட
வராயும் இருப்பவர்களிடையே காணப்படு
பவை. இவர்கள் இறைப்பற்று என்பது
ஊதியம் பெறுவதற்கான வழி என்று
கருதுகிறார்கள். 6 இறைப்பற்று மிகுந்த
ஊதியம் தரும் என்பது உண்மைதான்.
ஆனால், அது போதுமென்ற மனம் உள்ள
வனுக்கே அதைத் தரும். 7 உலகத்திற்கு
நாம் ஒன்றையும் கொண்டு வந்ததில்லை;
உலகத்தை விட்டு நாம் ஒன்றையும்
கொண்டுபோகவும் முடியாது. 8 எனவே,
உணவும் உடையும் நமக்கு இருந்தால்,
அதுவே நமக்குப் போதும். 9 செல்வம் சேர்க்க
விரும்புகிறவர்கள் சோதனையாகிய
கண்ணியில் சிக்கிக்கொள்கிறார்கள்; மதி
கேடானவையும் கேடு விளைவிப்பவையுமான
பல்வேறு தீய விருப்பங்களில் மூழ்கிவிடு
கிறார்கள். இவை மனிதரைக் கேட்டிலும்
அழிவிலும் ஆழ்த்துபவை. 10 பண ஆசையே
எல்லாத் தீமைகளுக்கும் வேர். அந்த
ஆசையால் சிலர் நம்பிக்கைநெறியை
விட்டு விலகிப் பற்பல துன்பங்களைத்
தங்களுக்குத் தாங்களே வருவித்துக்
கொண்டவராய் இருக்கின்றனர்.

## வாழ்க்கையாகிய ஓட்டப்பந்தயம்

11 கடவுளின் தொண்டனாகிய நீயோ
இவற்றிற்குத் தப்பி ஓடி, நேர்மை, இறைப்
பற்று, உண்மை, அன்பு, பொறுமை,
சாந்தம் ஆகியவற்றையே நாடிச்செல்.
12 ஆண்டவரிடம் நம்பிக்கை கொண்டு
வாழும் வாழ்க்கையாகிய ஓட்டப் பந்தயத்
தில் நீ நன்றாய் ஓடி, என்றுமுள்ள மெய்
வாழ்வைப் பெற்றுக்கொள். பலர் முன்
னிலையில் அச்சமின்றி உன் நம்பிக்கையை
நீ வெளிப்படச் சொன்னபோது, இப்
பரிசை நீ பெற வேண்டுமென்றே கடவுள்
உன்னை அழைத்தார். 13 எல்லாவற்
றிற்கும் உயிரளிக்கிற கடவுளின் முன்
னிலையிலும், பொந்தியு பிலாத்துவின் எதிரில்
நின்று அச்சமின்றித் தம் நம்பிக்கையை
வெளிப்படத் தெரிவித்த கிறிஸ்துஇயேசுவின்
முன்னிலையிலும் உனக்குக் கட்டளை
யிடுகிறேன்: 14 நம் ஆண்டவராகிய
இயேசுகிறிஸ்து தோன்றி வரும் வரை
யிலும் நீ குற்றமோ குறைவோ காணப்
படாத வகையில் இந்தக் கட்டளைகளுக்குக்
கீழ்ப்படிந்து நட. 15 குறித்த காலத்தில்

6:13 யோ. 18:37.

கடவுள் அவரைத் தோன்றிவரச் செய்
வார். கடவுள் பேரின்பத்திற்கு ஊற்றானவர்,
அவர் ஒருவரே வேந்தர், அரசர்க்
கெல்லாம் அரசர், ஆண்டவன்மார்க்கெல்
லாம் ஆண்டவர். 16 அவர் ஒருவரே
சாவாமை உடையவர், எவரும் அணுக
முடியாத ஒளியில் உறைபவர்; எவனும்
அவரைக் கண்டதில்லை; காணவும் இய
லாது. அவருக்கே என்றென்றும் மாட்
சிமை! வல்லமை! ஆமேன்.

17 இவ்வுலகில் செல்வர்களாயிருப்பவர்
களுக்கு இவ்வாறு கட்டளையிடு: அவர்கள்
மேட்டிமை உடையவர்களாய் இருக்கலா
காது; நிலையற்ற செல்வத்தில் நம்பிக்கை
வைக்காமல், நம்முடைய பயனுக்கென்று
எல்லாவகையான நன்மைகளையும் தாராள
மாக அளிக்கும் கடவுளே தங்கள் நம்
பிக்கை என்றிருக்க வேண்டும். 18 நன்மை
யானதைச் செய்கிறவர்களாயும், நற்
செயல்களில் செல்வர்களாயும், தமக்குள்
ளதைப் பகிர்ந்தளிக்கிறவர்களாயும்,
தாராள மனப்பான்மை உடையவர்களா
யும் இருக்க வேண்டும். 19 இவ்வாறு அவர்
கள் வருங்காலத்திற்கென்று நல்ல மூல
தனத்தைச் சேமித்து வைப்பதால், உண்
மையான வாழ்வைத் தங்களுக்குச் சொந்
தமாக்கிக்கொள்வார்கள்.

20 தீமோத்தேயுவே, உன்னிடம் ஒப்பு
விக்கப்பட்டதைப் பாதுகாப்பாயாக.
உலகப் போக்கான வீண்பேச்சுகளுக்கும்
ஞானம் என்னும் தவறான பெயரைப்
பெற்றிருக்கும் கோட்பாட்டினுடைய முரண்
பாடான கருத்துகளுக்கும் செவிகொடாமல்
விலகியிரு. 21 அந்த ஞானத்தைப்
பெற்றிருப்பதாகக் காட்டிக்கொண்ட சிலர்
நாம் நம்பும் கோட்பாட்டைப் பின்பற்றாது
வழிதவறிச் சென்றிருக்கின்றனர்.

அருள் உங்களோடிருப்பதாக!

# பவுல் தீமோத்தேயுவுக்கு எழுதின இரண்டாம் கடிதம்

### வாழ்த்து

1 கிறிஸ்து இயேசுவோடு இணைந்திருப்
பவர்களுக்கு அருளப்படும் வாழ்
வைப் பற்றிய வாக்குறுதியை அறிவிக்கும்
படி கடவுளின் திருவுளத்தால் கிறிஸ்து
இயேசுவின் திருத்தூதுவனாயிருக்கும் பவுல்,
2 அன்பார்ந்த தீமோத்தேயுவுக்கு எழுது
வதாவது: விண்ணுலகத் தந்தையாகிய
கடவுளிடமிருந்தும், நம்முடைய ஆண்ட
வராகிய கிறிஸ்து இயேசுவிடமிருந்தும்
உனக்கு அருளும் இரக்கமும் நலமும்
உண்டாகுக!

### அருட்செய்தியில் திடப்பற்றுடைமை

3 என் முன்னோர்கள் செய்ததுபோலக்
குற்றமற்ற மனச்சான்றோடு கடவுளுக்குச்
சேவை செய்துவரும் நான், அல்லும்
பகலும் என் ஜெபங்களில் உன்னை இடை
விடாமல் நினைவுகூர்ந்து அவருக்கு நன்றி
செலுத்துகிறேன். 4 நீ கண்ணீர் சிந்தியது
என் நினைவில் இருப்பதால், உன்னைக்
காண வேண்டுமென்னும் ஆவல் எனக்கு
இருக்கிறது; கண்டால் என் உள்ளம்
மகிழ்ச்சியால் நிரம்பும். 5 நீ ஆண்டவரிடம்
கொண்டிருக்கும் உள்ளார்ந்த நம்
பிக்கை என் நினைவிற்கு வருகிறது. முன்பு
உன் பாட்டி லோவிசாளிடமும், உன்
தாய் ஐனிக்கேயாளிடமும் அத்தகைய
நம்பிக்கை விளங்கிற்று. இப்போது அது
உன்னிடமும் விளங்குகிறதென்று திட்ட
மாகத் தெரிகிறது. 6 அதனாலேதான்
நான் இதை உனக்கு நினைப்பூட்டுகிறேன்:
உன்மீது நான் என் கைகளை வைத்து
உன்னைத் திருப்பணியில் அமர்த்தினபோது
உனக்கு அருளப்பட்ட வரத்தை நெருப்
புப்போல மீண்டும் ஒளிரச்செய். 7 கடவுள்
நமக்கு அருளியிருக்கும் ஆவி நம்மைக்
கோழைகளாக்கும் ஆவியன்று. வல்
லமையும் அன்பும் தன்னடக்கமும் உள்ளவர்
களாக்கும் ஆவியே. 8 ஆகையால், நீ
ஆண்டவரின் சாட்சியாயிருப்பதைப்பற்றி
வெட்கப்படாதே; அவர் பொருட்டுக்
கைதியாயிருக்கிற என்னைப்பற்றியும் வெட்
கப்படாதே. கடவுள் அளிக்கும் வல்ல
மையைக் கொண்டு அருட்செய்திக்காக
என்னோடு துன்பத்தைப் பொறுத்துக்
கொள். 9 அவர் நம்முடைய செயல்களை
முன்னிட்டன்று, தமது அருள் நிறைந்த
தீர்மானத்தை முன்னிட்டே நம்மை மீட்டு,
நாம் தமக்குரிய மக்களாயிருக்கும்படி
நம்மை அழைத்தார். கிறிஸ்து இயேசு
வோடு இணைக்கப்பட்டுள்ள நமக்கு இந்த
அருளானது உலகம் தோன்றுவதற்கு
முன்பே அருளப்பட்டது. 10 ஆனால், அது
நம்முடைய மீட்பராகிய கிறிஸ்து இயேசு
உலகில் தோன்றினதன் மூலம் இக்காலத்
தில் நம் கண்முன் வெளிப்படையாகி
யிருக்கிறது. அவர் மரணத்தை ஒழித்து,
மெய்வாழ்வையும் சாவா நிலையையும்
நாம் அருட்செய்தியின் மூலம் காணும்
படி செய்திருக்கிறார். 11 அந்த அருட்
செய்திக்கென்றே நான் ஓர் அறிவிப்பாள
னாகவும் திருத்தூதுவனாகவும் போதகனாக
வும் அமர்த்தப்பட்டேன். 12 ஆகையால்,
நான் இவ்வாறு பாடுற்று வருகிறேன்.
ஆனால், இதற்காக நான் வெட்கப்பட
வில்லை. ஏனென்றால், யாரிடம் நான் நம்
பிக்கை கொண்டிருக்கிறேனோ அவரை
நான் நன்கு அறிவேன். அவர் என்னிடம்
ஒப்புவித்துள்ளதை* இறுதித் தீர்ப்பு நாள்
வரையிலும் பாதுகாக்க அவர் வல்லவர்
என்கிற திடநம்பிக்கை எனக்கு இருக்கிறது.
13 என்னிடம் நீ கேட்டறிந்த நலந்தரும்
போதனையை நீ தரும் போதனைக்கு ஒரு
முன்மாதிரியாக வைத்துக்கொண்டு,கிறிஸ்து
இயேசுவோடு இணைந்திருப்பதால் பிறக்கும்
நம்பிக்கையையும் அன்பையும் கடைப்
பிடித்துவா. 14 உன்னிடம் ஒப்புவிக்கப்
பட்ட அந்தச் செல்வத்தை நமக்குள் குடி
கொண்டிருக்கும் தூய ஆவியானவரின்
துணைகொண்டு காத்துக்கொள்.

15 பிகெல்லு, எர்மொகேனேஸ் என்ப
வர்கள் உட்பட ஆசியாவிலுள்ள யாவரும்
என்னைக் கைவிட்டனர் என்பது உனக்குத்
தெரியும். 16 ஒநேசிப்போருவின் வீட்
டாருக்கு ஆண்டவர் இரங்கியருளுவாராக!
அவர், சோர்ந்திருந்த எனக்குப் பன்முறை
ஊக்கமூட்டினார். விலங்கிடப்பட்டிருக்கும்
என்னைப்பற்றி அவர் வெட்கப்படவில்லை.
17 அவர் ரோமாபுரிக்கு வந்திருந்தபோது
என்னை அக்கறையோடு தேடிக் கண்டு
பிடித்தார். 18 இறுதித் தீர்ப்பு நாளில்
அவர் ஆண்டவரது இரக்கத்தைப் பெறும்
படி ஆண்டவர் அருள்புரிவாராக! எபேசு
வில் அவர் ஆற்றின பணிகளெல்லாம்
உனக்கு நன்றாகத் தெரியும்.

### கிறிஸ்து இயேசுவின் நல்ல வீரன்

2 என் மகனே, கிறிஸ்து இயேசுவோடு
இணைக்கப்பட்டிருப்பதால் கிடைக்கும்

* 'நான் அவரிடம் ஒப்புவித்ததை' என்றும் மொழிபெயர்க்கலாம்.

1:5 திருத்தூது. 16:1. 1:11 1 தீமோ. 2:7.

அருளைக்கொண்டு நீ ஆற்றலுள்ளவனயிரு.
2 பலர் முன்னிலையில் நீ என்னிடம் கேட்
டறிந்த போதனைச் செல்வத்தை மற்ற
வர்களுக்குப் போதிக்கக்கூடியவர்களும் நம்
பிக்கைக்குரியவர்களுமான மனிதரிடம் ஒப்
படை. 3 கிறிஸ்து இயேசுவின் நல்ல
வீரனுய் மற்றெல்லாரோடும் சேர்ந்து நீயும்
துன்பத்தைப் பொறுத்துக்கொள். 4 போர்
முனையில் இருக்கும் எந்த வீரனும் படைத்
தலைவனுக்கு உகந்தவனுய் விளங்குவதற்
காக ஏனைய அலுவல்களில் ஈடுபடாதிருப்
பான். 5 மேலும், ஓட்டப்பந்தயத்தில்
ஒருவன் விதிகளின்படி ஓடினுலன்றி வெற்றி
மாலை சூட்டப்பெறமாட்டான். 6 பாடு
பட்டு உழைக்கும் குடியானவனுக்குத்தான்
விளைச்சலில் முதன்முதல் பங்கடையும்
உரிமை உண்டு. 7 நான் சொல்வதை
எண்ணிப்பார். எல்லாவற்றையும் புரிந்து
கொள்ளும் உணர்வை ஆண்டவர் உனக்குத்
தந்தருளுவார்.

8 இயேசுகிறிஸ்துவை மறவாதே.
நான் அறிவிக்கும் அருட்செய்தியில் உள்ள
படி அவர் இறந்தோரிடமிருந்து உயிரோ
டெழுப்பப்பட்டவர்; தாவீதின் மரபில்
தோன்றினவர். 9 இந்த அருட்செய்தியின்
பொருட்டே நான் துன்பம் அடைகிறேன்;
குற்றவாளியைப்போல விலங்கிடப்பட்
டிருக்கிறேன். ஆனுல், கடவுளின் வார்த்
தைக்கோ விலங்கு எதுவுமில்லை. 10 கிறிஸ்து
இயேசுவோடு இணைந்திருப்பதால்
கிடைக்கும் மீட்பையும் அதனேடு என்று
முள்ள மாட்சிமையையும் தேர்ந்துகொள்ளப்
பட்ட மற்றவர்களும் பெறும்படி, அவர்கள்
பொருட்டு நான் எல்லாவற்றையும்
பொறுத்துக்கொள்கிறேன்.

11 ''நாம் அவரோடு இறந்தோமாஞல்,
அவரோடு வாழ்வுமடைவோம்.
12 நாம் பாடுகளைப் பொறுத்துக்
கொள்வோமாஞல்,
அவரோடு ஆளுகையும்செய்வோம்.
நாம் அவரைத் தெரியாதென மறுதலிப்
போமாஞல்,
அவரும் நம்மைத் தெரியாதென
மறுதலிப்பார்.
13 நாம் நம்பத்தக்கவர்களாய் இல்லா
மற்போனுலும்,
அவர் நம்பத்தக்கவராகவே இருப்
பார்.
தமது தன்மைக்கு மாறுக அவரால்
செயலாற்ற முடியாது.''

இது நம்பத் தகுந்த வார்த்தை.

## கடவுளின் பணியாளாய் இருக்கத்தக்கவன் யார்?

14 நான் இப்போது கூறியவற்றை
அவர்களுக்கு நினைப்பூட்டு. சொற்களைப்
பற்றிய விவாதம் செய்யாதிருக்கும்படி
கடவுள் முன்னிலையில் அவர்களுக்கு வற்
புறுத்திச் சொல். அத்தகைய விவாதம்
ஒரு பயனும் தராது; கேட்போருக்குக்
கேடுதான் விளைவிக்கும். 15 நீ கடவுள்
பார்வையில் தக்கவன் எனக் காணப்படும்
வகையில் நடந்துகொள்ளக் கருத்துள்ள
வனுயிரு. நீ வெட்கப்படக் காரணம் ஏற்
படாதவாறு உன் ஊழியத்தைச் செய்.
சத்திய செய்தியைத் திரிபின்றிப்
போதித்துவா. 16 உலகப் போக்கான
வீண்பேச்சுகளை விட்டு விலகியிரு.
அப்படிப் பேசுகிறவர்கள் இறைப்பற்றின்
மையிலேதான் முன்னேற்றம் அடைவார்கள்.
17 அவர்கள் பேச்சுப் புற்றுநோய்போலப்
புரையோடிப் பரவும். இமெநேயுவும்
பிலேத்துவும் அப்படிப்பட்டவர்கள்.
18 உயிர்த்தெழுதல் ஏற்கெனவே நிகழ்ந்து
விட்டது என்று அவர்கள் சொல்லிக்
கொண்டு, சத்தியத்தைப் பின்பற்ருது
வழிவிலகிச் சென்று சிலருடைய நம்பிக்
கையை நிலைகுலையச் செய்கிருர்கள்.
19 ஆனுல், கடவுள் நாட்டின அடிக்
கல்லோ உறுதியாய் நிலைத்து நிற்கிறது.
அதில், ''ஆண்டவர் தம்முடையவர்களை
அறிவார்'' என்றும், ''ஆண்டவருடைய
திருப்பெயரைச் சொல்லி வேண்டுதல்
செய்பவன் எவனும் நேர்மையற்றதை
விட்டு விலகி நிற்பானுக'' என்றும்
பொறிக்கப்பட்டிருக்கிறது. 20 ஒரு பெரிய
வீட்டில் தங்கப் பாண்டங்களும் வெள்ளிப்
பாண்டங்களும் மட்டுமல்ல, மரப்
பாண்டங்களும் மட்பாண்டங்களும் இருப்
பதுண்டு. அவற்றுள் சில மேலான வேலை
களுக்குப் பயன்படத்தக்கவை, சில தாழ்
வான வேலைகளுக்குப் பயன்படத்தக்கவை.
21 ஒருவன் மேற் சொல்லப்பட்ட குற்றங்
களினின்று விலகித் தன்னை மாசறக்
கழுவிக்கொள்வானுனுல், அவன் மேலான
தொரு வேலைக்குப் பயன்படத்தக்கதும்,
கடவுளுக்கென்று பிரித்து வைக்கப்பட்டது
மான பாண்டமாயிருப்பான்; வீட்டுத்தலை
வனுக்குப் பயனுள்ளதும் எந்த நல்ல
வேலைக்கும் ஏற்றதுமான பாண்டமாயிருப்
பான். 22 நீ இளமைப் பருவத்திற்குரிய
தீய விருப்பங்களுக்குத் தப்பி ஓடு; தூய
உள்ளத்தோடு ஆண்டவரைத் தொழுகிற
வர்களுடன் சேர்ந்து, நேர்மையையும் நம்
பிக்கையையும் அன்பையும் சமாதானத்
தையும் நாடிச்செல்; 23 அறிவிலா மூட
ஆராய்ச்சிகளை வெறுத்துத் தள்ளிவிடு.

2:12 மத். 10:33; லூக். 12:9.

அவை சண்டைகளைப் பிறப்பிக்கும் என்
பதை நீ அறிவாயல்லவா? 24 ஆண்ட
வருடைய அடியான் சண்டை செய்கிற
வனாய் இருக்கக்கூடாது. அவன் எல்லாரி
டமும் கனிவாக நடந்துகொள்கிற
வனும், போதிக்கும் திறமையுள்ளவனும்,
துன்பத்தைப் பொறுத்துக்கொள்கிறவனு
மாய் இருக்கவேண்டும். 25 அவன் தன்னை
எதிர்த்துப் பேசுகிறவர்களைச் சாந்தத்
தோடு கண்டித்துத் திருத்த வேண்டும்.
அப்பொழுது மனமாற்றமடைந்து சத்தி
யத்தை அறிந்துகொள்ளக் கடவுள் அவர்
களுக்கு வாய்ப்பு அளிக்கலாம். 26 அவர்
கள் பிசாசினால் ஆட்கொள்ளப்பட்டு அத
னுடைய விருப்பத்தை நிறைவேற்றிவந்
திருந்தபோதிலும், அதன் கண்ணியி
லிருந்து தப்பி, மீண்டும் மனத்தெளிவு
அடையக் கூடும்.

### கடைசிக் கால மக்களின் தன்மை

**3** மேலும், இதையும் தெரிந்துகொள்:
கடைசிக் காலத்தில் சூழ்நிலைகள்
கொடியனவாயிருக்கும். 2 அப்பொழுது
மனிதர் தன்னலம் பேணுவோர், பண
ஆசை பிடித்தோர், வீண் பெருமை கொள்
வோர், இறுமாப்புக் கொண்டோர், வசை
மொழி கூறுவோர், பெற்றோருக்கு அடங்
காதோர், நன்றிகெட்டோர், தூய்மையற்
றோர் என்று இவ்வாறெல்லாம் இருப்பர்.
3 இன்னும் அன்புணர்ச்சி இல்லாதவர்
களாயும், தணியாப் பகைமை உடைய
வர்களாயும், புறணி பேசுகிறவர்களாயும்,
தன்னடக்கமற்றவர்களாயும், கொடியவர்
களாயும், நல்லதை வெறுக்கிறவர்களா
யும் இருப்பார்கள். 4 நம்பிக்கைத் துரோ
கம், முரட்டுத்தனம், செருக்கு ஆகியவை
அவர்களிடம் மலிந்து காணப்படும். அவர்
கள் கடவுளையன்று, உலக இன்பங்
களையே விரும்புவார்கள்; 5 இறைப்பற்று
உடையவர்கள்போலத் தோன்றுவார்கள்;
ஆனால், அதன் வல்லமையையோ அவர்கள்
வாழ்க்கையில் சிறிதளவும் காண
முடியாது. இப்படிப்பட்டவர்களோடு
சேராதே. 6 இவர்களுள் சிலர் வீடு
வீடாகப் புகுந்து, மதிகெட்ட பெண்களைத்
தம் பக்கம் ஈர்த்துக்கொள்கின்றனர்.
அந்தப் பெண்கள் தங்கள் பாவச்சுமையால்
அழுத்தப்பட்டவர்கள்; பலவகையான தீய
விருப்பங்களால் ஆட்கொள்ளப்பட்டவர்
கள்; 7 ஓயாமல் படித்துக்கொண்டே இருப்
பவர்களாயினும், சத்தியத்தை ஒருபோதும்
அறிந்துகொள்ள முடியாதவர்கள். 8 அந்த
மனிதர்கள், யந்நேயும் யம்பிரேயும்
மோசேயை எதிர்த்து நின்றதுபோல, சத்
தியத்தை எதிர்த்து நிற்பவர்கள். இவர்
கள் தீய மனத்தினரும் நம்முடைய கோட்
பாடுகளில் தேர்ச்சி பெறாதவர்களுமாய்
இருக்கிறார்கள். 9 இவர்களது முயற்சி
விரைவிலேயே தோற்றுப்போகும். ஏனெ
னில், அந்த இருவருடைய மதிகேட்டைப்
போல இவர்களுடைய மதிகேடும் எல்லா
ருக்கும் தெளிவாகிவிடும்.

### இறுதி அறிவுரை

10 ஆனால், நீயோ என் போதனை,
நடத்தை, குறிக்கோள், நம்பிக்கை,
பொறுமை, அன்பு, சகிப்புத் தன்மை
ஆகியவற்றைப் பின்பற்றிவந்திருக்கிறாய்.
11 நான் துன்புறுத்தப்பட்டுப் பாடுகள்
அடைந்ததையும், குறிப்பாக அந்தியோ
கியா, இக்கோனியா, லீஸ்திரா ஊர்
களில் எனக்கு நேரிட்டதையும், அவற்றை
நான் எவ்வாறு பொறுத்துக்கொண்டேன்
என்பதையும் நீ கவனித்துவந்திருக்கிறாய்.
ஆண்டவர் இவை எல்லாவற்றினின்றும்
என்னை விடுவித்தார். 12 ஆம், கிறிஸ்து
இயேசுவின் அடியாராக அவரையே பற்
றிக்கொண்டு வாழ விரும்புகிற யாவரும்
துன்புறுத்தப்படுவர். 13 ஆனால், பொல்
லாங்கு செய்கிறவர்களும் எத்தர்களுமோ
இன்னும் மோசமான நிலையை நோக்
கியே முன்னேறிச் செல்வார்கள். அவர்
கள் வஞ்சிப்பார்கள், தாங்களும் வஞ்சிக்
கப்படுவார்கள். 14 நீ கற்று மெய்யென
உணர்ந்தவற்றில் நிலைத்து நில். அவற்றை
உனக்குப் போதித்தவர்கள் யாரென்பது
உனக்குத் தெரியுமல்லவா? 15 மேலும்,
உன் இளமை முதற்கொண்டே நீ திரு
நூல்களை அறிந்தவனாய் இருக்கிறாய் என்
பதும் உனக்குத் தெரியும். அவை உனக்கு
ஞானத்தை அளித்து, நீ கிறிஸ்து இயேசு
வினிடம் கொள்ளும் நம்பிக்கையின்மூலம்
மீட்படைவதற்கு உன்னை வழிநடத்தக்
கூடியவை. 16 வேத வாக்கியங்களெல்
லாம் தெய்வ ஆவியின் செயலாற்று
தலினால் அருளப்பட்டிருக்கின்றன. அவை
மக்களுக்குப் போதனை அளிப்பதற்கும்*
அவர்களைக் கண்டிப்பதற்கும், சீர்திருத்து
வதற்கும், நேர்மையான வாழ்க்கையில்
பயிற்றுவிப்பதற்கும் பயனுடையவை.
17 அவற்றால் கடவுளுடைய தொண்டன்
திறமை வாய்ந்தவனாகி, எந்த நற்செயலை
யும் செய்ய முழு ஆற்றலையும் பெறு
கிறான்.

**4** கடவுளின் முன்னிலையிலும், உயி
ருள்ளோருக்கும் இறந்தோருக்கும்
தீர்ப்பளிக்கப்போகும் கிறிஸ்து இயேசுவின்

* 'தெய்வ ஆவியின் செயலாற்றுதலினால் அருளப்பட்ட வேத வாக்கியங்களெல்லாம் மக்களுக்குப் போதனை அளிப்பதற்கும்....' என்றும் மொழிபெயர்க்கலாம்.

3:8 யாத். 7:11. 3;11 திருத்தூது 13:14—52; 14:1—7, 8—20.

முன்னிலையிலும், நான் கிறிஸ்துவின் வெளிப்
படையான வருகையின் பேரிலும் அவரது
ஆட்சியின் பேரிலும் ஆணையிட்டு உனக்குக்
கட்டளையிடுவதாவது: தெய்வ வார்த்
தையை அறிவி; 2 சூழ்நிலை பொருத்தமா
யிருந்தாலும் இல்லாவிட்டாலும் உன்
வேலையில் கண்ணுங்கருத்துமாயிரு. மிகுந்த
பொறுமையோடு போதித்துவா; தவறான
கொள்கையை மறுத்துக் கூறு; குற்றத்
தைக் கடிந்துரை; அறிவுரை கூறு.
3 ஏனெனில், ஒரு காலம் வரும். அப்
பொழுது மக்கள் நலந்தரும் போதனையை
கேட்கமாட்டார்கள்; அவர்கள் செவிக்கு
இன்பமானதை நாடி, தங்கள் சொந்த
விருப்பத்திற்கிசைந்த ஏராளமான போத
கர்களைத் திரட்டிக்கொள்வார்கள்.
4 அவர்கள் சத்தியத்திற்குச் செவி
கொடுக்க மறுத்து, கட்டுக்கதைகளுக்குச்
செவிசாய்ப்பார்கள். 5 ஆனால் நீயோ
எல்லாச் சமயங்களிலும் அறிவுத்தெளி
வுடையவனாயிரு; துன்பத்தைத் தாங்கிக்
கொள். அருட்செய்தியை அறிவிப்பதே
உன் வேலையாயிருக்கட்டும். உன் பணியை
முழுவதுமாக நிறைவேற்றிவா. 6 ஏனெ
னில், இப்போதே என் இரத்தம் பலி
யாக ஊற்றிப் படைக்கப்படுகிறது. நான்
பிரிந்து செல்லும் காலம் வந்துவிட்டது.
7 ஓட்டப்பந்தயத்தில் நன்றாக ஓடினேன்;
ஓட்டத்தைக் கடைசிவரை ஓடி முடித்தேன்;
நான் நம்பிக்கை வைத்திருந்த கோட்
பாட்டை வழுவுறாது காத்துக்கொண்
டேன். 8 இப்போது நேர்மையான வாழ்க்
கையின் பரிசாகிய வெற்றிமாலை எனக்காகக்
காத்திருக்கிறது. நீதிவழுவா நீதிபதி
யாகிய ஆண்டவர் இறுதி நாளில் அதை
எனக்குத் தந்தருளுவார்; எனக்கு மட்டு
மன்றி, அவர் தோன்றி வருவதை அன்
போடு எதிர்பார்க்கும் அனைவருக்குமே
அவ்வாறு தந்தருளுவார்.

### தனிமுறையான செய்தி

9 விரைவில் என்னிடம் வந்து சேரப்
பார். 10 தேமா இந்த உலகத்தின்மீது நாட்
டங்கொண்டு, என்னை விட்டுப் பிரிந்து
தெசலோனிக்கேயுக்குப் போய்விட்டான்.
கிரேஸ்கே கலாத்தியா நாட்டுக்கும், தீத்து
தல்மத்தியா நாட்டுக்கும் போய்விட்டார்
கள். 11 லூக்கா மட்டும் என்னுடன்
இருக்கிறார். மாற்குவை உன்னோடு கூட்டிக்
கொண்டு வா. திருப்பணியில் அவர்
எனக்கு உதவி செய்வார். 12 தீகிக்குவை
எபேசுவுக்கு அனுப்பிவிட்டேன். 13 துரோ
வாவில் கார்ப்புவினிடம் நான் விட்டுவந்த
மேலங்கியை நீ வரும்போது எடுத்துக்
கொண்டுவா; நூல்களையும், குறிப்பாகத்
தோல் ஏடுகளையும் கொண்டுவா. 14 கன்
னானகிய அலெக்சந்தர் எனக்கு மிகுந்த
தீமை செய்தான். அவனுடைய செய்கை
களுக்குத் தக்கபடி ஆண்டவர் அவனுக்குத்
தண்டனை அளிப்பார். 15 நீயும்
அவனைப்பற்றி எச்சரிக்கையாயிரு. அவன்
நம்முடைய வார்த்தைகளை வன்மையாக
எதிர்த்தான்.

16 நான் முதல் விசாரணையில் என்
வழக்கை எடுத்துச் சொன்னபோது, எனக்
குத் துணைநிற்க ஒருவனும் வரவில்லை.
எல்லாரும் என்னைக் கைவிட்டனர். அந்தக்
குற்றம் அவர்கள்மீது சுமராதிருப்ப
தாக. 17 ஆனால், ஆண்டவர் எனக்குத்
துணைநின்று, எல்லா நாட்டினரும் அருட்
செய்தியைக் கேட்கும்படி நான் அதை
அறிவித்து முடிக்க எனக்கு ஆற்றலளித்
தார். நான் சிங்கத்தின் வாயினின்று விடு
விக்கப்பட்டேன். 18 ஆண்டவர் எனக்கு
நேரிடும் எல்லாத் தீங்கினின்றும் என்னை
விடுவித்து, எனக்கு மீட்பளித்து என்னைத்
தமது விண்ணரசில் சேர்த்துக்கொள்
வார். அவருக்கே என்றென்றைக்கும்
மாட்சிமை! ஆமேன்.

### வாழ்த்துகள்

19 பிரிஸ்காள், ஆக்கிலா, ஒநேசிப்
போருவின் வீட்டார் ஆகியோருக்கு என்
வாழ்த்துகள். 20 எரஸ்து கொரிந்துவில்
தங்கிவிட்டார். துரோப்பீமு நோயுற்றி
ருந்ததால் அவரை மிலேத்துவில் விட்டு
வந்தேன். 21 மாரிக்காலத்திற்கு முன்
வந்து சேர்ப்பார். ஐபூலுவும் பூதேயுவும்
லீனுவும் கிலவுதியாளும் மற்ற எல்லாச்
சகோதரர்களும் உனக்கு வாழ்த்துக் கூறு
கிறார்கள்.
22 ஆண்டவர் உன்னோடு இருப்பாராக!
அருள் உங்களோடு இருப்பதாக!

4:14 சங். 62:12; ரோ. 2:6.

# பவுல் தீத்துவுக்கு எழுதின கடிதம்

## வாழ்த்து

1 கடவுளின் அடியானும், இயேசு
கிறிஸ்துவின் திருத்தூதுவனுமான
பவுலாகிய நான், என்னைப்போலக் கிறிஸ்
துவினிடம் நம்பிக்கை கொண்டு, உண்
மையாகவே என் மகனாய் விளங்கும் தீத்
துவுக்கு எழுதுவதாவது: 2 தந்தையாகிய
கடவுளிடமிருந்தும் நம்முடைய மீட்ப
ராகிய இயேசுகிறிஸ்துவிடமிருந்தும்
உனக்கு அருளும் நலமும் உண்டாகுக!

3 கடவுளால் தேர்ந்துகொள்ளப்பட்ட
வர்கள் கிறிஸ்துவினிடம் நம்பிக்கை கொள்
ளவும், அவர்கள் நம்முடைய கோட்பாட்
டிற்கிசைந்த சத்தியத்தை அறிந்து
கொள்ளவும், என்றுமுள்ள மெய்வாழ்வை
அவர்கள் எதிர்நோக்கியிருக்கவும் வேண்டு
மென்றே நான் திருத்தூதுவனாயிருக்கிறேன்.
4 இந்த மெய்வாழ்வை வாக்குத்
தவறாத கடவுள் ஆதிகாலத்திலேயே வாக்
களித்தார். இப்பொழுது உரிய காலத்தில்
அருட்செய்தியறிவிப்பின் மூலம் தம் வார்த்
தையை வெளிப்படுத்தியிருக்கிறார். இந்த
அருட்செய்தியறிவிப்பு நம் மீட்பராகிய
கடவுளின் கட்டளைப்படி என்னிடம் ஒப்
படைக்கப்பட்டிருக்கிறது.

## கிரேத்தாத் தீவில் செய்ய வேண்டிய வேலை

5 நீ கிரேத்தாத் தீவில் இன்னும் செய்ய
வேண்டிய ஒழுங்குகளைச் செய்து முடிப்ப
தற்காகவும், ஊர்தோறும் மூப்பர்களை
அமர்த்துவதற்காகவும் உன்னை நான்
அங்கே விட்டு வந்தேன். 6 நான் உனக்
குச் சொன்னவாறே, மூப்பராக அமர்த்
தப்படுகிறவர் எவரும் குற்றங்காண முடி
யாதவராயும் ஒரு முறை மட்டும் திரு
மணம் புரிந்தவராயும் இருக்க வேண்டும்.
அவருடைய பிள்ளைகள் கிறிஸ்துவினிடம்
நம்பிக்கை கொண்டவர்களாயும் கட்டுப்
பாட்டுக்கு அடங்குகிறவர்களாயும் இருக்க
வேண்டும்; ஒழுக்கமற்றவர்கள் என்று
பெயரெடுத்தவர்களாய் இருக்கக் கூடாது.
7 ஏனெனில், சபை மேற்பார்வையாளர்
கடவுளின் கண்காணிப்பாளராயிருப்பதால்
அவர் எவரும் குற்றங்காண முடியாத
வராய் இருக்க வேண்டும். அவர் பிடிவாத
முள்ளவராகவோ, மூர்க்கராகவோ, குடி
காரராகவோ, கலகக்காரராகவோ, இழி
வான முறையில் ஊதியம் தேடுகிறவரா
கவோ இருக்கலாகாது; 8 அன்னியரை
உபசரிக்கிறவராயும், நல்லதையே நாடு
கிறவராயும், தன்னடக்கமுடையவராயும்,
நேர்மையானவராயும், தூய்மையுள்ளவ
ராயும், தம்மைக் கட்டுப்படுத்திக்கொள்ளக்
கூடியவராயும் இருக்க வேண்டும். 9 அவர்
நலந்தரும் போதனையைக் கொண்டு ஊக்க
மளிக்கவும், அதை எதிர்த்துப் பேசுகிறவர்
களின் வாதத்துக்கு மறுப்புக்கூறவும் வல்ல
வராய் இருக்கும்படி, நமது உண்மை
யான போதனையை, அது கற்பிக்கப்பட்ட
படியே உறுதியாகப் பற்றிக்கொள்கிற
வராய் இருக்க வேண்டும். 10 ஏனெனில்,
பலர், குறிப்பாக யூதமார்க்கத்திலிருந்து
வந்தவர்கள் கட்டுப்பாட்டுக்கு அடங்காத
வர்களாயும், வீண்வாதம் செய்கிறவர்
களாயும், மக்களை ஏமாற்றி அவர்களைத்
தவறான வழியில் திருப்புகிறவர்களாயும்
இருக்கிறார்கள். 11 அவர்கள் வாயை
அடக்க வேண்டும். இழிவான முறையில்
ஊதியம் பெறுவதற்காக அவர்கள் தகாத
வற்றைச் சொல்லிக்கொடுத்து, குடும்பம்
குடும்பமாகச் சீர்குலையச் செய்கிறார்கள்.
12 கிரேத்தாத் தீவினரும், அந்நாட்டின
ராலேயே வருவதுரைக்கும் அறிஞர் என்று
கொள்ளப்பட்டவருமான ஒருவர்,

''கிரேத்தாத் தீவினர் ஓயாப்பொய்யர்,
அவர்கள் கொடிய காட்டுமிராண்டிகள்,
பெருந்தீனிச் சோம்பேறிகள்''

என்று சொல்லியிருக்கிறார். 13 இந்தக்
கூற்று உண்மையே. அவர்களுடைய
நிலைமை இவ்வாறு இருப்பதால், நீ அவர்
களைக் கடுமையாகக் கண்டிக்க வேண்டும்.
அவர்கள் கிறிஸ்துவைப்பற்றிப் பழுதற்ற
நம்பிக்கை உள்ளவர்களாயிருந்து,
14 யூதரின் கட்டுக்கதைகளுக்கும், சத்தி
யத்தை மறுத்துத் தள்ளுவோர் ஏற்படுத்தும்
விதிகளுக்கும் செவிசாய்க்காதபடி
நீ அப்படிச் செய்ய வேண்டும். 15 தூய
மனத்தினருக்கு எல்லாம் தூய்மையே.
கறைப்பிடித்த மனத்தினருக்கும் நம்பிக்கை
இல்லாதவர்களுக்கும் எதுவுமே தூய்மை
யாயிராது. அவர்கள் மனமும் மனச்
சான்றுங்கூட மாசு நிறைந்தவையாயிருக்கும்.
16 கடவுளை அறிந்திருப்பதாக அவர்கள்
வாயால் சொல்லுகிறார்கள்; ஆனால்,
அவர்களுடைய செய்கைகளே அதற்கு
மறுப்புக் கூறுகின்றன. அவர்கள் அரு
வருப்புக்குரியவர்கள், கீழ்ப்படியாதவர்கள்,
எந்த நற்செயலையும் செய்யத் தகுதி
யற்றவர்கள்.

2 எனவே, நீ அவர்களுக்கு நலந்தரும்
போதனைக்கடுத்தவற்றை எடுத்துக்
கூற வேண்டும். 2 வயதுமுதிர்ந்த ஆண்கள்
அறிவுத் தெளிவு, கண்ணியம், தன்னடக்கம்
ஆகியவை உடையவர்களாயும், கிறிஸ்
துவைப்பற்றும் நம்பிக்கையிலும் அன்பிலும்
பொறுமையிலும் பழுதற்றவர்களாயும்

1:4 2 கொரி. 8:23; கலா. 2:3; 2 தீமோ. 4:10. 1:6—9 1 தீமோ. 3:2—7.

இருக்கும்படி சொல். 3 அவ்வாறே,
வயதுமுதிர்ந்த பெண்களும் பயபக்திக்
கடுத்த ஒழுக்கம் உடையவர்களாயும்
புறணி பேசாதவர்களாயும் குடிப்பழக்கத்
திற்கு அடிமையாகாதவர்களாயும், நலமான
வற்றைப் போதிக்கிறவர்களாயும் இருக்
கும்படி சொல். 4 இவர்கள் அவ்வாறு
இருந்து, இளம்பெண்கள் தங்கள் கண
வரிடமும் பிள்ளைகளிடமும் அன்பு செலுத்து
கிறவர்களாயும், 5 தன்னடக்கமுள்ளவர்
களாயும், கற்புள்ளவர்களாயும், தங்கள்
வீட்டு வேலையைச் செய்கிறவர்களாயும்,
இரக்கமுள்ளவர்களாயும் இருக்கும்படி
அவர்களுக்கு அறிவு புகட்ட வேண்டும்.
இளம்பெண்கள் இவ்வாறு நடந்தால்
கடவுளின் வார்த்தைக்கு இழுக்கு ஏற்
படாது. 6 அவ்வாறே இளைஞராயிருக்கும்
ஆண்களும் தன்னடக்கமுள்ளவர்களாய்
இருக்கும்படி அறிவுரை கூறு. 7 நற்
செயல்கள் செய்வதில் எப்போதும் அவர்
களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்க
வேண்டியவன் நீயே! 8 நீ போதிக்கும்
போது வாய்மையும் கண்ணியமும் உள்ள
வனாய்க் காணப்பட வேண்டும். உன்னு
டைய பேச்சு எவரும் குறை கூற முடி
யாத பழுதற்ற பேச்சாய் இருக்கட்டும்.
அப்பொழுது எந்த எதிரியும் நம்மைப்
பற்றித் தீதானதொன்றும் பேச இடமில்
லாததால் வெட்கிப்போவான். 9 அடிமை
களாயிருப்பவர்கள் தங்கள் முதலாளி
களுக்கு எல்லாவற்றிலும் அடங்கி நடந்து
அவர்களுக்கு உகந்தவர்களாய் இருக்கு
மாறும், எதிர்த்துப் பேசாமலும், 10 சிறிய
களவுகூடச் செய்யாமலுமிருந்து, எப்
போதும் முழு நேர்மையைக் காட்டுமாறும்
அவர்களுக்கு அறிவுரை கூறு. அவர்கள்
இப்படி நடந்துகொண்டால், நம்மு
டைய மீட்பராகிய கடவுளின் போதனை
எல்லாவகையிலும் அழகுபெறும்.

11 இவ்வாறெல்லாம் நான் கூறுவதற்கு
ஆதாரம் இதுவே: எல்லா மனிதருக்கும்
மீட்பை அளிக்கும் இறையருள் தோன்றி
வந்துள்ளது. 12 அந்த அருளானது, நாம்
இறைப்பற்றின்மையையும் உலகத்திற்குரிய
தீய விருப்பங்களையும் விட்டொழித்து,
தன்னடக்கத்தோடும் நேர்மையோடும்
இறைப்பற்றோடும் இப்போதுள்ள உலகத்தில்
வாழும்படி பயிற்றுவிக்கிறது. 13 அவ்
வாறு பயிற்றுவிக்கப்படுகிற நாம் மகத்துவ
மிக்க நம் கடவுளும் மீட்பருமாகிய இயேசு
கிறிஸ்து மாட்சிமையோடு தோன்றி வரப்
போவதால்* கிடைக்கும் நற்பேற்றினை
எதிர்நோக்கிக் காத்துக்கொண்டிருக்
கிறோம். 14 அவர் நம்மை எல்லா அக்கிர
மத்தினின்றும் விடுவித்து, நாம் தமக்
குரிய சொந்த மக்களாயும், நற்செயல்
களில் ஆர்வமுள்ளவர்களாயும் இருக்கும்
படி நம்மை மாசறக் கழுவுவதற்காகத்
தம்மைத் தாமே நமக்காக ஒப்புக்கொடுத்
தார். 15 நீ இவற்றை உன் சபையா
ருக்கு எடுத்துரை; அறிவுரை கூறுவதை
யும் கண்டிப்பதையும் முழு அதிகாரத்
தோடு செய். உன்னை எவனும் தாழ்
வாக மதியாதிருப்பானாக.

### நன்னடத்தையை நினைப்பூட்டு

3 உன் சபையார், ஆட்சி செலுத்து
வோருக்கும் அதிகாரிகளுக்கும் அடங்
கிக் கீழ்ப்படியவும், எந்த நற்செயலையும்
செய்ய ஆயத்தமாயிருக்கவும் வேண்டும்.
2 அவர்கள் யாரையும் பழிக்காமலும்,
யாரோடும் சண்டையிடாமலும் இருந்து,
பொறுமையுள்ளவர்களாய்த் தங்கள் சாந்த
குணத்தை எல்லா மனிதருக்கும் எல்லா
வற்றிலும் காட்ட வேண்டும். இவற்றை
அவர்களுக்கு நினைப்பூட்டு.

3 ஏனெனில், நாமும் ஒரு காலத்தில்
மதிகேடராயும், கீழ்ப்படியாதவர்களாயும்,
வழிதவறி நடக்கிறவர்களாயும் இருந்
தோம்; பலவகையான தீயவிருப்பங்களுக்கும்
உலக இன்பங்களுக்கும் அடிமைப்
பட்டிருந்தோம்; பகைமை உணர்ச்சியும்
பொறாமையும் கொண்டவர்களாய் வாழ்ந்
தோம்; வெறுக்கத்தக்கவர்களாயும், ஒரு
வரையொருவர் பகைக்கிறவர்களாயும்
இருந்தோம். 4 ஆனால், நம் மீட்பராகிய
கடவுள் தமது பரிவையும் மனிதரிடம்
நாம் கொண்டுள்ள அன்பையும் வெளிப்
படுத்தினார். 5 அப்பொழுது அவர் நாம்
செய்த நீதியான செயல்களை முன்னிட்
டன்று, தமது இரக்கத்தை முன்னிட்டே
நம்மைத் தூய ஆவி அளிக்கிற பிறப்பிற்கும்
புத்துயிருக்கும் உரிய முழுக்கினால்
மீட்டுக்கொண்டார். 6 அந்த ஆவியை
அவர் நம் மீட்பராகிய இயேசுகிறிஸ்து
வின் மூலம் நம்மீது நிறைவாகப் பொழிந்
தருளினார். 7 நாம் கிறிஸ்துவின் அரு
ளால் கடவுளுக்கு ஏற்றவர்களென அவ
ரால் கொள்ளப்பட்டு, நாம் எதிர்நோக்கி
யிருக்கும் என்றுமுள்ள மெய்வாழ்வை
நமது உரிமைச் சொத்தாகப் பெற வேண்டு
மென்றே இப்படிச் செய்தார். 8 இது
உண்மையான வார்த்தை.

ஆகவே, கடவுளிடம் நம்பிக்கை கொண்
டிருக்கிறவர்கள் நற்செயல்களைச் செய்வதில்
கருத்தாயிருக்கும்படி நீ இவற்றை
யெல்லாம் வலியுறுத்திப் போதிக்க வேண்டு

* 'மகத்துவமிக்க கடவுளும் நம் மீட்பராகிய இயேசுகிறிஸ்துவும் மாட்சிமையோடு தோன்றி வரப்போவதால்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

**2:14.** யாத். 19;5; உபா. 4:20; 7:6; 14:2; 1 பேது. 2:9.

# பவுல் தீத்துவுக்கு எழுதின கடிதம்

## வாழ்த்து

1 கடவுளின் அடியானும், இயேசு
கிறிஸ்துவின் திருத்தூதுவனுமான
பவுலாகிய நான், என்னைப்போலக் கிறிஸ்
துவினிடம் நம்பிக்கை கொண்டு, உண்
மையாகவே என் மகனாய் விளங்கும் தீத்
துவுக்கு எழுதுவதாவது: 2 தந்தையாகிய
கடவுளிடமிருந்தும் நம்முடைய மீட்ப
ராகிய இயேசுகிறிஸ்துவிடமிருந்தும்
உனக்கு அருளும் நலமும் உண்டாகுக!

3 கடவுளால் தேர்ந்துகொள்ளப்பட்ட
வர்கள் கிறிஸ்துவினிடம் நம்பிக்கை கொள்
ளவும், அவர்கள் நம்முடைய கோட்பாட்
டிற்கிசைந்த சத்தியத்தை அறிந்து
கொள்ளவும், என்றுமுள்ள மெய்வாழ்வை
அவர்கள் எதிர்நோக்கியிருக்கவும் வேண்டு
மென்றே நான் திருத்தூதுவனாயிருக்கிறேன்.
4 இந்த மெய்வாழ்வை வாக்குத்
தவறாத கடவுள் ஆதிகாலத்திலேயே வாக்
களித்தார். இப்பொழுது உரிய காலத்தில்
அருட்செய்தியறிவிப்பின் மூலம் தம் வார்த்
தையை வெளிப்படுத்தியிருக்கிறார். இந்த
அருட்செய்தியறிவிப்பு நம் மீட்பராகிய
கடவுளின் கட்டளைப்படி என்னிடம் ஒப்
படைக்கப்பட்டிருக்கிறது.

## கிரேத்தாத் தீவில் செய்ய வேண்டிய வேலை

5 நீ கிரேத்தாத் தீவில் இன்னும் செய்ய
வேண்டிய ஒழுங்குகளைச் செய்து முடிப்ப
தற்காகவும், ஊர்தோறும் மூப்பர்களை
அமர்த்துவதற்காகவும் உன்னை நான்
அங்கே விட்டு வந்தேன். 6 நான் உனக்
குச் சொன்னவாறே, மூப்பராக அமர்த்
தப்படுகிறவர் எவரும் குற்றங்காண முடி
யாதவராயும் ஒரு முறை மட்டும் திரு
மணம் புரிந்தவராயும் இருக்க வேண்டும்.
அவருடைய பிள்ளைகள் கிறிஸ்துவினிடம்
நம்பிக்கை கொண்டவர்களாயும் கட்டுப்
பாட்டுக்கு அடங்குகிறவர்களாயும் இருக்க
வேண்டும்; ஒழுக்கமற்றவர்கள் என்று
பெயரெடுத்தவர்களாய் இருக்கக் கூடாது.
7 ஏனெனில், சபை மேற்பார்வையாளர்
கடவுளின் கண்காணிப்பாளராயிருப்பதால்
அவர் எவரும் குற்றங்காண முடியாத
வராய் இருக்க வேண்டும். அவர் பிடிவாத
முள்ளவராகவோ, மூர்க்கராகவோ, குடி
காரராகவோ, கலகக்காரராகவோ, இழி
வான முறையில் ஊதியம் தேடுகிறவரா
கவோ இருக்கலாகாது; 8 அன்னியரை
உபசரிக்கிறவராயும், நல்லதையே நாடு
கிறவராயும், தன்னடக்கமுடையவராயும்,
நேர்மையானவராயும், தூய்மையுள்ளவ
ராயும், தம்மைக் கட்டுப்படுத்திக்கொள்ளக்
கூடியவராயும் இருக்க வேண்டும். 9 அவர்
நலந்தரும் போதனையைக் கொண்டு ஊக்க
மளிக்கவும், அதை எதிர்த்துப் பேசுகிறவர்
களின் வாதத்துக்கு மறுப்புக்கூறவும் வல்ல
வராய் இருக்கும்படி, நமது உண்மை
யான போதனையை, அது கற்பிக்கப்பட்ட
படியே உறுதியாகப் பற்றிக்கொள்கிற
வராய் இருக்க வேண்டும். 10 ஏனெனில்,
பலர், குறிப்பாக யூதமார்க்கத்திலிருந்து
வந்தவர்கள் கட்டுப்பாட்டுக்கு அடங்காத
வர்களாயும், வீண்வாதம் செய்கிறவர்
களாயும், மக்களை ஏமாற்றி அவர்களைத்
தவறான வழியில் திருப்புகிறவர்களாயும்
இருக்கிறார்கள். 11 அவர்கள் வாயை
அடக்க வேண்டும். இழிவான முறையில்
ஊதியம் பெறுவதற்காக அவர்கள் தகாத
வற்றைச் சொல்லிக்கொடுத்து, குடும்பம்
குடும்பமாகச் சீர்குலையச் செய்கிறார்கள்.
12 கிரேத்தாத் தீவினரும், அந்நாட்டின
ராலேயே வருவதுரைக்கும் அறிஞர் என்று
கொள்ளப்பட்டவருமான ஒருவர்,

''கிரேத்தாத் தீவினர் ஓயாப்பொய்யர்,
அவர்கள் கொடிய காட்டுமிராண்டிகள்,
பெருந்தீனிச் சோம்பேறிகள்''

என்று சொல்லியிருக்கிறார். 13 இந்தக்
கூற்று உண்மையே. அவர்களுடைய
நிலைமை இவ்வாறு இருப்பதால், நீ அவர்
களைக் கடுமையாகக் கண்டிக்க வேண்டும்.
அவர்கள் கிறிஸ்துவைப்பற்றிப் பழுதற்ற
நம்பிக்கை உள்ளவர்களாயிருந்து,
14 யூதரின் கட்டுக்கதைகளுக்கும், சத்தி
யத்தை மறுத்துத் தள்ளுவோர் ஏற்படுத்தும்
விதிகளுக்கும் செவிசாய்க்காதபடி
நீ அப்படிச் செய்ய வேண்டும். 15 தூய
மனத்தினருக்கு எல்லாம் தூய்மையே.
கறைப்பிடித்த மனத்தினருக்கும் நம்பிக்கை
இல்லாதவர்களுக்கும் எதுவுமே தூய்மை
யாயிராது. அவர்கள் மனமும் மனச்
சான்றுங்கூட மாசு நிறைந்தவையாயிருக்கும்.
16 கடவுளை அறிந்திருப்பதாக அவர்கள்
வாயால் சொல்லுகிறார்கள்; ஆனால்,
அவர்களுடைய செய்கைகளே அதற்கு
மறுப்புக் கூறுகின்றன. அவர்கள் அரு
வருப்புக்குரியவர்கள், கீழ்ப்படியாதவர்கள்,
எந்த நற்செயலையும் செய்யத் தகுதி
யற்றவர்கள்.

2 எனவே, நீ அவர்களுக்கு நலந்தரும்
போதனைக்கடுத்தவற்றை எடுத்துக்
கூற வேண்டும். 2 வயதுமுதிர்ந்த ஆண்கள்
அறிவுத் தெளிவு, கண்ணியம், தன்னடக்கம்
ஆகியவை உடையவர்களாயும், கிறிஸ்
துவைப்பற்றும் நம்பிக்கையிலும் அன்பிலும்
பொறுமையிலும் பழுதற்றவர்களாயும்

1:4 2 கொரி. 8:23; கலா. 2:3; 2 தீமோ. 4:10. 1:6—9 1 தீமோ. 3:2—7.

இருக்கும்படி சொல். 3 அவ்வாறே,
வயதுமுதிர்ந்த பெண்களும் பயபக்திக்
கடுத்த ஒழுக்கம் உடையவர்களாயும்
புறணி பேசாதவர்களாயும் குடிப்பழக்கத்
திற்கு அடிமையாகாதவர்களாயும், நலமான
வற்றைப் போதிக்கிறவர்களாயும் இருக்
கும்படி சொல். 4 இவர்கள் அவ்வாறு
இருந்து, இளம்பெண்கள் தங்கள் கண
வரிடமும் பிள்ளைகளிடமும் அன்பு செலுத்து
கிறவர்களாயும், 5 தன்னடக்கமுள்ளவர்
களாயும், கற்புள்ளவர்களாயும், தங்கள்
வீட்டு வேலையைச் செய்கிறவர்களாயும்,
இரக்கமுள்ளவர்களாயும் இருக்கும்படி
அவர்களுக்கு அறிவு புகட்ட வேண்டும்.
இளம்பெண்கள் இவ்வாறு நடந்தால்
கடவுளின் வார்த்தைக்கு இழுக்கு ஏற்
படாது. 6 அவ்வாறே இளைஞராயிருக்கும்
ஆண்களும் தன்னடக்கமுள்ளவர்களாய்
இருக்கும்படி அறிவுரை கூறு. 7 நற்
செயல்கள் செய்வதில் எப்போதும் அவர்
களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்க
வேண்டியவன் நீயே! 8 நீ போதிக்கும்
போது வாய்மையும் கண்ணியமும் உள்ள
வனாய்க் காணப்பட வேண்டும். உன்னு
டைய பேச்சு எவரும் குறை கூற முடி
யாத பழுதற்ற பேச்சாய் இருக்கட்டும்.
அப்பொழுது எந்த எதிரியும் நம்மைப்
பற்றித் தீதானதொன்றும் பேச இடமில்
லாததால் வெட்கிப்போவான். 9 அடிமை
களாயிருப்பவர்கள் தங்கள் முதலாளி
களுக்கு எல்லாவற்றிலும் அடங்கி நடந்து
அவர்களுக்கு உகந்தவர்களாய் இருக்கு
மாறும், எதிர்த்துப் பேசாமலும், 10 சிறிய
களவுகூடச் செய்யாமலுமிருந்து, எப்
போதும் முழு நேர்மையைக் காட்டுமாறும்
அவர்களுக்கு அறிவுரை கூறு. அவர்கள்
இப்படி நடந்துகொண்டால், நம்மு
டைய மீட்பராகிய கடவுளின் போதனை
எல்லாவகையிலும் அழகுபெறும்.

11 இவ்வாறெல்லாம் நான் கூறுவதற்கு
ஆதாரம் இதுவே: எல்லா மனிதருக்கும்
மீட்பை அளிக்கும் இறையருள் தோன்றி
வந்துள்ளது. 12 அந்த அருளானது, நாம்
இறைப்பற்றின்மையையும் உலகத்திற்குரிய
தீய விருப்பங்களையும் விட்டொழித்து,
தன்னடக்கத்தோடும் நேர்மையோடும்
இறைப்பற்றோடும் இப்போதுள்ள உலகத்தில்
வாழும்படி பயிற்றுவிக்கிறது. 13 அவ்
வாறு பயிற்றுவிக்கப்படுகிற நாம் மகத்துவ
மிக்க நம் கடவுளும் மீட்பருமாகிய இயேசு
கிறிஸ்து மாட்சிமையோடு தோன்றி வரப்
போவதால்* கிடைக்கும் நற்பேற்றினை
எதிர்நோக்கிக் காத்துக்கொண்டிருக்
கிறோம். 14 அவர் நம்மை எல்லா அக்கிர
மத்தினின்றும் விடுவித்து, நாம் தமக்
குரிய சொந்த மக்களாயும், நற்செயல்
களில் ஆர்வமுள்ளவர்களாயும் இருக்கும்
படி நம்மை மாசறக் கழுவுவதற்காகத்
தம்மைத் தாமே நமக்காக ஒப்புக்கொடுத்
தார். 15 நீ இவற்றை உன் சபையா
ருக்கு எடுத்துரை; அறிவுரை கூறுவதை
யும் கண்டிப்பதையும் முழு அதிகாரத்
தோடு செய். உன்னை எவனும் தாழ்
வாக மதியாதிருப்பானாக.

### நன்னடத்தையை நினைப்பூட்டு

**3** உன் சபையார், ஆட்சி செலுத்து
வோருக்கும் அதிகாரிகளுக்கும் அடங்
கிக் கீழ்ப்படியவும், எந்த நற்செயலையும்
செய்ய ஆயத்தமாயிருக்கவும் வேண்டும்.
2 அவர்கள் யாரையும் பழிக்காமலும்,
யாரோடும் சண்டையிடாமலும் இருந்து,
பொறுமையுள்ளவர்களாய்த் தங்கள் சாந்த
குணத்தை எல்லா மனிதருக்கும் எல்லா
வற்றிலும் காட்ட வேண்டும். இவற்றை
அவர்களுக்கு நினைப்பூட்டு.

3 ஏனெனில், நாமும் ஒரு காலத்தில்
மதிகேடராயும், கீழ்ப்படியாதவர்களாயும்,
வழிதவறி நடக்கிறவர்களாயும் இருந்
தோம்; பலவகையான தீயவிருப்பங்களுக்கும்
உலக இன்பங்களுக்கும் அடிமைப்
பட்டிருந்தோம்; பகைமை உணர்ச்சியும்
பொறாமையும் கொண்டவர்களாய் வாழ்ந்
தோம்; வெறுக்கத்தக்கவர்களாயும், ஒரு
வரையொருவர் பகைக்கிறவர்களாயும்
இருந்தோம். 4 ஆனால், நம் மீட்பராகிய
கடவுள் தமது பரிவையும் மனிதரிடம்
நாம் கொண்டுள்ள அன்பையும் வெளிப்
படுத்தினார். 5 அப்பொழுது அவர் நாம்
செய்த நீதியான செயல்களை முன்னிட்
டன்று, தமது இரக்கத்தை முன்னிட்டே
நம்மைத் தூய ஆவி அளிக்கிற பிறப்பிற்கும்
புத்துயிருக்கும் உரிய முழுக்கினால்
மீட்டுக்கொண்டார். 6 அந்த ஆவியை
அவர் நம் மீட்பராகிய இயேசுகிறிஸ்து
வின் மூலம் நம்மீது நிறைவாகப் பொழிந்
தருளினார். 7 நாம் கிறிஸ்துவின் அரு
ளால் கடவுளுக்கு ஏற்றவர்களென அவ
ரால் கொள்ளப்பட்டு, நாம் எதிர்நோக்கி
யிருக்கும் என்றுமுள்ள மெய்வாழ்வை
நமது உரிமைச் சொத்தாகப் பெற வேண்டு
மென்றே இப்படிச் செய்தார். 8 இது
உண்மையான வார்த்தை.

ஆகவே, கடவுளிடம் நம்பிக்கை கொண்
டிருக்கிறவர்கள் நற்செயல்களைச் செய்வதில்
கருத்தாயிருக்கும்படி நீ இவற்றை
யெல்லாம் வலியுறுத்திப் போதிக்க வேண்டு

* 'மகத்துவமிக்க கடவுளும் நம் மீட்பராகிய இயேசுகிறிஸ்துவும் மாட்சிமையோடு தோன்றி வரப்போவதால்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
2:14. யாத். 19;5; உபா. 4:20; 7:6; 14:2; 1 பேது. 2:9.

மென்று விரும்புகிறேன். அத்தகைய
செயல்களே சிறந்தவை, மனிதருக்குப்
பயன்படுபவை. 9 மூடத்தனமான தர்க்
கங்கள், மூதாதையர் வரலாற்றைக் குறித்த
ஆராய்ச்சிகள், சண்டைகள், நீதிச்சட்டத்
தைப்பற்றிய வாக்குவாதங்கள் ஆகிய
வற்றை விட்டு விலகியிரு; இவை பயனற்
றவை, வீணானவை. 10 சபையில் பிரிவினை
உண்டாக்குகிறவனை ஒருமுறை,
தேவைப்படுமானால் இன்னொருமுறை எச்
சரித்தபின் அவனோடு எவ்வகைத் தொடர்பும்
வைத்துக்கொள்ளாதே. 11 ஏனெ
னில், அப்படிப்பட்டவன் கோணலான
மனத்தினன்; தன்னைத்தானே தண்டனைத்
தீர்ப்புக்கு ஆளாக்கிக்கொள்ளும் பாவி;
இது உனக்குத் தெரியும்.

### இறுதியுரையும் வாழ்த்தும்

12 அர்த்தெமாவையாவது தீகிக்குவை
யாவது நான் உன்னிடம் அனுப்பும்
போது, கூடுமானால் நீ நிக்கொப்போலி
நகருக்கு என்னிடம் வந்து சேர். ஏனெ
னில், நான் மாரிக்காலத்தில் அங்கே
தங்கியிருக்கத் தீர்மானித்திருக்கிறேன்.
13 சட்ட அறிஞராகிய சேனாவையும் அப்
பொல்லோவையும் விரைவில் புறப்படச்
செய்; அவர்களுக்கு யாதொரு குறையும்
இல்லாதபடி பார்த்து அனுப்பு. 14 நம்
மைச் சேர்ந்தவர்களும் பயனற்றவர்களாய்
இராதபடி நற்செயல்களைச் செய்து, பிற
ருடைய தேவைகளைக் கவனித்து அவர்
களுக்கு உதவி செய்யக் கற்றுக்கொள்ள
வேண்டும்.

15 என்னோடு இருக்கிற யாவரும்
உனக்கு வாழ்த்துக் கூறுகின்றனர். ஆண்
டவரிடம் நம்பிக்கை கொண்டுள்ள நம்
நண்பர்களுக்கு என் வாழ்த்துகளைக் கூறு.

அருள் உங்கள் அனைவரோடும் இருப்ப
தாக!

# பவுல் பிலேமோனுக்கு எழுதின கடிதம்

## வாழ்த்து

கிறிஸ்து இயேசுவின் பொருட்டுக் கைதி
யாயிருக்கும் பவுல், சகோதரனாகிய தீமோத்
தேயு ஆகிய நாங்கள் எங்களுக்கு அன்
பார்ந்தவரும் எங்கள் உடன் ஊழியரு
மான பிலேமோனுக்கும், 2 சகோதரி அப்பி
யாளுக்கும், எங்களுடைய உடன் போர்
வீரர் அர்க்கிப்பாவுக்கும்,பிலேமோன் வீட்டில்
கூடும் சபையாருக்கும் எழுதுவதா
வது: 3 நம்முடைய தந்தையாகிய கட
வுளிடமிருந்தும், ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவிடமிருந்தும் உங்களுக்கு அருளும்
நலமும் உண்டாகுக!

## பிலேமோனுடைய அன்பும் நம்பிக்கையும்

4 நான் சேவிக்கும் கடவுளிடம் வேண்டு
தல் செய்யும்போது உம்மைக் குறிப்பிட்டு
உமக்காக அவருக்கு என்றும் நன்றி
செலுத்திவருகிறேன். 5 ஏனெனில், நீர்
ஆண்டவராகிய இயேசுவினிடம் கொண்
டுள்ள நம்பிக்கையையும், கடவுளுக்குரிய
மக்கள் அனைவரிடமும் நீர் காட்டும் அன்
பையும்பற்றி நான் கேள்விப்பட்டிருக்
கிறேன். 6 கடவுளால் நமக்கு ஏற்கெனவே
அருளப்பட்ட நன்மைகள் நம்மைக் கிறிஸ்து
வோடு இன்னும் நெருக்கமாக இணைக்கக்
கூடியவை. அவரைப்பற்றும் நம்பிக்கை
யினால் நீர் எங்களோடு கொண்டிருக்கும்
நல்லுறவின் மூலம் அந்த நன்மைகள்
யாவும் எத்துணை மேன்மையானவை
என்று நீர் தெளிவுற உணர்ந்துகொள்
ளும்படி அருள்புரியுமாறு நான்
கடவுளிடம் வேண்டுதல் செய்கிறேன்.
7 சகோதரனே, கடவுளுக்குரிய மக்களின்
உள்ளம் உமது அன்பினால் புத்துயிர் பெற்
றிருப்பதால், நான் பெருமகிழ்ச்சியும்
ஊக்கமும் அடைகிறேன்.

## ஒநேசிமு என்பவனுக்காக வேண்டிக்கொள்ளுதல்

8 எனவே, கிறிஸ்து இயேசுவின் தூது
வனும் அவர் பொருட்டு இப்போது
கைதியாயிருக்கிறவனுமான பவுலாகிய
நான், 9 நீர் செய்ய வேண்டியதை உமக்குக்
கட்டளையிடக் கிறிஸ்துவோடு இணைக்
கப்பட்டிருக்கும் நிலையில் எனக்கு முழு
உரிமை உண்டெனினும், நான் அப்படிச்
செய்யாமல் அன்பை முன்னிட்டு உம்மிடம்
ஒரு வேண்டுகோள் செய்கிறேன்.
10 என் மகனாகிய ஒநேசிமு* என்பவனுக்
காக இந்த வேண்டுகோள் செய்கிறேன்.
நான் கைதியாயிருக்கையில் ஆன்மீக முறை
யில் நான் அவனுக்குத் தந்தையானேன்.
11 முன்பு அவனால் உமக்குப் பயன் ஒன்று
மில்லை. ஆனால், இப்போதோ அவனால்
உமக்கும் எனக்கும் மிகுந்த பயனுண்டு.
12 அவனை உம்மிடம் திருப்பி அனுப்பு
கிறேன். அவனை அனுப்புவது என் உள்ளத்
தையே பிய்த்தெடுத்து அனுப்புவது போலி
ருக்கிறது. 13 அருட்செய்தியின் பொருட்டுக்
கைதியாயிருக்கும் இந்த நிலையில் உமது
பெயரால் எனக்குப் பணிவிடை செய்யும்
படி அவனை என்னிடம் நிறுத்திக்கொள்ள
விரும்பினேன். 14 ஆனால், உம்முடைய
உதவி, கட்டாயத்தினாலன்று மனமாரச்
செய்யப்படுவதாய் இருக்க வேண்டும்.
ஆகவே, நீர் இசைந்தாலன்றி எதையும்
செய்ய எனக்கு மனமில்லை. 15 அவன்
உம்மை விட்டுச் சிறிதுகாலம் பிரிந்திருந்
தது, அவன் என்றுமே பிரியாத நிலையில்
உம்மோடு இருக்க வேண்டும் என்பதற்கா
கவே என்று நினைக்கிறேன். 16 இப்போது
நீர் அவனை அடிமையாகவன்று, அடிமை
யைவிட மேலானவனாக, அதாவது, உம்
முடைய அன்பார்ந்த சகோதரனாக ஏற்
றுக்கொள்ளும். அவன் எனக்கு மிகவும்
அன்பார்ந்தவனாயிருக்கிறான். உமக்கு அவன்
உலக வழக்கின்படியும், ஆண்டவரால்
உண்டான உறவின்படியும் இன்னும் எவ்வ
ளவோ மேலாக அன்பார்ந்தவனாயிருப்பா
னல்லவா!

17 எனவே, நீர் என்னை உம்முடைய
கூட்டாளியாகக் கருதினால், என்னை ஏற்
றுக்கொள்வதுபோல அவனையும் ஏற்றுக்
கொள்ளும். 18 அவன் ஏதாவது தவறு
செய்திருந்தால் அல்லது உமக்குக் கடன்
பட்டிருந்தால், அது என் கணக்கில் இருக்
கட்டும். 19 நானே அதற்கு ஈடு
செலுத்துவேன். இதோ, பவுலாகிய எனது
கையொப்பம். நீர் அடைந்திருக்கும்
நிலைமை என்னால்தான் உமக்கு வந்தது
என்பதை நான் உமக்குச் சொல்லத்
தேவையில்லை. 20 எனவே, சகோதரனே,
ஆண்டவரின் திருப்பெயரால் எனக்கு
இந்த உதவி செய்யும்; கிறிஸ்துவின் திருப்
பெயரால் என் உள்ளத்திற்குப் புத்துயி
ரளியும்.

21 என் சொல்லுக்கு நீர் இணங்குவீர்
என்கிற முழு நம்பிக்கையோடு இதை
எழுதுகிறேன். நான் கேட்பதற்கும் மிகுதி
யாகவே செய்வீர் என்பது எனக்குத் தெரியும்.
22 அல்லாமலும், உங்களுடைய
மன்றாட்டு காரணமாகக் கடவுள் என்னை
உங்களிடம் திரும்பவும் அனுப்பியருளுவார்.

* இப்பெயரின் பொருள் 'பயனுள்ளவன்' என்பது.
4 எபே. 1:15, 16; கொலோ. 1:3. 6 பிலி. 1:9—11; கொலோ. 1:9—11. 10 கொலோ. 4:9.

என்று நான் நம்புகிறபடியால், நான்
தங்குவதற்கு ஓர் இடத்தை ஏற்பாடு
செய்துவையும்.

23 கிறிஸ்து இயேசுவின் பொருட்டு
என் உடன் கைதியாயிருக்கிற எப்பாப்
பிராவும், 24 என் உடன் ஊழியர்களாகிய
மாற்கு, அரிஸ்தர்க்கு, தேமா, லூக்கா
ஆகியோரும் உமக்கு வாழ்த்துக் கூறு
கிறார்கள்.

25 ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவின்
அருள் உங்களோடிருப்பதாக!

# எபிரேயருக்கு எழுதப்பட்ட கடிதம்

## கடவுள் தம் மைந்தர் மூலமாக நம்மிடம் பேசியிருக்கிறார்

1 கடந்த காலத்தில் தம் வாக்கை
உரைப்போர் மூலமாக நம் மூதா
தையரிடம் சிறு சிறு அளவில் வெவ்வேறான
வகையில் பேசின கடவுள், 2 இந்த
யுகம் முடிவுறும் இக்காலத்தில் தமக்கு
மைந்தராயிருக்கும் ஒருவர் மூலமாக நம்
மிடம் பேசியிருக்கிறார்; அந்த மைந்தரை
எல்லாவற்றிற்கும் உரிமையாளராக ஏற்
படுத்தி, அவரைக் கொண்டே உலகங்கள்
அனைத்தையும் படைத்தார். 3 அந்த
மைந்தர் கடவுளின் மாட்சிமை வீசும் சுட
ரொளியாகவும் அவருடைய தன்மையின்
நேரான அச்சுப் பதிவாகவும் விளங்கி,
எல்லாவற்றையும் தமது வல்லமையான
சொல்லால் தாங்கி நடத்துகிறார். பாவக்
கறையை நீக்கும் வேலையைச் செய்து
முடித்தபின் அவர் விண்ணுலகத்தில்
மேன்மைமிக்க கடவுளின் வலப்பக்கத்தில்
அமர்ந்தார். 4 இவ்வாறாக அவர், எந்த
அளவுக்குத் தெய்வதூதர் பெற்றிருப்
பதைவிட மேலானதொரு பெயரை உரி
மையோடு பெற்றாரோ அந்த அளவுக்கு
அவர்களைவிட அவர் மேன்மை வாய்ந்த
வரானார்.

## திருமைந்தர் தெய்வதூதரைவிட மேன்மைவாய்ந்தவர்

5 கடவுள் தெய்வதூதர் யாரை
யாவது பார்த்து,
''நீர் என் மைந்தர்,
இன்று நான் உம்மைப் பெற்றெடுத்
தேன்''
என்று எப்போதாவது சொன்னதுண்டா?
அல்லது அவர்களுள் யாரைப்பற்றியாவது,
"நான் அவருக்குத் தந்தையாயிருப்பேன்,
அவர் எனக்கு மைந்தராயிருப்பார்''
என்று சொன்னதுண்டா? 6 மேலும்,
அவர் தம்முடைய முதற்பேறான இவரை
உலகத்திற்கு அனுப்பிவைத்தபோது,*
''கடவுளின் எல்லாத் தூதர்களும்
அவரைத் தொழுவார்களாக''
என்றார். 7 தெய்வ தூதரைப்பற்றிப்
பேசும்போது,
''தம்முடைய தூதரைக் காற்று
களாகவும்,
தம்முடைய பணியாளரை நெருப்புத்
தழலாகவும் செய்கிறார்''
என்று அவர் சொல்லியிருக்க, 8 தம்மு
டைய மைந்தரிடம் பேசும்போதோ,
''கடவுளே, உமது அரியணை என்
றென்றும் உள்ளது,
உமது ஆட்சியின் கோல் நேர்மையான
செங்கோல்.
9 நீர் நீதியை விரும்பினீர், அநீதியை
அருவருத்தீர்;
ஆகையால் கடவுள், உம்முடைய
கடவுள்தாமே,
உம்மை எண்ணெயால் அபிடேகம்
செய்து,
உம்முடைய தோழர்களைவிட உம்மை
மேம்பட்டவராக்கி, உம்மை மகிழ்
வித்தார்''
என்றும்,
10 ''ஆண்டவரே, நீர் தொடக்கத்
தில் மண்ணுலகிற்கு அடித்தளம்
போட்டீர்;
விண்ணுலகங்கள் உமது கையால்
உண்டாக்கப்பட்டவை;
11 அவை அழிந்துவிடும்.
நீரோ நிலைத்திருப்பீர்.
அவையெல்லாம் ஆடையைப்போலப்
பழமையாகிவிடும்;
12 ஒரு சால்வையைப்போல அவற்றை
நீர் சுருட்டிவிடுவீர்.
ஓர் ஆடையைப்போல அவை மாற்றப்
படும்;
ஆனால் நீரோ மாறாதவராயிருக்கிறீர்.
உம்முடைய ஆண்டுகளுக்கு முடிவே
இராது''
என்றும் சொல்லியிருக்கிறார். 13 மேலும்,
கடவுள் தெய்வதூதருள் யாரையாவது
பார்த்து,
''நான் உம்முடைய பகைவரை உமக்குப்
பாதப்படியாக்கி விடுகிறேன்; அதுவரை
நீர் என் வலப்பக்கத்தில் அமர்ந்திரும்''
என்று எப்போதாவது சொன்னதுண்டா?
14 தெய்வதூதர் அனைவரும் சேவை செய்
யும் ஆவிகள், மீட்பை உரிமைச் சொத்
தாகப் பெறப்போகிறவர்களின் நலனுக்
காகப் பணி செய்யும்படி அனுப்பப்படு
கிறவர்கள் அல்லவா?

## ஒப்பற்ற மீட்பு

2 ஆகையால், நாம் கேட்டறிந்த செய்
தியினின்று வழுவிப் போகாதிருக்கும்
படி, அதில் மிகுந்த கவனம் செலுத்த
வேண்டும். 2 ஏனெனில், தெய்வதூதர்
மூலமாகச் சொல்லப்பட்ட நீதிச்சட்டமே
கட்டுப்படுத்த வல்லதாயிருந்ததென்
றால், அதை மீறின எவனும், அதற்குக்

* 'அவர் தம்முடைய முதற்பேறான இவரை மீண்டும் உலகத்திற்கு அனுப்பிவைக்கும்போது' என்றும் மொழி பெயர்க்கலாம்.

1:5 சங். 2:7; 2 சாமு. 7:14; 1 வரலாறு. 17:13. 1:6 சங். 97:7. 1:7 சங். 104:4. 1:8, 9 சங். 45:6, 7. 1:10—12 சங். 102:25—27. 1:13 சங். 110:1.

கீழ்ப்படியாதிருந்த எவனும் தகுந்த தண்
டனை பெற்றானென்றால், 3 இத்தகைய
ஒப்பற்ற மீட்பைப்பற்றி நாம் கவலை
யற்றிருப்போமானால், தண்டனையிலிருந்து
எப்படித் தப்ப முடியும்? இந்த மீட்பை
முதன்முதல் அறிவித்தவர் ஆண்டவரே.
அதைக் கேட்டவர்களும் அதன் உண்
மையை நமக்கு உறுதிப்படுத்தியுள்ளார்கள்.
4 கடவுள்தாமும், அரிய செயல்கள்
அற்புதங்கள் பலவகைப்பட்ட வல்லமைச்
செயல்கள் ஆகியவற்றின் மூலமும்,
தம்முடைய திருவுளப்படி தூய ஆவியின்
வரங்களைப் பகிர்ந்தளித்ததன் மூலமும்
அதன் உண்மைக்குச் சான்று காட்டி
யுள்ளார்.

## நம்முடைய மீட்பர்

5 வரப்போகிற உலகத்தைக் குறித்து
நாங்கள் பேசுகிறோம். அவ்வுலகத்தைத்
தெய்வதூதருக்குக் கீழ்ப்படுத்த வேண்டு
மென்பது கடவுளின் தீர்மானமன்று.
6 இதை வலியுறுத்திக் கூறும் வகையில்
எங்கோ ஒருவர் இவ்வாறு கூறியிருக்
கிறார்:

''மனிதனை நீர் நினைவில் கொள்வதற்கு
அவன் யார்?
மனிதனுடைய மைந்தனை நீர் கண்
ணோக்குவதற்கு அவன் யார்?
7 அவனைச் சிறிது காலத்திற்கெனத்
தெய்வதூதரைவிடச் சிறியவனாக்கினீர்.
அவனுக்கு மாட்சிமையும் மேன்மையும்
அளித்து முடிசூட்டினீர்.*
8 யாவற்றையும் அவன் காலடிக்குக்
கீழ்ப்படுத்தினீர்.''

அனைத்தையும் அவர் மனிதனுக்குக் கீழ்ப்
படுத்தினார் என்பதால், எதையும் கீழ்ப்
படுத்தாமல் விட்டுவிடவில்லை என்றாகிறது.
இருந்தபோதிலும், யாவும் மனிதனுக்குக்
கீழ்ப்பட்டிருப்பதாக நாம் இதுவரையிலும்
காணவில்லை. 9 ஆனால் நாம் காண்பது
சிறிது காலத்திற்கெனத் தெய்வதூதரை
விடச் சிறியவராக்கப்பட்டிருந்த ஒரு
வரையே. இவர் இயேசுவே. இவர் பாடு
கள்பட்டு மரணமடைந்ததால், மாட்சி
மையும் புகழும் இவருக்கு முடியெனச்
சூட்டப்பட்டதையும் நாம் காண்கிறோம்.
இவை யாவற்றிலும் கடவுள் கொண்டிருந்த
அருள் நிறைந்த நோக்கம் யாதெனில்,
அவர் அடைந்த மரணம் எல்லா
ருக்கும் பயனளிக்கும் மரணமாயிருக்க
வேண்டும் என்பதே.
10 கடவுள் எல்லாவற்றையும் தமக்
கென்றும் தாமாகவும் உண்டாக்கினவர்.
புதல்வர் பலரைத் தம் மாட்சிமை நிலைக்
குள் கொண்டுவந்து சேர்க்கத் திட்டமிட்ட
அவர், அவர்கள் மீட்புப் பெறும்படி வழி
நடத்துபவரைப் பாடுகளின் மூலம் முழு
நிறைவுள்ளவராக்கியது பொருத்தமே.
11 தூய்மையாக்குகிற இந்த இயேசு,
தூய்மையாக்கப்படுகிற அவர்கள் ஆகிய
அனைவருக்கும் தந்தை ஒருவரே. இந்தக்
காரணத்தினாலேதான் அவர் அவர்களைச்
சகோதரர் என்றழைக்க வெட்கப்படுவ
தில்லை. 12 அதற்கேற்ப அவர்,

''உமது திருப்பெயரை என்
சகோதரருக்கு அறிவிப்பேன்;
சபை நடுவில் உம்மைத் துதித்துப்
பாடுவேன்''

என்று சொல்லியிருக்கிறார்.
13 மேலும்,

''நான் கடவுளிடம் நம்பிக்கையுடையவனா
யிருப்பேன்''

என்றும்,

''இதோ, நானும் கடவுள் எனக்களித்த
பிள்ளைகளும்''

என்றும் சொல்லியிருக்கிறார். 14 அந்தப்
பிள்ளைகள் ஊனும் இரத்தமும் உடைய
வர்களாயிருந்ததனால், அவரும் ஊனும்
இரத்தமும் உடையவராய் அவர்களைப்
போலானார்; மரணத்திற்குள்ளாக்க வல்ல
பிசாசானவனைத் தமது மரணத்தினால்
அழிக்கும் பொருட்டும், 15 மரணத்தைப்
பற்றிய அச்சத்தினால் வாழ்நாள் முழுதும்
அடிமைத்தனத்திற்கு உட்பட்டிருப்பவர்
கள் யாவரையும் விடுதலை செய்யும்
பொருட்டும் அப்படியானார். 16 ஏனெ
னில், நாம் அறிந்திருக்கிறபடி, அவர்
தெய்வதூதருக்கு உதவி செய்ய வர
வில்லை; ஆபிரகாமின் மரபினருக்கே உதவி
செய்ய வந்தார்.† 17 ஆகையால், கட
வுள்முன் செய்யும் சேவையில் அவர் இரக்
கமும் உண்மையுமுள்ள தலைமை ஆசாரிய
ராயிருந்து, மக்களின் பாவங்களைப் பரி
கரிப்பதற்காக, எல்லா வகையிலும் தம்
முடைய சகோதரரைப்போல ஆக வேண்
டியதாயிருந்தது. 18 அவர் தாமே சோதனைக்
குள்ளாகிப் பாடு அடைந்திருப்பதால்,
சோதிக்கப்படுகிறவர்களுக்கு உதவி செய்ய
அவர் வல்லவராயிருக்கிறார்.

## இயேசு மோசேயைவிட மேம்பட்டவர்

3 இப்படியிருப்பதால், கடவுளுக்கெனப்
பிரித்தெடுக்கப்பட்டு ஒருங்கே தெய்வ
அழைப்பைப் பெற்றுள்ள சகோதரர்களே,
நாம் வெளிப்படையாகப் பின்பற்றுகிற
நெறிக்குரிய திருத்தூதுவரும் தலைமை

* 'உம்முடைய கையால் உண்டாக்கப்பட்டவற்றின்மேல் அவனை அதிகாரியாக ஏற்படுத்தினீர்' என்பதைச் சேர்த்து வாசிப்பதும் பாடம்.
† 'அவர் தெய்வதூதரின் தன்மையை ஏற்கவில்லை; ஆபிரகாம் மரபினரின் தன்மையையே ஏற்றார்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
2:6—8 சங். 8:4—6. 2:12 சங். 22:22. 2:13 ஏசா. 8:17, 18.

ஆசாரியருமாயிருக்கிற இயேசுவைப் பாருங்
கள். 2 மோசே கடவுளின் குடும்பத்தார்
அனைவரிடையேயும் உண்மையுள்ளவராய்
ஊழியம் செய்ததுபோல, இவரும் தம்மை
நியமித்த கடவுளுக்கு உண்மையுள்ளவரா
யிருந்தார். 3 ஆனால், ஒரு குடும்பத்தைக்
கட்டி எழுப்புகிற தலைவன் அந்தக் குடும்
பத்தைவிட மிகுந்த மதிப்புப் பெறுவது
போல, இயேசுவும் மோசேயைவிட மிகுந்த
மேன்மை பெற உரிமையுள்ளவராக எண்
ணப்பட்டார். 4 ஏனெனில், ஒவ்வொரு
குடும்பத்திற்கும் கட்டி உருவாக்குகிற
ஒருவன் இருப்பதுபோல, எல்லாவற்றை
யும் படைத்து உருவாக்கினவர் ஒருவரே;
அவர் கடவுள்; 5 மோசே அவருடைய
குடும்பத்தார் அனைவரிடையேயும் உண்
மையுள்ளவராய் ஊழியம் செய்த பணி
யாளர். கடவுள் பின்னால் வெளிப்படுத்த
விருந்த காரியங்களுக்கு முன்னறிவிப்பான
சான்றுகளை அளிப்பதே அவருடைய பணி
யாயிருந்தது. 6 ஆனால் கிறிஸ்துவோ,
கடவுளுடைய குடும்பத்தார்மேல் அதி
காரம் செலுத்தும் மைந்தராயிருக்கிறார்.
நாமே அவருடைய குடும்பத்தார். நமக்
குள்ள துணிவையும் எதிர்காலத்தைப்பற்றிய
நம்பிக்கை தரும் பெருமகிழ்ச்சியையும்
விடாமல் பற்றிக்கொண்டு நிற்கும்
வரையில் அவ்வாறே இருப்போம்.

### கடவுளுடைய மக்கள் பெறும் ஓய்வு

7 தூய ஆவியானவர்,
''இன்று நீங்கள் அவருடைய குரலைக்
கேட்கிறீர்களென்றால்,
8 பாலைநிலத்தில் கிளர்ச்சி செய்து
கடவுளைச் சோதித்துப்பார்த்த நாளில்
நீங்கள் செய்ததுபோல, பிடிவாதங்
கொண்ட உள்ளத்தினராய் இராதீர்கள்.
9 அங்கே உங்கள் மூதாதையர் என்
னைச் சோதித்துப் பார்த்தனர்;
நாற்பது ஆண்டுகளாக என் செயல்
களையும் கவனித்தனர்.
10 ஆகையால் நான் அந்தத் தலை
முறைமீது சினங்கொண்டு,
'அவர்கள் எப்போதும் வழிதவறிச்
செல்லும் மனமுடையவர்கள்,
என் வழிகளை அவர்கள் அறிந்து
கொள்ளவில்லை' என்றேன்.
11 ஆகவே, 'நான் தரும் ஓய்வை
அவர்கள் அடையவே மாட்டார்கள்'
என்று
சினத்தோடு ஆணையிட்டுக் கூறினேன்''
என்று சொல்லுகிறார்.
12 சகோதரர்களே, நீங்கள் எச்சரிக்கை
யாயிருங்கள். என்றுமுள்ள கடவுளை விட்டு
விலகிச் செல்லும் நம்பிக்கையற்ற பொல்
லாத உள்ளம் உங்களுள் எவனுக்கும்
இருக்கக் கூடாது. 13 உங்களுள் எவனும்
பாவத்தினால் வஞ்சிக்கப்பட்டுப் பிடிவாத
முள்ளவனாகிவிடாதபடி, ''இன்று'' என்று
சொல்லக்கூடிய நாள்கள் இருக்கும்வரை,
நாள்தோறும் ஒருவருக்கொருவர் அறி
வுரை கூறிவாருங்கள். 14 நாம் கிறிஸ்து
வின் உடன் ஊழியர்களாகிவிட்டோம்.
நாம் தொடக்க காலத்தில் கொண்டிருந்த
திடநம்பிக்கையை முடிவுமட்டும் விடா
மல் உறுதியாகப் பற்றிக்கொண்டிருப்போ
மானால் அவ்வாறே இருப்போம்.

15 ''இன்று நீங்கள் அவருடைய
குரலைக் கேட்கிறீர்களென்றால்,
கிளர்ச்சி செய்தபோது இருந்ததுபோல,
பிடிவாதங்கொண்ட உள்ளத்தினராய்
இராதீர்கள்''

என்று சொல்லியிருக்கிறதே. 16 அவர்
குரலைக் கேட்டும் கிளர்ச்சி செய்தவர்கள்
யார்? மோசேயின் தலைமையில் எகிப்தை
விட்டு வெளியேறினவர்கள் அனைவரும்
அல்லவா? 17 மேலும், அந்த நாற்பது ஆண்டு
களாக அவர் யார்மீது சினங்கொண்டிருந்
தார்? பாவம் செய்தவர்கள் மீதல்லவா?
அவர்கள் பாலைநிலத்திலேயே பிணங்களாக
விழுந்து கிடந்தார்கள். 18 ''நான் தரும்
ஓய்வை அவர்கள் அடையவே மாட்டார்
கள்'' என்று யாரைப்பற்றி அவர்
ஆணையிட்டுக் கூறினார்? கீழ்ப்படியாதவர்
களைப்பற்றியல்லவா? 19 எனவே, அவர்
களால் அதை அடைய முடியாமற்போன
தற்கு அவர்களுடைய நம்பிக்கையின்மை
தான் காரணம் என்பது தெரியவரு
கிறது.

4 கடவுள் தாம் அருளும் ஓய்வைத்
தம் மக்கள் அடைவார்கள் என்று
கூறின வாக்குறுதி மாறாமல் அப்படியே
இருக்கிறது. உங்களுள் எவனும் அதை
அடையத் தவறியவனாகக் காணப்படக்
கூடாது. ஆகையால் இதைக்குறித்து அச்
சத்தோடு நடந்துகொள்வோமாக. 2 ஏனெ
னில், நம் மூதாதையருக்கு அறிவிக்கப்பட்
டதுபோலவே நமக்கும் அருட்செய்தி
அறிவிக்கப்பட்டது. ஆனால், அவர்கள்
கேட்ட செய்தி அவர்களுக்குப் பலனளிக்க
வில்லை; ஏனெனில், அவர்கள் அதற்குச்
செவிசாய்த்தவர்களோடு சேர்ந்து அதில்
நம்பிக்கை வைக்கவில்லை.* 3 அந்த
ஓய்வை அடைகிறவர்கள் அந்தச் செய்தியில்
நம்பிக்கை வைக்கிறவர்களாகிய நாமே.
இந்த ஓய்வைக் குறித்துப் பேசுகையில்
அவர்,

* 'ஏனெனில், அவர்கள் அதைக் கேட்டபோது அதை நம்பிக்கையோடு ஏற்றுக்கொள்ளவில்லை' என்பது சில பிரதிகளின் பாடம்.

3:2 எண். 12:7. 3:7—11 சங். 95:7—11. 3:15 சங். 95:7, 8. 3:16—18 எண். 14:1—35. 4:3 ஆதி. 2:2.

''நீர் மெல்கிசேதேக்கின் மரபுவழியில்
வந்த
ஆசாரியராய் என்றைக்கும் இருப்பவர்''
என்று சொல்லியிருக்கிறார். 7 அவர் இவ்
வுலகில் வாழ்ந்த காலத்தில், தம்மை
மரணத்தினின்று காப்பாற்ற வல்லவரை
நோக்கி உரத்துக் கதறிக் கண்ணீர் சிந்தி,
அவர்முன் தம் வேண்டுதல்களையும் மன்
றாட்டுகளையும் படைத்தார். அவருடைய
பணிவடக்கத்தை முன்னிட்டுக் கடவுள்
அவருக்குச் செவிசாய்த்தார். 8 அவர்
திருமைந்தராயிருந்தும், பாடுகள்அடைந்தே
கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்டார். 9 அவர்
இவ்வாறு முழு நிறைவுள்ளவரானபின்,
தமக்குக் கீழ்ப்படிகிற அனைவருக்கும் முடி
வில்லா மீட்புநிலை அருளப்படுவதற்குக்
காரணரானார். 10 மெல்கிசேதேக்கின்
மரபுவழியில் வந்த தலைமை ஆசாரியர்
என்று கடவுள் அவருக்குப் பெயர்
சூட்டினார்.

### நெறியினின்று விலகாதிருக்க எச்சரிக்கை

11 மெல்கிசேதேக்கைப்பற்றி நாம்
சொல்லக்கூடிய காரியங்கள் பல உண்டு.
ஆனால், நீங்கள் அறிவு மழுங்கியவர்களாகி
விட்டதால், அவற்றை உங்களுக்கு விளக்
குவது கடினம். 12 இவ்வளவு காலத்திற்குள்
நீங்கள் போதகர்களாகியிருக்க வேண்டும்.
ஆனால் உங்களுக்குக் கடவுளின் வாய்
மொழிகளைப்பற்றிய முதற் பாடத்தையே
மறுபடியும் போதிப்பது இப்போது தேவை
யெனக் காணப்படுகிறது. நீங்கள் கெட்
டிப்பொருள் உணவையன்று, பாலுணவை
உண்ண வேண்டியவர்களாகிவிட்டீர்கள்.
13 பாலுணவை உண்பவன் ஒரு குழந்தை.
அவன் நன்னெறிப் போதனையைப்பற்றி
ஒன்றுமறியாதவன். 14 முதிர்ச்சி அடைந்த
வர்களுக்கு ஏற்றது கெட்டிப்பொருள்
உணவு. அவர்கள் நன்மை எது, தீமை
எது என்று பகுத்தறிவதற்கான ஆற்றல்
களைப் பயன்படுத்தப் பயிற்சி பெற்ற
வர்கள்.

**6** ஆகையால், கிறிஸ்துவைப்பற்றிய
போதனையின் தொடக்க நிலையி
லேயே நாம் நின்று கொண்டிராமல்,
முதிர்ச்சியடைய முன்னேறிச் செல்வோ
மாக. பயனற்ற செயல்களை விட்டுவிடும்
மனமாற்றத்தையடைதல், 2 கடவுளிடம்
கொள்ளும் நம்பிக்கை, சுத்திகரிப்புச்
சடங்குகளைப்பற்றிய போதனை, கைகளை
வைக்கும் சடங்கு, இறந்தோரின் உயிர்த்
தெழுதல், என்றும் மாறா இறுதித்தீர்ப்பு
ஆகியவற்றாலான அடித்தளத்தை மீண்டும்
ஒரு முறை இடாதிருப்போமாக. 3 கடவுள்
திருவுளங்கொள்வாரானால் இப்படித்
தான் முன்னேறிச் செல்வோம். 4 ஏனென்
றால், ஒருசமயம் ஒளிபெற்றவர்கள்,
கொள்கை துறப்பார்களானால், அவர்களை
மனமாற்றமடையச் செய்து முன்னிலைக்கு
மீண்டும் கொண்டு வருவது முடியாத
காரியமாகும். 5 அவர்கள் பரம ஈவை
அனுபவித்தவர்கள்; எல்லாரோடுங்கூடத்
தாங்களும் தூய ஆவியைப் பெற்றவர்
கள்; கடவுளின் நல்வாக்கைக் கேட்டு,
வரப்போகிற யுகத்தின் வல்லமைகளையும்
அனுபவித்தவர்கள். 6 ஆயினும், அவர்கள்
கொள்கை துறந்தார்கள். அதனால்
அவர்கள் கடவுளின் மைந்தரைத் தாங்
களே மறுபடியும் சிலுவையிலறைந்து
இழிவுபடுத்துகிறவர்களானார்கள். 7 ஒரு
நிலம் தன்மீது அவ்வப்போது பெய்யும்
மழைநீரை உறிஞ்சி, தன்னில் பயிர் செய்
கிறவர்களுக்குப் பயனுள்ளதான விளைச்
சலைத் தருமானால், அது கடவுளிடமிருந்து
ஆசி பெறும். 8 ஆனால், அது முட்செடி
களையும் நெருஞ்சில்களையும் முளைப்பிக்கு
மானால், அது பயனற்றதாகிச் சாபத்திற்
குள்ளாகும் நிலையிலிருக்கும்; தீக்கிரையா
வதே அதன் முடிவு.

9 அன்பார்ந்தவர்களே, இவ்வாறு நாங்
கள் கூறினாலும், உங்கள் நிலைமை அவ்வளவு
கேடானதாயில்லை என்றும், மீட்பு
அடையும் வழியில் நீங்கள் முன்னேறி
வருகிறீர்கள் என்றும் நாங்கள் திடமாக
நம்புகிறோம். 10 நீங்கள் கடவுளுக்குரிய
மக்களுக்குப் பணிபுரிந்ததன் மூலமும் பணி
புரிந்துவருவதன் மூலமும் நீங்கள்
கடவுள் பொருட்டுக் காட்டிய அன்பை
யும் உங்கள் உழைப்பையும் அவர் மறக்க
மாட்டார்; அவர் நீதியற்றவரல்ல. 11 எதிர்
காலத்தைப்பற்றி நீங்கள் கொண்டுள்ள
நம்பிக்கை முழு உறுதிபெறும் பொருட்டு
உங்களுள் ஒவ்வொருவனும் முன்பு
காட்டின ஆர்வத்தையே முடிவு மட்டும்
காட்ட வேண்டுமென்பதே எங்கள்
பேராவல். 12 நீங்கள் சோம்பலுக்கு இடந்
தராமல், கடவுளிடம் நம்பிக்கை கொள்
வதனாலும் பொறுமையினாலும் அவர்
வாக்களித்தவற்றை உரிமைச் சொத்தாகப்
பெறுகிறவர்களைப் பின்பற்றி நடக்க
வேண்டும்.

### கடவுளின் வாக்குறுதி

13 ஆபிரகாமுக்கு கடவுள் வாக்களித்த
போது, அவர் ஒருவர்மேல் ஆணையிட்டுக்
கூறுவதற்கு அவரைவிடப் பெரியவர் ஒரு
வரும் இல்லாததால், தமதுமேலேயே
ஆணையிட்டு,

**5:7** மத். 26: 36—46; மாற். 14:32—42; லூக். 22: 39—46. **5:12, 13** 1 கொரி. 3:2. **6:8** ஆதி. 3:17, 18.

''நான் தரும் ஒய்வை அவர்கள்
அடையவே மாட்டார்கள் என்று
சினத்தோடு ஆணையிட்டுக் கூறினேன்''
எனச் சொல்லியிருக்கிறார். அவர் இவ்
வாறு சொன்னபோதிலும், உலகத்தோற்ற
காலத்திலேயே அவருடைய செயல்கள்
முடிவுற்றிருந்தன. 4 எப்படியெனில்,
ஏதோ ஓர் இடத்தில் ஏழாம் நாளைப்
பற்றி, ''கடவுள் தம்முடைய செயல்களை
யெல்லாம் முடித்துவிட்டு ஏழாம் நாளில்
ஒய்ந்திருந்தார்'' என்று சொல்லியிருக்
கிறது. 5 என்றாலும், இந்த வாக்கியத்தில்,
''நான் தரும் ஒய்வை அவர்கள் அடை
யவே மாட்டார்கள்'' என்றல்லவா சொல்லி
யிருக்கிறார்? 6 எனவே, அவ்வாறு இருக்
கும் ஒய்வை இனிமேல் வேறு யாரோ
சிலர் அடைவர் என்பது திண்ணம்.
மேலும், அதைப்பற்றிய நற்செய்தியை
முன்னுளில் கேட்டவர்கள் கீழ்ப்படியாத
தால் அவர்கள் அதை அடையவில்லை.
7 இந்தக் காரணங்களினுல், நாம் ஏற்
கெனவே தந்த மேற்கோளில் காண்கிற
படி, அவர்,

''இன்று நீங்கள் அவருடைய குரலைக்
கேட்கிறீர்களென்றால்,
பிடிவாதம் கொண்ட உள்ளத்தினராய்
இராதீர்கள்''

என்று சொல்லி, நீண்ட காலத்திற்குப்
பின் தாவீதின் மூலம் ''இன்று'' எனச்
சொல்லப்படும் இன்னொரு நாளைக் குறிக்
கிறார். 8 அவர்கள் ஒய்வை அடையும்படி
யோசுவா* செய்திருந்தால், அதன்பின்
அவர் வேறொரு நாளைப்பற்றிச் சொல்லி
யிருந்திருக்க மாட்டார். 9 ஆகையால்,
கடவுளின் மக்களுக்கு இனிமேல்தான்
ஒய்வு காலம் வரும். 10 கடவுள் தம்மு
டைய செயல்களை முடித்துவிட்டு ஒய்ந்
திருப்பதுபோல, அவர் தரும் ஒய்வை
அடைகிறவனும் தன் செயல்களை முடித்து
விட்டு ஒய்ந்திருப்பான். 11 ஆகையால்,
முன்கூறப்பட்டவர்கள் காட்டின கீழ்ப்
படியாமையைப் பின்பற்றி நடந்து நம்
முள் எவனும் வீழ்ச்சியுறாமலிருக்கும்படி
அந்த ஒய்வை அடைய நாமனைவரும்
முயற்சி செய்வோமாக.

12 கடவுளின் திருமொழி உயிருள்ளது,
ஆற்றல் வாய்ந்தது; இரு பக்கமும் கூர்மை
யான எந்த வாளையும்விடக் கூர்மையா
யிருக்கிறது; ஆன்மாவையும் ஆவியையும்
பிரிக்குமளவுக்குக் குத்தி ஊடுருவுகிறது;
கணுக்களையும் ஊனையும் அவ்வாறே செய்
கிறது; உள்ளத்தின் நோக்கங்களையும்
எண்ணங்களையும் சீர்தூக்கிப் பார்க்கிறது.
13 படைக்கப்பட்டவற்றுள் எதுவும் அவ
ருடைய பார்வைக்கு மறைவாயில்லை.
யாருக்கு நாம் கணக்கு ஒப்புவிக்க வேண்
டுமோ அவருடைய கண்களுக்கு முன்னால்
எல்லாம் மறைப்பு எதுவும் இன்றி வெளிப்
படையாக இருக்கின்றன.

### மாபெரும் தலைமை ஆசாரியராகிய இயேசு

14 எனவே, வானங்களைக் கடந்து
சென்ற கடவுளின் மைந்தராகிய இயேசுவை
மாபெரும் தலைமை ஆசாரியராகக்
கொண்டுள்ள நாம், வெளிப்படையாகப்
பின்பற்றிவரும் நெறியை உறுதியாகப்
பற்றிக்கொண்டிருப்போமாக. 15 ஏனெ
னில், நமக்கு இருக்கும் தலைமை ஆசாரியர்
நம்முடைய குறைபாடுகளைக் கண்டு
இரக்கங்கொள்ள முடியாதவரல்ல. அவர்
எல்லாவகையிலும் நம்மைப்போலச்சோதிக்
கப்பட்டார்; ஆயினும், பாவம் செய்யா
திருந்தார். 16 ஆகையால், நாம் இரக்
கத்தைப் பெற்றுக்கொள்ளவும், தக்க
வேளையில் அவரருளால் உதவி பெறவும்
அவரது அருளின் அரியணையருகில் துணி
வுடன் செல்வோமாக.

5 மக்களிடையேயிருந்து தேர்ந்தெடுக்
கப்படும் ஒவ்வொரு தலைமை ஆசாரி
யரும், பாவங்களுக்காகக் காணிக்கைகளை
யும் பலிகளையும் செலுத்தும்படி மக்கள்
சார்பாகக் கடவுள் முன்னிலையில் சேவை
செய்ய நியமிக்கப்படுகிறார். 2 அவர் அறி
யாமையில் இருப்பவர்களுக்கும் நெறி
தவறிச் செல்வோருக்கும் பரிவுகாட்டக்
கூடியவராயிருக்கிறார்; ஏனென்றால், அவரும்
குறைபாடுகள் நிறைந்தவரே. 3 இந்தக்
காரணத்தினுல் அவர் இஸ்ரவேல்
மக்களுடைய பாவங்களுக்காகப் பலி
செலுத்த வேண்டியதுபோலத் தம்மு
டைய பாவங்களுக்காகவும் பலி செலுத்த
வேண்டும். 4 மேலும், யாரும் இந்த
மேன்மையான பதவியைத் தாமே எடுத்
துக்கொள்வதில்லை; ஆரோன் அழைக்கப்
பட்டதுபோல ஒருவர் அதற்கெனக்
கடவுளால் அழைக்கப்பட்டே அதில்
அமர்த்தப்படுகிறார்.

5 அவ்வாறே, கிறிஸ்துவும் தலைமை
ஆசாரியர் என்னும் உயர் பதவியில் தம்
மைத்தாமே அமர்த்திக்கொள்ளவில்லை.
''நீர் என் மைந்தர்,
இன்று நான் உம்மைப் பெற்றெடுத்
தேன்''
என்று அவரிடம் சொன்னவரே அவரை
அமர்த்தினார். 6 இதற்கிசைய வேறோர்
இடத்தில்,

* இங்கே மூலத்தில் இருப்பது 'இயேசு' என்கிற பெயர். அது 'யோசுவா' என்கிற எபிரேயப் பெயரின்
கிரேக்க வடிவம்.
4:5 சங். 95:11. 4:7 சங். 95;7, 8. 4:8 உபா. 31:7; யோசுவா. 22:4. 4:10 ஆதி. 2:2. 5:3 இலே.
9:7. 5:4 யாத். 28:1. 5:5 சங். 2:7. 5:6 சங். 110:4.

''நீர் மெல்கிசேதேக்கின் மரபுவழியில் வந்த
ஆசாரியராய் என்றைக்கும் இருப்பவர்''
என்று சொல்லியிருக்கிறார். 7 அவர் இவ்
வுலகில் வாழ்ந்த காலத்தில், தம்மை
மரணத்தினின்று காப்பாற்ற வல்லவரை
நோக்கி உரத்துக் கதறிக் கண்ணீர் சிந்தி,
அவர்முன் தம் வேண்டுதல்களையும் மன்
றாட்டுகளையும் படைத்தார். அவருடைய
பணிவடக்கத்தை முன்னிட்டுக் கடவுள்
அவருக்குச் செவிசாய்த்தார். 8 அவர்
திருமைந்தராயிருந்தும், பாடுகள் அடைந்தே
கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்டார். 9 அவர்
இவ்வாறு முழு நிறைவுள்ளவரானபின்,
தமக்குக் கீழ்ப்படிகிற அனைவருக்கும் முடி
வில்லா மீட்புநிலை அருளப்படுவதற்குக்
காரணரானார். 10 மெல்கிசேதேக்கின்
மரபுவழியில் வந்த தலைமை ஆசாரியர்
என்று கடவுள் அவருக்குப் பெயர்
சூட்டினார்.

### நெறியினின்று விலகாதிருக்க எச்சரிக்கை

11 மெல்கிசேதேக்கைப்பற்றி நாம்
சொல்லக்கூடிய காரியங்கள் பல உண்டு.
ஆனால், நீங்கள் அறிவு மழுங்கியவர்களாகி
விட்டதால், அவற்றை உங்களுக்கு விளக்
குவது கடினம். 12 இவ்வளவு காலத்திற்குள்
நீங்கள் போதகர்களாகியிருக்க வேண்டும்.
ஆனால் உங்களுக்குக் கடவுளின் வாய்
மொழிகளைப்பற்றிய முதற் பாடத்தையே
மறுபடியும் போதிப்பது இப்போது தேவை
யெனக் காணப்படுகிறது. நீங்கள் கெட்
டிப்பொருள் உணவையன்று, பாலுணவை
உண்ண வேண்டியவர்களாகிவிட்டீர்கள்.
13 பாலுணவை உண்பவன் ஒரு குழந்தை.
அவன் நன்னெறிப் போதனையைப்பற்றி
ஒன்றுமறியாதவன். 14 முதிர்ச்சி அடைந்த
வர்களுக்கு ஏற்றது கெட்டிப்பொருள்
உணவு. அவர்கள் நன்மை எது, தீமை
எது என்று பகுத்தறிவதற்கான ஆற்றல்
களைப் பயன்படுத்தப் பயிற்சி பெற்ற
வர்கள்.

**6** ஆகையால், கிறிஸ்துவைப்பற்றிய
போதனையின் தொடக்க நிலையி
லேயே நாம் நின்று கொண்டிராமல்,
முதிர்ச்சியடைய முன்னேறிச் செல்வோ
மாக. பயனற்ற செயல்களை விட்டுவிடும்
மனமாற்றத்தையடைதல், 2 கடவுளிடம்
கொள்ளும் நம்பிக்கை, சுத்திகரிப்புச்
சடங்குகளைப்பற்றிய போதனை, கைகளை
வைக்கும் சடங்கு, இறந்தோரின் உயிர்த்
தெழுதல், என்றும் மாறா இறுதித்தீர்ப்பு
ஆகியவற்றாலான அடித்தளத்தை மீண்டும்
ஒரு முறை இடாதிருப்போமாக. 3 கடவுள்
திருவுளங்கொள்வாரானால் இப்படித்
தான் முன்னேறிச் செல்வோம். 4 ஏனென்
றால், ஒருசமயம் ஒளிபெற்றவர்கள்,
கொள்கை துறப்பார்களானால், அவர்களை
மனமாற்றமடையச் செய்து முன்னிலைக்கு
மீண்டும் கொண்டு வருவது முடியாத
காரியமாகும். 5 அவர்கள் பரம ஈவை
அனுபவித்தவர்கள்; எல்லாரோடுங்கூடத்
தாங்களும் தூய ஆவியைப் பெற்றவர்
கள்; கடவுளின் நல்வாக்கைக் கேட்டு,
வரப்போகிற யுகத்தின் வல்லமைகளையும்
அனுபவித்தவர்கள். 6 ஆயினும், அவர்கள்
கொள்கை துறந்தார்கள். அதனால்
அவர்கள் கடவுளின் மைந்தரைத் தாங்
களே மறுபடியும் சிலுவையிலறைந்து
இழிவுபடுத்துகிறவர்களானார்கள். 7 ஒரு
நிலம் தன்மீது அவ்வப்போது பெய்யும்
மழைநீரை உறிஞ்சி, தன்னில் பயிர் செய்
கிறவர்களுக்குப் பயனுள்ளதான விளைச்
சலைத் தருமானால், அது கடவுளிடமிருந்து
ஆசிபெறும். 8 ஆனால், அது முட்செடி
களையும் நெருஞ்சில்களையும் முளைப்பிக்கு
மானால், அது பயனற்றதாகிச் சாபத்திற்
குள்ளாகும் நிலையிலிருக்கும்; தீக்கிரையா
வதே அதன் முடிவு.

9 அன்பார்ந்தவர்களே, இவ்வாறு நாங்
கள் கூறினாலும், உங்கள் நிலைமை அவ்வளவு
கேடானதாயில்லை என்றும், மீட்பு
அடையும் வழியில் நீங்கள் முன்னேறி
வருகிறீர்கள் என்றும் நாங்கள் திடமாக
நம்புகிறோம். 10 நீங்கள் கடவுளுக்குரிய
மக்களுக்குப் பணிபுரிந்ததன் மூலமும் பணி
புரிந்துவருவதன் மூலமும் நீங்கள்
கடவுள் பொருட்டுக் காட்டிய அன்பை
யும் உங்கள் உழைப்பையும் அவர் மறக்க
மாட்டார்; அவர் நீதியற்றவரல்ல. 11 எதிர்
காலத்தைப்பற்றி நீங்கள் கொண்டுள்ள
நம்பிக்கை முழு உறுதிபெறும் பொருட்டு
உங்களுள் ஒவ்வொருவனும் முன்பு
காட்டின ஆர்வத்தையே முடிவு மட்டும்
காட்ட வேண்டுமென்பதே எங்கள்
பேராவல். 12 நீங்கள் சோம்பலுக்கு இடந்
தராமல், கடவுளிடம் நம்பிக்கை கொள்
வதனாலும் பொறுமையினாலும் அவர்
வாக்களித்தவற்றை உரிமைச் சொத்தாகப்
பெறுகிறவர்களைப் பின்பற்றி நடக்க
வேண்டும்.

### கடவுளின் வாக்குறுதி

13 ஆபிரகாமுக்கு கடவுள் வாக்களித்த
போது, அவர் ஒருவர்மேல் ஆணையிட்டுக்
கூறுவதற்கு அவரைவிடப் பெரியவர் ஒரு
வரும் இல்லாததால், தமதுமேலேயே
ஆணையிட்டு,

5:7 மத். 26: 36—46; மாற். 14:32—42; லூக். 22: 39—46. 5:12, 13 1 கொரி. 3:2. 6:8 ஆதி. 3:17, 18.

14 ''என் ஆசியை உன்மீது திட்டமாகப்
பொழியச்செய்வேன்.
உன் மரபினரைப் பெருகச்செய்வேன்,
இது உறுதி''
என்று கூறினார். 15 அவரும் நீண்ட
காலம் பொறுமையோடிருந்து, கடவுள்
வாக்களித்ததை அவ்வாறே பெற்றுக்
கொண்டார். 16 மனிதர், தம்மைவிடப்
பெரியவர் ஒருவர்மேல் ஆணையிடுவது
தான் வழக்கம். அவர்கள் ஆணையின்
மூலம் தாங்கள் சொல்வதை உறுதிப்
படுத்தி எல்லாச் சச்சரவுகளுக்கும் முடிவு
காண்பார்கள். 17 அவ்வாறே கடவுளும்
தாம் வாக்களித்ததை உரிமைச் சொத்
தாகப் பெற்றுக்கொள்கிறவர்களுக்குத்
தம்முடைய நோக்கம் மாறாதது என்
பதை மிகத் தெளிவாகக் காட்ட விரும்பி
ஓர் ஆணையால் உறுதிப்படுத்தினார்.
18 கடவுளின் வாக்கும் ஆணையும் மாறாத்
தன்மையுடையவை. கடவுள் இந்த இரண்
டையுங்கொண்டு உரைத்தது பொய்யா
யிருக்க முடியாது. அவர் இவ்வாறு செய்
ததன் நோக்கம் யாதெனில், தம்மிடம்
அடைக்கலம் புகுந்திருக்கும் நாம், எதிர்
காலத்தில் பெறப்போகும் நற்பேற்றினைக்
குறித்த நம்பிக்கையை விடாமல் பற்றிக்
கொண்டிருப்பதற்குத் தளரா ஊக்கமுடைய
வர்களாய் இருக்க வேண்டும் என்பதே.
19 அந்த நம்பிக்கை நமக்கு நிலையானதும்
உறுதியானதும் ஆலயத் திரைக்குள்
ளாகச் சென்று ஊன்றியிருப்பதுமான
ஆன்ம நங்கூரம் போன்றது. 20 இயேசு
மெல்கிசேதேக்கின் மரபுவழியில் என்று
முள்ள தலைமை ஆசாரியராகி, நமக்கு
முந்திச் செல்லுகிறவராய் நம் சார்பாக
அந்தத் திரைக்குள் போயிருக்கிறார்.

### தலைமை ஆசாரியராகிய மெல்கிசேதேக்கின் மேன்மை

7 இந்த மெல்கிசேதேக்கு சாலேம்
நகரின் அரசராகவும் உன்னதமான
கடவுளின் ஆசாரியராகவும் இருந்தவர்;
அரசர்களைப் போரில் முறியடித்துவிட்டுத்
திரும்பி வந்துகொண்டிருந்த ஆபிர
காமைக் கண்டு அவருக்கு ஆசி கூறினவர்.
2 ஆபிரகாமிடமிருந்த எல்லாவற்றிலும்
பத்திலொரு பாகத்தைப் பெற்றுக்
கொண்டவரும் இவரே. முதலாவதாக,
இவருடைய பெயரின் பொருள் நீதி
வழுவா வேந்தன் என்பது. அடுத்தபடி
யாக, இவர் சாலேமின் அரசராகவும்
இருந்தார். இதற்குப் பொருள் சமாதானம்
அருளும் அரசர் என்பது. 3 இவர்
தகப்பன், தாய், குலமரபு, வரலாறு
ஆகியவை இல்லாதவர். இவருடைய
வாழ்நாளுக்குத் தொடக்கமுமில்லை, ஆயு
ளுக்கு முடிவுமில்லை. இவர் கடவுளின்
மைந்தருக்கு ஒப்பானவர். இவர் ஆசாரி
யராக என்றென்றும் நிலைபெற்றிருக்
கிறார்.

4 இவர் எவ்வளவு பெரியவர் என்ப
தைப் பாருங்கள்! நம் குலத்தந்தையாகிய
ஆபிரகாம், தாம் போரில் கைப்
பற்றிய பொருள்களில் பத்திலொரு
பாகத்தை இவருக்குக் கொடுத்தார்.
5 இலேவியின் குலத்தினருள் ஆசாரி
யராக அமர்த்தப்பெற்றவர்களைக் குறித்து
நீதிச்சட்டத்தில் ஒரு கட்டளை உண்டு.
அவர்கள் இஸ்ரவேல் மக்களிடமிருந்து,
அதாவது தங்களுடைய சகோதரரிட
மிருந்து பத்திலொரு பாகத்தை வாங்க
வேண்டும். அந்த மக்கள் ஆபிரகாம் மரபில்
தோன்றினவர்களாய் இருந்தாலும்,
அவர்களிடமும் இதை வாங்குகிறார்கள்.
6 ஆனால், அவர்களுடைய மரபில் தோன்றி
யிராத மெல்கிசேதேக்கு ஆபிரகாமிட
மிருந்து பத்திலொரு பாகத்தை வாங்கினார்;
கடவுளின் வாக்குறுதிகளைப் பெற்றி
ருந்த அவருக்கு ஆசி கூறினார். 7 பெரிய
வன்தான் சிறியவனுக்கு ஆசி கூறுவான்.
இதை யாரும் மறுக்க முடியாது.
8 மேலும், பத்திலொரு பாகத்தை வாங்கும்
அவர்கள் மாண்டுபோகும் மனிதர்கள்;
ஆனால் மெல்கிசேதேக்கோ உயிரோ
டிருக்கிறவர் என்பது வேதம் கூறுகிற
சான்று. 9 அன்றியும், பத்திலொரு
பாகத்தை வாங்கும் இலேவியுங்கூட ஆபிர
காம் மூலமாகப் பத்திலொரு பாகத்தைக்
கொடுத்தார் என்று சொல்லலாம். 10 எப்
படியெனில், மெல்கிசேதேக்கு ஆபிர
காமை வழியில் கண்டபோது இலேவி
யாகத் தோன்றிய வித்து அவருடைய
மூதாதையாகிய ஆபிரகாமுக்குள் இருந்தது.

11 இலேவி குலத்து ஆசாரிய முறை
மையின் அடிப்படையிலேதான் இஸ்ரவேல்
மக்கள் நீதிச்சட்டத்தைப் பெற்றார்கள்.
அந்த முறைமையினாலே ஒருவன்
முழு நிறைவு அடையக்கூடுமானால்,
ஆரோன் மரபுவழியிலல்லாமல் மெல்கி
சேதேக்கின் மரபுவழியில் வேறோர்
ஆசாரியர் தோன்றப்போவதாக வேதம்
சொல்லத் தேவை என்ன? 12 ஆசாரிய
முறைமை மாற்றப்படும்போது அதனோடு
தொடர்புடைய சட்டமும் மாற்றப்பட
வேண்டுமே. 13 இவை எல்லாவற்றாலும்
குறிக்கப்படுகிற நம்முடைய ஆண்டவர்
வேறொரு குலத்தைச் சேர்ந்தவர்.
அந்தக் குலத்தைச் சேர்ந்த எவருமே
பீடத்தினருகில் திருப்பணி செய்ததில்லை.

6:14 ஆதி. 22:16, 17. 6:19 இலே. 16:2. 6:20 சங். 110:4. 7:1, 2 ஆதி. 14:17—20. 7:5 எண்
18:21.

14 அவர் யூதா குலத்தில் உதித்தார்
என்பது தெளிவாகத் தெரிந்ததே. மோசே
ஆசாரியரைப்பற்றிப் பேசினபோது, அந்தக்
குலம் குறிப்பிடப்படவேயில்லை.

15 தோன்றவிருந்த புதிய ஆசாரியர்
மெல்கிசேதேக்குக்கு ஒப்பானவர் என்பதால்
நாம் கூறுவது இன்னும் மிகத்தெளிவா
கிறது. 16 இவர் இவ்வுலகத்திற்குரிய சட்
டத்தினாலன்று, அழியாவாழ்வின் வல்ல
மையினால் ஆசாரியரானார். 17 இதற்குச்
சான்றாக வேதம்,
''நீர் மெல்கிசேதேக்கின் மரபு
வழியில் வந்த
ஆசாரியராய் என்றைக்கும் இருப்
பவர்''
என்று கூறுகிறது. 18 இவ்வாறாக முந்திய
விதிகள் வலிமையற்றவையாயும் பயனற்
றவையாயும் இருந்ததால் அவை நீக்கப்
பட்டுப் போகின்றன. 19 நீதிச்சட்டம்
எதையும் முழுநிறைவுக்குக் கொண்டுவருவ
தில்லையே. இப்போது எதிர்காலத்தைப்
பற்றி மேலானதொரு நம்பிக்கை அளிக்
கப்படுகிறது. இந்த நம்பிக்கையைக்
கொண்டு நாம் கடவுளிடம் நெருங்கிச்
செல்லுகிறோம்.

20 மேலும், அவர்கள் ஆசாரியரான
போது ஒன்றும் ஆணையிட்டுக் கூறப்பட
வில்லை. 21 ஆனால் இவர் ஆசாரியரான
போதோ கடவுள் அவரிடம்,
''நீர் என்றைக்கும் ஆசாரியரா
யிருப்பவர்;
ஆண்டவர் இதை ஆணையிட்டுக்
கூறினார்.
அவர் மனத்தை மாற்றிக்கொள்ள
மாட்டார்''
என்று ஆணையிட்டுக் கூறினார். 22 அவர்
இவ்வாறு ஆணையிட்டுக் கூறியதற்கேற்ப,
இயேசு எவ்வளவோ மேலானதோர்
உடன்படிக்கைக்கு உறுதியளிப்பவராய்
இருக்கிறார். 23 மேலும், அந்த ஆசாரியர்கள்
பதவியில் நிலைத்திருக்கச் சாவு தடையா
யிருக்கிறபடியால், ஏராளமான பேர் ஆசா
ரியராக்கப்பட்டுவருகின்றனர்.

24 ஆனால், இவரோ என்றைக்கும்
நிலைத்திருப்பவர், ஆகையால், இவருடைய
ஆசாரிய பதவி கை மாறாது. 25 அப்படி
யிருப்பதால், அவர் தம் மூலம் கடவுளை
அணுகுவோரை முற்றும் மீட்க வல்லவ
ராயிருக்கிறார்; அவர்களுக்காகப் பரிந்து
பேசுவதற்கென என்றுமே உயிரோடிருக்
கிறார்.

26 இத்தகைய தலைமை ஆசாரியரே
நம்முடைய நிலைமைக்கேற்றவர். இவர்
தூய்மையானவர், கபடற்றவர், மாசில்
லாதவர், பாவிகளினின்று பிரிக்கப்பட்டவர்,
வானங்களுக்கு மேலாக உயர்த்தப்
பட்டவர். 27 மற்றத் தலைமை ஆசாரியர்கள்
நாள்தோறும் செய்வதுபோல இவர்
முதலில் தம்முடைய சொந்தப் பாவங்
களுக்காகவும் அதன் பிறகு மக்களுடைய
பாவங்களுக்காகவும் பலிகளைப் படைக்கத்
தேவையில்லை. ஏனெனில், இவர் தம்மைத்
தாமே படைத்ததன் மூலம் இதை ஒரே
முறையில் செய்து முடித்தார். 28 நீதிச்
சட்டம் மனிதரைத் தலைமை ஆசாரியராக
நியமிக்கிறது. அவர்கள் குறைபாடுள்ளவர்
களே. ஆனால், நீதிச்சட்டம் கொடுக்கப்
பட்ட காலத்திற்குப்பின் ஆணையிட்டுக்
கூறப்பட்ட திருவாக்கு அமர்த்தியிருக்கும்
தலைமை ஆசாரியரோ திருமைந்தர்;
அவர் என்றைக்கும் முழு நிறைவுடையவர்.

### புதியதும் மேலானதுமான உடன்படிக்கையின் தலைமை ஆசாரியர்

8 நான் இதுகாறும் கூறியவற்றின்
முக்கிய கருத்து என்னவெனில்,
நமக்கு இருக்கும் தலைமை ஆசாரியர்
மேற்கூறிய தகைமை உடையவர் என்
பதே. இவர் விண்ணுலகில் மேன்மை
மிக்கவருடைய அரியணையின் வலப்பக்கத்தில்
வீற்றிருக்கிறார். 2 அங்கே தூய
அகத்தில், அதாவது, மனிதரால் அமைக்
கப்படாமல் ஆண்டவரால் அமைக்கப்
பட்ட மெய்யான கூடாரத்தில் திருப்
பணி புரிகிறவராய் இருக்கிறார். 3 காணிக்
கைகளையும் பலிகளையும் செலுத்தவே
ஒவ்வொரு தலைமை ஆசாரியரும் நியமிக்
கப்படுவதால், அவ்வாறு செலுத்துவதற்கு
இவரிடமும் ஏதேனும் ஒன்று இருந்திருக்க
வேண்டும். 4 இவர் உலகத்திலேயே இருப்
பாரானால் ஓர் ஆசாரியராகக்கூட இருக்க
மாட்டார். ஏனெனில், நீதிச்சட்டத்தின்
படி காணிக்கைகளைச் செலுத்துகிற ஆசாரி
யர்கள் இங்கே ஏற்கெனவே இருக்கிறார்கள்.
5 அவர்கள் திருப்பணி செய்கிற இடம்
விண்ணுலகில் உள்ள தூய அகத்தை
யொத்த வடிவமும் அதன் நிழலுமாயிருக்
கிறதென்பது மோசே கூடாரத்தை அமைக்
கப்போனபோது கடவுள் அவருக்கு இட்ட
கட்டளையால் விளங்குகிறது. அவர்
மோசேயை நோக்கி, ''மலையில் உனக்குக்
காட்டப்பட்ட மாதிரியினின்று சிறிதளவும்
மாறுபடாதிருக்கும் வண்ணம் எல்லாவற்
றையும் செய்'' என்று சொன்னார்.
6 ஆனால், இவரோ அவர்களுடைய ஆசா
ரியப் பணியைவிட மிகச் சிறந்த ஆசா
ரியப் பணியை ஏற்றிருக்கிறார். இவரை
இணைப்பாளராகக் கொண்டிருக்கும் உடன்
படிக்கையும் அதே அளவுக்கு முந்தின

**7:17** சங். 110:4. **7:21** சங். 110:4. **7:27** இலே. 9:7. **8:1.** சங். 110:1. **8:5** யாத். 25:40.

உடன்படிக்கையைவிட மேலானதாயிருக்கிறது. ஏனெனில், அது முன்னிலும் மேலான வாக்குறுதிகளின் அடிப்படையில் அமைக்கப்பட்டிருக்கிறது.

7 முதலாம் உடன்படிக்கை குறையற்றதாய் இருந்திருக்குமானால் இரண்டாம் உடன்படிக்கை தேவைப்பட்டிருக்காது.
8 ஆனால், கடவுள் தம் மக்களின் குறையை எடுத்துக்காட்டி உரைத்தது இதுவே:

''இதோ பாருங்கள், காலம் வரப்போகிறது.
அப்பொழுது நான் இஸ்ரவேல் குடும்பத்தினரோடும் யூதா குடும்பத்தினரோடும் புதியதோர் உடன்படிக்கையைச் செய்துகொள்ளுவேன்
என்று ஆண்டவர் சொல்லுகிறார்.
9 இது நான் அவர்களுடைய மூதாதையரை எகிப்து நாட்டிலிருந்து அவர்கள் கையைப் பிடித்து அழைத்துவந்த நாளில் அவர்களோடு செய்துகொண்ட
உடன்படிக்கையைப்போல இராது.
ஏனெனில், நான் அவர்களோடு செய்துகொண்ட
உடன்படிக்கையில் அவர்கள் நிலைத்து நிற்கவில்லை.
ஆகையால், நான் அவர்களைக் குறித்து அக்கறை கொள்வதை விட்டுவிட்டேன்
என்று ஆண்டவர் சொல்லுகிறார்.
10 குறித்த காலம் வரும்போது, நான் இஸ்ரவேல் குடும்பத்தினரோடு செய்யப்போகும் உடன்படிக்கை இதுவே:
என் சட்டங்களை அவர்கள் மனத்தில் பதியவைத்து,
அவர்கள் உள்ளத்தில் அவற்றை எழுதுவேன்.
நான் அவர்களுடைய கடவுளாயிருப்பேன்;
அவர்கள் என் மக்களாயிருப்பார்கள்.
11 'ஆண்டவரை அறிந்துகொள்' என்று சொல்லி
எவனும் தன் நாட்டினனுக்காவது தன் சகோதரனுக்காவது போதிக்கத் தேவையிராது.
ஏனெனில், சிறியவன் முதல் பெரியவன் வரைக்கும் எல்லாரும் என்னை அறிந்திருப்பர்.
12 நான் அவர்களுக்கு இரங்கி, அவர்களுடைய நேர்மையற்ற செயல்களை மன்னிப்பேன்;
அவர்களுடைய பாவங்களை இனி நினைவில் வைத்திருக்க மாட்டேன்.
என்று ஆண்டவர் சொல்லுகிறார்.''

13 புதியதோர் உடன்படிக்கை என்று சொல்லுகிறபடியால், முந்தியதை அவர் பழமையாக்கிவிட்டார். நாள்பட்டுப் பழமையாகிற எதுவும் விரைவில் மறைந்து போகும்.

## மண்ணுலகிலும் விண்ணுலகிலும் நடக்கும் இறைவழிபாடு

9 முதலாம் உடன்படிக்கையின்படி வழிபாட்டிற்குரிய விதிகளும் மண்ணுலகத் திருவிடமும் இருந்தன.
2 அந்தத் திருவிடத்தில் ஒரு கூடாரம் அமைக்கப்பட்டிருந்தது. இது முதலாம் கூடாரம். இதில் ஒரு குத்துவிளக்கும் ஒரு மேசையும் படையல் அப்பங்களும் இருந்தன. இந்தக் கூடாரத்தின் பெயர் 'புனித அகம்' என்பது.
3 'மாபுனித அகம்' எனப்படும் ஒரு கூடாரமும் இருந்தது. அது இரண்டாம் திரைக்குப் பின்னால் அமைக்கப்பட்டிருந்தது.
4 அதில் பொன் தூபப்பீடமும் முழுவதும் பொன் தகடு பொருத்தப்பட்ட உடன்படிக்கைப் பெட்டியும் இருந்தன; அந்தப் பெட்டியில் மன்னா வைக்கப்பட்டிருந்த பொற்கிண்ணமும் ஆரோனுடைய தளிர்த்த கோலும் உடன்படிக்கைக் கற்பலகைகளும் இருந்தன.
5 பெட்டிக்கு மேலே பாவப் பரிகாரத்திற்கென இரத்தம் தெளிக்கப்படும் அதன் மூடியின்மீது மாட்சிமை பொருந்திய கேருபுகள் என்னும் தெய்வதூதர்கள் நிழலிட்டுக்கொண்டிருந்தார்கள். இவற்றைப்பற்றி விவரித்துக்கூற இப்போது இயலாது.

6 இவை இவ்வாறு அமைந்திருந்த நிலையில், ஆசாரியர்கள் தங்கள் திருப்பணிகளை நிறைவேற்றி முடிக்க முதலாம் கூடாரத்திற்குள்ளாகத்தான் எல்லா நேரங்களிலும் செல்வார்கள்.
7 இரண்டாம் கூடாரத்திற்குள் தலைமை ஆசாரியர் மட்டும் செல்வார்; அவரும் ஆண்டுக்கு ஒரு முறைதான் செல்வார். அப்பொழுது அவர் தமக்காகவும், மக்கள் அறியாமற் செய்த பிழைகளுக்காகவும் இரத்தத்தைக் கொண்டுபோய்ப் படைப்பார்.
8 மேற்கூறிய முறைமைகளின் மூலம் தூய ஆவியானவர் தெரிவிப்பது யாதெனில், முற்காலத்துக் கூடார அமைப்பு நீடித்திருக்கும் வரையில் கடவுளின் திருமுன் செல்லும் வழி திறக்கப்படாமலிருக்கும் என்பதே.*
9 அந்தக் கூடாரத்தின் அமைப்பு இந்தக் காலத்திலுள்ள நிலையை ஓர் உவமைபோல எடுத்துக் காட்டுகிறது. அதற்குரிய ஒழுங்கின்படி செலுத்தப்படுகிற காணிக்கைகளும் பலிகளும், வழிபடுகிறவனை அவனது

* '....யாதெனில், முதலாம் கூடாரம் நீடித்திருக்கும் வரையில், மாபுனித அகத்திற்குள் செல்லும் வழி திறக்கப்படாமலிருக்கும் என்பதே' என்றும் மொழிபெயர்க்கலாம்.

8:8—12 எரே. 31:31—34. 9:2 யாத். 26:1—30; 25:31—40, 23—30. 9:3 யாத். 26:31—33. 9:4 யாத். 30:1—6; 25:10—16; 16:33; எண். 17:8—10; யாத். 25:16; உபா. 10:3—5. 9:5 யாத். 25:18—22. 9:6 எண். 18:2—6. 9:7 லேவி. 16:2—34.

மனச்சாட்சியைப் பொருத்தவரையில்
முழுநிறைவுக்குக் கொண்டுவர இயலாத
வையாய் இருக்கின்றன. 10 அந்த விதி
கள், உணவு, பானம், பலவகையான
சுத்திகரிப்புச் சடங்குகள் ஆகியவற்றை
மட்டும் பற்றியவை. அனைத்தும் சீர்திருத்
தப்படும் காலம்வரையில் இருக்கும்படி
உடல் சார்ந்த இந்த விதிகள் விதிக்
கப்பட்டன.

11 ஆனால் இப்போது கிறிஸ்து
தலைமை ஆசாரியராய் வந்திருக்கிறார்.
அவர் அருளும் நற்பலன்கள் இப்போதே
நமக்குக் கிடைத்துள்ளன. அவர் திருப்
பணி செய்கிற கூடாரம் முன்னதைவிட
மேலானது, முழு நிறைவானது. அது
மனிதர் கையால் அமைக்கப்படாதது:
அதாவது, உண்டாக்கப்பட்ட இவ்வுலகத்
திற்குரியதன்று. 12 அவர் படைத்த
இரத்தம் வெள்ளாட்டுக்கடா, இளங்காளை
ஆகியவற்றின் இரத்தமன்று, அவரது
சொந்த இரத்தமே. அவர் ஒரே ஒரு
முறை எல்லாக் காலத்திற்குமெனத் தூய
அகத்திற்குள் சென்று அதைப் படைத்து
நமக்கு என்றுமுள்ள மீட்புக் கிடைக்கும்
படி செய்தார். 13 வெள்ளாட்டுக்கடா,
எருது ஆகியவற்றின் இரத்தமும், கடாரி
யின் சாம்பலும் மாசுள்ளவர்கள்மீது
தெளிக்கப்படுவதால், அவர்கள் தீட்டு
நீங்கிப் புறம்பாகத் தூய்மையாக்கப்படு
கிறார்கள். 14 அப்படியானால், கிறிஸ்து
வின் இரத்தம் இன்னும் எவ்வளவோ
வல்லமையுள்ளதாய் இருக்குமல்லவா?
அவர் என்றுமுள்ள தெய்வ ஆவியால்
தம்மைத் தாமே மாசற்ற பலியாகக் கட
வுளுக்குப் படைத்தார். நாம் என்றுமுள்ள
கடவுளுக்குச் சேவை செய்யும்படி, அவரது
இரத்தம் நம்முடைய பயனற்ற செயல்
களால் வரும் குற்ற உணர்ச்சியை நம்
மனச்சான்றினின்று நீக்கும்.
15 ஆகையால், அவர் புதிய உடன்
படிக்கை ஒன்றை ஏற்படுத்தின இணைப்
பாளராயிருக்கிறார். கடவுளால் அழைக்கப்
பட்டவர்கள் அவரால் வாக்களிக்கப்பட்ட
அழியாப்பேறுகளை உரிமைச் சொத்தாகப்
பெறுவதற்கென்று இந்த உடன்படிக்கை
உண்டானது. இது ஒரு மரணத்தின்
மூலம் ஏற்படுத்தப்பட்டது. அந்த மர
ணம், முந்தின உடன்படிக்கையை மீறிச்
செய்த குற்றங்களினின்று மீட்பளிக்கிறது.
16 ஏனெனில், ஒரு மரண சாசனம்*
இருக்கிறதென்று சொன்னால், அந்தச் சாச
னத்தை எழுதினவன் இறந்துபோனான்
என்பது மெய்ப்பிக்கப்படவேண்டும். 17 அதா
வது, ஒருவனுடைய மரணத்திற்குப் பிறகு
தான் அவனது மரண சாசனம் செயலில்
நிறைவேற்றப்படும். அதை எழுதினவன்
உயிரோடிருக்கும் வரையில், அதை நடை
முறையில் கொண்டுவர முடியாது. 18 அத
னாலேதான் முந்தின உடன்படிக்கையுங்
கூட இரத்தஞ் சிந்துதல் இல்லாமல் ஏற்
படுத்தப்படவில்லை. 19 மோசே, நீதிச்சட்
டத்திலுள்ளபடி ஒவ்வொரு கட்டளையை
யும் எல்லா மக்களுக்கும் சொன்னபின்
இளங்காளைகளின் இரத்தத்தையும் தண்
ணீரையும் எடுத்து, அவற்றைச் சிவப்புக்
கம்பளித் தூரிகையும் ஈசோப்புச் செடி
யுங்கொண்டு நீதிச்சட்ட நூலின்மீதும்
எல்லா மக்கள்மீதும் தெளித்தார் அல்
லவா? 20 தெளிக்கும்போது அவர், ''கட
வுள் உங்களைக் கட்டுப்படுத்தி உங்களோடு
செய்துகொண்ட உடன்படிக்கைக்குரிய
இரத்தம் இதுவே'' என்று சொன்னார்.
21 அவ்வாறே, கூடாரத்தின்மீதும் இறை
வழிபாட்டிற்குரிய எல்லாப் பொருள்கள்
மீதும் அந்த இரத்தத்தைத் தெளித்தார்.
22 நீதிச்சட்டத்தின்படி பார்த்தால் அனைத்
தும் இரத்தத்தினால் சுத்திகரிக்கப்படுகின்
றன என்றே சொல்லலாம். இரத்தம்
சிந்துதல் இல்லாமல் பாவமன்னிப்பு
அளிக்கப்படுவதில்லை.

### பாவத்துக்குப் பரிகாரம் அளிக்கும் பலி

23 விண்ணுலகில் உள்ளவற்றையொத்த
வடிவங்களாயிருக்கும் இவை இப்படிப்
பட்ட முறைமைகளால் சுத்திகரிக்கப்படு
கின்றனவென்றால், விண்ணுலகிலுள்ள
அவை இவற்றைவிட மேலான பலி
களால் சுத்திகரிக்கப்பட வேண்டுமல்லவா?
24 அதனாலேதான் மனித கையினால்
அமைக்கப்பட்டு மெய்யான தூய அகத்
திற்கு அடையாளமாயிருக்கும் அகத்திற்
குச் செல்லாமல், விண்ணுலகத்திற்குள்
ளேயே சென்றிருக்கிறார். அங்கே இப்
போது நம் சார்பாகப் பேசக் கடவுளின்
திருமுன் இருக்கிறார். 25 தலைமை ஆசாரியர்
வேறொன்றின் இரத்தத்துடன் ஆண்டு
தோறும் தூய அகத்திற்குள் செல்வார்.
அதற்கு மாறாகக் கிறிஸ்து தம்மையே
பலியாகப் படைத்தார். அவ்வாறு சென்று
தம்மைத் திரும்பத் திரும்பப் படைக்கவு
மில்லை. 26 அப்படிச் செய்திருப்பாரானால்,
உலகம் உண்டான கால முதற்கொண்டு
அவர் திரும்பத் திரும்பப் பாடுகள் அடைந்
திருக்க வேண்டும். உண்மை என்னவெனில்,
அவர் தம்மையே பலியாகப் படைத்த
தன் மூலம் பாவங்களைத் தொலைப்பதற்
காக உலக வரலாற்றின் இவ்விறுதிக்

* கிரேக்கபதம் உடன்படிக்கை என்றும், மரண சாசனம் என்றும் பொருள்படும்.
**9:13** இலே. 16:15, 16; எண். 19:9, 17—19. **9:19—20** யாத். 24:6—8. **9:21** இலே. 8:15. **9:22** இலே. 17:11.

காலத்தில் ஒரே ஒரு முறை உலகில்
தோன்றினார். 27 மனிதர் ஒரே முறை
சாவுக்குட்படுகின்றனர். பிறகு இறுதித்
தீர்ப்பு வருகிறது. இதுவே அவர்களுக்
கென்றுள்ள ஏற்பாடு. 28 அதைப்போலவே
கிறிஸ்துவும் எல்லாருடைய பாவங்களை
யும் சுமந்து போக்கும்படி ஒரே முறை
பலியாகப் படைக்கப்பட்டார். அவர்
மீண்டும் ஒரு முறை தோன்றுவார்; ஆனால்
பாவத்தின் பொருட்டன்று, தமக்காகக்
காத்துக்கொண்டிருப்பவர்களுக்கு மீட்பை
அருளும் பொருட்டே தோன்றுவார்.

**10** நீதிச்சட்டத்தில் வரப்போகும் நன்
மைகளின் நிழல்தான் காணப்படு
கிறதே தவிர, அவற்றின் உண்மை உரு
வம் அதில் இல்லை. அதனாலேதான் ஆண்டு
தோறும் திரும்பத் திரும்பச் செலுத்தப்
பட்டு வரும் அதே பலிகளைக் கொண்டு
கடவுளை அணுகுகிறவர்களை முழு நிறை
வுள்ளவர்களாக்க நீதிச்சட்டத்தால் ஒரு
போதும் இயலாது. 2 அப்படிச் செய்ய
இயலுமானால், அந்தப் பலிகளைச் செலுத்
துவது நின்றிருக்கும் அல்லவா? ஏனெனில்,
வழிபாடு செய்கிறவர்கள் ஒரு முறை சுத்தி
கரிக்கப்பட்டுவிட்டால், அப்புறம் அவர்
களுக்குக் குற்ற உணர்ச்சி என்றைக்குமே
இல்லாமற்போகும். 3 ஆனால், பாவங்கள்
நீங்கவில்லை என்பது அந்தப் பலிகளினால்
ஆண்டுதோறும் நினைப்பூட்டப்படுகிறது.
4 ஆம், எருது, வெள்ளாட்டுக்கடா ஆகிய
வற்றின் இரத்தத்தால் பாவங்களை நீக்கி
விடமுடியாது.

5 ஆகையால், கிறிஸ்து உலகத்திற்கு
வந்தபோது கடவுளிடம்,
''பலியையும் காணிக்கையையும் நீர்
விரும்பவில்லை;
ஆனால், ஓர் உடலை எனக்கு
அமைத்துத் தந்தீர்.
6 எரிக்கப்படும் பலிகளும்
பாவப்பரிகாரப் பலிகளும்
உமக்கு உகந்தவையல்ல.
7 அப்பொழுது நான், கடவுளே,
உமது திருவுளத்தை நிறைவேற்ற
இதோ வருகிறேன்;
திருநூற்சுருளில் என்னைக் குறித்து
இவ்வாறு எழுதியிருக்கிறது
என்று சொன்னேன்''
என்றார். 8 முதலில் அவர், ''நீர் பலி
களையும் காணிக்கைகளையும் எரிக்கப்படும்
பலிகளையும் பாவப் பரிகாரப் பலிகளையும்
விரும்பவில்லை; அவை உமக்கு உகந்தவை
யல்ல'' என்று சொன்னார். இந்தப் பலி
கள் நீதிச்சட்டத்தின்படி செலுத்தப்பட்டு
வந்தபோதிலும் இப்படிச் சொன்னார்.
9 பிறகு அவர், ''கடவுளே, உமது திரு
வுளத்தை நிறைவேற்ற இதோ வரு
கிறேன்'' என்றார். எனவே, பிந்தியதை
நிலைநிறுத்துவதற்காக முந்தியதை அவர்
நீக்கிவிடுகிறார். 10 இயேசுகிறிஸ்து தமது
உடலை ஒரே முறை எல்லாக் காலத்திற்கு
மெனப் பலியாகப் படைத்து அந்தத் திரு
வுளத்தை நிறைவேற்றினதால் நாம்
கடவுளுக்கெனப் பிரித்துவைக்கப்பட்டிருக்
கிறோம்.

11 யூத ஆசாரியர் ஒவ்வொருவரும்
நாள்தோறும் திருப்பணி ஆற்றுகையில்
நின்றுகொண்டு மீண்டும் மீண்டும் ஒரே
வகையான பலிகளைச் செலுத்துகிறார்;
அவற்றால் பாவங்களைப் போக்க ஒரு
போதும் முடியாது. 12 ஆனால், கிறிஸ்துவோ
பாவங்களுக்காக ஒரே ஒரு பலியை
என்றென்றைக்குமெனச் செலுத்திவிட்டுக்
கடவுளின் வலப்பக்கத்தில் அமர்ந்தார்;
13 இனி தம்முடைய பகைவர் தமக்குப்
பாதப்படியாக்கப்படும் வரையிலும் அங்
கேயே காத்திருப்பார். 14 ஏனென்றால்,
கடவுளுக்கெனப் பிரித்து வைக்கப்படு
வோரை அவர் ஒரே ஒரு பலியினால் முழு
நிறைவான நிலையில் என்றென்றைக்கும்
இருக்கும்படி செய்துவிட்டார்.

15 இதைப்பற்றித் தூய ஆவியானவர்
அளிக்கும் சான்றும் நமக்கு உண்டு. அது
இதுவே:
16 ''அந்த நாள்களுக்குப் பின்பு, நான்
அவர்களோடு செய்யப்போகும்
உடன்படிக்கை இதுவே:
என் சட்டங்களை நான் அவர்
களுடைய உள்ளத்தில் பதியவைத்து,
அவர்களுடைய மனத்தில் அவற்றை
எழுதுவேன்
என்று ஆண்டவர் சொல்லுகிறார்''
எனத் தூய ஆவியானவர் முதலில் கூறு
கிறார். 17 பிறகு அவர்,
''அவர்களுடைய பாவங்களையும்
அவர்களுடைய அக்கிரமங்களையும்
இனிமேல் நான் நினைவில் வைத்
திருக்க மாட்டேன்''
என ஆண்டவர் கூறுகிறார் என்றும் சொல்லு
கிறார். 18 எனவே, பாவங்களுக்கு
மன்னிப்புக் கிடைத்தபின், பாவப் பரி
காரப் பலிக்கு இடமேயில்லை.

### கடவுளைக் கிட்டிச் சேர்வோமாக

19 சகோதரர்களே, பாருங்கள். இயேசு
தமது உடலாகிய திரையினூடே புதிய
தும் வாழ்வளிப்பதுமான ஒரு வழியை
நமக்கென்று திறந்துவைத்திருக்கிறார்.
20 அந்த வழியாகத் தூய அகத்திற்குள்

**10:5—7** *சங். 40:6—8.* **10:11** *யாத். 29:38.* **10:12, 13** *சங். 110:1.* **10:16** *எரே. 31:33.* **10:17** *எரே. 31:34.*

துணிவுடன் செல்வதற்கு நமக்கு அவரு
டைய இரத்தத்தினால் உரிமை கிடைத்
திருக்கிறது. 21 மேலும், கடவுளுடைய
வீட்டின்மீது அதிகாரமுடைய மாபெரும்
ஆசாரியர் நமக்கு இருக்கிறார். 22 ஆகை
யால், குற்ற உணர்ச்சி நீங்கச் சுத்திகரிக்
கப்பட்ட உள்ளமும் தூய நீரில் கழுவப்
பட்ட உடலும் உடையவர்களாய்க் கபட
மில்லாத உள்ளத்தோடும் நம்முடைய நம்
பிக்கையைப் பற்றிய முழு உறுதியோடும்
கடவுளின் திருவடியை அணுகுவோமாக.
23 அல்லாமலும், எதிர்காலத்தைப் பற்றி
நாம் வெளிப்படையாகச் சொல்லிவருகிற
நமது நம்பிக்கையில் உறுதியாக
நிலைத்திருப்போமாக. நமக்கு வாக்களித்தவர்
நம்பிக்கைக்குரியவர். 24 மேலும்,
ஒருவர்மீது ஒருவர் அக்கறைகொண்டு
அன்பு காட்டுவதிலேயும் நற்செயல் புரி
வதிலேயும் ஒருவருக்கொருவர் ஊக்க
மளித்துவருவோமாக. 25 சபையார்
ஒன்றுகூடும்போது சிலர் வழக்கமாக அதில்
கலந்துகொள்வதில்லை. நாம் அவ்வாறு
செய்யலாகாது. நாம் ஒன்றுகூடி ஒருவருக்
கொருவர் ஊக்கமூட்டுவோமாக. ஆண்ட
வரின் நாள் எவ்வளவுக்கெவ்வளவு நெருங்கி
வருகிறதென்று தெரிகிறதோ அவ்வளவுக்
கவ்வளவு இதைச் செய்ய வேண்டும்.
26 சத்தியத்தை நாம் நன்கறிந்தபின்,
வேண்டுமென்றே பாவம் செய்துவந்தால்,
இனி நமக்கு எந்தப் பாவப்பரிகாரப் பலி
யும் இராது. 27 தெய்வத் தீர்ப்பையும்
கடவுளின் பகைவரைச் சுட்டெரிக்கும்
அவரது சீற்றத்தையுமே நாம் எதிர்
பார்த்து நடுங்கிக்கொண்டிருக்க வேண்டும்.
28 மோசேயின் சட்டத்தை ஒருவன்
புறக்கணித்தால், அவன் இரண்டு அல்
லது மூன்று சாட்சிகளின் வாக்குமூலத்
தின்பேரில் இரக்கமின்றிச் சாகடிக்கப்படு
கிறானே. 29 அப்படியானால், கடவுளின்
மைந்தரைக் காலால் மிதித்து, தன்னைக்
கடவுளுக்கெனப் பிரித்து வைத்த உடன்
படிக்கை இரத்தத்தை இழிவாகக் கருதி,
அருள் தரும் ஆவியைப் பழிக்கிறவன்
எவ்வளவு கொடிய தண்டனையைப் பெற
வேண்டியவன் என்பதை எண்ணிப்பாருங்
கள். 30 ''பழிவாங்குவது என் பொறுப்பு.
நானே உங்கள் சார்பில் பதிலுக்குப்
பதில் செய்வேன்'' என்றும், ''ஆண்டவர்
தம் மக்களுக்குத் தீர்ப்பு அளிப்பார்''
என்றும் உரைத்தவர் இன்னார் என்பது
நமக்குத் தெரியும். 31 என்றுமுள்ள கட
வுளின் கையில் அகப்படுவது அஞ்சத்தக்க
பெரிய இடரல்லவா?

32 முன்னைய நாள்களை நினைத்துப்
பாருங்கள்; நீங்கள் ஒளியைப் பெற்றபின்,
உங்களுக்கு நேரிட்ட பாடுகளையும் போராட்
டத்தையும் பொறுமையோடு தாங்கிக்
கொண்டீர்கள். 33 சில வேளைகளில் நீங்கள்
வசைமொழிக்கும் துன்பங்களுக்கும்
ஆளாகி, வேடிக்கைக் காட்சிக்கென வைக்
கப்பட்டீர்கள்; சில வேளைகளில் அப்படிப்
பட்ட நிலையில் இருந்தவர்களைக் கைவிடாது
அவர்களுக்கு உறுதுணையாய் நின்
றீர்கள்; 34 சிறையிடப்பட்டவர்கள்மீது
பரிவிரக்கங்கொண்டீர்கள். மிக மேம்
பட்டதும் அழியாததுமான செல்வம் உங்
களுக்கு இருக்கிறது என்பதை நீங்கள்
அறிந்திருந்ததால்,உங்களுடைய சொத்துகள்
பறிமுதல் செய்யப்பட்டபோது,
அதற்கு நீங்கள் மகிழ்ச்சியோடு இடங்
கொடுத்தீர்கள். 35 உங்களுக்கு இருக்கும்
இந்த மன உறுதியை விட்டுவிடாதீர்கள்.
அதற்கு மிகுந்த பலன் உண்டு. 36 கடவுளின்
திருவுளத்தை நிறைவேற்றி, அவர்
வாக்களித்ததை நீங்கள் பெற்றுக்கொள்
வதற்கு உங்களிடம் இன்றியமையாது
இருக்க வேண்டுவது பொறுமையே.
37 ''இருக்கும் காலம் மிகமிகச்
சிறிதே;
வரவேண்டியவர் காலந்தாழ்த்தாது
வந்திடுவார்.
38 நேர்மையுடன் நடக்கிற என்
அடியான்
நம்பிக்கையால் மெய்வாழ்வைப்
பெறுவான்.
அவன் பின்வாங்கிச் செல்வானானால்,
எனக்கு உகந்தவனாயிரான்.''
39 நாம் பின்வாங்கி அழிந்துபோகிறவர்
களா? இல்லை. நாம் நம்பிக்கை உள்ளவர்
களாயிருந்து மெய்வாழ்வைப் பெறப்
போகிறவர்கள்.

### நம்பிக்கை

11 நம்பிக்கை என்பது எதிர்நோக்கப்
படுபவை கிடைக்கும் என்கிற உறுதி;
கண்ணுக்குத் தெரியாதவைபற்றிய ஐய
மற்ற நிலை. 2 நம்பிக்கையினால்தான் நம்
மூதாதையர் நற்சான்று பெற்றனர்.
3 நம்பிக்கையினால்தான் நாம் உலக
முழுமையும் கடவுளின் சொல்லால் உரு
வாக்கப்பட்டது என்றும், காணப்படாத
வற்றினின்று காணப்படுகிறவை உண்டா
யின என்றும் உணர்கிறோம்.
4 நம்பிக்கை இருந்ததால்தான் ஆபேல்
காயீனுடைய பலியைவிட மேலான பலி
யைக் கடவுளுக்குச் செலுத்தியவனானான்.
அதனால் அவன் நேர்மையானவன் என்று
கடவுளின் நற்சான்றும் பெற்றான்.
அவனுடைய காணிக்கைகள் ஏற்கத்தக்கவை
என்று அவர்தாமே உறுதியளித்தார்.

**10:22** இலே. 8:30; எசே. 36:25. **10:27** எசா. 26:11. **10:28** உபா. 17:6; 19:15. **10:29** யாத். 24:8. **10:30** உபா. 32:35, 36. **10:37, 38** ஆப. 2:3, 4. **11:3** ஆதி. 1:1; சங். 33:6, 9; யோ. 1:3. **11:4** ஆதி. 4:3—10.

அவன் இறந்துபோனபோதிலும் அந்த நம்
பிக்கையின் மூலம் இன்னும் பேசுகிறான்.
5 நம்பிக்கை இருந்ததால்தான், ஏனோக்கு
மரணத்தைக் காணாதிருக்கும்படி கடவு
ளால் எடுத்துக்கொள்ளப்பட்டார். அவரைக்
கடவுள் எடுத்துக்கொண்டதால்
அவர் மறைந்துபோனார். அவர் எடுத்துக்
கொள்ளப்படுவதற்கு முன்பே கடவுளுக்கு
உகந்தவர் என்று நற்சான்று பெற்றவரா
யிருந்தார். 6 நம்பிக்கையில்லாமல் ஒருவ
னாலும் கடவுளுக்கு உகந்தவனாயிருக்க முடி
யாது. ஏனெனில், கடவுளைக் கிட்டிச்
செல்லுகிறவன் அவர் இருக்கிறார் என்
பதையும், தம்மை ஆவலோடு நாடி வரு
கிறவர்களுக்குப் பலன் அளிக்கிறார் என்பதை
யும் நம்ப வேண்டும். 7 நம்பிக்கை இருந்த
தால்தான், நோவா தாம் காணமுடி
யாத வருங்கால நிகழ்ச்சிகளைக் குறித்துக்
கடவுளின் எச்சரிக்கையைப் பெற்றபோது
தம் குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காக
மிகுந்த கவனத்தோடு ஒரு பேழையை
உண்டாக்கினார். அதனால் உலகம் தண்ட
னைக்கு உரியது எனக் காட்டி, நம்பிக்கை
யினால் நேர்மையானவர் என்று கொள்
ளப்படும் நற்பேற்றுக்கு உரிமையாள
ரானார்.

8 நம்பிக்கை இருந்ததால்தான் ஆபிர
காம், தாம் அழைக்கப்பட்டபோது கீழ்ப்
படிந்து, உரிமைச் சொத்தாகப் பெற
விருந்த இடத்துக்குப் போனார்; தாம்
எங்கே போக வேண்டும் என்பது தெரியா
திருந்தும் புறப்பட்டுப் போனார். 9 நம்
பிக்கை இருந்ததால்தான் அவர் தமக்கு
வாக்களிக்கப்பட்ட நாட்டில் ஓர் அன்னி
யனைப்போலத் தங்கியிருக்க முடிந்தது.
அதே வாக்குறுதிக்கு உடன் உரிமையாள
ராகிய ஈசாக்கோடும் யாக்கோபோடும்
கூடாரங்களில் குடியிருந்தார். 10 ஏனெ
னில், அவர் கடவுளே சிற்பியாயிருந்து
கட்டும் அசையாத அடித்தளமுள்ள ஒரு
நகரத்தை எதிர்நோக்கியிருந்தார். 11 நம்
பிக்கை இருந்ததால்தான் ஆபிரகாம்
வயது சென்றவராயும் சாராள் மலடி
யாயும் இருந்தபோதிலும், அவர் ஒரு
தகப்பனாவதற்கான வலிமை பெற்றார்.
வாக்களித்தவர் நம்பிக்கைக்குரியவர் என்
பதில் அவர் சிறிதும் ஐயங்கொள்ள
வில்லை.* 12 இவ்வாறாக, செத்தவர்
போலிருந்த ஒரே ஒரு ஆள் வானத்தி
லுள்ள திரளான விண்மீன்களைப்போலவும்
கடற்கரையிலுள்ள எண்ணிறந்த
மணற்கற்களைப்போலவும் 'கணக்கற்றவர்
களாயிருந்த மக்களுக்குத் தந்தையானார்.
13 இவர்கள் எல்லாரும் நம்பிக்கை
உள்ளவர்களாகவே இறந்தார்கள். கடவுள்
வாக்களித்தவற்றை அவர்கள் அடைய
வில்லை; ஆனால், அவற்றைத் தொலைவில்
கண்டார்கள்; கண்டு வாழ்த்தினார்கள்.
இவ்வுலகில் தாங்கள் அன்னியர்களென்
பதையும் சிறிது காலமே தங்கியிருக்க
வேண்டியவர்கள் என்பதையும் அவர்கள்
ஒப்புக்கொண்டார்கள். 14 இப்படி ஒப்புக்
கொள்வோர் தமக்கென்றுள்ள நாட்
டைத் தேடிச் செல்வோர் எனக் காட்டு
கின்றனர். 15 இவ்வுலகில் தாங்கள் முத
லில் விட்டுவந்த நாட்டை அவர்கள்
நினைக்கவில்லை. அவர்கள் நினைத்திருந்தால்
அதற்குத் திரும்பிச்செல்ல அவர்களுக்கு
வாய்ப்பு இருந்திருக்கும். 16 ஆனால், அவர்
கள் ஒரு மேலான நாட்டின்மீது, அதா
வது விண்ணிலுள்ள நாட்டின்மீது நாட்
டங்கொண்டிருக்கிறார்கள். அதனாலேதான்
'அவர்களுடைய கடவுள்' என்று அழைக்
கப்படும் அவர் அவர்களைக் குறித்து வெட்
கப்படுவதில்லை; அவர்களுக்காக ஒரு
நகரத்தையும் ஏற்கெனவே அமைத்து
வைத்திருக்கிறார்.

17 நம்பிக்கை இருந்ததால்தான் ஆபிர
காம், தாம் சோதிக்கப்பட்டபோது,
ஈசாக்கைக் கடவுளுக்கு ஒப்புக்கொடுத்
தார். 18 கடவுளின் வாக்குறுதிகளை அவர்
பெற்றிருந்தபோதிலும், ''ஈசாக்கின் வழி
யாகத்தான் உன் மரபினர் தோன்றுவர்''
என்று அவருக்குச் சொல்லப்பட்டிருந்த
போதிலும், அவர் தம் ஒரே மகனைப்
பலியாகப் படைக்க முன்வந்தார். 19 ஏனெ
னில், கடவுள் மரணத்தினின்று ஒருவனை
உயிரோடெழுப்பவும் வல்லவர் என்பதை
அவர் தெளிவாக உணர்ந்திருந்தார்.
அப்படியே அவர் ஈசாக்கை மீண்டும் பெற்
றுக்கொண்டார். பின்னால் நடக்கப்போவ
தற்கு இது ஒரு முன்னடையாளமா
யிற்று. 20 நம்பிக்கை இருந்ததால்தான்
ஈசாக்கு வருங்கால நிகழ்ச்சிகளை முன்னறி
வித்து, யாக்கோபையும் ஏசாவையும்
வாழ்த்தினார். 21 நம்பிக்கை இருந்ததால்
தான் யாக்கோபு, தாம் சாகும் தறு
வாயில் இருந்தபோது, தம் ஊன்று
கோலின்மீது சாய்ந்து கடவுளைத்
தொழுது, யோசேப்பின் மைந்தர் இரு
வரையும் வாழ்த்தினார். 22 நம்பிக்கை
இருந்ததால்தான் சாகுந்தறுவாயிலிருந்த

* 'நம்பிக்கை இருந்ததால்தான் சாராள் வயது சென்றவளாயிருந்தும் அவளும் ஒரு தாயாவதற்கான வலிமை பெற்றாள். வாக்களித்தவர் நம்பிக்கைக்குரியவர் என்பதில் அவள் சிறிதும் ஐயங்கொள்ளவில்லை' என்பதும் பாடம்.

11:5 ஆதி. 5:21—24. 11:7 ஆதி. 6:13—22. 11:8 ஆதி. 12:1—5. 11:9 ஆதி. 35:27. 11:11 ஆதி. 18:11—14; 21:2. 11:12 ஆதி. 15:5; 22:17; 32:12. 11:13 ஆதி. 23:4; 1 வரலாறு. 29:15; சங். 39:12. 11:17 ஆதி. 22:1—14. 11:18 ஆதி. 21:12. 11:20 ஆதி. 27:27—29, 39, 40. 11:21 ஆதி. 47:31—48:20. 11:22 ஆதி. 50:24, 25; யாத். 13:19.

யோசேப்பு, இஸ்ரவேல் மக்கள் எகிப்து
நாட்டைவிட்டு வெளியேறுவார்கள்
என்பதை அறிவித்தார், தம் எலும்புகளை
என்ன செய்ய வேண்டும் என்றும் சொன்னார்.

23 நம்பிக்கை இருந்ததால்தான் மோசே
பிறந்தபோது, அவர் அழகான குழந்தையா
யிருந்ததைக் கண்டு அவருடைய பெற்
றோர், அரசனுடைய கட்டளைக்கும் அஞ்
சாமல் அவரை மூன்று மாதங்களாக
ஒளித்து வைத்திருந்தனர். 24 நம்பிக்கை
இருந்ததால்தான் மோசே, தாம் பெரிய
வரானபோது பார்வோனுடைய மகளின்
மகன் என்கிற பெயரை வெறுத்துத்
தள்ளினார். 25 அவர் பாவ இன்பங்களைச்
சிறிது காலம் நுகர்வதையன்று, கடவுளின்
மக்களோடு சேர்ந்து துன்புறு
வதையே தேர்ந்துகொண்டார். 26 ஏனெ
னில், அவர் தமக்குக் கிடைக்கவிருந்த
பலனையே கவனத்தில் இருத்தி, எகிப்து
நாட்டின் செல்வத்தைவிட மேசியாவின்
பொருட்டு வரும் இழிவே மேலான செல்
வம் என்று எண்ணினார். 27 நம்பிக்கை
இருந்ததால்தான் அவர் எகிப்து நாட்டை
விட்டுச் சென்றாரேயன்றி, அரசனுடைய
சினத்திற்கு அஞ்சியன்று; காணமுடியா
தவரைக் காண்பவராகி மன உறுதியோ
டிருந்தார். 28 நம்பிக்கை இருந்ததால்
தான் அவர் முதற்பேறானவர்களை அழிக்
கும் தெய்வதூதன் இஸ்ரவேலரைத் தீண்
டாதிருக்கும்படி இரத்தத்தைத் தெளித்துப்
பஸ்காவைக் கொண்டாடினார். 29 நம்
பிக்கை இருந்ததால்தான் இஸ்ரவேலர்
கட்டாந்தரையைக் கடப்பதுபோலச் செங்
கடலைக் கடந்து சென்றனர். எகிப்தியர்கள்
அப்படிச் செய்யப் பார்த்தபோது
அழிந்துபோனார்கள். 30 நம்பிக்கை இருந்
ததால்தான் இஸ்ரவேலர் எரிகோவின்
மதிற்சுவரை ஏழு நாள் சுற்றிவர, அது
விழுந்தது. 31 நம்பிக்கை இருந்ததால்
தான் ராகாப் என்னும் விலைமகள் ஒற்றர்
களைப் பகைமை உணர்ச்சியின்றி வர
வேற்று, கடவுளுக்குக் கீழ்ப்படியாத மக்
களோடு அழிந்துபோகாதபடி தன்னைக்
காத்துக்கொண்டாள்.

32 இன்னும் சொல்ல வேண்டுமா? கிதி
யோன், பாராக், சிம்சோன், யெப்தா,
தாவீது, சாமுவேல் என்பவர்களையும்
இறைவாக்குரைப்போரையும்பற்றிய வர
லாறுகளைக் கூற எனக்கு நேரமில்லை.
33 நம்பிக்கையின் மூலந்தான் இவர்கள்
அரசுகளை எதிர்த்து வென்றார்கள்; நேர்மை
யானதை நடப்பித்தார்கள்; கடவுள்
வாக்களித்தவற்றைப் பெற்றார்கள்; சிங்
கங்களின் வாயை அடைத்தார்கள்;
34 கொழுந்துவிட்டெரியும் தீயைக் குளிர்ந்து
போகச் செய்தார்கள்; வாள்முனைக்குத்
தப்பினார்கள். வலிமையற்ற இவர்கள்
வலிமை பெற்றார்கள்; ஆற்றலுடன் போர்
புரிந்தார்கள்; பகைவர் படைகளை முறி
யடித்தார்கள். 35 இறந்துபோன தங்கள்
குடும்பத்தினர் உயிருடன் எழுந்துவரப்
பெண்கள் கண்டார்கள். சிலர் அதைவிட
மேன்மையான உயிர்த்தெழுதலை அடையும்
பொருட்டு, விடுதலைபெற மறுத்து
வதையுண்டு மாண்டனர். 36 வேறு சிலர்
ஏளனத்துக்கும் சாட்டையடிகளுக்கும்
ஆளாயினர்; 37 விலங்கிடப்பட்டுச் சிறையில்
வாடினர்; கல்லடியால் இறந்தனர்;
வாளால் அறுப்புண்டனர்; பட்டயத்திற்கு
இரையாயினர்; வறுமையுற்று, துன்பத்
திற்கும் கொடுமைக்கும் உள்ளாகி, செம்
மறி வெள்ளாடு ஆகியவற்றின் தோல்
களைப் போர்த்துக்கொண்டு திரிந்தனர்.
38 அவர்களைத் தாங்க இம்மண்ணுலகம்
தகுதியற்றதாயிருந்தது. அவர்கள் குகை
களிலும் குழிகளிலும் தங்கி, மனித நட
மாட்டமில்லாத இடங்களிலும் மலைகளி
லும் அலைந்து திரிந்தார்கள்.

39 இவர்களெல்லாரும் தம் நம்பிக்கை
யின் மூலம் நற்சான்று பெற்றிருந்தனர்;
என்றாலும், இவர்கள் கடவுளால் வாக்
களிக்கப்பட்டதைப் பெறவில்லை. 40 ஏனெ
னில், நம் பொருட்டுக் கடவுள் மேலான
திட்டம் ஒன்றை வகுத்திருந்தார். அது
யாதெனில், அவர்கள் நம்மோடு சேர்ந்தே
முழுநிறைவு பெற வேண்டும் என்பதே.

### ஆண்டவர் அளிக்கும் பயிற்சி

12 எனவே, நாம் செய்ய வேண்டுவது
யாது? ஆண்டவரின் சாட்சிகளாய்
விளங்கின இத்தனை பேரும், திரண்டுவரும்
மேகம்போல நம்மைச் சூழ்ந்திருப்பதால்,
நாம் பளுவாயிருக்கும் பொருள்கள் அனைத்
தையும் உதறித் தள்ளிவிட்டு, இயேசு
வையே நோக்கியவண்ணம் நமக்குக் குறிப்
பிட்டுள்ள ஓட்டப்பந்தயத்தில் எந்த இடர்
வந்தாலும் பொறுமையோடு ஓடுவோ
மாக. 2 நம்பிக்கை ஓட்டத்தில் அவர்
முதன் முதல் ஓடினவர், அதை முழு
நிறைவுக்குக் கொண்டு வருபவர்.* அவர்,

* 'அவரே நமது நம்பிக்கையைத் தொடங்கினவர். அதை முழு நிறைவுக்குக் கொண்டுவருபவர்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

**11:23** யாத். 2:2; 1:22. **11:24** யாத். 2:10—12. **11:27** யாத். 2:15. **11:28** யாத். 12:21—30. **11:29** யாத். 14:21—31. **11:30** யோசுவா 6:12—21. **11:31** யோசுவா 6:22—25; 2:1—21. **11:32** நீதிபதி. 6:11—8:32; 4:6—5:31; 11:1—12:7; 1 சாமு. 16:1—1 அர. 2:11; 1 சாமு. 1:1—25:1. **11:33** தானி. 6:1—27. **11:34** தானி. 3:1—30. **11:35** 1 அர. 17:17—24; 2 அர. 4:25—37. **11:36** 1 அர. 22:26, 27; 2 வரலாறு. 18:25, 26; எரே. 20:2; 37:15; 38:6. **11:37** 2 வரலாறு. 24:21.

தாம் அடையவிருந்த மகிழ்ச்சியைக் கருதி
சிலுவையினால் வரும் இழிவையும் பொருட்
படுத்தாமல், அந்த மரணத்தை ஏற்றுக்
கொண்டார்; இப்போது கடவுளுடைய
அரியணையின் வலப்பக்கத்தில் வீற்றிருக்
கிறார். 3 பாவிகளால் தமக்கு எவ்வளவோ
பெரிய எதிர்ப்பு உண்டானபோதிலும்
அசையாது நின்ற அவரை நீங்கள் நினைத்
துக்கொள்ளுங்கள். அப்படிச் செய்வது,
நீங்கள் மனச்சோர்வோ தளர்ச்சியோ
அடையாதிருக்க உங்களுக்கு உதவியா
யிருக்கும்.

4 நீங்கள் பாவத்தை எதிர்த்துப் போரா
டுகிறீர்கள். ஆனால், அந்தப் போராட்டத்
தில் இன்னும் நீங்கள் உங்கள் இரத்தத்
தைச் சிந்தும்படி நேரிடவில்லை. 5 தம்
பிள்ளைகளுக்குச் சொல்லுவதுபோலக்
கடவுள் உங்களுக்கு ஊக்கமளித்துச் சொல்லி
யிருக்கிறதை நீங்கள் மறந்துவிட்டீர்கள்.
'என் மகனே, ஆண்டவர் உன்னைத்
தண்டித்துத் திருத்தும்போது,
அதைக் கவனியாமல் இராதே.
அவர் கண்டிக்கும்போது சோர்ந்து போ
காதே.
6 எவனிடம் ஆண்டவர் அன்பு
கொண்டிருக்கிறாரோ அவனைத்
தண்டித்துத் திருத்துகிறார்.'
தாம் ஏற்றுக்கொள்ளும் ஒவ்வொரு
மகனையும் சாட்டையால் அடிக்கிறார்.
7 உங்களைத் திருத்துவதற்காகத்தான் அப்
படிச் செய்கிறார் என்பதை உணர்ந்து
அதைத் தாங்கிக்கொள்ளுங்கள். கடவுள்
உங்களைத் தம் மைந்தர்களாக நடத்து
கிறார். திருத்துவதற்கென்று தகப்பனால்
தண்டிக்கப்படாத மைந்தன் உண்டா?
8 எல்லா மைந்தருக்கும் அளிக்கப்படும்
அவ்வகையான தண்டனை உங்களுக்கு
அளிக்கப்படாவிட்டால், நீங்கள் உண்மை
யான மைந்தர்களாய் இருக்கமாட்டீர்கள்,
சோரப் பிள்ளைகளாகவே இருப்பீர்கள்.
9 மனித முறையில் நமக்குத் தந்தைய
ராய் இருப்போர் நம்மைத் தண்டித்துத்
திருத்திவந்தனர். நாமும் அவர்களை
உயர்வாக மதித்துவந்தோம். அப்படி
யானால், நமக்கு ஆன்மீக முறையில் தந்தை
யாயிருப்பவருக்கு நாம் இன்னும்
மிகுதியாக அடங்கி நடந்து மெய்வாழ்
வைப் பெற வேண்டும் அல்லவா? 10 அவர்
கள் நம்மைச் சிறிது காலம் தங்களுக்கு
நலமென்று தோன்றின வகையில் தண்
டித்துத் திருத்தினார்கள். ஆனால் கட
வுளோ, நமது நன்மைக்கென்றே, அவரைப்
போலவே நாமும் தூய்மையுள்ளவர்களாய்
விளங்க வேண்டுமென்றே நம்மைத் தண்
டித்துத் திருத்துகிறார். 11 இவ்வாறான
எந்தத் தண்டனையும் அளிக்கப்படும்போது
மகிழ்ச்சி தருவதாகத் தோன்றாது, துய
ரம் தருவதாகத்தான் தோன்றும். ஆனால்,
பிற்காலத்திலோ, அதனால் பயிற்றுவிக்கப்
பட்டவர்களிடம் அது அமைதியும் நேர்
மையும் பொருந்திய வாழ்க்கையை விளை
விக்கும்.

12 எனவே, ஓய்ந்துபோன கைகளும்
நடுக்கமுறும் முழங்கால்களும் உள்ளவர்
களே, திடன்பெறுங்கள். 13 ஊனமாய்ப்
போன கால்மூட்டுப் பிசகாமலிருந்து
குணமடையும்படி, உங்கள் கால்கள் செல்
லும் பாதையைச் செவ்வையாக்குங்கள்.

## கடவுளின் அருளைப் புறக்கணித்துவிடாதபடி எச்சரிக்கை செய்தல்

14 யாவரோடும் சமாதானத்துடன்
இருப்பதையும் தூய வாழ்க்கையையும்
நாடுங்கள்; தூய வாழ்க்கை இல்லையானால்
எவனும் ஆண்டவரைக் காண
முடியாது. 15 யாரும் கடவுளின் அருளை
இழந்துவிடாதபடி பார்த்துக்கொள்ளுங்
கள்; கசப்பான நச்சுவேர் எதுவும் முளைத்துக்
கலக்கம் உண்டாக்கி எல்லாரையும்
கெடுத்துவிடாதபடியும் பார்த்துக்கொள்
ளுங்கள். 16 உங்களுள் எவனும் ஒழுக்கங்
கெட்டவனாகவோ, ஏசாவைப்போல
உலகப்பற்று உள்ளவனாகவோ,
இராதபடியும் பார்த்துக்கொள்ளுங்கள்.
ஏசா ஒரே ஒரு வேளை உணவுக்காகத் தன்
முதற்பேற்றுரிமையை விற்றுவிட்டான்.
17 பின்னர் அவன் தனக்குரிய ஆசியைப்
பெற விரும்பினபோது, அவன் தள்ளி
விடப்பட்டான். ஏனென்றால், அவன்
அதைக் கண்ணீரோடு நாடினபோதிலும்,
தந்தையின் மனத்தை மாற்ற அவனால்
இயலவில்லை. இது உங்களுக்குத் தெரியும்.*

18 நீங்கள் அணுகியிருப்பது பருப்
பொருளாகிய சீனாய் மலையன்று. அங்கே
நெருப்புப் பற்றி எரிந்தது; மந்தாரமும்
காரிருளும் சூழ்ந்திருந்தன; பெருங்காற்று
வீசிற்று; எக்காளம் முழங்கிற்று; பேச்சுக்
குரல் கேட்டது. 19 அந்தக் குரலைக் கேட்
டவர்கள், அக்குரல் அதற்குமேல் தங்
களுக்கு ஒரு வார்த்தைகூடச் சொல்ல
வேண்டாம் என்று கேட்டுக்கொண்
டார்கள். 20 ஏனென்றால், ''ஒரு விலங்
கின் கால் அம்மலைமீது பட்டாலும்,
அந்த விலங்கைக் கல்லாலடித்துக்

* 'ஏனெனில், அவன் மனமாற்றமடையக் கண்ணீரோடு விரும்பியும், அந்த மனமாற்றத்தை அடைய இயலாமற்போயிற்று' என்றும் மொழி பெயர்க்கலாம்.

12:5, 6 யோபு 5:17; நீதி. 3:11, 12. 12:12 ஏசா. 35:3. 12:16 ஆதி. 25:29—34. 12:17 ஆதி. 27:30
40. 12:18, 19 யாத். 19: 16—22; 20:18—21; உபா. 4:11, 12; 5:22—27. 12:20 யாத். 19:12, 13.

கொன்றுவிட வேண்டும்'' என்று சொல்லப்
பட்ட கட்டளையையே அவர்களால் தாங்க
முடியவில்லை. 21 மேலும், மோசே, ''நான்
அஞ்சி நடுங்குகிறேன்'' என்று சொல்லும்
அளவுக்கு அந்தக் காட்சி அச்சந்தருவதா
யிருந்தது. 22 நீங்கள் அணுகியிருப்பதோ
அத்தகையதன்று. நீங்கள் சீயோன்
மலைக்கும், என்றுமுள்ள கடவுளின் நகர
மாகிய விண்ணக எருசலேமுக்கும் எண்
ணற்ற தெய்வதூதர்களிடமும் வந்
திருக்கிறீர்கள்; 23 விண்ணுலகில் பெய
ரெழுதியுள்ள முதற்பேறானவர்கள் விழாக்
கோலத்தில் கூடியிருக்கும் சபைக்கும்
யாவருக்கும் நீதிபதியாகிய கடவுளின்
முன்னிலைக்கும் முழு நிறைவு எய்திய
சான்றோருடைய ஆவிகளின் முன்னும்,
24 புது உடன்படிக்கையின் இணைப்பாள
ராகிய இயேசுவினிடமும் வந்திருக்கிறீர்கள்.
ஆபேலின் இரத்தம் விளைவித்ததைவிட
மேலான பலனை விளைவிக்கும் அவரது
இரத்தத்தினால் தெளிக்கப்பட்டுமிருக்
கிறீர்கள்.

25 அவர் பேசும்போது அவருக்கு
நீங்கள் செவிகொடாமற்போய்விடாதபடி
விழிப்பாயிருங்கள். இவ்வுலகில் தெய்வ
கட்டளைகளைக் கூறினவருக்குச் செவி
கொடாமற்போன அவர்கள் தண்டனைக்
குத் தப்பவில்லை. அப்படியிருக்க, விண்
ணுலகிலிருந்து பேசுகிறவரை நாம் புறக்
கணித்தால் எப்படித் தப்புவோம்? 26 அவ
ருடைய குரல் அன்று மண்ணுலகை நடுக்க
முறச் செய்தது. இப்பொழுது அவர்,
''மண்ணுலகை இன்னும் ஒரு முறை நடுக்க
முறச் செய்வேன்; மண்ணுலகை மட்டு
மன்று, விண்ணுலகையும் நடுக்கமுறச்
செய்வேன்'' என்று உறுதி கூறியிருக்
கிறார். 27 'இன்னும் ஒரு முறை' என்பது
எதைக் குறிக்கிறதென்றால், அசையக் கூடி
யவை உண்டாக்கப்பட்டவை; ஆகையால்
அவை அகற்றப்படும்; அப்பொழுது அசை
யாதவையே நிலைக்கும் என்பதைக் குறிக்
கிறது. 28 ஆகவே, அசைக்க முடியாத
அரசைப் பெறும் நாம் நன்றியுள்ளவர்
களாய் இருப்போமாக; நன்றியுணர்ச்சி
யோடும் பக்தியோடும் அச்சத்தோடும்
கடவுளுக்கு உகந்த வகையில் அவரைத்
தொழுவோமாக. 29 நம்முடைய கடவுள்
சுட்டெரிக்கும் நெருப்பாயிருக்கிறார்.

## கடவுளுக்கு உகந்த வாழ்க்கை

**13** உங்களிடையே சகோதர அன்பு
நிலைப்பதாக. அன்னியரை உபசரிக்க
மறவாதீர்கள். 2 இப்பழக்கம் காரணமாக
சிலர் தமக்குத் தெரியாமலே தெய்வ
தூதரையும் உபசரித்ததுண்டு. 3 சிறையி
லிருப்பவர்களோடு நீங்களும் சிறையி
லிருப்பதாக நினைத்துக்கொள்ளுங்கள்;
அவர்களை மறவாதீர்கள்; உங்களுக்கும்
உடல் இருப்பதால், உடல் சார்ந்த
கொடுமைக்கு உள்ளானவர்களை மற
வாதீர்கள். 4 திருமணம் யாவராலும்
உயர்வாக மதிக்கப்படுவதாக. பள்ளி
யறை மஞ்சம் மாசுறாதிருக்கட்டும். ஒழுக்
கங்கெட்டவர்களும் பிறர்மனை நயப்போரும்
கடவுளின் தீர்ப்புக்கு உள்ளாவார்கள்.
5 நீங்கள் பண ஆசை இல்லாத
வர்களாய் வாழ்க்கை நடத்துங்கள்; உள்
ளதே போதுமென்றிருங்கள். ஏனெனில்,
''நான் ஒருபோதும் உன்னை விட்டுப்
பிரியேன், உன்னைக் கைவிடேன்'' என்று
கடவுள் சொல்லியிருக்கிறார். 6 அத
னால் நாம் துணிவுகொண்டு,

''ஆண்டவர் எனக்குத் துணை,
நான் அஞ்சிடேன்,
மனிதன் எனக்கு என்ன செய்து
விட முடியும்?''

என்று சொல்லலாம்.
7 உங்களுக்குக் கடவுளின் செய்தியை
எடுத்துச் சொன்ன உங்கள் தலைவர்களை
நினைத்துப்பாருங்கள்; அவர்கள் எவ்
வாறு வாழ்ந்து எவ்வாறு வாழ்க்கையை
முடித்தார்கள் என்பதை எண்ணிப்
பார்த்து, அவர்கள் கொண்டிருந்த நம்
பிக்கையையே நீங்களும் கொண்டிருங்கள்.
8 இயேசுகிறிஸ்து நேற்றும் இன்றும் என்றும்
மாறாதவர். 9 பல்வேறு வகைப்பட்ட
நூதனமான போதனைகளால் இழுப்புண்டு
போகாதீர்கள். உணவு பற்றிய விதிகளினா
லன்று, அருளினாலே உள்ளத்தை உறுதிப்
படுத்துவதே நல்லது. அவ்விதிகளைக்
கடைப்பிடிக்கிறவர்கள் இந்நாள் வரை
யிலும் எந்தப் பயனையும் அடைந்ததில்லை.
10 நமக்கு ஒரு பலிபீடம் இல்லாம
லில்லை. அதில் படைக்கப்பட்டவற்றை
உட்கொள்வதற்குக் கூடாரத்தில் திருப்
பணி செய்கிறவர்களுக்கு உரிமையில்லை.
11 எந்த விலங்குகளின் இரத்தத்தைப்
பாவப் பரிகாரமாகத் தலைமை ஆசாரியர்
தூய அகத்திற்குள் கொண்டு செல்
கிறாரோ, அந்த விலங்குகளின் உடல்கள்
பாளையத்திற்கு வெளியே எரிக்கப்படு
கின்றன. 12 அவ்வாறே, இயேசுவும்
தமது சொந்த இரத்தத்தைச் சிந்தித்
தம் மக்களைத் தமக்கென்றே பிரித்து
வைப்பதற்காக நகரவாயிலுக்கு வெளியே
பாடுற்று உயிர்துறந்தார். 13 ஆகவே,
நாமும் அவர் பொருட்டு வரும் இழிவை
ஏற்றுக்கொண்டு, பாளையத்திற்கு வெளியே
அவரிடம் செல்வோமாக. 14 ஏனெனில்,

12:21 உபா. 9:19. 12:24 ஆதி. 4:10. 12:25 யாத். 20:22. 12:26 ஆகாய் 2:6. 12:29 உபா. 4:24. 13:2 ஆதி. 18:1—8; 19:1—3. 13:5 உபா. 31:6, 8; யோசுவா 1:5. 13:6 சங். 118:6. 13:11 இலே. 16:27.

நிலையான நகரம் நமக்கு இங்கே இல்லை;
நாம் வரப்போகும் நகரத்தையே நாடு
கிறவர்களாயிருக்கிறோம். 15 ஆகவே, அவ
ருடைய திருப்பெயரை ஏற்று, அவரை
வாயாரப் போற்றுதலாகிய தோத்திர
பலியை அவர் மூலமாக எப்போதும்
கடவுளுக்குச் செலுத்துவோமாக. 16 நன்மை
செய்யவும், உங்களுக்கு உள்ளதைப் பிற
ருடன் பகிர்ந்துகொள்ளவும் மறவாதீர்கள்.
இப்படிப்பட்ட பலிகளே கடவுளுக்கு
உகந்தவை.

17 உங்கள் தலைவர்கள் உங்களைப்பற்றிக்
கணக்குக் கொடுக்க வேண்டியிருப்பதால்,
அவர்கள் உங்களுக்கு நன்மை உண்டா
கும்படி அயராது உழைத்து வருகிறார்கள்.
ஆகையால், அவர்களுக்குக் கீழ்ப்
படிந்து, அவர்களோடு இணங்கிப்போங்
கள். அப்பொழுது அவர்கள் இதை மன
வேதனையோடன்று மனமகிழ்ச்சியோடு
செய்வார்கள். அவர்கள் இதை மன
வேதனையோடு செய்தால் உங்களுக்கு
நன்மை கிடைக்காது.

18 எங்களுக்காக வேண்டுதல் செய்து
வாருங்கள். ஏனெனில், நாங்கள் எல்லா
வற்றிலும் நேர்மையோடு நடக்க வேண்டு
மென்பதே எங்கள் விருப்பம். எங்கள்
மனச்சான்றும் குற்றமற்றதாயிருக்கிறது
என்கிற உறுதி எங்களுக்கு உண்டு.
19 கடவுள் என்னை உங்களிடம் விரைவில்
மீண்டும் கொண்டுவந்து சேர்க்க அவரிடம்
நீங்கள் வேண்டுதல் செய்யும்படி உங்களை
வருந்திக் கேட்டுக்கொள்கிறேன்.

## வாழ்த்துரை

20 ஆடுகளின் மாபெரும் ஆயரான
நம்முடைய ஆண்டவராகிய இயேசுவை,
என்றுமுள்ள உடன்படிக்கை இரத்தத்தை
முன்னிட்டு இறந்தோரிடமிருந்து உயிரோ
டெழுந்து வரச்செய்த சமாதானத்தின்
ஊற்றாகிய கடவுள்தாமே, 21 தமது திரு
வுளத்தை நிறைவேற்றுவதற்குத் தேவை
யான எல்லா நல்ல திறன்களையும் உங்
களுக்குத் தந்தருளுவாராக! அவர் நம்மை
இயேசுகிறிஸ்துவின் மூலம் தமக்கு உகந்த
வர்களாய் இருக்கும்படி செய்தருள்
வாராக! இயேசுகிறிஸ்துவுக்கே என்
றென்றும் மாட்சிமை! ஆமேன்.

22 சகோதரர்களே, இந்த அறிவுரை
களை நீங்கள் பொறுமையோடு ஏற்றுக்
கொள்ளும்படி உங்களைக் கேட்டுக்கொள்
கிறேன். 23 சுருக்கமாகவே உங்களுக்கு
எழுதியிருக்கிறேன். இதையும் தெரிந்து
கொள்ளுங்கள்: நம்முடைய சகோதர
ராகிய தீமோத்தேயு விடுதலையாகிவிட்டார்.
அவர் இங்கே விரைவில் வந்து சேர்ந்
தால், நான் அவரோடு உங்களை வந்து
பார்ப்பேன்.

24 உங்கள் தலைவர்கள் யாவருக்கும்,
கடவுளுக்குரிய மக்கள் யாவருக்குமே
வாழ்த்துக் கூறுங்கள். இத்தாலியா நாட்டி
னின்று இங்கே வந்திருப்பவர்கள் உங்
களுக்கு வாழ்த்துக் கூறுகிறார்கள். 25 அருள்
உங்கள் அனைவரோடும் இருப்பதாக!

# யாக்கோபின் கடிதம்

1 கடவுளுக்கும் ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவுக்கும் அடியானாகிய யாக்
கோபு உலகெங்கும் சிதறலாக வாழும்
பன்னிரு குலத்தினருக்கும் வாழ்த்துச்கூறி
எழுதுவதாவது:

## நம்பிக்கையும் ஞானமும்

2 என் சகோதரர்களே, நீங்கள் பல
வகையான சோதனைகளுக்கு உள்ளாகும்
போது, உங்களை நற்பேறு பெற்றவர்கள்
என்று எண்ணிக்கொள்ளுங்கள். 3 ஏனெ
னில், ஆண்டவரைப்பற்றும் உங்கள் நம்
பிக்கை சோதிக்கப்பட்டால், நீங்கள்
மிகுந்த பொறுமையுடையவர்களாவீர்கள்
என்பது உங்களுக்குத் தெரியும். 4 நீங்கள்
பொறுமையுள்ளவர்களாய்க் கடைசிவரை
யிலும் நிலைத்து நில்லுங்கள்; அப்பொழுது
முழுத்தேர்ச்சியும் நிறைவும் அடைந்த
வர்களாய் எவ்வகையான குறைபாடு
மின்றி விளங்குவீர்கள். 5 உங்களுள் யாரா
வது ஞானத்தில் குறைவுள்ளவனாயிருந்
தால், அவன் கடவுளிடம் கேட்கட்டும்.
அவர் அவனுக்கு ஞானத்தை அருளுவார்.
அவர் எல்லாருக்கும் தயக்கமில்லாமல்
வரையறையின்றிக் கொடுப்பவர். 6 ஆனால்,
கேட்பவன் சிறிதளவும் ஐயங்கொள்ளா
மல் நம்பிக்கையோடு கேட்க வேண்டும்.
ஐயங்கொள்ளுகிறவன் காற்றினால் அலைக்
கழிக்கப்படும் கடல் அலையைப் போன்றவன்.
7 அவன் இருமனமுள்ளவன்; தான்
எந்த வழியில் சென்றாலும் உறுதியோடு
செல்லாதவன். 8 ஆகையால், அப்படிப்
பட்ட மனிதன், தான் ஆண்டவரிடம்
எதையும் பெற முடியும் என்று நினைப்பது
வீண். 9 தாழ்நிலையில் இருந்த ஒரு சகோ
தரன் தனக்கு வந்திருக்கும் உயர்வைப்
பெருமைக்குரிய காரியமாகக் கொள்ளட்டும்.
10 செல்வமுள்ளவன் தனக்கு வந்
திருக்கும் தாழ்நிலையை அவ்வாறே கொள்
ளட்டும். ஏனென்றால், செல்வமுள்ளவன்
புல்லின் பூவைப்போல அழிவான். 11 கதி
ரவன் எழுந்தபின் வெயில் ஏறிப் புல்லைத்
தீய்த்துவிட, அதன் பூ உதிரும்;
அதன் அழகிய தோற்றமும் மறையும்;
அவ்வாறே செல்வமுள்ளவனும் அவனுடைய
அலுவல்களும் வாடி மறையும்.

## சோதனை

12 சோதனையைப் பொறுமையுடன்
தாங்கிக்கொள்ளுகிற மனிதன் நற்பேறு
பெற்றவன். ஏனெனில், அவன் சோதிக்
கப்பட்டுத் தகுதியுள்ளவனென விளங்கும்
போது, ஆண்டவர் தம்மிடம் அன்பு
கொள்ளுகிறவர்களுக்கு வாக்களித்த என்று
முள்ள மெய்வாழ்வாகிய வெற்றிமாலை
யைப் பெறுவான். 13 ஒருவனுக்குச்
சோதனையோ, பாவம் செய்யத் தூண்டு
தலோ வரும்போது, அவன், ''இது எனக்
குக் கடவுளால் வந்தது'' என்று சொல்ல
வேண்டாம். ஏனென்றால், கடவுள் அத்த
கைய தீய தூண்டுதலுக்கு ஆளாவதில்லை
என்பது மட்டுமன்றி, அவர் எவனையும்
அவ்வாறு தூண்டுவதுமில்லை. 14 ஒவ்வொரு
வனும் தீமையான தன் சொந்த விருப்
பத்தாலேதான் பாவம் செய்யத் தூண்
டப்படுகிறான்; அதுவே அவனை மயக்கித்
தன் வயப்படுத்துகிறது. 15 பிறகு அந்த
விருப்பம் கருக்கொண்டு பாவத்தைப்
பெற்றெடுக்கிறது; பாவம் முழு வளர்ச்சி
யடைந்ததும் சாவென்னும் மகவை ஈன்
றெடுக்கிறது.
16 என் அன்பார்ந்த சகோதரர்களே,
நீங்கள் ஏமாந்துபோக வேண்டாம்.
17 நன்மையான எந்த ஈவானாலும்
நிறைவான எந்த நன்கொடை
யானாலும், அது விண்ணினின்றே
வருகின்றது; ஒளியெல்லாம் படைத்த தந்
தையாரே அவற்றின் பிறப்பிடம். அவர்
மாறி மாறித் தோற்றமளிப்பதில்லை; தம்
முகத்தை மறைத்து நம்மை இருளில்
ஆழ்த்துவதுமில்லை. 18 அவர் தம்முடைய
படைப்புகள் யாவற்றுள்ளும் நாமே முதன்
முதலாகத் தமக்குச் சொந்தமாக வேண்டு
மென்று திருவுளங்கொண்டு நம்மைச் சத்திய
அருட்செய்தியால் ஈன்றெடுத்தார்.

## கேட்டலும் செய்தலும்

19 என் அன்பார்ந்த சகோதரர்களே,
இதைத் தெரிந்துகொள்ளுங்கள்: ஒவ்
வொருவனும் பிறர் சொல்வதைக் கேட்
பதில் ஆர்வமும் பேசுவதில் தயக்கமும்
சினங்கொள்வதில் தயக்கமும் காட்ட
வேண்டும். 20 ஏனெனில், கடவுள் பார்
வையில் நேர்மையாயிருப்பது நிறைவேற
மனிதனது சினம் உதவப்போவதில்லை.
21 ஆகவே, உங்களிடமிருந்து எல்லாவகை
யான அழுக்கையும் மிகுதியாயிருக்கும்
பகைமை உணர்ச்சியையும் களைந்துவிட்டு,
உங்கள் உள்ளத்தில் பதியவைக்கப்பட்ட
கடவுளின் செய்தியைப் பணிவோடு ஏற்றுக்
கொள்ளுங்கள். அதுவே உங்களை மீட்க
வல்லது.

22 அந்தச் செய்தியைக் கேட்டாலே
போதும் என்னும் தவறான எண்ணங்
கொண்டு, அதைக் கேட்கிறவர்களாய் மட்
டும் இராமல், அது சொல்கிறதைச் செய்
கிறவர்களாயுமிருங்கள். 23 ஏனெனில்,

1:1 மத். 13:55; மாற். 6:3; திருத்தூது. 15:13; கலா. 1:19. 1:10, 11 ஏசா. 40:6, 7.

அந்தச் செய்தியைக் கேட்டும் அது சொல்
கிறதைச் செய்யாதிருக்கும் ஒருவன், கண்
ணாடியில் தன் முகத்தைப் பார்த்த மனி
தனுக்கு ஒப்பாயிருக்கிறான். 24 அந்த மனி
தன் தன்னைப் பார்த்து விட்டுப்போன உட
னேயே தான் எவ்வாறு இருந்தான் என்
பதை மறந்துவிடுகிறான். 25 குறைவற்ற
தும் நமக்கு விடுதலையளிக்கக் கூடியது
மான சட்டத்தைக் கூர்ந்து கவனித்து
அதை இடைவிடாது படித்துவருகிற
வனோ கேட்பதை மறக்கிறவனாயிராமல்
அதற்கேற்ற செயலைச் செய்கிறவனாயிருக்
கிறான். இப்படிப்பட்டவனே தான் செய்வ
தனைத்திலும் மகிழ்ச்சி அடைகிறவனா
யிருப்பான்.

26 தன்னை ஒரு பக்தன் என்று நினைத்துக்
கொண்டிருக்கும் ஒருவன் தன் நாவை
அடக்காமலிருப்பானானால், அவன் தன்
னையே ஏமாற்றுகிறவனாவான். இப்படிப்
பட்டவனுடைய பக்தி வீண் பக்தியாகும்.
27 நம்முடைய தந்தையாம் கடவுளின்
பார்வையில் களங்கமற்றதும் மாசில்லா
ததுமான பக்தி எதுவெனில், பெற்றோரை
இழந்த பிள்ளைகளும் கணவரை இழந்த
பெண்களும் இருக்கும் துன்பநிலையில் அவர்
களைப் போய்ப் பார்த்து உதவி செய்வ
தும், ஒருவன் தன்னை உலகத்தால் கறைப்
படாமல் காத்துக்கொள்வதுமேயாகும்.

### ஓரவஞ்சனை தகாதது

**2** என் சகோதரர்களே, மாட்சிமை
யுள்ள நம்முடைய ஆண்டவராகிய
இயேசுகிறிஸ்துவினிடம் நீங்கள் நம்பிக்கை
கொண்டிருப்பதால், வெளித்தோற்றத்
தைப் பார்த்து நீங்கள் எவரையும் ஓர
வஞ்சனையோடு நடத்தக் கூடாது. 2 பொன்
மோதிரமும் விலையுயர்ந்த
ஆடையும் அணிந்த ஒருவனும் அழுக்குக்
கந்தையணிந்த ஏழை மனிதன் ஒருவனும்
உங்கள் தொழுகைக்கூடத்திற்கு வருகிறார்
கள் என்று வைத்துக்கொள்வோம். 3 அப்
பொழுது நீங்கள் விலையுயர்ந்த ஆடை
அணிந்தவன்மீது தனிக்கவனம் செலுத்தி,
அவனைப் பார்த்து, ''தயவுசெய்து இங்கே
உட்காருங்கள்'' என்று சொல்கிறீர்கள்;
ஏழையைப் பார்த்து, ''அங்கே போய்
நில்'' என்றாவது, ''இங்கே தரையில்
என் காலடியில் உட்காரு'' என்றாவது
சொல்கிறீர்கள். 4 அப்படிச் சொல்லும்
போது, உங்களிடையே பாகுபாடு உண்டு
பண்ணிக்கொண்டு கெட்ட எண்ணத்
தோடு மதிப்பிடுகிறீர்கள் அல்லவா?

5 என் அன்பார்ந்த சகோதரர்களே,
இதைக் கேளுங்கள்: உலகத்தாருக்கு ஏழை
களாய்க் காணப்படுகிறவர்கள் ஆண்ட
வரைப் பற்றும் நம்பிக்கையாகிய செல்
வத்தை அடையவும், கடவுள் தம்மிடம்
அன்புகொண்டவர்களுக்குத் தாம் வாக்
களித்த அரசை அவர்கள் உரிமைச் சொத்
தாகப் பெறவும் அவர்களைத் தேர்ந்
தெடுக்கவில்லையா? 6 அப்படியிருந்தும், நீங்
கள் ஏழைகளுக்கு மதிப்புக் கொடுப்ப
தில்லை. ஆனால், உங்களைக் கொடுமைப்
படுத்தி வழக்கு மன்றத்துக்கு இழுத்துச்
செல்கிறவர்கள் யார்? பணக்காரர் அல்
லவா? 7 மேலும், கடவுள் உங்களுக்குக்
கொடுத்திருக்கும் மேன்மையான பெய
ரைப் பழிப்பவர்களும் அவர்களே
அல்லவா?

8 ''உன்னிடம் நீ அன்புகொள்வது
போல, அடுத்தவனிடமும் அன்புகொள்ள
வேண்டும்'' என்று வேதம் கூறும் விண்
ணரசின் சட்டத்தை நிறைவேற்றினால்,
உங்கள் செயல் சிறந்த செயலாகும்.
9 அவ்வாறன்றி, நீங்கள் ஓரவஞ்சனை காட்
டினால் பாவம் செய்கிறவர்களாவீர்கள்;
நீங்கள் குற்றவாளிகளென அந்தச் சட்
டம் தீர்ப்பளிக்கும். 10 நீதிச்சட்டம் முழு
வதையும் ஒருவன் கடைப்பிடித்துவந்தும்,
ஒரு கட்டத்தில் ஒன்றில் மட்டும் தவற
நேரிட்டால் அவன் எல்லாவற்றையும்
மீறின குற்றவாளியாவான். 11 ஏனென்றால்,
''கற்புநெறி தவறாதே'' என்று
சொன்னவரே, ''கொலை செய்யாதே''
என்றும் சொன்னார். எனவே, நீ கற்பு
நெறி தவறாதிருந்தும், கொலை செய்வா
யானால் நீதிச்சட்டத்தை மீறினவனாவாய்.
12 நீதிச்சட்டம் விடுதலையளிக்கவே இருப்
பதால், அந்தச் சட்டத்தின்படி தீர்ப்புப்
பெறப்போகிறவர்கள் எப்படிப் பேசவும்
நடந்துகொள்ளவும் வேண்டுமோ அப்படியே
நீங்கள் செய்யுங்கள். 13 ஏனெ
னில், இரக்கம் காட்டாதவனுக்கு இரக்க
மற்ற தீர்ப்புத்தான் கிடைக்கும். இரக்
கமே தீர்ப்பைத் தன் கீழடக்கிப் பெருமை
கொள்ளும்.

### நம்பிக்கையும் செயலும்

14 என் சகோதரர்களே, ஒருவன்
தனக்குக் கடவுளைப்பற்றிய நம்பிக்கை
உண்டு என்று சொல்லியும், அவனிடம்
அதற்கேற்ற செயல்கள் காணப்படவில்லை
யென்றால், பலன் என்ன? அந்த நம்
பிக்கை அவனுக்கு மீட்பளிக்குமா? 15 ஒரு
சகோதரன் அல்லது ஒரு சகோதரி
போதிய உடையும் அன்றாட உணவும்
இல்லாதிருக்கும்போது, அவர்களுடைய
உடலுக்குத் தேவையான எதையும்

2:8 இலே. 19:18. 2:11 யாத். 20:13, 14; உபா. 5:17, 18.

கொடாமல் அவர்களைப் பார்த்து,
16 ''மகிழ்ச்சியோடு போய் வாருங்கள்,
நன்றாய் உண்டு உடலைப் பத்திரமாகப்
பார்த்துக்கொள்ளுங்கள்'' என்று உங்க
ளுள் ஒருவன் சொல்வானானால் அதனால்
ஏதாவது பயனுண்டா? 17 அதைப்
போலவே, செயல்களில்லாமல் ஒருவனிடம்
நம்பிக்கை மட்டும் இருந்தால், அது
உயிரற்றதாகும்.

18 ஆனால், யாராவது ஒருவன் வந்து,
''ஒருவனிடம் நம்பிக்கை இருக்கிறது,
இன்னொருவனிடம் செயல்கள் இருக்கின்
றன. அதில் என்ன தவறு?'' என்று
கேட்கலாம். அதற்கு நான், ''செயல்கள்
இல்லாமல் நம்பிக்கை மட்டும் உனக்கு
இருக்கிறதென்றால், அதை எனக்குக்காட்டு.
எனக்கு நம்பிக்கை உண்டு என்பதை
என் செயல்களைக் கொண்டு என்னால்
காட்ட முடியும்'' என்று சொல்லுவேன்.
19 கடவுள் ஒருவரே என்று நீ நம்பு
கிறாய் அல்லவா? நல்லதுதான். ஆனால்,
பேய்களுங்கூட அவ்வாறு நம்பி அச்சத்
தால் நடுங்குகின்றன. 20 அறிவிலியே,
செயல்கள் விளைவிக்காத நம்பிக்கை பய
னற்றது என்பதை நான் எடுத்துக்காட்
டத் தேவையா? 21 நம்முடைய தந்தை
யாகிய ஆபிரகாமைப் பார். தம்
மகன் ஈசாக்கைப் பலிபீடத்தின்மீது
படையலாக வைத்தபோது, அவர் செய்த
செயல்களாலல்லவா கடவுளுக்கு ஏற்றவ
ரென அவரால் கொள்ளப்பட்டார்?
22 அவருடைய செயல்களோடு அவரது
நம்பிக்கையும் சேர்ந்து செயலாற்றிற்று
என்பதையும், செயல்களாலேதான் அவ
ரது நம்பிக்கை நிறைவு பெற்றதென்பதை
யும் இதிலிருந்து காண்கிறாயல்லவா?

23 ''ஆபிரகாம் கடவுளை நம்பினார்;
அவரது நம்பிக்கையை முன்னிட்டுக் கட
வுள் அவரை நீதியுள்ளவராகப் பாவித்து
ஏற்றுக்கொண்டார்'' என்கிற வேதவாக்
கியத்தின் நிறைவேற்றத்தை இதில் காண
லாம். அவர் கடவுளின் நண்பர் என்கிற
பெயரும் பெற்றார். 24 ஆகவே, மனிதன்
செயல்களினாலே கடவுளுக்கு ஏற்றவனென
அவரால் கொள்ளப்படுகிறானேயன்றி
வெறும் நம்பிக்கையினாலன்று என்பதை
நாம் பார்க்கிறோம். 25 அவ்வாறே, தூது
வர்களை வரவேற்று வேறு வழியாக
அனுப்பின ராகாப் என்ற விலைமகள்
செயல்களினால் கடவுளுக்கு ஏற்றவளென
அவரால் கொள்ளப்பட்டாள் அல்லவா?
26 மூச்சு இல்லாத உடல் செத்ததாயிருக்
கிறதுபோல, செயல்கள் இல்லாத நம்பிக்
கையும் செத்ததாயிருக்கிறது.

### நாவடக்கம்

**3** என் சகோதரர்களே, போதகரா
யிருக்கும் எங்களுக்கு வரும் தீர்ப்பு
மற்றவர்களுக்கு வருவதைவிட மிகவும்
கண்டிப்பானதாயிருக்கும் என்பதை நீங்கள்
அறிந்திருப்பதால், நீங்கள் எல்லாருமே
போதகராக வேண்டுமென்று விரும்
பாதீர்கள். 2 நாம் எல்லாருமே அடிக்கடி
தவறு செய்கிறோம். பேச்சில் ஒருபோதும்
தவறு செய்யாதிருக்கிறவனே நிறைவு
பெற்ற மனிதனாவான். அவனே தன்னை
முழுவதுமாக அடக்கி ஆள்வான். 3 குதி
ரைகளை நமக்கு அடங்கும்படி செய்ய
அவற்றின் வாய்களில் கடிவாளங்களைப்
போடுகிறோம். பிறகு அவற்றை முழுவது
மாக அடக்கி நடத்துகிறோம். 4 கப்பல்
களைப் பாருங்கள். அவை மிகப்பெரியன
வாயிருந்தாலும், கடுங்காற்றால் அடித்துச்
செல்லப்பட்டாலும், மிகச்சிறிய சுக்கானைக்
கொண்டு கப்பலோட்டி தான் விரும்பும்
இடத்தை நோக்கி அவற்றைச் செலுத்து
கிறான். 5 மனிதன் நாவும் அதைப்போல
ஒரு சிறிய உறுப்பே. ஆனால், அது
பெரிய காரியங்களைச் செய்யக் கூடுமென்று
பெருமையுடன் பேசுகிறது.
பாருங்கள், சிறியதொரு நெருப்புப்
பொறி எவ்வளவு பெரிய காட்டைக்
கொளுத்திவிடுகிறது! 6 நாவு நெருப்புப்
பொறியைப் போன்றது. நம்முடைய
உறுப்புகளுள் ஒன்றாக அமைக்கப்பட்டிருக்
கும் இந்த நாவு தீமை நிறைந்த ஒரு
தனி உலகமாகும். அது நம் உடலைக்
கறைப்படுத்துகிறது; தன்னை நரகத் தீயி
னால் கொளுத்திக்கொண்டு நம் வாழ்க்
கையின் முழுப்போக்கையும் நெருப்புமய
மாக்கிவிடுகிறது. 7 பறப்பன, ஊர்வன,
காட்டில் நடப்பன, நீரில் வாழ்வன
ஆகிய எவ்வகையான உயிரினத்தையும்
மனிதன் அடக்கிவிடலாம், அடக்கியு
மிருக்கிறான். 8 ஆனால், நாவை அடக்
கவோ எந்த மனிதனாலும் இயல்வதில்லை.
அது எப்பக்கமும் திரும்பக்கூடிய தீய
உறுப்பு; சாவை விளைவிக்கும் நஞ்சு
நிறைந்தது. 9 நாம் நம் தந்தையாம் ஆண்
டவரைத் துதிப்பதும் அந்நாவாலே;
கடவுளின் சாயலாக உண்டாக்கப்பட்ட
மனிதனைச் சபிப்பதும் அந்நாவாலே.
10 துதியும் சாபமும் ஒரே வாயிலிருந்து
வருகின்றன. என் சகோதரர்களே, இப்
படி இருத்தலாகாது. 11 ஒரே ஊற்றுக்
கண்ணிலிருந்து நல்ல தண்ணீரும் உப்புத்
தண்ணீரும் சுரக்குமா? 12 என் சகோ
தரர்களே, அத்திமரத்தில் ஒலிவப் பழங்
களும், திராட்சைச் செடியில் அத்திப்
பழங்களும் கிடைக்குமா? அவ்வாறே,

**2:21** ஆதி. *22:1—14*. **2:23** ஆதி. *15:6*; 2 வரலாறு. *20:7*; ஏசா. *41:8*. **2:25** யோசுவா *2:1—21*. **3:9** ஆதி. *1:26*.

உப்புநீர்க் கடலிலிருந்து நல்ல தண்ணீர்
கிடைக்காது.

### மெய்ஞ்ஞானம்

13 உங்களிடையே ஞானமும் அறி
வாற்றலும் உடையவன் எனக் கொள்ளப்
படும் ஒருவன் இருந்தால், அவன் ஞானத்
தோடும் பணிவோடும் செயல்புரிவ
தாலும் தன் நன்னடத்தையாலும் அவற்
றைக் காட்டட்டும். 14 உங்கள் உள்ளத்
தில் நஞ்சையொத்த பொறாமையும் தன்
னலமும் இருக்குமானால், உங்களைப்பற்றிப்
பெருமையுடன் பேசாதீர்கள். உண்மையை
எதிர்த்துப் பொய் பேச வேண்டாம்.
15 அப்படிப் பேசுபவனது ஞானம் விண்
ணிலிருந்து வந்த ஞானமன்று; மண்ணுல
கத்திற்கே உரிய ஞானமாகும். அது
ஆவிக்கடுத்ததன்று, பேய்த்தன்மை வாய்ந்
தது. 16 பொறாமையும் தன்னலமும்
எங்கே உண்டோ அங்கே கலகமும் எல்லா
வகைத் தீய செய்கைகளும் இருக்கும்.
17 விண்ணிலிருந்து வரும் ஞானத்தின் தன்
மைகளுள் முதன் முதலாகக் காணக்கூடி
யது அதன் தூய்மையே. அதன் மற்றத்
தன்மைகள் சமாதானம், பொறுமை,
இணங்கிப்போதல் ஆகியவை. அது இரக்க
மும் நற்செயல்களும் நிறைந்தது; நடுநிலை
தவறாதது; போலித்தன்மை அற்றது.
18 சமாதானம் செய்துவைப்போர் சமா
தான மனப்பாங்குடன் விதை விதைக்
கின்றனர்; அந்த விதை நீதியாகிய
கனியை விளைவிக்கும்.

### உலகத்தோடு நட்பு

4 உங்களிடையே சண்டைகளும் சச்சர
வுகளும் ஏற்படக் காரணமென்ன?
உங்களுக்குள்ளே போட்டியிட்டுக்கொண்
டிருக்கும் கீழ்த்தரமான விருப்பங்க
ளல்லவா? 2 நீங்கள் ஏதோ ஒன்றின்மீது
நாட்டங்கொள்கிறீர்கள். ஆனால், அது
கிடைப்பதில்லை. எனவே, கொலை செய்யவும்
துணிகிறீர்கள்; பொறாமை மேலிடு
கிறது. ஆயினும், நீங்கள் அதை அடைய
முடியாமற்போகிறது. ஆகவே, சச்சரவு
செய்கிறீர்கள், சண்டை போடுகிறீர்கள்.
அதை நீங்கள் ஏன் அடைய முடியாமற்
போகிறது? நீங்கள் கடவுளைக் கேட்ப
தில்லை. 3 நீங்கள் கேட்டாலும் பெறு
வதேயில்லை. ஏனெனில், நீங்கள் கேட்ப
தைத் தவறான நோக்கத்தோடு கேட்
கிறீர்கள்; கீழ்த்தரமான விருப்பங்களை
நிறைவேற்றுவதில் பயன்படுத்துவதற்
காகவே கேட்கிறீர்கள். 4 கடவுளுக்குத்
துரோகம் செய்து வாழும் மக்களே, உல
கத்துக்கு நண்பனாக இருக்க விரும்புகிற
வன் தன்னைக் கடவுளுக்குப் பகைஞனாக்கிக்
கொள்கிறான். உலகத்தோடு நட்புக்கொள்
ளுதல் கடவுளைப் பகைத்தலாகும் என்பது
உங்களுக்குத் தெரியாததா? 5 அல்லது,
‘‘கடவுள் நமக்குள் குடியிருக்கச் செய்
துள்ள நமது ஆவியைத் தமக்கே உரிமை
யாகக் கொள்ளப் பேராவல் கொண்டிருக
கிறார்’’ என்று வேதவாக்கியம் வீணாகச்
சொல்லுகிறதென நினைக்கிறீர்களா? 6 அவர்
அளிக்கும் அருள் இன்னும் மேலானது.

‘‘இறுமாப்புள்ளவர்களைக் கடவுள்
எதிர்க்கிறார்;
தாழ்மை உள்ளவர்களுக்கோ கருணை
காட்டுகிறார்’’

என்று வேத வாக்கியம் உரைக்கிறது.
7 ஆகையால், கடவுளுக்குக் கீழடங்கி
யிருங்கள்; பிசாசை எதிர்த்து நில்லுங்
கள்; அப்பொழுது அவன் உங்களிட
மிருந்து ஓடிவிடுவான். 8 கடவுளை நெருங்கி
வாருங்கள்; அவரும் உங்களை நெருங்கி
வருவார். பாவிகளே, உங்கள் கைகளில்
படிந்துள்ள கறையைக் கழுவுங்கள். இரு
மனமுள்ளவர்களே, உங்கள் உள்ளத்தைத்
தூய்மைப்படுத்துங்கள். 9 உங்கள் நிலையை
உணர்ந்து, துயரப்பட்டுப் புலம்பி அழுங்
கள். உங்கள் சிரிப்புப் புலம்பலாகவும்,
மகிழ்ச்சி துயரமாகவும் மாறட்டும்.
10 ஆண்டவர் முன்னிலையில் உங்களைத்
தாழ்த்துங்கள்; அப்பொழுது அவர் உங்களை
உயர்த்துவார்.

### பிறரிடம் குற்றம் காண்போருக்கு எச்சரிக்கை

11 சகோதரர்களே, ஒருவரையொருவர்
இழிவுபடுத்திப் பேசாதீர்கள். ஒரு சகோ
தரனை இழிவுபடுத்திப் பேசுகிறவன்,
அல்லது ஒரு சகோதரனைக் குற்றவாளி
யெனத் தீர்ப்பளிக்கிறவன், நீதிச்சட்
டத்தை இழிவுபடுத்துகிறவனாவான்; நீதிச்
சட்டம் குற்றமுடையதெனத் தீர்ப்பளிக்
கிறவனுமாவான், நீ நீதிச்சட்டத்தைக்
குற்றமுடையதெனத் தீர்ப்பளித்தால்,
அதைக் கடைப்பிடிக்கிறவனாயிராமல் அதற்
குத் தீர்ப்பளிக்கும் நீதிபதியாகிவிடுகிறாய்.
12 சட்டத்தை உண்டாக்கவும் தீர்ப்புக்
கூறவும் உரிமையுடையவர் ஒருவரே;
அவரே மீட்கவும் அழிக்கவும் வல்லவர்.
அப்படியிருக்க, அடுத்தவனைக் குற்றவாளி
யெனத் தீர்ப்பளிப்பதற்கு நீ யார்?

### வீம்புப் பேச்சுப் பேசுவோருக்கு எச்சரிக்கை

13 இன்றோ, நாளையோ குறிப்பிட்ட
ஒரு பட்டணத்துக்குப் போய், அங்கே

4:6 நீதி. 3:34. 4:13, 14 நீதி. 27:1

ஓராண்டுத் தங்கி வணிகம் செய்து,
பணம் சேர்ப்போம் என்று சொல்லுகிற
வர்களே, கவனியுங்கள். 14 உங்கள்
வாழ்க்கை நாளைக்கு எப்படியிருக்கும் என்
பதே உங்களுக்குத் தெரியாது. நீங்கள்
நொடிப்பொழுதில் தோன்றி மறையும்
புகைக்கு ஒப்பானவர்கள். 15 ஆகவே,
அப்படிச் சொல்லாமல், ''ஆண்டவர்
திருவுளங்கொண்டால், நாங்கள் உயிரோ
டிருப்போம், இன்னின்ன செய்வோம்''
என்று சொல்வதே சரி. 16 இப்பொழுதோ
நீங்கள் தற்பெருமையுடன் வீம்புப் பேச்சுப்
பேசுகிறீர்கள். இப்படி வீம்புப் பேச்சுப்
பேசுவதெல்லாம் தீது. 17 நல்லதைச்
செய்ய ஒருவனுக்குத் தெரிந்திருந்தும்,
அவன் அதைச் செய்யாவிடில், அது பாவ
மாகும்.

### பணக்காரருக்கு எச்சரிக்கை

5 பணக்காரர்களே, கவனியுங்கள். உங்
களுக்கு வரப்போகிற இக்கட்டுகளை
நினைத்து அலறி அழுங்கள். 2 உங்கள்
தானியச் செல்வம் மக்கிப்போயிற்று.
உங்கள் ஆடைகளைப் பூச்சிகள் அரித்து
விட்டன. 3 உங்கள் பொன்னும் வெள்ளி
யும் கறைப்பிடித்துக் கறுத்துவிட்டன.
அவற்றின் கறையே உங்களுக்கு விரோத
மாகச் சாட்சி கூறும். அது நெருப்பைப்
போல உங்கள் சதையைத் தின்றுவிடும்.
இந்தக் கடைசிக் காலத்தில் செல்வத்தைச்
சேர்த்து வைத்திருக்கிறீர்களே!
4 மேலும் கவனியுங்கள். உங்கள் வயல்
களில் அறுவடை செய்த வேலையாள்
களுக்குச் சேர வேண்டிய கூலியை நீங்கள்
பிடித்து வைத்துக்கொண்டீர்கள். அது
கத்தி முறையிடுகிறது. அறுவடை செய்த
வர்களின் கூக்குரல் வெற்றி வேந்தராகிய
ஆண்டவர் செவிக்கு எட்டியுள்ளது.
5 உலகில் நீங்கள் ஒய்யாரமாகவும் இன்ப
மாகவும் வாழ்ந்தீர்கள். வெட்டப்படும்
ஆடுகளைக் கொழுக்க வைப்பதுபோல
நீங்கள் உங்களைக் கொழுக்கவைக்கிறீர்
கள். நீங்கள் வெட்டப்படும் நாளும் வந்து
விட்டது. 6 குற்றமற்றவனுக்குத் தண்டனைத்
தீர்ப்பளித்து அவனைக் கொன்றீர்கள்.
அவன் உங்களை எதிர்த்து நிற்காதவன்.

### சில அறிவுரைகள்

7 ஆகவே, சகோதரர்களே, ஆண்டவர்
வரும்வரை பொறுமையோடிருங்கள். பயி
ரிடுபவனைப் பாருங்கள். அவன் நிலத்தில்
நல்ல விளைச்சலை எதிர்பார்த்து, முன்மாரி
யும் பின்மாரியும் வரும்வரையில் பொறு
மையோடு காத்திருக்கிறான். 8 நீங்களும்
பொறுமையோடிருங்கள். உங்கள் உள்
ளத்தில் தளர்ச்சி அடையாதீர்கள்.
ஏனெனில், ஆண்டவரின் வருகை நாள்
நெருங்கிவிட்டது. 9 சகோதரர்களே, நீங்
கள் இறுதித் தீர்ப்புக்கு ஆளாகாதிருக்கும்
படி, ஒருவருக்கு விரோதமாக ஒருவர்
முறையிடாதீர்கள். நீதிபதி இதோ வாயி
லில் நிற்கிறார். 10 சகோதரர்களே, நீங்
கள் துன்பத்தைப் பொறுயோடு சகிப்ப
தற்கு ஆண்டவரின் திருப்பெயரால் இறை
வாக்குரைத்தவர்களை உங்களுக்கு முன்
மாதிரிகளாக வைத்துக்கொள்ளுங்கள்.
11 பொறுமையுடையோர் நற்பேறு பெற்
றோர் என்கிறோம். யோபுவின் பொறு
மையைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்
கள். முடிவில் ஆண்டவர் அவரை எப்ப
டிக் காப்பாற்றினார் என்பது உங்களுக்குத்
தெரியும். ஆண்டவர் மிகுந்த உருக்கமும்
இரக்கமும் உள்ளவர் அல்லவா?

12 என் சகோதரர்களே, எல்லாவற்
றிற்கும் மேலாக ஒன்று சொல்லுகிறேன்.
நீங்கள் ஆணையிடவே வேண்டாம். விண்
ணுலகின்மீதும் மண்ணுலகின்மீதும்
வேறு எதன்மீதும் ஆணையிட வேண்
டாம். உண்டு என்றால் உண்டு என்றும்,
இல்லை என்றால் இல்லை என்றும் சொல்
லுங்கள். இப்படிச் செய்தால் நீங்கள்
தண்டனைத் தீர்ப்புக்கு ஆளாக மாட்டீர்கள்.

13 உங்களுள் யாராவது துயரப்பட்டுக்
கொண்டிருக்கிறானா? அவன் கடவுளிடம்
வேண்டுதல் செய்யட்டும்; மனமகிழ்ச்சி
யோடிருக்கிறானா? அவரைப் புகழ்ந்து
பாடட்டும். 14 உங்களுள் யாராவது
நோயுற்றிருக்கிறானா? அவன் தன் சபையின்
மூப்பர்களை வரவழைப்பானாக. அவர்கள்
ஆண்டவருடைய திருப்பெயரால்
அவன்மேல் எண்ணெய் பூசி வேண்டுதல்
செய்யட்டும். 15 நம்பிக்கையோடு செய்
யப்படும் வேண்டுதல் நோயாளிகளைக்
குணமாக்கும். ஆண்டவர் அவனை நோய்
நீங்கி எழுந்திருக்கச் செய்வார். அவன்
பாவங்களைச் செய்திருந்தால் அவற்றை
அவர் மன்னிப்பார். 16 ஆகவே, நீங்க
ளும் உங்கள் பாவங்களை ஒருவரிடமொருவர்
சொல்லி ஒப்புக்கொள்ளுங்கள்; ஒரு
வருக்காக ஒருவர் கடவுளிடம் வேண்டு
தல் செய்யுங்கள். அப்பொழுது குண
மடைவீர்கள். நேர்மையானவனின் மன்
றாட்டு மிகவும் வல்லமையுள்ளது, பயன்
விளைவிப்பது. 17 எலியா நமக்குள்ளது
போன்ற தன்மையை உடைய ஒரு மனி
தரே. அவர் மழை பெய்யாதிருக்கும்படி
செய்ய ஊக்கத்தோடு கடவுளிடம் வேண்டு
தல் செய்தார். மூன்று ஆண்டுகளும்

**5:2, 3** மத். 6:19. **5:4** உபா. 24:14, 15. **5:11** யோபு 1:21, 22; 2:10; சங். 103:8. **5:12** மத். 5:34—37. **5:14** மாற். 6:13. **5:17** 1 அர. 17:1; 18:1.

ஆறு மாதங்களுமாக நிலத்தில் மழை
பெய்யவில்லை. 18 மறுபடியும் வேண்டுதல்
செய்தார்;வானம் மழையைப் பொழிந்தது;
நிலம் விளைச்சல் தந்தது.
19 என் சகோதரர்களே, உங்களுள்
ஒருவன் சத்தியத்தை விட்டு விலகி வழி
தவறிச் சென்றதாகவும், அவனை வேறொ
ருவன் திருப்பிவிட்டதாகவும் வைத்துக்
கொள்வோம். 20 அவ்வாறு ஒரு பாவி
யைத் தவறான வழியிலிருந்து திருப்பிவிடு
கிறவன் அவனை அழிவினின்று மீட்கிறான்
என்பதையும் திரளான பாவங்களைப்
போக்குகிறான் என்பதையும் தெரிந்து
கொள்ளுங்கள்.

**5:20** *நீதி. 10:12; 1 பேது. 4:8.*

# பேதுருவின் முதலாம் கடிதம்

1 இயேசுகிறிஸ்துவின் திருத்தூதுவனா
யிருக்கும் பேதுரு, கடவுளால் தேர்ந்
தெடுக்கப்பட்டு, பொந்து, கலாத்தியா,
கப்பதோக்கியா, ஆசியா, பித்தினியா
நாடுகளில் சிதறலாகவும் அன்னியராகவும்
வாழ்ந்துவருகிறவர்களுக்கு எழுதுவதா
வது: உங்களுக்கு அருளும் நலமும் பெருகுக.
2 நீங்கள் இயேசுகிறிஸ்துவுக்குக்
கீழ்ப்படிந்திருக்கும்படியும் அவரது இரத்
தத்தால் தெளிக்கப்பட்டுத் தூய்மையாகும்
படியும், முன்கூட்டியே அறியவல்ல
கடவுள் உங்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்.
ஆவியானவரும் உங்களைக் கடவுளுக்குரிய
மக்களாகப் பிரித்துவைத்திருக்கிறார்.

### எதிர்காலத்தைப்பற்றிய உறுதியான நம்பிக்கை

3 நம்முடைய ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவின் கடவுளும் தந்தையுமான
அவர் புகழ்ந்து போற்றுதலுக்குரியவர்.
அவர் இயேசுகிறிஸ்துவை இறந்தோரிட
மிருந்து உயிரோடெழுப்பினதன் மூலம்
தமது மிகுந்த இரக்கத்திற்கேற்ப நாம்
மறுபடியும் பிறந்து புதிய மனிதராய்
வாழும்படி செய்தார். 4 இவ்வாறு பிறந்த
நாம் ஓர் உரிமைச் சொத்துக் கிடைக்கு
மென்று குன்றா நம்பிக்கையோடு எதிர்
நோக்கியிருக்கிறோம். இந்த உரிமைச்
சொத்து அழியாதது, மாசற்றது, குன்றிப்
போகாத் தன்மையுடையது. 5 இது உங்
களுக்கென விண்ணுலகில் வைக்கப்பட்டுள்
ளது. இந்தச் சொத்தாகிய மீட்பு உங்க
ளுக்கு அருளப்படும் வரையில், நீங்கள்
கடவுளிடம் கொண்டுள்ள நம்பிக்கையின்
மூலம் அவரது வல்லமையால் காக்கப்
படுவீர்கள். இப்போதே ஆயத்தமாயிருக்
கும் அந்த மீட்புக் கடைசிக் காலத்தில்
வெளிப்படுத்தப்படும். 6 இதனாலேதான்
நீங்கள் மகிழ்ச்சியோடிருக்கிறீர்கள். நீங்கள்
இன்னும் சிறிது காலம் பல வகையான
சோதனைகளால் துன்புற நேரிடு
மெனினும், இவ்வாறு இருக்கிறீர்கள்.
7 அழியக்கூடிய பொன்னும் நெருப்பினால்
சோதித்துப் பார்க்கப்படுகிறது. அதை
விட விலையுயர்ந்த உங்கள் நம்பிக்கையும்
சோதித்துப் பார்க்கப்படவேண்டும்
அல்லவா? அப்போதுதான் இயேசுகிறிஸ்து
வெளிப்படுத்தப்படும் போது, உங்கள் நம்
பிக்கை உங்களுக்குப் புகழும் மாண்பும்
மாட்சிமையும் தருவதாய் விளங்கும்.
அதற்காகத்தான் சோதனைகள் உங்களுக்கு
நேரிடுகின்றன. 8 நீங்கள் அவரைப் பார்த்த
தில்லை; ஆயினும் அவரிடம் அன்பு
கொண்டிருக்கிறீர்கள். இப்போதும் நீங்கள்
அவரைப் பார்க்காதிருந்தும், அவரிடம்
நம்பிக்கை கொண்டு களிகூர்ந்து, சொல்ல
வொண்ணாத மேன்மையான மகிழ்ச்சி
யோடிருக்கிறீர்கள்; 9 உங்கள் நம்பிக்கை
யின் பலனாகிய மீட்பையும் பெறு
கிறீர்கள்.

10 உங்களுக்குக் கிடைக்கவிருந்த அரு
ளைப்பற்றிய இறைவாக்கினை எடுத்துரைத்
தோர் இந்த மீட்பைக் குறித்துக் கூர்ந்து
ஆராய்ச்சி செய்தனர். 11 அவர்களுக்
குள்ளிருந்த கிறிஸ்துவின் ஆவி, கிறிஸ்து
பட வேண்டிய பாடுகளையும் பின்னர் வரும்
மாட்சிமையையும் முன்னறிவித்தது; மீட்பு
எந்தக் காலத்தில் எந்தச் சூழ்நிலையில்
வரும் என்பதையும் எடுத்துக்காட்டிற்று.
அவற்றைக் குறித்தே அவர்கள் ஆராய்ச்சி
செய்தார்கள். 12 இந்தக் காரியங்களைக்
குறித்து ஆராய்ச்சி செய்யும் இப்பணியை
அவர்கள் தங்கள் பொருட்டன்று, உங்கள்
பொருட்டே செய்தார்கள் என்பது அவர்
களுக்கு வெளிப்படுத்தப்பட்டிருந்தது. விண்
ணுலகினின்று அனுப்பப்பட்ட தூய ஆவி
யானவரின் வல்லமையைக் கொண்டு உங்
களுக்கு அருட்செய்தியை அறிவித்தவர்கள்
அதே காரியங்களை இப்போது உங்களுக்
குத் தெரிவித்திருக்கிறார்கள். அந்தக் காரி
யங்களைக் கூர்ந்து கவனிக்கத் தெய்வ
தூதரும் ஆவலோடிருக்கின்றனர்.

### தூய வாழ்க்கை நடத்துங்கள்

13 ஆகவே, செயலாற்றுவதற்கென
மனத்தை ஆயத்தப்படுத்திக்கொண்டு
அறிவுத் தெளிவுடையவர்களாயிருங்கள்.
இயேசுகிறிஸ்து வெளிப்படுத்தப்படும்
போது உங்களுக்குக் கிடைக்கப்போகும்
அருளில் உங்கள் முழு நம்பிக்கையையும்
வையுங்கள். 14 முன்பு நீங்கள் அறியா
மையில் சிக்குண்டிருந்தீர்கள். அக்காலத்
தில் உங்களுக்கு இருந்த தீய விருப்பங்
களுக்கிசைய நடவாமல் கடவுளுக்குக்
கீழ்ப்படிந்தவர்களாய் இருங்கள். 15 உங்
களை அழைத்த அவர் தூய்மையுள்ளவராய்
இருப்பதுபோல நீங்களும் உங்கள் நடத்
தையிலெல்லாம் தூய்மையுள்ளவர்களாய்
இருங்கள். 16 ''நான் தூய்மையுள்ளவர்;
ஆகையால் நீங்களும் தூய்மையுள்ளவர்
களாய் இருங்கள்'' என்று வேதத்தில்
எழுதியிருக்கிறது அல்லவா?

17 நீங்கள் யாரை, ''தந்தையே''
என்று அழைத்து வேண்டுதல் செய்கிறீர்
களோ அவர் யாருக்கும் தனிச்சலுகை
காட்டாமல் அவனவனுடைய செயல்

1:16 இலே. 11:44, 45; 19:2.

களுக்கேற்றபடி தீர்ப்பளிப்பவர். ஆகை
யால், இவ்வுலகத்திற்கு அன்னியராகிய
நீங்கள் இங்கே வாழும் காலமெல்லாம்
அச்சத்தோடு நடந்துகொள்ளுங்கள்.
18 மேலும், நீங்கள் அறிந்திருக்கிறபடி
உங்கள் மூதாதையரிடமிருந்து மரபுவழி
யாக வந்த வீண் வழக்கங்களினின்று
நீங்கள் வெள்ளி அல்லது பொன் போன்ற
அழியக் கூடிய பொருள்களினுலன்று,
19 மாசு மருவற்ற ஆட்டுக்குட்டியாகிய
கிறிஸ்துவின் விலைமதிப்பில்லாத இரத்தத்
தினுல் விடுவிக்கப்பட்டீர்கள் அல்லவா?
20 உலகத் தோற்றத்திற்கு முன்பே
இதற்கென்று குறிக்கப்பட்ட அவர் இந்தக்
கடைசிக் காலத்தில் உங்களுக்காக
வெளிப்படுத்தப்பட்டார். 21 அவராலே
தான் நீங்கள் கடவுளிடம் நம்பிக்கை
கொண்டவர்களாய் இருக்கிறீர்கள். கடவுள்
அவரை இறந்தோரிடமிருந்து உயிரோ
டெழுப்பி அவருக்கு மாட்சிமை அளித்
தார். ஆகையால், நீங்கள் கடவுளிடம் நம்
பிக்கை கொண்டிருக்கிறீர்கள். வருங்காலத்
திற்கும் அவரையே நம்பியிருக்கிறீர்கள்.

22 இப்பொழுது சத்தியத்திற்குக் கீழ்ப்
படிந்ததன் மூலம் உங்களைத் தூய்மைப்
படுத்திக்கொண்டு உங்கள் சகோதரரிடம்
கள்ளமற்ற பரிவுகொண்டிருக்கும் நீங்கள்
ஒருவருக்கொருவர் மனமார ஆர்வத்
தோடு அன்பு காட்டுங்கள். 23 நீங்கள்
உயிருள்ளதும் நிலைத்திருப்பதுமான தெய்வ
வார்த்தையால் மறுபடியும் பிறந்திருக்கிறீர்
கள். சாவுக்குரிய தந்தைக்கன்று, சாவாத
தன்மையுள்ள தந்தைக்குப் பிள்ளைகளாய்ப்
பிறந்திருக்கிறீர்கள். 24 ஏனெனில்,

''மனிதன் எவனும் புல்லைப்போன்றவன்.
அவனுடைய முழு மாட்சிமையும் புல்லின்
பூவைப் போன்றது.
புல் உலரும், பூ உதிரும்.
25 ஆண்டவரின் திருவார்த்தையோ
என்றைக்கும் நிலைத்திருக்கும்.''

உங்களுக்கு அறிவிக்கப்பட்ட அருட்செய்தி
தான் அந்த வார்த்தை.

### நீங்கள் உயிருள்ள கற்கள், கடவுளுக்குரிய மக்கள்

**2** எனவே, எல்லாவகையான பகைமை
உணர்ச்சியையும், வஞ்சனை, போலித்
தன்மை, பொறாமை, பழிப்புரை ஆகிய
வற்றையும் அறவே களைந்துவிடுங்கள்.
2 புதிதாகப் பிறந்த குழந்தைகள் பாலின்
மீது நாட்டங்கொள்வதுபோல, நீங்கள்
* தெய்வ வார்த்தையாகிய கலப்பற்ற
பாலின் மீது நாட்டங்கொள்ளுங்கள்.
அதன் மூலம் நீங்கள் வளர்ச்சியடைந்து
மீட்புப் பெறுவீர்கள். 3 ஆண்டவர்
இனியவர் என்பதை நீங்கள் சுவைத்தறிந்
திருக்கிறீர்கள் அல்லவா?

4 அவரிடம் நெருங்கி வாருங்கள்;
அவர் உயிருள்ள கல். அந்தக் கல் உத
வாதென்று மனிதரால் தள்ளப்பட்ட கல்
லாயினும், அது கடவுளால் தேர்ந்தெடுக்
கப்பட்டதும் விலையுயர்ந்ததுமான கல்.
5 நீங்கள் உயிருள்ள கற்களாக அவரிடம்
வந்து, ஆன்மீக வீடாக அமைக்கப்படு
வீர்களாக. அப்பொழுது நீங்கள் கடவு
ளுக்கு உகந்த ஆன்மீகப் பலிகளை இயேசு
கிறிஸ்துவின் மூலம் செலுத்தும் ஆசாரியத்
திருக்கூட்டமாயும் இருப்பீர்கள். 6 இதைக்
குறித்து வேதத்தில்,

''இதோ, தேர்ந்தெடுக்கப்பட்டதும் விலை
யுயர்ந்ததுமான முதன்மையான கல்லைச்
சீயோனில் நாட்டிவைக்கிறேன்.
அந்தக் கல்லாகிய அவரிடம் நம்பிக்கை
கொள்பவன் ஏமாற்றமடையான்''

என்று சொல்லியிருக்கிறது. 7 ஆகவே,
அவரிடம் நம்பிக்கை கொண்டுள்ள உங்
களுக்கு அது விலையுயர்ந்ததாக விளங்கும்:
அந்த நம்பிக்கை இல்லாதவர்களைப்
பொருத்தமட்டில்,

''வீடு கட்டுகிறவர்கள் உதவாதென்று
தள்ளிவிட்ட கல்லே மூலைக்குத் தலைக்
கல்லாயிற்று.''

அது மட்டுமன்றி அது அவர்களுக்கு,

8 ''தடுக்கும் கல்லாகவும் அதாவது,
இடறிவிழச் செய்யும் கற்பாறை
யாகவும்''

ஆயிற்று. அவர்கள் தெய்வ வார்த்தைக்குக்
கீழ்ப்படியாததால் தடுக்கி விழுகிறார்கள்;
அவர்களுக்குக் குறிக்கப்பட்ட முடிவும்
அதுவே.

9 நீங்களோ உங்களை இருளினின்று
வியக்கத்தக்க தமது ஒளிக்கு வரவழைத்த
கடவுளின் மாட்சிமை மிக்க செயல்களை
அறிவிப்பதற்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட
இனமாயும் அரச ஆசாரியத் திருக்கூட்ட
மாயும் தூய குலமாயும் அவருக்குச்
சொந்தமான மக்களாயும் இருக்கிறீர்கள்.
10 முன்பு நீங்கள் ஒன்றாய் இணைக்கப்
பட்டு ஓர் இனமாக வாழவில்லை. இப்
பொழுதோ நீங்கள் ஒன்றாய் இணைக்கப்
பட்டுக் கடவுளுக்குரிய இனமாயிருக்கிறீர்
கள். நீங்கள் முன்பு அவரது இரக்கத்தைப்

* 'கலப்பற்ற ஞானப்பாலின் மீது' என்றும் மொழிபெயர்க்கலாம்.

1:24, 25 ஏசா. 40:6—8. 2:3 சங். 34:8. 2:6 ஏசா. 28:16. 2:7 சங். 118:22. 2:8 ஏசா. 8:14, 15. 2:9 யாத். 19:5, 6; உபா. 4:20; 7:6; 14:2; ஏசா. 43:20, 21; 9:2; தீத்து. 2:14. 2:10 ஓசே. 2:23.

பெறுதவர்கள், இப்பொழுதோ அவரது
இரக்கத்தைப் பெற்றவர்கள்.

11 அன்பார்ந்தவர்களே, நீங்கள் இவ்
வுலகில் அன்னியராய்ச் சிறிது காலமே தங்கி
யிருக்கிறபடியால், ஆன்மாவை எதிர்த்துப்
போர்புரியும் உடலின் தீய விருப்பங்களை
விட்டுவிடும்படி உங்களை வருந்திக்
கேட்டுக்கொள்கிறேன். 12 நீங்கள் தீமை
செய்கிறவர்களென்று பிற மதத்தினர்
இப்போது உங்களை இழிவுபடுத்திப் பேசு
கின்றனர். ஆனால், அவர்கள் உங்கள்
நற்செயல்களைக் கண்டு, கடவுள் அவர்
களுக்குத் தீர்ப்பளிக்கும் நாளில், அவ
ரைப் புகழ்ந்து போற்றுமாறு, அவர்களி
டையே நீங்கள் நன்னடத்தையில் சிறந்து
விளங்குங்கள்.

13 மனிதரால் அமர்த்தப்படும் எந்த
அதிகாரிக்கும் நீங்கள் ஆண்டவரின்
பொருட்டுக் கீழடங்கியிருங்கள். 14 அவன்
யாவருக்கும் மேலான அதிகாரமுள்ள
அரசனாயிருந்தாலும் சரி, அல்லது தீமை
செய்கிறவர்களைத் தண்டிக்கவும் நன்மை
யானதைச் செய்கிறவர்களைப் புகழ்ந்து
பாராட்டவும் அவனால் அனுப்பப்படும்
மாநிலத் தலைவர்களாயிருந்தாலும் சரி,
அந்த அதிகாரத்துக்குக் கீழடங்கியிருங்
கள். 15 ஏனெனில், நீங்கள் இப்படி நன்
மையானதைச் செய்துவருவதன் மூலம்
மதிகெட்ட மனிதர் அறியாமையினால்
சொல்வதை அடக்க வேண்டுமென்பதே
கடவுளின் திருவுளம். 16 நீங்கள் விடு
தலை நிலையை அடைந்தவர்களாய் வாழுங்
கள். ஆனால், இந்த விடுதலை நிலையை
ஒரு போர்வைபோல வைத்துக்கொண்டு
மறைவில் தீய செய்கைகளைச் செய்யாதீர்
கள்; கடவுளின் அடிமைகளாகவே
வாழுங்கள். 17 எல்லாரையும் உயர்வாக
மதியுங்கள்; சகோதரரிடம் அன்புகொள்
ளுங்கள்; கடவுளுக்கு அஞ்சி வாழுங்கள்;
அரசனை உயர்வாக மதியுங்கள்.

### பாடுகளைச் சகித்தல்

18 வேலைக்காரர்களே, உங்கள் முத
லாளிகளுக்கு நீங்கள் எல்லாவற்றிலும் மரி
யாதையோடு கீழடங்கியிருங்கள்; நல்ல
வர்களுக்கும் சாந்தகுணமுள்ளவர்களுக்கும்
மட்டுமன்றி, கொடுமையாக நடத்துகிற
வர்களுக்கும் கீழடங்கியிருங்கள். 19 ஏனெ
னில், ஒருவன் அநியாயமாகத் துன்புறும்
போது, அவன் கடவுளைப்பற்றிய நினை
வினால் அத்துன்பத்தைப் பொறுமையோடு
சகிப்பானானால், அதுவே மேன்மையான
செயலாகும். 20 குற்றம் செய்ததற்காக
நீங்கள் அடிக்கப்படும்போது, அதைப்
பொறுமையோடு சகிப்பதில் என்ன
சிறப்பு இருக்கிறது? நன்மையானதைச்
செய்ததற்காக நீங்கள் துன்புற்றால்,
அதைப் பொறுமையோடு சகிப்பதுதான்
கடவுள் பார்வையில் மேன்மையான செய
லாகும். 21 இதற்கென்றே நீங்கள் அழைக்
கப்பட்டிருக்கிறீர்கள். ஏனெனில், கிறிஸ்து
உங்களுக்காகப் பாடுற்று, தம்முடைய
அடிச்சுவடுகளை நீங்கள் பின்பற்றவேண்டு
மென்று உங்களுக்கு ஒரு முன்மாதிரியை
வைத்துவிட்டுப் போனார்.

22 ''அவர் பாவம் செய்யவில்லை,
அவரது சொல்லில் வஞ்சனை காணப்
படவுமில்லை.''

23 அவர் வையப்பட்டபோது பதிலுக்கு
வையவில்லை; பாடுகளடைந்தபோது அச்சு
றுத்தவுமில்லை; நியாயமாகத் தீர்ப்புச்
செய்கிற கடவுளிடம் தம்மை ஒப்படைத்
தார். 24 பாவத்தைப் பொருத்தமட்டில்
நாம் செத்து, நேர்மையானதைச் செய்
வதற்கென்றே உயிர் வாழும்படி, அவர்
சிலுவைமீது தாமே தம் உடலில் நம்மு
டைய பாவங்களைச் சுமந்து போக்கினார்.
அவருடைய தழும்புகளால் நீங்கள் குண
மானீர்கள். 25 நீங்கள் வழிதவறி அலை
யும் ஆடுகளைப்போல இருந்தீர்கள். இப்
பொழுதோ நீங்கள் உங்கள் ஆன்மாக்க
ளின் ஆயரும் பாதுகாவலருமானவரிடம்
திரும்பி வந்திருக்கிறீர்கள்.

### மண வாழ்க்கை

3 திருமணமான பெண்களே, உங்
களுக்கும் சொல்லுகிறேன்: நீங்கள்
உங்கள் கணவருக்குக் கீழடங்கியிருங்கள்.
அப்படி இருந்தால், அவர்களுள் சிலர்
தெய்வ வார்த்தைக்குக் கீழ்ப்படியாதவர்
களாய் இருந்தாலும், 2 அவர்கள் உங்க
ளுடைய பயபக்தியும் கற்புமுள்ள நடத்
தையைக் கண்டு, போதனை எதுவுமின்றி,
தத்தம் மனைவியரின் நன்னடத்தை மூல
மாகவே கவரப்பட்டுச் சீர்திருந்துவார்
கள். 3 பகட்டாக முடியை அழகுபடுத்து
தல், பொன் நகைகளை அணிதல், விலை
யுயர்ந்த உடைகளை உடுத்துதல் ஆகிய
புறம்பான அலங்கரிப்பு உங்களுக்கு அடுத்
ததன்று. 4 காண இயலாத உள்ளான
குணமே, அதாவது அழியாத நகையாகிய
சாந்தமும் அமைதியுமான பண்பே உங்
களுக்கு அலங்காரமாய் இருக்க வேண்டும்.
அதுவே கடவுள் பார்வையில் பெருமதிப்
புள்ளது. 5 முற்காலத்தில் இவ்வாறு
தான், கடவுளையே நம்பி வாழ்ந்து தங்
களை அவருக்கென ஒப்படைத்த பெண்

**2:22** ஏசா. 53:9. **2:23** ஏசா. 53:7. **2:24** ஏசா. 53:5. **2:25** ஏசா. 53:6. **3:1** எபே. 5:22; கொலோ. 3:18. **3:3** 1 தீமோ. 2:9.

மணிகளும் தங்கள் கணவருக்குக் கீழடங்கி
யிருந்து தங்களை அலங்கரித்துக்கொண்
டார்கள். 6 இவ்வாறே சாராள் ஆபிர
காமை, ''என் ஆண்டவனே'' என்
றழைத்து அவருக்குக் கீழ்ப்படிந்தாள். நீங்
கள் நன்மையானதையே செய்துவந்து,
எந்த அச்சுறுத்துதலுக்கும் அஞ்சாதிருக்கும்
வரையிலும் அவளுக்குப் பிள்ளைகளாகவே
இருப்பீர்கள்.

7 அவ்வாறே கணவர்களே, நீங்களும்
நல்லறிவோடு மணவாழ்க்கை நடத்துங்
கள். பெண்பாலார் உங்களைவிட வலுக்
குறைந்தவர்களாய் இருப்பதாலும், மெய்
வாழ்வைத் தரும் கடவுளின் அருளை உங்
களோடு அவர்களும் பெற்றிருப்பதாலும்
அவர்களுக்குக் கொடுக்க வேண்டிய மதிப்
பைக் கொடுங்கள். இப்படிச் செய்தால்தான்
நீங்கள் தடை எதுவுமின்றிக் கடவுளிடம்
வேண்டுதல் செய்ய முடியும்.

**நேர்மையின் பொருட்டுப் பாடனுபவித்தல்**

8 முடிவாக, நீங்கள் எல்லாரும் ஒரு
மனப்பட்டிருங்கள்; ஒருவரிடமொருவர்
இரக்கமும் சகோதர அன்பும் மனவுருக்
கமும் தாழ்மையும் உள்ளவர்களாய்
நடந்துகொள்ளுங்கள். 9 தீமைக்குத்
தீமை, பழிச்சொல்லுக்குப் பழிச்சொல்
என்று சரிக்குச்சரி செய்யாமல், அதற்கு
மாறாக, ஆசி கூறுங்கள். ஏனென்றால்,
நீங்கள் கடவுள் வாக்களித்த ஆசியைப்
பெற்றுக்கொள்ளும்படி அழைக்கப்பட்
டிருக்கிறீர்கள்.

10 ''வாழ்க்கையை அனுபவித்து மகி
ழவும்
நல்ல நாள்களைக் காணவும் விரும்பு
கிறவன்,
பொல்லாங்கானதைக் கூறாதபடி தன்
நாவையும்
வஞ்சனை பேசாதபடி தன் வாயையும்
அடக்கி வைக்கட்டும்.
11 அவன் தீமையினின்று விலகி,
நன்மையானதைச் செய்து நல்லுறவுடன்
வாழ்வதை நாடி,
அதற்கானதைச் செய்ய முயலட்டும்.
12 ஏனெனில், ஆண்டவர் நேர்மை
யானவர்களைக் கருணை நிறைந்த கண்
களோடு நோக்குகிறார்.
அவர்களுடைய வேண்டுதல்களுக்குச்
செவிசாய்க்கிறார்.
ஆனால், தீமை செய்வோருக்கோ கடு
கடுத்த முகங்காட்டுகிறார்.''

13 நீங்கள் நன்மையானதைச் செய்வ
தில் ஆர்வமுள்ளவர்களாய் இருப்பீர்க
ளானால், உங்களுக்குத் தீமைசெய்யப்
போகிறவன் யார்? 14 ஆனால், நீங்கள் நேர்
மையின் பொருட்டுப் பாடுகள் அடைய
நேரிட்டாலும் நீங்கள் நற்பேறு பெற்ற
வர்களே. எவருக்கும் நீங்கள் அஞ்ச
வேண்டாம், மனங்கலங்கவும் வேண்
டாம். 15 உங்கள் உள்ளத்தில் கிறிஸ்
துவை ஆண்டவராகக் கொண்டு அவ
ரைத் தூயரெனப் போற்றுங்கள். எதிர்
காலத்தைப்பற்றிய உங்கள் நம்பிக்கை
யைக் குறித்து யாராவது உங்களிடம்
விளக்கம் கேட்டால், தக்க விடையளிக்க
நீங்கள் எப்போதும் ஆயத்தமாயிருங்கள்.
16 ஆனால், சாந்தத்தோடும் மரியாதை
யோடும் விடையளியுங்கள்; உங்கள் மனச்
சான்றும் குற்றமற்றதாயிருக்கட்டும். அப்
பொழுது கிறிஸ்துவின் அடியாராகிய உங்
கள் நன்னடத்தையைப் பழிக்கிறவர்கள்
உங்களை இழிவாகப் பேசினதைக் குறித்து
வெட்கப்பட்டுப்போவார்கள். 17 நீங்கள்
பாடுற வேண்டுமென்பது கடவுளின் திரு
வுளம் என்றால், தீமையானதைச் செய்து
பாடுறுவதைவிட நன்மையானதைச் செய்து
பாடுறுவதே மேல். 18 கிறிஸ்துவும் அப்
படியே செய்தார். நீதியுள்ளவராகிய அவர்
நீதியற்றவர்களுக்காக மரணமடைந்தார்;
உங்களைக் கடவுளிடம் சேர்க்க, உங்கள்
பாவங்களின் பொருட்டு எல்லாக் காலத்
திற்குமென ஒரே முறை மரணமடைந்
தார்; உடலில் கொலையுண்டார்; ஆவி
யில் உயிர்ப்பிக்கப்பட்டார். 19 அந்த
ஆவி நிலையில் அவர் காவலிலிருந்த ஆவி
களிடம் போய் உரையாற்றினார். 20 அந்த
ஆவிகள், அன்று நோவா பேழையைச்
செய்துகொண்டிருந்த நாள்களில் கடவுள்
பொறுமையோடு காத்துக்கொண்டிருந்த
போது கீழ்ப்படியாமற் போனவை.
சிலர், அதாவது எட்டுப் பேர் மட்டும்
அந்தப் பேழையினுள் சென்றனர்; சென்று,
தண்ணீர் வழியாகக் கொண்டுவரப்பட்டு
மீட்கப்பட்டனர். 21 அந்தத் தண்ணீ
ரானது திருமுழுக்கிற்கு முன்னடையாள
மாயிருக்கிறது. திருமுழுக்கு இயேசுகிறிஸ்
துவின் உயிர்த்தெழுதலின்மூலம் இப்
போது உங்களுக்கு மீட்பளிக்கிறது. அதைப்
பெறுதல் உடலின் அழுக்கைப் போக்கும்
செய்கையன்று; குற்றங்கள் மன்னிக்கப்பட்
டன என்னும் உணர்வோடு கடவுள் முன்
னிலையில் வாக்குறுதி அளித்தலாகும்.

22 உயிர்த்தெழுந்த இயேசுகிறிஸ்து விண்
ணுலகிற்குச் சென்று, கடவுளின் வலப்பக்
கத்தில் இருக்கிறார்; தெய்வதூதரும் ஆவி
யுலகில் அதிகாரம் செலுத்துவோரும் வல்
லமையுடையோரும் அவருக்குக் கீழடங்கி
இருக்கின்றனர்.

**3:6** ஆதி. 18:12. **3:7** எபே. 5:25; கொலோ. 3:19. **3:10—12** சங். 34:12—16. **3:14, 15** ஏசா. 8:12, 13. **3:20** ஆதி. 6:1—7:24.

### மாறிய வாழ்க்கை

4 கிறிஸ்து தம் ஊனுடலில் பாடு
களடைந்ததை நினைத்து, அவருக்கு
அப்போதிருந்த மனநிலையை நீங்கள்
படைக்கலமாகப் பூண்டுகொள்ளுங்கள்.
ஊனுடலில் பாடுகளை அடைந்துவிட்ட
ஒருவனுக்குப் பாவத்தோடு ஒருவகையான
தொடர்புமில்லை. 2 பிறகு அவன் தான்
ஊனுடலில் இருக்கும் எஞ்சிய காலமெல்
லாம் மனித விருப்பங்களுக்கிசைய வாழா
மல், கடவுளின் திருவுளத்திற்கிசைய
வாழ்கிறான். 3 பிற மதத்தினர் செய்ய
விரும்புவதையெல்லாம் செய்ய உங்
களுக்குக் கடந்த காலத்தில் போதுமான
வாய்ப்பு இருந்தது. அப்போது நீங்கள்
காமவெறி, தீய விருப்பச் செயல்கள்,
குடிபோதை, களியாட்டம், குடிவெறி
யாட்டம், செய்யக்கூடாத சிலை வழி
பாடு ஆகியவற்றில் காலத்தைக் கழித்
தீர்கள். 4 அவ்வாறு செய்வதில் நீங்கள்
இப்போது அவர்களோடு சேர்ந்து அத்
தகைய சிற்றின்ப உளையில் விழாதிருக்கிறீர்
கள். இதை அவர்கள் கண்டு புரிந்து
கொள்ள முடியாமல் உங்களைப் பழிக்
கிறார்கள். 5 ஆனால், உயிருள்ளோருக்கும்
இறந்தோருக்கும் தீர்ப்பளிக்கக் காத்திருக்
கிறவருக்கு அவர்கள் கணக்குக் கொடுத்தாக
வேண்டும். 6 இறந்தோருக்கும் அருட்செய்தி
அறிவிக்கப்பட்டதன் நோக்கம் யாதெனில்,
அவர்கள் தங்கள் ஊனுடலில் தீர்ப்புப்
பெற்றுவிட்டபோதிலும், ஆவிசார்ந்த
வாழ்க்கையில் அவர்கள் கடவுளைப்போல
வாழ வேண்டும் என்பதாகும்.

### பெற்ற வரத்தைச் சரிவரப் பயன்படுத்துங்கள்

7 எல்லாவற்றிற்கும் முடிவு நெருங்கி
விட்டது. ஆகையால், கடவுளிடம் வேண்
டுதல் செய்யக்கூடியவர்களாகும்படி தன்
னடக்கத்தோடும் அறிவுத்தெளிவோடும்
இருங்கள். 8 எல்லாவற்றிற்கும் மேலாக,
ஒருவருக்கொருவர் மனமார அன்பு காட்
டுங்கள். அன்பு திரளான பாவங்களைப்
போக்கும். 9 ஒருவரையொருவர் முணு
முணுப்பின்றி உபசரியுங்கள். 10 உங்களுள்
ஒவ்வொருவனும் தான் பெற்றிருக்கும்
வரத்தைக் கடவுளது பலவகைப்பட்ட
அருளின் நல்ல கண்காணிப்பாளனாகப்
பயன்படுத்தி, அவ்வரத்திற்கேற்றபடி ஒரு
வருக்கொருவர் பணி செய்ய வேண்டும்.
11 ஒருவன் போதிக்கிறவனாயிருந்தால்,
அவன் தான் கடவுளின் திருமொழிகளைச்
சொல்லுகிறான் என நினைத்துப் போதிக்
கட்டும். ஒருவன் சேவை செய்கிறவனா
யிருந்தால், அவன் கடவுள் அருளும்
ஆற்றலைப் பெற்று அதைச் செய்யட்டும்.
ஒவ்வொருவனும் தான் செய்கிறவற்றி
லெல்லாம் இயேசுகிறிஸ்துவின் மூலம்
கடவுளின் மாட்சிமை விளங்கும்படி செய்
யட்டும். அவருக்கே என்றென்றும்
மாட்சிமை! வல்லமை! ஆமேன்.

### கிறிஸ்தவனுக்கு வரும் பாடுகள்

12 அன்பார்ந்தவர்களே, உங்களைப் புட
மிடுவதற்காக உங்களிடையே வந்திருக்
கிற துன்பத் தீயை நீங்கள் கண்டு ஏதோ
எதிர்பாராதது நேர்ந்துவிட்டதென எண்
ணித் திகைக்காதீர்கள். 13 அதற்கு மாறாக,
கிறிஸ்துவின் பாடுகளில் உங்களுக்குக்
கிடைத்துள்ள பங்கை மகிழ்ச்சியோடு
ஏற்றுக்கொள்ளுங்கள். அப்பொழுது கிறிஸ்
துவின் மாட்சிமை வெளிப்படும் வேளை
யில் இன்னும் மகிழ்ந்து ஆர்ப்பரிப்பீர்கள்.
14 கிறிஸ்துவின் திருப்பெயரின் பொருட்டுப்
பழிக்கப்படுகிறீர்களென்றால் நீங்கள்
நற்பேறு பெற்றவர்களே. ஏனெனில்,
அது கடவுளின் ஆவியானவராகிய மாட்
சிமைமிக்க ஆவியானவர் உங்கள்மேல்
தங்கியிருக்கிறார் என்பதைக் குறிக்கிறது.
15 உங்களுள் எவனுக்கும் வருகிற பாடுகள்,
அவன் கொலைகாரனாகவோ, திருட
னாகவோ, தீமை செய்கிறவனாகவோ,
பிறர் காரியங்களில் தலையிடுகிறவனாகவோ
இருப்பதை முன்னிட்டு வந்தவையாயிருக்க
லாகாது. 16 ஒருவன் கிறிஸ்தவனாயிருப்
பதை முன்னிட்டுப் பாடுகளுக்குள்ளானால்,
அவன் அதற்காக வெட்கப்படாமல்
அந்தப் பெயருக்கேற்றவாறு நடப்பதன்
மூலம் கடவுளின் மாட்சிமை விளங்கும்
படி செய்வானாக. 17 இறுதித் தீர்ப்பு
அளிப்பதற்கான காலம் வந்துவிட்டது.
கடவுளின் குடும்பத்தாரே முதன்முதலில்
அந்தத் தீர்ப்பைப் பெறப்போகின்றனர்.
நாமே முதன்முதல் தீர்ப்புப் பெறப்
போகிறோமென்றால், கடவுளின் அருட்
செய்தியை ஏற்காதவர்களின் முடிவு என்ன
வாகும்?
18 ''நேர்மையானவன் மீட்கப்படுவதே
அரிதென்றால்,
இறைப்பற்றில்லாதவன், பாவி ஆகியோ
ரின் நிலை என்னவாகும்?''
19 ஆகவே, கடவுளின் திருவுளப்படி பாடு
களுக்கு ஆளாகிறவர்கள், நன்மையான
தைச் செய்வதில் நிலைத்திருந்து, அவருக்குத்
தங்களை ஒப்படைத்துவிடுவார்களாக. அவர்
களைப் படைத்த அவர் நம்பத்தக்கவர்.

### கடவுளின் மந்தை

5 கிறிஸ்துவின் பாடுகளை நேரில் பார்த்
தவனும் இனி வெளிப்படப்போகும்

4:8 நீதி. 10:12. 4:18 நீதி. 11:31.

மாட்சிமையில் உங்களோடு பங்குகொள்ளப்
போகிறவனுமாகிய நான், ஒரு மூப்பன்
என்கிற முறையில் உங்களுள் மூப்பரா
யிருப்பவர்களுக்குக் கூறும் அறிவுரை
இதுவே: 2 நீங்கள் உங்கள் பொறுப்பி
லிருக்கும் கடவுளின் மந்தையை மேய்த்துப்
பேணுங்கள். கட்டாயத்தினாலன்று,
கடவுள் விரும்பும் வகையில் அதை மன
மாரச் செய்யுங்கள். கிடைக்கக்கூடிய
ஊதியத்தையே எண்ணிச் செய்யாமல்,
உண்மையான ஆர்வத்தோடு செய்யுங்கள்.
3 உங்கள் பாதுகாப்புக்கு ஒப்படைக்கப்
பட்டவர்கள்மீது இறுமாப்புடன் ஆட்சி
செய்கிறவர்களாய் இராமல், மந்தைக்கு
முன்மாதிரிகளாய் இருங்கள். 4 இப்படி
இருந்துவந்தால், தலைமை ஆயர் வெளிப்
படும்போது, நீங்கள் மாட்சிமை பொருந்திய
வாடாத வெற்றிமாலை சூட்டப்பெறுவீர்கள்.
5 இளைஞரே, உங்களுக்கும் சொல்லு
கிறேன். நீங்கள் மூப்பர்களுக்குக் கீழடங்கி
யிருங்கள். எல்லாரும் தாழ்மை என்னும்
ஆடையை அணிந்தவர்களாய் ஒருவரிட
மொருவர் நடந்துகொள்ளுங்கள்.
ஏனெனில்,

"இறுமாப்புள்ளவர்களைக் கடவுள் எதிர்க்
கிறார்,
தாழ்நிலையில் உள்ளவர்களுக்கோ கருணை
காட்டுகிறார்."

6 ஆகையால், அவரது வல்லமைக்குக்
கீழடங்கி உங்களைத் தாழ்த்துங்கள். அப்
பொழுது அவர் குறித்த காலத்தில் உங்களை
உயர்த்துவார். 7 உங்கள் கவலைகளை
யெல்லாம் அவர்மேல் சுமத்திவிடுங்கள்.
உங்கள்மீது அவருக்கு அக்கறை உண்டு.
8 அறிவுத்தெளிவுள்ளவர்களாய் இருங்
கள், விழிப்பாயிருங்கள். ஏனெனில், உங்
கள் எதிராளியாகிய பிசாசானவன் யாரை
யாவது விழுங்க வேண்டுமென்று கர்ச்சிக்கிற
சிங்கம்போல அலைந்துகொண்டிருக்கிறான்.
9 கிறிஸ்துவைப் பற்றும் நம்பிக்கையில்
உறுதியுள்ளவர்களாய் அவனை எதிர்த்து
நில்லுங்கள். உலகமெங்குமுள்ள உங்கள்
சகோதரர்கள் உங்களைப்போலவே பாடு
களை அடைந்துவருகிறார்கள் என்பது உங்
களுக்குத் தெரியும் அல்லவா? 10 பேரருள்
நிறைந்த கடவுள், நீங்கள் கிறிஸ்து
வோடு இணைக்கப்பட்டு என்றுமுள்ள தமது
மாட்சிமையில் பங்குகொள்ளும்படி உங்களை
அழைத்திருக்கிறார். சிறிது காலம்
உங்களுக்கு இருக்கப்போகும் இந்தப் பாடு
கள் ஓய்ந்ததும், உங்கள் வாழ்க்கையைச்
சீர்படுத்தி உங்களுக்கு உறுதியும் ஆற்றலும்
அளித்து, உங்களை அசைவுறாதபடி
நிலைநிற்கச் செய்வார். 11 அவரே என்
றென்றும் ஆட்சி செலுத்துபவர். ஆமென்.

## வாழ்த்து

12 உங்களுக்கு உறுதியளிக்கும் நோக்
கத்தோடு இந்தச் சுருக்கமான கடிதத்தை
நம்பிக்கைக்குரிய சகோதரன் என்று நான்
கருதும் சில்வானுவைக் கொண்டு எழுது
கிறேன். கடவுளின் மெய்யான அருளைத்
தான் இதில் விளக்கியிருக்கிறேன் என்று
உறுதி கூறுகிறேன். இந்த அருளையே
நம்பி வாழ்வதில் நிலைத்திருங்கள்.

13 உங்களைப்போலவே கடவுளால்
தேர்ந்துகொள்ளப்பட்ட பாபிலோன் சபை
யாரும், என் மகன் மாற்குவும் உங்
களுக்கு வாழ்த்துக் கூறுகின்றனர். 14 நீங்
கள் ஒருவரையொருவர் அன்பு முத்தத்
தால் வாழ்த்துங்கள்.

கிறிஸ்துவின் அடியாராகிய உங்கள்
அனைவருக்கும் சமாதானம் உண்டாவதாக!

**5:2** யோ. 21:15—17. **5:5** நீதி. 3:34. **5:6** மத். 23:12; லூக். 14:11; 18:14. **5:12** திருத்தூது. 15: 22, 40.

# பேதுருவின் இரண்டாம் கடிதம்

## வாழ்த்து

1 நீதியோடு ஆட்சி செலுத்தும் நம்
கடவுளும் மீட்பருமாகிய இயேசு
கிறிஸ்துவினால், எங்களைப்போல அவரைப்
பற்றும் மேன்மையான நம்பிக்கையை
உடையவர்களாகும் நற்பேற்றினைப் பெற்ற
வர்களுக்கு, கிறிஸ்துவின் அடியானும்
திருத்தூதுவனுமாயிருக்கிற சிமியோன்
பேதுரு எழுதுவதாவது: 2 கடவுளையும்
நம்முடைய ஆண்டவராகிய இயேசுவை
யும் அறியும் அறிவினால் உங்களுக்கு
அருளும் நலமும் பெருகுக!

## கடவுளின் அழைப்பு

3 தம்முடைய மாண்பு காரணமாகவும்
தாராள குணத்தாலும் கடவுள் நம்மை
அழைத்திருக்கிறார். அவரை நாம் அறிந்து
கொள்வதன் மூலம் இறைப்பற்றுடன்
வாழ்க்கை நடத்துவதற்குத் தேவையான
யாவற்றையும் அவர் தம் தெய்வீக வல்ல
மையால் நமக்கு அருளியிருக்கிறார்.
4 இவ்வாறாக, கடவுள் நமக்கு உயர்
மதிப்பும் சிறப்பும் வாய்ந்த வாக்குறுதி
களையும் அளித்திருக்கிறார். நீங்கள் அவற்
றைப் பற்றிக்கொண்டு, தீய விருப்பங்
களின் விளைவாக இவ்வுலகில் தோன்றி
யுள்ள சீர்கேட்டுக்குத் தப்பியோடி,
தெய்வத் தன்மையில் பங்குகொள்ளும்படி
அவற்றை அளித்திருக்கிறார். 5 ஆகையால்,
நீங்கள் உங்கள் நம்பிக்கையோடு நற்
பண்பும், நற்பண்போடு அறிவுடைமையும்,
6 அறிவுடைமையோடு தன்னடக்கமும்,
தன்னடக்கத்தோடு பொறுமையும், பொறு
மையோடு இறைப்பற்றும், 7 இறைப்பற்
றோடு சகோதரப் பரிவும், சகோதரப் பரி
வோடு அன்பும் சேர்ந்து விளங்குமாறு
முழு ஊக்கத்தோடு முயற்சி செய்யுங்கள்.
8 இந்தப் பண்புகள் உங்களிடம் வளர்ந்து
பெருகுமானால், நம்முடைய ஆண்டவராகிய
இயேசுகிறிஸ்துவை அறிந்து வாழும்
வாழ்க்கையில் நீங்கள் ஊக்கமுள்ளவர்களும்
பயனுள்ளவர்களுமாவீர்கள். 9 இவை இல்
லாதவன் மங்கலான பார்வையுடையவன்;
இல்லை, குருடன்; முன்பு தான்
செய்த பாவங்களினின்று தான் தூய்மை
யாக்கப்பட்டதை மறந்து போனவன்.
10 ஆகவே, சகோதரர்களே, நீங்கள்
அழைக்கப்பட்டிருக்கிறீர்கள், தேர்ந்தெடுக்
கப்பட்டிருக்கிறீர்கள்; இந்நிலையில் உறுதி
யாய் நிற்க ஊக்கத்தோடு முயலுங்கள்.
இப்படிச் செய்தால், நீங்கள் ஒருபோதும்
வீழ்ச்சியுற மாட்டீர்கள். 11 அப்பொழுது
நம்முடைய ஆண்டவரும் மீட்பருமாகிய
இயேசுகிறிஸ்துவின் முடிவில்லா அரசிற்குள்
செல்லும் உரிமை உங்களுக்குத் தாராள
மாக அருளப்படும்.

12 நீங்கள் இவற்றை அறிந்திருக்கிறீர்
கள்; உங்களுக்குப் போதிக்கப்பட்ட சத்தி
யத்தில் உறுதியாகவும் நிற்கிறீர்கள். இருந்த
போதிலும், இவற்றை நான் மீண்டும் மீண்
டும் உங்களுக்கு நினைப்பூட்டிக்கொண்டே
இருப்பேன். 13 உடலாகிய இந்தக் கூடா
ரத்தில் நான் இருக்கும்வரையில் உங்க
ளுக்கு இவற்றை நினைப்பூட்டுவதுதான்
நல்லது என்று எண்ணுகிறேன். 14 ஏனென்
றால், நான் இந்தக் கூடாரத்தை விட்டு
விரைவில் பிரிய நேரிடுமென்பது எனக்குத்
தெரியும். நம்முடைய ஆண்டவராகிய
இயேசுகிறிஸ்து இதை எனக்குத்
தெரிவித்தார். 15 நான் இறந்துபோன
பிறகும் நீங்கள் இவற்றை எப்போதும்
நினைவில் வைத்துக்கொள்ள வாய்ப்பு
உண்டாகும்படி என்னால் இயன்றதை
யெல்லாம் இப்போது செய்யப்போகிறேன்.

## கிறிஸ்துவின் மாட்சிமையை நேரில் கண்டோர்

16 நம்முடைய ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்துவின் வல்லமையையும் வருகை
யையும் உங்களுக்கு அறிவித்தபோது,
சூழ்ச்சியாகப் புனைந்த கட்டுக் கதைகளை
ஆதாரமாகக்கொண்டு நாங்கள் பேச
வில்லை. நாங்கள் அவரது மாண்பை
நேரில் கண்டவர்கள். 17 தந்தையாகிய
கடவுளிடமிருந்து அவர் உயர் மதிப்பும்
மாட்சிமையும் பெற்றபோது, ''இவர்
என்னுடைய அன்பார்ந்த மைந்தர்; இவரால்
பெருமகிழ்ச்சியடைகிறேன்'' என்று
உன்னத மாட்சிமையிலிருந்து அவரைப்
பற்றிய ஒரு வாக்குப் பிறந்தது. 18 அப்
போது நாங்களும் திருமலையில் அவரோ
டிருந்தோம்; வானத்தினின்று பிறந்த
அந்த வாக்கைக் கேட்டோம். 19 இந்
நிகழ்ச்சி, இறைவாக்குரைப்போர் கூறினது
நம்பிக்கைக்குரியது என்பதை இன்னும்
தெளிவாகக் காட்டுகிறது. அவர்கள்
கூறினதை நீங்கள் கருத்திற்கொள்வது
நல்லது. ஏனென்றால், அது ஒரு விளக்
கைப்போலிருந்து, அந்த மாபெரும் நாளின்
வைகறையில் விடிவெள்ளி உங்கள் உள்
ளத்தில் எழும் வரையில், இருண்ட
இடத்தில் சுடர் வீசிக்கொண்டே இருக்கும்.
20 ஆனால், வேதத்திலுள்ள எந்த இறை
வாக்கும் ஒருவன் தானாகவே தரும் விளக்
கத்திற்கு உட்பட்டதன்று என்பதை நீங்
கள் முதன்முதல் அறிய வேண்டும்.

**1:17, 18** மத். *17:1—5;* மாற். *9:2—7;* லூக். *9:28—35.*

21 ஏனெனில், இறைவாக்கு எதுவும்,
மனிதன் இறைவாக்கு உரைக்க வேண்டு
மென்று விரும்பினதால் உரைக்கப்பட்ட
தன்று. ஆனால், கடவுள் அருளினதை
மனிதர்கள் தூய ஆவியினால் ஆட்கொள்
ளப்பட்டு உரைத்தார்கள்.

### கள்ளப் போதகர்
### (யூதா 4—13)

2 இஸ்ரயேல் மக்களிடையே பொய்
யாக இறைவாக்குரைப்போரும் இருந்
தனர். அவ்வாறே உங்களிடையேயும்
கள்ளப் போதகர்கள் தோன்றுவார்கள்.
அவர்கள் அழிவை விளைவிக்கும் கொள்
கைகளைப் புகுத்திவிடுவார்கள்; தங்களை
விலைகொடுத்து மீட்ட ஆண்டவரைப்
புறக்கணித்துத் தள்ளுவார்கள்; விரைவில்
அழிவைத் தங்களுக்கு வருவித்துக்கொள்
வார்கள். 2 அவர்களுடைய காமவெறிச்
செயல்களைப் பலர் பின்பற்றுவர். அவர்
களால் நமது சத்தியநெறி பழிச் சொல்
லுக்கு உள்ளாகும். 3 அவர்கள் பேராசை
கொண்டவர்கள்; நயவஞ்சகப் பேச்சால்
உங்கள் பணத்தைச் சுரண்டுவார்கள்.
நெடுங்காலத்திற்கு முன்பே தண்டனைத்
தீர்ப்பு அவர்களுக்கு அளிக்கப்பட்டது.
அது இன்னும் மாற்றப்படவில்லை; அவர்
களை விழுங்குவதற்காக வாய்திறந்து
காத்துக்கொண்டிருக்கிறது.

4 பாவம் செய்த தெய்வதூதர்களைக்
கடவுள் தண்டியாமல் விடவில்லை. அவர்
அவர்களைப் பாதாளத்தில் தள்ளிவிட்
டார். அங்கே அவர்கள் விலங்கிடப்பட்டு
இறுதித் தீர்ப்பு அளிக்கப்படுவதற்கென்று
இருளில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். 5 பண்
டைய உலகத்தையும் அவர் தண்டியாமல்
விடவில்லை. இறைப்பற்று இல்லாத
மக்கள் நிறைந்த அவ்வுலகத்தின்மீது
அவர் வெள்ளப்பெருக்கை வரச்செய்த
போது, நேர்மையைப் போதித்துவந்த
நோவா உட்பட எட்டுப் பேரை மட்டும்
காப்பாற்றினார். 6 சோதோம், கொமோரா
என்னும் பட்டணங்களையும் அவர் தண்
டனைக்குள்ளாக்கினார். இறைப்பற்று இல்
லாதவரின் முடிவு என்னவாகும் என்ப
வற்கு எடுத்துக்காட்டாக அவற்றை எரித்
துச் சாம்பலாக்கினார். 7 ஆனால் அவர்,
காமவெறி கொண்ட தீயோரின் நடத்
தையைக் கண்டு மனத்துயரமடைந்த
லோத் என்பவரைத் தப்புவித்தார். லோத்
ஒரு நேர்மையான மனிதர். 8 இந்த
நேர்மையான மனிதர் அவர்களிடையே
தான் வாழ்ந்துவந்தார். அவர் கண்ட
முறைகேடான செய்கைகளும் கேட்ட
பேச்சுகளும் அவரது நேர்மையான
மனத்தை நாள்தோறும் வாட்டி
வதைத்தன. 9 இறைப்பற்று உள்ளவர்
களைச் சோதனையினின்று விடுவிக்கவும், தீய
வரைத் தண்டனைக்குள்ளாக்கி இறுதித்
தீர்ப்புநாள் வரையில் வைத்திருக்கவும்
ஆண்டவர் வல்லவராயிருக்கிறார். 10 குறிப்
பாக, பாவ இயல்புக்கும் அசுத்த விருப்
பங்களுக்கும் இசைய நடந்து ஆண்டவரின்
அதிகாரத்தை இழிவாகக் கருதி புறக்
கணிக்கிறவர்களைத் தண்டனைக்குள்ளாக்க
அவர் வல்லவர்.

இவர்கள் துணிச்சலுள்ளவர்கள், பிடி
வாதமுள்ளவர்கள்; வானுலக மாட்சிமை
பொருந்தியவர்களைப் பழித்துரைக்கவும்
அஞ்சாதவர்கள். 11 இவர்களைக் காட்டி
லும் மேலான ஆற்றலும் வலிமையு
முள்ள தெய்வதூதர்கள்கூட ஆண்ட
வரின் முன்னிலையில் அந்த மாட்சிமை
பொருந்தியவர்களைப் பழிக்கும் வகையில்
குற்றச்சாட்டைக் கொண்டுவருவதில்லை.
12 இவர்களோ பிடிபட்டு அழிக்கப்படு
வதற்கென்றே தோன்றி, இயற்கை அறி
வைக்கொண்டு வாழும் பகுத்தறிவற்ற
விலங்குகளைப் போன்றவர்கள். இவர்கள்
தங்களுக்குப் புரியாதவற்றைப் பழித்
துரைப்பார்கள்; விலங்குகள் அழிக்கப்
படுவதுபோல இவர்களும் அழிக்கப்படு
வார்கள். 13 இவர்கள் தாங்கள் செய்த
தீமையின் விளைவாகத் தீமையையே அனு
பவிப்பார்கள். பட்டப்பகலில் களியாட்
டத்தில் ஈடுபடுவதையே இவர்கள் இன்
பம் என்று எண்ணுகிறார்கள். உங்களோடு
விருந்துண்ணும்போதும் தங்கள் வஞ்
சனைச் செயல்களில் களிப்புடன் உழல்
கிறார்கள். இவர்கள் உங்களை மாசுபடுத்தி
உங்களுக்கு மானக்கேடு உண்டாக்குகிறார்
கள். 14 இவர்கள் கண்கள் ஒழுக்கங்
கெட்ட பெண்களையே நாடுகின்றன.
அவை பாவம் செய்வதில் ஓய்வதில்லை.
இவர்கள் மன உறுதியற்றவர்களை மயக்கித்
தம் வயப்படுத்துகிறவர்கள்; பொருள்
பறிப்பதில் கைதேர்ந்தவர்கள். கடவுளின்
சாபம் இவர்கள்மேல் உள்ளது. 15 உண்மை
நெறியை விட்டுவிட்டு, வழிதவறிப்போய்,
பொசோரின் மகன் பிலேயாமின் நெறி
யைப் பின்பற்றினவர்கள். இந்தப்
பிலேயாம் தீமை செய்து ஊதியம் பெற
விரும்பினான்; 16 தான் செய்த தீய
செய்கைக்காகக் கடிந்துகொள்ளப்பட்டான்.
பேச இயலாத கழுதை ஒன்று ஒரு
மனிதன் பேசுவதைப்போலப் பேசி, இறை
வாக்குரைப்போனாகிய இந்தப் பிலேயாமை
மதிகேடான செயலைச் செய்யாதபடி
தடுத்தது.

2:5 ஆதி. 6:1—7:24. 2:6 ஆதி. 19:24. 2:7 ஆதி. 19:1—16. 2:15, 16 எண். 22:4—35.

17 இந்த மனிதர் நீர்வற்றிய ஊற்றுகள்;
சுழல் காற்றினால் அடித்துச் செல்லப்படும்
மேகங்கள். காரிருளே இவர்
களுக்கெனக் குறிக்கப்பட்டுள்ள இடம்.
18 இவர்கள் தங்களைக் குறித்துப் பெரு
மையாக வெட்டிப் பேச்சுப் பேசி,
தவறான நெறியில் நடப்பவர்களிடையே
யிருந்து வெளியேறி வருகிறவர்களுக்கு
உடனே பாவ இயல்புக்குரிய விருப்பங்
களையும் காமவெறியையும் தூண்டி அவர்
களை மயக்கித் தம் வயப்படுத்திக்கொள்
கிறார்கள்; 19 அவர்களுக்கு விடுதலையளிப்
பதாக வாக்களிக்கிறார்கள். ஆனால், தாங்
களே கேடான பழக்கங்களுக்கு அடிமை
களாய் இருக்கிறார்கள். எப்படியெனில்,
ஒருவன் எதனால் ஆட்கொள்ளப்பட்டிருக்
கிறானோ அதற்கு அவன் அடிமையாகிவிட்
டான் என்றே சொல்ல வேண்டும். 20 ஆண்
டவரும் மீட்பருமாகிய இயேசுகிறிஸ்துவை
அறிவதன் மூலம் உலகத்தின் பாவச்
சேற்றிலிருந்து தப்பினவர்கள், அவ்வாறு
தப்பினபின் மறுபடியும் அதில் சிக்கி அத
னால் ஆட்கொள்ளப்பட்டால், அவர்களு
டைய பின்னிலைமை முன்னிலைமையைவிட
மோசமானதாகும். 21 அவர்கள் நீதி
யான நெறியை அறிந்தபின் தங்களுக்குக்
கொடுக்கப்பட்ட தூய கட்டளையைக்
கடைப்பிடியாமல் விட்டுவிட்டுப் பழைய
நிலைக்குச் செல்வதைவிட அதை அறியா
மலே இருந்திருந்தால் அவர்களுக்கு நல
மாயிருக்கும். 22 ஆனால், ''நாய் தான்
கக்கினதைத் தின்னத் திரும்பிவரும்''
என்னும் நீதிமொழி அவர்களிடம் உண்
மையாயிற்று. ''பன்றியைக் குளிப்பாட்டி
னாலும் அது பழையபடி சேற்றிலேதான்
புரளும்'' என்று கூறும் ஒரு பழமொழி
யும் உண்டு.

## ஆண்டவருடைய வருகையைப்பற்றிய வாக்குறுதி

3 அன்பார்ந்தவர்களே, இப்போது
நான் உங்களுக்கு எழுதுவது இரண்
டாம் கடிதம். இந்தக் கடிதங்களால் உங்
களுக்குச் சில காரியங்களை நினைப்பூட்டி,
உங்களைத் தெளிவுறச் சிந்திக்கும்படி
தூண்டிவிட்டிருக்கிறேன். 2 இறைவாக்
குரைக்கும் தூயோர் முன்பு உரைத்த
செய்திகளையும், ஆண்டவரும் மீட்பரு
மானவர் உங்கள் திருத்தூதுவர் மூலமாக
உங்களுக்கு இட்ட கட்டளையையும் நீங்கள்
நினைப்பூட்டிக்கொள்ள வேண்டுமென்பது
என் விருப்பம். 3 நீங்கள் முதலாவதாகத்
தெரிந்துகொள்ள வேண்டியது இதுவே:
கடைசிக் காலத்தில் சிலர் தோன்றித்
தங்கள் சொந்தத் தீய விருப்பங்களுக்
கிசைய நடந்து, உங்களை ஏளனமாகப்
பேசுவர். 4 அவர்கள், ''அவரது வருகை
யைப்பற்றிய வாக்குறுதி என்னவா
யிற்று? நம் மூதாதையர் துஞ்சின காலத்
திலிருந்து இந்நாள் வரையில் எல்லாம்
படைப்பின் தொடக்கத்தில் இருந்தது
போலவேதான் இருக்கின்றன'' என்று
சொல்வார்கள். 5 ஆனால், ஒன்றை இவர்கள்
வேண்டுமென்றே மறந்து விடுகிறார்கள். கட
வுளின் வார்த்தையினாலேதான் தொடக்க
காலத்தில் விண்ணுலகமும் மண்ணுல
கமும் தண்ணீரினின்றும் தண்ணீரினிடை
யேயும் உண்டாகி நிலைபெற்றன என்ப
தையும், 6 தண்ணீர்ப் பெருக்கினாலேதான்
அப்போது இருந்த உலகம் அழிவுற்றது
என்பதையும் மறந்துவிடுகிறார்கள். 7 இப்
போதுள்ள விண்ணுலகமும் மண்ணுலக
மும் அந்த வார்த்தையினாலே நெருப்
புக்கு இரையாவதற்கெனக் குறிக்கப்பட்டு,
இறைப்பற்று இல்லாதவர்கள் அழிவுற
வேண்டிய தீர்ப்புநாள் வரையிலும் விட்டு
வைக்கப்பட்டிருக்கின்றன.

8 அன்பார்ந்தவர்களே, நீங்கள் ஒன்றை
மறந்துவிட வேண்டாம். ஆண்டவரின் பார்
வையில் ஒரு நாள் ஆயிரம் ஆண்டுகள்
போலவும், ஆயிரம் ஆண்டுகள் ஒரு நாள்
போலவும் இருக்கின்றன. 9 ஆண்டவர்
தம் வாக்குறுதிகளை நிறைவேற்றக் காலந்
தாழ்த்துகிறார் என்று சிலர் நினைக்கின்றனர்.
அவ்வாறு நினைப்பது தவறு. அவர்
உங்கள் பொருட்டுப் பொறுமையோடிருக்
கிறார். ஏனெனில், எவனும் கெட்டழிந்து
போகாமல், எல்லாரும் மனமாற்றமடைய
வேண்டுமென்று அவர் விரும்புகிறார்.
10 ஆனாலும், ஆண்டவரின் நாள் வந்தே
தீரும். அது திருடனைப்போல வரும்.
அப்பொழுது வானங்கள் பேரொலியுடன்
மறைந்தொழியும்; பஞ்சபூதங்கள் வெந்
துருகிப்போகும். பூமியும் அதிலுள்ள
வேலைப்பாடுகளும் மறைவின்றித் திறந்து
வைக்கப்படும். 11 இவை யாவும் இப்படி
அழிந்துபோகுமாதலால், நீங்கள் எப்படிப்
பட்டவர்களாய் இருக்க வேண்டும்? மாசற்ற
நடத்தையும் இறைப்பற்றும் உள்ளவர்
களாய், 12 கடவுளின் நாளுக்காக ஆவ
லோடு காத்திருந்து, அதை விரைவில்
வரச்செய்ய வேண்டும். அந்த நாள் வரும்
போது, வானங்கள் எரிந்தழிந்து, பஞ்ச
பூதங்கள் வெந்துருகிப் போகும். 13 அவர்
வாக்களித்தபடியே உண்டாகப்போகும்
புதிய விண்ணுலகையும் புதிய மண்ணுல
கையும் நாம் எதிர்பார்த்துக் காத்திருக்
கிறோம். அவற்றில் நீதி குடிகொண்டிருக்கும்.
14 ஆகவே, அன்பார்ந்தவர்களே,
இவற்றை எதிர்பார்த்துக் காத்திருக்கும்

2:22 நீதி. 26:11. 3:3 யூதா. 18. 3:5 ஆதி. 1:6—9. 3:6 ஆதி. 7:11. 3:8 சங். 90:4. 3:10 மத். 24:43; லூக். 12:39; 1 தெச. 5:2; திருவெளி. 16:15. 3:13 எசா. 65:17; 66:22; திருவெளி. 21:1.

21 ஏனெனில், இறைவாக்கு எதுவும்,
மனிதன் இறைவாக்கு உரைக்க வேண்டு
மென்று விரும்பினதால் உரைக்கப்பட்ட
தன்று. ஆனால், கடவுள் அருளினதை
மனிதர்கள் தூய ஆவியினால் ஆட்கொள்
ளப்பட்டு உரைத்தார்கள்.

### கள்ளப் போதகர்
(யூதா 4–13)

2 இஸ்ரவேல் மக்களிடையே பொய்
யாக இறைவாக்குரைப்போரும் இருந்
தனர். அவ்வாறே உங்களிடையேயும்
கள்ளப் போதகர்கள் தோன்றுவார்கள்.
அவர்கள் அழிவை விளைவிக்கும் கொள்
கைகளைப் புகுத்திவிடுவார்கள்; தங்களை
விலைகொடுத்து மீட்ட ஆண்டவரைப்
புறக்கணித்துத் தள்ளுவார்கள்; விரைவில்
அழிவைத் தங்களுக்கு வருவித்துக்கொள்
வார்கள். 2 அவர்களுடைய காமவெறிச்
செயல்களைப் பலர் பின்பற்றுவர். அவர்
களால் நமது சத்தியநெறி பழிச் சொல்
லுக்கு உள்ளாகும். 3 அவர்கள் பேராசை
கொண்டவர்கள்; நயவஞ்சகப் பேச்சால்
உங்கள் பணத்தைச் சுரண்டுவார்கள்.
நெடுங்காலத்திற்கு முன்பே தண்டனைத்
தீர்ப்பு அவர்களுக்கு அளிக்கப்பட்டது.
அது இன்னும் மாற்றப்படவில்லை; அவர்
களை விழுங்குவதற்காக வாய்திறந்து
காத்துக்கொண்டிருக்கிறது.

4 பாவம் செய்த தெய்வதூதர்களைக்
கடவுள் தண்டியாமல் விடவில்லை. அவர்
அவர்களைப் பாதாளத்தில் தள்ளிவிட்
டார். அங்கே அவர்கள் விலங்கிடப்பட்டு
இறுதித் தீர்ப்பு அளிக்கப்படுவதற்கென்று
இருளில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். 5 பண்
டைய உலகத்தையும் அவர் தண்டியாமல்
விடவில்லை. இறைப்பற்று இல்லாத
மக்கள் நிறைந்த அவ்வுலகத்தின்மீது
அவர் வெள்ளப்பெருக்கை வரச்செய்த
போது, நேர்மையைப் போதித்துவந்த
நோவா உட்பட எட்டுப் பேரை மட்டும்
காப்பாற்றினார். 6 சோதோம், கொமோரா
என்னும் பட்டணங்களையும் அவர் தண்
டனைக்குள்ளாக்கினார். இறைப்பற்று இல்
லாதவரின் முடிவு என்னவாகும் என்ப
வற்கு எடுத்துக்காட்டாக அவற்றை எரித்
துச் சாம்பலாக்கினார். 7 ஆனால் அவர்,
காமவெறி கொண்ட தீயோரின் நடத்
தையைக் கண்டு மனத்துயரமடைந்த
லோத் என்பவரைத் தப்புவித்தார். லோத்
ஒரு நேர்மையான மனிதர். 8 இந்த
நேர்மையான மனிதர் அவர்களிடையே
தான் வாழ்ந்துவந்தார். அவர் கண்ட
முறைகேடான செய்கைகளும் கேட்ட
பேச்சுகளும் அவரது நேர்மையான
மனத்தை நாள்தோறும் வாட்டி
வதைத்தன. 9 இறைப்பற்று உள்ளவர்
களைச் சோதனையினின்று விடுவிக்கவும், தீய
வரைத் தண்டனைக்குள்ளாக்கி இறுதித்
தீர்ப்புநாள் வரையில் வைத்திருக்கவும்
ஆண்டவர் வல்லவராயிருக்கிறார். 10 குறிப்
பாக, பாவ இயல்புக்கும் அசுத்த விருப்
பங்களுக்கும் இசைய நடந்து ஆண்டவரின்
அதிகாரத்தை இழிவாகக் கருதி புறக்
கணிக்கிறவர்களைத் தண்டனைக்குள்ளாக்க
அவர் வல்லவர்.

இவர்கள் துணிச்சலுள்ளவர்கள், பிடி
வாதமுள்ளவர்கள்; வானுலக மாட்சிமை
பொருந்தியவர்களைப் பழித்துரைக்கவும்
அஞ்சாதவர்கள். 11 இவர்களைக் காட்டி
லும் மேலான ஆற்றலும் வலிமையு
முள்ள தெய்வதூதர்கள்கூட ஆண்ட
வரின் முன்னிலையில் அந்த மாட்சிமை
பொருந்தியவர்களைப் பழிக்கும் வகையில்
குற்றச்சாட்டைக் கொண்டுவருவதில்லை.
12 இவர்களோ பிடிபட்டு அழிக்கப்படு
வதற்கென்றே தோன்றி, இயற்கை அறி
வைக்கொண்டு வாழும் பகுத்தறிவற்ற
விலங்குகளைப் போன்றவர்கள். இவர்கள்
தங்களுக்குப் புரியாதவற்றைப் பழித்
துரைப்பார்கள்; விலங்குகள் அழிக்கப்
படுவதுபோல இவர்களும் அழிக்கப்படு
வார்கள். 13 இவர்கள் தாங்கள் செய்த
தீமையின் விளைவாகத் தீமையையே அனு
பவிப்பார்கள். பட்டப்பகலில் களியாட்
டத்தில் ஈடுபடுவதையே இவர்கள் இன்
பம் என்று எண்ணுகிறார்கள். உங்களோடு
விருந்துண்ணும்போதும் தங்கள் வஞ்
சனைச் செயல்களில் களிப்புடன் உழல்
கிறார்கள். இவர்கள் உங்களை மாசுபடுத்தி
உங்களுக்கு மானக்கேடு உண்டாக்குகிறார்
கள். 14 இவர்கள் கண்கள் ஒழுக்கங்
கெட்ட பெண்களையே நாடுகின்றன.
அவை பாவம் செய்வதில் ஓய்வதில்லை.
இவர்கள் மன உறுதியற்றவர்களை மயக்கித்
தம் வயப்படுத்துகிறவர்கள்; பொருள்
பறிப்பதில் கைதேர்ந்தவர்கள். கடவுளின்
சாபம் இவர்கள்மேல் உள்ளது. 15 உண்மை
நெறியை விட்டுவிட்டு, வழிதவறிப்போய்,
பொசோரின் மகன் பிலேயாமின் நெறி
யைப் பின்பற்றினவர்கள். இந்தப்
பிலேயாம் தீமை செய்து ஊதியம் பெற
விரும்பினான்; 16 தான் செய்த தீய
செய்கைக்காகக் கடிந்துகொள்ளப்பட்டான்.
பேச இயலாத கழுதை ஒன்று ஒரு
மனிதன் பேசுவதைப்போலப் பேசி, இறை
வாக்குரைப்போனாகிய இந்தப் பிலேயாமை
மதிகேடான செயலைச் செய்யாதபடி
தடுத்தது.

2:5 ஆதி. 6:1—7:24. 2:6 ஆதி. 19:24. 2:7 ஆதி. 19:1—16. 2:15, 16 எண். 22:4—35.

17 இந்த மனிதர் நீர்வற்றிய ஊற்றுகள்;
சுழல் காற்றினால் அடித்துச் செல்லப்படும்
மேகங்கள். காரிருளே இவர்
களுக்கெனக் குறிக்கப்பட்டுள்ள இடம்.
18 இவர்கள் தங்களைக் குறித்துப் பெரு
மையாக வெட்டிப் பேச்சுப் பேசி,
தவறான நெறியில் நடப்பவர்களிடையே
யிருந்து வெளியேறி வருகிறவர்களுக்கு
உடனே பாவ இயல்புக்குரிய விருப்பங்
களையும் காமவெறியையும் தூண்டி அவர்
களை மயக்கித் தம் வயப்படுத்திக்கொள்
கிறார்கள்; 19 அவர்களுக்கு விடுதலையளிப்
பதாக வாக்களிக்கிறார்கள். ஆனால், தாங்
களே கேடான பழக்கங்களுக்கு அடிமை
களாய் இருக்கிறார்கள். எப்படியெனில்,
ஒருவன் எதனால் ஆட்கொள்ளப்பட்டிருக்
கிறானோ அதற்கு அவன் அடிமையாகிவிட்
டான் என்றே சொல்ல வேண்டும். 20 ஆண்
டவரும் மீட்பருமாகிய இயேசுகிறிஸ்துவை
அறிவதன் மூலம் உலகத்தின் பாவச்
சேற்றிலிருந்து தப்பினவர்கள், அவ்வாறு
தப்பினபின் மறுபடியும் அதில் சிக்கி அத
னால் ஆட்கொள்ளப்பட்டால், அவர்களு
டைய பின்னிலைமை முன்னிலைமையைவிட
மோசமானதாகும். 21 அவர்கள் நீதி
யான நெறியை அறிந்தபின் தங்களுக்குக்
கொடுக்கப்பட்ட தூய கட்டளையைக்
கடைப்பிடியாமல் விட்டுவிட்டுப் பழைய
நிலைக்குச் செல்வதைவிட அதை அறியா
மலே இருந்திருந்தால் அவர்களுக்கு நல
மாயிருக்கும். 22 ஆனால், ''நாய் தான்
கக்கினதைத் தின்னத் திரும்பிவரும்''
என்னும் நீதிமொழி அவர்களிடம் உண்
மையாயிற்று. ''பன்றியைக் குளிப்பாட்டி
னாலும் அது பழையபடி சேற்றிலேதான்
புரளும்'' என்று கூறும் ஒரு பழமொழி
யும் உண்டு.

### ஆண்டவருடைய வருகையைப்பற்றிய வாக்குறுதி

3 அன்பார்ந்தவர்களே, இப்போது
நான் உங்களுக்கு எழுதுவது இரண்
டாம் கடிதம். இந்தக் கடிதங்களால் உங்
களுக்குச் சில காரியங்களை நினைப்பூட்டி,
உங்களைத் தெளிவுறச் சிந்திக்கும்படி
தூண்டிவிட்டிருக்கிறேன். 2 இறைவாக்
குரைக்கும் தூயோர் முன்பு உரைத்த
செய்திகளையும், ஆண்டவரும் மீட்பரு
மானவர் உங்கள் திருத்தூதுவர் மூலமாக
உங்களுக்கு இட்ட கட்டளையையும் நீங்கள்
நினைப்பூட்டிக்கொள்ள வேண்டுமென்பது
என் விருப்பம். 3 நீங்கள் முதலாவதாகத்
தெரிந்துகொள்ள வேண்டியது இதுவே:
கடைசிக் காலத்தில் சிலர் தோன்றித்
தங்கள் சொந்தத் தீய விருப்பங்களுக்
கிசைய நடந்து, உங்களை ஏளனமாகப்
பேசுவர். 4 அவர்கள், ''அவரது வருகை
யைப்பற்றிய வாக்குறுதி என்னவா
யிற்று? நம் மூதாதையர் துஞ்சின காலத்
திலிருந்து இந்நாள் வரையில் எல்லாம்
படைப்பின் தொடக்கத்தில் இருந்தது
போலவேதான் இருக்கின்றன'' என்று
சொல்வார்கள். 5 ஆனால், ஒன்றை இவர்கள்
வேண்டுமென்றே மறந்துவிடுகிறார்கள். கட
வுளின் வார்த்தையினாலேதான் தொடக்க
காலத்தில் விண்ணுலகமும் மண்ணுல
கமும் தண்ணீரினின்றும் தண்ணீரினிடை
யேயும் உண்டாகி நிலைபெற்றன என்ப
தையும், 6 தண்ணீர்ப் பெருக்கினாலேதான்
அப்போது இருந்த உலகம் அழிவுற்றது
என்பதையும் மறந்துவிடுகிறார்கள். 7 இப்
போதுள்ள விண்ணுலகமும் மண்ணுலக
மும் அந்த வார்த்தையினாலே நெருப்
புக்கு இரையாவதற்கெனக் குறிக்கப்பட்டு,
இறைப்பற்று இல்லாதவர்கள் அழிவுற
வேண்டிய தீர்ப்புநாள் வரையிலும் விட்டு
வைக்கப்பட்டிருக்கின்றன.

8 அன்பார்ந்தவர்களே, நீங்கள் ஒன்றை
மறந்துவிட வேண்டாம். ஆண்டவரின் பார்
வையில் ஒரு நாள் ஆயிரம் ஆண்டுகள்
போலவும், ஆயிரம் ஆண்டுகள் ஒரு நாள்
போலவும் இருக்கின்றன. 9 ஆண்டவர்
தம் வாக்குறுதிகளை நிறைவேற்றக் காலந்
தாழ்த்துகிறார் என்று சிலர் நினைக்கின்றனர்.
அவ்வாறு நினைப்பது தவறு. அவர்
உங்கள் பொருட்டுப் பொறுமையோடிருக்
கிறார். ஏனெனில், எவனும் கெட்டழிந்து
போகாமல், எல்லாரும் மனமாற்றமடைய
வேண்டுமென்று அவர் விரும்புகிறார்.
10 ஆனாலும், ஆண்டவரின் நாள் வந்தே
தீரும். அது திருடனைப்போல வரும்.
அப்பொழுது வானங்கள் பேரொலியுடன்
மறைந்தொழியும்; பஞ்சபூதங்கள் வெந்
துருகிப்போகும். பூமியும் அதிலுள்ள
வேலைப்பாடுகளும் மறைவின்றித் திறந்து
வைக்கப்படும். 11 இவை யாவும் இப்படி
அழிந்துபோகுமாதலால், நீங்கள் எப்படிப்
பட்டவர்களாய் இருக்க வேண்டும்? மாசற்ற
நடத்தையும் இறைப்பற்றும் உள்ளவர்
களாய், 12 கடவுளின் நாளுக்காக ஆவ
லோடு காத்திருந்து, அதை விரைவில்
வரச்செய்ய வேண்டும். அந்த நாள் வரும்
போது, வானங்கள் எரிந்தழிந்து, பஞ்ச
பூதங்கள் வெந்துருகிப் போகும். 13 அவர்
வாக்களித்தபடியே உண்டாகப்போகும்
புதிய விண்ணுலகையும் புதிய மண்ணுல
கையும் நாம் எதிர்பார்த்துக் காத்திருக்
கிறோம். அவற்றில் நீதி குடிகொண்டிருக்கும்.
14 ஆகவே, அன்பார்ந்தவர்களே,
இவற்றை எதிர்பார்த்துக் காத்திருக்கும்

2:22 நீதி. 26:11. 3:3 யூதா. 18. 3:5 ஆதி. 1:6—9. 3:6 ஆதி. 7:11. 3:8 சங். 90:4. 3:10 மத். 24:43; லூக். 12:39; 1 தெச. 5:2; திருவெளி. 16:15. 3:13 எசா. 65:17; 66:22; திருவெளி. 21:1.

நீங்கள், கடவுள் முன்னிலையில், மாசு
மறு எதுவும் இல்லாதவர்களாய்க் காணப்
படவும் அவரோடு நல்லுறவு கொண்ட
வர்களாய் இருக்கவும் முயற்சி செய்து
வாருங்கள். 15 நம்முடைய ஆண்டவரின்
பொறுமையே நமக்கு மீட்பு என்று எண்
ணுங்கள். நம்முடைய அன்பார்ந்த சகோ
தரன் பவுலும் கடவுளிடமிருந்து ஞானத்
தைப் பெற்று உங்களுக்கு இவ்வாறுதான்
எழுதியிருக்கிறார். 16 அவருடைய கடிதங்
களிலெல்லாம் இவற்றைப்பற்றி எழுதின
போது இப்படி எழுதியிருக்கிறார். புரிந்து
கொள்வதற்குக் கடினமான சில காரி
யங்கள் அவருடைய கடிதங்களில் உண்டு.
கல்லாதவர்களும் நம்பிக்கையில் உறுதி
யற்றவர்களும் வேதத்திலுள்ள மற்றப்
பகுதிகளின் கருத்தைப் புரட்டுவதுபோல
இவற்றின் கருத்தையும் புரட்டுகிறார்கள்.
அதனால் அவர்கள் தங்களுக்குத்தான்
அழிவை வரவழைத்துக்கொள்ளுகிறார்கள்.
17 அன்பார்ந்தவர்களே, நீங்களோ
இவற்றையெல்லாம் ஏற்கெனவே அறிந்
திருக்கிறீர்கள். ஆகையால், தீமை செய்
வோரின் தவறான கருத்துகளால் மதி
மயங்கி, நீங்கள் நிற்கும் உறுதியான நிலை
யினின்று விழுந்துவிடாதபடி பார்த்துக்
கொள்ளுங்கள். 18 நம்முடைய ஆண்ட
வரும் மீட்பருமாகிய இயேசுகிறிஸ்துவின்
அருளைச் சார்ந்து வாழ்வதிலும் அவரை
அறிவதிலும் வளர்ச்சியடையுங்கள். அவ
ருக்கே இப்போதும் எப்போதும் மாட்
சிமை! ஆமேன்.

# யோவானின் முதலாம் கடிதம்

## மெய்வாழ்வளிக்கும் வாக்கு

1 ஆதிமுதற்கொண்டே இருந்ததும்,
நாங்கள் கேட்டறிந்ததும், கண்ணுல்
கண்டதும், உற்றுக் கவனித்ததும், கையால்
தொட்டதுமான மெய்வாழ்வளிக்கும் வாக்
கைப்பற்றி உங்களுக்கு இங்கே எழுது
கிறேம். 2 அந்த மெய்வாழ்வு வெளிப்
படுத்தப்பட்டது. அதை நாங்கள் கண்
டோம். அதைப்பற்றிச் சாட்சி கூறு
கிறேம். விண்ணகத் தந்தையோடு இருந்
ததும் எங்களுக்கு வெளிப்படுத்தப்பட்டது
மான என்றுமுள்ள அந்த மெய்வாழ்வை
உங்களுக்கு அறிவிக்கிறேம். 3 எங்களோடு
நீங்களும் நல்லுறவில் இணைக்கப்பட வேண்
டும் என்று, நாங்கள் கண்டதையும்,
கேட்டறிந்ததையும் உங்களுக்கும் அறிவிக்
கிறேம். நாம் தந்தையாரோடும் அவரு
டைய மைந்தராகிய இயேசுகிறிஸ்து
வோடும் நல்லுறவில் இணைக்கப்பட்டிருக்
கிறேம் அல்லவா? 4 நமது மகிழ்ச்சி
நிறைவுபெறும்படி இவற்றை உங்களுக்கு
எழுதுகிறேம்.

## கடவுள் ஒளியே

5 நாங்கள் அவரிடமிருந்து கேட்டறிந்து
உங்களுக்கு அறிவிக்கும் செய்தி இதுவே:
கடவுள் ஒளியே; இருள் என்பதே அவரி
டம் இல்லை. 6 நாம் கடவுளோடு நல்லுற
வில் இணைக்கப்பட்டிருப்பவர்கள் என்று
சொல்லிக்கொண்டே இருளிலும் நடப்
போமானுல், நாம் பொய் சொல்லுகிற
வர்களாவோம்; நடைமுறையில் உண்மை
யைக் கடைப்பிடியாதவர்களுமாவோம்.
7 அவர் ஒளியில் இருப்பதற்கிசைய நாமும்
ஒளியில் நடப்போமானுல் நாம் ஒருவ
ரோடொருவர் நல்லுறவில் இணைக்கப்பட்
டிருப்போம். மேலும், அவருடைய மைந்
தராகிய இயேசுவின் இரத்தம் எல்லாப்
பாவமும் நீங்க நம்மைத் தூய்மைப்படுத்
தும். 8 நம்மிடம் பாவம் என்பதே இல்லை
என்போமானுல், நம்மை நாமே ஏமாற்றிக்
கொள்ளுகிறவர்களாவோம்; நமது உள்ளத்
தில் சத்தியம் இல்லை என்றும் ஆகும்.
9 நாம் நம்முடைய பாவங்களை மறைக்
காமல் சொல்லி ஒப்புக்கொள்வோமானுல்,
கடவுள் நம்முடைய பாவங்களை மன்
னித்து, எல்லாத் தீமையும் நீங்க நம்
மைத் தூய்மைப்படுத்துவார். ஏனென்
ருல், அவர் நம்பிக்கைக்குரியவர், நீதி
யுள்ளவர். 10 நாம் பாவம் செய்ததே
யில்லை என்று சொல்வோமானுல், நாம்
கடவுளைப் பொய்யராக்குகிறேம். நமது
உள்ளத்தில் அவருடைய வார்த்தை இல்லை
என்றும் ஆகும்.

## கிறிஸ்து நமக்காகப் பரிந்துபேசுகிருர்

2 என் பிள்ளைகளே, நீங்கள் பாவம்
செய்யாமல் இருக்க வேண்டுமென்றே
இதை உங்களுக்கு எழுதுகிறேன். நம்முள்
ஒருவன் பாவம் செய்வானுனல், நமக்
காக நம் தந்தையாரிடம் பரிந்து பேசு
கிறவர்* ஒருவர் இருக்கிருர். அவர் நீதி
யுள்ளவராகிய இயேசுகிறிஸ்துவே.
2 அவரே நம்முடைய பாவங்களைப்
போக்கும் பரிகாரப்பலி. நம்முடைய
பாவங்களை மட்டுமன்றி, முழு உலகத்தின்
பாவங்களையும் போக்கும் பரிகாரப் பலி
அவரே. 3 அவரை நாம் அறிந்திருக்
கிறேம் என்பது அவருடைய கட்டளைகளை
நாம் கடைப்பிடித்தால்தான் நமக்குத்
தெரியவரும். 4 ''நான் அவரை அறி
வேன்'' என்று சொல்லிக்கொண்டு அவரு
டைய கட்டளைகளைக் கடைப்பிடியாதிருப்
பவன் பொய்யன்; அவன் உள்ளத்தில் சத்
தியம் இல்லை என்றும் ஆகிறது. 5 ஆனுல்
அவருடைய வார்த்தையைக் கடைப்
பிடித்து நடக்கிறவன் எவனே அவனிடம்
கடவுளுடைய அன்பின் நோக்கம் முற்றும்
நிறைவேறிவிட்டது என்பது உறுதி.
6 ''நான் அவருக்குள் நிலைத்திருக்கிறேன்''
என்று சொல்லிக்கொள்கிறவன், கிறிஸ்து
சென்ற வழியே தானும் செல்லக் கடமைப்
பட்டவன். நாம் அவருக்குள் நிலைத்திருக்
கிறேம் என்பது இதனுலேதான் நமக்குத்
தெரியவரும்.

## ஒரு புதிய கட்டளை

. அன்பார்ந்தவர்களே, நான் உங்க
ளுக்கு எழுதுகின்ற இது ஒரு புதிய கட்
டளையன்று. அது தொடக்கத்திலேயே
நீங்கள் பெற்றிருந்த பழைய கட்டளைதான்.
இந்தப் பழைய கட்டளை நீங்கள்
கேட்டறிந்த வார்த்தையே. 8 என்றுலும்,
நான் உங்களுக்கு எழுதுகிறது உண்மை
யில் ஒரு புதிய கட்டளையே. அதன் புதிய
தன்மை கிறிஸ்துவின் வாழ்க்கையிலும்
உங்கள் வாழ்க்கையிலும் விளங்குகிறது.
ஏனெனில், மெய்யொளி இப்போதே
சுடர் வீசுகிறது; இருளும் நீங்குகிறது.
9 ''நான் ஒளியில் இருக்கிறேன்'' என்று
சொல்லிக்கொண்டு, தன் சகோதரனைப்
பகைக்கிறவன் இன்னும் இருளில் இருக்
கிறவனுவான். 10 தன் சகோதரனிடம்
அன்புகொள்கிறவன் ஒளியில் நிலைத்திருக்
கிருன். பாவத்தில் இடறி விழுவதற்கான

* அல்லது சகாயர். யோ. 14:16 பார்க்க.
**1:1** யோ. *1:1*. **1:2** யோ. *1:14*. **2:7** யோ. *13:34*.

காரணம் எதுவும் அவனிடம் இராது.
11 தன் சகோதரனைப் பகைக்கிறவனோ
இருளில் இருக்கிறான். அவன் இருளில்
நடக்கிறான்; தான் போகும் இடம் எது
என்பதும் அவனுக்குத் தெரியாது. இருள்
அவன் கண்களைக் குருடாக்கிவிட்டது.

12 என் பிள்ளைகளே, அவரது
திருப்பெயரின் பொருட்டு உங்கள் பாவங்
கள் மன்னிக்கப்பட்டுவிட்டன;
ஆகையால் உங்களுக்கு எழுதுகிறேன்.
13 தந்தையரே, ஆதி முதற்கொண்டே
இருக்கிறவரை நீங்கள் அறிவீர்கள்;
ஆகையால் உங்களுக்கு எழுதுகிறேன்.
இளைஞரே, நீங்கள் தீயோனை வென்று
விட்டீர்கள்;
ஆகையால், உங்களுக்கு எழுதுகிறேன்;
14 பிள்ளைகளே, விண்ணகத் தந்
தையை நீங்கள் அறிவீர்கள்;
ஆகையால், உங்களுக்கு எழுதியிருக்
கிறேன்.
தந்தையரே, ஆதிமுதற்கொண்டே இருக்
கிறவரை நீங்கள் அறிவீர்கள்;
ஆகையால் உங்களுக்கு எழுதியிருக்
கிறேன்.
இளைஞரே, நீங்கள வலிமை வாய்ந்
தவர்கள்.
கடவுளின் வார்த்தை உங்களிடம் நிலைத்
திருக்கிறது.
நீங்கள் தீயோனை வென்றுவிட்டீர்கள்.
ஆகையால் உங்களுக்கு எழுதியிருக்
கிறேன்.

15 உலகத்திலும் உலகத்திலுள்ளவற்றி
லும் அன்பு வைக்க வேண்டாம். எவனா
வது உலகத்தில் அன்பு வைப்பானானால்,
அவன் விண்ணகத் தந்தையின் அன்பை
ஏற்றுக்கொள்ளாதவன் என்றாகும். 16 ஏனெ
னில், உலகத்திற்கடுத்தவையாகிய உட
லின் தீய விருப்பம், கண்களின் தீய
விருப்பம், செல்வச் செருக்கு போன்றவை
அனைத்தும் உலகத்திற்கே உரியவை, நம்
தந்தையாருக்கு உரியவை அல்ல. 17 உல
கமும் அதன் தீய விருப்பங்களும் அழியத்
தொடங்கிவிட்டன. ஆனால், கடவுளின்
திருவுளத்தை நிறைவேற்றுகிறவனோ என்
றைக்கும் நிலைத்திருப்பான்.

### எதிர்க் கிறிஸ்து

18 பிள்ளைகளே, இது கடைசிக் காலம்.
எதிர்க் கிறிஸ்து வருவான் என்று நீங்கள்
கேள்விப்பட்டதற்கிசைய, இப்போதே
எதிர்க் கிறிஸ்துகள் பலர் தோன்றியிருக்கின்
றனர். அதனால் இது கடைசிக் காலம்
என்று புரிந்து கொள்கிறோம். 19 இவர்கள்
நம்மை விட்டுப் பிரிந்து சென்றவர்களே.
உண்மையில் இவர்கள் நம்மைச்
சேர்ந்தவர்களாய் இருந்ததேயில்லை, இவர்
கள் நம்மைச் சேர்ந்தவர்களாய் இருந்
திருந்தால், நம்மோடு இருந்திருப்பார்
கள். இவர்களுள் எவனும் நம்மைச்
சேர்ந்தவனேயில்லை என்பது வெளிப்படை
யாகும் பொருட்டே இவ்வாறு நடந்தது.
20 தூயராகிய கடவுளிடமிருந்து வரும்
அருளால் நீங்கள் உண்மையிலேயே அபி
டேகம் பெற்றவர்கள். அதனால் நீங்க
ளெல்லாரும் மெய்யறிவு உடையவர்
களாய் இருக்கிறீர்கள்.* 21 எனவே,
நீங்கள் சத்தியத்தை அறியாதிருக்கிறீர்கள்
என்றெண்ணி நான் உங்களுக்கு
எழுதவில்லை. அதை நீங்கள் அறிந்திருக்
கிறீர்கள்; பொய்யானதெதுவும் சத்தியத்
தினின்று தோன்றாது என்பதையும் அறிந்
திருக்கிறீர்கள். ஆகையால், உங்களுக்கு
எழுதியிருக்கிறேன். 22 ஆகவே, பொய்
பேசுகிறவன் யார்? இயேசுவே கிறிஸ்து
என்பதை எவன் ஏற்க மறுக்கிறானோ
அவனே பொய்யன்; அவனே எதிர்க்
கிறிஸ்து. அவன் தந்தையாரையும் மைந்
தரையும் ஏற்க மறுக்கிறான். 23 மைந்தரை
எவன் ஏற்க மறுக்கிறானோ அவன் தந்
தையாரை ஏற்றுக்கொண்டவனாய் இருக்க
முடியாது. மைந்தரை வெளிப்படையாக
ஏற்றுக்கொள்ளுகிறவனே தந்தையாரையும்
ஏற்றுக்கொண்டவனாவான். 24 ஆகையால்
தொடக்கத்திலிருந்தே நீங்கள் கேட்
டறிந்து வந்ததை விடாது பற்றிக்கொண்
டிருங்கள். தொடக்கத்திலிருந்தே நீங்கள்
கேட்டறிந்துவந்தது உங்களிடம் நிலைத்
திருக்குமானால், நீங்கள் மைந்தருக்குள்
ளும் தந்தையாருக்குள்ளும் நிலைத்திருப்
பீர்கள். 25 நமக்கு வாக்களிக்கப்பட்டிருப்
பது என்றுமுள்ள மெய்வாழ்வு. இந்த
வாக்குறுதியை அவர்தாமே அளித்திருக்
கிறார்.

26 உங்களை ஏமாற்றப் பார்க்கிறவர்
களைக் குறித்தே இவற்றை நான் உங்
களுக்கு எழுதுகிறேன். 27 நீங்கள் அவரிட
மிருந்து வரும் அருளால் அபிடேகம்
பெற்றவர்கள். அந்த அபிடேகம் உங்
களிடம் நிலைத்திருக்கிறது. எவரும் உங்
களுக்குப் போதிக்கத் தேவையில்லை. அவர்
அருளிய அபிடேகமே உங்களுக்கு எல்லா
வற்றையும் போதித்துவருகிறது. அது
சத்தியத்தையே போதிக்கிறது, பொய்யை
யன்று. உங்களுக்குப் போதிக்கப்பட்டதற்
கிசைய அவருக்குள் நிலைத்திருங்கள்.

### கடவுளின் பிள்ளைகள்

28 ஆகவே, என் பிள்ளைகளே, அவர்
வெளிப்படுத்தப்படும்போது உறுதியான

* 'அதனால் நீங்கள் எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர்கள்' என்பது சில பிரதிகளின் பாடம்.

நம்பிக்கையோடிருக்கவும் அவரது வருகை
யின்போது அவர் முன்னிலையினின்று வெட்
கத்தோடு போய்விடாமலிருக்கவும் அவ
ருக்குள் நிலைத்திருங்கள். 29 அவர் நீதி
யுள்ளவர் என்பது உங்களுக்குத் தெரியும்
அல்லவா? எனவே, நீதியை நிறைவேற்றி
வரும் எவனும் அவரால் பெற்றெடுக்கப்
பட்டவன் என்பதை அறிந்துகொள்ளுங்கள்.

3 பாருங்கள், நம் தந்தையார் நம்மி
டம் கொண்டுள்ள அன்பு எவ்வளவு
மேன்மையானது! அந்த அன்பு காரண
மாகவே நமக்குக் கடவுளின் பிள்ளைகள்
என்கிற பெயரும் கொடுக்கப்பட்டிருக்
கிறது. நாம் கடவுளின் பிள்ளைகளே.
உலகம் அவரை அறிந்துகொள்ளவில்லை.
அதனாலேதான் அது நம்மையும் அறி
யாதிருக்கிறது. 2 அன்பார்ந்தவர்களே,
நாம் இப்போது கடவுளின் பிள்ளைகளா
யிருக்கிறோம். இனிமேல் எத்தன்மை உடைய
வர்களாய் இருப்போம் என்பது இன்
னும் வெளிப்படுத்தப்படவில்லை. ஆனால்,
*அவர் வெளிப்படுத்தப்படும்போது, அவர்
இருக்கிறபடியே நாம் அவரைக் காண்
போமாகையால், அவரைப் போலவே
இருப்போம் என்பது நமக்குத் தெரியும்.
3 அவரையே நம்பி இதை எதிர்நோக்கி
யிருக்கிறவன் எவனும், அவர் தூயரா
யிருக்கிறதுபோலத் தன்னையும் தூயவனாக்கிக்
கொள்கிறான்.

4 பாவம் செய்கிற எவனும் நீதிச்சட்
டத்திற்குக் கீழடங்காதிருக்கிறான். நீதிச்
சட்டத்திற்குக் கீழடங்காதிருத்தலே பாவம்.
5 பாவத்தைச் சுமந்து நீக்கிடவே கிறிஸ்து
தோன்றினார். அவரிடம் பாவமே இல்லை
என்பது உங்களுக்குத் தெரியும். 6 அவ
ருக்குள் நிலைத்திருக்கும் எவனும் பாவம்
செய்ய மாட்டான். பாவம் செய்துவருகிற
எவனும் அவரைக் கண்டதுமில்லை,
அறிந்ததுமில்லை. 7 பிள்ளைகளே, உங்களை
ஏமாற்ற எவனுக்கும் இடங்கொடாதீர்
கள். நீதியை நிறைவேற்றுகிறவன்,
கிறிஸ்து நீதியுள்ளவராயிருக்கிறதுபோலத்
தானும் நீதியுள்ளவனாயிருக்கிறான். 8 பாவம்
செய்துவருகிறவன் பிசாசினின்றே தோன்
றியவன். ஏனெனில் பிசாசானவன், ஆதி
முதற்கொண்டே பாவம் செய்துவருகிறான்.
பிசாசின் செயல்களை ஒழித்திடவே
கடவுளின் மைந்தர் தோன்றினார். 9 கட
வுளால் பெற்றெடுக்கப்பட்டவன் எவனும்
பாவம் செய்கிறவனாய் இருக்க மாட்டான்.
ஏனெனில், தெய்வவித்து அவனுக்குள்
நிலைத்திருக்கிறது. அவன் கடவுளால் பெற்
றெடுக்கப்பட்டவனாதலால், அவனால் பாவ
வாழ்க்கை நடத்த இயலாது. 10 கடவுளின்
பிள்ளைகள் யாரென்பதையும் பிசாசின்
பிள்ளைகள் யாரென்பதையும் தெளிவாகத்
தெரிந்துகொள்ளலாம். எப்படி
யெனில், நீதியை நிறைவேற்றாத எவனும்
கடவுளின் பிள்ளையல்ல; தன் சகோதர
னிடம் அன்புகொள்ளாதவனும் கடவுளின்
பிள்ளையல்ல.

### ஒருவரிடமொருவர் அன்புகொள்ளுங்கள்

11 ஏனென்றால், ஒருவரிடமொருவர்
அன்புகொள்ளுங்கள் என்பதே நீங்கள்
தொடக்கத்திலிருந்து கேட்டுவந்த செய்தி.
12 நீங்கள் காயீனைப்போல இருக்க வேண்
டாம். தீயோனினின்றே தோன்றியவனா
யிருந்த அவன் தன் சகோதரனை அடித்துக்
கொன்றான். அவன் கொன்றதற்குக்
காரணம் என்ன? அவனுடைய செய்கைகள்
தீயனவாயும் அவன் சகோதரனுடைய
செய்கைகள் நேர்மையானவையாயும்
இருந்தன. 13 சகோதரர்களே, உலகம்
உங்களைப் பகைக்கிறதென்றால், நீங்கள்
வியப்படைய வேண்டாம். 14 நாம்
மரணத்திலிருந்து மெய்வாழ்வுக்குள் வந்
திருக்கிறோம் என்பது நமக்குத் தெரியும்.
எப்படியெனில், நாம் சகோதரரிடம்
அன்புகொள்கிறோம். அன்பு காட்டாத
வனே இன்னும் மரண நிலையிலேயே
இருக்கிறான். 15 தன் சகோதரனைப் பகைக்
கிற எவனும் மனித கொலைகாரன்.
மனித கொலைகாரன் எவனுக்குள்ளும்
என்றுமுள்ள மெய்வாழ்வு நிலைகொள்
ளாது என்பது உங்களுக்குத் தெரியும்.
16 கிறிஸ்து நமக்காகத் தம் உயிரைக்
கொடுத்ததனால், அன்பு இன்னது என்
பதை அறிந்துகொண்டோம். நாமும்
சகோதரருக்காக உயிரைக் கொடுக்கக்
கடமைப்பட்டிருக்கிறோம். 17 இவ்வுலகப்
பொருளை நிறையப் பெற்றிருக்கும் ஒரு
வன், தன் சகோதரன் ஒருவனுக்குப்
பொருள் தேவைப்படுகிறதென்று கண்டும்
அவனுக்குத் தன் இதயக் கதவைத் திறக்
காமலிருந்தானானால், அவன் உள்ளத்தில்
கடவுள் அன்பு இருக்கிறது என்று எப்படிச்
சொல்ல முடியும்? 18 பிள்ளைகளே,
வெறும் சொல்லிலும் பேச்சிலுமன்று,
உண்மையோடு செயலில் அன்பு காட்டு
வோமாக.

### கடவுள் முன்னிலையில் நமக்குள்ள உறுதியான நம்பிக்கை

19 நம் மனத்தின் தீர்ப்பைவிடக் கட
வுளின் தீர்ப்பு மேலானது; அவருக்கு எல்
லாம் தெரியும். 20 எனவே, நம் மனம்
நம்மைக் குற்றப்படுத்தும்போது, நாம்
சத்தியத்திற்கு உரியவர்களாய் இருக்கிறோம்

* 'அது' என்றும் மொழிபெயர்க்கலாம்.
3:1 யோ. 1:12. 3:5 யோ. 1:29. 3:11 யோ. 13:34. 3:12 ஆதி. 4:8. 3:14 யோ. 5:24.

என்பதை உணர்ந்து, கடவுள் முன்
னிலையில் நம் மனத்தை நாம் அமைதியா
யிருக்கச் செய்யலாம். 21 அன்பார்ந்தவர்
களே, நம் மனம் நம்மைக் குற்றப்படுத்
தாதிருக்குமானால், கடவுள் முன்னிலையில்
நாம் உறுதியான நம்பிக்கையோடு நிற்க
முடியும். 22 நாம் கேட்பவை எல்லாவற்
றையும் அவரிடமிருந்து பெற்றுக்கொள்
வோம். ஏனெனில், நாம் அவர் தந்த
கட்டளைகளைக் கடைப்பிடித்து அவருக்கு
உகந்தவற்றைச் செய்துவருகிறோம்.
23 அவருடைய மைந்தராகிய இயேசு
கிறிஸ்துவின் திருப்பெயரில் நம்பிக்கை
வைத்து, அவர் நமக்குக் கற்பித்தபடி
ஒருவரிடமொருவர் அன்புகொள்ள வேண்டு
மென்பதே அவர் தந்த கட்டளை. 24அவர்
தந்த கட்டளைகளைக் கடைப்பிடிக்கிறவன்
அவருக்குள் நிலைத்திருக்கிறான்; அவரும்
அவனுக்குள் நிலைத்திருக்கிறார் என்பதை
அவர் நமக்குத் தந்துள்ள ஆவியானவ
ரால் அறிந்துகொள்கிறோம்.

### கடவுளின் ஆவியும் எதிர்க் கிறிஸ்துவின் ஆவியும்

4 அன்பார்ந்தவர்களே, உலகத்தில்
பொய்யாக இறைவாக்குரைப்போர்
பலர் தோன்றியிருப்பதால், ஆவியை
உடையவர்கள் எல்லாரையுமே நம்பி
விடாதீர்கள். அவர்கள் ஒவ்வொருவரிட
மும் இருக்கும் ஆவி கடவுள் அருளியதுதானா
வென்று சோதித்துப் பாருங்கள்.
2 கடவுளின் ஆவியை அறிந்துகொள்ளும்
வழி இதுவே: மெய்யான மனிதனாக
வந்த இயேசுகிறிஸ்துவை ஏற்றுக்கொள்
ளும் எந்த ஆவியும் கடவுள் அருளிய
ஆவியாகும். 3 அப்படி வந்த இயேசுவை
ஏற்றுக்கொள்ளாத எந்த ஆவியும் கடவுள்
அருளிய ஆவியன்று, அது எதிர்க்
கிறிஸ்துவின் ஆவி. அது வருமென்று
நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். அது
இப்போதே உலகத்தில் இருக்கிறது.
4 என் பிள்ளைகளே, நீங்கள் கடவுளுக்கு
உரியவர்களாய் இருக்கிறீர்கள். உங்களுள்
இருக்கிறவர் உலகத்தில் இருக்கும் எதிர்க்
கிறிஸ்துவைவிடப் பெரியவர். ஆகையால்,
பொய்யாக இறைவாக்குரைப்போரை நீங்
கள் வென்றுவிட்டவர்கள். 5 அவர்கள்
உலகத்துக்கு உரியவர்களாய் இருக்கிறார்
கள். ஆகையால், அவர்கள் உலகத்துக்
கடுத்தவற்றைப் பேசுகிறார்கள். உலகமும்
அவர்களுக்குச் செவிசாய்க்கிறது. 6 நாம்
கடவுளுக்கு உரியவர்களாய் இருக்கிறோம்.
கடவுளைப்பற்றி அறிய வருகிறவன்
நமக்குச் செவிசாய்க்கிறான். கடவுளுக்கு
உரியவனாய் இல்லாதவன் நமக்குச் செவி
சாய்ப்பதில்லை. இதிலிருந்து நாம் சத்திய
ஆவி எதுவென்பதையும் வஞ்சக ஆவி
எதுவென்பதையும் அறிந்துகொள்கிறோம்.

### கடவுள் அன்பே

7 அன்பார்ந்தவர்களே, நாம் ஒருவரிட
மொருவர் அன்புகொள்வோமாக. அன்பு
கடவுளிடமிருந்து வருகிறது. அன்பு காட்டு
பவன் எவனும் கடவுளால் பெற்றெடுக்
கப்பட்டவன். 8 அவன் அவரை அறி
வான். அன்பு காட்டாதவன் கடவுளை
அறியாதவன். ஏனெனில், கடவுள்
அன்பே. 9 கடவுளின் அன்பு நம்மிடையே
வெளிப்படுத்தப்பட்ட வகை இதுவே:
அவர் தம்முடைய ஒரே பேறான மைந்த
ரால் நாம் மெய்வாழ்வு அடையும்
பொருட்டு, அவரை இவ்வுலகத்திற்கு
அனுப்பினார். 10 நான் சொல்லும் அன்பு,
நாம் கடவுளிடம் கொள்ளும் அன்பன்று,
கடவுள் நம்மிடம் காட்டிய அன்பாகும்.
கடவுள் நம் பாவங்களைப் போக்கும் பரி
காரப் பலியாகத் தம் மைந்தரை அனுப்
பினதில் அது விளங்கிற்று. 11 அன்பார்ந்த
வர்களே, கடவுள் இவ்வாறு நம்மிடம்
அன்புகொண்டாரெனில், நாமும் ஒரு
வருக்கொருவர் அன்பு காட்டக் கடமைப்
பட்டிருக்கிறோம் அல்லவா? 12 கடவுளை
ஒருவனும் ஒருபோதும் கண்டதில்லை.
நாம் ஒருவருக்கொருவர் அன்பு காட்டி
னால் கடவுள் நமக்குள் தொடர்ந்து நிலைத்
திருப்பார். அவரது அன்பின் நோக்கம்
நம்மிடம் முற்றும் நிறைவேறும்.

13 அவர் தம் ஆவியை நமக்கும்
அளித்ததிலிருந்து, நாம் அவருக்குள்ளும்
அவர் நமக்குள்ளும் நிலைத்திருப்பதைத்
தெளிவாக அறிந்துகொள்கிறோம். 14 தந்
தையார் தம் மைந்தரை உலக மீட்ப
ராக அனுப்பியுள்ளதை நாங்கள் நேரில்
கண்டு அதைப்பற்றிச் சாட்சி கூறி வரு
கிறோம். 15 இயேசுவைக் கடவுளின்
மைந்தரென்று எவன் ஒப்புக்
கொள்கிறானோ அவனுக்குள் கடவுள்
நிலைத்திருக்கிறார். 16 அவனும் கடவுளுக்
குள் நிலைத்திருக்கிறான். கடவுள் நம்மிடம்
கொண்டுள்ள அன்பை நாம் அறிந்திருக்
கிறோம், அதில் நம்பிக்கையும் வைத்திருக்
கிறோம். கடவுள் அன்பே. அன்பில் நிலைத்
திருப்பவன் கடவுளுக்குள் நிலைத்திருக்
கிறான். 17 கடவுளும் அவனுக்குள் நிலைத்
திருக்கிறார். நாம் இறுதித் தீர்ப்புநாளில்
உறுதியான நம்பிக்கையோடு இருப்போ
மாதலால், தெய்வ அன்பின் நோக்கம்
நம்மிடம் நிறைவேறியிருக்கிறது எனலாம்.
ஏனெனில், நாம் இவ்வுலகில் இருக்கும்
போதே அவர் எப்படி இருக்கிறாரோ

**3:23** *யோ. 13:34; 15:12, 17.* **4:12** *யோ. 1:18.*

அப்படியே இருப்பதால், நமக்கு இந்த நம்
பிக்கை உண்டு. 18 அன்பு இருக்குமானால்
அச்சம் இராது. நிறைவான அன்பு அச்
சத்தை அகற்றும். அச்சம் தண்டனையோடு
தொடர்புடையது. எனவே, அச்சமுள்ள
வனிடம் நிறைவான அன்பு இராது.
19 அவர் முதலில் நம்மிடம் அன்பு
கொண்டதால், நாம் அன்புடையோரா
யிருக்கிறோம்.* 20 ஒருவன், ''நான் கட
வுளிடம் அன்புகொண்டுள்ளேன்'' என்று
சொல்லிக்கொண்டு தன் சகோதரனைப்
பகைத்தால், அவன் பொய்யன். தான்
பார்க்கக்கூடிய சகோதரனுக்கு அன்பு
காட்டாதவனால் தான் பார்த்திராத கட
வுளிடம் அன்புகொள்ளவே இயலாது.
21 கடவுளிடம் அன்பு கொள்கிறவன் தன்
சகோதரனிடமும் அன்புகொள்ள வேண்டு
மென்பதே நாம் கிறிஸ்துவினிடமிருந்து
பெற்றிருக்கும் கட்டளை.

## நம்பிக்கையின் வெற்றி

5 இயேசுவே கிறிஸ்து என்று நம்புகிற
எவனும் கடவுளால் பெற்றெடுக்கப்
பட்டவன். தந்தையிடம் அன்புகொள்
கிறவன் அவர் பெற்றெடுத்த பிள்ளை
யிடமும் அன்புகொள்கிறான். 2 நாம் கட
வுளிடம் அன்புகொண்டு அவருடைய
கட்டளைகளைக் கடைப்பிடித்தால்தான்,
கடவுளுடைய பிள்ளைகளிடமும் அன்பு
கொள்கிறோம் என்பது நமக்குத் தெரிய
வரும். 3 கடவுளின் கட்டளைகளைக் கடைப்
பிடிப்பதே அவரிடம் அன்புகொள்வ
தாகும். 4 அவருடைய கட்டளைகள் ஒரு
சுமையல்ல. கடவுளின் பிள்ளையா
யிருக்கும் ஒவ்வொருவனும் உலகத்தின்மீது
வெற்றிகொள்வான். உலகத்தின்மீது
வெற்றிகொள்வது எதுவெனில் நமது
நம்பிக்கையே. 5 உலகத்தை வெல்லுகிற
வன் யார்? இயேசு கடவுளின் மைந்தர்
என்று நம்புகிறவனே.

## இயேசுகிறிஸ்துவைப் பற்றிய சாட்சியம்

6 அந்த இயேசுகிறிஸ்து தண்ணீர்
மூலமாகவும் இரத்தம் மூலமாகவும் வந்
தவர். தண்ணீரோடு மட்டுமன்று, தண்ணீ
ரோடும் இரத்தத்தோடும் வந்தவர். ஆவி
யானவரும் இதற்குச் சாட்சி. ஆவியான
வரே சத்தியம். 7 [விண்ணுலகில்] சாட்சி
யாயிருப்பவர் மூவர்; [தந்தையார், திரு
வாக்கு, தூய ஆவியானவர்; இம்மூவரும்
ஒன்றாயிருக்கின்றனர். 8 மண்ணுலகில் சாட்சி
யாயிருப்பவை மூன்று.] ஆவி, தண்ணீர்,
இரத்தம்; இம்மூன்று சாட்சிகளுக்கும்
நோக்கம் ஒன்றே. 9 நாம் மனித சாட்சி
யத்தை ஒப்புக்கொள்கிறோம். கடவுளின்
சாட்சியம் அதைவிட மேலானது. இது
கடவுளின் சாட்சியம்; அவர் தம் மைந்
தரைப்பற்றி அளித்த சாட்சியம். 10 கட
வுளின் மைந்தரிடம் நம்பிக்கை கொள்
கிறவன் இந்தச் சாட்சியத்தைத் தன்
உள்ளத்தில் உடையவன். கடவுளை நம்
பாதவனோ, கடவுள் தம் மைந்தரைப்
பற்றி அளித்த சாட்சியத்தையும் நம்பா
திருக்கிறான். ஆகையால், அவன்
அவரைப் பொய்யராக்குகிறான். 11 அந்தச்
சாட்சியமாவது, கடவுள் நமக்கு என்று
முள்ள மெய்வாழ்வைத் தந்தருளினார்;
அந்த வாழ்வு அவருடைய மைந்தருக்குள்
இருக்கிறது என்பது. 12 அந்த மைந்தரை
உள்ளத்தில் உடையவன் மெய்வாழ்வை
உடையவன். யார் கடவுளின் மைந்தரை
உள்ளத்தில் உடையவனாய் இல்லையோ
அவனுக்கு மெய்வாழ்வு இல்லை.

## என்றுமுள்ள மெய்வாழ்வு

13 கடவுளின் மைந்தரது திருப்பெய
ரின்மேல் நம்பிக்கை வைத்திருக்கிற நீங்
கள் என்றுமுள்ள மெய்வாழ்வை உடைய
வர்களாயிருக்கிறீர்கள் என்பதைத் தெரிந்து
கொள்ள வேண்டுமென்றே இவற்றை
எழுதியிருக்கிறேன். 14 நாம் அவரது திரு
வுளத்திற்கிசைந்திருக்கும் எதையாவது
கேட்டால் அவர் நமக்குச் செவிசாய்ப்
பார் என்பதே நாம் அவரிடம் கொண்
டுள்ள உறுதியான நம்பிக்கை. 15 நாம்
கேட்பது எதுவாயினும் அதற்கு அவர்
செவிசாய்க்கிறார். இது நமக்குத் தெரிந்
திருப்பதால், நாம் அவரிடம் கேட்கிறவை
நமக்குக் கிடைத்துவிட்டன என்கிற
உறுதி நமக்கு உண்டு.
16 தன் சகோதரன் பாவம் செய்
கிறதை ஒருவன் பார்க்கிறான் என்று வைத்
துக்கொள்வோம். அந்தப் பாவம் மரண
நிலைக்கு உட்படுத்தாத பாவமாயிருக்கு
மானால், அவன் கடவுளிடம் அவனுக்காக
விண்ணப்பம் செய்வானாக; அவர் அந்தச்
சகோதரனுக்கு மெய்வாழ்வளிப்பார்.
மரண நிலைக்கு உட்படுத்தாத பாவத்
தைச் செய்கிறவர்களுக்கே இது பொருந்
தும். மரண நிலைக்கு உட்படுத்தும் பாவமும்
உண்டு. அதைக் குறித்துக் கடவுளிடம்
வேண்டுதல் செய்யும்படி நான் சொல்ல
வில்லை. 17 எல்லாத் தீச்செயலும்
பாவமே; ஆனால், எல்லாப் பாவமும்
மரண நிலைக்கு உட்படுத்தாது.
18 கடவுளின் பிள்ளையாயிருக்கிற எவ
னும் பாவம் செய்கிறவனாய் இருக்க மாட்
டான். கடவுளின் மைந்தர் அவனைக் காக்
கிறார்.† தீயோன் அவனைத் தீண்டுவதில்லை.
இது நமக்குத் தெரியும். 19 நாம்

* 'நாம் அவரிடம் அன்புகொள்ளுகிறோம்' என்பது முக்கியமல்லாத பிரதிகளின் பாடம்.
† 'கடவுளால் பிறந்தவன் தன்னைத்தானே காத்துக்கொள்கிறான்' என்பது வேறொரு பாடம்.
5:3 யோ. 14:15. 5:11 யோ. 3:36.

# யோவானின் இரண்டாம் கடிதம்

## வாழ்த்து

கடவுளால் தேர்ந்துகொள்ளப்பட்ட
பெருமாட்டிக்கும் அவருடைய பிள்ளை
களுக்கும் சபை மூப்பனாகிய நான் எழுது
வதாவது:

சத்தியத்தின் பொருட்டு நான் உண்
மையாகவே உங்களிடம் அன்புடையவனா
யிருக்கிறேன். நான் மட்டுமன்றி, 2 சத்தி
யத்தை அறிந்திருக்கிற அனைவருமே,
அந்தச் சத்தியத்தின் பொருட்டு உங்
களிடம் அன்புடையோராயிருக்கின்றனர்.
அந்தச் சத்தியம் நமக்குள் நிலைத்திருக்
கிறது; அது என்றைக்குமே நம்மோ
டிருக்கும். 3 தந்தையாராகிய கடவுளிட
மிருந்தும் அத்தந்தையாரின் மைந்தராகிய
இயேசுகிறிஸ்துவிடமிருந்தும் வரும்
அருளும் இரக்கமும் நலமும் நாம் சத்தியத்
தோடும் அன்போடும் வாழ நம்மோடு
நிலைத்திருக்கும்.

## கிறிஸ்துவைப்பற்றிய போதனையில் நிலைத்திருங்கள்

4 உம்முடைய பிள்ளைகளுள் சிலர் விண்
ணகத் தந்தையிடமிருந்து நாம் பெற்ற
கட்டளைப்படி சத்தியத்திற்கு உட்பட்டு
நடக்கிறதைக் கண்டு நான் மிகவும்
மகிழ்ச்சியடைந்தேன். 5 பெருமாட்டியே,
நான் இப்போது உமக்கு எழுதுவது ஒரு
புதிய கட்டளையன்று. இது தொடக்கத்தி
லிருந்தே நம்மிடையே இருந்துவருவதுதான்.
நான் இப்போது உம்மைக் கேட்
டுக்கொள்வது என்னவெனில், நாம் ஒரு
வரிடமொருவர் அன்புடையோராய் இருப்
போம் என்பதே. 6 அன்புகொள்ளுதலா
வது அவருடைய கட்டளைகளின்படி நடப்
பதேயாகும். அக்கட்டளை உங்களுக்கு
வாழ்க்கை நெறியாயிருக்கும்படி அருளப்
பட்டது. அதைத் தொடக்கத்திலிருந்தே
அறிந்துவந்திருக்கிறீர்கள். 7 வஞ்சனை
யாளர் பலர் உலகத்தில் திரிந்துவருகின்
றனர். அவர்கள் மெய்யான மனிதனாய்
வந்த இயேசுகிறிஸ்துவை ஏற்றுக்கொள்
ளாதவர்கள். அப்படி ஏற்றுக்கொள்ளாத
ஒருவன் வஞ்சகனும் எதிர்க்கிறிஸ்துவு
மாவான். 8 ஆகையால், விழிப்புள்ளவர்
களாயிருங்கள். நீங்கள் எவற்றிற்காக
உழைத்தீர்களோ அவற்றை இழக்காமலிருக்
கவும் நீங்கள் அடைய வேண்டிய முழுப்
பலனையும் பெற்றுக்கொள்ளவும் வேண்
டுமே! 9 கிறிஸ்துவினுடைய போதனையின்
எல்லைக்குள் நில்லாமல், அதை மீறிச்
செல்கிற எவனும் கடவுளுடன் தொடர்
பற்றவன். அந்தப் போதனையின் எல்லைக்
குள் நிற்பவனே தந்தையாரோடும் மைந்
தரோடும் தொடர்புடையவன். 10 உங்
கள் வீட்டுக்கு வரும் ஒருவனிடம் இந்தப்
போதனை இல்லாவிடில், அவனை நீங்கள்
வரவேற்கவும் வேண்டாம், அவனுக்கு
வாழ்த்துக் கூறவும் வேண்டாம். 11 அவ
னுக்கு வாழ்த்துக் கூறுகிறவன் அவனு
டைய தீய செயல்களில் பங்குகொள்கிற
வனாவான்.

## வாழ்த்துரை

12 நான் உங்களுக்குத் தெரிவிக்க
வேண்டிய காரியங்கள் பல உண்டு.
அவற்றை நான் காகிதமும் மையுங்
கொண்டு எழுத விரும்பவில்லை. அதற்குப்
பதிலாக, நமது மகிழ்ச்சி நிறைவு பெறும்
படி, நான் வந்து உங்களிடம் நேரில்
பேசுவேன். இந்த நம்பிக்கை எனக்கு
இருக்கிறது.

13 கடவுளால் தேர்ந்துகொள்ளப்பட்ட
உம் சகோதரியின் பிள்ளைகள் உமக்கு
வாழ்த்துக் கூறுகிறார்கள்.

5 யோ. 13:34; 15:12, 17.

கடவுளுக்கு உரியவர்கள். உலகம் முழு
தும் தீயோனுடைய ஆட்சிக்குள் இருக்
கிறது. இதுவும் நமக்குத் தெரியும்.
20 ஆனால், அவருடைய மைந்தர் வந்தார்
என்பதும், வந்து நாம் மெய்ப்பொருளான
வரை அறிந்துகொள்ளும்படி அவர்
நமக்கு அறிவைத் தந்திருக்கிறார் என்ப
தும் நமக்குத் தெரியும். நாம் மெய்ப்
பொருளானவருக்குள்ளும் அவருடைய
மைந்தராகிய கிறிஸ்துவுக்குள்ளும் இருக்
கிறோம். இவரே மெய்யான கடவுள்;
இவரே என்றுமுள்ள மெய்வாழ்வு. 21 பிள்
ளைகளே, பொய்த்தெய்வங்களைக்குறித்து
மிகுந்த எச்சரிக்கையாயிருங்கள்.

# யோவானின் இரண்டாம் கடிதம்

### வாழ்த்து

கடவுளால் தேர்ந்துகொள்ளப்பட்ட பெருமாட்டிக்கும் அவருடைய பிள்ளைகளுக்கும் சபை மூப்பனாகிய நான் எழுதுவதாவது:

சத்தியத்தின் பொருட்டு நான் உண்மையாகவே உங்களிடம் அன்புடையவனாயிருக்கிறேன். நான் மட்டுமன்றி,
2 சத்தியத்தை அறிந்திருக்கிற அனைவருமே, அந்தச் சத்தியத்தின் பொருட்டு உங்களிடம் அன்புடையோராயிருக்கின்றனர். அந்தச் சத்தியம் நமக்குள் நிலைத்திருக்கிறது; அது என்றைக்குமே நம்மோடிருக்கும்.
3 தந்தையாராகிய கடவுளிடமிருந்தும் அத்தந்தையாரின் மைந்தராகிய இயேசுகிறிஸ்துவிடமிருந்தும் வரும் அருளும் இரக்கமும் நலமும் நாம் சத்தியத்தோடும் அன்போடும் வாழ நம்மோடு நிலைத்திருக்கும்.

### கிறிஸ்துவைப்பற்றிய போதனையில் நிலைத்திருங்கள்

4 உம்முடைய பிள்ளைகளுள் சிலர் விண்ணகத் தந்தையிடமிருந்து நாம் பெற்ற கட்டளைப்படி சத்தியத்திற்கு உட்பட்டு நடக்கிறதைக் கண்டு நான் மிகவும் மகிழ்ச்சியடைந்தேன்.
5 பெருமாட்டியே, நான் இப்போது உமக்கு எழுதுவது ஒரு புதிய கட்டளையன்று. இது தொடக்கத்திலிருந்தே நம்மிடையே இருந்துவருவதுதான். நான் இப்போது உம்மைக் கேட்டுக்கொள்வது என்னவெனில், நாம் ஒருவரிடமொருவர் அன்புடையோராய் இருப்போம் என்பதே.
6 அன்புகொள்ளுதலாவது அவருடைய கட்டளைகளின்படி நடப்பதேயாகும். அக்கட்டளை உங்களுக்கு வாழ்க்கை நெறியாயிருக்கும்படி அருளப்பட்டது. அதைத் தொடக்கத்திலிருந்தே அறிந்துவந்திருக்கிறீர்கள்.
7 வஞ்சனையாளர் பலர் உலகத்தில் திரிந்துவருகின்றனர். அவர்கள் மெய்யான மனிதனாய் வந்த இயேசுகிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளாதவர்கள். அப்படி ஏற்றுக்கொள்ளாத ஒருவன் வஞ்சகனும் எதிர்க்கிறிஸ்துவுமாவான்.
8 ஆகையால், விழிப்புள்ளவர்களாயிருங்கள். நீங்கள் எவற்றிற்காக உழைத்தீர்களோ அவற்றை இழக்காமலிருக்கவும் நீங்கள் அடைய வேண்டிய முழுப் பலனையும் பெற்றுக்கொள்ளவும் வேண்டுமே!
9 கிறிஸ்துவினுடைய போதனையின் எல்லைக்குள் நில்லாமல், அதை மீறிச் செல்கிற எவனும் கடவுளுடன் தொடர்பற்றவன். அந்தப் போதனையின் எல்லைக்குள் நிற்பவனே தந்தையாரோடும் மைந்தரோடும் தொடர்புடையவன்.
10 உங்கள் வீட்டுக்கு வரும் ஒருவனிடம் இந்தப் போதனை இல்லாவிடில், அவனை நீங்கள் வரவேற்கவும் வேண்டாம், அவனுக்கு வாழ்த்துக் கூறவும் வேண்டாம்.
11 அவனுக்கு வாழ்த்துக் கூறுகிறவன் அவனுடைய தீய செயல்களில் பங்குகொள்கிறவனாவான்.

5 யோ. 13:34; 15:12, 17.

### வாழ்த்துரை

12 நான் உங்களுக்குத் தெரிவிக்க வேண்டிய காரியங்கள் பல உண்டு. அவற்றை நான் காகிதமும் மையுங்கொண்டு எழுத விரும்பவில்லை. அதற்குப் பதிலாக, நமது மகிழ்ச்சி நிறைவு பெறும்படி, நான் வந்து உங்களிடம் நேரில் பேசுவேன். இந்த நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

13 கடவுளால் தேர்ந்துகொள்ளப்பட்ட உம் சகோதரியின் பிள்ளைகள் உமக்கு வாழ்த்துக் கூறுகிறார்கள்.

# யோவானின் மூன்றாம் கடிதம்

அன்பார்ந்த காயு, உம்மிடம் உண்மையாகவே அன்புடையோனுயிருக்கும் சபை மூப்பனுகிய நான் உமக்கு எழுதுவதாவது:

2 அன்பார்ந்தவரே, உம் ஆன்மா நலமுடன் இருக்கிறதுபோல, உமக்கு அனைத்தும் நலமுடன் நடைபெறவும், நீர் உடல் நலத்தோடு வாழவும் வேண்டுமென்று கடவுளிடம் மன்ருடி வருகிறேன்.
3 நீர் சத்தியத்திற்குட்பட்டு நடக்கிறீர் என்று சகோதரர் சிலர் என்னிடம் வந்து உமது உண்மையான வாழ்க்கையைப்பற்றி நற்சான்று கூறினபோது நான் மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். 4 என்னுடைய பிள்ளைகள் சத்தியத்திற்குட்பட்டு நடக்கிருர்கள் என்பதைக் கேள்விப்படுகிறதனுல் உண்டாகும் மகிழ்ச்சியைவிடப் பெரிய மகிழ்ச்சி எனக்கு இல்லே.

### ஒத்துழைப்பும் எதிர்ப்பும்

5 அன்பார்ந்தவரே, நீர் சகோதரருக்காக, குறிப்பாக உமக்கு அறிமுகமில்லாத சகோதரருக்காக உழைக்கும் உழைப்பில் உமது உண்மைத் தன்மை விளங்குகிறது.
6 அவர்கள் சபைமுன் உமது அன்பைக் குறித்து நற்சான்று கூறியிருக்கிருர்கள். அவர்கள் தொடர்ந்து பயணம் செய்ய நீர் கடவுளுக்கு உகந்த முறையில் ஏற்பாடுகள் செய்து அனுப்பிவைப்பது
நல்லது. 7 ஏனென்ருல், அவர்கள் கிறிஸ்துவின் திருப்பெயரின் பொருட்டே புறப்பட்டு வந்திருக்கிருர்கள்; பிற மதத்தினரிடமிருந்து அவர்கள் எதையும் பெறுவதில்லே. 8 ஆகவே, சத்தியம் பரவ நாமும் ஒத்துழைப்பவர்கள் என்பது விளங்கும்படி நாம் அப்படிப்பட்டவர்களே ஏற்று ஆதரவளிப்பது நமது கடமை.

1 திருத்தூது. 19:29; ரோ. 16:23; 1 கொரி. 1:14

9 நான் சபையாருக்கு ஒரு கடிதம் எழுதினேன். ஆனுல், அவர்களுக்குத் தலேவனுயிருக்க விரும்பும் தியோத்திரேப்புவோ என் வார்த்தையைப் பொருட்படுத்தவில்லே. 10 எனவே, நான் வந்தேனுல், அவன் செய்துவருகிற காரியங்களே எடுத்துச் சொல்வேன். அவன் தீயதெல்லாம் சொல்லி என்மீது வீண்பழி சுமத்துகிருன். இது போதாதென்று அங்கே வரும் சகோதரரை ஏற்க மறுக்கிருன். அதுவுமன்றி, ஏற்க முன்வருகிறவர்களேத் தடுப்பதோடு, அவர்களேச் சபையிலிருந்து விலக்கிவைக்கவும் பார்க்கிருன்.
11 அன்பார்ந்தவரே, தீய காரியம் எதையும் பின்பற்ருதீர்; நல்ல காரியங்களேயே பின்பற்றும். நற்காரியம் செய்கிறவன் கடவுளுக்கு உரியவன். தீய காரியம் செய்கிறவன் கடவுளேக் காணுதவன்.
12 தேமேத்திரியு எல்லாரிடமும் நற்சான்று பெற்றவன்; சத்தியத்தினிடமும் நற்சான்று பெற்றவன். நானும் அவனேப் பற்றி நற்சான்று கூறுகிறேன். நான் கூறும் சான்று உண்மையானதே என்பது உமக்குத் தெரியும்.

### வாழ்த்துரை

13 நான் உமக்குத் தெரிவிக்க வேண்டிய காரியங்கள் பல உள்ளன. ஆனுல், அவற்றை மையும் எழுதுகோலும்கொண்டு எழுதித் தெரிவிக்க நான் விரும்பவில்லே.
14 விரைவில் உம்மைப் பார்ப்பேன் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. அப்பொழுது நேரில் பேசிக்கொள்வோம்.
15 உமக்குச் சமாதானம் உண்டாவதாக! இங்குள்ள நண்பர்கள் உமக்கு வாழ்த்துக் கூறுகிருர்கள். அங்குள்ள நண்பர்களுக்குத் தனித்தனியே என் பெயரால் வாழ்த்துக் கூறவும்.

# யூதாவின் கடிதம்

இயேசுகிறிஸ்துவின் அடியானும் யாக்
கோபின் சகோதரனுமாகிய யூதா,
தந்தையாகிய கடவுளால் அழைக்கப்பட்டு,
அவருக்கு அன்பார்ந்தவர்களாய் இயேசு
கிறிஸ்துவின் பாதுகாப்பில் இருந்துவரு
வோருக்கு எழுதுவதாவது:
2 கடவுள் அளிக்கும் இரக்கமும் நலமும்
அன்பும் உங்களுக்குப் பெருகுக!

### கள்ளப் போதகர்
*(2 பேது. 2:1–17)*

3 அன்பார்ந்தவர்களே, நம்மெல்லோருக்
கும் கிடைத்துள்ள மீட்பைப்பற்றி உங்
களுக்கு எழுத நான் மிகவும் ஆவலோ
டிருந்தேன். ஆனால், கடவுளுக்குரிய மக்க
ளிடம் எல்லாக் காலத்திற்குமென ஒப்ப
டைக்கப்பட்ட கோட்பாட்டில் திரிபு ஏற்
படாமல் பாதுகாக்க நீங்கள் போராடும்
படி உங்களை ஊக்குவிக்க இதை உடனடி
யாக எழுத வேண்டிய தேவை இப்போது
ஏற்பட்டிருக்கிறது. 4 எப்படியெனில்,
திருட்டுத்தனமாகச் சிலர் உங்களிடையே
வந்திருக்கின்றனர். இறைப்பற்று இல்
லாத இவர்கள் நம்முடைய கடவுளின்
அருளைப்பற்றிய செய்தியைத் தங்கள்
காமவெறியை நிறைவேற்றுவதற்கு உரிமை
தரும் வகையில் திரித்து அமைக்கிறவர்
கள். நம்முடைய ஒரே தலைவரும் ஆண்
டவருமாகிய இயேசுகிறிஸ்துவைப் புறக்
கணித்துத் தள்ளிவிட்டவர்கள். இவர்கள்
பெற்றுள்ள தண்டனை இவர்களுக்கு அளிக்
கப்பட வேண்டுமென்று வேதத்தில் முற்
காலத்திலேயே குறிக்கப்பட்டிருந்தது.
5 நீங்கள் ஏற்கெனவே எல்லாவற்றையும்
அறிந்திருக்கிறீர்கள். எனினும், அவற்றுள்
சிலவற்றை உங்களுக்கு நினைப்பூட்ட விரும்பு
கிறேன். ஆண்டவர் இஸ்ரவேல் மக்களை
எகிப்து நாட்டிலிருந்து விடுவித்தாரெனி
னும், அவர் தம்மை நம்பாதவர்களைப்
பிறகு அழித்துவிட்டார். 6 தெய்வ தூதருள்
சிலர் தங்களுக்கு அளிக்கப்பட்ட
ஆட்சிப் பொறுப்பைக் கைவிட்டு, தங்
களுக்குரிய இடத்தை விட்டுவிட்டுச் சென்ற
தால், அவர் அவர்களை மாபெரும் நாளின்
தீர்ப்பு அளிக்கப்படும் வரையில், என்
றைக்கும் கட்டுண்ட நிலையில் காரிருளில்
இருக்கும்படி அடைத்து வைத்திருக்கிறார்.
7 அவர்களைப்போலவே சோதோம்,
கொமோரா, அவற்றின் சுற்றுப்புற நக
ரங்கள் ஆகியவற்றிலிருந்த மக்கள் கெட்ட
நடத்தையிலும் இயற்கைக்கு மாறான சிற்
றின்பத்திலும் மூழ்கினார்கள். அவர்கள்
என்றும் அவியாத நெருப்பில் தண்டனைக்
குள்ளானார்கள். இது எல்லாருக்கும் ஓர்
எச்சரிக்கை.

8 எனினும், இந்த ஆள்களும் அவ்
வாறே செய்கிறார்கள். இவர்கள் ஏதோ
கனவுக் காட்சிகள் கண்டு, உடலைப் பாவக்
கறைக்கு உள்ளாக்குகிறார்கள்; ஆண்டவரது
அதிகாரத்தைப் புறக்கணிக்கிறார்கள்;
வானுலக மாட்சிமை பொருந்திய
வர்களைப் பழித்துரைக்கிறார்கள். 9 தலை
மைத் தெய்வதூதனான மிகாவேல்கூட
இப்படிச் செய்யவில்லை. அவன் மோசே
யின் உடலைக் குறித்துப் பிசாசோடு விவா
தம் செய்து உரையாடினபோது, அவ
ரைப் பழித்துரைத்துக் குற்றப்படுத்தத்
துணியாமல், ''ஆண்டவர் உன்னைக்
கடிந்துகொள்வாராக'' என்று மட்டும்
சொன்னான். 10 இந்த ஆள்களோ தங்க
ளால் அறிந்துகொள்ள முடியாதவற்றைப்
பழிக்கிறார்கள். தங்களால் அறிந்துகொள்
ளக்கூடியவற்றை, அதாவது பகுத்தறிவில்
லாத விலங்குகளைப்போல இயற்கை அறி
வினால் அறிந்துகொள்ளக்கூடியவற்றைத்
தங்கள் அழிவுக்குக் காரணமாக்குகிறார்கள்.
11 இவர்கள் நிலை இரங்கத்தக்கதே.
ஏனென்றால், இவர்கள் காயீன்
சென்ற வழியைப் பின்பற்றி நடந்தார்
கள்; ஊதியத்திற்காகப் பிலேயாமின் தப்
பிதத்தைச் செய்ய விரைந்தார்கள்;
கோராகைப்போலக் கிளர்ச்சி செய்து
அழிந்தார்கள். 12 உங்கள் அன்பு விருந்து
களில் பயபக்தியின்றி இந்த ஆள்கள் உங்
களோடு விருந்துண்டு அவற்றின் புனிதத்
தன்மையைக் கறைப்படுத்துகிறார்கள்.
இவர்கள் தங்கள் பொறுப்பிலுள்ளவர்
களின் நலத்தைக் கவனிக்காமல் தங்கள்
நலத்தையே கவனித்துக்கொள்கிறார்கள்.
இவர்கள் காற்றினால் அடித்துச் செல்லப்
படும் நீரற்ற மேகங்கள்; கனிதரும் பரு
வத்தில் கனியின்றி நின்று பிறகு வேரோடு
பிடுங்கப்படும் மரங்களைப்போல இரு
முறை செத்தவர்கள்; 13 தங்களுடைய
வெட்கக்கேடுகளைத் தாங்களே நுரையா
கத் தள்ளும் கொந்தளிப்பான கடலலை
கள்; நெறிதவறித் திரியும் கோளங்கள்.
காரிருளே இவர்கள் என்றென்றும் இருப்ப
தற்கெனக் குறிக்கப்பட்டுள்ளது.

14 ஆதாமுக்குப் பின் ஏழாம் தலை
முறையில் வந்த ஏனோக்கு இவர்களைக்
குறித்து இறைவாக்காக, ''இதோ, ஆண்
டவர் எல்லாருக்கும் தீர்ப்பளிக்கத் தம்

1 மத். 13:55; மாற். 6:3. 5 யாத். 12:51; எண். 14:29, 30. 7 ஆதி. 19:1—24. 9 தானி. 10:13, 21; 12:1; திருவெளி. 12:7; உபா. 34:6; சக. 3:2. 11 ஆதி. 4:3—8; எண். 22:1—35; 16:1—35. 14 ஆதி. 5:18, 21—24.

தூய கணங்களாகிய தம்முடைய தூத
ரோடு வந்துவிட்டார். 15 இறைப்பற்று
இல்லாத எல்லாரும் இறைப்பற்றின்மை
யால் செய்த எல்லாத் தீய செய்கை
களின் பொருட்டும், இறைப்பற்று இல்
லாத பாவிகள் தமக்கு விரோதமாகப்
பேசின எல்லா இறுமாப்பான பேச்சு
களின் பொருட்டும் அவர்களுக்குக் குற்றத்
தீர்ப்பு அளிக்க வந்துவிட்டார்'' என்று
உரைத்தார். 16 இந்த ஆள்கள் தங்கள்
நிலை குறித்து முணுமுணுக்கிறவர்கள்;
ஓயாது குறைகூறுகிறவர்கள்; தங்கள் தீய
விருப்பங்களின்படி நடப்பவர்கள்; தற்
பெருமையோடு பேசுபவர்கள்; ஆனால்,
தங்களுக்கு நலன் கிடைக்கப் போலிப்
புகழ்ச்சி செய்பவர்கள்.

### அறிவுரை

17 அன்பார்ந்தவர்களே, நீங்கள் இந்த
ஆள்களைக் குறித்து நம்முடைய ஆண்ட
வராகிய இயேசுகிறிஸ்துவின் திருத்தூது
வர் முன்பு கூறியவற்றை நினைப்பூட்டிக்
கொள்ளுங்கள். 18 ஏனென்றால், அவர்
கள், ''இறைப்பற்றின்றித் தங்கள் தீய
விருப்பப்படி நடக்கிறவர்கள் கடைசிக்
காலத்தில் தோன்றுவார்கள். அவர்கள்
உங்களை ஏளனம் செய்வார்கள்'' என்று
உங்களுக்குச் சொன்னார்கள். 19 இந்த
ஆள்கள் பிரிவினை உண்டாக்குபவர்கள்;
மனித இயல்பின் போக்குப்படியே நடப்
பவர்கள். 20 தெய்வ ஆவி அவர்களிடம்
இல்லை. அன்பார்ந்தவர்களே, நீங்கள் மிகத்
தூய்மையான உங்கள் கோட்பாட்டினை
அடிப்படையாகக் கொண்டு அதன்மீது
உங்கள் வாழ்க்கையைக் கட்டியெழுப்
புங்கள்; தூய ஆவியின் துணைகொண்டு
ஜெபம் செய்யுங்கள். 21 கடவுளது அன்
பின் பாதுகாப்பில் நிலைத்து நில்லுங்கள்;
நம்முடைய ஆண்டவராகிய இயேசு
கிறிஸ்து உங்கள்மீது இரக்கங்கொண்டு
என்றுமுள்ள மெய்வாழ்வைத் தருவதை
எதிர்நோக்கியிருங்கள். 22 சிலருக்குப் பற்
பல ஐயப்பாடுகள் உண்டு. அவர்களைப்
பரிவுடன் நடத்துங்கள். 23 வேறு சிலர்
இருக்கின்றனர். நெருப்பினின்று ஒரு
வரைப் பிடித்திழுத்துக் காப்பாற்றுவது
போல அவர்களைக் காப்பாற்றுங்கள். இன்
னும் சிலர் இருக்கின்றனர். உடலின் இச்
சையால் கறைப்பட்ட அவர்களது ஆடை
யும் அருவருக்கத்தக்கது. ஆகையால்,
அவர்களுக்குப் பரிவு காட்டும்போது,
அதை எச்சரிக்கையோடு செய்யுங்கள்.
24 வழுவாதபடி உங்களைக் காக்கவும்,
தம்முடைய மாட்சிமையுள்ள முன்னிலை
யில் உங்களை மாசற்றவர்களாகவும் மகிழ்ச்
சியுள்ளவர்களாகவும் நிறுத்தவும் வல்ல
வருக்கே, 25 ஒரே கடவுளும் நம்முடைய
மீட்பருமாகிய அவருக்கே, யுகங்கள்
தொடங்குமுன்னும், இன்றும், இனி வருங்
காலத்திலும், நம்முடைய ஆண்டவரா
கிய இயேசுகிறிஸ்துவின் மூலம் மாட்சிமை!
மாண்பு! வல்லமை! அதிகாரம்! ஆமேன்.

18 2 பேது. 3:3.

# யோவானுக்கு அருளப்பட்ட திருவெளிப்பாடு

## முன்னுரை

1 இது இயேசுகிறிஸ்துவின் திரு
வெளிப்பாடு; விரைவில் நடந்தேற
வேண்டிய காரியங்களை அவர் தம்முடைய
அடியாருக்குக் காட்டும் பொருட்டுக் கட
வுள் இதை அவருக்கு அருளினார். இயேசு
கிறிஸ்து தம் தூதனைத் தம்முடைய அடி
யானாகிய யோவானிடம் அனுப்பி, அவர்
மூலம் இதைத் தெரிவித்தார். 2 யோவான்
தாம் காட்சியில் கண்டவாறே கடவுளின்
வார்த்தையையும் இயேசுகிறிஸ்துவின்
சாட்சியத்தையும் வெளிப்பட அறிவித்
தார். 3 இந்த இறைவாக்குகளைப் படிப்
பவனும் படிப்பதைக் கேட்டு இதில் எழுதி
யுள்ளவற்றைக் கடைப்பிடித்து நடப்பவர்
களும் நற்பேறு பெற்றவர்களே. ஏனெனில்,
இவை நிறைவேறும் காலம் நெருங்கி
விட்டது.

## வாழ்த்து

4 ஆசியாவிலுள்ள ஏழு திருச்சபை
களுக்கும் யோவான் எழுதுவதாவது:
இருக்கிறவரும் இருந்தவரும் இனி வருபவ
ருமாகிய கடவுளாலும் அவரது அரியணை
யின்முன் நிற்கும் ஏழு ஆவிகளாலும்,
5 நம்பத்தக்க சாட்சியானவரும் இறந்தோ
ரிடமிருந்து எழுந்த முதற்பேறானவரும் உலக
அரசர்களுக்குத் தலைவருமாகிய இயேசு
கிறிஸ்துவினாலும் உங்களுக்கு அருளும்நலமும்
உண்டாகுக!

இவர் நம்மிடம் அன்புகொண்டு, தமது
இரத்தத்தினால் நம்முடைய பாவங்களி
னின்று நம்மை விடுவித்து நம்மை ஓர்
அரசகுலமாக்கினார். 6 அதாவது, தம்
முடைய தந்தையும் கடவுளுமாயிருக்கிற
வருக்கென நம்மை ஆசாரியர்களாக்கினார்.
இவருக்கே என்றென்றைக்கும் மாட்சிமை!
வல்லமை! ஆமேன்.

7 இதோ, மேகங்கள்மீது வருகிறார்.
எல்லாக் கண்களும் அவரைக் காணும்.
அவரை ஊடுருவக் குத்தினவர்களும்
அவரைக் காண்பார்கள். உலகிலுள்ள எல்
லாக் குலத்தவர்களும் அவரைக் கண்டதும்
புலம்பி அழுவார்கள். ஆம், ஆமேன்.

8 எல்லாம் வல்ல கடவுளாகிய ஆண்டவர்,
''அல்பாவும் நானே, ஒமேகாவும்
நானே''* என்கிறார். இருக்கிறவர், இருந்
தவர், இனி வருபவர் அவரே.

## யோவான் கண்ட கிறிஸ்துவின் காட்சி

9 நான் யோவான், உங்கள் சகோ
தரன்; இயேசுவோடு இணைந்திருக்கும்
நிலையில் துன்பத்திலும் ஆட்சியுரிமையிலும்
பொறுமையிலும் உங்களோடு பங்கு
கொள்கிறவன். நான் கடவுளின் வார்த்
தையையும் இயேசுவின் சாட்சியத்தையும்
ஏற்றுக்கொண்டதால், பத்மு என்னும்
தீவிற்கு வர நேர்ந்தது. 10 ஆண்டவரின்
நாள் ஒன்றில் நான் தெய்வ ஆவியால்
ஆட்கொள்ளப்பட்டேன். எனக்குப்
பின்னால் ஒரு பெருங்குரல் கேட்டது;
அது எக்காளம்போல ஒலித்தது. 11 ''நீ
காண்கிறதை ஒரு நூலாக எழுதி, எபேசு,
சிமிர்னா, பெர்கமு, தியத்திரா, சர்தை,
பிலதெல்பியா, லவோதிக்கேயா என்னும்
ஏழு இடங்களிலுமுள்ள திருச்சபைகளுக்கு
அனுப்பு'' என்று அந்தக் குரல் சொல்
லிற்று.

12 அப்போது நான் என்னோடு பேசின
குரல் யாருடையது என்று பார்க்கத் திரும்
பினேன்; திரும்பினதும், ஏழு பொன்
குத்து விளக்குகளையும், 13 அந்தக் குத்து
விளக்குகளின் நடுவில் மனுமைந்தரைப்
போன்ற ஒருவரையும் கண்டேன். அவர்
நீண்ட அங்கி அணிந்திருந்தார்; மார்பில்
பொற்கச்சை கட்டியிருந்தார். 14 அவர்
தலையும் முடியும் வெண்பஞ்சுபோலவும்,
உறைபனிபோலவும் வெண்மையாயிருந்தன.
அவர் கண்கள் தீக்கொழுந்து போலிருந்தன.
15 அவர் பாதங்கள் உலைக்களத்தில்
காய்ச்சப்பட்ட வெண்கலம்போலப் பள
பளப்பாய் இருந்தன. அவரது குரலொலி
பெருவெள்ளத்தின் இரைச்சலைப்போலிருந்
தது. 16 அவர் தமது வலக்கையில்
ஏழு விண்மீன்களை ஏந்திக்கொண்டிருந்
தார். இருபுறமும் கூர்மையான வாள்
ஒன்று அவர் வாயினின்று வெளிப்பட்டது.
அவர் முகம் முழுப்பொலிவுடன் ஒளிவீசும்
கதிரவனைப்போலிருந்தது.

17 நான் அவரைக் கண்டதும் செத்த
வனைப்போல அவர் காலடியில் விழுந்
தேன். அவர் தம் வலக்கையை என்மீது
வைத்து, ''அஞ்சாதே; முதலும் நானே,
இறுதியும் நானே, 18 என்றும் உள்ளவரும்
நானே; மரணமடைந்தவராயினும், இதோ,
நான் என்றென்றும் உள்ளவர். மரணம்,
பாதாளம் என்பவற்றின் திறவுகோல்கள்

* கிரேக்க நெடுங்கணக்கில் அல்பா முதலெழுத்து, ஒமேகா கடைசி எழுத்து. தமிழில் சொன்னால், 'அகரமும் நானே, னகரமும் நானே' என்று அமையும்.

1:4 யாத். 3:14; திருவெளி. 4:5. 1:5 எசா. 55:4; சங். 89:27. 1:6 யாத். 19:6; திருவெளி. 5:10. 1:7 தானி. 7:13; சக. 12:10; மத். 24:30; மாற். 13:26; லூக். 21:27; யோ. 19:34, 37;1 தெச. 4:17. 1:8 திருவெளி. 23:13; யாத். 3:14. 1:13 தானி. 7:13; 10:5. 1:14 தானி. 7:9. 1:14, 15 தானி. 10:6. 1:15 எசே. 1:24; 43:2. 1:18 எசா. 44:6; 48:12; திருவெளி. 2:8; 22:13.

என் கையில் இருக்கின்றன. 19 நீ
காணும் காட்சிகளை, அதாவது இப்போது
நடக்கிறவற்றையும் இனிமேல் நடக்கப்
போகிறவற்றையும் எழுதிவை. 20 என்
வலக்கையில் நீ கண்ட ஏழு விண்
மீன்கள், ஏழு பொன் குத்துவிளக்குகள்
ஆகியவற்றின் மறைபொருள் இதுவே:
ஏழு விண்மீன்களும் ஏழு திருச்சபைகளின்
தூதர்களையும், ஏழு குத்து விளக்குகளும்
ஏழு திருச்சபைகளையும் குறிக்கின்றன.

### எபேசு நகரத் திருச்சபைக்கு

2 ''எபேசு நகரத் திருச்சபையின் தூத
னுக்கு இதை எழுது:
'ஏழு விண்மீன்களைத் தமது வலக்கை
யில் பிடித்துக்கொண்டு ஏழு பொன்
குத்துவிளக்குகளின் நடுவில் உலாவுகிறவர்
சொல்லுகிறதாவது: 2 உன் செயல்களும்
உன் கடும் உழைப்பும் பொறுமையும்
எனக்குத் தெரியும். பொல்லாரின்
போக்கை உன்னால் பொறுத்துக்கொள்ள
இயலாது என்பதும் எனக்குத் தெரியும்.
தாங்கள் திருத்தூதுவர்களாய் இல்லா
திருந்தும், தங்களைத் திருத்தூதுவர்கள்
என்று சொல்லிக்கொள்கிறவர்களை நீ
சோதித்துப்பார்த்து, அவர்கள் பொய்யர்கள்
என்பதைக் கண்டறிந்தாய் என்பதும்
எனக்குத் தெரியும். 3 நீ பொறுமை
யுடையவன்; என் பெயரின் பொருட்டுத்
துன்பம் சகித்தாய், சோர்ந்துபோகவில்லை.
4 ஆனாலும், உன்னிடம் நான் ஒரு குறை
காண்கிறேன். தொடக்கத்தில் நீ கொண்
டிருந்தது போன்ற அன்பு இப்போது உன்
னிடம் இல்லை. 5 ஆகையால், எந்த நிலையி
லிருந்து விழுந்தாய் என்பதை நீ நினைத்துப்
பார்த்து, மனமாற்றமடைந்து, தொடக்
கத்தில் நீ செய்தவற்றைச் செய். அவ்வா
றன்றி, நீ மனமாற்றமடையாமலே இருப்
பாயானால், நான் உன்னிடம் வந்து, உன்
குத்துவிளக்கை அதன் இடத்திலிருந்து
அகற்றிவிடுவேன். 6 ஆனால், உன்னிடம்
ஒரு நல்ல காரியமும் காணப்படுகிறது.
* நிக்கொலாயரின் செயல்களை நான் வெறுப்
பதுபோல நீயும் வெறுக்கிறாய். 7 கேட்டுண
ரும் காதுள்ளவன் ஆவியானவர் திருச்
சபைகளுக்குச் சொல்வதைக் கவனித்துக்
கொள்ளட்டும். வெற்றிகொள்கிற
எவனுக்கும் கடவுளது இன்ப வனத்தி
லிருக்கும் மெய்வாழ்வளிக்கிற மரத்தின்
கனியை உண்ணும் நற்பேற்றினை அருளு
வேன்.'

### சிமிர்னா நகரத் திருச்சபைக்கு

8 ''சிமிர்னா நகரத் திருச்சபையின் தூத
னுக்கு இதை எழுது:
'முதலும் இறுதியுமானவர், மரண
மடைந்தும் உயிரோடெழுந்தவர் உரைப்ப
தாவது: 9 உன் துன்பமும் வறுமையும் எனக்
குத் தெரியும். என்றாலும், நீ செல்வமுள்ளவன்
என்பேன். தாங்கள் யூதர்கள் என்று
சொல்லுகிறவர்கள் உங்களைப் பழிப்பது
எனக்குத் தெரியும். அவர்கள் யூதர்க
ளல்ல, சாத்தானுடைய கூட்டம்.
10 உனக்கு வரப்போகிற பாடுகளைப்பற்றி
அஞ்சாதே. உங்களைச் சோதித்துப் பார்ப்
பதற்காகப் பிசாசு உங்களுள் சிலரைச்
சிறையில் அடைத்துவைக்கப்போகிறான்.
உங்களுக்குப் பத்து நாளுக்குத் துன்பம்
இருக்கும். மரணமடையும் வரை உண்மை
யுள்ளவனாயிரு. நான் உனக்கு மெய்வாழ்
வாகிய வெற்றிமாலையை அருளுவேன்.
11 கேட்டுணரும் காதுள்ளவன் ஆவியானவர்
திருச்சபைகளுக்குச் சொல்வதைக் கவனித்
துக்கொள்ளட்டும். வெற்றிகொள்பவனை
இரண்டாம் மரணம் அணுகவே அணு
காது.'

### பெர்கமு நகரத் திருச்சபைக்கு

12 ''பெர்கமு நகரத் திருச்சபையின்
தூதனுக்கு இதை எழுது:
'இருபுறமும் கூர்மையான வாளை
உடையவர் சொல்லுகிறதாவது: 13 நீ
குடியிருக்கும் இடம் எனக்குத் தெரியும்.
சாத்தானது அரியணை அங்கே இருக்
கிறது. நீ என் பெயரில் பற்றுதலுள்ள
வனாயிருக்கிறாய். சாத்தான் குடியிருக்கிற
உங்கள் பட்டணத்தில் என் உண்மை
யுள்ள சாட்சியாகிய அந்திப்பா என்பவன்
கொலையுண்ட நாளிலுங்கூட என்னிடம்
நீ கொண்டுள்ள நம்பிக்கையை நீ மறுக்க
வில்லை. 14 ஆனாலும் உன்னிடம் நான் சில
குறைகளைக் காண்கின்றேன். நிக்கொலாயரின்
போதனையில் பற்றுதல் உள்ளவர்கள்
உன்னிடம் இருக்கிறார்கள். 15 இவர்கள்
பிலேயாமின் போதனையில் பற்றுதல் உள்ள
வர்களைப் போன்றவர்கள். இந்தப் பிலே
யாம்தான் இஸ்ரவேல் மக்கள் பாவக்குழி
யில் இடறிவிழச் செய்யும்படி பாலாக்கு
என்பவனுக்குப் போதித்தவன். அதனால்
அவர்கள் தெய்வச் சிலைகளுக்குப் படைத்த
வற்றை உண்டார்கள்; ஒழுக்கக்கேடான
செயலைப் புரிந்தார்கள். 16 எனவே, நீ
மனமாற்றமடை. இல்லாவிடில், நான்
விரைவில் உன்னிடம் வந்து என் வாயி
னின்று வெளிப்படும் வாளால் அவர்
களோடு போர் தொடுப்பேன். 17 கேட்டுண
ரும் காதுள்ளவன் ஆவியானவர் திருச்
சபைகளுக்குச் சொல்வதைக் கவனித்துக்
கொள்ளட்டும். வெற்றிகொள்கிற

* பொருளடக்க அட்டவணை பார்க்க.

**2:7** ஆதி. 2:9; நீதி. 3:18; திருவெளி. 22:2. **2:8** ஏசா. 44:6; 48:12; திருவெளி. 1:17; 22:13. **2:11** திருவெளி. 20:14; 21:8. **2:14** எண். 22:5, 7; 25:1—3; 31:16; உபா. 23:4.

எவனுக்கும் மறைந்திருக்கும் மன்னுவை உட்
கொள்ளக் கொடுப்பேன். மேலும், அவ
னுக்கு வெண்மையான கல் ஒன்றையும்
கொடுப்பேன். அந்தக் கல்லில் ஒரு புதிய
பெயர் எழுதப்பட்டிருக்கும். அதைப்
பெறுகிறவனேயன்றி வேறு எவனும் அந்தப்
பெயரை அறியான்.'

### தியத்திரா நகரத் திருச்சபைக்கு

18 ''தியத்திரா நகரத் திருச்சபையின்
தூதனுக்கு இதை எழுது:

'தீக்கொழுந்து போன்ற கண்களும்
வெண்கலம் போன்ற பளபளப்பான பாதங்
களுமுள்ள கடவுளின் மைந்தர் சொல்கிற
தாவது: 19 நீ செய்யும் நற்செயல்களை
நான் அறிவேன். உன் அன்பும் நம்பிக்
கையும் ஊழியமும் பொறுமையும் எனக்
குத் தெரியும். நீ இப்போது செய்யும் நற்
செயல்கள் முன்பு நீ செய்தவற்றைவிட
மிகுதியானவை என்பதும் எனக்குத்
தெரியும். 20 ஆனாலும், உன்னிடம் நான்
ஒருகுறை காண்கிறேன். யேசபேல் என்னும்
பெண்ணுக்கு நீ இடங்கொடுக்கிறாய்.
அவள் தன்னை இறைவாக்குரைப்பவள்
என்று சொல்லிக்கொண்டு, என் அடி
யாரை வஞ்சித்து, அவர்கள் ஒழுக்கக்
கேடான செயல்கள் புரிந்து தெய்வச் சிலை
களுக்குப் படைத்தவற்றை உண்ணும்படி
அவர்களுக்குப் போதித்துவருகிறாள்.
21 அவள் மனமாற்றமடையும்படி தவணை
கொடுத்தேன். ஆனால், அவளோ தன்
ஒழுக்கக்கேடான நடத்தையை விட்டு
விட்டு, மனமாற்றம் அடையவில்லை.
22 இப்பொழுது நான் அவளைப் படுகிடை
யாய்க் கிடைக்கச் செய்வேன். அவளோடு
கூடி ஒழுக்கக்கேடான செயல்புரிகிறவர்கள்,
அவள் செய்வது போன்ற செயல்களை
ஒழித்துவிட்டு மனமாற்றமடையாவிடில்,
அவர்களையும் நான் மிகுந்த துன்பத்திற்
குட்படுத்துவேன்; 23 அவளுடைய பிள்ளை
களையும் கொன்று தீர்ப்பேன். உள்ளங்
களையும் இதயங்களையும் ஆராய்ந்தறிகிற
வர் நானே என்பதை எல்லாத் திருச்சபை
களும் அப்போது அறிந்துகொள்ளும். உங்
களுள் ஒவ்வொருவனுக்கும் அவனவனு
டைய செயல்களுக்குத் தக்கபடி பலன
ளிப்பேன். 24 தியத்திரா நகரத்திலிருக்கும்
ஏனையோரே, அதாவது, மேற்கூறிய போத
னையை ஏற்காமலும், 'சாத்தானைப்பற்றிய
ஆழ்ந்த மறைபொருள்' என்று சொல்லப்
படும் போதனையைக் கற்காமலும் இருக்
கிறவர்களே, உங்களுக்கு நான் சொல்
வது இதுவே: நீங்கள் கொண்டுள்ள நம்
பிக்கையை நான் வரும் வரையில் பற்றிக்
கொண்டிருங்கள். 25 இதைத் தவிர
வேறொரு சுமையையும் நான் உங்கள்மீது
சுமத்தவில்லை. 26 முடிவுவரை வெற்றிகர
மாக எனக்கான செயல்களைத் தொடர்ந்து
செய்கிற எவனுக்கும், நான் என் தந்தை
யாரிடமிருந்து பெற்றுக்கொண்டது
போல, பிற மதத்தினர்மேல் அதிகாரம்
கொடுப்பேன். 27 அவன் அவர்களை இருப்
புக்கோலால் ஆண்டு நடத்துவான்.
அவர்கள் மட்பாண்டங்களைப்போல நொறுக்
கப்படுவார்கள். 28 விடிவெள்ளியையும்
அவனுக்குக் கொடுப்பேன். 29 கேட்டுணரும்
காதுள்ளவன் ஆவியானவர் திருச்சபை
களுக்குச் சொல்வதைக் கவனித்துக்கொள்
ளட்டும்.'

### சர்தை நகரத் திருச்சபைக்கு

3 ''சர்தை நகரத் திருச்சபையின் தூத
னுக்கு இதை எழுது:

'கடவுளின் ஏழு ஆவிகளையும் ஏழு விண்
மீன்களையும் உடையவர் சொல்லுகிறதா
வது: உன்னுடைய செயல்களை நான் அறி
வேன். நீ உயிருள்ளவன் என்கிற பெய
ரைக் கொண்டவனாயிருந்தும், செத்தவ
னாய்த்தான் கிடக்கிறாய். 2 விழித்தெழுந்து
உன்னிடம் மீந்திருப்பவற்றை உயிர்பெறும்
படி செய். அவை சாகும் தறுவாயில்
இருக்கின்றன. உன்னுடைய செயல்களுள்
எதுவும் கடவுள் முன்னிலையில் முற்றுப்
பெற்றதாயிருந்ததை நான் கண்டதில்லை.
3 ஆகையால் நீ என்ன போதனை பெற்றி
ருக்கிறாய், எவ்வாறு கேட்டறிந்தாய் என்
பதை நினைத்துப்பார்; அதைக் கடைப்
பிடித்து மனமாற்றமடை. நீ விழித்தெழா
விடில், நான் ஒரு திருடனைப்போல வரு
வேன். நான் உன் எதிரே வரும் நேரத்தை
நீ அறியாய். 4 ஆனால், சர்தையில் தம்
ஆடைகளைக் கறைப்படுத்திக்கொள்ளாத
சிலர் உன்னிடம் இருக்கின்றனர். அவர்
கள் வெண்ணுடை அணிந்துகொண்டு என்
னுடன் நடந்துவருவார்கள். அவர்களே
அவ்வாறு வரத் தகுதியுடையவர்கள்.
5 வெற்றிகொள்கிற எவனும் இவ்வாறே
வெண்ணுடை அணிவிக்கப்படுவான். மெய்
வாழ்வுக்குரியவர் அட்டவணையிலிருந்து
அவன் பெயரை நான் நீக்கவே மாட்டேன்.
என் தந்தையார் முன்னிலையிலும் அவரு
டைய தூதர் முன்னிலையிலும் அவன்
பெயரை வெளிப்படையாக அறிவிப்பேன்.
6 கேட்டுணரும் காதுள்ளவன் ஆவியானவர்
திருச்சபைகளுக்குச் சொல்வதைக் கவனித்
துக்கொள்ளட்டும்.'

2:20 1 அர. 16:31; 2 அர. 9:22, 30. 2:23 சங். 7:9; எரே. 17:10; சங். 62:12. 2:26, 27 சங். 2:8, 9. 3:3 மத். 24:43, 44; லூக். 12:39, 40; திருவெளி. 16:15. 3:5 யாத். 32:32, 33; சங். 69:28; திருவெளி. 20:12; மத். 10:32; லூக். 12:8.

### பிலதெல்பியா நகரத் திருச்சபைக்கு

7 ''பிலதெல்பியா நகரத் திருச்சபையின் தூதனுக்கு இதை எழுது:

'தூய்மையானவரும் உண்மையான வரும் தாவீதின் திறவுகோலை உடைய வரும் பூட்ட இயலாதபடி திறந்துவிடு கிறவரும் திறக்க இயலாதபடி பூட்டிவிடு கிறவருமானவர் சொல்கிறதாவது: 8 உன்னு டைய செயல்களை நான் அறிவேன். கொஞ்சம் வலிமைதான் உனக்கு இருக் கிறது. ஆயினும், நீ என் வார்த்தையைக் கடைப்பிடித்து நடந்தாய்; என் பெயரை ஏற்க மறுக்கவில்லை. இதோ பார், நான் உன் முன்னே ஒரு வாயிலைத் திறந்து வைத்திருக்கிறேன். அதை ஒருவனும் பூட்ட இயலாது. 9 சாத்தான் கூட்டத் தைச் சேர்ந்தவர்களை உன்னிடம் வரச் செய்வேன். அவர்கள் தாங்கள் யூதர்கள் என்று சொல்லிக்கொள்கிறார்கள். ஆனால், அவர்கள் யூதர்களல்ல. அவர்கள் சொல் வது பொய். அவர்களை உன்னிடம் வந்து உன் காலடிகளில் விழுந்து பணியும்படி யும், நான் உன்னிடம் அன்பு செலுத்தி னேன் என்பதை அவர்கள் அறியும் படியும் செய்வேன். 10 பொறுமையைப் பற்றிய என் வார்த்தையை நீ மறவா மல் அதன்படி நடந்துகொண்டதால், உல கில் வாழும் மக்களைச் சோதித்துப்பார்க்க முழு உலகின்மீதும் வரப்போகிற கடுஞ் சோதனையின் வேளையில் நான் உன்னை மறவாமல் காப்பாற்றுவேன். 11 விரை வில் வருகிறேன். உனக்குரிய வெற்றி மாலையை எவனும் பறித்துக்கொள்ளா திருக்கும்படி, நீ கொண்டுள்ள நம்பிக்கை யைப் பற்றிக்கொண்டிரு. 12 வெற்றி கொள்கிறவனை என் கடவுளின் ஆலயத் தில் ஒரு தூணாக இருக்கும்படி செய் வேன். அவன் அதை விட்டு ஒருபோதும் நீங்க மாட்டான். என் கடவுளின் திருப் பெயரையும் என் கடவுளுடைய நகரத் தின் பெயரையும், அதாவது என் கடவுளி டமிருந்து வானத்தை விட்டு இறங்கி வரு கிற புதிய எருசலேமின் பெயரையும் அவன்மீது எழுதுவேன்; என் புதிய பெய ரையும் அவன்மீது எழுதுவேன். 13 கேட் டுணரும் காதுள்ளவன் ஆவியானவர் திருச்சபைகளுக்குச் சொல்வதைக் கவனித் துக்கொள்ளட்டும்.'

### லவோதிக்கேயா நகரத் திருச்சபைக்கு

14 ''லவோதிக்கேயா நகரத் திருச் சபையின் தூதனுக்கு இதை எழுது:

'நம்பத்தக்க உண்மையான சாட்சியான வரும், கடவுளின் படைப்புக்கு முதற் காரணமானவரும், ஆமேன் என்பவரு மானவர் சொல்கிறதாவது: 15 உன்னு டைய செயல்களை நான் அறிவேன். உன் னைக் குளிரென்றும் சொல்வதற்கில்லை, அனலென்றும் சொல்வதற்கில்லை. நீ குளி ராகவாவது அனலாகவாவது இருந்தால் நலமாயிருக்கும். 16 இப்படி நீ குளிரா கவோ அனலாகவோ இல்லாமல் வெது வெதுப்பாய் இருப்பதால், நான் உன்னை என் வாயினின்று துப்பிவிடப்போகிறேன். 17 'நான் செல்வமுடையவன், செல்வச் செழிப்புள்ளவனாகிவிட்டேன்; எனக்கு ஒரு குறையும் இல்லை' என்று நீ சொல்லிக் கொள்கிறாய். ஆனால், நீ இழிவான நிலையி லுள்ளவன், இரக்கம் பெறத்தக்கவன், ஏழை, கண்ணில்லாதவன், ஆடையில் லாதவன். 18 இதை நீ உணர்வதில்லை. எனவே, நீ செல்வமுடையவனாகும்படி நெருப்பில் புடமிடப்பட்ட பொன்னையும், ஆடையில்லாத உன் நிலைமையின் மானக் கேடு வெளிக்குத் தோன்றாதிருக்கும்படி அணிந்துகொள்ள வெண்ணாடையையும், பார்வை பெறும்படி உன் கண்களில் பூசக் கண்மருந்தையும் என்னிடம் வாங்கிக் கொள் என்று உனக்கு அறிவுரை கூறு கிறேன். 19 நான் யார் யாரிடம் அன்பு கொள்கிறேனோ அவர்களைக் கடிந்து கொண்டு தண்டித்துத் திருத்துகிறேன். ஆகையால், நீ ஆர்வமுள்ளவனாகி மன மாற்றமடை. 20 இதோ, வாயிற்படியில் நின்று தட்டுகிறேன். ஒருவன் என் குரலைக்கேட்டுக் கதவைத் திறப்பானானால், அவனுடன் உள்ளே சென்று, நான் அவ னோடும் அவன் என்னோடுமாக விருந்துண் போம். 21 நான் வெற்றிகொண்டு என் தந்தையாரோடு அவரது அரியணையில் உட்கார்ந்தது போல, வெற்றிகொள்ளும் எவனுக்கும் என் அரியணையில் என்னோடு உட்காரும் நற்பேற்றினை அருளுவேன். 22 கேட்டுணரும் காதுள்ளவன் ஆவியான வர் திருச்சபைகளுக்குச் சொல்வதைக் கவ னித்துக் கொள்ளட்டும்.' ''

### விண்ணுலகில் இறைவழிபாடு

4 அதன்பின் நான் அண்ணாந்து பார்த் தேன். விண்ணுலகில் ஒரு வாயில் திறந்திருந்தது. நான் முதலில் பேசக் கேட்ட அதே குரல் மீண்டும் எக்காளம் போல ஒலித்து என்னிடம், ''இவ்விடத் திற்கு ஏறி வா. இதற்குப் பின் நடக்க வேண்டிய காரியங்களை உனக்குக் காட்டு கிறேன்'' என்று சொன்னது. 2 உடனே நான் தெய்வ ஆவியால் ஆட்கொள்ளப் பட்டு, விண்ணுலகில் ஓர் அரியணை இருப் பதைக் கண்டேன். அந்த அரியணையில்

3:7 ஏசா. 22:22; யோபு. 12:14. 3:9 ஏசா. 49:23; 60:14; ஏசா. 43:4. 3:12 ஏசா. 62:2; 65:15. 3:14 நீதி. 8:22. 3:19 நீதி. 3:12; எபி. 12:6. 4:2, 3 எசே. 1:26—28; 10:1.

ஒருவர் வீற்றிருந்தார். 3 வீற்றிருந்தவரின்
தோற்றம் வைரக்கல்போலவும் மாணிக்கம்
போலவும் இருந்தது; மரகத நிற
முடைய ஒளிவட்டம் அரியணையைச் சூழ்ந்
திருந்தது. 4 அந்த அரியணையைச் சுற்றி
லும் வேறு இருபத்து நான்கு அரியணைகள்
இருந்தன. அந்த இருபத்து நான்கு
அரியணைகளிலும் இருபத்து நான்கு மூப்
பர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள்
வெண்ணுடை அணிந்து தலையில் முள்முடி
சூடியிருந்தார்கள். 5 அந்த அரியணையி
லிருந்து மின்னல்கள் தோன்றி ஒளி வீசு
கின்றன. இடியோசையும் முழங்குகிறது.
அரியணையின்முன் ஏழு விளக்குகள் எரி
கின்றன. 6 அவை கடவுளின் ஏழு ஆவிகளே.
அந்த அரியணையின் எதிரில் பளிங்கை
யொத்த ஒரு கண்ணாடிக் கடல் இருப்பது
போலத் தெரிகிறது.

அரியணையைச் சுற்றிலும் நான்கு உயிரி
கள் அதன் நான்கு பக்கங்களிலும் நின்று
கொண்டிருக்கின்றன. அவற்றின் முன்புற
மும் பின்புறமும் கண்களால் நிறைந்திருக்
கின்றன. 7 முதலாவது உயிரி சிங்கம்
போலவும் இரண்டாவது உயிரி இளங்
காளை போலவும் இருக்கின்றன. மூன்று
வது உயிரிக்கு மனித முகம் போன்ற
தொரு முகம் இருக்கிறது. நான்காவது
உயிரி சிறகு விரித்த கழுகை ஒத்திருக்கிறது.
8 அந்த நான்கு உயிரிகளுள் ஒவ்வொன்றிற்
கும் ஆறு சிறகுகள் இருக்கின்றன; வெளிப்
புறமும் உட்புறமும் கண்களால் நிறைந்
திருக்கின்றன. அந்த உயிரிகள்,

''எல்லாம் வல்ல கடவுளாகிய ஆண்டவர்
தூயர், தூயர், தூயர்;
இருந்தவரும் இருக்கிறவரும் வரப்
போகிறவரும் இவரே''

என்று இரவும் பகலும் ஓய்வின்றிப் பாடிக்
கொண்டிருக்கின்றன. 9 என்றென்றும்
உள்ளவராய் அரியணையில் வீற்றிருப்பவ
ருக்கு அந்த உயிரிகள் மாட்சிமையும்
மாண்பும் நன்றியும் செலுத்தும்போதெல்
லாம், 10 அந்த இருபத்துநான்கு மூப்பர்
களும் அரியணையில் வீற்றிருப்பவர்முன்
அடிபணிந்து, என்றென்றும் உள்ளவரைத்
தொழுகிறார்கள். அவர்கள் தங்கள் மணி
முடிகளை எடுத்து அரியணையின் முன் வைத்து,

11 ''எங்கள் ஆண்டவரே, எங்கள்
கடவுளே,
மாட்சிமைக்கும் மாண்பிற்கும்
வல்லமைக்கும் உரியவர் நீரே;
யாவற்றையும் படைத்தவர் நீரே.
யாவும் உமது திருவுளத்தால் உண்
டாயின,
படைக்கப்பட்டன''
என்று பாடுகிறார்கள்.

## ஆட்டுக்குட்டியானவர் எடுத்த நூற்சுருள்

5 அரியணையில் வீற்றிருப்பவரின் வலக்
கையில் ஒரு நூற்சுருளைக் கண்
டேன். அதில் உட்புறமும் வெளிப்புறமும்
எழுதியிருந்தது. அது ஏழு முத்திரை
களோடு கட்டப்பட்டிருந்தது. 2 வலிமை
வாய்ந்த தெய்வதூதன் ஒருவனையும் கண்
டேன். அவன் உரத்த குரலில், ''முத்தி
ரைகளை உடைத்து நூற்சுருளை விரிக்கத்
தகுதியுள்ளவன் யார்?'' என்று கத்தினான்.
3 ஆனால், நூற்சுருளை விரிக்கவும், அதைப்
படித்துப் பார்க்கவும், மேலுலகிலோ, நில
வுலகிலோ, கீழுலகிலோ உள்ள எவரா
லும் இயலவில்லை. 4 நூற்சுருளை விரிக்க
வும் அதைப் படித்துப் பார்க்கவும் எவ
னும் தகுதியுள்ளவனாகக் காணப்படவில்
லையே என்று நான் தேம்பி அழுதேன்.
5 அப்பொழுது மூப்பருள் ஒருவன் என்னைப்
பார்த்து, ''அழாதே, இதோ பார், தாவீ
தினின்று தோன்றின முளையாகிய யூதா
குலத்துச் சிங்கம் வெற்றியடைந்து
விட்டார். ஆகவே, அந்த நூற்சுருளின்
ஏழு முத்திரைகளையும் உடைக்கவும் அதை
விரிக்கவும் அவரால் இயலும்'' என்று
சொன்னான்.

6 அரியணைக்கும் நான்கு உயிரிகளுக்கு
மிடையே, மூப்பர்களின் நடுவில் ஓர் ஆட்
டுக்குட்டி நிற்கிறதைக் கண்டேன். அது
கொல்லப்பட்டிருந்தாற்போன்று காணப்
பட்டது. அதற்கு ஏழு கொம்புகளும் ஏழு
கண்களும் இருந்தன. அந்தக் கண்கள்
கடவுளின் ஏழு ஆவிகள். அவை உலகெங்கும்
அனுப்பப்படுகிறவை. 7 அந்த ஆட்
டுக்குட்டியானவர் முன்வந்து, அரியணையில்
வீற்றிருந்தவரின் வலக்கையிலிருந்து
அந்த நூற்சுருளை எடுத்தார். 8 அவர்
அதை எடுத்தபோது நான்கு உயிரிகளும்
இருபத்து நான்கு மூப்பர்களும் ஆட்டுக்
குட்டியானவர்முன் விழுந்து பணிந்தார்கள்.
அவர்களுள் ஒவ்வொருவர் கையிலும்
சுரமண்டலமும் கடவுளுக்குரிய மக்களின்
வேண்டுதல்களாகிய தூபம் நிறைந்த
பொற்கலசங்களும் இருந்தன. 9 அவர்கள்
புதியதொரு பாட்டைப் பாடிக்கொண்டிருந்
தார்கள்:

''நூற்சுருளை எடுக்கவும் அதன் முத்
திரைகளை உடைக்கவும்
தகுதியுள்ளவர் நீரே.

4:5 யாத். 19:16; திருவெளி. 1:4; 8:5; 11:19; 16:18. 4:6 எசே. 1:22. 4:8 எசே. 1:18; 10:12; ஏசா. 6:3. 5:1 எசே. 2:9, 10; ஏசா. 29:11. 5:5 யாத். 49:9; ஏசா. 11:1, 10. 5:6 ஏசா. 53:7. 5:8 சங். 141:2, 5:9 சங். 33:3; 98:1; ஏசா. 42:10.

ஏனெனில், நீர் கொல்லப்பட்டீர்.
உமது இரத்தத்தை விலையாகக்
கொடுத்து,
எல்லாக் குலத்தினர், மொழியினர்,
இனத்தவர் நாட்டினரிடையேயிருந்தும்
மனிதரைக் கடவுளுக்கென்று வாங்கிக்
கொண்டீர்.
10 அவர்களை நம் கடவுளுக்குரிய
அரசகுலமாகவும் ஆசாரியத் திருக்
கூட்டமாகவும் ஆக்கினீர். அவர்கள்
உலகின்மீது ஆட்சி செலுத்துவார்கள்.''

11 மேலும் பார்த்தேன். அப்பொழுது
அரியணையையும் உயிரிகளையும் மூப்பர்களையும்
சூழ்ந்திருந்த திரளான தெய்வதூதரின்
குரலைக் கேட்டேன். அவர்கள் எண்
ணிக்கை ஆயிரமாயிரம் கோடானுகோடி.
12 அவர்கள் உரத்த குரலில்,
''கொல்லப்பட்ட ஆட்டுக்குட்டியானவரே
வல்லமை, செல்வம், ஞானம், வலிமை,
மாண்பு, மாட்சிமை, புகழ் ஆகியவை
அனைத்திற்கும் உரியவர்''
என்று பாடிக்கொண்டிருந்தார்கள்.
13 மேலுலகம், நிலவுலகம், கீழுலகம்,
ஆழ்கடல் எங்குமுள்ள படைப்புகளும்
அவற்றிலுள்ள யாவும்,
''அரியணையில் வீற்றிருக்கிறவருக்கும்
ஆட்டுக்குட்டியானவருக்குமே
துதியும் மாண்பும் மாட்சிமையும்
வலிமையும்
என்றென்றும் உரியன''
என்று பாடினதையும் கேட்டேன்.
14 நான்கு உயிரிகளும் அதற்கு, ''ஆமேன்''
என்றன; மூப்பர்கள் முகங்குப்புற விழுந்து
தொழுதார்கள்.

### முத்திரைகள்

6 பிறகு நான் ஆட்டுக்குட்டியானவர்
ஏழு முத்திரைகளுள் முதலாம் முத்
திரையை உடைக்கிறதைக் கண்டேன்.
அப்பொழுது நான்கு உயிரிகளுள் முத
லாம் உயிரி, ''வா'' என்று இடியோசை
போன்ற குரலில் கூப்பிட்டதைக் கேட்
டேன். 2 மேலும் பார்த்தேன். அங்கே
ஒரு வெண்ணிறக் குதிரையைக் கண்
டேன். அதன்மீது ஏறியிருந்தவனிடம் ஒரு
வில் இருந்தது. அவனுக்கு ஒரு மணிமுடி
கொடுக்கப்பட்டது. அவன் வெற்றி வீரனாக
வெற்றிகொள்ள வெளியே புறப்பட்டான்.

3 ஆட்டுக்குட்டியானவர் இரண்டாவது
முத்திரையை உடைத்தபோது, இரண்டா
வது உயிரி, ''வா'' என்று கூப்பிட்ட
தைக் கேட்டேன். 4 அப்பொழுது செந்நிற
மான வேறொரு குதிரை வெளியே வந்தது.
உலகினின்று சமாதானத்தை அகற்றி
விடவும் மனிதர் ஒருவரையொருவர்
கொல்லும்படி செய்யவும் அதன்மீது ஏறி
யிருந்தவனுக்கு அதிகாரம் அளிக்கப்
பட்டது. அவனுக்கு ஒரு பெரிய வாளும்
கொடுக்கப்பட்டது.

5 அவர் மூன்றாவது முத்திரையை
உடைத்தபோது, மூன்றாவது உயிரி, ''வா''
என்று கூப்பிட்டதைக் கேட்டேன். மேலும்
பார்த்தேன். ஒரு கறுப்புக் குதிரையைக்
கண்டேன். அதன்மீது ஏறியிருந்தவன்
கையில் ஒரு துலாக்கோல் இருந்தது. 6 அப்
பொழுது அந்த நான்கு உயிரிகளின் நடு
வினின்று ஒரு குரல் எழுவதுபோலத்
தோன்றிற்று. அது, ''ஒரு திநாரியத்
துக்குக்* கோதுமை ஒரே ஆழாக்குதான்;
சோளம்† ஒரு திநாரியத்துக்கு மூன்று
ஆழாக்குதான். ஆனால், எண்ணெயையும்
திராட்சை இரசத்தையும் அப்படியே
விட்டுவிடு'' என்று சொன்னதைக்
கேட்டேன்.

7 அவர் நான்காவது முத்திரையை
உடைத்தபோது, நான்காவது உயிரி,
''வா'' என்று கூப்பிட்டதைக் கேட்
டேன். 8 மேலும் பார்த்தேன். அங்கே
வெளிறிய தோற்றமுடைய குதிரை ஒன்
றைக் கண்டேன். அதன்மீது ஏறியிருந்தவன்
பெயர் மரணம். அவனோடு பாதாளம்
வந்தான். வாளாலும் பஞ்சத்தாலும்
கொள்ளை நோயாலும் காட்டு விலங்கு
களாலும் கொன்றழிப்பதற்கென்று உலகின்
கால் பாகத்தின்மேல் அவர்களுக்கு
அதிகாரம் அளிக்கப்பட்டது.

9 அவர் ஐந்தாவது முத்திரையை
உடைத்தபோது, கடவுளின் வார்த்தைக்
காகவும் அவரைப்பற்றிய சாட்சியத்தில்
பற்றுதல் கொண்டிருந்ததற்காகவும் கொலை
யுண்டவர்களின் ஆன்மாக்களைப் பலிபீடத்
தின் கீழே கண்டேன். 10 அவர்கள்
உரத்த குரலில், ''தூய்மையும் உண்மை
யுமான ஆண்டவரே, எவ்வளவு காலம்
தீர்ப்பளிக்காமலிருப்பீர்? எங்கள் இரத்
தத்தைச் சிந்தியதற்காக உலகில் வாழ்
கிறவர்களை எவ்வளவு காலம் பழி வாங்
காமலிருப்பீர்?'' என்று கத்தினார்கள். 11 அப்
பொழுது ஒவ்வொருவருக்கும் ஒரு வெள்ளை
அங்கி கொடுக்கப்பட்டது. அன்றியும்,
அவர்களைப்போலக் கொல்லப்பட வேண்
டிய அவர்களுடைய உடன் ஊழியரும்

* மத். 20:2 அடிக்குறிப்பைப் பார்க்க.
† இதனால் குறிக்கப்படுவது மலிவான ஒருவகைத் தானியம்.
5:10 யாத். 19:6; திருவெளி. 1:6. 5:11 தானி. 7:10. 6:2 சங். 1:8; 6:3, 6. 6:4 சக. 1:8; 6:2. 6:5 சக. 6:2, 6. 6:8 எசே. 14:21.

சகோதரருமானவர்களின் குறிப்பிட்ட எண்
ணிக்கை நிறைவுபெறும்வரை இன்னும்
சிறிதுகாலம் பொறுத்திருக்க வேண்டு
மென்று அவர்களுக்குச் சொல்லப்பட்டது.

12 பிறகு நான் ஆறும் முத்திரையை
அவர் உடைக்கிறதைக் கண்டேன். அப்
பொழுது பெரிய நிலநடுக்கம் உண்டா
யிற்று. கதிரவனின் தோற்றம் கறுப்பு
முரட்டுத் துணிபோலக் கறுத்தது. நிலா
முழுதும் இரத்த மயமாயிற்று. 13 பெருங்
காற்று அடிக்கும்போது அத்தி மரத்தி
லிருந்து காய்கள் உதிர்வதுபோல வானத்
திலிருந்து விண்மீன்கள் நிலவுலகில்
விழுந்தன. 14 வானம் நூற்சுருள்போலச்
சுருண்டு மறைந்தது. எல்லா மலைகளும்
தீவுகளும் நிலைபெயர்ந்து அகன்றன. 15 உல
கின் அரசர்கள், பெருங்குடி மக்கள்,
படைத்தலைவர்கள், செல்வர்கள், வலிமை
வாய்ந்தவர்கள் ஆகியோரும், அடிமை
களும் மற்ற மக்களுமாகிய யாவரும் குகை
களுக்கும் மலைப்பாறைகளுக்கும் ஓடி ஒளிந்து
கொண்டார்கள். 16 அவர்கள் அந்த
மலைகளையும் பாறைகளையும் பார்த்து,
''எங்கள்மேல் விழுங்கள்; அரியணையில்
வீற்றிருக்கிறவருடைய முகத்தினின்றும்
ஆட்டுக்குட்டியானவரின் சினத்தின் கொடு
மையினின்றும் எங்களை மறைத்துவிடுங்கள்.
17 அவர்களுடைய சினம் வெளிப்படும்
பெருநாள் வந்துவிட்டதே! அதை எதிர்த்து
நிற்க எவராலும் இயலாதே!'' என்று
சொன்னார்கள்.

## இஸ்ரவேல் மக்கள் 1,44,000 பேர்

7 இதற்குப்பின் உலகின் நான்கு
திசைகளிலும் நான்கு தெய்வதூதர்
கள் நிற்கிறதைக் கண்டேன். அவர்கள்
உலகின்மீதும் கடலின்மீதும் எந்த மரத்
தின்மீதும் காற்று வீசாதபடி உலகின்
நான்கு காற்றுகளையும் நிறுத்திவைத்
திருந்தார்கள். 2 வேறொரு தெய்வதூதன்
கதிரவன் எழும் திசையிலிருந்து ஏறிவரு
கிறதையும் கண்டேன். அவனிடம் என்று
முள்ள கடவுளின் முத்திரை இருந்தது.
அவன் நிலத்தையும் கடலையும் பாழ்படுத்த
அதிகாரம் பெற்றிருந்த அந்த நான்கு
தெய்வதூதர்களையும் உரத்த குரலில் கூப்
பிட்டு, 3 ''நம் கடவுளின் அடியார் நெற்றி
களில் நாங்கள் முத்திரையிட்டு முடிக்கு
மட்டும் நிலத்தையும் கடலையும் மரங்களை
யும் பாழ்படுத்த வேண்டாம்'' என்று
சொன்னான். 4 முத்திரையிடப் பெற்றவர்
களின் தொகை என்னவென்று சொன்ன
தைக் கேட்டேன். இஸ்ரவேல் மக்களின்
எல்லாக் குலங்களிலும் முத்திரையிடப்
பெற்றவர்கள் இலட்சத்து நாற்பத்து
நாலாயிரம் பேர்.

5 முத்திரையிடப்பெற்றவர்கள் யூதா
குலத்தில் பன்னீராயிரம்,
ரூபன் குலத்தில் பன்னீராயிரம்,
காத் குலத்தில் பன்னீராயிரம்,
6 ஆசேர் குலத்தில் பன்னீராயிரம்,
நப்தலி குலத்தில் பன்னீராயிரம்,
மனசே குலத்தில் பன்னீராயிரம்,
7 சிமியோன் குலத்தில் பன்னீராயிரம்,
இலேவி குலத்தில் பன்னீராயிரம்,
இசக்கார் குலத்தில் பன்னீராயிரம்,
8 செபுலோன் குலத்தில் பன்னீயிரம்,
யோசேப்புக் குலத்தில் பன்னீராயிரம்,
பென்யமீன் குலத்தில் பன்னீராயிரம்.

## திரளான மக்கட்கூட்டம்

9 இதற்குப்பின் நான் பார்த்த
போது, எவராலும் எண்ண இயலாத
திரளான மக்கட்கூட்டத்தைக் கண்டேன்.
அவர்கள் எல்லா நாட்டினர், குலத்தினர்,
இனத்தவர், மொழியினரிடையேயு
மிருந்து வந்தவர்கள், அவர்கள் வெள்ளை
அங்கி அணிந்துகொண்டு கையில் குருத்
தோலையுடன் அரியணையின் முன்னும் ஆட்
டுக்குட்டியானவரின் முன்னும் நின்று
கொண்டிருந்தார்கள். 10 அவர்கள் உரத்த
குரலில்,

''அரியணையில் வீற்றிருக்கிற எங்கள்
கடவுளாலும் ஆட்டுக்குட்டியானவரா
லுமே எங்களுக்கு மீட்பு''*
என்று பாடினார்கள். 11 அப்பொழுது
எல்லாத் தெய்வதூதர்களும் அரியணையையும்
மூப்பர்களையும் நான்கு உயிரிகளையும் சூழ்ந்து
நின்று, அரியணையின்முன் முகங்குப்புற
விழுந்து கடவுளைத் தொழுது,
12 ''ஆமேன்,
துதியும் மாட்சிமையும் ஞானமும் புகழும்
மாண்பும் வல்லமையும் ஆற்றலும்
என்றென்றும் எங்கள் கடவுளுக்கே
உரியன. ஆமேன்''
என்றார்கள்.

13 அப்பொழுது மூப்பர்களுள் ஒருவர்
என்னைப் பார்த்து, ''வெள்ளை அங்கி
அணிந்திருக்கிற இவர்கள் யார்? எங்
கிருந்து வந்தவர்கள், தெரியுமா?'' என்று
கேட்டார். 14 அதற்கு நான், ''ஐயா, அது
உமக்குத்தான் தெரியும்'' என்று சொன்
னேன். அப்பொழுது அவர், ''இவர்கள்

* 'எங்கள் கடவுளுக்கும் ஆட்டுக்குட்டியானவருக்குமே வெற்றி' என்றும் மொழிபெயர்க்கலாம்.
6:12 ஏசா. 13:10; யோவேல் 2:10, 31; 3:15; மத். 24:29; மாற். 13:24, 25; லூக். 21:25. 6:13, 14 ஏசா. 34:4. 6:15 ஏசா. 2:19, 21. 6:16 ஓசே. 10:8; லூக். 23:30. 6:17 யோவேல் 2:11; மலா. 3:2. 7:1 எரே. 49:36; தானி. 7:2; சக. 6:5. 7:3 எசே. 9:4, 6. 7:14 தானி. 12:1; மத். 24:21; மாற். 13:19.

குறிக்கப்பட்ட மாபெரும் துன்பத்தை
அனுபவித்துவிட்டு வந்தவர்கள்; தங்கள்
அங்கிகளை ஆட்டுக்குட்டியானவரின் இரத்
தத்தில் துவைத்து வெண்மையாக்கிக்கொண்
டவர்கள். 15 அதனாலேதான் இவர்கள் கட
வுளின் அரியணையின்முன் இருந்துகொண்டு,
இரவும் பகலும் அவரது திருக்கோவிலில்
அவருக்குச் சேவை செய்கிறார்கள். அரியணை
யில் வீற்றிருப்பவர் இவர்களைத் தம் நிழ
வில் தங்கச் செய்வார். 16 இனிமேல்
இவர்களுக்குப் பசியுமிராது, தாகமுமிராது.
இனிமேல் இவர்களை வெயிலும் தாக்
காது, எவ்வகையான வெப்பமும் தாக்
காது. 17 ஏனெனில், அரியணையின் நடு
விலிருக்கிற ஆட்டுக்குட்டியானவரே இவர்
களை மேய்ச்சலுக்குக் கொண்டுபோய்,
மெய்வாழ்வளிக்கும் நீரூற்றுக்கு நடத்திச்
செல்வார். கடவுள்தாமே இவர்கள் கண்
களினின்று கண்ணீரை அறவே துடைத்து
விடுவார்'' என்று சொன்னார்.

### ஏழாவது முத்திரை

**8** ஆட்டுகுட்டியானவர் ஏழாவது முத்
திரையை உடைத்தபோது, விண்ணுல
கில் ஏறத்தாழ அரைமணி நேரம் பேர
மைதி நிலவிற்று. 2 பிறகு கடவுள்முன்
நிற்கும் ஏழு தெய்வதூதர்களுக்கும்
ஏழு எக்காளங்கள் கொடுக்கப்பட்டதைக்
கண்டேன்.

3 வேறொரு தெய்வதூதன் பொன் தூப
கலசத்தோடு வந்து, பீடத்தினருகில் நின்
றான். அரியணையின்முன் இருக்கும் அந்தப்
பொற்பீடத்தின்மீது கடவுளுக்குரிய மக்கள்
அனைவருடைய வேண்டுதல்களோடு
தூபத்தைச் சேர்த்துப் படைக்கும்படி அவ
னுக்கு மிகுதியான தூபம் கொடுக்கப்பட்
டது. 4 அந்தத் தூபத்தின் புகை கட
வுளுக்குரிய மக்களின் வேண்டுதல்களோடு
சேர்ந்து தெய்வதூதன் கையிலிருந்து கட
வுள்முன் எழும்பிற்று. 5 பிறகு அந்தத்
தெய்வதூதன் தூபகலசத்தை எடுத்து,
அதில் பீடத்து நெருப்பை நிரப்பி, நில
வுலகின்மீது கொட்டினான். கொட்டவே,
இடியோசையும் பேரிரைச்சலும் மின்னல்
களும் நிலநடுக்கமும் உண்டாயின.

### எக்காளங்கள்

6 அப்பொழுது ஏழு எக்காளங்களை வைத்
திருந்த ஏழு தெய்வதூதர்களும் எக்காளம்
ஊதுவதற்குத் தங்களை ஆயத்தப்படுத்திக்
கொண்டார்கள்.

7 முதலாம் தூதன் ஊதினான். அப்
பொழுது இரத்தம் கலந்த கல்மழையும்
நெருப்பும் நிலவுலகின்மீது பொழிந்தன.
நிலவுலகில் மூன்றில் ஒரு பாகம் எரிந்
தழிந்தது; மரங்களில் மூன்றில் ஒரு பாகம்
எரிந்தழிந்தது; பசும்புல்லெல்லாம் எரிந்
தழிந்தன.

8 இரண்டாம் தூதன் எக்காளத்தை
ஊதினான். அப்பொழுது தீப்பற்றி எரியும்
பெரிய மலைபோன்றதொன்று கடலில் எறி
யப்பட்டது. கடலில் மூன்றில் ஒரு பாகம்
இரத்தமாக மாறிற்று. 9 கடலில் வாழ்ந்த
உயிரினங்களுள் மூன்றில் ஒரு பாகம்
செத்துப்போயிற்று; கப்பல்களில் மூன்றில்
ஒரு பாகம் அழிந்தது.

10 மூன்றாம் தூதன் எக்காளத்தை
ஊதினான். அப்பொழுது பெரிய விண்மீன்
ஒன்று தீப்பந்தம்போல எரிந்துகொண்டே
வானத்தினின்று பாய்ந்துவந்து, ஆறு
களில் மூன்றில் ஒரு பாகத்திலும் நீரூற்று
களிலும் விழுந்தது. 11 அந்த விண்
மீனுக்கு 'எட்டி' என்று பெயர். தண்
ணீரில் மூன்றில் ஒரு பாகம் எட்டிக் கசப்
பாயிற்று. தண்ணீர் அப்படிக் கசப்பான
தால் அதைக் குடித்த ஏராளமான மனி
தர்கள் இறந்துபோனார்கள்.

12 நான்காம் தூதன் எக்காளத்தை
ஊதினான். அப்பொழுது கதிரவனில் மூன்றில்
ஒரு பாகமும் நிலாவில் மூன்றில் ஒரு பாகமும்
விண்மீன்களில் மூன்றில் ஒரு பாகமும்
தகர்த்தெறியப்பட்டன. ஆகவே, அவற்றுள்
மூன்றில் ஒரு பாகம் இருளடைந்தது.
பகலில் மூன்றில் ஒரு பாகம் ஒளியற்ற
தாயிற்று; இரவுக்கும் அப்படியே ஆயிற்று.

13 மேலும் பார்த்தேன். நடு வானத்
தில் பறந்துகொண்டிருந்த ஒரு கழுகு
உரத்த குரலில், ''இன்னும் இருக்கிற
மூன்று தெய்வதூதர்களும் எக்காளங்களை
ஊதப்போகிறார்கள். அந்தோ! உலகில்
வாழ்கிறவர்களுக்கு ஐயோ, ஐயோ,
ஐயோ, ஆபத்து!'' என்று கத்தினதைக்
கேட்டேன்.

**9** பிறகு ஐந்தாம் தெய்வதூதன் எக்
காளத்தை ஊதினான். அப்பொழுது
வானத்திலிருந்து நிலவுலகில் விழுந்து
கிடந்த விண்மீன் ஒன்றைக் கண்டேன்.
பாதாளக் குழியின் திறவுகோல் அதற்குக்
கொடுக்கப்பட்டது. 2 அது பாதாளக் குழி
யைத் திறந்தது; திறந்ததும், பெருஞ்சூளை
யிலிருந்து புகை எழும்புவதுபோல அந்
தக் குழியிலிருந்து புகை எழும்பிற்று;

7:16 ஏசா. 49:10. 7:17 சங். 23:1, 2; ஏசா. 25:8; 49:10; எசே. 34:23. 8:3 யாத். 30:1, 3; ஆமோஸ் 9:1. 8:5 யாத். 19:16; இலே. 16:12; எசே. 10:2; திருவெளி. 11:19; 16:18. 8:7 யாத். 9:23—25; எசே. 38:22. 8:10 ஏசா. 14:12. 8:11 எரே. 9:15. 8:12 ஏசா. 13:10; எசே. 32:7; யோவேல் 2:10, 31; 3:15. 9:2 ஆதி. 19:28.

கதிரவனும் ஆகாயமும் அந்தக் குழியி
லிருந்து வந்த புகையினுல் இருளடைந்தன.
3 அந்தப் புகையிலிருந்து வெட்டுக்கிளி
கள் கிளம்பி நிலவுலகிற்கு வந்தன. நில
வுலகில் தேள்களுக்கு என்ன ஆற்றல்
உண்டோ அதே ஆற்றல் அவறறிற்கு
அளிக்கப்பட்டது. 4 நிலவுலகின் புல்
லுக்கோ எந்தப் பசும்பூண்டுக்குமோ எந்த
மரத்துக்குமோ தீங்கிழைக்கக்கூடாதென்
றும், மனிதருள் தங்கள் நெற்றிகளில் கட
வுளின் முத்திரையில்லாதவர்களுக்கு மட்
டுமே தீங்கிழைக்கலாமென்றும் அவற்றிற்
குக் கூறப்பட்டது. 5 ஆனுலும், அவர்
களைக் கொல்வதற்கன்று, ஐந்து மாதம்
வரையிலும் அவர்களைத் துன்பத்திற்குட்
படுத்தவே அவற்றிற்கு அனுமதியளிக்கப்
பட்டது. அவற்ருல் உண்டாகும் துன்பம்
தேள் மனிதனைக் கொட்டும்போது உண்
டாகும் துன்பத்தைப் போன்றது. 6 அக்
காலத்தில் மனிதர் மரணத்தைத் தேடு
வார்கள்; ஆனுல், அதைக் காண மாட்
டார்கள்; சாக விரும்புவார்கள்; ஆனுல்,
சாவு அவர்களை அணுகாது ஓடிவிடும்.

7 பார்வைக்கு அந்த வெட்டுக்கிளிகள்
போருக்கு ஆயத்தமாக்கப்பட்ட குதிரை
களைப்போல இருந்தன. அவற்றின் தலை
களில் பொன்மயமான மணிமுடிகள்
போன்றவை இருந்தன. அவற்றின் முகங்கள்
மனிதரின் முகங்களை ஒத்திருந்தன.
8 அவற்றின் பிடரிமயிர் பெண்களின் கூந்
தலைப்போலவும், அவற்றின் பற்கள் சிங்
கங்களின் பற்களைப்போலவும் இருந்தன.
9 இருப்புக் கவசங்களையொத்த மார்புக்
கவசங்கள் அவற்றிற்கு இருந்தன. அவற்
றின் சிறகுகளின் இரைச்சல் போருக்கு
விரைந்தோடும் குதிரை பூட்டிய பல தேர்
களின் இரைச்சலை ஒத்திருந்தது. 10 தேள்
களுக்கு இருப்பதுபோல அவற்றிற்கு
வாலும் கொடுக்கும் இருந்தன. ஐந்து
மாதம் வரையிலும் மனிதருக்குத் தீங்
கிழைக்கும் ஆற்றல் அவற்றின் வால்
களில் இருந்தது. 11 பாதாளக் குழியின்
தூதனே அவற்றிற்கு அரசன். அவனுக்கு
எபிரேய மொழியில் அபத்தோன்* என்று
பெயர். கிரேக்க மொழியில் அப்பெயர்
அப்பொல்லியோன்† எனப்படும்.

12 முதலாம் ஆபத்து நீங்கிற்று. இதற்
குப்பின் இன்னும் இரண்டு ஆபத்துகள்
வரவிருந்தன.

13 ஆரும் தெய்வதூதன் எக்காளத்தை
ஊதினுன். அப்பொழுது கடவுள் முன்
னிருந்த பொற்பீடத்தின் கொம்புகளி
லிருந்து உண்டான ஒரு குரலொலியைக்
கேட்டேன். 14 அது, ''ஐபிராத்து என்
னும் பெரிய ஆற்றினருகில் கட்டுண்டிருக்
கும் நான்கு தூதரையும் அவிழ்த்துவிடு''
என்று எக்காளம் வைத்திருந்த ஆரும்
தூதனுக்கு உரைத்தது. 15 அப்படியே
அந்த நான்கு தூதர்களும் அவிழ்த்துவிடப்
பட்டார்கள். அவர்கள் மனிதருள் மூன்
றில் ஒரு பகுதியினரைக் கொன்றழிப்பதற்
கென்று, இந்த ஆண்டு, இந்த மாதம்,
இந்த நாள், இந்த நேரம் வரும் வரை
யிலும் ஆயத்தமாக வைக்கப்பட்டிருந்
தார்கள். 16 குதிரைப்படையின் எண்
ணிக்கையைச் சொல்லக் கேட்டேன்.
அது இருபது கோடி. 17 நான் கண்ட
திருக்காட்சியில் குதிரைகளையும் அவற்றின்
மீது ஏறியிருந்தவர்களையும் பார்த்தேன்.
அந்தக் காட்சி இதுவே: அவர்கள் அணிந்
திருந்த மார்புக் கவசங்கள் செந்தழல்,
நீலமணி, கந்தக மஞ்சள் நிறமுடையவை.
குதிரைகளின் தலைகள் சிங்கங்களின் தலை
கள் போன்றவை. அவற்றின் வாயினின்று
நெருப்பும் புகையும் கந்தகமும் வெளிப்
பட்டன. 18 அவற்றின் வாயினின்று வெளிப்
பட்ட நெருப்பு, புகை, கந்தகம் ஆகிய
இம்மூன்று வாதைகளாலும் மனிதருள்
மூன்றில் ஒரு பகுதியினர் கொல்லப்பட்டனர்.
19 அந்தக் குதிரைகளின் ஆற்றல்
அவற்றின் வாயிலும் வாலிலும் இருந்தது.
அவற்றின் வால்கள் பாம்புகளைப் போன்
றவை. அவற்றிற்குத் தலை உண்டு; தலை
யினுலேதான் அவை தீங்கிழைக்கும்.

20 இந்த வாதைகளால் கொல்லப்படாம
லிருந்த மற்ற மனிதரிடம் எவ்வகையான
மனமாற்றமும் காணப்படவில்லை. பேய்
களையும் கைளால் செய்யப்பட்ட பொருள்
களையும் பொன், வெள்ளி, செம்பு, கல்,
மரம் ஆகியவற்ருல் செய்யப்பட்டு, பார்க்
கவோ கேட்கவோ நடக்கவோ இயலாத
சிலைகளையும் வணங்குவதை அவர்கள்
விட்டுவிடவில்லை. 21 தாங்கள் செய்து
வந்த கொலைகள், சூனியங்கள், ஒழுக்கக்
கேடான செயல், களவுகள் ஆகியவற்றை
யும் விட்டுவிடவில்லை.

### தெய்வதூதன் கொடுத்த சிறு நூற்சுருள்

10 பிறகு, வல்லமைவாய்ந்த வேருெரு
தெய்வதூதன் வானத்தினின்று
இறங்கிவருகிறதைக் கண்டேன். மேகமே
அவனுக்கு ஆடையாயிருந்தது. அவன்
தலைக்குமேல் ஒளிவட்டம் இருந்தது. அவன்
முகம் கதிரவன் போலவும் கால்கள் நெருப்
புத் தூண்கள் போலவும் இருந்தன.

* அழிவு †அழிப்போன்.
9:3 யாத். 10:12—15. 9:4 எசே. 9:4. 9:6 யோபு 3:21; எரே. 8:3. 9:7 யோவேல் 2:4. 9:8 யோவேல்
1:6. 9:9 யோவேல் 2:5. 9:13 யாத். 30:1—3. 9:20 [illegible] 135:15-17; தானி. 5:23.

2 விரிக்கப்பட்டிருந்த ஒரு சிறு நூற்சுருளை
அவன் தன் கையில் வைத்திருந்தான்.
அவன் தன் வலக்காலைக் கடலின்மீதும்
இடக்காலைத் தரையின்மீதும் வைத்துக்
கொண்டு, 3 சிங்கம் கர்ச்சிப்பதுபோல உரத்
துக் கத்தினான். அப்படி அவன் கத்தின
போது, ஏழு இடிகள் முழக்கமிட்டு ஒரு
செய்தியைத் தெரிவித்தன. 4 ஏழு இடி
களும் செய்தி தெரிவித்தபோது நான் எழு
தப் போனேன். அப்பொழுது ஒரு குரல்,
''அந்த ஏழு இடிகள் தெரிவிக்கும் செய்தியை
உள்ளத்தில் வைத்துக்கொள், எழுதி
வைக்காதே'' என்று வானத்திலிருந்து
சொன்னதைக் கேட்டேன். 5 கடலிலும்
தரையிலும் நிற்கிறவனாக நான் கண்ட
தெய்வதூதன் தன் வலக்கையை வானத்தை
நோக்கி உயர்த்தி, 6 என்றென்றும்
உள்ளவரும் வானத்தையும் அதிலுள்ள
வற்றையும், நிலத்தையும் அதிலுள்ளவற்
றையும், கடலையும் அதிலுள்ளவற்றையும்
படைத்தவருமான கடவுள்மேல் ஆணை
யிட்டு இவ்வாறு கூறினான்: 7 ''இனிக்
காலந்தாழ்த்துதல் இராது. ஏழாம் தூதன்
எக்காளம் ஊதும் காலம் வரும்போது,
கடவுள் தம் அடியாராகிய இறைவாக்
குரைப்போருக்குக் கூறிய அருட்செய்தியின்
படியே, அவர் தம் உள்ளத்தில் வைத்
திருந்த நோக்கம் நிறைவேறித் தீரும்.''
8 நான் கேட்கும்படி வானத்திலிருந்து
பேசின அக்குரல் மீண்டும் என்னோடு
பேசிற்று: ''கடல்மீதும் தரைமீதும் நிற்
கிற தெய்வதூதன் கையில் இருக்கும்
திறந்த நூற் சுருளை நீ போய் வாங்கிக்
கொள்'' என்று அது சொல்லிற்று. 9 நான்
அந்தத் தூதனிடம் போய், அந்தச் சிறு
நூற்சுருளை எனக்குத் தரும்படி கேட்
டேன். அதற்கு அவன், ''இதை வாங்கித்
தின்றுவிடு. இது உன் வயிற்றில் எரிச்சலை
யூட்டும், ஆனால் உன் வாயிலோ தேனைப்
போலத் தித்திக்கும்'' என்று சொன்னான்.
10 நான் அந்தச் சிறு நூற்சுருளைத் தெய்வ
தூதன் கையிலிருந்து வாங்கி அதைத் தின்
றேன். என் வாய்க்கு அது தேனைப்போல
தித்திப்பாயிருந்தது. ஆனால் அதைத் தின்
றதும் என் வயிற்றில் எரிச்சல் உண்டா
யிற்று. 11 அப்பொழுது, ''பல இனத்தவர்,
நாட்டினர், மொழியினர், அரசர் ஆகியோ
ரைக் குறித்து நீ மறுபடியும் இறைவாக்கு
உரைக்க வேண்டும்'' என்று எனக்குச்
சொல்லப்பட்டது.

### இரு சாட்சிகள்

11 பிறகு என்னிடம் ஊன்றுகோல்
போன்றதொரு அளவுகோல் கொடுக்
கப்பட்டது. மேலும், ''எழுந்துபோய்,
கடவுளின் ஆலயத்தையும் பலிபீடத்தையும்
அளவிடு; அங்கே தொழுகிறவர்களையும்
கணக்கிடு. 2 ஆனால், அந்த ஆலயத்துக்கு
வெளியே இருக்கிற முற்றத்தை ஒதுக்கித்
தள்ளிவிடு; அதை அளக்காதே; ஏனெனில்,
அது பிற இனத்தவருக்குக் கொடுக்கப்
பட்டுள்ளது. அவர்கள் திருநகரத்தை நாற்
பத்திரண்டு மாதங்களாக மிதித்துச் சீரழிப்
பார்கள். 3 நான் என் இரு சாட்சிகளை
யும் அனுப்புவேன். அவர்கள் முரட்டுத்
துணி உடுத்திக்கொண்டு, அந்த ஆயி
ரத்து இருநூற்று அறுபது நாளும் இறை
வாக்கு உரைப்பார்கள்'' என்று எனக்குச்
சொல்லப்பட்டது.

4 உலகத்தின் ஆண்டவர்முன் நிற்கும்
இரு ஒலிவ மரங்களும் இரு குத்துவிளக்கு
களும் அவர்களே. 5 அவர்களுக்கு யாரா
வது தீங்கிழைக்கப் பார்த்தால், அவர்
கள் வாயினின்று நெருப்பு வெளிப்பட்டு,
அந்த எதிரிகளைச் சுட்டெரித்துவிடும்.
அவர்களுக்குத் தீங்கிழைக்கப் பார்ப்பவ
னுக்கு இவ்வாறு மரணம் வருவது திண்
ணம். 6 அவர்கள் இறைவாக்கு உரைக்கும்
காலத்தில் மழை பெய்யாதிருக்கும்படி
வானத்தை அடைத்துவிட அவர்களுக்கு
அதிகாரம் உண்டு. தண்ணீரை இரத்த
மாக மாற்றவும், தாங்கள் விரும்பும்
போதெல்லாம் உலகத்தை எல்லா வகை
யான வாதைகளாலும் வாதிக்கவும் அவர்
களுக்கு அதிகாரம் உண்டு. 7 அவர்கள்
தங்கள் சாட்சியத்தைக் கூறி முடிக்கும்
போது, பாதாளக் குழியினின்று
வெளியே ஏறிவரும் விலங்கு அவர்களோடு
போர்புரிந்து அவர்களை வென்றுவிடும்.
8 அவர்களுடைய பிணங்கள் அந்த மாநக
ரத்தின் வீதியில் கிடக்கும். சோதோம்,
எகிப்து என்பவை அந்த நகரத்தின் புனை
பெயர்கள். அதுவே அவர்களுடைய ஆண்
டவர் சிலுவையில் அறையப்பட்ட இடம்.
9 பற்பல இனத்தவர், குலத்தினர்,
மொழியினர், நாட்டினர் அவர்களுடைய
பிணங்களைப் பார்த்துக்கொண்டிருப்பார்
கள்; அவற்றை அடக்கம் செய்ய விட
மாட்டார்கள். 10 அவ்விரு இறைவாக்
குரைப்போரும் உலகில் வாழ்வோரைத் துன்
புறுத்தினபடியால், உலகில் வாழ்வோர்
அவற்றைப் பார்த்துக் களிகூர்ந்து மகிழ்
வார்கள். ஒருவருக்கொருவர் நன்கொடை
களைக் கொடுத்துக்கொள்வார்கள். 11 அந்த
மூன்றரை நாளுக்குப் பின் கடவு
ளிடமிருந்து வந்த உயிர்மூச்சு அவர்களுக்குள்
சென்றது; அவர்கள் காலூன்றி நின்றார்கள்.

**10:5—7** யாத். 20:11; உபா. 32:40; தானி. 12:7; ஆமோஸ் 3:7. **10:8—10** எசே. 2:8—3:3 **11:1** எசே. 40:3; சக. 2:1, 2. **11:2** லூக். 21:24. **11:4** சக. 4:3, 11—14. **11:6** 1 அர. 17:1; யாத். 7:17—19; 1 சாமு. 4:8. **11:7** தானி. 7:7, 21; திருவெளி. 3:5—7; 17:8. **11:8** ஏசா. 1:9, 10. **11:11** எசே. 37:10.

அவர்களைப் பார்த்தவர்களுக்கு மிகுந்த அச்சமுண்டாயிற்று. 12 அப்பொழுது, ''இங்கே ஏறி வாருங்கள்'' என்று ஓர் உரத்த குரல் வானத்திலிருந்து சொன்னதை அவ்விருவரும் கேட்டு, அவர்களுடைய பகைவர் கண்காண மேலே வானத்திற்கு மேகத்தின்மீது சென்றார்கள். 13 அந்நேரத்தில் பெரிய நிலநடுக்கம் உண்டாயிற்று. நகரத்தின் பத்தில் ஒரு பாகம் இடிந்து விழுந்தது. அந்த நிலநடுக்கத்தால் ஏழாயிரம் மனிதர் மடிந்தனர். மீந்திருந்தவர்கள் திகிலடைந்தார்கள். அவர்கள் விண்ணுலகின் கடவுள் மாட்சிமையுள்ளவர் என்பதை ஒப்புக்கொண்டார்கள்.

14 இரண்டாம் வாதை நீங்கிற்று. மூன்றாம் வாதை விரைவில் வரப்போகிறது.

### ஏழாவது எக்காளம்

15 ஏழாம் தெய்வதூதன் எக்காளத்தை ஊதினான். அப்பொழுது விண்ணுலகில் பேரொலிகள் முழங்கி,

''உலகத்தின் அரசாட்சி நம் ஆண்டவருக்கும் அவருடைய கிறிஸ்துவுக்குமே உரியதாயிற்று;
அவர் என்றென்றும் ஆட்சி செலுத்துவார்''

என்று தெரிவித்தன. 16 கடவுள் முன்னிலையில் தங்கள் அரியணைகளில் உட்கார்ந்திருந்த இருபத்து நான்கு மூப்பர்களும் முகங்குப்புற விழுந்து கடவுளைத் தொழுது,

17 ''எல்லாம் வல்ல கடவுளாகிய ஆண்டவரே,
இருக்கிறவரும் இருந்தவரும் நீரே.
உம்மை நன்றியோடு புகழுகிறோம்.
நீர் உமது மாபெரும் வல்லமையைச் செலுத்தி ஆட்சிபுரியத் தொடங்கியிருக்கிறீர்.
18 பிற இனத்தவர் சினங்கொண்டனர்;
உமது சினமும் சீறி எழுந்தது.
இறந்தோருக்குத் தீர்ப்பளிக்கிறதற்கும்
இறைவாக்குரைப்போராகிய உம் அடியாருக்கும்
உமக்குரிய மக்களுக்கும்
உமது திருப்பெயருக்கு அஞ்சி நடக்கிற சிறியோருக்கும் பெரியோருக்கும்
பலன் அளிக்கிறதற்கும்
நிலவுலகைக் கெடுக்கிறவர்களைக் கெடுக்கிறதற்கும்
காலம் வந்துவிட்டது''

என்றார்கள்.

19 அப்பொழுது விண்ணுலகில் கடவுளின் ஆலயம் திறக்கப்பட்டது. அவரது ஆலயத்தில் அவரது உடன்படிக்கைப் பெட்டி காணப்பட்டது. மின்னல்களும் பேரிரைச்சலும் இடியோசைகளும் நிலநடுக்கமும் உண்டாயின; கனத்த கல்மழையும் பெய்தது.

### பெண்ணும் கொடும் பாம்பும்

12 பிறகு வானத்தில் பெரிய அறிகுறி ஒன்று தோன்றிற்று. கதிரவனை ஆடையாக அணிந்திருந்த ஒரு பெண் காணப்பட்டாள். அவள் கால்களின் கீழ் நிலாவும் அவள் தலையில் பன்னிரு விண்மீன்களுள்ள மணிமுடியும் இருந்தன. 2 அவள் கருத்தரித்திருந்தாள். அவளுக்கு நோவெடுக்கவே, அவள் பிள்ளைப்பேறு வேதனையால் கதறினாள். 3 வேறொரு அறிகுறியும் வானத்தில் தோன்றிற்று. அது நெருப்புமயமான பெரிய கொடும் பாம்பு. அதற்கு ஏழு தலைகளும் பத்துக் கொம்புகளும் இருந்தன; தலைகளில் ஏழு மணிமுடிகள் இருந்தன. 4 அது தன் வாலால் வானத்தின் விண்மீன்களில் மூன்றில் ஒரு பாகத்தைச் சுருட்டிப்பிடித்து அதை நிலவுலகின்மீது வீழ்த்திற்று. பிள்ளை பெறப்போகும் நேரத்திலிருந்த அந்தப் பெண்ணின்முன் அக்கொடும் பாம்பு நின்றது; அவள் பிள்ளையைப் பெற்றவுடன் அந்தப் பிள்ளையை விழுங்கிவிடுவதற்காக அது அவ்வாறு நின்றுகொண்டிருந்தது. 5 அவள் ஓர் ஆண் மகனைப் பெற்றெடுத்தாள். எல்லா நாட்டினரையும் இருப்புக்கோலால் ஆண்டு நடத்தப்போகிறவன் அவனே. அந்த ஆண் மகன் பிறந்ததும், அவன் கடவுளண்டைக்கும் அவரது அரியணையண்டைக்கும் எடுத்துக்கொள்ளப்பட்டான். 6 அந்தப் பெண் ஆள் நடமாட்டமில்லாத இடத்திற்கு ஓடிப்போனாள். அவள் ஆயிரத்து இருநூற்று அறுபது நாளுக்குப் பராமரிப்புப் பெறும்படி அங்கே அவளுக்கெனக் கடவுள் ஏற்பாடு செய்திருந்த ஓர் இடம் இருந்தது.

7 பிறகு விண்ணுலகில் போர் மூண்டது. மிகாவேலும் அவனுடைய தூதர்களும் கொடும் பாம்பின்மீது போர் தொடுத்தார்கள். கொடும் பாம்பும் அதன் தூதரும் போரிட்டனர். ஆனால் தோற்கடிக்கப்பட்டனர். 8 அவற்றிற்கு விண்ணுலகில் இருந்த இடமும் இல்லாமற் போயிற்று. 9 இவ்வாறு அந்தப் பெரிய கொடும் பாம்பு வீழ்த்தப்பட்டது. அதுவே ஆதியில் வந்த பாம்பு. அது பிசாசு என்றும் சாத்தான் என்றும் சொல்லப்படும். உலகமனைத்தையும் வஞ்சிப்பதும் அதுவே.

11:12 2 அர. 2:11. 11:13 திருவெளி. 6:12; 16:18. 11:15 யாத். 15:18; தானி. 2:44; 7:14, 27. 11:18 சங். 2:5; 110:5; 115:13. 11:19 திருவெளி. 8:5; 16:18, 21. 12:3 தானி. 7:7. 12:4 தானி. 8:10 12:5 ஏசா. 66:7; சங். 2:9. 12:7 தானி. 10:13, 21; 12:1; யூதா. 9. 12:9 ஆதி. 3:1; லூக். 10:18.

அந்தக் கொடும் பாம்பு நிலவுலகின்மீது
வீழ்த்தப்பட்டது. அதன் தூதர்களும் அத
னோடு வீழ்த்தப்பட்டார்கள். 10 பிறகு விண்
ணுலகில் ஒலித்த உரத்த குரலைக் கேட்
டேன். அது சொன்னதாவது:

''இதுவே கடவுள் அருளும் மீட்பின் வேளை,
அவருடைய வல்லமைக்கும் ஆட்சிக்கும் உரிய வேளை,*
அவருடைய கிறிஸ்துவினது அதிகாரத்தின் வேளை.
நம் சகோதரர்மீது குற்றம் சுமத்துவோன் வீழ்த்தப்பட்டான்;
நம் கடவுளின் முன்னிலையில் நம் சகோதரர்மீது இரவும் பகலும் குற்றம் சுமத்துவோன் வீழ்த்தப்பட்டான்.
11 அவர்கள் ஆட்டுக்குட்டியானவரின் இரத்தத்தினாலும்,
தங்கள் சாட்சியத்தினாலும் அவனை வென்றார்கள்;
தங்கள் உயிர்மீது ஆசை வைக்கவில்லை, சாகத் தயங்கவுமில்லை.
12 விண்ணுலகே, விண்ணுலகில் வாழ்வோரே,
இதை முன்னிட்டுக் களிகூருங்கள்.
ஆனால், நிலமே, கடலே, உங்களுக்கு ஐயோ, கேடு வரும்.
ஏனெனில், பிசாசு தனக்குள்ள காலம் சிறிதே என்பதை அறிந்துகொண்டு,
கடுஞ்சினத்துடன் இறங்கி உங்களிடம் வந்துவிட்டான்''

என்பது.

13 கொடும் பாம்பு தான் நிலவுலகின்
மீது வீழ்த்தப்பட்டதைக் கண்டு, ஆண்
மகனைப் பெற்ற அப்பெண்ணைப் பிடிக்கச்
சென்றது. 14 ஆனால், அவளுக்கு ஆள் நட
மாட்டமில்லாத வெளியில் தன் இடத்திற்
குப் பறந்து செல்லும்படி பெருங் கழுகின்
இரு சிறகுகள் அளிக்கப்பட்டன. அங்கே
அந்தக் கொடும் பாம்புக்கு எட்டாத
அந்த இடத்தில் அவள் மூன்றரை ஆண்டு†
பராமரிக்கப்படுவாள். 15 எனவே, வெள்
ளம் அப்பெண்ணை அடித்துக்கொண்டு
போகும்படி, கொடும் பாம்பு தண்ணீ
ரைத் தன் வாயினின்று ஆறுபோல அவள்
பின்னே பாய்ந்தோடச் செய்தது. 16 ஆனால்
நிலவுலகு அப்பெண்ணுக்கு உதவி செய்
தது. அது தன் வாயைத் திறந்து, கொடும்
பாம்பு தன் வாயினின்று பாயச் செய்த
ஆற்று நீரை உறிஞ்சிவிட்டது. 17 அப்
பொழுது கொடும் பாம்பு அப்பெண்மீது
சினங்கொண்டு, அவளுடைய மர
பினருள் மீந்திருந்தவர்களோடு போர்
தொடுக்கச் சென்றது. அவர்கள் கடவு
ளின் திருக்கட்டளைகளைக் கடைப்பிடித்து
வந்தவர்கள்; இயேசுவின் சாட்சியத்தை
உள்ளத்தில் கொண்டவர்கள். 18 அந்தக்
கொடும் பாம்பு வந்து கடற்கரை மணலில்
நின்றது.‡

### இரு விலங்குகள்

13 அப்பொழுது கடலிலிருந்து ஒரு விலங்கு
எழுந்து வருகிறதைக் கண்டேன்.
அதற்குப் பத்துக் கொம்புகளும் ஏழு
தலைகளும் இருந்தன. அதன் கொம்பு
களில் பத்து மணிமுடிகளும் அதன் ஒவ்
வொரு தலையிலும் தெய்வ நிந்தனையான
ஒரு பெயரும் இருந்தது. 2 நான் கண்ட
விலங்கு சிவிங்கியைப்போல இருந்தது.
அதன் கால்கள் கரடியின் கால்களைப்
போலவும் அதன் வாய் சிங்கத்தின்
வாயைப் போலவும் இருந்தன. அதற்கு
அந்தக் கொடும் பாம்பு தன் வல்லமை
யையும் தன் அரியணையையும் பேரதி
காரத்தையும் அளித்தது. 3 அதன் தலை
களுள் ஒன்றில் அதைச் சாகடிக்கக்கூடிய
காயம் ஒன்று இருப்பதுபோலத் தோன்
றிற்று. ஆனால், சாகடிக்கக்கூடிய அந்தக்
காயம் ஆறியிருந்தது. அந்த விலங்கின்
பின்னே உலகத்தார் அனைவரும் வியப்
புடன் சென்றனர். 4 அந்த விலங்கிற்கு
அதிகாரமளித்தது அந்தக் கொடும் பாம்
பானதால், அந்தப் பாம்பை அவர்கள்
வணங்கினார்கள். மேலும், அவர்கள் அந்த
விலங்கையும் வணங்கி, ''இந்த விலங்கிற்கு
ஒப்பானவர் யார்? இதனோடு போரிடக்
கூடியவன் யார்?'' என்று சொன்னார்கள்.
5 அந்த விலங்கிற்கு வீண்பெருமையும்
தெய்வ நிந்தனையும் நிறைந்த வார்த்தை
களைப் பேசும் வாய் அளிக்கப்பட்டது;
நாற்பத்திரண்டு மாதம் வரையில் தான்
விரும்பியதெல்லாம் செய்ய அதற்கு அதி
காரமும் அளிக்கப்பட்டது. 6 அது கட
வுளுக்கு விரோதமாக நிந்தனை பேசத் தன்
வாயைத் திறந்து, அவரது திருப்பெயரை
யும் அவரது இருப்பிடத்தையும், விண்
ணுலக இருப்பிடமாகக் கொண்டவர்களை
யும் நிந்தித்தது. 7 கடவுளுக்குரிய மக்க
ளோடு போரிட்டு அவர்களை வெல்லவும்
அதற்கு அனுமதி அளிக்கப்பட்டது. அதுவு
மன்றி, எல்லாக் குலத்தினர், இனத்
தவர், மொழியினர், நாட்டினர்மேலும்
அதற்கு அதிகாரம் அளிக்கப்பட்டது.
8 உலகில் வாழும் யாவரும், அதாவது
உலகத் தோற்றம் முதற்கொண்டே

* 'கடவுளுடைய வெற்றிக்கும் வல்லமைக்கும் ஆட்சிக்கும் உரிய வேளை' என்றும் மொழிபெயர்க்கலாம்.
† மூன்றரை ஆண்டு: மூலத்தில், ஒரு காலப்பகுதி, காலப்பகுதிகள், அரைக் காலப்பகுதி என்றிருக்கிறது.
‡ 'நான் கடற்கரை மணலில் நின்றேன்' என்பது முக்கியமெனக் கருதப்படாத பிரதிகளின் பாடம்.

**12:10** யோபு 1:9—11; சக. 3:1. **12:14** தானி. 7:25; 12:7. **13:1** தானி. 7:3; திருவெளி. 17:3, 7—12. **13:2** தானி. 7:4—6. **13:5, 6** தானி. 7:8, 25; 11:36. **13:7** தானி. 7:21. **13:8** சங். 69:28.

கொல்லப்படுவதற்கென்று ஒப்படைக்கப்
பட்டவரான ஆட்டுக்குட்டியானவர்
வைத்திருக்கும் மெய்வாழ்வுக்குரியவர்
அட்டவணையில் பேரெழுதப்படாத
யாவரும்* அதை வணங்குவர்.

9 கேட்டுணரும் காது ஒருவனுக்கு இருந்
தால் அவன் இதைக் கேட்டுணரட்டும்.
10 சிறைக்கெனக் குறிக்கப்பட்டிருப்பவன்
சிறைக்குச் செல்வான். வாளால் கொல்
லப்பட வேண்டியவன் வாளால் கொல்
லப்படுவான். இந்நிலையிலேதான் கடவு
ளுக்குரிய மக்களின் பொறுமையும் நம்
பிக்கையும் வெளிப்படையாக விளங்கும்.

11 பிறகு வேறொரு விலங்கு நிலவுலகி
லிருந்து எழுந்து வருகிறதைக் கண்டேன்.
ஆட்டுக்குட்டியின் கொம்புகளைப் போன்ற
இரு கொம்புகள் அதற்கு இருந்தன.
12 ஆனால், அது கொடும் பாம்பைப்
போலப் பேசிற்று. அது முதலாம் விலங்கின்
முழு அதிகாரத்தையும் தானே அதன்முன்
செலுத்தி, சாகடிக்கக்கூடிய காயம்
ஆறியிருந்த அந்த முதலாம் விலங்கை
உலகமும் அதில் வாழ்வோரும் வணங்கும்
படி செய்தது. 13 செய்தற்கரிய பெரிய
செயல்களையும் அது செய்தது; மனிதர்
காண, வானத்தினின்று நிலவுலகின்மேல்
நெருப்பு இறங்கி வரும்படிகூடச் செய்தது.
14 இவ்வாறு அது அந்த முதலாம் விலங்
கின்முன் செய்யும்படி அனுமதிக்கப்பட்ட
அச்செயல்களைக் கொண்டு உலகில் வாழ்
வோரை வஞ்சித்தது; வாளினால் காயப்
பட்டும் பிழைத்திருந்த அந்த விலங்கிற்குச்
சிலை அமைக்க வேண்டுமென்று உலகில்
வாழ்வோருக்கு அது சொல்லிற்று. 15 அந்த
விலங்கின் சிலை பேசவும், தன்னை வணங்
காதவர்களைக் கொன்றுவிடும்படி செய்ய
வும் அதற்கு உயிரளிக்குமாறு இரண்டாம்
விலங்கிற்கு அதிகாரம் அளிக்கப்பட்டது.
16 அது சிறியோர், பெரியோர், செல்வர்,
எளியவர், அடிமைகள், அடிமையல்லாத
வர்கள் ஆகிய அனைவரும் தத்தம் வலக்
கையிலாவது நெற்றியிலாவது ஓர் அடை
யாளத்தைப் போட்டுக்கொள்ளும்படி கட்
டாயப்படுத்திற்று. 17 அவ்வாறு அடை
யாளம் போட்டுக்கொள்ளாத எவனும்
வாங்கவோ விற்கவோ கூடாதென்று
தடுத்தது. அந்த அடையாளம் அவ்விலங்
கின் பெயர் அல்லது அதன் பெயரைக்
குறிக்கும் இலக்கமாகும். 18 இதை விளங்
கிக்கொள்ள அறிவுக்கூர்மை தேவை. கூர்ந்த
அறிவுள்ளவன் விலங்கின் இலக்கத்தைக்
கணித்துப் பார்த்துக் கண்டுகொள்ளட்டும்.
அது ஒரு மனிதனைக் குறிக்கும் இலக்கம்.
அது அறுநூற்று அறுபத்தாறு.

## மீட்புப்பெற்றோர் பாட்டுப் பாடுதல்

14 மேலும் பார்த்தேன். இதோ, சீயோன்
மலையில் ஆட்டுக்குட்டியானவர்
நின்றுகொண்டிருந்தார். அவரோடு
இலட்சத்து நாற்பத்து நாலாயிரம் பேர்
இருந்தனர். அவர்கள் நெற்றிகளில் அவரது
திருப்பெயரும் அவருடைய தந்தை
யாரின் திருப்பெயரும் எழுதப்பட்டிருந்தன.
2 பிறகு விண்ணுலகினின்று ஒரு குரல்
கேட்டது. அது பெரு வெள்ளத்தின்
இரைச்சல் போலவும், பெரிய இடியோசை
போலவும் ஒலித்தது. நான் கேட்ட
குரலானது சுரமண்டலத்தை வாசிப்பவர்கள்
தங்கள் சுரமண்டலங்களை வாசிப்பது
போலவும் இருந்தது. 3 அவர்கள் அரியணையின்
முன்னிலையில் நான்கு உயிரிகளுக்கும்
மூப்பர்களுக்கும்முன் புதியதொரு பாட்
டைப் பாடினார்கள். உலகினின்று விலை
கொடுத்து வாங்கப்பட்ட இலட்சத்து
நாற்பத்து நாலாயிரம் பேரைத் தவிர
வேறெவராலும் அந்தப் பாட்டைக் கற்றுக்
கொள்ள இயலவில்லை. 4 அவர்கள் பெண்
களோடு சேர்ந்து தங்களைக் கறைப்படுத்திக்
கொள்ளாதவர்கள், கற்பைக் காத்துக்
கொண்டவர்கள். அவர்கள் ஆட்டுக்குட்டி
யானவர் செல்லும் இடமெல்லாம்
அவரைப் பின்பற்றிச் செல்பவர்கள்; கட
வுளுக்கும் ஆட்டுக்குட்டியானவருக்கும்
உரிய முதற்பலனாக மனித குலத்தினின்று
விலைகொடுத்து வாங்கப்பட்டவர்கள்.
5 அவர்கள் பேச்சில் பொய் காணப்பட
வில்லை, அவர்கள் மாசற்றவர்களாயிருந்
தார்கள்.

## மூன்று தெய்வதூதரின் அறிவிப்பு

6 பிறகு வேறொரு தெய்வதூதன் நடு
வானத்தில் பறந்து போகிறதைக் கண்
டேன். அவன் எல்லாக் காலத்திற்குமுரிய
அருட்செய்தியை உலகில் வாழ்வோருக்கு,
அதாவது எல்லா நாட்டினர், குலத்தினர்,
மொழியினர், இனத்தவருக்கும் அறி
விப்பதற்காகச் சென்றான். 7 அவன் உரத்த
குரலில், ''கடவுளுக்கு அஞ்சுங்கள், அவரது
மாட்சிமையை விளங்கச் செய்யுங்கள்.
ஏனென்றால், அவர் தீர்ப்பளிக்கும் நேரம்
வந்துவிட்டது. விண்ணையும் மண்ணை
யும் கடலையும் நீரூற்றுகளையும் உண்டாக்
கினவரையே தொழுங்கள்'' என்று
கூறினான்.

* 'உலகில் வாழும் யாவரும், அதாவது கொல்லப்படுவதற்கென்று ஒப்படைக்கப்பட்டவரான ஆட்டுக்குட்டியானவர் வைத்திருக்கும் மெய்வாழ்வுக்குரியவர் அட்டவணையில் உலகத்தோற்றம் முதற்கொண்டே பேரெழுதப்படாத யாவரும்' என்றும் மொழிபெயர்க்கலாம். (திருவெளி. 17:8 பார்க்க).

13:19 எரே. 15:2; 43:11. 14:1 எசே. 9:4; திருவெளி. 7:3. 14:5 செப். 3:13.

8 அவனுக்குப் பின்னல் இரண்டாம்
தெய்வதூதன் வந்து, ''வீழ்ந்தது! பாபி
லோன் வீழ்ந்தது! ஒழுக்கக் கேட்டின்
காமவெறி என்னும் மதுவை எல்லா நாட்
டினருக்கும் குடிக்கக் கொடுத்த மாபெரும்
பாபிலோன் வீழ்ந்தது!'' என்ருன்.

9 அவர்களுக்குப் பின்னல் மூன்ரும்
தெய்வதூதன் வந்து, உரத்த குரலில்,
''எவனுவது விலங்கையும் அதன் சிலையையும்
வணங்கி, தன் நெற்றியிலாவது தன்
கையிலாவது அதன் அடையாளத்தைப்
பெற்றுக்கொள்வானுனல், 10 அவன் கட
வுளின் கடுஞ்சினமாகிய கசப்பு மதுவைக்
குடிக்க நேரிடும். அது அவரது சினம்
என்னும் பாத்திரத்தில் ஊற்றி வைக்கப்
பட்ட கலப்புருத கசப்பு மது. அவன்
மாசற்ற தெய்வதூதர் முன்னும் ஆட்டுக்
குட்டியானவர் முன்னும் நெருப்பினுலும்
கந்தகத்தினுலும் வாதிக்கப்படுவான்.
11 அவர்களுடைய வாதையின் புகை என்
றென்றும் மேலே எழும்பும். அந்த விலங்
கையும் அதன் சிலையையும் வணங்குகிற
வர்களுக்கும், அதன் பெயரின் அடையா
ளத்தைப் பெற்றுக்கொள்கிற எவனுக்கும்
இரவும் பகலும் இளைப்பாறுதலே இராது.
12 கடவுளின் திருக்கட்டளைகளையும் இயேசு
வைப்பற்றும் நம்பிக்கையையும் கடைப்
பிடித்து நடக்கிற கடவுளுக்குரிய மக்களின்
பொறுமை இந்நிலையிலேதான் வெளிப்
படையாக விளங்கும்'' என்று கூறினன்.

13 பிறகு விண்ணுலகில் ஒலித்த ஒரு
குரலைக் கேட்டேன். அந்தக் குரல், ''இது
முதல் ஆண்டவரோடு இணைக்கப்பட்டவர்
களாய் மரணமடைகிறவர்கள் நற்பேறு
பெற்றவர்கள் என்றெழுது, இனி அவர்
கள் உழைப்பினின்று நீங்கி இளைப்பாறு
வார்கள். ஏனெனில், அவர்களுடைய
செயல்களின் நற்பலன் அவர்களுக்குக்
கிட்டுவது திண்ணம் என்று ஆவியானவர்
சொல்லுகிருர்'' என்றது.

## உலகின் அறுவடைக் காலம்

14 மேலும் பார்த்தேன். இதோ, வெண்
மையான ஒரு மேகம் காணப்பட்டது.
அந்த மேகத்தின்மீது மனுமைந்தரைப்
போன்ற ஒருவர் உட்கார்ந்திருந்தார்.
அவர் தலையில் பொன் முடியும் அவர்
கையில் கூர்மையான அரிவாளும் இருந்
தன. 15 அப்பொழுது வேறொரு தெய்வ
தூதன் திருக்கோவிலிலிருந்து வெளியே
வந்தான். அவன் மேகத்தின்மீது அமர்ந்
திருந்தவரைப் பார்த்து, ''அறுவடை
செய்யக் காலம் வந்துவிட்டது; உலகின்
பயிர் முற்றிவிட்டது; அறுவடை செய்ய
உமது அரிவாளை எடுத்துக் கையில் ஏந்
தியருளும்'' என்று உரத்துக் கத்தினன்.
16 மேகத்தின்மீது அமர்ந்திருந்தவர் தமது
அரிவாளை உலகில் வீசினுர்; உலகம் அறு
வடையாயிற்று.

17 வேறொரு தெய்வதூதன் விண்ணுல
கிலுள்ள திருக்கோவிலிலிருந்து வெளியே
வந்தான். அவனிடமும் கூர்மையான ஓர்
அரிவாள் இருந்தது. 18 இன்னுமொரு
தெய்வதூதன் பீடத்திலிருந்து வந்தான்.
இவன் நெருப்பின்மேல் அதிகாரமுள்ளவன்.
இவன் கூர்மையான அரிவாளை
வைத்திருப்பவனைப் பார்த்து, ''கூர்மை
யான உன் அரிவாளை எடுத்து, உலகின்
திராட்சைக் குலைகளை அறுத்துவிடு; அதன்
பழங்கள் கனிந்துவிட்டன'' என்று உரத்
துக் கத்தினன். 19 அந்தத் தெய்வதூதன்
தன் அரிவாளை உலகில் வீசி, உலகின்
திராட்சைக் குலைகளை அறுத்து அவற்றைக்
கடவுளின் கடுஞ்சினம் என்னும் பெரிய
ஆலையில் போட்டான். 20 நகரத்திற்கு
வெளியே இருந்த அந்த ஆலையில் அவை
மிதிக்கப்பட்டன. அந்த ஆலையிலிருந்து
இரத்த வெள்ளம் குதிரைக் கழுத்தள
வுக்கு ஆயிரத்து அறுநூறு இஸ்தாதி*
தொலைவு பாய்ந்தோடிற்று.

## வாதைகளை வைத்திருந்த தெய்வதூதர்

15 பிறகு, பெரியதும் வியப்பிற்கு உரி
யதுமான வேருேர் அறிகுறியை விண்
ணுலகில் கண்டேன். அதில் ஏழு தெய்வ
தூதர்கள் ஏழு வாதைகளுடன் காணப்
பட்டார்கள்; அவையே கடைசியான
வாதைகள். அவற்ருேடு கடவுளின் கடுஞ்
சினம் முடிவுறும்.

2 நெருப்புக் கலந்துள்ள கண்ணுடிக்
கடல் போன்றதொன்றையும் நான் கண்
டேன். விலங்கினின்றும் அதன் சிலையி
னின்றும் அதன் பெயரைக் குறிக்கும்
இலக்கத்தினின்றும் தப்பி வெற்றிபெற்ற
வர்கள் கடவுள் தந்த சுரமண்டலங்களை
வைத்துக்கொண்டு அந்தக் கண்ணுடிக்
கடலருகே நின்றுகொண்டிருந்தார்கள்.
3 அவர்கள் கடவுளின் அடியாளுகிய மோசே
யின் பாடலையும் ஆட்டுக்குட்டியானவரின்
பாடலையும் பாடினுர்கள்.

''எல்லாம் வல்ல கடவுளே,
ஆண்டவரே,

* ஓர் இஸ்தாதி ஏறத்தாழ 190 மீட்டருக்குச் சமம்.
14:8 ஏசா. 21:9; எரே. 51:8; திருவெளி. 18:2. 14:10 ஏசா. 51:17; ஆதி. 18:24; எசே. 38:22. 14:11 ஏசா. 34:10. 14:14 தானி. 7:13. 14:15 யோவேல். 3:13. 14:20 ஏசா. 63:3; புலம்பல் 1:15; திருவெளி. 19:15 15:3 யாத். 15:1.

உம் செயல்கள் மாட்சிமிக்கவை, வியக்கத்
தக்கவை.
அனைத்து உலகிற்கும் அரசரே,
உம் வழிகள் நியாயமானவை, உண்மை
யானவை.
4 ஆண்டவரே, யாரால் உமக்கு
அஞ்சாமல் இருக்கக் கூடும்?
யாரால் உமது திருப்பெயரைப்
போற்றிப் புகழாமல் இருக்கக் கூடும்?
தூயர் நீர் ஒருவரே.
அனைத்து உலகமும் உம்முன் வந்து
பணியும்.
உம்முடைய நீதியான செயல்கள்
வெளிப்படையாகிவிட்டன.''

5 இதற்குப்பின் நான் பார்த்தபோது
விண்ணுலகில் கடவுளின் திருச்சமுகத்
திற்கு அடையாளமான கூடாரமாகிய
திருக்கோவில் திறக்கப்பட்டது. 6 அந்தக்
கோவிலிலிருந்து ஏழு வாதைகளையுடைய
அந்த ஏழு தெய்வதூதர்களும் வெளியே
வந்தார்கள். அவர்கள் தூயதும் ஒளி
பொருந்தியதுமான உடை உடுத்தி மார்பில்
பொன்னாலான பட்டையைக் கட்டி
யிருந்தார்கள். 7 அந்த நான்கு உயிரிகளுள்
ஒன்று என்றென்றுமுள்ள கடவுளின் கடுஞ்
சினத்தால் நிறைக்கப்பட்ட ஏழு பொற்
கலசங்களை அந்த ஏழு தெய்வதூதர்களுக்கும்
கொடுத்தது. 8 அப்பொழுது கடவுளின்
மாட்சிமையாலும் வல்லமையாலும்
திருக்கோவில் புகை நிறைந்ததாயிற்று.
ஏழு தெய்வதூதர்களும் வைத்திருந்த
ஏழு வாதைகளும் முடிவுறும்வரை எவரா
லும் திருக்கோவிலுக்குள் செல்ல இயல
வில்லை.

### கடவுளின் கடுஞ்சினக் கலசங்கள்

16 அப்பொழுது திருக்கோவிலினின்று
ஒலித்த உரத்த குரல் ஒன்று, ''நீங்
கள் புறப்பட்டுப்போய், கடவுளின் கடுஞ்
சினக் கலசங்கள் ஏழிலும் உள்ளதை உல
கின்மேல் ஊற்றிவிடுங்கள்'' என்று அந்த
ஏழு தெய்வ தூதர்களுக்கும் சொன்ன
தைக் கேட்டேன்.

2 முதலாம் தெய்வதூதன் புறப்பட்டுப்
போய்த் தன் கலசத்திலுள்ளதை உலகின்
மேல் ஊற்றவே, விலங்கின் அடையாளத்
தைப் பெற்று, அதன் சிலையை வணங்கின
மனிதர்மேல் கேடு விளைவிக்கும் கொடிய
புண்கள் உண்டாயின.

3 இரண்டாம் தெய்வதூதன் தன் கல
சத்திலுள்ளதைக் கடலில் ஊற்றவே, அது
இறந்துபோனவனின் இரத்தம் போலா
யிற்று; கடலிலுள்ள உயிரிகள் யாவும்
மடிந்தன.

4 மூன்றும் தெய்வதூதன் தன் கலசத்தி
லுள்ளதை ஆறுகளிலும் நீரூற்றுகளிலும்
ஊற்றவே, அவை இரத்தமயமாயின.
5 அப்பொழுது நீர்நிலைகளுக்குரிய
தெய்வதூதன், ''இருக்கிறவரே, இருந்த
வரே, தூயரே, நீர் இப்படித் தீர்ப்பளித்து
உமது நீதியை விளங்கச் செய்தீர். 6 மனி
தர், கடவுளுக்குரிய மக்களின் இரத்தத்
தையும் இறைவாக்குரைப்போரின் இரத்
தத்தையும் சிந்தினபடியால், அவர்களுக்கு
இரத்தத்தை நீர் குடிக்கக் கொடுத்தீர்;
அதுவே அவர்களுக்குத் தகுந்தது'' என்று
சொன்னதைக் கேட்டேன். 7 அப்பொழுது,
''ஆம், எல்லாம் வல்ல கடவுளாகிய ஆண்
டவரே, உம்முடைய தீர்ப்புகள் உண்மை
யும் நீதியுமானவையே'' என்று பலி
பீடமே சொன்னதைக் கேட்டேன்.

8 நான்காம் தெய்வதூதன் தன் கல
சத்திலுள்ளதைக் கதிரவன்மீது ஊற்றவே,
அது தன் சுடரினால் மனிதரைப் பொசுக்
கும் வன்மை பெற்றது. 9 மக்கள் கடு
மையான வெப்பத்தால் பொசுக்கப்பட்ட
போதிலும், இந்த வாதைகளால் வதைக்க
அதிகாரமுள்ள கடவுளின் திருப்பெயரை
அவர்கள் பழித்தார்களேயன்றி, மனமாற்ற
மடைந்து அவரைப் புகழ்ந்து போற்ற
வில்லை.

10 ஐந்தாம் தெய்வதூதன் தன் கல
சத்திலுள்ளதை அந்த விலங்கின் அரியணை
யின்மீது ஊற்றவே, அதன் அரசு இருண்
டது; கடுந்துன்பத்தால் மக்கள் தங்கள்
நாக்கைக் கடித்துக்கொண்டார்கள். 11 அவர்
கள் தங்களுக்கிருந்த கடுந்துன்பம் காரண
மாகவும் தங்களுடைய புண்கள் காரண
மாகவும் விண்ணுலகக் கடவுளைப் பழித்
தார்களேயன்றி, மனமாற்றமடைந்து தங்
கள் செய்கைகளை விட்டுவிடவில்லை.

12 ஆறும் தெய்வதூதன் தன் கலசத்
திலுள்ளதை ஐபிராத்து என்னும் மாபெ
ரும் ஆற்றில் ஊற்றவே அதன் தண்ணீர்
வற்றிப்போயிற்று. அதனால் கதிரவன்
எழும் திசையிலிருந்து வரும் அரசர்களுக்கு
வழி ஆயத்தமாயிற்று.

13 பிறகு, கொடும் பாம்பின் வாயி
னின்றும் விலங்கின் வாயினின்றும் பொய்
யாக இறைவாக்குரைப்போரின் வாயி
னின்றும் தவளைகளின் உருவில் மூன்று

15:4 எரே. 10:7. 15:5 யாத். 38:21. 15:8 யாத். 40:34; 1 அர. 8:10, 11; 2 வரலாறு. 5:13, 14; ஏசா. 6:4. 16:2 யாத். 9:10. 16:4 யாத். 7:17—21; சங். 78:44. 16:10 யாத். 10:21. 16:12 ஏசா. 11:15.

8 அவனுக்குப் பின்னால் இரண்டாம்
தெய்வதூதன் வந்து, ''வீழ்ந்தது! பாபி
லோன் வீழ்ந்தது! ஒழுக்கக் கேட்டின்
காமவெறி என்னும் மதுவை எல்லா நாட்
டினருக்கும் குடிக்கக் கொடுத்த மாபெரும்
பாபிலோன் வீழ்ந்தது!'' என்றான்.

9 அவர்களுக்குப் பின்னால் மூன்றாம்
தெய்வதூதன் வந்து, உரத்த குரலில்,
''எவனாவது விலங்கையும் அதன் சிலையையும்
வணங்கி, தன் நெற்றியிலாவது தன்
கையிலாவது அதன் அடையாளத்தைப்
பெற்றுக்கொள்வானானால், 10 அவன் கட
வுளின் கடுஞ்சினமாகிய கசப்பு மதுவைக்
குடிக்க நேரிடும். அது அவரது சினம்
என்னும் பாத்திரத்தில் ஊற்றி வைக்கப்
பட்ட கலப்புறாத கசப்பு மது. அவன்
மாசற்ற தெய்வதூதர் முன்னும் ஆட்டுக்
குட்டியானவர் முன்னும் நெருப்பினாலும்
கந்தகத்தினாலும் வாதிக்கப்படுவான்.
11 அவர்களுடைய வாதையின் புகை என்
றென்றும் மேலே எழும்பும். அந்த விலங்
கையும் அதன் சிலையையும் வணங்குகிற
வர்களுக்கும், அதன் பெயரின் அடையா
ளத்தைப் பெற்றுக்கொள்கிற எவனுக்கும்
இரவும் பகலும் இளைப்பாறுதலே இராது.
12 கடவுளின் திருக்கட்டளைகளையும் இயேசு
வைப்பற்றும் நம்பிக்கையையும் கடைப்
பிடித்து நடக்கிற கடவுளுக்குரிய மக்களின்
பொறுமை இந்நிலையிலேதான் வெளிப்
படையாக விளங்கும்'' என்று கூறினான்.

13 பிறகு விண்ணுலகில் ஒலித்த ஒரு
குரலைக் கேட்டேன். அந்தக் குரல், ''இது
முதல் ஆண்டவரோடு இணைக்கப்பட்டவர்
களாய் மரணமடைகிறவர்கள் நற்பேறு
பெற்றவர்கள் என்றெழுது, இனி அவர்
கள் உழைப்பினின்று நீங்கி இளைப்பாறு
வார்கள். ஏனெனில், அவர்களுடைய
செயல்களின் நற்பலன் அவர்களுக்குக்
கிட்டுவது திண்ணம் என்று ஆவியானவர்
சொல்லுகிறார்'' என்றது.

## உலகின் அறுவடைக் காலம்

14 மேலும் பார்த்தேன். இதோ, வெண்
மையான ஒரு மேகம் காணப்பட்டது.
அந்த மேகத்தின்மீது மனுமைந்தரைப்
போன்ற ஒருவர் உட்கார்ந்திருந்தார்.
அவர் தலையில் பொன் முடியும் அவர்
கையில் கூர்மையான அரிவாளும் இருந்
தன. 15 அப்பொழுது வேறொரு தெய்வ
தூதன் திருக்கோவிலிலிருந்து வெளியே
வந்தான். அவன் மேகத்தின்மீது அமர்ந்
திருந்தவரைப் பார்த்து, ''அறுவடை
செய்யக் காலம் வந்துவிட்டது; உலகின்
பயிர் முற்றிவிட்டது; அறுவடை செய்ய
உமது அரிவாளை எடுத்துக் கையில் ஏந்
தியருளும்'' என்று உரத்துக் கத்தினான்.
16 மேகத்தின்மீது அமர்ந்திருந்தவர் தமது
அரிவாளை உலகில் வீசினார்; உலகம் அறு
வடையாயிற்று.

17 வேறொரு தெய்வதூதன் விண்ணுல
கிலுள்ள திருக்கோவிலிலிருந்து வெளியே
வந்தான். அவனிடமும் கூர்மையான ஓர்
அரிவாள் இருந்தது. 18 இன்னுமொரு
தெய்வதூதன் பீடத்திலிருந்து வந்தான்.
இவன் நெருப்பின்மேல் அதிகாரமுள்ளவன்.
இவன் கூர்மையான அரிவாளை
வைத்திருப்பவனைப் பார்த்து, ''கூர்மை
யான உன் அரிவாளை எடுத்து, உலகின்
திராட்சைக் குலைகளை அறுத்துவிடு; அதன்
பழங்கள் கனிந்துவிட்டன'' என்று உரத்
துக் கத்தினான். 19 அந்தத் தெய்வதூதன்
தன் அரிவாளை உலகில் வீசி, உலகின்
திராட்சைக் குலைகளை அறுத்து அவற்றைக்
கடவுளின் கடுஞ்சினம் என்னும் பெரிய
ஆலையில் போட்டான். 20 நகரத்திற்கு
வெளியே இருந்த அந்த ஆலையில் அவை
மிதிக்கப்பட்டன. அந்த ஆலையிலிருந்து
இரத்த வெள்ளம் குதிரைக் கழுத்தள
வுக்கு ஆயிரத்து அறுநூறு இஸ்தாதி*
தொலைவு பாய்ந்தோடிற்று.

## வாதைகளை வைத்திருந்த தெய்வதூதர்

15 பிறகு, பெரியதும் வியப்பிற்கு உரி
யதுமான வேறோர் அறிகுறியை விண்
ணுலகில் கண்டேன். அதில் ஏழு தெய்வ
தூதர்கள் ஏழு வாதைகளுடன் காணப்
பட்டார்கள்; அவையே கடைசியான
வாதைகள். அவற்றோடு கடவுளின் கடுஞ்
சினம் முடிவுறும்.

2 நெருப்புக் கலந்துள்ள கண்ணாடிக்
கடல் போன்றதொன்றையும் நான் கண்
டேன். விலங்கினின்றும் அதன் சிலையி
னின்றும் அதன் பெயரைக் குறிக்கும்
இலக்கத்தினின்றும் தப்பி வெற்றிபெற்ற
வர்கள் கடவுள் தந்த சுரமண்டலங்களை
வைத்துக்கொண்டு அந்தக் கண்ணாடிக்
கடலருகே நின்றுகொண்டிருந்தார்கள்.
3 அவர்கள் கடவுளின் அடியானாகிய மோசே
யின் பாடலையும் ஆட்டுக்குட்டியானவரின்
பாடலையும் பாடினார்கள்.
''எல்லாம் வல்ல கடவுளே,
ஆண்டவரே,

* ஓர் இஸ்தாதி ஏறத்தாழ 190 மீட்டருக்குச் சமம்.
14:8 ஏசா. 21:9; எரே. 51:8; திருவெளி. 18:2. 14:10 ஏசா. 51:17; ஆதி. 18:24; எசே. 38:22. 14:11 ஏசா. 34:10. 14:14 தானி. 7:13. 14:15 யோவேல். 3:13. 14:20 ஏசா. 63:3; புலம்பல் 1:15; திருவெளி. 19:15 15:3 யாத். 15:1.

உம் செயல்கள் மாட்சிமிக்கவை, வியக்கத்
தக்கவை.
அனைத்து உலகிற்கும் அரசரே,
உம் வழிகள் நியாயமானவை, உண்மை
யானவை.
4 ஆண்டவரே, யாரால் உமக்கு
அஞ்சாமல் இருக்கக் கூடும்?
யாரால் உமது திருப்பெயரைப்
போற்றிப் புகழாமல் இருக்கக் கூடும்?
தூயர் நீர் ஒருவரே.
அனைத்து உலகமும் உம்முன் வந்து
பணியும்.
உம்முடைய நீதியான செயல்கள்
வெளிப்படையாகிவிட்டன.''

5 இதற்குப்பின் நான் பார்த்தபோது
விண்ணுலகில் கடவுளின் திருச்சமுகத்
திற்கு அடையாளமான கூடாரமாகிய
திருக்கோவில் திறக்கப்பட்டது. 6 அந்தக்
கோவிலிலிருந்து ஏழு வாதைகளையுடைய
அந்த ஏழு தெய்வதூதர்களும் வெளியே
வந்தார்கள். அவர்கள் தூயதும் ஒளி
பொருந்தியதுமான உடை உடுத்தி மார்பில்
பொன்னாலான பட்டையைக் கட்டி
யிருந்தார்கள். 7 அந்த நான்கு உயிரிகளுள்
ஒன்று என்றென்றுமுள்ள கடவுளின் கடுஞ்
சினத்தால் நிறைக்கப்பட்ட ஏழு பொற்
கலசங்களை அந்த ஏழு தெய்வதூதர்களுக்கும்
கொடுத்தது. 8 அப்பொழுது கடவுளின்
மாட்சிமையாலும் வல்லமையாலும்
திருக்கோவில் புகை நிறைந்ததாயிற்று.
ஏழு தெய்வதூதர்களும் வைத்திருந்த
ஏழு வாதைகளும் முடிவுறும்வரை எவரா
லும் திருக்கோவிலுக்குள் செல்ல இயல
வில்லை.

## கடவுளின் கடுஞ்சினக் கலசங்கள்

16 அப்பொழுது திருக்கோவிலிலிருந்து
ஒலித்த உரத்த குரல் ஒன்று, ''நீங்
கள் புறப்பட்டுப்போய், கடவுளின் கடுஞ்
சினக் கலசங்கள் ஏழிலும் உள்ளதை உல
கின்மேல் ஊற்றிவிடுங்கள்'' என்று அந்த
ஏழு தெய்வ தூதர்களுக்கும் சொன்ன
தைக் கேட்டேன்.

2 முதலாம் தெய்வதூதன் புறப்பட்டுப்
போய்த் தன் கலசத்திலுள்ளதை உலகின்
மேல் ஊற்றவே, விலங்கின் அடையாளத்
தைப் பெற்று, அதன் சிலையை வணங்கின
மனிதர்மேல் கேடு விளைவிக்கும் கொடிய
புண்கள் உண்டாயின.

3 இரண்டாம் தெய்வதூதன் தன் கல
சத்திலுள்ளதைக் கடலில் ஊற்றவே, அது
இறந்துபோனவனின் இரத்தம் போலா
யிற்று; கடலிலுள்ள உயிரிகள் யாவும்
மடிந்தன.

4 மூன்றும் தெய்வதூதன் தன் கலசத்தி
லுள்ளதை ஆறுகளிலும் நீரூற்றுகளிலும்
ஊற்றவே, அவை இரத்தமயமாயின.
5 அப்பொழுது நீர்நிலைகளுக்குரிய
தெய்வதூதன், ''இருக்கிறவரே, இருந்த
வரே, தூயரே, நீர் இப்படித் தீர்ப்பளித்து
உமது நீதியை விளங்கச் செய்தீர். 6 மனி
தர், கடவுளுக்குரிய மக்களின் இரத்தத்
தையும் இறைவாக்குரைப்போரின் இரத்
தத்தையும் சிந்தினபடியால், அவர்களுக்கு
இரத்தத்தை நீர் குடிக்கக் கொடுத்தீர்;
அதுவே அவர்களுக்குத் தகுந்தது'' என்று
சொன்னதைக் கேட்டேன். 7 அப்பொழுது,
''ஆம், எல்லாம் வல்ல கடவுளாகிய ஆண்
டவரே, உம்முடைய தீர்ப்புகள் உண்மை
யும் நீதியுமானவையே'' என்று பலி
பீடமே சொன்னதைக் கேட்டேன்.

8 நான்காம் தெய்வதூதன் தன் கல
சத்திலுள்ளதைக் கதிரவன்மீது ஊற்றவே,
அது தன் கனலால் மனிதரைப் பொசுக்
கும் வல்லமை பெற்றது. 9 மக்கள் கடு
மையான வெப்பத்தால் பொசுக்கப்பட்ட
போதிலும், இந்த வாதைகளின்மேல்
அதிகாரமுள்ள கடவுளின் திருப்பெயரை
அவர்கள் பழித்தார்களேயன்றி, மனமாற்ற
மடைந்து அவரைப் புகழ்ந்து போற்ற
வில்லை.

10 ஐந்தாம் தெய்வதூதன் தன் கல
சத்திலுள்ளதை அந்த விலங்கின் அரியணை
யின்மீது ஊற்றவே, அதன் அரசு இருண்
டது; கடுந்துன்பத்தால் மக்கள் தங்கள்
நாக்கைக் கடித்துக்கொண்டார்கள். 11 அவர்
கள் தங்களுக்கிருந்த கடுந்துன்பம் காரண
மாகவும் தங்களுடைய புண்கள் காரண
மாகவும் விண்ணுலகக் கடவுளைப் பழித்
தார்களேயன்றி, மனமாற்றமடைந்து தங்
கள் செய்கைகளை விட்டுவிடவில்லை.

12 ஆறாம் தெய்வதூதன் தன் கலசத்
திலுள்ளதை யூப்ராத்து என்னும் பெ
ரும் ஆற்றில் ஊற்றவே அதன் தண்ணீர்
வற்றிப்போயிற்று. அதனால் கதிரவன்
எழும் திசையிலிருந்து வரும் அரசர்களுக்கு
வழி ஆயத்தமாயிற்று.

13 பிறகு, கொடும் பாம்பின் வாயி
னின்றும் விலங்கின் வாயினின்றும் பொய்
யாக இறைவாக்குரைப்போரின் வாயி
னின்றும் தவளைகளின் உருவில் மூன்று

15:4 எரே. 10:7. 15:5 யாத். 38:21. 15:8 யாத். 40:34; 1 அர. 8:10, 11; 2 வரலாறு. 5:13, 14; ஏசா. 6:4. 16:2 யாத். 9:10. 16:4 யாத். 7:17—21; சங். 78:44. 16:10 யாத். 10:21. 16:12 ஏசா. 11:15.

அசுத்த ஆவிகள் வெளியே வருவதைக்
கண்டேன். 14 அவை செய்தற்கரிய
செயல்களைச் செய்யும் பேய்களின் ஆவி
கள்; எல்லாம் வல்ல கடவுளின் பெரு
நாளில் நடக்கும் போருக்கென உலக
மெங்குமுள்ள அரசர்களை ஒன்றுகூட்டிச்
சேர்க்க அவர்களிடம் புறப்பட்டுச் செல்
லும் ஆவிகள்.

15 — இதோ, நான் திருடனைப்போல
வருகிறேன். ஆடையின்றி நடந்து, வெட்கக்
கேடாகக் காணப்படாதவாறு தன்
ஆடைகளைப் போட்டுக்கொண்டு விழிப்பா
யிருப்பவன் நற்பேறு பெற்றவன் —

16 அந்த ஆவிகள் எபிரேய மொழியில்
அர்மகெதோன் எனப்படும் இடத்தில்
அவர்களை ஒன்றுகூட்டிச் சேர்த்தன.

17 ஏழாம் தெய்வதூதன் தன் கலசத்
திலுள்ளதை வானவெளியில் ஊற்றவே,
திருக்கோவிலிலுள்ள அரியணையினின்று,
''செய்தாயிற்று'' என்று ஒரு பெருங்
குரல் ஒலித்தது. 18 அப்பொழுது மின்
னல்களும் இரைச்சல்களும் இடியோசை
களும் உண்டாயின; பெரியதொரு நில
நடுக்கமும் உண்டாயிற்று. உலகில் மனி
தன் தோன்றின கால முதற்கொண்டு
இவ்வளவு பெரிய நிலநடுக்கம் உண்டானதே
யில்லை. 19 அப்பொழுது மாபெரும்
நகரம் மூன்று பாகங்களாயிற்று. எல்லா
நாடுகளின் நகரங்களும் இடிந்து விழுந்தன.
கடவுள் மாபெரும் பாபிலோனை மறந்து
விடவில்லை; பொங்கியெழும் தம் கடுஞ்
சினமாகிய கசப்பு மது நிறைந்த பாத்தி
ரத்தில் உள்ளதை அது குடிக்கும்படி
செய்தார். 20 தீவுகள் யாவும் மறைந்தன.
மலைகள் காணப்படவில்லை. 21 மேலும்,
ஒவ்வொன்றும் ஒரு தாலந்து*
எடையுள்ள ஆலங்கட்டிகள் வானத்தி
னின்று மக்கள்மீது விழுந்தன. ஆலங்கட்டி
யால் உண்டான வாதை மிகக் கொடிய
தாயிருந்ததால், அதன் பொருட்டு மக்கள்
கடவுளைப் பழித்தார்கள்.

### மாபெரும் விலைமகளுக்கு வரப்போகும் தீர்ப்பு

17 ஏழு கலசங்களையுடைய ஏழு தெய்வ
தூதருள் ஒருவன் என்னிடம் வந்து,
''என்னோடு வா. பல நீரோட்டங்கள்மீது
வீற்றிருக்கும் மாபெரும் விலை மகளுக்கு
வரப்போகும் தீர்ப்பின் முடிவை உனக்குக்
காட்டுகிறேன். 2 உலகின் அரசர்கள் அவ
ளோடு கூடி ஒழுக்கக்கேடான செயல் புரி
கிறார்கள். உலகில் வாழும் மக்கள் அவ
ளது ஒழுக்கக்கேடாகிய மதுவினால் வெறி
கொண்டார்கள்'' என்று சொன்னான்.
3 அப்பொழுது பரவச நிலையில் என்னை
அவன் மனித நடமாட்டமில்லாத ஓர்
இடத்திற்குக் கொண்டு சென்றான். அங்கே
ஒரு பெண் கருஞ்சிவப்பு நிறமான விலங்கு
ஒன்றின்மீது அமர்ந்திருக்கிறதைக் கண்
டேன். அந்த விலங்கின் உடலெங்கும்
தெய்வ நிந்தனையான பெயர்கள் காணப்
பட்டன. அதற்கு ஏழு தலைகளும் பத்துக்
கொம்புகளும் இருந்தன. 4 அந்தப் பெண்
செந்நிற ஆடையும் கருஞ் சிவப்பு உடை
யும் அணியப்பெற்று, பொன்னாலும் இரத்
தினங்களாலும் முத்துகளாலும் அலங்
கரிக்கப்பட்டிருந்தாள். அவள் கையில்
அவளது ஒழுக்கக்கேட்டின் அருவருப்பும்
அசுத்தமும் நிறைந்த பொற்பாத்திரம்
இருந்தது. 5 அவள் நெற்றியில், **மாபெரும்
பாபிலோன் உலகிலுள்ள விலைமகளிருக்குத்
தாய்; அருவருப்பான யாவற்றிற்கும் தாய்**
என்னும் மறைபொருள் கொண்ட ஒரு
பெயர் எழுதியிருந்தது. 6 அந்தப் பெண்
கடவுளுக்குரிய மக்களின் இரத்தத்தையும்
இயேசுவினுடைய சாட்சிகளின் இரத்தத்
தையும் குடித்து வெறி கொண்டிருந்ததைக்
கண்டேன்.

அவளைக் கண்டபோது நான் மிகுந்த
வியப்பினால் மலைத்து நின்றேன். 7 அப்
பொழுது தெய்வதூதன் என்னைப் பார்த்து,
''நீ மலைத்து நிற்பானேன்? இந்தப் பெண்
ணைப் பற்றிய மறைபொருளையும், ஏழு
தலைகளும் பத்துக் கொம்புகளும்
உடையதாய் இவளைச் சுமந்துசெல்லும்
விலங்கைப்பற்றிய மறைபொருளையும்
உனக்குச் சொல்லுகிறேன், கேள். 8 நீ
கண்ட விலங்கு முன்பு இருந்தது, இப்போது
இல்லை. இனி அது பாதாளக் குழியிலி
ருந்து ஏறிவரும்; பிறகு அழியும். உலகில்
வாழும் மக்களுள், உலகத் தோற்ற முதற்
கொண்டே மெய்வாழ்வுக்குரியவர் அட்ட
வணையில் பேரெழுதப்படாதவர்கள், முன்பு
இருந்ததும் பிறகு இல்லாமற்போனதும்,
மீண்டும் தோன்றப்போவதுமான அந்த
விலங்கைக் கண்டு வியப்படைவார்கள்.
9 இதை விளங்கிக்கொள்ள அறிவுக் கூர்
மையுள்ள சிந்தனை தேவை. அந்த ஏழு
தலைகளும் அந்தப் பெண் வீற்றிருக்கும்
ஏழு மலைகளைக் குறிக்கின்றன; 10 ஏழு
அரசர்களையும் குறிக்கின்றன. அவர்களுள்

* ஒரு தாலந்து ஏறத்தாழ 35 கிலோகிராம் எடைக்குச் சமம்.
**16:15** மத். 24:43, 44; லூக். 12:39, 40; திருவெளி. 3:3. **16:16** 2 அர. 23:29; சக. 12:11. **16:18** திருவெளி. 8:5; 11:13, 19. **16:19** ஏசா. 51:17. **16:20** திருவெளி. 6:14. **16:21** யாத். 9:23; திருவெளி. 11:19. **17:1** எரே. 51:13. **17:2** ஏசா. 23:17; எரே. 51:7. **17:3** திருவெளி. 13:1. **17:8** தானி. 7:17; திருவெளி. 11:7; சங். 69:28.

ஐவர் ஒழிந்துபோயினர், ஒருவன் இப்
போது இருக்கிறுன்; ஒருவன் இன்னும்
தோன்றவில்லை. அவன் தோன்றினபின்
சிறிது காலம் இருந்தாக வேண்டும்.
11 முன்பு இருந்து இப்போது இல்லாத
விலங்கே எட்டாவது அரசன்; அவன் அவ்
வெழுவருள் ஒருவனுமாவான்; அவன்
அழிந்தே போவான். 12 நீ கண்ட பத்துக்
கொம்புகளும் பத்து அரசர்கள். அவர்
கள் இன்னும் அரசுரிமை பெறவில்லை.
ஆனுல், அவர்கள் அந்த விலங்கோடு
சேர்ந்து ஒரு மணி நேரம் அரசாளும்
உரிமை பெறுவார்கள். 13 அவர்கள் ஒரே
நோக்கமுடையவர்களாயிருந்து தங்கள் வல்
லமையையும் அதிகாரத்தையும் அந்த
விலங்கினிடம் ஒப்படைப்பார்கள். 14 அவர்
கள் ஆட்டுக்குட்டியானவரோடு போரிடு
வார்கள். ஆனுல், ஆட்டுக்குட்டியானவர்
அவர்களை வென்றுவிடுவார். ஏனெனில்,
அவரே ஆண்டவர்க்கெல்லாம் ஆண்டவர்,
அரசர்க்கெல்லாம் அரசர். அவரோடிருப்ப
வர்களும் வெற்றி பெற்றவர்களாவார்
கள்; அவர்கள் அவரால் அழைக்கப்பட்ட
வர்கள், தேர்ந்துகொள்ளப்பட்டவர்கள்,
உண்மையானவர்கள்'' என்று சொன்னுன்.

15 அவன் பின்னும் என்னை நோக்கி,
''அந்த விலைமகள் அமர்ந்திருக்கும்
நீரோட்டங்களைக் கண்டாயே; அவை பற்பல
இனத்தவர், சமுதாயத்தினர், நாட்டி
னர், மொழியினரைக் குறிக்கின்றன.
16 நீ கண்ட பத்துக்கொம்புகளும் அந்த
விலங்கும் அந்த விலைமகள்மீது வெறுப்புக்
கொண்டு அவளைத் திக்கற்றவளாகவும்
ஆடையற்றவளாகவும் ஆக்கிவிடும்;
அவள் தசையைத் தின்னும், அவளை
நெருப்பில் சுட்டெரித்துவிடும். 17 அவர்கள்
ஒருமனப்பட்டவர்களாய்த் தங்கள் ஆட்
சியை அந்த விலங்கினிடம் ஒப்படைத்து,
இவ்வாறு தமது எண்ணத்தை நிறை
வேற்ற, கடவுள் அவர்களது உள்ளத்தில்
தூண்டுதலளித்தார்; கடவுளின் வார்த்தை
கள் நிறைவேறிக் தீரும்வரையில் அந்த
ஆட்சி விலங்கினிடம் இருக்கும். 18 நீ
கண்ட அந்தப் பெண், உலகின் அரசர்கள்
மேல் ஆட்சி செலுத்திக்கொண்டிருக்கிற
மாபெரும் நகரமே'' என்று சொன்னுன்.

### பாபிலோனது வீழ்ச்சி

**18** இதற்குப்பின் வேருெரு தெய்வ
தூதன் மிகுந்த அதிகாரத்தோடு
விண்ணுலகினின்று இறங்கி வருகிறதைக்
கண்டேன். அவனது மாட்சிமையினுல்
மண்ணுலகம் ஒளி பெற்றதாயிற்று. 2 அவன்
உரத்த குரலில்,

''வீழ்ந்தது! வீழ்ந்தது! மாபெரும்
பாபிலோன் வீழ்ந்தது!
அது பேய்களின் குடியிருப்பாயிற்று,
அசுத்த ஆவிகளுக்கெல்லாம் உறைவிட
மாயிற்று;
அசுத்தமும் அருவருப்புமான பறவை
களுக்கெல்லாம் உறைவிடமாயிற்று.
3 அவள் தன் ஒழுக்கக்கேடாகிய காம
வெறி என்னும் மதுவை எல்லா நாட்டி
னருக்கும் குடிக்கக் கொடுத்தாள்.
உலகின் அரசர்கள் அவளோடுகூடி
ஒழுக்கக் கேடான செயல்புரிந்தார்கள்.
அவளது செல்வப்பெருக்கினுல் உலக
வணிகர்கள் செல்வர்களானுர்கள்''
என்று சொன்னுன்.

4 பிறகு இன்னெரு குரல் வானத்தி
னின்று ஒலித்ததைக் கேட்டேன். அது,
''என் மக்களே, அவளை விட்டு வெளியே
வந்து விடுங்கள்;
அவளுடைய பாவச்செயல்களில் பங்கு
கொள்ளாமலும்,
அவற்றுல் அவளுக்கு நேரிடும் வாதை
களில் பங்கு பெருமலும் இருக்கும்படி
நீங்கள் வெளியே வந்துவிடுங்கள்.
5 அவளுடைய பாவங்கள் வானத்தை
எட்டும்படி குவிந்துவிட்டன.
அவளுடைய அநீதச் செயல்களைக் கடவுள்
நினைவில் வைத்துக்கொண்டிருக்கிறுர்.
6 அவள் அளந்த அளவின்படியே
அவளுக்கு அளந்துவிடுங்கள்.
அவள் செய்ததற்கெல்லாம் இரண்டு
மடங்காக அவளுக்குச் செய்துவிடுங்கள்.
அவள் கொடுத்த மதுபானத்திற்குப்
பதிலாக,
அதைவிட இரு மடங்கு வெறியூட்டும்
மதுபானத்தை அதே பாத்திரத்தில்
ஊற்றி அவளுக்குக் கொடுங்கள்.
7 எந்த அளவுக்கு அவள் தன் மாட்சி
மையையே வெளிப்படுத்திக்கொண்டு
செல்வச் செருக்குடன் வாழ்ந்தாளோ
அந்த அளவுக்கு அவள் துன்பமும்
துயரமும் அடையும்படி செய்யுங்கள்.
அவள் தன் உள்ளத்தில், 'நான் அரசியாக
வீற்றிருக்கிறேன்;
நான் ஒரு கைம்பெண்போலில்லை;
துயரத்தை நான் காண மாட்டேன்'
என்றல்லவா சொல்லிக்கொள்கிறுள்!
8 அதனுல் அவளுக்கு ஒரே நாளில்
சாகடிக்கும் நோய் துயரம் பஞ்சம் ஆகிய
வாதைகள் வரும்.

**17:12** தானி. 7:24. **18:2** ஏசா. 21:9; எரே. 51:8; திருவெளி. 14:8. **18:3** ஏசா. 23:17; எரே 51:7. **18:4** ஏசா. 48: 20; எரே. 50:8; 51:6, 45. **18:5** யாத். 18:20, 21; எரே. 51:9. **18:6** சங். 137:8; எரே. 50:29. **18:7, 8** ஏசா. 47:7-9.

அவள் நெருப்பில் சுட்டெரிக்கப்படுவாள்,
அவளுக்குத் தீர்ப்பளிக்கும் கடவுளாகிய
ஆண்டவர் வல்லமையுள்ளவர்''
என்று உரைத்தது.

9 அவளோடு கூடி ஒழுக்கக்கேடான
செயல்புரிந்து செல்வச் செருக்கோடு
வாழ்ந்த உலகின் அரசர்கள், அவள் எரி
யும்போது எழும்பும் புகையைப் பார்த்
துப் பார்த்து அழுது புலம்புவார்கள்.
10 அவள் படும் துன்பத்தைக் கண்டு
அவர்கள் அஞ்சி, தொலைவிலே நின்று
கொண்டு,
''ஐயையோ! மாபெரும் நகரத்திற்கு
அழிவு வந்ததே!
வலிமைவாய்ந்த பாபிலோன் பட்டணமே,
உனக்கு வந்த தண்டனைத் தீர்ப்பு
ஒரு மணி நேரத்திற்குள் நிறைவேறி
விட்டதே!''
என்று சொல்வார்கள்.

11 உலகின் வணிகர்களும் அவளுக்
காக அழுது துக்கங்கொண்டாடுவார்
கள். ஏனெனில், அவர்களுடைய சரக்கு
களை இனி வாங்குவதற்கு யாருமே
இல்லை. 12 அவர்களுடைய சரக்குகள்
பொன், வெள்ளி, இரத்தினம், முத்து,
மெல்லிய துணி, செந்நிற ஆடை, பட்
டாடை ஒண்சிவப்பாடை, பற்பலவகை
நறுமணக் கட்டைகள், தந்தத்தினலான
பற்பலவகைச் சாமான்கள், விலையுயர்ந்த
மரம், செம்பு, இரும்பு, சலவைக்கல்
ஆகிய இவற்ருலான பொருள்கள், 13 இல
வங்கம், நறுமணச் சரக்கு, தூபவர்க்கம்,
நறுமணத் தைலம், சாம்பிராணி, திராட்சை
இரசம், எண்ணெய், மாவு, கோதுமை, ஆடு
மாடுகள், குதிரைகள், தேர்கள், அடிமைகள்,
அதாவது மனித உயிர்கள் என்பன.

14 ''நீ விரும்பின கனிகள் உனக்கு
எட்டாமற்போயின.
உன்னுடைய மினுக்கும் பகட்டும்
எல்லாம் ஒழிந்தன.
அவற்றை இனி ஒருபோதும் எவரும்
காணப்போவதில்லை''
என்பார்கள். 15 இந்தச் சரக்குகளைக்
கொண்டு வாணிபம் செய்து அவளால்
செல்வரானவர்கள், அவள் படும் துன்பத்
தைக் கண்டு அஞ்சி, தொலைவில் நின்று
கொண்டு அழுது துக்கங்கொண்டாடி,

16 ''ஐயையோ! மாபெரும் நகரத்திற்கு
அழிவு வந்ததே!
மெல்லிய துணியும் செந்நிற ஆடையும்
ஒண்சிவப்பு உடையும் உடுத்தி,
பொன்னுலும் இரத்தினங்களாலும்
முத்துகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்
தாளே!
17 இவ்வளவு செல்வமும் ஒரே மணி
நேரத்தில் பாழாய்ப்போயிற்றே!''
என்று புலம்புவார்கள்.

கப்பல் மாலுமிகள் அனைவரும், கப்ப
லில் பயணஞ்செய்வோர் எல்லாரும்,
கப்பலோட்டிகளும், கடலால் பிழைக்கிற
யாவரும் தொலைவில் நின்றுகொண்டு,
18 அவள் எரியும்போது எழும்பும் புகை
யைக் கண்டு, ''இந்த மாபெரும் நகரத்
திற்கு ஒப்பான ஒரு நகரம் எப்போதா
வது இருந்ததுண்டா!'' என்று கத்தினர்
கள். 19 அவர்கள் தங்கள் தலைமேல் புழு
தியை வாரிப் போட்டுக்கொண்டு அழுது
துக்கங்கொண்டாடி,
''ஐயையோ! மாபெரும் நகரத்திற்கு
அழிவு வந்ததே!
அங்கிருந்த வாணிகக் கப்பல் முதலாளிகள்
யாவரும் இவளுடைய அருஞ்செல்வத்தைக்
கொண்டுதானே செல்வரானர்கள்;
ஒரே மணி நேரத்தில் பாழாய்ப்
போனளே!''
என்று புலம்பினர்கள்.
20 ''விண்ணுலகே, கடவுளுக்குரிய
மக்களே,
திருத்தூதுவரே, இறைவாக்குரைப்
போரே,
அவளது அழிவைக் கண்டு களிகூருங்கள்;
ஏனெனில், அவள் உங்களுக்கு அளித்த
தீர்ப்பைக் கடவுள் அவளுக்கு அளித்து
அவளிடம் பழிவாங்கிவிட்டார்.''

21 அப்பொழுது வலிமைவாய்ந்த தெய்வ
தூதன் ஒருவன் பெரிய ஏந்திரக் கல்லைப்
போன்றதொரு கல்லை எடுத்துக் கடலில்
எறிந்து,

''மாபெரும் நகரமாகிய பாபிலோன்
இவ்வாறே வீசி எறியப்படும்;
இனி அது ஒருபோதும் காணப்படுவ
தில்லை.
22 சுரமண்டலம் வாசிப்போர், பாடகர்
குழல் வாசிப்போர் எக்காளம் ஊதுவோர்
ஆகியோருடைய இனிய ஓசை இனி ஒரு
போதும் உன்னிடம் கேட்கப்படுவதில்லை.
தொழில் செய்யும் எந்தத் தொழி
லாளியும்
இனி ஒருபோதும் உன்னிடம் காணப்
படுவதில்லை.
ஏந்திரம் அரைக்கும் ஒலி

18:9, 10 எசே. 26:16, 17. 18:11 எசே. 27:31, 36. 18:12, 13 எசே. 27:31, 36. 18:12, 13 எசே. 17:12, 13, 22. 18:15 எசே. 27: 31, 36. 18:17 ஏசா. 23:14; எசே. 27:26—30. 18:18 எசே. 27:32. 18:19 எசே. 27:30—34. 18:20 உபா. 32:43; எரே. 51:48. 18:21 எரே. 51:63, 64; எரே. 26:21; 18:22 எசே. 26:13 [illegible]

இனி ஒருபோதும் உன்னிடம் கேட்கப்
படுவதில்லை.
23 விளக்கு வெளிச்சம்
இனி ஒருபோதும் உன்னிடம் காணப்
படுவதில்லை.
திருமணத்தின் மங்கல ஒலி
இனி ஒருபோதும் உன்னிடம் கேட்கப்
படுவதில்லை,
உன் வணிகர்கள் உலகில் தலைசிறந்த
வர்களாயிருந்தார்களே!
உன் மாயமந்திரத்தால் நீ எல்லா நாட்
டினரையும் வஞ்சித்து வந்தாயே!
24 இறைவாக்குரைப்போர், கடவுளுக்
குரிய மக்கள்
ஆகியோருடைய இரத்தமும்
நிலவுலகில் கொல்லப்பட்ட அனைவரின்
இரத்தக் கறையும் அவளிடம் காணப்பட்
டனவே''
என்றான்.

**19** இதற்குப்பின் விண்ணுலகில் பெரிய
தொரு மக்கட் கூட்டத்தின் ஆரவாரம்
போன்றதோர் ஒலி ஒலிப்பதைக்கேட்டேன்.
அவர்கள்,
*''அல்லேலூயா! †மீட்பளிக்கும் ஆற்
றலும், மாட்சிமையும் வல்லமையும்
நம் கடவுளுக்கே உரியன.
2 அவர் வழங்கும் தீர்ப்புகள் உண்மை
யானவை, நீதியானவை.
தன் ஒழுக்கக்கேட்டினால்
உலகைக் கெடுத்த மாபெரும் விலை
மகளான நகருக்கு
தண்டனைத் தீர்ப்பளித்தார்.
தம்முடைய அடியாரின் இரத்தத்திற்காக
அவளைப் பழிவாங்கினார்''
என்றார்கள். 3 மறுபடியும் அவர்கள்,
''அல்லேலூயா! அவள் எரிகிறதிலிருந்து
புகை என்றென்றும் மேலே எழும்பும்''
என்றார்கள். 4 இருபத்து நான்கு மூப்பர்
களும் நான்கு உயிரிகளும் கீழே விழுந்து
அரியணையில் வீற்றிருக்கும் கடவுளைத்
தொழுது,
''ஆமேன், அல்லேலூயா!''
என்றார்கள்.

**ஆட்டுக்குட்டியானவரின் திருமண விருந்து**

5 அரியணையினின்று பிறந்த ஒரு குரல்,
''கடவுளின் அடியாரே, அவருக்கு
அஞ்சுகிறவர்களே,
சிறியோரே, பெரியோரே,
எல்லாரும் நம் கடவுளைப் புகழுவோம்
வாருங்கள்''
என்று உரைத்தது. 6 பிறகு பெரிய
தொரு மக்கட் கூட்டத்தின் ஆரவாரம்
போன்றதும், பெருவெள்ளத்தின் இரைச்சல்
போன்றதும், முழங்கும் இடியோசை
போன்றதுமான பேரொலியைக் கேட்டேன்.

''அல்லேலூயா! எல்லாம் வல்ல நம்
கடவுளாகிய ஆண்டவரே ஆட்சிபுரியத்
தொடங்கியிருக்கிறார்.
7 நாம் களிகூர்ந்து அகமகிழ்ந்து,
அவருக்கு மாட்சிமை அளிப்போமாக.
ஆட்டுக்குட்டியானவரின் திருமணம் வந்து
விட்டது.
அவருடைய மணவாட்டி தன்னை
ஆயத்தப்படுத்திக்கொண்டாள்.
8 பளபளப்பான தூயதொரு சிறந்த
ஆடையை
அணிந்துகொள்ளும் நற்பேறு அவளுக்கு
அளிக்கப்பட்டது.
அந்தச் சிறந்த ஆடையானது கடவுளுக்
குரிய மக்களின் நீதிச்செயல்களாகும்''
என்று அது உரைத்தது.

9 பிறகு, தெய்வதூதன் என்னிடம்,
''ஆட்டுக்குட்டியானவரின் திருமண விருந்
துக்கு அழைக்கப்பட்டவர்கள் நற்பேறு
பெற்றவர்கள் என்றெழுது'' என்று சொன்
னான். மேலும் அவன் என்னிடம், ''இவை
கடவுளின் சத்திய வார்த்தைகள்'' என்
றும் சொன்னான். 10 அப்பொழுது அவனை
வணங்குவதற்காக நான் அவன் காலடி
யில் விழுந்தேன். அவனோ, ''வேண்டாம்,
வேண்டாம். நான் உன்னுடைய உடன்
ஊழியன்; இயேசு அறிவித்த சாட்சி
யத்தை ஏற்றுக்கொண்ட உன் சகோதர
ருடைய உடன் ஊழியனுமாவேன், கடவு
ளைத்தான் நீ வணங்க வேண்டும்'' என்றான்.

இயேசு அறிவித்த சாட்சியத்தை அடிப்
படையாகக் கொண்டே இறைவாக்கு
உரைக்கப்பட்டு வருவதால் அப்படிச்
சொன்னான்.

**வெண்ணிறக் குதிரைமீது ஏறிவருபவர்**

11 பிறகு, விண்ணுலகம் திறந்திருக்கிற
தைக் கண்டேன். அங்கே ஒரு வெண்ணிறக்
குதிரை காணப்பட்டது. அதன்மீது
ஏறியிருந்தவரின் பெயர்கள், 'நம்பத்தக்க
வர்', 'உண்மையுள்ளவர்' என்பவை. அவர்
நீதியோடு தீர்ப்பளிப்பார், போரிடுவார்.
12 அவர் கண்கள் எரிதழல் போலக்
காணப்பட்டன. அவர் தலையில் பல மணி

* இந்த எபிரேயச் சொல்லுக்கு, 'ஆண்டவரைப் புகழுக' என்பது பொருள்.
† 'மீட்பளிக்கும் ஆற்றலும்' என்பதை 'வெற்றியும்' என்றும் மொழிபெயர்க்கலாம்.
**18:24** எரே. 31:49. **19:2** உபா. 32:43; 2 அர. 9:7. **19:3** ஏசா. 34:10. **19:5** சங். 115:13. **19:6** எசே. 1:24; சங். 93:1; 97:1; 99:1. **19:9** மத். 22:2, 3. **19:11** எசே. 1:1; சங். 96:13; ஏசா. 11:4. **19:12** தானி. 10:6.

முடிகள் இருந்தன. அவர்மேல் ஒரு பெயர்
எழுதப்பட்டிருந்தது. அது என்னவென்
பது அவரைத் தவிர வேறெவருக்கும்
தெரியாது. 13 இரத்தம் தோய்ந்த ஆடை
ஒன்றை அவர் அணிந்திருந்தார்.
'கடவுளின் திருவாக்கு' என்பது
அவரது பெயர். 14 விண்ணுலகப்
படைவீரர் வெண்மையும் தூய்மையுமான
சிறந்த ஆடையை அணிந்துகொண்டு,
வெண் குதிரைகள்மீது ஏறி அவருக்குப்
பின்னே சென்றனர். 15 கூர்மையான
வாள் ஒன்று அவர் வாயினின்று வெளிப்
பட்டது. அவர் அதைக் கொண்டு நாடு
களைத் தாக்கி அழிப்பார்; இருப்புக்
கோலால் அவர்களை அடக்கி அவர்கள்
மேல் ஆட்சி செலுத்துவார். திராட்
சையை ஆலையில் மிதித்து மதுவை எடுப்
பதுபோல அவர் எல்லாம் வல்ல கடவு
ளின் கடுஞ்சினமாகிய மதுவை மிதித்
தெடுப்பார். 16 **'அரசர்க்கெல்லாம் அரசர்,
ஆண்டவர்க்கெல்லாம் ஆண்டவர்'** என்னும்
பெயர் அவருடைய ஆடையிலும் காலிலும்
எழுதியிருந்தது.

17 பிறகு, தெய்வதூதன் ஒருவன் கதிர
வனில் நிற்கிறதைக் கண்டேன். அவன்
நடுவானத்தில் பறக்கும் எல்லாப் பறவை
களையும் பார்த்து உரத்த குரலில்,
''வாருங்கள். கடவுள் அளிக்கும் மாபெரும்
விருந்துக்கு வந்து கூடுங்கள். 18 அரசர்,
படைத்தலைவர், வலிமைவாய்ந்தோர்
ஆகியோரின் உடலையும் குதிரைகளையும்
அவற்றின்மீது ஏறியிருப்போரின் உடலை
யும் அடிமைகள், அடிமையல்லாதவர்கள்,
சிறியோர், பெரியோர் ஆகியோரின் உட
லையும் தின்பதற்கு வாருங்கள்'' என்றான்.
19 முன் கூறப்பட்ட விலங்கும் உலக
அரசர்களும் அவர்களுடைய படைகளும்
குதிரைமீது ஏறியிருந்தவரையும் அவரு
டைய படையையும் எதிர்த்துப் போர்
தொடுக்கும்படி கூடியிருந்ததைக் கண்
டேன். 20 அந்த விலங்கு பிடிபட்டது.
செய்தற்கரிய செயல்களை அந்த விலங்கின்
முன்னிலையில் செய்துவந்த பொய்யாக
இறைவாக்குரைப்பவனும் அதனோடு பிடி
பட்டான். அவனே தன் செயல்களால்
அந்த விலங்கின் அடையாளத்தைப் பெற்
றிருந்தவர்களையும் அதன் சிலையை வணங்
கினவர்களையும் வஞ்சித்துவந்தவன். அவர்
கள் இருவரும் கந்தகம் என்கிற நெருப்புக்
கடலில் உயிரோடு எறியப்பட்டார்கள்.
21 குதிரைமீது ஏறியிருந்தவரின்
வாயினின்று வெளிவந்த வாளினால் மற்ற
வர்கள் கொல்லப்பட்டார்கள். அவர்கள்
உடல்களைப் பறவைகளெல்லாம் வயிறுரத்
தின்றன.

## ஆயிரம் ஆண்டு ஆட்சி

20 பிறகு, தெய்வதூதன் ஒருவன் வானத்
தினின்று இறங்கிவருகிறதைக் கண்
டேன். அவன் தன் கையில் பாதாளத்
துத் திறவுகோலையும் ஒரு பெரிய சங்கிலி
யையும் வைத்திருந்தான். 2 அவன் கொடும்
பாம்பைப் பிடித்தான். அது ஆதியில்
வந்த பாம்பே. அது பிசாசென்றும் சாத்
தானென்றும் சொல்லப்படும். அதைப்
பிடித்து ஆயிரம் ஆண்டுகளாகக் கட்டி
வைத்திருந்தான். 3 அவன் அதைப்
பாதாளத்தில் எறிந்துவிட்டு அதன் வாயிலை
அடைத்து அதற்கு முத்திரையிட்டான்.
அந்த ஆயிரம் ஆண்டுகள் முடியும்வரை
அது உலக மக்களை வஞ்சியாதிருக்கும்படி
இப்படிச் செய்தான். அதற்குப்பின் அது
சிறிது காலத்திற்கு அவிழ்த்துவிடப்பட
வேண்டும்.

4 நான் அரியணைகளையும் கண்டேன்.
தீர்ப்பளிக்க அதிகாரம் பெற்றவர்கள்
அவற்றில் உட்கார்ந்திருந்தார்கள். இயேசு
கிறிஸ்து அறிவித்த சாட்சியத்தையும்
கடவுளின் வார்த்தையையும்ஏற்றுக்கொண்ட
தால் தலை துண்டிக்கப் பெற்றோருடைய
ஆன்மாக்களையும் கண்டேன். அவர்கள்
அந்த விலங்கையாவது அதன் சிலையையா
வது வணங்காமலும், தங்கள் நெற்றியி
லும் தங்கள் கையிலும் அதன் அடையா
ளத்தைப் பெற்றுக்கொள்ளாமலும் இருந்
தவர்கள். அவர்கள் உயிர்பெற்றுக் கிறிஸ்
துவோடு ஆயிரம் ஆண்டுகள் ஆட்சி
செலுத்தினார்கள். 5 – மரணமடைந்த ஏனை
யோர் அந்த ஆயிரம் ஆண்டுகள் முடியும்
வரையில் உயிர்பெற்று வரவில்லை—இதுவே
முதலாம் உயிர்த்தெழுதல். 6 முதலாம்
உயிர்த்தெழுதலில் பங்கு கொள்வோர் நற்
பேறு பெற்றோர், கடவுளுக்குரிய மக்கள்.
இரண்டாம் மரணத்திற்கு இவர்கள்மேல்
அதிகாரமில்லை. இவர்கள் கடவுளுக்கும்
கிறிஸ்துவுக்குமென ஆசாரியர்களாயிருப்
பார்கள்; அவரோடு ஆயிரம் ஆண்டு ஆட்சி
செலுத்துவார்கள்.

7 அந்த ஆயிரம் ஆண்டுகள் முடிந்த
பின் சாத்தான் தன் சிறையிலிருந்து விடு
விக்கப்படுவான். 8 பிறகு அவன் நிலவுல
கின் நான்கு திசைகளிலுமுள்ள மக்களை,
அதாவது கோகு, மாகோகு என்பவர்களை
வஞ்சித்துப் போருக்கெனக் கூட்டிச் சேர்க்
கச் செல்வான். அவர்கள் தொகை கடற்
கரை மணல்போல எண்ணுக்கடங்காதது.
9 அவர்கள் நாடெங்கும் பரவலாகச் சென்று,
கடவுளுக்குரிய மக்களின் பாளையத்தை
அதாவது கடவுளின் அன்பிற்குகந்த

**19:15** சங். 2:9; ஏசா. 63.3; யோவேல் 3:13; திருவெளி. 14:20. **19:17, 18** எசே. 39:17—20. **19:20** திருவெளி. 13:1—18. **20:2** ஆதி. 3:1. **20:4** தானி. 7:9, 22. **20:8** எசே. 7:2; 38:2, 9, 15.

நகரத்தைச் சூழ்ந்துகொண்டார்கள். அப்
பொழுது வானத்திலிருந்து நெருப்பு
விழுந்து அவர்களை விழுங்கிவிட்டது.
10 அவர்களை வஞ்சித்துக் கொண்டிருந்த
பிசாசு, நெருப்பும் கந்தகமும் நிறைந்த
கடலில் எறியப்பட்டான். அங்கேதான்
அந்த விலங்கும் பொய்யாக இறைவாக்
குரைப்போரும் இருந்தார்கள். அவர்கள்
என்றென்றும் அல்லும் பகலும் வதைக்கப்
படுவார்கள்.

## இறுதித் தீர்ப்பு

11 பிறகு, வெண்மையான பெரிய
தோர் அரியணையையும் அதில் வீற்றிருப்ப
வரையும் கண்டேன். பூமியும் வானமும்
அவர் முன்னிலையினின்று மறைந்து
போயின. அங்கு அவற்றிற்கு இனி இட
மில்லை. 12 இறந்தோராகிய சிறியோரும்
பெரியோரும் அரியணையின்முன் நிற்கிறதைக்
கண்டேன். அப்பொழுது சில நூல்கள்
விரிக்கப்பட்டன. வேறொரு நூலும் விரிக்
கப்பட்டது. அதுவே மெய்வாழ்வுக்குரிய
வர் அட்டவணை நூல். அந்நூலில் எழுதி
யிருந்தவற்றைக் கொண்டு இறந்தோர்
தத்தம் செயல்களுக்குத் தக்கபடி தீர்ப்
புப் பெற்றனர். 13 கடல் தன்னிடமுள்ள
இறந்தோரை வெளியே கொணர்ந்தது.
மரணமும் பாதாளமும் தங்களிடமுள்ள
இறந்தோரை வெளியே கொணர்ந்தன.
ஒவ்வொருவனும் தன்தன் செயல்களுக்குத்
தக்கபடி தீர்ப்புப் பெற்றான். 14 மரண
மும் பாதாளமும் நெருப்புக் கடலில் எறி
யப்பட்டன. இந்த நெருப்புக் கடலே
இரண்டாம் மரணம். 15 யார் யாரு
டைய பெயர்கள் மெய்வாழ்வுக்குரியவர்
அட்டவணையில் எழுதப்பட்டில்லையோ அவர்
கள் அந்த நெருப்புக் கடலில் எறியப்பட்
டார்கள்.

## புதிய வானமும் புதிய பூமியும்

21 பிறகு, நான் புதியதொரு வானத்
தையும் புதியதொரு பூமியையும்
கண்டேன். முந்திய வானமும் முந்திய
பூமியும் மறைந்துபோயின; கடலும் இல்
லாமற் போயிற்று. 2 புதிய எருசலேமாகிய
திருநகரம் கடவுளிடமிருந்து வானத்தை
விட்டுக் கீழே இறங்கி வருவதைக் கண்
டேன். தன் கணவனுக்காக அலங்கரிக்கப்
பட்ட மணவாட்டியைப்போல அது
ஆயத்தம் செய்யப்பட்டிருந்தது. 3 பிறகு,
அரியணையினின்று ஒலித்த ஒரு பெருங்
குரலைக் கேட்டேன். அந்தக் குரல், ''இனிக்
கடவுளின் உறைவிடம் மனிதரிடையே
இருக்கும். அவர்களிடையிலேயே அவர்
தங்கியிருப்பார். அவர்கள் அவருடைய
சொந்த மக்களாயிருப்பார்கள். கடவுள்
தாமே அவர்களோடிருப்பார். அவரே
அவர்களுடைய கடவுள். 4 அவர் அவர்
கள் கண்களினின்று கண்ணீரை அறவே
துடைத்துவிடுவார். இனி மரணமில்லை,
துயரமில்லை, கூக்குரலில்லை, துன்பமில்லை.
ஏனெனில் முன்பிருந்த அனைத்தும் மறைந்து
போயின'' என்றது.

5 அரியணையில் வீற்றிருப்பவர், ''இதோ,
நான் எல்லாவற்றையும் புதிதாக்குகிறேன்''
என்றார். மேலும் அவர், ''இதை எழுதி
வை. இந்த வார்த்தைகள் நம்பத்
தக்கவை, உண்மையானவை'' என்றார்.
6 அன்றியும் அவர் என்னை நோக்கி,
''செய்தாயிற்று. அல்பாவும் நானே, ஒமே
காவும் நானே;* தொடக்கமும் நானே,
இறுதியும் நானே. தாகமாயிருக்கிறவனுக்கு
மெய்வாழ்வளிக்கும் ஊற்றினின்று நீரை
நான் விலையின்றிக் கொடுப்பேன். 7 வெற்றி
கொள்கிறவன் எல்லாவற்றையும் பெறும்
உரிமையாளனாவான். நான் அவனுக்குக்
கடவுள்; அவன் எனக்கு மகன். 8 ஆனால்,
கோழைகள், நம்பிக்கையற்றவர்கள், அரு
வருப்பானவர்கள், கொலைகாரர்கள், கற்பு
நெறி தவறுகிறவர்கள், சூனியக்காரர்கள்,
தெய்வச் சிலைகளை வணங்குகிறவர்கள் ஆகி
யோருக்கும் பொய்யர் அனைவருக்கும்
நெருப்பும் கந்தகமும் பற்றியெரிகிற கடலே
கதியாகும். இதுவே இரண்டாம் மரணம்''
என்று சொன்னார்.

## புதிய எருசலேம்

9 பிறகு, கடைசியான ஏழு வாதை
கள் நிறைந்த ஏழு கலசங்களையுடைய ஏழு
தெய்வதூதருள் ஒருவன் வந்து, என்னைப்
பார்த்து, ''என்னோடு வா; ஆட்டுக்குட்டி
யானவர் மணக்கவிருக்கும் மணவாட்டியை
உனக்குக் காட்டுகிறேன்'' என்று சொன்
னான். 10 பரவச நிலையில் என்னை அவன்
உயர்ந்ததும் பெரியதுமான மலை ஒன்றின்
மேல் கொண்டுசென்று, எருசலேமாகிய
திருநகரம் கடவுளிடமிருந்து வானத்தை
விட்டுக் கீழே இறங்கி வருகிறதை எனக்
குக் காட்டினான். 11 அதில் கடவுளின்
மாட்சிமை விளங்கிற்று. அது விலையுயர்ந்த
இரத்தினம் போன்றும், ஒளிவீசும் வைரக்
கல் போன்றும் பளபளப்பாக மின்னிற்று.
12 அதற்கு உயர்ந்ததும் பெரியதுமான
ஒரு மதிலும் பன்னிரு வாயில்களும் இருந்தன.
அந்த வாயில்களில் பன்னிரு தெய்வதூதர்கள்

* திருவெளி. 1:8 அடிக்குறிப்பைப் பார்க்க.

**20:11, 12** தானி. 7:9, 10. **21:1** எசா. 65:17; 66:22; 2 பேது. 3:13. **21:2** திருவெளி. 3:12; எசா. 61:10. **21:3** எசே. 37:27; இலே. 26:11, 12. **21:4** எசா. 25:8; 35:10; 65:19. **21:6** எசா. 55:1. **21:7** 2 சாமு. 7:14; சங். 89:26, 27. **21:10** எசே. 40:2. **21:12, 13** எசே. 48:30—35.

நின்றார்கள். அவற்றில் இஸ்ரயேலரின் பன்
னிரு குலங்களின் பெயர்கள் எழு
தப்பட்டிருந்தன. 13 அந்த வாயில்கள்
கிழக்கே மூன்றும் வடக்கே மூன்றும்
தெற்கே மூன்றும் மேற்கே மூன்றுமாக
இருந்தன. 14 நகரத்தின் மதில் பன்னிரு
அடிப்படைக் கற்களின்மேல் கட்டப்பட்
டிருந்தது. அவற்றில் ஆட்டுக் குட்டியான
வரின் பன்னிரு திருத்தூதுவரின் பெயர்கள்
காணப்பட்டன.

15 என்னோடு பேசின தெய்வதூதன்
அந்த நகரத்தையும் அதன் வாயில்களை
யும் அதன் மதிலையும் அளப்பதற்குப்
பொன்னாலான ஓர் அளவுகோலை வைத்
திருந்தான். 16 அந்த நகரம் சதுரமாக
இருந்தது. அதன் நீளமும் அகலமும் ஒரே
அளவாயிருந்தன. அவன் அந்தக் கோலைக்
கொண்டு நகரத்தை அளந்தான். அதன்
அளவு பன்னீராயிரம் இஸ்தாதியாயிருந்
தது.* அதன் நீளமும் அகலமும் உயர
மும் சமமாயிருந்தன. 17 அவன் அதன்
மதிலையும் அளந்தான். அதன் உயரம்
மனித முழத்தின் அளவுப்படி நூற்றுநாற்
பத்து நான்கு முழம் இருந்தது. மனித
முழத்தின் அளவுப்படியே தெய்வதூதன்
அளந்தான். 18 அதன் மதில் வைரக்கல்
லால் கட்டப்பட்டிருந்தது. நகரமோ பழு
தற்ற பளிங்குபோன்ற பசும்பொன்னா
லானது. 19 நகரத்து மதிலின் அடிப்படைக்
கற்கள் எல்லா வகையான இரத்தினங்
களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. முதல்
அடிப்படைக் கல் வைரக்கல், இரண்டா
வது நீலம், மூன்றாவது மாணிக்கம், நான்
காவது மரகதம், 20 ஐந்தாவது கோமேத
கம், ஆறாவது பதும ராகம், ஏழாவது சுவர்ண
ரத்தினம், எட்டாவது படிகப்பச்சை, ஒன்ப
தாவது புட்பராகம், பத்தாவது வைடூரியம்,
பதினோராவது இந்திர நீலம், பன்னிரண்டா
வது சுகந்தி. 21 பன்னிரு வாயில்களும்
பன்னிரு முத்துகள். ஒவ்வொரு வாயிலும்
ஒவ்வொரு முத்தாலானது. நகரத்தின்
வீதி பழுதற்ற பளிங்குபோன்ற பசும்
பொன்னாயிருந்தது.

22 அதனுள் கோவிலை நான் பார்க்க
வில்லை. எல்லாம் வல்ல கடவுளாகிய ஆண்
டவரும் ஆட்டுக்குட்டியானவருமே அதன்
கோவில். 23 அந்நகரத்திற்கு ஒளி கொடுக்
கக் கதிரவனோ நிலவோ தேவையில்லை.
கடவுளின் மாட்சிமையே அதன் ஒளி;
ஆட்டுக்குட்டியானவரே அதற்கு விளக்கு.
24 உலக மக்கள் அதன் ஒளியில் நடப்பார்
கள். உலகின் அரசர்கள் தங்களுக்கு மாட்
சிமையாயிருப்பவற்றை அங்கே கொண்டு
வந்து கொடுப்பார்கள். 25 அதன் வாயில்
கள் பகலில் ஒருபோதும் அடைக்கப்படுவ
தில்லை. இராக்காலம் என்பதும் அங்கே
இல்லை. 26 உலக மக்களுக்கு மாட்சிமையா
யும் மேன்மையாயும் இருப்பவை அதனுள்
கொண்டுவரப்படும். 27 ஆனால், தூய்மை
யற்ற எதுவும், அருவருப்பானதையோ
வஞ்சனையையோ செய்கிற எவனும் அத
னுள் செல்வதில்லை. ஆட்டுக்குட்டியான
வர் கையிலிருக்கும் மெய்வாழ்வுக்குரியவர்
அட்டவணை நூலில் பேரெழுதப்பட்டவர்
கள் மட்டுமே அதனுள் செல்வார்கள்.

**22** பிறகு, மெய்வாழ்வளிக்கும் தண்
ணீர் ஓடும் ஆற்றைத் தெய்வதூதன்
எனக்குக் காட்டினான். அது பளிங்கு
போல மின்னிற்று. கடவுளும் ஆட்டுக்
குட்டியானவரும் வீற்றிருக்கும் அரியணை
யினின்று புறப்பட்டு, அது நகர வீதியின்
நடுவே ஓடிற்று. 2 ஆற்றின் இரு கரையிலும்
மெய்வாழ்வளிக்கும் மரம் இருந்தது.†
அது மாதத்திற்கு ஒரு முறையாக ஆண்டு
தோறும் பன்னிரு வகையான கனிதரும்.
அதன் இலைகள் உலக மக்களுக்குக் குண
மளிப்பதற்கென்றே இருக்கின்றன. 3 இனிச்
சாபம் என்பதே இராது. கடவுளும் ஆட்டுக்
குட்டியானவரும் வீற்றிருக்கிற அரியணை
அங்கே இருக்கும். அவருடைய அடியார்கள்
அவரைச் சேவித்து, 4 அவர் முகத்தைக்
காண்பார்கள். அவரது திருப்பெயர்
அவர்கள் நெற்றியில் எழுதியிருக்கும்.
5 இனி இராக்காலம் என்பதே
இராது. விளக்கு வெளிச்சமோ கதிர
வன் ஒளியோ அவர்களுக்குத் தேவைப்
படாது. கடவுளாகிய ஆண்டவரே அவர்
கள்மீது ஒளி வீசுவார். அவர்கள் என்
றென்றும் ஆட்சி செலுத்துவார்கள்.

### கிறிஸ்துவின் வருகை

6 பிறகு அவர் என்னை நோக்கி, ''இந்த
வார்த்தைகள் நம்பத்தக்கவை, உண்மை
யானவை. இறைவாக்குரைப்போருக்கு
ஆவியை அருளும் கடவுளாகிய ஆண்டவர்
விரைவிலேயே நடந்தாக வேண்டிய காரி
யங்களைத் தம்முடைய அடியாருக்குக் காட்
டும் பொருட்டு, தம் தூதனை அனுப்பி
யிருக்கிறார். 7 இதோ, விரைவில் வரு
கிறேன்'' என்று சொன்னார். இந்நூலி
லுள்ள இறைவாக்குகளைக் கடைப்பிடிப்பவன்
நற்பேறு பெற்றவன்.

* திருவெளி. 14:20 அடிக்குறிப்பைப் பார்க்க.
† 1. '....அரியணையினின்று புறப்பட்டு ஓடிற்று. 2. நகர வீதியின் நடுவிலும் ஆற்றின் இரு கரையிலும் மெய்வாழ்வளிக்கும் மரம் இருந்தது' என்றும் மொழிபெயர்க்கலாம்.
**21:15** எசே. 40:3. **21:18—21** ஏசா. 54:11, 12. **21:23** ஏசா. 60:19, 20. **21:24** ஏசா. 60:3. **21:25, 26** ஏசா. 60:11. **21:27** ஏசா. 52:1; எசே. 14:8. **22:1** எசே. 47:1; சக. 14:8. **22:2** ஆதி. 2:9. **22:3** சக. 14:11. **22:5** ஏசா. 60:19; தானி. 7:18.

8 யோவானாகிய நானே இவற்றைக்
கேட்டேன்; இவற்றைக் கண்டேன்.
இவற்றை நான் கேட்டுக் கண்டு முடிந்த
தும் இவற்றை எனக்குக் காட்டின தெய்வ
தூதனை வணங்குவதற்காக அவன் காலடி
யில் விழுந்தேன். 9 அவனோ, ''வேண்டாம்,
வேண்டாம். நான் உன் உடனூழியன்;
இறைவாக்குரைப்பவர்களாகிய உன் சகோ
தரர்கள், இந்நூலிலுள்ள வார்த்தைகளைக்
கடைப்பிடிப்பவர்கள் ஆகியோருடைய
உடன் ஊழியனுமாவேன். கடவுளையே
நீ வணங்க வேண்டும்'' என்றான். 10 மேலும்
அவன் என்னை நோக்கி, ''இந்த நூலி
லுள்ள இறை வாக்குகளை மூடி மறைத்து
வைக்காதே. குறித்த காலம் நெருங்கிவிட்
டது. 11 அநியாயம் செய்கிறவன் அநியா
யம் செய்துகொண்டே இருக்கட்டும்.
அசுத்தன் அசுத்தனாகவே இருக்கட்டும்.
நேர்மையானவன் நேர்மையானதையே
செய்துகொண்டிருக்கட்டும். தூய்மையுள்ள
வன் தூய்மையுள்ளவனாகவே இருக்கட்டும்''
என்று சொன்னான்.

12 ''இதோ, விரைவில் வருகிறேன்.
ஒவ்வொருவனுக்கும் அவனவன் செய்கை
களுக்குத் தக்கபடி நான் அளிக்கப்போகும்
பலன் என்னிடம் இருக்கிறது. 13 அல்பா
வும் ஓமேகாவும்* நானே; முதலும் இறுதி
யும் நானே; தொடக்கமும் முடிவும்
நானே.''

14 தங்கள் ஆடைகளைத் துவைத்து
வெண்மையாக்கிக்கொண்டவர்கள் நற்பேறு
பெற்றவர்கள். அவர்கள் மெய்வாழ்
வளிக்கும் மரத்தின் கனியை உண்ணும்
உரிமை பெறுவார்கள்; வாயில் வழியாக
நகரத்திற்குள் செல்வார்கள். 15 தவறான
போக்குடையவர்களும்,† சூனியக்காரரும்,
கற்புநெறி தவறுவோரும், கொலைகாரரும்,
தெய்வச் சிலையை வணங்குகிறவர்களும்,
வஞ்சனையில் விருப்பங்கொண்டு
அதைச் செய்கிற அனைவரும் வெளியே
இருப்பார்கள்.

16 ''திருச்சபைகளுக்கான இந்தச் செய்
திகளை உங்களிடம் வலியுறுத்திக் கூறுவ
தற்காக இயேசுவாகிய நான் என் தூதனை
அனுப்பியிருக்கிறேன். நான் தாவீதினின்று
தோன்றின முளை, அவனுடைய வழித்
தோன்றல், நான் ஒளிதரும் விடிவெள்ளி.''

17 ஆவியானவரும் மணவாட்டியும்
''வருக'' என்கிறார்கள். இதைக் கேட்பவ
னும், ''வருக'' என்பானாக. தாகமாயிருப்
பவன் வரட்டும். விருப்பமுள்ளவன் மெய்
வாழ்வளிக்கும் தண்ணீரை விலையின்றிப்
பெற்றுக்கொள்ளட்டும்.

18 இந்த நூலிலுள்ள இறைவாக்குகளைக்
கேட்கிற ஒவ்வொருவனையும் நான் எச்ச
ரிக்கிறேன். எவனாவது இவற்றோடு எதை
யேனும் கூட்டினால், இந்நூலில் எழுதி
யுள்ள வாதைகளைக் கடவுள் அவன்மேல்
வரும்படி கூட்டிவிடுவார். 19 எவனாவது
இந்த இறைவாக்கு நூலின் வார்த்தை
களினின்று ஏதாவது ஒன்றை நீக்கிவிட்
டால், இந்நூலில் எழுதியுள்ள மெய்வாழ்
வளிக்கும் மரத்திலும் திருநகரத்திலும்
அவன் பங்குகொள்ளாதபடி கடவுள்
அவனை நீக்கிவிடுவார்.

20 இவற்றிற்குச் சாட்சியாயிருப்பவர்,
''ஆம், விரைவில் வருகிறேன்'' என்
கிறார். ஆமேன், ஆண்டவராகிய இயேசுவே,
வாரும்.

21 ஆண்டவராகிய இயேசுவின் அருள்
அனைவரோடும் இருப்பதாக.

* திருவெளி. 1:8 அடிக்குறிப்பைப் பார்க்க.
† மூலத்திலுள்ள சொல்லின் நேர்ப்பொருள், 'நாய்கள்' என்பது.
22:11 தானி. 12:10. 22:12 எசா. 40:10; 62:11; சங். 28:4; எசா. 40:10; எரே. 17:10. 22:13 திருவெளி. 1:8, 17; 2:8. எசா. 44:6; 48:12. 22:16 எசா. 11:1, 10. 22:17 எசா. 55:1. 22:18, 19 உபா. 4:2; 12:32.

# பொருளடக்க அட்டவணை

**அரையோப்பாகு**

திருத்தூது. 17:19 இது அத்தேனே நகரிலுள்ள ஒரு குன்றின் பெயர். அக் குன்றில் அத்தேனே நகரமன்றம் கூடும். ஆகையால் அம்மன்றத்திற்கு இப்பெயர் வந்தது.

**அர்த்தெமி**

திருத்தூது. 19:24 இது ஒரு தேவதையின் கிரேக்கப் பெயர். இப்பெயர் ரோமரால் 'தியானு' என்று வழங்கப்பட்டது. வளம்தரும் தேவதையாகக் கொள்ளப்பட்ட இத்தெய்வத்தைச் சிறிய ஆசியாவில் (Asia Minor) மக்கள் சிறப்பாக வழிபட்டு வந்தார்கள்.

**அற்புதங்கள், அரிய செயல்கள், வல்லமைச் செயல்கள்**

1. இயேசு செய்தவை:

1. பொதுப்படையாகக் கூறப்படும் இடங்கள்:

மத். 4:23–25; 8:14–17; 9:35-38; 12:15–21; 14:13,14; 15:29–31: 19:1,2; 21:14

மாற். 1:32–34;3:7–12;6:5,53–56

லூக். 4:40,41; 5:15; 6:17–19; 7:20–23; 9:10-12

யோ. 2:23

2. பிசாசுகளைத் துரத்துதல்:

ஊமை: மத். 9:32–34; 12:22–32; லூக். 11:14–23

ஓர் இளைஞன்: மத். 17:14–20; மாற். 9:14–29; லூக். 9:37–43

கதரேனர் நாட்டினன்: மத். 8:28–34 மாற். 5:1–20; லூக். 8:26–39

கானான் நாட்டுப் பெண்ணின் மகள்: மத். 15:21–28; மாற். 7:24–30

கூன் விழுந்த பெண்: லூக். 13:10–17

கெரசேனர் நாட்டினன்: மாற். 5:1–20; லூக். 8:26–39

தொழுகைக்கூடத்தில் இருந்தவன்: மாற். 1:23–28; லூக். 4:31–37

மகதலேனு மரியாள்: மாற். 16:9; லூக். 8:2

3. குணமாக்குதல்:

அரசாங்க அதிகாரியின் மகன்: யோ. 4:43–54

குருடர் இருவர்: மத். 9:27–31; 20:29–34; மாற். 10:46–52; லூக். 18:35–43

சூம்பின கையன்: மத். 12:9–14; மாற். 3:1–6; லூக். 6:6–11

செவிடன்: மாற். 7:31–37

திமிர்வாதமுள்ளவன்: மத். 9:1–8; மாற். 2:1–12; லூக். 5:17–26

தலைமை ஆசாரியரின் வேலைக்காரன்: லூக். 22:51

தொழுநோயுள்ளவன்: மத். 8:1–4; மாற். 1:41–45; லூக். 5:12–16

நீர்க்கோவை நோயுள்ளவன்: லூக். 14:1–6

நூற்றுவர் தலைவனின் வேலைக்காரன். மத். 8:5–13; லூக். 7:1–10

பர்திமேயு என்ற குருடன்: மத். 20:29–34; மாற். 10:46–52 லூக். 18:35–43

பெரும்பாடுள்ள பெண்: மத்.9:20-22; மாற். 5:25–34; லூக். 8:43–48

பேதுருவின் மாமி: மத். 8:14,15: மாற். 1:29–31; லூக். 4:38,39

4. உயிரோடெழுப்புதல்:

யவீருவின் மகள்: மத். 9:18–26; மாற். 5:21–43; லூக். 8:40–56

நாயீன் ஊர் கைம்பெண்ணின் மகன்: லூக். 7:11–17

இலாசரு: யோ. 11:1–44

5. வேறு அரிய செயல்கள்:

அத்தி மரத்தைச் சபித்தல்: மத். 21:18–22; மாற். 11:12–14,19–26

ஐயாயிரம் பேருக்கு உணவளித்தல்: மத். 14:13–21; மாற். 6:30–44; லூக். 9:10–17; யோ. 6:1–15

கடற்கொந்தளிப்பை அடக்குதல்: மத். 8:23–27; மாற். 4:35–41; லூக். 8:22–25

கடல்மீது நடத்தல்: மத். 14:22–33; மாற். 6:45–52; யோ. 6:16–21

திரளான மீன்கள் கிடைக்கச் செய்தல்: லூக். 5:1–11; யோ. 21:1–6

நாலாயிரம் பேருக்கு உணவளித்தல்: மத். 15:32–39; மாற். 8:1–10

பிறவிக் குருடனுக்குப் பார்வையளித்தல்: யோ. 9:1–34

பெத்சாதா குளத்தினருகில் கிடந்த நோயாளி குணமடைதல்: யோ. 5:1–18

**இலேவியன்**

லூக். 10:32; யோ. 1:19; திருத்தூது 4:36; எபி. 7:11 இலேவி குலத்தைச் சார்ந்தவன். கோவிற் பணிகளில் உதவி செய்யும் உரிமை பெற்றவன். (எண். 3:1–13)

**இறுதி நாள், இறுதித் தீர்ப்புநாள்**

யோ. 6:39, 40, 44, 54; 11:24; 12:48; மத். 10:15; 11:22,24; 12:36; 2 பேது. 2:9; 1 யோ. 4:17; 2 தீமோ. 1:12, 18; 4:8

அந்த நாள்: மத். 7:22; லூக். 6:23; 10:12; 21:34; 1 தெச. 5:4; 2 தெச. 1:10

அந்நாளைச் சுட்டும் பிற இடங்கள்: மத். 7:2; லூக். 17:30; திருத்தூது. 2:20; ரோ. 2:5,16; 1 கொரி. 3:13; 5:5; எபே. 4:30; 1 தெச. 5:2; 2 தெச. 2:2; எபி. 10:25; யாக். 5:5; 1 பேது. 2:12; 2 பேது. 2:9; 3:7, 10,12; திருவெளி. 6:17; 16:14

**இறைவாக்குரைப்பவர்**

1. கடவுளின் செய்தியை மக்களுக்கு உரைத்தோர்: பழைய ஏற்பாட்டுக் காலம்:

மத். 2:18; 3:3; 5:12; 12:39; 13:17; 24:15; திருத்தூது. 2:16

2. திருச்சபையில் அவ்வாறு உரைத்தோர்:

திருத்தூது. 13:1; 1 கொரி. 12:28, 29; எபே. 4:11

3. திருமுழுக்குநர் யோவான் அவ்வாறு உரைத்தவர்:

மத். 11:9; 14:5; லூக். 1:76

4. இயேசு—யூதரால் எதிர்பார்க்கப்பட்ட இறைவாக்குரைப்பவர்:

மத். 21:11,46; லூக். 7:16; 24:19; யோ. 6:14; 7:40; 9:17; திருத்தூது. 3:22,23

**உடன்படிக்கை**

1. பழையது:

திருத்தூது. 3:25; 7:8; 2 கொரி. 3:14; கலா. 3:17, 18; எபே. 2:12; எபி. 8:7–13; 9:1–5

2. புதியது:

மத். 26:28; மாற். 14:24; லூக். 22:20; 1 கொரி. 11:25; 2 கொரி. 3:4–6; எபி. 8:7–13; 10:15,16, 29; 12:24; 13:20

**உயிர்த்தெழுதல்**

1. இயேசு:

திருத்தூது. 2:23–35; 5:30–32; 10:40, 41; 13:30, 31; ரோ. 1:5; 6:4–11; 1 கொரி. 15:1–58 (இயேசு பார்க்க)

2. மனிதர்:

யோ. 5:24–29; 6:40; திருத்தூது. 23:6–8; 1 கொரி. 15:12–58

யவீருவின் மகள்: மத். 9:18–26; மாற். 5:21–43; லூக். 8:40–56

நாயீன் ஊர் கைம்பெண்ணின் மகன்: லூக். 7:11–17

இலாசரு: யோ. 11:1–44

தொர்க்காள்: திருத்தூது 9:36–43

**உவமைகள்**

பயன்படுத்தியதன் நோக்கம்: மத். 13:10–17, 34,35, மாற். 4:10–12; லூக். 8:9,10

அடிமை: லூக். 17:7–10

அத்திமரம்: மத். 24:32–35; மாற். 13:28–31; லூக். 21:29–33

இரக்கம் காட்டிய சமாரியன்: லூக். 10:25–37

இரு கடனாளிகள்: லூக். 7:40–43

உடன்பிறந்தார் இருவர்: மத். 21:28–32

ஒட்டுத்துணி: மத். 9:16; மாற். 2:21; லூக். 5:36

கடுகு விதை: மத். 13:31,32; மாற். 4:30–32; லூக். 13:19

கனிகொடாத அத்திமரம்: லூக். 13:6–9

காணமற்போயிருந்த ஆடு: மத். 18:12–14; லூக். 15:1–7

காணமற் போயிருந்த வெள்ளிக் காசு: லூக். 15:8–10

காணமற்போயிருந்த மகன்: லூக். 15:11–32

கோதுமையும் களைகளும்: மத். 13:24–30,36–43

கைம்பெண்ணும் நீதிபதியும்: லூக். 18:1–8

செல்வனும் இலாசருவும்: லூக். 16:19–31

திராட்சைத் தோட்டத்துக் குத்தகைக்காரர்: மத். 21:33–46; மாற். 12:1–12; லூக். 20;9–19

திராட்சைத் தோட்ட வேலையாட்கள் மத். 20:1–16

திராட்சை இரசமும் துருத்தியும்: மத். 9:17; மாற் 2:22; லூக். 5:37,38

திருமண விருந்து: மத். 22:1–14

நம்பிக்கைக்குரிய வேலைக்காரன்: மத். 24:45–51; லூக். 12:41–48

நேர்மையற்ற கண்காணிப்பாளன்: லூக். 16: 1–13

பத்துக் கன்னியர்: மத். 25:1–13

பத்துப்பணியாள்கள்: லூக்.19:11-27

பரிசேயனும் ஆயக்காரனும்: லூக். 18:9–14

புளிப்பு மாவு: மத்.13:33; லூக்.13: 20, 21

பெரிய விருந்து: லூக். 14:15–24

மதிகேடனை செல்வன்: லூக்.12:13–21

மறைந்திருக்கும் புதையல்: மத்.13:44

மன்னிப்பளியாத அடிமை: மத். 18: 21–35

முத்து: மத். 13:45, 46

முளைத்துப் பயிராகும் விதை: மாற். 4:26–29

மூன்று பணியாளர்: மத். 25:14–30

வலை: மத்.13:47–50

விதை விதைப்பவன்: மத். 13:1–9, 18–23; மாற்.4:1–9; லூக்.8:4–8, 11–15

விளக்கு: மத். 5:15; மாற்.4:21–23; லூக். 11:33

விளையாட்டுப் பிள்ளைகள்: மத்.11:16, 17; லூக். 7:31

விழிப்பாயிருக்கும் ஊழியர்: மாற். 13:32–37; லூக். 12:35–48

வீடு கட்டினவர் இருவர்: மத். 7:24–27; லூக். 6:46–49

**எப்பிக்கூரர்**

திருத்தூது. 17:18. எப்பிக்கூரு (+கி.மு. 270) என்ற தத்துவ ஞானியின் போதனையைப் பின்பற்றினவர்கள். இம்மையின் இலக்கு இன்பமே என்பது எப்பிர்கூரரின் போதனை.

**ஒப்புக்கொள்ளுதல்**

1. பாவத்தை:

மத். 3:6; மாற். 1:5 யாக். 5:16; 1 யோ. 1:9

2. இயேசுவை:

மத்.10:32; லூக்.12:8; யோ. 9:22; 1 யோ. 2:23 4:2, 15.

**கலாத்தியா:**

திருத்தூது. 16:6; 18:23; 1 கொரி. 16:1; 2 தீமோ.4:10; 1 பேது.1:1 இது ரோமர் ஆட்சிக்குட்பட்டிருந்த ஒரு மாநிலம். இதில் பிசீதியா அந்தியோகியா, இக்கோனியா, லீஸ்திரா, தெர்பை ஆகிய ஊர்கள் இருந்தன. இப்போது இம்மாநிலம் துருக்கி நாட்டைச் சேர்ந்த ஒரு பகுதியாயிருக்கிறது.

**கிறிஸ்துவின் இரண்டாம் வருகை**

மத். 16:27,28; 24:36–44; 25:31–46; மாற். 13:24–27; லூக். 12:40; 17:20–37; 21;25–28; யோ. 14:3, 18,28; திருத்தூது. 1:11; பிலி. 3:20, 21; 1 தெச. 4:13–5:11; 2 தெச. 1:3–10; 2:1–12; எபி. 9: 28; 2 பேது. 3:1–13; 1 யோ. 2:28–3:3; திருவெளி. 22:6–17

**கீழ்ப்படிதல்**

1. கடவுளுக்கு, கிறிஸ்துவுக்கு:
மாற். 1:27; 4:41; யோ. 3:36; திருத்தூது.5:29–32; 1 யோ. 5:2

2. அருட்செய்தி கூறுவதற்கு:
ரோ. 6:15–23; 2 கொரி. 7:15,16; பிலி.2:12,13; 2 தெச.1:8; 3:14

3. உலகியல் அதிகாரிகளுக்கு:
திருத்தூது. 5:29; ரோ. 12:1–5; 13: 1–7; எபே. 6:5; தீத்து 3:1,2; 1 பேது. 2:13–17

**சதுசேயர்**

இவர்கள் யூத மதப் பிரிவுகளுள் ஒரு சிறு பிரிவைச் சேர்ந்தவர்கள்; இவர்களுள் பெரும்பான்மையர் ஆசாரியராயிருந்தனர்; செல்வாக்குடையோர்; முன்னோர் பாரம்பரியம், உயிர்த்தெழுதல், தெய்வதூதர், ஆவிகள் உண்டென்னும் நம்பிக்கை ஆகியவற்றை ஏற்காதோர்; வேதாகமத்தின் முதல் ஐந்து நூல்களை மட்டும் வேதமாகக் கொள்வோர்:

மத். 3:7; 16:5–12; 22:23–33; மாற். 12:18–27; லூக். 20:27–40; திருத்தூது. 4:1–4; 5:17–21; 23:6–9

**சிலுவை**

1. கிறிஸ்துவினது:
மத். 27:32–56; மாற். 15:13–41; லூக்.23:26–49; யோ.19:17–37; 1 கொரி. 1:18–25; கலா. 6:12–14; எபே. 2:16; கொலோ. 1:20; 2:14, 15; எபி. 12:2

2. கிறிஸ்தவனுக்குரியது:
மத். 10:38; 16:24; மாற். 8:34; லூக். 9:23; 14:27; ரோ. 6:5–8; கலா. 2:19, 20; 6:12–14

## ஜெபம்

1. இயேசுவின் போதனை:
மத்.5:43—45; 6;5—15; லூக்.11:1—13; 18:1—8

2. இயேசுவின் வாழ்க்கையில்:
மத்.14:23; 26:36—48; மாற்.1:35; 6:46; 14:32—42; லூக்.3:21, 22; 5:16; 6:12; 9:18, 29; 11:1; 22:32, 39—46; யோ. 17:1—26

3. திருத்தூதுவரின் அறிவுரை:
ரோ.8:26, 27; 1 கொரி.14:13—17; எபே. 6:18—20; பிலி. 4:6; கொலோ. 4:2—4; 1 தெச. 5:16; 1 தீமோ.2:1—8; யாக். 5:13—18; 1 யோ. 5:16; யூதா 20

## திருத்தூதுவர்

1. பன்னிருவர்:
மத். 10:1—4; மாற்.3:13—19; லூக். 6:12—16; திருத்தூது. 1:12—14; யூதா 17; திருவெளி. 21:14

2. பவுல்: வாழ்க்கையின் முற்பகுதி:
பிறப்பு: திருத்தூது. 22:3
உடன்பிறந்தாள்: திருத்தூது. 22:3
கல்வி: திருத்தூது. 22:3
தொழில்: திருத்தூது. 18:3
ஸ்தேவான் இறந்தபோது: திருத்தூது. 7:58; 8:1;22:20
கிறிஸ்தவர்களைத் துன்புறுத்தினது: திருத்தூது. 7:58; 8:1; 22:4, 5; 26:9—11;1 கொரி. 15:9; கலா. 1:13; பிலி. 3:6; 1 தீமோ. 1:13
மனமாற்றமடைதல்: திருத்தூது.9:1—18;22:6—16; 26:12—18

வாழ்க்கையின் பிற்பகுதி:

அரேபியாவில்: கலா. 1:17
தமஸ்குவில்: திருத்தூது. 9:19—25; 26:20; 2கொரி.11:32; கலா.1:17
எருசலேமில்: திருத்தூது. 9:26—30; 26:20; கலா. 1:18
தர்சுவில்: திருத்தூது. 9:30; 11:25
அந்தியோகியாவில்: திருத்தூது. 11:25—30
முதற் பயணம்: திருத்தூது. 12:25—14:28
எருசலேமில்:திருத்தூது.15:36-18:21
இரண்டாம் பயணம்: திருத்தூது.15:36—18:21
மூன்றும் பயணம்: திருத்தூது.18:22—20:38
எருசலேமில்: திருத்தூது.21:1—23:22
செசரியாவில்: திருத்தூது. 23:23—26:32
ரோமாபுரிக்குப் பயணம்: திருத்தூது. 27:1—28:15
ரோமாபுரியில்: திருத்தூது.28:16—31

3. பேதுரு:

சீடனுயிருக்க அழைக்கப்படுதல்:
மத்.4:18—20; மாற்.1:16—18; லூக். 5:1—11; யோ. 1:35—42

இயேசுவைப்பற்றிக் கூறியது:
மத். 16:13—20; மாற். 8:29; லூக். 9:18—20; யோ.6:68,69

மறுதோற்ற மலையில்:
மத். 17:1—13; மாற். 9:2—8; லூக். 9:28—36

கெத்செமனேயில்:
மத். 26:36—46; மாற். 14: 32-42; யோ.18:10,11

மறுதலிப்பு:
மத்: 26:69—75; மாற். 14:66—72; லூக். 22:31—34, 54—62; யோ. 18:15—27

உயிர்த்தெழுந்த ஆண்டவரைக்காணுதல்:
லூக்.24:36—43; யோ.21:1—23

அருட்செய்திப் பணி:
திருத்தூது. 2:14—36; 3:1—5:16; 8:14—25; 15:6—11

அந்தியோகியாவில் பேதுருவும் பவுலும்:
கலா.2:11—14

## திருமுழுக்கு

1. யோவான்—திருமுழுக்குநர்:
மத். 3:7—17; மாற். 1:4—8; லூக். 3:1—20; யோ. 1:6—9, 29—34; யோ.3:22—30; திருத்தூது.13:24, 25; 19:3,4

2. இயேசு—திருமுழுக்குப் பெற்றது:
மத்.3:13—17; மாற்.1:9—11; லூக். 3:21,22

3. கிறிஸ்தவத் திருமுழுக்கு:
மத். 28:19, 20; திருத்தூது. 2:41; 8:36—38; 10:47, 48; ரோ.6:3,4; 1 கொரி. 12:13; கலா. 3:27; கொலோ.2:12; 1 பேது.3:21,22

4. தூய ஆவியால்:
மத்.3:16; மாற்.1:10; லூக். 3:21, 22; திருத்தூது. 1:8;11:15

17:3,4; யோ. 20:23; 2 கொரி. 2:5—11; எபே. 4:32; கொலோ. 2:13, 14; 1 யோ. 2:2

**மனச்சான்று**

ரோ. 2:15,16; 9:2; 1 கொரி. 8:10—13; 10:25—30; தீத்து 1:15; எபி. 9:14; 1 பேது. 3:21

**மேசியா**

இந்த எபிரேயச் சொல் கிரேக்க மொழியில் கிறிஸ்து எனப்படும். இச் சொற்களுக்கு 'அபிடேகம் செய்யப் பட்டவர்' என்பது பொருள்: யோ. 1:41; 4:25

எபிரேயர் கிறிஸ்துவை மேசியா என்பர். (எ—டு): மத். 2:4

இவரைக் குறிக்கும் பிற பெயர்கள்: எதிர்பார்க்கப்பட்ட இறைவாக்குரைப் பவர் யோ. 7:40;

வருபவர்: மத். 21:9; 23:39; மாற். 11:9; லூக். 13:35; 19:38; யோ. 12:13

தாவீதின் மைந்தர்: மத். 22:42

மனுமைந்தர்: மத். 9:6; மாற். 8:31

கடவுளின் மைந்தர்: மத். 2:15; 14:33; 27:54

**வரிகள்**

மத். 17:24—27; 22:15—22; மாற்.12:13—17; லூக். 20:20—26

**விருத்தசேதனம்**

உடல் சார்ந்தது:

லூக். 1:59; 2:21; யோ. 7:22-24

ஆன்மீக வாழ்க்கை சார்ந்தது:

பிலி. 3:3; கொலோ. 2:11

**ஸ்தோயிக்கர்**

திருத்தூது. 17:18 சேனோ (+கி. மு. 265) என்ற தத்துவஞானியின் போதனையைப் பின்பற்றினவர்கள். மகிழ்ச்சியோ துயரமோ இல்லாத நிலையிலேதான் இன்பத்தைக் காண லாம் என்பது ஸ்தோயிக்கரின் போதனை.

# சங்கீதங்கள்

## முதலாம் பாகம்

*1–41*

### நற்பேறு பெற்றவன் யார்?

1 நற்பேறு பெற்றவன் யாரெனில்,
பொல்லாரின் அறிவுரையின்படி நடவா
மலும்,
பாவிகளின் வழியைப் பின்பற்றாமலும்,
இகழ்வார் கூட்டத்தில் உட்காராமலும்,
2 ஆண்டவர் அருளிய வேதத்தை மகிழ்ச்சி
யோடு படித்து,
இரவும் பகலும் அவர் அருளிய வேதத்
தைத் தியானித்து வருகிற மனிதனே..
3 அவன் நீரோடையின் ஓரத்தில் நடப்
பட்ட மரத்தைப் போலிருப்பான்;
பருவகாலத்தில் கனிதந்து, என்றும்
பச்சையாயிருக்கும் அம்மரத்தைப்
போலச் செழிப்பான்;
அவன், தான் செய்வதனைத்திலும்
வெற்றி பெறுவான்.

4 பொல்லாரோ அவனைப் போலிரார்;
அவர்கள் காற்று அடித்துக்கொண்டு
போகும் பதரைப் போலிருப்பார்கள்.
5 ஆகையால், பொல்லார் தண்டனைத்
தீர்ப்புப் பெறுவர்;
அந்தப் பாவிகளுக்கு நல்லார் கூட்டத்
தில் இடமேயிராது.
6 நல்லாரின் வழியை ஆண்டவர் பாது
காப்பார்;
பொல்லாரின் வழியோ பாழாகும்.

### கடவுள் தேர்ந்துகொண்ட அரசர்

2 பிற இனத்தவர் சீறி எழுவானேன்?
அந்த மக்கள் வீணாகச் சூழ்ச்சி செய்
வானேன்?
2 ஆண்டவரையும் அவர் அபிடேகம் செய்
தவரையும் எதிர்த்து உலக அரசர்
எழுந்தனர்;
அதிகாரிகளும் ஒன்று சேர்ந்தார்கள்.
3 "அவர்கள் கட்டின கட்டுகளை அறுப்
போம்;
அவர்கள் இட்ட தளைகளைத் தகர்த்தெறி
வோம்" என்கிறார்கள்.

4 விண்ணுலகில் வீற்றிருப்பவர் நகைப்
பார்;
ஆண்டவர் அவர்களைப் பார்த்து ஏளனம்
செய்வார்.
5 அவர் சினத்தோடு அவர்களிடம் பேச
வார்;
தமது கடுஞ்சினத்தால் அவர்களைக் கலங்
கடிப்பார்.
6 "என் புனித மலையாகிய சீயோனிலே
நான் என் அரசரை அமர்த்தினேன்"
என்கிறார்.

7 ஆண்டவர் உரைத்ததை அறிவிக்
கிறேன் :
"நீர் என் மைந்தர்; இன்று நான்
உம்மைப் பெற்றெடுத்தேன்.
8 என்னிடம் கேளும்; எல்லா நாட்டின
ரையும் உமக்கு உரிமை ஆக்குவேன்:
உலகை அதன் கடையெல்லைவரை உமக்
குச் சொந்தமாக்குவேன்.
9 இருப்புக் கோலால் நீர் அவர்களை
நொறுக்குவீர்;
குயவன் கலத்தைப்போல அவர்களை
உடைத்துவிடுவீர்" என்று அவர்
என்னிடம் சொன்னார்.

10 ஆகையால் அரசர்களே, விவேகமாக
நடந்துகொள்ளுங்கள்;
உலகின் நீதிபதிகளே, எச்சரிக்கையா
யிருங்கள்;
11 அச்சத்தோடு ஆண்டவரைத் தொழுங்
கள்;
நடுக்கத்தோடு அவர் பாதம் பணியுங்
கள்.
12 மைந்தர் சினங்கொள்ளாமல் இருக்கும்
படியும்,
நீங்கள் வழியிலேயே அழியாமல் இருக்
கும்படியும்,
அவரை முத்தம் செய்யுங்கள்.
அவரது சினம் விரைவில் பற்றியெரியும்.
அவரிடம் அடைக்கலம் புகுவோர் அனை
வரும் நற்பேறு பெற்றோர்.

### காலை மன்றாட்டு

(தம் மகனான அப்சலோமுக்குத் தப்பி
யோடினபோது தாவீது பாடின
சங்கீதம்)

3 ஆண்டவரே, என் பகைஞர் எவ்
வளவாகப் பெருகிவிட்டனர்;
என்னை எதிர்த்து எழுவோர் ஏராள
மான பேர்.

1:1 நீதி. 1:10. 1:3 நீதி. 11:28; எரே. 17:8. 2:1,2 திருத்தூது. 4:25,26. 2:7 திருத்தூது. 13:33; எபி. 1:5; 5:5. 2:9 திருவெளி. 2:26,27; 12:5; 19:15.

2 ''கடவுள் அவனுக்கு உதவி செய்யார்'' என்று
என்னைக் குறித்துச் சொல்வோர் பலர். (சேலா)*

3 ஆண்டவரே, நீர் எனக்குக் கேடயமாயிருக்கிறீர்;
எனக்கு மேன்மை அளிப்பவரும் நீரே;
என்னைத் தலை நிமிர்ந்து நடக்கச் செய்பவரும் நீரே.
4 நான் உரத்த குரலில் ஆண்டவரிடம் மன்றாடுவேன்;
அவர் தமது புனித மலையிலிருந்து எனக்குச் செவிகொடுப்பார். (சேலா)

5 நான் படுத்துத் தூங்கினேன், விழித்தெழுந்தேன்;
ஏனெனில், ஆண்டவரே எனக்குஆதரவு.
6 என்னைச் சூழ்ந்திருக்கும் பல்லாயிரக் கணக்கான பகைவருக்கு நான் அஞ்சேன்.

7 ஆண்டவரே, வாரும்; என் கடவுளே, என்னைக் காத்தருளும்;
என் எதிரிகள் அனைவரையும் கன்னத்தில் அறைகின்றீர்; பொல்லாரின் பல்லை உடைக்கின்றீர்.
8 விடுதலை அளிப்பவர் ஆண்டவர்;
அவர் தம் மக்களுக்கு ஆசி வழங்குவாராக!

## மாலை மன்றாட்டு

(பாடகர் தலைவனுக்கு; இசைக்கருவி: யாழ்; தாவீதின் சங்கீதம்)

**4** எனக்கு நீதி கிடைக்கச் செய்யும் கடவுளே,
நான் மன்றாடும்போது எனக்குச் செவிசாய்த்தருளும்;
நான் நெருக்கடி நிலையில் இருந்தபோது, நீர் என் இக்கட்டை நீக்கினீர்;
எனக்கு இரங்கும்; என் வேண்டுதலுக்குச் செவிசாய்த்தருளும்.

2 மானிடரே, எவ்வளவு காலம் சிலை வழிபாட்டை நாடுவீர்கள்? பொய்யானதைத் தேடிச் செல்வீர்கள்?
எவ்வளவு காலம் எனக்குரிய மாட்சிமையை அளிக்காமல் இவ்வாறு என்னை அவமானப்படுத்துவீர்கள்?

3 ஆண்டவர் என்னைத் தமக்குரியவனாகத் தேர்ந்துகொண்டார் என்பதை அறிந்துகொள்ளுங்கள்.
4 சினங்கொண்டாலும் பாவம் செய்யாதீர்கள்;
படுத்திருக்கையில் உங்கள் உள்ளங்களில் தியானம் செய்து அமைதியாயிருங்கள். (சேலா)
5 நேர்மையான மனத்தோடு பலிகளைச் செலுத்துங்கள்;
ஆண்டவரை நம்புங்கள்.
6 ''யாராவது நலமானதை எங்களுக்கு அருள மாட்டாரா?'' என்று பலர் கேட்கின்றனர்;
ஆண்டவரே, எங்கள்மீது உமது முகத்தின் ஒளி வீசும்படி செய்தருளும்.
7 தானியமும் திராட்சை இரசமும் நன்கு விளையும் காலத்தில்,
மக்கள் அடையும் மகிழ்ச்சியைவிட மேலான மகிழ்ச்சியை என் உள்ளத்தில் பொங்கச்செய்தீர்.

8 மன அமைதியுடன் நான் இப்போது படுத்துறங்குவேன்;
ஆண்டவரே, நான் தனிமையாயிருந்தாலும், நீர் என்னை அச்சமின்றி வாழச்செய்கிறீர்.

## பாதுகாப்புக்காக மன்றாடுதல்

(பாடகர் தலைவனுக்கு; இசைக்கருவி: நெகிலோத்து; தாவீதின் சங்கீதம்)

**5** ஆண்டவரே, என் விண்ணப்பத்திற்குச் செவிசாய்த்தருளும்;
என் பெருமூச்சைக் கவனித்தருளும்.
2 என் அரசரே, என் கடவுளே, நான் மன்றாடும்போது என் குரலுக்குச் செவிகொடுத்தருளும்;
உம்மையே நோக்கி வேண்டிக்கொள்கிறேன்.

3 ஆண்டவரே, விடியற்காலையில் என் குரலுக்குச் செவிசாய்ப்பீர்;
வைகறையில் உமது மறுமொழியை எதிர்பார்த்துக் காத்திருப்பேன்.

4 நீர் பொல்லாங்கைப் பார்த்து மகிழும் கடவுளல்ல;
உமது முன்னிலையில் தீமைக்கு இடமில்லை.
5 வீண் பெருமை கொள்வோர் உமது முன்னிலையில் நிற்க மாட்டார்கள்;
தீமை செய்யும் அனைவரையும் நீர் அருவருக்கின்றீர்.
6 பொய் பேசுவோரை நீர் அழிப்பீர்.
கொலைவெறியனையும் வஞ்சகனையும் ஆண்டவர் அருவருக்கின்றார்.

7 நான் உமது பேரருளால் உமது ஆலயம் செல்வேன்;

* சேலா: இசைக்கருவி வாசிப்போருக்குக் கொடுக்கப்பட்ட ஒரு குறிப்பு என்று கருதப்படுகிறது.

3:5 நீதி. 3:24. 4:4 எபே. 4:26. 5:9 ரோ. 3:13.

உமது முன்னிலையில் அச்சத்தோடு நின்று
உம்மைப் பணிவேன்.
8 ஆண்டவரே, என்னைப் பிடிக்கப் பதுங்கி
யிருப்போர் பலர் இருப்பதால்,
உமது நீதிப்பாதையில் என்னை நடத்
தும்;
உமது செவ்வையான வழியை எனக்குக்
காட்டியருளும்.
9 அவர்கள் வாயில் உண்மை இல்லை;
அவர்கள் உள்ளம் கேடுள்ளது;
அவர்கள் தொண்டை திறந்த பிணக்
குழி;
அவர்கள் நாவோ இனிமையானவற்
றைப் பேசும்.

10 கடவுளே, அவர்கள் குற்றவாளிகள்
என்று தீர்ப்பளியும்;
அவர்கள் தங்கள் சூழ்ச்சிகளாலேயே
அழிவார்கள்.
அவர்களுடைய துரோகச் செயல்கள்
ஏராளம்;
அவர்கள் உம்மை எதிர்த்துக் கலகம்
செய்தார்கள்;
ஆகையால், அவர்களைப் புறம்பே தள்ளி
விடும்.

11 உம்மிடம் அடைக்கலம் புகுந்தோர்
அனைவரும் மகிழ்ந்து கொண்டாடு
வர்;
அவர்கள் எந்நாளும் களித்து ஆர்ப்பரிப்
பார்கள்;
நீர் அவர்களைக் காப்பீர்; உமது திருப்
பெயரை நேசிப்பவர்கள் உம்மை
நினைத்துக் களிகூர்வார்கள்.
12 ஆண்டவரே, நீதிமானுக்கு நீர் ஆசி
வழங்குவீர்;
கருணை என்னும் கேடயத்தால் அவனை
மறைத்துக் காப்பீர்.

### இக்கட்டுக் காலத்தில் உதவிக்காக வேண்டுதல் செய்தல்

(பாடகர் தலைவனுக்கு; இசைக்கருவி:
யாழ்; இராகம் : சிமீனீத்து;
தாவீதின் சங்கீதம்)

6 ஆண்டவரே, என்மீது சினங்கொண்டு
என்னைக் கண்டியாதேயும்;
என்மீது கடுஞ்சிற்றங்கொண்டு என்னைத்
தண்டியாதேயும்.
2 ஆண்டவரே, எனக்கு இரங்கும்; நான்
வாடிப்போனேன்;
ஆண்டவரே, என்னைக் குணமாக்கி
யருளும்; என் எலும்புகள் தள்ளாடு
கின்றன.
3 என் ஆன்மா மிகவும் கலங்குகின்றது;
இது எவ்வளவு காலம் நீடிக்கும்,
ஆண்டவரே?

4 ஆண்டவரே, திரும்பிவாரும்; என் ஆன்
மாவை விடுவித்தருளும்;
உமது இரக்கத்தை முன்னிட்டு என்னை
மீட்டு விடுவியும்.
5 இறந்தபின் உம்மை நினைப்பவன் எவனு
மில்லை;
பாதாளத்தில் உம்மைத் துதிப்பவன்
யார்?
6 பெருமூச்சினால் இளைத்துப்போனேன்;
இரவெல்லாம் கண்ணீரால் என் படுக்கை
ஈரமாகின்றது;
என் கட்டில் அழுகையால் நனைகின்றது.
7 துயரத்தால் என் கண் மங்கிப்போயிற்று;
என் பகைவர் காரணமாக அது குழி
விழுந்துபோயிற்று.

8 நெறிகேடான செயல்களைச் செய்கிறவர்
களே, என்னை விட்டு அகன்று
போங்கள்;
ஆண்டவர் என் அழுகுரலுக்குச் செவி
சாய்த்தார்.
9 ஆண்டவர் என் விண்ணப்பத்திற்குச்
செவி கொடுப்பார்;
ஆண்டவர் என் வேண்டுதலை ஏற்றுக்
கொள்வார்.
10 என் எதிரிகள் யாவரும் வெட்கிக்
கலங்குவார்கள்;
அவர்கள் விரைவில் நாணமுற்றுத் திரும்
பிச் செல்வார்கள்.

### நீதி வழங்கும்படி வேண்டுதல் செய்தல்

(சிக்காயோன் என்னும் பாடல்;
பென்யமீனியனான கூஷ் என்பவ
னின்வார்த்தைகளைக் கேட்டுத்தாவீது
வருந்தி, ஆண்டவரை நோக்கிப்
பாடியது)

7 என் கடவுளாகிய ஆண்டவரே, உம்
மிடம் அடைக்கலம் புகுந்தேன்;
என்னைப் பிடிக்கும்படி என் பின்னே
வருவோர் அனைவரிடமிருந்தும் என்
னைத் தப்புவித்துக் காப்பாற்றும்.
2 நீர் என்னைக் காப்பாற்றாவிடில் என்
எதிரிகள் சிங்கம்போல என்னைப்
பிடித்துப் பீறிவிடுவார்கள்;
விடுவிக்க எவனும் இரான்.

3 என் கடவுளாகிய ஆண்டவரே, நான்
இவ்வாறு செய்திருந்தால், என் கை
யால் நேர்மைக்கேடானதைச் செய்
திருந்தால்,
4 என் நண்பனுக்கு நான் தீங்கிழைத்திருந்
தால்,
என் பகைவனை நான் காரணமின்றிக்
கொடுமைப்படுத்தியிருந்தால்,

6:1 சங். 38:1; 6:8 மத். 7:23; லூக். 13:27.

5 என் எதிரிகள் என் பின்னே வந்து
என்னைப் பிடித்து,
என்னைத் தரையில் தள்ளி மிதித்து நசுக்
கட்டும்;
என் பெருமையைக் குலைத்து என்னை
அவமானப்படுத்தட்டும். (சேலா)

6 ஆண்டவரே, சினங்கொண்டு எழுந்து
வாரும்; என் எதிரிகளின் சீற்றத்தை
எதிர்த்து நில்லும்;
என் கடவுளே, நியாயத்தை நிலைநாட்
டும்; விழித்தெழுந்து எனக்கு உதவி
செய்யும்.
7 எல்லா இனத்தவரையும் உம்மைச் சூழ
ஒன்றுகூடி வரச்செய்யும்;
விண்ணுலகத்திலிருந்து அவர்கள்மீது
ஆட்சி செலுத்தும்.
8 ஆண்டவரே, நீரே எல்லா நாட்டினருக்
கும் தீர்ப்பளிப்பவர்;
ஆண்டவரே, என் நேர்மைக்கும் வாய்
மைக்கும் ஏற்ப எனக்குத் தீர்ப்பளி
யும்.

9 பொல்லாருடைய தீமை ஒழியும்படி
செய்யும்; நல்லவனை நிலைநிறுத்தும்;
நீர் நீதிபரர், மனிதரின் உள்ளெண்ணங்
களையும் விருப்பங்களையும் கண்டறி
பவர்.
10 கடவுளே என் கேடயம்;
நேர்மையான உள்ளத்தினரை அவர்
காப்பார்.
11 கடவுள் நடுநிலை தவறாத நீதிபதி;
அவர் பொல்லாரை நாள்தோறும் கண்
டிக்கிற கடவுள்.

12 மக்கள் மனமாற்றமடையாவிடில், அவர்
தம் வாளைக் கூர்மையாக்குவார்;
வில்லை நாணேற்றி ஆயத்தப்படுத்து
வார்.
13 சாகடிக்கும் ஆயுதங்களைக் கையில் எடுப்
பார்;
தம் அம்புகளை அனல் கக்கச் செய்வார்.

14 தீமையைப் பெற்றெடுக்கப் பொல்லான்
படும் வேதனையைப்பார்;
அவன் தீவினையைக் கருவாகக் கொண்டு
வஞ்சனையைப் பெற்றெடுக்கிறான்.
15 அவன் ஒரு குழியை வெட்டி அதை ஆழ
மாகத் தோண்டினான்;
அவன் வெட்டின குழியில் அவனே விழு
வான்.
16 அவன் செய்த தீமை அவன் தலைக்கே
திரும்பும்;
அவன் செய்த கொடுமை அவன் உச்சந்
தலையிலேயே வந்து இறங்கும்.

17 ஆண்டவர் வழங்கிய நீதிக்காக அவரைப்
புகழுகின்றேன்;
உன்னதமானவராகிய ஆண்டவரின்
திருப்பெயரைப் புகழ்ந்து பாடுகின்
றேன்.

### கடவுளின் மாட்சிமையும் மனிதரின் மேன்மையும்

(பாடகர் தலைவனுக்கு; இராகம்: கித்தீத்து; தாவீதின் சங்கீதம்)

8 ஆண்டவரே, எங்கள் ஆண்டவரே,
உமது திருப்பெயர் உலகெங்கும்
எவ்வளவு மேன்மையாய் விளங்கு
கிறது!
உமது மாட்சிமையை வானங்களுக்கு
மேலாகவும் விளங்கச் செய்கிறீர்.
2 உம்முடைய பகைவருக்கு அறிவு உண்
டாகும்படியும்,
எதிரியும் பழிகாரனும் அடங்கியிருக்கும்
படியும்,
பாலகர் வாயினாலும் குழந்தைகள் வாயி
னாலும் வல்லமை விளங்கச் செய்தீர்.

3 உம் கைகளின் வேலைப்பாடாகிய வானத்
தையும்
நீர் உண்டாக்கின நிலாவையும் விண்
மீன்களையும் நான் கவனிக்கும்போது,
4 மனிதனை நீர் நினைவில் கொள்வதற்கு
அவன் யார்?
மனிதனுடைய மைந்தனை நீர் கண்ணோக்
குவதற்கு அவன் யார் என்கிறேன்.

5 தெய்வதூதரைவிட அவனைச் சற்றுச்
சிறியவனாக்கினீர்;
மாட்சிமையையும் மேன்மையையும்
அவனுக்கு முடியாகச் சூட்டினீர்.
6 உமது கை படைத்தவற்றின்மேல் அவன்
ஆட்சி செலுத்தும்படி அருள்புரிந்தீர்;
எல்லாவற்றையும் அவன் பாதங்களுக்
குக் கீழ்ப்படுத்தினீர்.
7 ஆடுமாடுகள் காட்டு விலங்குகள் அனைத்
தையும் அவனுக்குக் கீழ்ப்படுத்தினீர்;
8 வானத்துப் பறவைகளையும் கடல் மீன்
களையும்
ஆழ்கடலில் நீந்திச் செல்லும் உயிரினங்
கள் அனைத்தையும் அவனுக்குக் கீழ்ப்
படுத்தினீர்.

9 ஆண்டவரே, எங்கள் ஆண்டவரே,
உமது திருப்பெயர் உலகெங்கும் எவ்
வளவு மேன்மையாய் விளங்குகிறது!

### நன்றி செலுத்துதலும் மன்றாடுதலும்

9 (பாடகர் தலைவனுக்கு; இராகம்:
மூதலப்பேன்; தாவீதின் சங்கீதம்.)

ஆண்டவரே, என் முழு இதயத்தாலும்
உம்மைப் புகழுகிறேன்;

7:9 திருவெளி. 2:23. 8:2 மத். 21:16. 8:4 யோபு 7:17, 18; சங். 144:3; எபி. 2:6–8. 8:6 1 கொரி. 15:27; எபே. 1:22; எபி. 2:8.

வியக்கத்தக்க உம்முடைய செயல்களை
யெல்லாம் எடுத்துரைப்பேன்.
2 உம்மை நினைத்து மகிழ்ந்து களிகூர்
கிறேன்;
உன்னதமானவரே, உமது திருப்
பெயரைப் புகழ்ந்து பாடுகிறேன்.

3 என் எதிரிகள் பின்னிட்டுத் திரும்புவார்
கள்;
உமது முன்னிலையில் இடறிவிழுந்து
அழிவார்கள்.
4 நீர் நீதியுள்ள நீதிபதியாய் அரியணையில்
வீற்றிருக்கின்றீர்;
என் வழக்கில் எனக்கு நீதி வழங்கினீர்.

5 பிற இனத்தவரைக் கண்டித்தீர்; பொல்
லாரை அழித்தீர்;
அவர்கள் பெயரை இனி இராதபடி
அடியோடு தொலைத்துவிட்டீர்.
6 எதிரிகள் ஒழிந்தார்கள்; என்றும் தலை
யெடுக்காமல் அழிந்தார்கள்;
அவர்கள் ஊர்களை முற்றும் அழித்தீர்;
அவர்களைப்பற்றிய நினைவு அற்றுப்
போயிற்று.

7 ஆண்டவர் அரியணையில் என்றென்றும்
வீற்றிருப்பவர்;
நீதி வழங்குவதற்கென்று அவர் தம்
அரியணையை அமைத்திருக்கின்றார்.
8 முழு உலகத்திற்கும் அவர் நீதியான
தீர்ப்பு வழங்குவார்;
மக்கள் அனைவருக்கும் நேர்மையான
தீர்ப்புக் கூறுவார்.

9 சிறுமைப்படுகிறவனுக்கு ஆண்டவர்
அடைக்கலமாயிருப்பார்;
நெருக்கடியான வேளைகளில் புகலிட
மாய் இருப்பவர் அவரே.
10 ஆண்டவரே, உம்மை நாடி வருவோரை
நீர் கைவிடுவதில்லை;
ஆகையால் உமது திருப்பெயரை அறிந்
தவர்கள் உம்மை நம்புவார்கள்.

11 சீயோனில் இருக்கும் ஆண்டவரைப்
புகழ்ந்து பாடுங்கள்;
அவருடைய செயல்களை எல்லா இனத்
தவரிடையேயும் அறிவியுங்கள்.
12 சிறுமைப்படுகிறவர்களை அவர் நினைவில்
வைத்திருக்கின்றார்;
அவர்கள் மன்றாட்டை அவர் மறப்
பதில்லை;
அவர்களைச் சிறுமைப்படுத்துவோரிடம்
பழிவாங்காமல் விடார்.

13 ஆண்டவரே, மரண வாயிலினின்று
என்னைத் தூக்கி எடுப்பவர் நீரே.
நீர் எனக்கு இரங்கி, என்னைப் பகைப்
போரால் எனக்கு வரும் துன்பத்
தைப் பாரும்.

14 அப்பொழுது சீயோன் நகர வாயில்
களில் உம்முடைய புகழையெல்லாம்
பாடுவேன்;
நீர் எனக்கு அளித்த விடுதலையை
நினைத்து அகமகிழ்வேன்.

15 பிற இனத்தவர் தாம் வெட்டின குழியில்
தாமே விழுந்தனர்;
அவர்கள் மறைத்து வைத்திருந்த
வலையில் அவர்கள் கால்களே சிக்கிக்
கொண்டன.
16 ஆண்டவர் நீதி வழங்குவதன் மூலம்
தம்மை வெளிப்படுத்தினார்;
பொல்லான் தான் செய்த சூழ்ச்சியில்
தானே சிக்கிக்கொண்டான்.
(இக்காயோன். சேலா)

17 பொல்லார் பாதாளம் செல்வர்;
கடவுளை மறந்திருக்கும் மக்கள் அனை
வரும் அங்கே செல்வர்.
18 ஏழைகள் என்றைக்கும் மறக்கப்படுவ
தில்லை;
சிறுமைப்படுகிறவர்கள் கொண்டுள்ள
எதிர்காலம்பற்றிய நம்பிக்கை ஒரு
போதும் வீணாகப்போகாது.

19 ஆண்டவரே, வாரும்; மனிதனை
மேலோங்கவிடாதேயும்;
பிற இனத்தவர் உமது முன்னிலையில்
தீர்ப்புப் பெறுவார்களாக.
20 ஆண்டவரே, அவர்களைத் திகிலடையச்
செய்யும்;
தாம் வெறும் மனிதரே என்பதை அவர்
கள் உணரும்படி செய்யும். (சேலா)

**நீதி வழங்கும்படி வேண்டுதல் செய்தல்**

**10** ஆண்டவரே, ஏன் தொலைவில் நிற்கிறீர்?
நெருக்கடியான நேரங்களில் ஏன்
மறைந்துகொள்கிறீர்?
2 பொல்லான் தன் இறுமாப்பினால் எளிய
வனைக் கொடுமையாகத் துன்புறுத்து
கிறான்;
அவன் வகுத்த சதித்திட்டங்களில்
அவனே அகப்பட்டுக்கொள்வானாக.

3 பொல்லான் தான் விரும்புவதை
அடைந்துவிடுவதில் பெருமை கொள்
கிறான்;
பேராசையுடையவன் ஆண்டவரைப்
பழிக்கிறான்; அவரைப் புறக்கணிக்
கிறான்.
4 தன்னை விசாரணை செய்வார் யாரும்
இல்லை என்று பொல்லான் இறுமாப்
பினால் சொல்லுகிறான்;
கடவுள் இல்லை என்பதே அவன் நினைப்பு.

5 தன் வழிகள் என்றும் நிலைக்குமென்று
அவன் எண்ணுகிறான்;

உம்முடைய தீர்ப்புகள் மிக மேலானவை,
அவன் அறிவுக்கு எட்டாதவை.
தன் பகைவர் யாவரையும் அவன்
ஏளனமாகப் பார்க்கிறான்.
6 "எவராலும் என்னை அசைக்க முடியாது;
என்னையோ என் வழித்தோன்றல்
களையோ தீங்கு அணுகாது" என்று
அவன் தனக்குள் சொல்லிக்கொள்
கிறான்.
7 அவன் வாய் சாபமும் கபடமும் கொடு
மையும் நிறைந்தது;
அவன் நாவின்கீழ் தீவினையும் அக்கிர
மமும் இருக்கின்றன.
8 ஊரின் அருகே அவன் ஒளிந்து காத்திருக்
கிறான்;
சூதறியாதவனை மறைவான இடங்களில்
கொலை செய்கிறான்;
திக்கற்றவனைப் பிடிப்பதிலேயே அவன்
கண்கள் கவனமாயிருக்கின்றன.
9 குகையிலிருக்கும் சிங்கம்போல அவன்
மறைவிலே பதுங்கியிருக்கிறான்;
எளியவனைப் பிடிப்பதற்காகவே அவன்
பதுங்கியிருக்கிறான்;
தன் வலையில் அவனைச் சிக்கவைத்து
இழுத்துச் செல்கிறான்.

10 எளியவர்மீது பாய்வதற்காகப் படுத்துப்
பதுங்கிக்கொள்கிறான்;
அவனது கொடுமையால் எளியோர்
வீழ்த்தப்படுகின்றனர்.
11 "கடவுள் கவனமற்றவர்; அவர் தமது
முகத்தை மறைத்துக்கொண்டார்.
ஒரு நாளும் கவனியார்" என்று சொல்
லிக்கொள்கிறான்.

12 ஆண்டவரே, வாரும்; கடவுளே, உமது
கைவல்லபத்தை வெளிப்படுத்தும்;
சிறுமைப்படுகிறவர்களை மறந்துவிடா
தேயும்.
13 பொல்லான் கடவுளைப் புறக்கணிப்
பானேன்?
அவர் தன்னை விசாரணை செய்ய மாட்
டாரென்று அவன் சொல்லிக்கொள்
வானேன்?

14 ஆனால் நீர் கவனிக்காமலில்லை;
வருந்துவோரையும் துயருறுவோரையும்
நீர் கவனிக்கிறீர்;
உதவி செய்ய எப்போதும் ஆயத்தமா
யிருக்கிறீர்;
திக்கற்றவன் தன்னை உம்மிடம் ஒப்
படைக்கிறான்;
அனாதைக்கு நீரே துணை.

15 பொல்லான், தீமை செய்வோன்
ஆகியோரின் கையை முறித்துவிடும்;
அவர்களைத் தேடிக் கண்டு பிடித்து,
அவர்களது பொல்லாங்கு காணப்படா
மல் போகும்வரையில் அவர்களைத்
தண்டியும்.

16 ஆண்டவர் என்றென்றும் ஆட்சி செலுத்
துபவர்,
அவரது நாட்டிலிருந்து பிற இனத்தவர்
அகன்றுவிடுவர்.
17 ஆண்டவரே, தாழ் நிலையிலுள்ளோரின்
விண்ணப்பத்திற்கு நீர் செவிசாய்க்
கிறீர்;
அவர்கள் உள்ளம் உறுதிபெறும்படி
செய்தருளும்.
18 மண்ணினின்று தோன்றின மனிதன்
இனி அச்சுறுத்தாதிருக்கும்படி,
நீர் அனாதைகளுக்கும் சிறுமைப்படுகிற
வர்களுக்கும் செவிசாய்த்து,
அவர்களுக்கு நீதி வழங்கினீர்.

## ஆண்டவரிடம் நம்பிக்கை

(பாடகர் தலைவனுக்கு; தாவீதின்
சங்கீதம்)

11 நான் ஆண்டவரிடம் அடைக்கலம் தேடு
கிறேன்.
நீங்கள் ஏன் என்னிடம், "பறவையைப்
போல மலைக்குப் பறந்து செல்;
2 இதோ பார்; நல்லார்மீது இருட்டில்
அம்பு எய்வதற்கு,
பொல்லார் தம் வில்லை வளைத்து நாணில்
அம்பு தொடுக்கின்றனர்.
3 அடித்தளமே தகர்க்கப்படும்போது,
"நீதிமானால் என்ன செய்ய முடியும்"
என்று சொல்வானேன்?

4 ஆண்டவர் தம் புனித ஆலயத்தில் இருக்
கின்றார்;
ஆண்டவரது அரியணை விண்ணுலகில்
இருக்கின்றது.
அவர் கண்கள் உற்று நோக்குகின்றன;
மனுமக்களை அவை சோதித்துப்பார்க்
கின்றன.
5 ஆண்டவர் நீதிமான்களையும் பொல்
லாரையும் சோதித்துப்பார்க்கின்றார்.
கொடுமை செய்வதில் விருப்பங்கொள்
வோனை அவர் வெறுக்கின்றார்.

6 அவர் பொல்லார்மீது கரி நெருப்பும்
கந்தகமும் சொரியும்படி செய்கின்
றார்;
தண்டனையாக வரும் தீக்காற்றே அவர்
கள் குடிக்கும் பானமாகும்.
7 ஆண்டவர் நீதியுள்ளவர்; நீதியை நேசிப்
பவர்;
நேர்மையானவர்கள் அவர் முகத்தைக்
காண்பார்கள்.

**10:7 ரோ. 3:14 11:4 எசா. 66:1.**

### உதவிக்காக மன்றாடுதல்

(பாடகர் தலைவனுக்கு; இராகம் : இமினீத்து; தாவீதின் சங்கீதம்)

12 ஆண்டவரே, என்னைக் காத்தருளும்;
உலகில் நல்லவர்களே இல்லாமற் போனார்கள்;
மனுமக்களிடையே உண்மையுள்ளோர் எவருமில்லை.
2 ஒவ்வொருவனும் அடுத்தவனிடம் பொய் பேசுகிறான்;
அவர்கள் நாவு வஞ்சகம் பேசும் நாவு;
அவர்கள் இரண்டகமான உள்ளத்தோடு உரையாடுகிறார்கள்.

3 வஞ்சக நாவை ஆண்டவர் துண்டித்து விடுவாராக;
வீம்புபேசும் நாவைஅறுத்துவிடுவாராக.
4 "எங்கள் நாவின் வலிமையால் வெல்லு வோம்;
எங்களுக்குப் பேசத் தெரியும்;
எங்களை அடக்க யாரால் இயலும்"
என்று சொல்லுகிறவர்களை அழித்து விடுவாராக.

5 "எளியோர் கொள்ளையிடப்பட்டனர்;
ஏழைகள் புலம்புகிறார்கள்;
ஆகையால் நான் இப்போதே எழுந்து, இகழ்வாரிடமிருந்து அவர்களைக் காப் பாற்றுவேன்"
என்று ஆண்டவர் உரைக்கின்றார்.

6 ஆண்டவரின் வாக்குறுதிகள் தூய்மை யான வாக்குறுதிகள்;
மட்கலத்தில் ஏழுமுறை புடமிடப்பட்ட வெள்ளிபோலத் தூய்மையானவை.

7 ஆண்டவரே, எங்களைக் காத்தருளும்;
இந்தத் தலைமுறையினரிடமிருந்து எங் களைக் காப்பாற்றும்.
8 மக்களிடையே இழிகுணம் உயர்வாகக் கருதப்படும்போது, பொல்லார் எப் பக்கங்களிலும் ஆர்ப்பரிப்பர்.

### உதவிக்காக மன்றாடுதல்

(பாடகர் தலைவனுக்கு; தாவீதின் சங் கீதம்)

13 ஆண்டவரே, எவ்வளவு காலம் என்னை மறந்திருப்பீர்? இறுதிவரை மறந்து விடுவீரோ?
எவ்வளவு காலம் உமது முகத்தை எனக்கு மறைப்பீர்?
2 எவ்வளவு காலம் என் துயரத்தை எனக் குள்ளேயே அடக்கிக்கொண்டிருப் பேன்?
நாள்தோறும் எழுகின்ற மனக்கவலையை எத்தனை நாள் பொறுத்துக்கொண் டிருப்பேன்?
எவ்வளவு காலம் என் எதிரி என்னைக் கீழே வீழ்த்திக்கொண்டேயிருப் பான்?

3 என் கடவுளாகிய ஆண்டவரே, நீர் என்னைக் கண்ணேக்கி என் மன்றாட் டிற்குச் செவிசாய்த்தருளும்;
மரண உறக்கத்தில் நான் ஆழ்ந்துவிடா திருக்கும்படி என் கண்களுக்கு ஒளியூட்டும்.
4 அப்பொழுது என் எதிரி, "நான் அவனை வீழ்த்திவிட்டேன்" என்று சொல்ல இடமிராது;
என் பகைஞர் என் வீழ்ச்சியால் களி கூரவும் இடமிராது.

5 நான் உமது பேரருளில் நம்பிக்கை வைத் திருக்கிறேன்;
நீர் அளிக்கும் விடுதலையால் என் இதயம் களிகூரும்.
6 ஆண்டவர் எனக்கு ஏராளமான நன்மை களைச் செய்திருக்கிறார்;
நான் அவரைப் போற்றிப் பாடுவேன்.

### கடவுள்மீது நம்பிக்கை இல்லாதோர்

(பாடகர் தலைவனுக்கு; தாவீதின் சங் கீதம்)

14 "கடவுள் என்று ஒருவர் இல்லை" எனத் தன் உள்ளத்திற்குச் சொல்பவன் மதிகேடன்.
மனிதர் முற்றிலும் கெட்டுப்போயினர்;
அருவருப்பானதையே செய்கின்றனர்;
நன்மையானதைச் செய்கிறவன் எவனு மில்லை.
2 ஆண்டவர் வானத்திலிருந்து மனுமக் களைப் பார்க்கின்றார்;
அறிவுள்ளவன், கடவுளை நாடித் தேடு பவன் எவனாவது உண்டா என்று பார்க்கின்றார்.

3 எல்லாரும் வழிவிலகிப்போயினர்; ஒரு மிக்கக் கெட்டுப்போயினர்;
நன்மையானதைச் செய்கிறவனே இல்லை; ஒருவன்கூட இல்லை.
4 "தீமை செய்கிற இவர்கள் அறிவிழந் தவர்களோ?

12:6 நீதி. 30:5. 13:1 புலம்பல் 5:20 14:1-3 ரோ. 3:10-12.

உணவை விழுங்குவதுபோல என் மக்களை
விழுங்கப்பார்க்கிறார்களே!
இவர்கள் என்னை வழிபடுவதுமில்லை''
என்கிறார் ஆண்டவர்.
5 அவர்கள் திகிலடையப்போகிறார்கள்;
ஏனெனில், கடவுள் நீதிமான்கள் பக்கம்
இருக்கிறார்.
6 சிறுமைப்படுகிறவனது திட்டத்தை
வீணாக்கப்பார்க்கிறீர்கள்;
ஆனால் ஆண்டவர் அவனுக்கு அடைக்
கலமாயிருக்கிறார்.

7 சீயோனிலிருந்து இஸ்ரவேலருக்கு மீட்பு
வருவதாக!
ஆண்டவர் தம் மக்களின் துன்பத்தை
நீக்கும்போது, யாக்கோபின் இனத்
தார் களிகூர்வர், இஸ்ரவேலர்
மகிழ்ந்து கொண்டாடுவர்.

### மனிதரிடம் எதிர்பார்க்கப்படுவதென்ன?

*(தாவீதின் சங்கீதம்)*

**15** ஆண்டவரே, உமது ஆலயத்தில் தங்கக்
கூடியவன் யார்?
உமது புனித மலையில் உறைபவன் யார்?

2 மாசற்றவனாய் நடந்து, நேர்மையான
தைச் செய்து,
உளமார உண்மையைப் பேசுகிறவனே.
3 அவன் தன் நாவினால் புறங்கூறான்; தன்
தோழனுக்குத் தீங்கு செய்யான்;
அடுத்தவனைப்பற்றி அவதூறு பேசான்;
4 நெறிதவறி நடப்பவனைப் புகழான்;
ஆண்டவருக்கு அஞ்சி நடப்பவர்களையே
அவன் உயர்வாக மதிப்பான்;
தனக்கு இழப்பு வந்தாலும் தந்த வாக்
குறுதியை மீறமாட்டான்.
5 தன் பணத்தை வட்டிக்குக் கொடான்;
அவன் கைக்கூலி வாங்கிக்கொண்டு
குற்றமற்றவனுக்கு விரோதமாகப்
பொய்ச்சாட்சி சொல்லுகிறவனல்ல.

இவ்வாறு நடப்பவனை ஒருபோதும்
எவராலும் அசைக்க முடியாது.

### நம்பிக்கையோடு கடவுளிடம் மன்றாடுதல்

*(தாவீதின் மிக்தாம் சங்கீதம்)*

**16** கடவுளே, என்னைக் காப்பாற்றும்,
உம்மிடம் நான் அடைக்கலம் புகுந்
தேன்.
2 நான் ஆண்டவரிடம், ''நீரே என்
ஆண்டவர்;
நீரே என் செல்வம், வேறெதுவுமன்று''
என்று சொன்னேன்.
3 உலகிலுள்ள உம்முடைய அடியார்கள்
எவ்வளவோ மேம்பட்டவர்கள்;
அவர்களோடிருப்பதே எனக்குப் பெரு
மகிழ்ச்சி.

4 பிற தெய்வங்களை நாடிச் செல்வோருக்
குத் துன்பம் பெருகும்;
நான் அவற்றிற்கு இரத்த பலிகளைச்
செலுத்த மாட்டேன்;
அவற்றின் பெயர்களை என் நாவினால்
உச்சரிக்கவும் மாட்டேன்.

5 ஆண்டவரே, நீரே எனக்குக் கிடைத்
திருக்கும் சொத்து;
வாழ்க்கையில் எனக்குக் குறிக்கப்பட்ட
பங்கு நீரே;
எனக்குரிய பாகத்தைப் பாதுகாப்பவர்
நீரே.
6 இன்பமான இடங்களில் எனக்குப் பாகம்
கிடைத்தது;
ஆம், என் உரிமைச் சொத்து மிக மேன்
மையானதே.

7 என்னை வழிநடத்துகிற ஆண்டவரை
நான் துதிக்கின்றேன்;
இரவில்கூட என் மனச்சான்று எனக்கு
அறிவுரை கூறுகிறது.
8 ஆண்டவரை எப்போதும் நான் என்
கண் முன் வைத்துக்கொண்டிருக்
கிறேன்;
அவர் என் வலப்பக்கத்தில் இருக்கிறார்;
என்னை அசைக்க எவராலும் இயலாது.

9 ஆகையால், என் உள்ளம் மகிழ்ந்தது;
என் ஆன்மா களிகூர்ந்தது;
என் உடலும் நம்பிக்கையில் நிலைகொண்
டிருக்கும்.
10 ஏனெனில், என் ஆன்மாவை நீர்
பாதாளத்தில் விட்டுவிட மாட்டீர்.
உம் அடியானைப் படுகுழியில் இறங்கவிட
மாட்டீர்.

11 மெய் வாழ்வுக்குரிய நெறியை எனக்குத்
தெரியப்படுத்துவீர்;
உமது முன்னிலையில் எனக்கு முழு நிறை
வான மகிழ்ச்சியும்,
உமது வலப்பக்கத்தில் எப்போதும்
பேரின்பமும் உண்டு.

### குற்றமற்ற ஒருவனது விண்ணப்பம்

*(தாவீதின் மன்றாட்டு)*

**17** ஆண்டவரே, நியாயமான என் வழக்
கைக் கேட்டருளும்;
என் மன்றாட்டிற்குச் செவிசாய்த்
தருளும்.

16:10 திருத்தூது. 13:35 16:8-11 திருத்தூது. 2:25-28.

என் வேண்டுகோளைக் காதுகொடுத்துக் கவனித்தருளும்; என் நாவில் வஞ்சக மில்லை.
2 நீரே எனக்கு நீதி வழங்கியருளும்; நேர்மையானது எதுவென்று நீரே பார்க் கின்றீர்.

3 நீர் என் உள்ளத்தைச் சோதித்துப் பாரும்;
இரவு நேரத்தில் என்னை வந்து பாரும்; என்னைப் புடமிட்டுப் பாரும்;
தீமையானது எதையும் என்னிடம் காண மாட்டீர்.
4 பிறரைப்போல நான் தீமையானதைப் பேசினதில்லை;
உமது வாயினின்று பிறந்த கட்டளை களைக் கடைப்பிடித்து நடந்தேன்;
கொடுஞ்செயல் புரிவோரின் வழிகளை நான் பின்பற்றவில்லை.

5 என் காலடிகள் உம்முடைய வழிகளி லேயே எப்போதும் சென்றன;
என் கால்கள் தவறான வழியில் செல்ல வில்லை.

6 கடவுளே, எனக்கு நீர் செவிசாய்ப்பீர் என்பதால், நான் உம்மை நோக்கிக் கெஞ்சி மன்றாடுகிறேன்;
என் பக்கமாக உமது செவியைச் சாய்த்து என் விண்ணப்பத்தைக் கேட்டருளும்.
7 உம்மிடம் அடைக்கலம் புகுந்தவர்களை அவர்களுடைய எதிரிகளிடமிருந்து உமது வருகையால் காப்பாற்றுகிற வர் நீர்;
வியக்கத்தக்க உமது பேரருளை வெளிப் படுத்தியருளும்.

8 உமது கண்மணியைப்போல என்னைக் காத்தருளும்;
என்னை உம்முடைய இறக்கைகளைக் கொண்டு மூடி மறைத்தருளும்.
9 என்னை ஒடுக்க வருகிற பொல்லாருக்கு என்னைத் தப்புவித்துக் காப்பாற்றும்;
என்னைச் சாகடிக்கப் பார்க்கும் பகைஞர் என்னைச் சூழ்ந்துகொண்டனர்.
10 அவர்கள் இரக்கம் சிறிதும் இல்லாதவர் கள்;
தங்கள் வாயினால் இறுமாப்புடன் பேசு கிறவர்கள்.
11 இப்போது அவர்கள் என்னை எல்லாப் பக்கங்களிலும் நெருங்கிவிட்டார்கள்;
என்னைத் தரையில் வீழ்த்தும்படி அவர் கள் கண்கள் என்னையே நோக்கிக் கொண்டிருக்கின்றன.
12 இரை தேடிச் செல்லும் சிங்கத்திற்கு அவர்கள் ஒப்பானவர்கள்;
மறைவிடங்களில் பதுங்கியிருக்கும் இளஞ்சிங்கம் போன்றவர்கள்.

13 ஆண்டவரே, வாரும்; அவனை எதிர்த்து முறியடியும்;
பொல்லாரிடமிருந்து உமது வாளால் என் உயிரைக் காப்பாற்றும்.
14 ஆண்டவரே, உமது வல்லமையால் மனிதரிடமிருந்து என்னைக் காப்பாற் றும்;
இம்மையில் வாழ்க்கை நலம் பெற்றிருக் கிற உலக மக்கள் கைக்கு என்னைத் தப்புவியும்;
இம்மை நலன்களால் நீர் அவர்கள் வயிற்றை நிரப்புகிறீர்;
மைந்தர்கள் பலரை அவர்களுக்குக் கொடுத்திருக்கிறீர்;
மீந்திருக்கும் செல்வத்தைத் தங்கள் பிள்ளைகளுக்கு விட்டுச் செல்கிறார்கள்.

15 நானோவெனில் நீதி வழங்கப்படும் போது, உமது திருமுகத்தைக் காண் பேன்;
நான் விழித்தெழுகையில் உம்மைக் காண்பதே என் பெரு மகிழ்ச்சி.

### தாவீதின் வெற்றிக் கீதம்

*(1 சாமு. 22:1—51)*

(பாடகர் தலைவனுக்கு; ஆண்டவரின் அடி யாராகிய தாவீதின் சங்கீதம்; எதிரிகளிட மிருந்தும் சவுலினிடமிருந்தும் ஆண்டவர் தம்மைக் காப்பாற்றின நாளில் தாவீது பாடின பாடல்)

**18** ஆண்டவரே, நீரே என் வலிமை;
நான் உம்மிடம் அன்புகூர்கிறேன்.

2 ஆண்டவர் என் கன்மலை, என் கோட்டை, என் மீட்பர்,
என் கடவுள், என் அரண், என் புகலிடம், என் கேடயம், எனக்கு மீட்பளிக்கும் வல்லமை*, என் அடைக்கலம்.
3 ஆண்டவரை நோக்கி மன்றாடுவேன்;
அவரே போற்றுதலுக்குரியவர்;
என் எதிரிகளிடமிருந்து நான் மீட்கப் பட்டேன்.
4 மரணக் கயிறுகள் என்னைச் சுற்றிக் கொண்டன;
அழிக்கும் வெள்ளம் என்மேல் வந்து பாய்ந்தது.

*எபிரேயச் சொல்லின் நேர்ப் பொருள் : 'மீட்பளிக்கும் கொம்பு.'

17:8 உபா. 32:10,11.

5 பாதாளக் கயிறுகள் என்னை இறுக்கின;
மரணக் கண்ணிகள் என்னைச் சூழ இருந்தன.
6 எனக்கிருந்த நெருக்கடியில் நான் ஆண்டவரை நோக்கி மன்றாடினேன்;
என் கடவுளை நோக்கி அபயமிட்டேன்;
தமது ஆலயத்திலிருந்து அவர் என் குரலைக் கேட்டார்; என் மன்றாட்டு அவர் செவிக்கு எட்டிற்று.

7 அப்பொழுது பூமி அசைந்தது, அதிர்ந்தது;
அவர் சினங்கொண்டதால், மலைகளின் அடித்தளங்கள் அதிர்வுற்றன, கிடுகிடுத்தன.
8 அவர் நாசியிலிருந்து புகை எழும்பிற்று.
அவர் வாயிலிருந்து சுட்டெரிக்கும் நெருப்பு வெளிப்பட்டது;
அதனால் தழல் மூண்டது.
9 அவர் வானங்களைச் சாய்த்துக் கீழே இறங்கினார்;
கார்மேகம் அவர் காலடியில் இருந்தது.
10 கேருபுகள்மேல் ஏறிப் பறந்தார்;
காற்றின் இறக்கைகளைக் கொண்டு விரைவாக இறங்கினார்.
11 இருளைத் தமக்கு மூடுதிரையாக்கினார்;
வானத்துக் கார்மேகங்களைத் தம்மை மூடும் கூடாரமாக்கினார்.
12 அவரது முன்னிலைப் பேரொளியால் மேகங்கள் விலகின;
கல்மழையும் நெருப்புத் தழலும் பொழிந்தன.

13 ஆண்டவர் வானங்களில் குமுறினார்;
உன்னதமானவர் தமது குரலை முழங்கச் செய்தார்;
கல்மழையும் நெருப்புத் தழலும் பொழிந்தன.
14 தம் அம்புகளை எய்து அவர்களைச் சிதறடித்தார்;
மின்னல்களைத் தெறித்து அவர்களைக் கலங்கடித்தார்.
15 ஆண்டவரே, உமது கண்டிப்பினாலும் உமது மூச்சின் வன்காற்றினாலும்
பெருங்கடலின் அடிப்பரப்புத் தென்பட்டது;
பூமியின் அடித்தளம் காணப்பட்டது.

16 உயரத்திலிருந்து அவர் கையை நீட்டி என்னைப் பிடித்துக்கொண்டார்;
வெள்ளப் பெருக்கிலிருந்து என்னைத் தூக்கிவிட்டார்.
17 என்னைவிட வலிமைவாய்ந்த என் ஆற்றல்மிக்க எதிரிக்கும்
என்னைப் பகைக்கிறவர்களுக்கும் என்னைத் தப்புவித்தார்.
18 எனக்கு இடுக்கண் வந்த நாளில் அவர்கள் என்னை எதிர்த்தார்கள்;
ஆண்டவர் எனக்கு ஆதரவாயிருந்தார்.
19 இடுக்கண் வராத இடத்திற்கு அவர் என்னைக் கொண்டுவந்தார்;
அவர் என்னை நேசிக்கிறபடியால் என்னை விடுவித்தார்.

20 ஆண்டவர் என் நேர்மைக்காக எனக்குரிய பலனை அளித்தார்;
என் கைகள் கறையற்றிருப்பதற்காக எனக்குரிய பலனை அளித்தார்.
21 ஆண்டவருடைய வழிகளை நான் பின்பற்றி நடந்துவந்தேன்;
நான் என் கடவுளுக்குத் துரோகம் செய்யவில்லை.
22 அவருடைய தீர்ப்புகளையெல்லாம் என் கண்முன் வைத்திருந்தேன்;
அவருடைய சட்டங்களை நான் ஒதுக்கித் தள்ளிவிடவில்லை.
23 அவர் முன்னிலையில் நான் மாசற்றவனாயிருந்தேன்;
தீங்கு செய்யாதபடி என்னைக் காத்துக்கொண்டேன்.
24 ஆண்டவர் என் நேர்மைக்காக எனக்குரிய பலனை அளித்தார்;
அவர் பார்வையில் என் செயல்கள் குற்றமற்றவையாய் இருப்பதற்காக எனக்குரிய பலனை அளித்தார்.

25 உண்மையுள்ளவனுக்கு நீர் உண்மையுள்ளவராகவும்,
உத்தமனுக்கு நீர் உத்தமராகவும் விளங்குவீர்.
26 தூய்மையுள்ளவனுக்கு நீர் தூய்மையுள்ளவராக உம்மைக் காட்டுகின்றீர்;
ஆனால் வஞ்சகமுள்ளவனுக்கு நீர் உம்மை விவேகமுள்ளவராகக் காட்டுகின்றீர்.
27 சிறுமைப்பட்ட மக்களுக்கு நீர் மீட்பளிக்கின்றீர்;
ஆனால் இறுமாப்புடன் பார்க்கிறவர்களையோ தரைமட்டும் தாழ்த்துகின்றீர்.

28 நீர் என் விளக்கை ஏற்றிச் சுடர்விட்டு எரியச் செய்கின்றீர்;
என் கடவுளாகிய ஆண்டவரே என் இருளை ஒளிமயமாக்குகின்றீர்.
29 உமது உதவி இருந்தால், ஒரு படைக்குள்ளும் பாய்ந்து செல்வேன்;
என் கடவுளின் துணை இருந்தால், எந்த மதிலையும் தாண்டிக் குதிப்பேன்.

30 கடவுளின் வழி உத்தமமானது; ஆண்டவருடைய வார்த்தை நம்பத்தக்கது;

**18:27** நீதி. 3:34.

அவரிடம் அடைக்கலம் புகும் அனைவருக்கும் அவரே கேடயமாயிருக்கிறார்.
31 ஆண்டவரைத் தவிர வேறு கடவுள் யார்?
நம் கடவுளைத் தவிர நமக்கு வேறு அரண் ஏது?
32 வலிமையை அரைக்கச்சையாக எனக்கு அளித்தவர் அவரே;
நான் செல்லும் வழியை இடையூறற்றதாக்குபவர் அவரே.
33 அவர் என் கால்களை மான்களின் கால்களைப் போலாக்குகிறார்;
உயர்ந்த இடத்தில் என்னை நிறுத்துகிறார்;
34 என் தோள்களைப் போருக்குப் பழக்குகிறார்;
செப்பு வில்லையும் வளைக்கும்படி என் கைகளைப் பழக்குகிறார்.

35 பாதுகாப்புத் தரும் கேடயத்தை நீர் எனக்கு அளித்தீர்;
உமது வலக்கை எனக்கு ஆதரவளித்தது;
உமது கருணை என்னைப் பெரியவனாக்கிற்று.
36 நான் நடக்கும் வழியை விரிந்தகன்றதாக்கினீர்;
என் கால்கள் தடுமாறவில்லை.
37 என் எதிரிகளைப் பின்தொடர்ந்து அவர்களைப் பிடிப்பேன்;
அவர்களை அழித்தொழிக்கும் வரையில் நான் திரும்பிவர மாட்டேன்.
38 அவர்களை வெட்டுவேன்; அவர்கள் எழுந்திருக்க மாட்டார்கள்;
அவர்கள் என் காலடியில் விழுவார்கள்.
39 போரிடும் வலிமையை நீர் எனக்கு அரைக்கச்சையாக அளித்தீர்;
என்னை எதிர்த்தவர்களை எனக்கு அடிபணியச் செய்தீர்.
40 என் எதிரிகளைப் புறங்காட்டி ஓடச் செய்தீர்;
என்னைப் பகைத்தவர்களை நான் அழித்துவிட்டேன்.
41 அவர்கள் உதவிக்காக கூவி அழைத்தார்கள்; ஆனால் அவர்களைக் காப்பாற்றுவார் யாருமில்லை.
ஆண்டவரை நோக்கி மன்றாடினார்கள்; அவர்களுக்கு அவர் செவிசாய்க்கவில்லை.

42 எனவே, நான் அவர்களை நொறுக்கிக் காற்றில் பறக்கும் தூளைப்போலாக்கினேன்;
தெருப்புழுதியைப்போல அவர்களை மிதித்து நசுக்கிவிட்டேன்.
43 கலகக்கார மக்களுக்கு நீர் என்னைத் தப்புவித்தீர்;
பல இனத்தவருக்கு என்னைத் தலைவனாக்கினீர்;
எனக்கு முன்பின் தெரியாத மக்கள் இப்போது என் குடிமக்களாயிருக்கிறார்கள்.
44 அவர்கள் என்னைப்பற்றிக் கேள்விப்பட்டவுடனே எனக்குக் கீழ்ப்படிவார்கள்;
அன்னியரும் எனக்கு அஞ்சி அடங்குவர்.
45 அன்னியர் மனமடிவுற்று,
தம் அரண்களிலிருந்து நடுங்கிக்கொண்டு வெளியே வருவர்.
46 ஆண்டவர் என்றும் உள்ளவர்;
என் கன்மலையாகிய அவர் போற்றுதலுக்குரியவர்;
என் மீட்பரான கடவுள் போற்றப்படுவாராக!
47 எனக்காக என் எதிரிகளிடம் பழி வாங்குகிற கடவுள் அவரே;
பிற இனத்தவரை எனக்குக் கீழ்ப்படுத்துகிறவர் அவரே.
48 என் எதிரிகளிடமிருந்து என்னை விடுவிக்கிறவரும் அவரே;
என்னை எதிர்க்கிறவர்களுக்குமேலாக நீர் என்னை உயர்த்துகிறீர்;
கொடுமையான மனிதன் கைக்கு என்னைத் தப்புவிக்கிறீர்.
49 ஆகையால் ஆண்டவரே, யூதரல்லாதாரிடையே உம்மைப் போற்றுவேன்;
உமது திருப்பெயரைத் துதித்துப் பாடுவேன்.
50 தாம் ஏற்படுத்தின அரசனுக்கு கடவுள் மாபெரும் வெற்றியை அளிக்கிறார்;
தாம் தேர்ந்தெடுத்த தாவீதுக்கும் அவருடைய மரபினருக்கும் என்றென்றைக்கும் இரக்கம் காட்டுகிறார்.

### படைப்பில் கடவுளின் மாட்சிமை

(பாடகர் தலைவனுக்கு; தாவீதின் சங்கீதம்)

19 வானங்கள் கடவுளின் மாட்சிமையை வெளிப்படுத்துகின்றன;
வானமண்டலம் அவர் கைகளின் வேலைப்பாட்டை விவரிக்கிறது.
2 ஒவ்வொரு பகலும் அதை அடுத்த பகலுக்குத் தெரிவிக்கிறது;
ஒவ்வோர் இரவும் அதை அடுத்த இரவுக்கு அறிவிக்கிறது.
3 அவற்றிற்குக் குரலுமில்லை, மொழியுமில்லை;
அவற்றின் ஒலி கேட்கப்படுவதுமில்லை.
4 ஆயினும், அவற்றின் குரல் உலகெங்கும் கேட்கிறது;
அவை கூறும் செய்தி உலகின் கடையெல்லை வரை எட்டுகிறது.

18:33 ஆப. 3:19. 18:41 ஆப. 1:2. 18:49 ரோ. 15:9. 19:4 ரோ. 10:18.

5 அங்கே கடவுள் கதிரவனுக்கு ஒரு
கூடாரத்தை அமைத்திருக்கிறார்;
அது மணவீட்டிலிருந்து புறப்படுகிற
மணவாளனைப்போல வருகிறது;
ஓடுவதில் மகிழ்ச்சி காணும் பந்தய
வீரனைப்போல அது தன் பாதையில்
ஓடுகிறது.
6 வானத்தில் ஒரு முனையில் எழுந்து அதன்
மறுமுனைவரைக்கும் அது செல்கிறது;
அதன் வெப்பத்திற்கு மறைவானது
ஒன்றுமில்லை.

### ஆண்டவருடைய சட்டங்கள்

7 ஆண்டவருடைய சட்டங்கள் மிக மேன்
மையானவை; அவை புது உயிர்
அளிக்கின்றன;
ஆண்டவருடைய விதிகள் நம்பத்தக்
கவை; அவை பேதையை ஞானமுள்ள
வனாக்குகின்றன.
8 ஆண்டவரின் கட்டளைகள் நேர்மை
யானவை; அவை உள்ளத்தை மகிழ்
விக்கும்;
ஆண்டவரின் திருக்கட்டளைகள்
தூயவை; அவை கண்களைத் தெளி
வடையச் செய்யும்.
9 ஆண்டவரிடம் அச்சங்கொள்ளுதல் ஒரு
புனிதமான செயல்; அது என்றைக்
கும் நிலைத்திருக்கும்;
ஆண்டவரின் தீர்ப்புகள் உண்மையை
வெளிப்படுத்துபவை; அவை முற்றி
லும் நீதியானவை.
10 அவை பொன்னைவிட, மிகுந்த பசும்
பொன்னைவிட மேலாக விரும்பத்தக்
கவை;
தேனைவிட, தேன்கூட்டிலிருந்து ஒழுகும்
தெளி தேனைவிட இனிமையானவை.
11 அவற்றால் உம்முடைய அடியானாகிய
நான் எச்சரிக்கப்படுகிறேன்;
அவற்றைக் கடைப்பிடிப்பதால் மிகுந்த
பலனுண்டு.

12 தன் பிழைகளைத் தானே உணர்பவன்
உண்டோ?
எனக்கு மறைவாயிருக்கும் என் குற்றங்
களை நீக்கியருளும்.
13 துணிகரமான பாவங்களுக்கு உம்
முடைய அடியானை விலக்கிக்காரும்;
அவை என்னை ஆட்கொள்ளவிடாதேயும்.
அப்பொழுது நான் மாசற்றவனாவேன்;
பழிச்செயல் எதையும் செய்யாத
வனாயிருப்பேன்.

14 என் கன்மலையும் என் மீட்பருமாகிய
ஆண்டவரே, உமது முன்னிலையில்
என் வாயின் வார்த்தைகளும்
என் இதயத்தின் சிந்தனையும் உமக்கு
உகந்தவையாயிருக்கட்டும்.

### அரசனின் வெற்றிக்காகக் குடிமக்கள் மன்றாடுதல்

*(பாடகர் தலைவனுக்கு; தாவீதின் சங்கீதம்)*

20 துன்பநாளில் ஆண்டவர் உமது மன்றாட்
டுக்குச் செவிசாய்ப்பாராக!
யாக்கோபின் கடவுளது திருப்பெயர்
உம்மைக் காப்பதாக!
2 புனித அகத்திலிருந்து அவர் உமக்கு
உதவி அனுப்புவாராக!
சீயோனிலிருந்து உமக்குத் துணை செய்
வாராக!
3 உம்முடைய காணிக்கைகளையெல்லாம்
அவர் நினைவில் கொள்வாராக!
சுட்டெரிக்கப்படும் உமது பலியை விருப்
புடன் ஏற்றுக்கொள்வாராக! (சேலா)
4 உமது மனம் விரும்புவதை அவர் உமக்
குத் தந்தருளுவாராக!
உம்முடைய திட்டங்களையெல்லாம்
நிறைவேற்றுவாராக!
5 நீர் அடையும் வெற்றி குறித்து நாங்கள்
மகிழ்ந்து, நம்முடைய கடவுளின்
திருப்பெயரால் வெற்றிக்கொடி நாட்
டுவோம்;
உம்முடைய விண்ணப்பங்களையெல்லாம்
ஆண்டவர் நிறைவேற்றுவாராக!

6 ஆண்டவர் தாம் தேர்ந்தெடுத்தவருக்கு
உதவி செய்கிறார் என்பது இப்போது
எனக்குத் தெரிகிறது;
வெற்றியளிக்கும் தமது வலக்கையின்
வல்லமையைக் காட்டுகிறார்;
தமது புனித வானத்திலிருந்து அவர்
மன்றாட்டுக்குச் செவிசாய்க்கிறார்.
7 சிலர் தம் தேர்களைக் குறித்தும் சிலர்
தம் குதிரைகளைக் குறித்தும் பெருமை
கொள்கின்றனர்;
நாமோ நம்முடைய கடவுளாகிய
ஆண்டவரின் திருப்பெயரைக்
குறித்தே பெருமைகொள்கிறோம்.
8 அவர்கள் தடுமாறி விழுந்தார்கள்;
நாமோ நிமிர்ந்து நிற்கிறோம்; வீழ்ச்சியுற
வில்லை.

9 ஆண்டவரே, அரசருக்கு வெற்றி
யருளும்;
நாங்கள் மன்றாடும் இவ்வேளையில் எங்
களுக்குச் செவிசாய்த்தருளும்.

### அரசருக்கு வெற்றியளித்ததற்காகப் புகழ்தல்

*(பாடகர் தலைவனுக்கு; தாவீதின் சங்கீதம்)*

21 ஆண்டவரே, உமது வல்லமையை
நினைத்து அரசர் மகிழ்ச்சியடைகின்
றார்;

நீர் வெற்றியளித்ததால் அவர் அளவு
கடந்த மகிழ்ச்சியில் மூழ்கியிருக்கின்
ருர்.
2 அவர் மனம் விரும்பினதை நீர் அவருக்
குத் தந்தருளினீர்;
அவர் உம்மிடம் கேட்டதை நீர் மறுக்க
வில்லை. (சேலா)

3 அவரை நீர் எதிர்கொண்டுபோய் நல
மிக்க ஆசியை அவருக்கு நிரம்ப
வழங்கினீர்;
அவர் தலையில் பொன்முடி சூட்டினீர்.
4 அவர் உம்மிடம் ஆயுளைக் கேட்டார்;
நீரும் முடிவில்லா நீண்ட ஆயுளை
அவருக்கு அளித்தீர்.

5 நீர் அவருக்கு வெற்றியளித்ததால்
அவரது மாட்சிமை பெரிதாயிற்று;
மேன்மையையும் மாண்பையும்
அவருக்கு அருளினீர்.
6 என்றுமுள்ள ஆசிகளை அவருக்கு வழங்
கினீர்;
உமது முன்னிலையில் அவரைப் பெரு
மகிழ்ச்சியினுல் இன்புறச் செய்தீர்.

7 எங்கள் அரசர் ஆண்டவரை நம்புகிருர்;
உன்னதமானவரின் பேரருளால் அவரது
ஆட்சி அசைக்கப்படாததாயிருக்கும்.
8 அரசே, உமது கை உம்முடைய எதிரி
களையெல்லாம் தேடிப்பிடிக்கும்;
உமது வலக்கை உம்மைப் பகைக்கிறவர்
களைத் தேடிப்பிடிக்கும்.
9 நீர் வரும்போது அவர்களை நெருப்புச்
சூளையில் தள்ளிவிடுவீர்.
ஆண்டவர் சினங்கொண்டு அவர்களை
அழிப்பார்; நெருப்பு அவர்களைச் சுட்
டெரிக்கும்.

10 அவர்கள் பிள்ளைகள் உலகில் இராதபடி
அவர்களை ஒழித்துவிடுவீர்;
அவர்கள் மரபினர் மக்களிடையே
இராதபடி அவர்களை அழித்துவிடுவீர்.

11 அவர்கள் உமக்குத் தீங்கிழைக்க நினைத்
தார்கள், சதித்திட்டங்களை வகுத்
தார்கள்;
ஆனுல் அவர்களால் வெற்றிபெற
முடியாமற்போகும்.
12 ஏனெனில், நீர் அம்புகளை நாணேற்றி
அவர்கள் முகத்திற்கு நேரே எய்வீர்;
அவர்களைப் புறங்காட்டி ஓடும்படி செய்
வீர்.

13 ஆண்டவரே, உமது வலிமையோடு
எழுந்தருளும்;
நாங்கள் உமது வல்லமையைப் புகழ்ந்து
பாடுவோம்.

## துயர்மிகு புலம்பல்

(பாடகர் தலைவனுக்கு; இராகம்:
காலைப் பெண்மான்; தாவீதின் சங்
கீதம்)

**22** என் கடவுளே, என் கடவுளே, ஏன்
என்னைக் கைவிட்டீர்?
என்னைக் காப்பாற்ருமலும் நான் கதறிச்
சொல்லும் வார்த்தைகளைக் கேளாம
லும் ஏன் தொலைவில் இருக்கிறீர்?
2 என் கடவுளே, நான் பகலில் மன்ருடு
கிறேன்; நீர் பதிலளிக்கவில்லை;
இரவில் மன்ருடுகிறேன்; எனக்கு
அமைதி கிடைக்கவில்லை.
3 நீர் பரிசுத்தர்;
இஸ்ரவேலின் துதிகளுக்கிடையே வீற்
றிருக்கிறீர்.
4 எங்கள் மூதாதையர் உம்மை நம்பினுர்
கள்;
அவர்கள் நம்பினதால் நீர் அவர்களை
விடுவித்தீர்.
5 உம்மை வேண்டினுர்கள்; விடுதலை பெற்
ருர்கள்;
உம்மை நம்பினுர்கள்; ஏமாற்றம்
அடையவில்லை.

6 நானே ஒரு புழு, மனிதனல்ல;
மனிதரால் பழிக்கப்பட்டவன், மக்
களால் இகழப்பட்டவன்.
7 என்னைப் பார்க்கிறவர்களெல்லாரும்
என்னை ஏளனம் செய்கிருர்கள்;
அவர்கள் என்னைப் பார்த்து நங்கு காட்
டித் தங்கள் தலையை ஆட்டி,
8 ''ஆண்டவரை நம்பியிருந்தானே; அவர்
இவனை விடுவிக்கட்டும்;
அவர் இவன்மேல் பிரியமாயிருக்கிருரே;
இவனை மீட்டு விடட்டும்'' என்கிருர்
கள்.

9 என்னைக் கருப்பையிலிருந்து எடுத்தவர்
நீர்;
என் தாயினிடம் நான் பால் குடிக்கை
யிலேயே எனக்கு நம்பிக்கை உண்
டாகும்படி செய்தவர் நீரே.
10 கருப்பையிலிருந்தே உம்மைச் சார்ந்
திருந்தேன்;
நான் என் தாயின் வயிற்றில் இருந்தது
முதல் என் கடவுள் நீரே.
11 என்னை விட்டுத் தொலைவில் போய்
விடாதேயும்;
ஆபத்துக் கிட்டியிருக்கிறது; உதவி
செய்ய வேறு யாருமில்லை.

12 காளைகள் பல என்னைச் சூழ்ந்துகொண்
டன;
பாசான் நாட்டுக் கொழுத்த எருது
கள் என்னை வளைத்துக்கொண்டன.

22:1 ஏசா. 49:14; 54:7; மத். 27:46; மாற். 15:34. 22:7 மத். 27:39; மாற். 15:29; லூக். 23:35. 22:8 மத். 27:43.

13 அவர்கள் என்னை எதிர்த்துச் சீறி
யெழுந்து,
முழக்கமிடுகிற சிங்கத்தைப்போலத்
தங்கள் வாயைத் திறக்கிறார்கள்.

14 நீர் வற்றுவதுபோல என் வலிமை வற்
றிப்போயிற்று; என் எலும்புகளெல்
லாம் தளர்ந்துபோயின;
என் இதயம் மெழுகு போலாகி, என்
குடல்களின் நடுவே உருகிற்று.
15 என் தொண்டை சருகுபோலக் காய்ந்
தது;
என் நாவு மேல் வாயோடு ஒட்டிக்
கொண்டது;
என்னை மரணத்தூளிலே போட்டுவிட்
டீர்.

16 நாய்கள் என்னைச் சூழ்ந்துகொண்டன;
தீமை செய்வோரின் கூட்டம் என்னை
வளைந்துகொண்டது;
என் கைகளையும் கால்களையும் குத்திக்
காயப்படுத்தினார்கள்.
17 என் எலும்புகளையெல்லாம் நான்
எண்ணலாம்;
அவர்கள் என்னை முறைத்துப் பார்க்
கிறார்கள்.
18 என் ஆடைகளைத் தங்களிடையே பங்கிட்
டுக்கொண்டார்கள்;
என் உடையின்மேல் சீட்டுக் குலுக்கிப்
போடுகிறார்கள்.

19 ஆண்டவரே, என்னை விட்டுத் தொலை
வில் போய்விடாதேயும்;
நீரே என் வலிமை; எனக்கு உதவி
செய்ய விரைந்து வாரும்.
20 வாளுக்கு இரையாகாதபடி என்
உயிரைத் தப்புவியும்;
என் ஆருயிரை நாய்களிடமிருந்து
காப்பாற்றும்.
21 சிங்கத்தின் வாயிலிருந்து என்னைக் காப்
பாற்றும்;
காட்டெருமையின் கொம்புகளில் சிக்கி
யுள்ள ஏழை என்னைக் காத்தருளும்.

## துதிப்பாடல்

22 உமது திருப்பெயரை என் சகோதர
ருக்கு அறிவிப்பேன்;
சபை நடுவே உம்மைத் துதித்துப் பாடு
வேன்.
23 ஆண்டவருக்கு அஞ்சி நடப்பவர்களே,
அவரைத் துதியுங்கள்;
யாக்கோபின் மரபினரே, நீங்கள் எல்
லாரும் அவரைப் போற்றுங்கள்;
இஸ்ரவேலின் மரபினரே, நீங்கள் எல்
லாரும் அவருக்கு அஞ்சுங்கள்.

24 சிறுமைப்பட்டவனின் சிறுமையை அவர்
அற்பமாக எண்ணவில்லை, அதைக்
கவனியாமல் இருந்துவிடவில்லை;
தமது முகத்தை அவனுக்கு மறைக்கவு
மில்லை;
தம்மை நோக்கி அவன் மன்றாடுகையில்
அவனுக்குச் செவிசாய்த்தார்.

25 மாபெரும் சபையில் நான் செலுத்தும்
துதி உமது தூண்டுதலால் எழுவ
தாகும்;
உமக்கு அஞ்சுகிறவர்கள் முன்னிலையில்
என் பொருத்தனைகளைச் செலுத்து
வேன்.
26 சிறுமைப்பட்டவர்கள் வயிறார உண்பார்
கள்;
ஆண்டவரை நாடித் தேடுகிறவர்கள்
அவரைத் துதிப்பார்கள்;
என்றென்றும் அவர்கள் இதயம் வாழ்க!

27 நிலவுலகின் கடையெல்லைகளில் உள்ள
வர்கள் அனைவருமே இதை நினைவு
கூர்ந்து,
ஆண்டவர் பக்கமாகத் திரும்புவர்;
எல்லா இனத்தவருடைய மரபினரும்
அவர் முன்னிலையில் விழுந்து பணிவர்.
28 ஏனெனில், அரசு ஆண்டவருடையது;
எல்லா நாட்டினர்மீதும் அவர் ஆட்சி
செலுத்துகிறவர்.

29 உலகிலுள்ள செல்வர் யாவரும் அவரைப்
பணிவர்;
மண்ணுக்குத் திரும்பும் யாவரும்,
தம் உயிரை அழியாதபடி காத்துக்
கொள்ள இயலாத யாவருமே அவரை
வணங்குவர்.

30 வரப்போகிற தலைமுறை அவரைத்
தொழும்;
இனி வரும் தலைமுறைக்கு ஆண்டவரின்
செய்தி அறிவிக்கப்படும்.

31 அவர்கள் வந்து, ''அவரே இவற்றைச்
செய்தார்'' என்று இனிப் பிறக்கப்
போகும் மக்களுக்கு அவரது நீதியை
அறிவிப்பார்கள்.

## ஆண்டவரே நம் ஆயர்

(தாவீதின் சங்கீதம்)

23 ஆண்டவர் என் ஆயராயிருக்கிறார்;
எனக்கு ஒன்றும் குறைவில்லை.
2 அவர் புல்லுள்ள இடங்களில் மேய்த்து
என்னை இளைப்பாறச் செய்கிறார்;
அமைதியான நீர்நிலைகளண்டையில்
என்னைக் கொண்டுபோய் விடுகிறார்.

22:18 மத். 27:35; மாற். 15:24; லூக், 23:34; யோ. 19:24. 22:22 எபி. 2:12. 23:2 திருவெளி. 7:17.

3 அவர் எனக்குப் புது உயிர் அளித்து,
தமது திருப்பெயருக்கேற்ப என்னை நீதிப்
பாதைகளில் நடத்துகிறார்.
4 நான் மரணவிருள் சூழ்ந்த பள்ளத்தாக்
கிலே நடந்தாலும் பொல்லாங்கிற்கு
அஞ்சிடேன்;
ஆண்டவரே, நீர் என்னோடு இருக்கிறீர்;
உமது கோலும் உமது தடியும் எனக்கு
ஆதரவளிக்கும்.

5 என் எதிரிகள் கண்முன் நீர் எனக்கு ஒரு
விருந்தை ஆயத்தப்படுத்தி,
என் தலையில் நறுமணத்தைலம் பூசி
என்னை வரவேற்கிறீர்;
என் பாத்திரம் நிரம்பி வழிகிறது.
6 உம்முடைய அருள்நலமும் பேரிரக்கமும்
என் வாழ்நாளெல்லாம் என்னை
விட்டு நீங்காதிருக்கும்;
நான் ஆண்டவரின் ஆலயத்தில்
என்றென்றும் நிலைத்திருப்பேன்.

## மாவேந்தரின் வருகை

(தாவீதின் சங்கீதம்)

24 மண்ணுலகும் அதிலுள்ளவை அனைத்
தும் ஆண்டவருடையவை;
நிலவுலகும் அதில் வாழும் குடிகளும்
ஆண்டவருக்கே சொந்தம்.
2 கடல்கள்மீது அதற்கு அடித்தளமிட்டு,
ஆறுகள்மீது அதை நிலைநாட்டினவர்
அவரே.

3 ஆண்டவரது மலையில் ஏறத் தகுதி
யுடையவன் யார்?
அவரது புனித அகத்தில் நிற்கக்
கூடியவன் யார்?
4 கறையற்ற கைகளும் மாசற்ற உள்ள
மும் உடையவனும்,
தெய்வச் சிலைகளை வணங்காமலும்
நயவஞ்சகத்தோடு வாக்குறுதி அளிக்
காமலும் இருக்கிறவனே.
5 அவன் ஆண்டவரிடமிருந்து ஆசியையும்
தன் மீட்பராகிய கடவுளிடமிருந்து நீதி
மான் என்னும் தீர்ப்பையும் பெறு
வான்.
6 அவரை நாடித்தேடும் மக்கள் பெறும்
நற்பேறு இதுவே;
கடவுளே, உமது முன்னிலையில் வர
விரும்புகிறவர்கள் இவர்களே.
(சேலா)
7 மாவேந்தர் உள்ளே வருகின்றார்; வாயில்
களே, விரிவாகத் திறவுண்டு வரவேற்
பளியுங்கள்;
தொன்மை வாய்ந்த கதவுகளே, திறந்து
நில்லுங்கள்.

8 யார் இந்த மாவேந்தர்? இவர்தாம்
வல்லமையும் ஆற்றலுமுள்ள ஆண்ட
வர்;
இவர்தாம் வெற்றிவீரரான ஆண்ட
வர்.
9 வாயில்களே, விரிவாகத் திறவுண்டு வர
வேற்பளியுங்கள்;
தொன்மைவாய்ந்த கதவுகளே, திறந்து
நில்லுங்கள்; மாவேந்தர் உள்ளே
வருகின்றார்.
10 யார் இந்த மாவேந்தர்? இவர் வெற்றி
வேந்தரான ஆண்டவர்;
இவரே மாவேந்தர். (சேலா)

## இக்கட்டுக் காலத்து மன்றாட்டு

(தாவீதின் சங்கீதம்)

25 ஆண்டவரே, உமக்கு நேராக என்
உள்ளத்தைத் திருப்பி வேண்டுதல்
செய்கிறேன்.
2 என் கடவுளே, உம்மை நம்புகிறேன்;
நான் ஏமாறாதிருக்கும்படி செய்யும்;
என் எதிரிகள் என் நிலைமையைக் கண்டு
மகிழ்ச்சியடைய விடாதேயும்.
3 உம்மை நம்புகிற எவனும் ஏமாற்றம்
அடைவதில்லை;
காரணமின்றித் துரோகம் செய்கிறவர்
களே ஏமாற்றம் அடைவார்கள்.

4 ஆண்டவரே, நீர் விரும்பும் வழிகளை
எனக்குக் காட்டியருளும்;
நீர் விரும்பும் பாதைகளில் செல்ல எனக்
குக் கற்பித்தருளும்.
5 உமது சத்திய நெறியில் என்னை நடத்தி
எனக்குக் கற்பித்தருளும்;
நீரே என் மீட்பராகிய கடவுள்; உம்
மையே நாள் முழுதும் நம்பியிருக்
கிறேன்.

6 ஆண்டவரே, உமது இரக்கத்தையும்
உமது அருளையும் நினைத்துப் பாரும்;
அவை ஆதி முதல் உள்ளவையே.
7 என் இளமைப் பருவத்தின் பாவங்களை
யும் என் தவறுகளையும் நினையா
தேயும்;
ஆண்டவரே, உமது அன்பிற்கேற்ப,
அருளிரக்கத்தோடு என்னை நினைத்
தருளும்.

8 ஆண்டவர் நல்லவர், நேர்மையுள்ளவர்;
ஆகையால் அவர் பாவிகளுக்கு நல்வழி
யைக் கற்பிக்கிறார்.
9 பணிவுடையோரை நேர்மையான வழி
யில் நடத்துகிறார்;

24:1 1 கொரி. 10:26. 24:4 மத். 5:8

பணிவுடையோருக்குத் தமது வழியைக் கற்பிக்கிறார்.
10 ஆண்டவரது உடன்படிக்கையையும் அவருடைய ஒழுங்குமுறைகளையும் கடைப்பிடிப்பவர்களுக்கு
அவருடைய பாதைகளெல்லாம் அருளும் உண்மையும் உள்ளனவாய் விளங்கும்.

11 ஆண்டவரே, உமது திருப்பெயரின் பொருட்டு என் குற்றத்தை மன்னித் தருளும்;
என் குற்றம் மிகப் பெரிது.
12 ஆண்டவருக்கு அஞ்சி நடக்கிறவன் எவனோ அவனுக்கு,
தாம் தேர்ந்துகொள்ளும் வழியை அவர் கற்பிப்பார்.
13 அவன் நலமுடன் வாழ்வான்;
அவனுடைய மரபினர் நாட்டைத் தமக் குச் சொந்தமாக்கிக்கொள்வர்.
14 தமக்கு அஞ்சி நடப்போருக்கு ஆண்ட வர் தமது மறை செய்தியை வெளிப் படுத்துவார்;
அவர்களுக்குத் தமது உடன்படிக் கையைத் தெரிவிப்பார்.

15 என் கண்கள் எப்போதும் ஆண்டவரை நோக்கியிருக்கின்றன;
அவரே என் கால்களை வலையிலிருந்து விடுவிப்பார்.
16 ஆண்டவரே, என்னைக் கண்ணோக்கி எனக்கு இரங்கும்;
ஏனெனில், நான் துணையற்றவன்; சிறுமைப்படுகிறவனுமானேன்.
17 என் மனத்துயரம் பெருகிவிட்டது;
என் இக்கட்டுகளினின்று என்னை விடுவித் தருளும்.
18 என் சிறுமையையும் வருத்தத்தையும் பாரும்;
என் பாவங்களையெல்லாம் மன்னித் தருளும்.

19 என் எதிரிகள் பெருகிவிட்டதைப்பாரும்;
அவர்களது பகைமையின் கொடுமையை யும் பாரும்.
20 என் உயிரைக் காப்பாற்றும், என்னை விடுவித்தருளும்;
உம்மிடம் அடைக்கலம் புகுந்திருக்கும் நான் ஏமாறாதிருக்கும்படி செய்யும்.
21 வாய்மையும் நேர்மையும் எனக்கு அரணாய் இருக்கட்டும்;
உமது உதவிக்காகக் காத்திருக் கிறேன்.

22 கடவுளே, இஸ்ரவேல் மக்கள் படும் எல்லாத் துன்பங்களினின்றும் அவர் களை விடுவித்தருளும்.

## நேர்மையானவனது விண்ணப்பம்

(தாவீதின் சங்கீதம்)

26 ஆண்டவரே, எனக்கு நீதி வழங்கும்;
என் நடத்தை நேர்மையானது;
நான் ஆண்டவரை நம்புகிறேன்; அந்த நம்பிக்கையில் நான் தடுமாறவில்லை.
2 ஆண்டவரே, என்னை ஆராய்ந்து சோதித்துப்பாரும்;
என் உள்ளத்தையும் இதயத்தையும் புடமிட்டுப்பாரும்.
3 உமது அருள் என் மனக்கண் முன் இருக் கிறது;
உமக்கு உண்மையாக நடந்து வரு கிறேன்.

4 தீயவர்களோடு நான் உட்காருவதில்லை;
வஞ்சகரோடு நான் சேர்வதில்லை.
5 தீமை செய்வோரின் கூட்டத்தை நான் வெறுக்கிறேன்;
பொல்லாரோடு உட்காருவதைத் தவிர்க் கிறேன்.

6 ஆண்டவரே, நான் குற்றமற்றவன் என்பதைக் காட்ட என் கைகளைக் கழுவுகிறேன்;
உமது பீடத்தைச் சுற்றி வலம் வந்து,
7 துதிப்பாட்டுப் பாடி, வியக்கத்தக்க உம் முடைய செயல்களையெல்லாம் எடுத் துரைக்கிறேன்.

8 ஆண்டவரே, நீர் குடிகொள்ளும் ஆலயத்தையும்,
உமது மாட்சிமை தங்கியிருக்கிற இடத் தையும் நான் நேசிக்கிறேன்.
9 என்னைப் பாவிகளோடு சேர்த்து எடுத்துக்கொள்ளாதேயும்;
இந்தக் கொலை வெறியரோடு சேர்த்து என் உயிரை அழித்துவிடாதேயும்.
10 அவர்கள் கைகள் தீவினை நிறைந்த கைகள்;
அவர்கள் வலக்கைகள் கைக்கூலியால் கறைப்பட்டவை.

11 என் நடத்தையோ நேர்மையானது;
என்னை மீட்டருளும், எனக்கு இரங்கி யருளும்.
12 இடுக்கண் எதுவும் வராத இடத்தில் நான் நிற்கிறேன்;
சபைகள் நடுவே நான் ஆண்டவரைத் துதிப்பேன்.

## புகழ்ப் பாடல்

(தாவீதின் சங்கீதம்)

27 ஆண்டவர்தாமே என் ஒளியும் என் மீட்புமாயிருக்கிறார்;
யாருக்கு நான் அஞ்ச வேண்டும்?

ஆண்டவர்தாமே என் உயிருக்கு அடைக்
கலமாயிருக்கிறார்;
யாருக்கு நான் அஞ்சி நடுங்க வேண்டும்?

2 தீமை செய்கிறவர்களாகிய என்
பகைஞரும் என் எதிரிகளும்
என் உடலை விழுங்க என்னை நெருங்கு
கையில் அவர்களே இடறி விழுந்
தார்கள்.
3 எனக்கு விரோதமாக ஒரு படையே
பாளையமிறங்கினாலும் என் உள்ளம்
அஞ்சாது;
என்னை எதிர்த்துப் போர் எழுந்தாலும்,
அப்பொழுதும் நான் நம்பிக்கையோ
டிருப்பேன்.

4 நான் ஆண்டவரிடம் ஒன்று கேட்டேன்;
அதையே நான் விரும்புகிறேன்.
என் வாழ்நாளெல்லாம் ஆண்டவரது
ஆலயத்தில் தங்கியிருப்பதையும்,
அவரது இனிய முன்னிலையை அங்கே
காண்பதையும்,
அந்த ஆலயத்தில் அவரது திருவுளத்
தைக் கண்டறிவதையும் நான் நாடு
கின்றேன்.

5 கேடுவரும் நாளில் அவர் என்னைத் தம்
கூடாரத்தில் மறைத்து வைப்பார்;
தம் கூடாரத்தினுள்ளே என்னை ஒளித்து
வைப்பார்;
என்னை உயரத் தூக்கிக்கொண்டுபோய்க்
கற்பாறையின்மேல் பத்திரமாக
வைப்பார்.
6 இப்போதும் என்னைச் சுற்றிலுமிருக்கிற
என் எதிரிகளுக்கு எதிரில் நான் தலை
நிமிர்ந்து நடக்கும்படி செய்திருக்
கிறார்.
நான் அவரது கூடாரத்தில் பலிகளைச்
செலுத்துவேன்;
ஆண்டவரைப் புகழ்ந்து இனிய பாடல்
கள் பாடுவேன்.

7 ஆண்டவரே, நான் மன்றாடும்போது
என் குரலைக் கேட்டருளும்;
என்மீது இரக்கங்கொண்டு எனக்குச்
செவிசாய்த்தருளும்.
8 ''என் முகத்தை நாடுங்கள்'' என்று
சொன்னீரே;
ஆண்டவரே, ''உமது முகத்தையே நாடு
வேன்'' என்று என் உள்ளம் உம்
மிடம் சொல்லிற்று.
9 உமது முகத்தை எனக்கு மறைக்காதே
யும்;
நீர் சினங்கொண்டு அடியேனை விலக்கித்
தள்ளி விடாதேயும்; நீரே எனக்குத்
துணை.
என் மீட்பராகிய கடவுளே, என்னைப்
புறம்பே தள்ளிவிடாதேயும்; என்னைக்
கைவிடாதேயும்.
10 என் தாயும் தந்தையும் என்னைக் கைவிட்
டாலும்,
ஆண்டவர் என்னை ஏற்றுக்கொள்வார்.

11 ஆண்டவரே, உமது வழியை எனக்குக்
கற்பித்தருளும்;
என்னைப் பிடிக்கப் பதுங்கியிருப்பவர்களை
முன்னிட்டு என்னைச் செவ்வையான
பாதையில் நடத்தும்.
12 என் பகைஞரின் விருப்பத்திற்கு என்னை
ஒப்புக்கொடாதேயும்;
பொய்ச் சாட்சிகளும் கொடுமை செய்
யச் சீறி எழுகிறவர்களும் என்னை
எதிர்ப்பதற்காகக் கிளம்பியிருக்கிறார்
கள்.

13 உயிர் வாழ்வோர் நாட்டிலே,
ஆண்டவரின் நலன்களைக் காண்பேன்
என்று நான் நம்புகிறேன்.
14 ஆண்டவரின் உதவிக்காகக் காத்திரு;
உன் உள்ளம் திடம் கொள்வதாக;
ஆண்டவரின் உதவிக்காகக் காத்திரு.

### உதவிக்காக மன்றாடுதல்

(தாவீதின் சங்கீதம்)

**28** ஆண்டவரே, உம்மை நோக்கி மன்றாடு
கிறேன்;
என் கன்மலையே, கேளாதவர்போல
மவுனமாயிராதேயும்;
நீர் மவுனமாயிருந்தால், படுகுழியில்
இறங்குவோருள் நானும் ஒருவனா
யிருப்பேன்.
2 நான் உம்மை நோக்கி மன்றாடுகையில்
என் விண்ணப்பக் குரலைக் கேட்
டருளும்;
உமது மாபுனித அகத்தை நோக்கி நான்
கைகூப்பி நிற்கையில்,
என் குரலுக்குச் செவிகொடுத்தருளும்.
3 என்னைப் பொல்லாரோடு சேர்த்து
ஒழித்துவிடாதேயும்; தீமை செய்
வாரோடு சேர்த்து அழித்துவிடாதே
யும்;
அவர்கள் தங்கள் உள்ளத்தில் வன்
மத்தை மறைத்து வைத்துக்
கொண்டே
அடுத்தவனோடு சமாதானப் பேச்சுப்
பேசுகிறார்கள்.
4 அவர்களுடைய செய்கைக்கேற்றபடி,
அவர்கள் செய்த தீமைகளுக்கேற்றபடி
அவர்களுக்குப் பலனளியும்;
அவர்கள் கைகள் செய்த தீவினைகளுக்
கேற்றபடி அவர்களுக்குப் பலனைக்
கொடுத்தருளும்.

28:4 திருவெளி. 22:12

5 ஆண்டவர் செய்தவற்றையோ, அவர் கைகள் உண்டாக்கினவற்றையோ
அவர்கள் பொருட்படுத்தவில்லை;
ஆகையால், அவர் அவர்களைத் தகர்த்தெறிவார்;
ஒருபோதும் கட்டி எழுப்பமாட்டார்.

6 ஆண்டவரைப் போற்றுகிறேன்;
அவர் என் விண்ணப்பக் குரலுக்குச் செவிசாய்த்தார்.
7 ஆண்டவரே, நீரே என் வலிமை, என் கேடயம்; அவரை என் உள்ளம் நம்புகிறது;
நான் உதவி பெற்றேன்; ஆகையால், என் உள்ளம் களிகூர்கிறது;
நான் இன்னிசை பாடி அவரைப் புகழ்கின்றேன்.

8 ஆண்டவர்தாமே தம் மக்களின் வலிமை;
அவர் தேர்ந்தெடுத்தவனுக்குப் பாதுகாப்பான அரண் அவரே.
9 ஆண்டவரே, உம்முடைய மக்களுக்கு வெற்றியளித்தருளும்;
உமக்குச் சொந்தமானவர்களுக்கு ஆசி வழங்கும்;
அவர்களுக்கு ஆயராயிருந்து என்றென்றும் அவர்களைச் சுமந்து செல்லும்.

## புயலினிடையே ஆண்டவரது குரல்

*(தாவீதின் சங்கீதம்)*

**29** தெய்வ தூதர்களே, ஆண்டவரைப் போற்றுங்கள்;
''மாட்சிமையும் வல்லமையும் ஆண்டவருக்கே!'' என்று புகழுங்கள்.
2 ஆண்டவரது மாட்சிமை பொருந்திய திருப்பெயரைப் போற்றுங்கள்;
தூய மாட்சிமையுடன் இருக்கும் ஆண்டவரை வழிபடுங்கள்.

3 ஆண்டவரின் குரல் தண்ணீர்மேல் ஒலிக்கிறது;
மாட்சிமைமிக்க ஆண்டவர் முழங்குகிறார்;
ஆண்டவர் திரளான நீர்நிலைகள்மேல் வீற்றிருக்கிறார்.
4 ஆண்டவரின் குரல் வல்லமையுள்ளது;
ஆண்டவரின் குரல் மாட்சிமை மிக்கது.
5 ஆண்டவரின் குரல் கேதுருமரங்களை முறிக்கிறது;
ஆண்டவர் லீபனோனின் கேதுருமரங்களை முறித்துவிடுகிறார்.
6 லீபனோன் மலையைக் கன்றுக்குட்டி போலத் துள்ளச் செய்கிறார்;
சீயோன் மலையைக் காட்டெருமைக் கன்றுக்குட்டிபோலக் குதிக்கச் செய்கிறார்.
7 ஆண்டவரின் குரல் மின்னலைப் பளிச்சிடச் செய்கிறது.
8 ஆண்டவரின் குரல் பாலைவனத்தை அதிரச் செய்கிறது;
காதேஸ் பாலைவனத்தை ஆண்டவர் அதிரச்செய்கிறார்.
9 ஆண்டவரின் குரல் மானைக் கன்று ஈனச் செய்கிறது; காடுகளை வெட்ட வெளியாக்குகிறது.
அவரது ஆலயத்திலுள்ள யாவரும், ''மாட்சிமை! மாட்சிமை!'' என்று ஆர்ப்பரிக்கின்றனர்.
10 ஆண்டவர் வெள்ளப் பெருக்கின்மீது வீற்றிருந்தார்;
ஆண்டவர் என்றென்றும் அரசராக வீற்றிருப்பார்.
11 ஆண்டவர் தம் மக்களுக்கு வல்லமை அளிப்பார்;
ஆண்டவர் தம் மக்களுக்குச் சமாதானம் அருளி ஆசி வழங்குவார்.

## நன்றி செலுத்துதல்

*(ஆலயப் பிரதிட்டைப் பாடல், தாவீதின் சங்கீதம்)*

**30** ஆண்டவரே, நான் உம்மை உயர்வாகப் புகழ்ந்து பாடுகின்றேன்;
ஏனெனில், நீர் என்னைக் கைதூக்கிவிட்டீர்;
என்னைப் பார்த்து என் பகைஞர் களிக்க நீர் இடங்கொடுக்கவில்லை.
2 என் கடவுளாகிய ஆண்டவரே, உம்மை நோக்கி மன்றாடினேன்;
என்னை நீர் குணப்படுத்தினீர்.
3 ஆண்டவரே, நீர் என்னைப் பாதாளத்திலிருந்து ஏறிவரச் செய்தீர்;
குழியில் இறங்குகிறவர்களோடு நானும் இறங்காதபடி என்னை உயிரோடு காத்தீர்.
4 ஆண்டவரின் அடியாரே, அவரைப் புகழ்ந்து பாடுங்கள்;
அவர் எத்துணை பரிசுத்தமுள்ளவர் என்பதை நினைத்து அவரைப் போற்றுங்கள்.
5 அவரது சினம் ஒரு நொடிப்பொழுது தான் இருக்கும்;
அவரது கருணையோ வாழ்நாள் முழுதும் நீடிக்கும்;
மாலையில் அழுகை; காலையிலோ களிப் பாரவாரம்.
6 ''என்னை ஒருபோதும் அசைக்க முடியாது'' என்று

**29:1, 2** *சங்.* 96:7-9.

நான் வளமுடன் வாழ்ந்த காலத்தில்
சொன்னேன்.
7 ஆண்டவரே, உமது கருணை என்னை
மலையரண்மீது நிறுத்திற்று;
ஆனால் நீர் உமது முகத்தை மறைத்துக்
கொண்டபோதோ நான் கலக்க
மடைந்தேன்.

8 ஆண்டவரே, உம்மை நோக்கி மன்
றாடினேன்;
என் ஆண்டவரிடமே விண்ணப்பம் செய்
தேன்.
9 "நான் குழியில் இறங்கும்போது என்
மரணத்தால் வரும் நன்மை என்ன?
புழுதி உம்மைத் துதித்து உமது சத்
தியத்தை அறிவிக்குமா?" என்றேன்.
10 ஆண்டவரே, எனக்கு இரங்கி என் விண்
ணப்பத்திற்குச் செவிசாய்த்தருளும்;
ஆண்டவரே, எனக்கு உதவி செய்
தருளும்.

11 ஆண்டவரே, என் புலம்பலை ஆனந்த
நடனமாக மாற்றிவிட்டீர்;
என் முரட்டுத்துணியைக் களைந்துவிட்டு
மகிழ்ச்சியென்னும் ஆடையால்
என்னை மூடினீர்.
12 ஆகையால், என் ஆவி இனி அமைதி
யாயிராது; நான் உம்மைப் புகழ்ந்து
பாடுவேன்;
என் கடவுளாகிய ஆண்டவரே, உமக்கு
என்றென்றும் நன்றி செலுத்துவேன்.

### முழு நம்பிக்கையோடு வேண்டுதல்

(பாடகர் தலைவனுக்கு; தாவீதின் சங்கீதம்)

**31** ஆண்டவரே, நீரே என் அடைக்கலம்;
நான் ஒருபோதும் ஏமாற்றம் அடை
யாதிருக்கச் செய்யும்;
உமது நீதிக்கேற்ப என்னை விடுவித்
தருளும்.
2 உமது செவியை எனக்குச் சாய்த்து
விரைவில் என்னை விடுவியும்;
எனக்கு வலிமைவாய்ந்த அரணும்
என்னைக் காப்பாற்றும் கோட்டையு
மாயிரும்.
3 என் கன்மலையும் கோட்டையும் நீரே;
உமது திருப்பெயரின் பொருட்டு எனக்கு
வழிகாட்டி என்னை நடத்தியருளும்.
4 அவர்கள் எனக்கு மறைவாக வைத்த
வலையினின்று என்னை விடுவித்தருளும்;
நீரே எனக்கு அரண்.
5 உமது கையில் என் ஆவியை ஒப்புவிக்
கிறேன்;
என்னை மீட்டுக்கொள்வீர்; நீர் உண்மை
யுள்ளவர்.
6 பயனற்ற சிலைகளை வணங்குவோரை
நான் வெறுக்கிறேன்;

ஆண்டவரை நான் நம்புகிறேன்.
7 ஆண்டவரே, உமது பேரருளை நினைத்து
நான் களிகூர்வேன், மகிழ்ந்துகொண்
டாடுவேன்.
என் துன்பத்தை நீர் பார்த்திருக்கிறீர்,
என் துயரம் உமக்குத் தெரியும்.
8 என் எதிரியின் கையில் நான் அகப்படும்
படி நீர் என்னை விட்டுவிடவில்லை;
நெருக்கடி இல்லாத இடத்தில் என்னை
நிலைநிறுத்தினீர்.

9 ஆண்டவரே, எனக்கு இரங்கும்; நான்
நெருக்கடியான நிலையில் இருக்
கிறேன்;
துயரத்தால் என் கண்ணும் என் ஆன்
மாவும் என் உடலும் தொய்ந்து
போயின.
10 என் வாழ்நாள் வருத்தத்திலேயே
கடந்து செல்கிறது; என் வாழ்க்கை
ஏக்கத்தோடு கழிகிறது;
துயரத்தால் என் வலிமை குறைந்தது;
என் எலும்புகள் நலிவுற்றன.

11 என் எதிரிகள் அனைவருடைய பழிச்
சொல்லுக்கும் நான் ஆளானேன்;
என் அயலாரின் பழிச்சொல்லுக்கும்
ஆளானேன்;
எனக்கு அறிமுகமானவர்கள் என்னைக்
கண்டு அஞ்சுகிறார்கள்; வீதியில்
என்னைக் காண்பவர்கள் விலகி ஓடு
கிறார்கள்.
12 செத்தவன்போல எல்லாராலும் மறக்
கப்பட்டேன்;
உடைந்த பாண்டம்போலானேன்.
13 பலர் என்னை இழித்துப்பேசுவது என்
காதில் விழுந்தது; எப்பக்கமும் திகில்
என்னைச் சூழ்ந்தது;
அவர்கள் ஒன்றுகூடி எனக்கு விரோத
மாகச் சூழ்ச்சி செய்தார்கள்; என்
உயிரைப் போக்கத் திட்டம் வகுத்
தார்கள்.

14 ஆண்டவரே, நான் உம்மை நம்பு
கிறேன்;
நீரே என் கடவுள் என்று சொன்னேன்.
15 என் வாழ்நாள் உமது கையில் இருக்
கிறது;
என் எதிரிகளின் கையினின்றும் என்னைத்
துன்புறுத்துகிறவர்களின் கையினின்
றும் என்னை விடுவித்தருளும்.
16 உமது முகத்தின் ஒளி உம்முடைய
அடியான்மீது வீசும்படி செய்யும்;
உமது பேரருளால் என்னை மீட்ட
ருளும்.
17 ஆண்டவரே, உம்மை நோக்கி மன்
றாடினேன்; நான் ஏமாற்றம் அடையா
திருக்கச் செய்யும்;

31.5 லூக். 23:46.

பொல்லார் ஏமாற்றம் அடைவார்
களாக; பேச்சின்றிப் பாதாளத்திற்
குச் செல்வார்களாக.
18 பொய் சொல்லும் வாய் பேச்சற்றுப்
போவதாக;
செருக்கும் பழிப்புரையும் நிறைந்ததாய்,
நீதிமானுக்கு விரோதமாக இறுமாப்
புடன் பேசும் நாவு அசைவற்றுப்
போவதாக.

19 உமக்கு அஞ்சி நடக்கிறவர்களுக்கென்று
நீர் வைத்திருக்கிற நன்மை எவ்வளவு
பெரிது!
உம்மிடம் அடைக்கலம் புகுந்தவர்
களுக்கு மனிதர் காண நீர் செய்
திருக்கிற நன்மை எவ்வளவு பெரிது!
20 எதிரிகளின் சூழ்ச்சிகளினின்று காக்க
அவர்களை உமது முன்னிலையில்
மறைத்துவைத்துப் பாதுகாக்கிறீர்;
தீய நாவுகளின் பேச்சுக்கு ஆளாகாதபடி
காக்க அவர்களை உமது கூடாரத்தில்
ஒளித்துவைத்துக் காப்பாற்றுகிறீர்.

21 ஆண்டவரைப் போற்றுகிறேன்; அரண்
சூழ்ந்த நகரத்தில் வியப்பிற்குரிய
தமது பேரருளை எனக்கு விளங்கச்
செய்தார்.
22 கலக்கமுற்ற நிலையில் நான், ''உமது முன்
னிலையிலிருந்து விலக்கப்பட்டேன்''
என்று சொல்லிக்கொண்டேன்.
ஆனால் நான் உம்மை நோக்கி மன்றாடின
போது, நீர் என் விண்ணப்பக் குரலுக்
குச் செவிசாய்த்தீர்.

23 ஆண்டவரின் அடியார்களே, அவரிடம்
அன்புகொள்ளுங்கள்; ஆண்டவர்
உண்மையுள்ளவர்களைப் பாதுகாக்
கிறார்;
ஆனால் இறுமாப்புடன் நடப்பவர்
களுக்கு அவர் கொடுமையான
தண்டனை அளிக்கிறார்.
24 ஆண்டவரை நம்புகிறவர்களே, நீங்கள்
எல்லாரும் மனத்திடன் கொள்ளுங்
கள்;
உள்ளத்தில் ஊக்கமுடையவர்களாயிருங்
கள்.

### பாவத்தை ஒப்புக்கொண்டு மன்னிப்புப் பெறுதல்

(தாவீதின் போதக சங்கீதம்)

**32** யாருடைய தவறுகள் மன்னிக்கப்பட்
டனவோ,
யாருடைய பாவங்கள் துடைத்தழிக்கப்
பட்டனவோ அவன் நற்பேறு பெற்
றவன்.
2 எவனுடைய குற்றத்தை ஆண்டவர்
எழுதிவையாதிருக்கிறாரோ அவன்
நற்பேறு பெற்றவன்;
யாருடைய உள்ளத்தில் கபடம் இல்
லாதிருக்கிறதோ அவன் நற்பேறு
பெற்றவன்.

3 நான் என் குற்றத்தை ஒப்புக்கொள்
ளாமல் உள்ளத்தில் மூடிவைத்
துக் குமுறிக்கொண்டிருந்தவரையில்,
எலும்புருகி நலிந்தவனாயிருந்தேன்.
4 இரவும் பகலும் உமது கை என்னை
ஓங்கி அடித்தது;
கோடைக்கால வறட்சிபோல என்
வலிமை வறண்டுபோயிற்று. (சேலா)

5 என் குற்றத்தை நான் உம்மிடம் சொன்
னேன்; என் பாவத்தை நான்
மறைக்கவில்லை;
''ஆண்டவரிடம் என் தவறுகளை ஒப்புக்
கொள்கிறேன்'' என்றேன்;
நீர் என் பாவக் குற்றத்தை மன்னித்தீர்.
(சேலா)

6 அதனாலேதான் உம்மைக் காணத்தக்க
வேளையில், உம்முடைய அடியான்
உம்மை நோக்கி மன்றாடுவான்;
வெள்ளப்பெருக்குப் பாய்ந்து வந்தாலும்
அது அவனை அணுகாது.
7 நீர் எனக்குப் புகலிடம்; என்னை நீர்
இக்கட்டுக்கு விலக்கிக் காத்
தருள்வீர்;
என்னைச் சூழ மீட்புப் பாடல்களை
அரணாக அமைத்திருக்கிறீர்.

8 நான் உனக்குப் போதிப்பேன்; நீ நடக்க
வேண்டிய வழியை உனக்குக் கற்பிப்
பேன்;
உன்மேல் என் கண்களை வைத்து உனக்கு
அறிவுரை கூறுவேன்.
9 வாரினாலும் கடிவாளத்தினாலும் கட்டி
இழுத்தாலன்றி உன் அருகில் வராத
குதிரையைப்போல இருக்க வேண்
டாம்;
அறிவில்லாத கழுதையைப் போலவும்
இருக்க வேண்டாம்.

10 பொல்லானுக்கு வரும் துன்பங்கள் பல;
ஆண்டவரை நம்புகிறவர்களையோ
அவரது இரக்கம் சூழ்ந்துகொள்
ளும்.
11 நீதிமான்களே, ஆண்டவரின் செயலை
நினைத்து மகிழ்ந்து களிகூருங்கள்;
நேர்மையான இதயம் உள்ளவர்களே,
நீங்கள் எல்லாரும் களிப்பாரவாரம்
செய்யுங்கள்.

32:1,2 ரோ. 4:7,8. 32:5 2 சாமு. 12:13.

## புகழ்ப் பாடல்

33 நீதிமான்களே, ஆண்டவரின் செயலை நினைத்துக் களிகூர்ந்து ஆர்ப்பரியுங்கள்.
நேர்மையானவர்களே, அவரைப் புகழ்வதே நீங்கள் செய்யத்தக்க செயலாகும்.
2 நன்றியறிதலோடு ஆண்டவரைச்சுரமண்டலத்தினால் புகழுங்கள்;
பத்து நரம்பு வீணையைக்கொண்டு அவரைப் புகழ்ந்து பாடுங்கள்.
3 புதியதொரு பாட்டைப் பாடி அவரைப் புகழுங்கள்;
மகிழ்ச்சிக் குரலில் இசைக் கருவிகள் கொண்டு நன்ருகப் பாடுங்கள்.
4 ஆண்டவரின் வார்த்தை நேர்மையானது;
அவருடைய செயல்களெல்லாம் உண்மையானவை.
5 அவர் நீதியையும் நேர்மையையும் விரும்புகிருர்;
அவரது அருளால் பூமி நிறைந்திருக்கிறது.

6 ஆண்டவரது வார்த்தையால் வானங்கள் உண்டாயின;
அவர் சொன்ன சொல்லால் வானத்து அணிகளெல்லாம் உண்டாக்கப்பட்டன.
7 அவர் கடல் நீரைக் குவியலாகச் சேர்த்து வைத்தார்;
ஆழ்கடல்களை நிலவறைகளில் சேமித்து வைத்தார்.

8 அனைத்துலகமும் ஆண்டவருக்கு அஞ்சுவதாக;
உலகில் வாழ்வோர் எல்லாரும் அவருக்கு அஞ்சுவார்களாக.
9 ஏனெனில், அவர் ஒரு சொல் சொல்ல எல்லாம் உண்டாயின;
அவர் கட்டளையிட எல்லாம் உருவாயின.

10 எல்லா இனத்தவரின் திட்டங்களையும் ஆண்டவர் குலைத்துவிடுகிருர்;
மக்களின் எண்ணங்களைப் பயனற்றவையாக்குகிருர்.
11 ஆண்டவரின் திட்டங்கள் என்றென்றும் நிலைத்திருக்கும்;
அவருடைய எண்ணங்கள் தலைமுறை தலைமுறையாக நீடித்திருக்கும்.
12 ஆண்டவரைத் தன் கடவுளாகக் கொண்ட இனம் நற்பேறு பெற்றது;
அவர் தமக்குச் சொந்தமாகத் தேர்ந்தெடுத்த மக்கள் நற்பேறு பெற்றவர்கள்.
13 ஆண்டவர் வானத்திலிருந்து பார்க்கிருர்;
மனுமக்கள் யாவரையும் பார்க்கிருர்;
14 தாம் வீற்றிருக்கும் இடத்திலிருந்து உலகெங்கும் வாழ்வோரைக் கண்ணேக்குகிருர்.
15 அவர்கள் இதய நினைவுகளையெல்லாம் அவர் உருவாக்குகிருர்;
அவர்களுடைய செய்கைகளையெல்லாம் கவனித்துவருகிருர்.

16 எந்த அரசனும் தன் படையின் மிகுதியால் காப்பாற்றப்படுவதில்லை;
எந்த வீரனும் தன் வலிமையின் மிகுதியால் தப்பிச்செல்வதில்லை.
17 வெற்றி பெறக் குதிரையை நம்புவது வீண்;
அதற்கு மிகுந்த வீரியம் இருப்பினும் அதனால் தப்புவிக்க இயலாது.

18 தமக்கு அஞ்சித் தமது பேரருளை நம்பியிருக்கிறவர்களைச் சாவுக்குத் தப்புவிக்கவும்,
19 பஞ்சகாலத்தில் அவர்களை உயிரோடு காக்கவும்,
ஆண்டவர் கண்ணுயிருக்கிருர்.
20 நமது ஆன்மா ஆண்டவரை நம்புகிறது;
அவரே நமக்குத் துணை, நமக்குக் கேடயம்.
21 அவரது திருப்பெயரில் நாம் நம்பிக்கை வைத்திருப்பதால்,
நம் இதயம் அவரை நினைத்துக் களிகூரும்.

22 ஆண்டவரே, நாங்கள் உம்மையே நம்பியிருக்கிறோம்;
உமது பேரருள் எங்கள்மீது இருப்பதாக!

## கடவுளின் கருணையைப் புகழ்தல்

(தாவீது அபிமெலேக்கின்முன் பித்துப் பிடித்தவன் போலத் தம்மைக் காட்டினபோது அவனால் துரத்திவிடப்பட்டார். அப்போது அவர் பாடியது: தாவீதின் சங்கீதம்)

34 ஆண்டவரை நான் எக்காலத்திலும் போற்றுவேன்;
அவரது புகழ் எப்போதும் என் நாவில் இருக்கும்.
2 ஆண்டவரின் செயலைக் குறித்து என் ஆன்மா மேன்மை பாராட்டும்;
சிறுமைப்படுகிறவர்கள் அதைக் கேட்டு மகிழ்ச்சியடைவார்கள்.
3 என்னோடு சேர்ந்து ஆண்டவரின் மாட்சிமையை வெளிப்படுத்துங்கள்;

நாம் ஒருமித்து அவரது திருப்பெயரைப் புகழ்ந்து போற்றுவோம் வாருங்கள்.

4 நான் ஆண்டவரின் உதவியை நாடினேன்; அவர் எனக்குச் செவிசாய்த்தார்;
எல்லா வகையான அச்சத்தினின்றும் அவர் என்னை விடுவித்தார்.
5 அவரை நோக்கும் எந்த முகமும் மலரும்;
அந்த முகம் ஒருபோதும் வாடாது.
6 இதோ, திக்கற்றவன் மன்றாடினான்; ஆண்டவர் அவனுக்குச் செவிசாய்த்தார்;
அவர் அவனை எல்லா இடுக்கண்களினின்றும் விடுவித்துக் காப்பாற்றினார்.
7 ஆண்டவருக்கு அஞ்சி நடப்பவர்களைச் சூழ அவருடைய தூதனானவர் பாளையமிறங்கி, அவர்களைக் காப்பாற்றுகிறார்.

8 ஆண்டவர் நல்லவர் என்பதைச் சுவைத்துப்பாருங்கள்;
அவரிடம் அடைக்கலம் புகும் மனிதன் நற்பேறு பெற்றவன்.
9 ஆண்டவருக்குரிய மக்களே, அவருக்கு அஞ்சுங்கள்;
அவருக்கு அஞ்சுகிறவர்களுக்கு எந்தக் குறையும் இராது.
10 சிங்கக்குட்டிகள் உணவின்றிப் பட்டினியாயிருக்க நேரிடலாம்;
ஆண்டவரை நாடித்தேடுவோருக்கோ ஒரு நன்மையும் குறைவுபடாது.

11 பிள்ளைகளே, நான் சொல்வதை வந்து கேளுங்கள்;
ஆண்டவரிடம் கொள்ள வேண்டிய அச்சத்தைப்பற்றி உங்களுக்குக் கற்பிக்கிறேன்.
12 உங்களுள் யாருக்காவது நல் வாழ்க்கை நடத்த விருப்பம் உண்டா?
எல்லா நலன்களையும் துய்ப்பதற்காக நீண்ட காலம் வாழவிருப்பமுண்டா?
13 அப்படியானால், தீமையானதைப்பேசாதபடி உன் நாவைக் காத்துக்கொள்;
வஞ்சக மொழி பேச வாயெடுக்காதே.
14 தீமையை விலக்கிவிட்டு நன்மை செய்;
நல்லுறவுடன் வாழ்வதை நாடு; அதை அடையப்பார்.

15 ஆண்டவர் நேர்மையானவர்களைக் கருணை நிறைந்த கண்களோடு நோக்குகிறார்;
அவர்களுடைய வேண்டுதல்களுக்குச் செவிசாய்க்கிறார்.
16 ஆண்டவர் தீமை செய்வோருக்குக் கடுகடுத்த முகங்காட்டுகிறார்.
அவர் அவர்களைப்பற்றிய நினைவையே உலகில் அற்றுப்போகச் செய்வார்.
17 தம்மிடம் மன்றாடும் நல்லாருக்கு ஆண்டவர் செவிசாய்க்கிறார்;
அவர்களை எல்லா இடுக்கண்களினின்றும் விடுவிக்கிறார்.
18 உள்ளம் நொறுங்குண்டவர்களுக்கருகில் ஆண்டவர் இருக்கிறார்;
மனம் நைந்தவர்களை அவர் காப்பாற்றுகிறார்.

19 நீதிமானுக்கு நேரிடும் தீங்குகள் பல;
அவையனைத்தினின்றும் ஆண்டவர் அவனை விடுவிப்பார்.
20 அவன் எலும்புகளையெல்லாம் அவர் காப்பாற்றுவார்;
அவற்றுள் ஒன்றுகூட முறிக்கப்படமாட்டாது.
21 தீயோரைத் தீவினையே சாகடிக்கும்;
நீதிமான்களைப் பகைப்பவர்கள் தண்டனைக்குள்ளாவார்கள்.
22 ஆண்டவர் தம் ஊழியரை மீட்டுக்கொள்கிறார்;
அவரிடம் அடைக்கலம் புகும் எவனும் தண்டனை அடையான்.

## உதவிக்காக மன்றாடுதல்

(தாவீதின் சங்கீதம்)

**35** ஆண்டவரே, என்னோடு வழக்காடுகிறவர்களுடன் நீர் வழக்காடும்;
என்மீது போர் தொடுப்பவர்களோடு நீர் போர்புரியும்.
2 கேடயத்தையும் பரிசையையும் எடுத்துக்கொள்ளும்;
எனக்குத் துணை செய்ய எழுந்து வாரும்.
3 ஈட்டியை ஓங்கிக்கொண்டு என்னைப் பின்தொடர்வோரைத் தடுத்தருளும்;
''நானே உன் மீட்பர்'' என்று எனக்குச் சொல்லும்.

4 என் உயிரைக் குடிக்கப்பார்க்கிறவர்கள் வெட்கமும் மானக்கேடும் அடைவார்களாக;
எனக்குத் தீங்கு செய்ய நினைக்கிறவர்கள் பின்வாங்குவார்களாக; அவர்கள் நாணித் தலை குனிவார்களாக.
5 ஆண்டவரின் தூதன் அவர்களை விரட்டியடிப்பானாக;
அவர்கள் காற்றில் பறக்கும் பதரைப் போலாவார்களாக.
6 ஆண்டவரின் தூதன் அவர்களை விரட்டியடிப்பானாக;

34:8 1 பேது. 2:3. 34:12-16 1 பேது. 3:10-12. 34:20 யோ. 19:36.

அவர்கள் [illegible]
[illegible]

7 காரணமின்றி அவர்கள் எனக்கு [illegible]
[illegible]
கள்
காரணமின்றி அவர்கள் எனக்குக்
குழி [illegible].
8 எதிர்பாராத அழிவு அவர்களுக்கு
வருவதாக;
அவர்கள் மறைத்து வைத்த கண்ணியில்
அவர்களே சிக்கிக்கொள்வார்களாக;
அவர்கள் வெட்டின குழியில் அவர்களே
விழுவார்களாக.

9 என் உள்ளம் ஆண்டவரை முன்னிட்டுக்
களிகூரும்.
அவர் அளிக்கும் மீட்பை நினைத்து
அகமகிழும்.
10 என் ஒவ்வோர் எலும்பும்,
''ஆண்டவரே, எளியோரை வலியோர்
கைக்கும்,
வறியோரை அவர்களைச் சுரண்டிப்
பிழைப்போர் கைக்கும் நீர் தப்புவிக்
கின்றீர்;
உமக்கு நிகரானவர் எவருமில்லை''
என்று சொல்லும்.

11 வன்மம் கொண்ட சாட்சிகள்
எழுந்தார்கள்;
நான் செய்தறியாத குற்றங்களை அவர்
கள் என்மீது சுமத்துகிறார்கள்.
12 நான் அவர்களுக்கு நல்லதைச் செய்
திருக்க, அவர்கள் எனக்குத் தீங்கு
செய்கிறார்கள்,
என் நெஞ்சம் ஆழ்துயரில் அமிழும்படி
செய்கிறார்கள்.
13 என்றாலும், அவர்கள் நோயுற்றிருந்த
போது, நான் முரட்டுத் துணி உடுத்
திக்கொண்டேன்;
நோன்பிருந்து என்னை வருத்திக்கொண்
டேன்;
தலையை மார்புவரைக்கும் தாழ்த்தி
வேண்டுதல் செய்தேன்.
14 நண்பனுக்காக அல்லது உடன் பிறந்
தானுக்காக மன்றாடுவதுபோல மன்
றாடினேன்;
தாயை இழந்தவன் துக்கங்கொண்டாடு
வதுபோல, வாட்டமுற்றுத் துயரத்
தோடு நடமாடினேன்.

15 ஆனால் நான் தளர்ச்சியுற்றபோது அவர்
கள் ஒன்றுகூடி மகிழ்ந்தார்கள்;
எனக்குத் தெரியாதவர்கள் எனக்கு
விரோதமாகக் கூட்டங் கூடினார்கள்;
என்மீது ஓயாமல் பழிப்புரை கூறினார்
கள்.

16 [illegible]

17 ஆண்டவரே, எவ்வளவு காலம் நீர் இதைப்
பார்த்துக்கொண்டிருப்பீர்?
என் ஆன்மாவை அழிவிலிருந்தும்
என் ஆருயிரை அச்சிங்கக் [illegible]
[illegible]
18 மாபெரும் சபையில் உமக்கு நன்றி
செலுத்துவேன்;
திரளான மக்களிடையே உம்மைப்
புகழுவேன்.

19 வஞ்சகரான என் எதிரிகள் என்னைப்
பார்த்துக் களிக்க இடமளியாதேயும்;
காரணமின்றி என்னைப் பகைக்கிறவர்
கள் என்னை ஏளனமாகப் பார்க்க
இடங்கொடாதேயும்.

20 அவர்கள் பேச்சுச் சமாதானத்தைப்
பற்றிய பேச்சன்று;
நாட்டில் அமைதியாயிருக்கிறவர்களுக்கு
விரோதமாக அவர்கள் வஞ்சனை
யான காரியங்களை நினைக்கிறார்கள்.
21 என்னை அவர்கள் எதிர்க்கிறார்கள்:
''ஆ, ஆ, நீ செய்ததை நாங்கள் எங்கள்
கண்ணாலேயே கண்டோம்''
என்று கத்திக்கொண்டு குற்றம் சுமத்து
கிறார்கள்.

22 ஆண்டவரே, நீர் இதைப் பார்த்
திரல்லவா? மவுனமாயிராதேயும்;
ஆண்டவரே, என்னை விட்டுத் தொலை
வில் போய்விடாதேயும்.
23 என் கடவுளே, என் ஆண்டவரே, விழித்
தெழும்;
எனக்காக வழக்காடி எனக்கு நியாயம்
கிடைக்கச் செய்யும்.
24 என் கடவுளாகிய ஆண்டவரே, உமது
நீதிக்கேற்ப எனக்கு நீதி வழங்கும்;
அவர்கள் என்னைப் பார்த்துக் களிக்க
இடமளியாதேயும்.
25 அவர்கள் தங்கள் உள்ளத்தில் ''ஆம்,
நாம் விரும்பினது இதுவே'' என்று
சொல்லாதபடி பாரும்;
''அவனை விழுங்கிவிட்டோம்'' என்று
பேசிக்கொள்ளாதபடி பாரும்.

26 எனக்கு நேரிட்ட தீங்கைப் பார்த்து
மகிழ்ச்சி அடைகிறவர்கள் எல்லாரும்
வெட்கமும் குழப்பமும் அடைவார்
களாக;
என்னைவிடத் தங்களை மேம்பட்டவர்
களாகக் கருதுவோரை வெட்கமும்
மானக்கேடும் சூழட்டும்.

35:19 சங். 69:4; யோ. 15:25.

27 என் நேர்மையில் விருப்பங்கொள்ளுகிற
வர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்
வார்களாக;
''ஆண்டவருக்கே மாட்சிமை! அவர் தம்
அடியான் நலமுடன் வாழ்வதைக்
காண விரும்புகிறவர்''
என்று மீண்டும் மீண்டும் சொல்வார்
களாக.
28 என் நாவு நாள் முழுதும் உமது நீதியை
அறிவிக்கும்;
உமது புகழைச் சொல்லிக்கொண்டே
யிருக்கும்.

### மனிதனிடமிருக்கும் தீமை

(பாடகர் தலைவனுக்கு; ஆண்டவரின்
ஊழியனான தாவீதின் சங்கீதம்)

36 தீமையானது பொல்லானுக்கு உரைக்
கும் செய்தி எனக்குத் தெரியும்;
அவன் மனத்தில் கடவுள் பயம் இல்லை.
2 அவன் பார்வையில் அவன் உயர்வாகக்
காணப்படுவதால்,
அவன் தன்னிடமுள்ள தீமையைக் கண்டு
பிடித்து அதை அருவருக்க இயலாத
நிலையிலிருக்கிறான்.
3 அவன் வாயிலிருந்து வரும் வார்த்தை
கள் தீமையும் வஞ்சகமும் நிறைந்
தவை;
நல்லறிவோடு நலமானதைச் செய்வதை
அவன் நிறுத்திவிட்டான்.
4 படுக்கையில் படுத்திருக்கும்போதே
அவன் சதித்திட்டங்களை வகுக்கிறான்;
தன் தவறான வழியில் உறுதியாக நிற்
கிறான்; தீமையை வெறுத்து ஒதுக்க
வில்லை.

### கடவுளின் கருணை

5 ஆண்டவரே, உமது பேரருள் வானம்
வரைக்கும் எட்டுகிறது;
உமது உண்மை மேக மண்டலங்கள்
வரைக்கும் எட்டுகிறது.
6 உமது நீதி உயர்ந்த மலை போன்றது;
உம்முடைய தீர்ப்புகள் கடல்போல ஆழ
மானவை.
ஆண்டவரே, மனிதரையும் விலங்குகளை
யும் காப்பாற்றுகிறவர் நீரே.

7 கடவுளே, உமது பேரருள் எவ்வளவு
அருமையானது!
மனுமக்கள் உம்முடைய இறக்கைகளின்
நிழலில் அடைக்கலம் புகுகிறார்கள்.
8 உமது வீட்டிலுள்ள ஏராளமான
உணவுப் பொருள்களை அவர்கள்
வயிறார உண்கிறார்கள்;
பேரின்பமாகிய உமது நீரோடையில் நீர்
அவர்கள் தாகத்தைத் தீர்க்கிறீர்.
9 உயிர்தரும் ஊற்று உம்மிடம் இருக்
கிறது;
உமது ஒளியின் மூலமே நாங்கள் ஒளி
பெறுகிறோம்.

10 உம்மை அறிந்தவர்களுக்கு உமது
பேரருளையும்
நேர்மையான இதயமுள்ளவர்களுக்கு
உமது நீதியையும் வழங்கியருளும்.
11 இறுமாந்தவர்களின் கால் என்னை நசுக்
கும்படி விடாதேயும்;
பொல்லாரின் கை என்னை விரட்டியடிக்
கும்படி இடங் கொடாதேயும்.

12 தீமை செய்தவர்கள் விழுந்தார்கள்;
அதோ, அங்கே கிடக்கிறார்கள்;
அவர்கள் தூக்கியெறியப்பட்டார்கள்;
இனி அவர்கள் எழுந்திருக்கப்போவ
தில்லை.

### பொல்லார் நல்லார் முடிவுகள்

(தாவீதின் சங்கீதம்)

37 தீமை செய்கிறவர்களின் நல்வாழ்வைக்
கண்டு எரிச்சல் கொள்ளாதே;
பொல்லாங்கு செய்கிறவர்களின் பெரு
வாழ்வைக் கண்டு பொறாமை கொள்
ளாதே.
2 அவர்கள் விரைவில் புல்லைப்போல
உலர்ந்துபோவார்கள்;
பசும் பூண்டைப்போல வாடிப்போவார்
கள்.

3 ஆண்டவரை நம்பு; நலமானதைச் செய்;
நாட்டிலேயே குடியிரு; எவ்வகைக்
கவலையுமின்றி வாழ்வாய்.
4 ஆண்டவரையே உன் மனமகிழ்ச்சியாகக்
கொண்டிரு;
அவர் உன் இதயம் வேண்டுவதை அருளு
வார்.

5 உன் வழியை ஆண்டவருக்கு ஒப்புவி;
அவரையே நம்பியிரு;
அவரே உன் காரியங்களை வெற்றி பெறச்
செய்வார்.
6 உன் நேர்மையை ஒளிபோல இருக்கச்
செய்வார்;
உன் வாய்மையைப் பட்டப் பகலைப்
போல விளங்கச் செய்வார்.

7 ஆண்டவர் முன் அமைதியாயிரு;
அவரது உதவிக்காகக் காத்திரு;
தன் காரியத்தில் வெற்றி காண்பவனைப்
பார்த்து எரிச்சல் கொள்ளாதே;

36:1 ரோ. 3:18.

தீவினைகளைச் செய்து முடிக்கிற மனித
னைப்பார்த்துப் பொருமை கொள்
ளாதே.

8 வெஞ்சினம் கொள்ளாதே; வெகுண்டு
பேசுவதை விட்டுவிடு;
எரிச்சலடையாதே; அதனுல் தீமைதான்
விளையும்.
9 தீமை செய்கிறவர்கள் நாடு கடத்தப்
படுவார்கள்;
ஆண்டவரை நம்புகிறவர்களோ நாட்
டைச்சொந்தமாக்கிக்கொள்வார்கள்.

10 இன்னும் சிறிது காலம்; பிறகு பொல்
லான் இரான்;
அவன் இருந்த இடத்தில் அவனைத்
தேடிப்பார்த்தால். அவன் அங்கே
இரான்.
11 பணிவுடையோர் நாட்டை உடைமை
யாகப் பெறுவர்;
அவர்கள் வளமான வாழ்க்கையில்
இன்பம் காண்பார்கள்.

12 பொல்லான் நீதிமானுக்குத் தீங்கிழைக்
கத் திட்டமிடுகிறுன்;
அவனைப் பார்த்துப் பல்லை நெரிக்கிறுன்.
13 ஆண்டவரோ அவனைப் பார்த்து நகைக்
கிறுர்;
அவனது இறுதிநாள் நெருங்குவதை
அவர் காண்கிறுர்.

14 எளியோரையும் வறியோரையும் கீழே
வீழ்த்தவும்,
நேர்மையான வழியில் நடக்கிறவர்களைக்
கொன்றுவிடவும்,
பொல்லார் வாளை உருவுகின்றனர்;
வில்லை நாணேற்றுகின்றனர்.
15 ஆனுல் அவர்கள் வாள் அவர்கள் நெஞ்
சிலேயே பாயும்;
அவர்கள் வில்லும் முறிந்து விழும்.
16 தீயோருடைய திரளான செல்வத்தை
விட,
நல்லாருடைய சிறிதளவு பொருளே
சிறந்தது.
17 பொல்லாரின் தோள் வலிமை முறிக்கப்
படும்;
ஆனுல் நீதிமான்களுக்கு ஆண்டவர்
ஆதரவளிப்பார்.

18 நீதிமான்களின்வாழ்நாள்களைஆண்டவர்
அறிவார்;
அவர்கள் உரிமைச் சொத்து என்றென்
றும் நிலைத்திருக்கும்.
19 துன்பகாலத்தில் அவர்கள் துயருக்குள்
ளாவதில்லை;
பஞ்ச காலத்திலுங்கூட அவர்களிடம்
தேவைக்கு மேலும் இருக்கும்.

20 ஆனுல் பொல்லார் அழிவுக்கு ஆளாவர்;
ஆண்டவருடைய இந்த எதிரிகள் காட்டு
மலர்களைப்போல மறைவார்கள்;
புகையைப் போல மறைந்தொழிவார்
கள்.

21 பொல்லான் கடன் வாங்கினுல் அதைத்
திருப்பிக்கொடுக்க மாட்டான்;
நீதிமானே மனமிரங்கிப் பிறருக்குக்
கொடுப்பான்.
22 ஆண்டவரின் ஆசிபெற்றவர்கள் நாட்
டைச்சொந்தமாக்கிக்கொள்வார்கள்.
அவரால் சபிக்கப்பட்டவர்களோ
நாட்டை விட்டுத் துரத்தப்படுவார்
கள்.

23 மனிதனுடைய நடைகள் உறுதிபெறு
வது ஆண்டவராலேயே;
அவன் நடத்தையைத் தமக்கு உகந்த
தெனக் கொள்கிறுர்.
24 அவன் விழுந்தாலும் அப்படியே கிடக்க
மாட்டான்;
ஆண்டவர் அவனைக் கைகொடுத்துத்
தூக்குவார்.

25 நான் இளைஞனுயிருந்தேன்; வயது
சென்றவனுமானேன்;
நல்லவன் கைவிடப்பட்டதை நான் ஒரு
போதும் கண்டதில்லை;
அவனுடைய மரபினர் பிச்சை எடுப்
பதை நான் பார்த்ததில்லை.
26 நீதிமான் எப்போதும் இரக்கமுள்ளவனு
யிருப்பான், கடன் கொடுப்பான்;
அவன் மரபினர் கடவுளின் ஆசி பெற்ற
வராயிருப்பர்.

27 தீமையை விலக்கு; நல்லதைச் செய்.
எந்நாளும் நிலை பெற்றிருப்பாய்.
28 ஆண்டவர் நேர்மையை விரும்புகிறவர்;
தம் அடியாரை அவர் கைவிடுவ
தில்லை; அவர்களை என்றும் காப்
பாற்றுவார்.
பொல்லாரின் மரபினரோ நாட்டை
விட்டுத் துரத்தப்படுவர்.
29 நீதிமான்கள் நாட்டைச் சொந்தமாக்
கிக்கொள்வார்கள்
அதிலேயே என்றைக்கும் குடியிருப்பார்
கள்.

30 நீதிமானின் வாயினின்று ஞானம்
வெளிப்படும்;
அவன் நாவு நியாயத்தை எடுத்துரைக்
கும்.
31 அவன் உள்ளத்தில் அவன் கடவுள்
அருளின சட்டங்கள் இருக்கின்றன;
அவன் கால்கள் தடுமாறுவதில்லை.

**37:11** மத். 5:5.

32 பொல்லான் நீதிமானைக் கவனித்துக் கொண்டிருக்கிறான்;
அவனைக் கொன்றுவிடப் பார்க்கிறான்.
33 ஆனால் ஆண்டவர் நீதிமானை அவன் கையில் சிக்கவிட மாட்டார்;
விசாரணை நடக்கும்போது அவனைத் தண்டனைக்குள்ளாக்கவும் விடமாட்டார்.

34 ஆண்டவரின் உதவிக்காகக் காத்திருந்து, அவர் காட்டும் வழியில் நட;
அப்பொழுது நீ நாட்டைச் சொந்தமாக்கிக்கொள்ளும்படி, அவர் உன்னை உயர்த்துவார்;
பொல்லார் நாட்டை விட்டுத் துரத்தப் படுவதை நீ காண்பாய்.

35 பொல்லான் ஒருவனைக் கண்டேன்; அவன் மிகக் கொடியவன்;
முளைத்த நிலத்திலேயே செழித்தோங்கி வளரும் கேதுரு மரம்போல அவன் வளர்ந்திருந்தான்.
36 அவ்வழியே மீண்டும் சென்றேன்; அவன் அங்கே இல்லை;
அவனைத் தேடினேன்; அவனைக் காண வில்லை.

37 நல்லவனைப் பார்; நேர்மையானவனைக் கவனி;
அமைதியை நாடும் மனிதனுக்கு வழித்தோன்றல்கள் இருப்பார்கள்.
38 தீமை செய்வோர் அனைவரும் அழிக்கப் படுவர்;
பொல்லாருடைய மரபினர் ஒழிக்கப் படுவர்.

39 நீதிமான்களுக்கு மீட்பு ஆண்டவரிட மிருந்து வரும்;
இக்கட்டுக் காலத்தில் அவர்களுக்கு அடைக்கலம் அவரே.
40 ஆண்டவர் துணை நின்று அவர்களை விடுவிப்பார்;
அவர்கள் அவரிடம் அடைக்கலம் புகுந்ததால், பொல்லாரின் கையினின்று அவர் அவர்களை விடுவித்துக் காப்பார்.

### துன்புறுவோனின் மன்றாட்டு

*(தாவீதின் சங்கீதம்; நினைவுகூர்தல்)*

**38** ஆண்டவரே, நீர் சினங்கொண்டு என்னைத் தண்டியாதேயும்;
சீற்றங்கொண்டு என்னைக் கடிந்துகொள்ளாதேயும்.
2 உம்முடைய அம்புகள் என்னுள் பாய்ந்திருக்கின்றன;
உமது கை என்னை அழுத்திக்கொண்டிருக்கிறது.

3 நீர் சினங்கொண்டதால் என் உடலில் நலமே இல்லை;
என் பாவத்தினால் என் எலும்புகள் வலுவற்றுப்போயின.
4 என் குற்றங்கள் தலைக்குமேல் போய் விட்டன;
அவற்றின் சுமை என்னால் தாங்க முடியாத அளவிற்குப் பெரிதாயிற்று.

5 என் புண்கள் அழுகி நாற்றமெடுத்தன;
என் மதிகேடுதான் இதற்கெல்லாம் காரணம்.
6 நான் மிகவும் ஒடுங்கிப்போனேன்;
எப்போதும் துயரத்தோடு அலைகிறேன்.
7 என் குடலெல்லாம் எரிகிறது;
என் உடலில் நலமே இல்லை.
8 நான் வலுவற்றுப்போனேன், நொறுக்கப்பட்டேன்;
என் உள்ளக் கொதிப்பினால் கதறுகிறேன்.

9 ஆண்டவரே, என் ஏங்கலெல்லாம் உமக்குத் தெரியும்;
என் பெருமூச்சை நீர் அறியாமலில்லை.
10 என் உள்ளம் துடிக்கிறது; என் வலிமை என்னை விட்டகன்றது;
என் கண்களிலும் ஒளி இல்லாமற் போயிற்று.
11 என் நண்பரும் என் தோழரும் என் வாதையைக் கண்டு விலகி நிற்கிறார்கள்;
என் உறவினரும் என்னை விட்டு ஒதுங்கி நிற்கின்றனர்.
12 என் உயிரைப் போக்கப்பார்க்கிறவர்கள் எனக்குக் கண்ணிகளை வைக்கிறார்கள்;
எனக்குத் தீமை செய்யப்பார்க்கிறவர்கள் எனக்குக் கேடு வருமென அச்சுறுத்துகிறார்கள்;
நாளெல்லாம் அவர்கள் சூழ்ச்சி செய்கிறார்கள்.

13 நானோ காதுகேளாத செவிடனைப்போல் இருக்கிறேன்;
ஊமையைப்போல வாய் திறவாமல் நிற்கிறேன்.
14 காது கேளாத மனிதனைப்போலானேன்;
பேச இயலாதவனுக்கு ஒப்பானேன்.

15 ஆண்டவரே, நான் உம்மையே நம்பியிருக்கிறேன்;
என் கடவுளாகிய ஆண்டவரே, என் விண்ணப்பத்திற்குச் செவிசாய்த்தருளும்.

16 அவர்கள் என்னைப் பார்த்துக் களிக்க
இடமளியாதேயும்;
என் கால் தவற நேரிட்டால் அவர்கள்
பெருமிதம் கொள்வார்கள்.
17 நான் தடுமாறி விழும் நிலையிலிருக்
கிறேன்;
என் வருத்தம் எப்போதும் என் கண்
முன் இருக்கிறது.

18 என் குற்றத்தை நான் ஒப்புக்கொள்
கிறேன்;
என் பாவத்திற்காக மனம் வருந்து
கிறேன்.
19 என் எதிரிகள் நலமும் வலிமையும் உள்ள
வர்கள்;
காரணமின்றி என்னைப் பகைப்போர்
பலர் இருக்கின்றனர்.
20 நான் நேர்மையோடு எதையும் செய்யப்
பார்க்கிறதற்காக அவர்கள் என்னைக்
குறைகூறுகிறார்கள்;
என் இரக்கச் செயலுக்குக் கைம்மாறாக
எனக்குத் தீமை செய்கிறார்கள்.

21 ஆண்டவரே, என்னைக் கைவிடாதேயும்;
என் கடவுளே, என்னை விட்டுத் தொலை
வில் போய்விடாதேயும்.
22 என் மீட்பராகிய ஆண்டவரே, எனக்கு
உதவி செய்ய விரைந்து வாரும்.

### மனித வாழ்க்கையின் நிலையாமை

(ஏதுூன் என்னும் பாடகர் தலைவ
னுக்கு; தாவீதின் சங்கீதம்)

**39** "நான் என் வழிகளைக் கவனித்துக்
கொள்வேன்;
நாவினால் பாவம் செய்யாதபடி விழிப்
புடையவனாயிருப்பேன்;
பொல்லார் என்முன் நிற்கையில் நான்
எனக்கு வாய்ப்பூட்டுப் போட்டுக்
கொள்வேன்" என்று சொல்லிக்
கொண்டேன்.
2 நான் வாய் திறவாது வாளாவிருந்தேன்;
நலமானதைக் கூடப் பேசாமல் அமைதி
யாயிருந்தேன்;
என் மனவருத்தமோ பெருகிற்று.
3 என் உள்ளம் என்னுள் எரியத்தொடங்
கிற்று;
நான் சிந்தனையில் ஆழ்ந்தபோது
நெருப்பு மூண்டது;
அப்பொழுது நாவு வார்த்தைகளைப்
பொழிந்தது.
4 ஆண்டவரே, என் முடிவு எப்போது
வரும் என்பதையும்
என் வாழ்நாளின் அளவு இவ்வளவு
என்பதையும் எனக்குத் தெரி
வித்து,
நான் எவ்வளவு நிலையற்றவன் என்பதை
உணரச் செய்யும்.

5 என் வாழ்நாளை நான்கு விரற்கடை
அளவாக்கினீர்;
என் ஆயுட்காலம் உமது பார்வையில்
அற்பமானதுபோலும்;
உண்மையில் எல்லா மனிதரும் நீர்க்
குமிழி போன்றவர்களே. (சேலா)

6 அவன்நிழலைப்போலக்கடந்துபோகிறான்;
அவன் சேமித்து வைக்கும் செல்வமும்
நீர்க்குமிழி போன்றதே;
அதை அனுபவிப்பவன் யார் என்பதை
அவன் அறியான்.

7 ஆண்டவரே, நான் எதிர்பார்க்கக்
கூடியதுதான் என்ன?
நான் உம்மையே நம்பியிருக்கிறேன்.
8 என் தவறுகள் அனைத்தினின்றும் என்னை
விடுவித்தருளும்;
மதிகேடனின் பழிப்புரைக்கு என்னை
ஆளாக்காதேயும்.
9 நான் மவுனமாயிருக்கிறேன், இனி வாய்
திறக்க மாட்டேன்;
ஏனெனில், நீரே இவ்வாறு செய்தீர்.
10 என்னிடமிருந்து நீர் தந்த வாதையை
நீக்கிவிடும்;
உமது கை அடித்த அடிகளால் நான்
நிலைகுலைந்துபோனேன்.
11 குற்றத்தின் பொருட்டு நீர் மனிதனைக்
கண்டித்துத் திருத்துகிறீர்;
அவனது உடலைப் பூச்சி அரிப்பதுபோல
அரித்தழித்து விடுகிறீர்.
மனிதன் ஒரு நீர்க்குமிழிதானே! (சேலா)

12 ஆண்டவரே, என் விண்ணப்பத்திற்குச்
செவிசாய்த்தருளும்,
என் மன்றாட்டுக்குச் செவிகொடுத்
தருளும்;
நான் கண்ணீர் விடுகையில் மவுனமா
யிராதேயும்.
என் மூதாதையர் அனைவரையும்போல
நானும் குடிநிலவரமற்றவன்; ஓரிடத்
தில் சிறிது காலம் தங்கும் ஒரு வழிப்
போக்கன்.
13 நான் காலமாகி உலகிலிருந்து மறையு
முன்பே
நான் இன்பம் காணும்படி என்னைக்
கண்டித்துக்கொண்டிராதேயும்.

### புகழ்ப் பாடல்

(பாடகர் தலைவனுக்கு; தாவீதின் சங்கீதம்)

**40** ஆண்டவரின் உதவிக்காக நான்
ஆவலுடன் காத்திருந்தேன்;
அவர் என் பக்கம் திரும்பி என் மன்றாட்
டுக்குச் செவிசாய்த்தார்.

2 அவர் என்னை அச்சந்தரும் பள்ளமாகிய
சேற்றுக்குழியிலிருந்து தூக்கி எடுத்
தார்;
ஒரு கன்மலையில் என்னைக் காலூன்றச்
செய்து என் நிலையை உறுதியுடைய
தாக்கினார்.
3 நம்முடைய கடவுளைப் புகழும்படி புதிய
தொரு பாடலைப் பாடச் செய்தார்;
இதைப் பார்க்கும் பலர் அச்சங்கொண்டு
ஆண்டவரை நம்புவர்.

4 ஆண்டவரை நம்புகிறவனே நற்பேறு
பெற்றவன்;
சிலைகளை வழிபடுவோரோடு சேராமலும்
பொய்த் தெய்வங்களை வணங்காம
லும் இருக்கும் இந்த மனிதனே நற்
பேறு பெற்றவன்.

5 என் கடவுளாகிய ஆண்டவரே, எங்கள்
பொருட்டு நீர் பல காரியங்களைச்
செய்திருக்கிறீர்;
உமக்கு நிகரானவர் எவருமில்லை;
நீர் எங்களுக்காக வியக்கத்தக்க திட்டங்
கள் பல வகுத்திருக்கிறீர்;
அவற்றையெல்லாம் நான் எடுத்துரைக்
கப்பார்த்தால்,
அவை நான் சொல்லக்கூடியதற்கும்
மேலாகத்தான் இருக்கும்.

6 பலிகளையும் காணிக்கையையும் நீர்
விரும்பவில்லை;
எரிக்கப்படும் பலிகளையோ பாவப்
பரிகாரப் பலிகளையோ நீர் கேட்க
வில்லை.
ஆனால் உமக்குச் செவிசாய்க்க எனக்குக்
காதுகளைக் கொடுத்திருக்கிறீர்.
7 ஆகையால் நான், ''இதோ வருகிறேன்;
நான் செய்யும்படி நீர் கட்டளையிட்
டவை நூற் சுருளில் இருக்கின்றன:
8 என் கடவுளே, உமது திருவுளத்தை
நிறைவேற்றுவதே எனக்கு மகிழ்ச்சி;
உம்முடைய சட்டங்கள் என் உள்ளத்
தில் இருக்கின்றன'' என்று சொன்
னேன்.
9 மாபெரும் சபையில் உமது நீதியைப்
பற்றிய நற்செய்தியை அறிவித்தேன்;
நான் வாயை மூடிக்கொண்டிருக்க
வில்லை; ஆண்டவரே, நீர் இதை
அறிவீர்,
10 உமது நீதியை நான் என் உள்ளத்தில்
மறைத்து வைக்கவில்லை;
உமது உண்மையையும் நீர் அருளும்
மீட்பையும் பற்றிக் கூறியிருக்கிறேன்;
உமது பேரருளையும் உமது வாக்குறுதி
யையும் மாபெரும் சபைக்கு நான்
ஒளிக்கவில்லை; அதை அறிவித்தேன்.
11 ஆண்டவரே, உமது பேரிரக்கம் எனக்
குக் கிடைக்காமற் போகும்படி செய்
யாதேயும்.
உமது பேரருளும் உமது வாக்குறுதி
யும் என்னை என்றும் பாதுகாப்
பனவாக.

### உதவிக்காக வேண்டுதல் செய்தல்

12 எண்ணிறந்த தீமைகள் என்னைச் சூழ்ந்து
கொண்டன;
என் குற்றங்கள் என்னைத் தொடர்ந்து
வந்து பிடித்துக்கொண்டன;
என்னால் நிமிர்ந்து பார்க்க இயலவில்லை;
அவை என் தலை முடிகளைவிட மிகுதி
யானவை;
என் உள்ளம் சோர்ந்துபோயிற்று.
13 ஆண்டவரே, என்னை விடுவித்தருளும்;
ஆண்டவரே, எனக்கு உதவி செய்ய
விரைந்து வாரும்.
14 என்னை அழித்துவிடப் பார்க்கிறவர்கள்
எல்லாரும் வெட்கமும் குழப்பமும்
அடைவார்களாக;
எனக்குத் தீங்கிழைக்க விரும்புகிற
வர்கள் வெட்கத்தால் தலைகுனிந்து
பின்னிட்டுத் திரும்புவார்களாக.
15 என்னைப் பார்த்து, ''ஆ, ஆ''
என்று ஏளனம் செய்கிறவர்கள்,
பெருங்கலக்கமுற்றுப் பின்னிடுவார்
களாக.

16 உம்மிடம்வருகிற அனைவரும் மகிழ்ந்து
களிகூர்வார்களாக;
நீர் அருளும் மீட்பில் நாட்டாங்கொள்
கிறவர்கள், ''ஆண்டவருக்கே
மாட்சிமை!'' என்று எப்போதும்
சொல்வார்களாக.
17 நான் சிறுமைப்பட்டவன், எளியவன்;
ஆண்டவரே, கடவுளே, என்னிடம்
விரைந்து வாரும்:
நீரே எனக்குத் துணை, என்னை விடுவிக்
கிறவர்; என் கடவுளே, காலந்
தாழ்த்தாதேயும்.

### ஒரு நோயாளியின் மன்றாட்டு

(பாடகர் தலைவனுக்கு; தாவீதின்
சங்கீதம்)

41 திக்கற்றவனைக் கவனித்துக்கொள்கிற
வன் நற்பேறு பெற்றவன்;
துன்பநாளில் ஆண்டவர் அவனை விடுவிப்
பார்.
2 ஆண்டவர் அவனைப் பாதுகாத்து அவனை
உயிரோடு வைப்பார்;

40:6-8 எபி. 10:5-7

நாட்டில் அவன் வளமுடன் வாழ்வான்;
அவனுடைய எதிரிகளின் கைகளில்
அவனை ஒப்புக்கொடுக்க மாட்
டார்.
3 படுக்கையில் அவன் நோயுற்றுக் கிடக்கை
யில் ஆண்டவர் அவனுக்குத் துணை
செய்வார்;
அவன் நோயை நீக்கி அவனைக் குணப்
படுத்துவார்.
4 ''ஆண்டவரே, எனக்கு இரங்கும்; உமக்கு
விரோதமாகப் பாவம் செய்தேன்;
என்னைக் குணப்படுத்தும்'' என்று மன்
றாடினேன்.
5 என் எதிரிகள் என்னைப்பற்றிய தீய எண்
ணத்துடன்,
''அவன் எப்போது சாவான்; அவன்
பெயர் எப்போது ஒழியும்'' என்கிறார்
கள்.
6 என்னைப் பார்க்க வருகிறவர்கள் வஞ்சக
மாகப் பேசுகிறார்கள்;
பழிப்புக்குரிய செய்திகளைச் சேகரித்துக்
கொண்டு, வெளியே போய் அவற்
றைப் பரப்புகிறார்கள்.
7 என் பகைஞரெல்லாரும் ஒன்றுகூடி
எனக்கு விரோதமாக முணுமுணுக்
கின்றனர்;
எனக்குத் தீங்கிழைக்கத் திட்டமிடுகின்
றனர்.
8 ''தீரா நோய் அவனைப் பிடித்துக்
கொண்டது;
படுக்கையில் கிடக்கிற அவன் எழுந்
திருக்க மாட்டான்'' என்று சொல்லு
கிறார்கள்.
9 எனக்கு நெருங்கிய நண்பன், நான்
நம்பினவன், என் அப்பத்தை உண்ட
வன்,
எனக்கு இரண்டகமாகத் தன் குதிகாலைத்
தூக்கினான்.

10 ஆண்டவரே, எனக்கு இரங்கும்; என்னை
எழுந்திருக்கச் செய்யும்;
நான் அவர்களுக்குச் சரிக்குச்சரி செய்
வேன்.
11 என் எதிரி என்மீது வெற்றிகொள்ளா
திடில்,
நீர் என்னிடம் அன்புகொண்டிருக்கிறீர்
என்பதை அறிந்துகொள்வேன்.
12 நான் நேர்மையானவனாய் நடக்கையில்,
நீர் எனக்கு ஆதரவளிப்பீர்;
உமது முன்னிலையில் என்னை என்றும்
நிறுத்திவைப்பீர்.

13 இஸ்ரவேலின் கடவுளாகிய ஆண்ட
வரைப் போற்றுவோமாக!
இப்போதும் எப்போதும் அவரைப்
போற்றுவோமாக!

## இரண்டாம் பாகம்

### 42—72

### நாடுகடத்தப்பெற்ற ஒருவனது மன்றாட்டு

*(பாடகர் தலைவனுக்கு; கோராகு சங்
கீதம்)*

42 மானானது நீரோடைகளுக்காக ஏங்கித்
தவிப்பதுபோல,
கடவுளே, என் ஆன்மா உமக்காக
ஏங்கித் தவிக்கிறது.
2 என் ஆன்மா கடவுள்மீது, என்றுமுள்ள
கடவுள் மீதே தாகங் கொண்டது;
நான் எப்போது கடவுள் முன்னிலையில்
வந்து நிற்கப்போகிறேன்?
3 ''உன் கடவுள் எங்கே?'' என்று அவர்
கள் நாள்தோறும் என்னைக் கேட்
கிறார்கள்;
ஆகையால் இரவும் பகலும் கண்ணீரே
எனக்கு உணவாயிற்று.

4 பண்டிகை கொண்டாடத் திரண்ட
கூட்டம் போகையில்,
களிப்புடன் புகழ்ப் பாடல்களை உரத்
துப் பாடிக்கொண்டு நான் அவர்
களோடு சென்று,
அவர்களைத் திருக்கோவிலுக்கு நடத்திக்
கொண்டு போனேன்;
அவற்றையெல்லாம் நினைக்கும்போது
என் உள்ளம் கொதிப்படைகிறது.
5 என் ஆன்மாவே, நீ ஏன் சோர்ந்து
போகிறாய்? கடவுளையே நம்பியிரு;
அவரிடம் கிடைக்கும் மீட்பை முன்
னிட்டு நான் இன்னும் அவரைப்
புகழ்வேன்.

6 என் கடவுளே, என் ஆன்மா சோர்ந்
திருக்கிறது;
ஆகையால், எர்மோன் மலைக்கும் மீசார்
மலைக்கும் பக்கத்திலுள்ள யோர்தான்
பகுதியில் அன்னியனாய் வாழ்கையில்,
நான் அவரை நினைக்கின்றேன்.
7 கடல்கள் ஒன்றையொன்று கூப்பிடுகின்
றன; கடவுளின் அருவிகளும் இரைச்
சலிடுகின்றன;
உம்முடைய சிற்றலைகள் பேரலைகளெல்
லாம் என்மீது புரண்டோடுகின்றன.
8 நாள்தோறும் ஆண்டவர் தமது பேரரு
ளைப் பொழிவாராக!
இரவுதோறும் நான் அவரைப் பாடு
வேன்;
எனக்கு வாழ்வளிக்கிற கடவுளை நோக்கி
மன்றாடுவேன்.

9 என் கன்மலையாகிய கடவுளிடம், ''ஏன்
என்னை மறந்தீர்?

41:9 மத். 26:23; மாற்[illegible] 22:21; யோ. 13:18. 41:13 சங். 106:48.

எதிரியால் ஒடுக்கப்பட்டு நான் ஏன்
துயரத்தோடு நடமாட வேண்டும்?''
என்பேன்.
10 ''உன் கடவுள் எங்கே?'' என்று ஏன்
எதிரிகள் நாள்தோறும் என்னைக் கேட்
கிறார்கள்;
இப்படி அவர்கள் என்னைப் பழிப்பது
என் எலும்புகளை நொறுக்குவதுபோல்
இருக்கிறது.

11 என் ஆன்மாவே, நீ ஏன் சோர்ந்து
போகிறாய்? ஏன் கலங்குகிறாய்? கடவு
ளையே நம்பியிரு;
என் மீட்பரும் கடவுளுமானவரை நான்
இன்னும் புகழுவேன்.

### நாடுகடத்தப்பெற்ற ஒருவனது மன்றாட்டு

43 கடவுளே, எனக்கு நீதி வழங்கும்;
இறைப்பற்றில்லாத இனத்தோடு
எனக்காக வழக்காடும்;
கொடுமையும் வஞ்சகமும் நிறைந்த
மனிதன் கையினின்று என்னை விடுவி
யும்.
2 கடவுளே, நீரே என் அரண்; ஏன்
என்னை ஒதுக்கித் தள்ளிவிட்டீர்?
எதிரியால் ஒடுக்கப்பட்டு நான் ஏன்
துயரத்தோடு நடமாட வேண்டும்?
3 உமது ஒளியையும் உமது உண்மையை
யும் எனக்குக் காட்டியருளும்;
அவை என்னை நடத்தி, புனிதமான
உமது மலைக்கும் உமது உறைவிடத்
திற்கும் என்னைக் கொண்டுபோய்ச்
சேர்க்கட்டும்.
4 அப்பொழுது நான் கடவுளின் பீடத்
திடமும் எனக்கு மகிழ்ச்சியும் இன்ப
மும் தருகிற கடவுளிடமும் செல்
வேன்;
கடவுளே, என் கடவுளே, உம்மைச்
சுரமண்டலங்கொண்டு புகழ்வேன்.

5 என் ஆன்மாவே, நீ ஏன் சோர்ந்து
போகிறாய்? ஏன் கலங்குகிறாய்?
கடவுளையே நம்பியிரு;
என் மீட்பரும் கடவுளுமானவரை நான்
இன்னும் புகழுவேன்.

### பாதுகாப்புக்காக மன்றாடுதல்

(பாடகர் தலைவனுக்கு; கோராகு சங்
கீதம்)

44 கடவுளே, முற்காலத்தில், எங்கள்
மூதாதையரின் காலத்தில்,
நீர் நடப்பித்த செயல்களை அவர்கள்
எங்களுக்குத் தெரிவித்தார்கள்;
நாங்கள் எங்கள் காதுகளால் கேட்டிருக்
கிறோம்.
2 நீர் உமது கையால் பிற இனத்தவரைத்
துரத்திவிட்டு, எங்கள் மூதாதையரை
நிலைபெறச் செய்தீர்;
ஏனைய மக்களைத் துன்புறச் செய்தீர்;
எங்கள் மூதாதயரை வாழச் செய்தீர்.
3 அவர்கள் தங்கள் வாளால் நாட்டைக்
கைப்பற்றவில்லை; அவர்கள் தங்கள்
தோள்வலிமையால் வெற்றிபெற
வில்லை.
நீர் அவர்களிடம் அன்பு கொண்டிருந்த
படியால், உமது வலக்கையும் உமது
கைவன்மையும் உமது முகத்தின்
ஒளியுமே அவர்களுக்கு வெற்றியளித்
தன.

4 நீரே என் அரசர், என் கடவுள்;
யாக்கோபுக்கு வெற்றி அளித்தவர் நீரே.
5 எங்கள் எதிரிகளை உமது உதவியால்
தாக்கி வீழ்த்துவோம்;
எங்களை எதிர்ப்பவர்களை உமது திருப்
பெயரால் கீழடக்குவோம்.
6 என் வில்லை நான் நம்பவில்லை;
என் வாள் என்னைக் காப்பாற்றவில்லை.
7 நீரே எங்கள் எதிரிகளிடமிருந்து எங்
களைக் காப்பாற்றினீர்;
எங்கள் பகைஞரை வெட்கத்திற்குள்
ளாக்கினீர்.
8 எந்நாளும் கடவுளை நினைத்து மகிழ்ந்து
கொண்டாடுவோம்;
என்றென்றும் அவரது திருப்பெயரைப்
புகழுவோம்.

9 ஆனால் இப்போது நீர் எங்களை ஒதுக்கித்
தள்ளிவிட்டீர்; இழிவுபடுத்தி விட்டீர்;
எங்கள் படைகளுடன் நீர் செல்வ
தில்லை.
10 எங்கள் எதிரிகளுக்கு நாங்கள் புறங்
காட்டி ஓடும்படி செய்தீர்;
எங்கள் பகைஞர்கள் தங்கள் விருப்பப்
படி எங்களைக் கொள்ளையிட்டார்கள்.
11 ஆடுகளைப்போல எங்களை அவர்கள்
வெட்டும்படி விட்டுவிட்டீர்;
அவர்கள் எங்களைப் பிற இனத்த
வரிடையே சிதறடித்தார்கள்.
12 நீர் உம்முடைய மக்களைச் சொற்ப
விலைக்கு விற்றுவிட்டீர்;
அவர்களை விற்றதால் உமக்குக் கிடைத்த
பலனோ ஒன்றுமில்லை.
13 எங்கள் அயலாருடைய பழிப்புக்கு நீர்
எங்களை ஆளாக்கினீர்;
எங்கள் சுற்றுப்புறத்தாரின் ஏளனத்துக்
கும் இகழ்ச்சிக்கும் எங்களை உள்ளாக்
கினீர்.
14 பிற இனத்தவரிடையே எங்களை ஏளனத்
திற்குரியவர்களாக்கினீர்;

ஏனைய மக்கள் எங்களைப் பார்த்துத் தலையை ஆட்டி நகைக்கும்படி செய்தீர்.
15 எனக்கு வந்த மானக்கேடு எந்நேரமும் என் கண்முன்னே நிற்கின்றது;
வெட்கம் என்னை முகங்கவிழச் செய்கின்றது.
16 என்னைப் பழித்துத் தூற்றுபவன் பேசுவதை நான் கேட்கும்போது,
என் எதிரியையும் பகைஞனையும் நான் பார்க்கும்போது வெட்கிப்போகிறேன்.

17 இவையெல்லாம் எங்களுக்கு நேரிட்டன;
ஆயினும் நாங்கள் உம்மை மறக்கவில்லை;
உமது உடன்படிக்கையை மீறவுமில்லை.
18 எங்கள் உள்ளம் மாறுபாடு அடையவுமில்லை;
எங்கள் கால் உமது பாதையை விட்டு விலகவுமில்லை.
19 என்றபோதிலும், கொடும் பாம்புள்ள இடத்தில் எங்களைத் தள்ளிவிட்டீர்;
எங்கள்மீது இருள் கவியச் செய்தீர்.

20 நாங்கள் எங்கள் கடவுளின் திருப்பெயரை மறந்துவிட்டு,
பிற தெய்வங்களைக் கைகூப்பி வணங்கியிருந்தோமானால்,
21 கடவுளே, நீர் அதைப் பார்த்திருப்பீர் அல்லவா?
உள்ளத்திலுள்ள எண்ணங்களை நீர் அறிகிறவர் அல்லவா?
22 உம்பொருட்டு நாள் முழுதும் வதையுண்டு கொல்லப்படுகிறோம்;
வெட்டுவதற்கென நிறுத்தப்படும் ஆடுகளெனக் கருதப்படுகிறோம்.

23 ஆண்டவரே, விழித்துக்கொள்ளும், ஏன் உறங்குகின்றீர்?
விழித்தெழுந்தருளும்; இறுதி வரையிலும் எங்களைத் தள்ளி வைத்து விடாதேயும்.
24 நீர் உமது முகத்தை ஏன் மறைத்துக் கொள்கிறீர்?
எங்கள் சிறுமையையும் எங்கள் துன்பத்தையும் ஏன் மறந்துவிடுகிறீர்?

25 நாங்கள் தரைவரைக்கும் தாழ்த்தப்படுகிறோம்;
எங்கள் உடல் மண்ணோடு ஒட்டிக்கொள்கிறது.
26 எழுந்து வாரும்; எங்களுக்குத் துணை அளியும் :
உமது பேரருளை முன்னிட்டு எங்களை மீட்டருளும்.

44:22 உரோ. 8:36. 45:6,7 எபி. 1:8,9

## திருமணப் பாடல்

(பாடகர் தலைவனுக்கு; இராகம்: சொஷனீம்; கோராகு சங்கீதம்; நாயகன் நாயகி பாடல்)

45 நல்ல செய்தியால் என் இதயம் பொங்குகின்றது;
அரசரைக்குறித்து நான் இயற்றின பாடலைச் சொல்லுகிறேன்;
என் நாவு விரைவாக எழுதுவோனது எழுத்தாணி போன்றது.

2 மனுமக்களுள் நீரே மிகவும் அழகுள்ளவர்;
உம் உதடுகள் அருள் பொழிகின்றன;
ஆகையால் கடவுள் உம்மை என்றென்றும் ஆசிபெற்றவராய் இருக்கச் செய்திருக்கிறார்.
3 வீர மன்னரே, உமக்கு மாட்சியும் மாண்பும் உண்டாக,
உமது வாளை உம் அரையிலே கட்டிக் கொள்ளும்.

4 உண்மைக்காகவும் நீதிக்காகவும் போரிட,
உமது மாட்சிமையோடு வெற்றிகரமாக எழுந்து வாரும்.
உமது வலக்கை, அரிய செயல்களை விளங்கச் செய்யும்.
5 உம்முடைய அம்புகள் கூர்மையானவை;
அவை அரசரின் எதிரிகள் நெஞ்சில் பாயும்;
மக்கள் உம் காலடியில் விழுவார்கள்.
6 இறைவனே, உமது அரியணை என்றென்றும் உள்ளது;
உமது ஆட்சியின் கோல் நேர்மையான செங்கோல்.
7 நீர் நீதியை விரும்பினீர்; அநீதியை அருவருத்தீர்;
ஆகையால் கடவுள், உம்முடைய கடவுள்தாமே,
உம்மை எண்ணெயால் அபிடேகம் செய்து,
உம்முடைய தோழர்களைவிட உம்மை மேம்பட்டவராக்கி, உம்மை மகிழ்வித்தார்.
8 உம்முடைய ஆடைகளெல்லாம் வெள்ளைப்போளம், சந்தனம், இலவங்கம் ஆகியவற்றின் நறுமணம் பொருந்தியவை;
தந்த மாளிகையினின்று எழும் யாழோசை உம்மை மகிழ்விக்கும்.
9 உம்முடைய நாயகிகளிடையே அரச மகளிரும் உண்டு;
அரசி ஒப்பீர் நகரத்துத் தங்கம் அணிந்தவளாய் உமது வலப்பக்கத்தில் நிற்கிறாள்.

10 மகளே, கேள்; உன் செவியைச் சாய்த்துக் கவனி;
உன் இனத்தாரையும் உன் தகப்பன் வீட்டையும் மறந்துவிடு.
11 அப்பொழுது அரசர் உன் அழகைக் கண்டு இன்புறுவார்;
அவர் உன் ஆண்டவர்; அவரை வணங்கு.
12 தீருவினின்று வரும் மணமகள் காணிக்கை கொண்டுவருவாள்;
செல்வமுடைய மக்களும் உன் தயவை நாடிவருவார்கள்.

13 அந்தப்புரத்தில் இருக்கும் இளவரசி பேரழகி;
அவளது ஆடை பொற் சரிகையாலானது
14 சித்திர வேலைப்பாடுள்ள ஆடை அணிந்தவளாய் அவள் அரசரிடம் அழைத்து வரப்படுகின்றாள்;
அவள் பின்னே செல்லும் அவளுடைய கன்னித் தோழிகளும் அவர் முன்னிலையில் வருவார்கள்.
15 அவர்கள் மகிழ்ச்சியோடும் களிப்போடும் வந்து,
அரசரின் அரண்மனைக்குள் செல்வார்கள்.

16 உமக்கு மூதாதையர் இருந்ததுபோல உமக்குப் புதல்வர்கள் இருப்பார்கள்;
அவர்களை உலகெங்கும் ஆட்சித் தலைவர்களாக வைப்பீர்.
17 உமது பெயரை எல்லாத் தலைமுறைகளும் நினைவுகூரும்படி செய்வேன்;
எனவே, எல்லா இனத்தவரும் உம்மை என்றென்றும் போற்றுவர்.

### கடவுள் நம்மோடிருக்கிறார்

(பாடகர் தலைவனுக்கு; இராகம் : அலாமோத்து; கோராகு சங்கீதம்)

**46** கடவுள் நமக்கு அடைக்கலமாயும் ஆற்றலுமாயும் இருக்கிறார்;
இக்கட்டுக் காலத்தில் நமக்கு உறுதுணை அளிப்பவர் அவரே.
2 ஆகையால் நிலவுலகம் நிலைமாறினாலும், மலைகள் அடிபெயர்ந்து ஆழ்கடலில் விழுந்தாலும்,
3 கடல்கள் எல்லாம் கொந்தளித்துப் பொங்கினாலும்,
அவற்றின் பெருக்கால் குன்றுகள் அதிர்ச்சியுற்றாலும்,
நாங்கள் அஞ்சமாட்டோம். (சேலா)

4 ஆறு ஒன்று உண்டு; அதன் நீரோடைகள் கடவுளின் நகருக்கு இன்பம் தருகின்றன;
உன்னதமானவரின் புனித அகத்தை மகிழ்விக்கின்றன.
5 அந்நகரின் நடுவில் கடவுள் இருக்கிறார்;
அது ஒருபோதும் வீழ்ச்சியுறாது;
விடியற்காலையில் கடவுள் அதற்கு உதவி செய்வார்.
6 பிற இனத்தவர் திகிலடைந்தனர்; அரசுகள் கலக்கமுற்றன;
கடவுளின் குரல் முழங்கிற்று; பூமி கரைந்தது.

7 வெற்றி வேந்தரான ஆண்டவர் நம்மோடிருக்கிறார்;
யாக்கோபின் கடவுளே நமக்கு அடைக்கலம். (சேலா)

8 ஆண்டவரின் செயல்களை வந்து பாருங்கள்;
அவர் உலகில் அதிர்ச்சியூட்டும் செயல்களைச் செய்திருக்கிறார்.
9 உலகின் கடையெல்லை வரைக்கும் போர்களை அற்றுப்போகச் செய்கிறார்;
வில்லை ஒடிக்கிறார்; ஈட்டியை முறிக்கிறார்; தேர்களை நெருப்பில் சுட்டெரிக்கிறார்.
10 "நீங்கள் அமைதியாயிருந்து நானே கடவுள் என்பதை உணர்ந்துகொள்ளுங்கள்;
பிற இனத்தவரிடையே நானே உயர்ந்திருப்பேன், பூமியில் நானே உயர்ந்திருப்பேன்" என்கிறார்.
11 வெற்றிவேந்தரான ஆண்டவர் நம்மோடிருக்கிறார்;
யாக்கோபின் கடவுளே நமக்கு அடைக்கலம். (சேலா)

### ஆண்டவரே உலக அரசர்

(பாடகர் தலைவனுக்கு; கோராகு சங்கீதம்)

**47** மானிடரே, நீங்கள் அனைவரும் கைகொட்டி ஆர்ப்பரியுங்கள்;
களிப்புடனே கடவுளுக்குப் புகழ்பாடி ஆரவாரம் செய்யுங்கள்.
2 உன்னதமானவராகிய ஆண்டவர் அஞ்சுதற்குரியவர்;
உலகனைத்தையும் ஆளும் மாட்சிமை மிக்க அரசர் அவரே.
3 ஏனைய மக்களை நமக்குக் கீழ்ப்படுத்தினார்;
நாடுகளை நமக்கு அடிபணிய வைத்தார்.
4 நமக்கே சொந்தமாயிருக்க ஒரு நாட்டைத் தேடித்தந்தார்;
அது அவருக்கு அன்பார்ந்த யாக்கோபுக்குப் பெருமை தருவதாகும். (சேலா)

5 கடவுள் தம் அரியணைக்கு ஏறிச் செல்கின்றார்;

ஆரவார ஒலியோடும் எக்காள முழக்கத்
தோடும் ஆண்டவர் மேலே செல்
கின்றார்.
6 பாடுங்கள், கடவுளைப் புகழ்ந்து பாடுங்
கள்;
பாடுங்கள், நம் அரசரைப் புகழ்ந்து
பாடுங்கள்.
7 கடவுள் முழு உலகிற்கும் அரசர்;
பாடல்களைப் பாடி அவரைப் புகழுங்
கள்.

8 கடவுள் அனைத்து நாட்டினரையும்
ஆளுகிறவர்;
கடவுள் தமது புனிதமான அரியணையில்
வீற்றிருக்கிறார்.
9 பிற இனத்தவரின் தலைவர்கள் ஆபிரகா
மின் கடவுளுடைய மக்களோடு
கூடியிருக்கிறார்கள்;
உலகின் கேடயங்களெல்லாம் அவருக்கே
உரியவை; அவர் அனைத்தையும்
ஆளுகிறவர்.

### கடவுளின் நகராகிய சீயோன்
*(பாட்டு; கோராகின் சங்கீதம்)*

48 ஆண்டவர் மாட்சிமைமிக்கவர்;
நம் கடவுளின் நகரிலே, புனிதமான
அவரது மலையிலே அவர் மிகவும்
புகழப்படத்தக்கவர்.
2 வடக்கிலுள்ள சீயோன்மலை மிக உயர
மானது; அழகு வாய்ந்தது;
முழு உலகிற்கும் அது மகிழ்ச்சி தரு
கிறது; அதுவே பேரரசரின் நகர்.
3 அதன் அரண்மனைகளில் கடவுள் உறுதி
யான அடைக்கலமாக விளங்குகின்
றார்.

4 அரசர்கள் ஒன்றுகூடி,
அதை நோக்கி அணிவகுத்துச் சென்றார்
கள்.
5 அதை அவர்கள் கண்டபோதோ திகைத்
துப் போனார்கள்;
திகிலடைந்து ஓட்டம் பிடித்தார்கள்.
6 அங்கே அவர்கள் நடுநடுங்கினார்கள்;
பேறுகால வேதனைப்படுகிற பெண்களைப்
போலத் துன்புற்றார்கள்.

7 ஸ்பெயினுக்குச் செல்லும் கப்பல்களைக்
கடவுள் கீழ்க்காற்றினால் உடைக்கின்
றார்.
8 கடவுள் செய்தவற்றைப்பற்றி நாம்
கேள்விப்பட்டிருக்கிறோம்;
அவற்றை இப்போது கடவுளின் நகரில்,
வெற்றிவேந்தரான ஆண்டவரின்
நகரில் கண்டோம்;
கடவுள் அந்நகரை என்றென்றும் நிலைத்
திருக்கச் செய்வார்.

9 கடவுளே, உமது ஆலயத்தில் உமது
அருளைப்பற்றிச் சிந்தனை செய்கிறோம்.
10 கடவுளே, உமது திருப்பெயரைப்
போலவே, உமது புகழும் உலகின்
கடையெல்லை வரைக்கும் எட்டுகிறது;
உமது வலக்கை நீதியோடு ஆட்சி
செலுத்துகிறது.
11 உம்முடைய தீர்ப்புகளை நினைத்துச்
சீயோன் மலை மகிழ்ச்சியடைகின்றது;
யூதாவின் நகர்கள் களிகூர்கின்றன.

12 சீயோனைச் சுற்றிச் செல்லுங்கள்;
அதைச் சுற்றிப்பாருங்கள்;
அதன் கொத்தளங்களை எண்ணிப்பாருங்
கள்.
13 அதன் மதில் அரண்களைக் கவனத்தோடு
பாருங்கள்; அதன் கோட்டைகளை
நன்றாய்க் கவனியுங்கள்;
அப்பொழுது இனிவரும் தலைமுறைக்கு
இதை உங்களால் விவரிக்க இயலும்.
14 "இவரே கடவுள், என்றென்றும் நம்
கடவுள்;
இவர் நம்மை இனிவருங்காலமெல்லாம்
வழி நடத்துவார்" என்பீர்கள்.

### செல்வத்தில் நம்பிக்கை வைக்காதே
*(பாடகர் தலைவனுக்கு; கோராகு
சங்கீதம்)*

49 மானிடரே, நீங்கள் அனைவரும்
இதைக் கேளுங்கள்;
உலகெங்கும் வாழ்வோரே, இதற்குச்
செவிகொடுங்கள்.
2 தாழ்ந்தோரே, உயர்ந்தோரே, செல்வர்
களே, ஏழைகளே, நீங்கள் அனைவரும்
இதற்குச் செவிகொடுங்கள்.
3 என் வாய் ஞானத்தை உரைக்கும்;
என் மனம் விவேகமானதைச் சிந்திக்
கும்.
4 புதிரான செய்தி ஒன்றிற்கு என் கவனத்
தைத் திருப்புகிறேன்;
அதன் மறைசெய்தியைச் சுரமண்டலங்
கொண்டு வெளிப்படுத்துகிறேன்.

5 தீயார் என்னைப் பின்தொடர்ந்து வந்து,
என்னைச் சூழ்ந்துகொள்ளும் இக்கட்டுக்
காலத்தில்,
நான் ஏன் அஞ்ச வேண்டும்?
6 அவர்கள் தங்கள் சொத்தில் நம்பிக்கை
வைத்திருக்கிறார்கள்;
தங்கள் பெருஞ் செல்வத்தைக் குறித்
துப் பெருமைகொள்கிறார்கள்.
7 எந்த மனிதனாலும் தன்னைத்தானே ஒரு
போதும் மீட்டுக்கொள்ள இயலாது;
8 ஏனெனில், ஒருவனுடைய உயிருக்குரிய
மீட்புப்பொருள் மிகப் பெரிது;

48:2 மத். 5:35

அது அவனுடைய ஆற்றலுக்கு மிஞ்
சினது.
9 எனவே, அவன் படுகுழியில் இறங்காது,
என்றும் உயிரோடிருப்பது எப்படி?

10 ஞானமுள்ளவர்கள் இறந்துபோவதை
நாம் காணலாம்;
அப்படியே பேதைகளும் மதிகேடரும்
மாண்டழிகிறார்கள்;
அவர்கள் எல்லாரும் தங்கள் செல்
வத்தை அன்னியருக்கு விட்டுச் செல்
கிறார்கள்.
11 கல்லறைகளே அவர்களுக்கு நிலையான
வீடுகள்;
அவர்களுக்குத் தங்கள் பெயரில் சொத்து
இருந்தபோதிலும்,
கல்லறைகளே அவர்களுக்குத் தலைமுறை
தலைமுறையாகக் குடியிருப்பு இடங்
களாகும்.
12 ஏனெனில், ஒருவனது மேன்மை அவனை
நீடித்திருக்கச் செய்யாது;
அவனும் விலங்குகளைப்போலவே மாண்
டழிவான்.
13 மூடத்தனமான நம்பிக்கை உள்ளவர்
களின் முடிவு இதுவே;
தங்களுக்குக் கிடைத்த செல்வத்தில்
மகிழ்ச்சிகொள்பவர்களின் கதி
இதுவே.
14 ஆடுகளைப்போல அவர்களும் சாவார்
கள்;
மரணமே அவர்களை நடத்திச் செல்
லும் வழிகாட்டி.
நீதிமான்கள் விடியற்காலையில் அவர்கள்
மேல் ஆட்சி செலுத்துவார்கள்;
அப்பொழுது அவர்களது போலித்
தோற்றம் மறையும்;
பாதாளமே அவர்களது குடியிருப்பிட
மாகும்.
15 என் ஆன்மாவையோ கடவுள் பாதாளத்
தின் வல்லமைக்குத் தப்புவித்து மீட்
பார்;
அவர் என்னை ஏற்றுக்கொள்வார்.
(சேலா)

16 ஒருவன் செல்வனானால் அவனைக் கண்டு
நீ அஞ்ச வேண்டாம்;
அவன் குடும்பச் செல்வம் பெருகினா
லும் நீ அஞ்ச வேண்டாம்.
17 சாகும்போது அவன் ஒன்றையும்
எடுத்துச் செல்லப்போவதில்லை;
அவன் சொத்தும் அவனோடு செல்லப்
போவதில்லை.
18 உயிரோடிருக்கையில் அவன் தன்னை
நல்வாழ்வுடையவன் என்று கருதினா
லும்,
அவனது செல்வத்திற்காக மக்கள்
அவனைப் புகழ்ந்தாலும்,
19 அவன் தன் மூதாதையர் கூட்டத்தோடு
சேர்ந்துகொள்வான்;
அவர்களோ ஒருபோதும் பகலொளி
யைக் காணப்போவதில்லை.
20 ஒருவனது மேன்மை அவனை நீடித்திருக்
கச் செய்யாது;
அவனும் விலங்குகளைப்போலவே மாண்
டழிவான்.

## உண்மையான வழிபாடு

(ஆசாபின் சங்கீதம்)

**50** கடவுள் தாமே, ஆண்டவராகிய கடவுள்
தாமே பேசுகின்றார்;
கதிரவன் எழும் திசைமுதல் அது மறை
யும் திசைவரைக்குமுள்ள உலகைத்
தீர்ப்புப் பெற அழைக்கின்றார்.
2 பேரழகு பொருந்திய சீயோனிலிருந்து
கடவுள் ஒளிர்கின்றார்.

3 இதோ! நம் கடவுள் வருகின்றார்; இனி
மவுனமாயிரார்;
அவர்முன் சுட்டெரிக்கும் நெருப்பு!
அவரைச் சுற்றிலும் கடுமையான
புயற்காற்று!
4 தம் மக்களுக்குத் தீர்ப்பு வழங்கும்போது
அதைக் காணவரும்படி,
உயர் வானங்களையும் பூமியையும் அவர்
அழைக்கின்றார்.
5 ''பலிகளினால் என்னோடு உடன்படிக்கை
செய்துகொண்ட
என் அடியாரை ஒன்று கூட்டுங்கள்''
என்கிறார்.
6 ''கடவுள் நீதிபரர்; அவரே நீதிபதி''
என்று வானங்கள் அறிவிக்கின்றன.
(சேலா)

7 ''என் மக்களே, கேளுங்கள்; நான் பேசு
கிறேன்;
இஸ்ரவேலே, கேள்; உனக்கு விரோத
மாகச் சாட்சிகூறப் போகிறேன்;
நானே கடவுள், உன் கடவுள் நானே.
8 நீ எந்நாளும் என்முன் கொண்டுவரும்
பலிகளை முன்னிட்டோ,
சுட்டெரிக்கப்படும் பலிகளை முன்
னிட்டோ,
நான் உன்னைக் கண்டிக்கவில்லை.
9 ஆனாலும், உன் வீட்டிலிருந்து காளை
களையோ,
உன்தொழுவத்திலிருந்து ஆட்டுக் கடாக்
களையோ
நான் விரும்பிக் கேட்கவில்லை.
10 காட்டு விலங்குகளெல்லாம் என்
னுடையவை;
என் மலைகளில் மேயும் ஆயிரக்கணக்
கான கால்நடைகளும் என்னு
டையவை.

11 வானத்துப் பறவைகளுள் ஒவ்வொன்
றையும் நான் அறிவேன்;
வெளியில் நடப்பன யாவும் என்
னுடையவை.
12 எனக்குப் பசியெடுத்தால் நான் உன்
னிடம் சொல்லப்போவதில்லை;
ஏனெனில், உலகமும் அதிலுள்ளவை
அனைத்துமே என்னுடையவை
தானே.
13 நான் எருதுகளின் ஊனை உண்பேனு?
ஆட்டுக்கடாக்களின் இரத்தத்தைக்
குடிப்பேனு?
14 நன்றியைக் கடவுளுக்குப் பலியாகச்
செலுத்து;
உன்னதமானவருக்கு உன் பொருத்தனை
களைச் செலுத்து.
15 இக்கட்டுக் காலத்தில் என்னை நோக்கி
மன்ருடு;
நான் உன்னை விடுவிப்பேன்; நீ என்
மாட்சிமையை வெளிப்படுத்து
வாய்.''

16 ஆனுல் கடவுள் பொல்லானைப் பார்த்து
இவ்வாறு கூறுகிருர் :
''என் கட்டளைகளை அறிவிக்கவும், என்
உடன்படிக்கையைப் பற்றி வாயெடுக்
கவும் உனக்கு என்ன உரிமை
உண்டு?
17 நான் உன்னைக் கண்டிப்பதை நீ விரும்ப
வில்லை;
என் வார்த்தைகளைத் தூக்கி எறிந்து
விடுகிருய்.
18 ஒரு திருடனைக் கண்டால் அவனேடு
விருப்புடன் சேர்ந்துகொள்கிருய்;
கற்புநெறி தவறியவர்களோடும் உனக்கு
உறவு உண்டு.
19 ''நீ வாய் திறந்தால் வெளிவருவது
பொல்லாங்கு;
உன் நாவு உரைப்பது பொய்யுரை.
20 உன் சகோதரனை எப்போதும் பழித்
துரைக்கிருய்;
உன் தாயின் மகனைப்பற்றி அவதூறு
பேசுகிருய்.
21 இவ்வாறெல்லாம் நீ செய்தும் நான்
மவுனமாயிருந்தேன்;
ஆகையால் நானும் உன்னைப்போன்ற
வன் என்று எண்ணிக்கொண்டாய்;
ஆனுல் இப்பொழுது நான் உன்னைக்
கண்டிக்கிறேன்;
நீ செய்தவற்றை உன் எதிரில் ஒவ்
வொன்ருய் எடுத்துரைக்கிறேன்
பார்.

22 ''கடவுளைப் பொருட்படுத்தாதிருக்கிற
வர்களே, இதைக் கவனியுங்கள்.
அல்லது நான் உங்களைக் கண்டதுண்ட
மாக்கிவிடுவேன்.
உங்களைக் காப்பாற்ற எவரும்
இரார்.
23 நன்றியைப் பலியாகச் செலுத்துபவனே
என் மாட்சிமையை விளங்கச் செய்
வான்;
தன் வழியைச் செம்மைப்படுத்துகிற
வனுக்கே நான் அருளும் மீட்பை
வெளிப்படுத்துவேன்'' என்கிருர்.

### பாவமன்னிப்புக்காக மன்ருடுதல்

(பாடகர் தலைவனுக்கு; தாவீதின் சங்
கீதம்; தாவீது பத்சேபாளிடம்
சென்றபின் இறைவாக்குரைப்பவராகிய
நாத்தான் அவரிடம் வந்தபோது அவர்
பாடினது.)

51 கடவுளே, உமது பேரருளுக்கேற்ப
எனக்கு இரங்கும்;
உமது அளவற்ற இரக்கத்திற்கேற்ப என்
தவறுகளைத் துடைத்தழித்து
விடும்.
2 என் கறை முற்றிலும் நீங்கும்படி
என்னைக் கழுவியருளும்;
என் பாவம் அற்றுப்போகும்படி என்னைத்
தூய்மைப்படுத்தியருளும்.

3 என் தவறுகளை நான் உணர்கிறேன்;
என் பாவம் எப்போதும் என் கண்முன்
நிற்கிறது.
4 உமக்கு விரோதமாகவே நான் பாவம்
செய்தேன்;
உமது பார்வையில் தீமையானதை நடப்
பித்தேன்.
ஆகையால் நீர் வழங்கின தீர்ப்பில் உமது
நீதி விளங்குகிறது;
நீர் அளித்த குற்றத்தீர்ப்பில் நியாயம்
விளங்குகிறது.
5 இதோ, நான் அக்கிரமத்தில் உரு
வானேன்;
என் தாய் என்னைப் பாவத்தில் கருத்
தரித்தாள்.

6 இதோ, உள்ளத்தில் உண்மை இருக்க
வேண்டுமென்று நீர் விரும்புகிறீர்;
அந்தரங்க உள்ளத்தில் எனக்கு ஞானத்
தைத் தெரியப்படுத்துவீர்.
7 ஈசோப்பால்* என் பாவத்தீட்டை நீக்கி
யருளும்; அப்பொழுது நான் தூய்
மையாவேன்;
என்னைக் கழுவியருளும்; அப்பொழுது
நான் வெண்பனியைவிட வெண்மை
யாவேன்.

*தூய்மைப்படுத்தும் செயலில் தண்ணீர் தெளிக்கப் பயன்படும் இலைக்கொத்து

51:4 ரோ. 3:4

8 நான் மகிழ்ச்சி ஒலியையும் களிப்பு ஆரவாரத்தையும் கேட்கும்படி செய்யும்;
அப்பொழுது நீர் நொறுக்கின என் எலும்புகள் களிகூரும்.
9 என் பாவங்களைப் பாராதபடி உமது முகத்தை மறைத்துக்கொள்ளும்.
என் அக்கிரமங்களையெல்லாம் துடைத்தழித்துவிடும்.

10 கடவுளே, தூய இதயத்தை என்னுள்ளே உருவாக்கும்;
உறுதிதரும் ஆவியை என் உள்ளத்திலே புதிதாகத் தந்தருளும்.
11 உமது முன்னிலையிலிருந்து என்னைத் தள்ளிவிடாதேயும்;
உமது தூய ஆவியை என்னிடமிருந்து எடுத்துவிடாதேயும்.
12 நீர் அளிக்கும் மீட்பினால் வரும் மகிழ்ச்சியை மீண்டும் எனக்குத் தாரும்;
ஆர்வத்துடன் கீழ்ப்படியும் மனத்தை எனக்கு அளித்தருளும்.
13 அப்பொழுது தீயோருக்கு உம்முடைய வழிகளைக் கற்பிப்பேன்;
பாவிகள் மனமாற்றம் அடைந்து உம்மிடம் திரும்புவார்கள்.

14 கடவுளே, என் மீட்பராகிய கடவுளே, மரணதண்டனைக்கு என்னைத் தப்புவியும்;
அப்பொழுது என் நாவு உமது நீதியைப் பாடி ஆர்ப்பரிக்கும்.
15 ஆண்டவரே, என் உதடுகளைத் திறந்தருளும்;
அப்பொழுது என் வாய் உமது புகழை அறிவிக்கும்.

16 பலியினால் உம்மை மகிழ்விக்க முடியாது;
அப்படி முடியுமென்றால் அதைச் செலுத்தியிருப்பேன்;
சுட்டெரிக்கப்படும் பலி செலுத்தினாலும் நீர் மகிழ்ச்சி அடையப்போவதில்லை.
17 கடவுளுக்கேற்ற பலி அகந்தையற்ற உள்ளமே;
கடவுளே, அகந்தையற்றதும் பாவத்தை உணர்ந்ததுமான இதயத்தை நீர் புறக்கணியீர்.

18 சீயோனுக்குக் கருணை காட்டி அதற்கு நன்மை செய்யும்;
எருசலேமின் மதில்களை மீண்டும் கட்டி எழுப்பும்.
19 அப்பொழுது உமக்கு உகந்த காணிக்கைகளையும் சுட்டெரிக்கப்படும் பலிகளையும் செலுத்துவார்கள்;
காளைகளை உமது பீடத்தில் பலியிடுவார்கள்.

## தெய்வத் தீர்ப்பும் திருவருளும்

(பாடகர் தலைவனுக்கு; தாவீதின் சங்கீதம்; அபிமேலேக்கின் வீட்டுக்குத் தாவீது போனார் என்று ஏதோமியனாகிய தோவேக்கு என்பவன் சவுலுக்கு அறிவித்தபோது பாடினது)

52 தீமை செய்வதில் வல்லவனே, தீமை செய்வதில் ஏன் பெருமை கொள்கிறாய்?
கடவுளின் கருணை எந்நாளும் உள்ளது.
2 உன் நாவு சவரக் கத்திபோலக் கூர்மையானது;
நீ எப்போதும் நயவஞ்சகத்தைக் கற்பனை செய்கிறாய்.
3 நல்லதைச் செய்வதைவிட தீமையைச் செய்வதையே நீ விரும்புகிறாய்;
நீதியானதைப் பேசுவதைவிடப் பொய் பேசுவதையே விரும்புகிறாய் (சேலா)
4 கபடமுள்ள நாவே, பிறருக்குக் கேடு விளைவிக்கும் பேச்சையே நீ எப்போதும் விரும்புகிறாய்.

5 எனவே, கடவுள் உன்னை அழித்துவிடுவார்; இனி நீ இருக்க மாட்டாய்;
அவர் உன்னை உன் கூடாரத்தினின்று வெளியேற்றுவார்;
மக்கள் வாழும் உலகில் நீ இராதபடி உன்னை வேரோடு களைந்துவிடுவார்.
6 நீதிமான்கள் அதைக் கண்டு திகிலடைவார்கள்;
அவர்கள் உன்னைப் பார்த்து நகைப்பார்கள்.
7 ''இதோ பாருங்கள், இவன்தான் கடவுளைத் தன் அரணாகக் கொள்ளாதிருந்தவன்;
தன் செல்வப் பெருக்கில் நம்பிக்கை வைத்து,
தன் பொல்லாங்கு குறித்துப் பெருமை கொண்டிருந்தவன்'' என்று சொல்லுவார்கள்.

8 ஆனால் நான் கடவுளின் ஆலயத்தில் பச்சை ஒலிவமரக் கன்றுபோலிருக்கிறேன்;
கடவுளின் பேரருளில் எப்போதும் நம்பிக்கை வைத்திருந்தேன்.
9 நீர் இவ்வாறு எனக்குச் செய்ததால், உமக்கு நான் எந்நாளும் நன்றி செலுத்துவேன்;
உம்முடைய அடியார் திருக்கூட்டத்தில் உமது திருப்பெயரையே கூறுவேன்; இதுவே நன்று.

52 தலைப்பு 1 சாமு. 22:9,10.

5 அச்சமும் நடுக்கமும் எனக்கு உண்
டாயின;
பேரச்சம் என்னைப் பிடித்து ஆட்டிற்று.
6 அப்பொழுது நான், ''எனக்குப் புறு
வைப்போலச் சிறகுகள் இருந்தால்,
நான் பறந்துபோய் இளைப்பாறும் இடம்
ஒன்றை அடைவேன்.
7 நெடுந்தொலைவு சென்று, பாலைநிலத்
தில் தங்குமிடம் ஒன்றை அமைப்
பேன். (சேலா)
8 பெருங்காற்றுக்கும் புயலுக்கும் தப்பும்
படி ஒரு புகலிடத்தை விரைவில்
தேடிக்கொள்வேன்'' என்றேன்.

9 ஆண்டவரே, அவர்களை அழியும்; அவர்
கள் பேச்சில் குழப்பத்தை உண்டாக்
கும்;
நகரத்தில் கொடுமையையும் கலகத்தை
யும் கண்டேன்.
10 இரவும் பகலும் அவர்கள் அதன் மதில்
கள்மேல் ஏறி அதைச் சுற்றிவருகிறார்
கள்;
அக்கிரமமும் கேடும் அதில் நிறைந்
திருக்கின்றன.
11 அதன் நடுவே கேடுகள் காணப்படுகின்
றன;
கொடுமையும் வஞ்சனையும் அதன்
தெருக்களில் காணப்படுகின்றன.

12 என்னைப் பழிக்கிறவன் என் எதிரியல்ல;
அப்படியிருந்தால் பொறுத்துக்கொள்
வேன்;
என்னை ஏளனம் செய்கிறவன் என்
பகைஞன் அல்ல; அப்படியிருந்தால்
அவனுக்கு மறைவாக இருந்துகொள்
வேன்.
13 என்னோடு சமநிலையில் இருக்கும் நீயே
அவன்;
என் தோழனும் என் நெருங்கிய நண்
பனுமாகிய நீயே அவன்.
14 நாம் இனிமையாய்க் கூடிப்பேசினோம்;
கூட்டத்தோடு சேர்ந்து திருக்கோவிலுக்
குச் சென்றோம்.
15 என் எதிரிகள்மேல் சாவு திடீரென வரட்
டும்; அவர்கள் உயிரோடு பாதாளத்
தில் இறங்கட்டும்;
அவர்கள் குடியிருப்புகளிலும் உள்ளங்
களிலும் பொல்லாங்கு குடியிருக்
கிறது.
16 நான் கடவுளை நோக்கி மன்றாடுவேன்;
ஆண்டவர் என்னை மீட்டுக்கொள்வார்.
17 காலையிலும் மாலையிலும் நண்பகலிலும்
நான் முறையிட்டுப் புலம்புவேன்;
அவர் என் குரலுக்குச் செவிசாய்ப்பார்.
18 ஒன்றுகூடி என்னை எதிர்த்தவர்கள்
ஏராளமானோர்;
என்னோடு போரிட்டவர்கள் கையி
னின்று அவர் என்னை விடுவித்து,
அமைதியுடன் இருக்கச் செய்தார்.
19 ஆதிமுதல் ஆட்சி செலுத்திவரும்
கடவுள் எனக்குச் செவிசாய்த்து,
அவர்களைத் தாழ்த்திவிடுவார்.
அவர்கள் மனம் மாறவில்லை; கடவு
ளைப் பற்றிய அச்சம் அவர்களிடம்
இல்லை. (சேலா)

20 தன்னோடு நட்புறவில் இருந்தவர்களை
எதிர்த்து அவன் தன் கையை ஓங்
கினான்;
தான் செய்திருந்த உடன்படிக்கையை
மீறினான்.
21 அவன் பேச்சு வெண்ணெயைப்போல
மென்மையானது; அவன் உள்ளத்
திலோ போர்க்குமுறல்!
அவன் வார்த்தைகள் எண்ணெயைவிட
நயமானவை, ஆனால் அவை உருவின
வாள்போன்றவை.

22 ஆண்டவர்மேல் உன் சுமையை வைத்து
விடு, அவர் உனக்கு ஆதரவளிப்பார்;
அவர் நீதிமானை ஒருபோதும் வீழ்ச்சி
யுறும்படி விடமாட்டார்.

23 கடவுளே, நீர் அவர்களை அழிவுப் படுகுழி
யில் இறங்கச் செய்யும்;
கொலை வெறியரும் வஞ்சகரும் தங்கள்
ஆயுட் காலத்தில் பாதிவரையிலுங்
கூட வாழ மாட்டார்கள்.
ஆனால் நானோ உம்மையே நம்புகிறேன்.

### கடவுளை நம்புகிறவனது விண்ணப்பம்

(பாடகர் தலைவனுக்கு; இராகம்: யோனாத் ஏலம் ரிக்கோகீம்; தாவீதின் சங்கீதம்; பெலிஸ்தியர் தாவீதைக் காத்தூரில் பிடித்தபோது அவர் பாடியது)

56 கடவுளே, எனக்கு இரங்கியருளும்;
மனிதர் என்னைக் கொடுமைப்படுத்து
கின்றனர்;
என் பகைஞர் என்னை நாள்தோறும்
துன்புறுத்துகின்றனர்.
2 என்னைப் பிடிக்கப் பதுங்கியிருப்பவர்கள்
என்னை நசுக்கிவிடப்பார்க்கிறார்கள்;
என்னை எதிர்த்துப் போரிடுகிறவர்கள்
மிகப் பலர்.
3 அச்சம் என்னை ஆட்கொள்ளும் நாளில்
நான் உம்மையே நம்பியிருப்பேன்.
4 கடவுளின் வாக்கை நான் புகழுகிறேன்;
கடவுளை நம்புகிறேன், எதற்கும்
அஞ்ச மாட்டேன்.

56 தலைப்பு 1 சாமு. 21:13-15.

மனிதனால் எனக்கு என்ன செய்ய
இயலும்?

5 என் எதிரிகள் எனக்கு இடையூறு செய்
கிறார்கள்;
அவர்கள் எண்ணமெல்லாம் எனக்குத்
தீங்கிழைக்க வேண்டுமென்பதே.
6 அவர்கள் சதித்திட்டம் வகுக்கிறார்கள்;
பதுங்கியிருக்கிறார்கள்; என் உயிரைப்
போக்கக் காத்திருக்கிறார்கள்;
நான் போவதையும் வருவதையும்
கவனிக்கிறார்கள்.
7 அவர்களுடைய தீய செயலுக்காக அவர்
களைத் தண்டியும்; தப்பவிடாதேயும்;
கடவுளே, சினங்கொண்டு எழுந்து இந்த
மக்களைக் கீழே வீழ்த்தும்.

8 நான் இங்குமங்கும் அலைவதை நீர்
பார்த்துக்கொண்டுதான் இருக்கிறீர்;
என் கண்ணீரை உமது துருத்தியில்
சேர்த்துவைத்திருக்கிறீர்;
உமது கணக்கிலும் அது இருக்கிறதல்
லவா?
9 நான் உம்மை நோக்கி மன்றாடும் நாளில்
என் எதிரிகள் பின்னிட்டுச் செல்
வார்கள்;
கடவுள் என் பக்கம் இருக்கிறார் என்
பதை நான் அறிவேன்.
10 கடவுளின் வாக்கை நான் நம்புகிறேன்;
ஆண்டவரின் வார்த்தையையும் புகழு
கிறேன்.
11 கடவுளை நம்புகிறேன்; எதற்கும் அஞ்ச
மாட்டேன்;
மனிதனால் எனக்கு என்ன செய்ய
இயலும்?

12 கடவுளே, நான் உமக்குச் செய்த
பொருத்தனைகளை நிறைவேற்று
வேன்;
உமக்கு நன்றி பலியைச் செலுத்துவேன்.
13 ஏனெனில், சாவினின்று என் உயிரைக்
காத்தீர்; சறுக்கிவிழாதபடி என் அடி
களைக் காத்தீர்;
உயிர்வாழ்வோர் பெறும் ஒளியிலே
கடவுள் முன்னிலையில் என்னை நடக்
கச் செய்தீர்.

### உதவிக்காக மன்றாடுதல்

(பாடகர் தலைவனுக்கு; இராகம் : அல்
தஷ்கேத்து; தாவீதின் சங்கீதம்; சவு
லுக்குத் தப்பியோடிக் குகையில் ஒளிந்து
கொண்டிருக்கையில் பாடியது)

**57** கடவுளே, எனக்கு இரங்கும், எனக்கு
இரங்கும்; நான் உம்மையே என்
அடைக்கலமாகக் கொண்டிருக்
கிறேன்.
இடர் நீங்கும் வரையில் உம் இறக்கை
களின் நிழலையே எனக்குப் புகலிட
மாகக் கொண்டிருப்பேன்.
2 எனக்காக யாவற்றையும் செய்து முடித்
திருக்கிற கடவுளை நோக்கி நான்
மன்றாடுகிறேன்;
உன்னதமான கடவுளை நோக்கி வேண்
டுதல் செய்கிறேன்.
3 என்னை நசுக்கப்பார்க்கிறவர்கள் என்னைப்
பழிக்கையில், அவர் விண்ணுலகி
லிருந்து உதவி அனுப்பி என்னைக்
காப்பாற்றுவார்; (சேலா)
கடவுள் தமது பேரருளும் உண்மையும்
எனக்குத் துணைபுரியும்படி செய்
வார்.

4 நான் சிங்கங்களின் நடுவிலிருக்கிறேன்;
தீயை இறைக்கிற மனுமக்களிடையே
கிடக்கிறேன்;
அவர்கள் பற்கள் ஈட்டியும் அம்பும்
போன்றவை; அவர்கள் நாவு கூர்
மையான வாள் போன்றது.

5 கடவுளே, வானத்தில் உமது மேன்
மையை வெளிப்படுத்தும்;
உலகெங்கும் உமது மாட்சிமை விளங்
குவதாக!

6 நான் நடக்கும் வழியில் எனக்குக்
கண்ணிவைக்கிறார்கள்; என் ஆன்மா
தொய்ந்துபோயிற்று;
என் பாதையில் குழிவெட்டினார்கள்;
அதில் அவர்களே விழுவார்
களாக.

7 என் உள்ளம் உறுதியாயிருக்கிறது,
கடவுளே, என் உள்ளம் உறுதியா
யிருக்கிறது;
நான் இன்னிசை பாடுவேன்; உம்மைப்
புகழ்ந்து பாடுவேன். என் ஆன்
மாவே, விழித்திரு.
8 வீணையே, சுரமண்டலமே, விழியுங்கள்;
வைகறையை விழித்தெழச் செய்
வேன்.
9 ஆண்டவரே, மக்களிடையே உமக்கு
நன்றி செலுத்துவேன்;
எல்லா இனத்தவரிடையேயும் உம்மைப்
புகழ்ந்து பாடுவேன்.
10 உமது பேரருள் வானம் வரைக்கும்
உயர்ந்துள்ளது;
உமது உண்மை மேகமண்டலம் வரைக்
கும் எட்டுகின்றது.
11 கடவுளே, வானத்தில் உமது மேன்
மையை வெளிப்படுத்தும்;
உலகெங்கும் உமது மாட்சிமை விளங்கு
வதாக!

57 தலைப்பு 1 சாமு. 22:1; 24:3.

## பொல்லாரைத் தண்டிக்கும்படி வேண்டுதல்

(பாடகர் தலைவனுக்கு; இராகம் : அல் தஷ்கேத்து; தாவீதின் சங்கீதம்)

58 ஆட்சித் தலைவர்களே, நீங்கள் உண்மையாகவே நீதியை வழங்குகிறீர்களா?
மனுமக்களே, நீங்கள் நேர்மையாகத் தீர்ப்புக் கூறுகிறீர்களா?
2 இல்லை; உங்கள் மனத்தில் நியாயக் கேடானதை நினைக்கிறீர்கள்;
உங்கள் கைகளால் நாட்டில் கொடுமை செய்கிறீர்கள்;

3 பொல்லார் தாம் தோன்றியது முதல் நெறிதவறி நடக்கின்றனர்;
பிறந்தது முதல் அவர்கள் பொய் சொல்லித் திரிகிறார்கள்.
4 அவர்களது நச்சுத்தன்மை பாம்பின் நஞ்சுபோன்றது;
செவிட்டு விரியனைப்போல அவர்கள் தங்களைச் செவிடாக்கிக்கொள்கிறார்கள்.
5 பாம்பாட்டியின் குழலோசை அதன் காதில் விழாது;
அவன் திறமையுடன் மகுடி ஊதினாலும் அதற்குக் கேளாது.

6 கடவுளே, அவர்கள் வாயிலுள்ள பற்களை உடைத்துவிடும்;
ஆண்டவரே, அந்த இளஞ்சிங்கங்களின் கடைவாய்ப் பற்களைத் தகர்த்து விடும்.
7 வடிந்தோடும் தண்ணீரைப்போல அவர்கள் ஒழிந்து போகட்டும்;
அவன் தன் அம்புகளைத் தொடுக்கும் போது அவை முறிந்து போகட்டும்.
8 அவர்கள் ஊர்ந்து ஊர்ந்து உருக்குலைந்து போகும் ஒடற்ற நத்தைபோலாகட்டும்;
கதிரவனைக் கண்டிராத செத்துப்பிறந்த சேய்போலாகட்டும்.
9 முள் நெருப்பினால் உங்கள் பானை சூடேறு முன்னே,
பச்சையானதையும்வெந்துகொண்டிருப்பதையும் அவர் சுழல் காற்றினால் அடித்துக்கொண்டுபோவார்.

10 பழிவாங்குவதை நீதிமான் காணும் போது மகிழ்வான்;
அவன் தன் பாதங்களைப் பொல்லாரின் இரத்தத்தில் கழுவுவான்.
11 அப்பொழுது மனிதர், ''மெய்யாகவே, நீதிமானுக்கு நற்பலன் உண்டு;
மெய்யாகவே உலகில் நீதிவழங்குகிற கடவுள் ஒருவர் இருக்கிறார்'' என்று சொல்வார்கள்.

## பாதுகாப்புக்காக மன்றாடுதல்

(பாடகர் தலைவனுக்கு; இராகம் : அல் தஷ்கேத்து; தாவீதின் சங்கீதம்; தாவீதின் வீட்டருகே காத்திருந்து அவரைக் கொல்வதற்கென்று சவுல் ஆள்களை அனுப்பினபோது தாவீது பாடினது)

59 என் கடவுளே, என் எதிரிகளின் கைக்கு என்னைத் தப்புவியும்;
என்னை எதிர்ப்பவர்களிடமிருந்து என்னைக் காப்பாற்றியருளும்;
2 தீயர் கைக்கு என்னைத் தப்புவியும்;
கொலைவெறியருக்கு என்னை விலக்கிக் காத்தருளும்.
3 இப்பொழுது அவர்கள் என்னைத் தாக்குவதற்காகப் பதுங்கியிருக்கிறார்கள்;
கொடியவர்கள் என்னைத் தாக்குவதற்காகக் கூடித் திட்டமிடுகிறார்கள்;
ஆண்டவரே, என்னிடம் பழியுமில்லை, பாவமுமில்லை.
4 என்னிடம் குற்றமில்லாதிருந்தும் அவர்கள் விரைந்துவந்து, என்னைத் தாக்க அணிவகுத்து நிற்கிறார்கள்;
எனக்குத் துணை செய்ய விழித்தெழும்; என் நிலைமையைப் பாரும்.

5 வெற்றி வேந்தரான ஆண்டவரே, இஸ்ரவேலின் கடவுளே, எல்லா இனத்தவருக்கும் தண்டனையளிக்க நீரே எழுந்து வாரும்;
தீமை செய்கிற அந்தத் துரோகிகளுள் எவனுக்கும் இரக்கம் காட்டாதேயும். (சேலா)
6 அவர்கள் மாலைதோறும் திரும்பி வருகிறார்கள்;
நாய்கள்போல உறுமிக்கொண்டு ஊருக்குள்ளே அலைகிறார்கள்.
7 அவர்கள் கூச்சலிடுவதைக் கவனியும்; அவர்கள் வாயில் வாள் போன்ற நாக்குகள் இருக்கின்றன;
''எங்களைக் கேட்கிறவன் யார்?'' என்கிறார்கள்.

8 ஆனால், ஆண்டவரே, நீர் அவர்களைப் பார்த்து நகைக்கின்றீர்;
பிற இனத்தவரைப் பார்த்து நீர் ஏளனம் செய்கின்றீர்.
9 எனக்கு வலிமை நீரே; உமது உதவிக்காகக் காத்திருக்கிறேன்; கடவுளே, நீரே எனக்குப் புகலிடம்.
10 என் கடவுள் தமது பேரருளால் என்னை எதிர்கொள்ளவருவார்;
என்னைப் பிடிக்கப் பதுங்கியிருக்கிறவர்கள் வீழ்த்தப்படுவதை நான் பார்க்கும்படி செய்வார்.

59 தலைப்பு 1 சாமு. 19:11

11 என் இனத்தவர் மறந்து விடுவதற்குள்
அவர்களைக் கொன்றுவிடும்;
எங்கள் கேடயமாகிய ஆண்டவரே,
உமது வல்லமையினால் அவர்களை
வதைத்து வீழ்த்திவிடும்.
12 அவர்கள் பேச்சில் பாவம்; அவர்கள்
சொற்களில் பாவம்;
அவர்கள் தற்பெருமை அவர்களைச் சிக்க
வைப்பதற்காக; அவர்கள் சபிக்கிறார்
கள், பொய் பேசுகிறார்கள்.
13 ஆகையால் சினங்கொண்டு அவர்களை
அழித்துவிடும்; இனி இராதபடி அவர்
களை ஒழித்துவிடும்.
அப்பொழுது கடவுள் யாக்கோபின்
மரபினரை ஆளுகிறார்; அவரது அரசு
உலகின் எல்லை வரைக்கும் உள்ளது
என்பதை அவர்கள் தெரிந்துகொள்
வார்கள். (சேலா)

14 அவர்கள் மாலைதோறும் திரும்பி
வருகிறார்கள்;
நாய்கள்போல உறுமிக்கொண்டு ஊருக்
குள்ளே அலைகிறார்கள்.
15 அவர்கள் உணவுதேடி அலைந்து திரிகிறார்
கள்;
கிடைக்காவிடில், இரவெல்லாம் பெருங்
கூச்சலிடுகிறார்கள்.

16 நானோ உமது வல்லமையைப் பாடு
வேன்; நாள்தோறும் உமது இரக்
கத்தை நினைத்துப் பாடி ஆர்ப்பரிப்
பேன்;
நெருக்கடியான வேளையில் நீர் எனக்கு
அரணும் அடைக்கலமுமாயிருந்தீர்.
17 எனக்கு வலிமை நீரே; உம்மைப்
புகழ்ந்து பாடுவேன்;
கடவுள் எனக்கு அரண்; அருள் நிறைந்த
அவரே என் கடவுள்.

### விடுதலையளிக்கும்படி மன்றாடுதல்

(பாடகர் தலைவனுக்கு; இராகம் : சூசன் ஏடுத்து; தாவீதின் சங்கீதம்; மெசொபொத்தாமிய நாட்டுச் சீரியரோடும் சோபா நாட்டுச் சீரியரோடும் தாவீது போர்புரிகையில் யோவாப்புத் திரும்பி வந்து உப்புப் பள்ளத்தாக்கில் பன்னீராயிரம் ஏதோமியரை வெட்டினபோது தாவீது பாடியது)

**60** கடவுளே, நீர் எங்களைக் கைவிட்டீர்,
எங்களை நொறுக்கிவிட்டீர்;
எங்கள்மீது சினங்கொண்டிருந்தீர்;
எங்களை மீண்டும் நிலைநிறுத்தும்.
2 நாட்டை அதிரச் செய்தீர்; அதில்
வெடிப்பு உண்டாகச் செய்தீர்;
அதன் வெடிப்புகளைப் பொருந்தச் செய்
யும்; அது அசைகிறது.
3 உம்முடைய மக்கள் கொடுமையை
அனுபவிக்கச் செய்தீர்;
தள்ளாடச் செய்யும் மதுவை எங்களுக்
குக் குடிக்கக் கொடுத்தீர்.
4 உமக்கு அஞ்சி நடக்கிறவர்களுக்கு ஒரு
கொடியைக் கொடுத்தீர்;
உண்மையைத் தெரிவிக்க அதைப் பறக்க
விடும்படி கொடுத்தீர். (சேலா)
5 உமக்கு அன்பார்ந்தவர்கள் விடுவிக்கப்
படும்படி, உமது வலக்கையால் வெற்
றியளியும்;
எங்கள் விண்ணப்பத்திற்குச் செவிசாய்த்
தருளும்.

6 கடவுள் தமது புனித அகத்தில் இவ்வாறு
உரைத்தார் :
''வெற்றிக் களிப்பினிடையே சீகேமைப்
பங்கிடுவேன்;
சுக்கோத்துப் பள்ளத்தாக்கை அளந்து
கொடுப்பேன்.
7 கிலேயாத்து என்னுடையது; மனாசேயும்
என்னுடையது;
எப்பிராயீம் என் தலைச்சீரா, யூதா என்
செங்கோல்.
8 மோவாபு எனக்குப் பாதங்கழுவும் பாத்
திரம்;
ஏதோமின்மேல் என் மிதியடியை
எறிவேன்.*
பெலிஸ்தியாவை வென்று ஆர்ப்பரிப்
பேன்''.
9 அரண் சூழ்ந்த பட்டணத்திற்குள் என்னை
நடத்திக்கொண்டு போகிறவர்
யார்?
ஏதோம்வரைக்கும் எனக்கு வழிகாட்டு
கிறவர் யார்?
10 கடவுளே, நீர் எங்களைக் கைவிட்டீரல்
லவா?
கடவுளே, நீர் எங்கள் படைகளோடு
புறப்படவில்லையே.
11 இந்த இக்கட்டு நேரத்தில் எங்களுக்கு
உதவிசெய்யும்;
மனிதர் உதவி பயனற்றது.
12 கடவுளின் துணையால் வீரத்துடன்
போரிடுவோம்;
அவரே எங்கள் பகைவரை நசுக்கி
விடுவார்.

### பாதுகாப்புக்காக மன்றாடுதல்

(பாடகர் தலைவனுக்கு; இசைக்கருவி : யாழ்; தாவீதின் சங்கீதம்.)

**61** கடவுளே, என் மன்றாட்டுக்குச் செவி
சாய்த்தருளும்;
என் விண்ணப்பத்தைக் கவனித்தருளும்.
2 நாட்டின் எல்லைப்புறத்திலிருந்து உம்மை
நோக்கி மன்றாடுகிறேன்;

* மிதியடியை எறிதல்: ஒரு நாட்டைக் கைப்பற்றினதற்கு அடையாளமான செய்கை.

60 தலைப்பு 2 சாமு. 8:13; 1 வரலாறு. 18:12.

என் உள்ளம் தளர்வுற்றிருக்கிறது.
உயரமான கன்மலையில் என்னைக் கொண்டுபோய்விடும்.
3 நீரே எனக்கு அடைக்கலம்;
எதிரியின் கைக்குத் தப்புவிக்கும் உறுதியான கொத்தளம்.
4 நான் உமது கூடாரத்தில் எந்நேரமும் தங்கியிருப்பேன்;
உம்முடைய இறக்கைகளின் பாதுகாப்பில் அடைக்கலம் புகுவேன்.
5 கடவுளே, நீர் என் பொருத்தனைகளை ஏற்றுக்கொண்டீர்;
உமது திருப்பெயருக்கு அஞ்சுகிறவர்களுக்குரிய பங்கை எனக்குத் தந்தீர்.

6 அரசரின் வாழ்நாளை நீடிக்கச் செய்யும்;
அவரது ஆயுள் தலைமுறை தலைமுறையாக நீடிக்கட்டும்.
7 கடவுள் முன்னிலையில் அவர் என்றென்றும் அரசாள்வாராக!
அருளோடும் உண்மையோடும் நீர் அவரைக் காத்தருளும்.
8 இப்படியே எந்நாளும் என் பொருத்தனைகளைச் செலுத்துவேன்;
உமது திருப்பெயரை என்றைக்கும் புகழ்ந்து பாடுவேன்.

### கடவுளின் பாதுகாப்பில் நம்பிக்கை

(பாடகர் தலைவனுக்கு; ஏதுதூனின் இராகம்; தாவீதின் சங்கீதம்)

**62** கடவுளையே என் ஆன்மா நம்பியிருக்கிறது;
அவராலேயே எனக்கு மீட்புக் கிடைக்கும்.
2 அவரே என் ஆதரவாளர், என் மீட்பர், என்னைக் காப்பவர்;
என்னை ஒருபோதும் எவராலும் அசைக்க முடியாது.

3 ஒருவனைக் கொல்ல வேண்டுமென்று நீங்கள் அனைவரும் எவ்வளவு காலம் அவன்மேல் பாய்ந்து வருவீர்கள்?
அவனோ சாய்ந்த சுவருக்கும் இடிந்த மதிலுக்கும் ஒப்பானவன்.
4 அவன் இருக்கும் உயர்ந்த இடத்திலிருந்து அவனைக் கீழே தள்ளிவிடத் திட்டமிடுகிறார்கள்;
பொய் சொல்வதில் அவர்கள் இன்பம் காண்கிறார்கள்;
அவர்கள் வாயில் ஆசிமொழி, உள்ளத்திலோ சாபமொழி. (சேலா)

5 என் ஆன்மாவே, கடவுளையே நம்பியிரு;
நான் எதிர்பார்க்கும் மீட்பு அவராலே கிடைக்கும்.
6 அவரே என் ஆதரவாளர், என் மீட்பர், என்னைக் காப்பவர்;
என்னை எவராலும் அசைக்க முடியாது.
7 என் மீட்பும் என் மேன்மையும் கடவுளிடமே இருக்கின்றன;
கடவுளே என் வலிமைவாய்ந்த கன்மலை;
அவரே என் அடைக்கலம்.

8 மக்களே, எக்காலத்திலும் அவரையே நம்புங்கள்;
அவர் முன்னிலையில் உங்கள் உள்ளத்தில் இருப்பதைக் கொட்டி விடுங்கள்;
கடவுள் நமக்கு அடைக்கலம். (சேலா)

9 தாழ்ந்தோர் காற்று; உயர்ந்தோர் பொய்; அவர்கள் அனைவரையும் தராசில் வைத்தால், அவர்கள் இருக்கும் தட்டு மேலே போகும்;
அவர்கள் காற்றைவிட எடை குறைந்தவர்களே.
10 கொடுமை செய்வதில் நம்பிக்கை வைக்காதீர்கள்; கொள்ளையடிப்பதில் பெருமை கொள்ள வேண்டாம்;
செல்வம் பெருகுமானால் உள்ளத்தை அதற்குப் பறிகொடுத்துவிடாதீர்கள்.

11 ஒன்றைக் கடவுள் உரைத்தார்; அதை இருமுறை கேட்டிருக்கிறேன்,
''வல்லமை கடவுளுடையதே.''
12 ஆண்டவரே, அருளும் உம்முடையதே.

ஆண்டவர் அவனவன் செய்கைக்கேற்றபடி பலன் அளிக்கின்றார்.

### கடவுளின் கருணையை நாடுதல்

(தாவீதின் சங்கீதம்; யூதாவின் பாலை நிலத்தில் தாவீது இருந்தபோது அவர் பாடியது)

**63** கடவுளே, நீரே என் கடவுள்; ஆர்வமுடன் உம்மை நாடுகிறேன்;
தண்ணீரின்றி வறண்டுபோன நிலம் தண்ணீரை நாடுவது போல என் ஆன்மா உம்மீது வேட்கை கொள்கிறது; என் புலன்களெல்லாம் உம்மை அவாவுகின்றன.
2 உமது வல்லமையையும் உமது மாட்சிமையையும் காணும்படி இந்த நாட்டத்தோடு உமது புனித அகத்திற்கு வருகிறேன்.
3 உமது பேரருள் உயிரைவிட அருமையானது;
என் நாவு உம்மைப் போற்றுகின்றது.
4 நான் உயிரோடிருக்கும் வரையில் இப்படியே உம்மைப் புகழ்வேன்;

**62:12** யோபு. 34:11; எரே. 17:10; மத். 16:27; ரோ. 2:6; திருவெளி. 2:23. **63** தலைப்பு 1 சாமு. 23:14.

உமது திருப்பெயரைச் சொல்லிக் கை
கூப்பி மன்றாடுவேன்.
5 கொழுப்புள்ள சத்துணவை உண்பது
போல என் ஆன்மா ஆவல் தீர்த்துக்
கொள்ளும்.
நான் வாயார உம்மைக் களிப்புடன்
போற்றுவேன்.

6 நான் படுத்திருக்கையில் உம்மை நினைப்
பேன்;
இராவிழிப்புகளில் உம்மைத் தியானிப்
பேன்.
7 நீர் எனக்குத் துணையாயிருந்தீர்;
உம்முடைய இறக்கைகளின் நிழலிலே
மகிழ்ந்து கொண்டாடுவேன்.
8 என் ஆன்மா உம்மைப் பற்றிக்கொண்
டேயிருக்கிறது;
உமது வலக்கை எனக்கு ஆதரவளிக்
கிறது.

9 என்னை அழித்துவிடப்பார்க்கிறவர்கள்
பூமியின் கீழிடங்களுக்கு இறங்கிச் செல்
வார்கள்.
10 அவர்கள் வாளால் வீழ்த்தப்படுவார்
கள்;
நரிகளுக்கு இரையாவார்கள்.
11 அரசரோ கடவுளை நினைத்துக் களிகூர்
வார்;
கடவுளின் திருப்பெயரால் ஆணையிட்டுக்
கூறுவோர் அனைவரும் பெருமிதங்
கொள்வர்;
பொய் சொல்வோரின் வாய் அடைக்
கப்படும்.

### பாதுகாப்புக்காக மன்றாடுதல்

*(பாடகர் தலைவனுக்கு; தாவீதின்
சங்கீதம்)*

64 கடவுளே, என் விண்ணப்பக் குரலுக்
குச் செவிசாய்த்தருளும்;
எதிரியால் வரும் அச்சத்தைப் போக்கி
என் உயிரைக் காத்தருளும்.
2 பொல்லாரின் சூழ்ச்சிக்கும் தீயோரின்
அமளிக்கும் என்னை விலக்கி மறைத்
தருளும்.
3 அவர்கள் தங்கள் நாவை வாளைப்
போலக் கூர்மையாக்குகிறார்கள்;
கொடுஞ்சொற்களாகிய தங்கள் அம்பு
களை நாணேற்றுகிறார்கள்.
4 மறைவிடங்களில் இருந்துகொண்டு நல்
லார்மேல் எய்வதற்கென்றே அப்
படிச் செய்கிறார்கள்;
சிறிதளவும் அச்சமின்றித் திடீரென
அவர்கள்மேல் எய்கிறார்கள்.
5 தீதான காரியத்தைச் செய்யத் தங்
களைத் தைரியப்படுத்திக் கொள்ளு
கிறார்கள்;
தங்கள் கண்ணிகளை மறைவாக வைப்
பதைப்பற்றிப்பேசிக்கொள்கிறார்கள்;
அவற்றை எவரும் பார்க்கப்போவதில்லை
என்கிறார்கள்.
6 நேர்மையற்ற செயல்களை அவர்கள்
ஆய்ந்து பார்க்கிறார்கள்; ஆய்ந்து
முடித்தோம் என்கிறார்கள்;
ஒவ்வொருவனது உட்கருத்தும் உள்ள
மும் ஆழமானவையே.

7 கடவுள் அவர்கள்மேல் அம்புகளை எய்
வார்;
திடீரென அவர்கள் காயப்பட்டு விழு
வார்கள்.
8 அவர்கள் நாவே அவர்களுக்கு விரோத
மாக இருப்பதால், அவர்கள் இடறி
விழ நேரிடும்;
அவர்களைப் பார்க்கிறவர்கள் அனைவரும்
தலையை ஆட்டுவார்கள்.
9 இதனால் எல்லா மனிதர்களும் அச்சங்
கொண்டு கடவுளின் செயலை அறிவிப்
பார்கள்;
அவரது செயலை உணர்ந்துகொள்வார்
கள்.
10 நீதிமான் ஆண்டவரின் செயலை நினைத்து
மகிழ்ந்து அவரிடம் அடைக்கலம் புகு
வான்;
நேர்மையான இதயமுள்ளோர் அனை
வரும் அவரைப் போற்றிப் புகழ்வர்.

### நன்றி செலுத்துதல்

*(பாடகர் தலைவனுக்கு; தாவீதின்
சங்கீதம்)*

65 கடவுளே, சீயோனில் உமக்கே புகழ்
பாடப்படும்;
உமக்கே பொருத்தனைகள் செலுத்தப்
படும்.
2 விண்ணப்பங்களுக்கு நீர் செவிசாய்க்கின்
றீர்;
மனுமக்கள் யாவரும் உம்மிடம்
வருவார்களாக.
3 பாவம் காரணமாக அவர்கள் வருவார்
களாக.
எங்கள் பாவங்கள் மிகவும் பெருகிவிட்
டன; ஆனால் நீர் எங்கள் தவறுகளை
மன்னிக்கிறீர்.

4 உமது ஆலயப் பிராகாரங்களில் இருக்
கும்படி நீர் தேர்ந்தெடுத்துச் சேர்த்
துக்கொள்கிறவன் நற்பேறு பெற்ற
வன்;
உமது புனித ஆலயமாகிய வீட்டின்
நலன்களால் எங்கள் ஆவல் தீரும்.
5 எங்கள் மீட்பராகிய கடவுளே, வியக்
கத்தக்க செயல்களால் நீர் நீதியோடு

எங்கள் மன்றாட்டுக்குச் செவிசாய்க்
கின்றீர்;
உலகின் கடையெல்லைகளிலும் தொலை
விலுமுள்ள தீவுகளிலும் இருக்கிற
எல்லாருடைய நம்பிக்கைக்கும்
ஆதாரம் நீரே.
6 ஆற்றலை நீர் இடைக் கச்சையாகக்
கொண்டிருக்கிறீர்;
மலைகளை உமது வலிமையால் நிலைப்படுத்
துகிறீர்.

7 கடல்களின் இரைச்சலையும் அவற்றின்
அலைகளின் இரைச்சலையும் அமைதிப்
படுத்துகிறீர்;
நாடுகளின் அமளியை அடக்குகிறீர்.

8 உலகின் கடையெல்லைகளில் குடியிருக்கிற
வர்களும் உம்முடைய அரிய செயல்
களைக் கண்டு அஞ்சுகிறார்கள்;
கிழக்கெல்லையிலும் மேற்கெல்லையிலும்
உள்ளோரைக் களிகூரச் செய்கிறீர்.

9 நீர் உலகத்தைக் காணவந்து அதற்கு
நீர் பாய்ச்சுகிறீர்; அதை மிகவும்
செழிப்பாக்குகிறீர்;
கடவுளின் ஆறு தண்ணீர் நிறைந்துள்
ளது;
இவ்வாறு நீர் நிலத்தைத் திருத்தி மக்
களுக்குத் தானியம் விளையச் செய்
கிறீர்.

10 படைச்சால்களைத் தண்ணீரால் நிரப்
புகிறீர்;
உழுத மண் அமுங்கச் செய்கிறீர்;
அதை மழையால் கரையச் செய்கிறீர்;
பயிரை வளமாக வளரச் செய்கிறீர்.
11 ஆண்டுதோறும் வளம் நிறைந்த அறு
வடையைக் காணச் செய்கிறீர்;
நீர் செல்லும் இடங்களிலெல்லாம்
செழுமை வழிந்தோடுகிறது.
12 கானகத்துப் பசும்புல் தரையிலும்
பொலிவு பொழிகிறது;
குன்று சார்ந்த நிலங்கள் களிப்பில்
ஆழ்ந்திருக்கின்றன.
13 ஆடுகள் மேய்ச்சல் நிலங்களைப் போர்
வைபோலப் போர்த்துகின்றன;
கோதுமை மணிகள் பள்ளத்தாக்குகளை
ஆடைபோல அணி செய்கின்றன.
எங்கும் ஆரவாரம்! எங்கும் இன்னிசைக்
குரல்!

### நன்றிசெலுத்திப் போற்றுதல்

(பாடகர் தலைவனுக்கு; புகழ்ப் பாடல்)

**66** உலகெங்கும் வாழ்வோரே, நீங்களெல்
லாரும் கடவுளைப் போற்றி ஆர்ப்
பரியுங்கள்.
2 அவரது திருப்பெயரின் மாட்சிமையைப்
புகழ்ந்து பாடுங்கள்;
அவருக்கு மேன்மையான புகழ் பாடுங்
கள்.
3 கடவுளிடம் ''உம்முடைய செயல்கள்
எவ்வளவு வியக்கத்தக்கவை!
உமது மாபெரும் வல்லமை காரணமாக
உம்முடைய எதிரிகள் அச்சத்தால்
உமது முன்னிலையில் அடங்குவார்
கள்.
4 உலக மக்கள் அனைவரும் உம்மைப்
பணிந்து உம்மைப் புகழ்ந்து பாடு
வார்கள்;
உமது திருப்பெயரைப் புகழ்ந்து பாடு
வார்கள்'' என்று சொல்லுங்கள்.
(சேலா)
5 வாருங்கள், கடவுளின் செயல்களைப்
பாருங்கள்;
அவர் மனிதரிடையே நடப்பிக்கும்
செயல்கள் வியப்பிற்குரியவை.
6 கடலைக் கட்டாந்தரையாக மாற்றினார்;
ஆற்றை அவர்கள் நடந்து கடந்தார்
கள்;
அவர் செய்ததை நினைத்துக் களிகூர்
வோமாக.
7 அவர் தமது வல்லமையால் என்றென்
றும் அரசாளுகிறவர்;
அவர் கண்கள் பிற இனத்தவரைக்
கவனித்து வருகின்றன;
அவரது ஆட்சியை எதிர்ப்போர் தலை
தூக்காதிருப்பார்களாக. (சேலா)

8 மக்களே, நம் கடவுளைப் போற்றுங்கள்;
அவரைப் புகழ்ந்து பாடும் ஒலி முழங்
கும்படி செய்யுங்கள்.
9 நம்மை உயிர்வாழும்படி செய்தவர்
அவரே;
நம்முடைய கால்கள் இடறும்படி அவர்
விடவில்லை.
10 கடவுளே, எங்களை முற்றும் சோதித்துப்
பார்த்தீர்;
வெள்ளியைப் புடமிடுவதுபோல எங்
களைப் புடமிட்டீர்.
11 கண்ணியில் எங்களை விழும்படி செய்
தீர்;
பளுவான சுமைகளை எங்கள் முதுகில்
சுமத்தினீர்.
12 மனிதர் எங்கள் தலைமேல் தேர்களை
ஓட்டும்படி செய்தீர்;
நெருப்பிலும் தண்ணீரிலும் அகப்பட்
டிருந்தோம்;
நீர் எங்களைச் செழிப்பான இடத்திற்
குக் கொண்டுவந்து சேர்த்தீர்.
13 சுட்டெரிக்கப்படுவதற்கான பலிகளை
எடுத்துக்கொண்டு உமது ஆலயத்தி
னுள் செல்வேன்.

66:6 யாத். 14:21; யோசு. 3:14-17.

14 என் இக்கட்டு வேளையில் என் நாவு
உரைத்தவையும் நான் வாய்திறந்து
நேர்ந்துகொண்டவையுமான
பொருத்தனைகளை உமக்குச் செலுத்து
வேன்.
15 செம்மறிக் கடாக்களையும் கொழுத்த
கன்றுகளையும் உமக்குச் சுட்டெரிக்கப்
படும் பலியாகச் செலுத்துவேன்;
காளைகளையும் வெள்ளாட்டுக் கடாக்களை
யும் உமக்குப் பலியிடுவேன். (சேலா)

16 கடவுளுக்கு அஞ்சி நடப்பவர்களே,
நீங்கள் எல்லாரும் வந்து கேளுங்
கள்;
அவர் எனக்குச் செய்தருளினதைச்
சொல்லுகிறேன்.
17 அவரை நோக்கி வாய்திறந்து மன்றாடி
னேன்;
அவரை உயர்வாகப் புகழ என் நாவு
எழுந்தது.
18 என் உள்ளத்தில் தீய எண்ணங்களை
வைத்திருந்தேனானால்,
ஆண்டவர் எனக்குச் செவிசாய்த்திருக்க
மாட்டார்.
19 ஆனால் உண்மையில் கடவுள் எனக்குச்
செவிசாய்த்தார் ;
என் விண்ணப்பக் குரலுக்குச் செவி
கொடுத்தார்.

20 என் விண்ணப்பத்தைப் புறக்கணியா
மலும்
தமது பேரருளை என்னை விட்டு விலக்
காமலும் இருக்கிற கடவுளைப் போற்
றுகிறேன்.

## நன்றி செலுத்துதல்

(பாடகர் தலைவனுக்கு; இசைக் கருவி :
யாழ்; புகழ்ப் பாடல்)

**67** கடவுளே, எங்களுக்கு இரங்கி எங்களை
ஆசீர்வதித்தருளும்;
உமது திருமுக ஒளி எங்கள்மீது வீசும்
படி செய்தருளும்.
2 அப்பொழுது உலகம் உமது வழியை
அறிந்துகொள்ளும்;
அனைத்து நாடுகளும் நீர் அருளும்
மீட்பை உணர்ந்துகொள்ளும்.
(சேலா)

3 கடவுளே, எல்லா மக்களும் உம்மைப்
போற்றுவார்களாக!
எல்லா நாட்டு மக்களும் உம்மைப்
போற்றுவார்களாக!

4 நீர் எல்லா நாட்டு மக்களுக்கும் நியாய
மான தீர்ப்பு வழங்குகின்றீர்;
உலகிலுள்ள எல்லா இனத்தவரையும்
வழி நடத்துகின்றீர்,
அதனால் எல்லா மக்களும் களிப்புடன்
மகிழ்ந்துகொண்டாடுவார்களாக.

5 கடவுளே, எல்லா இனத்தவரும் உம்
மைப் போற்றுவார்களாக;
எல்லா நாட்டு மக்களும் உம்மைப்
போற்றுவார்களாக.

6 பூமி தன் பலனைத் தந்தது;
கடவுள், நம் கடவுள் தாமே, நம்மை
ஆசீர்வதிப்பார்.
7 கடவுள் நம்மை ஆசீர்வதிப்பார்;
உலகின் கடையெல்லை வரைக்கும்
மக்கள் அவரைப் போற்றுவார்களாக.

## வெற்றிக் கீதம்

(பாடகர் தலைவனுக்கு; தாவீதின் சங்
கீதம்; புகழ்ப் பாடல்)

**68** கடவுள் எழுந்தருளுவார்; அவருடைய
எதிரிகள் சிதறடிக்கப்படுவார்கள்;
அவரைப் பகைக்கிறவர்கள் அவர் முன்
னிலையில் நிற்காமல் ஓடிப்போவார்
கள்.
2 புகை அடித்துச் செல்லப்படுவதுபோல
அவர்களும் அடித்துச் செல்லப்படு
வார்கள்.
மெழுகு நெருப்புமுன் உருகுவதுபோலப்
பொல்லார் கடவுள்முன் அழிந்தொழி
வர்.
3 நீதிமான்களோ அவர் முன்னிலையில் இன்
புற்றிருப்பார்கள்;
களிப்பாரவாரம் செய்வார்கள்;
மகிழ்ந்துகொண்டாடுவார்கள்.

4 கடவுளைப் பாடி அவரது திருப்பெயரைப்
புகழுங்கள்;
மேகங்கள்மீது வருகிறவருக்கு வழியை
ஆயத்தப்படுத்துங்கள்;
ஆண்டவர் என்பது அவரது பெயர்;
அவர்முன் களிகூருங்கள்.

5 தமது புனித அகத்தில் இருக்கிற கடவுள்
திக்கற்ற பிள்ளைகளுக்குத் தந்தை;
அவர் கைம்பெண்களுக்கு நீதி வழங்கு
வார்.
6 துணையற்றவர்களுக்குக் கடவுள் வீடு
வாயிலை அமைத்துக் கொடுக்கிறார்;
சிறையிலிருப்பவர்களுக்கு விடுதலையை
யும் நல் வாழ்வையும் அளிக்கிறார்;
அவரை எதிர்ப்பவர்களோ வறண்ட
இடத்தில் தங்குவார்கள்.

7 கடவுளே, நீர் உம்முடைய மக்கள் முன்
சென்று, பாலை நிலத்தில் நடந்து
வருகையில், (சேலா)

8 பூமி அதிர்ந்தது; கடவுள் வருகையில் வானம் மழையைப் பொழிந்தது;
இஸ்ரவேலின் கடவுள் வருகையில் இந்தச் சீனுய் மலையும் அசைந்தது.
9 கடவுளே, நீர் மழையை மிகுதியாகப் பெய்யச் செய்தீர்;
வறண்டு போயிருந்த உமக்குச் சொந்தமான நாட்டை மீண்டும் வளப்படுத்தினீர்.
10 உமது மந்தை அதில் தங்கியிருந்தது;
கடவுளே, உமது கருணையால் நீர் ஏழைகளைப் பராமரித்தீர்.

11 ஆண்டவர் செய்தி அறிவித்தார்;
அதைப் பரவச் செய்த பெண்களின் கூட்டம் பெரிதாயிற்று.
12 படைகளையுடைய அரசர்கள் ஓடுவார்கள்; புறங்காட்டி ஓடுவார்கள்;
வீட்டில் குடியிருப்பவர்கள் கொள்ளைப் பொருள்களைப் பகிர்ந்துகொள்வார்கள்.
13 (நீங்கள் தொழுவங்களின் நடுவில் படுத்துக்கொண்டீர்களோ?)
வெள்ளியால் மூடிய புருச் சிறகுகளும் பசும்பொன்னுல் மூடிய அதன் சிறகுகளும் அவர்களுக்குக் கிடைத்தனவே
14 எல்லாம் வல்லவர் அங்கே அரசர்களைச் சிதறடித்தபோது,
சல்மோன் மலையில் பனிமழை பெய்தது.

15 பாசான் மலை கடவுளின் மலை;
பலகொடுமுடிகள் உள்ள மலை.
16 உயர்ந்த கொடுமுடிகள் உள்ள மலைகளே,
கடவுள் இருக்கும்படி திருவுளங்கொண்ட இந்த மலையை நீங்கள் ஏன் பொருமையோடு பார்க்கிறீர்கள்?
ஆண்டவர் இதிலேதான் என்றென்றும் இருப்பார்.

17 கடவுளின் தேர்கள் ஆயிரமாயிரம், பல்லாயிரம்;
ஆண்டவர் சீனுய்மலையிலிருந்து தமது புனித அகத்தில் எழுந்தருள வருகின்ருர்.
18 அவர் மேலே ஏறிச்சென்றபோது,
சிறைப்பட்ட கைதிகளைக் கொண்டு சென்ருர்;
எதிர்க்கிளர்ச்சி செய்த மனிதரிடமிருந்து நன்கொடைகளைப் பெற்ருர்;
கடவுளாகிய ஆண்டவர் அங்கேயே வீற்றிருப்பார்.

19 ஆண்டவர் போற்றுதலுக்குரியவர்;
ஒவ்வொரு நாளும் அவர் நம் சுமைகளைச் சுமக்கின்ருர்;
அவரே நம் மீட்பராகிய கடவுள்.
20 நம் கடவுளே நம்மைக் காப்பாற்றிவரும் கடவுள்;
சாவுக்கு நம்மைத் தப்புவிக்கும் வழி கடவுளாகிய ஆண்டவரிடம் உள்ளது.

21 அவர் தம் எதிரிகளின் தலையை உடைப்பார்;
தன் தீய வழியில் துணிந்து நடக்கிறவனின் முடிநிறைந்த மண்டையை உடைப்பார்.
22 "பாசானிலிருந்து அவர்களை அழைத்து வருவேன்;
ஆழ்கடலிலிருந்தும் அழைத்து வருவேன்.
23 அப்பொழுது உன் கால் இரத்தத்தில் தோயும்;
உன் நாய்கள் எதிரிகளிடம் தமக்குரிய பங்கைப் பெறும்" என்று ஆண்டவர் சொன்னுர்.

24 கடவுளே, நீர் பவனி செல்வதை,
என் கடவுளும் அரசருமானவர் புனித அகத்தில் பவனி செல்வதை,
மக்கள் கண்டார்கள்.
25 முன்னுல் பாடகரும் பின்னுல் இசைக் கருவிகளை வாசிப்போரும்,
சுற்றிலும் தம்புரு வாசிக்கும் பெண்களும் சென்ருர்கள்.
26 "இஸ்ரவேலாகிய ஊற்றிலிருந்து தோன்றினவர்களே,
சபைகளில் ஆண்டவராகிய கடவுளைப் போற்றிப் பாடுங்கள்".
27 அங்கே அவர்களை நடத்துகிற இளைய வனுகிய பென்யமீனும்,
யூதாவின் தலைவர்களும் அவர்கள் கூட்டமும்,
செபுலோனின் தலைவர்களும் நப்தலியின் தலைவர்களும் இருக்கிருர்கள்.

28 கடவுளே, உமது வல்லமையை வெளிப்படுத்தும்;
எங்கள் பொருட்டுச் செயலாற்றின கடவுளே, உமது வல்லமையை வெளிப்படுத்தும்.
29 எருசலேமிலுள்ள உமது ஆலயத்திற்கு அரசர்கள் உமக்குக் காணிக்கைகளைக் கொண்டுவருவார்கள்.
30 நாணலிடையே இருக்கும் விலங்கினைக்* கண்டியும்;
கன்றுகளோடு வருகிற காளைகளின் கூட்டமாகிய மனித இனங்களைக் கண்டியும்;
அவை வெள்ளியைத் திறையாகக் கொண்டு வந்து கட்டித் தலை வணங்கச் செய்யும்;
போர் வெறிகொண்ட இனத்தவரைச் சிதறடியும்.

* எகிப்து
68:8 யாத். 19:18. 68:18 எபே 4:8.

31 எகிப்திலிருந்து தூதுவர்கள் வருவார்
கள்;
எத்தியோப்பிய மக்கள் கடவுள்முன்
கைகூப்பி நிற்க வருவார்கள்.

32 உலகிலுள்ள அரசர்களே, கடவுளைப்
பாடுங்கள்;
ஆண்டவரைப் புகழ்ந்து பாடுங்கள்.
(சேலா)
33 ஆதிமுதல் உள்ள வானுதிவானங்கள்
மீது ஏறிவருகிறவரைப் புகழுங்கள்;
இதோ, அவர் தமது குரலை, உரத்த
குரலை முழங்கச்செய்கிறார்.
34 கடவுளுக்கே வல்லமை உரியதென்றிருங்
கள்;
அவரது மாட்சிமை இஸ்ரவேல் மேலுள்
ளது;
அவரது வல்லமை மேகமண்டலங்களில்
உள்ளது.
35 கடவுளே, உமது புனித அகத்தில் அஞ்
சுதற்குரியவராய் விளங்குகின்றீர்;
இஸ்ரவேலின் கடவுள் தம் மக்களுக்கு
வலிமையையும் ஊக்கத்தையும் அளிக்
கின்றார்.

### கடவுள் போற்றுதலுக்குரியவர்

*(பாடகர் தலைவனுக்கு; இராகம் : சோசனீம்; தாவீதின் சங்கீதம்)*

**69** கடவுளே, என்னைக் காப்பாற்றும்;
வெள்ளம் கழுத்தளவு வந்துவிட்டது.
2 ஆழமான உளையில் அமிழ்ந்திருக்கிறேன்;
நிற்க இடமில்லை;
நிலைகொள்ளாத நீருக்குள் ஆழ்ந்திருக்
கிறேன்;
வெள்ளம் என் மீது புரண்டோடுகிறது.
3 கத்திக் கத்திக் களைத்துப்போனேன்;
தொண்டையும் வறண்டு போயிற்று;
கடவுளின் உதவிக்காகக் காத்திருந்
தேன்; கண்களும் பூத்துப்போயின.

4 காரணமில்லாமல் என்னைப் பகைப்பவர்
கள் என் தலைமுடியைவிட மிகுதி
யாயிருக்கிறார்கள்;
அநியாயமாக எனக்கு எதிரிகளாகி
என்னை ஒழித்துவிட வேண்டுமென்
றிருக்கிறவர்கள் வலிமைவாய்ந்தவர்
கள்;
நான் எடுத்துக்கொள்ளாததையும்
கொடுக்கலானேன்.
5 கடவுளே, என் மதிகேடு உமக்குத் தெரி
யும்;
என் குற்றங்கள் உமக்கு மறைவானவை
யல்ல.
6 ஆண்டவரே, வெற்றிவேந்தரான ஆண்
டவரே, உம்மை நம்புவோர் என்
னால் ஏமாறாதிருக்கும்படி செய்யும்.
இஸ்ரவேலின் கடவுளே, உம்மை நாடித்
தேடுவோர் என் பொருட்டுக் கலக்க
மடையாதிருக்கச் செய்யும்.
7 ஏனெனில், உம்பொருட்டே நான் நிந்
தையை ஏற்றேன்;
வெட்கக் கேட்டினால் என் முகத்தை
மூடிக்கொண்டேன்.
8 என் சகோதரருக்கு வேற்றுமனிதனா
னேன்;
என் தாயின் பிள்ளைகளுக்கு அன்னியனா
னேன்.

9 உமது வீட்டைப்பற்றிய ஆர்வம் என்னை
எரித்துவிடும்;
உம்மைப் பழித்துப் பேசினவர்களின்
பழிச்சொற்கள் என்மீது விழுந்தன.
10 நான் நோன்பிருந்து என்னை வருத்திக்
கொண்டேன்;
அதுவும் நிந்தனைக்குரியதாயிற்று.
11 முரட்டுத் துணியை எனக்கு உடையாகக்
கொண்டேன்;
அதனால் அவர்களுடைய ஏளனத்துக்கு
ஆளானேன்.
12 நகர வாயிலில் அமர்வோர் என்னைப்
பற்றிப் புறளி பேசுகின்றனர்.
குடிகாரர் என்னைப் பற்றிப் பாட்டுக்
கட்டுகின்றனர்.

13 ஆண்டவரே, நான் தக்க காலத்தில்
உம்மை நோக்கி விண்ணப்பம் செய்
கிறேன்;
கடவுளே, உமது பேரருளை முன்னிட்டு
உமக்கு உகந்த நேரத்தில் எனக்குச்
செவிகொடுத்தருளும்;
மீட்பளிப்பதில் நீர் உண்மையுள்ளவர்.
14 நான் அமிழ்ந்துபோகாதபடி சேற்றின்று
என்னைத் தூக்கிவிடும்;
என்னைப் பகைப்பவர்களிடமிருந்து
என்னைத் தப்புவியும்;
நிலைகொள்ளாத நீர்ப்பெருக்கிலிருந்து
நான் தப்பும்படி செய்யும்.
15 பெருவெள்ளம் என்னை வாரிக்கொண்டு
போகவிடாதேயும்;
ஆழ்கடல் என்னை விழுங்காமலும்
படுகுழி தன் வாயைத் திறந்து என்னை
மூடிக்கொள்ளாமலும் இருக்கும்படி
செய்யும்.

16 ஆண்டவரே, உமது வளமிக்க அருளை
முன்னிட்டு என் விண்ணப்பத்திற்குச்
செவிசாய்த்தருளும்;
உமது பேரிரக்கத்திற்கேற்ப என்னைக்
கண்ணோக்கியருளும்.
17 உமது முகத்தை அடியேனுக்கு மறைக்
காதேயும்; நான் நெருக்கடியான
நிலையிலிருக்கிறேன்;

69:4 சங். 35:19; யோ. 15:25. 69:9 யோ. 2:17; ரோ. 15:3.

என் மன்றாட்டுக்கு விரைவில் செவி
சாய்த்தருளும்.
18 என்னிடம் வந்து என்னை விடுவித்
தருளும்;
என் எதிரிகளிடமிருந்து என்னை மீட்
டருளும்.

19 என் நிந்தையும் என் வெட்கக்கேடும்
என் மானக்கேடும் உமக்குத் தெரி
யும்;
என் பகைவர் எல்லாரையும் நீர் பார்த்
திருக்கிறீர்.
20 நிந்தை என் இதயத்தைப் பிளந்துவிட்
டது; நான் மிகவும் வருந்துகிறேன்;
எனக்குப் பரிவுகாட்டுவோருக்காகக்
காத்திருந்தேன்; எவரும் வரவில்லை.
தேறுதல் கூறுவோருக்காகக் காத்
திருந்தேன்; யாரையும் காணவில்லை.

21 என் உணவில் கசப்பைக் கலந்து கொடுத்
தார்கள்;
தாகத்துக்குக் காடியைக் குடிக்கக்
கொடுத்தார்கள்.

22 அவர்களுடைய விருந்துகள் அவர்களுக்
குக் கண்ணியாகட்டும்;
அவர்களுடைய கொண்டாட்டங்கள்
அவர்களது வீழ்ச்சிக்குக் காரண
மாகட்டும்.
23 காணவியலாதபடி அவர்கள் கண்களை
இருளடையச் செய்யும்;
அவர்கள் இடுப்புகளில் எப்போதும் நடுக்
கம் இருக்கும்படி செய்யும்.

24 உமது கடுஞ்சினத்தை அவர்கள்மேல்
வரவிடும்;
உமது சினத்தீ அவர்களைப் பற்றிப் பிடிப்
பதாக.
25 அவர்கள் வீடு பாழாவதாக;
அவர்கள் கூடாரங்களில் ஒருவனும்
குடிபுகாதிருப்பானாக.
26 நீர் அடித்தவனை அவர்கள் துன்புறுத்
தினார்கள்;
நீர் காயப்படுத்தினவர்களின் நோவைப்
பற்றித் தூற்றித் திரிகிறார்கள்.

27 அவர்கள்மீது குற்றத்திற்குமேல் குற்றம்
சுமத்தும்;
நீர் அளிக்கும் நீதி அவர்களுக்குக் கிட்
டாதிருப்பதாக.
28 மெய்வாழ்வுக்குரியவர் அட்டவணையி
லிருந்து அவர்களுடைய பெயர்களை
நீக்கிவிடும்;
அவற்றை நீதிமான்களின் பெயர்
களோடு சேர்க்காதேயும்.

29 நானோ சிறுமைப்பட்டவன்; காயமுற்ற
வன்;
கடவுளே, நீர் அருளும் மீட்பு என்னை
உயர்த்திக் காப்பதாக.

30 கடவுளின் திருப்பெயரை நான் இன்
னிசை பாடிப் புகழ்வேன்;
அவருக்கு நன்றிசெலுத்தி அவரது மாட்
சிமை விளங்கும்படி செய்வேன்.
31 காளைகளைவிட இதுவே ஆண்டவருக்கு
உகந்தது;
கொம்பும் விரிகுளம்புமுள்ள எருதைவிட
இதுவே அவருக்கு உகந்தது.
32 சிறுமைப்பட்டவர்கள் இதைக் கண்டு
மகிழ்ச்சியடைவார்கள்;
கடவுளை நாடித் தேடுகிறவர்களே,
உங்கள் உள்ளம் ஊக்கமடைவதாக.
33 ஆண்டவர் ஏழைகளின் விண்ணப்பத்திற்
குச் செவிசாய்க்கிறார்;
சிறையிலிருக்கும் தம்முடையவர்களை
அவர் புறக்கணித்துவிட மாட்டார்.

34 வானமும் பூமியும் கடல்களும்
அவற்றில் வாழும் யாவும் அவரைப்
புகழட்டும்.
35 கடவுள் சீயோனுக்கு மீட்பளிப்பார்;
யூதாவின் பட்டணங்களைக் கட்டி எழுப்பு
வார்;
அப்பொழுது அவருடைய மக்கள்
அங்கே குடியிருப்பார்கள்;
நாட்டைத் தங்களுக்குச் சொந்தமாக்
கிக் கொள்வார்கள்.
36 ஆண்டவருடைய அடியாரின் மரபினர்
அதைத் தம் உரிமைச் சொத்தாக்கிக்
கொள்வர்;
அவரது திருப்பெயரை நேசிப்போர்
அதில் குடியிருப்பர்.

### உதவிக்காக மன்றாடுதல்

(சங். 40:13—17)

(பாடகர் தலைவனுக்கு; தாவீதின் சங்
கீதம்; நினைவுகூர்தல்)

**70** கடவுளே, என்னை விடுவித்தருளும்;
ஆண்டவரே, எனக்கு உதவிசெய்ய
விரைந்து வாரும்.
2 என்னை அழித்துவிடப் பார்க்கிறவர்கள்
எல்லாரும் வெட்கமும் குழப்பமும்
அடைவார்களாக;
எனக்குத் தீங்கிழைக்க விரும்புகிறவர்
கள் வெட்கத்தால் தலைகுனிந்து பின்
னிட்டுத் திரும்புவார்களாக.
3 என்னைப் பார்த்து, ''ஆ, ஆ'' என்று
ஏளனம் செய்கிறவர்கள், பெருங்
கலக்கமுற்றுப் பின்னிடுவார்களாக.
4 உம்மிடம் வருகிற அனைவரும் மகிழ்ந்து
களிகூர்வார்களாக;

**69:21** மத். 27:48; மாற். 15:36; யோ. 19:28,29. **69:22,23** ரோ. 11:9,10. **69:25** திருத்தூது. 1:20. **69:28.** யாத். 32:32; பிலி. 4:3; திருவெளி. 3:5; 13:8; 17:8.

நீர் அருளும் மீட்பில் நாட்டங்கொள்
கிறவர்கள், ''ஆண்டவருக்கே மாட்
சிமை!'' என்று எப்போதும் சொல்
வார்களாக.

5 நான் சிறுமைப்பட்டவன், எளியவன்;
கடவுளே, என்னிடம் விரைந்து
வாரும்.
நீரே எனக்குத் துணை, என்னை விடுவிக்
கிறவர்;
என் கடவுளே, காலந்தாழ்த்தாதேயும்.

### வயதுசென்ற ஒருவரது மன்றாட்டு

71 ஆண்டவரே, உம்மையே நான் அடைக்
கலமாகக் கொண்டிருக்கிறேன்;
நான் உம்மையே நம்பியிருக்கிறேன்.
2 உமது நீதிக்கேற்ப என்னை விடுவித்து
என்னைக் காத்தருளும்;
எனக்கு நீர் செவிசாய்த்து என்னை மீட்
டுக்கொள்ளும்.
3 எனக்குப் புகலிடம் அளிக்கும் கற்பாறை
யாயிரும்; என்னைப் பாதுகாக்கும்
அரணாயிரும்;
எனக்குக் கற்பாறையும் நீரே, கோட்
டையும் நீரே.

4 என் கடவுளே, பொல்லான் கையினின்று
என்னை விடுவித்தருளும்;
நேர்மைக்கேடும் கொடுமையும் நிறைந்
தவன் பிடியினின்று என்னைக் காத்
தருளும்.
5 ஆண்டவரே, உம்மையே நான் நம்பி
யிருக்கிறேன்;
என் இளமைப்பருவம் முதற்கொண்டே,
ஆண்டவரே, நீரே என் நம்பிக்கை.
6 நான் என் தாயின் வயிற்றில் உற்பவித்
தது முதல் எனக்கு ஆதரவு அளித்து
வருகிறவர் நீரே;
என் தாயின் கருப்பையிலிருந்து என்னை
எடுத்தவர் நீரே;
உம்மையே எப்போதும் நான் புகழ்ந்து
போற்றுவேன்.

7 பலருக்கு நான் ஒரு புதிராகக் காணப்
படுகிறேன்;
நீரே எனக்கு உறுதியான அடைக்கலம்.
8 என் வாயால் எந்நாளும் உம்மைப் புகழ்
கிறேன்;
நாள்தோறும் உமது மாட்சிமையை
அறிவிக்கிறேன்,
9 வயது முதிர்ந்த இப்பருவத்தில் என்னைப்
புறம்பே தள்ளிவிடாதேயும்;
வலிமை குறைந்த இக்காலத்தில்
என்னைக் கைவிடாதேயும்.
10 என் எதிரிகள் என்னைப்பற்றித் தீதாகப்
பேசுகிறார்கள்;
என் உயிரைப் போக்கப்பார்க்கிறவர்
கள் ஒன்றுகூடிச் சதி செய்கிறார்கள்.
11 ''கடவுள் அவனைக் கைவிட்டார்;
அவனைப் பின்தொடர்ந்து ஓடிப்
பிடியுங்கள்;
அவனைக் காப்பாற்றுவாரில்லை'' என்று
சொல்லுகிறார்கள்.

12 கடவுளே, என்னை விட்டுத் தொலைவில்
போய்விடாதேயும்;
என் கடவுளே, எனக்குத் துணை செய்ய
விரைந்து வாரும்.
13 என்னைப் பகைக்கிறவர்கள் வெட்கி அழி
வார்களாக;
எனக்குத் தீங்கு செய்ய நாடுகிறவர்களை
நிந்தையும் மானக்கேடும் சூழட்டும்.
14 நான் என்றும் நம்பிக்கையோடிருப்பேன்;
மேலும் மேலும் உம்மைப் புகழ்ந்து
கொண்டிருப்பேன்.
15 என் வாய் நாள்தோறும் உமது நீதியை
யும் நீர் அருளும் மீட்பையும் அறிவிக்
கும்;
உம்முடைய அருட் செயலுக்கோ
கணக்கே இல்லை.
16 கடவுளாகிய ஆண்டவரே, உம்முடைய
வல்லமைச் செயல்களை எடுத்துரைப்
பேன்;
உமது நீதி ஒன்றையே அறிவிப்பேன்.

17 கடவுளே, என் இளமை முதல் எனக்குக்
கற்பித்துவந்தீர்;
இந்நாள்வரையிலும் வியக்கத்தக்க உம்
முடைய செயல்களை அறிவித்துவரு
கிறேன்.
18 கடவுளே, நான் வயது சென்றவன்,
என் முடி நரைத்துவிட்டது;
இப்பருவத்தில் உம்முடைய வல்லமை
யையும் ஆற்றலையும் இனிவரும் தலை
முறைக்கு அறிவித்துவருகிறேன்;
என்னைக் கைவிடாதேயும்.

19 கடவுளே, உமது நீதி வானம் வரைக்
கும் எட்டுகிறது;
பெரிய காரியங்களை நீர் செய்திருக்கிறீர்;
கடவுளே, நீர் ஒப்பற்றவர்.
20 கடுந் துயரத்திற்கும் பல இன்னல்களுக்
கும் என்னை ஆளாகும்படி செய்தீர்;
ஆனால் நீர் மீண்டும் என்னை உயிர்ப்பிப்
பீர்; பாதாளத்தில் என்னை இறங்க
விடீர்.
21 என் மேன்மையைப் பெருகச் செய்து,
மீண்டும் என்னைத் தேற்றுவீர்.
22 என் கடவுளே, நான் வீணையைக்
கொண்டு உம்மையும் உமது உண்மை
யையும் புகழுவேன்;
இஸ்ரவேலின் பரிசுத்தரே, சுரமண்டலத்
தைக்கொண்டு உம்மைப் புகழ்ந்து
பாடுவேன்.

23 நான் இசைக்கருவியில் வாசிக்கும்போது
என் வாய் உம்மைப் புகழ்ந்து ஆர்ப்பரிக்கும்;
நீர் மீட்டுக்கொண்ட என் ஆன்மா ஆர்ப்பரிக்கும்.
24 எனக்குத் தீங்கு செய்யப் பார்த்தவர்கள்
வெட்கமும் மானக்கேடும் அடைந்தால்,
நாளெல்லாம் என் நாவு உமது நீதியை எடுத்துரைக்கும்.

### அரசருக்காக மன்றாடுதல்

(சாலொமோனின் சங்கீதம்)

72 கடவுளே, அரசரிடம் உமது நீதி விளங்கச் செய்யும்;
அரசமைந்தரிடம் உமது நியாயமான தீர்ப்பு விளங்கச் செய்யும்.
2 அவர் உம் மக்களை நீதியோடு ஆள்வாராக;
உம்முடையவரான எளியோருக்கு நீதி வழங்குவாராக.
3 மலைகள் மக்களுக்குச் சமாதானத்தைக் கொடுக்கட்டும்;
குன்றுகள் நீதியை விளைவிக்கட்டும்.
4 ஏழை மக்களுக்கு அவர் நீதி வழங்குவாராக;
ஏழைகளின் பிள்ளைகளைக் காப்பாராக;
பிறரை ஒடுக்குகிறவனை நொறுக்கி விடுவாராக.
5 அவர்கள் கதிரவனும் நிலாவும் உள்ள வரையில்,
தலைமுறை தலைமுறையாக உமக்கு அஞ்சி நடப்பார்களாக.

6 அவர் புல் வெளியில் பெய்யும் தூறலைப் போல் இருப்பார்;
நிலத்தை வளப்படுத்தும் மழையைப் போல் விளங்குவார்.
7 அவர் காலத்தில் நீதிமான் தழைத்தோங்குவான்,
நிலா உள்ளவரையில் சமாதானம் நிலவும்.

8 ஒரு கடலிலிருந்து அடுத்த கடல்வரைக்கும் அவர் ஆட்சி செலுத்துவார்;
ஆற்றிலிருந்து உலகின் எல்லை வரைக்கும் அவர் அரசாளுவார்.
9 வானத்தில் வாழ்வோர் அவர்முன் குனிந்து வணங்குவர்;
அவர் எதிரிகள் மண்ணை நக்குவார்கள்.
10 ஸ்பெயின் அரசர்களும் தீவுகளின் அரசர்களும் காணிக்கைகளைக் கொண்டு வருவார்கள்;
அராபியாவிலும் எத்தியோப்பியாவிலுமுள்ள அரசர்கள் நன்கொடைகளைக் கொண்டு வருவார்கள்;
11 எல்லா அரசர்களும் அவரை வணங்குவார்கள்;
எல்லா இனத்தவரும் அவருக்குச் சேவை செய்வார்கள்.
12 தம்மை நோக்கி மன்றாடுவோரையும்,
திக்கற்ற வறியோரையும் அவர் காப்பாற்றுவார்.
13 வலிமையற்றோனுக்கும் வறுமையுற்றோனுக்கும் அவர் இரக்கம் காட்டுவார்;
ஏழைகளின் உயிரைக் காப்பாற்றுவார்.
14 அவர்கள் உயிரை இக்கட்டினின்றும் கொடுமையினின்றும் விடுவிப்பார்;
அவர்கள் இரத்தம் அவர் பார்வையில் அற்பமானதன்று.
15 அவர் வாழ்க! அராபியாவின் பொன் அவருக்குக் கொடுக்கப்படும்;
அவர் பொருட்டு இடைவிடாமல் ஜெபம் செய்யப்படும்; அவர் எந்நாளும் வாழ்த்தப்படுவார்.
16 நாடெங்கும், மலையின் உச்சியிலும், மிகுதியான தானியம் விளையும்; விளை பயிர்கள் லீபனோனைப்போல விளங்கும்;
வயல் வெளியின் புல்லைப்போல் நகர மக்கள் செழித்தோங்குவார்கள்.
17 அவர் பெயர் என்றென்றும் நிலைத்திருக்கும்; கதிரவன் உள்ள வரையில் அவர் பெயர் நிலைக்கும்;
அவரது பெயரால் மனிதர்கள் தங்களை வாழ்த்திக்கொள்வார்கள். எல்லா நாட்டினரும் அவரை நற்பேறு பெற்றவரென வாழ்த்துவார்கள்.
18 இஸ்ரவேலின் கடவுளாகிய ஆண்டவர் போற்றுதலுக்குரியவர்;
அவர் ஒருவராய் வியக்கத்தக்க செயல்களைச் செய்கிறவர்.
19 மாட்சிமை பொருந்திய அவரது திருப்பெயர் என்றென்றும் போற்றுதலுக்குரியது;
முழு உலகிலும் அவரது மாட்சிமை நிறைந்திருப்பதாக! ஆமேன், ஆமேன்.
20 (ஈசாயின் மகனாகிய தாவீதின் விண்ணப்பங்கள் முடிந்தன).

### மூன்றும் பாகம்

73—89

### கடவுளின் நீதிமுறை

(ஆசாபின் சங்கீதம்)

73 மெய்யாகவே கடவுள் இஸ்ரவேலருக்கு நல்லவர்;
தூய உள்ளமுடையோருக்கு அவர் நல்லவர்.

72:8 சக. 9:10

2 என் கால்கள் தடுமாறலாயின;
நான் அடிசறுக்கி விழப்போனேன்.
3 பொல்லானுக்கு வந்த வாழ்வை நான் கண்டேன்;
இறுமாந்த அவன்மேல் பொறாமை கொண்டேன்.

4 அவர்களுக்கு மரண வேதனை என்பதே இல்லை;
அவர்கள் உடலானது நலமும் உரமும் கொண்டது.
5 மனிதருக்கு வரக்கூடிய இடர்களில் அவர்கள் அகப்படுவதில்லை;
மற்ற மனிதரைப்போல அவர்கள் துன்புறுவதில்லை.
6 ஆகையால் பெருமை அவர்களைச் சங்கிலி போலச் சுற்றிக்கொள்கிறது;
கொடுமை அவர்களை ஆடைபோல மூடிக்கொள்கிறது.
7 அவர்கள் கல்நெஞ்சிலிருந்து பொல்லாங்கு பொங்கி வழிகிறது;
அவர்கள் மனத்திலிருந்து தீய எண்ணங்கள் தோன்றி வருகின்றன.
8 அவர்கள் பிறரை ஏளனம் செய்கிறார்கள்; தீயன உரைக்கிறார்கள்;
பெருமை கொள்கிறார்கள்; பிறரை ஒடுக்குவதைப்பற்றியே பேசுகிறார்கள்.
9 விண்ணுலகையே தாக்குகின்றது அவர்களது பேச்சு;
மண்ணுலகில் செல்வாக்குடன் பரவுகின்றது அவர்களது சொல்.
10 (அதனாலேதான் கடவுளின் மக்கள் அவர்கள் பக்கமே திரும்புகிறார்கள்;
அவர்கள் சொல்வதையெல்லாம் தண்ணீரை ஏற்பதுபோல ஏற்கிறார்கள்).
11 ''கடவுளுக்கு எப்படித் தெரியும்? உன்னதமானவருக்கு அறிவு இருக்கிறதா?'' என்கிறார்கள்.
12 பாருங்கள், இவர்களே அந்தப் பொல்லாதவர்கள்;
இவர்கள் செல்வர்களாயிருந்தும் தங்கள் செல்வத்தை மேலும் பெருக்குகிறார்கள்.

13 அப்படியானால், நான் என் உள்ளத்தை மாசற்றதாய் வைத்துக்கொண்டது வீண்தானா?
என் கைகளைக் குற்றமற்றதாய் இருக்கும்படி பார்த்துக்கொண்டதும் வீண் தானா?
14 நாள்தோறும் நீர் என்னைத் துன்புறச் செய்கிறீர்;
காலைதோறும் என்னைக் கண்டிப்புடன் நடத்துகிறீர்.

15 அவர்களைப்போல நானும் பேசியிருந்தேனானால்,
உம்முடைய மக்களுக்கு உண்மையற்றவனாய் நடந்திருப்பேன்.
16 எனவே, இதன் உண்மையை அறிய முயன்றேன்;
ஆனால் அது எனக்குக் கடினமாகத் தோன்றிற்று.
17 நான் கடவுளின் புனித அகத்திற்குள் சென்றதும் அவர்களுக்கு நேரிடப் போவது என்ன என்பதை அறியலானேன்.

18 நீர் அவர்களைச் சறுக்கலான இடங்களில் நிறுத்துகின்றீர்;
பாழான இடங்களில் விழச்செய்கிறீர்; இதுதான் உண்மை.
19 அவர்கள் எவ்வளவு விரைவில் ஒழிந்து போகிறார்கள்!
அவர்கள் திகில் பிடித்தவர்களாய் அடியோடு அழிந்துபோகிறார்கள்.
20 தூக்கம் தெளிந்தவுடன் ஒழிந்துபோகும் கனவுபோன்றது அவர்களது முடிவு;
ஆண்டவரே, நீர் விழிக்கும்போது அவர்களது போலித்தனத்தை இகழ்ந்து ஒதுக்குவீர்.

21 என் மனத்தில் வெறுப்புணர்ச்சி உண்டாயிற்று;
என் உள்ளம் புண்பட்டது.
22 அப்பொழுது நான் அறிவிழந்தவனானேன்;
உமது முன்னிலையில் ஒரு விலங்குபோல நடந்துகொண்டேன்.
23 ஆனாலும், நான் எப்போதும் உமது முன்னிலையிலேதான் இருப்பேன்;
நீர் என் வலக்கையைப் பிடித்து எனக்கு ஆதரவளிப்பீர்.
24 உமது தி[illegible]ளப்படி என்னை நடத்தி யரு[illegible],
முடிவில் என்னை மாட்சிமையில் பங்கடையச் செய்வீர்.
25 விண்ணுலகில் எனக்கு உம்மையன்றி வேறு யார் உண்டு?
நீர் எனக்கு இருப்பதால், மண்ணுலகில் நான் விரும்புவது எதுவுமில்லை.
26 என் உடலும் உள்ளமும் சோர்ந்து போகின்றன;
ஆனால் கடவுள் என் இதயத்திற்கு அரணாயிருக்கிறார்; அவரே என்றென்றும் என் சொத்து.
27 எனவே, உம்மை விட்டுத் தொலைவில் செல்கிறவர்கள் அழிவார்கள்;
உமக்கு உண்மையாயிராத அனைவரையும் நீர் அழித்துவிடுவீர்.
28 நானோ கடவுளை அண்டிக்கொண்டிருப்[illegible]தையே நலமெனக் கொள்கிறேன்;
[illegible]ளாகிய ஆண்டவர் செய்தவற்றை [illegible]யல்லாம் எடுத்துரைப்பதற்காக அவரைப் புகலிடமாகக் கொண்டிருக்கிறேன்.

## நாட்டின் விடுதலைக்காக மன்றுடுதல்
(ஆசாபின் சங்கீதம்)

74 கடவுளே, நீர் ஏன் எங்களை முற்றிலு
மாக விலக்கித் தள்ளிவிட்டீர்?
உமது மேய்ச்சல் நில ஆடுகள்மேல் உமது
சினம் ஏன் புகைந்தெழுகின்றது?
2 பண்டைக் காலத்திலேயே நீர் உமக்குச்
சொந்தமாக்கிக்கொண்ட மக்களை
நினைத்தருளும்;
நீர் மீட்டு உமக்கு உரிமையாக்கிக்
கொண்ட குலத்தினரை மறந்து
விடாதேயும்;
உமது உறைவிடம் அமைந்துள்ள
சீயோன் மலையையும் நினைவுகூர்ந்
தருளும்.
3 நெடுங்காலமாகப் பாழாய்க் கிடக்கிற
இடங்களில் நீர் எழுந்தருளும்;
எதிரி உமது புனித அகத்தில் அனைத்தை
யும் பாழ்படுத்திவிட்டான்.
4 உம்முடைய எதிரிகள் உம் மக்கள் கூடும்
இடத்தில் வெற்றி முழக்கம் செய்
கிறார்கள்;
தங்கள் கொடிகளை வெற்றிக்கு அடை
யாளமாக நாட்டுகிறார்கள்.
5 அடர்ந்த சோலையில் கோடரிகளை ஓங்கி
மரங்களை வெட்டுகிறவர்கள்போல்
அவர்கள் காணப்பட்டார்கள்.
6 இதோ! அதன் சித்திர வேலைப்பாடுகள்
அனைத்தையும் கோடரிகளாலும் சம்
மட்டிகளாலும் தகர்த்துவிட்டார்
கள்.
7 உமது புனித அகத்தை நெருப்புக்கு
இரையாக்கிவிட்டார்கள்;
உமது திருப்பெயருக்குரிய உறைவிடத்
தைத் தரைமட்டமாக்கித் தீட்டுப்
படுத்தினார்கள்.
8 ''அவர்களை அடியோடு அழித்துவிடு
வோம்'' என்று தங்களுக்குள்ளே
சொல்லிக்கொண்டார்கள்;
கடவுளின் சபையார் கூடும் இடங்களை
யெல்லாம் நாடெங்கும் எரித்தழித்
தார்கள்.
9 எங்களுக்கு இருந்துவந்த அறிவிப்புக்குறி
கள் இப்போது இல்லை; இறைவாக்
குரைப்போரும் இல்லை;
எவ்வளவு காலம் இந்நிலை நீடிக்கும்
என்று அறியக்கூடியவனும் எங்
களிடையே இல்லை.
10 கடவுளே, எவ்வளவு காலம் பகைவன்
நிந்திப்பான்?
எதிரி உமது திருப்பெயரை எப்போதுமா
பழித்துக்கொண்டிருப்பான்?
11 உமது கையை ஏன் மடக்கிக்கொள்
கிறீர்?
உமது வலக்கையை உமது மடியிலிருந்து
எடுத்து நீட்டி அவர்களை அழித்து
விடும்.
12 கடவுளே, முற்காலத்திலிருந்தே நீர்
எங்கள் அரசர்;
நீரே உலகெங்கும் மீட்புச் செயலைச்
செய்து வருகிறீர்.
13 நீரே உமது வல்லமையால் கடலை இரண்
டாகப் பிளந்தீர்;
நீரில் வாழும் கொடும்பாம்புகளின்
தலைகளை உடைத்துவிட்டீர்.
14 லிவியாதானின் தலைகளை நசுக்கிவிட்டீர்;
அதைக் காட்டு விலங்குகளுக்கு இரை
யாகக் கொடுத்தீர்.
15 பாறையைப் பிளந்து ஊற்றும் ஆறும்
புறப்படும்படி செய்தீர்;
என்றும் வற்றாத ஆறுகளை வற்றச் செய்
தீர்.
16 பகலும் உம்முடையது, இரவும் உம்
முடையது;
நீர் ஒளியையும் கதிரவனையும் ஏற்படுத்
தினீர்.
17 பூமியின் எல்லைகளையெல்லாம் திட்டம்
செய்தீர்;
கோடைக்காலத்தையும் மாரிக்காலத்
தையும் ஏற்படுத்தினீர்.
18 ஆண்டவரே, எதிரி உம்மை நிந்தித்
ததையும் மதிகெட்ட மக்கள் உமது
திருப்பெயரைப் பழித்ததையும்
நினைத்துப் பாரும்.
19 உமக்குச் சொந்தமான புறாவின் *
உயிரைப் பொல்லாத விலங்கிற்கு ஒப்
புக்கொடுத்துவிடாதேயும்.
சிறுமைப்படுகிற உம்முடைய மக்களின்
உயிரை ஒரேயடியாக மறந்துவிடாதே
யும்.
20 உமது உடன்படிக்கையை நினைத்
தருளும்;
நாட்டின் இருளான இடங்களில்
கொடுமை நடக்கும் குடியிருப்புகள்
நிறைந்திருக்கின்றன.
21 சிறுமைப்பட்டவன் மீண்டும் ஏமாறு
திருக்கும்படி செய்யும்;
எளியோரும் வறியோரும் உமது திருப்
பெயரைப் புகழ்வார்களாக.
22 கடவுளே, வாரும்; உமக்காக நீரே வழக்
காடும்;
மதிகேடனாலே நாடோறும் உமக்கு
வரும் நிந்தையை நினைத்துப்பாரும்.
23 உம்முடைய பகைஞர் செய்யும் முழக்
கத்தை மறவாதேயும்;
உம்மை எதிர்க்கிறவர்களின் அமளி
இடைவிடாமல் எழுகிறது.

* இஸ்ரவேல் மக்கள்

74:13 யாத். 14:21. 74:14 யோபு. 41:1; சங். 104: 26; ஏசா. 27:1

## கடவுளின் தீர்ப்பு

(பாடகர் தலைவனுக்கு; இராகம் : அஸ் தஷ்கேத்து; ஆசாபின் சங்கீதம்)

75 உமக்கு நன்றி செலுத்துகிறோம்;
கடவுளே, உமக்கு நன்றி செலுத்து கிறோம்;
உமது திருப்பெயரைப் போற்றுகிறோம்;
வியக்கத்தக்க உம்முடைய செயல் களை எடுத்துரைக்கிறோம்.
2 ''நான் குறித்த நாளிலே நீதியின்படி தீர்ப்பு வழங்குவேன்.
3 உலகமும் அதில் வாழ்வோர் அனைவரும் அசைவுறலாம்;
ஆனால் நான் அதன் தூண்களை உறுதி யாக நிற்கச் செய்வேன். (சேலா)
4 வீண் பெருமை கொள்வோரிடம், 'வீண் பெருமை கொள்ள வேண் டாம்' என்றும்
பொல்லாரிடம், 'உங்கள் கொம்பை* உயர்த்த வேண்டாம்;
5 உங்கள் கொம்பைச் சிறிதளவும் உயர்த்த வேண்டாம்;
தலையை ஆட்டி இறுமாப்புடன் பேச வேண்டாம்,'' என்றும் சொன்னேன்.
6 கிழக்கிலிருந்தோ மேற்கிலிருந்தோ மலைக் காட்டிலிருந்தோ உங்களுக்கு உதவி வராது.
7 கடவுளே நீதிபதி; அவர் ஒருவனைத் தாழ்த்துகிறார்; ஒருவனை உயர்த்து கிறார்.
8 ஆண்டவர் கையில் நுரைக்கும் மது நிறைந்த ஒரு பாத்திரம் இருக்கிறது;
அது வெறிமயக்க மருந்து கலந்த மது;
அதை அவர் ஊற்றுகிறார்;
உலகிலுள்ள பொல்லார் அனைவரும் அதை [illegible]மண்டியோடு உறிஞ்சிக் குடிக்கின்[illegible]ார்.
9 நானோ எந்[illegible]ும் மகிழ்ந்து கொண் டாடுவேன்;
யாக்கோபின் கடவுளைப் புகழ்ந்து பாடு வேன்.
10 பொல்லாரின் கொம்புகளையெல்லாம் வெட்டிவிடுவேன்;
நீதிமான்களின் கொம்புகளோ உயர்த் தப்படும்.

## வெற்றிக் கீதம்

(பாடகர் தலைவனுக்கு; இசைக்கருவி : யாழ்; ஆசாபின் சங்கீதம்)

76 யூதாவில் கடவுளை மக்கள் அறிவார் கள்;
இஸ்ரவேலில் அவரது திருப்பெயர் மாண்புடன் விளங்குகிறது.
2 சாலேமில்† அவரது கூடாரம் இருக் கிறது;
சீயோனில் அவரது உறைவிடம் இருக்கிறது.
3 அங்கே அவர் மின்னும் அம்புகளை முறித் தெறிந்தார்;
கேடயத்தையும் வாளையும் படைக்கலங் களையும் தகர்த்தெறிந்தார். (சேலா)
4 நீர் தேசுடையவர், மாட்சிமை மிகுந் தவர்;
எதிரிகளை வீழ்த்திவிட்டு மலைகளிலிருந்து திரும்பும் உமது மாண்புதான் என்னே!
5 நெஞ்சில் உரமுள்ள வீரரிடமிருந்த கொள்ளைப் பொருள்கள் பறிக்கப்பட் டன;
அவர்களும் துஞ்சிவிட்டார்கள்; படைக் கலங்களைப் பயன்படுத்தக்கூடியவன் ஒருவனுமில்லை.
6 யாக்கோபின் கடவுளே, நீர் அச்சுறுத் தினதால், தேர்களும் குதிரைகளும் செயலற்று விழுந்தன.
7 நீர் அஞ்சுதற்குரியவர்;
உமது சினம் மூளும்போது உம்மை எதிர்த்து நிற்கக்கூடியவன் யார்?
8 தீர்ப்பு வழங்கவும் உலகிலுள்ள சிறுமைப் பட்டோருக்கு விடுதலையளிக்கவும்,
9 கடவுள் எழுந்தபோது, வானத்திலிருந்து அவரது தீர்ப்பு முழங்கிற்று;
உலகம் பேரச்சத்துடன் அமைதியா யிருந்தது. (சேலா)
10 மனிதனின் சினம் உமது மாட்சிமையை விளங்கச் செய்யும்;
உமது சினத்திற்குத் தப்பிப் பிழைத் தவர்கள் உம்மை நினைத்துப் பண் டிகை கொண்டாடுவார்கள்.
11 உங்கள் கடவுளாகிய ஆண்டவருக்குப் பொருத்தனை செய்து அதை நிறை வேற்றுங்கள்;
அவரைச் சுற்றிலுமிருக்கிற அனைவரும் அஞ்சுதற்குரிய அவருக்கே காணிக் கைகளைக் கொண்டுவருவார்களாக.
12 செருக்குள்ள தலைவர்களை அவர் அடக்கி விடுவார்;
உலகிலுள்ள அரசரைத் திகிலடையச் செய்வார்.

## இக்கட்டுக் காலத்தில் அளிக்கப்படும் ஆறுதல்

(பாடகர் தலைவனுக்கு; எடுதூனின் இராகம்; ஆசாபின் சங்கீதம்)

77 கடவுளை நோக்கி உரத்த குரலில் மன் றாடுகிறேன்;
கடவுள் எனக்குச் செவிசாய்த்தருள வேண்டுமென்று அவரை நோக்கி மன் றாடுகிறேன்.

* கொம்பு : வலிமையைக் குறிக்கும் சின்னம்.
† சாலேம் : எருசலேம் என்பதன் சுருக்கம்.

2 இக்கட்டு நாளில் ஆண்டவரின் உதவியை நாடினேன்;
இரவு நேரத்தில் அவரை நோக்கிக் கை கூப்பி மன்றாடுகிறேன்;
ஆனாலும் என் ஆன்மா ஆறுதலடைய வில்லை.
3 நான் கடவுளை நினைக்கிறேன்; ஏங்கு கிறேன்;
நான் தியானம் செய்து பார்க்கிறேன்; என் ஆவி சோர்வடைகிறது. (சேலா)

4 நான் கண் இமைகளை மூடித் தூங்காத படி செய்துவிட்டீர்;
நான் கலக்கமுற்றிருக்கிறேன்; என்னால் பேச இயலவில்லை.
5 கடந்த காலத்தை நினைத்துப்பார்க் கிறேன்;
முற்காலத்து ஆண்டுகளை நினைத்துக் கொள்கிறேன்.
6 ஆழ்ந்த சிந்தனையில் இரவைக் கழிக் கிறேன்;
தீர எண்ணிப்பார்க்கையில் என் ஆவி கேட்கும் கேள்வி இதுவே :

7 "ஆண்டவர் என்னை ஒரேயடியாக வெறுத்துத் தள்ளி விடுவாரோ?
இனி ஒருபோதும் எனக்கு இரக்கங் காட்ட மாட்டாரோ?
8 அவரது பேரருள் எனக்கு முற்றிலும் இல்லாமற் போய்விட்டதோ?
அவரது வாக்குறுதி தலைமுறை தலை முறையாக நிறைவேற்றம் பெறாதோ?
9 கடவுள் இரக்கங்காட்ட மறந்துவிட் டாரோ?
அல்லது சினங்கொண்டு தம் இரக்கங் காட்டும் உள்ளத்தை அடைத்துக் கொண்டாரோ?" (சேலா)
10 அப்பொழுது நான், "உன்னதமான வரின் வல்லமையில் மாற்றம் ஏற் படுவது எப்படி?
இதுதான் என்னை வருத்துகிறது" என்றேன்.

11 ஆண்டவரே, உம்முடைய செயல்களை நினைவுகூர்வேன்;
முற்காலத்தில் நீர் செய்த வியக்கத்தக்க செயல்களை நினைத்துப்பார்ப்பேன்.

12 உம்முடைய செயல்கள் அனைத்தையும் பற்றித் தியானிப்பேன்;
நீர் செய்தவற்றைப்பற்றிச் சிந்திப் பேன்.
13 கடவுளே, உமது வழி தூய்மையானது;
நம் கடவுளைப்போலப் பெரிய தெய்வம் யார்?

14 அற்புதங்களைச் செய்கிற கடவுள் நீரே;
எல்லா இனத்தவரிடையேயும் நீர் உமது வல்லமையை விளங்கச் செய்தீர்.
15 யாக்கோபு, யோசேப்பு என்பவர்களின் மரபினராகிய உம் மக்களை
நீர் உமது தோள்வலிமையால் மீட் டுக்கொண்டீர். (சேலா)

16 கடவுளே, வெள்ளம் உம்மைப் பார்த் தது;
வெள்ளம் உம்மைப் பார்த்துக் கலக்க முற்றது; ஆழ்கடல்களும் கலங்கின.
17 மேகங்கள் தண்ணீரைப் பொழிந்தன;
வானங்கள் முழங்கின;
உம்முடைய அம்புகளும் மின்னி இங்கு மங்குமாகப் பறந்தன.
18 உமது குமுறலின் ஒலி சுழல்காற்றில் முழங்கிற்று;
மின்னல்கள் பூமியில் ஒளி வீசின; பூமி நடுங்கி அதிர்ந்தது.
19 கடல் வழியே நீர் நடந்து சென்றீர்;
ஆழ்கடலைக் கடந்தீர்;
ஆனால் உம்முடைய அடிச்சுவடுகள் கண் ணுக்குத் தெரியவில்லை.
20 மோசே, ஆரோன் என்பவர்களைக் கொண்டு
ஓர் ஆட்டு மந்தையைப்போல உம் முடைய மக்களை வழிநடத்தினீர்.

### இஸ்ரவேல் மக்களுக்குப் போதித்தல்

*(ஆசாபின் சங்கீதம்)*

**78** என் மக்களே, என் போதனையைக் கேளுங்கள்;
என் வாய்மொழிகளுக்குச் செவிசாயுங் கள்.
2 உவமைகள்மூலம் பேசுகிறேன்;
முற்காலத்து மறைசெய்திகளை எடுத் துரைக்கிறேன்.
3 நாங்கள் கேள்விப்பட்டு அறிந்து கொண்டவற்றையும்
எங்கள் மூதாதையர் எங்களுக்கு அறி வித்தவற்றையும் கூறுகின்றோம்.
4 அவர்கள் பிள்ளைகளுக்கு நாங்கள் அவற்றை மறைக்க மாட்டோம்;
ஆண்டவரது புகழையும் அவரது வல் லமையையும்
அவர் செய்த வியக்கத்தக்க செயல்களை யும் வரும் தலைமுறைக்கு அறிவிப் போம்.

5 அவர் யாக்கோபின் மரபினருக்கு ஒழுங்குமுறைகளை வகுத்தமைத்தார்;
இஸ்ரவேல் மரபினருக்குச் சட்டங்களைச் செய்து கொடுத்தார்.

78:2 மத். 13:35.

அவற்றைத் தம் பிள்ளைகளுக்குத் தெரி
விக்கும்படி நம்முடைய மூதாதைய
ருக்குக் கட்டளையிட்டார்.
6 இனிப் பிறக்கப்போகும் பிள்ளைகளாகிய
பின்வரும் தலைமுறையினர் அவற்றை
அறிந்துகொண்டு,
தங்கள் பிள்ளைகளுக்குச் சொல்ல
வேண்டுமென்றும்,
7 அந்தப் பிள்ளைகளும் கடவுளையே நம்பி
வாழ்ந்து,
கடவுளின் செயல்களை மறவாமலிருந்து,
அவருடைய கட்டளைகளைக் கடைப்
பிடிக்க வேண்டுமென்றும்,
8 அவர்கள் தங்கள் மூதாதையரைப்
போலக் கடவுளை எதிர்ப்போரும்
கலகம் செய்வோருமாய் இல்லாம
லும்,
உள்ளத்தில் உண்மையற்றவர்களாய்
இல்லாமலும்,
கடவுளை உறுதியாகப் பற்றிக்கொள்
ளாதவர்களாய் இல்லாமலும்
வாழ வேண்டுமென்றும் அவ்வாறு கட்
டளையிட்டார்.

9 வில்வீரரான எப்பிராயீம் மக்கள்
போரில் புறங்காட்டி ஓடினுர்கள்.
10 கடவுளின் உடன்படிக்கையை அவர்கள்
கடைப்பிடிக்கவில்லை,
அவருடைய சட்டங்களின்படி நடக்க
மறுத்துவிட்டார்கள்.
11 அவருடைய செயல்களையும் அவர் தங்
களுக்குச் செய்து காட்டின வியக்கத்
தக்க செயல்களையும் மறந்தார்கள்.
12 எகிப்து நாட்டிலுள்ள சோவான்
என்னும் சமவெளியில்
அவர்கள் மூதாதையர் காண அவர்
வியக்கத்தக்க செயல்களைச் செய்தார்.
13 கடலைப் பிளந்து அவர்களைக் கடக்கச்
செய்தார்;
தண்ணீரைக் குவிந்து நிற்கும்படி செய்
தார்.
14 பகலில் மேகத்தினுலும் இரவு முழுதும்
நெருப்பு வெளிச்சத்தினுலும் அவர்
அவர்களை வழி நடத்தினுர்.
15 பாலைநிலத்தில் கற்பாறையைப் பிளந்
தார்;
ஆழத்திலிருந்து நீர் சுரக்கும்படி செய்து,
அவர்களுக்குக் குடிக்கக் கொடுத்தார்.
16 கற்பாறைகளிலிருந்து நீரோடைகளைத்
தோன்றச் செய்தார்;
தண்ணீர் ஆறுபோல ஓடும்படி செய்தார்.

17 அப்படியிருந்தும் அவர்கள் மீண்டும்
மீண்டும் பாவம் செய்தார்கள்;
வறண்ட வெளியில் உன்னதமானவரை
எதிர்த்தார்கள்.
18 தாங்கள் விரும்பின உணவைக் கேட்டுக்
கடவுளைச் சோதித்துப்பார்த்தார்
கள்.
19 கடவுளுக்கு விரோதமாகப் பேசினுர்கள்:
''பாலைநிலத்தில் நமக்கு விருந்தளிக்கக்
கடவுளால் கூடுமா?
20 அவர் கற்பாறையை அடித்தார்;
தண்ணீர் புறப்பட்டது; ஆறுகள்
பாய்ந்தோடின;
ஆனுல் அப்படியே நமக்கு உணவு
கொடுக்க அவரால் முடி
யுமா?
தம் மக்களுக்கு இறைச்சியையும்
கொடுப்பாரா?'' என்றுர்கள்.

21 ஆண்டவர் அதைக் கேட்டபோது சினங்
கொண்டார்;
நெருப்பு யாக்கோபின் மரபினரிடையே
கொழுந்துவிட்டு எரிந்தது;
இஸ்ரவேல் மரபினர்மீது அவரது சினம்
பொங்கியெழுந்தது.
22 ஏனெனில், அவர்கள் கடவுளை நம்ப
வில்லை;
அவர் தங்களைக் காப்பாற்றுவார் என்ற
நம்பிக்கை அவர்களுக்கு இல்லை.
23 என்றுலும், அவர் வானத்திலுள்ள
மேகங்களுக்குக் கட்டளையிட்டார்;
வானத்தின் கதவுகளைத் திறந்துவிட்
டார்.
24 அவர்கள் உண்பதற்கு மன்னுவைப்
பொழியச் செய்தார்;
வானத்து உணவை அவர்களுக்குக்
கொடுத்தார்.
25 தூதரின் உணவை மனிதர் உண்டனர்;
அவர்களுக்கு வேண்டிய மட்டும் அவர்
உணவை அனுப்பினுர்.
26 வானத்தில் கீழ்க்காற்றை வரச்செய்
தார்:
தமது வல்லமையினுல் தெற்கிலிருந்தும்
காற்று வீசும்படி செய்தார்.
27 இறைச்சியைத் தூசிப்படலம் போலவும்
பறவைகளைக் கடற்கரை மணலைப்போல
வும் அவர்களுக்காகப் பொழியச்
செய்தார்.
28 அவற்றை அவர்கள் பாளையத்தின்
நடுவிலும்
அவர்கள் கூடாரத்தைச் சுற்றிலும் விழச்
செய்தார்.
29 அவர்கள் உண்டார்கள்; அவர்களுக்குத்
தெவிட்டிவிட்டது;
அவர்கள் விரும்பினதைக் கடவுள் அவர்
களுக்குக் கொடுத்தார்.
30 அவர்கள் விருப்பம் முற்றிலும் நிறை
வேறுமுன்பே,
அதாவது அவர்கள் வாயில் உணவு
இருந்தபோதே,

78:12 யாத். 7:8-12:32. 78:13 யாத். 14:21,22. 78:14 யாத். 13:21,22. 78:15,16 யாத். 17:1-7; எண். 20:2-13.
78:24 யோ. 6:31.

31 கடவுளின் சினம் அவர்கள்மேல்
பொங்கி எழுந்தது;
அவர்களுள் வலிமைவாய்ந்தவர்களைக்
கொன்றது;
இஸ்ரவேல் இளைஞரை மடியச் செய்
தது.

32 இவையெல்லாம் நடந்துங்கூட அவர்
செய்த வியக்கத்தக்க செயல்களை
அவர்கள் நம்பவில்லை;
அவர்கள் மேலும் பாவம் செய்து
வந்தார்கள்.
33 ஆகையால் அவர்கள் வாழ்நாளை மூச்
சைப்போல மறையச் செய்தார்;
அவர்கள் ஆயுளைத் திடீரென முடியச்
செய்தார்.
34 அவர்களுள் சிலரை அவர் சாகடித்த
போதுதான் அவர்கள் அவரை
அறியப்பார்த்தார்கள்;
மனமாற்றமடைந்து அவரைக் கருத்
துடன் நாடினர்கள்.
35 கடவுள் தங்கள் கன்மலை என்பதையும்
உன்னதமான கடவுள் தங்கள் மீட்பர்
என்பதையும்
அவர்கள் நினைவுகூர்ந்தார்கள்.

36 ஆனாலும் அவர்கள் உதட்டளவில்
அவரைப் புகழ்ந்தார்கள்;
தங்கள் நாவினால் அவரிடம் பொய்
சொன்னார்கள்.
37 அவர்கள் இதயம் அவரைப் பற்றிக்
கொள்வதில் உறுதியாய் இல்லை;
அவரது உடன்படிக்கையில் அவர்கள்
நிலைத்து நிற்கவில்லை.
38 அவரோ இரக்கமுள்ளவராய் அவர்கள்
குற்றத்தை மன்னித்து வந்தார்;
அவர்களை அழித்துவிடவில்லை.
அவர் தமது சினத்தைப் பன்முறை
அடக்கிக்கொண்டார்.
தமது முழுச் சீற்றத்தையும் அவர்கள்
மீது எழச்செய்யவில்லை.
39 அவர்கள் வெறும் மனிதர் என்பதையும்
மீளாமல் அப்படியே போய்விடுகிற
காற்றே என்பதையும் அவர் நினைவில்
கொண்டார்.

40 பாலைவனத்தில் எத்தனையோ முறை
அவர்கள் அவரை எதிர்த்தார்கள்;
எத்தனையோ முறை அவர் மனத்திற்கு
வருத்தமுண்டாக்கினர்கள்.
41 அவர்கள் மீண்டும் மீண்டும் கடவுளைச்
சோதித்துப் பார்த்தார்கள்.
இஸ்ரவேலின் பரிசுத்தருக்கு எரிச்சலை
உண்டாக்கினர்கள்.

42 அவரது கைவன்மையை மறந்தார்கள்;
பகைவரிடமிருந்து அவர் தங்களை
விடுவித்த நாளையும் மறந்தார்கள்.

43 எகிப்தில் அவர் அரிய செயல்களையும்
சோவான் என்னும் சமவெளியில்
அற்புதங்களையும் செய்து அவர்களை
விடுவித்ததையும் மறந்தார்கள்;
44 தண்ணீரைக் குடிக்க முடியாதபடி
எகிப்து நாட்டு ஆறுகளையும்
நீரோடைகளையும்
அவர் இரத்தமாக மாற்றினதையும்
அவர்கள் நினைத்துப் பார்க்க
வில்லை.
45 அவர்களை அழிக்க மொய்க்கும் ஈக்களை
யும்
அவர்களைக் கெடுக்கத் தவளைகளையும்
அவர்களிடையே அனுப்பினர்.
46 அவர்கள் விளைச்சலைப் பச்சைப் புழுக்
களுக்கும்
அவர்கள் உழைப்பின் பலனை வெட்டுக்
கிளிகளுக்கும் கொடுத்தார்.
47 கல்மழையினால் அவர்களுடைய திராட்
சைச் செடிகளையும்
ஆலங்கட்டியினால் அவர்களுடைய அத்தி
மரங்களையும் அழித்தார்.
48 அவர்கள் கால் நடைகளைக் கொள்ளை
நோய்க்கும்
அவர்கள் மந்தைகளைத் தொற்றுநோய்க்
கும் ஒப்புக்கொடுத்துவிட்டார்.
49 தமது சினத்தையும் சீற்றத்தையும்
வெஞ்சினத்தையும்
அவற்றோடு இன்னலையும் அழிவுண்டாக்
கும் தூதர்களாக அவர்களிடையே
அனுப்பினர்.
50 அவர் தமது சினத்திற்கு வழியைத்
திறந்துவிட்டார்; அவர்களைச் சாவி
னின்று காக்கவில்லை;
அவர்களைக் கொள்ளை நோய்க்கு ஒப்
படைத்தார்.
51 எகிப்திலுள்ள தலைச்சன்கள் அனைத்தை
யும்
காமின் கூடாரங்களிலுள்ள தலைப்
பேறான ஒவ்வொன்றையும் அழித்
தார்.

52 பிறகு தம் மக்களை ஆடுகளைப்போல
வழி நடத்திச் சென்றார்;
அவர்களைப் பாலைநிலத்தில் மந்தையைப்
போல நடத்திக் கொண்டுபோனர்.
53 பாதுகாப்புடன் அவர்களை வழிநடத்
தினர்;
அவர்களுக்கு அச்சம் என்பதே இல்லை;
அவர்களுடைய எதிரிகளையோ கடல்
விழுங்கிவிட்டது.

78:18-31 யாத் 16:2-15. எண். 11:4-23, 31-35. 78:37 திருத்தூது. 8:21. 78:44 யாத். 7:17-21. 78:45 யாத். 8:20-24; யாத் 8;1-6. 78:46 யாத். 10:12-15. 78:47,48 யாத். 9:22-25. 78:51 யாத். 12:29. 78:52 யாத். 13:17-22. 78:53 யாத். 14:26-28.

54 அவர் தமது புனித நாட்டுக்கு,
தமது வலக்கை வென்று அடைந்த மலைக்கு,
அவர்களை அழைத்து வந்தார்.
55 அவர்கள் சென்ற வழியிலிருந்த பிற இனத்தவரை விரட்டிவிட்டார்,
நாட்டை அளந்து, பங்கிட்டு, அவர்கள் கூடாரங்களில் இஸ்ரவேல் குலங்களைக் குடியேற்றினர்.

56 ஆனாலும் அவர்கள் உன்னதமான கடவுளைச் சோதித்துப் பார்த்தார்கள்;
அவரை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார்கள்; அவருடைய கட்டளைகளைக் கடைப்பிடிக்கவில்லை.
57 அவர்கள் மூதாதையரைப்போல வழி தவறிச் சென்றார்கள்;
நம்பிக்கைக்குரியவர்களாய் நடந்துகொள்ளவில்லை;
கோணலான வில்லினின்று செல்லும் அம்புபோல, நம்பமுடியாத மக்களானார்கள்.
58 மேடைகளில் பீடம் கட்டி அவருக்குச் சினமூட்டினார்கள்;
சிலைகளை வழிபட்டு அவருக்கு எரிச்சலை உண்டாக்கினார்கள்.
59 கடவுள் அதை அறிந்து சினந்தெழுந்தார்;
இஸ்ரவேலை அறவே வெறுத்தார்.
60 சீலோவிலுள்ள தம் உறைவிடத்தை விட்டு அகன்றார்;
மனிதரிடையே தாம் அமைத்திருந்த அந்தக் கூடாரத்தை விட்டு நீங்கினார்.
61 தம் வலிமையைச்* சிறைப்படுதலுக்கும் தம் மாட்சிமையைப்* பகைவரின் கைக்கும் ஒப்புக்கொடுத்தார்.
62 தம் மக்கள்மீது கடுஞ்சினங்கொண்டார்;
தமக்குச் சொந்தமானவர்களை வாளுக்கு இரையாகும்படி செய்தார்.
63 அவர்களுடைய இளைஞரை நெருப்புச் சுட்டெரித்தது;
அவர்களுடைய கன்னிகளை மணந்துகொள்ள எவருமில்லை.
64 அவர்களுடைய ஆசாரியர் வாளால் வீழ்த்தப்பட்டனர்;
அவர்களுடைய கைம்பெண்கள் அவர்களுக்காகத் துக்கங் கொண்டாடவில்லை.

65 அப்பொழுது ஆண்டவர் தூக்கத்திலிருந்து எழுவதுபோல எழுந்தார்;
மதுவால் ஊக்கம் பெற்றெழும் வீரனைப்போல எழுந்தார்.
66 தம் பகைவரைப் பின்புறத்தில் அடித்தார்;†
அவர்களை என்றுமழியா வெட்கக் கேட்டிற்கு உள்ளாக்கினார்.
67 அவர் யோசேப்பின் குலத்தினரைப் புறக்கணித்தார்.
எப்பிராயீம் கோத்திரத்தைத் தேர்ந்துகொள்ளவில்லை.
68 யூதாவின் கோத்திரத்தையும்
தமக்கு விருப்பமான சீயோன் மலையையும் அவர் தேர்ந்து கொண்டார்.
69 அங்கே தமது தூய ஆலயத்தை விண்ணக வீட்டைப்போலக் கட்டி எழுப்பினார்;
அதைப் பூமியைப்போல என்றும் நிலைத்திருக்கும்படி கட்டி எழுப்பினார்.

70 தாவீதைத் தம் தாசனாயிருக்கும்படி தேர்ந்துகொண்டார்;
ஆட்டுக் கொட்டில்களில் இருந்த அவரைத் தேர்ந்தெடுத்தார்.
71 கறவை ஆடுகளைக் கவனித்து வந்த அவரை யாக்கோபின் மரபினராகிய தம் மக்களுக்கு,
தமக்குச் சொந்தமான இஸ்ரவேல் மக்களுக்கு,
ஆயராயிருக்கும்படி அழைத்தார்.
72 அவர் அவர்களை நேர்மையான உள்ளத்தோடு மேய்த்து,
திறமைவாய்ந்த கைகளினால் அவர்களை நடத்திச் சென்றார்.

### நாட்டின் விடுதலைக்காக மன்றாடுதல்
(ஆசாபின் சங்கீதம்)

**79** கடவுளே, பிற இனத்தவர் உமது சொந்த நாட்டில் புகுந்தனர்;
உமது தூய ஆலயத்தைத் தீட்டுப்படுத்தினர்; எருசலேமை மண் மேடாக்கினர்.
2 உம்முடைய ஊழியரின் பிணங்களை வானத்துப் பறவைகளுக்கு இரையாகக் கொடுத்தனர்;
உம்முடைய அடியாரின் உடல்களைக் காட்டுவிலங்குகளுக்கு இரையாகக் கொடுத்தனர்.
3 அவர்கள் இரத்தத்தை எருசலேமைச் சுற்றிலும் தண்ணீரைப் போல இறைத்தார்கள்;

* வலிமை, மாட்சிமை : உடன்படிக்கைப் பெட்டியைக் குறிக்க வந்தன.
†மூலநோய் வரச்செய்தார்.
78:55 யோசுவா11:16-23. 78:56 நீதிபதி. 2:11-15. 78:60 யோசுவா 18:1; எரே. 7:12-14; 26:6. 78:61 1 சாமு. 4:4-22. 78:70,71 1 சாமு. 16:11,12;2 சாமு. 7:8; 1 வரலாறு. 17:7. 79:1 2 அர. 25:8-10; 2 வரலாறு. 36:17-19; எரே. 52:12-14.

அவர்களை அடக்கம் செய்ய எவருமில்லை.
4 எங்கள் அயலாரின் நிந்தைக்கு நாங்கள் ஆளானோம்;
எங்களைச் சுற்றிலுமுள்ள மக்களின் கேலிக்கும் ஏளனத்துக்கும் இலக்கானோம்.

5 ஆண்டவரே, எவ்வளவு காலம் நீர் எங்கள்மீது சினங் கொண்டவராகவே இருப்பீர்? என்றென்றைக்குமா?
உமது எரிச்சல் எப்போதும் நெருப்பைப் போல எரிந்து கொண்டே இருக்குமா?
6 உம்மை ஏற்காத இனத்தவர்மேல் உமது வெஞ்சினம் விழச் செய்யும்;
உம்மை வழிபடாத நாட்டினரிடம் உமது சீற்றத்தைக் காட்டும்;
7 ஏனெனில், அவர்கள் யாக்கோபின் மரபினரைக் கொன்றார்கள்;
அவர்கள் வாழும் இடத்தைப் பாழாக்கினார்கள்.

8 எங்கள் மூதாதையரின் குற்றங்களுக்காக எங்களைத் தண்டியாதேயும்;
விரைவிலேயே எங்களை இரக்கத்தோடு சந்தித்தருளும்;
நாங்கள் மிகவும் தாழ்த்தப்பட்டிருக்கிறோம்.
9 எங்கள் மீட்பராகிய கடவுளே, உமது திருப்பெயரின் மாட்சிமையை முன்னிட்டு எங்களுக்கு உதவி செய்தருளும்;
உமது திருப்பெயரை முன்னிட்டு எங்களைக் காத்தருளும்; எங்கள் பாவங்களை மன்னித்தருளும்.
10 "அவர்களுடைய கடவுள் எங்கே?" என்று பிற இனத்தவர் கேட்பானேன்?
உம்முடைய ஊழியரின் இரத்தத்தைச் சிந்தியதற்காக நீர் அவர்களை எங்கள் கண்காணப் பழிதீர்த்தருளும்.

11 சிறைப்பட்டவர்களின் ஏங்கல் உமது முன்னிலையில் கவனம் பெறுவதாக;
கொலைத் தீர்ப்புப் பெற்றவர்களை உமது தோள் வலிமையால் விடுவித்தருளும்.
12 ஆண்டவரே, எங்கள் அயலார் உம்மைப் பழித்ததற்காக,
ஏழுமடங்கு தண்டனையை அவர்கள் அனுபவிக்கச் செய்யும்.
13 அப்பொழுது உம்முடைய மக்களும் உமது மேய்ச்சல் நில ஆடுகளுமாகிய நாங்கள் என்றென்றும் உமக்கு நன்றி செலுத்துவோம்;
தலைமுறை தலைமுறையாக உமது புகழை எடுத்துரைப்போம்.

## நாட்டின் விடுதலைக்காக மன்றாடுதல்

(பாடகர் தலைவனுக்கு; இராகம் : சோஷனீம் ஏடுத்து; ஆசாபின் சங்கீதம்)

**80** இஸ்ரவேலின் ஆயரே, யோசேப்பை ஆட்டு மந்தைபோல நடத்துகிறவரே, எங்களுக்குச் செவிசாய்த்தருளும்;
கேருபுகள்மேல் வீற்றிருக்கிறவரே, உமது அருளொளியை வீசச்செய்யும்.
2 எப்பிராயீம், பென்யமீன், மனாசே என்பவர்கள்முன் உமது வல்லமையை விளங்கச் செய்யும்;
எங்களை மீட்க எழுந்து வாரும்.

3 கடவுளே, எங்களை முன்னிலைக்கு மீண்டும் கொண்டு வாரும்;
எங்களுக்கு மீட்புக் கிடைக்க இன்முகம் காட்டியருளும்.

4 வெற்றி வேந்தரான கடவுளாகிய ஆண்டவரே, உம்முடைய மக்களின் விண்ணப்பத்திற்குச் செவிகொடாமல்,
எவ்வளவு காலம் சினங்கொண்டிருப்பீர்?
5 கண்ணீராகிய உணவை எங்களுக்குக் கொடுத்தீர்;
கண்ணீரையே எங்களுக்குப் பேரளவில் குடிக்கவும் கொடுத்தீர்.
6 அயல் நாட்டினர் சண்டையிட்டுக் கொள்ள எங்களைக் காரணராயிருக்கச் செய்தீர்;
எங்கள் எதிரிகளின் ஏளனத்துக்கு நாங்கள் இலக்கானோம்.

7 வெற்றிவேந்தரான கடவுளே, எங்களை முன்னிலைக்கு மீண்டும் கொண்டு வாரும்;
எங்களுக்கு மீட்புக் கிடைக்க இன்முகம் காட்டியருளும்.

8 நீர் எகிப்திலிருந்து திராட்சைச் செடி ஒன்றைக் கொண்டு வந்தீர்;
பிற இனத்தவரைத் துரத்திவிட்டு, அவர்கள் நாட்டில் அதை நட்டுவைத்தீர்.
9 அதற்குத் தேவையான இடத்தை நீர் ஏற்படுத்திக் கொடுத்தீர்;
அது வேரூன்றி நாடெங்கும் படர்ந்தது.
10 அதன் நிழல் மலைகளை மூடிற்று;
அதன் கிளைகள் வளர்ந்தோங்கிய கேதுரு மரங்களை மூடிற்று.
11 அதன் கொடிகள் கடல் வரைக்கும் படர்ந்தன;
அதன் தளிர்கள் ஆறுவரைக்கும் பரவின.

80:1 யாத். 25:22.

12 நீர் அதன் மதிற்சுவரை ஏன் தகர்த்து விட்டீர்?
அவ்வழியாகச் செல்வோர் அனைவரும் அதன் பழத்தைப் பறிக்கிறார்களே.
13 காட்டுப் பன்றிகள் அதை அழிக்கின்றன;
வனவிலங்குகள் அதைத் தின்கின்றன.

14 வெற்றி வேந்தரான கடவுளே கருணை காட்டும்; வானத்திலிருந்து கண்ணோக்கியருளும்;
இந்தத் திராட்சைச் செடியை வந்து பாரும்.
15 உமது வலக்கை நட்டுவைத்ததைக் காத்தருளும்;
உமக்கென்றே நீர் வளர்த்துவந்த செடியைக் காப்பாற்றியருளும்.

16 அவர்கள் அதற்குத் தீ மூட்டினார்கள்;
அதை வெட்டித் தள்ளிவிட்டார்கள்;
உமது முகத்தின் அச்சுறுத்தலால்
அவர்கள் அழிந்துபோவார்களாக,
17 உமது வலப்பக்கம் இருக்கும் மனிதனை உமது கை காப்பதாக;
உமக்கென்றே நீர் உறுதிபெறச் செய்த மனுமைந்தனைக் காப்பதாக.
18 இனி நாங்கள் உம்மை விட்டுப் போக மாட்டோம்;
எங்களை உயிர்ப்பியும்; நாங்கள் உமது திருப்பெயரைத் தொழுவோம்,
19 வெற்றிவேந்தரான கடவுளாகிய ஆண்டவரே, எங்களை முன்னிலைக்கு மீண்டும் கொண்டுவாரும்;
எங்களுக்கு மீட்புக் கிடைக்க இன்முகம் காட்டியருளும்.

### பண்டிகைப் பாடல்

(பாடகர் தலைவனுக்கு; இராகம் : கித்தீத்து; ஆசாபின் சங்கீதம்)

81 நமது வலிமையாகிய கடவுளை ஆரவாரத்தோடு பாடுங்கள்;
யாக்கோபின் கடவுளை ஆர்ப்பரிப்புடன் புகழுங்கள்.
2 இன்னிசை எழுப்புங்கள்; மத்தளம் கொட்டுங்கள்;
சுரமண்டலத்திலும் வீணையிலும் இனிமையான பாடல்களை வாசியுங்கள்.
3 அமாவாசையில் எக்காளம் ஊதுங்கள்;
முழுமதி நாளாகிய நமது பண்டிகை நாளிலும் எக்காளம் ஊதுங்கள்.
4 இது இஸ்ரவேல் மக்களுக்குரிய சட்டம்;
யாக்கோபின் கடவுள் அமைத்த ஏற்பாடு.
5 அவர் எகிப்து நாட்டை எதிர்த்துச் சென்றபோது,
யோசேப்பின் மரபினருக்கு இவ்வாறு கட்டளையிட்டார்.

முன்பின் அறியாத குரல் ஒன்று இவ்வாறு கூறியதைக் கேட்டேன் :
6 "உங்கள் தோளினின்று சுமையை நீக்கினேன்;
கூடைகளை உங்கள் கைகள் கீழே போட்டுவிடலாம்.
7 இக்கட்டுக் காலத்தில் என்னை நோக்கி மன்றாடினீர்கள்; நான் உங்களைத் தப்புவித்தேன்;
இடிமுழக்கம் உண்டாகும் மேகத்திருந்து உங்களுக்குச் செவிகொடுத்தேன்;
மெரிபாவின் நீரூற்றண்டையில் உங்களைச் சோதித்துப் பார்த்தேன். (சேலா)

8 "என் மக்களே, கேளுங்கள்; நான் எச்சரிப்புரை ஒன்று கூறுகிறேன்;
இஸ்ரவேல் மக்களே, நீங்கள் எனக்குச் செவிசாய்ப்பீர்களானால் எவ்வளவோ நலமாயிருக்கும்.
9 உங்களிடையே வேறொரு தெய்வம் இருத்தலாகாது.
நீங்கள் பிறிதொரு தெய்வத்தைத் தொழக்கூடாது.
10 உங்களை எகிப்து நாட்டிலிருந்து வெளியேறச் செய்த கடவுளாகிய ஆண்டவர் நானே;
உங்கள் வாயை விரிவாகத் திறவுங்கள்;
நான் அதை நிரப்புவேன்.

11 என் மக்களோ என் குரலுக்குச் செவி கொடுக்கவில்லை;
இஸ்ரவேல் மக்கள் எனக்குக் கீழ்ப்படியவில்லை.
12 ஆகையால் அவர்களது பிடிவாதமான போக்கிற்கு நான் அவர்களை விட்டுவிட்டேன்; தங்கள் விருப்பம்போல் செய்யும்படி அவர்களுக்கு இடமளித்தேன்.
13 என் மக்கள் எனக்குச் செவிகொடுப்பார்களானால் எவ்வளவோ நன்றாயிருக்கும்;
இஸ்ரவேல் மக்கள் நான் காட்டும் வழியில் நடப்பார்களானால் எவ்வளவோ நலமாயிருக்கும்.
14 நான் விரைவிலேயே அவர்கள் எதிரிகளை அடக்குவேன்;
என் கை அவர்கள் பகைவரை எதிர்த்துத் தாக்கும்.
15 ஆண்டவரைப் பகைக்கிறவர்கள் அவருக்கு அஞ்சி அடங்குவார்கள்;

81:3 எண். 10:10. 81:7 யாத். 17:7; எண். 20:13. 81:9,10 யாத். 20:2,3; உபா. 5:6,7.

அவர்கள் பெறும் தண்டனைத் தீர்ப்பு
என்றென்றும் நிலைத்திருக்கும்.
16 நயமான கோதுமையை உங்களுக்கு
உணவாகக் கொடுப்பேன்;
மலைத்தேனை வேண்டுமட்டும் கொடுப்
பேன்.''

### அரசர்க்கெல்லாம் அரசராகிய கடவுள்

*(ஆசாபின் சங்கீதம்)*

**82** தெய்வ சபையில் கடவுள் எழுந்
தருளியிருக்கிறார்;
தேவர்கள் கூட்டத்தில் அவர் விசாரணை
செய்கிறார்.
2 எவ்வளவு காலம் நீங்கள் நேர்மையற்ற
தீர்ப்பு வழங்குவீர்கள்?
எவ்வளவு காலம் பொல்லாருக்குச்
சலுகை காட்டுவீர்கள்? (சேலா)
3 எளியோனுக்கும் திக்கற்றவனுக்கும் நீதி
வழங்குங்கள்;
சிறுமைப்படுகிறவனுக்கும் துணையற்ற
வனுக்கும் நியாயம் கிடைக்கும்படி
செய்யுங்கள்.
4 எளியோருக்கும் வறியோருக்கும் பாது
காப்பளியுங்கள்;
பொல்லாரின் கைக்கு அவர்களைத்
தப்புவியுங்கள்.

5 ''உங்களுக்கு அறிவுமில்லை; உணர்வு
மில்லை; நீங்கள் இருளில் இருக்கிறீர்
கள்;
உலக சமுதாயத்தின் அடிப்படையே
ஆட்டம் கண்டுவிட்டது.
6 நீங்கள் தேவர்கள் எனச் சொன்னேன்;
நீங்கள் எல்லாரும் உன்னதமானவரின்
மக்கள் என்றேன்.
7 என்றாலும், நீங்கள் மனிதரைப்போலவே
மடிவீர்கள்;
உலகத் தலைவர்களுள் ஒருவன் மாள்வது
போலவே மாள்வீர்கள்.''

8 கடவுளே, உலகில் எழுந்தருளும்; அதில்
நீரே ஆட்சி செலுத்தும்;
ஏனெனில், எல்லா நாட்டினரும்
உமக்கே சொந்தம்.

### எதிரிகளை முறியடிக்கும்படி மன்றாடுதல்

*(ஆசாபின் சங்கீதம்)*

**83** கடவுளே, மவுனமாயிராதேயும்,
பேசாதிராதேயும்;
கடவுளே, அமைதியாயிராதேயும்.
2 இதோ, உம்முடைய எதிரிகள் அமளி
செய்கிறார்கள்;
உம்முடைய பகைஞர்கள் தலைதூக்கு
கிறார்கள்.
3 உம்முடைய மக்களுக்கு விரோதமாகச்
சதி செய்கிறார்கள்;
உமது பாதுகாப்பில் இருக்கிறவர்
களுக்கு விரோதமாகச் சூழ்ச்சி செய்
கிறார்கள்.
4 ''வாருங்கள், அவர்களை ஒழித்து
விடுவோம்; அவர்கள் இனிமேல் இல்
லாதபடி செய்துவிடுவோம்;
இஸ்ரவேல் என்கிற பெயரே இனி
எவருடைய நினைவிலும் இராதபடி
செய்துவிடுவோம்'' என்கிறார்கள்.

5 அவர்கள் ஒருமனப்பட்டுச் சதி செய்
கிறார்கள்;
உம்மை எதிர்க்க ஓர் ஒப்பந்தம் செய்து
கொண்டார்கள்.
6 ஏதோமின் மக்களும் இஸ்மவேலரும்
மோவாபியரும் ஆகாரியரும்
7 கேபாலரும் அம்மோனியரும் அமலேக்
கியரும், தீருவின் மக்களும் பெலிஸ்
தரும்
இவ்வாறு ஒப்பந்தம் செய்துகொண்
டார்கள்.
8 லோத்தின் மரபினருக்குத் துணை
செய்வதற்காக அசீரியரும் இப்போது
அவர்களோடு சேர்ந்துகொண்டார்
கள். (சேலா)

9 மிதியானியருக்குச் செய்ததுபோலவும்
கீசோன் நீரோடையருகில் சிசெரா,
யாபீன் என்பவர்களுக்குச் செய்தது
போலவும் அவர்களுக்கும் செய்யும்.
10 அவர்கள் எந்தோரில் அழிக்கப்பட்டார்
கள்;
அவர்கள் உடல்கள் நிலத்துக்கு உர
மாயின.
11 நீர் ஓரேபுவையும் சேபுவையும் நடத்
தினதுபோல அவர்களுடைய படைத்
தலைவர்களையும் நடத்தியருளும்;
சேபாவையும் சல்முனாவையும் நடத்
தினதுபோல அவர்களுடைய எல்லாத்
தலைவர்களையும் நடத்தியருளும்.
12 ''கடவுளின் நிலத்தை எங்களுக்குச்
சொந்தமாக எடுத்துக் கொள்
வோம்'' என்று சொன்னார்களே.

13 என் கடவுளே, உருண்டோடும் சருக்
கைப்போல அவர்களை ஓடச்செய்யும்;
காற்றில் பறக்கும் பதரைப்போல அவர்
களைக் கலைந்தோடச் செய்யும்,
14 காட்டை எரிக்கும் நெருப்புப்போலவும்
மலைகளை எரித்தழிக்கும் தீப்போலவும்
15 நீர் உமது புயலால் அவர்களைத் துரத்தி
விடும்;

82:6 யோ. 10:34. 83:9 நீதிபதி. 4:6-22;7:1-23. 83:11 நீதிபதி. 7:25; 8:12.

உமது பெருங்காற்றினல் அவர்களைத்
திகிலடையச் செய்யும்.
16 ஆண்டவரே, மானக்கேட்டினல் அவர்
கள் தங்கள் முகத்தை மூடிக்கொள்
ளச் செய்யும்;
அப்பொழுது அவர்கள் உமது திருப்
பெயரை நாடுவார்கள்.
17 அவர்கள் என்றென்றும் வெட்கிக்
கலங்குவார்களாக;
நாணமுற்று அழிந்து போவார்களாக.
18 ஆண்டவர் என்னும் பெயரையுடைய
உம்மை அவர்கள் அறிந்துகொள்வார்
களாக;
உலகனைத்தின்மீதும் ஆட்சி செலுத்து
கிறவர் நீரே என்பதைத் தெரிந்து
கொள்வார்களாக.

### திருக்கோவில் மீதுள்ள நாட்டம்

(பாடகர் தலைவனுக்கு; இராகம்:
கித்தீத்து; கோராகு சங்கீதம்)

**84** வெற்றி வேந்தரான ஆண்டவரே,
உமது ஆலயம் எவ்வளவு அருமை
யானது!
2 ஆண்டவரின் ஆலயப் பிராகாரங்கள்
மீதுள்ள தேட்டத்தால் என் ஆன்மா
ஏங்கிப்போயிற்று;
என்றுமுள்ள கடவுளை நினைத்து என்
உள்ளமும் உடலும் களிப்புடன் ஆர்ப்
பரிக்கின்றன.

3 வெற்றி வேந்தரான ஆண்டவரே, என்
கடவுளே, என் அரசரே, உம்முடைய
பீடங்கள் இருக்கும் இடங்களில் வீடு
கட்ட அடைக்கலான் குருவிகளுக்கு
இடம் கிடைத்தது;
தங்கள் குஞ்சுகளுக்குக் கூடுகட்டச்
சிட்டுக்குருவிகளுக்கும் இடம் கிடைத்
தது.

4 உமது ஆலயத்தில் தங்கியிருப்போர் நற்
பேறு பெற்றோர்;
அவர்கள் எந்நாளும் உம்மைப் புகழ்ந்து
போற்றிக்கொண்டேயிருப்பார்கள்.

5 உம்மிடமிருந்து வலிமை பெற்றுச்
சீயோன் மலையில் ஏறிச் செல்ல ஆவ
லுடையோர் நற்பேறு பெற்றோர்;
6 வறண்ட பள்ளத்தாக்கை அவர்கள்
கடந்துசெல்கையில் அதை நீரூற்றுகள்
உள்ள இடமாயிருக்கும்படி செய்
கிறார்கள்.
முதலில் பெய்யும் மழை அதை நீர்
நிலைகள் நிறைந்த இடமாக்கும்.
7 அவர்கள் செல்கையில் மேலும் மேலும்
வலிமை பெறுவார்கள்;
பிறகு எல்லாரும் சீயோனில் கடவுள்
முன்னிலையில் காணப்படுவார்கள்.

8 வெற்றி வேந்தரான கடவுளாகிய ஆண்
டவரே, என் விண்ணப்பத்திற்குச்
செவிகொடுத்தருளும். (சேலா)
9 எங்கள் கேடயமாகிய கடவுளே, எங்
களைக் கண்ணோக்கியருளும்;
நீர் தேர்ந்தெடுத்தவர்மீது உமது அருட்
பார்வையைத் திருப்பும்.
10 உமது ஆலயப் பிராகாரத்தில் ஒருநாள்
இருப்பது, வேறோரிடத்தில் ஆயிரம்
நாள் வாழ்வதைவிட மேலானது,
பொல்லாரின் கூடாரங்களில் அவர்
களோடு வாழ்வதைவிட,
என் கடவுளின் ஆலய வாயிற்படியில்
காவற்காரனயிருப்பதையே தேர்ந்து
கொள்வேன்.
11 கடவுளாகிய ஆண்டவர் நமக்குக் கதிரவ
னும் கேடயமுமாயிருக்கிறார்; ஆண்ட
வர் அருளையும் மேன்மையையும்
அளிப்பார்;
நேர்மையாக நடப்பவர்களுக்கு நன்மை
யான எல்லாவற்றையும் வழங்கு
வார்.
12 வெற்றி வேந்தரான ஆண்டவரே,
உம்மை நம்பும் மனிதன் நற்பேறு
பெற்றவன்.

### நாட்டின் நலத்திற்காக மன்றாடுதல்

(பாடகர் தலைவனுக்கு; கோராகு
சங்கீதம்)

**85** ஆண்டவரே, நீர் உமது நாட்டிற்குக்
கருணை காட்டினீர்;
யாக்கோபு மரபினரின் துன்ப நிலையை
மாற்றினீர்.
2 உம்முடைய மக்களின் குற்றத்தை மன்
னித்தீர்;
அவர்களுடைய எல்லாப் பாவங்களை
யும் துடைத்தழித்து விட்டீர். (சேலா)
3 அவர்கள்மீது சினங்கொள்வதை நிறுத்
தினீர்;
சீற்றங்கொள்வதை விலக்கினீர்.

4 எங்கள் மீட்பராகிய கடவுளே, எங்களை
முன்னிலைக்கு மீண்டும் கொண்டு
வாரும்;
எங்கள்மீது உமக்கு இருந்த சினம் நீங்
கட்டும்.
5 எங்கள்மீது எப்போதுமா சினங்கொண்
டிருப்பீர்?
தலைமுறை தலைமுறையாகவா உமது
சினம் நீடித்திருக்கும்படி செய்வீர்?
6 உம்முடைய மக்களாகிய நாங்கள்
உம்மை மகிழ்ச்சியோடு போற்றும்
படி,
எங்களை மீண்டும் உயிர்ப்பிக்கமாட்
டீரோ?
7 ஆண்டவரே, உமது பேரருளை எங்களுக்
குத் தந்தருளும்;

நீர் அளிக்கும் விடுதலையை நாங்கள்
அடையச் செய்யும்.

8 ஆண்டவராகிய கடவுள் உரைப்பதைக்
கேட்கிறேன் :
நாம் நமது மடமையான வழிக்குத்
திரும்பிப்போகாதிருந்தால்,
அவர் தம் மக்களாகிய நமக்கு, தம்
அடியாராகிய நமக்கு,
சமாதானம் அருளுவதாக வாக்களிக்
கிறார்.
9 அவருக்கு அஞ்சி நடப்போரை அவர்
மீட்டுக்கொள்வார் என்பது திண்ணம்;
அதனால் நம் நாட்டில் அவரது மாட்
சிமை தங்கும்.
10 அருளும் உண்மையும் ஒன்றையொன்று
சந்தித்தன;
நீதியும் சமாதானமும் ஒன்றையொன்று
தழுவின.
11 உண்மை பூமியிலிருந்து முளைத்தெழும்;
நீதி வானத்திலிருந்து கீழ்நோக்கிப்
பார்க்கும்.
12 ஆண்டவர் நன்மையானதைத் தருவார்;
நமது நாடும் நல்விளைச்சலைத் தரும்.
13 நீதி அவருக்கு முன்னே செல்லும்;
சமாதானம் அவருடைய அடிச்சுவடு
களைப் பின்தொடரும்.

**உதவிக்காக மன்றுடுதல்**

(தாவீதின் மன்றாட்டு)

**86** ஆண்டவரே, செவிசாய்த்து என் மன்
றாட்டைக் கேட்டருளும்;
நான் எளியவன், வறிய நிலையிலிருப்
பவன்.
2 என்னைக் காத்தருளும்; நான் உம்
முடைய அடியான்;
என் கடவுளே, உம்மை நம்பியிருக்கிற
உம் ஊழியனைக் காப்பாற்றியருளும்.

3 ஆண்டவரே, எனக்கு இரங்கும்,
நாளெல்லாம் உம்மை நோக்கி மன்றாடு
கிறேன்.
4 அடியேனை மகிழச் செய்யும்;
ஆண்டவரே, உமக்கு நேராக என் உள்
ளத்தைத் திருப்பி வேண்டுதல் செய்
கிறேன்.
5 ஆண்டவரே, நீர் நல்லவர், மன்னிப்
பவர்;
உம்மை நோக்கி மன்றாடுகிற எல்லாருக்
கும் அருளிரக்கம் காட்டுகிறவர்.

6 ஆண்டவரே, என் மன்றாட்டிற்குச் செவி
சாய்த்தருளும்,
என் விண்ணப்பக் குரலைக் கவனித்
தருளும்.

7 இக்கட்டு நாளில் உம்மை நோக்கி மன்
றாடுவேன்;
நீர் எனக்குச் செவிசாய்ப்பீர்.
8 ஆண்டவரே, தேவர்களுள் உமக்கு
நிகரானவர் எவருமில்லை;
உம்முடைய செயல்களுக்கு ஒப்பானவை
யுமில்லை.
9 ஆண்டவரே, நீர் உண்டாக்கின எல்லா
இனத்தவரும் உம்மைப் பணிவர்;
உமது திருப்பெயரின் மாட்சிமையை
விளங்கச் செய்வர்.
10 நீர் மகத்துவமுள்ளவர், வியக்கத்தக்க
செயல்களைச் செய்பவர்;
நீர் ஒருவரே கடவுள்.
11 ஆண்டவரே, உமது வழியை எனக்குக்
கற்பியும்; நான் உமக்கு உண்மை
யாக நடப்பேன்;
என் மனத்தை ஒருமுகப்படுத்தும்; நான்
உமது திருப்பெயருக்கு அஞ்சி நடப்
பேன்.
12 என் கடவுளாகிய ஆண்டவரே, உம்மை
என் முழு இதயத்தோடும் புகழ்ந்து
போற்றுவேன்;
உமது திருப்பெயரை எந்நாளும் மாட்
சிமையோடு விளங்கச் செய்வேன்.
13 என் மீதுள்ள உமது அருள் மிகப்பெரிது;
ஆழமான பாதாளத்திலிருந்து என்னை
விடுவித்தீர்.
14 கடவுளே, இறுமாப்புடையோர் என்னை
எதிர்க்க வருகின்றனர்;
கொடியோர் ஒன்றுகூடி என் உயிரைப்
போக்கப் பார்க்கின்றனர்;
அவர்களுக்கு உம்மைப் பற்றிய நினைவே
இல்லை.
15 ஆண்டவரே, நீர் மனவுருக்கமும் இரக்
கமும் உள்ளவர்;
நீர் பேரருளும் உண்மையுமுள்ள
கடவுள்.
16 என்னைக் கண்ணோக்கி எனக்கு இரங்கி
யருளும்;
உமது பாதுகாப்பை அடியேனுக்கு
அருளும்;
உம்முடைய அடியாளின் மகனைக் காப்
பாற்றும்.
17 ஆண்டவரே, நீர் எனக்குத் துணை
நின்று என்னைத் தேற்றுகிறதை என்
பகைஞர் கண்டு வெட்கப்படும்படி,
உமது கருணையைப் பற்றிய ஓர் அடை
யாளத்தை எனக்குக் காட்டியருளும்.

**சீயோனின் மாட்சி**

(கோராகு சங்கீதம்)

**87** கடவுள் தம் நகரைப் புனித மலையில்
அமைத்தார்.
2 யாக்கோபின் எல்லாக் குடியிருப்புகளை
யும்விட,

86:9 திருவெளி. 15:4.

சீயோன் நகரவாயில்களையே ஆண்டவர்
மிகவும் விரும்புகிறார்.
3 கடவுளின் நகரே, உன்னைப்பற்றி மேன்
மையான காரியங்கள் சொல்லப்
படுகின்றன. (சேலா)

4 இராகாபும்* பாபிலோனும் என்னை
அறிந்த நாடுகளைச் சேர்ந்தவை
என்று குறித்துக்கொள்வேன்;
இதோ, பெலிஸ்தியர், தீரு, எத்தி
யோப்பியா நாடுகளைப்பற்றிக் கூறும்
போது,
''இன்னான் அங்கே பிறந்தான்'' என்று
சொல்வதுண்டு.
5 ஆனால் சீயோனைப்பற்றிக் கூறும்போது,
''இங்கேதான் எல்லாரும் பிறந்தனர்''
என்று சொல்லப்படும்;
உன்னதமானவர் தாமே அதை உறுதி
யாக நிற்கச் செய்வார்.
6 அனைத்து நாட்டினரின் பெயர்களையும்
ஆண்டவர் பதிவு செய்யும்போது,
எல்லாருமே அங்கே பிறந்ததாகக் குறித்
துக்கொள்வார்.
7 அங்கே இருக்கும் மக்கள் ஆடிப்பாடி,
''எங்கள் எல்லோருடைய பிறப்பிடமும்
நீயே'' என்பார்கள்.

### உதவிக்காக மன்றாடுதல்

(கோராகு சங்கீதம்; பாடகர் தலைவ
னுக்கு; இராகம்: மகலாத்து லயனோத்து;
எஸ்ராகியனாகிய ஏமானின் பாடல்)

**88** கடவுளாகிய ஆண்டவரே, என்
மீட்பரே, பகலில் மன்றாடுகிறேன்;
இரவில் உமது முன்னிலையில் புலம்பு
கிறேன்.
2 என் விண்ணப்பம் உமது முன்னிலையில்
ஏற்கப்படுவதாக;
என் மன்றாட்டுக்குச் செவிசாய்த்தருளும்.

3 எனக்கு நேர்ந்த துன்பங்கள் மிகப்பல;
என் உயிர் பாதாளத்தைக் கிட்டிவிட்
டது.
4 நான் குழியில் இறங்குகிறவர்களோடு
எண்ணப்படுகிறேன்;
வலுவற்ற மனிதனைப்போலானேன்;

5 இறந்தவர்களுள் ஒருவனெனக் கைவிடப்
பட்டேன்;
வெட்டுண்டு கல்லறைகளில் கிடக்கிறவர்
கள்போலானேன்;
இனிமேல் நீர் அவர்களை நினைக்கப்
போவதில்லை;
அவர்கள் உமது பாதுகாப்புக்கு விலக்
கப்பட்டார்கள்.

6 என்னைப் பாதாளக் குழியில் தள்ளிவிட்
டீர்;
இருட்டும் ஆழமுமான இடத்தில் வைத்
தீர்.
7 உமது சினம் என்னை அழுத்துகிறது;
அதன் அலைகள் எல்லாவற்றினாலும்
என்னை வருத்துகிறீர். (சேலா)

8 எனக்கு அறிமுகமானவர்களை என்னை
விட்டு விலகச் செய்தீர்.
அவர்களுக்கு என்மீது வெறுப்பு உண்
டாகும்படி செய்தீர்;
நான் வெளியேற முடியாதபடி அடை
பட்டிருக்கிறேன்.
9 துயரத்தால் என் கண்பார்வை மங்
கிற்று;
ஆண்டவரே, நாள்தோறும் உம்மை
நோக்கி மன்றாடுகிறேன்;
கைகூப்பி உம்மிடம் வேண்டுதல் செய்
கிறேன்.

10 இறந்தவர்களுக்காகவா நீர் வியக்கத்
தக்க செயல்களைச் செய்கிறீர்?
மாண்டுபோனவர்கள் எழுந்து உம்மைப்
போற்றுவார்களா? (சேலா)
11 கல்லறைகளில் உமது பேரருள் எடுத்
துரைக்கப்படுமா?
பாதாளக்குழியில் உமது உண்மை
விவரிக்கப்படுமா?
12 இருட்டுலகில் உம்முடைய வியக்கத்
தக்க செயல்கள் அறிவிக்கப்படுமா?
மறதி நிலவும் அவ்வுலகில் உமது நீதி
தெரிவிக்கப்படுமா?

13 ஆண்டவரே, நான் உம்மை நோக்கி
மன்றாடுகிறேன்;
காலைதோறும் என் விண்ணப்பம் உமது
முன்னிலையில் வரும்.
14 ஆண்டவரே, ஏன் என்னைப் புறக்கணித்
துத் தள்ளிவிடுகிறீர்?
ஏன் உமது முகத்தை எனக்கு மறைக்
கிறீர்?
15 இளமை முதல் நான் சிறுமைப்பட்டு
வருகிறேன், மடியும் நிலையில் இருக்
கிறேன்;
உம்மால் வந்த திகில்களைத் தாங்கிக்
கொண்டேன்; இப்போதோ சோர்ந்து
போனேன்.
16 உமது சினம் என்னைப் புரட்டித் தள்ளு
கிறது;
அச்சந்தரும் உம் தாக்குதல்கள் என்னை
மடியச் செய்கின்றன.
17 அவை நாளெல்லாம் தண்ணீரைப்போல
என்னைச் சூழ்ந்து கொள்கின்றன;
எல்லாப் பக்கங்களிலும் என்னை நெருக்கு
கின்றன.

* எகிப்து

18 நண்பர்களையும் தோழர்களையும் என்னை விட்டு அகலச் செய்தீர்;
எனக்கு அறிமுகமானவர்கள் மறைந்து போனுர்கள்.

### நாடு துன்புற்றபோது பாடியது

(எஸ்ராகியனுகிய ஏமானின் சங்கீதம்)

**89** ஆண்டவரின் பேரருளை நினைத்து என்றும் பாடுவேன்;
என் வார்த்தைகள் அவரது உண்மையை எல்லாத் தலைமுறைகளுக்கும் அறிவிக்கும்.
2 உமது அருள் என்றென்றும் உள்ளது என்பதை நான் அறிவேன்;
உமது உண்மை வானத்தைப்போல என்றுமுள்ளது என்பது எனக்குத் தெரியும்.
3 ''நான் தேர்ந்தெடுத்தவனேடு ஓர் உடன்படிக்கை செய்துகொண்டேன்;
என் தாசனுகிய தாவீதை நோக்கி;
4 'உன் மரபினரை என்றென்றும் நீடித்திருக்கச் செய்வேன்;
உன் அரியணையைத் தலைமுறை தலைமுறையாக நீடிக்கச் செய்வேன்' என ஆணையிட்டுக் கூறினேன்'' என்று நீர் சொன்னீர்.
5 ஆண்டவரே, வியக்கத்தக்க உம்முடைய செயல்களை வானங்கள் போற்றும்;
உமது உண்மையை வானேர்கூட்டம் புகழ்ந்துபோற்றும்.
6 விண்ணகத்தில் ஆண்டவருக்கு ஒப்பானவர் யார்?
விண்ணகச் சபையில் ஆண்டவருக்கு நிகரானவர் யார்?
7 வானேர் கூட்டத்தில் அவர் மிகவும் போற்றப்படுகிற கடவுள்;
தம்மைச் சூழ்ந்திருப்போர் அனைவருக்கும் அவர் மேலானவர், அஞ்சுதற்குரியவர்.

8 வெற்றிவேந்தரான கடவுளாகிய ஆண்டவரே, உம்மைப்போல வல்லமை உள்ளவர் யார்?
ஆண்டவரே, உமது உண்மை உம்மைச் சுற்றிலும் விளங்குகிறது.
9 நீர் கடலின் பெருமையை அடக்கி ஆளுகிறவர்;
அதன் அலைகள் எழும்பும்போது நீர் அவற்றை அமைதிப்படுத்துகிறீர்.
10 பிணத்தை வெட்டுவதுபோல நீர் இராகாபை வெட்டி வீழ்த்தினீர்.
உமது தோள்வலிமையால் உம்முடைய எதிரிகளைச் சிதறடித்தீர்,
11 வானம் உம்முடையது; பூமியும் உம்முடையது.
உலகத்தையும் அதிலுள்ள யாவற்றையும் நீரே உண்டாக்கினீர்.
12 வடக்கையும் தெற்கையும் படைத்தவர் நீரே;
தாபோர் மலையும் ஏர்மோன் மலையும் உமது திருப்பெயரைக் களிப்புடன் புகழும்.
13 உமது புயம் வலிமை வாய்ந்தது; உமது கை வல்லமையுள்ளது;
உமது வலக்கை ஓங்கி நிற்கிறது.
14 நீதியும் நியாயமும் உமது அரியணையின் அடிப்படை;
அருளும் உண்மையும் உமக்கு முன்னல் செல்லும்.

15 ஆண்டவரே, உம்மை ஆரவாரத்தோடு புகழ அறிந்தோர் நற்பேறுபெற்ருேர்;
அவர்கள் உமது முகத்தின் ஒளியில் நடப்பார்கள்.
16 அவர்கள் எந்நாளும் உமது திருப்பெயரை நினைத்துக் களிகூர்வார்கள்;
உமது நீதியை உயர்வாகப் புகழ்வார்கள்.
17 நீரே எங்கள் வலிமை, நீரே எங்கள் மேன்மை;
உமது கருணையால் எங்கள் கொம்பு* உயரும்.
18 நம் கேடயம் ஆண்டவருக்குரியது;
நம் அரசர் இஸ்ரவேலின் பரிசுத்தருக்குச் சொந்தம்.

### கடவுள் தாவீதுக்கு அளித்த வாக்குறுதி

19 ஒரு காலத்தில் நீர் உம் அடியாருக்குக் காட்சியளித்து இவ்வாறு உரைத்தீர்;
''வல்லவன் ஒருவனுக்கு முடிசூட்டினேன்;
மக்களிடையேயிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவனைப் பெருமைப்படுத்தினேன்.
20 என் தாசனுகிய தாவீதைத் தேர்ந்தெடுத்தேன்;
என் புனித தைலத்தால் அவனை அபிடேகம் செய்தேன்.
21 என் கை எப்போதும் அவனேடிருக்கும்;
என் புயம் அவனை வல்லவனுக்கும்.
22 எந்த எதிரியாலும் அவனைக் கீழடக்க இயலாது;
எந்தத் தீயவனுலும் அவனை ஒடுக்க முடியாது.

* கொம்பு : 75 : 4 அடிக்குறிப்பைப் பார்க்க.

89 தலைப்பு 1 அர. 4:31. 89:4 2 சாமு. 7:12-16; 1 வரலாறு. 17:11-14; சங். 132:11; திருத்தூது. 2:30.

23 அவனுடைய எதிரிகளை அவன்முன்
இராதபடி அழிப்பேன்;
அவனைப் பகைக்கிறவர்களை ஒழித்து
விடுவேன்.
24 என் உண்மையும் என் பேரருளும்
அவனேடிருக்கும்;
என் பெயரால் அவன் கொம்பு* உயரும்.
25 கடல்வரைக்கும் அவன் கை ஆட்சி
செலுத்தும்;
ஆறுவரைக்கும் அவனது அரசு பரவி
யிருக்கும்.
26 அவன் என்னை நோக்கி,
''நீரே என் தந்தை, என் கடவுள்,
என்னைக் காக்கும் அரண்'' என்று
சொல்லி மன்றுடுவான்.
27 நான் அவனை என் முதற்பேருனவனுக்கு
வேன்;
உலகின் அரசர் எல்லாருள்ளும் மிகவும்
மேம்பட்டவனுயிருக்கச் செய்வேன்.
28 என் பேரருளை என்றைக்கும் அவனேடு
தங்கும்படி செய்வேன்;
அவனேடு நான் செய்த உடன்படிக்கை
நிலைத்திருக்கும்.
29 அவன் மரபினரை என்றென்றும் நிலைத்
திருக்கச் செய்வேன்;
அவனது அரியணையையும் வானங்
களுள்ளளவரையில் நிலைத்திருக்கச்
செய்வேன்.

30 ''ஆனுல், அவன் மக்கள் என் சட்டங்
களை மீறினுல்,
அல்லது, என் கட்டளைகளின்படி
நடவாதிருந்தால்,
31 என் விதிகளைப் புறக்கணித்தால்,
அல்லது, என் ஒழுங்குமுறைகளைக்
கடைப்பிடியாதிருந்தால்,
32 அவர்களுடைய தவறுகளுக்காக அவர்
களைப் பிரம்பினுல் அடிப்பேன்;
அவர்களுடைய பாவங்களுக்காக அவர்
களுக்குக் கசையடி கொடுப்பேன்.
33 ஆயினும், என் பேரருளைத் தாவீதை
விட்டு விலக்கிவிட மாட்டேன்;
என் உண்மையில் தவற மாட்டேன்.
34 என் உடன்படிக்கையை மீற மாட்டேன்;
என் வாய் உரைத்ததை மாற்ற மாட்
டேன்.

35 ஒரு முறை என் பெயரால் ஆணையிட்டுக்
கூறின நான்,
தாவீதிடம் பொய் சொல்லவே மாட்
டேன்.
36 அவன் மரபினர் என்றென்றும் இருப்பர்;
அவனது அரியணை கதிரவனைப்போல
என்முன் நிலைத்திருக்கும்.
37 நிலாவைப்போல அது என்றென்றும்
நீடித்திருக்கும்;
வானத்திலுள்ள அந்த உண்மையான
சாட்சியைப்போல நிலையாயிருக்
கும்.'' (சேலா)

**அரசனின் வீழ்ச்சியை நினைத்துப் புலம்புதல்**

38 இப்பொழுதோ நீர் தேர்ந்தெடுத்த
வரை நீரே வெறுத்துத் தள்ளிவிட்
டீர்;
நீர் அவர்மீது சினங்கொண்டீர்.
39 உம்முடைய தாசனேடு நீர் செய்த
உடன்படிக்கையை ஒழித்துவிட்டீர்.
அவரது மணிமுடியை அவமதித்துத்
தரையில் எறிந்து விட்டீர்.
40 அவருடைய நகர மதில்களையெல்லாம்
தகர்த்துவிட்டீர்;
கோட்டைகளைப் பாழாக்கினீர்.
41 வழிப்போக்கர் யாவரும் அவரைக்
கொள்ளையிடுகின்றனர்;
தம் அயலாரின் பழிப்புக்கு அவர்
ஆளானுர்.

42 அவருடைய பகைவரின் கை ஓங்கும்படி
செய்தீர்;
அவருடைய எதிரிகள் யாவரையும்
மகிழும்படி செய்தீர்.
43 அவரது வாளின் முனையை முறித்துவிட்
டீர்;
போரில் அவரால் எதிர்த்து நிற்க
முடியாதபடி செய்தீர்.
44 அவரது மாட்சிமை மறையும்படி செய்
தீர்;
அவரது அரியணையைக் கீழே தள்ளிவிட்
டீர்.
45 அவரது இளமைப் பருவத்தைக் குறுக்கி
விட்டீர்;
அவமானத்தை அவருக்கு ஆடையாக்
கினீர். (சேலா)

**விடுதலைக்காக வேண்டுதல் செய்தல்**

46 ஆண்டவரே, நீர் எவ்வளவு காலம்
மறைந்துகொண்டிருப்பீர்? என்றென்
றைக்குமா?
உமது சினம் நெருப்பைப்போல எப்
போதும் எரிந்துகொண்டே இருக்கு
மோ?
47 மனிதனின் ஆயுள் எவ்வளவு குறுகியது
என்பதை நினைத்தருளும்;
மனுமக்கள் யாவரையும் நீர் வீணுகவா
படைத்திருப்பீர்?
48 சாவைக் காணுது உயிரோடிருக்கும்
ஆண்மகன் யார்?
பாதாளத்தின் பிடிக்குத் தன்னைத் தப்பு
விப்பவன் யார்? (சேலா)

* கொம்பு: சங். 75:4 அடிக்குறிப்பைப் பார்க்க.
89:23. 1 சாமு. 13:14; திருத்தூது. 13:22; 1 சாமு. 16:12. 89:27 திருவெளி. 1:5.

49 ஆண்டவரே, முன்பு நீர் செய்து வந்த
இரக்கச் செயல்களெல்லாம் எங்கே?
தாவீதுக்கு உமது உண்மையின்மேல்
ஆணையிட்டுக் கூறின அச்செயல்க
ளெல்லாம் எங்கே?
50 ஆண்டவரே, உம்முடைய அடியானாகிய
நான் நிந்திக்கப்படுவதை நினைத்துப்
பாரும்;
பிற இனத்தவர் கூறும் பழிச்சொல்லை
என் நெஞ்சில் தாங்கிக் கொண்டிருக்
கிறேன்.
51 ஆண்டவரே, நீர் தேர்ந்தெடுத்தவரை
உம்முடைய எதிரிகள் நிந்திக்கிறார்
கள்;
அவர் செல்லும் இடமெல்லாம் அவரைப்
பழிக்கிறார்கள்.
52 ஆண்டவர் என்றென்றும் போற்றப்படு
வாராக! ஆமேன், ஆமேன்.

## நான்காம் பாகம்

## 90–106

### மனிதரின் நிலையாமை

(கடவுளால் தேர்ந்துகொள்ளப்பட்ட
மனிதனாகிய மோசேயின் மன்றாட்டு)

90 ஆண்டவரே, தலைமுறை தலைமுறை
யாக நீரே எங்களுக்கு அடைக்கல
மாய் இருந்து வந்திருக்கிறீர்.
2 மலைகள் தோன்றுமுன்பே, பூமியையும்
உலகத்தையும் நீர் உருவாக்கு
முன்பே நீர் கடவுள்;
தொடக்கமும் முடிவும் இல்லாதவராய்
என்றென்றைக்கும் நீரே கடவுளா
யிருக்கிறீர்.

3 நீர் மனிதனை மறுபடியும் மண்ணாகும்
படி செய்கிறீர்;
"மனுமக்களே, மண்ணுக்கே திரும்புங்
கள்" என்கிறீர்.
4 உமது பார்வையில் ஆயிரம் ஆண்டுகள்
கடந்துபோன நேற்றைய தினம்
போலிருக்கின்றன;
இரவின் ஒரு சாமம் போலிருக்கின்றன.
5 நீர் ஒரு வெள்ளம்போல அவர்களை
வாரிக்கொண்டு போகிறீர்;
அவர்கள் தோன்றி மறையும் கனவை
ஒத்தவர்கள்;
அவர்கள் காலையில் வளரத் தொடங்கும்
புல்லுக்கு ஒப்பாயிருக்கிறார்கள்.
6 அது காலையிலேயே வளர்ந்து மலர்ச்சி
யுற்று மாலையில் வாடிக் காய்ந்து
போகிறது.
7 நாங்கள் உமது சினத்தால் அழிந்து
போகிறோம்;
உமது கடுஞ்சினத்தால் கலங்குகிறோம்.
8 எங்கள் குற்றங்களை உம் கண்முன் வைத்
திருக்கிறீர்;
மறைவான எங்கள் பாவங்களை உமது
முகத்தின் ஒளியில் வைத்திருக்கிறீர்.
9 எங்கள் வாழ்நாளெல்லாம் நாங்கள்
உமது சினத்தையே அனுபவித்து
வருகிறோம்;
எங்கள் வாழ்வுக் காலத்தை ஒரு துயரக்
கதையாய் முடித்து விட்டோம்.
10 எங்கள் ஆயுட்காலம் எழுபது ஆண்டு
களே;
வலிமை மிகுந்திருந்தால் எண்பது
ஆண்டுகள்;
ஆயினும், அதன் மேன்மை வருத்தமும்
கவலையுமே;
அது விரைவில் கடந்து போகிறது; நாங்
களும் பறந்து போகிறோம்.

11 உமது சினத்தின் வலிமையை உணர்ந்
தவன் எவனுமில்லை;
உமது கடுஞ்சினத்தால் ஏற்படும் திகிலை
உணர்ந்தவனும் எவனுமில்லை.

12 நாங்கள் ஞானமுடைய உள்ளத்தின
ராகும்படி,
வாழ்நாள்களை எண்ணி எண்ணிப்
பயனுறக் கழிக்கும் அறிவை எங்
களுக்குப் புகட்டியருளும்.

13 ஆண்டவரே, உமது கருணை முகத்தை
எங்கள் பக்கம் திருப்பியருளும்;
எதுவரையில் காலந்தாழ்த்துவீர்?
உம்முடைய அடியாரிடம் இரக்கங்
கொள்ளும்.
14 காலைதோறும் எங்களை உமது பேரரு
ளால் நிரப்பியருளும்;
நாங்கள் எங்கள் வாழ்நாளெல்லாம் களி
கூர்ந்து மகிழ்வோம்.
15 நீர் எங்களுக்குத் துயரம் தந்த காலத்
திற்குச் சரியீடாக,
நாங்கள் துன்பம் அனுபவித்த ஆண்டு
களுக்குச் சரியீடாக,
எங்களை மகிழ்ச்சியடையச் செய்யும்.
16 உம்முடைய அடியாராகிய எங்களுக்கு
உம்முடைய வல்லமைச் செயல்களைக்
காட்டியருளும்;
எங்கள் பிள்ளைகளுக்கு உமது மாட்
சிமையை வெளிப்படுத்தியருளும்.
17 ஆண்டவராகிய கடவுளின் இன்னருள்
எங்களோடிருப்பதாக!
நாங்கள் செய்கிறதனைத்திலும் எங்
களுக்கு வெற்றிதாரும்;
ஆம், நாங்கள் செய்கிறதனைத்திலும்
எங்களுக்கு வெற்றி தாரும்.

90:4 2 பேது. 3:8

## தெய்வ பாதுகாப்பு

91 உன்னதமானவரின் பாதுகாப்பில் இருப்பவனே,
எல்லாம் வல்லவராகிய அவரது நிழலில் தங்கியிருப்பவன்.
2 அவன் ஆண்டவரை நோக்கி, ''நீர் என் அடைக்கலம் என் கோட்டை, நான் நம்பும் என் கடவுள்'' என்று சொல்லுவான்.
3 அவர் உன்னை வேடன் கண்ணிக்கும் கொடிய கொள்ளை நோய்க்கும் தப்புவிப்பார்.
4 தம் சிறகுகளால் உன்னை மூடிக்காப்பார்;
அவருடைய இறக்கைகளின் கீழே நீ அடைக்கலம் புகுவாய்;
அவரது உண்மை உனக்குக் கேடயமும் கவசமுமாயிருக்கும்.
5 இரவில் உண்டாகக்கூடிய திகிலுக்கும் பகலில் பறக்கும் அம்புக்கும் நீ அஞ்ச வேண்டியதில்லை.
6 இரவில் நடமாடும் கொள்ளை நோய்க்கும் நண்பகலில் தாக்கும் தொற்று நோய்க்கும் நீ அஞ்ச வேண்டியதில்லை.

7 உன் பக்கத்தில் ஆயிரம் பேரும்,
உன் வலப்புறத்தில் பதினாயிரம் பேரும் தாக்கட்டும்;
உன்னை எந்த இடையூறும் அணுகாது.
8 உன் கண்களாலேயே நீ அதைப் பார்ப்பாய்;
பொல்லாருக்கு வரும் பலனைக் காண்பாய்.

9 நீ ஆண்டவரை உனக்கு அடைக்கலமாகக் கொண்டிருக்கிறாய்;
உன்னதமானவரை உனக்கு அரணாகக் கொண்டிருக்கிறாய்.
10 ஆகையால் உனக்குத் தீங்கு வராது;
துன்பம் உன் உறைவிடத்தை அணுகாது.
11 உன் வழிகளிலெல்லாம் உன்னைப் பாதுகாக்கும்படி,
அவர் உன்னைக் குறித்துத் தம் தூதருக்குக் கட்டளையிடுவார்.
12 உன்கால் கல்லிற்படாதபடி,
அவர்கள் உன்னைத் தங்கள் கைகளில் தாங்கிக்கொள்வார்கள்.
13 சிங்கத்தின்மீதும் விரியன் பாம்பின்மீதும் நீ நடப்பாய்;
சிங்கக் குட்டியையும் கொடும்பாம்பையும் நீ மிதித்து நடப்பாய்.

14 அவன் என்னை நேசிக்கிறபடியால் அவனை நான் விடுவிப்பேன்;
என் பெயரை அவன் அறிந்திருக்கிறபடியால் நான் அவனைப் பாதுகாப்பேன்.
15 அவன் என்னை நோக்கி மன்றாடுவான்;
நான் அவனுக்குச் செவிசாய்ப்பேன்;
நான் அவனோடிருப்பேன்; அவனைத் தப்புவித்து அவனைப் பெருமைப்படுத்துவேன்.
16 அவனுக்கு வளமான நீண்ட ஆயுளைக் கொடுப்பேன்;
நான் அருளும் மீட்பை அவனுக்கு வெளிப்படுத்துவேன்.

## புகழ்ப் பாடல்

*(சங்கீதம்: ஓய்வு நாள் பாட்டு)*

92 ஆண்டவருக்கு நன்றிசெலுத்துவது நல்லது;
உன்னதமானவரே, உமது திருப்பெயரைப் புகழ்ந்து பாடுவது நல்லது.
2 பத்து நரம்பு வீணையினாலும் தம்புருவினாலும்
இன்னிசை தரும் சுரமண்டலத்தினாலும்
3 காலைதோறும் உமது பேரருளையும்
இரவுதோறும் உமது உண்மையையும் அறிவிப்பது நல்லது.
4 ஆண்டவரே, உம்முடைய செயல்களால் என்னை மகிழ்வித்தீர்;
நீர் உமது கையால் செய்தவற்றை நினைத்துக் களிகூர்ந்து பாடுகிறேன்.

5 ஆண்டவரே, உம்முடைய செயல்கள் எவ்வளவு மகத்தானவை;
உம்முடைய நினைவுகள் எவ்வளவு ஆழமானவை!
6 அறிவில்லாத மனிதனுக்கு இது தெரியாது;
மூடன் இதை உணர மாட்டான்.
7 பொல்லார் புல்லைப்போலத் தழைக்கலாம்;
தீமை செய்வோர் யாவரும் செழித்தோங்கலாம்;
என்றாலும், அவர்கள் முற்றும் அழிக்கப்படுவார்கள்.
8 ஆண்டவரே, நீரே என்றென்றும் உன்னதமானவராயிருக்கிறீர்.

9 ஆண்டவரே, உம்முடைய எதிரிகள் அழிவார்கள்;
உம்முடைய எதிரிகள் அழிந்தே போவார்கள்;
தீமை செய்வோர் யாவரும் சிதறுண்டு போவார்கள்.

91:11 மத். 4:6; லூக். 4:10. 91:12 மத். 4:6; லூக். 4:11. 91:13 லூக். 10:19.

10 என் கொம்பையோ* காட்டெருமையின்
கொம்பைப்போல உயர்த்துவீர்;
புது எண்ணெயை என்மீது பொழிந்தீர்.
11 என் எதிரிகள் வீழ்ச்சியுற்றதை நான்
நேரில் கண்டேன்;
என்னை எதிர்க்க வந்த பொல்லாரின்
அழுகுரலைக் கேட்டேன்.

12 நீதிமான்கள் பனைமரத்தைப்போலச்
செழித்தோங்குவார்கள்;
லீபனோனின் கேதுரு மரத்தைப்போல
வளர்வார்கள்.
13 ஆண்டவரது ஆலயத்தில் நடப்பட்ட
அவர்கள்,
எங்கள் கடவுளின் ஆலயப் பிராகாரங்
களில் நடப்பட்ட அவர்கள்
செழிப்புற்று விளங்குவார்கள்.
14 அவர்கள் முதுமையிலும் கனி தருவார்
கள்;
எப்போதும் செழுமையும் பசுமையுமா
யிருப்பார்கள்.
15 ஆண்டவர் நேர்மையானவர் என்பதும்
என் கன்மலையாகிய அவரிடம் அநீதி
இல்லை என்பதும் இதனால் விளங்கும்.

### கடவுளின் அரசாட்சி

**93** ஆண்டவர் ஆட்சி செலுத்துகிறார்;
அவர் மாட்சிமையை ஆடையாக
அணிந்துகொண்டிருக்கிறார்.
ஆண்டவர் வல்லமையைப் பூண்டு
கொண்டு அதையே அரைக் கச்சை
யாகவும் கட்டியிருக்கிறார்.
நிலவுலகை அவர் நிலைப்படுத்தினார்;
அது அசையாது.
2 உமது அரியணை ஆதியிலிருந்தே நிலை
பெற்றிருக்கிறது. அது அசையாது.

3 ஆண்டவரே, ஆறுகள் தோன்றின;
ஆறுகள் இரைச்சலிட்டன;
ஆறுகள் இரைச்சலிட்டு முழங்குகின்றன
4 வெள்ளத்தின் இரைச்சலையும் கடலின்
பேரலைகளையும்விட ஆண்டவர் வல்
லமை வாய்ந்தவர்.
உன்னதத்தில் அவரே ஆட்சி செலுத்து
கின்றார்.
5 உம்முடைய ஒழுங்குமுறைகள் மிகவும்
உண்மையானவை;
ஆண்டவரே, பரிசுத்தமே என்றென்றும்
உமது ஆலயத்தை அழகு செய்யும்.

### கடவுளின் நீதிமுறை

**94** நீதிமுறை தவறாத கடவுளே, ஆண்
டவரே,
நீதிமுறை தவறாத கடவுளே, மாட்
சிமையுடன் எழுந்தருளும்.
2 உலகின் நீதிபதியே, எழுந்தருளும்.
இறுமாப்புடையோருக்கு உரிய தண்
டனையை வழங்கியருளும்.
3 பொல்லார் இன்னும் எவ்வளவு காலம்
பெருமிதத்தோடிருப்பர்?
இன்னும் எவ்வளவு காலம் களிப்
புடனிருப்பர்?
4 அவர்கள் வாயாடுகிறார்கள், இறுமாப்
புடன் பேசுகிறார்கள்;
தீமை செய்கிற யாவரும் பெருமையுடன்
நடந்துகொள்கின்றனர்.

5 ஆண்டவரே, அவர்கள் உம்முடைய
மக்களை நொறுக்குகிறார்கள்;
உமக்குச் சொந்தமான இனத்தை
ஒடுக்குகிறார்கள்.
6 கைம்பெண்களையும் அன்னியனையும்
கொன்றுவிடுகிறார்கள்;
திக்கற்றவர்களைச் சாகடிக்கிறார்கள்.
7 ''ஆண்டவர் பார்க்க மாட்டார்;
யாக்கோபின் கடவுள் கவனிக்க மாட்
டார்'' என்று சொல்லிக் கொள்
கிறார்கள்.

8 மக்களிடையே இருக்கும் அறிவிலிகளே,
இதை உணர்ந்து கொள்ளுங்கள்;
மூடரே, எப்போது இதைத் தெரிந்து
கொள்ளப் போகிறீர்கள்?
9 காதை உண்டாக்கினவர் கேளாமலிருப்
பாரா?
கண்ணை உருவாக்கினவர் பார்க்காம
லிருப்பாரா?
10 எல்லா நாட்டினரையும் கண்டிக்கிறவர்
தண்டியாமல் இருப்பாரா?
மனிதனுக்கு அறிவைப் புகட்டுகிறவர்
வாளாயிருப்பாரா?
11 மனிதனுடைய எண்ணங்களை ஆண்ட
வர் அறிவார்;
அவை வீணான எண்ணங்கள் என்பது
அவருக்குத் தெரியும்.

12 ஆண்டவரே, உம்மால் அறிவு புகட்டப்
பெறும் மனிதன் நற்பேறு பெற்றவன்;
உம்முடைய சட்டங்களைக்கொண்டு உம்
மால் கற்பிக்கப்படுகிற மனிதன் நற்
பேறு பெற்றவன்.
13 அவன் மனம் இக்கட்டுக் காலத்தில்
அமைதியாயிருக்கும்;
பொல்லானுக்கோ குழிவெட்டப்படும்.
14 ஆண்டவர் தம் மக்களை வெறுத்துத்
தள்ளிவிட மாட்டார்;
தமக்குச் சொந்தமான இனத்தைக்
கைவிட மாட்டார்.
15 நீதிமன்றங்களில் மீண்டும் நியாயம்
வழங்கப்படும்;

* கொம்பு: சங். 75:4 அடிக்குறிப்பைப் பார்க்க.
94:11 1 கொரி. 3:20.

நேர்மையான உள்ளமுடையோர் யாவரும் அதற்கு ஆதரவு தருவர்.

16 பொல்லாரை எதிர்க்க என் சார்பாக எழுந்தவன் எவனுமில்லை;
தீமை செய்வோரை எதிர்க்க என் பக்கம் நின்றவன் எவனுமில்லை.
17 ஆண்டவர் எனக்குத் துணை செய்திராவிடில்,
நான் ஏற்கெனவே அமைதி நிலவும் உலகிற்குச் சென்றிருப்பேன்.
18 என் கால் இடறுவதை நான் உணரும்போது,
ஆண்டவரே, உமது பேரருள் எனக்கு ஆதரவளிக்கிறது.
19 என் உள்ளத்தில் கவலை பெருகும்போது,
நீர் அளிக்கும் ஆறுதல் என் ஆன்மாவை மகிழ்விக்கிறது.
20 சட்டம் என்னும் பெயரால் தீமை விளைவிக்கிற கொடுமையான ஆட்சியாளர்,
உமது இசைவை எப்படிப் பெற முடியும்?
21 அவர்கள் நீதிமான்களின் உயிரைப் போக்கிவிடுகிறார்கள்;
குற்றமற்றவனுக்கு மரணதண்டனை விதிக்கிறார்கள்.
22 எனக்கு ஆண்டவர் புகலிடமாயிருக்கிறார்;
என் கடவுள் அடைக்கலமளிக்கும் அரணாயிருக்கிறார்.
23 அவர்களுடைய குற்றங்களுக்காக அவர்களைத் தண்டிப்பார்;
அவர்கள் பொல்லாங்குகளுக்காக அவர்களை அழித்துவிடுவார்.
நம்முடைய கடவுளாகிய ஆண்டவர் அவர்களை அழித்துவிடுவார்.

## புகழ்ப் பாடல்

**95** ஆண்டவரைக் களிப்புடன் போற்றுவோம், வாருங்கள்;
நமக்கு மீட்பளிக்கும் கன்மலையை ஆர்ப்பரிப்புடன் புகழ்வோமாக.
2 நன்றியறிதலோடு அவர் முன்னிலையில் செல்வோம், வாருங்கள்;
இன்னிசைப் பாடல்களால் அவரைப் போற்றுவோமாக.
3 ஆண்டவரே, மகத்துவமிக்க கடவுள்;
அவரே எல்லாத் தேவர்களுக்கும் மேலான அரசர்.
4 பூமியின் ஆழ்பகுதிகள் அவர் கையில் இருக்கின்றன;
மலைகளின் கொடுமுடிகளும் அவருடையவையே.
5 ஆழ்கடல் அவருடையது; அவரே அதை உண்டாக்கினார்;
கட்டாந்தரையையும் அவர் கைகளே உருவாக்கின.
6 நம்மை உண்டாக்கின ஆண்டவரை நாம் பணிந்து தொழுவோம், வாருங்கள்;
அவர் முன் முழந்தாள்படியிட்டு அவரை வழிபடுவோமாக.
7 அவரே நம்முடைய கடவுள்; நாம் அவருடைய மக்கள்;
அவர் நடத்திச் செல்லும் அவருடைய ஆடுகள்;
இன்று நீங்கள் அவர் உரைப்பதைக் கேளுங்கள்.
8 "அன்று மெரிபாவிலும் பாலைவனத்தில் மாசாவிலும்
உங்கள் மூதாதையர் பிடிவாதமுள்ளவர்களாய் இருந்ததுபோல நீங்களும் இராதேயுங்கள்.
9 அங்கே உங்கள் மூதாதையர் என்னைச் சோதித்துப் பார்த்தனர்;
என் செயல்களைக் கண்டிருந்தும் என்னைச் சோதித்துப் பார்த்தனர்.
10 நாற்பது ஆண்டுகளாக அந்த மக்கள் எனக்கு அருவருப்பூட்டி வந்தார்கள்;
'அவர்கள் வழிதவறிச்சென்ற இதயமுள்ள மக்கள், என் வழிகளை அவர்கள் அறிந்துகொள்ளவில்லை' என்றேன்.
11 ஆகவே, நான் தரும் ஓய்வை அவர்கள் அடையவே மாட்டார்கள் என்று சினத்தோடு ஆணையிட்டுக்கூறினேன்.

## ஆண்டவரின் அரசாட்சி

**96** ஆண்டவருக்குப் புதியதொரு பாடலைப் பாடுங்கள்;
உலகெங்கும் வாழ்வோரே, நீங்கள் எல்லாரும் ஆண்டவரைப் பாடுங்கள்.
2 ஆண்டவரைப் பாடி அவரது திருப்பெயரைப் புகழுங்கள்;
அவர் அருளும் மீட்பைப்பற்றிய நற்செய்தியை எந்நாளும் அறிவியுங்கள்;
3 பிற இனத்தவரிடையே அவரது மாட்சிமையை எடுத்துரையுங்கள்;
எல்லா நாட்டினருக்கும் வியக்கத்தக்க அவருடைய செயல்களை விரித்துரையுங்கள்.

4 ஆண்டவர் மகத்துவமுள்ளவர்; உயர்வாகப் போற்றுதலுக்குரியவர்.
எல்லாத் தேவர்களையும் விட அவரே மிகுதியாக அஞ்சுதலுக்குரியவர்.

**95:7,8** எபி. 3:15; 4:7. **95:8,9** யாத். 17:1-7; எண். 20:2-13. **95:11** எண். 14:20-23; உபா. 1:34-36; எபி. 4:3,5; உபா. 12:9,10. **95:7-11.** எபி. 3:7-11.

5 பிற இனத்தவரின் எல்லாத் தேவர்களும் வெறும் சிலைகளே;
ஆனால் ஆண்டவரோ வானங்களை உண்டாக்கினவர்.
6 மாட்சிமையும் மாண்பும் அவர் முன்னிலையில் மிளிர்கின்றன;
வல்லமையும் வனப்பும் அவரது புனித அகத்தில் ஒளிர்கின்றன.

7 அனைத்துலக மக்களே, ஆண்டவரைப் புகழுங்கள்;
அவருடைய மாட்சிமையையும் வல்லமையையும் புகழ்ந்துரையுங்கள்.
8 ஆண்டவரின் திருப்பெயருக்குரிய மாட்சிமையைப் புகழ்ந்துரையுங்கள்;
காணிக்கைகளை எடுத்து வந்து அவரது ஆலயப் பிராகாரம் செல்லுங்கள்.
9 தூய மாட்சிமையுடன் இருக்கும் ஆண்டவரை வழிபடுங்கள்;
உலகில் வாழ்வோரே, நீங்கள் அனைவரும் அவர்முன் அஞ்சி நடுங்குங்கள்.

10 "ஆண்டவர் ஆட்சி செலுத்துகின்றார்; நிலவுலகம் உறுதியாக நிற்கின்றது; அது அசையாது;
அவர் எல்லா இனத்தவருக்கும் நீதி வழங்குவார்" என்று எல்லா நாட்டினருக்கும் அறிவியுங்கள்.
11 வானங்கள் மகிழட்டும்; உலகம் களிகூரட்டும்;
கடலும் அதிலுள்ள அனைத்தும் ஆரவாரம் செய்யட்டும்.
12 சம வெளியும் அதிலுள்ள யாவும் ஆர்ப்பரிக்கட்டும்;
அப்பொழுது காட்டு மரங்களெல்லாம் ஆண்டவர்முன் மகிழ்ச்சியடையும்.
13 ஏனெனில், அவர் வருகிறார்; அவர் உலகத்திற்குத் தீர்ப்பு வழங்க வருகிறார்;
அவர் உலகத்தை நீதியோடு தீர்ப்புச் செய்வார்; எல்லா இனத்தவரையும் உண்மையோடு தீர்ப்புச் செய்வார்.

### ஆண்டவரின் ஆட்சி

**97** ஆண்டவர் ஆட்சி செலுத்துகின்றார்; உலகம் களிகூர்வதாக; ஒவ்வொரு தீவும் மகிழ்வதாக.
2 மேகமும் மந்தாரமும் அவரைச் சூழ்ந்திருக்கின்றன;
நீதியும் நேர்மையும் அவரது அரியணையின் அடிப்படை.

3 அவர் செல்கையில் நெருப்பு அவர்முன் செல்கிறது;
அது அவரைச் சுற்றிலுமிருக்கிற பகைவரை எரித்தழிக்கிறது.
4 அவருடைய மின்னல்கள் பூமியின் மீது ஒளிவீசுகின்றன;
உலகம் அதைக் கண்டு நடுக்கங்கொள்கிறது.

5 உலகனைத்திற்கும் ஆண்டவராயிருப்பவர் வருகையில்,
மலைகள் அவர்முன் மெழுகுபோல உருகுகின்றன.
6 வானங்கள் அவரது நீதியை அறிவிக்கின்றன;
எல்லா இனத்தவரும் அவரது மாட்சிமையைக் காண்கின்றனர்.

7 சிலைகளை வணங்குவோரும் அவற்றைப் பற்றிப் பெருமை கொள்வோரும் வெட்கப்பட வேண்டும்;
எல்லாத் தேவர்களுமே அவரைப் பணிகிறார்களே;
8 ஆண்டவரே, உம்முடைய தீர்ப்புகளைக் கேட்டு சீயோன் மகிழ்ந்தது;
யூதாவின் பட்டணங்கள் களிகூர்ந்தன.
9 ஆண்டவரே, உலகனைத்தின்மீதும் நீர் ஆட்சி செலுத்துகின்றீர்;
எல்லாத் தேவர்களையும்விட நீரே மிகவும் உயர்ந்தவர்.
10 தீமையைப் பகைப்பவர்கள்மீது ஆண்டவர் அன்புகூர்கிறார்;
அவர் தம் அடியாரைக் காப்பாற்றுகிறார்; பொல்லார் கைக்கு அவர்களைத் தப்புவிக்கிறார்.
11 நீதிமான்கள்மீது ஒளி சுடர் வீசுகிறது;
நேர்மையான இதயத்தாருக்கு மகிழ்ச்சி உண்டாகிறது.
12 நீதிமான்களே, ஆண்டவர் செய்தவற்றை நினைத்து மகிழ்ந்து கொண்டாடுங்கள்;
அவரது திருப்பெயரை நன்றியறிதலோடு போற்றுங்கள்.

### கடவுள் உலக நீதிபதி

**98** ஆண்டவருக்குப் புதியதொரு பாடலைப் பாடுங்கள்;
அவர் வியக்கத்தக்க செயல்களைச் செய்திருக்கிறார்;
அவரது வலக்கையும் அவரது பரிசுத்த புயமும் அவருக்கு வெற்றியளித்தன.
2 ஆண்டவர் தமது வெற்றியை அறிவித்தார்;
தமது நீதியைப் பிறஇனத்தவர் கண்முன் வெளிப்படுத்தினார்.
3 இஸ்ரவேல் மக்களுக்குத் தாம் காட்டின இரக்கத்தையும் தம் உண்மையையும் நினைவுகூர்ந்தார்;

96:7-9 சங். 29:1,2.

உலகின் எல்லைப் புறங்களிலுள்ள அனை
வரும் நம் கடவுளின் வெற்றியைக்
கண்டனர்.

4 உலகெங்கும் வாழ்வோரே, நீங்களெல்
லாரும் ஆர்ப்பரியுங்கள்; ஆண்ட
வரைப் பாடுங்கள்;
முழக்கமிட்டு ஆரவாரத்தோடு பாடுங்
கள், புகழ்ந்து பாடுங்கள்.
5 சுரமண்டலங்கொண்டு ஆண்டவரைப்
புகழ்ந்து பாடுங்கள்;
சுரமண்டலங்கொண்டு இன்னிசை
எழுப்பி அவரைப் பாடுங்கள்.
6 ஆண்டவராகிய அரசரின் முன்னிலையில்
எக்காளங்களைக் கொண்டும் குழல்
களைக்கொண்டும்
மகிழ்ச்சியோடு ஆர்ப்பரியுங்கள்.

7 கடலே, அதிலுள்ளவையே, ஆண்டவர்
முன் முழங்குங்கள்;
உலகமே, அதில் வாழும் மக்களே, அவர்
முன் ஆர்ப்பரியுங்கள்.
8 ஆறுகளே, ஆண்டவர்முன் கைகொட்
டுங்கள்;
மலைகளே, அவர்முன் ஆரவாரத்துடன்
பாடுங்கள்.
9 அவர் உலகத்திற்குத் தீர்ப்பளிக்க
வருகிறார்;
உலகத்தை நீதியோடு தீர்ப்புச் செய்
வார்;
எல்லா இனத்தவருக்கும் நேர்மையான
தீர்ப்பு வழங்குவார்.

## ஆண்டவரின் ஆட்சி

**99** ஆண்டவர் ஆட்சி செலுத்துகின்றார்;
எல்லா இனத்தவரும் கலக்கமடை
கின்றனர்;
அவர் கெருபுகள்மீது வீற்றிருக்கின்றார்;
பூமி அஞ்சி நடுங்குகின்றது.
2 ஆண்டவர் சீயோனில் மாட்சிமையுடன்
விளங்குகின்றார்;
எல்லா இனத்தவர்மீதும் ஆட்சி செலுத்
துகின்றார்.
3 மகத்துவமுள்ளதும் அஞ்சுதற்குரியது
மான அவரது திருப்பெயரை அவர்
கள் போற்றுவார்களாக;
அவர் பரிசுத்தர்.

4 வல்லமைமிக்க அரசர் நீதியை விரும்பு
கின்றார்; அவர் நேர்மையை நிலைக்
கச் செய்கின்றார்;
யாக்கோபின் மரபினரிடையே நீதியை
யும் நேர்மையையும் நிலை நாட்டு
கின்றார்.
5 நம்முடைய கடவுளாகிய ஆண்ட
வரைப் போற்றிப்பாடுங்கள்;
அவர் காலடியில் விழுந்து பணியுங்கள்;
அவர் பரிசுத்தர்.

6 மோசேயும் ஆரோனும் அவருடைய
ஆசாரியர்;
அவரை வழிபடுகிறவர்களுள் சாமு
வேலும் ஒருவர்;
அவர்கள் அவரை நோக்கி மன்றாடினார்
கள்;
அவர் அவர்களுக்குச் செவிசாய்த்தார்.
7 மேகத்தூணிலிருந்து அவர்களோடு பேசி
னார்;
அவர்கள் அவருடைய கட்டளைகளையும்
அவர் தங்களுக்கு விதித்த விதிகளை
யும் கடைப்பிடித்தார்கள்.

8 எங்கள் கடவுளாகிய ஆண்டவரே, நீர்
அவர்களுக்குச் செவிசாய்த்தீர்;
மன்னிக்கும் கடவுளாக உம்மை அவர்
களுக்கு வெளிப்படுத்தினீர்;
ஆயினும், அவர்களுடைய தீய செயல்
களுக்காக நீர் அவர்களைத் தண்டித்
தீர்.
9 நம்முடைய கடவுளாகிய ஆண்டவரைப்
புகழ்ந்து போற்றுங்கள்;
அவரது புனித மலையில் அவரைப்
பணியுங்கள்.

## புகழ்ப் பாடல்

**100** உலகெங்கும் வாழ்வோரே, நீங்கள்
எல்லாரும் ஆண்டவரை ஆர்ப்பரிப்
புடன் பாடுங்கள்;
2 மகிழ்ச்சியோடு ஆண்டவரை வழிபடுங்
கள்;
களிப்பாரவாரத்துடன் அவர் முன்னிலை
யில் வாருங்கள்.
3 ஆண்டவரே கடவுள் என்பதை உணருங்
கள்; அவரே நம்மை உண்டாக்கின
வர்;
நாம் அவருக்கே சொந்தம் அவருடைய
மக்கள், அவர் வழி நடத்தும் ஆடுகள்.
4 நன்றியறிதலோடு அவரது ஆலய
வாயிலுக்குள் செல்லுங்கள்;
புகழ்ப்பாடலைப் பாடிக்கொண்டு அவரது
ஆலயப் பிராகாரங்களில் நில்லுங்
கள்;
அவருக்கு நன்றி செலுத்தி, அவரது
திருப்பெயரைப் போற்றுங்கள்.
5 ஆண்டவர் நல்லவர்; அவரது பேரருள்
என்றென்றும் உள்ளது;
அவரது உண்மை தலைமுறை தலைமுறை
யாக விளங்கும்.

**99:1 யாத். 25:22. 99:7 யாத். 33:9. 100 : 5 1 வரலாறு 16:34; 2 வரலாறு. 5:13; 7:3; எஸ்ரா 3:11; சங். 106:1; 107:1; 118:1; 136:1; எரே. 33:11.**

### ஒரு நீதிபதியின் வாக்குறுதி
(தாவீதின் சங்கீதம்)

**101** உமது அருளையும் நீதியையும் புகழ்ந்து
பாடுகிறேன்;
ஆண்டவரே, உம்மைப் புகழ்ந்து பாடு
கிறேன்.
2 நேர்மையான வழியிலே நடப்பதில்
கவனமுள்ளவனாயிருக்கிறேன்;
நீர் எப்போது என்னிடம் வருவீர்?

தூய உள்ளத்தோடு என் வீட்டில்
நடந்துகொள்வேன்;
3 இழிவான எந்தக் காரியத்திலும் என்
கவனத்தைச் செலுத்தமாட்டேன்.

நெறிதவறிச் செல்வோரின் செய்கைகளை
நான் வெறுக்கிறேன்;
அவற்றில் நான் பற்றுவைக்க மாட்
டேன்.
4 நேர்மையற்ற இதயமுடையோரை என்
னிடம் நெருங்கவிட மாட்டேன்;
தீயாரோடு எவ்வகைத் தொடர்பும்
வைத்துக்கொள்ள மாட்டேன்.

5 அடுத்தவனைப் பற்றி அவதூறு பேசு
கிறவனை ஒழிப்பேன்;
இறுமாப்புமிக்க பார்வையும் செருக்கு
மிக்க நெஞ்சமும் உள்ளவனிடம்
பொறுமை காட்ட மாட்டேன்.

6 நாட்டிலுள்ள நேர்மையானவர்களைத்
தேர்ந்தெடுத்து அவர்களையே என்
னோடு குடியிருக்கச் செய்வேன்;
நேர்வழியில் நடப்பவனையே எனக்குத்
தொண்டு செய்ய அனுமதிப்பேன்.
7 வஞ்சனையாளருக்கு என் மாளிகையில்
இடமில்லை;
பொய் சொல்லுகிறவர்கள் என் கண்
முன் இருப்பதில்லை.
8 தீமை செய்வோன் எவனும் ஆண்ட
வரின் நகரில் இல்லாமற் போகும்
படி செய்ய,
நாட்டிலுள்ள பொல்லார் அனைவரையும்
காலைதோறும் ஒழித்துவிடுவேன்.

### துன்புறும் ஒரு மனிதனின் விண்ணப்பம்

(சிறுமைப்பட்டவன் துயரத்தில்
மூழ்கியிருக்கையில் ஆண்டவர்முன்
தன் வருத்தத்தைத் தெரிவித்துச்
செய்யும் விண்ணப்பம்)

**102** ஆண்டவரே, என் விண்ணப்பத்திற்குச்
செவிசாய்த்தருளும்;
என் மன்றாட்டை ஏற்றுக்கொள்ளும்.
2 இக்கட்டுநாளில் உமது முகத்தை எனக்கு
மறைக்காதேயும்;
உமது செவியை என் பக்கமாகச் சாய்த்
தருளும்;
நான் மன்றாடும் நாளிலே விரைவில்
எனக்குச் செவிகொடுத்தருளும்.

3 என் வாழ்நாள் புகையைப்போல மறை
கின்றது;
என் எலும்புகள் கொள்ளிக்கட்டையைப்
போல எரிந்து போகின்றன.
4 என் இதயம் புல்லைப்போல வாடி
வதங்குகிறது;
உணவு கொள்ளவும் நான் மறந்து
விடுகிறேன்.
5 நான் உரத்துப் புலம்புவதால்,
என் எலும்புகள் என் தோலோடு ஒட்டிக்
கொள்கின்றன.
6 நான் பாலை நிலத்தில் தங்கும் காடை
போலானேன்;
பாழ்வெளியில் தங்கும் ஆந்தை
போலானேன்;
7 எனக்குத் தூக்கமே இல்லை;
வீட்டுக் கூரையில் தனிமையாயிருக்கும்
குருவிபோலானேன்.
8 நாளெல்லாம் என் எதிரிகள் என்னைப்
பழிக்கிறார்கள்;
என்மீது சினவெறிகொண்டவர்கள் என்
பெயரைச் சொல்லிச் சபிக்கிறார்
கள்.

9 நீர் என்னை மேலே உயர்த்திக் கீழே
தள்ளிவிட்டீர்;
உமது சினத்திற்கும் சீற்றத்திற்கும் நான்
ஆளானேன்.
10 ஆகையால் நான் சாம்பலை உணவாகக்
கொள்கிறேன்;
தண்ணீரோடு என் கண்ணீரைக் கலந்து
குடிக்கிறேன்.
11 என் ஆயுள் மாலை நிழலைப்போலிருக்
கிறது;
உலர்ந்துபோன புல்லைப் போலானேன்.

12 ஆண்டவரே, நீர் என்றென்றும் உள்ள
வர்;
உமது புகழ் தலைமுறை தலைமுறையாக
நிலைத்திருக்கும்.
13 நீர் எழுந்தருளி, சீயோனுக்கு இரக்கம்
காட்டும்;
அதற்கு இரக்கம் காட்டும் காலம் வந்து
விட்டது; குறித்த நேரம் இதுவே.
14 அதன் கற்கள் சிதறிக் கிடப்பினும் அது
உம்முடைய அடியாருக்கு மிகவும்
அருமையானது;
அது அழிந்துபோன நிலையில் இருந்த
போதிலும், அவர்கள் அதற்குப் பரிவு
காட்டுகிறார்கள்.

15 ஆண்டவர் சீயோனைக் கட்டி எழுப்பி,
மாட்சிமையுள்ளவராய் வெளிப்படும்
போதும்,

16 திக்கற்றவர்களின் விண்ணப்பத்தைப் புறக்கணியாமல்,
அவர்கள் வேண்டுதலை ஏற்கும் போதும்,
17 பிற இனத்தவர் ஆண்டவரின் திருப் பெயருக்கு அஞ்சுவர்;
உலகின் அரசரெல்லாரும் அவரது மாட் சிமையைக் கண்டு திகிலடைவர்.
18 பின்வரும் தலைமுறைக்கென இது எழுதி வைக்கப்படும்.
19 ஆண்டவரைத் தொழுவதற்கான எல்லா நாட்டினரும் அரசரும் வந்து கூடும் போது,
20 சீயோனில் ஆண்டவரின் திருப்பெயரை யும்,
எருசலேமில் அவரது புகழையும் அறிவிக் கும்படி,
21 சிறைப்பட்டவர்களின் புலம்பலைக் கேட் கவும்,
மரண தண்டனை பெற்றவர்களை விடுவிக் கவும்,
22 ஆண்டவர் விண்ணிலுள்ள தமது புனித அகத்திலிருந்து பார்த்தார்;
வானத்திலிருந்து உலகத்தைக் கண் ணோக்கினார் என்று,
இனிப் படைக்கப்படும் மக்கள் ஆண்ட வருக்கு நன்றி செலுத்துவார்கள்.

23 என் வாழ்க்கைப் பாதையின் இடையில் அவர் என் வலிமையைக் குன்றச் செய்தார்;
என் ஆயுளைக் குறுக்கிவிட்டார்.
24 அப்பொழுது நான், "என் கடவுளே, வயது முதிரா திருக்கும்போதே என்னை எடுத்துக்கொள்ளாதேயும்;
உமது காலம் தலைமுறை தலைமுறையாக உள்ளது.
25 நீர் தொடக்கத்தில் மண்ணுலகிற்கு அடித்தளம் போட்டீர்;
விண்ணுலகங்கள் உம்மால் உண்டாக்கப் பட்டவை.
26 அவை அழிந்துவிடும்; நீரோ நிலைத் திருப்பீர்;
அவையெல்லாம் ஆடைபோலப் பழமை யாகிவிடும்;
நீர் உடையைப்போல அவற்றை மாற்று வீர்; அவை மாறும்.
27 நீரோ மாறாதவராயிருக்கிறீர்;
உம்முடைய ஆண்டுகளுக்கு முடிவே இராது.
28 உம்முடைய அடியாரின் பிள்ளைகள் தொடர்ந்து வாழ்வார்கள்;
அவர்களுடைய மரபினர் உமது பாது காப்பில் நிலைபெற்றிருப்பர்" என்று சொன்னேன்.

## கடவுளின் அன்பு

(தாவீதின் சங்கீதம்)

**103** என் ஆன்மாவே, ஆண்டவரைப் போற்று;
என் முழு உள்ளமே அவரது திருப் பெயரைப் போற்று.
2 என் ஆன்மாவே, ஆண்டவரைப் போற்று;
அவர் செய்த நன்மைகளுள் ஒன்றையும் மறவாதே.
3 அவர் உன் குற்றங்களையெல்லாம் மன் னிக்கிறார்;
உன் நோய்களையெல்லாம் குணப்படுத்து கிறார்.
4 உன் உயிரைப் பாதாளத்திற்குத் தப்பு வித்துக் காப்பாற்றுகிறார்;
அருளையும் இரக்கத்தையும் உனக்கு முடியாகச் சூட்டுகிறார்.
5 நன்மைகளினால் உன் வாழ்நாளை நிரப்பு கிறார்;
கழுகைப் போல நீ மீண்டும் இளமை பெற்றவனாய் வாழ்வாய்.

6 ஆண்டவர் தம்முடைய செயல்களில் நீதியுள்ளவராயிருக்கிறார்;
ஒடுக்கப்படுகிற யாவருக்கும் நியாயம் கிடைக்கச் செய்கிறார்.
7 அவர் தம் வழிகளை மோசேயுக்கு வெளிப் படுத்தினார்;
தம்முடைய செயல்களை இஸ்ரவேல் மக்கள் காணும்படி செய்தார்.
8 ஆண்டவர் உருக்கமும் இரக்கமும் பொறுமையும் பேரருளும் நிறைந்த வர்.
9 அவர் எப்போதும் கடிந்துகொண்டே இரார்;
என்றென்றும் சினத்தோடிரார்.
10 நம்முடைய பாவங்களுக்கு ஏற்றபடி அவர் நம்மை நடத்துவதில்லை;
நம்முடைய குற்றங்களுக்கு ஏற்றபடி நம்மைத் தண்டிப்பதில்லை.
11 பூமியிலிருந்து வானம் எவ்வளவு உயரத் திலிருக்கிறதோ அவ்வளவுக்கு,
அவருக்கு அஞ்சி நடப்போர் மீதுள்ள அவரது அருள் பெரிதாயிருக்கிறது.
12 மேற்கிலிருந்து கிழக்கு எவ்வளவு தொலை விலிருக்கிறதோ அவ்வளவு தொலை வுக்கு,
அவர் நம் தவறுகளை நம்மை விட்டு விலக்கிவிட்டார்.
13 தகப்பன் தன் பிள்ளைக்கு இரங்குவது போல
ஆண்டவர் தமக்கு அஞ்சி நடப்பவர் களுக்கு இரங்குகிறார்.

**102:25-27** எபி. 1:10-12. **103:8** யாக். 5:11.

14 நமது உருவம் இன்னதென்பது அவருக்
குத் தெரியும்;
நாம் மண் என்பதை அவர் அறிந்திருக்
கிறார்.
15 மனிதனது வாழ்நாள் புல்லைப் போன்
றது;
காட்டுப்பூவைப்போல அவன் மலர்
கிறான்.
16 காற்று அதன்மீது வீசினவுடனே அது
இல்லாமற் போகிறது;
அது இருந்த இடத்தில் இனி அது
காணப்பெறாது.
17 ஆண்டவரது பேரருளோ அவருக்கு
அஞ்சி நடப்பவர்மேல் நிலைத்திருக்
கும்;
அவரது நீதி தலைமுறை தலைமுறையாக
என்றென்றும் நிலைபெற்றிருக்கும்.

18 அவருடைய உடன்படிக்கையைக்கடைப்
பிடித்து,
அவருடைய கட்டளைகளின்படி செய்ய
மறவாதிருக்கிறவர்களுக்கே
அது என்றென்றைக்கும் நிலைபெற்றிருக்
கும்.

19 ஆண்டவர் தமது அரியணையை வானங்
களில் அமைத்திருக்கிறார்;
அவர் அனைத்தின்மீதும் ஆட்சிசெலுத்து
கிறார்.
20 ஆண்டவருடைய சொல்லைக் கேட்டு,
அவர் சொற்படி செய்து வருகிற அவரு
டைய வலிமைவாய்ந்த தூதர்களே,
அவரைப் போற்றுங்கள்.
21 ஆண்டவருடைய படைகளே,
அவரது திருவுளப்படி செய்து வருகிற
அவருடைய பணியாளரே, அவரைப்
போற்றுங்கள்.
22 ஆண்டவர் ஆட்சிசெலுத்துகிற எல்லா
இடங்களிலுமுள்ள அவருடைய
படைப்புகளே,
அவரைப் போற்றுங்கள்;
என் ஆன்மாவே, அவரைப் போற்று.

## படைப்பின் மாட்சி

104 என் ஆன்மாவே, ஆண்டவரைப்
போற்று;
என் கடவுளாகிய ஆண்டவரே, நீர்
மிகவும் பெரியவராயிருக்கிறீர்;
நீர் மாட்சியையும் மகத்துவத்தையும்
அணிந்து கொண்டிருக்கிறீர்.
2 ஒளியைப் போர்வையாகப் போர்த்திக்
கொண்டிருக்கிறீர்.
கூடாரத் திரையைப்போல வானங்களை
அமைத்திருக்கிறீர்.
3 மேலேயுள்ள நீர்ப்பரப்பின்மீது உமது
மாளிகையை அமைத்திருக்கிறீர்!
மேகங்களை உமக்குத் தேர்களாக்கிக்
கொண்டு காற்றின் இறக்கைகளில்
செல்கிறீர்.
4 காற்றுகளே உம்முடைய தூதர்கள்;
சுடர் வீசும் மின்னல்களே உம்முடைய
பணியாளர்கள்.

5 பூமி ஒருபோதும் நிலைபெயராதபடி
அடிப்படைகள்மீது அதை அமைத்
திருக்கிறீர்;
6 போர்வையினால் மூடுவதுபோல அதை
ஆழ்கடலால் மூடினீர்;
மலைகளுக்கும் மேலாகத் தண்ணீர்
நின்றது.
7 நீர் கண்டிக்கவே, அது விலகி ஓடிற்று;
உமது குமுறலின் ஒலி கேட்டு அது
விரைந்து விலகிற்று.
8 நீர் குறித்த இடத்தில் மலைகள் எழுந்
தன;
பள்ளத்தாக்குகள் தாழ்ந்தன.
9 தண்ணீர் மீண்டும் நிலத்தை மூடிக்
கொள்ளாதபடி,
அதனால் கடக்க முடியாத எல்லையை
நீர் அதற்குக் குறித்தீர்.

10 மலை இடுக்குகளில் நீரோடைகளைப்
பாய்ந்தோடச் செய்கிறீர்;
அவை மலைகளுக்கிடையே ஓடுகின்றன.
11 அவை காட்டு விலங்குகளுக்கெல்லாம்
தண்ணீர் கொடுக்கும்;
அங்கே காட்டுக் கழுதைகள் தங்கள்
தாகத்தைத் தீர்த்துக் கொள்ளும்.
12 அவற்றின் ஓரத்தில் வானத்துப் பறவை
களுக்கு இருப்பிடம் உண்டு;
மரக்கிளைகளிலிருந்து அவை பாடும்.

13 நீர் உம்முடைய மேல் வீடுகளிலிருந்து,
மலைகளுக்குத் தண்ணீர் பொழியச்
செய்கிறீர்;
உம்முடைய செயல்களின் விளைவாக
நிலம் செழிப்பாக்கப்படுகிறது.
14 கால்நடைகளுக்குப் புல்லையும், மனித
னுக்குப் பயன்படக்கூடிய பயிர் வகை
களையும் நீர் முளைப்பிக்கின்றீர்;
எனவே, மனிதன் உணவுப் பொருளை
நிலத்திலிருந்து பெறுகிறான்;
15 தன் உள்ளத்திற்கு மகிழ்ச்சியூட்டத்
திராட்சை இரசமும்,
முகக்களை உண்டாக்க எண்ணெயும்,
மனத்திற்குத் திடமளிக்க உணவும் பெறு
கிறான்.

16 ஆண்டவர் நட்ட மரங்களுக்கு வேண்டு
மட்டும் தண்ணீர் கிடைக்கிறது;

104:4 எபி. 1:7.

அவர் லீபனேனில் நட்ட கேதுருமரங்
கள் செழித்து வளர்கின்றன.
17 அவற்றில் குருவிகள் கூடுகட்டும்;
தேவதாரு மரங்களில் கொக்குகள்
குடியிருக்கும்.

18 உயர்ந்த மலைகள் வரையாடுகளுக்கும்
கற்பாறைகள் குழிமுயல்களுக்கும்
அடைக்கலம் தரும்.

19 பருவ காலங்களைக் குறிப்பதற்கு
நிலாவை உண்டாக்கினர்;
கதிரவனுக்குத் தான் மறையவேண்டிய
நேரம் தெரியும்.
20 இருளை நீர் வரச்செய்யவே, இராக் கால
மும் வரும்;
அப்பொழுது காட்டு விலங்குகளெல்
லாம் நடமாடும்.
21 இளஞ்சிங்கங்கள் இரைக்காக முழக்கமிடு
கின்றன;
கடவுள் தங்களுக்கு அளிக்கும் இரை
யைத் தேடித்திரிகின்றன.
22 கதிரவன் எழவே, அவை திரும்பிப்
போய், தங்கள் குகைகளில் படுத்துக்
கொள்ளும்.
23 அப்பொழுது மனிதன் வெளியேறு
கிறன்; மாலைவரையில் உழைப்பதற்
காகச் செல்கிறன்.

24 ஆண்டவரே, உம்முடைய படைப்புகள்
எவ்வளவு திரளானவை!
அவற்றையெல்லாம் ஞானமாகப்
படைத்தருளினீர்;
பூமி உம்முடைய படைப்புகளால்
நிறைந்திருக்கிறது.
25 இதோ, ஆழ்கடல் பெரிதும் விரிந்தகன்
றிருக்கிறது;
அதில் வாழும் சிறியனவும் பெரியனவு
மான உயிரினங்கள் ஏராளம்.
26 அதில் கப்பல்கள் ஓடும்;
அதில் ஓடியாடித் திரியும்படி நீர்
படைத்த திமிங்கலமும் அதில் உண்டு

27 தக்க வேளையில் நீர் இரை கொடுப்
பீரென்று அவையனைத்தும் உம்மையே
நம்பியிருக்கின்றன.
28 நீர் கொடுக்க, அவை வாங்கிக்கொள்
ளும்;
உமது கையை நீர் திறக்க, அவை பசி
யாரத் தின்னும்.
29 நீர் உமது முகத்தை மறைக்க, அவை
திகைக்கும்;
நீர் அவற்றின் மூச்சை வாங்கிக்கொள்ள,
அவை மாண்டு மண்ணுக்கே மீண்டும்
செல்லும்.

30 நீர் உமது ஆவியை அனுப்ப, அவை
படைக்கப்படும்;
நீர் உலகத்திற்குப் புதிய உயிர் அளித்து
வருகிறீர்.

31 ஆண்டவரின் மாட்சிமை என்றென்றும்
நிலைத்திருப்பதாக!
ஆண்டவருக்குத் தம் படைப்புகளைக்
குறித்து மகிழ் உண்டாவதாக?
32 அவர் பூமியை நோக்க, அது அஞ்சி
நடுங்குகிறது;
அவர் மலைகளைத் தொட, அவை
புகையை வெளியிடுகின்றன.

33 நான் உயிரோடிருக்கும்வரையில் ஆண்ட
வரைப் பாடுவேன்;
நான் உள்ளவரையில் என் கடவுளைப்
புகழ்ந்து பாடுவேன்.
34 என் தியானம் அவருக்கு உகந்ததாயிருப்
பதாக!
ஆண்டவர் படைத்தவற்றை நினைத்து
நான் மகிழ்ச்சியடைகிறேன்.
35 பாவிகள் உலகினின்று ஒழிவார்களாக;
பொல்லார் இனி இராமற் போவாராக;
என் ஆன்மாவே, ஆண்டவரைப்
போற்று; அல்லேலூயா.*

## இஸ்ரவேலின் வரலாற்றில் நடந்த அற்புதங்கள்

105 ஆண்டவருக்கு நன்றி செலுத்துங்கள்;
அவரது திருப்பெயரை வழி
படுங்கள்;
அவர் செய்தவற்றை எல்லா இனத்த
வருக்கும் தெரியப்படுத்துங்கள்.
2 அவரைப் பாடுங்கள்; புகழ்ந்து பாடுங்
கள்;
அவர் செய்த அற்புதங்களையெல்லாம்
எடுத்துச் சொல்லுங்கள்.
3 அவரது தூய்மையான பெயரைக்
குறித்து மேன்மை பாராட்டுங்கள்;
ஆண்டவரை நாடித் தேடுவோரின்
உள்ளம் மகிழ்வதாக.
4 ஆண்டவரையும் அவரது வல்லமையை
யும் நாடுங்கள்;
அவரது திருமுகத்தை நாள்தோறும்
தேடுங்கள்.
5 அவர் தாசனுகிய ஆபிரகாமின்
மரபினரே,
அவர் தேர்ந்தெடுத்தவர்களாகிய யாக்
கோபின் வழித்தோன்றல்களே,
6 அவர் செய்த அற்புதங்களையும் அவரு
டைய வியக்கத்தக்க செயல்களையும்
அவர் வாய் உரைத்த தீர்ப்புகளையும்
நினைவுகூருங்கள்.

* அல்லேலூயா : இந்த எபிரேயச் சொல்லுக்கு 'ஆண்டவரைப் புகழுக!' என்பது பொருள்.

104:26 யோபு 41:1; சங். 74:14; ஏசா. 27:1.

7 நம் கடவுளாகிய ஆண்டவர் அவரே;
அவருடைய தீர்ப்புகள் உலகெங்கும் செல்லும்.
8 தாம் செய்த உடன்படிக்கையையும்,
ஆயிரம் தலைமுறைகளுக்குத்தாம் அளித்த வாக்குறுதிகளையும்,
9 ஆபிரகாமோடு தாம் செய்த உடன் படிக்கையையும்,
ஈசாக்குக்குத் தாம் கொடுத்த உறுதி மொழியையும்,
அவர் ஒருநாளும் மறவார்.
10 அதை அவர் யாக்கோபுக்கு விதியாக வும்
இஸ்ரவேலுக்கு என்றுமுள்ள உடன்படிக் கையாகவும் உறுதிப்படுத்தி,
11 ''கானான் நாட்டை உனக்குத் தருவேன்;
அதுவே உங்கள் உரிமைச் சொத்தா யிருக்கும்'' என்று சொன்னார்.

12 அக்காலத்தில் அவர்களது எண்ணிக்கை மிகச் சிறிதே;
அந்நாட்டில் அவர்கள் மிகச் சிலரே;
அவர்கள் அந்நாட்டில் அன்னியரா யிருந்தார்கள்.
13 அவர்கள் இனம் விட்டு இனம்,
நாடு விட்டு நாடு சென்று கொண்டிருந் தார்கள்.
14 அவர்களுக்குத் தீங்கு செய்ய எவரையும் அவர் விடவில்லை;
அவர்கள் பொருட்டு அவர் அரசர்களைத் தண்டித்தார்.
15 ''நான் தேர்ந்தெடுத்தவர்களைத் தொடாதீர்கள்;
என் வாக்கை உரைப்போருக்குத் தீங்கு செய்யாதீர்கள்'' என்று அவர்களுக் குச் சொன்னார்.

16 நாட்டில் பஞ்சம் வரும்படி செய்தார்;
உணவெனும் ஊன்றுகோலை முற்றும் உருக்குலையச் செய்தார்.
17 அவர்களுக்கு முன்னே ஓர் ஆளை அனுப் பினார்; அவர் பெயர் யோசேப்பு;
அவர் அடிமையாக விற்கப்பட்டார்.
18 அவர் கால்களில் விலங்கிட்டு அவரை வதைத்தார்கள்;
இரும்புச் சங்கிலி அவர் கழுத்தில் மாட்டியிருந்தது.
19 காலம் வந்தது; யோசேப்பு உரைத்தது நிறைவேறிற்று;
அவர் சொன்னது உண்மையெனக் காட் டப்பட்டது.
20 அரசன் ஆளனுப்பி அவரை விடுவித் தான்;
நாட்டுத் தலைவன் அவரை விடுதலை செய்தான்.
21 அவரைத் தன் வீட்டுக்குத் தலைவராக் கினான்;
தன் உடைமைகள் அனைத்தின்மீதும் அவருக்கு அதிகாரம் கொடுத்தான்.
22 அரச அலுவலரை அவர் தம் விருப்பப் படி கட்டுப்படுத்தவும்,
தனக்கு ஆலோசனை கூறுவோருக்கு நல் லறிவு புகட்டவும் அவரை ஏற்படுத் தினான்.

23 அக்காலத்தில் இஸ்ரவேல் எகிப்துக்கு வந்தார்;
யாக்கோபு காமின் நாட்டில்* அன்னிய ராக வாழ்ந்து வந்தார்.
24 ஆண்டவர் தம் மக்களின் எண்ணிக்கை பெரிதாகும்படி செய்தார்;
அவர்களுடைய எதிரிகளைவிட அவர்களை வலிமை வாய்ந்தவர்களாக்கினார்;
25 எகிப்தியர் தம் மக்களை வெறுக்கும்படி யும்,
தம் அடியாரை வஞ்சகமாக நடத்தும் படியும் அவர்கள் மனத்தை மாற் றினார்.

26 அவர்தம் தாசனாகிய மோசேயையும்
தாம் தேர்ந்தெடுத்த ஆரோனையும் அவர்களிடையே அனுப்பிவைத்தார்.
27 அவர்கள் அம்மக்களிடையே ஆண்ட வரின் அரிய செயல்களைச் செய்தார் கள்;
காமின் நாட்டில் அற்புதங்களைச் செய் தார்கள்.
28 அவர் இருளை அனுப்பினார்; நாடும் இருளடைந்தது;
எனினும், எகிப்தியர் அவரது சொல்லை எதிர்த்து நின்றனர்.
29 அவர்களுடைய நீர்நிலைகளை அவர் இரத்தமாக மாற்றினார்;
அவற்றிலிருந்த மீன்களைச் சாகடித்தார்.
30 அவர்கள் நாட்டில் தவளைகள் திரளாய்த் தோன்றின;
அவர்களுடைய ஆட்சித் தலைவர்களின் வீட்டறைகளிலும் அவை நுழைந் தன.
31 அவர் கட்டளையிட, நாடெங்கும் திரளான ஈக்களும் கொசுக்களும் மொய்த்தன.
32 மழைக்குப் பதிலாகக் கல்மழை பெய்யும் படி செய்தார்;
ஒளிதெறிக்கும் மின்னல்களை நாட்டில் உண்டாகச் செய்தார்.

*காமின் நாடு: எகிப்து நாடு.

105:9 ஆதி. 12:7; 17·8; 26:3. 105:10,11 ஆதி. 28:13. 105:14,15 ஆதி. 20:3-7. 105:16 ஆதி. 41:53-57. 105:17 ஆதி. 37.28; 45:5. 105:18-19 ஆதி. 39:20-40:23. 105:20 ஆதி. 41:14. 105:21 ஆதி. 41:39-41. 105:23 ஆதி. 46:6; 37·41. 105:24,25. யாத். 1:7-14. 105:28 யாத். 10:21-23. 105:29 யாத். 7:17-21. 105:30 யாத். 8:1-6. 105:31 யாத். 8:20-24. 105:32,33 யாத். 9:22-25.

33 அவர்களுடைய திராட்சைச் செடிகளையும் அத்திமரங்களையும் அழித்தார்:
அவர்கள் நாடெங்குமுள்ள மரங்களை முறித்தார்.
34 அவர் கட்டளையிட்டார், எண்ணிறந்த வெட்டுக்கிளிகளும் பச்சைப் புழுக்களும் வந்தன.
35 அவை அவர்கள் நாட்டிலுள்ள எல்லாப் புற்பூண்டுகளையும் அழித்தன;
அவர்கள் நிலத்தின் விளைச்சலையும் தின்றுவிட்டன.
36 அவர்கள் நாட்டிலுள்ள தலைச்சன்கள் அனைத்தையும் அழித்தார்;
முதற்பேறான யாவரையும் அழித்தார்.

37 பிறகு அவர் தம் மக்களை வெள்ளியோடும் பொன்னோடும் புறப்படச் செய்தார்;
அவர்கள் குலங்களில் வலுக்குறைந்தவன் ஒருவனுமில்லை.
38 அவர்கள் புறப்பட்டபோது எகிப்தியர் மகிழ்ச்சியடைந்தனர்;
ஏனெனில், அவர்களைப்பற்றிய திகில் அவர்களுக்கு இருந்து வந்தது.
39 அவர்களுக்கு நிழல் தரஅவர் மேகத்தை விரித்தார்;
இரவில் வெளிச்சந் தர நெருப்பைத் தந்தார்.

40 அவர்கள் உணவு கேட்டார்கள்; அவர் காடைகளை வரச் செய்தார்;
வானத்திலிருந்து வந்த உணவினாலும் அவர்களது ஆவல் தீர்த்தார்.
41 கற்பாறையைப் பிளந்தார்; தண்ணீர் பொங்கி வழிந்தது;
அது வறண்ட நிலத்தில் ஆறாய் ஓடிற்று.
42 அவர் தம் தாசனாகிய ஆபிரகாமுக்கு அளித்த வாக்குறுதியை நினைவுகூர்ந்தார்.
43 தம் மக்களை மகிழ்ச்சியோடு செல்லும்படி செய்தார்;
தாம் தேர்ந்துகொண்ட மக்களைக் களிப்பாரவாரத்தோடு போகச் செய்தார்.
44 தம் விதிகளை அவர்கள் பின்பற்றி நடக்கவேண்டுமென்றும்,
நீதிச்சட்டங்களை அவர்கள் கடைப்பிடிக்க வேண்டுமென்றும்,
45 பிற இனத்தவரின் நாடுகளை அவர்களுக்குக் கொடுத்தார்;
அன்னியருடைய விளைநிலங்கள் அவர்களுக்குச் சொந்தமாயின.
அல்லேலூயா.

## கடவுள் தம் மக்களுக்குக் காட்டினகருணை

**106** அல்லேலூயா.
ஆண்டவருக்கு நன்றிசெலுத்துங்கள்; அவர் நல்லவர்;
அவரது அருள் என்றுமுள்ளது.
2 ஆண்டவரின் வல்லமைமிக்க செயல்களை யாரால் எடுத்துரைக்கக் கூடும்?
அவருடைய புகழையெல்லாம் யாரால் விரித்துரைக்கக் கூடும்?

3 நேர்மையாக நடப்போர் நற்பேறு பெற்றோர்;
எப்போதும் நீதியானதையே செய்வோர் நற்பேறுபெற்றோர்.

4 ஆண்டவரே, நீர் தேர்ந்தெடுத்த மக்களுக்கு நீர் கருணை காட்டும்போது என்னை நினைத்தருளும்;
அவர்களை விடுவிக்கும்போது எனக்கும் உதவிசெய்தருளும்.
5 நீர் தேர்ந்தெடுத்த மக்களின் நல்வாழ்வை நான் காணும்படி செய்யும்;
உம்முடைய மக்களின் மகிழ்ச்சியில் நானும் பங்குகொள்ளும்படி செய்யும்.
உமக்குச் சொந்தமான மக்களோடு சேர்ந்து நானும் மேன்மை பாராட்டச் செய்யும்.

6 எங்கள் மூதாதையரைப்போல நாங்களும் பாவம் செய்தோம்;
குற்றம் புரிந்தோம், தீமை செய்தோம்.
7 எங்கள் மூதாதையர் எகிப்து நாட்டில் நீர் செய்த வியக்கத்தக்க செயல்களைப் புரிந்துகொள்ளவில்லை;
உமது மாபெரும் அருளை நினைவுகூரவில்லை.
மாறாக, உன்னதமானவரை எதிர்த்துச் செங்கடல் ஓரத்தில் கலகம் விளைவித்தனர்.
8 ஆனால் அவர் தமது திருப்பெயரின் பொருட்டு அவர்களை மீட்டார்;
இவ்வாறு தமது வல்லமையை வெளிப்படுத்தினார்.
9 அவர் செங்கடலை அதட்டினார்; அது வற்றிப்போயிற்று;
கட்டாந்தரையில் நடத்திச் செல்வதுபோல அவர்களைக் கடல் வழியாக நடத்திச் சென்றார்.
10 பகைவர்களிடமிருந்து அவர்களைக் காப்பாற்றினார்;
எதிரியின் கைக்கு அவர்களைத் தப்புவித்தார்.

105:34,35 யாத். 10:12-15. 105:36 யாத். 12:29. 105:37,38 யாத். 12:33-36. 105:39 யாத். 13:21,22. 105:40 யாத். 16:2-15. 105:44 யோசுவா 11:16-23. 106:1 சங். 100:5. 106:7 யாத். 14:10-12.

11 அவர்களுடைய பகைஞரைத் தண்ணீர் மூடிக்கொண்டது;
அவர்களுள் ஒருவன்கூடத் தப்பவில்லை.
12 அப்பொழுது அவர்கள் அவருடைய வாக்குறுதிகளில் நம்பிக்கை வைத்தார்கள்;
அவர்கள் அவரைப் புகழ்ந்து பாடினர்கள்.

13 ஆனாலும், அவர் செய்தவற்றை அவர்கள் விரைவிலேயே மறந்துவிட்டார்கள்;
அவரது திட்டத்தை அறிந்துகொள்ள அவர்கள் காத்திருக்கவில்லை.
14 பாலை நிலத்தில் அவர்கள் தங்கள் இச்சைகளுக்கு இடங் கொடுத்தார்கள்;
பாலைவனத்தில் அவர்கள் கடவுளைச் சோதித்துப் பார்த்தார்கள்.
15 அவர்கள் கேட்டதை அவர் அவர்களுக்குக் கொடுத்தார்;
ஆயினும், அவர்களிடையே கொடிய நோய் ஒன்றைப் பரவச் செய்தார்.

16 பாளையத்தில் இருக்கையில் அவர்கள் மோசேயின் மேலும்,
ஆண்டவருக்கு உகந்தவரான ஆரோன் மேலும் பொறாமை கொண்டார்கள்.
17 நிலம் பிளந்து, தாத்தானை விழுங்கிற்று;
அபிராமையும் அவன் கூட்டாளிகளையும் விழுங்கிற்று.
18 அவர்கள் கூட்டத்தில் நெருப்புப் பற்றியெரிந்தது;
பொல்லாரை அனற்கொழுந்து எரித்து விட்டது.

19 அவர்கள் ஓரேபில் ஒரு கன்றுக்குட்டியை உருவாக்கினர்கள்;
வார்க்கப்பட்ட அச்சிலையை அவர்கள் வணங்கினர்கள்.
20 இவ்வாறு மாட்சிமை மிக்க தங்கள் ஆண்டவரை அவர்கள் புல் தின்னும் காளையின் உருவமாக மாற்றினர்கள்.
21 எகிப்தில் மாபெரும் காரியங்களையும் காமின் நாட்டில் வியக்கத்தக்க செயல்களையும்,
22 செங்கடலருகில் திகிலுண்டாக்கும் செயல்களையும்
செய்த தங்கள் மீட்பராகிய கடவுளை அவர்கள் மறந்தார்கள்.
23 ஆகையால் அவர்களை அழித்துவிடப் போவதாகக் கடவுள் சொன்னர்;
ஆனல் மோசே அவரது கடுஞ்சினத்தைத் தணிக்கும்படி,
அவர்முன் இணைப்பாளராக நின்று அவர்களை அவர் அழிக்காதபடி தடுத்தார்.

24 அவர்கள் அவரது வாக்குறுதியை நம்பாமல்,
அந்த அருமையான நாட்டை வேண்டாமென்று புறக்கணித்தார்கள்.
25 ஆண்டவரின் குரலுக்குச் செவிகொடாமல்,
தங்கள் கூடாரங்களில் முணுமுணுத்துக் கொண்டிருந்தார்கள்.
26 எனவே, ஆண்டவர் அவர்களைப் பாலைவனத்தில் மடியச் செய்யப்போவதாகவும்,
அவர்களுடைய மரபினரைப் பிற இனத்தவரிடையே சிதறலாகப் போகச் செய்து,
27 அவர்களை அன்னிய நாட்டில் அழியச் செய்யப் போவதாகவும்,
தமது கையை உயர்த்தி ஆணையிட்டுக் கூறினர்.

28 அவர்கள் பாகால் பேயோரைப் பற்றிக் கொண்டு,
உயிரற்ற தெய்வங்களுக்குப் பலியிடப் பட்டவற்றை உண்டார்கள்.
29 இவ்வாறு தங்கள் செய்கைகளினல் அவருக்குச் சினமூட்டினர்கள்;
ஆகவே, கொள்ளைநோய் அவர்களிடையே பரவிற்று.
30 அப்பொழுது பினெகாஸ் என்பவர் எழுந்தார்;
குற்றவாளிகளைத் தண்டித்தார்;
கொள்ளை நோயும் நீங்கிற்று.

31 இதனல் கடவுள் அவரை நீதிமானெனப் பாவித்து ஏற்றுக் கொண்டார்.
தலைமுறை தலைமுறையாக இது நினைவு கூரப்படும்.
32 மெரிபாவின் ஊற்றினருகிலும் அவருக்குக் கடுஞ்சின மூட்டினர்கள்;
அவர்களால் மோசேயுக்கும் தீங்கு நேரிட்டது.
33 அவர்கள் மோசேயுக்கு மனவருத்தத்தை உண்டுபண்ணினதால்,
அவர் பேசத்தகாததைப் பேசினர்.

34 பிற இனத்தவரை அழித்துவிடும்படி ஆண்டவர் அவர்களுக்குக் கட்டளையிட்டிருந்தார்;
ஆனல் அவர்கள் அப்படிச் செய்யவில்லை.
35 அவர்கள் பிற இனத்தவரோடு கலப்பு மண உறவுகொண்டு,
அவர்கள் வழிகளைப் பின்பற்றி நடந்தார்கள்.
36 அவர்கள் தொழுதுவந்த சிலைகளை இவர்களும் தொழுதார்கள்;
அவையே அவர்களுக்குக் கண்ணிகளாயின.

**106:9-12** யாத். 14:21-31. **106:14,15** எண். 11:4-34. **106:27** இலே. 26:33.

37 தங்கள் புதல்வரையும் புதல்வியரையும்
அவர்கள் பேய்களுக்குப் பலியிட்டார்
கள்.
38 குற்றமற்ற தங்கள் புதல்வர் புதல்வி
யரின் இரத்தத்தைச் சிந்தினூர்கள்;
கானூன் நாட்டுத் தெய்வச் சிலைகளுக்கு
அவர்களைப் பலியிட்டார்கள்.
அவர்கள் இரத்தத்தால் நாடு தீட்டுப்
பட்டது.
39 இவ்வாறு அவர்கள் தங்கள் செய்கை
களினுல் தங்களைக் கறைப்படுத்திக்
கொண்டார்கள்;
தங்கள் நடத்தையால் சோரம் போன
வர்களானூர்கள்.

40 அதனுல் ஆண்டவரின் சினம் அவரு
டைய மக்கள்மேல் மூண்டது;
தமக்குச் சொந்தமானவர்கள்மீது
அவருக்கு வெறுப்பு உண்டாயிற்று.
41 அவர்களைப் பிற இனத்தவர் கையில்
ஒப்புக்கொடுத்தார்;
அவர்கள் பகைஞர் அவர்களை ஆண்டு
வந்தார்கள்.
42 அவர்கள் எதிரிகள் அவர்களை ஒடுக்கினூர்
கள்;
தங்கள் கையின் கீழ் அவர்களைத் தாழ்த்
தினூர்கள்.
43 பன்முறை அவர் அவர்களை விடுவித்தார்;
அவர்களோ அவரை எதிர்த்து நிற்கத்
துணிந்தார்கள்;
தங்கள் தீய செய்கைகளில் மேலும்
இறங்கினூர்கள்.

44 எனினும், அவர்களது மன்றாட்டுக்கு
அவர் செவிசாய்த்தார்;
அவர்களுக்கு உண்டான இக்கட்டை
அவர் கண்டு இரங்கினூர்.
45 தமது உடன்படிக்கையை நினைவுகூர்ந்
தார்;
தமது பேரருளுக்கேற்ப அவர்களுக்குக்
கருணை காட்டினூர்.
46 அவர்களைச் சிறைசெய்த யாவரும்
அவர்களுக்கு இரக்கம் காட்டும்படி செய்
தார்.

47 எங்கள் கடவுளாகிய ஆண்டவரே, நாங்
கள் உமது புனிதமான பெயருக்கு
நன்றி செலுத்தி,
உம்மைப் போற்றி மேன்மை பாராட்
டும்படி பிறஇனத்தவரிடையேயிருந்து
எங்களை வரவழைத்து ஒன்று சேர்த்
தருளும்.

48 இஸ்ரவேலின் கடவுளாகிய ஆண்ட
வருக்கே புகழ்ச்சி!
அனுதி காலமுதல் என்றென்றைக்கும்
அவருக்கே புகழ்ச்சி!
எல்லா மக்களும், 'ஆமென்' என்று
சொல்வார்களாக.
அல்லேலூயா.

## ஐந்தாம் பாகம்

## 107 - 150

### கடவுளின் கருணையைப் போற்றுதல்

107 ஆண்டவருக்கு நன்றிசெலுத்துங்கள்;
அவர்நல்லவர்;
அவரது அருள் என்றுமுள்ளது.
2 ஆண்டவரால் மீட்கப்பட்டவர்கள் அப்
படிச் சொல்வார்களாக;
அவர் அவர்களைப் பகைஞரின்
கையினின்று மீட்டார்.
3 கிழக்கிலும் மேற்கிலும் வடக்கிலும்
தெற்கிலுமுள்ள பிற நாடுகளிலிருந்து
அவர்களை வரவழைத்துக் கூட்டிச் சேர்த்
தார்.

4 பாலை நிலத்திலே, மனித நடமாட்டம்
இல்லாத அந்த இடத்திலே,
அவர்கள் அலைந்து கொண்டிருந்தார்
கள்;
தாங்கள் குடியிருப்பதற்கான ஊர் எதை
யும் காணுமல் அலைந்தார்கள்.
5 பசியாலும் தாகத்தாலும் வருந்தினூர்
கள்;
மனச் சோர்வுடன் அலைந்தார்கள்.
6 அந்த இக்கட்டு நேரத்தில் அவர்கள்
ஆண்டவரை நோக்கி மன்றாடினூர்
கள்;
அவர்கள் இக்கட்டுகளிலிருந்து அவர்
அவர்களை மீட்டார்.
7 குடியிருக்கும் ஊர் போய்ச் சேரும்வரை
யில்,
அவர் அவர்களைச் செவ்வையான
வழியில் நடத்திச் சென்றூர்.
8 ஆண்டவரின் பேரருளை நினைத்து அவர்
கள் அவரைப் போற்றுவார்களாக;
மனுமக்களுக்காக அவர் செய்த வியக்
கத்தக்க செயல்களை முன்னிட்டு
அவரைப் புகழ்வார்களாக.
9 அவர் தாகமுற்றூரின் ஆவல் தீர்க்
கிறூர்;
பசியுள்ளவர்களை நன்மைகளால் நிரப்பு
கிறூர்.

10 சிலர் கடவுளின் சொல்லை எதிர்த்துக்
கலகம் உண்டுபண்ணினர்;
உன்னதமானவரின் கட்டளையைப் புறக்
கணித்தனர்.
11 ஆகையால் அவர்கள் இருளிலும் கடுந்
துயரத்திலும் இருந்தார்கள்;

106:37 2 அர. 17:17. 106:38 எண். 35:33. 106:40-46 நீதிபதி. 2:14-18. 106:47,48 1 வரலாறு. 16: 35,36
107:1 சங். 100:5

விலங்கிடப்பட்டுத் துன்புறும் கைதிகளா
யிருந்தார்கள்.
12 கடினமான வேலையினால் அவர்கள்
நலிவுற்றார்கள்;
தடுமாறி விழுந்தார்கள்; உதவி செய்
வார் எவருமில்லை.
13 அவர்கள் அந்த இக்கட்டு நேரத்தில்
ஆண்டவரை நோக்கி மன்றாடினார்
கள்;
அவர்களுடைய இக்கட்டுகளிலிருந்து
அவர் அவர்களை விடுவித்தார்.
14 அவர்கள் விலங்குகளை முறித்தார்;
இருளிலும் கடுந்துயரத்திலுமிருந்து
அவர்களை வெளியே கொணர்ந்தார்.
15 ஆண்டவரின் பேரருளை நினைத்து அவர்
கள் அவரைப் போற்றுவார்களாக;
மனுமக்களுக்காக அவர் செய்த வியக்
கத்தக்க செயல்களை முன்னிட்டு
அவரைப் புகழ்வார்களாக.
16 அவர் செப்புக் கதவுகளை உடைத்தார்.
இருப்புத் தாழ்ப்பாள்களை முறித்தார்;

17 சிலர் தம் பாவங்கள் காரணமாக நோய்
வாய்ப்பட்டனர்;
அவர்கள் தங்கள் தீயசெய்கைகள்
காரணமாகத் துன்புற்றார்கள்.
18 எந்த உணவின்மீதும் அவர்களுக்கு
விருப்பமில்லை;
சாவின் வாயில்களை அவர்கள் நெருங்
கினார்கள்.
19 இக்கட்டு நேரத்தில் ஆண்டவரை
நோக்கி மன்றாடினார்கள்;
அவர்கள் இக்கட்டுகளிலிருந்து அவர்
அவர்களை விடுவித்தார்.
20 அவர் தமது வார்த்தையால் அவர்களைக்
குணப்படுத்தினார்;
படுகுழிக்கு அவர்களைத் தப்புவித்தார்.
21 ஆண்டவரின் பேரருளை நினைத்து அவர்
கள் அவரைப் போற்றுவார்களாக;
மனுமக்களுக்காக அவர் செய்த வியக்
கத்தக்க செயல்களை முன்னிட்டு
அவரைப் புகழ்வார்களாக;
22 அவர்கள் நன்றிப் பலிகளைச் செலுத்து
வார்களாக;
அவருடைய செயல்களைக் களிப்பார
வாரத்துடன் எடுத்துரைப்பார்களாக.

23 கப்பலேறிப் பெருங்கடலில் பயணம்
செய்து வணிகம் செய்வதற்காகப்
போகிறவர்கள்,
24 ஆண்டவரின் செயல்களைக் காண்கிறார்
கள்;
கடலில் அவருடைய வியக்கத்தக்க
செயல்களைப் பார்க்கிறார்கள்.
25 அவர் கட்டளையிட, பெருங்காற்று உண்
டாகிறது;
அது அலைகளை உயரமாக எழும்பச் செய்
கிறது.
26 அவர்கள் வானத்தில் சென்று ஆழ்
கடலில் இறங்குகிறார்கள்;
அவர்கள் மனம் இடுக்கண் கண்டு கலங்கு
கிறது.
27 குடித்து வெறித்தவனைப் போல அங்கு
மிங்கும் தடுமாறுகிறார்கள்;
அவர்களது கைத்திறமையெல்லாம்
பயனற்றதாகிறது.
28 தங்களுக்கு இக்கட்டு வரவே,
அவர்கள் ஆண்டவரை நோக்கி மன்
றாடுகிறார்கள்;
அவர்கள் இக்கட்டுகளிலிருந்து அவர்
அவர்களை விடுவிக்கிறார்.
29 கடற்கொந்தளிப்பை அவர் அமைதிப்
படுத்துகிறார்;
அதன் அலைகளின் இரைச்சலும் அடங்கு
கின்றது.
30 அமைதி உண்டாவதால் அவர்கள்
மகிழ்ச்சியடைகிறார்கள்;
அவர்கள் நாடிச் சென்ற துறைமுகத்தில்
அவர் அவர்களைக் கொண்டுபோய்ச்
சேர்க்கிறார்.

31 ஆண்டவரின் பேரருளை நினைத்து அவர்
கள் அவரைப் போற்றுவார்களாக;
மனுமக்களுக்காக அவர் செய்கிற வியக்
கத்தக்க செயல்களை முன்னிட்டு
அவரைப் புகழ்வார்களாக.
32 மக்கள் சபையில் அவரைப் புகழ்வார்
களாக;
மூப்பர் சங்கத்தில் அவரைப் போற்று
வார்களாக.

33 மக்களின் பொல்லாங்கை முன்னிட்டு
அவர் ஆறுகளைப் பாலைநிலமாகவும்
34 நீரூற்றுகளை வறண்ட நிலமாகவும்,
செழிப்பான நாட்டை உவர் நிலமாக
வும் மாற்றுகிறார்.
35 அவர் பாலை நிலத்தைத் தண்ணீர்த்
தடாகமாகவும்
வறண்ட நிலத்தை நீரூற்றுகளாகவும்
மாற்றி,
36 பசியுள்ளோரை அங்கே குடியேற்று
கிறார்;
அங்கே அவர்கள், தாங்கள் குடியிருக்க
ஓர் ஊரை அமைக்கிறார்கள்.
37 வயல்களில் விதை விதைக்கிறார்கள்;
திராட்சைத் தோட்டங்களை அமைக்
கிறார்கள்;
அவற்றிலிருந்து நல் விளைச்சலைப் பெறு
கிறார்கள்.
38 அவர் அவர்களுக்கு ஆசி வழங்குகிறார்;
அவர்கள் பலுகிப் பெருகுகிறார்கள்;
அவர்களுடைய கால்நடைகள் குறைந்து
போகும்படி விடமாட்டார்.

39 பிறகு அவர்கள் கொடுமையாலும்
தொல்லையாலும் துயரத்தாலும்
குறைந்து

தாழ்நிலையை அடைகிறார்கள்.
40 தலைவர்களுக்கு அவர் இகழ்ச்சி வரும்படி செய்கிறார்;
வழியில்லாத பாலைவனத்தில் அவர்களை அலையச் செய்கிறார்;
41 ஆனால் அவர் வறியோரை இக்கட்டு நிலையிலிருந்து தூக்கி எடுக்கிறார்;
அவர்கள் குடும்பங்களை ஒரு மந்தை போலப் பெருகச் செய்கிறார்.
42 நேர்மையானவர்கள் அதைக் கண்டு மகிழ்வார்கள்;
தீமை செய்கிறவர்கள் தங்கள் வாயை மூடிக்கொள்வார்கள்.
43 விவேகமுள்ள யாவரும் இவற்றை எண்ணிப் பார்ப்பார்களாக;
ஆண்டவரின் பேரருள் செய்தவற்றை உணர்ந்துகொள்வார்களாக.

### எதிரியின் கைக்குத் தப்புவிக்கும்படி வேண்டுதல்

*(தாவீதின் சங்கீதம்)*

**108** என் உள்ளம் உறுதியாயிருக்கிறது; கடவுளே, என் உள்ளம் உறுதியாயிருக்கிறது;
நான் இன்னிசை எழுப்புவேன்; உம்மைப் புகழ்ந்து பாடுவேன்.
என் ஆன்மாவே, விழித்தெழு.
2 வீணையே, சுரமண்டலமே, விழியுங்கள்;
வைகறையை விழித்தெழச் செய்வேன்.
3 ஆண்டவரே, மக்களிடையே உமக்கு நன்றிசெலுத்துவேன்;
எல்லா இனத்தவரிடையேயும் உம்மைப் புகழ்ந்து பாடுவேன்.
4 உமது பேரருள் வானம் வரைக்கும் உயர்ந்துள்ளது;
உமது உண்மை மேகமண்டலம் வரைக்கும் எட்டுகிறது.

5 கடவுளே, வானத்தில் உமது மேன்மையை வெளிப்படுத்தும்.
உலகெங்கும் உமது மாட்சிமை விளங்குவதாக.
6 உமக்கு அன்பார்ந்தவர்கள் விடுவிக்கப்படும்படி, உமது வலக்கையால் அவர்களுக்கு வெற்றியளியும்;
எங்கள் விண்ணப்பத்திற்குச் செவிசாய்த்தருளும்.

7 கடவுள் தமது புனித அகத்தில் இவ்வாறு உரைத்தார் :
''வெற்றிக் களிப்பினிடையே சீகேமைப் பங்கிடுவேன்;
சுக்கோத்துப் பள்ளத்தாக்கை அளந்து கொடுப்பேன்.
8 கீலேயாத்து என்னுடையது; மனாசேயும் என்னுடையது;
எப்பிராயீம் என் தலைச் சீரா; யூதா என் செங்கோல்.
9 மோவாபு எனக்குப் பாதங் கழுவும் பாத்திரம்;
ஏதோமின்மேல் என் மிதியடியை எறிவேன்*
பெலிஸ்தியாவை வென்று ஆர்ப்பரிப்பேன்.''

10 அரண்சூழ்ந்த பட்டணத்திற்குள் என்னை நடத்திக்கொண்டு போகிறவர் யார்?
ஏதோம் வரைக்கும் எனக்கு வழிகாட்டுகிறவர் யார்?
11 கடவுளே, நீர் எங்களைக் கைவிட்டீரல்லவோ?
கடவுளே, நீர் எங்கள் படைகளோடு புறப்படவில்லையே.
12 இந்த இக்கட்டு நேரத்தில் எங்களுக்கு உதவி செய்யும்;
மனிதர் உதவி பயனற்றது.
13 கடவுளின் துணையால் வீரத்துடன் போரிடுவோம்;
அவரே எங்கள் பகைவரை நசுக்கி விடுவார்.

### துன்புறும் ஒருவனது முறையீடு

*(பாடகர் தலைவனுக்கு; தாவீதின் சங்கீதம்)*

**109** நான் போற்றிப் புகழும் கடவுளே, மவுனமாயிராதேயும்.
2 பொல்லாரும் வஞ்சகரும் எனக்கு விரோதமாகப் பேசுகின்றனர்;
என்னைப்பற்றிப் பொய்யானவற்றைக் கூறுகின்றனர்.
3 பகை நிறைந்த சொற்களால் என்னைத் தாக்கிப் பேசுகின்றனர்;
காரணமின்றி என்னைத் தாக்குகின்றனர்.
4 நான் அவர்களுக்கு அன்பு காட்டினேன்; அவர்களோ என்னைப் பகைக்கிறார்கள்;
நான் அவர்களுக்காகக் கடவுளிடம் மன்றாடினேன்.
5 நான் செய்வது நன்மை, அவர்கள் செய்வதோ தீமை;
நான் காட்டுவது நட்பு; அவர்கள் காட்டுவதோ வெறுப்பு.

6 என் எதிரியை விசாரணை செய்யப் பொல்லான் ஒருவனை அமர்த்தும்;
அவனைப் பகைக்கிறவன் அவன்மீது குற்றம் சுமத்தட்டும்.
7 விசாரணை செய்யப்படுகையில் அவன் குற்றவாளியெனத் தீர்ப்புப் பெறுவானாக;
அவனது மன்றாட்டும் பாவமெனக் கருதப்படுவதாக.

*சங். 60 : 8 அடிக்குறிப்பைப் பார்க்க.

8 அவனது வாழ்நாள் குறைக்கப்படுவதாக;
அவனது பதவியை வேறொருவன் பறித்துக்கொள்வானாக.
9 அவனுடைய பிள்ளைகள் திக்கற்றவர்களாகட்டும்;
அவன் மனைவி கைம்பெண் ஆவாளாக.
10 அவனுடைய பிள்ளைகள் அலைந்து திரியும் பிச்சைக்காரராகட்டும்;
அவர்கள் பாழாய்ப் போன தங்கள் வீடுகளிலிருந்து துரத்தப்படுவார்களாக.
11 கடன் கொடுத்தவன் அவன் சொத்தையெல்லாம் பறித்துக் கொள்வானாக;
அவனது உழைப்பின் பலனை அன்னியர் பிடுங்கிக் கொள்வார்களாக.

12 அவனுக்கு எவனும் கருணை காட்டாதிருக்கட்டும்;
அவனுடைய திக்கற்ற பிள்ளைகளுக்கு எவரும் இரக்கம் காட்டாதிருக்கட்டும்.
13 அவனது குடும்ப மரபு அடியோடு அழியட்டும்;
அடுத்த தலைமுறையில் அவன் பெயர் இல்லாமற்போகட்டும்.
14 அவனுடைய மூதாதையரின் குற்றத்தை ஆண்டவர் நினைத்துக்கொள்வாராக.
அவன் தாயின் பாவம் மன்னிக்கப்படாதிருப்பதாக.
15 அவை என்றும் ஆண்டவர் முன்னிலையில் இருக்கட்டும்;
அவர்கள் நினைவு உலகில் இராமற்போகட்டும்.
16 ஏனெனில், அவன் இரக்கம் காட்ட நினைக்கவில்லை;
சிறுமைப்படுகிறவனையும் ஏழையையும் துன்புறுத்தினான்;
மனமுடைந்தவனைக் கொல்லப் பார்த்தான்.
17 சாபம் கூறுவதே அவனுக்கு விருப்பம்;
அது அவன் மீதே திரும்பிற்று;
அவன் ஆசிவழங்குவதை விரும்பவில்லை,
அது அவனை விட்டகன்றது.
18 சாபத்தைத் தனக்கு ஆடையாக்கினான்;
அது அவன் உள்ளத்தில் தண்ணீரைப் போலவும்,
அவன் எலும்புகளில் எண்ணெயைப் போலவும் பரவிற்று.
19 அது அவன் போர்த்துக்கொள்கிற போர்வையாகட்டும்;
நாள்தோறும் கட்டிக் கொள்ளுகிற அரைக்கச்சை ஆவதாக.

20 என்னைப் பகைக்கிறவர்களுக்கும்
என்னைப் பற்றித் தீதாய்ப் பேசுவோருக்கும் ஆண்டவர் அளிக்கும் தண்டனை இதுவாயிருக்கட்டும்.
21 கடவுளாகிய ஆண்டவரே, உமது திருப்பெயரின் பொருட்டு என்னை ஆதரித்தருளும்;
நலமார்ந்த உமது பேரருளை முன்னிட்டு என்னை விடுவித்தருளும்.
22 நான் எளியவன், வறியவன்;
என் உள்ளம் புண்பட்டிருக்கிறது.
23 மாலை நிழலைப்போல நான் மறைந்து போகும் நிலையிலிருக்கிறேன்;
வெட்டுக்கிளியைப்போலக் காற்றில் அடித்துச் செல்லப்படுகிறேன்;
24 உணவின்றி என் முழங்கால்கள் தளர்ந்தன;
என் உடம்பு மெலிந்து போயிற்று.
25 நான் அவர்கள் பழிப்புரைக்கு இலக்கானேன்;
அவர்கள் என்னைப் பார்த்து ஏளனமாகத் தங்கள் தலையை ஆட்டுகிறார்கள்.

26 என் கடவுளாகிய ஆண்டவரே, எனக்கு உதவி செய்தருளும்,
உமது பேரருளுக்கேற்ப என்னைக் காப்பாற்றியருளும்.
27 ஆண்டவரே, இதை உமது கை செய்ததென்பதை அவர்கள் அறிவார்களாக;
நீரே இதைச் செய்தீர் என்பதை அவர்கள் தெரிந்து கொள்வார்களாக.
28 அவர்கள் சபித்தாலும், நீர் எனக்கு ஆசி வழங்குவீர்;
அவர்கள் என்னை எதிர்க்கும்போது வெட்கத்திற்குள்ளாவார்கள்;
உம்முடைய அடியானாகிய நானோ மகிழ்வேன்.
29 என்னைப் பகைக்கிறவர்களுக்கு மானக்கேடு ஆடையாவதாக;
அவர்கள் தங்கள் வெட்கக்கேட்டைப் போர்வைபோலப் போர்த்துக்கொள்வார்களாக.

30 நான் ஆண்டவரை என் வாயால் புகழுவேன்;
பெருங்கூட்டத்தில் அவரைப் போற்றுவேன்.
31 ஏனென்றால், எளியவனுக்காக அவர் வழக்காடுவார்;
அவனுக்குத் தண்டனைத் தீர்ப்பு அளிப்போரிடமிருந்து அவனை விடுவிப்பார்.

## ஆண்டவரும் அவர் தேர்ந்துகொண்ட அரசரும்

(தாவீதின் சங்கீதம்)

110 (கடவுளாகிய) ஆண்டவர் என் ஆண்டவரிடம்,
''நான் உம்முடைய எதிரிகளை உமக்குப் பாதப்படியாக்கி விடுகிறேன்;

109:8 திருத்தூது 1:20. 109:25 மத். 27:39; மாற். 15:29.

அது வரையிலும் நீர் என் வலப்பக்கத்
தில் அமர்ந்திரும்'' என்று உரைக்
கிறூர்.
2 ஆண்டவர் சீயோனிலிருந்து வல்லமை
வாய்ந்த செங்கோலை உம்மிடம் ஒப்
படைப்பார்;
நீர் உம்முடைய எதிரிகளிடையே ஆட்சி
செலுத்துவீர்.

3 உமது வல்லமை விளங்கும் நாளில்
உம்முடைய மக்கள் மனமுவந்து
பரிசுத்த அலங்காரமுள்ளவர்களாய்
வந்து கூடுவார்கள்.
விடியற்காலத்துக் கருப்பையில் பிறக்
கும் பனிக்கு ஒப்பாக
உம்முடைய இளைஞர்கள் உம்மிடம்
திரண்டுவருவார்கள்.

4 நீர் மெல்கிசேதேக்கின் மரபு வழியில்
வந்த ஆசாரியராய் என்றைக்கும்
இருப்பீர் என்று ஆண்டவர் ஆணையிட்
டுக் கூறினர்;
அவர் தாம் சொன்ன சொல்லை மாற்ற
மாட்டார்.

5 உமது வலப்பக்கத்திலிருக்கிற ஆண்ட
வர் தமது சினம் மூண்டெழும் நாளில்
அரசர்களைக் கீழே வீழ்த்துவார்.
6 அவர் அனைத்து நாட்டினருக்கும் தீர்ப்பு
வழங்குவார்;
எல்லா இடங்களையும் பிணங்களால்
நிரப்புவார்;
உலகெங்குமுள்ள தலைவர்களைக் கீழே
வீழ்த்துவார்.
7 வழியில் அவர் நீரோடையில் தாகம்
தீர்த்துக் கொள்வார்;
அப்பொழுது அவர் தலைநிமிர்ந்து நடப்
பார்.

## ஆண்டவரைப் போற்றுதல்

111 அல்லேலூயா.
நேர்மையானவர்கள் சங்கத்திலும் சபை
யிலும் ஆண்டவருக்கு நன்றி செலுத்
துவேன்;
என் முழுமனத்தாலும் அவருக்கு நன்றி
செலுத்துவேன்.
2 ஆண்டவரின் செயல்கள் மகத்தானவை;
அவற்றில் விருப்பங்கொள்கிற யாவரா
லும் அவை ஆராயப்படுகின்றன.
3 அவர் செய்வதெல்லாம் மாட்சிமையும்
மகத்துவமும் நிறைந்தவை;
அவரது நீதி என்றென்றும் நிலைநிற்கும்.

4 அவர் தம் அற்புதச் செயல்களை நாம்
நினைவுகூரும்படி செய்திருக்கிறூர்;
ஆண்டவர் இரக்கமும் உருக்கமுள்ளவர்.
5 தமக்கு அஞ்சி நடப்போருக்கு உணவளிக்
கிறூர்;
தமது உடன்படிக்கையை ஒருபோதும்
மறவார்.
6 பிற இனத்தவரின் உரிமைச் சொத்தைத்
தம் மக்களுக்குக் கொடுத்தார்;
இவ்வாறு தம் வல்லமை மிக்க செயல்
களை அவர்களுக்கு வெளிப்படுத்தினர்.

7 அவர் கை செய்பவை உண்மையானவை,
நியாயமானவை;
அவருடைய கட்டளைகளெல்லாம்
நிலையானவை.
8 அவை என்றென்றும் நிலையானவை;
உண்மையும் நேர்மையும் அவற்றின்
அடிப்படை.
9 அவர் தம் மக்களுக்கு மீட்பு அருளினர்;
தமது உடன்படிக்கையை என்றுமுள்ள
உடன்படிக்கையாக ஏற்படுத்தினர்.
அவரது திருப்பெயர் மாதூயது, அஞ்
சுதற்குரியது.
10 ஆண்டவருக்கு அஞ்சுவதே ஞானத்தின்
தொடக்கம்;
அவருடைய கட்டளைகளின்படி செய்கிற
யாவருக்கும் நல்லறிவு உண்டு;
அவரது புகழ் என்றென்றும் நிலைக்கும்.

## கடவுளுக்கு அஞ்சி நடப்போரின் நற்பேறு

112 அல்லேலூயா.
ஆண்டவருக்கு அஞ்சி, அவருடைய கட்
டளைகளை மகிழ்ச்சியோடு கடைப்பிடிக்
கிற மனிதன் நற்பேறு பெற்றவன்.
2 அவனுடைய மரபினர் உலகில் வலிமை
வாய்ந்தவர்களாய் இருப்பார்கள்;
நேர்மையானவன் குடும்பம் ஆசி
பெறும்.
3 செல்வமும் செழிப்பும் அவன் வீட்டில்
இருக்கும்;
அவனது நீதி என்றென்றும் நிலைக்கும்.

4 இருளில் ஒளிபோல அவன் நேர்மையான
வர்களுக்கு விளங்குவான்;
அவன் இரக்கமும் உருக்கமும் நீதியுமுள்
ளவன்;
5 இரக்கம் காட்டிக் கடன் கொடுத்து,
தன் காரியத்தை நேர்மையாக நடத்து
கிற மனிதன் நற்பேறு பெற்றவன்.
6 அவனை ஒருபோதும் அசைக்க முடியாது;
நீதிமான் ஒருபோதும் மறக்கப்படுவ
தில்லை.
7 கெடுதியான செய்தியை அவன் கேட்
பினும், கவலை கொள்ளான்.

110:1 மத். 22:44; மாற். 12:36; லூக். 20:42,43; திருத்தூது. 2:34,35; 1 கொரி. 15:25; எபே. 1:20-22; கொலோ. 3:1; எபி. 1:13; 8:1; 10:12,13. 110:4 எபி. 5:6; 6:20; 7:17,21. 111:10 யோபு 28:28; நீதி. 1:7; 9:10

திடமனத்துடன் கடவுளை நம்பியிருப்
பான்.
8 அவன் உள்ளம் உறுதியாயிருக்கும்;
அவன் எதற்கும் அஞ்சான்;
தன் பகைவருக்கு நேரிடும் தோல்வியை
அவன் காண்பான்.
9 அவன் ஏழைகளுக்குத் தாராளமாகக்
கொடுப்பான்; அவனது நீதி என்
றென்றும் நிலைநிற்கும்;
அவனது கொம்பு மாட்சிமையோடு
உயர்த்தப்படும்.
10 பொல்லான் அதைக் கண்டு சினங்
கொள்வான்; தன் பற்களை நெரிப்
பான்; மறைந்தே போவான்;
அவனது நம்பிக்கையும் அழியும்.

### ஆண்டவரது கருணையைப் போற்றுதல்

அல்லேலூயா.
113 ஆண்டவரின் அடியாரே, அவரைப்
போற்றுங்கள்;
ஆண்டவரின் திருப்பெயரைப் போற்றுங்
கள்.

2 ஆண்டவரின் திருப்பெயர் இப்போதும்
எப்போதும் புகழ்ந்து போற்றப்படுவ
தாக.
3 கதிரவன் எழும் திசை முதல் அது மறை
யும் திசை வரைக்கும்
ஆண்டவரது திருப்பெயர் போற்றிப்
புகழப்படுவதாக.
4 ஆண்டவர் எல்லா இனத்தவர்மேலும்
ஆட்சி செலுத்துபவர்;
அவரது மாட்சிமை வானங்களுக்கு
மேலாக உள்ளது.

5 நம்முடைய கடவுளாகிய ஆண்டவருக்கு
நிகரானவர் யார்?
அவர் உயரத்தில் வீற்றிருக்கிறார்.
6 வானத்தையும் பூமியையும் பார்ப்பதற்
காக அவர் கீழ் நோக்கிப் பார்க்
கிறார்.
7 அவர் எளியவனைத் தரையிலிருந்து
தூக்கிவிடுகிறார்;
ஏழையைக் குப்பை மேட்டிலிருந்து
உயர்த்துகிறார்.
8 அவனை ஆட்சியாளரோடும் தம் மக்
களின் தலைவர்களோடும் அமரச் செய்
கிறார்.
9 மலடியாயிருந்தவள் பிள்ளைகளைப்
பெற்று,
வீட்டில் மகிழ்ச்சியோடு வாழும்படி
செய்கிறார்.

### பஸ்காப் பண்டிகைப் பாடல்

114 இஸ்ரவேல் மக்கள் எகிப்து நாட்டை
விட்டுப் பயணம் பட்டபோது,
யாக்கோபின் குடும்பத்தினர் அன்னிய
நாட்டினரை விட்டுப் புறப்பட்ட
போது,
2 யூதா அவருக்குப் புனித அகமாயிற்று;
இஸ்ரவேல் அவரது ஆட்சிக்குட்பட்டது.

3 கடல் பார்த்து விலகி ஓடிற்று;
யோர்தான் பின்னிட்டுத் திரும்பி
ஓடிற்று.
4 மலைகள் ஆட்டுக் கடாக்கள் போலக்
குதித்தன;
குன்றுகள் ஆட்டுக்குட்டிகள் போலத்
துள்ளின.

5 கடலே, நீ விலகி ஓடும்படி என்ன நடந்
தது?
யோர்தானே, நீ பின்னிட்டுத் திரும்பி
ஓடும்படி என்ன நடந்தது?
6 மலைகளே, நீங்கள் ஏன் ஆட்டுக்கடாக்
கள் போலக் குதித்தீர்கள்?
குன்றுகளே, நீங்கள் ஏன் ஆட்டுக்குட்டி
கள் போலத் துள்ளினீர்கள்?

7 பூமியே, ஆண்டவர் வரும்போது
நடுநடுங்கு;
யாக்கோபின் கடவுள் முன்னிலையில்
நடுக்கமுறு.
8 அவர் கன்மலையைத் தண்ணீர்த் தடாக
மாக்குகிறார்;
கற்பாறையை நீரூற்றுகளாக்குகிறார்.

### கடவுள் ஒருவரே

115 எங்களுக்கு அல்ல, ஆண்டவரே, எங்
களுக்கு அல்ல; மாட்சிமையெல்லாம்
உமக்கே உரியது.
உமது பேரருளையும் உமது உண்மையை
யும் முன்னிட்டு உமது திருப்
பெயருக்கே மாட்சிமை உரியது.

2 "அவர்களுடைய கடவுள் எங்கே?"
என்று
பிற இனத்தவர் சொல்வது ஏன்?
3 நம்முடைய கடவுள் விண்ணுலகில் இருக்
கிறார்;
தாம் திருவுளங்கொள்ளும் யாவற்றை
யும் செய்கிறார்.
4 அவர்கள் வழிபடும் சிலைகள் வெறும்
வெள்ளியும் பொன்னுமே;
அவை மனிதர் கைவேலைப்பாடே.

* கொம்பு : 75 : 4 அடிக்குறிப்பைப் பார்க்க.

112:9 2 கொரி. 9:9. 114:1 யாத். 12:51. 114:3 யாத். 14:21. 114:8 யாத். 17:1-7; எண். 20:2-13.

5 அவற்றிற்கு வாய் உண்டு; ஆனால் பேசுவதில்லை;
கண்கள் உண்டு; ஆனால் பார்ப்பதில்லை.
6 அவற்றிற்குக் காதுகள் உண்டு; ஆனால் கேட்பதில்லை;
மூக்கு உண்டு; ஆனால் முகருவதில்லை.
7 அவற்றிற்குக் கைகள் உண்டு; ஆனால் தொட்டுப் பார்ப்பதில்லை;
கால்கள் உண்டு; ஆனால் நடப்பதில்லை
அவற்றின் தொண்டையிலிருந்து குரல் எழுவதில்லை.
8 அவற்றைச் செய்கிறவர்களும்
அவற்றில் நம்பிக்கை வைப்பவர்கள் யாவரும்
அவற்றைப் போலவே இருப்பார்கள்.

9 இஸ்ரவேல் மக்கள் ஆண்டவரை நம்புகிறார்கள்;
அவரே அவர்கள் துணை, அவர்கள் கேடயம்.
10 ஆரோன் குடும்பத்தார் ஆண்டவரை நம்புகின்றனர்;
அவரே அவர்கள் துணை, அவர்கள் கேடயம்.
11 ஆண்டவருக்கு அஞ்சி நடப்பவர்கள் ஆண்டவரை நம்புகிறார்கள்;
அவரே அவர்கள் துணை, அவர்கள் கேடயம்.

12 ஆண்டவர் நம்மை நினைத்தருளினார்;
அவர் நமக்கு ஆசி வழங்குவார்;
இஸ்ரவேல் குடும்பத்தாருக்கு ஆசி வழங்குவார்.

13 ஆண்டவருக்கு அஞ்சி நடப்பவர்களுக்கு ஆசி வழங்குவார்;
பெரியோருக்கும் சிறியோருக்கும் ஆசி வழங்குவார்.

14 ஆண்டவர் உங்களையும் உங்கள் பிள்ளைகளையும் வளர்ந்தோங்கச் செய்வாராக!
15 விண்ணையும் மண்ணையும் உண்டாக்கின ஆண்டவர் உங்களுக்கு ஆசி வழங்குவாராக!

16 விண்ணுலகம் ஆண்டவருடையது;
அவர் மண்ணுலகை மனுமக்களுக்குக் கொடுத்துவிட்டார்.
17 இறந்தவர்களும் மவுனத்தில் இறங்குகிற அனைவரும் ஆண்டவரைப் போற்றுவார்கள்.
18 நாமோ இப்போதும் எப்போதும் ஆண்டவரைப் போற்றுவோம்.
அல்லேலூயா.

### நன்றி செலுத்துதல்

116 ஆண்டவர் என் விண்ணப்பக் குரலுக்குச் செவிசாய்த்தார்;
நான் அவரிடம் அன்புகூர்கிறேன்.
2 அவர் தமது செவியை எனக்குச் சாய்த்தருளினார்;
உயிருள்ள வரையில் நான் அவரைத் தொழுவேன்.
3 மரணத்தின் துயரக் கட்டுகள் என்னைச் சுற்றிக்கொண்டன;
பாதாளக் கண்ணிகள் என்னைப் பற்றிக்கொண்டன;
கடுந்துன்பமும் துயரமும் அடைந்தேன்.
4 அப்பொழுது நான் ஆண்டவரின் திருப்பெயரைத் தொழுது மன்றாடினேன்;
''ஆண்டவரே, என்னை விடுவியும்'' என்று கெஞ்சிவேண்டினேன்.

5 ஆண்டவர் இரக்கமும் நீதியுமுள்ளவர்;
நம்முடைய கடவுள் மனவுருக்கமுள்ளவர்.
6 ஆண்டவர் எளியோரைக் காக்கிறார்;
எனக்கு இடுக்கண் வந்தபோது அவர் என்னைக் காப்பாற்றினார்.
7 என் ஆன்மாவே, மீண்டும் அமைதிகொள்;
ஆண்டவர் உனக்கு நன்மை செய்தார்.

8 அவர் என் ஆன்மாவை மரணத்திற்கும்
என் கண்ணைக் கண்ணீர் சிந்துதலுக்கும்
என் காலை இடறலுக்கும் தப்புவித்தார்.
9 இவ்வுலகில் நான் ஆண்டவரின் முன்னிலையில் நடப்பேன்.
10 ''மிகவும் வருத்தப்படுகிறேன்'' என்று நான் சொன்ன வேளையிலும்
அவரை நம்பினேன்.
11 ''எந்த மனிதனையும் நம்பலாகாது'' என்று
என் மனக் கலக்கத்தில் சொன்னேன்.

12 ஆண்டவர் எனக்குச் செய்த எல்லா நன்மைகளுக்காகவும்
நான் அவருக்கு எதைக் காணிக்கையாகச் செலுத்துவேன்?
13 ஆண்டவர் எனக்கு அளித்த மீட்புக்காக நான் பானபலிப் பாத்திரத்தைக் கையில் எடுத்துக்கொண்டு,
அவரது திருப்பெயரைத் தொழுவேன்.
14 ஆண்டவருடைய எல்லா மக்கள் முன்னிலையிலும்
அவருக்கு என் பொருத்தனைகளைச் செலுத்துவேன்.
15 ஆண்டவருடைய அடியாரின் மரணம் அவர் பார்வையில் அற்பமானதன்று.
16 ஆண்டவரே, நான் உம்முடைய அடிமை; நான் உமக்கே அடிமை;

**115:4-8 சங் 135:15-18; திருவெளி. 9:20. 115:13 திருவெளி. 11:18; 19:5. 116:102 கொரி. 4:13.**

உம்முடைய அடியாளின் மகன்; நீர்
என் கட்டுகளை அவிழ்த்து விட்டீர்.
17 நான் உமக்கு நன்றிப் பலியைச் செலுத்
துவேன்;
ஆண்டவரின் திருப்பெயரைத் தொழு
வேன்.
18 ஆண்டவருடைய எல்லா மக்கள் முன்
னிலையிலும் அவருக்கு என் பொருத்
தனைகளைச் செலுத்துவேன்;
19 ஆண்டவரது ஆலயப் பிராகாரங்களி
லும் எருசலேமே, உன் நடுவிலும்
என் பொருத்தனைகளைச் செலுத்துவேன்.
அல்லேலூயா.

## கடவுளைப் போற்றுங்கள்

**117** யூதரல்லாதவர்களே, நீங்கள் அனை
வரும் ஆண்டவரைத் துதியுங்கள்;
மனித இனத்தாரே, நீங்கள் அனைவரும்
அவரைப் புகழுங்கள்.
2 ஏனெனில், ஆண்டவர் நமக்குக் காட்
டும் இரக்கம் மிகப்பெரிது;
அவரது உண்மை என்றென்றுமுள்ளது.
அல்லேலூயா.

## வெற்றிப் புகழ்

**118** ஆண்டவருக்கு நன்றி செலுத்துங்
கள்; அவர் நல்லவர்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.

2 அவரது பேரருள் என்றுமுள்ளதென்று
இஸ்ரவேல் மக்கள் சொல்வார்களாக.
3 அவரது பேரருள் என்றுமுள்ளதென்று
ஆரோன் குடும்பத்தார் சொல்வார்
களாக.
4 அவரது பேரருள் என்றுமுள்ளதென்று
ஆண்டவருக்கு அஞ்சி நடப்பவர்கள்
சொல்வார்களாக.

5 நெருக்கடியான வேளையில் நான் ஆண்ட
வரை நோக்கி மன்றாடினேன்;
ஆண்டவர் எனக்குச் செவிசாய்த்து
என்னை விடுவித்தார்.
6 ஆண்டவர் என் பக்கம் இருக்கிறார்;
நான் அஞ்சிடேன்.
மனிதன் எனக்கு என்ன செய்துவிட
முடியும்?
7 ஆண்டவர் என் பக்கம் இருக்கிறார்;
அவரே எனக்குத் துணை செய்பவர்;
என்னைப் பகைக்கிறவர்கள் வீழ்த்தப்படு
வதை நான் காண்பேன்.
8 மனிதனை நம்புவதைவிட
ஆண்டவரிடம் அடைக்கலம் புகுவதே
நலம்.
9 மக்கள் தலைவர்களை நம்புவதைவிட
ஆண்டவரிடம் அடைக்கலம் புகுவதே
நலம்.
10 பிற இனத்தவர் பலர் என்னைச் சூழ்ந்து
கொண்டனர்;
ஆண்டவரது திருப்பெயரால் அவர்களை
அழித்துவிடுவேன்.
11 எல்லாப் பக்கங்களிலும் என்னைச் சூழ்ந்து
கொண்டனர்;
ஆண்டவரின் திருப்பெயரால் அவர்களை
அழித்துவிடுவேன்.
12 தேனீக்களைப்போல என்னை வளைத்துக்
கொண்டார்கள்;
முள்ளில் பற்றிய தீயைப்போல அவர்
கள் எரிந்து அணைந்து போவார்கள்;
ஆண்டவரின் திருப்பெயரால் அவர்களை
அழித்துவிடுவேன்.
13 என்னைப் பிடித்துத் தள்ளினார்கள்; கீழே
வீழ்த்தப் பார்த்தார்கள்;
ஆனால் ஆண்டவர் எனக்குத் துணை
நின்றார்.
14 ஆண்டவரே எனக்கு வலிமையையும்
ஆற்றலையும் அளிப்பவர்;
என் மீட்பரும் அவரே.

15 இதோ, நீதிமான்களின் கூடாரங்களில்
மகிழ்ச்சிக் குரல் ஒலிக்கின்றது;
ஆண்டவரின் வலக்கை இந்த வீரச்
செயலைச் செய்தது.
16 ஆண்டவரின் வலக்கை வெற்றி தந்தது;
ஆண்டவரின் வலக்கை இந்த வீரச்
செயலைச் செய்தது.

17 நான் இறந்து போகாமல் உயிரோடிருப்
பேன்;
ஆண்டவர் செய்தவற்றை எடுத்துரைப்
பேன்.
18 ஆண்டவர் என்னைக் கடுமையாகத் தண்
டித்தார்;
ஆனால் சாவினிடம் என்னை அவர் ஒப்புக்
கொடுக்கவில்லை.

19 நீதிமான்கள் செல்லும் வாயிலை எனக்
குத் திறந்துவிடுங்கள்;
அதனுள் நான் சென்று ஆண்டவருக்கு
நன்றி செலுத்துவேன்.

20 ஆண்டவரின் வாயில் இதுவே;
இதற்குள்ளேதான் நீதிமான்கள் நுழை
வார்கள்.
21 நீர் எனக்குச் செவிசாய்த்து எனக்கு
மீட்பராக விளங்குவீர்;
நான் உமக்கு நன்றிசெலுத்துவேன்.
22 வீடு கட்டுகிறவர்கள் உதவாதென்று
தள்ளிவிட்ட கல்லே மூலைக்குத் தலைக்
கல்லாயிற்று.

**117:1** ரோ. 15:11. **118:1** சங். 100:5. **118:6** எபி. 13:6. **118:14** யாத். 15:2; ஏசா. 12:2. **118:22** லூக். 20:17; திருத்தூது 4:11; 1 பேது. 2:7

23 அது ஆண்டவராலே நடந்தது;
நம் கண்ணுக்கு இது வியப்பாயிருக்கிறது.
24 இது ஆண்டவர் குறித்த நாள்;
இந்நாளில் நாம் களிகூர்வோம், மகிழ்ந்து கொண்டாடுவோம்.
25 ஆண்டவரே, மீட்டருளும்;
ஆண்டவரே, வெற்றிதாரும்.

26 ஆண்டவரின் திருப்பெயரால் வருகிறவர் ஆசிபெற்றவர்;
ஆண்டவரின் ஆலயத்திலிருந்து உங்களுக்கு ஆசி வழங்குகிறோம்.

27 ஆண்டவரே கடவுள்; அவர் நம்மீது ஒளி வீசும்படி செய்கிறார்;
பண்டிகைப் பலியைக் கொண்டுபோய்ப் பலிபீடத்துக் கொம்புகளில் கயிறுகளால் கட்டுங்கள்.

28 நீரே என் கடவுள்; உமக்கு நன்றி செலுத்துகிறேன்;
நீரே என் கடவுள்; உம்மைப் போற்றுகிறேன்.
29 ஆண்டவருக்கு நன்றி செலுத்துங்கள்; அவர் நல்லவர்;
அவரது பேரருள் என்றும் உள்ளது.

## நீதிச்சட்டம்

### ஆலெட்

119 குற்றமற்றவர்களாய் நடப்பவர்கள் நற்பேறு பெற்றவர்கள்;
ஆண்டவரின் சட்டப்படி நடப்பவர்கள் நற்பேறு பெற்றவர்கள்.
2 அவருடைய ஒழுங்குமுறைகளைக் கடைப்பிடிப்பவர்கள் நற்பேறு பெற்றவர்கள்;

முழுமனத்தோடு அவரை நாடித் தேடுபவர்கள் நற்பேறு பெற்றவர்கள்.
3 அவர்கள் நேர்மைக்கேடானதைச் செய்யமாட்டார்கள்;
அவர் காட்டும் வழியில் நடப்பார்கள்.
4 நீர் உம்முடைய கட்டளைகளை எங்களுக்குத் தந்தீர்;
அவற்றை நாங்கள் கவனமாகக் கடைப்பிடிக்க வேண்டும் என்றீர்.
5 உம்முடைய விதிகளைக் கடைப்பிடிக்கும்படி
என் நடத்தை உறுதியுள்ளதாய் நிலைத்திருந்தால் எவ்வளவோ நன்றாயிருக்கும்!
6 உம்முடைய திருக்கட்டளை ஒவ்வொன்றிலும் நான் கவனம் செலுத்தினால்,
எனக்கு ஒருபோதும் இழிவு வராது.
7 உம்முடைய நீதியுள்ள தீர்ப்புகளை நான் அறிந்திருப்பதால்,
நேர்மையான இதயத்தோடு உமக்கு நன்றி செலுத்துகிறேன்.
8 உம்முடைய விதிகளை நான் கடைப்பிடித்து நடக்கிறேன்;
என்னை ஒருபோதும் கைவிடாதேயும்.

## நீதிச்சட்டப்படி நடத்தல்

### பேத்

9 இளைஞன் தன் வாழ்க்கை கறைபடாது இருக்குமாறு காத்துக் கொள்வது எப்படி?
உமது வார்த்தையைக் கடைப்பிடிப்பதாலேதான்.
10 என் முழு இதயத்தோடும் உமக்கென வாழ விரும்புகிறேன்;
என்னை உம்முடைய திருக்கட்டளைகளை மீறி நடக்கும்படி விடாதேயும்.
11 நான் உமக்கு விரோதமாகப் பாவம் செய்யாதிருக்கும்படி,
உமது வார்த்தையை என் உள்ளத்தில் பதித்து வைத்துக் கொண்டேன்.
12 ஆண்டவரே, நீர் போற்றுதலுக்குரியவர்;
உம்முடைய விதிகளை எனக்குக் கற்பித்தருளும்.
13 நீர் அளித்த தீர்ப்புகளையெல்லாம்
என் நாவினால் எடுத்தோதி வருகிறேன்.
14 திரளான செல்வம் வைத்திருப்பதில் களிகூர்வதுபோல,
உம்முடைய ஒழுங்குமுறைகளின்படி நடப்பதில் களிகூர்கிறேன்.
15 உம்முடைய கட்டளைகளைத் தியானிக்கிறேன்;
நீர் காட்டும் வழிகளில் சிந்தனையைச் செலுத்துகிறேன்.
16 உம்முடைய விதிகள் எனக்கு மகிழ்ச்சியளிக்கின்றன;
உமது வார்த்தையை மறக்கமாட்டேன்.

## நீதிச் சட்டம் தரும் இன்பம்

17 உம்முடைய அடியானாகிய எனக்குக் கருணைகாட்டும்;
அப்பொழுது நான் உமது வார்த்தையைக் கடைப்பிடித்து வாழ்வேன்,
18 நீர் அருளிய வேதத்திலுள்ள வியக்கத்தக்க உண்மைகளை நான் காணும்படி,
என் கண்களைத் திறந்தருளும்.
19 உலகில் நான் ஓர் அன்னியனாகத் தங்கியிருக்கிறேன்;

118:22,23 மத். 21:42; மாற். 12:10,11. 118:26 மத். 21:9; 23:39; மாற். 11:9; லூக். 13:35; 19:38; யோ. 12:13.

உம்முடைய திருக்கட்டளைகளை எனக்கு
மறைத்து வைக்காதேயும்.
20 எந்நேரமும் நான் உம்முடைய தீர்ப்பு
கள்மீது நாட்டங் கொண்டிருக்
கிறேன்;
என் ஆன்மாவும் ஏக்கங்கொண்டிருக்
கிறது.
21 இறுமாப்புடையோரை நீர் கண்டிக்
கிறீர்; அவர்கள் சாபத்துக்கு ஆளா
வார்கள்;
அவர்கள் உம்முடைய திருக்கட்டளைகளை
மீறி நடப்பவர்கள்.
22 அவர்களுடைய நிந்தைக்கும் ஏளனத்
திற்கும் என்னை ஆளாகும்படி
விடாதேயும்;
ஏனெனில், நான் உம்முடைய ஒழுங்கு
முறைகளைக் கடைப்பிடிக்கிறேன்.
23 ஆட்சித் தலைவர்கள் உட்கார்ந்து எனக்கு
விரோதமாகப் பேசுகிறார்கள்;
என்றாலும், உம்முடைய அடியானாகிய
நான் உம்முடைய விதிகளைத்
தியானித்துக் கொண்டிருப்பேன்.
24 உம்முடைய விதிகள் எனக்கு இன்பம்
தருகின்றன;
அவையே எனக்கு நல்லறிவு தருபவை.

### நீதிச் சட்டத்தின்படி நடக்கத் தீர்மானித்தல்

டாலத்

25 நான் வீழ்த்தப்பட்டு மண்ணில் கிடக்
கிறேன்;
உமது வார்த்தையின்படி என்னை உயிர்ப்
பித்தருளும்.
26 என் செயல்களை நான் உமக்கு எடுத்
துரைத்தபோது, நீர் என் வேண்டு
தலுக்குச் செவிசாய்த்தீர்;
உம்முடைய விதிகளை எனக்குக்
கொடுத்தருளும்.
27 உம்முடைய கட்டளைகள் காட்டும்
வழியை எனக்கு உணர்த்தியருளும்;
உம்முடைய அற்புதச் செயல்களைத்
தியானிப்பேன்.
28 துயரத்தினால் என் ஆன்மா சோர்ந்து
போகிறது;
உமது வார்த்தையின்படி என்னைத்
தூக்கி நிறுத்தும்.
29 பொய் வழியை என்னை விட்டு விலக்கி
யருளும்;
உம்முடைய கட்டளைகளை எனக்கு
அருளும்.
30 மெய்வழியை நான் தேர்ந்து கொண்
டேன்;
உம்முடைய தீர்ப்புகளை என் கண்முன்
நிறுத்தினேன்.
31 உம்முடைய ஒழுங்குமுறைகள்மீது
பற்றுள்ளவனாயிருக்கிறேன்;
ஆண்டவரே, நான் ஏமாற்றம் அடை
யாதிருக்கும்படி செய்யும்.
32 நீர் என் அறிவை விரிவாக்கும்போது
நான் உம்முடைய திருக்கட்டளைகளின்
படி நடப்பேன்.

### அறிவு தரும்படி விண்ணப்பித்தல்

ஹெ

33 ஆண்டவரே, உம்முடைய விதிகள்
குறிப்பிடும் வழியை எனக்குக் கற்பித்
தருளும்;
முடிவு வரையில் நான் அதைப் பின்
பற்றி நடப்பேன்.
34 உம்முடைய வேதத்தை எனக்கு விளக்கி
யருளும்; அதன்படி நடக்கிறேன்;
முழுமனத்துடன் அதைப் பின்பற்று
கிறேன்.
35 உம்முடைய திருக்கட்டளைகள் காட்டும்
பாதையில் என்னை நடத்தியருளும்;
அதுவே என் விருப்பம்.
36 என் உள்ளம் செல்வத்தை நாடும்படி
விடாதேயும்;
உம்முடைய ஒழுங்குமுறைகள் பக்கம்
அதைத் திருப்பியருளும்.
37 வீணானவற்றைப் பாராதபடி என் கண்
களைத் திருப்பியருளும்;
என்னை உம் வழிகளில் நடத்தி உயிர்ப்
பித்தருளும்.
38 உமக்கு அஞ்சி நடப்பவர்களுக்கு நீர்
அளிக்கும் வாக்குறுதியை எனக்கும்
அருளும்.
39 என்னை நடுங்கச் செய்யும் நிந்தைக்கு
என்னை ஆளாக்காதேயும்;
உம்முடைய தீர்ப்புகள் நலமார்ந்தவை.
40 உம்முடைய கட்டளைகளை நான் பெரிதும்
விரும்புகிறேன்;
உமது நீதியினால் என்னை உயிர்ப்பித்
தருளும்.

### நீதிச் சட்டத்தில் நம்பிக்கை வைத்தல்

வாவ்

41 ஆண்டவரே, உமது பேரருள் என்மீது
பொழிவதாக;
உமது வாக்குறுதியின்படி என்னை மீட்
டருளும்.
42 அப்பொழுது நான் என்னை நிந்திக்கிற
வனுக்கு ஏற்ற பதில் உரைப்பேன்;
ஏனெனில், நான் உமது வார்த்தையில்
நம்பிக்கை வைத்திருக்கிறேன்.
43 என் வாய் எப்போதும் உண்மையையே
பேசும்படி செய்தருளும்;
உம்முடைய தீர்ப்புகளையே நம்பியிருக்
கிறேன்.
44 நான் எப்போதும் உமது வேதத்தைக்
கடைப்பிடிப்பேன்;

என்றென்றும் அதைப் பின்பற்றி நடப்பேன்.
45 நான் உம்முடைய கட்டளைகளின்படி நடக்கப்பார்ப்பதால், அகன்றதொரு பாதையில் நடப்பேன்.
46 உம்முடைய ஒழுங்குமுறைகளைப்பற்றி அரசன் முன்னிலையிலும் பேசுவேன்;
வெட்கப்பட மாட்டேன்.
47 உம்முடைய திருக்கட்டளைகளின்படி நடப்பதில் நான் இன்பம் காண்கிறேன்;
நான் அவற்றை நேசிக்கிறேன்.
48 நான் நேசிக்கிற உம்முடைய திருக்கட்டளைகளை உயர்வாக மதிக்கிறேன்;
உம்முடைய விதிகளைத் தியானிப்பேன்.

### நீதிச்சட்டத்தின் மீதுள்ள உறுதியான நம்பிக்கை

சாயின்

49 உம்முடைய அடியானாகிய எனக்கு நீர் அளித்த வாக்குறுதியை நினைத்தருளும்;
அதில் என்னை நம்பிக்கை வைக்கச் சொன்னீரே.
50 உமது வாக்குறுதி என்னை உயிர்ப்பிக்கிறது;
நான் சிறுமைப்படுகையில் அதுவே எனக்கு ஆறுதலளிக்கிறது.
51 இறுமாப்புடையோர் என்னை மிகவும் பழிக்கின்றனர்;
நானோ உம்முடைய சட்டங்கள் காட்டும் வழியினின்று விலகவில்லை.
52 ஆண்டவரே, நீர் முற்காலத்தில் அருளிய தீர்ப்புகள் என் நினைவில் இருக்கின்றன;
அவை எனக்கு ஆறுதல் அளிக்கின்றன.
53 உமது வேதம் காட்டும் வழியை விட்டு விலகுகிற பொல்லார்மீது எனக்குச் சினம் உண்டாகிறது.
54 நிலையற்ற நாடாகிய இவ்வுலகில் எனக்கு உம்முடைய விதிகள்
புகழ்ப்பாடல்களாய் விளங்குகின்றன.
55 ஆண்டவரே, இரவிலும் உமது திருப்பெயரை நினைக்கிறேன்;
நீர் அருளிய வேதத்தைக் கடைப்பிடித்து நடக்கிறேன்.
56 நான் உம்முடைய கட்டளைகளின்படி நடக்கிறேன்;
அதுவே நான் அடையும் இன்பம்.

### நீதிச்சட்டத்தைப் பற்றிய ஆர்வம்

கேத்

57 ஆண்டவரே, உம்முடைய வார்த்தைகளைக் கடைப்பிடிப்பதே என் வாழ்க்கைப் பயன் எனக் கருதினேன்.
58 முழு மனத்தோடும் நான் உமது கருணையை நாடுகிறேன்;
உமது வாக்குறுதியின்படி எனக்கு இரங்கும்.
59 என் வழிகளை நன்கு கவனித்தேன்;
உம்முடைய ஒழுங்குமுறைகள் காட்டும் வழியில் என் நடையைத் திருப்பினேன்.
60 உம்முடைய திருக்கட்டளைகளைக் கடைப்பிடிப்பதற்கு நான் தயங்கவில்லை;
இனிக் காலந்தாழ்த்த மாட்டேன்.
61 பொல்லாரின் கண்ணிகள் என்னைச் சுற்றிக்கொண்டன;
எனினும், நான் உம்முடைய சட்டங்களை மறக்கவில்லை.
62 உம்முடைய நீதியுள்ள தீர்ப்புகளுக்காக நன்றிசெலுத்தும்படி நான் நள்ளிரவில் எழுந்திருப்பேன்.
63 உமக்கு அஞ்சுகிற யாவருக்கும் நான் நண்பன்;
உம்முடைய கட்டளைகளைக் கடைப்பிடிப்பவர்களுக்கு நான் தோழன்.
64 ஆண்டவரே, பூமி உமது பேரருளால் நிறைந்திருக்கிறது;
உம்முடைய விதிகளை எனக்குக் கற்பித்தருளும்.

### நீதிச்சட்டத்தின் பயன்

தேத்

65 ஆண்டவரே, உமது வாக்குறுதியின் படியே
உம்முடைய அடியானாகிய எனக்கு நன்மை செய்து வந்தீர்.
66 நல்லுணர்வையும் அறிவையும் எனக்குப் புகட்டியருளும்;
உம்முடைய திருக்கட்டளைகளில் நான் நம்பிக்கை வைத்திருக்கிறேன்.
67 துன்பம் எனக்கு வருமுன் நான் வழி தவறி நடந்தேன்;
இப்பொழுதோ உமது வார்த்தையின்படி நடக்கிறேன்.
68 நீர் நல்லவர், நன்மை செய்கிறவர்;
உம்முடைய விதிகளை எனக்குக் கற்பித்தருளும்.
69 இறுமாப்புடையோர் என்னைப்பற்றிப் பொய்யானவற்றைப் புனைந்து கூறுகின்றனர்;
எனினும், நான் உம்முடைய கட்டளைகளை முழு மனத்தோடும் கடைப்பிடித்து வருகிறேன்.
70 அவர்கள் உள்ளம் கொழுத்துத் தடித்துப் போயிற்று;
ஆனால் நான் நீர் அருளிய வேதத்தால் மகிழ்ச்சியடைகிறேன்.
71 நான் சிறுமைப்பட்டது எனக்கு நல்லது;
அதனால் உம்முடைய விதிகளைக் கற்றுக்கொள்ள முடிந்தது.

72 ஆயிரக்கணக்கான பொன் வெள்ளி நாணயங்களைவிட
நீர் திருவாய்மலர்ந்தருளிய வேதமே எனக்கு அருமையானது.

### நீதிச்சட்டத்தின் நீதிமுறை

யோட்

73 உம்முடைய கைகளே என்னை உண்டாக்கின; என்னைப் பாதுகாக்கின்றன;
உம்முடைய திருக்கட்டளைகளைக் கற்றுக்கொள்ள எனக்கு உணர்வைத் தாரும்.
74 உமது வார்த்தையை நான் நம்பினதால்,
உமக்கு அஞ்சி நடப்பவர்கள் என்னைக் கண்டு மகிழ்ச்சியடைவார்கள்.
75 ஆண்டவரே, உம்முடைய தீர்ப்புகள் நியாயமானவை என்பதையும்
நீர் என்னைத் துன்பத்திற்குள்ளாக்கியது நியாயம் என்பதையும் நான் அறிவேன்.
76 உம்முடைய அடியானாகிய எனக்கு நீர் அருளின வாக்குறுதியின்படி
உமது பேரருள் என்னைத் தேற்றுவதாக.
77 நான் பிழைத்திருக்கும்படி உமது மனவுருக்கம் எனக்குக் கிடைப்பதாக;
உமது வேதமே என் மகிழ்ச்சி.
78 இறுமாப்புடையோர் வெட்கிப் போவார்களாக;
அவர்கள் பொய்யுரை கூறி என்னைக் கெடுக்கப்பார்த்தார்கள்;
நானோ உம்முடைய கட்டளைகளைத் தியானிப்பேன்.
79 உமக்கு அஞ்சுகிறவர்களும்
உம்முடைய ஒழுங்குமுறைகளை அறிந்தவர்களும்
என் பக்கம் திரும்புவார்களாக.
80 நான் வெட்கத்திற்குள்ளாகாதிருக்கும்படி,
என் உள்ளம் உம்முடைய ஒழுங்குமுறைகளைப் பற்றிய வகையில் குற்றமற்றதாயிருப்பதாக.

### மீட்புக்காக மன்றுடுதல்

காப்

81 நீர் அளிக்கும் மீட்புக்காக என் ஆன்மா தவிக்கிறது;
உமது வார்த்தையை நான் நம்பியிருக்கிறேன்.
82 எப்போது என்னைத் தேற்றுவீரோ என்று ஏங்கிக் கொண்டிருக்கிறேன்;
நீர் வாக்களித்ததை எதிர்நோக்கிக் காத்திருந்து என் கண்கள் பூத்துப் போயின.
83 நான் புகைபடிந்த துருத்திபோலானேன்;
ஆயினும், உம்முடைய விதிகளை மறக்கமாட்டேன்.
84 உம்முடைய அடியானாகிய நான் உயிரோடிருப்பது இன்னும் எவ்வளவு காலம்?
என்னைத் துன்புறுத்துவோருக்கு நீர் எப்போது தண்டனைத் தீர்ப்பு அளிக்கப்போகிறீர்?
85 நீர் அருளிய வேதத்தின்படி நடக்காத இறுமாப்புடையோர் எனக்குக் குழி வெட்டினார்கள்.
86 உம்முடைய திருக்கட்டளைகளெல்லாம் உறுதியானவை;
அவர்கள் காரணமின்றி என்னைத் துன்புறுத்துகிறார்கள்;
எனக்கு உதவி செய்தருளும்.
87 அவர்கள் என்னை உலகில் இராதபடி போக்கிவிடப் பார்த்தார்கள்; நான் சற்றே தப்பினேன்;
உம்முடைய கட்டளைகளின்படி நடப்பதை நான் விட்டு விடவில்லை.
88 நீர் திருவாய்மலர்ந்தருளிய ஒழுங்குமுறைகளை நான் கடைப்பிடித்து நடக்கும்படி,
உமது பேரருளால் என்னை உயிர்ப்பித்தருளும்.

### நீதிச்சட்டத்தில் வைத்துள்ள நம்பிக்கை

லாமெட்

89 ஆண்டவரே, உமது வார்த்தை என்றென்றும் உள்ளது;
வானத்தைப்போல அது நிலையாயுள்ளது.
90 உமது உண்மை தலைமுறை தலைமுறையாக இருக்கும்;
பூமியை உறுதியாயிருக்கச் செய்தீர்; அது நிலைத்திருக்கிறது.
91 உம்முடைய தீர்ப்புகள் யாவும் இந்நாள் வரையிலும் நிலைத்திருக்கின்றன;
யாவும் உமக்கே சேவை செய்கின்றன.
92 உமது வேதம் எனக்கு மகிழ்ச்சி தருவதாயிராவிடில்,
நான் துன்பத்தால் அமிழ்ந்துபோயிருப்பேன்.
93 நான் ஒருபோதும் உம்முடைய கட்டளைகளை மறக்கமாட்டேன்;
அவற்றால் நீர் என்னை உயிர்ப்பித்தீர்.
94 நான் உமக்கே சொந்தம்; என்னைக் காத்தருளும்;
உம்முடைய கட்டளைகளை ஆராய்ந்து வருகிறேன்.
95 பொல்லார் என்னை அழித்துவிடப் பார்க்கின்றனர்;
நானோ உம்முடைய ஒழுங்குமுறைகளில் என் சிந்தனையைச் செலுத்துகிறேன்.

96 முழுநிறைவான எதற்கும் ஓர் எல்லை உண்டு;
ஆனால் உம்முடைய திருக்கட்டளைக்கோ வரையறையே இல்லை.

## நீதிச்சட்டத்தை அன்புடன் போற்றுதல்

மேம்

97 நீர் அருளிய வேதத்தை நான் எவ்வளவோ நேசிக்கிறேன்;
நாளெல்லாம் அதையே தியானிக்கிறேன்.
98 என் எதிரிகளைவிட என்னை ஞானமுள்ளவனாக்கியது உமது திருக்கட்டளை;
அது என்றும் என்னோடிருக்கிறது.
99 உம்முடைய ஒழுங்குமுறைகளை நான் தியானிக்கிறேன்;
ஆகையால் எனக்கு அறிவு புகட்டிய எல்லாரையும்விட நான் விவேகமுள்ளவனாயிருக்கிறேன்.
100 உம்முடைய கட்டளைகளை நான் கடைப்பிடித்து நடக்கிறபடியால்,
வயது சென்றவர்களைவிட நான் உணர்வுள்ளவனாயிருக்கிறேன்.
101 உமது வார்த்தையை நான் கடைப்பிடித்து நடக்கும்படி,
எந்தத் தீய வழியிலும் நான் அடியெடுத்து வைப்பதில்லை.
102 நீரே எனக்குக் கற்பித்திருக்கிறபடியால்,
நான் உம்முடைய தீர்ப்புகள் காட்டும் வழியை விட்டு விலகுவதில்லை.
103 உம்முடைய வார்த்தைகள் என் நாவுக்கு எவ்வளவோ இனிமையாயிருக்கின்றன;
என் வாய்க்கு அவை தேனைவிடத் தித்திப்பானவை.
104 உம்முடைய கட்டளைகளால் நான் அறிவுள்ளவனானேன்;
ஆகையால் நான் எல்லாப் பொய்வழிகளையும் வெறுக்கிறேன்.

## நீதிச்சட்டம் தரும் ஒளி

நூன்

105 உமது வார்த்தை என் கால்களுக்கு விளக்கு;
அது என் பாதைக்கு வெளிச்சம்.
106 உமது நீதியுள்ள தீர்ப்புகளின்படி நடப்பேன் என்று ஆணையிட்டுக் கூறினேன்;
அதை நிறைவேற்றுவேன்.
107 நான் மிகவும் சிறுமைப்படுகிறேன்;
ஆண்டவரே, உமது வாக்குறுதியின்படி என்னை உயிர்ப்பித்தருளும்.
108 ஆண்டவரே, நான் மனமாரச் செலுத்தும் நன்றிப் பலிகளை ஏற்றுக்கொள்ளும்.
உம்முடைய தீர்ப்புகளை எனக்குக் கற்பித்தருளும்.
109 என் உயிரை எப்போதும் என் கையில் பிடித்துக் கொண்டிருக்கிறேன்;
ஆயினும், நீர் அருளிய வேதத்தை மறக்க மாட்டேன்.
110 பொல்லார் எனக்குக் கண்ணிவைத்தார்கள்;
ஆயினும், நான் உம்முடைய கட்டளைகளை மீறி நடக்கவில்லை.
111 உம்முடைய ஒழுங்குமுறைகளை என்றுமுள்ள உரிமைச் சொத்தாகக் கொண்டுள்ளேன்;
அவை என் உள்ளத்திற்கு மகிழ்ச்சியளிக்கின்றன.
112 முடிவுவரையில் எந்நாளும் உம்முடைய விதிகளின்படி செய்ய மனவிருப்பம் கொண்டிருக்கிறேன்.

## நீதிச்சட்டம் அளிக்கும் பாதுகாப்பு

சாமெக்

113 இருமனப்பட்டவர்களை நான் வெறுக்கிறேன்;
உம்முடைய வேதத்தையோ நேசிக்கிறேன்.
114 என் புகலிடமும் என் கேடயமும் நீரே;
உமது வார்த்தையில் நம்பிக்கை வைத்திருக்கிறேன்.
115 தீமை செய்கிறவர்களே, என்னை விட்டு அகன்றுபோங்கள்;
அப்பொழுது நான் என் கடவுளின் திருக்கட்டளைகளின்படி நடப்பேன்.
116 நான் பிழைத்திருக்கும்படி உமது வாக்குறுதிக்கிசைய எனக்கு ஆதரவளித்தருளும்;
எதிர்காலத்தைப்பற்றி நான் கொண்டுள்ள நம்பிக்கை குறைந்து போகாதிருக்கச் செய்யும்;
என்னை வெட்கத்திற்குள்ளாக்காதேயும்.
117 எனக்கு ஆதரவளித்தருளும்; அப்பொழுது நான் காக்கப்படுவேன்;
எக்காலமும் உம்முடைய விதிகளை என் கருத்தில் கொண்டிருப்பேன்.
118 உம்முடைய விதிகள் காட்டும் வழியை விட்டு விலகுகிற யாவரையும் நீர் இகழ்ந்து தள்ளுவீர்;
அவர்கள் பேச்சு வஞ்சனை நிறைந்தது.
119 உலகிலுள்ள பொல்லார் யாவரையும் களிம்பைப்போல நீர் அகற்றிவிடுகிறீர்;
ஆகையால் நான் உம்முடைய ஒழுங்குமுறைகளை நேசிக்கிறேன்.
120 உம்மீது கொண்டுள்ள அச்சத்தால் என் உடம்பு சிலிர்க்கின்றது;
உம்முடைய தீர்ப்புகளுக்கு நான் அஞ்சி நடுங்குகின்றேன்;

### நீதிச்சட்டத்தின்படி நடத்தல்

ஆயின்

121 நியாயமும் நீதியுமானவற்றைச் செய்து வருகிறேன்;
என்னை ஒடுக்குகிறவர்கள் கையில் என்னை ஒப்புக்கொடாதேயும்.
122 உம் அடியானுகிய என் நலனுக்கென உறுதுணையாயிரும்;
இறுமாப்புடையோர் என்னை ஒடுக்கும்படி விடாதேயும்.
123 நீர் அளிக்கும் மீட்புக்காகவும் உமது நீதியான வாக்குறுதிக்காகவும் காத்திருந்து
என் கண்கள் பூத்துப்போயின.
124 உம்முடைய அடியானுகிய என்னை உமது பேரருளுக்கேற்ப நடத்தி,
உம்முடைய விதிகளை எனக்குக் கற்பித்தருளும்.
125 நான் உம்முடைய அடியான்;
உம்முடைய ஒழுங்குமுறைகளை அறியும்படி எனக்கு அறிவைப் புகட்டியருளும்.
126 ஆண்டவர் செயலாற்றுவதற்கான வேளை வந்துவிட்டது;
மக்கள் உம்முடைய சட்டங்களை மீறிவிட்டார்கள்.
127 நானே பொன்னையும் பசும் பொன்னையும்விட மேலாக உம்முடைய திருக்கட்டளைகளை நேசிக்கிறேன்.
128 எனவே, உம்முடைய கட்டளைகளெல்லாம் நீதியானவை என ஏற்றுக்கொண்டேன்;
எல்லாப் பொய்வழிகளையும் வெறுக்கிறேன்.

### நீதிச்சட்டத்தின் மீதுள்ள பற்று

பே

129 உம்முடைய ஒழுங்குமுறைகள் வியக்கத்தக்கவை;
ஆகையால் நான் அவற்றைக் கடைப்பிடித்து வருகிறேன்.
130 உம்முடைய வார்த்தைகளைப்பற்றிய விளக்கம் ஒளியூட்டுகிறது;
அது பேதைகளை உணர்வுள்ளவர்களாக்குகிறது.
131 உம்முடைய திருக்கட்டளைகள் மீதுள்ள நாட்டத்தால்
என் வாயை ஆவென்று திறந்து ஏங்குகிறேன்.
132 உமது திருப்பெயரை நேசிக்கிறவர்களுக்கு நீர் இரங்குவது போல,
என் பக்கம் திரும்பி எனக்கும் இரங்கும்.
133 உமது வாக்குறுதியின்படி என் நடையை ஒரு நிலைப்படுத்தும்;
தீமையானது எதுவும் என்னை ஆட்கொள்ளவிடாதேயும்.
134 மனிதர் செய்யும் கொடுமையினின்று என்னை விடுவித்தருளும்;
நான் உம்முடைய கட்டளைகளைக் கடைப்பிடித்து நடப்பேன்.
135 அடியேன் மீது உமது முகத்தின் ஒளி வீசும்படி செய்யும்;
உம்முடைய விதிகளை எனக்குக் கற்பித்தருளும்.
136 நீர் அருளிய வேதத்தை மனிதர் கடைப்பிடித்து நடக்காததைக் கண்டு,
என் கண்களிலிருந்து கண்ணீர் ஆருய்ப் பெருகி ஓடிற்று.

### நீதிச்சட்டத்தின் நீதிமுறை

த்சாடே

137 ஆண்டவரே, நீர் நீதிபரர்;
உம்முடைய தீர்ப்புகள் நேர்மையானவை.
138 உம்முடைய ஒழுங்குமுறைகள் நியாயமானவை;
முற்றிலும் உண்மையானவை.
139 என் பகைஞர் உம்முடைய வார்த்தைகளை மறந்துவிடுகின்றனர்;
ஆகையால், அவற்றைப்பற்றி ஆர்வம் என்னை எரித்துக் கொண்டிருக்கிறது.
140 உமது வார்த்தை நம்பகமானதென மெய்ப்பிக்கப்பட்டதாகும்;
அடியேன் அதை நேசிக்கிறேன்.
141 நான் சிறியவன், புறக்கணிக்கப்பட்டவன்;
ஆயினும், நான் உம்முடைய கட்டளைகளை மறந்துவிடவில்லை.
142 உமது நீதி என்றுமுள்ள நீதி;
உமது வேதம் சத்தியம்.
143 இக்கட்டும் நெருக்கடியும் என்னைப்பற்றிக்கொண்டன;
எனினும், உம்முடைய திருக்கட்டளைகளால் நான் மகிழ்ச்சியடைகிறேன்.
144 உம்முடைய ஒழுங்குமுறைகள் எக்காலமும் நீதியுள்ளவை;
அவற்றைப் புரிந்துகொள்ளும் ஆற்றலை எனக்குத் தாரும்; அப்பொழுது நான் வாழ்வேன்.

### மீட்புக்காக மன்ருடுதல்

கோப்

145 முழு இதயத்தோடும் உம்மை நோக்கி மன்ருடுகிறேன்;
ஆண்டவரே, எனக்குச் செவிசாய்த்தருளும்;
உம்முடைய விதிகளை நான் கடைப்பிடிக்கிறேன்.

146 உம்மை நோக்கி மன்றாடுகிறேன்;
எனக்கு மீட்பு அளித்தருளும்;
நான் உம்முடைய ஒழுங்குமுறைகளைக் கடைப்பிடித்து நடப்பேன்.
147 வைகறையில் நான் எழுந்து உதவிக்காக மன்றாடினேன்;
உமது வார்த்தையில் நம்பிக்கை வைக்கிறேன்.
148 உமது வார்த்தையைத் தியானிக்கும்படி,
குறித்த சாமத்திற்கு முன்பே நான் விழித்துக் கொள்கிறேன்.
149 ஆண்டவரே, உமது பேரருளுக்கேற்ப என் மன்றாட்டிற்குச் செவிசாய்த்தருளும்;
உமது நீதிக்கேற்ப என்னை உயிர்ப்பித்தருளும்.
150 என்னைத் துன்புறுத்தப் பார்க்கிறவர்கள் என்னிடம் நெருங்கி வருகிறார்கள்;
அவர்களுக்கும் உமது வேதத்திற்கும் நெடுந்தொலைவு.
151 ஆண்டவரே, நீர் என் அருகில் இருக்கிறீர்;
உம்முடைய வாக்குறுதிகளெல்லாம் உண்மையானவை.
152 நீர் உம்முடைய ஒழுங்குமுறைகளை என்றுமுள்ள ஒழுங்குமுறைகளாக ஏற்படுத்தினீர்;
நெடுங்காலத்திற்கு முன்பே இது எனக்குத் தெரியும்.

## துன்பத்தினின்று விடுவிக்கும்படி மன்றாடுதல்

ரேஷ்

153 நான் சிறுமைப்படுவதைப் பார்த்து என்னை விடுவித்தருளும்;
உமது வேதத்தை நான் மறக்கவில்லை.
154 எனக்காக வழக்காடி என்னை மீட்டுக் கொள்ளும்;
உமது வாக்குறுதியின்படி என்னை உயிர்ப்பித்தருளும்.
155 பொல்லாருக்கு மீட்புக் கிடைப்பதில்லை;
அவர்கள் உம்முடைய விதிகளைப் பின்பற்றி நடப்பதில்லை.
156 ஆண்டவரே, உமது மனவுருக்கம் மிகப் பெரியது;
உம்முடைய தீர்ப்புகளின்படியே என்னை உயிர்ப்பித்தருளும்.
157 என்னைத் துன்புறுத்துகிறவர்களும் என்னைப் பகைக்கிறவர்களும் மிகப் பலர்;
நானோ உம்முடைய ஒழுங்குமுறைகள் காட்டும் வழியை விட்டு விலகவில்லை.
158 உமது வார்த்தையைக் கடைப்பிடிக்காத துரோகிகளை நான் கண்டபோது,
எனக்கு மிகுந்த வருத்தமுண்டாயிற்று.
159 நானோ உம்முடைய கட்டளைகளை நேசிக்கிறேன்;
ஆண்டவரே, உமது பேரருளுக்கேற்ப என்னை உயிர்ப்பித்தருளும்.
160 உமது வார்த்தைக்கு உண்மையே அடிப்படை;
உமது நியாயமான தீர்ப்பு ஒவ்வொன்றும் நிலைபேறுடையது.

## நீதிச்சட்டத்தைப் புகழ்தல்

ஷீன்

161 பெருந்தலைவர்கள் என்னைக்காரணமின்றித் துன்புறுத்தினார்கள்;
என் இதயம் உம்முடைய வார்த்தைகளுக்கு அஞ்சுகிறது.
162 மிகுந்த செல்வத்தைக் கண்டெடுத்தவன் மகிழ்வதுபோல,
நான் உமது வசனத்தை முன்னிட்டு மகிழ்கிறேன்.
163 பொய்யை அறவே வெறுக்கிறேன்;
உமது வேதத்தையே நேசிக்கிறேன்.
164 உம்முடைய நியாயமான தீர்ப்புகளுக்காக
ஒரு நாளில் ஏழுமுறை உம்மைப் புகழுகிறேன்.
165 உமது வேதத்தை நேசிக்கிறவர்களுக்கு மிகுந்த சமாதானம் உண்டு;
அவர்களை இடறிவிழச் செய்வது எதுவுமில்லை.
166 ஆண்டவரே, நீர் அளிக்கும் மீட்புக்காக நான் காத்து இருக்கிறேன்.
உம்முடைய திருக்கட்டளைகளின்படி நடக்கிறேன்.
167 என் ஆன்மா உம்முடைய ஒழுங்குமுறைகளைக் கடைப்பிடிக்கிறது;
அவற்றை நான் மிகவும் நேசிக்கிறேன்.
168 உம்முடைய கட்டளைகளையும் உம்முடைய ஒழுங்குமுறைகளையும் கடைப்பிடிக்கிறேன்;
நான் செய்வதெல்லாம் உமக்குத் தெரியும்.

## உதவிக்காக மன்றாடுதல்

தாவ்

169 ஆண்டவரே, என் மன்றாட்டு உமது முன்னிலையில் ஏற்றுக் கொள்ளப்படுவதாக;
உமது வாக்குறுதியின்படி எனக்கு உணர்வைத் தாரும்.
170 என் விண்ணப்பம் உமது முன்னிலையில் ஏற்றுக்கொள்ளப்படுவதாக;
உமது வாக்குறுதியின்படி என்னை விடுவியும்.

171 உம்முடைய விதிகளை நீர் எனக்குக் கற்பித்துவருகிறீர்;
என் வாய் எப்போதும் உமது புகழைப் பாடும்.
172 உம்முடைய திருக்கட்டளைகளெல்லாம் நியாயமானவை;
என் நாவு உமது வாக்குறுதியைப் பாடும்.
173 நான் உம்முடைய கட்டளைகளின்படி நடப்பதைத் தேர்ந்து கொண்டேன்;
உமது கை எனக்குத் துணை செய்வதாக.
174 ஆண்டவரே, நீர் அளிக்கும் மீட்பைப் பெற ஆவலுள்ளவனாய் இருக்கிறேன்;
உமது வேதம் எனக்கு மகிழ்ச்சியளிக்கிறது.
175 நான் பிழைத்திருந்து உம்மைப் புகழ வேணுக;
உம்முடைய தீர்ப்புகள் எனக்குத் துணை புரியட்டும்.
176 காணுமற்போன ஆட்டைப்போல நான் வழிதவறி அலைகிறேன்; அடியேனை நீர் தேடியருளும்;
உம்முடைய திருக்கட்டளைகளை நான் மறக்கவில்லை.

### உதவிக்காக மன்ருடுதல்

*(சீயோன் மலை ஏறுகையில் பாடும் பாடல்)*

**120** நெருக்கடியான வேளையில் நான் ஆண்டவரை நோக்கி மன்ருடினேன்;
அவர் எனக்குச் செவிசாய்த்தருளிஞர்.
2 ஆண்டவரே, பொய் பேசும் வாய்க்கும் வஞ்சக நாவுக்கும் என்னைத் தப்புவியும்.

3 வஞ்சக நாவே, உனக்குக் கிடைக்கப் போவது என்ன?
உனக்கு நடக்கப்போவது என்ன?
4 வீரனின் கூர்மையான அம்புகளும் கொழுந்துவிட்டெரியும் நெருப்புமே கிடைக்கும்.

5 ஐயோ! நான் மேசேக்கிலே இருந்து அல்லற்பட்டதுபோதும்;
கேதாரிலே நடத்தின கூடார வாழ்க்கை போதும்.
6 சமாதானத்தைக் குலைப்பவர்களோடு நான் குடியிருந்ததும் போதும்;
7 நான் சமாதானத்தை நாடுபவன்;
ஆனாலும் நான் அதைப்பற்றிப் பேசத் தொடங்கினுலே அவர்கள் என்னைப் போருக்கு இழுக்கிருர்கள்.

### நம்மைப் பாதுகாப்பவர்

*(சீயோன் மலை ஏறுகையில் பாடும் பாடல்)*

**121** புனித மலையையே என் கண்கள் நோக்குகின்றன;
எனக்கு உதவி எங்கிருந்து வரும்?
2 விண்ணையும் மண்ணையும் உண்டாக்கின ஆண்டவரிடமிருந்தே எனக்கு உதவி வரும்.

3 அவர் உன் கால் இடருதபடி பார்த்துக் கொள்வார்;
உன்னைக் காக்கிறவர் உறங்கார்.

4 இதோ, இஸ்ரவேலைக் காக்கிறவர் உறங்குவதுமில்லை;
கண்ணயர்வதுமில்லை.
5 ஆண்டவர் உன்னைக் காக்கிருர்;
ஆண்டவர் உன் வலப்பக்கத்தில் உனக்குப் பாதுகாப்பாய் இருக்கிருர்.
6 பகலில் வெயில் உனக்குத் தீங்கிழைக்காது;
இரவில் நிலாவும் உனக்கு ஒரு கெடுதியும் செய்யாது.
7 ஆண்டவர் உன்னை எல்லாத் தீமைக்கும் விலக்கிக் காப்பார்;
அவர் உன் ஆன்மாவைக் காப்பார்.
8 ஆண்டவர் உன் போக்கையும் வரத்தையும் இன்றும் என்றும் காப்பார்.

### எருசலேமே நீ வாழி!

*(சீயோன்மலை ஏறுகையில் பாடும் பாடல்; தாவீதின் சங்கீதம்)*

**122** ''ஆண்டவரது ஆலயத்திற்குப் போவோம், வாருங்கள்''
என்று அவர்கள் என்னிடம் சொன்னபோது நான் மகிழ்ச்சி அடைந்தேன்.
2 எருசலேமே, இதோ, நாங்கள் உன் வாயில்களைக் கடந்துவந்து நிற்கிறேம்.
3 எருசலேம்தான் அழகாக ஒருங்கிணைத்துக் கட்டப்பட்ட நகரம்;
4 ஆண்டவரின் குலத்தினராகிய மக்கள் இங்கே வருவார்கள்.
இஸ்ரவேல் மக்களுக்கு இட்ட கட்டளைப்படி,
ஆண்டவரின் திருப்பெயருக்கு நன்றி செலுத்த வருவார்கள்.
5 இங்கே நீதி வழங்கும் அரியணைகள் இருக்கின்றன;
அவை தாவீதினுடைய மரபினரின் அரியணைகள்.

6 எருசலேமில் சமாதானம் நிலைத்திருக்கும்படி வேண்டிக் கொள்ளுங்கள்;
''உன்னை நேசிக்கிறவர்கள் நலமுடன் வாழ்வார்களாக!

7 அரண்சூழ்ந்த நகரமே உன்னுள் அமைதி நிலவுவதாக!
உன் மாளிகைக்குள்ளே நல்வாழ்வு இருப்பதாக!''
8 ''உன்னுள் சமாதானம் நிலவுவதாக!'' என்று
நான் என் சகோதரர் சார்பிலும் என் நண்பர் சார்பிலும் உன்னை வாழ்த்து கிறேன்.
9 நம்முடைய கடவுளாகிய ஆண்டவரின் ஆலயம் இங்கே இருப்பதால்,
உன் வளம் பெருகும்படி நான் மன் றாடுவேன்.

### இரக்கத்திற்காக மன்றாடுதல்

*(சீயோன் மலை ஏறுகையில் பாடும் பாடல்)*

123 விண்ணுலகில் வீற்றிருப்பவரே, உம்மையே என் கண்கள் நோக்குகின் றன.
2 தலைவரின் விருப்பத்தை அறிய வேலைக் காரரின் கண்கள் அவர் கையைப் பார்த்தவண்ணம் இருப்பது போல வும்,
தலைவியின் விருப்பத்தை அறிய வேலைக் காரியின் கண்கள் அவள் கையைப் பார்த்தவண்ணம் இருப்பது போல வும்
எங்கள் கடவுளாகிய ஆண்டவர் எங் களுக்கு இரங்கும் வரையில்
எங்கள் கண்கள் அவரையே நோக்கிக் கொண்டிருக்கும்.

3 எங்களுக்கு இரங்கும் ஆண்டவரே, எங் களுக்கு இரங்கும்;
அளவுக்கு மேலேயே நாங்கள் இகழ்ச்சி அடைந்துவிட்டோம்.
4 பணக்காரரின் வசைமொழி போதும்;
இறுமாந்த மனிதரின் இகழ்ச்சியுரை யும் போதும்.

### இஸ்ரவேலரின் மீட்பர்

*(சீயோன் மலை ஏறுகையில் பாடும் பாடல்)*

124 மனிதர் நமக்கு விரோதமாக எழுந்த போது,
ஆண்டவர் நம் பக்கம் இருந்திராவிடில்,
2 ஆண்டவர் நம் சார்பாக இருந்திரா விடில்,
3 அவர்களது சினம் நம்மேல் மூண்டெழு கையில்,
அவர்கள் நம்மை உயிரோடு விழுங்கி யிருப்பார்கள்.
4 அப்பொழுது வெள்ளம் நம்மீது பாய்ந் தோடியிருக்கும்;
வெள்ளப் பெருக்கு நம்மீது புரண்டோடி யிருக்கும்.
5 கொந்தளித்தெழும் தண்ணீர் நம்மீது புரண்டோடியிருக்கும்
என்று இஸ்ரவேல் மக்கள் சொல்வார் களாக.

6 ஆண்டவருக்கே புகழ்ச்சி!
அவர்கள் பற்களுக்கு அவர் நம்மைத் தப்புவித்தார்.
7 வேடன் கைக்குத் தப்பின குருவிபோல நமது ஆன்மா தப்பிற்று;
கண்ணி தெறித்தது; நாம் தப்பினோம்.
8 நமக்கு உதவி ஆண்டவரின் திருப்பெய ரில் உள்ளது;
விண்ணையும் மண்ணையும் உண்டாக்கின வர் அவரே.

### ஆண்டவரை நம்புவோரின் நற்பேறு

*(சீயோன் மலை ஏறுகையில் பாடும் பாடல்)*

125 ஆண்டவர்மீது நம்பிக்கையுள்ளவர்கள் என்றென்றும் அசையாமலிருக்கும் சீயோன் மலையைப்போல் இருப்பார் கள்.
2 எருசலேமைச் சுற்றிலும் மலைகள் இருப் பதுபோல
ஆண்டவர் இன்றும் என்றும் தம் மக் களைச் சுற்றிலும் இருப்பார்.
3 நீதிமான்களுக்குச் சொந்தமான நாட் டில் தீயோரின் ஆட்சி நிலைத்திராது;
நீதிமான்கள் தங்கள் கைகளால் தீய காரியத்தைச் செய்ய மாட்டார்கள்.
4 ஆண்டவரே, நல்லவர்களுக்கும் நேர்மை யான இதயமுள்ளவர்களுக்கும்
நீர் நன்மை செய்தருளும்.
5 நேர்மை கெட்ட வழிகளில் விருப்பங் கொள்கிறவர்களை
ஆண்டவர் தீமை செய்கிறவர்களோடு சேர்த்துவிடுவார்.
இஸ்ரவேலருக்குச் சமாதானம் உண் டாவதாக!

### விடுதலைக்காக மன்றாடுதல்

*(சீயோன் மலை ஏறுகையில் பாடும் பாடல்)*

126 சீயோனின் அடிமை நிலையை ஆண் டவர் மாற்றினபோது,
நாம் ஏதோ ஒரு கனவு காண்கிறவர்கள் போல இருந்தோம்.
2 அப்பொழுது நமது முகத்தில் மகிழ்ச்சி காணப்பட்டது; நாவில் களிப்பார வாரம் எழுந்தது;

''ஆண்டவர் அவர்களுக்குப் பெரிய காரியங்களைச் செய்தார்'' என்று
பிற இனத்தவர் அப்போது பேசிக் கொண்டனர்.
3 ஆண்டவர் நமக்குப் பெரிய காரியங் களைச் செய்தார்;
நாம் மகிழ்ச்சியடைந்தோம்.

4 ஆண்டவரே, மழையானது வறண்ட தென்னாட்டை நீரோடையாக மாற்றுவது போல,
எங்கள் அடிமை நிலையை மாற்றி யருளும்.
5 கண்ணீரோடு விதைக்கிறவர்கள் மகிழ்ச் சியோடு அறுவடை செய்வார்கள்.
6 விதைப்பதற்கு விதையைச் சுமந்து செல் கிறவன் அழுதுகொண்டு போவான்;
அறுத்த அரிகளைச் சுமந்து வரும்போது பாடிக்கொண்டு வருவான்.

### கடவுளின் அருள்நலம்

*(சீயோன் மலை ஏறுகையில் பாடும் பாடல்; சாலொமோனின் சங்கீதம்)*

127 ஆண்டவரே வீட்டைக் கட்டவில்லை யென்றால்,
அதைக் கட்டுகிறவர்களின் உழைப்பு வீணே;
ஆண்டவரே நகரத்தைக் காவல் புரிய வில்லையென்றால், காவலாளர் விழித் திருப்பது வீணே.

2 நீங்கள் விடியற் காலையில் எழுந்து, நள்ளிரவு வரை வேலைசெய்து உணவுக் காக வருந்தி உழைப்பதும் வீணே.
கடவுளின் அருள்பெற்றவன் உறங்கிக் கொண்டிருந்தாலும்,
அவனுக்குத் தேவையானதைக் கடவுளே கொடுப்பார்.

3 பாருங்கள், பிள்ளைகள் ஆண்டவர் அருளும் செல்வம்;
மக்கட்பேறு அவரளிக்கும் நற்பேறு.
4 இளமையில் ஒருவனுக்குப் பிறக்கும் மைந்தர்கள் வீரனின் கையிலுள்ள அம்புகளுக்கு ஒப்பானவர்கள்.
5 அத்தகைய அம்புகள் நிறைந்த பையை உடைய மனிதன் நற்பேறு பெற்ற வன்;
பொது அரங்கில் எதிரிகளோடு வழக் காடும்போது,
அவன் தோல்வியடைய மாட்டான்.

### ஆண்டவருடைய அடியாரின் குடும்பம்

*(சீயோன் மலை ஏறுகையில் பாடும் பாடல்)*

128 ஆண்டவருக்கு அஞ்சி அவர் வழிகளில் நடக்கிறவன் எவனோ அவன் நற் பேறு பெற்றவன்.
2 உன் உழைப்பால் நீ பெறுவது உனக்குப் போதியதாயிருக்கும்;
நீ எல்லா நற்பேறும் நலமும் பெற்றவனா யிருப்பாய்.
3 உன் வீட்டில் உன் மனைவி நிரம்பக் கனி தரும் திராட்சைச் செடிபோல் இருப் பாள்;
உணவு வேளையில் உன் பிள்ளைகள் ஒலிவக் கன்றுகளைப்போல் உன்னைச் சூழ இருப்பார்கள்.
4 ஆண்டவருக்கு அஞ்சி நடக்கிற மனிதன் இத்தகைய ஆசி பெற்றவனாயிருப் பான்.
5 ஆண்டவர் சீயோனிலிருந்து உனக்கு ஆசி வழங்குவாராக!
உன் வாழ்நாளெல்லாம் நீ எருசலேமின் நல்வாழ்வைக் காணும்படி செய் வாராக!
6 நீ உன் பிள்ளைகளின் பிள்ளைகளைக் காண் பாய்;
இஸ்ரவேலுக்குச் சமாதானம் உண்டாவ தாக!

### இஸ்ரவேலரின் எதிரிகளை முன்னிட்டுப் பாடியது

*(சீயோன் மலை ஏறுகையில் பாடும் பாடல்)*

129 என் இளமை முதற்கொண்டே என் னைப் பல முறை துன்புறுத்தினார்கள்.
2 என் இளமை முதற்கொண்டே என்னைப் பல முறை துன்புறுத்தின போதிலும்,
அவர்கள் என்மீது வெற்றி பெறவில்லை.
3 உழவர்கள் என் முதுகின்மேல் உழுது, நீண்ட படைச்சால்களை உண்டாக்கி னார்கள்.
4 ஆண்டவர் நீதிபரர்;
''பொல்லார் என்னைக் கட்டியிருந்த கயிறுகளை அவர் அறுத்தெறிந்தார்''
என்று இஸ்ரவேல் சொல்வதாக.

5 சீயோனைப் பகைக்கிற அனைவரும் வெட் கப்பட்டுப் பின்வாங்குவார்களாக.
6 வீட்டின்மேல் முளைக்கும் புல்லுக்கு அவர் கள் ஒப்பாவார்களாக;
அதைப் பிடுங்குமுன் அது உலர்ந்து போகும்.
7 அதை அறுவடை செய்தால், ஒரு கை நிறையப் புல் கிடைக்குமா?

அரிகளைக் கட்டினால், ஒரு தலைச் சுமை
புல் கிடைக்குமா?
8 வழிப்போக்கன் அவர்களைப் பார்த்து,
''ஆண்டவர் உங்களுக்கு ஆசி வழங்கு
வாராக!'' என்றோ,
''ஆண்டவரின் திருப்பெயரால் உங்
களுக்கு ஆசி வழங்குகிறோம்'' என்றோ
சொல்லமாட்டார்கள்.

### உதவிக்காக மன்றாடுதல்

*(சீயோன் மலை ஏறுகையில் பாடும் பாடல்)*

130 ஆண்டவரே, ஆழ்துயரத்திலிருந்து
உம்மை நோக்கி மன்றாடுகிறேன்;
2 ஆண்டவரே, என் கூக்குரலுக்குச் செவி
சாய்த்தருளும்,
என் விண்ணப்பக் குரலை உம்முடைய
செவிகள் கவனத்துடன் கேட்கட்டும்.
3 ஆண்டவரே, நீர் எங்கள் குற்றங்களை
நினைவில் வைத்திருப்பீரானால்,
யாரால் நிலைத்து நிற்கக் கூடும், ஆண்ட
வரே?

4 மனிதர் உமக்கு அஞ்சி நடக்கும்படி,
நீர் அவர்களை மன்னிக்கிறீர்.
5 ஆண்டவரின் உதவிக்காகக் காத்திருக்
கிறேன்; என் ஆன்மா காத்திருக்
கிறது;
அவரது வார்த்தைக்காக ஆவலோடு
காத்திருக்கிறேன்.

6 விடியற்காலத்திற்காகக் காத்திருக்கும்
காவலரைவிட,
ஆம், விடியற்காலத்திற்காகக் காத்
திருக்கும் காவலரைவிட,
என் ஆன்மா மிகுந்த ஆவலுடன் ஆண்
டவரின் உதவிக்காகக் காத்திருக்
கிறது.
7 இஸ்ரவேலே, ஆண்டவரையே நம்பியிரு;
ஆண்டவரிடமே அருள் உண்டு;
அவரிடமே திரளான மீட்பும் உண்டு.
8 அவரே இஸ்ரவேலரை அவர்களுடைய
எல்லாப் பாவங்களினின்றும் மீட்டுக்
காப்பார்.

### பணிவுடன் மன்றாடுதல்

*(சீயோன் மலை ஏறுகையில் பாடும் பாடல்; தாவீதின் சங்கீதம்)*

131 ஆண்டவரே, என் உள்ளம் இறுமாப்
புடையதன்று;
என் பார்வை மேட்டிமையானதுமன்று;
பெரிய காரியங்களிலும் எனக்கு மிஞ்சின
செயல்களிலும் நான் தலையிடுவது
மில்லை.
2 பால் மறந்த குழந்தை தன் தாயினிடம்
அமைதியாயிருப்பது போல,
உண்மையாகவே என் ஆன்மா அடங்கி
அமைதியாயிருக்கும்படி செய்கிறேன்;
என் ஆன்மா பால் மறந்த குழந்தை
போலிருக்கிறது.
3 இஸ்ரவேலே, இன்றும் என்றும் ஆண்ட
வரையே நம்பியிரு.

### சீயோன்

*(சீயோன் மலை ஏறுகையில் பாடும் பாடல்)*

132 ஆண்டவரே, தாவீதை நினைத்தருளும்;
அவர் பட்ட அரும்பாடுகள் அனைத்
தையும் நினைவுகூர்ந்தருளும்.
2 அவர் ஆண்டவரிடம் ஆணையிட்டுக்
கூறினதை நினைத்தருளும்;
யாக்கோபின் வல்லவருக்குச் செய்த
பொருத்தனையை நினைத்தருளும்.
3 ''ஆண்டவருக்கு ஓர் இடத்தை, யாக்
கோபின் வல்லவருக்கு உறைவிடமாக
ஒரு வீட்டை,
நான் அமைக்கும் வரையில்,
4 என் வீடாகிய கூடாரத்தினுள் செல்ல
மாட்டேன்;
படுப்பதற்காக என் கட்டிலின்மேல் ஏற
மாட்டேன்.

5 என் கண்களைத் தூங்கவிட மாட்டேன்;
என் இமைகளை மூடிக்கொள்ள மாட்
டேன்'' என்று சொன்னாரே.

6 இதோ, அது[1] எப்பிராத்தாவிலே இருக்
கிறதென்று கேள்விப்பட்டோம்;
வனத்தின் வெளியிலே[2] அதைக் கண்டு
பிடித்தோம்.
7 அவரது உறைவிடத்திற்குச் செல்வோம்;
அவரது பாதப்படியில் பணிவோம்
வாருங்கள்.

8 ஆண்டவரே, உமது வல்லமை விளங்கும்
பெட்டியுடன் நீர் தங்கும் இடத்தில்
எழுந்தருளும்.
9 உம்முடைய ஆசாரியருக்கு நீதி ஆடை
யாவதாக;
உம்முடைய அடியார் மகிழ்ந்து கொண்
டாடுவார்களாக.

10 நீர் தேர்ந்தெடுத்த அரசரை, உம்முடைய
தாசனாகிய தாவீதின் பொருட்டுப்
புறக்கணியாதேயும்.
11 ஆண்டவர் தாவீதுக்கு உண்மையாய்
ஆணையிட்டு உறுதி கூறினார்;

1. உடன்படிக்கைப் பெட்டி 2. கீரியாத் யெயாரீம்

**130:8** மத். 1:21; தீத்து 2:14. **132:6-10** 2 வரலாறு. 6;41,42. **132:11** 2 சாமு. 7:12-16; 1 வரலாறு. 17:11-14; சங். 89:3,4; திருத்தூது. 2:30.

''உன் மரபினருள் அரசர்களை ஏற்படுத்தி
உன் அரியணையில் வீற்றிருக்கச் செய்
வேன்.
12 உன் மைந்தர் என் உடன்படிக்கை
யையும்,
நான் அவர்களுக்குக் கற்பிக்கும் என்
ஒழுங்குமுறைகளையும் கடைப்பிடித்
தால்,
அவர்களுடைய மைந்தரும் என்றென்
றும் உன் அரியணையில் வீற்றிருப்
பார்கள்'' என்று சொன்னார்.
அவர் உண்மையுள்ளவர், வாக்குத்
தவறமாட்டார்.

13 ஆண்டவர் சீயோனைத் தேர்ந்தெடுத்தார்
அதையே தமது உறைவிடமாக்க விரும்
பினார்.
14 ''இது என்றென்றும் நான் தங்கும் இடம்
இதை நான் விரும்பினதால் இதையே
என் உறைவிடமாக்குவேன்.
15 இதில் விளையும் உணவுப் பொருளுக்கு
ஆசி வழங்குவேன்;
அதன் ஏழைகளுக்கு வயிறார உணவளிப்
பேன்.
16 இங்குள்ள ஆசாரியருக்கு மீட்பெனும்
உடையை உடுத்துவேன்;
இங்குள்ள என் அடியார் மகிழ்ந்து
ஆரவாரிப்பார்கள்.

17 ''இங்கே தாவீதின் மரபிலிருந்து ஒரு
கொம்பை எழச் செய்வேன்;
நான் தேர்ந்தெடுத்தவனுக்காக ஒரு
விளக்கை ஆயத்தம் செய்திருக்
கிறேன்.
18 அவனுடைய எதிரிகளுக்கு வெட்க
மெனும் உடையை உடுத்துவேன்;
அவன் மீதோ அவனது மணிமுடி புக
ழொளி வீசும்'' என்று ஆண்டவர்
சொன்னார்.

### சகோதர அன்பு

*(சீயோன் மலை ஏறுகையில் பாடும்
பாடல்; தாவீதின் சங்கீதம்)*

**133** இதோ, சகோதரர் ஒருமித்துவாழ்வது
எத்துணை நல்லது! எத்துணை
இனியது!
2 அது ஆரோன் தலையில் ஊற்றப்பட்டு,
அவர் தாடிவழியாக அங்கிவரைக்கும்
வழிந்தோடும் நறுமணத் தைலம்
போன்றது.
3 அது சீயோன் குன்றுகள்மேல் இறங்கிப்
படியும் எர்மோன் மலைப் பனிக்கு
ஒப்பாயிருக்கும்;
அங்கே ஆண்டவர் என்றுமுள்ள வாழ்
வாகிய ஆசியைப் பொழிவார்.

### ஆண்டவரைப் போற்றுதல்

*(சீயோன் மலை ஏறுகையில் பாடும்
பாடல்)*

**134** இதோ, இராக் காலங்களில் ஆண்ட
வரது ஆலயத்தில் நிற்கும் ஆண்ட
வரின் ஊழியரே,
நீங்கள் எல்லோரும் ஆண்டவரைப்
போற்றுங்கள்.
2 புனித அகத்தில் உங்கள் கைகளைக் கூப்பி,
ஆண்டவரைப் போற்றுங்கள்.

3 விண்ணையும் மண்ணையும் உண்டாக்கின
ஆண்டவர்,
சீயோனிலிருந்து உங்களுக்கு ஆசிவழங்கு
வாராக!

### புகழ்ப்பாடல்

அல்லேலூயா.
**135** ஆண்டவரின் திருப்பெயரைப் புக
ழுங்கள்;
ஆண்டவரின் ஊழியரே, அவரைப்
புகழுங்கள்.
2 ஆண்டவரின் ஆலயத்தில் இருப்ப
வர்களே,
நம் கடவுளின் ஆலயப் பிராகாரங்களில்
உள்ளவர்களே அவரைப் புகழுங்கள்.
3 ஆண்டவரைப் புகழுங்கள்; ஆண்டவர்
நல்லவர்;
அவரது திருப்பெயரைப் புகழ்ந்து
பாடுங்கள்; அது இன்பமானது.
4 ஆண்டவர் யாக்கோபைத் தமக்கென்று
தேர்ந்துகொண்டார்;
இஸ்ரவேலைத் தமக்குச் சொந்தமான
இனமாகத் தெரிந்தெடுத்தார்.

5 ஆண்டவர் மகத்தானவர் என்பதை
அறிவேன்;
நம்முடைய ஆண்டவர் எல்லாத் தேவர்
களுக்கும் மேலானவர் என்பது
எனக்குத் தெரியும்.
6 விண்ணிலும் மண்ணிலும் கடல்களிலும்
எல்லா ஆழ்பகுதிகளிலும்
ஆண்டவர் தமக்கு விருப்பமான யாவற்
றையும் செய்கிறார்.
7 அவர் பூமியின் கடையெல்லைகளிலிருந்து
மேகங்களை எழும்பச் செய்கிறார்;
மழை பெய்யும்படி மின்னலை உண்டாக்கு
கிறார்;
காற்றைத் தமது பண்டசாலையிலிருந்து
வெளிப்படச் செய்கிறார்.
8 அவர் எகிப்தில் மனிதரின் தலைப்பிள்ளை
களையும் கால்நடைகளின் தலையீற்று
களையும் அழித்தார்.

132:17 1 அர. 11:36.

9 [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
10 அவர் [illegible] அழித்தார்;
வலிமை [illegible] கொன்றார்.
11 எமோரியரின் அரசனாகிய சீகோனையும்
பாசானின் அரசனாகிய ஓகையும்
கானானின் எல்லா அரசுகளையும் அழித்தார்.
12 அவர்களின் நாட்டைத் தம் மக்களாகிய
இஸ்ரயேலருக்குச் சொத்தாகக்
கொடுத்தார்.

13 ஆண்டவரே, உமது திருப்பெயர் என்று
முள்ளது;
ஆண்டவரே, உமது புகழ் தலைமுறை
தலைமுறையாக நிலைத்திருக்கும்.
14 ஆண்டவர் தம் மக்களுக்கு நீதி வழங்கு
வார்;
தம் அடியாரிடம் இரக்கங்கொள்வார்.
15 பிற இனத்தவர் வழிபடும் சிலைகள்
வெறும் வெள்ளியும் பொன்னுமே;
அவை மனிதர் கையால் செய்யப்
பட்டவை.
16 அவற்றிற்கு வாய் உண்டு; ஆனால்
பேசுவதில்லை;
கண் உண்டு; ஆனால் காண்பதில்லை;
17 அவற்றிற்குக் காது உண்டு; ஆனால்
கேட்பதில்லை;
அவற்றின் வாயில் மூச்சு இல்லை.
18 அவற்றைச் செய்கிறவர்களும்
அவற்றில் நம்பிக்கை வைக்கிற யாவரும்
அவற்றைப்போலவே இருப்பார்கள்.

19 இஸ்ரயேல் குடும்பத்தாரே, ஆண்ட
வரைப் போற்றுங்கள்;
ஆரோன் குடும்பத்தாரே, ஆண்ட
வரைப் போற்றுங்கள்.
20 லேவி குடும்பத்தாரே, ஆண்டவரைப்
போற்றுங்கள்;
ஆண்டவருக்கு அஞ்சி நடப்பவர்களே,
ஆண்டவரைப் போற்றுங்கள்.
21 எருசலேமைத் தம் உறைவிடமாகக்
கொண்டிருக்கும் ஆண்டவர் போற்
றப்படுவாராக!
சீயோனிலிருக்கும் ஆண்டவர் போற்றப்
படுவாராக!
அல்லேலூயா.

## நன்றி செலுத்துதல்

**136** ஆண்டவருக்கு நன்றி செலுத்துங்கள்;
அவர் நல்லவர்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
2 தெய்வங்களின் கடவுளுக்கு நன்றி
செலுத்துங்கள்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
3 ஆண்டவர்களின் ஆண்டவருக்கு [illegible]
[illegible] நன்றி
செலுத்துங்கள்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
4 வியக்கத்தக்க செயல்களைச் செய்பவருக்கு
[illegible] நன்றி செலுத்
துங்கள்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
5 வானங்களை [illegible] உண்டாக்கிய
வருக்கு நன்றி செலுத்துங்கள்.
அவரது பேரருள் என்றுமுள்ளது.
6 தண்ணீர்மீது பூமியை விரித்தவருக்கு
நன்றி செலுத்துங்கள்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
7 பெரிய சுடர்களை உண்டாக்கினவருக்கு
நன்றி செலுத்துங்கள்.
அவரது பேரருள் என்றுமுள்ளது.
8 பகலில் ஆளுகை செய்யக் கதிரவனை
அவர் உண்டாக்கினார்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
9 இரவில் ஆளுகை செய்ய நிலவையும்
விண்மீன்களையும் அவர் உண்டாக்
கினார்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
10 எகிப்தியரின் தலைப்பேறுகளை அழித்த
வருக்கு நன்றி செலுத்துங்கள்.
அவரது பேரருள் என்றுமுள்ளது.
11 அவர்களிடையேயிருந்து இஸ்ரயேல்
மக்களைப் புறப்படச் செய்தார்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
12 தோள்வலிமையாலும் ஓங்கிய கையா
லும் அதைச் செய்தார்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
13 செங்கடலை இரண்டாகப் பிளந்தவருக்கு
நன்றி செலுத்துங்கள்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
14 அதன் நடுவே இஸ்ரயேல் மக்களை
நடந்துபோகச் செய்தார்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
15 பார்வோனையும் அவன் படைகளையும்
செங்கடலில் மூழ்கடித்தார்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
16 தம் மக்களைப் பாலைவனத்தில் வழி
நடத்தியவருக்கு நன்றி செலுத்
துங்கள்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
17 பெரிய அரசர்களை அழித்தவருக்கு
நன்றி செலுத்துங்கள்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
18 வலிமை வாய்ந்த அரசர்களை அழித்
தார்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.

135;15-18 சங் 115:4-8; திருவெளி. 9:20. 136:1 [illegible]

19 எமோரியரின் அரசனுகிய சீகோனை
அழித்தார்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
20 பாசானின் அரசனுகிய ஓகை அழித்தார்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
21 அவர்கள் நாட்டைத் தம் மக்களுக்கு
உரிமைச் சொத்தாகக் கொடுத்தார்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
22 அதைத் தம் தாசனுகிய இஸ்ரவேலுக்கு
உரிமைச் சொத்தாகக் கொடுத்தார்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.

23 தாழ் நிலையிலிருந்த நம்மை நினைத்த
வருக்கு நன்றி செலுத்துங்கள்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
24 நம் பகைஞர் கையினின்று அவர் நம்மை
விடுவித்தார்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
25 ஊனுடலுள்ள அனைத்திற்கும் அவர்
உணவளிக்கிருர்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.
26 விண்ணுலகக் கடவுளுக்கு நன்றி செலுத்
துங்கள்;
அவரது பேரருள் என்றுமுள்ளது.

### நாடு கடத்தப்பட்டோரின் புலம்பல்

137 பாபிலோனிலுள்ள ஆறுகளினருகில்
நாங்கள் அமர்ந்து,
சீயோனை நினைத்து அழுதோம்.
2 அங்குள்ள அலரிச் செடிகளின்மேல்
எங்கள் சுரமண்டலங்களைத் தொங்க
வைத்தோம்.
3 எங்களைக் கடத்திச் சென்றவர்கள்
அங்கே எங்களைப் பாடச் சொன்னுர்
கள்;
எங்களைப் பிடித்துச் சென்றவர்கள்
எங்கள் மங்கல கீதத்தையும் கேட்க
விரும்பி,
சீயோனின் பாடல்களுள் சிலவற்றைப்
பாடும்படி எங்களைக் கேட்டார்கள்.

4 ஆண்டவரைப்பற்றிய பாடலை அன்னிய
நாட்டில் நாங்கள் எப்படிப்
பாடுவோம்?
5 எருசலேமே, நான் உன்னை மறந்தால்,
என் வலக்கை தன் தொழிலை மறப்பதாக.
6 நான் எருசலேமை நினையாமலும்,
எனக்கு மகிழ்ச்சிதரும் எதையும்விட
மேலாக நான் அதை எண்ணுமலும்
இருந்தால்,
என் நாவு என் வாயோடு ஒட்டிக்
கொள்வதாக.
7 ஆண்டவரே, எருசலேம் வீழ்ச்சியுற்ற
நாளில்,
ஏதோமியர் செய்ததை நினைத்துப்
பாரும்:
''அதை இடியுங்கள்; அடியோடு இடித்
துத் தள்ளுங்கள்'' என்று அவர்கள்
சொன்னுர்களே!
8 பாபிலோன் மகளே, பாழாய்ப் போகி
றவளே,
நீ எங்களுக்குச் செய்தபடியே உனக்குச்
செய்கிறவன் நற்பேறு பெற்றவன்.

### நன்றி செலுத்துதல்

(தாவீதின் சங்கீதம்)

138 என் முழு இதயத்தோடும் உமக்கு
நன்றி செலுத்துகிறேன்;
தேவர்கள் முன்னிலையில் உம்மைப்
புகழ்ந்து பாடுவேன்.
2 உமது தூய்மையான ஆலயத்தை
நோக்கித் திரும்பி,
உமது பேரருளையும் உமது உண்மை
யையும் நினைத்து,
உமது திருப்பெயருக்கு நன்றி செலுத்து
கிறேன்.
உமது புகழ் அனைத்திற்கும் மேலாக
உமது வாக்குறுதியை நீர் மேன்மைப்
படுத்தியிருக்கிறீர்.
3 நான் மன்றுடின நாளில் எனக்கு நீர்
செவிசாய்த்தீர்;
என் ஆன்மாவுக்கு வலிமையளித்து
எனக்கு ஊக்க மூட்டினீர்.
4 ஆண்டவரே, உலக அரசரெல்லாரும்
உமது வாயின் வார்த்தைகளைக் கேட்
கும்போது,
உமக்கு நன்றி செலுத்துவார்கள்.
5 ஆண்டவரின் மாட்சிமை மேன்மை
யானது என்பார்கள்;
அவர்கள் ஆண்டவரின் வழிகளைப்
பற்றிப் பாடுவார்கள்.
6 ஆண்டவர் உயர்ந்தவராயிருந்தும் தாழ்
நிலையிலுள்ளோரைக் கண்ணேக்கு
கிருர்;
மேட்டிமையானவனையோ தொலைவி
லிருந்தே அறிகிருர்.

7 நான் துன்பத்தின் நடுவில் நடந்தாலும்
நீர் என்னை உயிர்ப்பிப்பீர்;
என் எதிரிகளின் சினத்தை அடக்கும்படி
உமது கையை நீட்டுவீர்;
உமது வலக்கை என்னைக் காப்பாற்றும்.
8 ஆண்டவர் எல்லாவற்றையும் எனக்
காகச் செய்து முடிப்பார்;
ஆண்டவரே, உமது பேரருள் என்று
முள்ளது;
உமது கை உண்டாக்கினவற்றைக்
கைவிடாதேயும்.

137:8 திருவெளி. 18:6.

### எல்லாம் அறிகிற கடவுள்

(பாடகர் தலைவனுக்கு; தாவீதின்
சங்கீதம்)

139 ஆண்டவரே, நீர் என்னைச் சோதித்
துப் பார்த்து அறிந்திருக்கிறீர்;
2 நான் உட்காருவதும் எழுந்திருப்பதும்
உமக்குத் தெரியும்;
என் எண்ணங்களைத் தொலைவிலிருந்தே
அறிகிறீர்.
3 நான் நடக்கிறேனா படுத்திருக்கிறேனா
என்று நீர் பார்க்கிறீர்;
நான் செல்லும் வழிகளெல்லாம் உமக்கு
நன்றாய்த் தெரியும்.
4 ஆண்டவரே, என் நாவில் சொல் பிறப்
பதற்கு முன்பே,
நான் சொல்ல இருப்பதை நீர் அறிவீர்.
5 எனக்கு முன்னும் பின்னும் நீர் என்
அருகிலேயே இருக்கிறீர்;
உமது கையை என்மேல் வைக்கிறீர்.
6 இத்தகைய அறிவு எனக்கு மிகுந்த
வியப்பைத் தருகிறது;
அது எனக்கு எட்டாத உயரமாயிருக்
கிறது;
7 உமக்கு மறைவாக நான் எங்கே
போவேன்?
உமது முன்னிலையை விட்டு எங்கே
ஓடுவேன்?
8 நான் வானத்துக்கு ஏறினாலும் நீர்
அங்கே இருக்கிறீர்;
நான் பாதாளத்தில் படுக்கை போட்
டாலும் நீர் அங்கேயும் இருக்கிறீர்.
9 நான் கதிரவன் எழும் இடத்திற்குப்
பறந்து சென்றாலும்,
மேற்கே கடலுக்கப்பால் போய்த் தங்கி
னாலும்,
10 அங்கேயும் உமது கை என்னை நடத்தும்,
உமது வலக்கை என்னைத் தாங்கி நிற்
கும்.
11 இருள் என்னை மூடிக்கொள்ளாதோ,
வெளிச்சம் என்னைச் சுற்றிலும் இருளாக
மாறாதோ என்று நான் சொன்னாலும்,
12 உமக்குக் காரிருளும் இருளாகாது;
இரவும் பகலைப்போல வெளிச்சமா
யிருக்கும்;
இருளும் வெளிச்சமும் உமக்கு ஒன்றே.

13 என் உள்ளிந்திரியங்களை உருவாக்
கினவர் நீரே;
என் தாயின் வயிற்றில் என்னை அமைத்து
வைத்தவரும் நீரே.
14 அற்புதமாகவும் வியக்கத்தக்க வகையி
லும் நான் உண்டாக்கப்பட்டேன்;
ஆகையால் உமக்கு நன்றி செலுத்து
கிறேன்.
உம்முடையசெயல்கள் வியக்கத்தக்கவை
என்பதை நான் நன்றாய் அறிவேன்.
15 நான் மறைவிடத்தில் உண்டாக்கப்பட்டு,
பூமியின் ஆழமான இடத்தில் வியக்
கத்தக்க வனப்புடன் உருவாக்கப்
பட்டேன்;
அப்பொழுதும் என் எலும்புகள் உம்
முடைய கண்களுக்கு மறைவாயில்லை.
16 அங்கே நாளுக்கு நாள் நான் பெறவிருந்த
வளர்ச்சியின் விபரம்,
ஒரு நாளும் விடப்படாமல்,
அனைத்தும் உமது நூலில் எழுதியுள்ளது.
17 கடவுளே, உம்முடைய எண்ணங்களைப்
புரிந்துகொள்வது எவ்வளவு கடினம்!
அவற்றின் எண்ணிக்கை எவ்வளவு
பெரிது!
18 அவற்றை எண்ண முற்பட்டால்,
அவை கடல் மணலை விட மிகுதியா
யிருக்கும்;
அவற்றை எண்ணி முடித்து எழ
வேண்டுமென்றால்,
இன்னும் உமது முன்னிலையிலேயே நிற்க
வேண்டிவரும்.

19 கடவுளே, நீர் பொல்லாரை அழித்து
விட்டீரானால் நலமாயிருக்கும்;
கொலை வெறியரே, என்னை விட்டு
அகன்று போங்கள்.
20 அவர்கள் உமக்கு விரோதமாகப் பழிப்
புரை கூறுகிறார்கள்;
உம்முடைய எதிரிகள் உம்மைக்
குறித்துத் தீதாகப் பேசுகிறார்கள்.
21 ஆண்டரே, உம்மைப் பகைக்கிறவர்களை
நான் பகையாமல் இருப்பேனா?
உம்மை எதிர்த்து எழுகிறவர்களை
அருவருக்காமல் இருப்பேனா?
22 முழு மனத்துடன் நான் அவர்களை
வெறுக்கிறேன்;
அவர்கள் எனக்கும் எதிரிகளே.

23 கடவுளே, என்னைச் சோதித்துப் பார்த்து
என் இதயத்தை அறிந்துகொள்ளும்;
என்னைப் பரிசோதித்து என் எண்ணங்
களை அறிந்துகொள்ளும்.
24 உமக்கு வேதனை உண்டாக்கும் வழியில்
நான் செல்கிறேனா என்று பாரும்;
அழியா வழியில் என்னை நடத்தும்.

### பாதுகாப்புக்காக மன்றாடுதல்

(பாடகர் தலைவனுக்கு; தாவீதின்
சங்கீதம்)

140 ஆண்டவரே, பொல்லான் கைக்கு
என்னைத் தப்புவியும்; கொடியவ
னுக்கு என்னை விலக்கிக் காத்தருளும்.
2 அவர்கள் தங்கள் உள்ளத்தில் கேடு
நினைக்கிறார்கள்;
நாள்தோறும் சண்டையை மூட்டிவிடு
கிறார்கள்.

3 பாம்பைப் போலத் தங்கள் நாவைக் கூர்மையாக்குகிறார்கள்;
அவர்கள் உதடுகளில் விரியன் பாம்பின் நஞ்சு இருக்கிறது. (சேலா)

4 ஆண்டவரே, பொல்லான் கைக்கு என்னைத் தப்புவியும்;
கொடியவனுக்கு என்னை விலக்கிக் காத்தருளும்;
நான் நடக்கையில் அவர்கள் என்னைக் கீழே வீழ்த்தப் பார்க்கிறார்கள்.
5 இறுமாப்புடையோர் எனக்கு மறைவாகக் கண்ணி வைக்கிறார்கள்;
கயிறுகளை வலையாக விரிக்கிறார்கள்;
வழியோரத்தில் எனக்குச் சுருக்குகளை வைக்கிறார்கள். (சேலா)

6 நான் ஆண்டவரிடம், ''நீர் என் கடவுள்'' என்றேன்;
ஆண்டவரே, என் விண்ணப்பக் குரலுக்குச் செவி சாய்த்தருளும்.
7 கடவுளாகிய ஆண்டவரே, வலிமை வாய்ந்த என் மீட்பரே,
போர் நடந்த நாளில் நீர் என் தலையை மறைத்துக் காத்தீர்.
8 ஆண்டவரே, பொல்லானுடைய விருப்பங்கள் நிறைவேறாதபடி செய்யும்;
அவன் தன்னை உயர்த்திக் கொள்ளாதிருக்கும்படி,
அவனுடைய எண்ணங்களின்படி நடக்க விடாதேயும். (சேலா)

9 என்னை வளைத்து கொள்ளுகிறவர்களுடைய வாயின் கேடான சொற்கள்
அவர்கள் தலையிலேயே விழுவதாக.
10 நெருப்புத்தழல் அவர்கள் மேல் விழுவதாக.
தீயிலும் எழுந்திருக்க முடியாத படுகுழியிலும் அவர்கள் தள்ளப்படுவார்களாக.
11 பொல்லாத நாவுள்ளவன் நாட்டில் நீடித்திருக்க மாட்டான்.
கொடியவனைக் கீழே வீழ்த்த, தீமை அவனைப் பின்தொடர்ந்து செல்லும்.

12 சிறுமைப்படுகிறவன் வழக்கில் ஆண்டவர் அவனுக்கு ஆதரவாயிருப்பார் என்பதும்,
ஏழைகளுக்கு அவர் நீதி வழங்குவார் என்பதும் எனக்குத் தெரியும்.
13 நீதிமான்கள் உமது திருப்பெயருக்கு நன்றி செலுத்துவார்கள் என்பதும்;
நேர்மையானவர்கள் உமது முன்னிலையில் இருப்பார்கள் என்பதும் உறுதி.

## மாலை மன்றாட்டு

(தாவீதின் சங்கீதம்)

**141** ஆண்டவரே, உம்மை நோக்கி மன்றாடுகிறேன்; என்னிடம் விரைந்து வாரும்,
நான் உம்மை நோக்கி மன்றாடுகையில் என் குரலுக்குச் செவிசாய்த்தருளும்
2 என் விண்ணப்பம் உமது முன்னிலையில் தூபமாகவும்;
கூப்பிய என் கைகள் மாலைப் பலியாகவும் இருக்கட்டும்.

3 ஆண்டவரே, என் வாய்க்குக் காவல் வைத்தருளும்;
என் உதடுகளின் வாயிலில் ஒரு காவலனை வைத்தருளும்,
4 என் இதயம் தீமையான எதையும் பற்றிக்கொள்ளாதிருக்கும்படி செய்யும்;
தீமை செய்கிறவர்களோடு சேர்ந்து பொல்லாங்கானதை நடப்பிக்க என்னை விடாதேயும்;
அவர்களுடைய இனிய விருந்துகளில் நான் பங்குகொள்ள மாட்டேன்.

5 ஒரு நீதிமான் என்மீதுள்ள இரக்கம் காரணமாக என்னைத் தண்டிக்கட்டும், அடிக்கட்டும்;
ஆனால் தீயவன் என் தலைக்கு எண்ணெய் பூச வந்தாலும் அப்படிச் செய்ய விடமாட்டேன்;
அவனது தீமையை நான் எப்போதும் எதிர்க்க வேண்டுமென்பதே என் மன்றாட்டு.
6 அவர்களுடைய நீதிபதிகள் கன்மலையிலிருந்து கீழே தள்ளப்படும்போது,
என் வார்த்தைகள் எவ்வளவு உண்மையானவை என்பதை மக்கள் ஒப்புக்கொள்வார்கள்.
7 உழும்போது மண் பிளந்து சிதறிவிடுவது போல,
அவர்களுடைய எலும்புகள் பாதாளத்தின் வாயிலே சிதறிக் கிடக்கின்றன.

8 கடவுளாகிய ஆண்டவரே, என் கண்கள் உம்மையே நோக்குகின்றன;
நான் உம்மிடம் அடைக்கலம் புகுந்தேன்;
என் உயிர் அழிந்துபோகும்படி விடாதேயும்.
9 அவர்கள் எனக்கு வைத்த கண்ணிகளுக்கு என்னைத் தப்புவியும்;
தீமை செய்வோரின் சுருக்குகளுக்கு என்னை விலக்கிக் காத்தருளும்.
10 பொல்லார் தம் வலைகளில் தாமே அகப்பட்டுக்கொள்வார்களாக;

140:3 ரோ. 3:13. 141:2 திருவெளி. 5:8

நான் மட்டும் தீங்கின்றி அவற்றைக்
கடந்து போவேன்.

### உதவிக்காக மன்றுடுதல்

*(தாவீதின் சங்கீதம்; அவர் குகையில் ஒதுங்கியிருந்தபோது செய்த மன்றாட்டு)*

142 ஆண்டவரை நோக்கி உரத்து மன்றுடுகிறேன்;
ஆண்டவரை நோக்கி உரத்து விண்ணப்பம் செய்கிறேன்.
2 அவர் முன்னிலையில் என் மனக்குறைகளைச் சொல்லுகிறேன்;
அவர்முன் என் நெருக்கடியை எடுத்துரைக்கிறேன்.
3 என் ஆவி சோர்ந்துபோகும் வேளையில் நான் செல்லவேண்டிய பாதையை நீர் அறிவீர்;
நான் நடக்கிற வழியில் மறைவாக எனக்குக் கண்ணி வைத்தார்கள்.
4 வலப்புறம் பார்க்கிறேன்; என்னைக் கவனிப்பார் ஒருவருமில்லை;
எனக்கு அடைக்கலம் கிடைக்காமற் போயிற்று;
என்னைப்பற்றிக் கவலைகொள்வார் எவருமில்லை.

5 ஆண்டவரே, உம்மை நோக்கி மன்றுடுகிறேன்; நீரே என் அடைக்கலம்;
உயிர் வாழ்வோர் நாட்டில் நீரே எனக்கு எல்லாம் என்றேன்.
6 என் மன்றாட்டைக் கவனித்தருளும்;
நான் மிகவும் நலிந்து போனேன்;
என்னைத் துன்புறுத்துகிறவர்களுக்கு என்னைத் தப்புவியும்;
அவர்கள் என்னைவிட வலிமைவாய்ந்தவர்கள்.
7 உமது திருப்பெயருக்கு நன்றி செலுத்தும்படி, என்னைச் சிறையினின்று வெளியேறச் செய்யும்;
நீர் எனக்கு நன்மை செய்கிறபடியால், நீதிமான்கள் மகிழ்ச்சியோடு என்னைச் சூழ்ந்துகொள்வார்கள்.

### உதவிக்காக மன்றுடுதல்

*(தாவீதின் சங்கீதம்)*

143 ஆண்டவரே, என் வேண்டுதலுக்குச் செவிசாய்த்தருளும்;
என் விண்ணப்பங்களுக்குச் செவிகொடுத்தருளும்;
உமது நீதிக்கும் உமது உண்மைக்கும் ஏற்ப எனக்குச் செவிசாய்த்தருளும்.
2 உயிர் வாழ்வோருள் எவனும் உமது முன்னிலையில் நீதிமான் அல்ல;
ஆகையால் அடியேனை விசாரணை செய்ய வராதேயும்.

3 என் எதிரி என்னைத் துன்புறுத்தி, என்னைத் தரையில் வீழ்த்திவிட்டான்;
நெடுங்காலத்திற்குமுன் இறந்தவர்களைப் போல என்னை இருளில் இருக்கச் செய்கிறான்.
4 என் ஆவி சோர்ந்து போகிறது;
என் இதயம் என்னுள் கலங்குகிறது.

5 கடந்த காலத்தை நான் நினைக்கிறேன்;
உம்முடைய செயல்களையெல்லாம் தியானிக்கிறேன்;
உமது கை செய்தவற்றை நினைத்துப் பார்க்கிறேன்.
6 உமக்கு நேராக நான் கைகூப்பி நிற்கிறேன்;
வறண்ட நிலம் நீருக்காக ஏங்குவது போல என் ஆன்மா உமக்காக ஏங்குகிறது. (சேலா)

7 ஆண்டவரே, என் வேண்டுதலுக்கு விரைவில் செவிசாய்த்தருளும்;
என் ஆவி சோர்ந்துபோகிறது;
உமது முகத்தை எனக்கு மறைக்காதேயும்;
மறைத்தால் நான் குழியில் இறங்குகிறவர்களைப்போலாவேன்.
8 உமது பேரருள் செய்தது விடியற்காலையில் என் காதில் விழும்படி செய்தருளும்;
உம்மையே நம்பியிருக்கிறேன்;
நான் நடக்க வேண்டிய வழியை எனக்குத் தெரிவித்தருளும்;
உமக்கு நேராக என் உள்ளத்தைத் திருப்பி வேண்டுதல் செய்கிறேன்.

9 ஆண்டவரே, என் எதிரிகளின் கைக்கு என்னைத் தப்புவியும்,
உம்மையே அடைக்கலமாகக் கொண்டிருக்கிறேன்.
10 உமக்கு விருப்பமானதைச் செய்ய எனக்குக் கற்பித்தருளும்;
நீரே என் கடவுள்;
உமது நல்ல ஆவி என்னைச் செம்மையான வழியில் நடத்துவதாக.

11 ஆண்டவரே, உமது திருப்பெயரின் பொருட்டு என்னை உயிர்ப்பித்தருளும்
உமது நீதிக்கேற்ப என் இடுக்கண்களிலிருந்து என்னை விடுவித்தருளும்.
12 உமது பேரருளுக்கேற்ப என் எதிரிகளை அழித்துவிடும்;

143:2 ரோ. 3:20; கலா. 2:16.

என்னை ஒடுக்குகிற யாவரையும் ஒழிந்து
போகச் செய்யும்;
நான் உம்முடைய அடிமையல்லவா?

### வெற்றியளித்த கடவுளைப் போற்றுதல்

*(தாவீதின் சங்கீதம்)*

144 என் கன்மலையாகிய ஆண்டவரைப்
போற்றுகிறேன்;
அவர் என் கைகளைப் போருக்கும்
என் விரல்களைச் சண்டைக்கும் பயிற்று
விக்கிறார்.
2 அவரே எனக்கு அருள் துணை அளிப்
பவர்; என் கோட்டை 'என் உறுதி
யான அரண்;
அவரே என்னை விடுவிக்கிறவர்; என்
கேடயம், என் அடைக்கலம்;
அவரே பிற இனத்தவரை எனக்குக்
கீழ்ப்படுத்துகிறவர்.

3 ஆண்டவரே, மனிதனை நீர் கவனிக்கிற
தற்கு அவன் யார்?
4 மனிதன் காற்றுக்கு ஒப்பானவன்;
அவனது வாழ்நாள் மறைந்துபோகிற
நிழலைப்போன்றது.

5 ஆண்டவரே, வானங்களைத் தாழ்த்தி
இறங்கிவாரும்;
மலைகள் புகையும்படி அவற்றைத்
தொடும்.
6 மின்னல்களை மின்னச் செய்து எதிரிகளைச்
சிதறடியும்;
உம்முடைய அம்புகளை எய்து அவர்களைக்
கலங்கடியும்.
7 உயரத்திலிருந்து உமது கையை நீட்டி
யருளும்;
வெள்ளப் பெருக்கினின்று என்னைக் காத்
தருளும்;
அன்னியரின் கைக்கு என்னை விலக்கிக்
காப்பாற்றும்.
8 அவர்கள் வாய் வஞ்சனை பேசும்;
அவர்கள் வலக்கை கள்ளத்தனமானது.

9 கடவுளே, உமக்கு நான் புதியதொரு
பாட்டைப் பாடுவேன்;
பத்து நரம்பு வீணையைக் கொண்டு
உம்மைப் புகழ்ந்து பாடுவேன்.
10 அரசருக்கு வெற்றியளிப்பவர் நீரே;
உம்முடைய அடியானாகிய தாவீதைப்
பொல்லாரின் வாளுக்குத் தப்பு
வித்தவர் நீரே.
11 அன்னியரின் கைக்கு என்னைத் தப்புவியும்
அவர்கள் வாய் வஞ்சனை பேசும்;
அவர்கள் வலக்கை கள்ளத்தனமானது.

12 எங்கள் புதல்வர்கள் மரக்கன்றுகள்
போல இளமையில் ஓங்கி வளருவார்
கள்;
எங்கள் புதல்வியர்கள் அரண்மனை மூலை
களை அழகு செய்யும் செதுக்கிய சிலை
களைப்போலிருப்பார்கள்.
13 எங்கள் களஞ்சியங்களில் எல்லாவகை
யான தானியங்களும் நிரம்பியிருக்கும்
எங்கள் பண்ணைகளில் ஆடுகள் ஆயிரம்
பதினாயிரமாய்ப் பலுகும்.
14 எங்கள் எருதுகள் வலிமை வாய்ந்த
வையாயிருக்கும்;
எதிரிகள் உள்ளே வருதலோ மக்கள்
நாடு கடத்தப்படுதலோ இராது;
எங்கள் வீதிகளில் கூக்குரலும் இராது.

15 இத்தகைய நலன்களைப் பெற்ற மக்கள்
நற்பேறு பெற்றவர்கள்;
ஆண்டவரைத் தங்கள் கடவுளாகக்
கொண்டிருக்கிறவர்கள் நற்பேறு
பெற்றவர்கள்.

### புகழ்ப்பாடல்

*(தாவீது பாடிய புகழ்ப் பாடல்)*

145 என் கடவுளே, என் அரசே, உம்மைப்
புகழ்ந்து பாடுவேன்;
உமது திருப்பெயரை என்றென்றும்
போற்றுவேன்.
2 நாள்தோறும் உம்மைப் போற்றுவேன்:
உமது திருப்பெயரை எப்போதும் புகழ்
வேன்.
3 ஆண்டவர் மகத்துவமானவர்;
உயர்வாகப் போற்றுதலுக்குரியவர்;
அவரது மகத்துவம் நம் அறிவுக்கு
எட்டாதது.

4 ஒரு தலைமுறை வரும் தலைமுறைக்கு
உம்முடைய செயல்களின் புகழைச்
சொல்லும்;
உம்முடைய வல்லமைச் செயல்களை
எடுத்துரைக்கும்.
5 உமது மகத்துவத்தின் மாட்சிமையையும்
மேன்மையையும்,
அற்புதமான உம்முடைய செயல்களையும்
நான் தியானிப்பேன்.
6 அச்சந்தரும் உம் செயல்களின் வல்ல
மையைப் பற்றி மக்கள் பேசுவார்கள்;
உமது மகத்துவத்தை நான் விவரிப்
பேன்.
7 அவர்கள் உமது மிகுந்த கருணையைப்
புகழ்ந்து கொண்டாடுவார்கள்;
உமது நீதியை நினைத்து ஆரவாரத்
துடன் பாடுவார்கள்.

144:3 யோபு 7;17,18; சங். 8:4

8 ஆண்டவர் இரக்கமும் மனவுருக்கமும் பொறுமையும் பேரருளும் நிறைந்தவர்.
9 ஆண்டவர் எல்லாருக்கும் நன்மை செய்கிறவர்.
தாம் படைத்த அனைத்தின்மீதும் இரக்கம் காட்டுபவர்.

10 ஆண்டவரே, நீர் படைத்த யாவும் உமக்கு நன்றி செலுத்தும்;
உம்முடைய அடியார்கள் உம்மைப் போற்றுவார்கள்.
11 மனுமக்களுக்கு உம்முடைய வல்லமைச் செயல்களையும்,
உமது அரசிற்குரிய மகத்துவத்தின் மாட்சிமையையும் தெரிவிக்கும்படி,

12 உமது அரசின் மாட்சிமையை அறிவிப்பார்கள்;
உமது வல்லமையைப்பற்றிப் பேசுவார்கள்.
13 உமது அரசு எல்லாக் காலங்களிலுமுள்ள அரசு;
உமது ஆளுகை தலைமுறை தலைமுறையாக உள்ளது.

14 தடுக்கி விழுகிற யாவரையும் ஆண்டவர் தாங்குகிறார்;
தாழ்த்தப்பட்ட யாவரையும் தூக்கி விடுகிறார்.
15 எல்லா உயிரினங்களின் கண்களும் உம்மையே நோக்குகின்றன;
தக்க வேளையில் நீர் அவற்றிற்கு உணவளிக்கிறீர்.
16 நீர் உமது கையைத் திறந்து எல்லா உயிரினங்களின் விருப்பத்தையும் நிறைவேற்றுகிறீர்.
17 ஆண்டவர் தாம் செய்கிற அனைத்தையும் நீதியோடு செய்கிறார்;
அவருடைய செயல்கள் யாவும் இரக்கச் செயல்களே.
18 தம்மை நோக்கி மன்றாடுகிற யாவருக்கும் உண்மையாய்த் தம்மை நோக்கி மன்றாடுகிற யாவருக்கும்,
ஆண்டவர் அண்மையில் இருக்கிறார்.
19 அவர் தமக்கு அஞ்சி நடப்பவர்களின் விருப்பப்படி செய்வார்;
அவர்களது மன்றாட்டிற்குச் செவிசாய்த்து அவர்களைக் காப்பாற்றுவார்.
20 ஆண்டவர் தம்மிடம் அன்புகொள்ளுகிற அனைவரையும் காப்பாற்றுகிறார்;
பொல்லார் அனைவரையும் அழிப்பார்.

21 என் வாய் ஆண்டவரின் புகழை அறிவிப்பதாக;
மனுமக்கள் யாவரும் அவரது திருப்பெயரை என்றென்றும் போற்றுவார்களாக.

### மீட்பராகிய கடவுளைப் போற்றுதல்

அல்லேலூயா.
146 என் ஆன்மாவே, ஆண்டவரைப் புகழ்ந்து போற்று;
2 நான் உயிரோடிருக்கும் வரையில் ஆண்டவரைப் புகழ்ந்து போற்றுவேன்;
என் வாழ்நாளெல்லாம் என் கடவுளைப் புகழ்ந்து பாடுவேன்.

3 ஆட்சித் தலைவர்களை நம்பாதீர்கள்;
எந்த மனிதனையும் நம்ப வேண்டாம்;
அவனால் உன்னை மீட்க இயலாது,
4 அவன் ஆவி பிரிந்துபோகும்; அப்போது அவன் தான் தோன்றின மண்ணுக்கே திரும்புவான்;
அந்நாளில் அவனுடைய எண்ணங்களும் அழியும்.

5 யாக்கோபின் கடவுளைத் தன் துணையாகக் கொண்டிருக்கிறவன் நற்பேறு பெற்றவன்;
தன் கடவுளாகிய ஆண்டவரையே நம்பியிருக்கிறவன் நற்பேறு பெற்றவன்.
6 அவர் விண்ணையும் மண்ணையும் கடலையும் அவற்றிலுள்ள யாவற்றையும் உண்டாக்கினவர்.
அவர் என்றென்றும் வாக்குத் தவறாதவராயிருக்கிறார்.
7 ஒடுக்கப்பட்டவர்களுக்கு அவர் நீதி வழங்குகிறார்;
பசியோடிருப்பவர்களுக்கு உணவளிக்கிறார்.
சிறைப்பட்டவர்களை ஆண்டவர் விடுதலை செய்கிறார்;

8 குருடரின் கண்களைத் திறக்கிறார்;
தாழ்த்தப்பட்டவர்களை ஆண்டவர் தூக்கி விடுகிறார்;
நீதிமான்களிடம் ஆண்டவர் அன்புகூர்கிறார்.
9 அன்னியரை ஆண்டவர் காப்பாற்றுகிறார்;
அனாதைப் பிள்ளைகளையும் கைம்பெண்களையும் ஆதரிக்கிறார்;
பொல்லாரின் திட்டங்களையோ பாழாக்குகிறார்.

10 ஆண்டவர் என்றென்றும் அரசாளுகிறார்
சீயோனே, உன் கடவுள் தலைமுறை தலைமுறையாக ஆட்சி செலுத்துகிறார்
அல்லேலூயா.

### எல்லாம் வல்ல கடவுளைப் போற்றுதல்

அல்லேலூயா.
147 நம்முடைய கடவுளைப் புகழ்ந்து பாடுவது நல்லது:
அவரைப் புகழ்வது இனிமையானது:
அதுவே தகுந்தது.

2 ஆண்டவர் எருசலேமை மீண்டும் கட்டி
எழுப்புகிறார்;
துரத்தப்பட்ட இஸ்ரவேலரைக் கூட்டிச்
சேர்க்கிறார்.
3 உடைந்த இதயமுள்ளவர்களைக் குணப்
படுத்துகிறார்;
அவர்கள் காயங்களைக் கட்டுகிறார்.

4 அவர் விண்மீன்களின் இலக்கத்தை
எண்ணி,
அவற்றுள் ஒவ்வொன்றுக்கும் பெயரிடு
கிறார்.
5 நம் ஆண்டவர் மகத்துவமானவர்;
மிகுந்த வல்லமையுள்ளவர்;
அவர் அறிவுக்கு எல்லையில்லை.
6 ஆண்டவர் சிறுமைப்படுகிறவர்களுக்கு
ஆதரவளிக்கிறார்;
பொல்லாரையோ தரை வரைக்கும்
தாழ்த்துகிறார்.
7 ஆண்டவருக்கு நன்றி செலுத்திப்
பாடுங்கள்;
நம் கடவுளைச் சுரமண்டலங்கொண்டு
புகழ்ந்து பாடுங்கள்.
8 அவர் வானத்தை மேகங்களால் மறைக்
கிறார்;
பூமிக்குத் தேவையான மழையைப்
பொழிகிறார்;
மலைகளில் புல்லை முளைப்பிக்கிறார்.
9 கால் நடைகளுக்கும் கத்துகிற காக்கைக்
குஞ்சுகளுக்கும்
அவர் இரை கொடுக்கிறார்.

10 குதிரையின் வலிமையில் அவர் விருப்பங்
கொள்ளார்;
வீரனின் கால் வலிமையையும் அவர்
விரும்புவதில்லை.
11 தமக்கு அஞ்சி நடந்து தம் பேரருளையே
நம்பி வாழ்கிறவர்களிடம் அவர்
விருப்பங்கொள்கிறார்.
12 எருசலேமே, ஆண்டவரைப் போற்று
வாயாக;
சீயோனே, உன் கடவுளைப் புகழ்வாயாக
13 அவர் உன் வாயில்களின் தாழ்ப்பாள்
களை வலிமையுள்ளதாக்குகிறார்;
உன்னிடமுள்ள உன் பிள்ளைகளுக்கு
ஆசி வழங்குகிறார்.
14 அவர் உன் எல்லைப்புறங்களில் அமைதி
நிலவச் செய்கிறார்;
உயர்தரக் கோதுமையை உனக்குப்
போதுமான அளவு கொடுக்கிறார்.
15 அவர் தமது கட்டளையை உலகிற்கு
அனுப்புகிறார்;
அவரது சொல் மிகவும் விரைவாகச்
செல்கிறது.
16 பஞ்சைப்போல வெண்பனியைப் பொழி
யச் செய்கிறார்;
சாம்பலைப்போல உறை பனியைத் தூவு
கிறார்.
17 மழை பெய்கையில் ஆலங்கட்டிகளை
விழச் செய்கிறார்;
அவர் வரவிடும் குளிரைத் தாங்கக்
கூடியவன் யார்?
18 அவர் மீண்டும் கட்டளையிட, உறைந்தது
உருகுகிறது;
அவர் தமது காற்றை வீசச் செய்ய,
உருகின நீர் ஓடத் தொடங்குகிறது.

19 யாக்கோபுகுத் தமது வார்த்தையையும்
இஸ்ரவேலுக்குத் தம் விதிகளையும் தீர்ப்பு
களையும் வெளிப்படுத்துகிறார்.
20 அவர் வேறே எந்த இனத்துக்கும்
இப்படிச் செய்யவில்லை;
அவருடைய தீர்ப்புகள் அவர்களுக்குத்
தெரியாது.
அல்லேலூயா.

## புகழ்ப்பாடல்

அல்லேலூயா.
**148** வானங்களில் ஆண்டவரைப் போற்
றுங்கள்;
உன்னதங்களில் அவரைப்போற்றுங்கள்.
2 அவருடைய தூதர்களே, நீங்கள் யாவ
ரும் அவரைப் போற்றுங்கள்;
அவருடைய படைகளே, நீங்கள் யாவ
ரும் அவரைப் போற்றுங்கள்.

3 கதிரவனே, நிலாவே, அவரைப் போற்
றுங்கள்;
ஒளிவீசும் விண்மீன்களே, அவரைப்
போற்றுங்கள்
4 வானாதி வானங்களே, அவரைப் போற்
றுங்கள்;
வானங்களின் மேலுள்ள தண்ணீர்களே,
அவரைப் போற்றுங்கள்.

5 அவை யாவும் ஆண்டவரின் திருப்
பெயரைப் போற்றட்டும்;
ஏனெனில், அவர் கட்டளையிட எல்லாம்
உண்டாயின.
6 அவர் அவற்றை என்றுமுள்ள எல்லாக்
காலங்களிலும் நிலைத்திருக்கச் செய்
தார்;
மாறாத விதிகளை அவற்றிற்கு ஏற்
படுத்தினார்.

7 உலகில் ஆண்டவரைப் போற்றுங்கள்;
மாபெரும் மச்சங்களே, ஆழ்கடலி
லுள்ள உயிரினங்களே,
8 நெருப்பே, கல் மழையே, வெண்பனியே
மூடுபனியே, அவர் சொற்படி செய்
யும் பெருங்காற்றே,
9 மலைகளே, குன்றுகளே, கனிமரங்களே,
கேதுரு மரங்களே,
10 காட்டு விலங்குகளே, நாட்டு விலங்கு
களே,

ஊரும் உயிரினங்களே, இறகுள்ள
பறவைகளே,

11 உலகின் அரசர்களே, எல்லா நாடுகளிலு
முள்ள மக்களே,
தலைவர்களே, உலகின் நீதிபதிகளே,
12 இளைஞரே, கன்னிகளே, முதியோரே,
சிறியோரே,
நீங்கள் எல்லாரும் ஆண்டவரைப்
போற்றுங்கள்.

13 அவர்கள் ஆண்டவரின் திருப்பெயரைப்
போற்றுவார்களாக;
அவரது திருப்பெயரே உயர்ந்தது;
அவரது மாட்சிமை பூமிக்கும் வானத்
துக்கும் மேலானது.
14 அவர் தம் மக்களிடையே தமது வல்ல
மையை வெளிப்படுத்தினர்;
அவருடைய அடியார் யாவரும், அவ
ருடைய அன்பார்ந்த மக்களாகிய
இஸ்ரவேல் மக்களும்
அவரைப் போற்றுவார்கள்.
அல்லேலூயா.

## புகழ்ப்பாடல்

அல்லேலூயா.
149 ஆண்டவருக்குப் புதியதொரு பாட
லைப் பாடுங்கள்;
அவருடைய அடியார் சபையில் அவரைப்
போற்றிப் பாடுங்கள்.
2 இஸ்ரவேல் தன்னை உண்டாக்கினவரை
நினைத்து மகிழ்வதாக;
சீயோன் மைந்தர் தம் அரசரை நினைத்
துக் களிகூர்வார்களாக.

3 நடனம் செய்து அவரது திருப்பெயரை
போற்றுவார்களாக;
மத்தளமும் சுரமண்டலமும் கொண்டு
அவரைப் புகழ்ந்து பாடுவார்களாக.
4 ஆண்டவர் தம் மக்கள்மீது அன்புகூர்
கிறுர்;
தாழ்நிலையிலுள்ள அவர்களுக்கு மீட்
பளித்து மேன்மைப் படுத்துவார்.
5 அவருடைய அடியார் மேன்மையடைந்து
களிகூர்வார்களாக;
விருந்துண்டு ஆர்ப்பரித்துப் பாடுவார்
களாக.
6 அவர்கள் வாய் கடவுளை ஆரவாரத்
தோடு புகழட்டும்;
அவர்கள் கையில் இருபுறமும் கூர்மை
யான வாள் இருக்கட்டும்.
7 அவர்கள் பிற இனத்தவரிடம் பழிதீர்த்
துக் கொள்வார்கள்;
பல இனத்தவரைத் தண்டிப்பார்கள்.
8 அவர்களுடைய அரசர்களைச் சங்கிலிக
ளாலும்,
மேன்மக்களை இரும்பு விலங்குகளாலும்
கட்டுவார்கள்;
ஏற்கெனவே எழுதப்பட்டிருக்கிற
தீர்ப்பை அவர்களுக்கு வழங்குவார்
கள்.
9 இத்தகைய மேன்மை ஆண்டவருடைய
அடியார் அனைவருக்கும் உண்டாகும்.
அல்லேலூயா.

## ஆண்டவரைப் போற்றுங்கள்

அல்லேலூயா.
150 புனித அகத்தில் கடவுளைப் போற்
றுங்கள்;
ஆகாயவிரிவில் வல்லமையோடிருக்கும்
அவரைப் போற்றுங்கள்.
2 அவரது வல்லமை விளங்கும் அவ
ருடைய செயல்களுக்காக அவரைப்
போற்றுங்கள்;
3 எக்காள முழக்கத்தோடு அவரைப்
போற்றுங்கள்;
வீணையோடும் சுரமண்டலத்தோடும்
அவரைப் போற்றுங்கள்.
4 மத்தளத்தோடும் நடனத்தோடும்
அவரைப் போற்றுங்கள்;
யாழோடும் தீங்குழலோடும் அவரைப்
போற்றுங்கள்.
5 ஓசை எழுப்பும் தாளங்களோடும்
அவரைப் போற்றுங்கள்;
பேரோசை எழுப்பும் தாளங்களோடும்
அவரைப் போற்றுங்கள்.
6 உயிரினங்களே, நீங்கள் எல்லோருமே
ஆண்டவரைப் போற்றுங்கள்.
அல்லேலூயா.


ஏரோதின் காலத்தில்
எருசலேம் தேவாலயத்திற்கான திட்டம்
அந்தோனியாக் கோட்டை
0 10 20 50 100 150 மீட்டர்
0 50 100 200 300 1 முழம் (18 அங்குலம்)
வடக்கு வாயில்
மேற்கு வாயில்
புறவினத்தார் கூடம்
பொன் வாயில்
எச்சரிப்பின் மதில்
இஸ்ரவேலர் கூடம் (ஆண்கள்)
பெண்கள் கூடம்
மண்டபம்
ஆசாரியர்கள் பிரகாரம்
அலங்கார வாயில்
பலிபீடம்
தூய இடம்
அதிதூய இடம்
தோப்பேத் பள்ளத்தாக்கு
மேற்கு சுவர் (Refferred to to-day as the "wailing wall")
சாலொமோன் மண்டபம்
கெதரோன் பள்ளத்தாக்கு

# புதிய ஏற்பாட்டின் உலகம்

நியமப்படிமைல்தூரம்

10 100 200 300 400

கிலோமீட்டர்

0 100 200 300 400 500

ரோமாபுரி
முச்சத்திரம்
அப்பியுசந்தை
இத்தாலியா
புத்தேயோலி
ரேகியு
சிசீலியா
சீரகூசா
மெலித்தா
இல்லிரிக்கம்
மக்கெதோனியா
பிலிப்பி
அம்பிபோலி
நெயாப்போலி
தெசலோனிக்கே
பெரோயா
கிரேக்கு
கொரிந்து
அத்தேனே
கருங்கடல்
பித்தினியா
பொந்து
மீசியா
துரோவா
பெர்கமு
தியத்தைரா
ஆசியா
கலாத்தியா
கப்பத்தோக்கியா
சிமிர்னு
சர்தை
பிலதெல்பியா
அந்தியோகியா
எபேசு
எராப்போலி
லவோதிக்கேயா
இக்கோனியா
லீஸ்திரா
பத்மு
மிலேத்து
கொலோசே
தெர்பை
தர்சு
அந்தியோகியா
பெர்கே
அத்தாலியா
பம்பிலியா
சிலிசியா
லீசியா
மீரு
கிரேத்தா
கிலவுதா
லசேயா
சல்மோனே
சீப்புரு
சீரியா
மத்திய தரைக்கடல்
சிரேனே
லிபியா
அலெக்சந்திரியா
எகிப்து
தமஸ்கு
சீதோன்
தீரு
செசரியா
யோப்பா
காத்சா
எருசலேம்
பலெஸ்தீன்
அரபிதேசம்